7-4

உ

ஓம் மகாகணபதயே நமஃ

ஸ்ரீ ஆளவந்தார் முனிவர்

மொழிபெயர்த்தருளிய

# ஸ்ரீ ஞானவாசிட்டம் மூலமும்,

ஸ்ரீ துறவாண்டவர் பாதசேகரராகிய

ஸ்ரீ நித்தியானந்த முனிவர்

மொழிபெயர்த்தருளிய

சமுசாரதரணி யென்னும் உரையும்,

ஸ்ரீ திருக்களர் ஆண்டவர் பாததூளியாகிய

நியாயசந்திர வேதாந்தபாஸ்கர

ஸ்ரீ சுப்பய்ய ஞானதேசிகேந்திரர்

திரட்டியருளிய

## ஸ்ரீ வீரசேகரமென்னும் உரையும்.

இவை

ஷை ஸ்ரீ சுப்பய்ய ஞானதேசிகேந்திரர்

அவர்களானே

சென்னை ஆனந்தபோதினி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

1928



Tittle Page Printed at Sri Bharathi Press, Choolai, Madras.



ஸ்ரீ வசிட்ட பகவான்
ஸ்ரீராமபிரானுக் குபதேசித்தல்.



ஶ்ரீ வீரசேகர
சுப்பய்ய ஞான தேசிகேந்திர சுவாமிகள்

உ

ஓம் மகா கணபதயே நமஃ

சிவமயம்.

# முகவுரை.

அன்பிற் சிறந்த பெரியீர்! ஞானவாசிட்டந் தெரியாத நண்பர்களும் நாட்டிலுளரோ, இலர். சாத்திரத்திற் பெரியதிது தடங் காவியத்திற் பெரியதிது, மாத்திரத்தின் மெய்ஞ்ஞான வழியாற் பெரியதிது ஞான, நேத்திரத்திற் பெரியோர்க்கு நிதிபோற் பெரியதிது கதிரோன், கோத்திரப் பொற் பாத்திரத்திற் குகித்தவமுதாம் வாசிட்டம். என்றபடியாக இது ஸ்ரீ இராகவர்க்கு ஸ்ரீ வசிஷ்டபகவானால் 32000ங் கிரந்தமாகப் பதினெட்டு தினங்களில் உபதேசித்ததாம், இதன் விஸ்தாரத்தை யுத்தேசித்து ஸ்ரீ காஷ்மீர பண்டிதரால் 24000ங் கிரந்தத்திலிருந்து 6000ங் கிரந்தம் சங்கிரகிக்கப்பெற்று லகுயோக வாசிஷ்டமெனப் பெயர்சூட்டப் பெற்றதிது. இதனை, ஸ்ரீ கவிராச பண்டிதர் குமாரர் வீரை ஸ்ரீ ஆளவந்தான் முனிவர் செந்தமிழ்ச் செய்யுள் வடிவமாய் மொழிபெயர்த்து வைத்தனர், இது நெடு நாள் விரிந்த உரையோடு இயையாமைபற்றி, நமது ஸ்ரீமது சுவாமிகள், எங்கள் வேண்டுகோட் கிசைந்து ஸ்ரீ வாசிஷ்ட சந்திரிகை, ஸ்ரீ வாசிஷ்ட தாற்பரியப் பிரகாசம் என்பவற்றைக்கொண்டு, அழகிய அவதாரிகை, பகுத்துணர்த்தும் பதவுரை, விரிந்த விசேட வுரைகள் அடங்கிய ஸ்ரீ வீரசேகரம் என்னும் உரையை இதனுடன் இயைத்துத் தந்ததுடன், இதற்கு முன்னிருந்த ஸ்ரீ நித்தியானந்த முனிவர் 60-வருடங்கட்குமுன் மொழிபெயர்த்து இதுவரை பாடம் நடந்துவந்த ஷை தமிழ் வாசிட்ட வியாக்கியானமாகிய சமுசார தரணி யென்னும் உரையையும் மூலத்திற் கியையபூத்திருத்தித்தர அவதாரிகை பதவுரை விசேட வுரைகளடங்கிய அதனையும், முன்றந்த ஸ்ரீ வீரசேகரத்தையும் தமிழ் மக்களுக்கு உபயோகமாமாறு அச்சிட்டு வருகின்றோம். இம்மூலமும் உரைகளும் முன்னுத்தேசப்படி 160-ராயல் பாரங்களில் அடங்காமல் 220-பாரங்கட்கும் மேலாகும்போற்றோற்றுகின்றபடியால் படிப்பவர் சௌகர்யத்தை யுத்தேசித்து இரண்டு பயிண்டுப் புத்தகங்களாக்கி, முதலாவதில், வைராக்கியம், முமுக்ஷு, உற்பத்தி, திதி யென்னும் நான்கு பிரகரணங்களும், இரண்டாவதில் உபசாந்தி நிர்வாணம் என்னும் இரண்டு பிரகரணங்களும், அடங்குமாறு செய்து பயிண்டியற்றி இரண்டாவது இப்போது முற்றுப்பெறுமைபற்றி முதலாவதை வெளிசெய்திருக்கின்றோம். கடித விலையாதிக்கியம் பற்றியும், பார மிகுதிபற்றியும், இம் முதலாவதற்கு ரூபா 6—0—0 விலைவைத்திருக்கின்றோம். மற்றது மத்தகைபதே பின் வெளியாம். இதனை வாங்கி ஸ்ரீ ஞானசிரியர் சந்நிதியிற் சிரவணஞ்செய்து பேரானந்தப் பெரும்பேறடைந்திடுமாறு எல்லாம்வல்ல இறைவனை வேண்டிக்கொள்ளும்,

அநந்தானந்த சுவாமிகள்.

4/5, ஆனந்தாசிரமம், வேப்பேரி, சென்னை.

சிவமயம்.

ஸ்ரீ சற்குருப்யோநம:

# ஸ்ரீ ஞான வாசிட்டம்

## வைராக்கியப் பிரகரணம் மூலமும்

## சமுசார தரணியென்னும் உரையும்



கணபதி வணக்கம்

ஆரண மிதுவென் றோதா வறிவுரு வான சோதி
பூரணமாகி யென்றன் புறத்தகத் திலகா நிற்குங்
காரண மாயன் றாகிக் காண்பன வனைத்து மாமவ்
வாரண முகத்தன் சீரார் மலரடி வணங்கு வாமே.

சபாபதி வணக்கம்.

இதம்பெற வெவரு மெண்ணி யேத்திநின் றிறைஞ்ச மேலாஞ்
சுதந்தரை யுமையா ளுள்ளஞ் சுகோத்தி யதனின் மூழ்க
நிதந்தித நிமல போத னிகழ்ந்ததன் கருணை யாலே
சிதம்பர நடனஞ் செய்யுந் திருவடி சிந்தை செய்வாம்.

பரமகுரு வணக்கம்.

அங்குமிங்கு மெங்குநிறைந் தாநந்த மயமாகி யறிவாய் நாளுந்
தங்குகின்ற மெய்ப்பொருளே யோர்வடிவாய்க் கோவிலூர் தனின்வாழ்சாது
சங்கமுற்ற வெம்மனோர்க் ககமாவைத் தொலைத்தின்பந் தானேதந்த
சிங்கமுத்தி ராமலிங்க தேசிகன்றா டொழுதேத்திச் சிந்தை செய்வாம்.

அருளிறை வணக்கம்.

திருத்தில்லை நடனபதச் சிற்சொரூபன் றிகழ்வடிவா யப்பாலுக் கப்பாலாயிவ்
வுருத்திகழு மணுவினுக்கு மணுவாய் நித்த வொளியாகி வெளியாகி யொன்றாய்மோன
விருத்தியெழு மின்பமா யெல்லா மாகி மிளிரருணா சலகுரவன் விமலப் பொற்றாள்
கருத்திருத்தி நினைத்தவரந் தருக வென்று கைகூப்பித் தொழுதுதுதி கசிந்து
[செய்வாம்.

# வாசிட்ட நிர்ச்சந்தேக ஞப்திவியாக்யானம்

## இந்நூல் வரலாறு.

இவ்வுலகின்கண்ணே சகலசகத்திற்கு மேககாரணமான சச்சிதாநந்தமயப் புருடோத்தமனாகிய பகவான் குணத்திரயமயமான தனது லீலையைச் செய்பவராகி ரசோகுண சம்பந்தமான சதுர்முகன் முதலிய தனது மூர்த்திபேதங்களால் விசித்திரமான பூதபௌதிகப்பிரபஞ்சத்தைச் சிருட்டித்துச் சீவரூபமாகப் பிரவேசித்த சீவர் சீவிக்குநிமித்தமாகவே யோகக்ஷேமத்தைக் கற்பித்தற்குச் சகல சத்பாக்கியத்தையும் விபாகஞ் செய்வதான மச்சகூர்மாதி சாத்துவிதாவதார பேதங்களைத் தரித்தார். அவற்றிற் பவித்திரமான சகத்திரயங்களிற் சிறிதவதாரங்கள் கிருதகிருத்தியமாகி யுபசாந்தம் பெற்றிருக்க, இராவணன் முதலிய விராட்சதர்களாற் றுபமுறுநின்ற சகத்திரயத்தை யிரக்ஷிப்பதற் கப்பகவானே சகல கலியாண குணங்களோடிரமித்து ஸ்ரீராமரென்னு நாமத்தோடுஞ் சூரிய குலத்துதித்தார். அவர் தாமே தடையறச் சகலவித்தையு முபநிஷத்தும் வந்தமனதுடையரேனுஞ் சம்பிரதாயத்தைத் தெரிவித்தற்குக் குருகுலத்தில் வசித்து, குருமுகத்தினின்று நன்றாய்க்கற்ற சகலசாத்திரதத்துவஞ்ஞராய்ப் பின் வெளிப்பட்டார். வெளிப்பட்டவிராமர் சற்கருமங்களிற் பிரவிருத்தியுற்று மகாமோகமய சம்சாரசாகரத் தாழ்ந்துமிதந்து துன்புறுமுலோகத்தைப்பார்த்துப் பரமகாருண்ணியத்தா லதைக்கரையேற்ற வேண்டுமென்னு மிச்சையுடையராய்த் தம்முகத்தாலும் தற்குரு முகத்தாலும் வாராநின்ற பிரசினோத்தரங்களினால் முக்திமார்க்கத்தை யுபதேசித்தார். அத்தன்மையான இவ்வுபதேசத்தைக் கவிகுலகுருவாகிய வான்மீகிபகவான் உலோகாநுக்கிரகநிமித்தம் விடார்க் கிளம்பாவைய முரைபோன்ற காவியப் பிரபந்தமாக வடமொழியி லருளிச்செய்தார். இதை வீரை யாளவந்தாரென்னு முனிவர் தமிழ்பாவினமாக மொழிபெயர்த்தருளினார். வசிட்டோபதேச மன்னிநிற்றலின் வாசிட்டமென்னுமிது மோக்ஷசாத்திரமாமிதில் வைராக்கிய முமுக்ஷுற்பத்தி திதி யுபசாந்தி நிருவாணங்களென்னும் ஆறு பிரகரணங்களுள. அவற்றில் முதற் றோடதரிசனத்தாற் கண்டகேட்ட விஷயங்களில் வைராக்கியமு மதன்பின் முமுட்சுத்துவமும் அதன்பின் முமுக்ஷுவென்னு மதிகாரியாய்த் தத்துவமறிய விச்சித்த மனமுடையனுக்குச் சகவுற்பத்திதிதி யுபசாந்திகளாற் றத்துவஞானவுபதேசமுந் தத்துவஞானந் திடப்படின் நிருவாணமுமாமென்று மிதுவே கிரமமாம்.

---

உ

ஓம் மகாகணபதயேநம:

# ஞான வாசிட்டம் மூலமும் உரையும்.



## மங்களம்.

திங்களணி வேணியனுர் உமையோடுந் திளைத்தாடித்
திருந்து வேதம்,
பொங்குலகும் போற்றிசெய நாற்றிசையும் புகழ்பெருகப்
பொலிந்த சீமான்,
மங்களமெய் மூர்த்தியாய் வணங்கினர்க்கு மாறினையும்
மணமே செய்யும்
எங்கள்குரு வீரேசன் இணையடியை மனமொழியில்
இணைத்து வாழ்வாம்.

## ஸ்ரீ வீரசேகரம்.

சத்தியஞான அனந்த அத்விதீய பரமாத்மாவாகிய பகவான் நாராயணர் கற்பாதியின்கண்ணே தமப்பிரதானமாகிய க்ஷேத்திரங்களையும் சிற்பிரதான மாகிய ஜீவர்களையும் பாவனை ஞான கருமானுசாரமாகச் சிருஷ்டித்தார்; "தமப்பிரதானமாம் க்ஷேத்திரங்கட்கும் சிற்பிரதானமாஞ் சீவர்கடமக்கும், பரம் காரணமாம் பான்மையைப்பற்றும், பாவனை ஞான கருமங்களினால்" என ஸ்ரீமதாசிரியரும் கூறியுள்ளார். தம்மாற் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளின் சொர்க்கமோக்ஷப்பொருட்டு உபாயமாகக் கொள்ளத்தக்கனவாயிருக்கும் கருமஞானவடிவ வேதார்த்தத்தை மரீசியாதிகட்கும் சனகாதிகட்கும் உபதேசிததனர்; அவர்களானே யுபதேசிக்கப்பட்டுப் பிராணிகளானே யனுஷ்டிக்கப்பட்டுவந்த அந்த வேதார்த்தமானது இராவணுதி துஷ்டர்களானே யனுஷ்டிக்கப்படாதவாறு இடையூறு செய்யப்பட்டதை யுத்தேசித்து அதை இரக்ஷிக்கவேண்டுமென்னு மிச்சையினாலே மாயையைத் தன்வயப்படுத்திய சத்திய சங்கற்பமுடைய பகவான் சங்கற்பத்தினாலே இனிது சம்பாதித்துக்கொண்ட அறியாமையுடையவராகிக் கௌசல்யதசரத குமாரராயவதரித்தார். அவதரித்துப் பின் ஸ்ரீ வசிஷ்டபகவானது சீடன்போ னடித்து நானாவிதமான கதைமாலைகணிறைந்த அவரது சம்வாதத்தால் ஞானமிருதரசத்தையும் வெளிப்படுத்தினர், கருமத்தையும் பிரவிருத்திப்பித்தார் அரக்கர்குலத்தை நாசஞ்செய்யும் வாயிலாக அவ்விரண்டையுமே காப்பாற்றியருளினர். ஆண்

# வாசிட்ட நிர்ச்சந்தேக ஞப்திவியாக்யானம்

## இந்நூல் வரலாறு.

இவ்வுலகின்கண்ணே சகலசகத்திற்கு மேககாரணமான சச்சிதாநந்தமயப் புருடோத்தமனாகிய பகவான் குணத்திரயமயமான தனது லீலையைச் செய்பவராகி ரசோகுண சம்பந்தமான சதுர்முகன் முதலிய தனது மூர்த்திபேதங்களால் விசித்திரமான பூதபௌதிகப்பிரபஞ்சத்தைச் சிருட்டித்துச் சீவரூபமாகப் பிரவேசித்த சீவர் சீவிக்குநிமித்தமாகவே யோகக்ஷேமத்தைக் கற்பித்தற்குச் சகல சகத்பாக்கியத்தையும் விபாகஞ் செய்வதான மச்சகூர்மாதி சாத்துவிதாவதார பேதங்களைத் தரித்தார். அவற்றிற் பவித்திரமான சகத்திரயங்களிற் சிறிதவதாரங்கள் கிருதகிருத்தியமாகி யுபசாந்தம் பெற்றிருக்க, இராவணன் முதலிய விராட்சதர்களாற் றுபமுறுநின்ற சகத்திரயத்தை யிரக்ஷிப்பதற் கப்பகவானே சகல கலியாண குணங்களோடிரமித்து ஸ்ரீராமரென்னு நாமத்தோடுஞ் சூரிய குலத்துதித்தார். அவர் தாமே தடையறச் சகலவித்தையு முபநிஷத்தும் வந்தமனதுடையரேனுஞ் சம்பிரதாயத்தைத் தெரிவித்தற்குக் குருகுலத்தில் வசித்து, குருமுகத்தினின்று நன்றாய்க்கற்ற சகலசாத்திரதத்துவஞ்ஞராய்ப் பின் வெளிப்பட்டார். வெளிப்பட்டவிராமர் சற்கருமங்களிற் பிரவிருத்தியுற்று மகாமோகமய சம்சாரசாகரத் தாழ்ந்து மிதந்து துன்புறுமுலோகத்தைப்பார்த்துப் பரமகாருண்ணியத்தா லதைக்கரையேற்ற வேண்டுமென்னு மிச்சையுடையராய்த் தம்முகத்தாலும் தற்குரு முகத்தாலும் வாராநின்ற பிரசினோத்தரங்களினால் முக்திமார்க்கத்தை யுபதேசித்தார். அத்தன்மையான இவ்வுபதேசத்தைக் கவிகுலகுருவாகிய வான்மீகிபகவான் உலோகாநுக்கிரகநிமித்தம் விடர்க் கிளம்பாவைய ருரைபோன்ற காவியப் பிரபந்தமாக வடமொழியி லருளிச் செய்தார். இதை வீரை யாளவந்தாரென்னு முனிவர் தமிழ்பாவினமாக மொழிபெயர்த்தருளினார். வசிட்டோபதேச மன்னிகிற்றலின் வாசிட்டமென்னுமிது மோக்ஷசாத்திரமாமிதில் வைராக்கிய முமுக்ஷுற்பத்தி திதி யுபசாந்தி நிருவாணங்களென்னும் ஆறு பிரகரணங்களுள. அவற்றில் முதற் றேடதரிசனத்தாற் கண்டகேட்ட விஷயங்களில் வைராக்கியமு மதன்பின் முமுட்சுத்துவமும் அதன்பின் முமுக்ஷுவென்னு மதிகாரியாய்த் தத்துவமறிய விச்சித்த மனமுடையனுக்குச் சகவுற்பத்திதிதி வுபசாந்திகளாற் றத்துவஞானவுபதேசமுந் தத்துவஞானந் திடப்படின் நிருவாணமுமாமென்று மிதுவே கிரமமாம்.

---

ஓம் மகாகணபதயேநம:

# ஞான வாசிட்டம் மூலமும் உரையும்.



மங்களம்.

திங்களணி வேணியனார் உமையோடுந் திளைத்தாடித்
திருந்து வேதம்,
பொங்குலகும் போற்றிசெய நாற்றிசையும் புகழ்பெருகப்
பொலித்த சீமான்,
மங்களமெய் மூர்த்தியாய் வணங்கினர்க்கு மாறினையும்
மணமே செய்யும்
எங்கள்குரு வீரேசன் இணையடியை மனமொழியில்
இணைத்து வாழ்வாம்.

## ஸ்ரீ வீரசேகரம்.

சத்தியஞான அனந்த அத்விதீய பரமாத்மாவாகிய பகவான் நாராயணர் கற்பாதியின்கண்ணே தமப்பிரதானமாகிய க்ஷேத்திரங்களையும் சிற்பிரதானமாகிய ஜீவர்களையும் பாவனை ஞான கருமானுசாரமாகச் சிருஷ்டித்தார்; "தமப்பிரதானமாம் க்ஷேத்திரங்கட்கும் சிற்பிரதானமாஞ் சீவர்கடமக்கும், பரம் காரணமாம் பான்மையைப்பற்றும், பாவனை ஞான கருமங்களினால்" என ஸ்ரீமதாசிரியரும் கூறியுள்ளார். தம்மாற் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளின் சொர்க்கமோக்ஷப்பொருட்டு உபாயமாகக் கொள்ளத்தக்கனவாயிருக்கும் கருமஞானவடிவ வேதார்த்தத்தை மரீசியாதிகட்கும் சனகாதிகட்கும் உபதேசித்தனர்; அவர்களானே யுபதேசிக்கப்பட்டுப் பிராணிகளானே யனுஷ்டிக்கப்பட்டுவந்த அந்த வேதார்த்தமானது இராவணாதி துஷ்டர்களானே யனுஷ்டிக்கப்படாதவாறு இடையூறு செய்யப்பட்டதை யுத்தேசித்து அதை இரக்ஷிக்கவேண்டுமென்னு மிச்சையினாலே மாயையைத் தன்வயப்படுத்திய சத்திய சங்கற்பமுடைய பகவான் சங்கற்பத்தினாலே இனிது சம்பாதித்துக்கொண்ட அறியாமையுடையவராகிக் கௌசல்யதசரத குமாரராயவதரித்தார். அவதரித்துப் பின் ஸ்ரீ வசிஷ்டபகவானது சீடன்போனடித்து நானாவிதமான கதைமாலைகணிறைந்த அவரது சம்வாதத்தால் ஞானமிருதரசத்தையும் வெளிப்படுத்தினார், கருமத்தையும் பிரவிருத்திப்பித்தார் அரக்கர்குலத்தை நாசஞ்செய்யும் வாயிலாக அவ்விரண்டையுமே காப்பாற்றியருளினர். ஆன்

டுப் பிரஹ்மத்திற்கே பிரஹ்மவித்யாதிக ரித்தன்மை அறிவித்தற்பொருட்டு ஸ்ரீ ராமர் சீடனுனதாம், "இவையெலா மெழுந்திங் கிலங்குதன் முன்னர், நவையறு பிரமமேநண்ணும் நன்கது, உவமறு தன்னையே புணர்ந்தது யானப், பவமறு பிரமமே படிவமா யுள்ளேன்" "ஆகலினது வெலாமாயதுகண்டாய்" என மறையுமறைகின்றது. "சர்வதுவைதாகார அஞ்ஞானபரிணமங்களில் தன்னுடைய ஆபாசம் அந்தப்பலகத்தில் இனிதாரூடமாகச் சாக்ஷித்வ ஈசுரத்வ காரணத்வ அந்தர்யாமித்வரூபத் தன்மையை யாத்மா அடைகின்றது. அதுவும் உலகத்திருந்தபோதினும் உண்மையாயினும் அதனோடு சம்பந்தப்படாதாம் அசங்காகமவிரோதம் வருதலின், ஆகலின் ஈசுரத்வாதி கற்பிதம்" என வார்த்திகத்துளதாம். அவ்வசிஷ்டராம சம்வாதத்தைத் திவ்யஞான சம்பத்தையுடைய ஸ்ரீவான்மீகபகவான் முப்பத்தீராயிரம் சுலோக வடிவமாக இயற்றினர். வைராக்கிய முமுக்ஷு விவகார ஜகதுற்பத்தி ஸ்திதி உபசாந்தி நிர்வாணப்பிரதிபாதக ஆறுபிரகரணப் பேரலைகளோடு கூடியதும், அநேக ஆக்கியான வரதரங்கங்களோடுற்றதும், விவேக வைராக்கிய உபரதி விஞ்ஞானதி இரத்தினங்கட்கிடமும், ஆகிய அவ்விவ் வாசிஷ்ட சமுத்திரத்தை மந்தமதிகள் கடக்க முடியாதவாறுகண்டு பரமகாருணிகராய காஷ்மீரபண்டிதரென்னும் ஸ்ரீ அபிநந்தாசாரியர் ஆறுயிரம் சுலோகங்களை யதினின்றும் தொகுத்தனர், அவற்றையே வீரை ஸ்ரீ ஆளவந்தார் முனிவர் கீர்வாணவலியிலாதுகிளர் தமிழ்மாக்கண்மேலுள்ள காருண்யச்சிறப்பால் செந்தமிழ்கவிதையிற் செய்துவைத்தனர், அவ்விவ் வரியஞானவாசிஷ்டத்தை மந்தமதியினர்க் கெளிதுபுலப்படுமாறு ஸ்ரீ வீரஞானேசதேசிகன்றந்த மதியளவு ஸ்ரீ வீரசேகரமெனப் பெயர்தந்தே யுபகாரப்பொருட்டு வியாக்கியானிப்பேன்.

## விநாயகர் வணக்கம்.

பெண்மை பாதியன் பெற்ற களிற்றினை
யண்மை தூர மறவகத் துன்னுவாம்
திண்மை ஞானச் சிறப்புயர் வாசிட்ட
முண்மை யாக வொருங்குரை செய்யவே.

(ப - ள்.) திண்மை=ஐயந்திரிபு இலாமல் அப்பிரதிபந்தகமாய்ப் பிரத்தியக்ஷமாக வுண்டாகும், ஞானம்=சாக்ஷாத்கார அனுபவத்தையும் அதன் அந்தரங்க பகிரங்க சாதனங்களையும் கூறுவதில், சிறப்பு=மற்றைய எல்லா அத்தியான்மிக சாஸ்திரங்களிலும் விசேடமாக இருத்தலின், உயர்=சர்வவேதாந்த மூர்த்தன்யமாய் மேம்பட்டிருக்கும், வாசிட்டம்=ஸ்ரீ வசிஷ்ட ஸ்ரீ இராகவர் சம்வாதரூபமாகிய இஞ்ஞானவாசிட்ட நூலை, உண்மையாக = எவ்வாறு கீர்வாணபாஷையில் ஸ்ரீ வான்மீகி பகவான் அருளியிருக்கின்றாரோ அவ்வாறே அருத்தமுங் கருத்தும் மாறுமலும் வேதாந்த சம்பிரதாய விரோதமில்லாமலும், ஒருங்கு=காஷ்மீர பண்டிதர் சங்கிரகித்து ஆறுயிரங் கிரந்தங்களையும்,

உரைசெய்ய = செந்தமிழ்ச் செய்யுளால் இனிமையாகப் பாடும்பொருட்டும், இடையூறின்றி யினிது முடியும் பொருட்டும், பெண்மைபாதியன் = பராசக்தியைப் பாதிபாகத்திற் கொண்ட பெருமானாகிய பரமசிவன், பெற்ற = தவம் புரிந்து உலகமுய்ய உதவிய, (இருவரும் தவம் புரிந்தே பரமான்மாவைப் புத்திரராகப் பெற்ற புராணவசன மனுசரித்துத் தான் பெண்மையாதியன் என்றதாம்) களிற்றினை = தாம் எப்போதும் விசுவரூபமென்று எல்லாரும் உணர்ந்துய்யக் கொண்ட சகலாகிருதியை யுடைய, கயமுக அசுரனால் வந்த இடர்தீர்ந்து சுர நராதியுலகு சுகிப்பக்கொண்ட திருமேனியையுடைய பிரஹ்ம விஷ்ணு ருத்திராதி சர்வதிருசியமும் தோற்றற்கும் ஒடுங்குதற்குப் வாயிலாக இலங்கும் கஜமுகப் பெருந்தகையை, அண்மை தூரமற = தற்பதபரோக்ஷ துவம்பத அபரோக்ஷமதாய்ச் சர்வகதமா யிருத்தலின் சமீபதூரமிலாது தன் வடிவமாகவே பஞ்சகோச பிரபஞ்ச கற்பனைகள் கடந்து, அகத்து = சுத்த சத்துவ அந்தக்கரணத்தில், உன்னுவாம் = அகண்டாகார விருத்தியால் பலவியாத்தியிலாமல் விருத்திவ்யாத்தியாற் சந்ததம் சிந்திப்பாம்; என்பதாம்.

பாவினங்களின் பரிமாணம்.

போற்றி ராமன் புகல்வை ராக்கியம்
தோற்று நூற்றிரு பத்திரண் டாஞ்சுகன்
சாற்று சீரிருபத் தைந்து தற்பதத்
தேற்றம் வேண்டினர் சீரிரு பத்தெட்டே. (2)

(ப - ள்.) போற்று = அறிவுடையார் யாவரும் நிரந்தரம் தோத்திரம் செய்யும், இராமன் = எல்லாருடைய மனங்களும் ரமிக்கும் படியான அநந்தகலியாண குணங்கணிறைந்து யாவற்றையும் அனுஷ்டித்துக்காட்டும் ஸ்ரீ இரகுகுல திலகன், புகல் = நம்மனோர் பொருட்டுக் குறையுள்ளவன்போல் நடித்துக் காட்டி மகரிஷிகளின் சந்நிதியிற் சித்தருந் தேவரும்புகழப் பதினொருவகையாய்ப் பிரித்துக்கூறிய, வைராக்கியம் = வைராக்கியப் பிரகரணமென்னும் ஞானவாசிட்ட முதலவயவம், தோற்று நூற்றிருபத்திரண்டாம் = நூற்றிருபத்திரண்டு கவிதைகளாக யாவருக்கும் வைராக்கியந் தோற்றுமாறு தோற்றும், சுகன்சாற்றுசீர் = ஸ்ரீ வியாசபகவானது அருந்தவப் புதல்வராகிய சுகப்பிரஹ்மத்திற்கு ஜனகமகாராஜாவினாலே பரிசோதித் துபதேசிக்கப்பட்ட சிறந்த ஞானமணமணக்கும் சுகோபாக்கியானம், இருபத்தைந்து = இருபத்தைந்து செய்யுட்களாகத் தோற்றும், தற்பதத்தோற்றம் வேண்டினர் சீர் = தற்பதமாகிய பரமசிவ ஸ்வருபப் பிரஹ்மானந்தத்தில் விசிராந்தியடைந்து கிருதகிருத்தியர்களாக வேண்டுமென்று சந்ததம் நிமித்தமில்லாமல் இயல்பா யிச்சையுற்ற முமுக்ஷுக்களின் இலக்கணம் கூறும்முமுக்ஷு விவகாரப்பிரகரணம், இருபத்தெட்டே = இருபத்தெட்டு யாப்புகளாகத் தோற்றும். (எ - ம்.) (2)

ஞான விண்பக னாற்பத்து நாலதா
மான லீலை மகிமைதொண் ணூறதா
மான வூசியு மையெட்டு மேழுமா
மீன மற்றசீ ராய்ந்தவ ரீரைந்தே. (3)

(ப - ள்.) ஞானவிண்மகன் = கர்த்தவயமிலாது யாவையுஞ்செய்து காலனுக்ககப்படாத ஞானககன குமாரரோ பாக்கியானம், நாற்பத்து நாலதாம் = நாற்பத்துநான்கு செய்யுட்களாலாம், மானலீலை = ஸ்ரீ சரசுவதிதேவியின் றிருவருளினாலே யாவரும் புகழும்படியிலங்கிய லீலோபாக்கியானத்தில், மகிமை = திருசியதோடத்தை யகற்றும் பிரபாவம், தொண்ணூறும் = பத்திலாநூறு பாவினங்களாலாம், ஆனவூசி = முன்னர் நீலகிரிபோற்பருத்திருந்து ஆசையாற்றவம்புரிந்து சிறிதினுஞ் சிறிதானரோகரூப அயவிகார வரலாறும், உம் = பின்னர் நிராசையோடும் பெருந்தவம் புரிந்து புராதனாகிருதியையும் ஆனாதிஞானாகிருதியையும் பெற்றுக் கம்பீரமாய் ஞானவிநோதியாய்ச் சஞ்சரித்தவரலாறும் கூறும் கற்கடிகதை, ஐயெட்டு மேழுமாம் = நாற்பத்தேழு செய்யுட்களாலமையும், ஈனமற்ற சீராய்ந்தவர் = ஸ்ரீ கைலாசபதியின் றிருவருளாலே ஜனித்து இந்துமறையவரின் குமாரராய். அக்காரணங் கொண்டே ஐந்தவரெனப் பெயர் பெற்ற பதின்மரும் சாமந்தபதமே முதற் சதமகபதமீறாக ஈனமுற்ற பதங்களெனத் தள்ளி எவ்வினமுமில்லாமற் சிறப்பே பொருந்திய பிரஹ்மாண்ட ஐசுவரியத்தை யாக்கும் பிரமனாக ஆராய்ந்து பெருந்தவம் புரிந்து அடைந்தவர் சரிதை, ஈரைந்து = பத்துப்பாட்டுகளாலாம். (எ - ம்.)

வஞ்ச விந்திரன் வன்கதை யொன்பதாம்
னெஞ்சி னுக்கிரு பத்திரு நீள்கவி
தஞ்ச பாலகன் றன்கதை யெட்டதா
மெஞ்சு சித்த னிருபது மாறுமே. (4)

(ப - ள்.) வஞ்சவிந்திரன் = பெயர் மாத்திரத்தானே இந்திரனென [illegible]ந்து பெருவஞ்சஞ்செய்து தீரமனத்துடனிருந்த அவன், வன்கதை = மனத்தின் செயலேசெயல் மற்றவற்றின்செயல் கௌணமெனப் புலப்படுத்திய ச[illegible]தை, ஒன்பதாம் = ஒன்பது கவிதைகளாலாம், நெஞ்சினுக்கு = மனத்தினுக்கு [illegible] சொரூபவைபவமும் வேறுவேறு வகையானே விளங்குமதற்கு வேறுவேறு வகையான விசேடபயனுறுதலும் போதிக்கும் மனத்தின்கதை, இருபதிரு நீள்கவி = இருபத்திரண்டு செவ்விய செய்யுட்களாலாம். தஞ்ச பாலகன்றன் = அன்னையையே அருஞ்சரணடைந்து அவன் வாக்கியத்தை யறியாமையால் நம்பிய குழந்தைக்குத் தாய்மெய்போன் றெண்ண முழுப்பொய்யே சொன்ன, கதை = அறியார்க்கு மெய்யாயுலகம் பொய்யாகவே போவதையுணர்த்தும் பாலன்கதை, எட்டதாம் = எட்டு எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவி[illegible]தங்களாலாம், எஞ்சு = லவணராஜாவிற்கு மானசீய இராஜசூயயாகத்தின்

பயனுய பெருந்துயரைத்தந்து தான் சேடித்து நின்ற, சித்தன்=தேவலோகத் திருந்துவந்த சித்தனது காரணத்தால் நடந்தலவணேபாக்கியானம் இருபதும் ஆறுமே=இருபத்தாறு இனிய கவிகளாலாம். (4)

துன்னு முற்பத்தி சொல்லெழு பத்தொன்றும்
நன்னர் வெள்ளியு நாற்பதோ டேழதாம்
அன்ன தாமனு மையெட்டு மூன்றுமாம்
இன்ன வீம னிருபது மைந்துமே. (5)

(ப - ள்.) துன்னும் = மனத்தினுனே வாசனைக்குத் தக்கபடி நெருங்கி விசாலித்துண்டாம், உற்பத்திசொல் = உற்பத்திப்பிரகரண இதோபதேசம், எழுபத்தொன்றும் = எழுபத்தொரு இன்கவிகளாலாம், நன்னர் வெள்ளியும் = நன்மையான தியானஞ் செய்துகொண்டிருந்து வாசனையினுலே பலபிறப் படைந்து எமதருமராது திருவருளால் இன் பதமடைந்த பார்க்கவ உபாக்கியானம், நாற்பதோடேழதாம்=நாற்பத்தேழு நல்லயாப்புகளாலாம், அன்னதாமனும் = வாதனையின் இயக்கமற்றிருந்து சூட்சியால் நான் என்னும் வாதனை உதிதமாகக் கட்டுன்றிறந்த அத்தன்மையராய தாமவியாள கடர்தம் உபாக்கியானம், ஐயெட்டு மூன்றுமாம்=நாற்பத்துமூன்று செய்யுட்களாலாம், இன்ன வீமன் = இச்சூட்சியையுணர்ந்த சம்பிராசூரனுல் ஞானத்துடன் சிருஷ்டிக்கப் பட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவோடும் போர்புரிந்த வீமபாசதிடர்தம் உபாக்கியானம், இருபதும் ஐந்தும் = இருபத்தைந்து கவியினங்களாலாம். (5)

துதிகொ டாசுரன் ருெல்கதை நூற்றெட்டா
மதிநெடுங் கசன் வண்கதை நாலைந்தாந்
திதியெனுங் கதை யேழுஞ் சனகன்றன்
முதிய நற்கதை முப்பது மாறுமே. (6)

(ப - ள்.) துதிகொள் = பவித்திரமான இடத்தை யக்கினிபகவான் வாயிலாகப்பெற்றுப் பெருந்தவம்புரிந்ததால் யாவருக்குந்துதிக்கும்படி வாழ்ந்த தாசுரமுனிவரது, தொல்கதை = ஸ்ரீ வனதேவதையின் மைந்தருக்குப் பிரகரணத்து முறையேசெய்த வுபதேசம் நிறைந்த உபாக்கியானம், நூற்றெட்டாம் = அஷ்டோத்தரசத அருஞ்செய்யுட்களாம், மதநெடுங்கசன் = அதிசூக்குமதீர்க்கபுத்தி விருத்தினுலே பரமான்மாவை தன்சொரூபமாகப் பேதமின்றித் தருமமேக சமாதியிலனுபவித்துத் தன்னைத்தவிர எங்குமே யொன்றுங்காணுத தேவதேசிகர் திருமைந்தனது, வண்கதை = அருமை யனுபூதி நிறைந்த சரிதை, நாலைந்தாம்=இருபது செய்யுட்களாலாம், திதியெனுங்கதை= திதிப்பிரகரண இதோபதேசமாய்ப் பெரியோர் சொருபமும் நடையும் குணமும் அதிகாரி செய்யவேண்டிய கடமையும் கூறும் அரியகதை, ஏழு=ஏழுபாக்களாலாம். சனகன்றன் முதியநற்கதை = ஆகாசபலம்போலத் தெய்வசம்பத்தால் சித்தகீதைச் சிரவணமாத்திரத்தானே வெஞ்சினக்கருடன் ஒலி

கேட்ட பாம்பென்னக் கலங்கி ஆராய்ந்து சொரூபத்தில் விசிராந்தியடைந்த சனகராஜாவினது திடஞானபோதக வினிமையான சரிதை, முப்பதும் ஆறுமே = முப்பத்தாறு கவிகளா லமையா நிற்கும். (6)

உரிய புண்ணிய னொன்பது நாற்பது
நரகின் மாவலி நாலுட னைம்பதாம்
பிரக லாதன் பிழைப்பெழு பத்திரண்
டரிய காதியு மைந்துடன் முப்பதே. (7)

(ப - ள்.) உரிய புண்ணியன் = மகா விவேகத்திற்கும் சாந்திக்கும் உரியவனு யிளைய சகோதரனுக் கனுக்கிரகம்புரிந்த புண்ணியன் அருள்பெற்ற பாவனன் சம்பாஷணை, ஒன்பது நாற்பது = ஒன்று குறைய ஐம்பது பாக்களாலாம், நரகில் = பரமமென்பதே யறியாமற் பெரும் புண்ணியத்தையும் பேராயுளையும் பெருவலியையும் பெற்ற, மாவலி = மகாபலிச் சக்கிரவர்த்தியென அபுத்தி பூர்வபுண்ணியத்தால் அநேககோடிகாலம் அகிலத்தையாண்ட விவேகப் பிரதானனது சரிதை, நாலுடனைம்பதாம் = ஐம்பத்தினுலு பாசுரங்களாலமையும், பிரகலாதன் = எண்ணினவர்தமக்கும் விசேஷ சந்தோஷத்தையுண்டாக்கி ஸ்ரீபகவற்பக்தி விசேடத்தால் ஐயாயிரம் வருடம் அசம்பிரஞ்ஞாத சமாதி யானந்தத்தை யனுபவித்த சிரஞ்சீவியினது, பிழைப்பு = பக்திவிசேடமும் ஆராய்ச்சியும் ஸ்ரீபகவதனுக்கிரகமும் பொலியும் புண்ணிய சரிதம், எழு பத்திரண்டு = எழுபத்திரண்டு கவிகளாலாம், அரியகாதியும் = அருமையான தவம்புரிந்து ஸ்ரீமாயவன்றிருவருளால் மாயாவிலாசத்தைக்கண்டு மாயையையொழித்த காதிப் பிராஹ்மணரது கதை, ஐந்துடன் முப்பதே = முப்பத்தைந்து செய்யுட்களாலாம். (7)

சித்த மாறித் தெளிந்த வுத்தாலக
னொத்த வெண்பதுக் கொன்று குறையவாஞ்
சுத்த நாற்பது மாறுஞ் சுரகுவாம்
பத்து மேழுமாம் பாசவி பாசரே. (8)

(ப - ள்.) சித்தமாறித் தெளிந்த ஒத்த உத்தாலகன் = மனத்துடன் மிகவும் போராடிக் கஷ்டத்தை யடைந்து யோகவலியால் வென்று நிருவிகற்ப சமாதிபெற்றுத் தெளிந்து ஐயம் திரிபற்று சர்வபதார்த்தங்களிலும் அவற்றின் இன்பங்களிலும் வியப்பொன்றின்றிச் சமதிருஷ்டியையடைந்த உத்தாலக முனிவரது அரியகாதை, எண்பதுக்கொன்று குறைவாம் = எழுபத்தொன்பது செய்யுட்களாலமையும், சுத்த சுரகு = விவகாரவேளை யெலாம் சமாதியே பெற்று ராஜாங்கஞ் செலுத்திய தூயகுணச் சுரகுமன்னன் சரிதை, நாற்பதும் ஆறும் ஆம் = நாற்பத்தாறு செய்யுட்களாலமையும், பாசவியாசர் = இந்நாமம் வாய்ந்த இரு நேயரும் பெருந்தவம்புரிந்து சம்பாஷணையா லரிய வுண்மையடைந்த வரலாறு, பத்துமேழுமாம் = பதினேழு பாக்களாலாம். (8)

ஏத மற்ற வெழுபது மாறுமே
வீத கவ்வியான் மேலெழு பத்தொன்றும்
போத முந்துப சாந்தி புசுண்டனு
மோத நூறு கவியிலொன் றில்லையே. (9)

(ப - ள்.) ஏதமற்ற வீதகவ்வியன் = பூர்வம் சிவகணமாக இருந்து சர்வ பவித்திரமாகிவந்து சித்த விசிராந்தியின் பொருட்டுச் சங்கத்தியாகமும் பிராணத்தடையும் அதாற்பெறு நிருவிகற்பசமாதியு மடைந்து புற்றுமூடி வெளியான வீதகவ்விய முனிவரது உபாக்கியானம், எழுபதுமாறுமாம் = எழுபத்தாறு கவிகளாலாம், போதமுந்து ஞானத்தினது மகிமையின் மேன்மையினாலே ஆகாச சமனாதிகளுந் துச்சமெனக் காட்டும், உபசாந்தி=உபசாந்தியைத் தருமிதோபதேசம், மேலெழுபத் தொன்றும்=மேலாகிய ஞானரசம் வாய்ந்த எழுபத்தொரு செய்யுட்களாலாம். புசுண்டனும் ஓத=பிராணவிருத்தி யனுசந்தானங்கொண்டு மிகுநீள்காலம் சித்த விசிராந்தியை யடைந்திருக்கின்ற மகா யோகீசுரனுடைய பெரியமகிமைச் சரிதத்தைப் புகழ்ந்து ஓதுதற்கு, நூறு கவியி லொன்றில்லை=தொண்ணூற் றொன்பது செய்யுட்களாலாம்.(எ-று.) (9)

தேவ பூசை சிறந்த வெழுபதா
மேவும் வில்வ மிகுபதி னறதா
மேவ மற்ற சிலைக்கதை யெட்டதாந்
தாவி லர்ச்சுனன் சாற்றிரு பத்தொன்றே. (10)

(ப - ள்.) சிறந்த தேவபூசை = சாக்ஷாத்தாகப் பரமசிவனே பார்வதி தேவியாரோடும் வந்து ஸ்ரீ வசிஷ்டபகவானுக் குபதேசித்த தேகாபிமானம் விட்டுச் சித்த விசிராந்தி சாதக விசேடமான தேவபூசோ பாக்கியானம், எழுபதாமேவும் = எழுபது செய்யுட்களை யுடைத்தாகும், மிகுவில்வம் = மிகுந்த மகிமைவாய்ந்த அத்விதீய பரிபூரணப் பிரஹ்ம சொரூபமே எல்லாவடிவமாகவு மிருக்கின்ற தென்றுணர்த்தும் வில்வபலக்கதை, பதினறதாம்=பதினறு செய்யுட்களாலாம், ஏவமற்ற = அசங்கத் தன்மையினாலே யாதொரு திருசியத்தினது சம்பந்தத்தையும் மடையாம விருத்தலின் குற்றமென்பதே பற்றாமல், சிலைக்கதை = சிலையைப்போலும் சித்தானது அசையாமல் அதாவது ஜகத் சித்திரங்கள் கோடானுகோடி தோற்றியபோதிலும் விகாரமுறாமல் அகண்டைகரசமும் நிருவிகற்பகனமுமே யுடையதாம் எனவுணர்த்துங்கதை, எட்டதாம்-எட்டுத் திருவிருத்தங்களாலாம், தாவிலர்ச்சுனன் சாற்று=போர் பெரிதுவந்தும் பூரணன்றன் றிருவருளால் எக்கலக்கமும் அடையாமல் அவ்வமராலும் சித்தவிசிராந்திமாறாத அர்ச்சுனனது வருஞ்சரிதை சாற்றுதல், இருபத்தொன்று=இருபத்தொரு செய்யுட்களாலாம். (எ-று.) (10)

சதவு ருத்திரன் றன்கவி முப்பதா
முதவு மையைந்தோ டொன்றென்பர் பேய்க்கதை
முதுப கீரதன் முப்பத்து மூன்றதா
மெதிர் சிகித்வச னெண்பது மும்மையே. (11)

(ப - ள்.) சதவுருத்திரன்றன் கவி=திடசமாதியாற் சத்தியசங்கற்பத்தை யடைந்து வேண்டியதைத் தானே சிருஷ்டித்து ஜன்மபரம்பரை சங்கற்பமாத்திரமெனக் காட்டு மிம்முனிவரன் சரிதையைக் கூறுங் கவிகள், முப்பதாம்= மூன்றுபத்தாம், உதவும் பேய்க்கதை = சர்வ சமுசயங்களையு நீக்கி விடையுதவும் படியான வேதாள மன்னசம்வாதம், ஐயைந்தோடொன் றென்பர் இருபத்தாறு செய்யுட்களா லாமென்றறைவர் பெரியர். முதுபகீரதன்=முதிர்ந்த வைராக்கியத்தை யடைந்து அரசையும் பகைக்கீந்து முயன்று ஞானியாய்த் தவத்தாற் பாகீரதியை இம்மண்ணுலகிற் றந்த வீரராஜனது பாக்கியானம், முப்பத்து மூன்றதாம் = மூன்றுபத்தொரு மூன்று செய்யுட்களா லமையும், அதிர் சிகித்வசன் = தனக்கிதத்தை யுபதேசித்த நாயகியோடு மெதிர்த்து அவள் இதோபதேசத்தை நம்பாமல் காட்டில் வருந்தித் தவங்கிடந்து அந்நாயகியாலேயே அதிதிட ஞானியான இராஜரிஷியின் றிவ்யசரிதை, எண்பது மும்மையே=இருநூற்று நாற்பது செய்யுட்களாலமையும். (எ-று) (11)

புகல் கசன் பதின்மூன்று பொய்யாமவன்
நிகழு நாலைந்து நீண்ட விரதங்கள்
இகலில் பத்தொன்ப தாமிக்கு வாகுவின்
அகில ஞான மறுபது மாறுமே.

(12)

(ப - ள்.) புகல்கசன் = தன்குறைகளைப் புகன்ற கசனைநோக்கி ஆசிரியர் மனம்விடுதலே சகலமும் விடலாமெனவும் எளிதிலது முடியுமெனவும் உபதேசிக்க அவ்வாறே யியற்றிய தேவகுருமகனது சரிதை, பதின்மூன்று = பதின்மூன்று செய்யுட்களா லமையும், நிகழும் பொய்யாமவன் = அகங்காரத்தோடு கூடி விவகரிக்கும் யாவரும் துக்கியரேயெனக் காட்டும் மித்தியா புருட ஆக்கியாயிகை, நாலைந்து=இருபது பாவினங்களா லிவையும், இகலில் = சமாதியில் லாவிடினும் அகங்காராதி பகைகளொன்றுஞ் சித்த விசிராந்தியைக் கெடாதபடி, நீண்டவிரதங்கள் = அதிதிடமான புத்தியாற் செய்யத் தக்கனவாமென ஸ்ரீ பரமேசுரனாற் பிருங்கிசற்கு உபதேசிக்கப்பட்ட மூன்று விரதங்களைக் கூறும் உபாக்கியானம், பத்தொன்பதாம் = பத்தொன்பது செய்யுட்களாலமையும், இக்குவாகுவின்=சர்வகாரண மியாதெனத்தேர்ந்து அறியாத இரகுவம்ச முதல்வனுக்கு மனுபகவான் அனுக்கிரகித்த, அகிலஞானம்= ஆசிரியனது னுகத்தானே அடையத்தக்கனவான ஞான அதன் சாதனங்கள் அனைத்தையும் பிரதிபாதிக்கும் இவ்விதிகாசம், அறுபதும் ஆறுமே=அறுபத்தாறு யாப்புகளாலமையும். (எ-று.)

(12)

மானு வேடனு மற்றிருபத் தைந்தா
மான யோக மறுபது மெட்டுமோ
மோன வுண்மை மொழிந்துள வாசிட்ட
ஞான நூற்கதை நாற்பது மூன்றுமே.

(13)

(ப - ள்.) மானு வேடனு மற்று=மானைக்காணோமென்று பின்றொடர்ந்தேகிய வேடன் ஆங்குறை முனிவனைக் கண்ணுற்றுக் கேட்பத் தானிருக்குந் துரியத்தைக்கூறி இலௌகிகமறந்த தன்மையைத் தெரிவிக்கு மிக்காதை, இருபத்தைந்தாம்=இருபத்தைந்து செய்யுட்களாலாம், ஆனயோகம்=சர்வகிரந்த சாரார்த்தத்தையும் தொகுத்துக் கூறும் நிருவாணத்தின் இதோபதேசம், அறுபது மெட்டுமாம்=அறுபத்தெட்டுச் செய்யுட்களா லமையும், மோனவுண்மை மொழிந்துள = மறுகுவாதனைகள் தீர்ந்த மவுனத்தை யொழிய வேறொரு கதி நல்லதில்லை யுணர்வன வுணர்ந்தவாகும் என ஞானவரம்பின் சாதனத்தை சாங்கோபாங்கமாக விஸ்தரித்துக் கூறும், வாசிட்ட ஞானநூல் = ஸ்ரீ வசிஷ்டபகவானது வாக்கியாமிருதமாயும் ஸ்ரீ மகாவிஷ்ணுவே ரூபாந்தரமாய்க்கேட்டதாயும் உயர்ந்த ஆதிகவியின் வாக்குதித்த தத்துவமாயும் விளங்கும் ஞான சாஸ்திரங்களிற் சிகாமணிபோன்ற இந்நூலிலுள்ள, கதை நாற்பது மூன்றுமே=கதைகள் நாற்பத்து மூன்றுகளேயாம். (எ - று.) (13)

பாக மார்பதி கம்பதி னொன்கதா
மாக வேயிரண் டாயிரத் தைம்பது
மாக விக்கைந் ததிகமிவ் வாசிட்டம்
யோக ஞானத்தி னுண்மை யுரைக்குமால். (14)

(ப - ள்.) பாகமார் பதிகம் = அதிபக்குவமாக உபோற்காதமாய் மற்றொன்று வந்து கலவாது மங்களமுட்படக் கூறும் பாயிரம், பதினொன்கதாம் = பதினொன்கு செய்யுட்களா லமையும், ஆக=இவையாவும் ஒருங்குசேர்ந்து, இரண்டாயிரத்தைம்பது மாகவிக்கைந்ததாகம் = இரண்டாயிரத் தைம்பத்தைந்து ஞானரசம் வாய்ந்த மகாகவிகள் நிவிறந்தலங் கரிக்கப்பட்ட, இவ்வாசிட்டம்= இந்த ஞானவாசிட்ட நூலானது, யோகஞானத்தின் = அதிதிட நிருவிகற்ப சமாதியாலுண்டாகும் சாக்ஷாத்கார அதனாலெய்தும் பிரம்மானந்த வோக்ஷ முதலியவற்றின், உண்மை யுரைக்கும் = யதார்த்த தத்துவத்தைப் பிரதிபாதிக்கும். ஆல்—அசை. (எ - று.) (14)

பாயிரம் முற்றியது.

---

ஓம் மகாகணபதயேநமஃ

# நூல்

# வைராக்கியப் பிரகரணம்.



## ஸ்ரீ வீரசேகரம் (அவதாரிகை.)

இனிதுதொடங்க இச்சித்தகிரந்தம் இடையூறிலாது முடிபெய்துவான், பாரம்பரியமாய்ப் படித்துணருவானுகவும் இஷ்டதேவதையை நமஸ்கரிப்ப

தாய மங்களாசரணத்தை நேரேகூறிப் பொருளால் நூலால் நுவலப்பட்ட பொருளை ஸ்ரீ பகவானுசிரியர் காண்பிக்கின்றார் :—பொன். அல்லது, இனித் தொடங்கஅவாவிய பெரியநூல் இடையூறிலாமல் இனிது முடியவும், எங்கு மினிதுலாவவும் வேண்டி "மங்களத்தை முதலினும் இடையிலும் ஈற்றிலும் உடையசாஸ்திரங்கள் வீரபுருடர்களை யுடையனவாகியும் ஆயுளோடுகூடியவர் களை யுடையனவாகியும் விளங்கும்" என மகாபாஷியத்திற் கூறியதும், சுருதி யிற் செய்யற்பாலதென வுணர்த்தப்பட்டதும், யாவற்றையும் விளக்கும் அறிவு ரசம்வாய்ந்த சர்வபிரத்தியக்கபின்ன பரப்பிரஹ்ம நமஸ்கார இலக்கணம் வாய்ந்ததும் ஆகியமங்களத்தைச் செய்துகொண்டு பொருளானே சாஸ்திரத்தி னது விஷயப் பிரயோஜனங்களைக் காண்பிக்கின்றார் :—பொன்.

## சம்சாரதரணி பவதாரிணி.

இனி வடநூலாசிரியராகிய ஸ்ரீ வான்மீகிபகவான் இயற்றற்கிச்சித்த கிரந் தம் நிர்விக்கினமாக நிறைவேறவும், குருசிட பாரம்பரியமாக யாவருஞ் சிர வண (உபதேச)ஞ் செய்யவும் சிஷ்டாசாரத்தாற்பெற்ற இஷ்டதெய்வ நமஸ் காரவிலக்கணமான மங்களத்தை யங்கீகரிக்கின்றார் :—பொன்.

பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த்
துன்னுவ தப்பொருள் தொழுதிறைஞ் சுவாம்.

(பதவுரை.) பொன்னுலகத்தினில் = சுவர்க்கலோகத்திலும், புவியில் = பூலோகத்திலும், அந்தரத்து = பூ சொர்க்கமத்திய அந்தரிக்ஷலோகத்திலும், என்னுடைய = எனது, உட்புறத்து = உள்ளிலும் வெளியிலும், மன்னு = விபு வாயுறையும், சிற்சோதியே = (எந்த) ஞானவடிவமாகிய ஆன்மா, இலங்குகின் றது = விளங்காநிற்குமோ, வடிவம் யாவுமாய்த் துன்னுவது = சர்வான்மகமா கச் செறிகின்றதோ, அப்பொருள் = அவ்வான்மாவை, தொழுதிறைஞ்சுவாம் = மீண்டும் மீண்டும் வணங்குவோம். (எ-று.)

## விசேஷ உரை.

(ஸ்ரீ-வி-ம்.) எது என்பது பிரசித்தப்பொருளை யியம்புதலான் ஆன்மாப் பிரசித்தமாகவிருத்தலின் ஆன்மா விசேடியமாகச் சம்பந்திக்கும், எனவுணர்த் தற்பொருட்டு எந்தஞானசொரூபமெனப்பட்டது; எவ்வான்மா எனக்குணர்த் தியவா றிலங்குகின்றதோ அதன்பொருட்டு நமஸ்காரமாமெனவுணர்க. அதன் வடிவமறிவிப்பான் அறைந்ததாம் சிற்சோதியென்பது. சிற்சோதி = யாவையு மிலக்கும் அறிவுவடிவமாம். தேசபரிச்சேதம் இன்றென்றுணர்த்தியது மன் னுமென்றது, சகலதேச வியாபியாமென்க. வியாபகத்தைச் சாதிக்கின்றது

பொன்னுலகத்தினிற் புவியிலந்தரத்து என்பது. தொகுத்து வகுத்துச் சொல்லியபொருள் கேட்போர்மதியில் எளிதாக ஏறுமென வெண்ணி விஸ்தாரமாகப் பிரதிபாதித்தபொருளைச் சுருக்கிக் காட்டுகின்றது உட்புறத்தென்றது. அல்லது லோகத்திரயத்திலும் உள்ளிலும் வெளியிலும் யாதிலங்குகின்றதோ அதன்பொருட்டு நமஸ்காரம்; "உள்ளும்புறம்பும் அவையாவற்றையும் வியாபித்து நாராயணர் விளங்குவர்" என சுருதியுமறைகின்றது, "பூதங்களினுள்ளிலும் புறம்பிலும் அசரத்திலும் சரத்திலுமே பரமனுளன்" எனமிருதியுமறைகின்றது. இத்தகைய ஆன்மசொரூபத்தில் ஞானிகளினனுபவமே பிரமாணமாமென ஸ்ரீ வான்மீகபகவான் குறிப்பிக்கின்றார் எனக்கிலங்குகின்றதென்பதாக; அற்றேல் ஆன்மாவிற்கயலாய்ப் பொருள்களிருத்தலின் பொருள்களினாலே பரிச்சேதம்வருமேயெனின், வாராதாம், வடிவமியாவுமாய்த் தானுவதாதலின், கற்பிதமாய சர்வதுவைதப்பிரபஞ்சத்திற்கும் வெள்ளிக்கிப்பியேபோல வடிவமாக எந்தப்பரமாத்மா விருக்கின்றதோ அதன்பொருட்டு நமஸ்காரம், வஸ்துபரிச்சேத நிராகரணஞ் செய்தமாத்திரையானே ஆன்மாவிற்குக் காலபரிச்சேதமும் நிராகரிக்கப்பட்டதேயாமென வுணரற்பாற்றும்; காலத்திற்குமுண்மையாகத் தன்னிடத்திற்கற்பிதமாந் தன்மையுண்மையின் ஆன்மா இருப்பு விளக்கங்கொடுத்தலின் ஆன்மாவை யது பரிச்சேதப்படுத்த முடியாதாம். அல்லது, விளங்காநின்ற லிங்கசரீரத்திலும் பூமிகாரிய தூலசரீரத்திலும் அவ்யாகிருத ஆகாச காரிய காரண சரீரத்திலும் அவற்றின் சாக்ஷி வடிவமாக யாது ஒளிர்கின்றதோ அதற்கு நமஸ்காரம்; பிறமுன்போலவேயாம். "அன்னியனிவனே யன்னியன் யானே என்னத் தேவதை யெவனுபாசிப்பனோ, அன்னவன் சிறிது மறிந்திலனந்தோ, இன்னவன் றெய்வப் பசுவென வியம்பலாம்" என்னும் சுருதியினானே ஆன்மாவிற் கயலாகத் தேவதையைக் காணில் நிந்தை காணப்படுதலினானும் "ஆன்மாவே தேவதை யனைவர்கடமக்கும்" என்னும் மனுமிருதியினானும், ஆன்மாவையே யிஷ்டதேவதையாக நமஸ்கரித்தனரென வறியலாம். அல்லது, பரமான்மா விசேடியமாகச் சம்பந்திக்கின்றதாம், எப்பரமாத்மா வென்பதாக; அதற்கு யீசுரத்தன்மையானே பிரசித்தமுண்மையின் அதற்கு ஜீவர்களிடத்தினின்றும் வேற்றுமை நீக்கப்படுகின்றது வடிவமியாவுமா யென்பதால், சர்வஜீவர்களின் பரமார்த்த சொரூபமாயிருக்கப்பட்டதன் பொருட்டு நமஸ்காரம், மற்றவை சமானமாம். அல்லது பூமியாகாசமென ஆதியந்தங்களைக் கவர்தலான் மத்தியிலிருக்கும் முப்பூதமும் சந்தம்சநியாயங்கொண்டு கவர்ந்ததேயாம், காரணபூதக் கவர்ச்சியானே காரியமுமாம், ஆகவே பொருளிதுவாம்:—ஆகாசாதி ரூபபூதபௌதிகங்களிலும், க்ஷேத்திரஞ்ஞவடிவமாக வுள்ளிலும் சம்சாரத்தின் வெளியிலும், தனது மகிமையிலும் யாது விளங்குமோ அதற்கு நமஸ்காரம். "இதனது பாதமொன்றே இகபர வுலகங்கள், பதமது மூன்றே நற்பர வறிவமுதந்தான்" எனச் சுருதியுமுளதாம். ஆகவிங்ஙனம் மூவித பரிச்சேத ரகிதமாய் நித்திய அத்விதீய பரிபூர்ணமாய் சிதான்

மகமாயிருக்கும் வஸ்துவே சாஸ்திரங்களாற் பிரதிபாதிக்கப்பட்டதாம் எனக் காண்பிக்கப்பட்டதென்றுணர்க. மற்றும், சுவர்க்கத்தில், பூவுலகில், அந்தரிக்ஷ லோகத்தில் அதிபூதத்தில், அத்தியாத்மத்தில், அதிதைவத்தில், எவ்விபுவான வர் நானாவடிவமாக எனதறியாமையால் எனக்கிலங்குகின்றாரோ, உண்மை யாயோ இலங்கும் வடிவதாய் நிர்விகார சின்மாத்ர இயற்கையதாய எல்லாவற் றின் வடிவாய அதன்பொருட்டு நமஸ்காரம். அல்லது, பிருதிவி பூர்வரூபம் துறக்கம் உத்தரரூபம் என்னுஞ் சுருதியிற்போல, ஈண்டும் பொன்னுலகத்தில் = பிரஹ்மாண்டத்தினது மேற்கபாலமாகிய சுவர்ணமய வத்துவில், புவியில் = கீழ்கபாலமாகிய வெள்ளிமயவத்துவில், அந்தரத்து = அவ்விரண்டன் சந்தி யாகிய சூக்ஷ்ம ஆகாசத்தில், பிரஹ்மாண்டத்தின் வெளியிலும் உள்ளிலும் யாது விசேடமாக = சூரியசந்திர அக்கினி வாக்கு முதலியவற்றினும் அதிசய மாக, சுவப்பிரகாச அபரிச்சின்ன இயற்கையானே யாதிலங்காநிற்குமோ! அஃதெங்ஙனமெனின், "இவ்விலங்காநின்ற ஆன்மாவானது சூரியாதிகளையும் விளக்குவதும் அவற்றின் வடிவமும் ஆகுமாதலின், எதனாற் சூரியன்றபிக்கின் றானோ தேயுவொளிர்கின்றதோ, ஆன்மாவே யிதனது ஜோதியாம், ஜோதி களுக்குமது ஜோதியாகும்" என்பதாதி சுருதி மிருதிகளானே யெனவுணர்க. எல்லாவஸ்துக்களினது பாரமார்த்திக சொரூபபூதத்தின் பொருட்டு நமஸ்கா ரம். அல்லது, பொன்னுலகத்தில் = இலக்குவிக்கும் ஏகரசம் வாய்ந்த பூமா னந்த வடிவ துரியவடிவமத்தில், இரண்டவஸ்தைகளி னுற்பத்தி பூமியில், அவ் வியாகிருத ஆகாசத்தில், வெளிப்பிரஞ்ஞைப் போக்கியமாகிய ஜாகரத்தில், உட்பிரஞ்ஞைப் போக்கியமாகிய சொப்பனத்தில், அவற்றின் சந்திகளாகிய மரண மூர்ச்சை முதலிய அவத்தைகளினும் யாது நானாவிதமாக இலங்குகின் றதோ, தூலசூக்கும காரண அபிமானியாகவும், அவற்றின் போக்தாவாகவும் அவற்றின் சாக்ஷியாகவும், நிஷ்பிரபஞ்ச பூரணானந்த சின்மாத்ர இயற்கையதாக வும், விளங்குகின்றதோ என்பதாம். ஆயினென், நானா இரசமேயின்றாமெனக் கடாவிக் கூறுகின்றார்:—இலங்கும் வடிவது அறிவுமாத்திர இயற்கையது. திருசி யமானது திருக்குமாத்திர வடிவமாய்த் திருக்கினும் வேறாக இராமையின் அவித்தையோடு கூடியதும் அவித்தையற்றதும் ஆகிய எல்லா வடிவத்தின் பொருட்டு நமஸ்காரம். அல்லது, பொன்னுலகத்தினில் = சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் சம்பத்துண்மையின் இலங்காநின்ற காரண வுபாதியின் கண்ணே, புவியில் = கருமபீஜமுண்டாகும் பூமியாகிய காரிய வுபாதியின் கண்ணே, அந்தரத்து = எங்குமிலங்காநின்ற சொரூப மிகப்பிரகாசத்தில், ஜீவன் முக்தி தசையில், வெளியில் = நிருபாதி சொரூபத்தில், உள்ளில் = காரியகாரண வுபாதியுள்ளடங்கிய மாயாந்தக்கரணவிருத்தி பேதங்களினும், எவ்விளங்கு மியற்கையுடையது விளங்குமோ சருவ உபாதிசாரமாய அவ்வான் மாவின் பொருட்டு நமஸ்காரம். அல்லது, விளக்கும் வடிவதேஜசில், பிருதிவி யில், விண்ணில், உள்ளடங்கிய நீர் காற்றுகளில், பகிர்ப்பூதமாகிய அவ்வியா

கிருதத்தில், நிருபாதிகத்தன்மையானே சப்தாதிகட்குத் தகுதியல்லாத பார மார்த்திக வடிவத்திலும் யாது தொடர்ந்து நின்று சன்மாத்திர வியல்பதா யிலங்குமோ அதுவே இலங்கும் பிரத்தியக்கான்மாவாம். அச்சர்வவடிவமாகிய பூர்ணானந்த சொரூப என்பொருட்டு நமஸ்காரம். அல்லது, தேவலோகத்தில் வெளியே தடஸ்தமாகப் பூஜ்யதேவதா ஈசுராதிவடிவமாக, புவியில் உள்ளே, உடம்பிலிருப்தாய்ப் பூஜகவடிவமாக, ஆகாயத்தில்=இரண்டனிடையில் கிரியா பலசாதனாதி வடிவமாக, என்னுடைய வடிவம், விளங்காத காலத்தில் பரிச்சேத மாகி வேறாக விளங்கினும் யாது இப்போது தத்துவதிருஷ்டி யுதயத்தானே வெளிப்படையாய் விளங்கும் வடிவதாய, மூவிதபரிச்சேத சூனியவிபு, வெளிப் படையாய் விளங்கும். அத்தகைய பூர்ணானந்த வடிவின்பொருட்டு நமஸ்கா ரம். அல்லது, மேல் கீழ் இடையில் கிழக்குமுதலிய திசைகளில், உடம்பினுள் பூர்வோத்திரகாலங்களில் எவ்விலங்குமான்மாவாகிய சிதேகரசமானது தத்துவ வித்தாகிய எனக்கு விளங்குமோ, "ஆன்மாவே கீழும் ஆன்மாவே மேலும்" என்பதாதி சுருதியினானே யென்க; ஆன்மாவே இவ்வி யாவுமென்னும் சர்வ பிரபஞ்சபாதத்தால் எஞ்சி நிற்பதாய பரமான்மாவின்பொருட்டு நமஸ்காரம். இவ்வாறு வேறுபொருள்களும் மதிவைபவப்படி ஊகித்துக்கொள்க. ஈண்டுப் பொருளால் அவ்வகையாய அறியப்படாத பிரஹ்மமே சாஸ்திரத்தின் விடய மாம். ஞானத்தால் அவ்வடிவமாய் நிலைபெறுதல் பரமநிர்வாண ரூபமாகிய பிரயோஜனமாம் எனக் குறிப்பிக்கப்பட்டது. மேலும்மேலும் இதுவே வெளிப் படையாய்க் காட்டப்படும்.

## சமுசார தரணி.

ஆத்மாவே யீதனைத்துமென்னுஞ் சுருதியினாலும், அடியுமுடியுமிலாச் செயப்படாவுணர்வே தெய்வமென மேற்றேவபூஜையிற் கூறுதலானும் ஆன் மாவே யிஷ்ட தெய்வமாம். அத்தெய்வத்தியல்பே சிற்சோதி யாதலினானும், சர்வாத்மகமாதலினானும், பொன்னுல்கென்பது முதலானதால் உலகத்திரயத் தினும் வியாபித்திருத்தல் சொல்லப் பட்டது. உட்புறத் திலங்குகின்றது என் பதனாற்றிருக்கு ரூபத்தாலுந் திருசியரூபத்தாலும் பிரத்தியக்ஷமாகவே ஆத்மா வின் சொரூபம் பிரகாசிக்கின்ற தென்றாயிற்று. சிற்சோதியே யென்பதனால் ஞானசொரூபம் ஆத்மாவென் றிலக்கணங் கூறியதாம். அன்றியு முட்புறத் திலங்குகின்றது என்பதனாற்றானும் பிரகாசித் திதரங்களையும் பிரகாசிப்பித்த லின் பிரகாசமான இவ்வாத்மாவின்கண் சொரூபத்துக் கிதரமான மற்றோர் பிரமாணமும் அபேக்ஷிக்கப் படாதாம் எனக்குறிப்பித்ததாம். இதற்குப் பிர மாணம்.—அதன்கட் சூரியனு மிலங்கவில்லை, சந்திரனுந் தாரகையு மிலங்க வில்லை, இம்மின்னல்களு மிலங்காதனவாம் அச்கினியெங்கே யிலங்கும் இலங்கு கின்ற அதனையே யனுசரித்துச் சர்வமுமிலங்குகின்றன, அதனது விளக்கத்தா லீதனைத்தும் விளங்குகின்றன—என்றும். விஞ்ஞானரூபனை, பெண்ணே எதனா

லறியலாம்—என்றும், எப்படிச் சுருதிகூறுகின்ற தப்படியே சுவானுபூதி யையே முக்கியப் பிரமாணமாக வுடைய சாந்தமான தேசசுக்கு நமஸ்கார மென்று பர்த்ருஹரியானுங் கூறம்பட் டிருக்கின்றது. (1)

## நூற் பெருமை.

திகழுநான் முகன்முதற் றேவர் மூவருஞ்
சகலவே தங்களும் சாத்தி ரங்களும்
புகலுஞா னத்தினற் புரண மானது
நிகரில்வா சிட்டமா நிபுண ஞானநூல். (2)

(ப - ரை.) திகழுநான்முகன்=ஸ்ரீ வசிஷ்டர் மரீசியாதி சகல முனிவர்கட்கும் ஞானசிரியராய் விளங்கும் நான்கு வேதங்களையும் நான்குமுகத்தாலருள் புரியும் பிரஹ்மா, முதல் = முதலிய, தேவர் மூவரும் = பிரஹ்மா, அருச்சுனற்கும் பிரஹ்மாதிகட்கும் அருளும் மகாவிஷ்ணு, சனகாதிகட்கும் பிருங்கிரிபு முதலியவர்க்கும் அம்பிகை நந்தி முதலியவர்க்குந் திருவருள் புரிந்தமாகா தேவர், என்னும் முத்தேவரும் அருளிய கீதாத்திரயங்களும், சகல வேதங்களும்=கருமம் பக்தி ஞானமென்னுங் காண்டத்திரய வடிவமாய் அநேகமாயிரம் சாகைகள் நிறைந்து விரிந்த தருமத்தையும் பிரஹ்மத்தையும் பிரதிபாதிக்கும் அபௌருஷேயப் பரமப்பிரமாண வாக்கியங்களின் வடிவமான சுருதிகளனைத்தும், சாத்திரங்களும்=அவ்வேதங்களையே யாதாரமாகக்கொண்டு மகரிஷிகளாலே செய்யப்பட்ட அநேகம்ஸ்மிருதி யிதிகாச அத்தியாத்மசாஸ்திரங்களும், புகலு ஞானத்தினல்=பிரதிபாதிக்கப்பட்ட விஸ்தாரஞான ஞான சாதனங்களால், நிகரில்வாசிட்டமாநிபுண ஞானநூல்=தன்னிடத்திலேயே சகல கிரந்தங்களின் அருத்தங்களுமிருத்தலின் உவமையற்றுப் பிரஹ்மபுத்திர வாக்கியமிருதமாய்ச் சகலமாண்பானும் அலங்கரிக்கப்பட்டு மிகவுமாழ்ந்து கம்பீரமாய் மகத்தான தீரபுத்திகட்கே சாத்தியமாய் விளங்கும் இந்த ஞான வாசிட்ட நன்னூலானது, புரணமானது=பூரிக்கப்பெற்றுப் பொலிகின்றது.(2)

தலைமைநான் முகன்மனத் தாமறைக் கினன்
சிலையில்ரா கவன்றிருச் செவிக்குத் தெள்ளமு
துலைவில்வான் மீகிவாக் குதித்த தத்துவ
நிலைமைவா சிட்டமா நிபுண ஞானநூல். (3)

(ப - ரை.) தலைமை=பிரஹ்மாண்டம் அவரது நுகர்வினைப்பயனுதலின் இதன்கண்ணியாவருக்குமே பிரதானமாயிலங்கும், நான்முகன்=நாற்றிசையினும் படைக்கச் சதுவதனங்களையுடைத்தாய் பிரஹ்மாவினது, மனத்தாமரைக்கு=திருவுள்ளமாகிய தாமரைமலருக்கு, இனன்=அலறிபோன்றதாம், மனத்தாமரையை மலர்த்தமைந்தன் மதலைமொழி மாண்புடைத்தேயாம், சிலையில்=வில்வித்தைக்கில்லமாயிருப்பவரும், சிரவணிக்குங் காலத்தில் ஆத்தாதிபணி

விடைகளை மேற்கொண்டொழுகலின் சிலையில்லாதவரும், சிலையாகிய அகலிகையைத் தமது திருவடிப்பரிசத்தான் மீண்டும் கௌதமர் இல்லத்திற்குத் தருமபத்தினியாக்கியவரும், அவர் வைராக்கியப் பிரகரணத்திற்கூறிய சில ஐயங்கள் உண்மையி லில்லாதவராயிருந்தும் இருப்பதுபோ னடித்தவரும், ஜடஇயற்கையின்றிச் சந்ததம் சேதன இயற்கையையே யுடையவரும், சீதாபிராட்டியை யுத்தேசித்துக் கோதண்டச் சிலையைச் சிதைத்தவரும், ஸ்ரீ வசிஷ்ட உபதேசானந்தரம் சிலைபோல நிருவிகற்பசமாதியை யடைந்து காஷ்டலோஷ்டம் போலானவரும், அசங்கமா யசலமா யிருக்குந் தம்மிடத்தி லுண்மையில் யாதொரு ஆரோபமுமில்லாதவரும், மேலும் அநந்தவிதமான கல்யாண குணங்க ணிறைந்தவரும், ஆகிய இராகவன் = ஸ்ரீ காமதேனுவின் கன்றாகிய நந்தினியின் றிருவருளால் வந்து மகாதீரவீரனை யிந்திரனையும் வெற்றிகொண்டு குருதக்ஷிணை கொடுக்கும் நிமித்தம் யாகானந்தரம் அடைந்த குமரனை யுத்தேசித்துக் குபேரன்பேரில் படையேவிய இரகுவினது உத்தமோத்தம குலத் தவதரித்த ஸ்ரீ இராமச் சந்திரரது, திருச்செவிக்கு = இலக்குமிதேவியின் அமிருத மொழிகளை யெப்போதுங் கேட்டுக்கொண்டிருக்கும் அழகிய சுரோத்திரங்கட்கு, தெள்ளமுது = பாற்கடலினுதிதமாய அமுதமும் கற்பாந்தபரியந்தமே வாழ்க்கை நல்குமாதலின் அதனினும் மிகத்தெளிவுற்ற இது அழியாத பரமபதத்தையே கரதலாமலகம்போலத் தருதலின் பரமாமிருதமானதாம், உலைவில்வான்மீகி = முன்னனேககாலம் ராமஜபத்தாற் றவம்புரிந்து கெடாத வித்தையையும் பிரஹ்மவித்தையையு மடைந்திருந்து திருமேனி புற்றான்மூடப் பட்டு புற்றினுள்ளேயே ஸ்ரீ ராமசரிதங்கூறிய ஆதிகவியாகிய மகாமுனிவரர்தம், வாக்குதித்ததத்துவம் = திருவாக்கியாமிருதமாய் வெளிப்பட்டு அநேகதத்துவங்களையும் சாகித்ய நவரசங்களையும் பொழியும்பெருமைவாய்ந்ததாம், இத்தகைய விசேடங்கள் வாய்ந்தது யாதுகொலாமாலோவெனின்? நிலைமை = சொரூபத்தின் யதாஸ்திதியையும் சாதகமாகிய சர்வஞானநிஷ்டைகளையும் நித்திய மோக்ஷத்தையும் அனுக்கிரகம்புரிவதில், மா = மாக்ஷிமைதங்கிய, வாசிட்ட நிபுண ஞானநூல் = ஸ்ரீ வாசிட்ட ராமசம்வாதமாகி அதிவிததககன கம்பீரமான இந்தஞானசாஸ்திரமேயாம். (எ - று) (3)

பெரிய வரறிவுறு பெருமை சான்றது
விரிவுறு சிறியவர் மேவொ ணாதது
வரிசையி லுயர்ந்தது வசிஷ்ட சங்கிதை
யரியமெய்ஞ் ஞானநூ லனைத்தின் மிக்கதே. (4)

(ப - ரை.) பெரியவரறிவுறு = சாதனங்கள் நான்கும் நிறைந்து சுசுருஷை சிரவணாதி தொடங்கியெப்போதும் ஆந்தரவிருத்தியிலும் சித்தவிசிராந்தியிலும் விருப்பமிகுந்து பரதியராகிச் செயற்கரியசெய்யும் மகான்கள்மாத்திரம், அறிவுறுத்த ஆசிரியர் அரிதிலெளிதிலறிந்து கொள்ளும்படியான, பெருமைசான்

றது=அத்தகைய மேன்மையைதான் பிரதிபாதிக்கும் சூக்குமப்பொருளால் உடையதும்; விரிவுறு=விடயங்களிலிந்திரியங்களை இஷ்டப்படிபோகுமாறு செலுத்திப்பின்னேகி மொத்துண்டலையும், சிறியவர்=அற்பமதியும் அற்ப முயல்வும் அதைரியமும் நம்பிக்கையின்மையும் தேகான்மமதியும் பிரபஞ்சசத்தியபுத்தியும் உடைத்தாகி மோக்ஷஆவலின்றிய அற்பர்கள், மேவொணாதது=சிறிதுங்கிட்டிக் கரத்தினுந்தீண்ட அருகமல்லாததும்; வரிசையிலுயர்ந்தது=ஞானப்பொருள்களையும் கதைமேற்கதைகளையும் உபாக்கியானத்துள்ளுபாக்கியானங்களையும் திருஷ்டாந்தங்களையும் ஊகங்களையும் ஆரோபஅபவாதக்கிரமங்களையும் ஜகன்மித்தியாத்துவத்தையும் பரமாத்ம சாக்ஷாத்காரத்தாலெய்தும் பரமானந்தத்தையும் சமாதிகளையும் போகங்களையும் பிறவற்றையும் அடுக்காக அடுக்காக அறைவதும், எல்லாஞானநூல்களிலும் பரமப்பிரமாணமாயெடுத்துக்காட்டாய் நின்று மிகவும்பூசிக்கத்தக்கதும்; ஆகிய, விசிட்டசங்கிதை=ஸ்ரீவசிஷ்டபகவானது இனிமையைத் தருமுபதேசம், அரிய மெய்ஞ்ஞான நூல் = அதிதுர்லபமாகி யாச்சரியம்போற் கண்டுங் கேட்டும் பேசியு மனுபவித்தும் வரும் மெய்யான சிதானந்த பூரணத்தைப் பிரதிபாதிக்கும் வேதாந்த சாஸ்திரங்கள், அனைத்தின்மிக்கதே=யாவற்றுள்ளும் சர்வார்த்த போதகமாதலின் மிகவும் உயர்ந்ததே. (எ - று) (4)

தெருளுறு மகர்க்கிதஞ் செய்யு மன்பினு<br>
லருமைவா சிட்டநூற் கன்னை யொப்பளோ<br>
வுரியதாய் பிறவியை யுள்ள தாக்குவள்<br>
பெருமைவா சிட்டமிப் பிறப்பை மாற்றுமே. (5)

(ப - ரை.) தெருளுறுமகர்க்கு=ஞானத்தையடையவேண்டுமென்று மிகவும்முயல்வையுடைய முமுக்ஷுக்கட்கு, இதஞ்செய்யுமன்பினுல்=பக்குவ நோக்கி யவரவர்க்குத்தக்கபடி இதோபதேசம் செய்யாநின்ற கருணையைச் சீர்தூக்கிப்பார்க்கின், அருமை=சொல்லாலும் பொருளாலும் மிகவும் அருமை வாய்ந்த, வாசிட்டநூற்கு=ஸ்ரீ வசிட்டகீதமாய் மனக்கோட்டம்மாற்றும் இச்சாத்திரத்திற்கு, அன்னையொப்பளோ=பெற்றுவளர்த்திடும் பெருங்கருணைத் தாய்தானும் சமமாவளோ, ஆகாள்; என்னை, உரியதாய்=சரீரத்தைப் போற்றற்குத்தக்கதாய், பிறவியை=ஜனனமரணசமுசாரத்தை மேலும் மேலும் மனைவிமக்களாதி வாசனையையுண்டுபண்ணி விருத்தியே யடையுமாறு செய்து வைப்பள், பெருமைவாசிட்டம்=திருசிய தோடத்தையகற்றிச் சனனமரண சமுசாரமகற்றுவதில் மிகுவலியுடையதாய் பெருமைவாய்ந்த ஆசிரியர் வசிட்டரதுபதேசம், பிறப்பைமாற்றுமே=ஜனித்தற்குமூலமாய வாசனைக்கிருப்பிடமான அவித்தையையே யில்லாமற்செய்யும்; செய்யவே அன்னையுவமையாகாளாம். (எ - று) (5)

அவையடக்கம்.

எண்ணுறு பெருங்குணத் திராமன் றன்மய
நண்ணுற வசிட்டனே நவின்ற ஞானநூல்
பண்ணுறு தமிழினாற் பாடுகேன் சுதை
மண்ணுறு கலத்தினும் வைக்கு மேழையேன். (6)

(ப - ரை.) எண்ணுறு = அநந்த நல்லகல்யாணகுணங்களும் தம்மிடத்து முந்திவரவுத்தேசித்துப்பரஸ்பரம் பொருமையுற்று நின்றனவெனவெண்ணத் தக்கனவான, பெருங்குணத்து = அரும்பெரும் பொறுமையாதி யளவின்மகத்தான குணங்கட்காஸ்பதமாக விலங்கிய, இராமன் = சந்ததம் சொரூபத்தின் கண்ணேயியல்பாகவே இரமித்துத் தம்மையடைந்தவரையும் சொரூபாநந்தத்தில் இரமிக்கச் செய்பவராயிருந்தபோதினும் அதிகாரி போனடித்த ஸ்ரீ இரகுகுலதிலகன், தன்மயம் நண்ணுற = இயல்பாகவே சித்தித்திருக்குந் தன்னுடைய சைதன்ய இயல்பை ஞாபகஞ்செய்துகொண்டு அதன்கண்ணே சதாசுகிக்க, வசிட்டனே = சூரியகுலகுருவாயும் திரிகாலஞ்ஞராயும் சர்வசாஸ்திர சுதந்திரராயும் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பிரஹ்மாவின் மானசீய புத்திரரே நேராகத் தமது வாக்கியாமிருதத்தால், நவின்றஞானநூல் = ஸ்ரீ இராமச்சந்திரரை முன்னிலைப்படுத்தி அனைத்தாய அதிகாரிகட்கும் அமலஞானமுண்டாகப் பொழிந்தருளிய அரியபெரிய இந்தஞான சாஸ்திரத்தை, சுதை = க்ஷீராப்தியாற் கடைந்தெடுத்த தேவாமிருதத்தை, மண்ணுறுகலத்தினும் = மண்ணாலாய சாமானிய பாத்திரத்தினும், வைக்கும் = வைக்கும்படியான உயர்வுதாழ்வின் பகுப்பிலாத, ஏழையேன் = அற்பஅறிவினனாகியயான், பெரிய மகரிஷியின்றிருவாக்கியாமிருதத்தை, பண்ணுறு தமிழினாற் பாடுகேன் = அநேகவித சந்தங்களோடுகூடிய செந்தமிழ்பாஷையில், என் புன்கவியாற்கொள்வ தவடிறமையன்றேயென்ற அருமைத் தந்தைவசனம்போல என்அற்ப செய்யுளாகிய மட்கலத்தில் வைக்கின்றேன் குணமேகொள்க. (எ - று) (6)

# அதிகாரியையறிவித்தல்



## ஸ்ரீ வீரசேகரம் அவதாரிகை.

நூலின்முதலில் கேட்பவனுக்குப் பிரவிருத்தியுண்டாகுமாறு செய்விக்க விடயத்தைக்காண்பித்து அதிகாரியைத் தரிசிப்பித்துக்கொண்டு பிரயோஜன சம்பந்தங்களைக் குறிப்பிக்கின்றார்:—பந்த. மற்றும், இனியிந்நூலின் கண்ணே அதிகாரியாவன், அறியானா? அறிவுடையவனா? ஆதியனல்லன், அவனுக்குத் தேகாதிகளிடத்தில் ஆன்மமதிதிடமாக விருத்தலினாலும், ஆசையதிகரித்திருத்தலினாலும், முமுக்ஷுத் தன்மையில்லாமையின்; விடங்களித்திற்றேடதரி

சனத்தாலும், ஜனனமரணாதிதுக்கதரிசனத்தாலும் அவனுக்கே வைராக்கிய உதயஇச்சையால், முமுக்ஷுத்தன்மையுண்டாகி அதிகாரமாமென்னற்க; இராகமுடையவர்கள் மிகவும்விடயங்களை இரக்ஷிப்பதாகக் காணப்படுதலின் விடயங்களிருக்கும்போதே அவற்றிலுள்ள தோடத்தை நீக்கு முபாயத்தை முயல்வதுடன் நல்லநல்ல விடயங்களையும் தேடுதலின் இகலோக சம்பந்திபர லோகசம்மந்திருபாய இச்சையோடு முயலுதலின்என்க. அறிஞனுமாகான், அவனுக்குக் கிருதக்ருத்தியத்தன்மை யுண்மையினனே கிரந்தத்தாற் சாதிக் கப்பட்ட பிரயோஜன ஆசையின்மையினனே கிரந்தத்திற் பிரவிருத்தி கூடாமை யின் என விஷவிசிஷ்டஅதிகாரியை காண்பிக்கின்றார்:—பந்த.

சமுசாரதரணி யவதாரிகை.

இஷ்டதெய்வத்தை வணங்கி யதிகாரியைத் தெரிவிக்கின்றார்:—பந்த.

பந்தமுற் றனன்பர பதத்தைச் சேர்கவென்
றந்தநிச் சயமுளா னறிவிலா னலான்
சிந்தனைத் துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளா
னிந்தநூற் குரியவ னென்று கொள்கவே. (7)

(ப - ரை.) பந்த முற்றனன் (நான்)=நான் பந்தத்தை யடைந்திருக்கின் றேன், பரபத்தை=மேலாகிய மோக்ஷபதத்தை, சேர்கவென்று=இனியடைய வேண்டு மென்று, அந்த=அம் மகிமைவாய்ந்த, நிச்சயமுளான்=நிச்சயத்தை நன்றாகவுடைய முமுக்ஷுவே, இந்த நூற்கு = இந்த ஞானசாஸ்திரத்திற்கு, உரியவன் = பொருந்திய அதிகாரியாவன், என்றுகொள்க = முத்திவாஞ்சை யுண்டா யிருத்தலின் இந்திரியங்கள் விடயங்களி னின்றும் அவசியம் உபாதி யடைந்திருக்கும் இருக்கவே இக பரபோக வைராக்கிய மின்றியமையாது எய்தியிருக்கலாம், ஆகவே நித்தியமின்னது அநித்தியமின்னது என்னும்பகுப் பும் ஒருதலையாக வுண்டாகி யுளதாமென்க, எனவே நான்கு சாதனமுடைய வனே இந்நூற் கதிகாரியாவன் என்று மனதிற் கவர்ந்து கொள்க. அறிவி லான்=அஞ்ஞான மிகுந்தவனும், அலான் = அதிகாரி யலன், சிந்தனைத்துயர் கெட=சங்கற்பதுக்க நீங்க, சித்தைச் சேர்ந்துளான் = சைதன்யான்மகமான தன்னை யுணர்ந்த ஞானியும், அலான்=அதிகாரியலன், என்று கொள்க=என் றுணர்தற்பாற்று. (எ - று.)

(ஸ்ரீ - வி.) பத்தன்யான் விடுபடவேண்டும் என எவனுக்கு நிச்சயமதி யுளதோ அவனிந்த நூலில் நூற்கேட்கு மதிகாரமுடையவ னென வறிக. அவ னுக்குக் கேட்குதலாதியின் சாதகமாக ஆரம்ப விவேகம் வேண்டுமெனக் காட்டுகின்றார்:—அறிவிலானலன் என, சித்தைச் சேர்ந்துளான்=அதனையுணர் ந்தவன் எனப் பொருள்படும் தத்ஞன் என்பது மூலபதமாம், அலன் = நோ,

ஒருங்குகூடி நோதத்ஞன் எனவாம், ஆகவே, அது என்பது பிரஹ்மமெனப் படும், ஓம் தத்சத்தென்னும் நிர்த்தேசம் பிரஹ்மத்தை மூவிதமாய்க் கூறியது என்னு மிருதியினால்; அதனையுணர்ந்தவன் தத்ஞன் பிரஹ்மவித்தாவன், நோதத்ஞன் என்பதில் ந-உ-த-ஞ-என்றேனும் பதப்பிரிவு செய்யலாம், உம்மைப் பொருளில் உத, வரும், வரவே ஞோபிந=அறிஞனும் அலன், பிரஹ்மத்தைப் பெரிதறிந்தவனும், பெரிதறியாதவனும் கேள்வியாதியில் முயலுதல் கூடாமையின் சிறிது விவேகியே யதிகாரியாவன். பரபதத்தைச் சேர்க வென்பதனால் பந்தநீக்கம் இந்நூலின் கேள்வியாலுறும் பயனமெனக் குறிப்பிக்கப்பட்டது. அறிவிலான் அலன் என்பதாதியாலும் சாஸ்திர பிரஹ்மங்கட்குப் பிரதிபாத்திய பிரதிபாதகபாவ வடிவ சம்பந்தமுளதாமென அறிவித்ததுமாகும். மற்றும், அத்தியந்தம் அஞ்ஞனும், அறிஞனும், இந்நூலின் கண்ணே அதிகாரிகளல்லர்; மற்று, யான்பத்தன் = இச்சம்சாரத்தில் அநாதிகாலந் தொடங்கிச் சிறையிற் கட்டுண்டு கிடப்பவனைப் போலப் பரிச்சேதபரவச ஜன்ம ஜரா மரணாதி துக்க மனுபவித்துக்கொண்டு சோகிக்கின்றேன். முற்றினுஞ் சோகத்தைக் கடக்கவேண்டு மானாலோ ஆன்மஞானமே யுபாயமாம். “ஆன்மவித்தானவன் சோகத்தைக் கடக்கின்றான்” என்னுஞ் சுருதியினாலென்க. அவ்வான்ம ஞானத்தானே யான் முக்தனவேன் என்னும் முதிர்ச்சியாய அறியும் வேட்கையோடு கூறிய நிச்சயமானது எவனுக்குளதோ அவன் விநய உபாய முதலியவற்றானே குருவைச் சரணகதியாக அடைவன் இந்நூற் கதிகாரியுமாவன் சாஸ்திர சிரவணாதிபலத்தைச் சேவிப்பவனுவ னென்பதாம்; எனவே அளவிறந்த புண்ணியங்களானே இராகாதி தோடங்களற்றவனும் விவேக உதயத்தானே அறியும் வேட்கையனும் ஆகிய அஞ்ஞனுக்கே அதிகாரம் என்பது கருத்தாம். அற்றேல் இராகாதி தோடமற்றவன் மூவருணத்தினனுயின் சந்யாசவாயிலாக வேதாந்த சிரவணத்தின் கண்ணே யதிகாரியாவன்; முற்காண்ட அடுத்த அனுஷ்டானத்திற்கு மனத்தூய்மை வாயிலாகப் பிற்காண்ட அதிகாரத்தை யடைவிக்குந்தன்மை “அவ்விதனை வேதவசனத்தானே” என்பதாதி சுருதியினானே துணியப்பட் டிருத்தலின் மூமருணத்தின னல்லாதவனுக் கீண் டதிகார மில்லையாம்; “அம்மகத்தாயதை வேதமுணராதவன் மனனியான்” என அதிகார நிடேதங் காணப்படுதலின்; ஆகையால் அதிகாரி சுலபனல்ல னெனின்? அற்றன்றும், ஸ்மார்த்த கருமம்போற் கூடலின்; மூவர்ணமுடையவனுக்கு மூன்றக்கினியிற் சாதிக்கத்தக்க கருமத்தின்கண் ணதிகாரமிருந்த போதினும் அக்கினியாதானஞ் செய்யாதவனுகிய சாதாரணன் ஸ்மார்த்த கருமாதிகாரத்தை யடைவதேபோலும்; சிரௌத ஞானதிகாரி யிருந்தபோதினும் அசந்யாசியாகிய முமுக்ஷு சாதாரணன் இந்நூலின்கண் ணதிகாரியாவன்; அஞ்ஞான மிருக்கும்வரையாம். இந்நூற்கும் மிருதியைப்போலும் வேதவியாக்கியானத்தன்மை யுண்மையின், அங்ஙனமே கூறவும் பட்டுளது:—வேதம் விளம்பாநின்ற பரபுருடன் தசரதர் மதலையாயுண்டாம் போழ்து வேதமும்.

ஸ்ரீ வான்மீகி பகவானுடைய வாக்கினின்றும் சாக்ஷாத் திராமாயண வடிவமாகியது. ஆண்டுப் பூர்வகாண்டத்திற்கு, ஸ்ரீ இராமசரிதகதை முன்னிலையாக வியாக்கியானமாகிய ஆறுகாண்ட பூர்வ ராமாயணம் சமானமாம் உத்தர காண்டத்திற்கு இவ்வைராக்கியாதி யாறுபிரகரணமும் சமானமாம் சிலஸ்மார்த்த கருமங்களில் ஸ்திரீசூத்திரப் பொதுவாக அதிகார முண்டாவதே போல இதனது சிரவணத்தினும் புராணம் போலுமாம். "மறையவனை முதன்மையாகக்கொண்டு நான்கு வருணங்களையுங் கேட்பிக்க" "சூத்திரரும் மகத்துவத்தையடைகுக" என்பதாதி வசன லிங்கங்களானும். "அப்பெரும்பொருளை வேதமுணராதவன் மனனியான்; அவ்வுபநிடப் பிரதிபாத்திய புருடனை வினவுகின்றேன்" என்பதாதிவசனமோ அவேதவித்திற்குச் சௌதஞான அநதி காரபரமாமென்பர் சிலர்; அபரோக்ஷஞான முடிவுபேறிலதாம் பரமென்பர் மற்றையர்; வேதவாயிலாந்தன்மைத் துதிபரமாமென்பர் சிலர். எல்லாவாற்றானுமே மற்றையருக்கும் புராணசம்பந்த சாதாரணமாகிய ஞானத்தின்கண்ணே அதிகாரமுளதேயாம் "எல்லாவருண ஆசிரமங்களானுமே அவ்வான்மா அறியத்தக்கதாம்" என்பதாதி வசனங்களானுமறிக. ஆண்டுச் சௌதஞானத்தில் பூர்வகாண்டத்திற் கூறிய தருமானுஷ்டான ஜன்னியமனத்தூய்மைமைப்போல. ஈண்டும், பூர்வ இராமாயணத்திற்காட்டப்பட்ட தத்தம் வருணாசிரமத்திற்குத் தகுதியாய நிஷ்காம தருமானுஷ்டான ஜன்னியமனத்தூய்மை அறியும் வேட்கையை யுண்டாக்கும் வாயிலாகக் காரணமெனப் பூர்வோத்தர இராமாயணங்கட்கு ஹேது ஹேதுவுடைமைச் சம்பந்தத்தைக் காண்பித்துக்கொண்டு சர்வாநர்த்த நிவிருத்திவடிவ வேறு பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—தருமதத்துவஞான அனுஷ்டானங்களாகிய, ஞானாதிகாரங்களை யடைவிக்கும் ஈசுர ஆராதனைகளில் கதையே யுபாயம் என்றாலின் கண்ணே அந்தப்பூர்வ இராமாயணக்கிரந்தம் கதையுபாயமாம். அநேக காண்டங்களோடுகூடிய அவற்றை ஆதியில் விசாரித்து அதனர்த்தானுஷ்டானத்தி லதிகாரத்தையடைந்து எவ்வதிகாரியானவன் இவ்வியம்பும் ஆறுபிரகரணரூப மோக்ஷோபாயங்களை ஆராய்கின்றனனோ, பிரஞ்ஞையால் காம கரும வாசனை அஞ்ஞானபீஜங்களை யெரித்த அவன், மறுபடியும் ஜன்மாதி துக்கத்தையடைவதில்லை முக்தனே யாகின்றான்.

(ச.) அதிகாரி யென்பவன் முத்தி விருப்புடையனன்றோ! முத்திவிருப்பாவது, ஆன்மாவிற்குப் பந்தநிச்சயத்தை முன்னிட்டிருப்பதா மென்பது கருத்து. அநதிகாரியைத் தெரிவிக்கின்றார்:— அறிவிலான் என. தேற்றும் பொடி சேற்றைத் தேற்றுதற்காகாதென்னும் நியாயத்தால் மிகுந்த அஞ்ஞனு மதிகாரியாகான், இடித்த மாவைப் பொடித்தல் போல அறிஞனுக்கறிவிப்பதும் பலமன்றாதலின் ஆத்மஞானியும் அதிகாரியாகானென்பது கருத்து. (7)

## (ஸ்ரீ வீ-அ-கை) பரத்துவாசர் வினுதல்.

இங்ஙனம் பொன்னுலகத்தினில் என்பதனுல் மங்களாசரணத்தையும் விடயரூசனத்தையும் விதித்து, பந்தமுற்றன னென்பதனுனே அதிகாரியை யும் பிரயோஜனத்தையும் சம்பந்தத்தையு முணர்த்திச் சாஸ்திரத்தைத் தொட ங்குபவராகி இதற்கு முதலில் சம்வாத கதைரூபத்தன்மையை விளக்குவிக்கும் பொருட்டுக் குரு சீட முறையைத் துதிக்கின்ருர்:—ஒருங்கு, மற்றும், 56000ங் கிரந்தவடிவ இராமாயணத்தில் அநாதிகாலந் தொடங்கிப் பயின்ற இராகாதி தோஷத்தைக் கெடுக்கு மாற்றலுடைமையின் மகாபலம் பொருந்திய இராம கதை வடிவமாகிய 24000ங் கிரந்த வடிவ 6 காண்டங்களை முதலில் ஸ்ரீ வான் மீகி பகவானியற்றி வணக்கமுடையவனும் மதிமானும் திருவருள்பெற விரும் பியவனும் சீடனும் ஆகிய பரத்வாஜர் பொருட்டுக் கடலானது யாசகனுக்கு இரத்தினத்தைக் கொடுத்ததேபோலக் கொடுத்தார் ஒருகாலத்தில் அறிவின் மிகுந்த பரத்வாஜர் மேருகிரியின்பாலுள்ள ஒரு ஆரணியத்தின் கண்ணே வீற் றருளியிருந்த ஸ்ரீ பிரஹ்மாவின் சந்நிதியிற் கீர்த்தித்தபோது சந்தோஷத்தை யடைந்த வுலகபிதாமகராகிய பிரஹ்மதேவர் வரமுன்னியிலையால் உலகைக் காக் குஞ் சாதனமாகிய மோக்ஷசாஸ்திரத்தைச் செய்விக்கவேண்டு மென்னும் பெருங் கருத்துடையராகி அந்த பரத்வாஜரை நோக்கி ஹே! குழந்தாய் ! உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளென, பரத்வாஜர் ஹேபகவன்! பூதபவ்ய ஈசுரரே ! பூர்வ இராமாயண அர்த்தானுஷ்டான ஜன்னிய சித்தநற் றாய்மையை யடைந்த இப்போது எதனுலிம் முமுக்ஷுக்கள் சமுசாரதுக்கத் தினின்றும் விடுபடுவார்களோ அதைத் திருவாய் மலர்ந்தருளுவீராக என்னும் வரத்தைத்தான் தேவரீரை வேண்டிக்கொள்ள அடியேனுக்கு இச்சை யிருக் கின்ற தென்றனர், இதைக்கேட்ட பிரஹ்மதேவர் நீவினவிய இப்பொருளில் உனதாசிரியராகிய வான்மீகரையே மிகமுயல்வுடன் விரைவில் பிரார்த்தித்துக் கொள்ளுவாயாக வெனவருள்புரிய அவரது ஆணையைச் சிரமேற் கொண்டு வந்து தமதாசிரியரைச் சரணுகதியடைதல் சாற்றப்பெறுகின்றது :—ஒருங் கென.

(ச-அ-கை) இனிக் குருவைத்துதித்துக் கதையை வினவுதல்:—ஒருங்கு.

ஒருங்குணர் குரவனு முயர்வான் மீகனை
மருங்குறப் பரத்துவன் வணங்கி வன்பவ
நெருங்கு வெந்துயரிலே நின்ற தெங்ஙன
மருங்குணத் திராமனீ யருளிற் கூறென்றுன். (8)

(ப - ரை.) ஒருங்குணர் = முற்றறிவும் அசேக்ஷ சாஸ்திர பாண்டித்திய யமும் பிரஹ்மநிஷ்டையும் உடையராய, குரவனும்=ஞானுசிரியராகிய, உயர்= ஏகாந்தத்தில் சந்ததம் பகவத்தியானத்திலிருந்த மேலான, வான்மீகனை =

ஸ்ரீ வான்மீகி பகவானை, மருங்குற=ஒழுங்காகச் சீடன் விதிவாயிலாய் அடையவேண்டிய அடைவின்படியாக, பரத்துவன் = பரத்துவாசர், வணங்கி= பூமியிற்றண்டவத்தாக அட்டாங்க நமஸ்காரஞ்செய்து சிரங் கரங்கூப்பித் தோத்தரித்து, வன்பவம் = கொடிய துயரமே வாய்ந்த இச்சமுசாரத்தில், நெருங்கு = மிகநிபிடமாய்ச் செறிந்து, வெந்துயரிலே = வெவ்விய விக்ஷேப சங்கடத்திலே, அருங்குணத்து = சகல சற்குணாலயமாய, இராமன் = ஸ்ரீ இராமச்சந்திரன், நின்றது = விவகரித்துக்கொண்டிருந்தது, எங்ஙனம் = எவ்வாறும், நீ = ஞானசிரியராகிய தேவரீர், அருளில் = பரமநிரபேக்ஷிக காருண்யத்தினால், கூறென்றான் = அடியேனுக்கனுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்டார். (எ-று.)

(ஸ்ரீ - வீ.) பிரஹ்மானந்தத்தை யினிதுபருகும் பொருட்டு ஏகாந்தத் திருந்த சமதரிசன சீலரான ஸ்ரீ வான்மீகி யாசிரியரைப் பரத்வாஜராகிய சீடர் நமஸ்காரஞ்செய்து விநயத்துடன் அடங்கிய குரவால் வினவினர். சங்கடமென்பது சம்பாதமாம், ஸ்ரீ இராமர் ஜீவன்முக்த பதத்தையடைந்து எங்ஙனம் சமுசார சங்கடத்தில் விவகரித்துக்கொண்டிருந்தனர். ஆனால் இப்பொருளையே பரத்துவாஜர் வினவினர் என்று எங்ஙனம் அறிய முடியும் எனின், கேட்டி ! பெரிய வாசிட்டத்தில் எங்ஙனம் சம்சார சங்கடத்தில் ஸ்ரீ இராகவர் விவகரித்தனர் என முன்வினச் செய்து அதன் அடுத்தபின்னரே ஸ்ரீ இராமர் முதலியோர் ஜீவன் முத்தராய் விவகரித்ததுபோலவே நீயும் விவகரிப்பாயாக எனத் தங்களாற் கூறப்பட்டதே அந்த ஜீவன் முக்தஸ்திதி யடைவினுபாயத்தில் ஸ்ரீ இராமருக்குக் கிடைத்த முறை தெரிந்தால் யானுமதைப் பின்பற்றலாம், அன்றியும், ஸ்ரீ இராகவரை வருணிப்பதற்காக முன்னிலையாய் முக்கியமாக்கி ஜீவன் முக்தஸ்திதியை முறையாக ஹே பிரஹ்மத்தை யுணர்ந்த பெரியவரே ! கூறுவீராக, அதைக் கேட்டுப்பின் அடியேன் நித்தியம் சுகியாயுலவுவேன், ஸ்ரீ இராகவருக்கு முறையாக ஜீவன்முக்தாவஸ்தையைக் கற்பித்து அடியேனுக்கு முதலினின்றும் மொழிவீராக, அம்முறையானே யான் நித்தியம் சுகியாய் வாழ்வேன்; எனவினவி யிருத்தலினாலும், ஜீவன்முக்தபதத்தை யடைந்து மகா மனத்தையுடைய ஸ்ரீ இராகவர் எவ்வாறு விவகரித்தாரோ அவ்வாற்றை யாம் கூறக்கேட்பாயாக எனவிடை தொடங்கலானும், மேலும் இச்சமுசார சங்கடத்தில் ஸ்ரீ இராமரும் மகாமனத்தை யுடைய பரதரும் சத்ருக்நரும் இலக்குமணரும் புகழ்பெற்ற சீதையம்மனும் ஸ்ரீ இராமரைப் பின்றொடர்ந்திருந்த மந்திரி மைந்தர்களாகிய மகாமதிமான்களும் தசரதரும் அவர் பரிவாரமும் எங்ஙனம் விவகரித்துக் கொண்டிருந்தனர் அஞ்ஞானிகளாய் மற்றையரைப்போற் சோகித்துக்கொண்டா ? அல்லது ஜீவன் முக்தரைப் போலவா ? என்பதை யருளவேண்டும், அவர்கள் துக்கமடையாமற் சுகிகளாயிருந்த விதத்தை அடியேனுக்கு என் மதியாற் படும்படி வெளிப்படையா யருள்செய்யின் அவ்வாறே

அடியேனும் தங்களுபதேச சிரவணத்தானே கிருத்தியத்தன்மையை யடைந்த திருக்கூட்டங்களுடனே சுகியாயுலவித்திரிவேன் என ஸ்ரீ இராமபரதாதி விடய் வினுவின் பின்னர் மந்திரிமைந்தர் நிர்துக்கித்தன்மை வடிவ ஜீவன்முக்தி யடைவுவகையை வினுதலினுனும் அறியப்பெறுகின்றதாம், பெறவே இப் பொருளே பரத்வாஜராற் கேட்கப்பட்டது.

(ச.) ஒருங்குணர் என்பதனுற் குருவிற்குச் சீடனறிய விரும்புஞ் சகல பொருள்களையும் விரித்துரைக்குஞ் சாமார்த்தியஞ் சாற்றப்பட்டது. பவத்தில் வெந்துயர்யாதது சாயையின் தன்மமான பிரியாப்பிரிய விஷயத்தில் மிகுந்த மத்தமாம். பவம் = சமுசாரம், சாயை = ஸ்திரீ, கிடையாததில் வாஞ்சையும் கிடைத்ததில் அபிமானமும் துயரமன்றோ ! (8)

(ஸ்ரீ - வீ - அ - கை) இவ்வாறு மிகவும் பணிவுடன் வினவிய வித்யா விநய சம்பன்ன பரத்வாஜரை யாசீர்வதித்துக் கிருபாதிருஷ்டியுடன் ஸ்ரீ வான்மீகி பகவான் கூறுகின்றார்:—

நல்லது சிறுவநீ யுரியை நானது
சொல்லுவன் கேட்குதி துயர்செய் மோகநீ
வெல்லலா மோகந்தான் சகத்தின் வேறன்றி
மல்லல்வா னிறம்படைத் தென்ன வந்துறும். (9)

(ப - ரை.) சிறுவ=உத்தமோத்தமமான புதல்வனே ! நீகேட்டது, நல்லது=மிக மிகவும் நன்குளது, உரியை=யோக்கியனுய், பூர்வ இராமாயண பாராயண மகிமையான் மனத்தூய்மையும் அதனுல் வேண்டுஞ் சாதனங்களும் அடையப்பெற்ருய், நானது=நானவ் விருத்தாந்தத்தை, சொல்லுவன்=விஸ்தாரமாய் விளக்கமாய் மாதுரியமாய்ப் புகல்வேன், கேள்=பாரத்துவாசனே சித்தமிது வதுவென வெண்ணுது ஏகாக்கிரமாய்க் கேட்பாயாக, கேட்டலும்= நீயன்போடுஞ் சிரவணஞ்செய்த மாத்திரத்தால், துயர்செய்=சந்ததம் சிந்தை செயமுடியாத ஜனன மரணவிக்ஷேபாதிய பெருந்துயரத்தை யுண்டு பண்ணும், மோகம்=ஆவரண விக்ஷேபவடிவ அநாதிபாவவடிவ ஞானமாத்திர நிவர்த்திய அஞ்ஞானத்தை, வெல்லலாம் = ஆவரணத்தைக் கெடுத்தும் விக்ஷேபத்தை மனேலய வாசனுக்ஷயங்களாற் கெடுத்தும் வெற்றி கொள்ளலாம், மோகந்தான்=மேலுரைத்த அஞ்ஞானமானது, சகத்தின் வேறன்றி = சகத் சம்பந்த முடையதாயே காரியரூபமாயே, மல்லல் = வளமைதங்கி வியாபித்திருக்கும், வான் = நிரவயவ ஆகாசம், நிறம்படைத் தென்ன = அறியார்தம் மறியாமையால் நீலவன்ன முடைத்தானதே போல, வந்துறும் = அஞ்ஞானிகளி னத்தியாசமாத்திரத்தா லாரோபிக்கப்பட்டு வந்து கற்பித தாதாத்மியமாகப் பொருந்தியதாம். (எ-று.) (9)

(ஸ்ரீ - விர.) நின்னாலியாது வினவப்பட்டதோ அது சாதுவாம். சிரவணத்தின் பொருட்டு நீ யோக்கியனாக விருக்கின்றா யாகலின் உன்பொருட்டுக் கூறுகின்றேன். சிரவணிக்கும் ஸ்ரீ இராகவ ஜீவன் முக்திலாப வுபாயத்தாற் சம்மோக மென்னும் அஞ்ஞான மலத்தை முற்றிலுமே நீ தூரஞ்செய்யலாம் இனிமேல் வராமலே யத்தியந்தங் கெடுக்கலாம், அல்லது சம்மோக மலமாம் ஹேயத்தகைமையால் அதனானே அதைத்தூரத்திலெறிதலுசிதமாம். அன்றியும், குழந்தையாகிய ஹே பரத்வாசனே! கேட்பாயாக! நீ கேட்டபடி கூறுகின்றேன், அதைச் சிரவணித்த மாத்திரையானே ஆன்ம தத்துவத்தை யறியாத மலமானது அத்தியந்த தூரத்தில் ஓடுமாறு செய்துவிடலாம், யாவற்றினும் பொய்யென்னும் புந்தியானே பற்றின்றிச் செந்தாமரைக் கண்ணராகிய ஸ்ரீ இராமபிரான் சுசியாயிருந்து விவகரித்தது போலவே, பிராஞ்ஞனாகிய நீயும் விவகரிப்பாயாக. அபரிச்சின்ன வஸ்து மனதிற் புகுதலானே பெருமனத்தை யுடையவராகிய இலக்குமணர், பரதர், சத்ருக்னர் கௌசலை சுமித்திரை சீதை தசரதர் அவர்தம் பரிவாரம் இராமசகாயர்களாகிய கிருதாஸ்திரன், அவிரோத னென்போர் யாவரும் எதன்பின் னறியவேண்டிய தயலொன் றெஞ்சாதோ அத்தகைய முடிவான மெய்ஞ்ஞானத்தை யடைந்தனர். ஸ்ரீ வசிஷ்டரும் வாமதேவரும் மந்திரிமா ரெண்மரும் அயலாரும் அவ்வாறே யடைந்தனர். திருஷ்டிஜயந்தன் பாசன் உண்மையுரைக்கும் விஜயன் விபீஷணன் சுஷேணன் அனுமான் சுக்கிரீபனுடைய மந்திரியாகிய இந்திரஜித்து என்பரே எட்டு மந்திரிமாரென எண்ணப்படுவர். இவர் யாவரும் உள்ளேசாந்தராகி இராகமற்ற மனத்தராய் வெளியிற் பிராரப்தப்படி கிடைத்தவற்றின் கண் மகிழ்வுடையராய், மகான் மக்களாய்ச் சீவன் முக்தர்களாய் வாழ்ந்தனர்; இவர்கள் ஹோம முதலிய சிரௌத கருமங்களையும், தான முதலிய ஸ்மார்த்த கருமங்களையும் கொள்ளல் தள்ளன் முதலிய அவ்வக்காலத்திற்குத்தக்க இலௌகிக நல்விவகாரங்களையும், நினைதலையும் மேற்கூறிய இரண்டன் ஆலோசனையையும், செய்ததேபோலச் செய்துகொண்டு நீ வாழ்வையாயின் மைந்த! இச் சங்கடத்தினின்றும் முக்தனே ஆவாய்; கரையற்ற குடும்பக்கடலில் விழுந்தவன் இவ்வுயர்வாகிய ஊகத்தை யடைவனாயின் மிகுந்த சத்துவ குணமுடையவனாய், சோகத்தையு மடையான், தைன்னியத்தையு மடையான் யாதொரு விதமான தாபமுமில்லாதவனாகி நித்திய திருப்தனாய் நிலைப்பன்.

(ஸ்ரீவீர - அ - கை.) சமுசார சங்கடத்தில் ஸ்ரீ இராகவர் எங்ஙனம் விவகரித்தனர் என்னும் வினாவிற்கு, ஜீவன் முக்தபதத்தை யடைந்த இராகவர் மகாமனத்தராய் எங்ஙன் விவகரித்தனரோ என்பதாதியாக விடையளித்து ஆதியில் கூறப்படும் ஜீவன்முக்தி சாதனபூத ஆத்ம அபரோக்ஷ ஞானத்தினுபாயம், சித்தமானது சின்மாத்திரமாகச் சேடித்து நிற்கும் வடிவத்தியானமும் அதன் முதிர்ச்சியாற் கையுறும் அசம்பிரஞ்ஞாத சமாதியும் ஆமென்பது

பிரசித்தமாம். ஸ்ரீ இராகவ விருத்தாந்தத்தைக் கூறும் வாயிலாக விஸ்தாரமாயினி யடிக்கடி பிரதிபாதிக்கும்படியாக விழைந்துள்ள சோபாயத்தை யுணர்வின் சௌகரியப் பொருட்டுச் சுருக்கிக் கூறுகின்றார்:—மோகந்தான், என. அல்லது ஜீவன்முக்த பதத்தையடைந்த ஸ்ரீ இராமர் என்பதாதியால் வினவி னுத்தரத்தைக் கூறி ஆதியில் முக்தியையும் அதனுபாயவடிவ சாஸ்திரார்த்தத்தையும் மதியிலெளிதாக ஏறும் பொருட்டுச் சுருக்கிக் கூறுகின்றார்: மோகந்தான், என, ஆகாயத்தின் சியாமளத்தகைமைபோல ஜகத் சம்பந்தியாய மோகத்தை மறப்பதே மேன்மையான பேருபாயமென வெண்ணுகின்றேன் என்பது வருஞ் சம்பந்தமாம்.

(ச.) சம்மோகமலம் = அஞ்ஞானரூப மலமென்பதாம், சம்மோகமலம் என்பது, அலம் = அத்தியந்தம், சம்யக்மோகம் பெருமோகத்தைத் தூரப்படுத்துவா யென்பதாக இருபதமாகப் பிரிந்தும் பொருடரும். ஆகாயத்தினது நீலவன்னம் பொய்யுருவ மாயினும் மெய்போற் பாமரனுக்கும் பரீக்ஷகனுக்கும் பொதுமையுற்றுத் தோற்றுவதேபோல அவித்தையாற் கற்பிக்கப்பட்ட சகத்பிரதீதியும் பாரமார்த்திகம் போற் சனித்ததென்பதாம். (9)

(ஸ்ரீவீர - அ - கை) ஸ்ரீ வான்மீகி பகவான் இலக்கணம் சொரூபம் சாதனம் பலம் என்பவற்றானே ஜீவன் முக்தியினிலைமையை விரிவாகக்கூற இச்சித்தவராய் முதலில் எளிதாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டுச் சுருக்கி முத்தியிலக்கண சொரூபங்களைக் காண்பிக்கின்றார்:—இறப்பிலாவென.

இறப்பிலா விந்தமோக மிறையுமீட் டெண்ணமின்றி
மறப்பதே நல்லதென்று மதித்துயர் மனத்தினுக்குத்
திறப்படக் காணப்பட்ட தில்லெனச் சித்தினாலே
புறப்பெறு மெப்போதப்போ துயர்பர சுகமதாமே. (10)

(ப - ரை.) இறப்பிலா = உளதுபோற் றோன்றுகின்ற அதிஷ்டான ஞானத்தாலன்றிக்கெடாத, இந்த மோகம் = இச்சகத்பிரதீதியை, இறையும் = அணுவளவேனும், மீட்டெண்ணமின்றி = மாறிநினைப்பு வாராதிருக்கும்படி, மறப்பதே = மறந்துவிடுவதே, நல்லதென்று = நன்றாக வேண்டுமென்று, யாம் மதித்தும் = நாம் நிச்சயிக்கின்றனம் ; திறப்பட = அதிதிடமாக, காணப்பட்டது = திருசியம், இல்லை = முற்றினும் முக்காலுமே கிடையாதாம், என = என்று, சித்தினாலே = உண்டாம் போதத்தினாலே, மனத்தினுக்கு = மனதுக்கு, உறப்பெறும் = (திருசியமறப்பு) மீட்டெண்ணமறப் பொருந்தும், எப்போது = அஃதெக்கணம் பொருந்துமோ, அப்போது = அக்கணம், உயர் = நிரதிசயமான, பரசுகமதாம் = கைவல்லிய சௌக்கியஞ் சித்தியாம். (எ-று.) (10)

(ஸ்ரீ-வீர.) மீண்டும் ஜகத்பிரமத்தை விடயஞ் செய்யும் உண்மையான நினைப்பு இல்லாதிருத்தலே மீட்டெண்ணமின்மையாம். அல்லது ஞானத் தானே மூலஅவித்தை அழிந்தொழியவே பிரமத்தின்பாவமே மறப்புச் சப்தத் தாற் கூறவிழைவாம், ஆதலினானே மீட்டெண்ணமின்றி யென்னப்பட்டது. கற்பிதமாகிய திருசியம் அதிஷ்டானமான காண்போனுக் கயலாகவில்லை யென்பதா யாகமாதிகளா லுண்டாக்கப்பட்ட போதத்தால், சங்கற்பவடிவமாய மனமென்னும் அந்தக் கரணத்தினின்றும் திருசியநீக்கம் உண்டாகுமானால் மோக்ஷசுகமானதுண்டாகி விளங்கிநிற்கும். அதுவிடய சுகம்போலச் சாதிசயமன்றென்பார் உயரென்றார். திருசியமித்தியாத்வ நிச்சயந் திடமான வழி அவ்வாதனை நீங்கிப் போதலின் ஆண்டு இராகம் அனுதயமாதலின் அதனினின்றும் திரும்பிய சித்தம் பிரஹ்மானந்தத்தை யறிந்தனுபவிக்கும்; அதனாலே தடையாவுமுடைந்து அவிரும் அபரோக்ஷ ஞானத்தால் மோக்ஷமானதுண்டாமென்பது கருத்தாம். அன்றியும், ஆகாயத்தில் நீலம்போல முற்றினும் அசம்பவமாயதும், கற்பனையானுண்டாகியதும் ஆகிய உலக சம்பந்தியத்தியாச வடிவ இம்மயலை, இதன் மூலமாகிய அவித்தை வாசனையழிவானே மீண்டுமெண்ணாமை யுண்டாகுமாறு மறத்தலே யாவற்றினும் மேலாகிய முக்தியிலக்கணமும் சொரூபமுமாம், எனப்பிரமாண அனுபவங்களானே துணிந்திருக்கின்றோம்; பரோக்ஷ ஞானிகட்குத் துயிலிலும் நிருவிகற்ப சமாதியிலும் திருசியத்தின் மறப்பிருந்தபோதினும் அதுமீட்டு மெண்ணமில்லாமை யாகாதாம். அல்லது மீண்டும் நினைத்தல் எம்மனத்தால் அது மீட்டு மெண்ணமாம், அது எதன்கண்ணின்றோ அது மீட்டு மெண்ணமில்லாமையாம். மறப்பு என்பது நினைப்பின்மையாம், துவைதத் தோற்றமாத்திரமு மில்லாதிருத்தலென்பதாம். அல்லது மறந்திருத்தலேபோல மறந்திருத்தலாம், அனுபவிப்பவன்பால் மறந்த விடயமிருந்தபோதினும் தோற்றாததேபோலச் சைதன்யத்தின்கண்ணே திருசியமிருந்தபோதினும் தோற்றாதிருக்கும். ஆயினென் பரமார்த்த சத்தியமாகிய திருசியத்திற்கே சாங்கியர் கொண்ட முக்தியைப்போலத் தோற்றாமை மாத்திரமாயிருத்தலா முக்தி யெனின்? அல்லவாம், அத்தியஸ்தமாகிய அது தோற்றாமையே முக்தியாமென்க. சமஸ்காரத்தா லஃதுண்டாகாமையின் யாங்ஙனம் அதற்கு மயலாந்தன்மையெனின்? பூர்வ பூர்வ ஜகத்து விவகாரத்தாலுண்டாய சமஸ்காரத்தால் நிலைபெறல் கூடுமென்றுணர்க. அற்றேலாயின், தோடத்தாலுண்டாகாமையானும், அதிஷ்டான மின்மையானும் மயற்றன்மை கூடாதெனின், ஆகாயத்தில் வர்ணம்போலுண்டாய தென்க. தூர ஆராய்ச்சியின்மைத்தோடத்தானே ஆகாசவர்ண மயலுண்டாவதேபோல் அவித்தைத் தோடத்தாற் பிரஹ்மத்தின்கண்ணே யவித்தை மயற் கூடுமென்றுணர்க. எனவே முற்றினுந் திருசியத்தை மாற்றுவதாம் மொழிந்த இவ்விலக்கணம், அதனாற்குறிப்பிக்கப்பட்ட சின்மாத்திர நிலைபேறு சொரூபமாம். மதித்தும் என்பதனானே அவை தமதனுபூதியினானே துணியப்பெற்றனவெனக் காண்பிக்

கப்பட்டன, அவ்வாறாயின் நம்மனோரால் அவையே யனுபவிக்கப்படவில்லை யெனின்? திருசியத்தினது அத்தியந்தாபாவ போதமாகிய பாதமில்லாமல், கூறிய இலக்கணமும் சொரூபமும் எப்போதும் எங்கும் அனுபவிக்க முடியா வாம். அனுபவமில்லாமை காலத்தினுந் தேயத்தினும் வியாபகமாமெனக் காட்டும்பொருட்டு எப்போது மெங்குமென்றதாம். ஆயின், திருசியபாத மானது எவ்வேதுவிலா மென்று சங்கைவரின், சர்வ ஜகத்திற்கும் அதிஷ்டான பிரத்தியக்கபின்ன ஆன்மதத்துவ சாக்ஷாத்காரத்தானே அஃதாம், என்பத னானே அச்சாக்ஷாத்காரத்தைத் தேடவேண்டும்; உபாயத்தாலதைச் சாதிக்க வேண்டுமென்பதாம். ஆயினதற்கென்ன வுபாயமெனின், அது இச்சாஸ் திரத்தை யுணரின் அவசியம் சம்பவிக்கும் அதன் பொருட்டே இஃதுண் டாயதாம். தத்துவத்துணிபுண்டாகும்வரை சாஸ்திரத்தைச் சிரவணஞ் செய்கு வாயாயின் தத்துவத்தையடைவாய் வேறுவிதமாய் முடியாதாம். உலகமய லாகிய இதுகாணப்பட்டபோதினும், இந்நூலிற் காண்பித்தபடி யாராய்த லினானே யாதொருதுயரமுமல்லாமல் ஆகாயத்தில் வருணத்தைப்போலும் இல்லவே யில்லையென அனுபவிக்கலாம். அனுபவிக்கலாமென்றால் அனுபவம் ஆன்மசைதன்யமேயா? அல்லதுஅயலா? அயலென்பது கூடாது, ஏனெனின், அறிவிற்கு வேறாயது ஜடமாய் விடயமாதலின் அனுபவமென்பது பொருந்தா தாம். ஆன்மாவேயெனின், அதுமுன்னரே யிருக்கின்றதாதலின் சாஸ்திரத்தா லாகவேண்டியதென்னுளது? எனின், உண்மைதான், ஆன்மாவே யனுபவ மாயினும் இது திருசியத்தோடு கூடியிருத்தலின் அவ்வனுபவமாகாதாம்; மற்றே, விருத்திரூபமாகிய ஆன்ம தத்துவ சாக்ஷாத்கார போதத்தானே அவித்தையினழிவால் அதனாலுண்டாய திருசியநீக்கமானது, திருசியம் முக் காலத்தினு மில்லையென்பதாக மனத்திற்குக் கிடைப்பின் நித்தியசித்த ஆன்ம வடிவமாக இருப்பினும் மேலாகிய மோக்ஷஆனந்தமானது தத்துவஞானத்தா லுண்டாயதேபோல ஆகின்றதாமெனக் கேவலம் அதன்வாயிலாகச் சொரூப பூதமாயினும் அனுபவம் சாஸ்திரபலமாம்.

(ச.) அற்றேல், கணத்திற்குக்கணம் காணப்படுஞ் சகத்தினது மறப்பெங் ஙனமாமெனின், கூறுகின்றார்:—திறப்படவென. ஆத்மாவினின்றும் ஆகாசம் உதித்ததென்னுஞ் சுருதியால் திருக்குரூபமான ஆத்மாவினின்றுந் திருசிய மான ஆகாசாதிப்பிரபஞ்சத்திற் குதயமுண்டாதலின் திருக்குக்கன்னியமாகத் திருசியமிலதேயாம், உபாதானகாரணத்திற் கன்னியமாகக் காரியமுண் டென்றுரைத்தற்கு அரிதாதலின் என்க. கடக மகுட குண்டலாதியைக் காஞ் சனத்திற் கன்னியமாகக் கழறற்கரிதன்றே! உபாதானமும் உபாதேயமும் வேறுபொருளாயின் குருப்பொருட்கு இருகுண நீர்மைவரல் வேண்டும், மற் றஃதவ்வாறாகவே, பொன்முதலியவற்றாற் றட்டானியற்றிய அபகாரமாம், கனமான திரவியத்திற்கு இடையுயர்ந்து மாற்றதிகரித்திருத்தல் வேண்டும் அங்

ஙனங் கண்டதின்றுகலின் வேறுபொருள் என்பதெங்ஙனங்கூடும்? என்னுந் தார்க்கிகமுறைபோல் அஞ்ஞானுபகாரமா மென்பதுமுதலிய தர்க்கங்களாலும், "இவ்விடத் தநேகமெவளவு மில்லை" என்பதாதி சுருதிப்பிரமாணங்களாலும் உண்டான தத்துவஞானத்தால் மனத்திலுக்குத் திருசியவிஸ்மரணம் உறப் பெறுமாயின் அப்போது நிரதிசயகைவல்லிய ஆநந்தமாம், அதுவே ஜீவன் முக்தியென்பதாம். (10)

(ஸ்ரீவீர அ-கை.) வித்தையின்வலுவினுலே சித்தத்திற்கு விடயத்தினின் றுந் திரும்புதலைச் சம்பாதியாதவர்கள்பாற் ருேடங்கூறுகின்றார்:—வழிபடு மென. அல்லது வேறுசாஸ்திரங்தெரிவித்த உபாயங்களானே முக்தியே யுண்டாகமாட்டாதெனின் கூறுகின்றார்:— வழிபடுமென.

(ச.) இதனிதரபக்ஷத்தின் வருந்தோடத்தைக் கூறுகின்றார்:—திருசியத் தோற்ற மறப்பதின்றேல் அதனுல்வருந் தோடமிஃதாமென்கின்றார்:—வழி படுமென.

வழிபடு மிதனை விட்டு மற்றுள நூல்க ளென்னுங்
குழிகளிற் புரண்டஞ் ஞானக் குணத்தினுற் பிறப்போர்க் கெல்லா
மொழிவற வொருவர் செய்தற் குரித்தன்றுய்த் தானே யுண்டாங்
கழிதலிற் பரம வின்பங் கற்பங்க ளாலுங் கூடா. (11)

(ப-ரை.) வழிபடும் = வித்துவான்கள் எல்லா முறையானும் மேன்மைப் படுத்தி வணங்குவதான, இதனைவிட்டு = இத்திருசியமறப்பை யொழித்து, மற்றுள = இதற்கிதரமாக விரிந்துகிடக்கின்ற சப்தஜாலங்களா லமைக்கப் பெற்ற, நூல்கள் என்னும் = மனத்தைச்சிக்ஷிக்காமையின் சாஸ்திரங்கள் என் னும் பெயர்மாத்திரம் வாய்ந்த, குழிகளில் = (பரப்பிரஹ்ம விடயவபரோக்ஷ அனுபவமின்றி)ப் படுகுழிகளாகிய ஏறமுடியாத கிடங்குகளில், புரண்டு = தாங்களும் உருண்டு தங்களைச் சேர்ந்தாரையும் உருட்டி, அஞ்ஞானக்குணத் தினுல் = அறியாமையின்நீர்மையால், பிறப்போர்க்கெல்லாம் = மீண்டு மீண் டுமோயாது பிறந்துகொண்டிருப்பவர்கள் அனைவருக்கும், ஒழிவற = கெடுத லின்றி, ஒருவர் செய்தற்கு = அகாரணமாதலின் யாவரானுமியற்றற்கு, உரித் தன்றி = தக்கதன்றுய், தானேயுண்டாம் = சுயமாகவே சித்தமாகி அகண்ட விருத்தியையும் அஞ்ஞானநீக்கப் பொருட்டுமாத்திர மவாவி விளங்கும், கழித லில் = நித்தியசித்தமான, பரமவின்பம் = கைவல்லிய சௌக்கியம், கற்பங் கூடா = ஆயிரங்கோடி பிரமராயுட்களாலும் உதியாதாம். (எ-று.) (11)

(ஸ்ரீ-வீர.) கூறிய முறையே உண்முகத்தைச் சம்பாதிக்காமல் வெளிமுக மாகச் சாஸ்திரங்களாகிய படுகுழிகளில் புரளும் காயசேஷ்டையைச் செய்து கொண்டு அக்கிருத்திரிமத்தை யறியாத அதாவது அப்பிரஹ்ம வித்துக்களாய பரத்வாஜாதி யுங்களைப்போன்றவர்கட்குப்பெரும் பெரும்போது சென்றபோ

தினும் மோக்ஷசுக முண்டாகாதாம். அல்லது, அறியாதவர்கட்கு மோக்ஷசுக முண்டாகாதாமென்க. குழியிற் புரளும் புரட்சியானது, சேறுபூசிய காத்திரபங் காதியாலுளவாம் துக்கத்தின் பொருட்டே யாதல்போல, வெளிமுகர் தங்கள் நூலின் கேள்வி துயரப்பொருட்டேயா மல்லாமல் இன்பப்பொருட் டிறையு மாகாதாம் என்பதபிப்பிராயம். அன்றியும், கூறியவுபாயத்தைக் கவராவிடின் பிறப்பில்லாத அனுதியஞ்ஞானத்தை யுடையவரும், வெவ்வேறு வகையாய அநான்ம சாஸ்திரக்குழிகளிற் புரளுபவரும், இச்சையையுடைய குருடுகள் விழு வதற்கேதுவாதலின் குழியெனப்படும் அவ்வச் சாஸ்திரமுணர்த்திய உபாயங்க ளானே இகபரலோக விடயவிருப்பத்தானே முயல்பவரும், அதனானே, அதனை யனுபவிக்கும்பொருட்டு, மீண்டு மீண்டு இச்சம்சாரத்தில் பிறப்பெடுப் பவரும் ஆகிய கீழ்மக்கட்கு அளவில்லாத பிரஹ்ம கற்பங்களானும், இனைப்பா றுஞ் சுகமானதுண்டாகாதாம். அநாதியஞ்ஞானமானது ஞானத்தினும் வேறாகிய ஆயிரஞ் சாதனத்தானும் நீங்கமாட்டாதென்பது கருத்தாம்.

(ச.) திருசியமறப்பில்லாமல் நூல்களென்னுங் குழிகளிற் புரண்டென்றத னற் சாத்திரசன்னியமான விஞ்ஞானம் விக்ஷேபத்திற்கிருப்பிடமாதலாற் கேவலங்கிலேச நிமித்தமேயன்றிச் சித்தவிசிராந்தியினிமித்தமன்று மென்றதா யிற்று. இங்கு, அக்கிருத்திரிம அஞ்ஞானும்என்னும் மூலபதத்திற்கு நித்திய சித்தபரப்பிரஹ்மவிஷய அபரோக்ஷ அனுபவம் இல்லாதவர்கட்கு என்பது பொருளாம் என்றும், அக்கிருத்திரிமா அஞ்ஞானும் எனப் பதங்கள்பிரிவு படினே இயற்றற்கேலாத மோக்ஷசுகம் எனவிசேடிக்கப்பட்டு மோக்ஷசுக விசேஷணமாம் என்றும் அஞ்ஞானுமென்பதற்கு விசேஷணமாகாது என்றும் அறியக்கிடந்ததாம். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) போதத்தாற் றிருசியநீக்கம் திருசியவாசனை நீக்க வாயிலாகவே யாமாகலின் வாசனைத்தியாகம் திருசியநீக்கமுதலியவற்றின் வாயி லாக மோக்ஷத்திற்கு உத்தம உபயோகமாக இருத்தலின் அனுஷ்டிக்கத்தக்க தாம் எனக் கூறுகின்றார்:—அலைசெய்யென, அற்றேல், உபாசனைமுதலிய வேறு உபாயங்களானே சாதிக்கப்படுவனவாகிய சாலோக்கிய முதலிய அன்னிய மோக்ஷங்களும் பிரசித்தங்களாம் அவற்றாலவர்கட்கு எங்ஙனம் ஆனந்த முண்டாகாமற்போகும் எனின் கூறுகின்றார்:—அலைசெய்யென.

(ச.) அற்றேற் றிருசியத்தோற்ற மறப்பான் மோக்ஷமெங்ஙனமா மெனிற் கூறுகின்றார்:— அலை செய்யென.

அலைசெய்வா தனையைச் சேட மறவிட னல்ல தென்று
நிலைபெறு முத்தி யென்று நிமலமா நெறியீ தென்றுந்
தலைமையோர் பகர்வ ரன்ன திருவகைச் சனன நல்கி
யுலைதரு மலின மொன்ற தொழித்திடுஞ் சுத்த மொன்றே. (12)

(ப - ரை.) அலைசெய் = சலனத்தைத் தராநின்ற, வாதனைவை = வாசனைகளை, சேடமற = மிச்சமின்றி, விடல் = விடுவதே, நல்லதென்றும் = உத்தமமெனவும், நிலைபெறும் = நிதி பொருந்தும், முத்தியென்றும் = மோக்ஷமெனவும், ஈது = இதுவே, நிமலமாநெறி யென்றும் = விமலமான கிரமமெனவும், தலைமையோர் = சத்புருடர்கள், பகர்வர் = கூறுகிற்பர், அன்னது = அவ்வாசனை, இருவகை = இருவித வேற்றுமையுடைத்தாம், அவற்றுள், சநநநல்கி = பிறப்பைக்கொடுத்து, உலைதரும் = உழல்வதான, மலினமொன்று = அசுத்தவாசனை யொன்றும், அது = அச்சனனத்தை, ஒழித்திடும் = நாசஞ்செய்யும், சுத்தமொன்று = சுத்தவாசனையொன்றும் ஆம், (எ - று) (12)

(ஸ்ரீ - வீர.) வாசனைத்தியாகத்திற்கு எங்ஙனம் மோக்ஷத்தன்மையாதல் கூடுமெனவாசங்கித்து உபசாரத்தாலாமெனக்கருதி விடையளிக்கின்றார்:—ஈது என. வாசனைத்தியாகமே நிர்மலவுபாயமாம் மோக்ஷத்திற்கென்பது பொருள். பிறப்பிற்குவிரையாய வாசனைகளின் சேடமின்றிய யாதொரு பரித்தியாகமுளதோ, அதாவது, மூலத்தைக்கெடுத்தலானே முற்றினுங்கெடுத்தல் யாதோ அது முக்கியமோக்ஷமாம்; மோக்ஷசப்தத்திலிருக்கும் முச என்னும் பகுதிக்குப் பந்த நீக்கத்தில் இடுகுறித்தன்மை யுண்மையின் வாசனைகளே முக்கிய பந்தமாதலின், சாலோக்கியாதிகளில் அவ்வாசனை நீக்கமில்லாமையின், மோக்ஷசப்தங் கௌணமாம்; அந்த முக்கியமே அவித்தை முதலியமலம் நீங்கியோராலடையப்படும், மற்றையரான் முடியாதாம், கருமங்களானும் உபாசனைகளானும் சிரவணாதிகளானும் நாடோறும் மன நற்றாய்மையே சர்வ வாசனைகளும் அழியும்வரை சாதனமுறையாமெனவுணர்க. வாசனை நீங்கிய போதிலும் அதனேதுவாகிய மனமிருத்தலின் மீண்டும் வாசனை யுண்டாம் உண்டாகவே பந்தமு மாமெனின், ஆகாதாம், சீதசந்ததியானது சென்றொழியவே பனிக்கணம் பட்டழிவதேபோல, வாசனையானது கழிந்தொழியவே வாசனையின்கூட்டமே மனமாதலின் விரைவாகவே மனங்கெடும்; மனம் நஷ்டமாயினும், தூலதேகமே பந்தமாக நிலைபெறுமே யெனின், பெறாதாம், பூதக்கூட்டத்தாலாகிய பிராணிகளாகிய பறவைகட்குக் கூண்டுபோன்ற இத்தேகமும் வாசனையால் மெல்லியதாகி யுட்பிரவேசித்த நூலினாலே, முத்துக் கூட்டம் நிலைப்பதேபோல நிலைக்கும்; ஆகலின் வாசனையழியவே அத்தேகமும் நீங்கிவிடும்.

(சு.) உலகவாசனை, சாத்திரவாசனை, தேகவாசனையாகிய வனைத்தும் நசியாவிடின் திருசியமறப்பு வாராதெனக் கருதித்தமது வாக்கான் மேற்கூறப் போதலின் வாதனைத்தியாகமும் வேண்டு மென்பது கருத்து.

(ஸ்ரீ-வீர.) வாசனைத்தியாகம் மோக்ஷவுபாயம் என்னும் பொதுக்கூற்றால் எஞ்சுதலின்றி எல்லாவாதனையின் நீக்கம் எய்துறத் தூயவாதனை விடத்தக்க

தன்றும் என்று காண்பிக்கும் பொருட்டு வாசனை யிருவகையாமெனக் கூறு கின்றார்:—அன்னதென தள்ளக்கொள்ளத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவற்றின் முரணுய காரியஞ்செய்யுந் தகைமையைக் காட்டுகின்றார்:—மலின மென. அல்லது இங்ஙனம் உபோற்காதத்தானே பரமுக்தியை வருணித்து பிரகரணத்திற் றுதிக்கப்பட்ட ஜீவன்முக்தியை விளம்பும் வேட்கையராகி அதன்பொருட்டு வாசனையின் இருவகையை வழங்குகின்றார், சுத்தம் மலினம் எனவாசனை யிருவகையாக வழங்கப்படும், மலினமானது பிறப்பிற்கேதுவாம், சுத்தமானது பிறப்பையறுப்பதாம்.

(ச.) இவ்விடத்திற் சீவன்முக்தியை யடைந்த ஸ்ரீ இரகுநாதரது கதையை வெளிப்படுத்துவதற்கு வாசனை யிருவகையென நிரூபிக்கும் வாயிலாய்ச் சீவன் முக்தியை நிதானித்துக்கூறுகின்றார்:—அன்னதென. மலினவாசனை சன்மத் திற்கேதுவென்றும் சுத்தவாசனை சன்மநாசத்திற்கேது வென்றும் கூறினதா யிற்று. ஆண்டு வாசனையினிலக்கண மிதுவாம், திடமான பாவனையான் முன் பினெண்ணந்தீர்ந்து பதார்த்தந்தனைச் சேர்வுறக் கைக்கொள்கை, மடமான வாதனையாம்; திடபாவனையினுற் பூர்வாபர விசாரணையின்றிப் பதார்த்தத் தைக் கிரகிப்பது வாசனையெனப்படும். (12)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அவற்றுண் மலினவாசனையின் இலக்கணங் கூறுகின் றார்:—மடமையின் என.

மடமையின் செறிவே மெய்யாய் மலியகங் காரந் துன்றிப்
படர்தரு பிறப்பை மேன்மேற் பயில்விக்கு மலின மென்ப
ரடர்மறு சநந மென்னும் அங்குர மின்றிச் செந்தீச்
சுடமுளை யாவித் தொக்குஞ் சுத்தவா தனைய தென்பர். (13)

(ப - ரை.) மடமையின் = அஞ்ஞானத்தினது, செறிவே = கனமே, மெய் யாய் = ஆகாரமாய், மலியகங்காரம் = கனமான வகங்காரத்துடன், துன்றி = நெருங்கி, படர்தரு = துன்பத்தைத்தாராநின்ற, பிறப்பை = சன்மத்தை, மேன்மேல் = மேலும் மேலும், பயில்விக்கும் = உண்டாக்கும், மலினம் என் பர் = மலினவாசனை என்று மேலோர் சொல்வர், (சுத்தவாசனையாவது), அடர் = நெருங்கிய, மறுசனனமென்னும்= மறுபிறவியைத் தருவதென்னும், அங்குரமின்றி = முளையில்லாமல், செந்தீ = சிவந்த அக்கினியால், சுட = வெதுப்ப, முளையா = அங்குரியாத, வித்து = பீஜத்திற்கு, ஒக்கும் = ஒப்பா கும், சுத்தவாதனை என்பர் = தூயவாசனை என்று மேலோர் சொல்லுவர். (எ-று.) (13)

(ஸ்ரீ-வீர.) மடமையின் செறிவே மெய்யாய் = அஞ்ஞானத்தால் நன்னி பிடமாயேனும், நற்றிடமாயேனும் ஆகாரம் பெற்று என்பதாம்; அஞ்ஞான மிருந்தாலன்றோ வாசனைக்கு நிபிடத்தன்மையாதல், மற்றையபோதர்காதரம்,

கன அகங்காரசாலினியாயிது அதாவது ஙிபிடமாயாதல் திடமாயாதல் அகங் காரத்தால் அழகுடைத்தாகும் என்பதாம். இனிச் சுத்தவாசனையி னிலக்கண மாவது, இனிது வறுத்த விதைபோலும் மீண்டும் உண்டாக்கத்தகாததா யிருக் கும். அன்றியும், மலின வாசனையானது அஞ்ஞானத்தினன்குபெருத்த ஆகா ரத்தை யுடையதாம், கன அகங்கார இயற்கையதாம், மீண்டும் மீண்டும் பிறப் பினும் வித்தாம், என்பர் மூத்தோர். வாசனை விரைகள் இனிது முளைப்பதற்கு அஞ்ஞானம் நல்ல நிலமாம், அதன்கண்ணே விடயத்தைச் சந்ததம் சிந்தித்தல் வடிவப்பயிற்சியால் விருத்தி யடைந்த நல்ல கனகாரத்தையுடைய வாசனை விரையாம். இராகத்துவேடாதிகளானே வளர்தலால் நெருங்கிய அகங்காரம் நீர் தெளிக்கும் நிலமுடையவனும்; அவனாலேயே அது விருத்தியடைவதாகி விரிந்து விளங்குகின்றது. சுத்த வாதனையானது மறுபிறப்பை யுண்டாக்கு மங்குரத்தை விடுத்து வறுத்தவிதைபோ லிருப்பதாம்.

(ச.) மடமையென்பது அனுதியவித்தையும், அகங்காரமென்பது தேகா தியி லாத்மாபிமானமும் ஆகிய அஞ்ஞானம் அன்னியதா ஞானம் என்னு மிரண்டாலும் நிபிடமா யிருப்பது மலினவாசனை யென்பதாம். வருத்தவித் தங்குரத்தை யுண்டாக்குவதற் காகாததேபோல ஞானக்கினியால் வெந்து வலி குன்றி யிருத்தலின் ஜன்மாந்தரத்தை யுண்டுபண்ணாதது சுத்த வாசனை யென் பதாம். (13)

(ஸ்ரீ-வீர-அ-கை.) கூறிய பொருளையே விரித்து விளம்புகின்றார் அல்லது பலத்தோடுகூடி வியந்த ஜீவன்முக்தியை யாசிரயத்தோடுங் கூறுகின்றார், விளம்புமென.

(ச.) இப்போது சுத்தவாசனுசித்தியே ஜீவன்முக்தியாமெனக் கூறிப் பிரதானமான கதையைக் கூறத் தொடங்குகின்றார்:—விளம்புமென.

மெய்தரி நிமித்த மாகத் தரிப்பதாம் விளம்புஞ் சுத்த
மெய்தினர் பிறவி யான வனர்த்தத்தி னென்று மெய்தார்
நொய்தினி நோக்க வேண்டு நோக்கெலா நோக்கி யின்பஞ்
செய்திடுஞ் சீவன் முக்தி சேர்ந்தவ ரென்ன லாமே. (14)

(ப - ரை.) அன்றியுஞ் சுத்தவாசனை, மெய் = தேகம், தரிநிமித்தமாக = தங்கும் பொருட்டாக, தரிப்பதாம் = அணிவதாம், விளம்பும் = இங்ஙன மியம்பிய, சுத்தம் = தூயவாசனையை, எய்தினர் = பொருந்தினவர், பிறவி யான = ஜன்மமாகிய, அநர்த்தத்தில்=பொல்லாங்கில், என்றும்=மேலொருக் காலும், எய்தார் = பொருந்தார், நொய்தினில் = அதிக சூக்குமமாக, நோக் கவேண்டும் = அறியத்தகுந்த, நோக்கெலாம் = விடயமுழுதையும், நோக்கி= அறிந்து, இன்பஞ் செய்திடும் = சௌக்கியத்தைத்தராநின்ற, ஜீவன் முக்தி = ஜீவிக்குங்காலத்திலேயே முக்தியை, சேர்ந்தவரென்னலாம் = பொருந்தின வராமென்று புகலலாம். (எ-று.) (14)

(ஸ்ரீ-வீர.) வர்த்தமான தேகஸ்திதியின்பொருட்டுத் தாங்கப்படுவதும், எதன் நிமித்தத்திலே அறியவேண்டிய பிரஹ்மம் அறியப்பட்டதோ அதுவும் சுத்த வாசனையாமென்று மறிக. யாவர் தூயவாசனை யுடையவராய் அறியவேண்டிய தமது யதார்த்த சொரூபத்தை யறிந்து மகாமேதாவிகளா யிருக்கின்றார்களோ அவர்கள் ஜன்மமேயாய அனர்த்தத்தின் பாத்திரமாக மறுபடியாக மாட்டார்கள்; அவர்களே ஜீவன்முக்தர்களென்றும் சொல்லப்படுகின்றார்கள். சுத்த அசுத்த வாசனைகட்கு இவ்வாறு இலக்கணங்களமைந்தவழி முமுக்ஷுவால் தூயவாசனை விடத்தக்கதன்றாம், மற்றே, மலினவாசனையே விடத்தக்கதாம், தூயதோ பெருமுயற்சியினாலே சம்பாதிக்கத் தக்கதாம் என்பது சமுதாயப் பொருளாம். விதையினுள்ளே சூக்குமமாகிய அங்குரங்களிருந்தே காலஞ்சல முதலியவற்றின் சம்பந்தத்தான் முளைக்கின்றன, அதுபோல, வாசனையின் கண்ணுள்ளடங்கிய ஜன்மபரம்பரைகளிருந்தே காமகருமாதி நிமித்த வசத்தால் கிளம்புகின்றன. முற்றினுமில்லாததற்குச் சன்மஞ் சம்பவியாமையின் ஆண்டுத் தத்துவ ஞானத்தானே அவித்தைநிலஞ் சுடப்படுதலின் அதனுள்ளடங்கிய பிறப்பங்குரங் கெடினும் தனது பிறாது பிராரப்தத்தானே தடைப்பட்ட, வறுத்த விதைபோலும் தேகத்தைத் தாங்குவதின் மாத்திரம் பயனுடையதாய வாசனை எஞ்சும் அதுவே சுத்தமாம். ஜீவன் முக்தர்களாகிய தேகிகளிடத்தில் தேகமிருக்கும்வரை மீண்டும் பிறப்பைத் தராததாகிய சுத்தவாசனையானது, சுழன்ற சக்கரத்தில் சுழற்சி யிருப்பதேபோல விருக்கும். தேகத்தைத் தாங்குங்காரியத்தானே அவர்களிடத்தும் வாசனையினிருப்பு அநுமிக்கப்படுமென்பது கருத்தாம். மிகுதியாகச் சுத்தவாசனை யுடையவர்களாகி மீண்டும் பிறப்பாகிய அநர்த்தத்தை யடையாதவர்களாகி யிருக்கும் அவர்களே மகாமதியுடையவர்களும் ஜீவன் முக்தர்களும் அறியவேண்டியதை யறிந்தவர்களும் ஆவர்கள் எனப்படுவர்கள், படவேதத்துவஞானத்தால் தகிக்கப்பட்ட பிறப்பின் முளையாற்றலையுடைய வாசனை மாத்திரத்தானே தரித்த சரீரத்தன்மை, ஜீவன்முக்த இலக்கணமென்பதுதுணிபாம்.

(ச.) வறுத்தவித்துத் தீனிக்குபயோகியா யிருப்பதுபோலத் தேகதாரணை மாத்திரத்திற் குபயோகியா யிருப்பது சுத்தவாசனை யென்பதாம். சுத்தமெய்தினர் ஜீவன் முக்தி சேர்ந்தவர் என்றதால் சுத்தவாசனையின் சித்தியே ஜீவன் முக்தி யென்றதாயிற்று. (14)

(ஸ்ரீ-வீர-அ-கை.) இதுகாறும் இயம்பியவகையே ஜீவன் முக்திசாதன விஞ்ஞானஉபாய பூதசமாதியையும் உபாயசகித முக்தியையும் அதனுபாய இலக்கண சாஸ்திரார்த்தத்தையும் சுருக்கமாகக் கூறி இப்போது எம்முறையானே ஜீவன்முக்தபதத்தை யடைந்து இச்சமுசார சங்கடத்தில் விவகரித்துக்கொண்டிருந்தனர் ஸ்ரீ இராகவர் என்னும் வினாவிற்குத்தரத்தைப் பிரதிஞ்ஞைவாயிலாக உத்தரகிரந்த சந்தர்ப்பங்கொண்டு கூறுகின்றார்:— அல்லது

ஜீவன்முக்தியின் சாதன நிரூபணத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:— ஆன்றதோரென.

ஆன்றதோர் ஜீவன் முத்திப் பதத்தினை யடைந்தி ராமன்
மூன்றமா மனத்தனை நெறியினைப் புகலக் கேட்பிற்
சான்றவிக் கேள்வியாலே சரைமர ணங்கடீர்தி
தோன்றலே யெனவான்மீகித் தொன்முனி சொல்லலுற்றான். (15)

(ப - ரை.) ஆன்றது = மாக்ஷிமையான, ஓர் = ஒப்பற்ற, ஜீவன் முத்திப் பதத்தினை = ஜீவன்முக்திப்பதவியை, அடைந்து = சேர்ந்து, இராமன் = ஸ்ரீ இராகவர், மூன்றமாம் = மகத்தாகிய, மனத்தனை = மனதுடையவனை, நெறியினை = சன்மார்க்கத்தினை,. புகல = யாமுனக்குக்கூற, கேட்பில் = நீ சிரத்தையோடுஞ் சிரவணஞ் செய்வையேயாயின், சான்ற = சர்வசாக்ஷியே தானெனத் தெளிவிக்காநின்ற, இக்கேள்வியாலே = இச்சிரவணத்தினாலே, சரை மரணங்கடீர்தி = தானேநிருவிகாரியாதலின் சராமரண சாந்தனாவாய், தோன்றலே = சீடநற்குணங்களிற் பெருமைவாய்ந்த சிறந்தபரத்துவாசனே, என = என்றிவ்வண்ணம், தொல் = பழமையான ஆதிகவியென்னும், வான்மீகிமுனி = வன்மீகமாகியபுத்து மூடும்படியாகத் தவம்புரிந்து வான்மீகரெனக் கூறுமாறு நின்ற ஜீவன்முக்த தவத்தையுடைய முனிவர், சொல்லலுற்றான் = அனுக்கிரகிக்கத்தொடங்கினார். (எ - று.) (15)

(ஸ்ரீ - வீர.) ஜீவன்முக்தர்களுடைய ஸ்தானத்தை அதாவது சுவாராஜ்ய மென்னும் நிர்வாண பரமானந்தவடிவ சொரூபத்தை எம்முறையானே ஸ்ரீ இராகவரடைந்திருந்தாரோ அம்முறையை யென்பதாம். அத்தகைய ஜீவன் முத்திப்பதத்தை மகாமதியையுடைய ஸ்ரீஇராகவர் எச்சாதனமுறையானே சாதித்தாரோ அதனை நினக்குக்கூறுகின்றேன் கேட்குதிகேட்பின் ஜனன மரணமேமுதலாயிருந்த அநர்த்தங்களியாவும் நீங்குவதாகிய பயன்கிடைக்கும்; மேலும், இச்சுயமாகிய ஸ்ரீஇராமர் முறையைக்கூறுகின்றேன் இதனை நீ கேட்பதனானேயே எப்போதுமே யாவற்றையுமே யுணர்வாய், இதனானே, ஒன்ற னுணர்வானே எல்லாவற்றி னுணர்வுமாமென்பதும் அதன்பயனாயதாம்.

(ச.) சரைமரணங்கடீர்தி யென்றதனால் ஞானசாத்திர விசாரத்தாற்றானே பஞ்சகோசவிலக்ஷணமான நிருவிகாரியென்னுஞ் சுவானுபூதி யுதித்தலின் அப்பஞ்சகோசங்களுக்குள்ள சரா மரணமுதலிய சகலவிகாரங்களுஞ் சாந்தியா மென்றதாயிற்று. (15)

(ச - அ - கை.) அற்றேல் ஏககாலத்தில் வெகுவித சாஞ்சல்லியமான வாலியமும், அன்றியும் அகிலமான ஆசையென்னுந் தோட்டத்துக்கடிமை புகுந் தாருண்யமும், அன்றியும் சார்வபௌம சம்பத்தோடுகூடிய மகாகீர்த்தியும் வலியுமுள்ள பிதாவும், முன்னிலையி லனுதினமு மனுபவித்தற்குரிய சுகசாதன

சாமக்கிரியும் இருப்ப ஸ்ரீஇராமருக்கு வைராக்கியாதி யோக்யதை யெங்ஙனமாம், எங்ஙனந்தான் அநதிகாரியாகிய அவருக்கு ஸ்ரீவசிஷ்டபகவானுபதேசங்கூடல், உபதேசமில்லாதவருக்குச் சீவன்முக்தியினடைவுதான் எங்ஙனமோ தானுதல் எனச்சங்கித்து, நிரந்தரந்தடையற வியற்றும் ஞானசாஸ்திர விசாரத்தால் நித்தியாநித்திய வஸ்துவிவேகமும், தீர்த்தாடன மூர்த்தி வழிபாடு முதலியவற்றானுண்டாகாநின்ற அகண்ணிய புண்ணியத்தானே பரிசுத்தமான சித்தத்திற்கு விடயங்களினுள்ள தோடதரிசனத்தால் வைராக்கியமும் ஸ்ரீவசிஷ்டாதி மகாமுனீசுரர்கட்கு அன்புடன் செய்யும் பணிவிடையாற் சமதமாதிசம்பத்தும் முத்திவிருப்பும் என்னுஞ் சாதனசதுட்டய சம்பத்துள்ள அதிகாரியான ஸ்ரீ இராகவருக்கு ஆசிரியரது அனுக்கிரகத்தாலும் தமதுபோதவலியாலும் ஜீவன்முக்தி சித்திப்பதிற் றடையாதாமெனக் கருதிக்கூறுகின்றார்:— சதுர்மறையென.

சதுமறை நூல்களியாவுந் தரித்தனன் விநோதத் தாலே
யெதுபய மென்ன வஞ்சா திருந்தனன் சின்னாட் பின்னாண்
முதுபய னதிக ளியாவு முனிவர திடமுங் காண்பான்
கதுமெனக் காத லானான் கார்நிறக் கமலக் கண்ணன். (16)

(ப - ரை.) கார்நிறக்கமலக்கண்ணன் = மேகவர்ணமான தேககாந்தியையும் செந்தாமரைமலரிதழ்போன்ற கண்களையும் கவின்பெறப் பொருந்திய ஸ்ரீ இராமச்சந்திரர், சதுமறை = இருக்குமுதலிய நான்குவேதங்களையும், நூல்களியாவும் = ஆறு அங்கங்கள் நியாயம் மீமாம்சை மிருதி புராணம் அர்த்தவேதம் ஆயுர்வேதம் காந்தர்வவேதம் தனுர்வேதம் இதிகாசங்கண்முதலிய சருவசாத்திரங்களையும், தரித்தனன் = ஆன்றோரொழுக்கத்தை யனுஷ்டித்துக் காட்டுவான் சீடராயினும் ஈசுரமான்மியங்கொண்டு குதூகலத்துடன் ஆயாசமின்றியே கற்றுணர்ந்தவராகி, வித்யாகிரகத்தினின்றுந் தமது அரண்மனைக்கு வந்து, எதுபயமென்ன = இனிநமக் கச்சமியாதுளதென்று, அஞ்சாது = ஒரு பயமுமின்றி, விநோதத்தாலே = லீலையால், சின்னாள் = சிலதினங்களைப் போக்கிக்கொண்டு, இருந்தான் = நின்றான், பின்னாள் = வாலிபகாலஞ்சென்றதன்பின்பு, முதுபயன் = முதிர்ந்தபிரயோசனத்தைத் தாராநின்ற, நதிகள் = தீர்த்தங்களையும், முனிவரதிடமும் = முனிசிரேஷ்டர்கள் வசிக்கும் புண்ணிய ஆச்சிரமங்களையும், யாவும் = மற்றுமுள்ள தேவாலயாதி அனைத்தையும், காண்பான் = தரிசிக்கவேண்டுமென்று, கதுமென = அதிவிரைவாக, (அல்லது கதுவுறு = நீங்காதுபற்றுதலான,) காதலானான் = விருப்பமுற்றான். (எ-று.) (16)

(ஸ்ரீ - வீர.) வித்யாகிரகத்தினின்றும் = வித்தைகளின் இலாபஸ்தானமாகிய ஆசார்யகிருகத்தினின்றும் என்பதாம். தீர்த்த புண்யாசிரமங்களின் வரிசைகளைக் காண்பான் அனுராகமுண்டாயதாம். எங்கும்பயமின்றிய செந்தாமரைக் கண்ணராகிய ஸ்ரீஇராமர் பாடசாலையினின்றுங்கிளம்பி வீடுவந்து

சேர்ந்து நாட்களை விளையாட்டாற் கழித்துவந்தனர். பிரஹ்மசரிய ஆசிரமத்திற்குத் தக்க குருகுலவாசத்தினின்றும் கிளம்பி யென்றதனானே சர்வவித்தைகளின் தானங்களையும் கவர்ந்ததன்பின்னென்னலாம். சுரமுதலியவற்றுச் சோகமின்றியவராய்ப் பிரஜைகளிருக்கும்படியாகத் தசரதர் பூமியைக்காத்துக் கொண்டிருக்குங்காலத்தில் ஈண்டு இராஜ்யத்தின் இனிமையானே பிரஜைகட்குச் சுரமுதலிய பீடையுமில்லையாயின் அன்னிய பீடைகளில்லாமலிருந்தனவென இயம்பவேண்டுவதில்லையாம். அக்கால் ஸ்ரீஇராமருடைய மனமானது, தீர்த்தங்கள் புண்ணியாசிரமங்கள் முதலியவற்றைக் காணவேண்டுமென்னும் பேரவாவைப் பெரிதுமடைந்தது. அற்றேல்,இவ்வத்தியாத்ம சாஸ்திரத்தில் தீர்த்தயாத்திரையை வருணித்தற்கும் இனிக்கூறப்படும் வேட்டையை வருணித்தற்கும், யாதுசம்பந்தம்? ஸ்ரீஇராம சரித்திரமாதலினானே ஈண்டுவருணிக்கப்பட்ட தென்பது கூடாது, ஏனெனின், ஸ்ரீஇராமரது அவதாரத்தை வருணிக்க நேர்தலினானும், பூர்வஇராமாயணம் வீணாகப்போதலினானும் எனவினவின்? விடைவருமாறு:—கதையினுபாயத்தை விசாரித்து என்பதன்கண்ணே தத்தம் வருணத்திற்குத்தக்க யாகாதி கருமத்தாலுண்டாய மனத்தூய்மையானது பிரஹ்மவித்தையினதிகாரத்திலினிது பொருந்துகின்றது எனஇயம்பப்பட்டது; வயது வித்தைமுதலியவை கிடையாமையின் யாவன் யாகாதியை அனுஷ்டிக்கச் சாமர்த்தியமில்லாதனாவனோ அவனுக்குத் தீர்த்தயாத்திரை முதலியவற்றானும் யாகாதிபலமாகிய மனத்தூய்மையதிகாரம் 'பூமிசம்பந்தமாய இந்நீர்மய யாகங்கள் தீர்த்தரூபாங்களாக உண்டாக்கப்பட்டன' என்னும் வசனத்தானே சித்தமாம் என்பதை குறிப்பிக்கும் பொருட்டுத் தீர்த்தயாத்திரையை வருணித்ததாம். இதனானே ஸ்ரீஇராமரைக் கிழவயதுடையவராக இனிதுகற்பித்து ஆன்மஜிஞ்ஞாசையை வருணிக்கவில்லை, கூறியபொருள் குறிப்பிக்கப்படாமற்போதலின். வேட்டையைவருணிப்பதோ, கண்டஉற்சாக தரிசன அவாவும் ஆன்மஜிஞ்ஞாசைக்குத் தடையாதலின் அவ்வுற்சாகத்தை யனுபவியாமல் அவ்விச்சையகலாவிடின் அதையனுபவித்தேனும் அஃதசாரமென்னுந் துணிபானே அவ்வாசையை யகற்றித் தடையில்லாமல் சிரவணாதிகளில் நிலைபெற்று நிற்றல்வேண்டும்என விசேடமாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு ஆமெனயாவுமே மனமுடைத்தாம்.

(ச.) அவதாரிகையிற் சந்நிதியிற் பிதாவும் என்பதிட்டமாயின், அத்தகைய பெருமைவாய்ந்த பிதா தமது சமீபத்தில் வேண்டிய சௌகர்யஞ் செய்து கொடுக்கத் தடையிலாதிருப்பச் சாதனமெங்ஙன்கூடும் எனப்பொருள் கொள்ளலாம்.

விநோதத்தாற் சிலநாளிருந்தனன் என்பதனாற் குருகுலத்திலடங்கிச் சிசுரூஷைகளைப் பயபக்தியுடன் செய்துகொண்டிருந்தமையின், அக்கிலேச நிவிருத்தியின் பொருட்டுத் தனதிச்சைப்படி விளையாடிக் கொண்டிருந்தாரெனத் தெரிவித்ததாம். (16)

(அ - கை.)

தந்தைதன் சரண மான நகமெனுந் தாது பூத்த
வந்தமில் கமலப் போதை யன்னம்போ லணைந்து தாழ்ந்து
முந்தைநன் னதிக டேவ ராலய முனிவர் கான்கள்
எந்தைநின் னருளிற் காண்பா னெண்ணிய தென்ற னுள்ளம். (17)

(ப - ரை.) ஸ்ரீஇராகவர் இங்ஙனஞ்சிந்தித்தெழுந்து, தந்தைதன் = பிதாவினது, சரணமான = பாதமாகிய. நகமெனும் = உகிரென்னும், தாதுபூத்த= கேசரநிறைந்த, அந்தமில் = அழகிற்கிருப்பிடமான, கமலப்போதை = பதுமமலரை, அன்னம்போல் = ஓதிமம் போல், அணைந்து = சார்ந்து, தாழ்ந்து= வணங்கி, முந்தை = பழமையான, நன்னதிகள் = புண்ணியதீர்த்தங்களையும், தேவர் = கடவுளரையும், ஆலயம் = அவர்வசிக்கும் கோயிற்களையும், முனிவர் = தவத்தோரையும், கான்கள் = அவர் வசிக்குந் தபோவனங்களையும், எந்தை = எனதுபிதாவே, நின்னருளின் = நினதுகாருண்யத்தினால், காண்பான் = தரிசித்தற்கு, என்றனுள்ளம் = எனதுமனம், எண்ணியது = விரும்பியது. (எ - று.) (17)

(ஸ்ரீ - வீர.) அபிநவங்களாகிய நகங்களே கேசரங்களாம் = கிஞ்சற்கங்களாம், அத்தகையவை சரணங்களென்க. ஆண்டு ஒருகால் நற்குணங்கட்கிடமாகிய ஸ்ரீஇராகவர் இவ்வாறு கூறியபொருளைச் சிந்தித்துத் தந்தையினது நகமாகியதாதுக்கணைறைந்த நவீனசரணகமலங்களை அன்னப்பக்ஷியைப்போல அணைந்து வணங்கிக் கூறுவதாவது, ஹேநாதனே, தீர்த்தங்களையும் தேவாலயங்களையும் முனிவர்வாழும் வனங்களையும், அவரது பன்னகசாலைகளையும் காணும் பொருட்டு எனதுமனம் மிகவும் விரும்பியது. நாதனேயென்றது தமதுபாரதந்திரத்தைக் குறிப்பிக்கும் பொருட்டாம். தந்தையின்பால் வாழ்பவனுக்குத் தந்தையின் சந்நிதியில் தந்தையின் ஆணைவாயிலாகவே தருமஅதிகாரமிருத்தலின் என்பது கருத்தாம். (17)

(அ - கை.)

முடிவில ரிரந்த தெல்லா முடிவுறா தில்லை நின்னா
லடியனேன் முன்னம் வேட்ட வரமுநீ யருடி யென்னப்
படிபுகழ் வசிட்ட னேடும் பார்த்திப னினிதி னெண்ணிக்
கடிதுபோய் மீடி யென்னக் கார்கழல் வணங்கிப் போனான். (18)

(ப - ரை.) முடிவிலர் = அநந்தம் யாசகர்க்குள் ளொருவனேனும், இரந்ததெல்லாம் = யாசித்தபொருளனைத்தும், நின்னால் = (நாதனே) உம்மால், முடிவுறாது = முற்றுப்பெறாமல், இல்லை = அமானிதையாய்ச் சென்றது இன்றும், ஆகலின், அடியனேன் = அடியேன்; முன்னம் = பூருவும், வேட்ட =

யாசித்த, வரமும் = இவ்வரத்தையும், நீயருடியென்ன = நீயருள்வாயென்று வேண்ட, படிபுகழ்=உலகத்திலுள்ள மகான்கள் புகழாநின்ற, வசிட்டனோடு= ஸ்ரீ வசிட்டமுனிவரருடன், பார்த்திபன் = அரசன், இனிதின் = நன்றாக, எண்ணி = விசாரித்து, கடிது = சீக்கிரமாக, போய் = சென்று, மீடி=திரும்புதி, என்ன = என்று விடைகொடுக்க, கார் = மேகவன்னனான ஸ்ரீ இராகவர், கழல் = அம்மன்னவனது சரணத்தை, வணங்கி=இறைஞ்சி, போனான்= தனது கிருகத்திற்குச் சென்றான். (எ-று.) (18)

(ஸ்ரீ-வீர.) உம்மால் எந்த யாசகனாவது இப்புவனத்தில் இச்சித்தவற்றை யடைதலாற் சன்மானிக்கப்படாமற் போனானென்பதாக இல்லையாதலின், முதலதாகிய இவ்வெனது பிரார்த்தனையைப் பலனுடையதாகச் செய்யவேண்டும், எனவேண்டிக்கொள்ளப்பட்ட அரசரானவர் ஸ்ரீ வசிஷ்டபகவானோடும் ஆலோசனைசெய்து முதல்முதல் வேண்டிக்கொண்ட ஸ்ரீ இராமரைப் போகுமாறே ஆஞ்ஞை தந்தனர். மைந்தன் பிரியும் துயரால் அங்கீகரித்திலர் என்பதாக இல்லை. (18)

(அ-கை.)

தம்பிய ரோடு நன்னா ளேகித்தன் னாடு நீங்கிப்
பம்பிய நதியுங் கானும் பற்றற்றோ ரிடனும் பாலை
வெம்பிய நிலனும் வேலைக் கரைகளும் விலங்கற் சார்வும்
வம்பிய லலங்கல் வீரன் நோக்கினன் மகிழ்ச்சி கூர. (19)

(ப - ரை.) நன்னாள் = சுயமான நக்ஷத்திரதினத்தில் சுபயோக சுபகரணாதி வாய்ந்தவேளையில், தம்பியரோடும் = சகோதரருடன், வம்பியலலங்கல் வீரன் = வாசனை பரிமளியாநின்ற (வெற்றி) மாலையைத்தரித்த சுத்தவீரனாகிய ஸ்ரீ இராகவர், ஏகி = தனது கிருகத்தினின்றும் தீர்த்தயாத்திரை நிமித்தம் புறப்பட்டு, தன்னாடு = தமது கோசலமண்டலத்தை, நீங்கி = கடந்து, பம்பிய = பொலிவுள்ள, நதியும்=புண்ணியமயமான தீர்த்தங்களையும், கானும்= தபோ வனங்களையும், பற்றற்றோரிடனும் = முனிவராச்சிரமங்களையும், வெம்பிய = வெப்பமுள்ள, பாலைநிலனும்=பாலைநிலங்களையும், வேலைக்கரைகளும்= சமுத்திரங்களையும், விலங்கற் சார்வும் = மலைச்சார்புகளையும், மகிழ்ச்சிகூர= சந்தோடம் பெருக, நோக்கினன் = நீராடல் தானம் ஜபம் தியானம் ஆகிய இவைகளைக் கிரமமாக முன்பியற்றிப் பின்பு தரிசித்தான். (எ-று.) (19)

(ஸ்ரீ-வீர.) சுபவாரத்தில் சுபதிதியில் சுபநக்ஷத்திரத்தில் சுபயோகத்தில் சுபலக்கினத்தில் ஸ்ரீ இராகவர் தம்பிமார்களோடும் சுபசகுனங்களோடும் மங்கள அலங்காரத்தோடுகூடிய திருமேனியை யுடையவராகி, மறையவர்களாலாசீர்வாதம் பண்ணப்பட்ட மார்க்கமுடையவராகி ஸ்ரீவசிஷ்டபகவானாற் றேர்ந்தெடுத்தனுப்பப்பட்ட சாஸ்திரமுணர்ந்த பிராஹ்மணர்களோடுகூடியவராகி

மிகநேயத்தோடுகூடிய மேன்மைதங்கிய இராஜபுத்திரர் சிலரோடுகூடியவராகி, தாய்மார்களால் பன்முறை தழுவித் தழுவிச்செய்யப்பட்ட ஆசீர்வாதங்களோடு அலங்கரிக்கப்பட்டவராகித் தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்னு முயற்சியுடையவராகித் தமது அரண்மனையினின்றும் வெளிப்போந்தனர். தமதுகோசல மண்டலத்தினின்றும் முறையாகத் தொடங்கி ஸ்நான தான தவத்தியானவாயிலாக நதிதீரங்கள், புண்ணியவனங்கள் புண்ணிய ஆசிரமங்கள் தேவாலயங்கள் காற்றுநிறைந்த பாலைவனங்கள் கிரிமமுடிபுகளிலிருக்கும் கடற்கரைகள் மருத்தலங்கள் மலைத்தோற்றங்கள் இந்துசம மந்தாகினி கிலோற்பல சமயமுனைமுதலிய விசேடபுண்ணியநதிகள் ஸ்ரீவாரணசிமுதலிய விசேடபுண்ணிய ஸ்தலங்கள், ஸ்ரீவிசுவேசர் முதலியவிசேட புண்ணியமூர்த்திகள் 64 சிவாலயங்கள் 64 விஷ்ணுவாலயங்கள் நானாவித ஆச்சரிய விசித்திர நாற்கடற்கரைகள் விந்திய மந்திர ஹிமாசலதலங்கள் இராஜஇருடிகள் பிரஹ்ம இருடிகள் தேவர்கள் பிராஹ்மணர்கள் புனிதமங்கள புண்ணியாசிரமங்கள் முதலியயாவற்றையும் மிகவும் ஆதரவோடும் இனிது நோக்கினர்.

(சு.) தம்பியரோடுமென்பது பரத லக்ஷ்மணரோடுமென்றுணர்தற்பாற்று, என்னெனினிவர்களே யவர்திருக்கருத்துணர்ந்து நடக்கும் நீர்மையராதலி னென்க. (19)

(அ - கை.)

துன்னுறு மமரர் போற்ற மானிடர் துதிப்ப மீண்டு
தன்னுயர் சிவலோ கத்தைச் சார்தரு மீச னென்னப்
பொன்னுல கத்தை மேவும் புரந்தரன் புதல்வ னென்ன
மன்னுறை யயோத்தி புக்கான் மலர்சொரிந் தியாரு மேத்த. (20)

(ப - ரை.) தன்னுயர் = தனதுமேலான, சிவலோகத்தை = சர்வஐசுவரியங்களும் நிறைந்து ஸ்ரீபார்வதி சமேத பரமசிவத்தின் நிவாசமாகிய கைலாச பர்வதத்தை, சார்தரும் = பரமபக்தானுக்கிரகநிமித்தம் விஜயஞ்செய்திருந்து மீண்டும் சுவஸ்தானத்தைநோக்கி யெழுந்தருளிவராநின்ற, ஈசனென்ன=உமாமகேசுரர் போலும், அந்தஸ்ரீஇரகுநந்தனர், துன்னுறும் = நெருங்காநின்ற, அமரர் = தேவதைகள், போற்ற = புகழவும், மானிடர்=மனிதர், துதிப்ப= துதிக்கவும், மீண்டு = தமதுகிருகத்தைக் குறித்துத்திரும்பி, பொன்னுலகத்தை = சுவர்க்கலோகத்தை, மேவும் = பொருந்தாநின்ற, புரந்தரன் புதல்வனென்ன=தேவேந்திரனது மைந்தனாகிய சயந்தன்போலும், யாரும்=பூவையர் புருடரனைவரும், மலர் சொரிந்து = முறையே அரிவையர்பொரிமலரும் ஆடவர் பூமலரும்பொழிந்து, ஏத்த = மங்களத்துதிகள்பாட, மன்னுறை = தமதுதந்தையாகிய மகாராஜன்வாழும், அயோத்தி = அயோத்திமாநகரத்தை, புக்கான் = சேர்ந்தான். (எ - று.) (20)

(ஸ்ரீ - வீர.) ஆண்டாண்டு சந்தித்த அமரர் கின்னரர் மனுடர் முதலியோ ரானே பூஜிக்கப்பெற்றவராகி, ஜம்புத்தீவு வடிவமாய இச்சர்வபூமியையும் இனிதுகண்ணுற்றுத் தமதுஅயோத்திமாநகரை ஸ்ரீஇரகுநந்தனர் திசைகளில் பரமபக்தானுக்கிரக விலாசமாகச்சென்ற ஸ்ரீபார்வதிநாயகர் தமதுசிவலோக த்தை யடைந்ததுபோல அடைந்தனர். புரவாசிகளால் லாஜபுஷ்பாஞ்சலி மாரியால் நிறைக்கப்பட்டவராகி, ஸ்ரீமான்ஜயந்தனுகிய தேவேந்திரன் மைந்தன் றனதுசுவர்க்கத்தை யடைந்ததேபோலத் தமதரண்மனையை யடைந்தனர்.

(சு.) யாருமலர் சொரிந்தேத்தவெனப் பொதுப்படக்கூறினமையின் அயோத்தியில் வசிக்கும் பூவையரனைவரும் வணங்கிப் பொரிமலர்மாரி பொழி ந்து துதிக்கவும், புருடரனைவரும் வணங்கிப் பூமலர்மாரிபொழிந்து துதிக்கவும் எனப் பொருள்விரித்தாம்.

(அ - கை.)

நோக்கிய தேச நீதி நுவல்வுற்றுப் புலரு முன்னே
சேக்கைநின் றெழுந்து நித்த நியமங்கள் செய்துந் தாதை
நீக்கமில் சரணந் தாழ்ந்து நெடுந்தவ வசிட்டன் முன்னோர்
வாக்கினுன் ஞான நீதி வாய்ந்தபல் கதைகள் கேட்டும். (21)

(ப - ரை.) ஸ்ரீஇராகவர் தமதுகிருகத்திற் சுகமாக வசித்தவராகியக்காலந் துடங்கி, நோக்கிய=விவிதாகாரங்களாகக்கண்ட, தேசநீதி=தேசாசாரங்களை, ஒருவர்க்கொருவர் நுவல்வுற்றும் = சொல்லிக்கொண்டும், புலருமுன்னே = விடிதற்குமுன்பு, சேக்கைநின்றெழுந்து = சயனத்தைவிட் டெழுந்திருந்து, நித்தநியமங்கள் = நித்தியகன்மங்களை, செய்தும் = விதிப்படி புரிந்தும், தாதை = தமது தந்தையினது, நீக்கமில் = பிரிவில்லாத, சரணம் = பாத த்தை, தாழ்ந்தும் = வணங்கியும், நெடுந்தவ = மகாதவமுடைய, வசிட்டன் முன்னோர் = ஸ்ரீவசிஷ்டாதிகளது, வாக்கினுல் = அமிர்தமயமான மொழி களால், ஞானநீதிவாய்ந்த =உண்மையான ஞானத்தைத்தாராநின்ற, பல்கதை கள் = பற்பலவிசித்திரமான கதைகளை, கேட்டும் = வினவியும் இருந்தனர்.

(ஸ்ரீ - வீர) தமது தந்தையை=சப்பர்கள் நிறைந்த சபையில் தேவேந்தி ரனுக்குத் துல்லியமாகக் கொலுவீற்றிருக்கும் தமது பிதாவை யென்பதாம். மேலும் சந்தோஷத்தாலுன்மத்தராகிய ஜனங்களால் மிகமேன்மையாகச் செய்யப்பட்ட கம்பீரமாகிய கோலாகலத்துடன் ஸ்ரீராமரது விஜயமகோற் சவம் பரமானந்தத்துடன் எட்டுதினங்கள் கொண்டாடிய பின்னர் ஸ்ரீ இராக வர் இங்குமங்குங் கண்ட நானுவகையாய தேசாசாரங்களை யிங்குமங்கும் வரு ணித்துக்கொண்டு அரண்மனையிலேயே அது முதற்சுகமாக வசித்து வந்தனர். அதிகாலையில் தினந்தினம் எழுந்து விதிப்படி சந்தியைச்செய்து கொலுமண்ட பத்தில் வீற்றிருக்கும் இந்திரசமமாகிய தமது தந்தையைத் தரிசித்து ஸ்ரீவசிஷ்

டர் முதலியவரோடு மிருந்து மிகவும் விசித்திரத்தோடு கூடிய அத்தியாத்ம ஞானக்கதைகளானே மகிழ்ந்தும் இருந்தனர்.

(ச.) ஸ்ரீ இராகவர் ஸ்ரீ வசிஷ்டமுனிவர் முதலியவரோடு கூடியிருந்து தினசதுர்ப்பாகத்தில் ஞானகர்ப்பம் வாய்ந்த கதைகளினாலே மகிழ்ந்திருப்பர்.

(அ - கை.) (21)

தந்தைசொற் படியே தானை தன்னுடன் வேட்டை கண்டும்
பந்துமித் திரர்கள் பின்னோர் தம்மொடும் பருகி ராநீத்
திந்துவு மமுதும் போல நிருபருக் கினிய செய்து
மைந்துட னீரைந் தாண்டு புக்கின னனைய நாளில். (22)

(ப - ரை.) தந்தை = பிதாவினது, சொற்படியே = உத்தரவின்படியே தானை தன்னுடன் = தமது மகத்தான சேனையோடும், வராகாதி நிறைந்தவனத்திற் சென்று, வேட்டைகண்டும் = வேட்டையாடியும், அதன்பின்ன ரண்மனையில் வந்து மூழ்குதன் முதலியவற்றை முறையே செய்து, பந்துமித்திரர்கள் = மித்திர பந்துக்களோடும், பின்னோர் தம்மொடும் = சுகிர்தர் சகாயர்களோடும், பருகி = புசித்து, ராநீத்து = நிசியை நெகிழ்த்தி, இந்துவும் அமுதும் போல = சந்திரனும் சுதையினது ரசமும்போல, நிருபருக்கு = நிருபதிகளுக்கு, இனிய = சம்மதமான விவகாரங்களை யின்பமாக, செய்தும் = இயற்றியும், ஐந்துட னீரைந்தாண்டு = பதினைந்துவருடம், புக்கினன் = சென்றவனானன், அனையநாளில் = அக்காலத்தில் (எ-று.) (22)

(ஸ்ரீ - வீர) தினத்தின் நான்காவது பாகத்தில் தந்தையினது கட்டளைப்படி பெருஞ்சேனையோடு கூடியவராகி வேட்டையின் விருப்பத்தால் காட்டுப்பன்றி காட்டெருமை முதலியவற்றானே கலக்கமிகுத்த காட்டையடைந்து வேட்டையாடி வீட்டிற்குத் திரும்பிவந்து முறையாக ஸ்நாநாதிகளைச் செய்து மித்திரர் பந்துக்களோடும் அமுதுசெய்து நேயர்களோடும் நிசியை நீக்குவர். ஸ்ரீ இராகவர் இலக்குமண சத்ருக்நர்களோடும் தீர்த்தயாத்திரையி னின்றும் வந்தது முதற்கொண்டு இவ்வாறு பெரும்பாலும் திசைாரமுடையவராய்த் தந்தையினது அரண்மனையில் பெருமகிழ்வோடும் வாழ்ந்து வந்தனர். பெரும்பாலும் என்றது வேட்டை முதலியவற்றிற்கு குடிகட் குபத்திரவ மேற்பட்டாற் செல்லுதலும், படாவிட்டாற் செல்லாமை பற்றியாம். அரசர்கட்குத் தக்க விவகாரத்தால் மனோகரமும், நல்லோருடைய வுள்ளத்தில் சந்திரிகையைப் போலும் மகிழ்வைத் தருவதும், அதனானேயே புகழத்தக்கதும், அமுதரசம் போல ஆற்றலுற்றதும், கோமளமும் ஒழுகாநின்ற அமுதரசம்போலும் மாதுர்யமும், ஆகிய ஒழுக்கத்தானே ஸ்ரீ இராமர் தினங்களை நன்குகழித்துவந்தனர்.

(ச.) பிரிதலுக்காற்றாதவர் பந்துக்களும், சம்மதியோ டொன்று பட்டவர் சுகிர்தரும், சமப்பிரிய முடையர் மித்திரரும், சமப்பிராண னுடையர் சகாய

ரும் என்பது சம்மதமாம்; என்னுமிப் பிரமாணத்தாற் பந்துமித்திரர்கள் பின்ஞேரின் பேதமறிக, நிருபதிகளுக்குச் சம்மதமான விவகாரமாவது மனுவாதிகளா லுபதேசிக்கப்பட்ட மன்னர் நீதி யென்பதாம். வடமொழி மூலம், ஊன சோடச வருஷம் (சிறிதுகுறையப் பதினறுவருடம்) ஸ்ரீ இராகவர் திருமேனிக் காயதெனவுளது. (22)

(ஸ்ரீ-வீர - அ - கை) ஈண்டிது சுருதிபுகன்ற நிச்சிரேய சோபாய பரிபாடியாம், பல அபிப்பிராயம் பற்ருமை வாயிலாகத் தத்தமது வருண ஆசிரம கருமஅனுஷ்டானத்தால் அறம்பிறக்கும் அதனுனே மறமழியும், "அறத்தான் மறத்தையறுத்தே யகற்றலாம்" என்னும் சுருதியினுனென்க, மறமழிந்தவழி மனத்தினுக்கு விவேகவாற்றலாம், பின் சமுசாரதத்துவ பரிஞானம் அதனுல் வைராக்கியாதி அதன்பின் முமுக்ஷுதை, அதனுன் மோக்ஷசாதனந் தேடுதல், பின் சருவகரும சந்நியாசம், பின் குருசரணத்திற் சரணடைதல், பின் சிரவணுதி யனுஷ்டானம், பின் பிரஹ்மான்ம சாக்ஷாத்காரம், அதனுல் அஞ்ஞானவிநஷ்டி, அதன்பின்னரோ சுவராஜ்யத்தின் கண்ணேயே யெழுந்தருளி யிருத்தலாம். "இச்சம்பிரசாதம் இவ்வுடம்பினின்று மினிது கிளம்பிப் பரஞ்சோதி ரூபத்தைப் பற்றித் தன்வடிவத்தானே தானேயிருக்கும்" எனச் சுருதியு மறைகின்றது. அறை அவ்வித்தொடர்ச்சிஜகத்குரு ஸ்ரீராமசரண கமல பஜனத்தின்கண் மூழ்கிக்கிடக்குஞ் சிற்சில மகாதீர புருடர்களிடத்தின் மாத்திர மிருப்பதாகும், புருடோத்தமனுகிய உலகர்க்கெல்லாந் திருவருள் செய்ய வேண்டுமென்னு மிச்சையினுனே பிரஹ்ம வித்தையின் அதிகாரி துரந்தரத் தகைமையைத் தரித்திருந்த தாசரதியின் மாட்டும் கூறிய முறையை காண்பிப்பான் விரும்பி, அவரிடத்தில் நிஷ்காம கருமானுஷ்டான மிருப்பதாக அறைந்த கிரந்த சந்தர்ப்பத்தால் அறைந்து இஞ்ஞான்று அதன்பயனுய விவேக வைராக்கிய இலக்கணத்தைக் காண்பிக்கின்ருர்:—இவ்வாறு ஸ்ரீ இராமருக்கு மனத்தூய்மையினுபாய அனுஷ்டான ஒழுக்கத்தை வருணித்து, அதன்பயனுகிய வைராக்கியாதி சாதனசம்பத்தியை விளம்பும் வேட்கையராய்த் தொடங்குகின்ருர்:—நிறையென.

(ச - அ-கை.) வைராக்கியத்தை நன்கு வருணித்தற்கு இனிது தொடங்குகின்ருர்:—நிறையென.

நிறையெழின் மேனி யெல்லா நெடுஞ்சரற் கால நீர்போற்
குறைவுற நெடுங்கட் செய்ய குளிர்முகம் விளர்ப்பத் தும்பி
யுறையும் வெண் கமலம் போல வொருகையாற் கபோல மேந்தி
யறைகழ லிராம னம்பு யாசனத் திருப்ப தானுன். (23)

(ப -‍ரை.) அறைகழ லிராமன் = சப்தியா நின்ற வீரகண்டை முதலிய ஆபரணங்களைத் திருவடியி லணிந்துள்ள ஸ்ரீ இரகுகுலதிலகர், நிறையெழின்

மேனியெல்லாம் = நிறைந்த கட்டழகு மன்மதனையும் பெற்றதன்மையால் வாய்ந்த திருமேனிமுழுதும், நெடுஞ்சரற்கால = முதிர்ந்த மழைபெய்ந்து ஒய்ந்தபோது வந்தபோது குறைந்து கொண்டே போகும்படியான, நீர் போல் = தெளிவான தடாகஜலமே போல, குறைவுற் = அனுதினம் கிருசத் தகைமையை யடைய, நெடுங்கண் = விசால அக்ஷங்களையுடைய, செய்ய குளிர் முகம் = சிறந்தசந்திர சீதளவதனம், தும்பியுறையும் = அளிமாலைகணிறைந்த, வெண்கமலம்போல = காலபாகத்தினாலே விகசித தளங்களையுடைய சுவேத பதுமம்போல, ஒருகையால் = ஒரு திருக்கரத்தால், கபோலமேந்தி = கபோல தலத்தை யேந்தியவராகி, அம்புயாசனத் திருப்பதானன் = பதுமாதனத் திருந்தார். (எ - று.) (23)

(ஸ்ரீ - வீர.) தீர்த்தயாத்திரையை முடித்துவந்து தமது வீட்டில் வசித் துக்கொண் டிருக்கும் ஸ்ரீ இராமர் தமக்குப் பதினைந்தே முக்கால் வயது நிகழ்ந்து கொண்டிருக்கும்போது நாடோறும் சரத்காலத்தில் நின்மலமாகிய தடமானது குறைவதேபோல இளைத்துக்கொண்டேவந்தார்; இளைத்தன்முதலி யவை வைராக்கிய சிந்தாதுக்கத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. குமா ரருடைய விசாலநேத்திரத்தோடு கூடிய வதனமானது, பக்குவமாகி மலர்ந்த விதழோடு கூடிய வதனமானது, பக்குவமாகிமலர்ந்த விதழோடுகூடிய வண்டு மாலைகள் சூழ்ந்த வெண்டாமரையைப் போலும் வெளுப்புற்றது. விசாலநேத் திர விசிஷ்ட உவமானப் பொருட்டே வண்டின் மாலைகள் சூழ்ந்த என்றதாம், கபோலத்தைக் கரத்தாற்றாங்கிப் பத்மாசனத்தில் வீற்றிருந்து சிந்தைபரவச ராகி மௌனியாகிச் சேட்டையற்றிருந்தனர். (23)

(அ-கை.)

சிந்தனை வயத்த னாகிச் செய்தொழி லனைத்தும் விட்டுப்
புந்திநைந் தியார்க்குங் கூறான் புனையுமோ வியமே போலச்
சந்தத மிருப்பை நோக்கித் தமரடி தாழ்ந்து வேண்ட
நொந்தயர் முகத்த னாகி நோக்கரு நியமஞ் செய்தான். (24)

(ப - ரை.) ஸ்ரீ இராகவர், கூறியவண்ணம் ஆசனத்தசைவற்றிருந்து, சிந் தனைவயத்தனாகி = சிந்தாபரவசராகி, செய்தொழி லனைத்தும் விட்டு = வியா பாரமொன்றுமின்றித் தூஷ்ணீம்பூதராகி, புந்திநைந்து = கிருசஅங்கராகிச் சிந்தையோடுகூடிப் பரமதுர்மனராகிப் பரமதுக்கியாகி, யார்க்குங்கூறான் = யாவரிடத்தும் எதையுமே பேசாதவராகி, புனையும் ஓவியமேபோல = சித் திரிகனாலே சித்திரிக்கப்பட்டுப் பித்திரிகையிலமைந்த சித்திரப்பதுமை போன் றாகி, சந்ததம் இருப்பை நோக்கி = எப்போது மிருப்பதைப் பார்த்து, தமர் = பரிஜனங்கள், அடிதாழ்ந்துவேண்ட = தமது திருவடியிற் பணிந்துமீண்டும் மீண்டும் பிரார்த்தித்துக்கொண்டால், நொந்து = கேதத்தோடும், அயர்முகத் தனாகி = மிகவாட்டத்தோடு கூடிய முகாம்புஜமுடையவனாகி இவர்கட்காகச்

செய்து தீரவேண்டியதாகவன்றோ இருக்கின்றது என்னுங்கவலையுடன், நோக்கரு நியமஞ் செய்தான் = பார்த்தற்கு முடியாதபடி அலக்ஷியமாகக் கடன் கழிப்பதேபோல ஸ்நாநாதி தின ஆசாரங்களை யியற்றினன். (எ-று.) (24)

(ஸ்ரீ-வீர.) பரமதுர்மனம் = அத்தியந்தம் துயரத்தாழ்ந்த சித்தம்; பரிஜனம் = சேவகஜனம் என்பதாம். இளைத்தயாக்கையராய் சிந்தையோடு கூடியவராய், துக்கிதராய், மிகவுந்துன்பமுழுமுளத்தராய், எவரோடும் எதனையும் இயம்பாதவராய் சித்திரத்திலெழுதிய பதுமைபோலும் ஆயினர். தாதர்களான் மீண்டும் மீண்டும் வேண்டிக்கொள்ளப்பட்டபின் அவசியம் செய்யத்தக்க தினசாரத்தை மிகவும் மலினமுற்ற முககமலத்தையுடைய அவர் கஷ்டத்தோடுஞ் செய்தனர். (24)

(ஸ்ரீ-வீர-அ-கை.) குணகணங்கட்கிடமாகிய ஸ்ரீ இராகவர் துக்கத்தோடு மீளத்து வருவதை நோக்கிப் பத்தினிமார்களோடும் தசரதமன்னவர் மிகவுஞ் சிந்தாவசராகி வினவுகின்றார்:— மடிமிசையென.

மடிமிசை கொண்டு தாதை வருந்துவ தென்கொ லென்ன
வடிபணிந் தயர்வொன் றில்லென் றனையவ னிருந்த நாளிற்
படிபுகழ் காதி மைந்தன் வருதலும் பணிந்து போற்றி
முடியுடை வேந்தர் வேந்தன் பூசனை முறையிற் செய்தான். (25)

(ப - ரை.) தாதைதசரத அரசர், மடிமிசைகொண்டு = தமது உத்சங்கத்தில் அன்புடன் உட்காரவைத்து, வருந்துவதென் கொலென்ன = ஹே குழந்தாய் நினக்கு நெருங்கியதிடமான சிந்தாகுலமுண்டாகி யிருக்கின்றதே அதுயாது காரணத்தைப்பற்றி யென்று அடிக்கடி மிக இனிமையான வசனத்துடன் வினவியபோதினும், அடிபணிந்து = அவரது பாதபதுமங்களில் நமஸ்கரித்து ஹே தந்தையே! அயர்வொன்றில்லென்று = யாதொரு துயரமுமே தங்கள் கருணையால் எனக்கில்லையென்று சொல்லித் தந்தையினது மடியிற்றானே, அனையவனிருந்தநாளில் = கமலபத் ராக்ஷராகிய ஸ்ரீ இராகவர் மௌனமாகவே இருந்து வந்தபோது, படிபுகழ் காதிமைந்தன் வருதலும் = அயோத்யா நகர அதிபரைப் பார்க்கும்பொருட்டுப் பெருந்தவத்தினாலே யுலகமெல்லாம் புகழும்படியான காதிமைந்தராகிய விசுவத்திற்கு மித்திரர் என்னும் பிரசித்தமகரிஷி வருவதைக் கண்டு, முடியுடைவேந்தர் வேந்தன் = கிரீடந்தரித்த மன்னவர்கட்கெல்லாம் மன்னவரான தசரதசக்கரவர்த்தியானவர், பணிந்துபோற்றி = இலக்குமியினாலே யலங்கரிக்கப்பட்ட அவரை யெதிர்கொண்டழைத்துவந்து வீற்றிருக்கச் சுவர்ணாசனந்தந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து மிகுந்த சந்தோஷத்தையுடைய வதனத்தை யுடையவராகிய அரசர், பூசனை முறையிற் செய்தார் = தாமே அர்க்கியத்தை நிவேதித்துக் கிரமமாகப் பூசை செய்தார். (எ-று.) (25)

(ஸ்ரீ-வீர-அ-கை.) இங்ஙனம் நிஷ்காம கருமபலமாகிய வைராக்கியத்தைச் சுருக்கமாகப் பிரதிபாதித்து இதனையே பிரசன உத்திரங்களால் விஸ்தாரமாகப்

பிரதிபாதிப்பான் விரும்பிப் பிரசனப் பிராப்தியின்பொருட்டுப் பிரசங்கத்தைக் கூறுகின்றார்:— இருந்தநாளில் என. விரத அத்தியயன ஜன்னிய சருமத்துறு தீப்தியே பிரஹ்மவர்ச்சசம் எனப்படும், அத்தகைய பிரஹ்மவர்ச்சசவடிவ இலக்குமியாம் மாலாகாரத்தால் மறைக்கப்பட்டிருந்தனர். ஹே மந்த! நினக்குப் பெருஞ் சிந்தையுண்டானதென்னே யென அடிக்கடி மிகவும் அன்போடு கூடிய மொழியினுனே கேட்டும் அவர் யாதொன்றுஞ் சொல்லவேயில்லை; சொல்லியும் பயனில்லையே யென்னும் நிச்சயமிருத்தலின் என்பது கருத்தாம். தந்தையின் மடிமீதிருந்த தாமரையிதழ்போலும் நேத்திரமுடைய ஸ்ரீ இராமர்! ஹே தந்தையே எனக்கு யாதொரு துயரமுமில்லையெனக்கூறி மௌனமாகவே யிருந்தனர்; வந்திருக்கப்பட்டதுயரம் அரசராற் பரிகரிக்கமுடியாத தென்பது கருத்தாதலின் மித்தையாகாதாம். மன்னவர் ஸ்ரீ வசிஷ்டபகவானைப் பார்த்து இராமசுவாமியேன் றுயருற்றுளனெனக்கேட்ப, முனிநாதர் இதன்கண்ணே காரணமிருக்கின்றது நீர் துயரப்படவேண்டாம் எனச் சாமானியமாக வுரைத்தலும் விசேஷ சந்தேகத்துடன் அரசரிருந்த அவ்வேளையில், தவசிரேஷ்டராகிய ஸ்ரீஜகன்மித்திரமகரிஷி ஆண்டெழுந்தருளினர். அம்முனிவரைத் தூரத்திலேயே கண்ட பூபாலர் வணங்கிய ஆகிருதியுடையவராகி மவுலிமணிகழன்று பூமியை யலங்கரிக்குமாறு நமஸ்கரித்தனர். மகாமகிமைவாய்ந்தவரும் பால சூரியனைப்போற் பிரகாசிப்பவரும், செஞ்சுடர்ச் சடாசூடரும் தவஇலக்குமியை யுடையவரும் புருடோத்தமரும் ஆகிய அம்முனீசுரரும் அவனி காவலரை யாசீர்வதித்து மதுரகம்பீர உதாரவாணியால் விஸ்தாரமாயனுக்கிரகித்தனர். ஸ்ரீ வசிஷ்டபகவானும் ஸ்ரீ ஜகன்மித்திரமகரிஷியும் பரஸ்பரம் அநாமயமுரைத்துக்கொண்டபின் றங்கத் தங்கப்பீடந்தந்து தவஇலக்மியாலலங்கரிக்கப்பட்ட ‡அவரைக் கண்டஞ்சி அந்த உத்தமோத்தமமாகிய மகரிஷிக்கு மகிழ்ச்சியோடுகூடிய வதனராய் அரசர்தாமே அர்க்கியத்தை நிவேதித்தனர்; அதாவது, அர்க்கியத்திற்கு வேண்டிய நீரைப் பிறரைக்கொண்டுவரச் செய்யின் அபராதம் வருமென நினைந்துதாமே கொணர்ந்து அருக்கியங்கொடுத்தனர், முனிநாதரும் விதிப்படியாய கருமத்தால் அருக்கியத்தைக் கவர்ந்து வலம்வந்து போற்றும் அரசரைப் புகழ்ந்தனர். நிராசையுடையவிவர் அரசர்பால் வருவானேனெனின், மாயாவீரியபலத்தால் உன்மத்தராகிய அரக்கர்களானே, தருமமே யவசியஞ் செய்யத்தக்க காரியமெனக்கொண்டு நடத்தும் மகாமதியையுடைய அவரது தருமயாகமானது சிதைவுற்றது அதைக் காக்கும் பொருட்டு அரசரைப் பார்க்கவேண்டுமென்னு மிச்சையான தவருக்குண்டாயதால் வருமாறு நேரிட்டதென்றுணர்க.

(ச.) முறையிற் செய்தான் என்றமையால், பரமபக்தியினுற் சுவர்ணபீடத்திருத்தித் தாமே அர்க்கியபாத்திய ஆசமனீய முதலிய சோடசவுபசாரத்தோடு மர்ச்சித்து மாறி மாறி வணங்கினரென்பதாம்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆசனத்திலெழுந்தருளிய மகாமதியை யுடைய ஸ்ரீ விசுவாமித்திர மகா முனிவருக்குப் பாத்தியம் அர்க்கியம் சந்தனம் புஷ்பம் வஸ்திரம் தக்ஷிணை பழந் தாம்பூலம் கோக்கள் முதலியவற்றை அளவிறந்தன வாகச் சமர்ப்பித்து, விதிப்படி அருச்சனைபுரிந்து அம்முனிவரை நோக்கித் தசரதர் இருகரஞ் சிரங்குவித்து அன்போடும் புனிதமாகிய இவ்வாக்கியத்தைக் கூறத்தொடங்கினர் :—நினைவென.

(ச.) ஸ்ரீவிசுவாமித்திரரை நோக்கித் தசரதர் கொண்டாடல்:—நினைவென.

நினைவற வெளிதின் வந்த நின்னுயர் காட்சியாலே
வினையெலாந் தவிர்ந்து வெய்யோன் மேவிய கமல மொத்தேன்
இனையதோ ரின்பமென்று மியைந்திலேன் மழையிலா நாள்
நனைதரு மழையு மந்த னண்ணிய கண்ணு மொத்த. (26)

(ப - ரை.) நினைவற = எண்ணியெதிர்பாராமலே, எளிதின் வந்த = அதிசுலபமாக யாதொரு கிரியையு மில்லாமற் கிடைத்த, நின்னுயர் காட்சியால் = தேவரீரது யாவற்றையு மீயும் பரமமேலான தரிசனத்தாலே, வினையெலாந் தவிர்ந்து = தூலசரீர பீடைகள் சூக்குமசரீர பீடைகள் காரணசரீர பீடைகள் என்பனயாவு மொழியப்பெற்று, வெய்யோன் மேவிய = சூரியபகவானது கிரணங்களின் அனுக்கிரகத்தை யடைந்த, கமலமொத்தேன் = அம்புஜ ஆகரம் போலத் தேவரீரது திருவருளை யடைந்துய்ந்தேம், இனையதோரின்பம் = இத்தகைய பேரானந்தத்தை, என்றும் = எக்காலத்திலும், இயைந்திலேன் = அடைந்தேமில்லை, தேவரீரது தரிசனமானது, மழையிலாநாள் = மழையின்றிக் குடிகள் கஷ்டப்படுங் காலத்தில், நனைதரும் = பூமியை நனைத்துப் புன்முதலியவற்றை யுண்டாக்கவரும், மழையும் = மகா விருஷ்டியையும், அந்தன் = பிறவிக்குருடனாக இருந்தவன், நண்ணிய = தேவதையின் றிருவருளால் அடைந்த, கண்ணும் = திவ்யநேத்திரங்களையும், ஒத்த = ஒப்பிடும்படியாக இருக்கின்றது. (எ-று.) (26)

(ஸ்ரீ-வீர.) நினைவற வெளிதின் வந்த = எனது எண்ணமின்றியே எனது சமீபமா யடைவுற்ற வென்பதாம். தீப்திமத் விடயத்தன்மை உண்மையின் உயர்ந்ததரிசனமாம்; அதிஸ்புடமான தரிசனமெனினு மமையும். தம்பால் அசங்கித உபநீதத் தகைமையும் பாசுவப்பான்மையும் பிரசித்தமேயாம். அனுக்கிர கீதத்தன்மையைக் காட்டுகின்றார்:—இனையதோரென, எத்தகையவின்பமெனின், ஆதியந்தரகிதமாயிருப்பது, இருப்பினும் கூடஸ்த நித்தியத்தன்மையின்றும் ஜகத்நித்தியத்வ வாதிகட்குப் பிருதிவியாதிபோலு மெனின், பிருதி வியாதிபோலச் சிலபாற் கண்டித அவயவமுடையதாகாதாம், ஆகாதேகக்கூடஸ்த நித்தியமென்பது சித்தமாம். ஆனாலநாதியாயினும் முன்னின்மையேபோல அநித்தியமாமோவெனின், ஆகாதாம் அபாயவர்ஜிதமாதலின்.

அபாயமற்றதாயினும் பின்னின்மைபோலச் சாதியாகலாமேயெனின், அநாதியேயாம், என்னை, உண்மையாக வுணருங்காற் பின்னின்மையும் அபாயமுடையதேயாம், ஆகவே சாதியாதலமையும், அமையவே யாது நாசமற்றதோ அதே அநாதியாமெனவுணர்க. எனவே மாயையும் உற்பத்தி யறியாமையின் அநாதியேயன்றி யுண்மையநாதியதாகாதாம் அத்தியஸ்தமாதலின். கூறிய வகையாய இன்பம் பிரஹ்மசொரூப ஆனந்தமேயாம், இங்ஙனமே சுருதிகளில் "ஆனந்தம் பிரஹ்மமென வறியப்பெற்றது, விஞ்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம், எவ்விவ்வாகாசம் ஆனந்தமாக இராதேலாயின்" என்பதாக ஆனந்தசப்தத்தின் அர்த்த வடிவமாய்ப் பிரஹ்மத்தைக் கூறுதல் வெட்டவெளியாதலின். நினையாமலிருப்பக்கிடைத்த தங்களது வரவினாலும், ஒளிவாய்ந்த தரிசனத்தாலும், ஆசிர்வசனத்தாலும் ஹே மகாமுனிவரே! கதிரவனைக்கண்ட கமலாகரங்கள் போலுவந்தோம். தங்களுடைய அனுக்கிரகமே எங்களுக்கினிவரும் பாக்கியமன்றோ; காரணமற்றதும் உண்டாதல் வளர்தல் அயலொன்றாய் மாறல்களற்றதும், குறைவழிவுகளற்றதும், ஔபாதிக தனது அங்கிச லேசத்தானே யாவரையும் ஆனந்திக்குமாறு செய்விப்பதும் ஆகிய அந்தப் பிரசித்த பரமபுருடார்த்த சுகத்தையே தங்களுடைய தரிசனத்தால் நாங்களடைந்தோம். தங்களுடைய வரவுக்குரியராகிய யாங்கள் இன்று தன்னியர்களாகிய கிருதகிருத்தியருக்குள் முதன்மைத்தானத்தையடைந்தோம். மேழிச்செல்வனுக்கு மழையிலாநாளில் மழையுற்றதுபோலும், அந்தகனுக்கு அழகியவிழி கிடைத்ததேபோலும் ஆம் தங்களுடைய திவ்யதரிசனம். அபாயவர்ச்சிதம்=நாசமின்மை.

(ச.) கமலமொத்தேன், மகாபுருட தரிசனத்தினாற் பிரசன்ன சித்தர்க்குச் சொரூபம் பிரகாசிக்கும் அதனால் கமலங்கள்போற் பந்தநீங்கி மனம்பரிபூரணமாமென்பதாம். இவ்வாறே "கண்களுக்குக் கதிரவன் கடுப்பச் சாதுக்களும் சமசித்தர்களும் அத்தியந்தம் தற்சொரூபமாய்ப் பிரகாசிப்பவர்களும் ஆகிய மகானுபவர்களது தரிசனமட்டும் புருடர்க்குப் பந்தமுண்டாம்" என ஸ்ரீமத் பாகவதத்தும் கூறப்பட்டுளது. சொரூபம் பிரகாசிக்குமெனின் சொரூபச்சுகமுமுதிக்கலாமேயென்றால், உண்மையே இனியதோ ரின்பமென்று மியைந்திலேன்; இதன் கருத்திதுவாம்:—அநாதியுந் துர்லபமும் அபாயவிவர்ச்சிதமும் ஆகிய வித்தன்மையான ஆனந்த சுகமிப்போதடைந்தனன் என்பதாயிற்று. அவற்றி லநாதியென்பது முதலியவற்றான் விடய சுகத்தினின்றும் விசேடந்தெரிவித்ததாம். சுழுத்திச் சுகமுமநாதி, அதுவுஞ் சொரூப சுகமாதலின், அதனை நீக்குவதற்காகத் துர்லபமென்றார் என்பார் என்று மியைந்திலேன் என்றார். இதனாற் சர்வசகத்தையும் ஆனந்தாத்மகமாக்குங் கைவல்லியசுகம் பெற்றேனென்பதாம். இஃதன்றியுந் தன்னியனானேன் எனல், மழையிலா என்பதாக. (26)

(ஸ்ரீ-வீர-அ-கை.) மேலும் மேலும் உபமானங்களை யுரைத்துத் தன்னியனானேனென முனிநாதருவரவை யரசர் கொண்டாடுகின்றார்:—உடலொடு எண.

உடலொடு விண்சென் மார்க்க முற்றென வொழிந்த வாவி
கடமுற வந்த தென்னக் கனைகட லமுத கும்ப
மிடமுற வெய்திற் றென்ன வெந்தைநீ வந்த வின்பஞ்
சடமெலாங் குளிர்ப்ப நின்றென் றளர்வெலா மகற்றிற் றன்றே. (27)

(ப - ரை.) உடலொடு=தேகத்தோடுகூட, விண் சென்மார்க்கம் = ஆகாசத்திற் கமனஞ்செய்யும் நெறி, உற்றென = கிடைத்ததே போலவும், ஒழிந்த ஆவி = சரீரத்தை விட்டுப் பிரிந்துபோன உயிரானது, கடமுறவந்ததென்ன= சரீரத்திற் றங்கும்படியாகத் தெய்வயோகத்தாற் பிராப்தமானதே போலவும், கனைகடல் = சப்தியாநின்ற க்ஷீராப்தியிற் கடைந்தெடுத்து மேருகிரியின்பால் அக்கினிபகவானது காவலிலிருக்கும், அமுதகும்பம் = அமிருதம் நிறைந்த கலசமானது தேவேந்திரனது தயவால், இடமுற = தானிருக்கு மிடத்திற்கே தேடிவந்ததுபோற் பலாத்காரமாய், எய்திற்றென்ன = கிடைத்ததுபோலவும், எந்தை நீ = எந்தந்தையைப்போலும் வேண்டியதை யறிவுறுத்துந் தேவரீர், வந்த வின்பம் = வந்து வலுவில் தரிசனந்தந்த ஆனந்தமானது, சடமெலாங் குளிர்ப்ப = தேகமுழுவதும் ஸ்ரீ கங்கா ஸ்நானத்தாற்போற் சீதளமாம்படி செய்து, நின்று = அச்சீதளமானது நெடுநேரந் தங்கி, என் றளர்வெலாம் = எனது சர்வதாபங்களையுமே, அகற்றிற்று=நீக்கியது. (எ-று.) அன்று ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) ஆகாசகமனத்தா லுண்டாய அரியமகிழ்ச்சியைப் போலவும் இறந்தவன் மீண்டெழுந்த சந்தோடம் போலவும், மனுடனுக்கு அமுதங் கிடைத்ததே போலவும், ஹேபிரஹ்ம சொரூபமாகிய மகாமுனிவரே! தங்களுடையவரவால் அடங்கா மகிழ்ச்சியை யடைந்தேன். பிரஹ்மலோகத்தின் வாழ்வானது யாருக்குத்தான் பிரீதியை யுண்டாக்காது. அதுபோலத் தங்கள் நல்வருகையென் றுண்மையாகவே கூறுகின்றனன். தேவரீருக்கு அடியேன் கொடுக்கத்தக்க எப்பொருளி லதிகப்பிரியம்! அடியேன் செய்யத்தக்க சேவை யாது! ஹே பரமதரும மூர்த்தியாகிய விப்பிரசிரேஷ்டரே! நீர் நற்பாத்திரமாக அடியேனுக்குக் கிடைத்தீர் முன்னர் இராஜ இருடி சப்தத்தானே விளங்கிய ஒளியுடையவரானீர், தவத்தாலே பிரஹ்ம இருடித் தன்மையைப் பின்னெய்தினீர்! ஹேபகவன்! அடியேனாற் பூஜிக்கத்தக்கவராயுள்ளீர்! ஆகலின் பூஜாபாத்திரமாயுள்ளீர், ஸ்ரீ கங்காஜல அபிடேகத்தானே எனக்கெவ்வாறு பிரீதியுண்டாமோ அவ்வாறு தேவரீரது தரிசனத்தானே யுண்டான உட்பிரீதியானது எனது தாபங்களைப் போக்கிச் சுகத்தையே யுண்டாக்கியது. ஹேபிரஹ்ம சொரூபரே! தங்கட்கு நமஸ்காரம்.

(ச.) சித்தர்கட்குக் கேசரத்துவாதி(ஆகாயத்தே செல்லுதன் முதலிய)சித்திகளாலும், இறந்தோர்க்குப் பின் ஜீவித்தலாலும், வருமின்பம்போல் வந்தசுகமென்றும், வரண்ட தடாகத்துதகம் நிரம்பல்போற் பரிபூர்ணமானவென்றும், அந்த னண்ணிய கண்ணைப்போற் சுவப்பிரகாச திருஷ்டி பெற்றேனென்றும்,

அமிர்தபானஞ்செய்த தேவர்கள்போல் அசராமரண சம்பன்னனுனே னென்றும் சூசகமறிந்துகொள்க. இவ்வுபமான பஞ்சகங்களாலும் அவரவர்க் கின்பம் வரல்போற் றேவரீரெளி தெழுந்தருளலால் வந்தசுகம் என்றுற் கணித்தற்கரிதாய்ச் சரீரத்திரயங்களும் சீதளமாம்படி யிருந்தெனது சர்வதுக்கங்களையும் நீக்கிற்றுதலின் யான் பரிபூரணமான சொப்பிரகாச திருட்டிபெற்று அசராமரண சம்பன்னனுனே னென்பதாம். (27)

(ஸ்ரீ-வீர-அ-கை.) தேவரீரது வரவு புதுமைத்தாயிருத்தலின் அவசியம் தாங்கள் விரும்பியதை அடியேன்றுனஞ் செய்தேவிட்டேன் என அரசர் கூறுதல்:— காதலென.

காதலும் பயமு மன்புங் கதமும்வன் பிணியு மில்லா
மாதவ விவணீ வந்த வரவிது புதுமைத் தாகும்
யாதுநீ கருதிற் றன்ன தியன்றன னுணர்த்து கென்றுன்
மேதகு முனிவன் கேட்டு மெய்புள கெறிந்து சொல்வான். (28)

(ப - ரை.) காதலும் = இச்சையும், பயமும் = அச்சமும், அன்பும் = இராகமும், கதமும் = குரோதமும், வன்பிணியும் = துன்புறுத்தும் வலிய வியாதியும், இல்லா = எப்போதுமில்லாத, மாதவ = மகாதவத்தையுடைய முனிசிரேஷ்டரே ! இவண் நீ = இவ்வெமது அரண்மனையைநாடித் தேவரீர், வந்தவரவிது = எழுந்தருளி அகஸ்மாத்தாகவந்தவரவான இது, புதுமைத்தாகும் = அதிநவஅற்புதமாக விருக்கின்றது, யாதுநீகருதிற்று = எவ்வத்துவிஷயகமாக எக்காரியத்தைத் தேவரீருத்தேசித்தீரோ, அன்னதியன்றனன் = அக்காரியத்தை யான் செய்துமுடித்து விட்டதாகவும் தேவரீர் வந்தகாரியம் சித்தியாய் விட்டதாகவும் தங்கள் திருவுளத்தில் எண்ணிக்கொண்டு, உணர்த்துக என்றுன் = எண்ணிய காரியத்தைத் திண்ணமாகத் தெரியப்படுத்தலாம் என்று மன்னவர் மன்னன் கூறினுன்; மேதகுமுனிவன் = சர்வயோக்யதையையும் மேன்மையாகவுடைய மனனசீலர்களுக்குள்ளே யுத்தமோத்தமராகிய ஸ்ரீவிசுவாமித்திரர், கேட்டு = அரசர்க்கரசன்கூறிய அற்புதவிஸ்தர அமிர்தம்போன்ற இனிய மொழிகளைச் செவிகுளிரக்கேட்டு, மெய்புளகெறிந்து = உடம்புமுழுதும் மயிர் சிலிர்ப்பக் குலுங்கி, சொல்வான் = இராஜசார்த்தூலரை நோக்கிக் கூறத் தொடங்கினுர். (எ-று.) (28)

(ஸ்ரீ-வீர.) இச்சை = அர்த்தமாத்திர விடயஞ் செய்யும் ஆசையாம், இராகம் = ஸ்திரீமுதலிய விசேடவிடயங்களின் ஆசையாம். சிலர், கிடையாதவத்துவானது கிடைக்கவேண்டு மென்பது மாத்திரமான ஆசை இச்சையென்றும், அடைந்ததிற் பிரார்த்தனை இராகமென்றும் கூறுவர். என்ன பிரயோஜனத்தை யுத்தேசித்துத் தேவரீரிங்குற்றதோ அதன்பொருட்டு யான் என்ன செய்யவேண்டுமோ அதுசெய்து முடிவுற்றதாகவே எண்ணிக்கொள்ளலாம்;

ஏனென்றால், எங்களாற்றுங்கள் பூசிக்கத் தகுந்தவர்களல்லவா ! மயிர் சிலிர்த்துக்குலுங்கல் = மிகுந்தசந்தோஷத்தால் என்றுணர்க. இச்சைபயம் குரோதம் விடயநேய அதிசயத்தால் விடயாகாரமாகச் சித்தம் இரமிக்கும் இராகம் நேய் முதலியவையற்றவராக இருந்துந் தாங்கள் என்பால் வந்த இவ்வருகை மிகவும் அற்புதமாகவிருக்கிறது ; இச்சையாதிகள் இருப்பினன்றோ பிறன்பாற் செல்லல் வேண்டும். ஹே முனிபுங்கவரே ! எக்காரியத்தை யெண்ணி வந்தீரோ அது செய்யப்பட்டதாகவே எண்ணுவீராக, எப்பொருளைவேண்டிவந்தீரோ, நிரந்தரமென்னுற் பூசிக்கப்பட்டவரா யிருத்தலின் அதை யடைந்ததாகவே எண்ணுவீராக ; என ராஜசிங்கம் முழக்கிய ஆச்சரிய அருத்தத்தோடுற்ற அதிவிஸ்தாரமாகிய அவ்வாக்கியத்தை, மகாதேஜசையுடைய ஸ்ரீவிசுவாமித்திர மகரிஷியானவர் கேட்டு மெய்புளகெறிந்து விளம்பலுற்றார்.

(ச.) தேவரீர்வாஞ்சித்த பொருளைச் சமர்ப்பிக்கின்றேன், செய்யவேண்டுமென் றிச்சித்தகாரியத்தைச் செய்கிறே னென்பார்; யாதுநீ கருதிற்றன்னதியன்றன னென்றார். இதனுற் குருவினுமன்னிய பாத்திரமின் றென்பது ஆயிற்று. யதார்த்தத்தைத் தரிசித்துத் தரிசித்தபடியே உபதேசிக்கும் சொப்பிரகாச சொரூபரென்பார். மேதகுமுனிவனென்றார். (28)

(அ-கை.)

மன்னவர் வணங்க வாழ்வோய் வசிட்டன்சொன் மறுதோய் பானு
தன்னுயர் குலத்தில் வந்தோ யாதலாற் றக்க சொன்னுய்
முன்னுறு செந்தீ வேள்வி முயல்வதற் கிடையூ றுகி
யின்னல்செய் யரக்கர்க் காற்று தெய்தின னிரங்கல் வேண்டும். (29)

(ப - ரை.) மன்னவர் வணங்கவாழ்வோய் = 56 தேசத்தரசர்களும் திரைகட்டிக் கரங்கட்டி வந்தித்துப் போற்றும்படியாக இந்திரனை நிகர்த்து வாழ்க்கை நலம்பெற்ற அரசசிங்கமே ! வசிட்டன் சொன்மறுதோய் = ஸ்ரீ வசிஷ்டபகவானது ஆணையைச் சிரத்தில் வகித்து மறுக்காமல் அவரது வசவர்த்தியா யிருக்கப்பட்ட சற்குண ! பானுதன்னுயர் குலத்தில் வந்தோய் = சூரியபகவானது மகாவம்சத்தில் அவதரித்தோய் ! ஆதலால் = இத்தகைய மகிமை வாய்ந்தவனுயிருத்தலி னன்றோ, தக்க = நினக்குத் தகுதியாய வார்த்தையைச், சொன்னுய் = கூறினுய், ஹேபுருட இடபமே ! முன்னுறு = சிலசித்திகளை யடையும் பொருட்டு, செந்தீவேள்வி = மந்திரபூர்வகமாகத் தீப்தஞ்செய்த அக்கினியின் கண்ணே மந்திரபூர்வகமாகவே ஆகுதிகொடுத்து முடிக்கவேண்டியதாய யாகத்தினை, முயல்வதற்கு = செய்யயத்தனப்படுவதற்கு, இடையூறுகி = இடைத்தடையாயுற்று யாகதிரவியத்தையும் சாலையையும் ருத்விக்குகளையும் துன்புறுத்தும் குரூரமனமுடையவர்களாகி, இன்னல் செய் = கொலைமுதலிய மகாபாதகங்களை யஞ்சாது செய்யும், அரக்கர்க்கு = இரக்கமில்லாத கரதூஷண தாடகை

முதலிய இராக்கதர்க்கு, ஆற்றுது = பயந்து அவரியற்றும் துயரைப் பொறுக்க முடியாது, எய்தினன் = உன்னிடத்திற் றெரியப்படுத்தவந்தேன், இரங்கல் வேண்டும் = நீ யிரக்கத்துடன் அதற்கு வேண்டிய காரியத்தைச் செய்யமுயல வேண்டும். (எ-று.) (29)

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ விசுவாமித்திரர் கிருதகிருத்தியரே யாயினும் உலகதிருஷ்டியை யனுசரித்துக் கூறுகின்றார்:—சித்திகளின் பொருட்டெனு. காரியகாரண சங்காதத்திற்கு ஞானநிஷ்டை யோக்யதையடையவே சித்தியாம், கருமத்தாற் சாக்ஷாத் முக்திலக்ஷண சித்தி சம்பவியாமையின், அத்தகைய எனது நியமத்திற்கு விக்கினஞ் செய்கின்றார்கள் அரக்கர்கள் என்பதாம். ஹேமன்னர் மன்னரே! மகாவம்மிசத்திற் பிறந்து குலகுருவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவானது ஆணையைச்சிரமேல் வகித்துவளரும் உமக்கே தகுமிப்பூமண்டலத்தில், எனது மனத்திற் சொல்லவேண்டுமென் றுள்ள வாக்கியத்தின் காரிய நிர்ணயத்தை; அதாவது, அதன் சம்பந்தியாகச் செய்யத்தக்க பொருணிச்சயத்தை; நீர் முதலிற் செய்வீராக, அஃததருமமாயின் செய்யத் தகாததுதான், ஆனலது தருமமாதலின் அதை யினிதுகாக்க வேண்டும். சித்தியையடையும் பொருட்டு யான் யாகத்தை யாரம்பித்தேன் அதற்கிடையூறு செய்யக் கோரமாகிய அரக்கர் அங்குவந்து சேர்ந்தனர். யான் யாகத்தாற் றேவர்குழாங்களைப்போற்றும் போதெல்லாம், அம்மகத்தை யந்நிசாசரர் அழிக்கின்றனர். என்னுன் மிகவும் அனுஷ்டிக்கப்பட்ட அந்த யாகபூமியைத் தசையாலும் இரத்தத்தாலும் பேரரக்கர் கெடுக்கின்றனர். இடையூற்றின் மிகுதியாற் கெடுக்கப்பட்ட அத்தகைய அம்மகக்கூட்டத்தில் அளவிறந்த கஷ்டப்பட்டு உற்சாகமற்று அங்கிருந்திங்கு வந்து சேர்ந்தேன். சாபத்தினலேயே இடையூறுகளை நீக்கிக்கொள்ளலாமெனினும், ஆண்டென்மதி கோபத்தைச் செய்ய முயற்சிக்க வில்லை, அக்கருமம் அத்தகையதாக விருக்கின்றது, அதன்கண்ணே சாபம்புகலாகாது. அம்மகா யாகத்தில் எனது யாகதீக்ஷையானது இத்தகைய கோபசாபமற்றதா யிருக்கின்றது; அதன்கண் மகாபலத்தைத் தங்களுடைய அருளால் இடையூறில்லாமல் அடையலா மென்றெண்ணுகின்றேன். (29)

(ஸ்ரீ-வீர- அ - கை.) ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியானவர் தாம்வந்த காரியமானது இன்னதானத்தாற் கைகூடுமெனல்:—அருளென.

அருள்செய வல்லை நீயென் றரும்புகல் புகுந்தே னின்னை
வெருளுறும் புலிபோன் மொய்ம்பன் விண்ணவர்க் கிறைபோல் வீரன்
மருளுறு மரக்கர் காலன் வாய்மைநின் முதன்மை மைந்தன்
றெருளுறு மிராம னென்னுஞ் சிகைமுடிச் சேயை யீவாய். (30)

(ப - ரை.) அருள்செய = எண்ணிவந்த காரியத்தை யினிதாக முடித்து அனுக்கிரகஞ் செய்ய, வல்லைநீ = சாமர்த்தியசாலி நீர்தானென்று, அரும்புகல்

புகுந்தேனின்னை = ராஜசேகரராகிய உம்மையே அனன்னிய தஞ்சமென்றடைந்தேன், என்னசெய்ய வேண்டுமெனின், வெருளுறும் புலிபோல் மொய்ம்பன் =தர்ப்பத்தோடு கூடிய வியாக்கிரத்தைப்போல விக்கிரமத்தை யுடையவனும், விண்ணவர்க் கிறைபோல் வீரன் = தேவதைகட் கெல்லாம் இறைவனாகிய தேவேந்திரனைப் போன்ற வீரியத்தை யுடையவனும், மருளுறு மரக்கர் காலன் = கட் காமாதிகளாற் கலங்கி மயங்கும் அரக்கர்குல காலனும், வாய்மை = சத்திய பராக்கிரம முடையவனும், தெருளுறும் = சர்வத்தையுமுணர்ந்தவனும், சிகைமுடி = காகபக்ஷச் சிகையை முடியில் வைத்துக்கொண்டழகாயிருக்குஞ் சூரனும், மூதன்மைமைந்தன் = ஜேஷ்டகுமாரனும், ஆகிய, இராமனென்னும் நின்சேயை யீவாய் = இராமசுவாமி யென்னும் உம்முடைய சுதனை யென் காரியசித்தியின் பொருட்டுக் கொடுத்தல் வேண்டும்—எ-று.(30)

(ஸ்ரீ - வீர.) தஞ்சமென் றடைந்தேன் = இரக்ஷிப்பீரென் றடைந்தேன், விக்கிரமம் = அதிக சக்தியாம். சத்தியபராக்கிரமம்= பலபரியந்தம் பராக்கிரமம் உடையவன். துக்கிதனுய்த் தஞ்சமென்றடைந்த என்னைக்காத்தல் உமது கடனாகும், வேண்டிக்கொண்டவர் வேண்டியது பெறுமற் போவது, மேன்மை தங்கியவரின்பால் பெருமிகழ்ச்சியையே கொடுக்கும். ஆகலின், மதத்த வெம்புலிபோல விக்கிரமத்தையும், மகேந்திரருக்குச் சமானமாகிய வீரியத்தையு முடையவனும், அரக்கர் குலகாலனும், சத்தியத்தையும் அமோக பராக்கிரமத்தையு முடையவனும், காகபக்கத்தைப்போற் சிகைமுடியனும், சூரனும், மூத்தவனும், ஆகிய உமதுமைந்தனை ஸ்ரீமான் இராமச்சந்திரமூர்த்தியை எனக்குத் தரவேண்டும். காகபக்கமென்னுங் காதடிச்சிகை க்ஷத்திரிய ஆசாரசித்தமாம்.

(30)

(ஸ்ரீ-வீர-அ-கை.) வில்வித்தையிற் றேர்ச்சியில்லாத பாலகனாகிய ஸ்ரீராமசுவாமி கரதூஷணாதி யரக்கரைக் கொன்று எங்ஙனந் தங்களுடைய யாகசித்தியைச் செய்தல் கூடுமெனின் இங்ஙனமென்கின்றார்:—தேவரிலெனா.

தேவரிற் றேசு மிக்க வென்பெருஞ் சேமந் தன்னு
லேவரு நிருதர் சேனை யிராமனே யெளிது கொல்லுங்
காவல சிறுவ னென்னுங் கவலையை யொழியென் போல்வா
ரோவலிற் சங்கை யான கருமத்தி னுள்ளம் வையார். (31)

(ப - ரை.) அரக்கரை வதஞ்செய்வதில் ஆற்றலின்மையின் கொடுப்பது கூடாதென்று நினைக்கலாகாது, என்னை, தேவரிற்றேசுமிக்க = தேவதைகட்குப் பூர்வபுண்ணிய ஜன்னிய தேஜசாதலின் அவ்வளவிற்றேயாம், இகத்தவத்தால் வருந்தேஜசோ எவ்வளவிற்றும் ஆமாதலின் பெருந்தவத்தான் மிகுந்த தேஜசோடுகூடி விளங்கும், என்பெருஞ் சேமந்தன்னல் = எனது பெருஞ் சாக்கிரதையுடன் குப்தமா யிரக்ஷிக்கும் தன்மையினுலும், ஏவரும்= ஒருவரா

னும் வெற்றிகொள்ள முடியாததே யாயினும், நிருதர்சேனை = யாகத்தைக் கெடுக்கும் இராக்ஷதப்படைகளை, இராமனே = ஸ்ரீஇரகுவம்ச கேதுவானவனே எளிதுகொல்லும் = அதி சுலபமாக அநாயசத்துடன் தூட்படுத்துவன், காவல = பார்த்திவனே! சிறுவனென்னும் கவலையையொழி = மைந்தனை யிற்றே என்ன நேரிடுமோவென்னுங் கவலையைவிட் டொழித்தல் வேண்டும், போர்க்கிவன் அயோக்கியனை குழந்தைப் பருவத்தன் என்றுண்டாங் கவலையை விட்டுவிட வேண்டும், என் போல்வார் = என்னைப்போன்ற அறிவு நிறைந்த பெரியர், ஒவலிற் சங்கையான கருமத்திலுள்ளம் வையார் = பொருத்த மில்லாமல் வருத்தத்தைத்தரத்தக்கதும் ஐயமுற்றதும் ஆகிய தொழிலைச் செய்யவேண்டு மென்று எண்ணமாட்டார்கள். (எ-று.) (31)

(ஸ்ரீ-வீர.) தூட்படுத்துவன் = அபகாரிகளாகிய அவர்களின் றலைகளைப் பொடிப் பொடியாயாக்குவதி லாற்றலுடையவனென்க. தேவரிற்றேசுமிக்கதனும் = தான் தானே ஸ்ரீமந் நாராயண ரானபடியால் எல்லாத்தேவதைகளினும் மிகுந்த திவ்ய தேஜசுடன் கூடி மகாவல்லவனு யிருத்தலாலும், என் பெருஞ் சேமந்தன்னலும் என்று பிரித்துப்பொருள் கொள்ளவே திவ்யதேஜசால் ஆற்றலுடைமையும், இருடியாற் காக்கப்படுந் தன்மையும் முரண்படுமாலோவெனின், படாதாம், அஞ்ஞானவதாரத்தில் இருடியும் அஸ்திரதானதிகளால் அவரது திவ்யதேஜசை விளக்குதல் பொருத்தமா யிருத்தலின். என் போன்றார் சந்திக்தமான கிரியையில் திடப்பிரவிருத்தி யுடையவர் ஆகார். மற்றும், என்னாற் காக்கப்பட்ட இராகவன் தன்னுடைய திவ்யதேஜசினனே யாகத்திற்கும் உலகிற்கும் அபகாரஞ் செய்யப்பட்ட அரக்கர்களுடைய சிரச்சேதஞ் செய்வதன் கண்ணே வல்லமை யுடையவன்; அவனுக்கு அஸ்திரவேற்றுமையானே பலவேறு வகைப்பட்டதும், எல்லையில்லாத அழிவற்ற மகிமையோடு கூடியதும் ஆகிய அஸ்திரவித்தையை யினிது கொடுத்தல் வடிவமேன்மையைச் செய்வேன் அதனல் மூன்றுலகங்களும் பூஜிக்குமாறு ஆய்விடுவன். ஆயினுந் தந்தையார் மைந்தரைவிடல் எளிதல்லவே யெனின், உண்மையே, மைந்தன்மேல் வைத்த என் மைந்த னிவனென்னும் நேயத்தை மிகுதிப்படுத்திக் கொள்ளுதல் நலனன்றும். என்போலிய அறிஞர் ஐயப்பட்ட காரியத்தில் மெய்ம்முயற்சியைச் செய்யார். (31)

(ஸ்ரீ-வீர. அ-கை.) அரக்கர்களை யழிக்கமுடியு மென்று கூறினீர்களே பாலகனகிய இராகவனுக்கு இத்தகைய சாமர்த்தியம் எங்ஙனங் கூடுமெனின், கூறுகின்றார்:—இயாரினுமென.

இயாரினு மிராமன் மேன்மை வசிட்டனு மியானு மாதி
யாரிய ரறிவே மாட்சி யறம்புகழ் வேண்டி னந்தப்
பேரிய லானை யீதி பெருமையோர் கொடாத துண்டோ
வீரிய வரக்கர் மாய்தன் மெய்யென விள்ம்பி விட்டான். (32)

(ப - ரை.) இயாரினும் = உலகத்திலுள்ள மகாமகிமைவாய்ந்த எல்லாரினுமே, இராமன் மேன்மை = மகாத்மாவும் ராஜீவலோசனனும் தன்பாலடைந்தாரை ரமிக்கச்செய்பவனும் ஆகிய ஸ்ரீ இரகுகுல திலகன்றன் மகா மகா மகாமகிமையோடு கூடியிருத்தலை, வசிட்டனும் = ஸ்ரீ பிரஹ்மாவின் மானசபுத்திரராகி மகாதேஜசோடுந் துலங்கி யாவற்றையும் எக்காலத்திலும் உணர்ந்த ஸ்ரீ வசிஷ்டபகவானும், யானும் = பெருந்தவத்தால் யாவையும் பெற்ற ஜகன்மித்திரனாகியயானும், ஆதி = இவ்வாறேயாய முக்காலமுமுணர்ந்த யோகீந்திரர்களும் ஆகிய, ஆரியர் = அறிஞர்களாகிய மேலோர்களும், அறிவேம் = தெரிந்துகொண் டிருக்கின்றேம், மாட்சி = பெருந் தன்மையும், அறம்=புண்ணியமும், புகழ்=யசசும், வேண்டின் = இனிதாக விரும்புதியேயாயின், அந்தப் பேரியலானையீதி = அழகு நிறைந்திருப்பதேபோல அநந்த கல்யாண குணகணங்கட் கிருப்பிடமாகிய மகாமகத்துவம் வாய்ந்த அவ்வுமது ஜேஷ்ட புத்திரனைக் கொடுப்பீராக, பெருமையோர் = மகான்மாக்கட்கு, கொடாததுண்டோ = கொடாததான பொருள் இவ்வுலகத்திற் காணேம், வீரியவரக்சர் = மிகுந்த பலமுடைய இராக்ஷசர்கள், மாய்தல் = மாய்ந்து போதல், மெய்யென விளம்பிவிட்டான் = பிரதிஞ்ஞையோடு கூறி நிறுத்தினர். (எ-று.) (32)

(ஸ்ரீ-வீர.) ஸ்ரீ இராகவனை, சங்கற்பமாத்திரையானே உலகமாங்குட்டியாவை யுண்டாக்கவும் ஒழிக்கவும் வல்லமைவாய்ந்த பரமாத்மாவென்று யாங்களறிந்திருக்கின்றோம். தன்மமுதலியவை உம்முடைய உள்ளத்திற் றள்ளத் தகாதனவாக வுள்ளனவாயின் உமக்கதிப்பிரியனை ஜேஷ்டமைந்தனைத் தரல் வேண்டும். என்பதாகத் தருமான்மாவாய் மகாதேஜசோடு கூடிவிளங்கும் ஸ்ரீ விசுவாமித்திர முனீசுரர் தருமார்த்த சகிதவாக்கியத்தை விளம்பிவிட்டுச் சும்மா யிருந்தார். செந்தாமரைக்கண்கள் வாய்ந்து மகாமகிமையோடிலங்கும், ஸ்ரீ இராமனை ஜீவஉபாதியாற் பரிச்சின்னப்படாத பூரணவடிவ ஈசுரனென்று, யானும் மகாதேஜசையுடைய ஸ்ரீ வசிஷ்டபகவானும் யோகசித்தியினானே எல்லாவிடங்களிலிருக்கும் பொருள்களையும் அறியுந்தன்மைவாய்ந்த மற்றைய இருடிகளு மறிவோம், அறத்தையும் மேன்மையையும் கீர்த்தியையும் காக்க வேண்டுமென்னும் எண்ணம் உமதுள்ளத்திருப்பின் அதிகப்பிரிய மைந்தனை ஸ்ரீ இராமச்சந்திரனை நன்னிச்சயத்துடன் கொடுக்கவேண்டும். எனதுயாக வைரிகளாக விக்கினங்களையே செய்யும் அரக்கர்கள் ஸ்ரீ இராமனாற் கொல்லப்படுபவர்களாய் நடக்குமெனது யாகம் பத்துநாளிரவும் பகலும் செய்யத்தக்கதாம். அசக்தத்தன்மையை யங்கீகரித்துக் கூறுகின்றீர். இவ்வுலகில் மகாத்மாக்கட்குக் கொடுக்கத்தகாத பொருளுமொன்றுண்டோ! "கன்னனே கவசந்தந்தான் கவின்றசைசிபிசீமூதன் இன்னுயிர் அலர்க்கன்கண்ணே யீந்தனன் றதீசிதேக, வென்னென்புதந்தான் வேண்டில் விழுமியபெரியோர்க்காக, வென்ன தான் கொடுக்கலாகா விரும்பொருளுலகிலம்மா!" என்பதுஸ்மிருதியாம். சிபி

ததீசியலர்க்கன்முதலியோர் தமதுதேகம் விழி முதலியவற்றையும் கொடுத்த னர் என்பதுமக்குத் தெரியாததல்லவே, இவ்விடயத்தில் அபாயம் வருமென நினைத்தலும் கூடாது,வெற்றியும் மேன்மையுமே யுண்டாம். அற்புதம் அவ்வரக் கர்களை மடிந்தவர்களாகவே என்றவத்தால் நான் நிச்சயமா யறிகின்றேன் என் வாக்கியத்தால் நீரும் அதை நிச்சயமாக வுணருதிர். ஸ்ரீ இராகவனை அனுப்பு வதில் ஸ்ரீ வசிஷ்டாதியரும் சம்மதிதருவர். காலத்திற்செய்த நன்றியே ஞாலத் திற் பலபரியந்தம் மேன்மையதாம் என்றனர்.

(ச.) ஆரியர் = என்போன்றே பூத வர்த்தமான பவிஷ்யத்காலங்களை யுணர்ந்த அறிவுடையோர். மகான்களனுக்கிரகத்தினால் குலத்திற்குந் தனக்கும் மகத்துவமும், யாகசம்ரக்ஷணையினாற் றருமமும், இராக்ஷதர்களை விஜயஞ்செய் தன் முதலியவற்றானே மகாகீர்த்தியும், விரும்புதியாயின் என்பார் மாட்சி யறம் புகழ் வேண்டினென்றார். (32)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஸ்ரீ இராகவனுக்குப் பருவமின்மையின் வலியின் றென் றும் யானவது வந்து போர்செய்யலாமாவென வெண்ணுகின்றே னென்றும் மன்னவர் கூறுதல்:—முனிமொழி யென.

முனிமொழி கேட்டு மன்னன் முகூர்த்தமொன்றயர்ந்து சோர்ந்து
தனியொரு சிறுவன் மூவைம்ப ருவத்தன் சமர்கண் டில்லான்
பனிசெய்வல் லரக்கர்க் காற்றான் பகைஞர்கோ ளறிதல்தேற்றான்
அனிகமோ டேகி யானே யவரொடு மரும்போர் செய்வேன். (33)

(ப-ரை.) முனிமொழிகேட்டு = ஸ்ரீவிசுவாமித்திரரது வாக்கியமாகிய கர்ணகடூரத்தைக் கேட்டவுடனே, மன்னன் = தசரதர் சிங்கம்போன்றவ ரேனும் புத்திர சோகத்தால், முகூர்த்தமொன்றயர்ந்து சோர்ந்து = ஒரு முகூர்த்தம்வரை சேஷ்டை யற்றவராகி மயங்கிவாடித் தைனியத்தோடும் இவ் வாக்கியத்தைப் பகரலாயினார், ஹேசர்வக்ஞராகிய மகரிஷியே! இராகவன், தனியொருசிறுவன் = அத்தியந்தம் ஒருசிறிய பாலகன், மூவைம்பருவத்தன் = கேவலம் ஊனசோடச வருடவயதினன், சமர்கண்டில்லான் = போர்க்களமே கண்டவனல்லன், பனிசெய் வல்லரக்கர்க்காற்றான் = பனிபோல் மூடும்படி யான அநேக மாயைகளைச் செய்யும் வல்லமைபொருந்திய அரக்கரோடு போர் செய்யக் கிஞ்சித்தும் சமர்த்துடையவனாகக் காணப்படவுமில்லை, பகைஞர் கோளறிதல் தேற்றான் = சத்துருக்களது பலாபலங்களையும் வஞ்சகங்களையும் தெரிந்துகொள்ளும்படியான சாமர்த்தியமும் அவனுக்கில்லை, ஆனால், அனிக மோடேகியானே = யானே சர்வ்சைனியங்களோடும் போய், அவரொடும் அரும்போர் செய்வேன் = அத்துஷ்டர்களாகிய அரக்கரோடும் பெரும்போ ரைச் செய்யலாமென் றெண்ணுகிறேன். (எ-று.) (33)

(ஸ்ரீ-வீர.) ஊனசோடசம் = பதினாறுவருடங்களின் பூர்த்தி சோடச மாகும், அப்பதினாறுவது வருடஞ் சிறிது குறைவாயிருத்தலே ஊனமாகும்

என்பதாம். அவ்வரக்கர்கள்பாற் றுஷ்டத்தன்மைக்குக் காரணம் மாம்சபக்ஷணமே யாமென்றறிக. ஸ்ரீவிசுவாமித்திரர் கூறியதைக்கேட்டு அரசர்க்கரசராகிய தசரதர் விடை யில்லாமையின் செயலற்று, முன்மொழிந்த ஸ்ரீ இராமரது த்சையை எண்ணுதலால் பிரதிஞ்ஞைசெய்த பொருளிற் சாமர்த்தியமின்மையினும், முனிவரது வசனத்தைத் தாண்டமுடியாமையானும், தைனியத்தோடு கூடிய இவ்வசனத்தைக் கூறுகின்றார்.—தனியெனா. தாமரை விழியையுடைய இவ்விராமனுக்குப் பதினைந்தே முக்கால் வயதுதானாகின்றது. போர்செய்யத் தகுதியே யில்லாதபோது அரக்கரோடு போர்செய்வானென்று நினைக்கவே முடியாது. ஆனால் கேட்டது வீண்தானோ என்பீரேல் ஹேபிரபுவே! பூரணமாகிய அக்ஷௌஹிணிக்குக் கருத்தாவாகிய யான் அச்சேனையோடு கூடிச் சென்று தசைதின்னுமரக்கரோடு போர்புரிவேன், அக்ஷௌஹிணியின் இலக்கணமிதுவாம்:— ஆனை 1, தேர் 1, குதிரைகள் 3, காலாள்கள் 5, இது பத்தியெனப்படும், இத்தொகைமூன்று மூன்று கொண்டனமுறையே, சேனைமுகம், குல்மம், கணம், வாகினி, பிருதனை, சமூ, அநீகினீ, யெனவாம்; 10 அநீகினீ சேர்ந்து அக்ஷௌஹிணி அதாவது, ஆனைகள் 21870, தேர்கள் 21870 குதிரைகள் 65610 காலாள்கள் 109350 என்பதாம். இஃதமரசிங்கத்தானே ஸ்ரீமத் மகாபாரதாதியில் வெளியாயிருப்பது தொகுத்துக் கூறப்பட்டிருக்கின்றது. இச்சேவகர் சூரர்வெற்றி நிறைந்தோர் மந்திரத் தெளிஞராவர், வில்விளங்குங் கையனாகியயானே இவர்களைப் போர்முனையிற் காப்பேன். இவர்களோடு கூடவே சென்று சிங்கமானது மதம்பொழியும் யானைகளோடு போரிடுவதே போல மகேந்திரரினும் வலுமைவாய்ந்த போர்வீரரோடும் போரிடுவேன். பாலகனாகிய இராமனோ பகையாளிகளின் பலாபலத்தையறிந்து கொள்ளமாட்டான், நகரத்துள் அம்புபயிலுமிடத்தில் விளையாட்டின் பொருட்டுக் கற்பிக்கப்பட்ட போர்க்களத்தினும் வேறாகிய போர்க்களத்தை யவன் கண்டதேயில்லை. மேலான சஸ்திரமாகிய விடாப்படையோடு கூடினவனுமல்லன், போர்விடயம் முற்றுந் தெரிந்தவனுமல்லன், விடும்படைகளோடு கூடினவனுமல்லன், சூரகோடிகணிறைந்த போர்க்களத்திற் போருணர்வு மவனுக்கில்லை, போர் ஞானமுமில்லையாயின் போரின்முற்றுமுணர்ச்சி அதிதூரத்ததன்றோ. அன்றியும், இப்போது எனதுபாக்கியக்குறைவால், பனியினாலேபதுமாகரம் போல மிகமிகவும் வெளுத்திளைத்து வருகின்றான், அன்னமுண்ணவும் ஆற்றலில்லை, வீட்டினுட்சஞ்சரிக்கவு முடியவில்லை, உள்ளே நிரம்பியதுயரோடுகூடிய வடிவினனாகிக் கேவலம் சும்மாவே யிருக்கின்றான். அனுப்புதற்கே தகுதியற்ற அவனைப் போர்க்கனுப்புதல் எங்ஙன்? அதனினும் அரக்கரோடு போர்க்கென்பது அத்தியந்தம் தகுதியற்றகாரியமன்றோ! வஞ்சகமாகப் போர்செய்வதிற் சமர்த்தும், கொடுந்தொழிலும், உடைய அரக்கர்களோடு கூறிய இத்தன்மையிலிருக்கும் இராமன் போர்புரிகவெனக்கூறும் தங்கள்யுக்தியே மிகவும் சகிக்கமுடியாததாக விருக்கின்றது, எனவிரிவாயுணர்க. (33)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னவனைத்தந்தால் பெரும் பெரும்ஆபத்துகள் வருவதுடன் தங்கட்கும் தருமம் வளர்வதற்கயலாக அதருமமேயேற்படும் என்று தசரதர் கூறுகின்றார்:—முன்னவனென.

(ச.) தசரதர் புத்திரவாஞ்சையாற் றளர்ந்தவராதல்:—முன்னவனென.

முன்னவ னீங்கின் மற்ற மூவரும் வாழா ரியானு
மின்னுயிர் வாழே னின்றி ராவண னொழிந்தோ ரியாவ
ரன்னவர்க் கஞ்சேன் முன்ன மிராவண னமர்க்கு மஞ்சேன்
வென்னிடப் பொருதும் வீரர் வீரங்க ணிலைமைத் தாமோ. (34)

(ப - ரை.) முன்னவனீங்கின் = ஜேஷ்டகுமாரனாகிய இராகவன் நீங்கு வானேயானால், மற்றமூவரும் வாழார் = பரதலக்ஷ்மண சத்ருக்நரென்னும் மூன்றுதம்பிமாரும் ஜீவிக்கமாட்டார்கள், யானும் = தசரதனாகியயானும் ஜேஷ்டகுமாரன் மேன்மிகப் பிரீதியுடையவனாதலின், இன்னுயிர்வாழேன் = இனிமையான இகலோக வாழ்க்கையிலிரேன், இன்று = விருத்தாப்பியத்தை யடைந்த இப்போது கரதூஷணாதிகளைக் கொல்லயான் வருவனேயாயின் அவர்கள் நிமித்தம் இராவணன்வந்தால் அவனோடு போர்புரிய என்னான்முடி யாது, இராவண னொழிந்தோரியாவர் அன்னவர்க்கஞ்சேன் = இராவணனா கிய இலங்கேசுரனல்லாமல் மற்றெவ்வரக்கரெதிர்ப்படினும் அவர்கட்கு யான் சிறிதும் பயப்படமாட்டேன், முன்னம் = யவ்வனமாக இருக்கும்போது, இராவணனமர்க்குமஞ்சேன் = கைலாசபர்வதத்தை யசைத்த புஜபலத்தை யுடைய தசமுகனுக்கும் தசரதனாகியயான் அச்சமுறேன், வென்னிடப்பொரு தும் வீரர் = பகைவர்முதுகு காட்டியோடும்படி போர்புரியும் வீரசூரரது, வீரங் கள் = வீர்யசௌர்யங்கள், நிலைமைத்தாமோ = ஒரே படித்தாகவோ நிலைத் திருக்கின்றது ? காலேனும் மாறிக்கொண்டேயிருக்கின்றது. (எ-று.) (34)

(ஸ்ரீ-வீர.) இன்னுயிர்வாழேன் என்றது அரக்கர்பொருட்டு என்னருமை முதன்மைச்சுதனை வலுவில்கொண்டு செல்வீராயின் உயிர்துறப்பேன் என்ற தாம். இராகவனைக் கொடுக்கமுடியாதென்பதில் வேறுநிமித்தமும் சங்கிக்கப் படுகின்றது என்கின்றார்:—இன்றென. இராமனைப் பிரிந்து ஒருமுகூர்த்த மேனும் வாழவிரும்பிய யான்வாழச்சகியேன், ஆகையால் இராமனையழைத் துச் செல்லுதல் தகுதியன்றும், இராமனையழைத்துச் செல்லுவீராயின் அரக்கர் வதமோ உண்டாகப்போவதில்லை, மாறாகவோ மைந்தரோடுகூடிய வெனக்கே யும்மால் அவ்வதமேற்படும், படவே யாகதருமத்தைக்குறித்து உமக்கு மகா அதருமமன்றோ ஏற்படும். ஒன்பதினாயிரவருடங்கள் புத்திரஇச்சையால் வருந் திக்கழிந்த எனக்கு மிகவும் கஷ்டப்பட்டுச் சாதித்த அசுவமேத புத்திர இஷ்டி யாதிகளாலே இந்நான்குமைந்தர் உண்டாயினர். பூர்வ இராமாயணத்தில் "ஹேகௌசிகரே! அறுபதினாயிரம் வருடங்கழிந்த எனக்கு" என்றது, தனக்குக் கடந்தவயதைக் காட்டலின், ஒன்பதினாயிரவருடம் புத்திர

வாஞ்சையாற் கழிந்ததோடு விரோதியாதாம். அந்நால்வருள்ளும் கமல லோசனனாகிய இராமனே முக்கியனாவான், தேகத்துட்பிராணனேபோலும் முக்கியமாய அவன் அதிகப்பிரீதிக்கு விடயனாயிருக்கின்றான் ; ஆகலின் ஈண்டு அவனில்லாமல் மற்றையமூவரும் உயிர்தரிக்கமாட்டார்கள். எவனை யழைத்துச்செல்வதால் மற்றையமூவரும் மரணத்தைமருவுவரோ, அத்தகைய இராமனே, யமன்வடிவமாய அரக்கர்பொருட்டுத் தங்களாலழைத்துக்கொண்டு போகப்படுவனேல் நான்குமைந்தர்களையுமிழந்தயான் இறந்ததாகவே நீரறிந்து கொள்ளவேண்டியது. நால்வர் மரணத்தாலென நான்சொல்லவேண்டிய தென்னே, இராமன் ஒருவனையழைத்துச் செல்லன்மாத்திரையானும் நானிறப்பேன் ; ஏனெனின், இந்நால்வருள்ளும் இவனிடத்திலேயே எனக்குப்பரமப் பிரீதியானதிருக்கின்றது. ஆகையால்மூத்ததருமமயமாகிய இராமனை யழைத்துச் செல்லுதல் தங்கட்குத் தகுதியன்றாம். நல்லது இராமனையழைத்துச் செல்லாமற் போவனாயின் எனதுகாரியசித்தி எப்படியாகுமெனின், ஹே மகாமுனிவரே ! நிசாசரர்களுடைய சேனையைக்கொல்லத் தங்கட்கு விருப்பமிருக்குமாயின் என்னோடுகூடச் சதுரங்கசேனையை யழைத்துச் செல்லுங்கள். பகைவர்பலமறியாமல் எதிர்க்கலாகாதன்றோ, அவ்வரக்கர் எவ்வளவு வீரியமுடையவர் எவர் மைந்தர் எங்ஙனமிருக்கின்றனர் எவ்வளவுபேரிருக்கின்றனர் அவர்கள்பெயர்கள் தாமென்னே என்பதை நன்றாய்த் தாங்கள்கூறவேண்டும்; அவ்வரக்கரோடு இராமனாற்போர்புரிய எங்ஙன் முடியுமா ? என்னாலேனும் எனது பாலகர்களாலேனும் பெரும்போரில் அத்துஷ்ட பாக்கியமுள்ள வஞ்சகப்போர் செய்யும் அவரோடு எவ்வாறு எதிர்த்துநிற்க முடியும் ? இவ்வியாவற்றையும் தாங்களே கூறவேண்டும்; வீரியமிகுத்து வலுத்தவரன்றோ அவ்வரக்கர், நேரே குபேரனுடைய சகோதரனும் விசிரவசுவின் மைந்தனும் ஆகியமகா வீரியத்தையுடைய இராவணனென்னும் அரக்கன் ஒருவனிருக்கின்றானென்று கேள்விப்பட்டுளேன். தங்களுடைய யாகத்தில் அந்தத் துன்மதியானவன் ஒருவேளை யிடர்செய்ய வருவானாயின் அந்தத் துராத்மாவோடு போரினெதிர்த்து நிற்க எங்களான் முடியவே மாட்டாது.

(ச.) ஹே கௌசிக முனிநாதரே ! எனக் கறுபதினாயிரவருடங் கழிந்தபின் வெகு வருத்தப்பட் டியற்றிய புத்திரகாமேட்டி யாகத்தால் நான்கு புத்திரருதித்தார், அவர்களிற் பிரதான புத்திரனை இராமனையே தேவரீர் அரக்கருக் கிரையாகக் கொடுக்கத் துணிந்தீர் அவனிவ்விடம் விட்டுப்பிரியின், மற்றப்பரதாதி மூவரும் சீவியார் அப்புத்திர பாவத்தால் என்னையு மிறந்தவனாகவே யறிந்துகொள்ளு மென்பார், முன்னவ—வாழேன்னென்றுங் கூறினர். அஞ்சேனென் றமையா லிக்காலத்திற் றுட்டமனமுடைய ராவணனுக்குப் பயப்படுவே னென்றதாயிற்று. (34)

(ஸ்ரீ-வீர. அ-கை.) இராவணனுக்கு இத்தகைய வீரியமெங்ஙனம் வந்தது, எங்ஙனந்தான், காகுத்தாதி வம்சத்தில் வந்தவர்களாய் இராவணாதிகளைப் பார்

க்கினும் அதிகபலத்தோடு கூடிய தங்கட்கு வீரியக்குறைவு ஏற்பட்டது எனக் காரணத்தைவினவத் தசரதர் கூறுகின்றார்:—காலவென.

காலவேற் றுமையா லெல்லாப் பொருள்களும் கலங்கி வேறு
மேலவ ரிளைத்தோ ராவர் வெய்யவன் குலத்துப் பூமி
பாலனு மியான்மேற் செய்வ தியாதெனப் பரிகேன் மூப்பாற்
சாலவு மென்றான் மன்னன் றாபதன் முனிந்து சொல்வான். (35)

(ப - ரை.) காலவேற்றுமையால் = காலங்களின் வேறு பாட்டையனு சரித்து, எல்லாப் பொருள்களும் = சிருஷ்டியிலுள்ள சர்வபதார்த்தங்களுமே, கலங்கிவேறாம் = கலக்கமுற்று வேறு வேறு திறனும், மேலவர் = சற்சனர், இளைத்தோராவர் = பலஹீன ராக்கப் பெற்றனர், வெய்யவன் குலத்து = சூரியவம்மிசத்திலுதித்த, பூமிபாலனுமியான் = தசரதமன்னவனாகிய யான், சாலவு மூப்பால் = அத்தியந்தம் விருத்தாப்பியத்தை யடைந்திருத்தலின், மேற்செய்வதி யாதெனப் பரிகேன் சாலவும் = இனித்தங்கட்கு எந்தவித மாக உதவிசெய்வது என்று மிகவுந் துயருறுகின்றேன், என்றான் மன்னன் = என விவ்வண்ணம் அநேகபரியாகுல அக்ஷரத்தோடு கூடிய மொழிகளால் தசரதர் வணக்கமாகக்கூற, தாபதன் = மிகுந்ததபத்தோடு கூடிய ஸ்ரீ விசுவாமித் திரமகரிஷியான கௌசிகர். வெகுண்டு சொல்வான் = மிகவுங் கோபாவேசத் துடன் கூறத்தொடங்கினர். (எ-று.) (35)

(ஸ்ரீ-வீர.) அன்னியோன்னியம் விலக்ஷணங்களான பகுவீர்ய சௌர்ய சம்பத்துகள் அபிவியக்த அநுகூல அவ்வச்சமயத்தில் பிராணிகளிடத்தில் வெளிப்பட்டு விளங்குகின்றன; பிரளய அநுகூல காலத்திலோ யாவும் உட்பட்டு ஒய்கின்றன. எம்போலிய சற்சனர்கட்குப் பிரதிகூலமாகவுள்ள இக்காலத்தில் இராவணாதிகளாகிய சத்துருக்கள் முன்னிலையில் யாங்கள் எதிர்த்து நிற்கச் சமர்த்தராகேம், இவ்விதி ஈசனாலே விதிக்கப்பட்டதாம். காலம் பிரதி கூலமாகவே யிருக்கின்றதென்பார் மேலவரிளைத்தோ ராவரென்றார்.

இப்போழ்து முப்போழ்தைக்குறித்து அத்தியந்தம் அயலாய் விபரீதமா யிருக்கின்றது. விருத்தத் தன்மையும் சர்ச்சரத்தன்மையும் எனக்கு மேலிட்டு விட்டது, இராகவனே ஷஷ்டசோடச வருடத்தோடு கூடினவனாயினும் விருத்த அவஸ்தையிற் போலச் சர்ச்சரமடைந்தவனா யிக்கால் தீனபாவத்தை யடைந்து துக்கியாக விருக்கின்றான். கௌசிகர் = குசிக கோத்திரத்தில் வந்தவர்.

ஒவ்வொருபிராணிகளிடத்தில் ஒவ்வொருகாலத்தில் தனித்தனியாக மிகுந்தவீரியங்களும் விபூதிகளும் உண்டாகின்றன, ஒவ்வொருகாலத்தில் ஒடுங்குகின்றன, ஆகையால் இக்காலத்தில் அதனினும்இப்போது நாங்கள் இராவணாதி சத்துருக்கள்முன்னின்று போர்புரிய ஆற்றலுடையவர்களல்லேம்; இஃதீசர் நியதியென்பது நிச்சயமாகும். ஆகலின் ஹே தருமத்தை யுணர்ந்த மகாமுனிவரே! என்னுடையமைந்தன் மீதுதிருவருள் புரியவேண்டும், யாசக

ரது எண்ணத்தைப்பூர்த்தி செய்யுமாற்றலற்ற அற்பபாக்கியமுடைய அடியேனுக்குத்தாங்களே மேலாயதெய்வமாக இருக்கின்றீர்கள்; ஏனிவ்வளவு அதைரியமெனின், தேவர்தானவருங்கூட இராவணனோடு போர்புரியச் சமர்த்தராகார் ஆயின்மனுடராகிய யாங்கள் அவன்முன்னென்செய்வோம். போரின்கண்ணே இந்திராதிகளையும் துச்சமாக்குகின்றனன், அத்தகையனோடு பாலகன் என்ன செய்வான். நல்லமேலோர்களும் பலமற்றவர்களாகவாழும் இஃதொரு விபரீதகாலமாக இருக்கின்றது; யானோ கிழத்தன்மையானே தளர்ந் திருக்கின்றேன். இராமனோ கிழவனைப்போல எளிமையையுந் தளர்வையுமடைந்துளான். ஆகையால் இராமனைக் கொடுக்கமுடியாது, யான்கொடாமலிருந்துந் தாங்கள் தவமகிமையாற் கொண்டுசெல்வீர்களேயாயின், உங்களால் யானேகொல்லப்பட்டவனாவேன் என்பதாக அவ்விரகு குலதிலகராகிய தசரதர் என்னும் மேன்மை மிக்க அரசர் மெதுவாகக் கூறி மகாமுனிவருக் கிஷ்டமாகிய ஸ்ரீ இராகவரை யனுப்புதலினும் அரக்கர் வதத்தினும் செய்யத்தக்கதா? தகாததா? அனுப்பலாமா? வேண்டாமா? என்பதாதிவடிவச் சம்சயமாகிய பேரலைக்கூட்டத்தில் உயர்ந்தெழா நின்ற அலைமிகுத்த கடலில்மூழ்கி மோக முற்றவனைப்போல மூழ்கினவராகித் தன்னின் பத்தையும் நிச்சயத்தையும் அறியாதவரானார். நேயத்தால் வியாகுலமுற்ற விழிகளோடு கூடிய அவரது அவ்வாக்கியத்தைக் கேட்டுக் கோபத்தோடு கூடிய ஸ்ரீகௌசிக மகாமுனிவர் மகீபதியை நோக்கிக்கூறுகின்றார் என்பதாம்.

(ச.) சிருஷ்டியாதி கால வேறுபாட்டால் பரமேஸ்வ ரைஸ்வரியங்களைத்துஞ் சீவரிடத்துதித்தலும் ஒடுங்குதலும் ஆகிய கலக்கமுற்றுப் பிரிவுறு மென்பர். வேறுமென்னு மிக்காலத்தில் இராவணாதியர் சங்கார ஹேதுக்களான பரமேசுவர ஐசுவரிய மிகுந்தவரும், சற்சனர் அது குறைந்தவரும் ஆவரென்பார் மேலவரிலேத் தோராவரென்றும், இப்போது யான்வார்த்திகத்தால் அசக்தனா யிருத்தல்போல இராகவனும் வாலியத்தால் அசக்தனா யிருத்தலின் அவனையு மனுப்புதற்கு மனமின் றென்பதைக் குறிப்பாலறிவித்தா ரென்பார், யான் மூப்பாலென்றுங் கூறினார். (35)

(ஸ்ரீ - வீர. அ - கை.) இப்போது ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியானவர் வெகுண்டு கூறுதல் கூறப்படுகின்றது:—கருதியதென.

கருதிய தளித்தே னென்று கழறிய வாய்மை பொய்த்தாய்
செருவுயர் சிங்கமா நீ சிறுவிலங் கியற்கை செய்தாய்
மருவிய கிளைஞ ரோடும் வாழ்தியாம் போதுமென்று
பெருமுனி முனிய மண்விண் பெரும்பயம் பிடித்த தன்றே. (36)

(ப - ரை.) கருதிய தளித்தேனென்று = தாங்கள் எண்ணிவந்த காரியத்தை முடித்துவிட்டதாகவே நினைத்துக் கொள்ளுங்கள் என்பதாக முன்பு, கழறிய வாய்மை பொய்த்தாய் = பன்முறை யுறுதிப்பட வுரைத்த பிரதிஞ

ஞையை விட்டொழிக்க விழைகின்றாய், செருவுயர் சிங்கமா நீ = போர்க்கஞ் சாத வுயர்ந்த சிங்கம்போல மாண்புட னிருந்த நீ, சிறுவிலங்கியற்கை செய் தாய் = சிறிய பயத்தோடுகூடிய மிருகவியற்கையுட னிருப்ப வாஞ்சிக்கின்றாய், யாம்போதும் = உன்னாலக்காரிய முடியாவிட்டால் யாமெங்கிருந்து வந்தோ மோ அங்கேயே செல்லுகின்றோம், நீ, மருவிய கிளைஞரோடும் வாழ்தி = உன்னை நம்பி உன்னுடன் கூடிக்குலவும் பந்து வர்க்கங்களோடும் பிரதிஞ்ஞை யிழந்தவனுய்க் காகுத்த வம்மிசத்திற் பிறந்தவனென்று சொல்லிக்கொண்டு சுகமாக நீ வாழக்கடவாய், என்று = என இவ்வண்ணம், பெருமுனி = சப்த ரிஷிகளி லொருவராய்ப் பெருந்தவ முடையராய அம்முனிவர், முனிய = சினந்து கூறியவளவில், மண்விண் = மண்ணுலகத்தி லுள்ளாரும் விண்ணுல கத்திலுள்ளாரும், பெரும்பயம் பிடித்தது = மிகுந்த அச்சத்தையடைந்தனர். (எ-று.) அன்று, ஏ அசை. (36)

(ஸ்ரீ - வீர.) காகுத்தனெனக் குறிப்பிட்டது ஏசிக்காண்பித்ததாம்; ஹே மன்ன! செய்கின்றேன் என அங்கீகரித்த பிரதிஞ்ஞையைக் கெடுக்க நினைத் தல் தகுங்கொல்! மகாமகிமைவாய்ந்த நீ சிங்கமாக விருந்து மான்றன்மையை மருவ வாஞ்சித்தலென்னே! இராகவர் குலத்திலிப் பொய்பேசும் விபரீதமா னது பொருந்தாததே யன்றோ! ஒருகாலத்திலுஞ் சந்திரனிடத்தில் உஷ்ண கிரணங்க ளுண்டாகாவாம். நீர் சாமர்த்தியமுடைய ரல்லராயின் நாம் வந்த வாறே செல்கின்றோம், ஹே காகுத்த! பிரதிஞ்ஞை யற்றவனுகிப் பந்துக்க ளோடும் சுகமாக வாழ்ந்துகொண் டிருப்பீராக வென்றனர், தவமகாத்மிய சாலியாகிய ஸ்ரீ விசுவாமித்திரர் இவ்வாறு கோபத்தினுல் வியாபிக்கப்பட்ட போது நமதுபதியின் அபராதத்தாலேனும், அபராதியைத் தாங்கிக்கொண் டிருக்கும் அபராதத்தினுலேனும் என்னையே எங்கு சபிக்கப் போகின்றாரோ வென்னும் பயத்தானே பூமிமுழுதும் நடுநடுங்கியது. தவத்தால் வேறுகவே இராவணுதிகளைக் கொல்லு மொருவனை யெங்கு சிருஷ்டித்து விடுகின்றாரோ, அவன் நம்மனோரையும் எங்குதன்புறத்தப் போகின்றானோவெனத் தேவதை களும் நடுநடுங்கினர். இத்தகைய சக்கிரவர்த்திக்கு ஏதாவது முனிவர் சினத் தாற் றீதுண்டாயின் அவனியானது காப்பற்றுத் தவிக்குமேயென இவ்வுலகி லுள்ளவர்களும், புண்ணியமூர்த்தியாகிய ஸ்ரீ இரகுநாயகற்கு ஏதாவதுதடைவ ரின் இராவணுதி சங்காரமிலதாகி யாம் பெருந்துயரன்றோ முன்னினும் அதிக மாக அனுபவிக்க நேரிடுமென அவ்வுலகி லுள்ளாரும் பயந்தனர் எனினும் அமையும். (36)

(ஸ்ரீ-வீர-அ-கை.) உலகிற்கு நேராகிய மகாமுனிவர் கோபத்தால் வியா பிக்கப்பட்டதை யுணர்ந்து, தைரியமுடையவராதலின் ஸ்ரீ விசுவாமித்திரரது கோபத்தைத் தமது கோபத்தானே தடுக்காமல், பேரறிவாளியும் பரமசாந்த சொரூபரும் நல்லவிரதமும் உடையவராய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுகின்றார்:- மாதவவென.

மாதவன் முனிவு நோக்கி வசிட்டனு மனு குலத்தே
சாதனுய்த் தசரதப்பேர் தரித்தனே சபதங் காவாய்
தீதுறிற் பிறிதார் காப்பார் திருத்திநீ நிறுத்து நீதி
மேதினி கடவா தென்றால் வேந்தநீ கடக்கற் பாற்றோ. (37)

(ப - ரை.) மாதவன் = மாட்சிமைதங்கிய பெருந்தவத்தால் சிருஷ்டி முதலிய எல்லாவல்லமையுமுடைய ஸ்ரீ விசுவாமித்திரர், முனிவு = குரோத அபிபூதமானதை, நோக்கி வசிட்டனும் = ஸ்ரீ பிரஹ்ம மானசீய இயற்கை ஞானியாகிய மைந்தர் கண்ணுற்று, தாரதரைநோக்கி, ஹேமன்ன! மனு குலத்தே சாதனுய் = மனு இக்ஷுவாகுவம்சத்தே அவதரித்தவனுய், சுயம், தசரதப்பேர் தரித்தனே = தசரதன் என்னுங் காரணக்கீர்த்தி நாமத்தை யடைந்தவனுய், இருக்கின்றபடியால், சபதங்காவாய் = நீ மகரிஷிக்குச் செய்த பிரதிஞ்ஞையை இரக்ஷிக்கவேண்டும், தீதுறிற் பிறிதார்காப்பார் = தபோதனர் கட்குத் தவ இடையூறு உற்றால் உன்போன்ற க்ஷத்தமாகிய ஆபத்தினின்றும் திராயமாகிய இரக்ஷிப்பைச் செய்யும் க்ஷத்திரிய அரசனன்றி வேறுயாவர் காத் தற்குரியருளார், திருத்திநீ நிறுத்துநீதி = இன்ன இன்னநீதி முறைப்படிதான் இன்ன இன்னவர் நடக்கவேண்டும் எனநீ ஆக்ஞாபித்த மரியாதையை, மேதினி = நின்னுலாளப்பட்ட சர்வபூமண்டல மகாப்பிரஜைகளும், கடவா தென்றால் = தாண்டியணுவும் வேறுமுறையாக அனுஷ்டிக்கமாட்டார்கள் என்பது பிரசித்தமா யிருந்தலினுல், வேந்தநீ = மன்னர்கட்கெல்லாம் நீதி தெரிவிக்கும் மன்னவனுகியநீ, கடக்கற்பாற்றோ = தவமுனிவர்க்குச் செய்த பிரதிஞ்ஞாபங்கஞ்செய்தல் உசிதமாமோ, ஆகாதாம். (எ-று.) (37)

(ஸ்ரீ-வீர.) இக்ஷுவாகு குலத்திற்பிறந்தும், சாக்ஷாத்தருமமே வேற் றுருவங்கொண்டுவந்ததேபோல இருந்தும் ஸ்ரீமான் தசரதப்பெயர் பெற்றும் மூவுலகினுமுள்ள குணவான்களினுடைய குணங்களை யெல்லாம் ஒருங்கே யலங் காரமாக அடைந்தும் தைரியமுடையவனுகி நல்ல விரதமுடையவனுகி யிருந் தும் தருமத்தைக் கெடுக்க நினைப்பது தகுதியன்றும். இதுகாலம்வரை பிரதிஞ் ஞாபாலனமாகிய விரத அலங்காரம் பெற்றும் இப்போதுமாறுதல் தகுதி யாமோ, தருமத்தோடுங் கீர்த்தியோடுங் கூடியுள்ளது மூன்றுலகினுமன்றோ விளங்குகின்றது உங்களுடைய குலதருமமாகிய பிரதிஞ்ஞாபாலன தருமத் தைக் காப்பாற்றவேண்டும். தருமத்தைக் கெடுப்பது தகுதியன்றும், மூவுல கினும் விரும்பியதைச் சம்பாதிப்பதில் ஆற்றன்மிக்க மூவுலகேசராகிய முனி வருடைய வாக்கியப்படி செய்வதே தகுதியாம், செய்கின்றேனென அங்கீ கரித்துப் பின்னதைச் செய்யாமலிருப்பது உனது இஷ்டபூர்த்தங்களாகிய யாகாதி தடாகாதி தருமத்தை யழிக்குமாதலின் இராமனை யவசியம் அனுப்ப வேண்டும். எந்நெறியோடு மன்னர்கள் வாழ்கின்றார்களோ அந்நெறியே குடி கள் என்னும் நியமமிருத்தலின், குடிகள் மரியாதையைக் காக்கும் பொருட் டேனும் பிரதிஞ்ஞாவாக்கியத்தைக் காப்பாற்றுவாயாக இக்ஷுவாகு குலத்திற்

பிறந்தும் சுயம் தசதிசையினும் தேரைச் செலுத்திப் போர்செய்தலினால், தசரத ஆரூடமாகி மாறிமாறிப் போர்செய்தலினுதல், தசரதனெனப் புகழ் பெற்றும், முனிவருக்குரையைக் காப்பாற்றாமல் பொய்யாக்குவையாயின் வேறு யாவர் காப்பாற்றுவர், உன்னால் நியமித்த விவகாரப்படி நீதியாக அஞ்ஞானிகளாகிய பிராணிகளும் மரியாதையைக் கடவாராயின் நீ கடத்தல் நீர்மையாமோ என்பதாம். (37)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆனால் சிறுபாலகனாகிய இராமனுக்கேதாவது ஆபத்து வந்தால் யாவரே காப்பர், வில்வித்தையினும் இவன் பாலகனாயிற்றே யெனின் கூறுகின்றார்:—எரிகாக்குமெனை.

எரிகாக்கு மமுதென்ன விம்முனிவ னனிகாக்கு மிராமன் றன்னைச்
செருவாழ்க்கை யரக்கர்செயுந் தீங்கணுகா தெனக்கேட்ட திண்டோள் வேந்த
னருள்வாய்த்த குமரனெது செய்கின்றா னெனவுமைய ரங்கை கூப்பி
விரிதீர்த்த மாடிவரு நாடடங்கி யுறுதுயரம் விளம்பலுற்றார். (38)

(ப - ரை.) எரிகாக்கும் = அக்கினிபகவானாலே காக்கப்பட்ட, அமுதென்ன = அமிர்த கும்பமேபோல, இராமன் றன்னை = அமிர்ததேஜஸையும் அமிர்தமொழிகளையும் அமிர்த அந்தக்கரணத்தையும் உடைய இராகவனை, இம்முனிவன் = எதிரிலிருந்திலங்கும் அக்கினிச்சுவாலைபோலும் பெருந்தவக்காந்தி வீசும் இந்த விசுவாமித்திர மகாமுனிவர், நனிகாக்கும் = மிகவும் நன்றாக வுன்னைக் காட்டினும் ஆயிரமடங்கு இரக்ஷிப்பர், செருவாழ்க்கை = போரையே செய்து வாழ்நாள் கழிக்கும், அரக்கர் = இராச்சரிப்போர், செய்யும் = வஞ்சகமாகச் செய்யாநின்ற, தீங்கு அணுகாது = துன்பமொன்றும் சமீபத்திலும் வரமாட்டாது, எனக்கேட்ட=என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் புத்திமதி சொல்வதைச் சிரவணஞ்செய்து, அதனாலுண்டாய களிப்பால் தருமஹானியும் புத்திரஹானியும் வராதென்னுந் துணிவால், திண்தோள்=புயம்பூரித்த, வேந்தன் = மன்னர் மன்னவன், அருள்வாய்த்த=ஸ்ரீவசிஷ்டபகவானுடைய திருவாக்கியப்படியே ஸ்ரீவிசுவாமித்திரரது திருக்கருணைக்குப் பாத்திரமாகி அவரது திருவருள் வாய்க்க யோக்கியமாய, குமரன் = நமது மைந்தன், இப்போது, எது செய்கின்றான் = எங்கே எங்ஙனம் எவ்வகை விவகரித்துக் கொண்டிருக்கின்றான், என = என்று தீமானாகிய மன்னவன் வினவ, உமையர் = ஸ்ரீராமபிருத்தியர், அங்கைகூப்பி = அன்புடன் சிரங்கரம் வைத்து, விரிதீர்த்தம் = விஸ்தாரமான தீர்த்தயாத்திரையைச் செய்து, ஆடிவரும் = அவ்வத்தீர்த்தங்களில் முறைமுறையே ஸ்நானஞ்செய்துவந்த, நாடடங்கி= தினமேமுதலாக, உறுதுயரம்= அடைந்துவராநின்ற பெருந்துன்பங்களை யெல்லாம், விளம்பலுற்றார் = சொல்லத் தொடங்கினர். (எ-று.) (38)

(ஸ்ரீ-வீர.) பயிற்சிசெய்து சாதிக்கப்பட்ட அஸ்திரங்களோடு கூடியவனேனும், அவ்வகைகூடாதவனேனும் ஆகுக இராகவன், ஆயினும் அவனைத்துயர்ப்

படுத்த அரக்கரான் முடியாதாம். இந்திராது கிருகத்தில் வைத்திருக்கும் அமிருதமானது நாற்புறமும் வளைந்திருக்கும் அக்கினியால் பிரசித்தமாகக் காக்கப்படுவதேபோலப் புருடசிங்கமாகிய இம்முனிவரானே இராமன் அஸ்திர வித்தை பயின்றவனுயினும் பயிலாதவனுயினும் அவனை அரக்கர் தீண்டவும் வல்லரல்லர். இவர் தரும விக்கிரமாக விளங்குபவர் வீரியவான்களுக்குள் உயர்ந்தவர், இவ்வுலகில் மதியினும் உயர்ந்தவர் தவத்திற்குமேலாய இடமாக விருப்பவர், பலவேறுவகைப்பட்ட அஸ்திரங்களையு முணர்ந்தவர் என்பது சராசரமாயுள்ள மூவுலகத்திலும் வெட்டவெளியேயாம் என்றறிதி. இத்தகைய இவ்விசுவாமித்திரமுனிவர் வீரியத்தையும் பெருந்தேஜசையும் யோகபலத்தால் உலக முழுவதையும் நேரேகாணு மாற்றலுடையவரும் ஆவர், அதனுனே இராம னது எதிர்காலவிஜயத்தையும் தெரிந்தேவந்திருக்கின்றாராதலின் இராமனது செல்கையில் மதியைச் சஞ்சலப்படுத்திக்கொள்ளுதல் தகுதியல்லவாம்; என் றிவ்வாறு ஸ்ரீ வசிட்டபகவான்கூற அரசர் மிகமகிழ்வுற்ற மனத்தராய் அருமை மைந்தராகிய ஸ்ரீ இராமரை இலக்குமணரோடும் அழைத்துவருமாறு சேவகனை விளித்து, பெருந் தோளையும் பராக்கிரமத்தையும் உடைய இராமனை இலக்கு மணனேடும் விரைவில் இடையூறின்றி முனிவரது யாகஞ் சித்திக்கும்பொருட்டும் உண்மை மொழியைக் காக்கும்பொருட்டும், அத்தகைய மகாபுண்ணியகாரி யத்தில் முன்னுண்டாய பொய்ச்சோகம்போலக் காலதாமதத்தால் வேறேதே னும் விக்கினமுண்டாகாம லிருத்தற்பொருட்டும், அழைத்து வருவாயாகவென் றனர். இவ்வரசரால் ஏவப்பட்ட அவன் சென்று அந்தப்புரத்திலிருக்கும் ஸ்ரீ இராமமந்திரத்தினின்றும் முகூர்த்தமாத்திரத்தில் வந்து அரசரை நோக்கி ஹே தேவரே! ஸ்ரீ இராமர் தமதுமந்திரத்தில் இரவிற்றாமரையில் வண்டிருப்பதே போலத் துக்கமனத்தரா யிருக்கின்றனர், ஒருபோது கணத்தில் வருகின்றே னென்கின்றார் ஒருபோது தியானத்திலிருக்கின்றார், கூறுதல் வாக்குமாத்திரத் தானே யிருக்கின்றதேயன்றி மனப்பூர்வகமாகவில்லை முக்கியமாகத் தியானமே செய்கின்றார், (கணங்கடிகையி னறுபதிலோர்பாகம்) சமீபத்திலொருவருமிருக்க இச்சிக்கின்றாரில்லை மதிவடிவாயுள்ளார் என்றனன் சேவகன், என்றபோது அரசர் அச்சேவகனேடு ஸ்ரீ இராமரது சமாசாரத்தைத் தெரியப்படுத்த வந் திருக்கும் அவரது சேவகரை யதட்டிக்கேட்பின் அனைத்தையும் சரியாய்ச் சொல்லாரென் றெண்ணி அவர்பால் மிகப்பிரீதிகாட்டி முறையாக யாவற்றை யும் கூறவேண்டுமெனக் கேட்டனர். (அ-கை.) இராமன் எவ்வாறு ஒழுகுகின் றனன் இளைத்தல் துயருறல் முதலியவற்றின் நிலைமை யெங்ஙனிருக்கின்றது என அரசராற் கேட்கப்பட்ட ஸ்ரீ இராமரது சேவகர் அரசரை நோக்கித் துக் கிதராயிவ்வாறு கூறத்தொடங்கினர்:—உழையரென. ஹே தேவரே! தங்க ளுடைய மைந்தராகிய ஸ்ரீஇராமர் இளைத்த யாக்கையோடுந் துயருற்றிருத்த லைக்கண்டு மெலிந்த இந்த யாங்களும் துக்கிதரா யித்தேகக்குச்சியைத் தாங்கிக் கொண்டிருக்கின்றோம், காணப்பட்ட எங்கட்கும் இத்தகைய துக்க இளைப்பு

கள் உண்டாயிருப்பின் அவருக்கிவைகளைப்பற்றி யாங்கள் கூறவுமாவேண்டும், கமலபத்திர நேத்திரமுடைய ஸ்ரீ இராகவர் மறையவரோடுந் தீர்த்தயாத்திரைக்குச்சென்று வந்தநாள் முதலாக மனோவியாகூலத்தோடு கூடியவராகவே யிருக்கின்றனர் என்பதாம். புருடசிங்கமாகிய மகரிஷியால் ஸ்ரீ இராகவர் கருடனு லமுதம்போலக் காப்பாற்றப்படுவர் என்றும் பாடமுள தெனக் காண்க.

(ச.) இராமன் அத்திரதாரியேனும் அநத்திரதாரியேனும், இவனை யிச் சகன்மித்திர முனிவரது தவமகிமை யிரக்ஷிக்குமென்பார் இம்முனிவனனிகாக் கும் இராமன்றன்னை யென்றூர். (38)

(ஸ்ரீ-வீர - அ - கை.) இப்போது உழையர் ஸ்ரீ இராகவர் அடையுந் துயரத்தை விளம்புகின்றூர்:—பதமென.

பதம்பணிந்து வேண்டியபின் பண்டைநிய மஞ்சிறிது பண்ணு நிற்கும்
இதந்தருமா தருநிதியு மில்லமும்பொய் யாதலினு லென்னேயென்னுஞ்
சிதம்படுநற் றுகிலடிசில் சீதநீ ராதிகளிற் சிந்தை தீரும்
மதந்தவிர்சந் நியாசியர்போன் மானமிராச்சிய மகிழ்ச்சி மறுக்க மாற்றும்.(39)

(ப — ரை.) பதம் பணிந்து = அவருடைய திவ்ய திருவடித்தாமரைகளில் வீழ்ந்து நமஸ்கரித்து, வேண்டியபின் = மிகுந்த முயற்சியோடும் பிரார்த்தனை செய்துகொண்டபின்னர், பண்டை நியமஞ்சிறிது = எப்போதும் செய்து வரும்படியான தமது தினவியாபாரத்தை அற்பம், பண்ணுநிற்கும் = வாடிய வதனத்தை யுடையவராய்ச் செய்தாலுஞ் செய்வர் சும்மாவிருந்தாலுமிருப்பர், இதந்தரும் = சுகத்தையும் நன்மையையும் ஈயுமென்று நம்பிக்கொண்டிருக்கும், மாதரும் = மதர்த்தநேத்திர மதோன்மத்த மங்கையரும், நிதியும் = அளவிறந்த திரவியமும், இல்லமும் = மாடமாளிகை கூடகோபுரங்களும், பொய் = அத்தியந்தம் மித்தையாம், ஆதலினல் = அவ்வாறு பேய்த் தேர்க்கொப்பா யிருப்பதால், என்னேயென்னும் = இவற்றுல் எனக்கு ஆகவேண்டிய தென்னே யெனச் சும்மாவிருக்கும், சிதம்படு நற்றுகில் = வெளுத்து மிகவும் வெள்ளையா யிராநின்ற வஸ்திரங்களிலும், அடிசில் = அறுவகைச் சுவை வாய்ந்த ஆகாரங்களிலும், சீதநீர் = வாசனைத் திரவியங்கள் சேர்த்து வெயிலில் வைத்தாற்றிய தண்மை பொருந்திய தெண்ணீரிடத்திலும், ஆதிகளில் = இவை முதலிய மற்றைய போக்கியங்களிலும், சிந்தைதீரும் = பராங்முகமாக மிகவும் நொதுமலையே யடைந்துள்ளார், மதந்தவிர் = காமக்குரோதலோப மோகமத மாற்சரியாதி துற்குணங்களை வென்ற, சந்நியாசியர் போல் = சர்வ சங்க பரித்தியாகஞ்செய்த துறவிகளைப் போலத் தவஞ்செய்யவே முயலுகின்றனர், மானம் = அபிமானத்தையும், இராச்சியம் = இராஜாவாக இருக்குந் தன்மையையும், மகிழ்ச்சி மறுக்கம் = சுகதுக்காதி விருத்திகளில் சந்தோஷ விஷாதங்களையும், மாற்றும் = அடைவதே கிடையாது (எ-று.) (39)

(ஸ்ரீ-வீர.) பரிவிராட்டுகள் என்று சொல்லப்பட்ட சந்நியாசிகளின் றரும மாகிய பிரபேக்ஷ முதலியவற்றையே நமது ஸ்ரீ இராகவர் கைக்கொண்டுளார் என்பார் சந்நியாசியர் போலென்றார். சந்தோஷ விஷாதங்கள் ஆவனமனதின் எழுச்சியாகிய வுற்சாகமும், விழுச்சியாகிய சோகமும் ஆமென்றறிக. எங்களுடைய முயற்சியினாலும் பிரார்த்தனையினாலும் தினந்தினஞ் செய்யும் தமது போஜனாதி வியாபாரத்தை வாடிய முகமுடையவராய்ச் செய்தாலுஞ் செய்வர், செய்யாமலு மிருப்பர், அதில் விருப்பமே கிடையாது, ஸ்நானம், தேவார்ச்சனை, தானம், ஆதானம், போஜனம், முதலியவற்றில் மனமேயில்லை வேண்டிக்கொண்ட போதிலும் திருப்தியுண்டாம் வண்ணம் உண்ணுவதே கிடையாது. போஜனம், சயனம், வாகனம், விலாசம், ஸ்நானம், ஆசனம், என்னுமிவ்வாசற்றவைகளிலும் உன்மத்தன் விவகரிப்பதேபோல மகிழ்வதே கிடையாது; சம்பத்தாலென்னே ! விபத்தாலென்னே ! மனையாலென்னே ! மனோரதங்களா லென்னே ! யாவுமே சாரமற்றனவாம், என்பதாக வியம்பி மவுனமாகத்தனியே யிருப்பர். பரிகாசங்களில் மகிழ்வதில்லை போகங்களில் மூழ்குவதில்லை தொடங்குங் காரியங்களில் அவாவுமில்லை மவுனியாகவே யிருக்கின்றார். ஏகாந்தங்களிலும், திகந்தங்களிலும், தீரங்களிலும், ஆரண்யங்களிலுமே அவர் மகிழ்கின்றனர்; உடுத்தல் குடித்தல் உண்ணல் நண்ணல்களில் வெளிப்படையாக உபேக்ஷையா யிருத்தலின் தவமுடைய எதையுமே யேலாத யதிகள்போலவே யொழுகுகின்றனர். ஜனசூனியமாகிய தேயத்தில் ஒருவராகவே யிருந்துகொண்டு முக்கியமாகிய மதியினனே நகைத்தல் பாடுதல் அழுதல் முதலன வொன்றுமே செய்வதில்லை, மற்றே. பதுமாதனத்திருந்து இடது கையாற் கபோல தலந்தாங்கிக் கேவலம் பரமார்த்தப் பற்றுதலானே தியானத்திலேயே யிருக்கின்றார் அபிமானத்தை யடைவதே கிடையாது, மன்னவனுந்தன்மையையும் வாஞ்சிப்பதே கிடையாது. இஷ்ட அநிஷ்ட வஸ்துக்கள் கிடைக்கும்போ துண்டாம் சுகதுக்கங்களில் மகிழ்ச்சி வாட்டங்களையும் அடைவதேகாணேம். இவர் செல்கின்றதென் ? செய்வதென் ? விழைகின்றதென் ? தியானிக்கின்றதென் ? வருகின்றதென் ? எங்ஙனமென் னனுசரிக்கின்றார் என்பதை யாங்கள் அறிய முடியவில்லை. தினந்தினம் இளைத்தே வருகின்றனர் வெளுத்தே வருகின்றனர், சரற்கால முடிவிலுள்ள காயுந்தருவைப் போலத் தினந்தினம் வைராக்கியத்தையே யடைகின்றனர் என்பதாம். (39)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆயின் என்னதான் சொல்கின்றான், என்னதான்செய்கின்றான், அவன் கருத்துத்தானென், அவனைத் திருத்தத்தான் முடியாதோவெனிற் கூறுகின்றார்:—இடரில் பதமென.

இடரில்பத மொழிந்தபல தொழிலாற்போம் வாணாளென் றிரங்கிப் பாடு, மடர்செல்வ மாபத்துக் கிடமென்றே யாசைதவிர்ந் தியார்க்கு மீயும், படர்கின்ற கருத்தறியே மிவற்காரே நற்குணங்கள் பயிற்ற வல்லார், தொடர்செய்கை யிதுவென்று தொழுதுரைத்தார் முனிகேட்டுச் சொல்வதானான்.(40)

(ப - ரை.) இடரில் பதம் = இடரில்லாமலே யெளிதாக அடையத் தக்கதும் எல்லாத்துயரங்களு மில்லாததும் ஆகிய மோக்ஷத்தை, ஒழிந்த பலதொழிலால் = அடைவதற் கில்லாதனவான பற்பல அநாத்ம சம்பந்தமானதொழில்களினாலே, போம்வாணாள் = ஆயுளானவை கழிக்கப்படுகின்றன, என்று = என இவ்வண்ணமாகக் கோர்க்கப்பட்ட பாடல்களை, இரங்கி = மிகவுமிரக்கத்தோடும் பரிதாபத்தோடும், பாடும் = அடிக்கடி மிருதுமாதுரிய சிறுதொனியினாலே பாடிக்கொண்டே யிருக்கின்றார், அடர் செல்வம் = நெருங்கிய சம்பத்துகளெல்லாம், ஆபத்துக் கிடமென்றே = துயரங்களெல்லாம் வசிக்கப்பட்ட ஸ்தானமெனக் கூறிக்கொண்டே, ஆசைதவிர்ந்து = அவற்றிற் சிறிதும் அவாவுறாமல், யார்க்கும் ஈயும் = உங்களுக்கு விருப்பமிருந்தா லெடுத்துக் கொண்டு போகலாமெனச் சொல்லி யாசகரிடத்தில் அள்ளி அள்ளித் தனங்களை யெல்லாங் கொடுத்துக் கொண்டே யிருக்கின்றார், படர்கின்ற கருத்தறியேம் = இவருடைய மனதில் என்ன எண்ணிக்கொண் டிருக்கின்றார் என்பது எங்கட் கெவ்வள வாலோசித்தும் தெரியவேயில்லை, இவர்க்காரே நற்குணங்கள் பயிற்றவல்லார் = இவ்வண்ணம் அபிப்பிராயத்தைத் தெரிவியாமல் துயரப்படு மிவ்விராகவர்க்கு இவர் கருத்தறிந்து யாவர்தாம் நற்குணங்களைப் போதிக்கவல்லார் உள்ளார் ஒருவரையுமே காணோம் இது விடயத்தில் தாங்கள் எங்களுக்குப் பெருங்கதியாக வுள்ளீர்கள், தொடர் செய்கை = இராகவர் இடைவிடாது செய்யப்பட்ட செய்கை, இது என்று = இத்தன்மையதாக இருக்கின்றதென, தொழுது உரைத்தார் = நமஸ்கரித்துக் கூறியவுடன், முனி கேட்டு = ஸ்ரீ விசுவாமித்திரர் இவற்றையெல்லாஞ் செவியிற் குளிரக்கொண்டு சொல்வதானான் = சொல்லத் தொடங்கினர். (எ-று.) (40)

(ஸ்ரீ-வீர.) இடரில் பதம் என்பது நிர்வாண பதமாம். இரங்கிப்பாடுதல் என்பது காகலியினாலே அதாவது கண்டஞ்சிறுகிய தொனியினாலே பாடுதலாம். ஹேயாசகனே! ஆபத்திற்கு முக்கிய வாசஸ்தானமாக இருக்கும் தனத்தை யாதின் பொருட்டு வாஞ்சிக்கின்றாய் என் றனுசாசனஞ் செய்து கொண்டே சர்வ ஐசுவரியங்களையும் உச்சம் நீசம் நாடாமல் கேட்டவர்கட்கெல்லாம் இவ்வாபத்து நம்மைவிட்டுத் தொலைந்தாற் போதுமென்னும் மதியால் ஈவதே வேலையாக இருக்கின்றா ரென்பதாம். அத்தகைய சித்தமுடைய இவர்க்குயாங்கள் என்னசெய்வ தென்பதாகத் தீர்க்கமாக ஆராய்ந்தும் தெரியவில்லை. பிராகிருத விவகாரத்தின் கண்ணே இவ்விராமச் சந்திரரை பிரவேசிக்கும்படிசெய்ய யாவர் சமர்த்தரோ, அத்தகைய பேராற்றலை யுடையவர் இம்மகீதலத்திற் சுற்றினும் யாவர்தாங் கிடைக்கப்போகின்றார் என்பதாம். இந்திரியங்களா லனுபவிக்க ஆரம்பிக்கும்போது மாத்திரம் மனோரம்மியமாகிப் பின்பு விடம்போலாம் போகங்களில் மனத்தை யழுத்தாதீர்கள் எனச் சமீபத்திலிருக்கும் இனியநேயர்களாகிய விவேகிகளை நோக்கிச் சிக்ஷிப்பர். ஆயாசமில்லாம லடையத்தக்க மோக்ஷபதத்தை யடையாமற்போம் புருடரானோ

பாகியப் பிரவிருத்திகளால் ஆயுள் வீணே கழிக்கப்பட்டதென்றும், அநாயாசமாக அடையத்தக்க பதத்தை யடையாமற் போம்படியான தொழில்களால் என்னல் ஆயுள்வீணே கழிக்கப்பட்ட தென்றும், மாதுரியமும் வெளிப்படாததும் ஆகிய வாக்கினுனே யடிக்கடிபாடா நிற்பர்; ஆபத்துக்கட்கு முக்கிய வாசஸ்தானமாகிய தனத்தையா விரும்புகின்றீர்கள் எனக்கூறி எல்லாத்தனத்தையும் யாசகர் பொருட்டு வாரிவாரித் தருகின்றார். இஃதாபத் திது சம்பத்தென்னும் கற்பனைப் பெருக்கான மோகம் மனத்தினின்றும் உண்டாயதென்னும் கவிகளைப் பாடுகின்றார். தங்களுக் கிட்டமானவை நழுவிவிடின், யான் ஹதஞ்செய்யப் பெற்றேன், யான் நாதனற்றவனுயினேன், எனப் பெருந்துயரடைந்தபோதினும், அதாவது உடன்பா டெதிர்மறைகளானே இராக முதலியவை துயரமெனக் கண்டபோதிலும் இவ்வுயிர்கள் வைராக்கியம் அடைவதேகிடையாது அகோ! ஆச்சரியம் எனக் கூறுகின்றார். ஸ்ரீ இராமர் நிரந்தரம் இவ்வாறிருத்தலினுனே யாங்கள் துயரத்தை யடைந்துள்ளோம். இத்தகைய மனத்தையுடைய இவருக்கு என்ன செய்வதென எங்களுக்குத் தெரியவில்லை இவ்விடயத்தில் நீர்தான் எங்கட்குக் கதி. மேற்கூறிய இயற்கையோடு கூடியிருக்கும் ஸ்ரீ இராமருக்குச் சம்பூர்ண ஐசுவர்யத்தோடுகூடி வஞ்சகவேடம் புனைந்த இச்சம்சார ஜாலமானது பிரதிகூலமாகிய விடம்போ லிருக்கின்றது. இத்தகைய இவரை உலகவிவகாரத்தில் புகுத்திவைக்கும் ஆற்றலுடைய மகானுபாவர் இவ்வுலகில் எங்கேயிருக்கப் போகின்றார், இரார், இரார், உங்களையன்றி வேறுயாரிருக்கின்றார், உங்களைப் போன்றுவது யாவரேனு மிருப்பின் இது முடியக்கூடியதேயாகும் எங்ஙன மிருளையகற்றும் சூரியர் பூமியின் கண்ணே தனது ஒளியைப் பயனுடையதாகச் செய்கின்றனரோ, அங்ஙனம் விவேகத்தைத் தடுக்கும், துயரமாகிய இருளையுண்டாக்கும் சகல மோகத்தையும் ஸ்ரீ இராமருடைய மனத்தினின்று மகற்றி இவர் விடயத்தில், தமது சாதுத்தன்மையை யுபதேசிக்கு மாற்றலைப் பயனுடைய தாக்குகின்ற மேன்மைவாய்ந்த மனத்தின ரெங்குளார்?

(ச.) மிகுந்த வருத்தத்திற்கு முக்கிய வாசத்தானமாகிய தனத்தை வாஞ்சிக்கின்றனை யென்னென்று தானே தன்னைச் சிக்ஷித்து அப்பற்றகன்று சர்வசொத்தையும் இயாசிக்கும்யாவர்க்கும் கொடுக்கின்றார். இத்தன்மைநடக்கின்ற கருத்தை யுணர்ந்திலே மென்பதுபொருள். என்று இனியாங்கள் என்செய்வோம் எங்களுக்குத் தேவரீரேகதி என்று தொழுதுரைத்தார். இடரில்பதம்= ஜீவன்முக்திபதம், பாடும்=சிறுதொனியால் ஒலமிடும், ஞானமகிமையினுலே மகா உதாரசத்துவ சித்தத்தை யுடையயாவர் இராகவனை லௌகிக விவகாரத்தில் நுழைவிக்க ஆற்றலுடையரோ அத்தகைய ரெங்கே. (40)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியானவர் ஸ்ரீ இராமர்தம் வசமாம் வகையை நினைந்து மிகுந்த குதூகலத்துடன் ஸ்ரீஇராகவரைச் சபைக்கழைத்து வரும்படியாகப் பிருத்தியருக்குக் கட்டளையிடுகின்றார்:—இப்பெரியவென.

இப்பெரிய செல்வனை நீ ரினக்கலையிற் றனிக்கலைபோ லீங்குத் தம்மின், கைப்படுமிம் மாமோகங் காதலினு லாபத்தாற் கலந்த தன்றாற், செப்பரிய விராசையினுல் விவேகத்தால் வருமுணர்வின் செல்வமாகுந், தப்பில்பல யூகத் தான் மோகம்போய்த் தளர்வறுந்தற் பதத்தி லெம்போல். (41)

(ப - ரை.) இப்பெரிய செல்வனை = நீங்கள் சொல்லியவண்ண மிருக்கும் பக்ஷத்தில் பெரும் பேரறிவுச் செல்வமுற்ற இரகுநந்தனனை, நீர் = ஹேமிருத் தியரே நீவிர்! இனக்கலையிற் றனிக்கலைபோல்=இனமானிற் றனிமான்போல, ஈங்கு = விவேகிகள் நிறைந்த இச்சபையின் கண்ணே, தம்மின்=அழைத்துக் கொண்டு வம்மின், கைப்படும் இம்மாமோகம் = இரகுபதிக்குற்ற இப்பெரிய மோகமானது, காதலினுல் = இராகத்தாலேனும், ஆபத்தால் = ஆபத்துக்க ளாலேனும், கலந்ததன்றால் = வந்தடைந்த தல்லவாம், செப்பரிய விராசையி னுல் = சொல்லுதற்கரிய பெரும்புகழ் வாய்ந்த வைராக்கியத்தினுலும், விவே கத்தால் = பகுத்துணர்வினுலும், வரும் = உண்டாகாநின்ற, உணர்வின் செல்வமாகும் = போதமகோதயமாம், தப்பில் பலயூகத்தால் = சுருதியுக்த மாய் மனத்திற்குப் பொருந்தும்படியான நானுவித யுக்திதருக்க அனுமானங் களினுலே, மோகம்போய் = இம்மோகத்தைத் துடைத்துவிட்டால் அது நீங் கப் பெற்று, தற்பதத்தில் = சர்வ அநர்த்தங்களும் நிவிருத்தியான ஆனந்த பதத்தில், எம்போல் = ஸ்ரீ வசிஷ்டபகவானே முதலிய எம்மைப்போல, தளர்வறும் = சர்வ ஆயாசங்களும் நீங்கப்பெற்று இளைப்பாறிக் கொண் டிருக்கும். (எ-று.) (41)

(ஸ்ரீ - வீர) பரமானந்த ஆவிர்ப்பாவம் எதனுலுண்டாமோ அதனுலது மகா உதயமாம், இம்மோகம் போதமாமென, இத்தகைய மோகத்திற்குப் போதஹேதுத் தன்மை யுண்மையின் உபசரிக்கப்பட்டது. விளம்பியவண் ணம் துயரத்தையும் மோகத்தையும் அடைந்திருப்பின், அவ்விடயத்திற் சோதிக்கும் ஆற்றலுடைய பேரறிவாளர்களாகிய நீங்கள் இரகுநந்தனனைத் தலைமானைப் பின்றொடருமான்கள்போல இங்குவிரைவிற் கொண்டுவாருங்கள். இம்மோகம் அவனுக்கு ஆசையாலேனும் ஆபத்தாலேனும் வந்ததன்றாம், விவேக வைராக்கியவானுக்குப் போதமே மகோதயமாம். ஆபத்துக்களாலே னும் இராகங்களாலேனும், உண்டாம் ஜடத்தன்மையே மோகமாம் இதோ விவேக முதலியவை யுடையவனுக்குப் போதபல முண்மையின் போதமாகிய பெருஞ் செல்வமேயாம். இராமனிங்கு விரைவில் வருவானுயின் வந்த இந்த இடத்திலேயே யாங்கள் சீக்கிரத்தில் அவன் மோகத்தை மலையின் மருவும் மங்குலை மாருதம் மாற்றுதலே போல மாற்றி விடுகின்றோம். மோகமகன் றபோதினும் அவருக்குக் கிடைப்பது யாதெனின் கூறுகின்றார்:—தளர்வறு மென. இம்மோகமானது ஊகத்தா லகற்றப்படவே இரகுநந்தனன் எம்ம னுரைப்போல, முன்னின்ற "அது விஷ்ணுவினது பரமமாம் பதமாம்" என்னுஞ் சுருதிப்பிரசித்த உத்தமபதமாகிய தன்னுன்மாவின்கண் இளைப்பாறு

வன், அபரிச்சின்ன ஞானரூபத் தன்மையையும், ஆனந்தம் வெளிப்பட்ட போதுண்டாம் பிரஞ்ஞையையும், கெடாதவஸ்துத் தன்மையையும், பரமானந்த ரூபத்தகைமையையும், இளைப்பாறுதலையும், தாபமின்மையையும், தேகத்தின் பருமையையும், பேரழகையும், அமுதபானஞ் செய்தவன் மறையறைந்த அறப்பயனைக் கண்கூடாய்க் காண்டலின் மெய்ம்மையையும் சுவர்க்க சுகித்தகைமையையும், தெய்வஞான அடைவையும் உறுவதேபோலடைவன்.()

(ஸ்ரீ-வீர-அ-கை.) விவகாரம் அவித்தையாலுண்டாயதெனப் பிரசித்தமாதலின் குடை நீங்கவே நிழல்நீங்கினாற்போல அதனீக்கமுமாம், அதோ பிரஜை கட்கிட்டமன்று, இராஜ்ஜியத்தைத் தனக்குப் பின்னாளுவதற்கு எவ்வளவோ பிரயாசப்பட்டு விருத்தாப்பியத்திற் பெற்றமைந்தன் விவகரியாமற் போவது மன்னவற்கு மிட்டமன்று எனின் கூறுகின்றார்:—மனமென.

மனநிறைந்து மானமுடன் மானவருக் கேற்றவெலா மகிழ்ந்து செய்யு
மெனமுனிவன் புகல்போதி லிராமனுந்தா தையைத்தொழுவா னேகித் தாதை
கனைகழல்கண் முனிவர்பதங் கலைமறையோ ரடிகுரவர் கால்க டாழ்ந்து
தனதிருதாள் வணங்கினரைத் தலையாற் சொல்லால் விழியாற் சற்கரித்தான்.()

(ப - ரை.) மனம்நிறைந்து = பரிபூர்ணமனத்தோடும், மானமுடன் = மான்னியனாய், மானவருக்கு ஏற்றவெலாம் = தனது மன்னவமனு சம்பந்த லௌகிகவிவ்கார பரம்பரையையே, மகிழ்ந்து செய்யும் = மிகமுகமலர்ச்சியுடன் அகண்டிதமாக ஒன்றுங்குறைவற ஆசிரிப்பன், என முனிவன் புகல்போதில்=என்றிவ்வண்ணம் முனீந்திரரானவர் சமாதானங் கூறிக்கொண்டிருந்த சமயத்தில், இராமனும் = கமலலோசனராகிய ஸ்ரீ இராகவரும், தாதையைத் தொழுவான் = பிதாவினுடைய சரணாபிவந்தனப்பொருட்டு, ஏகி = தமதரண்மனையிலிருந்து கொலுமண்டபத்திற்குவந்து, முதலில், தாதை கனைகழல்கள்= பிதாவினுடைய வீரகண்டையாற் சப்தியா நின்றதும் அநேகமன்னர்கள் நமஸ்கரித்தலால் அவர்கள் தங்கிரீடங்களின் பரஸ்பரம் மோதிக்கொள்வதாலுண்டாம் சப்தத்தோடு கூடியதும் ஆகிய திருவடிகளை நமஸ்கரித்து, பின்னர், முனிவர்பதம் = பூஜிக்கத்தக்கவராற் பூஜிக்கப்பெற்ற முனீசுரர்தம் திவ்யதிருவடிகளை நமஸ்கரித்து, கலைமறையோரடி = நாலுவேதங்கள் ஆறங்கங்கள் 64 கலைஞானங்கள் நியாய வேதாந்த மீமாம்சை தருமசாஸ்திரம் புராணங்கள் முதலிய யாவற்றையும் கற்றவைதிக மறையவர்களுடைய திருவடிகளை நமஸ்கரித்து, குரவர்கால்கள் = தமக்குச் சாஸ்திரங்களைக்கற்பித்த ஆசிரியர்கள் திருவடிகளை, தாழ்ந்து = நமஸ்கரித்து, தனதிருதாள் வணங்கினரை = தம்முடைய இரண்டு கமலபாதங்களை நமஸ்கரித்த அரசசம்பந்திகளை, தலையால் = சிறிதசைத்த சிரத்தாலும், சொல்லால் = இன்சொற்களாலும், விழியால் = பார்வையினாலும், சற்கரித்தான் = தகுதிக்குத் தக்கபடி சன்மானஞ் செய்தான். (எ-று.) (42)

(ஸ்ரீ - வீர.) தனது வருணாசிரமத்திற்குத் தகுதியாய்த் தொடங்கிய விவகார பரம்பரையையே யிடையீடிலாது நிறைந்த மனத்தனாகி மானியனாய்ச் செய்வன். அவாவிய அனைத்தையு மடைந்தவனாயினும் வாழுமவன் சர்வவிவகாரத்தையும் விடமுடியாமையின் இன்றியமையாது கொள்ளத்தக்கதாய தொடங்கிய விவகாரத்தை விடுத்து வேறொன்றைக் கொள்ளக் காரண மின்மையினாலும், தனது நடையைக்கண்டு நடக்கும் பிரஜைகட் கனுக்கிரகித்தற் பொருட்டும் தனது விவகார பரம்பரையைத் தடையிலாது செய்வன். அவற்றைச் செய்து அவற்றிற் பற்றறின் அதனால் முன்போலச் சுகதுக்க தசையுடையவராகவும் ஆவரேயெனின் மனனாதியாலாகிய ஞான திடவலுமை யென்னும் மகாசத்துவத்தை யுடையவனாகியும் உலகிற் காரணதத்துவம், காரியதத்துவம், பிராணிகளின் பரமபுருடார்த்த ரூபம், சமுசாரத்துற்ற சுழல்கை வடிவமென்னும் பராவரங்களை விவேகத்தா லுணர்ந்தவனாகியும், உலகவடிவமாகிய விராட்டையும், அவ்யாகிருதத்தையும் ஹிரண்ய கருப்பரையும் உண்மையாகப் பிரஹ்மமே யல்லவென அறிந்தவன்; இதனானே பற்றறவே சுகதுக்க தசையற்றவனாகியும், ஓடு கல் பொன்களின் சமமதியுடையவனாகியும் ஆவன்; என்றிவ்வாறு முனிநாதர் கூறவே அரசர்நிறைந்த மனத்தராகி ஸ்ரீ இராமரையழைத்துவரும் பொருட்டுத் தூதபரம்பரையை மீண்டு மீண்டும் அனுப்பினர்! தூதர் வந்ததும் ஸ்ரீ இராகவர் தமதரண்மனையுள் ளாசனத்தினின்றும் தந்தைபால் வந்து சேவிப்பான் அசலத்தினின்றும் அருக்கன்போல எழுந்து தேவேந்திரரது சொர்க்கம் போலிருக்கும் ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திரரது திருவடிபடலாற் புண்ணிய மயமாகிய தமது பிதாவினுடைய அக்கொலுமண்டபத்தை நோக்கிப் பலதாசர்களும் சகோதரர்களும், சூழத்தந்தையின் பாதவந்தனஞ் செய்யும் பொருட்டு வந்தனர். முதலிற்றந்தையையும், பின்பூஜிக்கப் பெறுபவரானும் பூஜிக்கப்பெறும் ஸ்ரீ வசிஷ்டவிசுவாமித்திர மகரிஷிகளையும், பின்மறை யவரையும், பின்பந்துக்களையும், பின்குருமார்களையும் அழகிய இருதயத்தையுடைய ஸ்ரீ இராமர் வணங்கினர். பின்பார்வையினாலும் தக்கவர்களிடத்தில் விநயத்தைக் காட்டும் சிறிது வணங்கிய சிரமசைத்தலினாலும் வாக்கினாலும் அரசக் கூட்டங்களாற் செய்யப்பட்ட நமஸ்கார பரம்பரையை யேற்றுக்கொண்டனர்.

(ச) சகல குரவரினும் பிதாபரம குருவென்பதால் முன்னற் பிதாவையும் அதன் பின்னர், சகல முனிவர்களுள்ளும் பூஜ்யராதலின் வசிட்ட விசுவாமித்திரரையும் அதன் பின் அந்நியமுனிவரையும் அதன்பின் பிதாவுக்கொப்பான பந்துக்களையும், அதன்பின் பிராஹ்மணர்க ளல்லாத கவி வித்யா குருக்களையும் நமஸ்கரித்தன ரென்பது நியாயமேயாம். தலையால், சொல்லால், விழியால், சற்கரித்தான் என்றது, உத்தரோத்தர தாரதம்மியத்திற் கியைய என்றுணர்க. (42)

(ஸ்ரீ-வீர. அ-கை.) மகீபதியானவர் புத்திரரைத் தழுவி யுச்சிமோந்து அன்புகாட்டி மடிமீதிருத்த முயன்றும் இராமற் பூமியிலிருத்தல்:—மடியென.

**மடிமிசைவந் திருத்தியென மன்னுரைப்ப வாராது மடித்ததூசைப்**
**படிமிசையிட் டிருத்தலுமே பார்த்திபன்பார்த் துயருணர்வு படைத்த மைந்தா**
**முடிவறுநன் னலங்களுக்கு முன்னாயல்பாத் திரமானாய் மூர்க்கர் போல**
**நொடியுமினி மனந்தளர்ந்து நோக்கினிய மெய்வாடி நோதல் வேண்டாம்.** (43)

(ப - ரை.) மடிமிசை வந்திருத்தியென = ஹே மைந்த! நீ உற்சங்கத்தில் வந்துட்காருவாயாகவென்று, மன்னுரைப்ப = மகீபதிவிரும்பி யழைத்தபோதினும், வாராது = வந்திராமல், மடித்ததூசை = மடித்த வத்திரத்தை, படிமிசை = பூமியின்கண்ணே,

இட்டு இருத்தலுமே = பரிஜனங்கள் விரிப்ப, இருத்தலும், பார்த்திபன் பார்த்து = தசரதர் நோக்கி, உயருணர்வு படைத்தமைந்தா ! = உயர்ந்த விவேகத்தோடு கூடிய புத்திர ! முடிவறு நன்னலங்களுக்கு = அளவில்லாத நல்ல மங்களங்கட்கு, முன்னியல் பாத்திரமாவாய் = முதன்மையாகப் பொருந்திய பாத்திரமாகா நின்றனே, மூர்க்கர் போல = ஜடர்கள்போல, நொடியும் = ஒரு கணமேனும், இனி = இன்னும், மனந் தளர்ந்து = ஜீர்ணமான மதியினலே, நோக்கினிய மெய்வாடி = யாவரும் பார்ப்பதற்கு இரம்மியமா யிராநின்ற மேனியானது நுடங்க, நோதல் வேண்டாம் = கேதப்பட வேண்டாம். (எ - று.) (43)

(ஸ்ரீ - வீர.) மகீபதியானவர் மடியில் வந்திருத்தி மைந்தவெனக் கூறவும், பூமியில் வேலையாட்களால் விரிக்கப்பட்ட வத்திரத்தி லுட்கார்ந்தனர் ; விவேகியாகிய நீ மங்கலங் களையெல்லாம் மருவவேண்டியவனக இருந்தும் அவிவேகியைப்போலச் சிதிலமாகிய மதியினனே உயிரைத் துயரப்படுத்த வேண்டாம்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டாதி மகாமுனிவர் சந்நிதியில் தொடைமீதிருத்தல் பொருந்தாமையானும் தனிமையான தரைமிசையிருத்தல் யுக்தமின்மையினனும் பரிசனங்கள் விரித்த வஸ்திரமீ திருந்தாரென் றுணர்க. சித்தத்தைத் தைனிய பரவசமாக்க வேண்டாம். (43)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ இராகவருக்குத் தசரதமன்னர் கவலையற் றிருக்கும்படியான விவேகத்தைப் போதிக்கின்றார்:—விருத்தரென.

**விருத்தர் மறையவர் குரவர் விளம்புபதந் தனைமோக மேவாதான**
**கருத்துடைய வுன்போல்வார் கலந்தனரா னீவாளா கவலா நின்றாய்**
**வருத்துறுமா பத்தெல்லாம் வன்மோக மறிலருகும் வாரா தென்று**
**பெருத்தமுடி மன்னவர்கோன் பேசியபின் வசிட்டனிவை பேசலுற்றான்.(44)**

(ப - ரை) விருத்தர் மறையவர் குரவர் = விருத்த விப்பிரகுருமார்கள், விளம்பு பதந்தனை = கூறுநின் றசீரியபதத்தை, மோக மேவாதான = மோகத்தைப் பின்றெடர்ந்து செல்லாதான, கருத்துடைய = மனத்தோடு கூடிய, உன்போல்வார் = நின்னை யொப்பானவர், கலந்தனர் = அந்தப் புண்ணியபதத்தை யடைந்தனர், ஆல் அசை, நீ வாளா கவலாநின்றாய் = நீ வீணகவே கவலைப்படுகின்றாய், வருத்துறுமாபத்தெல்லாம்= துன்பப்படுத்தா நின்ற ஆபத்துக ளெல்லாம், வன்மோகமறில் = வலியமயக்கமானது அற்று விட்டால், அருகும்வாராது = வெகுதூரத்திலே எளிதாக ஓடிவிடும் பின்னர் கிட்டவும் நாடா, என்று = என விவ்வண்ணம், பெருத்தமுடி மன்னவர்கோன் = பெரிய நவரத்ன கசித கிரீடந்தரித்த இராஜாதிராஜன், பேசியபின் = உரைத்தபின்னர், வசிட்டன் = ஸ்ரீ வசிஷ்டபகவான், இவை = மேற்கூறப்படு மிவற்றைப், பேசலுற்றான் = ஸ்ரீ இராகவரை நோக்கிக் கூறத்தொடங்கினர். (எ - று.) (44)

(ஸ்ரீ - வீர.) மோகத்தை யடையாதவர்களாகிய நின்னைப் போன்றவர்கள் பிதாமுதலிய பெரியோர் மறையோர் ஆசிரியர் அருளிய பிரஜைகளைக் காக்குந் தருமசாதனமாதலிற் புண்ணியமாகிய இராஜஸ்தான சுவர்க்காதி பதத்தையடைந்து வாழுகின்றார்களல்லவா. மோகத்திற்குவிரிய இடங்கொடாயே லாயின் ஆபத்துக்களானவை தூரத்திலேயே மிகக் கோமளங்களாக விருக்கும், சம்பந்தியாதனவோ தூரத்திலேயே நிற்கும் தொடரா, சம்பந்தித்தனவோ முற்றினும் மிருதுவாகி விருக்கும் தமது காரியத்தைக் காட்டமாட்டா. மோகம் விரிவிலேயே மொழிந்தவைமாறுகி வந்துவிடும் என்றரசர் கூறினர்.

(ச.) அருகும் வாராதென்றமையால் மோக நிவிருத்தியின்றி மற்றொன்றினு லும் ஆபத் தகலாதென்ப தாயிற்று. (44)

(ஸ்ரீ-வீர. அ-கை.) ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராகவரது வைராக்கியத்தை மெச்சி மோகக்கடலின் மூழ்குதல் எற்றினுக்கு யாமிருப்பவெனல்:—வெலற்கரியவென.

**வெலற்கரிய நீமுயற்சி விடயமெனும் பகையெளிதின் வென்ற சூரா**
**கலக்குறுபே தையர்க்குரித்தா மடஞ்செறிமோகக் கடலிற் கவிழே லென்று**
**னலக்குறுகோ சிகன்புகல்வா னன் மனையை யெலிநலியும் நலிவுபோல**
**வலக்கணுறு காரணமென் காதலித்த தேததனை யடைதி யன்றே. (45)**

(ப - ரை) வெலற்கரிய = துருச்சேதமாய், நீமுயற்சி = துராரம்பமாயிருக்கும் விடயமெனும் பகை = விடயங்களாகிய இப்பகைகளை, எளிதில் = அதிசுலபமாக, வென்ற = வெற்றிகொண்ட, சூரா = ஹே மகா பாகுவையுடைய மகாசூரனே ! கலக்குறு = மிகவும் கலக்கத்தை யடையாநின்ற, பேதையர்க்கு = அஞ்ஞானிகட்கு, உரித்தாம் = யோக்கியமாய, மடஞ்செறி = அறியாமை நிறைந்த, மோகக்கடலில் = வியோமோக சாகரத்தில், கவிழேல் = வீழ்ந்து மூழ்கவேண்டாம், என்றுன் = என இவ்வண்ணம் ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராமமூர்த்தியைப் பார்த்துக் கூறினர், நலக்குறு கோசிகன் புகல்வான் = சகல நலங்களையும் பெருந்தவத்தானே யடைவுற்ற ஸ்ரீ விசுவாமித்திரமகரிஷி கூறுவதாவது, நன்மனையை = நல்ல அழகிய வீட்டை, எலி நலியு நலிவுபோல = ஆகுவானது கெடுத்துத் துன்புறுத்து வதேபோல, அலக்கண்உறு = நீ துன்புறுவதற் குரிய காரணமென்னே, காதலித்ததேது = நீ யெதனை வாஞ்சிக்கின்றனையோ, அதனை யடைதியன்றே = அத்தகைய பதார்த்தத்தை யடையப்பெற்று வாழ்வாயாக.(எ-று.) (45)

(ஸ்ரீ - வீர.) துக்கமுற்றும் கெடுக்க முடியாதவை யாவையோ அவை துர் உச்சேதங் களாம், துஷ்டித் தொடக்கங்களோடுகூடிய வியாபாரங்களையுடையவை யாவையோ அவை துராரம்பங்களாம்; அல்லது துராரம்பங்கள் என்பவை துர் உபக்கிரமங்களாம் அதாவது துர்ச்சாத்தியங்களாம். பேதையர்களாகிய அப்பிரஹ்மவித்துக்கள் போலத் துயருறேல். வியாமோகசாகரத்திற் பேரலைகள் பிரசண்ட ஆபத்துக்களாம், அக்கடலில் சாட்டிய சாலித்தகைமையோ சிரத்தகைமை யுடைமையாம். சங்க்ஷேபமாகப் பூர்வம் பிரதி பாதித்த வைராக்கியத்தை விஸ்தாரமாகப் பிரதிபாதிக்கும் உத்தரகிரந்த சந்தர்ப்பம் கிளம்புவதற்கு ஹேது பூதமாக ஸ்ரீ விசுவாமித்திரர் வினக்களை யுதிப்பிக்கின்றார்:—அலக் கணுறு என. மூஷிகங்கள் கிருகத்தைக் கிலப்படுத்துவதேபோல மனப்பீடையிலக்கண் ஆதிகள் நினது மனத்தை விசேஷமாகத் துன்புறுத்துகின்றன. அவை எவ்விடயங்களில் நிரந்தரம் நிற்கின்றன எவ்வடிவமுடையன, எக்காரணத்தாலுண்டாயின, எவ்வளவுள்ளன, என்பதாம். வினவிய வினக்கட்கு விடை யளிப்பது பிரயோஜன மற்றதாமாலோ வென்க் கடாவக் கெடுக்கின்றார்:—காதலித்ததென. ஹே அநக! எதனையடைந்த மாத்திரை யானே விதலித்ததுகிடைத்த அதனால் எல்லா ஆதிகளுமே நின்னைப்பேதிக்கமாட்டாவோ அத்தகையவாய அபிப்பிரேத பதார்த்தத்தைக் கூறுதி, காதலித்தவை வெகுவாயினும் அவ்வியர்வுமே நீ யடைந்து கொண்டதாகவே யெண்ணலாம். பெரும் புயங்கள் வாய்ந்த அரசகுமர! உன்னால் கெடுக்க முடியாதனவும், துக்கத்தைத் தொடங்குவனவும், ஆக இவ் விடய சத்துருக்களிருந்தபோதினும் வெற்றிகொள்ளப்பட்டனவாதலின் நீ சூரனே யாவாய், என்னை, பிரசித்தமாய சத்துருக்கள் கெடுக்க முடியாதவர்களே யாயினும் அவர் கள் தன்னால் துக்கத்தோடும் சம்பாதிக்கப்பட்டவர்களல்லர் விடயப்பகைகளோ, தன்

ளாலேயே சம்பாதிக்கப்பட்டவைகள், வேறு துக்க பரம்பரையை யுண்டாக்குபவைகள், கெடுக்கமுடியாதவைகளன்றோ; இங்ஙனமிருந்தும் நீ விக்ஷேபங்களாகிய பேரலைகணிறைந்ததும் ஆவரணத்தான் மூடப்பெற்றதும் அஞ்ஞானிகட்கு யோக்கியமும் ஆகிய அருமோகப் பெருங்கடலில் ஆன்மாவை யறியாதவர்கள்போல என் மிக மூழ்குகின்றனை, என ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறினர். துக்கமடைந்ததாலாக்கப்பட்ட அசையாநின்ற கருங்குவளைக் கூட்டத்தோடொத்த விழிகளின் சாஞ்சல்யத்தை விடுத்து எவ்வேதுவினலே நீ மோகித்து மயங்கி யிருக்கின்றாயோ அதனைக் கூறுதி! நினது மயக்கினுக்குக் காரணமியாது, வீட்டை மூஷிகங்கள் குடைவதேபோல எம்மனோ வியாதிகள் நின் மனத்தைத் துன்புறுத்துகின்றனவோ அவை எதன்கண் முடிவுபெறுபவை, விரும்பிய எதனை யடைந்தாலவைதீரும், எவற்றைப் பற்றியவை, எவ்வடிவமுடையன எக்காரணத்தால் வந்தன, எத்தனை வகையின, மனோவியாதியின் காரண முதலியவை உலகிற் பிரசித்தங்களே யாமாதலின் அவற்றையேன் கேட்கவேண்டும்? எனின், பிரசித்தமென்பதுண்மையாயினும் தகாதனவாகிய மனோவியாதிகட்கு நீ யுத்தமபதமாகமாட்டாய் ஆபத்துடையவனேனும் தரித்திரனேனும் மிடமாவன், என்றெண்ணுகின்றோம், தந்தையின் மகிமையினலே உனக்கு யாதொரு ஆபத்துங் கிடையாதாதலின் நீ யகற்றவேண்டிய ஆபத்தேயில்லை. மேலும் சர்வ சௌபாக்கியமு முனக்கு நிறையக்கிடைத்திருத்தலின் சுயமாகவே ஆபத்துக்கள் நீங்கி யிருக்கின்றன. மனோ வியாதிகளும் நீங்கியேயுள்ளன. ஹே பாவமற்ற குழந்தாய் நீ விரும்பியது யாதோ அதனை மறையாமல் அறைவாயாக! பாவமுனக்கில்லாமை யானுமே விரும்பிய யாவற்றையுமே யடைவாய்.

(௪.) இச் செய்யுளின் நான்காமடி, அலக்கண் மனக்காரணமென் னுருவிருப்பென்னவதற்கென்னறைதியன்றே. மனதை வருந்தச் செய்யுஞ் சிந்தைக்கு விடயமெது, சொரூபமெது, பரிமாணமெது, காரணமெது என்று வினவினரென்பார், காரணமென்னென்றார். (45)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஸ்ரீ இராகவர் முனிநாயகர் கூறியதைக் கேட்டானந்தமுற்று அவர் ஆக்ஞையின்படியே தமது குறையைத் தெரிவிக்கத் தொடங்கல்:—மீட்டணுவென.

**மீட்டணுகா தகத்துயர்போம் விளம் பென்ன முகிற்குரலால் வெம்மை தீர்ந்து**
**வாட்டமறு மயிலென்ன மகிழ்ந்திடர்போ யருண்மூர்த்தி மடவ னேனைச்**
**சேட்டமுறு மாதவநீ செப்பெனமுன் செப்புதலாற் செப்பு கின்றேன்**
**கேட்டருடி மேலவர்சொன் மறுக்குநரியா ரெனவினிது கிளத்தலுற்றான். (46)**

(ப - ரை.) மீட்டணுகாது=நீ விரும்பியதை யடைந்துவிட்டால் மீண்டும் ஒரு துயரமும் வந்துறாது, அகத்துயர்போம்=சிந்தாகுலங்களி யாவுமே தீர்ந்துபோம், விளம்பென்ன = விரைவில் நீ விழைந்ததை விளம்புதியென ஸ்ரீ விசுவாமித்திரமுனி நாயகர் கூறிய வளவில், முகிற்குரலால் = மேககர்ச்சனையினலே, வெம்மை தீர்ந்து = வெப்பந் தொலைந்து, வாட்டமறு = துக்கமற்ற, மயிலென்ன = மயிலைப்போன்று, மகிழ்ந்து = இஷ்டார்த்தசித்தியாமென அனுமித்து மகிழ்ந்து, இடர்போய் = முன்னிருந்த துயரங்கணீங்கி, அருண்மூர்த்தி = அமூர்த்தமாக இருந்தபோதினும் கிருபையினலே திவ்ய மங்களத் திருமேனியைத் தரித்த ஸ்ரீ இராகவர், சேட்டமுறுமாதவநீ = ஸ்ரீ முதலிய ஆறு ஐசுவரியங்களையு மடைந்த ஹே பகவன் ! மாகூதிமைதங்கிய பெருந்தவத்தையுடைய ஹே தயாநிதே! தேவரீர், செப்பெனமுன் செப்புதலால் = நின்குறையை நீ வாஞ்சித்ததைக் கூறவேண்டுமென்று முன்னர் ஆக்ஞை செய்ததால், செப்புகின்றேன் = உண்மையில்

மௌனமாகவே யிருக்கவேண்டு மென்றெண்ணமிருத்தலால் ஒருவாறு விண்ணப்பிக்கின்றேன், கேட்டருடி = தேவரீர் திருச்செவி சாத்தி யருளல்வேண்டும், மேலவர் சொன் மறுக்குனர்யார் = சற் புருடர்களுடைய கட்டளையைத் தடுப்பவர்கள் எவ்வறிவாளிகள், என = என்றுரைத்து, இனிது கிளத்தலுற்றான் = பரிபூர்ணமாக அர்த்தம் அடங்கிய மாதுர்யமான மொழிகளாற் கூறத்தொடங்கினர். (எ-று.) (46)

(ஸ்ரீ - வீர.) இராகவர் = இரகுவம்சகேதுவாவர், தேர்க்குக் கேதுவானது அலங்காரமாக இருத்தலேபோல இரகுவம்சத்திற்கு அலங்கார பூதமானவரென்க, ஸ்ரீவிசுவாமித்திரமகரிஷியருளிய வாக்கியமானது உசிதமான அர்த்தங்களின் விஸ்தாரத்தைக் கர்ப்பத்திலுடைத்தாகியிருந்தது. மயூரமானது எங்ஙனம்தான் விரும்பிய பிரயோஜனத்தை யனுமித்துத் துயரத்தைத் துடைக்குமோ அங்ஙனமே ஸ்ரீ இராகவரு மென்றறிக. நீ விரும்பிய வண்ண மடைந்திடின் மீண்டுமுன்னை மனோவியாதிகள் பிளக்கமாட்டா இரகுவம்சகேதுவாகிய ஸ்ரீஇராமர் இவ்வாறு மகாமதியையுடைய ஸ்ரீ விசுவாமித்திரர் கூறிய, தாம் விரும்பியவைபோன்ற பொருள்களின் பிரகாசத்தைத் தாற்பரியத்தில் வைத்திருக்கும் வாக்கியத்தை இருசெவிகுளிரக்கேட்டு விரும்பியபொருள் கைகூடிவிட்டதாகக்கருதி மேககர்ச்சனையைக்கேட்ட மயூரம்போல அத்துயரத்தை யடியோடு விட்டனர். முன்னர் சங்க்ஷேபமாகப் பிரதிபாதித்த வைராக்கியத்தை விஸ்தாரமாகப் பிரதிபாதிக்கும் பொருட்டு உத்தரகிரந்த சந்தர்ப்பமெனத் தாற்பரியங் கூறினேம், ஆண்டுச் சென்றசெய்யுளில் அலக்கண் மனக்காரணமென் னென்பனவாய வினுக்களை விட்டுவிட்டு அவற்றின் நிர்ணயார்த்த வசனத்தை ஸ்ரீஇராகவர் கூறுகின்றார்:—சேட்டமென. அர்த்தமடங்குதல் = அருத்தங் கம்பீரமாயிருத்தல்; முனிநாதராலிவ்வாறு கூறக்கேட்ட ஸ்ரீ இராகவர் நன்கு சமாதானத்தையடைந்து பரிபூரண அர்த்த கவுரவத்தானே மந்த நடையை யடைந்து அதனானே யழகுபெற்ற வாக்கியத்தைக் கூறத் தொடங்கினர்:— சேட்டமென. ஹே பகவன்! தங்களால் கேட்கப்பட்டது முழுவதையும் முள்ளபடி யிப்போது தங்களுடைய ஆணையைக் காக்கும் பொருட்டு அஞ்ஞனுயினும் யான் கூறுகின்றேன்; என்றுட்டியத்தைக் காண்பிக்கும் பொருட்டல்ல. பெரியோர் வாக்கியத்தை யாவரே கடப்பர்.

(ச.) துயரென்பது ஆதிகள் அவை சிந்தைகளென்றுணர்க. (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேற்கூறியவண்ணம் விநயமாகக்கூறி முனிவரை வயஞ்செய்து தமது விருத்தாந்தத்தை யனுவாதஞ்செய்யும் வாயிலாகத் தருமானுஷ்டானத்தாலுண்டாய மனத்தூய்மையானே யுளதாய விவேக வைராக்கியங்களால் தமக்கு விசாரமுதித்ததைக் காட்டுகின்றார் ஸ்ரீஇராகவர்:— தந்தையென.

தந்தையிவ் னிற்பிறந்து வளர்ந்துபல கலைதரித்துச் சதாசா ரத்தால்
வந்துயர்நன் னதியாடி வாரிதிசூழ் புவியுழன்று வருதலோடு
மிந்தநெடுஞ் சகமோகத் திச்சையெலாந் தீர்ந்ததிதி லின்ப மில்லை
யந்தமுறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட் டிறப்பதற்கே யதித்த மியாவும். (47)

(ப - ரை.) தந்தையிவண் இல் = எதிரில் வீற்றிருக்கும் பிதாவினுடைய இந்தச் சொந்த மந்திரத்தில், பிறந்து = யான் உற்பவித்து, வளர்ந்து = கிரமமாக விருத்தியாகி, பலகலைதரித்து = பற்பல சாஸ்திரங்களைப் பயின்று, சதா சாரத்தால் வந்து = நல்லொழுக்க தற்பரனய் நடந்து, உயர் நன்னதியாடி = மிகமகிமை பொருந்திய நல்ல தெய்வ தீர்த்தங்களில் மூழ்கி, வாரிதி சூழ்புவி யுழன்று வருதலோடும் = சமுத்திரஞ் சூழ்ந்த பூமியைப் பிரதக்ஷிணஞ்செய்து இவ்வரண்மனைக்கு வந்து

சேர்ந்ததும், இந்த நெடும் = பிரதீதியாகாநின்ற விஸ்தாரமான, சகமோகத்திச்சை = விடயங்களில் மோகப்படுவதற்குக் காரணமான ஆசை, எலாந்தீர்ந்தது = யாவும் ஒழிந்தது, இதிலின்பமில்லை = இச்சம்சாரத்தின்கண்ணே கிஞ்சித்துஞ் சுகங்கிடையாது, அந்தமுறல் = மரணமாதல், பிறப்பதற்கே = மீண்டுஞ் சனிப்பதற்கேயாம், பிறப்பது= சனிப்பது, மீட்டிறப்பதற்கே = மீண்டும் மரணமாதற்கேயாம், அநித்தமியாவும் = சர்வமும் அஸ்திரமேயாம். (எ-று.) (47)

(ஸ்ரீ - வீர.) சமுத்திரஞ்சூழ்ந்த = கடலாகிய மேகலை யென்னும் காஞ்சி சுற்றிய வென்பதாம். இச்சம்சார சமஸ்திதியின் கண்ணே என்னதான் சுகமுளது கூறுவீராக; அசுகமுண்டாதலையே அறிவிக்கின்றார், பிறப்பது என. பிறப்பது இறப்பதின்பொருட்டென்றதால், சனனம் மரணத்தை விட்டிராதென்று கூறியவாறாயிற்று. சனனத்தின் பொருட்டு மரணமடைதல் என்றதனால் மரணமானது அஞ்ஞானுக்கவசியஞ் சன்மகாரணமென்றதாயிற்று. இந்நான் இந்தத்தந்தையி னரண்மனையிற் பிறந்து முறையாக விருத்தியடைந்து வித்தையையு மடைந்திருந்தேன். பின்னர்.ஹே முனிநாயகரே! நல்லொழுக்கமுடையவனாகி ஆர்கலியை மேகலையாயுடுத்த பூமியைத் தீர்த்தயாத்திரையின் பொருட்டுச் சுற்றிவந்தேன். இவ்வாறிருக்குங் காலத்தில் இச்சமுசாரவாசை அடியோடழிந்து என் மனதில் இனிக்கூறும் வகையாய விசாரமுண்டாயது. விவேகம் நிறைந்தயான் இன்று சுயமாகவே போகங்களிலிச்சையின்றிய புந்தியானே இதனை விசாரித்தேன்:— அந்தோ! இவ்விஸ்தாரமாகிய சம்சாரத்தில் யாது சுகமிருக்கின்றது ஒன்றையுங்காணேமே! பிராணிகள் இன்பின்மைக் கேதுவாகப் பிறக்கின்றன இறப்பதற்கு: இறப்பதுவோ பிறப்பதற்கேயாம். மரிப்பதற்கு விரையாயாம் பிறந்திடுதல், பிறத்தற்கு விரையாயாம் மரித்திடுதல், என்னும் வசனமுமுளதன்றோ!

(ச.) தீர்ந்தது, அஃதியாதினாலெனின், என் மனதிலித்தன்மையான விசாரமுதித்தமையான். (47)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் அவ்வாறாகுக, ஆயினும் இடையில் வைபவபூமிகளில் சுகமனுபவிக்கப்படுகின்றதே யெனின் கூறுகின்றார்:—பாவமென.

**பாவமதா யாபத்துப் பயிலிடமாய்த் தம்மிற்றும் பற்றின் றாயுந்**
**தாவுமனக் கற்பனையாற் சம்பந்த மாயிருப்புச் சலாகை போலா**
**மேவுபெருஞ் செல்வத்துக் கிடமாகு மெய்பொருளும் விடயத்தாலும்**
**பூவலயத்தாலுமெது பயன்யாமார் வருவதெது பொய்பொய் பொய்யாம் (48)**

(ப - ரை.) பாவமதாய் = பாவ ஹேதுக்களாய், ஆபத்துப் பயிலிடமாய் = சர்வ ஆபத்துக்கட்கும் ஸ்தானமாய், தம்மிற்றும் பற்றின்றாயும் = பரஸ்பரம் அசங்கிகளாயும், தாவுமனக் கற்பனையால் = வாசனைவயத்தால் சுயம் எழுந்தெழுந்து பாயும் சித்தத்தின் சிந்தனையால், சம்பந்தமாய் = ஒன்றோடொன்று சேர்ந்தனவாய், இருப்புச் சலாகை போல் = அயச்சலாகைக்குச் சதிருசமாக, மேவு பெருஞ்செல்வத்துக் கிடமாகு மெய்பொருளும் = கர்மஜமாய்வரும் மகா விபவபூமிகளா யிராநின்ற சராசரவஸ்துக்கள் யாவும், ஆம் = பொருந்தும், விடயத்தாலும் பூவலயத்தாலு மெதுபயன் = இப்போகங்களாலென்னே இவ்விராஜ்ஜியத்தா லென்னே, பிரயோஜனம், யாமார் = யான் என்பதென், வருவதெது = இவ்வருகையாது, பொய் பொய் பொய்யாம் = அத்தியந்தம் மித்தையாம். (எ - று.) (48)

(ஸ்ரீ - வீர.) ஆபத்துக்கட்குப் பதிகள் எனினும் ஆம். சராசரங்களாற்செய்யப்பட்ட யாவும். வஸ்துக்கள் = பாவங்கள், விபவபூமிகள் = ஐஸ்வரிய காரணங்கள்—இவை

களே சர்வ ஆபத்துக்கட்கும் இடமாய்ச் சர்வபாவங்கட்குங் காரணமாய் நிற்குமென் றுணர்க. கனுச் சம்சாரங்கடுப்ப மனோநிர்மிதமே சம்சாரமென்பார் இருப்பு என்றார். பரஸ்பரம் அசங்கிகள் இயற்கையாகவே அந்நியோன்னியம் சம்பந்தமற்றவைகள். சுய மாகவே சம்பந்தமற்றத் தன்மையில் திருஷ்டாந்தம் சலாகையாம். இருப்புச் சலாகை என்பது இரும்பாலாக்கப்பட்ட சங்குதுல்லியங்கள் என்றுணர்க. இரும்புச்சலாகை அரக்கு காஷ்டம்போலப் பரஸ்பரம் சம்பந்திக்க மாட்டாதாம். பாவங்கள் என்னும் புத் திரபாரியாதி லக்ஷண பதார்த்தங்கள் கேவலம் தன் மனக்கற்பனையால் என்மைந்தனி வன் என்மனைவியிவள் என்பதியிது என்பதாதி வடிவமாய்ச் சம்பந்திக்கின்றன. சரீரம் இந்திரியம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம், அஞ்ஞானம், சித்பிரதிபிம்பம், பிம்பம், கேவலம் என்பவற்றின் மத்தியில் யான் யார்? வாராநின்ற அபிவியக்தமாயது இவ்வுல கம்; அசத்தியமா அல்லது சத்தியமா என்று நன்கு விசாரிக்குங்கால் இவ்வுலகமானது பொய்யேயா யிருக்கின்றது. பொய்யா யிருக்கப்பட்ட இது ஒரு காலத்திலும் மெய்யாக மாட்டாது. சரங்கட்குப் பிரவிருத்தி நிவிருத்தி அதீனமான சாதனத்தானே சாதிக்கப் பட்டவை யெனவும் அசரங்கட்கோ தெய்வத்தாற் கிடைத்த சாதனாதீனமானவை என வும் இருவகையன்றோ போகப்பிரவிருத்தி! அவ்வடிவ சேஷ்டையோடு கூடிய வைபவ சமயத்தில் மாத்திரம் இருப்பனவாய மாலை சந்தன அன்னபானாதி விடயங்கள் யாவுமே இன்ப மீவனவாகாவாம்; திரமற்றவையாகலின்; இலாபமற்ற போதும் கைவிட்டபோ தும் துக்கத்தைக் கொடுப்பனவாம். நினைக்கும் அனுபவிக்குங் காலத்தில் அவற்றாற் சுகந்தானே யெனின் ராகாதி தோஷத்தைப் பயத்தலானே பரம ஆபத்தை அடைவித்த லின் ஆபத்துக்குச் சுவாமிகளாகி மேன்மை மிக்கனவாம். இவைகள் சாஸ்திர நிஷித் தங்க ளல்லாதவைகள். இனி நிடேதிக்கப் படுவனவோ பாவத்தைப் பயத்தலின் பாவங் களாம். ஆகவே விடங்கலந்த அன்னம்போ லாதலின் அதன் யோகத்திற் சுகமிருன் மென்பதாகச் சம்சாரத்திலும் சுகமின்றாமெனத் துணிவேன். அவைசுகங் கொடுப்பன வல்லனவாயின் சுகம் செய்விப்பனவாய் ஒன்றற்கொன்று யாங்ஙனம் பற்றி நிற்கின்றன வெனின் எல்லாவிடயங்களும் தாம் இருப்புச் சலாகைகளாகிய ஊசிகள் முதலியவை போல ஒன்றற்கொன்று சம்பந்த மற்றனவேயாம். ஆனால் இம்முறையாக எனக்கிது போகசாதனம் இதனால் இவ்வகை இதனைச் செய்வேன் என்பதாதியாய்த் தன் மனக் கற்பனையானே கேவலம் கிரியை காரகாதித் தன்மையானே இவை சம்பந்திக்கின்றன; இவ்வாறே அந்வயமும் வியதிரேகமும் காணப்படுதலின். யான் யார்: இத்திருசியக்கூட் டத்திற்கு வடிவம்யாதாம்: யாதின்பொருட்டு வந்தது, எனக்கு இவ்விராஜ்யத்தா லென் னே, போகங்களாற்றானென்னே, அவற்றுள் யாது மித்தையேயாமோ அதுவே மித்தை யாகுக; மாறாகவாகா தொழிக.

(ச.) சராசர வடிவமாக விருக்கும் சகத்தின் சனனாதி சேஷ்டைகளோடு கூடின வாம். பாவங்கள் = துக்கஹேதுக்களாம். சம்பந்தமா யென்றமையால் மமதாகற்பித சம்பந்தமன்றி வாஸ்தவமன்றா மென்பதாயிற்று. பெருஞ்செல்வத்துக் கென்றது-பரமே ஸ்வர ஐஸ்வரியத்துக் கென்றுணர்க. எப்பொருளும் பரமேஸ்வ ரைஸ்வரிய மிருத்தற் கிடமாதலின் இராச்சியத்துள்ள போகமுதலிய சகல பதார்த்தங்களு மநித்தியமென்ப தாயிற்று. விடயத்தாலு மென்றது, போகப்பிரயோசன விசாரம். பூவலயத்தாலு மென் றது - இராச்சிய விசாரம். யாமார் என்பது ஆத்மவிசாரம். வருவதெது என்பது - சரீர விசாரம். இங்ஙனம் விசாரிக்கின் ஆத்மாவுக் கன்னியமான திருசியமனைத்தும் சுத்த மித் தையேயா மென்பதாம். (48)

(ஸ்ரீ-வீர. அ-கை.) யாவும் பொய்யேயாதலின் எப்பொருளிலும் ஆசையானது இன்றென்கின்றார். யாதியார் என.

**யாதியார் பெற்றதென விவ்வண்ண நினைவேற்கு வழிச்செல்வோர்க்கு**
**மோதுகா னலிலம்பு முறைமைபோற் பொருண்முழுதின் மூளா வாசை,**
**பேதியா வித்துயர்போ நெறிநாடிற் பெருந்தருதான் பெற்ற தீயால்**
**வேதல்போல் வேகின்றேன் விடரடைகல் லாந்திறவா வெய்ய மோகம். (49)**

(ப - ரை.) யாதியார் பெற்றது = எப்பொருளை யாவர்தாம் பெற்றார்கள், எனவிவ்வண்ணம் = என்றிந்தப் பிரகாரம், நினைவேற்கு = விசாரிக்கப்பட்ட எனக்கு, வழிச்செல்வோர்க்கு = பதிகர்கட்கு, மோதுகானலி லன்பு முறைமைபோல் = பொருதா நின்ற கானலின்கண் ஆசையுண்டாகாத தன்மைபோல, பொருண்முழுதில் = சர்வபாவங்களிலும், மூளாவாசை=இரதியுண்டாக மாட்டாது, பேதியா = எவ்வுபாயத்தானும் பிளக்க முடியாததுபோ லிருக்கும், இத்துயர் = இப்படுதுயரம், போம் நெறிநாடில் = சாந்தியாகும் மார்க்கத்தை ஆராய்ந்து பார்த்தறியாமல், பெருந்தருதான் = விருத்த விருக்ஷமானது தானே, பெற்றதீயால் = கோடரத்துற்ற கொடூரவன்னியால், வேதல் போல் = தக்தமாதலொப்ப, வேகின்றேன் = வெதுப்பப் பெறுகின்றேன், திறவாவெய்யமோகம் = பேதிக்க முடியாதபடி இடைவெளி யற்றிருக்கும் கொடியசம்சார மோகத் துயர், விடரடைகல்லாம் = இடைவெளியில்லாத கல்லேபோல அதிகடினமாய். (எ-று.)

(ஸ்ரீ - வீர.) யாது யார் பெற்றது—பொய்யாகிய அதனால் யாருக்குத்தான் என்னதான் வந்தது. பொய்ப்பொருளானே அபகாரமாதல் உபகாரமாதல் எவருக்கும் உண்டாவதில்லை. மரீசிகையின் உதகத்தால் பூமிக்குப் பூஷணமேனும் அபூஷணமேனு முண்டாவதின்றாம். அதிஷ்டானபூத ஆத்மாவிற்குக் கற்பிதப் பிரபஞ்சத்தால் ஒரு சிறிதும் உண்டாவதில்லை யென்பது கருத்தாம். இவ்வண்ணம் சம்சாரத்தின் உண்மைவடிவை விசாரஞ் செய்வதாற் சித்தித்த பலம் யாது கொலாமாலோ வெனின் கூறுகின்றார்: இவ்வண்ணமென. எண்ணி யெண்ணிப் பார்ப்பதால் இரமித்தல் ஒய்ந்தது. பதிகன் = வழிப்போக்கன். கானலில் = மருப்பூமியில் எர்விஷ்டை யென்பதாதி வினவிடை தரும் பொருட்டிங்ஙனம் உபோத் காதஞ்செய்து இப்பொழுததன் விடைகளைக் கூறுகின்றார், போம் என இச்சம்சாரதுக்கம் எவ்வுபாயத்தானே நீங்கியொழியும் என்னுஞ் சிந்தையால் தாபமுற்றுத் துக்கிதனா யிருக்கின்றேன். ஜீரணவிருக்ஷம் விருத்த விருக்ஷமெனப்பட்டது. எக்காரணத்தால் ஆதிகள் துன்புறுத்துகின்றன. என்னும் வினவிற்கும் சம்சார சாந்தியுபாயத்தை நன்கறியாத காரணத்தானே எனவிடை, பொருளால் ஈண்டேயியம்பப் பெற்றதென இனிதுணரற் பாற்றாம். அதுமித்தையாயின் யாவர்க்கு என்னவந்தது, யாதொருகோதும் வாராதாம். இவையாவும் பொய்யா? அல்லது சிறிது மெய்யுமாமோ? அவற்றினுள்ளும் திருஷ்டியுண்மையா? அல்லது திருசியமுண்மையா? ஹே பிரஹ்ம சொரூபரே! மேற்கூறிய வகையானே ஆராயுமெனக்கதனால் எல்லாவிடயங் களிலுமே வழிப்போக்கனுக்கு நீரின்றிய பூமியிற் பிரீதியில்லாததே போலப் பிரீதியில்லை. இவ்வாறெனக் காராய்ச்சி யுண்டா யிருத்தலினாலும் ஆராயுங்கால் அசாரத்தன்மை யிருத்தலினாலும் தங்களை வினவவேண்டிய அங்கிசம் மிகவுமுள தென்பதாம். எவ்வேதுவினாலே மோகிக்கின்று யெனின்? பெருந்தருவானது தனது பொந்திலிருக்கும் உக்கிரமான அக்கினியினாலே வேதலேபோல இத்துயரமானது எங்ஙனம் நீங்குமென்னுஞ் சிந்தையானே வேகின்றேன். சமுசாரதுக்கத்தால் கற்போல இடைவெளியில்லாமல் நெருக்கி நிரம்பப்பெற்ற இருதயத்தை யுடையவனா யிருக்கின்றேன்.

(ச.) அங்ஙனமாராயின் யாருக்குத்தான் என்னவந்தது? ஒருவருக்கும் பந்தமுமின்று மோக்ஷமு மின்று என்பார் யாது யார் பெற்றது என்றும் ஆராய்ச்சி யுண்டாயின் மருமீசிகையில் ஜலப்பிராந்தி சாந்தியாயின் வழிப்போக்கருக்கு அவாவொழித லுண்டாதலே போலச் சர்வபாவங்களிலும் அவாவொழிதலா மென்பார் கானலிலம்பு முறைமைபோ லென்றுங் கூறினர். விடரடைகல்லாம் என்றது நீரந்தரமான கல்லைப்போலென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) எவ்விதத்தாலேனும் இத்துயரை நீக்கிக்கொள்ள லாமேயெனின் ? கூறுகின்றார். இனமென.

**இனமிகழு மென்றஞ்சி யித்துயருக் கழுதாற்றே னீன்ற மாதர்**
**தனமுதலா மாபத்தோர்க் கெனச்சிந்தா வினஞ்சுழலுந் தானமாகுங்**
**கனமிலதாமுதார மதாமென்னினுமின் பம்பயவாக் கயவரென்ன**
**வனகரெனத்தரமறியா தரசரைப்போ லடைந்தார்பா லணுகுஞ் செல்வம்.(50)**

(ப - ரை.) இனமிகழு மென்றஞ்சி = பந்துக்கள் நிந்திப்பர்க ளென்று பயந்து, இத்துயருக்கு = இச்சம்சார துன்பத்தைக் குறித்து, அழுதாற்றேன் = கண்ணிற்றண்ணீர் விட்டு ரோதனம் புரிந்தித்துயரைத்தீர்க்கேன், ஈன்றமாதர் = பிரசவித்த மங்கையரை இல்லங்களி னுடைத்தாய், முதலா மாபத்தோர்க்கு = உக்கிரமான ஆபத்துகள் நிறைந்த கிருகஸ்தர்களுக்கு, என = சிந்தாகுலங்கள் வந்துறுவதேபோல, தனம் = திரவியமானது, சிந்தாவினஞ் சுழலுந் தானமாகும் = சிந்தாகுலங்களின் கூட்டம் வாட்டச்சுழற்றும் இடமாம், செல்வம்=ஸ்ரீயானது, கனமிலதாம் = கனமற்றதாம், உதாரமதாம் = உதாரமுற்றதாம், என்னினும் = என்றாலும், இன்பம்பயவா = ஆனந்தத்தைக் கொடுக்கமாட்டாது, கயவர் என்ன=அகுணவான்க ளென்றேனும், அனகரென்ன=குணவான்களென்றேனும், தரமறியாது=எற்றத்தாழ்வின் விசாரமிலாது, அரசரைப்போல்= இராஜப்பிரகிருதிபோலும், அடைந்தார் பால்=சமீபித்தவரிடத்து, அணுகும் = சேராநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) சர்வபோக்கியங்க ளோடுகூடி விளங்காநின்ற நீ தரித்திரனைப்போல துக்கத்தையே வர்ணிப்பது எவ்வாறு ஒவ்வுமெனச் சங்கிப்ப, யாவும் அனர்த்தத்தைச் செய்யும் துஷ்டங்களே, எனக்காண்பித்து ஆதியில் அநேக அனர்த்த ஹேதுவான தனத்தை நிந்திக்கின்றார்: ஈன்றமாதர் என, சிந்தைகளின் சமூகங்களே சக்கரங்களென்னும் ஆயுதவிசேடங்களாய்ச் சுழற்றுமிடமாம். தனங்களால் உண்டாக்கப் பட்டவைகளேயாய சிந்தைக்கூட்டங்கள் நேமிபோலப் புருஷனைப் பிளந்தெறியும். நன்றாகவிசேஷமாய்ப் பிரசவித்திரா நின்ற தாரங்கள் இல்லங்களி விருப்ப மிகவும் விருத்தியான உக்கிர ஆபத்துக்களாற் பீடிக்கப்பட்ட குடும்பிகட்குச் சக்கரதுல்லிய சிந்தைச் சமுதாயங்களை உண்டாக்கும் அநேகங் குழந்தைகள் சூழ்ந்த மனைவிகளும் மனைகளும் சுகத்தின் பொருட்டாகாவாம் ; மற்றோ துக்கத்தின் பொருட்டேயாம்: அதுபோலத் தனங்களும் ஆம். தன நிந்தையின் பின்னர் தனஹேதுவான ஸ்ரீயை நிந்திக்கின்றார் கனமென இச்சம்சாரத்தின் கண்ணே அச்செல்வம் உதாரமென்னும் மகத்தாயிருப்பதாம்; எங்கும் திரமற்றதாம், அச்செல்வமும் சுகத்தைக் கொடுப்ப தாகாதாம். நிச்சயமாய் மாறாகப் பரிமோகத்தின் பொருட்டு ஆம். குணமுடையவர்களையே ஆசிரயிக்கின்றது இலக்குமி என்பதாக நியமமின்மையின் அதற்கு ஆசிரயத்தன்மையில் துஷ்டத்தன்மையுள தென்பார் கயவர் என்றார். மூடமையாக்குவதாம் துன்பத்தை யீவதாம், பெறுதற்கரியதாம் இவனிடத்திற் குணமிருக்கின்றது, இவனிடத்திற் றோஷமிருக்கின்

றது, என்னும் ஆராய்ச்சியில்லாமலே பக்கத்துறுபவனைப் பற்றாநிற்குமென்பது உலக வதந்தியாம். எங்ஙனமெனின் அரசரியற்கையைப் போலுமென்க. அரசரியற்கையைப் போலுமென்க. அரசரியற்கை துர்ச்சனமேனும் சற்சனமேனும் பக்கத்திலிருந்தால் பகுப்பின்றியே பற்றுதலாம். துராரூடமுமாம், அல்லது அரசரியற்கை ஆமாத்தியாதியரைப் பற்றுமென்க. எனது பந்துக்களும் என் பொருட்டாக அழுவார்களே யென்னும் பயத்தானே கண்ணீர்பெருக அழவில்லை. தரித்திரம், சத்துரு, நோய், முதலிய தீவிரமான ஆயிரம் ஆபத்துக்களாற் பீடிக்கப்பட்டவர்கட்குப் பிரசவித்த அநேக மனைவியரோடுகூடிய கிருகங்கள்போலத் தனிகரைச் சிந்தைகளாகிய முனைகளால் எள்ளௌளாகத் துண்டித்துக் குவிக்கும்பொருட்டு முயன்ற சக்கரங்களாகிய தனங்கள் அடியேனுக்கானந்தத்தின் பொருட்டாகவில்லை. இவ்வாறு விடயங்கள் அசாரங்கள் அநர்த்தங்கள் விடய சம்பாதன காரணமாகிய தனமும் அவ்வாறாகும், இச்சம்சாரத்தில் நீங்காதவளாகி மிகமிகச் சுகவேதுவாகலின் மேலானவள் என இவ்விலக்குமி மூடர்களாலினிது கற்பிக்கப்படுகின்றாள். • உண்மையாயோ, அவளும் கொலைபந்தம் நரகமுதலிய நிந்தைக்கிடமானவற்றையே கொடுத்தலானே அணுவள வின்பமுங் கொடாமையானே, பெருமோகப் பொருட்டே யாவள் பெருமோகப் பொருட்டடைவுறினும் அடையாமற் சென்றிடினும், இகழுந்தனத்தைக் கொடுத்து விவேகத்தைக் கொடாமையினானும் நிந்தைக்கிடமே யாவள், இலக்குமி = செல்வம். அநேக மூர்க்க அரசர் தருமமும் குணமுமுடையவரோடு நேயஞ்செய்வதில்லை; மற்றோ, எவன்முற்பட்டானோ அவனோடு நேயஞ்செய்தலே போலத் துயருற்றுச் சம்பாதித்தபோதினும் தருமமுடையவரே யனுபவிக்கின்றாரென்பதாக இல்லாமல் குண அகுண ஆராய்ச்சியின்றியே முற்பட்ட எவனையேனும் பற்றுவள்.

(ச) சமுசார (சமுசாரிகளின்) துக்கத்தைச் சிந்தித்துக் கண்ணீர்விட் டுரோதனஞ் செய்யவேண்டுமாயின் என்னிவன் அமங்களாசாரனாய் நிர்மித்தம் உரோதனஞ் செய்கின்றான் என்னுஞ் சனாபவாதபயத்தினாலேயே உரோதனஞ் செய்திலனென்பார்: இனமென்றார். தனம், ஆயுள், அகங்காரம், மனம், ஆசை, சரீரம், பாலியம், யவ்வனம், மாதர், சரை, காலம், ஆகிய இவற்றைச் சிந்திக்கத்தொடங்கி, அவற்றுள் தனமூலத்தினாற் சமுசாரசம்பந்தமான சர்வப்பிரயோஜனமுஞ் சித்தித்தலின் முக்கியந்தனமென்று முதலிற்றன விசாரமாம்; தனமிருக்கின் வெகுகால போகப்பொருட்டுச் சிரஞ்சீவித்தகைமையபேக்ஷிக்கப்படுதலின் தனத்தின்பின் னாயுள்விசாரமாம்; ஆயுளுந்தனமுமுற்றவழி நான் கர்த்தா நான் போக்தாவென்று வெகுவித கர்த்திருத்துவ போக்திருத்துவாதி யபிமானப் பிரவிருத்தி வருதலின் அதன்பின் அகங்கார விசாரமாம்; அகங்காரமுமிருக்கின் அதன் வசத்தால் நானாவிதமான சங்கற்ப விகற்பவடிவமாக மனமுதித்தலின் அதன்பின் மன விசாரமாம், அம்மனத்தின்பின் நிரந்தரம் போகேச்சை ரூபமான ஆசை விசாரமாம், அதன்பின் பேரழகுடைய விசித்திரமாய்ப் போகத்தானமான சரீரவிசாரமாம், அதன்பின் அதன் அவஸ்தா விசேடரூபமான பாலிய விசாரம், யவ்வனவிசாரம்; அதன்பின் யவ்வனத்தின் மாத்திரம் முக்கிய போகத்திற்குரிய சர்வவிடய சமஷ்டிரூபமான மாதர் விசாரம்; அதன்பின் போகத்திற்குரித்தன்றாயினும் போகேச்சை மிகுந்த சரைவிசாரம், அதன்பின்சர்வ சிருஷ்டிதிதி சங்கார நிமித்தமானகால விசாரம், இதுவே கிரம அபிப்பிராயமென உணரத்தக்கது. ஆர்ஜன ரக்ஷணதரிசனாதி விஷய சிந்தா சமூகங்களை சிந்தாவின மென்றதாம். (பஎ.) உக்கிரமான ஆபத்தையுடைய குடும்பிகளுக்கு ஈன்ற மாதர்போல தனம் துக்க நிமித்தமேயன்றிச் சுகநிமித்தமாகாமல் சிந்தா சமூகஞ் சுற்று

தற்கு நிர்ப்பய நிவாசஸ்தானமா மென்பார், ஈன்றதானமாகு மென்றார். (இ—உ—ம்) " இன்ன றரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே—பின்னதனைப் பேணுதலுந் துன்பமே, யன்ன—தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா—லிழத்தலுந் துன்பமேயாம். " தனம் குணகுண விசாரமற்றதும் அவிவேக முடையதும் தானகப் பொருந்தாததும் ஆகுமென் பது தாற்பரியமாம். (50)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இலக்குமியால் தோஷங்கூறி அபிவிருத்தியின் கண்ணும் எல்லா மூடர்கட்கும் பிரியந்தந்து சந்ததம் போகானர்த்தங்களை ஈந்து வெகுவித தோஷங்களோடு கூடியிருக்கு மெனக் கூறுகின்றார்:—கருமவென.

**கருமவகையால் விரிந்த கட்செவிப்பால் விடமாகுங் கணக்கே போலாந்**
**திருவெனுஞ் சூறைக்காற்றாற் பனிபோலச் சிதறாரார் சேரார்சேர்ந்தோர்**
**மிருவகைக்குங் குளிர்ந்தினியர் நன்றியறிவோ ரறிஞரினி யோர்சூரர்**
**பொருவிலெ வருந்திருவாற் புழுதிசெறி சுடர்மணிபோற் புன்மைசேர்வர்**(51)

(ப - ரை.) கருமவகையால் = நானாவிதமான தொழில்களினாலே, இது விரிந்தது = விஸ்தாரத்தை யடைகின்றது, கட்செவிப்பால் = பாம்பின் பானமானபால், விடமாகுங் கணக்கேபோல = கேவலம் விடமேயாகிவிடுந் தகைமையேபோல, ஆம் திரு எனும் = ஆகாநின்ற இலக்குமி யென்னும், சூறைக்காற்றால் = பிரசண்டமாருதத்தால், பனிபோல = ஹிமம்போன்று, சிதறார் ஆர் = அடித்துக்கொண்டு போகப்படாதவர் யாவர், சேரார் சேர்ந்தோர் = அயலவர் தம்மவர்என்னும், இருவகைக்கும் = இருதிறத் தவரிடத்தும், குளிர்ந்தினியர் = தண்மையோடும் நன்மொழி புகன்று நன்கேசெய்பவர், நன்றியறிவோர் = கிருதஞ்ஞர், அறிஞர் = பிராஞ்ஞர், இனியோர் = மிருதுவாய்க் காரிய முடிக்கும்படவர், சூரர் = வீரர், பொருவிலெவரும் = இத்தகைய சமானமற்ற யாவராயினும், திருவால் = செல்வத்தால், புழுதிசெறி = பாம்சு முட்டிக்குட்பட்ட, சுடர் மணிபோற் = பிரகாசம் பொருந்திய மணிபோல, புன்மைசேர்வர் = தாழ்மை யையே சார்வர். (எ - று.) (51)

(ஸ்ரீ - வீர.) அவ்வச் சாதுவான கருமத்தாலேனும் அசாதுவான கருமத்தாலேனும் அபிவிருத்தியை யடையாநிற்கும், அபிவிருத்தி யடைந்தபோதினும் அனர்த்தத்தின் பொருட்டேயாம் என்பார், கட்செவியென்றார். இலக்குமிரூபக்ஷீரம் தோடங்களாந் தர்ப் பாதி விடப்பாம்புகளின் விடவேகத்தினுடைய விசர்ப்பணம்போல ஆசிரிக்கின்றது என்பதாம். எங்ஙனம் பால் உரகத்தின் விடவேகத்தை வளர்ப்பதாமோ அங்ஙனம் தோஷ சர்ப்பங்களின் பிரபாவரூப விடவேகத்தை வளர்ப்பதாய இலக்குமி ரூபப்பாலு மாம்.. பால் விசர்ப்பணம் செய்கின்றது என்றதை வெளிப்படை யாக்குகின்றார்:—திரு வெனு.

குளிர்ந்து = சுகஞ்செய்யுந் தன்மையோடும், இனியர் = விநயமதுர வாக்கியத்தன்மை முதலிய குணசம்பந்த முடையவர். பிரசண்ட மாருதம் = சக்கரவாதம், சிதறல் = சக் கரவாத சலிதஹிமமான்து துயர்தரும் பரிசமுடைத் தாதலேபோல இலக்குமியால் விடமஞ்செய்யப்பட்ட சித்தம் துக்கசம்பந்த முடைமையாம். பிராஞ்ஞர் = பண்டிதர். கிருதஞ்ஞர் = செய்தவுபகாரத்தை மறவாதவர், படவர் = சமர்த்தர், மணி = ரத்னம் முதலியவை. எக்கருமத்தின் பலம், தன இராஜ்ஜிய இலாபாதியின் உலோபத்தானுண் டாம் இம்சை பொய்முதலிய தோஷசர்ப்பவிஷ வேகத்தின் பொருட்டாமோ; போர், சூது, வாணிச்சியம் முதலிய அவ்வக்கருமத்தானே இவ்விலக்குமி விஸ்தாரத்தை யடை

வளேயன்றி யாகதானுதியானே யடையாள்; மாறாக, அவை அழிவின் காரணங்களே யாம். வாயுக்கூட்டத்தாற் பனியேபோல எதுவரை யிலக்குமியானே பெருங்கஷ்டப் படுத்தப் படவில்லையோ அதுவரை யுயிர்கள் தம்மவரிடத்தும் பிறரவரிடத்தும் தயை, தாக்ஷிண்யம், நேயம் முதலியவற்றோடு கூடியிருப்பர். மேலும் செய்ந்நன்றியறிவோர், விவேகியர், சூரர், குசலர், இனியவர், முதலியயாவரும், இலக்குமியினாலே, பெரும்புழுதி யாற் பதிந்த அருமணிபோல மலினத்தை யடைவர்.

(ச.) கருமவகையால் = விதிவிலக்கென்னும் இருவகைக் கன்மங்களால் விரியும், இவ்விரிவு எத்தன்மையதெனின்? கட்செவிப்பால் விடமாகுங் கணக்கேபோலாம், விடவேகமுடைய சர்ப்பத்திற்கு க்ஷீரமும் விடமே யாவதுபோல இராகாதிதோஷ முடைய செல்வவானுன அந்தனுக்கு க்ஷீரம்போன்றிதமான ஆப்தவாக்கியமும் உருசி யாகாதென்பதாம். காமாதி பாப்புரைப்பாற் காதனீங்கும் என்னும் பாடத்திற்கும் இதுவே பொருள். (51)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீமான்களுள்ளும் அநேகர் தருமமுடையவராயும் கீர்த்தி யுடையவராயும் காணப்படுகின்றாரெனின்? உரைக்கின்றார்:—தீதடையாவென.

**தீதடையாச் செல்வர்மொழி திறம்பாத சூரர்நடுத் தெரிந்து நோக்கு**
**நாதரிவர் மிகவரியர் நாகஞ்சூழ் குழிவல்லி நனைபோற் செல்வம்**
**சாதனத்துக் கரிதுளத்தை யிழுத்திமைப்பி லிறுந்தலைகீழ்த் தளிரினான்ற**
**வோதுதுளி யொத்தவுயிர் மத்தரென வகாலத்தி லுடல்விட்டோடும். (52)**

(ப-ரை.) தீதடையாச் செல்வர்=ஜனங்களால் இகழப்பெறாத தனவந்தரும், மொழி திறம்பாதசூரர்=அதிகரித்த மொழி மொழியாத சூரரும், நடுத்தெரிந்து நோக்கும் நாதர் சமதிருஷ்டியையுடைய பிரபுவும், இவர்மிக அரியர் = இயம்பிய இத்தகையோர் அத்தி யந்தந் துர்லபராவர், நாகஞ்சூழ் குழிவல்லி நனைபோல் = பாம்புகள் மண்டலமிட்டிருக் குங் படுபள்ளத்திலுள்ள தேன்கொண்ட பூமொட்டுகளோடு கூடிய கொடிபோல், செல் வம் = இலக்ஷ்மி ஆம், சாதனத்துக் கரிது = கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கத்தக்கது, உளத்தை இழுத்து = சித்தவிருத்தியைக் கவர்ந்து, இமைப்பில் இறும் = க்ஷணபங்குர மாம், உயிர் = ஆயுளானது, தலைகீழ்த்தளிரில்= தலைகீழா யிருக்கும் இலையில், நான்ற= தொங்கிக்கொண்டிருக்கும், ஓதுதுளி = இதோ விழப்போகின்ற தென்று சொல்லப் பட்ட ஜலபிந்துவோடு, ஒத்த = ஒப்பிடத்தக்கதாம், மத்தரென = உன் மத்தரைப் போல, அகாலத்தில் = சமயமல்லாத போது, உடல் விட்டோடும் =சரீரத்தைப்பரித்தி யாகஞ்செய்து போய்விடும், இமைப்பில் இறும் = கணபங்குரமாம்.

(ஸ்ரீ - வீர.) மொழிதிறம்பாமை = சூரன் நான், எனக்குச் சமானமாக யார் இருக் கின்றார் என்பதாக மிகவும் ஜல்பம் செய்தலின்மையாம். ஜனங்களால் நிந்திக்கப்பெறாத ஸ்ரீமானாகிய புருஷன் துர்லபன் என்பதற்கு ஆத்ம ஸ்துதிரகித சூராதி திருஷ்டாந்த மாகக் கூறப்பட்டதென் றுணர்ந்து கொள்க. குழி = வல்மீகாதிரந்திரம்; அதனினின் றெழுந்த புட்பம் நிறைந்த கொடிபோல இலக்குமியானவள் தொடக்கத்தில் மாத்திரம் சௌந்தரியத்தால் மனோரமையாய்ச் சித்த விருத்தியைக் கவர்ந்து தன் அபிமுகமாகு மாறு செய்வள். கஷ்டப்பட்டுச் சம்பாதித்தலாவது = நீசசேவை முதலியவற்றால் உண் டாகும் கஷ்டமுற்றுச் சாதிக்கத்தக்கவளா மென்க. நாகஞ்சூழ் குழிக்கொடியானது, சர்ப்பபந்திகள் புரளும் தேகத்தோடு கூடியிருப்பதே போலச் சடர்களின் பந்தியால் காத்திரங்களிற் புரளும்படியான தேகத்தை யுடையவளாவள். இலக்குமியை இகழ்ந்த

தின் பின்னர் இலக்குமியின் போக நிமித்தமான ஆயுளை நிந்திக்கின்றார்: தலைகீழ் என. இலையின் ஈற்றுக்கூற்றின் நுனியில் தொங்கும் உதகலேசம்போல பங்கசீலம் வாய்ந்த ஆயுளானது அசமயத்தில் சரீரத்தை விட்டோடிவிடும். இதன்கண்ணே திருஷ்டாந்தம் இயம்புகின்றார்: மத்தரென. அநுன்மத்தன் உன்மத்தனை விடுதல் போலவாம், அல்லது உன்மத்தனைப்போல விருக்கும் சரீரத்தை யென்றேனுங் கொள்க. இமைப்பில் இறும் என்றது மறுமுறையும் வருவித்தது தேகளீதீப நியாயத்தாலாம். உலகராலிகழப்படாத ஸ்ரீமானும் மொழிதவறாத சூரனும் சமதிருஷ்டியையுடைய பிரபுவும் ஆகிய மூவரும் கிடைக்கக் கூடாதவரே யாவர். மனதுக் கினிமையானவளும், மனோவிருத்தியைக் கவர் பவளும் அநேகதி மரண முதலியவற்றை உண்டாக்குங் காரியங்களானே தேடத்தக்க வளும், ஒரு கணத்திலழிபவளும், பாம்பின் மாலைகளை யாகத்தி லலங்கரித்துக் கொண் டிருக்கும் பாழுங்கிணற்றிலும் படுகுழியிலும் எழுந்தமலர்க்கொடி போன்றவளுமாவளிந்த இலக்குமிதேவி. இலக்குமியைப் போலவே ஆயுளும் சுகத்தின் பொருட்டாகாதாம், ஆயுளானது மூங்கிலிலை நுனிமேற் றூங்கும் பனிநீர்போலக் கண்த்தில் நீங்குவதாகும். உன்மத்தனைப் போன்ற ஆயுள் உன்மத்தமாய உடலினின்றும் அகாலத்தி லோடிவிடும்:

(ச.) தீது = சனநிந்தை, சனங்களா னிந்திக்கப்படுவார்கள் என்பதாம். கட்டப் பட்டுச் செலவைச் சுருக்கிச் சேர்க்கத்தக்கது, லோபிகளான பாபிகளால் அசாத்தியமா மென்பார் சாதனத்திற்கு அரிது என்றார். உளத்தையிழுத்து = மனத்திருத்தியாகிச் சித்த விருத்தியைக் கிருகித்து, இமைப்பிலிறும் = கணபங்குரமாம். சர்ப்பசரீரவேஷ்டிதமான சொரூப முடையதாம், புராண கூபாதியினின்றும் உற்பன்னமான புஷ்பலதையாம். தலைகீழென்பது ஆயுள் தாட்டணமாம். பயித்தியம் பிடித்தவன் அநவசரத்தில் விட்டுவிட்டுச் செல்வதேபோல ஆயுளும்போம் என்பதாம். (52)

(ஸ்ரீ-வீர - அ - கை.) சிலபால் தீர்க்கமான ஆயுளும் காணப்படுகின்றதே யெனின், உண்மையே, அதுவும் ஆத்மஞான உபயோகமற்றதா யிருப்பின் வியாதி ரோகம், ஜரை, முதலியவற்றோடுகூடி காமாதிகளாற் கலக்கமுற்று, அனர்த்தத்தின் பொருட்டேயாம் என்கின்றார்:—வளர்என.

**வளர்புலமா மராத்தீண்ட மனமயர்வோர் மெய்யுணர்வு வாய்த்திலாதோர்**
**தளர்வுறுகா ரணம்வாணாட் டனிமோக மெனுமுகிலிற் சார்மின்போலு**
**மளவுபடு முடன்மெய்யென் றழுந்திநா மிதின்மகிழ்வே மாகாயத்தைப்**
**பிளவிடவா யுவைப்பிடிக்கத் திரைகோக்க வெளிதிதனைப் பேணவொண்ணா ()**

(ப - ரை.) வளர் = மேலும் மேலும் விருத்தியாகும், புலமாம் அரா = விஷயமாகிய பாம்பு, தீண்ட = தொட்டு விஷசம்பந்தமாக, மனமயர்வோர் = ஜர்ஜர சித்தமான வருக்கும், மெய்யுணர்வு வாய்த்திலாதோர் = திடமான ஆத்மவிவேக மில்லாதவருக்கும், வாணாள் = ஆயுளானது, தளர்வுறு காரணம் = ஆயாச காரணமாம், தனிமோக மெனும் = தாழ்வில் ஒப்பற்ற சம்சாரமென்னும், முகிலில் = அப்பிரமண்டலத்தில், சார்மின்போலும் = பொருந்திய மின்னற் புஞ்சம்போலும், இதில் = இவ்வாயுளின் கண்ணே, அளவுபடும் உடல் = பரிமித ஆகாரத்தின் கண், மெய்யென்றழுந்தி நாம் = சத்தியமென்று நத்திய யாம், மகிழ்வேம் = சந்தோஷியேம், ஆகாயத்தை = அவயவங் காணப்பெறாத அவகாசந்தரும் வத்துவை, பிளவிட = கண்டனஞ்செய்ய, வாயுவை = வேககதியோடு கூடிய தத்துவத்தை, பிடிக்க = வேஷ்டனஞ்செய்ய, திரைகோக்க = அளவின்றி அடுக்கடுக்காய் வரும் அலைகளைக் கிரந்தனஞ்செய்ய, எளிது = வேண்டுமா

றற் சுலபமாம், இதனைப்பேண ஒண்ணு = இவ்வாயுவின் கண்ணே ஆஸ்தை செய்தல் இயையாததாம்.

(ஸ்ரீ - வீர.) விடயமேயாய விடப்பாம்புகளிடத்தில் ஆசக்தியாலேனும் சம்பந்தத்தாலேனும் அதிசிதில முற்ற சித்த விருத்திகளை உடையவர் என்பார், மனமயர்வோரென்றார். விருத்தியாகாத ஆத்மவிவேகம் உடையவரே வாய்த்திலாதோர். மீண்டும் அயுள் அஸ்திரமென்பார், நாம் என்றார். பரிச்சின்ன ஆகாரம் வாய்ந்த அனுன்மாவின் கண் ஸ்திரபுத்தியை யுடைய யாம் என்பதாம். சமுசார மேகவித்யுச்சலக ஆயுளில் சுகிகளாகேம். கிரந்தனம் = பந்தனம். விடயப்பாம்பு தீண்டலானே எங்குஞ் சுற்றுண்ட சித்தத்தையுடையவரும், அதிதிடமாகிய ஆன்மஞான மில்லாதவரும் ஆகியோர்க்கு ஆயுளானது ஆயாச காரணமாம். பிரஹ்மவித்துக்கட்கு மிவ்வாறேனுகாதெனின்? யாவர் நன்கறிய வேண்டியதை யறிந்துளாரோ, அபரிச்சின்ன வஸ்துவின் கண்ணே இளைப்பாறியுளாரோ இலாப அலாபங்களிற் சித்தசமாதான மடைந்துளாரோ அவர்தம்மாயுள் சுகத்தைக் கொடுப்பதாம். நாங்கள் தேகாதிகளிடத்தில் இவ்வளவுதானுன்ம ரூபமெனத் துணிந்து சம்சாரமேக மின்னற் கூட்டமாகிய ஆயுளிற் சுகிகளாகிலேம். எளிதாக ஆகாயத்தைப் பிளக்கலாம், வாயுவைக் கட்டலாம், அலைகளைக் கோர்க்கலாம், ஆனல் ஆயுளின் கண்ணே நம்பிக்கை வைக்கமுடியாதாம்.

(ச.) மனமயர்தலாவது—விடயசம்பந்த உறுதியாற் பிரஞ்ஞா நாசமாம். (இ-உ-ம்) ஆறுசெல் பொருள்கடுய்க்கு மைம்புலனுக்கும் பின்னே, காருடர் நெஞ்சமந்தப் புலன்றனைக்கலக்கு மாங்கே, யூறிய கடலுளோடு கலத்தினை யுடன்செல்காற்றே, வேறுசெய்தறைந்துமாய்த்து வீழ்த்துமாபோலவேயாம். அதனுற்றனே தேகேந்திரிய அந்தக்கரணதிகட்கு விலக்ஷணமான படுதர ஆத்துமதத்துவ நிச்சயமற்றவ ரென்பார், மெய்யுணர்வு வாய்த்திலாதோர் என்றார். பரிபூரண சொரூபத்தில் ஆன்மாபிமானிகளாய் ஆநந்திப்பேமன்றித் நியமிதமாய்த் தள்ளத்தக்கனவாய் நிகழும் தேகேந்திரியாதிகளில் அன்றென்பார் அளவுபடும் என்றார். (தா—ம்.) மேகம் போன்று நசிக்கும் மோகமென்னுந் தேகத்தில் மின்போன்று க்ஷணத்தில் நசிக்குமாயுளிற் சந்தோஷியேம் என்பதாயிற்று. ஆத்மாவிற்கு இத்தேகத்தில் விபரீதஞானம் விளைதலின் மோகத்தைத் தேகமெனப்பட்டது. ஆத்மா சம்சரிக்குங் காரணம்பற்றி சம்சாரமென்னும் தேகமாம் மேகம் போற் பங்குரத்திலிருக்கும். மின்னற் கூட்டம்போல க்ஷணபங்குரமான ஆயுளில் யாம் இளைப்பாறிலேம். (53)

(ஸ்ரீ - வீர-அ-கை.) மேலும் அற்பவாணாளின் பயனை நாடில் நிற்பது ஆபத்தே என்கின்றார் சரற்பருவமென.

**சரற்பருவ மேகமெனத் தைலந்தீர் விளக்கென்னத் தரங்கமென்னத்**
**திரப்படநீங் குவதாகிச் சிறிதுமிளைப் பாறுத சிந்தைத்தாகிப்**
**பரப்புடைய சேட்டையதாய்ச் சூனியமாம் வாணாளின் பயனைநாடிற்**
**றுரப்பரிய துயராக்கு மொட்டகத்துக் குயிர்தொலைக்குஞ் சூலேபோல. (54)**

(ப - ரை.) சரற்பருவமேகமென=சரற்காலத்து மேகம்போலும், தைலந்தீர் விளக்கென்ன = சிநேகமற்ற தீபம்போலவும், தரங்கமென்ன = அலைபோலவும், திரப்பட நீங்குவதாகி = அத்தியந்தம் ஆலோலமாகிச் சென்றதாகவே கருதப்படும், சிறிது மிளைப்பாறுத சிந்தைத்தாகி=விசேஷ மூடத்தனத்தோடும் விசிராந்தி பெறுதமனத்தோடு கூடியதாய், பரப்புடைய சேட்டையதாய் = விஸ்தார விவகாரத்தோடு கூடியதாயிராநின்ற,

வாணாளின் = வியர்த்தமாய் விஸ்தாரமாயிருக்கும் ஆயுளின், பயனை நாடில் = பிரயோஜனத்தை ஆலோசித்துப்பார்த்தால், ஒட்டகத்துக்கு = அசுவதரி என்னும் மிருகத்துக்கு, உயிர் தொலைக்கும் = பிராணனை விலக்கும், சூலேபோல = கர்ப்பமொப்ப, துரப்பரிய துயராக்கும் = நீக்கமுடியாத துக்கத்தையே அது உண்டு பண்ணும். (எ-று.)

(ஸ்ரீ - வீர.) சரன்மேகம் அதிதனுவாம். உபாய விசேஷத்தால் நீண்ட ஆயுளையும் சம்பாதித்துக்கொண்டிருக்கும் சிலபுருடர் உலகிற் காணப்படுகிறாரே யெனின் ? உண்மையே அதுவும் அப்பிரஹ்ம வித்தாயிருக்கு மவர்க்கு அனர்த்தத்தின் பொருட்டேயா மென்பார், சிறிதும் இளைப்பாறுத என்றார். விசேஷ மூடத்தனத்தோடு கூடினமையானே பிரஹ்மத்தின்கண்ணே மனம் இளைப்பாறவில்லையாம். அசுவதரியென்பது அசுவத்தாற் பெண் கர்த்தபத்தின்பாலுண்டாவதாம், அதனது கருப்பம் அதனையே யழிக்குமென்பது பிரசித்தம். சரற்காலத்திருக்கும் அற்பமேகம்போலவும், தைலமில்லாத விளக்கே போலவுங் அலையாநின்ற அலைபோலவும் சென்றதாகவே கருதவேண்டும். முற்றினும் ஆசை நீக்கமாகிய இளைப்பாறுதலை யடையாத மகாமூடன், சுகப்பொருட்டல்லாத விஸ்தாரமாய ஆயுளைத்துக்கத்தின்பொருட்டே, ஆண்குதிரைக்கும் பெண்கழுதைக்கும் பிறந்த அசுவதரியானது தனது கருப்பம் தன் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வருவதாயிருந்தபோதினும் கருப்பந்தரிக்க இச்சிப்பதேபோல இச்சிப்பன்.

(ச.) ஆத்மசொரூபத்தில் விசிராந்தியற்ற மனமுடைய தேகவிராமனை மூடன் புருடார்த்த சூனியமேனு மாயுளைத் தீர்க்கமாக இச்சிப்பனென்பார், சிறிதுமென்றார். அதனால்வரும் பிரயோஜனம் யாதெனில், துரப்பரிய துயராக்கும். அதற்குக் காரணம் விசேட மூடத்தன்மையேயாம், அதற்குத் திருஷ்டாந்தம் அசுவதரியாம், அசுவதரியாவது, கழுதைபாற் குதிரையாற்பிறந்த சங்கரஜாதி அவ்வசுவதரி தனக்குக் கர்ப்பம் விநாசகாரணமாக விருப்பினும் அத்தகைய துக்கவேதுவான கர்ப்பத்தை இச்சிப்பதேபோல மூடனுமா மென்பதாயிற்று. (54)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானத்திற்குச் சாதகமாகாத ஆயுளை விசேஷமாய் நிந்தித்து அதற்குச் சாதகமாகும் ஆயுளைக் கொள்ளத்தக்கதாக ஸ்துதிக்கின்றார்:—அடையவென.

(ச - அ - கை.) ஆயின் எத்தகைய ஜீவனம் சிலாக்கியமாம் எனின் கூறுகின்றார்:—அடையவென.

**அடையவேண் டியதடைந்து மேற்றுயர மற்றின்ப மளவி லாதாய்க்**
**கடையதாந் தருவிலங்கு பறவைகள்போல் வீணாள்கள் கழியா தாகித்**
**தடையிலா மனனத்தால் வாழ்வதே யுயர்வாணாள் சநநந்தீர்ந்தோ**
**ருடையபிறப் புயர்ந்ததாங் கிழவேச ரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம். (55)**

(ப - ரை.) அடையவேண்டிய தடைந்து = அடையத்தக்க வஸ்துவை அடைந்து, மேற்றுயரமற்று = மறித்தும் சோகம் வராதபடி, இன்பம் அளவிலாதாய் = பரமாநந்தத்தைப்பெற்று, கடையதாந்தரு=கீழாகிய விருக்ஷம், விலங்கு பறவைகள்போல்=மிருகம் பக்ஷி இவற்றைப்போல, வீணாள்கள் கழியாதாகி=வாளாகாலம் போக்காமல், தடையிலா மனனத்தால் = இடைவிடாது செய்யும் விசாரத்தால், வாழ்வதே = ஜீவிப்பதே, உயர்வாணாள் = உயர்ந்த ஜீவனமாம், சநநந்தீர்ந்தோருடைய = இனிவரும் பிறப்பற்றவருடைய, பிறப்பு = அவதாரம், உயர்ந்ததாம் = சாது ஜீவிதமாம், ஒழிந்தவெல்லாம் = சேஷஜனங்களெல்லாம், கிழவேசரிப் பிறப்பாம்=ஜரட்கர்த்தபத்திற் இணையாய ஜன்மங்களை யுடையவர்களாம். (எ-று.) (55)

(ஸ்ரீ - வீர.) எச்சீவனத்தாலே அடையத்தக்க பிரஹ்மம் அடையப்படுமோ அதுவே உயர்ந்ததாம். அதனுனேயே எச்சீவனத்தால் ஜன்மாந்தரத்தை யடையாமல் மீண்டும் சோகிக்கவேண்டியதின்றுமோ அதுவே உயர்ந்ததாமென்றுணர்க. எச்சீவிதம் பிராரத்த கன்ம க்ஷயபரியந்தம் விஷயசுகவிலக்ஷண பிரஹ்மாநந்தத்தின் ஸ்தானமாமோ அதுதான் நற்சீவிதமெனப்படும். காரியத்தைத் துதித்தபோதே அதன் காரணத்துதி அவசியம் பலிக்குமென ஆயுஷின் காரியபூத பிராணதாரண இரக்ஷணஜீவிதத்தின் ஸ்துதி ஈண்டு செய்யப்பெற்றதா மென்றுணர்க. எப்புருடனுடைய மனம் துர்வாசனு பரவசமாகாமல் வஸ்து தத்துவவிஷயபூத நிரூபணமாகிய மனனத்தினுனே ஜீவிப்பதாமோ, மனனுதி ஜனித சாக்ஷாத்காரத்தானே பாதிதமேயாமோ அதுதான் நல்வாழ்க்கையென நவிலப் பெறும். ஜரடகர்த்தபம் = ஜரையோடுகூடிய கிழக்கழுதையாம். இச்சம்சாரத்தின் கண்ணே வாழும் வாழ்க்கையானது எனக்குப் பிரியமாகத் தோற்றவில்லை. அவசியம் அடையவேண்டியதாகிய பரம புருடார்த்தத்தை அடைந்து எப்போதும் துயரமே சிறிதும் அடையாமல் மேலினும் மேலாய ஜீவன் முத்திச் சுகத்தானத்தையுற்று வாழும் வாழ்க்கைதான் வாழ்க்கை யெனப்படும். மரங்களுந்தான் வாழுகின்றன, பசுபறவைகளுங்கூட வாழுகின்றன ; அதுபோல் மனனத்தின் மனஞ் செலுத்தாமல் வாழும் வாழ்க்கையும் வாழ்க்கையாமோ? மனனத்தின் பயனுகிய தத்துவஞானமேனும் வாசனுக்ஷயமேனும் அடையாமல் வாழும் வாழ்வு துச்சமேயன்ருே? மீண்டு மீண்டும்பிறவாத பெரியவரே புகழும் வாழ்க்கையை உலகிலுடையவராவர். மற்றையர் நெடுநாள் வாழ்பவராயினும் அசுத்தமாகிய தேகாத்மபுத்தி யுடைத்தாயிருத்தலின் கிழக்கழுதை யொப்பக் கீழான இகழும் வாழ்க்கை யுடையவரே யாவர். அந்தமொன்றில்லா ஆநந்தம் பரமானந்தமாம்.

(ச.) அடையவேண்டியது அத்துவிதீயமான ஆத்தும தத்துவமாம். அளவிலா வின்பம்=பரமாநந்தமாம். மனனத்தால்=விசாரத்தினுலேயே; கேட்ட பொருளை நல்ல யுக்திகளோடு அனவரதஞ் சிந்திப்பது மனனமாம். வாழ்வதே=காலத்தைக் கழிப்பதே, உயர்வாணுள் = தத்துவவிசார பரனுக்குப் பிரயோஜன ஜீவனமாம். கிழவேசரி மீட்டும் மீட்டும் பாரமெடுக்குந் துக்க பரம்பரையில் நின்றும் விடுபடாததுபோல மற்றையரெல்லாம் மோக்ஷாபாயத்தைச் சம்பாதியார் என்பார், கிழவேசரி யென்ருர். விருத்தவேசரி கடினமான கவலைகளைச் சகிக்கத்தக்கதாம். (55)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அஞ்ஞஜீவிதத்திற்கு விருக்ஷாதி ஜீவிதம்போலத் துர்ஜீவிதத்தன்மையைத் தரிசிப்பித்து அச்சரீராதிகட்கும் துஷ்டத்தன்மை அர்த்தத்தாற் றரிசிப்பிக்கப்பட்டது. அதனைத் தெளிவிக்கின்ருர் அவிவேகிக்கென

(ச.) அஞ்ஞானிகளை நிந்தித்தல்.

**அவிவேகிக் குப்பாரஞ் சாத்திரமெய் யறிவிலோர்க் கங்கம்பார**
**நவில்சாந்தி யில்லாதோர்க் குளம்பார மவாவினர்க்கு ஞானம் பாரஞ்**
**செவிதான வுருவாணுண் மனம்புந்தி யகங்காரஞ் செயல்க ளெல்லாங்**
**குவிபார மாஞ்சுமடர் சுமைபோலப் புந்திநலங் கூடா தார்க்கே. (56)**

(ப - ரை.) அவிவேகிக்குப் பாரஞ்சாத்திரம் = பகுத்தறிவில்லாதோருக்கு நூல் சுமையாம், மெய்யறிவிலோர்க் கங்கம்பாரம் = அனுத்மவித்துக்கட்கு சுமைவபுவாம், நவில்சாந்தியில்லாதோர்க்குளம்பாரம் = மூர்க்கர்களென்னும் அசாந்தர்கட்கு மனஞ் சுமையாம், அவாவினர்க்கு ஞானம்பாரம் = இராகிகட்கு மெய்யுணர்வு சுமையாம், செவி

தானஉரு = மனங்கவரத்தக்க ரூபம், வாணாள் = ஆயுள், மனம் = உள்ளம், புந்தி = புத்தி, அகங்காரம் = அகங்காரம், செயல்கள் = திரசேஷ்டைகள், எல்லாம் = இயம்பிய இவை யாவும், புந்தி நலங்கூடாதார்க்கு = துர்ப்புத்தியுடையவருக்கு, சுமடர் சுமைபோல = பாரம்வகிப்பவனுக்குப் பாரம்போல, குவிபாரமாம் = பெருந்துயரைத் தரும் மிகுந்த பாரமாம். (எ - று.) (56)

(ஸ்ரீ - வீர.) பாரம் எங்ஙனம் தரிக்கமுடியாததாய்ச் சுவாதீனமாகாதோ அங்ஙனம் அவிவேகியாதிகட்குச் சாஸ்திராதிகள் சுவாதீனமாகாவாம் என்றுணர்க. ஈண்டு அவிவேகி என்றது விவேக சாமர்த்திய மில்லாத மந்தபுத்தியென விளம்ப விழைந்ததாம். அனான்மவித்துக்குச் சரீரம் பாரம் என்பதன் திருஷ்டாந்தமாக மற்றையயாவும் உபந்நியசிக்கப்பட்டன வென்றுணர்க. அற்றேல் ஆத்மவித்துக்கும் தேகம் பாரமே, ஆக ஆண்டு அனாத்மவித்துக்கு உடம்பு சுமையென உரைத்ததென்னே யெனின்? இங்ஙனமன்றும், ஆத்மவித்துக்குச் சரீரமே இன்றாதலின் உண்டெனினும் பிராதிபாசிகமாய அதன் கண்ணே முன்போல் அபினிவேச மின்மையின் அதன் சம்பந்தமாய் வாராநின்ற லாபசேதங்களில் உதாசீனமுண்மையின் என்க. திரசேட்டைகள் என்பதில் சேஷ்டைக்குத் திரத்தன்மை திரகாரிய விஷயத்தன்மையாலாம். நிதசேஷ்டையெனினும் இதே பொருளாம். அவிவேகிகட்குச் சாஸ்திரம், பாரம்போல வீணான சிரமகாரணமாம், ஆசையுடையவருக்கு ஞானம் பாரமாகும், சர்வ சிரமங்களையும் நீக்குவதிற் பிரசித்தமாகிய ஞானமும் பாரமாயின் மற்றவற்றைப் பற்றிப் பேசுவதெங்ஙன். சாந்தியற்றவனுக்கு மனது பாரமாம்; ஆன்மாவை யறியாதவனுக்குத் தேகம் பாரமாம்; சிறந்தரூபம், வாணாள், மனது, மதி, அகங்காரம், தொழில்கள் முதலியயாவுமே கெட்டபுத்தியுடையவருக்கு சுமைசுமப்பவர்க்குச் சுமையேபோலத் துக்கப்பொருட்டேயாகும் என்பதாம்.

(ச.) யாதினால் நூல்பாரமெனின், விவேகலக்ஷண பலசூனியத்தாற் சித்தக்கிலேசமாத்திர வேதுவாதலின் என்க. அவாவினர்க்கு = இராகாதி தோஷங்களாற் றூஷிக்கப்பட்ட சித்தத்தினர்க்கு, ஞானம் = அத்தியாத்மசாஸ்திர போதமும், பாரம், யாதினாலெனில், மனோபசாந்தி இலக்ஷண பலமின்மையாலென்க. நவில் — பாரம், யாதினாலெனில், இராகாதி நிவிருத்தியின்றேல் சிரவணமனனாதி சாதனமானமனமும் நிஷ்பலமாதலின் என்க. இம்மூன்றும் திட்டாந்தங்களாம் இனித் தாட்டாந்தம்; மெய் - பாரம் கூறப்பட்டதால் அஞ்ஞன் நிந்திக்கப்பட்டான், இதனால் அன்னியதா ஞானங்களென்னும் விபரீத ஞானங்கள் நிந்திக்கப்படுகின்றன. சௌந்தரியமானதேகம், சிரசீவனம், சங்கற்ப விகற்பான்மகமான அந்தக்கரணம், நிச்சயான்மகமானபுத்தி, அபிமானரூபமான அகங்காரம் விபரீதபுத்தி யுடையோர்க்கு யாவுந் துக்க நிமித்தமேயா மென்பதாம். (56)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யவ்வன அவத்தைகளின் ரூபாதிகள் சுகத்தின் பொருட்டாமே யெனின் அதற்கஸ்திரத்தன்மை யுண்மையின் இங்ஙனமின்று மென்கின்றார்:— சின்னாளென.

சின்னாண்மெய்ப் பயின்றிளமை தீநட்பை விடுமறிஞர் திறம்போ னீங்கு
மன்னாது சுகமிலமை மரணத்தின் பாத்திரமாம் வாணாள் போல
வின்னாத தில்லைபிடர் மோகத்தால் வாளாவந் தெங்கும் வாளா
துன்னாநின் றதுபொல்லாப் பொய்பகங்கா ரப்பகையாற் றுணுக்கென் கின்றேன்

(ப - ரை.) சின்னாள் = சிலதினங்கண் மாத்திரம், மெய்ப்பயின்று = சரீரத்தின் கண்ணே யிருந்து, இளமை = யவ்வனமானது, தீநட்பை = துர்ஜன சகவாசத்தை,

விடும் அறிஞர் திறம்போல = அறிந்து ஆதரம்செய்யாத சர்ஜனர்களின் தன்மைக்கொப் பாய், நீங்கும் = விட்டுவிடும், சுகநிலைமை மன்னாது = திரமாய் ஆநந்தப் பேற்றையடையாது, மரணத்தின் பாத்திரமாம் = மரணபாஜனமாம், வாணாள்போல = ஆயுளைப் போல, இன்னாததில்லை = குணவர்ஜித வஸ்து ஜகத்தில் இல்லையாம், இடர்மோகத்தால் = துன்புறுத்தும் மயக்கத்தினாலே, வாளாவந்து = வீணாகவே யுண்டாகி, எங்கும் வாளாதுன்னா நின்றது = எவ்விடத்திலும் வீணாகவே பரிவர்த்தனை யாகின்றது, பொல்லாப் பொய்யகங்காரப் பகையால் = மித்தியாமயமாய துர் அகங்காரவைரியால், துணுக்கென்கின்றேன் = மிகப்பீதியை யடைகின்றேன். (எ-று.) (57)

(ஸ்ரீ - வீர.) அறிந்து = துர்ஜனன் என்று தெரிந்து, ஆதரஞ்செய்யாமை, கிரியா விசேஷணமாம்; ஆயுள் நிந்தையை யுபசங்கரிப்பார், மன்னாது என்றார். மன்னாது, சுகநீபிதமாய் சுகசோபிதமாய்ப் பிரசித்தமாய் திரத்தன்மை யுடையதாய், அசத்தில் அசாரம் போலப் பொருந்துமேயல்லாமல், சததம் பொருந்தாதாம். மரணபாஜனமான இவ்வாயுள் குணவர்ஜித மாவதேபோலக் குணவர்ஜிதமாகும் வேறுபொருள் உலகத்தில் இன்றாம். ஆயுளானது அகங்கார வாயிலாய் அனர்த்த ஹேதுவாதலின் அந்நிந்தையின் பின்னர் அதற்கனர்த்தத்தைத்தரும் முக்கியவாயிலாம் அகங்காரத்தை நிந்திப்பார், வாளாவென்றனர். துரகங்காரம் = துஷ்ட அகங்காரம். அதுவே வைரியாம், மோகமாமஞ்ஞானத்தால் விருதாவாகவே எதிர்த்தெழா நின்றது. அகங்காரத்தினது உற்பத்தியின் கண்ணே வியர்த்தத்தன்மையை விளம்பி அபிவிருத்தியின் கண்ணே அதனைக்கூறுவார், எங்கும் வாளா என்றனர். மித்தியாமயம் = பொய்வடிவம். “ அகமெனல் தானே ஆதியத்தியாசம் ” என்றார் ஆசிரியர். புருடார்த்தத்தில் உபயோகிக்கவில்லை எனவுணர்ந்து ஆதரவு செய்யாத யவ்வனத்தால், துஷ்டனென்று தெரியாதவரையுமே சாதுவால் துஷ்டன் ஆதரிக்கபபட்டுத் தெரிந்தபின் கைவிடப் படுவதேபோலச் சில தினங்களிலேயே கைவிடப்படும். ஜீவன் முத்திச் சுகத்தினானும் நிலைபேற்றினானும் எப்போதும் விடுபட்டதும் மிகவும் துச்சமாயதும் குணமற்றதும் மரணத்தைச் சேவிப்பதும் இவ்வாயுள் எவ்வாறுமோ அவ்வாறு இவ்வுலகில் ஒரு பொருளுங் கிடையவே கிடையாது. மேற்கூறியவகையே எல்லா அனர்த்தங்களும் தொடங்குதற்குக் காரணமாகிய தம்பமும் மமதையாகிய கொடிக்குக் காரணமும் ஆகிய அகங்காரமும் சுகவேதுவாகாதாம்; மாறாகச் சர்வ தோஷங்கட்கும் அபிமான மூலமாயிருத்தலின் அனர்த்தமே செய்கின்றது. அதன் விஸ்தாரமெங்ஙன மெனின் அஞ்ஞானமாகிய நிமித்தத்தானே வீணாகவே அகங்காரமானது எழுகின்றது, வீணாகவே நாற்புரமும் வளருகின்றது, அதனாற் புருடார்த்த மின்றாம். அதனது காரணமும் மோகமேயாகும். பொய்மயமாயும் நோய்மயமாயுமிருக்கும் கெட்ட அகங்காரமாகிய சத்துருவினாலே மிகவும் அஞ்சுகின்றேன்.

(ச.) இளமை, சரீரசௌபாக்கிய உபலக்ஷித ஆயுள் என்றுரைகாண்க. இஃதன்றேல் வேறு நிரூபிக்கும் இளமையை ஆயுள் நிரூபணவசரத்தில் நிரூபித்தல் அயுக்தமாம். விடும் = ஆதரமின்மை யறிந்து நீங்கும். ஜகத்தில் அத்தியந்தம் சாரமின்மையதும் குணமின்மையதும் மற்றொன்று மின்றென்பார், இன்னாததில்லையென்றார். சந்ததம் ஸ்திரமாயிருக்குந் தன்மையையும் இன்பமாயிலங்குந் தன்மையையும் தியாகித்து மரணபாஜனமாய் உள்ள ஆயுளானது பரம நிஸ்ஸாரமா மென்றுணர்க. அகங்காரம், அந்நிதா ஞான சொரூபமாதலின் மோகமென்னும் அஞ்ஞானத்தினால் உதயமும் விருத்தியும் பொருந்துமென்பது கருத்து. துணுக்கென்கின்றேன் = பெரும்பயத்தை யடைந்துள்ளேன். (57)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அகங்காரம் துர்வைரி என்பதையே சாதிக்கின்றார்; அல்லது அகங்கார வயத்தினாலேயே கொடியவை யாவையும் எய்தலின் அதன்பலத்தையே ஒருவாறு காண்பித்து விஸ்தரிக்கின்றார்:—மனத்துயர் என.

(ச.) அகங்காரம் வைரி என்றதையே உறுதிப்படுத்தல்.

**மனத்துயரு மாபத்தும் வளர்தொழிலு மகங்கரத்தால் வருமித்தைப்போற்**
**கனத்தபகை யிலதுநெடுங் காலம்வினை யிதுசேர்ந்து கலங்கானின்றே**
**னனத்தொடுதண் ணீர்நுகரே னரும்போகம் விளம்புவதென் னகங்காரஞ்சேர்**
**தினத்தொழில்க ளோமமுண வனைத்தும்பொய் யகங்காரந் தீர்தன்மெய்யே ()**

(ப - ரை.) மனத்துயரும் = துஷ்ட ஆதிகளும், ஆபத்தும் = பெரிய ஆபத்துக்களும், வளர்தொழிலும் = விரிந்த விவகாரங்களும், அகங்கரத்தால் = அகங்கார வசத்தால், வரும் = உண்டாம், இத்தைப்போல் = இவ்வகங்காரத்திற் கிணையாக, கனத்த பகை = பெருஞ்சத்துரு, இலது = அயலொன்றின்றும், நெடுங்காலம் = நீள்போழ்து, வினையிது சேர்ந்து = பரமசிர வைரியான இவ்வகங்காரத்தைப் பற்றி, கலங்கானின்றேன் = அதிவிக்ஷேபத்தை யடைந்துளேன், அனத்தொடு தண்ணீர் நுகரேன் = அடிசிற்புசியேன் சீதநீர்பருகேன் என்றால், அரும்போகம் விளம்புவதென் = பெரும் போகங்களைப் புசிப்பதில் பேசுவதற் கென்னுளது, அகங்காரஞ்சேர் = அகங்காரபரவசப்பட்டு, தினத்தொழில்கள் = அனுதினம் யான் செய்துகொண்டு வந்த, செயல்களாகிய, ஓமம் = பரலோக சம்பந்த காரியங்கள், உணவு = இகலோக சம்பந்த காரியங்கள், அனைத்தும் = சர்வமும், பொய் = அவஸ்துவேயாம், அகங்காரம் தீர்தல் = அகங்காரிக்ததை, மெய் = வஸ்துவாம். (58)

(ஸ்ரீ - வீர.) ஆதிகள் = மனப்பீடைகள். விவகாரங்கள் வாஞ்சையால் ஆவனவாம். பெருஞ்சத்துரு = உத்கிருஷ்ட ரிபு. அகங்காரம் வைரி என்பதை நன்குணர்தலால் வரும்பயனிலதென்பார் நெடுங்கால மென்றார். அற்றேல், சத்துருவை ஆசிரித்தசிலர்க்கும் உலகத்தில் போஜனாதியின் கண் பிரவிருத்தி காணப்படுகின்றது; அதுபோல் நினக்கேன் ஆகாதெனின் இயம்புகின்றார், அகங்காரஞ்சேர் என. அவஸ்துவே = அபரமார்த்தமே. எங்ஙனம் சொப்பனத்தில் புக்தியாதிகள் அகங்கார வசத்தால் இயற்றப்பெற்றனவாய்ப் பொய்யேயாமோ அங்ஙனம் சாக்கிரத்திலும் ஆம். அகங்காரிக்தத்தன்மையாவது, அகங்கார ரகிதத்தன்மையாம். வஸ்து = பரமார்த்தம். அகங்காரவயத்தானே ஆபத்தாகிய சரீரதுக்கமாம். அகங்காரவயத்தானே கொடிய மானச துக்கங்களாம்; அகங்காரவயத்தானே இச்சையும் கெட்டதொழிலுமாம்; அகங்காரமே எனக்கு நோயுமாம்; மேலாயதும் நெடுநாள் வைரியுமாய அவ்வகங்காரத்தைப்பற்றி அன்னமுண்ணேன் தண்ணீருமருந்தேன் எனின் இனி யரும்போகங்களைப்பற்றிப் போகிக்கும் விடயத்தில் அறைய வேண்டியதென்னே! அகங்கார வயத்தினானே என்னால் யாவை புசிக்கப்பட்டனவோ, ஆகுதி செய்யப்பட்டனவோ விவகரிக்கப் பட்டனவோ, அவை யாவுமே துச்சங்களும் அசாரங்களும் ஆகிய பொய்களேயாம்; அகங்கார மில்லாமையே மெய்யாம். நானென்னும் தோற்ற முண்டாயின் ஆபத்தில் துயரடைகின்றேன் இலதாயினோ இன்பமடைகின்றேன். ஆதலின் அகங்காரமின்றி யிருத்தலே மேலானதாம்.

(ச.) அகம்கர்த்தா அகம் போக்தா என்னு மபிமான மூலத்தால் சம்சாரசம்பந்தமான துக்கம் வருதலின் அகங்காரமே முக்கியவயிரி என்பார். கனத்தபகை என்றார். இங்ஙனம் அனர்த்த ஹேதுவாதலால் அகங்காரம் பரமசத்துருவேயென நிச்சயித்தும்

எப்படி அதனையே யனுசரித்துப் பிரவிருத்தி மார்க்கத்தைத் தொடர்வேன் என்னுங் கருத்தால் உரைத்தார் அரும் போகமென. விளம்புமென்றன் என்றமையால் அந்தர்முகர்களான தங்கட்கும் இது சம்மதமல்ல வெனக் குறிப்பித்தாம். அற்றேலாயின் விகிதநித்திய நைமித்திகங்களாய கருமங்களை என்றான் செய்கின்றிலை யெனின், கூறுகின்றார். அகங்காரஞ்சேர் என. முன் அஞ்ஞானதசையில் அகங்காரத்தை ஆசிரயித்துக் கன்மங்களை யனுஷ்டித்தேன். இப்போதோ அகங்காரமும் அதன் மூலமான பிரவிருத்தி மார்க்கமும் மித்தியாமயமாதலின் புருடார்த்த மன்றெனத் நிச்சயித்தும் பின் எப்படி அனுஷ்டிப்பே னென்பது பொருளாம். (58)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகங்கார வசத்தாலென்று கூறியதையே விஸ்தரிக்கின்றார்; அல்லது அகங்காரம் தீரும்வரை எல்லாக் கிளர்ச்சிகளும் மேலும் மேலும் விளைந்து கொண்டே யிருக்கும் என்கின்றார், அகங்காரமென.

(ச.) சாம்ராஜ்ய போகம் சமீபத்திலிருக்க நினக்கெப்படிப் போகேச்சையற்றதெனின் கூறுகின்றார் அகங்காரமென. (58)

**அகங்கார முகில்படர வாசைமலை மல்லிகையவ் வளவிற் றரு**
**மிகுந்துயரிவ் வகங்காரத் தொழில்பிரிந்தும் பேதைமையின் மிகவு நொந்தேன்**
**செகந்தனிலா பத்திடமாய்த் திரந்துறப்ப தாயுள்ளாய்த் தியக்க மாயு**
**முகந்தவிசார முமுணர்வு மிலாவகங்கா ரம்போமா றுபதே சிப்பாய். (59)**

(ப - ரை.) ஹே பிரஹ்ம சிரேஷ்டரே! அகங்கார முகில்படர = எவ்வளவு காலம் அகங்காரமாகிய மேகமானது விஸ்திரிக்கின்றதோ, ஆசை மலை மல்லிகை அவ்வளவிற்றரும் = திருஷ்ணையாகிய குடஜமஞ்சரி அவ்வளவு காலம் விகாசத்தை யடையும், மிகுந்துயர் = பெருந்துன்பத்தைத்தரும், இவ்வகங்காரத் தொழில் பிரிந்தும் = நிரகங்கார விருத்தியைப் பெற்றும், பேதைமையின் = மூர்க்கத்தன்மையினால், மிகவு நொந்தேன் = சோகத்தால் பெருந்துயரமே பெற்றேன், செகந்தனில் = இவ்வுலகத்தின்கண்ணே, ஆபத்திடமாய் = சர்வாபத்துக்கட்கும் நிலயமாய், திரந்துறப்பதாய் = துருவமற்றதாய், உள்ளாய் = அந்தரஸ்தமாய், தியக்கமாயும் = எவ்விடத்தும் துன்ப மயமாயும், உகந்த விசாரமும் உணர்வுமிலா = கொள்ளத்தக்கனவான ஆராய்ச்சி விவேகம் முதலிய உத்தமகுணங்கள் விடுபட்டதாயுள்ள, அகங்காரம் = அகங்கிருதிபதம், போமாறு உபதேசிப்பாய் = நீங்கும்படி திருவருள் புரிவாய். (59)

(ஸ்ரீ - வீர.) குடஜம் = வத்சகமெனப் பெயரிய விருக்ஷவிசேஷமாம், மலைமல்லிகை; ஆசையே மலைமல்லிகைப் பூங்கொத்தாம். மலைமல்லிகை மரத்தின் இயற்கையாவது கார்வருங்கால் மலர்ந்து மஞ்சரியோடு கூடிவிளங்குதலாம். இங்ஙனம் குருவனுசாசன யோக்கியத் தன்மையைத் தமக்குத் தெரிவித்து அவர்தம் அனுசாசனத்தைப் பிரார்த்திப்பார், அகங்காரத் தொழில் என்றார். நிரகங்கார விருத்தியைப் பெற்றும் = அகங்காரமின்றி யிருக்கப் பெற்றும், மூர்க்கத்தன்மையால் = மூடத்தன்மையால். சர்வாபத்தென்றது பூர்வத்தின் பிரபஞ்சமாம். அகங்கிருதிபதம் = அகங்கார வஸ்து அல்லது அகங்காரஸ்தானம் அணுகாதிருக்குமாறு எத்தனத்தாற் பற்றுவண்ணம். நிலயம் = ஆசிரயம். அந்தரஸ்தம் = தேகத்துள்ளிருப்பது. அகங்காரத்தியாகத்தால், அதன் சாக்ஷியாகச் சேடித்த அசிதமம்சமாயிருக்குமாறு நன்குபதேசித்தருளுவீராக. ஈண்டுத் தொனித்த பொருள் கூறப்படும் :—அகங்கிருதிபதம், அகமெனச் சப்தித்தலால் அகங்கிருத் கோவாம் அதன்கண் நிகழும் பதம்; அல்லது அகம்சப்த விஷயாகிருதிப்

பிரயத்தனம் எக்கோவிற்கோ அது அகங்கிருதியாம் அதனது பதம், பாதமாம். ஆகவே சஞ்சலமாய், குக்ஷிப்பிரதேசத்திருப்பதாய், உத்தமமான ரஜ்ஜுவினால் விடுபட்டதாய், எப்புறத்தும் அடிமுதலியவற்றானே அதிசயமாய துக்கத்தைக் கொடுக்கும், கோவின் பதத்தை விவேகி பற்றாததேபோல அவ்வகங்காரபதத்தை யான் பற்றாதிருக்குமாறு உபதேசித்தருளுவீராக. விவேக ஜோதிக்கூட்டத்தை மறைக்கும் அகங்காரமாகிய மேகம் நாற்புறத்தும் சரீரங்களை விரிக்கின்ற காலம்வரையுமே ஆசைமல்லிகைப் பூங்கொத்தானது மலர்ந்துகொண்டிருக்கும். அகங்காரமாகிய மேகம் சாந்தமானபோது ஆசை யென்னும் நவமின்னற்கொடியானது அணையுந் தீபச்சிகை யொடுங்குவதேபோல மிகவிரைவில் எங்கேயோ ஓடிவிடுகின்றது. மூர்க்கத்தன்மையினாலே சோகத்தாற் றுக்கிக்கும் நிரகங்கார விருத்தியோடுகூடிய எனக்கு யாதுபதேசிக்கத் தக்கதாமோ அதனை எண்ணி தேவரீர் உபதேசித்தருள வேண்டுகின்றேன். இவ்வாறு அகங்காரத்தையும் அஃதுண்டாக்கிய அனர்த்தத்தையும் அதைக் கெடுக்கினுண்டாம் பயனையும் இனிது வருணித்துத் தமக்கு அதன்றியாகத்தாலுண்டாம் சிரவண அதிகார அடைவைக்கூறி ஸ்ரீ இராகவர் உபதேசிக்கும் பொருட்டுப் பிரார்த்திப்பார், ஆபத்திடம் என்றார். எல்லா ஆபத்துக்கட்கும் இடமும், நிலையில்லாததும், உள்ளே யிருப்பதும், சாந்தியாதி உத்தம குணங்களானே விடப்பட்டதும், நாற்புறமும் மிகத்துயரை உண்டு செய்வதும், ஆகிய அகங்காரவடிவ அடையாளத்தை விவேகத்திறத்தானே பற்றாமல் ஒழித்துவிடும் வகையையும், மற்றுமின்னும் என்ன சம்பாதிக்கவேண்டுமென்பதையும், ஆன்மதத்துவத்தையும், தேவரீர் உபதேசிக்க வேண்டுமென்பதாம்.

(ச.) அகங்கார—ஆகும், போகேச்சைக்கு அகங்காரம் மூலமாதலின் அகங்காரமுள்ளமட்டும் அஃதுதிக்கு மென்பது கருத்து. அகங்காரம் மின்றிப் போகேச்சையுமின்றேல் துன்புறுங் காரணம் யாதெனப் பேதைமை யென்றார். விசிராந்தி பதத்தை யறியாமையினால் மிகவும் நொந்தேன். அகங்காரம் நிவர்த்தியாகியும், விசிராந்திபதம் பெறாமையின் சோகம் நிவர்த்தித்ததின் றென்பது கருத்தாம். யாதொன்றுணரத்தக்கதாமோ அஃது துபதேசிக்கப் படவேண்டு மெனினும் யாதோதுவதென அறியவேலாமையின் இத்துன்பம் நீங்கத் தேவரீர் இத்தன்மையான அனுக்கிரகம் செய்யவேண்டுமென் றியம்புகின்றார், ஆபத்திடமென. அகங்காரம் போமாறு அகங்காரத்திற்கிடமான தேகாதிகள் துக்கமயமாதலின் அவைகளை எப்படியும் யானென அபிமானியேன்; ஆயினும் அவ்வபிமானரூபமான அகங்காரம் மீட்டணுகாதேகும்படி தேகேந்திரியாதிகளுக்கு விலக்ஷணமாயும், அகங்காரத்திற் கவிஷயமாயும், சுத்தமாயும், இராநின்ற ஆத்மசொரூபத்தோடு யான் ஐக்கியமுற உபதேசிப்பாய் நீர் மகானுபாவராய் நிச்சயித்திருத்தலின் அனுக்கிரகித்தல் வேண்டும். (59)

(ஸ்ரீ - வீர- அ - கை.) அகங்கார நிந்தையின் பின்னர் அகங்காரத்தின் காரியமான மனத்தை நிந்திக்கின்றார்; அல்லது அநேக ஊகங்களாலும் திருஷ்டாந்தங்களாலும் விஸ்தாரமாக மனத்தோடங்களைக் கூறத்தொடங்குகின்றார்:—காமமென.

**காமமுதல் வினைக்குடைந்து கற்றவர்நற் றொழிலகலுங் கடுங்காற் றூற்ற**
**மாமயிலின் பீலிபோன் றதிதூர நகர்நாய்போல் வாளா சுற்று**
**மாமதுகிஞ் சிலுங்கிடையா தருகிதிபெற் றுலுமகிழ்ந்தமைந்துட் கொள்ளாச்**
**சேமமுறு கரண்டகநீர் தரியாபோற் றிரியுமனத் தீய தன்றே. (60)**

(ப - ரை.) காமமுதல்வினைக்குடைந்து = காமம் முதலிய தோஷங்களானே ஜர்ஜரத்தன்மையை யடைந்து, கற்றவர் நற்றொழிலகலும் = சற்காரியத்தையும் ஆரியர்

சேவையையும் விட்டொழிக்கும், கடுங்காற்றுற்ற சண்டமாருதத்துட்பட்ட, மாமயிலின் பீலிபோன்று = அழகிய மயிற்ரேகை மயிர்போலச் சித்தஞ்சஞ்சலிக்கும், அதிதூரம் = தூரத்தினுந் தூரதரதீர்க்கம், நகர்நாய்போல் = நகரின்கண்ணே நாய் திரிதல்போல, வாளாசுற்றும் = இங்குமங்கும் அலுப்புடன் வியர்த்தமாகவே மனம் ஓடித்திரியும், ஆமது = இவ்வாறு சஞ்சலமாம் அம்மனமானது, கிஞ்சிலுங் கிடையாது = ஓரிடத்திலும் ஒன்றையும் பெறாது; அருநிதி பெற்றாலும் = மகாதனத்தைப் பெற்றபோதிலும் மகிழ்ந்து அமைந்து உட்கொள்ளா = உள்ளே சந்தோஷித்து போதுமென்று சம்பூர்ணத்தன்மையை அடையமாட்டாது, சேமமுறு கரண்டகம் = பதார்த்தங்களைப் பாதுகாக்கும் பெட்டியானது, நீர்தரியாபோல் = ஜலத்தைச் சேமித்து வைத்துக்கொள்ளாதது போலவாம்; திரியும் மனம் தீயது = இவ்வாறலையுஞ் சித்தம் குரூரத்தன்மையை அடைந்துளது. அன்று = விவேகமுடையதன்று. (எ-று.) (60)

(ஸ்ரீ - வீர.) சஞ்சல சித்தமானது ராகாதி தோஷங்களாலே ஜர்ஜரமய சிதிலத்தன்மையை யடைந்து ஆரியசேவித காரியமாய மோக்ஷசாதன அனுஷ்டான லக்ஷணத்தினின்றும் சலிக்கும். நற்றொழில் தனிப்பதமாயின் சலன கர்த்துருத் தன்மைமாத்திரத்தில் திருஷ்டாந்தமாம். வாயுவிடை யிலகப்பட்ட மயிற்ரேகை லேசம்போலும் என்பார் மாமயிலென்றார்·பிரயோஜனமுள தாமாயின் சலனமானது தோஷத்தின்பொருட்டு ஆகாதன்றோ வெனின் அறைகின்றார் வாளாவென. தூரதரதீர்க்கம், தரப், விகுதியின் அர்த்தமாய தூராதிசயத்திற்குச் சதயோஜனை முதலியவற்றில் முடிபு நீக்குவான் தீர்க்கமெனப்பட்டது. வாளாசுற்று மென்றது பொருந்தாதாம்; சிலபால் ஏதாவதொன்று கிடைத்தலையும் காண்டலின் எனவினைய விடைதருகின்றார், பெற்றாலும் என. ஈண்டுப் பெட்டியென்றது மூங்கிலா லாக்கப்பட்ட கண்டோலமாம் (பெருங்கூடை) கேவலம் சித்தத்தின் சலனம் வியர்த்தமன்றாம் அனர்த்தத்தையுந்தரும் என்பார் தீயதென்றார். தீயது = குரூரத்தோடும் அவிவேகத் தன்மையைப் பொருந்தியது. அகங்காரத்தைப் போலச் சித்தமனங்களும் சுகஹேதுக்க ளாகாவாம்; மற்றோ, துக்கஹேதுக்களே யாகும்; " மகத்துக்கள் சேவையை முத்திக் கேதுவாய் மலர்வர் " என்னும் வாக்கியத்தானே நல்ல முமுக்ஷுக்களால் இன்றியமையாது செய்யத்தக்கதாய ஆரியசேவையைவிடுத்துக் காமாதிகளானே சிதிலத் தன்மையாகிய புருடார்த்தசாதன ஆற்றலின்மையைச் சித்தமடையும்; வாயுப் பிரவாகத்திடையிலகப்பட்ட மயிற்ரேகை நுனியின் சஞ்சலம்போலச் சஞ்சல சுபாவமுடைய தாதலிற் சலிக்கும் மனதும் பிராணவாயுவின் அதீனமாய்ச் சலனமாகவே யிருக்கும். எவ்வாறெனின் ? பொருத்தமா, பொருத்தமின்றா என விசாரியாமல் மிகுந்த வியாகூலத்துடனே மேலும் மேலும் வீணாகவே, எவ்விடத்தும் தனக்கு நிறையுங்காரணங் கிடையாமையின் தீனமான நகர் நாயானது மிகுதூரத்தினும் தூரமாகச் சுற்றித் திரிதல்போலச் சுற்றித்திரியும். எவ்விடத்தும் ஒரு சிறிதும் அடைவதேயில்லை. பெருந்தனங்களை அடைந்தபோதினும் மூங்கிற்பிரம்புப் பெட்டிகள் தண்ணீரால் நிறையாததேபோல உள்ளே நிறைவையடைவதே கிடையாது. குரூரம் = நிஷ்டூரம்.

(ச.) ராகாதிதோஷ ஹேதுக்களால் பிரஞ்ஞைஹீனமாய் வாயுமத்திய வர்த்தியாய மயிற்ரேகையின் தளம்போலச் சஞ்சலசித்தம் சாதுஜனங்களால் பரிக்கிரகிக்கப்பட்ட சத்கருமத்தினின்றும் நீங்கிச்சலிக்கும். (பரிக்கிரகித்தல் = அநுஷ்டித்தல்.) பிரமாதஞ் செய்யுமென்க. செல்லும் சுனகம் வீணாகவே சுற்றுவதுபோலச் சித்தமும் சுற்றும். கரண்டகமென்பது மூங்கிற் சலாகையாற் கற்பிக்கப்பட்டுப் புஷ்பாதிகள் கொணரத்

தருதியாய அந்தராளமுற்ற பெட்டகமாம். அது நீரால் நிரம்புவதில்லாமல் பிராப்தத்தை விசர்ஜனம் செய்து அப்ராப்தத்தை ஆகாங்க்ஷித்து சிற்றலேபோலச் சித்தமும் நின்றுழ லும் ஹிம்சாபரவசமாய் நிர்த்தயையை யடையும். (60)

(ஸ்ரீ-வீர-அ-கை.) மேலும் அச்சித்தம்செய்யும் பேரனர்த்தத்தையே விரிவாகக் கூறுகின்றார். காதல் என.

**காதலெனு மனைவியின்பின் செல்கின்ற மனமென்னுங் கடியஞாளி**
**பேதைமைமே வியவென்னைப் பிணந்தின்னு மாறுபோற் பிடுங்கித்தின்னும்**
**மோதுபெருங் காற்றினன் முறிந்தெழுந்த துரும்புபோன் மோகமெய்த**
**வாதைமனம் பெரும்பாழின் மிகவீழ வதிதூர மலங்கத்தள்ளும்.** (61)

(ப - ரை.) காதல் எனும் மனைவியின்பின் = திருஷ்ணை யென்னும் பாரியைப் பின்பற்றி, செல்கின்ற மனமென்னும்=கமனஞ்செய்யும் சித்தமென்று சொல்லப்பட்ட, கடியஞாளி = குரூர விவேகமில்லாத சுவானமானது, பேதைமை மேவிய என்னை = அறியாமையோடு கூடியவென்னை, பிணந்தின்னுமாறுபோல் = சவத்தைப்பிடுங்கித் தின்பதேபோல, பிடுங்கித்தின்னும் = துண்டுபடுத்தி உண்ணும், மோதுபெருங்காற்றி னல் = வீசியடிக்குஞ் சண்டமாருதத்தால், முறிந்து எழுந்ததுரும்புபோல் = தூட்பட் டெழுந்த திருணத்திற் கொப்பாய், மோகம் எய்த = சூனியத்திற் பிரமணமடையவும், பெரும்பாழின் மிகவீழ = மகாசூன்யத்தில் அவாந்தர வீழ்ச்சியின் பொருட்டும், வாதை மனம் = துயர்செய்யும் உள்ளமானது, அதிதூரம் = வெகுதூரத்தில், மலங்கத்தள் ளும் = கலங்கும்படியாக இழுத்துச் சென்று விட்டோடும். (61)

(ஸ்ரீ - வீர.) பெண்நாயைப் பின்றொடரும் குரூர ஆண்நாயால் சவம்பிடுங்கித்தின் னப்படுவதேபோலக் கூறிய விசேஷங்கள் வாய்ந்த சித்தத்தால் உபத்திரவப்படுத்தப் பட்டேன் என்பதாம். கேவலம் ஜீவிக்கப்பட்ட எனது துக்ககாரணம் சித்தமென்ப தன்றாம்; மற்றோ, மரித்தபின் நரக திரியக்காதியோனிகளை அடைவிக்கும் கரும விரையுமாம் என்பார் அவாந்தர மென்றார். அவாந்தர வீழ்ச்சி = ஏறிவீழ்கை, சூனிய பிரமணம் = புருஷார்த்த சாதன சூன்யமாய திரியக்குமுதலிய ஜன்மங்களிற் சுழலல் ஆம். திருணபக்ஷத்திலோ சூன்யத்திற் பிரமணம், நிராதாரககனத்திற் சுற்றிச்சுற்றிவரு தலாம். சந்ததம் உதரம் நிறையாத மனைவியாகிய பெண்ணையைப் பின்றொடரும் கோர மான நாயால் பெரும்பாரம் வாய்ந்தபிணம் தின்னப்படுவதேபோல ஆசையாகிய மனைவி யைப்பின் றொடரும் சித்தத்தால் யான் தின்னப்பட்டேன். ஆற்றங்கரைத் தருவானது, அலைமிகுத்துச் சஞ்சலித்துக் கரைக்கும் நீர் வெள்ளத்தால் வீழ்க்கப்பட்டிழுக்கப்படு வதேபோல, அலைபோற் சலித்துக் கிடையாத விடயத்தின் மொத்துண்டுழலும் விருத் திகளோடுற்ற சடவடிவமாயசித்தத்தால் இழுக்கப்பட்டேன். சூறைக்காற்றினாலே துரும் பானது இடையில் வீழ்த்தற் பொருட்டும், சூனியத்திற் சுழற்றும் பொருட்டும் இழுக்கப் படுவதேபோல யான், தருமப்பிர விருத்தியானே சுவர்க்கத்திற் செல்லில் அகாலத்தில் வீழ்தற் பொருட்டும், அஃதில்லையாயின் சுகலேசமுங் கிடையாத இவ்விடத்திலேயே புழுபறவை முதலிய பிறப்புக்களானே சுழலும் பொருட்டும், மனத்தால் நெடுந்தூரம் இழுக்கப்பட்டவனு யிருக்கின்றேன். அவ்வாறே:—" இந்நெறி தன்னினே யிறங்குவர் மீண்டே " எனவும் " பின்னிவ்விரு நெறியு ளொன்றேனும் பெற்றில, அன்னவிவை துச்சமாம் பிராணியா யநேகமுறை, பின்னும் பிறக்கும் பிறத்தியிறத்தி, யென்னு மிது மூன்றாவது தானமாம் " எனவும் சுருதிகளும் புகல்கின்றனவன்றே.

(ச.) பேதைமை மேவிய என்னை கார்யாகார்ய விவேகரகிதனை என்னை. (இ-ம்) சண்டா நிலத்தால் திருணம் தூரஞ்செல்லுதலால் மத்தியில் வீழ்தலாவது சூன்ய அம்பரத்திற் சுழலுதலாவது அதற்குப் பிரயோசனமன்றி மற்றொன்று மின்மைபோல மனதால் மனோரத மார்க்கத்தில் தூரம் சென்றபோதிலும் ஆம் என்றதாயிற்று. (61)

(ஸ்ரீ-வீர-அ-கை.) துஷ்ட சித்தமானது என்னைக்கீழும் மேலுமாய்க் கிருகிருக்கின்றது என. " பிராணனற்றது, மனமற்றது, சுப்பிரம், அக்ஷரத்தினும் பரத்தினும் பரம் " என்னும் ஆத்மதத்துவப் பிரதிபாதக சுருதி இருத்தலின் உனக்குச் சித்தமே இன்று. இல்லதாகவே எங்ஙன் அதனால் ஏவப்படுந் தன்மையென ஆசங்கித்துக் கூறுகின்றார் வேரறு என.

வேரறுபொய் யாய்ச்செறிந்த வடிவாகி விசாரத்தால் விரோத மாகுங்
கோரமனம் பேய்பிடித்த சிறுவரைப் போற் பலதொழிலிற் கூட்டா நிற்கும்
பாரகன்று பாதலம்போம் பாதலத்தி னின்றகன்று பாரின் மீளுஞ்
சோரமனங் கிணற்றுமரம் பழங்கயிற்று லெடுப்பதுபோற் றொழிலிற் றள்ளும்.

(ப - ரை.) வேரறு பொய்யாய் = பீஜமற்ற மித்தையேயாய், செறிந்த வடிவாகி= நெருங்கியவடிவாகி, விசாரத்தால் விரோதமாகும் = ஆராய்ச்சியால் மாறுகி நிற்கும், கோரமனம் = துஷ்டசித்தமானது, பேய்பிடித்த சிறுவரைப்போல் = வேதாள சம்பந்தியாய பாலகரைப்போல், பலதொழிலிற் கூட்டாநிற்கும் = பற்பல விவகாரங்களிற் சேர்ப்பியாநிற்கும், பாரகன்று பாதலம்போம் = பிருதிவியைவிட்டுப் பாதாளத்திற்குச் செல்லும், பாதலத்தினின்றகன்று பாரின்மீளும் = பாதாளத்தை விட்டுநீங்கிப் பிருதிவியில் வந்து சேரும், சோரமனம் = கள்ளஉள்ளமானது, கிணற்றுமரம் = கூபகாஷ்டம், பழங்கயிற்றால் = பிணித்த புராதனரச்சுவினாலே, எடுப்பதுபோல் = பந்தித்துத் தூக்கப்படுவதுபோல், தொழிலிற்றள்ளும் = பலகாரியங்களில் வீழ்த்தா நிற்கும். (62)

(ஸ்ரீ - வீர.) நெருங்கியவடிவம் = பூரிரூபம். மாறுதல் = விசரணசீலமாதல் பாலகன் தன்மேனிச்சாயை முதலியவற்றில் வேதாளத்தை ஆரோபித்து அதனாற் பீடிக்கப் பெற்றவனுவன். பொய்யாகவே செறிதலும் அதன் விசாரத்தால் மாறுதலும் சித்தத்திற்கும் வேதாள சம்பந்திக்கும் சமானமாம், உருளையானது கயற்றினாற் சுற்றப்படுவதே போலத் துஷ்டசித்தத்தாற் பாதாளத்தினின்றும் பிருதுவியிற் செல்பவனாகியும் பிருதுவியினின்றும் பாதாளத்திற் செல்பவனாகியும் சுற்றப்படுகின்றேன். பாலன் பயப்படக் கற்பிக்கப்பட்ட வேதாளம், பாலபுத்தியினனே இருப்பதாய்த் தோற்றி அவனுக்கே பாலியம் நீங்கினவுடனே விசாரத்தால் அசத்தாவதேபோல அஞ்ஞான மதியினனே வெற்றிகொள்ள முடியாததாகியும், பொய்யாகவே தோற்றுவதாகியும் விசாரத்தால் விவேகமுதித்த அளவில் வடிவமே யில்லாததாகும் துஷ்டசித்தத்தானே பீடிக்கப்பட்டுளேன்.

(ச.) வேரறு பொய்யாய் நிற்கும், ரோதனாதி நிவிர்த்தியி னிமித்தம் பயவேதுவாகக் கற்பிக்கவந்த பேயானது பாலகனை அவிசாரத்தால் விருத்தியாகி அநேகந் தொழிலிற் சேர்த்து வருத்தஞ்செய்து விசாரிக்கில் இன்மையாவதுபோலச் சித்தமும் ஆம் என்பது பொருளாம். தள்ளும் (இ - ம்) கூபத்திற்கிடக்குங் காஷ்டம்தான் நிஷ்கிரியமாயினும் குழலரச்சுவால் பந்திக்கப்பட்டு மாறிமாறி மேலே வருதலும் கீழேபோதலும்போல ஆத்மாநிஷ்கிரியனாயினும் மனதால் மாறி மாறி ஊர்த்துவ அதோகதியை யடைவனென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே ராகவ ! நீ கூறியவாறு சித்தமானது துஷ்டசேஷ்டை யைச் செய்யும் பக்ஷத்தில் நிக்கிரகித்துவிடலாமே எனின் முடியாதகாரியமா யிருக்கின்ற தென்கின்றார், கடுவென.

கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகு மலைகளினுங் கடத்தற் கொண்ணு
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்குகினு நிறுத்தரிது புலன்முழுதுந் தோன்று மூலங்
கெடுமுலகி துண்டெனிலுண் டில்தாகி லிலதிதனைக் கெடுத்தல் வேண்டும். (63)

(ப - தை.) கடுமனவன்பேய் = கொடியமனமாகிய வலியகிரகமானது, கனலிற் கொடிதாகும் = வன்னியிலும் உஷ்ணதரமாம், மலைகளிலும் கடத்தற்கொண்ணு = மலை முதலியவற்றைத் தாண்டுதல் குறித்துந்தாண்டற்கு முடியாததாம், நெடுவயிரத்தினும் வலிது = நீண்ட வஜ்ஜிராயுதத்தினும் திடமுடையதாம், கடல்பருகி = அப்தியைப் பானஞ்செய்து, மேருவினை நேரேபேர்த்து = சுமேரு பர்வதத்தை வேரோடும் பிடுங்கி, சுடுகனலை = தகிக்கின்ற அக்கினியை, விழுங்குகினும் = அசனஞ் செய்யினும், நிறுத் தரிது = நிக்கிரகஞ் செய்தல் கூடாதாம், புலன்முழுதுந் தோன்றுமூலம் = எல்லாப் பொருள்களும் பிரதீதியாவதற்குக் காரணமாம், கெடும் உலகு = நைஸ்வரமான இந்த ஜகத்திரயமும், ஈதுண்டெனில் உண்டு = இம்மனமான திருந்தால் இருக்கும், இலதாகில் = க்ஷீணமாயின், இலது = க்ஷீணமாம், இதனைக் கெடுத்தல் வேண்டும் = பிரயத்தனத்தி னாலே இவ்வுளத்தைச் சிக்ஷித்தடக்கவேண்டும். (63)

(ஸ்ரீ - வீர.) கடத்தற்கொண்ணு = மிகக்கஷ்டப்பட்டும் பாதவிக்ஷேபமுற்றும் ஆரோகணஞ்செய்தல் முடியாதென்பதாம். கிரகம் = பூதம், மேருவைப் பிடுங்கிப் பிளந்து அசனம் = பக்ஷணம், இவ்வண்ணம் சித்தநிக்கிரகம் பெருந்துயரொடுத்தும் வருந்தி முடியாவிடின் அதையுபேக்ஷித்து மற்றொன்றே புருஷார்த்தப்பொருட்டுச் செய்யத்தக் கதாமெனின் அறைகின்றார் புலனென. ஆகாசாதிபதார்த்தங்கட்குச் சித்தம் உபாதான காரணமாம். அங்ஙனமே சங்க்ஷேபசாரீரகத்தின்கண்ணும் கூறப்பட்டுளது:—"முத் தொரொட்முத்தர் நின்னிய லறிவாளர் மூடர், மத்தகமாதி மண்ணீருகிழு முகிதானெல் லாம், அத்தமதவித்தை பெற்றவகப் பொறியாக்குமத்தை, மைத்ததை யறிகமாறும் மன் னுணர் வடைந்திடாதே" (இ—ள்) அற்றேல், நித்திராதி தோஷஜன்னியமாய சொப்ப னம் அவித்தை அத்தியாசத்தானே அதைக் காண்பவனினும் அயலாக அதுத்தென்பது கூடும், அதனானே யாங்ஙனம் ஜாக்ரத் பிரபஞ்சத்தின் சாமியமாதல், அதனானே வைதர் மியத்தானும் சொப்பனாதிபோலாகாதாம் எனச் சொப்பனவைஷம்மியம் சூத்திரக்காரர் கூறினர் என்கிடாவ், பிரமர்தா விருப்பப் பாதமாவது மொண்டும் ப்ரத்மாகாதது கொண்டும் சொப்பனஜாக்கிரங்கட்கு வைதர்மிய மிருந்தபோதினும் அத்தியஸ்தத் தன் மையானே, முக்காலத்தினு மில்லாமற்போதலில் யாதொரு விசேடமுமின்று மென்னுங் கருத்தோடும் விடையிறுத்த வுத்தேசித்துக் கூறுகின்றார்:—முத்தவென. சுகாதி முத்தர் சைத்திராதிய முக்தர் இங்ஙனம் குருமுதலிய அறிஞர் தேவதத்தாதி அறிவிலர், மண் பிருதிவி, என்பதை யுந்தமாகவுடைய விசுவமாமிது முழுதும் தன்னவித்தையி னுண் டாய அந்தக்கரண கதவாசனை நிமித்தத்தானே அதனது சேஷ்டை மாத்திரமேயாம்; அவித்தையின் காரிய அந்தக்கரண பரிணாமமென்றேனும் அறியத்தக்கதாம், மாறும் = சொப்பன விலக்ஷணமாகச் சத்தியமாய் நீயறியவேண்டாம், அல்லது இங்ஙனம் தள்ளத் தக்க சமுசாரப் பிரபஞ்சத்தை யவித்தையாலாயது என்பதை நிரூபித்து முன்னர் விவர்

த்த திருஷ்டியினுனே ஏக அநேகஜீவவிடயமாக இருவகைமை யியம்பப்பட்டது, ஆண்டுச் சுகர்முக்தர், நம்மனோரல்லாம் என்பதாய், வைதிக இலௌகிக விவகாரத்தை யனு சரித்து ஜீவநாநாத்தகைமையே பொருந்துமென வினவித் திருஷ்டிமாத்திரம் அங்ஙனமே சொப்பனம் போலும், உண்மையாகவேனும், வியாவகாரிக மாகவேனும் ஜீவபேத மில்லையாம். அங்ஙனமன்றேல்:—அவித்தையின் கண்ணே பிரதிபிம்பிதமான சைதன்யமே ஜீவனும், அவித்தையும் எளிதிற்கோடல் என்னும் உக்தியா லனுக்கிரகிக்கப்பட்ட அஜை ஏகை" என்பதாதி சுருதியால், அதனனுபவத்தால், அதனது பேதத்திற் பிரமாண மின்மையினுனும் ஏகமாகவே சித்தமாகின்ற படியால் ஜீவனும் ஒருவனேயாவன்: அவனும், அவித்தியாகாரிய அநேக அந்தக்கரண வரைவினுனே அநேகரூபப் பிரமாதாகருத்தா போக்தாத் தன்மையை யடைவன், என இலௌகிக வைதிக விவகாரம் யாவுமே எவ்வாறு வேண்டப்படுமோ அவ்வாறு ஒரு ஜீவனை யுட்படினும் ஒத்தே யிருக்கின்றதாம், ஆகவே அநந்த ஜீவகற்பனைசெய்தல் அடாதாம்; வேறோராற்றுற் பெறப்படாத அளவை யின்மையினுனும், அரிதிற்கோடலானும் என்க. அந்தக்கரண நானாத்தன்மையும், ஏகஜீவவாதத்திலும் பிரசித்தமாய் விவஸ்தையோடுகூடி விளங்கும் விவகாரத்தை யனுசரித்துக் கற்பிக்கப் பெற்றதாய் லோககந்தித் தன்மையையும் கவர்வதின்று மென்னுங் கருத்துடன் கூறுகின்றார் முத்தரொடு முத்தரென. என்பதாம். அக்காரண சித்தம் உளதாயவழி அதன் காரியமாகிய மும்புவனம் நிகழாநிற்கும், அக்காரணம் நஷ்டமாகிய வழியோ அதன்காரிய பூதஜகத்தும் க்ஷீணமேயாய்விடும். ஆகவின் அச்சித்தமே புருடார்த்த மடைவான் பிரயத்தனத்தாற் கூறப்போதலின் நிகிச்சை செய்து வயப்படுத்தற்குரியதா மென்றுணர்க. துயரமடைந்தும் கவரத்தகாத மனமாகிய பேயானது எப்போதும் தகித்தற் கேதுவாதலின் தீயினுமிக்க வெப்பமுடையதாம்; மலைகளைத் தாண்டுவதினும் இதனை வயப்படுத்தல் மிகவுங் கஷ்டமாம்; இதுவயிரத்தினும் வலியதாகும், இடியினுங் கொரேமுடையதாம். பெருங்கடலைக் குடிப்பதினும் மேருகிரியைப் பெயர்த்தெடுப்பதினும் அக்கினியை விழுங்குவதினும் சித்தத்தை யடக்கல் மிகவும் கஷ்டமாம் பொருள்கட்கெல்லாம் சித்தமே காரணமாம் அஃதிருந்தால் மூன்றுலகமுமுளது, அஃதடங்கின் அகிலமுமடங்கும், எம்முயல்வானும் அது நோய் போல அவசியம் அகற்றத்தக்கதாம்.

(ச.) உலகு = சகத்திரயமும், கெடுத்தல் வேண்டும் = சர்வப் பிரயத்தனத்தினுலும் ஒழித்திடல் வேண்டும். (63)

(ஸ்ரீ-வீர-அ-கை.) கூறியதையே திருஷ்டாந்த முகத்தால் நன்குகூறுகின்றார்:—

வரையிலெழு வனம்போல மகிழ்ச்சியிட ரிவையனைத்து மனத்திற்றேன்றும்
புரையில்விவே கத்தின்மனம் பொன்றிலவை பொன்றுமெனப்புந்திசெய்தேன்
கரைதலறு மோகமெனுங் காரிருளிற் றெழிற்கடங்காக் காதலல்லா
லுரைதருகா மாதிகளாமுஹ்க நிரையுணர்வெனும் விண்ணுலாவுமன்றே. (64)

(ப - ரை.) வரையிலெழுவனம் போல = மேலான பர்வதத்தின் கண்ணே வேரூன்றி ஓங்கிநிமிரும் கானனமொப்ப, மகிழ்ச்சியிடரிவை யனைத்தும் = சுகதுக்கங்களென்னும் இந்தச் சங்கடங்கள், மனத்திற்றேன்றும் = சித்தத்தின் கண்ணே உற்பத்தியாயோங்கும், புரையில் விவேகத்தின் மனம்பொன்றில் = குற்றமற்ற விசாரத்தினுலே மனமானது சுருங்குமாயின், அவைபொன்று மெனப்புந்தி செய்தேன் = கூறிய இடர்யாவும் முற்றினும் நசிக்கும் என்பதாக நன்கெண்ணுகின்றேன், கரைதலறு மோக

மெனும் = பிரஹ்மஞானத்தானன்றி மற்றொன்றானுமே கெடாததாய அஞ்ஞானமென்கின்ற, காரிருளில் = சொரூபத்தை மறைக்கும் இருதய அந்தகாரத்தில், தொழிற்கடங்காக்காதல் அல்லால் = விவகாரஞ்செய்து முடியாமல் அலுத்துப் போகும்படி செய்விக்கும் ஆசையாகிய இரவால், உரைதரு காமாதிகளாம் = மேலேசொல்லப்பட்ட காமமே முதலான தோஷங்கள் என்னும், உலூக நிரை = கோட்டான் வரிசைகள், உணர்வெனும் விண் = சேதனாகாசத்தில், உலாவும் = மகிழ்ந்துலாவும். (எ-று.) (64)

(ஸ்ரீ-வீர.) சித்தமானது மெலியமெலியச் சுகதுக்காதிகளும் அத்தியந்தம் தோற்றாமல் நசித்துவிடும் என்றெண்ணுகின்றேன். மனத்திற்குத் திருஷ்ணைவாயிலாக அநர்த்தஹேதுத்தன்மை புண்மையின் மனநிந்தையின் பின்னர் நீக்கும்பொருட்டுத் திருஷ்ணையை நிந்திக்கின்றார்: — மோகமென.. மோகவிருள் = ஹார்தாந்தகாரம், இருதயத்திருக்கும் அந்தகாரத்தோடு கூடிய சந்திரிகையில்லாத இரவு திருஷ்ணையாகிய ஆசையாம். ஆசையாலே தொழில்கள் அதிகமாகத் துயரமாய் முடியும். அறிவேயாய ஆகாயத்தில் குரோதிகளேயாய கௌசிகங்களின் பந்திகள் உலவும், பிரசித்த அந்தகார இரவு பிரசித்த ஆகாச உலூக பந்திகட்குப் புரணவேது வென்பது பிரசித்தமேயாம். பெரும் பர்வதங்களினின்றும் பெருங்காடுகள் உண்டாவதே போலச் சித்தத்தினின்றும் நூற்றுக்கணக்கான இச்சுகதுக்கங்களியாவும் திரமாயுண்டாகின்றன; விவேகமிகுதியினுனே அம்மனம் இலயமடையுமாயின் அவைகள் அடியோடுந் தொலைந்து விடுமென எண்ணுகின்றேன். எல்லாப் பாவங்களையும் உண்டாக்குவதும், தீனலோப மரணங்களையீவதும் உலகமுழுவதும் உலாவுவதும் ஆகிய ஆசையையிகழ்தல் செய்கின்றார்:—கரைதலறு என. பரமப்பிரீதிக் கிடமான ஆன்மதத்துவத்தையும், இருதயத்திலுதித்த விவேகாதிகளையும், மறைக்கும் கெடுக்க முடியாத இருளினாலே, இச்சேதனா காசமாகிய ஜீவன்பால், இராகாதிதோடக் கூகைகளின் கூட்டம் குலாவித்திரியும்.

(ச.) மோகமேயாய இருளோடு கூடிய இரவுபோல் வளர்தற் கேதுவான துக்கமுடிபையுடைய ஆசையாமேதுவான் அறிவம்பரத்திற்றோட கௌசிகபந்திகள் உலவும். தோஷங்கள் = காமாதி, பாதகங்கள், அவை மலினமயமா யிருத்தலின் உலூகங்களாம். அக்காமாதி பரம்பரைகளாகிய வரிசைகள் உலாவி யொளிரு மென்றமையானே நிருலேபனான ஆன்மாவிற் காசைவயத்தாற் பாபரூப காமாதிசம்பந்தத் தோற்றம் வருகின்றதென்பதாம். (64)

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருஷ்ணையானது கேவலம் தோஷத்தையே யுண்டாக்குகின்றது என்பதாக மாத்திரமின்றும், மற்றே, குணங்களையும் நாசஞ்செய்கின்றதென்கின்றார்:—ஆதரித்தவென.

**ஆதரித்த நற்குணங்க ளாகுவினாற் றந்திரிபோ லாசை யாலே**
**சேதமுறுஞ் சொரூபநிலை செறிதரவல் லமையில்லாச் சிந்தை யேங்கண்**
**மீதுவலை யுறுபுட்போன் மெலியவரு மாசைத்தீ வெதுப்ப நொந்தேன்**
**கோதிலமு திற்குளித்துங் குளிராதென் றென்மனத்திற் குறிக்கின் றேனால்.(65)**

(ப - ரை.) ஆதரித்த நற்குணங்கள் = மிகவும் அன்போடும் சம்பாதித்த நல்ல குணங்களெல்லாம், ஆகுவினாற்றந்திரிபோல்=மூஷிகத்தால் நாதசாதகம் கெடுக்கப்படுதலேபோல, ஆசையாலே = திருஷ்ணையாலே, சேதமுறும் = சைதன்யமயமாய்ச் சித்தத்தின்கண்ணிருக்கும், சொரூபநிலை= தற்சொரூபஸ்திதியை, செறிதர= அடைவதற்கு, வல்லமையில்லா = அசமர்த்தமான, சிந்தையேங்கள் = மதியையுடைய யாங்கள், வலை

மீதுறுபுட்போல் = ஜாலத்துள்ளகப்பட்ட சகுனப்பக்ஷிபோல, மெலியவரும் = திருஷ்ணை ஜாலத்தில் விமோகிக்கின்றோம், ஆசைத்தீ = திருஷ்ணையெனப் பெயரிய சுவாலையான்து, வெதுப்ப = தகிக்க, நொந்தேன் = துயருற்றேன், கோதிலமுதிற்குளித்தும் = குற்றமற்ற தேவாமிர்தத்தில் மூழ்கியும், குளிராதென்று = தாகஉபசமனமாகாதென்று, என்மனத்தில் = அடியேனுடைய உள்ளத்தில், குறிக்கின்றேன் = ஆசங்கிக்கின்றேன், ஆல் அசை. (எ-று.) (65)

(ஸ்ரீ - வீர.) ஆதரித்தலாவது, அவிகத ஆசக்தியாமாறு குணசோபையைப் பற்றியிருத்தலாம். விஸ்தாரமாய்த் திருஷ்ணையை நிந்திக்கத் தொடங்குவார், சேதமுறுமென்றார். சொரூபநிலை = தன்து ஆஸ்பதமாய தன்வடிவம், சர்வகிலேசங்களும் விடுபட்டுப் பரமானந்த வடிவமாக இருப்பது. ஜாலம் = வலை, சகுனிபக்ஷத்திலோ தன்னிடம்தன் கூண்டாம். நிரதிசயதுக்க வேதுவாகத் திருஷ்ணையை நிந்திப்பார், ஆசைத்தீயென்றார். அமுதம் = சுதை. சுதைகளானும் தாகஉபசமனம் ஆகாதென் றெண்ணும் வண்ணம் தகிக்கப்பட்டேன். விவேக வைராக்கியாதி குணங்களுக்குள் எவ்வெதன்பால் யான் அதிக ஆவற்படுகின்றேனோ அவ்வதை யென்தாசை, வீணையின் நரம்பைத் துஷ்டஎலி கடிப்பதேபோலக் கெடுக்கின்றது. சுழலாநின்ற பிரவாகத்திற்பட்ட இலைபோலவும், சண்டமாருதத்தின் கண்ணேபட்ட துரும்பேபோலவும், ஆகாயத்தின்கண்ணே சரற்கால வெண்மேகம்போலவும், சிந்தையாகிய சக்கரத்திற் சுழலுகின்றேன் யான். எங்களுடைய பாரமார்த்திக வடிவத்தை யடையமுடியாத மதியையுடைய யாங்கள் வலையிற் பறவைகள்போலச் சிந்தையாகிய வலையிலகப்பட்டுக்கொண்டு பெருமயக்கத்தை யடைகின்றோம். ஆசையெனப் பெயரிய அழலினுனே யழற்றப்பட்டயான், அமுதத்தானுந் தாகசாந்தியை யடையமாட்டேனென வெண்ணுகின்றேன்.

(ச.) திருஷ்ணையானே நற்குணங்கள் சென்றுவிட்டன. சொரூபநிலை = விசிராந்திபதமென்னுங் கைவல்லியம், புட்போல ஆசாசாலத் தகப்பட்டு சாலாம் = சமுதாயம். எவ்வகையானே தாகவுபசமனம் அப்தசதங்களானும் அவ்வகையைச் சங்கித்திலேன், அவ்வகையான்து சம்வத்சர சதத்தானும் பலிக்குமெனக் கற்பிப்பான் முடியாத காரியமாம். அமுதில் அநேக வருடங் குளித்துங் குளிராது என்றமையால் மற்றெவ்விதத்தாற்றான் இத்தாகோபசமனம் ஆமென்ச் சாற்றத்தகு மென்பதாம். (65)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் தீரனாய் விசாரவானாய் திருஷ்ணைக் கனுகூல வியாபாரகிதனாயிருக்கும் நின்னை யெங்ஙனம் திருஷ்ணை தாகப்படுத்துவதாகும் எனக் கூறுகின்றார்:—பின்னென.

பின்னுறுபக் கத்திருள்போற் பேராண்மைத் தீரரையும் பீதி செய்யும்
நன்னயனங் குருடாக்கு முபசாந்தத் தோர்தமையும் நடுக்கஞ் செய்யுங்
கின்னமுறு காதலெனுங் கிழமடந்தை யொருபொருளுங் கிட்டா தேனும்
இன்னிதிய நயந்தெவர்க்கும் பின்றொடரும் மனோரதமு மெய்தா தாகும். (66)

(ப - ரை.) பின்னுறுபக்கத்திருள்போல் = அபரபக்ஷத்துற்ற இரவிருளேபோல, பேராண்மைத் தீரரையும் = மிகுந்த ஆண்மையுற்ற தீரரையும், பீதிசெய்யும் = பயப்படுத்தா நிற்கும், நன்னயனங் குருடாக்கும் = நல்ல விழிகளோடுகூடி யிருந்தபோதினும் ஒன்றுந் தெரியவொட்டாமற் செய்கின்றது, உபசாந்தத்தோர் தமையும் = பரமசாந்தமாயிருக்கும் நல்லோரையும், நடுக்கஞ்செய்யும் = பெருந்துயரடைந்து கம்பிதமாமாறு செய்விக்கும், கின்னமுறுகாதலெனும் கிழமடந்தை = துன்பமயமாய திருஷ்ணை

யென்னும் ஜீர்ணகாமினியானவள், ஒரு பொருளுங்கிட்டாதேனும் = எவ்வாற்றிலுந் தனக்குக் கிடையாதத்தன்மை யுடையவளேனும், இன்னிதிய நயந்து = இனிமையைத் தரும்பொருளை நாடிக்கொண்டு, எவர்க்கும் பின்றொடரும் = யாரைக்கண்டபோதிலும் பின்பற்றியோடும், மனோரதமும் எய்தாதாகும் = எண்ணியபடி யாதொரு பலத்தை யுமே யடைவதில்லை, ஒருவர் மனத்தையும் வசப்படுத்தவு முடியாதாம். (எ-று.) (66)

(ஸ்ரீ - வீர.) தீரரையும் = தைரியமாய் விவகரிப்பவரையும், விசாரமெனப் பெயரிய லக்ஷணங்களோடுற்றவரையுங் காரியா காரியந் தெரியாதவண்ணஞ் செய்கின்றதென்பார், குருடாக்குமென்றார். பரமசாந்த விவகாரஞ் செய்பவராய், துயரையுண்டாக்குந் தொழி லற்றவராய், இருப்பவரையும் துயர்ப்படுத்து மென்பதாம். வேறும் ஆசை துஷ்டத் தனஞ் செய்வதுபற்றிக் கிழச்சாரம்ற்ற வேசிக்கொப்பிட்டுரைக்கின்றார்:—சித்தத்தை வசம்பண்ண முடியாத குரூபியாயினும் அலைவள் என்பார், மனோரதமென்றார். துர்ஜனர் சஜ்ஜனர் யாவரையுமே ஜாதியாதியும் பாராமற் பொருணசையாற் பின்பற்றலின் எவர்க்கு மெனப் பொதுப்படக் கூறினார். பிராணி பிரவிருத்தித்தோடுதல் திருஷ்ணையாலேவப் பட்டே யாதலின் அதைத் திருஷ்ணையின் பேரிலேற்றிக் கூறுவார், காதலெனும் என்றார். இவ்வண்ணமே மேல்வருமிடங்களிலும் திருஷ்ணையின் செய்கை உபசாரத்தா லாயதெனக் காண்க. ஆசையானது, அறிவுமிகுந்து தைரியத்தோடு கூடியிருக்கு மென் னையும் பயமுறுத்துகின்றது, விவேக நேத்திரங்களோடும் வெள்ளி விழிகளோடுங் கூடி யிருந்தபோதினும் குருடாக்குகின்றது, அபரபக்ஷத்திரவேபோல ஆனந்தத்தோடுகூடி யிருந்தபோதிலும் பெருந்துயரப்படுத்துகின்றது. ஒருவனது மனத்தையும் வயப்படுத்த முடியாம லிருந்தபோதினும் யாவர் பின்னும் தொடர்ந்து யாதொரு போகலாபப் பயனை யும் சிறிதும் அடையாமல் விருத்த விலைமாதைப்போன்ற விருப்பம் துயரையே யுடையும். விரிந்தபுவன நடனசாலையின்கண்ணே சோகமோக கருணை நகைப்பு முதலிய பலவித ரசங்களோடு கூடிய சமுசாரப் பெருங்கூட்டத்தில் ஆசையாகிய கிழத்தாசி யாடுவள்.

(ச.) தீரர் = தைரியத்தோடுகூடிய இச்சையுடையவர், உபசாந்தத்தோர் = நிர் விகார ஈகையுடையவர், கிழப்பொதுமடந்தை தருணசனமன வசீகரணத்தில் தான் சமர்த்தை யன்றாயினும் தனவாஞ்சையாற் சகலதருணசனத்தையும் மேன்மேலுந் தொடர்தல்போல், ஆசையும் சகல தனவானையுந் தொடரும்; அதனாற் பிரயோஜன மொன்றையும் பெறாதென்பதாம். (66)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேறு வகையானே திருஷ்ணையை நிந்திக்கின்றார்:—முதிர் என.

முதிர்பருவத் தளர்ச்சியான் முடியாத நடனகதி முயல்வா ளாகி
மதிமகிழ்ச்சி யறநடிக்கு மாடுங்கூத் தியைப்போல வருத்து மாசை
யெதிர்கிடைத்தற் கரும்பொருளிற் சென்றெய்து மமைந்தாலு மின்பந் தேடுங்
கதியறவோ ரிடத்துறையா துலைகின்ற வானரம்போல் காதல் தானே. (67)

(ப - ரை.) முதிர்பருவத்தளர்ச்சியால் = கிழ அவஸ்தையின் அவஸ்தையால் அவய வங்கள் சிதிலப்பட்டிருத்தலால், முடியாத நடனகதி முயல்வாளாகி நடிக்கும் = ஆற்ற லின்றித் தள்ளாடி நடனநடை செய்யும் பிரயத்தினத்துடன் ஆடுவள், மதிமகிழ்ச்சியற= ஆனந்தரகிதமாய், ஆடுங் கூத்தியைப்போல = ஜீர்ணநர்த்தகிபோல, ஆசை= திருஷ்ணை யானது, வருத்தும் = ஆடியாடித்துயர்செய்யும், எதிர்கிடைத்தற் கரும்பொருளில் = இனிக்கண்காண அடைதற்கு முடியாததாயிருக்கும் வஸ்துவினும், சென்றெய்தும் =

கிடைத்துவிடுமென்னும் ஆஸ்தை யிருந்தவழி கிடைக்கும்பொருட்டுப் போய்ப் பெரும் பிரயத்தனஞ் செய்யும், அமைந்தாலும் = செய்தடைந்து திருப்தியுற்றபோதினும், இன் பந்தேடும் = ஆனந்தபலத்தையே மேலும் மேலும் சம்பாதிக்க முயலும், காதல் = திரு ஷ்ணையானது, உலேகின்ற வானரம்போல் = சபலமர்க்கட சமானமாய், கதியறவோ ரிடத்துறையாது = சலனமின்றி யொருஸ்தானத்தில் நீண்டபோது இராதாம். (எ-று.)

(ஸ்ரீ - வீர.) நடனநடை = நர்த்தனப் பிரயத்தினத்துடன், கமனப் பிரயத்தி னத்துடன் என்பதாம். சென்று ஆனந்தமின்றியதாக நடனம்புரிவள். முடியாத பொரு ளையும் சாதிக்கும் பொருட்டு சம்பிரமத்தோடுஞ் செல்வள். ஆசையோ சுகமொன்று மின்றியே கஷ்டத்துடன் சேட்டிக்கும். அசாத்திய விடயத்திலும் உண்டாந்தன்மை, துன்புற்றும் நிறைவின்மை, திரமின்மை வடிவ வேறுதோடங்க ளிருக்கின்றனவென்பார், எதிர்கிடைத்தற் கென்றார். நடக்கவுஞ் சாதிக்கவும் முடியாதவளா யிருந்தாலும், நடன கதியை முயல்பவளான, ஆசையாகிய கிழக்கூத்தியானவள் வலுவின்மையினனே மன மகிழ்விலாம லானந்தமின்றிக் கூத்தாடா நிற்பள். ஆசையாகிய அதிசஞ்சலவானரம் அடையத் தாண்டமுடியாததன் கண்ணும் எண்ணமாகிய பாதத்தை வைக்கின்றது; திருப்தியடைந்திருந்தபோதினும் இலாபமென்னுங் காய்கனியை விரும்பிக்கொண்டே யிருக்கும் ஓரிடத்தில் நீள்காலம் நிலைத்திருப்பதே கிடையாது. பிராணிகளின் கருமானு சாரமாக விருக்கும் பிரஹ்மாவின் சேஷ்டையைப்போல ஆசையானது சுபமா யுசிதமான தைத் தொடங்கி அதனை முடிக்காமலே அசுபமா யனுசிதமாய்த் தொடங்கியதற்கு மாறுய எல்லாக் காரியங்களையுமே அதிவிரைவி லனுசரிக்குமாயினும் இளைப்பாறுவதே கிடை யாது மற்றோ, எப்போதுமே சுப அசுபப் பலப்பொருட்டு முயன்றுகொண்டே யிருக்கும்.

(ச.) முடியாத — காரணமாவது, அங்கஹாரமாவது செய்தற்குச் சக்தியற்றிருந்த போதினும் முடியாதவிடய மென்றுணர்ந்தும் பரபரிகாசபயத்தால் அந்நடனகதி அதிருசி யத்தினின்று முயல்வாளாகி, ஆனந்தமின்றியே நடிப்பள். அதுபோல இவ்வாசையும் பொருந்தாத விடயத்தில் மிகவருந்தி முயற்சித்துச் சந்தோஷமற நடித்துவருத்தும் என்ப தாம். ஈண்டோ, திருஷ்ணையின் பரவசப்பட்டு யாது யாது செய்யப்படுகின்றதோ, அவை யாவுமே திருஷ்ணையை யேதுவாக வுடையன வாதலின் திருஷ்ணையின்கண்ணே ஆரோ பித்து நடித்து வருத்துமென்னப்பட்டது; அன்றாயினே நடிப்பியெனப் பிரயோகித் திருக்கலாம், அங்ஙனமன்றோ "வீண்மனோரதமாய் விரிந்திடுமாசைநீ, யேணிதனினு மயலென்னையென் னாட்டுவாய்" ஸ்ரீபர்த்ருஹரியுங் கூறியுள்ளார். (67)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஓரிடத்தில் நிலையாமையையே காண்பிக்கின்றார், எப்போ துமே சுப அசுபப்பலப்பொருட்டு முயன்றுகொண்டே யிருக்குமென்பதை விரிக்கின் றார்:—காவின் என.

**காவின்மதர் வண்டென்னப் பாதலம்விண் டிசையனைத்துங் கணத் துலாவும்**
**வாவிவளர் மயலொன்றே வருத்தமனைத்தினும் பெரிய வருத்த நல்கு**
**மேவுமர னுறைபவர்க்குந் துயர்செய்யு மாசையெனும் விடசி கைக்குத்**
**தேவர்புகழ் மந்திரமாஞ் சிந்தையற லுலகிடர்போஞ் சிந்தை யற்றால்.** (68)

(ப - ரை.) காவின்மதர் வண்டென்ன = இருதய தாமரையாகிய பூஞ்சோலையில் நறைமாந்திப் போதையோடு இங்குமங்குந்திரியும் அறுகாற்போல, பாதலம் விண்திசை யனைத்தும் கணத்துலாவும் = கணகாலத்திற் பாதாளலோகம் போய்மீளும், கணத்திற் ககனமேகும், கணப்போதிற்றிக்குக் குஞ்சங்களிலுலவும், வாவிவளர் மயலொன்றே =

கணம் கணம் மேலும் மேலும் வளர்ந்தேசென்று கொண்டிருக்கும் திருஷ்ணையேகமே, வருத்தமனைத்தினும் = துயரீயும் சர்வசம்சார தோஷங்களுக்குள்ளும், பெரியவருத்த நல்கும் = அதிதீர்க்க துக்கத்தைத் தருவதாம், மேவுமரணுறை பவர்க்கும் = காவற்கட்டோடேற்ற அந்தப்புரத்தி லிருப்பவர்க்கும், துயர்செய்யும் = அதிசங்கடத்தை யுண்டாக்கும், ஆசையெனும் = இத்தகைய திருஷ்ணையென்று சொல்லப்பட்ட, விடூசிகைக்கு = விஷவியாதிக்கு, தேவர்புகழ் மந்திரம் = இந்திராதி தேவதைகளும் ஸ்தோத்திரஞ் செய்யும் மந்திரம், சிந்தையறல் ஆம் = மனோலயமேயாகும், சிந்தையற்றால் = சித்தம் க்ஷயமானால், உலகிடர் போம் = உலகத்திலுள்ள எல்லாத் துயருமே உலகர்க்கு நீங்கும். (எ-று.) (68)

(ஸ்ரீ - வீர.) அறுகால் என்பது வண்டாம். விரித்துக் கூறுவதாலென்னே! தொகுத்துக் கூறக்கேளுங்கள் திருஷ்ணையின் றுஷ்டத்தனத்தையெனக் கருதிக்கூறுகின்றார்:— வாவியென: சருவசமுசார தோடங்களின் மத்தியில் ஆசையொன்றே பொல்லாததாம். ஆயின் என்னதான் றிருஷ்ணையைத் தியாகிக்கு முபாயமெனின், கூறுகின்றார்:—உலகிடர் என. உலகத்துள்ள இச்சனம் பாபவடிவமா யிராநின்ற சிந்தையைத் தியாகஞ் செய்த மாத்திரையானே அகில துக்கங்களையும் விட்டொழிக்கின்றது என்பதவிவாதமேயாம். ஆண்டுச் சிந்தையின்றியாகம் துக்ககாரணபூத திருஷ்ணையின் றியாகசம்பாதனவாயிலாகவே அகிலதுக்கத்தின் றியாகவேது வென்பது பொருத்த முடைத்தாம்; ஆகலின் அறைகின்றார் ஆசையெனும் விடூசிகையென. வேறுபாய மின்மையின் அறல் என்பதில் தேற்றமேற்றப்பட்டது. விடயசிந்தை யின்றியாகமே திருஷ்ணைவிடூசிகையின் மந்திரமெனப் பிரசித்தமாக்க் கூறப்படும். திருஷ்ணையே விடூசிகையெனப் பெயரிய ரோகவிசேஷமாம் அதையகற்றும் மந்திரம் திருஷ்ணை விடூசிகை மந்திரமெனப்படும். விடயங்களில் இரமணீயத்தன்மைச் சிந்தையினுனே ஆண்டுத் திருஷ்ணையுண்டாகின்றது, ஆண்டுச் சிந்தைப் பரித்தியாகத்தால் இராகமெனுமயற் பெயர்வாய்ந்த திருஷ்ணை யுண்டாகாதாம், ஆகலின் சிந்தையின்றியாகம் திருஷ்ணை விடூசிகைமந்திரம் என்பதாகப் பொருத்தமாகவே புகலப்பெற்றதாம். இருதயதாமரையி லிருக்கும் வண்டாகிய ஆசையான்து கணப்போதிற் பாதாளஞ் செல்லும், க்ஷணத்தில் மேலுலகங்கட்குப்போம், கணத்திற்றிக்குக் குஞ்சங்களிற் சுழலாநிற்கும். அந்தப்புரத்தி லிருப்பவனையும் அதிக சங்கடத்திற் சேருமாறு செய்யாநின்ற ஆசையொன்றே சமுசாரத்துள்ள சர்வதுக்கங்களுக்குள்ளும் நீண்ட தூண்டிற்கயிறு கொல்பவனது அருகாமையிற் கொண்டிழுத்துக் கொல்லன் முதலியவற்றைச் செய்வதேபோலப் பெருந்துயர்களை நெடுங்காலீயும். விடவிசேடத்தா லுண்டாய விடூசிகை ரோகம்போல் மரணஹேதுவாகிய ஆசையை எதுவரையினும் அனுசரிக்கின்றார்களோ, இனிது தரிக்கின்றார்களோ, விடுகின்றார்களில்லையோ, அதுவரையும் அத்தியாத்ம சாஸ்திரக்கதையே கேளாத பிராணிகள் வியாகுலசித்த முடையவர்களாகி மோகிக்கின்றார்கள். ஆயினதன்றி யாகத்தில் யாதுதானுபாயமெனின், விடயத்தைச் சிந்தித்தலை விடுதலானே உலகர் எல்லாத்துயரங்களையும் விடுப்பர். காதலாகிய விடூசிகைக்கு மகாமந்திரம், சிந்தைசெய்தலை விடுதலே யாமென்பர். " விடயந்தமை நினைகின்றவன் விரகொன்று வனவையில் " எனக்கீதையுமருள்கின்றது.

(ச.) திக்குக்குஞ்சம் = திங்மண்டலம், இருதயபதும அறுகால் திருஷ்ணையாந்து அந்தக்கரண தருமமாதலின், அந்தக்கரணம் ஜீவான்மாவால் அதிஷ்டிக்கப்பட்ட ஹிருதயபுண்டரீகத் திருத்தலின், திருஷ்ணையை ஹிருதயபதும ஆசிரயமாக விருக்கும் அறுகால் என்று நிரூபித்தது பொருத்த முடையதேயாம். துயர்செய்யும், [(இ-ம்.) திருஷ்

திரவஸ்தானத்திற் சுகமாக வசிப்பவரையும்,] வெகு ரதகசதுரக பதாதிகளோடு நெருங்கிய போராதி சம்பவித்தலிற் பிரவேசிப்பிக்கு மென்பதாயிற்று. இதன் கருத்து, ஆசாபரவசன் அந்தப்புராதியிற் சுகமாக வசிப்பினும் பரநரபதிராச்சியத்தில் வாஞ்சையால் மெலிந்து போராதிதுக்க சாகரத்தில் மூழ்குவனென்பதாம். இப்போது பரமகாருண்ய முடையராய் ஆசாநிவிர்த்தியுபாயமிஃதெனல்: — ஆசையென. மீட்டு மீட்டும் பிரவிருத்தி யேதுவாதலின் விடேசிகையே யாசை, அதனது நிவிருத்தியேதுவாதலின் ஏந்தாத்தியாகமே மந்திரமென்க. சிந்தையற்றால், உலகு = உலகென்னுமக்கட்டு, இடர்போம் = அகிலதுக்கமு நீங்கும். (68)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சர்வதோஷங்களின் மத்தியில் திருஷ்ணை தீர்க்கதுக்கத்தைத் தருவதென் றியம்பப்பட்டது திரப்பெறும் பொருட்டு மீண்டும் திருஷ்ணையை நிந்திக்கின்றார்:—பைந்தொடியென.

பைந்தொடியா ராசைநோய் கெம்பீர மனிதரையும் பதுமந்தன்னை
மூந்திரவிக் கதிர்போது மிளிர்விக்கும் கனவிடியின் முனைகூர் வாளும்
வெந்தவிருப் புப்பொறியு மெனக்கொடிய மனவேட்கை மேருவொத்தோர்
சுந்தரஞானியர்தீரர் சூரரையெல் லாமிமைப் பிற்றுரும்பு செய்யும். (69)

(ப - ரை.) பைந்தொடியார் = அங்கனையார், ஆசை = திருஷ்ணை, நோய் = ரோகார்த்தி, கம்பீரமனிதரையும் = மிகத்தீர வீரராய புருடரையும், பதுமந்தன்னை = அம்புஜத்தை, இரவிக்கதிர்போலும் = உதயமாகி வராநின்ற சூரியனது கிரணங்கள்போலும், மூந்து மிளிர்விக்கும் = விரைவில் உத்தானத்தன்மையை யடைவிக்கும், கனவிடி = வஜ்ஜிர அக்கினியும், முனைகூர்வாளும் = அக்ரபாகத்தில் மிகவும் கூர்மை வாய்ந்த அசிதாரையும், வெந்த விருப்புப்பொறியும் = தப்த அயக்கணங்களும், இல் = அவ்வளவு கொடியனவாகவில்லை, என = என்று சொல்லும்படியாக, மனவேட்கை = இருதயத்தின் கண்ணிருக்கும் இத்திருஷ்ணை, கொடிய = தீக்ஷணமுடையதாம், மேருவொத்தோர் = பொன்மலை போன்றவரையும், சுந்தரஞானியர் = விசேஷப் பிரஞ்ஞையுடையவரையும், தீரர் = திரம்பெற்றவரையும், சூரர் = சௌர்யமுடையவரையும், எல்லாம் = மற்றைய நரோத்தமரையும், இமைப்பில் = நிமிஷமாத்திரத்தில், துரும்பு செய்யும் = திருணீகரிக்கும்; (இத்திருஷ்ணை) (எ-று.) (69)

(ஸ்ரீ - வீர.) உத்தானத்தன்மையாவது, குயமயில் குழவிபால் வெளியாம் குப்புறப் படுத்திருத்தலின்மாறுய சரீரநன்னிலைமையாம். வஜ்ஜிர அக்கினி = அசனிதகனம். அயக்கணங்களின் சுவாலைகளும் எனக்கூட்டுக. ரோகபீடையும், மோக மங்கையும், சோக ஆசையும், கம்பீரதீரவீரரையும், சூரியகிரணங்கள் தாமரையை மலர்த்துவதேபோல விரைவில் அதீரத்தன்மை மேன்மலர்ச்சி யடையுமாறு செய்யும். கெடுக்கவே முடியாத தான இவ்வாசையையும் மகாம்திமான்கள் விவேகமாகிய ஒளிபொருந்திய வாளினாலே கெடுத்துவிடுகிறார்களே! அற்புதம் அற்புதம் இஃதொரு பெரிய சித்திரமாயன்றோ இருக்கின்றது. கூர்மையாய வாளின் முனையும், வச்சிரவொளியும், வெந்த இருப்புப் பொறியினொளியும், இருதயத்தின்கண்ணே யிராநின்ற இவ்வாசையைப்போலக் கூர்மையுடையதல்ல; ஏனெனின், வாளின்முனை முதலியவை வெளியிலிருத்தலினாலே ஒவ்வொரு காலே யநர்த்தத்தைச் செய்யும்; ஆசையோ, இருதயத்தின்கண்ணே யிருத்தலின் எப்போதுமே துயர்தரும்; ஆகையால் அவற்றினின்றும் ஆசையை யதிகமென்றே சொல்லவேண்டும். கவுரவத்தாலே மேருகிரிக் கொப்பானவரையும், மிகுந்த அறிவுடைய

வரையும், சூரரையும், வேண்டாமை யென்னும் விரதத்தானே நிலைபெற்றவரையும், புருடோத்தமரையும், இவ்வொரே யாசையானது ஒரு நொடிப்போதில் துரும்புபோல உபேக்ஷிக்கத்தக்கவராகவும், சஞ்சலமுடையவராகவும் யாசகதைனிய அடைவினனே இருக்குமாறு செய்துவிடும். "துரும்பினுந் தூலமெலிதினு மெலிதாம், விரும்புறு மிரப்போனதனினு மெலியோன், தரம்பெறு வாயுத்தானடித்திலையென், இரும்பெருமெனையு மிரப்பானெனவே" என்றுமன்றே கூறுகின்றார்.

(ச.) நோய் = பீடை, நிமித்தமானரோகமும் = ரோகத்தாலுண்டாய பீடையும், பைந்தொடியார் = மனோகர சர்வ அவயவ தருணியும், சமுத்திரம்போலக் கம்பீரமான புருடரையும் உத்தானத்தன்மையையடைவிப்பார், அதாவதுகிருபணத்தன்மையை யடைவிப்பர். மினிர்வித்தலாவது, அகம்பீரமான கெடுதலைச் செய்தலாம். அதுபோன்றசையும் அடைவிக்கு மென்பதாம், ஆசையே யெல்லாக் கெடுதல்களுக்கும் உபாதானகாரணமாம். கட்கதாரையின் தீக்ஷணமான முனைப்பாகமும், குலிசனது கோடியும், தப்த அயக்கணங்களில் வர்த்தமான வன்னிச்சுவாலை விஸ்புலிங்கங்களும் திருஷ்ணையைப் போலாகாவாம்; திருஷ்ணையானது தாக்ஷண்ய காம்பீர்யாதி குணகணங்களையும் சேதித்து விடுமாகலின் மிகவும் கொடியதாமென்றுணர்க. திருஷ்ணையினது தீக்ஷண்ய அதிசய நிர்வாகப் பொருட்டுத் தைர்ய சௌர்யஸ்தைர்யாதி குணகணங்களை அது சேதிப்பதையே காட்டுகின்றார்:—மேருவென. நரோத்தமரென்றது, நரர்களுள் உத்தமர்என ஏழாம் வேற்றுமைத்தொகையாம், ஆறாம்வேற்றுமைத்தொகை மற்றன்றாம், இலக்கண ஆசிரியராலிகழப் பெற்றிருத்தலின். (69)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் வாளாவங்கெதங்கும் என்பதாதியாய் மேற்கொத்தோர் சுந்தர ஞானியர் என்பதந்தமாய்க் கொண்டு தருமத்தோடுகூடிய லிங்கசரீரத்தை விசேடமாக நிந்தித்துத் தூலசரீரத்தை நிந்திக்கின்றார், அல்லது உள்நோய் வெளிநோய்களாகிய, அநேகவிதக் கிலேசங்கட் கிடமாகியும், ஜரைமரணாதியானே யழிவுறுவதாயும், அபிமானம் ஆசைமுதலியவற்றிற்குக் காரணமாகியும், இராநின்ற தேகத்தை நிந்திக்கின்றார்; நல்லது ஆசை துக்க ஹேதுவாமெனில், ஆருக, ஆயினும், "வாழ்ந்து வளனை வயங்கவே காணும்" என்னும் நியாயத்தால் ஆகத்திற்கே சுகபோகங்களை யனுபவித்தற் கிடனாகி யிருக்குந்தன்மை வெளிப்படையாதலினானும், யாவருக்குமே தேகத்திலதிகப்பிரீதி காணப்படுதலினானும், சுகவேதுவாகலாமே யெனின், அதுவுந்துக்க வேதுவே யாகுமென்கின்றார்:—ஈரித்தவென.

ஈரித்த குடனரம்பாற் செறிந்துபல விகாரியா யிரங்கவாடிப்
பூரித்த வுடல்பிறப்பிற் பொலிந்தாலுந் துன்பத்தின் பொருட்டே யாகும்
பாரித்த சிற்றின்பஞ் சிறுதுன்ப மனுபவிக்கும் பகர்ந்த மெய்போ
னேரிட்ட குணமிலதுந் துயருளது நீசமுமா நிலைவேறுண்டோ. (70)

(ப - ரை.) ஈரித்தகுடல் = மலநீர்களால் நனைந்து தண்மைவாய்ந்த சிறுகுழல் பெருங்குழல் பைகள், முதலியவற்றாலும், நரம்பால் = கோடானு கோடியாயிருக்கும் நரம்புகளாலும், செறிந்து = நிறைக்கப் பெற்று, பல விகாரியாய் = பிறத்தல் முதல், இறத்தல்வரை நாநாவித விகாரத்தை யடைந்து, இரங்கவாடிப் பூரித்தவுடல் = பரிதாபவானாகிச் சுகதுக்கம் வந்து போனபோது மகிழ்ச்சி வாட்டங்களை நிறைய அடைந்துவளரும் சரீரம், பிறப்பில் = சம்சாரத்தில், பொலிந்தாலும் = நன்கொளத் தோற்றியபோதினும், துன்பத்தின் பொருட்டேயாகும் = கேவலந் துக்கத்தின் பொருட்டேயாம்

பாரித்த சிற்றின்பஞ் சிறுதுன்ப மனுபவிக்கும் = கருமஜன்னிய சிறுகாரணங் கொண்டு மிவ்வுலகில் ஆனந்திக்கும் சிறுகாரணங் கொண்டுந் துக்கிக்கும், பகர்ந்த மெய்போல் = மேற் கூறியபடியுள்ள தேகசமமாக, நேரிட்ட குணமிலதும் = குணவிவர்ஜிதத்தோடு கூடியதும், துயருளதும் = சோகிக்கத் தக்கதும், ஈசமும் = தாழ் வுற்றதும், ஆம் நிலை வேறுண்டோ = ஆகிய நிலைமையையுடைய வஸ்து தேகத்தினயலாக உளதோ! இலதா மென்றபடி. (எ-று.) (70)

(ஸ்ரீ - வீர.) செறிதலாவது, மலப்பைகளாலும் ஜலப்பைகளாலும் ஈரல் நுரையீரல் இருதயகமலம் குடல்கள் முதலிய அசுத்த பதார்த்தங்களால் நெருக்கப்பட் டிருக்கு மென்பதாம். பரிதாபவான் = மிகுந்த துயருடையது. பரிபாதவான் எனினும் அமையும். சிரச்சுரைபுனைந்த ஏககோடிக்காயம், குவீணைத்தண்டம்போல விளங்கும். அற்பம் அற்பமே யுலகில் இன்பத்துன்ப மனுகலின் சிறிதெனப்பட்டது. ஈரமாய மலமூத்திராதிகள் நிறைந்த குடல்களோடு கூடியதும், நரம்பினால் நிறைவுற்றதும், அநேக விகார முற்றதும், எங்கும் விழுதல் கழிதல் அழிதல் முதலியவற்றோடு கூடியதும், ஆகிய தேகமிச் சம்சாரத்தி லிலங்குகின்றது; அதுவும் கேவலந் துக்கத்தின் பொருட்டேயாம். அற்ப அன்னபானாதிகளானும் சீத உஷ்ணாதிகளானும், ஆனந்தத்தை யடைகின்றது, துயரத்தையு மடைகின்றது தேகத்திற்குச் சமானமாகச் சோகிக்கத் தக்கதும், அசுசியானதும், குணமில்லாததும் உலகிற் கிடையவே கிடையாது.

(ச) இனிச்சரீரவிசாரம். குடன் முதலிய யாவையுங்கூடிக் கூக்குரலிட்டுக்கொண்டு துயர்ப்படுத்துவதோடும் அறுவகை விகாரத்தோடுங் கூடியதாம், அபாயமிகுந்தது, பிறப்பில் = ஜகத்தில், தாத்காலிக அன்னபானாதி லாபமாத்திரத்தாற் சந்தோஷிக்கும், ஒரு பொழுதலாபத்தாற் கிலேசிக்கும் என்பதாம். (70)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகங்காரமாகிய இல்வாழ்வானுக்கு இல்லமாக நிகழும் இக் காயத்தாலென்னே யெனல்:—அற்பவென.

**அற்பமதாஞ் சுகாசுகத்தி லழுந்துமுட லிலையெனினு மழிவென்றாலு**
**நற்பலமென் னகங்கரனுக் ககமாகிப் பொறிபசுக்க ணாலோ டாறுங்**
**கற்பனைசெய் மனத்தொழும்பு மாசைமனை வியும்வாயாங் கடையுமாங்கே**
**பற்பலபல் லென்புகளாந் தோரணமும் நாக்குரங்கும் பயின்று தோன்றும். ()**

(ப - ரை.) அற்பமதாஞ் சுகாசுகத்தில் = சிறிது சிறிது வாராநின்ற இன்பத்துன்பங்களிலும், அழுந்துமுடல் = சந்தோஷ விஷாதங்களை யடைந்துகொண்டே யிருக்கும் இத்தேகம், நிலையெனினும் அழிவென்றாலும் = ஸ்திரமாயிருப்பினும் அஸ்திரமாயிருப்பினும், நற்பலமென் = நற்பிரயோஜனம்யாது தரும், அகங்கரனுக்கு = அகம்பாவமாகிய இல்வாழ்வானுக்கு, அகமாகி = பெரியவீடாகி, பொறிபசுக்கள் = இந்திரியங்களாகிய பசுக்கள், நாலோடாறும் = கருமேந்திரியபஞ்சகம் ஞானேந்திரியபஞ்சகம் எனப்பட்ட பத்துப்பொறிகளோடும், கற்பனைசெய் மனத்தொழும்பும் = சந்ததம் யாதாவதொன்றைச் சிந்தித்துக்கொண்டேயிருக்கும் சித்தமாகிய பிருத்தியனோடும், ஆசைமனைவியும் = சஞ்சலமான திருஷ்ணையென்னும் இல்லாட்டியோடும், வாயாங்கடையும் = பயங்கரமான வதனத் துவாரத்தோடும், ஆங்கே = அவ்வாயிலின்கண்ணே, பற்பலபல் லென்புகளாந் தோரணமும் = அநேகவிதமான தூர்க்கந்த தந்தஎலும்புகளா லாக்கப்பட்ட பலதோரணங்களோடும், நாக்குரங்கும் = ஜிஹ்வையென்னும் அதிசஞ்சலக்குரங்கோடும், பயின்று தோன்றும் = மிகவிமரிசையாக விளங்கிப்பொலியா நிற்கும். (எ-று.) (71)

(ஸ்ரீ - வீர.) உடல், = களேவரமாம். அகங்காரமே கிருகத்தன், அஸ்திரம் = அழிவு. அசங்கனுகி யிருக்குமெனக்கு இக்களேவரத்தா லாவதென்னே, யாதொன்றுமே யாவதுகிடையாதாம். அக்கிருகத்தில் இருவகையிந்திரிய பஞ்சகங்களும் வரிசைவரிசை யாகக் கட்டப்பட்டிருக்கும் பசுக்களாம். அக்கிருகத்தில் வேலைமிகுதியா லிங்குமங்கும் திரிபவளாவள் திருஷ்ணையேயாய இல்லறக்கிழத்தி. சித்தமேயாய சேவகன் வேண்டிய காரியங்களைச் சாதித்துச் சுகத்தைச் செய்துகொண்டிருப்பதற் கிடமாய்தா மக்கிருகம். உலகத்தில் அடங்காத அநேகபசுக்கள் நிரைநிரையாய்க் கட்டப்பட்டு இடத்தை யடைத் துக்கொண்டிருப்பதும், மற்றையகிருகங்களிற் சென்று சுற்றுவதே வேலையாகவுடைய மனைவியோடு கூடியதும், வேலைக்காரனுக்கே சுகித்தற்கிடமாயிருப்பதும் ஆகியகிருக மானது விவேகிகட் கிட்டமாகமாட்டாது, அவ்வாறே யெனக்கும் தேக மிட்டமாக மாட்டாது. நாவேயாய பெண் கோத்தியாடிக் கொண்டிருக்கும் வக்திரவாயில் பார்ப் பதற்குப் பயங்கரமாக விருக்கும். காணப்பெற்ற பல்லெலும்புத் துண்டங்களே கோர்த் துக் கட்டப்பட்டிருக்கும் மாலையே தோரணமாம். அகங்காரமாகிய இல்வாழ்வோனுக் கித்தேகம் பெரியவீடாம், இதுபூமியில் விழுந்துருண்டபோதினும், நிலைத்தபோதினும் இதனுல் ஹேமுனிவரே ! அடியேனுக் காகவேண்டியதென்னே ! வரிசை வரிசையாகக் கட்டியிராநின்ற இந்திரியங்களாகிய பசுக்களையுடையதும், மீண்டு மீண்டலைவாநின்ற ஆசையாகிய இல்வாழ்க்கைத் துணைவியையுடையதும், அதனுனே காமமாங் காவிக்கன் முதலியவற்றுனே அலங்கரிக்கப்பட்ட முழுமேனியையுடையதும் ஆகிய இத்தேகவீடா னது எனக்கிஷ்டமாகத் தோற்றவில்லை. சித்தமாகிய வேலைக்காரனுற் செய்யப்படும் அநந்தஞ் சேஷ்டையினுலே விழாமற்றடுக்கு முயற்சியுண்டாக இருப்பையுடையதும், பொய்யும் அஞ்ஞானமுமாகிய இருபெருமாதாரத் தூண்கள் தாங்கியதுமாகிய இத்தேக வீட்டை யான்விரும்பேன். நாவாகிய குரங்கைக் கட்டிவைத்திருக்கும் கபாடத்தலை யாய காட்டம்போட்ட பயங்கரமாகிய தலைவாயிலையுடையதும், பிரத்தியக்ஷப் பல்லெலும் புத் துண்டுகளின் றோரணங்களையுடையதும், ஆகிய இத்தேகத்தை யான்விரும்பேன்.

(ச) அகங்காரனென்பவன் உடம்பாதிகளில் நானெனதென்னும் அபிமானமுண்டாய அந்தக்கரணவிசேடமாம். அவனே கிருகஸ்தனென்னும் யஜமானன்; களேவரமித்த சுகதுக்க உபபோகியாயிருத்தலின். இத்தேகம் வீழ்ந்தாலென் வாழ்ந்தாலென், அகங் காரனுக்கிது மகாக்கிருகமாம், ஆகவே அன்னியனது கிருகசிந்தையில் எனக்கு நஷ்டமெ னென் என்பதுபாவமாம். பந்தியாகாரமாகப் பந்திக்கப்பட்ட இந்திரியங்களே பசுக் களாம், பராதீனப் பிரவிருத்தியுடையனவாதலின் இந்திரியங்கள் பசுக்கள் என்னப்பட் டன. சம்பிரமத்தோடுஞ் செல்கின்றபடியினுலே ஆசைமனைவியாம்; திருஷ்ணையின் பரதந்திரமுடையதாதலின் சித்தம்பரவசனுக்கவும் பரிசாரகனுக்வு மிருக்கும். கிருகஸ்தனே அகங்காரன்றுன், அவனை விசேஷணமாகவுடைய ஜீவன்றுன் ஆவனென்றுணர்க. அசுசத்தைத்தருவதும் அருவருக்கத்தக்க அசுத்தமுடையதும் ஆதலின் மசான துல்லியமான தேகக்கிருகத்தில் எனக் கிஷ்டமின்றென்பது கருத்து. (71)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அநித்தியமாய் அத்தியந்தம் அசுத்தமாய் அறிவற்றதாய் அற்பமா யிருக்கும் ஆகத்தில் அபிமானமடைவது யாங்ஙனமென்கின்றுர் :— நிதியென.

நிதியுமரசுஞ் செயலுமிவ்வுடம்பும் வேண்டுவன நிற்கினன்றே
விதியில்வரு காலனுற் சிலநாளிலிவையெலாம் வீந்துபோகும்
உதிரமொடு தசையுடைத்தா யுடைவதியல் பாய்ந்தாழ்ந்தோ ருயர்ந்தேர் ரோர்த்தே
யதிகசராமரணமுறுந் தரமறியா திவ்வுடலி லழ்கென் கொல்லோ. (72)

(ப - ரை.) திதியும் = ஸ்ரீயும், அரசும் = இராஜ்யமும், செயலும் = ஈகையும், நிற்கினன்றே = திரமாயிருந்தாலல்லவா, வேண்டுவன = விரும்பப்படுவனவாகும், இது போல, இவ்வுடம்பும் = இத்தேகமும் நிலையாக இருந்தாலல்லவோ விரும்பப்பெறும். இவை எலாம் = கூறின கூறுதனயாவுமே, சிலநாளில் = சிற்சில போழ்தினுள்ளேயே விதியில் வருகாலனால் = கருமபோக உபரமத்தை யனுசரித்து வாராநின்ற தருமராஜா வால், வீந்துபோகும் = நாசமுற்று இருந்த விடந்தெரியாமற் போய்விடும். உதிர மொடு = இரக்தத்துடன், தசையுடைத்தாய் = பொத்தையூன் மயமாயுள்ளும் புறம்பும், உடைவதியல்பாய் = நாசமாகிய முக்கியதருமத்தை யுடையதாய், தாழ்ந்தோர் = தரித் திரர்கள், உயர்ந்தோர் = போகிகள், ஒத்தே = என்னுமிருவர்பாலுஞ் சமமேயாய், அதிக தரமறியாது = விசேட எற்றத்தாழ்வொன்று முணராதிருப்பதாய், சராமரணமுறும் = ஜரைகாலத்தில் ஜரையையும், மிருதிகாலத்தில் மிருதியையும் அடைவதாயிருக்கும், இவ் வுடலில் = இத்தேகத்தில், அழகென்கொல் = ஹேமகரிவியே! யாதுஇரம்மியத் தன்மையுளது கூறுங்கள். (எ-று.) (72)

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ = தனதானியாதி சம்பத்தி ஈகை = சேஷ்டை தனத்தாற்று னென்? இராச்சியத்தாற்றுனென்? தேகத்தாற்றுனென்? சேஷ்டைகள் மனோரதங் களாற்றுனென்? சிலதினங்களிலேயே காலன் யாவற்றையுமே யழிப்பன். அழிவையே யியற்கையான தருமமாகவுடைத்தாகிய உதிர மாமிசமயமான இத்தேகத்தை யுள்ளும் புறம்பும், ஆராய்ந்து நோக்கின் என்ன இரம்மியமிருக்கின்றது கூறுங்கள். மரண சமயத்தில் எக்காயங்கள் ஜீவனை யனுசரிக்கவில்லையோ, காத்துக் கொழுக்கவைத்த உபகாரத்திற்கு மறுஉபகாரஞ் செய்யாமையின் செய்ந்நன்றி கொன்றனவாய அவைக ளிடத்தில் மதிமான்கட்கு எவ்வாறுபற்றுதலுண்டாகும். ஜரைவரும் போழ்தில் ஜரை யேவரும், மரணகாலத்தில் மரணமேவரும் ஆதலின் போகிதரித்திரர்களின் விசேடத் தை யறியாததாய்ச் சமமாகவே இக்காயமிருக்கும் என்பதாம்.

(ச.) ஈகை = கார்யா (வழக்கா) திக்கனுகூல சேஷ்டை. வீந்துபோகும் = திதியும் அரசாதியும்போற் காயமும் = நைசுவரமாகலின் விசுவசித்தற் குரித்தன்றென்பதாம். அகத்தும் புறத்தும்; உதிரம், இலிங்கபலக்ஷணம், இரத்த தசையாதி மயமுடைத்தாய், அழகென்கொல், இரக்தமாம்சாதிகள் யாவரானுமே மிகவும் அருவருக்கத்தக்க அசுத்த முடையனவாதலின் யாதொரு அழகையுங்காணேம். அழகு = இரம்மியத்தன்மை, தாழ்ந்தோர் = தரித்திரர், உயர்ந்தோர் = போகியர், தரமறியாது = காயமானது தர மறியுமெனின், நிறைந்த போகசாமக்கிரியை யுடையவனை யனுசரித்தே யவ்வனகாயத் தோடும் சிரஞ்சீவியாக விருக்கவேண்டும், தரித்திரன்பால் அதனினும் விபரீதமாக விருக்கவேண்டும். அங்ஙனமின்றுதலின், தரமறியாதென்றதே தகுமென்பதாம். இரக் தமாம்சாதியசுத்தம் நிறைந்ததும் அன்றித் தரமறியாத சரீரத்தில் இரம்மியத்தன்மை யெள்ளளவும் இன்றென்பதாயிற்று. எவ்வளவும் = கிஞ்சித்தும். (72)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்தியந்தம் அநித்தியமாய பொருள்களில் நித்தியபுத்தி யைச் செய்யும் அறியாதவனே இக்காயத்தை நிலையென மருள்வனென்கிறார் :— மின்னென.

(ச-அ-கை.) நிலையில்லாததேயாகு மிக்காயமெனல்.

**மின்னிடத்திற் சரற்கால மேகத்திற் கந்தர்வ வியன்மூ தூரி**
**னன்னிலைமை யெண்ணுவோ னெவனவனே யுடனிலைமைநாடு கிற்போன்**
**மன்னுகிலா தசைந்துபல தொழிற்றரங்கஞ் செறிபிறவி வாரி தன்னி**
**லென்னபிறப் பெய்துகினு மிளமைமிகு துயரத்துக் கேது வாகும்.** (73)

(ப - ரை.) மின்னிடத்தில் = மின்னல்களிடத்திலும், சரற்காலமேகத்தில் = சரற்போதுற்ற வெள்ளிய மேகங்களிலும், கந்தர்வ வியன்மூதூரில் = அற்புதமான கந்தர்வ நகரங்களிலும், நன்னிலைமை = நன்காய திரத்தன்மையை, எவன் = எம்மூடன், எண்ணுவோன் = விசேடநிர்ணயஞ் செய்வனோ, அவன் = அம்மூடனே, உடனிலைமை = விக்கிரக நிக்கிரக மின்மையை, நாடுகிற்போன் = விசுவாசத்தோடு மெண்ணுகிற்பன், மன்னுதலாதசைந்து = நிலைபெறாது சஞ்சலப்பட்டுத் தரளாகரமாய, பலதொழிற் றரங்கஞ்செறி = நானாவிதமான கிரியைகளென்னும் அலைகள்நிரம்பிய, பிறவிவாரிதன்னில் = சம்சாரசாகரத்தில், என்னபிறப்பெய்தினும் = எவ்வகையான உயர்ந்த ஜன்மத்தையடைந்தபோதினும், இளமை = பால்யம், மிகுதுயரத்துக் கேதுவாகும் = கேவலம் பெருந்துன்பத்திற்கே காரணமாகும். (எ-று.) (73)

(ஸ்ரீ - வீர.) விக்கிரகம் = சரீரம். இங்ஙனங் காயத்தை விசேஷமாக நிந்தித்து அதனவஸ்தையை விசேஷமாக நிந்திக்க வேண்டுமென்று முயன்று ஆதியிற் பால்யத்தை நிந்திப்பார், மன்னுஎன்றார். உம்மை இழிவிலாம். தரளாகரம், சஞ்சலாகாரம், பலதொழிற்றரங்கம் செறிபிறவிவாரி = செய்யத்தக்கனவாய இகலோக சம்பந்த பரலோக சம்பந்த பெரும் பெரும் காரியங்களாய தரங்கங்கள் நிறைந்த சமுத்திரமென்றறிக. ஜன்மம் பெற்றபோதினும் வர்த்தமானத்தின் என அத்தியாகாரமாம். பொய்யாயிரா நின்ற அஞ்ஞானத்தின் விகாரமாயும், கனவிற்காணும் நகர்க்கொப்பாயும், "தன்தேகத்திலிஷ்டப்படி யுலவுகின்றனன்" என்னும் மறைப்படி கணமயல் கட்காதாரமாயும் வெட்டவெளியாயழிவை யடைவதாயும் இருத்தலின் இக்காயம் அத்தியந்தம் அசத்தியமாம், இத்தகையதி விச்சையுற லெங்ஙனமேலும். மின்னலின் கண்ணும், சரற்கால மேகத்தினிடத்திலும், கந்தர்வ நகரத்தின் கண்ணும், நன்னிலைமையை நாடுபவனெவனோ அவனே இக்காயத்தின்கண்ணும் நம்பிக்கை வைக்குக. விரைவிற் கெடுவதிற்றன்றிறமையைக் காண்பிக்கும் பொருட்டு வலுவின்முயன்ற பதார்த்தங்களுக்குள் எப்போது மழியுங்காரியக் கூட்டத்தை வெற்றிகொள்வதாய எவ்வெம்மின்னல் சரற்கால மேகம் முதலியனவுளவோ அவற்றினும் வெற்றிபெற்று மேன்மையை யடைந்ததும், நாச ஹேதுவாய் தோஷசாமக்கிரி மிகுத்திருத்தலின் பிரபலதோஷத்தோடு கூடியதும் ஆகிய இக்களேபரத்தைத் துரும்பிற் கொப்பாகத் துச்சபுத்தியினுனே நீக்கி யான் சுகமாக விருக்கின்றேன் என்பதாம். அறியாமை பசிதாகம் நோய் சுசியிலாமை சஞ்சலம் என்பவற்றோடு கூடித் தூடிக்கப்பெறுவதும், விலங்கு பறவைகட்கு ஒப்பாயிருப்பதும் ஆகியபாலியம் நிந்திக்கத்தக்கதா மென்பார், மன்னுதலாதென்றார். அற்றேல், தேகத்திற்குண்டாம் பாலிய அவஸ்தையானது யாவராலும் விரும்பும்படியான மிக இரம்மியமாயிருத்தலின் உடம்பின் எல்லா அவத்தைகளுமே துக்கரூபங்களெனக் கூறுதல் முடியாது; மேலும் "பேரிறையவனும் பெருமறையவனும், சீரிளங்குமரனும் சிறந்தபேரின்பையுற், றூர்தரவுறங்க லெவ்வாறுமோ" என்னுஞ் சுருதியினுனும் பாலியமானது மிகுந்த ஆனந்தத்தோடு கூடியதெனப் பிரதிபாதிக்கப்பட் டிருத்தலினுனே மிகத்துக்கமெனல் எங்ஙனங் கூடுமெனின்? விஸ்தாரமா யது செய்யும் அனர்த்தமிகுதியைக் கூறுகின்றார், எய்தினு மிளமையென, பலவிதமாய்ச் செய்யவேண்டு மென்னும் அபிமானத்தால் அலைந்து கொண்டிருப்பதும், நான்குவித சரீரங்களோடு கூடித் திரமற்ற ஆகாரத்துடன் சஞ்சல இயற்கையுடையதும், ஆகிய சமுசாரசாகரத்தில் மனுடஜன்மங் கிடைத்தபோதினும் "அரியமானுடம் பெறலரிதரி தரிதே" எனமறை கூறலின் மனுடப்பிறவி கிடைப்பதற் கருமையினும் அருமையா யிருந்தபோதினும் பாலியம் கேவலந்துக்கத்தின்

பொருட்டேயாகும். மாலைப்போது வானின்மேகம் பலதிறப்பட்டுப் பொலிதலும், மரண் காலத்தில் நகரம்பொலிதலும் கந்தர்வநகரமா மென்பர்.

(ச.) கந்தர்வநகரமென்பது வியோமத்தில் விசித்திரவர்ணங்களோடு கூடிய பிராசாதாதி (மேன்மாடி கோயின்முதலிய) ரூபமாகப் பரிணமித்துக் கணத்தில் வேறுபடுந் தரணிகிரணமெனப்படும். தரளாகாரமாய் = அஸ்திரசொரூப இயற்கைத்தாய் அநேக கர்த்தவ்ய காரியபரம்பரைகளாகிய தரங்கங்களையுடையதா யிருக்கும் இச்சம்சார சாகர மென்பதாம். (73)

(ஸ்ரீ-வீர-அ-கை.) பதிஞ்ஞைசெய்ததையே விரித்துப் பகர்கின்றார்:—தொலையென.

(ச-அ-கை.) பாலியங் கேவலம் படுதுயர்ப் பொருட்டேயெனப் பட்டது முன்னர், அம்மிகுதுயரத்திற் கேதுவாகுமென்றதனையே வற்புறுத்துவான் வாலிபத்திற் சம்பவிக்கும் துக்கஹேதுக்களைத் தெரிவிக்கின்றார்:—தொலையென.

**தொலைவறுமா பத்தெளிமை சொல்லின்மை மடமாசைத்துவட்சி யெய்தி**
**யுலைவுறுசை சவத்துடனே யுலையியல்பா மனங்கூடி யோத நீரி**
**னலைமடவார் விழியனலின் கொழுந்தொடுமின் னிவைக்கெல்லா மலைவு கற்பித்**
**தலைதலுறு நாய்போல மலமருந்து மற்பத்தான் மகிழும் வாடும்.** (74)

(ப - ரை.) தொலைவறும் ஆபத்து = நீக்கிக்கொள்ள முடியாததான ஆபத்து, எளிமை = அதற்கேதுவான அசக்தி, சொல்லின்மை = அயலாராலும் பரிகாரஞ்செய்வித்துக் கொள்ளமுடியாததான மூகத்தன்மை, மடம் = மூடமதியுடைமை, ஆசை = திருஷ்ணை, துவட்சி = லோலத்தன்மை, கிருத்நுதை, தீனத்தன்மை முதலியவற்றை, எய்தி = பாலியத்திலடைந்து வருந்தும். உலைவுறு = மிகவும் சஞ்சலத்தன்மைவாய்ந்த, சைசவத்துடனே = பாலியத்தோடு, உலையியல்பா மனங்கூடியோத நீரில் = இயல்பாகவே அதிசஞ்சலத்தை யடைந்திராநின்ற சித்தமும் கூடிவிட்டுதேயானால் இயற்றுங் குசாபலத்திற்குக் கணக்கு மோதலுளதோ ; இலதாம். அலை = கல்லோலம், மடவார் விழி = மடமையுற்ற மங்கையர்கண்கள், அனலின்கொழுந்து = சுவாலைமாலை, ஒடு = இவற்றுடன், மின் = மின்னற்கூட்டம், இவைக்கெல்லாம் = கூறிய பொருள்கட்கெல்லாம், அலைவுகற்பித்து = சபலத்தன்மையை யுபதேசித்து, அலைதலுறும் = பாலியமனம் அலைந்தே திரியும், நாய்போல = ஞாளிபோன்று, மலமருந்தும் = பாலன் அமேத்தியத்திலேயே இரமிப்பன், அற்பத்தால் = சிறிது தின்பண்டங் கிடைப்பினும், மகிழும் = சந்தோஷமடைவன், (அதிற்சிறிது கீழேசிந்திவிடினும்) வாடும் = பேரழுகை யுறுவன். (எ-று.) (74)

(ஸ்ரீ - வீர.) திருஷ்ணை = அருத்தமாத்திரவிஷய ஆகாங்க்ஷை. கிருத்நுதை = அர்த்த விசேஷவிஷய அபிகாங்க்ஷையென்னும் லோலுபத்தகைமையாம். மனமும் பாலியமும் மருவின்கெட்ட சஞ்சலத்தன்மையில் அந்தமியாதுள்ளது, ஒன்றுமின்றும், குசாபலத்வத்திற்கு அந்தமே யோதமுடியாதாம். ஓதநீரில் = ஓதவே முடியாதாம் என நீர் என்பது தேற்றத்தை யுணர்த்திற்று. சைசவம் = சிசுத்தன்மை, அதனோடுகூடிய மனம் பேரலைச்சற் கேதுவாமென்க. ஞாளி = சுனகன். சக்தியில்லாமை, ஆபத்து, பக்ஷ்ஞதி விடயங்களில் விருப்பு, பேசமுடியாமை, மூடமதியுடைமை, விளையாடல் குதூகலமாய்த் திரிதலாதியிலாசை, கிடையாவிடிற் றீனத்தன்மை, அதிசஞ்சல முடைமை, என்னுமிவையாவும் பாலியத்தில் நிகழ்கின்றன, கோபம் அழுகை, கொடூரம், தைனியம், இளைப்புமுதலிய தசைகளையும் வேறு அநந்த துர்த்தசைகளையும், பாலியமானது யானை

கட்டுக் கட்டுந் தம்பமிருப்பது போலக் கட்டுமிடமாயிருக்கும். மனதின் சஞ்சல மிகுதியானே துக்கம் மிகுந்துவருதல் வெட்டவெளியேயாம், மனமியல்பாகவே சஞ்சலமானதாம், பாலியமோ அதிசஞ்சலமுடையதாகும், ஆகவே யவ்விரண்டுஞ் சேர்ந்ததனு லுண்டாம், அனர்த்தத்தில் தன்னைக்காப்பாற்றிக் கொள்பவன் யாவன்ருனிருக்கின்ருன். சைசவத்தோடுகூடிய சித்தத்தினின்றும் சஞ்சலத்தை மங்கையர் கண்களும், மின்னற் கூட்டங்களும், சுவாலைமாலைகளும், அலைகளும், கற்றுக்கொள்ளுகின்றன. சைசவமும் மனதும் எப்போதும் சஞ்சலசுபாவங்க ளுடையனவாய்ச் சகல வியாபாரங்களிலுமே சகோதரர்கள்போலவே குறிப்பிக்கப் படுகின்றன. அற்பத்தினுலேயே பாலகன் வயமாகி விடுகின்ருன், அற்பத்திலேயே விகாரத்தையு மடைகின்ருன், மலத்திலேயே இரமிக்கின்ருனுதலின் இப்பாலன் நாய்போலவன்ருே திரிகின்ருன்.

(ச.) ஆபத்து = வாலக்கிரகாதி பீடையும், எளிமை = கடிக்கும் மசகாதிகளைத் தொடைக்குந் திறமின்மையும், சொல்லின்மை = சொல்லுதற்குச் சக்தியின்மையும், மடம் = இதாகித விவேகமின்மையும், ஆசை = தாகமிகுதியும், கிருத்துணை = கண்ட வத்துக்க ளனைத்தினும் வாஞ்சையும், லோலதை = சாபல்யமுடைமையும், தைன்யம்= அதைர்ய முடைமையையும், என்னுமிவைபோன்ற துக்கசாதன மனைத்தும் வாலியத்திற் குடிகொண்டிருக்கும் என்பதாம். கூடின், அவ்வாலியசலனம் எத்தன்மையதாமெனின் கூறுகின்ருர் அலைஎன, அலையாதிகள் உலகத்திற் சலனரூபமென்பது பிரசித்தமாம். அவைகளும் சலனமனதோடுகூடிய பாலியத்தினுலே அப்பியசித்தன என்றதாயிற்று. அலையாதிகட்கு சைசவத்தோடுகூடிய சித்தமே சலனுபதேசத்தில் குருவென மதித்தேன் என்பது கருத்தாம், அற்பவுபகாரத்தாற் சந்தோஷிக்கும் அற்பவபகாரத்தால் கிலேசிக்கும். மலபங்காதியின் கண்ணே கிரீடிக்கும் ஆதலால் பாலியம் நாய்போல் துச்சசுபாவமுடைய தென்பதாம். (74)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் பாலியத்தினது சாபல்யத்தையே விரித்துக் கூறுகின்ருர்:— மண் என.

மண்ணுகரும் விண்மதியை வரவழைக்கு மிம்மடமை மகிழ்ச்சியாமோ
நண்ணுகுரு தாய்தந்தை யுற்ருேர்மூத் தோரெவர்க்கு நடுக்கங் கூரும்
புண்ணுறுசை சவம்பயத்துக் கிடமாகுங் குற்றமெலாம் பொதிந்த கூடா
மெண்ணுமவி வேகவிடன் வாழ்மனையாம் யார்க்குமிதி லின்ப மெய்தா. (75)

(ப - ரை.) மண்ணுகரும் = புவனமுண்ண விழையும், விண்மதியை வரவழைக்கும் = அம்பரத்தில் நின்றும் இந்துவை வரவழைக்க இச்சிக்கும். இம்மடமை = இத்தகைய மூர்க்கத்தன்மையோடு கூடிய பாலியம், மகிழ்ச்சியாமோ = சுகத்தின் பொருட்டு எங்ஙனமாகும்? ஆகாதாம். நண்ணு குரு = கல்விதரவரும் உபாத்தியாயரையும், தாய் தந்தை = ஹிதத்தைவிரும்பும் மாதாபிதாக்களையும், உற்ருேர் = பந்து ஜனங்களையும், மூத்தோர் = வயது முதிர்ந்த பாலகர்களையும் கண்டால், எவர்க்கும் நடுக்கங்கூரும் = கூறியயாவருக்கும் பயந்துநடுங்கும், புண்ணுறு சைசவம்=மனம் புண்படும்படியான பாலியம் பயத்துக்கிடமாகும் = சர்வபயங்களுக்கும் ஸ்தானமாகும், குற்றமெலாம் பொதிந்த கூடாம் = சகலதோஷங்களும் நிரம்பியநீடமாம், எண்ணும் அவிவேகவிடன் = அடையமுடியாத வஸ்துக்களைச் சிந்திக்கும் அவிவேகவிலாசி, வாழ்மனையாம் = இன்புற்றுவாழும் பவனமாம், யார்க்கும் இதில் இன்பம் எய்தா = எத்தகைய பிராணிக்கும் இந்தபாலியத்தில் சந்தோஷமானது உண்டாகமாட்டாது. (75)

(ஸ்ரீ - வீர.) மண்ணுகருமென்றதால் எதனைக் கண்கண்டதோ அதனைத்தின்ன முயலுமென்றதாயிற்று. ஆகாயத்தினின்றும், உப்பு, பச்சைமிளகாய், பச்சைக்கொத்து மல்லி, இஞ்சி, பெருங்காயம், பிஞ்சுமாங்காய், கட்டிதயிர் கலந்து கடுகுமுதலியவற்றால் தாளிக்கப்பெற்று மணம்வீசும் தத்தியோதன கவளமென்னும் எண்ணத்தால் இந்துவை வரவழைக்க முயலும்படியான வாஞ்சையானது எம்மூர்க்கத்தன்மையா லுண்டாகின்றதோ அம்மூர்க்கத்தன்மை வாய்ந்த மௌட்டியாதி அபரபரியாய பால்யம் சுகத்தின் பொருட்டு எங்ஙனமாம்? ஒருபோதுமாகாதென்பதாம். சிசுத்தன்மையோடு கூடியிருக்குங்காலத்தில் வயோதிகபாலர்கள் அடித்துவிடுவார்க ளென்னும் பயம் பிரசித்தமாம். பால்யம் கேவலம் துக்கத்தின் பொருட்டேயாமென பிரதிக்ஞைசெய்து பிரசாதித்ததை உபசம்மரிக்கின்றார், குற்றமெலாம் என. குற்றம், = ராகாதிகள். சகலதோஷதசைகளால் உபத்திரவம் பண்ணப்பட்ட அந்தக்கரணம் அப்பாலியத்திலிருக்கும் அவிவேக விலாசிக்குசுகமாகவாழும் மனையேயாயினும் பாலியம் இச்சம்சாரத்தில் எப்புருடனுக்கும் மிகவும் மகிழ்ச்சியின் பொருட்டு ஆகாதாம். மாறாக அத்தியந்தம் துக்கத்தின் பொருட்டே ஆம். ஒருகால் போஜன இச்சையானே அழும் பாலகனைநோக்கிப் புவனத்தை யுனக்குப் போஜனமாகத் தருகின்றேன் என்னும் வஞ்சகவாக்கியத்தாற் சந்துஷ்டனாகிப் பின்னதையே புசிக்க ஆசைப்பட்டழுவதும், மூர்க்கத்தன்மையினாலே ஆகாயத்திலிருந்தும் நிலவைப்பிடித்து வரவிழைவதும், ஆகியபாலியமானது இன்பப்பொருட் டெங்ஙனமாகும். மனத்திற் குளிர் வெப்ப முதலியவற்றை நீக்கிக்கொள்ள வேண்டுமென்னுமெண்ணமிருந்தும் முடியாமையின் இப்பாலகனுக்கும் மரத்திற்கும் யாதுபேதமிருக்கின்றது. பறவைக்குஞ்சேபோலப் பாலகன் இறகுகளாகிய புயங்களால் எழும்புவதற்கிச்சிக்கின்றனன், பசியோடு கூடியவனாயுள்ளன் நித்தியம் பயாகார பரனாகியேயிருக்கின்றான். தந்தை தாய் ஆசிரியர் மூத்தோர் மற்றையர் முதலியோரால் சைசவத்திற் பயம் இருந்துகொண்டே யிருக்குமாதலிற் சைசவம் பயத்திற்காலயமாம். சகல தோஷதசைகளானே தூஷிக்கப்பட்ட மனத்தையுடையதும், அவிவேகவடிவ தடையிலாமற் சஞ்சரிக்குஞ் சீவனுக்குவீடும், ஆகிய பாலியமானது ஈண்டு எவர்க்குமே இன்பத்தைத் தரத் தகுதியுடையதாகாதாம்.

(ச.) மண்ணுகரும் என்பது உபலக்ஷணம். அன்னியருடைமையாயினும் புசிக்கத் தகாதவையாயினும் அவையனைத்தையும் புசிக்கவாஞ்சிக்கும். விண்மதியை வரவழைக்குமென்றதும் உபலக்ஷணம். வருத்தித்தர பொருத்தமற்றன முடியாதவனைத்தையும் வருத்தித்தர இச்சிக்கும். இம்மடமை = இவ்வறியாமை நிறைந்தபாலியம் எப்படிச் சுகநிமித்தமாமென்பதாம். குற்றமெலாம் = முற்கூறிய தோஷங்களனைத்தாலும் தன்னபிப்பிராயம் விக்கனிக்கப்படு மென்பதாம். பாலியம் யாவருக்குமே சந்தோஷத்தைத்தர சமர்த்த முடையதாகாதாம். (75)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அநேகதோஷ ஆஸ்பதமான பால்யம் துக்கத்தின் பொருட்டாமென்றாலாகுக. யவ்வனமோ ஆற்றலுடைமை படுவாக்குப்பான்மை, முதலிய குணங்களால லங்கரிக்கப்பட்டிருத்தலின் சுகத்தின் பொருட்டாம் எனச்சங்கிப்ப அதனை நிந்திக்கின்றார்: உலோபம் துவேடம், மதம், அசூயை, அபிமானம், மாச்சரியம் முதலியவற்றானே தாடிக்கப்பெற்றதும் காமம்முதலிய அனர்த்தங்களின் இல்லமும் ஆகிய யவ்வனத்தை நிந்திக்கின்றார்: பாலியமானது மிக மூர்க்கத்தன்மையோடும் ஆசையோடும் பரதந்திரத் தோடுங் கூடினமையின் மிகுதுயருக் கேதுவென்பதாக, ஆனபோதிலும் யவ்வனமானது அவ்வாறாகாமையினானும் பலவிதமாய் போகரச ரஞ்சிதத்தன்மையினா

னும் சுகவேதுவேயாகலாமென இச்சிக்கத் தக்கதேயாகுமெனின் யவ்வனம்போல வனர்த்தத்தைக் கொடுப்பது யாதுளதா மென்கின்றார் இப்பருவத்தென.

இப்பருவத் தனர்த்தமகன் றிடரில்வீ ழெவ்வனத்தி லேறி நெஞ்சா
மொப்பரிய பொந்திலுறை காமனெனும் பேயறைய வுள்ளம் வாடுஞ்
செப்பரிய விரிவுடைத்தாய்த் தெளிந்துபரி சுத்தமாய்ச் சிறந்ததேனு
மைப்புயனு ணதிநீர்போன் மதிகலங்கு மெவ்வனத்தின் மயங்கு நாளில். (76)

(ப - ரை.) இப்பருவத்தனர்த்தம் அகன்று = இந்த பாலியபருவத்த னர்த்தங்கள கன்று மிகஆசையுள்ளத்துடன், இடரில் வீழ் = பெருந்துன்பத்தில் வீழ்வதற்காக, எவ் வனத்திலேறி = மகாசம்பிரமத்தோடும் காளைப்பருவத்தில் ஆரோகணித்து, நெஞ்சாம் ஒப்பரிய பொந்திலுறை = தன் மனமாகிய உவமையின்றிய பிலத்துவாரத்திலிருந்து வலு வில் நானாவித விப்பிரமங்களையீந்து வாழும், காமனெனும் பேய் = மன்மதப் பிசா சானது, அறைய = ஓங்கிவலுத்த அடிகொடுக்க, உள்ளம் வாடும் = மனம் பரவசமாய்த் துயருறும், செப்பரிய விரிவுடைத்தாய் = சொல்லுதற்கரிய விஸ்தீரணமாகி, தெளிந்து = பிரசன்னமாகி, பரிசுத்தமாய் = பாவனமாகி, சிறந்ததேனும் = விசேடித்திருந்த போதினும், மைப்புயனுள் = கார்மேகநிறைந்த மழைகாலத்தில், நதிநீர்போல் = ஆற் றில் ஓடிவரும் வெள்ளநீர்க்குச் சமானமாக, மதிகலங்கும் = புத்தி கலக்கத்தையடையும். யவ்வனத்தில் = இத்தகைய தாருண்யப்பருவத்தில், மயங்குநாளில் = மயலுற்றிருக்கும் போது. (எ-று.) (76)

(ஸ்ரீ - வீர.) ஆசையுள்ளத்துடன் = காமாதிகளாலே உபத்திரவம் பண்ணப்பட்ட அந்தக்கரணத்துடன். வீழ்வதற்காக யவ்வனத்தினின்று மெனச்சேர்க்க. தன்மனப் பொந்தினுள்ளே தனித்திருந் தினிதுவாழும் பன்மயல்மிகவுமீயும் பட்ர்மூலமோகப் பேயால் அடிபட்டுமாயும். விஸ்தீர்ணம் = வெகுபொருள்களைக்காண்பிப்பதாம். கலங் கும் = அப்பிரசன்னமாம். பாலிய அனர்த்தத்தை விடுத்து போக உற்சாக மயக்கத்தா னும் மேற்கூறப்படும் காமப்பேய் முதலியவற்றானும் கெடுக்கப்பட்ட மனத்தையுடையவ னாகிய புருடன் இடர்ப்படும் பொருட்டு யவ்வனத்தி லேறுகின்றான். பதினாறுவருட மென் மாண்டவ்யமகரிஷியால் பால்யம் எல்லையிடப்பட் டிருத்தலின் அத்தகையபாலி யம் இடர்ப்பொருட்டாகாதாம். யவ்வனமோ இடர்ப்பொருட்டேயாம். யவ்வனத்தில் மூர்க்கனானவன் அனந்த விலாசத்தோடு (சேட்டையோடு) கூடிச் சஞ்சலமாயிராநின்ற தனது மனதின் இராகத்துவேஷாதி பரிணாமங்களை யனுபவித்து ஒரு துயரினின்றும் மற்றொருதுயரை யடைந்துகொண்டே யிருக்கின்றான். தனது மனதாகிய துளையுட் புகுந்து நானாவித சம்பிரமங்களைச் செய்துகொண்டிருக்கும் காமப்பேயினாலே பலாத் காரமாய்த் தன்வயமற்றவனாகி விவேகத்தைவிட்டு அதன் வயப்படுகின்றான். இதனானே சுதந்தரமின்றிய மனமானது தருணிகளைப் போலுஞ் சஞ்சல வியற்கைவாய்ந்த சிந்தை கட்கு நிதிமுதலியவற்றைக் காணும்பொருட்டுக் குழந்தைகளின் கையிற்கொடுத்த சித்தாஞ்சனமானது சஞ்சல வியற்கைவாய்ந்த அவர்கள் விழியொளிகட்குத் தடையிடா மல் பூமிசிலை முதலிய மறைப்பையகற்றி இஷ்டப்படி நிதியைக்காணும்படி ஆற்றலைச் செய்விப்பதே போலத் தடையிலாம விட்டப்படி சுழலவழிதரும். யவ்வனத்தில் உள்ள மானது தோடத்தைக் கெடுத்தலானே நிர்மலமா யிருந்தபோதினும் உதாரத்தன்மை யானே விஸ்தீரணமா யிருந்தபோதினும் குணத்தைத் தருதலானே புனிதமா யிருந்த போதினும் இன்னும் தண்மை இனிமை முதலியவற்றோடு கூடியிருந்தபோதினும் மாரி

காலத்தில் தெளிந்த நதியானது கலக்கத்தை யடைவதேபோலக் கலக்கத்தை யடையும்.

(ச.) இடரின் வீழ் = மனோரதம் கெடுக்கப்பட்டுத் துன்பத்தினுல் தன் தருமம் இழந்து போதலாம், ஒப்பரிய = அளவற்ற பிரமங்களைத் தாராநின்ற காமமெனும்பேய், விரிவுடைத்தாய் = வித்தியாப்பியாசத்தால் விஸ்தீரணமாய், தெளிந்து = குருசேவையால் பிரசன்னமாய், அதாவது நிர்மலமாய், பரிசுத்தமாய் = புண்ணிய க்கியால் பாவனமாய். (76)

(ஸ்ரீ-வீர-அ-கை.) யவ்வனத்தி லுண்டாம் அனர்த்தங்களையே வருணிக்கின்றார் கருத்தென.

கருத்தெனுமான் மருண்டோடி விடயமெனுங் குழியில்விழக் காயமென்னு
மருத்தலத்தி லெவ்வனமாங் கடுங்கான லெழுந்துமிக வளராநிற்கும்
பெருத்ததுய ரிளமைநல மெவ்வளவுண் டவ்வளவும் பெருகாநிற்கு
மருத்திகளு மெவ்வன மவ்வளவும் விரைந்தெழுந்து மிகவனர்த்தஞ் செய்யும்.()

(ப - ரை.) கருத்தெனுமான் = மனோமிருகம், மருண்டோடி = மயங்கியோடி, விஷயமெனுங் குழியில் = சப்தாதி அவடத்தில், விழ = வீழும்படியாக, காயமென்னும் = சரீரமாகிய, மருத்தலத்தில் = மருப்பூமியில், எவ்வனமாம் கடுங்கானல் = தாருண்யமாம் கொடுந்தாபத் தாங்கானனீர், எழுந்து = உதித்து, மிகவளரா நிற்கும் = அதிகமாய் விருத்தியாம், இளமை நலம் = யவ்வனமானது விருத்தியாதல், எவ்வளவுண்டு = எது காலபரியந்தமாமோ. அவ்வளவும் = அதுகால பரியந்தமும், பெருத்த துயர் = பெருந்துன்பத்தை யீயும், அருத்திகளும் = காமாதிகளும், பெருகா நிற்கும் = வளர்ந்து செல்லும், சென்று, எவ்வனம் அவ்வளவும் = தாருண்ய மிருக்கும் பரியந்தம், விரைந்தெழுந்து = வேகமாக ஆரப்பரித்து, மிக அனர்த்தஞ்செய்யும் = கேவலம் நாசத்தையே செய்யாநிற்கும். (எ-று.) (77)

(ஸ்ரீ-வீர.) சரீரமே மருப்பூமியாம் ஆண்டுக் காலமனுக்கிரகித்த வைசுவானர தாபத்தால் உற்பன்னமான யவ்வனப்பேய்த்தேர் என்பதாம்: யவ்வனமே கானல்நீர் என்பது திரண்டபொருளாம். அவடம் = படுபள்ளம், யவ்வனத்தினது பிராரம்பத்தில் தோஷம் கூறி அபிவிருத்தியின் கண் அதைக் கூறுகின்றார், எவ்வளவு உண்டென, யவ்வனமானது எவ்வளவுகாலம் எத்துணை உயர்ந்து விரிந்து பெரிதாகுமோ, அவ்வளவுத் தவ்வளவு மேன்மேலாகக் காமஜன்னிய ஜ்வரமும், காமங்களும், காமிகளும், அபிவிருத்தியடைந்து கொண்டே போவார்கள். காயமாகிய மருப்பூமியில் காமவெயிலா லுண்டாகித் தோற்றுநின்ற யவ்வனமாகிய கடிய கானனீரைக் கண்டோடி மனமாகிய மானனது விஷயப் படுகுழியில் வீழும்; எக்காலெக்கால் யவ்வனமாது உயர்ந்த நிலையை அடைகின்றதோ அக்காலக்கால் சந்தாபத்தோடு கூடியகாமங்கள் கேவலம் நாசப்பொருட்டே விருத்தியடைகின்றன.

(ச.) காயமே தாபமிகுந்த நிர்ஜல மருத்தேயமாம் அதனினின் றெழுந்த யவ்வனமேயாய கானல் நீரைநோக்கி விவேக மின்மையினுலே அதிவேகமாக ஓடி மனோமிருகங்கள் விடயப் படுகுழியில் வீழ்ந்து மடியும். இதனுல் பரஸ்பரம் யவ்வன மங்கையிடத்து யவ்வனனுக்கும் யவ்வனனிடத்தில் யவ்வனிக்கும் மாறி ஆங்காங்கு தோற்றுநின்ற யவ்வனமானது கானல் நீர்போல் மயக்கவேது வாதலால் துக்கவேது வாமெனத் தெரிவித்தா மென்றுணர்க. சொந்தமான யவ்வனத்திற் கிருப்பிடமாதலின் கான

லென்பது பொருந்தாமையானும் கருத்தெனும் மானுக்கு மதித்தோடல் முடியாமை யானும் கூறியவண்ணம் பொருள்கொள்க. பெருத்ததுயர், அருத்திகள் = சந்தாப சகிதமனோ ரதங்களாம். (77)

(ஸ்ரீ-வீர-அ-கை.) இவ்வண்ணம் யவ்வன் தோஷங்களைச் செவ்வையாய்ப் பகர்ந்து அதனாலுண்டாய காமாதியால் இகபரங்களில் துக்கபீஜம் சம்பாதித்து அதனினின் றும் கடந்து சென்றோரை, அதனைக்கடப்பதில் பெருமுயற்சி செய்யவேண்டும் முமுக்ஷுவால் என்று காண்பிக்கும் பொருட்டுத் தோத்திரிக்கின்றார் எத்திற என.

எத்திறத்தோ ரெவ்வனமா மிடையூற்றைக் கடந்தெளிதி னேறவல்லோ
ரத்திறத்தோரே புருடரவர்களே தொழற்குரியோ ரவரேசான்றோர்
மெய்த்திறத்தோர் சேரிடமாய் விநயநிதி படைத்தருளால் விளங்காநிற்குஞ்
சுத்தகுண வெவ்வனமிவ் வுலகிலுளதோ விசும்பிற் சூழ்காடுண்டோ (78)

(ப - ரை.) எத்திறத்தோர் = எத்தன்மையர், எவ்வனமாமிடையூற்றை = தாருண்ய சங்கடத்தை, கடந்தெளிதின் ஏறவல்லோர் = சுகமாக நன்கு உத்தீரணஞ்செய்து கரையேற ஆற்றலுற்றவராவரோ, அத்திறத்தோரே = அத்தன்மையரே, புருடர் = நரோத்தமர், அவர்களே தொழற்குரியோர் = அப்பெரியோர்களே போற்றி வாழ்த்தற் குரியவர், அவரேசான்றோர் = அப்புருடோத்தமரே இவ்வுலகில் மகாத்மாக்களெனப் படுவர், மெய்த்திறத்தோர் சேரிடமாய் = ஆரியஜனங்க ளடைதற்காஸ்பதமாய், விநய நிதி படைத்து = விநயபூஷிதமாய், அருளால் விளங்காநிற்கும் = கருணையால் உஜ்வல மாகியோங்கும், சுத்தகுண வெவ்வனம் = கல்யாண குணங்களா லலங்கரிக்கப்பட்ட தாருண்யம், இவ்வுலகிலுளதோ = இச்சகத்தில் எளிதாயுளதாமோ ? ஆகாதரிதேயாம், விசும்பிற் சூழ்காடுண்டோ — அம்பரத்தில் தருநிறை கானனம் கண்டது முண்டு கொல் ? (எ-று.) (78)

(ஸ்ரீ - வீர.) யவ்வனம் தோஷாஸ் பதமெனச் சொல்லி குணமற்றதுமா மெனக் கூறுவார் மெய்த்திற மென்றார். யாவர் கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, பிறர்மனை நயவாமை முதலியவற்றை விடாமற் சுகமாக யவ்வன சங்கடத்தினின்றும் ஏறவல்லரோ இவ்வுலகில் அவரே தொழற்குரியோர், அவரே புருடர் அவரே சான்றோராவார். பெரும் பெரும் முதலைகட்கு வாசஸ்தானமாம் பெருங்கடல் தாண்டுதற்கெளியதாகும். ஆனால் இராக முதலிய அலைகளின் வலுவான உல்லாசத்தோடுற்றதும் இகழத்தக்கதும், தோடத்தோடு கூடியதும் ஆகிய யவ்வனக் கடலைத் தாண்டல் அரிதினும் அரிதாம் இவ்வாறுயின் பாலியமும் விருத்தாவஸ்தையும் மூர்க்கத் தனத்தினாலும் முடியாமையா னும் புருடார்த்த சாதன மாகாமையின் யவ்வனமும் அநேகதோடத்தோடு கூடி யிருத்தலின் ஒருகாலத்திலும் புருடனுக்குச் சாதன மடைவினனே புருடார்த்தத்தின் பொருட்டாசை செய்யமுடியவே மாட்டாதன்றோ வென்றுசங்கிப்பின் எல்லாயவ்வனத் தையும் யானிகழவில்லை, மற்றோ; கெட்டயவ்வனத்தையே யாகும்; நல்ல யவ்வனமோ புருடார்த்தத்தையே கொடுக்கும், விநயத்தினு லலங்காிக்கப்பட்டதும், புகழத்தக்க முனிவர்பா லிருப்பதும், சாதுக்களின் வாசஸ்தானம்போல இளைப்பாறுதலைத் தருவ தும், கருணையானே சுவின்வாய்ந் திலங்குவதும், சாந்தி தாந்தியாதி குணங்களானே பிரகாசிப்பதும் ஆகிய நல்லயவ்வனம் இவ்விலக்கணத்துடன் இவ்வுலகிற் கிடைப்பது அரிதன்றோ; எனெனின், பறவைகளாற் சூழப்பெற்ற கற்பகத்தருக்கள் நிறைந்தலங்கரிக் கப்பட்டதும் தேவதைகட் கிடமாயும் அதனானே தயையின்றிப் பிரகாசிப்பதும், பலம்,

புஷ்பம்? ஐசுவர்யம், முதலியவற்றானும், கற்பகக்கொடி முதலிய குணங்களானும் சூழப் பெற்றதும் ஆகிய ஆகாய நந்தனவனமானது இவ்வுலகின்கண்ணே மிகவுந் துர்லப மன்றோ? இந்நந்தன வனத்தைப்போல இம்மனுடஜன்மத்திலும் கூறிய யவ்வனங் கிடைப்பதரிதாயின் பிறவிடத்தி லின்றெனக் கூறவும் வேண்டுமோ. (78)

(ஸ்ரீ - வீர-அ - கை.) யவ்வனனுக்கு ஸ்திரீவாயிலாகப் பெரும்பான்மையும் அனர்த்தம் வந்து சேர்தலின் அதனை நிந்தித்தபின்னர் அதன் அனர்த்த காரணத்துவாரமாய ஸ்திரீயை நிந்திக்கின்றார்: பிரத்தியக்ஷ நரகக்கூட்டங்களா லுண்டாக்கப்பட்ட சர்வ அங்கங்களை யுடையவர்களும் புருடர்கட்கு நரகத்தையும் ஜன்மத்தையும் எப்போதும் கொடுத்துக் கொண்டே யிருப்பவர்களும் ஆகிய மங்கையர்கள் நிந்திக்கத் தக்கவர்களே யாவர்கள் என்கின்றார்: எந்தஸ்திரீ பிண்டத்தில் காளையர்களுக்கு ரமணீயத்தன்மை புத்தியுண்டாகின்றதோ அதன் சொரூபத்தைப் பிரித்துத் தெரிவிக்கின்றார்:— சந்துறு என.

சந்துறு நாம்போ டென்பு தசைசெறி பாவையொப்பா
ரெந்திரத் தியங்குமங்க பஞ்சரத் தினிமை யென்னே
கந்தமென் குழலார் கண்ணிற்றோறசை கண்ணீர் புண்ணீர்
சிந்தையிற் பிரித்து நோக்கிற் சீரிதேன் மோகஞ்செய்வாம் (79)

(ப - ரை.) சந்துறு = பொருத்துற்ற, நரம்போடென்பு தசைசெறி = சுனுப், அஸ்தி, மாம்சம் நிறைந்த, பாவை யொப்பார் = பதுமைக்குச் சமானமான, எந்திரத்தியங்கும் = எந்திரலோலமா யிலங்கும், அங்கபஞ்சரத்து = சரீரபஞ்சரத்தில், இனிமை யென்னே = சோபனம் யாதுளது, கந்தமென் குழலார் = தகரமையூட்டி நறுமணம் நாறும் மெல்லிய கருங்கூந்தலார்தம், கண்ணில் = நேத்திரத்தில், தோல்தசை = தொக்கு மாமிசம், புண்ணீர் கண்ணீர் = ரக்தம் பாஷ்பநீர் என, சிந்தையிற் பிரித்து நோக்கில் = கருத்தின் கண்ணே பகுத்துக் காண்போமாயின், சீரிதேல் = ரம்மியமாகத் தோற்றுமாயின், மோகம் செய்வாம் = மயக்கத்தையடைவாம். (எ-று.) (79)

(ஸ்ரீ - வீர.) பதுமை = ஆடையாபரணம் தரித்தபதுமை யென்க, வஸ்திராதி நிர்மித பதுமைபோலும், மாமிசாதி நிர்மித இப்பதுமை நரம்புகளாற் கட்டப்பட்டு நடிக்கும். நரம்புகளாலும் என்புகளாலும் மாம்சக் கிரந்திகளாலும் சோபிக்கும், தோகையின் ஜல எந்திராதிபோலச் சஞ்சலமான அங்கபீடத்தில் அழகென் கொலென்பதாம். நரம்புகளின் எலும்புகளின் கிரந்திகளினுனு மெனினுமமையும், அற்றேல் மங்கையர்தம் விழிகள் சஞ்சலத்துடன் கருங்குவளையொத்து அதிரமணீயங்களாகி யிருக்கின்றன, ஸ்தனியங்களோ புரளாநின்ற வெள்ளிய முத்து ஹாரங்களோடு கூடிக் கனககலசங்கள் போலத் திரண்டு விளங்கி மனத்தையிழுக்கின்றன, இவ்வாறிருக்க அம்மங்கையர்தம் மங்கபஞ்சரத்தில் இனிமை யென்னே யென எங்ஙனமாக்ஷேபித்தல் கூடுமெனச் சங்கிப்பப் பரிகரிக்கின்றார்:—கந்த மென்னென. சுகந்தம் ஆங்காங்கு அவயவங்களிற் சேர்க்கப் பெறுதலினலே இயல்பா யங்கமுழுவதும் துர்க்கந்தமயமா மென்பது விளங்கும். பாஷ்பம்=விழியிலொழுகும் கழிநீராம். தோன்மாங்கிசாதி சமூகவடிவமேயன்றோ லோசனம், அது உணர்விலி திருஷ்டியால் இரம்மியமாகுமாயின், தோன்முதலிய வற்றைத் தனித்துப் பிரித்து ஒவ்வறிவான் நன்கர்லோசனைசெய்து பார்க்கட்டும் அப்போது லோசனம் சோபனமாகின்றதா பார்ப்போம் வாளா மோகிக்கின்றனன். நரம்பு எலும்பு பருத்த முடிச்சுகளோடு விளங்கும் மாம்சமயப் பாவைபோன்ற மங்கையரின் யந்திரங்க

ளாகிய சக்கிரமுதலியவற்றைப்போலச் சந்ததஞ்சுழலும் சரீரக்கூண்டில், இரமணீய மதியைச் செய்கின்றனரே இஃதென்னே, யாதொன்றையுங் காணேமே. இதன் விஸ்தாரத்தைப் பின் பார்ப்போம்; முதலில் காலைகட்கு எதன்கண்ணே நேத்திரமயக்க மாமோ அதை யாராயின் அமங்கலமாகத்தானன்றோ வுளது; தோல் மாம்சம் புண்ணீர் கண்ணீர் என்பவற்றைப் பிரித்து நோக்கின், நோக்கமானது இனிதாகத் தோற்றும் பக்ஷத்தில் மோகிப்பாம், அல்லாக்கால் என் வீணாய் மோகிக்கவேண்டும். இதுமயிர் இது இரத்தம் என்னும் இவைதாமே பிரியகாதலியின் காரச்சரீரம்; இகழத்தக்க இதனுனே விவேக விஸ்தீர்ணமதியுடையவர்க் காகவேண்டுவதென்னே.

(ச.) மாமிசாதி கற்பிதப்பதுமை, நரம்புகளாலுஞ் சூக்குமமான கிருமிகளாலும் எலும்புகளாலும் மாம்சபிண்டங்களாலும் சேர்க்கப்பெற்றதாம், பெற்றதே பெண்ணும். யந்திரலோல = யந்திரம் = சேர்க்கை விசேஷமாம், அதனாற் சஞ்சலமான, அங்கபஞ்சரத்தில் = அவயவக்கூட்ட விசேஷத்தில், இனிமையென்னே, ஒன்றுமேயின்றாமென்க. விலோசனம் இரம்மியமாயின் தோன்முதலியவற்றை வேறுபிரித்துப் பகுத்துநோக்குக என்னதானிரம்மியமென எண்ணியாராய்க, ஆராயின் தோன்முதலியவை யுக்தமாதலினாலும், அவைகளுக்கு வேறாகக் கண்ணின்மையினாலும், அற்பமும் இரம்மியஞ் சேடித்த தின்றென்பது கருத்தாம். (79)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அடிக்கடி கஸ்தூரி புனுகு சவ்வாது சந்தனம் முதலியவற்றைப் பூசி வாசனைகளானே மினுமினுக்கும் குயக்குன்றங்களைக் கழுகு குள்ளநரி முதலியவை கொத்தியிழுத்துப் புரட்டுகின்றன வென்கின்றார்:—மேருவென.

மேருவின் குவட்டின் வீழும் விரிதிரைக் கங்கை நீர்போ
லாரமுற் றிலங்குகின்ற வணியிழை மடவார் கொங்கை
யூரயன் மயானந் தன்னி லுற்றபோ தருண்டைச் சோற்றி
னேருறு கவளம் போல நிரைநிரை நாய்க டுய்க்கும். (80)

(ப - ரை.) மேருவின் குவட்டின் வீழும் = மேரு சிருங்க தடவுல்லாசியாய், விரிதிரை = விஸ்தாரமான தரங்கங்களோடுகூடி விளங்கும், கங்கைநீர்போல் = ஸ்ரீபாகீரதியின் பிரவாகம்போல. ஆரமுற்றிலங்குகின்ற = முத்துமாலை முத்தமிட்டு விளையாடும்படியாக விளங்கும், அணியிழை மடவார்கொங்கை = அநேக ஆபரணங்களைத்தரித்து வருத்தும் மங்கையர் கொங்கைகள், ஊரயன் மயானந்தன்னில் = கிராமத்தின் வெளியேயிருக்கும் மயானங்களிலும் திக்கந்தங்களிலும், உற்றபோது = பிணத்தைக் கொண்டு போய்ப் போட்டுவிட்டபோது, உருண்டைச் சோற்றில் நேருறு = உருண்டையாகத் திரட்டி அன்னத்தாலாக்கப்பட்ட, கவளம்போல = லகுபிண்டம்போல, நிரை நிரை = வரிசை வரிசையாக, நாய்கடுய்க்கும் = நாய் முதலியவை பிடுங்கித்தின்னும். எ-று. (80)

(ஸ்ரீ - வீர.) எத்தனத்தின்கண் முத்துமாலையின் உல்லாசசாலித்தன்மையானது, மேருசிருங்க தடவுல்லாசி ஸ்ரீ கங்கையின் பிரவாகம்போன்றதாகக் கண்டதாமோ அந்தலலையின்றனமே திக்கந்தங்களிலும் ஸ்மசானங்களிலும் அன்னத்தில் லகுபிண்டம் போலக் காலத்தில் ஞாளிகளாலே தின்னப்படும் எனத் திரண்ட பொருளாம். மேருகிரி முடியிடத்தில் மிளிர்கின்ற தன்மைபற்றி மேருசிங்க தடவுல்லாசி யென்றதாம். அல்லது மேருகிரியினது சிருங்கத்திடத்தில் குதித்துக்கொந்தளித்து விளையாடிக் கொண்டுவரும் ஸ்ரீகங்கையினது தீர்த்தத்தின் வேகத்தோடுவமையுற்ற உல்லாசமாய் முலைமேற் குதித்துருண்டு சோபிக்கும் பான்மையெனினும் அமையும். பொன்மலையின்

கொடுமுடியினின்றும் பெருகி யுல்லாசமாய் வரும் விரிதிரைக் கங்கைப் பிரவாகம்போல முத்துமாலையானது கிடந்து புரளு முல்லாசத்தோடுகூடிய மங்கையரின் மலைமுலைகள் யாவை காணப்பட்டனவோ அவையே மயானங்கடோறும் திசைதிசைகளில் அதிவிரைவில் நாய்களானே சோற்றுச் சிறுபிண்டம்போல மிகவு முருசியாகப் பட்சிக்கப்படும்.

(ச.) எம்மங்கையின் குயமேல் முத்தார உல்லாச சாலித்தன்மையாங் காந்திசாலித்தன்மை (ஆகிருதியன்றும்.) மேருசிங்கத் தடவுல்லாசியாய ஸ்ரீகங்காஜலப்பிரவாக சதிருசம் காணப்பெற்றதோ அதுவே காலாந்தரத்தில் மசானங்களில் ஓதனபிண்டம்போல் விரைவில் நாய்களால் பக்ஷிக்கப்படும். நாய்களாற் பக்ஷிக்கப்படும் மாம்சக்கிரந்தியில் ரம்மியத்துவமென் என்பது கருத்தாம். (80)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நாரியர்கள் மகத்தான பாபரூபங்களென்கின்றார்:—மேவுவென.

மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாதரொனுங்கனற் றிருணம் போல
யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத்தீக்குப்
பாவையர் குளிர்ந்தமேனி பசையிலா விறக தாமே. (81)

(ப - ரை.) மேவுதற்கரிதாய்=பரிசிக்கமுடியாதவராய், கேசம்புகையதாய் கேசகஜ்ஜல தாரியராய், விழிக்குநன்காய்=லோசனப்பிரியராய், தீவினைச்சிகைசேர்=துஷ்கிருத அக்கினிச்சிகை வடிவஞ்சேர்ந்தவராய் ஒளிராநின்ற, மாதரெனுங்கனல் = நாரியரென்னும் எழுநா, திருணம்போல் = துரும்புக்குச் சமானமாய், யாவரைச்சுடாது = எந்நரரைத் தகிக்கமாட்டாது, தூரத்தெரிகின்ற நரகத்தீக்கு = அதிதூரத்தில் ஜ்வாலைவிட்டெரியும் நரகாக்கினிகளுக்கு, பாவையர் குளிர்ந்த மேனி = ஸ்திரீகளின் சரசசரீரமானது, பசையிலா விறகதாமே = நீரச இந்தனமாகும். (81)

(ஸ்ரீ - வீர.) கேசமே கஜ்ஜலமென்னும் மையாம் அதைத்தரித்தவரென்பதாம்; எனவே மிகுதியும் துயரம் தருபவ ரென்றதாயிற்று. தீண்டமுடியாத பாபமேயாய அக்கினியின் ஜ்வாலைபோன்றிருப்பர். அரிவையர் மிகவும் ஜொலிக்கும் நரகாக்கினிக்கு சாருதாருணமான இந்தனமாயிருப்பர். சாருசப்தத்தால் அற்புதத்தன்மை ஈண்டியம்ப விழைந்ததாம், தாருணம் = பயங்கரம். ஸ்திரீகட்கு சாரு இந்தனீபாவம் சாதிப்பான் விசேஷணமாம். சரசராயினும் நீரசராவர். ரசம் = சாரம். பிராந்ததிருஷ்டியினாலே ரசத்தோடு கூடியவராயினும் அதற்கயல் திருட்டியினாலே நிஸ்ஸாரநீரசமாவர். ரசசப்தத்தால் நெகிழ்ச்சியும் நிகழ்த்தப்படும். இந்தனமானது உலகத்தில் ரசமுற்றதாகவேனும் ரசமற்றதாகவேனும் உண்டாம். உபயவடிவமாய் உண்டாவதின்றும். ஸ்திரீகளோ சரசராயினும் நீரசராயிருத்தலின் சாரு இந்தனமாவர். தூரத்திலிருந்தபோதினும் நரக லக்ஷண அக்கினியை மிகச் சொலிக்கச் செய்தலாலும் சாருவிந்தனமும் தாருணவிந்தனமுமாவர்கள். கூந்தலாகியமையைத் தரித்தவரும் தீண்டத்தகாதவரும், கண்ணிற்கு மாத்திரம் அழகாயிருப்பவரும் ஆகிய தீவினைச்சுடர் சுவாலையா மங்கையர் மனுடனைக் காய்ந்த துரும்பிற் கொப்பாகக் கொளுத்துகின்றனர். அதிதூரத்திலிருக்கும் நம்முனர் புரியிற் கொரேமாயெரியும் நரகாக்கினிக்கும் மங்கையரிங்குள்ளவராயினும் காய்ந்த கட்டையா யிருக்கின்றனரென்னும் காரியகாரணத்தால் இரசத்தோடு கூடியவராயினும் இரசமற்றவரே யாவர்; துஷ்டவாசனையோடு கூடி யிருத்தலின் பார்வைக்குரசத்தோடு கூடியவராயினும் உண்மையில் இரசமற்றவரேயாவர், பார்வைக்கழகா யிருப்பவராயினும், பயனுங்காற் பாவமயமேயாவர்.

(ச.) லோசனகாந்தியர் பாபரூபவன்னியின் ஜ்வாலைபோன்றவர், நாரது பூரபகன் மங்களே காரீரூபமாக ஜ்வலித்துச் சந்தாபுப்படுத்துமென்பது பொருளாம். ஸ்லோசனப் பிரியர் என்னும் பாடத்தில் நாரிபக்ஷத்தில் சௌந்தர்யாதிசயத்தாற் றிருஷ்டிப்பிரியர் எனப் பொருள்கொள்க. அக்கினிச்சிகைப் பக்ஷத்திலோ நயனசககாரிகள் என்பது பொருளாம். குளிர்ந்தமேனி தேகத்தின் ரசதாதுக்களின் சாஹித்தியத்தாலாம். பசை யில்லாமையோ அவர் மனத்தில் நிர்த்தயையிருத்தலின் என்க. சாருத்தன்மை மனோகரத் தன்மையாலாம். தாருணத்தன்மைபய ஹேதுத்தன்மையாலாம். (81)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மாதர்வலைக்கும் தூண்டிலிரைக்கு மொப்பாரென்கின்றார்;— மாமடமென.

மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பிடிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சேறார் சன்மச் சிறுகுழி மீனு மாந்தர்க்
கேமவா தனைக்கயிற்றுத் தூண்டிலுக் கிரையு மொப்பார். (82)

(ப - ரை.) மாமடம் செறிந்த நெஞ்சின் = பெரிதும் அறியாமையுற்ற மனத்தோடு கூடிய, மனிதராம்புள் = நரவிகங்கங்களை, பிடிக்க = அகப்படுத்த, காமனும்வேடன் = மன்மதனென்னப் பெயரியகிராதன், வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர் = நீலோற்பலம்போலும் விழிகளையுடைய மடவார் வீசியெறியாநின்ற ஜாலத்திற்குச் சமானமாவர் தீமனச்சேறார் = வெவ்விய சித்தபங்கம் நிறைந்த, சன்மச்சிறுகுழி = ஜன்மபல்வலத்தி லிருக்கும், மீனும் மாந்தர்க்கு = மத்ஸ்யங்களாகிய புருடர்களுக்கு, எமவாதனைக் கயிற்று = துர்வாசனை ரஜ்ஜுவின்கண்ணுள்ள, தூண்டிற்கு = படிசத்திற்கு, இரையுமொப்பார் = பிண்டிகையாவர். (82)

(ஸ்ரீ - வீர.) நாரியர் மூடமனத்தினையுடைய நரப்பறவைகளின் அனங்கனும் வேடனால் விரித்திடப்பட்ட அவயவபந்தன ஜாலமாவர், மிருகபந்தனவாசக வாகுரமென்னும் மூலசப்தத்தால் ஈண்டு ஜாலங் குறிப்பிக்கப்படுகின்றதென்றுணர்க. ஜன்மமே பல்வலமென்னும் அற்பபள்ளமாம்; அங்குள்ள சித்தச் சேற்றில் உலவும் மீன்களாகிய புருடரைக் கவரும்பொருட்டு அவிவேகமெனப் பெயரிய துர்வாசனையே தூண்டிற் கயிறுமென்க. நாரியோ, படிசமென்னும் மத்சத்தைமாட்டும் கயிற்றின் நுனியிலுள்ள இரும்பு முதலியவற்றாற் செய்யப்பட்ட கொக்கிபோன்ற வத்துவில் வைத்த மீனுகாரம்பிண்டிகையாமென்றுணர்க. மூடமனத்தையுடைய நரர்களாகிய பறவைகளினங்கத்தைக் கட்டக் காமவேடனாற் பரப்பப்பட்ட பெருவலைக்கொப்பாவர் இக்கருங்கண் மடந்தையர். குமரிப் பெண்ணாகிய பெரியகட்டுத்தறியில் இரதியென்னுங் கொடிய சங்கிலியால் மனமென்னும் உன்மத்த மதயானையானது கட்டுப்பட்டு ஒன்றுந் தோன்றாமல் எமாந்து நிற்கின்றது. சித்தமாகிய சேறு நிறைந்த சென்மமென்னுஞ் சிறு குழியில் மீன்களைப்போன்று உழலும் மூர்க்கர்கட்குத் துர்வாசனையே தூண்டிற்கயிறும், பெண்களே தூண்டின் முள்ளில் வைத்தமாவு மாவரென்பதாம்.

(ச.) சமுசாரமென்னும் சொற்ப சரசில் மீன்கள்போல் மூழ்கிக்கிடக்கும் மாந்தர்க்குப் போடப்படும் துர்வாசனையென்னும் கயிற்றுத் தூண்டிலில் மாட்டிய மாமிசகண்டமும் போல்வார் இந்நாரியர், சம்பந்த ஹேதுவாவர் என்பதாம். (82)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் பெண்டோடங்களைக் காட்டி அவற்றை யறிந்து கொள்வதால் வரும்பயனை யறிவிக்கின்றார்;—மூதுவென.

முத்துயர் விலங்குமாகி முடிவில் காமாதி யென்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவையரின்பம் வேண்டே
னிதுதசை யிதுநெய்த்தோ ரென்பிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாஞ் சிறிதுநாளில். (83)

(ப - ரை.) முதுதுயர் விலங்குமாகி = பெருந்துயர்ச் சங்கிலித் தடையுமாய், முடிவில் காமாதி யென்னும் = அளவுபடுத்த வொண்ணாத சர்வதோஷங்களென்று சொல்லப்பட்ட, புதுமணிவைத்த செப்பாம் = நவநவரத்தினங்கள் அடங்கிய சம்புடமாம், பூவையரின்பம் வேண்டேன் = மங்கையர்தம் மடமைச்சுகத்தை விரும்பிலேன், இது தசை = இதுமாமிசம், இது நெய்த்தோர் = இது இரக்தம், இது என்பு இதுநரம்பு = அஸ்தியிது சநாயுவிது, என்றெண்ணில் = என பகுத்து ஆராய்ந்து கொண்டே யிருந்தால், விதுமுக = சந்திரவுல்லாச வதனம் வாய்ந்த, மாதர் வேட்கை = அரிவையர் மேல் வைத்த ஆசை, சிறிதுநாளில் = சில தினங்களிற்றானே, விரோதமாம் = பகையாகி யருவருப்புறும். (எ-று.) (83)

(ஸ்ரீ - வீர.) தோடங்களேயாய இரத்தினங்கள் வைத்திருக்கும் சோபன சம்புடமாகிய மாதர் வெளியின் மினுக்கேனும் உள்ளே அசுசியரும் இராகத்வேஷியருமேயாவர் என்பதாம். துக்கத்தைத்தரும் விலங்காய சங்கிலிவடிவப் பெண்ணாசை போதும்போதும் வேண்டாம். திரமின்மையினாலும், பிரித்துப் பார்த்தால் அசுத்த பதார்த்தங்களாயிருத்தலினாலும், பலநாளும் பெண்ணாலே பட்டதுயர் போது மென்கின்றார்: — இதுதசை யென. விரோதமாம் = நாரியர் நசைவிசரண சீலத்தன்மையை யடையு மென்பதாம். எல்லாத்தோட ரத்தினங்கட்கும் சிமிளாயும், எப்போதுந் துயரைத்தரும் பெருஞ்சங்கிலியாயும், இராகின்ற மங்கையராற் பெற்றபயன் போதும், எனக்குப்போதும், மாம்சமாத்திர முக்கியசாரமாய்ப் பொய்யாயிருக்குந் தனங்களாலும், கண்களாலும் அல்குலாலும் புருவங்களாலும் எனக்காக வேண்டுவதென்னே ! எனக்காகவேண்டுவ தென்னே !! இதுமாமிசம், இது இரக்தம், இவை யெலும்புகள் என ஆராயிற் சிலதினங்களிலேயே பெண்களினாசை இருந்த இடந் தெரியாமற் மறந்துபோம்.

(ச.) முதுதுயர் = மகத்தானதுக்க சங்கிலியாவர், மற்றொன்றிலும் பிரவிருத்திக்கவொட்டாமலும், எங்குஞ் செல்ல முடியாமலும் அவர் பொருட்டாகவோ செல்லமுடியாத விடத்தும் சென்றுவர முடியுமாறும் செய்வித்தலின், பெருந்துயரை யீயும் பூட்டாற் பூட்டி மாட்டலின், மாதராது சம்பந்தத்தால் வரும் சுகத்தை விரும்பேன். இது தசை யென முதலாக இங்ஙனம் விசாரிக்கிற் சொற்பகாலத்தில் மகளிர் சம்யோக இச்சை நசிக்கும், மீட்டில் மோகம் வாராதென்பது கருத்து. விசரண சீலத்தன்மை = சிதிலத்தன்மை. (83)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல், போகேச்சையான திருப்ப எனக்குப் பெண் வேட்கை யலமெனக் கூறியது எங்ஙனங் கூடுமெனின் கூறுகின்றார்:—பாரியென.

பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போகம்
நாரியை யில்லா தாற்குப் போகத்தி னலமெங் குண்டாங்
காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்
பேரியல் சகத்து நீங்கிற் பிரிவில்பே ரின்ப முண்டாம். (84)

(ப - ரை.) பாரியையுடையோன் யாவன் = எவன்பால் நாரி யிருக்கின்றாளோ, அவனுக்கே = அச்சம்சாரிக்கே, பற்றும் போகம் = போகத்திலிச்சையாம், நாரியை

யில்லாதாற்கு = நிஸ்திரீகனுக்கு, போகத்தினலமெங்குண்டாம் = போகபூமியானது எங்ஙனங்கிடைக்கும், காரிகைதன்னை நீங்கில் = ஸ்திரீ ஒருத்தியைவிட்ட மாத்திரத் தானே, கருத்துறு சகத்து நீங்கும் = மானசோல்லாச வுலகமகலும், பேரியல் சகத்து நீங்கில் = நாமரூபக்கிரியை மயமாயவுலகம் அகன்ற கணத்திலேயே; பிரிவில் பேரின்ப முண்டாம் = தனது சொரூபத்தினின்றும் பேதியாத பேரானந்தம் ஆவிர்ப்பவிக்கும்.()

(ஸ்ரீ - வீர.) ஸ்திரீயையுடையவனுக்கே போகேச்சை யுளதாம், போகேச்சையில தாயின் நிபுணனாய அன்னவனுக்கு அதன்பரிக்கிரகம் கூடாமையின்; நிஸ்திரீகன்=ஸ்திரீ பரிக்கிரக வர்ஜகன், அன்னவனுக்குப், போகபூமியெங்கே = போகேச்சை யெங்கே, எங்குமில்லை யென்பதாம்; போகேச்சையானது இருக்குமாயின் அதன் பரிக்கிரக வர்ஜனம் சம்பவியாதாம், ஆகுக தானிங்ஙனம், இங்ஙனமாயினும், ஸ்திரீத் தியாகமாத்திரத் தானே என்னாய் விடுமெனின்' எல்லாவின்புமா மென்பார், காரிகை யென்றார். எவனுக் குப் பெண்பேய் பிடித்ததோ அவனுக்கே போக இச்சையாம், பெண்ணற்றவனுக்குப் போகமெவ்வாறுண்டாம்; பெண்ணாசையை விட்டொழித்தாற் பெரிதான வுலகம் போகும் பெரியதான வுலகம் போனாற் பேரின்பந் தானே யுண்டாம். (84)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரகரணப் பொருளை யுபசங்கரிக்கின்றார்:—வந்தேன.

வந்துறு போதினன்றாய் வரியளிச்சிறகு போலச்
சந்ததஞ் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந்தன்னை
முந்துநோய் மரணமூப்பு முதலவாந் துயர்கட்கஞ்சிச்
சிந்தையில் விரும்பே னெங்ஙன் சேர்வரும் பதத்தைச் சேர்வேன். (85)

(ப - ரை.) வந்துறு போதினன்றாய் = ஆபாதமாத்திர இரமணீயமாய், வரியளிச் சிறகுபோல = பொறிவண்டி னிறகுபோன்று, சந்ததம் = எப்போதும், சலித்து = அதிசஞ்சலமாய், தள்ளற்கரியதாம் = சுதுஸ்தரமாய், இருக்கும், போகந்தன்னை = அள விறந்த போகத்தை, முந்துநோய் = முதிர்ந்துவாராநின்ற ரோகம், மரணம் = இறப்பு, மூப்பு = ஜரை, முதலவாம் = இவை முதலிய, துயர்கட்கஞ்சி = துன்பங்கட்குப் பயந்து, சிந்தையில் விரும்பேன் = மனத்தின்கண்ணே ரமிக்க விரும்புகிறேன், சேர்வரும் பதத்தை = அடைதற்கரிய ஆநந்தவீட்டை, எங்ஙன் சேர்வேன் = எவ்வாறு முயன்றே னும் அடைவேன். (எ-று.) (85)

(ஸ்ரீ - வீர.) விடயங்களை இந்திரியங்களின் பொருட்டுச் சேர்ப்பித்தலே ஆபாதமாம், விடயேந்திரிய சம்பந்தமென்பதாம், சேர்க்கைச் சமயத்திலேயே இன்பாம்; அல்லது; சேர்க்கை மாத்திரத்தானே யின்பாம், சுதுஸ்தரம்=சுலபமாகத் தாண்டமுடியாததாம். சந்ததஞ் சலித்தல் = பிரமரபக்ஷாம்ச சஞ்சலமாம். கிடைத்தபோது மாத்திரம் இரம ணீயமாயிருப்பதும், வண்டின் சிறகுபோல மிகச் சஞ்சலமுற்றதும், விழுந்துவிட்டாற் றாண்ட முடியாததும், ஆகிய பொய்ப்போகங்களில் பிறப்பிறப்புச் சரைமுதலிய பீதியி னால் யான் இரமிக்கவேமாட்டேன்; தங்கள் ஆசீர்வாதத்தாற் பெருமுயற்சி செய்து ஹே மகா முனிவரே! சாந்தியையடைவேன், பரமபதத்தையு மடைவேன்.

(ச.) நன்றாய் = விசாரமில்லாமன் முதலில் நோக்கும்போது மாத்திரம் இரமணீய மாய், அதனுத்தர க்ஷணத்தில் பெருந்துயரோடியைந்து தள்ளற்கரியதாம். விஷய சாக்ஷாத்காரத்தில் அற்பசந்தோஷமாதலின் திருப்தியதிகரியாமையின் சந்தோஷம் மிகு விமித்தம் முயற்சித்து அலைதலாபமாயின் வெகு விக்ஷேபஞ் சம்பவித்தலின் உத்தரக்ஷ

ணத்திற் பெருந்துயராமென்றுணர்க. அத்தன்மையான தோஷதர்சனத்தாற் போகங் களிலிரமிக்க யான் விரும்பேன், ஆதலால், எங்ஙன் = எத்தன்மையான பிரயத்தனத் தால், துயரமுழுவதுஞ் சாந்தியையடைந்து பரமசுகரூப கைவல்யத்தை யடையலாம் என்றிச்சிக்கின்றேன். எங்ஙன் = எத்தகையதான பிரயத்தினத்தினுலும் கைவல்லி யத்தை யடைந்தே தீருவேன். எங்ஙன், உம்மைத் தொகை. (85)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யவ்வனத்திற் பெரும்பான்மையும் அநர்த்தகரணத் துவார மாகிய ஸ்திரீயை நிந்தித்து, பாலியாதிகட்குப் பாத்தியபாதக பாவந் தரிசிப்பித்துக் கொண்டு, யவ்வனத்தின்பின் வரத்தக்க ஜரையை உத்தரகிரந்த சந்தர்ப்பத்தால் நிந்திக் கும்பொருட்டு நன்கு துதிக்கின்றார்:—சோகம், மோகம், பிரிவு, பீடை, வாட்டம், நோய் முதலியவற்றோடு கூடியதும், பெருஞ்சிந்தைக்கும் அவமானத்திற்கும், இருப்பிடமும், ஆகிய வயோதிகத்தன்மையானது நிந்திக்கத்தக்கதே யாமென்கின்றார்: மேற்கூறிய வாறேலாயின், காமாதிதோஷப் பிரபலத்தன்மையினுனே யவ்வனத்திற் சுகமில்லா திருக்குக, வயோதிகப்பருவத்திலோ காமாதிகள் குறைந்துபோனதாலும் அடக்க முதலிய சற்குணசம்பன்ன புத்திர பௌத்திராதிகளால் வீட்டிற் சேவிக்கப்பட்ட வயோதிகனுக்கு அதிக சுகமானது உண்டாகக் கூடுமெல்லவாவெனின்? அந்த அவஸ்தை யானது அநேக துக்கங்கட்கு இடமா யிருந்தபோதினும் அவ்வியாவற்றையும் பின்னுராய் வாம், முன்னர், “தன்னினந்தின்னும் பாம்பினங்கட்கு, இன்னினமயலிற் றயை யெங்ஙன மாம்” என்னும் நியாயத்தாற் பெருங் கொடூரமுடைய தென்பதைக் கூறுவாமென்கின் றார்:—ஈறறுவென.

ஈறறுசை சவத்தை யெவ்வனம் விழுங்கு மித்தை
மாறுறு சரைவிழுங்கு மயக்கநோய் வருத்தமிக்க
பேறுறு சரைகைக் கொண்டாற் பேரறிவ கன்றிட்டோடும்
வேறுறு மணங்கான் முன்னை மெல்லியலகலு மாபோல். (86)

(ப - ரை.) ஈறறுசை சவத்தை = அபரியாப்தமான பாலியத்தை, வலிதில், யவ்வ னம் விழுங்கும் = யவ்வனமானது பானஞ்செய்யும், இத்தை = இத்தாருணியத்தையும், மாறுறுசரை = தேகங் குணமுதலிய யாவுமே விகாரமாக்கிடப்பெற்ற வயோதிக அவஸ் தையானது, விழுங்கும் = பானஞ்செய்துவிடும், வருத்தம் நோய் = துன்புறுத்தும் வியாதிகளும், மயக்கம் = அவற்றிற்குக் காரணமாகிய ஆகாராதிகளில் அகந்தை மமதை களும், மிக்க பேறுறும் சரை = மிகவளர்தலையே பெரும் பிரயோஜனமாகவுடைய கிழப் பருவம், கைக்கொண்டால் = வந்தடைந்துவிட்டதேயாயின், வேறுறு மணங்கால் = அயலாகவந்த சபத்நியால் (சக்களத்தியால்) முன்னை மெல்லியலகலுமாபோல் = பூர்வ களத்திரம் பிரிவதேபோல, பேரறிவகன்றிட்டோடும் = பெரும்பிரஞ்ஞையானது விலகி விட்டுப் போய்விடும். முன்னையணங்காலெனினும் அமையும். (எ-று.) (86)

(ஸ்ரீ - வீர.) அபரியாப்தமான பாலியத்தை = அசமர்த்தமான பாலத்தன்மையை யவ்வன அரக்கன் இனிய திருப்தியின் பொருட்டுக் குடித்து விடுவன், யவ்வனத்தையோ ஜரைவலுவிற் குடிக்கும். இங்ஙனம் பரஸ்பரம் குரூரத்தன்மையை யடைந்திருப்பதைக் காணலாம். ஜரையானது அநாயாசமாகவே கிலேசந்தருவதாம். விளையாடல் மகிழ்ந்து திரிதல் முதலியவற்றிலாசை நிறைவடைதற்கு முன்னரே, பலாத்காரமாய்ப் பாலியத்தை யவ்வனமானது விழுங்குகின்றது; பின்பு பெண்முதலிய போகஆசை நிறைவுறுதற்கு

முன்பே பலாத்காரமாய்த் தாருண்யத்தை ஜரை விழுங்குகின்றது தாங்களே பாருங்கள், பரஸ்பரம் பெருங் கொரேத்தன்மையை. ஆயாசமில்லாமலே தீனத்தன்மையைத் தரும் ஜரையாற் கவரப்பெற்றவரானபோது சக்களத்தியால் மூத்தவள் தள்ளப்படுவதே போலப் பேரறிவானது அவரைவிட்டோடியே விடும். பானஞ்செய்தல் என்றது உட்கொள்ளும் வேகம் பற்றியாம்.

(ச.) இனிச்சரை, ஈறறு = பாலக்கிரீடைகளிற் றிருப்தியின்றிய; இத்தை பாலகத் தன்மையைப் பானஞ்செய்து விளையாடித் திருப்தியுறாத யவ்வனத்தை, விழுங்கும். இங்ஙனம் ஒன்றற்கொன்று குரூரமுடையதா மென்றுணர்க. ஒருபருவமும் போகத்தில் முடிவு பெறாததென்பது கருத்து. மயக்கம் = கமனுதி யத்தின விசேடங்களால் ஆயாசமும் அதனாற் கேதமுமுண்டாம்; இதனாற் பிரஞ்ஞையு மதிதூரத்திலகலும், தூரத்தினின்றும் வரலால் மயக்கநோய் வருத்தமிகுந்த மூத்தமனைவியால் வெகுகால போகமனுபவித்த இளையமனைவி தூரஞ்சேர்ந்து மறைதல்போலவாம். (86)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அச்சரையில் வரும் நானாவிதமான துயரையே விரித்துரைக்கின்றார்:—புரையென.

புரையுட னெகிழ்வு சோர்வு பொருந்திய லோபந் துன்பங்
கரையுறு கருமந்தன்னில் வலியின்மை கடுநோய் தோற்றம்
வரைபொருள் செயமாட்டாமை மைந்தரே முதலோர் நிந்தை
சரைநரை வருகாலத்துத் தருந்துயர்வி விதமாகும். (87)

(ப - ரை.) புரையுடன் = அநேக குற்றங்களுடன், நெகிழ்வு சோர்வு = பெருஞ் சோகமும் தளர்ச்சியும் தைன்யமும்; பொருந்திய லோபம் = கண்டவற்றிலெல்லாம் ஆசையும் லோபமும், துன்பம் = அநேகவிதமான துயரங்களும், கரையுறு கருமந் தன்னில் = இயல்பாகவே மாசோடுகூடிய ஒருசிறு தொழிற் செய்வதன் கண்ணும், வலியின்மை = சாமர்த்தியமில்லாமையும், கடுநோய் தோற்றம் = மறைந்திருந்த கொடிய குன்ம க்ஷயாதி வியாதிகள் ஆக்கமுற்றெழுதலும், வரைபொருள் செயமாட்டாமை = நாடிய பொருளைச் செய்ய முடியாமையும், விரும்பிய பொருளை யுண்ண முடியாமையும், அளவிட்ட திரவியத்தைக்கூடச் சம்பாதிக்கமுடியாமையும், மைந்தரே முதலோர் நிந்தை = புத்திரன் முதலியவருங்கூடச் செய்ந்நன்றி மறந்து நிந்தை செய்தலும், விவித மாகுந்துயர் = ஆகிய அநேக வகையான துக்கங்களை, சரைநரை = தோற்சுருங்கி வெண் மயிர் வேய்ந்தவயோதிகம், வருகாலத்துத்தரும் = தான் வரும்போது கொடாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) ஆசை = விசேட விடயங்களிலிச்சை. (87)

விருத்தராய் நடுக்குவோரை மித்திரர் மைந்தருற்றார்
கருத்துறு மாதர்தாசர் நகைசெய்வர் காணுறுதாய்
வருத்தமுஞ் சரையுமுற்று வலிகுண மிழந்த மூப்பை
யருத்திவந் தடையுங்கட்டை மரங்கழு கடையுமாபோல். (88)

(ப - ரை.) விருத்தராய் நடுக்குவோரை = வயோதிகப் பருவமடைந்து நடுங்கிய தேகமுடையவரை, மித்திரர் மைந்தர் உற்றார் கருத்துறுமாதர் தாசர் = நேயர்களும், பாலர்களும் கான்முளைகளும் உறவினர்களும் ஆசைப்படத்தக்க தருணிகளும், அடிமைகளும், மற்றவர்களும், நகை செய்வர் = நடையுடைபாவனைகள் உன்மத்தர்

போன்றிருத்தலின் பரிகாசஞ் செய்வர், காணொணாதாய் = அவர் தம்வடிவமோ காண்பதற்கும் அருவருப்பாய், வருத்தமும் சரையும் உற்று = அநேகந் துயரங்களையும் கவலைகளையும் தோற் சுருக்கம் அங்கத்தளர்ச்சிகளையும் அடைவுற்றதாய், வலிகுணமிழந்த = குணபராக்கிரமங்கள் குன்றியதாயிருக்கும், மூப்பை = விருத்தாப்பியமுடையவனை, கட்டைமரங் கழுகடையுமாபோல் = மொட்டைமர முழுவதும் கழுகுகள் நிறைய அடைவதேபோல, அருத்திவந்தடையும் = ஆசைகள் வந்தடையும். எ-று. (88)

(ஸ்ரீ - வீர.) ஆசை = அர்த்த விசேட விடய இச்சையாம். வயோதிகப்பருவத்தால் நடுங்காநின்ற கிழவனைப் பைத்தியகாரனைப்போலப் பார்த்துத் தாசர்கள் மைந்தர்கள் பெண்கள் பந்துக்கள், நேயர்கள், முதலியோர்கள் நகைக்கின்றார்கள். பார்க்கச் சகிக்கக்கூடாதவனாய், இருக்குங் கிழவனைப் பேராசையானது, மிகநீண்டதும் பலத்தோடுகூடிய சாகை தூறு முதலியவை நிறைந்து விரிந்ததும் வேறு பக்ஷிகள் வந்து வசியாததுமாகிய மிக நீண்ட விருக்ஷத்திற் கழுகு வந்தடைவதேபோல வந்தடையும்.

(ச.) கிழமையாலே சர்வாங்கங்களும் நடுக்குற்றுத் தாசாதிகளாலே பரிகசிக்கத்தக்க வீணனவயோதிகம் யாவரானும் உன்மத்தன்போல் நிந்தித்து நீக்கப்படுமென்பது கருத்து. அருவருப் புருவத்தாற் பார்த்தற்கு முரித்தன்றா யிருக்கும் முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளைகொண்டிருமிவரும் உருவம், அருத்தி = பேராசை. (88)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேராசை வளர்தலும் பெறமுடியாமையும் சிறேதுமில்லாமற் சிறுமையே யுறுதலும் பாரலௌகிகமே பற்றிப் பயமிகவுறுதலும் ஆமென்கின்றார் குற்றமுமென்.

(ச.) பேராசையின் சொருப மிஃதெனல்:—குற்றமுமென.

குற்றமு மிளைப்புமேவிக் குறிதன்றி யுளத்தைச் சுட்டுத்
துற்றவா பத்துக்கெல்லாந் தோழியா மாசைதுன்னு
முற்றதோர் பரலோகத் துக்குறுதியே தென்று மூப்பிற்
பற்றுறு பரிகாரந்தீர் பயமிகப் படருமன்றே. (89)

(ப - ரை.) குற்றமும் இளைப்புமேவி = தைன்ய தோஷமயமாய், குறிதன்றி யுளத்தைச்சுட்டு = அதிதீர்க்க இருதயதாகத்தை யாற்றுவதாய், துற்றவாபத்துக் கெல்லாம் = கருமவயத்தால் வளர்ந்துவரும் எல்லா ஆபத்துக்கட்கும், தோழியாம் = முக்கியசகியாகிய, ஆசை = ஸ்பிருகை, துன்னும் = வார்த்திகத்தில் விருத்தியாம், உற்றதோர் பரலோகத்துக் குறுதியேதென்று = அடுத்த க்ஷணத்தில் பிராணன் நீங்கினால் வாராநின்ற பரவுலக வாழ்விற்கு என்ன தருமத்தை யான் சம்பாதித் திருக்கின்றேன் ஒன்றையும் காணேமே, அந்தோ கஷ்டம் என்றாலிப்போது என்னசெய்யத் தக்கது என்பதாக, மூப்பில் = கிழப்பருவத்தில், பற்றுறு பரிகாரந்தீர் = செய்துகொள்ளத் தக்கபரிகாரமானது யாதொன்றுமில்லாமல் அப்பிரதீகார யோக்கியமாய் அதிதாருணமாய் வளர்ந்த, பயமிகப்படரும் = பெரும்பயம் விருத்தியாம் அன்று எ. அசைநிலைகள். (எ-று.) (89)

(ஸ்ரீ - வீர.) ஸ்பிருகை = அருத்தமாத்திரத்தை விடயஞ்செய்வதாம், மறுமைக்கண் அதிதாருணங் கஷ்டம் பலிக்குமே, என்றால் என்னசெய்யத்தக்கது என் அப்பிரதீகார யோக்கியம் பயமாமெனப் பகுத்தறிக தீனத்தன்மையாகியதோயிருந்ததும், இருதயத்தின்கண் எப்போதுந் தாபத்தைக் கொடுத்துக் கொண்டே யிருப்பதும், மிகவும்

நீண்டதும், சர்வ ஆபத்துக்கட்கும் முக்கியமாகிய தோழியும், ஆகிய ஆசையானது, வயோதிகத்தில் வந்து வளர்ந்துகொண்டே யிருக்கும், பரலோகத்திற்காக என்னால் என்னசெய்யத் தக்கது, ஆ! கஷ்டம், எனமிகக் கொடூரமா யெவ்விதத்திலும் நீக்கமுடியாத பெரும்பயத்தின் விருத்தியானது வயோதிகத்தில் மிகவு முண்டாகின்றது. வயோதிகத்தில் வருந்தினத் தன்மையானது யானோ மிகமுடியாதவன் என்னதான் எவ்வாறுதான் செய்வேன், மௌனமாகவே யிருக்கின்றேன், என இவ்வாறு பல வகையாம்.

(ச.) ஆபத்துக் கெல்லாந் தோழியாமாசை = வாஞ்சித்தபொருளைக் கைவசமாக்கச் சாமர்த்திய மின்மையால் என்க. (இ-ம்.) கைவசமான பொருளை யனுபவித்தற்குஞ் சக்தியின்மையால் ஆபத்தி னிமித்தமே யாசைமுடிகின்ற தென்பதாம். மறுமைக்கண் = மறுஜன்மத்தில், கஷ்டம் = இகழத்தக்க கருமம், அப்பிரதீகாரமென்பது, கஷ்டசொரூபத்தை நிச்சயிக்க முடியாமையின் அதனிமித்தம் பயமும் நீக்குவதற்கு முடியாதென்பதாம்; உறுதியேதென்று = என்னாற் செய்யவேண்டும் நன்மையாதென்று, பற்றுறும் கட்டத்தை; கட்டத்தைநீக்க முடியாமையின் அதனிமித்தமான பயத்தையும் நீக்கக்கூடாதென்பதாயிற்று. இகழத்தக்ககருமம் = ஜுகுப்ஸிதகருமம், துச்சத்தொழில். (89)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வயோதிகத்தில் அருந்தலாதி யாசை யதிகரிக்க யனுபவிக்க முடியாமையும், முடிவின் மடிதலும், துயரத்தையே தருமென்கின்றார்:— ஆதரவென.

ஆதரச் செருக்கு மல்குமருந்துதற் கரிது மூப்பிற்
காதல்செய் வலியிலாமை கருத்தெலாம் வெந்து சோரும்
போதுறு நீரூர்முற்றற் பூசுணிப் பெருங்காய் போல
மேதகுகாலன் மாந்தர் வெண்ணரைத் தலையைத் தின்னும். (90)

(ப - ரை.) ஆதரச்செருக்குமல்கும் = உல்லாசத்தோடு மாசையானது எழுந்துவரும், ஆனால், அருந்துதற் கரிதுமூப்பில் = அவ்விருத்த அவஸ்தையில் அநுபவித்தற் கெதனையு முடியாதாம், காதல் செய்வலியிலாமை = இச்சித்த செயல்களைச் செய்யச் சிறிதும் ஆற்றலிலாமையால், கருத்தெலாம் வெந்து சோரும் = இருதய முழுவதும் தகிக்கப்பட்டுவாடும். முற்றல் போதுறு நீரூர் = பரிபக்குவமுற்றுச் சூரணம் விரவிய, பூசுணிப் பெருங்காய்போல = பெரியகூஸ்மாண்டபலம் போலிருக்கும், மாந்தர் வெண்ணரைத்தலையை = மக்கள் தம் வெள்ளிய மயிர்மூடிய சிரங்களை, மேதகு காலன் தின்னும் = மேன்மைமிக்க காலன் உண்ணும். எ-று. (90)

(ஸ்ரீ - வீர.) உல்லாசத்தோடும் = சம்பிரமத்தோடும், ஆற்றலிலாமையால் = சக்திமந்தத்தால்; என்பதாம். ஜரையே வெண்ணரைப்பய னெனும்விரவிப் பஸ்மத்தால் அற்பவெண்மையை யடைவிக்கும், கூஸ்மாண்டபலமானது மேற்பாகத்தில் விபூதிக் கொப்பான வர்ணத்தால் அற்பபாண்டுரத்தையடைந்திருப்பது வெளியேயாம். எவ்வாறு எக்காலெனக்கு என்ன போஜனம் உருசியாயிருக்கும் என்பதாக ஜரையானது பிராணிகளைப்பற்றி வயோதிகத்தில் நிரந்தரம் சித்தத்தைத் தகிக்கின்றது; எவ்வாறெனின், போகங்களை யனுபவித்தற்காக உல்லாசத்தோடும் பேராசையானது கிளம்புகின்றது, ஆனாலனுபவிக்க முடியவில்லை, போகிக்கச் சமர்த்திருந்தால் ஜீரணமாவதில்லை. ஜீரணிக்கும் ஆற்றலிருப்பினோ போகிக்க முடியவில்லையெனச் சக்தியின் கெட்ட நிலைமையானதுண்டாம்; அதனால் கிழ அவஸ்தையில் அத்தியந்தம் இருதயமானது வெந்து புழுங்கும் ஜரையாகிய லவணமுதலியவற்றானே யுபகரிக்கப்பெற்ற, புருடர்களுடைய

போன்றிருத்தலின் பரிகாசஞ் செய்வர், காணுதாய் = அவர் தம்வடிவமோ காண்ப தற்கும் அருவருப்பாய், வருத்தமும் சரையும் உற்று = அநேகந் துயரங்களையும் கவலை களையும் தோற் சுருக்கம் அங்கத்தளர்ச்சிகளையும் அடைவுற்றதாய், வலிகுணமிழந்த = குணபராக்கிரமங்கள் குன்றியதாயிருக்கும், மூப்பை = விருத்தாப்பியமுடையவனை, கட்டைமரங் கழுகடையுமாபோல் = மொட்டைமர முழுவதும் கழுகுகள் நிறைய அடை வதேபோல, அருத்திவந்தடையும் = ஆசைகள் வந்தடையும். எ-று. (88)

(ஸ்ரீ - வீர.) ஆசை = அர்த்த விசேட விடய இச்சையாம். வயோதிகப்பருவத் தால் நடுங்காநின்ற கிழவனைப் பைத்தியகாரனைப்போலப் பார்த்துத் தாசர்கள் மைந்தர் கள் பெண்கள் பந்துக்கள், நேயர்கள், முதலியோர்கள் நகைக்கின்றார்கள். பார்க்கச் சகிக்கக்கூடாதவனாய், இருக்குங் கிழவனைப் பேராசையானது, மிகநீண்டதும் பலத் தோடுகூடிய சாகை தூறு முதலியவை நிறைந்து விரிந்ததும் வேறு பக்ஷிகள் வந்து வசி யாத்துமாகிய மிக நீண்ட விருக்ஷத்திற் கழுகு வந்தடைவதேபோல வந்தடையும்.

(ச.) கிழமையாலே சர்வாங்கங்களும் நடுக்குற்றுத் தாசாதிகளானே பரிகசிக்கத் தக்க வீணனவயோதிகம் யாவரானும் உன்மத்தன்போல் நிந்தித்து நீக்கப்படுமென்பது கருத்து. அருவருப் புருவத்தாற் பார்த்தற்கு முரித்தன்றா யிருக்கும் முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்னொரு கோலூன்றி விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளை கொண்டிருமிவரும் உருவம், அருத்தி = பேராசை. (88)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேராசை வளர்தலும் பெறமுடியாமையும் ஈரேதுமில்லாமற் சிறுமையே யுறுதலும் பார லௌகிகமே பற்றிப் பயமிகவுறுதலும் ஆமென்கின்றார் குற்றமுமென.

(ச.) பேராசையின் சொருப மிஃதெனல்:—குற்றமுமென.

குற்றமு மிளைப்புமேவிக் குறிதன்றி யுளத்தைச் சுட்டுத்
துற்றவா பத்துக்கெல்லாந் தோழியா மாசைதுன்னு
முற்றதோர் பரலோகத் துக்குறுதியே தென்று மூப்பிற்
பற்றுறு பரிகாரந்தீர் பயமிகப் படருமன்றே. (89)

(ப - ரை.) குற்றமும் இளைப்புமேவி = தைன்ய தோஷமயமாய், குறிதன்றி யுளத் தைச்சுட்டு = அதிதீர்க்க இருதயதாகத்தை யாற்றுவதாய், துற்றவாபத்துக் கெல்லாம் = கருமவயத்தால் வளர்ந்துவரும் எல்லா ஆபத்துக்கட்கும், தோழியாம் = முக்கியசகியா கிய, ஆசை = ஸ்பிருகை, துன்னும் = வார்த்திகத்தில் விருத்தியாம், உற்றதோர் பர லோகத்துக் குறுதியேதென்று = அடுத்த க்ஷணத்தில் பிராணன் நீங்கினால் வாராநின்ற பரவுலக வாழ்விற்கு என்னதருமத்தை யான் சம்பாதித் திருக்கின்றேன் ஒன்றையும் காணேமே, அந்தோ கஷ்டம் என்னுலிப்போது என்னசெய்யத் தக்கது என்பதாக, மூப்பில் = கிழப்பருவத்தில், பற்றுறு பரிகாரந்தீர் = செய்துகொள்ளத் தக்கபரிகார மானது யாதொன்றுமில்லாமல் அப்பிரதீகார யோக்கியமாய் அதிதாருண்மாய் வளர்ந்த, பயமிகப்படரும் = பெரும்பயம் விருத்தியாம் அன்று ஏ. அசைநிலைகள். (எ-று.) (89)

(ஸ்ரீ - வீர.) ஸ்பிருகை = அருத்தமாத்திரத்தை விடயஞ்செய்வதாம், மறுமைக் கண் அதிதாருணங் கஷ்டம் பவிக்குமே, என்னுல் என்னசெய்யத்தக்கது என் அப்பிரதீ கார யோக்கியம் பயமாமெனப் பகுத்தறிக தீனத்தன்மையாகியதோமிகுந்ததும், இருத யத்தின்கண் ஒணப்போதுந் தாபத்தைக் கொடுத்துக் கொண்டே யிருப்பதும், மிகவும்

நீண்டதும், சர்வ ஆபத்துக்கட்கும் முக்கியமாகிய தோழியும், ஆகிய ஆசையானது, வயோதிகத்தில் வந்து வளர்ந்துகொண்டே யிருக்கும், பரலோகத்திற்காக என்னால் என்னசெய்யத் தக்கது, ஆ! கஷ்டம், எனமிகக் கொடூரமா யெவ்விதத்திலும் நீக்கமுடியாத பெரும்பயத்தின் விருத்தியானது வயோதிகத்தில் மிகவு முண்டாகின்றது. வயோதிகத்தில் வருந்தினத் தன்மையானது யானோ மிகமுடியாதவன் என்னதான் எவ்வாறுதான் செய்வேன், மௌனமாகவே யிருக்கின்றேன், என இவ்வாறு பல வகையாம்.

(ச.) ஆபத்துக் கெல்லாந் தோழியாமாசை = வாஞ்சித்தபொருளைக் கைவசமாக்கச் சாமர்த்திய மின்மையால் என்க. (இ-ம்.) கைவசமான பொருளை யனுபவித்தற்குஞ் சக்தியின்மையால் ஆபத்தி னிமித்தமே யாசைமுடிகின்ற தென்பதாம். மறுமைக்கண் = மறுஜன்மத்தில், கஷ்டம் = இகழத்தக்க கருமம், அப்பிரதீகாரமென்பது, கஷ்டசொரூபத்தை நிச்சயிக்க முடியாமையின் அதனிமித்தம் பயமும் நீக்குவதற்கு முடியாதென்பதாம்; உறுதியேதென்று = என்னாற் செய்யவேண்டும் நன்மையாதென்று, புற்றுறும் கட்டத்தை; கட்டத்தைநீக்க முடியாமையின் அதனிமித்தமான பயத்தையும் நீக்கக்கூடாதென்பதாயிற்று. இகழத்தக்ககருமம் = ஜுகுப்ஸிதகருமம், துச்சத்தொழில். (89)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வயோதிகத்தில் அருந்தலாதி யாசை யதிகரிக்க யனுபவிக்க முடியாமையும், முடிவின் மடிதலும், துயரத்தையே தருமென்கின்றார்: — ஆதரவென.

ஆதரச் செருக்கு மல்குமருந்துதற் கரிது மூப்பிற்
காதல்செய் வலியிலாமை கருத்தெலாம் வெந்து சோரும்
போதுறு நீரூர்முற்றற் பூசணிப் பெருங்காய் போல
மேதகுகாலன் மாந்தர் வெண்ணரைத் தலையைத் தின்னும். (90)

(ப - ரை.) ஆதரச்செருக்குமல்கும் = உல்லாசத்தோடு மாசையானது எழுந்து வரும், ஆனால், அருந்துதற் கரிதுமூப்பில் = அவ்விருத்த அவஸ்தையில் அனுபவித்தற் கெதனையு முடியாதாம், காதல் செய்வலியிலாமை = இச்சித்த செயல்களைச் செய்யச் சிறிதும் ஆற்றலிலாமையால், கருத்தெலாம் வெந்து சோரும் = இருதய முழுவதும் தகிக்கப்பட்டுவாடும், முற்றல் போதுறு நீரூர் = பரிபக்குவமுற்றுச் சூரணம் விரவிய, பூசணிப்பெருங்காய்போல = பெரியகூஸ்மாண்டபலம் போலிருக்கும், மாந்தர் வெண்ணரைத்தலையை = மக்கள் தம் வெள்ளிய மயிர்மூடிய சிரங்களை, மேதகு காலன் றின்னும் = மேன்மைமிக்க காலன் உண்ணும். எ-று. (90)

(ஸ்ரீ - வீர.) உல்லாசத்தோடும் = சம்பிரமத்தோடும், ஆற்றலிலாமையால் = சக்திமந்தத்தால்; என்பதாம். ஜரையே வெண்ணரைப்பய னுடும்விரவிப் பஸ்மத்தால் அற்பவெண்மையை யடைவிக்கும், கூஸ்மாண்டபலமானது மேற்பாகத்தில் விபூதிக்கொப்பான வர்ணத்தால் அற்பபாண்டுரத்தையடைந்திருப்பது வெளியேயாம். எவ்வாறு எக்காலெனக்கு என்ன போஜனம் உருசியாயிருக்கும் என்பதாக ஜரையானது பிராணிகளைப்பற்றி வயோதிகத்தில் நிரந்தரம் சித்தத்தைத் தகிக்கின்றது; எவ்வாறெனின், போகங்களை யனுபவித்தற்காக உல்லாசத்தோடும் பேராசையானது கிளம்புகின்றது, ஆனாலனுபவிக்க முடியவில்லை, போகிக்கச் சமர்த்திருந்தால் ஜீரணமாவதில்லை. ஜீரணிக்கும் ஆற்றலிருப்பினோ போகிக்க முடியவில்லையெனச் சக்தியின் கெட்ட நிலைமையானதுண்டாம்; அதனால் கிழ அவஸ்தையில் அத்தியந்தம் இருதயமானது வெந்து புழுங்கும் ஜரையாகிய லவணமுதலியவற்றுனே யுபகரிக்கப்பெற்ற, புருடர்களுடைய

சிரமாகிய வெண் பறங்கிக்காயை நன்றாகப் பக்குவமாயிருப்பது நோக்கிக் காலசுவாமியா ரானவர் தாமே யதனையுண்டாக்கி வளர்த்தவராதலின் இனிது புசிப்பர்.

(ச.) ஜரையேயாய பஸ்மத்தால் விலோபிதமாய சிரமேயாய கூஸ்மாண்டபலத்தைப் பரிபக்குவமானது இனிது நோக்கிக் காலேசுரர் புசிப்பரென்றுணர்க. (90)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மரணமன்னவன் விஜயமாகைக்கு ஜரையே முன் ஜாக்கிரதைப்படுத்து மென்கின்றார்:—மரணவென.

மரணமா மன்னன் முன்னர் வருநரைக் கவரி வீசித்
திரளுறு வியாதியாதி யாகிய சேனை செல்லும்
தரமறு நரைவெண் சாந்தார் சரீரமா மனைக்கு ளாபத்
துரவலி யின்மை சோர்வா மொண்டொடி மகளிர் வாழ்வார். (91)

(ப - ரை.) மரணமாமன்னன் முன்னர்=இறப்பாகிய இறைவன்முன், வருநரைக் கவரிவீசி = வாராநின்ற ஜரையென்னுந் தவளசாமரை யிரட்டி, திரளுறு வியாதியாதி யாகிய=கூட்டங்கூட்டமான ஆதிவியாதிகளென்னும் காமாதிகுன்மாதிகளாகிய, சேனை செல்லும் = படைகள்போம், தரமறுநரை வெண்சாந்தார் = குணங்குலங் கல்விகவின் றன முடையனெனப் பாராது ஜரைத்தவளச் சுதை லேபத்தால் வெளுத்திருக்கும், சரீரமாம் மனைக்குள் = சரீர அந்தப் புராந்தரத்தில், ஆபத்து உரவலியின்மை சோர்வு ஆம் = விபத்து அசக்திஆர்த்தி என்று சொல்லப்பட்ட, ஒண்தொடி மகளிர்வாழ்வார் = ஒள்ளிய தோள்வளையலணிந்த அங்கனையார் சுகமாக ஜீவித்துக்கொண்டிருப்பர். (91)

(ஸ்ரீ - வீர.) ஜரையேபலிதத்தோடுகூடித் தவளசாமரமாம், அவற்றைப் பதாகினி (சேனை) யுடைத்தாயிருக்கும். பவனிவரும் மரணமன்னவனுக்கு முன்னே செல்லு மென்றறிக. சுதை = சூரணுதி விகாரமாம். மரணமாகிய மன்னவர் வருவதற்கு முன்னர் ஜரையாகிய வெண்சாமரையை வீசிக்கொண்டு உள்நோய் வெளிநோய்களாகிய தமது சேனைகள் வெளியே செல்லாநிற்கும். ஜரையாகிய சுண்ணும்புப் பொடியாற் பூசப்பெற்று வெளுத்த சரீர அந்தப் புரத்தினுள்ளே முடியாமை பீடை ஆபத்து என்னும் ராணிமார்கள் சுகமாக வாழ்வர்.

(ச.) மரணமே சுவதந்திரமா யிருத்தலின் மன்னனுவன், அவன் வருவதை விளக்குதலின் ஜரைகளே வெள்ளிய சாமரைகளாம். அவற்றையுடைய ஆதிவியாதிகளே யாயசேனைகள் முன்னே செல்லும் என்பதாம். சுதையா லேபிக்கப்படுதலாவது = சூர்ண பரிகற்பித லேபவிசேடமா மென்க, அதனுல் வெளுத்திருக்கும். ஆபத்து = மிகுந்த பயமும் உரவலியின்மை = அசக்தி = அர்த்தக்கிரியையிற் சாமர்த்தியமின்மையும், சோர்வாம் = ஆர்த்தி = பீடையும், ஆகிய, ஒண்டொடிமகளிர் சுகமாக வசிப்பார். அர்த்தக்கிரியையாவது பிரயோஜன காரியமாம். சுகவிருத்திகள் மற்றொன்றுமின்றென் பதாயிற்று. உரம்திடமாக வசிப்பரெனினுமாம். (91)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதிகமாகக் கூறுவதானேபயனென்னே, ஜரையோடு கூடியவன் அநேக துயரங்கட்கிடமா யிருந்து வாழ்வதைப் பார்க்கினும் வீழ்தலே நலமாம் ஜரையவமானப்படுத்த மரணமெதிர்பார்க்க வாழ்தலிலென்ன பயனும் மந்தமதியை யுடைய தத்துவமறியாத வெனக்கென்கின்றார்;— நரையென.

நரையுறு தீவாணுளாம் பேயுட னண்ணி வாழ்வென்
சரைவெலற் கரிதியார்க்கு மீட்ணை மூன்றுந் தள்ளும்
நிரைபவத் தவினையாகி நிகழின்பப் பொருள்க ளெல்லாம்
புரையுறு மெலியா நூல்போற் காலனற் பொன்று மன்றே. (92)

(ப - ரை.) நரையுறு = ஜரையோடுகூடிய, நிவாணுளாம் = துர்ஜீவிதமாகிய, பேயுடன் = துர்க்கிரகத்தோடும், நண்ணி வாழ்வென் = பொருந்தி வாழ்வதாலென்னே பிரயோஜனம், சரைவெலற்கரிது இயார்க்கும் = எத்தகையவர்க்கும் வயோதிகம் ஜயித்தற்கரியதேயாகும், ஈடணை மூன்றுந்தன்னும் = சர்வ ஈஷணைகளையும் திரஸ்கரிக்கும், நிறைபவத்து = பாரம்பரியமாக வாராநின்ற சமுசாரத்தோர் பால், அவிஞையாகி = மயலாற் சுகசாதனமெனவாகி, நிகழ்=பொலியாநின்ற, இன்பப்பொருள்களெல்லாம்= சுகபாவனைகள் யாவுமே, புரையுறு மெலியால் = யாவற்றையுங் கெடுக்குங் குற்றத்தோடுகூடிய ஆகுவினால், நூல்போல் = பட்டுவஸ்திரங்கள் முதலியவை கெடுக்கப்படுதல்போல, காலனால் = பெருஞ் சங்கார தேவனால், பொன்றும் = கெடுக்கப்படும். (எ-று.)

(ஸ்ரீ - வீர.) ஜரையையடைந்து பகுயாதனைகட்குப் பாத்திரபூதமாயும் வாழும் வாழ்வு யாதுளதோ அத்துர்ஜீவித துர்க்கிரக துரபினிவேசத்தால் என்னே பயனென்பதாம். திக்குவிஜயம் செய்பவராலும் வெலற்கரிதாமிச்சரை; ஞானமுடையவர்களையும் விடுகின்றதில்லையாதலின் என்க. மகாதுக்கந்தருந்தன்மையானே சர்வேஷணைகளையும் திரஸ்கரிக்கின்றது. அதிமகத்தான ஜரைத் துக்கத்தால் ஆகுலப்படுத்தப்பட்ட மனத்தன் அத்துக்க நீக்கத்தையேவிழைந்து கொண்டிருப்பனன்றி மற்றொன்றையும் கருதான் என்பது கருத்தாம். இங்ஙனஞ்சென்ற கிரந்தசந்தர்ப்பத்தால் துக்க சதசங்குல சமுசாரத்தில், குற்றமற்ற சுகம்யாண்டும் இலதாமெனத்துணியப்பெற்றதாம், இப்போதின்பமுளதாமென வுடன்படினும் போக்தாபோக்கிய போகவடிவ அதற்கு அநித்தியத் தன்மைத் தோடம் வந்தணுகுதலின் முக்கியானதின்றுமென்னும் உத்தரகிரந்த சந்தர்ப்பத்தால் ஓதுவதன்முன் ஆண்டுச் சுகத்திற் கநித்தியத்தன்மையை முதலிற் கூறுகின்றார். நிரையென. உண்மையிலின்பமில்லாவிடினும் மயலாலின்பம் சிலருண்டென்பார், அவ்வாறிருப்பினுமஃதநித்தியமேயாமென்பார் நிகழ் என்றார். ஜரையானது வந்தபின்னரும் வாழ்ந்துகொண்டிருக்க வேண்டுமென்ற துக்கவாழ்க்கையாற்கெட்ட பிடிவாதஞ் செய்வதாலென்ன பிரயோஜனமுளது, வீண்டானன்றோ; உலகத்திலுள்ளவர்களால் ஜரையானது வெற்றிகொள்ள முடியாமலிருக்கின்றமையானே ஆசைகள் யாவற்றையும் விட்டொழிக்கச் செய்கின்றது. குணந்தோஷம்பலம் மேன்மை முதலிய தனது மிகுந்த விலாசங்களாலே சர்வப் பிராணிகளின்றொழில்களாகிய மனைவிமாரை இரமிக்கும்படியாகச் செய்யும் காலபுருடன் என்பார்காலனால் என்றார். மேற்கூறியபிரகாரம் போக்கியங்களாகிய தனங்கண் முதலியவை, போக ஆசை போக அனுபவகாலமாகிய பாலிய முதலிய அவஸ்தைகள் தோடமுடையனவென விரிவாய் விளம்பியமையானும், அளவிடப்படாத மகாதுக்கத்தை முடிபாக உடைத்தாயிருக்கின்றன வெனக் கூறினமையானும் ஸ்ரீ இராமர் தமக்கு இகாமுத்திரார்த்தபல போகவிராக மிருப்பதாகக் காண்பித்தனர், "இப்போது காமாதிகளின் இயற்கையை விஸ்தரிக்கும் வாயிலாய் நித்தியாநித்திய வஸ்துவிவேக மிருப்பதையும் காண்பிப்பார் பொன்றுமென்றார். அவிஞையாகி = அஞ்ஞானத்தினாலே மூடர் மயலுடையவராகி, இஃதென்னுடைய போக்கியம், யானிதன் போக்தா, இவை யதன் சாதனங்கள், இதனாலிதைச் சம்பாதித்து நெடுநாளைக்கனுபவிப்பேன், இஃதின்றென்னாலெய்தலாயது, "இஃதினி யெண்ணுமாறெய்துவலினிதே" என்பன முதலிய அளவில்லாத மனோவிகற்ப கற்பனைகளானே மிகமிகவும் விவகாரவசனங்களை வசனிப்பவரும் அற்பதேகத்தி லான்ம மதியைச் செய்பவரும் அற்ப சுகலேசங்களிற் பரமபுருடார்த்த மதியைச் செய்பவரும்ஆவர் ஆகிய மூர்க்கமூடர்களால் சத்துருமித்துரு உதாசீனர் முதலிய பேதங்களானும், தள்ளத்தக்கது கொள்ளத்தக்கது உபேக்ஷிக்கத்

தக்கது என்பது முதலிய பேதத்தானும், அவற்றாலுண்டாகிய இராகத்துவேடாதி பேதத்தானும், சம்சாரத்தைப் பெருக்கும் பிரமாண்டப் பொந்தில் ஒன்றை மற்றொன்றாகக் கவரும் பெருமயக்கமானது ஒருவரானுங் கெடுக்கமுடியாத விதமாக அடைவிக்கப்பட்டுளதாம். இத்தகைய அஞ்ஞானமயமாகத் தோற்றும் அவஸ்துவான சமுசாரத்தில், குழந்தைகள் கண்ணடிக்கனியை யுண்ணக் கருதுவதேபோல மூடரே இரமிப்பரன்றி விவேகியர் இரமியார், இத்தகைய மித்தியா சமுசாரத்தின்கண்ணும் எம்மூடர்கட்குத் துச்சமாகிய சுகவாசனையும் ஆசையுமுண்டாகின்றதோ அம்மூடர்களையும் எலியானது செல்லும் வளைக்கருகிருக்கும் அறுகம்புன் னுனியை மாத்திரம்பற்றி வாழவேண்டுமென்றெண்ணி நூல்நூற்று அந்நூல் நுனியிற்றொங்கும் நூற்புழுவினது நூலை அடியோடும் அறுப்பதேபோலக் காலன் அடியோடு கெடுத்துவிடுவன். நூல் ஆகுபெயராற் பட்டாடையைத் தொட்டு நின்றது.

(ச.) வாழ்வேன் = ஜரையோடு கூடியும் ஜீவிப்பதாயின் அதிதுக்கத்தோடு மேன் ஜீவிக்கத் துராக்கிரகம் செய்யவேண்டுமென்பதாம், ஈஷணை = சர்வ ஆசாதுக்கங்களையும் ஜராநிமித்த துக்கந்திரஸ்கரித்தலால் சர்வதுக்க அதிசயமுடையதா மென்பதாயிற்று. இனிக்காலம், இன்பப் பொருள்கள் = சுகபாவனைகள் = சுகசௌக்கியகந்தங்கள், நூல்போல = திருணுதிக்கொத்துப்போலக் கெடுக்கும். (92)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுகஜனக விடயசமுதாயத்திற்கு நித்தியத்தன்மை யிருக்குமாயின் சுகத்திற்கும் பிரவாகரூபத்தால் நித்தியத்தன்மை சம்பவிக்கும் எனக்கடாவ விடைதருகின்றார்:—மகரவென.

மகரநீர் கடல் குடிக்கும் வடமுகக்கனலே போலச்
சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்
புகலரும் பெரியோ ரேனும் பொழுதொரு கணமுந் தாழா
னகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்கு மன்றே. (93)

(ப - ரை.) மகரநீர் கடல்குடிக்கும் = முதலைமுதலிய ஜந்துக்கணிறைந்த பெருநீர்நிலயமாய சமுத்திரத்தைப்பானஞ்செய்து வற்றடிக்கும், வடமுகக்கனலேபோல = வடவாத்தீயேபோல, சகலமும் விழுங்குங்காலன் = யாவற்றையுந் துவம்சஞ்செய்யும் சகலகஸ்மரனென்னுங்காலன், சகத்திடைவிழுங்காதில்லை = கெடுக்காதவஸ்துவொன்று இவ்வுலகத்தின்கண்ணே யிடையதாம், புகலரும்பெரியோரேனும் = சொல்லுதற்கரிய புகழையுடைய மகான்களாக இருந்தபோதினும், பொழுதொருகணமுந்தாழான் = அக்காலதேவன் ஒருகணமும்பரிபாலியான், அகிலமும்விழுங்கி = அசேஷவிசுவத்தைக் கவளீகரித்து, தானே = அக்காலன்றானே, அகிலமாய்நிற்கும் = விசுவான்மத்தன்மையடைந்துநிற்கு. எ - று. 93

(ஸ்ரீ - வீர.) கஸ்மரன் = பக்ஷணசீலன். துச்சர்கட்குக்காலனாற் பயமிருந்தபோதினும் மகாத்மாக்கட்கு அஃதின்றாமென்றாசங்கிப்ப விடையளிப்பார், புகலருமென்றார். பூரணநிலவெழுந்தவுடனே பொங்கிப்பெருகும்பெருங்கடலை வடவாமுகவனற்குடிப்பதேபோலச் சகலமும்விழுங்குங்காலன் விவகாரபூமியானஜகத்திடை விழுங்காததுமுளதோ! இல்லவேயில்லை உண்டாயயாவற்றையுமேவிழுங்கிவிடுவன். இச்சருவதிருசியசத்தைகளையும் ஒரேகவளமாய்விழுங்கமுயன்றகாலனே, சர்வ பதார்த்தசாதாரணமாக அதிபயங்கரசங்கார உருத்திரனுவன், வல்லமை பேரறிவுமகிமைமுதலியவற்றானே மிகப்பெரியோராயிருப்பினும் ஒருகணப்பொழுதாயினும் தாழான், உடனேகொண்டுபோய்விடுவன் அகந்

தவிசுவத்தையுந்தானேகவஸீகரித்து விசுவவடிவமாய்க்காலனே விளங்காநிற்பன்.

(ச.) சர்வபக்ஷகனுமிக்காலன் விழுங்காதது உலகிலில்லை என்றதனால், பிரஹ்மாண்டங்கள் அநந்தமாதலின், அளவற்ற ஆயிரக்கணக்கான சகச்சாலங்கள் உள்ளன, அவையனைத்தும் அநித்தியமென அறைந்ததாயிற்று. கணமுந்தாழான் = கற்பமுடிவின் பின் கணநேரமுஞ் சகியானென்பதாம். அகிலம் = விசுவம், அகிலமாய் நிற்கும் = விசுவரூபியாயிருப்பன். (இ - ம்) காலன் ஈசுரசக்திரூபமாதலின் விசுவாகார ஈசுரரூபத்தோடபேதம் ஆரோபித்திங்ஙனங் கூறியதாம். (93)

(ஸ்ரீ - வீர - அ - கை) இரமணீயத்தன்மை, சற்கருமத்தன்மை, குணகரத்தன்மை முதலியவையும் கால நிவாரகங்களே யாவதில்லை யென்கின்றார்:—விழுவென.

விழுமியர் சுபத்தின் பாலர் மேருவை யொப்போ ரெல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோடிலை துரும்பு பொன்மலை புணரி வெள்ளஞ்
செழுமகேந் திரமுங் காலன் சிதைத்துத்தன் வடிவமாக்கும். (94)

(ப - ரை) விழுமியர் = இரம்மியர், சுபத்தின்பாலர் = தூய்து தொடங்குவோர் மேருவை யொப்போர் = சுமேருபோற் பெரியர், எல்லாம் = என்பவர் யாவரையுமே, பழுதறுகருடன் கொல்லும் பாம்பென = குற்றமற்ற விகங்கராஜன் சங்கரிக்கும் அற்ப அரவமென்ன, காலன் கொல்லும் = காலபகவான் நசுக்கிவிடும், புழுதியோடு இலை துரும்பு = பாம்சுபர்ணம் திருணம் என்னுமிவற்றுடன், பொன்மலை = தங்கமலை, புணரிவெள்ளம் = சமுத்திரமேழு, செழுமகேந்திரமும் = சர்வ வளப்பம் நிறைந்த மகேந்திரமலை என்னுமியாவற்றையும், காலன் = சங்காரபகவான், சிதைத்து = துவம்சப்படுத்தி, தன்வடிவமாக்கும் = ஆன்மமயமாய்ச் செய்துகொள்வன். (எ - று) (94)

(ஸ்ரீ - வீர) தூய்து தொடங்குவோர் = மங்களகாரியத் தொடக்கம் யாவருக்கோ அவர் அத்தகையர் ஆவர். அற்றேல் அநந்தபதார்த்த விசித்திரமத்தியில் காலனுக்குக்கட்டுப்படாததுஞ் சிறிது சம்பவிக்கலாமேயெனின், இன்றென்றுரைப்பார், புழுதியென்றார். ஆன்மமயமாக்குதலாவது, தனது உதரபூரகஞ் செய்து கொள்ளுதல் என்பதாம். மிக அழகாயிருப்பவர்களும், நல்லொழுக்கத்தவர்களும், மேருகிரிக்குச் சமானமாய் வல்லமையுள்ளவர்களும், சர்ப்பங்கள் கருடனால் விழுங்கப்படுவதேபோலக் காலனால் விழுங்கப்படுவார்கள். தயையேயின்றியவனும், கற்போலக் கடினமானவனும், புலி முதலியவற்றைப்போலக் குரூரமானவனும், இரம்பாதிபோலக் கூர்மையானவனும் உலோபியும் அதமனும், தன்வயிற்றை நிரப்புவதிலேயே கருத்தையுடையவனும், ஆகியகாலன் புழுதி, இலை, துரும்பு, பொன்மலை, மஹேந்திரம், அலைகடல், முதலியயாவற்றையும் தன் வயமாக்கி விழுங்கும் பொருட்டு முயலுகின்றனன். இவன் இதுவரை விழுங்காதவஸ்துவே கிடையாதென்பதாம்.

(ச.) புழுதியாதி மஹேந்திராந்தமான சகல சகத்தையும் தனது குக்ஷியில் அந்தர்ப்பவிக்கச் செய்யு மிக்காலனென்பதாம். (94)

(ஸ்ரீ - வீர - அ - கை) யாவற்றையும் தன் மயமாக்க முயல்கின்றனன் என்பதனானே காலன் சர்வ சங்கார கர்த்தாவெனக் கூறப்பட்டது, அதனையே விரிக்கின்றார். பெருங்கற்பந்தனில் விளங்கா நிற்கும் என்பதந்தமாய கிரந்த சந்தர்ப்பத்தால், ஆண்டுப் பிரதமம் பிராகிருதப் பிரளயத்தில் பிரஹமாண்ட சங்காரத் தன்மையைக் கூறுகின்றார்:—அகலென.

அகல்பூதக் கொதுகிரையு மண்டமெனுங் கனியுகுத்த வத்தி யாயும்
பகலவனே கண்ணகப் பகற்பொழுது பார்வையாற்பதங்கள் பார்த்துச்
சகமெனுந்தொல் வனத்துலக பாலரெனும் பழம்பறித்துத் தானே தின்னுந்
திகழுலகா மணிமாலைக் குணமூன்றாற் கோத்தணிந்து சிந்துங் காலன். (95)

(ப - ரை) காலன் = பிரஹ்மாண்ட சங்காரன், அகல் பூதக்கொதுகு இரையும்= விஸ்தீர்ணமான பூதமசகங்கள் கும்கும் என்றிரைச்சலிடும், அண்டமெனுங் கனியுகுத்த= பிரஹ்மாண்டங்க ளென்னுங் கனிகள் யுதிர்த்துக்கொண் டிருக்கும், அத்தியாயும் = பெரிதாய உதும்பர பாதபமாயு மிருக்கும், பகலவனேகண்ணாக = சூரியனே நேத் திரமாக பகற்பொழுது = பகற்காலமேயாய பார்வையால் = நோக்கத்தால், பதங் கள் பார்த்து = பாகமானதை நோக்கி, சகமெனுந்தொல் வனத்து = ஜகத்ஜீர்ண வனத்தில், உலகபாலரெனும் = ஜகத்ரக்ஷகரென்னும், பழம்பறித்து = கனிகளைக் கொய்து, தானே தின்னும் = அயலொருவரு மின்மையின் சுயமே விழுங்கும், திகழுல காமணிமாலை = விளங்காநின்ற லோகரத்நாவலியை, குணமூன்றாற் கோத்து = முக் குணங்களால் நிரப்பித்து, அணிந்து = அலங்காரப் பொருட்டு அலங்கரித்து, சிந்தும்= மீண்டும் சிதறுமாசெய்யும். எ - று (95)

(ஸ்ரீ - வீர) பிராணிகளேயாய கொதுகுகள் ஆற்றும் குங்குமத் தொனியோடு கூடிய
பிரஹமாண்டங்களேயாய அத்திக்கனிகளின் கூட்டங்களையுடைய பேரத்திமரமாம்.
பிரஹமாண்ட சங்காரத் தன்மையைக் காலத்திற்குரைத்த மாத்திரத்தே அதனுள்ளடங்
கிய சங்காரத். தன்மையும் துணியப் பெற்றதேயாம், ஆயினும், அநித்தியத் தன்மைப்
புத்திதாட்டியமாதற் பொருட்டுத் தனித்து அதனுள்ளடங்கியிருக்கும் வஸ்து சங்கா
ரத் தன்மையைக் காண்பிப்பவராய் ஆதியில் லோகபால சங்காரத் தன்மையைச்
சாற்றுவார், பகலவனேயென்றார். பகற்காலம் = அஸ்தமய சமயம். திதிகாலத்
தில் அதனை யங்கத்தணிந்து சங்காரகாலத்திற் சிதைத்துப் போக்கும். பிராணி
களாகிய கொதுகுகள் கும்கும் என இரையும் பிரஹ்மாண்டங்களாய அத்திக்கனி
நிறைந்த பெரிய மரமாயிக்காலனிருப்பன். தினமாகிய இமைதிறத்தலானே சூரியனா
கிய கண்ணாற் பழுத்ததைப் பார்த்து ஜகத்தாகிய பழைய வனத்திலிக்காலனானவன் பக்
குவமாயிருக்கும் லோகபாலர்களாகிய பழங்களைப் புசித்துக்கொண்டே யிருப்பன் இது
பாலக சங்காரத் தன்மையாம். வித்தைவிநய முதலிய நூற்களானே கோக்கப்பட்ட
சற்புருடர்களாகிய இரத்தினமாலையை நிரந்தரம் அலங்காரப் பொருட்டுத் தனதவயவங்
களாகிய கிருத திரேதாயுக முதலியவற்றில் அணிந்தணிந்தடிக்கடி அறுத்தெறிவன்,
யாவரையுமே யறுத்தெறிவதாயினும் குணவான்களுடைய விநாசமே லோகப்பிரசித்த
மாகுமன்றோ ! = இது பாலிய சங்காரத் தன்மையாம்.

(ச.) பூதங்களாகிய மசகங்களால் குங்குமத் தொனி தொனிக்கும் பிரஹ்மாண்ட
ரூபபலஸ் தோமங்கட்கு (கூட்டங்கட்கு) பிருகத் பாதபத்தன்மையை அதாவது ஆசிரய
பூத உதும்பர விருக்ஷத் தன்மையை யடைந்துளான். அத்தியாயும் எனப் பாதபத்வ நிரூ
பணஞ் செய்தலால் காலன் சிருஷ்டி திதி சங்காரகாரணனெனக் குறிப்பித்ததாம்.
(உ - ம்) காலன் பூதங்களைச் சிருட்டிப்பவன், காலன் பிரஜைகளைச் சங்கரிப்பவன்,
சகலமுங் காலத்தினது வசமாம் காலனொன்றினது வசமன்றாவன் ; என்பதாம், இக்கா
லன் பகற்காலமென்னும் பார்வையாற் பார்த்தலினால் பக்குவப்பட்ட லோகபாலராகிய
பலங்களை முற்றும் நன்றாக உற்றுநோக்கி ஜகத்தாகிய புராதன வனத்தினின்றும் பறித்
துப்பறித்துத் தின்பன். திகழுலகா மணிமாலை = சற்சனரத்தின மாலை, அணிந்து =

ஆபரணம் பூஷணு நிமித்தம் போன்மேனியிற் றரித்துப் பின் சிந்துங்காலன். " சமமாம் புஷ்பாபரணங்கடாம் பார்த்திவங்களாம் " என்னும் நியாயத்தானே இரத்தின மாலையும் பூமாலையைப்போல நிருமாலிய மாமெனக் குறிப்பித்ததாம். குணமூன் றென்றதற்கு வைராக்கியம் உபரதிஞானம் எனவேண்டுமோயின் அமைக்கலாம். (95)

(ஸ்ரீ-வீர - அ - கை.) பாலக சங்காரத் தன்மையைப் பகர்ந்து பாலிக்கத் தக்கவற் றின் சங்காரத் தன்மையையே இன்னும் பகர்கின்றார்:—சிறியவென.

சிறியசகப் பழங்குடிலிற் சிதறுலக மணியமனுஞ் செப்பிற்சேர்க்கு
மறிவில்பல பூதமாம் விலங்குகளும் பறவைகளு மளவற்றெங்கு
முறியவுலர் சகப்பாலை தனில்வேட்டை யாடிநெடு முதுகற்பத்திற் [காலன்.
பொறிவடவைத் தாமரைசேர் கடல்விளையாட் டோடைகளாப் பொருந்துங்

(ப - ரை.) சிறிய சகப்பழங்குடிலில் = அற்பமானஜகத் ஜீர்ணமனையில், சிதறுலக மணி = பரவிக்கிடக்கும் லோகமணிகளை, யமனுஞ்செப்பில் சேர்க்கும் = மிருத்யுசம் புடத்தில் பொறுக்கி யடைக்கும், அறிவில்பல = தீனங்களாயும் மூடங்களாயு மிருக்கும் பற்பல பூதமாம் விலங்குகளும் பறவைகளும் = பிராணிகளாகிய மிருகங்களும் விகங் கங்களும், அளவற்றெங்கு முறிய = அளவில்லாமல் எவ்விடத்தும் ஜர்ஜரிதமாமாறு, உலர்சகப்பாலைதனில் = சுஷ்கமான ஜகத்ஜாங்கல ஜாலத்தில், வேட்டையாடி = ஆகேட கம்புரிந்து, நெடுமுது கற்பத்தில் = நெடிதுமுதிர்ந்த கற்பகாலத்தில், பொறிவடவை = பொறிப்பொறிந் தெறியும் சுவாலையுற்ற வடவானல மென்னும், தாமரைசேர் = பங்கஜ மலங்கரித்துக் கொண்டிருக்கும், கடல் = அர்ணவத்தை, விளையாட் டோடைகளாக = இரம்மியமானகிரீடா புஷ்கரணிகளாக, காலன்பொருந்தும் = காலன் அடையா நிற்பன். (எ - று.) (96)

(ஸ்ரீ - வீர.) உலகமே ஜீர்ணகுடிசையாம், அங்கு விக்ஷிப்தமாய்க் கிடக்கும் குணங்க ளோடு கூடிய லோகங்களேயாய மணிகளைப் பெரும் பள்ளத்துடனிருக்கும் யமனாகிய சம்புடத்தில் வைக்கும் அயல்வகையினனே காலனுடைய லோகசங்காரத் தன்மையைக் கூறுவார், முறிய வுலரென்றார். அடற்சிலைதாங்கி யென்பதுவரையு முள்ளகிரந்த சந்தர்ப் பத்தாலெனவுணர்க ஜாங்கலம் = காற்று மிகுந்ததேசம், இதனைக் கூறுதலால் வேட் டஞ்செய்யத்தக்க தேசங்குறிப்பிட்டதாம் ஜாலம் = சமுதாயம். இத்தகைய வனங்க ளில் பூதமிருக விநோதங்களோடு வேட்டையாடி விளையாடும் இக்காலனெனப் பெயரிய இராஜகுமாரனுக்குக் கற்பகால மகார்ணவமானது கிரீடாபுஷ்கரணியாம் என்பதாகி உத்தரகிரந்த சமூகக் கூற்றுப் பொருள்களோடு சம்பந்தமாம் என்க. ஏகதேசத்தில் உல் லாசமாக இருக்கும் கவின்வாய்ந்த வடவ அநலமேயாய பங்கஜத்தை யுடையதாம் அச் சமுத்திரம், ஜகத்தாகிய பழையகுடிசையிற் சிதறுண்டிருக்கும் குணத்தோடு கூடிய உலகமணிகளையுக்கிரமாகிய பொந்தினையுடைய யமனாகியசிமிளில் முறையாக அடைத் துக்கொண்டே யிருப்பன் சண்டிகாதேவி யென்னும் பிராணநாயகியோடும் கூடிய அக் காலனே வேட்டைக்குதூகலத்தோடு விளங்கும் அரசகுமாரனுக் வருணிக்கப் படு கின்றார்:—வேட்டையென, அக்காலனே வேட்டைமகிழ்வால் விளையாடும் மகாமன்ன வன் மைந்தனாக விளங்குவன்; இச்சம்சாரத்தில் அடங்கா மேன்மையான லீலையை யுடையவனும், சர்வ ஆபத்துக்களும், மிகுதூரத்திலேயே நீங்கப் பெற்றவனும், எண்ண வொண்ணாத பராக்கிரமத்தை யுடையவனும், பிரசித்தமாகிய சூரிய சந்திராதிகளையும் பிரகாசிப்பித் தொளிரும் அரசனாகிய பரப்பிரஹ்மத்தினுடைய அநாதிமாயை யென்னும்

பட்டமகிஷியின் சம்பந்தத்தாற் கிடைத்த வடிவத்தானும் யுவராஜ்ஜிய பட்டாபிஷேகம் பெற்றுச் சம்பத்துக்களி யாவற்றையும் அனுபவித்தலினுனும் மைந்தனுமாகிய காலனு டைய சரித்திரமானது வருணிக்கத்தக்கதேயாம். மிகவும் பழைமையா யிராநின்ற ஜகத் தாகிய பெருங்காட்டுக் கூட்டத்தில், தீனர்களும் அறிவில்லார்களும் ஆகிய பிராணிக ளென்னு மிருகக் கூட்டங்களோடு வேட்டை விநோதத்தைச் செய்யும், இவனுக்கே அக்காட்டின் ஏகதேசத்தில் விரிந்து விளங்கும் அழகிய வடவாமுகாக்கினி யாகிய தாம ரையா லலங்கரிக்கப் பெற்ற கற்பகாலப் பெருங்கடலானது மனோரம்மியமான விளையா டுந் தடாகமாகச் செய்யப்பட்டுளது.

(ச.) ஈண்டுச் சகத்தேபழங்குடில் = புராதன கிருகமாம், குணவான்களாகிய ஜனங் களே மணிகளாம், மிருத்தியுவே சம்புடமாம், யாவருக்கும் அதன் கண்ணே யந்தர்ப் பாவமிருத்தலின் அதற்குக் கிரகோடரத்தன்மையுளதாம் அதாவது பயங்கரவதனக் குகையிருக்குகையுளதாம். (இ - ம்) ஒரு ரத்நசம்பாதன இச்சையுள்ளவன் புராதன கிருகாதியிற் சிதறிக்கிடக்கும் நாநாவித இரத்தினங்களையெடுத்து மகாகோடரச்சம்புடத் திற் புதைத்து வைப்பதுபோலக் காலமுமா மென்பதாம். கிருகஸ்வாமியாய் வாஞ்சை யால் அந்நோக்குற் றிருப்பதேபோலக் காலனு மிருத்தலின் என்பதுணரக் கிடந்தது. பிரளய அர்ணவங்களாகிய ஓடைகள் பலவாதல் போல் அங்குற்றவடவா நலமும் பல வாதலின் கமலவனம் வடவனலாம். ஜாங்கல ஜாலம் = நிர்ஜலாரண்யம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேட்டையாடியதா லுண்டாய சிரம அபநோதப் பொருட் டுப் புஷ்கரணியைக் காண்பித்துக் காலராஜகுமாரனுக்கு வேட்டை நிர்க்கமனத்தின் முன்போஜனங் காண்பிக்கின்றார்:—கைப்பென.

**கைப்பினெடு புளிப்புக்கார்ப் பிவைமுதலாஞ் சுவைபடைத்த கனபூதத்தா**
**லொப்பரிய பாறயிரை யாதியாய் வருகின்ற வுததிதன்னல்**
**துப்புடையன் விவிதமாந் தோற்றமுள சகங்களினுற் சுற்றிச் சுற்றி**
**வைப்புடைய வவற்றவற்றும் பெருங்கற்பம் பலகாலும் வட்டஞ் செய்யும்.(97)**

(ப - ரை.) கைப்பினெடு புளிப்புக்கார்ப்பு = கடு ஆம்ல திக்தம், இவை முதலாஞ் சுவைபடைத்த = என்பதாதிய இரசங்களுற்ற, கனபூதத்தால் = கனமான பூதாதிக ளால், ஒப்பரிய = உவமித்தற்கு வேறுபொருள் விசால முதலியவற்றி லில்லாத பால் தயிரையாதியாய் = பாற்கடல் ததிக்கடன் முதலாக, வருகின்ற வுத்திதன்னல் = எண் ணவரும் சமுத்திரங்களால், துப்புடையன் = கல்யவர்த்தன முடையவனுவன், விவித மாந்தோற்றமுள = நானுவகையான தோற்றத்தோடு கூடிய, சகங்களினுற் சுற்றிச் சுற்றி=உலகங்களினுற் சுற்றிச்சுற்றி, வைப்புடைய—இருப்பையுடைய,அவற்றவற்றும்= அவற்றவற்றின் சம்பந்தமாய, பெருங்கற்பம் = பெரிய கற்பத்தை, பலகாலும்=அநேக முறை, வட்டஞ் செய்யும் = ஆவர்த்தனஞ் செய்துகொண் டிருக்கும். (97)

(ஸ்ரீ - வீர.) கடுதிக்த ஆம்லங்களாய பிராணிகண் முதலியவற்றை யுடையவற்று வென்பதாம். நானுரச யுக்தபூத உபதம்சமுற்ற ததி க்ஷீரசாகரங் கலந்தவுலக அன்னத் தின்வைப்பி லேதுவுரைப்பார் வைப்புடைய வென்றார். எவையெவை கற்பாதியிற்றி தங்களாமோ அவையவையேயாயஜகங்கள் கற்பாந்தத்திலும் இருக்கின்றன வென வைப் புடையதாம். கல்யவர்த்தனம் என்பது அதிகாலைப் போஜனமாம். உபதம்சமென் பது அதற் குபகரணமாய ஊறுகாய் முதலிய வியஞ்சனமாம். அபநோதம் = நீக்கம். வட்டஞ்செய்தல் துப்புடைமைபோற் றேற்றுகின்றது என்றமைக. கைப்பாகவும், கார

மாகவும், புளிப்பாகவும், இராநின்ற அப் பூதங்களோடும், தயிர்பான் முதலிய கடல்களோடும் தனித்தனி ஏகவடிவமாகி நெடுநாளா யிராநின்ற இந்தஜகத்தானது அவனுக்குக் காலைப்போஜனமாம். கைப்புக் கார்ப்புத் தயிர் முதலியவற்றோடு பழைய அன்னத்தைக் காலையிலுண்ணல் திராவிடர்பாற் பிரசித்தமேயாம்.

(ச.) கடுதிக்த ஆம்லாதி பூதங்கள் = பிராணிகள், ஆதிசப்தத்தால் மதுராதி சங்கிரகமாம். கடு = வேம்பு முதலியவை, திக்தம் = காரம் = மிளகு முதலியவை, மிகக் காய்ந்தவை = வரகு முதலியவை. விசேஷதாகமுடையவை கடுகுமுதலியவை இவ்வண்ணம் நானாரசங்களோடு கூடிய ததிக்ஷீராதிசாகரசகிதமாய அவற்றானே "தாதா முன்புளபடியே சமைத்தான்" என்னுஞ் சுருதியினால் அத்தகையன வேயாய அநாதன அந்தப் பூதாதி ஜகங்களால் காலை சம்பந்தபோஜனமானது சம்பவிக்கும் என்பதாம். சாகரசகிதமான சகல சகத்துகளும் காலனுக்குப் புராதன அன்ன வியஞ்சன ரூபமாகப் புசிக்கும் வஸ்துவாக ஆயிற்றென்பதாம். (97)

(ஸ்ரீ - வீர. அ - கை.) வேட்டம் ஆட்டமாகவுற்ற காலனுக்குச் சுனியின்றனத் துற்ற பெண்புலியைக் காட்டுகின்றார்: சுனி = பெண்ணாய். அவனுக்கு அனுரூபமான பிரியையைக் கூறுகின்றார். தொல்லென.

தொல்லுலகிற் றோன்றுகின்ற சராசரமாம்பொருளனைத்துந் தொலைத்துமாற்றி
வெல்லரிய சங்கார காளராத்திரி மிகவும் வெருட்சி மிக்க
வல்லபமா நடையுடைத்தாய் மாதர்கண மனைத்துமுடன் மருவப்பட்டு
புல்லரிய சகமோகப் பொறிவனத்திற் புலிப்பேடு போலவாழும். (98)

(ப - ரை.) தொல்லுலகில் = பிராசீனமான உலகத்தில், தோன்றுகின்ற = பிரதீதியாகப்பட்ட, சராசரமாம் பொருளனைத்தும் = ஸ்தாவரஜங்கம ரூபமான சகலவஸ்துக்களையும், தொலைத்து மாற்றி = சங்கரித்து வேறுபடுத்தி, வெல்லரிய = யாவரானும் ஜயஞ்செய்தற்கு முடியாத, சங்காரகாளராத்திரி = சண்டிகா தேவியானவள், மிகவும் வெருட்சி மிக்க = அதிகோர பயங்கரமான, வல்லபமா நடையுடைத்தாய் = சதுரசஞ்சார முடையவளாகி, மாதர்கண மனைத்து முடன் மருவப்பட்டு = சர்வமாத்ரு கணங்களும் பின்றொடரப் பெற்றவளாய், புல்லரிய சகமோக = பற்றுதற்கரிய துயர்மய வுலகமயல், பொறிவனத்தில் = இந்திரியங்கள் உலாவித்திரியும் மாவனத்தில், புலிப்பேடு போலவாழும் = பெண் புலியைப்போல வாழ்ந்து கொண்டிருக்கும். (௯௮)

(ஸ்ரீ - வீர.) சண்டி = சரை, சர்வதாய்க் கூட்டங்களோடு கூடியவளும், புலியைப் போலப் பிராணிக் கூட்டங்களைக் கொல்பவளும், சமுசாரவனத்தில் விளையாடும் பொருட்டு ஏவப்பட்டவளும், மகாசாமர்த்தியத்தோடு சஞ்சரிப்பவளும், ஆகிய சண்டியென்னும் மகாகாளராத்திரியம்மையேயவனுக்கு மனைவியாம்.

(ச.) சண்டியென்னுஞ் சங்காரசக்தி, பெண்புலிபோலச் சமுசாரவனத்தில் பிராணிக் கூட்டங்களைக் கொல்வள் என்பதாம். அச்சண்டிகையே காளராத்திரியாய் நடனஞ்செய்வள் எனமேற் புகல்வர். (98)

(ஸ்ரீ - வீர. அ - கை.) மத்தியபானப் பொருட்டு அக்காலனது கரதலத்தில் வைத்துக்கொண்டிருக்கும் பான பாத்திரத்தைக் காண்பிக்கின்றார்:—படரென.

(ச-அ-கை.) இப்போது இனிதுசிதமான பயங்கர வேடத்தைக் கூறுகின்றார்:—படரென.



படர்பூதந் தொலைத்திரதம் பயில்புவியாம் பானபாத் திரங்கைப்பற்றி
மடல்சூழுற் பலங்கழுநீர் வனசமென வுலகநிரை மாலைசூடி
விடுகோடை யிடிநகைக்கு நரவரியை விளையாட்டு விகங்கமாக
நெடுநீள்வன் புயமாம்பஞ் சரத்தினிடை யேந்துகின்ற நெறியனாகி. (99)

(ப - ரை.) பூதந்தொலைத்து = பூதக் கூட்டங்களை நாசஞ்செய்து, இரதம்பயில்= இரசம் பூரிக்கப்பெற்ற, படர் புவியாம் பானபாத்திரம் = பெரிதாகிய பிருதிவியென்னும் குடிகுடத்தை, கைப்பற்றி = கரதலத்திலேந்தி, மடல்சூழுற்பலம்=இதழ்நிறைந்த கருங்குவளை, கழுநீர் = செங்கழுநீர், வனசம் = தாமரை, எனவுலக நிரைமாலைசூடி = என்று சொல்லப்பட்ட வுலகலோல ஜாலமாலை வரிசைகளை யலங்கரித்து, கோடையிடிவிடு = கோடைகாலத்திடியின் ஒலியும் அற்பமென்றுபேக்ஷிக்கத்தக்கபடி, நகைக்கும்= பேரொலியோடு சிரிக்கும், நரவரியை = நரசிங்கமூர்த்தியை, விளையாட்டு விகங்கமாக= கிரீடைச் சகுந்தமாக, நெடுநீள்வன்புயமாம்= மிகமிக மிகவும் நீண்டுள்ள வலியபுயமாகிய, பஞ்சரத்தினிடை = கூண்டினுள்ளே, ஏந்துகின்ற நெறியனாகி = தாங்குகின்ற தன்மையுடையவனாகி, அக்காலனிருப்பன்-நெறியளாகிச்சண்டி. (99)

(ஸ்ரீ - வீர.) பிருதிவி யென்னும் பூமியே காலனது கரதலத்தில் பானபாத்திரமாகும், அதுவும். அநற்பமாம் என்பார் படரென்றார், மத்தியரசம் பூரிக்கப் பெற்றதாம், வெண்ணறையின் நறுமணப் பொருட்டு அதிசுகந்தமான கமலோற்பலாதி லோலமாலைச் சமுதாயங்களால் அப்பாத்திரம் அலங்கரிக்கப் பட்டிருக்கு மென்பதாம். ஜகத்தடவியின்பால் ஆகேடகஞ்செய்யும் ஆற்றலுற்றதிற் றற்பரமான காலமகாபடனுடைய பிரசண்ட புஜதண்டத்தேந்திய அவன் கிரீடைக்குத்தக்க பக்கியைக் காட்டுவார், விடுகோடையென்றார். அந்நரசிங்கமானது, பெருங்கர்ச்சனைச் சத்தஞ்செய்வதாம், அன்றியும் மாறிமாறிக் கரபுடங்களால் வீராவேசத்தால் பெருந்தோள்களிடைதட்டுவதாம், அவ்வொலி அதிவிகட விரூபமாயிருக்கும். கிரீவ ரோமங்களால் விரூபத்தையடைந்து பெருத்துள்ள கழுத்தை யுடையதாம் அந்நரவரி பெரும் பெரும் பிடரிரோமங்கள் பீதியைப் பெருக்கவைக்கும் என்பதாம். சகுந்தம் = பக்ஷி இரசத்தோடு கூடியதும், மதுவானது சுகந்தமாயும் அழகாயு மிருக்கும் பொருட் டுலகவழக்கம்போ லலங்கரிக்கப் பட்ட செந்தாமரை கருங்குவளை செங்குவளைகளோடும் கூட்டமாமாலைகணிறைந்ததும், ஆகிய பூமியென்னும் பெரிய அகன்ற மதுக்குடத்தைக் கரதலத்தில் வைத்திருப்பன். மகாகர்ச்சனத்தோடு கூடியதும், சகிக்கமுடியாத தோள்தட்டுமோசையை யுடையதும் கேசரங்களானே பார்க்கமுடியாதபடி நிறைந்து பெருத்த கழுத்தோடு கூடியதும் ஆகிய நரசிங்கத்தைத் தோளிற் றெருங்கவிட்டிருக்குங் கூண்டில் அசுரரைக் கொல்லும் பொருட்டு விளையாட்டுப் பறவையாக வைத்திருப்பன். நெறியனாகி யென்றது முப்பத்திராயிர வியாக்கியானம் வாசிஷ்ட சந்திரிகை வியாக்கியானபாட மனுசரித்தாம். சம்சாரதரணியை யனுசரித்தோ சண்டி விசேஷணமே யாதலின் நெறியளாகி யென்பதே பாடமாம். செய்யுள் மொழிபெயர்ப்பும் சம்சாரதரணி யுரைபற்றியதேயாம்.

(ச.) அச்சங்காரகால ராத்திரியின் கரதலத்தில் வைத்த கட்பானை சரித்சமுத்திராதி ரசபூரிதமா மென்க. கமலாதிவாசிதமாய விபுலபூமியேபான எனமாம். நரசிங்கமே அவளது புஜபஞ்சரத்தில் இலங்காநின்ற கிரீடைப்பறவையாம். இவ்வுரைப்படி லோக ஜாலம் பாடமாம். (99)

(ஸ்ரீ - வீர. அ - கை.) நரசிங்கம்போல உருத்திர அனுசரபூத மகாகாலனெனப் பெயரியதேவனும் காலனுக்குக் கிரீடோபகரணமாமென்கின்றார்:—மன்னென.

மன்னுசரற் ககனம்போன் மாசின்றிச் சுரைவீணை மதுரமேவி
முன்னுயர் காலனைக்கேளீ இக்கோகிலக் குஞ்சாக் கொண்டு முழுதுமின்மை
யென்னுமடற் சிலைதாங்கி யெழுதுய ராகியகணை களேந்தி யெங்குந்
துன்னுநடனம் புரிந்துதன் வசமாய்மிக விளங்கிச் சுற்றுநிற்கும். (100)

(ப - ரை.) மன்னுசரற் ககனம்போல் மாசு இன்றி = சரத்து இருதுவிற் பொருந்தும் ஆகாயம்போல களங்கமற்ற நின்மல ஒளியையுடைத்தாய், சுரைவீணை மதுரமேவி = அலாபுவீணையின் மாதுர்யத்தை நுகர்ந்துகொண்டு, முன்னுயர் காலனை = இலங்கும் மகாகால னென்னும் தேவனையே, கேளீஇ கோகிலக்குஞ்சு ஆகக்கொண்டு = விளையாட்டுக் குயிற்குஞ்சாகப் போஷித்துக் கொண்டு, முழுதுமின்மை யென்னும் = அத்தியந்தாபாவமெனப் பெயரிய, அடல் சிலைதாங்கி = வலிய கோதண்டந் தாங்கிக்கொண்டு, எழுதுயராகிய கணைகளேந்தி = விம்மிப்பொம்மிவரும்பெரும் துன்பங்களாகிய சரமாலைகளையேந்திக் கொண்டு, எங்கும் = எல்லா இடங்களிலும் சுற்றுவன். துன்னுநடனம் புரிந்து = நெருங்கிய வாத்தியகோஷ வபிநயங்களுடன் கூத்தாடிக் கூத்தாடி, தன்வசமாய் = நிஜ இச்சையுடன், மிகவிளங்கி = காளராத்திரி சுயமேயாகி யிலங்கி, சுற்றுநிற்கும் = சுற்றிக்கொண் டிருப்பன். (100)

(ஸ்ரீ - வீர.) "உருத்திரானுசரர் நந்தி மகாகாலன் பிருங்கியாம்" எனக்ஷீரசுவாமிகள் கூறியுள்ளார்கள். சுரைவீணைபோலும் மதுரத்தொனியாம். சரற்ககனமென்னு மிடத்தில், மதுரத்தொனி விண்ணெனவும் மூலபாடபேதமாம். கோகிலம்போலும் அவனுக்குக் கறுப்புநிறம் கூறுவார், சரற்ககன மென்றார். ஜகத்ஜீர்ண அடவியிற்புகுந்து பிராணி மிருகவதத்தில் முயற்சிசெய்யும் காலனுக்கு வில்லைக்காட்டுவார், சிலைதாங்கியென்றார். இந்திரனில்லை சந்திரனில்லை மேருவில்லை விந்தியமில்லை என்று நிரந்தரம் ஸ்பூர்ஜித ஆகாரமுடையவனும். துக்கங்களேயாய அம்புகளின் பந்திகளை விட்டுக்கொண்டேயிருப்பன். கோதண்டம் தனு, காலவடிவ பரமேசுவரருக்காமென்க. சிலைக்கதையில் மேற் கூறப்படும் சங்கார பயிரவனென்னும் மகாகாலனை விளையாட்டின் பொருட்டுக் குயிற்குஞ்சாகக் கொண்டிருப்பன், அக்குஞ்சானது பிரஹ்மாண்டங்களையே மாலைகளாகத் தரித்துக்கொண் டிருத்தலின் அநேகஞ் சுரைக்குடுக்கைக ளடங்கிய வீணையைப்போல வடிவத்தானும் ஓசையானும் இனிமையா யிருக்கும், அதன்சொரூபமுந் தொனியும் பிறருக்குப் பயத்தையுண்டு செய்வதேயாயினும் அதனினும் உக்கிரமிகுந்தவர் துதிருஷ்டியில் அதுமதுரமாகவே தானிருக்கும், சரற்காலத்திருக்கும் ஆகாயம்போல நிர்மல நீலமேனி யுடையதுமாம். எப்போதும் டங்காரத்தொனி தொனித்துக்கொண்டே யிருப்பதும், துயர்தரம் அம்புமாலைகளை யளவில்லாமற் கக்குவதும், ஆகிய சங்காரமென்னும் கோதண்டமானது எப்புறத்தும் விளங்கிக்கொண் டிருக்கும். வேறுவகையானே ஜகத்தின் சங்காரலீலையை வருணிப்பார், துன்னுநடனமென்றார், பெருங் கற்பந்தனில் விளங்காநிற்கும் என்பதனுனே சர்வசங்கார சாமர்த்தியமுள்ள தமப்பிரதான சக்திகாளராத்திரி யெனப்படும். இக்காலாத்மா பரமேசுவரர் சுயங்கால ராத்திரியாய் நடிப்பர் எனச் சம்பந்தமாம்.

(ச.) அலாபுயுக்த வீணைபோலும் சாலவினிய தொனியையுடையவன் என்பதாம். நிரந்தரம் டங்காரத்தொனியுக்த கோதண்டன். பூர்ணதுக்கரூப சரக்கூண்டை யுடையவன். (100)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கிரியை அதன்பல வடிவனும் கரையற்ற மற்றவனும், நியதியின் மணாளனும் ஆகிய காலனுடைய சித்திரநடனங் காண்பித்து, அவனுடைய சக்தி

யில் நித்திய காமினியாய நியதியென்னு மம்மையானவள் இடைவிடாமல் முயல்பவளாய்ச் சர்வப் பிராணிகட்கும் போக அனுகூலக்காரியந் தொடங்குபவளாய் மிகமிகவுங் கூத்தாடுவள்; தடையற்ற கிரியாசக்தி வடிவ அவ்வம்மைக்கு நிருத்திய வுபகரணங் களைக் காண்பிக்கின்றார்:—பொன்னென.

பொன்னுலகு தரியணியாம் புணர்பாவ மெனுநூலாற் பூட்டிக்கட்டும்
பன்னரகச் சிலம்புகளைப் பாதலமாம்பதத் தணியும் பானுத்திங்க
ளென்னுமணி சேரிமவானெனு மெலுப்புமணி மேருவென்னும் பொற்பூண்
டன்னிருகாதினுந் தரிக்குஞ் சக்கரவெற் பணிகலையாத் தழுவுமன்றே. (101)

(ப - ரை.) பொன்னுலகு தரியணியாம் = தேவலோக அந்தராவலியே அங்கங் களில் அணிந்துகொள்ளும் பூஷணமாம், புணர்பாவமெனு நூலால் = ஜீவர்களிடத்தே பொருந்திய துஷ்கிருத சூத்திரத்தால், பூட்டி = கோர்த்து, கட்டும் = பந்திக்கும், பன் னரகச் சிலம்புகளை = பலவிதமான கலகல உஜ்வலநரகாலியென்னும் மஞ்சீரங்களை, பாதலமாம் பதத்தணியும் = பாதாலசரணத்தில் அலங்கரித்துக்கொள்ளுவள், தன்னிரு காதினும் = தனதிரண்டு செவிகளிலும், ஹிமவானென்னும் எலுப்புமணி = தீர்க்கமான பனிமலையென்னும் அஸ்திமுத்திரையையும், மேருவென்னும் பொற்பூண் = மகாமேரு வென்னும் சொர்ணமயகர்ணிகையையும், தரிக்கும் = அலங்கரித்துக்கொள்ளுவன், அதே காதின்கண், பானுத்திங்களென்னுமணி = சந்திர அருக்கர்கள் என்னும் லோல குண்டலங்களை, சேர் = அலங்கரித்துக்கொள்ளுவன், சக்கரவெற்பு = லோகாலோக அசலசிரேணியை, அணிகலையாத்தழுவும் = கடிமேகலையாக அலங்கரித்துக்கொள்வன்.

(ஸ்ரீ - வீர.) தேவலோக பேதங்களின் மாலை அக்காலராத்திரியின் அங்கங்களிற் பூஷணமாம். நரகாலியானது அவளது பாதாலசரணத்திருக்கும் மஞ்சீரமாலையாம், ஆலி = பந்தி, மஞ்சீரம் = நூபுரம், மஞ்சீரமாலையின் சாதர்மியத்தைச் சம்பாதிக்கு மென்பதாம். கலகலஉஜ்வலமாவது கோலாகலத்தால் தீப்தமாம். ஒருகாதின்கண் வெள்ளிய பனிமலை யென்னும் என்புவளையத்தை யணிவன் அது தீர்க்கமாம் = சிறிது குறைந்த லக்ஷயோஜனை நீட்சியுடையதாம். கர்ணிகை = கர்ண அலங்கார விசேடமா மென்க. ஈண்டே குண்டலங்களாம், முன்மொழிந்த சிரவணத்திலேயே அசையாநின்ற குண்டலங்கள் கண்டமண்டலங்களிற் கவின்காலும் சிரேணி = பந்தி, ஈண்டு, என்னு மணிசேர் தன்னிருகாதினும் பொற்பூண்டரிக்குமென்றுங் கொண்டு கூட்டலாம். மூலப் படி முன்னன் வயித்தாம். தேவசகித சர்வபுவனமாலைகளும் அங்கங்களிலணியும் பூஷ ணங்களாம், பாதாள பரியந்தமிருக்கும் ஆகாசமானது நீண்டு கறுத்துப் பெருத்த குழன் மண்டலமாகும், அழுகைக் கோலாகலத்தால் ஓங்கி யெரியாநின்ற நரக அக்கினிகளானே யொளிராநின்ற நரகமாலையானவை அவ்வம்மையின் பாதாளமாகிய சரணத்திலிருக்கும் பாவநூலாற் கோர்க்கப்பட்ட பாதகிங்கிணிமாலைகளாம். இங்ஙனம் நியதியம்மைக்குச் சாமக்கிரியோடும் நடனமாயின், அவளுடைய பர்த்தாவிற்கும் அதுவும் பூஷணங்களும் வேண்டுமேயெனின்? முற்கூறிய நாடகசாலையினுள்ளே, கூறப்படும் குண்டல வடிவமாய சந்திரமண்டலத்தாலே அழகு பொருந்தியவனும், நக்ஷத்திரங்களானும் சந்திரிகையானும் தாரகைசந்திரப் பிரதிபிம்பங்களானும் மனோகரமாய விண்ணேயாய மயிற்றோகையால் அலங்கரிக்கப்பட்ட கேசத்தையுடையவனும், நடனஞ் செய்பவனும், ஆகிய கிருதாந்த னுடைய இடது செவியில் என்பு மயமான முத்திரை வடிவக்குண்டலம் கபாலிகரைப் போலலங்கரிக்கப்பட்டுளது, வலதுசெவியில் மகாமேருவாகிய காந்தியையுடைய காஞ்சன கர்ணபூஷணமணியப்பட்டுளது; இவ்விருசெவிகளினின்றும் கன்னத்தலத்தில் சூரியசந்தி

ரர் குண்டலங்களா யமைந்துகொண்டிருக்கின்றனர், உலோகாலோக பர்வத வரிசைகள் எப்புறத்தும் கடிமேகலாபரணமாய்க் கவின் செய்யும்; வரிசைகள் என்றது, அநேகஞ் சிகரங்கள் கூடிய தன்மையாலேனும், கற்பப் பிரஹ்மாண்ட பேதத்தாலேனும் என்றுணர்க.

(ச.) தேவதைகளின் லோகாந்தரங்களாய அழகிய சுவர்க்காதி மாலைகளே தரியணியாம், தனதங்கத் தலங்கரிக்கும் ஆரகேயூராதி பூடணமாம். பாதாளமே சரணமாம், அங்குள்ள நரகாவலியே நூபுரபரம்பரையாம், துன்புறுஞ் சனமலறுங் கலகலத்தொனி முழக்கத்தால் நரகம் சிலம்பாம். என்பு முத்திரைரசனை விசேடமாய சித்திரிக்கப்பட்ட என்புச்சலாகை தாழம்பூப்போ லிருப்பதாம், சந்திர அர்க்கமண்டலங்கள் குண்டலங்களாகக் கூறப்படு மாதலின். ஆகவே பனிமலை தாழம்பூத்தனம்போலும், தாழம்பூ=கேதகீ புஷ்பம். பொன்மலை கமல கர்ணிகைபோலும் இருக்கும், இவையிரண்டும் கர்ணவதம்சங்களாக வுபயோகமாதல் காண்க. ஈண்டுச் சந்திரமண்டலம் சூரியமண்டல மிரண்டும் குண்டலங்களாகக் கண்டமண்ட லங்களிலாகும். சக்கரவெற்பு = லோகாலோக பருப்பதம்; கொடிமலைகளையுங் கூட்டுக.

(ஸ்ரீ-வீர-அ-கை.) காலனாகிய பதியினுடைய முகவிலாசங் கடைக்கண் பார்வை முதலியவற்று லுணர்த்தப்பட்ட திருக்கருத்தை யினிதுணர்ந்து அத்தேவியானவள் கற்பாந்தங்களில், மிக ஆகுலத்தோடு கூடியவளாய்மீண்டும் பர்வதங்களெல்லாம் உரத்த சப்தத்தோடு வெடிக்கும் படியாகப் பெருங்கூத்தாடுமவள், அத்தகைய அவளுடைய ரூபம் லோகத்தைப் பயப்படுத்துவது என்பதன் கண்ணே யியம்பவேண்டுவ தென்னுளது கூத்துத்தான் எத்தகைய தென்பது எனக்கருதிக் கூறுகின்றார்:—பின்னென.

பின்னுறத் தாழ்ந்தலைந் திலங்கு முருகன்வாகன மயிலின் பீலிசூடு
முந்நயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யு மதிச்சடைதாழ் முடிகள்பூணுங்
கன்னியுமை குழற்கவரி மலைநிகர் பைரவராடுங் கவந்தமேவும்
பன்னயனக் குழிவிளங்கு மிந்திரன்றன் மேனியெனும் பலியோடேந்தும்(102)

(ப - ரை.) பின்னுறத்தாழ்ந்து இலங்கும் = பிற்பாகத்தில் அத்தியந்தந் தாழ்ந்து தொங்கி விளங்கும், முருகன் வாகனமயிலின் பீலிசூடும் = குமாரசம்பந்தி வாகனமாய மிருதபர்கிகளின் ஸ்ரேணிகளை யணிந்தலங்கரித்துக்கொள்வள், முந்நயனப் பெருங்குழிகள் = நேத்திரத்திரய பிருகத்திரந்திரங்கள், பயஞ்செய்யும்=மிகமகா பயத்தையுண்டாக்கும்படி நிற்ப, மதிச்சடை தாழ்முடிகள் = சந்திராலங்கார ஜடாபாரங்கள் தொங்காநின்ற சிரங்களை, பூணும் = அலங்கரித்துக் கொள்ளுவள், கன்னியுமை = கன்யாபரமேசுரியாய கௌரியின், குழற்கவரி = கபரசாமரங்களையும், மலைநிகர் = அசலத்திற் கொப்பான, பைரவராடுங் கவந்தம் = வைரவ உதர தும்பகங்களையும், மேவும் = கையில் வைத்துக்கொண் டிருப்பள், பல் நயனக்குழி விளங்கும் = பல நூற்றுக்கணக்கான விழிக்குழிகளோடு கூடியிலங்கும், இந்திரன்றன் மேனியெனும் = தேவேந்திரருடைய சரீரங்களெனப்படும், பலியோடேந்தும் = பிக்ஷைக் கபாலங்களை வைத்துக் கொண்டிருப்பள். (102)

(ஸ்ரீ - வீர.) இத்துணை யலங்காரத்துடன் ஆகாயத்தில் வியாபித்திருப்பள். பிற்பாகத்தில் தோகை முதலியவை நீண்டு தொங்கி அலைந்துகொண் டிருக்கும் சண்முகமிருத மயூரங்கள் என்பதாம், பர்கி = மயில். ஹரமூர்த்த விசேடமாய முக்கண்ணின் பெரும் பொந்துகளில் வாயுபூரிக்கும் வயத்தால் பெரியஜாங்கார பயங்கர ஒலிகள் கிளம்பும் என்றறிக. நீண்டசையும் ஜடைகளில் மதிவீற்றிருக்கும், அத்தகைய சிரஞ்சிதறிக்கிடக்கும்

அதனையேந்தும். மேலேசரிக்கும் கவின்வாய்ந்த மணங்காலும் மந்தாரபுஷ்பங்கணி றைந்த கவுரியின் கபரங்களே சாமரைகளாம். கபரம் = கேசபாசம். மேற்கிளம்பிக் குதித்துப் புரளும் அசலாகிருதியை யுடையபைரவ உதரங்களேயாய தும்பகங்களையேந்தும். தும்பகம் = சுரைப்பழம்= அலாபுப்பழம். கூறியகூறும் வேடங்களைத் தரித்துக் கொண்டு காலராத்திரியம்மன் கூத்தாடிக் கொண்டிருப்பள். நூற்றுக் கணக்கான நேத்திர ரந்திரங்களோடு கூடிவிளங்கும் இந்திரர் தேகங்களே அநேகம் பிக்ஷக்கபாலங்களாம் பின்பக்கத்திற் பொருந்தித் தாழ்ந்து அலைந்து கொண்டு விளங்காநின்ற சுப்பிரமண்யருடைய வாகனமாகிய மயில்களின் இறகுகளை யணிந்தும், மூன்று விழிகளாகிய பெருந்துளைகளினின்றுண்டாகும் பெருத்த பயங்கரமான உரத்த தொனியோடும், நீண்டலையும் மதிச்சடைகள் விரிந்த அரன் சிரங்களை யலங்கரித்தும், மேற்கிளம்பும் அழகொழுகும், மந்தாரமலர் நிறைந்த கௌரியின் கேசசாமரைகள் கொண்டும், பெருந்தாண்டவம் புரியும் பைரவருடைய மலைபோன்ற வயிறாகிய சுரைக்குடுக்கைகளைத் தாங்கியும், (சுரைக்குடுக்கையாற் காபாலிகரதுவிவகாரம் பிரசித்தமாம்) சப்தித்துக்கொண்டு ஆயிரத்தேழு துளைகளோடு கூடியிலங்கும் இந்திரர் தேகங்களாகிய பிக்ஷா கபாலமேந்தியும், கூத்தாடுவள். சகஸ்ரரந்திரபாடமே சதரந்திரத்தினும் நலம்.

(ச.) ஆண்டுக் கௌமாரமயிலின் பீலிபின்னுறத் தாழ்ந்திலங்குதலால் கேசபாசமாக விநியோகிக்கப் பட்டது. ஹரசிரங்களின் மாருத பூரிதநேத்திர ரந்திரங்களில் தொனி தொனித்தலின் கடிதடத்தல் கட்டிய கண்டாமணிபோலப் பூணலாம். வீணு தண்ட மண்டிதங்களாய பைரவ உதரங்கள் அலாபு மண்டலங்களெனவாம். இந்திர தேகங்கள் ஆயிரங் கண்களோடு கூடியிருத்தலின், அன்னத்தின் க்லின்னதையின் பொருட்டுப் பிக்ஷா கபாலங்கட்கு ரந்திரத்தோடு கூடியிருக்குந் தன்மை பொருத்தமாம். க்லின்னம் = ஈரம். (102)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் அவ்வம்மையின் அலங்காரத்தையே வருணித்து அவள் நடனத்துடன் விளங்கலை முடிக்கின்றார்:—மிகவென.

மிகவுணங்கு சாரீரகட் வாங்கப் பங்குகளால் விளக்கந்துன்று
மகமுடைத்தாய்த் தனைத்தானே பயஞ்செய்து புவனமெலாந்தொலைத்துமாற்று
மகிலமுமா மொருவடிவின் முடிவட்ட மெனுங்கமலத் தலங்கலோடு
நிகரினடனம் புரிந்துபெருங் கற்பந்தயில் விளங்கா நிற்குமன்றே. (103)

(ப - ரை.) மிகவுணங்கு = அத்தியந்தஞ் சுஷ்கமாய, சாரீரகட்வாங்கப் பங்குகளால் = சரீரசம்பந்தமான கட்வாங்கப்பங்கங்களால், விளக்கந்துன்று மகமுடைத்தாய் = பூரிக்கப்பெற்ற அம்பரத்தோடு கூடிவிளங்கி, தனைத்தானே பயஞ்செய்து = தன்னைத்தானே பயப்படுத்திக் கொண்டு, புவனமெலாந் தொலைத்து மாற்று=சர்வசங்கார காரிணியாகி யிருப்பள், அகிலமுமா மொருவடிவின் = விசுவரூபமாகிய ஏகவடிவத்தின், முடிவட்டமெனுங் கமலத் தலங்கலோடும் = சிரச்சக்கிர அழகிய புட்கரமாலையோடும், நிகரினடனம் புரிந்து = ஒப்பற்ற தாண்டவத்தைச் செய்து, பெருங்கற்பந்தயில் = மகாகற்பங்களில், விளங்காநிற்கும் = மிகவும் இலங்கிக்கொண்டிருப்பள்-எ-று.()

(ஸ்ரீ - வீர.) காய்ந்திராநின்ற சரீரத்திருக்கும் என்புகளே கட்வாங்க பங்கங்களென்னும் பஞ்ச அவயவகண்டங்கள், அவற்றால் என்பதாம். குமாரசம்பந்த மயின்முதலியவை ஒவ்வொன்றேயாதலின் மயில்கள் என்பதாதி பன்மைவசனம் எங்ஙனம் பொருந்துமாலோவெனின், அச்சங்கையினிதன்றாம், பெருங்கற்பந்தயில் விளங்காநிற்கும் என

ஈண்டே பன்மை வசனத்தால் பரிகாரஞ் செய்யப்பட்டிருத்தலின், மகாகற்ப பேதத்தானே மயூராதிகட்குப் பன்மை சம்பவித்தலின். பின்னென்பது முதல் பங்குகளால் என்பது வரையுமுள்ள அச்சர்வ அலங்காரங்களாலும் ஆகாயமானது நிறைக்கப்பட்டிருந்தது. அதிகமாகக் கூறுவதாலென்னே காலராத்திரியின் பிரபாவத்தைச் சுருக்கமாகக் கேட்பீர்களாக என்னுங்கருத்தாற் கூறுவார் அகிலமென்றார். கீதைகளிற் பிரசித்தமாய விசுவரூபத்தின் அநேககோடி சிரங்களின் சமூகங்களே அழகிய புஷ்கரமாலைகளாம். நிகரில்லாத நடன அவசரத்திற் செய்யத்தக்கனவாய அபிநயங்களையெல்லாஞ் செய்து ஆடுவள் என்பதாம். மிகவுங்காய்ந்த சரீரசம்பந்தமாய கட்வாங்கமென்னும் முதுகென்புப் பாரங்களானே விண்ணைநிறைத்தும், பிறரஞ்சும்பொருட்டுத் தன்னுனே தன்னைப் பயப்படுத்திக்கொண்டும் சர்வத்தையுஞ் சங்காரஞ் செய்துகொண்டும் பலவகை ரூபங்களோடுகூடிய சிரக்கூட்டங்களாகிய அழகிய தாமரைமாலையால் அலங்கரிக்கப்பெற்று நானுவகையாய்ச் சுழன்றுகொண்டும் மகாகற்பங்களிலுண்டாம் தாண்டவங்களில் அவ்வம்மை விளங்கா நிற்பள்.

(ச) காய்ந்த தண்டநுனியில் கோர்த்த நரசிரக்கபாலம் கட்வாங்க மெனப்படும். சரீரசம்பந்தமான அத்தண்டின் நுனியில் மாலைபோல நரம்புகளாற் கோர்க்கப்பட்ட நரச்சிரகபால கட்வாங்கங்களின் பங்கங்களாலும் பிறவற்றாலும் விண்ணைவியாபிக்கும் என்பதாம். தனைத்தானே பயஞ்செய்தல், பயப்படுத்துதற்கு அக்கால் வேறு பிராணிகளின்மையால் என்க. விசுவரூப விஷ்ணுவின் சிரங்களின் சக்கிரசமூகமே அழகிய புஷ்கரமென்னுங் கமலமாலையாம் அதனுலலங்கரிக்கப்பட்டு விளங்கும் என்பதாம். (103)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் இயம்பிய காலாதிகளின் விருத்தாந்தத்தை யனுவதித்துக்கொண்டு அத்தோடத்தை நன்குணர்ந்த பயனைத் தெளிவிக்கின்றார்: காலாதிகளின் பரதந்திரமா யிருத்தலினுனே தோடங்களே மிகமிகவும் நிறைந்த இச்சம்சாரதுர்த்தசையையே வைராக்கியம் உண்டாம்பொருட்டு வருணிக்கத்தொடங்கிக் காலனிவ்வாறு செய்தலினுனே காலாதி சர்வவஸ்துக்களிடத்திலும் எனக்கு விஸ்தாரமாய்த் தோடந் தோற்றலின் அதன்பயனுகிய வைராக்கியரூபப் பற்றின்மையி னடைவுண்டாகின்றதாதலின் இச்சம்சாரமெனப் பெயரிய இக்கால முதலியவற்றின் சரிதத்தில் எம்போலியர்க் கெவ்வாறு பற்றுண்டாதல் கூடும் என்கின்றார்:—பொருளென்.

பொருள்களெலாம் பொருளன்றாங் கடியமன மகங்கரத்தின் பொருட்டே யாகுந், தெருளுறுபா வங்களெலாம் பாவமாம் பவமுடிவு தெரியாதாகும், மருளுமதி யாகுலத்தா லுள் வெதும்பு மாசைநோய் வளரா நிற்கு, மிருண்மயறீர் பவரரிய ரெவ்வனந்தான் வருத்தத்தா லேகா நிற்கும். (104)

(ப - ரை.) பொருள்களெலாம் பொருளன்றாம் = வஸ்துக்களெல்லாம் அவஸ்துக்களாக அறியப் பெறுகின்றன, கடியமனமகங்கரத்தின் பொருட்டேயாகும்=கொடூரசித்தமானது அகங்காரத்தினிடத்திற் கொடுக்கப்பட்டது, தெருளுறுபாவங்களெலாம் = உணர்வுறு பாவங்களெல்லாம் அபாவமேயடையப்பெற்றன, பவமுடிவு தெரியாகும் = பவாந்தங்கண்டு பிடிக்க முடியவில்லை, மருளுமதியாகுலத்தாலுள் வெதும்பும் = மயங்கும் புத்தியானது சிந்தாகுலங்களால் உள்ளே தபித்துக்கொண்டிருக்கும், ஆசைநோய் வளராநிற்கும் = ராகரோகம் விஸ்தாரத்தை யடையும், இருண்மயறீர்பவரரியர் = விராகிஜனங்கள் விரலரானவர், எவ்வனந்தான் வருத்தத்தா லேகாநிற்கும் = தாருண்யமானது பெருமுயற்சியின் கஷ்டத்தாலேயே கழிந்தேகும். (எ-று.)

(ஸ்ரீ - வீர.) காலாதிகட்கும் சந்திராதிகட்கும் கூறிய பிரகாரமாக இவ்வகைச் சில மாயின் மற்றையர்க்கு கதியாதாம். காலாதிகளின் விருத்தம் மற்றையர்கட்கு முன்மொழிந்த சமுசாரதோடங்களின் உபலக்கணமாம். அற்றேல் சமுசாரமெனப் பெயரிய அனர்த்தத்தில் ஆஸ்தை நாஸ்தியாயின் அதை நிவிருத்திப்பதில் பரமயத்தினம் பற்றி நின்றிகெ, வாளா அலேர்துழல்வ தெற்றினுக்கென்றால், அதன் நிவிருத்திப் பிரதிகூலங்கள் எளிதாயிருக்கின்றன அனுகூலங்கள் அரிதாயிருக்கின்றன, என்னை, இந்திரியங்களே பரமசத்துருக்களாக இருக்கின்றனவாதலின். அடையத்தக்க சத்தியஞானதி லக்ஷணம் வாய்ந்த வஸ்து நேரே தோற்றுவதேயாயின் இந்திரிய சத்துருக்கள் என்னசெய்ய முடியுமென்றால், சத்தியஞானதி லக்ஷணம் வாய்ந்தவஸ்து மித்தியா தேகாதிரூபத்தன்மையை யடைந்தது போலாய்விட்டது. மனமானது தனக்கனுகூலமாயின் இந்திரிய சத்துருக்களை பிளந்தெறியலாமே யென்றால், தன்றற் றன்னையே யடித்துத் துன்புறுத்து கின்றமையின் மனத்திற்கு மனமே சத்துருவாகியுளது; அதாவது மனமே பகையாகவுற்று மனத்தானே மனமாகிய தன்னைத் தாடனஞ் செய்கின்றது. தனக்கேதான் எங்ஙன் பகையாகுமெனின் இயம்புவர் பொருளென்றார். காரியகாரண சங்காத சாக்ஷிவடிவ வஸ்துவானது அவஸ்துவாகக் காரியகாரண சங்காதவடிவமாய்க் கவரப் பெறுகின்றது. சங்காதசாக்ஷியாக வஸ்துகிரகணம் சம்பவித்தலின், மாறுயினே கிரகணம் நிவர்த்தியன்றோவாமெனின்? அறைவார் பொருட்டே யென்றார் காமாகுலமாய அச்சித்தம் விவேக ஆற்றல் அற்றிருத்தலின் அகங்காரத்தின் பின்னேயே யோடா நிற்கு மாதலால் அதன் சாக்ஷியைப் பின்பற்றுவ தின்றெனபது கருத்தாம். வஸ்துவாற் கவரப்பெறுமாயின் உள்ளம் எவ்வகங்காராதி பாவங்களைக்கவர்கின்றனவோ ஆண்டே ரதியோடு கூடலாமே யெனின், கூறுவார், தெருளென்றார். பாவபதார்த்தங்க ளெல்லாம் அபாவத்தோடு கூடினவாய் அநித்தியங்களாம். ஆயின் விகாரம் விலகி னிர்விகாரம தெஞ்சும் என்னும் நியாயத்தால் நாச அவதியாக அறியலாம் ஆத்மாவெனின்? அறைவார், பாவமுடிவு என்றார். பாவங்களாகிய அநித்திய பதார்த்தங்களின் அந்த மென்னும் அவசான பூமியான்மாவாம், கவியிலுள்ள படிபவமுடிவு என்றும் சிலவிடத்தே பாடமாம். அநாத்மாவின்கண்ணே தோஷதிருஷ்டியான துண்டாகி யான்மாவும் அடையப் பெறுதாயின் வருபயனிது வென்பார், மருளுமதி யென்றார். உள்வெதும்பும் = வஸ்து அவஸ்துக்களின் அந்தராளத்தில் அழுன்றுதீயும். எல்லா ஆசைகளையும் விட்டொழித்தலினனே தாபநீக்கமானது சம்பவித்தல் ஆக யாதின் பொருட்டுத்தபிக்கின்றாய் எனவின்வ நுதலுவார், ஆசையென்றார். ஆயின் விரக்த சம்பந்தத்தால் ஆசையை விட்டொழிக்க லாமே யெனின்? இருண்மயலென்றார்: ஆயின் வேகப்படவேண்டிய காரியமில்லை யிப்பொழுதெனின்? உரைப்பார், எவ்வனந்தா னென்றார். யவ்வனத்திலேயே காரியகாரணங்களின் புருடார்த்த சம்பாதன ஆற்றலுண்மை வார்த்தகத்தி லின்றாமென்பது கருத்து. இந்திரியங்களே பகைவர்களாக இருக்கின்றார்கள், பரமார்த்தமாக ஆன்மாவெனத் தேகாதிகள் கவரப் பட்டிருந்தன விவேகிக்குங்கால் அபரமார்த்த ஆன்மத்தன்மையை யடைந்து விட்டன; சத்தியஞானதி யிலக்கணம் வாய்ந்த வஸ்துவோ அசத்தியத்தை யடைகின்றது பந்தஹேது வாதலினனே மனத்தையே பகையாகக் கொண்ட ஆன்மா மனோபிமானத்தால் மனோபூதமாந் தன்னை மனோரூபமானதன்றலே துக்கப்படுத்துகின்றதுவிடயங்களோ விரும்பத் தகாதனவா யிருக்கின்றன, அலௌகிக வஸ்துவானது காரியகாரண சங்காதத்தவடிவதாகவே காணப்படுகின்றது, சித்தமோ அகங்காரத்திற் குத்தத்தஞ் செய்யப்பட்டு அபிநிவேசத்தை யடைந்துள்ளது பொருள்களோ அழிவை யலங்கரித்துக்கொண் டிருக்கின்றன, எல்லாப் பொருள்களின் முடிவிற்கிடமாய ஆன்மா

வோ அறிய ப்பெறவில்லை. மதியானதுள்ளே யாகுலப்பட்டுக் கேவலம் தபித்துக்கொண் டேயிருக்கின்றது, இராகரோகமானது எப்போதும் விலாசத்தை யடைந்துகொண்டே யிருக்கின்றது உலகில் வைராக்கியத்தை யடைபவரைக் காணேம் மிகவுந் துர்லபமாய் விட்டது, பரமார்த்த திருஷ்டியானது இரஜோகுணத்தினாலே யதஞ்செய்யப் பட்டது தமசோ மேலும் மேலும் விருத்தியாகிக் கொண்டே வருகின்றது சத்துவகுணமடை வதே கிடையாது, கெட்டமுயற்சியினுனே யவ்வனங் கழிகின்றது. உபலக்ஷணமாக:— அகங்காரமானது அபிமானித்துக் களங்க முண்டாக்கிச் சொரூபதூஷணஞ் செய்கின் றது, நிச்சயகாரணமான புத்திவிருத்திகள் வெளிமுகமாகவே திரிதலின் மிகவும் மிருது வாகிச் சொரூபத்தின் கண்ணே நிலைக்குந் திடத்தன்மை யற்றனவா யிருக்கின்றன. தேகமோ கெடுதலைச் செய்கின்றது, மானசவிலாசங்களோ மங்கையர் மயலைமருவா நின் றன, மெய்ப்பொருளை யுணர்தலோ மிகுதூரமாய்விட்டது, வாழ்வோ மாயமாகின்றது, மரணமோ எதிர்பார்க்கின்றது; என்பனவும் பிறவும் கொள்ளக்கிடந்தன, விரிவு பெரிய வாசிட்டத்தே காண்க:

(ச.) ஹேமகாமுனிவரே! மகத்துவமுடைய காலாதியரும் இத்தன்மையராகின் இச்சமுசாரத்தில் என்போலிகளுக்கோ என்ன ஆசையிருக்கின்றது கூறுங்கள். இந்திரி யங்களனைத்தும் அந்தரங்கமாக விசுவசிக்கப் பட்டிருந்தும் விடயங்களில் வீழ்தலினாலும் நம்பினவனை வீழ்த்தலினாலும், சத்தருக்களாக இருக்கின்றன. சத்தியமாய பாரமார்த் திக ஆத்மசொரூபம், அசத்தியமாய அபரமார்த்த தேகாதி ரூபத்தன்மையை யடைந்து விட்டது; மனமேயாகிய ரிபு, தனக்குத்தானே சத்துருவாய்த் தன்னைத்தானே தாட னஞ் செய்கின்றது. பொருள்களெல்லாம், பொருளன்றாம் = பிராமாணிகமான ஆத்ம தத்துவம், தேகாதி வியதிரிக்த ஆத்மசொரூபம் நிஷ்பிரமாணமாக நிச்சிதமாம். எல் லாம் என்றது உபாதிபற்றி, இவ்வாறுகூறச் சத்திய அசத்தியங்கட்குத் தாதான்மியமும் வஸ்து அவஸ்துக்கட்கு பிராமாணிக அப்பிராமாணிகமும் ஆகலின் கூறியது கூறலின் றுமென்றுணர்க. பொருட்டே யென்னுந் தேற்றத்தால், சித்தமும் அகங்காரத்தையே யனுசந்திக்கின்றது அல்லாமல் ஒருகாலும் ஆன்ம தத்துவத்தை யனுசந்திப்பதே கிடை யாது என்பதாயிற்று. பாவங்கள் = பதார்த்தங்கள், அபாவத்தான் மறைபட்டனவாம் அதாவது அபாவவயமா யில்லாமலே போகின்றனவென்பதாம். ஆயிற் சமுசாரம் தானு கவே நசிக்குமாவெனின், பவமுடிவு = சமுசார சாகரபாரம்; தெரியாதாகும் = காண முடியாததாம். அல்லது இதனை:—பொருள்க ளெல்லாம் = அந்தரங்கமாக விசுவசிக்கப் பட்ட இந்திரியங்க ளனைத்துமே, பொருளன்றாம் = விடயத்தில் விழுமேது வாதலின் சத்துருக்களாம். பாரமார்த்திகமான ஆத்மசொரூபத்தை அபரமார்த்தமான தேகாதி ரூபதாதான்மியஞ்செய்து தேகாதி விலக்ஷணமான பிரத்தியக்ஷ ஆத்மதத்துவ சொரூ பத்தை அப்பிரத்தியக்ஷமாக நிச்சயித்துத் தனக்குத்தானே சத்துருவாய்த் தன்னைத் தானே நசிப்பித்தலின் கடியமனமென்றார். மருளுமதி நிரர்த்தமாகவே = ஒருபயனு மின்றியே, மயங்கித்தபிக்கும். ஆசைநோய்=இராகரோகம், மயல்=இராகம், யவ்வனம் புருடார்த்தசாதன ஆற்றலுடைத்தேனும் அதனிமித்தம் விதித்த யத்தினத்தோடுமே யேகின்றது; யத்தின தசையிற்றானே யேகின்றதன்றி மற்றோர் புருடார்த்தமும் பெற்ற தின்றாமென்பது கருத்து. (104)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் இப்போதே தத்துவவித்துக்களைச் சேவிக்கலாமே சாதுசங்கமே சகலசன்மார்க்கவேதுவாதலின், யெனின் கூறுகின்றார்:—பெரியவரென்.

பெரியவர்நண் பதிதூரஞ் செல்கதிகிட் டாதுண்மை பெறற்கொ ணுதாங்
கரியமன மோகிக்கு முண்மகிழ்ச்சி தூரமதாங் கருணை தோன்று
விரியுமிழி வதிதூரத் தினுமணுகு நிலைமைபோய் வேறும் வீழ்வோர்
திரியவுட னெழுவர்சிறி யவர்கூட்ட மெளிதரிது தெளிந்தோர் கூட்டம். (105)

(ப - ரை.) பெரியவர் நண்பதிதூரம்=சற்சனசங்கதி மிகுதூரத்ததாம், செல்கதி கிட்டாது = எங்குமே செல்லத்தக்க கதியானது இருப்பதாகக் காணப்படவில்லை, உண்மை பெறற்கு ஒணுதாம்=சத்தியத்தன்மை யோரிடத்தினும் உதிப்பதைக்காணோம், கரியமனமோகிக்கும்=விடயங்களிற் களங்கமுற்றமனம் மயலையடையும், உண்மகிழ்ச்சி தூரமதாம்=உண்முதிதை வெகுதூரத்திற் சென்றுவிட்டது, கருணைதோன்று=துயருற் றவரிடத்தே உருகும் பெருங்கருணை யுதிப்பதையுங் காணோம், விரியுமிழிவு அதிதூரத் தினுமணுகும்=விஸ்தாரமான நீசத்தன்மை அதிசேய்மையினின்றும் வந்தடைகின்றது, நிலைமைபோய் வேறும்=தீரதையானது அதீரதையாகின்றது, வீழ்வோர் திரியவுடனெழு வர்=ஜனங்கள் வீழுதலையும் மாறி எழுதலையுமே யடைந்துகொண்டிருக்கின்றனர், சிறிய வர்கூட்டமெளிது = துர்ச்சனசம்பந்தம் சுலபமாம், அரிதுதெளிந்தோர்கூட்டம்=சற்ச மாகமம் துர்லபமாம். (எ-று) (105)

(ஸ்ரீ - வீர.) ஆயின் சற்சனசங்கதி யொழிந்த வேறுபாயத்தைத் தேடலாமே யெனின், விடைதருவார், செல்கதியென்றார். அன்னியகதி யெங்ஙனமின்றும், தருக்க பலத்தாற்றுணுதல் தானேதாணுதல் சுயம்பிரகாச ஆத்மா விளங்காநிற்குமெனின், உரைப் பார், உண்மையென்றார். சத்தியத்தன்மை சத்தியபாவமாம் சத்தியசொருபமென்பது பொருள். அல்லது ஜகத்தைச் சத்தியமாக அங்கீகரிக்கில் துவைதிகட்கேபோலும். அன்னியகதியானதுண்டாம் என வுரைப்பார், உண்மை யென்றார். எங்குமே உலகத் துள்ள பொருள்களில் உண்மையானது உதிப்பதே கிடையாது; தோற்றுவதின்றும். சமுசார அசற்சன மத்தியவர்த்திகட்குச் சாமியம் துர்லபமா மென்பதைக் காட்டும் பொருட்டு அத்திதிக்கு அத்திரத்தன்மையை யறைவார், நிலைமையென்றார். விழுதல் = ஐசுவர்யாதிகளினீக்கம், எழுதல்=அவற்றின் ஆக்கம் அல்லது விழுதல்=நாசமாம், எழு த்ல்=உற்பவமாம். சாதுக்கள் சங்கமோ அதிதூரத்திலிருக்கின்றது, கதியோயாதொன் றையு மெங்குங்காணோம், நல்லது தார்மிகனுயிருக்கப்பட்ட உனைக்குக்கதி யெங்ஙனமில் லாமற்போம் எனின்,எங்கும் எப்பொருளும் சத்தியமாகக் காணப்படவேயில்லை சுவர்க்க முதலிய கதிகளும் அநித்தியங்களாகலின் கனவின்பம்போற் கழிவனவா யிருக்கின்றன. உள்ளேயுள்ளமானது அதிமோகத்தை யடைந்துள்ளது, பிறரின்பத்தைக்கண்டு மகிழ்த லாகிய முதிதையெட்டாமற் றூரத்தேகிவிட்டது, கருணையான துதித்தொளிர்வதே கிடை யாது, அதிக்தூரத்தினின்றும் நீசத்தன்மையின் காரணங்களாய அசூயை முதலியவைகள் வந்தடைகின்றன, தீரத்தன்மையானது அதீரத்தன்மையை யடைகின்றது, பிராணி களோ பிறப்பிறப்புகளிலும் கீழ்மேற் செல்வதிலும் தற்பரராகத் திரிகின்றார்கள். துஷ்ட சங்கமோ சுலபமாய் மலிந்துகிடக்கின்றது, சற்சனசங்கமோ துர்லபமாய் விட்டது.

(ச.) சர்வபுருடார்த்தசாதனமான சற்சனசங்கதியுந் துர்லபமாம், அன்னியகதி சிரே யசுமார்க்கமாகக் காணோம், மற்றையர் நட்புயர் மார்க்கமன்றுதலினுனே சத்தியமான ஆத்துமதத்துவம் விளங்கமாட்டாதென்பது கருத்தாம். சற்சங்கமின்றிச் சத்தியதத்துவ முதயமாகாதாம். சித்தப்பிரசாதவேதுக்களான மைத்திரியாதிகளுங் கிடையாதென் பார் கரியமனமென்றார். பரர்களுடைய சுகத்திற் பாவிக்கவேண்டும் மைத்திரியை

மனம் பாவியாது, மற்றென் செயுமெனில், மோகிக்கும், மற்சரபாவத்தினல் மூர்ச்சையை யடைந்ததுபோலாம். உண்மகிழ்ச்சி ஆரமதாம் = பரர்களுடைய புண்ணிய கருமத்திற் சந்தோஷிக்கும் முதிதையென்னும் மனோவிருத்தி ஆரத்திற் செல்லும், அருமையா லென்பது கருத்தாம். கருணை தோன்று=பரர்களுடைய துக்கத்திற்றுக்கிக்கும் நிரு பாதிகமான கருணை யுதிப்பதில்லை, துவேஷத்தாலென்பது கருத்து. பரர்களுடைய பாவகருமத்தில் உபேக்ஷை யுண்டாகவேண்டிய திருப்பினும் உண்டாகாமல் நிந்தித்தற் குச்சந்தோஷிக்கும் துர்ஜனத்துவம் ஆரத்திருப்பினும் வந்துபொருந்தும்; பரநிந்தையால் பாவஞ்சம்பவிக்குமாகலின், இதனுனே மைத்திரியாதி குணங்கள் சம்பவியாமையாற் சித் தந்தெளியாதென்பது தாற்பரியம். (உ-ம் ஸ்ரீபதஞ்சலி பகவான்) மைத்திரி கருணை முதிதையுபேக்ஷை யென்பது சுகதுக்க புண்ணியபாவ விஷய பாவனையாமதனுற் சித்தந் தெளியும் என அருளிச்செய்துளார் என்பதாம். நிலைமைபோய் வேறு = தைரியங் கெட்ட தைரியமாம், பிரதிஷ்டையைப் பெறுதென்பதாயிற்று. நிரியவுடன், சர்வ ஜனங்களும், மாறிமாறி, வீழ்வோர் =, அதோகதியை யடைபவரும், எழுவர் = ஊர்த்த கதியையடைபவரும் ஆவார்கள். ஒருபோதும் மோக்ஷத்தையடைய வாஞ்சியார்கள். (105)

(ஸ்ரீ - வீர - அ - கை) சமுசாரம் யாவுமே அநர்த்தசையை யடைந்து மடியுமென் கின்றார்:—கொண்டவென.

கொண்டபாவனை பிறவியாம் பூதங்கள் குலைந்துபோந் திசைதோன் ரு
கண்டதே சங்கள்பிற சொலாத்திரிந் திடுங்கன கிரிதுகளாகு
முண்டெனுந் தன்மைவிழுங் கிடவுலகுபோமும் பர்போம் புவனம்போ
மண்டுவாரிபோ முடுக்கள் போந்தானவர் வானவர் கணம்போகும். (106)

(ப - ரை.) கொண்டபாவனை பிறவியாம் = போக்குவரவுடைய பொருள்களாற், பெரிது கவர்ந்த பாவனை பவபந்தினியாம், பூதங்கள் குலைந்துபோம் = பூதபரம்பரை கள் சிதறி யெங்கேயோ ஒடிப்போய்விடும், திசைதோன்ரு = திசைகளுங் காணுமற் போய்விடும், கண்ட தேசங்கள் பிறசொலாத் திரிந்திடும் = காணப்பட்ட தேசங்கள் யாவுமே வேறுவிதமாகச் சொல்லும்படி மாறி நூறிப்போம், கனகிரிதுகளாகும் = பல மான பருப்பதங்களும் தூளாகிப்போய் விடும், உண்டெனுந் தன்மை விழுங்கிட = சத் துத்தன்மையை யுடைய பரமாத்மா வுட்கொள்ள, உலகுபோம் = இவ்வுலகமும் காணு மற் போய்விடும், உம்பர்போம் =அவ்வுலகமும் காணுமற் போய்விடும், புவனம்போம்= இடையிலுள்ள புவனங்களும் காணுமற் போய்விடும், மண்டுவாரிபோம் = கரைபொரு திரையெறி கடல்களும் போய்விடும், உடுக்கள்போம் = தாரகைக் கூட்டங்களும் இல் லாமற் போய்விடும், தானவர்வானவர் கணம்போகும் = சுராசுரக் கூட்டங்களுஞ் சுழன்று மடிந்துபோம். (எ - று.) (106)

(ஸ்ரீ - வீர.) பாவனை போக்குவரவுடைய பதார்த்த தேகாதிவிடயமாம், இவ்வண் ணம் புருடார்த்த அனுகூலங்கட்குத் துர்லபத்தன்மையையும், அதன் பிரதிகூலங்கட் குச் சுலபமாந் தன்மையையும் பிரதிபாதித்துப் பலிதத்தைப் பகருவார். குலைந்துபோ மென்றார். கேவலம் புருடார்த்த சாதனனுஷ்டான மில்லாத புருடார்த்த விரோதமான யாதாவதொரு மார்க்கத்தில் விதியாலிழுக்கப்பட்டுக் கொண்டுபோய்த் தள்ளப்பெறும் பெறவே இப்பாவங்களி யாவுமே போக்கு வரவுடையனவாம், தலையிற் றீப்பற்றிக் கொண்டவன் தண்ணீர்த் தடமடு மூழ்க ஆவலேய்ப்ப, சமுசாரப் பேரழற் சுவாலைப் பிளம்பிற்பட்டுக் கரிந்துசோரும் அடியேனுக்கு நித்தியானந்த மடுவினிரந்தரம் மூழ்க

அத்தியந்தம் அதிக அவாவிருக்கின்றது எனக்காட்டும் பொருட்டுப் போக்குவரத்துடை யன பாவங்கள் எனக்கூறிய அநித்தியத்தையே விரித்து விளம்புவார் திசைதோன்று வென்றார். கொண்ட = பாவங்கள் போக்குவரத்தை யுட்கொண்டனவாம், என்றமைக் கலாம். ஈண்டுப் பொருள் வெளிப்படையா யிருத்தலின் சிலபதங்கட்கு மாத்திரம் உரை யுரைப்பாம். பிறசொலாத் திரிந்திடும் = அன்னிய சப்தத்தைப் பஜிப்பதாம், தேசமும் அதேச சப்தத்தைப் பஜிப்பதாம் என்பதாயிற்று. அன்னிய உபதேசத்தைப் பஜிப்பது எனச் சிலவிடத்தே பாடமாம், அங்கு அன்னியத்தி னுபதேசத்தையேபஜிக்கும், சுயமே பிரதீதியாகாதாம், நஷ்டதத்தன்மை யுண்மையின் என்பதாம். உண்டெனுந் தன்மை விழுங்கிட வெனக்கொள்க ; கொள்ளவே தரை முதலியவை வைதூர்யமென்னும் அசத் துத்தன்மை விழுங்கிட இல்லாமற் போமென்பதாம். பொருள்களெல்லாம் போக்கு வரவுடையனவா யிருக்கின்றன சென்றொழிந்த போதினும் அவற்றின் வாசனை அகல வதேயில்லை மேலும் பந்தகாரணமாகவே வளர்கின்றது, பிராணிகளின் கூட்டங்களா னவை கேவலம் எப்பொழுதும் காலனால் எங்கோ கொண்டு செல்லப்படுகின்றன. கால னாற் பயமற்றவையாய் திசைகளுங் காணவே காணோம், சத்விவகார உபதேசமும் வேறாய அபதேசமாய் முடிகின்றது, பிராணிகட் கவகாசங் கொடுக்கும் தேசமும் அதற்கு மாறாயதைத் தனக்கேயிடங் கிடையாமையிற் செய்யத் தொடங்குகின்றது. மலைகளும் பொடிகளாகின்றன ஆயின் எம்போலியர் பாலென்னே விசுவாசம். சன் மாத்திர இயற்கைவாய்ந்த ஈசுரரானே ஆகாயமும் புவனங்களும் விழுங்கப் பெறுகின் றன, தரையும் தூளாகுமாயின் எம்போலியர் பாலென்னே விசுவாசம்.

(ச.) கொண்டபாவனை = சகலவாசனையும் மலினமேயாதலின் பிறவியாம் = பந்த வேதுவேயாம். பூதங்கள் குலைந்துபோம், நியதியாலுதித்து ஒடுங்குவனவாதலின் என்க. பிரளயாதியில் திக்கின் விபாகவேதுவான சூரியாதிக ளின்மையின் திசையுந்தெரியாது. குருபாஞ்சாலாதி தேசமும் கற்பாந்தரத்தில், பிறசொலாத்திரிந்திடும் = வேறுவியப தேசத்தை யடையும், வேறுக்ஷத்திரியராற் கிரகிக்கப் படுதலின் என்பது கருத்து. உண்டெனுந்தன்மை விழுங்கிட = இல்லையென்னும் அபாவத்தினால், உலகு = பூலோ கம், புவனம் = புவர்லோகம், இவ்வாறாகவே எம்போலிய மனுடதேக தாரியின் கண் யாது விசுவாசம் என்பதாயிற்று. (106)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இத்துணை மாத்திரமல்ல மகாமகத்துக்களும் இலயத்தை யடைந்து விடுவர் என்கின்றார்:—சித்தரென.

சித்தர் பொன்றுவர் துருவனுஞ் சிதைகுவன் சிவனயன் றிருமார்பன்
றத்துவந்தனி லொன்றுவர் காலமுங்கருமமு முடிவாகு
மத்தவானும் போமயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச்
சுத்தமாம்பொரு ளொன்றினை லிகழ்வுறத் தொல்லுல கிழிவாகும். (107)

(ப - ரை.) சித்தர் பொன்றுவர் = சித்தர்களும் சிதைவுறுவர், துருவனுஞ் சிதைகு வன் = துருவனும் அத்துருவஜீவிதனுவன், சிவனயன் றிருமார்பன் = ருத்திரன் பிரஹ்மா விஷ்ணுவென்னும் பெரியார்; தத்துவந்தனி லொன்றுவர் = பரமமங்கல்ரூப மாக வொடுங்குவர், காலமுங் கருமமும் முடிவாகும் = காலமும் நியதியும் முடிவை யடையும், மத்தவானும்போம் = அநந்தமென் றறையப்பட்ட, ஆகாசமும் அழிந்து போம், மயக்கமேதருவதாய்=பிரமத்தைக் கொடுப்பதாய், வாக்கொடு செவிக்கெட்டா- அசிராவ்யமா அவாச்சியமா யிருக்கும்; சுத்தமாம் பொருளொன்றினால் = காணமுடி

யாத சுத்ததத்துவமாகிய ஞானமூர்த்தியினால், இகழ்வுறத் தொல்லுல கிழிவாகும் = நிந்திதமாமாறு முன்னுள்ளதாய்ச் சொல்லு மூலகம் வெறுந் தோற்றமாய் மாய்ந்து போம். (எ - று.) (107)

(ஸ்ரீ - வீர.) பரமேஷ்டியாகிய பிரஹ்மாதிஷ்டாவானவன் அதாவது சொரூபத்தில் இலயமாவன், அஜனாகிய அரியும் நிஜவடிவாயிருப்பன், பவனுமுருத்திரனும் சிவமாய் வாழ்வன் என்பதாம். இப்பரமான்மாவினாலே காலமுஞ் சங்கரிக்கப்படும் என்பதா யிற்று. நியதி = தைவம் பூர்வகர்மம் என்பதர்த்தமாம், மரியாதைகளில் நியதியாம். காலமுஞ் சங்கரிக்கப்படுகின்றது அன்னியத்தா லென்னச்சொன்ன அன்னியம் இன்ன தென வியம்புவார். வாக்கென்றார். நிர்விகற்பமா யிருத்தலினானே சுரோத்திராதி இந் திரியங்கட்கும் வாக்குமுதலிய இந்திரியங்கட்கும் எட்டாத தத்துவம் பாரமார்த்திக சொரூபமாம். காணமுடியாததாய் ஞானமே மூர்த்தியென்னும் சொரூபமாயிருப்பது. "அத்தூர்தரிசகூட அனுப்பிரவிஷ்டமாயதை" யெனமறையு மறைகின்றது. இழிவாகும்= இழிவுற்ற விநோதம் காட்டப்படும், தத்துவத்தைமறைத்துக் கற்பிதத்தையே காட்டும் மாயாவியினால் மிக வஞ்சிக்கப்படும் என்பதாயது. ஞானமின்றி யோகமந்திராசனாதி களானே சித்தியுற்ற சித்தருஞ் சிதைவர், நக்ஷத்திரங்களும் நாசமாகும், அலைகடலும் வறண்டுபோகுமாயின் எம்போலியர்பா லென்னே விசுவாசம். தானவரும் தத்தளித் தொழிவர், துருவனும் நிலையற்றவாழ்க்கையை யடைவன், அமரரும் அழிந்துபோவரா யின் எம்போலியர்பா லென்னே விசுவாசம். இந்திரனும் இனிதுட்கொள்ளப்படுகின் றனன், இயமனும் நியமமா யுபரதியுறுவன், வாயுவுமோயுமாயின் எம்போலியர்பா லாஸ் தையென்னே. சோமனுஞ் சூனிய மெய்துவன், சூரியனும் காரியமாகான், அக்கினியும் மக்கினத்தை யடையுமாயின் எம்போலியர்பாற் பற்றுதலென்னே. பரமேஷ்டியும் முடி பாய பரநிஷ்டையை யடைவர், கரியாத அரியும் கரியிலிரிவர், பவனுமறிவில் அபா வத்தை யடைவராயின் எம்போலியர்மாட்டென்னே நம்புதல். முன்மொழிந்த மூவகைக் காலமுங் கோலமின்றியதாம், நியதியும் வயதாய் முடியும், அந்தமற்ற வெளியாவரண ஆகாயமுமொளியுமாயின் எம்போலியர் மாட்டென்னே விசுவாசம். செவிக்கும் வாக்கிற் கும் செவ்விய விழிக்குமெட்டாத தத்துவமாகிய எவனோவொரு மயக்கத்தைத்தரும் அறியப்படாத மூர்த்தியாந் தூலவடிவனாற் றன்பாலே மாயையினாற் றத்துவ மறைக்கப் பட்டுக் கற்பிதங்களே காண்பிக்கப் பெறுகின்றன. அபிமான அங்கிசத்தை யடைவுற்று லவும் பிராணிகளுக்குட் சர்வாந்தரியாமியா யெங்குமிருக்கும் பொருளாற் பாதிக்கப்படாத தொன்று இம்மூவுலகத்திலும் கிடையவேகிடையாதாம், அதற்குச் சர்வத்தையும் பாதிக் குந் தன்மையுண்டு, அதற்கேதுவாய தடையில்லாச் சுதந்திரமுளதாம்.

(ச.) ஒன்றுவர், பிரமாதி சகலரும் பரிமாணத்தாற் பரிமித ஜீவிகளே யாமென்பது கருத்து. பிரகிருதி புருடரின் கலக்கவடிவம் அல்லது நாசரூபம் ஆனபரமேசுரசக்தி யென்னும் காலமும், கருமமும், நியமனரூப சக்தியாகிய நியதியும் அழிந்துபோம். காலா திகளும் ஈசுர பரதந்திரமாகலின் மகாப்பிரளயத்திலோர் பொழுது நிவிருத்தியா மென் பது கருத்து. என்போன்ற மனுடதேக தாரியின் கண் இயாது விசுவாசமென்று அவ் வவ்விடத்துணர்க. இதுவென நிச்சயித்தற் கரிய மாயாவியாய் விளம்புதற்கும் வினவுதற் கும் காணுதற்கும் அரிய பரிசுத்தமான ஞானமூர்த்தியாய் அத்வைததத்துவமான பரமே சுரனா லிவ்விலக்கண மிகழ்ந்த புவனங்கள் நசிக்குமென்பதாயிற்று. (107)

(ஸ்ரீ-வீர - அ - கை.) அதிஷ்டானபூத பரமாத்மாவினாலே கொடுக்கப்பட்ட மயக் கத்தையே பற்றிச் சுழற்றிவைக்கும் அவனையறியாது உலகமானது நசிக்கின்றது என

வருத்தப்படுகின்றார்: ஆகாயத்தில் மரமிருக்குமாயின் அதிலிருக்கும் கொடியாற் கழுத்திற் சுற்றப்பெற்றுத் தொங்கிக்கொண்டு இருப்பதற் கொப்பாகச் சாரமற்றதும், பற்றுக் கோடின்றிய துக்கமும் வீழ்ச்சி முடிவினிலையை யுடையதும் ஆகிய சுவர்க்க நரகாதிகளைப் பயனாகவுடைய, முற்கூறிய தோடங்கணிறைந்த கெட்டகாமிய நிஷித்த ஒழுக்கங்களானே இவ்வுலகின் கண்ணே ஜன்மபரம்பரைகளில் இவ்வுயிர்களின் ஆயுளானவை மிகவும் கழிகின்றன; அதனி விருத்தி யுபாயமோ அதிதூரத்தி னிற்கின்றது அச்சிந்தையு முதிப்பதே கிடையாது விசாரவான்களாகிய யாங்களும் அறியவில்லை யென்கின்றார்:—இன்னபோதெனை.

இன்னபோது மங்கலங்களா மிருதுவீதி யாத்திரைக் கிதுகால
மன்னதேயுற விச்சுக மிருந்தவா வற்புத முளபோக
மென்ன வென்னவா ளாநினைத் துலகங்க ளிறக்கின்ற வுயர்ந்தோரை
யுன்னிமுந்துறப் பகலெலாந் தேடிடா தோழியுமேற் றுயிலுண்டோ. (108)

(ப - ரை.) இன்னபோது மங்கலங்களாம் = இப்போது உற்சவங்களாம், இருது வீது = இது இருதுவாம், யாத்திரைக் கிதுகாலம் = யாத்திரை செய்வதற்கு இதுவே சமயமாம், அன்னதேயுறவு = அவர்களும் இவர்களுமே பந்துக்கள், இச்சுகம் இருந்தவாறு (என்னே) = இந்த இன்பம் எத்தகைய சிறப்புற் றிருக்கின்றது ஆ! ஆ!!, அற்புதமுள போகம் = விசேடத்தோடு கூடிய போகமானது அதிக விஸ்மயத்தைத் தரத்தக்கதாக விருக்கின்றது, என்ன என்ன = இந்த இந்த வண்ணம், வாளா நினைந்து = வீணாகவே யெண்ணி யெண்ணி, உலகங்க ளிறக்கின்ற = அநேக விகற்பமடைந்து நெகிழ்ந் நெஞ்சுடன் உலகங்கள் அழிகின்றன, உயர்ந்தோரை யுன்னி = விவேகியராகிய சாதுசீலரை நினைந்து, முந்துற=அவர் சம்சர்க்கம் பெற்று, பகலெலாம் = பகன் முழுதும், தேடிடாது = சிரவணாதி செய்யாமல் ஒழியுமேல் = வாளாபோழ்து போமாயின், துயிலுண்டோ = யாவர்தாம் கவலையின்றி நித்திரை செய்யமுடியும். (எ - று.) ()

(ஸ்ரீ - வீர.) உலகங்க ளிறக்கின்ற, உலகத்தார்தம் ஆலோல பேலவமதி அதாவது பரிசஞ்சல தனுபுத்தியானது நாசத்தை யெய்துகின்ற தென்பதாம், இங்ஙனம் அவிவேகிகளாய்ச் சமுசரிப்பவரைப்பற்றி யனுதாபப்பட்டுவிட்டு அவர்மத்தியில் நிகழாநின்ற முமுக்ஷுக்கள் ஏகாந்தப்பிரிய பிரஹ்மநிஷ்ட சந்நிதியின் கண்ணே சிரவணாதி யசம்பவத்தாற் சிந்தையிலெழு மாகுலங்கள் மிகுத்திடுதலின் இயற்கையாயதுயிலையும் ஆதரிக்க மாட்டார்கள் என்பார், உயர்ந்தோரை யென்றார், விவேகியர் = பிரஹ்மவித்துக்கள், அவர்கள் அதீனமான நல்லொழுக்கங்கள் சிரவணாதிகள் கிடையாவிடில் முமுக்ஷுக்கள் உறங்குதல் எங்ஙன்கூடும்? இன்று மகோற்சவம், இது நல்ல இருது, இது இனியயாத்திரை, இவர்களுறவினர், இஃதின்பம், சிறப்பாய போகமிது, என்பதாக வீணாகவே மடமையினாலே அநேகங்கோடி விகற்பங்களைக் கற்பித்துக்கொண்டு மகாசஞ்சலத்தையும் அதிமிருதுவையும் அடைந்த மூடரும் அவர்மதியும் இவ்வுலகிற் கெடுமாதலினாலே கெடும் சாமக்கிரி மாத்திரம் கணந்தோறும் அதிசுலபமாம். இயம்பியும் இயம்பாமலும் இராநின்ற மோக்ஷவிரோதியாய பொருள்களில் மீண்டும் வைராக்கியப் பொருட்டு விஸ்தாரமாகத் தோடங்களை மேலுங் கூறத்தொடங்குபவரா யாதியில் சர்வதோஷ நிவர்த்தகரான பெரியாரைப் பேணவிடிற் கண்கண்ட சுகமே காணாதென்பார், உயர்ந்தோரென்றார். இங்குமங்குமாக அதிதூரம் சுற்றித்திரிந்து பொழுது போம்போது வீட்டிற் புகுந்து பகலில் விவேகிகளினது அனுசரணத்தால் நல்லகரும ஒழுக்கமே யில்லாமலொழியின் மூடனைத்தவிர இரவில் யாவன் நித்திரைசெய்வன்.

(ச.) இன்றிது மதனஉற்சவமாம், இஃதின்பந்தரத்தக்க வசந்த இருதுவாம், இந்தப் பிரதேசத்தில் யாத்திரைசெல்லும் ஜனசமுதாயம் அதிசயமாகச் சவிசேஷசுகத்தை யனுபவிக்கின்றது. விகற்பஜாலங்களை நினைந்து அற்பமதியுடைய வுலகங்கள் இறக்கின்றன வென்பதாம். சற்சரித்திரமில்லா தொழியுமாயின் எம்முமுக்ஷு தான் நித்திரைசெய்வன், எவனுஞ்செய்யான், புருடார்த்த சாதனத்திற் குரியகாலம் நிரர்த்தகமாகவே நீங்குமெனிற் பறிகொடுத்தவனைப்போல விழித்திருக்க வேண்டுமே யல்லாமன் மற்றெங்ஙனம் கிருதகிருத்தியன்போல் நித்திரை செய்யத்தகும் என்பது கருத்தாம். (108)

(ஸ்ரீ - வீர. அ - கை.) சர்வஜனங்களும் புத்திரதாராதிகளை அமிருத சமானமாக நினைந்து அவர்கட்காகவேண்டி யதன் கண்ணே முயலுகின்றனரே யன்றிச் சிரவணாதியின் கண்ணே முயலுவதில்லை, அதுபோலவே நினது பிரவிருத்தியும் என் ஆகக்கூடாதெனின்? அதற்குக் கூறுகின்றார்: துராசையினாலே கெடுக்கப்பட்ட சித்தவிருத்தியையுடையவுலகர் எக்கருமத்தைப்பற்றி இளைப்பாறு தலையடைவரோ அத்தகைய தெக்கருமமும் எங்கும் எக்காலத்தும் கிலேசமும் நாசமும் அற்றதாய்ச் சமுசாரமுடிவு வடிவான மோக்ஷபலத்தை யுடைத்தானமையான அழிகியதாய்க் காணப்படுவதேயில்லை, “எவ்வாறிங்கே யெழிற்றொழிலானே, செவ்வாருக்கிய பயன்றின்றுதீரும், அவ்வாறங்கே யறத்தாற்றரித்த, செவ்வாருய பயனயின்றேகும்” என்பதாதி சுருதியை யனுசரித்துச் செயற்கையானுண்டான பயனுசம்மாமென்பது நியமமாம் இட்டங்கெட் டொழியினே துக்கமே முடிவிலுண்டாகின்றதென்பதும் வெட்டவெளியாம் என்கின்றார்:—மனையென,

மனைவியும கரும்பொன்னு மமதைசெய் தமுதம் போல
நினைவினு னேயஞ்செய்து நீணிலத் துள்ள வெல்லா
மனையவர்க் காகச்செய்வ ருத்திக ளான வெல்லாம்
வினையுற முடியுங்காலை விடங்களின் மயக்கஞ் செய்யும். (109)

(ப - ரை.) மனைவியு மகரும் பொன்னும் = தாரத்தையும் தனயரையும் தனத்தையும், அமுதம்போல = இராசயனத்திற்குச் சமானமாக, நினைவினால் நேயஞ்செய்து = புத்தியினாலே அதிவிசுவாசப்படுத்தி, மமதைசெய்து = எனது எனது எனவபிமானம் வைத்து, நீள் நிலத்துள்ள வெல்லாம் அனையவர்க்காகச் செயவர் = இவ்விஸ்தாரமாகிய ஜகத்தின் கண்ணுள்ள சர்வசுக சாதனங்களையும் மேற்கூறியவர்கட்காகவே சம்பாதித்துக்கொண்டே யிருப்பர், அருத்திகள் ஆனவெல்லாம் = ஆஜைசயா லாக்கப்படுவன யாவுமே, வினையுற முடியுங்காலை = அனுபவித்துத் தீர்க்குங் காலத்திலும் கருமமுடிந்து செல்லுங் காலத்திலும், விடங்களின் மயக்கஞ்செய்யும் = அதிரம்மியம் என்பதற்றுவிடமூர்ச்சனைபோலப் பெருந்துயரத்தையே யீயும். (109)

(ஸ்ரீ - வீர.) அநதிரம்மிய விடமூர்ச்சனைபோலப் பெருந்துயரை யந்தகாலத்திற் செய்யுமென்பதாம். மோக்ஷோபயோக மின்மையின் அனையவர்க்காகச் செய்வது பழிப்பேயாம். எதன்கட்டுக்கமுண்டாயபோது விடமூர்ச்சனையும் அதிரம்மியமேயாமோ அத்தகைய துக்கத்தைச் செய்யுமென்பதாம். புத்திரர்களும், மனைவியரும், தனங்களும் மயலினாலே அமிர்தத்திற்குச் சமானமாகக் கற்பிக்கப் படுகின்றனர், மரணகாலத்திலோ அவர்யாவரும் உதவுவதேயில்லை, அப்போது போகவிடயங்கள் மிக மனோரம்மியமானவை யெனினும் விஷமூர்ச்சையைப் போற் றுக்கப் பொருட்டேயாகின்றன.

(ச.) புத்திராதி யாவுமே அவசானத்தில் அத்தைகைய பலத்தைச் செய்யும், எத்தகைய பலத்தைக் குறித்து விடமூர்ச்சனையே இரம்மியமாமோ! இதனானேவிட மூர்ச்

சனையினும் சகிக்க முடியாததும் மாற்றிக்கொள்ள முடியாததும் ஆனபெருந்துயரம் இறந்துபோம் புத்திர களத்திராதியா லுளதாம் என்பது குறிப்பிக்கப்பட்டது. (109)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிலபாலோ துக்கத்தோடு கூடியதாயினும் அவ்விடய சுகம் அனுபவியாமலும், அதனைச் சம்பாதிக்கும் பிரயாச மாத்திரத்தை யனுபவித்தும் இருக்கும்போதே விடயபரன் மிருத்தியுவினிடத்தி லகப்பட்டுக் கொள்ளுகின்றான், என்கின்றார்:—பகையென.

பகையெலாந் துரந்துதள்ளிப் பாக்கியம் பலவந் தெய்த
விகலறத் துய்க்குநாளி லெவ்விடத் திருந்தோ வந்து
மிகையறு காலன்கொல்லும் விவிதமா மிடத்தி னின்று
வருந்தின்வந் தொன்றுவார்போன் மனைவிசேய் முதலா மாயை (110)

(ப - ரை.) பகை எலாந் துரந்து தள்ளி = சமக்கிர சத்துரு ஜனங்களையும் துரத்திவிட்டு, பாக்கியம் பலவந்தெய்த = சகல பாக்கியங்களாகிய அஷ்டலக்ஷ்மிகளும் இனிதாக வந்தடைய, இகலறத்துய்க்கும் நாளில் = யாதொரு விக்கினமுமில்லாமல் இவ்வின்பங்களைச் சேவித்துக்கொண் டிருக்கும்போது, எவ்விடத்திருந்தோ வந்து = எங்கிருந்தோ தெரியாமல்வந்து, மிகையறுகாலன் கொல்லும் = தனக்குமேலொன்று வலுவிலாத காலன் சங்கரிக்கும், விவிதமாமிடத் தினின்று = இங்கிருந்தும் பிறவிடத்திலிருந்தும், வருந்தின் வந்தொன்றுவார்போல் = சமானசங்கேத எண்ண முடையவர்கள் வந்துசேர்ந்து கொள்வதேபோல, மனைவி சேய் முதலாமாயை = களத்திர புத்திரமித்திராதி விவகார மாயையாம். (எ-று.) (110)

(ஸ்ரீ - வீர.) யாவையுஞ் சேகரித்துப் புசிக்குங்கா னமன்வரின் கைக்கெட்டியது வாய்க்கெட்டாமற் போய்ப் பெருந்துயர்க்கே யிடமாம். ஆயினும் ஒருவேளைபோக்தா மிருத்தியு வாயிலகப்படாமல் வாழ்வான், வாழினும் அவனது மயல்வடிவமாய களத்திராதி விவகாரம் அஸ்திரமாமென்பார், விவிதமாமென்றார். சாதாரண சங்கேதத்தாற் கட்டுப்பட்ட கருத்துடையபோகாதி விடயங்கள் விவகார மாயையில்ஆம், பொருளிதுவாம்:—பங்குனிமாதத்தில் கிருஷ்ண சதுர்த்தசியில் ஸ்ரீவிசுவேச யாத்திரை செய்யத்தக்கது என்னுஞ் சங்கேதத்தாற் சர்வசாதாரணமாகவே நரர்கள் கட்டுற்ற கருத்துடையராய் க்ஷணிகயாத்திரைச் சமாசங்கமுறுவர்;அவ்வாறே விவாகாதி காலசம்பந்தமுற்றசாதாரண சங்கேதத்தாற் கட்டுற்ற கருத்துடையராய்க் களத்திராதி விவகார மயல்கள்கணிகங்களாக வுண்டாம். எல்லாப்பகைவரையு மினிது வெற்றிகொண்டு அஷ்டலக்ஷ்மிகளும் நாற்புறமும் சூழ்ந்து வருமாறு சுகங்களைப் புருடானுபவிக்கும்போது எவ்விடத்திலிருந்தோ மிருத்தியுவானது வந்தழித்து விடுகின்றது. எவ்விதத்தினும் இன்னதெனநிண்ணயிக்கமுடியாத காரணத்தினனே விருத்தியாகாநின்ற துச்சவடிவமுடையனவும், கண்டகணத்திலழிந்து போவனவும், ஆகிய இவ்விடயங்களானே மயங்கித்திரிபவராகிய ஜனங்கள் இவ்வுலகின்கண்ணே எங்கிருந்துதா னுற்பத்தியாகின்றார்களோ, எங்குபோய்த்தான் மடிகின்றார்களோ அறியமுடியவில்லை யென்பதாம். இம்மனுட வுலகத்தினின்றும், சுவர்க்க நரகாதிகளினின்றும் வந்து வீணுகவே யிங்கு நாமெல்லோரும் ஒன்றுசேர்ந்து நெடுநாள் வாழ்வோம் எனப்பரஸ்பரம் அபிப்பிராயங்கொண்டு சங்கேதஞ்செய்து அதற்குத்தக்க வடிவோடுகூடி மித்திர களத்திர விவகாரரூப மாயையானது தேவோற்சவ முதலிய யாத்திரைகளில் நரர்கள் ஒன்றுசேர்ந்து சுழல்வதேபோற் சுழலுகின்றது.

(ச.) பாஷாசாமியாதி நிபந்தனத்தால் சப்தார்த்த சம்பந்தத்தால் இயற்றப்பெற்ற பிரமாணிகளாய் ஒன்றுவார். விவிதமாமிடம் = இங்கிருந்தும் பிறவிடத்திருந்தும் எனக்

க்மனுர்த்தத்தில் தேசநாநாத் தன்மை காண்பித்ததாயிற்று. தீர்த்தாதி யாத்திரையின் கண் சமாசங்கரா யொன்றுவார்போல் என்பதாம். மனைவி சேய் முதலன வடிவமாயை யெனவறிக. (110)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நம்மனோராதி போக்தாக்கட்குப் போக்தவ்ய போக அவசரத்திற்றானே மிருத்தியு சம்பவிக்கும், சம்பவித்தபோதினும் அநேக ஆயிரயுக ஜீவித பிரஹ்மாதிகட்கு அங்ஙனஞ் சம்பவியாதேயெனின், கூறுகின்றார்: ஸ்ரீ இரகுநந்தனர் சம்சார திருஷ்டிகளுக்குள் தோஷமில்லாத திருஷ்டிகளெவை, துக்கதாகமில்லாத திசைகள் தாமெவை, கணத்தில் நாசத்தை யடையாத பிரஜைகள் தாமியாவர், வஞ்சனையில்லாத இலௌகிகக் கிரியைதாமெவை, ஒன்றுமில்லவே யில்லையென்று சொல்ல, அன்னியர்களுடைய பிரஜைகட்கு அழிவிருப்பினும் பிரஹ்மாவினுலகத்தை யடைந்த பிரஜைகட்குக் கற்பகால மிருக்குந்தன்மை யுண்மையின் கணத்தில் அழிதலெவ்வாறு பொருந்துமெனின்? கூறுகின்றார்:—கற்பமாமென.

கற்பமாங் கணகாலத்திற் கமலயோ னிகளு மாய்வர்
சிற்பமாங் கலைகளாலே செறிந்தகா லத்தின் சால
வற்பமு மகத்துநாடி யளப்புறு புந்தி பொய்யாம்
பற்பல தீதின்மாறும் பயிலுமன் னுயிர்க ளெல்லாம். (111)

(ப - ரை.) கற்பமாம் கணகாலத்தில் = கற்பமெனப் பெயரிய க்ஷணப்போழ்தில், கமலயோனிகளும் = பிரஹ்மாக்களும், மாய்வர் = வாழ்ந்து போவர், சிற்பமாங் கலைகளாலே = கற்பிக்கப்பட்ட கலைகண் முதலியவற்றானே, செறிந்த = அடுக்காகப் பொருந்திய, காலத்தின் சால = காலவீட்டத்துற்ற, அற்பமுமகத்துநாடி = லகுத்தன்மை தீர்க்கத்தன்மைகளைச் சிறிதுபெரிதாகப் பாவித்து, அளப்புறுபுந்தி பொய்யாம் = எண்ணும்மதி மித்தையேயாம், பயிலுமன்னுயிர்களெல்லாம் = காமாசக்தர்களாய் விவகரிக்கும் பிராணிகள் அனைத்தும், பற்பல தீதின்மாறும் = விவிதகுகலைச் சேட்டையராவர்கள். (111)

(ஸ்ரீ - வீர.) அநாதியாய சமுசாரத்தில் கற்பசமூக சங்கியையைக் கணக்கிடில் விரிஞ்சர்கள் கற்பகண ஜீவிகளேயாவர்கள்; ஆயினும் நம்மனோராதியின் லகுகாலத்தை யுத்தேசித்துத் தீர்க்கஜீவியே யாவர் பிரஹ்மாவெனின், விடைதருவார், காலத்தின் சாலமென்றார்; கனவின்கண் முகூர்த்தத்தில் வருடக்கூட்டமயல் உண்டாவதேபோல நனவின் கண்ணும் லகுத்வமுதலவற்றின் பிராந்தியாம் என்பது கருத்து. இங்ஙனம் சமுசார விருத்தத்தை விளம்பி அதனிவிருத்தி யுபாய அலாபநிமித்த கேதத்தைத் தரிசிப்பிப்பார், மன்னுயிர் என்றார். குகலை = கெட்டவித்தை. சென்றனவும் வருவனவும் ஆகிய அநந்த கற்பங்களின் எண்ணிக்கையை யறியாதபோது அநந்தமென்பது சமமாயிருத்தலினானே கற்பங்களும் விஷ்ணுருத்திராதி திருஷ்டியானே கணங்களே யாமெனவாதலின் பிரஹ்மாக்களும் கற்பமென்னுங் கணவாழ்க்கையை யுற்றவர்களே யாவர்கள், ஆகவே அவயவத்தோடுகூடிய காலசமுதாயத்தில் குறுகல் நீட்சிமதிகளும், அற்ப அதிகவாழ்க்கை மதிகளும், காண்போன் கற்பனையி னதீனமாயிருத்தலின் அசத்தியங்களேயாகும்; இதே நியாயத்தால் பிரஹ்மாண்டங்களும் அநந்தங்கோடி பிரஹ்மாண்டங்கண்டவர்களின் திருட்டியால் அணுக்களேயாமென அணுமகத்தென்னும் மதிகளும் அசத்தியங்களேயாம். இவ்வாறே பிரகிருதி திருஷ்டியில் விகாரங்களியாவுமே அசத்தியங்களே யாமெனத் தோற்றும்; செந்தழல்கொண்ட சிவப்புவர்ணம், அந்தநற்றேஜசி லண்மியதாகும், தந்திடும் வெண்மையோ தண்ணீரதாகும், மந்தமாங்கறுப்போ மண்ணினதாகும், இந்தவாறன்ற

கண்ணெரியாந்தகைமை, வந்தவாறந்தோ வழிகொண்டேகும், தொந்தவாக்காற் றொடங்கிய விகாரம் மந்திர நாமமாத்திரமாகும், முந்திய மூன்றுமொழிதரு ரூபமே, அந்தமற்றுண்மையா யமர்ந்திடுமென்றே' என்னும் மறையும் இதனையே யறைகின்றது. கூறிய பொருளையே யனுவதித்து முடிப்பார் அதனிமித்தமாகத் தமது கிளர்ச்சியைக் காட்டுகின்றார், பற்பலவென காமப்பற்றுடையவர்களோ பலவகையான குடிலத்தன்மைச் சாதுரியங்களானே விவகரிப்பதிற் றற்பரர்களாக இருக்கின்றார்கள் என்பதாம்.

(ச.) பூதபாவிகற்பக் கூட்டங்களை எண்ணிக்கைசெய்து கோடீகரிக்குங்கால் விரிஞ்சனும் கற்பமெனப்பெயரிய கணஜீவியேயாவன் ஆகலின் வெகுவித கற்பனுசாலினி காலசாலத்தில் கற்பாயுள் தீர்க்காயுள் என்னும் புத்தியும் மித்தியாபூதமேயாம். அற்பம்மகத்து = அற்பாயுள் தீர்க்காயுள். பற்பலநீதும். பற்பலநீதின், பற்பலநீதும்=குற்சிதநீதநிருத்திய விசித்திரங்களை விளம்பும் அறுபத்துநான்கு என்னுங் காமகலையின் நீதான சேட்டையில் சேட்டையும், மாலும் = வாஞ்சையடைகின்றன. அவைகளில் வாஞ்சையும், பயிலும் பொருந்தும், மன்னுயிர்களெல்லாம்; சர்வஜனங்களும், காமாசக்தர்களே யாவர்கள் என்பதாம்.

(ஸ்ரீ - வீர- அ-கை.) இப்போது விவேகிகள் துர்லபமென்றும் ஒரு செயலுஞ் செய்ய முடியவில்லை யென்றும் யாவுமனித்திய மென்றுங் கூறுகின்றார்:—கற்றவரெனை.

கற்றவ ரரியர் சாலக் கருமமுந் துயரினுலே
யுற்றகு னியமா மெல்லா முயிர்தரித் துழல்வ தெங்ஙன்
னற்றவத் தினமு மேலாஞ் செல்வமு மந்தச் செய்கை
முற்றுமாய்ந் துளத்தே தோன்று மியாமுமம் முறையிற் செல்வோம்.

(ப - ரை.) கற்றவரரியர்சால = கற்கவேண்டியதைக்கற்று உணரவேண்டியதையுணர்ந்த சுஜனங்கள் கனவினும் இவ்வுலகின்கண்ணே சுலபமாகக் காணப்படவில்லை, கருமமுந் துயரினுலேயுற்ற = கிரியையும் துக்காசங்கமாக விருக்கின்றது, சூனியமாம் எல்லாம் = யாவுமே விதுரவிதுரங்களாம், உயிர்தரித் துழல்வதெங்ஙன் = ஜீவிதமயிதசையை யெங்ஙனந்தான் கடத்துவதோ தெரியவில்லை, நற்றவத்தினமும் = நல்ல அந்தத்தினங்களும், மேலாம் = அம்மேன்மையும், செல்வமும்=அச்செல்வங்களும், அந்தச் செய்கை = அத்தொழில்களும், முற்றுமாய்ந் துளத்தேதோன்றும் = மற்றுமுள்ள யாவுமே நசித்து நினைவுமாத்திரமாய்ப் போய்விடும், யாமும் = நாமும், அம்முறையிற் செல்வோம் = அம்மார்க்கத்தேயே செல்வோம். மேலோரெனின் பெரியோ ரென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) சுஜனலாபத்தாலென்னே கிரியையினுலேயே புருடார்த்தத்தைச் சாதிக்கலாமேயெனின் புகல்வார், கருமமுமென்றார். எல்லாக்கிரியைகளுமே துக்கங்களோடு கூடியவைகளாம், விதுரவிதுரங்களுமாம்=சுக சாதனங்களற்றவைகளும், அதுக்கபலன்கள் அற்றவைகளுமாம், துக்காசங்கம் துக்கங்களோடு முற்றினும் கூடியது, விதுரவிதுரம்=புருடார்த்தம் அத்தியந்தம் இல்லாதிருப்பது; இவ்வண்ணம் அநாத்மவர்க்கம் அநித்தியம் என விஸ்தாரமாகப் பிரதிபாதித்ததைச் சுருக்கிக்கூறுவார், நற்றவென்றார். இவ்வுலகின்கண்ணே கனவிலும் விவேகிகளிப்போது எளிதாகக்கிடைப்பது அரிதாக இருக்கின்றது, தொழில்கள் யாவையுமோ அத்யந்தம் துக்கரகித சாதனங்களோடும் பலன்களோடும், சேராதனவா யவசியம் துக்கத்தையே கொடுப்பனவாகவே யிருக்கின்றன, ஆகலின் இவ்வாழ்க்கைமயமாயிருக்கும் தசையை யெங்ஙனந்தான் கழிப்பதோ தெரியவில்லை. சர்வபோக்கிய வஸ்துக்களிலும் வைராக்கியமுண்டாகும் பொருட்டு எல்லாப் பொருள்கட்

கும் மாறுபாடான இயற்கை யியம்புவார், நற்றவென்றார். நல்ல உற்சவ வைபவத்தோடு கூடிய அத்தினங்களும் அப்பெரியோர்களும், அச்சம்பத்துக்களும், அத்தொழில்களும், பிறயாவும், நினைவுமாத்திர நெறியை மருவிநின்றன, இனியாமுங் கணத்திலந்த வழியே தான் செல்லப்போகின்றோம். தினந்தினம் அழிந்துகொண்டே யிருக்கின்றது, தினம் தினம் மீண்டு முண்டாகிக்கொண்டே யிருக்கின்றது. கெட்டுப்போன இந்த வெந்த சம்சாரத்திற் கின்றளவும் அந்தத்தையே காணோம். புருடர்கள் மிருகங்க ளாகின்றார்கள் மிருகங்கள் புருடர்களாகின்றன, தேவதைகளும் அதேவதைகளா கின்றார்கள் ஆகலின் ஈண்டெடதைத்தான் நிலையெனக் கூறமுடியும்.

(ச.) கற்றவர் கனவினும் காணக்கிடையார். சகல கருமங்களுமே சித்தவிக்ஷேப வேதுக்களேயாம், எங்ஙன்=எப்படியோ யானறியேன். ஜீவரது வாழ்க்கை புருடார்த்த நிமித்தம் சேடிக்குந் தன்மையைத் தேவரீர் அனுக்கிரகிக்க வேண்டு மென்பது கருத்தாம், மேலோர் = மகான்கள். செல்வோம் = இனிமேற் போவோம். (112)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வடவாமுக அக்கினியினாலே நீரானது வற்றுவதேபோலப் பிரஹ்மா விஷ்ணு ருத்திரன் பிறபிராணிகள் யாவும், லயத்தையே யடைகின்றனர், சுவர்க்கம் பூமிவாயு ஆகாசம் மலையாறு திசையென்னு மிவையாவுமே லயமுறுகின்றன வென்றால் எவைதாங் கணத்திற் போகாதன வில்லை யென்கின்றார்:—பிணியென.

(ச.) சலம் வடவாநலத்தா னசிப்பதே போன்று பிரஹ்மா விஷ்ணுருத்திரனும் சகல பூதசாதிகளும் நாசமே யடைவரென்கின்றார்:—பிணியென.

பிணிசெயா பத்துச் செல்வம் பிறப்பிறப் பென்ப வெல்லாங்
கணிதமாங் கணத்திற் போகா தனவில்லைக் கடிய சூரன்
றுணிவனோ ரேழையாலே நூறுட றுணியு மொன்றாற்
பணிதரு கீழோர் மேலாம் பலவட்டம் வருமிவ் வாறே. (113)

(ப - ரை.) பிணிசெய் ஆபத்து = துயரத்தை யுண்டாக்கும் ஆபத்துக்கள், செல்வம் = சம்பத்து, பிறப்பிறப்பு = ஜன்மமரணம், என்பவெல்லாம் = என்று சொல்லப்படும் பொருள்களியாவுமே, கணிதமாம் = க்ஷணிகங்களேயாம், கணத்திற் போகாதன வில்லை = கணகாலத்திற் கழியாதனவே காணோம், கடிய சூரன் = அதிசாமர்த்திய சூரனாயினும், ஓரேழையாலே துணிவன் = அசூரனொருவனால் அதமாக்கப்படுவன், ஒன்றால் நூறுடல் துணியும் = ஏகத்தால் அநேகசரீரங்கள் அதமாக்கப்படும், பணிதரு கீழோர் மேலாம் = வணங்கும் படியான தன்மைவாய்ந்த பிராகிருதர் மேன்மையாகிய பிரபுத்தன்மை யடைவர். இவ்வாறே பலவட்டம் வரும் = இங்ஙனந்தானே சகல சகத்தும் அநேகமுறை சுற்றிக்கொண்டே யிருக்கும். (எ - று.) (113)

(ஸ்ரீ - வீர.) எதுதான் கணத்தில் நசிக்கவில்லை மற்றோ எல்லாமே கணத்தில் நசிக்குமென்பதாம்; வரவுபோக்கினையே யுடைத்தாகி யிருப்பதும் கணமிருப்பையும் நாசத்தையும் உறுவதும் ஆகிய இதனால் இச்சமுசாரத்தில் எத்தீரன்றான் அஞ்சவில்லை: கணம் ஆபத்துக்கள் வந்தடைகின்றன, கணம் சம்பத்துக்கள் வந்து சார்கின்றன, கணம் பிறப்புறுகின்றது, கணமிறப்புறுகின்றது, கணமாயினும் என்னதான் மாறாம லிருக்கின்றது. முன்னர் வேறாகவே யிருந்தவொருவன் சிலதினங்களில் வேறாதவே யாய்விடுகின்றான் ஆகலினிவ்வுலகில் எப்போதும் ஏகரூபமாயும் நன்னிலையுற்றதாயும் ஒரு பொருளும் இல்லவேயில்லை யென்பார் கடிய என்றார். சூரனல்லாதவனாலே சூரன்

கொல்லப்படுகின்றான், ஒருவனாலும் நூறுபேர் கொல்லப்படுகின்றனர். அற்ப அறிவிலர்களும் பிரபுத்தன்மையை யடைந்து விடுகின்றனர் ஆகலின் எல்லாவுலகும் மாறிக் கொண்டே யிருக்கின்றது.

(ச.) சகலமும் கணிகமாதலேயன்றி நிலேயுறுதா மென்பார் கணத்தில் என்றார். சலிலமெல்லாம் வடவையை யடைவதேபோலும் கணத்திற் காலன்பாலடையும்; ஆண்டாகாயத்தினின்றும் வீழாநின்ற சகல சலிலங்களுமே சிறுசிறுயாறுருவமாகிக் கடலே யடைந்து வடவாக்கினியின்பால் வீழ்கின்றன வென்பதாம்; சகல சகத்தும் மாறிமாறிச் சுற்றும். (113)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் வெகுவிதமாகச் சம்சாரதோஷங்களை நிரூபித்து அதன்பயனாகிய நிரதிசய வைராக்கியத்தைக் கூறுகின்றார்.—சர்வ பதார்த்தங்களிலுந் தோடங்களைக் கண்டமையின் தமக்கு வைராக்கிய முண்டாகி யிருத்தலையும் தமது சித்தத்திற் றேடத்தைக் கண்டமையையும் வருணித்து, அவைசாந்தியாம் பொருட்டும் தத்துவத்தையறியும் பொருட்டும் உபதேசிப்பான் பிரார்த்திக்கத் தொடங்குகின்றார்:— அனையவென.

அனையகுற் றங்களாங் காட்டெரி யினாலறவும் வெந்த
நினைவினீ ரிற்கானற்போ னெடியபோ கங்க டோன்றா
வினையுறு மரணம் வாணாளிர ண்டையும் விரும்புகில்லேன்
இனையதோ ரிடருமின்றி யிருந்தவா றிருக்கின் றேனால். (114)

(ப - ரை.) அனைய குற்றங்களாங் காட்டெரியினால் = மேற்கூறிய தோடங்களாய தாவாக்கினியினாலே, அறவும் வெந்த = அத்தியந்தம் வெதுப்பப்பட்ட, நினைவில் = சித்தத்தின்கண்ணே, நீரிற் கானற்போல் = மிருகதிருஷ்ணை சரங்களிற்போல, நெடிய போகங்கள் தோன்றா = பெரும்போகங்கள் பொருளாகப் புலப்படவில்லை, வினையுறு மரணம் வாணாளிரண்டையும் = கருமசம்பந்தத்தானே வாராநின்ற மரணம் ஜீவிதம் என்னு மிரண்டின் கண்ணும், விரும்புகில்லேன் = விருப்பத்தை யடையமாட்டேன், இனையதோரிடருமின்றி = இத்தகைமைத்தாய் எவ்விடருறு சுரமுமேயில்லாமல், இருந்தவாறிருக்கின்றேன் = இருந்தவண்ணமே யிருக்கின்றேன். (114)

(ஸ்ரீ - வீர.) போகங்களில் இச்சை யில்லாவிடினும் ஜீவனாதிகளிற் பிரீதியுண்டாமெனின் உரைப்பார், வினையென்றார். கூறியவகையாக உண்டாய தோடதிருட்டியான காட்டுத்தீயாலும், என் விவேகமதியில் நிறைந்த தோடங்களாகிய காட்டுத்தீயாலும், ஆசை விரைகளெல்லாம் அடியோடு தகிக்கப்பட்டும், விவேக விஸ்தாரத்தோடு கூடியும் இராநின்ற என்மதியில் மலர்த் தடாகத்திற் கானனீர் தோற்றுதேபோலப் போக ஆசையானது தோற்றுவதில்லை; அவிவேக மருப்பூமியிலன்றோ போக ஆசைக் கானனீர் தோற்றும். எனக்குத்யானவனமும் ஆனந்தத்தின் பொருட்டாகவில்லை, மங்கையரும் சுகப்பொருட்டாகார், தனவடைவும் மகிழ்ச்சிசெய்யாது மனஞ்சாந்தியடைவதே நலமாகின்றது, சாந்தியன்றி வேறுசுகவேதுவைக்காணேம். உலகமோ அநித்தியம் ஆநந்தமல்ல, ஆசையோ தாண்டமுடியாமற் பெருகுகின்றது, சித்தமோ அதிசஞ்சலத்தாற் கெடுக்கப்பட்டுளது ஆகலின் எங்ஙன் சுகமுண்டாம். இறப்பதினும் இச்சையில்லை, வாழ்வதினும் வாஞ்சையில்லை; எவ்வாறிருக்கின்றேனே அவ்வாறே தாபமற்றவனா யிருக்கின்றேன்.

(ச.) போகங்கள் = போகாசைகள், வினையுறு = ஊழால் வரும். இருந்தவாறு= இப்போது தேவரீரது திருச்சந்நிதியில் வழங்கியவகையே பரிசுத்தசித்தனுக விருக்கின்ற படியே இருக்கின்றேன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விடயத்தில் வீழ்ந்து சுழலும் சித்தத்தின் சிகிச்சை. விருத்த அவஸ்தையிற் செய்வதே தகுதியாம் தாருண்யத்தில் யாதின்பொருட்டுக் கட்டப்பட்டு அதைச் செய்யவேண்டும் எனின் கூறுகின்றார்:—தெரியென.

தெரிவுறு வயதில் வந்த புந்தியாற் சித்தந் தன்னைப்
பரிகரி யாது விட்டாற் பரிகரிப் பதுமற் றெந்நாள்
விரிவிடம் விடம தன்று விடயமே விடமாந் துன்பம்
புரிவிடங் கொல்வ தோர்மெய் புலன்மறு பிறப்புங் கொல்லும். (115)

(ப - ரை.) தெரிவுறு வயதில்வந்த = விவேக திடத்தோடுகூடிய தாருண்யத்திற் கிடைத்த, புந்தியால்=தெளிந்தமதியால், சித்தந்தன்னை=விடயத்தை நாடும் மனத்தை, பரிகரியாது விட்டால் = சிகிச்சைசெய் தடக்காவிடில், பரிகரிப்பது மற்றெந்நாள்=மறுபடி சித்த சிகிச்சைக்குக் காலம் வாய்ப்பதெப்போதோ, விரிவிடம் விடமதன்று = துயரத்தை விஸ்தரிக்கும் விஷம் விஷத்திற்குரிய ஷ்கிருஷ்ட வேலையைச் செய்கின்றதென்று சொல்ல முடியதாம், விடயமே விடமாம் = திருசிய சப்தாதியே விடவேலையை யோயாது செய்வதாம், துன்பம் புரிவிடம்கொல்வதோர்மெய் = துயரைத்தரும் விடம் நசிப்பிப்பது ஒரு சரீரமாம், புலன் = விடயங்கள், மறுபிறப்புங் கொல்லும் = வாதனைவடிவமாகி மறுமறுபிறப்புகளிலும் கொன்று கொண்டே யிருக்கும். (எ - று.) (115)

(ஸ்ரீ - வீர.) பாலியத்தின் பின் மதிதெளிதலின் வயதில்வந்த என்றார். யிவ்வனத்திற் சிகிச்சை சித்தஞ்செய்யப் படாதாயின் மற்றொரு போதுமே திருத்தப்படாதாம். விடயங்களி லிச்சித்தஞ் சிகிச்சை செய்யப்படவே வேண்டுவதேன் எனின் இயம்புவார், விரிவிடமென்றார். விஷமானது விஷயவைஷம்யியமாம், விடயங்களில் விடமத்தன்மை யாவது, சோபனு சோபனத் தன்மைவடிவ இராகத்வேஷ ஹேதுபூதமாம். இந்தப் பாலியவயதில் தெளிவான மதியினுனே மனதானது சிக்ஷிக்கப் படாவிடின், மறுபடி சித்தத்தைத் திருத்துவதற்கு அவகாசம் எவ்வாறு கிடைக்கும், “ தருத்தனைச் சிறுத்துறத் தரித்திட லெளிதே, பருத்திடின் மரத்தினைப் பறித்திட லெவரே ” என்னும் நியாயமுமுளதாம். விடம் விடமெனக் கூறப்பட மாட்டாது, மிகக்கோணலால் விடயமே பெரிய விடமாம், விடமானது புசித்த தேகத்தை மாத்திரம் நசிப்பிக்கும், விடயமோ ஜன்மாந்தரங்களிலும் கெடுக்கும்.

(ச.) இப்போது நீர் பரிகரியாது விட்டால் பரிகரிப்பது மற்றெந்நாள். சாதனசதுஷ்டய சம்பத்தியும் சற்குரு சம்பத்தியும் அநேக ஜன்மசஞ்சிதமாகிய மகத்தான சுகிர்த புஞ்சத்தின்பலமாம், ஆகலின் அவைகிடைத்த இப்போதும், சித்தலய உபாயம் உபதேசியாவிடின் இனி யொருபோதும் பந்த நிவிருத்தியின்றென்பது கருத்து. கொல்லும், ஆலகாலாதி விடமெந்தத் தேகத்தைத் தீண்டிற்றோ அந்தத் தேகத்தையே கெடுக்கும், நிஷித்த விடயபோகமோ சன்மாந்தர சகஸ்ரங்களையும் கெடுக்கும்; ஆதலால் விஷதுன்பத்தினும் விஷயதுன்பம் சகித்தற் கரியதாமென்க. (115)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானவைராக்கிய ஔடதங்களால் சிகிச்சை செய்யப்பட்ட சித்தத்தால் என்னபயன் அடையப்படும், எதனுல் நின்னுல் சித்த சிகிச்சை செய்யப்படு

கின்றதோ வெனின், கூறுகின்றார்; தத்துவஞானிகளும் விடயங்களைப் புசிப்பவராய்ச் சுகாதிகளை யுடையவராய்க் காணப்படுகின்றனரே அவர்களிடத்தில் யாது விசேடமெனின் கூறுகின்றார்:—மகிழ்வென.

மகிழ்வுசோர் வுறவு சார்வு வாழ்வுசா வென்ப வெல்லாம்
திகழ்வதா மறிவு சான்றோர் சிந்தையிற் பந்த மாகாப்
புகலுறு மாயு வாயுச் சிதறிய புயனீ ரொக்கும்
நிகரறு போகமேக மிசையெழு நெடுமின் போலும். (116)

(ப - ரை.) மகிழ்வு = சுகங்கள், சோர்வு = துக்கங்கள், உறவு = மித்திரர்கள், சார்வு = பந்துக்கள், வாழ்வு = ஜீவிதம், சாவு = மரணம், என்பவெல்லாம் = என்றியம்பப் பெற்றயாவுமே, திகழ்வதா மறிவுசான்றோர் சிந்தையில் = விளங்காநின்ற பரிபூரண ஞானத்தினை யுடைய பெரியோரது சித்தத்தில், பந்தமாகா = கட்டுப்பாட்டைச் செய்யப்பட்டன வாகமாட்டாவாம், புகலுறுமாயுள் = பெரிதாக இருக்கின்றதென்று புகழ்ந்து கொள்ளும்படியான ஆயுளானது, வாயுச்சிதறிய புயனீரொக்கும் = காற்றினாற் றூற்றப்பெற்ற அப்பிரபடல லோலாப்பு போலும் பங்குரமாம், நிகரறுபோகம் = நமக்கொப்பாகப் போகம்படைத்தா ரெவரெனும் போகம், மேகமிசை யெழுநெடுமின் போலும் = மேகவிதான மத்தியில் விலாசஞ் செய்யும் நீண்ட மின்னலைப் போலும் சஞ்சலமாம். (எ - று.) (116)

(ஸ்ரீ - வீர.) பிரஹ்ம வித்திற்கும் பேதமின்மையின் கூறிய யாவையுமே யறிவாம். சித்த சிகிச்சையினது சாபல்யத்தைத் தரிசிப்பித்துப் பலிதத்தைக் கூறுவார், புகலென்றார், விதானம் = மேற்கட்டி. மின்னல் = வித்யுத்து. சுகங்களும் துக்கங்களும் மித்திரர்களும் பந்துக்களும் வாழ்வும் சாவும் ஆன்மஞானியின் மனத்தைப் பந்தப்படுத்தமாட்டாவாம். சர்வதுக்கங்களு மில்லாமல் மூலத்தோடுங் கெடுத்தலின் ஞானமுடைமையே மகாபுருடார்த்தமா மாதலின் அதன்பொருட் டுபதேசம் வேண்டிய தவசியமாகவிருக்கின்றது, உபதேசங் கிடைக்கின் யான் ஞானியா யிருந்துகொண்டு சோகபயஆயாசமுதலிய வற்றைக் கடந்து விரைவிற் சுகமடைவேன் சந்திரனுலே நீங்காத இரவிருட் டில்லாததேபோல, உத்தமமனத்தையுற்ற மகான்களினுடைய சங்கத்தாலும், சங்கபலமாகிய வுபதேசத்தாலும், அழியாதனவாய கெட்ட மனோவியாதிகள் உலகத்திற் கிடையவே கிடையாவென, சாந்தியாதி தாட்டியமில்லாத பாலகனாகிய உனக்குபதேசித்தபோதினும் யாங்ஙனம் பலப்படுத்துவா யெனின், சாந்தியாதி தாட்டியம் தங்கள் கிருபையால் மிகவுமுளது, அரசனானவன் அதிகாரம்பார்க்கும் ஆவலுடையவர்கள் அநேகர்கள் இருந்தபோதினும் எவர்களிடத்தில் லோபம் அச்சம் முதலிய தோடங்களால் தேசத்தில் பீடை பகைவர் படையெடுப்பு முதலியவையாமென்னுந் தோற்றமுளதோ அவர்களை விடுத்து, எவனேனுமொரு வல்லவனாகிய குணவானுக்கே முக்கிய அதிகார முத்திரையைக் கொடுப்பதேபோல என்னுலின்று இந்தவயதிலும், ஆயுள்போகம் யௌவனம் முதலியவற்றின் கண்ணே, ஆசை சஞ்சலம் முதலிய தோடங்களானே சித்தத்திற் றுக்கம் நாசம் முதலிய அநர்த்தத்தை யெண்ணி அவைகளை விடுத்து எல்லாத்தோடங்களு மற்றதும், வல்லமையுற்றதும், ஆகிய சாந்தியின் பொருட்டுச் சித்தவிடயத்தில் திடஅசஞ்சலமாய அதிகாரமுத்திரை கொடுக்கப்பட் டிருக்கின்றது; கூறியவற்றுள் ஆயுளோ வாயுவினு லலைக்கப்பட்ட மேகக்கூட்டங்களிற் றெங்கும் நீர்த்துளிபோற் பொன்றுவதாம், போகங்களோ மேற்கட்டியைப் போல விரிக்கப்பட்டிருக்கும் மேகங்களுக்குள் மின்னுகின்ற மின்னற் கொடிபோற் சஞ்சல மானவையாம்.

(ச.) சுகதுக்காதி யனைத்தும் அஞ்ஞானியே பந்திக்குமன்றி ஞானியினது சித்தத்தைப் பந்தியாவென்பதுணர்க. (116)

(ஸ்ரீ - வீர - அ - கை) பரம சாந்தர்களாகிய தாங்கள் பேரானந்தம் பிரியாதிருப்பத் தேவரீரை யடைந்த அடியேன் பரதந்திரமாய்த் துயருறல் நீதியன்றென்கின்றார்:— மாந்தரென.

மாந்தர்த மிளமை நில்லா திவை யெலா மனத்தி னெண்ணிச்
சாந்திகொள் பெரியோர் நீவிர் சமாதியோ கத்தைச் சார்மி
னாய்ந்தவென் சிந்தை சீவ நாயகன் வசமா கைக்கே
யேய்ந்தது நிலையு மெய்தாதி றைவனைப் பிரிந்தாள் போல. (117)

(ப - ரை.) மாந்தர் தமிளமை நில்லாது = அதிசஞ்சலமான மக்களின் யவ்வனலாவனை நீர் வேகம்போல நிலையாததாம், இவையெலாமனத்தினெண்ணி = கூறிய யாவற்றையும் சித்தத்தின் கண்ணே சிந்தித்து, சாந்திகொள் பெரியீர் நீவிர் = பரமசாந்தியை யடைந்த பெரியோர்களாய தாங்கள், சமாதி யோகத்தைச் சார்மின் = நிர்விகற்ப சமாதியில் நிலைபெற்று வாழ்ந்து சுகியுங்கள், ஆய்ந்தவென் சிந்தை = இவற்றை யெல்லாம் விசாரித்துப் பார்த்த அடியேனது சித்தம், சீவநாயகன் வசமாகைக்கே யேய்ந்தது = ஜீவேசுவரன் வசமாகுவதற்கே பொருந்தியது, நிலையுமெய்தாது = அவஸ்திதியையு மடையாது, எதுபோலெனின், இறைவனைப் பிரிந்தான்போல = பிரிய நாயகன் இல்லத்திற் காந்தையைப் போலவாம்.

(ஸ்ரீ - வீர.) யவ்வனலாவனை = யவ்வனவுபலாலனம், அதுவே அதிசஞ்சலமாதலின் ஜலவேகம் போன்றதாம். இவையெலா மனத்தின்கண் அடியேன் சிந்தித்து அற்புதமாக விடயத்திற் றுவுறுதலை நீக்கும் பொருட்டு விவேகலோக காரணு லாற்றப்பட்ட வைராக்கிய முத்திரைதிரநீள்சாந்திப் பொருட்டு அடியேனுற் சித்தத்திலின் றர்ப்பிக்கப்பட்டது, என்றுணர்ந்து கொள்க. இவ்வண்ணம் முத்திரை அர்ப்பிக்கப் பட்டதாமேலாயின் நினக்குச் செய்யவேண்டியூ செய்து முடிந்ததேயாயது, இதற்குமேல் என்ன எஞ்சியுளதெனின்கூறுவார் நிலையுமென்றார். உம்மையால் வாஞ்சித்தபடியும் பெறுதென்பதாம். ஜீவனே விவேகித் தன்மை யானே ஈசுரன் = நியந்தாவாம், வசம் = அவனததீனமாம். ஜீவனது ஈசுரைகத்வப்பிரணவ புத்தியானது நிர்த்துக்கபதத்தில் அவஸ்திதியை யடையாது. காந்தைபக்கத்தில் ஜீவேசுவரன் = பிராணநாதன், இறைவன் ஆவன், அவளும் பர்த்தாவினுடைய பவனத்தில் தன்னிச்சைத் திதியைப் பயாதியால் அடையமாட்டாள், இட்டப்படியும் வெளியேயேகவும் மாட்டாள், சித்தமெனினும் புத்தியெனினும் ஒன்றென்க. விமலமான ஒருபதத்தில் சித்தவிசிராந்தியே சிட்டமென்பது பாவமாம். யவ்வன சம்பந்திகளாய மனோவிநோதங்கள் நீரின் வேகம்போல மிகவேகமுமலைவு முடையனவாம் என இவற்றை யெல்லாம் விரைவிலெண்ணித் தான் மனத்தின் நீள்சாந்தியின் பொருட்டு உரைத்ததுபோல முத்திரையானது கொடுக்கப்பட்டுளது. தமது சித்தத்தின் கிளர்ச்சியையும் உத்வேகத்தையுமே அநேகம் ஹேதுக்களானே விஸ்தாரமாகப் பிரகாசப்படுத்தி அதனீக்கப் பொருட்டும் இளைப்பாறுதற் பொருட்டும் ஹேதுவா யிராநின்ற தத்துவஞான வுபதேசத்தையே விஸ்தாரமாய்ப் பிரார்த்திப்பார், நிலையுமென்றார். ஜீவநாயகனை யடைந்த காந்தையான சிந்தையானவள் நாயகனது வீட்டில் அவனதீனமா யிளைப்பாறுதலை யடையாமல் வாஞ்சித்த தேயத்தையும் விடயத்தையும் அடையாம லிருக்கின்றனள் என்பதாம்.

(ச.) இவையெலா மனத்தின் எண்ணி, யவ்வனமும் அதிலுதிக்கும் போகேச்சை ஆயுள் ஆதிகளும் கணபங்குர மெங்குரமென்றனு சந்தானஞ்செய்து சித்தத்தில் விசிராந்தி நிமித்தம் கோசகிருகாதியில் விவகாரநிவிருத்தி நிமித்தந் திடமுத்திரை, அதாவது அக்ஷராதிவிந்யாசபந்த விசேடம் வைப்பதேபோல வென்னல் வைக்கப்பட்டே யிருக்கிறது. ஜீவப்பிரஹ்மைக்கியவிடயசிந்தை நிலையுமெய்தாது, என்னே, அசம்பாவனை விபரீதபாவனைகளாலென்க. நிலையுமென்ற வும்மையால் இச்சைப்படியு மியங்காது, என்னே, தோடதரிசனத்தால் வெளியில் விரக்தியுடைமையின் என்க. இதற்குத் திருஷ்டாந்தம் இறைவனைப் பிரிந்தாள்போல வென்பதாம்; பிராணேசுவர பரதந்திரமான காந்தை பிரியநாயகன் இல்லாத வில்லத்தில் துக்கவேதுத்தன்மை யுண்மையின் நிலைத்திருக்கவுஞ் சகியாளோ, பதிவிரதாதர்மத்தை மேற்கொண்டொழுகலின் பிறவிடத்தும் இச்சைப்படி சஞ்சரியாளோ அதுபோலவாமென்பதாம். (உ-ம்) ஸ்ரீயாஞ்ஞவற்கியர்:—கிரீடையையும் சரீரசமஸ்காரவர்ணனையையும், தேர் திருவிழாமுதலிய தரிசனத்தையும், நகைத்தலையும், பரகிருகத்திற் சேர்தலையும் விடல்வேண்டும் பதியைவிட்டுப் பிரிந்தவள். (117)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிந்தையுடையவராய் ஸ்திதி ஸ்தானத்தை அதிவாதப் பொருட்டு வினவுகின்றார்: சுயமாகவே சஞ்சலமும் நானுபோகவாசனையால் விஸ்தீரணமும் ஆகியசித்தம் புவனத்து ளெங்குந் திரிதலானே திடமாகப்பயின்ற சஞ்சலத்தோடு கூடி யிருத்தலின் பலாத்காரமாக நிறுத்தியபோதினும் தத்துவஞானப் பற்றின்மையினனே சஞ்சலத்தை விடுவதில்லையாகலின் விடுமாறடையும் நிலைமையாதெனவினவுகின்றார்:— ஆதலாலெனா.

> ஆதலால் வருத்தங் குற்றமுபாதி யோடைய மின்றி
> மீதுறுமோக மின்றி விளங்கிய நிலைமை யேது
> காதல் செய்யின்ப மிக்க விடயமாங் கனலில் வீழ்ந்துந்
> தீதுறு நிலைமையேது தீயினுள்ரதம் போல. (118)

(ப - ரை.) ஆதலால் = அதனல், வருத்தம் = ஆயாசம்; குற்றம் = துச்சம், உபாதியோடு = உபாதியுடன், ஐயம் = சங்கை, இன்றி = இல்லாமல், மீதுறுமோகமின்றி = மேலோங்கி வாராநின்ற மயக்கமில்லாமல், விளங்கிய நிலைமையேது = இலங்குகின்ற ஸ்திதிபதம் யாதாம், காதல்செய்யின்ப மிக்க = விரும்பும் ஆனந்தமதிகரித்த, விடயமாங் கனலில் = விடயமாகிய பேரழலில், வீழ்ந்தும் = பதனமாகியும், தீதுறுநிலைமை = கெடுதலில்லாத ஆஸ்பதமியாது, எதுபோலெனில், தீயினுள் இரதம்போல = அக்கினியின்கண்ணே ரசம்போலுமென்க. (எ-று.) (118)

(ஸ்ரீ - வீர.) அதனல், எதனாற்சித்தம் ஸ்திதியை யடையமாட்டாதோ அதனல் வினவுகின்றேன் எனஅத்தியா காரஞ்செய்க: துச்சம் = பரமார்த்த சத்துரூபம், ஆயாசம் = துக்கம், ஆயாசத்தின் கட்காரணம், மயக்கமாம், மயக்கத்தின்மாட்டேது உபாதியாம், உபாதி = மனமாம், மனமன்றே எல்லா மயக்கங்கட்குமூலமாவது, அவ்வாறே முன்னரும் மொழியப் பெற்றது பின்னரும், ஆதியின்மனம் அதனனுபந்த விமோக்ஷ திருஷ்டிபின்னர்ப் புவனப்பெயரிய பிரபஞ்சரசனையெனப் பேசவும் பெறும். சோபனமாயானந்த ரூபமாயிருக்கப்பட்ட நிலைமையேது; எப்பதத்தின் கண்ணே மறித்தும் துக்கசம்பந்த சங்கையே வந்தணுகாதோ அத்தகைய நிலைமையேது. சித்தவிசிராந்தி ஸ்தானத்தை வினவிச் சித்தவிக்ஷேப முதிறுங் துக்கம் பக்கமுமுறுத வுபாயத்தை வினவுவார், காதல் என்றார், தாகப்பிராப்தியைக் காட்டுவார் காதல் என்றார்; இரமிக்கத்தக்க நெய்முதலிய வாசனைகளோடு கூடி விளங்கி விரும்புந் தீரவீரர், சமுசாரப்பெயரிய

பேரழலில் வீழ்ந்தும் சமுசாராக்கினிச் சுவாலைகளால் எவ்வுபாயத்தால் தகிக்கப்படாம லிருக்கின்றார்கள். இரதம் = இரசம் = யிரதம், பாரதம் தகிக்கத்தகாததா மென்பது வெளிப்படை. இது கட்டையாகள்வனு என்னும் உண்மையின்மைப் பக்கமிரண்டாற் சலிக்கப்பட்டும் சலிக்கப்படாமலும் இருக்கின்ற சமுசய ஹேதுவினுலே புத்தியானது துன்புறுவதே போல இது தத்துவமா அல்லது இது அதத்துவமா என்னும் ஐயத்தாற் றுன்புறுகின்றது தோஷதர்சனஜன்னிய வைராக்கிய திடத்தால் இராகாதிக ளெல் லாமகன்றும் ஐயம் நீங்காமையின் மூலாஞ்ஞானங் கெடாமையானே வாசனையைக் கிளப் பும் ஹேது விருத்தலினுலே வெட்டுப்பட்ட விருக்ஷம் மூலங்கெடாமையின் மீண்டுமுளைக் கும் வாயிலாய்த் துன்புறுத்த விரிவதேபோல விரிந்துகொண்டே யிருக்கின்றது; சுயமா கவே சஞ்சலமும் நானுபோக வாசனையால் விஸ்தீர்ணமும்ஆகிய சித்தம் புவனத்துளெங் குந்திரிதலானே திடமாகப்பயின்ற சஞ்சலத்தோடு கூடியிருத்தலின் பலாத்காரமாக நிறுத்தியபோதினும் தத்துவஞானப்பற்றின்மையினுனே சஞ்சலத்தை விடுவதேகிடை யாது; ஆதலின் பரமார்த்தசத்தியமும் ஜன்மமரண ஆயாசமற்றதும், தேகாதி யுபாதி சூனியமும் மயக்கஹேது நீங்கி யிருத்தலின் மயக்கமில்லாததும், இளைப்பாறுமிடமும், அடைந்தவர்க்கென்றுமே சோகத்தை யுண்டாக்காததும் ஆகிய அத்தகைய பதமியாது? சர்வகாரியங்களையும் நன்குதொடக்கினவர்களாகி எம்மனோரைப்போலவே சர்வதிருஷ்ட அதிருஷ்டபலங்களைத் தருமாறுமுடித்து அவற்றிற்கனுகூலமாய இலௌகிக வைதிக விவகார தற்பரர்களாயே நின்றும் நல்லோர்களாகிய ஜனகாதியர் எவ்வாறு உத்தமோத் தமத்தன்மையை யடைந்தன ரென்பதாம் மழைகாலத்தில் பெருங்காட்டில் ஜீவிப்பதற் கொப்பான துர்ஜீவன சமுசாரத்தில் எதனுல் சௌக்கியத்தை யடையலாமென்பார், காதல் என்றார். மூலிகை ரசத்தோடுகூடிய இரசமானது அக்கினியிற்றகிக்கப்படாததே போல அக்கினியைப்போற் றகிக்குஞ் சம்சாரத்தில் விழுந்து கிடந்தபோதினும் எந்த ஞானமுதரச மேய்தலால் எங்ஙன்றகிக்கப்படாம லிருக்கமுடியும் ?

(ச.) ஆதலால் = விசிராந்தி பெருமையால், சித்தவிசிராந்தி ஸ்தானத்தை யனுக் கிரகிக்கவேண்டுமென்பது வினுவின் பொருளாம். வருத்தம் = துக்கம், குற்றம் = விக்ஷே பம், மோகம் = பிரமம், அந்நிலைமையினையே தெளிவுற வினவுவார், காதல், என்றார். அஃ தெத்தகைய இளைப்பாறுமிடமென்றால், காதல் செய்யின்பமிக்கோர் = பிரஹ்மானந்தா னுபவ ரசத்தை ஆசுவாதித்து மகிழும் சத்துக்கள், விடயமாங்கனலில் = தாபத்திரய நிலய மான சமுசாரத்தில் வீழ்ந்தும் தாபமுறார்கள், அக்கினியில் வீழ்ந்த பாதரசமானது தாப முறாது ஓடிப்போவதுபோலவாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமுசாரத்தில் நிர்வியாபாரமாக அவஸ்தானமே தாகவுபாய மென்கின்றார்: விவகாரந் துக்கமாயின் விட்டுவிடலாமே யெனின் கூறுகின்றார்:—வசன மென.

(ச - அ - கை.) துக்கஹேதுவான விவகாரத்தைவிட்டுச் சுகமாக விருவெனின், கூறுகின்றார்:—வசனமென.

வசனமாந் தொழிலே யன்றி வருபவந் தான்வே றில்லை
யசைதரு புனலை யன்றி யளக்கர்வே றிலாததே போ
னசைதரு பெரியோ ரெங்ஙன வையுறு துயரந் தீர்ந்தா
ரிசையநீ யுணர்ந்த தந்த நிலையினை யெனக்குச் சொல்வாய். (119)

(ப - ரை.) வசனமாந்தொழிலேயன்றி = பற்பலவகையாகச் சொல்லப்படுந் தொழில் களைவிட்டு, வருபவந்தான் வேறில்லை = வராநின்றவிவகாரமானது அயலாகவில்லதாம்,

அசைதருபுனலையன்றி யளக்கர் வேறிலாததேபோல் = சலியாநின்ற சலத்தைவிடுத்துச் சலதியயல் இல்லாததேபோலவாம், நசையுறுபெரியோர் = யாவரும் விரும்பத்தக்க சாதுக்கள், எங்ஙன் நவையுறு துயர்தீர்ந்தார்=எவ்விதத்தினால் தீர்க்கமுடியாத பெருந் துயரத்தை முற்றினும் அகற்றினர், இசைய=மோமேகிச்சுகம் பொருந்துறுமாறு, நீ யுணர்ந்ததந்த = தேவரீர் அறிந்த அவ்விசிராந்திபதத்தை, எனக்குச் சொல்வாய்=அடியேற்கருள்வாய். (எ-று.) (119)

(ஸ்ரீ - வீர.) அம்புப்பரிசமின்றிச் சமுத்திரமத்தியில் ஸ்திதி எங்ஙனஞ் சம்பவியாதோ அங்ஙனமென்பதாம். கடலிலுண்டாகிய மீன்முதலியவற்றிற்கு நீரில்லாமல் நிலைபேறில்லாததேபோல, இவ்வுலகத்திலிருப்பவர்க்கும் விவகாரத்தொழிற் செய்யாமலிருக்கமுடியாது; கெட்ட விவகாரத்திற்றானே துயரம் உண்டாகின்றது நற்றொழிற் செய்யினோ அவ்வாறில்லை யல்லவாவெனின்? தாகமற்றிருக்கும் அக்கினிச் சுவாலையானது இல்லாததேபோல ஈண்டு இராகத்வேஷமற்றதும் சுகதுக்கநீங்கியதும் ஆகியநற்றொழிற் கிடையாது. பாகியத்தில் நல்லவிவகார மிருந்தாலிருக்குக; மனதினுடைய சஞ்சலமானது மகாதுக்கமாயிருத்தலால், அதனுடைய சிகிச்சையை யருளவேண்டும். விவகாரத்தோடு கூடியிருந்தபோதினும் கூடாமலிருந்தபோதினும் எந்தயுக்தியினால் எனக்குத் துயரம் வரமாட்டாதோ அந்த உத்தமமான யுக்தியைக்கூறியருளவேண்டும். மேன்மையும் பவித்திரமுமாய மனமானது எதனால் இளைப்பாறுதலையடையுமோ, அந்த யுக்தியால் மோகநீக்கமானது எவ்வுத்தமசித்தமுடையவனால் முன்னெவ்வகையாற் செய்யப்பட்டது அதனாலெதனை யடைந்தான் இவ்வுண்மையைத் தாங்களறிந்தபிரகார முபதேசித்தருளவேண்டும்; எதனாற் சாதுக்கள் துக்கமே சிறிதுமில்லாம லுலவுகின்றார்களோ அதனைத் திருவருள் செய்யவேண்டும்.

(ச.) சலமயஞ் சமுத்திரமாவதேபோல விவகாரமயஞ் சம்சாரமாமென்பது கருத்து. எனக்கு மோக நிவிருத்தியாகு நிமித்தஞ் சொல்வாய்; மோகநிவிர்த்திக்குந்தன்மையைத் தேவரீர் உணர்ந்தபடி உபதேசிக்கவேண்டுமென விரும்பினதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்தகைய யுக்தியானவை கிடையாவிடின், எனது தேகத்தியாக பரியந்தம் பிராயோபவேசனத்தையே அதாவது பிராணனீங்கும்வரை யுண்ணுமற்றற்பாசனத்திற் சயனித்தலையே, செய்வேனன்றி ஜீவனவிவகாராதிகளைச் செய்யமாட்டேன் என்கின்றார்:—இந்நிலையென.

(ச - அ - கை.) உபதேசியாவிடின் அதனாலுறுந் தோடம் இவையெனத் தெரிவித்துத் தேவரீர் எப்படியு முபதேசிக்கவேண்டுமென வாஞ்சித்தல்:—இந்நிலையென.

இந்நிலை யிலதா வேனு முளதியம் பாரா வேனு
மந்நிலையைய மின்றி யகங்கர மின்றி யானே
துன்னுற மாட்டேன் செய்வதே தெனிற் சோறும் வேண்டே
னன்னய நீரும்வேண்டே னலம்பெறு துகிலும் வேண்டேன்.

முழுகுத றானமாதி நியமங்கண் முழுதுஞ் செய்யேன்
விழுமிய கருமஞ் சம்பத்தா பத்தின் மேவே னியாக்கை
நழுவுவ தன்றி யொன்று நயக்கிலன் மவுனி யாகி
யெழுதுமோ வியம்போற் காமங் கோபம் பற்றின்றி நிற்பேன். (120. 121.)

(ப - ரை.) இந்நிலையிலதாவேனும் = இத்தகைய யுக்தியானது இல்லாமற்போனாலும், உளதியம்பாராவேனும் = இருந்தும் உபதேசிக்கமாட்டீரேனும், அந்நிலை = உத்த

மோக்ஷமமாகிய அந்தவிசிராந்தி பதத்தை ஐயமின்றி = சமுசயமில்லாமல், அகங்கர மின்றி=நிரகங்காரமாய், யானே = சுயமாகவே, துன்னுறமாட்டேன் = அண்டமாட்டேன், செய்வதேதெனில்=மாட்டாயேல் என்செய்வாயெனின், சோறும்வேண்டேன்= அன்னத்தையுமயிலேன், நல்நயநீரும் வேண்டேன் = குளிர்ச்சியும் வாசனையும் மிகுந்த நீரையும் பருகேன், நலம்பெறுதுகிலும் வேண்டேன் = மிகவும் அழகு பொருந்திய பீதாம்பராதிகளு மணியேன்; முழுகுதல்=ஸ்நானம், தானம் = தன்னதைப் பிறரதாக்கும் தொழில், ஆதி = முதலிய, நியமங்கண்முழுதும் = பிறநியமங்களாய்ச் செய்யவேண்டிய யாவற்றையுமே, செய்யேன் = இயற்றமாட்டேன், விழுமியகருமம் = பெருங்காரியங்களிலும், சம்பத்து = சம்பத்துகளிலும், ஆபத்தில் = ஆபத்துகளிலும், மேவேன் = பொருந்தமாட்டேன், இயாக்கை நழுவுவதன்றி=தேகத்தை விட்டொழிப்பதே யல்லாமல், ஒன்றும் நயக்கிலன் = மற்றொன்றையும் விரும்புகில்லேன், மவுனியாகி = மவுனத்தையே யுடையவனாய், எழுதுமோவியம்போல் = பித்தியிலமைத்த சித்திரம்போல, காமம் கோபம் பற்றுஇன்றி நிற்பேன்=இச்சை சினம் எனதாக்கல் இல்லாமலிருப்பேன்.

(ஸ்ரீ - வீர.) மேற்கூறிய யுக்தியாதொன்று மிராவிடின், அத்தகைய திருந்தபோதினும் வெளிப்படையாக எனக்குபதேசியா திருப்பின், அவ்வுத்தமோத்தமமாகிய விசிராந்தி பதத்தை யானே விசாரித்தேனும் அடையாமற் போவேனாயின், பின் யான் சருவஇச்சைகளையும் அகங்காரத்தையு மொழித்து உண்ணேன்; நீருங்குடியேன், வத்திரமுந்தரியேன், ஸ்நானதான அசனமுதலிய எந்தத்தொழிலையுஞ் செய்யேன், எக்காரியங்களிலுமிரேன், சம்பத்து ஆபத்துத் தசைகளிலுமிரேன், தேகம்விடுவதை யொன்றையன்றி யொன்றையும் வாஞ்சிக்கவே மாட்டேன். கேவலம் யாதொரு ஆசங்கையுமற்றவனாகி மமதைமற்சராதிகளற்றவனாய்ச் சித்திரக்கிரியைகளாற் பித்தியிலர்ப்பிக்கப்பெற்ற ஓவியம்போல வாக்குமுதலிய சர்வவிவகாரங்களையும் விட்டிருப்பேன், பின்முறையே மூச்சுவிடுதல் வாங்குதல் சத்தாதி ஞானங்களை விடுத்து, அவயவச் சேர்க்கை வடிவமாயிராநின்ற இவ்வநர்த்தமாகிய தேகத்தைவிட்டொழிப்பேன், யானிதனுடையவனு மல்லேன் என்னுடையது மிஃதல்ல, அன்னியரும் எனக்கில்லை யாதலின், தைலந்தீர்ந்த தீபமேபோலச் சாந்தியை யடைவேன்; யாவற்றையுமே பரித்தியாகித்து இக்களேவரத்தை விட்டொழிப்பேன்.

(ச.) இந்நிலை=சித்தலயவுபாயம், இலதாவேனும், உளது=உண்டாயினும், இயம்பாரேனும் = எனக்கொருவரு முள்ளபடி யுபதேசியாராயினும், அந்நிலை = அவ்வுத்தமமான விசிராந்தியை. (120, 121.)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீவான்மீகிகூறல்:—

எனவுரைத்த மலசீதமதி யெனவினி யோனின் சொல்
வினவுநல் விவேகந் தன்னால் விரிந்தலர் மனத்தி ராமன்
மனமகிழ் முனிவர் முன்னர் வாய்மொழி யமைந்து நின்றான்
கனமுகின் முன்னர்க்கே காரவந்த விர்கலாபி போன்றே. (122)

(ப - ரை.) எனவுரைத்து=இவ்வண்ணமியம்பி, அமலசீதமதியென வினியோன்= அமல சீதகராபிராமராகி இன்சொல் = இனிமையான மொழிவிருந்திட்டு வினவுநல் விவேகந்தன்னால் = அதிவிசாரத்தோடுகூடிய மகத்தர விவேக மிகுதியால், விரிந்தலர் மனத்திராமன் = விகாசமாய் மலர்ந்தமனத்தையுடைய ஸ்ரீஇராகவர், மனமகிழ் முனிவர் முன்னர் = இனிமொழி விருந்தால் மனமகிழ் முனிநாதர் சந்நிதியில், வாய்மொழி யமைந்துநின்றான் = தூஷ்ணீ பூதமாகவிருந்தார், எஃதொத்ததெனின், கனமுகின் முன்

னர் = சப்திக்கும் பெருமேகமண்டலத்தின் சந்நிதியில்கேகாரவந்தவிர் = கேகாரவமென்னும் கூவுதல் நிவிர்த்தியான, கலாபிபோன்று = நீலகண்டப் பறவைபோலுமிருந்தது. (எ-று.) (122)

(ஸ்ரீ - வீர.) கேகாரம் = மயூரத்தொனி. நீலகண்டம் மயூரம், ஹேபரத்வாஜ! இவ்வண்ணம் மகத்தினும் மகத்தாகிய விசாரத்தானே மலர்ந்த மனத்தையுடையவரும் அமலசீதள அமுதகிரண மதிபோன் றழகுவாய்ந்தவருமாகிய ஸ்ரீஇரகுநந்தனர் இயம்பிக் கேகாரவத்தைச் செய்துகொண்டிருந்த மயூரமானது மேகங்களின் முன்பாகச் சிரமவயத்தால் மவுனமடைந்திருந்ததேபோலத் தேசிகோத்தமர்களாகிய ஸ்ரீவசிஷ்டமுனிவர் முதலிய பெரியோர்கள் சந்நிதியில் மவுனமாக இருந்தனர்.

வைராக்கியப் பிரகரணம்

முற்றிற்று.



# வைராக்கியப் பிரகரணத்தில் சுகர் கதை.

———(*)———

(ஸ்ரீ - வீர - அ - கை.) சென்ற கிரந்த சந்தர்ப்பத்தால் நித்தியா நித்தியவஸ்து விவேகத்தினின்றும் வைராக்கியம் பிரதிபாதிக்கப்பட்டது, அது வித்வத்ஜனமனோகரமென்பதும், ஆகாசவாசிகட்கும் துர்லபமென்பதும், ஸ்ரீராமரது துதியின் பொருட்டுக் கூறப்படுகின்றது:—ஸ்ரீ இராமரது திருமொழிகளை யிருசெவி குளிரக்கேட்ட மானவர் வானவர்களுடைய அளவுகடந்த ஆச்சரியம் அறையப் பெறுகின்றது:—மைம்மலமென. தமது விவேக நல்விசார மூலமா யிராநின்ற இந்த ஸ்ரீ இராமரது வாக்கியா மிருதங்கள் தாமாக விசாரஞ்செய்யும் ஆற்றலில்லாத முமுக்ஷுக்கட்கு உபதேசரூபமா யிருத்தலின், ஆதரவப் யாசங்களால் உயர்வாகக் கவரத்தக்கதெனக் குறிப்பிக்கும் பொருட்டுப் புகழ்பவராய் அவர்மேலினும் வாதராயண ரமைதலின், அதாவது, மனுடர்கட்கும் மேலாய தேவதைகட்கும் பிரஹ்மவித்தையின் கண்ணே அதிகார முளதென வாதராயண ஆசாரியர் அங்கீகரித்தலின், என்னும் நியாய சித்தமாய தேவதைகட்கும் கூறப்படும் பிரஹ்மவித்தை யதிகாரத்தைத் தரிசிப்பிக்கும் பொருட்டு அவர்கள் மகிழ்ச்சியை ஸ்ரீவான்மீகி பகவான் கூறத்தொடங்கல்:—மைம்மலமென.

(ச.) அத்தருணத்தில் திவ்யாதிவ்ய சபையிரண்டும் சந்தோஷிக்கப்பட்ட ஸ்ரீஇரகுநந்தனனைக் குறித்து மிக வுற்சாகித்தவராகி யுற்சாகப் படுத்துவான் ஸ்ரீ விசுவாமித்திரர் விசித்திரமான சுகர் விருத்தாந்தத்தை இனிது கூறத்தொடங்குகின்றார்:—மைமலமென.

மைம்மல மாமோகத்தை மாய்த்திடும் புதுமைத் தான
செம்மல்வா சகங்கள் கேட்டுத் திருந்தவை யிருந்தோ ரெல்லா
மிம்மொழி கேட்பபோல வெழப்புள குவகை மிக்கா
ரிம்மல்சேர் சித்தர் சேனை விண்மிசைக் களித்த வன்றே. (1)

(ப - ரை.) மைம்மலமா மோகத்தை = அஞ்ஞான மாகிய மலத்தினாலே யுண்டாகிச் சர்வ சோகங்களையும் தருவதிற் பெரியதாகிய மோகத்தை, மாய்த்திடும் புதுமைத் தான = நிவிருத்தி செய்யும் அற்புத மகிமைவாய்ந்த, செம்மல் வாசகங்கள் = செந்தா

மரை யிதழ்போலும் திருநேத்திரங்களை யுடைய ஸ்ரீ இராகவரது திருவாக்கியங்களை, திருந்தவை யிருந்தோ ரெல்லாங் கேட்டு = கலைகணிறைந்து மதிதெளிந்த சபையின் கண்ணிருந்த விவேகிக ளெல்லாருமே சிரவணித்து, இம்மொழி கேட்பபோல = ஸ்ரீ இராகவரது இனிய மொழிகளைச் சிரவணிக்க வருவனபோல, எழப்புளகுவகை மிக்கார் = எழுந்து வராநின்ற ரோமங்களால் வத்திரந்துளைபடச் சிலிர்த்து உற்புல்ல லோசனராய் மிகமகிழ்வுற்றனர், விஸ்மயமுற்றனர், விம்மல் சேர்சித்தர் சேனை = மிகவும் அற்புதமுற்றுப் பூரித்த சித்தர் கூட்டம், விண்மிசை = ஆகாயவீதியில், களித்தன = சந்தோடத்தை யந்தமில்லா தடைந்தன. (எ-று.) (1)

(ஸ்ரீ - வீர.) தேகருகங்கள் எழுந்து நின்றதோற்றம் சிரவணிக்க வந்ததுபோ லிருந்தது. இவ்வாறு மனோமோகத்தை நீக்கத்தக்கதாய திருமொழிகளைத் தாமரையிதழ்போலும் விழிகளையுடைய இராஜகுமாரராகிய ஸ்ரீ இராமர் கூறியபோது, அச்சபையின் கண்ணிருந்த யாவரும், விஸ்மயத்தால் விரிந்த விழிகளையுடைய வராகவும், ஸ்ரீ இராமபிரானது வாக்கியாமிருதத்தைக் கேட்கவேண்டு மென்று ஜாட்டியத்தைக் கடத்தியெழுந்து வத்திரத்தைத் துளைத்து வெளியே யெட்டிப்பார்க்கும் மயிர்க்கூச் செறிதலையுடையவராகலின், பீறல் ஆடையை யுடையவராகவும், வைராக்கிய வாசனையினாலே சமஸ்தசமுசாரகாரணங்களாய இராகத் வேஷாதி வாசனைகளையும் நீக்கினவர்களாகவும், ஒரு முகூர்த்த பரியந்தம் அமிருதசாகர அலையால் அலைவிக்கப் பட்டவர்கள்போலவும் ஆனார்கள் ; சித்திரத் தமைத்த பதுமையேபோலக் கேட்குஞ் சமர்த்துடையோர், ஆனந்தத்தைக் குறிப்பிடுவதாகப் பூரித்து ஸ்ரீ இராமபத்திருடைய திருமொழியை யினிமையாகக் கேட்டனர். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யாவரானும் ஸ்ரீஇராமருடைய விசித்திரப் பொருணிறைந்த மகா உதாரமான திருவாக்கானது கேட்கப்பட்ட பின்னர். ஆகாயத்தி லிருந்து புட்ப மாரியுண்டாயிற் றென்றும், ஸ்ரீ இராகவர் திருவாக்கியங்கள் புகழப்பட்டன வென்றுங் கூறுகின்றார்:—நன்றென.

நன்றுநன் றென்னுஞ் சொல்லு நன்மலர் மழையுங் கூடி
யொன்றியோர் கடிகை பாதி யிழிந்தபின் னூழிகாலம்
வன்றுய ருழன்று சிந்தை மயங்கிய யாங்க ளெல்லா
மின்றி ராகவன்சொ லென்னு மின்னமு தமையப் பெற்றோம். (2)

(ப - ளா.) நன்று நன்றென்னுஞ் சொல்லும் = நன்கு நன்கு என்றுற்சாகப்படுத்தும் சாதுவாத வாணியும், நன்மலர் மழையுங்கூடி யொன்றி = நல்ல வாசனைபொருந்திய புஷ்பவிருஷ்டியும் ஒன்றுசேர்ந்து, ஓர் கடிகைபாதி யிழிந்தபின் = கான்முகூர்த்தம் பெய்தபின்னர், ஊழிகாலம் = கற்பபரியந்தம், வன்றுயருழன்று = வலியதுயரங்களை மிகமிகவு மடைந்து, சிந்தைமயங்கிய = மனமயலுற்ற, யாங்கள் எல்லாம் = சித்தர் கூட்டங்களாகிய யாங்கண்யாவருமே, இன்று = இப்போது, இராகவன் சொலென்னும் இன்னமுது அமையப்பெற்றோம் = ஸ்ரீ இராகவரியம்பிய சொற்களாகிய அபூர்வ அற்புத சுருதிரசாயனவினிய அமுதத்தைச் செவிகளில் நிறையப்பொருந்தப்பெறும் பெரும்பாக்கியத்தை யடைந்துய்ந்தோம். (2)

(ஸ்ரீ-வீர.) இரகுகுலமாகிய ஆகாயத்திற்குப் பூரணசந்திரரும், பூர்ணசந்திரர்போல மிகச் சுந்திரரும், தாமரையிதழ்போன்ற நேத்திரத்தை யுடையவரும் ஆகிய ஸ்ரீ இராமர் மவுனமாயிருந்தபோது, நன்றுநன்று என்னுஞ்சொல்லோடு முமுக்ஷுக்களாகிய சித்தரி

தேவகணங்களியாவரும் இறைத்த மலர்மாரியானது விண்ணினின்றும் மேற்கட்டிபோல விழுந்துகொண்டே யிருந்தது. அம்மலர்மாரி வண்டினங்கள் ரீங்காரம் பாடப்பெற்றும் மாதுர்யம் மணம் அழகு முதலனவற்றும் யாவரையும் பரவசப்படுத்தியும் நக்ஷத்திரகணங்களுதிரும் அலங்காரத்தைச் செய்துகொண்டும் மற்றும் பலவிதமாயுமிருந்தது. அக்குசும விருஷ்டி என்றுங் கண்டறியப் பெறுததாய் யாவருக்கும் ஆச்சரியத்தை விளைவிப்பதாய் அற்புதமாக அரைநாழிகைவரை பெய்தது, அது அச்சபையையும் அதன்கண்ணிருந்தவரையும் மந்தாரமலர்களால் நிறைத்துச் சாந்தியானபின் அச்சபையிலிருந்த யாவரும் இச் சித்தகணங்களின் இவ்வாக்கியங்களைக் கேட்டனர்:—சித்தசேனைகளுள்ளே சுவர்க்கத்தினுடைய எல்லா இடங்களிலும் கற்பமுடியும்வரை சுற்றிக்கொண்டுதிரியும் நம்மனோரால் அபூர்வமாகிய இச்செவிக்கமுதான வேதசாரம் கேட்கப்பட்டது. இரகுகுலதிலகாகிய இந்த ஸ்ரீ இராமரால் யாதுதாரமாக வைராக்கியத்தோடுங் கூறப்பட்டதோ அது பிருகற்பதிக்கும் விளங்காத பொருளுடையதேயாம். மதிமான்கட்கும் மகத்தாகிய மகிழ்வை மலர்விப்பதும் ஸ்ரீஇராமரது முகாம்புஜத்தினின்றும் எழுந்ததும் ஆகிய இத்திருமொழியை யின்று கேட்டோம் ஆச்சரியம்! ஆச்சரியம்!! நாம் என்னமகத்தாய புண்ணியஞ் செய்தோமோ தெரியவில்லை அந்தோ! இத்தகைய வாக்கியத்தைக் கேளாத செனமம் என்ன செனமம் வீணே. (2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வீதராகஉக்தி சாரார்த்த விடயம் சுரோதாக்களிடத்தில் உடனே பயன்படும் என்னும் அபிப்ராயத்தாலுரைக்கின்றார்:—திருந்தியவென.

திருந்திய விவன்சொ லாலே தெளிவுறு சிந்தை பெற்றோம்
பெருந்தகை முனிவர் சொல்லும் பொருளினிப் பெறுது மென்னுப்
பொருந்திய விண்ணி னின்று பூதலத் திழித லோடு
மிருந்தபே ரவையோ ரெல்லா மெழுந்தெதிர் கொள்வ தானார். (3)

(ப - ரை.) திருந்தியவிவன் சொல்லாலே = அதிவிசார திருஷ்டியோடுரைத்த உபசம அமிருத சுந்தர வாக்கியங்களாலே, தெளிவுறு சிந்தைபெற்றோம் = சர்வவிடயங்களுஞ் சுகமயங்களன்றென்றும் சொரூபமே நித்தியமென்றும் தோற்றும்படியான அதிநிர்மல மனத்தை யடைந்தோம், பெருந்தகை முனிவர்சொல்லும் = பரமமகத்துவத்தை யடைந்துள்ள மகரிஷிகளுபதேசிக்கும், பொருளினிப் பெறுதும் = நிர்ணயவத்துவை யிப்போது கேட்டுப் பரமானந்தத்தை யடைவோம், என்னு = என்றுகூறி, பொருந்திய விண்ணினின்று = தாங்களிருந்த ஆகாயவீதியிலிருந்து, பூதலத்திழிதலோடும் = பூமண்டலத்தேயிலங்குந் தசரதரது புண்ணியசபையை நோக்கி யிறங்கிவரவும், இருந்தபேரவையோரெல்லாம் = அவ்வுயர்ந்த அவையின்கண்ணே யிருந்தபெரியோரியாவரும், எழுந்தெதிர் கொள்வதானார் = வந்தவர்கட்கு மரியாதைசெய்யும் பொருட்டு எதிர்கொண்டு வணங்கினர்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ இராகவர் வாக்கியம், பரமபுருடார்த்தத்தை யடைவித்துப் பரமவுபசாந்தி யமிருதத்தைப் பயப்பதாம். ஞானர்த்திகளான் நன்கு நண்ணத்தக்கதும், சத்துக்களாலினிது சார்ந்து கவரத்தக்கதுமா மாதலாற் சர்வஅனுகூலமாயிருத்தலின் ஆண்டிருக்கத்தக்கதெனப் பிரதிபாதிக்கப்பட்ட பொருளாம். ஸ்ரீ இராகவர், தேரின் கொடிபோல இரகுவம்சத்தின் அலங்காரத்தால் இரகுகேதுவெனப்படுவர். ஜாதிகுல ஆசாரதரும ஞானமுதலியவற்றானே யடைந்திருக்கும் மிகமேன்மைக்குப் பெரும்பயனை நல்கிக்காக்கு மிலக்கணம் வாய்ந்ததும், மிகயோக்கியமானதும், உபசாந்தியமிருதம் பொழியுமழகு வாய்ந்ததும் ஆகிய ஸ்ரீ இராமர் ஆதரவோடுகூடி யுரைத்த இத்திருவாக்கால் விரைவில்

யாங்கள் சுவர்க்காதி சுகங்கள்யாவும் சாரமற்றனவென அறிந்தோம். சித்தர்களானே செய்யப்பட்ட ஸ்ரீ இராம வாக்கியாதியின் புகழையே மகிமைப்படுத்திக்கொண்டு வினவியதற்கு நிர்ணயமாகும் உத்தரத்தைக்கேட்டும் அவாவுடையராய அவர்களது சபைப்பிரவேச முதலியவற்றை வருணிப்பார், பெருந்தகையென்றார். இரகுவம் சத்தைப் பிரகாசிப்பிக்கும் கேதுவாகிய ஸ்ரீ இராமராற் கூறப்பட்ட அதிபவித்திர மாகிய இவ்வாக்கினதுத்தரமாக மகரிஷிகளாற் கூறப்படும் தக்க நிர்ணயம் கேட்கத்தக்க தாதலின் நாரதர் வியாசர் புளகர்முதலிய முனிபுங்கவர்களே சர்வமகரிஷிகளே! விரைவில் விக்கினமின்றிக் கேட்பான் வாருங்கள் "சிறந்தவைதடைகள் சொறிந்தனமிகவே" என்பதால் காலதாமதமாக்காதீர்கள்; என அச்சித்தர்கள் கூறக்கேட்ட விண்ணை வாசஸ்தானமாகவுடைய அவ்விமானங்களிலிருக்கும் திவ்யமுனிக்கூட்டமியாவுமே விஸ்தீர்ணமாய் அச்சபையின்கண்ணே ஸ்ரீ இராமர் முதலியோரிருந்த இடத்திலிறங்கினர். அச்சித்தர் சேனையானது நாரதர் வியாசர் பிருகு அங்கிரர் புலஸ்தியர் சியவனர் உத்தாலகர் உசீரர் சரலோபர் முதலிய முனிநாயகர்களானே யலங்கரிக்கப்பட்டு ஆகாயத்தினின்றும் பூமியிலிறங்கும்போது மகாமுனிவர்கணிறைந்த தசரதருடைய பெருஞ்சபையானது எழுந்தது, விண்ணவரும் மண்ணவரும் கலந்தவராய்ப் பரஸ்பரம் கலந்த தேககாந்திகளானே பத்துத் திசையையும் ஒளிர்வித்து விளங்கினர். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விண்ணினின்றும் வந்துபுகுந்த விண்ணவர்க்கு மண்ணவர் எம்முறையில் மரியாதை செய்தனரென்னும் அவாநிகழக் கூறுகின்றார்:—வந்தென.

வந்துறு சித்தர்க் கெல்லாம் வசிட்டனுங் காதி சேயு
முந்துபூ சனைகள் செய்தார் முனிவருக் கவருஞ் செய்தார்
அந்தநல் லவையின் வேந்து மருச்சனை யவர்க்குச் செய்தா
னந்துமன் னவர்க்கு மன்னோர் நன்சொலாற் பூசை செய்தார். (4)

(ப - ரை.) வந்துறு சித்தர்க்கெல்லாம் = ஆகாயத்தினின்று மிறங்கிவந்த சித்த சேனைகள்எல்லாம், வசிட்டனும் காதிசேயும் ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகளிருவரும், முந்து பூசனைகள் செய்தார்=முந்திக் கணத்திற் பூசைசெய்தனர், முனிவருக்கு= ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திரமகரிஷிகட்கு, அவரும் அச்சித்தசேனைகளும், செய்தார் = பூசையாதரவோடுஞ் செய்தனர்கள், அந்த நல்லவையின் வேந்தும் = அத்திவ்யசபைக்குக் கர்த்தாவாக விருந்த தசரதபூபதியும், அருச்சனையவர்க்குச் செய்தான்=சர்வாதரத்தோடும் சித்தர்க்கு அருச்சனை செய்தனன், நந்துமன்னவர்க்கும் = சர்வஐசுவரியங்களும் விருத்தியாகப்பெற்ற தசரதமன்னவர்க்கும் அன்னோர் = அச்சித்தர், நன்சொலால் பூசைசெய்தார் = குசலப்பிரசினவார்த்தையால் பூசைசெய்தனர்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகள் வந்திறங்கிய எல்லா விண்ணவர் கூட்டத்தையும் முறையே அருக்கியங்களானும் பாத்தியங்களானும் நன்மொழிகளானும் பூசித்தனர்; அந்த விண்ணவர் மகாகணங்களும் ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திரரை யாதரவோடும் அருக்கியங்களானும் பாத்தியங்களானும் இன்மொழிகளானும் பூசித்தனர்; எல்லா ஆதரவோடுஞ் சித்தர் கூட்டங்களைப் பூபதியானவர் பூசைசெய்தனர், சித்தர் கூட்டமும் பூபதியைக் குசலம்வினவும் இன்மொழிகளாலும் அக்காலத்துக் கேற்ற கதைகளாலும் மகிழ்வித்தனர்.

(ச.) நந்தமன்னவர் = இன்பமயமான அரசர், நன்சொல் = குசலப்பிரசனத்தோடு கூடிய தத்கால வுசிதவார்த்தை. (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வானவரும் மானவரும் பிரீதிக்குசிதமான தானமானுதி முயற்சிகளானே பரஸ்பரம் பூசித்துக்கொண்டு ஆசனங்களிலுட்கார்ந்ததன்பின்னர் நடந்ததைக் கூறுகின்றார்:—தொழுதென.

தொழுதுமுன் னிருந்த செங்கட் டோன்றற்கு முபசாரங்கள்
பழுதில்பூ மழையானல்ல மொழிகளாற் பரிந்து செய்து
விழுமிய குணத்தான் மிக்கோன் விரத்தியாய் விளம்புஞ் சொற்கள்
முழுதுநல் லுதார மாகி முடிவிலற் புதமா மென்றார். (5)

(ப - ரை.) தொழுது முன்னிருந்த = நமஸ்கரித்து வணக்கத்துடன் எதிரில் நின்றுகொண்டிருந்த, செங்கட்டோன்றற்கும் = செந்தாமரை மலரினிதழ்போலும் திருநேத்திரங்களையுடைய ஸ்ரீ இராகவருக்கும், உபசாரங்கள் = பூசைகள், பழுதில்பூமழையால் = குற்றமற்ற புஷ்பவர்ஷத்தாலும், நல்ல மொழிகளால் = சாதுவாதத்தாலும், புகழ்தல் வாயிலாலும், பரிந்துசெய்து = மிகவும் அன்புடன் செய்து. விழுமியகுணத்தான் மிக்கோன் = பெருமைவாய்ந்த அநந்த கல்யாண குணங்கட் காதரமாகி மேன்மைமிக்க விக்குமரன், விரத்தியாய் விளம்புஞ் சொற்கள் = வைராக்கியரசம் நிறைந்தனவாய்க் கூறும் வாக்கியங்கள், முழுது நல்லுதாரமாகி = அத்தியந்தம் பரம உதாரமாய், முடிவில் அற்புதமாம் என்றார் = அளவில்லாத விஸ்மயத்தை யளிப்பனவாம் என்று கூறினார்கள்-எ-று.

(ஸ்ரீ - வீர.) முன்பாக நமஸ்கரித்து நின்றுகொண்டிருக்கும் ஸ்ரீஇராமபிரானை, நாற்புறங்களிலும், தக்க கதாலாபமாகிய இன்மொழிகளாலும், புட்பமாரியினாலும், புகழ்தலினாலும், அவர்யாவரும் பூசித்தனர். பின்னுஞ்ஞை பெற்று ஆண்டெழுந்தருளி யிருந்த இருடிகள் மத்தியில் இராஜ்ய இலக்ஷ்மி வீற்றிருக்கும் ஸ்ரீ இராகவர் வீற்றிருந்தனர். விநயத்தால் வணக்க வதனத்தோடுற்ற ஸ்ரீ இராமச்சந்திரரைப் பார்த்து ஆசிரியரிடத்தில் விதிப்படி அங்கசகித வேதாத்தியயனஞ் செய்த அந்நாரதாதி யிருடியார் இவ்வசனத்தை யியம்புவாராயினர்:—அகோ ஆச்சரியம்! இக்குமரனால், பதினாறு கல்யாண குணங்களோடு கூடியிலங்கும், பரம உதாரமாகியழகுவாய்ந்து வைராக்கியரசத்தை வயிற்றிற்றரித்த வாக்கியமானது வழங்கப்பட்டது; விசாரித்து இவ்வாறேயென விவத்தை செய்யப்பட்டுக் கூறத்தக்கபொருளோடு கூடியதும், கற்பனைமாத்திரையானே விவத்தை செய்யப்பட்ட பொருளோடு கூடாமல் பதார்த்தவயோதத்தோடு கூடியதும் அதனானே வித்வத்சபைக்குத் தக்கதும் வியக்தமாய வர்ணங்களோடு கூடியதும், மேன்மைதங்கிய அநேகங்கருத்துக் கடைங்கியதும், இருதயத்திற் கானந்தத்தைச் செய்வதும், பூச்சியர் கட்குரித்தானதும் சித்தசஞ்சலத்தா லுண்டாய தோடமற்றதும், பொருளால் வெளியானதும், இலக்கணத்தாற் பரிசோதிக்கப் பட்ட பதங்களோடு கூடிப் பிரகாசிப்பதும், இதமானதும், வர்ணலோப முதலிய குற்றங்களற்றதும், ஆசையழிதலாலுண்டாய மகிழ்ச்சியோடு கூடியதும் ஆகிய ஸ்ரீ இராகவராற் கூறப்பட்ட இம்மொழியானது யாருக்குத்தான் விஸ்மயத்தை யுண்டாக்கமாட்டாது?

(ச.) முனிகள் மொழிதல் (விழு) உதாரம் = கம்பீரம். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தீயசமுசாரத்திற் யசுகம் வருவது அதி துர்லபமாம் என்பதை ஸ்ரீ இராமரேயவரது யாவரே யுணர்ந்தாரெனல்:—ஈசனேயென.

ஈசனே படைத்த தாகி யெண்ணிறீ முயற்சி மிக்க
மாசுறு மாயை தன்னில் வருசுக மரிது சாலத்
தேசுறு சதுரச் சிந்தைச் செல்வனுக் குணரற் பாற்றேற்
பேசுறு நாங்க ளெல்லாம் பேதைய ரென்னச் சொன்னார். (6)

(ப - ரை.) ஈசனே படைத்ததாகி = தைவநிர்மாண நிர்மிதமாகி, எண்ணில் தீமுயற்சி மிக்க = அளவில்லாத கொடிய விவகாரங்கள் மிகுந்து நிறைந்த, மாசுறு மாயை தன்னில் = குற்றம் பொருந்திய தக்க சம்சாரத்தின் கண், வருசுகமரிது சால = வராநின்ற சாரமாயசுகம் அத்தியந்தம் துர்லபமாக விருக்கின்றது, சாலத் தேசுறு சதுரச்சிந்தை = அத்தியந்தம் ஒளிமிகுந்து சகலலோக சமற்காரம் நிறைந்து விளங்குஞ் சித்தத்தோடு கூடிய, செல்வனுக்கு = ஸ்ரீ இராகவருக்கு, உணரற்பாற்போல் = உபதேசியேமா யின், பேசுறு நாங்களெல்லாம் = ஹே துவிஜேந்திரர்களே ! பரஸ்பரம் சம்பாஷித்துக் கொள்ளும் நாம் யாவருமே, பேதைய ரென்னச் சொன்னர் = வெளியாகவே யதமதியுடைய ராவோம் என்று கூறினர்கள். (எ-று.) (6)

(ஸ்ரீ - வீர.) இச் சமுசாரமானது அதி விஸ்தாரமா யோங்கிக் கெடுக்கமுடியாத தாய்த் தடையாதொன்று மின்றித் துர்வடிவமாய் விருத்தியாகி, தைவநிர்மாண நிர்மிதமாய் அதாவது அநிர்வாச் சியமாகி, விளங்குகின்றது, இதன் கண்ணின்பம் எளிதினிற் கிடையா. யாதொரு தடையுமற்றுக் கெட்ட வடிவையுடைய தெய்வமென்னும் முற்கருமத்தை யனுசரித்த விதாதாவின் சிருஷ்டியா லுண்டாகிய இச்சாம்பற் சமுசாரத்திற் சாரமாகிய விவேகத்தா லுண்டாம் ஆன்மலாபமானது ஹேது விஜேந்திரர்களே ! அத்தியந்தந் துர்லபமாக விருக்கின்றது. எக்கீர்த்தி நிதிகள் எப்போதுந் தத்துவசிந்தன பரர்களாகி ஆன்மலாப ரூபமாய சாரத்தை யடைவதில் முயலுகின்றார்களோ அவர்களே தன்னியர்கள், புருடோத்தமர்கள், சாதுக்களுள் முதலில் எண்ணப் படுபவர்களாவர்கள், விவேக முடையவரும் உதார கம்பீரவடிவும் மனமு முடையவரு மாகிய ஸ்ரீ இராமருக்கொப்பாக ஒருவருமே யிவ்வுலகிற் கிடையாது; இப்போதுங் காணேம், முற்போதுங் கண்டதில்லை, பிற்போதும் வரப்போவதே கிடையாது, என்பது எமது துணிபாம். ஸ்ரீ இராமரது மனோரத சம்பத்தியை அவசியஞ் செய்விக்க வேண்டு மென்பதை அவரைப்புகழும் வாயிலாகவும், உத்தம அதிகார அடைவு அவர்க்குண்டா யிருப்பதைவெளிப்படுத்தும் வாயிலாகவும் கூறி அவரை யுபேக்ஷிக்கிற் றோடமா மென்பார், சாலத்தேசுறு வென. சர்வஜனங்கட்கும் அதிசய குணசீல விநயாதிகளானும் உசிதமாக வினவத்தக்க இரகசியத்தை வெளிப்படுத்தலானும் ஆனந்தத்தைச் செய்வித்த ஸ்ரீ இராகவர் மனத்தில் விரும்பிய தத்துவத்தை யறியும் வேட்கை வடிவமனோரதம், நம்மனோராகிய அறிவாளிகளின் உபதேசத்தாற் பலிக்காமற் போகுமாயின் முனிவர்களாகிய யாமே வெட்டவெளியாய்க் கெட்டமதி யுடையவர்க ளாவோம், நமதறிவுண்மையும், பயனற்றதேயாகும்; ஆதலின் அவசிய முபதேசிக்க வேண்டும். செல்வனுக் குணரற்பாற்றேல் = ஸ்ரீ இராகவருக்கு உணரவேண்டிய பரம்பொருளை யுணர்த்தாமலு பேக்ஷிப்பமேயானல்.

(ச.) மாயைதன்னில் = சமுசாரத்தில், சாலவரிது = அத்தியந்தம் துர்லபம், சுகம் = ஆத்மலாபம், சதுரச்சிந்தை = சமத்காரம், சேர்ந்தமனம், உணரற்பாற்றேல் = அறிதற்பாலதை உபதேசியேமாயின். இங்ஙனம் வலிந்து பொருள் கூறினது மூலசுலோகத்திற் கியையாவென்க. பேசுறும் (அவ்வுணர் வின்றி) வசனிக்கும், நாங்களெல்லாம் = முனிகளான யாங்களனைவரும். (6)

## பெரியவாசிட்டத்தில் இனி முமுக்ஷுவிவகாரப் பிரகரணம்.

அஜமொடுஞ் சரையற்ற நாதியாயொன் றுயகில வின்பங்க ளுந்தமது
நிஜசுகலேச மெனநிகழ்ந் திதயநிகித மாயாத்து மசார
யஜுமர்முதல் வேதமுடி பெழுமமுத வெழிலிர சாயன வடிவாங்
கஜமுகவீர மாதவன் கமக்கழன்மலர் கருத்தில் வாழ்த்துதுமே.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ இராமாதிவசன வாயிலாய்ச் சாதன சம்பத்தானது வருணிக்கப் பட்டபோதினும், முமுக்ஷுக்களால் எம்முறையால் விவகரிப்பவர்களாய்ச் சம்பாதிக்கத் தக்கன, அதனுல் தத்துவ விசிராந்தி இலாபந்தா னெங்ஙன முண்டாம் எனத்தனித் தனியாகப் பிரித்து அவற்றை யுபதேசிக்கும் பொருட்டு இரண்டாவது பிரகரணத்தை ஸ்ரீ வான்மீகிபகவான் ரெுடங்குகின்ருர்:—ஈதவரென.

ஆண்டாதியில் மந்த வைராக்கியாதி சாதன முடையவர்கள், எல்லாம் வந்ததுபோலவே விரைவில் அதிகார அடைவின் மயக்கத்தாற் கேள்வி முதலியவற்றே முயலுதல் கூடாதெனச் சுகர் கதையினுனே அந்தப்பரிபாக இலக்கணங்களைக் காண்பித்து, "குருவருளானே குணமதாயறிந்த, பெருமொரு வித்தையே பெரும்பயனுடைத்தாம்" என்னுஞ் சுருதியினுனே குலகுருவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவானை ஸ்ரீ இராமருக்குபதேசிப்பான் பூர்வவிருத்தாந்த நினைவினுலும், தத்துவவுபதேச வுபக்கிரமத்தாலும் மிகவுமுற்சாகப் படுத்துபவராய்த் தமது பிரயோஜன சித்தியின் பொருட்டே சிரவணஞ்செய்யும் பொருட்டும் விரைந்து ஸ்ரீ விசுவாமித்திர முனிவரே முதலிற் கூறத்தொடங்கினுரென ஸ்ரீவான்மீகி பகவான்கூறல். ஈதவரென.

> ஈதவ ருரைத்த பின்ன ரிராமனை யினிது நோக்கிக்
> காதிசே யுரைப்பா னீயே களங்கமில் புந்தியாலே
> தீதற வனைத்துங் கண்டாய் தெளிவுறப் பிறிதொன் றில்லைப்
> போதமார் சுகனு நீயும் புந்தியா லொப்பீ ரன்றே. (7)

(ப - ரை.) ஈதவருரைத்த பின்னர் = இவ்வண்ணம் உரத்தகுரலோடும் அச்சபையிலுள்ளவராற் கூறப்பட்ட பின்னர், இராமனை யினிதுநோக்கி = முன்னரிருந்த ஸ்ரீ இராகவரைநோக்கி, காதிசே யுரைப்பான் = ஸ்ரீ விசுவாமித்திரர் கூறுவதாவது, நீயே களங்கமில் புந்தியாலே = நீதானே மாசற்ற அதிசூக்கும மதியினுனே, தீதறவனைத்துங் கண்டாய் = விபரீதமில்லாமல் அறியவேண்டிய வனைத்தையும் அறிந்தாய், ஆதலின், தெளிவுறப் பிறிதொன்றில்லை = அறிந்து கொள்ளத் தக்கதாக வயலொன்றையுங் காணேம், போதமார் சுகனும் நீயும் = ஞானமயமாய சுகனென்னும் ஸ்ரீமத் பகவத் வியாசபுத்திரனும் நீயும், புந்தியில் ஒப்பீர் = மதியின் கண்ணே விசிராந்திமாத்திரத்தை விரும்புதலால் ஒப்பாக இருக்கின்றீர். (எ - று.) (7)

(ஸ்ரீ - வீர.) சபைக்கு விஜயஞ்செய்த முனிவர்களானே இவ்வண்ணம் உரத்தகுரலோடும் வாக்கியங்கள் வழங்கப்பட்ட பின்னர் முன்னரும் அதிகார எல்லையிலும் உட்கார்ந்திருக்கும், முக்கிய அதிகாரிகள் கிடைப்பது அருமையாதலின் ஸ்ரீ இராமரிடத்திலும் பிரஹ்மரசத்தை யறிந்தவர்களுக்குள் ளுத்தமரானவ ராதலின் நிகழப்போகின்ற பிரஹ்மவிசாரத்திலுங், பிரீதியுடையவராய் ஸ்ரீ விசுவாமித்திரர் ஸ்ரீ இராமரை நோக்கிக் கூறுவதாவது:—ஹே இராகவ! ஹே ஞானவான்களுக்குள்ளே மேன்மை மிக்கோய்! அவசிய மறியத்தக்கது உனக்கு அயலொன்று மில்லை; சுயமாகவே அதிசூக்குமமான சாராசாரத்தைப் பகுக்கு மாற்றலுற்ற மதியினுனே தள்ளத்தக்க கொள்ளத்தக்க இரகசிய முழுவதையும் பரமார்த்த சாரபூத அகண்ட அத்வயசின்மாத்திர ரூபமாகிய ஆன்ம தத்துவத்தையும், நீயறிந்தே யிருக்கின்ருய்; ஆயினேன் இளைப்பாறுதல் உண்டாகவில்லையெனின்? எப்போது மியற்கையாகவே நிர்மலமா யிராநின்ற நினது மதிக்கண்ணுடியிற் கேவலம் அவாரம்பிக்கையாலாய ஐய அழுக்கை யகற்றன்மாத்திரம் ஒரு சிறிதே பொருந்த வேண்டியதா யிருக்கின்றது, தனது மதியாலறிந்த போதினும் பிரமாண ஆசி

ரியர் முதலிய சம்வாதமில்லாமல் விசுவாசம் வரமாட்டாதன்றே! "வலுவதாய்ச் சிக்ஷித்து வழங்கிய பேர்க்கும், நலமதாயான்ம னினன்னிலை யுளம்பெறு" எனவுமன்றோ கூறுகின்றனர். ஸ்ரீ வியாசபகவானுடைய மைந்தனாகிய சுகனுடைய மனம்போன்றதாம் நின்னுடைய மனதும், அறியவேண்டுவது யாவற்றையும் அறிந்தபோதினும் உள்ளே விசிராந்தி மாத்திரத்தையே யபேக்ஷிக்கின்றது. ஈண்டு ஸ்ரீ வியாசர் சுகர் என்பவர், ஒவ்வொரு துவாபரமுடிவினும் ஸ்ரீ வியாசாவ தாரபேதம் பிரசித்தமாதலின் முன்னுள்ளது துவாபரமுடிவி லுண்டானவர் சுவரப்படுவர்.

(ச.) நீயே = ஞானவான்களிற் சிரேட்டனான ஸ்ரீ ராமா நீயே, களங்கமில் புந்தியாலே = சூக்ஷுமபுத்தியினாலே, சுகனும் = ஸ்ரீ வியாசபகவானது புத்திரனான சுகமுனிவரும். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனங் கூறிய முனிநாயகரை நோக்கிச் சுகர்சரிதத்தை வினவுகின்றார்:—இகலறவென,

இகலற வுணர்வுற் றோனு மிளைப்பற நயந்தா னென்று
மகமுனி யுரைப்பக் கேட்ட வள்ளலு முரைப்பா னையா
வகமறு முணர்வுண் டாயு மாறுதன் முன்ன மின்றிச்
சுகமுறப் பின்னுண் டான தெங்ஙனஞ் சுகனுக் கென்றான். (8)

(ப - ரை.) இகலற வுணர்வுற்றோனும் = விபரீத மில்லாமல், அறியவேண்டிய வத்துவை யறிந்தவனா யிருந்தபோதினும், இளைப்பற = முதலில் விசிராந்தியடையாமல் யநந்தான் = மதியான் மீண்டும் விசிராந்தியை யடைந்தான், என்னுமகமுனியுரைப்ப= என விவ்வண்ணம் யாகஞ்செய்வதன் கண்ணே மிகவுந் தற்பரரான ஸ்ரீ விசுவாமித்திர மகாமுனிவர் கூற, கேட்டவள்ளலும் = வினவிய ஸ்ரீ இராகவரும், உரைப்பான் = கூறுவதாவது, ஐயா = ஹே தேசிகோத்தமரே! அகமறும் உணர்வுண்டாயும் = தற்போதமிழந்த ஞானமான துறபத்தியாகியும், ஆறுதன் முன்னமின்றி = விசிராந்தியானது முன்னர்க் கிட்டாமல், சுகமுறப் பின்னுண்டானது = பிரஹ்மானந்தம் பெறுமாறு பின்னர் விசிராந்தி யுண்டானது, எங்ஙனஞ் சுகனுக்கென்றான் = சுகப்பிரஹ்மரிஷிக்கு எவ்வண்ணம் என்று ஸ்ரீ இராகவர் வினவினர். (8)

(ஸ்ரீ - வீர.) சர்வக் கிலேசங்களு மற்றதாய் அளவைகள் விவகரிக்கும் முன்னரே தானே பிரகாசித்துக் கொண்டிருக்கும் பரமானந்த ரூபமாய்ச் சொரூபம் அறியப்பெற்றதாகியும் மதியில் இளைப்பாறுதல் ஏன் உண்டாகவில்லை? இவ்வா றியம்பக்கேட்ட ஸ்ரீ இராமர், ஹேபகவன்! ஸ்ரீ வியாசபகவான் மைந்தராகிய சுகருக்கு ஆதியில் தமது விசாரத்தானே தத்துவம் அறியக்கூடியதா யிருந்தும் எவ்வாறு விசிராந்திவரவில்லை? பின்னர், குரு உபதேசித்த பலத்தோடுகூடியமதியினானே எவ்வாறு விசிராந்தி கிடைத்தது எனவினவினர்.

(ச.) நயத்தல், அறியவேண்டியவனைத்தும் அறிந்தவரும் சித்தவிசிராந்தி மாத்திரத்தையே யகத்தபேக்ஷிப்பர் என்பதாயிற்று. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தனது மதியினானே விசாரித்தினிதுணர்ந்தும் தந்தையாலுபதேசிக்கப்பெற்றும் நம்பிக்கை யற்றவராகி ஜனகரது உபதேசத்தாற் சுகர்தத்துவத்தில் இளைப்பாறினரென்று கூறத்தொடங்குகின்றார்:—என்னலுமென.

என்னலும் முனிவன் சொல்வா னெழுபிறப் பறுக்கு ஞானந்
துன்னிய சுகனு நின்போற் றொல்லுல கியல்பை நாடி
மன்னிய விவேக முண்டாய் மாசறு முணர்வு பெற்று
மந்நிலை யைய மாகி யாறுத லற்ற னன்றே. (9)

(ப - ரை.) என்னலும் = என்றிவ்வண்ணம் ஸ்ரீஇராகவர் வினவுதலும், முனிவன் சொல்வான் = ஸ்ரீவிசுவாமித்திர மகரிஷிகூறுவதாவது, எழுபிறப்பறுக்கும் ஞானம் = எழுவகைத்தோற்றங்களாகிய தேவநரதிரியக்காதி யோனிகளிற் பிறக்குந்துயரைத் துடைக்கும் பிரஹ்மவித்தையை, துன்னியும் = விசாரதிருஷ்டியினுனே சுலபமாக அடைந்தும், சுகனும் = சுகப்பிரஹ்மரிஷியும், நின்போல் = உன்னைப்போலவே, தொல்லுலகியல்பை நாடி = அநாதி யநிர்வசநீயமாய உலகிலுள்ள அநித்திய அசுத்த கண்டித துக்கமயத்தன்மையை ஆலோசித்துப் பார்த்து, மன்னியவிவேகமுண்டாய் = நிறைந்த விவேகமானது உதயமாகி, மாசறுமுணர்வுபெற்றும் = விபரீத மில்லாத பூர்ணஞானத்தைச் சுயமாகவே யடைந்தும், அந்நிலை அந்தச் சொரூபநிலைமையானது, ஐயமாகி = சமுசயத்தாலே பிறழ்ச்சியையடைந்து, ஆறுதலற்றான் = சித்தவிசிராந்தியை யடைந்தானில்லை, அன்று ஏ அசைநிலைகள். (9)

(ஸ்ரீ - வீர.) மேற்கூறிய பிரகாரம் ஸ்ரீராகவர் வினவியபோது.

ஸ்ரீவிசுவாமித்திரர் கூறுகின்றார், ஹே இராமச்சந்திர! உன்னுடைய விருத்தாந்தத்திற்குச் சமமும், மோக்ஷகாரணமும் ஆகிய ஸ்ரீவியாசமைந்தன் விருத்தாந்தத்தைக் கூறக் கேட்பாயாக, உனதுதந்தைக்குச் சமீபத்தில் பிரசித்த நீலகிரிக்குச் சமானமாய்ப் பொன்னாசனத்திற் சூரியனைப்போற்பிரகாசித்துக்கொண்டு இதோ உட்கார்ந்திருக்கும் ஸ்ரீவியாசபகவானுக்கு, சர்வசாஸ்திரங்களையு முணர்ந்தவனும், சந்திரவதனனும், சரீரத்தோடு யாகம் எழுந்தருளியதுபோன்றவனும், பேரறிவாளனும், ஆகிய சுகனென்னும் ஒருமைந்தனுண்டானான்; இந்தச் சம்சாரசங்கடங்களையெல்லாம் இருதயத்தின்கண்ணே நன்றாக ஆராய்ந்த அவனுக்கும், உனக்குதித்ததுபோலவே இத்தகைய விசாரமானது உதித்தது. அதனால் மகாமனத்தையுடைய அவன் சுயமாகவே தனது விவேகத்தினால் நெடுங்காலம் ஆராய்ந்து மிகவும் அழகாக, எப்பரமார்த்த சத்தியமாய ஆன்மதத்துவம் அத்விதீய சின்மாத்திர ரூபமாயிருக்கின்றதோ அதையறிந்தடைந்தனன். ஞானமேயன்றோ ஆன்மலாபம், தானேயடைந்த பரவஸ்துவின் கண்ணே இதுதான் வத்துவென விசுவாசம் தனக்குப் பிறவாமையானே இளைப்பாறுதலடையாத மனத்தனுயிருந்தான்.

(ச.) நின்போல் இவ்வுலகயாத்திரைசெய்து, மன்னிய விவேகமுண்டாய், அவ்விவேகத்தாற் சுயமாகவே, தொல்லுலகியல்பைநாடி மாசறுமுணர்வுபெற்றும், அந்நிலை, = சுயமாக அடைந்த, அந்தப்பரவஸ்துவில், ஐயமாகி = இதுவேவஸ்துவென மனதில் விசுவாசம் பிறவாமல் சித்தவிசிராந்தி பெற்றிலன். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அச்சுகவிருத்தாந்தத்தையே, தொடர்ந்து கூறுகின்றார்:— விடலென.

விடலரு மசைவு விட்டு விடயத்தின் மீண்ட நெஞ்சன்
வடவரை யுறையுந் தாதை மருங்குற வெய்தி யிந்த
விடருறு மாயை வந்த தெங்ஙன மிறப்ப தெங்ஙன்
றொடர்பிலா ருடைய தெம்மட் டென்றிது தோன்றிற் றென்றான். (10)

(ப - ரை.) விடலரும் அசைவுவிட்டு = விடுவதற்கு முடியாததான சஞ்சலத்தை விடுத்து, விடயத்தின் மீண்ட நெஞ்சன் = சர்வபோகங்களினின்றும் நிவிருத்தியான மனத்தையுடைய அச்சுகப்பிரஹ்மம், வடவரை யுறையுந்தாதை = சுமேருபர்வதத்தில் ஏகாந்தமாக எழுந்தருளியிருக்கும் தந்தையினது, மருங்குறவெய்தி = சமீபசந்நிதியை யடைந்து இந்தஇடருறுமாயை = இத்துன்பமயமான சம்சார ஆடம்பரம், வந்தெதங்ஙனம்=எழுந்தது எவ்வண்ணம்? இறப்பதெங்ஙன்=ஒடுங்குவது எவ்வண்ணம்? தொடர்பிலாருடையது = எவரைத் தொடர்பாக உடையது? தொடர்விலாத எவரை யாசிரயத்திருப்பது? எம்மட்டு = எதுவரையுளதாம்? என்றிது தோன்றிற் றென்றான்=எக்காலிது தோற்றியது? என்று சீடவிதிப்படி வினவினன். (எ-று.) (10)

(ஸ்ரீ - வீர.) பூமியின்கண் ணிருக்கும் நீரருந்துவதிற் றிரும்புவதாய பக்ஷிவிசேஷமாம் சாதகம் மகிழ்ந்தபின் மழைத்தாரைகளி னின்றும் உபராமத்தை யடைதல்போலப் போகங்களினின்றும் உபராமத்தை யடைந்தான் என்பதாம். அவனுடைய சித்தமானது சஞ்சலத் தன்மைகளை யெல்லாம் விட்டுக் கேவலம் அகால மழைத்தாரைகளி னின்றும் சாதகப் பக்ஷியானது விலகுவதே போலப் பலவகை விநாச துக்க ஹேதுக்களாய போகங்களினின்றும் வைராக்கியத்தை யடைந்தது; ஒருகால் நின்மலப் பிரஞ்ஞையையுடைய அவன் மேருவின் கண்ணே ஏகாந்தமாயிருந்த தந்தையாகிய ஸ்ரீகிருஷ்ணத்வைபாயன ரென்னும் ஸ்ரீ வியாசமகா முனிவரை நமஸ்கரித்துப் பக்தியோடும், ஹே தந்தையாகிய ஆசிரியரே! பரவஞ்சனையின் பொருட்டு வஞ்சகமாக ஆட்டிவிடப் பட்ட இந்தச் சமுசார ஆடம்பரம் எம்முறையாக உண்டாயது? எக்காலிது அத்தியந்தம் எவ்வாறு அழியும்? எவ்வளவுபெரியது? எத்துணைக்காலமிருப்பது? இது யாருடையது? தேகத்தினுடையதா? இந்திரியத்தினுடையதா? மனத்தினுடையதா? பிராணனுடையதா? சங்காதத்தினுடையதா? அதனினும் அயலாய விகாரியினுடையதா? நிர்விகார சின்மாத்திரத்தினுடையதா? என வினவினன்.

(ச.) விடயத்தின் = களங்க மிகுந்த போகங்களி னின்றும், தரைச் சலங்களின் றும் சாதகப்புள்மீளல் போல, மீண்ட நெஞ்சன். வடவரையுறையும் = மேருவில் ஒரு காலத் தேகாந்தமாக இராநின்ற, தாதை = கிருஷ்ணத் வைபாயன முனிவரென்னும் பிதாவினிடத்தில், மருங்குறவெய்தி=சீட ஒழுங்கின்படி பக்தியுடன்சென்று, மாயை= சம்சார ஆடம்பரம், அனுக்கிரகிக்க வேண்டு மென்றான். (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙன் வினவிய மைந்தனை விளித்துத் தந்தையருளியது இஃதென்கின்றார்.—அன்னவனெனை.

அன்னவன் கேட்ட வெல்லா மறிவுற வுரைத்த போது
முன்னநா னுணர்ந்த வாறே மொழிந்தனை யெனவச் சொல்லா
னன்னிலை பெருமை கண்டு நல்லுணர் வெனக்குத் தோன்று
மன்னவன் சனக னென்பான் வழுவறு முணர்வின் மிக்கான். (11)

ஆயவன் றனையே கேட்டெனன் றருளொடு தாதை யேவப்
போயினன் சனகன் வாழும் பொன்மனை வாயிற் சேர்ந்தான்
ஆயவன் வரவு கேட்டுச் சோதிப்பான் கருதி மன்னன்
ஏயின னில்லை நாளே ழிருந்தனன் விகற்ப மில்லோன். (12)

(ப - ரை.) அன்னவன் கேட்டவெல்லாம் =அந்தமைந்தன் வினவியயாவற்றிற்கு முத்தரத்தை, அறிவுற உரைத்தபோது = ஞானமுதய மாகுமாறு உபதேசித்தபோது,

முன்னம் நான் உணர்ந்த வாறே மொழிந்தனே யென=பூர்வம் அடியேன் தெரிந்திருந்த பொருளையே நீருங்கூறினீர் என்றுகூற, அச்சொல்லால் = கூறிய அம்மொழிகளால், நன்னிலை பெருமைகண்டு = சமுசயமற்ற சுபாவசொரூப ஸ்திதியை யடையாதது கண்டு, நல்லுணர்வு எனக்குத் தோன்று = தத்துவமான ஞானம் எனக்கிலங்காதாத லின், மன்னவன் சனகன் என்பான் = ஜனகமகாராஜா என்றொருவர் மிதிலையி லிருக் கின்றார், வழுவறு முணர்வின் மிக்கான் = சமுசய விபரீதமில்லாமல் உள்ளபடியே யெல்லா முணர்ந்தவர் அவர்; ஆயவன்றனையே = அத்தகைய சர்வஞ்ஞ அரசரையே, கேட் கென்று = வினவித் தெரியவிரும்பியதைத் தெரிந்து கொள்ளுதி என்று, அரு ளொடுதாதையேவ = பரமகருணையோடு பிதா நல்லாசியோடு வழிவிட, போயினன் = மிதிலையை நோக்கிச் சென்றனன், சனகன் வாழும் பொன்மனை வாயிற் சேர்ந்தான்= ஜனகமகாராஜன் எழுந்தருளி யிருக்கும் சர்வஐசுவரியம் நிறைந்த அரண்மனை வாயிலில் வந்து சேர்ந்தான், தூயவன் வரவுகேட்டு = பரிசுத்த பிரஹ்மசரிய முடைய சுகபிரஹ் மம் வந்து வாயிலில் நிற்பதாக யாஷ்டிகரா லறிவிக்கப் பெற்று, சோதிப்பான் கருதி = பரிசோதிக்க வேண்டுமென் றுத்தேசித்து, மன்னன் = இராஜாதிராஜன், எயினன் இல்லை = போயழைத்து வரவில்லை, நாளேழிருந்தனன் விகற்பமில்லோன் = எழுதி னம் வரை சும்மா இருந்துவிட்டனர். (11-12)

(ஸ்ரீ - வீர.) யாஷ்டிகர்= தண்டாயுத பாணியர். சுகப்பிரஹ்மத்தால் வினவப்பட்ட யாவு முணர்ந்த ஸ்ரீ வியாசபகவானால் அம்மைந்தன் பொருட்டுப் புகலவேண்டிய தனைத் தும் உள்ளபடியே தெளிவாகப் புகலப்பட்டது. உபதேசித்த அதைச் செவியுற்ற சுகர் அம்ம ! இதை முன்னரே யானறிந்துளேன் எனத் தனது தந்தையினது வாக்கியத்தை அபூர்வ அர்த்தமொன்றுங் காணேமெனச் சுயபுத்தியினானே பகுமானிக்க வில்லை. ஸ்ரீ வியாசபகவானும் மைந்தனது கருத்து இத்தகையதென வுணர்ந்து அவன்மதியையே யனுசரித்துப் புத்திரனை நோக்கி மீண்டுங் கூறுவதாவது:—ஹேமைந்த ! கூறியதினும் அயலாக உண்மையா யொன்றையும் யான் நன்றாகவுணரேன்; பூமியின்கண்ணே ஜனக னென்னும் அரசனிருக்கின்றான்; அவனுண்மையாக உணரவேண்டிய யாவற்றையு முணர்வான் அவனிடத்தி னின்றும் நீ யாவற்றையும் அறிவாய்; என்பதாகத் தந்தை யாற் கூறக்கேட்ட சுகர் மேருகிரியினின்றும் பூமியிற் சென்று ஜனகனாற் காப்பாற்றப் படும் விதேக தேசத்திலுள்ள மிதிலையென்னும் நகரத்தை யடைந்தனர். ஹே மன்னவர் மன்ன ! வாயிலின் கண்ணே ஸ்ரீ வியாச பகவானுடைய அருமை மைந்தராகிய சுகப் பிரஹ்ம இருஷியானவர் வந்து நிற்கின்றார் என்று மகாத்மாவாகிய ஜனகரிடத்தில் துவாரபாலகர்களாற் றெரிவிக்கப் பட்டபோதினும் ஜனகரும் சுகர் விருத்தாந்தம் தெரிந்தவராய் விரைவி லுபதேசிக்கின் ஸ்ரீ வியாசவசனம்போல அவமதிப்பால் அவ னுக்குக் கிருதார்த்தத் தன்மையை யுண்டாக்க மாட்டாது, அவ்வாறென் மொழியும் போகலாகாதென வெண்ணிச் சுகருடைய வைராக்கியாதி சாதனங்களின் விசுவாச திடத்தன்மைகளை அறியும் வேட்கையுற்று உபேக்ஷயாக அவர் ஆங்கேயிருக்குக வெனக் கூறி ஏழுதினம்வரை ஒன்றுங் கூறாம லிருந்து விட்டார்.

(ச.) அன்னவன், ஸ்ரீ வியாசர் வாய்மொழி. ஈதனைத்துந் தன் விகற்பசன்னியஞ் சித்தவிருத்தி நாசத்தினால் நசிக்கும் பொய்யான சம்சாரம் சாரமின்மையதென நிச்சய மாம் என்று அறிவுறச் சொல்ல வேண்டிய வனைத்தும் உள்ளபடி யுரைத்தபோதும் உண ராமல். முன்ன—கண்டு. புத்திரனைநோக்கி மீட்டும் மொழிதல். நல்—மிக்கோன். பூவுல கத்திருக்கின்றனன் அவனால் அனைத்தும் பெறுவாய். ஆயவன்; மேருவினின்றும் பூவு

லகைநோக்கிப் போயினன், சனகன் (ஆளும் விதேகநகரியில் வாழும். வரவு = தனது வரவை, மகாமனதுடைய சனகராசனுக்குத் துவாரத்தரால் அரசனே! இவ்வரண்மனை வாசலில் வியாசபுத்திரராகிய சுகமுனிவர் வந்து நிற்கின்றாரென வறிவிக்க, மன்னன் கேட்டுச் சோதிப்பான் கருதி, நிற்கட்டுமென் றவமானித் துரைத்தவராய், எகினன் இல்லை = சும்மா இருந்தார். யாஷ்டிகர் = வாயிலாளர். (11-12)

(ஸ்ரீ-வீர - அ - கை.) பின்னர் என்னுற்ற தென்னும் ஆகாங்க்ஷை யுண்டாகக் கூறுகின்றார்:—மற்றென.

மற்றுநா ளேழும் வேறோ ரிடத்துற வைத்த பின்னர்
பொற்றிர ளழகா ரந்தப் புரத்திடை நாளேழ் வைத்துச்
சிற்றிடை மகளிர் போகஞ் சிறந்தவூ ணளிப்பத் துய்த்தான்
குற்றமுங் குணமு நாடான் குளிர்நிறை மதியமொத்தான். (13)

(ப - ரை.) மற்று = அதன் பின்பு, நாள் எழும் = சப்ததினங்கள் வரை, வேறோ ரிடத் துறவைத்த பின்னர் = மற்றோ ரங்கணத்தின் கண்ணே இருக்கும்படியாக நிய மித்து அதன்பின்பு, பொற்றிரள் அழகு ஆர் அந்தப்புரத்திடை = பொன்முதலிய ஐசு வரியங்கள் நிறைந்து அழகுவாய்ந்த உள்ளங்கணத்தின் கண்ணே, நாளேழ்வைத்து = எழுதினங்கள் வரை இருக்கும்படி செய்வித்து, சிற்றிடை மகளிர்போகம் = சிறிய இடையையுடைய மங்கையர் போகமும், சிறந்தவூண் = அறுவகையாய இரசங்களோ டுற்ற நால்வகை யுண்டியையும், அளிப்ப = ஈயும்படி செய்விக்க, துய்த்தான் = அனுப வித்தான், குற்றமும் குணமும் நாடான் = புன்மையையேனும் நன்மையை யேனும் எண்ணவேயில்லை, குளிர் நிறைமதிய மொத்தான் = தண்ணென்று நிறைந்த பூரண சந்திரனை யொப்ப விளங்கினன்.

(ஸ்ரீ - வீர.) ஜனகதரிசன உற்கண்டையோடு மிருந்தாரே யல்லாமல் வேறொன் றையும் எண்ணவேயில்லை. அதன்பின்பு அரண்மனை உண்முற்றத்தில் விடும்படியாகச் செய்தனர், அவ்விடத்திலும் எழுதினங்கள் அவ்வாறே தத்துவத்தை யுணரவேண்டு மென்னும் இச்சையின் மிகுதியினால் அநாதரவு யாவற்றையுமறந்து இருந்தனர். பின்னர் அந்தப்புரத்தில் விடும்படியாகச் செய்தனர். எதுவரையுணவு முதலியவற்றானே நீர் பூஜிக்கப் பெறவில்லையோ அதுவரை யரசர் தெரியாரென்னும் வாக்கின் வஞ்சனையானே எழுதினங்கள் வரை அந்தப்புரத்திலேயே யவ்வனத்தால் மதத்துலவும் அழகியமங் கையராற் போஜனதிகளானும் போகக் கூட்டங்களானும் பூர்ணசந்திரனுக்குச் சமான மான சுகரை யுபசரிக்குமாறு செய்வித்தனர்.

(ச.) போகஞ்சிறந்த புசித்தற்கினிய, ஊண் = போஜனங்கள். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் மேனடந்த மானாவமானங்கள் மனத்தைக் கனத்த மகிழ்விற் றுயரில் ஆழ்த்தி யிருக்குமே யெனின், திருஷ்டாந்த பூர்வகமின்றென் கின்றார்:—மன்னவனென.

மன்னவன் சனகன் றந்தபோகத்தின் மகிழ்ச்சி யாவு
மன்னவன் முன்னஞ் செய்த வவமதித் துன்ப மியாவு
மின்னவன் மனத்தைச் சற்று மிழுத்தில விளமென் றென்றல்
பொன்னச லத்தின் மிக்க பொருப்பினை யிழுக்க வற்றோ. (14)

(ப - ரை.) மன்னவன் சனகன்றந்த = இராஜாதிராஜ ஜனகர் தரும்படி செய் வித்த, போகத்தின் மகிழ்ச்சியாவும் = போகங்களின் சந்தோடங்கண் முழுவதும்,

அன்னவன் = அவ்வரசர், முன்னஞ்செய்த = பூர்வஞ் செய்வித்த, அவமதித் துன்பமி யாவும் = அவமானத்தின் றுயரங்கண் முழுவதும், இன்னவன் மனதை = இச்சுகமரிஷி யின் உள்ளத்தை, சற்றுமிழுத்தில = ஒரு சிறிதும் அசைத்திலவாம், இளமென் தென் றல் = அற்பமான மிருதுவான தென்மந்தா நிலம், பொன் அசலத்தின் மிக்க பொருப் பினை = சுமேருவைப் பார்க்கினும் அதிகமாக வூன்றியிருக்கும் பர்வதத்தை, இழுக்க வற்றோ = அசைக்க வல்லமை யுடைத்தான தாகுமோ, ஆகாததுபோலவாம். (எ-று) (14)

(ஸ்ரீ - வீர.) ஊன்றி யிருத்தல் = பத்த அதிஷ்டானமா யிருத்தல். ஜனகர்தந்த அப்போகங்களும் அத்துயரங்களும் ஸ்ரீ வியாசமைந்த ராகிய அச்சுகரைத் திடமூலத் தோடு கூடிய பெருங்கிரியைத் தென்றற் காற்றானது அசை வியாததேபோல அசைக்க வில்லை, கேவலம் போகங்களிலும் அநாதரவுகளிலும் நல்ல சமமுடையவ ராகவும் அத ஞனே சுவஸ்தராகவும் அதற்கு ஹேதுவாக வாக்கு முதலிய இந்திரியங்களை யடக்கிக் கொண்டும் சந்தோஷத்தோடு கூடிய மனத்தை யுடையவராகப் பூர்ண சந்திரன்போல அங்கேயே சுகரிருந்தார்.

(ச.) சுகர் அத்தியந்தம் சமத்துவமடைந்து சுவஸ்தராய் மௌனியாய்ச் சந்தோஷ மனதுடையராய்ச் சந்திரனைப்போலப் பரிபூர்ணராய் நிர்மலராய் இருந்தாரென்பதாயிற்று.

(ஸ்ரீ - வீர. அ - கை.) இவ்வண்ணம் அரசர் பெருமான் பரீக்ஷை செய்தபின் சத்கா ரத்துடன் அழைத்து நமஸ்கரித்து வந்தகாரியம் வினவினரென்கின்றார்:—ஆங்கவன் என.

ஆங்கவ னிலைமை நோக்கி யடிபணிந் தரசன் போற்றித்
தாங்குல கத்தின் செய்கை தவிர்ந்துபே றனைத்தும் பெற்றோய்
ஈங்குறு பொருளே தென்ன வெங்ஙன மாயை தோன்றிற்
றோங்கிய தெங்ஙன் போவ துள்ளவா றுரைசெய் யென்றான். (15)

(ப - ரை.) ஆங்கு அவன் நிலைமைநோக்கி = அந்நிருபர் அவ்விடத்திலச்சுகரிருந்த நிலைமையைப் பார்த்து, அடிபணிந்து = திருவடியில் முறையே நமஸ்காரஞ்செய்து, அரசன்போற்றி = ஜனகர் பிரியவசனங்களைக்கூறி, தாங்குலகத்தின் செய்கை = ஒன்றற் கொன்று தவித்தரிப்பதுபோன்ற உலககாரியமனைத்தையும், தவிர்ந்து = மறந்து, பேற னைத்தும் பெற்றோய் = சர்வப்பிரயோஜனங்களையும் அடைந்த பெரியோய் ஈங்குறு பொருளேதென்ன! = என்னை நாடியிவ்விடத்திற்கெழுந்தருளிய காரிய மென்னென்ன! எங்ஙனமாயை தோன்றிற்று = இச்சமுசாரஆடம்பரம் எவ்வண்ணம் எழுந்துவந்தது, ஓங்கியதெங்ஙன் போவது = விஸ்தரித்த இது எவ்வண்ணம்போம், உள்ளவாறுரைசெய் யென்றான் = உள்ளபடியே அனுக்கிரகிக்க வேண்டுமென்றனன்.

(ஸ்ரீ - வீர.) காரியமனைத்தையும் = உலகத்தின்கண்ணே சிரேயசின் பொருட்டுள்ள சர்வகாரியங்களையும் ஒரு சிறிதும் எஞ்சாமல், என்றும், மிச்சமே யில்லாமலெல்லாக் காரி யங்களையும், என்றும், பொருள்கொள்ளலாம். சமுசார ஆடம்பரம் = சமுசார விவகார வுற்சாகம். இவ்வாறு பரீக்ஷித்தலினுனே சுகரது தத்துவதரிசனம்வரை நிலையாயிருக்கக் கூடிய விசாரவைராக்கியாதி பரிபாக இயற்கையை யறிந்து அச்சுகரை அவ்வரசர் வர வழைத்து மகிழ்ச்சி பொங்கி யிருக்கப்பட்ட அவரைப்பார்த்து ஆச்சரியப்பட்டு நமஸ்கரித் தனர்; எஞ்சுதலில்லாமலுலகின்கண்ணே அவசியஞ்செய்யத்தக்கனவாய பிரசித்த காரி யங்களாகிய பரமபுருடார்த்த சாதனங்கள் முழுவதையும் செய்து கிருதகிருத்தியத்தன் மையை யடைந்தவரே! எல்லா ஆனந்தலேசங்களும் ஆன்மசுகத்திலடங்குதலின் அத

டைவினுனே எல்லாமனோரதங்களையுமடைந்தவரே ! நீர் விரும்பியது யாதெனை விரை விற் சுகமாக விருக்கின்றீராவென வினவிய அச்சுகரை நோக்கிக்கூறினர்; அரசர் கூறி யதைக்கேட்ட ஸ்ரீவியாசமைந்தர், ஹே குருவே! இச்சம்சார ஆடம்பரமானது எவ்வா றுண்டாயது? எவ்வாறுபசாந்தியையடையும்? என்பதை யுள்ளபடி யடியேனுக்கு விரை விற் கூறுவீராகவென்றனர்.

(ச.) மாயை = சம்சார ஆடம்பரம், தோன்றி யோங்கியது. குருவே யெனக்கு உள்ள. (15)

(ஸ்ரீ - வீர- அ - கை.) ஸ்ரீ சுகர் வினவியதற்கு மன்னவர் விடைகூறுதலும் சுகர் அங் கீகரித்தலும் கூறப்பெறுகின்றது:— மெய்ம்முறையென.

மெய்ம்முறை முனிவன் கேட்ப வேந்தனும் வியாசன் சொன்ன
வம்முறை யுரைத்த லோடு மறிஞனும் விவேகத்தான்முன்
னிம்முறை யறிந்தே னீயு மெந்தையு மதுவே சொன்னீர்
மொய்ம்முறை நூல்களெல்லா மொழிபொரு ளொன்றே யென்றார். (16)

(ப - ரை.) மெய்ம்முறை=உண்மையான மார்க்கத்தைக் கேட்கவேண்டியநெறியே, முனிவன்கேட்ப = மனனசீலராகிய சுகர்வினவ, வேந்தனும் = ஜனகராஜாவும், வியா சன் சொன்ன = ஸ்ரீவியாசராகிய மகாத்மா கூறிய அம்முறை யுரைத்தலோடும்=அந்தப் பிரகாரமே அனுக்கிரகித்த மாத்திரத்தில், அறிஞனும் = விவேகியாகிய சுகரும், விவே கத்தான் முன்னிம்முறை யறிந்தேன்=விவேகமாகிய விசாரத்தினாலே பூர்வமே சுயமா கவே இந்நெறி யித்தகையதெனத் தெரிந்துகொண்டேன், நீயும் எந்தையும் அதுவே சொன்னீர் = யான் முன்னர் வினவியபோது என்னருமைத்தந்தையும் இப்போது தாங் களும் யான் நிர்ணயித்தவண்ணமே உபதேசித்தீர்கள், மொய்ம்முறை நூல்களெல்லாம் = வேதங்களும் அவற்றைப் பிரமாணமாக வுடைத்தாய் நல்யுக்திகணிறையப்பெற்ற மற் றைய அத்தியாத்ம சாஸ்திரங்கள் யாவும், மொழிபொருள் ஒன்றே யென்றான் = பிரதி பாதிக்கப்பட்ட அர்த்தம் ஒன்றே யாமென்றார்.

(ஸ்ரீ - வீர.) மேலுரைத்தவண்ணம் வினவப்பட்ட ஜனகரால் அச்சுகருக்கு மகான் மாவாகிய அவர்தந்தையாற் பூர்வங் கூறப்பட்ட அதுவே கூறப்பட்டது. அதைக்கேட்ட சுகர் கூறுவதாவது:—சுயமாகவே என்னால் விவேகத்தாலிது பூர்வமுணரப்பெற்றது, இதனையே வினவப்பட்ட எனது பிதாவும் எனக்கு நன்றாக அநேக உதாரண ஊகங்க ளானேவிரித்துரைத்தார்; உபதேசிப்பவருள்ளெல்லாம் மேன்மைமிக்கவரே! தங்களாலும் இதே பொருள் கூறப்பட்டது, இதுவே சர்வஉபநிடதத்துள்ள மகாவாக்கியார்த்தமெனச் சாஸ்திரங்களாகிய வாக்கியார்த்ததாற்பரியத்தை நிர்ணயிக்கும் நியாயங்களைக் காட்டுவ திற் றற்பரமாஞ் சூத்திரபாடியாதிகளிலுங் காணப்படுகின்றது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுகர் தாந்துணிந்து தந்தையருளிய பொருளைக் கூறித்துணிபு வினுதல்:—தன்னுள்ளென.

தன்னுள்விகற் பித்தெழுந்த விகற்பம்போகிற் றவிர்ந்திடு மாயையிற் பய னோர் சற்றுமில்லை, யின்னவகைத் தோருண்மை யியம்பவேண்டு மியாவர் மயக் கழுமாற்று மிறைவ வென்ன, மன்னன்றற்குரை செய்வான் முனிவ நீயே மதித்துணர்ந்தும் பிதாவுரைக்க மறுத்துங் கேட்டா, யந்நிலையே நிச்சயமிந் தகண்டஞான வாகாய புருடனுள னயலொன்றில்லை. (17)

(ப - ரை.) தன்னுள் விகற்பித்தெழுந்தமாயை = தாபத்திரய மயமாய இச்சம்சாரம் தனக்குள்ளே எழும் விகற்பத்தால் எழுந்ததாம், விகற்பம் போகிற் றவிர்ந்திடுமாயையில் = தன்விகற்ப பரிக்ஷயத்தால் க்ஷீணித்தேகும் இச்சம்சாரத்தில், பயனேர் சற்றுமில்லை = ஒருசிறிதும் பிரயோஜனமில்லை சாரமற்றதாம், இன்னவகைத் தோருண்மை = இத்தகைய ஐயப்பாடற்ற விடயத்தில் ஒப்பற்ற சத்தியத்தை, இயம்ப வேண்டும் = சஞ்சலம் நீங்கும்படி இதுதான் றுணிபென அருளல்வேண்டும், யாவர் மயக்கமும் மாற்றும் இறைவ என்ன = இலௌகிகா லௌகிகப் பிரஜைகளின் லௌகிக வைதிக மயக்கங்களை மாற்றியருளும் அரசரே உம்மால்யான் இளைப்பாறவேண்டு மென்று சுகர்கூற, மன்னன் அதற்குரை செய்வான் = அரசர்பெருமான் அவ்வினாவிற்கு விடைகூறுவதாவது, முனிவ! நீயே = மனனசீலராகிய நீரே, மதித்துணர்ந்தும் = நிச்சயித்துத் தெரிந்துகொண்டும் பிதாவுரைக்க = உமது தந்தையாகிய ஸ்ரீவியாசபகவான் உபதேசிக்க மறுத்துங்கேட்டாய் = மீண்டும் சிரவணித்தாய், அந்நிலையே நிச்சயம் = அந்தமெய்யான ஸ்திதியே நிண்ணயமானதென் றுணர்தி, இங்கு அகண்டஞான ஆகாயபுருடனுளன் அயலொன்றில்லை = இவ்விடத்தில் கண்டிதப்படாத சிதாகாச புருடனே யிருக்கின்றான் அன்றி மற்றொரு பொருளும் இல்லவே யில்லை. (எ-று.) (17)

(ஸ்ரீ - வீர.) அகண்டம் = அவ்யுச்சின்னம் = அவிநாசி கூடஸ்த நித்திய சிதாத்மாவானது சுயம் அத்விதீயமாயினும் சத்விதீயமாகத் தன்சங்கற்பவயத்தாற் பத்தமாம். அங்ஙனமே ஸ்ரீசுரேசுர ஆசிரியரானும் அருளப்பட்டுளதாம்:—"இக்கிரியாகாரக பலான்மக ஆபாசம் அற்பமும் பரமார்த்தவத்துவைத் தீண்டவேமாட்டாதாம், அதற்கு மோகமாத்திரவுபாதானத்தன்மை யுண்மையின், நாமமில் லபிமான நயத்தினேமமெய்த்தனையே மாற்றுமிங்கிது, தாமமில் லருமைப்பொருடம்மினும், சோமசன்மனின் றந்தையைச் சொல்லலாம்"(இதன்பொருள்) மூராணுறுதருமங்கள் ஆன்மாவிற் சம்பவிக்குமாயின் அதற்கு அசங்கத்தன்மை வியாகாதமாம் எனக்கடாவ விடையளிக்கப்படுகின்றது: இக்கிரியையென மூராணுறு தருமங்கள் சுகதுக்காதியாம். அநிர்வசநீய அஞ்ஞான பரிகற்பித துவைதப்பிரபஞ்ச சம்பந்தத்தானே ஆன்மாவினது அசங்கத்தன்மை அழிக்கப்படாதாம், உண்மையாக அதனைத்தீண்டாமையின்; அவித்தையாற் பரிகற்பித நீலப்பண்பாற் ககனம் கருப்பாவதில்லையாம், அதனானும் அசங்கத்தன்மையழிவு பெறாதாம் என்பதாயிற்று. நாமமில் = அசத்தியமாய துவைதப் பிரபஞ்சத்தின்கண்ணும் பொய்யபி நிவேசத்தானே யானின்பி துன்பியெனத் தன்னைத்தானே இவ்வுலகம் வஞ்சிக்கின்றதென்பதாம். அதன் கட்டிருட்டாந்தம் சோமனென்பது. ஒரு அதிதரித்திர பேராசைப் பிச்சைக்காரப் பிரமசாரி ஒருபஞ்சகாலத்தில் சத்துமுட்டியைக்கட்டி யனுதாபத்தோடும் ஒருமலையிலுள்ள இலைநிறைதருவின் சாயையிற் சயனித்துக்கொண்டு இவ்வண்ணம் மனோராச்சியஞ் செய்வானாயினன்:—சத்துமுட்டிக்கட்டைவிட்டு அதனால் அநேக ஆக்கள் வாங்கிவளர்ப்பேன், அவையும் ஐந்தாறு வருடங்களில் அநேகங் கன்றுகளையீனும், அதனால் யதேஷ்டமாய்ச் சேகரிப்பேன், அதனால் தனதானியாதி சகலமும் உண்டாம், அதனால் தாசிதாசாதிய கூட்டம் இருகம் சம்பாதிப்பேன், இத்தகையபெருஞ் சம்பத்தைநோக்கி மிகமிகவும் யோக்கியனாகிய எவனேனும் ஒருபிரபு தனது கன்னியை என்பொருட்டுக் கன்னிகா தானஞ்செய்துவைப்பன், பின்னர்விதிமுறையே இல்லறவாழ்க்கையை யினிதனுபவிப்பேன், அதனல்வங்கிசம் விளக்குமிங்கிதபுத்திரனையீன்று சோமசன்மனென நாமகரணம் புரிந்து பின்னர், குடும்ப சௌக்கிய அனுபவசமயத்தில் அழுதுகொண்டு அன்னையைப் பின்றொடரும் சோமசன்மனைத்தன் காரியபரவசத்தையடைந்து அவனையநாதரவுசெய்து

செல்லும் என்பாரியைப் பார்த்துப் புத்திரநிமித்தலோபத்தால் அடிப்பேன்எனத் தன் பாரியையடித்தான், அதனாற் பயிக்கபாத்திரம் கரகத்தா விருபிளவாயது, சத்துக்களும் வாயுவேகத்தால் அடித்துக்கொண்டுபோகப்பட்டன ; பின்னர் அந்தோ? வெந்துயரம் நொந்துகெட்டேன் மந்தபாக்கியன்யான் சத்துமாக்களும் எனக்குவாய்க்கெட்டாமற் போய்விட்டனவே யினியென்ன செய்வேன் என விழித்துக்கொண்டு தந்தை புலம்பினான்; இதுதான் திருட்டாந்தமாகக் கூறியதின் கதையென்றுணர்க. இதுதன்னிடத்திலிருக்கும் அஞ்ஞானத்தினாலுபசிதமாய தன்பால் நானாவகையைக் கற்பிக்கும் விகற்பமாகிய அநந்தகாம கருமவாசனைகளாகிய விரைகளானே விருத்தியடைந்து பிரளயசுழுப்திகளிற் சமஷ்டி வியஷ்டி சமஸ்கார பரிசேடமாக அவ்வியா கிருதத்தில் லீனமாகியமனுஜீவபாவவுபாதி வடிவமாம் அந்தக் கரணத்தினின்றும் பிரளய முறைக்குமாறிய முறையாக முதலில் அபஞ்சீகிருத ஆகாசாதி உற்பத்திக் கிரமமாகச் சமஷ்டி ஹிரணிய கருப்ப வடிவமாகவும் அதன்பின் பஞ்சீகரண விராட்டு வடிவமாகவும், அதன் பின் அன்னாதிக் கிரமமாக வியஷ்டி தூலதேக வடிவமாகவும், அதனுள்ளே துன்புறுத்தும் வியஷ்டிலிங்க சரீரவடிவமாகவும் ஆவிர்ப்பவித்து மகாஅநர்த்தரூபமாக விளங்கும், அதுவும் கருமஉபாசனைச் சமுச்சயமாத்திர அனுஷ்டானத்தால் அத்தியாத்மிக வியஷ்டிபாவ பரிச்சேதவாசனை மாத்திரம் ஒழியவே சமஷ்டிஹிரணியகருப்பபாவமாயெஞ்சாநிற்கும், சிரவணாதி பரிபாகத்தாலுண்டாய தத்துவசாக்ஷாத்காரத்தானே வாசனையோடுகூடிய காரியகாரண அவித்தை நாசமாங்காலோ மூலங்கெடலால் அத்தியந்தம் அந்தக்கரணங்கெடலால் அடியோடும் கெடுகின்றது; ஆகையாலிகழத்தக்க சம்சாரம் சாரமற்றதென்பதென்றுணிபாம். சுவப்பிரகாச ஆன்மாவின்கண்ணே நிலைபடாமையினாலும் பொய்யானமையானும் முன்னரே தகிக்கப்பட்டதன்மையை யுடையதுதான், ஆதலினாலே சாரமற்றதாம், அத்தகையது மறுபடியும் சாக்ஷாத்காரப் பிரளயாக்கினி யெங்கும் வியாபிக்கும்போது எவ்வாறிருக்கும்; மேலேதகிக்கப்பட்ட திருணமானது உள்ளே சாரமானது சேடித்தலின் மீண்டுமீண்டும் முளைப்பதற்கு முடியும் இச்சம்சாரமோ சாரமில்லாமலே தகிக்கப் படுவதாகத்தத்துவவித்துக்களின் அனுபவ மிருத்தலின் எங்ஙனுண்டாகும்? இதுவென்னான் முன்னரே சுயமாகவே விசாரத்தால் அறியப்பெற்றது, இதுவேயுண்மையாவென்? ஆயினதைச் சந்தேகமில்லாம லிருதயத்தி லுறைக்குமாறு ஹே மகாபாகுவே! எனக்குக் கூறுவீராக ; நானாவிடயங்களை இதுவாதத்துவம் அல்லது வேறுவென அவிசுவாசத்தால் உழலாநின்ற வுளத்தால் உழலாநின்ற யான்உமது வசன விசுவாசத்தினாலே ஆண்டே நிலைபெற் றிளைப்பாறுவேன், எனக் கூறியதைக் கேட்ட ஜனகர் கூறுவதாவது:—ஹே மகாமுனிவரே! நீருணர்ந்ததைப் பார்க்கினும் அதி மேன்மையானது யாதொன்றும் வேறு நிச்சயிக்கத் தக்கதாயில்லை; சுயமாகவே நீருணர்ந்தீர் குருவினாலும் மீண்டுங்கேட்டுக் கொண்டீர் அதுவே திடமெனத் துணிவீராக. அளவுகடந்த அறிவுவடிவ ஒரு புருடனே யிங்குள்ளான் ; அயலொன்றுமில்லை.

(அ.) அந்நிலையே நிச்சயம், என்றமையால் அதற்கு மேலான நிச்சயம் மற்றொன்றும் இன்றென்பதாயிற்று ; முன் ஸ்ரீ வியாசர் கூறிய வுத்தரத்தைப்பின் ஜனகருக்குத் தன்னுள் விகற்பித்தெழுந்த, என்னும் அடியாற் சுகர் சுவயமாகவே தெளிவுறக் கூறுதலால் அதன் சொரூபம் இவ்விடத்துச் சனகரும் அவ்விடத்து ஸ்ரீ வியாசரும் தெரிவித்திலர் என்றுணர்க. சம்சாரம் மித்தையாயின் றன்விகற்பத் துதித்தலும் தன் விகற்ப நாசத்திறத்தலும் கூடும் அதை மித்தையென்ப தெப்படியெனில், கூறுவார், இங்க கண்ட ஞானவாகாய புருடனுளன் அயலொன் றில்லையென்றார். தேசகால வஸ்துக்க

ளால் அபரிச்சின்னமான ஞான சொருபனுகிய பரமான்மா ஒருவனே யிருக்கின்றன், இவ்வாகாசாதிப் பிரபஞ்சம் இல்லவேயில்லே, "ஒன்றே யத்துவிதீயமான பிரமம் இவ்விடத்து நாநாத்துவம் எவ்வளவு மின்று என்னுஞ் சுருதியால் என்றுணர்க.

(ஸ்ரீ - வீர.-அ - கை.) மேலும் ஜனக மன்னவரே இதோபதேசமாகத் தொடர்ந்து கூறுகின்றார்:—அவ்வறிவென.

அவ்வறிவு சங்கற்பத் தாற் கட்டுண்ணு மதுவிடில்வீ டுறுமந்தவறிவு தன்னேச், செவ்விதினீ யறிந்தனேயாற் போகத் திச்சைசெகக்காட்சி யனேத்திேனயுந் தீர்தியானு, யெவ்வமற நிறைமனத்தா லடையற் பால யாவுமடைந் தாய்காட்சிக் கெட்டா தொன்றிற், கவ்வையற வடைகின்ருய் முத்தனுனுய் கருத்திலுறு மயக்கமெனுங் கவலே தீர்வாய். (18)

(ப - ரை.) அவ்வறிவு = அந்தச் சித்சொரூபமானது, சங்கற்பத்தாற் கட்டுண்ணும் = தனது சங்கற்ப வசத்தாற் பந்தப்படும், அதுவிடில் வீடுறும் = அச்சங்கற்பத்தை விட்டுவிட்டதேயானுல் மோக்ஷமுறும், அந்த அறிவு தன்னே = அறியத்தக்க அந்தப் பரம்பொருளே; செவ்விதினீ யறிந்தனேயால் = மிகத் தெளிவாகச் சாக்ஷாத்கரித்திருக்கின்றீர், போகத்திச்சை செகக்காட்சி யனேத்திேனயுந் தீர்தியானுய் = போகங்களினின்றும் இச்சைதீர்ந்துள்ளீர் உலகத்திருசிய மெல்லாவற்றினின்றும் நாட்டம் தீர்ந்துள்ளீர், எவ்வமற = குற்றங்கள் யாவுமற்ற, நிறைமனத்தால் = பரிபூரணமனத்திேனலே, அடையற் பாலயாவு மடைந்தாய் = அடையவேண்டிய அகிலத்தையும் அடைந்துள்ளீர், காட்சிக் கெட்டா தொன்றில் = அதிருசியமான வஸ்துவின்கண்ணே, கவ்வையற அடைகின்ருய் = களங்கமில்லாமல் உபஸ்திதி பெற்றிருக்கின்றீர், முத்தனுனுய் = கேவலம் மோக்ஷ சொரூபமாகவே விளங்குகின்றீர், கருத்திலுறு மயக்கமெனுங் கவலே தீர்வாய்=சித்தத்தின் கண்ணேயுற்ற பிராந்தியாகிய் கவலேயைவிட்டொழிப்பீராக-எ-று.

(ஸ்ரீ - வீர.) தற்சங்கற்பத்தாலே தளேயுறும், நிர்ச்சங்கற்பத்தாலே நீங்கும். என்பதாம். தனது சங்கற்பத்திலுலே கட்டுறுகின்றன் விட்டானேல் சங்கற்பத்தை விடுபடுகின்றன்; அதனுல் வெட்டவெளியாக உம்மால் அறியவேண்டியது அறியப்பட்டது, மகான்மாவாகிய உமக்கு முன்னர் எல்லாப் போகங்களினின்றும், இப்போது எல்லாத் திருசியங்களினின்றும் அதிவிரக்தியான துண்டாகி யிருக்கின்றது. ஹே பாலகராயினும் விடயத்தியாக சூரராதலின் மகாவீரரே! உமதுமதியானது நீண்ட ரோகங்களாகிய போகங்களி னின்றும் விரக்தியை யடைந்துளது, நீர்வேறென்ன கேட்கவேண்டு மென்றிச்சிக்கின்றீர்? உமக்குப் பூர்ணத்தன்மை யுண்டானதே போலச் சர்வஞானங்களின் மகாநிதியாகியும் எப்போதும் அபாரமான தவத்தையே செய்துகொண்டிருக்கும் உம்முடைய பிதாவிற்கும் பூர்ணத் தன்மையானது உண்டாகவில்லே. (இதுவும் இதுபோன்றனவும் சுகருக்குத் திடப்பொருட்டுக் கூறியவாம்) யான் வியாசரினும் அதிகனேயாவேன், அவருடைய சீடராயும் மைந்தராயும் இருக்கும் நீர் போகேச்சைகள் யாவற்றையும் அடியோடு விட்டிருத்தலின் என்னினும் அதிகமேயாவீர்; பூர்ண சித்தத்தையுடைய உம்மால் அடையத்தக்க யாவுமே யடையப் பெற்றனவாம், திருசியதரிசனமே சமுசாரத்திற் றள்ளுவதாதலின், பாகியதிருசிய விடயத்தில் விழவேண்டாம், ஹே பிரஹ்மசொரூபரே! முக்தராய்விட்டீர், மயக்கத்தை விட்டுத் தொலேத்துவிடும். "அற்பமதேனும் வேற்றுமை யாற்றிடின், அற்பனக்காலேயச்சமதடைவன்" என்னுஞ்சுருதியினுனே அறியத்தக்க துயலொன்றுளதென்னும் மயக்கத்தையும், திருசிய தரிசன மயக்கத்தையும் விட்டொழித்து விடும்.

(ச.) ஆதலால் = அவ்வறிவு சங்கற்பத்தாற் கட்டுண்ணும் அதுவிடில் வீடுறும் ஆதலால், ஆன்மாவிற் கன்னியமான சம்சாரம் மித்தையாகலின் விகற்பமாத்திர கற்பித மும், அது நிவிர்த்திக்கின் பவ நிவிர்த்தியும் கூடுமென்பது கருத்து. இவ்வியாவு மும் மால் உணரப்பெற்றதே யாமென்பார், செவ்விதினீ யென்றார். ஆல் = ஆதலால், கவலே = பிராந்தி. யாவற்றினின்றும் வைராக்கிய முண்டாயிருக் கின்றபடியினாலே உமக்கொரு குறைவுமின்றாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறு மகாராஜாவாலுபதேசிக்கப்பட்டபின் அச்சுக முனிவர் என்ன செய்தாரென்பதை யறியும் அவாநிகழ அறைகின்றார்:—சனகனென.

சனகனெனு மன்னவர்கோ னிவ்வாறோதத் தன்னிலையாம் பரம்பொரு ளிற் றளர்ச்சியாறி, யனகசுகன் பயநீங்கிச் சோகமாறிய யர்வகன்று செய லடங்கி யையந்தீர்ந்து, கனகவரையேறி நிருவிகற்பமான கலங்காத சமாதியிற் சிற்ககனத் துற்றான், றினகரனைச் செறிவருட மீரைஞ் ஞாற்றிற் றிரியொடு நெய்ம்மாண்ட விந்ததீபம்போன்றே. (19)

(ப - ரை.) ஜனகனெனும் மன்னவர்கோன் = மகான்மாவாகிய ஜனகமகாராஜா வானவர், இவ்வாறோத = இந்தவண்ணம் உபதேசித்தபின்னர், தன்னிலையாம் பரம் பொருளில் = தன்வடிவமாகிய பரமவஸ்துவின்கண்ணே, தளர்ச்சியாறி = விசிராந்தியை யடைந்து, அனகசுகன்பயநீங்கி = பாவமற்ற அச்சுகமுனிவர் அச்சமகன்று, சோகமாறி = சோகத்தைவிட்டு, அயர்வகன்று = ஆயாசமகன்று, செயலடங்கி = பரமவுபரதியுற்று, ஐயம்தீர்ந்து = சின்னசமுசய மூடையவராய், கனகவரையேறி = மேருவின்சிகரஞ்சென்று, நிருவிகற்பமான கலங்காதசமாதியில், = யாதொருஅசைவுமில்லாத விகற்பமற்ற சமாதி யின்கண்ணே யழுந்தியிருந்து, தினகரனைச் செறிவருடம் = சூரியசம்பந்தமாய்வரும் வருடங்கள், ஈரைஞ்ஞூற்றில் = ஆயிரங்கழிந்தபின்னர், திரியொடு நெய்மாண்டு அவிந்த தீபம்போன்று = இந்தனங்களாகிய திரியும் எண்ணெய்யும் தீர்ந்து அணைந்தவிளக்கே போல, சிற்ககனத்துற்றான் = சிதாகாசமாத்திரமாக எஞ்சினார்.

(ஸ்ரீ - வீர.) மகாராஜா வுபதேசித்தபின் ஞானஅடைவினனே பிரதிபிம்பமெனப் பட்ட தன்பால் அதிஷ்டானத்தன்மையைக்கண்டு சொஸ்தமாய்ச் சுகமாயினரென்பதாம். ஜனகராகிய மகாத்மாவால் அம் முற்கூறிய அளவுகடந்த சிதாத்மவைகரேநீர் என்பதாக உப தேசிக்கப்பட்ட அச்சுகர் திருசியமலினமற்ற நிர்மலமான பரமவஸ்துவின்கண்ணே சும்மா விருந்தனர். சோகம்பயம் ஆயாசங்கண் முழுவதுமற்றுச் சேட்டையற்றுச் சம்சயமற் றுச் சாத்விகதேவதைகள் வாசஞ்செய்தலான் விக்ஷேபம் யாதொன்றுமின்றி யிருத்த லின் அநிந்திதமாய்ச் சமாதிக்கநுகூலமான மேருவின் சிகரத்தைநோக்கி நிருவிகற்ப சமா தியின்பொருட்டுச் சென்று, ஆண்டு நிருவிகற்பசமாதியிற் பதினாயிரவருடமிருந்து தைலந்தீர்ந்த தீபமேபோல ஆன்மாவின்கண்ணே விதேகமுத்தியையடைந்தார்.

(ச.) சனகமகாராசாவானவர், சுகமுனிவரே! நீர், அதிபாகியமும் அவ்வாறே அபா கியமும் அந்தரத்திற்கும் மிகவந்தரமுமான வஸ்துவைப் புத்தியாற் பார்த்தும் பாராதவர் சாக்ஷி பரிபூரணர் கேவலர் என்றிவ்வாறு சுகப்பிரஹ்மத்திற் குபதேசித்தருள, கனகவ ரையேறி = மேருவின் சிகரத்திவர்ந்து, சிற்ககனத்துற்றான் = சிதாகாச சொரூபமாகிய ஆன்மாவிலக்கியமானார். வருடமீரைஞ்ஞூற்றிற் சிற்ககனத்துற்றாரென்பதனால் ஆயிர வருடந் திருசியத்திலிருந்தாரெனக் குறிப்பித்ததாம். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை) சுகரடைந்த விதேகமுக்தியை வருணித்துக்கொண்டு ஸ்ரீ இராகவரைச் சுகர்க்கொப்பாக்கி ஸ்ரீவிசுவாமித்திரமகரிஷி கூறுகின்றார்:—சிந்தனையென.

சிந்தனையாங் களங்கமறச் சுத்த னாகித் திரைகடலிற் செறிந்தொன்றுந் திவலை போல, வந்துறுவா தனைபோய்த்தற் பதத்தொன்றானான் மாயாமோகந் தீர்ந்து வருத்தந் தீர்ந்தான், அந்த நெறி யுனக்குமா மறிவ தெல்லா மறிந்த மனத்திற் குரியவடைவே தென்னிற், சந்ததமு மகிழ்ச்சி செறி போகமெல்லாந் தனதென்னுஞ் சுதந்தரத்தைத் தவிர்ந்து நிற்றல். (20)

(ப - ரை) சிந்தனையாம் களங்கமறச் சுத்தனாகி = எண்ணங்களாகிய மாசுகளெல்லாந்தீர்ந்து தூயவனாகி, திரைகடலிற் செறிந்தொன்றுந்திவலைபோல = அலைகடலதனிற் றுளியானது சேர்ந்து ஐக்கியபாவத்தை யடைதலேபோல, வந்துறுவாதனைபோய் = வந்துசேர்ந்திருந்த வாதனைகணீங்கி, தற்பதத்தொன்றானான் = பவித்திரமான வமலபரமான்மாவில் ஐக்கியத்தை யடைந்தான், மாயாமோகந்தீர்ந்து வருத்தந்தீர்ந்தான் = மாயையாலுண்டாகியிருந்த மோகம்போய்ச் சோகங்களெல்லாம் விட்டொழித்தான், அந்தநெறியுனக்குமாம் = அம்மார்க்கமட்டுமே உனக்கும் ஆம் அதிகம் வேண்டியதில்லை, அறிவதெல்லாமறிந்த மனத்திற்கு = தெரியவேண்டியதைத் தெரிந்த சித்தத்திற்கு, உரிய அடைவேதென்னில் = பொருத்தமான இலக்கணம் யாதென்றால், சந்ததமும் மகிழ்ச்சி செறிபோகமெல்லாம் = எப்போழ்தும் சந்தோடத்தைப் பயக்கும்போகங்கள் யாவும், தனதென்னும் = தன்னுடையனவென்பதான சுதந்தரத்தைத் தவிர்ந்து நிற்றல் = சுவதந்திரமதியைத் தியாகஞ்செய்து சொஸ்தமாகி யிருத்தலேயாம். (எ-று.) (20)

(ஸ்ரீ - வீர.) சிந்தனை = சங்கற்பம், அதுவேகளங்கம் = அபவாதம். சிந்தனையாங் களங்கமற வென்றமையான் தூல அஞ்ஞானநீக்கம் கூறப்பட்டது, சுத்தனாகியென்றமையானே மூல அஞ்ஞானநீக்கம் கூறப்பட்டது என்பதாம். பிரஹ்மமும் அநாதியாகந்துக இருமலரகிதமென்பார் அமலபாவன ஆன்மாவாகிய தற்பதத்தென்றார். எல்லாப்போகக் கூட்டங்களையும் மீண்டும் ஆசைப்படாமல் விடுவதே அறியவேண்டியதை யறிந்தமனதிற்கு இலக்கணமென்பது துணிபாம். திருசியவுன்முகத்தன்மையும், அதற்கு மூலமாகிய அஞ்ஞானமும் அகன்றமையின் சுத்தனாகி, அதனானே சஞ்சித ஆகாமியங்கள் காணப்பெறாமையானும், புண்ணியபாவங்கள் பற்றாமலும் அற்றும்போய்விட்டமையானும் அமலான்மாவும், பிராரப்தகருமந் தேய்ந்துவிட்டமையின், அசுத்ததேகாதி நீங்கிவிட்டமையின், புனிதபதமும் சுயமாகவே நிருமலமும் ஆகிய பரமான்ம வஸ்துவின்கண்ணே நீலமேக சம்பந்தம் விட்டுப்பிரிந்து கடலில்விழுந்து ஒன்றாகும் நீர்த்துளியேபோல மகாத்மாவாகிய சுகர் சர்வவாசனையும் ஒழிந்தவராகிப் பேதஞ்செய்யு முபாதியற்றமையின் உண்மையாய அகண்டஐக்கியத்தை யடைந்தனர்; பேதத்தையுண்டாக்கும் அஞ்ஞானமானது அடியோடும் அழிந்துபோனபின்பு ஆன்மாவிற்கும் பிரஹ்மத்திற்குமில்லாத பேதத்தைச் செய்விப்பவன் யாவனென விஷ்ணுபுராணமுங் கூறுகின்றது. சுகர்கதையைப் பிரகிருதத்திற் பொருத்திக் கொண்டு ஸ்ரீ இராமருக் குபதேசிக்கும் பொருட்டு ஸ்ரீ வசிஷ்டரை முயல்விக்குமாறு தொடங்கிய ஸ்ரீ விசுவாமித்திரர் கூறுகின்றார், அந்தநெறியென. அந்த வியாசமைந்தனுக்கு மலமாத்திர நீக்கும் எவ்வளவு வகையாய யூகத்தோடு கூடிய வுபதேசம் பொருந்தியதோ அவ்வளவே யுனக்கும் வேண்டியதாக இருக்கின்றது. ஹே முனீசுரர்களே! இந்த நல்லமதிமானாகிய இராமனுக்குப் போகங்களியாவும் ரோகங்களைப்போல ருசிக்கவில்லை யாதலின் இவனால் அறியவேண்டியது முழுவதும் அறியப்

பட்டதே யாய்விட்டது. போகக்கூட்டங்கள் யாவும் சுவைக்காமற் கைத்ததே. அறிய வேண்டியதை யெல்லாமறிந்த மனத்திற்குத் திடமான இலக்கணமாகும்.

(ச.) வாசனைபோய் = வாசனாக்ஷயமாய், தற்பதத்து = பரிசுத்தமான தற்சொரூபத்தில், மாயாமோகம் = கெடாத சந்தேகம். (மலம் = சம்சயரூப களங்கம்) அந்த நெறி = அவ்வியாச புத்திரர்க் குரித்தான சந்தேக நிவிர்த்தி மாத்திரமே இராகவ! உனக்கும், ஆம் = உரித்தாம், உரிய அடைவு = உரித்தான இலக்கணம், தவிர்ந்து நிற்றல் = மீட்டணுகாது துடைத்திருத்தலாம். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாசனையே பந்தகாரண மெனவும் அது தீர்தலே மோக்ஷ காரணமெனவும் அஃதின்றியவரே ஜீவன் முக்தரெனவும் கூறுகின்றார்:—போகமென.

போகமுறு பாவனையாற் பொருளல்லாத பொருளிலெழு பந்தநிலை பொருந்த வன்பாஞ், சோகமுறு பாவனைதான் சாந்தமாகிற் றுயர்பந்த மிகத்தேய்ந்து துலைந்து போகு, மிராகவனே வாதனையி னேர்மைவீடா மிகப்பொருளின் வாதனையி னிறுகல்பந்தஞ், சேகறவென் றவர்க்கேது வின்றிப் போகத்திரள் வெறுப்பா மேலவரே சீவன்முத்தர். (21)

(ப - ரை.) போகமுறு பாவனையால் = போக பாவனையினாலே, பொருளல்லாத பொருளிலெழு = அவஸ்து ஜன்னிய, பந்தநிலை = பந்தமானது, பொருந்தவன்பாம் = மிகவுந் திடமுடையதாம்; சோகமுறு பாவனைதான் = துயர்செய்யும் பாவனையானது, சாந்தமாகில் = உபசாந்தியுற்றால், துயர் பந்தம் மிகத்தேய்ந்து துலைந்துபோகும் = துக்கமய சமுசாரம் அத்தியந்தந் தேய்ந்துபோய் அடியோடு அழிந்துபோம்; இராகவனே != ஹே இரகுவம்ச கேதுவே! வாதனையின் நேர்மைவீடாம் = வாசனை சிறுகலே மோக்ஷமாம், இகப்பொருளின் வாதனையி னிறுகல்பந்தம் = காணப்பட்ட பதார்த்தங்களின் வாசனையின் றிடத்தகைமையே பந்தமெனப்படும், ஏதுவின்றி = கீர்த்தி முதலிய காரணங்களை முன்னிட்டு வராமல், சேகறவென்றவர்க்கு = அடியோடு நீங்கும்படிச் சயித்தவர்க்கு, போகத்திரள் வெறுப்பாம் = போகக் கூட்டங்களில் இயல்பாகவே துவேடந்தோற்றும், மேலவரே = அத்தகைய பெரியோரே, சீவன் முத்தர் = ஜீவிக்குங் காலத்திலேயே முத்தரெனப் படுவர். (21)

(ஸ்ரீ - வீர.) கீர்த்திலாபாதி நிமித்தத்தானே எவர்க்குப் போகங்கள் பிரியமாகமாட்டாவோ அவர் ஜீவன்முக்தர் ஆகார் என்பார், ஏதுவின்றி யென்றார். கீர்த்தியாதியின் பொருட்டன்றியே வைராக்கியம் வேண்டற் பாலதாம். போகவாசனையினாலே பொய்ப் பொருள்களா லாயபந்தம் மிகத்திட மாகின்றது; அவ்வாசனை தேயத்தேயப் பந்தமும் உலகின் கண்ணே மிகவுந்தேய்ந்து விடுகின்றது. ஹே இரகுவீர! வாசனாக்ஷயமே மோக்ஷமென மகான்களாற் கூறப்படும், பதார்த்த வாசனைகளின் றிடத்தன்மையே பந்தமெனப் பகரப்படும், எத்துணை விடயவாசனை யழிகின்றதோ அத்துணை விடுபடுகின்றான், எல்லாவாற்றானும் அழியினோ எல்லாவற்றி னின்றும் முக்தியை யடைகின்றான். அற்பசிரவணாதி யாயாசத்தினானும் அபரோக்ஷ திருக்கு சொரூபம் திருசிய விவேகமாத்திரத்தினானும் நன்கு பரிசயித்தல் கூடுமாதலினானும், தனதாத்ம தத்துவத்தின் தொடக்க ஞானமுண்டாதல் கூடும், விடய வைராக்கியமோ மிகக்கிலேசமுற்றே யுண்டாகின்றது. ஆனாலந்த ஞானமே போதுமே வைராக்கியத்தினால் யாதுபயனெனின்? இராகாதிகளின் றடையில்லாமல் யாவன் காண்கின்றனனோ அவனே தத்துவஞான

ஜன்னிய அவித்தையழிவின் பலத்தை யுடையவனும் அறியவேண்டியதை யறிந்தவனும் பண்டிதனும் ஆவன்: தொடக்கஞானியோ மூர்க்கத்தன்மையை யகற்றுமையின் அத்தகையனுகான். அறைந்த பண்டிதனுகிய மகாத்மாவின் பொருட்டோ போகங்கள் பலாத்காரத்தானும் ருசியையுண்டாக்க முடிவனவாகா; கீர்த்தி பூஜை இலாபம் முதலிய யாதொருபல உத்தேசமு மில்லாமலே, கேவலம் யாவனுக்குப் புவியிலுள்ள போகங்களெல்லாம் அருசியாகத் தோன்று கின்றனவோ அவனே ஜீவன்முக்த னெனப்படுவன், இடாம்பீக போகத்தி யாகத்தினுனே இஷ்டசித்தி யெங்ஙனுண்டாம்? வைராக்கிய ஞானவுபரதிகள் மிக விருத்தியாயின் பரஸ்பர சகாயத் தன்மையினு னுண்டாம் ஞான பரிபாக அதிசயத்தானே மூலமானது கெடுதலின் அத்தியந்த ஆசை நாச முண்டாகும். எத்துணை எத்துணை அறிவு அறியப்பட வில்லையோ அத்துணை யத்துணை ஜந்துக்கட்கு விடயங்களில் வைராக்கியம் மருத்தலத்திற் கொடிபோல உண்டாவதில்லை. "இரதமுமிவற்கிங் கிறைகண்டேகும்" எனக்கீதையு மிதையே கூறுகின்றது.

(ச.) பாவனை = வாசனை. பொருளல்லாத பொருளிலெழும் = அஞ்ஞானத்திற் சனிக்கும். பாவனைதான் = போகவாசனைகள். எதுவின்றி = தவவிரதாதி நியமங்களைத்தவிர எவற்குப் போகங்கள் ருசிக்கவில்லையோ அவன் ஜீவன்முக்தன் எனப்படுவன் என்பதாம். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை) இந்த ரம்மியமான போகவிடயங்க ளியாவும் எதனுல் இரகுநந்தனனை இரஞ்சிக்கச் செய்யவில்லையோ அதனுனே பாவனையறிய வேண்டியது முழுவது மறிந்தவனுகவே தெரியவேண்டும் என ஸ்ரீ இராமர் தத்துவ முணர்ந்தவர் ஆயின் உபதேசிக்க முயலல் யாதுகாரணம் பற்றியோ வெனின் கூறுகின்றுர்:—இராமனென.

**இராமன் மனத் துணர்பொருளே பொருள்வே றில்லை யெனவுயர்ந்தோர் வாக்கினு லியம்பக் கேட்டு, மாமனத்தி னிளைப்பாறி யைய நீங்கு மகத்தான விவனுக்கு மதித்துச் சொல்வா, னேமமுறு காலமூன் றறிந்தோனுகி யிரவிகுல குருவாகி யெல்லா நோக்கி, நாமவுரு வனைத்துக்குஞ் சான்றுய் நின்ற நல் வசிட்ட னெனச் சபையி னவின்ற பின்னர்.** (22)

(ப - ரை.) இராமன் மனத்துணர் பொருளே பொருள் = இராகவன் மனத்தில் உணர்ந்தபொருளே பொருளாகும், வேறில்லை = அயலில்லை, என = என்பதாக, உயர்ந்தோர் வாக்கினுல் = சத்துக்களின் திருவாக்கினுலே, இயம்பக்கேட்டு = கூறச்சிரவணித்து, மாமனத்தினிளைப்பாறி யையநீங்கும் = மகாமனத்தின் விசிராந்தி யடைந்து சமுசய நீங்கிச் சுகரூபமாவன்; மகத்தான இவனுக்கு = பேரதிகாரியாகிய இவன்மதியை, மதித்து = அனுசரித்து, சொல்வான் = உபதேசிக்கக்கூடியவர் யாரென்றுல், ஏமமுறு காலமூன் றறிந்தோனுகி = திரிகாலங்களிலுமுள்ள அழகிய யாவற்றையும் நன்கறிந்தவராகி, இரவிகுலகுருவாகி = சூரியவங்கிச அரசர்க்கெல்லாம் குலகுருவாய் எல்லாம் நோக்கி = சர்வஞ்ஞராய், நாமவுருவனைத்துக்குஞ் சான்றுய் = சர்வநாம ரூபங்கட்குஞ் சாக்ஷியாய், நின்ற = இலங்காநின்ற, நல்வசிட்டன் = பிரஹ்மபுத்திரராகிய மைத்திரியாதிநிறைந்த ஸ்ரீவசிஷ்டபகவானே யாவர், எனச்சபையில் நவின்றபின்னர் = ஹே முனீசுரர்களேயென்று அப்பேரவையின்கண் ணியம்பபின்னர். (22)

(ஸ்ரீ - வீர.) ஹே முனிநாயகர்களே! இராமச்சந்திரன் யாதையுள்ளே யறிந்துள்ளானே அதுவேவஸ்துவென்பதாகச் சற்புருடர்கள் வாயிலாய், முன்னர் விசுவாசதிட

யில்லாமையினாலே அடையாததுபோலிருந்தது, இப்போதுகேட்டு விசுவசித்து அதன் கண்ணே சித்தவிசிராந்தியையடைவன். அதன் மூலமாய் அன்னிய அதிகாரிகளுங் கேட்டுத் தத்துவத்தை யடையலாம். ஆகவே யுபதேசம் சர்வவுபகாரமாகும். சரத்காலமாகிய இலக்ஷ்மி மேகமற்ற நிர்மல ஆகாசமாத்திரமாக எஞ்சியிருப்பதை வாஞ்சிப்பதேபோல இரகுநந்தனனுடைய மதியும் துவைதமியாவற்றையும் நீக்கி அத்விதீய சின்மாத்திரமாய்ப் பரிசேடித்து நிற்றலாகிய விசிராந்தியைக் கேவலம் விசுவாசத்தால் வாஞ்சிக்கின்றது. ஈண்டு இம்மகாத்மாவாகிய இராகவனுக்கு இளைப்பாறுதலுள்ளத்தி லுண்டாவதற்காக இப்பகவானாகிய ஸ்ரீமான் வசிஷ்டரே யுக்தியை யுபதேசிக்கவேண்டும் நீரே யேன் உபதேசிக்கக்கூடாதெனின்? இக்ஷ்வாகுகுல முழுவதிற்கும் எப்போதும் குலகுருவாகவும் நியந்தாவாகவும் இருப்பவரிவரே; இந்நியந்தாவைக் கடந்தன்றோ, திரிசங்கு முதலியோர் பெருந்துயரை யடைந்தனர், சர்வசாஸ்திரங்களையுமிவர் அறிந்தவர், உண்மையாகச் சர்வசாக்ஷியா யிருப்பதோடும், யோகபலத்தாலும் பிரிவுபிரிவாகவும் இவர் யாவற்றையும் அறிந்துகொண்டே யிருப்பவர், அதற்கேதுவாக மூன்றுகாலங்களிலும் நிருமலமாகிய மோகங்கடந்த தரிசனசாதனமாய மனத்தையுடையவரு மிவரேயாவர்.

(ச.) மகத்தான இவனுக்கு = மகாமனதினையுடைய இராகவனுக்கு, மதித்து = விசிராந்தியிதுவேயென நிச்சயித்து. (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீவசிஷ்டபகவானைநோக்கி ஸ்ரீவிசுவாமித்திரர் ஸ்ரீஇராகவர் உத்தமோத்தம அதிகாரியாக இருக்கின்றபடியினாலே இனிதுபதேசிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தல்:—நல்லெனை.

**நல்வசிட்டன் முகநோக்கி யுணர்தி யோமுன் னமிருவர் பகை நீங்க நல்லோ ரெல்லாந், தொல்வினைபோய் முத்திபெறக் கமல வேதா சொன்னதனி ஞானத்தின் றொகுதி யெல்லாங், கல்விமிகு மிராமனுக்குச் செப்பல் வேண டுங் காதறீர் மாணுக்கன் கருத்திற் சொல்லுஞ், செல்வவுப தேசமே ததுவே ஞானச் செழுநூலின் பொருளுமிது சிறப்பு மீதே. (23)**

(ப - ரை.) நல்வசிட்டன் முகநோக்கி=சத்துவசீலராய்ப் பரமசாந்தராய ஸ்ரீவசிஷ்டபகவானுடைய திருவதனத்தை நோக்கி, உணர்தியோ = ஞாபகமிருக்கின்றதா? முன் நாமிருவர் பகைநீங்க = பூர்வம் நம்மிருவரின் வைரசாந்தியின் பொருட்டும், நல்லோ ரெல்லாந் தொல்வினைபோய் = நல்லமகாத்மாக்களெல்லாம் அநாதியாய் அஞ்ஞானம் நீங்கி, முத்திபெற = மோக்ஷத்தை யடையும் பொருட்டும், கமலவேதா = தாமரையின் கண்ணே எழுந்தருளி யிருக்கும் வேதநாயகர், சொன்ன = உபதேசித்தருளிய, தனி ஞானத்தின் = ஒப்பற்ற பிரஹ்மவித்தையின், தொகுதியெல்லாம் = சாரார்த்தங்களை யெல்லாம், கல்விமிகும் இராமனுக்கு = வித்யாவிநயகுணசம்பன்ன பரமஉத்தம சீடனாகிய இராகவனுக்கு, செப்பல் வேண்டும் = உபதேசித்தருளல்வேண்டும், காதல் தீர்மாணுக்கன் கருத்தில் சொல்லும், = சகலஆசைகளையும் நீக்கிய உத்தமசீடனது மனதில் ஞானமுதிக்கும்படி யுபதேசிக்கும், செல்வவுபதேசமேததுவே ஞானம் = எந்நல்லவுபதேசமுண்டோ அதுவே ஞானமாம், செழுநூலின் பொருளும் = ஞானப்பிரதிபாதக வளமைவாய்ந்த வேதாந்தசாஸ்திரத்தின் அர்த்தமும், இது = இஃதேயாம், சிறப்பு மீதே = அகண்டித விசேடமும் இதுவேயாம். [23]

(ஸ்ரீ - வீர.) ஹே வசிஷ்டபகவன்! முன்னம் நம்மிருவருடைய வைரமுஞ் சாந்தியாகும்பொருட்டும் மகாமதிமான்களாகிய முனிவர்களின் சிரேயசின்பொருட்டும் நிடதமலை

யினுடைய சோலையடர்ந்த விசாலமான இடத்தில் பகவானாகிய ஸ்ரீ பிரஹ்மாவால் விரிவாகவுபதேசிக்கப்பட்ட மேன்மையாய யுக்திநிறைந்த ஞானமானது தங்களுக்கு ஞாபகத்திலிருக்கின்றதா? எந்த யுக்திப்பிரவாகம் நிறைந்த ஞானத்தினாலே இந்தச்சம்சார சம்பந்தமாய வாசனையானது சூரியனா லிருளானது முற்றினுமொழிவதேபோல முற்றினுஞ் சாந்தமாகுமோ, அதேஞானத்தைப் பரமசீடனாகிய இராமமூர்த்திக்கு விரைவில் விசிராந்தியானதுண்டாதற்பொருட்டு நீருபதேசிக்கவேண்டும். இவ்வுமதுபதேசமானது அற்பபல அதிகப் பிரயாச முடையதாகாது; ஏனெனின்; இராகவன் கல்மஷம் நீங்கினவனாக இருக்கின்றான். நிர்மலமான கண்ணாடியில் முயல்வில்லாமலே முகமானது பிரதிபிம்பிக்குமல்லவா? இவ்வுபதேசம் பயனின்மையை யுண்டாக்க மாட்டாது; மாறாக. உம்முடைய ஞானத்தன்மை தயை முதலியவற்றிற்குப் பயனுடைமை கிடைத்தலானே மேன்மையே யுண்டாகும், விரக்தனாகிய நல்ல சீடனுக்கு யாதுபதேசிக்கப் படுமோ அஃதே ஞானமுஞ் சாஸ்திரார்த்தமும் ஆகும் அஃதே புகழத்தக்கதும் பாண்டித்தியத்தை விளக்குவது மாகும். சுபாத்திரத்தி லீயாவிடின் வீணாகப் போதலின் இகழ்வே யன்றோவாம்.

(ச.) கல்விமிகு மிராமனுக்கு = கல்வியால் அமித காந்தியையுடைய இரகுநந்தனனுக்கு, மாணாக்கன் = சற்சீடன், அதுவே ஞானம், சிறப்பும் = அகண்டித மகிமையும் ஆமென்பதாம். (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அநதிகாரிக் குபதேசித்தல் அடாத காரியமெனவும் ஸ்ரீ இராமருக் கவசியம் உபதேசிக்க வேண்டு மெனவும் ஸ்ரீ விசுவாமித்திர முனிவர் கூற ஸ்ரீ நாரதாதியர் அவசியம் செய்யத்தக்க தென்கின்றார்:—காதலென.

**காதல்செறி பொல்லாமா ணாக்கனுக்குக் கற்பித்த வுபதேசங் கருநாய்த் தோலுண், மேதகுபா லெனவசுத்த மேவுமென்று மிகுகாதி சேப்பலவும் விளம்பக் கேட்டுத், தீதறுநா ரதன்வேத வியாதனாதித் திரண்முனிவர் நன்றி தெனச் சிறப்புச் செய்தார், காதிபுதல் வனைநோக்கிக் கமலத்தோனேர் கமல முனி புதல்வனிவை கழறலுற்றான். (24)**

(ப - ரை.) காதல்செறி பொல்லா மாணாக்கனுக்கு = அவிரக்தனாகிய துஷ்டசிக்ஷைப்படாத சீடனுக்கு, கற்பித்தவுபதேசம் = அனுக்கிரகித்த வுபதேசமானது, கருநாய்த்தோலுள் = கறுத்துக் கழிபட்ட நாய்த்தோலா லாக்கப்பட்ட துருத்திப்பையுள்; நிரப்பிய, மேதகுபாலென அசுத்தம்மேவும் = மேன்மைதங்கிய காராம் பசுவின்பாற் போற் றூய்தின்மையை யடைந்து நிந்திதமாம், என்று = என இவ்வண்ணம், மிகுகாதி சேப்பலவும் விளம்பக்கேட்டு = தவமேன்மை மிக்க காதிபுத்திரராகிய ஸ்ரீ விசுவாமித்திரர் அநேகமாக எடுத்துக் கூறியபோது அதைக்கேட்டு, தீதறுநாரதன் வேதவியாதனாதித்திரண் முனிவர் = அச்சபையின் கண்ணிருந்த யாதொரு மாசுமற்ற ஸ்ரீநாரதா வியாதாதி, மகரிஷிக ளெல்லாரும், நன்றிதெனச் சிறப்புச் செய்தார் = நல்லது நல்லது என்பதாக விசேடமாக ஆமோதித்தனர், காதிபுதல்வனை = ஸ்ரீ ஜகன்மித்திர பகவானை, நோக்கி = விளித்து: கமலத்தோனேர் கமலமுனி புதல்வன் = பிரஹ்மாவுக்கு சமானமான பிரஹ்ம புத்திரர் ஆகிய ஸ்ரீ வசிஷ்டபகவான், இவைகழறலுற்றான் = இம் மொழிகளைக் கூறத்தொடங்கினர். (எ-று.) (24)

(ஸ்ரீ - வீர.) சீடனும் விரக்தனும் அல்லாதவனுக்கு ஏதேனுஞ் சிறிதை யுபதேசஞ் செய்யினோ அது கருநாய்த்தோலிற் கவிழ்த்த காராம்பசுவின் பாலைப்போற் களங்கத்

தையே யடையும். இராகாதிகளின் காரணம் அவித்தையாக விருத்தலின் அவ்வவித்தை நீங்கலானே இராகம் பயம் குரோதம் முதலியவை நீங்கினவரும், அபிமான மற்றவரும், பாவமற்றவரும் ஆகிய உம்மைப் போன்றவர் எவர்க்குபதேசஞ் செய்கின்றாரோ அப்போதே அவ்விடத்திலேயே அபரோக்ஷ ஆன்மாவின் கண்ணே கேட்டமதியானது இளைப்பாறுதலை யடையும். காதிமைந்தராகிய ஸ்ரீ விசுவாமித்திரரானே இவ்வாறியம்பப்பெறவே ஸ்ரீ வியாசநாரதர் முதலிய முனீசுரர்களெல்லாம் அப்பொருளையே நல்லது நல்லதெனப் புகழ்ந்து கொண்டாடிப் பேசினார்கள்; அதன்பின் சக்கரவர்த்தியின் சமீபத்தில் வீற்றிருப்பவரும் மகாதேஜஜை யுடையவரும், பிரஹ்மாவின் மைந்தரும் பிரஹ்மாவிற்குச் சமான மானவரும், மகாமுனிவரும் ஆகிய ஸ்ரீ வசிஷ்ட பகவான் பிரஹ்மாவின் மைந்தராய்ப் பிரஹ்மாவைப் போலவே மகாதேஜசு முதலிய குணங்களோடு கூடி விளங்குதலின் திவ்யதேஜசோடு கூடிய மகரிஷிகளினது முன்னிலையிற் பிரஹ்மாவைப் போலவே புகலத் தொடங்கினார். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தத்துவ ஞானிகட்கு இலக்கணபூதமாய அபிமான மின்மை முதலிய நற்குணங்களைத் தமதொழுக்கத்தானே சிக்ஷிப்பித்துக் கொண்டு விநயமான மொழிகளானே ஸ்ரீ விசுவாமித்திரராற் பிரார்த்திக்கப்பட்டதைச் செய்கின்றேன் எனப் பிரதிஞ்ஞை செய்தல்:—கலைமுனியென.

கலைமுனியே நீர்மொழிந்த படியே செய்வேன் கற்றுணர்ந்த பெரியோர் சொற் கடப்பா ரியாரே, நிலையில்பவ மயக்கமறப் பதுமவேதா நிடதமலை மேலுரைத்த நிமலஞானம், அலைவின்மனத் திருக்கின்ற துரைப்பே னென்ன வஞ்ஞானத் தொகுதிகெட வகண்ட ஞானத், தொலைவில் பரபதமெவர்க்குந் தோன்று மாறு சுத்தவிந யத்துடனே சொல்வதானான். (25)

(ப - ரை.) கலைமுனியே = சர்வசாஸ்திரங்களையும், அறிந்த மகரிஷியே! நீர்மொழிந்தபடியே செய்வேன் = தாங்கள் ஆணையிட்ட பிரகாரமே செய்யக்கடமைப் பட்டுளேன், கற்றுணர்ந்த பெரியோர் சொற் கடப்பார்யாரே = கற்கவேண்டியதைக் கற்று, அதனால் உணரவேண்டியதை யுணர்ந்த மகான்களினுடைய திருமொழியைச் சமர்த்தரேயாயினும் யாவரேகடக்கச் சமர்த்தர், நிலையில் பவமயக்கமற = நைசுவரமான சமுசாரப்பிரம சாந்தியின் பொருட்டு, பதுமவேதா = தாமரை மறையோனாகிய என்னரும் பிதா, நிடதமலைமே லுரைத்த நிமலஞானம் = நிடதபர்வதத்தின் மீதெழுந்தருளி யிருந்து முன்ன ருபதேசித்தருளிய நின்மலமான ஞானார்த்தங்க ளியாவும், அலைவின் மனத் திருக்கின்றது = நிச்சல சித்தத்தில் ஒன்றும் மறையாது இருக்கின்றன, உரைப்பேன் என்ன = இராகவனுக் குபதேசிக்கின்றேன் என்று, அஞ்ஞானத் தொகுதிகெட = அஞ்ஞானக்கூட்டங்கள் யாவுமிரிந்தோட, அகண்டஞான தொலைவுஇல்பரபதம் = கண்டிதமில்லாத ஞானமயமான அழிவில்பரம கைவல்யபதம், எவர்க்குந்தோன்றுமாறு = எல்லாவித அதிகாரிகட்கும் புலப்படும் வண்ணம், சுத்தவிநயத்துடனே சொல்வதானான் = ஸ்புடமாய அர்த்தவாணிகளோடும் அதிகவணக்கத்தோடும் உபதேசிக்கத் தொடங்கினார். (எ-று.) (25)

[ஸ்ரீ - வீர.) ஆணையிடல்=ஆஞ்ஞாபனஞ்செய்தல். உபதேசிக்க உபயோகியா யிரா நின்ற சர்வசாமக்கிரிகளின் சேகரத்தால் உபதேசிகர் தேசசையடைந்து ஸ்ரீவசிஷ்டபகவான் விளங்கினார் என்பதாம். ஹே மகாமுனிவரே! நீர் ஆணையிட்டபடியே யாதொரு தடையுமில்லாமற் செய்வேன், சமர்த்தராயினும் கற்றுணர்ந்த பெரியோர் சொற்கடக்

குஞ் சமர்த்தர்யாருளார்? யானிப்போதே அதிவிரைவில் அரச குமாரர்களாகிய இராமாதிகளினது மனத்திலிருக்கப்பட்ட அஞ்ஞானத்தை ஞானத்தினலே, தீபத்தினலே இரவினிருளை அகற்றுவதேபோல அகற்றுவிப்பேன்; அஞ்ஞானத்தை நீக்குவதிலும் ஞானத்தை யாக்குவதிலும் யாதொருதடையுமே கிடையாது. கிடத மலையின்கண்ணே சம்சாரமயக்க நீங்கும்பொருட்டு முன்னர் எந்தந்தையாகிய பிரஹ்மாவினல் எந்தஞானமானது உபதேசித்தருளப்பட்டதோ அவையாவற்றையுமே சிதறுமற் கிரந்தத்தோடும் அர்த்தத்தோடும் ஸ்மரித்துக்கொண்டே யிருக்கின்றேன்; அபரிச்சின்னமாதலினலே பூர்ணமாக எந்தஞானசொரூப ஆத்மதத்துவமுளதோ அதை நிரந்தரம் அனுசந்தானஞ் செய்துகொண்டே யிருக்கின்றேன். இந்தமகாத்மாவாகிய ஸ்ரீவசிஷ்டபகவான் இந்தப்பிரகாரம் வெளிப்படையாகப் பிரதிஞ்ஞையைச்செய்து,சூரனும் நடனும் ஆயுதாதிகளைத்தரித்தல் பூடணுதிகளைப் பூணன்முதலிய சாமக்கிரிகளைச் சேர்த்துக்கொண்டு இனிதாகவிளங்குவதேபோலச் சீடனுக்கான்மஞான மெளிதிலுண்டாவதற்காகவேண்டிய உபாயங்களான திருஷ்டாந்தம் கதைபிரமாணம் தருக்கம் முதலியவற்றின் அனுசந்தான உற்சாகாதிசாமக்கிரிகளைச் சேர்த்தலானே உபதேசஞ் செய்பவர்களின் மிகுந்த அழகைக்கொண்டு இனிதாக விளங்குபவராய்ச் சகத்திலுள்ள சர்வப்பிராணிகளின் அறியாமையினது வேரைப்பிடுங்குவதும் பரமபதத்தை முக்கியமா யறிவிப்பதும் ஆகிய இந்தச் சாஸ்திரத்தைக் கூறத்தொடங்கினர்.

(ச.) சமுசாரமயக்கஞ் சாந்தியாக, உரைத்த = முன்பு உபதேசித்த பரிகரம் பரியங்க யோகபட்டிகையாதியாம், அவற்ருலாக்கப்பட்ட சுகாசனம் அதனல் ஆசிரியரழகையமைந்திலங்கின ரென்பதாம். (25)

சுகர் கதை முற்றிற்று.

# முமுக்ஷுப் பிரகரணம்.

(*)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஓம்சுவஸ்தி. ஸ்ரீகணேசாயநம: பூர்வப்பிரகரணத்தானே நித்யாநித்திய வஸ்துவேகத்தினின்றும் வைராக்கியம் சமாதியங்குரபீஜம் முமுக்ஷுபல பரியவசாயி முக்கியத்தன்மையானே பிரதிபாதிக்கப்பட்டது; இப்போது முமுக்ஷு விவகாரம், சமாதி இங்ஙன் செய்யற்பாலதா மென்பதை யுடைத்தாய், மனனநிதித்தியாசன அங்கமுடைத்தாய், சிரவணவடிவ உத்தரப்பிரகரணத்தால் அறையப்பெறுகின்றது; பிரசங்கத்தால் வந்ததுஞ் சிறிதுசிறிது. ஆண்டுமுதற்கவியினலே தைவாதீனம் சர்வம் பௌருஷம் வியர்த்தம் ஆகலின் விசாரவிஷயப் பிரயத்நபரத்தன்மையைப் பற்றலாகாது எனப்பகர்ந்துகொண்டு திரியும் படிப்பாளிகளின் சங்கையாகமத்தை நிமித்தமாகக் கொண்டு பரிகரிக்கின்ருர் ஸ்ரீவசிஷ்டபகவான்:—இராகவ என. ஸ்ரீ வசிஷ்டபகவான் முன்னுற்ற யாவற்றையும் அனுசந்தித்துப் பார்த்து விஸ்தாரமாக அவற்றையுபதேசிக்க விரும்பிச் சற்குருவின் தியானவடிவ மங்கலத்தைச் செய்துகொண்டும், வித்தையின் சம்பிரதாய சுத்தியைக்காண்பித்துக்கொண்டும், சீடரை யொருமைப்படுத்திக்கொண்டும், முன்னர்ச் சிருஷ்டியினுதியில் என்றந்தையாகிய பிரஹ்மாவான பகவானல் யாவருக்கும் சர்வசம்சார துக்க உபசாந்தியின்பொருட்டு எந்த ஞானசாதனமான சாஸ்திரம் அருளப்பட்டதோ அவ்விதையே கூறுகின்றேன் கேளென்கின்ருர்:— இராகவகேள் என. சமைதமை முதலிய சாதனசம்பத்தோடுகூடிய சுகர் முதலியோருக்குச் சிரவணம் பலிதமாம்

இப்போதுள்ள மற்றையர்கட்கு யாங்ஙனம் அதுபலிக்கும், சாதனஞ் சம்பாதித்தல் முடி யாதகாரியமன்றோவெனின்? எளிதென்கின்றார்:—இராகவகேளென. ஸ்ரீவசிஷ்டர் கூறல்.

இராகவகே ளிப்பவத்தி லென்று மெல்லா மியல்புறுநன் முயற்சியினு லியார்க்கு மெய்து, மாகலைநன் னான்முயற்சி யொன்று மொன்று வருநூலி லாமுயற்சி மற்றி வற்றின், சோகமினூல் வழிவீடா நூலி லாமை துன்பமாஞ் சைசவத்திற் றொடரு மிந்நூன், மோகமினல் லோர்கூட்டங் குணங்க ளாலே முயற்சியுறு பெரியோர்க்கு முத்திபேறும். (1)

(ப - ரை.) இராகவகேள்! = ஹே இரகுகுலதிலகனே ஒருமையுடன் கேட்பாயாக, இப்பவத்தில் = இச்சமுசாரத்தில், என்றும் = எப்போதும், எல்லாம் = யாவுமே, இயல்புறு நன்முயற்சியினால் = இடைவிடாது செய்யப்படும் நல்ல முயற்சியினாலே, யார்க்கும் எய்தும் = எவ்வகையினரும் அடைவர், மாகலைநன்னான் முயற்சி யொன்றும் = முதலாவது மாக்ஷிஸமதங்கிய உபநிஷத் வேதாந்த சாஸ்திர சம்பந்தமான ஆன்ம முயற்சியாம், வரு நூலிலாமுயற்சி மற்று ஒன்று = சாஸ்திர சம்பந்தமில்லாமல் வரும் அநாத்ம முயற்சி இரண்டாவதாம், இவற்றின் = இவ்விரண்டினுள், சோகமில் நூல்வழிவீடாம் = துயரமில்லாத சாஸ்திரமார்க்கம் மோக்ஷத்தைத் தருவதாம், நூலிலாமை துன்பமாம் = சாஸ்திரவழியிற் செல்லாமை பந்தத்தைத் தருவதாம், சைசவத்திற் றொடருமிந்நூல் = பாலியமுதலாகவே பயின்றுவந்த இந்தச் சாஸ்திரம், மோகமில் நல்லோர்கூட்டம் = மயக்கங்களை யொழித்த சாதுக்களின் சங்கம், குணங்களாலே = மைத்திரியாதி சற்குணங்கள் முதலிய இவற்றானே, முயற்சியுறு பெரியோர்க்கு = மிகவும் முயற்சிக்கப்பட்ட மகான்கட்கு, முத்திபேறும் = மோக்ஷமே பிரயோஜனமாக அகப்படும். (1)

(ஸ்ரீ - வீர.) முயற்சி = பௌருஷ மென்னும் புருடகார உத்தியோகமாம், முயற்சியுடையார் பயனை யடையவே யடைவர், பௌருஷத் தன்மையால் யாவும் நன்கு அடைதற்பாலனவாமேல், அசாஸ்திரீயப் பௌருஷத்தானும் பரமார்த்தப் பிராப்தியாம் ஆகலின் அதுவும் முமுக்ஷுக்களால் அனுஷ்டிக்கப் படவேண்டும் என வாசங்கிப்ப விடைதருவார், மாகலையென்றார், பரமார்த்தப் பொருட்டுச் சாஸ்திரித மாம் என்புதை விரித்துணர்த்துவார், சைசவமென்றார். புருடமுயற்சியாற் சாதிக்க முடியாத தொன்றில்லையாம், இச்சம்சாரத்தின் கண்ணே எப்போதும் எல்லா ராலும் விடாதனுட்டிக்கப்பட்ட புருடமுயற்சியினால் எல்லாப் பொருள்களும் அடையப்படும். யாவரானும் எப்போழ்தும் யாவுமே அடையப்படு மேலாயின் எங்ஙனஞ் சிலவிடத்தில் முயற்சி பயன்படாமற் போதல்கூடும்? விடாமுயற்சி வேண்டுமென் றுணர வேண்டும், வேண்டவே யுபேக்ஷிக்காமன் முயலிற் கூடாதகாரிய மென்னே! முயற்சியானது கண்டே யவசியம் முக்கியமாகிப் பலன்றரும், தெய்வமானது முயற்சியினும் வேறாகவோ இன்றாம், இலதாகவே முயற்சிக்குவேறாகத் தெய்வத்தின் இன்மை, தெய்வத்தினும் முயற்சிக்கு முக்கியத்தன்மை, முயற்சியினானே புருஷார்த்த சித்தி யுண்மை யென்னு மியாவற்றையும் ஊகங்களானே யுணர்த்துவான் முயற்சியை யிருவகைப்படுத்துவார், மாகலையென்றார். எவ்வாறு எவன் முயல்கின்றனனோ அவ்வாறு அவன் தன்கருமத்தையே அனுபவிக்கின்றனன், தெய்வத்தா லுபய விபரீதத்தன்மை வரலாமேயெனின்? முன்னியற்றிய கருமமே பலத்தைக் கொடுக்கவந்தபோது தெய்வ மெனப்படுகின்றது, அதனினும் அயலாகத் தெய்வம் காணப்படவில்லை. இன்னும் தெளிவாகக் கூறுங்கால் சாஸ்திரத்தைக் கடந்ததும், சாஸ்திரத்தைத் தொடர்ந்ததும் என

முயற்சி யிருவிதமாகக் கூறப்பட்டுளது அவற்றுண் முதலது அநர்த்தத்தின் பொருட்டும், மற்றது பரமார்த்தத்தின் பொருட்டும் ஆம்; ஒருகாற் சமமும் சமமின்றியுமாம் இருக்கும் முந்தியதும் இகத்ததும் இரு கடாய்கள்போல வலுத்தது வெற்றியுறும், சாஸ்திர நியம நன்முயற்சியால் முந்தியதை மாற்றலாம். இளைப்பில்லையாயின் அந்தியத்தில் அதைச் செய்யலாமே இப்பொழுதே யதனு லாகவேண்டிய தென்னெனின்? பாலிய முதற்கொண்டு மிகமிகவும் பயின்ற நன்னூல் நற்கூட்ட முதலிய குணங்களுடன் கூடிய புருடமுயற்சியால் அதன்பயன் இனிதாக அடையப்படும். விரைவிற் செய்யப்பட்டமிருதுவான இளமுட்போன்ற வற்றுற் பயனின்றும், இவ்வண்ணம் எம்போன்ற ஜீவன் முக்தர்களானே கண்கூடாய்க் காணப்பட்டது அனுபவிக்கப் பட்டது கேட்கப்பட்டது சாதனங்களாற் சாதிக்கப்பட்டது அதனைத் தெய்வத்தா லடைந்தோ மெனல் வீணும்.

(ச.) எல்லாம் = திருஷ்டா திருஷ்டரூபமான பிரயோஜன மனைத்தும், நன்முயற்சி = விதித்த புருடப் பிரயத்தினம். வீடாம் = மோக்ஷத்திற் கேதுவாம், துன்பமாம் = அனர்த்தத்திற் கேதுவாம், சைசவத்தில் = அதிபாலியத்தினின்றும் தொடங்கும் நன்றுயப் யசிக்கப்பட்ட (1)

(ஸ்ரீ-வீர-அ-கை.) வாசனையின் பரதந்திரவயப்பட்டதானே சுதந்திரப் பிரவிருத்திகொண்டுதற்பயனும் பொருள் நன்கடைவான் முடியாததாக விருக்கின்றது என்றுக்ஷேபிக்கின்றார்:—அம்முயற்சி நினக்குச் சுபத்தைத் தருவதாக ஆகுகவென ஆயினும் முன் வாசனையின் பரவசனுகிய எனக்கு இப்போது சுதந்திரத்தன்மை சித்தியாதா மென்கின்றார்:—முற்பிறப்பென.

முற்பிறப்பின் வாதனையின் வயத்தி னின்றேன் முயற்சியிலே னென்செய்கேன் முனிவவென்ன, வற்புதனே தன்வருத்த முயற்சியாலே யடையலாம் பரமபத மயல்வேறின்று, சொற்பயில்வா தனைத்திரளின் பேதஞ்சொல்லிற் சுபமசுப மெனவிரண்டாஞ் சொன்னவற்றில், வற்புறுமுற் பவந்தோறுந் தொடர்ந்து வந்த வாதனையே யதுவொன்றே மருவி நிற்கும். (2)

(ப - ரை.) முற்பிறப்பின் = பூர்வஜன்மத்தின், வாசனையின் வயத்தின் நின்றேன் = வாசனையின் வசமாகி அஃதேவியபடி செய்கின்றேன், முயற்சியிலேன் என் செய்கேன் = இருபணனுகியயான் செய்வதென்னே, முனிவவென்ன? = யாவற்றையு மறிந்த பகவானே என்று வினவுதியேல், அற்புதனே = அற்புத குணங்கள் வாய்ந்த இராகவ! தன் வருத்த முயற்சியாலே = தான் கஷ்டப்பட்டுச் செய்யும் அதிதீவிரப் பிரயத்தினத்தானே, அடையலாம் பரமபதம் = சாசுவதமான சிரேயசை யடையலாம், அயல் வேறின்று = மாறுகவோ வேறுவழியில்லையாம், சொற்பயில் வாதனைத்திரளின் பேதஞ் சொல்லில் = முன்புகன்ற வாசனைக் கூட்டத்தின் வேற்றுமையைக் கூறுமிடத்து, சுபஅசுபம் என இரண்டாம் = சுபவாசனை யென்றும் அசுபவாசனை யென்றும் இருவிதமாம், சொன்னவற்றில் = அறைந்த அவ்விரண்டில், வற்புறு முற்பவந்தோறும் தொடர்ந்து வந்த வாதனையேது = வலுமை பொருந்தியதாகப் பூர்வஜன்மந் தோறும் அனுசரித்து வந்த வாசனையாதோ, அது வொன்றே மருவிநிற்கும் = அஃதொன்று தானே அடைந்து வளர்ந்துநிற்கும். (2)

(ஸ்ரீ - வீர.) பரிகரிப்பார், அற்புதனே யென்றார் இதனுனே = பழையவாசனைக்குச் செலுத்தப் பெறுமையுண்மையானே, தன் முயல்வாற் சம்பாதிக்கப் பட்ட செய்யப்பட்ட புருடவியாபாரத்தினுலே மேன்மையை யடையலாம். பூர்வவாசனை தீவிரவாயு

லைப்போலப் புருடனைப் பிரேரியாதாம், மற்றோ, இச்சையுபசங்கார வாயிலாய்ச் சுதந்திரப்பான்மையை யடைவிக்கும், அடைவிக்கவே சுதந்திரப் பிரவிருத்தியினாலே தன்னிட்டப் பொருள் இனிதடைவான் முடியும் என்பது அபிப்பிராயமாம். தன்முயல்வினாலே தோற்றுகின்ற பௌருஷத்தினாலேயே மேன்மை யடைவாம் என்றால் எவ்வகையானே யெனக் கடாவ விபாகத்தான் பழையவாசனைச் சாலச்சிறப்பாவித்தைக் காட்டிக்கொண்டு ஆண்டும் வகையை விரிப்பார், சொற்பயில் என்றார். சுபாசுப வாசனைச் சமூகங்களின் மத்தியில் இரண்டுள் ஒன்றினுக்கு மிக அற்பத்தன்மையால் இருப்பதற்றதென்னுங் கற்பகத்தன்மைக் கருத்தால் ஒன்றே மருவிநிற்குமென்றார். ஹே பகவன்! பழைய வாசனையின் கூட்டமானது என்னை யேவுகின்றபடியே யிருக்கின்றேன், நினைவுகளிப் பரவயனுயயான் என்ன செய்வேன் இப்பொழுது பலத்திற் சுதந்திரமில்லாமை புளதாருக, வருங்காலத்திய பலானுகூலமாய முயல்விலோ, சுதந்திரமே யிருக்கின்றதாம்; நல்வித்தையை யடைவுற்ற பிறப்பா லனுமிக்கப்பட்ட நன்முயற்சிப் பிராரப்த பலத் தோடுகூடிய பூர்வ வாசனைக்குத் தனது விரோதியாய பலமாத்திரத்தைத் தடுக்குந் தன்மை யிருத்தலின், அவனதிகாரப் பிறப்பின் கண்ணும் அவன் பிரவிருத்தி சுதந்திர மில்லாவிடில் கருமத்தையும் பிரஹ்மவித்தையையும் போதிக்குஞ் சாஸ்திரமும் வீணு யன்றோபோம், எனக்கருதிக் கூறுவார் அற்புதனே யென்றார். அதிகாரி ஜன்மஹேதுவான வாசனையி னுதவியானே நீ சாசுவதமான மோக்ஷத்தை யடையப் போகின்றாய்; அதுவும் உனது பெருமுயல்வினானே யுண்டாய ஞானத்தானே யல்லாமல் வேறுவழியாக இல்லையாம், வாசனையின் சகாயமோ ஜன்ம விவேகசம்பத்து விசேஷணத்தினாலே யனுமித்துக் கொள்ளலாமல்லவா! கூறிய பொருளை நன்றுயுணர்ந்து கொள்வான் வாசனையின் பிரிவை விளுதல் சொற்பயில் என்பது. வாசனைக்கூட்டம் சுபமெனவும் அசுபமெனவும் இருவகையாம்; உனக்குப்பழைய வாசனை சுபமா? அசுபமா? சுபமும் அசுபமுமா? உளது.

(ச.) வாதனையின் = வாசனு சாலத்தின், தன் வருத்தமுயற்சியாலே = முற்பிறப்பின் சுத்தவாசனு சாலத்தின் அதிகரிப்பால், பரமபதம் = சாசுவதமான கைவல்யம், அயல்வேறின்று = மற்றொன்றாலும் அடைவதில்லை, இரண்டாம் சுபாசுப மெனவும் மூன்றாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாசனை யிருப்பின் இப்பயன் ஆமெனவும் இவ்வாதனையை விருத்தி செய்யவேண்டு மெனவும் கூறுகின்றார்:—சுத்தவென.

சுத்தவா தனைதொடரி லதனான் மெல்லத் தூயபர பதம்பெறுவை சுத்த மல்லாப், பெத்தவா தனைதொடரிற் றுன்பமாக்கும் பெரிதுவருந் தியுமிதனைப் போக்க வேண்டும், வைத்தசுபம சுபமெனும் வழியி ரண்டால் வாதனையா நதி பெருகில் வருத்தத் தாலே, மெத்தமுயன் றசுபவா தனையைத் தள்ளி மிக்கசுப வாதனையின் மேவி நிற்பாய், (3)

(ப - ரை.) சுத்தவாதனை தொடரில் = தூயவாசனைக் கூட்டத்தானே நடத்தப் பெறுதியேல், அதனான் மெல்லத் தூயபதம் பெறுவை = அப்பயிற்சியின் முதிர்ச்சியால் மெல்ல மெல்லப் பரிசுத்த சாசுவத கைவல்யத்தையே யடைவாய், சுத்தமல்லாப் பெத்த வாதனை தொடரில் = தூய்மையற்ற கெட்டவாசனை நின்னை யிழுத்துச் செல்லுமாயின், துன்பமாக்கும் = பெருந்துயரத்தையே யீயும். பெரிது வருந்தியுமிதனைப் போக்கவேண்டும் = எவ்வளவு கஷ்டப்பட்டு முயன்றேனும் இம்மலின வாதனையை நீக்கிவிடவேண்

டும், வைத்த சுபமசுபமெனும் வழியிரண்டால் = பழக்கத்தால் வராநின்ற சுப அசுப மார்க்க மிரண்டினாலே, வர்த்தனையா நதிபெருகில் = வாசனைகளாகிய நதிகள் பெருகி யோடுமாயின், வருத்தத்தாலே = எத்துணைச் சிரமப்பட்டேனும், மெத்தமுயன்று = மிகமிகவும் புருடப் பிரயத்தினஞ் செய்து, அசுபவாதனையைத் தள்ளி = கெட்டவாதனையை யடியோடு விட்டு, மிக்க சுபவாதனையின் மேவிநிற்பாய் = அதிகரித்த நல்லவாசனையையே யனுசரித்து வாழ்வாயாக. (எ-று.) (8)

(ஸ்ரீ - வீர.) அவ்விரண்டினுள் வாசனை தூயதேற் பலமுந்தூயதாம், தீயதேற் பலமுந்தீயதேயாம். வாசனை = பாவம், சுப அசுபவாசனைச் சமூகங்களுள் எதாவதொன்றால் புருடன் ஏவப்படுவனேல் மோக்ஷவடைவின் வகையை மொழிந்து, இரண்டாலும் ஏவப்படுவனே லாயினும் அதனைக் கூறுவார், வைத்தவென்றார். கூறிய பொருளையே விரிப்பார், வருத்தமென. புருடார்த்த ஹேதுவாய சுபவாதனையையே அனுசரிப்பாய். கூறிய இரண்டனுள் சுத்தவாதனையின் கூட்டத்தானே யேவப்படுவையேல் இப்போது அம்முறையாகச் சுபத்தினானே அழியாத பதத்தை யடைவாய். மற்றதேலோ, சுதந்திரமாக வாதனைகட்கு எழுச்சியோ கிடையாதாம், மற்றோ வெளிப்படுத்துவதன் வாயிலாகவே யெழும், அசாதுக்களுடைய சங்கமத்தானே தெய்வத்தால் அசுபவாசனை யொன்றெழுந்து உன்னை மகாசங்கடத்தில் அழுத்துமாயின், அதையும், அதற்கு விரோதியாய சாதுசங்கஞ் சற்சாஸ்திர முதலியவற்றின் நிடசேவையானே விரோதி வாசனையைக் கிளப்பி விரைவில் தூரத்தே தள்ளித் திரஸ்கரிக்க வேண்டும். முயற்சியினாற் கிட்டுத்தி பலத்தாலவசியம் வெற்றி கொள்ளலாம். " எவன் மனத்திருந்தும் அம்மனத்தயலாம்; எவனை மனந்தான் அறியாதாமோ, எனமனதின் பிரேரகமாய பிரஞ்ஞாத்மா அன்னியமெனவே கேட்கப் படுகின்றமையின் அதனதீனமாகவே மனோவாசனை யுற்பவமாதலால் யாங்ஙனம் எனக்கு நல்லவாசனை யுண்டாக்குஞ் சுதந்திரங் கூடுமெனின் அறிவுமாத்திர இயற்கை வாய்ந்த பிராஞ்ஞனெனப் படுமதுவே நீயாவாய்; ஜடவடிவமாய சூக்குமதூல தேகங்கள் அன்னியனாய் விடுமாறு நீயாகாய் " இதனினும் வேறாய்க் காண்போனின்றாம், அதுவே நீயாயமர்ந்தனை " என்பதாதி சுருதியு மிதையேயன்றோ கூறுகின்றது. ஆதலின் இவ்வாறு சின்மாத்திர சொரூபமாயிருக்கு நினக்கு அன்னியமாய சேதனத்தாலறியப்படுந் தகைமை எவ்வாறு கூடும்? பிராஞ்ஞன் உன்னினும் அன்னியன் ஆவனேலாயின் சித்திற்கு மற்றொருசித்தால் ஒளிர்தல் கூடாமையின் உன்னைப்பாராமல் சர்வஞ்ஞமேயது ஆகாதாம் ஆதலின், நீயேயதுவென மாற்றிக் கோடலானே ஒருமையானது சித்திக்கும். அன்னியத்தால் நீ விளக்கப்படுவையே யாயின் உனக்குச் சேதனத்தன்மை எங்கேயிருக்கும், சித்தாலொளிர்வதற்கு வந்தடையும் ஜடத்தன்மையை நீக்கலுமேலுமோ? சித்திற்கு வேறுசித்தால் விளங்குதல் கூடுமேல் அதுவும் அன்னியத்திற்கு விடயமாம், ஆகவே எல்லையில்லாது செல்லுந் தோடமுமாம், அன்னிய முன்னை யறியுமேயாயின் அது தனையறிவது யாதோவேறு? அவ்வறிவதையு மறிவதுயாதோ? அதற்குமயலதேல் அநவஸ்தையாகும், அதுவும் உண்மையாக மாட்டாமல் வஸ்து சித்தியைச் செய்யாதாம், ஆகவே உனக்குச் சத்வாசனையை வெளிக்கிளப்பும் முயல்விற் சுதந்திரத்தன்மை தடையற்றதே யாகும். புருடசுதந்திரத் தன்மையின் முக்கியத்திற்கும் பயனென்னெனின், சுபஅசுபங்களாகிய வழிகளில் பெருகிவரும் வாசனாநதியை முயல்வினாலே சுபவழியிலேயே திருப்பிவிட வேண்டும். வீரியவான்களுக்குள் மகாவீரிய! அசுபங்களிற் றிரிந்துகொண் டிருக்கும் உனதுமனதை முயற்சியின் வலியினாலே சுபங்களிலேயே புகுத்தவேண்டும், சுபங்களில் அவதாரணப் பொருட்டுத் தகுதியைக் காண்

பித்துக் கொண்டு கூறியதையே நிகமனஞ்செய்யும் பொருட்டுச் சித்தமாய நதியானது புண்ணியத்தின் பொருட்டும் பாவத்தின் பொருட்டும் என இருவகையாய்ப் பிரவாக முற்று வருகின்றது, அவற்றுள் ஒருதாரையைத் தடைப்படுத்தின் மற்றதன்கண் ணிருமடங்காகப் பெருகும் என்னும் யோகசாஸ்திரத்தின் கூற்றை யனுசரித்துங் கூறுவார் மேவிநிற்பாய் என்றார். அசுபத்தினின்றும் நீக்கியது சுபத்தைச் சென்றடையும், சுபத்தினின்றும் நீக்கியது அசுபத்தைச் சென்றடையும், ஜந்துக்களுடைய சித்தமானது சிசுக்களைப் போலாகும், ஆதலினதனை யசுபத்தினின்றும் பல்மான் முயல்வான் நீக்கவேண்டும் என்பதாம். சுபவிடயம் பௌருடத்தை யபேக்ஷியாமலே சுபமாகவே அசுபத்தினின்றும் மனத்தைச் சலிப்பிக்கும் ஆகலின் பௌருடம் வீணேபோமோ வெனின் போகவே போகாதாமென்னக் கூறியதாயிற்று.

(ச.) அய்யாதனை நினைத்தெட்டரின், அதனால், அது மோக்ஷமடைவதற்கு ஏதுவாதலினால்; மெல்ல = யத்தினபேக்ஷை யின்றிக் கிரமமாகச் சீக்கிரத்தில், தின்பமாக்கும் ஆதலால்; இதனை = இம்முறை பிறப்பின் அசுத்தவாசனையை, பெரிது வருந்தியும் = அதிப் பிரயத்தினத்தால் நீதானே போக்கவேண்டும், செய்த்தலேகாரியம். அசுபபக்ஷத்திலும், அசுபத்தை யத்தியந்தங் கெடுத்து அதனாற் சுபத்திற் பிரவர்த்திக்க வேண்டுமென்பதாம். இதனாலிதுவரை புருடப்பிரயத் தனத்தினாலே சுபமார்க்கத்திற் செல்லவேண்டுமென்றதனையே வற்புறுத்துவார் வைத்த சுபமென்றார். புருடார்த்தப்பொருட்டுப் பல்மான் புருடயத்தன சாதனம் வேண்டுமென்பதாம். (3)

(ஸ்ரீ - வீர: அ - ஸ்க.) சித்தமானது சிசுப்போல் விருக்கின்றபடியினாலே அதற்குத் தக்க அடக்குமுறை காட்டுகின்றார்:—மிகவென.

(ச-அ-கை.) அசுபத்தோடு கூடியமனதை அதினின்று நிறுத்தலால்நிராலம்பமாய் (பற்றின்றி) ச் சலிக்கின்றதெனில், சித்தஞ்சிசுப்போல நிராலம்பமாதலால் ஒன்றினும் உறைத்து நில்லாதுசுபத்தினின்று அசுபத்தினும் அசுபத்தினின்று சுபத்தினும் செல்லுமாதலின் றனது வலியால் அசுபத்தினின்று நிறுத்தின் சுபத்தையே கிரகிக்கும் அங்ஙனம் அந்த நிறுத்துதன் மெல்ல மெல்லவே செய்யவேண்டுமென்கின்றார்:—மிக முயன்றென:

மிகமுயன்று வருந்தாமற் சமமாகின்ற வேண்டுகொளாற் றன்முயல்வால் விநோதந் தன்னால், பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும் பலபிறப் பிற்பரிசயங்க ளகலப் பண்ணி, யகல்சுபவா தனையுதித்தான் முயற்சிபேறு மையுறினுஞ் சுபமுயல்வை யதுநீதல்ல, திகழ்மனம் போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டுந் தேசிகனாற் சொல்வழியிற் செல்லு வாயே. (4)

(ஏ - ஸா.) மிகமுயன்று வருந்தாமல் = மனத்தை நிறுத்த அதிப் பிரயத்தினஞ் செய்து, நிற்காவிடினும் கஷ்டத்தையடைந்து முயற்சியை விட்டுவிடாமல், சமமாகின்ற வேண்டுகொளால் = சமத்வப் பிரார்த் தனையினாலும், தன்முயல்வால் = இடைவிடாதியற்றும் தனது பௌருடப் பிரயத்தினத்தினாலும், விநோதந்தன்னால் = சித்தற் கிதமான கதா சல்லாபத்தாலும், பகர்மனமாம் சிறுமகவை = சிறு பாலக னென்னப்பகரும் உளத்தை; நிறுத்தல் வேண்டும் = பையப்பைய, விரையாது இலயப்படுத்த வேண்டும், பலபிறப்பில் பரிசயங்கள் அகலப்பண்ணி = அநந்த ஜன்மங்களிலுண்டான பழக்கங்களை அகலுமாறாக்கி, அகல் சுபவாசனை = விஸ்தாரமான் சுபவாசனை, உதித்தால் = உதயமானால், முயற்சிபேறும் = அப்யாசிமானது பெரும்பயனை யுண்டாக்கும்; ஐயுறினும் = ஐ

தேகம் வந்தாலும், சுபமுயல்வை = தூயவர்தனையையே சம்பாதனஞ்செய்தி, அது தீதல்ல = அது மாசாகமாட்டாது, திகழ்மனம் = அவ்வியுற்பன்னமனது, போய் = தன்மலினம் நீங்கித்தூய்தாய், தற்பதத்தைத் தெளியுமட்டும் = பரம்பொருளை ஐயந்திரிபறச் சாக்ஷாத் கரிக்கும்வரை, தேசிகன் நூல்சொல்வழியில் செல்லுவாய் = குரு சாஸ்திரப் பிரமாணங்களால் நிர்ணயமானதைப் பற்றி ஆசரிப்பாயாக, ஏ=மற்றவற்றை விட்டொழித்தி. (4)

(ஸ்ரீ - வீர.) ஹே சித்தபாலக! பெயரானும் பொருளானும் விடத்தினும் அதிகமாய விடயங்களைக் கவராதே, பிரிய அப்பிரிய விடயப் பிராப்தியில் மகிழ்ச்சிவாட்டமற்ற பெற்றிவடிவ சமத்தன்மை நிரதிசய சுகப்பிராப்தியைச் செய்விக்குமாதலின் அதனைப்பற்றுதி என்றிவ்வாறு சமமாகின்ற வேண்டுகோட் செய்யவேண்டும்; அதுவும் விரைவாகவே வேண்டும். அசுபத்தினின்றும் சித்தத்தை மாற்றிப் பயிலும்பயிற்சிக்குப் பெரும் பயனுடைமை யெக்காற்பவிக்குமெனின்? கூறுவார், பலவென. இப்பிறப்பினும் மிகப்பயிற்சி செய்யும் நினக்கு முற்பிறப்பின் பயிற்சிவயத்தால், அல்லது, முன்வயதில், சைசவத்திற் றொடரு மிந்நூல் எனக் கூறப்பட்டது, விரைவாகப் பயிலுதல் என்றால் முன்னர் பையப்பைய விரையாமல் என்று முன்மொழிந்தது பழுதாமே யெனின், ஆகாதாம், சித்தநிக்கிரக ஆரம்பதசையை யபேக்ஷித்து அவ்வாறு விதித்துண்மையின். அதனுத்தர அவஸ்தையை யபேக்ஷித்து விரைவுபடுத்திய தாமென்றுணர்க, அசுபவாசனை சுபவாசனையினும் அதிகமாயினும் ஒப்பாயினும் செய்யவேண்டியதை விளம்பி அதன் சந்தேகத்தினும் அதனைக் கூறுவார், ஐயுறினும், என்றார்; நல்லது நல்லவாசனை வளர்தலிலும் மாசில்லையென்ப தெங்ஙனம்? அதுவும் அவித்தையின் காரியமாதலினானே தோடமூடல் கூடுமென்றோ எனச் சங்கிப்ப ஆன்மசாக்ஷாத்கார பரியந்தம் கைக்கொள்ளத் தக்கதாம் அதன் பின்றள்ளிவிடலா மென்பார், திகழ் மனமென்றார். பிரஹ்ம சொரூபத்தைத் தானாக அறியாதவரை, செல்லவே வேண்டும் பிறிதொன்றினும் செல்லாதொழியவே வேண்டு மென்பது தேற்றத்தாற் கொள்க. இவ்வாறு கூறியமுறையே சித்தபாலகனை விரைவிலே இராகாதி விஷமத்தன்மையை விடும்படி செய்வித்து இயற்கையாய சமத்தன்மையின் கண்ணே குற்றமற்றிருத்தலைச் சம்பாதித்துப் பையப்பைய ஆன்மசொரூபத்தில் நிரோதவடிவ முயல்வாற் காக்கவேண்டும். விரைவிலே அடமாக நிரோதிக்கக் கூடாது. எழுச்சியாற் சமாதானத்தை யடையாது போய்விடும், அவ்வாறு கூடாது; அவ்வாறே ஸ்ரீ பகவத்வசனமும் "ஒண்டியிரியங்கவருணர் விஞற்பையப்பையவுபரமந்தனைச் சேர்க" இதன்கட் பிரமாணமாகும். உன்னுன் முன்னர்ச் சுபவாசனைக் கூட்டத்தையேனும் அசுபவாசனைக் கூட்டத்தையேனும் முயல்வின் பயில்வாற் பெரிதாகச் சேர்க்கப்பட்டிருந்த போதினும் இப்போது சுபத்தையே பெரிதாக்க வேண்டும். முதலிற் பலமானது விரைவிற் கைகூடவேண்டியாம், இரண்டாவதிற் பகையைத் தடுக்கும்பொருட்டுச் சுபவாசனை யவசியம் வேண்டியதேயாம், வாசனையின் பயிற்சியானது பயனற்றுப் போமென்பதாகச் சங்கிக்கவேண்டியதில்லை, பூர்வவாசனைப் பயில்வுகளிற் பிரத்தியக்ஷமாகப் பயன்சித்தித் திருத்தலின், ஹே பகைவரைவெல்வோய்! முன்முயற்சியின் பலத்தால் உனது வாசனையானது மிகத் திடத்தை யடைவுற்றபோதே பயிற்சி பயனோடு கூடியதென் றறிந்து கொள்ளலாமல்லவா, அவ்வாறே யிப்போதுங்கூட உன்து வர்தனையானது பயில்வின் வலியால் அதிதிடமாம்; ஆதலின், சுபப்பயிற்சியையே செய்வாயாக பழையவாசனை பருத்திருந்தபோதினும் ஐயப்பாடுண்டாயிற் கேட்பாயாக, உன்து வாசனை பூர்வம்பயிற்சியில் திடத்தன்

மையை யடையா திருக்கும் பக்ஷத்தி லிப்போதும், அது வளரமாட்டாது நீ சுகமாகவே யிருக்கலாம்; தக்கபடி சுகமாகவே விவகரிக்கலாம் ஆகவே தூர்வாசனை வளர்தலானே யுண்டாகும் அநர்த்தஞ் சம்பவிக்கு மெனத் துக்கிக்க வேண்டிய தனக்கில்லை; ஆயின் சுபவாசனையை வளர்ப்பதில் என்னேயேன் ஏவுகின்றீர் எனின், ஐயத்தை யடைந்தபோதினும், அத்தியந்தம் சுபவாசனையையே வளர்ப்பாயாக, நல்லொழுக்கங்களைப் பழகி வருதலால் இச்சுபவாசனையை விருத்தி செய்தலானே யாதொருகேடும் வாராதாம். " நல்ல தீயபயன்றனை நாடிடு, மெல்லையை யுறினுஞ் சுபமேயியல், வல்வினில்லெனில் வந்ததுயாதுகொ, னல்லனுண்டெனி னுத்திகன் பொன்றினுன் " என்னும் நியாயத்தையும் கண்டுகொள்க. ஆயின்எவ்வளவுகாலம் சுபவாசனையைப்பயிலவேண்டு மெனின், விற்பத்தியோடு கூடிய மனத்தனுகாமற் பரமான்ம பதத்தை யறியாதிருக்கும்வரை அதாவது தத்துவஞானம் வரும்வரை குருசாஸ்திரப் பிரமாண யுக்தி யனுபவங்களான் நிர்ணயிக்கப் பட்டதை யாசரிக்க வேண்டும்.

(ச.) சமமாகின்ற வேண்டுகோளால், சுபத்தைக் கிரகிக்கின்றனையா? அசுபத்தைக் கிரகிக்கின்றனையா? ஒன்றிலே சுகம், அன்னியத்திற் றுக்கம். சுபாசுபங்களிற் செல்லுதல் சரியேயாமென வேண்டிக் கோடலாலும் மெல்லமெல்ல நிறுத்த வேண்டுமே யன்றித் துரிதப்படலாகா தென்னும் அபிப்பிராயத்தால் விநோதந்தன்னுல் நிறுத்தவேண்டு மென்றூர். தன்முயல்வால் நிறுத்தவேண்டு மென்றமையால் அசுபத்தில் மாத்திரமின்றென்றதன்று அவ்விரண்டும் அப்பியாச சாத்தியமாதலின் அசுபவாசனையினின்று நிறுத்தல் வேண்டுமோ? சுப்வாசனையினின்று நிறுத்தல் வேண்டுமோ? என்னுஞ் சந்தேக நிவிருத்தியாக அப்பியாச சாபல்யம் இத்தாலாமென்பார் பலபிறப்பிலென்றூர். வாசனைச் சப்தத்தால் சுபமே கவரத்தக்கதென என்னியமம் அவ்விரண்டுமே அப்பியாச சாத்தியமாமாதலின், சுபாசுபவாசனைச் சமுசயம்வரின் சுபமே முயலுகவென்பார் ஐயுறினும் என்றூர். தனது சுபவாசனையில் சுப அன்னியமாய அசுபத் தன்மையானே நிச்சயம் பெருவிடினும் சுபமுயல்வாய், தீதன்று. அச்சுத்தத்திற் பிரவிருத்தியும் சாக்ஷாத்கார பரியந்தமே யென்பார் திகழ்மனமென்றூர். திகழ்மனம்போய் = தத்துவசாக்ஷாத்காரப் பிரஞ்ஞையின்றி விளங்குமன நசித்து, வழியில் = பிரமாணத்தில், செல்லுவாய் = பிரவிருத்திப்பாய். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தூயவாதனை பலப்பட்ட பின்ன ரிவ்வாறிருந்து சுகிப்பாயென்கின்றூர்:—தூயவென.

தூயதா யிகத்தினிதாய்ப் பெரியோர் மேவுஞ் சுபத்தினுன் மனவழுக்குந் துயருமற்ற, நேயமாம் பதமேவி யதுவுந்தள்ளி நிலைநிற்பாய் மீட்டணுகா நெறியதாக, மாயைநினை வொழித்து நிறை சாந்தி யின்பம் வழுவாம லுதாரமா மதியாலெய்தி, யாயமொழிப் பொருண் முன்பின் கருது நெஞ்சை யமர் சமஞ்செய் தான்மாவி லனுசந் திப்பாய். (5)

(ப - ரை.) தூயதாய் = பரிசுத்தமாய், இகத்தினிதாய் = பயிலும்போதும் இன்பமேபயப்பதாய், பெரியோர் மேவும் = அறிஞரடையும், சுபத்தினுல் = தூயவாதனையால், மனவழுக்குந் துயருமற்ற = மனுமயக்கமும் துன்பமுமில்லாத, நேயமாம் பதமேவி = பரமப்பிரே மாஸ்பதமான அகோசரபத முற்று, அதுவுந்தள்ளி = அச்சுபத்தையும் நீக்கிவிட்டு, நிலைநிற்பாய் = சொரூபத்தின் கண்ணே உபஸ்திதி பெற்றிருத்தி, மீட்டணுகா நெறியதாக மாயை நினைவொழித்து = மீண்டுந் தொடராதபடி சமுசாரபால

னையை நீக்கி, நிறைசாந்தி = பூர்ண உபசாந்தியும், இன்பம் = சந்தோஷ சுகமும், வழு வாமல் = இடைவிட்டு நீங்காமல், உதாரமா மதியாலெய்தி = உதார புத்தியினாலே யடைவுற்று, ஆயமொழிப் பொருள் முன்பின் கருது நெஞ்சை = அனுகூலமான வாக்கி யார்த்தத்தைப் பூர்வாபரம் விசாரியா நின்றமனத்தை, அமர் சமஞ்செய்து = அடங்கு மாறு சமரசப்படுத்தி, ஆன்மாவி லனுசந்திப்பாய் = நினது சொரூபத்தின் கண்ணே நிலைபெற்று நிற்றி. (எ-று.) (5)

(ஸ்ரீ - வீர.) இராகாதிகளை யெல்லாம் கொன்ற விவேகியினாலே சுபமும் விடத்தக் கதேயாமென்க. தூயது அதிசோபன மகாத்மிய முடையதாம். சுபவாசனைச் சாலத்தை யனுசரித்து மனவிசோக பதத்தை அடைதி; அடைதலும் ஞானத்தன்மை விசிட்டமதி யினாலே யறிதலாம்; மனோகர அபிப்பிராய மதியான் மருவுதலாம். குருசாஸ்திரப் பிர மாணங்களால் நிர்ணயிக்கப் பட்டதையே ஆசரிப்பாயாக எனப்புகன்றதை விவரிணித் துக்கொண்டு சிரவணிக்கத் தக்கதான ஞானசாஸ்திரத்திற்கு விசிஷ்டசம்பிரதாய மூலத் தன்மையும் பரமபுருடார்த்தத்தை யுண்டாக்குந் தன்மையும், உண்டென்பார் மீட்டென் றூர் பாவனை = வாசனை உதாரம் = மகா உத்தமம். சோபனமான பூர்வாபரவாக்கி யார்த்த விசாரமேயாய விடயத்தில் ஆதரவுற்ற நெஞ்சை யென்பதாம், தன்னால் நிர்ண யிக்கப்பட்ட பூர்வாபர வாக்கியார்த்தங்களில் விசாரவிடய ஆதரமுற்ற நெஞ்சை யெனி னுமாம். மனோவிசாரவிடய ஆதாமுற்ற சமரசத்தன்மையும் ஆன்மாவின் கண்ணே நிலை பேறுடைமையும் நெஞ்சிலுண்டாகு மாறுசெய்தி. ஆடையிற் சேர்ந்த அழுக்கானது வெள்ளாவி வைத்தல் சாரமண்ணிடல் முதலியவற்றானே தீர்தல்போல இராகாதி வாச னைக் கஷாயங்க ளெல்லாம் நீங்கப்பெற்ற பின்னர் ஆன்மவஸ்துவை யறிந்தவனுமிச் சகலதுயரங்களும் நீங்கப்பெற்றுப் பூர்ணமாக விருக்குமுன்னால் நல்வாசனைக் கூட்ட மும் விடத்தக்கதே யாகும். அவ்வாறே மிருதியும் "பக்குவங்கஷாயம் படவேவினைக ளாற் பக்குவவுணர்வுபின் பவித்திடலாமோ" எனக் கூறுகின்றது. கூறியபொருளையே சுருக்கி யுபசங்கரித்துக் கொண்டு ஆசரிக்கத்தக்க சுபத்தை யுபதேசிப்பார்; தூயது யென்றூர். மகாமங்களமாயும் பெரியோராற் பேணப் பெற்றதாயும் இருக்கும் சுபவாத னையை யனுசரித்து அதனை யடைவுற்ற மதியினானே எப்போதும் சோகமற்ற பரமார் த்த வஸ்துவைச் சாக்ஷாத் கரிப்பாயாக; அதன் பின்னர் அச்சுபவாசனையை யனுசரித் தலையும் விட்டுப் பரமானந்த மாகவே சமுசாரவாதனையை மீண்டுங் கவராதபடி உள்ளே விடுத்துயிருத்தி உதாரமான மதியினாலே சாந்திவைராக்கிய சுகத்தை நிறையக்கொண்டு கருமகாண்ட சுருதிகள், உபாசனை பரசுருதிகளின் ஞானசாதகத் தன்மையைக் காண் பிப்பதும் அவ்விடயங்களாற் கெடுக்கப் படாததும், ஆன்மாவின் கண்ணே யனுசந்தா னத்தை யுடையதும் குருசாஸ்திர முபதேசித்த கிரமமாகக் கிடைத்த சுவானுபவத்தை யும் ஏகரசத்தையும் சம்பாதிப்பதும் சுகதுக்கங்களைக் கெடுப்பதும் பேரானந்தத்திற்கு முக்கிய காரணமாவதும் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமாயதும் ஆம் இவ்விய்ம் பும் மகாசங்கிதையை மனவொருமையுடன் கேட்பாயாக எனத்தொடரும். அதனைக் கேட் பதில் மந்த விரக்தனுக்கும் அதிகாரம் கிடையாதெனக் காட்டுவார், மீட்டணுகா நெறி யதாக என்றூர்.

(ச.) பரிபக்குவ அந்தக்கரணமாய், மிகவினிதாய், இங்கே மனோக்கியமாய் மேவும் சுபத்தினால் = பெரியோரா லடையப்படும் சுபத்தை முன்பனுசரித்து, மகாசத்தாவலம் பனமான பரிபூரண புத்தியால் மனவழுக்கும் = வாசனையும், துயரும் = ஆதியும், அற்ற, ஞேயமாம்பதம் = ஞேயவஸ்துவை, மேவி = அப்பதப் பிராப்தியநந்தரம், அது

வுந்தள்ளி = அச்சுபத்தையும் விடுத்து, நிலைநிற்பாய். இரகுநந்தனா நீ பரிபக்குவ அந்தக்கரணனாய் ஆத்மதத்துவஞ்ஞனாய் நிர்வாசனனாய் நிராதியுடையனாய் அதன்பின் அச்சுப வாசனையையும் தியாகம் செய்யவேண்டு மென்பதாம். ஸ்ரீ வசிஷ்டர், மீட்டனுகா நெறியதாக, மாயை நினைவு = சமுசாரபாவனைகளை ஒழித்து, நிறை = சம்பூர்ணமான, சாந்தி = நிர்விகார சித்தத்தையும், இன்பம் = நிராசையினா லுண்டான சுகத்தையும், வழுவாமல் = தவறாமல், உதாரமாமதியால் எய்தி = மகத்துவமான மதியாலடைந்து, ஆய = யான் உபதேசிப்பதான, மொழிப்பொருள் = வாக்கியார்த்தத்தினது, முன்பின் கருதும் = பூர்வாபரவிசாரத்தில் ஆதரமுடைய, அமர் சமஞ்செய்து = ஏகப்பிரகாரமாகச் சிரவணேச்சையோடுஞ் சேர்த்து, ஆன்மாவி .லனுசந்திப்பாய். இஃதனைத்துஞ் சிரவணசாமக்கிரி நிருபணம்.

(ஸ்ரீ - வீர.-அ - கை.) சர்வ விவேகிகளோடும் இம்மோக்ஷ கதையை நீகேட்டு என்றும் அழிவேயில்லாது துயரஞ் சிறிதுமில்லாத பரமபதத்தை யடைவாயாக வென் றிவ்வாறு அங்கசகிதமாகச் சிரவணத்தைக் கூறியபின் கேட்கத்தக்க சாஸ்திராதிகள் இல்லையென்பதைக் குறித்து அஃதுண்டான பிரகாரத்தைக் கூறுகின்றார்:—தேங் கமலத்தென.

தேங்கமலத் தயனுரைத்த மொழிகே ளென்னச்செப்பிய காரணமே தென்
றிராமன் கேட்ப, வோங்குமுனி யுரைசெய்வான் முடிவற்றெங்கு முளதாகி
யனைத்தினுக்கு முறையுளாகி, வீங்குபொருள் களில்விளக்கமாகி மேவுமெய்ஞ்
ஞான விண்ணினின்று விண்டுவந்தா, னங்கவன்றன் மனக்கமலத் தயனுண்
டாகி யகிலமன விகற்பம்போ லளித்தானன்றே. (6)

(ப - ரை.) தேங்கமலத் தயனுரைத்த = தேனிறைந்து வாசனை பரிமளிக்கும் தாமரையி லெழுந்தருளி யிருக்கும் பிரஹ்மா அனுக்கிரகித்த, மொழிகேளென்ன = சர்வ துக்கங்களையும் போக்கும் வாக்கியத்தைக் கேட்பாயாக வென்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூற, இராமன் = ஸ்ரீ இரகுகுலதிலகர், செப்பிய காரணம் ஏதென்று = அனுக்கிரகித்த காரணமியாது கொலாமென்று, கேட்ப = வினவ, ஓங்குமுனி யுரைசெய்வான் = தவம் பெருக்கிய மனனசீல மகரிஷியானவர் கூறுகின்றதாவது, முடிவற்று = அந்தமின்றி, எங்குமுளதாகி = சர்வகமாய் விலாசாத்மாவாய், அனைத்தினுக்கும் உறையுள் ஆகி = சர்வங்கட்கும் ஆசிரயமாய், வீங்குபொருள்களில் விளக்கமாகி = உண்டாகிவளரும் எல்லா வஸ்துக்களிலும் நல்விளக்கந்தந்து, மேவும் மெய்ஞ்ஞான விண்ணின்று = பொலியும் உண்மை யறிவானந்த ஆகாயத்திலிருந்து, விண்டுவந்தான் = ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அவதரித்தனர், ஆங்கவன்றன் மனக்கமலத்து = அத்தகைய ஸ்ரீமந் நாராயணரது இருதய தாமரையினின்றும், அயனுண்டாகி = பிரஹ்மதேவர் அவதரித்து, மனம் விகற்பம்போல = மனமானது விகற்பத் தொகுதிகளை யுண்டாக்கலேபோல, அகிலம் = சகல சிருஷ்டியையும், அளித்தான் = உண்டாக்கினார், அன்று, ஏ, அசை. (6)

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மவித்தைச் சம்பிரதாய கர்த்தாவாகிய பிரஹ்மாவிற்கு மகத்துவம் மலர்த்தற் பொருட்டுப் பரமகாரணத்தி னின்றும் உண்டாயதன்மையும் உலகத்தை யுண்டாக்குந் தன்மையும் காண்பித்துக் கொண்டு செப்பிய காரணமேது என வினவிய வினாவிற்கு விடைதருவார், முடிவற்றென்றார். ஆன்மாவை யறிந்தவைவற் றென்பதீறாக. முடிவற்றெங்கு முள்தாகி = அநந்தகாரிய சொரூபபூதமாகி அவ்வியாவற்றையு மிலக்கி வைப்பதாகி. ஜகத்துருவமாக விரிந்தும் உண்மையில் விரியாமலும் சமவடிவமான விண்

ணிலிருந் தென்பதாம். சிருஷ்டிக்கப்பட்ட வுலகத்திற்கு மெய்ம்மைச் சங்கையை மெலி வித்துத் திருஷ்டாந்தந் தெரிப்பார், மனவிகற்பம் போல வென்றார். மனவிகற்பக் கூட் டம் = மனோரதசமூகம். கற்பத்தின் ஆதியில் பிரஹ்மாவாகிய பரமேஷ்டியால் எல் லாத்துயரங்களையு மெரிப்பதும் மதிக்குப் பரமசமாதானத்தைச் செய்விப்பதும் ஆகிய இஃதியம்பப்பட்டது என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூற, ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய அபிப்பிராயத்தைத் தொடர்ந்து அறியும் அவாவுற்று, முன்னர்ச்சுயம்புவால் இது என்ன காரணத்தானே கூறப்பட்டது ? எங்ஙனந் தங்களா லடையப்பட்டது ? இதனை யடி யேனுக் குரைத்தருளல் வேண்டும் என்று ஸ்ரீ இராகவர் பிரார்த்திப்ப ஸ்ரீ வசிஷ்டபக வான் கூறுவதாவது:—ஆண்டாதியில் பரமேஷ்டியின் ஜன்மத்தைக்கூற அவர் மூலகா ரணத்தைத் தெரிவிப்பார் முடிவற்றென்றார். அநந்தமாயிக விலாசங்களின் அதிஷ்டா னபூத ஆன்மாவுளது, அதுயாவற்றினும் அயலாயுள்ளாயிருப்பது, சருவாதாரமாயது, மாயை யதன்காரிய மியாவற்றையுங் கடந்தது, பிரத்தியக்குச் சித்திருபமாய் நித்திய அபரோக்ஷமாகி எல்லாப் பிராணிகளினது இருதயத்தி லொளிர் விளக்காயிருப்பது, சிதம்பரமா யிருப்பது அழிவிலா வடிவமுற்றதுமாம். மாயையதன் காரியங்கள் அசையும் போதும் அசையாதபோதும் ஒரே ஆகாரமாயிருப்பதும் ஒரேயியற்கையா யிருப்பதும் ஆகிய நிர்விகார அதனினின்றும் சர்வகாரியங்களிலும் வியாபித்திரா நின்ற பிரஹ் மாண்ட வடிவமாய விராட்டு என்னும் விஷ்ணுவானவர் சூக்குமபூதச் சிருட்டிக்கிரமமாக பெருகிவராநின்ற நீர் நிறைந்த அசைவு அசை வின்மைகளிலும் அழியாத ஒரே நீரியற் கையை யுடைத்தான கடலினின்றும் அலையுண்டானதே போல உண்டானார். நிர்விகா ரத்தினின்றும் உலக உதயம் விவர்த்தரூபம் ஆகுமேயல்லாது பரிணாமமாக மாட்டாதாம் மேருகிரியைக் கர்ணிகையாகவும், திசைகளைத் தளங்களாகவும். நக்ஷத்திரங்களைக் கேச ரங்களாகவும் உடைத்தாகி விளங்காநின்ற அவருடைய இருதயதாமரையி னின்றும் பரமேஷ்டியானவருண்டானார். வேதவேதார்த்தங்கள் யாவற்றையு முணர்ந்து தேவ முனி மண்டலங்களா லலங்கரிக்கப்பட்ட அவர் எல்லாப் பிராணிக் கூட்டங்களையும் மனது விகற்பக் கூட்டத்தைச் சிருட்டிப்பதே போலச் சிருஷ்டித்தார்.

(ச.) முன்னுரைத்த புத்திக்குச் சர்வதுக்கோப சாந்தமும் பரமானந்தமுமான மொழி இராகவா நீகேளென்ன ; செப்பிய காரணமேது = முன் சுயம்புயாதுகாரணத்தா லுபதேசித்தார், தேவரீர் பெற்றதெப்படி அடியேற் கருளவேண்டும் என்று கேட்ப உரைசெய்வான், அநந்தமாய்ச் சர்வகதமாய்ச் சர்வாசிரயமாய் விவர்த்தமான சகலவஸ் துக்களிலும் பிரகாசமாய் இருக்கும் சச்சிதம்பரம் விசேஷா விசேஷங்களின் றுல்லிய ரூபமான அதில் நின்று, சகல சர்க்கத்தையும் அளித்தான் = சிருஷ்டித்தான். (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜம்புத்தீவின் ஒருகோணத்தில் பாரதவர்ஷமெனப் பெயர் பெற்ற இதன்கண் தேகவியாதி மனோவியாதிகளாற் கஷ்டப்படும் ஜனக்கூட்டங்களின் பரம்பரையை நோக்கி யின்னது செய்தாரெனல்:—உலகென.

உலகளித்த வயன்றானே நாநாவாக வோங்கியபா ரதவருடத் துயிர்க ளெல்லா, மலகிறுய ருறக்கண்டு புதல்வர் நோவுக் கழுங்குபிதா வெனவழுங்கி யவர்க ளுய்வான், பலகருமந் தவந்தான நதிமற் றெல்லாம் பவந்தீரா ஞானத் தாற் பவம்போ மென்றே, கலகமிலா மனத்தளித்தா னென்னைத் தன்போற் கமண்டலமுஞ் செபவடமுங் கையிற் காண. (7)

(ப - ரை.) உலகளித்த அயன்றனே = சகலலோகங்களையும் சிருஷ்டித்த பிரஹ்ம தேவரே, நானாவாக வோங்கிப் = பலவித வேறுபாட்டுடன் விஸ்தரிக்கப்பட் டிருக்கும் பாரதவருடத் துயிர்களெல்லாம் = பாரதகண்டத்தின் கண்ணே வாழும் ஜீவர்களெல் லாம், அலகில்துயர் உறக்கண்டு = அளவில்லாத துன்பம் அடைவதைப் பார்த்து புதல் வர்நோவுக் கழுங்குபிதாவென = மைந்தர்கள் அடைந்த துன்பத்திற்கு வருத்தப்படும் தந்தைபோல, அழுங்கி = துயரடைந்து, அவர்களுய்வான் = அவ்வுயிர்கள் நன்மை யடையும் பொருட்டு, பலகருமம் = நானாவகையான கிரியைகளையும், தவம் = தவங் களையும், தானம் = தானங்களையும், நதி = தீர்த்தங்களையும், மற்றெல்லாம் = வேறும் அநேக சாதனங்களையும், உண்டாக்கியும் இவையாவுமே, பவந்தீரா = சமுசாரதுன்பம், முழுது நீங்காவாறைக் கண்டு, ஞானத்தாற் பவம்போம் என்றே = பிரஹ்மவித்தையி னாலே யவசியம் ஜனனமரணம் நீங்குமென்று, திண்ணமா யெண்ணி, என்னை = என் றனை, தன்போல் = தம்மைப்போல, கமண்டலமும் செபவடமும் = ஜலபாத்திரமும் ஜபமாலையும், கையில் காண = கரத்தில் தரித்திருக்குமாறுற்ற ஆகிருதியாக, கலக மிலா மனத்தளித்தான் = ஒருமையோடு கூடிய உள்ளத்தினின்றுந் தோற்றுமாறு செய்தார். (7)

(ஸ்ரீ - வீர.) ஜபமாலை கொண்டு ஜபித்துக்கொண்டே தோற்றினேன் என்பதாம். சிருஷ்டிக்கப்பட்ட ஜனங்கள், இலாப நஷ்டங்களான் மகிழ்வு கவலையுற்ற மனத்தை யுடையவர்களாகவும், உண்டாகி யழிந்துகொண் டிருப்பதிற் றற்பரர்களாகவும், அற்ப வாழ்க்கை யுடையவர்களாகவும், திரிந்துகொண் டிருக்கும் இப்பூதஜாதிகளின் சிருஷ்டி யில் பற்பல விதமான விஷயபோக விசனங்களா லவதிப்படும் பிராணிகளின் றுயரைப் பார்த்துச் சகல லோகங்களையும் சிருஷ்டித்து எல்லாத்துயரங்களையும் நீக்கும் சமர்த்து டைய அவர் மைந்தன் றுயரைநோக்கி யிரங்கும் தந்தையைப்போலக் கருணையினால் இரங்கினார். ஆசையாற் கெடுக்கப்பட்டு அற்பஆயுளோடு கூடியிருக்கும் இவர்களுடைய துக்கத்தின் நீக்கத்தின் உபாயம் எஃதாமெனக் கணப்போது ஒருமையோடு கூடிய மனத்தராய்ப் பூதியின் பொருட்டுச் சிந்தித்தனர். முதற்சுத்தி சாதனமாகச் சிருட்டித் தது யாதெனின், ஈசுரராய அவர் இவ்வாறு இனிது சிந்தித்துச் சுயம்தவத்தையும் தரு மத்தையும் தானத்தையும் சத்தியத்தையும் தீர்த்தங்களையுமே சிருஷ்டித்தனர், இவற் றைச் சிருஷ்டித்து மீண்டும் பிராணிகளைப் படைக்கும் பிரமதேவர் நம்மாற் சிருஷ்டிக் கப்பட்ட புருடர்கட்குத் தவமுதலியவற்றானே வேரோடுந் துயரமாயவில்லையெனத் தாமே சிந்திப்பாராயினர். ஜீவன் எதனால் மீண்டு பிறப்பதும் இறப்பதும் அற்றிருப் பானோ அத்தகைய பரமசுகவடிவ நிர்வாணபதம் ஞானத்தானே கிடைக்கும்; சமுசாரத் தைக் கடப்பதில் ஜந்துக்கட்கு உபாயம் ஞானமேயாம், தவந்தானர் தீர்த்தமுதலியவை உபாயங்களல்லவென, "திரமா மருத்தத்தினன் மைந்தரானுந் தீராது கருமத்தினா னும்" "மகவடிவான வங்கங்களாமிவை" புகுதிறமற்ற திறத்தனவேயாம்; என்பதாதி சுருதிகளிற் கூறப்பட்டுள்ளன. ஆகையால் ஆண்டு துயரைத் தொலைக்கவேண்டித் தன்னைமறந்து திரியும் பிராணிக்கு நவமாய்த் திடமாயிருக்கும் தாண்டுமுபாயத்தை விரைவில் வெளிப்படுத்தா நிற்பேன். தாமரையின்கண் வீற்றிருக்கும் ஸ்ரீ பகவானான பிரஹ்மாவானவர் இவ்வாறு சிந்தித்து உன்னெதிரிலிருக்கு மிவ்வென்னை மனத்தினாற் சங்கற்பித் துண்டாக்கினார்; அநிர்வசநீய மாயையின் வயத்தினாலே யுபாதி யுற்பத்தியா யுண்டாய யான் விரைவில் அலையினிடத்தி னின்றும் மீண்டோரலை யுண்டாவதேபோல விரைவிற் பிதாவின் சந்நிதியி லடைந்தேன் ஜபமாலையையும் கமண்டலத்தையும்

கையிற்றரித்திருக்கும் நாதராகிய பிரஹ்மாவானவர் ஜபமாலையோடுங் கமண்டலத்தோடு மிருக்கப்பட்ட என்னால் வணக்கத்துடன் நமஸ்கரிக்கப்பட்டனர்.

(ச.) அழுங்கி=கருணை கூர்ந்து, உய்வான் = துக்க நிவிருத்தித்தற்கு உபாயம் யாதென்று கணகாலம் ஏகாக்கிரனாய்ச் சிந்தித்துப்பின், பவந்திரா = சம்சாரதுக்கம் எவ்வளவுஞ் சாந்தியாகாது, என்றே நிச்சயித்து, மனத்தளித்தான் = மனத்தாற் சங்கற்பித்துச் சிருஷ்டித்தான்.

(ஸ்ரீ - வீர- அ - கை.) அவ்வாறு அவதரித்த தங்கட்குற்றதயாது உபதேசித்ததெங்ஙன் எனக் கூறுகின்றார்:—வந்தென.

வந்திறைஞ்சு மென்னைத்தான் மகிழ்ந்து மேவும் வனசத்தின் வடபா லோர் மடன்மேல் வைத்தென், சிந்தைதனை நாழிகையோ ரிரண்டு மாயை சேர்கவெனச் சபித்தலுமே தியக்க முற்ற, புந்தியுடன் மெய்யுணர்வை மறந் தேன் கல்லாப் புல்லரைப்போற் புலம்புமென்னைப் போதன் பார்த்து, வெந்துய ரென் னெனமாயை விளைந்த வாறும் வீடுறுமா றுங்கேட்டேன் விளங்கச் சொன்னான். (8)

(ப - ரை.) வந்திறைஞ்சு மென்னை = அவதரித்துவந்து நமஸ்கரித்து அபிவாதனஞ் செய்யும் என்றனை, தான்மகிழ்ந்து மேவும் = தாம் சந்தோஷத்துடன் வீற்றிருக்கும், வனசத்தின் வடபால் = தாமரையின் உத்தரபாகத்தி லிருக்கும், ஓர் மடன்மேல் வைத்து=ஒரு தளத்தின்பேரி லிருக்குமாறு ஏவி, என் சிந்தைதனை=எனதுள்ளத்தை, நாழிகையோரிரண்டு = முகூர்த்த மாத்திரம், மாயை சேர்கவென = அஞ்ஞானம் அடையும்படியாக, சபித்தலுமே = எண்ணியவுடன், தியக்கமுற்ற புந்தியுடன் = மயக்கத்தோடுற்ற மதியுடன், மெய்யுணர்வை மறந்தேன் = உண்மையறிவை மறந்தேன், கல்லாப் புல்லரைப்போல் புலம்புமென்னை = படியாத மூடரைப்போலப் புலம்பாநின்ற என்றனை, போதன்பார்த்து = பிரஹ்மதேவர் நோக்கி, வெந்துயரென் என = மைந்த என் கொடுந்துய ரடைகின்றனை என வினவ, மாயை விளைந்தவாறும் = துக்கமய சமுசாரம் தொடங்கிய முறையும், வீடுறுமாறும் = தொலையும் வண்ணமும், கேட்டேன் = வினவினேன், விளங்கச் சொன்னான் = அபரோக்ஷமாயறிய வருள்புரிந்தார். (8)

(ஸ்ரீ - வீர.) வந்து நமஸ்கரித்த வென்னைப் "போமைந்த" வெனக்கூறித் தாமிருக்கும் தாமரையின் வடதளத்தில் வெண்மேகம், சந்திரனை விடுவதேபோலத் திருக்கரத்தால் என்னையுட்காரப்போகச் சொன்னார். மான்றோலைத் தரித்திருக்குந் தந்தையாமவர் மான்றோலை வஸ்திரமாகவுடைய என்னைப் பார்த்து நல்லன்னமானது சாரசப் பக்ஷிக்குக் கூறியதுபோற் கூறியதாவது; ஹேமைந்த! நினதுமனதை ஒருமுகூர்த்தம் வரை குரங்கைப்போலச் சஞ்சல ஹேதுவாய அஞ்ஞான மானது சந்திரனைக் களங்க மடைவது போலடைக. இவ்வாறு தந்தையால் விரைவிற் சபிக்கப்பட்டுப் பரமேஷ்டியினுடைய சங்கற்பத்தின் பின்னர், அந்தோ ஆச்சரியம் பூர்ணநிர்மல சொரூபத்தை மறந்தனன்யான். பின்பொன்னைப் பறிகொடுத்தவன் போலத் தீனத்தன்மையை யடைந்தேன், போதமற்ற புந்தியோடு மிருந்தேன், தனமற்றவன் போலத் துக்கசோகங்களாற் றபிக்கப் பட்டவனானேன். அந்தோ கஷ்டம்! சமுசாரமென்னு மித்தோடம் இங்கெங்ஙன மப்பாவந்தது, என இவ்வாறு சும்மாவே யாதொருதொழிலையும் செய்யாம லிருந்து கொண்டுள்ளே சிந்தித்தனன்; பின்பென்பிதா என்னை நோக்கிக்குழந்தாய்! துயரமடைந்தனன் போலிருக்கின்றாயே அஃதென்னை துயரம் நீங்குமுபாயத்தைக்

கேட்பாயாக ! அதனுனித்தியம் சுகியாகவே யாவாயெனக் கூறினர். அதன்பின் சகல லோகங்களையும் சிருஷ்டிக்கும் பிரஹ்மாவை வணங்கிப் பொற்றுமரைத்தளத்தி லிருந்த யான் சமுசாரநோய்க்கு மருந்தை ஹேநாதரே ! மகாதுக்கமயமாகிய சமுசாரம் எங்ஙனம் வந்தது ? பிராணிகட்கிது எவ்வாறு நீங்கும் ? என வினவினேன், வினவியவளவில், எதையறிந்து தந்தையினுடைய சர்வ உற்கிருஷ்ட தத்துவஞானம்போல நிர்மலபரி பூர்ண இயற்கையனு யிருந்தேனே அத்தகைய பரமபவித்திரமாகிய ஞானத்தை யந்தோ ஆச்சரியம் ! அதி விஸ்தாரமாக என்பொருட் டருளினர். சம்பிரதாயத்தானே கிடைத்த ஞானத்திற்கே முத்தியீயுந் தன்மையாமன்றி மற்றவற்றிற் கின்றும் என்பதைக் காட்டும் பொருட்டும் பிரஹ்மவித்துக்கு லோகானுக்கிரகம் விட்டு வேறுசெய்யற்பாலது இல தாம் என்பதை யறிவித்தற் பொருட்டும், புருடார்த்த சித்தியின் கண்ணே பாரதவரு டத்திற்குப் பிறவற்றினும் சிறப்புளதாந் தன்மையைத் தெரிவித்தற் பொருட்டும், கூறு வார், கேட்டேன் என்றார்.

(ச.) வந்திறைஞ்சும் = சாஷ்டாங்கமாகப் பாதத்திற் றண்டம்போல வீழ்ந்து வணங்கி (பிரணமத்துடன்) க் கோத்திர நாமகீர்த்தன பூர்வகம் பாதக்கிரகணஞ் செய் யும் (அபிவாதனஞ் செய்யும்) மகிழ்ந்து = தத்துவ மூபதேசித்தற் கிசைந்து (இச்சை யுற்று) தான்மேவும்—வைத்து. கேட்டற்குரிய அதிகாரியைச் சம்பாதித்தற்கு அவ்வதி காரியைப் பொருந்தும் அஞ்ஞானத்தை இப்போது கற்பித்தல்:—என் சிந்தையென. வெந்துயரென் = புத்திரனே நீ துக்கியா யிருப்பதென்ன ? துக்கியாயிருக்கும் நீ என் னைக் கேட்கிற்சதா சுகியாகுவையென். மாயை = மகாதுக்கமயமான சம்சாரம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ வசிஷ்டபகவானைப் பார்த்துப் பிரஹமதேவர் செய்ய வேண்டிய பணிவிடையைக் கட்டளையிடல்:—ஆன்மாவென.

**ஆன்மாவை யறிந்தலைவற் றிருந்த வென்னை யயன் பார்த்து நாமேநின் னறிவை மாற்றி, யூன்மாயை பின்பொழித்தே முயிரெலாநின் னுபதேசம் பெற்றுய்ய வுபாயஞ் செய்தோ, மேன்மாயும் வினைநிறைந்த சம்புத்தீவின் மேவியபா ரதவருடம் விரைவின்மேவித், தான்மாளாக் கிரியினர்க்குக் கிரியை சாற்றிச் சாதனமுள் ளோர்க் குணர்வைச் சாற்று கென்றான். (9)**

(ப - ரை.) ஆன்மாவையறிந் தலைவற்றிருந்த என்னை = அறியவேண்டிய ஆத்ம சொரூபத்தை யுணர்ந்து யதார்த்தநிலையிற் சஞ்சலமில்லாம லிருந்த என்றனை, அயன் பார்த்து = பிறப்பற்ற பிரஹ்மதேவர் நோக்கி, நாமே நின்னதறிவை மாற்றி = உன் னுடை பிரஞ்ஞையை மாறுபடுத்தி, ஊன்மாயை பின்பொழித்தேம் = தேகாதிமா யையை உணர் வுதித்தபின்னர் நீங்கும்படி செய்தோம், உயிரெலாம் = ஜீவர்களெல் லாம், நின்னுபதேசம் பெற்றுய்ய = உன்னுடைய அனுக்கிரகத்தை யடைந்து பவங் கடப்ப, உபாயஞ் செய்தோம் = உபாயத்தை யியற்றினேம், மேன்மாயும் வினைநிறைந்த சம்புத்தீவில் = மேலும் மேலும் இறந்து பிறந்துழலுவதற் கேதுவான கருமங்களைச் செய்துகொண்டிருக்கும் பிரஜைகணிறைந்த உப்புக்கடல் சூழ்ந்த தீவில், மேவிய பாரத வருடம் = சிறப்பாக விருக்கும் பாரதகண்டத்தை, விரைவின்மேவி = அதிசீக்கிர மாக அடைந்து, தான் மாளாக் கிரியினர்க்கு = தன்னை யறிந்துகொள்ளும் வகையின் றித் தொழிற்படும் மக்கட்கு, கிரியைசாற்றி = கருமகாண்டத்தை யுபதேசித்தும், சாதனமுள்ளோர்க்கு = நான்கு சாதனங்களையு முடைய அதிகாரிகட்கு, உணர்வை = பிரஹ்மவித்தையை, சாற்றுகென்றான் = உபதேசித்தும் விளங்குவாயாக என்றருளினர்.

(ஸ்ரீ - வீர.) அருளியபிறகு அறியவேண்டியதை யறிந்து உண்மையான இயற்கை நிலையி விளைப்பாறும் என்னை நோக்கி அந்த உலககர்த்தாவாயும் ஆசிரியராயும் இருக்குந் தந்தையாகிய பிரஹ்மதேவர் சகலகாரணத்தையும் கூறியருளினர். சாபத்தால் அஞ்ஞ பதத்தையடைந்து ஹே! மைந்த ! இந்த ஞானத்தினது சாரத்தை எல்லா அதிகாரிகட்கும் ஞானஞ் சித்திக்கும் பொருட்டு நீ வினவுமாறு யாமேசெய்தனம்; இப்போது நீசாபந் தீர்ந்தவனாகி, கனகம் நெடுங்காலம் களங்கப்பற்றுற் கனகமல்லாததே போலடைந்து மீண்டும் புடம்போடலானே முதற்போதிருந்த சுத்தகனகத் தன்மையதாகவே யிருப்பதேபோலப் பரமஞானத்தை யடைந்து அகண்டானந்த ஆன்மவடிவமா யெம்போல இருக்கின்றனை. இப்போது உலகத்திற் கனுக்கிரகிக்க வேண்டிய காரணம் பற்றிப் பூமியின்மீது சம்புத்தீவின்கண் ணிருக்கும் பாரதவருடத்திற்கு நீசெல்வாயாக. ஆண்டு, மகாமதியையுடைய நீ முறையே செல்பவனாதலின் கருமகாண்ட தற்பரர்கட்குக் கிரியாகாண்ட முறையாகவே உபதேசம் புரிவாயாக, இவ்வாறே "வினைகருமந் தொடர் வெண்மை மிக்கார்த, முளமயலியற்ற லுரித்தன்றாமால்" என்னும் நியாயமுமுளதாம்; விரக்தமனத்தரும் சூக்குமப் பொருளைக்கவருஞ் சமர்த்தரும், மிகஆராய்ச்சியோடு கூடியவரும் ஆய அதிகாரிகட்கு நீ ஆனந்தத்தைக் கொடுக்கும் ஞானத்தை யுபதேசிப்பாயாக.

(ச.) ஸ்ரீ பிரமதேவர் சகலகாரணமுங் கூறல்:—சுகியாயிருந்த நாமே சாபத்தால் நின்னறிவைமாற்றி = அஞ்ஞனாய் வினவும் அதிகாரியாக்கி, பின்சாப நிவிர்த்திசெய்து, ஊன்மாயை யொழித்தேம், உயிர்—பெற்று = ஞானசாரஞ் சித்தித்து, உய்ய—தோம், இப்போது பரமபோதப் பிராப்தனை நீ, மேன்மாயும்—வருடம், உலக அனுக்கிரக ஹேதுவால், விரைகென்றான்; கன்மபரர்க்குக் கன்மயோகத்தையும், விரக்தராய பிராஞ்ஞருக்கு ஞானயோகத்தையும் உபதேசிக்க வேண்டுமென்பது கருத்து. (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கற்பபரியந்தம் கருமபூமியி லிருக்கவேண்டியதானது, குருவாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்யுந் தங்கட்கு உலக அனுக்கிரகப் பொருட்டே கேவலம் ஆவதில்லை, மற்றோ செய்யவேண்டியதின் சேடமும் செய்தற்பொருட்டுமாம் என்று சங்கிப்ப விடைதருகின்றார்:—அவனென.

**அவனுரைப்ப வந்துயிர்க ளுளநா ளெல்லா மாகுவனிங் கொருசெயலு மாசையில்லை, யிவணிருந்து சுழுத்தியுறு செய்கையாலே யிடர்மனத்தைக் கடந்துசெயல் யாவுஞ் செய்கேன், கவருறுமென் செயலொன்று மில்லைவீர கலைநிறைவும் பேதைமையுங் கருமத்தாலே, விவரமதா யாராய்ந்து மேன்மையான மெய்க்குருவைக் கொண்டுணர்வோர் மேதை மிக்கோர். (10)**

(ப - ரை.) அவனுரைப்ப = பிரஹ்மதேவராகிய பிதா ஏவியருள, வந்து = இவணுற்று, உயிர்கள் உள நாளெல்லாம் = ஜீவர்களின் பரம்பரை வாழுங் காலபரியந்தம், ஆகுவன் = அனுக்கிரகஞ் செய்துகொண் டிருப்பேன், இங்கொருசெயலு மாசையில்லை = ஈண்டு இதுசெய்து தீரவேண்டுமென்பதாக யாதொன்றினு மிச்சையிடையாது, இவணிருந்து = நிராசையுட னிங்கிருந்துகொண்டு, சுழுத்தியுறு செய்கையாலே = நித்திரை மிகுந்திருந்தவன் செய்கையை யனுசரித்து, இடர்மனத்தைக் கடந்து = துயர் செய்யும் உள்ளத்தையடக்கி; செயல்யாவுஞ் செய்கேன் = சருவகாரியங்களையுஞ் செய்யா நிற்பேன், கவருறும் என்செய லொன்றும் இல்லை = சுதந்திரமாய்ச் செய்யும்படியான எனது கர்த்தவ்ய மியாதொன்றையுமே காண்கிலேன், வீர = போகாதி பகைசாய்ப்பதில் வீரியமிகுந்த குழந்தாய்!, கலை நிறைவும் = சாஸ்திரஜன்னிய பூரணவுணர்வும்,

பேதைமையும் = அறியாமையும், இருப்பதை, கருமத்தாலே = காரியத்தாலே, விவர மதா யாராய்ந்து = நன்ருக நிர்ணயித்து, மேன்மையான மெய்க்குருவை = பிரஹ்ம நிஷ்டையும் அசேஷசாஸ்திர பாண்டித்தியமு மடைந்துள்ள உண்மையான ஞானசிரி யரை, கொண்டு = சேவையாற் சந்தோஷிப்பித்து உணர்வோர் = அனுக்கிரகம் பெற் றறிவோர், மேதைமிக்கோர் = மகாமதியை யுடையவராவார். (10)

(ஸ்ரீ-வீர.) மனத்தைக் கடத்தல் = அதிமனன் ஆதலாம், அதிக்கிராந்த மனன் ஆதலாம், வெற்றிகொண்ட மனனுதலாம் மகாமனத்தனுதலாம். துர்மனன் ஆகாதிருத்த லெனினுமாம், அஞ்ஞரைப் போலத் தங்களுக்கும் காரியங்களில் பிரவிருத்தி காணப் படுதலின் எங்ஙனம் தாங்கள் கிருத கிருத்தியராக முடியும் எனின் விடைதருவார், சுழுத்தியென்ருர்; பரமசார்தமாய் இஷ்டம் அநிஷ்டம் எய்துங்காலத்தில் மகிழ்ச்சி வாட்டமற்று எப்போதும் துயின்ற பிரஞ்ஞையையுடைய விருத்தியானே நிகழ்ந்து. பர மார்த்த திருஷ்டியால் பிராதிபாசிக திருஷ்டியால் காரியத்தைச் செய்துகொண்டிருப் பேன், அங்ஙனிருத்தலான் பாரமார்த்திக திருஷ்டியால் அஃதொன்று மின்றென்பார், செயலொன்று மில்லையென்ருர். பிரஞ்ஞை துயிலுதலாவது, சத்திய அத்வைத விஷயத் தன்மையை யுடைத்தா யிருத்தலாம்,இவ்விடயம் ஸ்ரீ உபதேச சகஸ்திரியிலும் ஸ்ரீ மதா சாரிய சுவாமிகளாலும் அறையப் பெற்றுளது.—துவிதத்திற்குப் பாதிதத்தன்மை யுண் மையின் யாவன் நனவின்கட் டுவிதத்தைக் கண்டுங் கண்டிலனே துயில்பவனைப்போ லொன்றுங்காணுது, அறிவாகவே காண்கின்றனனே அங்ஙனமாக யாவன்பயிக்காதி செய்யினும் நிஷ்கிரியனே அவனே ஆத்மவித்தாம் அன்னியனன்றென நிசமாந்தங்களில் நின்மல நிச்சயமாம், மேன்மிழற்றிய ஆன்மவித்தின் சொரூபங் கூறுவார். துயில்பவ னென்ருர். நனவின்கண் = விசுவ அவஸ்தையின் கண், துவிதத்தை = துவைதப் பிர பஞ்சத்தை முன்வாசனை வயத்தாற் கண்டும் = விவகரித்தும், விசேடமாகக் கண்டி லன் = விவகரித்திலன். மற்றே, துயில்பவனைப்போல, எல்லாவுலகங்களையும் பிரத்தி யக்காத்மாவில் இலயஞ்செய்து தான்மாத்திரமே யிருப்பதாகக் காண்பன். அதன் கண் ணேது வறைகின்ருர்:—துவிதத்திற்கென. அத்வயத் தன்மையினுனே யென்பதாம். அங்ஙனுகவே முன்போலவே முழுக்கு சௌச பிக்ஷாடனுதி செய்தபோதினும், நிஷ்கிரி யனுவன் = நிர்விகாரனுவன் அகர்த்தாத்ம சுபாவ ஆவிர்ப்பாவத்தானென்க. யாவன் இவ்விதனே அவனே ஆத்மவித்தாவன். விக்ஷேபதசையின் மாட்டும் நழுவாத ஆன்ம உண்மைத் தரிசனமுடைமையான் பிரஹ்மவித்துக்களி லுத்தமன் இவனேயாவன்; அன் னியனல்லன், சாஸ்திரார்த்தங்களை யுணர்ந்தவனேனும் யாவன் விவகாரகாலத்தில் அறி யப்பெற்றதாந் தன்மை செய்யப்பெற்றதாந் தன்மை முதலிய அபிமானவானுவன் அவ னல்லன், என்றிவ்வண்ணம் வேதாந்த சாஸ்திரங்களில் விசேடமாக நிச்சயிக்கப்பட்டுள தாம். மேலும் யானென்னும் ஆத்மபுத்தியும் எனதென்னும் ஆத்மீய புந்தியும் எவனுக் கெக்கால் பிரயோஜன மற்றவாமோ அவனக்காலாத்ம வித்தாவன். மமதையற்றதாய் அகங்காரமற்றதாயுள்ள ஆத்மாவை யாவன் நன்குணர்வானே அவனே தத்துவதரிசியா வன் என முன்பருளியதை வெளிப்படை யாக்கிக்கொண்டு ஆன்மாவை யறிந்தவனு டைய இலக்கண மியம்புவார். யானென்ருர். சாஸ்திர ஆசாரிய அனுக்கிரகம் பெற்ற பதார்த்த மிரண்டன் விவேகமுடைய யாவனுக்கு யான் எனதென்பதான ஆத்ம ஆத்மீய விடய ஞானங்கள் பயனற்றனவாக எக்காலாமோ அதாவது அவற்ருலுண்டாக்கப்பட்ட விவகார ஹீனனுகப் புமான் எப்போதாவனே, அப்போது அவன் ஆத்மவித்தாவன்; தேகாதிகளிலும் அவற்றின் அனுபந்தத்திலும் விவகார காலத்திலும் முன்போல வஸ்

துத்தன்மையனவாக விவகாரம் புரியாமல், அவ்விவகாரத்தும் ஆன்மா மாத்திரத்தைத் தரிசித்துக்கொண் டிருப்பவனே நல்ல ஆன்மவித்தாவன் என்பதாம். அவ்வாறே " யாதொரு பொருளை யெல்லாவுயிர்களுமென்றுங் காண்பார், காதலின் ஞானியத்தைக் கண்ணினுற் றெரியக்காணுன் " என்னும் ஸ்ரீ பகவத் வசனமுமுளதாம். இவ்வண்ணம் எக்காரணத்தாற் கூறப்பெற்ற தென்பதாதி வினவிடைகளைக்கூறிப் பிரசங்கத்தால் வந்த சிலவற்றையுங் கூறித் தேங்கமலத் தயனுரைத்த மொழிகேள் என்னும் வாக்கியத் தானே அபிமுகீபூதமான ஸ்ரீ இராமர் பொருட்டு உபாயத்தோடுகூட ஞானத்தை உப தேசிக்க விழைந்தவராய் விசிஷ்ட வினவுவான் விளம்புவான் என்னும் நம்மிருவர் சம் வாதம் அவசியம் பலத்தின் பொருட்டே கற்பிக்கப்பெறும் எனக்காண்பித்தற் பொரு ட்டு வினவுவோனையும் விளம்புவோனையும் கூறுவார், கலைநிறைவு மென்றார். இவ்வாறு தாமரையிலுதித்த தந்தையின் ஆணையைப் பற்றியான் அதிகாரிகளின் பிரவாக மிருக் குமவரை யிருப்பவனு யிருக்கின்றேன். செய்யத்தக்க தொழிலின்பயன் எனக்கீண்டு ஒரு சிறிதுமே கிடையாது, இருக்கவேண்டியதற்காக மனமற்றவனுகிப் புவியின் கண் ணே யிருக்கின்றேன். அதனுனே எப்போதும் உறங்குவதேபோல அபிமானமற்ற விருத்தியாற் கிடைத்து நிகழ்கின்றபடி காரியத்தைச் செய்கின்றனன், மிகச்சாந்தியோடு கூடிய விருத்தியினுனே வாழ்கின்றேன், எப்போதும் சமுசாரத்தி லுறங்கும் அஞ்ஞர்க ளது புத்தியினுனே காரியத்தைச் செய்விக்கின்றேனேயன்றி என் மதியைக் கொடுத்து ஒருகாரியமும் செய்வதே கிடையாது. ஆசிரிய ரிலக்கணமறைவார், வீர, என்றார். தத்து வத்தை யுணர்ந்திருக்குந் தன்மையையும் உணராத தன்மையையும் முன்னருபதேசக ரிடத்தில் விவகாரக் குறியினுலே நிர்ணயித்து எந்நரன் வினவுகின்றனனே அவ்வினவு வோன் மிகவும் மதிமானுவான்.

(ச.) இவண் இருக்கவேண்டு மென்பதின்றி யிருந்தும், சுழுத்தியுறு செய்கையாலே = சந்ததம்பாகிய அனுசந்தானம் இன்மையினுலே நிர்விகார விருத்தியால், இடர்— இல்லை, எனக்குச் செய்யவேண்டுவ தொன்றுமின்று, யானென்றுஞ் செய்திலனுதலாற் கன்மங்களாற் சலியேனென்ப தாயிற்று; கருமபலன்கள் பற்றுறுவென்பதையு முணர்க, இங்ஙனந்தனக்கு ஞானோபதேசாதிகார நிரூபித்துக் கேட்போர் இலக்கணமுன்புகன்று பின்மோக்ஷவுபாயங் கூறுவார், வீர, என்றார். ஹே வீரராகவ ! அல்லது வீர = உபதே சிப்பவரது, கலையாராய்ந்து = முன்பு நிர்ணயித்துப் பின்பு, மேன்—மேதைமிக்கோர்= மகாமதியுடையர்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதிகாரியின் இலக்கணமும் வீட்டின் வாயிற்காவலரையும் கூறுகின்றார்:—ஓதுகின்றவெண.

ஓதுகின்ற பொருண் முழுதுமுன்பின் கூட்டியுணர்பவர்க் கல்லது பசுவை யொப்போர்க் கெல்லாந், தீதகன்ற குருவுண்மை செப்பாரன்றே திகழ்சாந்தி விசாரமொடு செறிசந் தோடஞ், சாதுசங்க மெனவீட்டின் வாயில்காக்குஞ் சதுட்டயரு முறவாகிற் றடைவே யுண்டோ, மேதினிகாவலர் மனையிற் கடை காப்பாளர் விடுவதுபோல் வீட்டிலவர் விடுவரன்றே. (11)

(ப - ரை.) ஓதுகின்ற பொருண்முழுதும் = உபதேசமுகமாகச் சிரவணித்த சகல பதார்த்தங்களையும், முன்பின் கூட்டி யுணர்பவர்க் கல்லது = பூர்வாபர சமாதானசா மர்த்திய மதியையுடைத்தாகி யுணர்ந்துகொள்ளு பவர்க்கல்லாமல், பசுவையொப்போர்க் கெல்லாம் = பசுதர்மத்தையுடைய அதமர்தமக்கு, தீதகன்ற குரு உண்மை செப்பார்=

குற்றமற்ற குருதத்துவத்தை யுபதேசியார், அன்றே=இஃதுண்மையே யல்லவா! திகழ் சாந்தி விசாரமொடு செறிசந்தோடஞ் சாதுசங்கம் = சாதனமாக விளங்கும் சாந்தி விசாரம் சந்தோடம் சாதுசங்கம், என = என்றுபெரியோராற் கூறப்பட்ட, வீட்டின் வாயில் காக்குஞ் சதுட்டயரும் = மோக்ஷத்தின் றுவாரத்தைக் காத்துக் கொண்டிருக்கும் நால்வரும், உறவாகில் = நேசித்தனுகில், தடைவேறுண்டோ = புகுதற்கிடையூறுவேறுளதோ, இன்றும், மேதினிகாவலர் மனையில் = பூபாலரது அரண்மனையில், கடைகாப்பாளர் = வாயிற்காவலாளர், விடுவதுபோல் = உள்ளே விடுவதையொப்ப, வீட்டில் = மோக்ஷத்தில், அவர்விடுவர் = அந்நால்வரும் விடாநிற்பர், அன்று, ஏ, அசைநிலைகள். (11)

(ஸ்ரீ - வீர.) முன்பின்கூட்டி யுணர்தலாவது, குருவினுலே பூர்வாபர வாக்கியார்த்த சுருதிகள் சேர்க்கையின்றி வைத்தவழி அதன் சமாதானத்திற் சாமர்த்திய முடைய மதியுடைத்தாதலாம், ஈண்டுப் பூர்வாபர சமாதான சாமர்த்தியபுத்திக்கே புகலுக, அஙிந்திதனுய சீடனுக்கே யறைந்திடுக, வினவுவோனுக்கே விளம்பிடுக, என்னுமிவை நியமமாம். சம்வாதசாபல்லிய முணர்த்தற் பொருட்டுக் கேட்போன் கிளத்துவோன் வடிவ ஆக்கியாயையாதிகளில் முமுக்ஷு கிருத்தியத்தை மொழிவார், திகழ் என்றுர். ஒடுசெறியென்பன, ஒன்றேடொன்று தொடர்ந்து நிற்றலையும் ஒன்றற்கொன்று சாதகமாதலையும் ஒன்றையடையினும் மற்றவை யுறவாதலையும் உணர்த்தியவாறு காண்க. முன்பின் கூறியவற்றையும் கூருதவற்றையும் பகுத்துணர்வதில் ஆற்றலுடைய மதியையுடையனுய்ப் புகழத்தக்கவ னுனவனுக்குப் பிராஞ்ஞன் வினவியதைக் கூறவேண்டும், பசுதருமத்தோடுற்ற அதருமத்தினனுக் கறையொணுதாம். "இருளுமவித்தையி னிடையிற் பட்டே, மருளுந்தாமே தீரர்பண்டிதர், தெருளரெனவே தேரித்திரிபவர், உருளுங்கோ ணல் வழிபலவுலவிப், பொருளறு துயரைப் பொருந்துவர் புலனிலார், வெருளுங்குருடனூற் கொடுபோங் குருடர்கள், சுருணூர்துயர்பல தொடருதல் போன்மே" என்னுஞ் சுருதியை யனுசரித்து அநாரியனைத் தியாகிக்க வேண்டும். மோக்ஷத் துவாரத்தில், சமம், விசாரம், சந்தோஷம், சாதுசங்கமம் என நான்கு துவாரபாலர்கள் கூறப்படுவர்கள். இந்நால்வரும் முயல்வினுனே சேவிக்கத் தக்கவர்களாவர்கள். முடியாவிடின் மூவரைச் சேவிக்கவேண்டும், அதுவு முடியாவிடின் இருவரை யேனுஞ் சேவிக்கவேண்டும், சேவிக்கின் மோக்ஷராஜக் கிருகத்தில் இவர்கள் கதவுதிறந்து விடுவார்கள்.

(ச.) சதுட்டயருளர் அவரில் மூவர் இருவர் ஒருவர் உறவாயினும் வீட்டில் விடுவர் சதுட்டயரும், கடைகாப்பாளர் வசிகரமாயின் விடுவர் அன்றேற் பிரதிபந்திப்பர் அதுபோற் சாந்தியாதிகளும் ஆமென்பதாம். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை): அந்த நால்வருள் ஒருவரையேனும் பற்றவேண்டு மென்பதையும் அதற்கேதுவாம் பிரஞ்ஞையை வளர்க்கவேண்டு மென்பதையும் வற்புறுத்தல்:—அந்நால்வரென.

அந்நால்வர் தமிலொருவ ரன்பானுலு மனைவருமொத் தன்பாவ ராதலாலே, பன்னுளு மிகமுயன்று யாது நீத்தும் பற்றியொரு வரை யேனும் பழகவேண்டு, மன்னுத பிறப்பறுக்க நல்லோர் நன்னூன் மாதவத்தா லறிவைமுதல் வளர்க்க வேண்டு, மின்னுத மாயையெனு நஞ்சம் போத மென்கின்ற காருடமந் திரத்தான் மீளும். (12)

(ப - ரை.) அந் நால்வர்தமில் ஒருவர் = அந்த நான்குபெயருள் ஏகர், அன்பாகு ஒம் = நேயமாயினும், அனைவரும் ஒத்தன் பாவர் = நால்வரும் ஒருமித்து நேயமாவர், ஆதலாலே = ஆகையினாலே, பன்னாளும் = பலகாலமும், மிகமுயன்று = பெரும் பிர யத்தினஞ் செய்தும், யாதுநீத்தும் = எதனைத் தியாகம் செய்யவேண்டு மானாலும்செய் தும், பற்றி யொருவரை யேனும் = ஒருவரையேனும் பின்பற்றி, பழகவேண்டும் = நேயஞ்செய்து கொள்ள வேண்டும், மன்னாத பிறப்பறுக்க = அநித்தியமாகிய சனன மரண சமுசாரத்தைக் கெடுக்க, நல்லோர் = சத்புருடர், நன்னூல் = சற்சாஸ்திரம், மாதவத்தால் = மகாதவம் முதலியவற்றால், அறிவை = பிரஞ்ஞையை, முதல்வளர்க்க வேண்டும் = ஆதியில் விருத்திசெய்ய வேண்டும், இன்னாத மாயையெனும் நஞ்சம் = துயரைத் தருவதான சமுசாரமெனும் விடம்; போதமென்கின்ற காருட மந்திரத்தான் மீளும் = ஞான மென்னப்பட்ட காருடதேவதா சம்பந்த மந்திரத்தினாலே தொலைந் துபோம்.

(ஸ்ரீ - வீர.) மிகவளர்ந்த பிரஞ்ஞையாலே என்னாமென்னின் இயம்புவார், இன்னாத வென்றார். சகிக்க முடியாத துயரைத்தரும் சமுசாரமேயாய விடவேகத்தால் உற்பன்ன மாய விசேசிகையென்னும் ரோகம்; போதம்=பிரஹ்மாத்மைக்கிய விஞ்ஞானம், அதுவே காருடமந்திரம், அதனாலகலும் என்பதாம். போதம் = யோகம், போதமே யோக சப் தார்த்தமாம், என்னை, ஆசிரியரிடத்துச் சிரவணித்துச் சகபாடிகளோடு சாஸ்திரவிசா ரஞ்செய்தலானே பரமார்த்த ஞானமய (மந்திர) மாகிய அவ்வியோகம் அவசியங்கிடைத் துப் பலத்தையுங் கொடுக்கும், என்னும் பெரிய வாசிட்டத்துள்ள இச்சுலோகத்திற் கடுத்த சுலோகத்தால் அறியப் பெறுதலினென்க. சம்சார ரோகத்தைக் கெடுக்கும் திடப் பிரஞ்ஞையின் பொருட்டுச் சமாதிகளோடு கூடி, ஆன்மாவை யாராய வேண்டும் எனக் கூறப்பெற்றது. எல்லா முயற்சிகளானும் பிராணனை விடுத்தேனும் மென்றது (முயற்சியி னதரவி னதிசயத்தைக் காண்பிக்கும் பொருட்டாம்) ஒருவனை யேனும் நன்குபற்ற வேண்டும், ஒருவன் வயப்பட்டானாயின், நால்வருமே வயப் பட்டவர்களாவர்கள். சமுசாரத்தை விடற்பொருட்டு முதலில் நூல் நல்லோருறவு களின் வாயிலாகவாம் தவத்தோடு கூடிய சமதமங்களால் விவேகத்தைக் கவர்ந்து வைத்துக்கொள்ளும் ஆற்றலுடைய மதியையே நன்குவளர்த்தல் வேண்டும், அதன் வளர்ச்சியின் கண்ணும் இந்நூற் பரிசீலனமே யுபாயமாம். சிறிது சீர்படுத்திய மதியி னனே இந்நூலை நன்காராயின் இதுவே யதிகாரியின் அஞ்ஞானத்தைப் பரமநாசஞ் செய்யும். "பேதிக்கு மிருதயப் பெருங்கிரந்திகடாம், சேதிக்கப்படுமாற் செறியைய மெல்லாம், வாதிக்குமிவனது கருமங்கண் மாயும், ஆதிக்கரியப்பரா வரமறியினே" என்ப தாக அறையும் மறையால், சகிக்கமுடியாத சமுசார விஷசம்பந்தத்தாற் பிரவேசித்த விசேசிகை வியாதியானது, ஜீவப்பிரஹ்மைக்கிய ஞானமாகிய காருடமந்திரத்தானே விட சோதனஞ் செய்யவே தீர்ந்துவிடும்.

(ச.) சமாதிகளின் மத்தியில் ஒன்று வயமாகியவழி அதனை யனுசரித்துப் பிறவும் வசமாம் ஆகலின் ஒன்றையேனும் அகப்படுத்த வேண்டும். ஆயின் சாந்தியாதிகள் யாவையென அபேக்ஷைவரச் சாந்தியாதிகளை நிரூபிப்பவராய் அவற்றின் மூலரூபமான பிரஞ்ஞையைக் கூறுவார் மன்னாதவென்றார். மன்னாத—மாதவத்தால், தமையந்தி மகா தவங்களினாலும், அறிவை = பிரஞ்ஞையையே சம்சார நிவிர்த்தி நிமித்தம், வளர்க்க வேண்டும். நினைப்பு, அதீத விடயமுடையது ; மதி, ஆகாமிகோசரம்; புத்தி, தாற்காலிக முடையதென் றறியவும் ; பிரஞ்ஞை, திரிகாலத்திலும் உள்ளதென்று மதிக்கப்படு

மென்பது பிரஞ்ஞை இலக்ஷணம். பிரஞ்ஞையும் யோகமும் மோக்ஷ உபாய மென்பார் போதமென்றார். சமுசாரமே விடவேகஜன்னிய விடூசிகையாம், துயரமிகுந்த பிரவிருத்தி ரூபமாதலின்; அத்தகைய அதுகருடமந்திர துல்லியமாகிய பாவனபவன நிரோத சன்னியமான யோகமென்னுஞ் சித்தவிருத்தி நிரோதத்தாற்றீரும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் புகன்ற விட விடூசிகையையே விரித்துரைக்கின்றார்:—கூறியவகையே இப்போது ஆன்மாவை ஆராயாதவனுக்கு நிரதிசய துக்கம் உண்டென்கின்றார்:—சரமழையென.

(ச - அ - கை.) சொல்லப்பட்ட வுபாயங்களாற் சம்சார நிவிர்த்தி செய்யாவிடின் அதனாலுந் தோடத்தைக் கூறுகின்றார்:—சரமழையென.

சரமழைகணெய்தன் மலர் மழையை யொக்குந் தழற்பள்ளி பனிநீரிற் சயன மொக்குஞ், சிரமரிதற் சுகமுறுநித் திரையை யொக்குந் தேகமரி வது கலவைச் செறிபூச் சொக்கும், நிரவதிக நாராச மருமம் பாய்த னெடுங் கோடைச் சிவிறியினன் னீரை யொக்கும், விரவரிய விடயமெனும் விடவி டூசி விவேகமிகுந் தவர்க்கல்லால் விலக்கொ ணாதே. (13)

(ப - ரை.) சரமழைகள் நெய்தன்மலர் மழையையொக்கும் = ஆயுதவர்ஷங்கள் குவளைமலர் வருஷம் போன்றும், தழற்பள்ளி = அக்கினிசயனம், பனிநீரிற்சயனமொக்கும் = பனிநீர் பரப்பிய சயனம்போன்றும், சிரமரிதல் = கழுத்தரிதல், சுகமுறு நித்திரையை யொக்கும் = ஆனந்தமேலிடும் தூக்கத்திற் கொப்பாம், தேகமரிவது = அங்கத்தைச் சேதிப்பது, கலவைச்செறி பூச்சொக்கும் = சந்தனக்குழம்பைப் பூசிக்கொள்வது போலவாம், நிரவதிக நாராசம் மருமம்பாய்தல் = அளவற்ற நாராசங்கள் மருமஸ்தலங்களிற் பாய்தல், நெடுங்கோடைச் சிவிறியின் நன்னீரை யொக்கும் = பெருங்கோடை காலத்தில், வெப்ப விநோதன தாரைக்கிருக்கும் வீசும் சுகந்தத்தண்ணீர் போன்றிருக்கும், விரவரிய விடயமெனும் விடவிடூசி = நீண்டுதற்குக்கூடாத விடயமாகிய விடமய விடூசிகை, விவேகமிகுந்தவர்க் கல்லால் = அதிக விவேகிகட்கே யல்லாமல் மற்றையர்கட்கு, விலக்கொணாதாம் = விலக்க முடியாததேயாம். (13)

(ஸ்ரீ - வீர.) விடயமே விடமவிட விடூசிகையாம். இதற்குச் சிகிச்சை செய்யாதிருப்பின், நிரந்தரம் நரகங்களேயாய நகரங்களின் சமுதாய மேயாய பயன்களைக்கொடுத்துக்கொண்டே யிருக்கும், அவற்றாற் றுயரத்தை யீந்துகொண்டே யிருக்கும். அவை யென்ன துக்கத்தைச் செய்யும் எனவினவ விடைதருவார் சரமென. விடயவிடமவிட விடூசிகையா லுளதாய எத்துயரைக்குறித்து, சிலைகளையும் பிளக்கும் தேஜசோகூடிய வாளாயுதங்கள் கோடிகூடித்தாக்கின் அங்கங்களில் அது உற்பல தாடனமொக்குமோ, எவ்வன்னியின்றாகம் சரீரத்தில் பனிநீர்பெய்த லொக்குமோ; அவயவங்களைத் துண்டித்தலோ சந்தன லேபனமாமோ; சர்வலோகமய பாணங்களாகிய நாராசங்கள் பாய்தலோ, வெப்பம் விலகற்பொருட்டு யந்திரமேவிய நீர்த்தாரையுள்ள கொடிவீட்டில் பெய்யும் சிறு நீர்த்துளிகளை யொக்குமோ; அத்தகைய பெருந்துயராம். சரமழைகண் முதலியவை பெருந்துயரங்கட்குக் காரணங்களாக இருந்தபோதினும் எத்துயரைக் குறித்து நோக்குங்கால் சுக ஏதுக்களாக வழங்கப் படுகின்றனவோ, அத்தகைய நிரதிசய துக்கத்தை விடயவிடம விடவிடூசிகை உண்டெண்ணும் என்பதாம். இவ்வண்ணமாதலின் விடயரோக் சிகிச்சையில் மிகவும் முயலவேண்டு மென்பார் விவேகமென்றார். அலக்ஷியமாக

விளையாட்டாக விவேக மிகுத்தவர்க்கு விலகுமென்க. நரகம்போன்று மலமூத்திரங்களின் நகரம்போன்ற சரீரங்களிடத்திலும் அவற்றினுறவினர் அன்னபானாதி வர்க்கமுதலிய சமுதாயங்களிடத்திலும் ஆசைவைத்தலானே புருடனைப் பந்தப்படுத்தும். இயற்கையனவாய விடயவடிவ விடவிடுசிகைகளாமிவை அந்தோ ! முடிபின்றியனவையாம்; இவைகளைச் சிகிச்சைசெய்து மாற்றாவிடின் நிரந்தரம் மேற்கூறப்படும் ஆயிரக்கணக்கான அவ்வந்நரக துர்த்தசைகளையே கொடுக்கும். அவைகளாவன:—கற்களைத்தின்னல், வாட்களால் வெட்டுண்டல், மலைச்சிகரங்களினின்றும் உருளல், கற்கனங்களாலடிபடல், அக்கினியாற் றகமுறல், பனியாலெப்போதும் நனைந்திருத்தல், கோடாரி கத்திரி முதலியவற்றால் சரீரங்கள் சேதிக்கப்படல் (பிளக்கப்படல்) சிலைப்பலகைகளில் உடல்கள் சந்தனக் கட்டையைப்போற் றேய்தல், வாளிலைமரங்கணிறைந்த வனத்திடையோடல், காஷ்டத்துள் ளிருக்கும் புழுக்கட்கேபோல அங்கமுழுதும் காஷ்டயந்திரத்தாற் றுன்புறல், பழுக்கக் காயவைத்த இரும்புமுட்சங்கிலியினாலே சுற்றுண்ணல், முட்டுடைப்பங்களால் அங்கமுழுவதும் தோலெழும்பும்படி தடைக்கப்படல்; எப்போதும் அக்கினிச் சுவாலைகளைக் கக்கும் போரிற்பொழியா நின்ற பாணங்களின் றாரையிடைவிடாது தைக்கப்பெறல், நிழல் நீர்குடித்தல் கிடைக்கப்பெறாமல் உஷ்ணகாலங் கழிக்கப்பெறல்; அவ்வாறே சீதகாலத்தில் நீருள்நிறுத்தி நீரைத்தாரையாகப் பொழியப் பெறல், வெட்டவெட்ட உண்டாகிக் கொண்டிருக்குஞ் சிரசு மீண்டு மீண்டும் வெட்டுப்படல், சுகநித்திரை விடயத்திலோ வார்த்தையு மில்லாமை, முகத்தை மூடிவிடுதலான் மூச்சுவிடமுடியாமை, அங்கங்களெங்குங் கொப்பளம் கிளம்பி மேடும்பள்ளமுமாய் விவகரிக்க முடியாமை, தேகம் மற்றைய ஒவ்வோ ரங்கங்களும் மலைபோல வீங்கப்பெறுதல் அல்லது கற்களைத் தின்னன் முதலிய நான்கையும் பனிதெளித்தல் போற் சகிக்கத்தக்கதாம் அங்கத்தைக் கத்தரித்தலைச் சந்தனப்பூச்சே போலவும், வாளிலைத்தருவனாதி மூன்றையும் தேகசமஸ்காரம் போலவும், விசிட்ட சரதாரை வீழ்தலையோ வேனிற்காலத்தில் விளையாடு நிமித்தங் கொடிவீடு முதலியவற்றி விருந்து ஜலதாரையைப் பொழிவித்தல் போலவும், தலைவெட்டலாலாய மரணத்தைச் சுகநித்திரைபோலவும், முகத்தை மூடலான் பலாத்காரமாய்ப் பேசாமையைச் செய்தலைச் சகஜ விருத்தியினாலே வதனத்தை மூடிக்கொண்டதே போலும், உடம்பெல்லாங் கொப்பளித்து மேடும்பள்ளமு மாதலையோ. மகாசம்பத் துதயமானதைப் போலவும், அவசியம் பொறுத்துக் கொள்ள வேண்டியதாம். துக்கஸ்தானங்கள் அளவிறந்தனவா யிருத்தலின் ஒரு திசைமாத்திரம் இவையெனக் காண்பிக்கப்பட்டன. அவற்றை யீண்டு காண்பித்தலானே யாதுபயனோவெனின்? கூறிய இவ்வகையான கஷ்டசேஷ்டைகள் ஆயிரங்கோடியாற் கொடிய சமுசாரத்துற்ற அழியப்பட்ட காயங்களாற் பரிச்சின்னப்பட்டுப் பரவசமா யிருப்பதில் அநாதரவாய்க் கவனியாமல் விட்டுவிடப்படாது. அவசியம் மேற்கூறும் பிரகாரம் விசாரிக்கத்தக்கது மேற்கூறும் வகையாக அறியவும் வேண்டும்.

(ச.) அப்போதவர்க் கஃதித்தன்மையான சகித்தற்கரிய துக்கங்கொடுக்கும்; அத்துக்கத்தை விசாரிக்கு மிடத்துச் சரமழைகண் முதலியவை நெய்தன் மலர்மழையாதி போற் சகிப்பனவா யிருக்கின்றன வென்பது தாற்பரியம்: (ஒக்கும் ஒக்குமென்பது பரிகாசம்) மூகீகரணம் ஆனன முத்திரையாம்=வாக்கின் பந்தனத்தால் மூகத்தன்மையின் சம்பாதனம் வதனவிசிராந்தியேயாம். பாதிர்யம் மகானுபசயமாம் = மந்திர ஔஷதாதியால் செவிடாந் தன்மையும், சித்தவிக்ஷேபத்தை யியற்றும் சத்தப்பிரபஞ்சங் கேளாமையின் மிகுந்த மேன்மையானதுண்டாம். விவேக—விலக்கொணு தென்றமையால் சாத்திரவிசாரம் நிறைந்தோரே யதைத்தவிர்ப்பர் அதேமோக்ஷமாம். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எதாவது சிகிச்சை விடயரோக நீக்கப்பொருட்டுச் செய்யத்தக்கதாம் என, கூறுகின்றார்:—எவ்வாறறிய வேண்டுமென் றாசங்கை யுண்டாகக் கூறுகின்றார்:—ஊனமென.

(ச - அ-கை.) சாஸ்திர விசாரத்தாற் சிரேயசுண்டா மென்னப்பட்டது. அஃதும் ஆத்மசாக்ஷாத்கார பரியந்தம் சந்ததமும் செய்யவேண்டு மென்கின்றார்:—ஊனமென.

ஊனமிலா ஞானநூல் விசாரத் தாலே யுயர்வீடு நண்ணுமென லுண்மை யன்றோ, தானறியு மனுபூதி ஞான நன்னூற் சற்குருவிம் மூவகையுந் தம்மி லொத்தே, யானவகை யியற்றில் விடா தான்மாத் தோன்று மற்பவறி வினர் கற்ற வரிய மெய்ந்நூ, லீனமுறு மடமைதெறு மிதுபோன் மற்ற வெந்தநூல் களும் மடமை யிகவா தன்றே. (14)

(ப - ரை.) ஊனமிலா ஞானநூல் = குற்றமற்ற ஞானசாஸ்திரங்களின், விசாரத்தாலே = ஆராய்ச்சியானே, உயர்வீடு நண்ணுமெனல் = உயர்ந்த மோக்ஷம் கிடைக்குமென்பது, உண்மையன்றோ = சத்தியமேயல்லவா, தானறியும் அனுபூதி = சுவானுபூதி, ஞானநன்னூல் = ஞானசாஸ்திரம், சற்குரு = ஞானாசிரியர், இம்மூவகையும் = இந்த மூன்றுவிதமும் தம்மிலொத்தே = ஏகவாக்கியத் தகைமையை யடைந்து, ஆனவகை யியற்றில்விடாது = அனவரதம் முடிந்தவிதம் பயிற்சிமுயலின், ஆன்மாத்தோன்றும் = ஆன்மா சாக்ஷாத்கரிக்கவரும்; அற்பவறிவினர் கற்றவரிய மெய்ந்நூல் = சிறிது சமஸ்கரிக்கப்பட்ட மதியினர் சிரவணித்த அருமையாகிய இத்தத்துவ சாஸ்திரம், ஈனமுறுமடமைதெறும் = சனனமரணத்தை யுண்டாக்கும் அறியாமையைப் போக்கும், இதுபோன்மற்ற வெந்தநூல்களும் = இதற்கு நிகராக வேறு எச்சாஸ்திரங்களும், மடமையிகவாதன்றே = அறியாமையைக் கெடுக்கமாட்டாதாம். (எ-று.) (14)

(ஸ்ரீ - வீர.) அன்றோ என்றது, சுருதி யிதிகாச புராணப்பிரசித்தியை யிலக்குவதற்காம். சகல அநர்த்த நிவிருத்தியையும் பரமானந்த பதப்பிராப்தியையும் இச்சிக்கப்பட்டவரால் சாஸ்திரார்த்த விசாரம் நன்குசெய்யத் தக்கதாம். அற்றேல் சாஸ்திரவிசாரத்தால் நன் ஞானவிசார வாயிலாகவே மேன்மையானது மிகும், அந்நன்ஞானம் விசாரஞ்செய்யு மியாவருக்குமே என் உண்டாவதில்லை யெனின்? கூறுவார், தானறியு மென்றார். எவ்வதிகாரிக்கு இடைவிடாப் பயிற்சியால் சுவானுபூதியாதி மூன்றும் சபலமாகப் பொருந்துமோ அவனால் ஆன்மாச் சாக்ஷாத் கரிக்கப்பெறும், மற்றவனால் ஆகாதாம். எச்சாஸ்திரத்தின் அர்த்த விசாரம் மேன்மை விரும்பியவனாற் செய்யத்தக்கதாம் எனக் கடாவ விடைதருவார், அற்பவென்றார். சாஸ்திரம் மூர்க்கத்தன்மையைக் கெடுக்கும் என்பதாம். எவ்வாறு சாஸ்திர விசாரத்தாற் றிடமாய் மேன்மையான துண்டாமோ அவ்வாறேயாம்; அவ்வாறாயின் சாஸ்திர விசாரத்தான் மேன்மைபெறல் எங்ஙனங் கூடுமென்று துணியமுடியும், சாஸ்திரவிசார தற்பரர்களாகிய மாண்டவ்யாதி மகரிஷிகட்கும் ஆயிரக்கணக்கான துர்த்தசை காணப்படுதலின் எனவினவின், வித்தைக்குக் கண்கண்ட பலனுண்டென்க; எனவே பிராணனுள்ள வரையும் அதிகாரியால் ஆன்மாவே விசாரத்தாற் சிரவணிக்கத் தக்கது, மனனிக்கத்தக்கது, தியானிக்கத் தக்கது, அறியத் தக்கது, அன்னியமொன்றுமன்றாம். எவ்வதிகாரிக்குச் சிரவணாதிகளின் பயிற்சியினாலே தன்னனுபூதியும் சாஸ்திரமும் குருமொழியும் ஒரு பொருணிச்சயத்தை யுறுகின்றனவோ அவனாலான்மா எப்போதுமே யறியப்படுவதாகும். சாஸ்திரார்த் தங்களைத் தெரிந்துகொள்ளுதன் மிகக்கஷ்டமா யிருத்தலின் எங்ஙனம் மூர்க்கத் தன்மையின் நீக்கமா

மெனின், சிறிது சீர்திருத்தப்பட்டுச் சிறிது விற்பத்தியுடைய மதியுடையவர்கட்கு இந் நூற்சிரவணம் எவ்வாறு மூர்க்கத்தன்மையை நீக்குமோ அவ்வாறு வேறு ஒருநாளும் கிடையாது ; மகாவாக்கிய அர்த்தரூபமாய பரமாத்மாவை யவசியம் அடையவேண்டு மென்னு மிஷ்டமுடையவனால் தக்கதிருஷ்டாந்தங்களால் அழகாயும், மூரணில்லாமலும் சுகந்தருவதாயும் இருக்கு மிந்நூல்யாவுமே, அவசியஞ் சிரவணஞ் செய்யத்தக்கதாம்.

(ச.) விடாதியற்றில் = சந்ததம் அப்யாசிக்கில் ஆன்மாத் தோன்றும். சொற்ப அப்பியாசத்தா லுறுந்தோடத்தைக் கூறுகின்றார்:—அற்ப அறிவினர் கற்ற வரியமெய்ந் நூலின முறுமடமைதரு மிதுபோன் மற்றவெந்தநூல்களு மடமை யியற்றுதன்றே. (இது ஸ்ரீ மும்மடித்தேவர் பாடத்தை யனுசரித்ததாம்) சந்திரிகைப் பாடமும் பெரிய வாசிட்டப் பாடமும் செய்யுளிலமைந்தபடி யென்றறிந்து கொள்க) மடமைதரும் = அப் பியாசத்தினது குறைவு சந்தேக விபரீதமிகுதியால் அறியாமையையே மிஞ்சவைக்கு மென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மூர்க்கத்தன்மை யவசியம் தள்ளத்தக்கதாம், நீக்கமுடியா தனவாய ஆபத்துக்களும், துயரைத் தருவனவாய அதமப் பிறவிகளும் அதனால் உண் டாகின்றமையின், சர்வதுர்த்தசைகளின் காரணத்தைக் குறித்து ஒவ்வொரு துர்த்தசை யும் மேலானதேயாம் என்கின்றார்:—மடமையென.

(ச – அ – கை.) அவ்வறியாமையும் மகத்தான கட்டமென்கின்றார்:—மடமையென.

**மடமையொடு வாழ்கின்ற வாழ்வி னீசர் மனைதொறுமோட் டிரந்துழல் கை வரிசை யாகு, மடர்தனநட் புறவுபர தேசந் தீர்த்த மாச்சிரம மெய்வருத்த மனைத்தி னுலுந், தொடருதவி யில்லைமன வருத்தத் தாலே தூயபத முறுமுத் தித் துவார பாலர், கடவகுணங் கேட்டியுயர் சாந்தி வந்தாற் காதலுந்துன் பமுங்கதிர்முன் கங்குல் போற் போம்.**

(ப - ரை.) மடமையொடு வாழ்கின்ற வாழ்வின் = அறியாமை யுடன்கூடி மூர்க் கத்தனமாய் ஜீவிப்பதைக் காட்டினும், நீசர்மனைதோறும் ஒட்டிரந்துழல்கை வரிசையா கும் = சண்டாளர்கள் வீடுகள் நிறைந்த வீதிகள்தோறும் திரிந்து ஓடெடுத்து இரந்து குடித்தல் மேன்மையதாகும், அடர்தனம் = பூர்ணதனங்கள் நட்பு = மித்திரர்கள் உறவு = பந்துக்கள், பரதேசம் = அயல் நாட்டேகுதல், தீர்த்தம் = தீர்த்தங்கள் ஆச்சிரமம் = ஆச்சிரமங்கள், மெய்வருத்தம் = காயக்கிலேசம், அனைத்தினுலும் = என்னும் இவ்வியாவற்றாலும், தொடருதவியில்லை = பற்றியுண்டாம் உபகாரம் ஒன்று மின்றாம், மனவருத்தத்தாலே = கேவலம் மனோமாத்திர ஜயத்தினாலே, தூயபத முறும் = பரிசுத்த பரமபதம் கிடைக்கும், முத்தித் துவாரபாலர் கடவகுணங்கேட்டி= மோகத் துவாரபாலகர்கட்கு உரியகுணங்களை முறையே கூறக்கேடபாயாக, உயர்சாந்தி வந்தால் = மேலாய சாந்தியான துண்டாயின், காதலும் துன்பமும் = ஆசைகளும் துயரங்களும், கதிர் முன் = சூரியன் சந்நிதியில், கங்குல்போற்போம் = தமம் போல நசித்துப் போய்விடும். (15)

(ஸ்ரீ - வீர.) சாஸ்திரார்த்த, விசாரம்போலவே சற்பாத்திரத்தில் தனுதிதானமும் பிரஹ்மப்பிராப்தியின் கண்ணே தகுதியானவுபாயம் ஆமாலோவெனின் அன்றென்பார் அடரென்றார். தனுதிகள் பிரஹ்மப் பிராப்தியின் கண்ணே சாதகமாகாதன போலவே விசாரமும் அதனை யடைவியாதாம், விசாரிக்கப்பட்ட பேர்களுள்ளும் அநேகர்கள்

அதனை யடையாதிருத்தல் காணப்படுதலின் எனக்கடாவ விடைதருவார் மனமென்றூர், மனத்தை ஜயிக்காமையானே விசாரவான்க ளிடத்திலும் பிரஹ்ம பிராப்தி காணப் பெறுவதில்லை யென்பது கருத்தாம். மோக்ஷத்துவாரத்தில் துவாரபாலர்முன் யாவர் கூறப்பட்டனரோ, எவரோடு நேயமாயின் புருடார்த்தமும், எவரோடு நேயமாயின் அநர்த்தமும் கூறப்பட்டதாமோ அவரை விரித்துரைப்பான் றொடங்குவார் முத்தியென்றூர். அவர்தம்முள் ஆண்டுச் சாந்திபலந் தொடர்பாய்க் கூறுவார் காதலும் என்றூர், நீசச்சேரித் தெருக்களில் ஓட்டைக் கையிற்றூங்கிப் பிக்ஷைவாங்கிக் குடித்துச்சீவித்தல் மேலாகுமே யல்லாமல் மடமையோடு கூடிவாழும் கெட்டவாழ்வானது மேலாகாதாம்; விசாரப் பிரவிருத்தியானது கிடைத்தபோது கெடாததும் ஐயமற்றதும் தன்வடிவமா யிருப்பதும் உபத்திரவ மற்றதும் மயலற்றதும் உத்தமமும் ஆகிய கைவல்ய பதப் பிராப்தியாற் கிலேச முண்டாகாது; தனுதிகளினுனே கைவல்யமானது உண்டாகலாமே விசாரத்தினுலே யாகவேண்டிய தென்னே யெனின்? தனுதிகளேனும் மித்திரர்களே னும் பந்துக்களேனும் உபகாரமாக மாட்டார்க ளென்றறிக, கரசரணுதி யசைவுவடிவ கர்யசம்பந்தமான நமஸ்காராதியேனும், தேசங்கள் சுற்றும் யாத்திரை முதலியவையே னும் உபாசனை முதலியவற்றிற் காயக்கிலேசத்தால் பலம் உற்சாகம் நித்திரை முதலிய வற்றை யற்றிருத்தலேனும், புண்ணிய தீர்த்தங்க ணிறைந்த க்ஷேத்திரவாசமேனும், உபகாரத்தைச் செய்யமாட்டாவாம். ஆயின் அஃதெதனுற்றுன் கிடைக்குமெனின்? சிரவணமனன நிதித்தியாசன வடிவப் புருடப் பிரயத்தனத்தினுற் சாதிக்கத்தக்கதும், துவைதவாசனையின் விரோதியாய பிரஹ்மாகார திடவாசனையின் சமவிடயத் தொழி லாஞ் சமாதியாற் சாதிக்கத்தக்கதும் ஆகிய சாக்ஷாத் காரத்தானே மனுேமாத்திரமாய துவைதத்தின் மூலத்தைக் கெடுக்கும் வெற்றிகொண்டு கைவல்யபதத்தை யடைந்து விடலாம். "அருமருந்தரிய நோய்களனைத்தையு மகற்றல்போல, வொருபரம் பொரு ளேயா மென்றுன்னியே யிடைவிடாமல், உரைவகை யுனுற்றுநின்ற வாசனை யொருங்கு கூடி, மூராணுறு மவித்தையீன்ற முழுத்துயர் நீக்குமன்றே" என்றுங் கூறியுள்ளார். "கரிமுகன் றிருவருள் காட்சியாகவே, யருமையி னெத்துணை யனுகவில்லையோ, குரு பரனொடு மறைக்கோதினால தூஉம், ஒருவனுமத்துணை யுறுவதில்லையால்" என்பதாற் கடவுள் கருணையும் வேண்டும். சகிக்க முடியாதன்வாய துயரங்களும், ஆசையும் கெட்ட காமக் குரோதாதிகளும், மற்றும் பிறவும் சாந்தமான மனங்களில் சூரியர்கன்பால் இருள் போல நசிக்கும். "சத்துமல்லவாம் அசத்து மல்லவாம், ஒத்தசிவமே கேவலமாகும்" என்னுஞ் சுருதியாற் சாந்தஞ் சிவமென்றறிக.

(ச.) உரைத்த வுபாயத்திற்கு வேறுனத னுதிகள் உபகரியாதெனல், அடர் என்பது, பரதேசம் = தேசாந்திர சங்கமம், தீர்த்தம் = தீர்த்தாடனம், ஆச்சிரமம் = முனிவர் ஆசிரயம், (க்ஷேத்திரங்கள்.) மெய்வருத்தம் = காயக்கிலேசம், கைகாற் சலனமுமாகிய நமஸ்காராதி யனைத்தினுலும், தொடருதவியில்லை, மனவருத்தத்தாலே = மனுேசய மாத்திரத்தால், தூயபதமுறும் = மோக்ஷமடையப்படும்; இதற்கிதரமான சாந்தியாதி களைக் கிரமமாகக் கூறுவார், முத்தியென்றூர். காதலும் = துராசைமுதலிய ஆதிகளும், துன்பம் = நட்டமான பொருள்களாற் றேன்றுந்துக்கங்கள், துராசை = வர்த்தமான விஷயபோகங்களிற் றிருப்தியின்மை, துராதிகள் = மேல்வரும் போகவிடயசிந்தைகள். அருக்கர்கள், மாதந்தோறும் வேறுதலின் மூலத்திலாம். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமத்தை யுடையவனும், எல்லாப் பிராணிகளிடத்தும் நேயமுள்ளவனு மாகிய சாதுவின்பால் பரமதத்துவமானது அநாயாசமாய்த்தானே பிரகாசிக்கின்ற தானபடியால் சர்வானந்தமும் உண்டாமென்கின்றூர்:—நல்லவரென.

நல்லவருந் தீயவரு மன்னை போல நம்புதற்கா யமுதுண்ண நண்ணி னுலு, மல்லன்மலர் மகட்புணர்ந்த போது மொவ்வா மகிழ்ச்சிதருஞ் சாந்தியுளோர் மரணஞ் செல்வங், கொல்லமரெய் தினும சையார் புலனைந் தாலுங் குற்றமு நன் மையு நுகர்ந்து குளிரார் வாடார், தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர் மொய்ம்பர் தூயவரியா ரினும் விளங்குந் தூய்மை யோரே (16)

(ப - ரை.) நல்லவரும் தீயவரும்=விடமங்களும் மிருதுக்களும், அன்னைபோல= தாய்போன்று, நம்புதற்கு = விசுவாசஞ் செய்வதற்கு; ஆய் = சமமானது சாதகமாய், அமுதுண்ண நண்ணினும் = ரசாயனம் பருகக் கிடைப்பினும், மல்லன்மலர்மகள் புணர்ந்தபோதும்=வளப்பம் பொருந்திய தாமரைச் செல்வியாம் இலக்ஷுமி அளவற்று வந்தபோதிலும், ஒவ்வாமகிழ்ச்சிதரும்=உவமையற்ற ஆனந்தத்தைச் சமந்தரும், சாந்தியுளோர்= சமசாலிகள், மரணஞ்செல்வம் கொல்லமர்=மரண உற்சவயுத்தங்களில், எய்தினும் அசையார் = இடர்முதலியவையுறினும் ஆகுலமெய்தித் துயருறார், புலன்ஐந்தாலும் = ஐம்பொறிகளாலும், குற்றமும் நன்மையும் = சுபத்தையும் அசுபத்தையும், நுகர்ந்து = அனுபவித்தும், குளிரார் வாடார் =இன்பிடர் அடையார், தொல்லறிஞர்= தவத்தினர் பேரறிவாளர், மகம்புரிந்தோர் = யாஜகர், முனிவர் = மனனசீலர், மொய்ம்பர்=மன்னவர் வலுமிகுத்தோர், தூயவர்=குணட்டியர், யாரினும்=இத்தகையர் எல்லாரினுமே, விளங்குந் தூய்மையோரே = சமமுடையவரே அத்தியந்தம் பரிசுத்தமா யிலங்குவர். (16)

(ஸ்ரீ - வீர.) சாந்திக்குப் பலத்தைப் பகர்ந்து சொருபத்தைக் கூறுவார் புலனைந் தாலுமென்றார். அசையார் = பூர்ணசந்திர பிம்பம்போல மலமிலாத மனமுடையராகி நிராகுலமாயிருப்பர் என்பதாம். திடவிவேகவானுய், மகத்தாம் வைராக்கியத்தை யுடையவனுய், வருவதைத் தடுக்கமுடியாமையையும் அறிந்தவனுய அதிகாரிக்குச் சுகதுக்கம் அடைந்த காலத்தில் மகிழ்ச்சி வாட்டமின்மை யுண்டாம், அதுவே சமம் எனப்படும், சமத்திற்குத் தொடர்பாய அயற்பயன் அறைவார்,- தொல்லறிஞரென்றார். குரூரமாயும் கோணலாயும் இருக்கும் உள்ளத்தினரும் சாதுக்களும் ஆகிய எல்லா வுயிர்களும் ஈண்டுச் சமசாலியினிடத்தில் அன்னையினிடத்திற்போலப் பரமவிசுவாசத்தை யடைகின்றன. மனமானதுள்ளே சாந்தியினுற் சுகமடைவதேபோல இந்திரபதத்தி லமிருதரசாயன பானத்தானும், விஷ்ணுபதத்தில் இலக்குமி யாலிங்கனத்தானும் சுகமடைவதில்லை. இடாம்பிக சாத்துவிக பரீக்ஷையின் பொருட்டுச் சாந்தன் இலக்கணங்களியம்புவார் புலனைந்தாலு மென்றார். சுபாசுபங்களாகிய பிரியாப் பிரியங்களைக் கேட்டுந் தீண்டியுங் கண்டும் உண்டும் முகர்ந்தும் மகிழ்ச்சி வாட்டங்களை யடையாதவனே சாந்தனெனக் கூறப்படுகின்றான். மரணஉற்சவ யுத்தங்களின் அச்சம் ஆசை சினம் என்பவற்றால் ஆகுலமின்றித் தபியா மனமுடையவனும், அதனுனே சந்திரபிம்பம்போலக் குளிர்ந்திருப்பவனும், எவனே, அவனே சாந்தனெனப்படுகின்றான். உலகத்திலும் எல்லாக் குணங்களினும் மேன்மையதாய்ச் சமமே யிலங்குகின்றதாம்; தபசிகள் மிகத்தெரிந்தவர்கள், மகம்புரிபவர்கள், அரசர்கள், பலமுடையவர்கள், குணமுடையவர்கள் என்னும் யாவரினும் சமமுடையவனே யிலங்கா நிற்பன்.

(ச.) சாந்தமான கோக்கன்று முதலனவும், துன்பஞ்செய்யும் சிங்கசிசு முதலனவும் ஆகிய சர்வப்பிராணிகளும் எப்படித் தம்மாதாவின்கண் ணதிகவிசுவாச மடைகின்றனவோ அப்படியே சகலஜீவருஞ் சாந்தியுடையரின்கண் ணதிக சுகமடைவர். அமுது=

ஆரோக்கிய ஹேதுவான ஔஷத விசேடம். மலர்மகட் புணர்தல் = இராஜ்ஜிய இலக்ஷுமி சம்போகம். ஆயிற் சாந்தர்யாரெனிற் கூறுவார், சாந்தியுளோர் என்றார். மரணத்திலும் மகோற்சவத்திலும் போரிலும் பொருந்தியும், ஆகுலமின்றிச் சந்திரபிம்பம்போல நின்மலமாயிருக்கு மனமுடையரே சாந்தர். சுரோத்திராதியாற் சப்தாதியின் சுபத்தையாவது அசுபத்தையாவது புசித்துச் சந்தோஷக் கிலேசத்திற் பிரதிபந்தமுறாத நிர்விகாரசித்தரே சாந்தர். முனிவர் = தபசிகள், மொய்ம்பர் = பலவந்தரான நிருபர், தூயவர் = குணசாலிகள். (16)

(ஸ்ரீ - வீர-அ - கை.) சமத்திற்கு மகாபலத்தைக் காண்பித்து மகானுபாவர் கவர்ந்திருக்குந் தன்மையானே அஃதவசியம் அனுஷ்டிக்கத் தக்கதாமென்கின்றார்; பெரியோராயும், குணவான்களாயும், சமத்தோடு கூடிய மனமுடையவராயும், இருப்பவர்தஞ் சித்தத்தினின்றும், பூர்ணசந்திர னிடத்தினின்றும் ஒளி நிகழ்வதேபோலச் சுகம் நிகழ்ந்து கொண்டே யிருக்குமாதலின் அவசியம் கவரத்தக்கதா மென்கின்றார்:— ஆரியரென.

ஆரியர் பேணுவதாகி யயலோர்க்கெல்லா மரிதான சாந்தியமுதருந்திமேலோர், சீரியவீட் டினையுற்றார் நீயுமந்தச் செயல்புரிவாய் நன்னூலாற் றெளிந்த சுத்த, நேரிய புந்தியினாலே விசாரந்தன்னை நிறைத்திடுக வதுநிறைந்தா னிகரில் புந்தி, கூரியதாய் வீடுணரும் விசாரந்தானே கொடும்பவநோய்க் கருமருந் தாங்குறிப்பு ளோர்க்கே. (17)

(ப - ரை.) ஆரியர் பேணுவதாகி = மேலோர்கள் விரும்பி யனுஷ்டிப்பதாகி, அயலோர்க்கெல்லாம் அரிதான = மற்றவர்க் கெல்லாம் அருமையினும் அருமையாய்க் கிடையாதான, சாந்தி யமுதருந்தி மேலோர் = உபசம அமிருதத்தைப் பானஞ்செய் துயர்ந்தவர், சீரிய வீட்டினையுற்றார் = சிறப்புப்பொருந்திய கைவல்ய பரமபதத்தை யடைவுற்றார், நீயும் அந்தச் செயல்புரிவாய் = ஹே இரகுதநய! நீயும் மகாநுபாவர் வழியையே அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருதி, நன்னூல் தெளிந்த சுத்தநேரியபுந்தியினாலே = நல்லவேதாந்த சாஸ்திரங்களின் ஆராய்ச்சியினாலே நின்மலமாகிய பரமபவித்திர மதியினாலே, விசாரந்தன்னை நிறைத்திடுக = ஆத்ம விசாரத்தை யகர்நிசம் அனுஷ்டிப்பாயாக, அது நிறைந்தால் = அந்த விசாரம் கூர்மையாய்ப் பூரணமானால், நிகரில் புந்தி = உவமையற்றமதி, கூர்மையதாய் வீடுணரும் = அதிசூக்குமப்பட்ட பான்மையால் பரமபதத்தைத் தரிசிக்கும், விசாரந்தானே = ஆராய்ச்சியே, கொடும்பவ நோய்க்கு = தீர்க்க சமுசார ரோகத்திற்கு; அருமருந்தாம் = மகா ஔஷதமாம்; குறிப்புளோர்க்கே = எப்படியாவது பரமபதத்தை யடைந்து விடவேண்டு மென்னும் ஆசையுடன்; ஒருமையுடன் காரணஞ்ஞராய் ஆராய்பவர்க்கு மாத்திரம், மற்றையர்க்கன்று மென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) கவரத்தகுதியதாய் ஆசாரியர் பேணுவதாய் அபரம் அமிருதம் பற்றித் தேவர் அபரமேயாய பதத்தை யடைந்தனர்; மகானுபாவரோ அயலாய் எவரானும் அபகரிக்க முடியாததாய் அறிஞர்களாற் காப்பாற்றப் பெறுவதாய்ச் சமமெனப் பெயரிய பரமமிருதம்பற்றி அதற்குத் தக்கபடியேயாய பரமபதத்தையே அடைந்தனர்; அவ்வண்ணமே பரமபதஞ் சித்தித்தற் பொருட்டு மகான்களின் முறையே சம இலக்கண உபாயத்தைச் சேவிப்பாயாக; அல்லது சமவிசார சந்தோஷ தியானாதிகளின் கிரமத்தை யனுஷ்டிப்பாயாக. சமாதிகளின் மத்தியில் சமத்தைத் விஸ்தாரமாகக்கூறி விசாரத்தை விளக்குவார் நன்னூலாலென்றார். ஆண்டு முதல் விசாரம் எங்ஙனமென்னின், புந்தியி

நல்லவருந் தீயவரு மன்னை போல நம்புதற்கா யமுதுண்ண நண்ணி னுலு, மல்லன்மலர் மகட்புணர்ந்த போது மொவ்வா மகிழ்ச்சிதருஞ் சாந்தியுளோர் மரணஞ் செல்வங், கொல்லமரெய் தினும சையார் புலனைந் தாலுங் குற்றமு நன் மையுநுகர்ந்து குளிரார் வாடார், தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர் மொய்ம்பர் தூயவரியா ரினும் விளங்குந் தூய்மை யோரே (16)

(ப - ரை.) நல்லவரும் தீயவரும்=விடமங்களும் மிருதுக்களும், அன்னைபோல=தாய்போன்று, நம்புதற்கு = விசுவாசஞ் செய்வதற்கு, ஆய் = சமமானது சாதகமாய், அமுதுண்ண நண்ணினும் = ரசாயனம் பருகக் கிடைப்பினும், மல்லன்மலர்மகள் புணர்ந்தபோதும்=வளப்பம் பொருந்திய தாமரைச் செல்வியாம் இலக்ஷ்மி அளவற்று வந்தபோதிலும், ஒவ்வாமகிழ்ச்சிதரும்=உவமையற்ற ஆனந்தத்தைச் சமந்தரும், சாந்தியுளோர்= சமசாலிகள், மரணஞ்செல்வம் கொல்லமர்=மரண உற்சவயுத்தங்களில், எய்தினும் அசையார் = இடர்முதலியவையுறினும் ஆகுலமெய்தித் துயருறார், புலன்ஐந்தாலும் = ஐம்பொறிகளாலும், குற்றமும் நன்மையும் = சுபத்தையும் அசுபத்தையும், நுகர்ந்து = அனுபவித்தும், குளிரார் வாடார் =இன்பிடர் அடையார், தொல்லறிஞர்= தவத்தினர் பேரறிவாளர், மகம்புரிந்தோர் = யாஜகர், முனிவர் = மனனசீலர், மொய்ம்பர்=மன்னவர் வலுமிகுத்தோர், தூயவர்=குணாட்டியர், யாரினும்=இத்தகையர் எல்லாரினுமே, விளங்குந் தூய்மையோரே = சமமுடையவரே அத்தியந்தம் பரிசுத்தமா யிலங்குவர். (16)

(ஸ்ரீ - வீர.) சாந்திக்குப் பலத்தைப் பகர்ந்து சொரூபத்தைக் கூறுவார் புலனைந் தாலுமென்றார். அசையார் = பூர்ணசந்திர பிம்பம்போல மலமிலாத மனமுடையராகி நிராகுலமாயிருப்பர் என்பதாம். திடவிவேகவானய், மகத்தாம் வைராக்கியத்தை யுடையவனய், வருவதைத் தடுக்கமுடியாமையையும் அறிந்தவனய அதிகாரிக்குச் சுகதுக்கம் அடைந்த காலத்தில் மகிழ்ச்சி வாட்டமின்மை யுண்டாம், அதுவே சமம் எனப்படும், சமத்திற்குத் தொடர்பாய அயற்பயன் அறைவார், தொல்லறிஞரென்றார். குரூரமாயும் கோணலாயும் இருக்கும் உள்ளத்தினரும் சாதுக்களும் ஆகிய எல்லா வுயிர்களும் ஈண்டுச் சமசாலியினிடத்தில் அன்னையினிடத்திற்போலப் பரமவிசுவாசத்தை யடைகின்றன. மனமானதுள்ளே சாந்தியினுற் சுகமடைவதேபோல இந்திரபதத்தி லமிருதரசாயன பானத்தானும், விஷ்ணுபதத்தில் இலக்குமி யாலிங்கனத்தானும் சுகமடைவதில்லை. இடாம்பிக சாத்துவிக பரீக்ஷயின் பொருட்டுச் சாந்தன் இலக்கணங்களியம்புவார் புலனைந்தாலு மென்றார். சுபாசுபங்களாகிய பிரியாப் பிரியங்களைக் கேட்டுந் தீண்டியுங் கண்டும் உண்டும் முகர்ந்தும் மகிழ்ச்சி வாட்டங்களை யடையாதவனே சாந்தனெனக் கூறப்படுகின்றான். மரணஉற்சவ யுத்தங்களின் அச்சம் ஆசை சினம் என்பவற்றால் ஆகுலமின்றித் தபியா மனமுடையவனும், அதனுனே சந்திரபிம்பம்போலக் குளிர்ந்திருப்பவனும், எவனே, அவனே சாந்தனெனப்படுகின்றான். உலகத்திலும் எல்லாக் குணங்களினும் மேன்மையதாய்ச் சமமே யிலங்குகின்றதாம்; தபசிகள் மிகத்தெரிந்தவர்கள், மகம்புரிபவர்கள், அரசர்கள், பலமுடையவர்கள், குணமுடையவர்கள் என்னும் யாவரினும் சமமுடையவனே யிலங்கா நிற்பன்.

(ச.) சாந்தமான கோக்கன்று முதலனவும், துன்பஞ்செய்யும் சிங்கசிசு முதலனவும் ஆகிய சர்வப்பிராணிகளும் எப்படித் தம்மாதாவின்கண் ணதிகவிசுவாச மடைகின்றனவோ அப்படியே சகலஜீவருஞ் சாந்தியுடையரின்கண் ணதிக சுகமடைவர். அமுது=

ஆரோக்கிய ஹேதுவான ஔஷத விசேடம். மலர்மகட் புணர்தல் = இராஜ்ஜிய இலக்ஷுமி சம்போகம். ஆயிற் சாந்தர்யாரெனிற் கூறுவார், சாந்தியுளோர் என்றார். மரணத்திலும் மகோற்சவத்திலும் போரிலும் பொருந்தியும், ஆகுலமின்றிச் சந்திரபிம்பம்போல நின்மலமாயிருக்கு மனமுடையரே சாந்தர். சுரோத்திராதியாற் சப்தாதியின் சுபத்தையாவது அசுபத்தையாவது புசித்துச் சந்தோஷக் கிலேசத்திற் பிரதிபந்தமுறாத நிர்விகாரசித்தரே சாந்தர். முனிவர் = தபசிகள், மொய்ம்பர் = பலவந்தரான நிருபர், தூயவர் = குணசாலிகள். (16)

(ஸ்ரீ - வீர-அ - கை.) சமத்திற்கு மகாபலத்தைக் காண்பித்து மகானுபாவர் கவர்ந்திருக்குந் தன்மையானே அஃதவசியம் அனுஷ்டிக்கத் தக்கதாமென்கின்றார்; பெரியோராயும், குணவான்களாயும், சமத்தோடு கூடிய மனமுடையவராயும், இருப்பவர்தஞ் சித்தத்தினின்றும், பூர்ணசந்திர னிடத்தினின்றும் ஒளி நிகழ்வதேபோலச் சுகம் நிகழ்ந்து கொண்டே யிருக்குமாதலின் அவசியம் கவரத்தக்கதா மென்கின்றார்:—ஆரியரென.

ஆரியர் பேணுவதாகி யயலோர்க்கெல்லா மரிதான சாந்தியமுதருந்திமேலோர், சீரியவீட் டினையுற்றார் நீயுமந்தச் செயல்புரிவாய் நன்னூலாற் றெளிந்த சுத்த, நேரிய புந்தியினாலே விசாரந்தன்னை நிறைத்திடுக வதுநிறைந்தா னிகரில் புந்தி, கூரியதாய் வீடுணரும் விசாரந்தானே கொடும்பவநோய்க் கருமருந் தாங்குறிப்பு ளோர்க்கே. (17)

(ப - ரை.) ஆரியர் பேணுவதாகி = மேலோர்கள் விரும்பி யனுஷ்டிப்பதாகி, அயலோர்க்கெல்லாம் அரிதான = மற்றவர்க் கெல்லாம் அருமையினும் அருமையாய்க் கிடையாதான, சாந்தி யமுதருந்தி மேலோர் = உபசம அமிருதத்தைப் பானஞ்செய் துயர்ந்தவர், சீரிய வீட்டினையுற்றார் = சிறப்புப்பொருந்திய கைவல்ய பரமபதத்தை யடைவுற்றார், நீயும் அந்தச் செயல்புரிவாய் = ஹே இரகுதநய! நீயும் மகாநுபாவர் வழியையே அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருதி, நன்னூல் தெளிந்த சுத்தநேரியபுந்தியினாலே = நல்லவேதாந்த சாஸ்திரங்களின் ஆராய்ச்சியினாலே நின்மலமாகிய பரமபவித்திர மதியினாலே, விசாரந்தன்னை நிறைத்திடுக = ஆத்ம விசாரத்தை யகர்நிசம் அனுஷ்டிப்பாயாக, அது நிறைந்தால் = அந்த விசாரம் கூர்மையாய்ப் பூரணமானால், நிகரில் புந்தி = உவமையற்றமதி, கூர்மையதாய் வீடுணரும் = அதிசூக்குமப்பட்ட பான்மையால் பரமபதத்தைத் தரிசிக்கும், விசாரந்தானே = ஆராய்ச்சியே, கொடும்பவ நோய்க்கு = தீர்க்க சமுசார ரோகத்திற்கு; அருமருந்தாம் = மகா ஔஷதமாம்; குறிப்புளோர்க்கே = எப்படியாவது பரமபதத்தை யடைந்து விடவேண்டு மென்னும் ஆசையுடன்; ஒருமையுடன் காரணஞ்ஞராய் ஆராய்பவர்க்கு மாத்திரம், மற்றையர்க்கன்று மென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) கவரத்தகுதியதாய் ஆசாரியர் பேணுவதாய் அபரம் அமிருதம் பற்றித் தேவர் அபரமேயாய பதத்தை யடைந்தனர்; மகானுபாவரோ அயலாய் எவரானும் அபகரிக்க முடியாததாய் அறிஞர்களாற் காப்பாற்றப் பெறுவதாய்ச் சமமெனப் பெயரிய பரமமமிருதம்பற்றி அதற்குத் தக்கபடியேயாய பரமபதத்தையே அடைந்தனர்; அவ்வண்ணமே பரமபதஞ் சித்தித்தற் பொருட்டு மகான்களின் முறையே சம இலக்கண உபாயத்தைச் சேவிப்பாயாக; அல்லது சமவிசார சந்தோஷ தியானாதிகளின் கிரமத்தை யனுஷ்டிப்பாயாக. சமாதிகளின் மத்தியில் சமத்தைச் விஸ்தாரமாகக்கூறி விசாரத்தை விளக்குவார் நன்னூலா லென்றார். ஆண்டு முதல் விசாரம் எங்ஙனமென்னின், புந்தியி

ஞலேயென இலக்குகின்றார். முதலில் ஈசுரனுக்கு அர்ப்பணஞ்செய்த கருமங்களினாலே பரமபவித்திர மடைந்தபின் நிவிருத்தி சாஸ்திரார்த்த உணர்ச்சியால் நின்மலமான புத்தியால் என்பதாம். இஃதிதன் காரணம், இஃதிதன் காரியம் எனக் காரணாதி புணர்ந்தவனால் விசாரம் பூரிக்கப்படவேண்டும். விசாரபலத்தைவிரிப்பார், அது என்றார். மோக்ஷமாம். சற்குணங்களின் சமூகங்கட்‌ கெல்லையாயும், புருடார்த்த முக்கிய பூடணமாயும், சர்வகுணங்களின் சம்பத்துக்களோடு கூடியதாயும், நிகழுஞ்சாந்தியே சங்கடங்களிலும் பயஸ்தானங்களிலும் விளங்கா நிற்கும். பிறராலபகரிக்க முடியாததாயும், பூசிக்கத்தக்கவரால் சாவதானமாய்க் காக்கப் பெற்றதாயும், மேலானதாயும் இருக்குஞ் சாந்தியாகிய அமிர்தமய சாதனத்தை யினிதுபற்றி மகானுபாவர்கள் எம்முறையானே பரமபதத்தை யடைந்தார்களோ அதேமுறையைப் பின்பற்றி ஹே இராகவா ! நீ அடையவேண்டியதடையும் பொருட்டுக் காப்பாயாக. சாதுசங்க சற்சாஸ்திர சித்தசுத்தி யென்பவற்றால் வளர்த்தப்பட்டு மோக்ஷவாயிற் காவலாய சமசந்தோஷங்கட் கேதுபூதமாய விசாரம் புகழப்படுகின்றது, நன்னூலாலெனெ. ஆண்டர்த்த அநர்த்தங்களைப் பின்பற்றியதாம் விசாரம், சார அசாரவிசாரம், தள்ளத்தக்க கொள்ளத்தக்கதாம் விசாரம், பிரமாண தாற்பரியவிசாரம், பரம ஆன்மதத்துவப் பரீக்ஷையென விசாரம் ஐந்துவிதமாம். அவற்றுள் இயற்கையாய பிரவிருத்தியும் விடயங்களும் அனர்த்தத்தைப் பின்பற்றினவாம், சாஸ்திர சம்பந்தமான பிரவிருத்தியும் வைராக்கி யாதிகளும் புருடார்த்தத்தைப் பின் பற்றினவாம் என்றுடன்பா டெதிர்மறைகண் முதலியவற்றானே பரீக்ஷவடிவமாயது முதலதாம். மனைவிமக்கள் தன்தேக முதலியவற்றுள், சுயமாகவும் காரணத்தானும் பரிணாமத்தானும் அசுசியாய மலமூத்திராதி அமங்களத் தன்மை வாய்ந்தனவெனச் சோதிக்கும் வடிவதும், பிரஹ்மலோகம் வரையும் உள்ளனவாய சுகங்களினிடத்தில் அநித்தியத் தன்மை யச்சந் துக்கங்கலந்த தன்மை முதலியவற்றைச் சோதிக்கும் வடிவதும் ஆன இரண்டாவதாம். இவ்விரண்டும் வைராக்கிய முமுக்ஷுத்தன்மைக் கேதுக்களாம். மோக்ஷேச்சை வந்தபின்னரும் மோக்ஷசாதனம் கருமமா ? உபாசனையேதானா ? அவையுங் கலந்ததா? அல்லது ஞானத்துடன் கலந்ததா? அல்லது ஞானமேயா ? என்னும் பரீக்ஷவடிவது மூன்றாவதாம். ஞானமே சாதனமாக வாயினும் அஃதென்னே ? சாங்கிய வைசேடிகர் கருதத்தக்க கால கௌதமர் முதலியோர் கூறிய அவ்வச் சாஸ்திரங்களைப் பிரமாணமாக வுடையதா ? அல்லது சுருதியை மாத்திரம், பிரமாணமாக வுடையதா ? சுருதியையே பிரமாணமாக வுடையதாயினும், சுருதிகட்குத் துவைதத்திலா ? அத்வைதத்திலா ? விசேஷத்தோடு கூடியதிலா ? விசேஷமற்றதிலா ? ஆன்மாவிலா ? அநான்மாவிலா ? தாற்பரியம், எனச் சோதிக்கும் வடிவது நான்காவதாம். அதுவும் சிரவணமெனக்கூறப்படும். சுருதியாதிப் பிரமாணங்கட்கும் அத்விதீயசச்சிதானந்தப் பிரஹ்மான்மாவின்கண்ணே தாற்பரியம் எனத் துணிவிருந்தபோதினும், தன்னான்மாவின்கண்ணே யுண்மையாக அவ்வாறாந்தகைமை சம்பவிக்குமா ? சம்பவியாதா ? என்னும் இரத்தினப் பரீக்ஷ நியாயத்தானே அநுபவநிஷ்ட ஆசிரியர் தன்னொடு கற்றார் முதலியோருடன் சம்வாதத்தாலும் ஜீவேசுவர ஜகத்தத்துவ பரிசோதனையாலும் துணிவுபிறக்கும்வரை சோதிக்கும் வடிவினது ஐந்தாவதாம். அவற்றுள் முதன் மூன்றன்பலம் சாதனசதுட்டய சம்பத்தியாம்; பின்னிரிரண்டினுக்கோ முறையேபிரமாணப் பிரமேய அசம்பாவனைகளின் நீக்கமாம். அவற்றுண் முன்னவை மூன்றும் பாக்கியவயத்தினாலே தாமாகவும் வருதல் கூடுமாயினும், அவைகள் மாறுமற் றிடப்படும்பொருட்டு மீண்டுங் குருசாஸ்திர வாயிலாகச் செய்யத்தக்கனவேயாம். பின்னவையிரண்டும் குருசாஸ்திரங்களானே வரு

வனவாம் எனச் சர்வசாதாரணமாகச் சாஸ்திரமிருக்கும். சாஸ்திரத்தாலுணர்த்தப் பெற்று அமலமாயும் மனத்தூய்மைவந்து பரம பவித்திரமாயும், இருக்கும் மதியினாலே, விடயசமுசய பூர்வபக்ஷ சித்தாந்த பிரயோஜன வேறுபாடுகளை யுணர்ந்துள்ள சகபாடிகளோடேனும், பிரமாணப்பிரமேய தத்துவங்களைப் பிரதிபாதிக்கு முபாய சாமர்த்தியத்தோடுகூடிய ஆசிரியரோடேனும் எப்போதும் ஆன்மாவின் விசாரஞ் செய்யத்தக்கதாம். புத்தியானது விசாரத்தாற் சூக்குமதத்துவத்தைக் கவருங் குசலத்தன்மையை யடைந்து பரமபதத்தைக் காண்கின்றது; நீண்ட சமுசார ரோகத்திற்குவிசாரமே பேரவுடதமாம்.

(ச.) அந்தச்செயல் புரிவாய் = பரமபதஞ் சித்தித்தற் கச்சாந்தியையே யவலம்பிப் பாய். (விசாரம்) நன்னூலால் = அத்தியாத்மசாத்திர போதத்தால். அமலமாய = பரிசுத்தமான, கூர்ந்தபுத்தியால், ஆத்மவிசாரத்தை யனவரதஞ் செய்யவேண்டும். இனி விசாரத்தின துபயோகத்தைக் கூறல், அதுகூரியதாம் வீடுணரும் = பரமாத்மாவைச் சாக்ஷாத்கரிக்கும் குறிப்புளோர்க்கு, இதற்கிது காரணமென்னும் காரியகாரண பாவத் துவஞ்ஞர்க்கு (அறிந்தோர்க்கு) இதனாலாத்ம விசாரத்திற்கு அதிகாரிகள் நிரூபிக்கப்பட்டார்கள். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விசாரத்தினது சொரூபத்தைக் காண்பித்து அதன்கண் செய்யத்தக்க தின்னதென்பதைத் தெளிவுறுத்துகின்றார்:—கருகியவென.

(ச - அ - கை.) இப்போது விசாரத்தினது சொரூபத்தைக் கூறல்:—கருகியவென.

கருகியகங் குலின்மறையாக் கதிர்க்குமட்காக் காண்பரிய பொருளெல்லாங் காணுங் கண்ணாற், றெருளுறநா னுருலகம் வந்தவாறென் செறிபிறவி யாரதெனுந் திகழ்விசார, மிருளுறுமாபத்தினுக்கு மருந்தாமப்பா லேற்றமுள சந்தோட மேதென்றேதில், வருபொருளி லின்பமறத் துய்த்துவாரா வன பொருளிற் றுன்பமிலா மகிழ்ச்சிதானே. (18)

(ப - ரை.) கருகிய கங்குலின் மறையா = இருண்ட இரவிருளில் மறைபடாமலும், கதிர்க்குமட்கா = சூரியன்றன் பேரொளியால் மங்காமலும், இலங்கி, காண்பரிய பொருளெல்லாம் காணும் = வியவகித பதார்த்தங்களையும் தெரிந்துகொண்டிருக்கும், கண்ணால் = ஆராய்ச்சியாகிய அழகிய விழியால், தெருள்உற=ஞானமுதயமாமாறு, நானார் = யானென்பது யாது பொருள், உலகம் வந்தவாறென் = இத்தோஷமய சமுசாரம் வந்தவகையென்னே! செறிபிறவி யாரது = துயரம் நிறைந்த இப்பிறவி எதைச் சம்பந்தித்தது, எனுந்திகழ் விசாரம் = என்று விளக்கமாக வுண்டாகின்ற ஆராய்ச்சி, இருளுறும் ஆபத்தினுக்கு மருந்தாம் = பெரு மயக்கத்தை யீயும் ஆபத்துக்கட்கசுற்றும் விடயத்தில் ஔஷதமாம், அப்பால் = அதன்பின், ஏற்றமுள சந்தோட மேதென்றேதில் = மேலான சுகத்தை யீயும் சந்தோஷம் யாதெனக் கேட்பிற் கூறுவாம், வருபொருளி லின்பமறத் துய்த்து = கருமவயத்தாற் கிடைத்தவஸ்துவை ஆசையின்றி யனுபவித்து, வாராவன பொருளில் துன்பமிலா மகிழ்ச்சிதானே = கிடையாத பொருள்களில் வருத்தமின்றிய சந்துஷ்டியே சந்தோஷமாம். (18)

(ஸ்ரீ - வீர.) சர்வதடைகளும் நீங்குமாறு திருத்திக்கொண்ட கருத்தாலாராயத் தக்கதாம். ஆராய்ச்சியைப் புகழுகின்றார் கருகிய வென்பதால். அழகியவிழி = சாருலோசனத்தைச்சாதித்தற் பொருட்டே சிறப்பு மூன்றுமாம். அவ்விலோசனம் காரியம்போல நஷ்டம் நண்ணுதாம், மறைக்கவும் முடியாதாம். விசாரசொரூபத்தைத் தெளிவிப்பார் யானென்றார். விசாரத்தின்பின் விளம்பிய சந்தோடத்தை விரிப்பார் அப்பாலென்றார்.

சந்தோடத்தைத் தோத்தரிப்பார் சந்தோடமென்றார். சந்தோடத்தாற் பரமவிசிராந்தி யானது கிடைக்கும். ஆபத்துவருங் குடும்பாதி வியாபாரத்தும் புத்திமானால் யானியாவன், யாவனுக்கிச் சமுசாரம் எனச் சமுசாரத்தை யகற்றுஞ் சிரவணாதி யனுஷ்டானத்தோடு கூடியவனாய்த் தானே முயல்வினாற் சிந்திக்கத்தக்கதாம். விசாரமாகிய அழகிய விழியானது, சரும நேத்திரம் அந்தகாரத்தில் நஷ்டமடைவதேபோல அந்தகாரங்களில் நஷ்டமடையாமலும், அதுமிகப் பிரகாசமய சூரியாதிகளில் ஒளிமழுங்குவதேபோல ஒளிமழுங்காமலும் அத்தடைப்பட்டுத் தூரத்திலிருக்கும்பொருளைக் கிரகிக்க முடியாததேபோல வல்லாமற் கிரகிக்கக்கூடியதாயும் விளங்கும். பரமான்மாவாயும் பிரஹ்மானந்தத்தைச் சித்திசெய்வதன்கண் முக்கியமாயும் பூசிக்கத்தக்கதாயும், இருக்கும் ஆராய்ச்சியாற்றலை ஒருகணமேனும் பரித்தியாகஞ் செய்யவே கூடாது; "அற்பமதேனும் பேதமதாற்றும் அவன் பயந்தன்னை யடைந்திடுவானே" என்னுஞ் சுருதியையும்; எக்கணமேனுமெம் முகூர்த்தமதேனும், முக்கணனொருவனை முன்னிலனாயின், அக்கணமானியது பெருஞ் சித்திரம், அக்கணிலாமையா மதுவுமூகதையுமாம்" என்னும் இலிங்கபுராணத்தையும் காண்க. விசார சொரூபந்தான் விளக்கமாக யாதென்றால்; யான் யாவன்? தேகாதிகளேயானா? அல்லது, அதனினும் வேறாயவனா என்பது துவம்பதார்த்த விசாரமாம், இத்தோஷரூப சம்சாரம் எவ்வேதுவினாலே அதிஷ்டானத்தில் வந்துற்றது? என்பது தற்பதவிசாரம். இவ்வண்ணம் சுருதி முனியாசார்ய சம்பிரதாய முறையிற் காட்டியபடியாய நியாயத்தான் ஆராய்ச்சிசெய்வதேவிசாரமெனப்படும். வைராக்கியமாகிய கற்பகவிருக்ஷத்தின் நிழலைப்போன்று சுகமாயுஞ் சீதளமாயுமிருக்கும் மூன்றாவது துவாரபாலனாய சந்தோஷத்தை விரிப்பார், எற்றமுளவென்றார். சந்தோஷமே பரமமோக்ஷமென்றும் சுகமென்றும் மற்றைய இனியவையுமென்றும் கூறப்படும், இதனிலக்கணம் இனியியம்பப்படும்; ஆயுள்நெய்யென்பதுபோலச் சாதனத்திற்பலத்தின் அபேதஆரோபத்தாற்புகழ்ந்ததாம் மிகவும் மேன்மையான அத்தியந்த துக்கவிக்ஷேப நீக்கமாகிய விசிராந்தியைநன்றாகச்சந்துஷ்டன் அடைவன். சந்தோஷசொரூபத்தை யறைவார், வருபொருள் என்றார். கிடையாத இஷ்டவஸ்துவில் வாஞ்சையைவிட்டு, கிடைத்த இஷ்டவத்துவில் விகார ரகிதத்தன்மையை யடைதலாம். கிடைத்த இஷ்டபோகத்தில் அற்பத்தன்மை அஃதின்மைகளானே மகிழ்ச்சிவாட்டமில்லாமையாம். சந்தோஷமுடையவனைக் கூறலானே சந்தோஷ இலக்கணத்தையும் தெரிந்துகொள்ளலாம்; விஷயம் அடைவுற்றபோதினும் பொய்யாதலின் அடையாததே போன்றமையையும், அதனடைவா லுளதாய மகிழ்ச்சிமுதலியவை யின்மையினானே முன்னவஸ்தை போன்றமையையும், அடையாததில் ஆசையற்று அடைந்ததேபோன்றமையையும், அடைந்தவனாய்ச் சுகதுக்கங்களற்றவன் ஈண்டுச் சந்துஷ்டனெனப்படுகின்றான்.

(ச.) வாகியலோசனம், அந்தகாரங்களிற் றெரியாது மிகுந்த மின்னலாதி பிரபைகளில் எதிர்நில்லாது விலகும் வஸ்துவைப்பாராது இவ்விசாரம் அத்தன்மையதன்றென்று, வாகியலோசனத்தினும் விசாரலக்ஷணமான அந்தர லோசனத்திற்கு விசேஷந் தெரிவித்ததாம். நானார்=அகஞ்சப்தார்த்தம் யாது. உலகம்=சம்சாரம், வந்தவாறென், செறிபிறவியாரது, சம்சாரம், தேகத்திற்கா? அந்தக்கரணத்திற்கா? அதற்கு வேறான ஆத்மாவிற்கா? தெருளுற வென்றதனாற் சம்சார நிவிருத்தி யெத்தாலாம்? எனுந் தெருளுறத்திகழும் விசாரம், இருளுறுமாபத்தினுக்கு மருந்தாமென்றதனால், புத்திமான்களால் ஆபத்துக்காலத்தும் தெருளுறத்தன்னாற்றானே சிந்திக்கவேண்டுமெனத் தெரிவித்ததாம். சந்தோட சொரூப நிரூபித்தற்குமுன் அதனது மகிமையைக் கூறுவார்

அப்பால் என்றார். ஏற்றமுளபரமலாபமும் சுகமும் சித்த விசிராந்தியைத் தருவதுமாகிய மேன்மை நிறைந்தது சந்தோடம். ஏதென்றேனில் = ஹே அரிமர்த்தன ! நீ அது யாதெனக் கேட்கில், வருபொருளில் = கிடைத்த பிரியவத்துவிலும் அப்பிரியவத்து விலும் சமத்துவமடைந்து இன்பமறத் துய்த்து சுகதுக்கானுபவமின்றி, வாராவன பொருளில்=கிடையாதவத்துக்களில், வாஞ்சையை விட்டு துன்பமிலா மகிழ்ச்சிதானே?

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகிழ்ச்சியின் மகிமைமலர்தல். நிகர் என,

நிகரறுசந்தோட வமுதமையப் பெற்றுனெடும்போக நஞ்சாமந் நிறை சந்தோட, மகலுறவாசையில் விழுநெஞ்சறிவை நோக்கி வழுக்குறு கண்ணடி யிலா ந நம்போற்றோன்று, மகிழ்குண மெய்திய புருடமகிமையோனை மாதவ ருநராதிபரும் வணங்கா நிற்பர், சகமெனு மாயையை வெல்லத் தக்கோர்க் கெல்லாந் தப்பாத சகாயமாஞ் சாதுசங்கம். (19)

(ப - ரை.) நிகரறு சந்தோடவமுது அமையப்பெற்றால் = உவமையில்லாத சந் தோடமாகிய அமிர்தபானஞ் செய்ததாற் சாந்தராகித் திருப்தியடைந்தவர்க்கு, நெடும் போகம் நஞ்சாம்=விஸ்தார போகபாக்கியமானது, விடம்போலாம், அந்நிறை சந்தோ டம் அகலுற=அந்தப்பரிபூரண சந்தோடமில்லாமல், ஆசையில் விழுநெஞ்சு=ஆசை வச மாகிப் பரவசமுற்றசித்தம், அறிவை நோக்கில் = சிதான்மாவைப்பார்க்கில், அழுக்குறு கண்ணடியில் ஆனனம்போல் தோன்று =மலினதர்ப்பணத்தில் வதனம்போலத் தோன் றுதாம் மகிழ்குணம் எய்திய புருட மகிமையோனை = சந்தோஷமாகிய உயர்ந்த குண மடைந்த புருடராஜப் பெருந்தகையினை, மாதவரும் நராதிபரும் வணங்காநிற்பர்=தபேந் திரரும் நரேந்திரரும் நமஸ்காரஞ்செய்து தோத்தரிப்பர், சகமெனு மாயையை=சனன மரண சமுசாரமயக்கத்தை, வெல்லத்தக்கோர்க்கு = ஜயிக்கவேண்டுமென்று முயன்று கொண்டிருப்பவர்கட்கு, எல்லாம் தப்பாத சகாயமாஞ் சாதுசங்கம் = எவ்விடத்தும் எல்லாவாற்றானும் மாறாதஉதவியாவது மகத்துக்களின் கூட்டமேயாம்.

(ஸ்ரீ - வீர.) சந்தோஷ அமிருதபானத்தால் திருப்தியை யடைந்தவர்கட்குப் போகங்கள் பிரதிகூலவிடம்போற் றோற்றும். சந்தோஷமிலதாயின் ஞானமுளதாகா தாம் ஆகலின் சந்தோஷஞ் சம்பாதிக்கத்தக்கதாம் என்பார், அந்நிறை யென்றார். ஆசை யின் பரவசத்தால் சுவஸ்தமற்ற நெஞ்சம், அழுக்கு = மலினத்தகைமை. கூறிய சந் தோட சொரூபத்தை மீண்டும் அவ்வுணர்வு திடப்படற்பொருட்டுக் கூறுவார் மகிழ்குண மென்றார். கிடையாததை அவாவாமலும், கிடைத்ததை ஒழுக்கமுறை தவறாமல் அனு பவித்தும் இருக்கும் யாவன் அழகுபொருந்திய நல்லொழுக்கமுடையவனுவனோ அவன் சந்துஷ்டனெனப்படுவன். சந்தோடத்தினது மகாமகிமையைத் தெரிவித் துபசங்கரிக் கின்றார், எய்தியவென. குணசாலிகளெல்லாம் புகழுமாறு சந்தோஷத்தை யடைந்துள்ள புருடராஜனை யென்பதாம். சாதுசங்கமத்தை விரிப்பார், சகமென்றார். சாதுசங்கமப லன் ஓதுவார், தப்பாதவென்றார். மேல் இனிது துதித்து சாதுசொரூபங் கூறும் வாயிலாக அவர் சேவையை வியந்து விதிப்பார் என்றுணர்க. சந்தோஷ அமிருத பானத்தால் சந்ததந் திருப்தியை யடைந்த சாந்தர்களுக்கு ஒப்பிலாப்போக ஐசுவரியங் களும் பிரதிகூலவிடம்போ லாய்விடுகின்றன. ஆசைதைனிய முதலிய தோஷங்களை நாசஞ் செய்யும் சந்தோஷம் அதிமதுர ஆனந்தத்தைத் தருவதொப்ப அமிருதரச அலை கள் சுகத்தைச் செய்யாவாம். ஆசையின்பரவசனாகி அதனால் வியாகுலமுற்றுச் சந்தோஷ மற்றிருக்கும் மனத்தில் ஞானத்தை யுபதேசித்தபோதினும் அழுக்கு நிறைந்த கண்ணடி

யில் ஆனனம்போல வெளிப்படத் தோன்றுதாம். முன்மொழிந்த இலக்கணஅனுவாத பூர்வகமாக வேறிலக்கணத்தை விளம்புகின்றார், மகிழ்குணமென. கிடையாதபொருளை யவாவாமலும், முறையே கிடைத்த சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்துக் கொண் டும், உலகத்திற் கின்பந்தரும் நல்லொழுக்கத்தில் நடந்துகொண்டும் இருப்பவனே சந்துஷ்டனெனக் கூறப்படுவன். விடயசம் பாதனமில்லாமலே கேவலஞ் சந்தோஷ மாத்திரத்தானே எங்ஙனந் தேகவாழ்க்கை கூடுமெனின், கேட்டி! சந்தோடத்தால் நிறைந்த மனமுடையவனை மகாசம்பத்துக்கள் யாவும் தாசர்கள்போலக் காத்துக்கொண் டிருக்கும். "ஆசைக்கடிமையே யகிலலோகத்தடிமை, ஆசையடிமையார்க் ககிலலோக மும் அடிமை" எனவுங் கூறுவர். உலகிலுள்ளோர் சந்தோஷத்தாற் சகலரிடத்திலும் விஷமபுத்தியில்லாத சமத்தகைமையால் அழகு நிறைந்த புருடனுடைய முகத்தைத் தரிசித்து எங்ஙனமானந்த மடைகின்றனரோ அங்ஙனஞ் சர்வதன சம்பத்துக்களாலும் அடைவதில்லை. சந்தோஷ முடையவனே யாவரினும் மேன்மை யனுவன். இவ்வுலகத் தில் குணசாலிகட் கிஷ்டமான சந்தோஷத்தாற் சகலரிடத்திலும் சமமானபுத்தி செய் வதால் இனிமையாக அலங்கரிக்கப் பட்டவனுய் மகாபரிசுத்தனு யிருக்கும் புருடராஜா வைத் தேவதைகளும் மகாமுனிவர்களும் நமஸ்கரிக்கின்றனர். நான்காவது துவாரபா லகனுகிய சாதுசங்கத்தை வருணிப்பார், சகமென்றார். நரர்கட்குச் சமுசாரத்தைத் தாண்டுவதி லீண்டுச் சாதுக்களின் உத்தமமான சமாகமமானது சகல அவஸ்தைகளி னும் விசேடமாக வுபகரிக்கின்றது.

(ச.) அமைய = சித்தசாந்திவர, பெற்று = பானஞ்செய்து, ஆல் = அதனுல், திருப்தியானவர்கட்கு, நெடும்போகம் நஞ்சாம் = அநுகூலமின்றிய விடம்போலாம். நெஞ்சு = சித்தத்தில், அறிவை = குரு உபதேசித்த ஞானத்தை, நோக்கில் = தான் விசாரிப்பினும்; தோன்று = அந்த அறிவு பிரதிவிம்பியாது, மாதவரும் = மகாமுனி வரும், நராதிபரும் = நரோத்தமரும், தப்பாத = உபாயஞானத்திலும் உபயஞானத் திலும், அவற்றை யடைவதிலும் தவறுத சகாயமாம் சாதுசங்கம். ஆசையின் பரதந்தி ரப்பட்டுத் தூடிதமாய் அதனுனே சந்தோடமில்லாத சித்தத்தில் ஞானம் குருவினுலே யுபதேசிக்கப்படினும் பிரதிபிம்பியாதாம், மலின ஆதரிசத்தில் வத்திரம்போலும். முன் னர் பிரியாப் பிரியங்களில் உதாசீனப்பான்மை யுரைக்கப்பெற்றது, இப்போது பிராப்த மான பிரியாப் பிரியங்களில் விகாரமடையாமல் புசிப்பன் என்பார் மகிழ் என்றார். மகி மையோன் = குணசாலிகளுக்குள் இவன் உயர்ந்தவன் எனக் குணவான்களாற் கொள் ளப்பட்ட பெருமையை யுடையவன். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சாது சங்கத்தைப் பலவகையானும்புகழ்வ:= அறவென.

அறக்குறைவை நிறைவாக்குஞ் சம்பத்தாக்கு மாபத்தைச் சுபமாக்கு மசுபந்தன்னைச், சிறக்குமுயர்ந் தவர்கூட்ட மென்னுங்கங்கைச் சீத நீ ராடினர்க் குச் செந்தீவேள்வி, யிறக்கரிய தவந்தானந் தீர்த்தம்வேண்டா மிடர்பந்தமறுத் தெவர்க்கு மினியோராகிப், பிறப்பெனும்வேலைப்புணையா முணர்வு சான்ற பெரியோரை யெவ்வகையும் பேணவேண்டும். (20)

(ப - ரை.) அறக்குறைவை நிறைவாக்கும் = அத்தியந்தம் குறைந்த இடத்தைப் பூர்ணமாக்கும், ஆபத்தைச் சம்பத்தாக்கும் = ஆபத்தினைச் சம்பத்தாக ஆக்கிவைக்கும், அசுபந்தன்னைச் சுபமாக்கும் = அமங்கலத்தை மங்கலமாக்கும், சிறக்கும் உயர்ந்தவர் கூட்டம் = யாவரானு முடியாததை முடித்துவைக்கும் விசேடம் வாய்ந்த மேலோர்சங்

கம், என்னுங்கங்கைச் சீதநீர் ஆடினர்க்கு = என்னப்பட்ட அதிசீதளபாவன ஸ்ரீ கங்கைத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்தவர்கட்கு, செந்தீவேள்வி = மந்திராக்கினி மகமும், இறக்கரியதவம் = கெடாதபயனைப் பயக்கும் தபமும், தானம் = தன்னதைப் பிறராக்குந்தானமும், தீர்த்தம் = பரிசமாத்திரத்திற் பாபத்தைப் படுத்தும் தீர்த்தமும், வேண்டாம் = அவசியமில்லை, இடர் பந்தமறுத்து = துயரைத்தரும் அகங்காரக் கட்டை யகற்றி, எவர்க்கும் இனியோராகி = சர்வசம்மத சாதுக்களாய், பிறப்பெனும் வேலைப்புணையாம் = சனனமரண சமுசார சமுத்திரவங்கமாய், உணர்வுசான்ற பெரியோரை = அறிவுமயமா யிலங்கும் ஞானிகளாகிய மகான்களை, எவ்வகையும் பேணவேண்டும் = எல்லாவு பாயங்களானும் இனிது சேவிக்கவேண்டும். (20)

(ஸ்ரீ - வீர.) சூனிய ஸ்தலத்தைப் பிராணிகளின் சமுதாய முடையனவாகப் போலுஞ் செய்விப்பர். அதிசீதள பவித்திரத் தகைமையானே சமுசாரதாப நிவாரகஞ் செய்விப்பதாந் தகைமை காட்டப்பட்டது. அகங்காரத்தை ஆத்ம அநாத்மக் கிரந்திரூபமாதலினானும், கிரந்திபோலும் கெடுத்தற் கெளிதன்மை யதானும், கிரந்தி = கட்டு என்றதாம். அறிஞர்களாகிய சாதுசங்கங் கிடைப்பின் மைந்தராதி பந்துக்கள் தனுதிகள் இல்லாமல் மகாதுயரந் தருமிடமும் அவற்றால் நிறைவுறுகின்றது மரணமும் உற்சவமங்கலமாகின்றது, ஆபத்துக்களும் சம்பத்துப்போல விளங்குகின்றன. ஆபத்துத் தாமரைக்குப் பனியும், மோகப்பனிக்கு மாருதமும் ஆம் சாதுசங்கம் மனோதுக்கங்களை யதிதூரத்திற் றள்ளும். எவன்தாபத்தை நீக்குவதாற் குளிர்ச்சியாயும் அழுக்கையகற்றலால் வெண்மையாயும், இருக்கும் சாதுசங்கமாகிய ஸ்ரீ கங்கையின் கண்ணே மூழ்கினனோ அவனுக்குத் தானங்களாலும், தீர்த்தங்களாலும், தவங்களாலும், யாகங்களாலும், ஆகவேண்டிய தென்னை ? ஹே அனகனே ! ஆசையற்றவர்களாய், ஐயமற்றவர்களாய், அந்தக்கரண அதன் றன்மங்கட்கு ஆன்மாவுடன் றாதான்மிய சம்சர்க்க அத்தியாச இலக்கணச் சிற்சடமுடிச்சு அவிழ்ந்தவரும் ஆகி விளங்கும் சாதுக்கள் கிடைத்துவிடுவராயின் தவந்தீர்த்த முதலியவற்றைத் தேடுவதா லாகவேண்டிய தென்னே, பிரஹ்மத்திலிளைப்பாறிய மனத்தோடு கூடித் தன்னியர்களாகிய சாதுக்களை முக்கியமுயற்சியினனே பூஜிக்கவேண்டும்; பிரஹ்மான்ம வஸ்துவை யடையவிரும்பி முயலும் அதிகாரியானவன் சாதுசங்கத்தை விடவே கூடாது. அகத்திலுள்ள சித்த சித்துப்பிராந்தி முடிச்சுகளை யறுத்தவர்களாயும், பிரஹ்ம சொரூபத்தை யறிந்தவர்களாயும், பவசாகரத்தைத் தாண்டச் சகாயஞ் செய்பவர்களாயும், யாவரானும் போற்றத் தக்கவர்களாயும், பிரசித்தர்களாயும் இருக்கும் சாதுக்கள் முமுக்ஷுக்களால் தானத்தாலும் பகுமானத்தாலும் சேவைகளாலும் மற்றுமுள்ள எல்லா வுபாயங்களாலும், நன்றாகச் சேவிக்கத் தக்கவர்களாவர்கள். நரகாக்கினியை யணைக்கும் மேகம்போன்ற சாதுக்களை யநாதரவுசெய்பவர்கள், நரகாக்கினிக்குக் காய்ந்த கட்டைகளாவர்கள். தரித்திரம் மரணந் துக்கம் முதலிய ரோகங்கட்குச் சாதுக்களே பரம ஔடதமாவர்கள்.

(ச.) சூன்ய ஸ்தானத்தையும், நிறைவாக்கும் எங்கும்பூர்ணமான பிரஹ்மமேயெனப் புத்தியுதய மாதலின் என்க. ஆபத்தைச் சம்பத்தாக்கும் = அநிஷ்டப் பிராப்தியும் வைராக்கிய ஏதுவினுன் முமுக்ஷுவிற் குபகாரஞ்செய்தலின் என்றுணர்க. அசுபந்தன்னைச் சுபமாக்கும் = மரணத்தை யுற்சவமாக்கும், தேக விலக்ஷணமான ஆத்மஞானத்தாற் பந்தரூபமான தேகாதி நிவிருத்திவரின் உற்சவப் பிரதீதியாதலின் என்பதாம். இடர்பந்தம் = அகங்காரக்கிரந்தி. பெரியோரை = பிரஹ்ம வித்துக்களை, எவ்வகையும் = சர்வ வுபாயங்களாலும், பேணல் வேண்டும் = நன்றாகச்சேவை செய்யவேண்டும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சந்தோடம், சாதுசங்கம், விசாரம், சமம், என்னும் இவை களே நரர்கட்குச் சமுசாரசாகரங் கடப்பதற்குப் பெரியவுபாயங்களாம்; சந்தோஷமா னது பரமலாபத்தைத் தருவதாம், சாதுசங்கமானது பரமகதியைத் தருவதாம், விசார மானது பரமஞானத்தைத் தருவதாம், சமமோ பரமசுகத்தைத் தருவதாம், எல்லாவிடங் களிலும் பலத்தின் அபேத ஆரோபமாம் என்று கருதியிப்போது சர்வ துவாரபாலரை யும் ஒருமித்துத் துதிக்கவிழைந்து அனுவதிக்கின்றார்:—நிறையென.

நிறைபவந் தீருபாயநான்கா மிவர்களோடு நிறைநட்பார் பவக்கடலை நீத் தாரன்றாய், குறையுமன மோகந்தீரிச் சொற்கேட்பாய் குணம்விரும் பாதிச் சொல்லைக் குறிக்கொண் டோர்க்கு, மறையுணர்வு வலிதின்வருங் காமமாதி மயக்கமறுஞ் சரற்கால வாவிநீர்போற், கறைதவிர்ந்து மனந்தெளியுங் கவசத் தோரைக் கணைகள்போன் மிடிமுதலாங் கவலைதாக்கா. (21)

(ப - ரை.) நிறைபவந்தீர் = நெருங்கிய பவபேதனஞ் செய்யும், உபாயநான்காம்= இவ்விமல உபாயங்கள் நான்காம், இவர்களோடு நிறைநட்பார்=இந்நால்வரோடும் பூர்ண சிநேகமுடையவர்கள், பவக்கடலை நீத்தார் = மோகநீர் நிறைந்த பவார்ணவத்தைக் கடந் தவர்களே யாவர்கள், அன்றாய் = இவ்வகண்டித குலலக்ஷ்மியோடு கூடி அத்தகைய னாய் நீ விளங்குகின்றனை, ஆகலின் குறையுமன மோகந்தீர் இச்சொல் கேட்பாய்=மலின வாசனை பொதிந்தமனத்தின் மோகத்தை யரிக்கும் உபதேசிக்கப்பட்ட இவ்வாக்கியத் தைக் கேட்பாயாக குணம்விரும்பாதிச் சொல்லைக் குறிக்கொண்டோர்க்கும் = பயனை விரும்பாமல் இம்மோக்ஷவுபாய கதையைச் சிரவணித்தவர் கட்கும், மறையுணர்வு வலி தின்வரும் = பலாத்காரமாகவே வேதபோதித பரபோதம் உண்டாம், காமமாதி மயக் கமறும் = லோபமோகாதி தோடங்கள், இலயத்தை யடையும்; சரற்காலவாவி நீர் போல் = சரத்திருதுவில் தடாகத் தெண்ணீர்போல, கறைதவிர்ந்து = களங்கம்நீங்கி, மனந்தெளியும் = உளம் தெளிவையடையும், கவசத்தோரைக் கணைகள்போல் = சந்நா கந்தரித்தவரை அம்புகள் அதஞ்செய்யாவாறுபோல, மிடிமுதலாங் கவலைதாக்கா = தைனிய தாரித்திரிய தோடங்களோடு கூடிய திருஷ்டிகளாகிய கவலைகள் உபத்திர வியாவாம்.

(ஸ்ரீ - வீர.) மயல் நீர்நிறைந்த பிறவிக்கடல் தாண்டவைப்பனவாய இவற்றால் யான் சேர்ந்துளனோ இலனோ வென ஆலோசிக்கும் ஸ்ரீஇராகவரை நோக்கிக்கூறுவார். அன்றாய் என. குணஇலக்குமியோடு கூடியதனாற் செய்யவேண்டுவதைத் தெரிவிப்பார் குறையு மென்றார். கேட்பாய் எனத் தொடங்கிவைத்துக் கூறும் ஞானகதைக்குச் சிரவண பலத்தை யொளிர்வித்தற்பொருட்டு அடைவின் முற்றும் என்பதுவரை கூறுதலாம். திருஷ்டிகள் = தள்ளக் கொள்ளத்தக்கனவாய விடயவிகற்பங்கள், மர்மபேதனப் பொருட்டுப் பிரகாசித அவசரங்களாம். சந்நாகம் = கவசம். சமுசார துக்கத்தைத் துடைப்பதற்கு உபாயங்களான இந்நான்கு நின்மலப் பொருள்களையும் பயின்ற அதிகா ரிகள் மோகநீர் நிறைந்த சமுசாரசாகரத்தைக் கடந்தவர்களே யாவார்கள். யாவற்றையும் அப்பியசிக்க முடியாவிடினும், ஒன்றையேனும் அப்யசிக்கலாம், ஒன்றைப் பயின்றபோதி னும் நான்கையும் பயின்றதாகவே முடியும். கூறிய குணசம்பத்தெனக்கின்றென்று நினைக்கவேண்டாம், நீ இவ்வகண்டிதமான குணஇலக்ஷ்மியோடு கூடி விளங்குகின் றனை, இனிக்கூறப்படுவதாகிய மனத்தின் மோகத்தைக் கெடுக்கும் இவ்வாக்கியத்தைக் கேட்பாயாக. நித்திரையில்லாது விழித்திருப்பவனுக்கு எதிரே தீபம் பிரகாசித்துக்

கொண்டிருப்பின் இச்சியாதபோதினும் ஆலோகமானது பதார்த்த தரிசனத்தை யெப்படி நன்றாய்ச் செய்விக்கின்றதோ அப்படிச் சிரவணித்த இதனுனே மோக்ஷசாதனபூதமாய ஞானம் இச்சையின்றியவனுக்குங் கிடைக்கும். இப்போது இதன் மகாபலத்தையும் குணத்தையும் காட்டுவார், காமமாதி யென்றார். சரற்காலத்தை யடைவுற்ற திசைகளினின்றும் பனிகள் ஓடுவதேபோல, மதியினின்றும் உலோப மோகாதி தோடங்களெல்லாம் பையப்பையக் குறைவை யடைந்துபோம். சரற்காலத்திற் பெரியதடாகம்போல மனது மிகவும் தெளிவை யடையும். தீனத்தன்மை தரித்திர முதலியதோடக் கூட்டங்கள் தனுதி விடயங்கள் சாரமற்றனவெனத் தெரிந்த திருஷ்டியுடையவரை, இருப்புக் கவசந் தரித்தவரது மருமங்களை யம்புகள் துளைக்க வல்லன வல்லனபோலக் கெடுக்க வல்லன வல்லவாம்.

(ச.) நட்பார்=இச்சாந்தியாதிகளைப் பூரணமாக அப்யசித்தவர்கள் பிறவிக் கடலினின்றும் கரையேறுவர்கள், அன்றுய் = இவ்வகண்டித குணஇலக்ஷுமியால் நன்றாயாசிரிதனுனநீ, இச்சொல் = மேலே சொல்லப்படும் இந்த வாக்கியத்தை, கேட்பாய்; இனி யிவர்க்கு மோக்ஷோபாயகதைச் சிரவணத்தின் பலந் தெரிவிப்பார், குணமென்றார். குணம் விரும்பாது = அறிவை வாஞ்சியாது, இச்சொல்லை = இம்மோக்ஷ உபாய கதையை, குறிக்கொண்டோர்க்கும் = சிரவணஞ் செய்தவர்க்கும், வலிதின் = பலாத்காரமாய் வரும், மிடிமுதலாங்கவலை = நான்தனவான், நான் தரித்திரன், என்பன முதலிய பேததிருஷ்டிகள், தாக்கா = இருதயங்களைப்பேதியா, மிடிமுதலியவைகளே விசார சத்துருக்கள், பரிபூரணமான சொச்சொரூபத்தில் தோற்றப்படும் பேதமாதலின் என்க. மிடிமுதலிய தோஷங்களால் அவற்றின் அதீனமான ஆன்மாவின்கட் பேதந் தோற்றப்படுகின்றதாகையால் சொரூபபேத வேதுக்கள்; அவைகள், இம்மோக்ஷ உபாய கதையைச் சிரவணஞ் செய்தவர்கள் இருதயங்களைக் கவசத்தோரைக் கணைகள்போலப் பேதியா வென்பதாம். தைங்யம் உற்சாகபங்கத்தா லொளியிலாமையாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் அவற்றையே புகழ்தல்:—தருவென.

தருபயஞ்செய் மாயைமன மீராதாகுஞ் சமபாவந் தரங்கந்தீர் சாகரம்போன், மருவலுறும் விசாரத்தான் மிக்கோர்க் கெல்லாம் வாரிதிபோ லாழமும் பொன்வரை போன் மொய்ம்புந், திருமதியின் குளிர்ச்சியும் வந்தெய்து நன்னூற்செய்கையி னல்லோர்புந்தி செவ்வையான, கருமவழி மகிழ்வெய்து மறுவிலாத கற்புடையா டன்மனையிற் களிக்குமாபோல். (22)

(ப - ரை.) தருபயஞ் செய்மாயை = பயங்கரஞ் செய்யும் சமுசாரம், மனம் ஈராதாகும்=மனத்தைக் கெடுக்கமாட்டாதாம், சமபாவந் தரங்கந்தீர் சாகரம்போல் மருவலுறும் = சமத்தன்மையானது மந்தரபர்வதத்தை யெடுத்துவிட்ட அலைதீர்ந்த கடல்போல உண்டாம், விசாரத்தான் மிக்கோர்க் கெல்லாம் = ஆராய்ச்சி மிகுந்த மகான்கட்கெல்லாம், வாரிதிபோ லாழமும் = சமுத்திரம்போற் கம்பீரப் பான்மையும், பொன்வரைபோன் மொய்ம்பும் = மேருகிரிக்குச் சமானமான ஸ்திரபாவமும், திருமதியின் குளிர்ச்சியும் = அழகிய பூர்ணமதிபோலும் அந்தர் சீதளத்தன்மையும், வந்தெய்தும் = வலிதிற்கிட்டும், நன்னூல் = நல்ல சாஸ்திரங்களையும், செய்கையின் நல்லோர் = நல்ல கிரியைகளையும் உடையவர்களது, புந்தி = மதியானது, செவ்வையான கருமவழி மகிழ்வெய்தும் =அவிரோதமாய கருமத்தில் இரமிக்கும், மறுவிலாத கற்புடையாள்=களங்கமற்ற கற்பையுடைய ஸ்திரீயானவள், தன் மனையில் களிக்குமாபோல் = தன்னுடைய அந்தப்புரத்தில் ஆனந்த முறுவதேபோலும்.

(ஸ்ரீ - வீர.) ஈராதாகும் = சேதியாதாம், அந்தப்புரம் = அஜிரம் அங்கணம் உண் மனையென்பதாம். பயவேதுக்கட்கு எதிரிலிருந்த போதினும் இந்நூலுணர்ந்தவனது மனதை அம்புகள் மகா ஜடமாகிய பெருமலையைத் துளையாததே போல, சமுசாரபயங்கள் துயர்ப்படுத்தாவாம்; கடைந்தபின் மந்திரகிரியோடு கூடாத பாற்கடல்போல ஏற்றத்தாழ்வின்றிய பரமசாந்தத்தை யடையும். இந்நூலை யாராயு மகானுக்குப் பாற்கடல் போன்ற கம்பீர இயற்கையும் மகாமேருவைப் போன்ற திரத்தன்மையும், பூர்ணசந்திரன் போன்ற அந்தக்கரண சீதளத்தன்மையும், அதிதிடமாக வுண்டாம். இவை சம்மந்தித்த பயன்களாம்; முக்கியமான பயனோ இனிவரும்: அந்தப்புரத்தி லிருக்கும் பதிவிரதை போல அறிஞனுடைய மதியானது நன்னூல் பெரியோராசாரங்கட்கு, விரோதமில்லாத கருமங்களிலும் தானாய்க் கிடைத்த பொருள்களிலும் இரமிக்கும், ஆகையால் அவனுக்கு இஷ்டம் போற்றிரிதல் கூடாதாம்.

(ச.) தருபயஞ் செய்மாயை = பயங்கரமான சம்சாரமும், சமுசாரந் தாரா நின்ற பீதியும், மனம் = இருதயத்தை, ஈராதாகும் = அரியாதாம், கலக்காதாம், சமபாவம்= சமபாவத்தை, மருவலுறும்=மனம் சலனமின்றிப் பொருந்தும், அந்தக்கரணத்திற் றரங்கந்தீர் சாகரம்போல் தரங்கந்தீர் சமபாவபுத்தி யுதிக்குமென்றுமாம். ஆழமும் = கம்பீர பாவமும், மொய்ம்பும் =திடதைரியமும், குளிர்ச்சியும்=சீதளமும், வந்தெய்தும் = அந்தக்கரணத்தின்கண் வந்துதிக்கும். நன்னூல் = சற்சாஸ்திரங்களால், செய்கையினல்லோர் = நன்னடை யுடையோரது, புந்தி = புத்திக்கு, செவ்வையான = அவிரோதமான, கருமவழி = கன்மத்தில், மகிழ்வெய்தும் = புத்தி சந்தோஷமா யிரமிக்கும்.(22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இனி முக்கியமான பயனைக் கூறுகின்றார்.—அற்புதவென.

அற்புதங்க ளனைத்துமிலா விவனுக்கந்த வருஞ்சீவன் முத்திபத மடைவின் முற்றுஞ், சொற்புலனுக் கதீதனுபுலகர் போலத் தோன்றிடுவோன் புந்தியிலோர் தொழில்பற்றாதோ, னற்பயன் பொல்லாப் பயனுற் சுகஞ்சோர் வில்லோ னண்ணியது புசித்தினிதி னன்றாய் நிற்போன், பொற்புறு நல்லாசார விரோதமான போகங்கடமிற் சிறிதும் பொருந்திடாதோன். (23)

(ப - ரை.) அற்புதங்கள் அனைத்தும் இலா இவனுக்கு = சேஷமில்லாமல் விசேஷங்கள் சாந்தமான இவனுக்கு, அந்த அரும் ஜீவன்முத்திபதம்= அந்த அருமைவாய்ந்த ஜீவன் முக்தித்தன்மை, அடைவின் முற்றும் = மெதுவாகப் பரிணதியடையும்; சொற்புலனுக் கதீதனாய் = வாக்கிற் கெட்டாதவனாய், உலகர்போலத் தோன்றிடுவோன் = லோகசாமானியமாகக் காணப் பெறுவன்; புந்தியிலோர் தொழில்பற்றாதோன் = அபிமானமாக ஒருதொழிலையும் செய்யாமல் சேர்ந்ததில் நிற்பன், நற்பயன் பொல்லாப்பயனுற் சுகஞ் சோர்வில்லோன் = இஷ்ட அநிஷ்டபல மடைவுறில் மகிழ்ச்சி வாட்டமில்லாமல் மனம் வென்றவன் ஆவன்; நண்ணியது புசித்து = கிடைத்ததை அயின்று, இனிதின் நன்றாய் நிற்போன் = சுகாசனத்திருந்து வாழ்வன், பொற்புறு நல்லாசார விரோதமான போகங்கடமில் = அழகுபொருந்திய சதாசார விரோதமான போகங்களில், சிறிதும் பொருந்திடாதோன் = கிஞ்சித்தும் வாஞ்சை வையாதவனாவன்.

(ஸ்ரீ - வீர.) சாஸ்திரத்தினாலும் லோகத்தினாலும் கிடைத்த விவகாரத்தின்படி தொடர்ந்து நிற்பன். மனத்தால் வெற்றிகொள்ளப்படாதவன். மோக்ஷ உபாயகதையை என்னுமிடத்தில் மொழிந்த சிரவணம் வ்வண்ணம் அதிகாரியாற் செய்த்தக்கது.

என்று காண்பித்து அதன்பயனுய ஆத்மதத்துவ அபரோக்ஷ ஞானத்தைக்காண்பிப்பார், நன்ருய் நிற்போன் என்ருர். சர்வசங்கற்ப விசேடங்களும் சாந்தியானவனுக்குப் பையப் பையப் பூமிக்கிரமமாகப் பரிபக்குவத்தை யடைந்து வந்து வாக்கிற் கெட்டாத ஜீவன் முக்திப்பதமான துண்டாம், இந்நூலையாராயும் அதிகாரி மதியானது பரமான்மாவின் றரிசனத்தைத் தந்து சர்வவிடயங்களிலும் தூய்மையாயும் தண்மையாயும் இலங்கி சரற் கால சந்திரப் பிரகாசம்போலப் பரமப்பிரகாசத்தை யடைகின்றது. இஷ்டமில்லாதவை தன்னை வந்தடையின் துவேஷிப்பது மில்லை, இஷ்டமுள்ளவை தன்னைவிட்டு நீங்கின் ஆசைப்படுவது மில்லை, காரியபல முதலியவற்றின் சொரூபத்தை யறிந்திருந்த போதி னும் அதையறியாத தருப்போலவே யிருக்கின்ருன்; முயல்வில்லாமற் கிடைத்ததை யனுசரிப்பவனுய், இஷ்ட அநிஷ்டபலங்கள் கிடைத்தபோது மனோவிகார மற்றவனுய் உலவி மற்றையர்களைப் போலவே காணப்படுவன், மதியை யடக்கும் வாயிலாய் எவற் றையுமடக்கிச் சுகாசனத்திருந்து தானே கிடைத்தபோகக்கூட்டத்தைப் புசித்து சாஸ்திர விருத்தமார்க்கங்களிற் செல்லாம விருப்பவனுல் மோக்ஷமடையப்படும். இதற்கு இந்நூலே சாதகம் ஆம், இது முழுவதையும் ஆராயின் பிரஹ்மாதிகளின் வரம்போ லனு பவிக்கலாம். இந்நூலைச் சிரவணித்தும் மனனித்தாராய்ந்தும் அறிந்தவனுக்கு மோக்ஷம் அடைவதில் தவம் தானம் சபம் முதலியவை ஒரு சிறிதும் உபயோக மாவதில்லை, அவ் வப்பயன்களெல்லாம், இப்பயனுள் ளடங்கிப் போவதா லென்றறிதல் வேண்டும்.

(ச.) அடைவின் = கிரமமாக, (சீக்கிரத்தில்) நற்பயன் பொல்லாப் பயனுல் = இட்டாநிட்ட பலப்பிராப்தியால், (இருதயத்தில்) சுகஞ்சோர்வில்லோன், நண்ணியது= உரித்தாய்க் கிடைத்ததை, நல்லாசார விரோதமான = சத்துக்களின் ஆசாரத்திற்கு விருத்தமாகிய.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விசாரயோகியர் பெருமையும் அவிசாரப் போகியர் சிறுமை யும் கூறல்:—ஒருவென,

ஒருகணமு மொழியாமற் சுகமதாகி யுடல்கடவானுய்ச் சான்ருே ருசாவி னுலே, பெருகியவிவ் வீட்டுநெறி விசாரஞ் செய்வோன் பிறவிதீர் மெய்ஞ்ஞா னம் பெற்ருேனுகி, வெருளுமறு பிறப்பினுருன் தாயர்யோனி விதனமுருன் சிறிதாகிமிளிர் போகத்தின், மருளுமனப் பாவியராய் வெருள்வோர் தாயர் வயிற்றின்மலப் புழுவென்றே வழங்கற் பாலோர். (24)

(ப - ரை.) ஒருகணமு மொழியாமல்=எத்தேசத்திலும் எக்கணத்திலும் மாருமல், சுகம்தாகி = கவலையில்லாமல், உடல் கடவானுய் = சுகாசனத் திருப்பவனுய், சான் ருேர் உசாவினுலே = சாதுசங்கத்துடன் கூடியாராய் பவனுய், பெருகியவிவ் வீட்டு நெறி = விசாலமான விம்மோக்ஷ மார்க்கத்தை, விசாரஞ் செய்வோன் = விசாரித்துக் கொண்டே யிருப்பவன், பிறவிதீர் = ஜனனந்தீர்ந்த, மெய்ஞ்ஞானம் = தத்துவஞா னத்தை, பெற்ருேனுகி = அடையப் பெற்றவனுகி, வெருளும் = பயமுறுத்தும், மறு பிறப்பினுருன் = மீண்டு முண்டாகான்; தாயர்யோனி விதனமுருன் = அதனுனே மாதாவின் யோனியந்திரத்திற் கரும்பெனத் துயரமடையான், சிறிதாகி மிளிர்போகத் தின் = அற்பமாகத் தோற்றும் போகங்களில், மருளுமனப் பாவியராய் வெருள்வோர்= மயங்கிவீழும் உள்ளப் பாவிகளாகிப் பயந்து நடுங்குவோர், தாயர்வயிற்றின் = மாதா வின் உதரத்தில், மலப்புழு என்றே வழங்கற்பாலோர் = தன் தாயகட்டிலுறும் மலக் கிருமிகள் என்றவ்வதமர்கள் விவகரிக்கப்படுவர்கள்.

(ஸ்ரீ - வீர) மனன நிதித்தியாசன அங்கத்தோடும், சமாதி இவ்வாறு செய்யத் தக்கதாந் தன்மையோடும் கூடிச் சாஸ்திர சிரவணஞ் செய்பவனுக்கு அதன்பயனைக் கூறி, அதைச் செய்யாதவரை நிந்திப்பார், சிறிதாகி யென்றார். பயந்துநடுங்குவோர், சுகாசனத்திருத்தலாதி, நியாயமாகச் சாஸ்திர சிரவணுதிவடிவப் பிரயாச மகத்பலந்தரும்சிறிய காரியத்திலும் செய்யப்பயர்தவர் என்பதாம். எக்காலத்திலும் எத்தேயத்திலும் சம்பவித்த சாதுக்களோடுகூடி இச்சாஸ்திரத்தையாவது உபநிடத மோக்ஷ தருமாதிகளையாவது, ஒருகணமும் விடாமல் ஆனந்தமா யாராயும் அவனுற் சமுசாரத்தைச் சாந்தப்படுத்தும் அபரிச்சின்ன பரமான்ம அபரோக்ஷஞான மடையப்படும், யோநியந்திரத்தில் நெருக்குண்டு வரும்படியான பெருந்துயர்ப் பிறப்பை மறுபடி யவனடையவே மாட்டான். இவ்வண்ணங் குணத்தினுலும் பலத்தினுலும் சுலபமா யடையத்தக்க தன்மையாலும் இச்சாஸ்திரத்தைப் புகழ்ந்து இதிற் புகாதவரை யிகழுவார் சிறிதாகியென்றார். போகரசத்தில் அழுந்துபவர்களாயும், பாவிகளாயும், இச்சாஸ்திரம் படிப்பதிற் கூடப் பயமுடையவர்களாயும், ஆன்மாவைக் கொல்பவராதலின் கூறுவதற்குந் தகுதியற்றவர்களாயும், இருக்கும் கெடுதலைச் செய்யப்பயப்படாத அவ்வதம சிரோமணிகள் தங்கள் தாயின் வயிற்றினின்று வந்த மலக்கிருமிபோற் பிறந்தவர்களே யாவர்கள்.

(ச.) உடல் கடவானுய் = சுகாசனத் திருப்பவனுய், சான்றோர் உசாவினுலே = சற்சங்க சிரவணத்தால், பெருகிய இவ்வீட்டு நெறி = இம்மோக்ஷ கதையின் கிரமத்தை, ஒருகணமும் ஒழியாமற் சுகமதாகி = வருத்தமின்றி; விசாரஞ்செய்வோன், பிறவிதீர் = சம்சாரசாந்தியைத் தாராநின்ற, மெய்ஞ்ஞானம் = பரிபூரண ஞானசொரூபப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தைப் பெற்றோனுகி வெருளான். இங்ஙனம் மோக்ஷம் சுலபமாயிருக்கவும் அம்முயற்சியினின்றும் நீங்கி வெருள்வோர் = பயப்படு நராதமர்கள்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) எவ்வளவுகாலம் விசாரம் அனுஷ்டிக்கத் தக்கது, என்னுஞ்சங்கையோடு கூடினவனை உபகரணத்தோடும் அனுவதித்து நிராகரிக் கின்றார்—தகுமென.

தகுமவர்க டம்மிற்று மெய்தப்பட்ட தருமமொடு பொருடேடுஞ் சரிதையோராய்த், துகடீர்தம் மிடத்தி லிளைப்பாறி மாறுத் துரியமெனுஞ் சாந்திநிலை தோன்றுமட்டு, மிகுநூல்க ளுபசாந்தி யொழுக்கம் போத மிக்கவர்கூட்டரவிவற்றால் விசாரம்வேண்டும், நிகரிலா விசாரத்தாற் றோன்றி நிற்கு நிமலதுரியத்தினிலை நிகழ்த்தற்பாற்றே. (25)

(ப - ரை.) தகும் அவர்கள் = அறிவுடையோர், தம்மில் = தமதந்தரத்தில், தாம் எய்தப்பட்ட = அந்தரமாக அடைவதான, தருமமொடுபொருள் = தருமத்தையும் அருத்தத்தையும், தேடுஞ்சரிதை யோராய் = தேடுங்கிரியை யுடையவராகி, தம்மிடத்தில் = ஆன்மாவின் கண்ணே; இளைப்பாறி = விசிராந்தி யடைந்து, மாறுத்துகடீர் துரியமெனுஞ் சாந்திநிலை = பின் நாசமாகாத நான்காவதென்னுஞ் சாந்திஸ்தானம், தோன்றுமட்டும் = கிடைக்கும் பரியந்தம், மிகுநூல்கள் = அதிகசாஸ்திர விசாரங்களும், உபசாந்தி = மேலான உபசாந்தியும், ஒழுக்கம் = சந்தோஷமும், போதம் = முன்மொழிந்த பிரஞ்ஞையும், மிக்கவர் கூட்டரவு = மேலோர் சங்கமும், இவற்றால் = ஆகிய இச்சாதனங்களினுலே, விசாரம் வேண்டும் = ஆராய்தல் வேண்டும், நிகரிலா = ஒப்பற்ற, விசாரத்தால் = ஆராய்ச்சியால், தோன்றிநிற்கும் = பிரதீதியாகி விளங்கும், நிமலதுரியத்தின்நிலை = நிருமலமான துரியபதத்தின் நிலைமை, நிகழ்த்தற் பாற்றே = கூறத்தரமதோ !

(ஸ்ரீ-வீர.) மத்தியில் மத்தியில் அறம்பொருள் சம்பாதித்துக் கோடற்பாற்று மென்றறிக. முமுக்ஷுவானவன் சாஸ்திரவுபதேசம் அதனப்பியாசம் நற்குணம் நன்மிசாஸ்திராதிகளையும் ஆன்மாவையும் அறிந்தவர்கள் சங்கமென்னு மிவற்றோடு கூடிப் பூர்வ பூர்வ அந்தரங்க சாதனமுறையாக அடைவுற்ற "பன்பெருங் குருபரன் பணிவிடையோடு மன்பொடு தினந்தின மாற்றிடலான, முன்பருமறையின் முடிக் கேள்வியினுன், என்பது திருச்சிரபலமெய்திடுமே" "மாதம்மாதம் மகிழ்சதவருடம் தாதெவன், வேட்பன்பரி மேதத்தால் சாதெவன் சினமேசருவர்பாலிலனோ, ஒதிருவரினுஞ்சினமில னுயர்ந்தோன்" என்பதாதி யிருதிப்பிரசித்த தருமங்கள், குருபணிவிடை முதலியவற்றிற் குபயோகமான அருத்தங்கள், சாஸ்திரதாற்பரிய அதிசயந் தருமருத்தங்கள் என்பவற்றைச் சம்பாதிப்பதே தொழிலாக வுடையவனும் விசாரிக்க வேண்டும் விவேகமுடையவன் மீண்டும் பிறப்பிறப்பைக் கொடாததும், துரியபதமென்னும் பெயரையுடையதும், "இருமையில் சிவத்தை யெண்ணுவர் நான்கதாய்", என்னுஞ் சுருதியில் நான்காவது பதமெனப் பெயரிட்ட எழாவது பூமியிலிருப்பதா மிலக்கணம் வாய்ந்ததும், சாந்திவடிவதும் ஆகிய ஆன்மாவி லிளைப்பாறுவதா மோக்ஷமடையும் பரியந்தம் ஆன்மவிசாரஞ் செய்தல் வேண்டும்.

(ச.) துரியமெனும் = விசுவாதித் திரயத்திற்கும், ஜாக்கிராதிபதத் திரயத்திற்கும் அதீதமான சதுர்த்தமென்னும், சின்மாத்திர லக்ஷணமுடைய சாந்திநிலை = பதம் தோன்றுமட்டு மென்பதாம். (25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) புஷ்பங்களிற் புணர்ந்த நூற்போலப் பிரிந்திருக்கும் விசுவ தைஜசப் பிராஞ்ஞர்களிடத்தில் தொடர்ந்து விளங்கும் நிருவிகற்ப சைதன்யத்தைத் தனிப்படுத்தித் துரியத் தன்மையினின்றும் இளைப்பிச்சர்வதுவைத ஜாலங்களும் அகன்ற அதன்கண்ணே அகம்பாவத்தோடு நிச்சலமா யிருக்கைவடிவ துரிய விசிராந்தியோடு கூடியவனுக்குச் செய்யவேண்டுவது யாதேனுஞ் சேட்முண்டோ என்னுஞ் சங்கையை நீக்கி யாவனேனும் அவ்வவஸ்தையை யடைந்தாற் செய்யத் தக்கனயாவும் செய்துமுடிந்ததாம் என்கின்றார்:—பாவனையென.

பாவனைதீர் துரியமதி லிளைப்பு நீங்கிப் பவமென்னுங் கடல்கடந்து பாரஞ் சேர்ந்தோன், சீவனென நின்றாலுஞ் சீவத்தன்மை தீர்ந்தாலு மில்லறத்திற் செறிவுற்றாலுங், கேவலஞ்சந் யாசியாயிருந்த போதுங் கிளர்சுருதி மயக்கத்தாற் கிடைப்பட்டாலு, மியாவதுஞ்செய் துந்தவிர்ந்தும் பயனென்றில்லை யிமகிரியு ருக்கடல்போ லியல்பினிற்பன். (26)

(ப - ரை.) பாவனை தீர்துரியமதில் = எண்ணமெல்லாம் நண்ணாத துரிய அவஸ்தையின்கண், இளைப்புநீங்கி = விசிராந்தியை யடைந்து, பவமென்னுங் கடல்கடந்து = ஜனன சமுத்திரத்தினின்று மேறி, பாரஞ்சேர்ந்தோன் = முத்திக்கரை யடைந்தவன், சீவனெனநின்றாலும் = ஜீவத்தன்மையுடன் விவகரித்த போதிலும், சீவத்தன்மை தீர்ந்தாலும் = அகம்பாவமற்றுச் சமாதியில் மூழ்கியபோதிலும், இல்லறத்தில் செறிவுற்றாலும் = மனைவிமக்களுடன் கிருகஸ்த ஆச்சிரமத்திலுற்றுத் தர்மத்தை நடத்தியபோதிலும், கேவலஞ் சந்நியாசியா யிருந்தபோதும் = சர்வசங்க பரித்தியாகிய பரிவிராஜகனாய் விளங்கியபோதினும், கிளர்சுருதி மயக்கத்தால் கிடைப்பட்டாலும் = யாவரையும் சிக்ஷிக்கும் சுருதிமிருதிகளைப் படித்தும் படிப்பித்தும் விளையாடித் திரிந்தபோதினும், இயாவதுஞ் செய்துந் தவிர்ந்தும் = மற்றும் பிறவற்றையும் செய்தபோதினும் செய்

யாது வாளாவிருந்த போதினும். பயனென்றில்லை = யாதொரு பிரயோஜனமுமே கிடையாது, இமகிரியுருக் கடல்போல் இயல்பில் நிற்பன் = பனிநிறைந்த மந்திரபர்வதம் மதனஞ்செய்யாத பாற்கடல்போற் கம்பீரமாய்ச் சுபாவ சித்தசித்தாகவே விளங்குவன். (26)

(ஸ்ரீ - வீர.) துரியபத அடைவினலடைந்த விசிராந்திச் சுகத்தை யுடையவனும், பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்ந்தவனும், இருப்பவன் இல்லினிற்போனென்னினும், துறவைத் தொடர்ந்தோனாயினும் அவனுக்கு இகலோக அருத்த பலன்கள் பரலோக அருத்தபலன்கள் என்பன எவையுங் கருமஞ்செய்யினும் செய்யாவிடினும் புண்ணிய கருமத்தாலேனும் பாவகருமத்தாலேனும் கிடையாவாம், சுருதிஸ்மிருதிகளின் சிரவண மனனவடிவ மனோவிருத்தி விக்ஷேபங்களு மில்லையாம்; அவன் மந்தரபருவதமில்லாத பாற்கடல்போல எவ்வாறிருந்தானே அவ்வாறே யிருக்கின்றான், இப்போதியம்பிய இது முரண்பட்டதா யிருக்கின்றது, இல்வாழ்வோன் துறவியென அவ்வவ் வாசிரம நியததரும நிஷ்டைத்தன்மை, பாவத்தானும் புண்ணியத்தானுந் தொழில் செய்யினும் செய்யாவிடினும் பயனில்லையென நியதமில்லாத தருமநிஷ்டைத் தன்மை, ஆண்டு மந்தரமின்றிய மாக்கடல்போலென அத்தியந்த விக்ஷேப நீக்க பரமான திருஷ்டாந்தம் எவ்வாறு பொருந்தும் எனின், ஆன்மதத்துவ விடயத்தில் முற்கூறிய ஏகதேசமான ஒப்புமையைக் கவரவேண்டும்; அதனாற்றான் இவ்வாறு கூறியதாகும், உபமானங்களின் ஏகதேச அங்கிசம் உபமேய சமதருமமாமென இங்குகருதியதாம், அறியத்தக்கபொருளை அறிவதற் கனுகூலமா யிருத்தலின் அவசியம் இவ்வாறே யறியத்தக்கதாம். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே இராகவ ! மதியினலெவை முடிவான தூயனவாமோ அவைகளுக்குள் அந்தரங்கமுதமும், விவேகமதியினாற் கவரத்தக்க சாரத்தினுஞ் சாரங் கட்கெல்லையா யிருப்பதும், புத்தியினுஞ் சாரதரமாயுள்ளா யிருக்கும் பிரத்தியக் கான்மவடிவமும் ஆம்வத்துவை விடயஞ்செய்வதும், ஞானத்தை வித்தரித்து விளம்புவதும், இப்போதென்னாற் கூறப்படுவதும் ஆகிய இச்சாஸ்திரத்தைக் கேட்கவேண்டு மேகாக்கிரத்துடன் என்றுஞ்செய்யத்தக்கது அதன்கண் ணின்றதென்றுங் கூறுகின்றார்: சுருக்கமாகவும் விரிவாகவும் கூறப்படும் ஞானசாஸ்திர சிரவணபலத்தை முன்மொழிந்து, இனிக்கூறத் தொடங்கும் நீ சிரவணிக்கத்தக்க சாஸ்திரம் விஸ்தாரமா யிருத்தலின் ஒருமையுடன் கேட்கவேண்டும், விஸ்தீர்ணமா யிருந்தபோதினும் அசாரமாயின் அதன்கண்ணே சித்தம் ஒருமைப்படாது. ஆனலிதுவோ அத்தகையதன்றாம், மற்றோ, மதியினுள்ளுள்ளும் ஞானசாரமா யிருப்பதாமிது, இதனையும் நீ எம்மனோரது கௌரதையையுத்தேசித்துக் கவரவேண்டு மென்பதாக இன்றாம், மற்றோ, பிரமாணங்களையனுசரித்து ஊகத்தோடு கூடியதாக இருந்தாற் கேட்கலாம் அவ்வாறே யுளதென்கின்றார்:— ஊகமென.

(ச - அ - கை.) அந்தராந்தரங்க சாரமாய் ஞானவித்தார முடையதாய் எம்மால் இனிச்சொல்லப்படும் இதனை இராகவா !நீகேட்பாயாக வென்கின்றார்:—ஊகமென.

ஊகமுள தேற்சிறுவ ருரையுங்கொள்க வொழிந்ததய னுரைசெயினுந் திரணமொப்ப, வேகவிடு வாய்ஞான மெளிதுதோன்ற வியம்புமுவ மான மெலா மேகதேச, மாகநினை வாயுருவ மற்றஞான மாகார மாமுவமைக் கண் டாதென்னு, மூகரனு பவமில்லா விகற்பத் தாலே மொழிகுதர்க்க மறிவழிக்கு முயல வேண்டாம். (27)

(ப - ரை.) ஊகமுளதேல் = யுக்தியோடு கூடியிருக்குமானால், சிறுவருரையும் = பாலகவசனமும், கொள்க = கொள்வாயாக, ஒழிந்தது = இவ்வாறில்லாதது, அயனுரைசெயினும் = பிரமதேவர் அருளிய போதினும், திரணமொப்ப வேகவிடுவாய் = துரும்பிற்குச் சமானமாகப் போகவிட்டு விடுவாய், ஞானமெளிது தோன்ற = பிரஹ்ம வித்தை சுலபமாக வுதிக்கும் பொருட்டு, இயம்பும் = தோன்றக்கூறும், உவமானமெலாம் = ஒப்புமைகள் யாவுமே, ஏகதேசமாக = ஒருவாறாக, நினைவாய் = கொள்வாயாக, உருவமற்றஞானம் = உருவமில்லாத வுணர்வு, ஆகாரமாம் உவமைக்கண்டாது = ஆக்ருதியுவமைகட்குப் பொருந்தாது, என்னும் = என்றுகூறும், மூகரனுபவமில்லா = மூர்க்கரது அனுபவமற்ற, விகற்பத்தாலே = விபரீத கற்பனையாலே, மொழிகுதர்க்கம் = சொல்லப்படும் கெட்டதருக்கம், அறிவழிக்கும் = விவேகத்தைக் கெடுக்கும், முயலவேண்டாம் = அதில்நீ முயற்சிக்க வேண்டாம். (27)

(ஸ்ரீ - வீர.) பிரமாதத்தினாலே குருகூறியதின் பாலும் பொருந்தாத திருந்தால் விட்டுவிடலா மென்றியம்பிப் பிரஹ்ம உபதேசப் பொருட்டுப் புகலுந் திருஷ்டாந்தங்களில் கொள்ளத்தக்க அங்கிசத்தைத் திருஷ்டாந்த தார்ஷ்டாந்த விடமத்தன்மையைக் காட்டும் வாயிலாய்க் கூறுவார், இயம்புமென்றார். குதர்க்கப் பிரபல மூர்க்கவிகற்பங்களை நீ பற்றவேண்டாம், அவைவிஞ்ஞான விநாசகங்களாம், கிடைத்த பிரசங்கசீடரைச் சிக்ஷிப்பார் குதர்க்கமென்றார். அக்குதர்க்கம் அனுபூதியைக் கெடுக்கும் முடிவையுடையது, அபவித்திர அர்த்தவிஷய முடையதாதலின் தூய்தற்றது ; அஃதிங்ஙனமாம்:— பிரஹ்மம் சத்விதீயமா ? அத்விதீயமா ? துவிதீயத்தோடு கூடியதாயின் அபசித்தாந்தமாம்; அத்விதீயமாயின் குருசாஸ்திராதி அபாவத்தால் ஞானம் உண்டாக மாட்டாது; பிரஹ்மம் சப்பிரமாணமா ? அப்பிரமாணமா ? பிரமாணத்தோடு கூடியதாயின் அத்வைத ஆனியாம், பிரமாண மற்றதாயின் அப்பிரமமேயாய அதனது அசித்தியாம் ; என்பனவாதிய குதர்க்க விகற்பங்களாம். ஆறுபிரகரண வடிவமா யிலங்கும் இம்மோக்ஷவுபாயசம்மிதையைச் சிரவணித் தறிந்தமாத்திரத்திற் கெடாத சக்தியோடும் நல்ல க்ஷேத்திர நல்லகாலங்களோடும், கூடியவிரையினின்றும் அவசியம் பலிக்குங் கெடாத பலமுண்டாவதேபோல மெய்ஞ்ஞான மினிதுண்டாம் அநேகஞ்சாகைகளின் வேறுபாட்டால் வேறுவேறாயுள்ள அநேகம் சுருதிகளிருப்ப அவைகளை விட்டுப் புருடபுத்தியினாற் செய்யப்பட்ட இதனையே கொள்ளவேண்டு மென என் கூறுகின்றீரெனின் ? கேட்டி ! ஊகங்களினாலே தத்துவ நிர்ணயத்தைச் செய்விக்குமாயி னச்சாஸ்திரம், புருடபுத்தியினாற் செய்யப்பட்டதா யிருந்தபோதினும் கொள்ளத்தக்கதேயாம், மற்றையது வேதசம்பந்தமா யிருப்பினும் தள்ளத்தக்கதேயாம். நியாயத்தை விடாததே முக்கியமென அனுசரிக்கும் புருடனா லாதரிக்கத்தக்கதாம் அருமறைகள் புகழத்தக்க மேன்மையுடையனவே யாயினும், அதிரகசிய அபிப்பிராயத்தோடு கூடினவாதலின் விரைவி லனுபவிக்க முடியாதாம். ஆகவே சாதாரண அதிகாரிகளானே கொள்ளத்தக்கன வாகாவாம், அவற்றின் சாரங்களை யுணர்ந்த பெரியோர் தம் மனுபவத்தை மூலமாகவுடைய ஊகங்கணிறைந்த இந்நூலோ வெட்டவெளியான கருத்தோடு கூடியிருத்தலின் அனுபவத்தில் ஒட்டிவருமென அவசியம் ஆதரவோடுஞ் சேவிக்கத்தக்கதாம். வேறு பொருட்கூறும் வாயிலாக இதனையே திடஞ்செய்வார் ஊகமென்றார், ஊகத்தோடு கூடிய வசனத்தைப் பாலகனிடத்தி னின்றும் கொள்ளவேண்டும், மாறாயினோ, மலரோன் மலர்ந்தபோதினும், திருணமொப்ப விடவேண்டியதேயாம். புருடமுயல்வா லுண்டுபண்ணப்பட்டதும் கொள்ளத்தக்கதா மேலாயின் எங்கள் வங்கிசத்தி லிருந்தவர்களே யெழுதிய நூல்க

ளெவற்றையேனும் கேட்பேன், இக்காதை கேட்கத் தக்கதன்றெனின், நன்று நவின்
ருய், தன் முன்னிகழும் ஸ்ரீ கங்கையைவிட்டு எனதுதந்தை தோண்டிய கூபமிது
வென்று அக்கூபநீரை யாவனருந்து கின்றனனே ஆசைமிக்க அவனையெவரேசிக்ஷியார்.
திருஷ்டாந்தங்களில் விளம்பவிச்சித்த ஒப்புமை விவேகப் பொருட்டும் தள்ளத்தக்க
அங்கிசத்தைக் கூறுவார் ஞானமென்ருர். இப்போதெவ்வெத் திருஷ்டாந்தங்களால்
யானுனக் குணர்த்து கின்றேனே அவையாவுங் காரணங்களை யுடையன, ஜன்னியங்
கள், அதனுனே பொய்யாயினவாம். அறியத்தக்கதோ பரமார்த்த சத்தியமாயும் அகாரண
மாயும் நித்தியமாயு மிருக்கின்றது. பொய்யாயே யிராநின்ற மண் பொன் முதலிய உபா
தான திருஷ்டாந்தங்களாற் சத்தாகிய பிரஹ்மகாரண முணர்த்தப்படும், படவே ஜன்னி
யத்தன்மை பொய்த்தன்மை முதலிய திருஷ்டாந்த தருமங்கள் விடத்தக்கனவாம். பரப்
பிரஹ்ம திருஷ்டாந்தத்தில் மாத்திரம் இந்நியமமாம். அன்னிய திருஷ்டாந்தங்க ளில்லை
யென வுணர்க, பரப்பிரஹ்மத்தைவிட்டு மற்றைய வுபமான வுபமேயங்கள் யாவற்றிற்
குமே காரியத்தன்மை காரணத்தன்மை முதலியவற்ருனே முற்கூறிய வொப்புமை
யுளதேயாம். ஆராய்ச்சி முதலியவற்ருனே பிம்பத்தைக் கவரும் உணர்வுண்டாகின்ற
தெனக் கூறப்படுமாயின் அவ்வாறே ஞானத்தாற் பிம்பமூற்பத்தியாம் எனக்கூறுதல்
கூடாதாம், பிரஹ்மத்திற் குற்பத்திகூற முடியாதன்றே. பரப்பிரஹ்மத்தை விடுத்து
என்றதனுனே அறியவேண்டியதிதுவாம், பிரஹ்மோபதேசத்தில் திருஷ்டாந்த மியா
துனக்கீண்டு கூறப்படுமோ, அவற்றுள் ஏகதேசதருமஞ்சமானமா யிருப்பதுகொண்டே
பிரகிருத நிண்ணயஞ் செய்யப்படும், பிரஹ்மஞ் சகத்தின்விவர்த்த அதிஷ்டான மென்
பதை யுணர்த்தப் பாம்பின் விவர்த்த அதிஷ்டானத்தை யறிவிக்கும் பழுதைத் திருஷ்
டாந்தத்திற்கு அதிஷ்டான விவர்த்த அங்கிச மாத்திரையானே திருஷ்டாந்தத் தன்மை
யாம். தார்ஷ்டாந்தத்திற் சம்பந்தித்த நித்தியத்தன்மை சுகித்தன்மை முதலிய எல்லா
அங்கிசத்தானு மன்ரும், அத்திருஷ்டாந்தம் ஏகதேசத்திலேயே கொள்ளப்படுவ
தென்னே யெனின், எல்லா அங்கிசத்தும் ஒப்புமையெங்கும் பிரசித்தமில்லை யென்
றறிக. பிரஹ்மதத்துவத்தை யறிவிப்பதற்காக எவ்வெத்திருஷ்டாந்தம், ஈண்டுக்கூறப்
படுமோ அவையாவுங் கனவிலுண்டானவைபோலப் பொய்யுலகி லடங்கினவேயன்றி
மெய்யாயின வல்லவாம், வேருருபர மார்த்தவஸ்து சச்சிதானந்தமாய் வெளிப்படை
யில்லை யல்லவா ? இருந்தாலன்றே உவமை கொடுக்கலாம். இவ்வாருகவே உருவமில்
லாத பிரஹ்மத்திற்கு வுருவத்தோடு கூடியவை யெவ்வாறு திருஷ்டாந்தமா மென்னும்
மூர்க்கர்களுடைய விகற்பத்தாலுளவாய வாக்கியங்கள் உதியாவாம், பிரஹ்மம்,இருமை
யோடு கூடியதா ? இருமையோடு கூடாததா ? இருமையோடு கூடியதெனின் சித்தாந்
தங் கெட்டுப்போம், இருமையோடு கூடாததெனின்? குருசாஸ்திராதிகள் ஒன்றுமில்லா
மையின் ஞானமுண்டாகாதாம், என்பனவாய விகற்ப வாக்கியங்களும் உதியாவாம்,
இதனுனே திருஷ்டாந்த உபந்யாசத்தை அனுமானப்படுத்தி யுணர்த்தும்போது திருஷ்
டாந்தம் ஹேது வியாப்தி முதலியவை பொய்யாயிருத்தலின் வியாப்பியத் தன்மைய
சித்தி சொரூபசித்தி முதலிய ஏதுப்போலிகள் பிரபஞ்ச சம்பந்தமான ஏதுக்களைக்
கொண்டு சத்தியத்தன்மை முதலியவற்றைச் சாதிக்கும்போது விருத்தத்தன்மை முத
லிய ஏதுப்போலிகள் அப்பிரயோஜக தோடங்களாக ஆதல்கூடும் என்னும் தார்க்கிகரது
சங்கைக்கு மிடங்கிடையாதென நீக்கப்பட்டது, அசித்தி விருத்தமுதலிய தோஷதிருஷ்
டிகளையுடைய மற்றைய தார்க்கிகர்கள் செய்த திருஷ்டாந்தப் பெருந்தூடணங்களாற்
றூஷிக்கப்பட்ட ஏதுத்தன்மை முதலிய ஜகத்தானது கனுப்போல விருத்தலின் வஸ்து

வின் கண்ணே யொருசிறிதுந் தூடணங்கிளம்பவே மாட்டாதாம்; உணர்தல் உணர்த்துவித்தல் விவகாரமோ வியாவகாரிக சத்தியத்தன்மை மாத்திரத்தானும் சாத்திய சித்திபரியந்தம் பொருந்தும். உலகம் கனமுதலிய திருஷ்டாந்தங்களாற் பொய்யாம்போது ஆன்மாவிற்கு ஆகாசசூரியாதி திருஷ்டாந்தமும் பிரஹ்மத்திற்கு மண்ணிரும்பாதி திருஷ்டாந்தமும் ஏகதேச அம்சை மாத்திரத்தாற் பதார்த்த பரிசோதனத்தால் அறியத் தக்கதாகிய இலக்கியார்த்தப் பொருட்டாம்; அதன் துணர்வுதிக்கவே காரியசகித அவித்தை கெடும் பொருட்டு அவ்வியங்கொள்ள வேண்டியதாகச் சர்வசுருதி சாஸ்திர மகா தாற்பரிய விஷயமாயயான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்னும் மகாவாக்கியார்த்த நிச்சயம் நிரகிக்கத் தக்கதாம் யான் வெள்ளையன், தூலன் என்பதாதிப் பிரத்தியக்ஷத்தாலும் ஆரோக்கிய இலாபாதிகட்காக ஔடதபானஞ் செய்ய முயற்சிக்கும் பலதரிசனக் குறியாலுங்; பிறர்விவகார சமமாக வுவமிக்கப் படுதலினாலும், சருவ விவகாரங்களையுஞ் செய்யும் மகாஜன வாக்கியங்களானும் “ மறையோன் வேட்க ” என்றற் றொடக்கத்துச் சுருதியினாலும் மிருதியினாலும் தரும சாஸ்திரங்களாலும், அநேகந் தார்க்கிகரது ஊகங்களாலும், தேகமெனும் அதனினை யலேனும் கருத்தாத்தன்மை போக்தாத்தன்மை முதலிய இயற்கை வாய்ந்த ஆன்மாவாகக் கவரப்பெறும், ஆகலின் எங்ஙனம் பிரத்தியக்ஷாதி யநேகம் பிரமாணவிருத்த அருத்தம் மகாவாக்கிய மாத்திரத்தானே, கொள்ளற்பாலது என வினவுதி யேல்? கேட்டி, குதார்க்கிகரது மதத்தை யனுசரித்து அறிஞரது பிரத்தியக்ஷ அனுபவத்தைக் கெடுக்கும் முடிவானபயனை யுடையனவும், அசுத்தமாய் தேகாதி யான்மபாவ விஷயத் தன்மையினானும், பவித்திரமில்லாத நாய் பன்றி முதலியவற்றின் பிறப்பின் பலத்தையே யுடைமையினானும் அசுத்தமும் ஆகிய பிரஹ்மம் பிரமாணத்தோடு கூடியதா? பிரமாணத்தோடு கூடாததா? பிரமாணத்தோடு கூடியதெனின்? அத்துவிதத்திற் கானியாம், பிரமாணத்தோடு கூடாததெனின், பிரமேய ஆனியாம் என்பனவாதி விகற்பங்களானே பரம புருடார்த்தத் தன்மையைக் கொடுப்பதாகிய ஞானயோக்கிய வுணர்வுடைமையைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது தேகாதிகட் கான்மத்தன்மை சம்பவியாதா மென்பது மேற்கூறப்படும்.

(ச.) மேற்கூறும் கதைகளினுடைய திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்களினது விரோதபாவத்தைச் சங்கித்தும், பரிகரிக்கின்றார் ஞானமென்பதாக, இயம்பும் = நினக்குப் பிரஹ்ம உபதேசஞ் செய்யும், உவமான மெலாம் = திருஷ்டாந்தம் அனைத்தும், காரணசகிதம் அதனாலடையும் மெய்ப்பொருள் காரணசொரூபமாதலின், ஏகதேசமாக = ஏகதேச தருமமுடையதாக, நினைவாய் = அகத்திற் கிரகிப்பாய், உருவமற்றஞானம் = நிராகாரமாகிய பிரஹ்மம். மூகர் = விகற்பத்தால் வியாத்தியாதி யங்கவிகற்பாதிகளால் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்கள் சரவப் பிரகாரத்தாலும் சமானபாவமா யிருக்கவேண்டு மென் றாக்கிரக முடையவன் மூர்க்கன்; அவனது பேததிருஷ்டியான வசனங்கள் பயன்படாது. உயர்வு தாழ்வானவைகட்குச் சமானசாதி துல்லியமாதலின் என்பது கருத்து. முயலவேண்டு மென்றதனால் இதமுபதேசித்ததாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முமுக்ஷுவினாற் செய்யத் தக்கதாகச் சமாதியுடன் எவ்வாராய்ச்சி முன்மொழியப் பெற்றதோ அது நிதித்தியாசனமென வேறுபெயர் வாய்ந்த ஞானப்பயிற்சியோடு கூடவே முமுக்ஷுவால் அனுஷ்டிக்கத் தக்கது, வெளிமுகச்சித்தத்தாற் கூடாதாம் என்னும் இப்பொருளை யுக்தியோடும் கூறுகின்றார்: ஒரேபோழ்தினில் ஒன்றினொடொன்று விருத்தியடைவதற் கொத்த திருஷ்டாந்தத்துடன் மீண்டுமதனையே கூறுகின்றார்:—தந்திரியென.

தந்திரியி லெழுமிசைபோற் சாந்தி முன்னுஞ் சற்குணத்தின் ஞானமெழுந் தம்மிற்றாமா, மிந்தவிரண் டுங்குளமு மலரும்போல வினிதுவளர்ந் திடுமொக்க விரண்டுங் கற்கில் வந்தணுகுந் தனித்தனியே யிரண்டுங் கற்கில் வருபயனொன் றிலதாமிவ் வாய்மை கேள்வி, முந்துமறம் பொருளின்பங் கீர்த்திவாணாண் முழுதளிக்கு மனத்தெளிவான் முத்திநல்கும். (28)

(ப - ரை.) தந்திரியலெழு மிசைபோல் = யாழ்நரம்பில் எழாநின்ற சப்தசுரம் போல, சாந்திமுன்னுஞ் சற்குணத்தின் = உபசாந்தி முதலிய கல்யாண குணங்களால், ஞானமெழும் = ஞானம் உதயமாம், ஞானத்தால் சமாதியாம், இந்த இரண்டும் = இவ்வுபயமும், தம்மில்தாம் ஆம் = பரஸ்பரம் விருத்தியாம், குளமும் மலரும்போல இனிது வளர்ந்திடும் = தடாகமுந் தாமரையும் போன்று நன்றாகவளரா நிற்கும், ஒக்க இரண்டுங் கற்கில் வந்தணுகும் = சமமாயிரண்டையும் அப்யசிக்கில் மோக்ஷம் சுலபமாம், தனித்தனியே யிரண்டுங் கற்கில் = ஒவ்வொன்றாக இரண்டையும் அப்யசித்த போதினும், வருபயன் ஒன்றிலதாம் = வராநின்ற பிரயோஜனம் ஒன்றையும் கண்டிலோம், இவ்வாய்மை கேள்வி = இந்த உண்மையைச் சிரவணித்தால், அது, முந்தும் அறம்பொருள் இன்பம் கீர்த்தி வாணாள் முழுதளிக்கும் = முதன்மையான தருமம் அர்த்தம் காமம் புகழ், ஆயுள் முதலியவற்றை நிறையத்தரும், மனத்தெளிவால் = புத்தி நிர்மலத்தன்மையைத்தந்து அதனால், முத்தி நல்கும் = வலுவில் மோக்ஷத்தைத்தரும். (28)

(ஸ்ரீ - வீர.) எத்துணை யெத்துணை யுண்முகமாகி ஆன்மதத்துவத்தைக் காண்கின்றானோ அத்துணை யத்துணை சமாதி மானாகின்றான், எத்துணை யெத்துணை உண்முகத்தோடும் சமாதிமானாவனோ, அத்துணை யத்துணை ஆத்ம தத்துவத்தைக் காண்கின்றனன் என்பது அனுபவ சித்தமா யிருத்தலின் நிருவிகற்ப சித்தேகாகார அந்தக்கரண விருத்தியாவிருத்திவடிவ ஞான அப்யாசத்துடனே சற்புருடக் கிரமமென்று சொல்லப்படும் சமாதியோடு கூடிய ஆத்ம விசாரத்தை மீண்டும் மீண்டும் ஆவிருத்தி செய்ய வேண்டும். அல்லது, "என்றவாணியை யத்திறனியற்று மாறென்னென விவள்கேட்கத், தன்றுசிந்தையும் வசனமு முசாவு மத்தொல்பொருட் பொருட்டாகி, நின்றவின்பமு முதாரமும் விராகமுநிறைந்து நீள்சகமென்று, மொன்றுமில் லெனக் கலைவழி யூகமாயுணர்வர் சாதகரானோர்." எனக்கூறப்படும் ஞானப்பயிற்சியும் சமசந்தோஷப் பயிற்சியும் சமகாலத்திலேயே செய்யத் தக்கனவாம் என ஊகத்தோடு கூறுவார் சாந்தி யென்றார். சிரவணாதியானே மதிநிர்மலமாதலானே; மகாவாக்கியத்தானே முத்தியாம், ஒருமுறை தற்பதப் பிராப்திவடிவ ஞானமுளதாகவே மீண்டும் அதன் மறப்புண்டாம் என்று சங்கித்துக் கூறுவார், நல்குமென்றார். தனது வடிவமாகவே கிடைத்ததாகும் என்பது அறிஞானுபவமாம் அதுவும் வலுவிலேயே கிட்டுமென்க. அது ஞானக்கண்ணாற் கண்டதாகும், அன்றியும் தேசகால வஸ்து பரிச்சின்ன மற்றதாகும், அதனானே ஆவரணமற்ற பரிபூரண போதரூபமாம் அப்பரமாத்மா, அறிஞரது மனோவிருத்திவியாப்பியத்தன்மையை விட்டுவிடாமல்விளங்குமென்க. சாந்தியாதி குணங்களானவை ஞானத்தால் விருத்தியை யடைகின்றன, ஞானமுஞ் சாந்தியாதி குணங்களால் விருத்தியை யடைகின்றது, இவை பரஸ்பரம் தாமரையுந் தடாகமும்போல விருத்தியடையும், நீராற் றாமரைபோலத் தாமரையாலும் தடாகம் தண்மை நன்மணம் அழகு முதலிய குணங்களானே விருத்தியடைவது வெளிப்படை யேயன்றோ! இவ்வாறே ஞானமும் நல்லொழுக்கமும் பரஸ்பரம் காரணமாய் விருத்தி யடைவனவேயாம், நல்லொழுக்கத்தானே

ஞானம்வளரும், ஞானத்தானே நல்லொழுக்கம் வளரும், இந்தமெய்யுணர்வும் நல்லொழுக்கமும் ஒன்றற்கொன்று சாதகமாகியே வளரும்; மதிமானானவன் சாந்தியினாலும் பிரஞ்ஞையினாலும், மகாபுருடத் தன்மையினாலும் திடமுயற்சியினாற் சிரவணாதி முறையாய் ஞானத்தையும் நல்லொழுக்கங்களையும் பயிலவேண்டும் இவ்வுலகத்தில் ஞானம் நல்லொழுக்கம் என்பவற்றைச் சமமாகப் பயிலாதவரை அதிகாரிக்கு அவ்விரண்டிலொன்றுகூடச் சித்திக்கமாட்டாது. சாதனகலாப வுபதேசத்தைப் பயனைப்பகரும் வாயிலாய் முடித்துக்கூறுவார், இவ்வாய்மை யென்றார். மதிமானாய முமுக்ஷுவால் கீர்த்தியையும் ஆயுளையும் கொடுப்பதும், புருடார்த்த பலத்தைக் கொடுப்பதும் ஆகிய இவ்வுத்தமோத்தமமான கிரந்தத்தை ஆத்தராயும் ஆன்மஞானியாயும் இலங்கும் ஆசிரியரிடத்தில் இனிதன்போடு சிரவணஞ் செய்யவேண்டும். குருசம்பிரதாயமாய்ச் சிரவணஞ் செய்தாற்றான் பெரும்பயனைக் கொடுக்கும். கலங்கிய நீரானது தேற்றாம் பொடியாற் றெளிவை யடைவதுபோல நீயுமிச்சாஸ்திரத்தைச் சிரவணித்து மதியின் தெளிவினாலே சாதனமகிமையின் பலத்தால் அந்தப் பரமபதத்தை யடைவாய்: கூறிவந்த சாதனசம்பத்தோடு மனனசீலனாய் வாழும் முனிவனுடைய மனது அறியத்தக்க ஆன்மசொருபத்தை யறிந்து அதன்வலுவினாற் சுதந்திரமாய்ப் பரமபதத்தை யிச்சியாவிடினும் அடைகின்றது; கேவலஞ் சாதனமகிமையாலே யிவ்வாறாகின்ற தென்பதாகவில்லை! மற்றோ, அறியத்தக்க தத்துவ வியற்கையினானும் என்றறிக. ஞானாதீனமாய் ஞானவடிவ அகண்டப் பிரஹ்மாகார விருத்தியோடுகூடிப் பிரகாசித்துக் கொண்டிருத்தலின் அஞ்ஞானத்தையும் அதன் காரியங்களையும் உதறி யெறிந்துவிட்டு யாவற்றையு மறிந்துகொண்டே விழித்திருக்கும் அகண்டமாய உத்தமோத்தமபதமானது மனதை விடுவதேயில்லை, அஞ்ஞானம் அதன்காரிய முதலியவற்றோடு மனதும் பாதிக்கப் படுவதேயாகும், இது மெய்ஞ்ஞானிகட் கனுபவமேயாகும். அவ்வாறே " உடலினை யகமென் றுணர்ந்திடு முணர்வை யொழித்திடு மெய்யுணர்வதுதா, னுடலினை யகமென் றுணர்ந்திடு முணர்வையொத் ததிதிடமதேயாகி, விடலருந்தனதுவடிவிலே யெவற்கு விளைந்திடுமன்னவன் வேண்டாம், விடறுயரெனினும் விட்டெலாத் துயரும் வீட்டினையடைந்து வாழ்குவனே.

(ச.) தம்மில் = ஞானத்தில், தாமாம் = சாந்தியாதி சற்குணமுதிக்கும், ஒன்றொன்று இனிது வளர்ந்திடும், பதுமங்கள் சரசால் வளர்கின்றன, சரசும் பதுமங்களாலேயே பிரகாசிக்கின்றது, அதுபோற் சாந்தியாதிகளும் ஞானமும் ஒன்றற்கொன் றுபகரிக்குமென்பதாம், இவ்-நல்கும், சர்வப்பிரயோஜனங்களையும் தருவதான இதனை இராகவா! சிரவணஞ்செய்து திடமானபுத்தி நின்மலத்தினால் மோக்ஷமடைவா யென்பதாம்.

முமுக்ஷுப் பிரகரணம் முற்றிற்று.



# உற்பத்திப் பிரகரணம்.

## ஞான விண்மகன் கதை.

சத்தியஞான வநந்தவொன்ற ஜரசாஸ்வத நித்தியவிபுவாய்ச்
சுத்தவுட்பிரம ரசாயனமாகிச் சுககனம் பூரணபரமாய்
மத்தியுற்பத்தி முடிவிறற்சோதி மாயையின் விரிவினுன் மீண்டும்
தொத்தியவுலகாய் மாயையும் பயமிறாய விநாயகற்கெருழுவாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஓம் சுவஸ்தி. ஸ்ரீ கணேசாயநம: ஓம் பரமாத்மநேநம: இவ்வுற்பத்தி யென்னும் பிரகரணத்தில் ஒன்பது கதைகள் உள்ளனவாம், ஆதியது ஞான விண்மகன்கதையாம், பின்லீலை கதையாம்,முறையே கற்கடிகதை, ஐந்தவர்சதை, வஞ்ச விந்திரன்கதை, மனத்தின்கதை, பாலன்கதை, சித்தன்கதை, எழுபூமிகளின் வர்ண னம், அலங்கரிக்கப்பெற்ற இலவண மன்னவன்கதை, என்பனவாம்; என்னுமிவற்றுள். பூர்வத்தாற் சுருக்கமாகப் போத்தியங் கூறப்படும். பூர்வப்பிரகரண விருத்தாந்தத்தை யனுவதித்து உத்தரப்பிரகரண தாற்பரியங் கூறுகின்றார்: ஞானத்தினுலேயே யான்மாவிற்கு மோக்ஷமல்லாமற் கருமசமாதிகளினுலே யில்லையென்பதையும், ஆன்மாவான்து தன்னைத்தானே யறியாமல் தன்பால் அசத்தாய திருசியவுலகத்தைச் சிருஷ்டிக்கின்ற தென்பதையுங் கூறுகின்றார்; சாஸ்திரங்களி லுரைத்த சாதனங்களோடு கூடிய அதிகாரிக்கு " விவேகமுடையவன் மீண்டும் பிறப்பிறப்பைக் கொடாததும், துரியபதமென்னும் பெயரையுடையதும், சாந்திவடிவும் ஆகிய ஆன்மாவி விளைப்பாறுவதா மோக்ஷமடையும் பரியந்தம் ஆன்மவிசாரஞ் செய்தல்வேண்டும் " என்பதாகத் தத்துவ அபரோக்ஷஞானம்வரை செய்யவேண்டியதாய் விதிக்கப்படும் விசாரப் பிரகாரத்தை முன்னிரண்டு பிரகரணங்களில் வருணிக்கப்பட்ட எல்லாச் சாதனங்களையும் உடையவரும் அதிகாரிகளுக்குட் சிரேஷ்டரும் ஆகிய ஸ்ரீ இராகவர் பொருட்டு " இப்போது ஞானத்தின் முறைமையானது இனிதாகச் சாதன முபதேசிக்கப்பட்டது போலவே யுபதேசிக்கப்படும் " எனப் பதிஞ்ஞைவாயிலாக இனி யியம்பப்படும் கிரந்தத்தால் விஸ்தாரமாக விளம்பமுயலும் ஸ்ரீ வசிஷ்டபகவானுனவர் சிருஷ்டிப் பிரகாரத்தைக் கூறும் வாயிலாகப் பிரஹ்மாத்வைதத்தை விளம்புவதற்காக முற்பட்ட உற்பத்திப் பிரகரணத்தைத் தொடங்குகின்றார்:—முத்தியென.

(ச - அ - கை.) அதில் ஞானவிண்மகன் லீலைகற்கடி ஐந்தவர் வஞ்சவிந்திரன் மனது பாலகன் சித்தன் சத்தபூமிகையுடைய லவணன் என்னு மொன்பது கதைகளாம், அவற்றினுடைய அன்னியோன்னிய சங்கதிகளும் அவசரப்படி மேற் சொல்லப்படும். ஆண்டு ஜகதுற்பத்தி மனச்சங்கற்பத்தா லாதலினுலும், மனதுஞ் சீவவிவர்த்தமாதலினுலும் இப்போது ஜீவசொரூப மிதுவென்கின்றார்:—முத்தியென.

முத்தியை நயந்தோர் செய்கை மொழிந்தனஞ் சகங்க டோன்று
மத்திற மினிது கேட்பா யனுபவப் பேற்றினுலே
யொத்துமுன் னிலைப்பேர் பெற்ற வுணர்வுநஞ் சீவனித்தைச்
சித்தொடு புமானகந்தை முன்னிலைச் சீவனென்ப. (1)

(ப - ரை.) முத்தியை = மோக்ஷத்தை, நயந்தோர் = விரும்பினவர், செய்கை = வ்யவகாரத்தை, மொழிந்தனம் = இயம்பினேம், சகங்கள் தோன்றும், அத்திறம் = உல

கங்களின் உற்பத்தியை, இனிது கேட்பாய் = விளம்ப ஒருமையுடன் வினவுதி அனுபவப் பேற்றினாலே = அனுபவம் வேதனம் பிரதிபத்தி என்பவற்றோடு, ஒத்து = பொருந்த, முன்னிலைப்பேர் பெற்ற வுணர்வு = பிரத்தியக்ஷம் என்று பெயரிடப்பட்ட அறிவு, நஞ்சீவன் = நமதுஜீவனும், அத்தை = அதனையே, சித்தொடு புமான் அகந்தை முன்னிலைச் சீவன் என்ப = சம்வித்தென்றும், புமானென்றும், அகந்தை யென்றும் பிரத்தியக்ஷ இயற்கைய னென்றுஞ் சொல்வார்கள்.

(ஸ்ரீ - வீர.) “ ஆன்மாவையே காணல்வேண்டும் ” என்பதாதி சுருதி கூறியதும், சமாதி இவ்வாறு செய்யத்தக்க தென்பதோடு கூடியதும், மனன நிதித்தியாசன அங்க முற்றதும், சிரவணவடிவ விவகாரமே முமுக்ஷு விவகாரம் என்னப்படும். சகங்கள் = சர்வதிருசியங்களும், விண்ணினின்றும் கந்தர்வநகரம் உண்டாவதேபோல், அறியாம லிருக்கப்பட்ட அதிஷ்டானப் பிஹ்மத்தினின்றும், உண்டாகின்றன வென்று கூறப் படும் முமுக்ஷுவினாலே காணத்தக்கதாகப் பிரஹ்மாத்ம தத்துவம் முன்னர் மொழிந்த வழி, சாக்ஷிமுதலிய அளவைகளான் அளக்கப்பெற்ற வுலகவுண்மைச் சங்கையால், அதற் கப் பரிபூர்ணத் தன்மைச் சங்கையுளதாக, அதனை யகற்றுவான், உலகத்திற்குக் காரண பரமாத்மாவை விடுத்துண்மை யின்மையைப் புகலும்பொருட்டு, அதனினின்றும் சிருஷ் டியைப் பின் வருணிக்க வேண்டியதாமெனக் கருதி ஜீவசொரூபத்தில், வாதிகள் விவா தம் காண்புறுதலின் தமதுகருத்திற் கிசைந்த ஜீவசொரூபத்தைக் கூறும் வாயிலாய், அதற்குப் பிரஹ்மைக்கியத்தை யறையார் அனுபவமென்றார். அல்லது ஏகான்மத் தன் மையை யறியவேண்டுமென் றிச்சித்த முமுக்ஷுவிற்கு அதுவே முதலிற் கூறத்தக்க தாம், அதற்கங்கமாகச் சிருஷ்டி பின்வருணிக்கத் தக்கதாம் எனக்கருதிப் போதிக்கும் விழைவுவிளைய முன்னரே அதன்சாக்ஷியதாக வொளிர்வதாய், சாக்ஷிப்பிரமாண மெனப் பிரசித்தமாயிலங்கும் அபரோக்ஷ சைதன்யவடிவ ஜீவனோடு; அதனினும் விருத்தமாய்ப் பரோக்ஷமாயுள்ள பிரஹ்மத்திற்கு ஒருமை சம்பவியாதாம் என ஆசங்கித்து, அதற்கு அபரோக்ஷசைதன்ய ஆத்மத் தன்மையைக் காண்பித்துப் பிரத்தியக்கைக்கியம் பேசு வார், அனுபவமென்றார். அல்லது, முமுக்ஷு அறிய இச்சித்த ஜீவபரமாத்மைக்கியத் தைக் கூறாமல் அறியவிரும்பாத ஜகதுற்பத்தியை யினிது கீர்த்திக்கும் பிரதிஞ்ஞை பொருந்தாததாம் என ஆசங்கையுண்டாக்க கூறுவார், அனுபவமென்றார். இவ்விவகார பூமியின்கண்ணே அனுபூதிவேதன பிரதிபத்தி சப்தங்களாற் கூறப்படும் அபரோக்ஷசை தன்யத்திற்குக் கூறியபடியே அனுபூதிப் பிரத்தியக்ஷம் வேதனப் பிரத்தியக்ஷம் பிரதி பத்திப் பிரத்தியக்ஷம் என்பதாகவாம். பிரத்தியக்ஷமென்பது தனித்தனிவாதிகளினாலே தாமங்கீகரித்த விசேஷணம் பெய்யும் வாயிலாய்ச் செய்யப்பட்டதாம், அதுவே நமது உபநிடத வாதிகட்கு ஜீவனும், அங்ஙனமே “ அனுபூதி வேதனப் பிரதிபத்தி என்று கூறப்படும் அபரோக்ஷசை தன்யம் யாதோ அது ஜீவனென்று கூறப்படும் ” என்று மகத்துக்களா லியம்பப்பட்டுளது, இதனானே வாதிகளால் வேறுவகையாகக் கற்பிக்கப் பட்ட ஜீவசொரூபம் நிராகரிக்கப் பட்டதாம். பிரஹ்மபக்ஷத்திலோ இஃதிங்ஙனுரை யியம்பிக் கொள்ள வேண்டும்:—அனுபூதி சப்தத்தால் பிரஹ்மம் கூறப்படும், வேதன பிரதிபத்திகளால் அதுவே விசேடிக்கப்படும், வேதனமெனப்பிரஹ்ம அபரோக்ஷஞானம் நவிலப்படும், பிரதிபத்தியென லௌகிகப் பிரத்தியக்ஷம் ஆம், மகாவாக்கியத்தா லுண் டாய அந்தக்கரண விருத்தி யாரூடமாகிய பிரஹ்மமே அபரோக்ஷ ஞானசப்தத்தா லியம் பப்படுவதாம்; விழிமுதலியவற்றானே உண்டாய அந்தக்கரண விருத்தியாரூடமாய அதுவே லௌகிகப் பிரத்தியக்ஷ மெனப்படும் வேதனப் பிரதிபத்தி வடிவமாகிய அனு

பூதிப்பிரஹ்மம் பிரத்தியக்ஷபரியாயத்தைத் தாண்டாமல் மோக்ஷசாஸ்திரத்தில் பிரத்தியக்ஷமெனப் பிரதிபாதிக்கப் பட்டுளதாம், "அபரோக்ஷத்தினும் அபரோக்ஷம் சக்ஷுர்நேத்திரம்" என பிரத்தியக்ஷ அர்த்தங்களின் பிரதிபாதக சுருதியாம். பிரத்தியக்ஷமெனப்பெயரிய அந்தப் பிரஹ்மமே நம்முபநிடத சம்பந்திகட்கு ஜீவபத இலக்கியமாம். தனித்தனி குறிப்பிடவேண்டிப்பால் மாறு பட்டதுணர்க. அச்சீவனென்னும் அபரோக்ஷசைதன்யாத்மா பிரஹ்மமேயாம். அற்றேல் மோக்ஷகாமனுக்கு அதுவே யுணர்வுருவெனப் பிரஹ்ம ஒருமை யுபதேசிக்கப்படினும் முக்தியான துண்டாக மாட்டாதாம்; பரிபூர்ணவடிவமாக நிலைபெறுதலே முக்தியாம், பிரஹ்மத்தினும் வேருய பிரபஞ்சமானது இருத்தலால் அஃதொவ்வாமையின் என ஆசங்கிப்ப, சர்வப்பிரபஞ்சத்திற்கும் பிரஹ்ம விவர்த்தத் தன்மையைக் காட்டுவார் புமான் என்றார். சித்தத்திருக்கும் சிற்பிரதிபிம்பவடிவ ஜீவன்புமான் எனப்படும். அகந்தையாற் புலப்படுவதனால் அகங்காரமாம். உணர்வுவடிவப் பரமாத்மாவானது, ஒடுவென்பதாற் கொள்ளப்படும் அதுவென்பதால் எண்ணப்பெறும், அச்சம்வித்துருவப் பரமாத்மா தன்னவித்தையினுனே பூர்வம் சித்தவுபாதியையுடைய் புமாஞகிப் பின்னர் அகந்தையுணர்வு வடிவமாம் இஃது பலக்கணமாம், புத்திவடிவமாய மனவடிவமாயும் ஆமெனவுங் காண்க. முமுக்ஷு விவகாரத்தை மொழியும் முற்பிரகரணத்தினும் வேருக இனி இவ்வுற்பத்திப் பிரகரணங் கூறப்படும் என்பதன்கண் இனியென்னும் பின்னரென்பதால் எதுத்தன்மைச் சம்பந்தங்காண்பிக்கப்பட்டதாம். உத்தமர்கள் சர்வப்பிரமாணங்கட்கும் இந்திரியங்கள் சாரமானபோலச் சர்வ இந்திரியங்கட்கும் அபரோக்ஷஞானம் சாரமமென்பர், அதுதான் முக்கியமான பிரத்தியக்ஷம் யாது அவச்சேத பூதமாயும் ஆசிரயபூதமாயும் விடயபூதமாயும் குடத்தை யானுணர்கின்றேன் என்னும் திரிபுடியுணர்வாற் சித்தமாமோ அதுவும் பிரத்தியக்ஷமே, திரிபுடியை யனுசரித்துப் பிரகாசவடிவமா யிருப்பது அனுபூதி, அறியப்படுவதாய திரிபுடியை யுணர்வது வேதனமாம், மூன்றன் பொருட்டுப் பிரகாசவடிவமாக வியாபித்திருப்பது பிரதிபத்தியாம், அக்கரப்பொருளைத் தாண்டாமல் திரிபுடியை வியாபித்திருக்குஞ் சாக்ஷியாகிய சின்மாத்திரத்திற்குப் பிரத்தியக்ஷமென விவகாரபூமியில் நாமந்தரிக்கப்பட்டது அச்சாக்ஷியே ஜீவனுமென்று பிராணனைத் தரிக்கும் நிமித்தங்கொண்டு கூறப்படும், அச்சாக்ஷியே விருத்தியுபாதி கொண்டு ஞானமெனப்படும், அகந்தை ஞானமுடையவனுகிய புருடனுயோ பிரமாதாவெனப்படும்.

(ச.) செய்கை = விவகாரம், அனுபவப்பேற்றினுலே = அனுபவம் பெறுவதாகிய வாகியார்த் தானுபவமான அநுபூதியும், ஞானசொரூபஸ் பூரணமான வேதனமும், ஆன்ம சொரூபப் பிரகாசமான பிரதிபத்தியும், என்னும் திரிவிதபேதத்தால், ஒத்து = அனுபூதி வேதனம் பிரதிபத்தியாகிய இம்மூன்றிற்கு இசைய முன்னிலைப் பேர்பெற்ற = முறையே அனுபூதிப் பிரத்தியக்ஷம், வேதனப் பிரத்தியக்ஷம் பிரதிபத்திப் பிரத்தியக்ஷம் என அதனேடுகூடவே நாமந்தரிக்கப்பெற்ற, உணர்வு = சைதன்யமே, நம்சீவன் = எமதுஜீவனும், பேர்பெற்ற என்றமையால்; யாவரால் எனச் சங்கைவரின், பிராமாணிகரான வாதிகளால் எனத்தொலையும். அவரில் தார்க்கிகர் பிருது வியாதிகளுக்கும், ஞானத்திற்கும், ஆத்மாவிற்கும், பிரத்தியக்ஷத்வம் அங்கீகரிக்கின்றவரேயாவர். சாலிகாநாதன் சாக்ஷாத்பிரதீதிப் பிரத்தியக்ஷம், மேயம் மாதருமானமுமாமென்று சொல்லியிருக்கின்றமையால் மீமாம்சகரும் திரிபுடிப் பிரத்தியக்ஷ வாதியரேயாவர். எமதுமதத்திற் பலப் பிரமாணவாதிகளால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அங்கீகரிக்கப்பட்ட உணர்வே ஜீவசப்தார்த்தமாம். ஞானத்திற்குவேருக ஆத்மாவின்மையால் என்றுணர்க,

அனுபூதியாதி பதவாச்சியம் அந்நியராற் பிரத்தியட்சமெனப் பிரமாணத்தால் அங்கீகரிக்கப்பட்டது, அபரோக்ஷசைதன்யமே எமது ஜீவனென்பது இதன் பொருள். இத்தை = இந்தஜீவ சைதந்யத்தையே, சித்தொடு = சுழுத்தியிற் சின்மாத்திரரூபமென்றும், சொப்பன சாக்கிரங்களில் அகந்தை = கிலேசி, பிரத்யபசுபாவன், புருடனுமவனேயாவன், முன்னிலைச் சீவன் = பிரத்தியக்ஷ சுபாவன் என்றும் சொல்லுவார்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதுவேபாகிய பதார்த்த ரூபமாகவும் விவர்த்தத்தை யடைகின்றதென்கின்றார்:—சீவனென.

(ச - அ - கை.) இத்தன்மையான ஜீவனே ஜகதாகாரமாக விவர்த்தமாவன் என்கின்றார்:—சீவனென.

சீவனெவ் வறிவினாலே தெரிவுறு மதுப தார்த்தந்
தாவுறும் விவிதமான சங்கற்ப விகற்ப முற்று
மேவிய மயக்கந் தன்னால் விரிந்தநீ ரலையா மாபோற்
பூவலயங்க ளாகிப் பொலிந்தது புகன்ற சீவன்.

(ப - ரை.) சீவன் = அந்த ஜீவனானவன், எவ்வறிவினாலே = எவ்வுணர்வினாலே, தெரிவுறும் = அறியாநிற்கும், அது பதார்த்தம் = அதுவேபதார்த்தமெனக் கூறப்பெறும், தாவுறும் விவிதமான = மாறிமாறி யுண்டாம் பற்பலவகையான, சங்கற்ப விகற்பமுற்று மேவிய மயக்கந்தன்னால் = சங்கற்ப விகற்பாதிகளாக ஆக்கப்பட்ட மயக்கங்களால், விரிந்தநீர் = அசைந்தஜலம், அலையாமாபோல் = தரங்கமாவதேபோல, புகன்றஜீவன் = மொழிந்த சேதனம், பூவலயங்களாகிப் பொலிந்தது = ஜகதாகாரமாகி விளங்குகின்றது. (எ-று.) (2)

(ஸ்ரீ - வீர.) எவ்வறிவினாலே = கடபடாதி யாகாரத்தினாலே, தெரிவுறும் = அறிவாகவே விவர்த்தமாகத் தோற்றும் கடபடாதிவடிவ வுணர்வே பதார்த்த மெனப்படும். எல்லாப் பதார்த்தங்களுமே மனோ விலாசங்களேயாம் என்பதுவே சாஸ்திரமரியாதையாம். கூறியபொருளையே வெளிப்படையாக்குவார், தாவுறுமென்றார்; அந்தப்பரமாத்மா, சங்கற்ப விகற்பங்கள் பிரமசமுசயங்கள் முதலியவற்றால் அபிமானாதிகளால் ஆக்கப்பெற்ற நானாபூத அவஸ்தைத் கிரமங்களை யடைந்து, விளையாடும், அவ்வவஸ்தை முறையிவ்வணணம் பவிக்கும்:—பரிபூர்ண அறிவுருவப் பரமாத்மா சிருஷ்டிகாலத்திற் பூர்வம் சாமானியமாகத் திருசியத்தன்மை யவஸ்தையை யடையும், பின்னர்ச் சித்த அவஸ்தையையடையும், பின்னர் அகங்கார அவஸ்தையை, பின்னர்ப் புத்தியவஸ்தையை, பின்னர் மனோ அவஸ்தையை, எனவடையும், இம்முறைதானே மேலும் மேலும் வெட்டவெளியாம், எவ்விடயாகார விருத்தியினால் புறவிடயத்திலுள்ள ஆவரணநீங்க வெளிப்படுகின்றதோ அதுவிடயம் எனப்படும். இவ்வாறு சாக்ஷியே முறையாக மூன்றுவிதத்தையுமடையும், வியஷ்டியின் கண்ணே யிவ்வாறாகச் சமஷ்டியின் கண்ணும் இரணிய கருப்பரிடத்தி லிவ்வாறே காணவேண்டும் நீர் அலைமுதலிய வடிவமாக எங்ஙனம் விளங்காநிற்குமோ அங்ஙனமே நானாவிதம் முறைமுறையாய் மயல்களைச் செய்விக்கும் சங்கற்ப விகற்பப் பிரதானமான அந்தக்கரணங்களினாதியாஞ் சமஷ்டிகளால் உலகவடிவமாகச் சாக்ஷியே விளங்கும்.

(ச.) சீவன் = அந்தச் சீவனே, எவ்வறிவினால் = பகிர்முகமாய் விளங்காநின்ற ஞானத்தினால், தெரிவுறுமது = பாவிப்பது, பதார்த்தம் = ஆகாசாதிப் பொருளாம், விகற்பமுற்று = விகற்பாதிகளை யடைந்து, மேவிய மயக்கந்தன்னால் = கிரமமாக வந்து

பொருந்திய பிரமங்களால் அலையாமாபோல் = தரங்காதியாக விளங்குவதுபோல முற் கூறிய சிவஸ்சதன்யமே, பூவலயங்களாகி = மனம் புத்தி யகங்காரமுதலிய செகங்களாகி பொலிந்தது = விளங்குகின்றது, எந்தஞானத்தினுல் விளங்குகிருனே அந்த ஞானமே ஆகாசாதி பதவாச்சியமாம்.

(ஸ்ரீ - வீர-அ - கை.) அற்றேல், பிரஹ்மமானது இவ்விதம் உலகமாகத் தோற்று மாயின் உலக காரணமாகிய பிரஹ்மத்தோடு அதனினும் விபரீதமாய ஜீவனுக்கு ஐக்கி யம் பொருந்தாதாம் என ஆசங்கித்துக் கூறுகின்றார்:—பன்னென.

(ச - அ - கை.) அவிக்கிரியமான வாத்மாவிற்குக் காரணத்துவ மெப்படியென்னுஞ் சங்கையை நிவிர்த்திசெய்து விசித்திரமான ஜகத்திற்கு அவிசித்திரமான ஆத்மசொருப முபாதானமெப்படி யாமெனச் சங்கித்துக் காரிய வைசித்திரியத்தினுற் காரணவைசித்தி ரியம் அனுமான சித்தமெனல்: —பன்னென.

பன்னுகா ரணமொன் றில்லைப் படைக்குமுன் படைக்க வேண்டு
மென்னும்லீ லையினுற்றுனே யியைந்தகா ரணமதாகி
முன்னுறு பொதுவாங் காட்சி மொய்ப் பொருட் டிரள்க ளாகித்
தன்னுளே சகமாய்க் காற்றுட் சலனம்போ லறிவுட் டங்கும். (3)

(ப - ரை.) படைக்குமுன் பன்னுங்காரண மொன்றில்லை = யாவற்றையும் உண் டாக்குவதற்கு முன்பு சொல்லத்தக்க காரணம் யாதொன்றுமே கிடையாது, படைக்க வேண்டு மென்னும் லீலையினுல் = உண்டாக்க வேண்டு மென்னும் விளையாட்டினுல், தானே இயைந்த காரணமதாகி = சுயமாகவே பொருந்திய காரண மென்னவாகி; முன் னுறு = காரிய உன்முகமான, பொதுவாங்காக்ஷி = பிரத்தியக்ஷமான ஆத்மசொரூபம், தன்னுளே = தன்னிடத்தில், மொய்ப்பொருட்டிரள்களாகி = நெருங்கிய பொருட்கூட் டங்களாகி, சகமாய் = அவை நிறைந்தவுலகமாய், காற்றுட் சலனம்போல் = வாயுவின்பா லசைவுபோல, அறிவுட்டங்கும் = சித்தின்பா லிருக்கும். (3)

(ஸ்ரீ - வீர.) பிரத்தியக்ஷப் பிரமாணவடிவப் பிரத்தியக்கபின்னத்தன்மை யுண்மை யின் பிரத்தியக்ஷப் பெயரியதாம் பிரஹ்மம், அல்லது நேராகவே பிரத்தியக்ஷப் பெயரிய தாம் பிரஹ்மம் தொழிற்படுவதாகி விகாரமென்னும் நியாயத்தால் சிருஷ்டியின்முன் கிரியையின்மையின் அகாரணமாகவே யிருந்தது. அல்லது காரணத்தன்மைக்குப் பொய்ம்மை யேற்படுதலின் அகாரணமாகவே யிருந்தது. சர்க்காதியின் கண்ணே விரை விற் சருக்கப்பொருட்டு ஈக்கணமியற்றும் மாயாமய்மான விளையாட்டால் விளங்கி, காரணப்படி நிர்வகிப்பதால், தன்பால் நிகழுமுலகின் விளக்கம்புரிந்து, தன்பாற் சமஸ் காரரூபத்தால் இருக்கு மூலகினுக்குத் தானே காரணவடிவம்; அல்லது சிருஷ்டிபால னுதிகளில் அகாரணமாகி, வாஸ்தவ சககாரி காரணமற்றதாகி, சிருஷ்டியின்முன் சர்க் கலீலையாற் புரிந்து, காரண நிர்வாகிகையான மாயையால் தன்பால் நிகழும் உலகிற்குக் காரணபூதமாம்; பிரபஞ்சவடிவமாக விவர்த்தமான மாயையதிஷ்டானத் தன்மையே பிரஹ்மத்திற்குக் காரணத்தன்மையாம். பிரஹ்மத்திற்கே காரணத்தன்மை மாயைத் துவாரத்தன்மை எனக்குறிப்பிக்கும் பொருட்டு அது தன்னைத்தானே ஆக்கியது என் னும்மறையைக் குறிப்பிக்கும் பொருட்டுத் தானேயெனச் சாற்றப்பெற்றது; அதைவிரிப் பார், மெய்யென்றார். அல்லது பிரஹ்மத்திற் குலகவுற்பத்தியை யுரைத்து, ஆண்டே இதினைக்கூறுவார் மெய்யென்றார். பொருட்டிரள்கள் சகமாய் = ரூபம், ஆலோகம், மனோவிஸ்தாரம் மற்றையபதார்த்தங்கள் என்னுமிவற்றுனே வியாகுலப்பட்டுக் கல்ப்

புற்ற உலகமாய், அல்லது, ரூபதரிசனஞ் செய்யும் நனு, மனோவிஸ்தார வடிவக்கனு, என்னும் இரண்டவஸ்தைகளிலும் உற்ற பதார்த்தங்களால் வியாகுலப்பட்டவுலகமாய், பிரஹ்மவடிவ அறிவுள் சமத்காரரூபத்தானுதல் தூலரூபத்தானுதல் நிகழாநிற்கும் பிரஹ்மத்தின்பால் தாதாத்மியமாக வுலகம் நிகழ்கின்றது என்றுணர்த்தற் பொருட்டுத் திருட்டாந்த மறைவார் காற்றென்றார். அச்சாக்ஷிரூபமாய பிரத்தியக்ஷமே முன்னர்ச் சிருஷ்டியினுதியிற் காரணமியாதொன்று மின்றியே யுலகலீலையால் விரைவில்தானேவிளங்கி யுலகவடிவமாகி யதன்பாலே தானேகாரண வடிவமாயது. ஓரிடத்தில் உண்மையான காரிய காரணத்தன்மை கூடாமையினுல், அசத்தாயினும் அஞ்ஞானத்தாலாகிய ஜீவனுக்குச் சத்துப் போன்றுளது, அவிசாரத்தோடு கூடிய ஆன்ம சொரூபத்தையுடைய இப்பிரகிருதியின் கண் உலகரூபமும் வெளிப்படையாய் வரும், இங்ஙன மிவ்வுலகம் ஆரோபிக்கப்படும். இதற்கபவாதமோ இங்ஙனமாம்; இவ்வண்ணம் விசாரமும் அதனுல் விளக்கப்பட்ட சாக்ஷாத்காரமும் சுயமாகவே யிருந்து தன்னிடத்தி லிருந்துண்டாகி உண்மையாய்த் தன் வடிவமாகவே யிருக்கின்ற வுலகதேகத்தை அஞ்ஞானநீக்கத்தாலே யழித்துத் தன்வடிவமாயும், ஆவரணமற்றதாயும், மகத்தாயும், அபரிச்சின்னமாயும், பிரத்தியக்ஷமாயும் இலங்கும் பரமபுருடார்த்த ரூபமாய்ச் சீக்கிரம் செய்கின்ற தென்பது உபசாரமாத்திரமாம். மனஞ்சஞ்சலிப்பதற்கு விடயமின்றிய வேதனமேதுவாதாமையின் விடயத்தோடு கூடியதாகவே அது கூறப்படவேண்டும். வேண்டவே, ஆண்டு மனந்தசைவதற்கு முன்னரும் விடயஞ் சித்தித்திருப்பதாகக் கூறவேண்டும்; விடயங்கள் மனோமயமென முன்ன ருரைத்திருத்தலின். அவ்வாறே விடயஞ் சித்திப்பதற்கு முன்னரே மனத்தின் சித்தியாமெனக் கூறவேண்டும். வேண்டவே, அன்னியோன்னிய ஆசிரயமாம், எனின்? மாயையோடு கூடிய சிதாகாசத்துக்குட் சர்வமுஞ் சமஸ்காரரூபமாக அதிஷ்டான சத்தையைப் பற்றியிருந்தே தோற்றுகின்றது; காற்றினுள் அசைவிருப்பதேபோல வேதனத்திற்குள்ளும், புறப்பொறிகளாற் கவரப்படுதல் மனதாற் சிந்திக்கப்படுதல் என்னும் இரண்டினுக்கும் விடயங்களாய பதார்த்தங்களால் நிறைந்து வியாகுலஞ் செய்யப்பட்ட வுலகமான துளதாம்.

(ச.) பண்டைக்குமுன் பன்னுகாரண மொன்றில்லை பொதுவாங்காக்ஷி = பிரத்தியக்ஷமான ஆத்மசொரூபம், உண்மையாக அகாரணமாயினும், லீலையால் = இச்சாரூபமான தன் சக்தியால், முன்னுற = காரியோன் முகமான, தன்னுளேதானே யியைந்த காரணமதாகி, மெய்ப்பொருட் டிரள்களாகிச் சப்தாதி குணங்க ளெனருங்கிய வியோமாதி பதார்த்தங்களும் அந்தக் கரணத்தின் விரிவான விருத்தி ஞானங்களும் வாசனைத் திரள்களும் ஆகிய இவைகளால், விசித்திரமா யிருக்கின்ற சகமாய் = சகத்தவ் வியக்தமாய், காற்றிற் சலனம்போ லறிவுட்டடங்கும். சகமாய் = நீலபீதாதியவற்றை யுடையன தரிசனகாரணங்கள் அந்தக்கரண விகாரங்கள் விருத்திஞானங்கள். சமஸ்காரங்கள் வியதாதிகள் என்பவற்றால் வியாகுலப்பட்ட வுலகாயென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஹ்மமானது ஜகதுபாதான காரணமாயின் தரங்காதி வடிவத்தாற் சலம்போலும் கடம் பிரஹ்மம் படம் பிரஹ்மம் என அவ்வவ்வடிவமாகவன்றோ தோற்றவேண்டும், அவ்வாறு தோற்றக் காணுமையின் உபாதானமாகாதாம், மற்றோ, நிமித்தமேயாமெனக் கடாவ விடைதருகின்றார்:—ஆயின் எங்ஙனம் ஒரோரு காற்றோற்றல் அதனுற்பத்தி முதலியவற்றின் விவர்த்தையாதல் எனின் அறைகின்றார்:— எல்லையென;

(ச-அ-கை,) சர்வஜகத் வைசித்திரியமும் சர்வான்மாவாகிய தனது சொரூபத்திருக்கின் எப்படிச் சிருஷ்டி விவர்த்தையாமெனிற் கூறுகின்றார்:—எல்லையென.

எல்லையி றிசைகள் காலம் புறம்பெனு மிவற்றிற் கேற்ற
பல்லுரு வாயெங் கெவ்வா றெழுந்ததப் படியங் காகுஞ்
செல்லுமிந் நெறியா லிந்தச் செகமெனும் பிரம கற்பம்
புல்லுகா ரணமிலாத பொருளெனப் புந்தி செய்க. (4)

(ப - ரை.) எல்லையில் = வரம்பற்ற, திசைகள் = திக்குகள், காலம் = சமயம், புறம்பு = பாகியம், எனுமிவற்றிற்கேற்ற = என்று கூறும் இவைகட்குத்தக்க, பல்லுரு வாய் = அநேகவடிவங்களாய், எங்கு = எவ்விடத்தில், எவ்வாறு = எவ்வகையாக, எழுந்தது = உதயமாயதோ, அப்படி = அவ்விதம், அங்கு = அவ்விடத்தில், ஆகும் = ஆகியவிரும், இந்நெறியால் = இம்மார்க்கத்தால், பிரமகற்பம் செல்லும் = பிரஹ்மகற்ப பரியந்தம் சென்றுகொண் டிருக்கின்ற. தென்னும் மயல்மயமான இச்சமுசாரத் தோற் றம், புல்லுகாரணமிலாத = பொருந்தாநின்ற காரணமிலாத, பொருளென = வஸ்து வென்று, புந்திசெய்க = மதியின்மாட் டாரூடப்படுத்துக். (எ - று.) (4)

(ஸ்ரீ - வீர.) சர்வான்மக ஞானரூபமாய பிரஹ்மம் எவ்வகையானே எக்காரியவடி வத்தானே விவர்த்தமாமோ அக்காரிய சொரூபமாகவே யிலங்காநிற்கும்; கடம் இருக் கின்றது படம் இருக்கின்றது என்றன்றோ, அவ்வவ்வடிவமாகச் சத்ரூபப் பிரஹ்மம் இலங்குகின்றது; ஆதலின் பிரஹ்மத்திற்கு உபாதான காரணத்தன்மையும் பொருத்த முடைத்தேயாம், ஆகவே விரிந்ததிசையாய்க் காலமாய் உட்பொருளாய் வெளிப்பொரு ளாய் வடிவுற்றுத் தோற்றுமது. கூறியபொருளையே தெளிவிப்பார், எங்கென்றார். ஏத் தேயத்தில் எவ்வகையானே எக்காரிய வடிவமாய் நன்கிலங்கா நிற்குமோ அவ்வகையே யாம், படைக்குமுன் பின்னுகாரண மொன்றில்லை யென்பதாதியாற் கூறியபொருளையே தெளிவிப்பார், காரணமில்லாத என்றார். மாயைவாயிலில்லாமல் பிரஹ்மத்தின் கண்ணே காரணத்தன்மை பொருந்துறுதாம். ஆதலின் வாஸ்தவ காரணமற்றதேயா யிவ்வுலகம் சிருஷ்டிக்கு முன்னர் வெளிப்படாத நாமரூபத்துடனுகிப் பிரஹ்மசொரூபம் போலு மிருந்தது. பிரஹ்மகற்பம் = பிரஹ்மசமம் என்பதாம். அதிஷ்டான வடிவமாய பிரஹ் மத்தின்கண் சமஸ்காரசேடமாய் விலீனமானஜகத்து அதனினும் வேறுபடுத்த முடியாத வாறு வேற்றுமையுற்று நின்றதாமென்பது பொருள். ஆய்தாயும் எல்லாவடிவமாயுமிருக் கும் சேதனம் கருமபரி பாகத்தாலாம் விவஸ்தையாலே பிராணிகள் கருமபோகப் பொருட்டுத் தோன்றுகின்றபடியே யவ்வவ்வடிவமா யுண்டானதுபோல விரிந்த திக்கு காலவெளியுட் பதார்த்தவேட தேகங்களைத் தரித்து விளங்குகின்றது; எல்லாவடிவ மான ஆன்மா மோகத்தாற் றன்னைத் தேகாதி திருசியம்போலக்கண்டு, அவையே யெனது சொரூபமெனக் கருதி ஜீவரூபமாயிருந்து விளையாடும்; இதுபொருத்த முடை யதேயாம். எவ்விடத்தில் எவ்வடிவமா யெவ்வாறு புலப்படுகின்றதோ அவ்விடத்தில் அவ்வடிவமா யவ்வாறேதான் தோற்றுகின்றது, வெளிப்படையாகவிளம்பினே, சர்வாத் மகமாய பொருள் எவ்விடத்தி லெவ்வாறு இனிய வல்லரசத்தை யடைகின்றதோ, அவ்விடத்தி லவ்வாறே அவ்வடிவ முடையதுபோல அதிவிரைவில் விளங்கிக்கொண் டிருக்கும், காணும்பொருள் எல்லாவடிவமாகவு மிருத்தலினுனே, காணப்படுபவற்றின் றன்மையை யடைந்ததுபோற் றோன்றுகின்றது. போலெனக் குறிப்பித்த திருசியம் பொய்யேயாமென்பதில் என்னையம், திருஷ்டா விருந்தாற்றான் திருசியமிருக்கும் இல் லாவிடினிராதா மாதலினுனே திருசியம் மெய்யாகாதாம், திருக்குவடிவமான திருஷ்டா திருக்கு சொரூபத்தினின்றும் நழுவித்திருசியத்தன்மையை யுடையுமாயின், திருஷ்டா வில்லாமல் திருசியசித்தியே யுண்டாகமாட்டாது, நழுவாமலிருக்கினே அத்திருஷ்டா

விற்குத் திருசியமா யிருக்குந்தன்மை, பழுதையின் இயற்கையினின்றும் நழுவாததற்குப் பாம்புப் பான்மைபோலும் விவர்த்தமாத்திரமாய்ப் பொய்யேயாகும்; ஆகவே காரியப் பொய்ம்மையானே அதனை யபேக்ஷித்த காரணத் தன்மைக்கும் பொய்ம்மையே சித்தித்தலின் பிரஹ்மம் காரணத்தன்மை யற்றதேயெனச் சித்தித்தது.

(ச.) சர்வான்மாவாயும் சுத்தமாயுமுள்ள தன்னால் வியாபிக்கப்பட்ட திசைகாலங்களால் அபரிச்சின்ன மாதலின், இவற்றிற்கு = இத்திசைகாலத்துக்கு புறம்பெனும் = பாகியஞ் சுத்தசைதன்யமேயாம், பல்லுருவாய் = சர்வான்மகமா யிருத்தலின், எங்கு = எந்தத்தேசத்தில், அன்றி, எந்தக்காலத்தில், எவ்வாறு = எத்தன்மையான சுபாவம் எழுந்தது = உல்லாச சக்தியாற் சம்சாரமென்று மேற்கூறுதலால், உல்லாசசக்தி யுதித்ததோ, அப்படியங்கு, ஆகும் = அவ்வகையாய் இயற்கையதாய் அதனனுகூல ஆலக்ஷ்ணமுடைத்தாய்த் தோற்றிக்கொண் டிருக்கும். ஆண்டிருக்கும் என்றதனால் கேவலம் பிரதீதிமாத்திரம் அன்று, மற்றோ, அர்த்தக்கிரியா சித்தியும் உண்டெனத் தெரிவித்ததாம். சிருஷ்டிக்க வேண்டு மென்னும் இச்சைவசத்தினால் சிருஷ்டி விவஸ்தையாமென்பது கருத்து. செல்லுமிந் நெறியால், பிரமகற்பமெனும் இந்தச்சகம் = பிரமகற்ப பரியந்தம் இருக்கப்பட்ட தென்னும் இச்செகம், புல்லுகாரண மில்லாத = ஆரம்பகாரண ரகிதமான, பொருளெனப் புந்திசெய்க. (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சர்வஜகத்தும் பிரஹ்மகாரியம் எனக் காண்பிப்பவராய்க் காரணப் பிரஹ்ம வியதிரேகமாகக் காரியமாகிய ஜகத்து அசத்தேயாமென லறையப்பட்டது, விகாரமானது வாக்கால் தொடங்கப்பட்ட நாமதேய மாத்திரத்தை யுடையது மண்மாத்திரம் உண்மையெனக் காரணத்தினும் அயலாய்க் காரியத்திற்கு அசத்துவத்தைப் பிரதிபாதிக்குஞ் சுருதியினால் இப்போது பந்தம் அதன் நீக்கங்கட்குக் காரணத்தைக் காட்டும் வாயிலாக அதேபந்த காரணபூத திரிசியஜகத் தசத்துவத்தைப் பிரதிஞ்ஞைவாயிலாக இவ்வியாவும் பிரஹ்மமேயாம் என்பதாதி சுருதிகளை யனுசரித்து விரித்துரைக்கின்றார்! பந்தத்தை நீக்குமுபாயத்தை விரும்பிய எனக்குத் திருசியத்தைப் பொய்யென்று சாதிப்பது கொண்டு ஆகவேண்டிய தென்னேயெனச் சங்கிப்பத் திருசியம் சங்கற்பமாத்திர மானபடியால் சங்கற்பநீங்கத் திருசிய மித்தியாபந்தமும் நீங்குமென் றெண்ணிக் கூறுகின்றார்:—இதனையென.

(ரு.) சங்கற்ப மாத்திரத்தாலே சித்தியெனல்:—இதனையென.

இதனைமுன் னிலையாஞ் சீவ னிமைப் பினிற் படைத்த தாகு
மதன்வடி வாகிநிற்கு மனுமான முதல வெல்லாம்
விதமுறு காட்சி மெய்ம்மை பந்தமஃ தின்மை வீடாந்
திதமறு மிதுபோமாறு செப்புதுந் தெரியக் கேட்பாய். (5)

(ப - ரை.) இதனை = இத்தோற்றத்தை, முன்னிலையாஞ் சீவன் = பிரத்தியக்ஷசைதன்யம், இமைப்பினில் = கணத்தினில், படைத்ததாகும் = சிருஷ்டித்ததாகும், அதன்வடிவாகி = அதனங்கி சங்களாகி, அனுமான முதலவெல்லாம் நிற்கும் = அனுமை முதலியவைக ளெல்லாம் இருக்கும், விதமுறுகாட்சி மெய்ம்மை பந்தம் = திருசியமுளதென்னும் எண்ணமே கட்டாம், அஃதின்மை வீடாம் = அவ்வெண்ணமறவே விடுதலையாம், திதமறுமிது = நிலையற்றவிது, போமாறு = நீங்குமாறு தெரியச் செப்புதும் கேட்பாய் = விளங்கக்கூறுவேம் ஒருமையாய்க் கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) சிருஷ்டிகாலம் அடைவுற்றபோது பிரத்தியக்ஷப் பிரமாணவடிவுப் பிரஹ்மமே ஜகத்தை யுண்டாக்குவதாகும், கட்கான் முனிவராதி தரிசனத்திற்போல அநபரோக்ஷசம சித்துருவும் நிர்மாதா வாகாதாம், அபரோக்ஷ சைதன்யமே ஜீவனும் எனக்காட்டற் பொருட்டே பிரத்தியக்ஷப்பிரமாணமே ஜீவனென்னப்பட்டதாம். அதன் வழக்கால் அனுமானாதி சொரூபமறைவார், அதன் என்றார். அல்லது அபரோக்ஷசை தன்யம் பிரஷ்மமேயெனக் காட்டற் பொருட்டுப் பிரத்தியக்ஷமெனப் பெயரிய பிரஹ்மம் எனக் கூறப்பெற்றது. அதன்வழக்கால் அனுமானாதி சொரூபத்தைக் கூறுகின்றார், அதன்என. அனுமானாதிகள் அந்தப்பிரத்தியக்ஷப் பிரமாணமாகிய அபரோக்ஷ சைதன்ய வடிவப் பிரஹ்மத்தின் அங்கிசங்கள்போன்ற அங்கிசங்களாம். பரிபூர்ண ஞானமாத்திரப் பிரஹ்மம் அந்தக்கரணப் பிரதிபிம்பிதமாகிப் பிரமாதா வெனப்படும். அதுவே இந்திரிய லிங்காதியாலுண்டாய அந்தக்கரண அங்கிச ஆரூடமாய்ப் பிரமாணமென் றறையப் பெறும் என்பதே வேதாந்த மரியாதையாம். ஜகத்து நீயான் என்பதாதி சர்க்கவடிவம் திருசியமெனப்படும் எனக்கூறப்பெறும் திருசியத்தின் இருப்பால் இதுநேரேயனுப விக்கப்பட்ட கர்த்துருத்துவ போக்திருத்துவாதி வடிவப்பந்தமாம். அற்றேல் திருசியம் அபாவமாயின் கட்டுண்டாக மாட்டா தென்பதுண்மையே. அந்தத்திருசிய அபாவமே சம்பவிப்பது முடியாத காரியமன்றோ எனக் கடாவக் கூறுவார் இதுபோமாறு என்றார். இதமறு மென்றதனானே கடாவையகற்ற, ஹேதுகர்ப்பமாய தென்க. இத்திருசியம் எவ்வாறு சம்பவியாதோ அவ்வாறு கூறக்கேட்குதி யென்பதாம். பிரத்தியக்ஷதத்துவத்தை யாராயின் அத்வைதமா யிருக்கும் பிரஹ்மமே சித்திக்கும், சித்திக்கவே இந்நிலைபெற்ற பிரத்தியக்ஷமே யுண்டாக்குவதெனத் துணியப்பெறும். அனுமானாதிகளோ பிரத்தியக்ஷ வாயிலாகவே யுண்டாகின்றமையினாலும், அதுவதுவாக முடிவுபேறடைதலினாலும், அத னங்கிசங்களேயாகும்; ஆகவே சர்வப்பிரமாண தத்துவம் ஆன்மாவே யென்பதாம். திருசியமிருத்தலினாலே இப்பந்தமுண்டாகி யிருக்கின்றது, திருசியமில்லாவிடிற் பந்தமு மிலதாகும், எவ்வாறித்திருசியஞ் சம்பவியாதோ அவ்வாறு முறையாய்க் கேட்பாயாக. திருசியமில்லாத மாத்திரையானே பந்த நீக்கமாகாதாம், உற்பத்திவிருத்திநாச சுவர்க்க நரகாதி பந்தமானது காண்போன் றருமமாகத் தோற்றலா லான்மாவிற்குள்ளடங்கி யிருத்தலின் திருசியம் நீங்கியபோதினும் அது நீங்காமைபின் எனின்? உண்மையாக யாவனுலகி லுண்டாவனோ அவனேவிருத்திநாச சுவர்க்க நரகாதிகளையும் பந்தமோக்ஷங் களையும் அனுபவிப்பன். ஆன்மா வுற்பத்தியாதி யியற்கையுடைய தன்றாம். தனதுசொரு பத்தை யுள்ளபடி தெரிந்து கொள்ளாமையானே அதற்குற்பத்தியாதி மயல் தோன்று நிற்கும். எதனாற் றன்னை யறியாமையினானே பந்தமாமோ அதனால் தன்னையறியும் பொருட்டு உனக்கு அத்திருசியஞ் சம்பவியாமையை ஆண்டுவிளம்ப விழைந்தவகை யாகவே விளம்புகின்றேன், உத்பத்தி சம்பந்தம் திருசியசமுசார கோடியின் கண்ணே பொருந்துமாறும், ஆன்மகோடியின் கண்ணே பொருந்தாதவாறும் கூறுவாம். ஆன் மாவோ திருசிய வுற்பத்திக்குமுன் எவ்வாறோ அவ்வாறே யுளதாம். அணுமாத்திரமும் விகாரப்படுவதே கிடையாது, அங்ஙனமே "உற்றதனிலயமில்லை யுறுவதுமில்லை கட்டை, யுற்றவனில்லை மற்றைப்பயில்பவ னுயர்வீட்டாசை யுற்றவனில்லை வீட்டையுற் றவனில்லை யென்னும், நற்றிறமிதுவே கண்டாய் நண்ணுவதுண்மையனும்." என்னும் மறையும் அறைகின்றது.

(ச.) முன்னிலையாஞ் சீவன் = அபரோக்ஷ ஆத்மசைதன்யமே, இமைப்பினில் = கண் இமைத்தற்குமுன் படைத்ததாகும் திருஷ்டியே சிருஷ்டியாகலின் என்பதாம் பிரத்

தியக்ஷமே நிருமாதருவென்ப தெப்படி அனுமாதுருகளுக்கு நிருமாதிருத்துவ மிருத்த வின் எனின்கூறுவார், அனுமான மென்றார். அதன் = அந்தப் பிரத்தியக்ஷாத்மசை தன்யத்தினது, வடிவாகிநிற்கும் = அம்சங்களாகியே யிருக்குமன்றி வேறுருவாகா வென்பதாம். சகத்தினுற்பத்தி யுபசாந்தி வர்ணனையினது உபயோகத்தைக் கூறுவார் விதமென்றார். திருசியங்கற்பித மாதலின். அதன் சம்பந்தரூபமான பந்தமும் கற்பித மென்பது கருத்து. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னரே யாது எவ்வாறுமோ வெனக் கூறப்பட்ட பொருளைக் கூறும்பொருட்டுப் பிரளய அவத்தையில் எஞ்சிநிற்கும் ஆன்மசொரூபத்தை யறையும்பொருட்டு முற்சிருஷ்டிக்குக் காரணத்தில் இலயப் பிரகாரத்தைத் திருஷ்டாந்தத்தால் தெரிவிக்கக்கேட்குதி யென்கின்றார்:—மண்டியவென.

(ச-அ-கை.) திருசியங் கற்பிதமென்ப தெப்படியெனச் சங்கித்து நாசமுடையதாதலின் என வுத்தரங் கூறுகின்றார்:—மண்டியமென.

மண்டிய சுழுத்தி தன்னில் வருகனுப் போவ தென்னக்
கண்டன வுலகமெல்லாங் கற்பனை முடிவிற்போக
வெண்டரு மலைவு தோற்றம் பெயரெலா மின்றியாழ்ந்து
தண்டலி லிருடேசின்றித் தனித்ததோ ருண்மை நிற்கும். (6)

(ப - ரை.) மண்டிய சுழுத்திதன்னில் = நெருங்கிய துயிலின்கண் நித்திரைத் தோடவயத்தால், வருகனுப் போவதென்ன = வாராநின்ற சொப்பனம் மறைந்துபோவதேபோல், கண்டன வுலகமெல்லாம் = திருசியமாய்த் தோற்றும் ஜகங்களெல்லாம், கற்பனை முடிவிற்போக = கற்பனையானது அவசானத்தில் அழிந்துபோக, பின், எண்தரும் அலைவு = அநேகசஞ்சலம், தோற்றம் = பிரதீதி, பெயர் = நாமம், எலாமின்றி = இவையாவுமற்று, ஆழ்ந்து = கம்பீரமாய், தண்டல் இல் = வியாபகமாய், இருள்தேசின்றி = அப்பிரகாச பிரகாசங்கள்கடந்து, ஒருண்மை = அகோசர சத்தொன்று தனித்து நிற்கும் = எஞ்சியதாக விருக்கும். (6)

(ஸ்ரீ - வீர.) விவாதத்திற்கிடமாய திருசியம், அசத்து, விநாசித்தன்மையின், கனுப்போலும்; விவாதத்திற் கிடமாயது, விநாசியாம், திருசியத்தன்மையான், கனுப்போலுமென்பதாம். திருசியம்போலும், பிரஹ்மத்திற்கு விநாசித்தன்மையை யாசங்கித்துக் கூறுவார், எண்டரும் என்றார். கற்பனையாவு மின்றியபோது வியாபகமாயும் இருளொளி கடந்ததாயும், நிச்சலமாயும் அபரிச்சின்னமாயும் பெயரற்றதாயும் இந்திரியங்களுக் கெட்டாமையின் விளக்கமற்றதாயும், இன்னபடிதா னிருக்கின்றதென ஒருசிறிதும் நிரூபிக்க முடியாமையின் அகோசரமாயு மிலங்கும் சத்பிரஹ்மம் எஞ்சாநிற்கும். " இவையாவையுமே யெழுவதன் முன்னர், சவுமியசத்தே சாந்தமாயுளதாம் " எனமறையு மறைகின்றது. தாவரஜங்கம வடிவமாகக் காணப்பட்ட இவ்வுலக முழுவதும் கனுவானது துயிலின்கட்போலக் கற்பாந்தத்தில் நன்கழிந்துபோம்; சாங்கிய நையாயிகாதியர் கருதிய பிரதான பரமாணுமுதலியவை யெஞ்சாநிற்கும்வடிவப் பிரளய வேற்றுமைப்பொருட்டே கூறிய திருட்டாந்தமாகும். அதன்பின்னர், அமூர்த்தமாதலினாலே தொழிலற்றதாயும், பரிச்சின்னப் படாமையினாலே கம்பீரமாயும், உருவமற்றமையானே தேயுவல்லாததாயும், பிரகாசவடிவ மாதலினாலே இருளல்லாததாயும், தருமமற்றமையானே சாற்றவொண்ணாததாயும் அஞ்ஞானத்தான் மூடப்பட்டமை யானேயும், பிரபஞ்சசமஸ்கார ஆதார

மான்மையானேயும், வெளிப்படாததாயும் இருக்கும் யாதோ ஒரு சத்வத்துவானது எஞ்சியிலங்கும்.

(ச.) கண்டன வுலகமெல்லாங் = திருசியங்களான தாவரசங்கமமாகிய சர்வசகத்தும், கற்பனைமுடிவிற் போகும் = கற்பாந்தத்தில் நசிக்கும், சுழுத்தியில் நசிக்கும்சொப்பனத்திற்கு எப்படி மித்தியாத்வம் அப்படிக் கற்பாந்தத்தி - னசிக்குந் திருசியத்திற்கு மென்பது கருத்து. அதன்பின் சத்துரூபமான பிரஹ்மமே சேடித்திருக்கு மெனல்; எண்டரும் - தோற்றம். இஃதென அறியத்தக்கது, பெயரெலாமின்றி, நாமஜாதியாதிய பாவத்தினுல் என்க. ஆழ்ந்து தண்டலில் = கம்பீர வியாபகமாய், பிரகாசசொரூபமாதலின் இருளின்றி, அநுஷ்ணத்துவ மாதலின் தேசின்றி, ஒருண்மை = ஏகாகாரமான சத்தாமாத்திர சைதன்யமே, தனித்து நிற்கும் = சேடித்திருக்கும். அதனுனே யப்பொருள் அறிவது மிகவும் அருமையினும் அருமையாம். (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பெயரற்றதெனக் கூறியது பிழையாகும் பிரஹ்மாதிநாமங்களிருத்தலின் அதற்கு எனச் சங்கித்துக் கூறுகின்றார்:—சத்தியமென.

(ச.) ஆயின் விவகாரம் எப்படிக் கூடுமெனச் சங்கித்துக் கற்பிதங்களான நாமங்களால் என்கின்றார்:—சத்தியமென.

சத்தியம் பிரமமான்மா பரமுதற் சாற்ற வேண்டி
யித்திறப் பெயர்மேலோ ராலிடப் பெற்றவிந்த வான்மா
சித்திர மாகத்தானே வேறுபோற்றி கழ்ந்துதீது
மெத்திமேல் வருசீவப் பேர்மேவிய போலவாகும். (7)

(ப - ரை.) சத்தியம் = உண்மை, பிரமம் = பெரிதினும் பெரிது, ஆன்மா = சொரூபம், பரம் = உயர்ந்தது, முதல் = ஆதியவாக, சாற்றவேண்டி = விவகரிக்கும் பொருட்டு; இத்திறப்பெயர் = இத்தன்மை யன்வாய நாமங்கள், மேலோரால் = மகான்களால், இடப்பெற்ற = வைக்கப்பட்ட, இந்த ஆன்மா = இப்பிரஹ்மம், வேறுபோல் = அன்னியம்போல, சித்திரமாகத்தானே திகழ்ந்து = விசித்திர வைபவங்களாகி, விலாசமாய்ச் சுயமிலங்கி, தீதுமெத்தி = பெருந்துயருற்று, மேல்வரு ஜீவப்பேர் மேவியபோலவாகும் = பாவி ஜீவநாமம் பெற்றதுபோல ஆகித்தோற்றும்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் எல்லாவுலகிற்கும் அறியப்பட்ட பிரஹ்மான்மத் தன்மையி லயமியம்பிச் சொரூபத்தினின்றும் நழுவாததான அதனினின்றுமே சிருஷ்டிகாலத்தில் ஜகத்தின் எழுச்சியாதலை ஆகாயத்தினின்றும் கந்தர்வநகர மெழுதலைப் போலக் காண்பித்துக்கொண்டு ஆதியிற் சமஷ்டிஜீவ ஹிரணியகருப்ப உற்பத்தியை யுரைப்பார் இந்த ஆத்மாவென்றார். பரிபூர்ண கம்பீரப் பேரொளியேயாய அந்தப் பரமான்மா, தெளிந்தநீரில் விண்டோற்றலேபோலத் தானே யன்னியம்போல வுல்லாசித்துத்தோற்றி வருஞ்சீவாதி நாமங்களால் கிலேச களங்க முதலவற்றையுற்ற ஜீவத்தன்மையை யுற்றதே போலவாம், போலபோல வென்றதனுனே அன்னியத்தன்மை மாயையா லாயதென்பதைக் காட்டியதாம். ஈண்டிது சிருஷ்டிக் கிரமமாம்:—சிருஷ்டிக்கும் முன்னத்விதீய பராத்மா, சிருஷ்டிகாலத்தில் பூர்வம் அநாலிங்கித விசேடதிருசிய (சிறப்பின்றிய) திருசியமாத்திர வடிவமாய் விவர்த்தமாம்; அதன்பின் சமஷ்டி சித்திரவடிவமாயும், அதன்பின் சமஷ்டி ஜீவவடிவமாயும், பின்னகங்கார வடிவமாயும், பின்புத்தி வடிவமாயும், பின்மன வடிவமாயும், பின்றன்மாத்திரை பூதபௌதிக வடிவமாயும் விவர்த்தமாம். அவ்வாறே

பெரிய வாசிட்டத்திற் கூறப்பட்டுளதாம்:—விஸ்தாரமாயும், விகாரத்தா லாக்கப்பட்ட ஏற்றத்தாழ்வற்ற மாயா சபளத்தன்மை யுண்மையாற் சமமாயும், சர்வாதிஷ்டானமாயும், உண்டாகாத ஆகாயதேயு தமாதிகளின் காரணவடிவமாய சத்தையாயும், சிதாத்மாவாயும் இருக்கும் பரப்பிரஹ்மத்தின் கண்ணே சித்திற்கு அறிபவனாந்தன்மை யிலக்கண ஜீவத் தன்மையானது விடயகரண சித்திவாயிலாகவே சித்திக்கவேண்டி யிருத்தலின் அதனத் தியாசம் முதலிலேயே யமையுமாதலின் முன்னர்த் திருசியத்தகைமைக் கற்பனையாம், அதன்கணணே எது யாதோவெனின், சத்வஸ்துவிற் கஃதுண்டாத வியற்கையே யாகு மன்றோ? ஆகவே சத்திற்குச் சேத்தியாங்கிச சேதனத்தாலாம், சிதிசக்தித் தன்மைச் சேதனத்தாற் சித்தகற்பனை யுதிக்கும், யாதுயாது அத்தியசிக்கப் படுகின்றதோ அதன தன் வெளிப்பாட்டியற்கை சித்தினிடத்தின் முன்னரே. சித்தித்திருத்தலின் யாண்டும் நிமித்தத்தன்மையாம். அதன்பின்னர்ச் சேத்யசையோக சேதனத்தாற் சீவத்வகற் பனையாம், சேத்தியத்தின் ஏகபரத்தன்மை வசத்தால் அதன்பின் மாயையென்னும் அகம்பாவ கற்பனையாம், அதுவும் ஜீவபாவத்தின் திருட அவஸ்தையாகும், ஏகபரத்தன் மையும் அத்துணை மாத்திரத்தின் யானென்னும் அபிமானமாம். அதன்பின் அகந்தை யின் விருத்தியினாலே. புத்தித்தன்மைக் கற்பனையாம், இதுவே மனஸ்தாதி சப்ததன் மாத்திர காதிமானும்; அதாவது இவ்வண்ணந் தருமசித்தியாகவே சப்தாதி விடயமாத்தி ரைகளாய் வாதனைவடிவமாகத் தன்பாலடங்கிய வற்றிற்குக் கனவிற்போல மனனத்தால் அஃதடங்கு மனோரூபமிதுவே யமையும் என்பதாம். உயர்ந்த பிரமாணமாய மறையா லறியப்படுதலின் இருதம், "எதனினனிறைந் தேய்ந்திடு மேற்றிடும், எதனினால் விட யங்க ளிலங்கிடும், எதனின லெந்தஞான்று மிருந்திடும், அதனினலிதை யாத்துமா வென்பரால்" என ஸ்ரீ வியாசபகவான் விளம்பிய முறையாய் ஆன்மா சத்தியத்தன்மை யின் மேன்மை யெல்லையாதலின் பரம், பெரிதாதலினானும் உலகாகாரமாகப் பெருத் திருத்தலினானும் பிரஹ்மம், நூன் முறையே அறிஞர்களானே யனுபவிக்கப் படுதலின் சத்தியம், என்பனவாதியாய நாமங்கள் அதற்கு மகான்களாகிய அறிஞர்களானே உப தேச வியவகாரப்பொருட்டு, இடப்பட்டனவாம்: சிருஷ்டியினாதியில் அதற்குப் பொய் யாகச் சமஷ்டி ஜீவபாவமுளதாம். அவ்வாறாய்ச் சிற்சுபாவமாகவே யிருக்கும் ஆன்மா வானது மோகத்தினாலே தானே அன்னியஜடமாய ஆகாசாதி முறையிலுண்டாய இலிங்க சமஷ்டிவடிவமாய் அதனுட் புகுந்தமையின் அதனபிமானம் பெற்று அதுபோ லொளிர்ந்து அதனுட்கிடந்த பிராணதாரணை யுபாதியினானே தேகமுண்டான பின்பு வரும்வாக்கு விளக்கவதீனமாக வருஞ்சீவப் பெயரானே நிந்தைக்கிடமாகச் சம்பாதித் துக்கொண்ட ஜீவத்தன்மையை மயக்ககத்தினாலே யடைந்தது போலாம், உண்மை யாகவோ அவ்வாறடைவுதில்லை.

(௪.) சாற்றவேண்டி = வியவகாரிக்கு நிமித்தம், பரமுதல் = அநந்தம் அக்ஷரம் என் பது முதலிய, மேலோரால் = அறிஞரால், இடப்பெற்ற = கற்பிக்கப்பட்ட, இந்தஞான மயம், ஆன்மா இப்பரமாத்மாவே தம்மாயையாற் சீவத்துவமானாரெனல், சித்திரமாக - திகழ்ந்து, தீதுமெத்தி = ஆபாசத்தை யடைந்து, மேல்வரு - தேகாபிமானத்தா காலும் பெறுவதான, சீவப்பேர் = தேவதத்தாதி நாமங்களை, மேவியபோலவாகும், போல வென்பதனால் சீவபாவத்துக்கு மித்தியாத்துவங் குறிப்பிக்கப்பட்டது. (௪)

(ஸ்ரீ - வீர - அ - ஸ்க.) இம்முறையையே மூற்றினும் மொழியாத தலத்தும் காணத் தக்கதாம், திருசியத்வசித்த வாயிலாய்ச் சமஷ்டி ஜீவபாவத்தை யடைந்த பரமாத்மா விற்கு அகங்காரபுத்தி வாயிலாய்ச் சமஷ்டி மனோபாவத்தைக் கூறுகின்றார்:—இவ்வாறு

ஞானசத்தி மாத்திரத்தாற் சாதிக்கப்பட்ட சிருஷ்டியானது கூறப்பட்டது, இனிக்கிரியா சக்தியின் சகாயம்பெற்ற அது சாதிப்பது கூறப்படுகின்றது:—சீவனென.

(ச - அ - கை.) ஆன்மாவிற்கே ஜீவபாவத்தின்பின் மனோபாவங் கூறுகின்றார்:— சீவனென.

சீவனென்கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த வான்மா
பாவனை மனனத் தாலே பருத்தெழு மனமதாகு
மேவரும் பிரமந் தன்னில் வேலையிலலை போல்வந்து
தாவுறு முள்ளந்தானே நினைந்த வாசகங் கற்பிக்கும். (8)

(ப - ரை.) ஜீவனென்கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த வான்மா = சீவ சப்தார்த்தமாய்க் கலனையாகுலத் தன்மையைப் பொருந்திய ஆன்மாவானது, பாவனை மனனத்தாலே = எண்ணமிகும் மன்னவிவகாரத்தாலே, பருத்தெழு மனமதாகும் = அலித்துதிக்கும் மனமெனப்படும், மேவரும் பிரமந்தன்னில் = அடைதற்கரிய மகத்தாகிய பிரஹ்மத்தில், வேலையிலலை போல்வந்து = கடலின் கண்ணே கல்லோலம் போலக் கிளம்பி, தாவுறும் உள்ளந்தானே = விடயங்களை நாடும் மனந்தானே, நினைந்த வாசகங்கற்பிக்கும் = தான் எண்ணியபடியே யுலகத்தைக் கற்பனைசெய்யும்.

(ஸ்ரீ - வீ ர.) பூதங்களின் காரணத் தன்மையாற் பூதாத்மாவாகியவது ஜீவசப்தார்த் தமாம், கலனையாகிய சங்கற்பத்தால் ஆகுலத் தன்மையாகிய கலக்கமுடைமையை யடைந்து மனமாகவாகும், மனனமென்னுஞ் சங்கற்பத்தால் அலத்தன்மையையடையும். கூறியதையே தொடுத்துக் கூறுவார், மனமென்றார். மனமென்னும் அற்பப் பொருளாம் அதன்பின்னர்ச் சீவசப்தத்தின் அர்த்தமான கிரியாசக்தியைப் பிரதான மாகவுற்ற பிராண தாரணையைச் செய்தலாற் சஞ்சலத்தன்மையை யடைந்ததாய், பௌதிகமான லிங்கவடிவினதாய், சங்கற்ப விகற்ப மனனத்தானே ஜாட்டியத்தான் மந்தத்தையடைந்து மனமாம். அம்மனோ பாவத்தான் மகத்தாகிய பரமான்ம பாவத்தை மறந்துமனோ தருமங்களாகிய சங்கற்பாதிகளைத் தன்னுடையனவாக வெண்ணும்; எவ்வாறெனில் சலனமின்றிய கடலினின்றும் சலனமயமாய அலைகள் எழுவனபோலவா மென்றறிக. மனத்தின் இயற்கையைக் காண்பித்து அச்சமட்டி மனத்தாற் சப்தாதி பஞ்சதன்மாத் திராகாசாதி பஞ்சபூத பிரஹ்மாண்டாதி பௌதிக இலக்கண ஜகதிந்திரஜாலம் விசேஷமாகச் செய்யப்படுகின்றதென்பார், தாவுறுமென்றார். இவ்வண்ணம் சமஷ்டி மனோ பாவத்தையடைந்த ஹிரணியகருப்ப னென்னும் பிரஹ்மம், அன்னியராலே யறிவிக்கப் படாம லிருந்தபோதிலும் தானாகவே பூர்வவாசனையை யனுசரித்து விராட்பாவத்தையும் புவனாதிபாவத்தையும் அதன் கண்ணே நான்குவிதமாய பூதக்கூட்ட பாவத்தையும் நித்தியம் தன்னிச்சைப் படியே விரைவிற் சங்கற்பிக்கும்.

(ச.) பாவனை மனனத்தாலே = சங்கற்ப விகற்பாதி மநநவியாபாரத்தினால், பருத்தெழும் = ஆகுலமுற்றுச் சடமாயுதிக்கும், விக்ஷேபித்தெழும் அச்சீவனே பூதான்மகத் தன்மையான் ஜர்ஜரத் தன்மையுற்று மனனலக்ஷண வியாபாரத்தான் மனமாமென்க. இவ்விதமன்னமயமே சௌம்ய மனமென்னுஞ் சுருதிப்படி, மனதன்னமயத்துவ மாதலின் அதனுற்பத்தியில் ஆத்மாவினாற் பூதத்துவ மாசிரயிக்கப்பட்டதென்றுணர்க. கிட்கிரிய சுபாவத்தோடுகூடி யிருந்த ஜீவன் சங்கற்ப விகற்பாதி கற்பனையினாலே விக்ஷேபத்தையடைந்து மனமாதலை மருவுவன் என்றுணர்க. கூறியமனோபாவத்தையே திருஷ்

டாந்தத்தால் வற்புறுத்தல்: மேவரும் பிரமந்தன்னில், வேலையில் = நிராகாரமான சமுத்திரத்தில், அலைபோல் = அத்திராகாரமான தரங்கம்போல, உள்ளம் வந்து தாவுறும் = முற்கூறிய பிரகாரம் மனம், அத்திராகாரமாய் வந்து பொருந்தும் இம்மனதே ஜகத்பிரதீதியின் நிமித்தம் எனல்; தானே = அம்மனது தானே, நினைந்தவா் = எப்போதும் தனதிச்சைப்படி வருத்தமின்றிச் சங்கற்பிக்கும். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வுலக இந்திரஜாலம் தோற்றுதலும் அதற் குவமையும் வலியுறுத்தல்:—உன்னுறு மென்பது.

உன்னுறு மனத்தினாலே யுலகமா மிந்திரஜாலம்
துன்னுறும் பணிகளென்னுஞ் சொற்பொருட் பொன்னையன்றி
யன்னிய மில்லைப் பொன்னாற் பணியென வறையவேண்டா
பன்னிய வுலகாஞ் சொற்குப் பரமன்றிப் பொருள்வேறில்லை. (9)

(ப - ரை.) உன்னுறு மனத்தினாலே = வாசனையோடு கூடிய உள்ளத்தினாலே, உலகமாம் இந்திரஜாலம் = ஜகத் சம்பந்தமான இந்திரஜால ஐசுவரியமானது, துன்னுறும் = விசேடமாகி விரிந்து நெருங்கித்தோன்றும், பணிகளென்னும் சொற்பொருள் = கடகசப்தார்த்தம், பொன்னையன்றி = காஞ்சனத்தைக் காட்டினும், அன்னியமில்லை = வேற்றுமையுறத் தக்கதன்றாம், பொன்னாற் பணியென வறையவேண்டா = பொன்கங்கணத்தினு மயலாம், பொற்றிருட்டியா னேத்குங்காற் கடகமெனக் கழறவேண்டாம், பன்னியவுலகாஞ் சொற்கு = உரைத்தவுலக மென்னுஞ் சப்தத்திற்கு, பரமன்றிப் பொருள்வேறில்லை = பரமாத்மாவைத் தவிர அருத்தம் யாதொன்றுமே கிடையாதாம்.

(ஸ்ரீ - வீர.) அம்மனத்தினாலே மிகமிகவும் விஸ்தரிக்கப்படுகின்றது, இவ்வண்ணம் சமஷ்டி சித்தஜீவ அகங்கார புத்தி மனபாவமடைந்த பரமான்மாவினின்றும் உண்டாய ஜகதிந்திரஜாலம் மித்தையாமாயின் அதனோடு அபின்னமுற்ற பிரஹ்மமும் மித்தையாம் பிரஹ்மத்திற்குச் சத்தியத் தன்மையாற் சகத்திற்கும் சத்தியத்தன்மையாம் எனக் கடாவிக் கூறுகின்றார்: பணியென கடகசப்தார்த்தம் காஞ்சனத்தினும் பேதார்த்தமாகாதாம், நியமமாக அஃதின்றிய வழியில்லாமையின், கயிற்றரவுபோலும், நன்றாகப் பகுத்துணரும் விழியால் பொன்னினும் அயலாகக் காணப்பெறாமை = == யானும், ஹேமங்கடகத்தின் வேற்றுமைத் தகுதியாகாதாம், மன்வாகாதாம், அஃதின்றியும் உண்மையின் இரஜ்ஜு சர்ப்பம்போலும். இத்திருஷ்டாந்த மிரண்டேபோலப் பரமாத்மாவின் கண்ணே ஜகத்சப்தார்த்தத் தன்மை பலிக்கும், பரமும் ஜகத்சப்தத்தின் என்பது சேடமாம், உலகினுமயலாய்ப் பரமிருக்கலாம், ஆரோபிதத்திற்கு இருப்பு விளக்கப்பொருட்டு அதிஷ்டான அவாவிருத்தலின், அதிஷ்டானத்திற்கு இருப்பு விலக்கப்பொருட்டு ஆரோபித அவாவின்மையின்; பிரஹ்ம ஜகத்துக்கட்குப் பிறங்கியது விலக்ஷணமுடையதேயாம், அச்சத்திய சங்கற்பத்தினாலே இவ்வாறுயவிஸ்தாரமான இந்திரஜால ஐசுவரியமான இது விஸ்தரிக்கப்படும். இவ்வண்ணம் அத்தியாரோபம் ஆயினானும் அதிஷ்டானத்தினுடைய உண்மையாய நிலையானது பங்கப்படாதாம் என்பதுணரும் பொருட்டுத் திருஷ்டாந்தங் கூறுவார் பணியென்றார். பொற்கங்கணவடிவப் பொன்னினும் கங்கணசத்தப் பொருள் தனிப்படுத்தத் தகுதியதாகாததேபோலப் பரப்பிரஹ்மத்தின் கண்ணே தோற்றுகின்ற ஜகத்சப்தார்த்தத் தன்மையும் அதனினும் அயலாகத் தகுதியதாகாதாம். இரண்டற்குந் தனிப்பட்டிருத்தல் தகுதியாகாமையானே ஏகசத்தை யுடைமை சித்தமாம். அதுவும் என்றுமுள்ள பிரஹ்மபாவத்தின் கண்ணே தானுக்கே

யுளதாம். இடையிலுற்ற வுலகபாவத்திலோ அதன ததினமாயுளதாம். தானுகவே யின்ரும்; இவ்வுலகமானது பரிச்சேத சுபாவத்தை விட்டொழித்ததாய்ப் பிரஹ்மசுபாவத்தின் கண்ணே யிருக்கும் உலக சத்தார்த்த பரிச்சேதமுடைய வடிவ இயற்கையிலோ இராதாம்; கங்கணவடிவத் தகைமை பொற்சுபாவத்தி லிருக்கும் கங்கண சுபாவத்தி லிராததேபோலு மென்றறிக.

(ச.) உன்னுறும் = சங்கற்பிக்கின்ற, அறையவேண்டாம் பொன்னே பணியாம், காஞ்சனத்துக்கும் அதன் விகாரங்களான கடகாதிகட்கும் போற் பரமான்மாவுக்கும் ஜகத்துக்கும் ஒன்றற்கொன்று அந்நியபாவ மின்றென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேன் மனத்திற்குச் சாயைப் பேயைப்போல இன்மையுண்மையின் ஜகதிந்திரஜால ஜனகத்தன்மை பொருந்தாதாம் எனின்? ஆண்டுக் கூறுகின்ருர்:—இதுதானுகவே யில்லாதிருக்குமாயின் எங்ஙன மிருப்பதுபோலப் பொலிதல் கூடுமெனின்? அறைகின்ருர்:—செல்லென.

(ச-அ-கை.) மாயாமயத்வ மாதலின் ஜகமாத்திரம் மித்தையன்று, மற்றென்னெனின் அதனைக் கற்பிக்கும் மனமுமித்தை யெனல், செல்லென.

செல்லுறு கானலாற்றிற் ரேன்றிடுந் திரைகள்போல
வில்லையா மனத்திலுண்டு போலெழு மிந்தஞால
மல்லல்செய் மோகம் பந்தந் தமமல மவித்தை மாயை
புல்லுசம் சாரமென்றே ஞானிகள் புகலப்பட்ட (10)

(ப - ரை.) செல்லுறு கானல் ஆற்றில் = செல்வது போன்று தோன்ருநின்ற தாப நதியால், தோன்றிடுந் திரைகள்போல = பிரதீதியாகும் லகரிகள்போல, இல்லையாம்= அத்தியந்தம் இல்லாததாகவே யிருந்தும், மனத்தில் = உள்ளத்தில், இந்தஞாலம் = இவ்வுலக இந்திரஜாலம், உண்டுபோலெழும் = சத்தியம்போல விரியாநிற்கும், அல்லல் செய் = மிகத்துன்புறுத்தும் பொருட்டே, புல்லு = அறியாமற் பொருந்திய, அதற்கு, அவித்தை, சம்சாரம், மோகம், பந்தம், மாயை, மலம், தமம், என்றே = என்பன நாமங்கள், ஞானிகள் புகலப்பட்ட = பேரறிவாளிகளாற் பேசப்பட்டனவாம். (26)

(ஸ்ரீ - வீர.) இச்சமுசாரத்தில் மரீசிநதியின் சஞ்சல ஊர்மியொப்ப அசத்தாகிய மனத்தினுலே சத்துப்போன்ற ஜகத்திந்திரஜால ஸ்ரீயானது விஸ்தரித்து விளங்குகின்றது. ஜகத்திற்கு நாமகற்பனையைக் கூறுதலாலும் பொய்ம்மையையும் தள்ளுபடுதலையும் சாதிப்பார் அல்லல் என்ருர் மகான்களாற் கற்பிக்கப்பட்ட நாமங்கள் வாய்ந்தது உலக விந்திரஜால ஐயிசுவரிய மென்பதாம். கூறவும் - படும் - பட்டது.—மனத்தின் வடிவுசங்கற்ப மற்றிவ்விரண்டு மொன்ருகு, மனர்த்த மோக மலம்பந்த மவித்தை மாயை தமமுதலாமினத்தபெயர் சற்கற்பததுக் கேற்றபெயரா மிதாநமுவிற், கனத்தசகக்காட்சியும் போருங்கதிர் விட்டெறிக்கும் பரவடிவம், விதமுறு காக்ஷிமெய்ம்மை பந்தமஃதின்மை வீடாந், திதமாறுமிது போமாறு செப்புதுந் தெரியக் கேட்பாய்'' எனவாம்; மருமரீசியினுலே கற்பிக்கப்பட்ட கானனீர் நதியின்வேகப் பிரவாக தரங்கங்களேபோல வுலகசம்பந்த இந்திரஜால ஐசுவரியமானது இல்லாதிருந்த போதினும் இருப்பதேபோல் ஈண்டு மனதினுலே விஸ்தரிக்கப் படுகின்றது. அதற்கு அசத்துத்தன்மையானதும் அவித்தையிலுண்டாவதாகி அவித்தை வடிவமுடைமையின் எனக்கருதி அதையனுசரித்த நாமங்களானே அவித்தையைக் காட்டுவாம்; வித்தையானீக்க யோக்கியமாதலின் அவித்தை

யாம்; மேல்கீழ் குறுக்குகளிற் சுழற்றுவிக்கு மேதுவாதலின் சமுசாரமாம், சுதந்திரமில்லாதிருத்தலைச் செய்வித்தலின் பந்தமாம், பொய்யா யிருத்தலின் மாயையாம், மயக்கவேதுவாதலின் மோகமாம், தாண்டமுடியாமையின்மகத்தாம், தற்சொரூபத்தை மறைத்தலின் தமமாம், என்பனவாதியாய நாமங்கள் யாவற்றையு முணர்ந்த பெரியோர்களால் அவித்தைக்கிடப் பட்டனவாம்.

(ச.) செல்லுறும் = சூரியகிரணத்தால் ஓடாநின்ற (அசத்தான) நதியால் மருமரீசிகையால், தோன்றும் அசத்தான திரைகள்போல் = தரங்கபரம்பரைபோல் இந்தஞாலம் = இச்சகமென்னும் இந்திரஜாலம் உண்டுபோலெழும், இச்சகம் மோகாதிபதவாச்சியமெனல். இச்சகத்திற்கு அல்லல்செய் மோகம், ஞானிகள் = சகலதரிசிகளால், புகலப்பட்ட கற்பிதநாமங்களாம், விவர்த்த வாதத்திற் காரிய காரணங்களுக்குப் பேதமின்மையினுன் மோகாதிகள் திருசியப் பிரபஞ்ச பரியாயமாதல் விருத்தமன் றென்பது கருத்து.

(ஸ்ரீ.- வீர - அ - கை.) இதனு லியம்பப்பட்டதையே விரித்தல்:—

பந்தத்துருவங் கேட்டுணரிற் பரவீட்டுருவு மேல்வெளியா
மிந்தச்சகநீ நான்முதலா மிவைமெய் யென்றல் பந்தமதா
மந்தக்கருத்து நிற்பளவு மரிதாமுத்தி வித்தினிடைத்
தொந்தத் தருப்போற் காண்பவன்பாற் றோன்றுந்துறையுங் காண்பவெலாம்..

(ப - ரை.) பந்தத்துருவங் கேட்டுணரில் = பந்தத்தின் உருவத்தைக் கூறக்கேட்டறிந்து கொள்ளுதியேல், பரவீட்டுருவு மேல்வெளியாம் = பின்மேலான மோக்ஷத்தின் சொரூபம் நன்றாகத் தெரிந்து கொள்ளலாம், இந்தச் சகம் = திருசியமய இவ்வுலகம், நீ நான் = திருஷ்டாமயதுவம் அகம், முதலாமிவை = ஆதியவிவற்றை, மெய்யென்றல் = சத்தென் றெண்ணுதல், பந்தமதாம் = பந்தமென்று பகரப்படும், அந்தக்கருத்து நிற்பளவும் = அச்சடாசடக் கருத்திருக்கும் வரையும், அரிதாம் முத்தி = மோக்ஷம் கிடையாதாம், வித்தினிடைத் தொந்தத் தருப்போல் = பீஜத்தின் கண்ணே மரங்கொடி பிறங்குவதொப்ப, காண்பவன்பால் = திருஷ்டா வினிடத்தில், காண்ப வெலாம் = காணப்பட்டவையாவும். தோன்றுந்துறையும் = அடங்கியிருக்கும். (11)

(ஸ்ரீ - வீர) திருசியம் = துவைதப் பிரபஞ்சம், கட்டுறுத்தலாற் பந்தமாம், கூறியதைத் தெளிவித்து ஞானத்தாற் றிருசியமொழிந்தவழி காண்போனுந்தன்மை நீக்கத்தாற் கைவல்லியமாம், என்பார் இந்த என்றார். யாதுபந்தத்திற்குக் காரணமாமோ அத்திருசியம் யாது கொலாமாலோ வெனின் உரைப்பார் சகமென்றார், அற்றேல் நையாயிகாதிகட்கே போலும் திருசிய மிருந்தபோதினும் மோக்ஷம் என் ஆகமாட்டாதெனக் கடாவிக் கூறுவார் அந்தவென்றார். " அற்பமும் பேதமே யாற்றிடப்படினும் அளவிலாவச் சமவனுக்காமே " என்னுஞ் சுருதியினுலே துவைதிகட்கு முக்தி ஆமைப்பாலல்லவோ. எத்துணைத் திருசியஞ் சம்பவிக்கும் அத்துணைமோக்ஷம் காணப்பெறு தெனவாயின் துயிற்பிரளயங்களிற் சருவதிருசியம் அசம்பவமாயவழி மோக்ஷமேனுகாது, துயின்முதலியவற்றே சுருதியாற் சருவதிருசிய அபாவப் பிரதிபாதனத்தான், ஆண்டுஞ் ஞான சற்பாவத்தாலெனின் ? அன்றும், அது உகிருதிர்த்த வுரகமொப்ப வொன்றுஞ் செய்யாதாதலின் அங்கீகரிக்கப் படமாட்டாதாம் ஆண்டு மோக்ஷமெனச் சங்கிப்பக் கூறுவார் வித்தென்றார். பதுமினியின் பீஜபூதமான அதிவிஸ்தார நில்லாதை வடிவம் பதுமமணியின் உள்ளவகாசத்திற் சமஸ்காரருபமாக எங்ஙனமிருக்கின்றதோ அங்ஙனம்

திருஷ்டாவின்பாற் றிருசியதீ யிருக்கும், பிராதிபாசிகத் தன்மையானே திருசியஞான மெனப் பட்டதாமென்க முதலில் பந்தத்தின் உருவத்தைப்பற்றிப் பகருமிதனைக் கேட்குதி பின்மோக்ஷத்தின் சொரூபத்தை யறிந்துகொள்வாய், ஞானத்தினாலே யுடைவதற்கும் அடைவதற்கும் தகுதியாய பந்தமோக்ஷங்களின் சொரூப மியாதென்னின் அறைவார் இந்தவென்றார் காண்போனுக்குக் காண்பொருளின் மெய்யாய விருப்பே பந்தமெனப் பகரப்படும், காண்போன் காண்பொருளின் வலுவால் கட்டுற்றவனாவன். காண்பொருளிலதாங்கால் விடுபடுவன்; உலகம் நீயான் என்பனவாதியாய இப்பொய்வடிவமே காண்பொருள் எனப்படும், எதுகாறும் இதுதோற்றிக் கொண்டிருக்குமோ அதுகாறும் மோக்ஷமான துண்டாக மாட்டாது, அற்றேல் திருசியந் தோற்றாமையே மோக்ஷமாயின் அவ்வப்போ ததிர்வரும் திருசியங்களை இஃதில்லை இஃதில்லையெனு நீக்குவதனானே ரோகநீக்கத்தானே ஆரோக்கிய முண்டாவதேபோல மோக்ஷமான துண்டாம்போது தத்துவஞான ஆயாசத்தா லாகவேண்டுவ தென்னே யெனின்? இத்திருசிய ரோகமானது இஃதில்லை இஃதில்லை யென்னும் சங்கற்பத்தையாக்கும் வீணான புலப்பத்தால் நன்கு சாந்தியை யடையமாட்டாது, மாறாக விருத்தியையே யடையும் இஃதில்லையென்னும் புலப்பமானது திருசியமான திருக்குமாயின் பாதிதப்பொருட்டன்மை யுறுதலின் அதன்விரோதியாய வேறு திருசியத்தை யுண்டாக்குஞ் சங்கற்பத்தால் அதனையுண்டாக்கலான் முற்றிருசியத்தை நீக்குவதாக மொழியலாம், ஆகவே ஒருதிருசிய நீக்கப்பொருட்டு இருதிருசிய மெழுப்பலின் விருத்தியே யன்றோவாம், அவித்தையோடு கூடியிருக்கும் காண்போனிடத்தில் காண்பொருளிருக்கும் வகையை யுவமித்துரைப்பார் வித்தென்றார். கமலவிரையி னிடையில் இனிவருந் தாமரைக் கொடிக்கேதுவாய சூக்குமமான பதுமக்கொடி வடிவம் எவ்வாறு இருக்கின்றதோ, அசத்திற்குதயம் பொருந்தாமையானே, அவ்வாறு திருஷ்டாவின் கண்ணே திருசிய சகிதமதியுளதேயாம்.

(ச.) இந்துசம ஆநகா நீ! யாமனுக்கிரகிக்கும் பந்தத்துருவம், வெளியாம். மூன் விதமுறுகாட்சி மெய்ம்மை பந்தமெனக் கூறியதை விரித்துரைத்தல், இந்தச்சகம் = இவ்வசேத னாத்மகமான பிரபஞ்சமும் நீ நான்முதலாஞ் சேதனப் பிரபஞ்சமும் ஆகிய இவையே திருசியமாம், மெய்யென்றல் = இத்திருசியத்தைத் திருஷ்டா வுண்மையென்று கருதுதல் பந்தமாம், அந்தக்கருத்து நிற்பளவும் = திருஷ்டா திருசியவசமாய்த் திருசியம் உண்மையென்னும் அந்நினை விருக்குமட்டும், முத்தியரிதாம், பந்தமாம், அந்நினைவின்றாயின் முத்தியாமென்ப தருத்தாபத்தி, வித்தினிடை = ஆலம்விரையாதியினகத்தில், தொந்தத்தருப்போல் = பத்திரபுஷ்ப பலாதி பேதங்களையுடைய விருக்ஷம் சூக்ஷுமரூபமாய் வெளிப்படாதிருக்கும் அன்றெனில் உபாதான காரணத்துவங் கூடாமையின், அதுபோல் காண்பவன்பால்= திருஷ்டாவென்னுஞ் சீவனிடத்தில், காண்பவெலாம் = திருசியபுத்தி சூக்குமரூபமாய்த் தோன்றாதுறையுமென் றங்கீகரிக்கவேண்டும். வடநூலாசிரியர் அற்ப நீலரூபமான வல்லிரூபத்தையுடைய கமலத்தினது சூக்குமரூபம் பதுமத்தினது கர்ணிகை மத்தியிலிருக்கும் பீஜத்தினகத் திருப்பது போலென விசேஷத் துரைத்த திருஷ்டாந்தத்தை இந்நூலாசிரியர் வித்தினிடைத் தொந்தத் தருப்போல் எனப் பொதுப்படக் கூறினாரென்றுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விரையின் கண்வருந் தருவாதியிருத்தல் போல எல்லாவுலகும் பரத்தில் மறைந்திருக்கும் = எனவுருவகப்படுத்திக் கூறுகின்றார்:—பிறிவென.

பிறிவாம் பொருளின் மரத்திருந்த பேதப்படியே யுதரத்திற்
செறிவாஞ் சிருட்டி சமத்காரஞ் சிதைவற் றுண்டாய்ச் செறிவதுபோ

லறிவாஞ் சரீரியெனும் பொருளி னகன்றவுதரத் தங்குரமாய்
நெறியார் சகத்தின் வடிவமெலா நீங்காவியல்பாய் நிறைந்திருக்கும். ()

(ப - ரை.) பிறிவாம், பொருளின் = காரணதிர வியத்தின், உதரத்தின் = அகட்டினுள்ளே, மரத்திருந்த பேதப்படியே = தருவிற்கண்ட வைசித்திரியப் பிரகாரமே, செறிவாஞ் சிருட்டி சமத்காரம் = பொருந்தியிராநின்ற சிருஷ்டி சாமர்த்தியம், சிதைவற்று = கெடாமல், உண்டாய்ச் செறிவதுபோல் = உதிதமாகி யடைவதுபோன்று, அறிவாஞ் சரீரியெனும் பொருளின் = சித்துரூப சரீரியென்னும் வஸ்துவின், அகன்றவுதரத்து = விசால அகத்து, அங்குரமாய் = அங்குரரூபமாய், நெறியார் = அநேகவித மார்க்கங்கள் பொருந்திய, சகத்தின் வடிவமெலாம் = உலக ஆகிருதிகளெல்லாம், நீங்காவியல்பாய் = மாறாத வியற்கைத்தாய், நிறைந்திருக்கும் = பூரித்திருக்கும். (12)

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் திரவியமாகிய பதுமமணியாதிகளின் உள்ளேயே உண்டாமாச்சரியம் அதன் சமமான வருந்திரவியத்தின் பரமசூக்கும அவஸ்தை சமஸ்காரப்பெயருடன் அஸ்தமயமறைந்து அதனதுதரத்தின் கண்ணே யுறைந்துளதோ, அங்ஙனமே சின்மாத்திர சொரூபமாய பரமாத்ம திரவியத்தின் உதரத்துள்ளே சுபாவபூத அதன் சொரூப அபின்ன உலகஸ்திதியுளதாம், இஃதின்னபடி யென்னற் தருக்கிக்க முடியாமற் காரியத்தை யுண்டுபண்ணும் ஆற்றல் சமத்கிருதியாம், அதுவிரைமுதலிய பொருள்களின் உதரச்சார பாகத்திலேயே யிருப்பதுபோலச் சின்மாத்திர இயற்கைவாய்ந்த அவித்தைச் சரீரமுற்ற ஆன்ம திரவியத்தினுடைய வுதரத்துள்ளும் ஜடாஜடங்களைக் கிளப்பு மியற்கையமைந்த ஜகத்திதியாகிய சென்றவரும் உலகசத்தை யுளதாமெனக் கூறியதே நிலைபெற்றதாம்; கூறிய சமத்கிருதியானது எப்போது மிலங்குவதும் அஸ்தமனமில்லதும் ஆம்.

(ச.) பிறிவாம் பொருளின் = வடபீஜ முதலிய காரணரூபத் திரவியத்தினது, உதரத்தின் = கருப்பத்தினுள்ளில் மரத்திருந்த பேதப்படியே விருக்ஷத்தினதுவைசித்திரியப் பிரகாரமே, சிருட்டி சமத்காரம் = ஆச்சரிய காரணியான சக்தி, சிதைவற்று = அஸ்தமித்தலின்றி, உண்டாம் = சதோதிதமாய், செறிவதுபோல் = அவிச்சின்ன சுபாவமா யிருப்பதுபோல், சித்துரூப ஆன்மவஸ்துவின் பூர்ணோதரத்தில், நெறியார் = கிரமமாகப் பொருந்தும், வைச்சித்திரிய ஆகாரமான சகல சகத்தும், அங்குரமாய் = ஆச்சரிய காரணியான சக்திரூபமாய், நீங்காவியல்பாய் = அத்தமித்தலின்றிச் சதோதிதமாய். அவிச்சின்ன சுபாவமாய் நிறைந்திருக்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் திருஷ்டாவின் கணணே திருசியம் சமஸ்காரரூபமாகப் பிரளயாதியின்கண்ணி கழுமாயின் விசித்திர சமஸ்காரங்களாற் சித்திரிக்கப்பட்ட அஞ்ஞாதிருஷ்டாவினின்றும் திருசிய அபிவியத்தி யப்போதே யேன் ஆவதில்லையெனச் சங்கித்துத் திருஷ்டாந்தத்தாற் பரிகரிக்கின்றார் :— சருவ திருசியங்களும் இருதயத்தி லிருக்குமாயின் இப்பொழுதே யாவரானும் அனுபவிக்கப்படாத தென்னைகொல்லெனிற் கூறுகின்றார் :— பருவவென திருஷ்டாவின் கண்ணிருக்குந் திருசியத்தினது சிருட்டிப் பிரகாரத்தைக் கூறல்:—பருவவென.

பருவங்களிலே விதைமுளைக்கும் படிபோற் காணப்படுமவற்றிற்
கருதுங் கருத்து முடலெடுக்குங் ககனத் துதித்தோன் கதையாலே
யிருளுஞ்சகத்தி னுற்பத்தி யெளிதாய் விளங்கு மிதுகேட்பாய்
பெருகுங்ககனம் பிறப்பிடமாய்ப் பிறந்தான் மறையோர் பெருங்குலத்தோன்.

(ப - ரை.) பருவங்களிலே = தேச காலங்களை யனுசரித்து, விதை = பீஜம், முளைக்கும் படிபோல் = அங்குரபாவத்தை யடைவதேபோல, காணப்படுமவற்றிற் கருதுங் கருத்தும் = திருசியாகாரமாக வாசனைப்படி யெண்ணும் எண்ணமும், உடலெடுக்கும் = விஸ்தார ஆகிருதியை யடையா நிற்கும், ககனத்துதித்தோன் கதையாலே = கூறப்படும் ஆகாசஜன் சரித்திரத்தானே, இருளுஞ்சகத்தின் = மோகமய சமுசாரத்தின், உற்பத்தி = உற்பத்தியை யுரைக்கும் பிரகரணம், எளிதாய் விளங்கும் = சுலபமாகவிளங்கும், இது கேட்பாய் = இக்கதையை யியம்பக் கேட்பாயாக, பெருங்ககனம் = விசாலமான விண்ணே, பிறப்பிடமாய் = உதயஸ்தானமாய், பிறந்தான் = உதித்தான், மறையோர் பெருங்குலத்தோன் = பரமதார்மிக துவிஜோத்தமன்.

(ஸ்ரீ-வீர.) பீஜத்தினுள்ளே சமஸ்கார ரூபமாக இராநின்ற அங்குரம், நியமிக்கப் பட்டதாகிக் காண்டசாகை பத்திர புஷ்பாதிகளோடு மிலங்குவதாகித் தூலரூபமாய் விரிவதேபோலத் திருசியமதியும் நியதமாய தேசகாலங்களானே தூலரூபத்தை மருவும்; இதனுற்றான் அக்காலே ஜகத்துற்பத்தி வழக்கில்லையாம். இவ்வண்ணம் ஆண்டு ஜீவப்பிரஹ்மங்களின் ஒருமையைத் தாற்பரியமாகச் சர்வ வேதாந்தப் பிரதிபாத்தியமறைந்து விருத்த தருமங்களோடு கூடியிருத்தலினுனே, அவற்றின் ஐக்கிய அசம்பவ சங்கை நீக்கப்பொருட்டும், அதனினும் வேறாய ஆகாசாதி பதார்த்த சற்பாவசங்கை நீக்கப்பொருட்டும், சர்வவிருத்த தருமக்கூட்டத்திற்கும், ஆகாசாதிப் பிரபஞ்ச சற்காரணத்திற்கும். அதனினின்றும் உண்டாந்தன்மை முதலியவற்றாற் பிரஹ்மத்தினும்வேறாய் அசத்துவங் கூறி, இப்போது பிரஹ்மாத்மைக்கிய அபரோக்ஷ ஞானத்திற்குக் கரும அதன் பலவடிவ சமுசாரநிவிருத்தி யிலக்கணபலங் காட்டற்பொருட்டு ஸ்ரீவசிட்டபகவான். ஆண்டிருத்திய யமசம் வாதவியாஜமாக அறிஞராகியஹிரணிய கருப்பரிடத்தில் வித்தியாபலங்காட்டியவழி வேறறிஞரிடத்தும் நியாய ஒப்புமையாற்காட்டிய அதுவேயாமெனக்கருதி ஆகாசஜாக்கியானத்தைத் தொடங்குவார் ககனமென்றார். அபூத அர்த்தவாதமிது பிரமாண சம்வாதாதிபோலும் பிராந்த திருஷ்டியினுனே கரும அதன் பலவடிவமாய சமுசாரமாம் தத்துவதிருஷ்டியினுனே உண்டாகவு மில்லை உளதாகவுமில்லை உளதாகவு மாட்டாது என்னுமிப் பொருளைப் பிரதிபாதிப்பதாய உற்பத்தி யெனப் பெயரிய பிரகரணம் எவ்வாகச ஜாக்கியானத்தைக் கேட்டமாத்திரத்தா லுணர்ந்துகொள்ளுவாயோ அவ்விவ்வாகசஜாக்கியானத்தைக் கேட்குதி! "ஆகாசமே நாமரூபங்களின் நிர்வாகத்தைச்செய்வதாம்," என்னு மறையுண்மையின், ஆகாசம் பிரஹ்மம் அதினின்றும் உண்டாகின்ற படியினாலே ஆகாசஜன் பிரஹ்மாவாம், இருபிறப்பாள னுந்தன்மைமுதலிய கற்பனையோ கதையின் சௌந்தரியப் பொருட்டாம். அங்குரமானது பீஜத்தினுள்ளே நன்னிலை பெற்று அது வெளியாவதற்குச் சககாரியாய தேசகால கருமபரிபாகங்களை யனுசரித்து விளக்கமான ஆகிருதியைச் செய்கின்றது, அதுபோலவே திருசியமதியும் பெருக்குகின்றது. பூதமயமான தேகத்தை யாத்மாவாகக் கொண்ட அறியாதவன் காலனாற்பக்ஷிக்கப் படுவன் என்றும், தத்துவத்தை யுணர்ந்தவன் சின்மாத்திரமே யாத்மாவென்றிருத்தலின் ஆகாசஜனாகிய மறையோன் போலக்காலனாற் பக்ஷிக்கப்படா னென்றும் இயம்புவார்க் ககனமெனத் தொடங்கினார். காமகரும வாசனைகள் நன்கு நிறைந்துள்ள அவித்தையை யுபாதியாகவுடைய ஆன்மாவே யுலகபீஜமும் காலபீஜமும் ஆம், வித்தையினாலே அந்தப் பீஜசக்தி தகிக்கப்படினே காலன் வசப்படுவதில்லை யெனமுற் கூறியபொருளில் விசேடத்தைக் காண்பிக்கும் பொருட்டு உலகத்தையாதியிற் படைப்போன் றத்துவசோதனத்தால் விளம்பப்படும் பொருளுபோற் காதசங்கதியுற்ற ஆக்கியாயிகையை வருணித்

துக்கொண்டு ஸ்ரீ வசிஷ்டபகவான் விளம்புகின்றார், ககனமென. உற்பத்தியெனப் பெயரிய பிரகரணப் பொருளை யுணர்வதற்குச் சாதகமாகிச் செவிக்கரியபூஷணம் போன்றிலங்கும் இவ்வாகாசஜ ஆக்கியானத்தைக் கேட்டி! ஆகாசத்தினின்றும் அத்தியஸ்தமாகிய அவித்தைக்கருமையின், ஆதாரத் தன்மையானே ஆகாயத்திற்கொப்பாயதும் அவித்தையான் மறைபட்டமையின் ஒளிகுன்றியதும், ஆகிய பிரஹ்மத்தினின்றும் உண்டானவன் ஆகாசஜனுவன், இலிங்கசமஷ்டியான்மாவாகிய இரணியகருப்பன் என்னும் அவனது ஆக்கியான மெனவுணர்க.

(ச.) விதை = பீஜத்தி னகத்திருக்கும் அங்குர நிமித்தபூதமாய், பருவங்களிலே = தேசகாலங்களை யனுசரித்து, முளைக்கும்படிபோல் = பிரசன்னரூபமா யுண்டாவது போல, கருதுங்கருத்தும் = ஆன்மாவின்கண்ணிருப்பதாக நினைக்கும் திருசியபுத்தியும், காணப்படு மவற்றின் = திருசியங்களினது, உடலெடுக்கும் = பிரசன்னரூபந்தரிக்கும்; இது = இஞ்ஞான விண்மகன் கதையை. ஆகாசஜனென்னும் நாமமுடையனு மென்பதாயிற்று. (13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆகாசஜன் பெருமையும் காலன் ஆலோசனையின் அருமையும் அறைதல்:—ஒழியென.

ஒழிவிற்றி யானமுயிர்க்கி தம்வீறுடையோ னெடுநாளுய்ந் திருப்ப<br>
விழியுமுலகை விழுங்குறு நாமிவனை விழுங்கா திருந்தமையென்<br>
னழிவுசெய்யு மெனதுவலி யழுந்துங் கல்லின்வாண் முனைபோற்<br>
கழியமழுங் கிற்றென வெண்ணிக் காலனவனூர்கடிதணைந்தான். (14)

(ப - ரை.) ஒழுவில் தியானம் = எப்போதும் தியான ஏக நிஷ்டனாய், உயிர்க்கிதம் = பிரஜைகட் கிதமேவிரும்புவனாய், வீறுடையோன் = அதிசாமர்த்திய பரமதர்மவானாகிய அத்தருமமூர்த்தி, நெடுநாளுய்ந்திருப்ப = சிரஞ்சீவியாகி வாழ்ந்து கொண்டுவர, இழியுமுலகை = அற்பமாய இவ்வுலகத் துள்ளவரை யெல்லாம், விழுங்குறுநாம் = எளிதாக முறையாய்க் கவளீகரிக்கும் யாம், இவனை விழுங்காதிருந்தமை யென் = இவ்வாகாசஜனையேன் அயிலாம லிருந்தோம், அழிவுசெய்யு மெனதுவலி = யாவரையும் கெடுக்கும், எமதுசாமர்த்தியம், அழுந்துங் கல்லின்வாண் முனைபோல் = கடினமான பாறையின்பால் இட்ட கட்கதாரை மழுங்காநிற்பதேபோல, கழியமழுங்கிற்று = அத்தியந்த மழிந்து கெட்டுப்போய் விட்டது, என எண்ணி = என்று நினைந்து, காலன் அவனூர் கடிதணைந்தான் = யமதூதன் அவன் புரத்தை விரைவிற்கொல்லும்பொருட்டு அடைந்தான். (14)

(ஸ்ரீ - வீர.) 'அஃதெங்ஙனங்கிருதின்' என்பதாதி சுருதியினுனே இரணியகருப்பதத்தை யடைவிப்பதாய சம்வர்க்கவித்தை முதலிய தருமத்தில், பிரஜைகள் யாவருஞ் செய்த தருமங்களின் உள்ளடக்கங் கழறப்பெறுதலின் பரமதரும மூர்த்தியாம். ஆன்மசிந்தனை செய்வதிலேயே தற்பரராய், எப்போதும் பிரஜைகட்கிதத்தையே செய்பவராய் ஆகாசஜன் எனப்பெயர் படைத்த பிராஹ்மண ரொருவர் இருக்கின்றார்; அவர் மிருத்தியுவின் வயப்படாமல் நீணாள் வசித்துக்கொண் டிருந்தபோது மிருத்தியு சிந்திக்கின்றான், எல்லாப் பிராணிகளையும், யான் முறையாக அக்ஷயனாக விருந்து பக்ஷிக்கின்றேன்; இவ்வாகாசஜ னென்னும் விப்பிரனையேன் பக்ஷிக்கமுடியவில்லை? கட்கத்தின் முனையானது கல்லில் மழுங்குவதேபோல இவனிடத்தில் என்னுடைய ஆற்றல் குன்றிப் போகின்ற

தென்னே என, நெடிது நினைந்து அக்கணமே அவரைக் கொல்லும் பொருட்டுச் சத்திய லோகத்திற் புகுவதற்கு மிருத்தியுவிற்கு ஆற்றலின்மையின், மேருவின்மத்தியிலிராநின்ற பிரசித்தமான அவரது புரத்தைநோக்கிச் சென்றனன்,

(ச.) உவம்ந்திருப்ப, வீறு = பரமதருமம், மிருத்திபு இவ்விதஞ் சிந்தித்தானெனல் இழியுமுலகை = சர்வப் பிராணிகளையும், கிரமமாக விழுங்குறுநாம் அன்றோ அஃதியன்' இவனை = இவ்வாகாச சனென்னும் விப்பிரனை, என் = யாதுகாரணம், அவனூர் = அவனைக் கொல்லுவதற்கு அவன் புரத்தைக் கடிதணைந்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) காலனது அதிதீவரப் பிரயத்தனந் தெரிவித்தல்:=வினைய னென.

வினையின் முயல்வார் தங்கருமம் விடுவதுண்டோ வெனமறையோன்
மனையின்வாயிற் புகுமளவின் மண்டுமூழிக் கடுங்கனல் போற்
கனையுங் கடுந்தீயெரித் திடவுங்கடிது புகுந்து கண்டவனைப்
பனைசெய் கரமாயிரத் தாலும்பற்றி யிழுத்துப் பயனற்றான். (15)

(ப - ரை.) வினையின் முயல்வார் = ஒரு காரியத்திற் றற்பரராய் முயலும் தீரர், தங்கருமம் விடுவதுண்டோ = தாங்கள் தொடங்கிய காரியத்தை முடிக்காமல் விடுவது துர்லபமல்லவா, என = என்பதனால், மனையின்வாயிற் புகுமளவில் = அவர்வீட்டுவாயி விற் புகுங்கால், மண்டு மூழிக்கனல்போல் = வியாபித்து நெருங்குங் கற்பாந்தக் கனல் கடுப்ப, கனையுங்கடுந்தீ யெரித்திடவும் = சப்தித்தெரியுஞ் சுவாலைத்தீ தகித்திடவும், கடிதுபுகுந்து = வேகத்துடன் புகுந்து, கண்டவனை = தருமமூர்த்தியைப் பார்த்து, பனைசெய் கரமாயிரத்தாலும் = பனைமரங்கள் போன்ற ஆயிரங்கரங்களாலும், பற்றி யிழுத்துப் பயனற்றான் = பிடித்திழுத்து யாதொரு பிரயோஜனத்தையும் அடைந்தா னில்லை. (15)

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மாவின் அரியமனைக்காவற்பொருட்டு நாற்புறமும் பிரகாரரூப மாக விளங்கிக்கொண்டிருக்கும் அக்கினி இம்மிருத்திபுவைத் தகித்தது. அல்லது ஆகா சஜனுகியது விஜோபித்தமனல் வெகுகாலம் பணிவிடை செய்யப்பட்ட படியினலே சந் தோஷமடைந்த அக்கினியானது அக்கினி யாகாரமாகவந்து தனது பக்தனைமரிக்கச் செய்வதின் முயன்ற இம்மிருத்தியுவை மிகவுந்தகித்தது. வலுவையுடையவ னாயினும் மிருத்திபு முற்கண்டபோதினும் ஆயிர்ங்கரங்களானும் வவ்வுதற்கு முடியாதவனாயினன், சாமரத்தியமுடைய எவருமே தமது தொழிலின் முயற்சியைத் தியாகிக்கமாட்டார்க ளன்றோ! பின்னக் கிரகத்தை யடைந்து காலன்தானே புகும்போது, சமாதிவிக்கினத் தைத் தடுக்கும் பொருட்டு முன்னரே பிரஹ்மாவினாலே கிரகத்தை வளைந்துகொண் டிருக்குமாறு சங்கற்பிக்கப்பட்ட பிரளயகால அக்கினிபோன்ற அக்கினியானது இம்மி ருத்தியுவைச் சுடத்தொடங்கியது, அந்த அக்கினிச் சுவாலைகளின் மகத்தான மாலைவடி வக்கோட்டையைப் பிளந்து மிருத்தியுவானவன் உள்ளேசென்று பிராஹ்மணரைப் பார்த்து மிகு முயல்வுடன் கரங்களாற்பற்ற இச்சித்தான்; பிராஹ்மணர் எதிரேகாணப் பட்டபோதினும் நூற்றுக்கணக்கானகரங்களால் அகப்படுத்தக் கூடாமற்போய்விட்டனர்

(ச.) வினையின் முயல்வார் = தன்கருமத்தின் முயற்சிப்பவர் யாவரேனும், தன் கருமம் = தனது முயற்சியை, தான் புகுமளவில் கனல்போல் = வன்னிபோன்ற, கடுந்தீ = காலனணுகா திருக்குநிமித்தம் ஆகாசஜன் மகிமையாற் கற்பிக்கப்பட்ட

கினி யென்றுணர்க, மனையினகத்துக்கடிது புகுந்து. வடநூலாசிரியர் அத்த சதங்களா லென்றது அளவற்ற கைகளாலென்பது தோன்ற இந்நூலாசிரியர் கரமாயிரத்தாலும் மென்றார்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) முயல்கை வீணாதலும் யமனை யுபாயம்வினாதலும்:—அவன் என.

அவன் சங்கற்ப புருடனைப்போ லசைவற் றிருப்ப வடர்ப்பரிதா
யிவனங் ககன்று நமன்பாற்போ யிவ்வா றுரைப்ப யமனுரைப்பான்
புவனங் கருமத் தாலன்றிப் பொன்றா துதவிப் பொருளவையே
தவறும் படிசெய் கருமங்கள் சகாய மாகச் செல்கென்றான். (16)

(ப - ரை.) அவன் = அவ்வாகாசஜன் = சங்கற்ப புருடனைப்போல் = மனோராச்சிய மானவனைமான, அசைவற்றிருப்ப = சலனமிலாது நிலைபெற்றிருப்ப, அடர்ப்பரிதாய் = கெடுக்கமுடியா தொழிய, இவனங்ககன்று = காலன் அவ்விடம் விட்டேகி, நமன்பாற்போய் = தருமராஜாவையணுகி, இவ்வாறுரைப்ப = நடந்த வரலாற்றைக் கூற, யமன் உரைப்பான் = தருமராஜர் கூறுகின்றார், புவனம் = புவனத்துள்ளவர்கள், கருமத்தாலன்றி = கருமமில்லாமல், பொன்றாது = மரியார்கள், உதவிப்பொருளவையே = சகாயமான வத்துக்கள் கருமங்களேயாம், தவறும்படி செய்கருமங்கள் = மாரணீயமான கருமங்களை, சகாயமாக = உதவியாகக்கொண்டு, செல் கென்றான் = நீ செல்லுவாயாக வென்று கூறினார். (16)

(ஸ்ரீ - வீர.) சங்கற்ப புருடன் = மனோரத நிர்மிதபோலிப்புருடன், நீ யொருவனாகவே பலாத்காரமாக எந்தப் பிராணியையுங் கொல்ல முடியாதவனாவாய் என்பதன் கண்ணே ஹேதுவைக்கூறுகின்றார்:—தவறுமென. மாரணவிடய ஹேதுக்களாய கருமங்கள் அக்கருமங்களினுள்ளும் மிகமிக முக்கியமான கருமசகாயத்தால் அல்லது சகாயபாவத்தால் செல்வதுநலமாம். சங்கற்பமாத்திர கற்பிதபுருடனையெத்துணைப் பலவானாயிருந்தபோதினும் தீண்டக்கூட முடியாமை வெளிப்படையேயன்றோ, பின்னர் மிருத்தியுவானவன் ஐயத்தையகற்றும் யமன்பால்வந்து, ஹேவியாபகரே! அவ்வாகாசஜனைப் புசிக்க யான் சமர்த்தனாகாத காரணம் என்னே! யெனவினவினன். அதைக்கேட்ட யமன், ஹேமிருத்தியுவே! நீ சகாயமற்றவனாய்ப் பலத்தாற் கொல்வதற்கு ஒரு சிறிதும் சமர்த்துடையவனாகமாட்டாய், மரணத்திற்கேதுவாய கருமங்களே மரணத்தைச் செய்விப்பனவாகு மன்றி மற்றவை யாகாவாம். நினதாற்றல் குன்றியதன் கண்ணும் இதுவே காரணமல்லாமல் மற்றதொன்று மின்றாம். ஆகையால் முயல்வினாலே கொல்லத்தக்க இவ்விப் பிராணுடைய கருமங்களைத் தேடுவாயாக, அவற்றின் உதவியினானே இவனை நீ புசித்துவிடலாம் என்றனன்.

(ச.) அவன் நமன்பாற் = சந்தேக சாந்திசெய்யும் யமனிடத்தில், போயிவ்வாறுரைப்ப. பிரபுவே! நான் ஆகாசஜனைப் புசித்தற்குத் துர்ப்பலன் ஆனேன் இஃதென்னையென்றுகேட்ப, யமன் காலனது கருவம் நாசமா நிமித்தம் அவனைக் கன்மான் வேடணை (கன்மத்தைத் தேடுதல்) யிற்செலுத்தல்: யமனுரைப்பான், உதவிப்பொருள் = கொல்கின்ற கருவிப்பொருள், அவையே = அக்கன்மங்களேயன்றி வேறின்றாம். ஆதலின்நீ யவ்விப்பிராணைப் பலத்தினாற் கொல்லுதற்கு அற்பமுஞ் சக்தனாகாய். தவறும்படிசெய் = அவனைக் கொல்லுதற்கு, கருமங்கள் சகாயமாகக் கருமங்களைத்தேடி அவைகளே சகாயமாகச் செல்கென்றான் = சென்றவனைப் புசிப்பாயாக வென்றான். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எனக் கேட்ட மிருத்திபு மரணகாரண கருமங்களைத் தேட மண்டலமெங்கணுஞ் சுற்றல்:—காலனென்பது.

காலனிதுகேட் டவன்செய்த கருமந்தேடி நதியோடை
ஞாலந்திசைக ளெலாமுழன்று நண்ணுதாக மீண்டெய்திச்
சீலநமனுக் குரைசெய்யச் சிந்தித்தவனு முரைசெய்வான்
மூலவிசும்பிற் பிறத்தலினுன் முடிவிலவனும் விசும்பன்றே (17)

(ப - ரை.) காலன் இதுகேட்டு = இவ்வண்ணம் இயம்பியதை மிருத்தியுகேட்டு, அவன்செய்த = அம்மறையவன் ஆற்றிய, கருமந்தேடி = கருமத்தை யாராயலுற்று, நதியோடை = புண்ணியநதிகள் புஷ்கரணிகள், ஞாலம் திசைகள் = மண்டலங்கள் திசைகள் திக்கந்தங்கள், எலா முழன்று = எல்லாவிடங்களிலுஞ் சுற்றிப்பார்த்தும், நண்ணுதாக = ஒன்றுமே கிடையாமற்போக, மீண்டெய்தி = மறுபடியும் தருமர் சந்நிதியுற்று; சீல நமனுக்குரைசெய்ய = எல்லாப் பொருள்களையு மறிந்துள்ள யமனுக்கு நடந்தவற்றைக்கூற, சிந்தித்தவனும் = தியானித்துத் தருமரும், உரை செய்வான் = இதை யியம்புவாராயினர், மூலவிசும்பிற் பிறத்தலினால் = கேவலம் சிதாகாசத்தி லிருந்துண்டாயிருத்தலான், முடிவிலவனும் விசும்பு அன்றே = அனந்தமாய அவனும் அச்சிதாகாசமே யாவனல்லவா. (17)

(ஸ்ரீ - வீர.) அறிஞர் திருஷ்டியை யனுசரித்து அறைவார் ஆகாசஜனுக்குக் கருமங்கள் யாண்டுமே யில்லையென்றார், இதனைக் கருமங்கள் பண்ணிற்றிலன் எனப்பின் காட்டுவர். அதன்கண் ணேதுவென்னை கொலோவெனின்? உண்மையாய்ச் சககாரிகாரணமின்றிய சிதாகாயமாகிய பரமாத்ம பிம்பத்தினின்றே பிரதிபிம்பமாகக் கேவலமுண்டாய காரணத்தால் என்க. பரமாத்மாவினின்றும் உண்டானபோதினும் இரணியகருப்ப ஜீவனுக்குயாங்ஙனங் கருமாபாவம் எனிற் கூறுவார் மூலவிசும்பென்றார். வாஸ்தவசககாரி காரணமின்றிய பரமாத்மாவினின்றும் யாதுபிரதி பிம்பமாகவுண்டாயதோ வெளிப்பட்டதோ அது கருமாதிமலரகித அமலமாகிய ஆகாசமாகவே பவிக்கும். ஆகாசஜன் தனது காரண வஸ்துவினின்றும் வேறாகான், வாஸ்தவ சககாரி காரணமிலாதாதலோடுண்டாயிருத்தலின், நீர்நிலாப்போலு மென்பதுபொருள். அதன்பின் அம்மிருத்தியு வானவன் அக்கருமங்களைத் தேடுவதன்கண்ணே மிகவும் ஆதரவுடையவனாய் மண்டலங்களையும், திக்கந்தங்களையும், தடாகங்களையும், நதிகளையும், திசைகளையும், வனக்கூட்டங்களையும், காட்டின் கூட்டங்களையும், மலைகளையும், கடற்கரைகளையும், தீபாந்தரங்களையும், ஆரண்யங்களையும், நகரங்களையும், மகா நகரத்துள்ளடங்கிய சாகா நகரங்களையும், கிராமங்களையும், எல்லாத் தேயங்களையும், தேயங்களுக்குள்ளிருக்கும் காடுகளையும் சுற்றினன்; எத்தேயத்தின்கண்ணே யிவன் எக்கருமம் முன் செய்துளான் என வொருமையோடும் ஆலோசனை செய்தலையே பெருமுயல்வாற் பெறத்தக்கதாதலின் சுழன்றதாகக் கூறியதாம், தேசசஞ்சாரமென அதற்குப் பொருள் கொள்ளலாகாதாம் கருத்தாவின் சூக்குமசரீரத்தி லபேதப்பட்டிருக்கும் அதிருஷ்டங்களைப் புறத்திற்றேடுதல் கூடாமையின் கூறிய வண்ணம் பூமண்டலம் முழுதும் சுழன்று முயன்று மிருத்தியு எவ்விடத்தும் ஆகாசஜனது கருமங்கள் எதனையுமே பிராஞ்ஞன் வந்தியா புத்திரனைப்போலும் சங்கற்பமலையைச் சங்கற்பித்தவனினும் அயலான்போலும் அறியவில்லை. பின்னர் வந்து எல்லாப்பொருள்களையும் அறிந்த யமனை நோக்கி தாதர்கட்கு ஐயுற்ற இடங்களில் பிரபுக்கள் கதியாகவிருக்கின்றபடியினாலே, ஹே பிரபுவே! ஆகாசஜனுடைய கருமங்கள் எவ்விடத்திருக்

கின்றன வென்பதைக் கூறவேண்டுமெனவினவ, தருமராஜாவானவர் நெடுநேரம் நன்காலோசனைசெய்து இதனைக் கூறத்தொடங்குவாராயினர்:—ஹே மிருத்யுவே! ஆகாசஜனுடைய கருமங்கள் யாதொன்றுமின்றும், இவ்வாகாசஜனாகிய விப்பிரன் கேவலம் ஆகாசத்திலிருந்தே யுண்டானவனுவன், பிராரப்த அதிகார பலங்கட்குப் பலத்தொடக்கத்தானே நாசமுண்மையினுனும் சஞ்சிதங்கட்கு ஞானத்தானே பாதமுண்மையினுனும், வருங்கருமங்கட்கு விரையின்மையினுனே இருப்பின்மையினுனும் யாதொரு கருமமுமில்லையென்றுணர்க. ஆகாயத்தினின்றே யாவனுண்டாயினனோ அவன் நின்மலமாய ஆகாயமே யாவன்.

(ச.) அவனும் வெகுகாலம் சிந்தித்து சககாரிகாரணமின்றி யுதித்தவன் தற்காரணத்திற் கன்னியனுகா னென்பதாயிற்று. மூலத்தே பராயண மென்றது வேறு பொருள் வைப்பாம். (17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியபொருளையே தெளியச் செய்கின்றார்:—விண்ணென

விண்ணிற் பிறந்தோன் காரணத்தை மேவா மையினுற் கருமங்கள்
பண்ணிற் றிலன்கா ரணமிலதேற் பண்ணுங் கரும முள்தாமோ
வெண்ணற் குரிய சகாயமுனக் கிலதா மென்று யமன்கூற
நண்ணற் கரிதென் றுயர்கால னடந்தான் மனையி னனிவியந்து. (18)

(ப - ரை.) விண்ணிற்பிறந்தோன் = சிதாகாயத்தினின்றுஞ் சனித்தோன், காரணத்தை = சககாரிகாரணத்தை, மேவாமையினுல் = பொருந்தாமையினுல், கருமங்கள் = தொழில்கள், பண்ணிற்றிலன் = செய்திலன், காரணமிலதேல் = சககாரிகாரணமில்லா தொழியவே, பண்ணுங்கருமமுளதாமோ = செய்யாநின்ற வினைநிற்குமோ, எண்ணற்குரிய = நீ நினைத்தவண்ண முடிக்கத்தக்க, சகாயம் = சககாரிகாரணம், உனக்கிலதாம் = கொல்ல முயலுமுனக்கில்லையாகும், என்று யமன்கூற = என விவ்வண்ணம் தருமராஜா சொல்லியவுடன். நண்ணற்கரிதென்று = நாம் பிடித்தற்கு முடியாதகாரியமென்று, உயர்காலன் = தன்னுத்யோக முயல்விற் பெருமைவாய்ந்த மிருத்யு, நனிவியந்து = நன்றாக ஆச்சரியப்பட்டுப் புகழ்ந்து, மனையின் நடந்தான் = தனது அரண்மனையை நோக்கிச் சென்றனன்.

(ஸ்ரீ - வீர.) சககாரி காரணமில்லாமல் யாதுண்டாகின்றதோ அது தனது காரணத்தினும் அயலாக ஆவதில்லையென்பது பிரதிபிம்பாதி ஸ்தலங்களில் அனுபவிக்கப்படுகின்றது. பயனாக முடிந்தது இன்னதென்பார் சகாயமுனக்கிலதென்றார். எக்காரணத்தால் அறிவின் பிரதிபலின வடிவமாய இவ்வாகாசஜன் உண்மையாய்ப் பரமான்மாவாகவேயிருத்தலின் கருமரகிதனுவனோ அக்காரணத்தான் முயல்வை யொழித்தி யென்பதாம், மிருத்தியுவசமாதல் நீக்கப்பட்டமையானே இரணியகருப்பரிடத்தில் அதன் அவினுபூதமாய எல்லாச் சமுசாரசம்பந்த தருமமும் நீக்கப்பட்டதாம் மெனத் தெரிந்துகொள்ளுக. அற்றேல், "பூதாத்மாதான் ஒன்றேயும் பூதேபூதே புகுந்தேவாழும், ஒதொருவகையாற் பலவகையானே, நீதருநீர் நிலாத்தெரிவதேபோலும்" என்னும் வசனத்தான் இரணியகருப்பனேடுகூடச் சர்வ ஜீவர்களுமே அறிவின் பிரதிபிம்பமாவதும், உண்மையாகப் பிம்பபூத அறிவுருபமாவதும், கரும அதன் பலவடிவ சமுசாரரகிதமாவதும் ஒப்பாயிருப்ப என்ன சிறப்பைப் பின்பற்றி இரணியகருப்பனுக்கே அகர்மிகத்தன்மை (வினையிலாமை) முதலியவற்றைக் கூறுவதோ வெனின்? ஈண்டுக்கூறுவாம், இரணியகருப்பனுக்குத் தத்துவவித்தாந்தன்மையேயாய விசேடம்பற்றி வினையிலாமை முதலியவற்றை விளம்ப

லாம். அங்ஙனமே சுருதியும் அவனுக்குத் தத்துவவித்தாந் தகைமையையே சாற்றுகின்றது “சகாயந்தன்னைத்தானேபார்த்தது, யாதெம்மினுமே அயலாயில்தாம், எதனைக் குறித்திங்கஞ்சா நிற்பேன்; அதனானே இவற்குப்பய மென்பதகலுமால்” என்றுணர்க. சககாரிகளாய அபிமான இராகாதிகளேனும் மிருத்தியுவாகிய நீ கொல்வதற்குச் சககாரிகளாகிய இப்போதியற்றிய கருமங்களேனுமில்லையாம், வேறெக்கருமங்களுமே யில்லையாம். ஆகிருதிபடையாதவனுக்கும் மலடி மைந்தனுக்கும் சம்பந்தம் உளதாவதிலதே போலும் முன்னியற்றிய கருமத்தோடும் இவனுக்கு அணுவளவேனுஞ் சம்பந்தமே கிடையாது அவ்வாறே சூத்திரமும் “அதனை யறிந்திடப்பின் முன்னகங்கள், துதையாமை யழிவுகள் சொலவதுபடுதலின்” என்பதாகக் கூறுகின்றதாம். இவ்வந்தணனுக்கு இப்போது சம்பாதிக்கப்பட்ட கருமங்களேனும் சஞ்சிதங்களேனும் கிடையவேகிடையா; பூர்வ கருமங்கள் இவனுக்கில்லாமையானே யிவன் ஈண்டுச் சம்சார வசப்படவில்லை, கரும அசம்பவத்தின் பயனேயன்றோ சமுசாரவயப்படாமை, பிரசித்தமான வெள்ளியாங் காரணத்தினின்றும் உண்டாகாத இப்பி வெள்ளிக்கேபோலும் அவனது தேகாதிகட்குப் பொய்ம்மைநிண்ணயமுறவே, அதனாலுள்ள கருத்துருத்தகைமை பாதிக்கப்படுதலின் மிருத்தியு பிடிக்கமுடியாதாம் சககாரி காரணங்களில்லாமலே யாவனுண்டாகின்றனனோ அவன்றனது காணத்தினின்றும் பின்னமாக ஆகான்என அனுபவிக்கப்படுவன். காரணமின்மையினானே இவன் சுயம்பு ஆவன். இவன் முன்னருங் கருத்தாவல்ல இப்போதுங் கருத்தாவல்ல வாகலின் நீ யெங்ஙனமிவனைப் பிடிக்க முடியுங்கூறுதி. ஆகவே நீ பிடிக்கவேண்டுமென்னு மிச்சையே செய்யத்தகாததாம். இவன்பால் பிருதிவியாதிகளின் சம்பவம் எத்தகையது, எங்ஙனந்தான்கூடும், அகோ! இவனைப் பிடிப்பதுதான் எங்ஙனம் ஏலும்? ஆகையாற் பிடிக்கவேண்டுமென்னும் முயற்சியை யடியோடு விட்டுவிடுவாயாக; எவனாலும் ஆகாசம் ஒருகாலும் கவருதற்குக் கூடாதன்றோ என்றிதனைக் கூறக்கேட்ட மிருத்தியு மிகவும் ஆச்சரியமுடையவனாய்த் தன்னரண்மனைக்குச் சென்றனன்.

(ச.) சககாரிகாரணத்தை, எண்ணற்குரிய=அவனைப் புசிக்கவேண்டுமென்னும் நின்து நினைப்பிற்குரிய கன்மசகாயம், நினக்கிலதாம். ஆகலினீ முயற்சியை விடுவாய் என்று சககாரிகாரணமின்றி யுதித்தவன் றற்காரணத்துக் கண்ணியனாகான் என்பதாயிற்று.

(18)

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆகாசஜப்பிராஹ்மணனென வேறு பெயர் பெற்றுப் போற்றப்பட்ட பிரஹ்மாவே என்னால் ஆக்கியாயிகையின் கருத்துரை யென்பதும் உலகம் பொய் யென்பதும் இனிதறிந்துகொள்ளப்பட்டன என்பதைக் குறிப்பிக்கும் வாயிலாக ஆசிரியரை மகிழ்வித்துக்கொண்டு ஸ்ரீஇராகவர் கூறுகின்றார்:—என்னவென.

என்னவுரைத்த முனிமுகம்பார்த் திராமனுரைப்பா னீயிசைத்த
வன்னன் சுயம்பு விஞ்ஞான மங்கமானோ னொன்றாகத்
தன்னுநின்றோன் பிரமனெனத் துணிந்தேனெனலுந் தூயமுனி
முன்னுமுரைத்த தயன் றனையே மொழிந்தகதையின் முறைகேளாய். ()

(ப - ரை.) என்னவுரைத்த = இவ்வண்ணமியம்பிய, முனிமுகம் பார்த்து = ஸ்ரீ வசிட்ட பகவானது திருவதனத்தை நோக்கி, இராமன் = ஸ்ரீஇராகவர், உரைப்பான் = கூறுவதாவது, நீயிசைத்த அன்னன்=தேவரீர் அருளிச்செய்த அம்மறையவன், சுயம்பு= தானே யுண்டானவன் விஞ்ஞானமங்கமானோன் = பேரறிவே வடிவமானவன், ஒன்றாகத்தன்னு நின்றோன் = ஒரே வடிவமாக விளங்குபவன், பிரமன் = பிரபிதாமகனாகிய

அஜன், எனத்துணிந்தேன் = என்று நிச்சயித்தேன், எனலும் = என்று கூறலும், தூய் முனி = பரிசுத்த மகாமுனீந்திரர், முன்னும் உரைத்தது = பூர்வம் யாம் புகன்றது, அயன்றனையே = பிரஹ்மா வினையேயாம், மொழிந்தகதையின் = கூறியசரிதையினது, முறைகேளாய் = கிரமத்தைக் கூறக்கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) தந்தையின்றந்தை யென்பதாதி சிறப்புநான்கும் பிரமனது பெருமையைத் துலக்கும்பொருட்டாம். பேரறிவே வடிவமானோனென்றது சொரூபத்தைக் கூறுதற்பொருட்டாம். பிதுர்தம்பிதரர் பிதாமகர் பிதாமகர் தம்பிதா பிரபிதாமகன்; சர்வ பூதங்களின் ஆதிகர்த்தாவென்பது பொருள். அவற்குற்பத்தியின்மேலே சிறப்புண்மை கூறுவார் சுயம்புவென்றார். சுயமே உண்டாதலிற் சுயம்புவாம், இதனானே அஜன், சுக்கில சோணித பீஜாதியானே உண்டாகாமையின் என்க. ஒருவனாகவே எல்லாக் காரியங்களையும் வியாபித்திருப்பவன் என ஏகாத்மாவான் பிரதானாத்மா வெனினுமாம். விஞ்ஞானாத்மா = விஞ்ஞானம் புத்தி ஆத்மா சொரூபம் எதற்கோ அது அங்ஙனமாம், பிரஹ்ம சொரூபம் என்றேனுமாம். சுயம்புவாயும் அஜனும் ஏகான்மாவாயும் விஞ்ஞானான்மாவாகிய ஜீவசமஷ்டி ரூபமாயும், இருக்கும் பிரஹ்மமாகிய இப்பிரபிதாமகனே தேவரீரால் ஹே தேசிகோத்தமரே! கூறப்பட்டவனுவன் என, ஹே இராகவ! இவ்வண்ணம் எம்மால் இப்பிரஹ்மா வுனக்குக் கூறப்பெற்றான்.

(ச.) பிதுர்க்கள் = கசியபாதிகள், அவர்கட்கும் பிதுருத்தன்மை யுண்மையின் பிரஹ்மாவிற்குப் பிதாமகத்தன்மையாம் என்றறிக. அயோநிஜத்தன்மையானே அஜன், எல்லாத் தேகங்களிலும் ஒரே யாத்மாவா யிருப்பவன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னடந்த விருத்தாந்தத்தை மொழியத் தொடங்கல்:— செயல் என.

செயல்செய் காலன் யமனுடனே செப்பும் வழக்குத் தாமுணர்ந்தே
முயரு மனுவி னந்தத்தி னுலக மெல்லா முண்டெழுந்த
வயர்வில் கால னயன்றனையு மடர்ப்ப முயன்ற வப்போதிற்
றுயரில் காலன் முகநோக்கித் தூங்க யமனுங் கிவைசொன்னான். (20)

(ப - ரை.) செயல் செய்காலன் = யாவரையுந் தொலைக்குந் தொழிலை யாற்றும் மிருத்யு வானவன், யமனுடனே = தருமராஜாவுடன், செப்பும் வழக்குத்தாம் = சம்பாஷித்த விவாதத்தையே, உணர்ந்தோம் = இன்னதன் பொருட்டென யாமுணர்ந்துளேம், உயருமனுவினந்தத்தின் = மேன்மையான மன்வந்தரத்தில், உலகமெல்லா முண்டெழுந்த = சர்வபக்ஷகனாகி எல்லாப் பிரஜைகளையுமுண்டு நிமிர்ந்துலவிய, அயர்வில் காலன் = பலம்படைத்தமிருத்தியு, அயன்றனையு = பிரஹ்மாவையும், அடர்ப்ப முயன்ற தாக்குவதற்காகத்தானே பிரயத்தனஞ்செய்த அப்போதில் = அக்காலத்தில், துயரில் காலன் = துக்கமில்லாத காலனுடைய அல்லது தன் முயற்சிவாளாபோனமையின் துக்கத்திற்கு இல்லமாகிய மிருத்தியுவினுடைய, முகநோக்கி = வதனத்தைப்பார்த்து, தூங்கயமனுங் கிவை சொன்னான் = பரிசுத்த தருமராஜாவானவர் அவ்விடத்தே யிவ்வுபதேசஞ் செய்தனர்.

(ஸ்ரீ-வீர.) இப்பிரஹ்மாவின் பொருட்டே முன்னர் யமனோடும் மிருத்திய சம்வாதஞ் செய்ததாகும், மனுக்களின் சந்திகாலத்தில் எல்லாவற்றையும் பக்ஷிக்குமிருத்திய எல்லாப் பிரஜைகளையும் கொன்றுகொண்டு வலுவைப்பெற்றுத் தாமரையிற் பிறந்தோனைப் பிடித்துக் கொல்லத் தொடங்கினன் றாகவே, அப்போழ்தே தருமராஜாவாகிய யமனுலே

விரைவி லுபதேசிக்கப்பட்டவனுவன். முடியாத காரியத்திலும் மிருத்தியுவிற்கு அடிக் கடி முயற்சி யாங்ஙனங்கூடுமெனின்? கவலையினுலே கூடுமென்றே எதனையாவன் நித்திய மியற்றுகின்றனனே அதன் கண்ணே ஆடுதல் உண்டாகிக்கொண்டே யிருக்கும்.

(ச.) உலகமெல்லாம் = பிரசைகளனைத்தையும், அயர்வில் = பலம்பொருந்திய என்பதாம்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) யமதருமரது அனுசாசன ரூபமான வுபதேசத்தையே தொகுத் துக்கூறல்; ஆக்கியாயிகை வாயிலாய்க் கூறியபொருளைக் கண்டத்தானும் கூறி அஜன் சரீராதிகட்கு மனோமாத்திரத் தன்மையைக் கூறுகின்றார்:—நிகரிலென.

நிகரில் பரம வாகாய நிமல வடிவாய் நிற்கின்ற
விகலி லயனை யடர்த்தற்கென் றெண்ணு மெண்ண மெளிதாமோ
திகழும் வெளியே வடிவாகிச் செறிந்த பூத வடிவிலனுய்ப்
புகல்சங் கற்ப புருடனைப்போற் பொன்ரு தயனும் பொலிந்திடுமால் ()

(ப - ரை) நிகரில் = உவமையற்ற, பரமவாகாய = மேலான சிதாகாச, நிமலவடி வாய் = நிருமலமான வடிவமாய், நிற்கின்ற = எழுந்தருளியிராநின்ற, இகல்இல் அயனை = பகையற்ற பதுமநாதனை, அடர்த்தற் கென்று = கொன்றுவிட வேண்டுமென்று, எண் ணும் எண்ணம் எளிதாமோ = நினையா நின்ற நினைவு சுலபமாமோ, திகழும் வெளியே வடிவாகி = விளங்காநின்ற அறிவாகாயமே ஆகமாகி, புகல் சங்கற்பப்புருடனைப்போல் = சொன்மாத்திரமாய நினைவு மனுடனையொப்ப, செறிந்த பூதவடிவிலனுய் = ஒன்றோ டொன்று உறைந்த பிருதிவியாதி பூதசம்பந்த வுடம்பில்லாதவனுகி, அயனும் = பிரஹ் மாவும், பொன்ருது = கொல்லப்படாது, பொலிந்திடும் = விளங்கிக்கொண் டிருக்கும் ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) இகலில் என்றதனுனே அடர்த்துப் பிடித்தல் முடியாதென்பதைப் புலப்படுத்தும்; பராகாச பரமான்மாவையே பிரஹ்மா சொரூபமாகவுடைய பிரஹ்மா வாதலி னென்பதாம். பிரஹ்மா பரப்ரஹ்ம சரீரத்துடனிருப்பின் யாங்ஙனம் நான்முக சரீரத்தன்மை அவற்கென ஆசங்கித்து விடைதருவார், திகழும்வெளியே யென்றார். பிர சித்த ஆகாசத்தில் விளங்காநின்ற ஆகாரம் சிரம்பாணியாதிமான் எம்மனோரத கற்பித புருடனுக்கோ அவன் அங்ஙனமாவன். பிராதிபாஸிகம் பிரஹ்மாவின் சரீரத்தன்மை, உண்மையாயோ சங்கற்ப புருடனைப்போல இலாததேயாம் என்பதபிப்பிராயமாம். பரம ஆகாச சரீரமாயும் மனோமாத்திரமாயும், சங்கற்பரூபமாயும், பிருதிவியாதியற்ற ஆகிருதி யாயும், இருக்கும் பிரஹ்மாவானவன் எங்ஙனம் பீடிக்கப்படுவன். சிதாகாச சமத்காரமே ஆகார அனுபூதிமானுய்வர அவன் சிதாகாசமாகவேதானிருப்பன்; அவனுக்குக் காரணத் தன்மை யேனும் காரியத்தன்மையேனுங் கிடையா. ஆகாயத்திற் கீழ்முகமான இந்திர நீலமகாகடாக ஆகாரம் பிருதிவியாதி யற்றதாய்த் தோற்றுவதேபோலும், சங்கற்ப புருடன் பிருதிவியாதியின்றியே தோற்றுவதே போலும் இச்சுயம்புவும் விளங்கு கின்றான்.

(ச.) வெறுஞ் சுத்தியாதிகளின் உற்பத்தியான இரஜதாதிகள் சுத்தியாதிகளுக் கன்னிய மாகாததுபோ லென்பது கருத்து. பூதவடிவு = பிருதிவியாதி யாகாரம். சங் கற்பமாத்திர கற்பிதனுன புருடன் எப்படியாகாச மாத்திரதேகனும் பிருதிவியாதி சதுட்டய ரகிதனும் ஆய்ப்பிரகாசிக் கின்றானே அப்படிச் சுயம்பு மென்பதாம். (21)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறியதைத் தெளிவித்து முடிக்கின்றார்; ஆண்மெனத்திற்கு அவ்வாகாரகற்பனைப் பரிணாமம் உண்மையாக வின்றும், மற்றே, தூய்தாய பிரஹ்மமே அஞ்ஞானத்தால் அவ்வாறு விவர்த்தத்தை யடையுமென்கின்றார்:=ஞானவென.

ஞான விண்ணாய்க் கேவலமாய் நடுவு முடிவு முதலில்லா
தான சுயம்பு வாம்பிரம மடுத்த தனது மனவசத்தான்
மான முருவ முடையதுபோன் மன்னு புமான்போல் வயங்குமோ
லீனு மலடி மகன்போல விதுமெய்ம் மையினால் வடிவிலதாம் (22)

(ப - ரை.) ஞானவிண்ணாய் = சிதாகாசமாய், கேவலமாய் = தனித்ததாய், நடுவு முடிவு முதலில்லாதான = ஆதிமத்யாந்த ரகிதமான, சுயம்புவாய் = தானேயிலங்கும், பிரமம் = பெரிதினுக் கெல்லாம் பெரிதாய வஸ்துவானது, அடுத்ததனது மனவசத்தால் = தன் பாலத்திய சித்த சித்தவயத்தால், மானவுருவமுடையதுபோல் = யாவரும் புகழும்படியான ஆகாரவான் போலவும், மன்னுபுமான்போல் = நிலைபெற்ற புருடோத்தமன்போலவும், வயங்குமோல் = விவகாரயோக்கியமாக பிரமன் சுயம்புவென விளங்கா நிற்கும், ஈனு மலடிமகன்போல = பயவாத வந்தியையின் மைந்தனென்ன, மெய்ம்மையினால் = வாஸ்தவமாக, இது = இதற்கு, வடிவிலதாம்=தேகமில்லையாம், ஆல் அசை, மாலெனின், மான்மைந்தனாக அழகு நிறைந்த பெரியோனாக என்க; எனவே, திருமான் மைந்தனாகிய பிரமன் எனவும் சுயம்பு வெனவும் விளங்காநிற்கும் பிரமமெனவாம்.

(ஸ்ரீ - வீர.) தனது மனவசத்தால் = திருஷ்டாவின் சித்தவயத்தால் கேவலமாயும், அநந்தமாயும், முதலிடை யில்லாததாயு மிருக்கும் சிதம்பரமானது தனது சித்தவசத்தாற் சுயம்புவாகிய பிரஹ்மாவென ஆகாரமுடையது போலும், புருடன்போலும், விளங்காநிற்கும், உண்மையாயோ மலடிமைந்தனுக்கே போலும் அவனுக்குத் தேகமேகிடையாது.

(ச.I இது = இப்பிரஹ்மத்திற்கு, விசுத்த சின்மாத்திரமே சித்தமாத்திரோபாதி வசத்தினாற் சுயம்புவான பிரமனென விளங்கு மிதனதாகாராதிகள் வாஸ்தவமன்றென்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனோமாத்திரமாயும் சங்கற்பரூபமாயும் பிருதிவியாதியற்ற ஆகிருதியாயும், என்முன் மொழிந்தமுறையானே பிரஹ்மாவிற்கு மனோரூபத்தன்மையை யங்கீகரிக்கில், மனத்திற்கு வாசனைக்கூட்ட ரூபத்தன்மை யுண்மையின் பழையவாதனைக்குவால் அற்பமும் இவனுக்கில்லையெனல் எங்ஙனங்கூடும் ? இப்பிரஹ்மாவினுடைய தேகத்தில் முன்சரீரத்தை விடுங்காலத்தி லுண்டாம் நினைவு, உமக்கும் எனக்கும் அன்னியருக்கும் பசுவாதிகட்கும் தத்தஞ் சரீரத்திற் பழைய நினைவு காரணமாவதேபோல எங்ஙனங் காரண மாகாமற்போம் ? பழைய நினைவு இருக்குமாயின் அஃதுண்டாவதற்காதாரமான சமஸ்கார தேகாதிகளும் முன்னுள்ளனவாகவே தள்ளத் தகாதனவாம்: பூர்வதேகாதி இருந்தாற்றான் ஆண்டனுபவித்ததைக் கவரும் நினைவுகாரணமாகும், அதுவே அசித்தமாம், பிரஹ்மாவிற்குப் பழையகருமமும் பழையநினைவும் ஒரு சிறிதுமில்லையாம் என்னின் ? இரணிய கருப்பபதத்திற்குக் கருமவுபாசனை யென்னும் இரண்டன் கூட்டுப் பலத்தன்மை யுண்மையின் எங்ஙனம் முன்னுடம்பு வாதனையாதியில்லையெனக்கூடும் ? எங்ஙனந்தான் மனோமயமாகிய அவன் தேகத்திற்குப் பிருதிவியாதிமயத் தன்மையின்மை யெனக்கூடும் ? மனம் பூதகாரிய மென்பது முரணன்றோ ஆதல் கூடும்? எனின் ? உண்மையே, " அஞ்ஞதிருஷ்டியினானே யங்ஙனம், என்னினும் அன்னியமில்லாதபோழ்து, எதினின்றும் யான்பயம் எய்துவன் கொல்லோ என்னுஞ் சுருதியாதிக்

ளாற் சித்தமாய அவனது, தத்துவ திருஷ்டியாஞே பிரபஞ்சத்திற்கு முக்காலத்தியபாத முண்மையின் பூர்வதேகவாதனே முதலியவற்றின் இருப்பின்றும்; பாதித அனுவிருத்தியிஞ்ஞே மனத்தின் கண்ணும் அத்தேகத்தின் மாட்டும் வெந்த ஆடையின்கண் நூலிருக்குந்தகைமையேபோலும் பிருதிவியாதி மயத்தகைமை முன்போலின்றுமென யாதொரு விரோதமுங் காணேம். யாண்டுப் பாதிக்கப்படாத அஞ்ஞமனச் சங்கற்ப நகராதிகட்கும் சத்தியத்தகையையும் பௌதிகத்த கைமையுமின்றுமோ,தத்துவஞானத்தாற் பாதிக்கப்பட்டுத் தொடர்ந்திருக்கும் விரிஞ்சனது மனச்சங்கற்பத்தாலாய விசுவத்திற்கு அவ்வாறுந்தகைமை யென்பதன் கண்ணே யென்னே கூறக்கிடக்கின்றது ? அஞ்ஞதிருஷ்டியை யனுவதிக்கும் உபாஸ்தி பல சுருதிவாயிலாயன்றும் அகாரணமாகவே விளங்குகின்றது, அல்லது தனது சித்தமாகிய தேகத்தைக்காணும் சித்தமே முக்கியகாரணமாகும், அவனுக்குச் சுயமாகவோ சித்தங்கிடையாதாம், சுயம்பு தனது காரணத்தினும் அனன்னிய வடிவமாம், சுயம் ஆத்மவடிவமாம், இச்சுயம்புவிற்கு ஆதிவாகிகதேகமே இருக்கின்றது, இவ்வஜனுக்கு ஆதிபௌதிக தேகம் பொருத்தமாகாதாம், தேவபிதுர் மார்க்கத்தானே லோகாந்தரத்தை யடைவதற்குச் சாதகமாகி நம்மஞேரது லிங்கதேகம்போ லிருப்பது அதிவாகிக சூக்குமமாம் ஆதிபௌதிகமோ தூலபூதஜன்னியமாம். என்று சமாதானங் கூறக்கேட்ட ஸ்ரீ இராகவர் ஆதிவாகிக தேகமென்ப தொன்றுளது ஆதிபௌதிகதேகமென்பதொன்றுளது எல்லாப் பிராணிஜாதிகட்டும், பிரஹ்மாவிற்கு மாத்திரம் ஒன்றே யென்பதென்னே ? என்று வினவுகின்றார்:—என்று என.

என்றுகாலன் றனக்கியம னிசைத்தா னென்றேன் முகநோக்கி
நின்றவாதி வாகியமாய் நிகழ்ந்தவாதி பௌதிகமா
வொன்றுமுடல முயிர்க்கெல்லா முபயவிதமாம் பிரமனுக்குத்
துன்றுமாதி வாகியமாஞ் சூக்கவுடலொன் றுயதென. (23)

(ப - ரை.) என்று காலன் தனக்கு = முன்னியம்பியபடி மிருத்தியுவை நோக்கி, இயமன் இசைத்தான் = தருமராஜர் கூறினர், என்றேன் முகநோக்கி = என அருளிய ஸ்ரீவசிஷ்டபகவானைப் பார்த்து, நின்ற ஆதிவாகியமாய்= ஆதிவாகிய மௌனநிலைபெற்ற, உடலம் = தேகம், ஒன்றும் = ஏகமும், நிகழ்ந்த ஆதிபௌதிகமாய் = அவ்வப்போது வந்துபோயிலங்கா நின்ற ஆதிபௌதிக மென்னும் தேகம் ஏகமும், ஆக, உயிர்க்கெல்லாம் = ஜீவர்கள் யாவருங்கும், உபயவிதமாம் = இரண்டுவகையாக விருக்கும், பிரமனுக்கு = அஜனுக்கு, துன்னும் = பொருந்தும், ஆதிவாகியமாம் = ஆதிவாகியமென்றறைந்த, சூக்குவுடல் = சூக்ஷ்மசரீரம், ஒன்றுயதென = ஏகமாத்திரமாக விருப்பது என்னகாரணம் ? (23)

(ஸ்ரீ - வீர) சித்வியோம் = ஞானவிண்ணுய், என்னும் சுலோகத்தின் பின்னர் விராட்டவஸ்தையை யடைந்த ஹிரணியகருப்ப விடயமாய்ப் பெரியவாசிட்டத்திருக்கும் சுலோக அபிப்பிராயம் அவதாரிகையில் வேண்டிய அளவுகாட்டப்பட்டது பிரஹ்மாவிற்குச் சீவத்தன்மை யுண்மையின் வேறுஜீவன்போல ஆதிபௌதிக தேகம் என் உண்டாக வில்லையென வினவுவார், துன்றுமாதி வாகியமாமென்றார். அவ்வத்தேயத்தை யடையும்படி கொண்டு செலுத்தத் தக்கதாகின்றது. இருநெறியிலு முற்றதேவதைகளால் என ஆதிவாகிகம் சூக்குமதேகமாம்.

(ச,) உயிர்க்கெல்லாம் நின்றவாதிவாகியமாய், ஒன்று முடலம் = ஒருதேகமும், நிகழ்ந்தவாதி பௌதிகமாய், ஒன்று முடலம் = ஒருதேகமும், ஆக உபயவிதமாம் ...

ஆதிவாகிக சரீரமென்பது லோகாந்தர கமனப்பிரயோஜன மிதற்குளதாமென் லோகாந்தரகமன சாதனமான லிங்கசரீர மெனப்படும்.

(ஸ்ரீ - வீ ர - அ-கை.) தூலதேக ஆரம்பஞ்செய்யும் ஆகாசாதி பூதசத்துவ அசத்துவங்களால் ஜீவர்கட்கு தேகமிரண்டாம், இரணியகருப்பனுக்கோ தூலதேக அசத்துவமாம், என உத்திரம் ஸ்ரீ வசிஷ்டபகவா னருளுகின்றார்:—பிரமவென.

பிரமவொளியாற் பிறந்தசகம் பிறக்குமுயிர்க்குக் காரணமாய்
விரவுமதனு லுயிர்க்கெல்லா மேவுமுடல மிரண்டாகும்
பரமபிரமத் தினையொழியப் பயில்காரணம்வே றிலாமையினல்
வரவிலயனுக் கோருடலாய் மருவுமாதி வாகியமே.

(ப - ரை.) பிரம வொளியிற் பிறந்தசகம் = பிரஹ்மப் பிரகாசத்தினுல் உண்டான வுலகம், பிறக்குமுயிர்க்குக் காரணமாய் = தேகமெடுக்குஞ் சீவர்கட்குக் காரணமாய், விரவுமதனுல் = கலந்துகொண் டிருக்கும் அக்காரணத்தால், உயிர்க்கெல்லாம் = சர்வப்பிராணிகட்கும், மேவுமுடலம் = பொருந்தா நின்ற தேகங்கள், இரண்டாகும் = இரண்டாம், பரமப்பிரமத்தினை யொழிய=மேலாய பிரஹ்ம சொரூபத்தை யொழிந்து, பயில்காரணம் = உபாதான காரணம், வேறிலாமையினுல் = அயலொன்றும் இல்லாமையினுல், வரவில் அயனுக்கு = போக்குவர வில்லாத பூரணப்பிரஹ்மாவிற்கு, ஒருடலாய் = ஒரேசரீரமாய், ஆதிவாகியமே = ஆதவாகியம் மாத்திரம், மருவும்=பொருந்தாநிற்கும். (24)

(ஸ்ரீ - வீ ர.) உபாதான இலக்ஷண காரணவடிவம் எவைகட்கோ அவை அத்தகையனவாம், அவ்வெல்லாப் பிராணிகட்கும், இதனுனே இருதேகங்களையுந் தொடங்குங் காரண இருப்பு வியஷ்டிஜீவர்கட்குக் குறிப்பித்ததாம் அஜனுக்குக் காரணமின்மையின் தூலதேகந் தொடங்கும் காரண அசத்வமாம். கூறிய பொருளைத் தெளிவுபடுத்துவார் உயிர்க்குக் காரணமாய் என்றார். பிரஹ்மப் பிரகாசத்தினுல் உண்டானவுலகம்=பிரஹ்மாவாகிய இரணியகருப்பனுடைய பிரகாசமாகிய சங்கற்பத்தினுல் உதயமாகிய ஜகமென்னும் சூக்குமபூத தூலபூத வடிவவுலகம்; அதனுல் அவை இரண்டு தேகங்களோடு கூடியவையென வறிக. அஜனுக்கோ பிரஹ்ம பரமாத்மாவே காரணமாம் பூதங்களல்லவாம் நேத்திரமுதலிய வியாவகாரிகப் பிரமாணத்தா லறியத்தக்க பஞ்சீகிருதபூதரூப காரண வடிவினையுடைய எல்லாப்பிராணிகளுக்குமே முன்மொழிந்த இரண்டு தேகங்களுமுண்டு. அஜனுக்கு அவித்தைய பஞ்சீகிருத பூதங்களின் அனன்னிய பரசுருதி நேத்திர முதலியவற்றுனே விளக்கப் படாமையானும் சாக்ஷிக்குமாத்திரம் விடயமாகுந் தகைமையானும் தோற்ற மாத்திரத் தன்மையானே வியவகாரிக சத்தியத் தன்மையின் மையின் அல்லது முன்மொழிந்த முறையே காரணமில்லாமையின் ஒரே ஆதிவாகிக சரீரந்தானுளது. வேறுவகையாக விளம்புவாம், எல்லாப்பிராணி ஜாதிகட்கும் அஜன் ஒருவனே முக்கிய காரணமாவன், அதனுனே அவன் ஒரேதேகத்தை யுடையவனுவன் அவ்வஜனுக்குக் காரணங் கிடையாது, முதலிலுண்டாய பிரஜாபதிக்குப் பௌதிக தேகங் கிடையவே கிடையாது, சிதாகாச மாத்திரவடிவனுய்த் தோற்றுவன் இவன் ஆதிவாகிக தேகவானே யாவன், ஆரோபித பதார்த்தத்திற்கு அதிஷ்டானத்தைத் தவிரக் சொரூபமில்லையல்லவா ? இவ்வாருகவே அவன் சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட வுலகிற்கும் அதனதிஷ்டான சின்மாத்திரத் தன்மைபலிதமாம்.

(ச·) பிரமப் பிரதிபாச மென்னுமொளியால் = பிரமசங்கற்ப மாத்திரத்தால், பிறந்தசகம் = ஆகாசாதிகள்; காரணமாய் = ஆரம்பகாரணங்களாய். காரணாத்மகாம்= காரணங்கள் ஆரம்பகவியதாதிகள், காரணங்களே ஆத்மா = தேகம், எவைகட்கோ. காரண அசத்வாத் = பிரஹ்மத்தினும் அயலாய காரணத்தின் இன்மையான். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் சூக்குமபூதவிகாரமாய மனத்தினின்றும் சூக்கும பூதாதி சர்வஜகத் துற்பத்தி எங்ஙனம் பொருந்தும் எனின்? அற்றன்றும், மனத்தைச் சூக்குமபூத விகாரமெனத் திருஷ்டி சிருஷ்டி பக்கத்தில் அங்கீகரியாமையின், நம்மான் முன்னரே ஆண்டு ஜீவசிருஷ்டிப் பிரக்கிரியை காட்டப்பட்டதேயாம், திருஷ்டியே சிருஷ்டியென ஸ்ரீ வசிஷ்ட சித்தாந்தம் திகழ்ந்தவழி சூக்குமபூத முதலிய எல்லாவுலகமும் மனோவிகார மென்பதில் முரணின்மையின் "எக்காற்றுயில் வோன் நனவாசனைவடிவ அநேகவத்துக்க ளவற்றையுமே கண்டிலனோ, அக்கணக் காணுதபோது ஞானசக்தி யற்றுமுகாதி சஞ்சாரியாய கிரியாசக்தியின் கண்ணே பிறவிடமில்லாது ஒருமையை யடையும், பிராணோபாதிகன் பிராண சப்தயோக்கியன்புருடன் ஆவன் என்பதுபொருள் அற்றேல் அக்கால் வாக்காதிகளாகிய கரணங்கள் யாண்டுச் செல்லுகின்றனவென ஆசங்கை நிகழச் சமாதானித்தல், அந்தப் பிராணனிடத்தில் ஒருமையை யடையுங் காலத்தில் இந்தப்பிராண உபாதியையுடைய ஆன்மாவை வாக்கானது சர்வநாமங்களோடும் அடைகின்றது, விழியானது சர்வரூபங்களோடும் அடைகின்றது, செவியானது சர்வசப்தங்களோடும் அடைகின்றது, மனம் சர்வத்தியானங்களோடும் அடைகின்றது. இந்நான்கும் விடயங்களோடு மடங்கும். என்னும் கௌஷீதகி சுருதியும் (இம்மந்திரம் பொருளோடுங் காட்டப்பட்டது) மனத்தின் லயமான துயிலில் எல்லாவுலகிற்கும் பிரளயத்திற்போல இலயத்தைக் காட்டுகின்றன, என்பதை யனுசரித்தே திருஷ்டியேசிருஷ்டியென அறிந்து கொள்ளலாம். அற்றேற் சுழுப்தியில் பிரளயம் போலப்பிரபஞ்சம் விலயப்படுவதின்றும், மற்றோ கரணமில்லாமையினுலே தோற்றுவதில்லை யென்னுங் கருத்தாலாம், ஆங்கே சுருதியும் கூறியது எனின்? அற்றன்றும் ஆண்டுலயத்தைப்பிரதிபாதனஞ் செய்யாதொழியில் ஜகத்திற்கு விழிக்குங்காலையில் சிருஷ்டிசெப்பா தொழியும் வழக்காதலின், செப்பவே செய்கின்றது செம்மறை? சருவசிருஷ்டிப் பிரபோதத்தில், "பிராணனிடத்தில் விலீனமான அவைகட்குக் கடல்போல நதிகட்குயாங்ஙனம் மீண்டு முண்டாதல் எனக்கடாவிக் கூறல், பிராண உபாதியை யுடைய புருடன், எக்கால் விழிப்பையடைவனோ, ஜாக்ர அவசரத்தில் இதனினின்றும் உற்பத்தியின் கண்ணே திருஷ்டாந்தங் கூறப் பெறுகின்றது: திருஷ்டாந்தமாவது:—மிகமிகவுஞ் சொலித்துக்கொண்டெரியா நின்ற அக்கினியினின்றும் எல்லாத்திசைகளிலும் துச்சமாய அக்கினி கணங்கள் நானாவிதமாகச் செல்லுகின்றன, இவ்வகையானே வேறுவகையானன்றி இப்பிராணோபாதியை யுடைய ஆனந்த ஆத்மாவினின்றும் எல்லாப் பிராணன்களென்னும் வாக்காதிகள் எதற்கு எத்தகைய இடம் நாமுதவியவை அதைக்குறித்து விதம்விதமாகச் செல்லுகின்றன, பிராணன் களினின்றும் அக்கினியாதி தேவதைகள் விதம் விதமாகச் செல்லுகின்றார்கள், அக்கினியாதி தேவதைகளினின்றும் நாமாதி விடயங்கள்," என்னும் வேறு சுருதியும் (இதுவும் பொருளோடுங் காட்டப்பட்டது, திருஷ்டி சிருஷ்டி விடயத்ததாகும், அசத்ததிமனத்தையாற்ற அம்மனம் பிரஜைதங்கள் அதிபதியதனைச்செய்ய, அப்பிரஜாபதியும் பிரஜைகள் தம்மையாற்ற, எவ்விவையாவை கொஞ்சம் எதிரினிற் காணலாமோ அவ்வெலாம்மனத்தின் மாட்டேமிகமிக வமராநிற்கும். மேலும் கற்பிதமாய இப்பிவெள்ளியா திக்கேபோலப் பிரதீதிமாத்திர சரீரமாய

இருமைக்குத் தோற்றுந் தசையின் கண்ணே தன் கற்பனையின் அதிஷ்டான சன்மாத்திரத்திற் கயலாகச் சொரூபமா யிருத்தல் அசம்பவ மாதலினாலும் எனவிஞ்ஞான உத்மாசார்யர் வசனத்தினாலும் ஆத்மசித்தத்தானே அசையாநின்ற ஜீவக்கூட்டம் ஆகாசாதி பிருதிவி யீருகவுங்காணும் என்னும் சங்க்ஷேப சாரீரக வசனத்தினாலும் அறியலாம். இதன் கண்ணே யியபம்படவேண்டியது வெகுவாக விருந்தபோதினும் விஸ்தாரமாய்விடு மென்னும் பயத்தினாலே விளம்பவில்லை. பிரஹ்மாவிற்கு மனோமாத்திர சரீரத்தன்மையானே அந்தப் பிரஹ்மா வுண்டாக்கிய வுலகம் மனோவிகாரமாயிருத்தலின் மனோராஜ்ஜியம் மானும் அசத்தேயாம் எனக்கருதிக் கூறுகின்றார்:—சகவென,

சகக்காரணமா மயனுக்குத் தானேதோன்று மனவடிவாய்
மிகத்தாஞ் சகத்து விரிந்திடலால் விரிந்தவெல்லா மனவடிவென்
றுகப்பாலுரைத்த வசிட்டனைப்பார்த் துலகமாயை தனைவிரித்த
மகத்தாமனத்தின் வடிவுதனை வகுத்தோ தென்ன முனிசொல்வான்.

(ப - ரை.) சகக்காரணமாம் = மூவுலகத்திதிக்கும் காரணத்தன்மை வாய்ந்த, அயனுக்கு = பிரஹ்மாவிற்கு, தானே மனவடிவாய் = கேவலம் சித்தமாத்திர ஆத்மாவாய் பிருதிவியாதி ரகிதாகிருதி சங்கற்ப புருடசமமாய், தோன்றும் = சுயமுண்டாம், மிகத்தாம் = மேன்மை மிகுந்த தமது மனத்தினாலே, சகத்து = விசுவமானது, விரிந்திடலால் = விஸ்தரித்துக் காணப் பெறுதலானே, விரிந்தவெல்லாம் = விரிவாக விளிதமாகக் காணப்பெறுவனயாவுமே, மனவடிவு = மனோமயமாம், என்று = இவ்வண்ணமாகத்தானே, உகப்பாலுரைத்த = அதியுற்சாகத்தோடு முபதேசித்தருளிய, வசிட்டனைப்பார்த்து = தேசிகோத்தமராகிய ஸ்ரீ வசிட்டபகவானை நோக்கி, உலகமாயைதனை விரித்த = அகிலதோஷ மஞ்சரியை விரிவுறுமாறு புரிந்த, மகத்தாமனத்தின் = பெருமைவாய்ந்த மனத்தினது, வடிவுதனை = உருவத்தை, வகுத்தோதென்ன = இத்தகையதெனப் பிரித்தனுக்கிரகிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்ட ஸ்ரீ இராகவனை நோக்கி, முனிசொல்வான் = ஸ்ரீ தபோதன மன்னசிலர் கூறத்தொடங்குகின்றார். (25)

(ஸ்ரீ - வீர.) சங்கற்பபுருட சமமா யென்றதையே தெளிவிக்கும் பொருட்டுப் பிருதிவியாதிரகிதா கிருதியென்றதாம்; தூலதேகத்தைத் தொடங்கும் பிருதிவியாதி ரகிதாகாரமென்பது பொருள். மனத்திற்கு விச்வகாரணத் தன்மையுள்ளதாயவழிப் பிரஹ்மம் போலச் சத்துவமாம் என்னுங் கருத்தினாலே வினவுவார், மனத்தின் வடிவுதனையென்றார், வினுவாளா போமென ஆசங்கித்துக் கூறுவார், உலகமாயை யென்றார். பிரஹ்மா சங்கற்பபுருடர் பிருதிவியாதியற்ற ஆகிருதி யுடையவர், கேவலஞ் சித்தமாத்திரவடிவினர், மூவுலகத்தின் நிதிக்குங்காரணர். எக்கற்பத்தில் எதனால் பிரஹ்மா மனோமாத்திரம் ஆவரோ பிருதிவியாதி மயான்மக மாகாரோ அதனால்விசுவமும் மனோமாத்திரமேயாகும்; எதனினின்றும் யாதுண்டாகின்றதோ அது அதுவேயாகும். இவ்வாறாகவே உலகிற்கு மனோமாத்திரத் தன்மையாம், மனத்திற்கும் பிரஹ்மமாத்திரத் தன்மையாம், எனவே பிரஹ்மாத்வைதம் பலிதமாம், ஹேபகவன்! மனதினது உண்மையான வடிவம் எத்தகையது என்பதைப்பற்றி வெளிப்படையா யனுக்கிரகிக்கவேண்டும், அம்மனத்தினாலன்றோ இவ்வெல்லா வுலகமாகிய பூங்கொத்துகள் இயற்றப் பெறுகின்றன; மனத்திற்கு எந்தரூபங் கூறப்படுமோ அதேரூபம் அகிலத்திற்கும் ஆம் தத்துவமற்றதாம் வடிவமித்தியாத் தன்மையானது பொருந்தாதா மென்பது ஸ்ரீ இராகவரது ஆசயம்.

(ச.) சகக்காரணமாம் = திரிஜகத்துக்குங் காரணமாய்ப் பிருதிவியாதி ரகிதாகிருதியான, அயனுக்கு தோன்றுமனவடிவாய், சங்கற்பமாத்திர கற்பிதமான சித்தமாத்திரோபாதி மயமாய், தான்றானே, அந்தப் பிரமன்தன் மனதினாலே தானே, சகத்தை விரித்திடலால், எல்லாம் = திருசியமான விசுவமும், உலகமாயைதனை = பிராந்திபரம்பரையான வகிலத்தை, சங்கற்பபுருடன் = சங்கற்பமாத்திர கற்பிதபுருடன் சித்தமாத்திர வுபாதிகன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாசாரம்பண சாஸ்திரத்தான் விகாரமாகிய மனதிற்கு நாமமாத்திரமேயல்லாமற் சத்துவங் கிடையாதென் றுத்தரங் கூறுகின்றார்:—சடவென.

(ச.) மனதாகாச துல்லியமெனல்:—சடவென

சடசூ னியமா யெங்கணுஞ்சேர் தனிநெஞ் சுக்குப் பேரொழிய
வுடனுங் ககனந் தனைப்போல வுள்ளும் புறம்பு முருவிலதாம்
படர்தீர் மெய்பொய் யெனும்பொருளிற் பயிறோற் றரவே மனமாகுந்
தொடர்சங் கற்ப மெங்குளதாந் தோன்று மனமு மங்குளதே.

(ப - ரை.) சட சூனியமாய் = சுயமறிவற்றுச் சொரூபமற்றதாய், எங்கணுஞ்சேர் = ஆசாவசத்தால் எல்லாவிடத்திலும் சேராநின்ற, தனிநெஞ்சுக்கு = துயர் செய்வதிலொப்பற்ற மனத்திற்கு, பேரொழிய = நாமமாத்திரமே யல்லாமல், உடனுங் ககனந் தனைப்போல = வியாபகமாகிய வியோமத்தை வியப்ப, உள்ளும் புறம்பும் உருவிலதாம் = இருதயத்தும் பாகியத்தும் மெய்வடிவ மில்லையாம், படர்தீர் = எவ்விடத்திநுந் தோற்றாநிற்கும், மெய்பொய் எனும் பொருளில் = சத்தசத்தான வத்துக்களில், பயில் = அவ்வவ்வாகாரத்தை யடைந்து, தொற்றரவே = புலப்படுவதே, மனமாகும் = மனமெனமலரப்பெறும், தொடர் சங்கற்பம் = விடயங்களைப் பின்பற்றும் சங்கற்பமானது, எங்குளதாம் = எவ்விடத்தி லுண்டாகாநிற்குமோ, தோன்றுமனமும் = புலப்படாநின்ற மனதும், அங்குளதே = அவ்விடத்தி லிருப்பதேயாம்.

(ஸ்ரீ - வீர.) வியோமத்திற்கும் பாமரரானும் வாசாரம்பணாதி சாஸ்திர சமஸ்காரம் வாய்ந்த சித்தரானும் சிறிதுஞ் சித்திரூபம் பார்க்கப்படுவதே யில்லையாம். அநர்த்தமூலமாகிய மனம் இல்லையாயின் அதன் மூலத்தைக் கெடுக்கும் பொருட்டு முயலாநின்றயாம் கிருதார்த்தர்கள் ஆகேம் எனவினவ மயலோன் திருஷ்டியாலென விடைதருவார், எங்கணுஞ்சேர் என்றார். யாண்டுங்கூடி யிருத்தல் கூடாததாம் எனவுண்டாஞ் சங்கையை மங்கவைப்பார் படர்தீர் என்றார். தோற்றரவு = பிரதிபானம் = ஞானம், எத்தகைய ஞானமெனிற் கடஞானம் படஞானம் எனப் பிரசித்தமா யிருப்பதென்பார் பயில் என்றார். சூனியஜட ஆகிருதியையுடைய அகாயத்திற்குப் பெயர்மாத்திரமே யல்லாமல் யாதொன்றுங் காணப்படாததேபோல இம்மனதிற்கு மொருவடியத்தையுங் காணோம் இதனானே யதன் காரியங்களில் "விகாரம் வாக்கால் விரித்தபெயரதே" எனக்கேட்ட மித்தியாத தன்மை பொருந்தும். சூனியஜடாகிருதித் தகைமை பூதாகாசத்திற்கும் மனத்திற்கும் பொதுவாகப் பொருந்தும், விண்போன்றமையையே மேலும் விரிப்பின், எல்லாவிடத்திலு மிருந்துகொண் டிருந்து மிவ்வாகாயம் சத்ரூபமாகாததேபோல இம்மனமும் சத்ரூபமாக வெளியிலு மிருப்பதில்லை; உள்ளிருதயத்திலு மிருப்பதில்லை; இம மனதினின்றுங் கிளம்பியிருக்கின்ற ஜகத்தானது மயற்கு விஷயீபூதமா யத்தியஸ்தமாய்த் தோற்றுங் கானனீருக்குச் சமானமாய்த் தோற்றும். இதன்ரூபமானது கனசங்கற்பத்தினாலே இரண்டாவது சந்திரனைப் பார்க்கும் மயற்குச் சமானமாம். உண்மை

யாக மனமெனப் பெயரிய பதார்த்தமொன் றில்லவேயில்லை யெனினும் சாஸ்திரசம் பந்தமான விவகார சாதகமாகக் கற்பனையா யதனுருவஞ் சொல்லவேண்டியதேயாகும், பிரத்தியக்ஷத்தில் எதிரேயிருப்பதும் மிருதியாதி பரோக்ஷத்திலில்லாததும்ஆகிய அருத் தத்தினிடையில் எவ்விவ்வவ்வாகாரத் தோற்றமுளதோ, எல்லாஜனங்கட்கும் பிரசித்த மாகத்தெரியவருமோ அதுமனமென அறியத்தக்கதாம், மற்றொன் றுமல்லவாம், தொகுத் துக் கூறுமிடத்து எப்பொருட் டோற்றமுண்டோ அதுவே மனமென வறையப்பெறும், மனமெனப் பெயரியவஸ்து வேறொன் றொருகாலுங் கிடையவே கிடையாது; மற்றோ, நிராகாரமாய் சித்திற்கு யாதொரு அருத்தாகாரமான அத்தியாசமுளதோ அதுவே மனதாம்.

(ச.) சட சூனியமாய் = சடாகிருதியாய் அற்பமுந் திருசியமாகாததாய், பேரொ ழிய = நாமமாத்திர மன்றி, சடசூனியமாய உடனுங் ககனந் தனைப்போல, உருவில தாம் = சத்ரூபமின்றும், உள்ளும் புறம்புஞ் சத்ரூபமாகத் தோன்றாத தாயினும் எவ்விடத்தும் தற்காரியந் தோற்றுதலான் மனதும் வியோமம்போ விருப்பதென்பதாம். பொருளினது, பயில் = பிரதீதிமாத்திர ஆகாரமாகப் பொருந்திய, தோற்றரவே = ஸ்புரணமே, மனமாகும். ஆந்தரவியாபாரஞ் சங்கற்பம், பாகிய வியாபாரம் பொருளின் றோற்றமென் றுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் விருத்தி சாமானியமாக இவ்விலக்கணங் கூறப்பட்டது, இனி அசாதாரண விருத்தியினைக் கூறுகின்றார்:—மனத்தினென.

மனத்தின் வடிவு சங்கற்ப மற்றிவ் விரண்டு மொன்றாகு
மனர்த்த மோக மலம்பந்த மவித்தை மாயை தமமுதலா
மினத்த பெயர்சங் கற்பத்துக் கேற்ற பெயரா மிதுநழுவிற்
கனத்த சகக்காட் சியும்போகுங் கதிர்விட் டெறிக்கும் பரவடிவம்.

(ப - ரை.) மனத்தின் வடிவு = மனத்தினது சொரூபம், சங்கற்பம் = சங்கற்பனை மாம், மற்றிவ்விரண்டும் = இதனையே இந்த இரண்டும், ஒன்றாகும் = பேதியாதாம், அனர்த்தம் = சமுசாரம், மோகம் = மயக்கம், மலம் = பாசம், பந்தம் = அகங்காரக் கிரந்தி,அவித்தை=பிரஹ்மவித்தையைப் பிரதிபந்தித்துக் கொண்டிருந்து அதனாலேயே கெடுவது, மாயை = சர்வவிக்ஷேபகாரணம், தமம் = ஆவரணம், முதலாம் = என்பன வாதிய, இனத்தபெயர் = இன்னோரன்ன நாமங்கள், சங்கற்பத்துக்கு = மனோவிகாரத் திற்கு, எற்றபெயராம் = பொருத்தமான நாமங்களாம், இது நழுவில் = இந்த சங்கற்ப சாலமானது நசிக்கில், கனத்த சகக்காட்சியும் போகும் = ஒருவிதத்தினும் தீராதான திடதரான பூமியாகாசரூபத் தோற்றத் திருசியமும் தொலைந்துபோம்; பரவடிவம் = மேலானதனது ஒளியுருவம், கதிர்விட் டெறிக்கும் = நிருமலப்பிரகாசமயமாய்ப் பிரகா சித்துக்கொண் டிருக்கும். (27)

(ஸ்ரீ - வீர) சங்கற்ப மனங்கள் ஒருகாலத்திலும் எவரானும் எவ்வகையானும் வேறு பிரியாவென்பதாம். இவ்வண்ணம் மனதிற்குப் பந்தமூலத் தன்மையையும் சொரூப விசேஷத்தையும் புகன்று ஞானத்தானே மூலத்தோடு கூடிய அதற்கு நிவிருத்தியுள தாயவழி, ஆன்மாவிற்குக் கைவல்லியமாம் என்பார், இது நழுவிலென்றார். ஜகத்தென்று சொல்லப்பெற்ற சங்கற்பஜாலங் கழிந்தபோது எவ்வான்மவடிவம் எஞ்சாநிற்குமோ அதை அபூத உபமானத்தானே தெளிவுபடுத்துவார், கனத்தவென்றார். தோற்றுந் தோற்றமொழிந்த வழிதொல்லை யொளியே. தோற்றிமொல். சங்கற்பிக்கின்றதே மன

மென அறிந்துகொள்ளல் வேண்டும், சங்கற்பத்தினுமது வேறுவதே கிடையாது, எது போன்மெனின்? நெகிழ்ச்சியானது நீரினும் வேறாகாததேபோலும், அசைவானது வாயுவினும் வேறாகாததே போலும் என்றுணர்க. அதனையே விஷயபேத விவஸ்திதியைக் காட்டும் வாயிலாய்த் திடப்படுத்துகின்றார், மற்றென, யாண்டுச் சங்கற்பமுண்டாகின்றதோ ஆண்டு அம்மனம், அங்கமாம், அவ்வாறே நிலைபெறும் சங்கற்பமனதுகள் ஒருகாலும் ஒருவராலும் பிரிவுபடுவதே கிடையாது. அங்ஙனமாயின் சித்தோடு கூடியிருக்கும் விருத்தியே பதார்த்தத் தேற்றமெனப் பகரப்படுகின்றது, ஆண்டுச் சித்திற்குச் சத்தியத்தகைமை யிருப்பின் அதனோடுகூடிய மனதிற்கு மித்தியாத் தகைமையுறல் எங்ஙனங்கூடுமெனின்? பொய்விடயாகாரத்தாற் பொய்யாயின் ஆகுக, சத்தியசித்தின் சேர்க்கையாற் சத்தியமாயினும் ஆகுக, எவ்வாறுகூறினும், இஷ்டமேயல்லாமல் இவ்வாறுதானிருக்கவேண்டு மென்பதாக ஆக்கிரகமில்லை, பதார்த்தத்தோற்றம் எங்ஙனமிருந்தாற்று னென்னே, அத்துணைமாத்திரம் மனமென அறிந்துகொள்ளல் வேண்டும். அவித்தை சமுசாரம், சித்தம், மனம், பந்தம், மலம், தமம், என்பனவாய பரியாய நாமங்கள் திருசியத்திற் குண்டென உத்தமர்க ளுரைப்பார்கள், திருசிய ஜாலமாகிய சங்கற்ப ஜாலமொழியவே சொரூபமாத்திரம் எஞ்சாநிற்கும், விடயமில்லாமல் ஞானத்தின் நிதி சம்பவிக்கமாட்டா தென்னும் எண்ணத்தினைத் திருஷ்டாந்தத்தால் அநுபவப் படுத்துவார் கனத்தவென்றார், ஒளிர்விக்கப் படுவனவான திக்குப்பூமி யாகாசரூபங்களியாவுமில்லாதபோது ஒளிக்கெத்தகைய நின்மலரூபம் பவிக்குமோ, அதுவே மனமற்ற நினது வடிவமாம்.

(ச) மனத்தின் வடிவு—மொன்றாகும், மனச்சங்கற்பம் மனமெனக் காரியகாரணங்களுக் கபேதத்தினுற் கூறப்பட்டது. உண்மையாகப் பொருளின் றேற்றமுஞ் சங்கற்பமுமுடையது மனமென்பது லக்ஷணார்த்தம். சம்சாரம் முதலாம், பெயராம், இவ்விதமானமனது நசிக்கிற்றானே சொரூபானுபூதி யுதிக்குமெனல். இது நழுவில், கனத்தசகக் காட்சிக ணழுவும், திசைபூமி யாகாசரூபங்களான திருசியத் தோற்றங் கணசிக்கும்; மனேலய வேதுவினுற்றிசையாதி ரூபசராசராத்மகத்திருசியம் அப்பிரதீதியாயின் பர வடிவம் = சித்ரூப ஆத்மாவினது நிர்மலரூபம், கதிர்விட் டெறிக்கும் = சொயஞ்சோதியாய்ச் சொலிக்கும். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்திருசியம் அறுதலையே தனிக்கேவல நிலைமையெனத் தர்ப்பணதிருஷ்டாந்த வாயிலாகத் தெளிவுபடக் கூறுகின்றார்:—நிற்பவென.

(ச) அதனையே விரித்துரைத்தல்:—நிற்பவென.

நிற்ப நடப்பவெனு மனைத்தி னிழலா டாது வெறிதிருங்குந்
தற்ப ணந்தா னெப்படியோ தானே விளங்குமப் படியே
கற்ப முறுநீ நான்முதலாங் காட்சி விகற்ப மெலாமடங்கி
யற்ப மெனினுங் காட்சியறி லதுவே தனிக்கே வலநிலைமை. (28)

(ப - ரை.) நிற்பநடப்ப வெனுமனைத்தின் = ஸ்தாவரஜங்கம ரூபமென்னும் எல்லாவற்றின், நிழலாடாது = பிரதிபிம்பங்கள் தோற்றாது; வெறிதிருக்குந் தற்பணந்தான் = சும்மாவிருக்குங் கண்ணுடியானது, எப்படியோதானே விளங்கும் = தான் மாத்திரம் தெளிவாய் விளங்குவ தெவ்வண்ணமோ, அப்படியே = அவ்வண்ணமே, கற்பமுறு = ஆயிரங் கோடியாய்க் கற்பனை செய்துகொண் டிராநின்ற மூவுலகம், நீநான் முதலாம் = துவம் அகம் முதலான, காட்சி விகற்பமெலாம் = திருசிய விபரீதங்கள்

யாவும், அடங்கி = அசத்துவத்தை யடைந்தவழி, அற்பமெனினும் காட்சியறில் — ஒருசிறிதும் அத்திருசிய வாதனையே யில்லாமற் றொலையுமாயின், அதுவே தனிக்கேவல நிலைமை = அவ்வாளா வாழ்வதே ஒப்பற்ற பரிசுத்தமான அவஸ்தையாம்; வெறுஞ்சொரூபமே யிருத்தலின் என்றுணர்ந்து கொள்க. (28)

(ஸ்ரீ - வீர.) திக்குப்பூமியாதி சகலவிளங்குறும் பொருள்கள் இல்லாதபோது வியாபியாயும் சலனமில்லாததாயும் உள்ள சூரியனது பிரகாசம் இருக்குமாயின் அதனது சொரூபம் கைவல்லிய அவத்தையின் மாட்டு ஆன்மசொரூபத்தினது திருஷ்டாந்தம் ஆம். பூத உபமானத்தினும் அதன் சொரூபத்தைத் தெளிவு படுத்திக்காட்டுவார், தற்பண மென்றார், அகில அசலாதி பதார்த்தங்களின் பிரதிபிம்பங்களை யடையாம லிருக்கும் கண்ணாடி, அக்கண்ணாடியின் கண்ணே தாரண விசேடத்தான் பிரதிபிம்பப் பெருமயற் குத்தக்கவிழியின் கூட்டின்மையானே கவரப்பெறாத அகிலப்பிரதி பிம்பமாம்; அத்தர்ப்பணத்தின்பால் எத்தகைய தர்ப்பணத் தன்மையோ, அத்தகையதே திருஷ்டாந்தமாம், எத்தகையது அஃதெனின் ? கேவலம் தர்ப்பண சொரூபமாயிருப்பதாம். ஒன்றையு முன்னும் லிருத்தலினாலேயே அவ்விடயப் பார்வையற்றிருப்பச் சாக்ஷியினிடத்தில் அத்தகைய கேவலத் தன்மையான துண்டாம் என்றறிக, மூவுலகம் நீயாம் என்பனவாய திருசியங்க ளிலாதபோது விமலவடிவமாய திருஷ்டாவிற்கு அத்தகைய கேவலீபாவ மானது உண்டாம். சைலமுதலிய சருவப்பிரதி பிம்பங்களுந் தோற்றாதிருக்குந் தருப்பணத்தில் தருப்பணத் தன்மையானது கேவலந்தருப்பணான்ம வடிவமா யெப்படியிருக்கின்றதோ அப்படியே, நீயும் யாமும் உலகமும் பிறவும் ஆகிய திருசியசம்பிரமம் எல்லாம் ஒழிந்தபோது திருஷ்டாவினிடத்திற் றிருசியத்தைக் காணவேண்டுமென்னும் நோக்கம் இலதாகவே திருஷ்டாவினிடத்திற் கேவலத்தன்மை யிருக்கும்.

(ச.) நிழலாடாது = பிரதிபிம்பத்தைப் பொருந்தாமல் எப்படித்தானே விளங்குமோ. அப்படியே சகமென்பது முதலாம், காட்சி விகற்பமெலாம் = திருசியப்பிராந்தியனைத்தும், திருஷ்டாவி லடங்கி, அறில் = அத்தியந்தம் அப்பிரதீயமானமாயின், சின்மாத்திரரூபந் தானே விளங்கும், அதுவேதனிக் கேவலநிலைமை (ஸ்திதி) பிரதிபிம்பத்தைச் சேராத தர்ப்பணம்போற் றிருசியத்தைப பற்றாத சைதன்யதிருஷ்டா கேவல சொரூபமாகவே பிரகாசிப்பன் என்பதாம். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்விதமான கைவல்யப் பிராப்தியில் மனமேவிரோதியாம் ஆகலின் அதன்ழிவின் பொருட்டுப் பெருமுயற்சியைச் செய்யவேண்டு மெனக்காட்டற் பொருட்டு அதனது துராத்மத் தன்மையையே விரித்துக்காட்டு கின்றார்:— காண் பரியவென.

காண்பரிய மனங்காட்சிப் பொருளை யெல்லாங் கனவுதரு கனவுபோற் காட்டா நிற்கும், பூண்பதிலா மனஞ்சலன சத்தியாலே பொலியுமசை யுந்தியங் கும் போகுமீளும், விண்பயிலுஞ் செருக்குமிகு மகங்கரிக்கும் வேற்றுருவாம் பெருங்கற்பமேவும் போதிற், சேண்படவெல் லாப்பொருளுந் நீரமாய்ந்து செறியுமுப சாந்தமே சேடமாகும். (29)

(ப - ரை.) காண்பரிய = முக்காலத்திலு மில்லாததேயும், காட்சிப் பொருளையெல்லாம் = இருப்பதுபோற் பொலியாநின்ற கூடியவடிவ இத்திருசய மயத்தோடங்கள் யாவற்றையும், கனவுதருகனவுபோல் = சொப்பனம் சொப்புனாந்தரத்தைக் காட்டு வதேபோல, மனம் = உள்ளமானது, காட்டாநிற்கும் = வாதனைவயு மாய்த்தோற்று

வித்துக்கொண்டே யிருக்கும், பூண்பதிலாமனம் = பூரண சொரூபத்தைகாட உண்முக மாகாத சித்தம், சலனசக்தியாலே = அலைவுதரு மாற்றலாலே, பொலியும் = விலங்கும், அசையும் = சஞ்சலிக்கும், தியங்கும் = மயங்கும், பொகும் = செல்லும், மீளும் = மொத்துண்டு திரும்பும், வீண்பயிலும் = வாளாதிரியும், செருக்குமிரும் = களிப்புமி கும், அகங்கரிக்கும் = கருவிக்கும், வேற்றுருவாம் = உயர்வை விட்டுத் தாழ்வையடை யும், பெருங்கற்ப மேவும்போதில் = மகாப்பிரளயமானது வந்தடையுங் காலத்தில், சேண்படவெல்லாப் பொருளும் = ஆகாயமுட்பட அகிலதிருசியங்களும், நிரமாய்ந்து= முற்றினும் அசத்தாகி, செறியும் = சருக்காதியில், உபசாந்தமே = பரமசாந்தமே, சேடமாகும் = எஞ்சியிருக்கும். (29)

(ஸ்ரீ-வீர.) தாழ்வை யடைதலாவது. தேகாதி யநாத்மரூபத் தன்மையையேனும் அதமத்தன்மையையேனும் அடைதலாம். இங்ஙனம் சஞ்சலசக்தியோடு கூடி கேவலம் மனமே சலிக்கின்றதே யன்றி யாத்மா அலைவதே கிடையாதாம். முன்மொழிந்த கைவல் லியப் பிராப்தியானது பரமாத்ம தரிசனத்தா லுண்டாகின்றது என்றியம்புவதற்காகப் பிரகிருதி சப்பந்தமான பிரளயத்தைப்பற்றி யாதியிற் பரமாத்மரூபத்தைப் பிரதிபாதிப் பார். பெருங்கற்பமென்றார். பராபரமா மப்பொருளை வயங்கக்கண்டால் என்பதற்கு முன்னுள்ளவற்றால் என்றுணர்க. சருக்காதியில் என்றதற்குச் சிருஷ்டியின் முற்போதி லென்றேனும், சிருஷ்டிக்கப் படுகின்றது இதனாலெனச் சருக்கம் காரணமாம் அது ஆதியில் நிருவிகாரப் பிரஹ்மமே காணப்பெறா நிற்கும். காண்பரியமனம் = அசத்தாய மனமெனினுமமையும் அசத்தாகவே யிருந்து சதாகாரத்தைக் காட்டும் என்பதாம், இந் தத் துவைதமானது தொனிசெய்யும் மலடிமகன்போல அசத்தே சிருஷ்டியின் முன் னுண்டாகவே யில்லை கனுப்பட்டணம்போல் மனத்திற் றோற்றும், மனது திருசியமய மாயழிவு வடிவமாயிருந்து தோடமிதனை யுண்டாக்கும், கனவானது வேறு கனவைத் தோற்றி வைப்பதேபோல அசத்தையே சத்தாகாரமாய்த் தோற்றிவைக்கின்றது, அம் மனது சுயமாகவே இஷ்டப்படி விரைவில் தேகத்தைச் சங்கற்பிக்கின்றது, நீண்டபா வனை விஸ்தாரத்தையுடைய அம்மனதினுனே இவ்விந்திரஜால இலக்குமி விரிக்கப்படு கின்றது; கேவலம் மனதே சஞ்சலசக்தியினாலே எங்கு எப்போழ்து சலிக்கின்றதோ அங்கு அப்போழ்து விளங்குகின்றது, சுற்றுகின்றது, செல்கின்றது, வாசிக்கின்றது, பிரமிக்கின்றது; மூழ்குகின்றது, கொல்கின்றது, சுயம் சம்சாரதசையிலுற்ற தாழ்வை யும், கைவல்ய இலக்கண மேன்மையையும் அடைகின்றது, என்பதாக மயக்கத்தாலே தோற்றுநிற்கும். இங்ஙனம் விசுவத்தின் மூலமான மனப் பொய்ம்மையின் வருணனை யின் பிரகரணப்பொருள் துணிவுற்றவழி யதனதிஷ்டான தத்துவத்தையும் அதன் ஆரோபப் பிரகாரத்தையும், அது பொய்யாவதிற் காரணத்தையும் விரிவாக அறிய வேண்டுமெனக் கூறுவார் பெருங் கற்பமென்றார், மகாப்பிரளயம் வரும்காலத்தில் உலகம் சூக்குமமாய் விட்டபடியால் அருத்தக்கிரியை யசமர்த்தத் தன்மையை யடைந்த போது வருஞ்சருவதிருசிய சிருஷ்டியின் ஆதியில் விசேஷமற்ற சாந்தமே எஞ்சி யிருந்தது.

(ச) காண்பரியமனம் = அசத்தாகாரமான மனதே அசத்தாகாரமான சாட்சி, தியங்கும் = பிரமிக்கும், (ஸ்ரீ வசிஷ்டர்) பெருங்கற்பம் = காட்சி, திருசிய மயதோ ஷம் = திருசியரூபவிகாரம். (29)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் திருசிய அசத்துவம்போலத் திருஷ்டாவிற்கும் அசத்துவமே பொருத்தமாம், " அசத்துத்தான் இதற்குமுன்னிருந்தது, அசத்துயிருந்

தில்து சத்து மிருந்தில்து அப்போது" என்பதாதி சுருதியினாலே யென ஆக்ஷேபிக்க உத்தரங் கூறுகின்றார்:—அத்தமியென,

அத்தமி யாத சோதி யருக்கனு யளவி லாதாய்
மெத்திய பிணியி லாதாய் மேவரும் பிறப்பி லாதா
யெத்தலங் களினு மென்று மியாவுமா யாவுஞ் செய்து
முத்தியு மாகி யோங்கு முதற்பரம் பொருளொன் றுண்டே. (30)

(ப - ரை.) அத்தமியாத=மறைவுபடாத, சோதி = பரப்பிரகாசமாய் விளங்கும், அருக்கனாய் = ஞானசூரியனாய், அளவிலாதாய் = அளவிட முடியாததாய், மெத்திய பிணியிலாதாய் = துயர்ப்படுத்தும் ரோகமொன்றும் ஒன்றாததாய், மேவரும் பிறப்பிலாதாய் = பிணிக்கிடமாய தேசங்களில்லாததினாலேயே பிறப்பு முதலியவை யற்றதாய், எத்தலங்களினும் = எவ்விடத்திலு மிருந்து தேசபரிச் சேதமற்றதாய், என்றும் = எல்லாக்காலங்களிலு மிருந்து காலபரிச் சேதமற்றதாய், இயாவுமாய்=சர்வான்மகமாயிருந்து வத்துபரிச்சேத மற்றதாய், யாவுஞ்செய்து = உபாதிவயத்தாய்ப் பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்து, முத்தியுமாகி = ஓங்கும் சர்வ அநர்த்தங்களும் விடுபட்டுப் பரமானந்தரூபமாகி விளங்குவதாயுள்ள, முதற்பரம்பொரு ளொன் றுண்டு = அநாதி ஜகத்ததிஷ்டான மேன்மையுற்ற அத்விதீய உண்மைப் பொருண்மாத்திர மிருக்கின்றது.

(ஸ்ரீ - வீர.) மறைப்பற்றது தோற்றமற்றது என்பதாக முதற்கடைப்பாவ விகாரங்களை நிடேதஞ்செய் துள்ளமையின் இடையினிகழும், நான்கு பாவவிகாரங்களும் நிடேதிக்கப்பட்டன வென அறிந்துகொள்ளல் வேண்டும். அப்பொருள் தேவசொரூபமாயிருத்தலால் அஜடமெனவறிக, விளங்கி விளக்குவதாதல் ஓரொருகாலா மாலோவென வினுதல் விலக்குவார், சோதியருக்கனு யென்றார். அது துக்கமுடைய தன்றென்பார் பிணியிலாதாயென்றார். என்று மென்றது எல்லாப் பதங்களோடும் புணர்ந்து சிறப்பாயினும் சிறப்பேயாம். அதற்குப் பூர்ணத் தன்மையைக் காட்டும் பொருட்டே சர்வான்மகயாவும் என்றதாம்; மற்றையரைப்போலச் சர்வகதத்வம் சர்வமூர்த்தம் சம்போகத்வம் பூரணமென்ற தன்றுமென்க. எல்லாமாயிருப்பதன் கண்ணே ஏது யாவுஞ்செய்தலாம், எல்லாரூபமாகவும் விவர்த்தமாகத் தோற்றலாம், இதுவே சர்வசிருஷ்டி யென்ப. அல்லது நிமித்தகாரண மென்றேனு நிகழ்த்திக்கொள்க, அதுவேமகேச்சுரனாகி யிருத்தலின் யாவுஞ் செய்தலெப்ப எல்லாவற்றையும் நியமிப்பதாமெனவும் தெரிந்துகொள்க. சத்தான அத்தமியாத சோதிச்சித்தாய் அருக்கனாய், ஆதிமத்தியாந்த ரகித தேவனாய் இன்பமயமாய் நோயற்றுப் பரிபூர்ணமாய் எப்போதும் சர்வக்கிரியா சக்திசம்பன்னனாய்ச் சருவமாய் நித்தியமாய மகேசுரனாய்ப் பரமான்மா விருக்கின்றது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமாத்மா யாவுஞ்செய்து சருவேசுரராயின் காரிய நியமிய சாபேக்ஷத் தன்மையானே சவிகற்பமாம் என ஆசங்கித்துச் சருவ கருத்துருத்துவாதிகளும் அவித்தையா லாவனவே, உண்மையாயோ நிருவிகற்பகமே அதனது சொரூபம் எனக்கருதிக் கூறுகின்றார்:—பகரென,

பகர்வரிதாய் முத்தராற் பயில்வ தாகிப் பரமுதலாம் புதிதான பலபேர் பெற்று, மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ் சுத்த வேதாந்தம் விளங்கினோர் பிரம மென்றுங், ககளறுவிஞ் ஞானிகள்விஞ் ஞானமென்றுஞ் சூனியர்சூனிய மென்றுஞ் சொல்லப் பட்டுந், திகழிரவி தேசுக்குந் தேசாய் நின்று தேசளித்துத் திகழ்வித்துத் திகழாநிற்கும். (31)

(ப - ரை.) பகர்வரிதாய் = வாக்கால் வசனிக்க முடியாததாய், முத்தராற்பயில்வ தாகி = அவ்வாறாயினும் ஜீவன் முக்தர்களாற் தற்சொரூபமாய்க் காண்பதாகி, பர முதலாம் புதிதான பல பேர்பெற்று = இயற்கையிலேயே யில்லாததா யுபதேசப் பொருட்டாக நவநவமாய்ப் பரமாத்மா முதலான செல்வத் திருநாமங்களை யலங்கார மாக உடையதாகி; மிகவுணர் சாங்கியர் = மிக்க மேதாவிகளாகிய சாங்கிய சாஸ்திர முடையார், புருடன் என்றும் = புருடன் என்னவும், சுத்தவேதாந்தம் விளங்கினோர்= தூய்தாகிய மனத்தினர்க்குரிய மறைமுடி யுணர்ந்த பெரியோர், பிரமமென்றும் = பெரிதினுக் கெல்லாம் பெரியதாய பிரஹ்மமென்னவும், துகள் அறுவிஞ்ஞானிகள் = குற்றமற்ற த்வம்புரியும் விஞ்ஞான வாதியர், விஞ்ஞான மென்றும் = கணிகவிஞ்ஞான மென்னவும், சூனியர் = சூனியவாதியர், சூனியமென்றும்=சூனிய மென்னவும், சொல் லப்பட்டும் = பெயர் புனைந் தலங்கரிக்கவும் பெற்றதாகி, திகழ் = ஆயிரங் கிரணங்களு டன் விளங்காநின்ற, இரவிதேசுக்கும் = மார்த்தாண்டன் ஒளிக்கும், தேசாய்நின்று = ஒளியாயுள்ளும் புறம்புமிருந்து, தேசளித்து = பிரகாசத்தையீந்து, திகழ்வித்து = ஒளிர்வித்து, திகழா நிற்கும் = பிரகாசியா நிற்கும். (81)

(ஸ்ரீ - வீர.) மூலத்தில் யதோவாச என்பதாதிகளில் பதினைந்து எது என்னும் சப் தங்களையும் தத்சப்தங்களையும் கொண்டு கூட்டி ஆஸ்தேயென்னும் முன் சுலோகத்தோடு சேர்க்கைசெய்து அருத்தங்காண்க. அல்லது தஸ்மின் திருஷ்டே பராவரே' பராபர மாமப்பொருளை வாங்கக்கண்டால் என்னும் கூறப்படும் அது என்னும் சப்தத்தோடே னும் சேர்த்தியுணர்க. வாக்காதிகட்கு எட்டாதாகுமாயின் நேரேகாணமுடியாததன்றோ வாகுமெனின்? அறைவார் முத்தரால் என்றார். வாக்கிற்கெட்டாத பிரஹ்மத்திற்கு யாங் ஙனம் ஆன்மாவென்பதாதி பெயர்கள் கூடல் எனின் ? கூறுவார் பரமுதலா மென்றார், இந்நாமங்கள் சுவாபாவிகமாக இல்லாதனவாம். அற்றேல் முக்தர்களானே யநுபவிக்கப் படுவதேயாயினும் அவ்வாக்காதி யகோசர வஸ்துவினிடத்தில் எம்மனோர்க்கு விசுவா சம் எங்ஙனே யெனவினவ அதனது விசிஷ்டகேவலரூபங்களானே சம்பவித்தபடி சகல சாஸ்திரக் கவர்ச்சியுண்மையின் அங்ஙனமன்று மென்னுங் கருத்தானே கூறுவார், மிக வுணரென்றார். அல்லது, கூறிய பரமார்த்தத்தின் மாட்டு ஐயப்பாட்டைக் காணும் வாதி யர்க்குப் பற்றுக்கோடற்ற தன் கண்ணே ஐயப்பாடு கூடாமையின் ஐயப்பாட்டின் முன் னரே அதன் பற்றுக்கோடுண்டாதலின் சித்தமாய வதன்கண்ணே விசுவாசஞ்செய் யவே தக்கதாம் என்பார், மிகவுணரென்றார். யோகாசாரர் மதங்கூறுவார் விஞ்ஞானி கள் என்றார். விஞ்ஞானமாத்திரம் வடிவானது நியமமாக நிர்மலமானது. மாத்தியமிக மதம் மலர்வார் சூனியர் என்றார். உண்மையாகச் சூனியமே தத்துவமோ எனவரும் ஆசங்கையை யகற்றுவார் திகழிரவியென்றார். "எதனொளி யியைபினாலே யிலக்குவ னருக்க னெல்லாம்" என மறையுமறைகின்றது. எதனினின்றுங் கோசரிக்கமுடியாமல் வாக்கானது திரும்பு கின்றதோ, யாது ஜீவன்முக்தர்களாற் பிரத்தியக்ஷமாக அனுப விக்கப் படுகின்றதோ, எதற்கு ஆன்மாமுதலிய பெயர்கள் கற்பிதங்களாமோ அநாரோ பித ரூபங்களா யுண்டாகவில்லையோ, மற்றோ ஆரோபித தரும ஜன்னியங்களாமோ, விடயமென்பது விவாதமற்றதாம் சருவாதிஷ்டானமான அதன் கண்ணென்றுணர்க, யாதுசாங்கியதிருஷ்டி யுடையவர்கட்குப் புமானுகியும், வேதாந்த வாதிகட்குப் பிரஹ்ம மாயும், விஞ்ஞான முணர்ந்தவர்கட்கு ஏகாந்த நிருமலமாய கணிகவிஞ்ஞான மாத்திரமா யும் (கணிகம் = கணகாலமிருந்து கழிவது) யாது சூனியவாதிகட்குச் சூனியமாயும் இருந்து யாது சூரியன் அக்கினிகளையும் விளக்கிவைப்பதாமோ அது சகலபிராணிகட் கும் பிரத்தியக் கான்மாவாம்:

(ச.) பயில்வதாகி = பொருந்துவதாய், பரம் = ஆத்மாமுதலாம், பலபேர்பெற்று, சப்தப்பிரவிருத்தி நிமித்தங்களான நாமசாதியாதிக ளின்மையின் எப்படிப் பரமாத்மா முதலிய நாமங்கள் எனில் ? கற்பிதங்களென்பது கருத்து தரிசனமென்னுஞ் சாஸ்திர பேதத்தால் நாமபேதத்தைக் கூறல், விஞ்ஞானம் = விஞ்ஞானமாத்திரம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அருக்கன் றேயுபாசகத் தன்மையானே பிராப்தமாம், அத னினும் வேறாய ஜீவனினும் பரமான்மாவிற்குப் பேதத்தை நீக்குகின்றார்:—உரையென.

உரைபகர்வோ னுசாவிடுவோன் கேட்போன் காண்போன் உண்பவன் சிந்திப்பவனா யுலகின் மெய்யிற், றிரமுறமே வியுமேவாப் பொருளி னின்றுந் தினகரன்றே சௌச்சித்தின் நிகழ்ச்சி யுண்டாம், விரைமனம்வேர் கரணமல ரண்டங் காயாய் விண்ணெழுமா வையக்கொடியை விதிர்க்குங் காற்றாம், புரை செயுடற் செப்பனைத்துண் மணியாய் நிற்கும் புணர்புரியட் டகவுடலைப் போய் மீள் விக்கும். (32)

(ப -ரை.) உரைபகர்வோன் = சொல்பவன், உசாவிடுவோன் = ஆராய்பவன், கேட்போன் = செவிசாய்ப்பவன், காண்போன்=பார்ப்பவன், உண்பவன்=போக்தா, சிந்திப்பவன் = எண்ணுபவன், ஆய் = இங்ஙனமாகி, உலகில் = ஜகத்திலும், மெய் யில் = தேகத்திலும், திரமுற மேவியுமேவாப்பொருள் = முறையே இருந்தும் இராப் பொருள் இருந்தும் தூரத்திருக்கும் பொருள், பொருளினின்றும் = இவ்வத்துவிலிருந் தும், தினகரன்றேசு என = சூரியனது பிரகாசம்போல, சித்தின் திகழ்ச்சியுண்டாம்= சிற்பிரகாசமானது எங்கும்பரவும், விரைமனம்வேர் = வேகமானமனம் வேராகவும், கரணமலர் = இந்திரியங்கள் தளபுஷ்பங்க ளாகவும், அண்டம் காயாய் = பிரஹ்மாண் டம் நற்பலமாகவும், விண்ணெழும் = வியோமத்தில் விரிந்த, மாயைக்கொடியை = பிரகிருதி யென்னும் வல்லியை, விதிர்க்குங் காற்றாம் = ஆட்டிவைக்கும் வாயுவாம், புரைசெய்யுடல் = ஏகாதசத் துவாரங்களும் குற்றங்களும் புனைந்த தேகங்களாகிய, செப்பனைத்துள் = சிமிழ்கள் யாவற்றினுள்ளும், மணியாய் = சின்மணியாகி, நிற்கும்= விளங்கும், புணர் புரியபட்டகவுடலை = தூலதேகத்திற் பொருந்தியுள்ள சூக்குமதே கத்தை, போய்மீள்விக்கும் = இங்கும் அங்கும் கமனாகமனப் படுத்தும். (32)

(ஸ்ரீ - வீர.) மூலபதம், இருதம்போக்தா என்பதை இருதத்தின் போக்தாவென் வேற்றுமை விரியாக்குக. இருதசப்தத்தானே கருமபலங் கழறப்பெறும், "ஏயபே ருல கில் வினைப்பய னுகர்ந்தங் கிதயமே மருவுவா ரிருவர்" என்னுஞ் சுருதியில் இருதசப் தம் வினைப்பயன் எனக்காட்டி யிருத்தலின், மந்தாருதமென்பது புணராதிருப்பது இருடிவாக்கியம். இருதம் என்னுமிடத்தில் ஸ்வயம் என்றும் பாடமுண்டாம். எல்லா விவகாரங்கட்கும் சாதகமாய சோதியையும் இலக்குவதாகி முற்றினுங் காட்சிப்படும் தத்துவத்திலும் யாங்ஙனம் வாதிகட்கு ஐயப்பாட்டின் இடங்கிடைத்ததோவென வாசங் கிப்ப விரும்ப முதலியவற்றானே தூடிக்கப் படுதலின் சூக்குமவத்துக் கவர்ச்சி யாற்ற லிலா மதியுடைமையின் அதற்கிடங் கிடைக்கும் என்பதாகக்கருதிக் கூறுவார், உலகி லென்றார். உலகத்தின்மாட் டிருந்தபோதினும் பரமாத்மா இலாததுபோன்றதே யா மென்க; "சூக்குமமாய நுண்ணிய மதியினானே சூக்குமத்தைக் காண்பவரானே காண வும் பெறும்" என்னுஞ் சுருதி கூறிய விசிஷ்டபுத்தி யில்லாதவர்கட்குச் சத்துவுபலமின் மையின் அசத்துப்போலவாம், உடம்பிலிருந்தபோதினும் தூரத்தி லிருப்பதாகவேயாம். அவர்கட்கு ஆயிரங்கோடி வருடங்க ளானபோதிலும் அவர்களால் அடைய முடியாமை

யின். அப்பரமான்மாவிற்கே ஜடப்பிரகாசகத்தன்மை நியாமகத்தன்மைகள் முறையாகக் கூறுவார் தினகரனெனத் தொடங்கினர். குடம்விளங்கு கின்றது ஆடை விளங்குகின்றது என அனுபவிக்கப்பெறும் சிற்பிரகாசம் எச்சிதாத்மாவி னின்றும் பரவாநிற்கும், அதுவே சோதியாம். பகுதியே லதையாம், அல்லதையிற் பிரமாண்டமே நல்ல அழகிய பலமாம். அற்றேல் உலகத்தை யொளிர்வித்தலானும் நியாமகத்தானும் பரமான்மாவிற்கும் அதனினும் விபரீதமாய ஜீவனுக்கும் வேற்றுமை பொருத்தமாம் என ஆசங்கித்து, “அவ்விவனிங்கு புகுந்தவ னுவன், இதனினு மயலாய்க் காண்போ னிலையாம்” “வன்னிதா னொருவனுயிருக்க மற்றவ, னுன்னிய வுருவமாய்த் தோன்று மாறுபோ, லின்னதெனுமவுட் புகுந்துமேகனு, யன்னியனுகியொன் றேடுமோர்ப் புருன்.” என்பதாதி சுருதிகளினுலே அடைவிக்கப் பெற்றதாய் அதற்கே ஜீவரூபமாக விருக்குந்தன்மையை யறைவார். புரைசெய்யுட லென்ருர், நிற்கும் = சித்தாயொளிரும், சிமிழ் = சம்புடம். விரைமனம் வேர் என்பதனுனே ஆதிதெய்வ அபிப்பிராயத்தானே நியாமகத்தன்மையை நிகழ்த்தி ஆதியாத்மிக அபிப்பிராயத் தானே போய் மீள்விக்குமென்ருர். இங்குமங்குமாகக் கலங்கிக்கொண்டு திரியும் புரியஷ்டக காயத்தைச் செலுத்தும். “கண்முதற் பொறிகளைந்துங் கரும விந்தியங்களைந்தும், உண்மனமாதி நான்கு முயிர்ப்பென்ப தாதியைந்தும், விண்முதற் பூதமைந்தும் விருப்பொடு வினையவித்தை, யெண்முறை யிதனைக் கூறுமெனப் புரியட்டகந்தான்” என்று புரியட்டக சொரூபம் பெரியோர்களால் அருளப்பட்டுளது. சொல்வதும், நினைவதும், உண்மையும், போகிப்பதும், காண்பதும், தொழிற்செய்வதும், எப்போதுமே யதுவாம்; யாதொன் றுலகின்கண்ணே யிருந்த போதினும், இல்லாதது போலாமோ, யாது தேகத்தின்கண் ணிருந்தபோதினும் அசத்வாபாதக அவித்தையான் மறைபட்டபடியாற் பாமரதிருஷ்டியானே இல்லாததாமோ, அதனுனே தூரத்ததாமோ, சூரியனிடத்தினின்றும் பிரகாசமான துண்டாவதேபோல எதனினின்றும் இச்சிற்பிரமையான துண்டாகின்றதோ, எதனினின்றும் பிரகாசத்தோடு கூடியிராநின்ற விஷ்ணுமுதலிய தேவதைகள் சூரியனிடத்தி னின்றுங் கிரணங்கள் உண்டாவதேபோல உண்டாகின்ருர்களோ; எதனினின்றும்; கடலிலிருந்து குமிழிகள் உண்டாவதேபோல அசேதனமான அநந்தஜகங்க ளுண்டா கின்றனவோ, பெருங் கடலை நதிகள் அடைவன போலத் திருசியக்குழுக்கள் எதனைப் பிரளயத் தடைகின்றனவோ; யாது தீபம்போலத் தன்னையும் பிறவாற்றையும் சுவப்பிரகாசத் தன்மை யுண்மையின் தன்னையும் பிறிதையும் விளக்கிவைக்கும் ஆற்றலினுலே ஒளிர்விக்கின்றதோ தன்னை யொளிர்விக்கின்ற தென்பது அபேதத்திலும் இராகுவின் சிரமென்பதேபோலும் உபசாரமாம். யாதுதத்தம் வியாபாரங்களில் முயன்று கொண்டிருக்கும் கருமேந்திரியங்கள்; ஞானேந்திரியங்கள், பூதசூக்குமங்கள், பிராணன்கள், அவித்தை, காமம் கருமம், அந்தக்கரண மென்னும் புரியஷ்டகத்தை யுள்ளும் வெளியும் தன்னுடைய சித்துவியாப்தியினுனே அலைக்குமோ, சேதனங்கட்குச் சேதனத்தன்மை எதனுலுண்டாமோ, இங்ஙனமே அசேதனங்களின் விசித்திரத் தன்மையின் கண்ணே யாது காரணமாமோ அதுவே பரமான்மாவாம். சருவபூதங்களுஞ் சாரிதன் பாதமாம், பருவமா மூன்று பாதமமிர்தமாம் என்று மறைகூறுகின்ற எவ்வறிவாம் வாயுவினுலே, சுத்தசிதாகாசத்திற் பிரகிருதியாகிய கொடியானது, மனமாகிய வேருடையதாய்ப் பொறிகளாந் தளிர்கணிறையப் பெற்றுப் பிரஹ்மாண்டங்களாம், நற்கனிகளைத்தந்து நடிக்கும். எச்சின்மணியானது ஒவ்வொரு தேகங்களாகிய சம்புடங்களில் விளங்கிக்கொண்டிருக்குமோ அதுவே பரமான்மாவாம்.

(ச.) உரைபகர்வோன், அளவிடுவோன், கேட்போன், காண்போன், உண்பவன், சிந்திப்பவனுய், இவைகளால் பாகியாந்தர கரணங்களின் பிரவர்த்தகத்வந் தெரிவிக்கப் பட்டது. திரமுறமேவியும் = சர்வாதிஷ்டான சொரூப மாதலாற்றிண்ணமா யிருந்தும், மேவா = சருவவிலக்ஷண மாதலால் பிரதீதியாகாத, பொருளினின்றும் = பரமான்மா வினின்றும், தினகரன்றே சென = ஆதித்தனினின்றும் பிரகாச முண்டாவதேபோல், சித்தின் நிகழ்ச்சியுண்டாம் = சிற்பரிணமரூப ஞான விவகாரமுதிக்கும். வேர் = மூலம், பிரமாண்டம், விண்ணெழும் = சிதாகாசத்திலுதித்த, மாயை = பிரகிருதி, கொடியை விதிர்க்குங் காற்ருய், என்றமையால் பிரகிருதியானது பிரவர்த்தகன் அப் பரமான்மாவேயாம். தினகரன்றேசென என்றமையால் சக்திரூபமான பிரகிருதிக்குச் சக்திமானுன பிரஹ்மத்தோ டபேதந் தெரிவித்ததாம். அப்பரம்பொருளே தூலசூக்கும தேகங்களையும் பிரேரணை செய்வதெனல்: புரைசெய், நிற்கும் = இருந்து பிரகாசிக்கும், புரியட்டகவுடல் = சூக்குமசரீரம், செப்பு=பேடிகை. புரியட்டக இலக்கணமும் அகங் கார காளாயுக்தமென முன்னரே மொழியப்பட்டது. (32)

•(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமான்மாவே சரீரத்துட் புகுந்து சமுசாரத்தை யாற்று வாராயின் அதற்கு யாங்ஙனங் கைவல்லியம் எனச் சங்கித்து உண்மையாக அசம்சாரியா யிருக்கும் அதன்கண் விபரீதபாவனையா லடைவுற்ற அச்சமுசாரத்திற்குத் தத்துவபா வனையினுலே நிவிருத்தி கூடலின் யொருந்து கின்றதேயாகுங் கைவல்லியம் என்கின் ருர்:—சிருஷ்டிகாலத்தில் அவசியம் சிருஷ்டி பிரளயகாலத்தி லவசியம் பிரளயம் உண் டாக வேண்டுமென்னும் நியமமாகிய நியதி, அதனை வரைந்துகொள்ளும் தேசகாலங்கள், அவையடையுற்றவழி விரையாதியி லுள்ளிருக்கும் காரியத்தின்விரை யுப்புதல்வாயிலாய சலனம், பீஜபுடத்தைப் பிளந்து மூலமுதலிய வற்றின் வெளிப்போதலாம் அசைவு, அதனினின்றும், பின்றண்டு தளிர்கிளைமுதலாய முறையாற் பலபரியந்த வியாபாரமாய கிரியை, என்னுமிம் முறையானே சர்வபாவங்களும் எதனுல் விவகார அர்த்தக்கிரியா சமர்த்துடைத்தாஞ் சத்தையை மருவினவோ அதற்கு உலகவிலக்கண பரமார்த்த சத் தையே கூறப்படும்; அல்லது அதுவே மாயிக வியோமாதி பாவசிந்தையினுலே வியோ மாதி பாவமா யடைவுற்றதாகும், அதனினும் அயலொன்று வியோமாதி சத்தமுடைய தாகாதாம் என்கின்ருர்:—சுத்தவென.

சுத்தவறி வாதலா லாகாய பாவனையாற் சூழ்விண் ணகு
மத்திறனே யெப்பொருளும் பாவித்த போதுள்ள ததுவா மந்தச்
சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும் பல்கா
லித்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்கு மன்றே.(33)

(ப - ரை.) சுத்த அறிவாதலால் = தூய அறிவு மயமாதலான், ஆகாயபாவனை யால் = விண்ணெண்ணத்தான், சூழ்விண்ணகும் = வியாபகமான வியோமமாகும், அத்திறனே = அம்முறையாகவே, எப்பொருளும் = சருவ பதார்த்தங்களும், பாவித்த போது = பாவனை செய்தகாலத்தில், உள்ளததுவாம் = அவ்வவ்வாகாரமாக அவ்வப் பொருள் உண்மைபோலத் தோற்றும், அந்தச் சித்திடையே = அவ்வறிவு வடிவ ஆன் மாவின்கண்ணே, மூவுலகும் = திரிபுவன ஊர்மிகளும், திடர்கானலென = மருப்பூமி யின்மாட்டுப் பேய்த்தேர் தோற்றுவதே யென்ன, தோன்றிச் சிதையும் பல்கால் = அநேகமுறை ஆவிர்ப்பாவ திரோபாவத்தை யடையாநிற்கும், இத்தனையுஞ் செய்யவும் தான் = அசங்கமாகிய தான் இப்பெருமுலகங்கள் யாவற்றையும் தோற்றிவைத்து

விளையாடின போதிலும், இத்தனையுஞ் செய்யாமல் இருக்கும் = இவ்வளவையும் எப்போதுமே செய்யாமல் சும்மாவிருக்கும். அன்று. ஏ. அசைநிலைகள். (83)

(ஸ்ரீ - வீர.) அவித்தை யதன் காரியரகித அறிவுருபத் தன்மையானே ஆகாசகற்பத்தன்மைச் சிந்தையால் ஆகாசம்போலாம், அல்லது ஜீவபாவத்தை யடைந்த பரமாத்மாவானது சிதாகாச பிரஹ்மசிந்தையால் அறிவம்பரம் பிரஹ்மமேயாம். அநாத்ம பதார்த்த சிந்தையால் பெருஞ் சம்சாரத்தின்மேற் பெருகாநிற்கும். அல்லது பதார்த்த சிந்தையானே விடயீகரிக்கப்பட்டு ஆகாசாதி பதார்த்தப் பான்மையைப் பற்றியது போலவாம். பதார்த்த சிந்தையானே அருத்தத்தன்மை போன்றுயது என்றதையே விரிப்பார் தோன்றியென்றார். அற்புதமாக வியாபித்திருக்கும் சித்தர்ணவத்தில் ஆவிர்ப்பாவ திரோபாவப் பிரதானங்களாய திரிபுவன தரங்கங்கள் விளங்கும் அத்தகைத் தாய்ப் பரமாத்மாவுளதாம். பராபரமாம் அப்பொருளை வயங்கக்கண்டால் கட்டறுமென இனிவருவதோடு பொருத்தினும் பொருத்தமே, உலகப்பெருங் கூட்டத்தை மாயையாற்செய்யினும் உண்மையி லொன்றுஞ் செய்திலதாம். யாது சுத்தஞான மயத்தன்மையோடு கூடியிருத்தலின் விண்ணெண்ணத்தால் விண்ணும், பதார்த்த சிந்தையினுலே பதார்த்தத் தன்மையுற்றது போலாம்; “ உருவ மியாவையுமுன்னியே யுரனுறும்பெயர்க, டுருவதாகியே சாற்றி மெய்யிலகிடுந்தானே ” என மறையும் அறைகின்றது, தோற்றல் மறைதல் வடிவமான திரிபுவன தரங்கங்கள் அத்தியந்தம் விஸ்தீர்ணமாய எவ்வத்துவின்கண் ணிலங்குதல் மருப்பூமியிற் கானனீர் இலங்குவது போலுமா மென்றுணர்க. ஜகத்தாரோபப் பிரகாரத்தைக் காட்டி அதனது பொய்மையிற் காரணங்கூறுவார் இத்தனையு மென்றார். எப்போது முள்ள தன்னிடத்திற் றன்மாத்திரமா யிருப்பதானே பெரும்பெரும் பிரமாண்டங்களின் அநந்தமான கூட்டத்தில் விசித்திர லீலைகளைச் செய்துகொண்டிருந்த போதினும் ஒன்றுஞ் செய்யவேயில்லை யாதொரு கிரியையும் இடையவே இடையாது எனவே நிருவிகார வுபாதான முடைமையே காரியப்பொய்மையிற் காரணமாம்.

(ச.) உள்ளது = சன்மாத்திரமான பிரஹ்மம், சுத்தவறிவாதலினுல் = ஞானகார சர்வான்மக மாதலினுல், அதுவாம் = அப்பொருளாம், பிரமம் ஞானமயம் ஞானஞ் சர்வான்மக மாதலின் வியோமாதி பாவத்தால் அவ்வவ்வுருவா மென்பதாம், திடர் = மருப்பூமியில், கானலென = கானலிற் கற்பிதமான ஜலங்கள்போல், இத்தனையும் = சகல கற்பனையும், இத்தனையும் = அற்பமும், ஓர்போதும் செய்டாம லிருக்கும், ஜகத்பிரதீதி பிராந்திமாத்திர கற்பிதமாதலின் என்பதாம், திடர் = உஷ்ணம் பொருந்திய தடாகத்தில் என்றும் பாடபேதமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விரிஞ்சன் முதலாகிய ஜகத்திற்கு மூலமென நிருபிக்கப்பெற்ற வத்துவினது தத்துவத்தைக்கூறி அதனையறியிற் சகல துக்க நிவிருத்தியுண்டாமென மறைமுறையே யறைகின்றார்:—நிருவிகற்பவென.

நிருவிகற்ப வான்மாவிற் சகத்தோற்ற மொடுக்க மிவை நேராயில்லை, மருவிகற்ப பேதமுறுப் பராபரமா மப்பொருளை வயங்கக் கண்டாற், பெருமனக் கட் டறுமைய மறுங்கரும மறுமென்றான் பெரியோன் வள்ள, லொருகடுகிற் பொன்மேரு புகிலன்றே பிரமாண்ட மொடுங்கு மென்றான்.

(ப - ரை.) நிருவிகற்ப ஆன்மாவில் = விகற்பமில்லாத ஆன்மாவினிடத்தில், சகத்தோற்ற மொடுக்கமிவை = உலகின் உதயதிதிபங்க மென்னுமிவை, நேராயில்லை =

வாஸ்தவமாக வில்லை, மருவிகற்ப பேதமுறு = யாதொரு அஸ்தமயாதி பேதமும் மருவாது அறிவாகவே யிருக்கும், பராபரமாம் = பரங்களும் அபரமாகும்படி யிலங்கும், அப்பொருளை = அத்தகைய பரமாத்மாவை, வயங்கக் கண்டால் = ஐயந்திரிபறத் தரிசித்தால், பெருமனக் கட்டறும் = இருதயப் பெருங்கிரந்தியானது இரியும், ஐயம் அறும் = சருவசமுசயங்களும் போம், கருமம் அறும் = கருமங்கள் யாவுமே கழிந்தேபோம், என்றான் பெரியோன் = என்றிந்தப் பிரகாரம் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூற, வள்ளல் = ஸ்ரீ இராகவர், ஒருகடுகில் = அற்பமான ஒருசர்ஷப உதரத்தில், பொன்மேரு= அதிவிசாலமாகிய சுவர்ணபர்வதம், புகிலன்றோ = நுழைந்தாலல்லவோ, பிரமாண்டம்= சருவதிருசிய மயமாய பிரமாண்டம், ஒடுங்கும் என்றான் = காணும லொழிந்தோடி விடுமெனச் சங்கித்தார். (34)

(ஸ்ரீ - வீர.) நிருவிகற்ப ஆன்மாவானது சருவ சங்கற்பங்களையும் விட்டுவிட்டிருக்கின்றதென்பதாம், அது உதயமற்றதாம் எப்போதும் நிச்சலமாக விருப்பதாம், நாசரகித சித்துருவமான தன்னிடத்திலேயே நிராதாரமா யிருப்பது என்றுணர்ந்து கொள்க. இங்ஙனம் ஆத்ம சொரூபத்தைப் பிரதிபாதித்து, அதனை நன்குணரும் பிரயோஜனத்தைக் கூறுவார், பெருமனக் கட்டறுமென்றார். மனக்கட்டு = அகங்காரம், பராபரம் = பரம் உயர்ந்தது அபரம் தாழ்ந்தது அவ்வடிவ மெனவே சருவான்மக மாகுமென்பதாயிற்று பரமாத்மாவினும் வேறாயயாவுங் கற்பிதமாதல் அசம்பவமாதலின் அத்வைத ஞானம் அரிதுபெறுவதும் அமையாதாம் என ஆக்ஷேபிக்கின்றார். வள்ளல் ஒருகடுகிலென். நிருவிகாரமாயும், அஸ்தமவமற்ற வறிவாயும், அதனனே சுவஜாதியாதி பேதங்களையும் உதயஸ்திதி முதலிய வற்றையும் விட்டிருப்பதாயும் உள்ளது தன்னுடைய சொரூபமேயாம்; உலககாரணமாகிய மாயையும் சிறிதென்னுமாறு பெரிய பிரஹ்ம சொரூபமாகிய தன்னை யதார்த்தமாக வறிந்தபோழ்து, மூல அஞ்ஞானங் கெடுதலானே அதன் காரியமாகிய அந்தக்கரண தாதாத்மிய அத்தியாசவடிவு இருதயக்கிரந்தி நசிக்கும், அது நாசமாதலினனே அதனை மூலமாகவுடைய எல்லா ஐயமுதலியவையும் சிதையும், இவனது கருமங்கள்யாவும் நசிக்கும் எனமறையும் அறைகின்றது. யாது அளவைகளானே எங்ஙனம் அறியப் பெறுகின்றதோ அது அங்ஙனமே யிருக்குமன்றி வேறுருபமாகமாட்டாதாம், பிரஹ்மமோ அறியப் பெறுவதில்லை, அதனைச் சத்துருபமெனத் துணிவான் கூடுதல் யாங்ஙனம்? ஜக்மோ அவ்வாறறியப் பெறுவதா யிருப்பதால் அசத்தென்று கூறுதல் யாங்ஙன மேலுமென வினவிய மூன் வினுக்கள் இரண்டில், முதலாவதற்குச் சமாதானஞ் செய்து கொண்டேவந்து, இத்திருசியத்தின் பொய்ம்மை யின்றிப் பிரமதத்துவமானது எத்தகையனுலும் எக்காலத்தும் அறிய முடியவே முடியாதாமென்பது திண்ணமே யாமென முடித்தவழி, சிறிது அதிக விசேடத்தைக்கருதி ஸ்ரீ இராகவர் இரண்டாவது வினவைக் கிளப்பல்:—வள்ளல் என்றதாம். ஹேமகாமுனிவரே! பிரஹ்மத்தின்கண் உலக மத்தியஸ்தமாயின் இவ்வாறுகலாம்; ஆனுலதுவே சம்பவியாத காரிய மன்றோ: என்னை, திருசியக் கூட்டமாய பிரஹ்மாண்டமான இத்துணையுலகின் நிலைமைக்குப் பொய்ம்மை யெங்ஙனம் உளதாகும்? பரமசூக்குமப் பிரஹ்மத்திற் சின்மாத்திர ரூபத்தன்மை யுண்மையின் இத்துணைப் பிரஹ்மாண்ட விஸ்தார ஸ்தூலப்பிரபஞ்சத்தின் அத்தியாசம் பொருந்தாமையின்; ஏனெனின்கடுகின் உதரத்தில் மேருகிரி நுழைதல் எங்ஙனந்தான் முடியும்?

(ச.) நிருவிகற்ப ஆன்மாவில் இல்லை, நித்தியஞான சொரூபனான தன்னில் ஒருவனே யிருக்கின்றான் என்பதாம், உலகம் மயன்மாத்திர மாதலினனே பரமாத்மா உதி

யஸ்திதி யிருதிகளை விட்டிருக்கின்ற தெதனுல் அத்தகைத்தாம். பராபரம் = பரம் = பிரஹ்மாதிகள், அவரம் = நிக்கிருஷ்டர்கள் = தாழ்ந்தவர்கள் எதனிடத்தோ அது பராவரம், சர்வோத் கிருஷ்டம் என்பதாம் மனக்கட்டு = இருதயக்கிரந்தி, ஐயம் = சர்வ சமுசயம், பெரியோன். முன்றிருசியத்துக்கு வெளியில் அசத்துவமும் திருஷ்டாவாகிய ஆன்மாவின் கண்ணே சத்துவமும் கூறப்பட்டது அவ்விரண்டுங் கூடாதெனல் ஸ்ரீ இராகவர் = வள்ளல், பிரமாண்ட முதலிய திருசியத்திதி, ஒடுங்கும் - வாகியத்தினசிக்கும் திருஷ்டாவிலடங்கும், என்றுன், ஆதேயப் பிரபஞ்சத்தைக்குறித்து அதன் ஆதாரமான திருஷ்டாவாகிய ஆத்மா பரிச்சின்ன சூக்ஷமமாதலின் என்பதுகருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஹ்ம ஞானியரது சமாகம வாயிலாக அத்வைத சாஸ்திரத்தினது நிரந்தர அப்யாசத்தான் அதிசுலபம் அத்வைதஞானம் எனப்பரிகரிக்கின்றுர். உலகில் ஸ்தூலத்தகைமை ஆராய்ச்சியின்முன் னிற்குமாயின் நீ கூறியது சரியாம், அஃது தவ்வாறுகாதாம், உனக்குலகிலிருக்கும் ஸ்தூலத்தன்மை ஞானம் எம்மால் நாட்கு நாள் ஊகங்களானே சிதிலஞ் செய்யப்படவே யக்கால் நீயாம் கூறியதைத் துணிவாயென ஸ்ரீ வசிஷ்டபகவான் உபதேசிக்கின்றுர்:—அருந்தவனென.

அருந்த வன்சொல் வானுலா னல்லோ ராற் றிங்களா லன்றிநாளாற்
றெரிந்துவிடும் பன்னூலின் சித்தாந்த மிதுவிதனைச் சிந்தை செய்யிற்
புரித்தபுவி யிராநிற்கப் போயொளிக்கு நிட்டையுடன் போதஞானம்
விரிந்துணர் வோர்க் குயர்சீவன் முத்திபெற லாமிதுவே விதேகமுத்தி. ()

(ப - ரை.) அருந்தவன்சொல்வான் = அரிய தவத்தினையுடைய ஸ்ரீ வசிட்டபகவான் உத்தரங் கூறுவதாவது : நூலால் = நன்றான அத்தியாத்ம சாஸ்திரங்களாலும், நல்லோரால் = அருமையான சாதுசமாகமத்தாலும், திங்களாலன்றி = மாதங்களால் அல்லாமல், நாளால் = தினங்களாலேயே, தெரிந்துவிடும் = இப்பரபோதத்தை யடைவாய், பல் நூலின் சித்தாந்தம் இது = எல்லா இதிகாசங்களின் சாரம் இதுவேயாம், இதனைச் சிந்தைசெய்யில் = இதனையே சந்ததம் விசாரித்துக் கொண்டிருந்தால், புரிந்தபுவி = மனே கற்பனையினுலே தோற்றிய திருசிய ஜாலம், இராநிற்கப் போயொளிக்கும் = இருக்கும் போதே அஸ்தத்தை யடைந்துவிடும், நிட்டையுடன் போத ஞானம் விரிந்துணர் வோர்க்கு = ஞான ஏக நிஷ்டர்களாய் வெளிகவைதிக கருமத்தியாகிகளாய் ஆத்மஞான விசாரிகளாய் உள்ள மூதுணர்வோர்கட்கு; உயர் ஜீவன்முக்தி பெறலாம் = மேன்மைமிக்க ஜீவன்முக்தி திசையை யடையலாம், இதுவே விதேகமுக்தி = இது விதேகத்தான் முக்ததையேயாம், தேகேந்திரிய சதசற்பாவமாத்திரத்தான் முக்தியிரண்டின் சிறப்பாம் அனுபவத்தானே, அன்றும் துவைதப்பிரதீதி யிரண்டிடத்து மின்மையின். (35)

(ஸ்ரீ - வீர.) எதனது பரமாயிருந்தால் உயர்போதமானது உறுமோ அச்சாஸ்திரம் யாதாங்கொலோ வெனக்கடாவ விடையளிப்பார், பன்னூல் என்றுர். பாரதாதி இதிகாசங்களின் மத்தியிற் சாரத்தன்மை யுளதாவதன் மாட்டேதுவைக் கூறுவார் இதனை யென்றுர். ஜீவன்முக்தத் தன்மையுமுண்டாம் விதேகமுக்தத் தன்மையு முண்டாம். அத்வைத ஞானப்பொருட்டுத் துவைதவில்லயமே அதற்குத்தக்க வுபாயமாகச் செய்யத் தக்கதாம், விசாரத்தானே யென்னேபயன் எனின் ! இராநிற்கப் போயொளிக்கும் என்பதேயாம். விசாரஞ்செய்தன் மாத்திரையானே திருசியம் இருக்கும்போதே மறையும், மண்ணினுங்கடம் பொன்னினும் பூடணம் வேறிலாமைபோலு முணர்க. உலகதிருசியம்

அதிஷ்டான சாக்ஷாத்கார பரியந்த மிருப்பதாம், ஆராய்ச்சியினாலே நிழலிலாரோபித்த பேய்போல அஸ்தம் ஆய்விடும், பொடியாந் தடியடி முதலியவற்றாற்போலு மல்லவாம், ஆண்டும் இருந்தபடியே அஸ்தமாய்விடும், அவயப்பிரிவு முதலிய வாயிலாயல்லவாம், இதனைச் சிந்தைசெய்யில் என்பதையே விரித்துரைப்பார் கிட்டையுட னென்றார். சில தினம்வரை கிளர்ச்சியின்றிய மனத்தனாகிச் சாதுசங்க சற்சாஸ்திரப் பயில்வுட னிருத்தி யென்னின், யாமொரு நொடியில் நினது சித்துருவத்தில் திருசியமெதுவு மில்லாமற் கானனீரை யாராய்ச்சியாற் றொலைத்தல்போற் றொலைத்துவிடுவேம். திருசியமொழியவே திருஷ்டாத் தன்மையும் ஒழிந்துபோம்; கேவலமறிவு மாத்திரம் எஞ்சாநிற்கும், திருசிய மிலதாகவே கேவலம் திருஷ்டாமாத்திரம் இல்லையென்பதாக இல்லை மற்றோ இருமை யொருமைகளும் இல்லாமலேகும் தத்துவஞானமானது சற்சாஸ்திரத்தினாலேயே யாமல் லாது மற்றொன்றினாலு மாகாதாம் ஆகலின் சாதுசங்க சற்சாஸ்திரபரா யிருத்தியென் னின் பரமபதத்தை மாதங்களென்பதாக இல்லாமற் சிலதினங்களிற்றானே அடைவது திண்ணம், ஆனால் முக்கியமான சாஸ்திரம் யாதாமெனின் ? சுபமாகிய இம்மகாராமா யணமேயாம், உத்தமமான இதைக் கேட்டமாத்திரையானே ஞானமுண்டாம், எல்லா வற்றினு மிதுமாத்திரம் எங்ஙனம் உத்தம மாகுமெனின் ! எல்லா இதிகாசங்கட்குள்ளு மிதுசாரமெனக் கூறப்பெறும், வாக்கிய சந்தர்ப்ப வடிவமாய இதனைச் சிரவணஞ் செய்த மாத்திரையானே கெடாதத்தாய ஜீவன் முக்தத்தன்மையானது அவசியம் முயல வின்றியே யுதிக்கும், ஆகலின் இதுவே மிகவும் பவித்திரமாம். கனவு முதலியவற்றின் கண் ணிருந்துகொண்டே இது கனவென் றுணரின் கனமெய்யென்னும் பாவனை யொழிந்து போவதேபோல வுலகமாகிய திருசியமானது இருக்கும்போதே ஆராச்சியி னானே யொழிந்துபோம் ஞானத்திற்குச் சாதகமாகிய ஊகக்கூட்டம் யாவை இந்நூலின் கண்ணே யுளவாமோ அவை பிறநூலின் கண்ணும் உளவாம், யாவை யீண்டிலவோ அவையெதன் கண்ணும் இராவாம், ஆகலினிதனை யறிஞர் சமஸ்த மெய்ஞ்ஞான சாஸ்தி ரதனங்கணிறைந்த களஞ்சியமென வுணர்வர். அவ்வான்மாவிலேயே சித்தமுடையவர் களும் அதையடையும் முயற்சியாலேயே வாழ்நாளைக் கழிப்பவர்களும், ஒருவருக்கொரு வர் அதனையே போதிப்பவக்களும், அதனையே யெப்போதும் பேசுபவர்களும், அதைக் கொண்டே நித்தியம் சந்தோஷிப்பவர்களும் அதிலேயே இரமிப்பவர்களும், ஆகிய ஞானசாதன சிரவணாதியின்கண் ணயலொருதொழிலு மிடையிலில்லாமல் ஒரே நிஷ்டை யையுடைய ஆத்மஞான ஆராய்ச்சியுடையோர் தமக்குப் புகன்ற ஜீவன்முக்தத் தன்மை யான துண்டாம், அது தேகத்தை விட்டபின்புண்டாம் தூயமுத்தத் தன்மையேயாம், அயலன்றாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர். அருந்தவன் தெரிந்துவிடும், சாதுசங்க முதலிய வுபாயங்க ளால் மனனிதித்தியாசனங்களின் அப்பியாசத்தினால் அசம்பாவனாதி நிவர்த்திக்கிற் சிலதினத்தாலே ஆத்மாவொருவனே யீதனைத்து மெனவுணரும் பரபோதத்தை இராமா ! நீ பெறுவாயென்றதாம். அந்நிய வுபாயங்களைவிட்டு அவ்வுபாயங்களால் நிறை ந்த இவ்வாகாச ஜாக்கியானத்தையே பாவனைசெய்யிற் சகல ஜீவர்க்கும் ஆகாசஜ சாதாரணத் தன்மையினாற் சீவன்முக்தியே சித்திக்குமெனல் ! பன்னூலின், சித்தாந் தம் = சர்வ இதிகாசங்களின் சாரம், புரிந்த = கற்பிதமான, புவி = ஜகத்து, நிற்கப்போ யொளிக்கும் = இருந்து மில்லாததாம். சம்சாரஞ் சித்துருபமாகப் பிரதீதியாயின் ஜகத் தாகாரம் சத்தியமாகவே லயமாதலின் என்பது கருத்து. சத்தியமே சம்சாரஞ் சித்து ருபமாகப் பிரதிதியாயின் சகத்தாகாரம் லயமாதலி னென்பது கருத்து; இது பாட-

பேதம், நிட்டையுடன் - தொடர்ந்த ஆன்ம சாக்ஷாத்கார விருப்போடுகூட (போத) ஞானம்—ஆன்மஞானத்தை - விரிந்துணர்வோர்க்கு - சிரவணப்படி சாஸ்திரிய ஞானத்தால் விசாரித்தறிபவர்க்கு; ஜீவன்முக்தி பெறலாம் = ஜீவன்முக்தி பெறக்கூடும், இது விதேகமுக்தி போதநிட்டையுடன் - சாக்ஷாத் காரத்தோடு, போதஞானம்-ஆத்மஞானத்தையும், விரிந்துணர்வோர்க்கு - சிரவணப்படி சாத்திரசம்பந்த ஞானத்தால், விசாரித்தறிபவர்க்கு - பெறலாம் = சித்திக்கும்; அருந்தவன் சொல்வா னூலானல்லோராற் பல சமயமனைத்து மாய்ந்து தெரிந்துணருங் காலத்துச் சித்தாந்தமேதிதனைச் சிந்தை செய்யில்—என்னும் பாடத்திற்கு மிதுவே பொருளாகவுணர்க, புவியார், புவி=சகமும், ஆர் = நீசான் முதலாம் யாவரும் ஆகிய திருசியமும். இவைபாடபேதம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிரவணதி பலக்கூறு விரிக்க வுற்றபோது ஜீவன்முக்த விதேகமுக்த இலக்கணங்களை யறிய விரும்பிய ஸ்ரீ இராகவர் வினவல்:—என்பதென

என்பதுசொல் லியமுனியை யுடலிறந்த வீடுமுட லிருந்த வீடு
நன்பழநூல் வழியியற்ற நவில்கென்ற விராமனுக்கு நல்லோன் சொல்வான்
வன்பலசெய் கையிற்பயின்று முன்றோன்றும் விண்டோன்று வகைமையுற்றோ
ரின்பமுற வருஞ்சீவன் முத்திபதம் பெற்றுயர்ந்த வியல்பி னோரே. ()

(ப - ரை.) என்பது சொல்லியமுனியை = மேற்கூறிய வகையே ஜீவன்முக்தர் பெருமையைக் கூறியபோது பெருந்தவ ஸ்ரீ வசிட்டபகவானை நோக்கி, உடலிறந்த வீடும் = விதேகமுக்தியும், உடலிருந்த வீடும் = ஜீவன் முக்தியும், நன்பழநூல் வழியியற்ற = இனிய பிராசீன சாஸ்திர முறையே யான்முயன் றப்யசிக்கும்பொருட்டு, நவில்கென்ற இராமனுக்கு = அவ்விரண்டினையும் அவற்றை யடைந்தோர் இலக்கணத்தையும், உபதேசித் தருளவேண்டு மென்று பிரார்த்தனை செய்துகொண்ட ஸ்ரீ இராகவருக்கு, நல்லோன் சொல்வான் = ஸ்ரீ வசிஷ்டபகவான் றிருவருள் செய்கின்றார், வன்பலசெய்கையிற் பயின்றும் = அநேகமான கஷ்டநஷ்ட லாபத்தொழில்களோடு கூடி விவகரித்தும், முன்றோன்றும்= முன்பிரதீதியாம், விண்டோன் றுவகைமை= ஆகாயந் தோன்று முறையையுற்றோர், இன்பமுற வருஞ் சீவன் முத்திபதம் = ஆனந்தம் பெருக வாராநின்ற ஜீவன்முத்தி பதத்தை, பெற்றுயர்ந்த = அடைந்துயர் வடைந்த, இயல்பினோரே = சுபாவத்தினரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) வினவெளிப்படை, ஜீவன் முக்தனது சுவாநுபவத்தானே தெரிந்து கொள்ளப்படும் இலக்கணங் கூறுவார் வன்பலவென்றார். தோற்றமாத்திரத் தானுதல் பரதிருஷ்டி யானுதல் விவகாரத்தோடு கூடியிருந்த போதினும் யாவனுக்குத் தோற்றுநின்ற படியான இவ்வுலகம் தத்துவ திருஷ்டியானே அஸ்தமாகியதாமோ வியோமப் பிரஹ்மம் இருப்பதேயாமோ அவன் வாழும்பொழுதே முக்தன் எனப்படுவன்; எனப்படவே எப்போதும் பிரத்தியக்ஷமாகவே சிதாகாச மிருக்கும், முன்றோன்றுவுலகம் என்பதாயிற்று, விதேக முக்தனுடைய இலக்கணத்தையும், ஜீவன்முக்தனுடைய இலக்கணத்தையும் கூறவேண்டும், கேட்டபின் சாத்திரமாய நேத்திரத்தா லுண்டாம் மதியால் அவ்வாறே யான் முயலவேண்டும் என ஸ்ரீ இராகவர்கூற, ஜீவன்முக்தி வாயிலாகவே விதேகமுக்தி யுண்டாதலின் சொன்முறை தன்னினும் பொருண்முறை வலிதே யென்னும் நியாயம்பற்றி வினவிய முறையைப் பற்றாது முதலிற் சீவன்முக்தன் இலக்கணமியம்புவாம்; சாஸ்திர நிஷித்தமில்லாத விவகாரவானாயினும், எவனுக்குலகம் உண்மை விழியானே பாதமாதலின் இலய மடைந்ததாய் விண்போலச் சூனியமாமோ

கண்ணாடி நகரம்போலப் புலப்படினும் இல்லாததேயாமோ அவன் ஜீவன்முக்தன் எனப் பொறுவன். தோற்றுகின்ற இக்கிரிநதி சமுத்ராதி புலகம் உணர்வோனது தேகேந்திரிய விவகாரத்தோடுகூட மகாப் பிரளயத்தில் பரமேசுரரால் உபசங்கரிக்கப்பட்டுச் சொரூபம் பொடியாக அஸ்தமாகிப்போம். ஈண்டோ அங்ஙனமன்றும் மற்றோ தேகேந்திரியாதி விவகாரம் இருக்கின்றதேயாம். கிரிநதியாதிகளோ ஈசுரரால் உபசங்கரிக்கப் படாமையின் முன்போன்றே யிருந்துகொண்டே மற்றைய எல்லாராலும் வெட்டவெளியாக அனுபவிக்கப் படுகின்றனவேயாம். ஜீவன் முக்தனுக்கு அவற்றைக்கவரும்விருத்தியில்லாமையின் துயிலிற்போல யாவும் அஸ்தமாகியே யிருக்கின்றன. சுயம்பிரகாசமாகி விளங்கும் சிதாகாசம் கேவலம் எஞ்சிநிற்கும், பத்தனுக்குத் துயிலின்கண்ணே அக்காலத்திய விருத்தியபாவ சாமிய மிருந்தபோதினும் வருமதிவிருத்தி விரையிருப்புண்மையின் ஜீவன் முக்தத்தன்மை யின்றாம்.

(ச.) இராமனுக்கு ஸ்ரீ வசிஷ்டர் சீவன்முக்த ரிலக்கணங் கூறல்:—நல்லோன், முன்விண்டோன்று, திருசியமான விசுவத்தை, வியோமாதி ரூபமாகக் காணமல், தோன்றும் = சிதாகாரரூபமாகக் காணும்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) அச்சீவன்முக்தர்களது இலக்கணத்தையே மீண்டுமிரண்டு செய்யுட்களாற் கூறல்:—மிகவென.

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போன் மிகநொய்தாேனா
ரகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலு மழுத்த மற்றோர்
சகநெறிகள் செய்திடினு மந்நியர்போற் கண்டுகுளிர் தன்மை சான்றோர்
திகழ்மனமு நினைவுமிருந் துஞ்சிறிது மில்லாதோர் சீவன் முக்தர்.
துக்கசுகங் களிலமிழ்ந்தி மிதவாத புந்திநிலை சுபாவ மானோர்
புக்கசூழ்த் தியினனவாய் நனவின்றி வாதனைதீர் போத முற்றோர்
மிக்கசம மாயுலகால் வெருளாம லுலகினையும் வெருட்டா மேலோர்
சிக்கறநன் னினைவிருந்து நினைவிலா தவரிவரே சீவன் முக்தர். (37-38)

(ப - ரை) மிகவரும் = நுகர்வினைவயத்தால் வாராநின்ற, காமாதிகளாம் விகாரமடைந்தும் = இராகத்துவேட பயாதிகளை யடைந்து விகாரப்பட்ட போதினும், விண்போல் = உள்ளே ஆகாயம்போல, மிகநொய் தானோர் = மிகவுந் தெளிந்து பற்றற்றவர் சீவன்முக்தர். அகமெனலின்றி = அகங்கிருத பாவமில்லாமல், செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலும் = விவகாரங்களைச் செய்தபோதினும் செய்யாத போதினும், அழுத்தமற்றோர் = மதியில் யாதொருவிதமான பற்றுமற்றவர் சீவன்முக்தர், சகநெறிகள் செய்திடினும் = உலகபதார்த்த மியாவற்றினோடும் விவகரிப்பவராயினும், அந்நியர்போல் = செய்யாதவர் போலவே, அல்லது அயலார் பொருள்களில் விவகரிப்பவர் போலவே, கண்டு = எண்ணி, குளிர்தன்மை சான்றோர் = தண்மைவாய்ந்த திண்மையரானோர் சீவன்முக்தர், திகழ்மனமும் நினைவும் = சமுசார சம்பந்தமாகி யிலங்கும் சங்கற்பவிகற்பங்களும் பல எண்ணங்களும், இருந்தும் = இருந்தபோதினும், சிறிதுமில்லாதோர் = அற்பமும் இல்லாதவரே, சீவன்முக்தர் = ஜீவிக்கும்போதே விடுபட்டவர் ஆவர், (37)

துக்க சுகங்களில் அமிழ்ந்து மிதவாத = அஸ்த முதயமாகாத, அல்லது அமிழ்ந்தி = இன்பத்துன்பங்களில் மூழ்கி, மிதவாத = வாட்டமகிழ்ச்சிகளை யடையாமல், புந்திநிலை சுபாவமானோர் = மதித்திதியானது சத்துவமாகியே நிலைக்குமியல்பினர்

சீவன்முக்தர். புக்க சுழுத்தியி னனவாய் = சர்வேந்திரியங்களும் மனதும் தத்தங் கோளகத்தடங்கிய துயிலுற்று விழித்துக்கொண்டே யிருந்து, நனவின்றி=ஜாக்கிரத் தைக்கடந்து. வாதனைதீர் போதமுற்றோர் = நிர்வாசனை யுணர்வுற்றவரே சீவன்முக்தர். மிக்கசமமாய் = முற்றினும் சமதிருஷ்டியை யடைந்து, உலகால் = உலகத்தினரால், வெருளாமல்=பயப்படாமல், உலகினையும் = ஜகத்தி லிருப்பவர்களையும், வெருட்டா= பயப்படுத்தாது, மேலோர் =உயர்ந்தோர் சீவன் முக்தர். சிக்கற நன்னினைவிருந்தும்= பயாதியும் சமுசாரத் தொழிலாதியும் அற்றுக் கலாவானுயினும், நினைவிலாதவ ரிவரே= நிட்கலராகிய இத்தகையரே, சீவன்முக்தர். (88)

(ஸ்ரீ - வீர.) அவனது பரரா லறிந்துகொள்ளக் கூடியதாய இலக்கணத்தையும் கூறுவார், துக்கசுகங்களி லென்றார். அடைந்தபடி விவகாரத்தில் அமைதியுற்றவ ரென் பதாம், மீண்டும் சுவானுபவ கம்மியமான இலக்கண மியம்புவார் புக்கசுழுத்தியென்றார். தன்னினும் வேறாய துவைதமானது உண்மையாக அநுபவிக்கப் படாமையின் சீவன் முக்தன் துயிலுற்றவனுவன். விடயசந்நிதானுதியை யடைந்தபோதினும் விகாரத்தினை யடையாமையின் எங்ஙனந் துயிலுற்றவனே அங்ஙனம் துவைத ஆபாசம் புலப்படுத லின் நினைவுற்றவனு மாவன் என்பதாம் அல்லது, சாக்ஷத் தநுபவரூபமாகவே பிரஹ்மம் அநுபவிக்கப் பெறுதலின் நனவையு மடைந்துளான் என்பதாம். அவ்வாறே " ஒதரு ஞானியத்தை யுளங்கையிற் கனிபோற்காணும் " எனச் சருவேச்சுரனுலே கூறப்பெற்று முளது, இவனுக்கு நனவு அஞ்ஞனுக்கேபோலு மிலதாம், சுருங்கிய வாதனையனுதலின் சகலவாசனை விலயமாகச் சீவன்முக்த சம்பவமாதலின். பிராரப்தகரும வேகத்தானே வந்தடைந்தனவாய இராகத்வேஷ பய ஆபாசாதிகட்குத் தக்கபடி எங்ஙனம் வேண் டுமோ அங்ஙனம் நடித்தபோதினும் எவ்வறிஞனது உள்ளாத்ம வடிவம் வியோமம்போல அதி நிர்மலமாகத் தெளிந்துளதோ அவன் சீவன்முக்தன். விண்ணனது நிருமலமா யிருத்தல் போலவே ஆன்மாவும் இராகாதி மலரகிதம் ஆமெனு அறிந்துகொள்க. எவ் வறிஞனுக்கு யான் கருத்தா என்னும் வகையினதாகப் பாவனைஞானம் உண்டாகாதோ, இந்திரியார்த் தங்களி லிந்திரியங்கள் ஈடுபடுகின்றன யானல்லன், யானே அவற்றின் வியாபார சாக்ஷி அகர்த்தாவாவேன் என்று யாவன் காண்பானே ,அவனே சீவன்முக் தன். எவனது அந்தக்கரணம் ஆழ்ந்து தாழ்ந்து போவதிலையோ, அதாவது யான் இந் நிடேதத்தைச் செய்துவிட்டேன் இவ்விதானத்தைச் செய்திலேன் ஆகலின் நரகத்தில் வீழ்ந்து வருந்துவேன் என்பதாக எவனதுமதி வாதையுறுவதில்லையோ அவனே சீவன் முக்தன், கலாவானுயினும் = அவித்தையினுனே அவயவத்தோடு கூடினவனுயினும், நிட்கலன் = உண்மையாக அவயவமற்றவன், சிந்தையா பாசத்தோடுகூட நிகழ்பவனே யாயினும் உண்மையாகச் சிந்தையற்றவன். அன்னியர்தமதாம் பொருள்களில் விவகரிப் பவனைப்போலத் தண்மையன் தாபமற்றவன் துயரற்றவன், மகிழ்ச்சியற்ற மாண்பிற்கு மிஃதுபலக்கணமாம், அபிமான மில்லாதவனுகிய ஜீவன் முக்தனுக்கு, சமஸ்த அநுத் தக் கூட்டங்களினது பெருக்காலுஞ் சுருக்காலும் மகிழ்ச்சியேனும் வாட்டமேனு முண் டாகாதாம், மாலை சந்தனம் பூசைமுதலிய இன்பமுண்டாகிய போதும் சமுசாரிக்கே போலும் மகிழ்ச்சி யுண்டாகாதாம், தனஹானி திக்காராதி துக்கமுண்டாகிய போதும் தீனனுகான், இப்போதியதாய தன்முயற்சி விசேடமில்லாமலே நுகர்வினை கொணர்ந்த முற்பிரவாகத்தில் வந்த பிக்ஷான்னுதிகள் கிடைத்தபடி தேகரக்ஷை, சமாதிதாட்டியத் தான் மாலை சந்தனுதித் தோற்றமின்மையின், ஒரொருகால் எழுந்தசையில் தொடக்கத் தோற்ற மேற்படினும் விவேகதாட்டியத்தானே தள்ளுங் கொள்ளும் புந்தியின்மையின்

மகிழ்ச்சி முதலியவற்றின் இன்மை யேற்படும். விழி முதலிய இந்திரியங்கள் தத்தமது கோளகங்களிலே யிருத்தலின் உபரதியின்மையின் விழித்திருப்பன், மனோவிருத்தி ரகிதமா யிருத்தலின் துயிலுற்றோன், இதனானே இந்திரியங்களானே பொருட்டோற்ற மென்னும் ஜாக்கிர இலக்கண மில்லாமையின் சாக்கிரமவனுக்கின்றாம். போதமுளதாய போதினும் உண்டாய பிரஹ்மவித்தாந் தன்மை யபிமானாதியும் போகார்த்தந் தொடங்கிய காமாதியுந் தீதோஷமாம், வாசனைவிருத்தி ரகிதத் தன்மையானே அத்தோட மில்லாமையின் நிர்வாசனத் தன்மையாம். இராகமுதித்த வண்ணம் போஜனாதிப் பிரவிருத்தி, துவேஷமுண்டாகிய பிரகாரம் பௌத்த காபாலிகாதிகளினின்றுந் திரும்புதல், பயமுதித்த அளவு பாம்பு புலியாதிகளி னின்றும் அகலுதல் ஆம். ஆதிசப்தத்தானே மாச்சரியாதி, மாச்சரிய முதித்தமானம் மற்றைய யோகிகளினும் அதிகமதாகச் சமாதியாதியனுஷ்டானம், எழுந்தசையை யடைந்த போதினும் இத்தகைய ஆசரணம் முற்பயிற்சியானே யடைவுற்றபோது விசிராந்த சித்தனுக்குக் களங்கமியாது மின்மையின் உட்டெளிவுறைந்து நிற்கும். விண்ணின்கண் தூமதூளிமேகாதி கூடினும் பற்றிலாவியற்கையானே அதிசயமாகத் தெளிவுளதாந் தன்மை யாதல்போலும். எப்பிரஹ்ம வித்தின் பாவம் = சத்தை = இயற்கை = ஆத்மா, அகங்காரத்தோடு தாதாத்மிய அத்தியாசத்தால் உள்ளே மறைபடவில்லையோ, எம்மதியில் ஐயமேகிடையாதோ; ஐயமிலதாயவழி மூவுலகவதத்தானும் பந்திக்கப் படமாட்டான்; என்றால் அன்னிய கருமத்தால் மற்றென்னே யியம்பவேண்டும். உலகத்தில் பந்தமடைந்த புருடன் சாஸ்திரஞ் சாற்றிய கருமம் ஆற்றுபவனாகி யான் கருத்தா வென்னும்போது சிதாத்மா அகங்கிருதமாகும், துறக்கத்தை யடைவேன் என்னும் மகிழ்ச்சியானே மதிபற்றுறும். செய்யாதவனே விட்டொழித் தேனேயென அகங்கிருதத் தன்மையையும் துறக்கலாப மின்மையால் வாட்ட முதலிய பற்றுகளையும் அடைந்திருப்பன், இங்ஙனம் வேண்டா மென்ற வினைகளிலும் உலகசம்பந்த கருமங்களிலும் பொருத்தமானபடி பொருத்திக்கொள்க. ஜீவன் முக்தனுக்கோ தாதாத்மிய அத்தியாச மில்லாமையானும் மகிழ்ச்சி முதலியவை யில்லாமையானும் தோடமிரண்டு மில்லையாம். திரஸ்கரித்தல் வைதல் அடித்தல், முதலியவற்றின்கண் முயலாமையின் இவனைநோக்கி யிவ்வுலக மஞ்சாதாம், இதனானே இவன்பால் உலகருக்குத் திரஸ்காராதிப் பிரவிருத்தி யிலதாதலினாலும், ஒவ்வொருதுஷ்டன் அங்ஙன் முயன்றபோதினும் இவனுடைய மனத்தில் அத்தகைய விகற்ப முண்டாகாமையானும் இவனும் பயப்படான் என்க. சத்துரு மித்துரு மான அவமானாதி விகற்பங்கள் சமுசாரக் கலக்கங்களாம், அவையிவன் பாலிலவாம், அறுபத்துநாலு கலைஞானமுணர்ந்தவனேனும் அவற்றின் அபிமான விவகார மில்லாமையின் கலையிலாத் தன்மையாம். சித்தமானது சொரூபமாக இருந்தபோதினும் விருத்தி யுதயமாகாமையின் சித்தமற்ற தன்மையாம். சிந்தையென மூலபாடமாயினோ வாதனை வயத்தினாலே ஆத்மத்தியான விருத்தி யிருந்தபோதினும் லௌகிக விருத்தி யில்லாமையின் சிந்தையற்ற தன்மையாம் என்க. அயலாரது இல்லத்தில் விவாக உற்சவாதிகளில் தானேசென்று அவர்தம் பிரீதியின் பொருட்டு அவரது காரியங்களில் தலைப்பட்டு விவகரித்த போதினும் இலாபாலாபங்களில் மகிழ்ச்சி வாட்டவடிவ புத்தி சந்தாபத்தை யடையான்; இங்ஙனம் இம்முக்தன்தன் காரியத்திலும் சீதளனாகியே யிருப்பன்; கேவலம் சந்தாபமில்லாமையான் மாத்திரம் சீதளத்தன்மை யென்பதாக வின்றாம்; மற்றோ பரிபூரண சொரூப அனுசந்தானத்தானும் ஆமென்றுணர்க. "ஆன்மனிலாடியும் ஆன்மனிற் சுகித்தும், தேன்மலி தொழிலனே திகழ்தரும் பிரம்வித், தான்மனினிலைத்தோன் ஆரமுதடைந்தோன்" எனமறையருளிய, யாவன் விவகரித்துக்கொண் டிருந்தபோதினும் "யான் யாதொன்

றுஞ் செய்கின்றிலேன் எனச் சொரூப நிட்டனாகி யான் றத்துவவித் தெனப்படுவன் ” என மிருதியருளிய நெறியானே சிற்சொரூபத்தின் மாட்டே நிட்டையை யடைந்துளானோ அவன் விழித்துக்கொண் டிருந்தபோதினும் தூங்குவோன்போல் நிர்விகாரனே யாவன், அத்தகையன் ஜீவன் முத்தன் எனப்படுவன். கிடைத்ததைக்கொண்டு மகிழா நிற்கும் எவனுடைய முகக் காந்தியானது இன்பத்துன்பங்கள் எய்திய காலத்தும் விரிதலும் குவிதலுமடைய மாட்டாதோ அவன் ஜீவன்முக்த னெனப்படுவன், யாவன் நிர்விகாரமான தன்பாற் றுயில்பவன்போல இருப்பினும் அவித்தையாம் நித்திரை யழிந்தபடியால் தன்பால் விழித்தே யிருப்பனோ தேகேந்திரியாதிகள் பாதிக்கப்படுதலின் பொறிகளால் விடயங்கள் புலப்படும் நனவானது யாவனுக்கில்லையோ; நனவின் வாதனையை நிமித்தமாகக் கொண்டுண்டாம் கனவும் யாவனுக்கு இல்லையோ எவன் வாதனையற்ற மெய்ஞ்ஞான வடிவமாகவே யிருப்பனோ அவன் ஜீவன்முக்தன் எனப்படுகின்றான். இராகத்துவேஷ பயாதிகளின் றொடர்ந்த வடிவமாய்ச் சுழன்று நடனைப்போலத் தக்கதக்கவாறு நடித்துக்கொண் டிருந்தானெனினும் யாவன் உள்ளே விண்போல நிர்மலமறைப் பற்ற ஆன்மாவின்கண் ணிலைபெற்றிருப்பனோ அவன் ஜீவன்முக்தன் எனப்படுகின்றான். விவகரித்துக்கொண் டிருந்தபோதினும் விவகரியாம லிருந்தபோதினும் அகங்காரத்தோடு கூடாத தன்மை யாவனுக்குளதோ, அவனது மதி செய்தேன் செய்யவில்லையென்னும் அபிமானத்தாற் பற்றுறாதோ அவன் சீவன் முக்தனெனப் படுகின்றான். எச்சிதாத்மாவினுடைய மறைப்பின துபாதி நீக்கத்தானே மூன்றுலகங்களினுடைய பிரளயத்தையும், எதனதுபாதி மறைப்பை யடைந்ததனானே அவற்றின் முற்சம்பவத்தையும் யாவன் காண்கின்றனனோ, தனக்குத்தானே யொப்பானவனா யிருக்கின்றனனோ அவனே ஜிவன்முக்தன் எனப்படுகின்றான்; விதேகமுக்தியின் கண்ணேயே எஞ்சுதலில்லாமல் ஆவரணங் ஏகலின் சாக்ஷியாகிய ஈசுரரிடத்திலோ ஆவரணம் இன்மையினானும் மேற்கூறிய இரண்டன் கண்ணும் பாதியெனக் கூறியதாகும். எவனைநோக்கி யுலகர் அஞ்சாரோ, யாவன் உலகருக்கஞ்சானோ, மகிழ்ச்சி பொறாமை பயமேதுவாய அஞ்ஞான அபிமானத்தினின்றும் விடுபட்டுளானோ அவன் ஜீவன்முக்த னெனப்படுகின்றான். சருவசமுசார சத்தியபுத்தியி னின்றுஞ் சாந்தியானவனும் அன்னியர்களுடைய பார்வைக்குத் தேக அவயவங்களோடு கூடியவனா யிருந்தபோதினும் அவயவமற்றவனாவனோ யாவுந்தெரிந்தவனாயிருந்த போதினும் மனமற்றவனா யிருக்கின்றனனோ அவன் ஜீவன்முக்தனெனப் படுகின்றான், யாவன் எல்லா வத்துக்களோடும் விவகரித்துக்கொண் டிருந்தபோதினும் இராகாதி தாபமின்றிக் குளிர்ந்திருக்கின்றனனே, இராகாதி விடயங்களாகிய பதார்த்தங்களிலும் அவற்றின் வடிவமாதலின் நிறைந்திருக்கின்றானோ அவன் ஜீவன்முக்தனெனப் படுகின்றான்; தள்ளக்கொள்ள முடியாத தனதான்மாவின் கண்ணே அத்தியஸ்த மாயேனும் பொய்யென நிச்சயிக்கப் பட்டதாயேனும் இருக்கும் பொருள்களில் இராகாதி சம்பவித்தல் கூடாதன்றோ !

(ச.) காமாதிகளாம் விகாரமடைந்தும் = இராகத்துவேட பயாதிகளுக்கு யோக்கியமாக நடந்தும், மிகநொய்தானோர்=இராகாதிகள் அத்தியாரோபிதமாதலின் அந்தக்கரணத்தில் ஆகாசம்போல அதி நின்மலர். அகமெனலின்றி = அகங்காரபாவ மின்றி, நான் செய்தே னென்னும் அபிப்பிராயரூப அந்தக்கரண விருத்தியுடைய அகங்காரியன்றாய் அழுத்தமற்றோர், அந்தக்கரண விசேடமான புத்தி நலியாதவர். சந்தோடாதிகளாற் பரிசிக்கப்படாதவர், செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலும் என்றமையால், செய்கைசெய்யாமைகளில் சாமானியங் கூறல், சகநெறிகள் செய்திடினும் மன்னியர் போற்

கண்டு = சர்வார்த்த ஜாலங்களில் விவகரிப்பவராயினும், பரப்பிரயோஜனங்களிற்போல் தற்பிரயோஜனத்திலுஞ் சமதிருஷ்டி வைத்து, குளிர்தன்மை சான்றோர் = ஆனிவிருத்திகளால் தபிக்கப்படாத சீதள நிறைந்த மனமுடையோர், மனமிருந்துஞ் சிறிது மில்லாதோர், சித்தமுடையரேனும் நிற்சித்தர், சம்சாரபிமான சித்த தோடங்க ளின்மையால் ஜீவன் முக்தர். நினைவிருந்தும் = தேகபந்தராயினும், சிறிது மில்லாதோர் = பந்தரகிதர் = தேகபந்த நிமித்தமான துக்கங்க ளின்மையாற் சீவன்முக்தர். (37)

துக்க சுகங்களில் = விஷய சம்பந்தமான துக்கசுக வேதுக்களில், அழுந்தி மிதவாத = மறைந்துதியாத, துக்கவேதுவில் இலேச மின்மையால் மறையாததும், சுகவேதுவில் சந்தோஷ மின்மையால் உதியாததுமாகிய, புந்தி = நின்மல சித்தராய், சுபாவ நிலையானோர் = பிராரப்தகன்ம வசத்தினால் எப்போது ஏது பொருந்திற்று அம்மட்டாலே ஜீவனஸ்திதிபெற்று அதிக விச்சை சேட்டையின்மையர். புக்கசுழுத்தியில் = அந்தர் முகத்திற்றானே பொருந்திய, நனவாய் = விவகார முடையராயினும், நனவின்றி = வாசியானு சந்தனமற்று. (அதினேது) வாசனைதீர் = நிர்வாசனையான போதமென்பது; போதத்தின் நிர்வாசனத்துவம், பூர்வவாசனைகள் சனியாமையின், வாசனாந்தரத்தைச் சனிப்பியாமையின் என்க. வெருளாமல் = தனக்கன்னிய மின்மையினால் பயப்படாது, தன்னால் உலகினையும் வெருட்டா = சர்வபூதங்களுக்கும் அபயப்பிரதானத்தினாற் பயப்படுத்தாத, மேலோர், சிக்கற = சந்தோடக்கிலேச்சாதி பந்தங்களீங்கிய, நன்னினைவிருந்தும், ஆன்மாகாரமாகவே விளங்குதலின், நினைவிலார் எவர் அவரே சீவன்முக்தர். (38)

(ஸ்ரீ - வீர - அ-கை.) இப்போது முதலில் வினவிய விதேகமுக்த இலக்கணம் கூறத் தொடங்குகின்றார்:—நிலையென.

(ச.) இனி விதேகமுக்தியி னிலக்கணங் கூறல்:—நிலையென.

நிலையான விச்சீவன் முத்திதனைவிட் டுடலிறந்தா னிறைந்தவாயு
வலையாம னிற்பதுபோ லுடலில்லா முத்திபெறு மதனின் றன்மை
தொலையாது மறையாது தோன்றாது நணித்தல்ல தூரத்தல்ல
வுலையாது முடியாது நானல்லப் பிறனல்ல வொன்று மல்ல. (39)

இருளன்றி யொளியன்றி யளவன்றி யலைவன்றி யியல்பொன் றின்றிப்
பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றி நிறை புரணமாகி
யுருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை யன்றி யொன்றாய்
வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாது மதித்துக் கொள்வாய். (40)

(ப - ரை.) நிலையான இச்சீவன் முத்தியை விட்டு = நுகர்வினை வரையிருக்கும் இந்த ஜீவன்முக்தி யவஸ்தையைத் தீர்த்து, உடலிறந்தால் = தனதுதேகம் காலவசமானபின், நிறைந்தவாயு = பரந்தபவனம், அலையாமல் நிற்பதுபோல = சஞ்சலப்படாமல் திரபாவத்தை யடைதல்போல், உடலில்லா முத்திபெறும் = அதேகமுக்தத் தன்மையை யடையும்; அதனின்றன்மை = அவ் விதேகமுக்தியின் றகைமையாதெனின்? நுதலுவாம், தோன்றாது = விதேகமுக்தன் உதயமாகான், தொலையாது = அஸ்தமாகான், மறையாது = சாமிய மடையான், உலையாது = சத்தாகான், முடியாது = அசத்தாகான், நணித்தல்ல தூரத்தல்ல = அண்மையனும் சேய்மையனுமல்லன், நானல்ல = அகமுமல்லன், பிறனல்ல = இதரனுமாகான்; ஒன்றுமல்ல = மற்றொரு பொருளுமாகான். (39)

இருளன்றி = அவ்விதேகமுக்த பதமானது, தமமல்லதாய், ஒளியன்றி = தேயுவல்லதாய், அளவன்றி = பரிமித மடையாததாய், அலைவன்றி = அசையாததாய், இயல்பு ஒன்றின்றி = தருமமியாதொன்று மணுகாததாய், பொருகின்ற பூதங்கள் பல பொருள்கள் அன்றி = ஒன்றோடொன்று முரண்பட்ட பூதங்கள் பதார்த்தக்கூட்டங்கள் ஆகாரதிருசிய தரிசனங்கள் அல்லதாய், நிறைபூரணமாகி = தேசகாலத்து பரிச்சேத பூரணமாய், உருவன்றி = வெளிப்படாததாய்; அருவன்றி = சூனியமற்றதாய், உளதன்றி = சத்துமல்லாததாய், (இலதன்றி = அசத்து மல்லாததாய்) உண்டில்லையன்றி = சதசத்து மல்லாததாய், ஒன்றாய் = ஆதிமத்யாந்தரகித சைதன்ய சேத்தியரகித சிவமாய், வருகின்ற திரிபுடியின் = மாறிமாறி ஓயாமல் வினைவயமாய் வாராநின்ற திருட்டா தரிசன திருசியங்களின், நடுத்தோன்றும் = மத்தியில் எத்தரிசனமான திருந்திலங்குகின்றதோ அதனை, மறவாது = இடைவிடா தனுசந்தித்து, மதித்துக்கொள்வாய் = நினது வடிவமாயும் விதேகமுக்தி வடிவமாயும் அறிந்து கொள்வாயாக. (40)

(ஸ்ரீ - வீர.) அவ்விதேக முக்தன் காரியமுமல்லன் காரணமும் அல்லன். சூனியமற்றதாய் = நிராகாரம் அற்றதாய் இவ்வண்ணமென வியம்ப வியலாமற் சத்தாந்தமாயிருக்கும், சத்தாகாதாம், குடமுதலியவற்றிற் போலச் சத்தாஜாதியை ஆண்டங்கீகரியாமையினானும், சற்புத்தி யொளிவியாமையினும் என்க. அசத்தாகாதாம் = பரமாத்த சொரூபத் தன்மையான். சத்தசத்தாகாதாம் விரோதத்தானும், அசிந்தையு மாகாதாம் சிந்தையுமாகாதாம். சேத்தியம் = திருசியம். அதற்காதியுமில்லை, மத்தியுமில்லை, பரியந்தமுமில்லை, அது மனப்பீடையும் அற்றது சரீரபீடையு மற்றது. மேற்கூறியவகையாக இருப்பதுயாதோ அச்சின் மாத்திரம் விதேக முத்தமாம், இவ்வண்ணம் விதேகமுக்தமெனப் பெயரிய பரமார்த்த ரூபத்தைக்கூறி அதனது சாக்ஷாத்கார வுபாயங் கூறுவார், திரிபுடியென்றார். ஞாதாஞானம்ஞேயம் என்பவற்றின் மத்தியில் எத்தரிசனம் அவற்றின் சாக்ஷியாக விளங்குமோ, அதாவது திருஷ்டா விளங்குகின்றது, தரிசனம் விளங்குகின்றது, திருசியம் விளங்குகின்றது, என்னும் வகையாக ஸ்புரணவடிவமாய் அவற்றுட்டொடர்ந்து விலக்ஷணமா யிருக்கும் நிருவிகற்பம் பிரத்தியக்குச் சைதன்யம் யாதோ அதன்கண்ணே யுளத்தை யொருமைப்படுத்தி நின்னையுணர்தி, அல்லது, அவ்வாறொருமையுறவே துணிந்தவழி பரிசோதிக்கப் பெற்ற துவம்பதார்த்த சாக்ஷாத்காரம் உண்டாம், உண்டாகவே முன்னருரைத்ததும், இப்போ தியம்பியதும் ஆகிய பரமார்த்த சொரூபம் நன்குணர்வா யென்பதாம்; ஜீவன்முக்திப் பதத்தைவிட்டுத் தேகமானது பிராரப்தம் தீர்தலானே காலத்தாற் பீடிக்கும்போது வாயுவானது அசைவின்மையை யடைதல்போல, இச்சீவன்முக்தன் விதேகமுக்தியை யடைகின்றான். அவ்விதேகமுக்தனது சொரூப லக்ஷணத்தைக் கேட்பாயாக, விதேகமுக்தனானவன் வளர்வதுமில்லை குறைவதுமில்லை, நாசமடைவதுமில்லை வெளிப்படுவதுமில்லை வெளிப்படாமலுமில்லை, தூரத்திலு மிருப்பதுமில்லை, நானென்பதுமில்லை, நானல்ல னென்பதுமில்லை, மற்றவனென்பதுமில்லை, அவனது தடஸ்தலக்ஷணம், சூரியனாகவிருந்து உலகத்தையொளிர் விக்கின்றான் என்பது முதலவாயப் பெரியவா சிட்டத்தில் விரிவாம். நிச்சலமாயும், கம்பீரமாயும், ஒளியற்றதாயும், இருளற்றதாயும், விஸ்தாரமாயும், பெயரற்றதாயும், வடிவற்றதாயும் இலங்கும். அவர்ஙமானச சத்தொன்று சேடித்து நிற்கும் பெயரையும் வடிவையும் நிட்டேதிக்கில் நாமரூபசூனிய வஸ்துவிற்கு உலகத்தில் அத்தியந்தம் பிரசித்தி காணப் பெறுமையின் சூனியத்தன்மையன்றோ வாமெனின்? அது சூனியமாகாதாம், ஆகாதாயின் சூனியமாகாத அதற்கு ஆகாரத்தன்மை திருசியத்தகைமை தரி

சனத்தகைமை முதலியவை எஞ்சுதலாமே யெனின்? அது ஆகாரமுடையது மல்ல, திருசியமுமல்ல, தரிசனமுமல்ல அநந்தமாயிருத்தலினானே, பூதபதார்த்தக் கூட்டமுமல்ல, பெயரில்லாதபடியினாலே எவ்வாற்றானும் கூறமுடியாத வடிவதாம், பூரணத்தினும் பூரணவடிவதாம், எப்படி யியம்பமுடியா தெனின்? கேட்குதி ! அது சத்துமன்று அசத்துமன்று சதசத்துமன்று காலசம்பந்தமும், காலசம்பந்தமுடையதுமன்று உற்பத்தியும் உற்பத்தியுடையது மன்று, அதுசின்மாத்திரமா யிருப்பதும் திருசியமற்றதும், அந்தமின்றியதும் ஜரையற்றதும் சிவமும்முதலிடைகடையற்றதும், காரணமற்றதும் நோயற்றதுமாம். எதன் கண்ணே யிந்தவுலகமானது, முத்துக்களை யுட்கொள்ளும் அன்னப்பக்ஷிகள் அதன்பரிணாம மாதலின் முன்னர் முத்துவடிவமாயும் பின்னர் அன்னவடிவமாயும் காணப்பட்ட அவ்விரண்டுந் தொடர்ந்த திரவியம்போலும் சித்திரமயக்க முதலியவற்றே காணப்பட்ட முத்துமய அன்னம்போலும் காணப்படும், யாது அத்தியாரோப திருஷ்டியினானே யாவுமாமோ, அபவாத திருஷ்டியினானே யாவுமாகாதோ அத்தெய்வம் வெளிப்பட்டும் வெளிப்படாமலும் இருக்கு மவஸ்தை யிரண்டைத் தொடர்ந்து விளங்கும் எங்ஙனம் வாயுவானது ஒருகாற் சலனத்தைவிட்டு நிச்சலரூபமாக இருக்குமோ அங்ஙனம் முக்தாத்மாவும் உபாதியாலாக்கப்பெற்ற சமுசாரத்தைவிட்டுச் சொரூபமாகவே யிருப்பனென்பதாம். ஆண்டு மகிழ்ச்சி வாட்டங்களுமின்றும் அவற்றின்றியாகமு மின்றும், என்னை, லிங்கதேகத்திற்கு ஈண்டே லீனத்தன்மை யுண்மையின். சத்வாச்சியங்களாய உலகவேதுவாம் அவித்தை மாயைகளை யுபாதிகளாகக் கொண்ட பிராஞ்ஞ ஈசுரர்களின்றும், அசத் வாச்சியங்களாய பூதபௌதிகங்களு மின்றும், தூரத்தல்ல வென்னும் கூற்றான் மாயாதீதமன்றும், நணித்தல்ல வென்றமையானே தூலபுக்குச் சமீபத்திருக்குந் தன்மை நிஷேதிக்கப் படுகின்றது, நானல்ல வென்பது சமட்டியுமன்று, பிறனல்லவென்பது வியட்டியுமன்று என்றுணர்த்தும். ஒன்றுமல்ல வென்றமையானே விவகாரயோக்கிய விகற்பம்யாதுமே கிடையாதென்பது பொருளாம், இவ்வித விதேகமுக்தியோடு ஒப்புமை மேன்மைக் கூற்றால் ஜீவன் முக்தியின் கண்ணும் எத்துணை எத்துணை நிர்விகற்ப அதிசயமாமோ அத்துணை அத்துணை உத்தமத்தன்மை கண்டுகொள்க.

(ச.) (அதனை வர்ணித்தல் சக்கியமன்றாயினும் கிஞ்சித்து வருணிக்கின்றார்.) தோன்றாது தொலையாது = ஜனனமரணங்கள் தேகதன்மங்கள் ஆகலின் விதேகமுக்தியில் அதன் இன்மை பொருந்தும், மறையாது = மறைதல் சித்த நிர்விகாரத்துவம் சித்தமின்மையாற் பொருந்தாது ; சர்வகதத்துவ மாதலின், நணித்தல்ல தூரத்தல்ல; உலையாது = இருப்பதாக விவகார மின்மையின் இருப்பதன்றும், முடியாது = சத்ரூபமாக விருத்தலின் இராததன்றும், அகங்கிருதிக்க விடயமாகலின் நானல்ல, சர்வான்மகமாகலின் பிறனல்ல. ஒன்றுமல்ல. 39 ஆனாலதன் சொரூப மெதுவெனில் இதுவெனல்; இருளன்றி. இயல் பொன்றின்றி, இயக்கொன்றின்றி என்னும் பாடமேயேற்கும், எண்டரு மலைவுதோற்றம் பெயரெலா மின்றி யாழ்ந்து, தண்டலி விருடேகின்றித் தனித்ததோ ருண்மைநிற்கும். இதற்கு முன்னமே பொருள் சொல்லி யிருக்கின்றது. பெயரெலாமின்றி யென்றதையே விரித்துரைத்தல், பொருளன்றி, அசடமாகலின்; பொருகின்ற பூதங்களென்றமையால் ஆகாரியும் திருசியமும் தரிசனமும் இன்றியென்றிசைய ஒட்டுக. ஆகாரியன்று, அமூர்த்தமாதலின்; திருசியமன்று, திருக்காயிருத்தலின்; தரிசனமன்று, தனக்கன்னியமான திருசிய மின்மையின் ; நிறைபுரணமாகி = ஆகாசாதிகட்கும் வியாபகமாய், உருவன்றி = ஆகாரமன்று, ஜாதியாதி விதிக்கப்படாத சொரூபமாதலின், அருவன்றி = நிராகாரமன்று, சிற்கனரூபமாதலின், உளதன்றி யிலதன்றி=

சத்துமன்று அசத்துமன்று: எதிற்காரிய சமூகஞ் சனிக்கின்றதோ அது சத்து என்னும் வசனத்தால் சத்துகாரண மெனவும் அசத்துக்காரிய மெனவுஞ் சொல்லப்படும். இது நிருவிகாரமாதலின் அவ்வுபாய விலக்ஷண மென்பது பொருள். உண்டில்லையன்றி = சதசத்தன்று, சத்தும் அசத்தும் ஒன்றற்கொன்று விரோதமாதலின் உபயரூபமும் பொருந்தா தென்பது பொருள். ஒன்ருய் வருகின்ற=பாவரூப திரவியாதி சட்பதார்த்த விலக்ஷண மாதலின் பாவமன்று, திரவியாதி சட்பதார்த்த மாவன:—திரவியம் = பொருள், குணம் = பண்பு. கன்மம் = வினை = தொழில், சமானியம் = ஜாதி, விசேடம் = நித்தியத்துள்ள சிறப்பு, சமவாயம் = பிரிவுபடாச் சம்பந்தம், என்பனவா மென்றுணர்க. சத்துரூபமாதலின் அபாவமும் அன்று, ஆகலின் அநந்தமா யிருக்குஞ் சன்மாத்திரமே. (பொரு—களன்றி, அசடமாதலின், இதனுனே அநந்தமாயிருக்குஞ் சன்மாத்திரமே யென்பது பாடபேதம்) ஆதிகள் =மானதரோகங்கள், ஆமயங்கள் = சரீர சம்பந்த ரோகங்கள், மநோதேக மின்மையின் அவ்வுபயரகிதமான அநாதி நிராமயமாய், திருசியசம்பந்த ரகிதமான திருக்குமாத்திரமாய். ஆதிமத்தியாந்த ரகிதமான சிவமாய், திரிபுடியினடுத் தோன்றும் = திருஷ்டா வென்னுங் கர்த்துரு சைதந்யமும், திருசிய மென்னுங் கருமமும், தரிசனமென்னுங் கிரியாரூபமான அவஸ்தாத் திரயத்தும் பிறிவற்றிருக்கும் ஞானமும் ஆகிய திரிபுடியின் மத்தியில் விளங்கும் அச் சின்மாத்திரத்தைச் சாதுவான இராமா! நீ மறவாது அனுசந்தானஞ்செய்து கூறிய விதேகமுக்திரூபத்தை, மதித்துக் கொள்வாய் = அறிந்து கொள்வாய். (40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பெருங்கற்பம் மேவும் போதில் என்பதாதியால் எப்பரமார்த்தசொரூபம் பிரதிபாதிக்கப் பெற்றதோ மீண்டும் விதேகமுத்த ரூபமாகப் பின்னரே யாது நிரூபிக்கப்பெற்றதோ அஃதிதுவென கரதலாமலகம் போலும் விசேடமா யறியும்பொருட்டு ஸ்ரீ இராகவர் வினுதல்:—அந்த ஆத்மாவினின்றும் திருசியங்களானவை நீரிற்றிரைமாலைபோல வேறன்றிவும் வேறுபோலுண்டாம், காலசம்பந்தியாய அறுவகை விகாரங்களுமாம், அதனுனே திருசியத்தின் றரிசனபலவியாப்தி யுண்டாம், அதனுனே இஷ்ட அநிஷ்டங்களின் அடைதல் அகலுதல் விடயங்களாய மநோரத விகற்பங்களாம், முறையே அதனது சச்சிதானந்த ரூபத்தன்மையே நிர்வகிக்கின்றதாம் அந்த மூன்றும் அதனது பிரகாசத்தினுலே ஜகத்தாகவே யிலங்கும் அயலாக உலகம் கிடையாதாம் அறியப்படாததிற் பொதுவதா யெங்கு நிறைந்திருப்பது சத்தாம், மறைபடாததின் மாத்திர மிருப்பது தரிசனமாம், அவற்றுள் அநுகூலமா யறியத்தக்கதின் மாத்திர மிருப்பது ஆனந்தமாம், இவ்வண்ணம் உட்பட்ட வுபாதி விலக்ஷணமா யிருந்த போதினும் ஒளிரூப இருப்பு ஒரேமாதிரியா யிருக்கும், கருமேந்திரியவுபாதியிற் கிரியையையும் ஞானேந்திரிய வுபாதியில் ரூபரச கந்த சத்தப் பரிசங்களையும், அந்தக்கரண வுபாதியில் அறிவையும் பிரமாதாவையும் எவ்வடிவமாயிருந்து அறிகின்றனேயோ அந்தப் பிரமாதாவினும் வேருய அவ்வடிவம் பரமான்மாவி னுடையதேயாம். எவ்விடயவியாப்த விருத்தியினும் வேருய அறிவுருவத்தா லுணர்கின்ருயோ அதுவும் அப்பரமான்மாவேயாம். காண்போன் காட்சி காண்படு பொருள்களி னிடையிற் சாக்ஷியாக எத்தரிசனமுளதோ அதனை யொருமைப்பட்ட மனத்தால் உபாதிகளினின்றும் வேறுபடுத்திக் காணும் வகையினுனே நினதுவடிவமென உணர்தியென விதேகமுத்தியின் கூற்றின் பின்னிதவுபதேசஞ் செய்தலும் ஸ்ரீ இராகவர் ஒருமைப்பட்டமனதில் எவ்வடிவத்தானே அஃதபரோக்ஷமா யனுபவித்தல் கூடுமோ அவ்வசாதாரண ரூபத்தைத் தெரிந்து கொள்ள வேண்டு மென்னும் அவாவுடையவராய் மீண்டும் வினுதல்:—அவ்வுண்மையென.

அவ்வகையாம் பரவடிவை யறிவுநிறை வுறவிரிவா யருள்வா யென்ற
செவ்வியவள் ளலுக்கு முனி செப்புவான் பெருங்கற்பஞ் சேர்ந்த போதி
லெவ்வகைமூ லங்களுக்கு மூலமாம் பிரமமே யிலங்கா நிற்கும்
வவ்வுமனத் தொழின் மாற்றித் தனைமாய்த்தாற் பெயரிறந்த வஸ்துவாகும்.()

(ப - ரை) அவ்வகையாம் பரவடிவை = அவ்வாநந்த சித்தாகிருதி வாய்ந்த பரமார்த்த வடிவத்தின் சீர்த்தியை, அறிவு நிறைவுற = நிபுணமாக ஞானம் நிறைந்து விருத்தியாதற் பொருட்டு, விரிவாய் = விஸ்தாரமாக, அருள்வாயென்ற = அனுக்கிரகம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்த, செவ்விய வள்ளலுக்கு = சிறந்த குணங்கள் வாய்ந்து திகழுந்தலைவள்ளலாகிய ஸ்ரீஇராகவருக்கு, முனி = தவேந்திரராகிய ஸ்ரீவசிட்ட பகவான், செப்புவான் = அருளுவதாவது, பெருங்கற்பஞ் சேர்ந்தபோதில் = மகாப்பிரளயமானது மன்னுறும் போதில், எவ்வகை மூலங்களுக்கும் மூலமாம் = சர்வகாரண காரணமாய, பிரமமே = பரப்பிரஹ்மமே, இலங்காநிற்கும் = எஞ்சி யிருந்திலங்கும், அவ்விதனை வருணிக்கின்றேன் கேட்குதி. வவ்வுமனத் தொழின்மாற்றி = விடயவாதனையானே தாவியோடாநின்ற மனோவிருத்திகளை நன்குக்ஷயஞ் செய்து, தனைமாய்த்தால் = தற்போதம் இழக்குமாறு செய்தால், பெயரிறந்த = நாமமற்ற சத்துருவம், வஸ்துவாகும் = அவ்வஸ்துவின் வடிவமாகும்.

(ஸ்ரீ - வீர.) பரமார்த்த சொரூபத்தைக் கொம்புக் கவர்ச்சியாய யுக்தியானே (கொம்பைப்பிடித்து மாட்டைக் காட்டுவதேபோல)காண்பிக்கும் பொருட்டுக் கூறுவார் பெருங்கற்பமென்றார். அப் பரப்பிரஹ்மத்தைப் பிரத்தியக்ஷமாமாறு வருணிப்பாம் என்பதாம். ஆண்டு மனத்தொழின் மாற்றி யென்பதாதியாற் சமாதி யவஸ்தையைப் பற்றிப் பரமார்த்த சொரூபத்தைக் கூறுவார். சமாதி யவஸ்தையின் கண்ணே மனோவிருத்திகள் நசிக்கின்றன மனம் நசிப்பதில்லை யென்பார் மனோவிருத்தி = மனத்தொழில் என்றார். சப்தாதி யாகாரங்களாய் வரும்மனோ விருத்திகட்கு நன்றாக க்ஷயம் ஏற்பட்டவழி சரீரத்திரய வடிவமாய் நிகழும் நிகழ்ச்சியைக் கெடுத்து, மூத்தேகத்திலும் ஆத்மத்தன்மை அபிமான் மாத்திரத் தடைவுற்றதாம்; சமாதியின்கண் அபிமானம் அழிவுற்றவழி அழியும் கேவலம் ஆன்மமாத்திர மிலங்கும். அவ்விதனை யறிவிப்பார் தனைமாய்த்தால் என்றார். தன்னை மாய்த்து எஞ்சி யிருந்திலங்கும் தனது மெய்யுருவத்தில் ஜாதி குணக்கிரியாதி ரகிதத் தன்மையானே சொல்லமுடியாத எச்சத்துருவம் விருத்தி சம்க்ஷயமாகச் சாக்ஷிரூபமாக விருக்கின்றதோ அது அந்தப்பிரஹ்மவஸ்துவின் சொரூபமெனப்படும். அநந்தமாயும் அநிர்வாச்சியமாயும் பரமார்த்தமாயு மிருக்கும் அதனது ரூபமியாதாம் என்பதை மீண்டும் அடியேனுக்கு நல்லுணர்வு வளர்தற்பொருட்டு மிகத்தெளிவாகத் திருவாய் மலர்ந் தருளவேண்டும் என்ன; கூறுகின்றார், மகாப்பிரளயம் வரும்போது சருவகாரண காரணமும் பரமும் ஆகிய பிரஹ்மமே சேடித்திலங்கும்; அஃதபரோக்ஷமா மாறு கூறக் கேட்பாயாக: சமாதியின் கண்ணே தடைப்படுத்தலால் விருத்திகள் ஒடுங்கியவழி விறகிலாத கனல்போல மனத்தினது சொரூபத்தையுங் கெடுத்துவிடின் இன்னபடியென வியப்ப வொண்ணாததாய ஸ்வப்பிரகாச சத்துரூபம் யாது எஞ்சாநிற்குமோ அது அந்தப் பரமான்மாவினது வடிவமாம். இவ்வண்ணம் நிருவிகற்ப சமாதி யாரம்பத்தில் திருசிய வுலகமில்லை திருசிய மின்மையின் காண்போனாகிய பிரமாதாவும் விலீனமானதேபோற் றோற்றும் என்னுந் திரிபுடிலய விளக்கமாகிய சாக்ஷிசொரூபமே அந்தப் பரமான்மாவின் வடிவமாம். பெயரிறந்தவத்து = சப்த அகோசரசிவம்,

(ச.) வவ்வுமன மென்பதாதியா யெட்டு சுலோகங்களால் பரவஸ்து சொரூப நிரூபணம்: ஸ்ரீ இராமர், அவ்வகையாம் பரவடிவை = அந்தச் சிதாகிருதியினது பரமார்த்த ரூபத்தை, அறிவு நிறைவுற = பூர்ணபோதஞ் சித்தித்தற்காக, விரிவாய் மீட்டுமெனக் கருள்வாய் எவ்வகை மூலங்களுக்கு மூலமாம் = சர்வகாரண காரணமாம், பிரமமே யிலங்கா நிற்கும் = பரப்பிரஹ்மமே சேடித்திருக்கும். அத்தன்மையான விதனைவருணித்தல். வவ்வும், மனத்தொழில் = மனத்தின் விருத்தி, தனைமாய்த்தால் = தன்மனதையும் நாசஞ்செய்யின், நாசயோக்கியமான திருசியத்திற்குஞ் சொரூபமாதலின், பெயரிறந்த = நிருபாதிகமாதலின் சொல்லுதற் கசக்கியமான சத்ரூபம், வத்துவாகும் = பரவஸ்துவினது சொரூபமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அந்தப் பரமாத்ம வஸ்துவின் வடிவத்தையே சமாதி நிலையிலும் விவகார நிலையிலும் இருக்கும் வண்ணம் அறிவித்தல்:—தெரித்தறியுமென.

தெரித்தறியும் பொருஞேக்காச் சீவவறி வதுவாகச் செப்பலாகும்
விரித்தபுல னனுபவித்து மனுபவியா மனமதுவாய் விளம்ப லாகும்
புரித்தவுணர் வொளிநெஞ்ச முலகிவற்றி னறிவதுவாய்ப் புகல லாகும்
பருத்ததொழிற் செய்யினுங்கற் போலிருக்கு நிலையதுவாய்ப் பகரலாகும்.(42)

முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டுயிலதுவா மும்மை யாகி
யடர்தருஞா துருஞான ஞேயமெழுந் தொடுங்குமிட மதுவே யாகுந்
திடவிசும்பன் றாயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சித்தம் புந்தி
படர்மனம் போய்த் தாவரம்போற் பெறுமுளறி வொப்பாமப் பரமரூபம்(43)

(ப - ரை.) தெரித்தறியும் பொருஞேக்கா = திருசியத்தை நாடாத வடிவதாயிலகும், சீவ அறிவு = ஜீவ இயற்கை அறிவான சின்மாத்திரம் யாதுளதோ, அதுவாக = அதுவே விமலசாந்த பரமாத்மாவின் வடிவதாக, செப்பலாகும் = சொல்லப்படும்; புலன் அநுபவித்தும் = காற்று முதலியவை காயத்திற்றோயினும், அநுபவியா = பரிசாதியனுபவமற்ற, விரித்தமனம் = ஜீவிப்பவனது சித்தத்தின் உருவம்யாதோ அதுவே. அதுவாய் விளம்பலாகும் = அந்தப் பரமாத்மாவின் வடிவாய் வழங்கப்படும்; புரித்தவுணர்வு = இந்திரிய விடயசம்பந்த ஞானம், ஒளி = பிரகாசம், நெஞ்சம் = வேதனம, உலகு = திருசியம், இவற்றின் = இயம்பியவற்றின், அறிவு = சாக்ஷியே; அதுவாய் = அநாதியந்தப் பரமாத்மாவின் வடிவமாய், புகலலாகும் = பகரப்படும்; பருத்ததொழில் செய்யினும் = மிகுத்த விவகாரத்தோடு கூடியிருப்பினும், கற்போலிருக்கும் நிலை = பாஷாணம்போ லசையாம லிருக்கும் ஸ்திதி, அதுவாய்= அந்தப் பரமான்ம வடிவமாய், பகரலாகும் = கூறலாம்.
(42)

முடிவு கனவு அஞ்ஞானம் இல்லா = அந்தமின்றிய கனவின்றிய ஜடமின்றிய, நீள்துயில் = சிரநித்திரையின் எவ்வுருவ முளதோ, அவ்வுருவம் அதுவாம் = அந்தப் பரமாத்மாவினது வடிவமாம்; மும்மையாகி = மூன்று வடிவாகி ஒன்றைவிட்டு ஒன்றொளியாது, அடர்தரு=நெருங்கி விவகரிக்கும், ஞாதுரு ஞானம் ஞேயம் = மாதாமானம் மேயம் அறிவான் அறிவு அறிபொருள் என்பன, எழுந்தொடுங்கு மிடம் = உதித்து ஒழியும் அதிகரணம், அதுவேயாகும்= அந்தப் பரமாத்மாவினது வடிவேயாகும்; திடவிசம்பு அன்றாயிருந்தும் = லௌகிக நித்திய விண்ணல்லாம லிருந்தும், விசும்பான நிலை = விண்ணதாந் தகைமை, அதுவாம் = அந்தப் பரமான்மாவினது வடிவமாம்;

சித்தம் புந்தி படர்மனம்போய் = விடய கோசங்களாகச் சிந்தித்தன் மதித்தல் சங்கற் பித்தல் என்பனநீங்கி, தாவரம்போல் = அசரத்திற்குச் சமான்மாக, இருந்து, பெறும் உள் அறிவு = உள்ளுணர்வுமயம் பெற்றிருக்கும் பக்ஷத்தில், ஒப்பாம் அப்பரமரூபம் = அந்நிலைக்கு அந்தப் பரமாத்மாவினது வடிவம் சமானமாகும். (43)

(ஸ்ரீ - வீ ர.) ஜீவ இயற்கைவடிவ அறிவினது விடயத்தை நாடாத சின்மாத்திர விமல சாந்தவடிவம், நிருவிகற்ப சித்தேவடிவ அநாதி ஆகந்துக இருமலரகிதம் நிர்விகார மாகி நிகழும் அந்தப் பரமாத்மாவினது சொரூபமாகச் சொல்லப்படும். வாத ஆதபாதி கள் அவயவ சம்பந்தமுறினும் பரிசரூபாதிகளின் அனுபவமில்லாமல் சித்தவுபாதியோடு கூடிய ஜீவனுக்கு எவ்வுருவ மிருக்கின்றதோ, சரீரத்தைவிட்ட ஜீவனது சொரூபம் அங் கலக்கினமாயினும் பரிசாதி அனுபவரகிதமாம். அதன்பொருட்டுக் கூறுவார் ஜீவிப்பவ னது என்னும் பொருள் வாய்ந்த விரித்த என்றார். அது ஆத்மாவினது சமுசார அதீத சொரூபமாம். கனவும் நீண்டகனவென்பதனானே கனவென்னுஞ்சப்தத்தாற் கவரப்பெ றும், பெறவே கனநனுவற்றதாய் ஜடமாயதுயிலற்றதாய், அநந்தவஸ்து விஷயத்தன்மை யானே அநந்தமதாயுள்ள சிரநித்திரை = நீள்காலயோக நித்திரையினது, எவ்வுருவம் அவ்வுருவம் பரமான்மாவிற்காம். துரீய அவஸ்தைவடிவ யோகநித்திரையி லிருப்ப நிரு விகற்ப சித்துருவம் பிரதீதியாம் அது பரமாத்மாவின் சொரூபமென அறைந்ததாயிற்று, விக்ஷேப தசையைப்பற்றியும் பரமாத்மசொரூபம் பகர்வார் புரித்தவுணர்வென்றார். வேத னம் = அந்தக்கரண விருத்திவடிவம், பிரகாசம் ஆதித்தியாதி சம்பந்தி, திருசியம் சப் தாதி வேத்தியம் இஃதுபலக்கணம் பிரகாசத்திற்கு தமமாகிய அஞ்ஞானம் என்பவற் றின் யாதொரு சாக்ஷிலக்ஷண ஞானமுளதோ அது பரப்பிரஹ்மத்தின் சொரூபமாம். மயலான் விகாரபரனுய ஜீவனுக்கும் வஸ்து விருத்தியால் பாஷாணம்போல அதாவது பெரும் பாறையைப்போல நிச்சலமாக இருக்குந்தன்மை யென்பதாம். அவ்வியோமத் திற்கே பொய்யாகப் பிரபஞ்சத்தோடு கூடியிருப்பதாகிய வியோமத்தன்மையாம் உண் மையாகவோ நிஷ்பிரபஞ்சத் தன்மையேயுளதாம், அல்லது, விசும்பன்றாயிருந்தும் = லௌகிக திருஷ்டியானே அநாகாச சதிருசத்திற்கே வியோமத் தன்மையாம், உண்மை யாயோ ஆகாச சதிருசத் தன்மையாதோ அது பரமாத்மாவின் வடிவமாம். வேத்தியத்வ வேதனத்வ, வேத்துருத்வ ரூபங்களின்மும்மை பிரத்தியக்ஷமாக எவ்வதிஷ்டானத்தின் கண்ணே உதயமாமோ அஸ்தமாமோ அவ்வுருவம் பரமாத்மாவின துருவமாம். அபூதவுப மானத்தானே பரமாத்மவுருவை வருணிப்பார் தாவரம்போ லென்றார். அசராதிகட்கு இயல்பாகவே மனோபுத்தியாதி விடுபட்டிருத்தல் வெட்டவெளியாம், எவ்வுருவமுளதோ அது வுணர்வுமயமாக வொருக்கால் ஆகுமாயின் அச்சொரூபம் பரமாத்மாவோ டுவமிக் கப்பெறும் அதாவது அது பரமாத்மாவிற் குபமானம் எனக் கூறப்பட்டதாயிற்று. சமா தினின்றும், எழுமுன்வருஞ் சிவ இயற்கையதாய அறிவினுக்குத் திருசியத்தைப் பாராத எவ்வடிவமுண்டே, அந்தச் சின்மாத்திர விமலசாந்த வடிவமே அந்தப் பரமாத்மாவின் வடிவமாம். சமாதிமத்திய காலத்திலும் இலங்கா நின்றது பரமான்ம வடிவமேயாமெனி னும் அஃததிருக்குமமா யிருத்தலினானே ஆரூடபதவியை யேறவிழைந்து பயின்று கொண் டிருப்பவர்கட்கு அக்கால் அறிந்து கொள்ளுதல் முடியாதாமென முதலினும் கடையிலும் காண்பிக்கப் பட்டது. இப்போது ஆரூட அனுபவித்தசமாதி மத்தியிலிலங் கும் வடிவத்தானும் அதனைக் காட்டுவார் புலனனுபவித்து மென்றார். பிரஹ்மாகார அவச்சின்ன அபரோக்ஷ விருத்தி யுடைமையானே சித்தமான திருக்கும்போது பானீர் போலப் பிரஹ்மத்தின் கண்ணே ஏகரசமயமாக மறைபட் டிருத்தலின் சித்ததனை யகா

தரவுசெய்து காற்று முதலியவை மேனியிற்படினும் அந்தப் பரிசாதி யனுபவமின்றி யிலங்கு மெய்வடிவ முண்டோ அதுவே பரமான்மாவினுடைய வடிவமாம். இப்போது யோகப்பயில் விலாருக்கும் எவ்வாறு அனுபவிக்க முடியுமோ அவ்வாறு கூறுவார் முடிவு என்றூர். கணுக்காணுமலும் கொதுகு மூட்டைமுதலான துயருறுத்திக் கெடுக்காமலும் மனமிளைப்பாறுதற் கேதுவாயு மிருக்கின்ற சுழுப்தியே சித்தத்தின் ஜாட்டியமில்லாமல் நீள்காலங் கிடைக்கப்பெறின் ஆங்கிலங்கு முருவமே பிரளயத்திலும் எஞ்சாநிற்கும், ஆகாயத்தின் இரகசியவடிவ சூனியத்தன்மை காற்றின் இரகசியவடிவ உள்ளும் வெளியும் நிறைந்திருக்குந் தன்மை, சிலையின் கனத்தன்மை திருசியத்தினும் வேறாகித் திருசியமற்றதாகிச் சிதாகாசமா யிருக்கும் பொருளிருப்பின் யாதொரு ரூபமாமோ அவ்வுருவம் பரமாத்மாவிற்காம், எல்லாப் பிராணிகளுக்கும் திருசியத்தையும் சித்தத்தையும் பரித்தியாகஞ் செய்தபோது எந்தஸ்திதியானது எஞ்சா நிற்குமோ அதுவே அதனுருவமாகுமென்றறிதி, திருசியமற்று மனமற்று உயிர்கட் கியற்கையாயுளதா யாதொரு நிலையுண்டோ, பரமசாந்த சத்தையாமதுவே அம்மூதன்மையான வஸ்துவின் வடிவமாமென்றுணர்தி, திருஷ்டாக்களின் கோடியில் அன்னமயம்வரை யான்மாவாக விரிந்த சிற்பிரகாசமானயாது, ஒவ்வொரு கோசவிவேகத்தால் ஆராய்ந்து பார்க்குங்கால் ஆனந்தமயத்திற்கு முள்ளே யிருத்தலின் மத்யமாமோ, திருசியகோடியிலோ மூர்த்தசாரபூத ஆதித்தியப் பிரகாசத்திற்கும், அமூர்த்தசாரபூத ககனத்திற்கும் லிங்க சமஷ்டியான்மாவாகிய அவ்வியாகிருத ஆகாயத்திற்கும், உள்ளானமையானே யாதுமத்யமமாமோ, விழியாதியாலாம் விருத்திகட்கும் உள்ளே விளக்கரூபமா யிருத்தலின் யாதுமத்யமமாமோ, இம்முறையே யானந்த சத்துச் சித்துரூபம் யாதொன்று, பிரசித்தமாமோ அது பிரஹ்மத்தினது ரூபமாம் தைத்திரிய வுபநிடதத்தின் கண்ணே அன்னமயாதி கோசங்கட்குள்ளாக ஆனந்தமய கோசத்தைக் காண்பித்து அதற்குப் பிரியமே சிரம், மோதம் தக்ஷிணபக்ஷம், பிரமோதம் உத்தரபக்ஷம், ஆனந்தம் ஆத்மா, பிரஹ்மபுச்சம் பிரதிஷ்டையென அதற்கு முள்ளாகப் பிரஹ்மம் காட்டப்பட்டது. பிருகதாரண்யகத்தின் கண்ணும் " பிரஹ்மத்திற் கிரண்டு பெருவடிவங்களுண் டுருவமா மூர்த்தமு முயரமூர்த்தமுமே " எனத்தொடங்கி " அவ்விம் மூர்த்தத் தினிதாசமாகும், எவ்விதுதபிக்கு மெழிலிது சசமாம், அவ்விவ் வமூர்த்தத் தினறையெவ் விதுதான், செவ்விம் மண்டலஞ் செறிதரு புருடனே " என அவ்வுபய சாரத்தையுங் காண்பித்து, " ஆதலி னினியா தேசநேதி நேதியாம் " எனமூர்த்த அமூர்தத ஆரோப அதிஷ்டானமாகிய அவற்றினுமுள்ளான பிரஹ்மம் அவற்றின் நிடேதவாயிலாகக் காண்பிக்கப்பட்டது. " விருத்திகடோறும் விளங்கிடு மான்மா " எனக்கேனுப நிடதத்தின் கண்ணே யெல்லாப் புத்திவிருத்தியினுள் ளிருப்பது எனக் கூறப்பட்டுளது; ஆகையாலவ்வுருவம் பிரஹ்மத்திற்காம், புத்திவிருத்திக்கும் பொருள் விளக்கத்திற்கும் விடயத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் சாக்ஷிவடிவமா யிராநின்ற எவ்வேதனமுளதோ அவற்றிற்கு ஆதியந்த முண்மையினனே எதற்கு ஆதியந்தங்கிடையாதோ அது பரமான்மாவினுடைய ரூபமாம். மாயிக விவகாரத்தைச் செய்து கொண்டிருந்த போதினும் ஞானிக்கேனும் ஈசுரருக்கேனும், யாதொரு கற்போன்ற அசலநிலைபெறுமோ, சித்திரமற்றதாயே யிருந்தும் உலகங்கட் கெல்லாமிடங்கொடுத் துண்மையின் ஆகாசத்தன்மையான தெதற்காமோ அவ்வடிவமே பரமான்மாவின் வடிவமாம். வேத்தியமுதலிய திரிபுடிஜன்மாதி நிமித்தமான எச்சச்சித்து ஆன்மவடிவமுளதோ அதுவே அவ்வடிவமாம்; வேத்தியம், வேதனம், வேத்துருத் தன்மை, என்னுமிம் மூன்றுரூபமும் எவ்வத்துவினின்று முண்டாகி யெதன்கண்ணே யொடுங்குகின்றனவோ பரமதுர்லபமாய அதுவே பரமான்மாவின் வடிவமாம்; நிமித்தமாயிருந்த

னும் பரிணாமத்தாலன்றும், மற்றேவிவர்த்தத்தாலேயாம். ஸ்தாவரங்கட்கு எவ்வகையிலா வடிவமுளதோ எம்மனோ புத்தியாதி விடுபட்ட வடிவமுளதோ அந்தரூபம் ஞானமய மாகவு மிருந்துவிடின் அது பரமான்மாவோ டுவமிக்கப் பெறும்.

(ச.) தெரித்தறியும் போருளேக்கா = திருசிய பரிசமற்ற சிவ அறிவு = ஜீவசை தன்யத்தினது சின்மாத்திரரூபம், அதுவாக = பரமான்ம சொரூபமாக, செப்பலாகும்; விரித்தபுல னனுபவித்தும் = வாதாதிகள் அங்கத்திற் பரிசிப்பினும், அனுபவியா = சமாதியாதியில் பரிசாதி யனுசந்தான ரகிதமான, மனம் = மனத்தினுருவம், பரமாத்ம ரூபமெனலாம், புரித்தவுணர்வு = பாகியார்த்த ஞானம், ஒளி = ஞானசாதனம், நெஞ் சம் = அந்தக்கரணம், உலகு = ஞானவிடயமான கடாதிகள், ஆகிய இவற்றின், அறிவு = சர்வசாக்ஷிசைதன்யம் பரமாத்மவஸ்து சொரூபமாகச் சொல்லலாம். பருத்ததொழிற் செய்யினும் = விவகார முடையதேனும் கற்போலிருக்குநிலை = நிர்விகாரமாயிருப்பது, அதுவாய்ப் பகரலாகும் = பரமான்ம வஸ்துவின் சொரூபமாய்ச் சொல்லலாம், (42)

நீடுயில் = சிரகித்திரை, யோகநித்திரையின்ரூபம், அதுவாம் பரமாத்ம வஸ்துவின் சொரூபமாம். அதிற்சுழுத்தி மரணம்மூர்ச்சைகளுக் கந்நியந்தெரிவித்தற்காக அஞ்ஞான மில்லாவென்னும் விசேஷணம், சொப்பன சம்பந்தம் நீக்குதற் பொருட்டுக் கனவிலா வென்னும் விசேடணம், அஃதந்தரகிதமான அரந்தமென்பது தோன்ற முடிவிலாவென் னும் விசேஷணமாம், இத்தன்மையான நீடுயிற் சப்தத்தாற் சமாதியவஸ்தை யின்கண் யோகநித்திரையே சொல்லப்படுகின்றது, மும்மையாகி = அவஸ்தாத் திரயங்களாய, திருஷ்டா தரிசனந் திருசியம் உதித்து அஸ்தமாகும் இடம் = சர்வ அவஸ்தையின் அநர்த்தரகிதமான சைதந்யம் பரவஸ்து சொரூபமாம். நிடவிசும்பன்று யிருந்தும் = பௌதிக ஆகாசபின்னமா யிருந்தும்; விசும்பான நிலை = வியோமம்போல் நிர்லேயமா யிருப்பது, பரவஸ்துவின் சொரூபமாம். சித்தம் = மனம்போய் — மனோவிருத்தி விகற் பரகிதமாய், தாவரமா மறிவுபெறில் = தருக்கொடியாதிகளின் ரூபமான போதமயம், பெறின் = இலாபமாயின், ஒப்பாமப் பரமரூபம் = அப்பரமான்ம வஸ்துவின் சொரூபத் தோடு உவமிக்கப் படுகின்றதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மொழிந்த பிரளயான்ம தத்துவத்திதியை முடிக்கின் றார்:— அயன் என.

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன் றானும்
வியனிலுப சாந்தராம் வேலையினி லுபாதியெலா விட்டு நீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரம ரூப
முயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி யொன்றாய் நிற்கும். (43)

(ப - ரை.) அயனெடுமால் = பிரஹ்மாவும் விஷ்ணுவும், சங்கரனும் = உருத்திர னும், சதாசிவனும் = சதாசிவமும், இந்திரனும் அருக்கன்றானும் = ஆயிரங்கண்ணனும் ஆயிரங்கிரணனும், வியனிலுப சாந்தராம் வேலையினில் = தத்தமது யேசுவரியங் களை மறைத்துப் பரம உபசாந்த நிலையைப் பெறும்போது, உபாதியெலாம் விட்டுநீங்கி = அவ்வவ் வதிகாரத்திற்குத் தக்கவேடங்க ளியாவற்றையுந் தியாகித்து அவற்றினின்றும் அசங்கமாய், பயனில் சகமென்கின்ற பற்றகன்று = அதனுனே யாதொரு பிரயோஜன மில்லாமல் வினைவதிக் கேதுவான உலகமென்று சொன்மாத்திரமாயுள்ள பற்றையுந்தொ லைத்து, சின்மயமாம் பரமரூபம் = சைதன்ய மாத்திரமயமான பரம்பொருள், உயர் =

யாவற்றிற்கு மேலாய், விகற்பமிலா வடிவாய் = சர்வோபாதி வியயவயத்தான் அவிகற்ப ரூபமாய், எங்குநிறை = தேசகாலவஸ்து பரிச்சேத ரகிதமான, சிவமாகி= மங்கலவடிவமாகி, ஒன்றாய் = அத்விதீயமாய், நிற்கும்௳= நின்றிலங்கும்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மா விஷ்ணு ஹரர் ரஜாதிகுணங்கள் உபாதிகளாம், சதாசிவம் = குணசாமியசாக்ஷி ஆதிசப்தத்தானே, சதாசிவனும் என்னும் உம்மையானே குணசாமிய உபாதி மகேசுராதிகள் கவரப்பெறுவர். சிவம் = மங்களம் ஆனந்தரூபம். அவிகற்ப ரூபம் = நிர்விகற்பசொரூபம் அதன்கண்ணேது சர்வோபாதி வியயவயத்தான் என்பதாம், வியயவயத்தான் = நாசவசத்தான். சைதன்ய மாத்ரமயம் = சைதன்யமாத்ர சொரூபம். சகமென்கின்ற பற்றகன்று = சர்வசங்கங்களேயும் விட்டு என்பதாம். இவ்வுலகில் யாவரானு மனுபவிப்பதா யிராநின்ற பிரத்தியக் கான்மாவாகிய இந்தப் பிரஹ்மமானது எல்லாவுபாதிகளின் இலயவயத்தால், பிரஹ்மா, சூரியன், விஷ்ணு, அரன், இந்திரன், சதாசிவன் முதலியோா சாந்தியை யடையுங்கால் மேலுக்கு மேலாயும் மாயைவிடுபட்டிருத்தலிற் சைதன்ய மாத்திர மயமாயும் விசுவசங்கங்களேயெல்லாம் விட்டொளித்தாயும் நிருவிகற்பமாயும் ஏகமாயும் சாந்தமாயு மிருக்கும் பரமசிவமாத்திர மிலங்கும்.

(ச.) அருக்கன்றானும், ஏனையவும், பிரஹ்மாதியுபகித ஆகாராதி நிவிர்த்தியில் சைதன்யமாத்திர சொரூபமான பரமாத்ம சொரூபம் அவிகற்பமாய் ஏகமாய் இவ்விடத்திருக்கு மென்பதாம்.

ஸ்ரீவீர சேகரத்துடன் ஸ்ரீ சம்சாரதரணி யென்னும் வாசிட்ட விவரணத்துடன் ஞானவிண் மகன்கதை சம்பூரணமாம்.

## லீலை கதை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னர் ஆகாசஜாக்கியானத்திற் சின்மாத்திர சொரூபமாய பரமாத்மாவிற்கு மாயையே மனமாகி யுலகத்தைச் சிருஷ்டிப்பதாகக் கூறப்பெற்றது இப்போது மாயையினது அளவின் மகாதுர்க் கடவேதுத் தகைமை ஜகந்மாயிகத்வ நிச்சய திடத்தின் பொருட்டு விஸ்தரிப்பார் லீலைகதையைத் தொடங்குகின்றார்; கூறிய பொருளில் ஸ்ரீ இராகவருக்கு ஐயந்திரிபு துணிவின்மைக ளிருப்பதைக் குறிகளாலுணர்ந்த ஸ்ரீ வசிஷ்டர் அவற்றை யகற்றும் பொருட்டு அதற்கு வேண்டிய யுக்திகோடிக ணிறைந்து கதை விசித்திரத்தால் அலங்கரிக்கப்பட்ட அதி விஸ்தாரமான மண்டப உபாக்கியானத்தைக் கேட்பிக்கும் பொருட்டுப் பதிஞ்ஞை செய்தருளுகின்றார்:—இந்தப் பொருளென.

(ச.) முன் ஞானவிண் மகன்கதையிற் சித்துருபமான பரமாத்மாவின் மாயையானது மனதாய்ச் சர்வசகத்தையுஞ் சிருஷ்டிக் கின்றதெனக் கூறப்பட்டது; இப்போது லீலைகதையில் ஜகம் மாயாமய மென்றதை வெளிப்படையாக்க மாயையினுடைய வெகு துர்க்கட கடனசாமர்த்தியமான தன்மை விஸ்தரிக்கப் படுகிறது:—இந்தவென.

இந்தப் பொருளேயமறுத் திளேப்பாறு மாறோர்
முந்தக்கதை கேள்குண முற்றி விவேக முற்றோன்
விந்தைப் புயத் தோன்பது மப்பெயர் வேந்தன் மண்மேற்
சிந்தைக் கினிதாங்குண லீலையச் செம்ம றேவி.

(ப - ரை.) இந்தப் பொருள் = மேற்கூறிய அருத்தம், ஐயமறுத்து = சந்தேகமில்லாமல், இளேப்பாறுமாறு = சித்தத்தின்கண் விசிராந்தியுறும் வண்ணம், ஓர் = ஒப்பிலாத, முந்தைக் கதைகேள் =முதன்மையும் பழைமையும் வாய்ந்து காதுக் கணியான.

மண்டப ஆக்யானத்தை பொருமையுடன் செவிகொள்ளுதி, குணமுற்றி = சற்குண ஹம்சங்கட்குச் சரமாயும், விவேகமுற்றோன் = மரியாதையைப் பாலனஞ் செய்வதிற் கடற் போன்றவனும், துர்க்குணத் துரும்புகட்குத் தூமத்துவஜனும், விந்தைப் புயத் தோன் = பகைத்திமிர பாஸ்கரனும், பதுமப்பெயர் வேந்தன் = விளங்கிப் பதுமரா ஜாவென நாமமுற்ற இராஜராஜன், மண்மேல் = புவியை யாண்டுகொண்டு பூப்புகழுப் பொலிந்தான், சிந்தைக்கினிதாங் குண = மனோகரமான அநந்தகல்யாண குணங்களா லலங்கரிக்கப் பெற்ற சர்வசௌபாக்கிய வதியாய, லீலை = லீலாதேவி யென்னும் பெயர்வாய்ந்த விலாசினி, அச்செம்மல் = அநேகம் புத்திரபாக்கியம் படைத்த அந்த ஸ்ரீ மானது, தேவி = பட்டமகிஷியாக இருந்தாள்.

(ஸ்ரீ - வீர.) " முன்னர் விண்மகன் கதையினின் மூதறிவாகச், சொன்னவப்பரம் பொருளினிற் றொடர்ந்திடு மாயை, அன்னதொண் மனமாகியே சிருஷ்டியை என்னவர் ணிதம் லீலையின் இனியகாதையினால். மாயையின் பகுதுர்க்கட ஹேதுதை மலர்த்தித் தூயை லீலையை நோக்கியே தொகுத்து மேல்வகுத்து, வாய யாவையும் விரித்திடக் கருத்தினிலமைந்தே, மாயி கத்தன்மை யுலகினில் வெளியதாய் மலரும். என இவ்வாறு மகத்துக்களான் மலர்ந்தருளப் பட்டுளது. அப்பதுமராஜன்; குலபதுமன் குலாலங்கா ரன், விளங்கத்தெரிபவன் வெகுபுகழுடையோன், முகவிகாச முடையோன் முகன் என் பதாகக்கொள்க. மரியாதையைக் காப்பதில் அவ்வரசன் கடற்கொப்பாக விருந்தனன், அதாவது கடலானது தன் மரியாதையாய கரைகடவாததேபோல இவனும் வருணு சிரமமரியாதையைத் தாண்டுவதே கிடையாது. மேலுமவ்வரையன் சத்துரு வந்தகார சூரியன், சற்குணங்க ளென்னும் சோபன குணங்களாகிய அன்னங்கட்குத் தடமாவன், தோடங்களே யாகிய திருணக் கூட்டங்கட்குத் தீயாவன், அவன்மனைவியாகிய லீலா தேவி சோபனமான ஸ்ரீயையுடையவள், கமலையாகிய இலக்குமி அவனியிலுதித்ததொப் பாள். ஹே இராகவ ! ஈண்டிந்தச் சிரவண பூஷணமா யிராநின்ற மண்டபோக்கியானத் தைக் கேட்பாயாக, கேட்ட மாத்திரையானே ஐயமில்லாம லிப்பொருள் சித்தத்தில் விசிராந்தியை யடையும் என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூற, போதத்தை விருத்திசெய்யும் மண்டபோக்கியான முழுவதையும் நல்லுணர் வுதிப்பான் றிருவருள் செய்யவேண்டு மென்று ஸ்ரீ இராகவர் பிரார்த்திப்ப ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுகின்றார்: இம்மஹீ பீடத் தில் விளக்கத்தோடு கூடியவனும் விவேகவானும், ஸ்ரீமானும், அநேகங் குமாரர்களை யுடையவனும், கீர்த்தியாகிய சுகந்த ஹேதுவாய வங்கிசகமலம் போன்றவனும், பத்ம னென்னும் நாமம்வாய்ந்த ஓரரசனிருந்தான், அவன்வருணுசிரம மரியாதையையும் வயங் குந்தீப மரியாதையையும் காக்குங் கருணைக்கருங் கடலாகியும், பகையிருளகற்றும் பாற் கரனாகியும், காந்தையா மாம்பறகலை மதியாயும் தோடத்துரும்பைத் தொலையெரியாயும், அறிஞர் அமரர் அருங்குழாத்திற் கோர் பொறிநிறை மேருவைப் போன்றவனும், பவக் கடலிற் புகழ் மான்மதியாயும், சற்குணவன்னச் சரமேயாயும், சம்பத்துருவத் தாமரை கட்கோர் விம்பமாம் விமல விண்மணியாயும், பகைவரைப் போரிற் பவனனைப்போல மிக நடுங்கிடச்செய்யும் வீரியனும், மனவடிவின்வாம் ஆனைகடமக்கோ ராண்சிங்கமாகி யும், பெரும் வித்தை யனைத்தினும் பிரியோனாகியும், இருந்து விளங்கினன்; இத்தகை யிவற்குச் சுபகைபாரியை சொலும்பெயர் லீலையாள், விலாசினியாவாள் விளங்கெலாப் பாக்கியம் உடையவள் திருவெனவுதித்தவள் பூவில், நாயகன்சேவை நவில்வகை யனைத் தினும் தூயபரிஜனந் துதைந்தவ ரெவர்க்கும் சேயனுகூலஞ் செயலினுங் கோமளை, ஆடல்பாடல் அமைமது மொழியாள், இளந்தளிர்க் கரமும் இன்மலரொளியுங் கொளும

துத் திருவெனக் கொளுந்திரு மேனியள், சொச்சத்தனுவினள் சொலிபுண்ணிய வதி யாய்ப் பொருந்தி யிருந்தனள்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டர், ஐயமறுத்து = நிர்ச்சந்தேகமாய், இளைப்பாறுமாறு = நினது சித்தத்தில் விசிராந்திபொருந்த, ஓர் முந்தைக்கதைகேள்=ஒப்பற்ற சிரவணபூடணமான முதன்மையாகிய மண்டபோபாக்கியானத்தை இப்போதுகேள். மண்மேல் இருந்தான், குணமுற்றி விவேகமுற்றோன் என்றதனால், சற்குண வம்சங்களுக்குத் தாமரைத் தடாகமா மென்றும், விந்தைப்புயத்தோன் என்றமையால், பகையந்தகார பாநுவாயென்றும், பதுமப்பெயர் வேந்தன் என்றமையால் தாமரைத் தடாகம்போற் குலவிருத்தி யுடையவனும், குலத்துச்குத் தாமரைப் பூவொப்ப வலங்காரவானும் வெகுபுத்திர ஐசுவரிய சம்பத்தும் பதுமனென்னு நாமமுமுடையவனும் மரியாதையைப் பாலனஞ்செய்வதிற் சமுத்திரமா யிருப்பவ னென்றும், சிந்தைக்கினிதாங் குணலீலை என்றமையால் அதிசௌந்தரியாய்ச் சர்வசௌபாக்கிய வதியாய்ப் பூமியில் இலக்குமி போன்று உதித்தவளாய் லீலையென்னு நாமந்தரித்தவளாய் அச்செம்மறேவி இருந்தாள் என்றும் யூகித்துணர்க: கூடாததைக் குயிற்றுவதாதி தோடங்களிலாந் திருஷ்ணைக்குத் தீப்போனிவர்த்தகன். பாடபேதம். (1)

அன்னானிழல் போன்மனம் போலய லற்ற வன்னா
ணன்னாயகன் மூப்பிறப்பின்றி நற் காளையாகி
யெந்நாளுமொத் தின்புற வென்கொலுபாய மென்னத்
தொன்னான் மறையோர்க்குரைத் தாளவர் சொல்லலுற்றார். (2)

(ப - ரை.) அன்னான் = அப்பதுமராஜாவினது, நிழல்போல்= பிரதிபிம்பம்போல, மனம்போல் = உள்ளமொப்ப, அயலற்ற = வேறாகாத, அன்னாள் = அந்தலீலாதேவி, நல்நாயகன் = எழிலும் வீரமும் வாய்ந்த நமது நாதன், மூப்பிறப்பின்றி = விருத்தாவஸ்தை மரணாவஸ்தை யடையாமல், நற்காளையாகி = நவயவ்வனம் நண்ணி, எந்நாளும் ஒத்தின்புற = எக்காலத்திலும் அபேதமாய்ச் சுகமடைய, என்கொலுபாயமென்ன = யாதேனும் உபாயம் உண்டுகொலோ வென்று, தொன்னான் மறையோர்க்கு = அநாதியா நான்கு வேதங்களையும் அத்தியயனஞ் செய்து தேர்ந்த மறையவர்க்கு, உரைத்தாள் = தன்குறையைத் தெரிவித்தாள், அவர் = அம்முதுவேதியர், சொல்லலுற்றார் = கூறுவாராயினர்.

(ஸ்ரீ - வீர.) காளை = யவ்வன உல்லாசவான், போந்தெழும் புதுத்தாருண்யமுடையவன் என்பதாம். நான் மறையோர் = ஞானவிடயம், வித்தைவிடயம், தேவதைவிடயம், தருமாதிவிடயம் தெரிந்தவர் எனக்கொள்க. முதலிற்றான் மனத்திற்சிந்தித்து விப்பிரரைநோக்கி ஹே விப்பிரரே! மானிடர்கட்கு அமரத்தன்மை யெங்ஙங்கிடைக்கும் எனமறித்தும் மறித்தும் வினவினள். அந்த லீலாதேவி கலக்கங்காதலன் உறிற்கலங்கிடுவள், விலக்கமகிழ்வுறில் வியன்மகிழ்விரவுவள், ஆகுலம் பெரிதுறில் ஆகுலத்திடுவள், பதிவிம்பமொப்பப் பகர்ந்திடு காந்தை, சினந்திடினுதன் பயஞ்சேர்ந்திடுவள். காதலன் கலக்காதிகள் அடைந்தபோது அதிகலக்காதிகள் அடைந்தபோதினும் கோபமுறுங்கான் மாத்திரம் பந்தொடுங்கி யொதுங்குவ ளெனவறிக: அநேகஞ் சுகத்தையடைந்து வாழ்ந்து வருமொருநாள் நல்லெண்ண முடைய அக்கல்யாணி இவ்வாறு சிந்திப்பதானள்:—இவ்வுலக நாயகனாகிய எனது நாதர் எனது பிராணனைப் பார்க்கினும் எனக்குப் பிரியராவர், அவர்யவ்வன உல்லாசராயும் ஸ்ரீமானாயும். ஜனனமரண]மற்றவராயும் எவ்வா

றுவர், ஆகிய அவரோடும், உன்னதமான ஸ்தன்னியங்களோடு கூடியயான்புட்பக்கொடி வீடுகளில், அழகுவாய்ந்த கருணியாய் இஷ்டப்படி நூற்றுக்கணக்கான யுகங்கள் எப்போதும் எப்படி இரமிக்கமுடியும் ? முதலிற் சந்திரவதன அரசர் ஜரையும் மரணமும் அற்றவராகுமாறு வேண்டியபடி தவம் ஜபம் இயம நியம அனுஷ்டானம் முதலியவற்றுனே முயல்வேனுக. ஞான விருத்தர்களும் தபோவிருத்தர்களும், வித்தை விருத்தர்களும் ஆகிய பிராஹ்மணர்களை நரர்கட்கு மரணமானது எங்ஙனம் வராமலிருக்கும் எனக் கேட்பேன் எனச்சிந்தித்து அத்தகையமறையவரை யழைத்துப் பூஜித்து மிகவும்வணக்கமாக ஹேவிப் பிரேந்திரர்களே ! அமரத் தகைமையானது எனக்கும் எனது நாயகருக்கும் எங்ஙனம் உண்டாகுமென மீண்டும் மீண்டும் அவள் கேட்டனள்.

(ச.) அன்னுன் நிழல்போல் = பிரதிவிம்பம் விம்பம்பொருந்திய வியல்பை அவலம்பிப்பதுபோல் அப்பதியோடு சமரச சுபாவம் பொருந்தினவளாய், மனம்போ லயலற்ற அவன் மனம்போற் றன்மனமும் இலேசிக்கிற் சிலேசிக்கும், சந்தோஷமுறிற் சந்தோஷமுறும், ஆகுலமுறி லாகுலமுறும் சமமுடையளான, அன்னுள் ஓர் காலத்துச் சுபசங்கற்பம் பொருந்தினவளாய், நன்னுயகன் =பிராணன்களினும் மிகுபிரியனுன இவ்வுலகபதியாகிய எனது கொழுநன், மூப்பிறப்பின்றி = அஜராமரணனுய், நற்கலையாகி = ஸ்ரீமானுன யவ்வனேல்லாசனு யிருக்க, என்சொலுபாயம்; எந்நாளுமொத்தின்புற = நானெக்காலமும் பர்த்தாவோடுகூடி இரமிக்க என்கொலுபாயம். என்னு = என்றெண்ணிப் பின்தொன்னுன் மறையோர்க் குறைத்தாள் = ஞானவிருத்தரும் தவவிருத்தரும் வித்தியா விருத்தருமாகிய அந்தணரை வரவழைத்துப் பூசித்து வணங்கி அந்தணர்களே ! அமரத்துவ மெப்படியாமென மாறிமாறிக் கேட்டாள். அவர் சொல்லலுற்றுர்.(2)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மறையவர் கூறுதல்:—செபமென.

செபமுந் தவமும் முதலி யாவையுஞ் சித்தி நல்கும்
புவனங் களிற் பொன்றுதல் போக்கரி தியார்க்கு மென்ன
விவள் சிந்தை செய்வா ளிறைவற்கு முன்யா மிறந்தாற்
கவலொன் றறத்தற் பதவாழ்வு கைகூட லாகும். (3)

இறைவன் முதற் சாகிலச் சீவனை யிந்த வீட்டி
லுறையும் படிசெய் ததுவென்னை யுவந்து காண்க
நிறையின்ப மெய்தி யிருப்பே னிது நேருமாறு
மறைதந்த வாணிபத மேத்துவன் வாழ்த்தி யென்றே. (4)

(ப - ரை.) செபமுந் தவமும் முதல் யாவையும் =ஜபதபயியமாதிகள் சமஸ்தமும், சித்திநல்கும் = அணிமாதி சித்திகளைத்தரும், புவன்களில் = எவ்விடத்திலிருந்தபோதினும், யார்க்கும் = புகலரும் பெரியோர்க்கும், பொன்றுதல் போக்கரிது = மரணத்தைத் தவிர்த்தல் முடியாத காரியமாகும், என்ன = என்றந்த மறையவர் கூற, இவள் சிந்தைசெய்வாள் = இந்தலீலை ஆலோசிப்பதாவது, இறைவற்கு முன்யாமிறந்தால் = பர்த்தாவிற்கு முன்பு யாம்தெய்வ யோகத்தான் மரணத்தையடையின், கவலொன்றற= சர்வதுக்கங்களும் விடுபட்டு, தற்பதவாழ்வு = மோக்ஷவாழ்வை, கைகூடலாகும் = யடைந்து பரமாநந்த முறுவேம். (3)

இறைவன் முதற்சாகில் = ஆயிரவருடங் கழித்துப் பர்த்தா நமக்குமுன் மரிக்கின், அச்சீவனை = அம்மன்னவனுயிரை = இந்த வீட்டில் =இந்த சுத்தாந்த மண்டபத்தில், உறையும்படி செய்து=இருக்குமாறு, அது =அவ்வுயிர், என்னை = எம்மை, உவந்து=

மகிழ்ந்து, காண்க = கண்டுகொண்டிருக்க, நிறையின்ப மெய்தி = பரிபூர்ண சுகத்தை யடைந்து, இருப்பேன் = மகிழ்வேம், இது நேருமாறு = இந்தப்பாக்கியம் கிடைத் தற் பொருட்டு, மறைதந்தவாணி = நால்வேதங்களையும் அனுக்கிரகித்த சரசுவதி தேவி யின், பதமேத்துவன் வாழ்த்தி = திருவடித்தாமரையை ஜபோபவாச நியமங்களானே மகிழ்வுறும் வரை புகழ்ந்து வணங்குவன், என்றே = என்றெண்ணி. (4)

(ஸ்ரீ - வீர.) இயமம் = கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பெண்ணய வாமை, ஏராமையாம். அணிமாதிகள் சித்தர்களின் சித்திகளாம் யாந்துஞ்சின் அத் விதீய ஆனந்தசொரூப ஆன்மாவின் கண் இனிதாக மீண்டும் எழாதவண்ணம் திதியைச் செய்வேன். நந்நாயகர் தேகத்தை, விட்டபோது சுழலாநின்ற பதியின் உயிரைப் பரிசுத்தமாகிய அந்தப்புர மண்டபத்தில் இருக்கச்செய்வேம், சகலகலாவல்லி யின் மகிழ்ச்சிவரை பூசைசெய்வது வரப்பொருட்டாம், பின்செய்வது செய்ந்நன்றி காத் தற்காமெனவறிக. தவம் ஜபம் இயமநியம அனுஷ்டான முதலியவற்றானே சமஸ்த சித் தர்தஞ் சித்திகளு மினிதாகவே கிடைக்கும்; ஆனால் அமரத்தன்மையோ ஒருகாலும் கிடைக்கவே மாட்டாது என்று சொல்ல அதைக்கேட்டதேவி மீண்டும் தனது நுண்ணு ணர்வானே வருமாறு விரைவிற் சிந்திக்கலானாள், பிரியநாயகர் பிரிந்து விடுவாரேயென மிகப்பயந்தனள், நாயகர்க்குமுன் எனதுமரணம் தெய்வயோகத்தா லுண்டாமேலாயின் அதன்பின் சர்வதுக்கங்களும் விடுபட்டவளாகி எனது சொரூபத்தின் கண்ணே சுகமாக வாழ்வேனாக. பரலோகத்திற் செல்லினும், இச்சன்ம ஸ்மரணமின்மையின் நாயகர் வியோகத்துக்கம் அடையாமையின் ஆயிரக் கணக்கான வருடங்கள் சென்றபின் எனது நாயகர் எனக்கு முன்பு தேகம் விடுவரேலாயின் எவ்வுபாயத்தால் ஜீவன் வீட்டைவிட்டு வெளியேறாம லிருக்குமோ அவ்வுபாயத்தைச் செய்வேன். எனது நாயகரது ஜீவன்சுற்றி விளையாடிக் கொண்டிருக்கும் எனது பரிசுத்தமாய அந்தப் புரமண்டபத்தில் நாயகராற் பார்க்கப்பட்டவளாய் நித்தியம் இஷ்டப்படி வசிப்பேனாக. இப்பயன் சித்திக்கும் பொ ருட்டு இன்றுமுதல் ஞானவடிவமாக விளங்காநின்ற ஸ்ரீ சரசுவதிதேவியைச் சந்தோஷ முண்டாகும் வரை ஜப உபவாச நியமங்களினாலே பூஜிப்பேனாக; என்று நிச்சயித்து முயலலானாள்.

(ச.) செவமும் தவமும் இயமம் முதலியாவையும் சித்திநல்கும், அவைகளால் புவ னங்களிற் பொன்றுதல் போக்கரிது இயார்க்கும், என்ன = என்றந்தணர் கூறக்கேட் டுப் பின் இவள் நாயகன் வியோகத்தில் அதிபய முடையளாய்த் தன் பிரஞ்ஞையால் இதைக்குறித்து, சிந்தைசெய்வாள், இறைவற்குமுன் நாம் தெய்வாநுகூலத்தினால் இறந் தால், கவலொன்றற = துக்கத்தினின்றும் விடுபட்டவளாய்க் கிலேசமேயின்றி, தற்பத வாழ்வு = பரமான்மாவின் கண் சுகமாயிருத்தலே, கைகூடலாகும் = கிலேசமேயின்றிப் பரமான்மாவின் கண் லயிப்பே னென்பதாம். (8)

இறைவன் முதற்சாகி லச்சீவனை யிந்த வீட்டில் = இக்கிரகத்தினின்றும் நீங்காது, உறையும்படிசெய்து, அது, தனது சுத்தமான மண்டபத்தினுட் சஞ்சரியா நின்ற அக் கணவனாகிய ஜீவன், என்னையுவந்து நித்தியம்காண கணவனாற் காணப்பட்டவளாய் நான் நிறையின்பமெய்தி யிருப்பேனிதுநேருமாறு இன்றைத்தினம் இப்போதாரம்பித்து, மறையின்ப வாணிபதம் = வேதரூபியாய் ஆநந்தாகார ஞப்திமயமான ஸ்ரீ சரசுவதிதேவி யின் பாதத்தை, ஏத்துவன் வாழ்த்தியென்றே = செபவுபவாச நியமங்களாற் சந்தோஷ மிகப் பூசித்துத் துதித்து வணங்குவ னென்றெண்ணி அவள். (4)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தவம்புரியு முறைசாற்றுதல்:—மன்னென.

மன்னற்குரை யாதுநன் மந்திரங் கற்பம் வல்லோர்
சொன்னத்தி னின்று சுரர்பூ சுரர்பூசை பண்ணி
யன்னத்தை நாளுநான்கி னுக்கோர் பகலற்ப மாயுண்
டின்னிட்டை யாலேமதி பத்து நடந்த வெல்லை. (5)

(ப - ரை.) மன்னற்கு = மகாராஜாவிற்கு, உரையாது = சொல்லாமல், நன்மந்திரம் கற்பம் வல்லோர் = நல்லமந்திர கற்பசாஸ்திரங்களிற் றேர்ந்தவர், சொன்னத்தினின்று = கூறியபிரகாரமே செய்து, சுரர் பூசுரர் பூசைபண்ணி = தேவப்பிராஹ்மண குருபிராஞ்ஞ வித்வான்களை விதிப்படி பூசைசெய்து, அன்னத்தை = தான் அயிலும் ஆகாரத்தை, நாள் நான்கினுக் கோர்பகல் = தினம் நான்கினுக் கொருபகலாக, அற்பமாயுண்டு = சிறிதாக அயின்று, இன்னிட்டையாலே = இவ்வினிமை பொருந்திய தவத்தினாலே, மதிபத்து = தசமாசம், நடந்தவெல்லை = சென்றபோது.

(ஸ்ரீ - வீர.) சொன்னத்தினின்று என்றமையின் நியமந்தவிராது பிடிவாதமாக விருந்து என்றதாம். பிராஞ்ஞர் = தருமாதி தெரிந்தவர். வித்வான்கள் = பிரஹ்மவித்துக்கள், விருத்தர்கள் எனவும் மூலபாடபேதமாம். ஸ்நான தானதபத்தியானங்களில் எப்போதும் முயலும் மேனியுடையவளாகவே யிருந்தனள். சர்வாஸ்திக்யத்தாற் சதாசாரஞ் செய்பவளாகவே யிருப்பன். எப்போழ்தும் தபோநிஷ்டையைப் பற்றியே நிகழுவள்; தவநிஷ்டையையே நிலைநிறுத்திக் கஷ்டப்பட்டுச் சாதித்துக் கொண்டிருப்பள் என்பதாம். அந்த லீலாதேவியாகிய சுந்தரியானவள் நாயகருக்குத் தெரிவிக்காமலே நூலில் கூறியபடி உக்கிரமான தவத்தைப் புரிந்தாள். அவ்வாறே அநேக நியமத்தோடுங் கூடியிருந்தாள். அற்றேல் “ பதியினால் ஆணைசெய்யப் படாமலே மடமானேவள், மூதுமுபவாச நோன்பு மூத்துறச் செய்வளன்னாள், பதியுடை யாயுளீர்வன் பாறிடிலாவியந்தோ, கொதியுறு துயரமிக்க கொடுநர கடைவளன்றே ” என நாயகருக்குத் தெரிவிக்காமலென்பது நிந்திக்கத்தக்கதாக விருப்ப நூலிற் கூறியபடி யென்றியம்பியது எங்ஙனங் கூடுமெனின்? இங்ஙனம் காட்சியாக வகாட்சியுதாகவோ, மாட்சியென்று மனுளனுக்கெய்துற, நீட்சிநோன்புபவாச நியமங்கள், ஆட்சி லோகோபசாரமு மாற்றுவாள் ” என்பதனால் முன்னூல் நிந்தை, நாயகனிதத்திற் கயலாகத் தனது இஷ்டசித்தியின் பொருட்டு உபவாசாதி விஷயகமாமெனத் தோடமின்மையறிக. மூவிரவுக் கொருமுறை மூவிரவுக் கொருமுறை பாரணை செய்பவளாய்த் தேவதைகள் மறையவர் ஆசிரியர் அறிஞர் கற்றோர் முதலியவரைப் பூசைசெய்வதிற் றற்பரையாய், ஸ்நாநம் தானம் தவம் தியானம் முதலியவற்றை நிரந்தரம் புரியும் முயல்வுடைய தேகியாய், எல்லாச்சாஸ்திரப் பொருள்களினும், அவசியம் பயனுண்டென்னும் எண்ண முடையவளாய்த் தவம்புரிந்து கொண்டு காலாகாலத்திற் செய்யவேண்டிய செய்கைப்படி நூற்படி முறைப்படி பர்த்தா தெரிந்து கொள்ளாதபடி நாயகரைமகிழ்வித்து வந்தனள். நியமத்தோடுகூடி யிவ்வண்ணம் அந்தப்பாலையாகிய லீலை பத்துமாத பரியந்தம் இடைவிடாமல் மிகவுங் கஷ்டப்படுத்தபோ நிஷ்டையை யநுஷ்டித்து வந்தனள் இவ்வாறுநூறுமூவிரவு செய்துகழித்தாள்.

(ச.) மன்னற் குரையாது, நன்மந்திரங்கற்பம் = மந்திர சாஸ்திரத்தில், வல்லோர், சொன்னத் தினின்று = விதித்த உக்கிரமான தபநியமங்களில் நிலைத்து நின்றவளாகி, சுரர்பூசுரர் பூசைசெய்து = தேவ அந்தணகுரு பிராக்ஞ வித்துவான் ஆகிய இவர்களைப் பூஜித்து — நாளுநான்கினுக் கோர்பகல் = மூன்றிரவின் பரியந்தந்தோறும், அன்னத்தை

யற்பமே யுண்டு பாரணை செய்தவளாய், இன்னிட்டையாலே கிலேசத்தை யரிக்கும் அகண்டமான சிரத்தையோடு ஸ்நாந, தான, தவ, தியான, நியமரூபமான சதாசாராநுட்டானமாகிய தபோநிஷ்டையால், மதிபத்து = திரிராத்திரி சதம், நடந்தவெல்லை = சென்றபின்பு.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்பிகை பிரசன்னமாதல்:—வானுரென.

வானுர்மதி போனிற வாணி மகிழ்ந்து தோன்றி
நீநாடிய தென்னென நீள்பவ மாநெருப்புக்
கானுவமு தக்கதி ரேயகத் துன்ப மென்னும்
பாநாளகற் றுங்கதி ரேயெனப் பாத மேத்தி. (6)

(ப - ரை.) வானுர், மதிபோல் நிறவாணி = கரற்கால ஆகாயத்திற் பொருந்திய பூர்ண சந்திரனைப்போலும் வெண்காந்தி வீசும் ஸ்ரீ சரசுவதிதேவி, மகிழ்ந்து = இவள் செய்த தவத்தால் அதிக சந்தோடத்தை யடைந்து, தோன்றி = பிரசந்நமாகி, நீ நாடியது என்னென = ஹேகுழந்தாய் ! நீ வாஞ்சித்த வரம்யாது கொலாமென்று கேட்டருள, நீள்பவமாம் நெருப்புக்கு = ஒன்றுகொண்டுங் கெடுக்கமுடியாதபடி தீர்க்கமான ஜன்ம ஜராமயமான ஜுவாலைவீசும் பேரழலின் ரூகத்திற்கு, ஆனு அமுதக்கதிரே = கெடாத அமுதமயமான கிரணங்கள் வீசும் சசிப்பிரபையே ! அகத்துன்ப மென்னும் பாநாள் = உட்டுன்பமயமாய ஹிருதய அந்தகாரக் கூட்டத்தை, அகற்றுங்கதிரே = நிவாரணஞ் செய்யும் ரவிப்பிரபையே ! எனப்பாதமேத்தி = என்பவான பலதோத்திரங்களாற் றிருவடியைப் பூசை முறைப்படிசெய்து.

(ஸ்ரீ - வீர.) மகிழ்ந்து = மிகவும் அதிசயமான ஆதரவோடும் நன்கு பூசிக்கப்பட்டு போற்றப் பெற்றதனுற் சந்தோஷித்து, நீ பர்த்தாவின் பக்தி அதிசயத்தோடு கூடியவளாக விருத்தலின் வேண்டிய மேன்மையைக் கேள். ஜன்மஜரையே சுவாலைகள் அவற்றால் தாகமே தோடம் அதைக் கெடுப்பதில் நிலவொளியே என்றதாம். இருதய அந்தகாரம் அஞ்ஞானமாம். கூறியவண்ணம் விரதத்தை யநுட்டித்தலா லெழுந்தருளிப்பாகிய வுபசாரத்தாற் பூஜிக்கப்பெற்றவளும், பாவனேபசாரத்தாற் பகுமானிக்கப் பெற்றவளும் சர்வஐசுவரிய சம்பன்னையாய பகவதியும் கௌரியுமாகிய ஸ்ரீ சரசுவதிதேவி சந்தோஷித்து அந்தலீலையை நோக்கி ஹேபுத்ரி ! பாத்தாவி னிடத்திலிருக்கும் மிகுந்தபக்தியினுல் நிரந்தரஞ்செய்த நீள்தபசால் மிகவும் அகமகிழ்ந்தோமாதலின் உன்னுளம் விரும்பிய வரத்தைக் கேட்டுக்கொள் ளென்றுகூற, உளம்பூரித்த லீலாதேவி வரும் நாயகஜீவன பிரஹ்மவித்தை யடைவுவடிவதும் பாக்கிய அனுரூபமாயதும் ஆகிய ஸ்துதியைத்தெய்வ யோகத்தாற் செய்கின்றனள்; ஜன்ம ஜரைகளாகிய சுவாலையின் ரூபத்தை யகற்றும் சந்திரகாந்தியாகிய சரசுவதிதேவியே ! நீடூழி நீ வாழ்க. இருதயாந்த காரக் கூட்டத்தை யகற்றும் சூரியகாந்தியாகிய சரசுவதிதேவியே! நீ நீடூழி வாழ்க. ஹே அம்பிகே ! ஹேமாதாவே ! ஹேயுலகமீன்ற அன்னையே ! இக்கிருபணையாகிய அடியாளைக் காப்பாயாக.

(ச.) வாணி = பகவதிதேவி யென்னும் வாக்கீசுவரி, மகிழ்ந்து = பூசையாற் பிரீதி மிகுந்து கனித்தவளாய், தோன்றி = பிரசன்னமாய், லீலையை நோக்கி வத்சையென்னும் வாலையே ! நீமகிண பக்தி யதிசயத்தாற் செய்த நிரந்தரதவத்தால் நான் சந்தோஷித்தென், நீ நாடியதென்னென = வாஞ்சித்த வரமியாது அதனை வாங்கிக்கொள்ளென்று திருவாய்மலர்ந்தருள. லீலை நீள்பவமா நெருப்புக்கானுவமுதக் கதிரே = சன்மசரை மரணமென்னும் சுவாலையால் வரும்தாக தோடத்தைச் சாந்திசெய்யுஞ் சசிப்பிர

பையே ஜய, அகத்துன்ப மென்னும், பானுளகற்றுங் கதிரே = அந்தகாரக் குழாத்தை நிவாரணஞ்செய்யும் ரவிப்பிரபையேஜய. திரிசகன்மாதாவே! இவ்வேழையாகிய என்னை யிரக்ஷி எனப்பாதமேத்தி. (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வரப்பிரதானமருளல்:—என்னுவென,

என்னுயகன் றுஞ்சிலச் சீவனிவ் வில்லி னிற்க
முன்னுகவுன் னைநினை போதிலென் முன்பு தோன்ற
வன்னுய வரங்க ளிரண்டு மளித்தி யென்ன
நன்னுமக ளன்பொடு நல்கி நயந்து போனுள். (7)

(ப - ரை.) என்னுயகன் = எனது பர்த்தா, துஞ்சில் = உயிர்விடில், அச்சீவன் = அவ்வுயிர், இவ்வில்லில் நிற்க = இவ்வந்தப்புர மண்டபத்தை விட்டேகாமல் இங்கேயே யிருக்கவும், முன்னுக = பிரத்தியக்ஷமாகித் தரிசனந்தந்து வேண்டியதை யனுக்கிரகித் தற்பொருட்டு, உன்னை நினைபோதில் = எப்போது எப்போது உனதுபாதப்போதைச் சிந்தை செய்வேனே, அப்போது அப்போது, என் முன்புதோன்ற = அடியாளது முன்னர் பிரசன்னமாகவும், அன்னாய்! ஹேமாதாவாகிய மகாதேவி! அவ்வரங்களிரண்டும் = அப்படியான வரங்கள் இரண்டையும், அளித்தி = திருவருள்செய்தி, என்ன = என்று பிரார்த்திப்ப, நல்நாமகள் = பக்தவாத்சல்யம் வாய்ந்த வாக்தேவியானவள், அன்பொடு நல்கி = மிகவும் பிரீதியுடன் கொடுத்து, நயந்து, ஆசீர்வதித்து விட்டு, போனுள் = அலைகடலெழுந்தங் கடங்குமாபோல் ஆங்கே யறிவிற் கரந்தனள்.

(ஸ்ரீ - வீர.) உயிர்விடல் = விதேகமாதல், வரப்பிரயோஜன ஹேதுவினுலே தரிசனப்பொருட்டு எக்கால் உன்னைப் பிரார்த்திப்பேனே அக்கால் தரிசனந்தரல் இரண்டாவது வரமாம். ஹே தருணமங்கலையே! அடியாள் பிரார்த்திக்கும் இவ்விரண்டு வரங்களையும் கொடுத்தருள்வாயாக; ஹே அம்பிகே! அவற்றுள் ஒன்றே அடியாளுடைய நாயகர் தேகநீங்கிய பின்னச்சீவன் இவ்வெனது அந்தப்புர மண்டபத்தினின்றும், அயலணுகா தொழிக, மற்றொன்றே ஹே மகாதேவியே! அடியாள் தேவரீரை யெப்போது எப்போது பிரார்த்திக்கின்றேனே தரிசனத்தின் பொருட்டும் வரங்கொடுத்தற் பொருட்டும் அப்போது அப்போது எனக்குத் தரிசனங்கொடுத் தருளவேண்டும். என்பதைக் கேட்ட தேவியா மூலகமாதாவானவள் அவ்வாறே யுனக்குளவாகுக வெனத் தாமேகூறி யருளிக் கடலிலெழுந்த அலையானது அடங்குவதேபோல ஆங்கே யறிவின்மறைந்தனள்.

(ச.) இவ்வில்லினிற்க = தனது இந்த அந்தப்புர மண்டபத்தினின்று நீங்காது எனது சமீபத்திருக்கவும், ஹேமகாதேவி! நின்னை முன்னுகத் தரிசித்தற்கு நினைபோதில் = பிரார்த்திக்குங் காலத்தில், என்முன்புதோன்ற = நீ யெனக்குத் தரிசனந்தரவும், (யான்வேண்டும்) அன்னுயவ்—போனுள் = சமுத்திரத்தெழுந்த தரங்கம்போல் அந்தர்த்தானமானுள். பின்பந்த ராசசிரேட்டி (மகிஷி) யான லீலை சந்தோடமிகுந்த இஷ்டதெய்வ முடையளாய் அமிருத வருடத்தாற் பூரணமானவள்போல் ஆநந்ததாரணியா யிருந்தாள் எனத்தேர்க. (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இஷ்டதேவதையைச் சந்தோஷிப்பித்து வரதானம்பெற்ற அவ்வரசியானவள் இன்கீதங்கேட்ட பெண்மான்போலப் பெருமகிழ்ச்சி யுடையவளா யிருந்தபோது காலத்தேரின் கதிகூறல்:—பக்கத்தென.

பக்கத்தொடு திங்க ளுறும்பரு வங்க டேர்க்காற்
றெக்கிச்செறி நாளதிற் கூம்பு தொடர்ந்த வாண்டு

புக்குற்றதோ ரச்சிமைப் போதநி ஞபி யாதி
மிக்குத்திரி காதலன் றேர்விரைந் தோட லோடும். (8)

(ப - ரை.) பக்கத்தொடு திங்கள் உறும்பருவங்கள் = பக்ஷத்துடனே மாதம் அதன் இரட்டிப்பான இருதுக்கள், தேர்க்கால் = கடகமாகவும், தொக்கிச்செறிநாள் = கூறிய வற்றிற் றொடர்ந்து பொருந்தியதினம், அதிற்கூம்பு = அராவாகவும், தொடர்ந்த ஆண்டு = ஆறு இருதுக்கள் பொருந்திய வருடம், புக்குற்ற தோர் அச்சு = இடையிற் புகுந்து பொலியும் ஒப்பற்ற தண்டமாகவும், இமைப்போது = கணமானது, அதன் நாபி = அதனது நாபியாகவும், ஆதி = முதலனவாய அநேகஞ் சாமக்கிரிகளோடு சேர்ந்ததாகவும் உள்ள, மிக்குத்திரி காலவன்றேர் = அதிக வேகத்தோடுமோடும் காலபகவானது இரதம், விரைந்தோடலோடும் = வெகுவேகமாகச் சென்றுகொண்டிருப்ப.

(ஸ்ரீ வீர) பக்கமாச இருதுக்கள் கடகம் = நாபிவளயம் தினங்கள் அராக்களாம், நாபிதொடங்கி நேமிபரியந்தம் எப்பக்கமும் சமர்ப்பிக்கப்பெற்ற அயவிகாரங்கள் அரா வெனப் படுகின்றன. சம்வற்சரம் அக்ஷதண்டம். நாபி = சக்கிரமத்யம், சக்கிரமத்யஸ்த பிண்டியா மென்க. மிக்குத்திரிதல் = அசைவுவடிவமாக இருத்தலாம் இரவிகதிக்குத் தகாலவியஞ் சகத்தன்மை யிருத்தலானே உபசாரத்தாற் றன்மயத்வம் கூறப்பட்டது, இங்ஙனங் காலரதஞ் சென்றுகொண்டிருந்தபோது பக்கங்களாகிய நேமிகடகங்களும், மாதங்களாகிய மத்திய கடகங்களும், இருதுக்களாகிய நாபிகடகங்களும் உடையதும், "மூந்நாபி சக்கிரம் அஜரம்" என்னுஞ் சுருதியினுனே மூன்றினுந் தொடர்ந்திராநின்ற தினங்களாகிய அராக்கள் குறுக்காகத் தொடர்ந்துநின்ற சங்குகள் கேசரம் போன்றவை யுடையதும், வருடமாகிய அக்ஷதண்டமுடையதும், முப்பதுகலைவடிவு நாபியாகிய மத்தியத் துளையுடையதும், ஆகிய சூரியாதி யசைவுமயமான காலசக்கிர மோடிக்கொண்டிருப்ப, அக்கால்.

(ச.) காலம் பிரமணசீலமாதலின் சக்கரசாமியஞ் சாற்றப்பட்டது. பக்ஷாதி கடகங்கள் = வளயங்கள் திநங்கள் = அராக்கள், வருடந் தண்டம், கணம் நாபி, இவற்றோடு டுற்ற ஸ்பந்தமயமாய் மிகமிகவுஞ் சுழலாநின்ற காலசக்கிரம் நடந்து சென்றபோது.

(ஸ்ரீ - வீர - அ - கை) என்னுயிற்றெனிற் கூறுகின்றார்:—இன்பமென,

இன்பங் கரையற்றிட லீலையிருந்தவெல்லை
யன்பன் சிலநாளி லிறந்தன னன்னமன்னு
டுன்பஞ் சுடும்வெம்மை பொறுதுயிர் துஞ்சுமுன்னே
முன்பின்றி விண்ணின்று சொன்னமாதிவண் மோகமாற்றி (9)

(ப - ரை.) இன்பங் கரையற்றிட = அமிருதவருடத்தால் நிறைந்தாள்போல ஆநந்ததாரிணியாய் கரையிலாவின்பக் காயமேயாகி, லீலை = லீலாதேவி, இருந்த எல்லை = வாழ்ந்து வந்தபோது, அன்பன் = தன்னுயகன், சிலநாளில் = சில காலங்கழித்து, இறந்தனன் = உயிர் துறந்தனன், அன்னமன்னுழ் = அம்சம்போன்ற அவ்வரசியானவள், துன்பம்சுடும் = சோகமானது தகிக்கும், வெம்மைபொறுது = சந்தாபம் பொருக்கமுடியாதவளாய், உயிர்துஞ்சுமுன்னே = தன் பிராணனைத் தியாகஞ் செய்துகொள்வதன் முன்னரே, முன்பின்றி = எதிரில் வராமலே, விண்ணின்று = வியோமத்திலிருந்துகெண்டே, சொன்மாது = ஸ்ரீவாக்தேவி, இவள் = இவ்வரசியின், மோகம் = சோககாரண மயக்கத்தை, மாற்றி = மாறுபடச்செய்து மயக்கம்நீங்குந் தேறுதல் கூறியென்றபடி. (9)

(ஸ்ரீ - வீர.) இஷ்டவியோக ஜன்னிய துக்கமாகிய சோகத்தினாலும் வேறு பெருந் துயரங்களாலும் நீரற்ற தாமரையோடை நிகர்ப்ப மிக மலினப்பட்டு வாடினள். முற்றினு முணர்வற்றுப் பரவசமாயிருந்தனள்; மடுக்காய்ந்தவழி சபரிமீன் மடிவதுபோற் பட்ட அவளை, சபரியென்பது மீனுட்பட்ட ஜாதிவிசேடம், மிகச் சிறுமீன் குஞ்சாம். அவ ளுடைய பதியின் மூச்சுவிடன் முதலிய குறிகளானே பிரத்தியக்ஷமாய சேதனம் இலிங்க தேகத்தின்கண்ணே மறையலுற்றது; கண்டுகொண்டிருக்கும்போதே விரைவிற்காய்ந்த விலையிரதம்போலும் ஆகியது. போரில் வெற்றிகொண்ட தேகமானது அவ்வந்தப்புர மண்டபத்தில் இறந்து போனவுடனே நீரில்லாத தாமரை யோடையைப்போல அவள் மிகுந்த வாட்டத்தை யடைந்தனள். விடம்போலும் அதிக வெப்பமான பெருமூச்சி னாலே வேறு வர்ணமாக்கப்பட்ட அதரபல்லவங்களை யெல்லா முடையவளானன். முன் னாயகனோடுகூடி மானவதியாயிருந்தவள் நாயகனிறந்தவுடனே மரணத்திற்கு முற்பட்டு நின்ற அவள் சக்கிரவாகப் புட்போல நாயகனது பிரிவாற்றாமையினானே விரைவிற் கோ வென்றழுவள், விரைவிற் பேசாம லூமையைப்போன் மூர்ச்சையிலிருப்பள் ஆயினள். மடுக்காய்ந்துபோகத் துயருறும் மீன்குஞ்சை முதன்மழைபோலும், இவ்வாறு அளவு மிகுந்த துயரத்தோடுற்றிருக்கும் அந்த லீலையை, முன் அநேக ஜன்மங்களில் ஆராதித் திருத்தலின் தத்துவஞான தானஞ் செய்யவந்த கிருபா மூர்த்தமும் அசரீரியும் ஆகிய ஸ்ரீ சரசுவதிதேவியானவள் பலன்கிட்டுங் குறிப்புண்டாக்கிக் கொண்டுற்றனள்.

(ச.) அன்பன் = அவளுடைய பதி, அம்மகீபாலன் றனுவிற் சேதனமிர்தமாகவே, அன்னமன்னாள் உயிர்துஞ்சுமுன்னே சக்கிரவாகிபோல் மரணோன்முகியானபின். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அசரீரிணியாகவே யிருந்து சமாதானித்தல் விரும்பும் வரந் தரதல்களால் அனுக்கிரகிக்கும் ஸ்ரீ சரசுவதிதேவி கூறியருளல்:—மாய்வென,

மாய்வுற்ற வேந்தை மலரான் மறைவித்து வைப்பா
யேய்வுற்ற பூவுல ராமெய் யழியாது ஜீவன்
பாய்வுற்றகலாதுபொன் மண்டபம் பற்றி நிற்கும்
தோய்வுற் றிவன் றேள்விரை விற்றுயர் தீர்தி யென்றாள். (10)

(ப - ரை.) மாய்வுற்ற வேந்தை = சவீபூதமாய இம்மன்னவனாகிய நின்கொழுநனை ஹேகுழந்தாய்! மலரால் = புட்பசமூகங்களால், மறைவித்து வைப்பாய் = ஆச்சாதனஞ் செய்து ஸ்தாபிப்பாய், ஏய்வுற்ற பூவுலரா = பொருந்திய புட்பங்கள் மலினமடையா, மெய்யழியாது = மேனியானியாகாது, சீவன் பாய்வுற்றகலாது = உயிர்பாய்ந்து வெளி யேசெல்லாது, பொன்மண்டபம் பற்றிநிற்கும் = நினது அழகிய பொன்மய அந்தப்புர மண்டபத்தையே யாசிரயித்து நிற்கும், தோய்வுற் றிவன்றோள் = மீண்டும் நினது நாய கனை யடைந்து ஆலிங்கனஞ்செய்து, விரைவிற் றுயர்தீர்தி யென்றாள் = சீக்கிரம் துக் கத்தை விடுத்துச் சுகியாக வாழ்த்தியென அனுக்கிரகித்தாள்.

(ஸ்ரீ - வீர.) ஹே குழந்தாய்! சவமயமாக இருக்கும் இந்நினது பர்த்தாவைப் புட் பக்குவியலுண் மறைத்து வைத்திருத்தி, மீண்டும் நீ இந்நாயகனை யடைவாய். புட்பங் கள் மலினத்தையடையா; இது கெடவுமாட்டாது; மீண்டும் நினது நாயகத்தகைமையை நீணாளில்லாமலே செய்யும், ஆனால் முன்றந்தவரம் பொய்யாமோவெனின்; ஆகாயத்தைப் போல நிர்மலமாக விருக்கும் இச்சரீர சம்பந்தி சீவன் இந்நினது அந்தப்புர மண்டபத்தி னின்றும் விரைவி லகலாது.

(ச.) ஸ்ரீ சரசுவதி வசனித்தல்:—மாய்வுற்ற வேந்தை = நினது பர்த்தாவை, மல ரால் மறைவித்து = புட்பமண்டபத்தில் மறைத்து வைக்குதி, இவனுடைய ஜீவன் பொன்மண்டபம் பாய்வுற்றகலாது பற்றி நிற்கும். நினது அந்தப்புர மண்டபத்தி னின் றும் ஒரிடம் விட்டோரிடந்தாவி நீங்காமற் றிதிபெற்றிருக்கும் விரைவிற் றேய்வுற்று.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ சரசுவதிதேவி கூறியபடி செய்துந் துயரமகலாமையின் மீட்டுந் தேவியை யழைத்தல்:—வாடாவென.

வாடாவச ரீரிதன் சொற்படி மன்னை வைத்தா
ளோடாதவா வியுடை யாளுளத் துன்ன வரணி
நீடாதுவந் தாளென தன்பனை நீங்கி வாழ்தல்
கூடாதவன் சேர்வுழி கூட்டுதி வல்லை யென்றாள். (11)

(ப -ரை.) வாடா வசரீரிதன் சொற்படி = கெடாத திவ்யபாரதியின் உத்தரவின் படியே, மன்னைவைத்தான் = தனது நாயகனைப் புட்பக்குழுவினுள் மறைத்துவைத் தனள், ஓடாத ஆவியுடையாள் = மூர்ச்சையினாற் பிராண னசைவற்றவளாய், மிகுந்த துயரத்தினால் மரிக்குந் தருவாயிலிருக்கும் அந்த லீலையானவள், உளத்துன்ன = ஞான தேவியாகிய சரசுவதியை மனத்தில் தியானஞ்செய்த மாத்திரத்தில், வாணி நீடாது வந் தாள் = ஸ்ரீ வாக்தேவி தாமதியா துடனே பிரசன்னமானாள், ஆகி வேண்டிய தென் னென, எனதன்பனை நீங்கிவாழ்தல் கூடாது = அடியாளது உயிர்போன்ற நாயகனை விட்டுத் தனியேவாழ்தல் முடியாத காரியமா யிருக்கின்றபடியால், அவன் சேர்வுழி = எனது பர்த்தா எத்தகையனாய் என்னசெய்துகொண்டு எங்கேயிருக்கின்றனனோ அங்கே அவன் சமீபத்தில், வல்லை = அதிவிரைவில், கூட்டுதியென்றாள் = அடைவிப்பாய் தயையினால் என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

(ஸ்ரீ - வீர.) புட்பராசியினாலே மறைத்துப் பதியைத்தாபித்து நிதிகிடைக்கப்பெற்ற தரித்திரியானவள் மகிழ்ந்ததேபோலச் சிறிது மகிழ்வுற்றிருந்தனள்; அதேதினத்திற் பாதியிரவில் வேலைக்காரிக ளெல்லாம் நன்றாய்த் தூங்கும்போது ஞானமயமாய்ப் பக வதியா யிராநின்ற தேவியைச் சுத்தியான மகாமதியால் துக்கம் பொறுக்க முடியாமல் வரவழைத்தனள். அந்த ஸ்ரீதேவியானவள் அவளை யடைவுற்றுக் கூறுவதாவது, ஹே குழந்தாய் எதன்பொருட்டாக என்னைத் தியானித்தாய்; ஏன் மிகச்சோகத்தோடு கூடி யிருக்கின்றாய், கானனீரானது பயனின்றியே தோற்றுமாபோலச் சமுசார மயக்கங்கள் தோற்றாநிற்கும், என்ன அதற்குலீலை கூறுவதாவது, ஹேதாயே! எனது நாயகரானவர் எங்கே போயிருக்கிறார், என்னசெய்கிறார், எத்தகையராக இருக்கிறார், என்னை யவரு டைய சமீபத்திற் சேர்ப்பித்தருள வேண்டும். நான் ஒண்டியாய் வாழமுடியவே மாட் டாது என்றனள்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்: உளத்துன்ன ஞப்திரூபமான ஸ்ரீசரசுவதிதேவியைத் தியானஞ் செய்ய, வாணி நீடாது வந்தாள். லீலை: வாழ்தல் கூடாது = ஒண்டியாய்ச் ஜீவித்தற்குச் சகியேன், அவன் சேர்வுழி = அவனது சமீபம், வல்லை கூட்டுதி யென்றாள் = எனது பர்த்தா எவ்விடத்திருக்கின்றான், என்செய்கின்றான், எத்தன்மையன் என்னும் வினா வுக்கு உத்தரந்தானாய் அறியச்செய்யுஞ் சமர்த்தியான ஸ்ரீ வாக்கீசுரியே! நீ யென்னைச் சீக்கிரஞ் சேர்க்குதி என்றான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஹ்மத்தை யறிந்தபோது அதன்கண்ணே சித்தவிருத்தி நிரோதவடிவ யோகத்தினாலே அயோகிகளாலே கவரமுடியாத பதார்த்ததரிசன ச மர்த்

தியம் சம்பவிக்கும் என்பதனுனே லீலைக்கு அந்தப் புரமண்டப ஆகாசத்திலிருக்கும் பர்த்தாவின் றரிசன சாமர்த்தியசித்தியின் பொருட்டுப் பிரஹ்மசொரூபத்தை ஸ்ரீபகவதி சரசுவதிதேவி பிரதிபாதிக்கின்ருள்:—இகலோகம்போலப் பரலோக கற்பனைக்கும் சின் மாத்திர அதிஷ்டான முடைமையைக் காண்பிக்கும் பொருட்டுச் சிதாகாசத்தைப் பகுத்துக் காண்பிக்கின்ருர் தேவியார்:—மனவென.

மனவானமும் வானமும் மாசறு ஞான வானும்
மெனவான மூன்றின்ஞ்முதல்வான மிரண்டு மின்றிக்
கனஞானவா னெய்துதல் கண்டதை விட்டுப் போத
நனவாயய லொன்றையுற் ருனடு ஞான வானும். (12)

(ப - ரை) மனவானமும் = சித்தாகாசமும், வானமும் = ஆகாசமும், மாசறு = குற்றமற்ற, ஞானவானும் = சிதாகாசமும், என=என்று சொல்லப்பட்ட, மூன்றில் = மூன்ருகாயத்துள், முதல்வான மிரண்டு மின்றி = முதலின் மொழிந்த உள்ளாகாசம் வெளியாகாசம் இரண்டினும் சூனியதரமாக, கனஞானவா னெய்துதல் = அறிவுமய ஆகாயம், இருப்பதாக அறிதி, போதம் = சம்வித்தானது, கண்டதைவிட்டு = கண்ட வத்துவைவிட்டு, அயலொன்றையுற்ருல் = அயலொருவத்துவை யெண்ணிஞல், நடு = மத்தியிலிருப்பது, நனவாய்=ஜாக்கிரதையா யுற்று = நோக்கின், ஞானவானும்=ஞாஞகாசமாக அறியலாம்.

(ஸ்ரீ - வீர.) கூறப்பெறும் விதூரத பாரிவடிவ லீலைக்கேபோலப் பிரஹ்மப் பிரதிபாதனுதி யில்லாமலேயும் லீலையின்பொருட்டு வேறுசிருஷ்டியின் றரிசன சாமர்த்தியத்தையேன்சரசுவதி கொடுக்கவில்லை, பிரஹ்மப் பிரதிபாதனுதியின் கண்ணே யேன் பிரவிருத்திக்கின்றனள் எனின் ? நுதலுதும், லீலையானவள் வரும் லீலைபோலச் சமுசாரசம்பந்த பலாபிலாஷையால் ஆராதியாமையினுனும், பரமேசுரியை சமுசாரத்தினின்று விடுபடுவேனுகவும் எனக்கருதி யாராதித்தமையானும் தேவியும் அதற்கனுகூலமாகவே பிரவிருத்திப் பாளாயினுள். சித்தமே சொச்சத்தன்மை சூக்குமத்தன்மை முதலிய வற்ருனே ஆகாச கற்பத்தன்மையால் ஆகாசம், சிற்பரமான்மாவே யாகாசம் சிதாகாசம், மகாபூதமெனப் பெயரிய ஆகாசம் என ஆகாசமூன்ரும், சொச்சத்தன்மை சூக்குமத் தன்மை முதலியவற்ருனே உலகிற் பிரசித்தமாய அம்மூன்றினுள் எச்சிதாகாசம் உளதோ அது அவ்விரண்டினும் அத்தியந்தம் மகாசூனியமென அறிதி. அல்லது வானமூமென வியாகிருதம் விளம்பப்பட்டதாம், முதல்வான மிரண்டு மின்றி யென்றதனுல் பிரஹ்மத்திற்கு நிஷ்பிரபஞ்சத்தன்மை நிகழ்த்தப்பட்டது; சித்த அவ்யாகிருதத்தினும் அயலாக அகிலமில்லாமையின். சம்வித்தாகிய சித்தத்திற்கு ஒருதேசத்தை விட்டு ஒரு தேசத்தை யடைவதென்னும் ஒருவிடயத்தை விட்டு ஒருவிடயத்தை யடைவதாங்கால் மிக அற்பகாலத்தால் தோற்றுகின்ற எம்மத்திய முளதோ அதுவே சிதாகாசமென வுணர்ந்துகொள்ளுதி. சித்தத்தினது பூர்வவிருத்தி நட்டமாகியவழி உத்தரவிருத்தி யுண்டாம் வழி யிடையே எந்நிர்விடயம் சந்தி சாக்ஷிவடிவமான சைதன்யம் சுயமாகப் பிரகாசிக்கின்றதோ, விருத்திகளின் மத்தியிற் பிரதீயமான மாதலின் மத்தியம் எனமலரப்பெறுகின்றதோ, அது சிதாகாசமென வறிதியென வறைந்ததாயிற்று அங்ஙனமே ஏழுபூமிகளை நிரூபிக்கும் அவசரத்தில் ஒருபொருணினைவை யொழித்து மேலப்பா வொருபொருணினைவுறி லந்த, விருபொருணடுவு ணினைவற விருக்குமிது சொரூபத்தியல்பு. என்க் கூறப்பெறும். "செறிதரு சந்திகள் விருத்திகலி னொழிவு முழுதுந் திகழ்வனவாம்

விகாரமிலா வெவ்வறிவாலந்த, நிறையறிவே கூடத்தனெனலாகும் " எனப்பெரியோர்களாலும் கூறப்பெற்றுளதாம் விருத்தி சந்திகளும் விருத்தி யபாவங்களும் எச்சைதன்யத்தினால் ஒளிர்விக்கப் படுகின்றனவோ அது கூடஸ்தமென் றறியப் பெறும் என்பது பொருள். வாதனைமயமாய சித்தாகாயமெனவும், பிரசித்த விவகாரசம்பந்தமான ஆகாயமெனவும்; சாற்றிய இரண்டிற்கும் இடையில் உபயசூனியமா யிலக்கியமாஞ் சிதாகாசமெனவும், ஆகாசம் மூன்றுவித மென்றறிதி; சிதாகாசமே தன்னுவரண அஞ்ஞானத்தினும் வேறுபடுத்தப் படாததாய் விளங்கி அசத்துலக வடிவமா யிப்போ திலங்குகின்றது. சிதாகாசத்தினது ஏகாக்கிர சிந்தனத்தினாலே விரைவில் நினது நாயகனை ஈண்டே காணலாம், அதன்பொருட்டுச் சிதாகாச பாவனையைப் பயிலுதி. ஓரிடம்விட்டு மற்றோரிடமடையின் இடையே யிருக்கும் அறிவே நிமிட முணரலாம், அதுவே சிதாகாசமாம் என்றறிதி முறையாக வரும் விடயமிரண்டாபாச சந்தியின் கண்ணே அதனுபய சூனிய சிதாகாசம் எளிதிலே யுணரலாமன்றோ.

(ச.) ஸ்ரீதேவி யனுக்கிரகித்தல்; மனவானமும் வானமும் மாசறுஞானவானும் என வானமூன்றின் முதல் வானமிரண்டு மிந்தக் கனஞானவா னெய்துதல்=சித்தம் வியோமம் சைதந்யம் என்னும் மூன்றும் அமூர்த்தமாதலின் ஆகாச சப்தவாச்சியமாம், அவற்றில் சித்தம் ரூபாதி சூனியமாயினும் விகாரமிருந்ததும்சடமுமாம், வியோமம், நிர்விகாரம் பரிபூர்ணமாயினுஞ் சடமாம், ஆகலின் சித்த பூதாகாசமென்னு மிரண்டினுஞ் சிதாகாசமிகு சூன்யமாம் என்று வரானனே யுணர்தி. கண்டதைவிட்டுப் போதநனவா யயலொன்றையுற்றா னடுஞானவானும், கண்டது=விடயம், பூருவம் கிருகித்த விடயத்தினின்று நீங்கி மற்றொருவிடயக்கிரகண சமயத்தில் போதநடு = போதத்தின் மத்தியம், பூர்வங் கிரகித்ததின் பரித்தியாகத்தினானும் அன்னியத்தின் அக்கிரகணத்தினானும் விடயசம்பந்தமற்ற போதத்தினுருவம் சிதாகாசமாம் என வரவர்ணினி நீயுணர்தி. வியபதேசிக்கப் பெறுகின்றது இதனால் சம்வித்தெனத் தேசம் விடயமாம். அதனையறியும் உபாய முபதேசித்தல். நனவால் என்பது. நனவால்=விழித்த நேத்திரத்தால் வாகியார்த்தக் கிரகணமாயிற் சீக்கிரம் மூடப்படும் அதனாலென்பது பொருள். அப்போததிற் போதத்திற்கு வெளியிற்செல்லப் பிரதிபந்த மாதலினானும் அந்தரத் தறியவேண்டும் பொருள்? அற்பமு மின்மையானும் அடைத்த கதவுடைய கர்ப்பக்கிரகத்திற் பிரகாசிக்குந் தீபரூபம்போற் சின்மாத்திரமே சேடித்து விளங்கு மென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் பிரஹ்மாத்மகஞ் சிதாகாசத்தைப் பிரதிபாதித்து அதன் விடயபோகத்தையும் அதன் பயனையும் கூறுகின்றார்:—ஆகலின் நினக்கு அதன் அடைவே அத்தன்மையை யடைந்திருக்கும் நாயகசமீப அடைவாம்; ஆண்டே நினது நாயகரின் பரலோக கற்பனை யாதலின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்:— சங்கற்பவென.

சங்கற்ப சாலந் தவிர்ந்தா லுபசாந்த மாகித்
துங்கப் புவியாவையு மாகிய சோதி தோன்றும்
இங்கற்பு பமுங்காண் யனவில்லை வெறும் பொய்யென்றா
லங்கப்பொழு தவ்வறி வாலது சேர்தலாகும். (13)

(ப - ரை.) சங்கற்ப சாலந் தவிர்ந்தால் = எல்லா எண்ணங்களையும் அடியோடு விட்டுவிடுவையே யானால், உபசாந்தமாகி = பரமசாந்தமாய், துங்க = பரிசுத்தமாய், புவியாவையுமாகிய = சர்வான்மகமாய், இராநின்ற, சோதி = சிவப்பிரகாச வடிவம்,

தோன்றும்=மின்வடிவமாய் திகழும், இங்கு அற்பமும் காண்பன இல்லை= இவ்விடத்தில் தோற்றுகின்ற எவையுமே ஒருசிறிதும்கிடையவே கிடையாது, வெறும்பொய் என்றால்= அத்தியந்தம் மித்தையென அறுதிவந்தால், அங்கு அப்போழுது = அவ்விடத்தில் அக் காலத்திலேயே, அவ்வறிவால்=அந்த அகண்டப் பிரஹ்மாகார விருத்தியால், அது = அப்பரம் பொருளானது, சேர்தலாகும் = சொரூபமாகவே யடைதல்கூடும். (13)

(ஸ்ரீ - வீர.) அநாத்ம ஆகாரங்களாய எல்லாச்சங்கற்பங்களையும் அடியோடும் விடுதி யேலாயின், ஞான முடையவளாகிச் சகல துயரங்களினின்றும்விடுபடுவாய். "மனத்தினை விருத்தியின்றி மருவுறக்குயிற்றி யாலும், கனத்தினை யுணருவானைக் கருதரும் பரம மான, இனித்தனி லேகமாக்கி யிடரெலாங் களைந்தேயுய்க, முனித்தனி யோகமீதே முக்கிய மென்னலாகும்." எனவும், சகலமான பொருள்களையுஞ் சமாதியமர்வோன் காண்கிலனுயகல வசங்கப்பரம்பொருளி லழுந்தி யேகவறிவாகிச், சுகமதாக விருந்தொ ளிருந் தூயபோதிற் கேவலமா யகமதான பரசிவமா யகண்டவடிவா யமைகுவனால். என வும் அவ்வாறே அறையப் பெற்றுளது. சர்வான்மகபத அடைவின் கண்ணே யுபாய முரைப்பார், இங்கற்பமு மென்றார். உலகமானது அத்தியந்தம் அசத்திய மென்னும் துணிவினாலே இச்சர்வான்மக பதத்தை யடைவாய். அதன்கண்ணே சர்வசங்கற்பங் களையும் விட்டு நிலைபேறை யடைவையேயானால் எல்லாவடிவையு முடைய பதமாகிய தத்துவத்தை யடைவா யென்பதன்கட் சமுசயமே கிடையாது; ஆயின் எங்ஙனம் அதை யடையலாமெனின், அதற்குபாயத்தைக் கேட்டி, தத்துவதரிசனத்தினாலே அவி த்தை யழிவுறவேதுவைத மனுதயமாகவே யுலகின் அத்தியந்த அபாவ அடைவாம்; ஆகவேயதனால் இஃதடையப்பெறும் அயனெறி யதற்கின்றென்னும் அருமறை முறைப் படி வேறொன்றாலும் முடியாது.

(சு.) சங்கற்பசாலம் அந்தச் சிதாகாசத்தில் தவிர்ந்தால் உபசாந்தமாகிய, துங்கப் புவி யாவையுமாகிய = சர்வான்மகமான, சோதிதோன்றும், சேரலாகும், மற்றொன்று லுஞ் சேரலாகாதென்ப தாயிற்று.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் எனக்கு ஞானப்பிராப்தியானது எங்ஙனமாமென எண் ணுதே யெனல்:—நம்மாலென.

நம்மாலது சேர்கென நாமக ணல்கி யேக
விம்மாது விகற்ப மிறந்த சமாதி யெய்தித்
தம்மா லுறைகூட கல்புள் ளெனத் தாவுநெஞ்ச
மைம்மா லுறுகூட் டினைமாற்றி னளக் காணத்தில். (14)

(ப - ரை.) நம்மாலது சேர்கென = எமது வரப்பிரசாதத்தால் விரைவில் அதனைச் சாக்ஷாத்கரிப்பாயாக வென்று, நாமகள் நல்கி = ஸ்ரீசரசுவதிதேவி திருவருள்செய்து, ஏக = திவ்யவான தமது பரந்தாமத்திற் கெழுந்தருள, இம்மாது=இந்தலீலையானவள், விகற்பமிறந்த = நிருவிகற்பமான, சமாதியெய்தி=சமாதியை யெளிதாகவே யடைந்து, தம்மாலுறை கூடகல் புள்ளென = தாமாகவே இருக்குங் கூட்டினின்றுஞ் சென்று சுதந்திரமாய் விளையாடும் பக்ஷியைப்போல, தாவுநெஞ்ச மைமாலுறு கூட்டினை = விட யாகாரமாய்ச் சலிக்கும் மனமயக்கத்தைப் பேதித்து மயக்கங்கட் கெல்லாங் காரணமா கிய தூலதேகக் கூட்டினை, அக்கணத்தில் = அப்போதே, மாற்றினள் = விட்டகன் றாள், சுதந்திரமாயினள். (14)

(ஸ்ரீ - வீர.) எமது வரப்பிரசாதத்தினாலே விரைவில் நீயவ்வறிவை யடைவாய்; என்றருளிச்செய்து அவ்வுல கன்னியானவள் தமது திவ்யஸ்தானத்திற்கு எழுந்தருளவே லீலையானவள் வரப்பிரசாத மகிமையால் பயிற்சியின் சிரமமில்லாமல் விளையாட்டாகவே நிருவிகற்ப சமாதியை யடைவுற்றனள். ஒரு நிமிடத்தினில் லோகபஞ்சரம் போலும் பேதிக்க முடியாததான அந்தக்கரண சகிதந் தூலதேகம் விடுத்துப் பறவையானது கூட்டைவிட்டு வெளிப்போந்து ஆகாயத்திற் பறப்பதேபோலப் பறந்தனள்; சித்தத்தை நிலைநிறுத்தி அபிமானத்தியாகமே ஈண்டு கூற விழைந்ததாம், மரணம்போலும் தேகம் விடுத்து வெளியே செல்லுதலல்லவாம்.

(ச.) ஸ்ரீவசிஷ்டர்: நம்மால் = எமதுவரத்தால் நீ சீக்கிரம் அது. திவ்யமான சொச்சோரூபா சிரபத்தைக் குறித்து ஏக. இம்மாது = இந்தலீலை லீலையினாலேயே விகற்பமிறந்த நெஞ்ச மைம்மாலுறு கூட்டினை = மனம் புத்தியாதிகட்குப் பஞ்சரம்போல் ஆசிரயரூபமான தன்றூலதேகத்தை, அக்கணத்தின் மாற்றினள்; அதன்பின் தம்மாலுறை கூடகல் புள்ளென = சூக்ஷுமரூபியாய் ஆகாசத்திற் றன்மனோரதப்படி சஞ்சரிப்பவளானாள் என்பது பொருள்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) சென்ற நாயகன் நின்றநிலையை யறிவிக்கின்றார்:—மங்காதவென.

மங்காத ஞானவிசும் பூடொரு மாநகர்க்கே
வெங்கா தலனெட் டிரண்டாண் டுளவீர னாகிச்
சிங்காதன மேற்செறி வேந்தருஞ் சேனை நாலும்
பொங்கா தரமாதரும் போற்ற விருத்த லோடும். (15)

(ப - ரை.) மங்கா = கெடாத, ஞானவிசும்பூடு = சிதாகாசத்தின்கணே, ஒருமாநகர்க்கே = ஒப்பற்ற பெரியதேசத்திற்கு, வெங்காதலன் = பெருமாசைக்கு விடயீபூதமாய நாயகன், எட்டிரண்டாண்டுள வீரனாகி = பதினாறுவயதுடைய காவலனாகி, சிங்காதனமேல் = சிம்ஹாசன சமாரூடனாய், செறிவேந்தரும் = நெருங்கிய மன்னவரும், சேனைநாலும் = நால்வகைச் சேனைகளும், பொங்காதர மாதரும் = மிகுந்த ஆதரவோடு கூடிய மங்கையரும்; போற்ற = ஜயஜீவவெனத் தோத்தரிக்க, இருத்தலோடும் = வீற்றிருப்பதைக் கோலாகல சம்பிரமத் தோடும் நோக்கி. (15)

(ஸ்ரீ-வீர.) தன்னுடைய கிருக ஆகாயத்தின் கண்ணே கண்டனள். ஜயஜீவ=வெற்றியோடும் வாழ்க, சிதாகாயத்தின் கண்ணே யிருப்பவளாய் அவ்வாலய ஆகாயத்தின் கண்ணே வெளிப்பட்டதன் வாதனை கரும அனுரூபமாகத் தோற்றுந் தேக கிருகாதியோடிருக்கும் தனதுநாயகனைத் தரிசித்தாள். அப்போதவன் அநேகமரசர்கள் கூட்டமுற்ற ஆஸ்தான மண்டபத்தில் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் பூபாலனாய்க் காணப்பட்டான். நீ நீடூழி வெற்றிபெற்று வாழ்கவென வாழத்தப் பெற்றிருந்தான்; அவனதெதிரிற் கைகுவித்து மண்டலாதிகமானது காரியத்தை யினிது முடிப்பான் காத்துக்கொண்டிருக்கின்றது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தனது நாயகனிருக்குங் கோலாகலத்தைக் காணுதலும் ஐயப்பட்டு ஸ்ரீவாக்குத் தேவியை வரவழைத்தலும் காட்டல்:—தன்னென.

தன்னுயிர்க்கேள் வனையந்த லீலைநோக் கிச்சபைபுகுந் தாண்மிகவியந்தாள் சபையைச் சூழ்ந்த, மன்னவரு முனிவருமறை வல்லோரு மங்கையரு நாற்படையு மற்றுளோரு, நன்னிலமுங் குன்றுகளுமூரு நாடுநதித்திரளும் பல பொருளு நண்ணிநோக்கி, மின்னனையாண் மீண்டுதன திடத்தின்மேவி வெண்ணிற வாணியை நினைத்தாள் விருப்பினோடும். (16)

(ப - ரை) தன் உயிர்க்கேள்வனை = தனது பிராணநாயகனை, அந்தலீலை நோக்கி அந்தலீலாதேவி பார்த்து, சபைபுகுந்தாள் = அரசசபைக்குட் சென்றனள், மிகவியந் தாள் = மிகமிகவும் அற்புதத்தை யடைந்தனள், சபையைச் சூழ்ந்த = சபையின் கண்ணே நெருங்கிக்கூடி, மேற்குவாயிலை யனுசரித்திருக்கும், மன்னவரும் = அளவற்ற இராஜராஜேச மண்டலத்தையும், கிழக்குவாயிலை யனுசரித்திருக்கும், முனிவரும் மறைவல்லோரும் = அளவில்லாத முனிவிப்பிர இருடிமண்டலத்தையும், தெற்குவாயிலை யடுத்துப்பரவிய, மங்கையரும் = அளவில்லாத மதோன்மத்த மடந்தையரையும், வடக்குவாயிலை யனுசரித்து நிற்கும், நாற்படையும் = அசங்கிய ரதகஜதுரகபதாதி சேனைகளையும், மற்றுளோரும் = அன்னிய பிரஜைகள் அநேகரையும், நன்றாகப்பார்த்து விட்டு, நல்நிலமும் = நல்லதேசங்களையும், குன்றுகளும் = பருப்பதங்களையும், ஊரும் = நகரங்களையும், நாடும் = நாடுகளையும், நதித்திரளும் = நதநதிக் கூட்டங்களையும், பல பொருளும் — மற்றும் பிறபொருள்களையும், நண்ணி நோக்கி = நன்றாக உற்று உற்றுப் பார்த்து, மின்னனையாள் = மின்னலைப்போன்ற அந்தலீலாதேவி, மீண்டுந் தனது இடத்தின் மேவி = மறித்துந் தன்னுடைய அரண்மனையை வந்துசேர்ந்து, விருப்பினோடும் வெண்ணிறவாணியை நினைத்தாள் = மிக்கன்புடன் சுவேதவரண ஹம்சவாணியைத் தியானித்தனள்.

(ஸ்ரீ - வீர.) லீலையினாலே முன்னரனுபூத தேசாதிகளும் வந்தியாதிகளுமே ஸ்மரிக்கப்படுகின்றன. நகரமென்றதனானே சாகாநகரங்களாகிய புரங்களையும். பட்டணமாகிய மூலநகர ராஜதானியையும் கொள்க. கொடிக்கூட்டங்களால் வியாபிக்கப்பட்ட இராஜதானியின் பிரதான அரண்மனையின் கண்ணே அவன் எழுந்தருளியிருப்ப அவ்வரண்மனையின் கீழ்வாசலில் எண்ணில்லாத விப்பிரர் முனிவர் இருடியர் கூட்டங்க ணிறைந்திருந்தன; தெற்குவாசலிலோ எண்ணில்லாத இராஜ இராஜேசுர மண்டலங்கள் காத்திருந்தன; மேலைவாசலிலோ எண்ணில்லாத பெண்மணிக் கூட்டங்க ணிறைந்திருந்தன; வடக்குவாசலிலோ ரதகஜ துரகாதிகள் எண்ணில்லாதன நண்ணி நின்றன அக்காட்சியானது ஒரு நகரத்தினின்றும், மற்றொரு நகரத்திற்கு யாவரும் வந்திருப்பது போலத் தோற்றியது; அவர்களியாவரும் தன் தேசத்திலுள்ளவர்கட்கு ஆசாரத்தையே செய்பவர்களா யிருந்தார்கள்; பாலகர்களும் தன்றேயத்தினர்; சிறுமிகளும் தன்றேயத்தினர்; மந்திரிமார்களும் முன் றன்றேயத்தி லிருந்தவர் ஆகவே காணப்பட்டனர். அப்பூபாலரே, அப்பண்டிதரே, இரகசிய ஆலோசனை செய்யும் சகாய அம்மந்திரிமாரே அவ்வேலைக்காரரே இருக்கக்கண்டனள் தருநிகள் நதிகள் நதங்கள் சைலங்கள் புரங்கள் பட்டணங்கள் நிறைந்திருப்பதையும், நானு நகரங்கள் விஸ்தாரமாய் காடுகள் கிராமங்கள்நிறைந்திருப்பதையுங் கண்டனள். பழைய ஜரைமுதலியவை யொன்றுமின்றி பதினாறு வயதுடைய காளையாகப் பூபாலனைக் கண்டனள். சர்வபழைய ஜனக்கூட்டங்களையும் சர்வ கிராமவாசிகளையும். லீலையானவள் கண்டுமிகவுஞ் சிந்தையோடு கூடியவளானாள். அந்த வாசனு நகரத்தி லவர்களை யெல்லாங்கண்டு இஃதென்னே முன்னிருந்த நகரத்தி லிருந்தவர்க ளெல்லாம் இறந்துபோய் விட்டார்களா ? என்றாச்சரியப்பட்டு மீண்டும் ஸ்ரீசரசுவதிதேவியின் பிரசாதத்தினாலே யுண்டாகிய வுணர்வாற் சமாதியினின்றுக் கிளம்பிப் பழைய அந்தப்புரத்தை யடைந்தனள்; அவ்வர்த்தராத்திரியில் அங்கு முன்போன்று இருந்த யாவரையும் கணத்திற் கண்டனள். கண்டு சித்தத்திற் சிந்திப்பதாவது. அகோ! இம்மாயை ஆச்சரியமாகவன்றோ இருக்கின்றது, எல்லாப்பிரஜைகளும் சமாதியிற்கண்ட உள்ளவகாச தேசத்திலும் வெளியித்தேசத்திலும் அன்றோ இருக்கின்றார்கள், மலையாதி

களும் ஆங்கேபோ லீங்குமுள. இம்மாயைத் தன்மையை யுவமித்துப் பார்க்கின் கண்ணுடியின் உள்ளும் புறம்பும் பர்வதம் அனுபவிக்கப் படுவதேபோலும் சிற்கண்ணுடியில் உள்ளில் வெளியிலும் உலகசிருஷ்டி யனுபவிக்கப் படுகின்றது, ஆனல் திருஷ்டாந்தத்தைப்போலவே இரண்டனுள் ஒன்றனுக்கே பொய்ம்மையாம்; இரண்டிற்கும் ஆகாதெனச் சம்பவித்தலின் இதன்கண் ஐயமன்றே உளதாகின்றது, இவ்விரண்டனுள் மயக்க மயச் சிருஷ்டியாதாம் உண்மை யுலகமியாதாம்? இவ்விஷயத்தை ஸ்ரீ வாக்தேவியை இனிதாராதித்து அத்தேவியின் சந்நிதியில் ஐயமாயிருக்கின்ற தென்று விண்ணப்பித்து அவ்வையம் நீங்கும் வண்ணம் வினவித் தெரிந்துகொள்வேன்" எனத்துணிந்து அக்கணமே யன்போடும் அவள் அருச்சித் தேத்தினள்.

(ச.) மறைவல்லோரும் = விப்பிர இருடி மண்டலமும், ஊரும்=புரமும், நாடும்= பட்டணமும், அவனுலே இரக்ஷிக்கப்பட்ட மற்றுளோரும் = நூதனமான பண்டிதர், சுகிர்தர் முதலான ஏனையோரும், அவற்றின் நிசைகளும் சமாசாரங்களும், பலபொருளும் மேல்வாயிலின் மன்னவரும், கீழ்வாயிலில் முனிவரரும், தென்வாயிலில் மங்கையரும், வடவாயிலில் நாற்படையும் என்றுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ வாக்குத்தேவி பிரசன்னமாதலும் தனதையம் வினுதலும், கூறல்:—வந்தெனை.

வந்துயரா தனத்திருந்த வாணிதன்னை வணங்கியெ னதன்பனுக்கு மரித்த பின்பு, பந்தமுறு மயக்கமே வடிவாய்நிற்கப் பழையபடி பிறப்புற்ற படியிதென்ன, விந்தவுலகுறு மயக்கம்போகச் சொல்வாயென லீலைகேட்டலுமே யிறைவிசொல்வாள், உந்து சிருட்டியின் முன்புமயக்க மட்டே யுருவாமிச்சிருட்டி வேறுதித்ததாகும். (17)

(ப - ரை.) வந்து = எழுந்தருளி யாகிவந்து, உயர் ஆதனத்திருந்த = மேன்மை மிக்கு மேலான பத்ராசனத்தில் வீற்றருளியிருந்த, வாணிதன்னை = ஸ்ரீசரசுவதிதேவியை, வணங்கி = நமஸ்கரித்துத் தோத்தரித்து, என தன்பனுக்கு = எனது நாயகனுக்கு, மரித்தபின்பு = மரணாநந்தரம், பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்க = கட்டுறும் அமூர்த்தமாய் மயக்கமே யுருவமாயிருக்க, பழையபடி பிறப்பு — மீண்டும் வேறுசன்மம்; உற்றபடி = வந்தவகை, ஈதென்ன = இஃதென்னற்புதம்! இந்தவுலகுறு மயக்கம்போகச் சொல்வாயென — இச்சகம் தோற்றமோ மாற்றமோ வென்னும் பிராந்தி நீங்கும்படியாக வுபதேசிப்பாய் என்று, லீலைகேட்டலுமே = லீலை வினவியபோது, இறைவி — ஜகன்மாதா, சொல்வாள் — திருவாய் மலர்ந்தருள்வாள், உந்து சிருஷ்டியின் முன்பு = முன் ஸ்மிருதியினுல், மயக்கமட்டே யுருவாம் = பிராந்திமாத்திர வடிவமாய, இச்சிருட்டி = இச்சருக்கம், வேறுதித்ததாகும் = எப்படி யுதிதமாமோ. அப்படி யெனுவருங் கவியோடன் வயம். (17)

(ஸ்ரீ - வீர.) பத்திராசனம் = சிங்காசனம் = நிருபாசனம் — சுபாசனம். பதுமநிருபனுல் மரணத்தின் பிற்கணத்திலேயே அதேயில்ல ஆகாசத்தில் கண்டவேறுபிரபஞ்சத்தின் உற்பத்தியின் கண்ணே தக்கதேச காலசாதனுதி யின்மையின் சொப்பனப் பிரபஞ்சம்போலப் பொய்ம்மை துணிந்து அத்திருஷ்டாந்தத்தானே சம்பவித்திரா நின்ற சகத்தின் மித்தியாத்துவத்தின் நிச்சயப் பொருட்டுப் பதியின் பிரபஞ்ச அயன்மயற் காரணம் வினவுகின்றுள், எனதன்பனுக் கென்பதாதியாய். அம்மயற்காரணம் அறிந்தவழி அக்காரணத்தையுடைய சர்வஜகத்திற்கும் மித்தியத்துவம் துணிதல் எளிதாகக் கூடும்

என்பதாம் மூர்த்தம் = அவயவத்தோடு கூடியது அஃதற்ற தமூர்த்தமாம். அமூர்த்தத் தன்மையிலேலது, மயக்கமே வடிவமா யிருத்தலின் என்பதாம். இவ்வுலகமியாவுமே மயல் வடிவமேயாம் ஆண்டு முன்மயலால் பின்பின் மயக்கவுற்பத்தியாம் எனச்சித்தாந்தம் நிலை நின்றவழி நினது நாயகனுக்கு மரணத்தினும் முன்பதான வுலகமயக்கம் எங்ஙனம் முன் சன்ம சஞ்சிதத்தா லுண்டாயதோ அங்ஙனமே மரணத்தின் பின் பவிக்கும் பிரபஞ்ச மயக்கமும் பூர்வஜன்ம பாவனையால் உண்டாயதாம் என்றுத்தரந் தந்தருளுகின்றாள் உந்து என்பதாதியாய். முன்றரிசனந் தந்தடைவுற்ற குமாரிவடிவ திவ்யமூர்த்தியைக் கண்டு கண்களிகூர்ந்து பரமார்த்த மகாசக்தியும் பத்திராசனத் தெழுந்தருளி யவளும் ஆகிய அவ்வாக்தேவியைப் புவியிலுற்ற லீலாதேவி கைகூப்பி யினிதாகச் சந்நிதியி லிருந்து வினவுவாளாயினள்.—ஹே பரமேசுரி! எம்மனோரை தயோசித விடயத்திலல் லவோ உத்தமர் சாதுரியமாய்ப் பழிப்பர், ஆகையால் தேவரீரது சந்நிதியில் விண்ணப் பித்துக் கொள்ளும்! விடயங்கட்குச் சமாதானத்தை திருவருள் செய்யவேண்டும்! எங்ஙனம் பதிக்கு அமூர்த்தமாக இச்சர்க்கத்தினின்றுஞ் சர்க்கம் மயக்கவடிவமா யுண்டாமோ அங்ஙனம் உலகமயக்க நீக்கப்பொருட்டு அனுக்கிரகித்தருள வேண் டும். இச்சர்க்கமும் முற்சர்க்க கோசர சமஸ்காரஜன்ய மயக்கமேயாகும், எனக் கூறியபொருளை மெய்ப்பிக்கும் பொருட்டு மண்டப உபாக்கியான ஆரம்பத்தை ஸ்ரீஅம் பிகை பதிஞ்ஞைசெய்து கூறுகின்றாள், உந்து என்பதாதியாய். முன்மிருதியினால் மயக்க மாத்திரவடிவ இச்சர்க்க முதித்தது.

(ச.) உயராதனம் = பத்திராசனம், ஞப்திமயமான வாணிதன்னை வணங்கி, லீலை யின் பிரசினம், எனதன்பனுக்கு இச்சன்மத்தினின்றும், மரித்தபின்பு, சமாதியிலிருந்த வென்னால் இப்போது காணப்பட்டு, பந்தமுறும், அந்நியர்க்கு அதிருசியமாதலின் அமூர்த் தமாய் = மயக்கமே வடிவாய், பதினாறுவயது முதலியவைகள் அசம்பவமாதலின், அயதார்த்தமாய், நிற்க = பழையபடி பிறப்பு = ஜன்மாந்தரம், உற்றபடி = வந்தபிரகா ரத்தை, ஈதென்ன = என்னென்று சொல்வேன் இஃதற்புதம் அற்புதம், இந்தவுலகுறு மயக்கம்போக = சப்பிரமை நிவிருத்தியாக, சொல்வாய் = எனக்கு அருள்செய்வாய் எனலீலை கேட்டலுமே இறைவி சொல்வாள், உந்து சிருட்டியின் முன்பு = பூருவஜன் மத்தெழுந்த சமஸ்கார வேதுவினால், மயக்கமட்டே யுருவாம் = பிராந்திமாத்திர ரூப மான, இச்சிருட்டி = இந்தச் சம்சாரம், எப்படி வேறுதித்த தாகுமோ. (17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பதிஞ்ஞை செய்த அதனையே விரித்துரைத்தல்:—அப்படி யேயென.

அப்படியே யுன்கணவற் கிரண்டாஞ் சென்மமாயின தாலீதுரைப்ப வறிந்து கேட்பாய்,மைப்படி விலாவிமலஞான விண்ணின் மற்றொரு பான்மாயா மண்டபமொன்றுண்டாஞ், செப்பரிய விசும்பென்னு மயூரபபீலித் திரை யாலே மறைத்திருக்குஞ் செம்பொற்குன்றுங், கப்புறுபொற் றாணிலுறையுலக பாலர் காரிகையா ரெனும் பொறிகள் கலந்துமிற்கும். (18)

(ப - ரை.) அப்படியே = அவ்வாறே, உன்கணவற்கு = உனது நாயகனுக்கு இரண்டாம் சன்மம ஆயினதால்=இரண்டாவது பிறப்பு ஆகியிருக்கின்றது, ஈதுரைப்ப= இதனையாம் தெளிவுபடுத்த, அறிந்து கேட்பாய்=உணர்வுடன் ஒருமையுடன் கேட்குதி, மைபடிவிலா = யாதொரு களங்கமும் உண்மையின்சேராத, விமலஞான விண்ணில் = நிருமல சிதாகாசத்தில், மற்றொருபால் = இன்னொரு பக்கத்தில், மாயாமண்டபம் ஒன்

றுண்டாம் = ஒரு சமுசாரமண்டப மானது இருக்கின்றது, செப்பரிய = சொல்லுதற் கொல்லாத, விசும்பென்னும் = விண்ணென்னும், மயூரப்பீலித் திரையாலே = மயிற் றோகைத் திரைச்சீலையினாலே மறைத்திருக்கும் = ஆச்சாதிக்கப்பட்ட ஆகிருதியுடைய தாகவிருக்கும், செம்பொற்குன்றாங் கப்புறு பொற்றூணில் = செம்பொன்னாலாய பருவத மென்னும் பலமுடி பொருந்திய ஸ்தம்பத்தின்கண், உறை = வாழும், உலகபாலர் = லோகேசர், காரிகையார் = அவர்தங் குடும்பினிகள் என்னும் = என்றுசொல்லாநின்ற, பொறிகள் = பதுமைகள், கலந்து நிற்கும் = கூடியலங்காரமா யிலங்காநிற்கும். 'மயூரப் பீலி கவிநாயகரதாம். (18)

(ஸ்ரீ - வீர.) திருஷ்டாந்தமே பொருத்த மற்றதாமென ஆசங்கிப்ப விடைதருவார் ஈதுரைப்ப என்றார். இதனை வெட்ட வெளியாகத் தெளியுமாறு கூறுவாம் என்றதாம். 'பதுமலீலைகட்கு வேறு சருக்கத்தில் பிராஹ்மண தம்பதிகளாக முன்னர் இருந்தமையா தியை காட்டும் பொருட்டு அவர்தம் பூர்வ சமுசாரத்தை ஜீர்ண மண்டபமாகத் தள்ளும் பொருட்டு வருணிக்கின்றார் மைப்படிவிலா வென்பதாதியாய் ஆகாசமே நீலத்தகைமை யான் நீலக்கற்றள வடிவமான மறைப்பீட்டும்பொருளாம், அதனால் ஆச்சாதிக்கப்பட்ட = மறைக்கப்பட்ட, ஆகிருதி = ஆகாரம் உடையதா யிருக்கும். மேருவே ஸ்தம்பமாம், அதன் கண்ணுள்ள லோகேசர்களாகிய இந்திராதிகளின் குடும்பினிகளே பதுமைகளா வார்கள் அவர்களை யுடையதாம். கனமயல் வடிவமா யிலங்குகின்ற இவ்விதத்தை யியம் பக் கேட்பாயாக, இச்சமுசாரமானது ஒரு ஜீரண மண்டபமேயாகும், எங்குளதெனின்? அஞ்ஞானத்தான் மறைபட்ட அங்கிசமாய் அதனினும் சிருஷ்டிப்பவன்றன் அந்தக்கரண பாக சிதாகாசத்தில் அசமுசார மண்டப முளதாம், ஆகாசரூபமான யாதொரு காசகண் டம் போலும் நீலமேலவயவச் சேர்க்கையான் மறைவுற்ற ஆகிருதியுடையதாகும்; அதன் கண்ணிருக்கும் மேருகிரியாகிய தம்பத்தின்கண் ணமைக்கப் பெற்ற உலகபாலர்களாகிய இந்திரனிந்திராணி முதலிய பதுமைகள் மிக அலங்கிருதமாகும்; பதினான்கு லோகங்க ளாகிய உள்வீடுகள் அதன் கண்ணுண்டு; திரிபுவன அந்தராளப் பள்ளமுமுண்டு; ஆண் டாதித்தனே யணையாத் தீபமாம்.

(ச.) அப்படியே நின்கணவற்கு இரண்டாஞ் சன்மமாம் = துவிதீய சிருஷ்டியும், ஆயினது = உதித்தது, அதிலுங் பூர்வசன்ம சமஸ்காரமே காரணமென்பது பொருள். ஈதறிந்துரைப்ப = இஃதனைத்துஞ் சித்தித்தபடியான் அறிந்து மொழியக் கேட்பாய், மைப்படிவிலா நிமலஞான விண்ணில் = சின்மாத்திர ரூபமான ஆன்மாவில், அவர்க்கே பிரபஞ்ச அதிட்டானத்துவ மாதலின், மற்றொருபால், மாயாமண்டபம் = சம்சாரமென் னும் மண்டபம் ஜனுசிரயத் துவமாதலின், ஒன்றுண்டாம் செப்பரிய விசும்பென்பன முதலியவை மண்டபசாமிய சாதகங்களான விசேடணங்களாம், செம்பொற் குன்றாம் = மேருவே மண்டபாதாரத் தம்பமாம், கப்புறு பொற்றூணிலுறை = அம்மேருத் தம்பத் திற் பொருந்திய, உலகபாலர் = புரந்தராதிய ருடைய, காரிகையாரெனும் சசிமுதலி யரே, பொறிகள் = பிரதமைகளாக, கலந்துநிற்கும்! காசதளம் = காசமென்பது பாக சித்தமண் விசேடமாம், ஆகாசமே காசதள கற்பித மறைப்பீட்டும் பொருளாம், அதனால், மறைபட்ட ஆகிருதியை யுடையது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மாயாமண்டப வர்ணனை:—ஒரு என.

ஒருகோணந் தனிற்பூதப் புற்றுமாங்கே யுறைகின்ற மலைகளெனு மோடு மூண்டாம், வருகாதற் புத்திரர்சூழ்விருத்த வாலமறையவனுங் கொருவனுறை

சிந்துநாமனுந் திறல்விரோதச் செல்வ வேந்தனுஞ் சிலைகளேந்தினு
ரிந்துபானுவுந் திசைகள் வானமு மெய்யும் வாளியா லெங்குமூடினர்
முந்துவெங்கணைத் திரளெரிந்து தீமூடுகி யூழியின்முடிவை யொத்தலு
முந்துபாகனுந் தேரும்வில்லு மற்றுயர் விரோத னொருவனாயினன்.

(ப - ரை.) சிந்துநாமனும்=சிந்துரதராஜனும், திறல்விரோதச் செல்வவேந்தனும்= வலிமையிருந்த விதூரத னென்னும் ஐசுவரிய மிக்க மகாராஜாவும், சிலைகளேந்தினர்= தனுஷுகளை வளைத்தனர் அம்புதொடுத்தனர், இந்துபானுவுந் திசைகள் வானமும் எய்யும் வாளியால் எங்கும் மூடினர் = பிரயோகியா நின்ற பாணவருஷங்களால் சந்திரசூரிய திக்காகாசமென்னும் எவ்விடங்களையும் மறைத்தனர், முந்து வெய்கணைத்திரள் எரிந்து தீமூடுகி = வேகமாகப் போகும்கொடி அஸ்திரக் கூட்டம் எரிந்து அழன்முதிர்ந்து, உழியின் முடிவை யொத்தலும் = கற்பாந்த காலத்திற்குச் சமானமாதலும், உந்துபாக னும் தேரும் வில்லும் அற்று = செலுத்துஞ் சாரதியும் செல்லும்ரதமும் வெல்லும் வில் லும் இல்லாதவனாய், உயர் விரோதன் ஒருவனாயினன் = உயர்வாற் மிகுந்த விதூரதமன் னவன் ஏகனாயிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) உன்னதக் கிரீவலமுற்றந்த நாமகன், வில்நாண் பூட்டித்தொனித் தனர்; திசைமுகங்க ளெல்லாம் பிரதித்தொனி செய்தன. மேருகிரிதடத்திற் கற்பாதந் பவன மடித்ததுபோலப் பலவாளுகிய விதூரதன் காலையிலருக்கன் கிரணங்களைப்போல விடுத்தனன் சாயகங்கள். நிமிர்ந்த கழுத்தோடுகூடிய சிந்துமன்னவனை முன்னுற்று அவ் விதூரதமன்னவன் மத்தியான தபனசமான கோபத்தோடும் அதிவேகத்தை யுடைய னாயினன்; வில்லெடுத்து நாணேசை செய்ய அது நெடுநேரம்வரை எல்லாத்திசைகளி லும் சப்தித்துக் கொண்டிருந்தன, மேருகிரியின் றடத்தைக் கற்பாந்த சண்டமாருதம் அடித்ததுபோ லிருந்தது; மிகவும் விக்கிரமம் பொருந்திய இராஜாவானவர் அம்புறுத் தூணியாகிய இரவிலிருக்கும் முகுளித பதுமங்களில் பந்திக்கப்பட் டிருந்த பாணங்களா கிய வண்டுகளின் பரம்பரைகளைப் பிரளய மார்த்தாண்டன் கரங்களை விட்டதேபோல விட்டனர்; அவரது நாணினின்றும் விடுபடுங் காலத்தில் ஓரேபாணமாக விருந்தது ஆகாயத்தின் கண்ணே போகும்போது ஆயிரமாக விருந்து இலக்ஷக்கணக்காய் வீழ்ந் தன; எளிதாகவே சிந்து மன்னனுக்கும் அவ்வாறாகவே யிருந்தது ஆற்றல்; இத்தகைய போர்க்கவுசலம் அவர்கட் கெங்ஙன முண்டாயதெனின்? வரதராஜாவாகிய ஸ்ரீமகாவிஷ் ணுவைத் தவத்தா லாராதனை செய்து பெற்ற வரப்பிரசாதத்தால் இவ்வில்லாண்மையா னது இவர்கட்கு நேர்ந்தது. அச்சிலீமுக பரம்பரை அதிதீக்ஷணங்களாய் மிகத்தீண்டப் பெறுதவா யிருந்தன. அநேகவிதமாகச் சிந்தவாகிய பெருந்தோளன் நெடுநேரம் சமர்க் களத்திற் சிரோபூதமாய் விளையாடினன்; தேரின்கண் ணேறியிருந்த ஆரியபுத்திரராகிய என்து நாயக விதூரதரை அதிவிரைவில் அச்சிந்து சரமழைகளால் விளையாடி ஆ ஆ! அந்தோ! கஷ்டம்! துன்புறுத்து கின்றனன். கொடியற்றனர், தேரற்றனர், குதிரை யற்றனர், கொள் சாரதியற்றனர், வில்லற்றனர்.

(ச.) சிந்து + எந்தினர் = சிந்து என்னும் விரோதப் பிரதிபக்ஷிக்கும் விரோதன் போலவே சக்தி (சாமர்த்தியம்) லாகவம், ஹஸ்தலாகவமும் ஆயிற்றென்பது அர்த்தம் ஏகவாக்கியம். இந்து + வாளியால் = சரவருடங்களால், ஒருவனாகினன்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) பூபதி வீழ்தலும் புதியலீலை பூபதியிற்போக ஆணைதருமாறு ஸ்ரீதேவியைத் தாழ்தலும்:—பிறையென,

பிறைநெடுஞ் சரங்கவசம் வீழ்வுறப் பிரித்துமெய் யெலாம் பிளந்து சிந்தலும், பொறையழிந்து வீழ்ந்தவனை நோக்கி வெண்புண்ட ரீகையைப் புதிய லீலைபார்த், திறைவனுவிபோ மெல்லையாயி னனிவனை நண்ணநானேக நல்கெனு, வறைதலோடு மவ்வன்னை நல்கினளவளும் விண்ணிநெய் தாகியேகினள். (80)

(ப - ரை.) பிறை நெடுஞ்சரம் = பிறைபோன்ற வஜ்ரசமமான பாணங்களால் விடூரதன் பாணங்களையும், கவசம் = வர்மத்தையும், வீழ்வுறப் பிரித்து = தூள்தூள் ஆகும்படியாகப் பிளந்து, மெய்யெலாம் பிளந்து சிந்தலும் = சர்வாங்கமும் ஆகுலப்படும்படித் துண்டந்துண்டமாக்கி யெறிதலும், பொறையழிந்து = பிரஞ்ஞை யில்லாமல், வீழ்ந்தவனை நோக்கி = வீழ்ந்த நாயகனைப் பார்த்து, வெண்புண்டரீகையை = வெண்டாமரைத்தேவியை, புதியலீலை பார்த்து = நவினலீலை நோக்கி, இறைவன் = எனது தேவன், ஆவிபோம் எல்லையாயினன் = உயிர்பிரியுந் தருவாயிலிருக்கின்றான். நான் இவனை நண்ண = இவ்விறைவனது சேவடியையான் சேரும்படியாக, ஏகநல்கெனு = போக அனுக்கிரகம் செய்தருள வேண்டுமென்று, அறைதலோடும் = பிரார்த்தித்துக் கொண்டபோது, அவ்வன்னை = அந்த ஜகன்மாதா, நல்கினள் = அனுக்கிரகித்தாள், அவளும் விண்ணில் நொய்தாகி யேகினள் = அந்தலீலையும் ஆகாயத்திற் சூக்குமமாகிச் சென்றாள். (80)

(ஸ்ரீ - வீர.) அகன்ற பாறைக்குச் சமானமாகத் திடமாய்ப் பருத்திருந்த மேற்பாகம் எதன்ஹ்ருதம் அதைப் பிளந்தென்பதாம். பாண்டங்களின் உபகரணங்களின் பாரக்கூட்டங்களோடும் சகடங்களின் சமூகம் ஓடிக்கொண் டிருந்தன, எங்கேபார்த்தாலும் அழுங்குரல் அதிகரித்துக் கொண்டே யிருந்ததை நோக்கிக் களத்திரக் கூட்டங்கள் துக்கித்துக் கத்தின. நகரத்திலுள்ளவர்களின் கூட்டம் ஓடிக்கொண் டிருந்தது. கனமற்றதனு ஆகாரத்துடன் மேற்கிளம்பிச் சென்றனள். கவசமற்றனர் அங்கமுழுவதும் அழிவுற்றனர் ஆகுலமுற்றனர் உடைக்க முடியாத கற்பாறையைப்போல அதிவலுமையான அதிதூலமாய மூர்த்தன்யத்தை வஜ்ரசமமான பாணங்களாற் பிளந்து பூதலத்தில் வீழ்த்தினன். விதூரத மன்னவன் மாண்டனன் விதூரதமன்னவன் மாண்டனன் வேற்றரசனுஞ் சிந்து வாற்போரில் வீழ்ந்தனன் என்னுஞ் சப்தமானது மிகமிகக்கிளம்பிய அளவில் தேசமெல்லாம் அதிபயமடைந்தது, கூட்டங் கூட்டமாக வண்டிகள் பாண்டங்களும் பிறவுமேற்றப்பட்டனவாய்ச் செல்லத்தொடங்கின, கூவிக்கொண்டு திரியும் மனைவி மக்களையழைத்துக் கொண்டு அதிதூர நகரங்கட்கு செல்லத் தொடங்கினர். ஹே இராகவ ! இப்படியாய வேளையில் ஸ்ரீசரசுவதிதேவியை நோக்கிலீலை ஹே மாத ! இங்கு எனது நாயகர் இத்தேயத்தைவிட முயலுகின்றாரென்று முன்னிருக்கும் மூர்ச்சித்த நாயகரது முடிவுமூச்சை நோக்கிக்கூறி ஸ்ரீ ஞானதேவியாகிய பரமேசுரியே ! எனதுபர்த்தாவைப் பின்றொடர்ந் தடையுமாறு திருவருள் புரியவேண்டும், புதிய லீலாதேவியானவள் கிடைத்தவரத்தினளாகி முன் வர்ணிக்கப்பட்ட வாசனா மயமாகவே தேகமுடையவளாகி மகீபதியாகிய பதியை யடையும் பொருட்டு விண்ணெறியானே லோகங்களைக் கடந்து செல்வாளாயினள். கூறியபடி சிந்தித்து ஸ்மரணத்தோடும் தேகாதியவத்தை யடைவுற்றுப் பதியடைவினுற்சாதகத்தால் மிகுந்த ஆனந்த முடையவளாய் மகத்தான மகரத்வஜமாய் ஆகாயத்தலத்திற் பக்ஷியைப்போல இலகுவான சரீரமுடைத்தாய்ப் பறந்தனள்.

(ச.) பொறையழிந்து வீழ்ந்தவனை = சுவாசம் எவ்வளவும் அற்று மூர்ச்சையடைந்த பர்த்தாவை, நல்கெனு, அம்பிகையே = ஹேமகேசுவரியே! தயைசெய்ய வேண்டு மென்ன அறைதலோடும், எகினள் நொய்தாகி = ஞப்தியை நிரந்தரந் தியானஞ்செய்து அதனாற் கணத்திற் சாமர்த்திய வதியாய்ச் சூக்கரூபமாய் விண்ணில் யக்ஷிணிபோல் எகினள். மூடம் = மூர்ச்சிதம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) வழியிலிருந்த குமாரியோடெங் கூடிசெல்வோம் வருதியென அக்குமாரி கூறி முன்பு நெறிகாட்டப் பின் செல்லுகின்ற புதியலீலையின் நெறிநீக்கம்:— கருவென.

> கருமுகிற் றடங்கடந்து வாயுவின் கதிகடந்து வெங்கதிரி னெல்லைவிட்
> டருகுதாரகர் பதமகன்று மேலயனை யாதியாமமரர் நாடொரீஇ
> மருவுமிந்த வண்டம் பிளந்துபோய் வாரியாதியாய் வளைந்த யாவையு
> முருவியெல்லையு முடிவுமற்றதா முண்மை ஞானவிண் ணொல்லையெய்தினள்

(ப - ரை.) கருமுகிற் றடங்கடந்து = நீலமேகநெறியைத்தாண்டி, வாயுவின் கதி கடந்து = வாதமார்க்கத்தையும் வலிந்து, வெங்கதிரின் எல்லைவிட்டு = சூரியமார்க்கத்தி னின்றும் கிளம்பி, அருகுதாரகர் பதம் அகன்று = சமீபித்த உடுபதநெறியையும் உல் லங்கனஞ்செய்து, மேல் அயனையாதியாம் அமரர் நாடு ஒரீஇ = உயர்ந்த பிரஹ்மாதி தேவதைகளின் பதங்களையுங் கடந்து, மருவும் இந்த அண்டம்பிளந்துபோம் = பொருந் தும் இவ்வண்டத்தைப் பிளந்து சென்று, வாரியாதியாய் வளைந்தயாவையும் உருவி = கடன் முதலனவாய்ச் சூழ்ந்த எல்லாவற்றையும் தாண்டி, எல்லையும் முடிவும் அற்ற தாம் = வரம்பும் அந்தமு மில்லாத, உண்மை ஞானவிண் = சத்திய சித்தாகாசத்தை, ஒல்லையெய்தினள் = விரைவில் விரவினள்.

(ஸ்ரீ - வீர.) அண்டத்தை = பிரஹ்மாண்ட கபாலஸ்தானத்தை? பெருஞ்சித்தே யாய பரமாத்மாவெனப் பெயரியககனமாம் அதன் மத்தியில் எய்தினளென்பதுபொருள் மேக மார்க்கத்தைக் கடந்து வாதஸ்கந்தத்தினுட் சென்றனர், சூரியமார்க்கத்தைத் தாண்டி நக்ஷத்திர மார்க்கத்தையும் கடந்து சென்றனர், வாயு இந்திரசுரசித்தர்களின் லோகங்களை யெளிதிற்றாண்டி பிரஹ்ம விஷ்ணு மகேசர்களின் லோகங்களையுந் தாண் டிப் பிரஹ்மாண்ட கபாலத்தை யடைந்தனர். இமநீர்ச் சீதளத் தகைமையானது உள் ளிருப்பதாயினும் கும்பத்தி லபின்னமாகத் துவாரமொன்று மிராதிருந்தும் வெளியில் வெளிக்கிளம்புவதே போலச் சங்கற்ப சித்தமான அவள் பிரஹ்மாண்டத்தி னின்றும் வெளியே கிளம்பினள். இக்கமனமும் சித்தத்தின் கற்பனை மாத்திரமேயாகும், தன் சித்தமாத்திரத்தி னின்றும் தன் சங்கற்ப வியற்கையாலாம் இம்மயக்கம் ஈண்டு இவ் வண்ணம் வெட்டவெளியாக உள்ளேயே யனுபவிக்கப் படுகின்றது; இவ்வண்ணப் பிரஹ்மாதி ஸ்தானங்களைக் கடந்து, பிரஹ்மாண்ட பாலத்தை யடைந்தபின்னர் பிரஹ் மாண்டத்திற்கு வெளியிலிருக்கும் ஜலாதியாவரணங்களைக் கடந்து பெரிதுக்கும் பெரி தாய மாயையோடு கூடிய சிதாகாசத்தை பின்படைவுற்றனர்.

(ச.) வாயுவின்கதி = வாயுமண்டலங்கள், இந்த வண்டம் = பிரஹ்மாண்ட கடாக கண்டம், வாரியாதியாய் வளைந்த யாவையும் = பிரஹ்மாண்டத்துக்குச் சல அநல ஆகா சாதிகளும் வாயுமகதகங்கார பிரகிருதி ரூபங்களும் சத்தா வரணங்களாம், உண்மை ஞானவிண் ஒல்லை = சிதாகாச மத்தியம் அச்சிதாகாசத்தில் அதிவேகமாக எய்தினள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகாத்மாக் கட்கும்பிருதிவியாதியாவரணம் போலும் பரிச்சேதம் ஆசங்கித்துக் கூறுகின்றார்:—கற்பமென.

கற்பகோடி வெங்கருட னோடினும் கடக்கொணு வத்திக்காடு காய்த்தபோ
லுற்பவங்களா மண்டகோடி யொன்றொன்றை நோக்குறு துளவவற்றினு
ளற்பமின்றி யாவரண பேதமே யயல்வளைப் புறமண்ட மொன்றனுட்
டற்பதங்கடந் தெய்தியம்புயச் சவங்கிடந்த மண்டப மடைந்தனள்.

(ப - ரை.) கற்பகோடி = கற்பகோடி சதங்களானும், வெங்கருடனோடினும் = அதிவேகத்தோடு கூடிய கருடன் பறந்து சென்றாலும், கடக்கொணு = தாண்டமுடியாதபடி, அத்திக்காடு காய்த்தபோல் = அத்திவனங்காய்த் திருப்பதேபோல், உற்பவங்களாம் அண்டகோடி = உண்டாகி மண்டிமெண்ட கோடிகள், ஒன்றையொன்று நோக்குறுதுள = அன்னி யோன்னியம் அதிர்ஷ்டங்களாக உள்ளன, அவற்றினுள் = அவைகளுள், அற்பமின்றி = விஸ்தாரமாய், ஆவரணபேதமே = மறைப்பின் வேற்றுமைகளே, அயல்வளைப்புறம் = அயல் வளைந்துகொண் டிருக்கும், அண்டமொன்றனுள் = ஓரண்டத்தின்கண், தற்பதங்கடந்தெய்தி = பிளந்து புகுந்தன் பதுமபட்டண மடைந்து, அம்புயச் சவங்கிடந்த மண்டப மடைந்தனள் = ஆண்டு அப்பதும சரீரமிருந்த மண்டபத்தைச் சார்ந்தனள்.

(ஸ்ரீ - வீர.) கருடனாலுங் கரைகாண முடியா வண்டகோடிகள் என்பதாம், அதிவேகத்தோடு செல்லும் பெருங்கருடனாலும் கற்பகோடி சதகாலஞ் செல்லினும் எல்லாவற்றையுங் கரைகாண இவ்வளவென வியையவே யியையாதாம்; ஆண்டநேகங்கோடி பிரஹ்மாண்டங்கள் கணக்கிட முடியாதனவாய் அளவற்று நிறைந்திருந்தன. அவைகள் மகாவனங்களில் பழங்கள்போல அன்னி யோன்னியம் காணமுடியாதனவா யிருந்தன, ஆண்டொருபுரத்தில் விஸ்தாரமான ஆவரணங்களோடு கூடியதா யினிது முன்னிருந்த அண்டத்தில் வாஸ்தவமாய்த் துவார அபேக்ஷை யில்லாதபடியினாலே இலந்தைக் கனியிற் புழுநுழைவதே போலத் துவாரஞ் செய்தே புகுந்ததுபோற் புகுந்தனருள்ளில்; மீண்டு அதிகவொளி வாய்ந்த பிரஹ்மாதி பதங்கடந்து கீழேயிருக்கும் அப்பதுமமன்னமகிமண்டலத்தை யடைந்தனர், அச்சவமண்டப மடைந்தபோது அக்குமாரி மறைந்தனள் மாயையாற் றோன்றி மார்க்கம் காண்பித்தன போலு ஸ்ரீதேவி திருவருளால்.

(ச.) கற்பகோடி சதங்களானும், அதில் = அச்சிதாகாசத்தில், மகாவனத்திற் பலங்கள்போல், அண்டகோடி = பிரஹ்மாண்ட லக்ஷங்கள், அசங்கைகள், வெகுவாய் அவைகள் ஒன்றை யொன்று காணுதனவாம், தற்பதங்கடந்து சித்திரஞ்செய்து பிரவேசித்து, அந்தப்புர மண்டபத்தை யடைந்தனள் = பொருந்தினவளாய்ச் சவத்தின் அருகிலிருந்தாள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நவீனலீலை அம்மண்டபக் காட்சியா லாச்சரிய முற்றிருப்ப நாயகன் ஜீவன் ஆண்டுவந்து சேர்தல்:—தமரவென.

தமரவண்டு சூழ்மலரின் மூடுமிச்சவ சரீரமாந்த ரணிபாலனே
யெமதுநாயகன் கருணைவா ணியாலென் கொன்முன்ன மிங்கெய்தினேமெனு
வமர வெண்ணிவெண் கவரிவீசி யங்கன்பனோர் புறத்தவ ளிருந்தபின்
விமலஞானியாம் விறல்விடூரதன் மேவுசீவன் விண்மீது போயதே.

(ப - ரை.) தமரவண்டு சூழ் = சப்தியா நின்ற அளிகள் மொய்த்த, மலரின்மூடுமிச்சவ சரீரமாந்தரணி பாலனே = புஷ்பங்களினாலே ஆச்சாதித் திருக்கப்பட்ட இந்த

உயிரில்லாத தேகமேயாய பூபாலனே, எமது = நம் நாயகன், கருணை வாணியால் = தயைவடிவமான ஸ்ரீ சரசுவதிதேவியால், என் கொல்முன்னம் இங்கெய்திஞேமெனு= என்ன ஆச்சரியம் பூர்வம் இவ்விடத்தில் அடைந்தோமே யென்று, அமர எண்ணி = பொருமையாயூன்றிச் சிந்தித்து, வெண் கவரிவீசி=அழகிய வெண்சாமரத்தை எடுத்து வீசி, அங்கு = அவ்விடத்தில், அன்பன் ஓர்புறத்து = நாயகனது ஒருபக்கத்தில் அவ ளிருந்தபின் = அந்த லலிதயவ்வனை யிருந்த பின்னர், விமலஞானியாம் நிருமல அறிஞ ஞை, விறல் விடூரதன் மேவுசீவன்=வெற்றிபொருந்திய விதூரத மன்னவன் பொருந்தி யிருந்த வுயிரானது, விண்மீதுபோயதே = ஆகாயத்தின் கண்ணே கிளம்பிச் சென்றது. (83)

(ஸ்ரீ - வீர.) என்கொல் = விஸ்மயமுற்று விதிர்விதிர்த்தும் புளகாங்கிதையாய்ப் புந்தியா லோர்ந்தாள். அந்நாயகராகிய சவரூபத்தை அவனிதாக நோக்கி யுண்மையா கவே இதனைத்தானே தர்க்கித்து எண்ணுவாளாயினள், அவ்விவ்வெனது நாயகர் சிந்து வாற்போரிற் கொல்லப்பட்டு வீரலோகமாகிய விதையடைந்து கணம் இஷ்டப்படிதுயில் கின்றார் போலும் யான் ஸ்ரீதேவியினது திவ்வியமான திருவருளானே சரீரத்தோடு கூடி னவளாகவே இவ்வண்ணம் இங்ஙன் ஈண்டு எனது நாயகரை யடைந்தேனுதலின்யானே தன்னியை எனக்குச் சமமாக எவளையுமே யியம்பமுடியாது எனவெண்ணி அவ்ன் தாம ரைக்கரத்திற்கவின் சாமரந்தாங்கிச் சந்திரனுல் விண்போல் அவனி மண்டலம் வீசிக் கொண்டிருந்தனள். இச்சமயத்தில் மன்னவன் கண்களின் விழிகள் சுழலப்பெற்றவனும் எல்லாக் கரணங்களும் மூர்ச்சிதனுகவே அதிசூக்குமமான பிராணன் மாத்திரம் எஞ்சிய தேகமுடையவனும் காய்ந்து வெளுத்த உதட்டினனும் ஜீர்ணபர்ணவர்ண வொளியின னும் ஆயினன், சேதனமற்றனன், தேகத்தை விட்டுச்சென்றது ஜீவன்; கிராணஜன்னிய விருத்தியுப கிதவுணர்வானது காற்றிலிருக்கும் கந்தலேசத்தைச் சூக்குமமாயினும் கவர் வதேபோல ஆகாயத்திற் செல்லும் அச்சீவனைத் திவ்யதிருஷ்டிகளோடு கூடிய அத்தேவி மார் இருவரும் கண்டனர். அந்தஜீவ சித்தானது ஆகாயத்தில் ஆதிவாகிகப் பிராண ஞேடு சேர்ந்துகொண்டு வாசனையின் வாயிலாக ஆகாயத்தில் அதிதூரம்போக ஆரம்பித் தது, காற்றிற் குறிக்கப்பட்ட கந்தகலையை இருவண்டுகள் இனிது தொடர்வதேபோல அந்தஜீவசித்தை இருதேவிமார்களும் அனுசரித்தே தொடர்ந்தனர்.

(ச.) அச்சவசரீரத்தைப் பார்த்து, வீரவராக்ரணீயான விதூரணிபாலனே, தேவி யின் பிரசாதத்தினுல் அங்குநின்று இங்கு நிர்மலமான சித்தத்தால் நன்ருய்ச் சிந்தித்து, அவள் = அவ்விளங்கொடி யென்னும் ராஜேந்திரலீலை, ஸ்ரீவசிட்டர் பின்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஆகாயத்திற் சென்ற அரசனைத் தொடர்ந்து தேவிமார்கள் மண் டபமடைதல்:—ஞானவென.

ஞானநோக்கினு லவனைநோக்கி விண்ணடைந்து பின்வரு நங்கைமார்தமைத்
தானறிந்திடா தகன்ற ஜீவன்போய்ச் சவமிருந்த மண்டப மடைந்திடப்
போனமாதரும் புதியலீலையைப் புரிந்து நோக்கினுர் பொன்செய் மண்டபத்
தானசீவனைத் தகைந்து மீளவுமம்பு யாசனத் தவணிறுத்தினுள்.

(ப - வை.) ஞானநோக்கினுல் = உணர்வுவடிவ திவ்யதிருஷ்டியினுலே, அவனை நோக்கி = அவ்வரசனைப் பார்த்துக்கொண்டு, விண்ணடைந்து = ஆகாயத்திற் சென்று, பின்வரும் = பின்னர்வராநின்ற, நங்கைமார் தமை=தேவிமார்களை, தானறிந்திடாது= தான் அறியாமல், அகன்றசீவன்போய் = சென்ற அவ்வரையனது உயிர்போய், சவ

யிருந்த மண்டப மடைந்திட = பதுமசரீர யிருந்த மண்டபத்தை யுற்றிட, போனமாதரும் புதியலீலையைப் புரிந்து நோக்கினர் = பின்சென்ற தேவிமாரும் நவீனலீலையை, நன்குகண்டனர், பொன்செய் மண்டபத்தான சீவனை = பொன்னாலாய பதுமமண்டபத்தை யடைந்துள்ள வுயிரை, தகைந்து = தடுத்து, மீளவும் = மீண்டும், அம்புயாசனத்தவள் = தாமரைச் செல்வி, நிறுத்தினள் = நிற்குமாறு செய்தாள்.

(ஸ்ரீ - வீர.) உயிர் = விதூரத சம்பந்தி சீவன். இச்சீவன் சவசரீரத்தை யடையாதொழிக, ஆகாசத்திலாண்டு இருக்குக என்றிவ்வகையான வடிவ சங்கற்பத்தால் நிற்குமாறு செய்தனள். அப்போது ஜீவகலையும் லீலையும் ஞானதேவியும் ஆகமூவரும் ஆகாயத்தே சென்றனர் மன்னவனுடைய ஜீவரேகையானது இருதேவிமார்களும் உருவமுடையவர்களாக இருந்த போதினும் அவர்களைப் பார்க்கவில்லை அவர்கள் அதனைப் பார்த்துக்கொண்டே சென்றனர், அக்கலையை யனுசரித்தே அவர்கள் ஆகாயமார்க்கங் கடந்தனர், அதிவிரைவில் லோகாந்தரங்களைக் கடந்து இந்தப் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளிப்போந்து வேறு பிரஹ்மாண்டத்தை யடைந்து பூமண்டலத்திற் சேர்ந்து சங்கற்ப மாத்திரத்தாலுருவம் பெற்ற அவ்விருவரும் ஜீவரேகையோடுற்று பதுமராஜபுரத்தை யடைந்து லீலையின் அந்தப்புர மண்டபமுற்றனர், காற்றின்ரேகை தாமரையிற் புகுந்ததுபோலும் சூரியப்பிரபை கமலத்திற் புகுந்ததுபோலும் சுகந்தம் காற்றிற்புகுந்ததேபோலும் இஷ்டப்படி யிருவரும் கணத்திற் புகுந்தனர் அதன்பின் ஆண்டுச் சவசய்யையின் ஒருபக்கத்தி லிருந்த முன்மரித்த விதூரதலீலையாகிய முன்வந்தவளை ஞானதேவியும் லீலாதேவியும் கண்டார்கள்.

(ச.) ஞானநோக்கினல்=திவ்யதிருஷ்டியினால், ஜீவகலையைப் பார்த்துக்கொண்டு, நங்கைமார்தமை = லீலையையும் ஞப்தியையும், பொன்செய் மண்டபம் = அந்தப்புர மண்டபம், (விரேத) சீவனை, அம்புயாசனத்தவள்=ஞப்தி, மீளவும், மனத்தின் சலனத்தைப்போல் (சங்கற்பத்தால்) தகைந்திருந்தனள், தன்மகிமை வெளியாக வென்பது கருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) புராதன லீலையின்றேகம் காணுதாகவே அம்பிகையை வினுதலும் விடைதருதலும்:—பண்டையென.

பண்டைலீலை தன்மேனி கண்டிலாள் பாமடந்தையைப் பணிந்து கேட்டலு, மண்டுசிந்தை போய்நிறை சமாதியான் மறிந்து வீழ்ந்தமெய் மாண்டதாமெனக், கொண்டமைச்சர்வெங்கனல் கொளுத்தினர் குரம்பையோடு நீகுவலயத்துறி, லண்டர்வானி னின்றுடலொ டேகினளந்த லீலையென்றதி சயிப்பரால். (85)

(ப-ரை.) பண்டைலீலை = புராதனலீலை, தன்மேனி கண்டிலாள் = தனதுதேகத்தைக் கண்டிலள், பாமடந்தையைப் பணிந்து கேட்டலும் = ஸ்ரீ வாக்தேவியை நமஸ்கரித்து வினவியபோது, மண்டு சிந்தைபோய் = நெருங்கிய சிந்தாகுலங்கடந்து, நிறை சமாதியால் = பூர்ணமான சமாதியினாலே, மறிந்து வீழ்ந்தமெய் = நிற்கமுடியாமல் நிர்ச்சீவமாய்ப் பூமியிற் சாய்ந்த சரீரத்தை, மாண்டதாம் என = இறந்துபோயிற் றென்று கருதி, கொண்டமைச்சர் = மயானத்திற்குக் கொண்டுபோய் மந்திரி முதலாயினோர், வெங்கனல் கொளுத்தினர் = சந்தன நெய்யிவற்றாற் சொலித்த நெருப்பிற் சாம்பராக்கினர், குரம்பையோடுநீ = இப்போது சரீரத்தோடுநீ, குவலயத்துறில் பூமண்டலத்தடைவை யேயானல், அண்டர் வானினின்று=தேவதைகளின் சுவர்க்கவுலகத்தி

விருந்து, உடலொடு வதினள்=சரீரத்தோடும் வந்தனள், அந்தலீலையென்று அதிசயிப்பரால்=அதேலீலாதேவி யென்று ஆச்சரியத்தை யடைவார்கள்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீபகவதியை நோக்கியெனது பழையதேகங் காணேமே யென்று சுந்தரலோசனத்தையுடைய புராதனலீலை கேட்ப ? ஹேமகத்தாங்கருத் தோடுற்றலீலையே கேட்டி ! எனச் சம்போதித்துத் தேவியுத்தர மருளுகின்றாள்:—ஈண்டிருந்த நினது தேகமானது என்ன ஸ்திதியை யடைந்ததென்றால் அந்தத்தேகம் பதினைந்து நாளாகவும் வேர்த்து நனைந்து பிராணத்தடையா லோங்கி யெரியும் சாடராக்கினியால் தகிக்கப்பட்டு நீராவியாகப் போய்விட்டது: விட்டபின் முறையாகக் காய்ந்து ஜீவனற்றதாகி நன்றாகக்காய்ந்த சருகுபோலப் பூமியின் கண்ணே விழுந்தது, காட்டகுட்டியம் ஒப்பதாகிப் பனிபோற் சீதளித்துச் சவமாகிக் கிடந்தது, கிடந்தபின் மந்திரிமார்க ளெல்லாம் கூடிவந்து தேகமிருந்து மிகவுங் கெட்டுக்கிடக்கும் நிலைமையைக்கண்டு இறந்தனளிந்த இராணியெனத் துணிந்து தாமேசிருகத்தை விட்டு வெளிப்படுத்தினார்கள், இதுவிஷயத்தில் அதிகமாகச் சொல்லிப் பயனென்னே, கொண்டுசென்று சந்தனக் கட்டைகளாற் சிதைசமைத்து நெய்வார்த்தும், தீமூட்ட விரைவிற் சாம்பன் மயமாயது. யாவரும் மேலுலகிற்குச் சென்றன ளென்று எண்ணிக்கொண் டிருக்கின்றார்கள். இப்போது தேகத்தோடு வந்திருக்கும் உன்னைப்பார்த்துப் பரலோகத்தி லிருந்து இங்கே வந்துற்றனள் என்று பேராச்சரியத்தை யாவருமே யடைவார்கள், நினது திவ்யசரீர தரிசனத்தானும் பரம ஆச்சரியத்தை யடையார்கள். முன்னர்லீலையின் தனதஞ்ஞான கற்பிதமாய்த் தனதனுபவ சித்தமாய தேகத்திற்குத் தத்துவஞானத்தானே பாதிதத்தன்மை யிருந்தபோதினும் பிராரப்த சேடபோகப் பொருட்டுத் தோற்றுநின்ற ஆதிவாகிகத் தகைமை வருணிக்கப்பட்டது இப்போது அன்னியரது அஞ்ஞான கற்பிதமாய் அன்னியரது அனுபவசித்தமாய தேகத்தின் விருத்தாந்தம் விளம்பப்பட்டது என்றுணர்க. இராஜ சரீரமானது விகாரப்படாம லிருந்தது ஞானதேவி சங்கற்பத்தினாலும் அம்மன்னவனது அதிஷ்டவசத்தானு மென்றுணர்க.

(ச.) லீலா விளங்கொடி தன் றேகத்தைக் காணுதவளாகிப் பகவதிதேவியைப் போற்றி, தேவியேயென தப்பூர்வஜன்ம தேகங்காணவில்லை யென்னென்று கேட்டாள்? அதன்பின் ஞப்தி சொல்லுகின்றாள். மகாகுணமுடைய லீலாதேவியே தேகத்தின் சரிதை யென்னெனிற் கேள் ! சமாதியில் நீயடங்கியிருக்க அப்போது உனதுகளேபரம் பூமியில் மிகவுலர்ந்த பல்லவம்போல் காட்டகுட்டிய சமமாய்ச் சவம்போலுஞ் சீதளமேயின்றி நிர்ச்சீவனுயிருந்தது அதன்பின் மந்திரிகள் வந்து இவள் மிருதமானுளென்னு நிச்சயராய் அவர்களாற் சந்தனக் கட்டையோடு வைத்துக் கிருதங்கூட்டித் தகிப்பிக்கப்பட்டது. இப்போது உன்னை இவ்விடத்துப் பார்த்துச் சரீரத்தோடு கூடினவளாய்ப் பரலோகத்தினின்று வந்தாளென்று மகாச்சரியப்படுவார்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்தேக வாசனைப்படியே நினக்குருவந் தோற்றும் ஆகலின் நினக்குவடிவம் முன்போன்றேயாம் என்ன அத்தேக வாசனைத் தன்மையேல் என்னால் அதேதேகம் மன்னவனுக்கே போல என் அடையப்படவில்லை யென லீலைகேட்ட உத்தரமருளிப் பின்புதிய லீலைக்குத் தரிசனந்தரல்:—சூக்கவென.

சூக்கமெய்யினே டிருந்து வாதனைத் தோற்றமாற்ற லாற்றாலகாயநீ,
போக்கலாய தென்றிவளுக் கோதியப் புதியலீலை யிப்போது காண்கென,
வாக்கின் செல்வியுண் ணினைந்த வெல்லையின் மறைந்து நின்றவர் நிறைந்து
தோன்றலும், பாக்கியங்கள் போற்கண்ட லீலையப்பாவை மார்பதம் பணிந்து
இறைஞ்சினள்.

(ப - ரை.) சூக்கமெய்யி னேடிருந்து = ஆதிவாகிக ஆகத்தோடிருந்து, வாதனைத் தோற்றம் மாற்றலால் = வாசனையின் எழுச்சியைத் தீர்தலால், தூலகாயம் நீ போக்க லாயது = தூலசரீரம் உன்னுற் போக்கப்பட்டது, என்றிவளுக்கோதி = என இவ்வண் ணம் பழையலீலைக் கனுக்கிரகித்து, அப்புதியலீலை யிப்போது காண்க என = அந்த நவீனலீலை இப்போது எம்மைத் தரிசிக்கவென்று, வாக்கின் செல்வி யுண்ணினைந்த வெல்லையில் = ஸ்ரீ சரசுவதிதேவி திருவுள்ளத்திற் கருதியவுடனே, மறைந்து நின்றவர் நிறைந்து தோன்றலும் = கண்ணுக்குத் தெரியாமல் நின்றவர் ஒளிநிரப்பிப் பூரணமாகத் தெரிசனந்தரலும், பாக்கியங்கள் போற்கண்ட லீலை = பாக்கியங்கள் வந்தெய்தின போலத் தரிசித்தலீலை எழுந்து சம்பிரமத்துடன், அப்பாவைமார் பதம் பணிந்து இறைஞ்சினுள் = அந்தத் தேவிமார் பாதாம்புஜங்களை யருச்சித்து நமஸ்கரித்துத் தோத்தரித்தாள்.

(ஸ்ரீ-வீர.) சூறியாகத் தோடும் தோற்றமாத்திர ரூபமாகக் காணப்பெறுவா யிப் போது நீயோக ஐசுவரிய ஆற்றலினிறைவினுல், தூலதேக வாதனையின் பரிக்ஷயத்தால் நினது தூலதேகம் மறக்கப்பட்டதாகும், அதிதிட்டமான சூறியாக நல்லுணர்வினுனே அதாவது கனவாகமேபோலும் கருத்தினுமயலாய் ஆதிபௌதிக ஆகம் இல்லையாம் என் னும் திரப்பிரமையானே ஆதிபௌதிகம் சாந்தியை யடையும். அதனுனே "சிவன் முக் தன் றேகம் பிராதி பாசிகமாகத் திகழாநிற்கும்" என்பர் பெரியார். சங்கற்ப விளையாட் டால் நமது தரிசனங் கொடுத்ததும் விவகாரந் தொடங்கப் படுமென லீலை காண்பான் சிந்தித்தனள், ஞானதேவியினுலே இங்ஙனவள் காணத்திருவுளம் நயந்த மாத்திரத்தில் அவள் கண்டெழுந்து நமஸ்கரித்தனள் என்பதாம்; ஹேதத்துவஞானப் பெரும்பே றுற்ற சுந்தரியே! நீ ஆதிவாகிக தேகத்தை யடைந்துவிட்டாய் இத்தேகம் மறந்ததே யாகும் பழையவாசனை யில்லையென்று சொல்லமுடியாது எல்லாவாற்றுனுமேமறந்திருக் கும் பக்ஷத்தில் ஆதிவாகிக தேகத்தில் அதனுகாரத் தன்மையே யசித்தியாகு மாதலின் அநுபவாசனை யதுவாமென்றறிதி. அவ்வாசனை யத்தியந்தம் அகன்று விட்டதென்று கூறமுடியாதாம்; ஆயினிதற்கு ஆதிபௌதிகத் தன்மையும் எனுண்டாக மாட்டாது எனின்? ஆதிவாகிக திருஷ்டிரூட மானவர்கட்கு ஆதிபௌதிகம், மிகவுஞ் சாந்தியை யடையும், ஞானிக்கு ஆதிபௌதிக மிருப்பதாக அன்னியர்கள் பார்த்தபோதினும் ஆகா யத்திற் சரற்கால மேகம்போலவாம், ஆதிவாகிகத் தகைமைரூடமான யாவருமே தேக முடையவர்தாம், ஜலமிலாத அம்போத சமானமும் கந்தமற்ற புஷ்பசமானமும் ஆவர் சத்திய சங்கற்பவிலாசத்தால் லீலையின் பொருட்டு நாம் தரிசனந்தருவோம் வருதிவிவ காரங்களையும் ஒழுங்குபடுத்தி நடத்துவாம், என்றிந்தப் பிரகாரம் ஹே இராகவ! இந்த எம்மை விதூரதலீலை காணுகவென ஞானதேவி நினைத்த மாத்திரத்தில் பிரகாசித் துக் கொண்டிராநின்ற ஞானதேவியும் லீலாதேவியுங் காணப்பெற்றனர்; பின் அவ்விதூ ரத லீலையானவள் நல்லா குலவிலோசன முடையவளாய் அத்தேஜசின் பெருக்கால் விளக்கமுற் றிருக்கும் வீட்டை இனிது பார்த்தனள். அவ்வீடானது நெகிழ்ந்த சீதளச் சுவாலையின் பிரகாச வசத்தாற் சந்திர பிம்பத்தினின்றும் மிகவெளுத்தகிளம் பிய வொளிபரவியதுபோ லிருந்தது; அவர்களுடைய அங்கத்தொளி நெகிழ்வு நிறைந்த சுவர்களோடு கூடியிருத்தலின் பொற்பால் பூசியதுபோல இருந்தது, வீட்டை யிவ்வாறு நோக்கியபின் முன்னர் லீலாதேவியையும் ஞானதேவியையும் கண்டு எழுந்து மிகமகிழ் வுற்றவளாகி அவர்களுடைய பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தனள்.

(ச.) சூக்க + போக்கலாயது = பிரதிபை மாத்திரரூபமான சூக்கும ஆதிவாகிக

தேகத்தால் யோகமதித் திருடமுடையளாய் நீ யிப்பொழுது காணப்படுகிறாய் வாசனையின் அத்தியந்த நாசத்தினால், நினக்கு இத்தேகம் மறந்தது, ஆதிபௌதிக சரீரமானது அதிருடமான ஆதிவாஹிக திருஷ்டி யுடையவர்க்கு நசிக்கிறது என்றிவளுக்கோதி, காண்கெனு = சங்கற்பலீலையோடு என்னைப்பார்க்கக் கடவாயென்று நினைந்த வெல்லையில், நிறைந்து தோன்றலும் = தேஜக்குழாப் பிரபையான கிருகத்தையும் லீலையையும் ஞப்தியையும் பார்த்து, எழுந்திருந்து, இறைஞ்சினள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தடை நீக்கியுயிரைத் தரணிபன் சரீரஞ் சேர்த்தபின் மன்னவனெழுதல்:—போதவென.

போதவாணியும் பழையலீலையும் புதியலீலையும் புணர்ந்திருந்துழி
சாதிமென்மலர் வாசம்விட்டெனச் சலசமாதுயிர்த் தடைவிடுத்தலும்
வாதரூபமாய் நாசியூடுபோய் வறந்தமெய்யெலா நிறைந்துலாவிடச்
சீதமாகிநெய்த் துளிபரந்துகண் டிறந்தெழுந்தனன் செத்தமன்னவன். ()

(ப - ரை.) போதவாணியும் = ஞானமயமாய ஸ்ரீ சரசுவதிதேவியும், பழையலீலையும் புதியலீலையும் = புராதன நவீனலீலைக ளிருவரும், புணர்ந்திருந்துழி = சேர்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தபோது, சாதிமென்மலர் வாசம்விட்டென = பதுமசங்காதம் ஆமோதம் விட்டதொப்ப, சலசமாது = ஸ்ரீ தாமரைச் செல்வி, உயிர்த்தடை விடுத்தலும் = ஜீவத்தடையை விட்டதும், வாதரூபமாய் = காற்று வடிவமாய், நாசியூடு போய் = நாசிக்குட் சென்று, வறந்த மெய்யெலாம் = காய்ந்த காயமெல்லாம், நிறைந்துலாவிட = பூரணமாய் நிலவ, சீதமாகி = தண்ணியதாகி, நெய்த்துளிபரந்து = ரச நிறைந்ததாகி, செத்தமன்னவன் = முன்னுயிர் துறந்துசென்ற அரசன், கண்டிறந்தெழுந்தனன் = விழிகளை விழித்து விந்தியம்போ லெழுந்தனன்.

(ஸ்ரீ - வீர.) அன்னமன்னதோர் மனோகர நடையுடைய லலிதலோசன லீலைகளே இப்போது அரசனை யெழுப்புவாமெனக் கூறித் தடைவிடுத்தனள், ஆமோதம் = தூரத்துள போழ்தே மனத்தைக் கவரும் பரிமளம், வாதம் = சமீரம், உயிர் சேர்தலும் அங்கங்களெல்லாம் விளக்கமுடையன வாயின், இரதஞ்சேர உஷ்ணித்து மிகுதியுற்றன. மதோன்மத்த யவ்வனத்தோடு கூடிய அம்மானினிகள் கொடிகள் மேருவின் சிகரத்திலுட்கார்ந்தன போலப் பொற்பீடத்திற் பொலிய வீற்றிருந்தார்கள். ஞானதேவி இருவதையும் பார்த்துக் கூறுவதாவது:—மான்போன்ற அழகிய நோக்கத்தையும் அன்னத்தைப் பழிக்கும் நடையையும் உடைய லீலைகளே! சவசயனத் தானத்தினின்றும் இந்நரபதியை யெழுப்புவோமாக வென வுரைத்துப் பதுமினிவாசனையை விடுவதேபோல முன்சங்கற்பத்தாற் றடைப்பட்ட அரசனது உயிரை விடுத்ததும் அவ்வுயிர் காற்றைப் போலக் காணப்படாத தாயினுந் இராகாதி வாசனை யிலைகளோடு கூடியிருத்தலின் கொடியாகாரமுற்று மன்னவனது நாசியின் சமீபத்தை யடைந்து, மூங்கிலின் றுவாரத்தில் வாயு நுழைவதே போலக் கிராண கோசத்தினுள் நுழைந்தது, கடல் மணிகளை வைத்திருப்பதே போல நூற்றுக் கணக்கான தன் வாசனைகளை யுள்ளே யுடைத்தாயிருந்தது; ஜீவன் உள்ளேசென்றதும் அப்பதுமனுடைய முககாந்தி முன்போலவே வந்து விட்டது மழையில்லாமல் வாடியபதுமம் மழைபெய்தவுடனே மலர்வதே போலாயிருந்தது, முறையாக எல்லா அங்கங்களுமே ரசத்தோடு கூடியதாய்ப் பிரகாசித்தன, கொடிக் கூட்டங்கள் வசந்தகாலத்தில் மலர்வதேபோல அம்மன்னவனுடைய அவயவங்கள் விளங்கின, பொன்போன் றொளிரும் காந்தியையுடைய இரசமுறுமிருது பல்லவங்

க்ளை யசைப்பதேபோல அம்மன்னவன் தன்னுடைய இரசமூற்றனவாய் மிருதுவாயின வாயிருக்கும் அங்கங்களை யசைக்கத் தொடங்கினன், நிருமலமாயுருளும் விழிகளையும், மனோகரத்தையும், சௌபாக்கிய லக்ஷணசாலி நன்னிலைமையையும், உடைத்தான கண்களைச் சர்வபுவன வடிவ விராட்டுத் தன்னேத்திர வடிவமான சந்திர சூரியர்களைத் திறந்து பார்த்ததேபோலத் திறந்து பார்த்தான், விந்தமலை விருத்தியா யெழுந்ததே போல மிகமலர்ந்த காயத்தோடும் எழுந்தனன்.

(ச.) ஞப்திசொல்கின்றாள், உயிர் = ஜீவன், நாசியூடுபோய் = நாசியைச் சமீபித்து ஆக்கிராண காசத்தைக் குறித்து வாயுவம்ச (மூங்கில்) ரந்திரத்தைப்போற் சீக்கிரம் பிரவேசித்ததாய், மெய்யெல்லாம் = சர்வாங்கங்களும், சீதமாகி நெய்த்தொளிபரந்து= கிரமமாக ரசங்களை யுடைத்தாய் மிருதுவாய்ப் பாரரூபமாயின கைகா லசைக்கப்பட்டன, விந்தைகிரிபோல் எழுந்திருந்தனன், கண்டிறந்து = பார்வைக்கு விமலகாரணமான கண்டிறந்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) எழுந்தமன்னன் வினவியதற்குப் புராதன லீலை விடை புகலல்:—இங்கு என.

**இங்குநின் றுளா ரெவர்கொ லென்றுவா னிடிமுழக்க மொத்திவ னுரைத் தலு, மங்குநின் றுளாள் வணங்கிஇப்பவத் தடுத்ததேவிநா னருகுதாழ்ந்தவிம், மங்கையாரென வென்னை யொப்பநீ மனத்தி லெண்ணலான் மகிழவந்துளா, டுங்கவாணியிங் கிருந்துளா ளெனத் தொல்லை லீலையே தோன்றவோதினள். ()**

(ப - ரை.) இங்கு நின்றுளார் = இவ்விடத்தி லிருக்கப்பட்டவர்கள்! எவர்கொலென்று = யாவர்கள் என்று, வானிடிமுழக்க மொத்து = ஆகாயத் திடிக்கர்ஜனையை நிகர்த்து, இவனுரைத்தலும் = பதும மன்னன் கனகம்பீரமாய்க் கேட்டலும், அங்கு நின்றுளாள் = அவ்விடத்தி லிருந்த புராதன லீலாதேவியானவள், வணங்கி = நமஸ்கரித்து, இப்பவத் தடுத்ததேவி நான் = இச்சனனத் தமைந்த மகிலையான், அருகு தாழ்ந்த இம்மங்கையாரென = நினக்குச் சமீபத்தில், நமஸ்கரித்து நிற்கும் இவ்வங்களை யாவள் என்ன, என்னையொப்ப நீ மனத்தில் எண்ணலால் = என்னைப்போன்று தேவரீரது மனத்தின் கண்ணே சிந்தித்தலால் மகிழவந்துளாள் = சந்தோடத்தைத் தரவந்த மகிலையாமிவள், இங்கிருந்துளாள் = சிரோபாக மகாசனத்தெழுந்தருளி யிருப்பவள், துங்கவாணியென = சுபமாகிய திரிலோக ஜனனியாம் ஸ்ரீ சரசுவதி தேவியென்று தொல்லைலீலையே தோன்ற ஓதினள் = பிராசீன லீலாதெவியே தெரியும்படியாகக் கூறினள்.

(ஸ்ரீ - வீர.) யாரிருப்பதெனக் கேட்டவுடனே இரண்டு லீலைகளும் கனகம்பீரமா யாணையிடலா மென்றார்கள், மகிலை = வனிதை, தங்களுடைய பிரயோஜனப் பொருட்டுத் தாங்கள் எண்ணிய படியே என்னாற் சம்பாதிக்கப் பட்டவளிவள். யாவர் அங்கேயிருக்கிறவர் எனக் கன கம்பீரத் தொனியோடும் கேட்டனன், கேட்டதும் இரண்டு லீலைகளும் முன்னின்று மகாராஜா என்னுத்தரவோ அதுசெய்யக் கடமைப் பட்டிருக்கின்றோ மென்றார்கள், அப்போதவ்வரசன் எதிரில் மிகவணக்கத்துடன் இரண்டு மனைவியரு மிருக்கக்கண்டனன், அவ்விருவரும் சம ஆசாரம், ஆகாரம், ரூபம், ஸ்திதி, வாக்கியம், முயற்சி ஆனந்தம், உதயம், உடையவராயு மிருந்தனர். மன்னவன் நோக்கி, நீயார் இவள்யார் இவள் எங்கிருந்து வந்தனள் எனக்கேட்டனன், கேட்கவே பூர்வலீலை அம்மன்னவனை நோக்கி ஹேதேவ! அடியாள் கூறுவதைக் கேட்பீர்களாக வெனக் கூறத்

தொடங்கினள், தங்களுடைய பழையபட்ட மகிஷியாகிய சகதர்மிணிலீலையான் ஆவேன் வாக்கும் பொருளும் போலச் சேர்ந்திருந்தேன், இந்தலீலையோ இரண்டாவது பட்ட மகிஷியாக விளையாட்டாய்த் தங்களுடைய உபயோகப் பொருட்டுப் பிரதிபிம்பமாய்ச் சுபமாய் என்னுற் சம்பாதிக்கப் பட்டவளாவள். மூன்றுலகங்களையும் உண்டாக்குபவ ளாய்ச் சிலையாய்த் தங்கள் சிரோபாகத்தி லிருக்கும் பொன் மகாசனத்தில் வீற்றிருந் தருளும். நமைக்காக்கும் இவ்வம்மை ஸ்ரீசரசுவதி தேவியாவள். நமது புண்ணியமுதிர்ச் சியினுனே ஈண்டு நேரே எழுந்தருளி யிருக்கின்றனள். இவளுடைய பெருந்தயையினுற் ருன் அயலண்டமாம் பரலோகத்தினின்றும் மகிபதியாகிய தாங்களும் யானும் கொண்டு வரப் பட்டோம்.

(ச.) இங்கு = சிரோபாகத்தில், இருந்துள்ளாள் = சொர்ண்நிர்மித மகாசனத்தில், இருக்கின்ற விவள், துங்கவாணி திவ்விய மங்களரூபியாய்த் திரைலோக்கிய செனனி யான ஸ்ரீசரசுவதி தேவியென்று; மூலமூன்று விஞவும் முத்தேவிகளைப் பற்றியதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கேட்ட அரசன் ஸ்ரீ தேவியைப் பணிந்துபோற்ற அம்பிகை யாசீர்வதித்துத் தமதுதிருத்தானத்திற்கு எழுந்தருளினுளென உபசங்கரிக் கின்ருர்:— பகருமெனை.

பகருமெல்லையிற் பதமிறைஞ்சு மிப்பதும வேந்தனைப் பாமடந்தைதன்
றிகழுமங்கையாற் சென்னி தீண்டிநீ தேவிமாரொடுஞ் சிறந்துவாழ்வுறப்
புகழுஞ்செல்வமும் பெருகவையகம் பொலிக தீதெலாம் போகவெங்கணு
நிகழுமேன்மையோர் நிறைகநீடெனு நிமலவாணிதன் னிலயமேயினுள்.

(ப - ரை.) பகருமெல்லையில் = மேற்கூறியபடி புராதனலீலை கூறியபோது, பத மிறைஞ்சும் இப்பதும வேந்தனை = பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்கும் இந்தப்பதும ராஜாவை, பாமடந்தை = ஸ்ரீவாக்கீசுரி, தன் திகழுமங்கையால் = தமது ஒளிபொருந்தி விளங்கும் அழகிய திருக்கரத்தால், சென்னிதீண்டி = சிரந்தீண்டி, நீ = ஹே குழந்தை யேநீ, தேவிமாரொடுஞ் சிறந்து = இரண்டு தேவிமார்களோடும் கூடிச் சர்வசிறப்பையு முற்று வாழ்ந்து கொண் டிருப்பாயாக, புகழும் = கீர்த்தியும், செல்வமும் = ஐசுவரிய மும், பெருக = நிறைந்து பொங்குக, வையகம் பொலிக = நினது இராஜ்யம் அந்தணர் முதலியவராலும் ஆனின முதலியவற்ருனும் விளங்கிக்கொண் டிருக்குக, தீதெலாம் போக = ஆழ்க தீயதெலாம்; எங்கனும் = எவ்விடத்தும், நிகழுமேன்மையோர் = மைத்திரியாதி நிறைந்து விளங்கும் உயர்ந்த மகான்கள், நிறைக = பூர்ணமாகுக, நீ டெனு = இங்ஙனம் வெகுகாலம் நீராஜ்ஜிய சம்பத்தி லிருந்து விதேகமுக்தியை யடை வாயாக வென்று திருவருள் செய்துவிட்டு நிமலவாணி = நின்மலமான சிற்சொரூப, ஸ்ரீவாக்தேவி, தன்னிலயமேவினுள் = தமதுபரந் தாமத்திற்கு எழுந்தருளினுள். (89)

(ஸ்ரீ - வீர.) அந்தணர் முதலிய வென்றமையானே மற்றைய ஜனசமுதாயங்களையுங் கொள்க, என்பதைக் கேட்டுத் தாமரைக் கண்ணனுகிய அம்மன்னன் நன்கெழுந்து தனது நீண்டமாலைகளும் ஆடையாதிகளும் தாழும்படி, ஸ்ரீ ஞானதேவியாரது பாதபது மங்களில் வீழ்ந்து நமஸ்காரஞ்செய்து கூறுவதாவது: சர்வஹிதத்தையும் கொடுக்கும் படியான ஹே சரசுவதிதேவியே! தங்கள் பொருட்டு நமஸ்காரம், வரங்களைக் கொடுக் கப்பட்டதாயே! கேட்ட பாமார்த்த தாரணையை யுடைய மதியையும் தீர்க்கமான ஆயு ளையும் தனங்களையும் கொடுப்பாயாக; என இங்ஙன் வேண்டிக்கொண்ட மன்னவனை ஸ்ரீ ஞானதேவியார் திருக்கரத்தாற் றீண்டிக் கூறியருளுவதாவது:— ஹே மைந்த! நீ இக

லோகத்தி லுண்டாவதாய நீண்ட ஆயுள் தனுதி இஷ்டப்பட்ட அருத்தங்கள் மிகமிகவு முடையவனுகி யிருத்தி; தத்துவமேதை யபிவியக்த பவனத்தானும் பாரமார்த்திகாத்ம தன்வடிவத் திதியினுலும் அலங்கரிக்கப் பட்டிருத்தி, சர்வ ஆபத்துக்களும் சகல கெட்ட காரியங்களும் பாபபுத்திகளும் விநாசமெய்துக, உனக்கு நன்ருக அனந்தமான பெரும்பெரும் ஆநந்தங்கள் உண்டாகுக, உன்னுடைய ராஜ்ஜியத்தில் ஜனசமூகங்கள் நித்தியம் மகிழ்வுடையவர் ஆகுக, உனது பிரஜைகளிடத்தில் எப்போதுமேசம்பத்துகள் வளர்ந்தோங்குக நிலைபெற்றும் நிலவுக; நீ வேண்டிக்கொண்ட வண்ணமே யாவும் உனக்குள்தாகுக வெனக்கூறி ஸ்ரீசரசுவதிதேவி அவ்வரண்மனை யிற்றுனே மறைந்தருளினள்.

(ச.) பகருமெல்லையில் எழுந்திருந்து பதமிறைஞ்சும், ஞப்திமய சரசுவதி உனக்கு நமஸ்காரமென்று பாதகமலங்களில் வீழ்ந்து வணங்கும். தீதெலாம் போக = சர்வாபத்துக்களும் சகல துர்க்கிருத திருஷ்டிகளும் நசிக்க, நீடு = எப்போதும், தன்னிலயம், அவ்விடத்திற்றுனே, மேவினுள் = அந்தர்த்தானமானுள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ சரசுவதிதேவி மறைந்தபின் அம்பிகையை வாழ்த்திமற வாதினிது நினைந்து வெகுகாலஞ் சீவன்முக்தராய்ப் பின் விதேகமுக்தர் ஆனுரெனல்:— வாழியென.

**வாழிவாணிநா மங்கைவாழி சொன்மாது வாழ்தியென் றினிதுவாழ்த்தியே**
**யாழிமன்னனுந் தேவிமார்களு மயுதமெட்டியாண் டரசுசெய்தபின்**
**னேழிரும்பவந் துடைத்து வாணிமுன் னியம்பு சீவன்முக் தியிலிருந்துபே**
**ரூழிபேரினுஞ் சிறிதுபேர்விலா வுடலிறந்தவீ டொன்றி மேவினர். (90)**

(ப - ரை.)) வாழிவாணி = ஸ்ரீ சரசுவதிதேவி வாழ்க, நாமங்கை வாழி = ஸ்ரீபிரஹ்மதேவர் நாவில் எழுந்தருளி யிருக்கும் பரமேசுரி வாழ்க, சொன்மாது வாழ்தி=கல்விக்கதிதெய்வமாகிய சொல்வளச் செல்வந்தருந் தேவி வாழ்க, என்று = என்பதாக, இனிது வாழ்த்தியே = அன்புடன் மாதுரியமாக வாயார வாழ்த்தி, ஆழி, மன்னனும்= சக்கரவர்த்தியாகிய இராஜ இராஜே சுவரனும், தேவிமார்களும் = லீலையும் லீலையும், அயுதமெட்டு இயாண்டு = எண்பதினுயிர வருடம், அரசு செய்தபின் = ராஜ்ஜியபாலனஞ் செய்தபின்னர், ஏழிரும்பவந் துடைத்து = கெடுக்கமுடியாத எழுவகைத் தோற்றத்தையுங் கெடுத்து, வாணிமுன் இயம்பு= ஸ்ரீ சரசுவதிதேவியார் பூர்வம் புகன்றருளிய, சீவன் முக்தியிலிருந்து = சீவன்முக்திப் பதத்திலிருந்து, பேரூழிபேரினும் = மகாப்பிரளயம் மாறிமாறி வந்தபோதினும், சிறிதுபேர்விலா = அணுவும் குறைவுநேராத, உடலிறந்த வீடு = விதேகமுக்தியை, ஒன்றிமேவினர் = அடைந்து பேரானந்த சொரூபமாகவே யிருந்தார்கள்.

(ஸ்ரீ - வீர.) சக்கிரவர்த்தி யெழுந்த சந்தோடமும் லீலாதேவி மீண்டுமுற்ற மகிழ்ச்சியும் எங்கும் பொங்கியது, ஜயஜய வென்றும் மங்களம் மங்களமென்றும் புண்ணியதினம் புண்ணியதினம் என்றும் உண்டான கோஷமானது கும்கும் எனவும் கர்கர் எனவும் மிக வியாபிக்கப்பட் டிருந்தது. சந்தோஷத்தினுலே புஷ்டியை யடைந்த ஜனசமுதாயம் நிறைந்ததாயிருந்தது, அரசசேவக ஜனங்கள் அரசனைக் காணும்பொருட்டு நகரங்களினின்றும் கிராமங்களினின்றும், வந்துகூடிய மண்டபங்களை யுடையதாயது. பதுமமன்னனன் இனிது கொணர்த நாற்கடனீரில் மூழ்கியபின் விப்பிரரும் மந்திரிகளும் மன்னவர்களும் அம்மகாராஜனை அபிஷேகித்தார்கள். சிரப்பிரவாசத்தினின்றும் வந்தவனுக்கேபோலும் பரலோகத்தி னின்றும் வந்தவனுக்கு மீண்டும் பதாபிடேகம் மங்க

எப்பொருட்டாம், பழையலீலையும் புதியலீலையும் இராஜாவும் ஜீவன்முக்த மகாபுத்தி யுடையவர்களாய்ச் சுரதங்களாற்போலப் பூர்வ விருத்தாந்தங்களைப் பேசுவதால் ரமித்துக்கொண் டிருந்தார்கள். அம்மன்னவன் ஸ்ரீ ஞானதேவியார் உபதேசித்ததாலுளதாய ஞானத்தால் தன் வடிவுணர்ந்தவனாகி இரு லீலாதேவி மார்களோடு கூடியெண்பதினாயிரவருடம்வரை யங்கு மிகுந்த புகழோடுகூட ஜீவன்முக்தர்கள் இவர்கள் என்று சொல்லும்படியாக இடரின்றி அரசுபுரிந்து பின்னர் விதேகமுக்தியை யடைந்து ஆநந்த அறிவு மயமே யாயினர். கும்கும் கர்கர் என்றது சப்தானுகாரமாம்; ஜயகோஷத்தினாலும் மங்கள புண்ணியதின் கோஷத்தினாலும் அத்தொனியாம். உபதேசத்தால் = ஸ்ரீ ஞானதேவியா லுபதேசிக்கப் பட்டஞான வாக்கியங்களினால் நன்றாகச் சொரூபத்தை யறிந்தனன்.

(ச.) ஆழிமன்னனும்—மற்றுமுள்ள விப்பிரர் மந்திரிகள் அரசர்களும் பட்டாபிஷேகஞ்செய்யவே. உடலிறந்த வீடு = சுத்தமெய்ஞ்ஞானரூப விதேகமுக்தி.

## லீலோபாக்கியானம் முற்றுப் பெற்றது.

## கற்கடியுபாக்கியானம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) விண்மகன் கதை லீலைகதைகளினால் விஸ்தாரமாகப் பிரதிபாதிக்கப்பட்ட அருத்தத்தை சுகமாய்த் தெளிதற் பொருட்டுச் சுருக்கமாகக் கூறத் தொடங்குகின்றார்:—காட்சியென.

(ச-அ-கை.) முன் லீலைகதையிற் பிரபஞ்சதிருஷ்டிக்கு நாசம்வர மாயிகத்வஞ் சொல்லப்பட்டது இனிக் கற்கடிகதையிற் பிரஹ்மதிருஷ்டியைத் திருடஞ்செய்தற்காக அந்தப் பிரஹ்மத்திற்கே பாரமார்த்தி கத்துவஞ் சொல்லப்படுகிறது அதன் பிரயோஜனத்தைநன்றாகத் தெரிவிப்பவராய்ப் பூர்வகதையை யுபசம்மரிக்கின்றார்:—காட்சியென.

காட்சியென்னுங் குற்றமறக் கதிதலீலை கதையாலே
யாட்சியான சகமென்னு மதியாரத்தை யறவிடுவாய்
சூட்சியான வுலகமெனுந் தோற்ற முடைத்தாய்ப் பேதமற
மாட்சிஞான சுகவடிவாய் வயங்கும் பிரமமேயுளதே.

(ப - ரை.) காட்சி யென்னுங் குற்றமற = திருசியதோஷ நிவிருத்தியின் பொருட்டு, கதித லீலைகதையானே = கூறிய லீலோபாக்கியானத்தினாலே, ஆட்சியான சகமென்னும் அதிபாரத்தை அறவிடுவாய் = விவகாரயோக்கிய சத்தியமாய் உலகமுளதாமென்னும் பெருங்கனத்தை மதியை முற்றினும் விட்டுத் தொலைப்பாயாக; சூட்சியான வுலகமெனுந் தோற்ற முடைத்தாய் = அசத்தா யிராநின்ற அகிலமென்கின்ற வெறுந்தோற்ற முண்டாதற் கதிஷ்டானமாய், பேதமற = ஒரு சிறிதும் வேற்றுமையே யிலாது, மாட்சிஞான = யாவற்றையு மிலக்கும் மகிமைவாய்ந்த ஞானமாயமாய், சுகவடிவாய் = பேரானந்த வடிவமாய், வயங்கும் = விளங்காநின்ற, பிரமமேயுளதே = பிரஹ்மமாகியதானே யிருக்கின்றது மற்றொன்றுமே யில்லையாம்.

(ஸ்ரீ - வீர.) திருசியமே சத்தியமாகத் தோற்றுகின்றபடியினாலே தோஷமாம் அதன் நீக்கப்பொருட்டு என்பதாம் கனதை சத்தியத் தன்மையாம். அசத்தாயிருக்கும்

அநிர்வசநீயப் பிரபஞ்சத்தின் ஆபாசத்தோற்றம் எதனினின்றும் விவர்த்தமா யுண்டாமோ அது விவர்த்த அதிட்டானமாம்: அதன் அசமசத்தை யுறலாதல், காரணவிஷம விலக்கண மாற்றுப் பெற்றியாதல், அதன் அபேதமின்றியே அதனின் அயலாக ஒத வொண்ணுத்தாகிய காரியமாதல், விவர்த்தமாம். இல்லாததேயான ஆபாசத்திருசியம் இருப்பதேபோலத் தன்னினிவிற் ரோற்றும், பிரஹ்மமாகிய தான் அதி நிருமலமாகவே யிருக்குமது மாயிகப் பிரபஞ்சத்தானே புஷ்டியடைந் திருத்தலின்பிரபிரும் மிதமெனப் படும், தடையற்ற பெருமையையுடைய தாதலின் பிருகத்தெனப்படும், தத்துவதிருஷ்டி விபரீத திருஷ்டிகளினுல் கூறிய விரண்டுமே ஓரிடத்தமைதல் விரோதமாகாதாம். அது அறிவுருவமாம், பயங்கர வுருவமாம், செங்கதிர்வாரிதீயமன் வாயுச்செய் தொழில்களி லொருகாலும் பங்கியா தொழுகும் பரிசது பரனைப் பற்றியுண்டாகிய பயத்தால், அது தானறியார்க்கிடர் நல்கும், என்பதாதி மறைமுதலனவும், எதனது பயத்தான் வாதமித முடனியங்கா நிற்கும், எதனது பயத்தால் வெய்யோ னிலங்கிடு மினிதேயாக, எதனது பயத்தாற் பூவுங் கிரிகளாலிழிந்திடாதா, லதுவழற்றீபத்மாகு மழிவிலாப் பிரமந்தானே என்னும் ஸ்ரீ மத்பகவத் வசன்மும் அளவைகளாம். திருசியமில்லை யென்னும் உணர்வி ஞனே மனத்திலுள்ள திருசியவாசனை கழியுமாயின் அக்கான்மேலான மோக்ஷம் அடையப் பெற்றதாகும் என்பதாக நூற்ருெடக்கத்தில் பிரதிஞ்ஞை செய்யப்பட்டதன் சித்தியே இதனது முக்கியப் பிரயோஜனம் என்றுணர்தி; ஹே இராகவா! இதற்காகத் தான் இப்பவித்திரமான லீலைகதை யுனக்கியம்பப் பட்டது, ஆகலின் ஜகத்தின் சத்தியத்தகைமையை விட்டொழிப்பாயாக. ஹே பகவன்! அகண்ட அத்விதிய சொப்பிரகாசப் பிரஹ்மத்தின் கண்ணே சகண்ட சத்விதீய ஜீவசத்தை யெப்படிக்கூடும்? சுவானுபூதியாகிய பிரமாணத்தாற் றெரிந்துகொள்ளத் தக்கதும், பெரிதுக்கெல்லாம் பெரிதா யிருப்பதனுனே நிரதிசய அபரிச்சேதவடிவ விருத்தியுற்றதும் துவைதங்கள் சிறிதுமில்லாததும் ஆகிய இப்பிரஹ்மத்தின் கண்ணே அற்பஜீவன் பூர்வசித்த பிரஹ்மத் தன்மைக்கு முரண்பாடான தனிச் சத்தையை எங்ஙன மடையாநிற்பன் என்று ஸ்ரீ இராகவர் வினவ, சத்தியமாய் அவித்தையற்றதா யிருக்கும் பிரஹ்மத்தின் கண்ணே பரமார்த்த திருஷ்டியானே ஜீவசத்தையானது சம்பவியாதாம் அவித்தையோடு கூடியதன் மாட்டோ அதன் சம்பவமானது விரோதப்பட மாட்டாது எனப்பகுத்துப் பகரும் வேட்கை வாய்ந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் முதலில் சாதாரணமாக அதன் சொரூபத்தைக் கூறுகின்றார்: சூட்சியென துவைதப் பிரத்யயங்கள் அத்தியந்தம் இல்லாததாகி அதி நிருமலமாகிப் பெரிதுக்கெல்லாம் பெரிதாகி, மிகப்பெரிதான சிற்பைரவகாய முடைத்தாகி, பரமானந்த நாமமுடைத்தாகி, நாசமற்றதாகி யந்தப்பிரஹ்ம மிருக்கும். அநாத்ம யோகிகளைப் பயப்படுத்துதலால் பைரவ ஆகிருதியுடையதாகும்; "பூணுத தாய்ப் பொலிந்திடு மிந்தமாயோகம், காணுததது யோகிய ரெவர்க்கு மேகருத்தில், தானுவாகிய வதனினு மஞ்சுவர் தவத்தோர், வீணதாகவே வெருவுவர் வெருவலில்லிதினே" எனவிது ஓதவும் பெற்றுளது.

(ச.) ஸ்ரீ வசிட்டர்: காட்சியென்னுங் குற்றமற = திருசிய தோஷ நிவிர்த்திக்காக, விகாரரூபமாதலின் திருசியமே தோஷமாம் அதனது நிவிர்த்திக்குப் பிரபஞ்சதிருஷ்டி சிதைதற் கென்பது பொருள் கதித்த = இராமா உனக்குயான் அனுக்கிரகித்த ஆக்ஷியான லீலைகதையாலே = அனகமான லீலோ பாக்கியானத்தினுலே, செகமென்னும் = ஜகத்தினது, அபிபாரத்தை = பிராமாணிக புத்தியை, ஆயிற் பிராமாணிக மியாதெனில்? சூட்சியான = நிஷ்களங்க சொரூபமாகிய, உலகமெனுந் தோற்ற முடைத்தாய் = அசத்

தென்னுஞ் சகத்தாகாரமாய் விளங்குவதாகிய, பேதமற = அத்வயமாய், மாக்ஷி ஞான சுகவடிவாய் = வியாபக சிதானந்தரூபமான = பைரவமென்னும் வியாமகாகாரமாய், வயங்கும் = பரிபூரணமாகி விளங்கும், பிரமமேயுளது = ஆண்டுப் பிரமரூபத்துக்குப் பைரவத்துவம் இந்தப் பிரமத்தினின்றும் பயத்தினுல் வாதமானது வீசுகிறதென்கிற விடத்தில் சுருதிசித்த மென்றறியத்தக்கது

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் இவ்விதமாய பிரஹ்மம் உளதாமேலாயின் இதுதானது வெனப் பகுத்துப் பகரலாமே யெனக்கடாவப் பகருகின்றார்:—அதனுக்கென.

அதனுக் கிணையாய்ப் புகலரிதாயகன்று நிறைந்தாழ்ந்த மலமதாய்ச்
சதமதறிந் தோர்களு மியல்புசாற்றற் கரிதாயச் சாந்தமதாய்த்
திதமுற்றசை யாக்கடலென்னத் தீபமென்னத் திகழ்கின்ற
முதன்மைப் பிரமத்தொளி தானேமுடிவில் பரமாகிய ஜீவன்.

(ப-ரை.) அதனுக் கிணையாய் = அதற்குச் சமமாய், புகலரிதாய் = கூறமுடியாதாய், அகன்று = விசாலித்து, நிறைந்து = பூரித்து, ஆழ்ந்து = ககனித்து, அமலமதாய் = நிருமலமாய், சதமதறிந் தோர்களும் = அந்தப் பிரஹ்மத்தை நன்றாயறிந்தவர்களும், இயல்பு சாற்றற்கரிதாய் = இதுவென இன்னதெனக் குறித்துக்கூறொணாததாய் இருக்குமது, சாந்தமதாய் = சாந்தமாகப் பரமபதரூபமா யிருக்கும், திதமுற்று = வாயுவின் கலக்கமற்று, அசையாக் கடலென்ன = சலனமில்லாத சமுத்திரமெனவும், தீபமென்ன = காற்றற்ற விடத்திலிருக்கும் விளக்கெனவும், திகழ்கின்ற = விளங்காநின்ற, முதன்மைப் பிரமத்தொளிதானே = அநாதியாய பிரஹ்மத்தினது பிரகாசந்தானே, முடிவில் பரமாகிய சீவன் = அநந்தவுயர்வாகிய ஜீவனுவன். (2)

(ஸ்ரீ - வீர.) இணை = சமம் = திருசிய உற்பத்தி நாசங்களில் ஏகரூபம், சர்வபூதங்களிலும் சமம். குறிக்கப்படாதது அது பான் மாதுரியமானதும் ஞானிகளாலும் பகரப்பாலதாகாதாம் சாந்தம் = நிருவிகாரம். அது விஷ்ணுவின் பரம பதம் என்பதாதி சுருதியளவையையுடையது அது என்பதைக் குறிப்பிக்கும் பரமபதமென்பது: கூறிய பிரஹ்மதத்துவத்தை அத்தியாரோப அபவாதங்களா லிதுமுதற் றெளிவிப்பார் திதமுற்றென்றார். காற்றற்ற கடற்போலிருக்கும் காற்றற்ற தீபம்போ லிருக்கும் பிரஹ்மத்திற்கு யாதொரு சிறிது சலனமுளதோ அது ஜீவனென அறியத்தக்கதாம். ஆகியதெங்ஙனமெனின், அதற்கு, சமமாயும் எங்கும் நிறைந்ததாயும் தூய்தாயும் சத்துவமாயும் குறிக்கப்படாததாயும், அதை யுணர்ந்தவராலும் கூறொணாததாயும் இருக்கும் எத்தகைமையுளதாமோ அத்தகைமை சாந்தமாயும் பரமபதமாயு மிருக்கும் இரண்டாவ தன்றன்மையோ, அதற்கோ மோக்ஷபரியந்தம் உற்பவபீஜ மிருத்தலின் இளம்புகை போன்ற எவ்வடிவமுளதோ, அதற்குபாதி யியற்கையினுனே சலனசக்திவடிவப் பிராணதாரண அசைவுயாதுளதோ அதுவே ஜீவசப்தத்தாற் கூறப்படும் அது சாந்தமற்றவுணர்வுவடிவமாயிருக்கும். ஜகத்வைசித்திரிய கற்பனைக்கனு கூலமாகிய கிரியாசக்திப் பிரதான பிராணபாவமே ஜீவபாவசித்தாம், இதன் கட்டிருட்டாந்த மிதுவாம் காற்றற்றலைவிலாக் கடலேபோலும், காற்றற்றசை விலாத் தீபமேபோலும் இருக்கும் பிரஹ்மத்தினுடைய இயக்கஞ்சிறிதுயாதோ அதுவே ஜீவனென அறிதி.

(ச.) அதனுக்கு = அந்தப் பிரஹ்மத்துக்கு, அமலமதாய் = சுத்தசத்துவ மென்னும் விசுத்தஞானுத்மகமாய், புகலரிதாய் = அசின்னித மென்னும் நிருவிசேஷமாய் இருத்தலினுலே, சதமதறிந் தோர்களும் = பிரஹ்ம வித்துக்களும், இயல்பு சாற்றற்கரி

தாய் = நிதானித்தற் கசக்கியமாய், இணையாயகன்று நிறைந்தாழ்ந்து—நிர்த்தரங்க சாகரம் போற்சமமும் பரிபூரணமும் கெம்பீரமும் ஆகிய, அது (ரூபம்யாது) அது சாந்தமாம் = நிர்விகாரமான பரமபதமாம் என்பதன்னுவயம். திதமுற்றசையாக் கடலென்னத்தீபமென்னத் திகழ்கின்ற =அவாதாம்புதியும் நிவாததீபமும்போல் நிஷ்கம்பமாய்ப் பிரகாசிக்கின்ற, முதன்மைப் பிரமத்தொளிதானே = பிரமத்தினது ஓர் ஸ்புரணமே, முடிவில் பரமாகிய ஜீவன் (என்றி ராகவா நீ யுணர்தி),

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதற் ககங்காராத்மகருத்ரபாவ முண்டென் கின்றார்:— தனையென.

தனையுண்டாக்கு நீள்விறகாற் சற்றுநெருப் புத்தடிப்பதுபோ
லினையசீவன் கனவறிவா லியானென் றுணர்ந்து சங்கற்ப
நினைவினாலே யகங்கரிக்கு நிறைந்த சீவன் காரணமாய்
வனையுஞ்சித்த மனம்பகுதி மாயை யெனும்பேர் வகுத்துரைப்ப. (3)

(ப - ரை) தனையுண்டாக்கும் நீள்விறகால்=தன்னைவிளைவிக்கும் அதிக இந்தனத்தால், சற்றும் நெருப்பு = வன்னியணு வானது, தடிப்பதுபோல் = விருத்தியாவதே போல, இனையசீவன் = மேற்கூறப்பட்ட சீவன், கனவறிவால் = திடவுணர்ச்சியினால், யானென்றுணர்ந்து — அகமென்றறிந்து, சங்கற்ப நினைவினாலே யகங்கரிக்கும் = சங்கற்போன்முகத்தை யடைவுற்று அகங்கார மென்றாகும், நிறைந்தசீவன் காரண்மாய் = வியாபித்த வுயிர் எதுவாய், வனையுஞ் சித்தம் = சிந்திக்கும் சித்தம், மனம் = உளம், பகுதி = பிரகிருதி, மாயை = மாயா, எனும்பேர் வகுத்துரைப்ப = என்னும் நாமங்களால் விரித்துக் கூறுப.

(ஸ்ரீ-வீர.] அந்தஸ்புரண்மே நெருங்கிய நினைவினானே அதாவது திடமாய அகங்காரபாவனையினானே, அகங்காரத் தகைமையை யடையும். வன்னியணு= அக்கினியின் நுக்கும அம்சம். சங்கற்போன்முகத்தகைமை = மனோபாவனாபிமுகத்தகைமையை யடைந்து அகங்காரமும் ஆம், அகங்காரமும் சங்கற்போன்முகத்தகைமையை யடைவுற்றதாய்ச் சித்தமென்பதாதி நாமங்களால் உரைக்கப்படும் வத்துவாம் எனக்கொண்டு கூட்டிமுடிக்க. அக்கினிகணமானது தன்னை விருத்திக்குங் காஷ்டதைல ஆதிக்கத்தால் அதிகரித்து மிகவொளி யுடையதாவதேபோல அச்சீவனே திடவாசனையிற் கனமான வுணர்வினாலே முறை முறையாகப் பேரகந்தையதாகும். அகம்பாவமோ ஆன்மாவைத் தேசகாலத்தாற் பரிச்சின்னப்படுத்தித்தானே சங்கற்பவயத்தால் தேகாதியா இருதியெடுத்துக் காற்றினசைவுபோல விளங்கும். சங்கற்பத்தின் முன்னிலைப்பட்ட மாத்திரத்திலேயே அகங்காரமெனப் பெயர்பெற்று நிற்கும் அகம்பாவ அத்தியாச மூலமாகச் சித்தாதி பேதங்களாம், அவ்வகங்காரம் ருத்திரனும், சித்தம் விஷ்ணுவாம்,ஜீவன் பிரஹ்மாவாம், அவைகட்கே முறையாக மனம்மாயை பிரகிருதியென்பன கிரியைநாமங்களாம் ஆண்டுச் சங்கற்பவடிவமான சித்தப்பிரஹ்மா சங்கற்பத்தாற் பூததன்மாத்திரைக் கற்பனையைப் புரிந்து அதனானே சேதனான்மகபூர்வ அவஸ்தையினின்றும் நழுவியதேயாகி ஜடப்பிரபஞ்சத் தகைமையையும் அடைகின்றது.

(ச.] இனையசீவன் = ஜீவரூபமாய் ஸ்புரிக்கும் பிரஹ்மமே, சற்றுநெருப்பு = வன்னிகணம், தனையுண்டாக்கும் நீள்விறகால் = சுவேந்தனாதிக்கியத்தினால், தடிப்பதுபோல் = தற்பிரகாசாதிக்கிய மாவதுபோல், கனவறிவால் = திடமான பகிர்முகஞானத்தினால், யானென்றுணர்ந்து = அகங்கார ரூபத்தை யடைந்தது, அதன் பின்பு

சங்கற்ப நினைவினாலே, சங்கற்போன்முகரூபத்தால், அகங்கரிக்கும் = அகங்காரமாம், அகங்காரமே சங்கற்போன்முகமாய்ச்சித்தமாதி நாமங்களோடு சேர்கின்றது; மனோரூபமாயிற்றென்பது பொருள். சவ + இந்தனம் = சுவேந்தனம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) போக்கிய வருக்கத்திற்கும் போக்தாவிற்கும் மூலமாகிய மனத்தினது தத்துவத்தை விசாரித்துச் சின்மாத்திர பரிசேடங் காட்டுவதற்காக ஆதியில் எல்லாக் கற்பனைகளும் சித்திற்கு வேறன்றென்று கூறும்பொருட்டு மூலபூதமாய் மனத்தினது உற்பத்தி ஸ்திதிகளிற் காரணசத்தையைக் காட்டினும் அன்னிய சத்தை பெருமையின் அநுமாத்திரமாக இருக்குந் தன்மை யுண்டாமென் றோதல்:—இனத்தாலென.

இனத்தாற் படரு மனம் பரமனேதுவாயிப் படித்தோன்று
மனத்தால் விரிந்த சகமெல்லா மனனவடிவே மற்றில்லை
கனத்தாற் கரைதீர் பலவறிவாங் கல்லோலச்சிற் கடல்பொங்குந்
தினத்தானீண்ட கனவொப்பச் சித்தவசத்தாற் சகந்திரமாம். (4)

(ப - ரை.) இனத்தால் படரும் மனம் = வாசனையினாலே விரிந்துகொண்டு செல்லாநின்ற உள்ளமானது, பரமனேதுவா யிப்படித் தோன்றும் = பரம காரணத்தினின்றும் இங்ஙனம் கூறிய முறையாய் முதலிலுண்டாம், மனத்தால் விரிந்த சகமெல்லாம் = உள்ளத்தினாலே யுன்னி விஸ்தரித்த வுலகமெல்லாம், மனனவடிவே மற்றில்லை = நினைவு வடிவமேயாமன்றி வேறாகக் கிடையாதாம், கனத்தாற் கரைதீர் = அதிவிஸ்தாரமாய்க் கரைகடந்து, பலவறிவாங் கல்லோலச் சிற்கடல் பொங்கும் = நானாவித விருத்திகளாகிய தரங்கங்களானே ஓலமிட்டுச் சின்மயமாக விளங்கும் சமுத்திரமானது சகத்துருவமாய்ப் பொங்கிக்கொண்டே யிருக்கும், தினத்தால் நீண்டகனவொப்பச் சித்தவசத்தால் சகம்திரமாம் = நீள்காலத்தை யுள்ளடக்கித் தோன்றும் சொப்பனமொப்ப, நாட்படநாட்படச் சிந்தனையின் ஆதிக்யவசத்தால் மித்தையான வுலகம் சத்தியம் போலத் தோன்றும். (4)

(ஸ்ரீ - வீர.) கூறிய முறையானே பரமகாரணமாகிய பிரஹ்மத்தினின்றும் மனம் முதலிலுண்டாயது அதுவும் சங்கற்மான்மகமாகி விரிந்து வளர்ந்தது; அதாவது தனது காரியமாகிய சக முழுதினும் நினைவுக் கன்னியமின்மையின் நிறைந்திருந்தது மொழிந்த அதனது வியாபகத்தன்மையையே விளக்கி விளம்புவார், கனத்தால் என்றார். இக்கரையும் அக்கரையும் அற்றனவாய் அதிக விஸ்தாரமாய்ச் சங்கற்ப அபரபரியாயங்கள் வாய்ந்தனவாய உணர்வுமயச் சலிலங்கள் நிறைந்து பெருகியிருக்கும் ஏதேக அர்ணவமேயாகிய இவ்வான்மா மனமாகி, எண்ணுத் தெண்ணங்களை யெண்ணுதலால், தானே ஜகத்துருவமாக விஜ்ரும்பணத்தை யடையும். "வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்" என்னும் மறையும் இதன் மூற்று மின்மையை மொழிகின்றது. பரம்பொருளாகிய காரணத்தி விருந்தே மனம் முதலிலெழுந்தது, மனனான்மகமா யதிவிஸ்தாரத்தை யடைந்து அதன்கண் ணிருப்பதாகவே ஸ்திதியடைந் துலவும்; துவைத ஆபாசம் மனதின் அதீனமேயாகும், ஆருக ஆகாதொழிக வெனவுலேயும், உளத்தாலுற்ற வேற்றுமையானது உளத்தை யொழித்தால் ஒழிந்துபோம் உண்மையிற் பேதமொன்று மில்லவே யில்லையாம் இலதாகவே சேடித்து நிற்பது தானேயாம், கரையற்று விஸ்தாரம யிராநின்ற அறிவுவடிவ நீரின் பரிச்சின்னப்படாத பரவுதலால் அறிவு ஏகசமுத்திரமே ஆய இவ்வான்மாச் சுயம் விளங்காநிற்கும். திருசியம் பாதமாகியவழி சத்தெங்ஙனஞ்சுமெனின்?

அத்திராங்கிசத்தை யழியுமா செய்யவே திரமெஞ்சுதல் பொருத்தமேயாம். சொப்பனத்தில் அஸ்திர விடயாங்கிசம் பாதமாயினும் திரமாகிய அதைக் காண்போனது பரிசேட தரிசனமாதலின், இங்ஙனம் சித்தம் ஜகத் சத்தசத்தான்மகமாம். அத்தியந்த அசத்திற்கும் பாதங்கண்டதில்லையே யெனின்? அவற்றின் கண்ணே பார்தயோக்கியமாய அநிர்வசநீயத் தன்மையைக் கேட்டி! இது சதசத் விலக்ஷணமாம், பொய்யாயினும் அநேகருக் கேகாரமாகத் தோற்றலோ சமாஜமடைந்த தீசமூதயங்கள் இந்திரஜால மாயையாற் கலங்கினவாகி ஏகாகாரமடைதல் மயல்போல வெழுந்ததா மென்றறிக. ஆயின் எங்ஙனம் நின்காலமிருப்பதாகத் தோற்றுதல் கூடுமெனின்? மனமியற்றிய ஆசக்திபலத்தினுவிச் சமுசாரமானது நீண்ட கனுஸ்திதியை யடையாநிற்கும்.

(ச.) இப்படி தோன்றும் = முற்கூறிய பிரகாரம் சர்வசகத்துக்கு முன்புநிக்கும், அதனால் இச்சகமுதித்தது; கனத்தால் = விஸ்தாரத்தினால், கரைதீர் = பாராவாரமற்ற, பல வறிவாரங் கல்லோலச் சிற்கடல் = விருத்தி ஞானங்களென்னும் சலிலங்களினது பேரலைகளினுற் சிதேகார்ணவ ரூபமான வான்மாதானே, பொங்கும் = விரிந்ததிஃதாம், நீண்டகனவு = தீர்க்க சொப்பனம், சித்தவசத்தால் = மனோ மகிமையால், சகம் = சம்சாரம், திரமாம் = திருடஸ்திதி பெறும், பாரம் = அந்தக்கரை, அவாரம் = இந்தக்கரை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருஷ்டாந்த வாயிலாக அநர்த்தம் வருதலைக் காட்டி, இவ்வெல்லா அநர்த்த பரம்பரையும் ஜீவப்பிரஹ்மபேத மயன் மூலத்தாலாதலின் அதனைக் கியபோதத்தால் அம்மயல் பாதிக்கப்படும்போது பாதிக்கப்படு மாதலின் பேதத்தையே தள்ளவேண்டு மென்கின்றார்:—தெரியென.

தெரியாத்த றியாற்கள்வ னெனத் தெளியாமையினு லுலகுண்டா
மரியாப்பிரமத் தொடுசீவன் மறந்தும் பேதமிலா ததுபோல்
பிரியாச் சீவசித்தங்கள் பேதமில்லை யிதுபோலத்
தரியாச் சித்தஞ் சகங்களுக்குச் சற்றும்பேத முளதாகா.

(ப - ரை.) தெரியாத்தறியில் கள்வன் என = நன்கிலா நாட்டத்தானே கட்டையிற் சோரனதுணர்வு எழுதல்போல, தெளியாமையினு லுலகுண்டாம் = ஆராய்ந்து நோக்காமையினால் ஜகத்தானது தோற்றும், மரியாப் பிரமத்தொடு சீவன் = நித்தியமாகிய பரப்பிரஹ்மத்துடன் சீவனுக்கு, மறந்தும் பேதமிலாததுபோல் = மறந்தேனும் வேற்றுமை யுறாததுபோல, பிரியாச் சீவசித்தங்கள் பெதமில்லை = ஒன்றோடொன்று வேறுபிரியாத வுயிருள்ளங்கள் வேற்றுமைப் படாவாம், இதுபோல = இஃதொப்பவே தரியாச்சித்தம் சகங்களுக்கு = சஞ்சலமான மனசர்க்கங்கட்கு, சற்றும் பேதமுளதாகா = ஒரு சிறிதும் வேற்றுமை யுண்டாகவே மாட்டாதாம்.

(ஸ்ரீ - வீர.) சிதான்மதத்துவங்களாய ஜீவப் பிரஹ்மங்களென்னும் காரிய காரணங்கட்குப் பேதமெங்ஙன மின்றோ அங்ஙனம் ஜீவமனங்களாகிய காரணகாரியங் கட்குப் பேதமிலதாம்; இவ்வண்ணம் மனப்பிரபஞ்சங்களாகிய காரணாதி வடிவங்கட்கும் பேதமிலதாம். பிரஹ்ம கூடஸ்தர்கட்குப் பேதமில்லாததேபோல ஜீவசித்தங்கட்கும் பேதமில்லையாம், ஜீவசித்தங்கட்கும் பேதமில்லாததே போலத் தேக கருமங்கட்கும் பேதமில்லையாம். துணிபாகக் கருமமே தேகமாம், தேகமே சித்தமாம், அதுவேயானென இங்கு ஜீவனாகும், அச்சீவனே ஈசுரசித்தாம், அது ஆன்மாவாம், யாவுஞ் சிவமாம், என்னுமிதுவே சகலசாஸ்திர விசார இரகசியமென்ப, தெரியாத்தறியால் இது

வெனச் சாமானிய வுணர் விருந்தபோதினும் இன்னதென விசேடவுணர் வின்மையின் ஆரோபமாம்.

(ச.) தெளியாமையினால் = அசம்பியத் தரிசனத்தினால். தெரியா = ஜடமான, தறியாற்கள்வனென = தாணுவிற் புருஷப் பிரதீதிபோல் உலகுண்டாம். ஆன்மாத் தானே விரிந்ததென்ற தெப்படி என்று ஆகாங்க்ஷவரில் காரிய காரணங்கட்கு அபே தத்தினால் எனல்: சித்ரூபமான பிரஹ்மத்தினின்றும் சீவன், சீவனிற் சித்தம், சித்தத் திற் சகம், உற்பன்ன மென்றதாதலிற் பிரமசீவர்க்கும் சீவசித்தங்களுக்கும் பேதமின் மைபோற் சித்த சர்க்கங்களுக்கும் பேதமின் றென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முதலிய பொருளிற் சூசியுபாக்கியானம் தரிசிப்பிக்கின்றார். விரிவாயும் சுருக்கமாயும் வருணித்த பொருளில் திடமுண்டாகும் பொருட்டுக் கற்கடி யுபாக்கியானமெனப் பெயரிய இதிகாசவாயிலாக இராக்கதியோடு வேடராஜ மந்திரி சம் வாதத்தை விஸ்தாரமாக விளம்பவேண்டுமென வேட்கையுற்ற ஸ்ரீ வசிஷ்டபகவான் அதனைக் கூறத்தொடங்குகின்றார்; —இது என.

இதுகாரண மாமொரு கதைபண்டிக லாரரக்கி யியம்பியது
முதுவாம் வினுவா லறிபொருள் கண்முழுதுந் தெளியத் தெளிவிப்ப
ததுநீகேட்பா யிமவானுக் கயலுத்தரபா லமர்கிற்பாள்
விதுவாமெ யிற்றுக்கற் கடிப்பேர் பேழ்வாயரக்கி மின்கண்ணாள்.

(ப - ரை) இதுகாரணமாம் = இயம்பிய விடயம், நன்றாக விளங்குவதன் பொ ருட்டு, ஒருகதைபண்டு = ஒப்பற்ற புராதன இதிகாசம் உதாகரிப்பர், இகலார் அரக்கி யியம்பியது = வலுமைபொருந்திய இராக்ஷசி கூறியது, முதுவாம் வினுவால் = மகாப் பிரசினஜாலங்களால், அறிபொருள்கள் முழுதுந் தெளியத் தெளிவிப்பது = தெரிய வேண்டிய வத்துக்கள் யாவற்றையும் நன்றாகத் தெரிந்து கொள்ளுமாறு தெளிவிக்கச் செய்வது, அது = ஆகிய அக்கதையை, நீ கேட்பாய் = ஹே இராகவ நீ சிரவணஞ் செய்தி, இமவானுக்கு அயல் உத்தரபால் = ஹிமாசலத்தினுக்குச் சமீபித்த வடதுபக் கத்தில், அமர்கிற்பாள் = வசித்துக்கொண் டிருப்பவள், விதுவாம் எயிற்று கற்கடிப் பேர் பேழ்வாய் அரக்கி மின்கண்ணாள் = பிறைபோலும் வளைந்த கோறப்பற்களையும் அகன்று பெருத்த வாயையும் மின்னலுக் கொப்பான நேத்திரங்களையும் உடைய கற் கடியெனப் பெயரிய இராக்ஷசியாமவள்.

(ஸ்ரீ - வீர.) ஒவ்வோரிடத் தொவ்வொருகால் ஹிம்சை செய்தே வாழ்பவர்களா கிய தாமசர்கட்கும் எவ்வாறேனு முண்டாய ஹிம்சைய நபிசம்பந்தி பூர்வபிரயத்தினுதி சயத்தால் அபவர்க்கமார்க்ககம் இனிதினுண்டாம் எனத் தெரிவிக்கும் பொருட்டும் இந்த ஆக்கியானமென வுணரத்தக்கதாம். முழுதும் = குரோடீ கரிக்கப்பட்டயாவும்= கூறிய விடயத்தின் கண்ணே புராதனமான இக்கதையை யுதாகரணமாகக் கூறுகின் றனர், இராக்ஷசியினாலே கேட்கப்பட்ட மகாவினுக் கூட்டம் உண்மையாக ஆராயுங்கால் உலகமெல்லாம் வியாபியா நிற்கும். மைக்குழம்பு மலைபோலும் உக்கிரமான ஆகிருதியை யுடையதா யாக்கப்பட்ட பதுமைபோன்ற கொடுந்தொழிற் கற்கடியென்னும் அரக்கி ஹிமகிரியின் வடக்கின் சார்பிலிருந்தாள்; அவளுக்கு விசூசிகையென்றும் அநியாய பாதிகை யென்றும் வேறிரண்டு நாமங்களுண்டு.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவண்மேனி யவயவங்களின் வர்ணனை —கருவென.

கருமேருவைப் பெண்வடிவாகக் கைகால் வருத்ததெனத் திரிவா
ளுருமேறனைய சிறுநகையா ளோடாமீன் போலுழல் கண்ணாள்
பெருமேனி யைத்தாங் கிருகுறங்கும் பேரீச்சென்னப் பெரிதுடையாள்
வருமேகத்தைப் பிளக்குநகம் வயிடூரியத்தின் சுளகொப்பாள். (7)

(ப - ரை.) கருமேருவைப் பெண்வடிவாக = மைப்பங்க மலையை மங்கையுருவமாக, கைகால் வகுத்ததென = கரசரணங்கள் பிரித்திருப்ப தொப்ப, திரிவான் = சுற்றிக்கொண் டிருப்பாள், உருமேறனைய சிறு நகையாள் = கர்ஜியாநின்ற இடிக்குச் சமானமான சிறுசிரிப்பை யுடையவள், ஓடாமீன்போல் உழல் கண்ணாள் = ஸ்திரமாகிய வித்யுத்கொடி போன்று உழலும் நேத்திர முடையவள். பெருமேனியைத் தாங்கு இரு குறங்கும் பேரீச்சென்ன பெரிது உடையாள் = அதிஸ்தூல காயத்தைத் தாங்கும் இரண்டு பெருந்தொடைகள் பெருங்கர்ஜூரதருக்களுக்குச் சமானமாகப் பெரிதாகவுடையவள். வருமேகத்தை = நீர் குடித்துக் கடலினின்றும் வாராநின்ற மேகங்களை, பிளக்குநகம் = போழும் உகிர், வயிடூரியத்தின் சுளகு ஒப்பாள் = வயிடூரியத்தாற் செய்யப்பட்ட முறத்திற்குச் சவானமாக வுடையவள்.

(ஸ்ரீ-வீர.) திரமாகிய வித்யுல்லதைகள் போலும் விழிகளை யுடையவள் என்னுமிது அபூத உவமையாம். கர்ஜூர தருவென்பது திருணப் பிரதான விருக்ஷவிசேஷமாம் அதுவும் நீட்சியாயும் கரடுமுரடாயும் இருக்கும் அதுபோலும் ஜானுக்களை யுடையவள். வைதூர்ய ரத்நத்தா லாக்கப்பட்ட சூரியனைப்போலும் அக்கிரநகங்களை யுடையவள். வைதூர்ய சூர்ய உக்கிரநகமெனவும் பாடமுளது, நரம்பெலும்புக் கிரந்திகளானே பூரிக்கப்பட்ட தேகத்தையுடையவள். தமாலதருவை யொத்தஜானுவையுடையவள், வைடூரிய வர்ணச் சுளகின் அக்ர ஆகார நகத்தையுடையவள். பஸ்மப்பனி நகைப்பையுடையவள், மாம்சமற்ற நரதேகக்கூட்டப் புஷ்பரக்தமாலையை யுடையவள். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவள் விருத்தங் கூறப்பெறுகின்றது:—பாழிப்பென.

பாழிப்புவி மேலுயிரை யெலாம்பகலு மிரவுஞ் சொரிந்திடவு
மூழிக்கனல் போலவியாத வுதரக்கனலா லுள்ளழிந்து
காழிக்கிளர் நாவலந்தீவிற் காணப்படு மன்னுயி ரெல்லா
மாழிக்கிடை வீழ்நதித்திரள் போலருந்திற் சிறிதாருயிர் நிற்கும்.

(ப - ரை) பாழிப்புவிமேல் = ஒருபயனு மற்றுத் துயரமே நிறைந்த இந்த வுலகத்தில், உயிரையெலாம் = ஜீவர்களுடைய சரீரங்களை யெல்லாம், பகலுமிரவுஞ் சொரிந்திடவும் = தினமும் ராத்திரியும் வாரிக்கொட்டிக் கொண்டே யிருந்தபோதினும், ஊழிக்கனல்போல் அவியாத உதரக்கனலால் உள்ளழிந்து = பிரளயாநலம்போலக் கெடாத ஜாடராக்கினியினாலே சிந்தாகுலமுற்று, காழிக்கிளர் நாவலந்தீவில் காணப்படு மன்னுயிரெல்லாம் = ஜம்புத்வீபத்திற் பார்க்கப்பட்ட சரீரங்களை யெல்லாம், ஆழிக்கிடை வீழ் நதித்திரள்போல் = கடலினுள்ளே விழும்படியான நதிகளின் கூட்டங்கட் கொப்பாக, அருந்தில் = புசிக்கில், சிறிது ஆருயிர் நிற்கும் = அற்பம் அருமைப் பிராணன் றிதியாம்.

(ஸ்ரீ - வீர.) தனதன்னமாகிய நரமாமிச முதலியவை கிடையாமையின் அவள்திஜாடர அநலமென்னும் ஔதர்ய அக்கினியானது வடவாநலம்போலத்திருப்தியடையாம லிருந்தது. இத்தகைய அவளுடைய காயம் பெரியதானதால் தன்னுடைய ஜாதிக்குரிய

ஆகாரம் கிடைப்பது அரிதாய் விட்டபடியால். திருப்தியற்றவளாகிக் கடலிலிருக்கும் வடவாநலம் போலவும் கடற்றிரை போலவும் பசியைத்தரும் ஜாடராக்கினியானது மிகவும் அலைத்துத் துயர்தந்தது. பெரிய வயிற்றையுடைய அவள் ஒருகாலத்திலும் திருப்தியை யடையவேயில்லை, வடவாநல நாவானது எக்காலத்தேனும் திருப்தியை யடைந்ததுண்டோ அத்தகையள் ஒருகாலத்தில் இங்ஙனஞ் சிந்தை செய்வாளாயினள்:—இடைவிடாமல் சுவாசந்தோறும் ஜலராசிகள் சமுத்திரத்திற் சேருங் கணக்கேபோல ஜம்புத்தீவிலுள்ள சர்வஜனங்களையும் விழுங்குவேனேயாயின் மேகத்தினாலே திருக்திருஷ்ணையானது தன்னேதுவாய் ஆதப நிவாரண மானபோது அடங்குவதேபோல அது எனது பசியைச் சிறிது தணிக்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆபத்திற் சீவிக்கும் யுந்தியாதாம், மந்திராதிகளாலே காப்புறும் யாவரையும் எங்ஙன் விழுங்கல் கூடும் கூடாதாயின் யாவரையும் விழுங்குமெண்ணமெய்யனஞ் சித்திக்கும் எனச்சிந்தித்துத் தவமேயுபாயமெனத் தீர்மானித்துத் தொடங்கல்:—மழையென.

மழையாலவியுங் கானலென வயிற்றிலெரியுஞ் சிறிதவியும்
பிழையாதி தனைத்தவம் புரிந்து பிரமனருளாற் பெறுதுமென
முழையாரி மயகிரிமேவி மூழ்கியொரு காலுற நின்று
புழையார் விழியான நடுவானிற் பொலிபுங் கதிரையெதிர் நோக்கி.

(ப. - ரை.) மழையா லவியுங் கானலென = விருஷ்டியினால் சாந்தமாகும் பேய்த்தேரேபோல, வயிற்றிலெரியும் சிறிது அவியும் = யாவற்றையும் சந்ததம் கிரசனஞ்செய்தால் உதரத்தில் அக்கினியும் அற்பந்தணியும், பிழையாதிதனைத் தவம்புரிந்து = தவறாமல் இம்மனோரதத்தைப் பெருந்தவஞ் செய்து, பிரமனருளால் பெறுதுமென = நான்முகனது திருவருளினாலே பெற்றுக்கொள்வேன் என்று, முழையார் இமயகிரிமேவி = குகைகள் நிறைந்த இமாசலத்தை யடைந்து, மூழ்கி = ஸ்நாநாதிகள் செய்து, ஒருகாலுறநின்று = ஒரு காலையூன்றி நின்று, புழையார் விழியால் = பொந்துபோன்ற நேத்திரங்களால், நடுவானிற் பொலியுங்கதிரை எதிர்நோக்கி = ஆகாயமத்தியிற் பிரகாசியாநின்ற சூரிய சந்திரர்களை எதிராகப்பார்த்து.

(ஸ்ரீ-வீர.) மிருகதிருஷ்ணை யென்னும் மருமரீசிகை மேகம் பெய்தலானே நன்கு சாந்தியை யடையுமாபோல யாவற்றையும் விழுங்குவேனாயின் சிறிது தணியும் பசியென்பதாம். சர்வப்பிராணி சமுதாய ஹநந இச்சையானே தவம்புரிவேன் எனச்சிந்தித்தாள். சந்திர அருக்கர் தங்கதிகளில் நோக்கமுற்ற விழியினளாய் அவர்தங் கதியையனுசரித்த பார்வையுடன் நின்றாள். துயர்ப்படாத மனங்கொண்டு பெருந்தவத்தைச் செய்வேனாகவும் மகா உக்கிரமாகிய தவத்தினாலேயே கிடையாத வத்துவுங் கூடக்கிடைத்து விடுகின்றது என இவ்வண்ணம் சிந்தனைசெய்து, அவள் அகிலப் பிராணிக் கூட்டங்களையும் உண்ணவேண்டு மென்னும் ஆசையினாலே, தவஞ்செய்யும் பொருட்டுப் பிராணிகள் செல்ல முடியாததான ஹிமவான் பர்வதத்தை நினைந்தனள். சந்திர சூரியர்கள்போலத் தேஜோமயமாய் அசையாத நேத்திரங்களையுடைய அவள் ஆண்டுச்சென்று ஸ்நானஞ் செய்து தவஞ்செய்யும் பொருட்டு ஒரே நிலைமையை யடைந்து ஒருகாலால் நின்று தவம் புரிந்தனள்.

(ச.) இதனை = சர்வஜெந்து சமூக சேகரத்தை, பெறுதுமென = என்றெண்ணி, விழியால் = நிச்சலமான லோசனங்களால், கதிரை = இரவிற்சந்திரனையும் பகலில்

அருக்கனையும் (பிரசண்ட சூரியனையும் எனினும் ஒக்கும் என்றும் பாடமுளது) சேகரத்தைப் பெறுதும் = கொல்ல வேண்டும் என்ற அபிப்பிராயம், சண்டார்க்க பாடபேதம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வருந்தித் தவம்புரிதலும் ஸ்ரீ பிரஹ்மதேவர் பிரசன்னமாதலும் வருணித்தல்:—வருந்தியென.

வருந்திநின்று வுயர்தவத்தில் வருடமோ ராயிரஞ் செலுத்தத்
திருந்துகமலத்தயன் வந்தான் றீயோ ரெனினு மருந்தவத்தாற்
பொருந்துறாத பொருளுண்டோ புண்டரீகன் போதவுமுன்
னிருந்தபடியே யிருந்தரக்கி யிதயத் திறைஞ்சியிது நினைந்தாள்.

(ப-ரை.) வருந்திநின்று = கஷ்டப்பட்டு ஒரு காலினின்று, உயர்தவத்தில் = மேலான தவத்தினாலே, வருடமோராயிரஞ் செலுத்த = ஒரு ஆயிரவருடம் கழிப்ப, திருந்து கமலத்தயன் வந்தான் = எல்லா அழகும் வாய்ந்த உந்தியந் தாமரைமலரில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ பிதாமகன் வந்து பிரசன்னமானார், றீயோரெனினும் = மகா பாதகரே யெனினும், அருந்தவத்தால் = பாவங்கள் நீங்கும் அரியதபசினாலே, பொருந்துறாத பொருள் உண்டோ = கிடைக்கத்தகாத வத்துவும் உளதுகொல்!, புண்டரீகன் போதவும் = தாமரைக் கடவுள் எழுந்தருளிவந்து தரிசனமளித்தும், முன்னிருந்தபடியே யிருந்து = பூர்வமிருந்த தவநிலையிலேயே திதிபெற்று, அரக்கி = கற்கடி, இதயத்திறைஞ்சி = மனத்தினாலேயே பிரணமஞ் செய்து, இது நினைந்தாள் = என்னவரம் வேண்டினால் பசி நீங்குவதற்குப் போதுமானதென்று இங்ஙனஞ் சிந்தைசெய்தாள். (10)

(ஸ்ரீ - வீர.) அவளுக்கு முறையே தினங்களும் பக்கங்களும் மாதங்களும் ருதுக்களும் நடந்தேறின, சைலமாகிய உபாதான காரணத்தினாலே செய்யப் பட்டவள்போல; இருந்து சீத ஆதவங்களில் மூழ்கிச் சிறிதும் கலங்காமல் தவக்கிலேசங்களை யெல்லாம் சகித்தனள். ஆயிரவருடங்கள் சென்றதன் பின்னர் அவளுக்கருளப் பிதாமகன்வந்தார், கெட்ட நடத்தையோடு கூடிய அவளுக்கு மிகமிகத் துர்லபமான பிதாமகன் பிரசாதம் எங்ஙனங் கூடுமெனிற் கூறுவார், அருந்தவத்தா லென்றார், கொரமான தபமானது சித்தியின் பொருட்டாகுமன்றோ தபமானது சித்திக்கின் விஷசகித அக்கினியும் சீதளமாய் விடுகின்றது, தவத்தினாலாகாதது ஒன்றுமே யின்றாம். அவள் அவ்வாறே யிருந்துகொண்டு தாதாவை மனத்தினாலேயே நமஸ்கரித்து இதனை யெண்ணினாள்.

(ச.) றீயோரெனினும் = நீசர்களாயினும், போதவும், அவனையிதயத்து = மனதினால், இது = இப்பசிபோதற் குரியவரம் யாதென்று.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேண்டியதைத்தானே சிந்தித்தலும் ஸ்ரீ பிரமதேவர் வினாதலும் கூறல்:—தாவுமென.

தாவுமுதரக் கனறணியச் சற்றுமிரும் பாற்சமைந்த வொரு
சீவசூசிவடி வானாற்சகத் தோருடலங் களிற்புகுந்து
மேவுமிரைகள் வேண்டியது விழுங்கலா மென்றுணர் வானே
யாவதெண்ண முனக்கென்ன விசைத்த வயனுக் கிவளிசைப்பாள்-

(ப - ரை.) தாவும் உதரக்கனல் தணிய = ஓங்கியெரியா நின்ற ஜாடராக்கினி சாந்தமாக, சற்றும் இரும்பால் சமைந்த = சூக்குமமா யிரும்பினா லாக்கப்பட்ட, ஒரு சீவசூசிவடிவ் ஆனால் = ஒருயிர்ஊசி வடிவமாக ஆயின், சகத்தோர் உடலங்களிற் புகுந்து = உலகத் துள்ளவர்களுடைய தேகங்களிற் பிரவேசித்து, மேவுமிரைகள் வேண்டியது

விழுங்கலாம் = பொருந்தா நின்ற ஆகாரங்கள் வேண்டிய அளவு உட்கொள்ளலாம், என்றுணர்வாளை = என எண்ணுவாளை, யாவதெண்ண முன்க்கென்ன = நின்னுடைய நினைவுயாது எதையுத்தேசித்து இத்தவம்புரிந்தாய் கூறுதியென்று, இசைத்த அயனுக்கு இவள் இசைப்பாள் வினவிய பிரஹ்மதேவருக்குக் கற்கடி கூறுகின்றாள்.

(ஸ்ரீ - வீர.) அலோக மயமாயினும் லோகமயம் போன்ற ஜீவர்களைத் தைக்கும் ஊசியாவேன், இவ்வர்த்தினுனே உலகத்தை இஷ்டப்படிமுறையே பக்ஷிக்கப்பொருட்டு விழுங்குவேன். ஆ! நினைவு வந்தது இவ்விபுவைப் பிரார்த்தித்து ஒருவரம் வாங்குவேன் ரோகரூப்மாகவும் இரும்பின் விகாரரூபமாகவும் இருக்கும் ஜீவனோடு கூடிய ஊசியாக யானிருப்பேன், வேதாவின் வரத்தினாலே இருவகையான ஊசியாக உற்று எல்லாப் பிராணிகளினுடைய இருதயத்தின் கண்ணொரே பேர்தில் கிராணத்தாற் கவரப்படும் மணம்போலப் பிராணனுடன் தெரியாமற் புகுந்து காரியத்தை முடிப்பேன், இம்முறை யுபாயத்தாற் பக்ஷிங்கும் பொருட்டுக் கிரமமாகச் சகலஜகத்தையும் இஷ்டப்படி விழுங்கு வேன். பக்ஷிங்குதலே பரமசுகமாம் இங்ஙனஞ் சிந்தித்துக் கொண்டிருக்கும் அவளைக் கமலாலயன், சாந்தி தாந்திதயாதி தபஸ்வித்ரும விருத்த லோகஹிம்சா அபிலக்ஷிணியா யிருத்தலின் அன்னிய வகையினுனே அவ்வாறு அபிலாஷைபுற்றிருப் பதைக்கண்டு, ஹே அரக்கர்குலமேயாய அசலத்தின் மேகமாலையாகிய கற்கடியென்னும் அருமைக் குமரியே! (புகழ்ந்தது வரும் மங்களத்தை விளக்குதற் பொருட்டாம்) எழுந்திருப்பா யாக நீ யான்மிக மகிழ்ந்தேன் வேண்டிய வரத்தைக் கேட்குதி.

(ச.) ஜீவசூசி = உண்மையில் அயவடிவா யில்லாதிருந்தும் அயோமுகம்போற் கூர் மையான சைதன்யமுள்ள சூசிகை, சகத்தோ ரிதயங்களிற் புகுந்து = சர்வப்பிராணிக ளுடைய இருதயத்திற் பிரவேசித்து, உணர்வாளை=சிந்திக்கும், அக்கற்கடியை நோக்கி அரக்கர்குலமேயாய கனகன மாலையேபோல அலங்காரபூதமாயிருக்குங் குழந்தையே.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கற்கடிவரம் வேண்டலும் ஸ்ரீ பிரஹ்மதேவர் வரமருளலும் வருணித்தல்:—துதியென.

துதிப்பார் துணையே நான்ஜீவ சூசியாக வேண்டுமென
விதிப்பான் விகார பூருவமாம் விசேயாக மெய்க்கொண்டு
குதிப்பாய் துர்ச்சேட்டையர் மூர்க்கர் கொடியோர் கொடியதலத் துறைவோர்
கதிப்பால் விரும்பாவுண வுண்போர் கருத்திற் சுவாசத்துடன் கலந்து.

(ப - ரை.) துதிப்பார் துணையே = ஹே விதியே! ஹே பகவன்! ஹே முக்கால முமுணர்ந்து தோத்தரித்துப் பூசிப்பவர்க் கருளும் உயிர்ச்சகாயமே!, யான் = அடி யாள், ஜீவசூசியாக வேண்டும் என = உயிரூசியாக வேண்டு கின்றேன் என்ன, விதிப் பான் = யாவரையும் சிருட்டிக்கும் ஸ்ரீ பிரமதேவர் அருளுகின்றார், விகாரபூருவமாம் விசேயாக மெய்க்கொண்டு = வியென்னும் உபசர்க்கத்தை முன்புடைத்தாய விஷூசி கையாகத் தேகந்தாங்கி, துர்ச்சேட்டையர் = கெட்ட சேட்டையுடையவர், மூர்க்கர்= மூடர், கொடியோர் = துட்டர், கொடியதலத் துறைவோர் = துர்த்தேச வாசியர், கதிப்பால் விரும்பா வுணவுண்போர் = நன்மைக் கேதுவாகாதென நிஷேதிக்கப்பட்ட ஆகாரத்தைத் தின்பவர், கருத்திற் சுவாசத்துடன் கலந்து குதிப்பாய் = ஹிருதயத்தில் பிராணனுடன் கலந்து பிரவேசித் துண்ணுதி. (12)

(ஸ்ரீ-வீர.) விதி = விரிஞ்சன். கற்கடியினாலே பிரார்த்திக்கப் பெற்ற லோகசித்த ஜீவசூசித்தன்மைத் தானத்தாற் சகல ஜனங்கட்கும் அபூர்வதுக்க சாகரத்தின் மூழ்குதல்

உண்டாகக் கூடாதென ஜகத்தில்தானாகவே இராநின்ற விஷூசிகை வியாதிபாவத்தை யிவள் பொருட்டுத்தரும் விருப்பினராகிய அடைவுற்ற கருமானுசாரி ஸ்ரீபகவான் பிதாமகர் மீண்டுங் கூறத்தொடங்குகின்றார்:—விதிப்பான், வி+சூசிகை, இகரத்தைநோக்கி, ச, ஷ, ஆக விஷூசிகையென ஆம். ஷ - ட ஆம், விடேசிகை. ஹே கமலப்பிரபுவாகிய திரிகால முணர்ந்த தேவதேவரே! ரோகரூபியாயும் இரும்புரூபியாயு மிருக்கும் ஜீவ ஊசி யாகும்படியான வரத்தைக் கொடுத்தருள வேண்டும் என்று கற்கடி விண்ணப்பிக்கவும், அவ்வாறே யுண்டாகுக வென அவளை நோக்கிக் கூறிப் பிரஹ்மா மீண்டுங் கூறுவதாவது; நீ உபசர்க்கத்தோடு கூடிய சூசிகையென்னும் விஷூசிகையாக ஆகக்கடவாய்! ஜனங்களாற் பார்க்கமுடியாத படியான மாயையால் எல்லாலோக ஹிம்சையைச் செய்தி. ஆனால் நிடேதித்த அபக்குவ அகாலபோஜனமும் அதிபோஜனமும் செய்யப்பட்டவர், அந்நியருக்கு அநிஷ்டம் செய்யப்பட்டவர், அசாஸ்திரீய மார்க்கத்தினிற்பவர், கெட்ட தேசத்தில் வாசம்பண்ணப் பட்டவர், துஷ்டர் என்னு மிவர்தமை ஹிம்சை செய்வாயாக; பிராணவாயிலாக அபானன்தொடங்கி ஹிருதயபரிந்தம் புகுந்து இருதயபதுமம் குக்ஷியில் வர்மபக்கத்திருக்கும் மாம்சபிண்டம் பஸ்தி சிரமுதலியவற்றைப் பீடைசெய்து வாதரேகை வடிவமான விஷூசிகை வியாதியாய் ஆகக்கடவாய்; பத்மம் எனப்பெயரியரோகம், குன்மம் என்பவற்றால் வாதிப்பதால் விஷூசிகை வியாதியாவாய் என்றும் பொருளாம் சாஸ்திர சதாசார நிஷ்டர்களையும் வேறு இயல்புடையயவர்களையும் நீபற்றிப் பீடைசெய்வாய்.

(ச.) வேண்டுமென = வரந்தரவேண்டு மென்று கற்கடிகேட்க, கதிப்பார் = துர்ப்புத்தி யுடையோரும், விரும்பா வுணவுண்போர் = துர்ப்போஜனரும், ஆகிய குணமிலிகளது, விதிப்பான் = பிரமதேவர் அப்படியே விடேசியாவா யென்றருளிப்பின்பு அவ்விடேசி சொரூபத்தையே விதிக்கின்றார், சுவாசத்துடன் = தேகாந்தரவர்த்தி வாயுக்களோடு, கருத்தைக் கலந்து = இருதய கமலத்தைக்கூடி, மெய்க்கொண்டு = குதமுதலிய தேகா வயவங்களின் வாதனை யேதுவாய் அதனால், விகாரரூபமதாம் = வாதவிகார ரூபமான, விடேசியாகி = விடேசிகா வியாதியாகி, குதிப்பாய் = சஞ்சரிப்பா யென்பது அன்னுவயம்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) குணமுடையவரிடத்திற் செல்லின் நீங்கமந்திரம் தருதல்:— நல்லென.

நல்லாரிடத் தினீயெய்தி னாமேவிதித்த மந்திரத்தாற்
கொல்லா தொழிவாய் தீயோரைக் கொன்றுதின் பாயெனமலரோன்
சொல்லாமுன்ன மலைபோல்வாள் சூசியுருவாஞ் சீவனுமாய்ப்
பொல்லாத வரஞ்சினத் தடித்தோர் பொன்றும்படி யுள்ளுறப்புகுந்தாள்.

(ப - ரை.) நல்லாரிடத்தில் = குணவான்க ளிடத்தில், நீ யெய்தில் = நீ அடைவாயேயானல், நாமேவிதித்த = எம்மால் விதிக்கப்பட்ட, மந்திரத்தால் = மந்திரத்தினால், கொல்லா தொழிவாய் = அவர்தம்மை உயிர்வாங்காது நீங்குவாய், தீயோரைக் கொன்று தின்பாய் = கொடியோர் தமைக்கொன்று பக்ஷிப்பாய், எனமலரோன் = என்று கமலாலய நாயகன், சொல்லா முன்னம் = திருவாய் மலர்ந்தருளிய வுடனே, மலைபோல்வாள் = பர்வதாகிருதியா யிருந்த அந்தக் கற்கடி, சூசியுருவாம் சீவனுமாய் = ஊசிவடிவமா முயிராகி, பொல்லாதவர் = கொடியவர், அஞ்சினத் தடித்தோர் = மிகப்பயந்தவர், பெருமிதம் பிடித்தவர் கொடுங் கோபமுடையவர், பொன்றும்படி = அழியுமாறு, உள்ளுறப் புகுந்தாள் = தேகங்களுள்ளே பிரவேசித்தனள்.

(ஸ்ரீ - வீ.ர.) குணங்களோடு கூடியவர்களின் பீடையானது நீங்கும்பொருட்டு இம் மந்திரத்தையுங் கூறுகின்றேன்: — ஹிமகிரியின் வடபாகத்தில் கற்கடியென்னும் இராக்ஷசி இருக்கின்றனள் அநியாயபாதிகை யெனவும் விஷூசிகை யெனவும் அவளுக்கு இரண்டு நாமங்களுண்டு அநியாயபாதிகை = நியாயமார்க்கங் கடந்து நடப்பவர்களைப் பாதிப்பவள், அவளது மந்திரம்

“ ஓம் ஹ்ரீம் ஹ்ராம் ஶ்ரீம் ஶ்ராம் விஷ்ணுஶக்த்யை நம:
ஓம் நமோ பகவதி விஷ்ணுஶக்தி ஏனாம்
ஓம் ஹர ஹர நய நய பச பச மத மத உத்ஸாதய தூரே குரு
ஸ்வாஹா ஹிமவந்தம் கச்ச ஜீவ ஸ: ஸ: ஸ: சந்த்ரமண்டலகதோஸி ஸ்வாஹா ”

விஷ்ணுசக்திக ளிருவகையாம் முதலது மாயையாம் அதனதீனங்களேயாம் அன்
னிய சர்வசக்திகளும், மற்றதோ அதனதீனமாகி ஒவ்வொரு வஸ்துவையும் நியதஞ்
செய்வதாய்ச் சாத்விகாதி பேதத்தாற் பின்னமுமாம், அதனுள் தாமசமான சங்காரசக்
தியின் அம்சங்கள் பிராணிகளின் கெட்டகர்ம பலஜனனசக்தி விசேடங்கள் ரோகங்
களாம், அதனால் அவற்றின் நீக்கப்பொருட்டு முதன் மாயாசக்தி பிரணவமாயாதி ரகசிய
பீஜமைந்தால் விளிக்கப்பட்டு நமஸ்கரிக்கப்பட்டுப் பிரார்த்திக்கப் படுகின்றது ! ஓம்
முதலாக. நான்காம் வேற்றுமையீருக நம: சப்தயோகத்தால், பரப்பிரஹ்ம வடிவமா
யிருக்கப்பட்டவள் பொருட்டு நமஸ்காரம் என்பது பொருளாம்; பகமாகான்மியம் சர்வ
நியமன வீரியமாம், அதனையுடைய ஆதியாய விஷ்ணுசக்திக்கு நமஸ்காரம், நீ இரண்டா
வதா யிருக்கும் இச்சினது அங்குச வடிவமான ரோகமய விஷ்ணுசக்தியைக் கெடுத்தி,
ஓங்காரவாச்சிய காரண சொரூபத்தில் அத்தியந்தம் உபசங்கரிப்பாயாக ஹரஹர என்
றது அத்தியந்த மென்பதைக் காட்டற்கு, நய = சொந்தஸ்தானத்தை யடைவாயாக,
பச = பாகத்தினுற்போல இப்போதே மிருதுவாக்கு, மத = தயிரைப்போலக்கடைதி,
உத்சாதய = இந்தஸ்தானத்தி லிருந்து வேறிடத்திற்குப் போதி, கூறிய அல்லது அய
லாய வகைகளானே தூரஞ்செய்தி, ஸ்வாஹா என்பது ஹவிதானுதிகளால் பூஜ்ஜியத்
தன்மையை விளக்குதற் பொருட்டாம். இங்ஙனம் ஆதிசக்தியை யினிது பிரார்த்தித்து
அதன் அதீனமான ரோகசக்தி பிரார்த்திக்கப் படுகின்றது, ஹிமவான் பர்வதமாகிய
சொந்தஸ்தானத்தையடைதி, பின்ரோகியின் பொருட்டுக் கூறப்படுகின்றது, ஸ:=
பழைய கெட்ட கருமத்தால் மறைபட்டவனாய், ஸ:=ரோகத்தால் மறைபட்டவனாய்,
ஸ:=மிருத்யுவாற் பீடிக்கப்பட்டவனாய் நீ மந்திர சாமர்த்தியத்தினாலே ஜீவனசமர்த்
தமாய அமிருதத்தால் சம்பூர்ணம் சந்திரமண்டலம் எனது பாவனையினாலே அடைந்தவ
னாகின்றாய், அந்தத்தில் ஸ்வாஹா ! என்றது தீப்தமாய அக்கினியின் கண்ணே ஹவிஸ்
விடுவதேபோலப் பூர்ணசந்திர மண்டலத்தில் ரோகியைப் பாவனையால் வைப்பதை
விளக்குதற்காம்; இம்மகா மந்திரத்தை மந்திரிப்பவன் எழுதிவாமகரத்தின் உதரத்த
லத்தில் வைத்து, அக்கரத்தோடு கூடியவனாய்ப் பிணியாளனைத் தீண்டுக, மந்திரமா
கிய முத்கரத்தா லடிபட்டுக் கட்டப்பட்டு ஹிமாசலத்தை நோக்கி ஓடாநின்ற அந்த விடூ
சிகையாகிய கற்கடிகையைச் சிறப்பாகச் சிந்தனஞ்செய்க; சந்திரனாகிய அமிருத கருப்ப
மாம் மடுவின்கண் ரோயாளி யிருப்பதாகச் சிந்திக்குக, சமாகித சித்தமுடையவனாகிச்
சர்வ ஆதிவியாதி மயல்களும் விடுபட்டவனாய் ஜரைமரண மற்றவனா யிருப்பதாக எண்
ணுக ஆறு லிம்மந்திரத்தைச் சாதகஞ் செய்யப்பட்டவன் மிகவும் சுசியாகி நிருமலமன

முடையவனுய் விக்ஷேபமற் றேகாக்கிரமன முடையவனுகிச் சௌச ஆசமனுதிகளைமுன் னரேசெய்து கொள்ளவேண்டும், வேண்டவே இம்முறையாகச் சகல விடூசிகையும் அத்தியந்த மில்லாமற் கழிந்துபோய் விடும் இவ்வாறருளி விண்ணிற்சென்ற மூன்றுலகத்திற்கும் நாதனுக இருக்கும் பிரஹ்மாவானவர் ககனத்திற் கமனஞ்செய்யும் சித்தர்களானே கவரப்பட்ட கெடாததான மந்திரத்தை யுடையவராய், காரியாந்தர சித்தியின் பொருட்டு அடைந்த இந்திரனுல் வந்திக்கப் பெற்றவராய் மற்றவராற் கெடுத்தற்கு முடியாத சத்திய சங்கற்ப சித்தமாய்ப் பரசித்த சங்கற்பத்தாலுண்டாய பிதாமாதா சகோதரன் சந்தனம் மாலை முதலிய லோகவடிவங்களாம் விசித்திர யோக்கிய மாயைகளையுடைத்தாகி யிருந்து மிகப்பிரகாசத்தோடு கூடி விளங்கும் தமது சத்தியலோகத்தை யடைந்தனர். ஹேவிஷ்ணு சக்தியே ! ஆதுரன் விளித்தல். ஹேஜீவ ! சந்திரமண்டலம் அமிருதமயம் சென்றவனுகின்ருய், ஸ்வாஹா = சுயம் ஈண்டுவருக என்று லழைக்கப்பட்ட ஜீவான்மகமான ஹவிஷ் சந்திரமண்டலம் சுயம்செல்க. இம்மந்திரமானது மந்திரங்களின் மத்தியில் மகாமந்திரமாகும். பூதரசிருங்கம்போற் பிரமையுள்ளவளாகிப் பேரிருண்மயமான இராக்ஷசியானவள் மைம்மேக ரேகைபோலச் சூக்குமத் தன்மையையடையத் தொடங்கினள், எவ்வாறென்ருல் மேகம்போல ஆயினள் பின்விருக்ஷசாகை வடிவமாயினள், ஒருபுருடப் பிரமாணமாயினள், பின்னே அஸ்தமாத்திர மாயினள், அதன்பின் னெட்டைரூப மாத்திரமாகி, அங்குலிரூபியாகி, உளுந்துப் பருப்பெனவாகி, தூல ஊசிபோலாயினள், பின்பட்டுத் தைக்கத்தகுதியான சூக்குமதம ஊசியாகப் பதும கேசர சுந்தரியாகிய அவளடைந்தனள். அதன்பின் முன்னயல் நோயினுற் பரவசமான சில அங்கத்தினும், சில இளைத்ததேகத்தினும் சிலபருத்த தேகத்தினும் உள்ளேபுகுந்து வாயுலீனமாய் இரும்புருவ ஊசியாய் அதிசயமான விடூசிகைப் பிரவிருத்தி ரோகமாய் ஆயினள்; சிலசிறிய தேகத்திலும் ஸ்வஸ்ததேகத்திலும் நல்லபுத்தியையுடைய தேகத்திலும் புகுந்து ஜீவசூசியாய்த் தூர்ப்புத்திரூபமான அந்தர் விடூசிகையாம்.

(ச) நல்லோர் = குணசாலிகள், விதித்த = நினக்குச் சித்தார்த்தஞ் சொல்லிய இம்மந்திரத்தால், மலரோன் சொல்லாமுன்னம் = ஸ்ரீ பகவானுன வேதாசொல்லி அவ்விடத்திற்ருனே அந்தர்த்தானமான பின்பு, மலைபோல்வாள் ஒட்டையாகாரியாய், பின்பு அங்குலரூபியாய் பின்புளுந்தின் பீசலேசப் பிரமாணியாய்ப் பின்பு சூசியுருவாஞ் சிவனுமாய், பொல்லாதவர் = சிலவிவசாங்கராகிய மூர்க்கர், அஞ்சினர் தடித்தோர் = சிறியர் பெரியர் ஆயினும், இத்தன்மையான மந்திரத்தை மாந்திரிகனுகிய சாதகன் சுசியாய்ச் சுவச்சாந்தக்கரணனுய் சமாதான சித்தனுய் வாமகரமத்தியில் வைத்துச்சபித்து அந்தக் கரத்தால் வியாதிக்கிரஸ்தனைத் தடவிக் கற்கடியை மந்திரமென்னும் இருப்புலக்கை அல்லது சம்மட்டியால் அடிபட்டு இமகிரியைநோக்கி யோடினவளாயும், வியாதிக் கிரஸ்தனை அமிர்தமயமாதலின் சந்திராசாயன மத்தியி லிருப்பவனுயும், சர்வ ஆதிவியாதி விப்பிரமைகளால் முக்தனுயும், அஜராமரணுயும், சிந்திக்கவேண்டும் இக்கிரமத்தாற் சகலவிடூசிகளும் ஓடிப்போ மென்பார் மந்திரத்தால் என்ருர்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் அவ்வூசி சிலபாலருந்தியும் மந்திரவசத்தாற் சிலவரிடத்தினின்றும் நீங்கியும் நீள்போது சுழன்று பின்மிகவருந்திய தென்கின்ருர்:—
வாயுவென.

வாயுவடிவா யுட்புகுந்து மண்ணில்[விண்ணிற் பல்லுயிர்க
ளாயுவெல்லா மிருவடிவாய நேககால மருந்தியபின்

ஞேயுமனத் தாளாயவமே யுழன்றுவருந்தி யூசியுமாய்த்
தேயும்படியே கெடுத்ததென மச்சீசீயாசை யெனத்திகைத்தாள். (14)

(ப - ரை.) வாயுவடிவாய் உட்புகுந்து = காற்றுருவமாயுள்ளே பிரவேசித்து, மண்ணில் விண்ணில் பல்லுயிர்கள் = கீழும்மேலும் பலவுயிர்களின், ஆயுவெல்லாம் = பிராணன்களை யெல்லாம், இருவடிவாய் = தேகத்துவயத்துடன், அநேககாலம் அருந்திய பின் = அநேகவருடம் புசித்தபின்னர், ஓயுமனத்தாளாய் = வைராக்கிய சித்தத்தை யுடையவளாய், அவமேயுழன்று வருந்தி=வீணுகவே யலைந்து துயருற்று, ஊசியுமாய்= அற்ப ஊசியாகி, தேயும்படியே =தேய்ந்து போமாறு, எமையாசை கெடுத்தது=ஆசையன்றோ பெருமை வாய்ந்திருந்த எம்மைக்கெடுத்து விட்டது, சீசீயெனத்திகைத்தாள்= திக்திக்கென வாடினள்.

(ஸ்ரீ - வீர.) எமையென்றது தன்பெருமையை யெண்ணியதாம். தேகத்துவயத்தால் = இராக்ஷசிரூபதேகம் நஷ்டமாய் விட்டமையின் ஊசிரூப இருதேகத்தால் எனக்கொள்க. பெரியவாசிட்டத்தில் பிரசங்கத்தால் நீதியைக்காட்டி பின் பிரகிருதத்தையனுசரித்து சிவசூசியெனப் பெயரிய வியாதி சொரூபத்தைக் கூறமிடத்து இங்ஙனங் கூறப்பெற்றுளது:—இலக்கினமாய் லகுவாய் அவள் அன்னியமாயினள் அவ்வாறே வியோமவடிவமாய் ஆகாரமற்று ஆகாசம்போலச் சூக்கும இயற்கையோடு கூடிய இலிங்க சரீரமாய் ஜீவவிடூசிகையென நின்றனள். இந்தப்பிரகாரம் இரண்டு ஊசிமயமாய்ச் சரீரங்கள் அவளுக்குண்டாயின, அவள் பனியினம்சம்போலக் குறுகியவளா யிருந்தனள், பனியின் அம்சம்போல மிருதுவானவளா யிருந்தனள், அவளுடைய சுருங்கிய சரித்திரமிதுவாம். இரண்டு சரீரங்களோடு கூடிய அவள் நரர்தம் இருதயத்தில் நுழைந்து மிகவுங்குரூரமாத் துன்புறுத்திக் கொண்டு பின் பத்துத்திசைகளிலும் இங்ஙனமே மிகமிகவும் சுழன்று திரிந்தாள். அநேக வருடங்கள் சுழலுவதிலே மிகவுந்தற்பரையா யிருந்து விண்ணின் கண்ணும் மண்ணின் கண்ணும் இருதேகத்தோடுஞ் சென்றுகொண் டிருந்தனள். இவ்வண்ணம் அந்தக் கற்கடியெனப் பெயரிய இராக்ஷசியானவள் அநேககாலமாகச் சர்வஜாதி நரமாமிசங்களையும் அருந்தியும் சிறிதும் போதுமென்று திருப்தியை யடையவேயில்லை; பூர்வபகலிலேயே (புசிக்கத்தொடங்கும் அக்கணத்திலேயே) அவள் உதிரத்துளி யொன்றுனே பசிநீங்கித்திருப்தியை யடைந்திடுவள், ஊசியினுள்ளே யெவ்வளவுதான் கொள்ளக்கூடும் ஆசையூசியோ அடங்கவேயில்லை. அவள் சிந்திப்பதாவது. அந்தோ ! கஷ்டம் யான்என் ஊசியாகவானேனே, மிகச் சூக்குமமாக இருக்கின்றேனே தின்னும் ஆற்றல் எல்லாம் குறுகிப்போய் விட்டதே ! என்னுதரத்தில் ஒரு கவளங்கூடக் கொள்ளவில்லையே ! துன்மதியையுடைய என்னுடைய விசாலம் பொருந்திய அந்தப்பழைய ஹஸ்தபாதாதிகளெல்லாம் எங்கே சென்று விட்டனவோ ! காளமேகம் போல விசாலமாகிய அங்கங்களெல்லாம் வனத்திற் சருகுகள் போலக் காய்ந்து போயினவே இத்தசையை யடைந்திருக்கப்பட்ட மந்தபாக்கியத்தையுடைய என்னிடத்தில் ஒரு சிறிதுங் கொள்ள வில்லையே ! வசையினாலே வாசனை கட்டப்பட்டதாய் மாதுரியமாயிருக்கும் மாங்கிசரசக் கவளங்கூட விழுங்க இடத்தைக்காணேமே ! இஃதென்னை யான் இயற்றினேன் திக்திக்கெனத் தன்னை நிந்தித்துக்கொண்டாள் என்பார் சீசீஎனத் திகைத்தாள் என்றார்.

(ச.) வாயுவடிவாய் = வாதசூசிரூபமாய், சீவசூசிரூபமும் வாதசூசிரூபமும் ஆக இருவிதத்தானும் உட்பிரவேசம் நிரூபித்தற்கு இருகவிகளில் முன்சூசியுருவாஞ் சீவனுமா

யுள்ளுறப் புகுந்தென்னும், பின்வாயு வடிவாயுட்புகுந்து என்றும் பாடம் ஓதப்பெற்றது, மண்ணில் விண்ணில் இருவடிவாய் = பூமியில் விதேசிரூபதேகமாயும், வியோமத்தில் சூசிரூப இராக்ஷசி தேகமாயும், என்பது பொருள். அநேககாலம்=வெகுவருடம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அந்தச் சோகபராயணத்தோடு கூடிய ஊசியானது மௌனமுற்று அஹிம்சா விரதங்கொண்டு ஏகாக்கிரத்தோடு தவஞ்செய்து பாவந்தீர்தலையும், அதை ஸ்ரீ நாரதபகவானாற் கேள்வியுற்ற இந்திரன்கண்டு ஸ்ரீ பிரஹ்மதேவரைப் பிரார்த்திப்ப அவர்வந்து வரந்தருதலையு மிருசெய்யுட்களிற் றொடர்பாய்த் தரிசிப்பித்தல்:— தீய—பாவ—வென.

தீயமனத் தொடுயாமவமே பலசீவ னருந்தினமா
லேயது விட்டனமென் றிமவானிடை யெய்தரிதானதவ
மேயினளொன்று நினைப்பிலள் சஞ்சலம் விட்டுணவற் றொருமித்
தாயிரமாவரு டங்கள் செலுத்தலு மற்றது வல்வினையே. (15)

(ப-ரை.) தீயமனத்தொடு = ஜீவகாருண்ய மில்லாத சித்தத்துடன், யாமவமே பலசீவனருந்தினமால் = ஆசையினாலே நம்பெருமையையும் தியாகித்து அளவற்ற பிராணிகளைக் கொன்று தின்றோம், ஏயது விட்டனம் =அடைந்திருந்த அவ்விழிவானதொழிலை விட்டுத் தொலைத்தோம், என்று = எனச் சங்கற்பித்துக்கொண்டு, இமவானிடை = ஹிமாசல சிருங்கத்தில், எய்தரிதான தவம்மேயினள் = அடைதற் கருமைத்தான பெருந்தபசைச் செய்யத் தொடங்கினள், ஒன்று நினைப்பிலள் = சங்கற்ப மற்றவளாய், சஞ்சலம் விட்டு = நிஸ்தரங்க மனோமயத்தினளாய், உணவற்று = நிராகார முடையவளாய், ஒருமித்து = ஏகாக்கிரசித்த முடையவளாய், ஆயிரமாவருடங்கள் = சகஸ்ரமகா சம்வற்சரங்கள், செலுத்தலும்= தவம்புரிதலும், அற்றது வல்வினையே = கனமடங்கள் யாவுங்கழிந்தன. (15)

பாவமகன்று மனத்தெளியப் பரபாவனை தன்வயமே
மேவலுமிவ் வுலகத்தை யிகழ்ந்து விருப்புவெறுப் பிலளாய்
மாவருடங்க ளோராயிர நின்றபின் மன்னுணர் வுற்றதெனக்
கேவலம் வந்திவளுக் கொருவாய்மை கிளர்த்தினன் மாமலரோன். (16)

(ப - ரை.) பாவம் அகன்று = துரிதந்தொலைந்து, மனம்தெளிய = சித்தம் நிர்மலமுற, பரபாவனை = பிரஹ்ம சாக்ஷாத்காரம், தன்வயமே = சுயமாகவே, மேவலும் = உண்டாதலும், இவ்வுலகத்தை யிகழ்ந்து = இந்தவுலகத்துள்ள திருசியங்களை யுபேக்ஷித்து, விருப்பு வெறுப்பிலளாய் = இராகத்துவேட மற்றவளாய், மாவருடங்கள் ஓராயிர நின்றபின் = மாண்புடைத்தான ஓராயிர வருடங்களைப் பெருந்தவத்தாலே கழித்த பின்னர், மன்னுணர் வுற்றதென = யதார்த்த ஞானம் உண்டாய் விட்டதென்று கேவலம்வந்து = இவள் வேண்டாமலே யெழுந்தருளியாகி, இவளுக்கு = கற்கடிக்கு, ஒருவாய்மை = ஒப்புற்ற வுண்மையை, மாமலரோன் கிளர்த்தினன் =பெருமைபொருந்திய ஸ்ரீ பிரஹ்மதேவர் திருவாய் மலர்ந்தருளினர். (16)

(ஸ்ரீ - வீர.) மேற்கூறிய பிரகாரமாகவும் தன் றேகாதிகளைப்பற்றியினப் பெரிய வாசிட்டத்திற் கூறும் வகையாகவுஞ் சிந்தித்து, மீண்டும் அவ்வகையாய தேகங்கிடைக்கும் பொருட்டு விரைவில் தவஞ்செய்யு முயற்சி யுடையவளாவேன் என்றெண்ணிச் சித்தத்தின் கண்ணே ஜனங்களைக் கொல்லும் ஆசையை யுபசங்காரஞ் செய்துகொண்டு,

முன்னேயிருந்து தவஞ்செய்து கொண்டிருந்த அதேஹிமாசல சிருங்கத்தை நோக்கிச் சென்றனள். சருவவிடயங்களி னின்றும் உள்ளத்தை யுள்ளேதிருப்பி வைராக்கிய சாரத்தை யுள்ளே புடையவளாய்ச் சந்தப்தமில்லாதவளாய் ஊசித்தேகத்துடன் பெருங் கடின தவத்தைச் செய்தனள்; நிர்ச்சங்கற்ப நிராகார நித்தரங்க மநோமயியாய் அசையா மல் நிர்விகார மனப்பிர தாரணையாய் நிலேத்துச் சித்தத்திலுள்ள திட்நிச்சயத்தோடுங் கூட ஆயிரவருடங்கள் பெருந்தவத்தைச் செய்தனள் அருந்தவத்தைச் செய்துகொண்டிருக் கும் அவ்வூசிக் கற்கடியின் பாவங்க ளெல்லாம் கழிந்துபோய் நீண்டகாலம் இராகாதி ரகித சித்தமானது ஒருமைப் பட்டதால் விசாரபூர்வகமாக ஞானமானது உதயமாயிற்று. வெளியசைவுகள் யாவுமே யடியோடற்றுத் தேசகாலங்கள் அநேகஞ் சென்றபின்னர், சத்தியமாயும் நல்ல அறிவுருவமாயும் இருக்கும் தன்னை விசாரிக்கப்பட்ட அவளுக்குத் தானகவே ஞானப்பிரகாச மென்னும் பிரஹ்மான்மைக்கிய சாக்ஷாத்கார விருத்தி சம் பந்த போதாத்மாவானது இனிதாக வுதயமாயது, பரத்தையும் அபரத்தையும்கண்டனள் அதிநிர்மல மனமுடைமையானே பரமபவித்திரத்தை யடைந்தனள், தான்தானே தவத் தானே அதிசூக்கும மதியினுலே அறிய வேண்டியதை யறிந்தனள், அருந்தவத்தினுலே பெரும்பாவங்கள் யாவுந் தொலேயவே தனது சொரூப சுகத்தையறிந் தண்டந் தமர்ந்த னள். இவ்வனம் ஏழாயிரவருடம் யாவரும் அதிசயிக்கத் தாருணதவமாற்றினள். வெகு காலஞ் சங்கற்ப மற்றவளாய் அகில திருசியங்களேயும் உபேக்ஷித்த இருதய முடையவ ளாய் உள்ளே யிருக்குஞ் சைதன்ய சொரூபமாகிய தன்னை நன்காராய்ந்து பரமகாரண பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்து அவ்வடிவமே யாயினள், யார் குருவெனின்? தன் சயுக் திகளோடு கூடிய விசாரத்தினுலே எப்போதுந் தன்னையே தியானஞ் செய்துகொண் டிருத்தலே பரமாசிரியர் ஆம் அக்கற்கடிக்குப் பரபோதமுண்டாகி யாயிரவருடங்கழித்து ஸ்ரீ பிரஹ்மதேவர் எழுந்தருளியாகி ஆகாயத்தி லிருந்துகொண்டு, ஹே புத்திரியே! வரம் வாங்கிக்கொள்ளுதி யென்று கூறியும் கரண அபாவத்தானும் விடயா சாபாவத்தா னும் மௌனமாகவே யிருந்தனள். (15-16)

(ச.) சீவனருந்தினம் = ஜனமாரணத்தைச் செய்தேம், இமவானிடையேய் = இம கிரிக்கண் சென்று, பின் சூசிதேகத்தால், அரிதானதவம் = கடினமான தவத்தை, சஞ் சலம்விட்டு = நிஸ்தரங்க மனோமயியாய், ஒருமித்து = பரமதசையைப் பெற்று. பரபா வனை = விதித வேத்தியத்துவம் (அறிய வேண்டியதை யறிந்து) தன்வயமே = தனது புத்தியாற்றுனே, மேவலும், உற்றதென = பிராப்தமானுள் என்று, அறிந்து, இவ ளுக்கு = அத்தன்மையான பரமபதத்தை யடைந்த இக்கற்கடி யென்னும் இராக்ஷசிக்கு மாமலரோன் = பகவானுகிய பிரமன், கேவலம் வந்தொருவாய்மை கிளர்த்தினன் என் பது அந்நுவயம். (15-16)

(ஸ்ரீ - வீர-அ - கை.) ஸ்ரீ பிரஹ்மதேவர் பூர்வசரீரந்தந்து மெய்யுணர்வை யுடைய நீ பசிநீக்கப் பொருட்டுப் பூரியரைக் கொள்ளென வேகலும் தற்சொரூப நாட்டத்தே நிலேத்திருந்தாள் கற்கடியெனல்:—சீவவென.

சீவனின் முக்தியடைந்தனை சிந்தை தெளிந்தனை தொல்வடிவாய்ப்
பூவலயத்துறி வில்லவர் தீயவர் பூரியர்மெய் யிரையா
யாவிவளர்த் துறைகென் றயனேகலு மத்தவித்தப் பரமே
பாவனையுற் றொருசெய் தொழிலற்ற பதத்தி லிருந்தனளால். (17)

(ப - ரை.) சிவனின் முக்தி யடைந்தனை = ஹேவற்சையே நீ ஜீவன் முக்தையாக விளங்குகின்றனை, சிந்தைதெளிந்தனை = உள்ளிருளற்றாய், தொல்வடிவாய் = பழைய ஆகிருதியுடன், பூவலயத்து = பூவுலகின்பால், அறிவில்லவர் = மூடர், தீயவர் = துராரம்பர், மூர்க்கர், பூரியர் = துர்த்திதியர், துர்த்தேசவாசியர், என்னுமிவர்தம், மெய் = தேகங்களை, இரையாய் = பக்ஷணமாகக் கொண்டு, ஆவிவளர்த்து உறைக என்று = உயிரையோம்பி வாழுதியென்று கூறி, அயன் ஏகலும் = ஸ்ரீ பிரமதேவர் செல்லுதலும், அத்துவிதப் பரமே = சச்சிதானந்த சிவத்தையே, பாவனையுற்று = தியானஞ்செய்து கொண்டு ஒரு செய்தொழிலற்ற பதத்தில் இருந்தனள் = நிட்கிரியமாகிய பதத்திற் பாகியகல்லோல வர்ஜிதையாகி வீற்றிருந்தனள். ஆல்—அசை. (17)

(ஸ்ரீ - வீர.) மூடர் = அப்பிரஹ்ம வித்துக்கள். மூர்க்கர் = ஹிதாஹித விவேகரஹிதர். பாகிய அநாத்மவத்துக்களிற் பிரவிருத்தமாய அந்தக்கரண சம்பந்திகள் யாவையுளவோ அவைகளே யூர்மிகளாம் அவையற்றவளாகித் தொழிலிலாப்பதத் தினைப் பாறி யிருந்தாள் என்பதாம்.

(ச.) பூரியர் = துராசாரர்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமாதியினின்றும் கிளம்பிய கற்கடியின் பாகியப் பிரவிருத்தி யுணர்த்தல்:—விகற்ப என.

விகற்பமிறந்த சமாதிநெடும் பகன்மேவினள் மீளவிடா
வுகப்பொடு நெஞ்சொடுகூடினள் டொல்பசி யுன்னினள் னனுமா
றிகத்துளமட்டு முடற்குளதான வியற்கை விடாததனாற்
சகத்திலரக்கர் குலத்தொழிலான தசைப்பலி கொள்வனெனா. (18)

(ப-ரை.) விகற்பமிறந்த சமாதி = நிருவிகற்ப சமாதியில் நெடும்பகல் மேவினள் = சிரகாலம் விசிராந்தி யடைந்திருந்தனள், மீளவிடா வுகப்பொடு நெஞ்சொடு கூடினள் = மீண்டு, விடமுடியா சந்தோஷத் தோடுற்ற மனத்தோடு கூடினள், தொல்பசி யுன்னினள் = பழையபசியை யெண்ணினள், நானெனுமாறு இகத்துளமட்டும் = அகமென்னும் அபிமானத்துடன் இவ்வுலகில் வாழுங்காறும், உடற்குளதான இயற்கைவிடாது = தேகத்திற் குண்டான சுபாவம்விட்டு நீங்காது, அதனால்=அக்காரணத்தால், சகத்தில்= இவ்வுலகத்தில், அரக்கர் குலத்தொழிலான = இராக்ஷதர் வம்சப்பழக்கக் கிரியையான, தசைப்பலி = மாம்சபக்ஷணம், கொள்வன் எனா=கொள்ளுவேனென்று சிந்தித்து (18)

(ஸ்ரீ - வீர.) வாழுதல் = பிராணதாரணஞ் செய்திருத்தல், பலி=கிராசம் ஆகாரம் அவள் நிஷ்பிரபஞ்சமா யிருக்கின்ற அறிவுரூபமான ஆத்மாவை அகண்டவிருத்தி தாரையினாலே ஆசிரயித்துத் தியானித்துக் கிரிகூடம்போலச் சலனமின்றிப் பதுமாசனத்திருந்து ஆங்கே யுறைந்தனள்; பின் ஆறுமாதங் கழித்து மழைக்காலத்தில் மகாமேகத்தினுடைய நாதத்தால் மயிலானது காம உத்போகத்தை யடைவதேபோலப் போதமூற்றுச் சமாதியைவிட்டு எழுந்திருந்தனள்; எழுந்து பாகியவிருத்தியை யடைந்து மிகுந்த பசியுடையவ ளானாள். இத்தேகத்திற்குத்தான் உள்ளவரைக்கும் பசிமுதலிய இயற்கைகள் நிவிருத்தியாவ தில்லையன்றோ ! யாதைவிழுங்கலா மென்று சிந்தைசெய்தனள். வெகுவாகச் சிந்தைசெய்தும் தோன்றாமல் மௌனமாயிருப்ப " நீ போதித்தும் உணராத மூடன் உனக்குக் கவளமாவது உசிதம் " என்று தோன்றாமல் வாயு வாணியைக் கேட்டுக் குலத்தொழில் செய்வேன் என்று துணிந்தாள்.

(ச.) விகற்ப விறந்தசமாதி = வாகிய விருத்தியின் பரம்பரையற்ற சின்மயமான நிர்விகற்பசமாதியை, நெஞ்சொடு கூடினள் = சித்தமசைந்து வாகிய விருத்திமயியாய், பின் நானெனுமாறு, சத்துவம் = பிராணனுள்ள வரையில், உடற்குளதான = தேகத்திற் குரித்தான, தொழிலான = நடத்தைக்குசிரமான.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாயுபகவான் வழங்கியதும் தான் உத்தேசித்ததும் ஒப்பப் பிரஹ்மதேவருங் கூறினுரென்று சிந்தித்துக்கிராதமண்டலம் வந்தமர்தல்:—அயனென.

அயனுரை செய்தது மப்படியாதலி லந்தவுரைப் படியே
கயவருடற் பலிகொள்ளுவ னென்று களித்தி மவானயல்போய்
வயமிகுவேடுவர் மண்டலமேவி வனத்திலுறைந் திடுநா
ணயமுறு மந்திரிதன் னெடுமங் கொருநரபதி நண்ணினனல். (19)

(ப - ரை.) அயனுரை செய்தது மப்படியாதலில் = ஸ்ரீ பிரஹ்மதேவர் திருவருள் செய்ததும் அவ்வண்ணமே யாகலின், அந்த வுரைப்படியே = அவ்வசனம் போலவே, கயவருடற்பலி = தீயோர்தம் தேகபக்ஷணம், கொள்ளுவனென்று = செய்து கொள்ளுவேன் என்று, களித்து = மகிழ்ந்து, இமவான் அயல்போய் = ஹிமாசலத்தின் ருன்வரையிலேகி, வயமிகுவேடுவர் மண்டலமேவி = சர்வவளப்பங்களும் பொருந்திய கிராதமண்டலத்தை யடைந்து, வனத்தில் உறைந்திடுநாள் = அங்குள்ள காட்டில் வாசஞ்செய்து கொண்டிருந்தபோது, நயமுறு மந்திரிதன்னெடும் = சர்வதந்திர சுதந்திர மந்திரியோடுங் கூட, அங்கு = அவ்வனத்தில், ஒரு நரபதி நண்ணினன் = அத்விதீயமான மன்னவன் வந்தனன்.

(ஸ்ரீ - வீர.) அயனுரை செய்தது மூடக்கிராசஞ் செய்யலாமென்பது. களித்து = தேடித்தின்னவிரும்பி உற்சாகமரும்பி. சைலபாதமாகிய பர்வதமூலக் குறுங்குன்றுக் காட்டிலுள்ள வேடர்நாடு. சைல்சிகரத்தினின்றும் எழுந்து கிரமமாகக் கீழே இறங்கி அப்பர்வதத்தினுடைய மேல்பாகத்தை விரைவிற் கடந்து மற்றப்பருவத பூமியையுங் கடந்து ஹிமாசலத்தின் பாதபர்வதங்தளி லிராநின்ற கிராதஜன மண்டலத்திற் புகுந்தனள் இருந்தனள்.

(ச.) என்று களித்து = என்று சிந்தித்து அக்கிரிசிருங்கத்தினின்று நீங்கி, வேடுவர் = கிராதசனம், வனத்தில் உறைந்திடு நாள் = அதிலுள்ள மகாரணியத்தோரிடத்தில் வசித்திருக்குங் காலத்தில்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மன்னமந்திரிகள் சோதனையின் பொருட்டுலாவ இவர்களைப் பக்ஷிக்கலாமா ஆகாதாவென ஆலோசனை செய்தல்:—முச்சுடர்—மீளவு—என.

முச்சுடர்வந் துறினுங்கருகத் தகுமூற்றிருண் மூடிரவூ
டச்சமுறுரவர் சோதனைசெய்தலு மங்கவள் கண்டளவே
பச்சிரையாமிவர் மெய்யறிவில் லவர்பாமர ராகியுளா
ரிச்சகமேனுயிர் வாழ்விகம்பர மெங்குமி டும்பையெனு.

மீளவுநின்றுணர் வாளயன் முன்னம் விதித்தது மிப்படியே
கோளறவந் தபயன்கவ ராதவர் கொச்சை மனத்தினரே
நீளிணைந்துணர் புந்தியுநற்குண நீர்மையு மெய்தியுளார்
மாளவதஞ்செய நெஞ்செழு மோவிவர் வன்றுயர் மேவுவரோ.

(ப - ரை.) மூச்சுடர் வந்துறினும்=சோம சூரியாக்கினிகள் ஒருங்கே வந்தடைந்த போதினும்; கருகத்தகும் = இருளத்தகும் படியான, மூற்றிருள் = காடாந்தகாரம், மூடிரவூடு = வியாபித்த பேரிரவில், அச்சமுறார் அவர் = சிறிதும்பயமற்ற அவர், சோதனை செய்தலும்=பரிசோதனை செய்துகொண்டு வருதலும், அங்கவள் கண்டளவே= அவ்விடத்தி லக்கற்கடி கண்டதும், பச்சிரையாமிவர் = பச்சியமாமிவர், மெய்யறி வில்லவர் = உண்மை யுணர்வற்றவர் இவர், பாமரராகியுளார் = அத்தியந்தம் மூடராகியிருக்கின்றார், இச்சகமே லுயிர்வாழில் = இவ்வுலகத்தின் கண் வாழ்வார்களேயானால், இகம்பரமெங்கும் இடும்பையெனு = இம்மை மறுமை முழுதுமே துயரமயமாகுமென்று ஆலோசனை செய்தனள். (20)

மீளவு நின்றுணர்வாள் = மீண்டுஞ் சாவதானமாக ஆலோசிக்கின்றாள், அயன்முன்னம் விதித்ததும் இப்படியே = ஸ்ரீ பிரஹ்மதேவர் முன்பு விதானஞ் செய்ததும் இவ்வண்ணமேயாம், கோளறவந்த பயன் கவராதவர் = குற்றமற்றுத் தானேவந்த பயனைக் கிரகியாதவர், கொச்சை மனத்தினரே = மங்களமில்லாத மனத்தவரே யாவர், நீள நினைந்துணர்புந்தியும் = ஆழ்ந்தாலோசித் துணரும் மகாசயமும், குணநீர்மையும்=கல்யாணகுணங்களும், எய்தியுளார் = அடைந்திருப் பவர்களேயாயின், மாளவதஞ்செய நெஞ்செழுமோ = அத்தகையர் உயிர்துறக்குமாறு கொல்வதற்கு மனமுதயமாமோ இவர் வன்றுயர் மேவுவரோ = இவர்வலிய துன்பத்தை யடைவரோ.

(ஸ்ரீ - வீர.) முற்றிருண் மூடிரவு = காலராத்திரி, மெய்யறி வில்லவர் = அநான்மஞ்ஞர், ஆன்மாவாகக் கவரப்பெற்ற தேகம் அவசியங் காப்பாற்றத் தக்கதா யிருத்தலின், அதனையும், எங்கும் எப்போழ்தும் உபத்திரவத்தோடு கூடியதாகக் காப்பாற்றுவதற்கு முடியாத காரியமா யிருத்தலின் தேகம் பாரம்போலும் துக்ககாரணமே யாகுமென்க. இடும்பை =புருடார்த்தரூபமான சுகங்கிடையாது துயருறல். ஆதிசர்க்கத்தில் அயன் விதித்தது “ ஹிம்சனசீலர்க் கிவ்வுஜிதமன் றின்னுணவாம் ” என்பது, கொச்சை மனத்தினர் = அயோக்கியரே, இவர் ஒருகாலும் குணயுக்தராய் மகாசயராயு மிருந்துவிடலாகாது, இருப்பராயின் என்னும் போக்தவ்யரே யாவர். அக்கால் அக்கிராத ஜன மண்டலத்தில் கரத்தினாலே கவரத்தக்கதான பிண்டம்போலிருக்குங் காரிருளிரவான்து உண்டாகியக் கற்கடியின் றேழிபோலும் மற்றொரு ராக்ஷசியாக இருந்தது. காடாஞ்ஞானம்போலுங் கவின்வாய்ந்தும் மூலாஞ்ஞானம் போலும் முற்றுங் கனமுற்று மிருந்த பேரிருண்மயமாய பயங்கர அவ்விரவின் கண்ணே கற்கடி சஞ்சரித்துக்கொண் டிருக்கும்போது அந்தக்கிராதஜன மண்டலத்தையாளும் பூபாலன் மந்திரியோடும் வந்தான். மிகவும் தீரவடிவமாயிரா நின்ற அந்தவிக்கிரமன் என்னும் மன்னவன் ஜனங்கள் யாவரும் நித்திரை செய்யும்போது நகரத்தைத் தாண்டிக் கள்வர்களைக் கொல்வதின் பொருட்டாக விடமமான அக்காட்டை யடைந்தனன். அக்காட்டிற் கற்கடியானவள் தைரிய சாலிகளாயும், அஸ்திரங்களை ஹஸ்தத்திற் றரித்தவர்களாயும், கிராமத்துக்கு வெளியிலிருக்கும் கிராம தேவதையாகிய வேதாளத்தைப் பார்க்கவேண்டுமென்னும் முயற்சியோடும் சஞ்சரித்துக்கொண்டு வருகிற அந்தராஜ மந்திரிகளைக் கண்டாள்; பின் அக்கற்கடி சிந்திப்பதாவது எனக்கு ஆகாரங்கிடைத்தது, அந்தோ ! இவ்விருவரும் மகாமூடர் ஆத்ம தத்துவத்தை யறியாதவர் இவருடைய தேகமிங்கே யிருப்பது பாரமாம்;மூடர் இகலோகத்திலும் பரலோகத்திலும் ஆன்மாவை யறியாம லிருப்பதால் அழிவின் பொருட்டும் துயரத்தின் பொருட்டும் ஜீவிப்பவராவர், முயற்சியினாலே கொல்லத்தக்கவரிவர், அனர்த்தத்தை வைத்திருத்தல் தகாது. தன்னுடைய யதார்த்த சொரூபத்தை யறியாத

மூடருக்கு மரணமே ஜீவிப்பதைக் காட்டிலும் உயர்ந்ததாம்; எவ்வாறென்றால், மரண மடைந்திடின் பாவமுண்டாதற்குக் காரணமில்லாமையினாலே உயர்வானது உளதாம். சிருஷ்டியின் ஆதியில், பதுமத்து உதித்தபகவான் ஆத்மாவை யறியாதமூடர் இம்சை செய்யும் பிராணிகளுக்குப் போஜனம் ஆகுகவென நியமஞ்செய்துளார். ஆகையால் இன்று இவ்விருவரும் என்னாலேயே புசிக்கத் தக்கவராவர். இப்போதே புசிப்பேன் நிர்த்தோஷமாக அடைவுற்ற பொருளை உபேக்ஷிப்பவர்கள் அமங்கல முடையவர்களே. ஒருகால் இவ்விருவரும் ஆன்மஞான வடிவகுணத்தோடு கூடியவராயும் பெரிய ஹிருதய முடையவராயும் இருக்கவுங்கூடும்; அவ்வாறிருக்கின் அத்தகைய நரரை விநாசஞ்செய் வதில் இயற்கையாகவே எனக்குப் பிரியமில்லை. ஆகையால் இவ்விருவரையும் யான்பரீ க்ஷிப்பேனாக. மேற்கூறிய குணங்களோடு கூடியே யிருப்பார்களானால் அக்காலிவர்களை யான் பக்ஷியேன் குணமுடையவர்கள் எங்கும் என்னால் ஹிம்சிக்கப் படமாட்டார்கள்.

(ச.) இரவூடு = கிருஷ்ண பக்ஷத் தர்த்தராத்திரியில், அச்சமுறாதவர் = பயஜயத் துக் கிருளிரவிற் கடகந்தரித்துத் தனியே சஞ்சரிக்கும் வீரபுருடர், அவன் = தைரிய வதியான அக்கற்கடி, மெய்யறிவில்லவர் = அஞான்மஞ்ஞர், பாமரர் = மூடர், இடும் பையெனா, நாசநிமித்தமும் துக்கநிமித்தமும் ஆமென்றெண்ணி.

முன்னம் = ஆதிசர்க்கத்தில், விதித்ததும் = நியமஞ்செய்ததும், (இம்சைப் பிரா ணிகள் ஆத்மஞானமில்லாத மூடர்களைப் பக்ஷிக்கட்டும் என்பது நியமம்) ஆதலால் இவர் கள் அவசியம் புசிக்கத்தக்கவர்களே. கோளற + மனத்தினரே = நிர்த்தோடமாய்க் கிடைத்தபொருளை யுபேக்ஷிப்பவர் அயோக்கியரே யாவர், நெஞ்செழுமோ = என்மன துக்குச் சுபர்வமாக ருசியாது, அவர்வன்றுயர் மேவுவரோ = அக்குணசாலிகள் ஒரு போதும் இம்சிக்கப்படார். (குணம்=ஆன்மஞானவடிவம்,)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கற்கடி பெரியோரைத்தானே புகழ்தலும் அடைந்தார் அடையார் பயன்களையுரைத்தலும் வருணிக்கப்படுதல்:—வஞ்ச—அரக்கியெனா.

வஞ்சமினீள் புகழ்வாணாள் வகுப்பரிய சுகமமர்ந்தோர் வணங்கலாவா
ரெஞ்சலிலா வாவியினு மினியவராதலி னவருக்கிடரே வந்தா
லஞ்சலென வுயிர்கொடுத்து மளித்திட வேண்டினராவ ரன்பானோர்க்குத்
தஞ்சமுறக் காலனையுமுற வாக்குந்தன் மையினர்தக்க சான்றோர்.

அரக்கியெனு மியாமுதலா யுயர்ந்தோரை யாதரிக்கு மன்புகண்டா
லிரக்கமுறப் பொன்போல யாவரேவிரும் பாதாரிக லோகத்திற்
புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோ ரைக்குளிர்விப் பார்புணராதோரே
பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற் பயன்பெற்றோரே.

(ப - ரை.) நீள்புகழ் வாணாள் = விசாலமான கீர்த்தியையும் நீண்ட ஆயுளையும், வஞ்சமில் வகுப்பரிய சுகம் = ஏற்றத்தாழ்வால் வஞ்சிக்கப் பெறாத அளவற்ற ஆனந்தத் தையும், அமர்ந்தோர் = அடைய அவாவினோரால், தக்கசான்றோர் வணங்கலாவர் = குணன்விதர் சர்வாபீத தானத்தானே பூஜனீயராவர், எஞ்சல் இலா ஆவியினும் இனிய வர் = கெடாத ஜீவிதத்தினும் இன்பம்,இயற்றுபவர் சாதுக்கள், ஆதலின் அவருக்கி டரே வந்தால் = ஆகலின் அச்சாதுக்கட் கேதாவது துயரம் நேரிட்டால், அஞ்சல் என = பயப்படாதீர்கள் என்று, உயிர்கொடுத்தும் அளித்திட வேண்டினராவர் =

ஜீவிததானத்தாலும் குணமுடையவர் பரிபாலிக்கப் பெறுவர் அன்பானோர்க்கு = குணவான்களின் சங்கமென்னும் ஔடதத்தை யடைந்தவர்க்கு, தஞ்சமுறக் காலனையும் உறவாக்கும் = அடைக்கலம் அடையும்படியாக மிருத்தியுவையும் மித்திரஞ் செய்விக்கும், தன்மையினர் = பெருமை வாய்ந்தவர். அரக்கியெனும் யாமுதலாய் உயர்ந்தோரையாதரிக்கும் அன்புகண்டால் = இராக்ஷசியா யிருக்கும் எம்போன்றவரும் குணசாலிகளைக் காப்பாற்றும் நேயத்தை யுற்றுநோக்கின், இரக்கமுற = இரக்கத்தோடுகூட பொன்போல = அமலமான ஹாரம்போல, யாவரே விரும்பாதார் = யாவர்தாம் இருதயத்தின் மாட்டன்புறார், இகலோகத்தில் = இவ்வுலகில், புரக்கவரும் = இரக்ஷிக்க வாராநின்ற, நிறைமதிபோல் = பூர்ணசந்திரன்போல, புணர்ந்தோரைக் குளிர்விப்பர் = சேர்ந்தோரைச் சீதளப்படுத்துவர், புணராதோரே = குணவான்களைத் திரஸ்காரம் புரிந்தவரே, பரக்கழியா இறந்தோராம் = பரம்பொருளடைவதை யிழந்து மிருதியுற்றவராவர், புணர்ந்தோரே முத்திமுதற் பயன் பெற்றோரே = குணவான்களை யினிதாக அடைந்தவரோ சுவர்க்காபவர்க்காதி பலன்களை யடைந்துய்ந்தவரே யாவர். (23)

(ஸ்ரீ-வீர.) அமானித்வாதி குணவான்களாகிய பிரஹ்ம வித்துக்களைத் திரஸ்கரித்தல் குணிதிரஸ்காரமாம், அதுவே மிருதி—ஜீவன ப்ரநாசகமாதலின் மரணமாம்; குணிகள் சந்தோஷப்படும் படியாக நன்றாகச் சேவித்தடைதல் குணிசம்சிரயமாம் அதுவே ஜீவிதம்—சகலபுருடார்த்த மூலமாதலின் வாழ்வாம். குணிகளின் பேராசிரயம் பெற்று வாழ்பவனே சுவர்க்காதி பயன்களை யடைவன். வஞ்சனை செய்யப்படாத பேரானந்தத்தையும், கீர்த்தியையும், ஆயுளையும், மிகவும் விரும்பப்பட்டவன் குணங்களோடு கூடியவர்களை விரும்பப்பட்ட யாவற்றையுங் கொடுத்துப் பூஜிக்க வேண்டும். ஆத்மாவானது அவிநாசியா யிருத்தலால் எனதுதேகம் நாசத்தையடையினும் குணத்தோடு கூடியவரை யான்புசிக்கவே மாட்டேன். சாதுக்கள் ஜீவிதத்தைப் பார்க்கிலும் சித்தங்களைச் சுகப்படுத்துகின்றார்கள். பிராணனைக்கொடுத்தேனும் குணமுள்ளசாதுக்களை இரக்ஷிக்க வேண்டும் குணவான்கள் சங்கமென்னும் வசீகரண ஔஷதத்தினாலே மிருத்தியுவும் மித்திரத்தன்மையை யடையும்; இராக்ஷசியா யிருக்கப்பட்ட யானும் குணசாலிகளை இரக்ஷிப்பேனென்றால் அக்குணசாலிகளை அன்னியன் யெவன்றான் ஹிருதயத்தில் நிர்மலமுத்தாரம்போல இரக்ஷிக்கமாட்டான்? வ்வுலகத்திற் சிறந்த குணங்களோடு கூடியவர்களாக யாவர்கள் சஞ்சரிக்கின்றார்களோ அத்தராதல சந்திரர்கள் சங்கத்தினாலே அத்தியந்தம் அன்பர்களைச் சீதளப்படுத்துகின்றார்கள். குணவான்களின் திரஸ்காரமே மரணமாம் குணவான்களைச் சேர்தலே ஜீவிதமாம், குணவான்களைச் சேர்ந்து ஜீவித்தலினாலே சொர்க்க அபவர்க்காதி பலமுண்டாம.

(ச.) லகுப்பரிய சுகம் = அகிர்த்திரிம சுகம் அமர்ந்தோர் = அடைய இச்சைபொருந்தினவர்களால், வணங்கத் தக்கவராவர் (ஆகலின் யான் இறந்தாலும் இறப்பனே யல்லாமல் கொல்லமாட்டேன்) எஞ்சலிலா ஆவியினும் இனியவர் = சுகந்தருபவர், உயிர்கொடுத்தும் = சர்வாபிமத தானத்தாலும். உயர்ந்தோரை = குணசாலிகளை, ஆதரிக்கும் = இரக்ஷிக்கும், பொன்போல = ஆரம்போல, யாவரே = அந்நியர் யார்தான், பரக்கழியாய் = குணிதிரஸ்காரராய்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மன்ன மந்திரிகளைப் பரீக்ஷிக்க முயலுதல்:—ஆதலி—மீட்டு—என.

ஆதலினாலிவர் தம்மை யறிஞரோ வறிவிலரோ யார்கொலென்னச்
சோதனையாம் வினவுரைகள் சொல்வோ மென்றுரு மேறுந் துணுக் கென்றஞ்ச
மீதுறநின் றார்ப்பரித்து வெவ்விடிக்குப் பின்னாலிவீழ்க்குங் கார்போ
லோதரிய கொடியவன விசும்புக்கு மதியிரவி யொப்பீரென்னா. (24)

மீட்டுரைப்பாண் மாயையெனும் வெவ்விருட் யிறையின் கீழேமிளிர்ந்துமாயு
மீட்டமுறு புழுப்போல் வீரெனக்கிரையா யிக்கணத்தே யிறக்கவந்தீர்
சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர்போன்றீ ரெவர்நீர் செப்புமென்னக்
கேட்டளவே கொலையரக்கி கேளென்னத் திறல்வேந்தன் கிளத்தலுற்றான்.(25)

(ப - ரை.) ஆதலினால் = ஆகையால், இவர்தம்மை=இவ்விருவரையும், அறிஞரோ அறிவிலரோ யார்கொல் என்ன = விவேகியரோ அவிவேகியரோ யாவர்தாமிவர் என்றறியும் வண்ணம், சோதனையாம் = பரீக்ஷை செய்யும்படியான, வினவுரைகள்=பிரசின வாக்கியங்களை, சொல்வோமென்று=கற்கடி பிரயோகிப்போ மென்றெண்ணி, உருமேறுந் துணுக்கென்றஞ்ச = நெடிய இடியும் திடுக்கென்று பயப்படும் படியாக, மீதுற நின்றார்ப்பரித்து = கம்பீரமாக விநாதஞ்செய்து வெவ்விடிக்குப் பின்னாலி வீழ்க்குங் கார்போல் = கர்ஜனைசெய்த பின்னர் கரகத்தை வீழ்த்துங் கார்மேகம்போல, ஓதரிய கொடியவன விசும்புக்கு மதியிரவி யொப்பீர் என்னா = சொல்லுதற்கு முடியாத கோராடவி வியோமபதவிச் சசி பாஸ்கரர்கள் போன்றவர்களே யென்று அதிகோர வசனத்தால் விளித்தாள் மீட்டுரைப்பாள் = மீண்டும் புகல்வாள், மாயையெனும் வெவ்விருள் பாறையின் கீழே மிளிர்ந்துமாயும் ஈட்டமுறு புழுப்போல்வீர் = மகாமாயா தமப்பீட சிலைக்கோடரத்தில் தோற்றிமாயும் கூட்டமாய கீடமொப்பீர்! எனக்கிரையாய் = என்றனக்குப் பக்ஷணமாக, இக்கணத்தே இறக்கவந்தீர் = இந்நிமிடத்தே மரணமுறவந்தீர், சேட்டமுளார் போலிருந்தீர் = மகாமதி மான்கள்போலவுங் காணப்படுகின்றீர், தீயவர் போன்றீர் = துர்ப்புத்தி யுடையவர்போலவுங் காணப்பெறுகின்றீர், எவர்நீர் செப்பும் என்ன = யாவர்நீவிர் சொல்வீர்களாக வென்று, கேட்டளவே = கற்கடிய வினவிய மாத்திரத்தில், கொலையரக்கி கேளென்னத் திறல்வேந்தன் கிளர்த்தலுற்றான்= இம்சை செய்யு மியற்கைவாய்ந்த இராக்ஷசியே! உத்தரங் கூறக்கேட்பாயாக வென்று பராக்கிரமம் பொருந்திய அரசன் கூறத்தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) யார்கொல் = எத்துணைமாத்திர முணர்வுடையவர்? கற்கடி = அரக்கர்குல கானனத்தின் மஞ்சரியானவள். கோரவசனம் = உங்காரத்துடன் க்ரூரவசனம். கரகம் = ஆலங்கட்டி, அதுவேயாய அசனி. கர்ஜனையின் அநந்தர முண்டாயயாதொரு கரக அசனியின் சப்தமுளதோ அதுபோலத் தோற்றும் வசனம். கோர அடவியே ஆகாயமார்க்கம் அதன்சசிபாஸ்கரர். மகாமாயையேயாய அந்தகாரத்திருக்கும் பீடவடிவ சிலையின் சித்திரத்தி லுழலும் புழுக்களே! எனக்கிரையாய் = என்கவளத் தானமாய்; ஆகையால் இவ்விருவரையும் ஏதாவது வினாவிளையாட்டால் யான் பரீக்ஷிப்பேன், இத்தாமரை யிதழ்போன்ற நேத்திரமுடைய இவர்கள் எத்துணைமாத்திர ஞானமுடையவர்க ளென்பதையும் யான் பரீக்ஷிப்பேன். ஆதியில் குணமுள்ளவனா குணமில்லவனா குணலேசத்தோடுங் கூடியுள்ளவனா என்பதை விசாரித்துப் பின்னர் தன்னைப் பார்க்கிலும் அதிகதர குணமுள்ளவனாவென விசாரித்துக் குணமில்லாதவனா யிருப்பின் அதன் பின்னர் நன்றாகச் சாஸ்திரத்தில் ஓதப்பெற்ற திருஷ்டியாலும் உபபத்தி வசத்தாலும்

யுக்திக்குப் பொருத்தமானபடி தண்டிக்கயோக்கியனை தண்டனைசெய்க; தன்னைப்பார்க்கிலும் குணங்களால் அதிசய முற்றவனுயினே தண்டனை செய்யாதொழிக வென்னும் நியமத்தை யனுசரித்துச் சோதனைசெய்ய முயன்றதார். பின் னரக்கர்குலமாகிய ஆரண்யத்தில் போதசுகந்த மகரந்த மதுரத்தன்மையாற் பூங்கொத்துப்போல்விளங்கும் அந்த ராக்ஷசியானவள் அவ்விருளிற்றுனே மேகம்போலக் கம்பீரமாய்க் கர்ச்சனை செய்தனள். கர்ச்சித்த பின்னர் உண்டாகாநின்ற ஆலங்கட்டி இடிச்சப்தம்போலத் தன்கர்ச்சனையின் ஈற்றில் சப்தத்தினுலே ஹுங்கார பீஷணத் தன்மையை யுடையதேனும் அர்த்தத்தினுலே நிஷ்டூர மில்லாததான இவ்வசனத்தைக் கூறத்தொடங்கினுள்; போ ! போ !! அதிகோரமான அடவிவடிவ வியோம பதவிக்குப் பிரகாசத் தன்மையானே சந்திர சூரியர்கள் போன்றும், மகாமாயாதமவடிவ சர்வபூத ஆதாரபீட பூதமான பாறையின் கீழிருக்குங் கோடரத்துள்ள கீடம்போன்றும் உள்ளீர் ! என்றதனுனே தான் ஆன்மாவை யறிந்திருக்குந் தன்மையையும் குறிப்பித்தனள். நீவிர்யார் புத்திக்குச் சாபல்யமான ஆன்மஞானத்தை யடைந்து பூஜ்யபுத்தி யுடையீரா, அஃதில்லாமல் புத்திக்குவியர்த்தத் தன்மையைச் சம்பாதித்துத் துர்ப்புத்தியுடையீரா, நீர் இங்கு என்வந்தீர் எனக்குணவாகுந் தன்மையை யடைந்தீர், இதோகணத்தில் மரணமா யுபத்திரவப்படத் தக்கவராயினீர் எனக்கேட்ட அரசன் கூறத்தொடங்கினுன்.

(ச.) சோதனையாம் = எப்பூமியில் வர்த்தமானர்கள் இவர்கள் என்னும் பரீக்ஷைக்கேதுவாகிய. கொடியவனவிசும்புக்கு = கோராடவி யென்னும் வியோமத்துக்கு; என்ற = என்றுசொல்லி.

மாயை = மகாமாயை, என்னும், வெவ்விருட் பாறையின் கீழே = அஞ்ஞானஸ்தானத்தின் கோடரத்தில், சேட்டமுளார் = மகாபுத்திமான்கள், தீயவர் = துற்புத்தியுடையவர், எவர் நீர் = என்பது வினு.

(25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கற்கடியினுடைய பயங்கரமான சப்தத்தினுலும் பயத்தை யடையாத மன்னவன் கற்கடியைக் கண்டு வருந்த வேண்டாமெனல்,—எவ்வுழியென.

எவ்வுழி நின்றனை நீ யிங்கிவசத்த வெலாமிள வண்டினிரைச் சல்போலச்
செவ்விது கேட்டன மென்னவரக்கியு நன்றென்றெதி ரேசிரித்தலோடும்
வெவ்விய பல்லொளியாலே வெளியாகக் கண்டிறையும் வெருவலின்றி
மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ வருந்தலென மன்னன்சொல்வான்.

(ப - ரை.) போ ! போ !! பூதமே ! எவ்வுழி நின்றனை = எங்கே நிற்கின்றனை, நீயிங் கிசைத்தவெலாம் = நீ இவ்விடத்தி லிப்போது கூறியவையாவும், இளவண்டின் = வண்டுக்குஞ்சின் இரைச்சல்போல = அற்பசப்தம்போல, செவ்விது கேட்டனம் = நன்குசெவி கொண்டோம், என்ன = என்றுபயமின்றி யரசன்கூற, அரக்கியும் = கற்கடியும், நன்றென்றெதிரே சிரித்தலோடும் = கூறியது இரம்மியமாக இருக்கின்றதென்று சிந்தித்து எதிரில் கர்ச்சித்துச் சிரித்தலோடும், வெவ்விய = கொடூரமான, பல்லொளியாலே = தந்தகாந்தியினுலே, வெளியாகக் கண்டிறையும் = சப்தமுண்டான இடத்தில் அவள் ஆகிருதியை இறைவன் நோக்கிய போதினும், வெருவல் இன்றி = ஒரு சிறிது மஞ்சாதவனுகி, மைவரைபோல் வாய்திறந்து = அஞ்சனுசலம் போல வாய் திறந்து, வாளாநீ = வீணுகநீ, வருந்தல் என = வருந்தவேண்டா மென்று, மன்னன் சொல்வான் = அரசன் சொல்லுகின்றுன்.

(ஸ்ரீ - விர.) பெண்வண்டுக் குஞ்சின் அற்ப ஓசைக்குச் சமானமாம் நினது கூச்சல். சப்தத்தோடு கூடிய பிரசண்டமான சிரிப்பின் பிரபைமிகுதியால் தூரத்தில் அவள் ஆகிருதி தோற்றியதெனக் கொள்க. சிரித்தலினாலே தந்தப்பிரபை பரவுதலின் அங்ஙனமாதல் கூடுமென்றோ. கர்ச்சித்தசப்தம் பிரளய இடிக்கொப்பாகத் தெணித்தபோதினும் கலங்காது கண்டனர். போ! போ!! = சம்போதனம். அற்பபூதமே, நீயார் சொல், நீ யெங்கே நிற்கின்றாய், நினது அற்பதேகத்தைக் காட்டுவாயாக, இளவண்டின் இரைச்சல்போன்ற நினது கூச்சலுக்கு யார் அச்ச முறுவார், ஒருவருமஞ்சார், ஹே நல்லவிரதத்தையுடைய பூதமே உனக்கு யாது வேண்டும், நீ ஆன்மஞான மடைந்திருப்பதை யானறிந்து கொண்டேன், பயங்கர சப்தங்களினாலே யெங்களைப் பயப்படுத்து கின்றாயா? அல்லது நீதான் பயப்படுகிறாயா? எதிரேவா பார்ப்போம், என்று அரசன் அறைந்த போது இவன் இரம்மியமாகக் கூறினானென்று நன்கு சிந்தித்துக் கற்கடியானவள் அவ்விருவருக்கும் விளக்கமாய்த்தான் தெரிவதற்காகவும் அவர்களுக்கு அதைரியமுண்டாக்குவதற்காகவும் பெருங்கர்ச்சனை செய்து பெரிது நகைத்தனள். அதன்பின் அவளை அவர்கள் கண்டார்கள். அவள்செய்த சப்தமானது எட்டுத்திக்குகளையும் கிடுகிடாய்த்துவிட்டது, அட்டகாசஞ் செய்ததினாலே தோற்றிய தந்தங்களின் காந்தி மிகுதியாற் பெரிய ஆகிருதி யுடையவளாகக் காணப்பட்டனள். அப்போதவள் பிரளய காலத்து மேகத்திலிருந்து வீழாநின்ற இடியினுடைய உறைதலாலே பொடிபண்ணப்பட்ட பருவதத்தின் தாழ்வரைபோலவும் தன்னுடைய கண்கள் என்னும் மின்னற்களாலேயும், சங்குவளையல் வடிவக்கொக்குகளாலேயும், ஆகாயத்தை விளக்கிக்கொண்டு மிருந்தனள். அவளைக் கண்டபின் அம்மகா வீரர்களிருவரும் சிறிதும் கலங்காதவர்களாகி நின்றவண்ணமே யிருந்தார்கள், சத்தியத்தையும் அசத்தியத்தையும் பகுத்துணர்ந்த விவேகிகளினுடைய சித்தத்தை மிக மயக்குதற்குரிய வஸ்து ஒன்றுமில்லை யன்றோ.

(ச.) என்ன = இத்தொனிக் கெவன் பயப்படுவன் என்று கூற, நன்றென்று = இரம்மியஞ் சொல்லப்பட்டதென்று, சிரித்தலோடும் = அவர்கட்குத் தன்வடிவு பிரகாசித்தற்கும் அதைரியமாதற்குங் கர்ச்சித்து அட்டகாசஞ் செய்யவும், வெளியாக அக்கற்கடியைக் கண்டு. (26)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நீ பெரியவளாக இருப்பின் அற்பகாரியத்தில் இவ்வளவு படபடப்பு வேண்டியதில்லை யென்பதாகப் பரமசாந்தத் தோடும் சாமத்தாற் சமாதானப் படுத்த வேட்கையுற்ற மந்திரிகூறல்:—எய்தாவென.

எய்தாநின் றுளபயனுக் கியற்றாதா ரில்லையா மென்றபோது
நொய்தான கருமத்தி னொய்தானோர் விரைந்திடுவர் நொய்மைதோன்ற
வைதானபுந்தியினா லாறுதலா லறிவுடையோ ரனைத்துஞ் செய்வர்
வெய்தாவுன் போல்வாரைக் கொதுகென வீசிடுமெங்கள் வீரக்காற்று.

(ப - ரை.) எய்தாநின்றுளை பயனுக்கு = அடையவேண்டிய பிரயோஜனத்திற்கு, இயற்றாதாரில்லையாம் = முயற்சி செய்யாதவ ரிலராவர், என்றபோதும் = என்றபோதினும், நொய்தான் கருமத்தில் = அற்பமான காரியத்தில், நொய்தானோர் = அற்பமதியினர், நொய்மை தோன்ற விரைந்திடுவர் = தமது அற்பத்தகைமை வெளிப்படும் படியாக ஆத்திரப்பட்டு முயல்வர், ஐதானபுந்தியினால் = பொறுமையோடு கூடியழகாகிய மதியினால், ஆறுதலாம் = பரமசாந்தத்துடன், அறிவுடையோர் = விவேகமிகுந்தவர், அனைத்தும் செய்வர் = யாவற்றையும் செய்து முடிப்பர்; வெய்தாவுன்போல் வாரை =

கொடியாராகிய வுன்போன்றவரை, கொதுகென வீசிடும் எங்கள் வீரக்காற்று = எங்களது தைரியவாயுவானது மசகத்துக்குச் சமானமாகத் தூர எறிந்துவிடும்.

(ஸ்ரீ - வீர.) நீனது கோபாதி யாடம்பரத்தை யொழித்துச் சாந்தமடைதி யென்பார் நொய்மை யென்றார். அனைத்தும் = சாத்திய யோக்கியமான யாவற்றையும்; என்றதால் வெற்றி யெங்கள்பாலதேயென்றதாம். தீரதையேயாகிய சக்கிரவாதத்தால் விசேடமாகத்திருண பர்ணமொப்பத் துட்டராகிய வுன்போல்வார் தூற்றப்படுவார். ஹே மகா இராக்ஷசியே ! நினக்கு நீ விரும்பியது சித்திப்பதில் நிரதிசய சொரூபமான இக்கோபம் யாதின்பொருட்டோ ! வாக்குமாத்திரத்தானே லபிக்கும்படியான ஆகாரலாபவடிவ காரியத்தில் குரோத சாகசாதிகட்கு யாதொரு பிரயோஜனத்தையுங் காணோமே, நீசினனவளாக இருப்பின் நாங்கள் பயப்படவும் மாட்டோமே, அற்பர்கள் அற்பமான காரியத்திலும் தங்கள் அற்பத்தன்மை தோன்ற அதிசம்பிரமத்தோடும் ஆரம்பிக்கின்றனர். என்று மந்திரிகூறிச் சாமத்தால் மீண்டும் முதற்கற்பத்தையே பின்பற்றிக் கூறுகின்றார் ஐதான, கோபத்தோடு கூடிய இந்த ஆடம்பரத்தை விடுதி, இந்த ஆடம்பரமானது நினக்கு அழகாக இல்லை, தங்களுடைய காரியத்தைச் சாதிக்கமுயலும் மதிமான்கள் விஷயங்களிற் சாந்தமாக முயலுகின்றார்கள்; அதாவது மதிமான்கள் சாமத்தாற் சாதிக்கக்கூடிய பொருளில் தண்டத்தை யனுசரிக்க மாட்டார்கள் என்பதாம். மீண்டும் இரண்டாவது கற்பத்தைப் பின்பற்றி நினது தண்டமுயற்சி வீணாகுமென மந்திரிகூறுகின்றார். வெய்தா, ஹே அபலே ! கொதுகுபோன்ற நின்னையொத்த ஆயிரக்கணக்கானவர்கள், எங்களுடைய தீரத்தன்மையாகிய காற்றினாலே துரும்பு சருகுகள் போலப் பறந்தோடிப் போவார்கள். பெரியவள் முதற்கற்பம், சின்னவள் இரண்டாவது கற்பம். ஐதானவென்றது முதலதை யனுசரித்தது, வெய்தா வென்றது இரண்டாவதை யனுசரித்தது என்பது விவேகம்.

(ச.) எய்தாநின்றுள பயனுக்கு = சுவப்பிரயோஜன சித்திக்கு, இயற்றாதார் = ஆரம்பமிகாதவர். நொய்மைதோன்ற = நிஷ்பலத்தைத் தெரிவிக்க, நீயாரம்பமிகுதியை விடு நினக்கு இவ்வாரம்பந்தகாது, ஐதான = சுவார்த்வ சாதகமாகிய, அனைத்துஞ்செய்வர் = விஷயத்திற் பிரவிர்த்திப்பர், வீரக்காற்று = தைரிய பிரசண்டம் = வாயுக்களின் சமூகம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் எங்ஙனம் தான் விரும்பிய பொருள் சித்திக்குமெனின் ? மந்திரிகூறல்:—ஆதலாலெனெ.

ஆதலால் விரைவை யொழியுன் கருத்தையுரை யெங்களருகு வந்தோர்
காதலாலிரந்த பொருள் கனவிலுநல்குவ மென்று கழறலோடும்
போதமுங் கல்வியும்வலியும் பொறையு மளவிலரென்றே புந்திசெய்தாள்
மேதகமா மவருரையை மிகவியந்தா ளிழிவிலாமெய்ம்மை கண்டாள் (28)

(ப - ரை.) ஆதலால் விரைவையொழி = ஆகையால் உனது அவசர ஆடம்பரத்தை விடுதி, உன்கருத்தையுரை = உன்னுடைய அபிப்பிராயத்தைக் கூறுதி, எங்கள் அருகு வந்தோர் = எங்களுடைய சமீபத்தில் யாசகார்த்தம் வந்தவர்கள், காதலால் = இச்சையால், இரந்தபொருள் = யாசித்தவத்துவை, கனவிலும் = சொப்பனத்தின் கண்ணும், நல்குவம் = கொடுப்போம், என்று கழறலோடு = என்றிவ் வண்ணம் கூறியபோது, போதமும் கல்வியும் வலியும் பொறையும் அளவிலர் என்றேபுந்தி செய்தாள் = ஞானமும் சாஸ்திர பாண்டித்தியமும், சரீரசாமர்த்தியமும், மனத்தி லுபசாந்தியும் அபரிமித

மாக வுடைத்தா யிருக்கின்றார்கள் என்றறிந்து கொண்டாள், மேதகமாம் அவர் உரையை = மகாமேன்மைதங்கிய அவர்தம் வாக்கியங்களை, மிகவியந்தாள் = அதியற்புதமெனக் கேட்டாச்சரியப் பட்டாள், அழிவிலா மெய்ம்மை கண்டாள் = கெடாத உண்மையைத் தரிசித்தாள்.

(ஸ்ரீ - வீர.) விவகார அநுகூலமாகிய ஊகங்களால் விவேகிகள் தற்பொருள் சாதிப்பராதலின் நீ விரைதல் நலனன்றாம். ஞான முடைமையானே இவர்மனம் சத்துவமாயும் சகிப்புற்றதாயும் உளதெனத் துணிந்தாள். கோபாதிகளை வாயிலாய் வைப்பதை விடுத்துச் சமத்தோடுந் தெளிவோடுங் கூடியபுத்தியினாலும் யுக்தியினாலும் அறிஞர்கள் விவகரிப்பதேபோலத் தக்கபடி அறிவுடையோர் விவகரித்துத் தங்காரியத்தை முடிப்பர். காரிய சித்தியின் சம்சயமிருப்பினும் அநாதி நியதிசித்தமான சாம உபாயத்தை விடக்கூடா தென்றால், அது நிச்சயமாகி யிருந்தவழி யென்ன சொல்ல வேண்டியதுளது, தானாகவே விவகாரத்தினாலே காரியம் சித்திக்குக அலது சித்தியாதொழிக, மகாநியதி யிவ்வாறே யிருக்கும். மயங்கியவனுக்குத் தக்கதா யிராநின்ற கோபத்திற்கு உன்பாலிடமேது கூறுதி, ஆயின் எங்ஙனம் சாமத்தாற் சித்திக்குமெனின்? உன்கருத்தையுரை நினது அபிப்பிராய மென்ன கூறுதி, விரும்பியநினக்கு என்னவேண்டும் கூறுதி, யாசித்தவன் கனவினும் எங்கள் முன்பு விரும்பிய பொருளை யடையாமற் போனதே கிடையாது. இவ்வண்ணம் அமைச்சன் அறைந்ததைக் கேட்ட ராக்ஷசி சிந்திப்பதாவது:—அகோ! அற்புதம், சிங்கம்போன்ற இவர்தம் தைரியமும் புத்திபலமும் நிருமலமான ஆசாரத்தோடு கூடியிருக்கின்றது. இவ்விருவரையும் யான் சாமானியமாக எண்ண முடியாது, என்னை யிவர்தம் சமத்கிருதியானது விசித்திரமாக இருக்கிறது என்று சிந்தித்தாள்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) அறிகுறிகளாற் பெரியோரை யறிதலும் அவரெதிர்ப்படின் சந்தேகநீக்கஞ் செயவேண்டிய அவசியமும் உரைத்தல்.—வாக்கென.

வாக்குமுகங் கண்களான் மாறுபடா துயர்ந்தோர்தம் மறுவில்சித்த
மேக்குயரு மிவற்றாலே யுண்ணினைவு மறியலாமே லோர்தாமே
பாக்கியம்போல் வந்தெய்திற் சந்தேகந் தெளியாதார் பதகராகுந்
தாக்குமுரையா லிவரையறிது மெனாயாவர் நீர்சாற்றுமென்றாள்.

(ப - ரை.) வாக்கு முகம் கண்களால் = வசனம் வக்திரம் ஈக்ஷணங்கள் என்பவற்றால், உயர்ந்தோர்தம் மறு இல் சித்தம் மாறுபடாது = பெரியோர்களுடைய குற்றமற்ற உள் நிச்சயம் திரிபையுறாது, மேக்குயரும் இவற்றாலே = மேன்மை பொருந்திய இவ் வாக்காதிகளாலே, உண்ணினைவும் அறியலாம்=உட்கருத்தையும் உணரலாம். மேலோர் தாமே = பெரியோர்கள் தாங்களே, பாக்கியம்போல் வந்தெய்தில் = பெரும்புண்ணியத்தால் ஐசுவர்யங் கிடைப்பதேபோல வந்து தரிசனந்தரில், சந்தேகந் தெளியாதார் பதகராகும் = ஐயத்தைத் தீர்த்துக் கொள்ளாதவர் நராதமர் ஆவர், தாக்குமுரையால் இவரை அறிதும் எனா = வினாவசனத்தால் இவர்தமை அறிந்துகொள்ளுவோ மென்று, யாவர் நீர் சாற்றும் என்றாள் = எவர்கொனீவிர் உரைப்பீராக என்று கூறினாள்.

(ஸ்ரீ - வீர.) வாக்கினாலும் வதனததிற் காணப்பட்ட தெளிவு முதலிய குறிகளாலுமே உள்ளேயிருக்கும் தத்துவ நிச்சயமானது குறிப்பிக்கப் படுகின்றது, வசன வக்திர ஈக்ஷணவாயிலால் மதிமான்களுடைய கருத்துகள் நதிகளின் நீர்கள் ஓடியோடிச் சங்கமத்தாலொன்று சேர்வதேபோலப் பரஸ்பரம் ஒன்றாக இருக்கின்றன. இருதயங்களி

னுடைய அபிப்பிராயங்களின் பரஸ்பரமுள்ள ஒருமைப்பாடே தன்கருத்தைக் காட்டும் ஆகலின் என்னுடைய அபிப்பிராயமானது இவர்களாற் பெரும்பாலும் நன்றாக அறியப் பட்டது. இவர்களுடைய கருத்தும் என்னால் இனிதுணரப் பெற்றது, என்னாலிவர்கள் கொல்லத்தகாதவர்கள்; அவிநாசியாகிய பிரஹ்மரூபத் தன்மையானே தாமாகமவே அவி நாசியாக இருப்பவர்கள்; இவர்கள் ஆத்மஞானிகளாக இருப்பார்களென் றெண்ணுகின் றேன். பொய்ம்மைத் துணிவானே ஜீவனமரணங்களைத் துணிந்து தள்ளும்படியான ஆத்மஞானமானது இல்லாதிருக்கும் பக்ஷத்தில் மரணத்தின் கண்ணிவ்வாறு பயமற்றி ருக்கும்படியான புத்தி யுண்டாக மாட்டாதன்றோ! ஆகையால் இவ்விருவர்களையும் சிறிது எழுந்த சந்தேகங்களைப்பற்றி இனிதாகவினவுவேன். அறிஞரை யடையப்பெற்று எம்மூடர்கள் வினவி ஐயம் தெரிந்துகொள்ள வில்லையோ அம்மூடர்கள் நராதமர்களாவர் கள்! என இவ்வண்ணஞ் சிந்தித்துக் கேட்பதற்கு அவசரத்தைப் பெற்றுப்பின் அகாலத் திலுண்டான பிரளயகால மேகம்போலக் கர்ஜிக்கும் பரிகாச முதலியவற்றை யடக்கிக் கொண்டு இவ்வாறு கூறினாள். ஹே பாவமற்ற தீரர்களாகிய புருடோத்தமர்களே! நீங் கள் இருவரும் எத்தகையர்கள் என்பதை எனக்குக் கூறுவீர்களாக. தெளிந்த சித்த முடையவர்களுக்குத் தரிசனத்தினாலேயே மைத்திரியான துண்டாகின்ற தன்றோ என் றனள்.

(ச.) சித்தம் மாறுபடாது = கருத்தொன்றுக் கொன்று பேதமுறாது, இவற்றாலே = வசன வதனேக்ஷணத் துவாரங்களால், உண்ணினைவும் = அகத்துறு நிச்சயமும் அன் னியோன்னியம் அறியலாம், இங்கிதா காரங்களாற் பரஸ்பராபிப் பிராயத்தைப் பரீக்ஷித் துப் புத்திமான்கள் சமரச சுபாவத்தை யடைவரென்பது பொருள், பதகர் = நராதமர் இவரை = பாவரகிதரான இத்தீரபுருடரை. எஞ = என்று சிந்தித்து. (29)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தாங்கள் இன்னார்கள் என்பதையும் வந்தகாரியம் இன்ன தென்பதையும் மந்திரிகூறல்:—வினையென.

வினையமுற வரக்கியிது விளம்பிடமந்திரி விளம்பும் வேடர்க்கெல்லா
மினையவன் மன்னவனமைச்ச ஞனுகுமிருட் போதி லெங்குநாடி
யுனைநிகர்வாரைச் சோதித்தொறு கவுயிரொடுக்க வுயிர்நிறுத்த வந்தோம்
நினைவிது வந்ததற்கென்ன விவன்கூற மீண்டந்த நிருதிகூறும்.

(ப - ரை) வினையமுற = வணக்கத்துடன், அரக்கியது = இராக்ஷசி இதனை, விளம்பிட மந்திரி விளம்பும் = கூறியவுடனே மந்திரி கூறுவதாவது, வேடர்க்கெல்லாம், கிராதர்கட் கெல்லாம், இனையவன் மன்னவன் = இவர் அரசர் ஆவர், அமைச்சன் நானு கும் = யான் ஆமாத்தியனுவேன், இருட்போதில் = அந்தகார சமயத்தில், எங்கும் நாடி = எவ்விடத்திலுஞ் சுற்றிப்பார்த்து, உனை நிகர்வாரைச் சோதித்து ஒறுக்க = உன் போன்ற துட்டரைப் பரீக்ஷித்து நிக்கிரகஞ்செய்ய, மீறினல், உயிர் ஒடுக்க = பிராண பகரணஞ் செய்ய, உயிர்நிறுத்த = சிட்டருக்கு வந்துற்ற ஆபத்தை நீக்கிக் காப்பாற்ற, வந்தோம் = வந்துற்றோம், நினைவிது வந்ததற் கென்ன = இரவினும் பகலினும் இறை வருக் கறனெனல், பரவுறு கயவரைப் பண்படுத்துவதே என்னும் இந்நினைவே வந்திங் கடைந்த காரணம் என்று, இவன்கூற மீண்டந்த நிருதிகூறும் = இம்மந்திரியியம்ப மீளவும் அவ்விராக்ஷசி கூறுவாளாயினள்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராக்ஷசியே! வேடர்களுக் கெல்லாம் இவன் அரசனுவன் இவ னுக்கு யான் மந்திரியா யிருக்கின்றேன்; நின்னைப்போன்ற இம்சைசெய்யும் ஜந்துக்களை

இரவிற் பரிசோதனைசெய்து நன்றாக நிக்கிரகிக்கும் பொருட்டு முயன்று வந்திருக்கின்றோம். இரவும் பகலும் மன்னவனுக்குத் துஷ்டப்பிராணிகளை நிக்கிரகஞ்செய்வதே தர்மமாம், சுதர்மத்தை எவர்கள் தியாகஞ் செய்கின்றார்களோ அவர்கள் விநாச அக்கினிக்கு விறகு ஆவர்கள். (30)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இனிச் செய்யப்படும் வினாவிற்கு உபோத்காதம் வரைந்து கொண்டு கூறுதல்:—தீயவென.

தீயவனு மந்திரியானல் வேந்துந்தீ வேந்தாந் தீமையில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்து நல்வேந்தாந் தொடர்ச்சிபோல
வாயநெறி மன்னவரா லமைச்சருமப் படியாகு மாதலாலே
நேயவிவேகத் தமைச்ச னுண்டாகி லெப்பயனு நிருபர்க் குண்டாம்.

(ப - ரை.) தீயவனு மந்திரியால் = கெட்ட எண்ணத்தோடு கூடிய அமைச்சனால், நல்வேந்தும் தீவேந்தாம் = நல்லகுண அரசனும் துர்க்குண இறைவனாய் விடுவன், தீமையில்லாத் தூயவனும் மந்திரியால் = துராலோசனை யின்றிய பரிசுத்த குணமுடைய ஆமாத்தியனால், தீவேந்தும் நல்வேந்தாம் = கொடுங்கோன் மன்னனும் செங்கோன் மன்னனாய் விடுவன், தொடர்ச்சிபோல = இச்சம்பந்தமேபோல, ஆயநெறி மன்னவரால் = மனுநூன் மார்க்கப் பிரகாரம் ஆட்சிசெய்யு மரசரால், அமைச்சரும் அப்படியாகும் = மந்திரிமாரும் அவ்வாறேயாவர், ஆதலாலே = ஆகையினால், நேயவிவேகத் தமைச்சன் = தலைவனிடத்தன்பும் அறிவும் கருணையும் உள்ள மந்திரி, உண்டாகில் எப்பயனும் நிருபர்க்குண்டாம் = பிராப்தமானால் அரசருக்கு இகபர சர்வப்பிரயோஜனங்களுமே பிராப்தமாம்.

(ஸ்ரீ - வீர.) நிருபன் துர்மந்திரி யுடையவன் ஆகலாகாது, மந்திரியும் நன்னிருபன் உடையவனே ஆகவேண்டும், நன் மந்திரியுடையவனே யரசனும் ஆகவேண்டும் என்பதாம். அரசனுக்குச் சன்மந்திரியோடு கூடியிருப்பது சிறப்பாகவே காணத்தக்கதாம் எனக்கருதிக் கூறுவார், நேய—உண்டாம் என்றார். விருத்தர்களோடும் விரவியேயுறுக வென்பது மன்னவர் நீதியாம். துஷ்டமந்திரியை யுடையவன் நல்ல அரசனாகான், நல்ல அரசனுக்கே நல்லமந்திரி கிட்டுவன், நல்லமந்திரிக்கே நல்ல அரசன் கிடைப்பன். அரசன் முதலில் நல்லமந்திரியால் மிகுந்த விவேகத்தை யடைவன் அதனால் மிகவும் சிறப்பையுஞ் செறிவன்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) ஞானநூற் கற்றவரே யமைச்ச ரரசராகத் தகுதியராகலின் அவ்வாறிலராயினோ நீர்நல மிழந்தீரெனல்:—மன்னவென.

மன்னவனெப்படி யுலகின் மன்னுயிரு மப்படியா மகிமைதானு
நன்னடுவுநிலைமையு மெய்ஞ்ஞான நூறெளிந்த வர்க்கே நண்ணுநிற்கு
மன்னது கற்றிலரென்னி லரசரமைச்சர்க ளென்போ ரயத்தராகு
மின்னகலையிலதாகி லெனக்கிரையா யினமைநல மிழந்தீரன்றே. (32)

(ப - ரை.) மன்னவனெப்படி யுலகில் மன்னுயிரும் அப்படியாம் = ஜகத்தில் எப்படி ராஜாவோ அப்படியே பிரஜையும் ஆம், மகிமைதானும் நல் நடுவுநிலைமையும் = பிரபுத்தன்மையும் சமதிருஷ்டித் தன்மையும், மெய்ஞ்ஞானநூல் தெளிந்தவர்க்கே நண்ணுநிற்கும் = உண்மை ஞானத்தை யுணர்த்தும் அரசவித்தைச் சாஸ்திர சிரவணஞ்செய்த அரசருக்கே யுண்டாகும், அன்னது கற்றிலரென்னில் = அந்தராஜ வித்தையை யறிந்தி

லராகில், அரசர் அமைச்சர்க ளென்போர் அபத்தராகும் — ராஜாமந்திரி யெனப்படுபவர் பெயர்ப்போலியரே யாவர், இன்னகலே யிலதாகில் = இந்தராஜ வித்தையை நீங்கள் படித்துணர்ந்திரா திருப்பீரேல் எனக்கிரையாய் இளமை நலம் இன்றே இழந்தீர் = என் றவனுக் காகாரமாய் யவ்வனுதி நன்மைகளை இப்போதே இழந்தவராவீர்.

(ஸ்ரீ-வீர.) ராஜவித்தை = ராஜநீதி பரிஞானம், அல்லது, வித்தைகளுக்குள் ராஜா வாதலின் ராஜவித்தை பிரஹ்மவித்தையாம். " ராஜவித்தை ராஜகுஹ்யம்" எனஸ்மிருதி யிருத்தலின் என்றுணர்க. இதுவே பொருள் இதற்கெனப் பிருகத் வாசிஷ்டபத்தியத் தாற் புடமாகப் புலப்படும். எவ்வாறரசனுளனே அவ்வாறே பிரஜைகளும் ஆம், சமஸ்த குண ஜாலங்களுக்குள்ளும் அத்யாத்ம ஞானமே உத்தமோத்தமமாம் அந்த பிரஹ்மஞா னத்தை யடைந்த ராஜாவே ராஜாவாவன், ஞானத்தையடைந்த மந்திரியே விசாரரகசி யங்களை யுணர்ந்தவனுவன் " எந்தக்கருமமானது பந்தத்தை யுண்டாக்காதோ அதுவே நல்லகருமமாம், எதுமோக்ஷத்தைக் கொடுக்குமோ அதுவே வித்தையாம், அந்நியகரு மங்க ளெல்லாம் ஆயாசத்தின் பொருட்டாவனவாம், அந்நியவித்தைகள் சிற்பசாமர்த்தி யம் போன்றனவாம் " என்று கூறியிருக்கின்றார் பெரியர். பிரபுத்தன்மையானது சம திருஷ்டித்தன்மையின் அதீனமா யிருத்தலின் ஆயுள் நெய்யென்பதுபோல அவ்வுருவ தாக ஆரோபித்தலால் சமதிருஷ்டித் தன்மையாம். வித்தைகளுக்குள் ராஜாவாயிருக்கும் ராஜவித்தை யென்னும் ஆத்மவித்தையினுலே அச்சமதிருஷ்டியு முண்டாம் அதனையே யாவன் அறியவில்லையோ அவன் மந்திரியுமாகான், ராஜாவு மாகான், நாயின்பாலும் நாய்க்கறிப் போர்பாலும் அறிஞர்கள் சமதிருஷ்டியை உடைத்தா யிருப்பார்கள், என ஸ்ரீ பகவானுங் கூறியுள்ளார், நீங்கள் அந்த ஞானத்தையடைந்து சாதுக்களாக இருப் பீர்களேயானுல், அதற்குத்தக்க மேன்மையையே யடைவீர்கள், அவ்வாறின்றேல் எவ் வாறு அரசனே அவ்வாறு பிரஜைகளும் ஆம், என்று முற்கூறியிருத்தலின் அரசன்மூர்க் கனுயின் பிரஜைகளும் மூர்க்கராதல் விலக்கக் கூடாமையின் அவர்களுக்கும் அனர்த்தத் தையே கொடுத்துக்கொண்டிருக்கும் உங்களையான் பக்ஷித்தேவிடுவேன், துஷ்டர்களைப் பக்ஷிப்பது என தியற்கையாகும்.

(ச.) மகிமைதானும் = பிரபுத்துவமும், நன்னடுவு நிலைமையும் = சமதிருஷ்டித்து வமும், அன்னது = அந்தப் பிரபுத்துவமும் சமதிருஷ்டித்துவமும், அபத்தராகும் = நிருபனுமன்று மந்திரியுமன்றும்; இன்னகலே = முற்கூறிய இராஜமந்திரிகளின் குணம், அஃதுண்டெனிற் சிரேயசை யடைவீர்க ளென்பதருத்தாபத்தி எனக்கு = இராக்ஷத சுபாவத்தையுடைய எனக்கு

(ஸ்ரீ - வீர - அ - கை.) வினவுக்கு விடைதரின் மங்களமும் அல்லாக்கால் அமங்கள மும் ஆம் எனல்:—சிங்கமென.

சிங்கமெனு முங்களையான் செப்புகின்ற வினுக்கூட்டிற்சிறை செய்கின்றே
னுங்கண் மதியாற்றிறந்தாலுயிர் வாழ்வீரென வகுத்தென்னுரைசெய் கென்னுத்
துங்கநரபதி யுரைப்பத்தொல்லரக்கி நல்லமுதத்துளிகள்போல
வங்கவருக்குரைத்த வெலாமிராகவ கேளென வசிட்டனருளனுற்றான்.

(ப-ரை.) சிங்கம் எனும் உங்களை = சிங்கத்திற்குச்சமான சூரத்தன்மையுற்ற உங்க ளிருவரையும், யான் = இராக்ஷசியாகியயான், செப்புகின்ற வினுக்கூட்டில் = கேட்கா நின்ற வினுக்களாகிய பஞ்சரத்தில், சிறைசெய்கின்றேன் = அடைக்கப் போகின்றேன், உங்கள் மதியால் = உங்களுடைய விசாரபுத்தியால், திறந்தால் = விதாரணஞ் செய்வீ

ரேல், உயிர் வாழ்வீர் = ஜீவிதாநிலை யடைவீர், என=என்றுகூற, வகுத்து என் உரை செய்க = பிரித்துப் பிரித்து நீயாதுயாது கேட்கவேண்டு மென்றனையோ அவற்றையெல்லாம் கூறுவாயாக, என்னுத்துங்கநரபதி=என்றுபரிசுத்தகுண நரேந்திரன், உரைப்ப= கூற, தொல்லரக்கி = நீள் காலந்தவம்புரிந்த இராக்ஷஸியாகிய அக்கற்கடி, நல்ல முதத் துளிகள்போல=இனிய அமிர்த பிந்துக்களைச் சிதறினாற்போல், அங்கு=அவ்விடத்தில், அவருக் குரைத்தவெலாம் = அம்மன்ன மந்திரிகளை நோக்கிக் கூறிய வினாக்களை யெல்லாம், இராகவ ! கேளென = ஹே இராமச்சந்திர ! கேட்பாயாக வென்று, வசிட்டன் அருளலுற்றான் = ஸ்ரீ வசிட்டபகவான் திருவருள் செய்யத்தொடங்கினார்.

(ஸ்ரீ - வீர.) ஹே பெற்றோர்களுக்குப் பிரீதி விடயங்களாகிய பாலகர்களே ! ஒரு பாயத்தினாலே என் பக்கத்தினின்றும் நீங்கள் தப்பித்துக் கொள்ளுதல் கூடும், மிகவும் சாரமான என்னுடைய வினாப்பஞ்சரத்தை விசாரம் மிகுந்த புத்தியினால் சேதிப்பீர்களாயின் தப்பலாம், ஹே இராகவ ! இராக்ஷஸி இவ்வண்ணம் இயம்ப அதைக்கேட்ட மன்னவன் கேள்விகளைக் கேட்கலாமென்று ஆக்ஞை செய்தவுடனே கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தனள், அக்கேள்விகளை நீ கேட்பாயாக.

(ச.) மதியால் = முக்கிய வுபாயத்தினால்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்மஞான மில்லாதவர்கட்கு வஜ்ஜிரம் போன்றனவும், ஆத்மஞானிகட்கு மனோரம்மியங்களும் ஆகிய கற்கடிசெய்த எழுபத்திரண்டுவினாக்களுள் முக்கியமானவற்றை இங்கு கூறல்:—அண்ட—வானிடை யென.

அண்டநிரைபலகோடிபலவாயுமொன்றுமெவ்வணுவினுள்ளே
விண்டகடற்குமிழிகள்போல்விரிந்தொடுங்கும்விண்ணுயும்விண்ணன்றேது
தண்டறவுண்டாயிருந்துமிலாததெதுசரித்தேயுஞ்சரியாதேது
கண்டிடநில்லாதாயுநிற்பதெதுசித்தாயுங்கல்லாமேது. (34)

வானிடையோவியமெழுதுகின்றதெதுவித்திடையின்மரங்கள்போல
வீனமிலாவெவ்வணுவிலுலகமெலாமிருக்கின்றதியாதினின்று
மானகடற்றிரைநுரைபோலொருபொருளும்பிரிவாகாதமைந்தநீரு
மீனமறுநெகிச்சியும்போலேதோன்றியிருமையுமெங்கொருமையாகும்.()

(ப - ரை) பலவாயும் ஒன்றும் எவ்வணுவினுள்ளே = அநேகமாயும் ஏகமாயிருக்கும் எந்த அணுவின் உள்ளே, அண்டநிறை பலகோடி = அண்ட வரிசைகள் அநேகங்கோடி, விண்டகடற் குமிழிகள்போல் = கடலில் எழுந்து தோற்றும் புற்புதங்கள்போல விரிந்தொடுங்கும் = விவர்த்தமாகத் தோற்றி லயமடையும் ? விண்ணுயும் விண்ணன்றேது = ஆகாசமாயும் அநாகாசமா யிருப்பது யாது ? தண்டறவுண்டாயிருந்தும் இலாததெது = தடையற சிறிதிலாததா யிருந்தும் சிறிதிருப்பதுயாது ? சரித்தேயுஞ் சரியாதேது=கமனம்புரிந்தும்கமனம் புரியாததுயாது ? கண்டிட நில்லாதாயும் நிற்பது எது= காணும்படியாக நில்லாதது ஆயினும் நிற்கின்றது யாது ? சித்தாயும் கல்லாம் ஏது = சேதனமாயினும் பாஷாணமாவது யாது ?

வானிடை யோவிய மெழுதுகின்றதெது = வியோமத்தின் கண்ணே சித்திரமெழுதுவது யாது ? வித்திடையின் மரங்கள்போல = விரையிற் றருக்கள் வீற்றிருப்பன போல, ஈனமிலா = கெடாத, எவ்வணுவில்=எந்த அணுவின் கண்ணே, உலகமெலாம், இருக்கின்றது = ஜகத்துகள் யாவும் இருக்கின்றன, இயாதினின்றும்=எதனினின்றும்,

ஆனகடற்றிரை நுரைபோ லொருபொருளும் பிரிவாகாது = சமுத்திரத்தி லுண்டாய தரங்கபேன புற்புதாதிகள் போல எவ்வத்துவும் வேற்றுமையை யடையாது ? அமைந்த நீரும் ஈனமறு நெகிழ்ச்சியும் போலேதோன்றி இருமையு மெங்கொருமையாகும் = ஜீவன ஹேதுவதாகப் பொருந்திய தண்ணீரும் அதன்கட் கெடாது தோற்றும் திரவத்தன்மை யும் போலவே பிரதீதியாகா நின்ற துவைதமும் எதனினின்று பிருதக்குத் தன்மையை யடையாது ? (35)

(ஸ்ரீ - வீர.) உபாதி பேதத்தால் அநேகசங்கியை யுடைய ஏகமான அபரிச்சேதத் தாற் கடல்போன்ற துர்லக்ஷிய எந்த அணுவினுள்ளே கடலிற் குமிழிகள்போலப் பிரஹ் மாண்ட லக்ஷங்கள் தோற்றியழியும் ? 1. ஆகாசமாயும் ஆசூன்ய அனாகாசமா யிருப்பது யாது ? 2 லௌகிகப் பிரசித்தம் சிறிதுமில்லாம லிருந்தும் தத்துவவித்துப் பிரசித்தம் சிறிதேயாவது யாது ? 3. நடந்தும் நடவாதது யாது ? 4. கதிரிவிருத்தியைச் செய்யா திருந்தும் அல்லது அசத்தாக இருந்தும் நிற்பதெது சத்தாயிருப்பதெது ? 5. இவ்வினு வாக்கியத்திற் கிதுவே பொருளென்பது பின்றெரியும். சேதனமாயினும்யாது கற்போல அசேதனம் சைதன்யப் பற்றும் கோடாகாது ? 6. சிதம்பரத்தில் விசித்திரகாரியத்தைச் செய்வதெது ? 7. ஜகங்கள் அனுற்பன்னங்களாயினும் பிரளயத்தில் பீஜத்தில் விருக்ஷங் கள்போல எவ்வணுவின் கண்ணே யிருக்கின்றன ? 8. ஒருதருவிற் ரூதாத்மியத்தால் இருப்பதன்கட்டிருட்டாந்தமாம், காரணத்திலாண்டு காரியமுண்டாவதற்கு முன் சூக் குமரூபமாக இருப்பதாய் அங்கீகரிக்க வேண்டும், ஆண்டஃதின்றேல் அதனினின்றே யதனுற்பத்தி யென்னும் நியம அதரிசன வழக்குண்டாதலின்; காணவுமன்றோ படுகின் றது:—எள்ளுகளினின்றே யெண்ணை யுண்டாதல், மணல்களினின்றோ இல்லையாம், பாலினின்றே நெய்யும் மண்ணினின்றே கடமும் உற்பத்தியாதல் நியமமாம், இங்ஙன மாகவே ஒரே விரையின் கண்ணே தன்குக்ஷி நிக்ஷிப்தமாய அநேக விருக்ஷங்கள் இருக் கின்றனவென விரையிலே தருமம்போல என்று பொருத்தமாகவே கூறப்பெற்றதாகும் சிறிதும் எதனினின்றும் தனியாக ஆகாதோ வெனப் பேதியைக்கொண்டு வினவி, பேதங்கொண்டு வினவல்:—பெரியநீர் நிலயத்தினின்றும் அலைமுதலானவை சிறிதுந் தனித்திலாதனபோல எதனினின்றும் ஒரு சிறிதும் வேறாகவில்லை ? 9. தேசகாலாதி யினால் வரைவுபெறாது ஏகமாய் அஸ்தூலத் தன்மையால் அசத்துல்லியமாய்ச் சத்தா யிருக்கும் எதனினின்றும் மகாஜலத்தின் நெகிழ்ச்சியேபோலத் துவைதமும் பிருதக் காக இராது ? 10. வினாக்களின் அபிப்பிராயங்கள் விடைதரும்போது நன்றாகவெளி யாம் என விரித்திலம்.

(ச.) தண்டற வுண்டாயிருந்தும் இலாததெது = இலதாயிருந்தும் உளதெது வானிடை = சிதாகாயத்தில், இருமையும் = துவைதமும், அண்டநிரை என்பது முத லிய கற்கடிவினாக் கவியிரண்டும் விடைய வசரங்களில் மந்திரியாற்றானே தெளிவிக் கப்படும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விளம்பிய வினாக்கட்குவிடைதரின் மேன்மையுண்டாமென் றும் தராவிடின் கீழ்மையுண்டா மென்று மறைதல்:—இந்தவென.

இந்தவினாவின்பயனை நும்முணர்வாலேதோன்றவியம்புவீரேற்
கந்தமுறவென்குழன்மேலெப்போதுமிருக்கின்றகமழ்போதாவீர்
மந்தமுற்றுயுந்திவினால்வகுத்துரைக்கமாட்டாதுமயங்குவீரேல்
வெந்தவயிற்றெரிகன்றுக்குவிறகாவீரென்றரக்கிவிளம்பலோடும்.

(ப - ரை.) இந்த வினாவின் பயனை=இயம்பிய வினாக்களின் விடைகளை, நம்முனார் வாலே = உங்களுடைய விசாரஞானத்தினாலே, தோன்ற இயம்புவீரேல் = விளங்கும் படியாக விளம்புவீர்களாயின், கந்தமுற = மணம்பொருந்த, என்குழன்மேல் = எனது கூந்தலின்மீது, எப்போதும் இருக்கின்ற = எக்காலத்திலும் இருக்கின்ற, கமழ்போதா வீர் = நற்கந்த புஷ்பமாவீர்கள், மந்தமுறு புந்தியினால் = பிரஞ்ஞைமந்தாதி தோடங் களினால், வகுத்துரைக்க மாட்டாது மயங்குவீரேல் = பிரித்துத்தரங்கூற முடியாமல் மயங்கி விழிப்பீர்களாயின், வெந்தவயிற் றெரிகனற்கு = கொளுத்தாநின்ற வயிற்றி லுள்ள ஜாடராக்கினிக்கு, விறகு ஆவீர் = இந்தனம் ஆவீர்கள், என்று = என இவ்வண் ணம், அரக்கி = கற்கடி, இயம்பலோடும் = கூறியபோது.

(ஸ்ரீ-வீர.) விருத்தார்த்தமதாக வினாக்கட்கு நலமிலாமையை விலக்குவாள், இந்த வினாவென்றான் =இவ்வெனது பிரசினங்களின், ஜாடராக்கினிக் கிந்தனத்தன்மையைச் சடுதியில் அடைவீர் கணத்தி லென்பதாம். இவ்வண்ணம் கிரமமாகக் கூறப்பட்ட பரம சாந்தியைக் கொடுக்கும் அதிலகுதரமான எனது இவ்வையத்தை நன்மதியுடைய நீங்கள் நீக்காமற் போவீர்களாயின் அக்கால் இராக்ஷச சாதியையுடைய என்தேகத்தின் சாட ராக்கினிக்கு எரிதரும் பென்னும் பக்ஷணமாக ஒருகணத்தில் ஒரு தடையுமில்லாமல் ஆகிவிடுவீர்கள். ஆத்மாவை யுணராமல் தேகமாத்திரத்தில் ஆத்மபுத்தியை வைத்துக் கொண்டிருக்கப் பட்டவர்கள் அரக்கர்கட்கு அன்னமாந்தன்மையை நீக்கிக்கொள்ளமாட் டார்கள்; முன்னுங்களை விழுங்குவேன் பின் உங்கள் ஜனபதமண்டல முழுவதையும் விழுங்குவேன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேரிருள் இரவின்கண் பெரியகாட்டில் மகாராக்ஷச கன்னி கையால் மேலே யியம்பியவிதமாகப்பெரிய வினாக்கள் வினவப் பட்டபோது அவ் வினாக் கட்கு நியாயமாக அதிசூக்குமமான யுக்திகளோடும் பெரியமந்திரி யானவர் சமாதானங் கூறல்:—மந்திரியென.

மந்திரிமுன்னுரைசெய்வான்மாசிலாப்பரம்பொருளைவகுத்துச்சொன்னாய்
சிந்தைமுதலாம்பொறிகளாறுலுமேட்டரிதாந்திறத்தினாலே
யந்தமில்சின்மாத்திரமாவிண்ணினுநொய்தாம்பரமமணுவேயாகு
முந்துபிரமாண்டமெலாமவ்வணுவிலேதோன்றிமுதிர்ந்துமாயும்.

(ப - ரை) மந்திரிமுன் உரைசெய்வான்=முதலில் மந்திரி விடைசெய்யத் தொடங் கிக் கூறுகின்றார், மாசிலாப் பரம்பொருளை வகுத்துச் சொன்னாய் = குற்றமற்ற பர மாத்ம வத்துவையே பிரஹ்மவித்துக்கள் உணரத்தக்கதான வாக்குப்பங்கியால் விரித் துரைத்தாய் சிந்தை முதலாம் பொறிகளாறுலும் எட்டரிதாந் திறத்தினாலே = மனமுத லிய இந்திரியங்கள் ஆறினாலும் கோசரிக்க முடியாததாந் தன்மையினாலே, அந்தமில் சின்மாத்திரமாய் = முடிவில்லாத அறிவுமாத்திரமாய், விண்ணினு நொய்தாம் = ஆகா யத்தினும் அதிசூக்குமமாம், பரமம் = பரமாத்மா, அணுவேயாகும் = அணுரூபமேயா கும், முந்து பிரமாண்டமெலாம் = பிராசீன பிரமாண்டகோடிகள் எல்லாம், அவ்வணு விலேதோன்றி = அச்சித்தணுவி னின்றுந் தோற்றமுற்று, முதிர்ந்துமாயும் = திதி பெற்று லயமாகும்.

(ஸ்ரீ - வீர.) எல்லாவினாக்கட்கும் பொதுவதாக உத்தரங் கூறுவார் பரம்பொருளை யென்றார். 'பங்கி'= பாகம் = பங்கு. "ஒன்றே அத்விதீயம்" என்னும் சுருதியினானே வாஸ்தவ எகத்வமும், "இந்திரன் மாயைகளினால் எண்ணிலுருவுற்றனன்" என்னுஞ்

சுருதியினல் மாயிக அநேகத்வமும் பிரமான்மாவிற்குப் பகர்தல் எளிதாம் எனக்கருதி ஆதியவினவின் பாகத்திற்கு உத்தரங் கூறலாம் சிந்தையென்பதாதி. வாசக ஆக்கியான ரகிதத்தன்மை யுண்மையானும் அதாவது உரையாட முடியாமையானும், மன முதலிய பொறிகட் கெட்டாமையானும், மனம் ஆருவதுபொறி எவற்றைக் குறித்தோ அச்சுரோர்த்திராதிகளின் மரியாதை யென்னப்பெற்ற கலப்பிலாமற் பதார்த்தப் பிரகாசன சாமர்த்தியத்திற்கு ஹேதுவாகி யெட்டாமையானும், அணுவாமாத்மா சூக்குமம் அணுவே போலுமென்க ! நிரவயவத் தன்மையினுனே ஆகாசம் போன்றதாம். ஆகாசமும் குணன் மிகமாதலின் அதனினும் அதிசூக்கும வியாபகம் ஆன்மாவாம். மாயும் = திதி சக்தியைத் தாண்டி யுபசங்கார சக்திவயமாம். இதனுனே அஷ்டமப் பிரசினத்துக்கும் விடையளித்தவாறு காண்க. ஹேஹே மகமலாக்ஷி ! எல்லா வினக்களையும் சிதிலமாக்கற் பொருட்டு எல்லா வினக்களின் அபிப்பிராயத்தை முதலிற் கூறக்கேட்குதி ! வினக்களை யுணர்பவர்க்கு ஞானத்தைக் கொடுக்கத்தக்கதான நீ கூறிய இவ்வாக்கு முறையால் உன்னுல் பரமான்மாவே சொல்லப்பட்டது, எவ்வணுவிற் கடலிற்போல என்னும் முதல் வினவிசேடியத்தில் அணுசப்தப் பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக் கூறக்கேட்பாயாக:—வாக்கினல் வசனிக்க முடியாமலும், மனமுதலிய ஆறிந்திரியங்களால் அறியமுடியாமலும் இருத்தலின் அணுவாம். இவ்வண்ணம் சின்மாத்திரமே வடிவமான அணுவானது ஆகாயத்தினும் அதிசூக்குமமாக இருக்கின்றது; இங்ஙனமே " அணுபந்தா விததம் புராணம் " என்பதாதி சுருதிகளிற் பிரசித்தமாம், உள்ளே பிரஹ்மாண்ட லக்ஷங்கள் என வினவிய அங்குசத்திற் கூறக்கேட்டி, பரமமாய் அறிவாயிலங்கும் அணுவினுள்ளே விரையினுள்ளே தருவிருப்பதேபோலச் சத்தைப்போலாதல் அசத்தைப் போலாதல் இந்தவுலகத் திதியானது இலங்குகின்றது; இதனல் எவ்வணுவின்கண்ணே விரையில் மரம்போல ஜகங்களிருக்கின்றன என்னும் வினவிற்கும் விடையிறுத்தியதாயிற்று.

(ச.) ஸ்ரீ வசிட்டர். மந்திரி முன்னுரைசெய்வான் = மகாநிசியில் மகாரணியத்தில் மகாராட்சத கன்னிகையால் இத்தன்மையான மகாவினவைக் கேட்டு மந்திரிமுன்னுரை செய்வான், பரம்பொருளை = பரமான்மாவை, இதனல் வாக்கு விவகாரத்துக்கு விடயமன்று இந்திரிய கோசரமன்று ஆதலின் ஞானவிவகாரத்துக்கு அவிடயமா மென்பதாயிற்று. இத்தன்மையாய் ஆகாசததினுஞ் சூட்சுமமும் சின்மாத்திரமுமானவான்மா அணுவெனப்படுவ னென்பது பொருள். அவ்வணுவிற் சின்மாத்திரரூபமான பரமாத்மாவினகத்தில் கோடிபிரமாண்ட புற்புதங்க ளுற்பவித்திருந்து சத்திநாசவேதுவினல் இலயமுறும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விண்ணும் விண்ணன்றேது என்னும் இரண்டாவது முதலிய வினவின் தாற்பரியத்தை வெளிப்படுத்தல்:—

(ச.) விண்ணும் விண்ணன்றேது என்பதாதியின் பொருளை விவரணஞ் செய்தல்:—தடமென.

தடமானவதன்புறமில்லாமையினுல்விண்ணுகுந்தனிப்போதத்தா
லிடமானவிண்ணன்றுமின்னதெனத்தெரிவரியவியல்பினுலே
திடமாகவிலதாகுஞ்சற்பாவத்தாலுளதாய்ச்செப்பலாகும்
புடமாகவிளங்குதலாற்சித்தாகுமறிவதிலாப்பொருட்டாற்கல்லாம்.

(ப - ரை.) தடமான = விசாலமான, அதன்புறம் = அதன் பாகியம், இல்லாமையினல் = சூனியமாதலின், விண்ணுகும் = ஆகாசமாகும், தனிப்போதத்தால் = ஒப்பற்ற

சித்துத் தகைமையால், இடமான = வாயுவாதிகட்கு இடந்தரும், விண்ணன்றும் = ஆகாயமாகாதாம், இன்னதெனத் தெரிவரிய வியல்பினாலே = இவ்வண்ணந்தான் இருக்கின்றதென நிர்த்தேசஞ் செய்ய முடியாமையின், திடமாக இலதாகும் = அகிஞ்சித்தாம், சற்பாவத்தால் உளதாய்ச் செப்பலாகும் = வஸ்துசத்தையால் கிஞ்சித்துளதென்றுரைக்கலாம், புடமாக விளங்குவதாற் சித்தாகும் = பிரகாசவடிவமாக வெளியாயிலங்கின் சேதனமாகும், அறிவதிலாப் பொருட்டாற் கல்லாம் = வேத்திய மாகாமையின் சிலைக்குச் சமானமாம்.

(ஸ்ரீ - வீர.) பாகியம் சூனியமாதலின் = தற்பகிர்பூத வத்து சூனியமாதலின். அறிவுருவமா யிருத்தலிற் பூதாகாசமாகாதாம். மூன்றாவது வினாவிற்குவிடைதருதல். அகிஞ்சித்தென்றது. எக்காரணத்தாற் பிரஹ்மவஸ்து வானது குறிக்கத்தகாமற் கூறத்தகாமலிருக்குமோ அக்காரணத்தாற் கிஞ்சித்தாகாதாம். பரமார்த்த சத்தாமாத்திர வடிவது என்பதனால் அது கிஞ்சித்தாம். ஆறாவது வினாவின் விடைதரல்: புடமாக என்றது. மாறிவிடை மலர்தல் இராக்ஷசியின் மதிப்பரிக்ஷையின் பொருட்டாம். இப்பரமான்மாவானது எதனாற் சைதன்யப் பிரகாசாத்மாவாமோ அதனாற் சேதனமாம் உண்மையாக ஞேயமாகாமையினானும் கற்பிதஞேய சந்நிதியுற் றிருந்தபோதிலும் விகாரமற் றிருத்தலினானும் சிலோபமம் ஆம். விண்ணும் விண்ணன்றேது என்னும்வினாவின் றாற்பரியத்தை விளம்பல்: பாகிய சூனியத்தன்மை யுண்மையின் ஆகாசமாம் சித்துத்தன்மையோடு கூடியிருத்தலின் அகாகாசமாம். சிறிதில்லாதிருந்தும் சிறிதேயாவது யாது என்னும் வினாவின் உத்தரம். இந்திரியங்களால் அறியப்படாததாற் சிறிதன்றாம்; அதாவது இந்திரியங்களால் அறியப்படும் அற்பதிருசியமே யல்லவாம், அவ்வணுவே முடிவற்றதாம்; சிறிதாயிருந்தும் சிறிதல்லாதது யாது ஆத்மபாவத்தில் அது எனவினாப்பொருள் செய்யினும் பாதகமில்லை, என்னை? தானே சர்வான்மகமா யிருத்தலின் தன்னையே சாக்ஷாத்கரித்ததால் யாவற்றையும் விழுங்கியபோது அதுவேசிறிதாம். ஆன்மாவுக் கயலாக யாதொன்றுமே எஞ்சுவதில்லை ஆன்மாமாத்திர மிருக்கும் அதனாற் கிஞ்சித்தாகியும் கிஞ்சித்தன்றாம். பலவாயும் ஒன்றாம் என்பதன் அபிப்பிராயம். ஏகமேயாய சித்தணுவிற்கு நீ கூறிய அநேகத்தன்மை தோற்றமாத்திரமே யாம் வாஸ்தவமன்றாம் பொய்யேயாம். சேதனமாயினும் யாது கற்போலாம் என்னு வினாவின் விடை:—சித்திருவமும் ஜகவுருவமும் எனவிருந்த உபயவடிவம் உடையது என்பதாகப் பொருள் கொள்ளின் உத்தரம் ஜடமாகவே யிருக்குந் தேகாதிகள் ஆத்மதாத்மிய அத்தியாசத்தினாலே சேதனத்திற்குப் பிரகாச சுபாவத்தன்மையும் ஜடத்தன்மையும் தன தனுபவத்திற்குத் தெரியவருதலின் ஆராய்ச்சி யின்மையினாலே ஜடம் போதம் என்னும் உபயரூபமும் உண்டாகவே செய்யும். சேதனமாயினும் கற்போலக் கனரூபம்யாது எனப் பொருள்படுத்தின் விடை: பாரமார்த்திகமான ஆத்மரூபமேயாய சிற்கனம் அதுவாம், சேதனபாஷாணம் இருப்பதேபோல ஆத்மா சிற்கனவடிவமே யுடையது என வினாப்பொருள் ஆமாயின் அக்கால் சேதனமேயாய இவ்வான்மா பாஷாணம்போலக் கனமாம்.

(ச.) அதன் புறமில்லாமையினால் = கிரகிக்கத்தக்க வஸ்து சூனியமாதலின் பிரஹ்மமே ஆகாயசத்த வாச்சியம், தனிப்போதத்தால் = சித்துரூபத்தினால் ஜடாகாய விலக்ஷணமும் ஆம். 3-வது வினா தண்டற வுண்டாயிருந்தும் இலாததெது? இன்னதெனத் தெரிவரிய வியல்பினாலே = இத்தன்மைய தென்று நிர்ணயித்தற்கு அசக்கியமாதலின், இலதாகும், சற்பாவத்தால் = சர்வவஸ்துவுஞ் சத்தின் ஆரோபமாதலின், உளதாய்ச் செப்பலாகும் = 6 வினா சித்தாயுங் கல்லாமேது? என்னும் வினாவிற்குத்தரம் = புட

மாக விளங்குதலாற் சித்தாகும், பிரகாசரூபமாதலின் சேதனமாம், அறிவழிலாப் பொருட்டாற் கல்லாம் = தனக்குவேறாய் அறியாத்தகுந்த வேத்திய மின்றுதலின் சிலைக் கொப்புமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலுஞ் சிலவினுக்கட்கு மந்திரி விடைதருதல்:—தானுகு மென.

தானுகுமிக நொய்தாமா காயத்திற் சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானே கோட்டு, மானுத வுலகமெலாந் தனது சோதியாதலினு லதற்குவேறய லொன் றில்லை, நீநானுஞ் சகபேத வடிவந்தானு நிற்கின்றவதன் வடிவாய் நீங்காதென் றும், நாநாவாம் பொருட் புணர்வா னடந்ததாகு நடக்கவிட மிலாமையினு னடவாதாகும். (39)

(ப - ரை.) தானுகும் மிகநொய்தாம் ஆகாயத்தில் = சொச்ச வியோமாத்மாவில், சகத்திரளாம் சித்திரத்தைத் தானேகோட்டும் = சகக்கூட்டங்களாகிய ஓவியங்களைச் சுயமாகவே வித்தாரஞ் செய்யும், ஆனுத வுலகமெலாம் = ஞானத்தாலன்றிக் கெடாத வுலகமுழுவதும், தனது சோதியாதலினுல் = தன்னறிவு வடிவமே யாகலின், அதற்கு அயலாக அன்னியம் ஒன்றுமே கிடையாது, நீ நானுஞ் சகபேத வடிவந்தானும் = துவம் அகம் என்பதாதியாய்த் தோற்று முலகபேத வடிவமும், நிற்கின்ற வதன்வடிவாய் நீங்காதென்றும் = நிலைபெற்ற அதன் பிரகாசமயமாய் அயலாகாமல் ஒன்றும் என்றும் நானுவாம் பொருட் புணர்வால் = பற்பலவாம் வத்துக்களின் சம்சர்க்கத்தால், நடந்த தாகும் = எங்கும் சென்றதாகும், நடக்க இடம் இலாமையினுல் நடவாதாகும் = வியாபகமாதலின் கதிசெய்வதற்கு இடமின்மையின் கதிசெய்யாததாகும். (39)

(ஸ்ரீ-வீர.) ஏழாவது வினுவின் விடை தானுகுமென்பது கோட்டும் = அபிவியக்தி செய்யும். ஒன்பதாவது வினுவின் விடை ஆனுதவென்பது. இவ்வுலகமெல்லாம் பிரஹ்ம சைதன்ய மாத்திரம், அந்த பிரஹ்ம சைதன்யத்திற் கயலாக இதற்குச் சத்தை சம்பவி யாதாம். இது அந்த அதிஷ்டானத்தின் அயலாற்றூற் றேற்றுமாத்திரம் ஆமென்றுமேது வினுலே அதனினும் தனியாகாதாம்! பத்தாவது வினுவின்விடை: நீ யென்பது, வடிவாய் = சொரூபமாய் அதனினும் பிருதக்காகாதாம் நான்காவது வினுவின்விடை நாநா வென்பது. கம்மியசம்பந்தமே கமனபலமாம் பரமாத்மாவோ சருவ கம்மியத்தோடும் சம்பந்தமுடையதாம் ஆதலின் சர்வகமாம். விபுத்தன்மையானே கதித்தன்மை யசம்பாவிதமாதலின் வாஸ்தவமாகக் கந்தவ்ய அபாவத்தானும் கமனஞ்செய்யாதாம் சிதம்பரத்தில் விசித்திர காரியத்தைச் செய்வதெது. என்னும் வினுவிற்கு விடை. அனுதியாய் அநந்தமாய் இருக்கப்பட்ட பரம ஆகாசத்தில் சின்மாத்திரமாய பரமாத்மாவால் மூன்றுலக சித்திரமானது சித்திரிக்கப்பட்டுளது; அதனுல் இது மித்தையாதலின் செய்யாமலே செய்யப்பட்டுளது. பெருநீரினின்றும் சிறுதரங்கம் சிறிதும் தனித்திராத துபோல் எதனினின்றும் ஒரு சிறிதும் வேருகவில்லை யென்னும் வினுவிற்கு விடை; சித்தவடிவமா யிருத்தலாற் பெருங்கடல்போல விகாரப்பட்டிருக்கும் அணுவினிடத்தில் நீரின்கண்ணே நெகிழ்ச்சியால் சுழற்சி தோற்றுதல் போலச் சித்தவிகற்பமாத்திர ரூபங்களான மூவுலகச் சிறுதரங்கங்களாகிய இவைகள் கசிந்துகொண்டிருக்கும் என்பதாம். இவ்வண்ணம் யூகத்தோடும் பிரசங்கத்தில் வந்த யாதுசேதனம் அசேதனம் என்னும் வினுவிற்கு விடைபகர்ந்து எஞ்சிய வினுக்களின் உத்தரத்தை யாசன்பொருட்டு நிறுத்தி வைத்து அதனஞ்ஞான சங்கையை நீக்கும்பொருட்டு அவற்றுள் இரண்டொன்றெடுத்து

உத்தரங்கூற விழைந்து துவைதமித்தியாத்துவ உபவர்ணனம் விரிந்த துவைதமாயினும் அப்பிருதக் கெதனுல் என்பதன் உத்தரத்தைக் கூறல்: பிருதக்தன்மைச் சமஸ்காரத் திளுலே சமஸ்கரிக்கப்பட்ட புத்திவிருத்தியினுள்ளே யிருக்கும் ஆத்மப் பிரகாசத்தின் வேற்றுமையை வெளிப்படுத்தும் ஆற்றல்வடிவ சமத்கார யோகத்தால் துவைதம் தோற் றினபோதிலும் வேற்றுமையே யின்றும்; அதன்கண் ணேதுவென் னெனின்? பரமான ஆத்மப் பிரகாசமானது விருக்ஷவடிவப் பீஜம்போல எல்லாவடிவமாகவு மிருக்கின்றது என்பதாம். நடந்தும் நடவாதது எது என்னும் வினுவின்விடை: எவ்வணுவானது ஆகாயம்போல அநேக யோஜனைதூரம் வியாபித்திருந்த போதினும் இருந்த இடத்தி லேயே யிருக்கின்றது; அவ்வணுவிற்குள்ளே அநேகயோஜனை தூரதேசமானது சொப் பனம் போலக் கற்பனையால் ஆம்.

(ச.) வானிடை யோவிய மெழுதுகின்றதெது? விடை: தானுகி மிகநொய்தா மாகாயத்தில் = சிதாகாச சொரூபமான சொச்சொரூபத்தில். யாதினின் + பிரிவாகாது என்பதை விவரணஞ்செய்தல், ஆறுதவுலகமெல்லாம் = இந்த விசுவம், தனது சோதி யாதலினுல் = பிரஹ்ம ஸ்புரணமேயா மாதலின், அதற்கு வேறயலொன்றில்லை. அமைந்த + ஆகும் என்பதற்கு விடை. நீளு + தானும் = ஜகபேதமும், நிற்கின்ற வதன்வடிவாய் நீங்காது = திருக்குரூபமான ஆன்மாவின் ஸ்புரணமேயாம், தன்மயமே திருசியமாம், திருக்கின் விவர்த்த ரூபமாதலின் என்பதுகருத்து. சரித்தேயுஞ் சரியாதேதது என்பதன் அர்த்தத்தை விவரணஞ் செய்கின்றுர்:—நாளுவாம் பொருட்புணர்வால் = சர்வசம்பந் தத்தினுல், நடந்ததாகும் = சகலத்தைக் குறித்துஞ் செல்வதாம். (89)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மந்திரியின் வார்த்தையைக் கேட்டுப் பரமசந்தோஷத்தை யடைந்த கற்கடி மன்னவன் வார்த்தையைக் கேட்க விரும்பலும் அவருரைத்தலும்:— அடையென.

**அடைவதற் கொன்றிலாமையினு லில்லையாகு மனவரதஞ் சத்தையினுண் டாகுமென்று, புடைபெயர் நன்மதியமைச்சன் புகலக்கேட்டுப் போதவியந்த தற்பின்பு பூபனேயுன், னுடையவுணர் வுரையென்னவ வனுஞ்சொல் வானுல கத்தினுறுதியிலா வுறுதிதானே, தடையறுசிற் பரம்பொருளி னுறுதியாகுந் தற்பரத்தி னியல்பின்னஞ் சாற்றக் கேளாய்.**

(ப - ரை.) அடைவதற்கு ஒன்றிலாமையினுல் = ஆசிரயம் யாதொன்று மில்லா மையினுலே, இல்லையாகும் = இது நாஸ்தியாம், அனவரதஞ் சத்தையினுல் உண்டா கும் = எப்போதும் உண்மையினுல் அஸ்தியாம், என்று = என இவ்வண்ணம், புடை பெயர் நன்மதியமைச்சன் = அநேகவித யூகங்களானே காரியத்தைச் சாதிக்கும் நல்ல புத்தியையுடைய மந்திரி, புகலக்கேட்டு = கூறச் செவியுற்று, போதவியந் ததற்பின்பு = மிகமிகவும் புகழ்ந்ததன் பின்னர், பூபனே = நரேந்திரனே, உன்னுடைய வுணர்வு = நினதுபோதத்தை, உரையென்ன = கூறுவாயாக வென்று கற்கடிவினவ, அவனுஞ் சொல்வான் = அம்மன்னவன் கூறுவான், உலகத்தில் உறுதியிலா உறுதிதானே = ஜகத் திற் பிரத்யய மில்லாதபிரத்யயந்தானே, தடையறு சிற்பரம்பொருளின் உறுதியாகும் = தடையில்லாத சின்மயப் பரமாத்ம வஸ்துவின் பிரத்யயமாகும், தற்பரத்தின் இயல்பு இன்னும் சாற்றக்கேளாய் = அந்தப் பரப்பிரமத்தின் சுபாவத்தை மேலும் கூறக் கேட்பாயாக. (40

(ஸ்ரீ - வீர.) ஐந்தாவதன் விடை: உலகத்தில் யாதொன்றுளதாமோ அதுவோ பிரகாசியமும் நன்காசிரயிப்பதும் ஆம், இப்பரமாத்மா அன்னிய அப்பிரகாசியத் தன்மையானும் நிராசிரயத் தன்மையானும் இல்லையென்று சொல்லலாம், ஆயினும் பரமார்த்த சத்ரூபத் தன்மையானே உளதென் றுரைக்கலாம். வினாமுறையை யனுசரித்து மந்திரியினாலேயே உத்தரந்தத்தஞ் செய்திருத்தலின் அதனை யுபேக்ஷித்து வேறுமுறைபற்றிக் கூறுவான் றொடங்குகின்றார் உலகத்தி லென்பதாதி, பரம்பொருளின் உறுதி=பரமபுருடார்த்த சாதனமாதலின். பிரத்யயம் = ஞானம், விழித்திருக்கும் விவேகிபுருடனுக்கு வாஸ்தவ துவைதஞான மின்மையின் உண்டாம் பிரஹ்மஞானம் என்பர். துவைதம் வஸ்துவாயிருக்கின்ற தென்னும் உணர்ச்சி அத்வைதஞானத் தடையாதலின் விழித்திருந்த போதினும் விவேகிக்கு அத்தன்மை யிருத்தலின் அத்வைதஞான முண்டாயிருத்தல் பொருத்தமாம். விழித்திருக்கும் விவேகியினது எவ்வாஸ்தவ துவைதப் பிரத்யயாபாவமுளதோ அதனை யதன் காரணமாதலின் பரமவுணர் வென்பர். நேரேதுவைதத்தைக் கண்டபோதினும் எவனுக்குத் துவைதவிடய போத முதயமாவதில்லையோ அவனே யுண்மையாகக் கண்டோனவன். சாக்ஷியானது விகாரமற்றிருத்தலின் துவைதஞான வடிவமாக பரிணமியாதாம் சொரூப சைதன்ய ஞானமானது கேவலஞ் சமுசார அதீதமானதாம். நடந்தும் நடவாதது யாது என்பதற்கே போலும் நில்லாதேயும் நிற்பதெது வென்னும் ஐந்தாவதற்குமாம்; இவ்வணுவானது தனது சத்தாரூபமான ஆகாசகோசத்துள்ளே தேசகாலங்க ளிருத்தலினால் ஒரு தேசத்திற் சென்றபோதிலும் செல்லவில்லை, ஒருதேசத்திற்கு வந்தபோதினும் வருவதில்லை. அடையத் தக்கதேசம் இவ்வணுவினுள்ளேயே யிருக்கும்போது இது எங்கே போகவேண்டும்; கும்பமுக மூடிக்கொண்டு போய்க் கொண்டுவரினும் அதிலிருக்கும் ஆகாயத்திற்குக் கமனாகமனங்கள் இல்லாததே போல ஆன்மாவிற்கு மில்லையாம் உண்டாயிருந்தும் இலாதது எது என்பது தனியினாவாயின் விடையிதுவாம்: சூக்குமமாகி, இவ்வணு குறிக்கப் பெறாததாய்ப் பரம ஆகாசமாக இருக்கும், இது சருவான்மகமாக இருந்த போதினும் மனாதிகட்கதீதமாகி யிருக்கும். இவ்வினாவில் இல்லாததா மென்னும் அங்கிசம் பாதிதமேயாம், சர்வான்மகத் தன்மை யுண்மையின் இது எக்காலும் எங்கும் சூனியமாவதேயில்லை; பாதிதமாமாறு:— எக்காரணத்தால் இருக்கின்ற தென்றும் இல்லையென்றும், கூறுபவனும் நினைப்பவனும் அவ்வான்மாவே யாமோ அக்காரணத்தால் வக்தாமந்தாதி வடிவமாய் அதுபிரசித்தமாம், ஆகவே தன்வடிவத்தைத் தள்ளத் தகாமையின் இல்லை யென்னுந்தன்மை அதற்குப் பொருந்துவதே யில்லை; சத்திற்கு அசத்து விரோத மிருத்தலினாலும் இது பொருந்தாதாம்; இருப்பதேயாயின் என்காணப் பெறவில்லை யெனின்? வெட்டவெளியாகக் காணப் பெறாவிடினும் எல்லாவற்றினும் தொடர்ந்து நிற்கும் சத்ரூபத்தால் கற்பூரம் மூடிவைப்பினும் கந்தத்தாற் காணப்படுவதேபோலகாணப் பெறவேயாம். மந்திரிவசன சமத்கார தரிசனத்தானே அரசனுக்கும் தத்துவஞான மிருப்பதாக நன்றாய்த் தெரிந்த போதினும் அரசனறைவதிற் சமத்கார அதிசயம் சம்பவிக்கும் எனக்கருதி அதனைக் கேட்கவேண்டுமென் றிச்சித்து இராக்ஷசி கூறுகின்றாள் போதவியந் தென்பதாதியாய். அகோ ஆச்சரியம் ! ஹே மந்திரியே ! நினது பரமார்த்த பாஷணமானது அதிபவித்திரமாக இருக்கின்றது, தாமரை யிதழ்போலும் நேத்திரமுடைய இவ்வரசன் இனிமற்றவற்றிற் குத்தரம் தருகவெனக் கற்கடி கூறுதலும் அரசன் கூறத்தொடங்கி அவ்வபிப் பிராயத்தைக் குறித்து எல்லாவினாக்களின் முக்கிய தாற்பரியவிஷயமான பிரஹ்மத்தை விரோத ஆபாசயுக்திமுக சமத்கார அதிசயத்தால் தரிசிப்பித்தல்; உலகத்

தில் என்பதாதி, அவஸ்தாத்திரய தரிசன இலக்ஷண ஜகத்சம்பந்தப் பிரத்யயத்தின் அபாவமாகிய போத இலக்ஷணையின் நிவிருத்தியே சுயமாகவிளங்கும் அதிஷ்டானரூப துரியலக்ஷணை எதனது தரிசனம் ஆமென்று புகல்வரோ அந்தப் பிரஹ்மத்தையே ஹே கல்யாணி ! நீ கூறினய்.

(ச.) 5-வது, அடைவதற்கு = ஆசிரயிப்பதற்கு, ஒன்றில்லாமையினல் = தன்க்கு வேருென்றும் இன்மையினல், இல்லையாகும் = எவ்விடத்தும் நில்லாததாம், சத்தையி லுண்டாகும் = எவ்விடத்தும் இருக்குந்தன்மையினல் நிற்பதுமாம். எவ்வணுவி லுலக மெலா மிருக்கின்றது என்னும் விஞவுக்குப் பிரதமவிஞ விவரணத்திஞற்றேனே அர்த்த மாயிற்றுதலின் விவரணஞ் செய்ததின்று; என்று இத்தன்மையான வாக்கியத்தைகேட்டு =கற்கடிவினவி, அவனுஞ்சொல்வான் = அரசன் பிரஹ்மசொரூபத்தை நிரூபிக்கின் ருன், உலகத்தினு+தானே = புருடனது வாகிய பதார்த்தானுசந்தான ராகித்தியமே, தடையறு சிற்பரம் பொருளினு றுதியாகும் = தானே விளங்குஞ் சைதன்யத்தின் பகிர் விக்ஷேபராகித்தியமே ஏகஸ்வரூப ஸ்புரணமென்பது கருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதுவும் அதன்கண்ணேயே நிஷ்டையை யடையும் வடிவ மான அதன் பரிக்கிரகத்தால் ஆம் எனப் பரிக்கிரகத்தை லக்ஷணத்தோடுங் கேட்டி யென அரசன்கூறல்:—கருத்தென.

கருத்ததனுற் சங்கற்பவிகற்பமெல்லாங் கைவிடுதல் கைக்கொள்ளப் படுவ தாகுந், திருத்தமுறு தன்விரிவுங் குவிவுதானுஞ் சிருட்டியுங் கற்பமுமாகுந் திரள்வேதாந்தத், தருத்தமுறு வாக்கியத்தி னிட்டையாகு மவ்வேதவாக்கியத் துக்கயனுமாகு, முருத்திகழு முள்ளதில திரண்டினுக்கு முள்ளாகு மவையிரண் டினுருவுமாகும். (41)

(ப-ரை.) கருத்ததனல் சங்கற்ப விகற்பமெல்லாம் = சித்தத்திஞலே சர்வசங்கற்ப விகற்பங்களையும், கைவிடுதல் கைக்கொள்ளப் படுவதாகும் = சந்யசித்தலே அதனைப் பற்றும் பரிக்கிரகமாம், திருத்தமுறு தன்விரிவும் குவிவுதானும் = மிகநிருமலமா யிரா நின்ற அதனது சங்கோச விகாசங்கடாமே, சிருட்டியும் கற்பமும் ஆகும் = சகற்சிருட் டியும் பிரளயமுமாம், திரள்வேதாந்தத் தருத்தமுறு வாக்கியத்தின் நிட்டையாகும் = சாந்தோக்கியாதி வேதாந்த வாக்கியங்களின் நிரந்தரத் திதியாகும், அவ்வேதவாக்கியத் துக் கயனுமாகும் = அம்மறைமொழிகட் ககோசரமுமாகும், உருத்திகழும் உள்ளது இலது இரண்டினுக்கும் உள்ளாகும் = வடிவுபொலியும் உண்மையின்மை யென்னும் இருகோடிகளின் அந்தராளத் திருப்பதாகும், அவையிரண்டின் உருவுமாகும் = அவ்விரு கோடிகளின் மயமுமாகும்.

(ஸ்ரீ - வீர.) அந்தக்கரணத்திஞலே சருவசங்கற்ப சந்யாசமென்னும் சர்வதுவை தப் பிரத்யய சங்கத்தியாக நிருவிகற்ப சமாதியானது பரமாத்ம சாக்ஷாத்கார ஹேது வாதலின் ஆண்டே பரமான்மாவைக் கவர்தல்கூடுமென்றறிக. சங்கோச விகாசங்கள் = சங்கற்ப விகற்பலய உதயங்கள். நிட்டையாகும் = இலக்கண விருத்தியாற் பரியவசான பூமியாகும்; ஆயினும் சப்தப்பிரவிருத்தி ஹேதுக்களாகிய ஜாதியாதிகள் இன்மையின் வாசாமகோசரமுமாம். அல்லது வாக்கிய ஜன்னிய விருத்தி வியாப்பியத் தன்மையானே அதன்கோசரத் தன்மையாம், அதனுலுண்டாய பல அவ்யாபகத் தன்மையால் அதன் அகோசரத் தன்மையாம், துவைத அத்வைத கோடி யந்தராளத் திருப்பதாகிய பிரஹ

மம், துவைதாத்வைத கோடிகளாகிய பரஸ்பர அபேக்ஷித்தத் தன்மையானே கற்பிதங் களினும் விலக்ஷணமாம், அதிஷ்டானமதாக் அவற்றின் மத்தியிலிருப்பது ஆம். அல்லது சத்தசத்துக் கோடியந்தராளத் திருப்பதாம் " சத்தன்றத சத்தன்றெனச் சாற்றப்பெற லாகும் " என்னும் ஸ்ரீ பகவத்வசனத்தான், என்பதாம். காரிய காரணகோடியந்தராளத் திருப்பதெனவேனும், திருஷ்டாதிருசிய கோடியந்தராளத்திருப்பதெனவேனும் பிம்பப் பிரதிபிம்பகோடியந்தராளத்திருப்ப தெனவேனும், பந்தமுக்திகோடியந்தராளத்திருப்ப தெனவேனும் நியமியநியாமககோடியந்தராளத் திருப்பதெனவேனும், ஆம்; இவ்வெல்லா வற்றிற்குமே கற்பிதத்தன்மை யிருத்தலின் பிரஹ்மத்திற்கு அவற்றினும் விலக்ஷணத் தன்மையுண்மையின் அவற்றின் அந்தராளத்திருக்குந்தன்மை பொருந்துவதேயாம். அங் ஙனமாயினும் மாயையினுலே மலர்ந்தகோடியிரண்டன் வடிவமாம். அதனது பரிக்கிரகம் சித்தத்தால் சர்வசங்கற்ப சந்யாசமாம், எதனதுமாயிக சங்கோச விகாசங்களால் ஜகத் தின் பிரளயசிருஷ்டிகள் ஆமோ, வேதாந்த வாக்கியங்கட்கு நிரந்தரஸ்திதி யெஃதாமோ எது வாசாமகோசரமாமோ அதுவே அந்தப் பிரஹ்மமென்றுணர்தி, சத்துவ அசத்துவ பான அபானமென்னும் இரண்டு கோடிகளின் அந்தராளத் திருப்பதாம், வசனிக்க முடி யாததாம் அது, அதனுனே ஆதி அந்தங்கள் அசத்துக் கோடியினுலே பீடிக்கப்படினும் மத்தியில் தேசிகபரிச்சேத சம்பந்தமாகச் சிலபால் உளதுசிலபால் இலது எனக்கோடித் வயீமயமாம். இவ்வண்ணம் ஆதியந்தங்கள் அபானத்தாற் பீடிக்கப்படினும் மத்தியில் அவ்வவ் விந்திரியயோக்கிய ரூபமாக விளங்குகின்றது. வேறுவடிவமாய்த் தத்துவமாயும் விளங்குகின்றதில்லை என மத்தியில் கோடித்துவ யீமயமாம்.

(ச.) கருத் + விடுதல் = மனதாற் சர்வசங்கற்பங்களின் சந்நியாசமே, கைக்கொள் ளப்படுவதாகும் = வஸ்துவின் பரிக்கிரகமாம், கண்டஸ்தசாமீகர நியாயத்தால் நித்திய சந் நிகிதத்துக்குப் பகிர்சங்கற்ப வசத்தினுல் மறதிவருதலின் அதற்கே சர்வசங்கற்ப பரித் தியாகம்வரின் சந்நிதானத்திற்றுனே விளங்குமென்பது கருத்து. திருத்தமுறுதன் = வஸ்துவினது, விரிவு குவிவுதானும் = விகாச சங்கோசங்களினுலேயே = விஸ்தார சம் க்ஷேபங்களினுலே, சிருஷ்டியுங் கற்பமுமாம் = ஜகங்களினது உற்பத்திகளும் பிரளயங் களும் ஆம், திகழ்வஸ்து வேதாந்தத் தருத்தமுறும் வாக்கியத்தின் நிட்டையாகும் = வாக் கியங்களினது தாத்பரிய அவசான பூமியாம், தந்து வௌபநிடதபுருடனைக் கேட்கின் றேன் என்னுஞ் சுருதியினுல், தம்துவா = அந்த உன்னை, ஔபநிடதம் = உபநிடதத் திற் சொல்லப்பட்டது. அவ்வேத வாக்கியத்துக் கயலுமாகும் அன்றியும் வாசாமகோ சரமுமாம், நானுவித சப்தப்பிரவிருத்தி நிமித்தங்களான ஜாதியாதிகளின் அபாவமாத லின், உருத்திகழுமுள்ள திலதிரண்டினுக்கு முள்ளாகும் = வஸ்து பரஸ்பர விருத்தங்க ளான சத்துத்தன்மை அசத்துத்தன்மை ஸ்தூலத்வ சூக்ஷ்மத்வாதி விசேஷங்கள் என் னும் பக்ஷத்துவயங்களின் மத்தியத்திருப்பதாம், பக்ஷத்வயங்களைப் பரிசியாத சொரூ பத்தி லிருக்கும் அஸ்தூலம் அனணு என்பன முதலிய சுருதிவாக்கியங்களால் நிகிலப க்ஷத்துவய நிஷேதத்தினுல் அவையிரண்டின் உருவமாகும், அன்றியும் ஸ்தூலசூக்ஷ்ம மாதி ரூபமுமாம் பிரமமே யீதனைத்தும் என்ற சுருதியில் பிரமஞ்சர்வப் பிரபஞ்சாதிஷ் டானமாதலாற் சர்வான்மகமாதலின்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அரசன்கூறி முடித்தலும் கற்கடி சந்தோடித்துக் கூறத் தொடங்கலும்:—சராவென.

**சராசரமா மூலகனைத்து மனரூபத்தாற் றுன்செய்யும் விளையாட்டாஞ் சக மாய்நின்றும், புராதனமா மொருமையினிற் பிரியாதாகும் பூரணசின் மாத்திர**

மாம் பொருளே சொன்னாய், நிராசையுளத் தவரறியும் பரமீதென்று நிருபனுரைத்திட நிருதி நெஞ்சுட்கொண்டு, விராவமுத மழைசொரியக் குளிர்ந்தவாபோன் மிகக்குளிர்ந்தாள் சாந்தமுற விளம்பலுற்றாள்.

(ப - ரை.) சராசரமாம் உலகனைத்தும் = ஜங்கம ஸ்தாவர வடிவமான ஜகத்தியாவும், மனரூபத்தால் தான் செய்யும் விளையாட்டாம் = அவ்வணுவின் சித்தமயீலீலையேயாகும், சகமாய் நின்றும் = விசுவான்மகத் தன்மையை யடைந்தபோதினும், புராதனமாம் ஒருமையினிற் பிரியாதாகும் = எப்போது மிருக்கும் ஏகபிண்டத்தன்மை கண்டிக்கப்பட மாட்டாதாம், பூரணசின் மாத்திரமாம் பொருளே சொன்னாய் = நிறைந்தசச்சின்மாத்திர சாசுவதப் பிரஹ்மத்தையே ஹேகல்யாணியே நீயுரைத்தனை, நிராசையுளத்தவர் அறியும் பரமீதென்று நிருபன் உரைத்திட = ஆசைதீர்ந்த சித்தத்தவர் தெரிந்துகொள்ளத்தக்க பரம்பொருள் இது என்று அரசன் கூறியபோது, நிருதி = கற்கடி, நெஞ்சுட்கொண்டு = கருத்துள்ளிருத்தி, விராவமுத மழைசொரியக் குளிர்ந்தவாபோல் மிகக்குளிர்ந்தாள் = அமுதங்கலந்த மழைபொழிய மயூராதி பரமதண்மை யடைந்ததேபோல அந்தர் சீதளத்தையும் பரம விசிராந்தியையும் அடைந்து, சாந்தமுறவிளம்பல் உற்றாள் = பரம சாந்தத்துடன் கூறத்தொடங்கினாள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வுலகமானது அவ்வதிஷ்டானத்தின் விவர்த்தபூத சித்தமயீலீலையாம். அது சர்வான்மகமாக இருந்தபோதினும் ஏகசொரூபத் தன்மை கண்டிக்கப்படமாட்டாது. மாயிகமாய அநேகரச சர்வதாத்மியத்தானே வாஸ்தவத்தன்மை வாய்ந்த ஏகரசத்தன்மை கெடமாட்டாதென்பது பொருள், நெஞ்சுட்கொண்டு என்றதனால் பிரஹ்மாத்ம ஞானமானது பிரத்யக்ஷபலமெனக் காட்டற்பொருட்டாம். சத்து அசத்துச் சந்திரூபமாயும் சித்து அசித்துச்சந்திரூபமாயும் இராநின்ற இரணியகர்ப்பவடிவ அதனது சித்தத்தின் விகாரமாதலின் சராசரமான இவ்வுலகம் லீலைவடிவமாம் அது விசுவவடிவமா யிருந்தபோதினும் அதன் அகண்ட வஸ்துத்தன்மை கண்டிக்கப் படுவதின்றாம். அத்தகைய சன்மாத்திர சாசுவதப் பிரஹ்மமே உன்னால் வினவப்பட்டது. ஒவ்வொரு வினாவிலும் ஆன்மாவின்கண் அணுசப்தப் பிரயோகத்திற்கு மந்திரியாலே எவ்வபிப்பிராயமானது "பெயரின்மையானும் மனமுதலியவைபொறியாறன் நிலைமைக்கு மன்னி விடயமாகாமையானும், சின்மாத்திரமேயாய ஆத்மாணுவானது இங்ஙனம் ஆகாயத்தைப் பார்க்கினும் அதிசூக்ஷ்மகமாம்" என இவ்வண்ண மியம்பப் பெற்றதோ அதுவே கற்கடியானுங் கருதப்பட்டது, அங்கீகரிக்கவும் பட்டது, என்பதாகத்தானே யரசன்றுணிந்து தனக்கிருக்கும் விசேட ஞானத்தன்மையைக் காண்பிப்பான் அதனைத்துடிப்பான் பூரணமென்றதாம். சுத்தசம் வேதன ஆகாசரூபத்திற்குப் பரம அணுவோடு மேருவிற்குங் கடுகுக்குமே போல ஒப்பிட்டுக் கூறியது அழகாகவில்லை; சூக்குமத்தன்மை மாத்திரத்தானே பரிச்சின்னமாகாதாம் பரிச்சேத வுற்கர்ஷ அவதி பரமாணு சாதிருசியம்பற்றிக் கௌணீ விருத்தியினாலே அணுவென விளம்புதற்குக் கூடுமென்றுணர்க, ஆயின் எங்ஙனம் அணுவுக்கணுவு மகத்துக்கு மகத்து, இவ்வணுவாத்மா சித்தத்தாலுணரத்தக்கதாம்" என்பதாதி சுருதிகளில் அவ்வாறுபதேசங் கூடுமெனின்? சர்வசக்தியோடு கூடியிருத்தலின் மகத்தன்மையைப்போல அணுத்தன்மையும் ஆன்மாவின் கண்ணே மாயையால் உண்டாக்கப்பட்டு நிற்குந்தகைமைத்ததாதலின் முக்கிய விருத்தியேயா மீண்டணுச் சப்தம்; ஈண்டுச் சமத்தன்மை நிமித்தமாகாதாம்; மாயையாற் பூஷிதமாய்ச் சபளமாயதனால் அணுத்தன்மை பரமாத்மாவின்கண் நிர்மிக்கப்பட்டுளது, அதன்

பால் கனகத்திற் றன்னிர்மித கடகாதித் தன்மையாற்போல் அணுத்தன்மைச் சமத்துவமாக மாட்டாதாம்; இன்னண மாதலினன்றே " மயிர்நுனியின் நூற்றி லொருபாகத்தை நூற்றிலொன்றாய்க் கற்பிப்பின் அப்பாகம் ஜீவனென வறிந்துகொள்க " என்பதாதி சுருதிகளும், மயிர்நுனியின் சதபாகம் ஆத்மாவென்னும் நினது வசனமும் மணம்பெறுவதாகும். விரையிற் றருவிருப்பதேபோல எவ்வணுவின்கண் ணுலகங்க ளிருக்கின்றனவென்னுஞ் சங்கைக்குச் சிறிது கூறுவாம்: சிதாத்மாவாகியபரமாணுவின்கண் ணுலகங்களெல்லாம் இருக்கின்றன. அதனானேயே ஜகத் சம்பந்தமான தோற்றங்கள் தோற்றுகின்றன. யாது எதன்கண் ணுளதாமோ அது அதனினின்றும் உண்டாகின்றது அது அதுவே யாகின்றது, ஸ்தம்பத்தினின்றுந் தோற்றுகின்றபதுமை ஸ்தம்பமாத்திரமாகவே இருக்கின்றதன்றே ! நிருமலமாக நிஷ்கிரியமாக விருக்கும் ஆகாயத்தில் விகாராதிகள் யாதொன்றுங் காணப்படுவ தில்லையன்றே ! அவ்வண்ணம் ஜகதாதிகள் யாதொன்றும் நிர்மலமாகிய தன்னிடத்தில் இல்லையாம், இல்லையெனின் வேதாந்தங்களில் திருசியகண்டனம் எற்றுக்கெனின் ? வியாவகாரிக லௌகிக திருஷ்டிவசத்தால் திருசியகண்டனஞ் செய்வதேயல்லாமல் பரமார்த்த திருஷ்டிபலத்தாலன்றும். அப்பரமார்த்ததிருஷ்டி எத்தகையதெனின் ? அணுதியாயும், விண்ணையும் வியாபித்ததாயும், ஏகரசமாயும், சம்பிரகாசமாயும், சமமாயும், சர்வமாயும் இராநின்ற சிதாகாசத்தையே ஜகமெனச் சப்தமாத்திரமாக விவகரித்ததாம் என்றறிதி " விகாரமானது வாக்கினுற்றொடங்கிய நாமதேயமாத்திரத்தது " எனச் சாந்தோக்கியமுஞ் சாற்றுகின்றது. ஆத்மாவானது அசத்தாயும் அவாஸ்தவமாயும் இராநின்ற திருசியத் தன்மையை அடைவதில்லை, என்னை, சத்தானது அசத்துருவமாக ஆவதற்கு முடியாமையின் ஆத்மாவின்கண்ணே யாது சிறிதுமில்லையோ அதுவாந் தன்மையைப் பரம்பொருள் எங்ஙனமடையுமென்றுணர்க. எதனினின்றும் ஒரு சிறிதும் வேறாகவில்லை யென்பதற்குச் சிறிதுரைப்பாம். பூதங்களாலாயவை எவையும் ஒரு சிறிதும் நிலம் நீர் முதலியவற்றை விடுத்துத் தனித்திராவாம்; அவ்வாறே இவ்வியற்கை வாய்ந்த அணுவைப் பார்க்கிலும் இவை யாவும் வேறாகாவாம்; அதற்குயுக்தி; இச்சித்தணுவானது சர்வ பதார்த்தங்களேயும் அறியாநின்ற அனுபவ வடிவமா யிருத்தலினுலே சர்வானுபவ ரூபத்தால் ஒருமையனுபவ நியாயத்திலேறும்போது யாவும் பேதமில்லாமல் ஒன்றாகவே ஆகிவிடுகின்றன என்பதாம். எதனிச்சையினுலே தனித்தும் இவையுளவாம் என்பது கூடாதாம், இச்சித்தணுவினுடைய இச்சைக்குத் தக்கபலமாயிருக்கும் தனித்திருக்குகையும், அஃதிருத்தற்குரித்தான பொருளும், ஒன்றாயிருத்தலினுலே இதனதிச்சையால் பெருநீரில் அலைபோலத் தனித்திராவாம்; தேசகாலாதியினுல் வரைவுபெறாது ஏகமாய் அஸ்தூலத் தன்மையால் அசத்துல்லியமாய்ச் சத்தாயிருக்கும். எதனினின்றும் மகாஜலத்தின் நெகிழ்ச்சியேபோலத் துவைதமும் பிருதக்காக இராது என்றதற்கும் கூறுவாம். திக்குகாலம் முதலியவற்றால் அளவிடப்படாமல் கேவலம் பரமான்மா விருக்கின்றது, அது எல்லாருடையசொரூபமா யிருத்தலின் சர்வாத்மாவாம் தனித்திருப்பதில்லை சுயமாகவே சர்வ அனுபவரூபமேயாமன்றி ஜடமன்றும். அசத்தாய்ச் சத்தாய் என்பதன் பொருள். இந்தப் பரமாத்மா சந்தேகமில்லாமல் ஆத்மாவையுணர்ந்த மகான்களின் ஆத்மசொரூபமா யிருத்தலின் சத்தாயிருக்கின்றது விழிமுதலியவற்றின் பார்வையினுலேயும், ஆலோசனையினுலேயும் அறியப் பெறுமையின் சகலரூபமா யிருக்கிற அந்த மகாத்மாவினிடத்தில் கண்முதலியவற்றால் அறியப்படா நின்ற லௌகிக சத்தைவடிவமான துவைதமென்பதும் ஐக்கியமென்பதும் இல்லையென்பதால் சுருதியின்கண் அசத்தென்று கூறப்படுவதே

மன்றி வாஸ்தவ அசத்துவ அபிப்பிராயத்தாலன்றும். துவைதமானது அபேக்ஷையோடு கூடிய வடிவமாதலின் பொய்யாகுக, ஐக்கியமோ இருமையின் அபேக்ஷையை யெய்தாமையின் உண்மையே யாமென்றாக எங்ஙனம் இரண்டு மில்லையென்று கூறலாமெனின்? கூறுவாம், யாதேனுமொரு துவிதீயம் உண்டாகுமாயின் அக்கால் ஏகத்திற்கு ஒருமையாம், துவைத ஐக்கியங்களின் பரஸ்பர சித்தியானது ஆதபச் சாயைகட்கே போலுமாம் துவிதீய விலக்கப் பொருட்டுக் கற்பிதமாய சங்கைரூபமும் துவிதீய சாபேக்ஷம் துவித்வாதி துல்லியமேயாம் என்னுங்கருத்தாற் கருதில், யாண்டிரண் டென்பதே யிலதோ ஆண்டு ஒன்றன் ஒருமையாங்ஙனம்? ஒருமையானது அசித்தமாகவே இரண்டே யிராதாம். இருமையும் தனித்தது ஆதல் யாங்ஙனம் மகாஜலத்தின் திரவத்தன்மைபோல வென்னும் அங்கிசம் விவரணிக்கப்படும்: இவ்வண்ணம் துவைத ஐக்கிய சூனியத்தன்மையதாகத் தத்துவமிருந்த வழி யாது அத்தகைய துவைத ஐக்கியமுடையதே போலவும் துவைதஐக்கியம் போலவும் இருந்திலங்குமோ அதனினின்றும் அந்தத்துவைத ஐக்கியரூபம் நீரில் நெகிழ்ச்சியே போலும் வேறாகமாட்டாதாம். விரிவு பெரியவாசிட்டத்திற்காண்க. இவ்வண்ணம் இறைவன் வாயிலாகக் கற்கடியாகிய வனமற்கடியானவள் கேட்டுப் பிரஹ்மபதத்தை யுணர்ந்ததனாலே மூல உச்சேதத்தால் நாசமான தன் ஜாதிக்குரிய மற்சரசாபலத்தை விட்டொழித்தனள். உட்சீதளத் தன்மையை யடைந்து, பாகியதிருஷ்டி சந்தாபத்தன்மை தீர்ந்து பரம விசிராந்தியை, மழையை யடைவுற்ற நன்மயூரீபோலவும், குளிர்மதி யொளிபெற்ற குமுதவதிபோலவும் அடைந்தனள்.

(ச.) சராசரமா மூலகனைத்தும் = இச்சராசரப் பிரபஞ்சம், மனரூபத்தால்=சித்தவிலாசமாத்திரமாம், சகத்துச் சித்தசலன மாத்திரமாதலின், தான் செய்யும் விளையாட்டாம் = வஸ்துவின் லீலையாம், சகமாய் நின்றும் = சகத்துரூபமாயிருப்பினும், ஒருமையினிற் பிரியாதாகும் = சிற்கனரூபத்துவங் கண்டமாகாது, புராதனமாம் = விவர்த்தமாய்த்தோற்று மிடத்தும் பூர்வரூபத்தை விடாதாதலின், பூரணசின்மாத்திரமாம் பொருளே சொனனுய் = சன்மாத்திரமும் அத்விதீயமும் சாசுவதமும் ஆன பிரஹ்மவஸ்துவையே மங்களரூபமான கற்கடி நீ வினவினுய், ஸ்ரீ வசிட்டர்: நிருதிநெஞ்சுட்கொண்டு= கற்கடிகேட்டு அவ்வஸ்துவை உள்ளத்துணர்ந்து, குளிர்ந்தவாபோல்=வருடாகாலத்தையடைந்த மயூரிபோலும், சந்திரிகையால் ஆம்பலோடை போலும், மிகக்குளிர்ந்தாள் = மச்சர சாபலத்தைவிட்டு இருதயத்து அதி சீதளத்தை யடைந்தவளாய், சாந்தமுற்று= விசிராந்தி பதத்தைப்பெற்று, விளம்பலுற்றாள்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வண்ணம் அரசனது வாக்தாரையினாலே அக்கற்கடிக்கு ஆகாயத்தில் மேககர்ச்சனையினாலே பலாகை யென்னும் பறவைக்கு உள்ளே கருப்பம் உண்டானதேபோல அத்தியந்தம் ஆனந்த முண்டானபின் அவள் அறையத்தொடங்கல்:—அற்புதவென.

**அற்புதமா யமுதமாயறிவே யாகியத்த மனமுதயமிலா வருக்கன்போலாய்ப், பொற்புமிகும் புந்தியுளவும்மைப் போல்வார் பொன்னடியை முடியாகப் புனைந்தாரன்றே, தற்பரமா மூலகாளும் வேந்தராவோர் தமையுணர்ந்தோரைச் சேர்ந்தாற் றளர்வுண்டாமோ, நற்பயன்போல் வருமுமக்கிங் கரிதின்றேனு நான்செய்யுங் கைம்மாறு நவிலுமென்றாள்.**

(ப - ரை.) அற்புதமா யமுதமாய் = அதிபவித்திர ஆச்சரியகரமாய் அத்தியந்தங் கெடாத சாரபூதமாய், அறிவேயாகி யத்தமனம் உதயம் இலா அருக்கன் போலாய் =

எழுதல் விழுதலில்லாத சிற்கனப் பிரபோதசூரியனு லிலக்கப்பெற்றதாய், பொற்புமிகும் புந்தி = உங்களதுமதி மிகக்கவின் வாய்ந்து மிளிர்கின்றது, உள உம்மைப்போல் வார் பொன்னடியை = அத்தகைய மதிமான்களாகிய உம்போல்வாரது அழகிய திருவடியை, முடியாகப் புனைந்தார் அன்றே ! = சிரத்திற் கிரீடம்போலத் தரித்தவர் அல்லவோ, தற்பரமாம் உலகாளும் வேந்தர் ஆவோர் = அதிசுந்தர உலகபரிபாலன மன்னவராவோர், தமையுணர்ந்தோரைச் சேர்ந்தால் = தமதுண்மை யுணர்ந்த மகத்துக்களைச் சேவித்துக் கொண்டிருந்தால், தளர்வு உண்டாமோ = மீண்டுந் துக்கம் பாதிக்குமோ, பாதியாதாம், நற்பயன்போல் வரும் உமக்கு இங்கு = இச்சாங்கலத்தில் நற்றவத்தின் பிரயோஜனத்திற் கொப்பாக எழுந்தருளி வந்த உங்கட்கு, அரிதின்றேனும் = இவ்வுலகத்தில் கிடையாதது ஒன்றின்றேனும், நான்செய்யும் கைம்மாறு நவிலும் என்றாள் = அடியாள் தங்கட்குச் செய்யத்தக்க பிரதியுபகாரத்தைக் கூறவேண்டும் என்றனள்.

(ஸ்ரீ - வீர) சிறந்த ஞானமுண்டானவர்க்குக் கருமலோப மின்றேனும் தேகவீழ்ச்சி வரையும் நன்னெறியிலேயே ருசியான துண்டாம் என்பதை அற்புதமென்பதாற் காட்டியதாயிற்று. அற்புதம் = சந்தோஷ அறிகுறி, மதி = சேமுஷி = புத்தியென்பன ஒருபொருளைக் காட்டுவன, கெடாதசாரம் = நட்டமற்ற ஆற்றல், சாங்கலம் = மருப்பூமிவனம், அகோ ஆச்சரியம் ! தங்களுடைய பவித்திரமாகிய இம்மதியானது அத்தமியாத சாரத்தோடுற்ற பிரபோத அருக்கனால் விலக்கப்பட்டதாகி, யொளிர் கின்றது; சீதளமாகிச் சமரசமாகித் தூய்தாகிச் சசிமண்டலத்தினின்றும் பிரவிருத்தமாய குளிர்ந்த அமுதகிரணம்போல ஒளிர்கின்றது. தங்களுடைய புத்தியின் சம்பந்தமாகவரும் வாக்கு வாயிலாக விரியும் விவேக அமிருதத்தின் கணிகையைக் கேட்டுக் கற்கடியாகிய யான் தங்களைப்போன்ற விவேகிகள் ஜகத்பூஜ்ஜியர்கள் சேவைசெய்ய யோக்கியர்கள் முமுக்ஷுக்களால் என்றெண்ணுகின்றேன் பெரியோர்களுடைய சங்கத்தினாலே ஒரு முறை விவேகபாதித மாகியதுக்கம் மீண்டும் பாதிக்கமாட்டாது, தீபசிகையைக் கையில்வைத்துக் கொண்டுள்ள யாவர்தாம் தமத்தாற் றளர்ந்து வருந்துவர் ! இப்பாலைவனத்தில் விரும்பாமலே வந்துற்ற பூமி பாஸ்கரர்களாகிய தாங்கள் என்னால் இஷ்டார்த்த தானத்தானே பூஜிக்கத்தக்கவர்கள் ஆவீர்கள், ஆகலின் வாஞ்சிதசுபத்தை விரைவி லுரைப்பீர்களாக.

(ச.) அருக்கன்போலாய், பொற்புமிகும் = பிரபோதப் பிரகாசமிகுந்த, தளர்வுண்டாமோ = பின்புதுக்கம் வராது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அரசன் அவாவியது கேட்டலும் கற்கடி யளித்தலும் கூறல்:—சிலையென.

சிலையரக்கர் குலமென்னு மெட்டிக்காட்டிற் செறிகனித்தே மாவனையாய்
சகத்திலொன் றுங், கொலைபுரியா தொழியென்று வேந்தன்கூறக் கொலையொ
ழிந்தே னென்றரக்கி கூறலோடுந், தொலைவரு மூனுணவாசீ செய்யுமாறென்
சொல்லென மன்னவன் கேட்பத்தொல்லை நாளி, லலைவில்சமாதியி லிருந்து
பசியைவென்றே னவ்வகையே யின்றுமிருந் தாற்றலுற்றேன். (44)

(ப - ரை.) சிலையரக்கர் குலம் என்னும் எட்டிக்காட்டில் = விற்றாங்கிக் கற்போலும் கடினமனத்தோடு முழலும் இராக்ஷதர் குலமாகிய எட்டிக்காட்டில், செறிகனித் தேமா அனையாய் = பழங்கள் நிறைந்த தேமாவுக் கொப்பாய், சகத்திலொன் றுங்கொலை

புரியாதொழி = இவ்வுலகத்தி லொன்றையும் கொலைசெய்யாது விட்டுவிடுவாயாக, என்று வேந்தன்கூற = எனமன்னவன் சொல்ல, கொலையொழிந்தேன் என்றரக்கிகூற லோடும் = ஹிம்சையை விட்டுவிட்டேன் என்று கற்கடி கூறியபோது, தொலைவரும் ஊன் உணவா நீ = அபரிமிதமான தேகங்களை ஆகாரமாகக் கொள்ளும் நீ, செய்யுமாறு என்சொல்லென = இனியாகாரஞ் செய்யும்விதம் எவ்விதம் என்று சொல்லுவாயாக வென்று, மன்னவன் கேட்ப = அரசன்வினவ, தொல்லைநாளில் = முன் அநேககாலம், அலைவில் சமாதியிலிருந்து = நிர்விகற்ப நிட்டையில் நிலைத்து, பசியை வென்றேன் = ஜாடராக்கினியைச் சாந்தி செய்துளேன், அவ்வகையே இன்றும் இருந்து ஆற்றல் உற்றேன் = அவ்விதமே இனிமேலும் சமாதியிலிருந்து பசியைவெல்ல உத்தேசிக்கின்றேன்.

(ஸ்ரீ - வீர.) ஹே அரக்கர்குலமேயாய கானனமஞ்சரீ ! உன்னால் இனிப்பிராணி யாதுமே ஹிம்சிக்கத் தகாததாகவேண்டும் என்பதனைப் பிரார்த்தித்துக் கொள்ளுகின்றேன், ஒழிந்தேன் என்பதுண்மையே. எமதிஷ்டத்தை நிறைவேற்றின் நின்னுடலைக் காப்பாற்றுவதற்குச் செய்யுமாறென் ? ஹே அரக்கர்குல கானன அத்வைத ரசமஞ்சரி ! இத்தேசத்தில் எப்போதும் அத்தியந்தம் இருதய சூலனம் பாதிக்கின்றது; ஆகலின் எல்லாப் பிராணிகளுமே திடவிசூசிகையினாலே தாக்கப்பட்டு மிகவுந் தபிக்கின்றனர், அக்காரணங்கொண்டே மண்டலத்தில் இராச்சோதனையின் பொருட்டு யான் வெளிப் போந்து வந்தேன், ஆகலின் மந்திர அடைவு சம்பவியா விடினும் வேறொன்று வேண்டுகின்றேன், என்னெனின் ? ஹே மங்கள மங்கையே! இத்துணைமாத்திரவசனம் உன்னால் அவசியம் அங்கீகரிக்கப் படவேண்டும்,: இனிமேல் எப்பிராணியுமே உன்னால் ஹிம்சிக்கப்படா திருக்கவேண்டும் என்பதே. என்பதைக்கேட்ட கற்கடிகூறல்; ஹே பிரபுவே ! இன்று முதலாக நிச்சயமாய் நீர்புகன்ற வண்ணமே செய்கின்றேன் இது சத்தியமேயாகும் மித்தையேயன்று இக்கணமுதல் என்னால் ஒரு பிராணியுமே ஹிம்சிக்கப் படமாட்டாது, இவ்வண்ணம் எனது வேண்டுகோட் கிணங்கிய என்புகன்ற அஹிம்சாவிரதத்தில் இருப்பையே யாயின் ஹே விரிவிரைமரை விழியாய், பரதேகத்தையே பக்ஷமெனவுடையாய் ! நினது சரீரவிவகாரம் நிகழுவது எவ்வாறுகூடும் ? கற்கடிகூறல்: ஹே இராஜ இராஜனே ! ஹிமகிரியில் பெருஞ் சமாதியினின்றுங் கிளம்பி ஆறுமாதமாகத் தியானஞ் செய்துகொண்டே யிருந்தேன், போஜன சங்கற்பத்தால் இன்று எனக்குப்போஜன இச்சையான துண்டாயது.

(ச.) அரசன்: இன்றுமுதற் கொலை யொழிந்தேன் சத்தியமே என்று, ஊன் = பர தேகங்களை, உணவாநீ = முக்கிய போஜனமாகக் கொள்ளும் நீ, செய்யுமாறென் = நினது சரீரவிருத்தியாதற்கு என்செய்வாய், தொல்லைநாளில் = இமகிரி முடியில் வெகு காலம், அலைவில், பசியை = போஜன வாஞ்சையை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கற்கடி பசிபோக்கும் விதங்கூற அரசன் வேறுபாயங் கூறல்:—தெள்ளென.

தெள்ளமுத தாரணையால் வேண்டுங்காலந் தேகமுடனிருந்தப்பாற்றேகந்
தீர்வேன், உள்ளநிறை யுணர்வுடையே னென்றுங் கொல்லே னுண்மையென
வுரைத்தேக வுன்னுவாளைக், கொள்ளரிய நட்பெனிதிற் கொண்டேம் நீயெங்
குலமகளா யெம்பதிக்குக் கூடவேகிற், கள்ளருட லிரைதருது முடல்போமட்
டுங் கருதுமுடல் வாதனைகள் கழலாகண்டாய். (45)

(ப - ரை.) தெள்ளமுத தாரணையால்=சமாதியிற்றெளிந்த அமுததாரணையினாலே, வேண்டுங்காலம் = ஆயுள்வரை, தேகமுடனிருந்து = சரீரத்தோடிருந்து, அப்பால் = பின்னர், தேகம் தீர்வேன் = உடம்பை விட்டொழிப்பேன், உள்ளநிறையுணர்வு உடையேன் = மனத்தின்கண் பரிபூர்ண சிவஞான முடையவளாக இருத்தலின், ஒன்றுங் கொல்லேன் = ஒருயிரையும் ஹிம்சியேன், உண்மையென = இது சத்தியமென்று, உரைத்து = பிரதிஞ்ஞை செய்துவிட்டு, ஏக உன்னுவாளை = செல்ல முயன்ற கற்கடியை, கொள்ளரியநட்பு எளிதிற் கொண்டேம் = கிடைத்தற் கருமையான சிநேகம் அதிசுலபமாக அடைந்தேம், நீ எம் குலமகளாய் =எமதுகுல குமரியாய்நீ, எம்பதிக்கு= எமதுநகர அரண்மனைக்கு, கூடஎகில்= கூடவருதியேலாயின், கள்ளர்உடல் இரைதரு தும் = தீயோர் சரீரங்களை உணவாகக் கொடுப்பேம், உடல்போமட்டும்=சரீரம் நீங்கும் பரியந்தம், கருதும் உடல் வாதனைகள் = எண்ணு சரீரவாசனைகள், கழலாகண்டாய் = நீங்காதென்பது நினக்கேதெரியும்.

(ஸ்ரீ - வீர.) இச்சரீரமாகிய பதுமை யிருக்கும்வரை ஹிமகிரிச்சிகரத்தில் தியானஞ் செய்துகொண்டே யிருப்பேன். அரிதிற்கிடைத்த சிநேகத்தை வீணே போக்குதல் உரித்தன்றன்றே. உங்கள் ஆகாரம் எமக்குப் பிரீதிகரமாகா தெனின் விடைதருவார் கள்ளர் உடல் என்றார் இதிற்கள்ளர் என்றது விதியால் இன்னுசெயினு மினிமேயாம் என்றபடி, இப்போதே ஹிமசிகரஞ் சென்று முன்போன்றே தியான நிச்சலசமாதியைக் கைக்கொண்டு இச்சையுள்ள பரியந்தம் சுகமாகவே மரத்தாற்செய்த பதுமைபோன்ற உயிரொடுடம்பொடு மிருப்பேன், சாங்காறும் அமுத தாரணையைப்பற்றித் தேகத்தைத் தரிப்பேன், இப்போது முதல் தேகத்தை வீழ்த்தும் பரியந்தம், அமிருதாத்ம பாவனை வடிவதாரணையைப் பற்றியயான் அயல் உயிர்களைக் கொல்லவேமாட்டேன், எங்கணுஞ் சிவமேயென்று நோக்கிடுவேன். பரமஞானியாய்ப் பரத்தையே நாடிக்கொண்டேயிருந்து இஷ்டமானபோது தேகம்விடுத்து விதேகமுக்தியை யடைவேன்; என்று சிநேகபாவத்தை யடைந்த அவ்விருவரையும் நோக்கிக்கூறிய பின்னர் அவரை விடுத்துச் செல்லமுயலும் கற்கடியை நோக்கி யரசன் கூறுவதாவது. ஹேமகா தேகத்தையுடைய கற்கடி! ஹேசுந்தரி! நீ பெரியவளாயும் சிநேகிதையாயும் இனியவளாயு மிருக்கின்ற படியினாலே எங்கள் கிராமத்திற்கு வரும்பொருட்டு மிகமுயல்வுடன் விருந்தளிப்பான் அழைக்கின்றேம். சுந்தரியென்றது இருதய சௌந்தரியம் பற்றியாமென்க. நாம்கொண்ட அதிப்பிரியபரம் நேயத்தை வீணாக்குவது தகுதியல்ல, நல்லோர்தம் நேயபரவம் நாட்டமாத்திரத்தானே வளர்ந்தோங்கு மன்றே. அற்பப்பிரமாணமாய்ச் சௌந்தரிய அலங்கார முதலியவற்றோடு கூடிய மனோரம்மிய தேகத்தைக் கொண்டு எமது அரண்மனைக்கு வந்து அவ்விடத்தில் இஷ்டப்படி சுகமாக வசிப்பாயாக. ஹேமன்னவனே! சாதாரண மங்கை வடிவமுற்ற குமரிக்கு மனுடயோக்கிய அன்னபானாதி கொடுக்க உமக்குமுடியும், இராக்ஷசாகார தாரிணியாகிய என்னை யெவ்வாகாரங் கொண்டு சந்தோஷிக்கச் செய்வாய், எனக்கு அரக்க அன்னமே சந்துட்டியைத்தரும், சாமானியசன அசனம்சந்தோஷியாது பூர்வசித்த சுபாவமாகிய இது உடம் புள்ளவரை நீங்கமாட்டாது. அரசன்கூறல் எமது வீட்டில்வந்து ஹேம மாலைகளையும், ஹேம சூத்திரங்களையும் அலங்கரித்துக் கொண்டு சிலதினம் யாவரும் புகழும்படியாக எங்கள் பெண்போலிருந்து வருதியேல்; பின்கொடுந்தொழில் புரிவோர் கொலையினைப் புரிவோர் களவினைச் செய்வோர் வதஞ்செய வுரியோர் என்னு மித்தகையரை நூறுயிரக்கணக்காக உனக்கு இச்சையுள்ளவரை மண்டலங்களினின்றும் தருவித்து நற்போஜனமாகத் தருவேம்,

(ச.) உள்ளநிறை யுணர்வுடையேன் = சிவஞ்சர்வகத மென்னும் போதமுடைய யான், ஒன்றுங் கொல்லேன் = இனித் தேகாந்தமட்டும் ஒருயிரையும் இம்சியேன், ஏக = அச்சுகிர்தரை விட்டுப்போக உன்னுவாளை, நோக்கி யரசன்கூறல்: எளிதில் = தரிசனமாத்திரத்தினுல் கொண்டேம், நீ யெங்குலமகளாய், நீ எம் விசுவாச சிநேகத்தை வியர்த்தஞ் செய்தற் குரியையாகாது, மனோகர சௌபாக்கியவதியான சிறுபெண்வடிவாகி, வாதனைகள், பூர்வசித்தமான சுபாவம், கழலா = நிவிர்த்தியாகாது, கண்டாய்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மன்னவன் வேண்டிக்கொண்ட வண்ணம் கற்கடிசென்று பாதகரைப் பற்றியேகல்:—ஆதலினென.

**ஆதலினுற் பதகருடலிரையைக்கைக்கொண் டரும்பசிபோய்ச்சமாதிதனை யடையிவ்வாறு, காதலுடன் பலகாலுஞ் செய்தியென்று காவலன் கூறவுமரக்கி களிகூர்ந்தேகப், போதகமன்னுர் தமது நகரமேவிப் பொன்மனைபுக் காரிரவி பொலியவந்தான், பாதகர் மூவாயிரரை யாறுநாளிற் பார்த்திபனீந் தானரக்கி பற்றிக் கொண்டாள்.** (46)

(ப - ரை.) ஆதலினுல் = விதேகமுக்திவரையும் வாதனைகள் இருக்குமாதலினுல், பதகருடல் இரையை கைக்கொண்டு = பாதகருடைய ஆகாரத்தைப் பெற்றுக்கொண்டு, அரும்பசிபோய் = கொடியபசி நீங்கி, சமாதிதனையடை = சமாதியை யடைந்து சுகித்திரு, இவ்வாறு காதலுடன் பலகாலும் = இவ்வண்ணமே அன்போடும் எப்போதும், செய்தியென்று = செய்வாயாக என்று, காவலன் கூறவும் = மன்னவன் மொழிந்தபோது, அரக்கி களிகூர்ந்தேக = கற்கடி மகிழ்ச்சியுடன் செல்ல, போதகம் அன்னுர் = சிங்கக்குட்டிக்குச் சமானமான அம்மன்ன மந்திரிகள், தமது நகரமேவிப் பொன்மனைபுக்கார் = தங்களுடைய பட்டணத்தை யடைந்து தங்கமய அரண்மனை புகுந்தார்கள், இரவிபொலியவந்தான் = சூரியன் இவ்விருத்தாந்தத்தை யொளிர் விப்பான்போல உதயமாயினன், ஆறுநாளில் = ஆறுதினங்களில், பாதகர் மூவாயிரரை = மூன்றுயிரந் துட்டரை பார்த்திபன் = அரசன், ஈந்தான் = கொடுத்தான், அரக்கி பற்றிக்கொண்டாள் = கற்கடி கவர்ந்து கொண்டனள்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் காந்தாரூபத்தைப் பரித்தியாகஞ்செய்து, இராக்ஷச சரீரத்தைக் கவர்ந்து, சேர்க்கப்பட்ட நூற்றுக்கணக்கான கள்ளபுருடரை யெல்லாம் கொண்டு ஹிமாசல சிருங்கத்தை யடைந்து ஆண்டு இன்பமுறுமாறு புசிப்பாயாக; பெருந்தீனிக்காரருக்கு ஏகாந்தத்திற் போஜனஞ்செய்தல் இன்பத்தைத் தருவதாகுமன்றே ! ஆகாரத்தாற் திருப்தியை யடைந்தபின் சிறிது நித்திரைசெய்து விட்டு மறுபடியும் சமாதியை யடையலாம், சமாதியினின்றுங் கிளம்பில் மீண்டும் ஒருகாலத்தில் வந்து சேர்தியேல் வதஞ்செய்ய யோக்கியரைச் சேர்த்துத்தருவேம் கொள்ளலாம், தருமசாஸ்திர மரியாதையாய் ஹிம்சைசெய்வது அவரை ஹிம்சை செய்ததாகாது. சுவதருமமாகச் செய்யும் ஹிம்சையே பெருங் கருணைக்குச் சமானமாம். சமாதியிச்சை யொழிந்தபோது நீயவசியம் எம்மைவந் தடைவாயென் றெதிர்பார்க்கின்றேம், அசத்துக்கட்கும் உற்ற அருநேயமானது அகலுவதே யில்லை. கற்கடிகூறல்: ஹே நேயமிகுந்த மன்னர்மன்ன ! நீர் நிகழ்த்தியது பொருத்தமாகவே யிருக்கிறது, யான் அவ்வாறே செய்கின்றேன்; நேயபாவத்தோடு முயன்றவர்க்கு எவ்வாக்கியந்தான் ஆநந்தருசியைத் தராது; ஸ்ரீ வசிட்டபகவான் கூறல்: இவ்வண்ணம் இயம்பிய கற்கடியானவள், ஆண்டு அதிசுந்தரியான ரூபத்தை யடைந்து ஹாரகேயூர கடக காஞ்சிபட்டம் பட்டுவஸ்திரம் அநேக விசித்திர ரத்நமாலை

கள் சுகந்தமாலைகள் முதலியவற்றை புஜிங்கரித்துக்கொண்டு, ஹே அரசரே! வாரும் போவோம் எனப்புகன்று பூபமந்திரிகளை முன்னர்ப் போகவிடுத்துப் பின்னர் அவ்விர விலேயே தானும் பின்றொடர்ந்து சென்றாள். அவர்கள் பார்த்திவன் அரண்மனையை யடைந்து அவ்விரவை இரம்மியமான ஒருசாலையிலிருந்து பரஸ்பரம் ஞானநற்கதைக ளானே மிக ஆதரவோடுங் கழித்தனர், விடிந்தபின் மந்திரியும் அரசனும் தாங்கள்செய்ய வேண்டிய ஜனபாலன வத்திய சம்பாதனாதி வியாபாரங்களிற் சென்றனர், கற்கடியோ அங்குள்ள ராணிமார்களுடன் விளையாடிக் கொண்டு அந்தப்புரத்தில் மகிழ்ந்திருந்தனள். பின்னாறு தினங்களுக்குள் மன்னர்மன்னன் தன் மண்டலங்களி னின்றும் அன்னிய அரசர் புரங்களினின்றும் தருவித்துச் சேர்த்த மூவாயிரம் பாதகரைக் கற்கடிக்குக் கொடுத்தனன்.

(ச.) பதகர் = துஷ்டகிருத்தியரும், சோரரும், கொலைசெய்பவரும் ஆகிய இப்பா விகளது, கைக்கொண்டு = காந்தரூபத்தை விட்டுக் கிரகித்து, மிகப் புஜிப்பவர்க்கு ஏகாந்தபோஜனமே சுகஙிமித்தமா மாதலின் நீ ஹிமகிரிமுடியை யடைந்து புஜித்து, அரும்பசிபோய் கொஞ்ச நித்திரைபோய பின்பு சமாதியினையடை, காதலுடன் = சுதர் மத்தினாலே செய்யுமிக்கொலை மகாகருணையோடு சமமாதலின் அன்புடன் = களி கூர்ந்து, சிநேகபாவத்தால் உன்னாற் சொல்லப்பட்ட வாக்கியம் நன்றென்று சந்தோஷ மிகுந்து ஏக = அவருடன் பின்னாலே செல்ல

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருடரைக் கைப்பற்றித் தின்றிமகிரியில் மீண்டு மீண்டும் வந்துபோய் நேயமிக்கனரெனக் கதையை யுபசங்கரிக்கின்றார்.—பூமகளென.

பூமகள்போலங் கிருந்தவடிவைக் கங்குற்போதி லொழித்தரக் கர்குலப் பூவையாகிப், பாமரராம் பாதகரைத் தோண்மேற் கொண்டு பார்த்திபனோ டமைச்சனுக்கும் பண்புகூறி, யேமமுறுமிமகிரியிற் சமாதிமேவ வேகினளின் றளவுமிந்தவாறே, கோமகனு மரக்கியுநட் பானாரென்று குரிசிலுக்கு வசிட்ட முனிகூறினால். (47)

(ப - ரை.) பூமகள்போல் அங்கிருந்த வடிவை = ஸ்ரீதேவிக்கொப்பாக அவ்வரண் மனையி லிருந்த காத்திரத்தை, கங்குற்போதில் ஒழித்து = இரவுவந்ததும் விடுத்து, அரக்கர்குலப் பூவையாகி = இராக்கதர் வங்கிச மங்கையாய், பாமரராம் பாதகரை = ஒன்றுந்தெரியாத மிருகசமான மூடரை, தோண்மேற்கொண்டு = தோளின்மீதுவைத் துக்கொண்டு, பார்த்திபனோடு அமைச்சனுக்கும் பண்புகூறி = அரசனுக்கும் மந்திரிக் கும் இனிய வசனங்களைக் கூறிவிட்டு, ஏமமுறு இமகிரியில் = பொன்மயமாகி யழகு நிறைந்த ஹிமாசலத்தில், சமாதிமேவ = சமாதியையடைய, ஏகினள் = சென்றாள், இன்றளவும் = இன்றையதின பரியந்தம், இந்தவாறே = இவ்வண்ணமே, கோமகனும் அரக்கியும் நட்பானார் = மன்னவனும் கற்கடியும் நேயமிக்கு வாழ்கின்றனர், என்று = என இங்ஙனம், குரிசிலுக்கு = ஸ்ரீ இராமச்சந்திரருக்கு, வசிட்டமுனி = ஸ்ரீ வசிட்ட பகவான், கூறினன் = திருவாய் மலர்ந்தருளினார். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) நிசாகாலம் உற்றபோது சுந்தரிவடிவத்தை விடுத்துக் கோரமான கறுப்பு இராக்ஷசியாய், கோடரத்திற் றெங்கிநின்ற தாராநிகர ஜாலங்களை மேகமாலை போலும், அம்மூவாயிரம் பாதகரையும் புஜமண்டலத்திற் கவர்ந்து மன்னமந்திரிக் காசி கூறி முன்னிருந்த ஹிமாசல சிருங்கத்திற்கேசென்றனள்! தரித்திரனுக்குப் பொற்புதை

யல் கிடைத்ததேபோலப் பூதனை ரக்ஷ பிசாசுமுதலிய கிரகங்களுக்குள் பெரியகாத்திரம் படைத்த சிறந்த அக்கற்கடியானவள் அங்கிருந்துமுழுவதையும் சந்தோடத்துடன் புசித்துத் திருப்தியை யடைந்து சுகமாக மூன்றுநாட் டேங்கி யெழுந்து சொஸ்தமாக நனவை யடைந்து மீண்டும் சமாதியின் கண்ணே பிரஹ்மோபஸ்திதி மதியை யுடையவளானுள். அதுமுதலாக இன்றுவரை 4 ஐந்து வருடத்திற் கொருமுறை சமாதியினின்றும் எழுந்து கிராதஜனமண்டல மடைந்து மன்ன மந்திரிகளோடும் அளவளாவிப் பாதகரை வாங்கிக் கொண்டு போவதும் வருவதும் ஆக இருக்கின்றனள் சுபம்.

கற்கடிகதை முற்றிற்று.



## ஐ ந் த வ ர் க தை.



(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரவிருத்த அநுவாத பூர்வகம் ஜகத்தின் மனோவிலாசிதத்தன்மையின் விரிவின்பொருட்டு அயல் ஆக்கியானம் ஆரம்பிக்கின்றார்: —உரையென.

(ச.) முன் கற்கடிகதையில் பிரஹ்மமே ஈதனைத்தும் என்று பிரஹ்மதிருஷ்டிசொல்லப்பட்டது, இப்போது அயிந்தவர் கதையில் அவ்வருத்தத்தினையே சமர்த்திக்கு நிமித்தம் விசுவதிருஷ்டிக்கு மனோமயத்துவஞ் சொல்லப்படுகின்றது, அதில் முற் கூறியதை உபசம்மரிப்பவராய் மற்றொருகதையை வர்ணிக்கின்றார்:—உரையென.

உரைசெயூசி கதையாலே யுண்மையாகிப் பரமான
கரையில்பிரமமே யுளதாங்காணப் படுவதொன்றில்லை
வரையில் சிருட்டிகளின் முதலாய்மனமே விளங்குமிது பொருட்டோர்
புரையில்கதை கேளென வசிட்டன் புயன்மேனியற்குப் புகல்கின்றான்.

(ப - ரை.) உரைசெய் ஊசிகதையாலே = முன்னர் மொழிந்த கற்கடிகதையினுனே, உண்மையாகிப் பரமான கரையில் பிரமமேயுளதாம் = சத்தியமாகி மேலான அபரிச்சின்ன ஆத்மாவே யிருக்கின்றது, காணப்படுவது ஒன்றில்லை = அன்னிய சம்சாரதிருஷ்டிகள் கிடையவே கிடையாவாம், வரையில் சிருட்டிகளின் முதலாய் மனமே விளங்கும் = அளவில்லாத சிருஷ்டிகளிற் காரணமாய்ச் சித்தமேதிகழும், இதுபொருட்டோர் = இப்பொருள் இனிது தெளிதற் பொருட்டு ஒப்பற்ற ஒரு, புரையில்கதை = குற்றமற்றகதை, கேளென = கேட்பாயாக வென்று, வசிட்டன் = ஸ்ரீ வசிட்டபகவான், புயன்மேனியற்கு = மேகமேனிய இரகுநாயகனுக்கு, புகல்கின்றான் = கூறத்தொடங்குகின்றார்.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மத்தினும் அன்னியமாய ஆன்மாவே யிருக்கின்றதா வெனக் கடாவியன் றென்பார்: உண்மையாகிப் பரமான என்றார். சத்தியம் பிரஹ்மம், சமுசார திருஷ்டிகள் = சமுசாரபிராந்திகள். என் சமுசார திருஷ்டிகள் இருப்பதில்லை யெனக் கடாவி விடைதருவார் மனமேவிளங்கும் என்றார். இம்மனந்தானே செய்யத்தக்கனவாய் சிருஷ்டிகளில் இவ்வகையானே சர்வஜகத்தான்மகமாக இலங்குகின்றதாதலின் சமுசார மயல்கள் இல்லையாம். ஈண்டு ஜகத்து மனோவிவர்த்த மென்பதில், இந்துவெனப் பெயரிய பிராஹ்மணரின் மைந்தர் ஆகிய ஐந்தவரது ஆக்கியானத்தைக் கேட்டி யென்பதாம். இக்கற்கடிகதை யியம்பும் வாயிலானே உனக்குயாவுமே யியம்பலாயது, பரமாய்ச் சத்திய

மாய ஆத்மாவேயுளதாம் அன்னிய சம்சார திருஷ்டிகளின்றும். இவ்வியாவுமே மனோ மாத்திரம், இம்மனமே யிவ்வண்ணம் சிருஷ்டிகளிற் சுழல்கின்றது. ஈண்டுச் சிரவண பூஷணமாய இந்த ஐந்தவ ஆக்கியானத்தைக் கேட்டி ! இது பிரஹ்மாவாகிய உலகபிதா மகரால் எனக்கனுக்கிரகிக்கப்பட்டது. ஆகையாற் புகழத்தக்க இதனை நினக்குரைக் கின்றேன் என்பதாம்.

(ச) பிரமமே = ஆன்மாவே, காணப்படுவது = சம்சார திருஷ்டிகள், ஒன்றில்லை = அற்பமும் வேறின்றும், முதலாய் = வியதாதி ரூபமாய், இது பொருட்டு = மனமே யீதனைத்தும் என்றதினிமித்தம், ஓர் புரையில் கதை = சிரவணபூடணமாய் நிந்தையற்ற அயிந்தவர் கதையை.

(ஸ்ரீ - வீர - அ-கை.) கதையால் வரும்பயனையும் மனம்பேய் பிடித்தாடிப் பந்த மோக்ஷங்கள் அடைதலையும் கூறுகின்றார்:—மேவுஎன:

மேவுகதையாற் சிற்சத்திவிரி வேயுலகென் றறுதிவரும்
வாவுமனமாஞ் சிறுமகவு மடமையாலே வெறும்பொய்யே
தாவுசகப்பேய் வரக்காணுந் தனைப்போதிக்கி லறிந்திடர்போம்
பாவும்விகாரம் பலசேரிற் பவமாமவற்றை விடல்வீடாம்.

(ப - ரை.) மேவுகதையால் = உரைக்கப்படும் உபாக்கியானத்தால், சிற்சத்தி விரிவே = சிதிசக்தியின் உல்லாசமே, உலகென் றறுதிவரும் = ஜகத்தென்ற நிச்சய முண்டாம், வாவுமனமாம் சிறுமகவு = உற்றதைப்பற்றுஞ் சிறுசித்தபாலன், மடமை யாலே = அறியாமையாலே, வெறும்பொய்யே தாவுஜகப்பேய் வரக்காணும் = அத்தியந் தம் மித்தையாகவே தோற்றுகின்ற வுலகயக்ஷனை உண்மையாக இருத்தல் போலவே பார்ப்பன், தனைப்போதிக்கில் = தனதுண்மையை யுணர்த்திடுனே, அறிந்திடர்போம் = நிராமயப் பரரூபத் தன்னையுணர்ந்து ஆநந்திப்பன், பாவும் விகாரம்பலசேரில் பவமாம் = இராகாதிக் கிலேசங்கள் அநேகம் அமைவதாற் சமுசாரமாம், அவற்றைவிடல் வீடாம் = அக்கிலேசங்கள் அறுதலே மோக்ஷமாம்.

(ஸ்ரீ - வீர.) இந்த ஐந்தவ ஆக்கியானத்தைக் கேட்பதானே ஜகத்தானது, பரமாத் மாவினுடைய, மநோபாவத்தையடைந்து மாயாசக்தியினது, விஜ்ரும்பணம் விவர்த்தம் என நிச்சயிப்பாய். ஞானத்தில் ஆற்றலையுடைய மனமெனினும் அமையும் ஆக்கியான தாற்பரியங் கூறுவதாம் வாவுமனமென்பது, சித்தமேபாலன், ஜகத்தேயக்ஷன் எங்ஙு னம் பாலன் உணராமையினுனே தன் சாயையைப் பொய்ப்பூதமாய்ப் பார்ப்பனோ, அங் ஙனம், சிதாபாச விசிஷ்டமாய சித்தம் அறியாமையோடு கூடியதாய்ப் பொய்யுலகைக் காணும் உணர்த்தப் பெறினோ நிருபத்வமான அதிஷ்டானத்தை யினிதுகாணும் வீடு = பவாந்தம் = சமுசாராந்தமெனத் தற்சாதனத் தன்மையாற் சாற்றப்பெறும் மனமே யென்பதாம். இதன் சிரவண மாத்திரத்தானே சிதிசக்தியின் சிறந்த உல்லாசத்தைச் சகமெனத் துணிவாய் ; சித்வியாப்தி வலுமையானே சித்தத்திற்கு அவிசார முண்டாகச் சகத்தைக் காணுந்தன்மையும் விசாரமுண்டாக ஆன்ம தரிசனமாதலும் ஆமென்பார் காணும் இடர் போமென்றார். சித்தபாலன் ஜகத்தியக்கனை அபோதத்தால் பொய்யா கவே காண்பன், இவன் போதிதனுகவே தனது நிராமயமான பரமரூபத்தைக் காண் பன் இராகாதிக்கிலேச தூஷிதமாய சித்தமேதான் சமுசாரம், அவற்றோடு கூடாத அதுவே பவாந்தமென அதாவது சமுசாரநாசமெனப் பகரப்பெறும்.

(ச.) மனோரூபமான சிற்சத்தி விரிவே = விலாசமே, உறுதிவரும் = நிச்சயம் பிறக்கும்; மனமாஞ் சிறுமகவும் = சித்தமென்னும் பாலன், மடமையாலே = தனக்கென விவேகமின்மையின் அவன் போதிக்கப் படாவிடின், போதிக்கில் = போதிக்கப்படின், தனையறிந்து = பரமரூபமான தன்னைத்தானே யுணர்ந்து இடர்போம் = நிராமயமாவன், விகாரம்பல சேரின் = இராகாதி கிலேசங்களாற் றூஷிக்கப்படின் பவமாம், வீடாம் = பவாந்தமெனப்படும்; விகாரமும் விகாரரகிதமும் ஆன சித்தமே பவத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஏதுவென்பது பொருள்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) சிருஷ்டிசெய்ய முயன்ற தாதா பத்துப் பிரமாண்டங்களைக் கண்டதிசயித்தல்:—ஒரு என.

ஒருகால்விரிஞ்சன் சிருட்டியெலா மொடுக்கியிரவி னுறங்கியபின்
வருகாலையின் மீண்டுலகளிப்பான் வானோக்குதலு மனத்தாலே
பெருகாநின்ற விண்ணிடையே பேதமான பலசிருட்டி
யருகாநின்ற படிகண்டானார் செய்தனரென் றதிசயித்தான்.

(ப - ரை) ஒருகால் = ஒருசமயத்தன் றினுந்தத்தில், விரிஞ்சன் = நான்முகன், சிருட்டியெலாம் ஒடுக்கி = அகில சர்க்கத்தையுஞ் சங்கரித்து, இரவினுறங்கியபின் வருகாலையில் = நிசியில் நித்திரையிலிருந் ததன் பின்னர் வாராநின்ற நிசாந்தத்தில் விழித்து, மீண்டுலகு அளிப்பான் = மீளவும் பிரஜைகளைச் சிருட்டிக்கும் பொருட்டு, வானோக்குதலும் மனத்தாலே = சித்தத்தினாலே சேணைநோக்கும்போது, பெருகாநின்ற விண்ணிடையே = விஸ்தாரமாய வியோமத்தின் மத்தியில், பேதமான பலசிருட்டி = விசித்திரமான பற்பல சர்க்கங்களை, அருகாநின்றபடி கண்டான் = நிரர்க்கலமாய் நிலைத்தவண்ணத்தை நோக்கினான், ஆர்செய்தனர் என் றதிசயித்தான் = யார்வரோ இவற்றைச் சிருட்டித்தனர் என விஸ்மயத்தை யடைந்தான். (3)

(ஸ்ரீ-வீர) நைமித்திகப் பிரளயத்தில் மகலோகாதிகட்கு இருப்புண்மையின் எலாமென்னுஞ் சப்தம் சில பலவிடயமாம். மகத்தான வானோக்குதலும் பேதமான பல சிருட்டி = பெருத்த வியாபாரங்க ணிறைந்து வேற்றுமையுற்ற நானாவித சர்க்கங்கள் = சிருஷ்டிக்கப் படுதலிற்சர்க்கம் பிரபஞ்சம்; அவைதம்மிருப்பிற் பாதமற்றனவாயிருந்தன வென்பார் அருகாநின்றபடி யென்றார் நிரர்க்கலம் = அபாதம் பிரஹ்மா கூறுகின்றார்—ஒருகால் அகிலசர்க்கத்தையும் திவசக்ஷயத்திற் சங்கரித்து ஒருவனாகவேயான் ஏகாக்கிரமுடையவனாகி நிசியைச் சொஸ்தமாகக் கழித்தேன்; நிசாந்தத்திற் பிரபோத முற்றவனாகிவிதிப் பிரகாரம் சந்தியோ பாஸ்தியை முடித்தவனாகிப் பிரஜைகளைச் சிருட்டிக்கும் பொருட்டு விலாசமாய விண்ணின்கண் திருஷ்டிகளைப் பரவச்செய்தேன் அக்கால் ஆண்டு வித்தார அவ்யக்த வியோமத்தில் மனத்தினாலே பிரஹ்மாண்டங்களைக் கண்டேன், அவை தனித்தனியே யிருந்தன, பெருங்காரியங்களி லீடுபட்டிருந்தன, ஆண்டுள்ள விஷ்ணு முதலிய தேவதைகளால் உனுற்றப்பெற்ற பாலனாதி விவத்தையினாலே பிரதிபந்த மற்றனவாக விருந்தன. இங்ஙனம் அவற்றை யெல்லாம் தூய்தாய்ப் பரமாயிருக்கும் எனது சித்தத்தினாலே கண்டு அத்தியந்தம் யான் விஸ்மயத்தை யடைந்து, இஃதென்னே! யாங்ஙனமுற்ற திச்சிருஷ்டி! எவராற்றான் உற்றதோ! எனக்குத் தெரியாததுதான் என்னகாரணம்? விஸ்மயத்தையே ஹேதுவோடும் விரித்துரைத்தல்; யாங்ஙனம் மாங்கிசமயமா யிராநின்ற சக்ஷுகோளகத்துட் புகுத்தப்பட்ட கண்களால் ஒரு சிறிதையுங் கண்டிலேன், எதனைக் கண்டிலனோ அதனை மனத்

தானே காண்கின்றேன் இஃதெங்ஙனம் பொருந்தும், ஒப்பற்ற அம்மாயா ஜாலமனைத்தையும் யாங்ஙனங் காண்கின்றேன் என்பது விஸ்மயமாம்.

(ச.) விரிஞ்சன் = பகவானாகிய பிரமன், இரவில் = திவசாந்தத்தில் உறங்கிய பின் = ஏகாக்கிரனாய்ச் சுழுத்திமை யடைந்தபின்பு, இரவு நீங்கிவருகாலையில் விழித்து விதிப்படி அநுஷ்டானஞ் செய்து, மீண்டு = மறுபடியும், உலகளிப்பான் = பிராணிகளைச் சிருஷ்டித்தற்கு, வானோக்குதலும் = கண்களான் மாவியோமத்தைப் பார்க்கவும், பேதமான = வேறுவேறான, அருகாகின்றபடி = மகா ஆரம்பமா யிருக்குந்தன்மையை கண்டான் = பார்த்தவனாகி.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ பிரஹ்மதேவர் கண்ட ஆதித்தியனை யழைத்துச் சம்சயநீக்கப் பொருட்டு வினாதலும் ஆதித்தன் கூறலும் வருணித்தல்:—அதிலென.

அதிலோரிரவி வருகென்னா யாரேயளித்தாரெனக்கேட்பக்
கதிரோன்வணங்கியுரை செய்வான்கரைதீருலகின்காரணமாம்
விதியாநீயீதறிந்திலையேல்விளம்பக்கேட்பாய்வெண்கயிலைப்
பதியாகிய நாவலந்தீவிற் பரப்பாமிடத் தோர்பக்கத்தில்.

(ப - ரை.) அதில் ஓர் இரவிவருக என்னா = அச்சகசாலத்தில் ஒரு சூரியனைவரவழைத்து, யாரே அளித்தார் எனக்கேட்ப = நீயார் உன்னையும் இச்சகஜாலத்தையும் தந்ததுயார் என்று வினவ, கதிரோன் வணங்கியுரை செய்வான் = சூரியன் நமஸ்கரித்துச் சொல்லுவதாவது, கரைதீருலகின் காரணமாம் = எல்லையற்ற சகத்தின் ஹேதுவாம், விதியாநீ = பிரஹ்மதேவராகிய தேவரீர், ஈதறிந்திலையேல் = இதனைத் தெரிந்திரில்லையேல், விளம்பக்கேட்பாய் = கூறுகின்றேன் கேட்பீராக, நாவலந்தீவில் ஓர் பக்கத்தில் = ஜம்புத்தீவின் ஒரு கோணத்தில், ஆகிய = இராநின்ற, வெண்கயிலைப்பதி= வெள்ளிய ஸ்ரீ கைலாச சைலத்தின் அவயவபூதமாய, பரப்பாமிடத்து = சமபூப் பிரதேசத்தில்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் நீள்போது மனத்தினாலேயே பார்த்து அச்சகசால அப்புவன அம்பரத்திலேகும் அருக்கனைச் சத்திய சங்கற்பத்தானே முன்னர்ச் சந்நிதிப்படுத்திக் கேட்டேன். எங்ஙனமெனின், ஹே தேவதேவேச! போபாஸ்கர! பெரும்பிரகாசமுடையோய் ! இங்குவருவாயாக நீ சுகமாக வாழ்த்திநீடூழி யென்றுபுகன்று பின் பிறங்கப்பெறும் பொருள்களை வினவினேன்; அப்பொருள் யாதெனின், நீயார்? நினது சம்பந்தமான ஜகத்தெங்ஙன முண்டாயது ? இங்ஙனமே அன்னிய நவஜகங்கள் எங்ஙனந்தான் உண்டாயின ? எச்சிருட்டாக்களாற் சிருட்டிக்கப் பெற்றன ? ஹே பாவமற்ற பகவன் நீயறிந்தனையாயின் அவ்விடயத்தை நன்குகூறுதி, எனவினவிய என்னை நன்றாகப்பார்த்து இப்பிரஹ்மாண்டத்தின் பிரஹ்மா இவர் என நன்றாகத் தெரிந்துகொண்டு நமஸ்காரஞ் செய்து புகழத்தக்கபதங்களோடுகூடிய வாக்கியங்களால் இனிதாக இயம்பியதாவது.— பானுபகரல்; இத்திருசியப் பிரபஞ்சத்திற்குச் சாசுவதமான காரணமாயுற்ற தேவரீர், சென்றதை யெங்ஙனம் உணராமற் போவீர், ஹே ஈசுரரே ! என்னைக் கேட்குங் காரணமென்னே ! ஹே எங்கும் வியாபகமானவரே எனது வாக்கிய சந்தர்ப்பத்தைக் கேட்க வேண்டுமென்னும் குதூகலத்தன்மை தங்கட் கிருக்கும் பக்ஷத்தில், உம்மால் சங்கற்பிக்கப்படாத எனது உற்பத்தியையும் என்சம்பந்த உலக வுற்பத்தியையும் யான்கூறக் கேட்பீராக. ஹே மகாதேவரே ! கற்பமெனப் பெயரிய தங்களுடைய தினாந்தத்தில் ஜம்புத்தீப ஏககோணத்துற்ற ஸ்ரீ கைலாச சைலத்தின் றலத்தில்.

(ச.) அகிலோரிரவி = அச்சக சமூகத்தினின்றும் ஓரருக்கன், வருகென்று = வாவென்றழைத்து, ஆரேயளித்தார் = இச்சக சமூகத்தை யார்சிருட்டித்தார் நீயாவன் என, பகவானுன நீ யறிந்தனையாயிற் சொல் என்று, காரணமாம் = நித்தியகாரணமும் சர்வகதமுமான விதியாநீ யீதறிந்திலேயேல் = நீயறிவாய் லீலேயான் என் வாக்கியத் கேட்க வேண்டுமாயின், வெண்கயிலைப் பதியாகிய = கைலாச சைலத்தினது அடிவா ரத்திருக்கும், நாவலன்றீவில் = சம்புத்தீவில்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்விருத்தார்ந்தத்தையே பானு விரித்துரைத்தல்:—சிறக்கு மென்பதாதி.

சிறக்குஞ்சுவர்ண சடமென்னுந் தேசமொன் றுன்மைந்தர்களா
னிறக்குஞ்சிருட்டி படைத்ததகி னெடுங்காசி பன்றன் குலத்திடையே
பிறக்குமறையோ னிந்துவெனும் பெரியோன் மக்கட்பேறின்றிப்
பறக்குங்கருத்தாற் றேவியொடும் பரமன்கயிலைப் பதிமேவி. (5)

தவமேற்கொண்டு பாதவம்போற் சலமேயருந்தி வருந்திடுநாட்
சிவனுண்மகிழ்ந்து வேண்டியதென் செப்புமென்னச் சிரம்பணிந்து
கவலைதீரவிரை வர்கலைதேர் புதல்வர் வேண்டுமென
வவனங்களிப்ப விவர்களிப்போ டகன்றூர்புதல்வ ரவதரித்தார். (6)

(ப-ரை.) சிறக்குஞ் சுவர்ணசட மென்னுந் தேசமொன்று = வளப்பங்கள் பொருந் திய சுவர்ணசடமென்னும் ஒருதேசம், உன்மைந்தர்களால் = மரீசியாதிதங்களது புத்திரர் களால், நிறக்குஞ் சிருட்டிபடைத்தது = ஸ்ரீமத் விஸ்தார சுகசுந்தரமாய்க் கற்பிக்கப் பெற்றது, அதில் = அம்மண்டலத்தில், நெடுங்காசிபன்றன் குலத்திடையே = பெருந் தவத்தின் மிக்க கஸ்யப ரிஷியினுடைய குலத்தின் கண்ணே பிறக்கும் மறையோன் = உற்பவமாகிய பிரஹ்மவித்தமப் பிராஹ்மணன், இந்துவெனும் பெரியோன் = இந்துநாம அதிசாந்தாத்மா அதிதருமாத்மா, மக்கட்பேறின்றி = மைந்தரில்லாமல், பறக்குங் கருத் தால் = சிந்தாகுலத்தினுல், தேவியொடும் = தரும பத்நியோடும், பரமன் கயிலைப்பதி மேவி = ஸ்ரீ பரமாத்மா எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ கைலாசபர்வதத்தை யடைந்து. (5)

தவமேற்கொண்டு = தவஞ்செய்யத் தொடங்கி, பாதபம்போற் சலமேயருந்தி = தருத்திதியுற்று நீராகாரங்கொண்டு, வருந்திடுநாள் = கோரதவஞ்செய்தபோது, சிவன் உண்மகிழ்ந்து = ஸ்ரீசசி கலாதரராகிய மகாதேவர் பரமசந்தோடத்தை யடைந்து, வேண்டியதென் செப்புமென்ன = நீங்கள் விரும்பியதுயாதோ அதனைக் கூறுவீர்களாக வென்று சிரம்பணிந்து = நமஸ்கார அர்ச்சனை தோத்திரங்கள் செய்து, கவலைதீர ஈர் ஐவர்கலைதேர் புதல்வர் வேண்டுமென = சிந்தாகுலஞ் சிதைய மகா மதிமான்களாய்ச் சகலசாஸ்திர சம்பன்ன பத்துப்புத்திரர் உதயமாக வரந்தரவேண்டுமென்று வேண்ட, அவனங்களிப்ப = ஸ்ரீமகாதேவர் அவ்வாறே வரந்தர, இவர் களிப்போடு = தம்பதிக ளிருவரும் மிகமகிழ்ச்சியுடன், அகன்றூர் = சுவஸ்தானத்திற்கு ஏகினர், புதல்வர் அவ தரித்தார் = மைந்தர் பிறந்தனர். (6)

(ஸ்ரீ-வீர.) தருத்திதி = மரம்போல அசையாம லிருத்தல் நீராகாரம் = ஜல ஆகா ரம் மரம்புரிதல் வெளியாம். யோக்கியர்கள் ஆகிய எத்தசமைந்தர்கள் உண்டான மாத் திரையால் யாங்கள் மறுபடி சோகமே யடையமாட்டேமோ அத்தகைய மைந்தர்கள் வேண்டும். எப்பிரதேசம் சுவர்ணஜட நாமத்தாற் பிரசித்தமாமோ, எப்பிரதேசத்தில்

சந்ததிகளை யுண்டாக்கிய உமது புத்திரர்களாகிய மரீசியாதிகள் இருக்கின்றார்களோ அவர்கள் பிரஜைகள் மகிழ்ந்துவசிக்கும் பொருட்டு ஸ்ரீமத் அநற்ப சுகசுந்தர அம்மண்டலத்தைக் கற்பித்தார்கள்; அம்மண்டலத்தில் அதிதருமாத்மாவாயும் வேதவித் சிரேட்டனுயும், அதிசாந்தாத்மாவாயும் கசியப குலோற்பவனுயும் விளங்கிய இந்துவென்னும் அந்தண னிருந்தான். அங்கு அக்கால் தன்னுறவினர் கூட்டத்தில் நித்தியம் நிவாசஞ் செய்து கொண்டிருந்த அம்மறையவனுக்கு உயிர்க்குயிராக ஒருபாரியையு மிருந்தனள், அவள்பால் அம்மகாத்மாவிற்குச் சந்ததிகள் இல்லாமல் இருந்தன மருப்பூமியின் மாட்டுத் திருணமுண்டாகாததே போலும். அவனுடைய மனைவி நிட்பலபுட்பிதையா யினிது சோபியாம லிருந்தாள், மிக நல்லவளாயும் கௌரியாயும் அதி பரிசுத்தையாயும் அவள் இருந்தபோதினும் சரலதைபோலும் அதாவது காசஸ்தம்பம் போலும் பலமற்றவளாயினள். பின் அத்தம்பதிகள் துக்கிதர்களாகிப் புத்திரப்பொருட்டுத் தவம்புரிவான் ஸ்ரீ கைலாசகிரியின் மேற்பாகத்தில் புதுத்துருமங்கள் ஏறுவதுபோல வேறி அக்கைலாச குஞ்சத்தில் எப்பிராணிகளும் இல்லாத நிர்ஜனப் பிரதேசத்தில் விருக்ஷம்போல நிலை பெற்றுநின்று தினம்போம் காலத்தில் ஒரு கைநீரருந்தி விருக்ஷம்போல் வேறருந்தாமல் நீராகாரத்தினராகி அதிகோரமான தபத்தைச் செய்தனர், அசையாமனின்று விருக்ஷசம் பந்தி விருத்தியைப்பற்றி சுசி விரத பராணராயிருந்தனர். இங்ஙனம் தருவிரதத்தினராகிய அவர் பெருந்தவத்திலங்கு அக்கால் திரேதா துவாபரம் என்னும் இரண்டு யுகங்களையே கழித்தனர், கழிந்தபின் விசிஷ்டபுத்திர லாபப்பொருட்டு அவ்வளவுகாலம் ஸ்ரீ நிலவுலர்விய நீர்மலிவேணியராகிய மகாதேவர் அதிசந்தோடத்தை யடைந்து தின ஆதபத்தினாலே பெருந்தாப மடைந்த குமுதங்கட்குதயமாகிவந்த இந்துவென்ன அவ் விப்பிர தம்பதிகள் தவஞ்செய்யும் பவித்திர தேசத்திற்கு ஸ்ரீ பார்வதி தேவியாரோடும் விருஷபாரூடராகி யெழுந்தருளி வந்தனர் அக்காட்சியைத் தரிசித்துத் தவதம்பதிகள் வீழ்ந்து நமஸ்கரித்துத் தூய்மலர் தூவித்தோத்தரித்து நிற்ப திருவருள் பாலித்து எந்தந்தை கூறுவார். ஹே விப்பிரசிரேட்ட ! விரைவில் வரம் வேண்டிக்கொள் நின்றவங் கண்டு மகிழ்ந்தேம் நினது வாஞ்சிதத்தைக் கூறுதியென்ன விப்பிரர் ஹே பகவன் ! தேவதேவேச ! மிகத்தகுதி யுண்டயவராய் கலியாணகுண ஆசாரராய் மகாமதியராய் மீண்டு எனக் கெக்காலும் சோகமேயுறுமற் காக்கக்கூடியவராய பத்துப்புத்திரர் தர வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவ்வாறே யுண்டாகுக வென்றருள்செய்து ஆங்கே அறிவிற் கரந்தனர் அம்பிகாநாதர். அதன்பின் சிவபெருமான் திருவருள்பெற்ற அவ்விருவரும் பேராநந்தத்தை யடைந்து தெய்வதம்பதிகள் போலும், மாயிக திவ்யசரீர கற்பனையாற் கீர்வாண சதிருசர்களான உமாமகேசுரர்கள் வாஸ்தவமான பிரஹ்மாகாசத்தை யடைந்ததேபோலுந்தமது கிருகத்தை யடைந்தனர்; புதல்வரவதரித்தார் இனிவரும்.

(ச.) சிறக்கும் + ஒன்று = சுகாதிசயத்தாற் சுந்தரமான ஒருமண்டலம், உன்மைந்தர்களால் = சிருட்டிப் பிரவிருத்தியிற் சிரேட்டரான பிருகு புலத்தியாதி நவப்பிரமர்களால் என்பது பொருள். நிறக்குஞ் சிருட்டிபடைத்தது=அழகாய்க் கற்பிக்கப்பட்டது, மறையோன் = பிரஹ்மவித்துக்களுக்குள் அதிக சிரேட்டனை பிராஹ்மணன், அந்த மகான்மாவிற்குப் பிராணசமமான பாரியின்கண் மருப்பூமியிற் றருப்போல மக்கட்பேறின்றி புத்திரநிமித்தம், பறக்கும் - கயிலைப்பதி யென்பது = கயிலாயத்தின் அடிவாரத்தில் ஜீவசஞ்சார சூனியமான கொடிகள் நிறைந்த ஓரிடத்தில் மேவி. (5)

பாதவம் = தரு, சிவன் = சசிகலாதரனுகிய தேவன், அவ்விடத்திற் பிரசன்னமாய் வேண்டியதென் = விரும்பிய வரம்யாது, மகாபுத்திமான்களாகிய புதல்வர், அவ்

னங் களிப்ப = சிவன் வரங்கொடுத்து அவ்விடத்திற்றுனே அந்தர்த் தானமானபின்பு, அகன்றார் = கிருகத்தை நோக்கிச்சென்றார், பின்பு புதல்வரவதரித்தார் சிலகாலத்தில்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மைந்தர்கள் பிறந்து வளர்ந்து வந்தபின் றந்தைதாயர்செல்லலும் மைந்தர்கள் பெரும்பத முறுதலும் வருணித்தல்:—மைந்தர்—பிரம-என.

மைந்தரொரு பதுளராகி மறைநூனிறைந்து வளர்ந்ததற்பின்
றந்தைதாயரிறந் தேகத்தநயர் கயிலைத்தல மெய்திச்
சிந்தைசெய்வார் நல்குரவு தீரவுயர் வன்னியராவோ
மந்தநிலை சற்றுதலினு லதிகநிலை மன்னவராவோம். (7)

அதுவுஞ்சிறிதாம் புவியனைத்துக் கரசராவோ மதுசற்று
நிதிதுன்னிய விந்திரராவோ நிகழ்த்து மதுவுநெடிதல்ல
பதுமஞ்செறியு மயனுதல் பழுதில்பதவி யெனத்துணிந்தா
ருதிதமனத் துப்பதின்ம ரு[illegible]த் துயரும்பதுமா தனத்திருந்து (8)

பிரமனுமே சிருட்டியெலாம் பிறப்பதெம்பா லென்றுள்ளே
திரமதான மனத்தாலே சிந்தித்துடலிற் சிந்தையற
மரமதென்ன விருத்தலுமே வருநாட் பலபோய்மனோபாவ
முரமதாகிய யனுனொரு பதுலக முளதான. (9)

(ப - ரை.) மைந்தர் ஒருபதுளராகி = காலத்தில் தசபுத்திரர் உதயமாகி, மறைநூல் நிறைந்து வளர்ந்ததற்பின் = சர்வவேத சாஸ்திரங்களைப் பூரணமாக அடைந்து பிரௌடர்கள் ஆனபின், தந்தைதாயர் இறந்தேகத் தநயர் கயிலைத்தலம் எய்தி = பிதாமாதாக்கள் மோக்ஷமடைய மைந்தர்பின் ஸ்ரீ கைலாசபர்வத சிகரத்தை யடைந்து, சிந்தை செய்வார் = சிந்திக்கலாயினர், நல்குரவுதீர = துயரந்தீர்ந்து மேலான சிரேயசுற, உயர் = மேலான, வன்னியராவோம் = சாமந்தர் ஆவோம், அந்தநிலைசற்று ஆதலினால் அதிகநிலை மன்னவர் ஆவோம் = அச்சாமந்தபதம் அற்ப ஐசுவரியமுடையது ஆகலின் அதனினும் அதிக செல்வந்திகழ்ந்த அரசபத மடைவோம் அதுவுஞ் சிறிதாம் = அப்பதமும் அற்பமாம், புவியனைத்துக் கரசராவோம் = சர்வபூமண்டலத்தையும் ஆட்சிசெய்யும் சக்கிரவர்த்தியாவோம், அது சற்றும் = அச்சாம்பிராட்டின் சாம்ராஜ்யமும் அற்பமாம்; நிதிதுன்னிய இந்திரர் ஆவோம் = சங்கநிதி பதுமநிதி முதலிய செல்வம்பெருகிய தேவேந்திரபத மடைவோம், நிகழ்த்தும் அதுவும் நெடிது அல்ல = கூறிய அத்திருவும் அதிகப் பெரிதாகாதாம், பதுமஞ்செறியும் அயன் ஆதல் = தாமரையில் உறையும் பிரமதேவன் ஆதலே, பழுதில்பதவி = கெடாதபதமாம், எனத்துணிந்தார் = என்று நிச்சயித்தார், உதிதமனத்துப் பதின்மரும் ஒத்து = தமையனோடு கலந்தாராய்ந்து துணிந்த மனத்தை யுடைய தசமரும் ஒருமைபெற்று, உயரும் பதுமாதனத்திருந்து = எண்பத்து நான்கு ஆசனங்கள் உள்ளும் சிறந்த பத்மாசனத்துறைந்து.

பிரமன் நாமே = சதுர்முகப் பிரஹ்மா யாமே, சிருட்டியெலாம் பிறப்பது எம்பால் = சர்வசிருஷ்டிகளும் உண்டாவது எம்மிடத்தினின்றும், என்றுள்ளே = என்றந்தரத்தில், திரமதான மனத்தாலே = திடமான சித்தத்தினாலே, சிந்தித்துடலிற் சிந்தையற = தியானித்துத் தேகத்தில் உணர்ச்சியற்று, மரமதென்ன விருத்தலுமே = தருவிரதர்களாய் இருந்து தவம்புரிந்தபோது, வருநாட்பலபோய் = அநேககாலங் கழிந்தபின், மனோபா

வம் உரமதாகி அயன் ஆனுர் = மதிபாவனை அதிதிடமாகிப் பிரஹ்மாவாயினர், ஒருபது லகமுளதான = இப்பத் தண்டங்களும் உண்டாயின. (9)

(ஸ்ரீ - வீர) அவ்வுத்தமப் பிராஹ்மணியானவள் இல்லத்தில் உதாரகர்ப் பிணியாய் நீரால் மேகரேகை கருக்கொண்டு கறுத்துநின்ற தொப்பப் பூர்ண உதரையாகிப் பிரதிபதசந்திர கோமளர்களாகிய புத்திரர்களை நல்லகாலத்திற் பெற்றெடுத்தனள் என்பார் புதல்வர் அவதரித்தார் என்முர். பூதேவி நவாங்குரங்களை யீன்றனள்போலும் அதிசுந்தரமான தசபாலர்களை யீன்றனள். இக்குழந்தைகள் முறையே ஜாதகரும, நாமகரண, அன்னப்பிராசன, சௌள, உபநயன, வேதவிரதாத்திய யனுதிகளாகிய பிராஹ்மண சமஸ்காரங்களாற் சமஸ்கரிக்கப் பெற்றவர்களாகி மகாதேஜஸோடும் வளர்ந்து வந்தார்கள். வருஷருதுவில், நவமேகங்கள் போலும் சொற்பகாலத்திற்றனே வாங்மயமாகிய சர்வசாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து ஏழுவயதை யடைந்து ஆகாயத்தின் கண்ணே நிருமலகிரகங்கள் சஞ்சரித் திலங்கலேபோலும் தேஜஸோடு மிலங்கினர். பின்பெருங் காலங்கழித்து அவர்கள் பெற்றோர் தநுக்களை விட்டு முக்கியதமகதிபூத பிரஹ்மரூபத்தைத் தங்கள் வடிவமாக வுணர்ந்தவராதலின் விதேக கைவல்யத்தை யடைந்தனர். அப்பத்துமறையவர் மைந்தரும் தாய்தந்தைய ரற்றவராய்த் துக்கிதராய் கிளர்ச்சியுற்றவராய் பிதுராதி பந்துஹீனராய்க் கிருகத்தைவிடுத்து ஸ்ரீ கைலாச சிகரத்தை யடைந்தனர். அவர்கட்குப் பாக்கியவசத்தானே வரும் ஹிரணியகருப்ப சம்பந்தஐசுவரிய அடைவுக்குரியதாய ஆராய்ச்சி யுதித்ததென்பார் சிந்தைசெய்வார் என்முர். ஆண்டிருந்து இனிது சிந்தித்தனர். ஈண்டு மேலான ஐசுவரியம் யாது ? மேலான சுகமியாது ? எனச் சிந்தைசெய்து இனிவரும் வாக்கியங்களைப் பரஸ்பரம் பகர்ந்தனர்; ஹே சகோதரர்களே இகலோக பரலோக சுகசாதனமாக அங்கீகரிக்கத்தக்க இனியதுயாது ? ஐகிகசுக ஹேதுத்தன்மை யதன்மையதேனும் பரிணுமத்தில் துக்கந்தரா திருப்பதுயாது ? ஹேதுவாயினும் எனவும் பாடம். இங்ஙனம் சாமானியமாகஆராய்ந்து விசேடமாயும் ஆராய்வாராயினர். யாது பெருமை யாது செல்வம் யாது சுபமான பேரைசுவரியம்? கிருகக்கிராம அதிபதிகளாக இருக்கும் இச்சனங்களுடைய ஐசுவர்யங்கள் அற்பம் இவற்றினும் உயர்ந்தது யாது ? மண்டலாதிபதியா யிருக்கும் சாமந்தபதமே மகா ஐசுவரியமுடையது எனலாம். சாமந்த சம்பத்துத்தான் எவ்வளவு ! தேசாதிபதியா யிருத்தலே பெருஞ்செல்வமாம். பூபர் செல்வந்தான் என்னே ! சம்ராட்டாக இருப்பதே மேலான ஐசுவரியமாம். அதுதான் என்னே ! ஆனல் மகேந்திரபதமே மகா ஐசுவரியம் எனின் ? அதுதானும் எத்துணையதாம் ? பிரஜாபதிக்கது ஒரு முகூர்த்தமாம் யாது கற்பத்தில் நசியாதிருக்குமோ அதுவே ஈண்டு சோபனமெனலாம். இவ்வண்ணம் சம்வாதஞ்செய்த பிராதாக்களுள் முற்பிறப்பில் செய்த ஹிரண்யகர்ப்ப உபாஸ்தியானது தடைகளா விடையில் தவறிப்போனமையின் அடைந்தவுத்தம ஜன்மத்தினனும், சகோதரரின் சம்வாதத்தானேயே வெளிப்பட்ட பழைய உபாஸ்தி சமஸ்காரத்தை யுடையவனும் ஆகிய மகாமதியெனப் பெயரிய மூத்தசகோதரன் முன்றுன் அனுட்டித்த உபாஸ்திமுறையை அதன் கண் ணதிகாரிகளான சகோதரர்கள் பொருட்டு உபதேசிக்கு மிச்சையுடையவனுய்க் கூறல்:—பதமஞ்செறியு மென்பதாக. பதவியென = பதவியென்று மூத்தவன் உபதேசிக்க, துணிந்தார் மற்றென்பதின்மரும் நிச்சயித்தார் எனக்கொள்க. பேசிக்கொண்டிருந்த இவர்களுள் ஜேஷ்டப் பிராதா மகாமதி கலைமான் கூட்டத்தை நோக்கித் தலைமான் கழறியதேபோலும், வழங்குங் கம்பீரமான வாக்கினுலே கூறத்தொடங்கினுன்: ஹே சகோதரர்களே எல்லா ஐசுவரியங்களுள்ளும் யாதுகற்ப மென்னும் பிராகிருதப்

பிரளயபரியந்தம் நசிக்கமாட்டாதோ அத்தகையது ஹிரணிய கருப்பத்தன்மையென்று எனக்குத் தோற்றுகின்றது மற்றதொன்று மல்லவாம். பாக்கியவசத்தினாலே மற்றை யர்கட்கும் அதன்கண் அதிகருசியானது உண்டாயிற் றென்பார் துணிந்தா ரென்றார். ஜேஷ்டனும் சிரேஷ்டனுமாகிய மகாமதி யுத்தமோத்தமன் இங்ஙன மியம்பியதைக் கேட்ட அவ்வுத்தம ஐந்தவமறையவர் மைந்தர் யாவரும் ஆண்டின் மொழிகளினாலே சாது சாது எனப்பூசித்து இதனை யியம்புவாராயினர்: அதாவது இதனானே யதனுபாயத் தைக் கேட்பாராயினர்: ஹே தாத ! சர்வஜரை மரண சாதிசயத்வாதியாலாய துக்கங் கள் ஒடுங்கும் இடமாய பதுமாசன சகற்பூச்சிய விரஞ்சித் தன்மையை யாங்ஙனம் சீக்கி ரம் அடைவோம். அப்பிராதாவால் மீளவும் மிகத்தேசசுற்ற பிராதாக்கள் வினவப் பட் டார்கள்; உபதேச முட்கொள்ள உடன்பட்ட அவர்கள் பொருட்டு ஹிரணியகருப்ப அகங்கிரக உபாஸ்தியைச் சாமக்கிரியுடன் உபதேசிப்பான் அதனதங்கமாக மரணபரி யந்தம் தாரண திடத்தன்மை விதித்தல்: யானியம்பும் இவ்வியாவற்றையுமே நீங்கள் அதிதிட நிச்சயத்துடன் காப்பாற்ற வேண்டும் பதுமாசனத்திருக்கும் மகாதேஜஸை யுடைய நமக்குப் பிரமரகீட நியாயமாக அத்தன்மை யுதயமாகும்வரை பிரஹ்மாவே யானென்னும் பிரபாவத்தினாலே சிருஷ்டிக் கின்றேன் சங்கரிக்கின்றேன் என்றுதியா னம் உளதாக வேண்டும்; சிருஷ்டிக்கின்றேன் சங்கரிக்கின்றேன் என்னும் லிங்கத்தாற் சம்வர்க்க வித்தையாமிது உபதேசிக்கப் பட்டதென் றுணரத்தக்கது, என்று என்றத னானே கூறப்பெறும் பிரகாரமுறை யாவுமே உபதேசிக்கப் பெற்றதென உணர்தல் வேண்டும். தமையனானே இங்ஙனம் இயம்பப் பெற்றதை யுண்மையெனத் திடமாக அங் கீகரித்த அவ்வுத்தமர் தமையனோடு கூடவே பலராக அதிசயத்தால் தியானாதீனமதிய ராயினர். பித்தியிற்றீட்டிய சித்திரங்களொப்ப ஆகாரமுடையவராய்த்தியான ஆசக்த மதியையுடைய அவர் உள்ளேயுள்ள வுள்ளத்தானே மிக ஆதரவோடும் உள்ளுவாராயி னர். அச்சிந்தனப் பிரகாரம் யாங்ஙனமென அறையத்தொடங்கல்; பின் மலர்ந்த கமல கோசவதன மேனோக்கியிருந்த அத்தவர், பிரஹ்மாயான் உலகங்களைச் சிருஷ்டிப்பவன் யான் கருத்தாபோக்தா மகேசுரன்யான். லோகபால புரங்களோடு கூட இப்பதினான்கு புவனங்களும் என்னானே நிர்மிக்கப்பட்டன, அவற்றுள் யானிருக்கின்றேன். இவ்வண் ணம் அந்தப் பிராஹ்மணர்கள் அதிதிடப் பிரஹ்மாவின் பாவனையில் ஈடுபட்டவர்களா கித் தேகங்களை மறந்துவிட்டார்கள், அவைகள் பூர்வபாவனைக்கு விடயங்களாய் அர்ப் பிக்கப்பட் டிருந்தமையின் உத்தரபாவனை அதிதிடப்பட மறக்கப்பட்டவைக ளாயின வாம். அவர்களுடைய அத்தேகங்கள் வெய்யிலினாலுங் காற்றினாலும் வெகுகாலமாக வுலர்ந்து உலர்ந்து சீர்ணபர்ணம் போலும் க்ஷீணித்துப் போயின. அங்ஙனம் பாவனைப் பரிபாகப் பெருஞ்சமாதியானே அவர்கள் பத்துப் பிரஹ்மாக்களாகிப் பத்துவகையான சர்க்கத் தோற்றங்களும் உண்டாயின. மன்னவர் = மண்டலேசுரர். எவன் ஆணையால் அரசர் அரசுசெலுத்துவரோ அவன் சம்ராட்டெனப்படுவன். பிரஜாபதியின் பகலிலோ பதினான்கு இந்திரர்கள் பவிக்கின்றார்கள். அவர்களுள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு முகூர்த்தமாத்திரம் மூவுலகத்தையும் ஆளுவர். தாத என்றது தந்தைசமத் தன்மை யானே ஜேஷ்டனைச் சம்போதித்ததாம் பழுதில்பதவி = சர்வதுக்கங்களும் உபசாந்தி யுற்ற இடம்.

(ச.) இறத்தலுமே = தனுவைவிட்டுத் தற்கதியை யடையவும், துக்கத்தினாற் கிரு கத்தைவிட்டுக் கயிலைத்தலையெய்தி = கயிலாச சிகரத்தை யடைந்து, நல்குரவுதீர = துக்கமற்றதியாது பரமசௌக்கிய மியாது இந்தச் சனசம்பத் தெவ்வளவு வுன்னியர் =

சாமந்தர், அந்தநிலை = அந்தச் சாமந்தசம்பத்து. அதுவும் = அவ்வரசர் சம்பத்தும், அது = அந்தச் சமிராட்டைசுவரியமும், இதுவும் = அமரேந்திரத்துவமும், நெடிதல்ல = பிரஜாபதிக்கு ஒரு முகூர்த்தமும் பிரஜாபதியும் கற்பத்தில் நசிப்பது மாதலிற் சோபனமாகாது, பழுதில்பதவி = சகல ஐசுவரியங்களுள்ளும் நாசமற்றதாம், என, அதுவேயெனக்கு ருசிக்கின்றது மற்றொன்றுமன்று என்று தமையன்கூற, துணிந்தார் = இதரரும் உம்மாற் சொல்லப்பட்டது யுக்தமேயென்று உறுதிப்பட்டார் பின்பு.

பிரமன் நாமே = ஜகசிருஷ்டிசெய்பவனாய்ப் பதுமாதனத் திருக்கும் பகவானாகிய பிரமதேவனே நாம், சிருட்டியெலாம் புரப்பது = லோகபால புரங்களோடு சதுர்த்தச புவனங்களு முதித்தொடுங்குவ தெமதிடத்தாம், என்றுள்ளே திரமதான் = அவைகளின் அகத்து வசிப்பவனும் கர்த்தாவும் போக்தாவும் மகேசுவரனும் நாமேயாம் என்று அகத் துறுதிப்பட்ட, மனத்தாலே சிந்தித்து = பிரமதேவ பாவனை செய்து, உடலிற் சிந்தையற = பூர்வதேகங்களை மறந்து சித்திரம் போலிருந்த வரனைவரும் அதேகராய், மரமதென்ன = காற்று வெயில்களினாற் சிலகாலத்தில் உலர்ந்தமரம் போன்று, கிருசித்திருக்கவும், மனோபாவமுரமதாகி = பரிபாகப்பட்டு, அயனானார் = தசப்பிரமரானார், அவர்களால் ஒருபது உலகம் உளதான = தசவித சர்க்கந்தோற்ற மாத்திரமா யுதித்ததாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சூரியன் கூறி யேகலும் கதையின் உபசங்காரங் கூறல்:— மன என.

மனவானகத்தி லிவர்பத்து வகையிற் சிருட்டிதந்தனரா
லினமாமவற்றி லோரிரவியானு மென்னா வேகினனாற்
கனமாமனத்தின் விரிவாலே காணுஞ்சகங்க ளுளவாமென்
றனவாகனத் தோன்மனத்தாலே யளித்தானிராமற் கருள்செய்தான். (10)

(ப - ரை.) மனவானகத்தில் = மனோவியோமத்தில், இவர் பத்துவகையில் சிருட்டிதந்தனர் = இத்தசப் பிரஹ்மர் தசப்பிரகாரமாக அண்டங்களைச் சிருட்டித்தனர், இனமாம் அவற்றில் = ஒன்றையொன்று ஒன்றிநின்ற அவற்றுள், ஓரிரவி = ஒரு சூரியன், யானும் என்னா = நானும் ஆவேன் என்று, ஏகினனால் = சென்றனன், கனமாம் மனத்தின் விரிவாலே = திடபாவனையோடு கூடிய மனத்தின் விசாலத்தாலே, காணுஞ் சகங்கள் உளவாமென்று = தோற்று முலகங்கள் இருக்கின்றனவாம் என்று, அனவாகனத்தோன் மனத்தாலே யளித்தோன் = ஸ்ரீ பிரஹ்மதேவரது மானசபுத்திரராகிய ஸ்ரீ வசிஷ்டபகவான், இராமற் கருள்செய்தான் = ஸ்ரீ இராகவருக் குபதேசித்தனர்.

(ஸ்ரீ - வீர) யானும் என்றது தனதுகிருத்தியமாகிய தினமிரவு செய்தலை யியம்பியதாம், பாற்கரனல்லவோ மேருவின்றடைபடாமற் றினஞ்செய்பவனும், தடைபட்டு இரவு செய்பவனுமாவன். இது பிருகத்வாசிட்டத்திலு முளது:—அருக்கனியற்றிய கோராத்திரி தெரிக்கு முருக்களை யெங்ஙனந்தானே, சுரிக்குமறிவுஞ் சதசத்தாக்கி, மரிக்குமுருக்களை மலர்த்தியே காட்டும். அவர்கள் தசசமுசாரங்களை மனோவியோமத்திற் சிருஷ்டித்தார்கள், இத்துணைக் கிரந்தத்தானே இஃதெங்ஙன முண்டாயது என்னுங் கேள்விக்குப் பதிலளித்து நீயாரென்றதற்கு விடையளித்ததாம் இரவியானும் என்றது. அவ்வைந்தவ சர்க்கங்களின் இடையில் ஏகதம பிரஹ்மாண்டத்தின் அவகாசபூத ஆகாசவடிவமந்திரத்தில் இருப்பவனாகிய பானுயான், புவியிற் காலகலைத்தொழிலில் ஏவப்பெற்றவன். புவியென்றது மூன்றுலக உபலக்கணம் ஆம், பூலோகத்திலேயே கருமாங்கமாகக் காலவிபாக ஞானத்திற்கு விசேட உபயோகமிருத்தலின். இவ்வண்ணம் ஸ்ரீபிரஹ்மதேவரை

நோக்கிக்கூறி நமஸ்கரித்துவிட்டுப் பானுதன்மந்திர மடைந்தனன், தேவேசராகியவிரிஞ்சியும் தமது வியாபாரபரமாயினர்.

(ச.) இரவி = பாஸ்கரனென்னும் திவாகரன், எகினால் = தன்மந்திரத்தைநோக்கிச் சென்றான், பின்பு, அனவாகனத்தோன் மனத்தாலே யளித்தோன்=சிருட்டித்தான், கனமாமனத்தின் விரிவாலே காணுஞ் சகங்களுளதா மென்றிராமர்க் கருள்செய்தான் என்பது கவிநாயகர் கருத்து.

ஐந்தவர் உபாக்கியானம் முற்றிற்று.

## வஞ்சவிந்திரன் கதை.

(ஸ்ரீ-வீர-அ - கை.). சென்றகதையாற் றாற்பரியமாகப் பிரதிபாதித்த அர்த்தத்தைக் காட்டுகின்றார்:—முன்சூரியனால் ஐந்தவர் விருத்தாந்தத்தைக் கேட்ட ஸ்ரீ பிரஹ்மதேவர் இனியான் படைக்கவேண்டிய அவசியம் ஒன்றையுங் காணேமேயென் அதற்குப் பாற்கரன் விநோதமாத்திரமாகத் தாங்கள் சிருஷ்டிக்கலாம் பற்றின் றியமனத்தாற் செய்வது பந்தமாகாது, மனமேயல்லவோ பந்தமோக்ஷ காரணம் என்பதற்குத் திருஷ்டாந்தமாக வஞ்சவிந்திரன் கதையைக் கூறல்:—பொருவில் என.

(ச.) முன் ஐந்தவர் கதையிற் பிரபஞ்சத்திற்குமனோமயத்துவஞ் சொல்லப்பட்டது, இப்போது, கிருத்திரிம இந்திரன் கதையில் வாகியேந்திரிய வியாபாரத்தைக் குறித்து மனோவியாபாரத்திற்கே பிரபலத்துவம் பிரதிபாதிக்கப் படுகின்றது:—பொருவில் என.

பொருவில் சகத்தையளிப் போனும் புருடன்றானும் புகன்மனமே
கருதுமனத்தின் செயல்செயலாங் காயச்செயல்கள் செயலன்றாம்
பருதியுரைசெய் புதுமறையோர் பதுமாதனராய்ப் பார்படைத்தார்
பெருமாமனத்தி னுயர்சத்தி பிறரா லறிதற் கெளிதாமோ.

(ப - ரை.) பொருவில் சகத்தை யளிப்போனும் = விசித்திரஜகத்தைச் செய்பவனும் புருடன்றானும் = பரபுருடனும், புகன்மனமே = கூறிய வுள்ளமேயாம், கருது மனத்தின் செயல்செயலாம் = எண்ணுகின்ற சித்தஞ்செய்ததே செய்ததாம், காயச் செயல்கள் செயலன்றாம் = சரீரஞ்செய்தது செய்ததாகாதாம், பருதியுரைசெய் புதுமறையோர் = சூரியனாற் சொல்லப்பட்ட அற்புத அந்தணர் சாமானியராக இருந்தும், பதுமாதனராய்ப் பார்படைத்தார் = மனோபாவனையின் வலுமையானே தாமரைத்தவிசினராகி யுலகங்களை யுண்டாக்கினர், பெருமாமனத்தின் உயர்சத்தி = பெரிய மாக்ஷிமைபொருந்திய மனத்தினது மேலான ஆற்றலானது பிறரால் அறிதற்கு எளிது ஆமோ = சாமானியரால் தெரிந்துகொள்வதற்குச் சுலபமாமோ ஆகாதாம்.

(ஸ்ரீ - வீர.) மனதாற் செய்யப்பட்டதே நன்றாகச் செய்யப்பட்டதாம் அதாவது மனமியற்றியதே பயனுடையதாம் என்பதாயிற்று. பத்தபீடமனத்தின் பரயத்னத்தாலசையாத்தன்மையை இந்திர அஹல்யை மனோவிருத்தி கதையாற்றெரிவிப்பான் விரும்பியபானு முதலில் மனத்தின் பெருமையை மனமே யென்று தெரிவித்ததாம்: மனமே ஜகத்துகளின் கருத்தா; மனமே பரபுருடன் அதாவது சமஷ்டிபாவத்தை யடைந்த மனமே ஹிரண்யகருப்பன், உலகில் மனங்கிருத்மே கிருதமாம், சரீரங்கிருதங் கிருதமன்

றும். கண்டோமல்லவா! சாமானிய பிராஹ்மணராகியும் மனோபாவனையினாலே ஐந்தவர் பிரஹ்மத்தன்மை யடைந்ததை; ஆகலின் மனத்தினது பேராற்றலைப் பாருங்கள் என்று ஸ்ரீ பிரஹ்மதேவரை நோக்கிப் பானுபகருவதாம்.

(ச) பொரு + போனும் = ஜகங்களின் கருத்தனும், புதுமறையோர் ஐந்தவரென்னும் சாமானியப் பிராஹ்மணர், பதுமர்தனராய் = பத்மாசனயுக்தராய்ப் பிரமபாவனையினாற் றசப்பிரமராய், எளிதாமோ இராமாநீபார். (குறித்து = பார்க்க.)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சரீரஞ்செய்த கருமங்கட்குப் பயனுடைமையானது காட்சி முதலிய வற்றானே துணியப் பெற்றமையின் சரீரகிருதஞ் சார்த்தகமன்று என்று சாற்றியது சாராதாம் என ஆசங்கித்துக் கூறல்:—உள்ளம் என.

உள்ளமுடலைப் பாவிக்க வுடலாயதனா லுள்ளயரும்
வெள்ளஞானத் தவருள்ளே மேவாநின்ற பாவனையாற்
பொள்ளவுடலி னலந்தீதுபுந்தி செய்யார் புராதனநாட்
கள்ளவினைசெய கலிகையுங் கரவிந்திரனு மிதற்கொப்பாம். (2)

(ப - ரை.) உள்ளம் = மனம், உடலைப் பாவிக்க = தேகத்தைப் பாவித்தலும், உடலாய் = தேகமாகி, அதனால் உள்ளயரும் = அக்காரணங்கொண்டு சிந்தாகுலஞ் செறியும், வெள்ளஞானத்தவர் = பூரணஞானமுற்ற புண்ணியசீலர், உள்ளே மேவாநின்ற பாவனையால் = அந்தரத்திற் பொருந்திய அதிதிட பாவனையினாலே, பொள்ளவுடலின் நலந்தீது புந்திசெய்யார் = அநித்திய ஆகத்தினது நன்மைதீமைகளை மதியின் மாட்டு மதியார், புராதனநாள் = பூர்வப்போதில், கள்ளவினைசெய் அகலிகையும் கர இந்திரனும் இதற்கு ஒப்பாம் = கூடாவொழுக்கம் ஒழுகிய அகலிகைமாதும் வஞ்சக இந்திரவிடனும் இதனுக் கிணையாவார். (2)

(ஸ்ரீ - வீர.) தேககன் மனத்தினாலே பாவிக்கப் பட்டவனாகித் தேகித்தன்மையை யடைவன் தேக உசிதகாரிய காரியாவன் என்பது பிரசித்தம், அன்வயமறைந்து வியதிரேகம் விளம்பல், வெள்ளமென்பதாதி. தேகபாவனையினின்றும் விடுபட்டபுருடன் தேக தருமங்களாகிய சீத உஷ்ணமான அவமானாதிகளினாலே பாதிக்கப்படான். யாண்டிதனைக் கண்டதோவெனக் கடாவி விடைதருதல்; புந்திசெய்யார் என்பதாதி, மனோபாவனையானது இருக்குமாயின் சரீரத்திற் பலமுடிபு வரையாய உண்ணலாதி காரியங் காண்டலான், அஃதிலதாய வழியோ நிருவிகற்பசமாதியவத்தையில் அதுகாணாமையின்; கனவு அவத்தையில் மனோமாத்திரவடிவ சரீரஞ்செய்த திருப்தியாதி பலமுடிபு வரையாய் போஜனாதி காணப்படுதலினானும், விவேக முற்றவனானும் அற்றவனானும் தேகத்தாற் செய்யப்பெற்றதாகப் புலப்படும் பயனுறு காரியம் கனாக்காயஞ் செய்தகாரியம் கடுப்பமன மியற்றியதேயாம் என்பதுபொருள் மனமே பிரியாப் பிரியங்களைச் செய்வது தேகமல்ல என்னு மிதன்பொருட்டு அதன் நிக்கிரகத்தில் பிரயத்ந அதிசயத்தை விழிப்பான் வேறுகதையால், புடம்புரியப் புகல்வார் இதற்கொப்பாம் என்றார். மனத்தால் எண்ணி யெண்ணியுயிர் உடம்புண்மையை யடையும், தேக எண்ணத்தினின்றும் விடுபட்டவனே தேகதருமங்களாகிய ஜன்மமரணாதிகளால் பாதிக்கப்படான் தேகாதியின்பால் யான் எனது திருஷ்டியை யுடையவனே யவசியம் சுகதுக்காதியை யடைவன்; அந்தர்முகத்தோடு கூடியிருக்கும் யோகிதேகத்திற் பிரியாப் பிரியங்களையறியான். இனியியம்பும் கதையைத் தொடங்குவான் முடிபுரைத்தல்; ஆதலால் நானாவித வுலகமயக்கிற்கு

மனமே காரணமாகும், அஹலியையோடு இந்திரனது விருத்தாந்தம் இதன்கண் நிதர்சனமாம்.

(ச.) உள்ளம் = மனத்தினுல் உடலாய் = அதேககன் தேகத்தை யடைந்தவனுய், அதனுல் = தேகபாவனையால் உள்ளயரும், எனவே தேகபாவனையால் விடுபட்டவன் தேகதருமங்களால் வருந்தான் என்பது அருத்தாபத்தி; வெள்ளஞானத்தவர் = ஞான யோகிகள், உள்ளே மேவாநின்ற பாவனையால் = அந்தர்முக திருஷ்டியால், உடலில் = தேகத்தின்கண் வரும் நலந்தீங்கு = பிரியாப் பிரியங்களை, புந்திசெய்யார் = அறியார் ஒப்பார் = திருஷ்டாந்தமாவார்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கதை தொடங்கல்:—என்னவென.

என்னவிவர்களா ரென்னுவிராமன் கேட்பமுனி சொல்வான்
முன்னர்மகத நாடுடையோன் மொழியிந்திரத் தும்மனென்ருேர்;
மன்னவனுக் குயிர்போல மகிழுந்தேவி யகலிகையாஞ்
சொன்னநகரி லொருவனுளன் ஞர்த்தனவன் பேரிந்திரனும்.

(ப-ரை.) என்ன = என்று திட்டாந்தப்படுத்த, இவர்கள் ஆர் என்னு = கூறியவர்கள் யாவர் என்று, இராமன்கேட்ப முனிசொல்வான் = ஸ்ரீ இராகவர்வினவ ஸ்ரீவசிஷ்டபகவான் கூறுவார், முன்னர் = பூர்வம், மகதநாடுடையோன் = மகத நாட்டை ஆண்டு கொண்டிருந்த, மொழி இந்திரத்தும்மன் என்று ஓர் மன்னன் = கீர்த்திபெற்ற இந்த்ரத்யும்நன் என்னும் ஒப்பற்ற ஓரரசன் இருந்தனன், அவனுக்குயிர்போல = அவ்வரசனுக்குப் பிராணன்போல, மகிழுந்தேவி = சந்தோஷமுறுமனைவி, அகலிகையாம் = அகலிகையென்னும் நாமத்தினளாம், சொன்னநகரில் = அதேபட்டணத்தில், ஒருவனுளன் ஆர்த்தன் = ஒருவிடன் இருந்தனன், அவன்பே ரிந்திரனும் = அவன் இந்திரன் என்னும் பெயரினன் ஆவன்.

(ஸ்ரீ-வீர.) ஸ்ரீ பிரஹ்மதேவர்: ஹே பகவன் பானுவே! ஹே அந்தகார மகற்றுவோய்! அஹல்யை என்பவள் யாவள், இந்திரனென்பவன்ருன் யாவன், எவர்தம் விருத்தாந்த சிரவணத்தானே பவித்திரமான திருஷ்டியான துண்டாமோ! பூர்வம் ஹே தேவ தேவ! மாகதங்களின் மகீபதியொருவன் இருந்ததாகக் கேள்வி, இந்திரத்யும்நன் எனப் பெறுவன், புராணுந்தரப் பிரசித்த இந்திரத்யும்நனைப் போன்றவன்; அவனுக்கு, சசாங்கனுக்கு ரோகிணியைப்போலும், இந்துபிம்பப் பிரதிமையென்னக் கமலலோசனப் பார்யையகல்யை யென்பவ ளிருந்தனள். அதேபுரத்தில் ஒரு விடனிருந்தான் அவன் விடமண்டலேசுரன், விடவித்யா குசலன், விப்பிரகுமாரன், இந்திரனென்னும் பெயரினன்.

(ச.) ஸ்ரீ இராமர், அவர்கள் = எவர்களது விருத்தாந்தத்தைத் தெரியின் என்னைப் பாவனமான திருஷ்டிவந்து பற்றுமோ அவர்கள்யார், அந்த வகலிகையாவள், இந்திரனியாவன், என்ன = இவ்விடத்து உமக்குச் சம்மதமாமென்று, முனி = ஸ்ரீ வசிட்டர், இராமா நீ கேளென் றுரைப்பான், மகதநாடுடையோன் = மகதங்களின் மகிபதி, இந்திரத்துய்மன் என்று, மொழி = பிரசித்த முள்ளவன்போல், ஓர் மன்னன் = மற்றோர் இந்திரத்துய்ம்ந னென்னும் அரசன், மகிழுந்தேவி = சந்திரவிம்பப் பிரதிமையாய்க் கமலலோசனியான பாரி, அகலிகையாம் = அகலிகை யென்பவள் சந்திரனுக்கு ரோகிணிபோ லிருந்தாள் ஆர்த்தன் = நாரிகளுக்குப் பிரியனுன விடன், அவன் = அவ் விடவரசிகாமணி, பேரிந்திரனும் = இந்திரனென்னும் பெருடைய மற்றொருவனும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கதையைத் தொடர்ந்து கூறல்:—அன்று.

அன்னாளந்த வகலிகையுமவ் விந்திரனுஞ் செறிகதைகேட்
டின்னாளிந்த வகலிகையுமிவ் விந்திரனை யினிதணைந்தா
டொன்னாட் பிரிந்தோர்கூட்ட மெனத்தூர்த்த சூடாமணியுடனே
சின்னாண் மகிழ்ந்தொன்று மளவிற்செங்கோ லரசன்செவிப்படுத்தார்.

கேட்டவேந்தன் மிகமுனிந்து கிளருநீரி லமிழ்வித்துங்
கோட்டுமதமா வெதிரிட்டுங் கொடுந்தீக்கொழுந்திற் குளிப்பித்தும்
வாட்டுங்கசையான் மோதுவித்தும் வருத்தஞ்செய்ய வருந்தாம
னாட்டமெதிர்பார்த் துளமொன்றி நகைசெய்திருந்தார் நலிவுணரார். (5)

(ப - ரை.) அந்நாள் = பூர்வகாலத்தில், அந்த அகலிகையும் அவ்விந்திரனும், செறிகதை கேட்டு = கௌதம பத்நியாகிய அஹல்யையும், தேவேந்திரனும் கூடியசரித்திரத்தைக் கேள்வியுற்று, இந்நாள் = இக்கால், இந்த அகலிகையும் இவ்விந்திரனை யினிதணைந்தாள் = கூறியராணியும் இத்தூர்த்த சூடாமணியுடன்கூடி இரமித்தாள், தொன்னாட் பிரிந்தோர் கூட்டமென = வெகுதினம் பிரிந்திருந்தவர் சேர்க்கையேபோல, தூர்த்த சூடாமணியுடனே = விடசிகா மணியோடும், சின்னாண் மகிழ்ந்தொன்றும் அளவில் = சிலகாலஞ் சந்தோஷித்து கனதரநேயமுற் றிருக்கும்போது, செங்கோலரசன் செவிப்படுத்தார் = தரும அரசன் சந்நிதியில் அவ் விருத்தாந்தத்தைத் தெரியப் படுத்தினர்.

கேட்ட வேந்தன் மிகமுனிந்து = செவிவுற்ற செந்நெறிமன்னன் சினத்தை மிகவு மடைந்து, கிளரும் நீரில் அமிழ்வித்தும் = ஆழ்ந்தமடுவில் மூழ்கடித்தும், கோட்டுமதமா வெதிரிட்டும் = கொம்புகளையுடைய மதயானையைக் கொண்டு மிதிக்குமாறு செய்வித்தும், கொடுந்தீக் கொழுந்திற் குளிப்பித்தும் = கொடிய தீச்சுவாலையிற் போட்டு வாட்டியும், வாட்டுங் கசையான் மோதுவித்தும் — துன்புறுத்துங் கசையினாலே இரத்தம் கிளம்ப அடித்தும், வருத்தஞ்செய்ய = இவ்வாறு அநேக துன்பங்களைத் தந்தும், வருந்தாமல் = துயரத்தை யடையாமல், நாட்ட மெதிர்பார்த்து =ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு, உளமொன்றி = மனமானது ஒருமைப்பட்டு, நகைசெய்திருந்தார் நலிவு உணரார் = சிரித்துக்கொண் டிருந்தாரே யல்லாமல் ஒருசிறு துயரத்தையும் அடைந்திலர். (5)

(ஸ்ரீ - வீர.) அகல்யையாகிய கௌதமபத்நீ முன்னர் இந்திரனது இஷ்டையாயினள் என்பதாக இராஜமஹிஷியாகிய அகலிகை இதிகாசஞ் சிரவணித்தபோது கதைப் பிரஸ்தாவத்தினால் கேள்வியுற்று இந்திர அநுராகிணியாயினள். கூடினள், யாவரும் அதிசயிக்கும்படியாக நிரந்தரங் கனதரநேயமுற்று மறைப்பின்றிச் சேட்டையராகி இரமித்தனர். இவ்வாறிருக்கும் இவரது விருத்தாந்தத்தை அரசனது சந்நிதியிற் றெரியப்படுத்தினர். அதைக்கேட்ட மன்னவன் சகிக்கமுடியாத துயரத்தையடைந்து அவர்களிருவரும் அன்னியோன்னியம் பற்றுற்றிருக்கும் பான்மையைப் பார்த்துப் பூபதியானவன், அவ்விருவருக்கும் அநேகவிதமான தண்டனையாற் பீடனம் செய்வித்தனன். என்னபீடனம் விசேடமா யியற்றுவித்தனன் எனின்? அவ்விருவரையும் ஹேமந்த இருதுவில் பெருநீர்மடுவில் மூழ்கடித்தனன். ஆண்டு லௌகிகமாயும் அசத்தியமாயும் இகழத்தக்கதாயும் உள்ள விடயத்திற் சித்தம் திரபாவத்தை யடைந்த அளவில் துக்கமுந் தோற்றவில்லை ஆனந்தத்

தையும் அடைவதாயின் பரமாத்மாவின்பாலவ்வாறு நிலைபெறுவதாயின் துக்கமூறுமென்னும் சம்பாவனையும் தூரத்திற் றள்ளப்படும் பேரானந்தம் நிரதிசயமாக நிரந்தரம் அடையப்படும் அதாவது தானுகவே சித்தமாம் என்னுந் தாற்பரிய இரகசியத்தைக் குறிப்பித்துக்கொண்டு அவர்தம் சித்தத்திரநிலையின் பயனிரண்டையும் விரிப்பார் நகைசெய்திருந்தார் நலிவுணரார் என்றார், பரம சந்தோஷத்துடன் சிரித்துக்கொண்டே யிருந்தனர் ஒரு சிறிதும் கேதமடைந்திலர். கடகயக் கழல்களிற் கட்டிவிட்ட போதினும் கடுகளவும் துயரையே கண்டாரில்லை. கசைகளால் ஹதம்பண்ணப் பட்டபோதினும் யாதொருத துயரையுமே யடைந்திலர் மழுக்கக்காய்ந்த பாத்திரத்திட்டும் கொழுக்கச் சுடர்விடுஞ் சுவாலையிற் றேய்த்தும் சிறிதுந் துயரமடைந்திலர்; பனிப்பாறைகளி லிருப்பதுபோலிருந்தனர். பேதங்களால் = பிரகாரங்களால்.

(ச.) கேட்டு = இதிகாசங்களினுல் வினவி, மகிழ்ந் தொன்றுமளவில் = மிகுந்த சிநேகமாய் லச்சையைவிட்டு ஆவரண அபேக்ஷையின்றி அந்நியோந்நியம் பார்வ்வயாதி சேட்டை ஒருமித்திருக்குங் காலத்தில், மூலபதம்: பேதங்களால் = பரஸ்பர அநுராகமழிக்கும் பேதோபாயங்களால்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அரசன் ஆச்சரியமடைந்து வினுதலும் அதற்கவர் கம்பீரமான சமாதானஞ் செய்தலும் வருணித்தல்:—அரசவென.

அரசனேக்கிமிக வியப்புற்ற றவும்வருத்த வருந்தாவா
றுரைசெய்திடுமி னென்றலுமே யுள்ளங்களிப்பா ருரைசெய்வார்
வரைசெய்புயத்தா யெங்கண் முகமதியினமுதம் விழியருந்தக்
கரைசெயரிய களிப்பான்மெய் காணேம்வருத்தங் காண்பேமோ. (6)

(ப - ரை.) அரசன் நோக்கி = இராஜாவானவர் பார்த்து, மிகவியப்புற்று = அதிக அற்புதத்தை யடைந்து, அறவும் வருத்த வருந்தாவாறு = அத்தியந்தம் துன்புறுத்தவும் துன்பினை யடையாதவண்ணம். உரைசெய்திடுமின் என்றலுமே = கூறுவீர்களாக என்று வினவுதலும், உள்ளங்களிப்பார் உரைசெய்வார் = மனமகிழ்ச்சியில் மூழ்கிக் கிடக்கும் அன்னுர் இன்னவாறு சொன்னுர், வரைசெய் புயத்தாய் = மலைபோலும் புயங்களையுடைய மன்னனே! எங்கண் முகமதியினமுதம் விழியிருந்த = எங்களுடைய ஆனன அமுதகிரணன் அமுதத்தை யக்கங்கள் அயில, கரைசெய்யரிய களிப்பால் = அபாரமான ஆநந்த மிகுதியால், மெய்காணேம் = சரீரத்தை நினைந்திலேம், வருத்தங் காண்பேமோ = அதனுலெய்துந்துயரை யெங்ஙன மடைவேம், அடையேம் என்பதாம்.

(ஸ்ரீ - வீர.) பின்னிறைவன்! ஹே துன்மதிகளே! இத்துணைத் துயருறுத்தியும் நீவிர் துயருறுவாதென்னே யென்ன, மகிழ்நிறைமதி அவர் கூறுவர் தரணீபால்னை நோக்கி: ஹே மகீபால! யாங்கள் எங்களுடைய அமிர்திதமுக காந்தியை நினைந்து நினைந்து அன்னியோன்னியம் ஆநந்த மடைகின்றேம், பரஸ்பரம் பார்வையின் றிடத்தினுலே எங்களுடைய தேகத்தையும் எண்ணிலேம் எங்களுடைய மனச்சம்பந்தம் பேதசங்கைச் சூனியஹேதுவால் உம்மாலாக்கப்பட்ட பீடனங்களில் மகிழ்ந்துளேமே யல்லாமல் ஒரு சிறிதுந் துயருற்றிலேம் என்பதாம்.

(ச.) உள்ளங்களிப்பார் = சந்தோஷசித்தர், விழியருந்த = நேத்திரங்கள் அந்நியோந்நியம் புஜிக்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மீண்டும் அவர்மனத்தின் செயலை விரித்தல் அரிந்தமாண்டு என.

அரிந்தபொழுது முடற்றுன்ப மறியேமொன் றிலன்பாகிப்
புரிந்துபற்று மனத்தினுடல் பொன்றவரினுந் துயர்தோன்றுத்
தெரிந்தபொருளின் மனமழுந்திற் றேகத்தொழில் வேறெவர்காண்பார்
விரிந்தமுனிவர் சாபமும்பல் வினையுமதனை மீட்பரிதாம்.

மாண்டுவாளா போனவுடன் மட்டொன் றில்லை யவையெல்லாந்
தாண்டுமனத்தா லுண்டாகுஞ் சலத்தாலன்றிக் காடுண்டோ
தூண்டுமனமே முதல்வடிவாய்த் தூலவுடலம் போனாலும்
வேண்டுமுடல்கள் விரைந்தெடுக்கும் விரியுங்கனவிற் செயல்போல.

(ப - ரை) அரிந்த பொழுதும் = எங்களுடைய அங்கங்களை கததரித்தபோதும், உடற்றுன்பம் அறியேம் = சரீரதுக்கத்தை யுணரேம், ஒன்றில் அன்பாகிப் புரிந்துபற்று மனத்தினுடல் பொன்றவரினும் துயர்தோன்று = ஒருபொருளின் கண்ணே மிகுந்த பிரியமாகி அழுத்தமாகப் பற்றுறும் மனத்தின்பால் தேகங் கெடும்படியான துன்பங்கள் வந்தபோதினும் அத்துயரங்கள் தோன்றுவாம், தெரிந்த பொருளில் மனமழுந்தில் = பிரியமாகத் தேர்ந்தெடுத்த வத்துவில் உள்ளமானது அழுத்தமாக மூழ்கில், தேகத்தொழில் வேறு எவர் காண்பார்=சரீரம் வருந்துவதாதியை வேறுயாவரேகாணுவர், விரிந்த முனிவர் சாபமும் = பெருந் தவத்தினையுடைய மகரிஷிகளது சாபமும், பல்வினையும்= எத்தொழிலும் அதனைமீட்பரிதாம் = அதுதனை மீளச்செய்தல் கூடாத காரியமாம்.

மாண்டு வாளாபோன வுடன் = வீணாக இறந்துபோன தேகங்கள், மட்டொன் றில்லை = கணக்கே கிடையாது, அவையெல்லாம் தாண்டுமனத்தா லுண்டாகும் = அத் தேகங்கள் யாவையும் ஒன்றைவிட் டொன்றிற் றாவிக்கொண்டே யிருக்கும் உள்ளத்தினாலே யுண்டாகும், சலத்தாலன்றிக் காடுண்டோ = நீரைவிடுத்து வனத்திற் றருவுங் கொடியுங் கனியும் உளவாமோ, தூண்டுமனமே முதல்வடிவாய் = விடயங்களை யுளவாக்கும் உள்ளமே முக்கிய வுடலாய், தூலஉடலம் போனாலும் = தூல ஆக்கைகள் தொலைந்தாலும், வேண்டும் உடல்கள் விரைந்தெடுக்கும் = வேண்டிய சரீரங்களைச் சீக்கிரத்தில் எடுத்துக்கொள்ளும், விரியும் கனவில் செயல்போல = விரிந்த சொப்பனத்தில் மாறிமாறிச் செயல்கள் செய்வதே போலவாம்.

(ஸ்ரீ - வீர.) எங்கள் அங்கங்களைத் துண்டந் துண்டமாக வெட்டியபோதினும் ஹே மகிபால யாங்கள் மோகியேம். இஷ்டப்பொருளில் நீண்ட அபிநிவேசஞ் செய்து அதன் கண்ணே வூன்றிநிற்கும் மனத்தை பாதை செய்வதற்குச் சரீரசம்பந்த பாவ அபாவங்கள் சமர்த்துடையன வாகாவாம். அதிதீவிர வேகத்தோடு கூடியமனத்தினாலேயாது பாவிக்கப்படுமோ அதனையே அது மிகத்திரமாகக் காணும் சரீரவிசேஷ்டைகளைக் காணாது. எக்கிரியைகளும், வரசாபாதிகளும், அதிதீவிர வேகத்தோடும் பற்றியமனத்தை யசைக்கச் சமர்த்துடையன வாகாவாம் அன்னி யோன்னியம் அவ்வவ் வாகாரங்களை யடைந்துள்ள யாங்கள் அதிதீவிரமாகப் பாவித்து அவற்றுள் அழுந்திக் கிடக்கின்றேம். ஹே பூபதே! ஒரு தீரனுடைய மனமானது ஒருமையுடன் ஒருகாரியத்திற் புகுந்துவிட்டதேயாயின் அது அநேக உபத்திரவங்களாலும் வரசாபவலுமைகளாலும் சுமேருவைப்போல அசைக்கமுடிய யோக்கியமே யாகாதாம்; மான்களுறைந்தோ மாமலைவீழும். அற்றேல் தேகமே மனத்தின் காரணம் தேகபீடனமாகப் பீடிக்கப்படாதது யாது காரணமோ வெனின்? அன்றென்பார் மாண்டெனத் தொடங்கினர். இங்கேகாணப் படுவனவாய

பிராணிகளின் சரீரவடிவ வீணுகவெழுந்த ஏகதேச அற்பகற்பனைகள், மனங்கட்குக் காரணமாகாவாம், மற்றே, சர்வவன கண்டலதை ரசங்களில் வாரியே காரணமாவது போல, இத்தேகங்கள் யாவற்றிற்கும் சித்தமே உபாதான காரணமாம். இதனுனே தேகநாசமெய்தினும் மீண்டும் மீண்டும் உடலுற்பவமாம் சித்தநாசமாயினே கைவல்யமேயாம் மீண்டும் பவமுண்டாகாதாம் என்பது வெட்டவெளியா மென்பார் விரைந்தெடுக்கு மென்றூர். தேகம் ஜடமாகுமாயின் விவிததேக கணத்தைச் சித்தஞ் செய்யுமாதலின் சரீரங்களின் மாட்டுச் சித்தம் உபாதான காரணமென்றது விபரீதமுடையதாக என் ஆக மாட்டாதென்னுஞ் சங்கைக்கிடனின்று மென்றுணர்க. கண்டாமன்றே கனவிடத்தின் மனம் விரைவில் நவநவமாகச்செய்து விளையாடுவது; சித்தமானது ஜடமாய் விடின் காயம் ஒரு சிறிதுமே உண்டாக்கவே மாட்டாது, ஆகையினுலே சித்தவடிவ சர்வ அருத்த காரணமாய சிந்தாமணி யாதனத்தைப் பரமபுருடார்த்த சமாதானத்தான் இரக்ஷிப்பீராக, துச்சக்குரோதாதி வயத்தானே விநாசஞ் செய்யாதீர்.

(௪.) ஒன்றிலன்பாகிப் புரிந்து = ஓர் பொருளில் நேசமாய் விருப்புற்று பற்றும் = தீரமாயிருக்கும், மனத்தில், வரினும் = சரீரத்துண்டாகா நின்ற பிரியாப்பிரிய ரூபங்களான கிரியைகள் வந்தாலும், துயர்தோன்று = பிரியவஸ்துவில் வெகுகாலங்கூடினதாயிருக்கும் மனதைச் சரீரசம்பந்தமான பிரியாப்பிரிய ரூபங்களாகிய கிரியைகள் வாதித்தற்குச் சத்தியுடையனவாகா என்பதுபொருள், தெரிந்தபொருளில் = பாவனூரூபமான வஸ்துவில் மனமழுந்தின் = மனது தீவிரவேகமுறில் அப்பொருளையே புருடன் சலனமறப்பார்ப்பன். தேகத்தொழில் வேறெவர் காண்பார் = அரசனே மற்றோர் கிரியையும் பாரார் என்பது பொருள். வீரிந்தமுனிவர் சாபமும் பல்வினையும் = முனிசாபாதிகளும், அதனை = ஒருகாரியத்தில் தீவிர வேகத்தோடுகூடின தீரனது மனதை, மீட்பரிதாம் = அநேகவச்சிராயுத அடிகளும் மேருவைச் சலிப்பியாததுபோற் சலிப்பியாது.

அவையெல்லாம் = அச்சரீரங்கள் அனைத்தும், மனத்தா லுண்டாகும் = விருதாவாக வுதிக்கும், சலத்தாலன்றிக் காடுண்டோ = சகலவனசமூக லதையினுடைய ரசங்களுக்கு வாரிபோல், அச்சரீரங்களுக்குச் சித்தமேகாரணமாம், ஆதலின், தூண்டுமனமே முதல் வடிவாம் = இவ்விடத்தில் மனதே முக்கியமான சரீரமாம்; என்றும்காத்மாவே நீயறி, வேண்டு முடல்கள், அம்மனமே நவநவமான விவிததேக கணங்களை, விரைந்தெடுக்கும் = சீக்கிர முண்டாக்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கதையை உபசங்கரித்தல்:—இந்த என.

இந்தமனமே யொடுங்கிலுட லேதுமறியா தெனக்கேட்ட
வந்தநிருபன் பரதனெனு மருகின்முனியை முகநோக்கிச்
சிந்தைமயலுற் றிருந்துமிவர் சிற்பாவனை செப்பினரென்று
புந்திமகிழ்ந்து புறநாட்டிற் போமென்றவரைப் போக்கினனுல்.

(ப-ரை.) இந்தமனமே யொடுங்கில் = இம்மனமானது இலயமானுல், உடல் எதும் அறியாது = தேகம் எதனையுமே புணராது, எனக்கேட்ட அந்த நிருபன் = என்றுகூறியதை வினவிய அம்மன்னவன், பரதன் எனும் அருகின்முனியை முகம்நோக்கி = சமீபத்தில் வீற்றிருந்த ஸ்ரீ பரதமுனிவரது திருமுகத்தைப் பார்த்து, சிந்தை மயலுற்றிருந்தும் இவர் சிற்பாவனை செப்பினர் என்று = மனோமயக்கத்தை யடைந்திருந்தும் இவர் பரமார்த்தரச சம்பந்தமான மொழிகளைக் கூறினர் என்று, புந்திமகிழ்ந்து = மதிமகிழ்வுற்று,

புறநாட்டில் போமென்று அவரைப் போக்கினன் = வேறு தேசத்திற்கு ஓடிப்போங்கள் என்று அவரைத் துரத்திவிட்டனன்.

(ஸ்ரீ - வீர.) பரமார்த்தரச சம்பந்தமான = பரமார்த்த சாரவிடயமான, அவர்களால் இவ்வண்ணம் இயம்பக்கேட்ட அரசன் அருகிலிருந்த ஸ்ரீ பரதமுனிவரை நோக்கிக் கூறுவதாவது; ஹே பகவன் ! சர்வதருமங்களையும் உணர்ந்தவரே ! காமக்குருடரேனும் இவர்தம் வசனம் பரமார்த்தரசம் பூரித்து மனங்களை யிரமிக்கச் செய்கின்றது. சாஸ்திரத்திற் சாற்றியபடி வெகுதண்டனையும் அடைந்தனர் இவரை யினித்தேயப் பிரட்டஞ் செய்கின்றே னென்றுரைத்து இராஜசார்த்தூலன் அவ்விருவரையும் தன்றேச எல்லைக் கப்புறம் போம்படி ஆணையிட்டான். பெரியவாசிட்ட முறையோ: அவன் கூறியதைக் கேட்ட மன்னவன் ஸ்ரீ பரதமுனிவரை நோக்கி இப்பாவியரைச் சபிக்கவேண்டுமென்று வேண்ட அவ்வாறே அழியுமாறு சாபமிட, அவர் தேகநஷ்டமாயினும் அந்தக்கரண வடிவினராய எமக்கு யாதொரு நட்டமு மின்றென்றனர் என்பதாகச் செல்கின்றது, விரிவு அங்குகாண விரித்துளேம் முதலடிக்கு முன்னுரையிற் சேர்த்தி விரித்தாம்.

(ச.) இந்தமனமே யொடுங்கில், உடல் ஏதும் = ஒருதேகமும், அறியாது = உண்டாகாது, ஸ்ரீவசிட்டர்: என = ஆதலின் அரசனே! நீ சித்தரத்தினத்தைப் பரிபாலனஞ் செய்யென்றவர்கள் கூற, கேட்ட அந்த நிருபன், புந்திமகிழ்ந்து = இவ்வாக்கியம் பரமார்த்தரசப் பரிசமுள்ள தென்று இருதயம் இரமித்து, இவர் சிந்தைமயலுற்றிருந்தும் = காமாந்தகராகிய இவ்விருவரும் என்னால் வேண்டும் வண்ணம் சிக்ஷிக்கப்பட்டும் என்ன ஆதலின் இவரைவிட்டு விடுகிறேன் என்று சொல்லி.

## வஞ்சவிந்திரன் கதை முற்றிற்று.



## மனத்தின் கதை.



(ஸ்ரீ-வீர - அ-கை.) நடந்த கதையினாலே விரிவாக விளம்பப்பட்ட அருத்தத்தைச் சங்கிரமாகக் கூறல்:—தூலத்திற்கே கெடுதலைக் கண்டோம் சூக்குமத்திற்கின்று மென்னும் லோகதிருஷ்ட அனுசாரமாக தங்கூற்றைக் கூறுவார் வேறுவேறு இயற்கைகள் வாய்ந்த இருதேகங்களைக் காட்டி மனோசக்தியை விரித்தல்:—இந்தவென.

(ச - அ - கை.) முன் வஞ்சவிந்திரன் கதையில் மனோவியாபாரத்திற்கே பிராதானியத்வம் ஆதலின் அதுவே சுகதுக்க போகாயதனத்துவமாதலின் முக்கியமான சரீரமென்று சொல்லப்பட்டது. இப்போது மீட்டும் அதன்சொரூப நிரூபித்தற்குச் சித்தத்தின்கதை ஆரம்பிக்கப் படுகின்றது:—இந்தவென.

இந்தக்கதையை விளையாட்டென்ன விசைத்தோ மெவர்க்கு
மந்தத்தமதா முடலொன்ற யலாமுட லொன்றவற்றிற்
சிந்தைச்சரீரம் விரைவிற் செயல்க ளெல்லாஞ்செய்து
தொந்தித் தலையுமற்ற தூலவுட லொன்றறியா.

(ப - ரை) இந்தக் கதையை = இவ்வஞ்சவிந்திர வுபாக்கியானத்தை, விளையாட்டென்ன = விநோதமாக, இசைத்தோம் = கூறினோம், எவர்க்கும் = எல்லாவுயிர்க்கட்கும், அந்தத்தமதாம் உடலொன்று = உள்ளேயிருக்குந் தேகம் ஒன்று, அயலாம் உட

லொன்று = மற்ற தேகமொன்று, அவற்றில் = அவ்விரண்டனுள், சிந்தைச்சரீரம் = மனோசரீரம், விரைவில் = சீக்கிரத்தில், செயல்கள் எல்லாஞ்செய்து = தொழில்கள் யாவற்றையுமே தொடங்கி, தொந்தித்தலேயும் = சம்பந்தித்துச் சுற்றிக்கொண்டே திரியும், மற்றதூலஉடல் ஒன்றறியா = அயலதாகிய இத்தூலதேகம் யாதொன்றையுமே தெரிந்துகொள்ள மாட்டாது.

(ஸ்ரீ - வீர.) பிரஹ்மா முதல் ஸ்தாவரபரியந்தம் எல்லாஜாதி சரீரிகளுமே எப்போதும் இவ்வுலகின்கண் ணிருசரீரங்களை யுடைத்தா யிருக்கின்றன, ஒன்றோமனச்சரீரமாம் வேக காரியாம் எப்போதுஞ் சஞ்சலமாம், மாம்ச நிர்மிதமாய மற்றையது யாதொருகாரியமும் செய்யவல்ல தல்லவாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்: இசைத்தேம் = இராமா உனக்குச் சொன்னோம், எவர்க்கும் = இச்சகத்திற் சகலசரீரிகளுக்கும். அந்தத்தமதாம் உடலொன்று = மனச் சரீரமொன்றும் அயலாம் உடலொன்று = மாம்ச நிர்மிதமான தூலசரீர மற்றொன்றும், ஆகவிரண்டே சரீரங்கள், அலேயும் = சதாசலிக்கும், ஒன்றறியா = எவ்வளவுஞ் செய்ய அறியாது. (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சம்சாரரோக காரணமாகிய மனத்தை நன்றாக வுணர்ந்தாற்றான் அதற்குச் சிகித்சைசெய்தல் சுககரம் என்றெண்ணி ஸ்ரீ இராகவர் வினுதல்:—அனுபவிக்கப்பட்ட அருத்தங்களின் பாவனை விபாவனை யெனப் பெயரிய விகற்பமாத்திரமே மனமாகும், அப்பாவனை அசையுந்தருமத்தை யுடையதாய் விதிநிடேத வினைவடிவமாம், அதிருக்குமமான அதிர்ஷ்ட பாவத்தையடைந்த அவ்வினைக்கே ஜன்மாந்தராதி யான்மகமாக யாது வரும் ரூபமுளதோ. அதுவே பயனும், அதனையே எல்லாஜந்துக்களும் அனுசரிக்கின்றார்கள், அம்மனமே முறையாக உபயபாவத்தை யடைகின்றது என ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறியதைக் கேட்ட ஸ்ரீ இராகவர் வினுதல்:—என்றான் என.

என்றான்வசிட்டன வனையிந்தச் சடமாமனத்துக்
கொன்றாவடிவ மிலதாமுள்ள வடிவை விரித்து
நன்றாயுரைப்பா யென்று ஞானக்குரிசில் கேட்பப்
பொன்றாவிதி சொற்படியே போதமுனிவன் புகல்வான்.

(ப - ரை.) என்றான் வசிட்டன் = திருவருள் செய்தனர் ஸ்ரீ வசிட்டர், அவனை = அவ்வாசிரியரை, சடமாம் = ஜடமாகியும், ஒன்றா = அஜடமாகியும், வடிவமிலதாம் = நிராகிருதியாகியும், இந்த மனத்துக்கு = இருக்கும் இம்மனத்தினுக்கு, உள்ளவடிவை = ஆரூடசங்கற்பரூபத்தை, விரித்து = விஸ்தாரமாக, நன்றாய் உரைப்பாய் என்று ஞானக்குரிசில் கேட்ப = மனதிற்படும்படி யனுக்கிரகிக்க வேண்டுமென்று ஞானதாதாவாய் ஞானமயமாய் ஒளிரும் ஸ்ரீ இராமச்சந்திரர் வினவ, பொன்றாவிதி சொற்படியே போதமுனிவன் புகல்வான் = கெடாத ஸ்ரீ பிரஹ்மதேவர் தமக்கனுக்கிரகித்த வண்ணமே ஞானசிரியராகிய ஸ்ரீ வசிட்டர் திருவருள்செய்யத் தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) மனம் நிராகிருதி = உண்மையாகச் சொரூபமற்றதாம், அதன் கண்ணேது ஜடமாயிருத்தலாம், அஜடத் தன்மையைச் சாதிப்பார் இந்த என்றார். திருசியமென்பது பொருள். ஆரூடம் சங்கற்பம் எதனுல் அது ஆரூட சங்கற்பமாம் = சங்கற்பப் பிரதானம் என்பதுபொருள். ஆரூடம் சங்கற்பம் எதற்கென்றேனும் கொள்க. ஹே பிரஹ்மந் ! ஜடமாயும் அஜடா கிருதியதாயும் நிராகிருதியதாயும் இருக்கும் மனத்தினது சங்கற்பப் பிரதான வடிவத்தை விஸ்தாரமாக அடியேனுக்கு அனுக்கிரகம் செய்வீராக, என்பது பிரசினம்.

(ச.) அவனே ஞானக்குரிசில் நோக்கி. உருவமிலதாய் = ஆகாரசூனியமாய் உண்மையுள்ள வடிவை = ஆரூடமான சங்கற்பரூபத்தை, எனக்கு உரைப்பாயென்று கேட்ப.

(ஸ்ரீ - வீர-அ - கை.) அநிர்வாச்சியமாய மனத்தினது சொரூபத்தைக் காண்பித்துக் கொண்டு துயில்வரை சாங்காறும் சிவசிந்தனுதிவடிவ மோக்ஷ உபாயத்திலேயே அம் மனத்தைப் பயில்விக்கவெனக் கூறுகின்றார்:—அகிலவென.

அகிலசத்தி யுடைத்தாய நந்தமான பரமம்
புகல்சங்கற்பத் தோடே பொருந்தும் வடிவேமனமா
மிகலுஞ்சத் தோடசத்தா மிரண்டினுள்ளுந் தோன்றிப்
பகருந்தொழில் களோடே பயில்பாவனையு மஃதே. (3)

(ப -ரை.) அகில சத்தியுடைத்தாய் = சர்வசக்தி உடையதாய், அநந்தமான = நாச மற்றதாகிய, பரமம் = ஆத்தும தத்துவமாகிய மகாத்மாவினது, புகல்சங்கற்பத்தோடே பொருந்தும் வடிவே மனமாம் = சொல்லாநின்ற சங்கற்பசக்தியுடன் கூடும் எவ்வுருவமுளதோ அது மனமெனப்படும், இகலும் = முரண்படும், சத்தோடசத்தா மிரண்டினுள்ளுந் தோன்றி = சத்தசத்துக்களின் இடையில் இருப்பதாய், பகருந்தொழில்களோடேபயில் பாவனையும் = சொல்லும் வினை முன்னிலைப் பட்டுச் சலனமுடைத்தாய வடிவம், அஃதே = அம்மனமே.

(ஸ்ரீ - வீர.) சர்வசக்தி = சர்வகாரணபூத மாயாசக்தி, சர்வபதார்த்தங்களிலும் இருப்பனவாகப் புலப்படாநின்ற சர்வசக்திகளையும் உடையது ஆத்மதத்துவம், அதற்குச் சங்கற்ப சக்தியுடன் சம்பந்தித்த எக்கற்பித ரூபமுளதோ அதனை மனமென்பர். சத்தசத்துக்களின் மத்தியிலுள்ள பதார்த்தம் அது. ஊஞ்சல் இயற்கையினாலே அதிலோலமான நரர்களின் எவ்வபிப்பிராய காரணமுளதோ அதுசங்கற்ப அபிமுகத்தன்மையையடைந்து சத்தசத்துக்களின் மத்தியிற் சலிக்கின்றது, ஆன்மா அனான்மாக்களினிடையில் ஊஞ்சலாடுகின்றது: பன்மைப்பாரம் தாங்கி மனக்கண்ணாடியில் அதிரூடமாகி ஆன்மா அனான்மா காண்போன் காண்பொருட் பாவத்தைப் பஜிக்கின்றது, மனோலயமான துயிலில் ஆன்ம அனான்மக்கட்குக் காண்போன் காண்பொருட் பான்மைகாணமையின் என்றுணர்க. அநந்த ஆத்மதத்வ மகாத்மாவாய்ச் சர்வசக்தியையுடைய மாயாசபமத்தின் முதற்றோற்ற சங்கற்பசக்தி யெவ்வுருவம் அதுமனமாம். இப்போது இங்குற்ற நர்தம் விவகாரத்தும் அது பிரசித்தமாம், நரர்கட்குத் தானுவா புருடனு எனவுண்டாம் விகற்பத்தில் சத்தசத்துக் கோடிகளினிடையில் எப்பாவம் ஊஞ்சற்போலச் சஞ்சரிக்கின்றதோ கோடித் துவயத்தின் கிணைப்புப் பூர்வகத்தன்மை யடைகின்றதோ அவ்வுருவமே மனமென அறைவர். எப்போதும் அறிவுருவத் தன்மையானே விளங்குகின்ற ஆன்மாவின் கண்ணும் யான் அறிந்திலேன் என்னும் உணர்வும், அகர்த்தாவின் கண்ணும் கர்த்தாத்தன்மை யுணர்வும் எதனால் உண்டாகின்றதோ அது மனமெனப்படும்.

(ச) அகில + மான = சர்வசக்திமானும் அநந்தமுமான, புகல் பிரமம் = ஆன்மதத்துவ மென்னும் பரமாத்மா, சங்கற்பத்தோடு = சங்கற்ப சக்தியுடன், ஆன்மாவின் கண்ணே சர்வசக்திகளும் உள அவற்றுட் சங்கற்பசக்தி சம்பந்தமான ஆன்மாவின் ரூபமியாது அதுவே மனமென்பது பொருள். சத்தோடசத்தாம் இரண்டினுள்ளும் = சேதனு சேதனங்களின் மத்தியில், எந்தப்பதார்த்தந் தோன்றி, பகருந் தொழில்களோடே பயிலும் = சங்கற்போன் முகமாய்ச் சலிக்குமோ, பாவனையஃதே = அந்தப் பதார்த்தம் மனோரூபமென்றறி.

(ஸ்ரீ - வீர - அ-கை.) நித்தியமுக்தமாய ஆன்மாவிற்கும், அஞ்ஞானத்தானே மனோ பிராந்தியா லாக்கப்பெற்றது பந்தமுத்தி யென்பதாக நிண்ணயிப்பான், மனத்திற்கு அறியப்பெறாத ஆன்மாவினின்றும் உற்பத்தி வித்தாரமாக உரைக்கப்பட்டது, ரோக தத்துவ நிர்ணயப் பொருட்டே போலும் ரோககாரண அபத்திய ஆகாரம் அறைந்ததா மிது; நிர்ணயம் மனத்தத்துவம் ஆனபின் னிப்போதோ அதன் சிகித்சைப் பிரயத்தி னமே அவசியம் செய்யத்தக்கதாம், மீண்டு மீண்டும் காரண சிந்தைக்குப் பயனின்றாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—எங்கே யென.

எங்கேயெனினுந் தோன்றுமிந்த மனத்தை முத்திச்
சங்கேதத் தாலூகந் தன்னிற் கூட்டினன்றாம்
பங்கேருக னோதியதோர் பழையகதை நீகேட்பாய்
வெங்கேதமு மச்சமுமாய் வெறும்பொய்யா மோர்வனமே. (4)

(ப - ரை.) எங்கே யெனினுந் தோன்றுமிந்த மனத்தை = எக்காரணத்தாலேனும் மயலாற் புலப்படும் இம்மனத்தை, முத்திச் சங்கேதத்தால்=மோக்ஷம் அடைவதற்காக ஊகந்தன்னிற் கூட்டினன்றாம் = முக்தி யுக்திகளிற் சேர்ப்பிப்பின் மிக்க நலமுடைத் தாம், இதன் பொருட்டாக, பங்கேருகன் ஓதியதோர்=ஸ்ரீ பிரஹ்மதேவர் கூறியதாகிய ஒப்பற்ற ஒரு, பழையகதை நீ கேட்பாய் = புராதன ஆக்கியானத்தை நீ சிரவணஞ் செய்து, வெங்கேதமும் அச்சமும் ஆய் = பெரிதாய் அசாந்தமாய் அதிபீஷணமாய், வெறும் பொய்யாம் ஓர் வனமே = அத்தியந்தம் சூனியமாம் ஒரு அடவியிருக்கின்றது.

(ஸ்ரீ - வீர.) ஆராயாது இரமணீயமென நாடேங்காரணத்தால் உற்பன்னமாம், அத னானே சித்தம் அவிசாரித ரமணீயமேயாம். ஆராய்ந்து நோக்கினோ, நிழற்கற்பித வேதா ளமேய்ப்ப விநாசமாம் இது மெய்யறிவாளரது அநுபவ கம்மியமாம். முக்தியுக்தி = மோக்ஷசாதக ஊகங்கள்; தற்சிந்தனாதி யிலக்கண மோக்ஷ உபாயங்களில் அதனைச் சேர்க்க இங்ஙனம் அவிசாரிதரமணீயமாய் விசாரத்தானே விநாசமாம் மனமே சம் சாரகாரணம் அதன் நிவிருத்தியின் பொருட்டு அதுவே மோக்ஷயுக்திகளில் யோஜிக்கத் தக்கதாம் என வியம்பப் பெற்றதாயிற்று. இப்போது இதனை யுணர்த்தற் பொருட்டே சித்தாக்கியானத்தை யவதரிப்பித்து விரிப்பார்: கதைகேளென்றார் கூடார்த்த பத்தியங் களை ஸ்ரீபகவான் வசிட்டர்தாமே வியாக்கியானிப்பர் ஆயினும் மதிசௌகரியப்பொருட்டு வியாக்கியானிப்பாம்; இதன் கண்ணே ஜீவர்கள் சுற்றுகின்றமையின் அடவி =சமுசார பதவியாம்; அது அதிவிஸ்தீர்ணமாம், சூனியம் = சர்வபதார்த்த வர்ஜிதமாம், ஆங்குத் தோற்றும் பொருட்கட்கு மா யிகத்தன்மை யுண்மையின், மூலத்திற் சாந்தமெனவே பிரிக்கின், தாமசத்தன்மையைத் தரிசிப்பான் சூனியமெனவும், சாத்விகத்தகைமையைத் தரிசிப்பான் சாந்தமெனவும், இராஜசத் தன்மையை யறிவிப்பான் அதிபீஷணமெனவுங் கூறப்பட்டதென அறிக. எவ்வாசனையினாலேனும் எதையேனும் பற்றிக் கிளம்பும் சித் தம் மிகவும் அற்பமேயாம், ஆயினும் நித்தியம் ஆன்ம விமோக்ஷப் பொருட்டு ஹே அநக! அதிமுயற்சியினால் ஆன்மாவின் கண்ணே சமாதானப்படுத்துக. சமாதியின்பலமியாதோ வெனின்? பரத்திற் சமாதியையடைந்த சித்தமானது தூய்தாய் வாசனை யற்றதாயாம், அதன்பின்னோ கற்பனையற்றதாய் ஆன்மதத்தன்மையை யடையும் சித்த நிரோதமாத்தி ரத்தானே யாங்ஙனம் வெளியுட் சர்வதுவைத பந்தநிவிருத்தி யெனின்? சராசரவடிவ மாக இருக்கும் இவ்வுலகமுழுவதும் சித்த அதீனமேயாம்; ஆகலின் பந்தமோக்ஷங்கள் சித்த அதீனங்கள் என்பது புடமாம் கூறியபொருளிற் சாதகமான ஆக்கியானத்தைக்

கூறுகின்றார் பங்கேருகன் என. இப்பொருளில் ஸ்ரீ பிரஹ்மதேவர் எமக்கு முன்னர்த் திருவாய்மலர்ந்தருளிய அநுத்தமமான சித்தாக்கியானத்தைக் கூற அதியத்தினத்தோடு கேட்பாயாக. ஸ்பாரமாய்ச் சூனியமாய் அசாந்தமாய் அதிபீஷணமாய் அடவியொன்றுளது. அடவியாதி சப்தங்கட்குத் தாற்பரியப் பொருளைப் பின்னர்த் தாமேயருளுவர், சூனியம் = மிருக பக்ஷியாதிரகிதம் மித்தைவடிவம் அசாந்தம் = மிக விக்ஷேபம் விரிந்தது. திக்குமுடிவுகள் அற்றதுமாம்.

(ச) எங்கேயெனினுந் தோன்றும், சித்தம் எங்கேயாவது உற்பன்ன மாகட்டும், யாதாமொன்றாகட்டும், காரண விசாரசொரூப விசாரத்திற்குப் பயனில்லையாம் என்பது பொருள். எங்கேயாவது = எக்காரணத்தாலாவது முத்திச் சங்கேதத்தால் = மோக்ஷ நிமித்தம், ஊகந்தன்னில் = மோக்ஷ உபாயங்களிலும் ஆன்மாவினிடத்தும் சேர்க்க வேண்டும், கூட்டினன்றாம் = மனதை நித்தியம், மோக்ஷ வுபாயங்களிலும் ஆன்மா விடத்துஞ் சேர்ப்பதே பிரயோஜனம் என்பதுபொருள் பங்கேருகன் = பங்கஜஜன்ம னன பகவான், உனக்குயான் ஓதுவேன் நீ கேட்பாய், வெறும்பொய்யாம் = சுத்த சூனியமான, ஓர்வனம் = அடவி இராமா இருக்கின்றது. அடவியாதிகளின் யதார்த்த ரூபத்தை ஸ்ரீ இராமர் வினவின்பின் ஸ்ரீ வசிட்டர் தாமே தெளிவிப்பர்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வனத்தையும் கதாநாயகனையும் அவனது செய்கையையும் வருணித்தல்:—அதி—தனை—மீட்டும்—என.

அதினோர்கோடி நீளமநந்த கோடிகாத
மிதிலோர் புருடன்கண்கை யெண்ணிலாத துடையோன்
சிதறுகின்ற நினைவோன் சேணுயுகன் றவடிவோன்
பதறுகின்ற கணையம் பலவுங் கரத்தாற்பற்றி.

தனைத்தான் சிதறமோதித் தகர்ந்தே யுலறியலறி
யனைத்தாந் திசையுமோடிய வசமாகிய படிபட்
டெனைத்தா முறுப்புந் தூளாயிருளாய் நடுக்கமிருந்த
வினைத்தாழ்வுறு பாழ்ங்கிணற்றில் வீழ்ந்துநெடு நாண்மெலியும்.

மீட்டுமெழுந்து வந்துமெய்யின் மோதிக்கதறி
யோட்டந்தனிலே சுழலுமுயர் முண்ணிறைந்த கருவேற்
காட்டின்முறிய விழுந்து கனலிற்புழுப் போற்பதைக்கும்
வாட்டந்தவிர்ந்து கதலிவனத்தின் மகிழ்வுற்றிருக்கும்.

(ப - ரை.) அதினோர்கோடி நீளம் அநந்தகோடி காதம் = அதனது ஒரு கோண மாத்திரத்தின் அளவு வெகுகோடி யோஜனை யுற்றதாம், இதில் ஓர்புருடன் = இவ்வடவியில் ஒரேபுருடன், கண் கை எண்ணிலாதது உடையோன் = சகத்திர கரலோசனன், சிதறுகின்ற நினைவோன் = ஆகுலம் நிறைந்த வுளத்தன், சேணுயகன்ற வடிவோன் = விசாலமான ஆகிருதியை யுடையோன், பதறுகின்ற கணையாம் பலவும் கரத்தாற்பற்றி = அதிசஞ்சல ஆயிரக்கணக்கான அத்தங்களால் ஆயுதவர்க்கங்கள் பற்பலவும் கொண்டு.

தனைத்தான் சிதறமோதி = தன்னுடைய பின்பாகஞ் சின்னபின்ன மாகத்தானே தாடனஞ்செய்து, தகர்ந்தே யுலறியலறி = அவதிப்பட்டு ஓலமிட்டு, அனைத்தாந்திசையும் ஓடி = எல்லாத் திக்குகளிலும் ஓட்டமிட்டு, அவசமாகி = தன் வயமற்று, அடி

பட்டு = தாடன தாவனுதிகளால், எனைத்தாம் உறுப்புந் தூளாய் = சர்வ அங்கங்களும் பொடியாகி இருளாய் நடுக்கம் மிகுந்த = அந்தகார மயமாய்க்கம்பித மதிகரித்த வினைத் தாழ்வுறு பாழ்ங்கிணற்றில் = ஏறமுடியாததான பாழுங்கிணற்றில், வீழ்ந்து நெடுநாள் மெலியும் = பதிதனுகி வெகுகாலம் துன்புறுவன்.

மீட்டுமெழுந்து வந்து = அதினின்றும் மீண்டும் உத்திதனுகிவந்து, மெய்யின் மோதிக்கதறி = சரீரத்தின் கண்ணே யடித்துக்கொண்டழுது, ஓட்டந்தனிலே சுழ்லும் = அநேக இடங்களில் ஓடிக்கொண்டே சுற்றுவன், உயர்முள் நிறைந்தகருவேல் = அதிகூர்மையான முட்கள் நிறைந்துள்ள கருவேன்மரங்கள் நெருங்கிய, காட்டில் = வனத்தில், முறியவிழுந்து = பிளந்துபோமாறு வீழ்ந்தவனுகி, கனலிற் புழுப்போல் புதைக்கும் = நெருப்பிற் பாய்ந்த விட்டிற்போலப் பெருந்துன்புறுவன், வாட்டந்தவிர்ந்து கதலிவனத்தின் மகிழ்வுற்றிருக்கும் = தளர்வுதீர்ந்து கன்னிவனமுற்று களிப்படைந்திருப்பன்.

(ஸ்ரீ - வீர.) புரியாகிய சரீரத்தில் இருத்தலினுலும் வெகுதுயர் உறுதலினுலும் புருடன் மனமாம்; சகத்திர கரலோசனன் = அநந்தஹஸ்த நயனன். ஈண்டு அளவற்ற விடயாகார விருத்திகள் கரலோசனங்களாகக் கழறும் வேட்கையாம்; சகத்திர நேத்திர அத்தத்தன்மைகள் யாவ்வபுருடனுக்கு நன்குவருணிக்கப் பெற்றனவோ அவை சித்தத்திற்கு அநந்த ஆகிருதித்தன்மைகளே நன்கு காட்டப்பெற்றனவாம் எனப்பெரிய வாசிட்டத்திற் கூறப்பட்டிருத்தலின் நானுயோனிகளை யடைவிக்கும் குகற்பனைகளின் சகத்திரங்களால், எப்புறங்களிலும் இடரேதரும் ஆத்தியாத்மிகாதி துக்கஹேதுக்களைக் கொண்டு தனது பிருட்டத்திற் புடைத்துக்கொள்ளும், அதாவது மயலாற் கவரப்பட்ட அத்தியான்மிகாதி துக்க ஹேதுக்களானே தன்னைத்தானே கிலேசப்படுத்து மென்பது பொருள். ஓடல், குகற்பனையினுலே யடைவுற்ற துக்கஹேதுக்களினுற் பயமுற்றும். பாழுங்கிணற்றில் = விவேகரகித அந்தகூப ஆழ்ந்த நரகத்தில், இகழத்தக்க துயரங்கள் நிறைந்துள்ளன இதன் கண்ணெனக் கூபசப்த விற்பத்தியினுல் ஆகாயம்போலக் கம்பீரமாம் அபரிச்சேத்தியமும், உள்ளவகாசமும் உடையதாம். கருவேல்வனம் = மருடஜன்மம் கூறப்படும். நிறைந்த முட்செடிப் புதருற்ற அவ்வனம் முண்மயமாகவே யிருத்தலின் இறையுமின்பந்தராமல் துன்பமேபொதிந்து கிடக்கும் என்பதாம். கதலிவனம் சுவர்க்கமாம், அதுபோற் றேற்றமாத்திர ரமணீயமாயிருத்தலின். அவ்வடவியை நோக்கின் நூற்றுக்கணக்கான யோஜனைகள் அணுமாத்திரம் போற்றேற்றும், அங்கு ஒரே புருடன் சகத்திரகர லோசனனுய், ஆகுலநிறைந்த புந்தியனுய், பயங்கரனுய், விஸ்தார ஆகிருதியனு யிருந்தனன். அவன் ஆயிரக்கணக்கான கரங்களால் ஆயிரம் ஆயிரம் ஆயுதவர்க்கங்களைத் தாங்கித் தனதுமுதுகில் அடித்துக்கொண்டு தானே ஓடித்திரிவன் திடமாகிய அடிவர்க்கங்களால் தன்னுல் தன்னில் சுயமாகவே புடைத்துக்கொண்டு பயந்த ஆகிருதியனுகி யோஜனை சதங்களாகச் சுழன்றுதிரிவன். ரோதனஞ் செய்துகொண்டு ஓடுகின்ற இவன் இங்கும் அங்குமாக வெகுதூரம் ஓடியோடி, வெகுசிரமத்துடன் பரவசமாகிய ஆகிருதியனுய்ச் சரணங்கள் பொடிந்து பொருமுவன். ஆகாயம்போலும் கம்பீரகோடரமுற்ற கிருஷ்ணபக்ஷ இராத்திரிபோலும் இருண்ட இருளால் அதிபயங்கரமுற்ற அந்த கூபத்தில் மிகுந்த அவிவேகியாகிய அவன் விரைவில் பரவசமாகவே வீழ்ந்தனன். பின் வெகுகாலங்கழித்து அவன் அந்த கூபத்தினின்றும் வெளிப்போந்து மீண்டும் அடிவர்க்கங்களால் அடித்துக்கொண்டு தன்னிமித்தத்தினுலே தானே ஓடிக்கொண்டு திரிவன். மீண்டும் அதிதூரமோடி முள்ளுகளும் கொடிகளும் செடிகளும்

நிறைந்த பிறவான் முட்களும் பெரிதுற்ற சிறுநிழலும் பெருந்துயரும் பொருந்திய கருவேல்வனத்திற் புகுந்து தீப்பாய்ந்த ஈப்போலத் துன்புறுவன். அக்கருவேலங் காட்டினின்றும் கணம் வாழ்ந்ததுபோல வெளிப்போந்து மீண்டும் தாடன வர்க்கங்களாற் பீடனமாகித் தானே தன்னிமித்தத்தினாலே யோடித்திரிவன். மீண்டும் வெகுதூரம் ஓடி நிலவின் கிரணத்தினாலே மிகக்குளிர்ந்து ஒளிகாலும் வாழைத்தோப்பில் இனிது பிரவேசித்துச் சிரித்து மகிழ்ந்து விளையாடும்.

(ச.) ஓர் கோடி = கோணமாத்திரம், நினைவோன் = மதியன், பதருகின்று = பயப்பட்டவனா யிருந்து, கணையம் பலவும் = வளைதடிகளை, கரத்தாற்பற்றி = கைகளினாற் பிடித்து சந்திரகிரணம்போன் மகிழ்வுற்று. (5-6-7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுழலும் அவனை நிறுத்தி யுபதேசித்தலும் அவன் சாந்தியுறுதலும்:—

கதலிவனத்தை விட்டுக்கருவேல் வனத்திற்சுழலும்
பதறிக்கிணற்றில் வீழும்பலகா லுழலக்கண்டு
விதருவகையாம்பற்றி வீணே வருந்துநீயா
ரெதுசெய்கின்றாய் நினைவென் னென்னவ வனீதிசைத்தான்.

யானென்றோருவ னில்லையிங்கோர் செயலுங்காணே
னீநின் றுரைக்க நினைந்து நின்னாற் றளராநின்றே
னூனொன்றிய வெம்பகை நீயுன்னா லின்பதுன்ப
நானின்றறிந்தே னென்று நல்குந்தன்னை நோக்கி.

இடிக்குமுகிலின் மழைபோ லிரங்கிக் கதறியழுதா
னொடிக்குளழுகை விட்டுநாணுக் கந்தன்னைநோக்கி
வெடிக்கநகைத்தா னெடிதாமீள வெமதுமுன்னே
தடிக்குமங்க மனைத்துந்தானே யடைவேத விர்ந்தான்.

(ப - ரை.) கதலிவனத்தை விட்டு = வாழைத்தோப் பினின்றும் நீங்கி, கருவேல்வனத்திற் சுழலும் = கருவேலங் காட்டிற் றிரியும், பதறிக்கிணற்றில் வீழும் = நடுங்கி யந்தகூபத்தில் பதிதனாவன், பலகால் உழலக்கண்டு = அநேகமுறையிங்ஙனம் அவதிப்படுதலைப் பார்த்து, விதருவகையாம் பற்றி = ஓடிப்போகாத விதமாக யாம்பிடித்து, வீணேவருந்து நீயார் = வாளா துயருறும் நீயாவன், எது செய்கின்றாய் = என்ன செய்கின்றாய் = நினைவென் = நினது அபிமதம் யாது, என்ன = என்று கேட்ப, அவன் ஈதிசைத்தான் = அவன் இதனைக் கூறத் தொடங்கினான். யானென் றொருவனில்லை = அகமென வொருவனுமில்லை, இங்கோர் செயலுங்காணேன் = இவ்விடத்தில் ஒரு தொழிலையும் கண்டிலேன், நீ நின் றுரைக்க = நீர் உற்றுபதேசிக்க. நினைந்து = அவ்வாறெண்ணி. நின்னாற் றளராநின்றேன் = உம்மால் துயருறுநின்றேன், ஊன் ஒன்றிய வெம்பகைநீ = இத்தேகத்திற்குப் பொருந்திய கொடிய சத்துருநீர், உன்னாலின்பதுன்பம் = உம்மால் சுகம் துக்கம், நானின்றறிந்தேன் = யான் இப்போ துணர்ந்தேன், என்று = என்றியம்பி, நல்குந்தன்னை நோக்கி = கெட்டுப்போன தனது அங்கங்களைப் பார்த்து.

இடிக்கு முகிலின் மழைபோல் = இடியாநின்ற மேகத்தின் விருஷ்டிவியப்ப, இரங்கிக்கதறி யழுதான் = இரக்கமுற்று வாடி வோலமிட்டு அழுதான், நொடிக்குள் அழுகை

விட்டு= கணமாத்திரையில் ரோதனத்தைவிட்டு, நுணுக்கந்தன்னை நோக்கி= நுணுக்கமான தன்னங்கங்களைப் பார்த்து. வெடிக்க நகைத்தான் நெடிதாய் = சிரகாலம் அட்டகாசத்துடன் சிரித்தனன், மீள எமது முன்னே = தன்றுயர் தீருமாறு எம்முடைய சந்நிதியில், தடிக்கும் அங்கம் அனைத்தும் தானே அடைவே தவிர்ந்தான் = தூலித்த அங்கங்கள் யாவற்றையும் சுயமே முறையே தொலைத்தான்.

(ஸ்ரீ - வீர.) யாம் = வசிஷ்டர், வசிஷ்டசப்தத்தானே தேஜசுரைக்கப் பெறும், அத்தியந்தம் தேஜசுருவமாம், வசிஷ்டர் என்றதனானே பரமவிவேகம் பகரவிழைந்ததாம். விவேகத்தால் வலிதிற்சித்தம் சடிதியில் நிறுவப்பெறும் என்பதை யுணர்த்துவார் விதருவகைபற்றி யென்றார். வலிதிற் பிடித்தே முகூர்த்தம் உணர்த்தினேம் என்பதாம், விவேகப் பொருட்டுச் சித்தத்தாற் கூறப்பெற்றதையே தரிசிப்பிக்கின்றார் யானென்பதாதியாய். நீ = விவேகம், தளர்தல் = அவிசாரித ரமணீயமேயாகுஞ் சித்தம் அதன் காரியாதிகள் விவேகத்தாற் கெடுக்கப் பெற்றனவாகி யசத்தேயாதல். உன்னால்=விவேகத்தால் வசீகரிக்கப் பட்டயான் துக்கத்தின் பொருட்டும் சுகத்தின் பொருட்டும், இறந்தேன் = நட்டன் ஆனேன் = சுகதுக்க உற்பாதன அசமர்த்தனானேன். இன்றறிந்தேன் என்பதில்வர்ணவிபர்யயம் செய்துகொள்க. விவேகம் பாதியேய்தலின் போகங்களைப் போக்க முடியாமையின் சித்தமானது சந்தாபங்களைச் செய்தது என்பதன்பொருட் டறைவார் அழுதான் என்றார். எங்கும் கேட்கும்படியாக நன்றாயுரக்க அழுதான். பூர்ணவிவேகத்தானே தனதங்கங்களாகிய அகங்காரமமகாரவடிவங்கள் பாதிக்கப்பட்ட அவற்றை நோக்கிப் பரமானந்தத்தை யடைந்ததாய சித்தம் மகிழ்ச்சியையுற்றது என்பார் நகைத்தான் என்றார். பூரணவிவேக முதயமாகியவழி விருத்தியோடேற்ற சித்தவிலயத்தின் முறையை யுணர்த்துவார் அடைவேத விர்ந்தான் என்றார் எமதுமுன்னே = விவேகத்தின் கண்ணுக் கெதிரில். சித்தத்தினது சிரமாகிய அகங்காரம் அதுவும் அதிபயங்கரமானது, பின்பாகுகளாகிய கெட்டகற்பனைகள் வீழ்ந்தன, பின், பொருளாசை வடிவ வக்ஷமுதலியவை வீழ்ந்தனவாம். பெரியவாசிட்டத்தி விதுபெருகும் பின்னுரையில்வரும். ஈண்டர்த்தாசை அகங்கார குகற்பனைகட்கு பலக்கணமாம். தனதங்கங்களைத் தக்கவாறு பூர்வாதிதிசைகட்குப்பலியாக இட்டுவிட்டுச் செல்லமுயன்றான், கதலீ கண்டத்தினின்றும் கணத்தில் வெளியேகிளம்பி மீண்டும் சுயம் தன்னாற்றன்னிற்றூடனவர்க்கங்களானே புடைத்துக்கொண் டோடினன்: மீளவும் வெகுதூரமோடி நவின்ற மகாந்தகார அந்த கூபத்திலேயே விரைவில் வீழ்ந்தனன், அவயவங்க ளெல்லாம் பொடியான ஆகிருதியுடைய வனானன். அந்த கூபத்தினின்றுங் கிளம்பிக் கதலீவனத்தை யடைந்தனன், கதலீகானனத்தி னின்றும், கர்த்தம்போலக் கம்பீரமான கரஞ்சவனகுல்மகத்தை யடைந்தனன் (கருவேலங்காட்டை) கரஞ்சகானனத்தினின்றும் கழறிய அந்த கூபத்தையும், அந்த கூபத்தினின்றும் ரம்பாவனாந்தரத்தையும் (கதலீவனமத்யம்) சுயம் தன்னால் தன்பால் அடித்துக்கொண்டு மாறிமாறிப் புகுந்து துயருற்றுக் கொண்டிருந்தனன். இவ்வண்ணமாய தனதாசாரமுடைய அவனை நெடும்போதுயாம் விவேகதிருஷ்டியினாலே நோக்கி யோகபலத்தினாலே நிறுத்தினேன், அந்நெறியில் முகூர்த்தம்வரை ரோதனஞ் செய்தனன். நீயார்? தன்னைத்தானே யடித்துக் கோடலும் தானே கூபந்தன்னில் வீழ்தலும் ஆதிய இச்செயல்யாதின் பொருட்டோ? எவ்வருத்தத்தால் இயற்றுகின்றனைதான்? ஈண்டு நின்னவாத்தா னிருந்தவா றென்னே? வீணேயிருமயல் வேய்ந்தனையென்கொல்? என்றவனை யாங்கேட்பக் கூறுவான், யானென்பதாக வொருவனில்லை; இதுவென்பதாகவு மில்லை, யான் சிறிது செய்வதாகவுங்காணேம், உம்மால்

யான் வெந்துயருற்றேன். அந்தோதுயரம்! நீரே யென்னுடைய பகையாக இருக்கின்றீர். உம்மால் துக்கத்தின் பொருட்டும் சுகத்தின் பொருட்டும் திருட்டனுனேன் நட்டனேன் என்றுபுகன்று சிதைந்துபோன தன் அங்கங்களை நோக்கிப் போகங்களில் திருப்தியொன்றும் அடையாதவனுகி மேகமானது சப்தித்துக்கொண்டு அவியிற்பொழிவதேபோல அதிதீனனும் மிகுந்தசப்தத்துடன் அழுதனன் கணமாத்திரையில் ஆண்டு அவன் ரோதனத்தை யொழித்து தன்னுடைய அங்கங்களை யினிதுநோக்கிச் சிரித்தனன் தொனித்தனன், நீள்போது அட்டகாசமுஞ் செய்தனன், பின்னப்புமான் எமது முன்னிலையில் முறையாகத் தனது அவ்வங்கங்களை யெல்லாம் தவிர்ந்தனன். பிரதமம் அவனது சங்கற்பவடிவமான சிரம்விழுந்தது அதுவே சருவ அநர்த்தமூலமாதலின் பரம் தாருணமாம்; பின்விகற்ப ஆசயங்களாகிய பாகுகள் விழுந்தனவாம், பின்விடய அபினிவேசமாகிய வக்ஷம் விழுந்தது, பின்திருஷ்ணையாகிய உதரம் விழுந்தது, என்னுமிது தக்கவாறு கற்பித்ததாம்.

(ச.) தானே தன்னை யடித்துக்கொண்டு, கருவேல், விதருவகை = பலத்தினுல், யாம்பற்றி = நாம்பிடித்து, யாதுகாரணத்தால், எதுசெய்கின்றாய், நினைவென், இஷ்டமியாது, உரைக்க = ஒருமுகூர்த்தம் போதிக்க, நானின்றறிந்தேன் = நான் இன்றறிந்து நஷ்டமானேன், நல்குந்தன்னை = அடிபட்டுச் சிதறிய ஜீர்ண அங்கங்களை, நுணுக்கந்தன்னை = தனதங்கங்களை, நெடிதாய் வெடிக்க நகைத்தான் = வெகுகாலம் அட்டகாசஞ்செய்தான். அடைவே = கிரமமாக, முன்பு அவனது மிகுதாருணமான சிரசும் பின்பு புஜங்கள் பின்புரம் பின்புதரம் பின்மற்ற வங்கங்களை தவிர்ந்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னவன் போதலும் பின்னவன் வந்து திருவருள்பெறுதலுங் கூறல்:—விதியென.

> விதியின்வசத்தா லிவனோ ரிடமே மேவுற்றா
> னெதிர்வந் தொருவனயலே யிவன்போ லடியுண்டேக
> முதல்வந்தவனைப் போனமொய்ம் பாயுணர்த்தவந்தப்
> பதிகன்றானும் போனன் பழையவடிவ மொழிய.

(ப - ரை.) விதியின் வசத்தால் = நியதியின் சக்தியால் இவன் ஓரிடமே மேவுற்றான் = இவன் எங்கோ ஓரிடத்திற்செல்லமுயன்றனன், எதிர்வந்தொருவன் அயலே இவன்போல் அடியுண்டேக = ஏகாந்தத்தில் மீளவும் அபல் ஒருநரன் முன்னவன் போன்று அடித்துச்சுழன்று ஆகுலத்துடன் போவதையாம்பார்த்து, முதல் வந்தவனைப் போல் நாம்மொய்ம்பாய் உணர்த்த = முன்வந் தற்றவனுக்கு அனுக்கிரகித்ததுபோல் யாம்சாமர்த்தியமாக விஞபூர்வகம் அருள, அந்தப் பதிகன்றானும் போனன் பழையவடிவம் ஒழிய = அவ்வழிப் போக்கனும் அழுது சிரித்து அகன்றான் அங்கங்கள் குலைந்து அலம் அலக்ஷியமாயினன்.

(ஸ்ரீ - வீர.) நியதியின் = தெய்வத்தின் சக்தியால் விஞ்ஞான ஆகாரமாக அபிவியக்தியாதற் பொருட்டு என்பதுபொருள். செல்ல முயன்றனன், செல்லவில்லை யென்றமையான் ஜீவன்முக்தத்தன்மை யுணர்த்தப் பெற்றதாம். ஏக = அத்தியந்தம் ஆகுலம் நிறைந்த சிந்தையுடன்போக. அலம் = அத்தியர்த்தம், அலக்ஷியமாயினன் = அதிருசியமாயினன், விதேகமுக்தியையடைந்தனன் என்பதாம்கணத்தில் அவன் அவ்வங்கங்களை முறையாக நன்குதியாகித்து ஞானத்தால் அஞ்ஞான வதன்காரியபாத நியதியின் சக்தியால் செல்லவிட வில்லாமையின் ஒன்றும் எஞ்சாமல் இலயமானமையின் பாதிதமாகிய

அவன் இச்சொரூப மற்றவனுய்ச் சிற்சொரூபமே யாயினன் என்பதாம் தன்மனத்திற்கே போல அன்னியமனங்கட்கும் இதுவே முறையாமெனக் காட்டுவார் அயலேயென்றார். யாம் ஏகாந்தத்தில் அவ்வாறே மீண்டும் அன்னிய நரனைக் கண்டேம் அவனும் தன்னில் தானே தன்னுல் அடித்துக்கொண் டெங்கும் ஓடிய வதிப்பட்டனன்; அவனையான் பலமாகப்பிடித்து முன்போலவே வினவினேன் அவனும் முறையாக முன்போன்றே கூறி யழுது சிரித்து, அங்கங்களெல்லாம் விசேரணத் தன்மையையடைந்து அத்தியந்த அதிரு சியத்தகைமையை யடைந்து போனுன் நியதியின் சக்தியை விசாரித்துப் பின்னடக்க முயன்றனன்.

(ச.) விதியின் பயனுல் = நியதியின் சக்தியால், பழையவடிவம் = சீர்ணமான அங்கங்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மற்றொருவன் அக்கூபத்தில் வீழ்ந்தேருண்மையும், ஏனைய னுக் குபதேசித்தல் எருமையும் கூறல்:—பிறிது—ஒதிற்றென.

பிறிதுமொருவன் வந்தப்பெரிய கிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல்லாத காலந்திரும்பி யேறக்காணேம்
வெறிதுன்றி யவ்வனத்தில் வேறுமொருவன் வரானும்
மறிதுமென்னத் தகைந்தேயான தெல்லாமுரைத்தேன். (12)

ஓதிற்றென்றுஞ் சேளாதுரப்பி யிகழ்ந்து மேன்மேன்
மோதிக்கொண்டு போனுன் மூர்க்கரவனைப் போல்வார்
வாதிப்புறுவார் நிறைந்து வயிரமுள்ளாற் செறிந்து
பீதிக்கிடமாயிருள் சூழ்பெருங் காடின்று முள்தால். (13)

(ப - ரை.) பிறிது மொருவன் வந்து = மற்றொருவன் ஓடிவந்து, அப்பெரியகிணற்றில் வீழ்ந்தான் = அம்மகத்தான அந்த கூபத்தில் விழுந்தனன், சிறிதல்லாதகாலம் = நீள்காலமாகியும், திரும்பியேறக் காணேம் = மீளவும் ஏறிவரக் கண்டிலேம், வெறிதுன்றிய அவ்வனத்தில் = பித்துப் பிடித்தாடும் அக்காட்டில், வேறும் ஒருவன் வரலும் = மற்றொருவன் எதிர்ப்படலும், அறிதுமென்ன = அறிவிக்கலா மென்று, தகைந்தே = வலுவிற்றடுத்தே, ஆனதெல்லாம் உரைத்தேன் = எம்மான் முடிந்த பரியந்தம் சருவப் பிரகாரத்தானு முபதேசித்தேம்.

ஓதிற்று ஒன்றும் சேளாது = உபதேசித்தவற்றுள் ஒன்றையுமே செவிகொள்ளாமல், உரப்பி இகழ்ந்து மேல்மேல் மோதிக்கொண்டு போனுன் = எம்மை அதட்டித் திட்டிவிட்டு மிகவும் அதிகமாக அடித்துக்கொண் டழுதுகொண்டு போனுன், மூர்க்கர் அவனைப்போல்வார் வாதிப்புறுவார் நிறைந்து=அவனைப்போன்று அநேகம் உபத்திரவத்திற் குட்பட்டுச் சுழன்று கொண்டுதிரியும் மூர்க்கர்களானே வியாபிக்கப் பெற்று, வயிரமுள்ளால் செறிந்து=வயிரம்போன்ற முட்களால் பூரிக்கப்பெற்று, பீதிக்கிடமாய்= அதிகபீஷண ஆஸ்பதமா யிலங்கும், இருள்சூழ்=மகாந்தகாரம் நிறைந்த பெருங்காடு இன்றும் உளதால் = மகாகோர அடவி இப்போதும் இருக்கின்றது.

(ஸ்ரீ - வீர.) மகாபாதகத்தோடு கூடியமனமே, அந்த கூபமெனப்பட்ட நரகத்தில் வீழ்ந்து அக்கூபத்திலிருந்து வெகுகாலமாகியும் ஏறவேயில்லை யென்பதாம். தூய்மை சிறிதுமேபெருத அநாத்மஞ்ஞ அன்னியமனம் தன் விவேகத்தைத் திரஸ்கரித்தது என்பார் உரப்பியென்றார். துர்மதியாகிய அவன் எம்மை நோக்கி ஹேமூடதுர்த்விஜ! உமக்

கொன்றுமே தெரியாது துர்மதியரே என்னை விட்டுப்போம் என்று இகழ்ந்து தனது வினைப்பரவசனாயினன். துவிஜன் = இருபிறப்பாளன். அக்காடானது, நானாவிதமாய கண்டகங்களாங் கடுந்துயர்களினாற் பாதித்துக்கொண்டே யதிபயங்கரமாக இருப்பது; உபத்திரவ அங்கங்களை யுடைத்தா யிருப்பது என்பதாம். கனதமசாய நெருங்கிய அஞ்ஞானத்தான் மூடப்பெற்று ஒருவரும் புகுதப்போதர முடியா தாழ்ந்திருப்பதாம். யாம் ஏகாந்தத்தில் மீளவும் அன்னியன் ஒருவனை யவ்வாறே கண்டேம், முன்போன்றே இவனும் மோதிக்கொண்டு தானே யோடிக்கொண்டு திரிந்தான். ஓடியோடிப்போய் எவர் விழியையும் மூடச்செய்யும் இருணிறைந்த பெருங்கூபத்தில் விழுந்தனன்; ஆண்டு யாம் நீள்போது வீழ்ந்தவன் ஏறிவருவானென்று பார்த்துக்கொண்டே யிருந்தேம்; அச்சடன் எவ்வளவோ காலமாகியும் அக்கூபத்தினின்றும் ஏறிவரவேயில்லை. பின்னர்யாம் எழுந்து செல்லலாம் என்று முயன்றபோது மீளவும் ஒருவனைக் கண்டேம் அத்தகைய அலங்கோலமுடையவனாய் அவ்வாறே வீழ்ந்தழுது திரிபவனா யிருப்பதைப் பார்த்து முன்போன்றே யசையாமற்பிடித்து அவ்வாறே விரைவில் ஆனவரையில் அவனுக்குபதேசஞ் செய்தேம், ஹே உற்பலபத்ராக்ஷ இராகவ ! எவ்வளவு சொல்லியும் அவன் சிறிதும் அறிந்து கொள்ளவேயில்லை, அம்மூடன் எம்மைநோக்கி ஓய் கெட்டுப்போன மகாபாபியாகிய பிராஹ்மணனே ! உனக்கொன்றுமே தெரியாது என் ஏதேதோ பிதற்றுகின்றாய் என்று வைதுவிட்டுக் கேவலம் தான் செய்துகொண்டிருந்த வினையையே செய்யமுயன்றோடிப்போனான். வைததென்றது, கேவலம் சுயம்விவேகந் தெரியாதவனல்லன் மற்றோ விவேகிகளாகிய பெரியோரையும் அலக்ஷியமாய்த் திரஸ்கரிப்பதிற் றற்பரனாயிருந்தனன் என்பதைக் காட்டுதற்காம், பின்னர் அந்தமகா ஆரண்யத்தில் அவ்வாறே சஞ்சாரம் செய்துகொண் டிருந்தயாம், அத்தகைய தோடமே செய்துகொண்டு துயர்மயமாய்த்திரியும் அநேகரைக் கண்டேம். இவ்வண்ணம் சுழன்று துயருறும் அநேகர் நிறைந்த விதமான வித்தாரமாய அம்மகா அடவியின்று மிருக்கின்றது.

(சு.) வந்து = அப்படியே யோடிவந்தவனாய் இகழ்ந்து = துட்டப் பிராமண நீ ஒன்றும் அறியாயென்று நிந்தித்து, அவனைப் போல்வார் = அவனைப் போன்று, மூர்க்கர் = மூடராய், வாதிப்புறுவார் = துக்கிக்கும் அநேகநரர், வயிரமுள்ளால் = வயிரமுள்ள நானாவித கண்டகங்களினால், பெருங்காடு = கோராடவி.

(ஸ்ரீ - வீர - அ - கை.) புகன்ற சித்தநிலைக்கியானத்தின் றற்பரியப்பொருளை முறையானும் முறையின்றியும் ஸ்ரீ இராகவனினாவாயிலாக இனிது வருணிக்கத் தொடங்கல்:— அறவேயென.

அறவேகொடிதாய் வெந்தவடவி யெனினுமறியார்
நறவேகமழ்ந்து குளிர்ந்தநந்தவனம் போன்மகிழ்வர்
மறவேலரசே யென்றவசிட்ட முனியைநோக்கித்
துறவேபுரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வாயென்றான்.

(ப - ரை.) அறவே கொடிதாய் வெந்த = அத்தியந்தம் கோரமாய்த் தக்தமாய, அடவியெனினும் = காடேயாயினும், நறவே கமழ்ந்து குளிர்ந்த = தேனும் மணமும் பொங்கித் தண்மைவாய்ந்த, அறியார் நந்தவனம்போல் மகிழ்வர் = தத்துவமுணரார் உத்யானவனம்போல அதன் கண்ணுல்லாச சந்தோடத்துடன் உலாவுவர், மறவேலரசே = பகைவரைக் கோறல் புரியும் வேலாயுதந்தரித்த இளவரசே, என்ற = என அருளிய, வசிட்டமுனியை நோக்கி = ஸ்ரீ வசிட்ட பகவானைப்பார்த்து, துறவேபுரி

வாய் = எனதையங்கள் யாவற்றையும் நீக்குவதே கடமையாகப் பூண்ட எனதாண்டவனே! இவற்றை = கூறியவற்றை, தோன்ற = மனதிற் படும்படியாக, சொல்வாயென்றான் = திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்றும் பிரார்த்தித்தனர் ஸ்ரீ இராகவர்.

(ஸ்ரீ - வீர) பகர்ந்தபடி அவ்வடவி யிருந்தபோதினும் ஆன்மஞான மடையாப் பிராணிகளால் இன்பமியைப் பெற்று, பூந்துணர்துருமித் தேன்றுளிசிதறும் பூஞ்சோலை நிகர்ப்ப அதிகுதூகலத்துடன் சேவிக்கப்பெறும். அவ்வடவி, பயங்கரமாய் விவிதகண்டக சங்கட அங்கியாய், கோரமாய், கனதமோ ககனமாய் இருந்தபோதினும், விவேகதிருஷ்டியினானே தருமப் பிரமதத்துவத்தைக் காணும்படியான அதிகாரிஜன மத்தில், சாதனசம்பத்திச் சுகத்தை யடைந்தும் பாக்கிய மில்லாமையானே பரமாத்ம போதமடையப் பெறாதவரால், பூங்காவனமெனப் போற்றப் பெறும், ஆபாதரம்மியமெனத் திருஷ்டாந்தமாம். அவ்வடவி உன்னாற் பார்க்கப்பட்டது என்றதைக் கேட்ட ஸ்ரீ இராகவர் கூறுவதாவது:—ஹே பிரஹ்மன்! இம்மகாடவி யென்பது யாது, எக்கால் எங்ஙனம் என்னாற் பார்க்கப்பட்டது, அப்புருடர் யாவர், ஆண்டு யாதின்பொருட்டு அவ் வாயுத வர்க்கங்களால் தந்தேகத்தில் அடித்துக் கோடலையும், கூபகர்ஞ்சனவனுதிப் பிரவேசத்தையும் செய்யமுயன்றவர் ஆயினர்? தாமேதமது அநிஷ்டத்தில் முயல்கைகூடாமையின் பிறிதாலது பேசப்பெறும் என; எவ்வக் கருத்தாவானே அத்தகைய அநிஷ்டத்தில் வலுவிற் செலுத்துங் காரணத்தால் தமது அடிமுதலியவற்றே முயன்றவராகி நின்றனர்? எவ்வக்கருத்தாவா லேவப்பெற் றியங்காநின்றனர்.

(ச.) அறியார் = நிஜபோத மிலாதவர், மகிழ்வர் = அநுபவித் தாநந்திப்பர், துறவே புரிவாய் = சர்வசந்தேகங்களையும் நிவிருத்திசெய்யும் ஆண்டவனே, இவற்றை = அந்த மகாடவியாது எவ்விடத் திருக்கின்றது அப்புருடர் யார் அவ்விடத்து என்செய்தற்கு எத்தனித்தார்கள் ஆகிய இவைகளை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உண்மையாகப் பிரஹ்மமே மித்தியாபூத சொர்க்க நரகாதி வைசித்திரிய கற்பனையானே சமுசார அடவி, அதனைக் கற்பிப்பனவாய மனங்களே அந்நரர் என்பதாக அவை தூரத்தனவாக எம்மாற் கூறப்பெற வில்லையெனக் கூறத்தொடங்கல்:—கேட்டவென.

> கேட்டகுரிசி லறியக் கிளர்மாமுனிவ னுரைப்பா
> னட்டவடியு முடியுநடுவு மின்றிப் பொய்யாங்
> கூட்டமாகி யாழ்ந்து கொடிதாய் விகற்பநெடிதா
> மீட்டவுலகத் தியல்பே யாமுன்சொன் னவனமே.

(ப - ரை.) கேட்டகுரிசில் அறிய = வினவிய அரசபாலன் அறிந்துகொள்ள, கிளர் மாமுனிவன் உரைப்பான் = மைத்திரியாதி நிறைந்த மகத்தான ஸ்ரீ வசிஷ்டபகவான் திருவாய் மலர்ந்தருளுவதாவது, நாட்ட அடியும் முடியும் நடுவும் இன்றி = ஸ்தாபிக்க முதலிடைகடை யிலதாய், பொய்யாங் கூட்டமாகி = அத்தியந்தம் சூனியவிகாரமுற்றதாய், ஆழ்ந்து கொடிதாய் = கம்பீர அபார கோடரமாய், விகற்பநெடிதாம் = அநேக விகற்பங்களோடு கூடியதாம், ஈட்டவுலகத் தியல்பேயாம் முன்சொன்னவனமே = சமுதாயப் பிரபஞ்சத்தியல்பே முன்னர்யாங் கூறிய அடவியாம். (15)

(ஸ்ரீ - வீர) சூனிய விகாரமுற்றது = அசத்காரியத் தோடுற்றது, ஹே மகாபாகுவாகிய இரகுநாத! உனக்குயாவும் கூறுவேங் கேட்குதி, அம்மகா அடவியானது வெகு

ஆரத்ததல்ல, அந்நாரும் வெகுஆரத்தர் அல்லர், அச்சகலருமறிந்த சமுசார பதவியா னது அதிகம்பீரமுடையதும் கரையற்ற இடமுடையதும் ஆம்; பரமார்த்த திருஷ்டியி ஞனே அசத்தன்மையால் சூனியமாம், மயற்றிருட்டியினுனே சத்தன்மையால் விகாரமு டையதாம் எனமுன் மொழிந்த மகாடவியை யறிதி, எப்போது அது சூனியமாம் எவ்வு பாயத்தாற்றான் அதுகிடைக்கும் எனின்? எக்கால் ஏக அத்விதியமேயாய வத்து வால்நிறைந்து அன்னியத்தோடு பொருந்தாதோ அக்கால் கேவலம் சூனியம்போலவாம். போலென்றது கேவல சூனியாதி சப்தங்கட்கும், ஆண்டு உபசாரத்தாலாய பிரவிருத்தி யாம் பிரதியோகிய நிரூபணமாங்கால் சூன்யத்வாதிகட்கு நிரூபண அசம்பவத்தால் என் பதை விலக்கற் பொருட்டாம். அத்தகையதேயாய இத்தத்துவம் பதார்த்த சோதன வடிவமாய விவேக ஆலோகத்தாற் கிடைக்கத் தக்கதாம்.

(ச.) பொய்யாங் கூட்டமாகி = சுத்தசூனிய விகாரத்தோடு கூடினதாய், வனம் ஆரத்திருப்பது மன்று, மற்றென்னெனின் சம்சாரபதவியாம். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதனையே விளக்கியுரைத்தல்:—புகையென.

புகையார் வனத்திற் புருடன்புலம்பிச் சுழலுமனமே
தகையாநின்ற நாமுந் தனிவிவேகந்தானே
பகையாமிதனு லுள்ளம் பரத்தையறிந் தாறினதான்
மிகையார்மனங் களிகழ்ந்து வேட்கைவசத் தோடினவால் (16)

(ப - ரை.) புகையார் வனத்தில் = புகைந்தெரியும் அவ்வடவியில், புருடன் = புருடனென் றுரைத்தது, புலம்பிச்சுழலு மனமே= அழுது திரியும் சித்தமேயாம், தகையா நின்ற நாமும் = தடுத்துப் பிடித்த நாமென்றதும், தனிவிவேகந்தானே = ஒப்பற்ற விவேகமேயாம், பகையாம் இதனுல் = சத்துருவா மிதனுல், உள்ளம் பரத்தையறிந்து ஆறினது = சித்தம் பரத்தை புணர்ந்து விசிராந்தி யடைந்தது, மிகையார் மனங்கள் = மற்றைய அடங்காவுள்ளங்கள், இகழ்ந்து வேட்கை வயத்தோடின = நிந்தித்துவிட்டு ஆசையின்வசமாக ஓடிமாய்ந்தன. ஆல்—அசை. (16)

(ஸ்ரீ - வீர.) ஆண்டு எம்மகாகாரபுருடர் சுழன்றனரோ என்றது. மனங்களே அத்தி யந்தம் துயரங்களில் வீழ்ந்து வருந்தினவென்றதாம் அவற்றை எக்கண்டயாமுண்டோ, ஈண்டு விசாரமாம், விசாரரூப விவேகமாய எம்மானே அவைகாணப் பெற்றனவாம் அன் னியத்தால் அல்லவாம், ஹே மகாமதியையுடைய அரக ; பரவிய பிரகாசத்தோடுற்ற பானுவினுலே பங்கஜங்கள்போல எப்போதும் விவேகமாகிய எம்மால் அம்மனங்களே புணர்த்தப் பெறுகின்றன. தத்துவஞானத்தை யடைந்து விவேகப் பிரசாதத்தினுலே மனோபாவ நாசமுற்று அம்மனங்களுட் சில மோக்ஷமடைந்தன. மற்றுஞ்சிலவோ மகா மோகத்தினுலே விவேகமாகிய எம்மைக்கண் டானந்தப் படுவதேயில்லை, விசார உபே க்ஷையின் வயத்தினுலே கூபங்களிலேயே கீழே விழுகின்றன.

(ச.) புலம்பிச் சுழலும் புருடன், புருடரன்றும், மற்றென்னெனின் மனமே, துக்கத் தழுந்து மனங்களேயாம், விவேகந்தானே, என்னுல், அவைகள் போதிக்கப் படுதலின் போதவேது இவ்விவேகமே யென்பது பொருள். இதனுல் = எனது அனுக்கிரகத்தி னுல், உள்ளம் =சிலமனங்கள், பரத்தையறிந்து=பரமபதத்தைப்பெற்று, ஆறியதால்= பரம உபசமத்தை யடைந்தனவாம், சிலமனங்கள் உபசமம் அடைந்தன வென்பது விசு த்தமும் பரிபக்குவமுமான சித்தங்க ளென்பது பொருள்; மிகையார் மனங்கள் = பரி பக்குவமற்ற சித்தங்கள். (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மற்றவற்றையும் தெளிவுபெறுத்தல்:—விதறியென.

விதறியோடு மனங்கண்மேவு நரகங்கிணறு
கதலிவனம் விண்ணுலகாங் கருவேல்வன மண்ணுலகாஞ்
சிதறிவிழுந்த கிணற்றிற்றிரும்பியேறு தொழிந்தோன்
பதறிநரகம் புகுந்துபாவந் தொலையாததுவாம். (17)

(ப - ரை.) விதறியோடு மனங்கள் = பதறிக் கட்டுப்படாமல் ஓடாநின்ற சித்தங்கள், மேவுநரகம் கிணறு = அடையாநின்ற நரகமேகூபமாம், கதலிவனம் = வாழைத் தோட்டம், விண்ணுலகாம் = சுவர்க்கலோகமாம், கருவேல்வனம் மண்ணுலகாம் = கரஞ்சவனம் பூவுலகமாம், சிதறிவிழுந்த கிணற்றில் திரும்பி ஏறுதொழிந்தோன் = பெருந்துயரங்களோடும் வீழ்ந்தகிணற்றி னின்றும் மீணடும் மேலேவராது போனான் என்றது, பதறிநரகம் புகுந்து பாவந்தொலையாதது ஆம் = கடுவினைகளாற்றி ரௌரவாதி புக்குப் பாதகங்களின் பயன் அனுபவித்து முடியாதது ஆம். (17)

(ஸ்ரீ - வீர.) அந்த கூபங்கள் என்று கூறப்பெற்றவை ஆழ்ந்த நர்கங்களாம்; கதலீ கானனத்தை அவர் புகுந்தனர் என்றது மனங்கள் சுவர்க்க எகரசத்தை யனுபவித்துக் கொண்டிருந்தன வென்றதாம்; அந்த கூபத்தினுள்ளே புகுந்தன மீண்டுந்திரும்பி யேற வில்லையென்றது, மகாபாதகத்தோடு கூடிய சித்தங்கள்.

(ச) கிணறென்றது = நரகங்களாம், துக்கஹேது வாதலின்; விண்ணுலகாம் = சுவர்க்கமாம், சுகாநுபவ ஹேதுவாதலின்; மண்ணுலகாம், சாயை = நிழல், மனைவி = கண்டகம் = முள், வயிரம், சாயைகண்ட காதியாற் சுகதுக்க வேதுவாதலின் மநுட லோகமாம், பாவம் = மகாபாதகமாம். அநுபவம் = உபயோகம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியதையே விரித்துரைத்தல்:—முனையென.
(ச.) கருவேல் வனத்திற்கும் மநுடலோகத்துவம் வித்தரிக்கப் படுகின்றது:—

முனையார்முள் ளென்றதுதான் மோகமனிதர் மடவார்
நினையாவின்ப துன்பநின்று லடைந்தேனீயே
வினையாமென்ற துணர்வால்வீயு மனநொந்துரைத்த
தனையாரழுத தென்றதாசை யறுக்குமலக்கண். (18)

(ப - ரை.) முனையார்முள் என்றதுதான் = கூர்மையோடு கூடிய முள் என்று கூறியதானது, மோகமனிதர் மடவார் ஆவர், மடவார் = அக்கருவேல் வனமானது களத்திராதி ஸ்திரீ இராக கலுஷமுற்றதாம், மோகமனிதர் = மநுடசம்பந்தமான அநேகவித ஆசைகணிறைந்ததாம், இவையே அக்காட்டிற் கடுமுட்கள்; நினையா இன்ப துன்ப நின்றால் அடைந்தேன் = எண்ணாத சுகதுக்கம் உம்மால் அடைந்தனன், நீயே வினையாம் = நீயேசத்துருவாம், என்றது = எனவியம்பியது, உணர்வால் வீயுமனம் நொந்து உரைத்தது = தத்துவ அவபோதத்தால் விசிரணமாம் விடயசித்தம் விலாபனஞ் செய்ததாம், அனையார் அழுதது என்றது ஆசையறுக்கும் அலக்கண் = அவர்ரோதனஞ் செய்தனர் என்றுரைத்தது போகஜாலங்களைவிடும் மனங்கள் புலம்பியதாம் (18).

(ஸ்ரீ - வீர.) எவ்வக்கரஞ் சககண்மென்னும் மர்த்யமண்டல முள்தோ அதுகளத்திராதி குடும்பகேயத்தோடு கூடியதாம், அதனாலேயே மநுடலோகசம்பந்த அநேகவித ஆசாபாசங்களாகிய துயரமய முட்களாலே வாதனை செய்வதாம். எம்மனங்கள் கரஞ்ச கானனத்தின் கண்ணே புகுந்தனவோ அவை மநுடலோகத்தில் உண்டாயினவாய்

ஆண்டே இரதமுறுவனவாய் இரமிக்கும், அபிநிவேசன முடையனவாய் விடயரச ஆசுவாதனமோக முடையனவாம். யாம் எவ்வறியாத புருடரால் புத்திகளாலும் சித்தங்களாலும் உபேக்ஷிதமாயினேம், துணிதலுமில்லை நினைதலுமில்லை யென்றது, அஞான்மபோதமுற்ற அம்மனங்களால் தம் விவேக திரஸ்காரமாம். உம்மாற் கண்டேன் விநஷ்டமாயினேன் நீரேயெனது பகையென வேகமாக யாதோதப் பெற்றதோ அதுவோதத்துவ அவபோதத்தால் தத்தளித் தழியாநின்ற சித்தத்தால் விலபிதமாம் பெருங்குரலொடு விரைவில் வெகுவாக ரோதனஞ் செய்யப்பெற்றது புருடனு லென்றது, போக ஜாலங்களை விடும்மனத்தினனே ரோதனஞ் செய்யப்பட்டதாம்

(ச.) முனியார் முள்ளென்றது = கருவேலவன மென்று முற்கூறியது, மோகமனிதர் மடவார் = மருடலோகமேயாம், களத்திரரசத்தோடு கூடுதலினுனும் துக்ககண்டக சம்பந்தத்தானும் என்பதுபொருள். மனிதர் என்றதனல் அவர் சம்பந்தமான லோகமும் மடவார் என்றதனுல் அவரால் ஜனிக்கும் சுகமென்னும் இரசமும் மோகமென்றதனுல் ஈடணைத்திரயரூபமான அதிதுக்கமென்னுங் கண்டகமுங் குறிக்கப்பட்டது. அறியாத புருடராற் றட்டப்பிராஹ்மண வென்றுயாம் நிந்திக்கப்பட்டேம் என்றது அஞான்ம ஞானமுள்ள மனங்களால் தன்விவேக நிந்திக்கப் பட்டதாம். நினையா - நொந்துரைத்தது = துக்கித்து ஸ்துதித்தது, உன்னுற் பார்க்கப்பட்டேன் ஆதலினுல் நஷ்டமேயானேன்; விசாரமே மனேலய வேதுவாகலின் நீயே யெனக்குச் சத்துருவென்னும் வசனமானது நசிக்கின்ற சித்தத்தின் அழுகையேயாமென்பது பொருள். ஆசையறுக்கு மலக்கண் = மனம் போகேச்சாத்தியாக நிமித்தம் வருந்துவதே யாமென்பது பொருள்.

(ச - அ - கை.) அதனையே விரித்துரைக்கின்றார்:—போதவென.

போதம்பாதியாகிப் புரணமாகா மனந்தான்
காதல்விடி னுந்தயர்தல் கதறியழுத ததுவாஞ்
சீதமாக மகிழ்ந்து சிரித்துநின்ற தென்ற
தேதமில்லா ஞானத்தேக மானமகிழ்ச்சி.

(ப - ரை.) போதம் பாதியாகி = அர்த்தவிவேக மடைந்து, புரணமாகா மனந்தான் = அமலபதத்தை யடையாததான மனமானது, காதல் விடினுந்தயர்தல் = போகங்களை விடும்போது பரிதாபப்படுதல், கதறியழுதததுவாம் = உரக்க ரோதனஞ்செய்தது அதுவாம், சீதமாக மகிழ்ந்து சிரித்துநின்றது என்றது = தண்மையாகச் சந்தோஷித்து நகைத்துலவியது என்றது, ஏதமில்லா ஞானத்தேகமான மகிழ்ச்சி = குற்றமில்லாதுண்டாய பூர்ணஞானத் தேகமாகிய சந்தோடமாம். குற்றம் = தவை.

(ஸ்ரீ - வீர.) புருடரின் ஆநந்தியாய எந்நகைப்புளதோ அது உணர்வினனே நன்கடைந்த விவேகமாகிய சித்தத்தினனே சந்தோடமடைந்ததாம். பாதியடைந்த விவேக முடையவனுய் அமலபதத்தை யடையாதவனு யிருப்பவன் சித்தம் போகங்களை விடும்போது அத்தியந்தம் பரிதாபத்தை யடையும்; நேயலோ பாதிகளை விடும்போது அதுல பரிதாப முண்டாமென்பதாம். யாமுணர்த் தியதானே யுணர்ந்தா நந்தியாகி நகைத்தது புருடன், பூரணவிவேகம் பொருந்திய சித்தம் ஆரணமுறையிலா நந்தமடைந்ததாம்.

(ச.) போதம் + அயர்தல் = அர்த்தப் பிராப்த விவேகத்தினுற் பரமபதத்தை யடையாத சித்தம் போகத்தியாகஞ் செய்யுமிடத்து அதிதாபத்தை யடையுமென்பது பொருள். ஏதமில் + மகிழ்ச்சி = பூரண் விவேகமுள்ள மனது ஆன்மஞானத்தினுற் சந்தோடமுற்றதேயாம்.

(ஸ்ரீ - வீர - ச - அ - கை.) அதுவே புடமாக விவ்ரணஞ் செய்யப் படுகின்றது:— முடிவிலென.

முடிவின் ஞானத்தாலே மோகம்விட் டமனந்தான்
வடிவைமாய்க்கும் பொழுது மகிழுமதுவே மகிழ்வாம்
நெடியமொய்ம் பினாலே நிறுத்திக் கேட்டோமென்ற
தொடிவின்ஞான வலியாலுள்ள மொருப் பட்டதுவே.

(ப - ரை.) முடிவின் ஞானத்தாலே = பரிபூரண பிரஹ்ம சாக்ஷாத் காரத்தாலே, மோகம் விட்டமனந்தான் = மயல்விடுத்த சித்தமானது, வடிவைமாய்க்கும் பொழுது = உருவத்தை விடும்பொழுது, மகிழும் அதுவே மகிழ்வாம் = சந்தோஷிப்பதுவே ஆனந்த விருத்தியாம், நெடிய மொய்ம்பினாலே = அதிமுயற்சியினாலே, நிறுத்திக் கேட்டோம் என்றது = நிற்குமாறியற்றி வினவினேம் என்றது, ஒடிவின்ஞான வலியால் உள்ளம் ஒருப்பட்டதுவே = கெடாத விவேகவலுவினாலே மனமானது அடங்கியதென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) உருவத்தை = சங்கற்ப விகற்பரூப விக்கிரியையைப் பரிபூரண விவேகத்தை யடைவுற்றுச் சமுசார நிலைமை யாவற்றையுங் கடந்த சித்தமானது தன்னுருவத்தை விடும்போது ஆனந்தமே யதிகரிக்கும். முன்மொழிந்த புருடன் எம்மால் பலாத்காரமாய் நிறுத்தப்பட்டுக் கேட்கப்பட்டான் என்றது, விவேகமானது வலிதிற் சித்தத்தைத் தகைந்து நிறுவியதெனத் தெரிவித்ததாம். நம்முன்பாகவே அங்கங்கள்யாவும் விசீர்ணமாகிப்போய் மறைந்ததென்றது, அருக்த சகித ஆசைய'வும் ஒழிந்து சித்தமானது சாந்தி யடைந்ததெனக் காட்டியதாம், மனமானது பாதமாகவே விடயங்களோடு விடய அவாவும் பாதிக்கப் படுமெனக் காட்டியதாம்.

(ச.) முடிவின் ஞானத்தாலே = பூரணவிவேகத்தினால், மோகம் விட்ட = சமுசாரத்திதியினின்றும் விடுபட்ட, சித்தம், வடிவை சங்கற்ப விகற்பரூபத்தை, மாய்க்கும் போது, விட்டநேரம், நெடிய மொய்ம்பினாலே, வசிட்டராகியயாம் பிரயத்தினத்தினால், ஞானவலியால் = விவேக பலத்தினால், உள்ளம் ஒருப்பட்டதுவே = சித்தம் வசீகரணமானதேயாம். (வசீகரண மென்பது புணர்ச்சிக் கிணக்கம்)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அதனையே நன் கிலக்கி யுபசங்கரித்தல்:—அங்க—கோச—என.

அங்கத்தறைந்து கொண்ட தடர்கற்பனை களாலே
பங்கப்படுவன் றுயராம் பரந்தோடின தென்றதுதான்
மங்கத்தரு வாதனையான் மருண்டு சுழல்வதாகுஞ்
சங்கற்பமும் வாதனையுந் தனைத்தான்வலை போற்றளைக்கும்.

கோசகாரப் புழுப்போற் கொடுங்கற்பனை வாதனையாற்
பாசமடைவ ரியாரும் பகர்ந்தமனத்தின் கதையை
மாசிலாத மனத்தான் மதித்துமனத்தை மாய்ப்பாய்
தேசமுடையா யென்று தெளிந்த வசிட்டனுரைத்தான்.

(ப - ரை.) அங்கத்தறைந்து கொண்டது = தானே தன்னங்கத்திற்றூடன வர்க்கங்களால் அறைந்து கொண்டதென்றது, அடர் கற்பனைகளாலே பங்கப்படுவன் றுயராம் = நெருங்கிய கற்பனா ஜாலங்களினாலே கட்டப்படுபவன் படுந்துன்பமாம், பரந்தோடின தென்றதுதான் = தன்னை யடித்துக்கொண் டோடித்திரிந்தான் என்றதோ,

மங்கத்தரும் வாதனையான் மருண்டு சுழல்வதாகும் = மலினஞ்செய்யும் வாதனையினலே மயங்கிச் சுற்றுவதாகும், சங்கற்பமும் வாதனையும் தனைத்தான் வலைபோல் தளைக்கும்= சங்கற்பவாசனு ஜாலங்களினுலே வலையிற் கட்டுண்பதே போலத்தானே கட்டுப்படுவன்.

கோசகாரப் புழுப்போல் கொடுங்கற்பனை வாதனையால் = கோசகாரக் கிருமியே போல மனோலீலாமய பந்தங்களினுலே பாசமடைவர் யாரும் = எவருந்தாமே பந்த முறுவர், பகர்ந்தமனத்தின் கதையை = கூறிய சித்தோபாக்கியானத்தை, மாசிலாத் மனத்தால் = குற்றமற்ற சித்தத்தால், மதித்து = சிந்தித்து, மனத்தை மாய்ப்பாய் = சித்தத்தியாகஞ் செய்வதிற்றிர முடையவனுதி, தேசமுடையாய் என்று = எல்லாத் தேசங்கட்கும் இறையவனே என்பதாக, தெளிந்த வசிட்டன் உரைத்தான் = சத்துவ உற்கர்ஷம் நிறைந்த ஸ்ரீவசிட்டபகவான் கூறியருளினர்.

(ஸ்ரீ - வீர.) அதீதப் பிரகரணத் தடங்கிய தாற்பரியங் கூறுவார் சங்கற்பமும் என் பதாதியாய்க் கூறினர். சங்கற்பங்களே வாதனைமூலத் தன்மையினலே வாசனைகளாம், அவற்றின் ஜாலங்களாலே தம்மவற்றுலே தாமே பந்தமுறுவ ரென்பதாம். தங்கள் சங் கற்பத்தாலே சாலமோகிப்பர் தீயோர். கோசகாரக் கிருமியானது, விளாவிருக்ஷாதி யினிதுலக்கினங் கொண்டு தனது இருப்பிடமாகக் கோசங்குயிற்றி வெளிப்போந்து வரும்வாயிலையும் அடைப்பதாய லீலாமய பந்தத்தால் கட்டுப்பட் டுழல்வதேபோலு மென்றுணர்க. சகத்திர நேத்திர அத்தமுடைமை யாது புருடனுக்கு இனிது வருணித் தாமோ அது சித்தத்திற்கு அநந்த ஆகிருதித் தகைமை தெரிவித்த தாமென்பார் அங்க மென்றூர். தன்பாற்றுடனுதி சமூகங்களாலே தானே அடித்துக்கொண்டான் புருடன் என்றது மனமானது கெட்டகற்பனைக் கூட்டங்களானே தானேதன்னை யடித்தவதிப் பட்டதாம் தானே தன்னையடித்துக் கொண்டு புருடன் ஓடித்திரிகின்றுன் என்றதோ,, தன் வாசனை யடிதடிகளினுலே மருண்டு மனமுருண்டு திரிந்ததாம், சங்கற்பவாசனைச் சாலங்களினுலே சுயம்பந்தனம் வந்து சேரும், மனமானது, தன்வாயினின்றும் ஒழுகு தல் வடிவமாய விகாரலாலை மயஜாலங்களால், கௌசேய உற்பத்தி பூமியின்கட் பிர சித்தமாய கோசகாரக் கிருமிபோலும் துன்புறும். இங்ஙனம் இச்சித்த உத்தம உபாக் யானமானது ஹே இராகவா ! உனக் குபதேசிக்கப் பெற்றதெம்மால், சித்தத்தினுலேயே இதனைச் சிந்தித்துப் பார்த்துச் சித்தத்தியாகத்திற் றிரத்தை யடைந்திடுவாய். கௌ சேயம் = பட்டு.

(ச.) அங்கத்தறைந்து கொண்டது = தன்னைத்தானே யடித்துக் கொண்டான் என்றது = அடர் கற்பனைகளாலே = மனத்தின் கற்பனு சமூகங்களினுல், மங்கத்தரு வாதனையால், மனதுவாசனு ஜாலங்களினுல், மருண்டு சுழல்வதாகும். அதனையே தெரி வித்தல்:—சங்கற்பமும் வாதனையும் = தனது சங்கற்ப வாசனுஜாலங்களே, தளைக் கும் = பந்தப்படுத்தும்.

அதனையே தெரிவித்தல்:—கோச + யாரும் = யாதொன்றின் கோசத்தினின்றும் உற்பவித்த தந்துக்களாற் பீதாம்பராதி வஸ்திரங்கள் செய்யப் படுகின்றனவோ அது கோசகாரகிருமி யெனப்படும், அது எப்படித் தன்னுடலின் கண்ணே முகவாயிலாக ஊறிவெளிப்படுஞ் சலருபங்களாகிய தந்துக்களாற்றுனே கோசஞ்செய்து, தன்னைப் பந்திக்கிறதோ அதுபோன்று மனமுந்தனது சங்கற்பவாசனு , சாலங்களாற்றுனே தன் னைப் பந்திக்கும் என்பதுபொருள். இவ்விடத்திற் புருடனுக்கு யாதொரு அளவற்றகை கண்கள் முற்கூறப்பட்டதோ அதுமனதுக்கு அநந்தவிதமான கருமஞானேந்திரிய சத்தி

புண்டெனச் சூசிம்பிக்கு நிமித்த மென்பதாதி ஊகிக்கவேண்டும். மனத்தால் மதித்து = சித்தத்தாற்றானே சிந்தித்து, மனத்தை மாய்ப்பாய் = சித்தத்தியாகியாய்த் திர முறுவாய்.

## மனத்தின் கதை முற்றிற்று.

## பாலன் கதை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கடந்த சருக்கக்கடையில் மனம் கோசகாரக் கிருமியைப் போலப்பந்த முறுகின்றது எனத் திருஷ்டாந்தங் கொண்டமையினாலும், மனதைத் தியாகிக்க வேண்டுமென்று கூறப்படுதலினாலும், அசத்தைத் தியாகஞ்செய்த லனு காமையானே, அதற் குண்மையமையும், அது சத்தியமாகவே, அதன் விகாரமாய வுல கிற்கும் சத்தியத் தன்மையாம், எனத்துவைக மியாவற்றிற்குமே சத்தியத்தன்மையை யாசங்கித்து, அதற்குப்பாலக ஆக்யானச் சலத்தாற் றுச்சத்துவம் பிரதிபாதிக்கும் பொருட்டுத் தொடங்குகின்றார்:—முழுது என.

(ச.) முற்கதையிற் சித்தசொரூப நிரூபிக்கப்பட்டது, இப்போது பிரபஞ்சமித்தியா ரூபமாயினும் மனச்சங்கற்ப மாத்திரத்தால் விசாரமற்ற மதியினர்க்குப் பாரமார்த்திக புத்தி அதிதிடப் படுவதெனப் பாலகன்கதை நிதரிசனத்தாற் சாதிக்கப் படுகின்றது அதில் இப்போது பிரமமே விவேகிகளுடைய மனமெனல்:—

முழுதுசத்தியுமாய்ப் புரணமாயென் றுமுடிவறு பிரமமாவதுதான்
பழுதின்ஞானிகடம் மனமலாதில்லைப் பரமமாமிதி லிலாதில்லை
யெழுதருஞ் சத்தியாவுமா யிலங்குமிவைக ளோர்கால மொன் றுளதாம்
வழுவிலாப் பிரமமுடைய சிற்சத்திமறிதரு முடல்களிற் றோன்றும்.

(ப - ரை.) முழுது சத்தியுமாய்ப் புரணமாய் = சர்வசக்தி யுடையதாய் ஆபூர்ண மாய், என்று முடிவறு = நித்தியமா யவ்வியயமாய், பிரமமாவதுதான் = இலங்கும் பிர ஹ்மசொரூப மாவதுவே, பழுதில் ஞானிகள் தம்மனம் = தடையறவுணர்ந்த பிரபுத்தர்க ளின்மனம், அலாதில்லை = அது பிரஹ்மமே யாமலது அயலென்றாகாதாம், பரமமாம் இதில் இலாதில்லை = உயர்ந்ததாகிய இதன் கண்ணில்லாதது இல்லை, எழுதருஞ்சத்தி யாவுமாயிலங்கும் = கணக்கில்லாத சக்திகளுடன் கூடியபடி எல்லாமாகி விளங்கும், இவைகள் = இச்சக்திகளுள், ஓர்காலம் ஒன்றுளதாம் = ஒவ்வொருபோதில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொருசக்தி யுல்லாசமுறும், வழுவிலாப்பிரமம் உடையசிற்சக்தி = கெடாத பிரஹ்ம சம்பந்தியாய சிற்சக்தியானது, மறிதருமுடல் களிற்றோன்றும் = துன்புறு கின்ற சரீரங்களிற் புலப்படும்.

(ஸ்ரீ - வீர.) பிரபுத்தர்களாகிய பிரஹ்ம வித்துக்களின் இவ்வுலகாகாரமாக விரிந்த மனமானது பிரஹ்மமேயாம், அதனினும் அன்னியமாகவேனும் அனன்னியமாகவேனும் இன்றும், மற்றென்னெனின் துச்சமேயாம் என்பதுபொருள் மனம் பிரஹ்மமெனப் பாதத்திற் சாமானுதி கரண்யம், இவையாவும் அத்தியர்த்தம் இல்லவேயில்லையாம் மனுதி கட்குப் பிரஹ்மமாய் மாத்திரமாகி யிருக்குந்தன்மை யாங்ஙனமெனச் சங்கித்து அதன் காரணத்தன்மை யுண்மையின் அதற்கு அம்மாத்திரத் தன்மை பொருத்தமா மென்பார் முழுதுசக்தியுமா யென்றார். எல்லாமனுதி காரியத்தில் மாயையெனப் பெயரிய சக்தி

யெதற்கோ அது சர்வசக்தி யுடையதாம், சருவசக்திகள் சருவகாரிய விடயங்கள் எதன் கண்ணே அது வெனினுமாம். அவ்வியயம் = அபக்ஷய மற்றதாம். விசித்திரபதார்த்தங் களின் மத்தியிற் சில அப்ரஹ்மகாரியமா யிருத்தலும் சம்பவித்தலின் யாங்ஙனம் யாவற் றிற்கும் பிரஹ்மமாய் மாத்திரமாகியிருக்கும் பெற்றிகூடு மெனக்கடாவ விடைதருவார், பரமமாம் இதிலிலாதில்லை யென்றார். விஸ்தாரவடிவமாய அவ்வதிஷ்டான வத்துவில் எக்காரிய உளதாவதில்லை அஃதில்லை, சர்வசக்தி பரப்பிரஹ்மம் என்பதன்கண் எவ் வெல்லாசக்திகள் பிரஹ்மத்தின்கண் ணிருப்பனவாகக் கூறப்பெற்றனவோ அவை அக் காரியங்களில் அஸ்பஷ்டமாக அவிர்கின்றன என்பார் ஓர் காலமென்றார். இப்பரமாத்மா தன்னையாசிரயித் திருக்கும் சர்வசக்திகளின் மத்தியில் எச்சக்தியோடு கூடிவிவர்த்த மாகின்றதோ அதுவாய்த் தோற்று மென்பதாம். மனோநினமேயாம் பந்தமோக்ஷ கற் பனையென யாதோதப் பெற்றதோ அதன் கண்ணுக்கியாதெனின்? பிரஹ்மமாகிய பரமபதத்தினின்றும் சித்தமாகிய இஃதுண்டாயது, அப்பிரஹ்மபூத அஞ்ஞான விகார மும், தூயபிரஹ்ம விவர்த்தமுமாமிது, தரங்கம் தண்ணீர் விகாரமும் அதன்சத்தை விவர் த்தமும் ஆதலேபோலும். ஈண்டுத்தத்துவஞானி யனுபவங்கொண்டு நோக்கின் தெளிந் துணர்ந்தவரது மனமானது பிரஹ்மமேயாம் இதராமாகாதாம், ஜலசத்தாபுத்தி யுடைய வர்கட்கு அப்தியினின்றும் அலையயல் அல்லவே, சர்வஜகத் காரணத்தன்மையும் அறி யப்பெறாத பிரஹ்மத்திற்கேயாம், அறியப்பெற்றதற் கின்றாமென்னுங் கருத்தாற் சர்வ சக்தி சாலித்தகைமை அதற்கே கூறுவார் முழுதுசத்திய மாயென்றார். நித்தியமாயும் எங்கும் நிறைந்ததாயும் நாசமற்றதாயும் இலங்கும் பிரஹ்மம் சகல சக்திகளையும் உடைத் தாகி மேலுக்குமேலாய் மிளிரும் அவ்விஸ்தாரமாய சொரூபத்தையுடைய சத்தையில் யாது இலதோ அது இலதாம்; அதனினும் அயலொன்றுளதாகாதாம் சர்வசக்திகளையு முடையவராதலின் ஸ்ரீ பகவான் எதைக்கொண்டு யாதையியற்ற விரும்புகின்றாரோ அச் சர்வகர் அதேவித்தார சக்தியைக் காரியவடிவமாகப் பிரகடனமாக்குகின்றார் பிரஹ்மத் தினுடைய சிற்சக்தியானது சதுர்வித பூதக்கிராம சரீரங்களில் இனிது காணப்பெறு கின்றது.

(ச.) ஸ்ரீ வசிட்டர்: பிரமம் பழுதின் ஞானிகடம் மனம் = இராமா! பிரமமே ஆன்ம ஞானிகளது மனமாம், அலாதில்லை — இது வேறேயன்று, சர்வசக்தியும், நித்தியமும், பரிபூரணமும், அத்துவயமும் ஆகியவென்பது, பிரமமேமனம் என்பதில் ஹேதுகர்ப்ப விசேடணமாம், பரமமா மிதிலிலாதில்லை, சர்வசக்தியை யுடையதாதலின், மனமுதலிய விசுவம் பிரமத்தின் கண்ணே இருக்கின்ற தென்றாதாயிற்று, எழுதருஞ்சத்தி யாவுமா யிலங்கும் = இப்பரமாத்மா சர்வசத்தியாலுஞ் சகலமுமாம். இவைகளோர் காலமொன் றுளதாம் = இச்சக்திகளில் ஓர்காலத்து ஓர் சக்தியுல்லாசமாம், அதிப்பிரகாசமாமென்ற தாயிற்று, அதில் திரவியபேதத்தாற் சத்திபேதமாமெனல் பிரமத்தினதுசிற்சக்தி சரீரங் களிற் காணப்படும்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) அச்சக்திகள் எங்கெங்கு புலப்படுகின்றன வெனக் கூறு கின்றார்:—காற்றிலென.

காற்றிலேயசைவுங் கல்லிலேதிட முங்கனலிலே சூடும்வான் றனிலே
தோற்றலாமையு நன்னீரிலே நெகிழ்வுந் தொலைவுறுமாய் விலேமாய்வு
மூற்றமாம்விதையின் மரங்களும் போலவுள்ளுறை பிரமசத்திகடா
மாற்றல்சால் காலதேசசித் திரத்தாலவனியிற் சாலிபோற்றோன் றும்,

(ப - வை.) காற்றிலே யசைவும் = வாயுவின்கண் ஸ்பந்தசக்தியும், கல்லிலேதிடமும் = பாஷாணத்திலே தார்ட்ய சக்தியும், கனலிலேசூடும் =அநலத்திற் றேஜசக்தியும், வான்றனிலே = ஆகாயத்திலே, தோற்றலாமையும் = சூனிய சக்தியும், நன்னீரிலே நெகிழ்வும் =அம்புவின் மாட்டுத்திரவ சக்தியும், தொலைவுறுமாய்விலேமாய்வும்= கெடும் படியான விநாசப் பொருள்களில் நாசசக்தியும், ஆகிய, உள்ளுறை பிரமசக்திகள்தாம்= அந்தர்ஸ்திதிபெற்ற சிற்சக்தியே முதலிய சகல சக்திகளும், விதையின் மரங்களும் போல = பீஜத்தில் அநேக அவயவதருக்களும், முட்டைக்குண்ணீரில் விசித்திரம மயூரங்களும் இருப்பனபோல, ஊற்றமாம் = பதிந்து கிடக்கும், ஆற்றல்சால் காலதேச சித்திரத்தால் அவனியிற் சாலிபோற் றோன்றும் = சக்திகள்போதிய துற்றவழி ஒவ்வொருகாலத்தில் சிற்சிலபால் தேசகால சாமக்கிரிகளின் வைசித்திரியத்தால் பூமியின் மாட்டு நெற்களைப் போன்று தோன்றும்,

(ஸ்ரீ - வீர.) பாஷாணம் = உபலம், சூனியசக்தி = அமூர்த்த நிட்பாதனசக்தி, சர்வதுவைதஜாதமும் பிரளயகாலத்தில் வெளிப்படா நாமரூபமதாகப் பிரஹ்மத்தின் மாட்டே நிகழும், உற்பத்திகால முற்றபோது, முட்டைக்குண்ணீரி னின்றும் மயூரம் போல அம்மாயாவியி னிடத்தினின்றே முறையே வெளிப்படும். ஆண்டும், திருஷ்டிக்கே சிருஷ்டித் தன்மையுண்மையின் மன ஆதிமுறையானே விரியும், அம்மனுதிதுவைதமும் அவிசாரதசையில் பாலகனைச் சீராட்டும் பொருட்டுப் புகன்ற நன்கலாக் கதையருத்த மொப்ப உண்மைபோல் ஒளிர்வதாயினும் தத்துவ நிரூபணமாங்கால் துச்சமேயாம் என்னும் இப்பொருள் யாவற்றையு மியம்புவார் விதையில் மரங்கள் என்றார். விருக்ஷம் = பலபத்ரலதா புஷ்பசாகாவிடப மூலவான், லதை = கோமளசாகை; ஈண்டு விடபசப் தத்தானே கூறியதுகூற லென்னும் குற்றம் வாராதிருக்கும் பொருட்டு விருக்ஷஸ்கந்தங் கவரப்பெறும்; தோன்றும் = அந்தப் பிரஹ்மத்தினின்றும் காரியரூபமாகப் பிரகாசிக்கும். வாதங்களில் ஸ்பந்தசக்தியும், உபலத்திற் சடசக்தியும், நீரிற்றிரவசக்தியும், அநலத்திற் றேஜஸாற்றலும், ஆகாயத்திற் சூனியசக்தியும் = மறைப்பதாந்தன்மையின்மையினுனே யாவற்றிற்குந் தடையின்றி யிடங்கொடுக்குந் தன்மையாற்றலும், சமுசாரஸ்திதியில் விவகாரயோக்யதை வடிவப் பாவசக்தியும், விநாசங்களில் நாசசக்தியாகிய காரணத்திலடங்குஞ் சக்தியும், சோகிகள்பால் எல்லாச் சோகமுந்தரும் தேகஜனன சக்தியும் சோகசக்தியும் இருக்கும். பிரஹ்மத்தின் சர்வசக்தியானது தசதிசையினும் விரிந்ததாகிக் காணப்படும் முட்டையுண்ணீரின் முழுமயிலுறல்போல் இவையாவுமே ஆன்மாவின் கண்ணுளவாம்- பலம் புஷ்பம் கொடியிலை சாகைவிடபம் மூலம் என்பவற்றையுடைய விருக்ஷம் தருவிரையிற் றங்கியிருப்பதேபோல இச்சம்சாரம் யாவும் பிரஹ்மத்தின் கண்ணே யிருக்கின்றன. எல்லாஜீவ எண்ணங்களும் பிரஹமசக்திகளாமாயின் யாவும் எல்லாவுயிர்க ளிடத்தும் கலந்துறுததென்னே யெனின்? சர்வ இருதுபுஷ்ப சக்திகளாலும் வியாபிக்கப் பெற்றிருந்தபோதினும் பூமி, அவ்வத்தேசங்களில் பீஜசம்ஸ்காராதி விதிபேதத்தினுனே விவத்தைகொண்டே கலப்பின்றிப் புஷ்பாதிகளைக்கொடுப்பதேபோல உலக முண்டாக்கும் பிரஹ்மமும் சித்தசக்தி விவத்தை கொண்டே கொடுக்கும்; ஆகலின் சிற்சிலபால் ஒவ்வொருகால் ஆற்றல்கள் விவஸ்தை செய்யப்பெற்ற பயன் வடிவங்களாய் உதித்துலாவுகின்றன; தேசகாலாதி வைசித்திரியத்தானே பூதலத்தினின்றும் நெற்பயிர் ஆற்றல்கள் உண்டாவன கண்டாமன்றே. எதிர்மறை பகுக்கும் எண்ணிக்கை யுருவாதி பேதரூப உலகவைசித்திரியமிதனை யுங்கீகரித்தே இக்கல்பி

ல்ாமை காட்டப்பட்டது, உண்மையாயோ அதன்றோற்ற மாத்திரத்திற்குக் காரகத் த்கைமை கூடாமையானும், தோற்றுந் தனிப்படுத்திய காரகம் வேறு சித்தியாமையா னும், தோற்றுமாத்திரம் ஒரு சிறிதும் உண்டாகவுமில்லை, ஒருவரானும் ஒன்றுமே பார்க் கப்படவுமில்லை, எனமனச் சத்தகற்பித பிரஹ்ம ஜங்களானவை பிரஹ்மமேயாம் என் றறிதல் வேண்டும்.

(ச.) காற்றிலேயசைவும் = வாயுக்களிற் சலனசக்தியும், கல்லிலே திடமும் =சிலை யிலே தார்ட்டிய சக்தியும், சூடும் = தாகசக்தியும், தோற்றலாமையும் =சூன்யசக்தியும், நெகிழ்வும் = திரவசக்தியும், மாய்விலே மாய்வும் = நாசவத்துவில் = நாசசக்தியும், தோன்றுமெனை முற்கவி யந்தத்தோடு முடிக்குக. ஒருவத்துவில் எப்படி இந்தச் சக்தி பேதமாமெனச் சங்கித்துத் திர்ஷ்டாந்தத் துவயத்தாற் றெளிவித்தல்; ஊற்றமாம் விதை யின் மரங்களும்போல் = முட்டையினுட் சலத்தில் பெருத்தவிசித்திர இறகுடலுடைய மயிலும், வடாதிபீஜத்திற் பலபுட்பலதை பத்திரசாகை விடபமூலமாகிய இவைகளை யுடைய விசித்திரமான வடாதி விருக்ஷமும் எப்படிச் சூக்ஷ்மரூபமாக விருக்கிறதோ அப்படியே ஆன்மரூபமாகிய பிரமத்திற் சகத்திருக்கின்றதென்பது பொருள். மரங்க ளும் என்றவும்மையால், முட்டைக்குண் மயில் வருவிக்கப்பட்டது, காலதேச சித்திரத் தால், தேசகால விசித்திரத்தினுல், தோன்றும் = சிலவிடத்திற் சிலசத்தி சிலகால முதிக்கும், பூதலத்திற் றேசகால பேதத்தால் விசித்திர சாலிபோற் பிரமத்தினின்றும் விசித்திர சத்திகள் உற்பவிக்கும் என்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரம்பொருளின் விசாலத்தையும் மனோமயக்க வல்லமை யையும் கூறி அதன்பொருட்டுப் பாலன்கதை தொடங்கல்:—பரமமென.

பரமமே யெங்குமென்று முண்டாகும் பயின்மனனத்தினுன் மனமாந்
தரமறுபந்த முத்திபேருலகாஞ் சத்திகளனைத்து மாய்நிற்குந்
திரமறு தனையர்க் கன்னைசொற் கதைபோற் செப்பிய விவையெலாந்திரமாங்
கரமலர் முகிலேயென்றனு மந்தக்கதையினை யிராகவன் வினவ.

(ப - ரை.) பரமமே எங்கும் என்றும் உண்டாகும் = ஆன்மாவே எவ்விடத்திலும் எப்போதும் இருப்பதாகும், பயின்மனனத்தினுன் மனமாம் = மனனஞ் செய்தல் கொண்டு மனனசக்தியுறுதலின் மனமாம், தரம் அறுபந்த முத்திபேருலகாம் = மேன் மையின்றிய பந்தம் மோக்ஷம் விஸ்தாரப் பிரபஞ்சம் ஆகிய, அனைத்துமாய்ச் சத்திகள் நிற்கும் = யாவுமாய்ச் சக்திகள் பிரதிட்டை யுற்றிருக்கும், திரமறு தனையர்க்கு = திட மதியில்லாத குழந்தைகட்கு, அன்னைசொற் கதைபோல் =தாய் வார்த்தையாற் கட்டிச் சொல்லுங் கதையொப்ப, செப்பிய இவையெலாம் திரமாம் = கூறிய இவையாவும் திட மாம், கரமலர் முகிலே = ஹே செந்தாமரைத் திருக்கரம் திகழும் அப்பிரமொப்பாய இராகவ! என்றலும் = என்று ஸ்ரீ வசிட்டபகவான் கூறுதலும், அந்தக்கதையினை இராகவன் வினவ = அவ்வாக்கியாயிகையை ஸ்ரீ இராகவர் எவ்வண்ணமென்று கேட்ப.

(ஸ்ரீ - வீர.) பூர்ண ஆத்மாவானது எப்போதும் சுயமாகவே யிலங்கிக்கொண் டிருக்குமென்பதாம். யாது எக்காற் சிறிது மனனவதியாகிய சக்தியைத் தரிக்குமோ, அதாவது விவர்த்தமான மனனத்தாற் சக்தி யவச்சின்னமதாமோ, அது அக்கான்மன மெனச் செப்பப்பெறும். முதலின் மனமெனக் சமஷ்டிரூபம் விளம்பும் வேட்கையாம், அதன்பின் பந்தமுக்திஞானங்கள் உண்டாம், அவையுளவாகா வழிபோக அபவர்க்கப் பொருட்டுச் சிருஷ்டியசம்பவ வழக்காதலின்; "போக அபவர்க்கார்த்தம் சிருட் மதி

யிந்திரியம் மனம் பிராணன்களை, விதிவிபு ஜனங்கட்கு விதித்தனனன்றே, மாத்திரப் பொருட்டும் பவத்தினற் பொருட்டும், ஆத்துமாவின் அகற்பனைப் பொருட்டும்'' எனஸ்ம ரிக்கவும் பெறுகின்றது. அனைத்தும் என்றதனுனே சித்தாதிகளையுங் கொள்ளலாம், நல் லழகிய பாலஜனப் பொருட்டு திதமாய ஆக்யாயிகைபோலக் கூறிய வண்ணமாய் துவை தஸ்திதி சலனமின்றிய அவஸ்திதியை யடைந்துளதாம், அதாவது அவிசாரகாரணத் தானே திடசத்தியபுத்தி விஷயத்தன்மையை யடைந்துளதாம். இவ்வுலக மியாவும் பிர ஹ்மமே யாமெனவும், யானெனத் தோன்றுகின்ற ஜீவதத்வமாகிய பிரத்தியக்குச் சித்து ருவும் பிரஹ்மமே யெனவும் காணுதி; அவ்வான்மா சர்வகமாம் நித்யப் பிரகாசப் பேரா கிருதியதாம். பிரஹ்மமே அவ்வச் சக்திவாயிலாக மயலான் மன் ஆதிசப்தங்களான் மல ரப்பெறும் அயலல்லவா மென்பார் மனமாம் என்றூர். யாதுசிறிது மனனசக்தியை மரு வியதாமோ அது மனமெனப்படும். கூறிய பொருளின் பாலகாக்யாயிகையைக்கூறி யுபசங்கரித்தல்:—தாமெனலாதி. ஆதியின்மனம், அதன்பின் பந்தவிமோக்ஷ திருஷ்டி, பின்னர்ப் பிரபஞ்சரசனை, உட்பட்ட புவனப் பெயரிய உள்ளடங்கியவை, என்பன வாதியாய இந்தப் பந்தத்திதியானது, குழந்தைகள் பொருட்டுத் தாத்திரியாற் கூறப் பெற்ற இனியியம்பப் படுங்கதைபோலத் திடமூலத்தன்மையை யடைந்துளது, சங்கற்ப விகற்பான்மகமான மனத்திற்குச் சங்கற்பம் மூலம், அதன் நிரோதமாகிய வழிமூலங் கெடலான் விகற்பங் கிளம்பாமையின் நிர்விகற்ப பதபிரதிட்டைச் சித்தியெனக் குறிப் பித்தற்பொருட்டு முன்னவதாரித்த பலகாக்யா யிகையைச் சிரவணிக்க விரும்பிய ஸ்ரீ இராகவர்வினுதல்:—அந்தக்கதை: ஹே முனிவருட் சிறந்த முனீசுரரே! பாலக ஆக் கியாயிகை யிலக்கணக் கிரமமென்னுந் திருட்டாந்தம் என்னவகையில் லோகத்திலுரைப் பர் இதனை முறையாகக் கூறியருளல் வேண்டும்.

(ச.) பரமமே = அவ்வான்மாவே, என்றும் = நித்தியோதித மகாவடிவமாய், எங்கு முண்டாகும் = சர்வகதமாம், பயின்மனனத்தினுன் மனமாம் = சர்வசத்திமானுன ஆன்மா மனதைக் கற்பிப்பவராய் மனனசக்தியைப் பொருந்துங்கால் மனமெனப்படு மென்பது பொருள்; தரமறு பந்தமுத்தி = இங்ஙனம் முன்புமனது பின்பு பந்தமோக்ஷ திருஷ்டியென்னும் ஜீவபரமான்ம விபாகமென்பது பொருள்; பேருலகாம் = புன்பு புவ னுதி பிரபஞ்ச கற்பனையாம், செப்பிய இவையெலாந்திரமாம் = சொல்லிய இச்சகஸ்திதி யாவும் பிரதிட்டையை யடையும்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) கதையைத் தொடங்கல்:—சித்தவென.

சித்தவஞ்சனையின் மூலமாங்கதையைச் செல்வனுக் கருந்தவனுரைப்பான்
மெய்த்தகவிலதோர் சிறுவனீயன்னை விரும்பியோர்கதை விளம்பென்னச்
சத்தியம்போல வெறும்பொய்யே யுரைப்பாடரணிபன் குமரரோர்மூவர்
சுத்தவீரமூநற் குணங்களுஞ் சிறந்தோர் சூனியநகரிலே யுறைவோர்.

(ப - ரை.) சித்த வஞ்சனையின் மூலமாம் கதையை = மனோவஞ்சனையின் காரண மாங் கதையினை, செல்வனுக் கருந்தவன் உரைப்பான் = ஸ்ரீ இராகவனுக்கு ஸ்ரீவசிஷ்ட பகவான் அருளுவார், மெய்த்தகவிலாதோர் சிறுவன் = மூடமதியையுடைய பாலகன் ஒருவன், அன்னைநீ = தாயேநீ, விரும்பியோர் கதை விளம்பென்ன = அன்புடன்விநோத மான ஒருகதை சொல்வாயாக வென்று தாத்திரியைக் கேட்ப, சத்தியம்போல வெறும் பொய்யே யுரைப்பாள் = உண்மைபோல அத்தியந்தம் மித்தையே கூறுவாள், தரணி பன்குமரர் ஓர் மூவர் = ஒப்பற்ற அரசகுமரர் மூன்றுபேர், சுத்தவீரமும் நற்குணங்க

ளும் சிறந்தோர் = புண்ணியராய் சௌரியவீரியாதி யுடையராய், மூதிதை முற்குணங்க ளாற் சிறப்புடையராய், விளங்குபவராய், சூனியநகரிலே யுறைவோர் = அத்தியந்த அசத்துப் பட்டணத்தி லமர்வோர்.

(ஸ்ரீ - வீர.) சித்தவஞ்சனையின் மூலம் = மனோவர்ண்ண காரணம் = விலாசத்தோடு கூடியமனம் துச்சமாயினும் விசாரமற்ற சித்தமுடையவர்கட்குச் சத்தியம் போலத் தோன்றுகின்றது என்னும் இவ்வகையாய மனோவர்ண்ணமாம் மனச்சொரூப போதனத்தின் காரணம். தாத்ரி = உபமாதா, அசமஞ்ச சமத்வ சித்தியின் பொருட்டுப் பட்டணத்தைச் சிறப்பிப்பார் சூனியமென்றார். துச்சமென்பது பொருள். தக்கது தகாத தாம் விவேகமற்ற ஒரு பாலகன் தாத்திரியை நோக்கி, ஹே அன்னாய்! யாதாவதொரு விநோதமான கதையை எனக்குக் கூறுவாயாக வெனக்கேட்ப, அக்கைத்தாய் அக்குழந்தையின் விநோதப் பொருட்டுத் தெளிந்த மதுராக்ஷரம் நிறைந்தகதை கூறுவதாவது: பிரதான ராஜதானியாகிய அத்தியந்த அசத்துப்பட்டணத்தில் மகாத்மாக்களாய்ச் சுபர்களாய்த் தார்மிகர்களாய் சௌரியர்களாய் சந்தோஷ சித்தர்களாய், இனிய குணமுடையவர்களாய், இலங்காநின்ற இராஜபுத்திரர் மூவர் இருக்கின்றனர்.

(ச.) ஓர் கதை = ஒரு விநோதமான கதையை, விளம்பென்ன; அவள் அப்பாலகனுக்கு விநோத நிமித்தம், சூனியநகரிலே = அத்தியந்தம் அசத்தென்னும் பட்டணத்தில்.

(4

மூவரிலிருவர் பிறந்திலரொருவன் மூலமாங் கருவினுமில்லை
யாவதுகருதித் திரிபவர்விண்ணி லளவறு பழமரச்சோலை
மேவனுமதனிற் செழுங்கனி துய்த்துவெம்பசி தணிந்துமேற் சென்றார்
காவருகாகமூன்று நன்னதிகள் கரைபொரு திரையொடுங் கண்டார்.

(ப - ரை.) மூவரில் = உரைத்த மூன்றுபேரில், இருவர் பிறந்திலர் = இரண்டுபேர் உற்பத்தியாயிலர், ஒருவன் = ஏகன்; மூலமாங் கருவினுமில்லை = காரணமாங் கருப்பத்தினும் உளதாகவேயில்லை, ஆவது கருதித்திரிபவர் = உத்தமலாபத்தை யுத்தேசித்து தெளிந்த அபிப்பிராயமுற்ற அம்மூவரும் தம் சூனியநகரை விட்டுச் செல்பவராய், விண்ணில் அளவறு பழமரச்சோலை மேவனும் = ஆகாயத்தில் அபரிமிதமான கனிவர்க்கங்கணிறைந்த தண்டலையை யடைதலும், அதனிற் செழுங்கனிதுய்த்து = அத்தோப்பில் இளைப்பாறி இளைப்பாறிச் சுவாதாய கனிகளையயின்று, வெம்பசி தணிந்து = கடும்பசியினைச் சாந்தப்படுத்தி, மேற்சென்றார் = விலாசமாக இன்பமுற்றேகினர், காவருகாக மூன்றுநல் நதிகள் = அப்பூந்தோட்டத்தின் சமீபமாக மூன்று நல்லாறுகள், கரைபொரு திரையொடும் கண்டார் = கரைகளிற் போராடுந் தரங்கங்களுடன் பார்த்தார்.

(ஸ்ரீ - வீர.) மாலையாகாரமான கல்லோலங்களோடு கூடினவாம் அந்நதிகள், சந்திராம்சத் தன்மையானே ஜலமயமாய தாரகைகள் விண்ணி லிருப்பனபோல அநேக சூனிய சாகாநகரங்கள் வாய்ந்த அவ்வசத்துப் பட்டணத்தி லிருந்தார்கள். அரசகுமாரர் மூவரில் இரண்டுபேர் உண்டாகவேயில்லை அவ்வாறே ஒருவனோகருப்பத்திலேயே யுண்டாகவில்லை. ஒருகால் அம்மூவரும் தெய்வத்தாற் கழிந்த பந்துக்களை யுடையவராய், பஞ்சமுதலிய வற்றானே கிலேசத்தோடு கூடிய முகத்தினராய் சோகத்தினாலே கெடுக்கப்பட்ட சித்தமுடையவராய் தம் நாகரசமாஜத்தாலாதல் பரஸ்பரம் ஏகமதியினாலாதல் ஒருங்கு சேர்ந்தவராய் உத்தமமான நகராந்தரத்தின் லாபப்பொருட்டு வெளிக்கிளம்பிப்

போயினர். ககனத்தினின்றும் சேர்ந்து சென்ற புதன் சுக்கிரன் சனியென்பவரைப் போல அச்சூனிய நகரத்தினின்றும் அம்மூவரும் வெளிப்போந்து விரிந்தவுல்லாச முகத்தினராய்ச் சென்றனர். மார்க்கத்தில் மிருகபக்ஷி கணுதாரமான மஞ்சரி, ஜாலநிறைந்து பலபல்லவஞ் சூழ்ந்த தருத்திரயத்தை யடைந்தனர். கூறியதருக்கள் மூன்றனுள் இரு தருக்கள் உண்டாகவேயில்லை சிறிதும், சுகமாக ஏறக்கூடியதாய மூன்றாவதற்கோ விதையே கிடையாதாம். இளைப்பை மிகவு மடைந்துள்ள அம்மூவரும் அம்மூன்றனுள் ஒருதருவின் கீழ்நிழலில், சுவர்க்கத்தில் பாரிஜாத விருக்ஷநிழலில் இந்திரன் வாயுயமன் இம்மூவரும் இளைப்பாறியதேபோல இளைப்பாறி யிருந்தனர், அமிருத சமானமாய கனிகளை யருந்தி அவற்றின் இரசத்தைமாந்தி அங்குள்ள பூங்கொத்துகளானே மாலைசெய்து சூடி நீள்போது விசிராந்தியுற்றுச் சென்றனர். மீள வெகுதூரஞ் சென்றபின் மத்தியான காலமானது வந்துற்ற வேளையில், தரங்கசஞ்சலங்களானே அரவமிகப்பெற்ற நதிகள் மூன்றைக்கண் டாநந்தித்தனர்.

(ச.) ஆவது கருதி = அவர் உத்தமலாப நிமித்தம் ஒருகாலத்துச் சுபசிந்தையுடைய வராய், திரிபவர் தமது சூனியநகரத்தினின்றும் புறப்பட்டு, மேவலும் = கண்டுபொருந்தவும், பசிதணிந்து = இளைப்பாறி இளைப்பாறிச் சுகமில்லாசத்தோடும்.

ஓடுநன்னதியி லிரண்டுநீரில்லை யொன்று வெண்மண லதாமிதனி
லாடிநீர்துளைந்து பருகினா ந்தியாகிமேல் வருநகரடைந்தார்
வீடுமூன்றெதிர்ந்தா ரதிலிரண்டில்லை மேன்மரஞ் சுவரிலாதொன்று
கூடியவவற்றிற் சுவரிலாவீட்டிற் குடிபுகுந்திருந்தனர் குமரர். (5)

ஒருவருங்காணு நகரிலே வெளிவீட்டு றைபவர் கனகபாத்திரமூன், றரு
குறக்கண்டா ரதிலிரண்டோடா மறவிலுந்தாளியாமொன்று, சொருபமில் கடத்
திற் றுரோணமூன்ற தனிற்றுரோண மூன்றகன்று மிக்கிருந்த, பருவரிசியைத்
தாஞ்சமைத் துவாயில்லாப் பனவரெண்ணிலர்க்கு முன்படைத்தார். (6)

(ப - ரை.) ஓடு நல்நதியில் = பிரவகித்துச் செல்லாநின்ற யாற்றனுள், இரண்டு = இருசரித்துக்கள், நீரில்லை = தண்ணீ ரேயிலதாம், ஒன்று வெண்மணலதாம் = ஏகமோ வெள்ளைமணல் நிறைந்ததாம், இதனில் = மணனிறைந்த இதில், ஆடிநீர் துளைந்து பருகினர் = ஸ்நாநஞ்செய்து நீள்போது ஜலக்கிரீடை புரிந்து பாலொத்த நீரைமாந்தினர், அந்தியாகி = பகன்முடிவாகி, மேல்வரு நகரடைந்தார் = இனியுண்டாகப் போவதாய பவிஷ்யந்நகரத்தைச் சேர்ந்தார், வீடுமூன்றெதிர்ந்தார் = இரம்மியங்களாகிய மூப்பவனங்களைக் கண்டனர், அதிலிரண்டில்லை = அம்மூன்றினுள் இரண்டுண்டாகவே யில்லை, ஒன்று = மற்றொன்றோ, மேன்மரஞ் சுவரிலாது = ஸ்தம்ப நிர்ப்பித்தியதாகி யிருந்தது, கூடிய அவற்றில் = அடைந்த அம்மூன்றில், சுவரிலாவீட்டில் = நிர்ப்பித்தி பவனத்தில், குடிபுகுந்திருந்தனர் குமரர் = அம்மூன்று அரையகுமாரரும் கிரகப்பிரவேசஞ் செய்து வாழ்ந்தனர். (6)

ஒருவருங் காணுநகரிலே = எவரும்பாராத பட்டணத்திலே, வெளிவீட்டுறைபவர் = வெட்ட வெளியாய இல்லத்திருப்பவர், கனகபாத்திர மூன்று = காஞ்சனபாத்திரம் மூன்று, அருகுறக்கண்டார் = சமீபத்தி லிருக்கப்பார்த்தனர், அதில் இரண்டோடாம் = அம்மூன்றனுள் இரண்டு கபாலமாம், ஒன்று அறவிலும் தாளியாம் = அத்தியந்தம் பொடியாம் மற்றொன்று, சொருபமில் கடத்தில் = வடிவமற்ற பானையில், துரோணமூன்ற

தனில் துரோணமூன் றகன்று மிக்கிருந்த = மூன்று துரோணத்தில் மூன்றுதுரோணங் கழிப்பச் சேடித்திருந்த, ஒன்றுமில்லாத, பரு அரிசியைத்தாம் = பருத்து நீண்டுமிகுத்த அரிசியை அக்குமாரர், சமைத்து = பக்குவப்படுத்தி, வாயில்லாப் பனவர் = வயிறும் வாயுமில்லாத வைதிகமறையவர், எண்ணிலர்க்கு = அளவில்லாதவர்கட்கு, முன்படைத் தார் = முன்னர் விருந்து செய்தனர்.

(ஸ்ரீ - வீர.) அம்மூன்று நதிகளுள் ஒன்று அத்தியந்தம் காய்ந்ததேயாம். மற்றிரண் டின்பாலும் ஒருதுளிநீரும் கிடையாதாம், நதியினீர் காட்சியானது அந்த லோசனங்க ளாற் சம்பவியாததேபோல அத்தியந்தம் அசத்தாயிருந்தது, அந்தனது கோளகத்திலிந் திரிய மில்லாததேபோல் அந்நதியில் அறல் அத்தியந்தம் இல்லாதிருந்தது. வெண் மணலாய் வறண்டு கிடந்த அந்நதியில் அம்மூவரும், வெம்பிய ஜனங்கள் ஸ்ரீ கங்கையில் வீழ்ந்து குளிப்பதேபோலும் ஸ்ரீபிரஹ்ம விஷ்ணு ஹரர்கள், ஸ்ரீகங்கையின்கண் மூழ்கிச் சுகிப்பதே போலும் ஆதரவுடன் குளித்துச் சுகித்தனர். சிரகாலம் ஜலக்கிரீடைசெய்து, க்ஷீரோபம நீரைப்பருகி அவ்வரைய குமாரர்சயம் மகிழ்ந்த மனத்தராய்த் தாங்கள் வாஞ் சித்த நகரத்தையடையும் பொருட்டுச் சென்றனர். பின்திறுந்தத்தில் திவாகரன் அத்த மிக்கும்போது இனிமேற் புதிதாகப் பண்ணப்படுவனவாய்க் குன்றுகளோடு கூடிக்குன் றங்கள் போன்ற மாளிகைகளோடு கூடிய மூன்றுநகரங்களை யடைந்தனர். அவைமேலே பதாகைகளானும் கேழேபத்மினிகளானும் வியாயிக்கப் பெற்றிருந்தன; நீலாகாசங்கள் போலும் சுந்தரங்களாயும் சூனியங்களாயும் விளங்கும் ஜலாசயங்கள் அங்கு நிறைந்திருந் தன. தூரத்திலேயே கேட்கும்படியான பரஸ்பரம் உரக்கப்பேசுஞ் சப்தங்களும், சுர மூர்ச்சனை முதலிய இராகத் தொனிகளும் அங்கு நிறைந்திருந்தன; அந்நகரத்துள்ளவர் கள் ஆடியும் பாடியும் அருமகிழ்வுற் றிருந்தனர்கள். ஆண்டு அதிரம்மியமாய அழகிய மாளிகைகள் மூன்றிருக்கக்கண்டனர், மகாகிரியின் சிருங்கங்கள்போல அவைகள் இரத் தினங்கள் பதித்த மாதங்கச் சுவர்களோடு கூடிவிளங்கின. அம்மூன்றினுள் ஒன்று சுவ ரிலாததேயாம், மற்றிரண்டு மனைகளோ இன்னும் நிர்மிதமே யாகவில்லை அம்மூவரும் அந்த மூன்றினுட் சுவரிலாமனையில் மிகவும் மகிழ்வுடன்புகுந்து இளைப்பாறினர். எழுந்து புகுந்து அற்புதங்களைக் கண்டு கண்டு அங்கு மிங்குமாக அம்மனையுள்ளே சுற்றிச் சுற்றிப் பார்த்தனர், ஆண்டு, அழகிய வதனம் வாய்ந்த அவ்வந்திமைந்தர் மூவரும் தப்தமாய தங்கத்தா லாக்கப்பட்ட பாத்திரமூன்றை யடைந்தனர், அம்மூன்றினுள் இரண்டு ஓடா யிருந்தன, ஒன்று சூரணமயமாயிருந்தது, அந்நீண் மதிமிக்கோர் அச்சூர்ணரூபமாய பாத்திரத்தை யோக்கியமெனக் கைக்கொண்டனர், அப்பாத்திரத்தில் அநேகருக்கன்ன மிடும் பொருட்டு ஒன்று குறைந்த நூறில்லாத தொண்ணூற் றொன்பது துரோண அய சியையிட்டுச் சமைத்தனர், போஜனஞ்செய்ய மூன்று பிராஹ்மணர்களை அவ்வரைய குமாரர் அழைத்துவந்தனர், அம்மறையவர் மூவரில் இருவர் தேகமேயில்லாதவர். ஒரு வன் முகமேயற்றவன், வாயில்லா மறையவன் நூறுதுரோண அரிசிகொண்டு சமைத்த அன்னம் முழுதையுமே உண்டனன் இதிற் பாடபேத முண்டென்றறிக. எட்டாடகந் துரோண மெனப்படும், பலம் பிரகுஞ்சகம் மூஷ்டிகுடவம் அதன் சதுட்டயம், நான்கு குடவங்கள் பிரஸ்தமாம் நான்குபிரஸ்தம் ஆடகம் எட்டாடகம் துரோணமாம், இருது ரோணம் சூர்ப்பமெனப்படும், சிலதேசத்தில் நான்காடகம் துரோணமெனவும்,32சேரது வெனவும் வழக்கம். அரசகுமாரரால் எம்மூத் துரோணம் சமைக்கப்பட்டதோ அதுமூத் துரோண மற்றதாம் என்பது பாடபேதம்.

(ச.) நதி மூன்றில் நீரில்லை = எவ்வளவுஞ் சலமின்றும், ஆடிநீர்துளைந்து = வெகு காலஞ் சலக்கிரீடைசெய்து பருகினர் = க்ஷீரநோர் நீரைப்பானஞ்செய்தவராம், குமாரர் = இராஜபுத்திரர் மூவரும், பனவர் = பிராமணர்.

(ஸ்ரீ - வீர - அ - கை) தொடங்கியதை யுபசங்கரித்தல்:—அவரென.

அவரெலா நிரம்பவுண்டபின் மிருந்ததருந்தினர் வேட்டைகளாடி
யிவர்கண் மூவருமங் கிருந்தனரென்ன விளமையா னம்பினன்சிறுவன்
புவனமுமிவ் வாறறிவிலோர் காண்பர் புகன்மனவிரிவு சங்கற்பம்
விவரமாமிதனா லுலகமாமிதனை விடுநிருவிகற்ப மாயிடுநீ.

(ப - ரை.) அவரெலாம் = முகமற்ற பகுபோஜிகளாகிய பிராஹ்மணர் யாவரும், நிரம்ப உண்டபின் = பூர்ணமாக அருந்தியபின்னர், மிருந்த தருந்தினர் = சேடித்ததை யுண்டனர், வேட்டைகளாடி = வேட்டைக் குதூகுலத்துடன் விநோதித்து, இவர்கண் மூவருமங்கிருந்தனர் = இவ்வரைய குமாரர் மூன்றுபேரும் அப்பவிஷ்யத் நகரத்தில் வாழ்ந்திருந்தனர், என்ன = என்று தாத்திரிகூற, இளமையால் நம்பினன் சிறுவன் = விசாரமில்லாத மதியினால் அப்பாலன் நிச்சயமாகவே விசுவசித்தனன், புவனமும் இவ் வாறு அறிவிலோர் காண்பர் = இச்சமுசார ரசனையையும் இங்ஙனமே விசாரமில்லாத சித்தமுடையவர் பார்ப்பர், புகன் மனவிரிவு சங்கற்பம் = சொல்லாநின்ற மனோவிலாசமே சங்கற்பஜாலமாம், விவரமாமிதனா லுலகமா மிதனை = சங்கற்பஜாலமே யாய இத்தொழிலாலே உலகமியாவுமாம், இத்தகைய பீஜபூதமாய சங்கற்பமாத்திரத்தை, விடுநீ = நீ விட்டொழித்தி, நிருவிகற்பமாயிடு = நிருவிகற்பத்தைப் பற்றி நிச்சயமாகச் சாந்தியை அடைந்து சுகிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) எல்லாவுலகமும் சங்கற்பஜாலப் பிராந்தியேயாம், சங்கற்ப புஞ்சவினையேயெனக் கூறல் யாதுகொலோ வெனின்? மனவிரிவு என்பதாம், பயன்றெரிப்பார் இதனைவிடு என்றார். நிருவிகற்பத்தைப் பற்றி = நிருவிகற்ப வஸ்து ஆகாரமாகி சமுசயமில்லாமற் பிரஹ்மாத்ம விடயநிச்சயத்தை யடைதி, சமுசார உபரதிரூபச் சாந்தியையும் அடைதி, பிராஹ்மணர் அயின்றபின் எஞ்சிய பிரசாதத்தை நிருபமைந்தர் உட்கொண்டனர், அம்மறையவர் மூவரும் அரசகுமாரர் மூவரும், மகிழ்வுடன் பரமானந்தத்தையடைந்தனர், வேட்டைகளானும் மற்றைய விளையாட்டு களினாலும் காலங்கழித்துக் கொண்டு அம்மன்னர் மைந்தர் மூவரும் பரமானந்த பரிதர்களாய்வரும் பெரும்பட்டணத்தில் இன்றும் வசிக்கின்றார்கள். இச்சுபமான பாலக ஆக்கியாயிகையைத் தாத்திரி பாலகனுக்குக் கூற அவிசாரத்தாற் கதையிதை மெய்யென வெண்ணி பரமசந்தோஷத்தை யடைந்தனன்பாலகன். சித்தாக்கியானத்தின் பின்னர்ப் பிரவிருத்தமாய எச்சகத்பிரத்ய யத்தின் விகற்பமாத்திரத் தன்மைக் கதையுளதோ அதன் பொருட்டு உதாகரணமாக இப்பால காக்கியாயிகை யானது ஹே கமலலோசன உன்பொருட்டு எம்மாற் கூறப்பட்டது. இங்ஙனம் விகற்பமாத்திர வடிவ இப்பாலக ஆக்கியாயிகைக் கொப்பாகக் கேட்டபாலகனது பிரதீதிக் கொப்பாகத் திடமாகக் கற்பிக்கப்பட்ட உக்கிர சங்கற்பங்களானே இச்சமுசாரவிலாச ஆடம்பரமானது மகாதிடதரத் தகைமையை யடைந்து விட்டது. முதலிற் பரமாத்மாவினது சங்கற்பமாத்திரம் கிளம்பியது அதன் பின்னிது ஜனவியாபாரங்களினாலும் சூரிய வியாபாரங்களினாலும், திவரம்போல வெகுவித்தாரத்தை யடைந்து விட்டது, விடவே சங்கற்பத்தியாக மாத்திரத்தினாலே நிருவிகற்ப சொரூப அவஸ்திதியாமெனக் காண்பித் துபசங்கரிப்பார், நிருவிகற்பமாயிடு நீ யென்றார். சங்கற்பஜாலத்க

பனையே சகல ஜகத்துமாம், சங்கற்பஜால கலனையாலோ மனோவிலாசமாம், இராகாதி விருத்தி விசேட்டங்களும் அதன் விசேடங்களும் சங்கற்பமே யென்றுணர்தி, அத்தியர்தம் சங்கற்பமாத்திரத்தை விட்டொழித்தி, சங்கற்பத் தியாகத்திலோ நிருவிகற்ப ஆத்ம நிச்சயமே காரணமாதலின், நிருவிகற்பத்தை நன்குபற்றி நிட்டைபெறுதியேல் துணிபாகப் பரமசாந்தியையே யடைவாய்.

(ச.) அங்கு = இனியுண்டாகும் நகரத்தில், இருந்தனரென்ன = சுகமாகவசித்தார்களென்று மாதாசொல்ல, சிறுவன் = பாலன், இளமையால் = நிர்விசாரபுத்தியால், நம்பினன் = உண்மையாக நிச்சயித்தான், புவனமும் = இச் சமுசாரகற்பனையையும், இவ்வாறு = இத்தன்மையான பாலகன்கதைபோல், அறிவிலோர், விசாரமற்ற சித்தத்தினர், காண்பர் = திரமுறுவதாய் நிச்சயிப்பர், மனவிரிவு = மனோவிலாசம், சங்கற்பம் = சங்கற்பஜால கற்பனையாம், விபரமாமிதனால், சங்கற்பஜால கற்பனையே, உலகமாம் = சகல ஜகத்துமாய், இதனைவிடு = சங்கற்பமாத்திரத்தை மிகவும்விட்டு, நிருவிகற்பமாயிடுநீ = நிர்விகற்பத்தை யாசிரயித்து இராமா நீ சாந்தியையடைவாய் நிச்சயம்.

## பாலன் கதை முற்றிற்று.



## சித்தன் கதை.

---

(ஸ்ரீ - வீர - அ - கை.) முற்சர்க்கவீற்றில் இயம்பிய நிருவிகற்ப நிச்சயத்தைப் பற்றும் பொருட்டுச் செய்யத்தக்கது யாது எனச்சங்கித்து, சத்தியாதி யிலக்கண பிரஹ்ம விசாரம் செய்யத்தக்கதாம் எனவூகத்தோடுங் கூறுகின்றார்:—தங்களென.

(ச - அ - கை.) முன் பாலன்கதையிற் பிரபஞ்சமித்தையே யாயினும் அவிசார தசையில் பரமாத்மாப்போல் தோற்றமெனப் பட்டது, இப்போது சித்தன்கதையில் கேவலந் தோற்றமாத்திரமன்று மற்றென்னெனிற் சுகதுக்க அநுபவமுண்டாகலின் அர்த்தக்கிரிய திமுளதாமாயினும் மனோவிலாச மாத்திரம் பிரபஞ்சமெனப் படுகின்றது. அதிற் சமுசாரம் அவிசாரசித்த மாகையால் விசாரத்தால் நிவிர்த்தியாமாதலின் விசாரமுபதேசித்தல்:—தங்கள் என.

தங்கள்சங்கற்பத்தா லறிவில்லோர் சாலமோகிப்பர் நல்லறிஞர்
பொங்குநல் விசாரமதியினன் மயங்கார்புந்தியாற் பொய்மையை யொழித்துத்
துங்கமெய்யுணர் வாய்பந்தமற் றிருந்துந்தொடர்புறு பந்தமுண்டென்று
பங்கமுற்றபரே லமலமாயழியாப் பரம்பொருள் பந்தமுற்றிடுமோ. (1)

(ப - ரை.) அறிவில்லோர் = மூடர், தங்கள் சங்கற்பத்தால் = தமது சிந்தனைவயத்தால், சாலமோகிப்பர் = மிகவும் மயக்கத்தை யடைவர், நல்லறிஞர் = மெய்யுணர்வினர், பொங்குநல்விசாரமதியினால் மயங்கார் = ஆராய்ச்சிமிகுந்து மோகஞ்சிறிதுமில்லாத மதியினாலே மயக்கத்தைமருவுறார், புந்தியாற் பொய்ம்மையை யொழித்து = தெளிந்த மதியினாலே அசத்தையகற்றி, துங்கமெய் உணர்வாய் = பரிசுத்தமான சத்தைவிசாரித்தறிவாய், பந்தமற்றிருந்தும் = அபத்தனாகியிருந்தும், தொடர்புறு பந்தம்உண்டென்று = அநாதியாய்த் தொடர்ந்த பந்தமுடையவனென்று புலம்பி, பங்கமுற்றபரேல் = துன்புற்று வாளாசோகிக்க வேண்டாம், அமலமாய் அழியாப் பரம்பொருள் = நிருமலமாகித்

கெடாத ஆத்துமதத்துவம், பந்தம் உற்றிடுமோ = பந்தத்தையேன் எங்ஙனம் எதனு லடையும்?

(ஸ்ரீ -வீர.) தருமத்தைப் போலுஞ் சந்ததம் அநுஷ்டிக்கத்தக்க விசாரமிருந்து, மோகாடம் பரஹீனமான மதியாற் பண்டிதன் மோகத்தை யடையான், கயற்றாற்கட்டுப் பட்ட சகுந்தப்புட்போல யான் கட்டுப்பட்டுளேன் என்னசெய்வேன் எனின்? அயரேல் தன் சங்கற்பவயத்தினாலே அஞ்ஞன் மோகத்தை யடைவன் பண்டிதன் அடையான்; நாசமாகாத பரமாத்மாவி னிடத்தில், நாசவடிவையுடைய தென்னுஞ் சங்கற்பத்தாற் குழந்தையே யன்றோ அச்சமுறும்! அசம்யக் தரிசனத்தையகற்றிச் சம்யக்தரிசனத் தைப்பற்ற யாதுகொலோ வுபாயமெனின்? மோகஞ்சிறிதும்பற்றாத விசாரதருமத்தோடு கூடிய மதியினானே யிப்போது சத்தியவத்துவையே விசாரிப்பாயாக, அசத்தியவத் துவை யகற்றுவாயாக; அபத்தனாக இருந்தும் பத்தனென வெண்ணிக் கரைந்து வீணா கவேயேன் சோகிக்கின்றாய், அநந்த ஆத்மதத்துவமானது என் எதனால் எங்ஙனம் தானா யிருத்தலின் அன்னிய மின்மையின் அசங்கமாதலின் கட்டுப்படும்?

(ச.) பொங்குநல் விசாரமதியினால் = வேதாந்த வாக்கியார்த்த மீமாம்ஸையோடு கூடியதனால் (பிரமாணத்தா லுண்மையறிதல் மீமாம்சையாம்) அவித்யாவிலாசரகிதமான புத்தியோடு கூடினமையின், நல்லறிஞர் = பண்டிதர், மயங்கார் = மோகியார், அறி வில்லோர் = விசார சூன்யரான மூடர், தங்கள் சங்கற்பத்தாற் சாலமோகிப்பர் என்பது அன்வயம், பொய்ம்மையை = அசத்தியமான திருசியத்தை யொழித்து, துங்கமெய் = சத்தியமான பிரஹ்மத்தை, விசாரித்து உணர்வாய், பந்தமற்றிருந்தும் = பந்தரகித மான ஆன்மாவை, பந்தமுண்டென்று = பந்தமுடையனாக வறிந்து, பங்கமுற்றயரேல் = எந்நிமித்தம் மிகமோகிக்கின்றாய், பந்தராகித்தியத்தைக் கூறல், பந்தமுற்றிடுமோ = எப் படி எதனால் என்ன பந்தத்தையடையும், என்னபந்தத்தையடையுமென்பது, கர்மவிஷய ஆட்சேபமும், எப்படியென்பது, உபாயாட்சேபமும், எதனாலென்பது, கரணாட்சேபமும் என்பதாம்,

(ஸ்ரீ-வீர - அ - கை.) உண்மையான நிலைதோன்ற அதனையே விரித்துரைத்தல்:—

அந்தமற்றொன்றாய் விகற்பமற்றறிவா யழிவிலாப் பரம்பொருளிருக்கப்
பந்தமுற்றவரார் முத்திபெற்றவரார் பாவனைவிகற்பமே யனைத்துஞ்
சிந்தனைவிரிவு பந்தமாமதனைத் தீர்ந்திடன் முத்தியா மனத்தின்
சொந்தலீலையினாற் றூரமாமணித்துந் தூரமுமண்ணிதாய்த் தோன்றும்.

(ப - ரை.) அந்தம் அற்று = அநந்தமாய், ஒன்றாய் = ஏகரூபமாய், விகற்பமற்று அறிவாய் = நிர்விகற்ப சிற்கனானந்தமாய், அழிவிலாப் பரம்பொருள் = நித்தியமாகிய மேன்மையாமான்மவஸ்து மாத்திரம், இருக்க = இரண்டாவதின்றி யிருப்ப, பந்தமுற்ற வரார் முத்திபெற்றவரார் = கட்டுற்றவர் யாவர், விடுபட்டவர் யாவர்; பாவனைவிகற்ப மேயனைத்தும் = நானாவிதமான வெண்ணங்களே யாவுமாம், சிந்தனை விரிவுபந்தமாம் = மனத்தின் உல்லாசமே பந்தமெனப்படும், அதனைத் தீர்ந்திடன் முத்தியாம் = அம்ம னத்தை யொழித்தலே மோக்ஷமாம், மனத்தின் சொந்த லீலையினால் = சித்தத்தினு டைய தன் விளையாட்டுகளினாலே, தூரமாம் அணித்தும் = சமீபத்ததும் தூரத்ததாம், தூரமும் அண்ணிதாய்த் தோன்றும் = சேய்மைத்ததும் அண்மைத்ததாய் தோன்றும்.

(ஸ்ரீ - வீர.) உண்மையாய்ப் பந்தம் அசம்பவமாகிய வமதி, மனத்தின் விஜ்ரும்பண மே பந்தமென்றும் அதன் அடக்கமே மோக்ஷம் என்றும் பலிதப்பொருள் துணியப்

பெற்றது. அற்றே லுண்மையாகப் பந்தமிலதாகியவழி மனத்திற்குப் பந்தமேதுத் தன்மை யாங்ஙனஞ் சம்பவிக்கும் என ஆசங்கித்து அதன்பொருட்டு அதற்கு முடியாததையுஞ் செய்யுந்தகைமை கூறப்படுகின்றது:—மனத்தின். தற்சம்பந்தமாய லீலைகளில் பிரவிருத்தமான மனத்திற்கு யோஜனை சமூகமும் கோவின்பதம் போலுந் தோற்றும்= கோவின்பாதமும் யோஜனசமூகமாம்; கண்டாமன்றோ கனுமுதலியவற்றே தேசகால தீர்க்கத்தகைமை முதலியவற்றின் பெருமயல். அநந்த சிற்கனனந்த நிர்விகற்ப ஏகரூப பரமான்மா மாத்திரமிருப்ப இரண்டாவ தொன்றும் இன்மையின் பத்தன்யாவன்? முக்தன் யாவன்? ஆகலின், மனத்தினது உல்லாசமாகிய ஆத்மவத நாடகமே பந்தமாம் விவேகத்தோடு கூடியமனம். தன்சங்கற்ப விகற்பாங்கிசம் விட்டு ஆன்மாவை யறிதலே மகோதயமென்னும் மோக்ஷமாம்; மனத்தினது அகடித கடனுசக்தி பிரசித்தமேயாம்; மனோரதத்திலும் சொப்பனத்திலும் சங்கற்பகலனைகளாகிய தன் லீலைகளில் மனத்திற்குச் சேய்மையும் அண்மையாம், அண்மையும் சேய்மையாம். திருஷ்டாந்தம் கோவினடி, அநேகயோஜனை தூரமாம், அநேக யோஜனை தூரமோ கோவினடியாம்; அற்பமாம், அநந்தம் = பரிச்சேதமற்றது, நித்தியம் = அபாவமற்றது.

(ச) அந்தமற்று = அநந்தமாய் = தேசகால வஸ்துக்களால் அபரிச்சின்னமாய், ஒன்றாய் = ஏகரூபமாய், விகற்பமற்று நிர்விகற்பரூபமாய்ச் சஜாதீய விஜாதீய சுவகதநாநாத்துவ ரகிதமாய், அறிவாய் = சிற்கனந்தமாய், அழிவிலாப் பிரமமேயிருக்க = அநந்தான்ம தத்துவமுள்ளளவில், துவிதீய வஸ்துவாகிய பந்தவேது இன்மையின், பந்தமுற்றவரார், பந்தமியாது மின்றென்பது பொருள். முத்திபெற்றவரார், பந்தமின்மையின் மோக்ஷமு மின்றென்பது பொருள். உபசங்கரித்தல், பாவனை விகற்பமே யனைத்தும்= பந்தமுதலிய யாவும் மனத்தினுல்லாச மாத்திரமான சங்கற்பமேயாம், சிந்தனை விரிவு பந்தமாம், வாஸ்தவமான பந்தவேது வின்மையின், மனதின் சங்கற்ப விகற்பமே பந்தமாம், அதனைத் தீர்ந்திடின் = மனதின் சங்கற்ப விகற்பத்தை விடின், விட்சேபமின்மையின் முத்தியாம்; விசுத்தமான ஆன்மசொரூபமே சேடிக்குமென்பது பொருள். தொந்த லீலையினால் = சங்கற்ப விலாசத்தினால், அணித்தும்=பசுவின் குளப்படியாகிய சமீபதேசமும், தூரமாம் = அநேகயோஜனை தூரதேசமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) செய்ய முடியாததையும் செய்விக்கின்றது மாயாமயம் மனமெனக்கூறிய பொருளைக் கதைதொடங்கித் தெளிவித்தல்:—கருத்தின் என,

கருத்தின் வல்லமையாற் கற்பமோர் கணமாங்கண மொருகற்பமா மிவற்றைத்
திருத்தமா யுணர்த்து மொருகதை யதனுற் செகமெனு மிந்திரசாலங்
குருத்துவமான மனத்தினுள் ளிருக்குங் கொள்கை தோற்றிடு மெனவுரைப்பா
னொருத்தனிங் கரிச்சந்திர குலத்துள்ளானுத் தரபாண்டவ நாட்டோன். (3)
செந்திருவாணி புகழ்மகன் விந்தைசெறி புயன்லவணனும் பெயரோன்
மந்திரநிறைந்த வமைச்சர்தற் சூழமணிகொள் சிங்காதனத்திருப்ப
விந்திரசால வல்லவனொருவ னெய்தினனி றைஞ்சி நின்றேத்திச்
சந்திரனனைய பீலிகையேந்தித் தாரபதிகாண் கெனச்சுழற்ற. (4)

(ப - ரை.) கருத்தின் வல்லமையால் = மனத்தினது ஆற்றலால், கற்பமோர் கணமாம் கணமொரு கற்பமாம் = கதபகாலம் ஒருகணமென அற்பமாம் கணகாலம் ஒரு கற்பமெனமகத்தாம், இவற்றைத் திருத்தமாயுணர்த்து மொருகதை = இவ்விடயங்களை

மிகத்தெளிவாகத் தெரிவிக்கும் ஒப்பற்ற ஒருவிருத்தாந்த முளது கூறுகின்றேன், அத னால் = அவ்வுத்தமமான கதையினால், செகமெனும் இந்திரசாலம் = உலகசம்பந்தமான இந்திரஜால ஸ்ரீ குருத்துவமான மனத்தினுள் ளிருக்குங்கொள்கை, தோற்றிடும் = கன மான வாசனைநிறைந்த அந்தக்கரணத்தின் கண்ணே நிதிபெற்றிருந்த இயல்பு இலங்கி டும், என உரைப்பான் = என்று கூறத் தொடங்குகின்றார், உத்தரபாண்டவ நாட் டோன் = உத்தரபாண்டவ மென்னும் விசாலதேசத்தை யரசாண்டவனாய், அரிச்சந்திர குலத்துள்ளான் = ஹரிச்சந்திர குலோற்பூதனாய், இங்கு ஒருத்தன் = இவ்வுலகில் ஓரரசனிருந்தான்.

செந்திருவாணி புகழ்மகன் = செவ்விய இலக்குமியும் கலைமகளும் புகழும்படியான மிக்கசெல்வும் கல்வியும் வாய்ந்தவன், விந்தைசெறிபுயன் லவணனும் பெயரோன் = அற்புதம் நிறைந்த அதிபுஜபலத்தையுடைய இலவணமகாராஜன் என்னும் பெயரினை வாய்ந்தவன் மந்திரநிறைந்த அமைச்சர்தற்சூழ = இராஜநீதியில் வல்லவர்கள் ஆகிய மந் திரிமார்கள் தன்னைச் சுற்றியிருப்ப, மணிகொள் சிங்காதனத்திருப்ப = நவரத்நகசிதமய சிங்காசனத்தின்கண் வீற்றிருந்தபோது, அக்கொலு மண்டபத்தில், இந்திரசால வல்ல வன் ஒருவன் எய்தினன் = இந்திரசாலவித்தையிற் றேர்ந்தவன் ஒருவன் உற்றனன் இறைஞ்சி நின்றேத்தி = நமஸ்கரித்து நின்று தோத்தரித்து, சந்திரன் அனைய = சந்திர னுக்குச் சமானமான, தராபதி = பூபதியே, காண்கென = நீ யிவ்விசித்திரத்தைப் பார்ப்பாயாகவென்று. பீலிகையேந்தி = மயிற்றோகையைக் கரத்திற்கொண்டு, சுழற்ற = சுற்றிய காலத்தில்.

(ஸ்ரீ - வீர.) கற்பங்கணஞ் செய்யுமுள்ளம் உள்ளே கணத்தையுங் கற்பமாக்கிடும், ஆகலின் தேசகாலக் கிரமம்யாவும் மனத்தின் அதீனமென யாவருமேயறிவர். மனமா னது சர்வநிர்மாண சமர்த்தமாயின் யாங்ஙன மிப்போது நம்மனோர்க்குச் சர்வசர்க்க அசக்தியெனின்? இரஜோகுண உற்கர்ஷமாங்கால் தீவிரத்தன்மை தமத்தின் உற் கர்ஷ மாம்போது மந்தத்தன்மை, யென்னும் சம்வேக வேற்றுமையானும் ஆகாரம் விசேடமாக விருத்தியாகிப் பருத்தன்மை, குறைந்தபோது அற்பத்தன்மை யெனப் பேதமாதலினானும், அவ்வவ்வஸ்துசர்க்க அநுகூல உபாசனாதி விலம்பனத்தினானும், அடைவுற்ற சர்க்க அசக்தியினாமே, மனத்திற்குள்ள வாஸ்தவ சர்வ சர்க்கசக்தியை யில்லாமற்செய்ய ஆற்றலுடையே மல்லேம். இதுவிடயத்தில் உத்தமமான ஆக்கியா னம் ஒன்று கூறக்கேட்பாயாக கேட்டமாத்திரையானே ஜகத்சம் பந்தி இந்திரஜால இலக்குமி மனத்தினுள்ளே மருவியிருக்கும்வகை மலர்ந்து தோன்றும்; நீயேயவ்வ கையை நன்கறிந்து கொள்ளலாம், இவ்வசுதாபீடத்தில், நானாவன சமாகுலமாயும் விசாலமாயும் சர்வ ஐசுவர்யங்களாலும் பிரஜைகளாலும் நிறைவுற்றதாயம் உத்தராபாண் டவம் என்னும் பெயருற்றதாயும் இலங்கும் ஒரு பெருந்தேயம் உண்டு. ஆண்டுப்பரம தார்மிகனாய் ஹரிச்சந்திரகுல உற்பவனாய் இலவணமகாராஜன் என்னும் அரசன் பூமியல் இறங்கிவந்துள்ள இரவிக்கொப்பாக இருந்தனன். அந்த இலவண மகாராஜனுடைய கீர்த்திகளேயாகியபுஷ்பசேகரங்களான் மகரந்தங்களான் அதிவெண்மைவாய்ந்த ஸ்கந்த மண்டலங்கள் வாய்ந்த அங்குள்ளசைலங்கள், மிகவும் விபூதியுத்தூளனஞ்செய்து விமலா கிருதியுடன் விளங்கும் ருத்திரர்கட் கொப்பாக விளங்கிக்கொண் டிருந்தன. உலகிலும் குசுமசேகரங்களான் மகரந்த வீட்சியான். ஸ்கந்த மண்டலங்கள் பாண்டுரங்கள் ஆவது வெளியேயாம், இக்கந்தங்களில் வியாப்த கீர்த்தியுடையவன் அவ்வரசன் என்பதுகருத்து சிரத்தில் வீற்றிருப்பது சேகரமாம். அம்மன்னவன் கபட்டத்தன்மையை யறியவே தி

யான், வணக்க மின்மையைக் கண்டதேயில்லை, பரா ஐசுவரியங் கொள்ளும் பேராசையை நண்ணியதே கிடையாது. மூலம் க்ருத்றுதை = க்ருது=பேராசைகாட்டும் பகுதி, க்றுவிகுதியுற்றுத் தன்மையைக் காட்டும்போது க்ருத்றுதையாயது. அவ்வரையன் கொடையையும் பெருமையையும் முகமானது வசனிக்குந் தொழிலை யுடைத்தாயிருப்பது போலும், ஸ்ரீ பிரஹ்மதேவர் படிகமாலையை யுடைத்தா யிருப்பதேபோலும் உடைத்தா யிருந்தான். ஆகாயத்திற் செல்லும் திவசாதிபனாகிய அருக்கன்தின அட்டமபாகமாக, அதாவது முகூர்த்தத் துவயமாக அம்மன்னவன் ஒருக்கால் சபாஸ்தானத்தில் சிங்காதனத்தில் வீற்றிருப்பனானன். ஆண்டு ராஜநீதியில் வல்லுநர்களான மந்திரிமார் முதலாயினோர் சூழ்ந்திருப்பச் சுகமாக அம்பரத்தில் இந்துவைப்போல அவ்வரைய னமர்ந்திருந்தபோது, சாமந்த சேனைகள் சம்பிரமத்துடனா புகுந்து தலைதாழ்த்தி நின்றிருந்தபோது அச்சபையில் இந்திரஜாலக் காரனுக்குத் தக்கவேஷ அலங்கார விருதாடம்பர சம்பன்னனாயொரு ஐந்திரஜாலிகன் மேகமானதுவரும்மழை பெய்வதற்குரிய இடிமின்னலாதியைக் காட்டிக்கொண்டுபூமியைவந் தடைந்ததுபோலும் புகுந்தனன். பாதசமீபத்திலிருப்பதாய பலபாரத்தோடு கூடிய தருவானது அதிக விளக்கத்தோடும் சிருங்கங்களானே யலங்கரிக்கப்பெற்ற மேற்பாகத்தோடு கூடியசைலத்தை வணங்கியிருப்பதே போலக் கிரீட கூடத்தோடுகூடிச் சர்வ அலங்காரங்களோடும் விளங்கும் உதார உத்தம கண்டத்தோங்கிய மகீபாலனை அவன் வணங்கினன். வாசனையோடு கூடி நிமிர்ந்தபதுமத்தை நோக்கிய அறுகாலளி ரீங்காரஞ் செய்வதேபோல அருத்தங்களின் வாசனைச் சுகமாருதத்தோடுற்று நிமிர்ந்து நோக்கிய பூபனைநோக்கி சபலலம்பட அவன் கூறியதாவது:- ஹேவியாபக மன்னர்மன்னனே, தாங்கள் பீடத்திலிருந்தபடியே ஈண்டு ஆச்சரியத்தோடு கூடிய ஒருமுக்கியமான இந்திரஜாலவித்யா அப்பாசத்தினின்றும் உண்டாயதான மித்யாகௌதுகக்கிரீடையை விண்ணிலிருக்கும் சந்திரன் அவனியைப் பார்ப்பதே போலப் பார்ப்பீர்களாக என்று புகன்று பிரமத்தைத் தரும்படியான மயிற்றோகையைச் சுழற்றினன்.

(ச.) வல்லமையால் = சங்கற்பவிலாசத்தினால், கற்பம் = பிரமகற்பமும், கணம்= க்ஷணம், மனச்சங்கற்பம் தேசகாலங்களையும் மற்றோர் விதமாகச் செய்யுமென்பது பொருள். ஒருகதை ... உத்தமமான இந்த விருத்தாந்தத்தை, யான்சொல்வேன் இராமா நீ கேட்பாயாக. குருத்துவமான = மகத்துவமான, செகம், இங்கு=இப்பூப்பிரதேசத்தில் இருப்ப = அம்பரத்திற் சந்திரன்போற் சுகமாயிருப்ப, எய்தினன் = அவ்விராஜ சபையிற் பிரவேசித்தவனாகி அப்பூபனை, சந்திரனனைய தராபதி = பூமியிற் சந்திரோதயம் போன்ற மகீபாலனே, காண்கென = நீ இவ்விடத்தி லிருந்துகொண்டே இவ்விடத்து ஆச்சரியமான வித்தையைப் பார்ப்பாயாக என்று சொல்லி, பீலியின் = பிரமையைத் தாராநின்ற மயிற்றோகையின், சூழல் = கூட்டத்தைச் சுழற்ற, உத்தராகுரவ என்பது போலும் உத்தரா பாண்டவ என்பதும் பகுவசனாந்தமே, தேசவிசேடத்தின் பெயர்= இலவணனது கீர்த்தியேயாய புஷ்பமாலையால் மலையின் மேற்பாகம் பாண்டரமா யிருந்தது. மூலம்வாசகோ யபிதா = சாக்ஷாத் சங்கேதிதம்யோ அர்த்தம் அபிதத்தேலவாசக, தஸ்ய சங்கேதிதார்த்த கோசரவ்யாபாரோபிதா. வாசகம் வாச்சியத்தை யுடைத்தா யிருப்பதேபோலும் உதாரத்தன்மையை யுடைத்தாயிருந்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தன் செய்த செயலைச்சிறப்பித்து மன்னவனிருந்த நிலைமையை யுணர்த்தல்:—சுத்தவென.

சுத்தமாம் பரத்தாற் பலவிதசிருட்டி தோற்றிட மாயைதோற்று தல்போற்
சித்தனுற்காட்டிச் சுழற்று றுபீலித் திகிரியை மன்னவன் பார்த்தா
னத்தலந்தனிலே சயிந்தவதேசத் ததிபதிவிடுத்த வோர்தூதன்
றத்துறுபுரவியொன்று கொண்டெய்திச் சதமகன் பரிக்குநேரென்று.

மன்னவவுனக்கென் றெங்கள்கோன் விடுத்தவயப்பரி யென்றலுஞ்சித்த
னின்னது போல்வதில்லை நீயிதனிலேறுவா யென்றன னினையோன்
சொன்னவை கேட்டுச் சித்திரம்போலத் துரகமே நாட்டமாய் வேந்தன்
கன்னலீரிரண்டங் கிருந்தனனறிஞர் கவலைதீர் சமாதியுற் றென்ன.

(ப - ரை.) சுத்தமாம் பரத்தால் = பரமான்மாவால் பலவித சிருட்டிதோற்றிட = நானாவித நாமரூபம் புலப்பட அவற்றின் பீஜமாய, மாயைதோற்றுதல்போல் = மாயையானது பிரதீதியாதல்போல், சித்தனுல் காட்டி சுழற்றுறு பீலித்திகிரியை = இந்திர ஜாலக்காரனாலே காண்பிக்கப் பெற்றுச் சுழற்றப்பட்ட மயிற்றோகையின்பிரமணத்தை, மன்னவன்பார்த்தான் = அரசன் நோக்கினன், அத்தலந்தனிலே = அவ்விடத்திற்றானே, சயிந்தவ தேசத்ததிபதி விடுத்தவோர் தூதன் = சயிந்தவதேச அரசன் அனுப்பிய ஒரு சாமந்தன், தத்துறுபுரவி ஒன்று கொண்டு எய்தி = பரம வேகத்தையுடைய குதிரை ஒன்றைக் கவர்ந்து வந்து, சதமகன் பரிக்கு நேரென்று = தேவேந்திரனது உச்சைசிரவ சமான ஹயரத்தினமென்று கூறி,

மன்னவ உனக்கென்றெங்கள் கோன் = ஹே இராஜாதிராஜனே, தங்களுக்குக் கொடுக்கும்படியாக எங்கள் பூபதியாகிய பிரபு, விடுத்த வயப்பரி என்றலும் = அனுப்பிய இலக்கணமும் வேகமும் பொருந்திய அசுவம் என்று கூறியபோது, சித்தன் = இந்திரஜாலிகன், இன்னதுபோல்வதில்லை = இதற்கொப்பான நற்பரிகிடைப்பரிது, நீ இதனில் ஏறுவாயென்றனன் = மன்னவனே இதில் ஆரோகித்து புவனஞ்சுற்றிப்பார்க்கலாம் எனக்கூறினன், இனையோன் சொன்னவை கேட்டு = இந்திரஜாலிகன் சொன்னவாக்கியங்களைக் கேட்டவுடனே, சித்திரம்போல = ஓவியமொப்பிய ஆகிருதியனாய், துரகமே நாட்டமாய் = குதிரையையே நோக்கிக்கொண்டு வேந்தன் = மன்னவன், கன்னல் ஈரிரண்டு அங்கு இருந்தனன் அறிஞர் கவலைதீர் சமாதியுற்றென்ன = மகான்கள் கிலேசமறக்கழிந்த நிர்விகற்ப சமாதியையடைந்திருந்ததுபோல இரண்டுமுகூர்த்தம் அச்சிங்காதனத்திலேயே அசையாம லிருந்தனன். (5-6)

(ஸ்ரீ - வீ ர.) பரமான்மாவால் நானா நிர்மாணங்கட்குக் காரணமாயிரா நின்ற மாயை போலும் நானாவர்ணக் காந்திவாய்ந்த படலங்களாந் தேஜோரேணுக் கணிறைந்து விளங்கும் அதனை அரசன் சுரவிமானத்தி லிருக்கும் இந்திரன் தன்வில்லதையைக் கண்டது போலுங் கண்டனன். அச்சமயத்தில் சிந்துதேசீய நிருபசாமந்தனும் அசுவபாலகனொருவன் சபையிற்புகுந்தனன்; அவன் பரமவேகத்தோடு கூடியதும்மிக அழகுவாய்ந்ததுமாகிய ஓரசுவத்தையும் தன்னொடுங் கொணர்ந்திருந்தனன்; அவ்வசுவபாலகன் அக்குதிரையை எதிரில் நிறுத்தி அரசனைநோக்கிக் கூறுவதாவது:—ஹே மஹீபதே ! இவ்வயரத்நமானது தேவேந்திரனது உச்சைசிரவம்போன்று பிரக்கியாதியானது, வேகமாகப்பாய் தன் முதலிய குணங்களானே மாருதம் மூர்த்தமடைந்தது போன்றதாம் இதனைப்பார்ப்பீராக என்றனன். என்றதுபோல மேலுமேலும் அரசனே மயலுற்றனன் என்பதாம் ஹே பிரபுவே ! எங்கள் பிரபுவாகிய அரசரால் தங்கள் பொருட்டிக்குதிரை அனுப்பிக்கப்பெற்றது; யோக்கியமாகிய மகாத்மாக்கட்குத் தானோர்ப்பணஞ் செய்தலானே பதார்த்

சத்தினது அழகு மிகவும் சுபமாக விளங்குகின்றது. என்றிவ்வண்ணம் அவன் கூறிய போது அரசனைநோக்கி இந்திரஜாலக்காரன் கூறுவதாவது; ஹே பிரபுவே ! நல்லகுதிரையாகிய இதன்பேரிலேறிப் புவனஞ்சுற்றி வரலாம். இவ்வண்ணங் கூறக்கேட்ட பார்த்திவன் குதிரையையே பார்த்துக்கொண் டிருந்தனன். இமைக்கொட்டாத திருஷ்டியோடும் சித்திரவுவமை யாகிருதியுடையவனாகிச் சித்திரத்திற் றீட்டியதுபோலும் நிச்சலனாகிக் குதிரையையே பார்த்துக்கொண் டிருப்பது, முதலவாக சபையிலுள்ளவர்தம் பிரதீதிசித்த ஆர்த்த அறுவாதமாம், இராஜப்பிரதீதி திருஷ்டமோ இனியரசனே கூறுவன். அம்மன்னவன், ஆத்மாவின் பாற்றியான ஆசக்தன் நிலைபெற்றிருப்பது போலவும், இராகாதியற்றுப் பாகியதிருஷ்டியில்லா முனிவன் பரமாநந்தத்தில் மூழ்கியிருப்பதே போலவும் இரண்டுமுகூர்த்தம் அசையாம லிருந்தனன்.

(ச.) சுத்தமாம் பரத்தால் = பரமான்மாவால், தோற்றிடுமாயை = ஜநிப்பிக்கும் பீஜரூபமானமாயை, அத்தலந்தனிலே, அப்போது, காந்திமிகுந்த அந்த இராசசபையில், அக்கணத்தில் தூதன் = சாமந்தன், தத்துறுபுரவி = பரமவேகமுள்ள அழகுடைய குதிரை, சதமகன்பரிக்கு நேரென்று = இவ்வய இரத்திநம் பிரசித்தமுள்ள இந்திரன், பரியாகிய உச்சைச்சிரவமென்று சொல்லி உனக்கு = பிரபுக்கட்கும் பிரபுவாகிய வுனக்கு, என்று = பதார்த்த இலக்ஷுமி மகத்துக்களுக்கு அர்ப்பித்தலால் சுபமாய் விளங்கும் அல்லவா ! என்றெண்ணி, சித்தன் = அயிந்திரசாலிகன், பிரபுவே நீ ஏறுவாய், ஏறிப் புவனத்திற் சுற்றுவாய், கன்னலீரிரண்டு = இரண்டு முகூர்த்தம், சமாதியுற்றென்ன = பரமாத்மாவிற் றியானுபேக்ஷை மிகுந்தவன்போல், அங்கிருந்தனன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவையோர் ஆச்சரிய முறுதலும், அரசன் அகந்தெளிர்ந்துணர்தலும்:—வேத்தென.

வேத்தவையிருந்தோரையமும்வியப்புமிகுந்தனரரும்பியகமலப்
பூத்திரளோடைபோற்குவிந்திருந்தார்போதமோருபாதியோடலந்து
மூர்த்தமோரிரண்டுசென்றபின்றவிசின்முன்னுறவீழ்வுறுநின்ற
பார்த்திபன்றன்னையயலுளோர்தாங்கப்பரந்துழன்மனந்தெளிந்துணர்ந்தான்

(ப - ரை.) வேத்தவை யிருந்தோர் = மன்னவனது சபாமண்டபத் திருந்தோர் யாவரும், ஐயமும் வியப்பும் மிகுந்தனர் = சந்தேகத்தையும் சிந்தையையும் விஸ்மயத்தையும் பெரிதடைந்தனர், அரும்பிய கமலப்பூத்திரள் ஓடைபோற் குவிந்திருந்தார் = முகுளிதமாய பத்மபுஷ்ப வனமுற்ற தடாகம்போலக் குவிதலையுற்றிருந்தனர், போதமோருபாதியோடிலந்து = உணர்வானது ஒரு உபாதியுடன் றிரிந்து, மூர்த்தமோர் இரண்டு சென்றபின் = கன்னல் நான்கு கழிந்தபின்னர் தவிசின்முன்னுற வீழ்வுறுநின்ற = ஆசனத்தினின்றும் முன்பாகத்தில் வீழ்வதற்கு முயலாநின்ற, பார்த்திபன்றன்னை = அந்த மன்னவனை, அயலுளோர் தாங்க = சமீபத்தில் இருந்தவர் அணைக்க, பரந்துழல் மனந்தெளிந்து உணர்ந்தான் = சுற்றியுழலும் உள்ளம் தெளிந்து முன்னிலையை யறிந்தான்.

(ஸ்ரீ - வீர.) அச்சபாசதர்யாவரும் விஸ்மயம் நிறைந்தவராய்ச் சலனமற்றிருந்தனர்; அச்சபாஸ்தானத்தில் ஜனங்களுடைய கோலாகலமானது மெதுவாகச் சாந்தியடைந்தது; நன்மந்திரிகள் சந்தேக சாகரத்தில் மூழ்கிச் சிந்தாபரவசரா யிருந்தனர். பூபதியானவன் அசையாம லிமைக்கொட்டாமற் பார்த்துக்கொண் டிருந்தபொழுது விஸ்தாரமான விஸ்மயத்தானே உற்சாகஞ் சிறிது மில்லாதவராய், அச்சத்தானும் மோகத்தானும் அதிதுக்கிதராய், அவ்வாஸ்தானத்தி லிருந்த ஜனங்கள்யாவரும், கூம்பிய தாமரைவனத்

தின் சோபையை யடைந்திருந்தனர், மகீபதி, மகாவிஸ்மயத்தோடு கூடிய ஐந்திரஜாலிக குடிலதையின் காரணத்தானே விழிகளை யசையிற் பார்த்துக்கொண் டிருப்பப்பய மோ கத்தானே துக்கிதஜனங்கள் முகுளித அப்ஜவன காந்தியை யடைந்திருந்தனர். பூபதி நான்கு நாழிகைகழித்து உணர்ச்சியை யடைந்தனன். உணர்ச்சியையுற்ற அவன், பூமி யைத் தாங்கும், திக்கஜபாதால வாரணம் சஞ்சலமுற்றபோது ஸ்ரீ சங்கராசலமாகிகை லாய பர்வதம்போல, சிங்காசனத்தின்மீது கம்பிதத்தை யடைந்தனன்: முன்னிருந்தவ ரானே தாங்கப்பெற்றவனுகிப் பர்யாகுலமதியை யுடையப் பார்த்திவன், கலேசிறைமதி கிளம்பக்கண்ட, கல்லோல மெழுங்கடல், பொங்குநீரி னுவமையழகை (சோபையை) யடைந்தனன்.

(ச.) வேத்தவை யிருந்தோர் = அரசசபையி லிருந்த மந்திரிகள், ஒருபாதியோடு, மோகவசத்தால்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஞ்ஞையையுற்ற அரசன் மயங்கியவனுகி மெதுவாக இது என்ன பிரதேசம் இதுயாருடைய சபை என்றுகேட்டலும் அதற்குமந்திரிமார் ஹேமகா ராஜாவே ! இஃதென்ன இவ்வாறு கேட்கின்றீர்கள் தங்களுக்குற்ற மயக்க மியாதென விஞதல்:—அனையவென.

அனையவன் றன்னை யமலநெஞ்சினைநீயயர்வுறவந்ததென் னென்ன
வினையமந்திரியர்வினவலும்வேந்தன் விழித்திதுகேளுமென் றுரைப்பான்
றனையுறப்பீலிசுழற்றியிச்சித்தன்சொல்லிடமயங்கியிப்பரிமே
னினைவுறவேறிவேட்டையின்பொருட்டானீணெறிகடிதுறச்சென்றேன்.

(ப - ரை.) அனையவன்றன்னை = அவ்வரசனை, வினைய மந்திரியர் = அதிகூக்ஷ்ம மதியுடைய விநயமுற்ற அமைச்சர், அமலநெஞ்சினை நீ = தெளிந்த மதியையுடைய தேவரீர், அயர்வுறவந்ததென் என்ன = மயங்கும்படியாக நேர்ந்தது யாதோ வென்று, வினவலும் = கேட்டலும், வேந்தன் = அரசன், விழித்து = ஆச்சரியத்துடன் உன்மீ லிதவிலோசனனுய், இது கேளுமென் றுரைப்பான் = இவ்வாச்சரியமான கதையைக் கேட்பீர்களாக வென்றுரைக்கத் தொடங்கினுன், தனையுற = அதிவிரைவில் மோக மாக, பீலிசுழற்றி = மயிற்றேகையைப் பிரமாணஞ்செய்து. இச்சித்தன் = இவ்விந்திர ஜாலிகன், சொல்லிடமயங்கி நினைவுற = நல்லகுதிரை ஏறலாமென் றிவன்கூறிடப் பிராந்த சித்தனுகி, இப்பரிமேல்=இச்சைந்தவ அசுவத்தின்மீது, ஏறி=ஆரோகணித்து, வேட்டையின் பொருட்டால் = வேட்டையாட வேண்டுமென்னும் எண்ணத்தால் ஒரு வனுகவே, நீள்நெறிகடிதுறச் சென்றேன் = வெகுதூரம்வெகு வேகமாகச்சென்றனன்.

(ஸ்ரீ - வீர.) அரசனை மந்திரிமார்களும் புரவாசிகளாகிய சபையோர்களும் வேண்டி வினவுவாராயினர்; அப்போது நன்குக வுணர்வுபெற்று விநயத்துடன் ஆதரவோடும் வினவுவோரை நோக்கிச் செவிசாய்த்தனன்; தேவரீர் இவ்வண்ண மிருந்ததைக் கண்ட யாங்கள் அத்தியந்தம் பெரிதாகுலமுற்றேம், அபேத்தியமாயினும் மனம் அதனை மயலு ணர்ச்சிகள் வெளிக்காரணம் யாதொன்றையும் விரும்பாமலே அச்சம் வாட்டம் முதலிய வற்றனே கலக்கிவிடுகின்றன; எப்போதும் உதார விருத்தங்களிலும் விவேகசர்ச்சை களிலும் பரிசீலனை செய்தலாலே அதி சீதளமடைந்த நிர்மலமான தங்கள் மனது எங்ஙன னம் மயல் பயமுதலியவற்றே மூழ்கியது ? ஆயின் எத்தகையமனம் மோகயோக்கியமா கும் எனின் ? துச்சமாகிய விடயங்களைப் பற்றுதலினுனே, அவை அவிழ்ந்தால் அவிர்ந் தால் அழிந்தால் அயர்ந்தால், அவிழ்த்தல் அவிர்தல் அழிதல் அயர்தல்போலவும் லோக

விவகார விருத்திகளில் மகாமோகத்தை யடைகின்றது, விவேகத்தினலே பரிஷ்காரஞ் செய்யப்பெற்றுப் பெருமைவாய்ந்த மனமோ மயங்கிடாதாம். தங்களுடைய மனதோ தைரிய நன்மனதாயிற்றே ! என்றுபசரிப்ப, உன்மீலிதவிலோசனனுகிச் சௌமிய வதனத்துடன் அரசன் விளங்கினன். ஹே எனது அன்பர்களே ! சம்பரனது மாயையையுடைய வஞ்சகனுன இந்திரஜாலக்காரன் ஈண்டு சொற்பகாலத்திற் காட்டிய எனது இவ்வெனது ஆச்சரியமான கதையைக்கூறக் கேட்பீர்களாக ! இம்மாய வித்தைகாரன் இங்கே இன்று சுழற்றிய தேஜசோ டோங்கியொளிரும் சஞ்சல மயிற்றோகையை யான் கண்டு முன்னேநிற்கு மிக்குதிரையின் மீதேறி யொருவனுகவே மயங்கிய மனத்தனும் வேட்டையாட வேண்டுமென்று அதிவேகத்துடன் சென்றனன்.

(ச) அமல நெஞ்சினை நீ = நிர்மலமான போதமுள்ள நீ, அபருறவந்தது = பிரமைகளின் மூழ்கிமயங்கும்படி வந்தகாரணம், வினவலும் = ஆதரத்தோடு கேட்கவும், இது = இவ்வாச்சரியமான கதையை, நினைவுற = பிராந்த சித்தனுப், நீணெறி = அதிதூரம்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) அதன் பின்னடந்தவற்றைக் கூறத்தொடங்கல்:—அறிவென்.

அறிவறுமனத்தாலயர்வுறுபோகத்தறிவிலார்மருண்டுபோவதுபோற்
செறிநெடுந்தூரம்பரியினுற்சென்றுதீயினுலிபாவையும்வெந்து
பொறியெழும்பாலைவனத்திலேபுகுந்துபுரவியும்யானுமெய்வருந்தி
யெறிசுடர்மேற்பாலெய்துறுமளவுமிடருறமயங்கிநெஞ்சினைத்தேன்.

(ப - ரை.) அறிவறுமனத்தால் = விவேகமில்லாத சித்தத்தினுலே, அயர்வுறுபோகத்து = மயங்கும்படியான போகங்களில், அறிவிலார் = ஜடமூடர் மருண்டுபோவது போல் = மயக்கமுற்றவதிப்படுவதேபோல, செறிநெடுந்தூரம் = பொருந்தா நின்றவெகுதூரம், பரியினுல் = அதிவேக அசுவமிதனுல், சென்று = போய், தீயினுலியாவையும் வெந்து = அக்கினியினுலே எல்லாம் தக்தமாகி, பொறியெழும் பாலைவனத்திலே = அக்கினிகணம் கிளம்பும்படியான வெம்பிய பாலைவனத்தில், புகுந்து = பிரவேசித்து, புரவியும் யானும் மெய்வருந்தி = குதிரையும் யானும் சரீரம் களைத்துப்போய், எறிசுடர் = கிரணங்களை வீசும், சூரியன் மேற்பால் எய்துறும் அளவும் = மேற்குத்திசையிற் செல்லும்பரியந்தம், இடர் உறமயங்கி நெஞ்சினைத்தேன் = துன்பம்பொருந்த மயக்கமுற்று மனங்கன்றினேன்.

(ஸ்ரீ - வீர.) அவ்வாயுவேக அசுவத்தானே வெகுதூரம் கொண்டு செல்லப்பட்டேன், தோற்றமாத்திரமணீயமர்யமாய விடயசமுதாயங்களின் போகப்பயிற்சியினுனே ஜடமாகிய மனத்தினுலே அஞ்ஞன் இழுக்கப்படுவதுபோலும் இழுக்கப்பட்டேன், விடய சம்பந்தமான சுகானுபவ விருத்தியானே ஜடனுகி, அதனினும் அன்னிய புருடார்த்தம் அறியாதவனுகி, அதனுனே அநாத்மாக்களை யகமென்றறிந்தவனுகி, பசுவைப்போல இலௌகிகப் பிரஞ்ஞையு மற்றவனுகி, இருக்கும் மூர்க்கன்றன் மனத்தானே யலமரல் போலும் அலமந்தேகினேன். பின்னொரு பெருங்காட்டையடைந்தேன், அக்காடானது, ஒன்றையும் பற்றுதயதிகளின் மனம்போலும் நிர்விடயமாய் மங்கையர் தம்மனம்போல அற்பமாயும் விடமமாயும், பிரளயத்தினுலே பஸ்மம் பண்ணப்பட்ட பிரஹ்மாண்டம் போலும் அதிபயங்கரமாயும், பக்ஷியேனும் விருக்ஷமேனும் நீரேனும் இல்லாததாயும், மகத்தாயும்; மகத்தாய பனியினுலே மூடப்பட்டுப் பொறுக்கமுடியாத குளிர்ச்சியாயும், ஜனம்சர்க்கங் காணுததாயும் திருணபல்லவங்கள் என்று முண்டாக்காததாயும், புலப்பட்ட இத்தகைய அரண்யத்தை யடைவுற்று என்மதி அதிகேதத்தை யடைந்தது; இத்தகைய

பெருங்காட்டை யுடைவுற்ற யானுங்குதிரையுமடைந்த துயரமெவ்வளவென்பது ! அக்காற் சூரிய அஸ்தமய சமயமாயது, பெருங்குளிரானது படுத்தியபாடு இன்னபடியென்று சொல்லவும் படுமோ !

(ச.) அறிவறும் = ஜடமானதன் மனத்தால், போகத்து = போகாப்யாசவசத்து, எறிசுடர், சூரியன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் பட்டபாட்டை யேபகர்தல்:—குடும்பவென்.

குடும்பபாரத்தைவிவேகிகள்கடக்குங்கொள்கைபோற்பாலையைக்கடந்து
நெடும்பனைநாவற்கடம்பெலுமிச்சநிறைந்துபுட்குரலினுனிரம்பி
யிடும்மைதீர்சோலை யெய்தலுமாங்கோரிளங்கொடிபிணித்ததென்கழுத்திற்
கடும்பரியெனைவிட்டகன்றதுகங்கைகலந்தவர்பாவமேயென்ன.

(ப - ரை.) குடும்பபாரத்தை = சம்சாரபாரத்தை, விவேகிகள் = ஆத்மாநாத்மவிவேகியர், கடக்குங் கொள்கைபோல் = தாண்டுந்தன்மைபோல, பாலையைக்கடந்து = அப்பாலை வனத்தைத்தாண்டி, நெடும்பனை நாவல்கடம்பு எலுமிச்சம் நிறைந்து = நீண்ட சாகோப சாகைகள் பரப்பியஜம்பு கதம்பஜம் பீராதி நெருங்கிவித்தரித்தோங்கி, புட்குரலினுல் நிரம்பி = பக்ஷிகளினது ஆரவாரங்களான் ஆகுலமிகுத்து, இடும்பைதீர்சோலை = துயரைத்துடைக்கும் குளிர்ந்த சோலையை, எய்தலும் = அடைதலும் ஆங்கோர் இளங்கொடி = அவ்விடத்தில் ஒரு இளையசாகை பிணித்ததென் கழுத்தில் = எனதுகண்டத்திற் சுற்றிக்கொண்டது, கங்கைகலந்தவர் பாவமேயென்ன = ஸ்ரீ கங்கையில் ஸ்நாநம் செய்தவரது பாதகங்கள்போல அக்கால், கடும்பரியெனை விட்டகன்றது = அதிவேகக் குதிரை என்னைத் தனியே விட்டுவிட்டுச் சென்றது.

(ஸ்ரீ - வீர) அப்பாலை வனத்தை யநேகங்கஷ்டங்களையுந் துன்பங்களையு மடைந்து, மத்திய சூனியவிஸ்தார ஆகிருதியோடுகூடிய சம்சாரத்தை விவேகிகள் கடப்பதேபோல் யான் கடந்தேன். கடந்துபுகுந்த சோலையானது சம்புகதம்பசாதி அநேக விருக்ஷங்க ணிறைந்து இருண்டு குளிர்ந்து நெறிச்செல்பவர்க்கு நீண்ட உறவினர்போலக் 'கலகல வெனச் சப்தித்துக்கொண் டிருக்கும் பறவைகள் நிறைந்து விளங்கின. யான் அத்தகைய எலுமிச்சந் தோப்பையடைந்தது, கடல்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து பொங்கும்போது ஸ்ரீ மகாவிஷ்ணு வீற்றிருந்தருளும் விருக்ஷசிரேஷ்டமான ஆலந்தருவை ஸ்ரீ மார்க்கண் டேயமுனிவர் அடைந்ததேபோலு மிருந்தது. தாபத்தாற் றப்தமான பர்வதத்தினுலே மேகமண்டலம் பற்றப்பெற்றதேபோலப் பெருங்கொம்பிற் பின்னிக்கொண் டிருக்கும் நீலக்கொடி யென்னுல் அசுவபரித்தியாகப் பொருட்டுப் பிடித்துக் கொள்ளப்பட்டது (பெரியோர் கூறியிருத்தல் பற்றிலதையைச் சாகையென்றது.) ஸ்ரீ கங்கையைப் பற்றிக் கொண்டவன் பாவின்றும் துஷ்கிருதத் தொகுதிகளெல்லாம் ஓடிவிடுவதேபோல யான் அக்கொடியைப் பற்றிக்கொண்டவுடனே அக்குதிரையானது என்னைவிட்டோடி விட்டது. "கடவுட்கங்கை நதிப்படி வான்செல்ல வொருவன் கருதுமுனம் இடர்கூர்பாவ மவனை யொழிந்துயாண்டு செலுவோமெனக் கருதும்" என்பது ஸ்ரீகாசிகாண்டம்.

(ச.) குடும்பபாரத்தை = சம்சாரத்தை, பாவம் = பாதகசமூகம். அற்பஜலத்தொடு செற்பதருத்தலஞ் சாங்கலம் மூலம்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) அன்றிரவிற்பட்ட வருந்துயரைக் கூறல்:—கழுத்தென.

கழுத்துறுகொடியாலூசல்போற்றூங்கிக்காவுறைதென்றலாற்குளிர்ந்து
முழுத்திறமோகத்தழுந்திநெஞ்சயர்ந்தேன்முழுக்குநற்பூசனைநியமம்
விழுத்தகுநல்லூணின்றியேநிசியாம்வீண்பொழுதணையவப்பொழுதிற்
பழுத்தவல்லிருளுந்துன்பமுங்குளிரும்பல்லறைபோசையுந்துணையாய். ()

(ப - ரை.) கழுத்துறு கொடியால் — கண்டத்திற் பற்றிக்கொண்ட லதையினால், ஊசல்போல் தூங்கி = ஊஞ்சலைப்போல்த் தொங்கி யாடிக்கொண்டு, காவுறை தென்றலாற் குளிர்ந்து = அச்சோலையில் வீசும் தென்றற்காற்றினாலே சீதளத்தையடைந்து, முழுத்திற மோகத்தழுந்தி = அத்தியந்தம் பெருமயக்கத்தில் அமிழ்ந்து, நெஞ்சயர்ந்தேன் = மனமழுங்கினேன், முழுக்கு நற்பூசனை நியமம் = ஸ்நாநம் நல்லதேவார்ச்சனை முதலிநியமங்களைச் செய்யாமலும், நல்லூணின்றியே = இராஜபோஜனஞ் செய்யாமலும், நிசியாம் வீண்பொழுதணைய = இரவாகிய வீண்காலம்வந்துற, அப்பொழுதில் = அக்காலத்தில், பழுத்தவல்லிருளும் = காடாந்தகாரமும், துன்பமும் குளிரும் பல் அறைபோசையும் துணையாய் = துயரமும் சீதளமும் தந்தபந்திகளின் டங்காரமும் சகாயமாயிருந்தேன்.

(ஸ்ரீ - வீர.) நீண்மார்க்கத்தைக் கடந்துவந்ததனாலே நெடுந்துயர் எய்தியுள்ளயான் ஆண்வெகுநேரம் இளைப்பாறிக்கொண் டிருந்தேன், ஆண்டு மோகத்தின்கண் மூழ்கிக் கிடக்கும் எனக்கு அவ்விரவானது கற்பசமமாகச் சென்றது, ஸ்நாநசந்திகளு மில்லை அருச்சனை யாதிகளுமில்லை அக்காற்போஜனமுமில்லை, ஆபத்துக்களின் பாரம் நிறைந்து ஆபத்துடைய் ஜனங்களுக்குள் முதன்மையாக இருந்த எனக்கு அந்த இரவானது கேவலம் வீணகவே சென்றது, வேதாளங்களினுடைய சிங்காரதங்கள் ஓய்ந்து கழுதகண் படுக்கும்பா நாள் வந்ததும் அத்தீர்க்காரண்யத்தில், சீதளத்தினாலே வருத்தப்பட்டன்து தந்தபந்திகளின் டங்காரங்களும் சீத்காரங்களும், அவற்றினோடு இருட்கூட்டங்களும் ஒருங்குசேர்ந்து அதிதீர்க்கமான அவ்விரவானது கழிந்துகொண்டிருந்தது: சகிக்கமுடியாததான சீதபீடிதங்களாகிய பிராணிகளின் தந்தபந்திகளின் அடிகளாம் டங்கார சீத்காரங்களானே, சீதத்திலுமிருட்டினும் மோகத்திலும் பற்கடகடவிலும் மூழ்கிக் கிடக்கும் என்னையேபார்த்துச் சிரித்துக்கொண் டிருந்ததுபோ லிருந்த பூர்வதிசையை, கட்குடித்தவன் கதுவிய கண்ணருணங் கடுப்பயான் கண்டனன். அவ்விரவு முழுதும் சிறிதும் நித்திரையே கிடையாது, சிறிதும் தைரியமில்லாமலே கஷ்டத்துடன் இலைகளோடு சேர்ந்தசைந்து கொண்டே யிருந்தேன், அச்சார்வரியானது கடக்கமுடியாத அதிதீட்சிபெற்று விட்டதாற் கடப்பது அதிகஷ்டமா யிருந்தது.

(ச.) நிசி = கற்பசமமான இராத்திரி, துன்பமும் = மிருகபக்ஷி சப்தங்களாற் றுன்பமும். மூலம்: ஶ்வாபதாம் துரிதிஷ்டதः = துஷ்டப்பிராணிகளின்முன்னிலையில் இருந்த இதுவே தருவினின்றும் கிழிறங்காமைக்குக் காரணமா மென்றுணர்க. வேட்டையின் மிகுந்த ஆபத்தையுடைய ஜந்துசுவாபத், ஆரும்வேற்றுமை, சுவாபதாம்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின் விடியற்றேன்றலும் பகலில் வருந்தியது பற்றிப் பகரல்:—மனவென.

மனத்திருளகற்றுமறிவுபோலந்தவல்லிருளிரவிவந்தகற்றப்
புனைத்துறுகொடியையறுத்தவணிறங்கிப்பொழில்புகுந்தொருவரைக்காணேன்
கனத்ததோர்பகலிலெட்டிலொன்றானகடிகையங்ககன்றதற்பின்ன
ரினத்தலாளொருத்திதன்னைமுன்னெதிர்ந்தேனிரவினைமதியெதிர்ந்தன்ன. (12)

(ப - ரை.) மனத்திருளகற்று மறிவுபோல் = இருதய அந்தகாரத்தை நீக்கும் எழி லுணர்வுபோலும், அந்தவல்லிருள் = அக்கொடிய பூதாந்தகாரத்தை, இரவிவந்தகற்ற= சூரியன்வந்து நீக்க, புனைத்துறு கொடியை =.வேய்ந்திருந்தலதையை, அறுத்து = சேதித்து, அவணிறங்கி = அவ்விடத்தில் இழிந்து, பொழில்புகுந்து = சோலையிற் பிர வேசித்து, ஒருவரைக்காணேன் = ஒரு பிராணியையும் சந்தித்திலேன், கனத்ததோர் பகலில் = பெருத்ததானதினத்தில், எட்டி லொன்றுனகடிகை = அஷ்டபாககாலம், அங்கு அகன்றதற்பின்னர் = அவண் நீங்கியபின்பு, இனத்தலாள் ஒருத்தி தன்னை = தாழ்ந்தசாதியானமங்கை யொருத்தியை = முன்னெதிர்ந்தேன் இரவினைமதி யெதிர்ந் தன்ன — சந்திரன் இருண்ட இரவைச்சந்தித்ததேபோல யான் அவளைச் சந்தித்தேன்.

(ஸ்ரீ - வீர.) அருணன் றேன்றியக்ஷணத்தில், அஞ்ஞானக்குஞானங் கிடைத்ததே போலும் தரித்திரனுக்குத் தங்கக்கட்டி கிடைத்ததேபோலும், கீழ்த்திசையில் ஐராவத மெனப் பெயரியதிக்கஜத்தின் மேற்பாகத்தில் ஆரோகணித்தெதிரே ஆகாயத்தில் அருக் கன் வருவதையான் கண்டேன். பின் அந்தவிஸ்தாரமாய ஜங்கலஸ்தலத்தைச் சுற்றிப் பார்க்க முயன்றேன், அந்த ஜீர்ணமான மகாவனத்தில் ஒருபிராணியுமே காணப்பெற வில்லை; மூர்க்கதேகத்துள்ள இருதயத்தில் குணலேசமும் காணப்பெறுததே போலும் சிறிதும் பயமற்றனவாய, கேவலம் நிஷ்பலவன கண்டப் பிரமணத்தானே ஜாதிக்குரிய சஞ்சல முண்டயனவாய் பறவைகள்சிசிகூசி என்னும் வசனங்களைச் சப்தித்துக்கொண்டு விளையாடித் திரிவதைக் கண்டேன். சிசீ = சப்தானுகரணம். திவசநாயகன் முப்பத்து பாகமுடைய ஆகாயத்தில் எட்டேப்பாகதேசம் வந்தபின், அதாவது 8 நாழிகையான்பின், அங்கு சுற்றிக்கொண்டு திரியும் ஒரு கன்னிகையையான் கண்டேன்

(ச.) ஒருத்தி ... பதினாறுவயசுப் பெண்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நீச கன்னிகையைச் சந்தித்தன்ன மிரத்தலும் அவள் கொ டூரண்மையும்:—கருவென,

கருகியநிறமுங்கருநிறத்துகிலுங்கைத்தலத்தன்னமுமாகி
யருகுவந்துறலும்பசிப்பிணிபாற்றுதவளைநானன்னமேயன்னாந்
தருதியென்றிரந்தேன்பசியினுலெவர்க்குந்தாழ்வுவந்துறுமெனல்கண்டேன்
வருதவஞ்செயாதோர்விரும்பியபொருட்போன்மற்றவளளித்திலளன்னம்.(13)

(ப - ரை.) கருகியநிறமும் = கறுப்புவன்னமும், கருநிறத்துகிலும் — கறுப்பான அழுக்குப்புடவையும், உடையவளாய், கைத்தலத் தன்னமுமாகி= கரத்திற்கஞ்சிப்பானை யைத் தாங்கினவளாய், அருகுவந்துறலும் = அம்மடந்தை சமீபத்தில் வந்தெய்தலும், பசிப்பிணியாற்றுது = பசிநோய் பொறுக்க முடியாமல், அவளைநான் = அக்குமரியை யான், அன்னமே = அன்னப்பேடு போன்றவளே ! அன்னந்தருதி யென்றிரந்தேன் = சிறுதுசோறு கொடுவென்று யாசித்தேன், பசியினுல் எவர்க்குந்தாழ்வு வந்து உறுமெ னல் கண்டேன் = க்ஷுத்பாதையினுலே எத்தகையவர்கட்கும் கட்டம்வந்து கிட்டு மென்பதைக் கண்கூடாகக் கண்டேன், = வருதவஞ்செயாதோர் விரும்பியபொருட் போல் = லாபத்தை யுத்தேசித்து சகாமியதவம் செய்யாதவர் இச்சித்த போக்கியம் போல், மற்றவள் = தாழ்ந்த அந்தக்கறுப்பி, அளித்திலள் அன்னம் = அன்னஞ் சிறி துந்தந்திலள்.

(ஸ்ரீ - வீர.) அக்கன்னிகை கரத்திற்கஞ்சிப் பானையைத் தாங்கி ஒய்யாரமாய் வரு தலை, ஜகன்மோகினி வேடந்தரித்து இனிய அமுதக்கும்பந் தாங்கிவரும் ஸ்ரீ மகாவிஷ்ணு

வைத்தானவன் கண்டதொப்ப யான்கண்டேன். கருவிழிகளை யுருட்டியுருட்டிப் பார்த்துக்கொண்டும் கறுத்த தேகத்துடனும் அழுக்குக் கிழிந்த சேலையுடனும் வந்த அந்தக் கறுப்பியை, சந்திரன்வந்திரவை யெதிர்ந்ததே போல ஆண்டியான் சந்தித்தேன். அழகு பொருந்திய ஹேமடந்தையே! இந்தப் பலமாயஉயிர்போம் ஆபத்துச் சமயத்தில் என் பொருட்டுச்சிறிது அன்னந்தருவாயாக, நீனர்கட்குற்ற கஷ்டத்தை நீக்குவதானே அளவற்ற சம்பத்துண்டாம் என்றிரந்தேன் = உயிர்நீங்கும் ஆபத்துவரின் எவ்வன்னமும் ஏற்கலாம்: அவ்வாறே "இதமதாமுயிரே குறவேவரின், விசமதெங்கு மெவ்வன்னமும் வேண்டலாம், பதமெதாலுணினும் மவன்பாவமே பதுமபத்திர நீரெனப் பற்றுறான்" எனமிருதியுங் கூறுகின்றது. ஸ்ரீ பாதராயண சூத்திரமும் உளதாம்:—சர்வாந்நாநுமதி பிராணாத்யயே தத்தர்சனாத்; பிராண அத்யயே = உயிர்போவதாக ஆபத்துவந்தபோது, சர்வ அந்நம் = கள்ளொழிந்து மற்றெவ்வன்னமும், அநுமதி — அறிஞனுக்கேனும் அறியானுக்கேனும் உண்ணலாமென ஆணையுண்டு, தோஷந்தன் பொருட்டில்லை; என்னை, தத்தர்சனாத் = அது காணப்படுதலின், சாந்தோக்கியத்தில் சாக்கிராயண உபாக்கியானத்தில் உஷஸ்தராகிய சாக்கிராயணருக்கு, ஆபத்துக்காலத்திலேயே கரிகாப்போனது உச்சிஷ்டமாய காராமணி பக்ஷணங் காணப்பெறுதலின். கதையிதுவாம்: குருதேசத்தில் வெட்டுக்கிளிகளாற் பயிர்கள் அழிக்கப்பட்டுப் பஞ்சமுண்டாகியபோது பாலையாகிய ஜாயையோடும் முனிவர் தேசாந்தரம்போய் இப்யக்கிராமத்தி லிருந்தார், கரிகாப்போன் பாதியயின்ற காராமணியை வேண்டி வாங்கித்தின்றார், அவ்விப்பியனால் குடித்தமிச்சஜலங் கொடுக்கும்போது வேண்டாமென்றார், இபங்காப்போன் காராமணி யுதவி நீருதவாதது என்னேயென அன்னானும்சத்திற்றான் எனக்காபத்து நீரம்சம் தடாகாதியிலும் கிடைக்கும் அதில் ஆபத்தில்லை யென்றார். தாந்தின்ற மிச்சத்தை ஜாயைக்குக்கொடுத்தார், ஆபத்தற்ற அவ்வுத்தமி பதியினுபத்தை யெண்ணிக் காராமணியைக் காப்பாற்றிக் காலையில் நாயகனுக்கே தந்தனள். என்பதாம். கிழத்துருமத்தின் பொந்தில் முட்டையிட்ட கருநாகம்போல அளவில்லாத பசியையுள்ளே யானடைந்துள்ளேன் எனக்குச் சிறிதன்னம் தந்தால் நீ நன்றாக விருத்தியடைவா யென்றேன். சர்ப்பமானது பசிமிகுதியானே தனது அண்டங்களையும் விழுங்குகின்றது எனப்பசியின், செய்யக்கூடாததையுஞ் செய்விக்குந் தகைமையைக் காட்டற்பொருட்டே விசேடித்ததாம். "மேவரும்பசியன்மேவ கட்டின்பொருட் டேவர்தாமெங்கே யென்செய்விலைதான்" எனப்பெரியோருங்கூறுவர். வெகுமுயல்வுடன் ஸ்ரீதேவியைப் பிரார்த்தனை செய்தபோதினும் பாவிசட்குத்தனம் இலக்ஷ்மி கொடாததே போல, வெகு பிரார்த்தனை செய்தபோதினும் அக்கன்னிகை ஒரு சிறிதன்னமும் எனக்குக் கொடுக்கவேயில்லை.

(ச.) வருதவஞ் செயாதோர் = பாவிகளுக்கு, விரும்பியபொருட்போல் = யத்நப்பிரார்த்தனையாலும், இலக்குமி தனங்கொடாததுபோல். எனக்கு.

(ஸ்ரீ - வீர.) நீச கன்னிகைபின் செல்லலும் நிச்சயதாம்பூலபலமாக அன்னந்தருதலும்:—சோலையென.

சோலைதோறுழலுமவள்பிறகேகிச்சோருமென்பசித்துயர்சொல்ல
நீலைநின்றுரைப்பாணீசர்கன்னிகையானினக்கெனதன்னமாமென்னின்
மாலையிட்டெங்கள்சேரியிற்பிதாமுன்வந்தெனைப்புணர்தியேலிந்த
வேலையிலளிப்பேனென்றனுமியைந்தேன் விருப்பொடுமளித்தனளன்னம்.

(ப - ரை) சோலை தோறுழலும் அவள்பிறகு ஏகி = சோலையினின்றும் சோலை போய்ச் சஞ்சலித்து மறைந்து விளையாடித்திரியும் அக்கன்னிகையின் பின்னர்ச்சென்று, சோறும் என்பசித்துயர் சொல்ல = வாட்டும் என்னுடை பசித்துக்கத்தைக் கூறியாசிக்க, நிலைநின்று உரைப்பாள் = கருப்பிசற்று நின்று கழறுவாள், நீசர்கன்னிகையான் = யான் புலையர்தம்மகள், நினக்கு = உனக்கு, எனதன்னம் ஆமென்னின் = என்னுடைய சோற்றுக்கஞ்சி உண்ணலா மென்றால், எக்கள் சேரியில்வந்து = நாங்கள்வாழும் நக்தத்துள் வந்து, பிதாமுன் = என்றந்தை யுத்தரவின் மூலமாக, எனை மாலையிட்டு = என்னை விவாகஞ்செய்துகொண்டு, புணர்தியேல் = என்னோடுகூடி வாழச்சம்மதிப்பையேல், இந்தவேளையில் = இவ்வாபத்துக் காலத்தில், அளிப்பேன் என்றலும் = அன்னந்தருவேன் என்று கூறுதலும், இயைந்தேன் = சம்மதித்தேன், விருப்பொடும் அளித்தனள் அன்னம் = அன்போடும் அன்னந்தந்தனள். (14)

(ஸ்ரீ - வீர.) கேவலம் நெடும்போது அத்தியந்தம் பின்றொடர்ந்து நிழல்போல முன்னின்று ஒருவன் கண்டத்தினின்றும் வேறுகண்டத்திலும் ஒருவிருக்ஷசமுதாயத்தினின்றும் மற்றொருதரு சமுதாயத்தும் யான் தொடர்ந்து சென்றவளை யிரந்தேன். அப்போதவள் கூறுவதாவது: ஹேஹாரகேயூரியே! என்னைநீர் புருஷ அசுவகஜாதிகளை புண்ணும் குரூரமுடைய ராக்ஷசிபோலச் சண்டாளப் பெண்ணென அறிந்துகொள்ளுதிர்; ஹாரகேயூரியே யென்றமையானே உத்தமஜாதி சூசனத்தால் எனதன்னம் புசிக்கத்தக்கதன்றும் மென்றுணர்த்தப்பட்டது; ஸ்ரீஆத்ம சுகாசிரியர் ஹாரகேயூரி யென்பதை அவள் பெயராக ஒப்புவர். ஓராஜாவே! வேண்டுதன் மாத்திரையானே என்னிடத்தினின்றும் போஜனத்தை நீயடைய மாட்டாய், வாஞ்சையை நிறைவேற்றுதபோது கிராமீணஜனங்களிடத்தினின்றும் சுந்தரமான சுஹ்ருதத் தன்மையைப்பெற முடியாததேபோலும். இவ்வாறு கூறிக்கொண்டு சிறிது சிறிது சென்றுசென்று விளையாடி நின்றுநின்று கொடிவீடுகளில் மறைந்துங் கனிபொருக்க நுழைந்தும் குன்றிமணி பொருக்கியும் கழுத்திலுள்ள அம்மாலையை விலக்கி விலக்கிப்பார்த்தும் தான் கருதியதைக் குறிப்பிக்கும் கடைக்கண்ணடித்தல் முதலிய சேஷ்டைகளானே யபிநயம் செய்தும் வணக்கத்துடன் நடித்தும் நாணியும் சொல்லுகின்றாள்:—எனக்குக்கணவனாகி யிருப்ப இஷ்டப்படுவையேயானால் இவ்வன்னந் தருவேன், சாமானிய லோகமாகிய தனிச்சனமானது நேயநெகிழ்ச்சி யில்லாமல் பொருள்களாலே யுபகரிப்பதில்லை யல்லவா. இவ்விடத்திலுள்ள கேதாரத்தில் என்னுடைய புற்கசப் பிதாமேழியிற் பழகிய எருதுகளைப் பூட்டியுழுதுகொண் டிருக்கின்றான், மயானத்தில் வேதாளம்போலத் தூளியோடு கூடிய உடம்பினனாய்ப் பசியோடு மென்னை யெதிர்ப் பார்த்திருப்பன்; அவனுக்காக இவ்வன்னத்தைக் கொண்டுபோகின்றேன் நீ யென்னைக் கல்யாணஞ் செய்துகொள்வதா யிருந்தால் ஈவேன், ஏனென்றால் மனைவியாயிருப்பவள் உயிரைக் கொடுத்தேனும் கணவனைக் காப்பாற்றவேண்டும், பிராணனைப் பார்க்கிலும் கொழுநன்மிகவும் உயர்ந்தவன். இவ்வண்ணம் அவள்சொல்வதைக் கேட்டயான் ஹே நல்லவிரத முடைய பெண்ணே! உனக்குயான் பர்த்தாவாக இருக்கின்றேன், யாவர்தாம் ஆபத்துக்காலத்தில் வருணதரும குலமுறைகளை விசாரிப்பார்! என்றபின்னர் அப்பெண்ணெனக்குக் கொண்டுவந்த அன்னத்திற் பாதியைக்களிப்புடன் கொடுத்தாள்; ஜகன்மோகினிவடிவ ஸ்ரீ பகவான் முன் இந்திரனுக்கு அமிருதத் திற்பாதி யளித்தபோது அவன் பேரானந்தம் அடைந்ததேபோலப் பசியால் வருந்திக் கொண்டிருந்தயான் அவ்வன்னங் கிடைத்தவுடனே யதையமிருதம்போல எண்ணி யளவில்லாத மகிழ்ச்சியை யடைந்தேன்.

(ச.) எகி = நிழல்போற் சென்று.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அன்னமுண்டிளைப்பாறியபின் னருந்தாதைபாற் கொண்டேகல்:—நல்கியென.

நல்கியபாதியன்னமுமருந்திநாவலின்கனிச்சுவைபருகி
யொல்கியதுயர்போயிருத்தலும்புறத்திலுலாவுநல்லுயிரெனவென்னைப்
புல்கியகரத்தாற்பற்றினள்பிதாமுன்போயினள்யாதனைசீர
மல்கியபயஞ்செய்நரகிலேகொடுபோய்மறுக்கமேசெய்யுமாறென்ன. (15)

(ப - ரை.) நல்கிய பாதியன்னமும் அருந்தி = அவள் அன்புடன் அளித்தபாதி யன்னத்தையும் புசித்து, நாவலின் கனிச்சுவைபருகி = ஐம்பூபலங்களின் ரசத்தைமாந்தி, ஒல்கியதுயர்போ யிருத்தலும் = பொருந்துறு துன்பம்போ யிளைப்பாறி யிருந்தபோது, புறத்திலுலாவு நல்லுயிரென = பாகியத்திற் சுற்றுகின்ற இனிய பிராணனைப் போல, என்னைப் புல்கியகரத்தாற் பற்றினள் = என்னை அநாசாரம் பொருந்திய கையினாலே பிடித்துக்கொண்டு, பிதாமுன் போயினள் = அவள் தந்தையின் முன்பாகப் போய்ச் சேர்ந்தனள், யாதனைசீரமல்கிய பயஞ்செய் நரகிலே கொடுபோய் = துயரஞ்செய்யும் பொருட்டு யாதனைசீரங் கொடுத்த நெருங்கிய அச்சத்தை மிகவும் உண்டாக்கும் நரகத்திற் கொண்டு போய்ப்போட்டு, மறுக்கமே செய்யுமா றென்ன = வெந்துயர் தந்துழற்றுவதேபோலு மிருந்தது.

(ஸ்ரீ - வீர.) அந்தச் சபராலயமாகிய புக்கசவீட்டுப் பக்கண அன்னத்தை யின்பமாய்ப் புசித்தேன் பின், நாவற்பழரசத்தை நன்றாய்க் குடித்தேன் மோகநீங்கிய சித்தமுடையவனாகி அங்கேயே சிறிதுநேரம் இளைப்பாறினேன். வெளியில் நின்ற பிராணனைப்போலக் கையினாலே பற்றிச் சூரியனை மேகமறைத்ததேபோல மேகமெனக்கறுத்த அம்மங்கை மறைத் தென்னைக் கொண்டுபோனாள். அவலக்ஷணமான ஆகிருதியனும், அநாசாரம் நிறைந்தவனும், அதிபயங்கரத்தைத் தருபவனும், மிகப்பருத்தவனும் ஆகிய தந்தையின் முன்பாக யாதனை செய்யும் பொருட்டு நரகத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பதேபோலச் சேர்த்தனள்.

(ச.) உயிரென = பிராணனைப்போல்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) தந்தை சம்மதித்து மணமகனைச் சேரிக்கழைத்துச் செல்லுதல்:—நண்பென.

நண்புறுமிவனென்னாயகனாக நல்கெனத்தாதையும் பொருந்திப்
பண்புறவிருவர் தமையும் வேதாள பந்தனவனத் தினின்றகன்று
கண்புகத்தோன்றுங் காலதூதரைப்போற் கருநிறத்தவன் கொடுபோகி
யுண்புலால்வீசுஞ் சேரியிலடைந்தா ணெருப்படு மணஞ்செய்வானுன்னி.

(ப - ரை.) நண்புறும் இவன் என் நாயகன் ஆக நல்கு என = நேசத்தோடுற்ற இம்மன்னவனை எனது மணாளனாக மணஞ்செய்து வைப்பாயாக வென்று அவள் வேண்ட தாதையும் பொருந்தி = தந்தையுமிசைந்து, பண்புற இருவர்தமையும் = அன்போடு கூட அவ்விரண்டு பேரையும், வேதாளபந்தன வனத்தினின்றகன்று = வேதாள பந்தன மென்னும் அவ்வனத்தினின்றும் புறப்பட்டு, கண்புகத்தோன்றும் காலதூதரைப் போல் = விழிப்புலனுக் கெதிரே புலப்படும் யமகிங்கரரைப்போலும், கருநிறத்தவன் = கறுப்பு வண்ணத்தவன், கொடுபோகி = கொண்டுபோய், உண்புலால் வீசும் = உண்ண

மின்ற புலால்நாற்றம் வீசும், சேரியில் அடைந்தான் = சேரியிற் சேர்ந்தான், ஒருப் படும் = ஒருமைப்பட்டு வாழும், மணம் செய்வான் உன்னி = விவாகஞ் செய்யும் பொருட்டு உத்தேசித்து.

(ஸ்ரீ - வீர.) என்னை யழைத்துக்கொண்டு சென்ற அப்பெண் தன்னுடைய இஷ்ட அருத்தத்தை அம்மாதங்கன் காதுக்குள் ஆண்வண்டின் பக்கஞ்சென்று தொனிசெய்யும் பெண்வண்டுக் குஞ்சுபோலும் மெதுவாயோதினள்; (மாதங்கன் சண்டாளன்) ஹே தந்தையே! இவனை யெனக்குக் கணவனாகத் தங்கட்கிட்ட மிருந்தால் விவாகஞ்செய்து தருவீர்களாக; என்றனள், அதைக்கேட்ட அவனும் அவ்வாறே செய்கின்றேன் என்று கூறிப் பொழுதுபோய்மாலையில் யமன் கிங்கரர்களை விடுவதேபோல எரினின்றும் எருதுகளை யவிழ்த்து விட்டனன். பனிமேகங்களென்னும் சந்தியாப்ரங்கள் கபிலமாக வியாபித்துறத் திக்குகள் உத்தூளிதமேனி யுற்றதுபோ லாகத்திராந்தத்தில் யாங்கள் வேதாளங்கட்கு வாசஸ்தானமாகிய அவ்விடத்தினின்றும் புறப்பட்டோம். ஒரு மயானத்தினின்றும் மற்றொருபெரிய மயானத்திற்கு வேதாளங்கள் செல்வதுபோல அதிவிரைவில் அம்மாலைப்போதில், அந்நீள்வனம் விட்டு புற்கசன் ஆலயமாய பக்கண மடைந்தோம். ஒத்தமணஞ்செய்ய உன்னிக்கொண்டேயடைந்தான், (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பறையர்சேரியை வருணித்தலும் விவாகஞ் செய்யத் தொடங்கலும்:—வானரவென.

> வானரம் புரவிகுக்குடங் காகம்வராக மென்பன வரிந்தெடுப்ப
> வூனரம்புணங்கப் பறவைவீழ்ந் தலைப்பவுலவிய சிறுவர்கைத் தசையி
> லீனவீயிரைப்ப வுதிரமுமென்பு மெல்லையில் சேரியிலெய்திக்
> கானரம்பைகளே நாட்டியகுடிலிற் கடிமணந் தொடங்கினர் களிப்பால்.()

(ப - ரை.) வானரம் புரவி குக்குடம் காகம் வராகம் = கபி அசுவம் கோழிவாயசம் பன்றி, என்பன வரிந்தெடுப்ப = என்னும் ஜந்துக்களின் றசையைப்பிரித் தொருபுறமெடுப்ப, ஊனரம்புணங்க = காயும்பொருட்டு நரம்புகளிற் கோர்த்துக் கட்டிய தோரணங்களில், பறவை விழ்ந்தலைப்ப = பருந்து முதலியவை யிடித்தலைத்துக் கொண்டிருப்ப, உலவிய = விளையாடித்திரியும், சிறுவர் கைத்தசையில் = பாலர்கரத்தில் வைத்திருக்கும் மாம்சத்துண்டத்தில், ஈனவீயிரைப்ப = தாழ்ந்த ஈக்கணங்கள் சப்திக்க, உதிரமும் என்பும் எல்லையில் சேரியிலெய்தி = இரத்தமும் எலும்பும் அளவற்றுமலியும் அந்நீசச்சேரியை யடைந்து, கானரம்பைகளே நாட்டியகுடிலில் = காட்டுவாழைகளே நாட்டிய குடிசைகளில், கடிமணந் தொடங்கினர் களிப்பால் = சந்தோஷத்துடன் விவாகஞ்செய்ய ஆரம்பித்தனர்,

(ஸ்ரீ - வீர.) அச்சேரியில் வராக அசுவகபிகுக்குட வாயசங்களைக் கத்தரித்து நானாவிதமாகத் துண்டித்துக்கொண்டு ஒருபக்கமிருந்தனர். மற்றுஞ் சிலபாகங்களில் இரத்தமான்று சிந்தி ஈக்கணங்கள் மொய்த்துச் சத்தித்துக்கொண் டிருந்தன. காயவைத்துச் சரக்காக்கற் பொருட்டு நரம்புகளிற் கோர்த்துப் பரப்பிய மாம்சதுண்டங்க ணிறைந்த மாலைகள்காயும் வீட்டுவாசல்களில் பருந்து முதலியவை வீழ்ந்தலைத்துக் கொண்டிருந்தன. காரியப்பொருட்டுக் காயவைத்திருக்கும் நரம்புஜாலங்களில் எனினும் அமையும். வீட்டுக் கொல்லைகளிலிருக்கு மஜம் பீரகண்டங்கட்கு நேராகச் சுற்றிச்சுற்றிப்பறவைகள் தொனிசெய்து கொண்டிருந்தன, பாலஹஸ்தத்திலுள்ள தசைப்பிண்டத்தின் மொய்த்த வீக்கூட்டச்சப்தம் பலபக்கம் ஒலித்தது. இத்தகைய சேரியிலுள்ள எனதுபுதியமாமனுர்

வீட்டில் அதிக உதாரசம்பிரம உற்சாக அதிசயத்துடனே விரிக்கப்பெற்ற நீண்ட கன்றவாழையிலை யாசனத்தின்மேல் யான் உட்கார்ந் திளைப்பாறினேன்.

(ச.) கானரம்பைகளே நாட்டிய = வனத்துள்ள கதலியிலைகளாற்றுபித்த.

(ஸ்ரீ - வீர - அ - கை) மாமியார் முதலாயினோர் மருகனை மெச்சி விவாகஞ் செய்தல்:—மலினவென.

மலினவூன் றன்னுஞ் சிறுகணானோக்கி மருகனல்ல லவனென மகிழ்ந்தாள்
கலியினுங்கறுத்த கூன்கிழமாமி கடையர்மற்றி யாவருங்கூடி
யொலிபடுபறைகண் முழக்கினர்மதுவு மூன்களுஞ் சமைத்தனரவளை
நலிதருபாவம் யாதனுசரீர நல்குமாறென வவனளித்தான்.

(ப - ரை.) மலினவூன் தன்னும் சிறுகணால் நோக்கி = மலினமாமிசம் மன்னும் சிறிய விழிகளால் நன்றாகப்பார்த்து, மருகன் நல்லவன் எனமகிழ்ந்தாள் = மருமகன் நம் மகளுக்கேற்ற மன்மதன் என்று சந்தோஷித்தாள், கலியினுங் கறுத்த கூன்கிழமாமி = கலிபுருடனைப் பார்க்கினும் மிகவுங்கறுத்து விற்போல் வளைந்த கிழட்டுமாமியார், கடையர் மற்றியாவருங்கூடி = அவர்தம் முறவினராகிய நீசர்யாவரு மொருங்குகூடி, ஒலிபடு பறைகள் முழக்கினர் = சப்திக்கும்படி தம்பட்டம் முதலவற்றைக் கொட்டினர், மதுவும் ஊன்களும் சமைத்தனர் = கட்சேகரித்து மாமிசம் பலவகையட்டனர், அவளை = அக்கன்னிகையை, நலிதருபாவம் = துயரீயும் அதருமம், யாதனுசரீரம் = துயரருந்துந் தேகத்தை, நல்குமாறென = கொடுப்பதேபோல, அவன் அளித்தான் = அம்மாமன் நல்லோரையிற் கன்னியாதானஞ் செய்தான்.

(ஸ்ரீ - வீர.) எனது மாமியாராகிய கேகராக்ஷியினால் இரக்தமயமானசிறுகண்களாற் பார்க்கப் பெற்றவனாகி இம்மருமகன் மிகவும் நன்றாக இருக்கின்றான் எனச் சன்மானிக்கப்பெற்றேன், அவளும் தன் மகளுக்கேற்ற காளையெனக்கண்டு களித்தனன் மிகவும். அதிகமாகக் கூறுவானேன், மேகங்களின்றி யாகாயந்தெளிவாயிருப்ப நல்ல நக்ஷத்திரத்தில் நல்லதொருதினத்தில், அவ்வுச்சண்டாள உற்சவ உசிதமந்திபமாம்சாதி சேகரிக்கும் பெருமுயற்சியோடுங்கூடி அச்சாதிக்கேற்ற சீர்சிறப்புகளாகிய வஸ்திர ஸ்ரீதனமீதன் முதலியவற்றோடும் அம்மாமன் பயத்தைப் பயக்கும் அக்குமாரியை எனக்குக் கன்னியாதானஞ்செய்து கொடுத்தான், அக்கறுப்புருவத் தவனான் அந்நற்கறுப்பியை யெனக்குத் தந்தது பாவமானது துயரின்பொருட்டு யாதனுசரீரங் கொடுத்ததுபோலு மிருந்தது. அந்த விவாக உற்சவத்தில் அந்நாய்க்கறிப்போர் எங்கும் அநேகவிதமான விசேஷநாதங்களைச் செய்தனர், வாந்திவருமாறு கள்ளுகளையும் அன்ன சுவாதுரசமாகிய சுராவையும் கரும்பின் சாற்றுரசங்களையும் அளவுக்குமிஞ்சிக் குடித்துவிட்டு மிகவும் மதங்கொண்டு தம்பட்டங்களைக் கொட்டியும் கொம்புகளை யூதியும் குடமுழாமுழக்கியும் கூத்தாடியும், பெரிய பிரஹ்மஹத்தியாதி பாவக்கூட்டங்கள் நேரே நீசவுருவங்கொண்டு வந்து திரிவதுபோல விலாசவந்தர்களாகத் திரிந்தார்கள் அப்புலையர்கள். ஸ்ரீக்ஷீரசுவாமிகள் சுவாதுர சம்மதிரா வென்றுள்ளார்கள்.

(ச.) மாமி, இவ்விடத்து வெகுவாகச் சொல்லியென்ன, சிலதினத்தின் பின்பு.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கலியாணமுடிந்து சாந்தியாகிச் சந்ததி யுண்டாதல்:—கடியவென.

கடியபாதகங்க ளுருவுகொண்டனைய கடையர் கல்யாணநாளேழின் (௬௧)
முடிதலுமவளோ டெண்மதிகழித்தேன் முகிண்முலை பூத்தவள்வாணாள்
கொடியதோர்விபத்துதருந்துயர்போலோர் குழந்தையை யளிக்கவக்குழந்தை
வடிவறவெந்தகட்டைபோனிறத்துவளர்ந்தது மூர்க்கர்தம்மனம்போல்.

(ப - ரை.) கடியபாதகங்கள் உருவுகொண்டனைய கடையர் = கொடிய பிரஹ்மஹத்தியாதி மகாபாதகங்கள் மறுடவடிவங்கொண்டு வந்தனபோன்ற நீசரது, கல்யாண நாள் ஏழில் முடிதலும் = விவாக உற்சவம் ஏழிரவில் முடிந்தபின், அவளோடு எண்மதி கழித்தேன் = அம்மங்கையோடு எட்டுமாதங்கள் செலுத்தினேன்; முகிண்முலைபூத்து அவள் வாழ்நாள் = முகள்போன்ற தனங்கள் வாய்ந்த அக்குமரி புஷ்பவதியாகி வாழும் போது, கொடியதோர் விபத்துதருந்துயர்போல் = மிகவுங் கொடிதாகிய ஒரு ஆபத்தானது துயரந் தருவதேபோல, ஓர் குழந்தையை யளிக்க = ஒருபெண் குழவியைப் பிரசவிக்க அக்குழந்தை = அக்குழவியானது, வடிவற = அழகுசிறிது மில்லாமல், வெந்த கட்டைபோல் நிறத்து = வெந்தவித்த கொள்ளிபோல் மிகக்கறுத்து, வளர்ந்தது மூர்க்கர்தம் மனம்போல் = அம்மூர்க்க நீசரதுமனம் அலித்து வளர்வதேபோல வளர்ந்தது.

(ஸ்ரீ - வீர.) ஈண்டு வெகுவாகக் கூறியதாலென்னே, உற்சவச்சித விவாகத்தானே சித்தமானது வயமாகி அதுமுதலாக ஆண்டுப்பின் புஷ்டபுற்கசன் ஆயினேன். சப்தராத்திரியுற்சவ ஈற்றிவிருந்து முறையே எட்டுமாதங்கள் சென்றபின்பு அவ்வெனது பார்யை புஷ்பவதி = ருதுமதி ரஜஸ்வலையாயினள், அதன்பின் கருத்தரித்தனள், விபத்தானது துக்கக்கிரியையைத் தருவதேபோலத் துயரந்தருங் கன்னிகையைப் பெற்றெடுத்தாள், அக்கன்யை மூர்க்க சிந்தையைப்போல மிகப்பருத்து விரைவில் வளர்ந்தனள்.

(ச) ஆனாள் = பின்புகர்ப்பவதியானாள், குழந்தை = பெண்பிள்ளை, வளர்ந்தது = சீக்கிரம் பெருத்து விருத்தியடைந்தது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சந்தான விருத்தியும் சரைவந்தெய்தலும் உரைத்தல்:— பின்னை.

பின்னர்மூவாண்டிற் பேதைமை யளிக்கும் பிறப்பென வொருமகப்பெற்றா
ளன்னவண்மீட்டு மாசையிற்றோன்று மனர்த்தமே யென்னவோர் குழவி
தன்னையுமளித்தா ளிவரொடுநெடுநாட் டங்கினன் குடும்பபாரத்தி
னின்னலாலவர்தா பத்தினால்வருந்து மிடும்பையாற் சரைத்ததென் யாக்கை.

(ப - ரை.) பின்னர் மூவாண்டில் = பெண்குழந்தையளித்து மூன்று வருடங் கழித்தபின், பேதைமையளிக்கும் பிறப்பென = அறியாமைதரும் ஜன்மமேபோல; ஒரு மகப்பெற்றாள் = ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தாள், அன்னவள் மீட்டும் ஆசையிற்றோன்றும் அனர்த்தமேயென்ன = அந்த எனதுமனைவி மறுபடியும் ஆசாபாசத்தினாலே தோற்றும் அநர்த்தமேபோல, ஓர் குழவிதன்னையு மளித்தாள் = ஒருகுழந்தையையும் பெற்றாள், இவரொடுநெடுநாள் = இக்குடும்பத்தொடும் நீள்காலம், தங்கினன் = வாழ்ந்தேன், குடும்பபாரத்தின் இன்னலால் = சம்சாரபாரத்தின் துக்கத்தால், அவர்தாபத்தினால் = களத்திரசிந்தையினால், வருந்தும் இடும்பையால் = மிகத்தபிக்கும் மதியுடன் அநேக கஷ்டங்களால், சரைத்ததென் யாக்கை = எனது சரீரமானது சராவஸ்தையை யடைந்தது,

(ஸ்ரீ - வீர.) மீண்டும் அம்மங்கை மூன்றுவருடங்கழித்து, துர்ப்புத்தியானது ஆசை யேயாய பந்தனஹேதுவான பாசத்தை யுண்டாக்கும் அநர்த்தத்தைத் தருவதேபோல அசோபன மைந்தனைத்தந்தனள். மீண்டும் ஒரு பெண்ணைப் பெற்றனள், பின்னரும் ஒருகுழந்தையைத் தந்தனள். யானொருபெரிய குடும்பியாகி அவ்வனத்திற் கிழப்புறக சனாயினேன். பிரஹ்மஹத்தி செய்தவன் சிந்தாகுலத்தோடும். நரகசம்பந்த யாதனைகளை யனுபவிப்பதேபோல, யான் அவளோடுகூட அவ்விடத்தில் அநேகவருடங்களைக் கழித் தேன். சேற்றுக்குட்டையில் கிழ ஆமையானது கிடந்து நீள்காலம் புரண்டுழல்வதே போல அவ்வநாந்தரத்தில் சீதவாத ஆதபக் கிலேசங்களின் வசமாகி அவ்வவ் விருதுக்க ளில் மிகவும் கஷ்டப்பட்டேன். குடும்பசிந்தையினாலே ஹதம்பண்ணப்பட்டதாய் மிக மிகவும் வெந்துகொண் டிருக்கும் மதியினாலே யான் மிகக்கஷ்டத்துடன் தொடங்கிய தொழில்க ணிறைந்த திசைகளை மிக மிகவும் ஜொலிப்பனவாகக் கண்டேன்.

(ச.) இன்னலால் = சீதவாத ஆதபக் கிலேசவசத்தால், அவர் தாபத்தினால் = களத்திரசிந்தையா லடிபட்டுப் புத்தி தபிப்பதனால், வருந்து மிடும்பையால் = அதிகட்ட வாரம்பத்தால்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மழையின்றித் துர்ப்பிக்ஷ முண்டாகிக் கிளைஞர் யாவரும் பிரிதல்:—வெம்பென.

வெம்புறு மூப்பான் மெலியுநாளந்த விந்தவெற் பருகுறுசாரற்
பைம்புயன் மறுத்து மண்ணினீர்சுண்டிப்பசியின லுயிரெலாம்பதைப்பக்
கொம்பொடு கொடியும்புல்லும் வெந்தெங்குங் கோடையாற் பொடிபடவரலு
மெம்புதுக்கிளைஞ ரிறந்தவரநேக ரெங்கணு மேகின ரநேகர்.

(ப - ரை.) வெம்புறு மூப்பான் = தாபங்களாற்றபிக்கும் ஜரையினாலே, மெலியு நாள் = வாடுங்காலத்தில், அந்த விந்தவெற்பு அருகுறுசாரல் = அவ்விந்தியாசலத் தருகேயிருக்கும் பொழில்களில், பைம்புயல் மறுத்து மண்ணில் நீர்சுண்டி = கார்மேகங் கள் பொழியாம லொழியவே பிருதிவியிற் சலமற்பமுமிலாது வறண்டு, பசியினால் உயி ரெலாம் பதைப்ப = க்ஷுத்பாதையினாலே பிராணிகளெல்லாம் தடுமாற்ற மடைந்து தபிப்ப, கொம்பொடு கொடியும் புல்லும் வெந்து = சாகாபலலதை திருணதியாவும் கருகி, எங்கும் கோடையால் பொடிபட வரலும் = மிகுந்த தாபத்தினாலே தூள்தூளாகப் போய்ப் பஞ்சமுண்டாதலும், எம்புதுக்கிளைஞர் = என்னுடைய நவீனஉறவினர், இறந்தவர் அநேகர் = பலபேர் உயிர்துறந்தனர், எங்கணும் ஏகினர் அநேகர் = பலபேர் பல இடங்கட்கும் ஓடிப்பிழைத்தனர்.

(ஸ்ரீ - வீர.) இங்ஙனங் காலங்கழிய ஆண்டு ஜரையினாலே ஜர்ஜரிதமாகிக் கிழ அவஸ்தையெய்த, பனியினால் மூடப்பட்ட புற்கூட்டம்போல மீசைதாடிக ளெல்லாம் வெளுத்து நிறைய; முகத்திலுற்ற ரோமங்களெல்லாம், திருணத்தினின்று முண்டாய அக்கினிச் சுவாலையானது சுவேதமா யிருப்பதேபோல வெள்ளியநிற முற்றன. அக்கால் அவ்விடத்தில் புன்முதலியவை யாவுங்காய்ந்து தீய்ந்து மகத்தாகிய பஞ்சமான துண்டா யது. அநவசரத்திற் றுர்ப்பிக்ஷமான் துண்டாகி மரணமேற் பட்டதனால் அதிக்குரோதி கள் நிறைந்த அந்தச் சண்டாள மண்டலமானது குலைவுற்றலைந்தது, மேகமண்டலங்கள் சிறிதும் பெய்யாமையின் அகாலத்தில் மரணத்தினாலே பரலோககமனம் உறுமாறு மஞ் சும் உற்றது, சண்டாளுஞ் சண்டாள மண்டலம் நிறைந்த விந்தியபர்வதத்தின் நீர்வளம் நிறைந்த பிரதேசமானது புல் அன்னத்தோடு புனல் இவையெல்லா மில்லாமல் வெம்பி

யலேவுற்றது. அந்நீசக்கூட்டம் விந்தியகச்சமென்னும் வேறுதேசத்தை நோக்கியோடியது மழைபொழியாமையினாலே என்கண்காணவே வெகுஜனம் மடிந்துபோயது வஸ்திரத்தினாலே வடிகட்டி யெடுத்ததேபோலச் சூக்குமத்தினும் அதிசூக்குமமாகிய தீக்கணங்களோடுகூடி வெம்பிய வாயுவானது வீசிக்கொண் டிருந்தது. அகாலத்திலுற்றது அவ்விதி பயங்கரமானபஞ்சம், அடக்கமுடியாததான வன அக்கினியானது ஆகாயமளாவி யெழுந்தது, அவ்வாரண்யம் முழுதும் ஒன்றுமில்லாமற் போயது, புல் கொடி கல் - முதலியயாவுமே வெறுஞ்சாம்பலாய்ப் போயது. அப்போது, அவ்விடத்தில் அறைந்த வண்ணம் பாக்கியம் விபரீதமுற்றுத் தெய்வம் பிரதிகூலமாகத் திரும்பக் கஷ்டங்கள் வளர்ந்து விருத்தியானபோது, அகாலத்திலே அதிதீப்தமான பிரளயமான துண்டாகி யத்தியந்தம் பெருந்தாபத்தைத்தரும் அவ்வேளையில், சிலஜனங்கள் தங்கள் மனைவி மக்களோடும் உறவினரோடும் வெளிப்போந்து, விண்ணினின்றுஞ் சரற்காலத்தில் மேகங்கள்போல வேறுவேறு தேசங்கட்கு ஓடினார்கள்; தேக அவயவங்கள்போல விடக்கூடாதவர்களாய புத்திரதார பந்துக்களுடன்கூடி யங்கேயே சிலர் வெட்டுப்பட்டவனவிருக்ஷங்கள்போல அழிந்தனர் சிலர் மிகவுஞ் சொலித்தெரியாநின்ற அக்கினியில் விட்டில் பூச்சிகள்போல வீழ்ந்திறந்தனர், சிலர் படுகுழியில் மலையினின்றும் நழுவிய சிலைகள்போல வீழ்ந்து பதைத்தனர். சிலர் மூர்ச்சையடைந்து கிடந்தனர்.

(௪.) வெம்புறும் = பேராசையாலுசித்துச் சுடுஞ் சுவாலையால் வாடும், மெலியும் நாள் = இளைப்புறும்போது நான் அஸ்திரஜீவியா யிருக்கும் காலத்தென்பது பொருள். பதைப்ப, அநவசரத்தின் மரணநிமித்தம் அதிமுயற்சியுற, வரலும் = பஞ்சம்வர, இறந்தவர் அநேகர் = காட்டக்கினியில் வீழ்ந்தும், கிணற்றில் வீழ்ந்தும், மூர்ச்சையடைந்தும், மடிந்தனர். பொருள்கள் கனிகமாயின தங்குதடையில்லாத தாவாநலமும் பெருங்கஷ்டமும் பெருகியது.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தான்செய்ததையும் தாலவிருக்ஷ நிழற்சென்று இளைப்பாறியதையும் கூறல்,—தனையென.

தனையரிலிருவர் தோள்களி லிருப்பத் தலையின்மீ தொருவனைத்தாங்கி
மனைவியோடேகி மெய்யெரி கொளுத்தமாய்வுறா தந்நாடகன்றோர்
பனையடிநிழலின் மைந்தரையிறக்கிப் பதைப்பொரு சிறிதொழிந் திருந்தேன்
வினைநரகேறிப் பழவினையோடே மேவியவின்பம தென்ன.

(ப - ரை.) தனையரில் இருவர் = குழந்தைகளுள் இரண்டு, தோள்களிலிருப்ப = இரண்டு தோட்பக்கங்களிலு மிருந்துகொள்ள, தலையின்மீ தொருவனைத்தாங்கி = சிரத்தினிடத்தே யொருபையனைத் தூக்கிக்கொண்டு, மனைவியோடேகி = களத்திரத்தோடுஞ்சென்று, மெய்யெரிகொளுத்த = தேகந் தாகமிகுதியும் வியாபிக்க, மாய்வுறாது = சாவுறாமல், அந்நாடகன்று = அந்தத்தேசத் தெல்லைகடந்து, ஓர்பனையடி நிழலில் மைந்தரையிறக்கி = ஒரு பனைமரத்தினது சாயையில் குழந்தைகளைக் கீழேவிட்டு, பதைப்பு ஒருசிறிது ஒழிந்திருந்தேன் = அற்பநேரம் இளைப்பாறி யிருந்தேன், வினைநரகேறிப் பழவினையோடே மேவிய இன்பமதென்ன = பாபத்தானே ரௌரவத்தில் வீழ்ந்து வருந்தி வெளிப்போந்து நரகசேடபாவகருமத்தோடு மறுபிறப்புற்றடைந்துள்ள அற்பசுகம்போலும்.

(ஸ்ரீ - வீர.) யானோ மாமனார் முதலினோரை விட்டொழித்து, என்னோடுகூட வரச் சமர்த்தை யாயிராநின்ற களத்திரமாத்திரத்தை யழைத்துக்கொண்டு யிருந்த உபத்திர

வத்தோடு கூடிய அத்தேயத்தினின்றுங் கட்டப்பட்டு வெளியேறினேன். மனைவிமக்க ளோடும் அத்தேச எல்லைகடந்து ஆண்டு தால தருத்தலத்தில், நானாவிதமான பெரும் பெரும் அனர்த்தங்களை இறக்கிவிடுவதேபோல தோள்களினின்றும் சுதர்களை இறக்கி விட்டேன். பின் ரௌரவத்தினின்றும் கிளம்பியவன் சிறிது இளைப்பாறியதேபோல நெடுநேரம் இளைப்பாறினேன்.

(ச.) நரகு = ரௌரவத்தினின்றும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனைவிகளைத்துத் துயில இளையவன் இடர்ப்படுத்தப் பொறுக்க முடியாது அக்கினி பாய்ந்ததைக் கூறி யரசன்கதையை யுபசங்கரித்தல்:— வளை—இட்டமென.

வளை தருமுப்பால் வழிவருந்துயரான் மைந்தர்க ளிருவரை யணைக்கக்
களைகொலோ துயிலோசாய்ந் தனன்மனைவி கண்டுளங்கரைந்து நானிருந்தே
னிளையவன் றுயிலா தென்மடியேறி யிருந்துநீர் சொரிதர வழுது
விளைபசியாற்றே னுதிரமூனும் வேண்டுமிப்போது தாவென்ன. (23)

இட்டமாமிளவலென் னெதிர்பதைப்ப வென்செயலேது மற்றுயிர்போய்க்
கட்டைபோலிருந்தேன் விடாதவனழுத கண்ணினீர் கண்டறக்கரைந்து
மட்டிவன்வாரா னென்றுயிர் விடுவான்வனக் கனல்வளர்த்ததில் வீழக்
கிட்டிநின்றுகைத் தேனிந்தவா சனத்தின்கிழ்வுற வீழ்வுறுமளவில். (24)

(ப - ரை) வளைதருமுப்பால் = வியாபித்துள்ள கிழத்தன்மையானும், வழிவருந் துயரால் = வெகுதூரம் நடந்துவந்த துக்கத்தானும், மைந்தர்க ளிருவரையணைக்க = இருபாலகரை யணைத்ததும், களைகோலோ = ஆயாசமோ, துயிலோ = நித்திரையோ, சாய்ந்தனள் மனைவி = கீழேபடுத்தனள் சண்டாள கன்யை, கண்டுளம் கரைந்து யானிருந்தேன் = அதனைப்பார்த்து மனமுருகி யான் கவலைப்பட்டிருந்தேன், இளையவன் றுயிலாது என்மடியேறி யிருந்து = கடையனுகிய பிருச்சகன் என்னும் தநயன் தூங்காது எனது மடிமீது ஏறிநின்றுகொண்டு, நீர்சொரிதர அழுது = கண்ணீர்பெருக ரோதனஞ் செய்து, விளைபசியாற்றேன் = உண்டாகா நின்றபசிபொறுக்க முடியவில்லை, உதிரமும் ஊனும் = இரத்தமும் மாமிசமும், வேண்டுமிப்போது தாவென்ன = உண்பதற்கு வேண்டும் இப்போதே, தருதியென்றுகூறி, இட்டமாம் இளவல் என்னெதிர்பதைப்ப= மிகவும் பிரியனுன கடைக்குட்டி என் எதிரில் நின்றுகதத்தித்துள்ள, என்செயலேது மற்று = யாதொரு உபாயமும் செய்யமுடியாதவனுய் உயிர்போய்க் கட்டைபோ விருந்தேன் = உயிர்சென்று விட்டதேபோலக் காஷ்டம்போலிருந்தேன், விடாதவன் அழுத கண்ணின் நீர்கண்டு அறக்கரைந்து=ஓயாமல் அக்குழந்தை ரோதனஞ்செய்த விழிகளி னீரைப்பார்த்து அத்தியந்தம் பரிதாபத்தை யடைந்து, மட்டிவன்வாரான் என்று =எவ் வளவுசொன்ன போதினும் இவன் அடங்கமாட்டான் கத்திச்சாவான் என்று, உயிர்விடு வான் — பிராணத்தியாகஞ் செய்துகொள்ளும் பொருட்டு, வனக்கனல் வளர்த்ததில் வீழ = காட்டக்கினியை யுண்டாக்கி அதன்கண் வீழும்பொருட்டு, கிட்டிநின்றுகைத் தேன் = அதனருகாமையினின்று குதிக்கும் முயற்சியைச் செய்தேன், இந்த ஆசனத் தின் கீழ்வுற வீழ்வுறும் அளவில் = இச்சிங்காதனத்தி னின்றும் பூமியிற் பதனமாதற் குரியவனும்போது.

(ஸ்ரீ - வீர.) பின் அச்சண்டாள கன்யை அத்தருத்தலத்தில் விசிராந்தியடைந்து, சீதளச்சாயையில் இருகுழந்தைகளை யினிதுற ஆலிங்கனஞ் செய்துகொண்டு நித்திரை

போயினாள். அத்தியந்தம் எங்களுக்குப் பிரியனாயும் கடைக்குழந்தையாயும் அறியாதவனாயும் தழுதழுத்த வசனமும் இனியவசனமும் உடையவனாயும் இராநின்ற பிருச்சகன் என்னும் குமரன் என்முன்பே நின்றுகொண்டு மிகவுந்தீனனாய் விழிகளில் நீரைப்பெருக்கியவனாய் என்னை நோக்கிக் கூறுவதாவது. ஓ அப்பா! எனக்குச் சீக்கிரம் தின்ன மாமிசமும் குடிக்க இரத்தமும் கணத்திற் கொடுப்பாயாக, அந்தப்பாலகனாகிய என்றனயன் மீண்டுமீண்டும் இதனையே கூறிக்கொண்டு மரணாவஸ்தையை யடைந்தனன், பசியினாலே கோவென்றலறி மீளவும் ஓலமிட்டான். அவனுடைய அந்தக் கஷ்டத்தைக் கண்ணாற்பார்த்துப் பொறுக்க முடியாத பெருங் கஷ்டத்தை யடைந்தனன், அத்தீவிரமான ஆபத்தைச் சகிப்பதற்கு முடியாமல் மதிமுதலியவை ஹதமுடையவனாகி, அக்காலத்திற் குசிதபந்துவாகிய மரணத்தின் பொருட்டு உண்ணிச்சயத்தை யடைந்தேன். ஆண்டு கிடந்த காஷ்டங்களைக் கொணர்ந்து பெருஞ்சிதையை யடுக்கியுண்டாக்கினேன், அச்சிதையானது சடசடவெனச் சப்தித்துக்கொண்டு என்னுடைய இஷ்டம்போல ஓங்கியெரிந்தது. அச்சிதையின் கண்ணே யென்னை வீழ்த்தும்பொருட்டு வேகமாகக் குதிக்க முயன்ற அளவில், அரசனாகியயான் இச்சிங்காதனத்தினின்றும் மிகச் சலிதனாய்க் கீழ் விழப்போனேன்.

(ச.) என்ன = என்று மாறிமாறிக் கேழ்க்க, கேட்க, என்செயலேதுமற்று = துக்கமிகுதியால் அடிபட்ட மனதுடைய என்னாற்றீவிரமான அவ்வாபத்தை நீக்குதற்குச்சக்தியின்றி, உயிர்போய் = மூர்ச்சித்து, மட்டிவன் வாரான் என்று = இவ்வேளையிவன் ஜீவியானென்று சிந்தித்து, இந்தவாசனத்தின் = சிம்மாசனத்திருந்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மன்னவன் மயக்கந்தீர்ந்தெழுந்ததும் அதனாலுண்டாகிய விவேகமும் உரைத்தல்,—தாங்கென.

தாங்கினீர் பலருஞ்சயசய வென்னத் தாக்குறு பல்லியமுழக்க
வீங்குணர் வுற்றேனீசனன் றாகிலவணனா மன்னவ னானேன்
றீங்குறுசித்தன் செயலின்மோ கித்தேன் சீவனுக்கவத்தைக ளநேகம்
பாங்குறவுள வென் றறிந்தன னென்று பகர்வுழி யொளித்தனன் சித்தன்.

(ப - ரை.) தாங்கினீர் பலரும் = அநேகர் என்னை விழாமற் பிடித்துக்கொண்டீர், சயசயவென்ன தாக்குறு பல்லிய முழக்க = ஜயஜயவென்று நீங்களுரைத்த சப்தத்தானும் தூர்யமுதலிய வாத்தியங்களைக் கோஷித்ததானும், ஈங்குணர்வுற்றேன் = இவ்விடத்திற் பிரஞ்ஞையை யடைந்தேன், ஈசனன்றாகி = தீக்குதித்த புற்கசனல்லனாகி, லவணனும் மன்னவன் ஆனேன் = லவணமகா ராஜாவாயினேன், தீங்குறு சித்தன்செயலின் மோகித்தேன் = தீமைத்தோற்றுவிக்கும் சாம்பரிகனது மாயச்செய்கையினால் மிகவும் மோகத்தை யடைந்தேன், சீவனுக்கவத்தைகள் அநேகம் = ஜீவனுக்கு அவத்தைகள் அளவில்லன, பாங்குறவுளவென் றறிந்தனன் = அஞ்ஞானத்தினாற் திரமாகவிருக்கின்றனவென்று தெரிந்து கொண்டேன், என்று பகர்வுழி = என இவ்வண்ணம் கூறிய போது, ஒளித்தனன் சித்தன் = சித்தன் மறைந்து விட்டனன்.

(ஸ்ரீ - வீர.) அதன்பின் தூர்ய நிநாதத்தானும் ஜயசப்தத்தானும் உணர்த்தப் பெற்றேன், இவ்வண்ணம் இவ்விந்திரஜாலிகனால் இம்மோகம் எனக்குண்டாக்கப் பெற்றது, அஞ்ஞானத்தினால் ஜீவனுக்குத் தசைகள் நூற்றுக்கணக்காய் நன்றாகவுறுவன போலும். மிகுந்த தேஜசோடுகூடிய ராஜேந்திரனாகிய லவணன் இவ்வண்ணங் கூறியபோது ஆண்டு விரைவில் அச்சாம்பரிகன் ககனத்தில் மறைந்துபோய்விட்டான்.

(ச.) அவத்தைகள் = அஞ்ஞானத்தினுலேயே தெசைகள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தன் காட்டியமாயச் செயற்கு மந்திரிமார் கருத்துரைத்தல்:—இருந்தென.

இருந்தமந்திரிகள் சித்தனன்றிவனென் றேற்றிலனிமைப் பினும்மறைந்தான்
பொருந்தியவுலக மனவிரிவென்றே புலப்படக் காட்டுவான் விடுத்த
திருந்தியதெய்வ மாயையீதாகுஞ் செப்புமிச் செயலினுற்றீரப்
பெருந்தகைபரத்தின் விகாரமே மனமாம் பேருலகென்றன ரென்ருன்.

(ப - ரை.) இருந்த மந்திரிகள்=அவ்வவையின் மாட்டு வீற்றிருந்த அமைச்சர்கள், சித்தனன்றிவன் = இவன் இந்திரஜாலக்காரன் அல்லன், ஒன்றேற்றிலன் = ஒருவெகுமதியும் வேண்டிலன், இமைப்பினும் மறைந்தான் = நொடியில் அந்தர்த்தான மாயினன், பொருந்தியவுலகம் = தோற்றுநின்ற ஜகத்தானது, மனவிரிவென்றே = மநோவிலாசமாத்திர மென்றே, புலப்பட = தெளிவுறும்படி, காட்டுவான் = தெரிவிக்கும் பொருட்டு, விடுத்த = ஏவிய, திருந்திய தெய்வமாயை யீதாகும் எல்லாவல்லமையுமுள்ள தெய்வசம் பந்தமான மகாமாயையே யாமிது, செப்புமிச் செயலினுல் = சொல்லாநின்ற இந்தச் செய்கையினுல், தீரப்பெருந்தகை பரத்தின் = சர்வசக்தியையுமுடைய அநந்தமாய பூர்ண பிரஹ்மத்தினது, விகாரமே மனமாம் பேருலகு=விலாசமே மனம் மனோவிருத்தியே பெரியவுலகம், என்றனர் = என்றிவ் வண்ணம் அமைச்சர் அறைந்தனர், என்ருன் = என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இரகுநந்தனனை நோக்கிக் கூறினன்.

(ஸ்ரீ - வீர.) ஆண்டுற்ற அமைச்சர் முதலிய அவையோர் விஸ்மயத்தானே விரிவுற்ற விலோசனராய் இவ்வாறியம்பினர்: போதேவ! இவன் சாம்பரிகனல்லன், இவன்றனத்தையொரு சிறிதும் வாஞ்சிக்கவில்லை யல்லவா! மற்றே, சமுசாரத்தின் நிலேயித்தகையது என இலக்குவித்தலினுனே தேவதைகளால் அநுக்கிரகத்தின் பொருட்டு ஏவப்பட்ட மகாமாயையிது ஒன்று என்றுதெரிதல் வேண்டும். இதனுலே, இச்சமுசாரமானது, மநோவிவர்த்தமெனப் புலப்படாநிற்கும் சர்வசக்தியையுடைய மகாவிஷ்ணுவின் விலாசமே மனஞ்சகத்தாம்; மனமேயுலகாம்; ஜகத்திற்கு மநோவச்சின்ன சைதன்ய விவர்த்தத்தன்மை புண்மையின் மனஞ் சகத்தெனச் சாமாஞதிகரண்யம் பொருத்தமுடைத்தேயாம்.

(ச.) இருந்த மந்திரிகள் = அமைச்சரோ டிருந்த அவையோர், அரசனை நோக்கி, சித்தனன்றிவ னென்றலும், ஸ்ரீ வசிட்டர் இமைப்பினில் மறைந்தான், அந்தர்த்தான மாயினன், தனவிச்சையின் மையின் சித்தனன்று, பரத்தின் = சர்வசக்தியுடைய அநந்தமானபிர்மத்தினது, மனம் = மனத்தின் விகாரமே, விலாசமே, பேருலகா மென்றன ரென்ருன் என்பதன்னுவயம். (பெருந்தகை யரசனெனினும் அமையும்) (26)

சித்தன் கதை முற்றிற்று.



# உற்பத்திப் பிரகரண இதோபதேசம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் நானு ஆக்கியானங்களானே பரமான்ம ஆசிரய மாயா விவர்த்தபூத மனோவிலாச வடிவமாய்த்துவைத அனர்த்த சமுதாயம்பொய், அதன திஷ்டான பிரஹ்மாத்ம தத்துவமேமெய், எனப் பிரதிபாதிக்கப் பட்டது; இப்போது இவ்வண்ணம் இயம்பியதான் உற்பன்னமாயினும் பிரஹ்மாத்ம தத்வப்பிரதீதி மனத்தின் ஒருமையில்லாமையின் அநுபவமுடிவு பேறுடையதாக வாராதாம், ஆகலின் சித்த வொருமையின் சித்தியின் பொருட்டு அதனது பாகியவிருத்தி நிரோதம் செய்யத்தக்கது என்பதாக ஆங்காங் கறிவித்திருந்த போதினும், ஈண்டுச் சிறப்பாக அறிவிக்கும்பொருட்டுக் கூறுகின்றார்:—ஆயமனத்தென:

(ச.) முன் சித்தன்கதையிற்றன் சங்கற்பத்தால் அற்பகாலத்திற்றானே அநேகவுருடம் மனதிற்குச் சம்சாரஞ் சொல்லப்பட்டது, அஃதெங்ஙனமென் றுகாஞ்சைவரின் அதனைச் சாதிக்குநிமித்தம் மனச்சாமர்த்தியம் இதிற்சொல்லப்படுகின்றது:—ஆயவென.

ஆயமனத்தின் செயல்செயலா மதனுலொழிந்த தொழிந்துளதா
மேயமனத்தினலை வொழித்தோர் மிகவுநல்ல தியானத்தோர்
தூயமனமாயிடில் வெற்பாற் சுழலாக்கடல்போற் பிறப்பிறப்பா
மாயைமயக்கங் கெடுமென்று வசிட்டன்மீண்டு முரைசெய்வான்.

(ப - தை.) மனத்தின் ஆயசெயல் = மனத்தினுல்யாது ஆற்றப்பெற்றதோ அதுவே, செயலாம் = ஆற்றப்பெற்றதாம், அதனு லொழிந்தது ஒழிந்துளதாம் = மனதினுலே யாது தியாகிக்கப் பெற்றதோ அது தியாகிக்கப் பெற்றதேயாம், மேயமனத்தின் அலை வொழித்தோர் = வாசனைவசமாகப் பொருந்திய மனத்தினது சஞ்சலத்தைக் கெடுத்தவர், மிகவு நல்லதியானத்தோர் = உத்தமோத்தமமான தியானமுடையவர், தூயமன மாயிடில் = மனத்தினது சஞ்சல நீக்கத்தால், வெற்பாற் சுழலாக்கடல்போல் = மந்தர மலையால் அசைவுறாத பாற்கடல்போல், பிறப்பிறப்பா மாயைமயக்கங் கெடுமென்று = சம்சாரவிப்பிரம சாந்தியுண்டா மென்றுரைத்து, வசிட்டன் மீண்டும் உரைசெய்வான் = ஸ்ரீ வசிட்டபகவான் மீளவும் பகருவாராயினர்.

(ஸ்ரீ - வீர.) உலகினும் வெளியல்லவோ இது! யாதுமனத்தாற் செய்யப்பெற்றதோ அது செய்யப்பெற்ற தென்றும், யாதுமனத்தால் விடப்பெற்றதோ அத்துணையானே யது விடப்பெற்றதென்றும். ஹே அநக இராகவ நீயுணர்தி! ஸ்தம்பனுஸ்திரம் செய்த கட்டிலகப்பட்டுப் பகைவன் அசையாம லிருப்பதேபோல எவனது உத்தமமான மனமானது அசையாம லிருக்கின்றதோ அவனே பரமார்த்தமாகப் புருடனெனப் படுவன், மற்றையரோ சேற்றுப் புழுக்களாவர். எவனதுமனம் சபலத்தன்மையை விட்டுவிட்டதோ, ஓரிடத்தில் நிலைபெற்றதோ, தியானமாகிய ஹேதுவினுனே அம்மனம் அநுத்தமபதத்தோடு ஒற்றுமையுற்றதாய்ப் பிரஹ்ம சொரூபமாகவே நிகழும். அலைவொழிவு = அசபலத்தகைமை = அசஞ்சலத் தகைமை, அதனது தத்துவ மியாதெனின்? சங்கற்பாதி வர்ஜித மென்பதாம். இவ்வதிகாரி, சர்வோத்தம உபாயத்தானே, சித்தத்தின் சின்மாத்திர சேடத்தன்மை வடிவத்தியானத்தோடு சேர்ந்து வாழ்ந்திடுவன்; ஆகலின் பெரும் பயனுண்மையானே மனத்தின் அசாபல்யம் சம்பாதிக்கத் தக்கதாம். அற்றேல் தியான

பலத்தானும் மனத்தினது சாபல்யத்தானே சமுசாரத்தான் முமுக்ஷுவிற்கு ஆவதென்னே யெனின் ஆண்டியம்பல், ஆயவென மனத்தினது சம்யமத்தாற் சமுசாரமயக்கம் சாந்தியையடையும்,மந்தரபர்வதம் அசையாதபோது க்ஷீரமகார்ணம் போலுமென்பதாம்.

(ச,) மனத்தின் = மனதினால், ஆயசெயல்=யாதுசெய்யப்பட்டதோ, செயலாம்= அதுவே செய்யப்பட்டதாம், அதனால் = மனதினால், ஒழிந்தது = எது விடுபட்டதோ, ஒழிந்துள்ளதாம் = அது எப்போதும் விடுபட்டதாம், என்று புண்ணிய சொரூபமான இராமா நீயறி; செயல் செயலின்மைகளுக்கு மனச்செயலானே பிராதான்யம் அல்லாமல் சரீரச் செயல்களாகப் பிராதான்யம் இன்றென்பது பொருள். மேயதியானத்தோர்= சங்கற்பாதிரகிதமாய் நித்தியமான (கதசாபல) மனதே உத்தமபதமான தியானமென்பது பொருள். வெற்பாற் சுழலாக்கடல்போல் = மந்தரபருவதம் நிச்சலமாயின் க்ஷீரமகார்ணவஞ் சாந்தியாவதுபோல், மாயைமயக்கங்கெடும் = சமுசாரப் பிரமைசாந்தியாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சப்தாதி யாகாரங்கள் வாய்ந்த சித்தவிருத்திகட்குச் சமுசார சம்பந்தமான தேகசததேஹதுத் தன்மையினிது புலப்படுத்தும் வாயிலாக அதனது நிரோத உபாயங்கூறல்:—தளையாவென.

தளையாநிற்கும் பலபோகச் சங்கற்பஞ்சேர் மனவிருத்தி
முளையால்வளரு மாமாயைமோக மென்னு நச்சுமரம்
விளையாநின்ற மனநோய்க்கு மேலோர் விதித்தபரிகார
மிளையாதெளிதா யதனாலே யியற்றலாகு மிதுகேட்பாய். (2)

(ப - ரை.) தளையாநிற்கும் பலபோகச் சங்கற்பஞ்சேர் மனவிருத்தி மூளையால் = பந்திக்கும் போகசங்கற்ப விப்ரமங்கள மனோ விருத்திகளேயாய அங்குரபங்திகளால், வளரும்மாமாயை மோகமென்னு நச்சுமரம் = விருத்தியாகி யோங்கும் சம்சாரவிஷவிருக்ஷங்கள், விளையாநின்ற மனநோய்க்கு = உண்டாகாநின்ற இச்சித்தமகா வியாதிக்கு, மேலோர் விதித்தபரிகாரம் = சிகிச்சைசெய்வதில் மகான்கள் நியமித்த அருமருந்து, இளையாது எளிதாயது தனாலே யியற்றலாகும் = இனிது நிச்சயிக்கப் பெற்றது சுலபமாகச் சாதிக்கப்பெறுவது மற்றொருவரது அபேக்ஷையின்றித் தன்னானே செய்துகொள்ளத்தக்கது, ஆகிய இது கேட்பாய் = அவ்விது தன்னைக் கூறக்கேட்குதி.

(ஸ்ரீ - வீர.) போகங்கள் விடயசங்கற்பங்கள் என்பனவேயாய விப்பிரமங்களாமேதுக்களானே யுண்டாகாநின்ற சப்தாதி விருத்திகளுஞ் சப்தாதி விடயங்களுமே, சமுசார விஷவிருக்ஷங்கட்கு அங்குர வரிசைகளாம். இச்சித்த மகாவியாதிக்குச்சிகித்சை செய்வதின்பர ஔஷதம் உளது கூறக் கேட்பாயாக = ஔஷதத்தின் பரத்தன்மையையே சாதிக்கின்றார். இளையாதென்பதாதியால். உலகிற் சிறிதௌடதம் சகாயமின்றித் தன்னானே சாதிக்க முடியாதாம், இஃதங்ஙன மல்லவென்பார் தன்னாலே யியற்றலாகுமென்றார். சுவாயத்தம் = சுவாதீனம் = தன்னானே சாதிக்கத்தக்கது என்பதாம். சுவாதீனமாயினும் சிறிது துயருற்றுச் சம்பாதிப்பதாகும், இஃதங்ஙன மல்லவென்பார், எளிதாயதென்றார். சுசாத்யம், சுவாதீனமும் சுசாத்யமும் ஆயினும் உபயோக காலத்தில் சிறிதௌடதம், சுசுவாது ஆவதின்றும், இஃதத்தகையது அல்லவென்பார், இளையாதென்றார். இத்தன்மைய இனிதாயினும் சிறிது ஔடகம் பிறழ்ந்தபயனதாம், இஃதன்னண மல்லவென்பார். இளையாதென்றார். நிச்சயிக்கப் பெற்றது = பலத்தானே நிர்ணயிக்கப்பெற்றது; அவசியம் சாதிக்கும் புருடார்த்தத்தை யென்பதாம்.

(ச.) பலபோகச் சங்கற்பஞ்சேர் = நாநாபோகங்களின் சங்கற்பங்களின் விலாசத்தோடுகூடிய, மனவிருத்தி முளையால் = மனதின் விருத்திகளாகிய அங்குரபந்திகளால்; வளரும் = வளராநிற்கும், மாமாயைமோக மென்னு நச்சுமரம் = மகத்தான சம்சாரப் பிரமையென்னும் வடவிருக்ஷங்கள், விளையாநின்ற மனநோய்க்கு = விளைதற்குக் காரணமாய் நின்ற சித்த மகா வியாதிக்கு, மேலோர் விதித்த = சாதுக்கள் நிச்சயித்து நியமித்த, பரிகாரம் = சிகித்சை, உளது, இயற்றலாகுமிது = சாத்தியமான பரம அவுடதத்தை, கேட்பாய்யான் கூற இராமா நீ கேட்பாய். அல்லது, போகம் = போகங்களின் எழும், சங்கற்பஞ்சேர் = சங்கற்பங்களின் விலாசத்தோடு கூடிய, மனோவிருத்தி = மனதின் விருத்திகளே, முளையாய், மரம் = சம்சாரவிட விருக்ஷங்களுக்கு அங்குரபந்திகளாம். சிகித்சையில் இயற்றலாகுமிது எனச்சிறிது விகற்பித்துணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை,) உள்ளாசை விடயத்தையும் வெளிவிடயத்தையும் விட்டுத் தொலைத்து, தன்னுன்மமாத்திர ஆகாரவிருத்தி தாரைவடிவமான புருடப்பிரயத்தினத்தினுனே விரைவில் தன்னுனே சித்த வேதாளத்தைச் செயிக்கவேண்டும், ஆண்டு இஷ்டத்தியாகம் பிரதம பீடிகையதிதிடஞ் செய்தல் வேண்டுமென்னுங் கருத்தாலுரைக்கின்றார்:—மிகவென.

மிகமாலுறுபல் பொருள்களையு மேவாதொழித் தோர்மனம் வென்றோர்
சுகமாயெளிதாய்த் தனக்குரித்தாந் துயர்தீர் நிராசையறி வரியோர்
சகமார்மனிதப் புழுவொப்பார் சான்றோருரைத்த நூற்பழகி
யகமாநினைவுதீர் மனத்தாலயரு மனதைத் திருப்பிடலாம். (3)

(ப - ஞா.) மிகமாலுறு பல்பொருள் களையும் = பேராசைக்கு விஷயீபூதமான பல பொருள்களையும் = மேவாதொழித்தோர் = பற்றாது விட்டவர்கள், மனம்வென்றோர் = சித்தத்தைச் செயித்தவராவர், சுகமாய் எளிதாய் தனக்குரித்தாம், இன்பமாய்ச் சுலபமாய்த் தனததீனமாய், துயர்தீர் நிராசையறிவரியோர் = துன்பந்துடைக்கும் தியாகவுணர்வானது யாவருக்கு முடியாததாமோ, சகமார்மனிதப் புழுவொப்பார் = அவர் உலகத்தி லிகழத்தக்க புருடகீடமாவர், சான்றோருரைத்த நூற்பழகி = பெரியோர் பேசிய சாஸ்திரங்களையப்யசித்து, அகமாநினைவு தீர்மனத்தால் = நானென்றெழும் எண்ணந்தீர்ந்த மனத்தினாலே, அயருமனதைத் திருப்பிடலாம் = விடயங்களின் மயங்கும் மனதைவயப்படுத்தலாம்.

(ஸ்ரீ - வீர.) இஷ்டமான வஸ்துவை விட்டொழித்து யாவன் பச்சாத்தாப மில்லாதவனாய் இராகாதி சித்தரோக சூனியனா யிருக்கின்றானோ, அவன்பாகிய விடயங்களில் மனத்தைச் சஞ்சரிக்க விடாதவனாய்த் தந்தமற்ற யானையைத் தந்தமுற்றயானை வெற்றிகொள்வதேபோல, மனத்தை வெற்றிகொண்டவனே யாவன் இஷ்டவிடயத் தியாகத்தில் மிகவும் உற்சாகமுண்டாதற் பொருட்டு அதனைச்செய்யாத அவிரக்தரை நிந்திப்பார் மனிதப்புழுவொப்பா ரென்றார். தனததீனமாய், நியமமாக ஹிதமாய், ஒருபோதினும் அஹிதமற்றதாயிலகும் தனதிஷ்ட விடயத்தியாகமேயாயவேதனம் (வேதன உபாயத் தன்மையானே) தனதிஷ்டத்தின்றியாக விடயகமாய வேதனம் அதாவது வைராக்கிய விருத்தி, யாவனுக்குச் செய்யமுடியாததாமோ அப்புருடகீடம் சீயென் றிகழத்தக்கதேயாம். இட்டவத்துத் தியாகமென்பது ஜய உபாயமேலாயின் அத்தியாகத்திற்கு உபாயம் யாதோ எனின்? உரைப்பார்:- சான்றோர். சாதுமகாசங்கத்தை யடைந்து அத்தியாத்மசாஸ்திர சிரவணஞ்செய்த தீக்ஷணதீரமாகிய சாந்தமனத்தினாலே சிந்தையுற்று வெம்புமனத்தைத் திருத்திவிடலாம்.

(ச.) மால் = இட்டம், விரும்பாதொழித்தோர் = விட்டு ஸ்மரியாதிருப்போர், மனம்மென்றோர் = நிராமயராம், பகிர்முகப் பிரவிருத்தியை விட்டவரால் மனஞ்சயிக்கப்பட்டதேயாம், இஷ்டவஸ்துத் தியாகமான மனதால் பகிர்முகப் பிரவிருத்தி நிவிருத்திக்குமென்பது பொருள். தனக்குரித்தாய் = சுவாதீனமாய், எளிதாய் = ஏகாந்தமாய், சுகமாய் = இதமாகிய, துயர்தீர் நிராசையறிவரியோர் = தனது இஷ்டத்தியாக பாவனமும் எவர்க்குச் செய்தற்கு அசக்கியமோ அவர், மனிதபுழு = மநுடகீடமாம், ஒப்பார் = சமத்துவநிறைந்த, சான்றோருரைத்த நூல்பழகி = சாஸ்திரசற்சங்கமங்களால் விவேகமுற்றதாய், அகமாகினைவுதீர் = அதனாலே சந்தாபரகிதமான, மனத்தால் = மனதினாலேயே, அயருமனதை = சாம்சாரிக சிந்தைகளால் தபிக்கும் மனதை திருப்பிடலாம் = மனனசீலனே நிஷேதிப்பாய் மனோவிருத்தியில் விடத்துமன மெனப்பட்டது. அசக்கியமோ அவரை மனிதப்புழுவொப்பார் = புருடகீடக மென்று நிந்திக்கலாம் என்பது பாடபேதமாம். (3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அத்திருத்தத்தையே திருஷ்டாந்த பூர்வகமாகத் தெளிவித்துத் தன்னு வியற்றலாம் சிறப்புகளையே வற்புறுத்தல்:—இரும்பென.

இரும்பாலிரும் புதிருந்துவபோ லியற்று மனத்தான் மனந்திருந்துந்
திரும்பாநிராசை வடிவாகிச் செறியுந் தன்னு லியற்றுவதாய்
விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்யமனத்தி னுபசாந்தி
பெரும்பாரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு நன்றாகா.

(ப - கை.) இரும்பால் இரும்பு திருந்துவபோல் = தண்மையுற்ற அயத்தினாலே வெம்மையுற்ற அயம்திருத்தப் படுவதேபோல, இயற்று மனத்தால் மனந்திருந்தும் = சத்வாசனு விசிஷ்டமனத்தினாலே சாந்த மில்லாத மனதுதிருத்தப்பெறும், திரும்பா நிராசைவடிவாகி = மாறுபடாத வைராக்கிய வுருவமாய், செறியுந்தன்னு லியற்றுவதாய் முயலாநின்ற தனது முயற்சியினாலே சாதிக்கத் தக்கதாய், விரும்பாநின்றார்க்கு எளிதான = பேராநந்தத்தை வாஞ்சிப்பவர்கட்கு அதிசுலபமான, வெய்யமனத்தின் உபசாந்தி = மலினவாசனு விசிஷ்டமனத்தினது பரமசாந்தியானது, பெரும்பாரந்தீர் நற்கதியாம் — பெரியசமுசார பாரத்தைத் தீர்க்கும் சுபகதியாம்,பிறிதோர் கதியும் நன்றாகா = மற்றெக்கெதியும் நலமுடையதாகாது,

(ஸ்ரீ-வீர.) எங்ஙனம் கொல்லன் அக்கினியிற் காயவைத்த இரும்பை, அதன்மாறுய சஸ்திரசம்பந்தியாம் பாஷாணுதிகளின் சங்கம ஆதாரத்தான் வெட்டும் ஆற்றலுற்ற இரும்பால் வெட்டுவானோ (திருத்துவானோ) அங்ஙனம், யோக க்ஷேமசிந்தைகளினாலே தபித்துக்கொண் டிருக்கும் அவிவேகமனத்தை, சிந்தைகளானே கலங்காமலிருக்கும் விவேகசாலி மனத்தானே சேதிப்பாயாக; சிந்யாகுலவடிவமாய பேரழலில் மிகமிகவும் அழுற்றப்பெற்ற மனோரூப இரும்பை, தாபங்களெல்லாம் சாந்தியடைந்த மனமேயாய இரும்பினாலே சாதனத்தினாலே சேதிக்குதி யென்பதாம். மனோநிக்கிரக மில்லாமலும் புருடார்த்தப் பிராப்தியை யாசங்கித்துக் கூறுகின்றார்:—திரும்பா தனதுபுருடப்பிரயத்தனமாத்திரத்தினாலே சாதிக்கத்தக்கதாய், தனதிஷ்டவத்துத் தியாகரூபமாய், உள்ள மனப்பிரசாந்தி மாத்திரத்தா னல்லாமல் சுபகதியில்லையாம். தனதிட்டவத்துத் தியாக சாத்தியத் தன்மையுண்மையின் உபசாரமாகத் தனுதிஷ்ட வத்துத் தியாகரூபம் என்றதாம்.

(ச.] இரும்பால் = காய்ச்சாத அயத்தால், இரும்பு = காய்ச்சியவயம், நிராசைவடிவாகி = தனதிஷ்டத் தியாகரூபமாய், இயற்றுவதாய்=சாத்தியமாய், நற்கதி= சுபகதி, இஷ்டத்தியாகமே மனோபசாந்தி அதுவே சுபகதியென்பது பொருள். (4)

(ஸ்ரீ-வீர-அ-கை.) அச்சுபகதியானது யாதுகொலாமாலோ வெனின் ஓதல்.—வாவென.

வாவுமனத்தையசங்கற்பவாளாலறுக்கினிறைந்தெங்கு
மியாவுமதுவாம்பொருடோன்றுமிந்தவழிநின்றறிவாலே
மேவுமனதைவிழுங்கியதின்மேலாமாயாவிகற்பமெலா
மோவுமதியாலறிவுகடந்துளத்தைவிழுங்கும்பொருளுணர்வாய். (5)

(ப - ரை.) வாவுமனத்தை =விடயங்களைச் சங்கற்பித்துக் கொண்டிருக்குஞ் சித்தத்தை, அசங்கற்பவாளால் = அச்ங்கற்ப மென்னுஞ் சஸ்திரத்தால், அறுக்கின் = சின்னஞ்செய்யின், நிறைந்தெங்கு மியாவுமது வாம்பொரு டோன்றும் =சர்வகதமாய்ச் சர்வமாய்ச் சாந்தமாய பிரஹ்மத்தை யடையலாம், இந்தவழி நின்று = இம்மகாபதவியில் நிலைத்து நின்று, அறிவாலே மேவுமனதை விழுங்கி = சித்தத்தைச் சிற்பக்ஷிதமாக்கி, அதின்மேலா=சித்தத்தினு மேலான, பொருளாதி, மாயாவிகற்பமெலாம் ஓவுமதியால்= பவபாவனையினின்றும் விடுபட்ட பரமதீயினுலே, அறிவுகடந்து = எண்ணங்கடொந்து உளத்தை விழுங்கும் பொருள் உணர்வாய் = மனோசாக்ஷியாய நிருபாதிக ஆன்மசைதன்யத்தை நின்வடிவமாகச் சாக்ஷாத் கரிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) சோபன அசோபன அத்தியாச வடிவசங்கற்பன அபாவமாகிய அசங்கற்பனமேயாய சஸ்திரத்தாற் சின்னப்பட்ட சித்தம் மூலத்தோடுகூட எக்காலழிவுற்றதாமோ, அக்கால் எங்குமுள்ளதாயும் எல்லா மானதாயும், சாந்தமாயும் இலங்கும்பிரஹ்ம சொரூபமடையப் பெறும் சங்கற்ப சப்தத்தானே சாற்றப்பெற்ற சோபன அசோபன அத்தியா சங்களானே விருப்பு வெறுப்புகள் உண்டாவனவாம், அதனைவிடின் அவை விளையா வாகலின் சித்தஞ்செயிக்கப் பெற்றதேயாம், எனக்கருதியே அசங்கற்பனமே சஸ்திரமென வறையப்பெற்றதா மென்றறிக. மனோநிக்கிரக மில்லாமற் சுபகதியானது இலதாமாதலின் அதன்பொருட்டு அதன் நிக்கிரகம் செய்யத்தக்கதா மென்பார்: இந்த வழி நின்றென்றூர். அல்லது அசித்தத்தன்மையைச் சம்பாதிப்பதில் யாதுகொல்லுபாய மெனின் அதனைக்கூறல்; இந்தவழி யென்பதாம். சித்தத்தை நெடுங்காலம், அத்விதீயமாய் வாக்கு மனத்துக் கெட்டாததாய அம்மகா பதவியாம் பிரஹ்மரூபத் தன்மையை யடையும்படி செய்வித்து முடிவிற் சாக்ஷாத்கார விருத்தியாவிர்ப்பூத சித்தால் மனத்தோடு அவித்தையின் பாதத்தானே சித்பக்ஷிதமாக்கிச் சித்தத்தினும் பரமானபூர்ணசின்மாத்திர ரூபமாயாவாய். எம்மகா பதவியின்பால் அநந்தஜீவர் ஒரேபோதில் யாதொரு ப்ாதமும்மில்லர்மல் சஞ்சரிப்பாரோ, தருக்கிக்க முடியாததான அதன் மாட்டுறுதியாயுற்று வாழ்தி = அதன் கண்ணே சுவசொரூபமாக மனத்தைத் தரித்திருத்தி யென்பதாம், சித்பக்ஷிதமாக்கி = சிந்தாகுலத்தாற் பீடையுற்ற சித்தத்தைச் சின்மாத்திர சேடமாக்கி யென்பதாம். ஆண்டு முதலிற் சின்மாத்திர பாவனையோடு கூடினவன் ஆதி, அது திரமுறற்பொருட்டு அதி சாவதானமான புத்தியோடு கூடினவன் ஆவாய், பின் உளத்தை விழுங்குதி. பின் சித்தத்தினுபரமாய் ஆத்மாவை யொருமையோ டுற்றவனாய் ஸ்தாபிப்பாயாக, மற்றொன்றையும் நிலைபெறுத்தாதொழிதி. பராபாவநயாமுக்த: என்றும் பாடம், ஆண்டு ஆத்ம நம்சித்தத்தைப் பிரஹ்மத்தின் கண்ணே தரிப்பாயாக, அதன் பின் சித்தம் சிந்தையோடு கூடியதாம் இதனை மூலமனுசரித்துணர்க

(ச.) அசங்கற்பவாளால் = சங்கற்பங்களின் உதயமின்மையே வாளாம் அதனால், எங்குநிறைந்து = சர்வகதமாய், யாவுமதுவாம் = சர்வான் மகமான, பொருள் = சாந்த மாகிய பிரஹ்மம், தோன்றும் = சங்கற்ப நாசத்தான் மனோ நாசமாம்போது பிரஹ்மம் பிரகாசிக்கு மென்பதாம். இந்தவழி நின்று = பரிபூர்ண பிரஹ்மதிருஷ்டியே மகாபதவி யாம் அதனை வெகுகாலம் பாவிப்பவனா யிருந்து, அறிவாலே மேவுமனத்தை விழுங்கி, சித்ரூபமான பிரஹ்மத்திற், சித்தத்தையடக்கி, அதின்மேலா = சித்தத்தின் மேலான வஸ்து ஆவாயென்பது பொருள். மாயாவிகற்மெலா மோவுமதியால் = பவபாவனையொ ழிந்தபரம புத்தியால், அறிவுகடந்து = சித்தத்திற்கு மேலாய், உளத்தை விழுங்கும் பொருள் = சித்தோபாதி ரகிதமான ஆன்மாவை, உணர்வாய். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தைவெல்ல அதிமுயற்சி செய்யவேண்டு மென்றும், வென்றால் இன்னபயனென்றும் வெல்லுதற் குபாயமும் கூறல்:—வருந்தியெனः

வருந்திமுயன் றுமனந்தன்னை மாற்றியில்லையுண்டென்
றிருந்தபதத்திலிருந்திடுவாயிடர்தீர்செல்வமிடரின்றிப்
பொருந்தவேண்டுமனம்வென்றாற்புவனமூன் றுந்துரும்பாகுந்
திருந்தவினிதென்றனவெல்லாந்தீதாய்த்தோன்றின் மனமாளும்.

(ப - ரை.) வருந்தி முயன்று மனந்தன்னைமாற்றி = பரமபௌருஷத்தைப்பற்றிச் சித்தத்தைச் சித்த மில்லாததாகச் செய்து, இல்லை உண்டு என்னுதிருந்த பதத்திலிருந் திடுவாய் = நீயும் மற்றொன்றும் இல்லாததாயிலகும் அம்மகாபதவியி லுபஸ்திதி பெறு வாய், இடர்தீர் செல்வம் இடரின்றிப் பொருந்த வேண்டும் = கலங்காதிருத்தல் ஸ்ரீயின் மூலமாம் கலங்காமலே முயன்றடைய வேண்டும், மனம்வென்றாற் புவனமூன் றும் துரும்பாகும் = சித்தத்தை வெற்றிகொண்டால் முப்புவனத்தையும் வெற்றிகொள் வது திருணமொப்பாம், திருந்த இனிதென்றன வெல்லாம் = மிகவும் நல்லதெனத் தோற்றுவனயாவும், தீதாய்த்தோன்றின் மனம்மாளும் = அத்தியந்தம் ஜனன ஏதுவா கவே புலப்படுமானால் (வாதனையை வளர்த்தலானே) உள்ளம் ஒழியும்.

(ஸ்ரீ - வீர.) மேலான புருடப் பிரயத்தினத்தைக் கொண்டு, சித்தத்தைச் சங்கற்ப விகற்பவடிவ மற்றதாகச் செய்வித்து, மருடன்யான் இன்னான்மகன், கருத்தாபோக்தா வென அபிமானிக்கும் நீ யில்லாததும், உன்னினும் அன்னிய மாயவுலகமும் இல்லா ததும், ஆகிய அவ்வத்விதீய பிரஹ்மமென பெயரிய பெரிய பதவியை அடைந்து வாழ்தி; அதனை யடைந்தால் அழிவென்று மில்லை. இன்றளவும் மனோஜயம் சித்திக்கவில்லை, விக்ஷேபமானது அதன்வெற்றியைக் கெடுத்துக்கொண் டிருத்தலின், மனோவெற்றியில் முயன்றுகொண் டிருப்பவன் அதனைச் செய்யாதொழிக லெனல்: இடர்தீர், நீள்காலம் மனோநிக்கிரகத்திற் பிரவிருத்தித்துக் கொண்டிருப்பவன் மனோலயமிதுவரை கிடைத்திலதே யெனக்கலக்கமுற்று, அதனானேனும் முயல்வை விட்டுவிடக் கூடாது என அதில் உற்சாகம் அதிகரிக்கக் கூறல்: இடர்தீர். கலங்காது முயல்வதே இராஜ்யாதி சம்பத்தின் மூலமாம், விக்ஷேபமிடையி லடையாமற் சாவதான மாய் முயலவேண்டு மென்பதாம். இது திருஷ்டாந்தப் பொருட்டாம், கலக்கமுறாமல் பொறுமையுடன் ஒருமையுடன் முயன்றால் மனோஜயம் அவசியஞ் சித்திக்கும் அதிகாரிக் கென்றுணர்க. இதனை ஸ்ரீபகவானும் பகர்ந்தருளி யுள்ளார்:—"வஞ்சர்வேல்கொடு மார்பி னெறியினு, மெஞ்சவேதழன் மூடியெரியினு, நஞ்சினாரழலைகலியினு, மஞ்சிடார்து வாரந்தமாவதே, போகமாய புலன்களைப் போக்கறுத், தாகமாமெய்யறி விடையேயந்த,

யேகமாய மனத்தினையெல்லவே, யேகமாகவிருத்திகலாது நீ." எம்மோ வெற்றியானே மும்மையுலக விஜயமும் திருணம்போலு மிலங்கித்தோன்றும். வெளியே விளையாடிக் கொண்டிருத்தலே சித்தத்திற்கு இயற்கையாதலின் ஆத்மத்தியானமே சம்பவியாதா மெனின் ? கூறல்:—திருந்தவென்பது. தோற்றுமாத்திரத்தில் இரம்மியங்களாகிய விடயங்களில் தோஷ அநுசந்தானத்தானே அரம்மியத் தன்மைத் தரிசனமம்மூதலில் தேடத்தக்கதா மெனல்:—திருந்தவென்பது விவேகியாகிய உன்னால் இரமணீயமான வஸ்து, அரமணீயமதாக, மலினமதாக வுணரப்பெறுமாயின்; நல்லது நல்லது என்று கவர்ந்த யாவற்றையும் தீயது தீயது எனக் கவருதியேலாயின்; ஆசைக்கு மூலமாக யெழாநின்ற விஷயங்களில் இரமணீயத் தன்மை யத்தியாசத்தின் நீக்கத்தானே ஆசைநீக்க முண்டாதலின் சித்தத்தின் அவயவங்களாகிய விருத்திகள் சேதிக்கப்பெற்றனவே யாமென்பது எமதபிப்பிராயமாம்.

(ச.) வருந்தி முயன்று = இயமநியமாதிருப்மான் யத்தன விசேடத்தை ஆசிரயித்து, மனந்தன்னை = சித்தத்தை, மாற்றி = சங்கற்பாதி ரகிதமாக்கி, இல்லையுண்டென்னுது = அபாவதிருஷ்டியும் பேததிருஷ்டியும் அற்ற, இருந்த பதத்திலிருந்திடுவாய் = மகாசத்தையைப் பொருந்துவாய் இடர்தீர்செல்வம் = தைரியமே செல்வஹேதுவாம், இடரின்றி = தைரியத்தினுலேயே, பொருந்த வேண்டும் = மனோஜயமாம், மனம்வென்றால் = மனோஜயத்தால், புவனமூன்றும் = திரிலோக விஜயமும், துரும்பாகும் = திருணம்போற் சுகமாய்ப் பெறப்படுமென்பது பொருள்; திருந்தவினிதென்றன வெல்லாம் = இரம்மியமானவஸ்து, தீதாய்த்தோன்றின் = அரம்மியமுடையதாய் நின்றுற் பாவிக்கப்படுமாயின் அப்போதே, மனமாளும் = சித்தத்தினங்கங்கள், சேதிக்கப்பட்டவைகளாம், சின்னங்களாம் என்றெமது மதமென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனோவிலயமாத்திரத்தானே விசிராந்தியான் துண்டாமாதலின் மீளவும் மநோநிக்கிரக வுபாயத்தையே வற்புறுத்தல்:—சித்தவென.

சித்தவிண்ணிற்றிகழறிவாந்தியானத்தாலேயறிவென்னு
மொத்தபடையாலையமறவுளத்தையறுப்பாயறுத்ததற்பின்
மெத்துதுயர்போமவனிவனுன்மேவுமென்னததுவிதுவாய்
வைத்தவவையேமனமிதனைமறப்பாம்வாளாலறுத்திடுவாய்.

[ப-ரை.] சித்த விண்ணில் திகழ் அறிவாம் தியானத்தாலே = இருதயாகாயத்தில் விளங்கா நின்ற சித்தாந்தி யானத்தினுலே, அறிவென்னும் ஒத்தபடையில் = பகையைக் கெடுக்கமகா ஆற்றனுற்ற சித்சக்ரதாரையினுலே, ஐயமற உளத்தை யறுப்பாய் = சங்கையில்லாமல் மனத்தை வெட்டித்தள்ளுதி, அறுத்ததற்பின் = மாய்த்ததன் பின்னர், மெத்து துயர்போம் = துன்புறுத்திக் கொண்டிருந்த ஆதிகள் துன்புறுத்தமாட்டா, அவன் இவன், நான்மேவு மென்னது அது இதுவாய்வைத்த விவையேமனம் = அவன் இவன் அகம்மம அது விது என்பதான எண்ணங்களை யடைந்துகொண் டிருப்பதே மனமாம், இதனை மறப்பாம்வாளால் அறுத்திடுவாய் = இம்மனந்தனை அவ்வெண்ணங்களை யாற்றுதிருக்கும் கட்கத்தினுலே சேதித்துத் தள்ளுவாய்,

(ஸ்ரீ - வீர.) இருதயாகாசத்தில் அந்தக்கரண விருத்திகளின் பாவ அபாவங்கட்கும் சந்திக்கும் சாக்ஷியாகப் பிரதீதி யாகாநின்ற சித்விடயகத் தியானத்தினுலே பிரவிருத்திப்பிக்கப்பட்ட ஞானசக்கிர தாரணியினுலே மனத்தை மாய்ப்பாய். அத்தியந்தம் விஸ்தீர்ணமாய இருதயா காயத்தில் தகராகாசரூபப் பிரஹ்மசித்தில் அந்நிய விருத்தி யென்

னும் அகண்டப் பிரஹ்மாகார விருத்தியி லிலங்கும் அறிவுவடிவமான சக்கிரப்படையின் அக்கிரபாகத்தால் மநத்தைமடியப் பொடிப்பாய் நீ இது விடயத்தில் யாதொரு ஆலோசனையும் வேண்டாம்; பின்னுன்னை மாநசதுக்கங்க ளென்னும் ஆதிகள் பந்தனப்படுத்த மாட்டா. முன் அசங்கற்பன சஸ்திரத்தானே சின்னமென்னயாது ஒதப் பெத்றதோ, அதனை மனச்சொரூபங் கூறும்வாயிலாகவிஸ்தரித்தல்,—அவனிவன் என்பது. மனதின் சேதிக்கத் தக்கனவாய் அங்கங்களை யறைந்து, சரீரத்தைச் சாற்றல்:—அவனிவன் என்பது: காணப்பெற்ற, தந்தை முதலியோரான் உண்டாக்கப் பெற்றிக்கும் அவ்வித்தேகமியானெனவும், முன்னர்த்தந்தை யாதியோராற் சம்பாதிக்கப் பெற்றுள்ள இத்தேகசம்பந்தி கிருகக்கிராம க்ஷேத்திராதி என்னுடைய தெனவும், எழாநின்ற எம்மயலுளவோ, அவ்வளவு மாத்திரமே சரீரமாகவுடையது மனமாம். இவன்யானு யிருக்கின்றேன் அவன் யானுயிருக்கின்றேன் என்பன அபிஞ்ஞை பிரத்யபிஞ்ஞைகளாம், இது வென்னும் சமீப வஸ்து, அது வென்னும் சேய்மைப்பொருள் இடையிலுள்ளது, என்னுமிவை என்னுடையன, என்பது மாத்திரமாய பரிமாணம் மனமெனப்படும், சங்கற்பத்தியாக மென்னும் அசங்கற்பமாத்திரமாகிய அரிவாளால் [சேதனசாதனத்தால்] அம்மனம் நன்றாகச் சேதிக்கப்படும்.

(ச) சித்த விண்ணில் = இருதயாகாசத்தில், திகழ், அறிவு தியானத்தாலேயாம் ஆன்மத்தியானத்தினுலே பிரகாசியா நின்ற, அறிவென்னும் ஒத்தபடையால் = சித்தேஒப்பமுள்ள சக்கராயுதமாம் யாவையும் பரிச்சேதஞ் செய்யும் எதுவாதலின், அச்சாதனத்தால், ஐயமற = சங்கையைவிட்டு, உளத்தையறுப்பாய் = ஆன்மாவின் கண்ணேயொடுக்குவாய், அறுத்ததற்பின் = அங்ஙன மொடுக்கின், மெத்து துயர்போம் = ஆதிகள் நின்னைப் பந்தியாதனவா மென்பது பொருள், இவனவனுன் = இவனுன் அவனுன் என்ன திதுவதுவாம் = இஃதெனது அஃதெனதாம், வைத்தவிவையே = என்னும் சமீபதூர விஷயங்களான அகமமாபிமானங்களே, மனம் = அகங்கார மமகாரங்களே மநோவியாபாரங்க ளென்பது பொருள், மறப்பாம் வாளால் = வாட்கொப்பான அகந்தைமமதைகளின் அபாவனையினுலே, இதனை யறுத்திடுவாய், மனதுலயிக்கு மென்பது பொருள் திகழறிவாந் தியானத்தாலே = சித்துரூபமான ஆத்மத் தியானத்தால் பாடபேதம், பரிச்சேத மென்பது பிரிவு இன்மை நீக்கம். (7)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனமிறந்தால் இடரில்லையென்று உரைத்தல்:—பெருகவென

பெருகத்திரண்டமுகிலெல்லாம்பெருங்காற்றுலேயொருவுதல்போல்
வருகற்பனைநாசத்தாலேமனம்போயிறக்குமனமிறந்தாற்
பொருகற்பாந்தமாருதமும்பொங்குகடலும்புவியனைத்து
முருகச்சுடுபன்னிருகதிருமொருகால்வரினுமிடருண்டோ. (8)

(ப - ரை.) பெருகத்திரண்ட முகில் எல்லாம் = விஸ்தாரமாகச சூழ்ந்து நிற்கும் மேகமண்டலங்கள் யாவும், பெருங்காற்றுலே யொருவுதல் போல் = பிரசண்டவாதத்தினுலே சிதறியோடிப் போவதேபோல, வருகற்பனை நாசத்தாலே = வாசனையின் வயமாக எழுந்துவரும் எண்ணங்களின் அழிவு பாட்டினுலே, மனம்போயிறக்கும் = மனமானது நசித்துப்போம், மனமிறந்தால் = சித்தானது சாவுற்றுல், பொருகற்பாந்த மாருதமும் = யாவற்றையு மழிக்கும் பிரளயகாலப் பிரசண்டவாதமும், பொங்குகடலும் = எல்லாக்கடலும் ஒன்றுகி யோங்கியெழும் ஏகமார்ணவமும், புவியனைத்தும் உருகச்சுடு பன்னிருகதிரும் = சர்வபூப்பிரதேசங்களையும் பொடியாம்படி தகிக்கும் பன்னிரண்டு

சகஸ்திர கிரணன்களும், ஒருகால் வரினும் இடருண்டோ ! ஒருபோதுற்ற போதினும் துயரஞ்சிறிதும் உண்டாமோ ! உண்டாகா தென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் சரற்காலத்தில், ஆகாயத்தில் வாயுவினாலே சின்னமான அப் பிரமண்டலம் நீக்கப்பெறுமோ அங்ஙனம் முன்னர் மொழிந்தயான் எனது என்னும் கற் பனையைச் செய்யாமையானே அதாவது அசங்கற்பத்தானே, மனமானது நீக்கப்பெறும். கற்பாந்தபவனம் வீசுக, கடல்கள்யாவும் ஒன்றாய்ப் பொங்குக, துவாதச ஆதித்தியர்க ளும் தாபஞ்செய்க. நிர்மனத்தினனுக்கு கூதி சிறிதும் கிடையாதாம்.

(ச.) பொருகத்திரண்ட முகிலெல்லாம் = சரற்கால வியோமத்திற் சிறியமேகமண் டலம் = அப்பிர மண்டலமானது, பெருங்காற்றாலே = வாதத்தினால், ஒருங்குதல் போல் = அழிகுதல்போல, விருகற்பனை நாசத்தாலே = அசங்கற்பனையினால், மனம்போ யிறக்கும், உள்ளிலுள்ள மனதழியும் என்பதுபொருள். ஏககாலத்திற் கற்பாந்தக் காற்ற டிப்பினும், உததிகள் ஒன்றுபடினும், துவாதச ஆதித்தியரு மெரிப்பினும் நிர்மனதுடை யவனுக் கழிவின் றென்பதாம், நிர்மனதுடையவன் = மனமற்றவன்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) கற்பனையற் றிருப்பிற் சுகத்தையே யடையலா மென்றும், கற் பனைவுற்றால் அம்மனந்தனக்கே பகையென்றும் கூறல்:—தன்னையென.

தன்னைக்கொண்டேதனையறுக்கிற்றாைய்ச்சகலபூமிக்கு
முன்னைத்தலைமைபோலின்பமுதிரநிறைந்துவகற்பனைக்கே
துன்னித்திகழ்தற்பதம்பற்றிச்சுகத்தையடைவாய்பலவாக
வுன்னிப்படர்கற்பனைச்செல்வமுடையமனமேயுயிர்ப்பகையாம்.

(ப - ரை.) தன்னைக்கொண்டே தனையறுக்கில் தானாய் = அசங்கற்ப மாத்திர மொன்றினாலே சாதிக்கத்தக்கதாய், சகலபோல் இன்பமுதிர நிறைந்து = சகல சித்தி யுந்தருவதாய், அகற்பனைக்கே பூமிக்கு முன்னைத்தலைமை = கற்பனை யற்றநிலைமைக்கே யுரித்தாய் அதிசயமானதலை பூண்ட சாம்ராஜ்ஜிய சம்பத்தில், துன்னி = உபஸ்திதி யடைந்து, திகழ்தற்பதம் பற்றிச் சுகத்தை யடைவாய் = ஆண்டாவரண நீங்கிவிளங்கா நின்றனது சொருபமாகிய தற்பதத்தை நீயாகவே யடையப்பெற்றுப் பிரஹ்மாநந் தத்தை யடைந்துவாழ்தி, பலவாக உன்னிப்படர் கற்பனைச் செல்வமுடைய மனமே = நானாவிதமான வாசனைகொண்டு எண்ணுதவற்றை யெல்லாம் எண்ணி ஜனனமரணத் திற் கிடேட்டுத் துயருறுஞ்சங்கற்ப ஐசுவரியத்தை யடைந்துள்ள சித்தமே, உயிர்ப்பகை யாம் = ஜீவனது ஜன்மசத்துருவாம்.

(ஸ்ரீ - வீர.) சகல எண்ணங்களையுங் களைந்துண்டாம் சம்பிரஞ்ஞாதத்தில் வரு மின்பமியாவும் பொய்யாதலின் போலின்ப மென்றார். சுகத்தையென்றதோ அசம்பிரஞ் ஞாதத்தில் விளங்கிய சொரூபா நந்தத்தையேயாம் என்றறிந்து கொள்க. கற்பனைச் செல்வமெதுவாயினும் பிரஹ்மாநந்தத்தடையாம். அசங்கற்பன மாத்திரம் ஒன்றி னானே தேடத்தக்கதாய், சகல சித்திகளையுந் தருவதாய், நிருவிகற்ப சமாதியேயாகிய அதிசயித சாம்ராஜ்யத்தின் கண்ணே பிரஹ்மசொரூபத்தைப் பற்றினவனாய்ச் சுகமாக வாழ்தி. அந்தப்பரமாத்மபத சிங்காசனத்தைப் பற்றினவனாகி அசங்கற்பன சாம்ராஜ் ஜியத்தில் வாழ்வாய் என்பதாம்.

(ச.) திகழ்தற்பதம் பற்றி = பிரஹ்மபாவஞ் சுவீகரித்தவனாய், தன்னைக்கொண்டே தனையறுத்தால் தாமாய் = அவ்வசங்கற்ப மொன்றினாலே சாத்தியமாய், அகற்பனைக்கே

இன்பமுதா நிறைந்த = சங்கற்பங்களின் அபாவமான நிர்மனஸ்கதை யென்னும் சகல சித்தியுந் தராநின்ற சாம்பிராச்சியத்தில், துன்னி = இருந்து, சுகத்தையடைவாய், கற்பனைச் செல்வமுடைய மனமே = சங்கற்பமாத்திர சாமர்த்திய முள்ளமனமே, (9)

(ஸ்ரீ - வீர - அ - கை·) மனப்பகைவன் வெல்ல முடியாதவனாதலும் முடிந்தவனாதலும் இன்னவகையெனல்:—உள்ளவென.

உள்ளப்பகைவன்பலவிதமாயுறுகாட்சிகளால்வெல்லாமற்
றெள்ளத்தகுசந்தோடமெனுஞ்செல்வமுடையநிராசையினாற்
கள்ளத்தனிநெஞ்சினைவெல்வாய்கற்றோர்க்கன்பாய்நின்மலமாய்க்
குள்ளக்குளிர்ந்தாங்காரத்தாற்கூறாகாதுசமபாவம்.

(ப-ரை.) உள்ளப்பகைவன் = மனச்சத்துரு, பலவிதமாயுறு காட்சிகளால் = நாநா விதவஸ்து நிதர்சனத்தானே, வெல்லாமல் = உன்னை வென்றுவிடாமல், தெள்ளத்தகு சந்தோடமெனுஞ் செல்வமுடைய நிராசையினால் = எப்போது மிலங்குவதாய, கிடைத்தது கொண்டலம் பேணும் மகிழ்ச்சியென்னும் ஐசுவரியத்தோடு கூடிய ஆசையின்மையினாலே, கள்ளத்தனி நெஞ்சினை வெல்வாய் = ஜீவனைக் கெடுப்பதில் ஒப்புயர்வற்ற மகா வஞ்சகமுற்ற மனத்தினை நீ வெற்றிகொள்வாய், கற்றோர்க்கன்பாய் = ஆன்மவித்துக் கட்குச் சம்மதமாய், நின்மலமாய் = பரமபாவனமாய், குள்ளக்குளிர்ந்து = பனிபோலும் அதி சீதளமாய், சமபாவமானது = பரமாத்மை தபதமானது, ஆங்காரத்தாற் கூறாகாது = அகந்தையினாலே பரிச்சின்னப்படாது.

(ஸ்ரீ - வீர.) சங்கற்பமாத்திர வடிவமாயதனது ஐசுவரியத்தால் பிரஹ்மாண்ட கோடியாதி பதார்த்தங்களைத் தோற்றிவைத்துக் கொண்டிருப்பதும், அதனானே சங்கற்பமாத்திர ஐசுவரியத்தானே ஜனனமரண நரகாதி யநேகம் பெரிய அநர்த்தங்களைச் செய்விப்பதும் ஆகிய மனத்தை, நிரந்தரம் பாவித்துக் கொண்டிருக்கும் நிர்ச்சங்கற்பமாகி சந்தோஷமாத்திர ஐசுவரியத்தால் விஜயஞ்செய்து சர்வோத் கர்ஷத்தை யடைவாயாக. சந்தோஷமாத்திர வைபவ மனத்தினாலே மனத்தை நன்றாகவென்று சுகிப்பாய் அம்மனமானது எவ்வபிலாஷையும் அற்று இல்லாமல் சுயம்பிரகாசத் தன்மையானே எப்போது மிலங்கிக்கொண் டிருக்கும் துரியத்தையே நாடிக்கொண்டிருப்பின் வெல்லும் என்பதாம். சந்தோஷமுடைய சமதைக்கும் மனோநிக்கிரக முண்டான தன்மையைத் தரிசிப்பித் துபசங்கரித்தல்:—கற்றோர்க் கென்பது, பரமபவித்தரமாயும் ஹிமம்போலும் அதிசீதளமாயும், ஆன்மாவை யறிந்தவர்கட்கோ சம்மதமாயும், இஷ்டம் அநிஷ்டம் வந்துறுபோது மகிழ்ச்சி வாட்டமின்மை வடிவசமதை யுற்றதாயும், அதன்வாயிலாயதியான அப்பியாசத்தினாலே கொண்டாடத் தக்கதாயும், பரிசசின்னமான அகம்பாவமானது அழிந்துபோன காரணத்தினானே ஆனந்த மயமாயும், அபரிச்சின்னமாய்ச் சத்தியமாயும் யாது என்சியிலங்கு கின்றதோ அது உன் வடிவாயுளதாகுக என்பதாம் சமதைபூர்வகத்தியானப் பயிற்சியானே, அகங்காரமான தவிந்தொழிய எதநிதம் ரூபமாய்த் துரியமெனப் பெயரிய ஜன்மமற்றபதம் எஞ்சியுளதோ அது நினதுவடிவமாக விளங்குகவென்பதாம் பரமபுனிதமாய் மனமற்றதாய் ஆன்மவித்துக்கட்குச் சம்மதமாய ஏற்றத்தாழ்வற்ற விருத்தியினாலே உள்ளேயுள்ள வெகுவிதமான அகந்தைகளும் நீங்கப் பெற்றதாய் ஜன்மாதி விகாரசூனிய அவசிஷ்ட பதமியாதோ அதுவே உனக்கடையத் தக்கதாகுக.

(ச.) உள்ளப்பகைவன் = அம்மனமென்னுஞ் சத்துரு, பலவிதமாயுறு காட்சிகளால் = நவிதவஸ்து தரிசனத்தால், வெல்லாமல் = நின்னைச் சயிப்பது அயுக்தமாத

வின் ஜயிக்காமல், தெள்ளத்தகு = நித்தியோதிதமான, சந்தோடமெனுஞ் செல்வமுடைய = சந்தோடமாத்திர சகாயமுள்ள, நிராசையினால் = நிர்ச்சங்கற்பத்தால், நெஞ்சினை வெல்வாய் = மனதைச் சயிப்பாய், கற்றோர்க்கன்பாய் = ஆத்ம வித்துக்களுக்குச் சம்மதமாய், நின்மலமாய் = பரமபாவனமாய், குளிர்ந்து = அதிசீதமாய், குள்ளவஞ்சக அகங்காரத்தால் = தாழ்வுயர்வான உளத்தகந்தையாலும், கூறாகாது = அபரிச்சின்னமாய், சமபாவமாம் = சின்மாத்திரம், சேடிக்குமென வருவித்துக் கொள்க. ஆன்ம வித்துக்கட்குச் சம்மதமான பரிபூர்ண பிரஹ்மபாவனையினாலே பரிச்சின்ன விடயமாய் அகந்தையானது உள்ளேயில்லாமல் நீக்கப்பெற்றவழி எவ்வபரிச்சின்ன சின்மாத்திரம் சேடிக்குமோ, அவ்வஜ நித்தியபத முனக்குளதாகுக, (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே பிரஹ்மசொரூபமாகிய ஆசிரியோத்தமரே! அதிவேகமாய் அதிசஞ்சலமாய், தீவிரவேகத்திற்கு முக்கிய காரணமாய் மிக வலிதாயிராநின்ற அதிலோலமாய இந்த மனத்தினுடைய மகாசாஞ்சல்யத்தை எங்ஙனம் வலிதுடன் நன்றாக நீக்குதல் கூடும்? என்று ஸ்ரீ இராகவர்கேட்ப அதற்கு ஸ்ரீ பகவான் முன்னுரைத்ததை முடித்துத்தரங் கூறுகின்றார்:—தாழ்வென,

தாழ்வுமுயர்வுமில்லாதசமபாவனையாற்பிறப்பில்லா
வாழ்வுநல்கும்பரமபதமாருப்பதமாமலைவாலே
வீழ்வுறுதமனமரிதாம்வெம்மைகனலைவிடாததுபோ
லாழ்வுசெய்யுமலைவுமனமகலாவறிவினலைவுமனம். (11)

(ப - ரை.) தாழ்வும் உயர்வுமில்லாத = வைஷம்ய மின்றிய, சமபாவனையால் = யாவுமறிவென்னும் ஒரேதிருஷ்டியால், பிறப்பில்லா வாழ்வு நல்கும் = ஜன்மமின்றிய பேரானந்தப் பெருவாழ்வினைத் தரும்படியான, பரமபதமாருப்பதமாம் = என்றும் அழிதலில்லாத பரமபதம் உண்டாம். அலைவாலே வீழ்வுறுதமனம் அரிதாம் = சஞ்சலத்தன்மையற்றமனம் எங்குமே யுளதாகாதாம், வெம்மை கனலைவிடாததுபோல = உஷ்ணத்தன்மை அக்கினியை விட்டிராததேபோல, ஆழ்வுசெய்யும் அலைவு = விடயங்களில் மூழ்கச் செய்யும் சஞ்சலத்தன்மை மனத்தின் றருமமாதலின், மனமகலா = மனத்தை விட்டு நீங்கியிருக்க மாட்டாது, அறிவின் அலைவுமனம் = சித்தாந்தத்துவத்தி லிருக்கும் ஸ்பந்தசக்தியே சஞ்சலமனமாம்.

(ஸ்ரீ - வீர.) முற்பாதியுரை முன்னுரைக்கப் பெற்றது. ஈண்டு எவ்விடத்திலுமே சஞ்சலத்தன்மையை விட்டிருக்கும் மனத்தைக் காண்பது முடியாதாம்; வன்னியினது தருமம் உஷ்ணத் தன்மையேபோலச் சஞ்சலத்தன்மை மனோதருமமாம். ஜகத்காரண மாயாசம்வலிதசை தந்யத்தின்கண் ணன்னிலைபெற்ற யாதொரு சஞ்சலமான கிரியா சக்தியுளதோ அதுவே மனோரூபமாகப் பரிணதையுற்ற மானசசக்தியென அறிதி.

(ச.) தாழ்வும் உயர்வு மில்லாத சமபாவனையால் = பரிபூரண பிரஹ்மபாவனையால், பிறப்பில்லா = அஜமான, பரமபதம் = தற்பதம், மாருப்பதமாம் = நித்தியமாம். அலைவாலே வீழ்வுறுதமனமரிதாம் = சஞ்சலத்துவ மற்றமனது எங்குங் காணப்படாததல்லவா! வெம்மைகனலை விடாததுபோல் = வெப்பம் வந்நிக்குத்தர்ம மாவதுபோல், அலைவுமனம் அகலாது = சஞ்சலத்துவம் மனோதருமமாம், அறிவினலைவுமனம் = சித்தத்துவத்திருக்குஞ் சஞ்சலசக்தியே மனச்சத்தியாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமசித்தாந்தமும் செய்யத்தக்கதும் இன்னதெனல்:— அலையுமென.

அலையுமந்தமனமூலகாமலைவுபோகின்மனங்கெடுமிந்
நிலையேதவமுநூற்கருத்துநிமலவீடுந்துணிபொருளுந்
தொலைவிலலைவேமனமாயைதொடர்வாதனையுமதன்பெயரா
மலையுமனமுமதுவதனை மாறாவிசாரத்தான்மாய்ப்பாய்.

(ப - ரை.) அலையுமந்தமன மூலகாம் = ஸ்பந்த சக்திமயமான அம்மனமே ஜக தாடம்பரவடிவமாம், அலைவுபோகின் மனங்கெடும் = சஞ்சலத்தன்மை நீங்கின்மனம் மிருதமாம், இந்நிலையே = இந்தஸ்திதியே, தவமும் நூற்கருத்தும், நிமலவீடும், துணி பொருளும் = தபமும் சாஸ்திரமும் சித்தாந்தமும் துயரற்றமோக்ஷமும் ஆமெனப்படும், தொலைவில் அலைவேமனமாயை தொடர்வாதனையும் அதன்பெயராம் மலையுமனமுமது = கெடாததான மனத்தின சஞ்சலத்தையே அவித்தை யென்றும் வெகுகாலமாகச் சம்பந்தித்துள்ள வாசனையென்றும் அதற்கு நாமங்கள் உண்டு, அல்லாமலும், துன்புறுத்தும் சித்தசத்தையும் அதுவேயாம், அதனைமாறா விசாரத்தான் மாய்ப்பாய் = அவ்வசைவை இடைவிடாத ஆராய்ச்சியானே நாசஞ்செய்தி.

(ஸ்ரீ - வீர.) அசைவு அசைவின்மைகளின்றி காற்றினிருப்பே யெங்ஙனங் கருத முடியாதோ, அங்ஙனம், சஞ்சலஸ்பந்தனத்தை விட்டுச் சித்தசத்தை யிலதாகும். யாதொரு சஞ்சலதையின் ஈனமனமுளதோ அது மிருதமெனப்படும்; அசைவற்ற மன மிறந்ததென்பதாம், அம்மனத்தின் இறப்பே, சாஸ்திர சிரவணம், அதன் பலத்தன்மை யால், பிராமாணிகத் தன்மையானே அங்கீகரிக்கப் பெற்ற அருத்தம் சித்தாந்தமாம், அதுவே மோக்ஷமெனப்படும் அதனுபாயத் தன்மையால். அதனது சஞ்சலத்தன்மையே, இரஜோசக்தி பீஜகத்தன்மையானே, அவித்தையின் காரியத் தன்மையானே அவித்தை யென்று சொல்லப் பெறும், வாசனை மூலத்தன்மையானே வாசனை யென்றும் ஒரு பெயரைப் பெறும், அதனை விசாரத்தானே விநாசஞ் செய்வாய்.

(ச.) அந்தமன மூலகாம் = அம்மனதே ஜகதாகரமாய் விளங்குவதாம், அலைவு போகின் = சஞ்சலத்துவமழியின், மனங்கெடும் = மனதழியும், இந்நிலையே = இம்ம நோலயமே, நூற்கருத்தும் = சாஸ்திரசித்தாந்தமும், நிமலவீடும் = மோட்சமுமாம், சங்கை: வாசனையோடு அவித்தியா நிவிர்த்தி மோக்ஷரூபமாதலின் மநோநிவிர்த்தி மோட்சமென்றது, எப்படிக் கூடுமெனச் சங்கித்து; மனதின் சாஞ்சல்யமே அவித்தை அதுவே வாசனையுமா மாதலின் அதன் நிவிர்த்திக்கு மோக்ஷரூபத்துவம் யுக்தமென்னுங் கருத்தாற்கூறல்: தொலைவிலலைவேமனம் = மனதின் சஞ்சலத்துவமே, மாயை = அவித்தை, மனமும் = சித்தசத்தையும் ஆம், ஆதலின், அதனை = மநோசஞ்சலத்தை, மாய்ப்பாய் = நாசஞ்செய்வாய்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானப்பியாசத்தானே மனதிற்கு மாரணியத் தன்மையை மலருவராய் அதனது சொரூபத்தைக் கூறும் வாயிலாய்ப் பயிற்சிக்குத் தக்கபடியாக அடைவுறும் வடிவத்தன்மையைக் கூறல்:—மெத்து என. இங்ஙன மியம்பத்தக்க வுப யோகியதாக மனத்திற்குச் சாஞ்சல்யதன்மகத்தன்மையைச் சமர்த்தித்து, வாஸ்தவ அவாஸ்தவரூப மென்னும் இரண்டன் வடிவதாந்தன்மையை, அவாஸ்தவ அங்கிசமகற் றலைக்காட்டும் பொருட்டும், வாஸ்தவரூபாப் பிரதிஷ்டையின் அழிவடைவை யகற்றற் பொருட்டும் கூறல்:—மெத்து என.

மெத்துகின்றவாதனையைவிட்டான்மேலாநலமுளதாஞ்
சத்தினசத்தினிடைநின்றுசைதன்னியத்திற்சாட்டியத்தி
லொத்துநடுநின்றலைவதுவேயுள்ளமாகுமிவ்வுள்ளஞ்
சித்தின்முயல்வாற்சித்தாகுஞ்சடத்தின்முயல்வாற்சடமாகும்.

(ப - ரை.) மெத்துகின்ற வாதனையை விட்டால் = அவித்தையின் மயமாயடைந்து கிடக்கும் துட்டவாதனையை விட்டுத்தொலைத்தால், மேலாம் நலமுளதாம் = பரம்சிரேயசு இனிதாக எய்தும், சத்தின் அசத்தின் இடைநின்று = உளதிற்கும் இலதிற்கும் மத்தியி லிருந்து, சைதன்னியத்தில் சாட்டியத்தில் ஒத்து நடுநின்று = சேதனத்தில் அசேதனத் தில் ஒத்துமத்தியி லிருந்து, அலைவதுவே = ஊசலாடுவதே, உள்ளமாகும் = மனமென ப்படும், இவ்வுள்ளம் = இம்மனமானது, சித்தின் முயல்வால் = அறிவினனுசந்தானத் தால், சித்தாகும் = சின்மயமாகும், சடத்தின் முயல்வால் = திருசியத் தியானத்தால், சடமாகும் = காஷ்டலோஷ்ட சமானமாம்.

(ஸ்ரீ - வீர.) விரும்பியபொருளை விடுதல் வாயிலாக, அவித்தை வாசனையென்னும் உட்சித்த சத்தையானது விலீனமுறவே மேலான மேன்மையானது அதாவது மோக்ஷ மானது அவசியமுண்டாம். விடுதல் முன்னர் "மிகமாலுறுபல் பொருள்களையு மேவா தொழித்தோர் மனம்வென்றோர்" என வியம்பப்பெற்றது. விடுதல் வாயிலாக = பாகியவிடயானு சந்தானத்தியாக பலத்தால் = சத்தசத்துக்களாகிய ஆன்ம அனான்ம மத்தியஸ்தமாய், உலகத்தில் மத்தியஸ்தனானவன் உபயாநுகூலனாக இருப்பதேபோல ஆத்மாநாத்ம அநுகூலமாய், இருப்பது மனமாம்; ஆகலின் உபாயவிசேடத்தினாலே செயிக்கத்தக்கது என்பது கருத்தாம். ஆத்மாநாத்ம தருமங்களாய சைதன்ய ஜாட்டியங் கட்கும் அநுகூலம் மனமென்பார், சைதன்னியத்தில் சாட்பியத்தி லென்றார். சேதனா சேதனங்களின் இடையிலிருப்பது மனமாம். யான் இது என்னும் விருத்தித்துவயவடிவ மாகப் பரிணமலீலைத் தன்மையால் உரைத்த இரண்டில் ஆடும் ஆகாரத்தையுடையது மனமென்று கூறப்பெறும். சத்தசத்துக்களின் மத்தியம் = மிதுநீபாவரூப மந்தராளம், அதனானே அன்னியரூபப் பிராதான்யத்தில், தோளயிதாகிருதியதாம் = இளைப்பாறு நிலைமையற்றதாம். ஆயின் எதனால் எகதரகோடி விசிராந்தியா மெனின்? கூறுகின்றார்: சித்தின் என்பதாதியால் ஜாட்டிய அநுசந்தானத்தானே யபகரிக்கப் பெற்றதாய அதா வது ஜடசிந்தாபரவசீ கிருதமாய சித்தமானது திடஅப்பியாச வசத்தால் தீப்தமாய் மிக வளர்க்கப் பெற்றதாய், மிக்கூன்றியதாய்ச் சாட்டியான் மக்மாகச் சடபாவத்தையடையும் அதாவது ஜடதேகாதி முக்கியத் தகைமையை யடையுமென்பதாம். புலப்படுகின்ற தன்றோ பிராகிருதர்தம் முள்ளம் அத்தகைத்தாய்! அநுசந்தான ஹேதமெனவும் பாட முளது = விசிஷ்ட போதமாகிய சாக்ஷி யொன்றன்பாலே யநுசந்தானத்தால் அதாவது அறிவங்கிசத் தியானத்தால், அநிதம்ங்கிச சொரூபத் தன்மையானே, அகம்பிரஹ்மாஸ்மி யென நிரந்தர அனுசந்தானத்தானே, பயிற்சியின் மிகுதிப்பாட்டானே, தீப்தமாய் மிக வளர்க்கப்பெற்றதாய் மிக்கூன்றியதாய், மனமானது அறிவாகாரமாய், வேற்றுமைப் பாகுபாடொன்றையுஞ் செய்யாத கேவல சிற்சொரூபமாய் இனிதுநிலைபெற்றிருக்கும்.

(ச.) மெத்துகின்ற வாதனையை = அவித்தையோடு வாசனையென்னு நாமமுள்ள மனோசஞ்சலத்தை, விட்டால் = இஷ்டத்தியாக வசத்தினால் நாசஞ்செய்யின், மேலா நலமுளதாம் = பரமசிரேயசு உண்டாகுமென்பது பொருள். சத்தினசத்தின் = சத்தென் பது கேடின்மையது திருக்குரூபமான பிரஹ்மம், அசத்தென்பது கேடுள்ளது திருசியம்

ஆகிய இடைகளினது, இடைநின்று = மத்தியில் உபயசம்பந்தமாய் அநுபயான்மகமான வஸ்துவாய், சைதன்யத்திற் சாட்டியத்தில் = சிற் சாட்டியங்களினது, நடுவொத்து நின்று = மத்தியிற் கூடினதாய்ச் சிற்கனவியல்பாலும் உண்மையாக ஜடத்துவத்தாலும் தப்தாயபிண்டம்போல் உபயான்மகமாய், அலைவதுவே = சித்து அசித்துக்களிரண்டினும் ஊஞ்சல்போல அலையும் ஆகிருதியுள்ள வஸ்துவே, உள்ளமாகும் = மனமெனப்படும்; என்பது சம்பந்தம். சிதசித்ரூபமான மனதிற்கு இங்குண்டாக்கப்பட்ட வுபபோகங் கூறல். இவ்வுள்ளம் = இச்சித்தமானது, சடத்தின் முயல்வால் சடமாகும் = அசித்து ரூபத்வ ஏதுவினாற் சடாநுசந்தானத்தால் வாகியத்தை மாறிமாறிப் பற்றுவதாய் வாகிய சேட்டையோடு கூடினதாய்த் திடாப்பியாச வசத்தாற் சடத்துவத்தையடையும். சித்தத்திற் சடாம்சமிருத்தலிற் சடபாவனையாற் சாட்டியத்தையடைவதுபோற் சிதம்சமிருத்தலிற் சிற்பாவனையாற் சித்தோடைக்கிய மாமெனல்: சித்தின் முயல்வாற் சித்தாகும் = சிதம்சத்துவரூப வேதுவினாற் போதத்தின் ஏகாநுசந்தானத்தின் திடாப்பியாச வசத்தினாற் சைதன்னியத் தோடைக்கியமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தெரிவித்ததையே நன்குதெளிவித்தல்:—ஊக்கமென.

ஊக்கமுளதாய்மனமொன்றினுறைக்கிலதுவாமாதலினாற்
றாக்குமனத்தைமனத்தாலேதள்ளியேறித்தளர்வின்றி
யாக்கமழிவில்பதம்விரைவிலடைவாய்மனத்தைமனத்தாலே
நீக்கவலதாந்தகைமைத்தாநிருபனிறுத்துநெறிபோல.

(ப - ரை.) ஊக்கமுளதாய் = புருடப் பிரயத்நத்தினாலே, மனம் ஒன்றில் உறைக்கில் = மனமானது ஒருபதத்தில் ஊன்றில், அதுவாம் = அப்பதமாம், ஆதலினால் = ஆகையினால், தாக்குமனத்தை மனத்தாலேதள்ளி = அசுத்தமனத்தைச் சுத்தமனத்தினாலே யகற்றி, ஏறி = மேற்போய், தளர்வின்றி = விசோகமாய், ஆக்கம் அழிவு இல் பதம் = உண்டாகியுயர்ந் தொழியும் சடங்கற்ற பதத்தை, விரைவில் அடைவாய் = வேகமாகப் பொருந்துவாய், மனத்தை மனத்தாலே நீக்கவலதாந் தகைமைத்தாம் = மனத்தினது நிக்கிரக விடயத்தில் மனமே சமர்த்துடையதாம், நிருபன் நிறுத்தும் நெறி போல = ராஜாவை நிக்கிரம் செய்வதில் அராஜாசமர்த்தனாவனோவென்? ஆகான் அது போலவாம், பதம் = வஸ்து,

(ஸ்ரீ - வீர.) இயற்கையானுதல் சாஸ்திரீயமாயாதல் உண்டாம் பௌருஷப் பிரயத்நத்தினாலே எப்பதத்தின் கண்ணேமனஞ் சேர்க்கப்பெறுமோ பயிற்சியின் வலுவால் அப்பதத்தை யடைந்தின்புறும், ஆகலின் மிகுந்த பௌருஷப் பிரயத்தனத்தைக் கைக்கொண்டு நல்லவிவேக சித்தத்தினாலே கெட்டசித்தத்தைக் கடந்து சோகமின்றிய பதம் பற்றி ஆமயமற்றவனாய் உபத்ரவமற்றவனாய், ஆசங்கையற்றவனாய், அதிதிரமாய்ச் சுகிப்பாயாக; என்பது பலிதமாம், சமுசாரபாவனையினாலே மூழ்கிக்கிடக்கின்ற மனதை மனதினாலேயே வலிதில் எடாமல் விடின் ஹே இராகவா! அதனுபாயம் அயல் ஒன்று இடையவே கிடையாது. சித்தத்தினும் அயலொன்றானும் சித்தத்தின் ஆக்கிரமணசங்கையுண்டாகக்கூறல். மனத்தை யென்பதாதி மனத்தினது நிக்கிரகத்தில் மனதேசமர்த்துடையதாம், அரசனை நிக்கிரகஞ்செய்யும் விடயத்தில் அரசனல்லான் சமர்த்தனாவனோ! ஆகான், சமபல மில்லாமையின் என்றறிக.

(ச.) மனம் = இத்தன்மையான மனது, ஊக்கமுளதாய் = புருடசம்பந்தப் பிரயத்தனத்தால், ஒன்றி னுறைக்கினதுவாம் ஜடபதத்தாவது அஜடபதத்தாவது சேர்க்கின்

அப்பதமடைந்து அப்பியாசத்தினால் அதுவேயாம், ஆதலினால்; ஏறி = புருடப்பிரயத்நத்தையாசிரயித்து, தளர்வின்றி = சோகமற்று, அடைவாய் = சங்கையற்றவனாய்ச் சாருவாய், மனத்தாலே, மனமே, நீக்க, திடநிக்கிரகஞ்செய்ய, வலதாகும் = சாமர்த்தியமுள்ளதாம், தனை = அப்பிரபல மூடவாசனை, நிருபன்தானே = பிரபல புத்திசாலியாயிருக்கிற்வாசனே, நிறுத்தும் = நிக்கிரகிக்கும், நெறிபோல = தளர்வன்றி சோகமற்ற பதம் அடைவாய், பாடபேதம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உரைத்த வுபாயத்தையே உவமான பூர்வகம் உறுதிப்படுத்தல்:—பிறவியென.

பிறவிக்கடலிற்காதலெனும்பெருவாய்முதலைபிடித்தீர்க்க
விறவுச்சுழியாற்சுழலுமவர்க்கிதயநாவாயெட்டாதா
மறமுற்றுளத்தையுளத்தாலேமாய்த்துப்பிறப்பில்வருந்தாம
லுறவுற்றுனைநீயுய்விப்பாயுயிர்க்குப்பிறராலுய்வுண்டோ.

(ப - ரை.) பிறவிக்கடலில் = சம்சார ஆர்ணவத்தில், காதலெனும்பெருவாய் முதலையிடித்தீர்க்க = திருஷ்ணையென்று சொல்லப்பட்ட யாவற்றையும் விழுங்கும் பெரிய வாயையுடைய கிராகம் பற்றிவலிதில் இழுக்க, இறவுச் சுழியால் எட்டாவாறு சுழலுமவர்க்கு = மூழ்குறச் செய்யும், ஆவர்த்தத்தாற் றூரத்திற் சுற்றுற்றவர்க்கு, இதயம் நாவாய் = தன்மனமே மரக்கலமாம், மறமுற்று உளத்தை உளத்தாலே மாய்த்து = பரம பந்தன பாசமாமனத்தை மனத்தினனே சேதித்து பிறப்பில் வருந்தாமல் உறவுற்றுனை நீயுய்விப்பாய் = சமுசாரத்தில் அவதிப்படாமல் தன்னைக் காப்பதில் நேயமடைந்து உன்னை நீயே உத்தாரணஞ் செய்தி, உயிர்க்குப் பிறரால் உய்வுண்டோ = இவ்வாத்மாவிற்கு அயலோராற் றூரணமிலதாம்.

(ஸ்ரீ - வீர.) கிராகம் = நக்கிரம், ஆவர்த்தம் = சுழி, திருஷ்ணையாகிய கிராகத்தாற் கிரகிக்கப்பெற்றவராய் சமுசார சமுத்திரத்தில் வீழ்ந்தவராய், மனைவிமக்களாதி சுழிகளால் வெகுதூர மிழுக்கப்பட்டு அழுபவர்கட்குத் தன் மனதேதரியாம் மகாகட்டாகிய மனப்பாசத்தை மனத்தினனே யறுத்தெறிந்து ஆன்மாவைச் சமுசாரத்தினின்றுங்கடத்தேற்றுவாய். இவ்வான்மா அன்னியத்தாற் றூண்டப்பெறுதாம். இவ்வாத்மா இதனால் விடுபடாவிடின் மற்றெதனாலும் விடுபடா தென்பதாம். தானே தனக்குச் சுற்றமும் என நினைக.

(ச.) பிறவிக்கடலில் = சம்சாரார்ணவத்தில், வீழ்ந்தவர்களாய், காதல் = திருஷ்ணை, இறவுச்சுழியில் = புத்திரகளத்திராதி; மமதாப் பிரமைகளால், இதயநாவாய் = தன்மனதே மரக்கலம், எட்டாவாறு = அதிதூரம், மறமுற்றுளத்தை = பரம்பர்தன்மான மனோரூப பாசத்தை, மாய்த்து = சிதைத்து, உயிர்க்கு = தனக்கு, உய்வுண்டோ = ஈடேற்றமின்று, தானே தனக்குப் பந்துவென்னும் நியாயத்தினா லென்பதாம். பிரமைகளால் அதிதூரம் சுழலுமவர்க்குத் தன்மனதே மரக்கலமாம் என்றுசேர்க்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தான் மனச்சேத வகையையே சுருக்கிப் பெருக்கிக் கூறல்:—ஏந்தவென.

ஏந்தவெந்தவாதனைகளித்தியத்தெழுந்தவன்வயெல்லா
மந்தவந்தருடத்தழிக்கிலதுவேமாயைக்கழிவாகு
மூந்துயோகபேதமெனமொழிந்தவிருவாதனைவிட்டு
வந்தபாவாபாவங்கள்மாற்றிவிகற்பமறமகிழ்வாய். (16)

(ப - ரை.) எந்த எந்த வாதனைகள் = எவ்வெச் சமஸ்காரங்கள், இதயத்தெழுந்த = இருதயத்தினின்றும் விருத்திரூபமாய் எழுந்தனவோ, அவையெல்லாம் = அவ்வியாவற்றையும்; அந்த அந்த இடத்தழிக்கில் = எழுந்த அவ்வவ்விடத்திலேயே பரிகரிக்கின், அதுவே மாயைக்கழிவாகும் = அம்முயற்சியே அவித்தையைக் கெடுப்பதாகும், முந்து போகபேதமென மொழிந்த = முன், முன் பின் ஆலோசனையில்லாமல் திடீரென்றுகிளம்பி வரும், போகத்திலுள்ள சமஸ்காரமென்றும் பேதசம்பந்த சமஸ்காரமென்றும் சொல்லப்பட்ட, இருவாதனைவிட்டு = இருவித வாசனைகளையும் தொலைத்து, வந்தபாவாபாவங்கள்மாற்றி = அதனாற் றேற்றவரும் பாவ அபாவங்களையும் தியாகித்து, விகற்பமற மகிழ்வாய் = நிர்விகற்பமாகிச் சுகிப்பாய். (46)

(ஸ்ரீ - வீர.) பாகியார்த்த மனனமெனப் படுவனவாகிய வாசனைமூல விருத்திகள் மனப்பிரதேசத்திற் சமஸ்காரத்தை யேற்றுவனவாய் யாவை யாவைகிளம்பி வருமோ அவ்வியாவற்றையும் பொய்ம்மை யநுசந்தானத்தானே அகற்றல் வேண்டும்; நஷ்டமான விருத்தியினாலே அந்தக்கரணத்தில் சமஸ்காரமானது உண்டாகின்றதென்பது வேதாந்திகள், கூற்றும், தார்க்கிகரோ, ஞானமெனப் பெயரியவிருத்தியினானே என்பர். பிராஞ்ஞன் பரிகரித்தபின் அவித்தை க்ஷயத்தையடையும்; ஔஷ்ண்யம் க்ஷீணமாகிய வழி வன்னி சாந்தமாவதேபோல, வாசனைக்ஷயமாகியவழி மனத்துடன் அவித்தைக்ஷீணமாம் என்பதுகருத்து. வாசனாத்தியாகத்தில் முறைகூறல்:—முந்து என்பது. போகக்கூட்ட வாதனைகளை விட்டுப் பேதவாதனையையும் நீ விடுதி; பேதமதித் தியாகத்தின் பின்னர், பாவாபாவங்களாய பேதிகளை, அதன் விடயவிகற் பங்களை, சித்தசேத்தியங்களை விட்டு, கற்பனை மற்றுமுறை கழற்றியெறிந்து, நிருவிகற்பனாகிச் சுகியாவாய்,

(ச.) இதயத்தெழுந்த = மனோரூபமாய் எப்போதெப்போ துதிப்பனவோ, அவையெல்லாம் = அம்மனோரூபமான வாசனைகளை, அந்த வந்தவிடத்து = அப்போதப் போதே, மாயைக்கழிவாகும் = அவித்தியா வாசனையின் நாசமாம். அவையெலாம் எனச் சூசிப்பித்தவாசனா பேதத்தை விவரணஞ்செய்தல்; முந்து—விட்டு = முன்புபோக வாசனாத்தியாகமும் பின்பு பேதவாதனையின்றியாகமும் செய்து, பாவாபாவங்கண் மாற்றி = பின்பர்வாபாவ வாசனையின் றியாகஞ்செய்து, விகற்பமற வாழ்வாய் = இங்ஙனஞ் சர்வவாசனாத் தியாகமாகின் நிருவிகற்பமாய்ச் சுகிப்பாய்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தசேத்தியத் தியாகமாயினும், அவற்றின் காரணமாய அஞ்ஞானம் எஞ்சாநிற்கும் என ஆசங்கித்துக் கூறுகின்றார்:—அறியென.

அறிபவற்றாசையறிலதுதானேயவித்தையுமனமுமாண்டதுவாம்
பொறிபயிலாசைதுன்பமாநிராசைபுகலருமுத்தியாமின்பம்
பிறிவறுதனதுமுயற்சியாலுண்டாம்பேதையருண்டெனுமவித்தை
செறிதருபொய்யாய்நாமமாத்திரமாய்ச்சித்தெனத்தேர்ந்திடிலதாம்.

(ப - ரை.) அறிபவற்று ஆசையறில் = சுட்டும் பொருள்களில் இச்சைநீங்கில், அதுதானே = அதுவே, அவித்தையும் மனமும் மாண்டதுவாம் = அவித்யா நாசமும் மனோநாசமுமாம், பொறிபயிலாசை துன்பமாம் = விடயங்களில் உழலும் ஆஸ்தையே துயரமாம், நிராசைபுகலரு முத்தியாமின்பம் = அநாஸ்தையே அறைதற் கருமைவாய்ந்த நிர்வாணபதமாம், பிறிவறுதனது முயற்சியாலுண்டாம் = இடைவிடா தியற்றும் தன்னுடைய பிரயத்தனத்தினாலே தனதுண்மைவடிவம் அடையப்பெறும், பேதையர் உண்டெனும் அவித்தை = இல்லாததேயாயும் நட்டப்பிரஞ்ஞர் இருக்கின்றதென்னும்

அவித்தையானது, செறிதருபொய்யாய் = அத்தியந்தம் மித்தையாய், நாமமாத்திரமாய் = பெயர்மாத்திரத்தாற் பிறங்கப்பெறுவதாகி, சித்தெனத்தேர்ந்திடில் = அறிவுமாத்திரமென்னும் ஆராய்ச்சியில், இலதாம் = நற்பிரஞ்ஞரிடத் தஃதெங்ஙனமிருக்கும்; இராதாம்.

(ஸ்ரீ - வீர.) எவ்வவித்யாவரணத்தானே பூர்ணமாகத் தன்னையநுபவிக்க முடிய வில்லையோ அதனைத்தத்துவ சாக்ஷாத்கார ஹேதுவினாலே விடுத்துச் சுகமாயிருத்தல் எங்ஙனங் கூடுமெனின்? ஒன்றையும் எண்ணாதிருத்தலினாலேயே கூடும், இத்துணையே வாசனாக்ஷயம், இதுவேமனோநாசமும் அவித்யாநாசமுமா மென்பர். நோரகவேனும் சித்தவாயிலாகவேனும் யாதுயாது சிறிதுசிறிது சாக்ஷியினாலே யநுபவிக்கலாமோ, ஆண்டாண்டு அறியப்பெறுவதன் அறியப்பெறாமை அத்தியந்தம் உற்கிருஷ்ட மனோநாச நிர்வாணமென்பது சுருக்கம். ஒன்றையும் உன்னாதிருத்தலே மோக்ஷமாம் = பேராநந்தமாம்; உன்னுதலினானே துயரமுண்டாம். அவ்விடயங்களை யுன்னாதிருத்தலும் புருடப்பிரயத்நத்தினாலேயே பொருந்து மென்பார். தனதுமுயற்சியாலென்றார். முயற்சியால் = விடயங்களில் இரமணீயத் தன்மையத்தி யாசத்தியாக விடயகப் பிரயத்நத்தால். அத்தகைய தன்னுடைய பெருமுயற்சியினானே அதிகாரி தன்னறிவைக் கணத்திலறிவன். எதனையும் எண்ணாதிருத்தலினாலே எய்தரும் பூதியெய்துறலாகும்; ஆகலின் தனதுமுயற்சியை எப்போதும் பயின்றேவருக, அற்றேல், அவித்தையானது இருத்தலினானே மனபோல் ஞானத்தானே நிவிருத்திய சம்பவத்தால், அதன் நிவர்த்தக ஞானலாபப்பொருட்டு மனோநிரோதம் அதனுபாய மெனவுபந்யசித்தல் வாளாபோமாலோ வெனின்? அற்றன்றுமெனல்: பேதையரென்பதாதி, விவேகவிஞ்ஞான சூனியர்பால் அவித்தை பரமார்த்த சத்தியம்போல இருக்கும், நற்பிரஞ்ஞை யுடையவரிடத்தோ அபரமார்த்தத்தன்மையானே வந்தியா புத்திரன்போல நாமமாத்திரத்தானே யங்கீகரிக்கப் பட்டதாகும், ஆதலின் அதுயாண்டையதாம்? நாமத்தானே = அவித்தை யென்னும் பெயரானே, அபாவமேயன்றோ அப்பெயரின் முக்கியப்பொருள். எனவே தத்துவஞானி யாதலையே ஆராய்ச்சிசெய்து சம்பாதிக்க வேண்டுமென்ப தொருதலை.

(ச.) அறிபவற்று = அறியப்படுகிற வஸ்துவில், அதுதானே = ஆசாநிவிர்த்தியே, அவித்தையும் மனமும் மாண்டதுவாம் = அவித்யாநாசமும் மனோநாசமும் ஆம், பொறிபயில் = அறிவின்கட் டாதான்மியமாகிற பொருட்கட் பொருந்துமெனினும் ஒக்கும், முயற்சியால் = பிரயத்நத்தால், உண்டாம் = புருடனுக்குக் கணத்திற் றலைப்படும், செறிதருபொய்யாய் நாமமாத்திரமாய், பேதையருண்டெனும் = ஞானிகளிடத்துச் சுவயமிருப்பது போற்றிருசிய மாகாநின்ற, அவித்தை, தெளிந்தஞானிகளுக்கு இலதாம், அஃதவிசாரசித்த மாதலின் என்பதுகருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நல்லபிரஞ்ஞையருக்கு அஃதெங்ஙனமிருக்கும் எனக்கூறிய பொருளை ஆண்டு வன்பவக்குழியில் என்பதாதியானே விஸ்தரித்தற்காக ஸ்ரீ இராகவாது பிரசினத்தைக்கிளப்பல்:—என்றலுமென.

வாசனாக்ஷயவுபாயம் வினவி அதன்மூல அவித்யாவரண க்ஷயவுபாயம் வினவல்:—என்றலுமென.

என்றலுமிராமனவித்தையின்செல்வத்தெழுந்தறநெருங்குமிவ்விருடா
னென்றுமிங்கின்றியெவ்வகைநீங்குமுரைத்தருளின்னநீயென்ன
வன்றவனுரைப்பான்வன்றுயர்முட்சேர்வன்பவக்குழியின்மன்னுயிரை
யொன்றவிழ்த்ததனேடொர்க்கவிழ்மாலையுண்டெனினுண்மனோக்கில்லை

(ப - ரை.) என்றலும் = இவ்வண்ண மியம்பலும். இராமன் = ஸ்ரீ இராகவர், அவித்தையின் செல்வத்தெழுந்த = அவித்யாவைபவ்மாகக்கிளம்பி, அறநெருங்கும் இவ்விருடான் = அத்தியந்தம் நிபிடமாகிவிவேகியையும் மறைக்கும் இந்த அந்தகாரம், ஒன்றுமிங்கின்றி எவ்வகை நீங்கும் = ஒரு சிறிதுமில்லாமல் எங்ஙனம் அகலும் = அழியும், இன்னம் = மீளவும், நீ = ஸ்ரீ பகவானாகிய தேவரீர், உரைத்தருள் = திருவாய் மலர்ந்தருள வேண்டும், என்ன = என்றுவினவ, வன்றவன் உரைப்பான் = அபாரமான பெருந்தவத்தையே யலங்காரமாகவுடைய ஸ்ரீ பிரஹ்மபுத்திரர் கூறுவார், வன்றுயர் முட்சேர் = கொடிய துக்கத்தைக் கொடுக்கும் கண்டகங்கள் கதுவிய, வன்பவக்குழியில் = ஏறமுடியாத சமுசாரப்படுகுழியில், மன்னுயிரை = தேகாபிமானத்தோடுற்ற ஜீவனை, ஒன்றவீழ்த்து = துயரையே யநுபவிக்கும்படியாகத் தள்ளி, அதனோடு = அவ்வுயிரோடு, ஒக்கவீழ் = சேர்ந்துவீழும், மாயை = அவித்தை, உண்டெனில் = இருக்கின்றதென்றுமழலும்வரை, உண்மைநோக்கில்லை = யாதார்த்தமான தனது தரிசனமுண்டாகவே மாட்டாது. (18)

(ஸ்ரீ - வீர.) அஞ்ஞான ஐசுவாயத்தா லோங்கியெழுந்த மகத்தாகிய ஜீவரது நிபிடமானருந்த இருண்மறைப்பானது ஹேபிரஹ்ம சொரூபமாக விளங்கும் ஆசிரிய உத்தமரே ! எங்ஙனந்தான் விநாசத்தையடையும், அருளல்வேண்டும் என்ற ஸ்ரீ இராகவரை நோக்கி ஸ்ரீ வசிஷ்டபகவான் முதலில் அவித்தையின் க்ஷயவுபாயத்தையருளல்: ஹே இரகுநந்தன ! எங்ஙனம் அற்பப்பனியானது பாற்கரா லோகனத்தானே கணத்திற் கழிந்துபோமோ அங்ஙனம் இவ்வவித்தையும் ஆன்மாவலோகனத்தானே அழிந்துபோம் இடையிடமிலாது நெருங்கிய துன்பமய முண்மரங்களே நிறைந்த இச்சமுசாரமாகிய கானுக்களில், மலைப்பெரும் பள்ளங்களில், யதார்த்தத்தைக் காணும்பரியந்தம், தேகாபிமானமுடைய அகங்காரத்தைத் தன்னோடு கூட கீழேகீழேயுருண்டு விழுமாறு உருட்டிக் கொண்டேயிருக்கும், அல்லது ஊசலாட்டிக் கொண்டேயிருக்கும், இந்த அவித்தையானது, க்ஷயத்தை யுண்டாக்குவதும், மோகத்தை யடியோடுகெடுத்து ஆனந்தத்தை விளைவிப்பதும் ஆகிய, ஆன்மாவைக்காணும் இச்சைசுயம் உண்டாகாதவரை உபத்திரவஞ் செய்துகொண்டே யிருக்கும்.

(ச.) நீங்கும் = புருடனுக்கு நசிக்கும், பகவனே நீ! வன்றவன் ஸ்ரீ வசிட்டர், குழியில் = கிடங்குகளில், மன்னுயிரை = தேகியை, மாயை = அவித்தை உண்டெனில் = இருக்குமட்டும், உண்மைநோக்கில்லை = ஆன்மதரிசன இச்சையு முதியாது. ஆன்மஜிஞ்ஞாசையானது எதுவரை யுளதாவதில்லையோ அதுவரையுமே அவித்தை தேகியைச் சமுசார ஆரண்யங்களில் மலைக்கிடங்குகளில் தன்னோடுகூடச் சுழற்றிச் சுழன்று கொண்டிருக்கும். என்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருஷ்டாந்த பூர்வகமாக அவித்தையழிவின் உபாயம் உரைத்தல்:—

பிறப்பெனுமாயைக்கரையதாயெங்கும்பிறிவறுபெரும்பொருடோன்றி
சிறப்புறுமாயைக்கிச்சையேவடிவாமிதனுடைநாசமேவீடு
சிறப்பில்சங்கற்பஞ்சிதைந்திடிவிதுதான்றேய்ந்திடுஞ்சித்தெனுங்கதிரோன்
புறப்படிவிதயவிசும்பில்வாதனையாற்பொங்கிருள்போமெனப்புகல:

(ப - ரை.) பிறப்பெனுமாயைக் கரையதாய் = ஜனனமரண சமுசாரத்தின் பாரமாய், எங்கும் பிறிவறுபெரும் பொருள் = எவ்விடத்திலும் நிறைந்தொங்கித் ததும்

பும் பூரணவஸ்து, தோன்றில் = சாக்ஷாத்கரிக்கவரின், இறப்புறும் மாயைக்கு = இல்லாமற்போகும் அவித்தைக்கு, இச்சையேவடிவம் = ஆசையே சொரூபமாம், இதனுடை நாசமேவிடு = இவ்விச்சையை யிரித்தலே மோக்ஷமாம், சிறப்பில் சங்கற்பஞ் சிதைந்திடில் = பிரஹ்மாகாரமற்ற வீண்சங்கற்பங்க ளெல்லாந் தொலைந்திடின், இதுதான்தேய்ந்திடும் = இது சுயமே கெட்டுப்போம், சித்தெனும் கதிரோன் புறப்படில் = ஆத்மஞானமாகிய ஆதித்தியன் பிரகாசிக்கில், இதயவிசும்பில் = மனோவியோமத்தில், வாதனையாற் பொங்கிருள்போம் = வாதனையாகிய இரவாலுண்டாகிய இருளானது க்ஷயமாம், எனப்புகல = என்று கூறியபோது.

(ஸ்ரீ - வீர.) யாவற்றினும் சேடரூபமாய்த் திதிபெற்ற அவித்தையினும் பரமாயிராநின்ற பரமாத்மாவை நன்குகாணப்பட்ட இதற்குத்தனது நாசமேயுண்டாம், அதனையே தெளிவித்தல்: சர்வகதமாகிய போதரூபத்தைக் கண்டபோது சுயமாகவே இதுலயமாய் விடும், ஆதப அநுபவார்த்தியாய சாயையேபோலும்; துவாதச அருக்கக்கூட்டம் சர்வதிசைகளிலும் நிறைய உதயமாயிடின் சாயையேபோலும் என அதனுவமையறிக. சர்வகதபோத மென்று சொல்லப்பட்ட பிரஹ்மத்தினது தரிசனத்திற்கு யாதுபாயம் என ஆசங்கித்து, விடயங்களிடத் திச்சையிருப்பின் சிரவணுதி செய்தபோதினும் வீணுதலின் அவற்றில் ஆசையின்மையே அதனுபாயமாம் என்னும் அபிப்பிராயத்தாலறைதல்: இச்சையே யென்பது காரண அவித்யாநாச உபாயம் உரைத்து காரிய அவித்தையின்ஐயோபாயமறைதல்:—இச்சையே யென்பது. இவ்வவித்தையான்து இச்சைமாத்திரமேயாம் இதன் அழிவே மோக்ஷமெனப் பெறும். “ இதயந்தனி விசையாசைகளி வனியாவையும் விடவே, விதமுந்துறுமது போதினில் விரிவாயறிவுறுவோன், அதநந்திய வமுதாகுவன் கமே சிவமதெனு, வுதயந்தரு முணர்வாலுறு முயர்மாசுகமுறுமே ” எனமறையு மறைகின்றது. ஸ்ரீ கணேசகீதையிலும் “ எனதிணு டகங்காரத்தை யீர்த்தவன், மனதிணுடெந்தவாஞ்சைப் மாய்த்தவன், தனது ஞானத்திஞனிதஞ் சார்ந்தவன், இனிதுஞானத்திஞன் முத்தியெய்வனல் ” ஸ்ரீ பகவற்கீதையிலும் “ யானெனதென்பதின்றி யெவ்வகைப்பொருளும் விட்டான் ருனெனச்சரிக்கின்றான் யாரவனேயே யடையுஞ்சாந்தி, யீனமதடையாரித்தை யாரித்தை யடைந்தவரி றக்கம்போது, ஞானமேயுடையா ரென்னை நண்ணுவர் பிறவிநண்ணர் ” இப்பொருள் திருவாய்மலர்ந்தருளப் பெற்றுள்ளன. ஆயின் ஆசையின் அழிவு எதனுல் அடையலாமெனின்? அறைகின்றார்: சிறப்பில் என ஹே இராகவ! அதுவும் அசங்கற்பமாத்திர சத்திரத்தானே சித்தமாய்விடும், விடயங்களில் இரமணீயத்தன்மை யத்தியாசம், சங்கற்பமாம், அதனபாவம் அசங்கற்பமாம், அதுவே சத்திரம், அதனு லென்பதாம். சிறிதுறும் வைராக்கியமும் பலத்தின் பொருட்டுப் பற்றுவதாரும் என்றால் பரிபூர்ண வைராக்கியமிருப்பிற் கூறவேண்டிய தென்னேயுள் தென்னுங் கருத்தாற்கூறல். சித்தென. ஒருசிறிதேனும் விடய இச்சை அல்லது காமவாசனை ரஜனீ = இரவு மனோவியோமத்தில் அகலுமாயின் திமிரசமுதாயமாய அவித்தை யாவரணம் குறைந்துதோன்றும். வாசனையேயாய இராத்திரியானது அற்பமேனும் க்ஷயமாகுமாயின் சித்தேயாய ஆதித்தியனது பிரகாசத்திஞல் அவித்தையிருளானது கிருசத்தன்மையை யடையும் என்பதாம்.

(ச.) எங்கும் பிரிவறு = சர்வகதமான, பரம்பொருள் = பரமாத்மபோதம், தோன்றில் = தரிசனமாயின், இறப்புறு மாயைக்கு = நாசமாகும் அவித்தைக்கு, இச்சையே = இச்சைமாத்திரம், வீடு = மோக்ஷமாம், சங்கற்பஞ்சிதைந்திடில் = அசங்கற்பமாத்திரத்தால், அதுதான் = இச்சைதானே நசிக்கும், சித்தெனுங் கதிரோன் புறப்படின் = சிதா

திதியன் பிரகாசிக்கின், அவ்வேதுவினால், இதயவிசும்பில் = மனோவியோமத்தில், வாதனையாற் பொங்கிருள் = வாசனை யிரவாலாய சகப்பிரமை ரூபமாகிய கறுப்புதபோ மெனப்புகல = இருச்ழும்றுமென்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தத்துவத்தைத் தரிசித்தால் மாயாகாரியமுட னீங்குமென் னின் ? அவ்வாத்துமதத்துவ மெத்தகையதென ஸ்ரீ இராகவர் வினுதலும் ஸ்ரீ வசிஷ்ட பகவான் விடைபகரத் தொடங்கலும்:—கண்டவென,

கண்டனவனைத்துமாயையேயென்றாய்கண்ணொனுந்தத்துவத்தாலே
தண்டறவதுதான்கரைந்தபோமென்றாய்தத்துவமாவதேதென்ன
வெண்டவனுரைப்பான்காண்பவற்றிடைசென்றெய்திடாதெங்கணுஞ்சமமா
யுண்டெனலாகிநாமமற்றுயர்ந்தவுணர்வுதற்பரமமாமுணர்வே.

(ப - ரை.) கண்டன அனைத்தும் மாயையே என்றாய் = இத்திருசியங்கள் யாவை யும் அவித்தையே என அருளிச்செய்தீர், கண்ணொனுந் தத்துவத்தாலே = அறிவுரூப ஆன்ம பாவனையினாலே; தண்டற அதுதான் கரைந்தபோ மென்றாய்= யாதொருதடையு மில்லாமல் அத்திருசியம் யாவும் இல்லாமற்போம் எனவும் அருளிச்செய்தீர், தத்துவம் ஆவது ஏதென்ன = அவ்வான்ம தத்துவம் எத்தகையது என்று ஸ்ரீ இராமச்சந்திரர் வினவ, எண்டவன் உரைப்பான் = பிரஹ்மாண்டத்திற் பெருந்தவத்தோன் என்று கணிக்கத்தக்க ஸ்ரீ வசிஷ்டபகவான் அருள்வார், காண்பவற்றிடை சென்றெய்திடாது= திருசியங்களுக்குள் ஒன்றாயில் லாததாய், யங்கணுஞ் சமமாய் = சாமானியமாகச் சர்வ கதமாய், உண்டெனலாகி = சத்தத்துவமாய், நாமமற்று = யாதொருவிதத்தினுங் கூற முடியாததாய், உள்ள உயர்ந்தவுணர்வு = அறிவுக்கும் அறிவானபொருளே, தற்பரமமா முணர்வே = தனது சொரூபமாகிய பரமேசுரராம்.

(ஸ்ரீ - வீர.) ஒரு சிறுதோற்றம் இத்திருசியம் எம்மாத்திரம் உளதோ அது அவித் தையாம், அதுவும் ஆன்ம பாவனையாகிய சொச்சொரூப தரிசனத்தானே கணத்தில் க்ஷீணமாம் என்று ஹே பிரஹமத்தை யுணர்ந்த பேராசிரியரே ! தேவரீர் அருளினீர் ! இவ்வாத்மா எத்தகையதென நன்றாக அருளிச்செய்ய வேண்டும் என்று ஸ்ரீ இராகவர் வினவ அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது. அவ்வான்மதத்துவம் விடய வியாப்தி யென்பதற்றது, திருசியங்களோடு கூடியவற்றைக் கண்டும் விலக்ஷணமாகவே யிருப்பது, திரிபுடிக்கும் வேறாயது, ஞேய அநுகதி யில்லாதது, அந்தக்கரணமாந்து சப்தாதிஞேயங்களைப் பின்றொடரும், அங்ஙனம் சித்தத்துவம் அவற்றைப் பின்றொட ராது என்பதாம்; சாமானியமென்னுஞ் சமத்தன்மையானே, அதாவது குறைதல் கூடல் என்னுந்தன்மையின்றியே, எவ்விடத்தும் இருப்பது, பாதிக்கப்படாத அறிவுருவமா யிருப்பது, எல்லாத் திருசியங்கட்கும் காரணமாதலின் சாமானியரூபமான அவித்தையும் அற்றிருப்பது, அதனானே ஆவரண விக்ஷேபங்களற்றது, எப்பொருளும் இல்லாமையி னானே எங்கணுமிருப்பது எனவும் இயம்பொணாதது, சப்தப்பிரவிருத்தி நிமித்த மில்லா மையானே அதாவது எவ்வாசகத்திற்கு வாச்சியமல்லாமையானே மொழிய முடியாதது, விடயசந்நிதியி லிருந்தபோதினும் விகாரம் சிறிதும் இல்லாதது, எச்சிறப்புமே இணையா தது, தேசகால வத்துக்க ளில்லாமையானே பரிபூரணமாயது, சத்தியமாயிருப்பது; ஆகிய இத்தகைய எச்சைதன்ய ஆத்மாவுளதோ அதுவேபரமேசுரர் என்றதாம், என்றத னானே, அவ்வான்ம தத்துவத்திற்குப் பிரஹ்மத்தோடு வேற்றுமை விலக்கப் பெற்றதா மெனவுணர்க.

(ச.) ஸ்ரீ இராமர், கண்டன வனைத்தும் = திருசியமுழுதும், மாயையே = அவித்தையே, கண்ணெனுந் தத்துவத்தாலே = ஆத்மபாவனையால், அதுதான் = அவ்வவித்தை, கரைந்துபோம் = நசிக்கும், தத்துவமாவது = இவ்வான்மா, எதென்ன = எத்தன்மையனு மென்று ஸ்ரீ இராமர் கேட்ப, எண்டவன் = ஸ்ரீ வசிட்டர், காண்பவற்றிடை சென்றெய்திடாது = திருசிய சம்பந்தரகிதமாய், எங்கணுஞ் சமமாய் = சின்மாத்திரத்தால் எவ்விடத்தும் பரிபூரணமாய், உண்டெனலாகி = தத்துவமாய் நாமமற்று = நிருபாதிகமாதலின் வியவகரிக்கத் தகாததாய், உயர்ந்த வுணர்வே = சித்தே, தற்பரமமாமுணர்வு = பரமேசுவர ரென்னும் ஆன்மாவாம். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதற்குவஸ்து பரிச்சேதமும் காலபரிச்சேதமும் அகற்றல்:—ஸ்ரீ பிரஹ்மாமுதல் ஸ்தம்பபரியந்தம் திருஞதிமயமாய எவ்விவ்வுலக முளதோ, அவ்வியாவுமே எப்போதும் ஆன்மாவேயாம்; அவித்தையென்பது சிறிதுமே கிடையாதென அதனசம்பாவனை யகற்றும் பொருட்டுக்காரியசகித அவித்தைக்கு ஆண்டுப்பாதம் பகர்தல்:—இவையென.

இவையெனுமனைத்துஞ்சிற்கனமாகியிறப்பிலாப்பிரமமேயென்று
நவையுறுமனமாங்கற்பனையில்லைநாசமும்பிறவியுமென்னு
மவையெலாம்புவனமூன்றினுமில்லையறுவகைவிகாரமுமில்லைக்
கவையறுசமமாங்குறிபெறுமறிவுமாத்திரங்காணநின்றுளதால்.

(ப - ரை.) இவையெனும் அனைத்தும் சிற்கனமாகி = பிரதீதியாகா நின்ற சர்வ திருசியங்களும் அறிவின்மயமாகி, இறப்பிலாப்பிரமமே = அவ்யயமாய பிரஹ்மமே, என்றும் = நித்தியமாயிருப்பதாம், நவையுறுமனமாம் கற்பனையில்லை = சங்கற்பித்துக் குற்றமேகொள்ளும் மனமென்னும் கற்பனையொருகாலத்திலும் இலவேயில்லை, நாசமும் பிறவியுமென்னும் அவையெலாம் புவனமூன்றினுமில்லை = இச்சகத்திரயத்திலும் ஒரு சிறிதும் உண்டாவதுமில்லை ஒழிவது மில்லை, அறுவகைவிகாரமும் இல்லை = ஷட்பாவ விகாரங்களுமில்லை, கவையறுசமமாம் குறிபெறும் அறிவுமாத்திரம் = க்ஷயமில்லாமற் சர்வசாமானியமான சித்துமாத்திரம், காணநின்றுளதால் = சேத்திய அநுபாத ரகிதமாயிருக்கின்றது. (21)

(ஸ்ரீ - வீர.) இவ்வியாவுமே யுரமாய்ப் பிரஹ்மமாம், அது நித்தியமாம் சிற்கனமாம், அபசயமற்றதாம்; சர்வமிதம் பிரஹ்மமென்றது வாதையிற் சாமானுதிகரண்யமாம் அதனுனேயே மனமனப் பெயரிய வேறுகற்பனை யொன்றுங் கிஞ்சிதுமேகிடையாது சர்வகற்பனைகளும் மனோவிலாசங்களேயாம் என்பார் மனமாம் என்றார். அற்றேல் அசத்தாயவந்தியா புத்திராதிகட்கு ஜன்மாதி காணுமையின் ஜன்மாதிஷட்பாவ விகாரமுடைமையானே புலப்படாநின்ற ஜகத்துயாங்ஙனம் ஆண்டுளதாதல் எனின்? இலதாமெனல் நாசமுமென. எதுவும் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை இம்மூவுலகத்திலும், பாவவிகாரங்களின் இருப்புமெங்கும் இல்லவேயில்லை. எக்காரணத்தாற் சகற்சன்மாதி நிருபணம் அயோக்கியமாமோ அக்காரணத்தாற் சத்தை உளதாவதில்லை யெனக்கூறியது பொருத்தமேயாம்,உபசங்கரித்தல்; கவையென. சர்வாநுகத சத்ரூபமாய், சர்வசாமான்யமாயிருப்பதாய், சமமே சாமானியமாம், பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்தங்களில் குறைதன் மிகுதலின்றி ஒருபடித்தா யிருப்பதாய், சேத்திய அநுபாதரகிதமாய் = சேத்தியங்களில் = ஞேயங்களில், சப்தாதிகளில், அநுபாத = அவ்வாகாரப்பரிணமம், ரகிதமாய் = அப்பரிணம மற்றதாய் = நிர்விகாரசாக்ஷிவாய், இலங்கும் சின்மாத்திரமே ஈண்டுளதாம்.

(ச.) மூற்கூறிய திருசியசம்பந்த ரகிதமான சின்மாத்திரமே பிரமமன்று, மற்றென்னெனில், இவையெனு மனைத்தும் = சர்வஜகத்துந் திருசியமாகத் தோற்றினும், பிரமமே = அத்தியாசம் அதிஷ்டானத்தைத் தவிர வேறுகாதாதலின் பிரமமேயாம், அங்ஙனமாயின் என்று நவையுறுகனமாங் கற்பனையில்லை — மனமென்னுங் கற்பனை அந்நியமாய் அற்பமும் உண்மையா யின்றேயாம், நாச—விகாரமுமில்லை = தோற்றங்களான ஜன்மாதிகளாய பாவவிகாரங்களு மின்றும், பாவவிகாரங்களுக்குஞ் சத்தையின்றும் என்பதுபொருள். கவையறுசமமாம் = சர்வசாமான்யமாகிய, குறிபெறும் = திருசியசம்பந்தரகிதமான தோற்றம்பெற்ற, அறிவுமாத்திரங் காணநின்றுளதாம் = சின்மாத்திரமே பிரத்தியக்ஷமா யிருப்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறிய சொரூபத்தை யநுவதித்து அவ்வதிஷ்டானத்தின் கண் அதனினும் விபரீதத்வைத அநர்த்தகற்பகங்கழறல்:—கேவலவென.

கேவலமாகிக்கேவலவொளியாய்க்கேட்டறுசுத்தமாய்விரிவா
யோவலிலறிவுமாத்திரமாகியுறுதுயரொன்றுமற்றாறி
மேவருமிரதமனைத்தினுக்கொத்துவிகாரமற்றுளபொருளிடத்தே
தாவருந்தனதுநினைவையேவிரும்பித்தன்வயத்தெழுந்ததோரறிவு.

(ப - ரை.) கேவலமாகி = ஒன்றேயாகி, கேவல ஒளியாய் = தானேயொளிர்வதாகி, கேடறு = நித்தியமாய், சுத்தமாய் = தூய்தாய், விரிவாய் = வியாபகமாய், ஓவலில் அறிவுமாத்திரமாகி = ஓயாவொளிச் சின்மாத்திரமாகி, உறுமியர் ஒன்றும் அற்று = சமுசாரத்துறுந்துன்பம் எதுவுமேயில்லாததாகி, ஆறி = சாந்தமாய், மேவருமிரதம் அனைத்தினுக்கொத்து = அத்தியந்தஞ் சமமாய்ப் பரிபூர்ணமாய், விகாரமற்று = நிர்விகாரமாய், உள = சதோதிதமா யிருக்கும், பொருளிடத்தே = ஆன்மாவின் கண்ணே, தாவருந் தனது நினைவையே விரும்பி = சத்தியாதியான தன்னுடைய இயற்கைக்குமாறுன திருசியத்தை இச்சித்து, தன்வயத்து = சுயமாகவே, எழுந்தது ஓரறிவு = ஒருணர்வானது சங்கற்பித்தது.

(ஸ்ரீ - வீர.) கேவலம் = அத்விதீயம், கேவலவொளி = பிரமாண வியாபாரமில்லாமலே யிலங்குகின்றது அது, சொயம்பிரகாசம் என்பது பொருள். இவ்வாறுய், நித்தியமாய் வியயகமாய்ச் சுத்தமாய்ச் சின்மாத்திரமாய் நிருபத்ரவமாய்ச் சாந்தமாய்ச் சமமாய்ப் பரிபூர்ணமாய் நிர்விசாரமாய்நிகழும், ஆன்மாவின்கண், ஆவரணசகித சித்தானது சத்தியசிற்சொரூப சுபாவவிருத்த, அசத்ஜாட்ய பரிச்சேதாதி சுபாவமுற்ற திருசியத்தைச் சுயமாகவே சங்கற்பித்தோடித்திரியும்.

(ச.) கேவலமாகி = உண்மையா யிருப்பதாய், கேவல, ஒளியாய் = தானே பிரகாசிப்பதாய், கேடறுசுத்தமாய் = நித்திய சுத்தமாய், விரிவாய் = வியாபகமாய், அறிவுமாத்திரமாகி = சின்மாத்திரமாய், துயரொன்றுமற்று = நிருபத்திரவமாய், ஆறி = சாந்தமாய், மேவரும் விரதம் = வேறுபாடற்ற, அனைத்தினுக்கொத்து = பரிபூரணத்தோடே கரூபமாய், விகாரமற்றுள = நிர்விகாரமாகிய, பொருளிடத்தே = பிரஹ்மத்தின்கண், ஸ்புரணமாம் ஓரறிவு, தனது நினைவையே விரும்பி = தற்கருத்தை யிச்சித்து, தன்வயத்து = திருசிய சம்பந்தமாய், எழுந்தது = தானே யுதித்தது. (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்புரணமான அவ்வறிவு முறையே மனமாதலும் அநந்தசக்திகளை யுடைத்தாதலும் உவமானபூர்வகமாக வுணர்த்தல்:—செப்பென.

செப்பியவறிவுமுடிவில்சங்கற்பஞ்செய்ததிற்சென்றிடுமிதுதா
னிப்பிரமத்தின்மனமதாமிதனுக்கெண்ணில்சத்திகளுளவாகுங்
கப்பிலாதெங்குநிரந்தரஞ்செய்யுங்கடவுளாமிம்மனந்தனிலே
யப்பிலேதோன்றுந்திரைகள்போற்பேதமாகியவல்லபந்தோன்றும்.

(ப - ரை.) செப்பிய அறிவு = ஸ்புரித்தெழுந்த சித்தானது, முடிவில் சங்கற்பஞ் செய்து = அநந்த எண்ணங்களையாற்றி, அதிற்சென்றிடும் = அந்நினைவின் வழித்தாயே யோடித்திரியும், இதுதான் = இங்ஙனுழனுமிதுவே: இப்பிரமத்தின் மனமதாம் = மன னத்தான் மனமெனப்பெறும், இதனுக்கெண்ணில் சத்திகளுளவாகும்=இத்தேவதைக்கு அளவில்லாத சத்திகளுளவாம், கப்பிலாதெங்கும் நிரந்தரஞ்செய்யுங்கடவுளாம் இம்மனந் தனிலே = சேடமற எங்கும் நிறைந்த மகாத்மாவாயிருக்கும் இம்மனமாகிய தேவதை யினின்றும், அப்பிலே தோன்றுந் திரைகள்போல் = நீரிலே பிரதீதியாம் தரங்கங்க ளொப்ப, பேதமாகிய வல்லபந்தோன்றும் = பேதகற்பனைச் சத்தியானது கிளம்பும்.

(ஸ்ரீ - வீர.) ஜடாஜட இலக்ஷணம் வாய்ந்த அந்தச் சித்தானது தன்னாற் சங்கற்பிக் கப்பட்ட திருசியத்தையே பின்றொடருமலாது அதிஷ்டான சின்மாத்திரத்தை யனுசரி யாதாம். அச்சித்தானது தானே பிரஹ்மரூபமா யிருத்தலிற் களங்கமற்றதே யாயினும், உபத்திரவமற்றதே யாயினும், உபாதியினுடைய சம்பந்தத்தினாலே மலினவிக்ஷேப முற்றதேபோலும் பொலிவதாகிப் பிரசித்தமான மனதேயென மலரப்பெறும். "தனி யஃது பாதித்தன்மையானே, மனனித்தலானே மனமெனலாகும்" எனமறையும் உள தாம். சர்வகமாயும் சர்வசத்தியுடையதாயும் மகாத்மாவாயும் இலங்கும் இம்மனோதேவ தையினின்றும், நீரினின்றும் கல்லோலங் கிளம்பல்போல, எண்ணவடிவமாய பேதகற் பனைச் சத்தியானது எழும்பியுலவும்.

(ச.) சங்கற்பஞ்செய்து = சங்கற்பித்து, முடிவில் சென்றிடும் = சிரமாகிதமாய்த் தாவும், அதுதானே = அவ்வறிவே, இப்பிரமத்தின் = இச்சங்கற்ப வேதுவினால், மன மதாம், இதனுக்கு = இம்மனோரூபமான அறிவுக்கு, எண்ணில் சத்திகளுளவாகும் = சர்வசத்தியுமுளதாம், நிரந்தரஞ்செய்யுங் கடமையாம் = சர்வகதமாய் மகத்சொரூபமான இம்மனந்தனிலே = இம்மனோரூப தேவனென்னும் பரமான்மாவினின்றும், பேதமாகிய வல்லபம் = மனோரூபமான விபாகசங்கற்பசத்தி, தோன்றும் = உதிக்கும். (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் துவைத அநர்த்தமூலத்தைத் தரிசிப்பித்து அதன் நாச உபாயத்தைக்கூறல்:—உள்ளன.

உள்ளுறுசங்கற்பத்தினாற்றோன்றுமுள்ளமற்றதனினாலொடுங்குந்
தள்ளுறுகாற்றாலெழுந்ததீக்கொழுந்துசமிப்பதுங்காற்றினாற்போல
நள்ளுறுபிரமமன்றுநானென்றுநாடுதன்மனத்துறுபந்த
மெள்ளுறுமிடமும்பிரிவிலாப்பொருளேயாமெனுமமுத்தமேவீடாம்.

(ப - ரை.) உள்ளுறு சங்கற்பத்தினாற் றோன்றும் உள்ளம் = ஆந்தரத்தில் எண் ணும்படியான எண்ணத்தினாலே உள்ளம் பிரதீதியாம், மற்றதனினால் ஒடுங்கும் = அச் சங்கற்பத்தினாலேயே நாசமாம், தள்ளுறுகாற்றால் எழுந்ததீக்கொழுந்து = யாவற்றை யும் அசைக்கும் வாயுவினாலே யோங்கிய அக்கினிச்சுவாலை, சமிப்பதுங்காற்றினால் போல = சாந்தமாவதும் அவ்வாயுவினாலேபோல, நள்ளுறுபிரமம் = பெரிதிற்கெல் லாம் பெரிதாய பிரஹ்மம், அன்று நானென்று = அகம் அல்லவென்ன, நாடுதல் மனத்

துறுபந்தம் = நாட்டமுறுதலே மனத்தின் கண்ணுற்ற பந்தமாம், எள்ளூறும் இடமும் பிரிவிலாப்பொருளே = அணுப்பிரதேசத்திலும் நீக்கமற நிறைகின்ற பிரஹ்மசொரூபமே, யாமெனும் அழுத்தமே வீடாம் = எமது வடிவமென்னும் திடஞானமே மோக்ஷமாம்,

(ஸ்ரீ - வீர.) நான் யாமென்றது இகழ்ச்சியும் புகழ்ச்சியுந் தோன்றவாம், எள்ளுவமித்தது, எல்லா எள்ளுள்ளும் நெய்போலும், ஒருதேகமன்றிச் சுரநரதிரியக்காதி சர்வ சரீரங்களுள்ளும் யாம் நிறைந்துள்ளேம் என்பதற்காம், எள்வேறு றினும் நெய் ஒன்றுபோலும் திருசியங்கள் வேறுறினும் திருக்கு ஒன்றேயாமென்க இதனை ஆன்றோரும் ஆள்வர் " பிள்ளைகணூறு பிழைகள் செய்தாலும் பெற்றவர் தயைர முனிந்துதள்ளுதலுலகிலுண்டுகொ ல்டியேன்றவறினைப் பொறுத்தருள் புரிவாய், எள்ளுறுமிடமும் பிறிவிலாப்பொருளே யெந்தையே யெம்முயிர்த்துணையே , யுள்ளுதற்கரிய பொருள்வைமாநகர்வாழுகந்த தேசிகசிகாமணியே " சுவாநுபவத் திருவாக்கு எதனால், எச்சம்சாரம் ஒரேவிஸ்தார சாந்தபரமாத்மாவில் ஒருசிறிதுங்கிடையவே கிடையாதோ அது சங்கற்பமாத்திரத்தானே சித்தியையடைந் துளதோ அதனால்; எதனால் இம்மனமெனப்பெயரிய விபாககற்பனசக்தி உசிதகாரண ரகிதமாமோ, நிர்விகாரமாய பிரஹ்மவஸ்து அதனுசித காரணமாவதற்குத் தகுதியதாகாதோ; அதனால்; சங்கற்பசித்தமாய தோற்றமாத்திர சித்தமாய அதுவும் மேற்கூறப்பெறும் சர்வம் பிரஹ்மம் என்னும் வடிவினதாய சங்கற்பத்தினனே நசித்துப்போம். யாது எதனனே யுண்டாமோ அது அதனனே நசித்துப்போம் வாயுவினனே யுண்டாய வன்னிச்சுவாலை அவ்வாயுவினனே நசிப்பதேபோலும்: வாயுவினின்றும் வன்னியுண்டாம் என்னும் மறையிருப்பதனு னென்பது கருத்தாம். பௌருஷ உத்யோக சித்தத்தானே போகாசையானது வடிவத்தை யடைந்துலவும் நிதித்தியாசன பரிபாக பௌருஷ உத்யோகத்தாற் சித்தமாய சாக்ஷாத்காரப் பிரதிஷ்டையை யடைந்துள்ள அசங்கற்பமாத்திரத்தானே அவ்வவித்யா மோகமானது அழிந்துபோம்; அவ்வாறுகவே பந்தமோக்ஷங்களும் மனோதருமங்களே யாமன்றி யாத்மதருமங்களல்லவாம், எனல்: நள்ளூறுயான் பிரஹ்மசொரூப மன்றென்றுள்ளவன் றிடனினைவினனே மனம்பந்திக்கப்பெறும்; யாவும் பிரஹ்மசொரூப மென்னும் அதிதிடமானபாவனையினலே மனமானது மோக்ஷத்தையடையும், " தன்னைச் சீவபாவனையாகக் காணுகிறதே பிறவி தன்னைச் சிவரூபமாகக் காணுகிறதே மோக்ஷம் " என்பது ஸ்ரீ மதாண்டவர் திருவாக்கியம். ஈண்டுப்பாவனை ரூபமென்னுஞ் சொற்கள் யதார்த்த அயதார்த்தங்களை யுணர்த்தி நின்றன.

(ச.) உள்ளம் = மனோரூபமான விபாககற்பன சக்தி, சங்கற்பசித்தமாதலின், அதனினல் = அச்சங்கற்பத்தினலே, ஒடுங்கும் = நசிக்கும், தீக்கொழுந்து = வன்னிச்சுவாலை, ஆயின் எச்சங்கற்பத்தாற் பந்தம் எச்சங்கற்பத்தான் மோக்ஷம் எனச்சங்கித்துரைத்தல்:—பிரமமன்று நானென்னும் = அகம்பிர்மமன் றென்னும், நாடுதல் = சுதிர்டசங்கற்பத்தினல், மனதுறும் பந்தம் = மனதுபந்தமுறும், பொருளே யானெனும் = அகம்பிர்மமென்னும், அழுத்தம் = சுதிர்டசங்கற்பத்தினல், மனதேயுறும் வீடெனக் கூட்டுக. ஏ வீடு = அம்மனதுதானே மோக்ஷமுறும், சுதிர்டம் = தீர்க்ககால நைரந்தரிய (இடைவிடாமல்) சத்காரிய சேவையாம். சத்காரியம் = நற்றொழில், சத்காரபாடமேல் = ஆதரவென்பது பொருள். (24)

(ஸ்ரீ - வீர - அ-கை.) பந்தகற்பனைப் பேதங்களை விரித்துரைதல்: மடமையெண்,

(ச.) அச்சங்கற்பத்வயத்தையே விவரணஞ்செய்கின்றார்:—மடமையென.

மடமையுந் துயருமவயவநிறைந்தவடிவமுமுடையனானென்றே
படர்தருமவற்றிற்கேற்றபன்னடையாற்பாசமும்பந்தமுமுளதாஞ்
சடமுறுமிவற்றிலேதுமொன்றல்லேன்றசைநரம்பென்புநீரல்லே
னுடலின்மேலானபரமநானென்னுமுறுதியோர்மாயைசெற்றுணர்ந்தோர்

(ப - ரை.) மடமையும்துயரும் அவயவம் நிறைந்தவடிவமும் உடையன் நான் = யான் அஞ்ஞன் யான்கிருசன் யான்பத்தன் யான் அதிதுக்கி யான்கரசரணுதியுடையவன், என்றே = என்பதாக, படர்தரும் இவற்றிற்கேற்ற பன்னடையால் = பரவிவரும் இப்பாவாநுரூபமாகவுண்டாம் பலவிவகாரத்தால், பாசமும் பந்தமும் உளதாம் = வாதனையும் கட்டும் உண்டாம், சடமுறுமிவற்றில் = ஜடமாய இவைதமில், ஏதும் ஒன்றல்லேன் = எப்பொருளும் யான் அல்லன், தசைநரம்பு என்புநீர் அல்லேன் = மாம்சம் சநாயு அஸ்தி உதிரம் மூத்திரம் மலம் அல்லன், உடலின்மேலான = தேகத்தினுய் விலக்ஷணமான, பரமநான் = பரம்பிரஹ்மமேயான், என்னும் உறுதியோர் = என்பதானதிட நிச்சயமுடையவர், மாயைசெற்று உணர்ந்தோர் = அவித்தையையழித்து மோக்ஷமடைவர்.

(ஸ்ரீ - வீர.) இளைத்தவன்யான் அதிதுக்கியான், பத்தன்யான், ஹஸ்தபாதாதிமான் யான், என்னும் பாவாநுரூபமாகச் செய்யும் விவகாரத்தாற் பந்தமுறும். அதன்மோக்ஷ உபாயகற்பனையைக் காட்டல் நான்துக்கியல்லன், எனக்குத்தேகம்கிடையாது, எதற்குப் பந்தம்? அசங்கமாய எனக்குப்பந்தம் எப்படிவரும் எனத் தன்வடிவையே தியானிப்பவன் இவ்வகையான நிட்டைகளைப் புரிந்து சுத்தவாசனை விவகாரஞ்செய்தலால் மோக்ஷத்தையடைவன். யான் எலும்புகள் அல்லன் அதனுள் மூளையேனும் மேன்மாமிசாதியேனும் அல்லன்; மற்றோ, தேகத்தினும் விலக்ஷணமாய பரமசிவமேயான் என்னுந்துணிபுள்ளுடையவன் க்ஷீண அவித்தையனுகி நிராவரண சொரூபமோக்ஷத்தையேயடைவன்

(ச.) மடமையும்—என்றே = நான் அஞ்ஞன் நான் கிருசன், நான்பெத்தன் நான் அதிதுக்கி நான் அஸ்தபாதாதிரூபன் என்று, இதனுக்கு = இக்கருத்துக்கு, நடையால் = விவகாரத்தால், சடமெனுமிவற்றிலேது மொன்றல்லேன், நான்றுக்கியன்று நான்றேகியுமன்று, நான்பெத்தனுமன்று. என்றேபடர்தருமிதனுக்கேத்த பன்னடையால் வீடுளதாமென முடிக்குக. பரிபூரணமென்னும் அத்துவிதீய வான்மாவிற்குப் பந்தவேதுவின்மையிற் பந்தமின்றென்பது பொருள் மோசகசங்கற்பத்தை மீட்டு முரைக்கின்றார்: தசை, உடலின்மேலான = தேகத்துக் கன்னியமான பிரமநானென்னு முறுதியோர் = பரமாத்மா நான் ஆனேனென்னும் நிச்சயமுடையவர், மாயைசெற்றுணர்ந்தோர், அவித்தை நசித்து வீடுற்றவராம். (25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பூமியிலிருக்கப்பட்டவரானே தங்கள் சங்கற்பமாத்திரத்தானே இயற்கையாகவே வியோமமானதுநீலமாக இருக்கின்றதெனக்கற்பிக்கப்படுவதே போல, மூடரானே அநான்ம வத்துக்களில் ஆன்மபாவனை கற்பிக்கப்படு மெனல்.—தானென.

தானலாதனவுடன் முதற்பொருளிற்றானெனும்பாவனையாய
ஞனமாமாயையுணர் விலோர்விதிக்கவுள்ளதாமுணர்வுளோர்க்கிலதா
மானதனினைத்ததைம் பொறியியற்றுமன்னவர்க்கமைச்சர்போல்விரைவி
லானநன்மதியான்முயற்சியாற்போகத்தாசைவிாதனையவேரறுப்பர்.

(ப - ரை.) தானலாதான் உடன் முதற்பொருளில் = அநாத்மாக்களாய ஆகமுதலிய வஸ்துக்களில், தானெனும் பாவனையாய ஊனமாம்மாயை = ஆத்மபாவனையாகிய நீசத்தனமான அவித்தை, உணர்விலோர் விதிக்கவுள்ளதாம் = விவேகமில்லாதவர் எண்ணுதலானே யிருப்பதாகும், உணர்வுளோர்க்கிலதாம் = ஞானமுடையவர்க் கில்லையாகும், மானதம் நினைத்தது = மனது அநுசந்தானஞ் செய்ததை, ஐம்பொறியயற்றும் = சர்வேந்திரிய விருத்திகளும் கணத்திற் சம்பாதிக்கும், மன்னவர்க் கமைச்சர் போல் விரைவில் = அரசர்கட் கெண்ணியதை மந்திரிமார்கள் கணத்திற் சம்பாதித்துக் கொடுப்பதே போலும், ஆனநன்மதியான் முயற்சியால் போகத்தாசை வாதனையைவேரறுப்பாய் = நிட்காமிய ஆராதனையாலுண்டான பரமமான புந்தியினுனே யத்தனத்துடன் மேலான பௌருஷத்தை யாசிரயித்து சித்தத்தினின்றும் போகாசா பாவனையை மூலஞ்சிறிது மில்லாதபடி எடுத்தெறிந்து விடுவாய்

(ஸ்ரீ - வீர.) விண்ணேவியமே போலும் பிரபோத முறுதவனுனே அநாத்மாவின் கண்ணுத்மபாவனை வடிவமாய இவ்வவித்தை கற்பிக்கப்பெறும், ஹே இராகவ ! பிரபோதமுற்றவனே கற்பியான். கேவலம் சங்கற்பித்தலானே மனத்திற்குப் பந்தகத்வம் என்பதாகவின்றும், மற்றே, சங்கற்பிதப் பொருள்களில் இந்திரியங்களை யேவுதலானேயும் பந்தகத்வம் ஆமென்கின்றார்: மானதம் மனதைத் தடைப்படுத்தினும் யாங்ஙனம் இந்திரியங்களால் வாசனையுற்பவ முண்டாகாது எனிற்கூறல்: மானதமென மனமானது யாதையநுபவிக்க விரும்புகின்றதோ அதை ஐந்து புலன்களும் கணத்திற்றேடிக் கொணர்ந்துகொடுக்கும்; அரசனுணையை யமைசசரேபோலும். ஆகவின் யாவன்மனோநுசந்தானம் பாவப்பொருள்களில் ஆக்கானே, உள்ளே பிரஹ்மாகம் பாவனையே முயன்று செய்வானே அவன் பரமசாந்தியை யடைவ னென்பதாம்: எதனுன் இராகவாசனையிருந்தான்மாத்திரம் மனத்திற்கும் பந்தகத்தன்மையாமோ இல்லாவிடின் ஆகாதோ அதனுன் அது விடத்தக்கதாமெனல்: ஆனநன்மதி. பரமபௌருஷத்தைப்பற்றி யத்நத்தானே பரமமானமதியால் போகவாசனையை அத்தியாசத்தோடுங்கூடச் சித்தத்தினின்றும் அத்தியந்தம் கனனஞ்செய்து எடுத்துவீசுக.

(ச.) தானலாதான வுடன் முதற்பொருளில் = அநான்மாவில், தானென்னும் பாவனையாலே = ஆன்மபாவனையால், உணர்விலோர் = அஞ்ஞர்கள், ஊனமாமாயை விதிக்கவுள்ளதாம் = கற்பிக்கப்படுகின்ற தவித்தையாம், அவ்வவித்தை உணர்வுளோர்க்கில்தாம், மாநதம் நினைத்தது = மனது அநுசந்தித்ததை, ஐம்பொறி = சர்வேந்திரிய விருத்திகள், விரைவிலியற்றும் = கணத்திற் சம்பாத்தியஞ் செய்யும், நன்மதியாற் = பரமபுத்தியால், ஆனமுயற்சியால் = மேலானபுருடப் பிரயத்தனத்தினுல், போகத்தாசை வாதனையே = போகேச்சா பாவனையை விட்டு, வேரறுப்பாய் = சமூலமாய் மனதை முற்றத்துறப்பாய், (26)

(ஸ்ரீ - வீர - அ - கை,) ஆயின் அத்தியாச இலக்கணமூல உத்தரணப் பொருட்டு யாது செய்யத்தக்கதென ஆசங்கித்து, அதன்மூல வாசனேத்தரணம் செய்யத்தக்கதெனல்: பரமானமோகமாகிய தனதஞ்ஞானம் யாதொன்றுதயமாமோ அதுவே ஜராமரணகாரணமாதலின், யாதுயாது காரியவடிவமாக உதயமாமோ அஃதெல்லாமாக ஆசாபாசசத உல்லாசவாசனையே விரிந்துதோற்றும், உண்மையாக ஒன்றுமின்று மாதலின் அதனையழிக்க முயலவேண்டு மெனல்:—என்னுடையென,

என்னுடைமைந்தரென்னுடைநிதிநானிவனவனிதுவதுவென்னு
மின்னுடைநிலைமையிந்த்ரசாலத்தால்வீங்கியவாதனையோங்கும்
நன்னுடைநிலையஞ்ஞானமாநிலைபோய்நாசமாயையிற்கருத்தொழிவாய்
நின்னுடைவடிவிலவற்றைநீயென்றேநினைவிலார்போல்வருந்துவதென்.

(ப - ரை.) என்னுடைமைந்தர் = எனதுபுத்திரர், என்னுடைநிதி = எனதுதனம், நான் இவன் அவன் இது அது என்னும் = அகம் அயம் ச: இதம் தத்மம என்பதாக, மின்னுடைநிலைமை யிந்த்ரசாலத்தால் = மின்னலன்ன அதிசாஞ்சல்ய இந்திரஜாலத்தினாலே, வீங்கியவாதனை யோங்கும் = நாட்குநாட் பருத்துவரும் வாசனையே விருத்தியாம், நன்னுடைநிலை = ஞன் என்னு அறிஞன் நிலைமையை உடைத்தாயிருப்பாய், அஞ்ஞானமாநிலைபோய் = அறிவில்லான் நிலைமையை யடையவேண்டாம், நாசமாயையிற் கருத்தொழிவாய் = சமுசாரவாசனையை யடியோடும் விடுவாய் நீ, நின்னுடைவடிவில் அவற்றை = அநாத்மாக்களாய அவற்றை, நீ என்றே = ஆன்மாவென நினைந்து. நினைவிலார் போல் வருந்துவதென்? = அறியார்போல அழுவதென்னே.

(ஸ்ரீ - வீர.) என்னுடையமக்கள் = மமபுத்திரர், என்னுடைய பொருள் = மம தனம், இவன் = அயம், அவன் = ஸ:, யான் = அகம், இதம் = இது, என்னுடையது இது = மம இதம், என்பதாக இவ்வண்ணமுண்டா மிந்திரஜாலத்தானே வாதனையே புரண்டுபுரண்டு திரியும். அஞ்ஞனைப்போல இருகற்பனை செய்யவேண்டாம், பிராஞ்ஞனைப்போலப் பிரஹ்மதிருஷ்டியே செய்வாயாக, சமுசாரஞ் சத்தியமாக இருக்கின்றதென்றும் வாதனையை யொழித்தி, அநான்மாவின் கண்ணே யான்மபாவத்தானே அஞ்ஞரைப்போல என்ரோதனஞ் செய்கின்றாய்.

(ச.) இதுவது = இஃதெனது, அஃதெனது, வீங்கிய விந்திரஜாலம் = விரிந்த இந்திரஜாலரூபமாய், வாதனையோங்கும் = வாசனையே பலவிதம் நிர்த்தனஞ் செய்யும், அஞ்ஞானமா நிலைபோய் = (நீ) அஞ்ஞனாகாது, நன்னுடைநிலை = ஞானியாய், நாசமாயையின் கருத்தொழிவாய் = சமுசாரபாவனையை விடுவாய், நின்னுடை வடிவிலவற்றை = அநான்மாவில், நீ யென்றே = ஆன்மபாவனையால், நினைவிலார்போல் = அஞ்ஞன்போல, வருந்துவதென் = அழுவதென்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அநாத்மாவாகிய தேகத்தில், ஆன்மத்தன்மையக்கமேசர்வதுக்க நிதானமென முதலில் அதனையே விலக்கல்:—மூகவென.

மூகமாய்ச்சடமாய்ச்சுகாசுகங்களிலேமூழ்கியோர்பயனறவருந்துந்
தேகமார்நீயாரகோவகோவீதோர்சித்திரமிருந்தவாகாணு
யேகமாய்மெய்யாயிலங்கியபிரமமெங்குமாயிருக்கவுந்தோன்றாச்
சோகமாய்ப்பொய்யாய்விளங்குறுமாயைதோன்றுறுதிருக்கவுந்தோன்றும்.

(ப - ரை.) சடமாய் மூகமாய் = அறிவற்றதாய் ஒன்றுந் தெரியாததாய், சுகாசுகங்களிலே மூழ்கி = இன்பத் துன்பங்களிலே யழுந்தி, ஓர் பயனறவருந்தும் = யாதொரு பிரயோசனமும் இல்லாமல் துன்புறும், தேகமார் நீயார் = உடல்யார் நீயார், அகோ அகோ = அந்தோ! அந்தோ! ஈதோர் சித்திரம் இருந்தவாகாணாய் = இஃதொரு விசித்திரம் இருந்தவாறு காண்பாயாக, ஏகமாய் மெய்யாய் இலங்கியபிரமம் = ஒன்றாய் உண்மையாய் ஒளிராநின்ற சிவஸ்வரூபம், எங்குமாயிருக்கவுந் தோன்றா = எவ்விடத்தினும் சத்தாஸ்பூர்த்தியைக் கொடுத்துக் கொண்டிருந்தும் இறையளவும் இலங்கவில்லை,

சோகமாய் பொய்யாய் விளங்குறுமாயை= துன்பமயமாய் மித்தையாய் தெரிவுறு திருந்த சமுசாரமய அவித்தை, தோன்றுறு திருக்கவுந்தோன்றும் = பிரதீதியாகத் தகுதியற்றிருந்தும் முன்னர்வந் திருப்பதுபோல் நடிக்கின்றது,

(ஸ்ரீ - வீர.) யாது நினது இச்சடமாய மூகதேகம் உளதாதல் ? ஒரு சம்பந்தமுங் காணேமே, நீயறிவு இது அறிபொருள் ஜடம் ஜடத்தன்மையானே மூகமாம் = வாக்காதியதிஷ்டாதாவாகாதாம். இது நீயுமல்ல நினதுமல்ல எனவாயினும் இதன்பொருட்டாகச் சுகதுக்கங்களால் வசமற்று மகிழ்ந்துவாடல் என்னே ! தயைவியாஜமாக அவித்தையகற்றற்பொருட்டு மிகவுற்சாகப் படுத்தல்: கானனீர் நேர்தோற்றுங் காயாதியை யசத்தெனவுணர்ந்து விடுதி, உண்மையுணர வுன்னையுற்றிடுதியெனல். அகோவென அந்தோ! அந்தோ ! சித்திரம், சத்தியமாய் பிரஹ்மம்யாதோ அது உயிர்கட்கு மறந்துபோய் விட்டது; யாது அசத்தியமோ அவித்தையெனப் பெறுமோ அது அத்தியந்தம் எண்ணத்திலெப்போதும் இலங்கியது; இஃதென்ன ஆச்சரியம் !

(ச.) சுபாசுபங்களிலே மூழ்கி = சுகதுக்கங்களின் விவசமாய், தேகமார் நீயார் = தேகத்துக்கும் உனக்கும் என்ன சம்பந்தம் என்பதுபொருள். மாயை = அவித்யாகாரியமாதலின் அவித்தையென்னுந் திருசியமே, அகோவகோ வென்பதுவிளி, சித்திரம் = ஆச்சரியம். எத்தேகத்தின் பொருட்டுச் சுகதுக்கங்களால் விவசமாய் விவகரிப்பாயோ அதற்கும் உனக்கும் என்னசம்பந்தம் என்பதாம். பாரமார்த்திகப் பிரஹ்மம் பிறந்தது அசத்தியதிருசியம் அநுபவிக்கப் பெறுகின்றது; இஃதாச்சரியமன்றோ.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவித்தையை யகற்றுவான் முயன்றவனால், தள்ளமுடியாத போகாதிகாரியங்கள் செய்யப்பெற்ற போதினும் அவற்றில் விருப்பம் வைக்கலாகாது என்று கூறுகின்றார்: சர்வத்வைதாகாரரஞ் சனமயமாய பவபந்தனவாதனையைப் பற்றுமல் விடுத்து இராகசம்பந்த மற்ற வெண்பளிங்குமணிபோலச் சொச்சமா யிருத்தியெனல்:—படிகவென.

(ச.) இதமுபதேசித்தல்:—படிகவென.

படிகநன்மணிகள்பற்றிபாய்நிறங்கள்பற்றறப்பற்றும்படிபோன்
முடிவறுதொழிலிற்பின்விருப்பின்றிமுடித்தியென்றருந்தவவசிட்டன்
நெடிதுரைத்தலுமேபரத்துவகேளாய்நிறைகுணத்திராகவன்கேட்டு
மடியறுமிதயபங்கயமலர்ந்துவசிட்டனைநோக்கியீதுரைத்தான்.

(ப - ரை.) படிகநன்மணிகள் = வெண்பளிங்கு மணிகள், பற்றிபாய் நிறங்கள் = பிரதிபிம்பித்த சித்திரங்களின், பற்றறப்பற்றும் படியேல்= சம்பந்தமின்றியே சம்பந்தித்துக் காட்டுவனபோல, முடிவறு தொழிலின் = நினது இன்றியமையாத காரியங்களில், பின்விருப்பின்றி = வரும்வாசனாரூப ராகானுரஞ்சனை யில்லாமல், முடித்தியென்று — செய்வாயாக வென்று, அருந்தவ வசிட்டன்=பெருந்தவபூஷண ஸ்ரீவசிஷ்டபகவான், நெடிதுரைத்தலுமே = வெகுவாக வுபதேசித்தபோது, பரத்துவகேளாய் = ஹே பரத்துவாசனே நீ யொருமையுட னிப்போது கேட்பாயாக, நிறைகுணத்திராகவன் கேட்டு = சர்வ கல்யாணகுணாகரமாய இரகுநந்தனன் சிரவணித்து, மடியறும் = விட்யவாதனையற்ற, இதயபங்கயம் மலர்ந்து = விகாசித அந்தக்கரண முடையவனாய், வசிட்டனை நோக்கி யீதுரைத்தான் = ஸ்ரீ வசிஷ்டபகவானைப் பார்த்து வருமாறு கூறத் தொடங்கினான்.

(ஸ்ரீ - வீ.ர.) அநேக விசித்திரங்களாய பிரதிபிம்பங்களைக் கவர்ந்த போதினும் வெண் பளிங்குமணியானது யாதொருபற்றையும் உறாததேபோல நினது விவகாரங்களில் நீ நின்று விவகரித்தபோதினும் விரும்பத்தக்க விடயங்களிற் பற்றையடைய வேண்டாம்; இராகானுஷங்கமே பந்தமாம். நிரதிசய ஆநந்தரூபத் தன்மையானே பரமகௌதுகமான பிரஹ்மத்தை யுணர்ந்த தத்துவ வித்துக்களுடைய சமாஜத்திற்சேர்ந்து மீள மீளவும் ஆராய்ச்சி செய்தலானே திடதரபிரஹ்மாகம் பாவநிச்சயப் பிரதீப்தமாய, அதனுனே யாண்டுஞ் சமதரிசனுகி சுசீலம்வாய்ந்த வரமதியாம், அப்பற்றற்ற புத்தியால், எப்போதும் விவகரிப்பாயேயாயின் அவித்தையாலாய காரியங்களாம் ஜனனமரணாதிவிப்பிரமங்கள் நீங்கப்பெற்றவனுந் தன்மையை யடைவாய், அதாவது நித்தியமுக்த சொரூபனுவாய், அக்கால், எம்மகாப் பிரபாவத்தோடு கூடிச்சீவன் முக்தராகிய பிரஹ்மாவினுடனுதல் ஹரியினுடனுதல் ஹரனுடனுதல் உவமிக்கப் படமாட்டாய், மற்றவரோடு ஒருவனுவாயிருப்பாய் என்றபடி. ஸ்ரீவான்மீகிபகவான் கூறல்:—ஹே பரத்துவாஜ ! மகாத்மாவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவான் இவ்வண்ணம் விரித்துக் கூறியபோது, கமலபத்ராக்ஷ இரகுநந்தனன் தாமரைமலர்ந்ததை யொத்தனன், விகசித அந்தக்கரணனுய், சமாதான சந்தோஷிதனுய், தமசுதணர்ந் தேகியவழி பதுமம் அருக்காலோகனத் தாற்போலும், அத்தியந்தம் பரமசோபையை யடைந்தனன். பின், போதத்தாற்போந்த விஸ்மயத்தாலினிது சனித்த சௌமியமாய புன்னகையாற் றுவல்யமான திருமுகனுகி, தந்தரஸ மிச்சுதையாற்ற வுதபாவமுற்ற இத்திருமொழிகளை இயம்பத் தொடங்கினுன்.

(ச.) படிக நன்மணிகள் = படிகம், பற்றிபாய் நிறங்கள் = சித்திரங்களான பிரதிபிம்பங்களை, முடிவறு தொழிலில் = காரியங்களிற் சம்பந்தித்திருந்து நீ, விருப்பு = இராகத்தில் அதன்மயமாகும் பாவனையை, பின்னின்றி முடித்தி = மீட்டெழாவண்ணம் ஒழிப்பாய், அருந்தவ வசிட்டன் = மகான்மா வென்னும் ஸ்ரீ வசிட்டபகவான், மடிவறு மிதய பங்கயமலர்ந்து = விகசித அந்தக்கரணனுகி, ஈது = இவ்வாக்கியத்தை, உரைத்தான்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ இராகவர் இயம்புதல்:—அற்புதமென.

**அற்புதமீதொன்றிருந்தவாறென்னேயம்புயனுளனூலாலே**
**வெற்பினம்பிணிப்புண்டறநெரிவதுபோல்வெறும்பொய்யாமாயையாலுலகம்**
**பற்பலதுயரம்பயில்வதாந்திரணம்பருவயிரத்தின்வன்புறல்போ**
**லுற்பவமிலங்குமதனினுலேற்குமுறுதியைபென்றுமீட்டுரைப்பான்.**

(ப - ரை.) அற்புதம் ஈதொன்று இருந்தவாறென்னே = அகோ அகோ ஆச்சரியம் ஆச்சரியம் இவ்வண்ண மிருந்தது இஃதென்னையோ ! அம்புயனுளனூலாலே = தாமரைத்தண்டி லுண்டாமெல்லிய தந்துவாலே, வெற்பினம் = பர்வதசமுதாயம், பிணிப்புண்டு = கட்டுப்பட்டு, அறநெரிவதுபோல் = அத்தியந்தம் நொருங்குவதேபோல, வெறும்பொய்யாம் மாயையால் = அத்தியந்தம் இல்லாததேயாய அவித்தையினுல், உலகம் = விசுவத்திலுள்ளவர், பற்பலதுயரம் பயில்வதாம் = அநேகவிதமான துயரங்களையநுபவிப்பர், திருணம் பருவயிரத்தின் வன்புறல்போல் = துரும்பானது கடினமான வயிரத்தைப்போல மிகக்கடினப் படுவதைமானும், உற்பவமிலங்குமதனினுல் = இல்லாத அவித்தையினுலும் உண்டாகிப் பிரதீதியாகும் இத்திருசியம், உறுதியையேற்கும் = இருப்பதுபோல மிகச் சத்தியமாய்த் தோற்றும், என்றுமீட்டுரைப்பான் = என்றிவ்வண்ணந் தனதனுபூதியை யுரைத்து மீளவும் கூறுகின்றுன். (30)

(ஸ்ரீ - வீர.) அகோ அகோவிசித்திரமிஃது என்னே! பதுமத்தினின்றுந் தோன்றிய தந்துக்களானே பர்வதக் கூட்டங்கள் பத்தப்பட்டனவே! பதுமத்தினின்றும் கிளம்பிய தந்துக்களானே பர்வதபந்தன துல்லியமாக ஈண்டென்னுச்சரியங் கண்டாயெனின்? கூறல்: வெறும். அத்தியர்தம் அசத்தாயிராநின்ற எவ்வவித்தை உளதோ அதனுல் விசுவம் சூனியமாக்கப்பெற்றது அதாவது புருடார்த்த ரகிதமாக்கப் பெற்றது; யாவருமே மயங்கிவயமாக்கப் பெற்றனர் என்றபடி. அற்ப அவித்தையினுனும் இப்பிரபஞ்சம் மிக நெருங்கிய சங்கிலிப் பந்தனமதாக எதனுல் ஆய்விட்டதோ அதனுல் திருணமாத்திரமேயாய அவ்விம் மூவுலகமும் (பரோக்ஷாபரோக்ஷ என்றபடி) வஜ்ஜிரம்போலாய் விட்டதே இஃதென்னே! பிரசித்தமாய்க் காணப்பட்ட சமுசாரதுக்கம் உபாதான பூதமாய அவித்தையானே தோற்றிய போதினும் வஜ்ஜிரமாய தென்னே! அவித்தையாற் றோற்றிய அசத்தேயாயினும் சத்துப்போற் றோற்றுகின்ற திஃதென்னே! என்பதாம்.

(ச.) மாயையால் = அவித்தையால், உலகம் = விசுவம், துயரம்பயில்வது = துக்கத்வசம்பாதனம் பதும தந்துக்களாற் பருப்பத பந்தனம்போல் ஆச்சரியமென்பது பொருள். உறுவது = அவித்தையாற் சர்க்கத்திற்கு நிபிடபந்தனத்துவம் திரணத்திற்கு வச்சிரத்துவம் போலென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அயலையம் வினுதல்:—ஈதென.

ஈதுமோரையமென்மனத்துளதாலியம்பியலவணனுமன்னன்
மாதுயரடைந்ததென்னெனக்கேட்பவசிட்டமாமுனியதற்குரைப்பான்
றீதகன்மனத்தாலியற்றலாலந்தச்செயல்பயனுடல்புசித்திலதா
லோதுறுமந்தமன்னனோர்நாளிலுபவனத்தொருவனுயிருந்து.

(ப - கை.) ஈதுமோர் ஐயம் என்மனத்துளது = அன்றியும் இஃதோர் ஐயமானது எனது இருதயத்தி லிருக்கின்றது, இயம்பிய = முன்னருளிய, லவணனு மன்னன் = இலவணமகா ராஜாவானவன், மாதுயர் அடைந்தது என் எனக்கேட்ப = பெருந்துக்கத்தை யடைந்தது யாதுகாரணத்தால் என்று ஸ்ரீ இராகவர் வினவ, வசிட்டமாமுனியதற்குரைப்பான் = ஸ்ரீ வசிட்டபகவான் அதற்குத்தரங் கூறுவதாவது, றீதகல் மனத்தால் இயற்றலால் = குற்றமனத்தினுலே குயிற்றலால், அந்தச் செயல்பயன் உடல் புசித்திலதாம் = அக்கிரியா பலத்தைச் சரீரம் அநுபவிக்கவில்லை, ஓதுறும் அந்தமன்னன் = கூறிய அந்த லவணமகாராஜன், ஓர் நாளில் = ஒருதினத்தில், உபவனத்தொருவனுயிருந்து = உத்யானவனத்துத் தனியிடத் தேகனுக வீற்றிருந்து.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாத்மாவாகிய ஆசிரியரே! மேலும் கேட்கவேண்டியதுளதாம்; எச்சம் சயமானது இருதயத்தி லிருந்து கொண்டே யிருக்கின்றதோ, மகாசமர்த்தனும் பாக்கியவானுமான இலவண மகாராஜன் பேராபத்தை யடைந்தது எந்நிமித்தத்தால் என்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் விடைகூறல்: றீதகல்: இவ்வற்புத விருத்தாந்தத்தைக் கூற நீ ஒருமையுடன் கேட்குதியேல் இவ்வரசன் மநோமயன் மாத்திரையானே சண்டாளத் தன்மையை யடைந்தனன் என்பது வெளியாம். மனஞ்செய்த சுபகர்மபலமேனும் அசுபகர்ம பலமேனும் மனமேபுசிக்கு மன்றிச் சரீரம்புசியாது; ஆபாசசகித மனமே கருத்தா அதுவே கிரியாபலத்தைப் புசிக்கும், சரீரம்புசிக்க மாட்டாது, இது இனிக்கூறப்பெறும் விருத்தாந்தக் கூற்றின் பிரயோஜனமாம். எவ்விருத்தத்தானே எங்ஙனம் நீ யிதையறிந்து கொள்ளலாமோ அங்ஙனம் அவ்விருத்தத்தைக்

கேட்குதி, ஹே அநகனே ! முன்னர் ஹரிச்சந்திர குலத்தில் வந்த லவணமகாராஜன் தனியிடத்திற் றனியனாக இருந்துகொண்டு நீள்போது மனத்திற் சிந்திப்பதாவது.

(ச.) இயம்பிய லவணனுமன்னன் = மனப்பிரமையினாற் சண்டாளத்துவ மடைந்தா னென்ற லவணவரசன், தொழிலின் பலனைப் புசித்திலதால், மனதேகருத்தா தான் புரிந்ததின் பலனைப் புஜிக்குஞ்சரீரங் கர்த்தாவன்றாதலின் கிரியாபலம் புஜியாதென்பது பொருள். இவ்வர்த்தசொரூபம் அறியும் வழிகூறல்ஃ ஓதுறும் அந்தமன்னன் = அரிச் சந்திர குலத்துதித்த லவண அரசன், முன் = ஓர் நாளில், உபவனத்து = பூங்காவி லோராசனத்தில், ஒருவனாயிருந்து = ஏகாந்தனாயிருந்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அரசனது சிந்தனையின் பிரகாரத்தைக் கூறல்:—இருத— கடவுளென.

இருதயத்துணர்வான்பிதாமகன்குருவாமிராசசூயஞ்செய்வோமென்னாக்
கருதியமனத்தான்மகத்தினுக்குரியகலப்பைகளனைத்துமுண்டாக்கிச்
சுருதிநூல்வழியேசாலையிற்புகுந்துதுறவரைவரித்தருச்சித்து
வருதிரென்றிமையோர்களைமறைமொழியால்வரவழைத்தாரழல்கிளப்பி.

கடவுளர்முனிவர்மறையவர்பூசைகடைப்பிடித்தாரொருவருடந்
தொடர்புறநடத்திதன்பொருண்முழுதுந்தொலைவுறத்தானமாவழங்கித்
திடமுறுமனத்தான்முடித்தபின்பகலுஞ்சென்றறுவிழித்தனனிதனா
லிடவியமனமேதுன்பவின்பங்களெய்துறப்புசிப்பதென்றுணர்வாய்.*

(ப - ரை.) இருதயத்துணர்வான் = மனத்தின் கண்ணே யிவ்வாறு சிந்திப்பானா யினன், பிதாமகன் குருவாம் = எனதுபாட்டன் பெரியமகானா யிருந்தார், இராசசூயஞ் செய்வோ மென்னா = அவர்செய்த இராசசூயயாகத்தை மனத்தாற் செய்யலாமென்று கருதி, கருதியமனத்தால் = எண்ணிய எண்ணத்தால், மகத்தினுக்குரிய கலப்பைகள் அனைத்தும் உண்டாக்கி = யாகத்திற்கு வேண்டிய சாமக்கிரியைகள் யாவற்றையும் சேகரித்து, சுருதிநூல்வழியே = சாஸ்திர மரியாதைப்படியே, சாலையிற்புகுந்து = தீக்ஷித்து யாகசாலைக்குட் சென்று, துறவரை வரித்தருச்சித்து = ருத்விக்குகளை வரவ ழைத் தருச்சனைசெய்து வருதிர் என்றிமையோர்களை மறைமொழியால் வரவழைத்து = வந்தருளுவீராக என்று தேவர்களை வேதமந்திரங்களால் ஆவாகனஞ்செய்து ஆரழல் கிளப்பி = யாகாக்கினியை யோங்கிச் சொலிக்குமாறு செய்து.

கடவுளர் முனிவர் மறையவர் பூசைகடைப் பிடித்தார் = தேவ இருடி துவிஜபூசை யோடு அந்தயாகத்தை, ஒருவருடம் = ஏகசம்வத்சரம், தொடர்புற நடத்தி = விடாமற் செய்து, தன்பொருண்முழுதும் = தன்னுடைய சருவ ஐசுவரியங்களையும், தொலைவுறத் தானமாவழங்கி = சர்வஸ்வதக்ஷிணை யெனும்படி யாவருக்கும் தானமாகக் கொடுத்து, திடமுறு மனத்தான் = அதிதிடமாகிய சித்தத்தினாலே, முடித்தபின் = யாகசமாப்தி செய்தபின்பு, பகலுஞ்சென்றது = தினமும் அந்தமாயது, விழித்தனன் = உணர்ச்சி யுற்றனன், இதனால் = இக்காரணத்தால், இடவியமனமே துன்பவின்பங்கள் எய்துறப் புசிப்பதென் றுணர்வாய் = சங்கற்பங்களைச் செய்யும் மனமே துக்கசுகங்கள் அடைவுற அநுபவிப்பதென் றறிவாய். (33)

(ஸ்ரீ - வீர.) இருதயத்துணர்வதாவதுஃ—எனது பிதாமகர் பெரியமகானாயிருந்தனர் பெரிய இராஜசூயயாகத்தைச் செய்து முடித்தனர், யான் அக்குலத்தே யாயினன் அவ்

வாறு செய்யாவிடினும் மனத்தினாலேயே அந்த யாகத்தைச் செய்துமுடிப்பேன். பாகிய சாமக்கிரிதேடி முடிப்பது முடியாமையானதல், ராஜாதிபீடா நிமித்த இராஜசூயத்தில் மந்திரி புரோகிதாதி அசம்மதியினானதல், மனத்தினால் யஞ்ஞசங்கற்பனை செய்யப்பெற்ற தென்றறிக. இவவாறு மனத்தினாலே யெண்ணி யாகத்திற்கு வேண்டிய சாமக்கிரிகளனைத்தையும் மனத்தினாலேயேதேடி, மனத்தினாலேயே தீக்ஷைசெய்துகொண்டு மகீபதியானவன் யாகசாலையுட் சென்று; முறையே இருத்துவிக்குகளை வழவழைத்து, மந்திரபூர்வகமாகத் தேவதைகளைப் பிரசந்நமாக்கி, முனிவர்களை வரவழைத்து தேவதைகளை மகிழ்ச்சிபொங்க மந்திரங்களா லருச்சித்து, யாகாக்கினியை மிகச் சொலிக்கும்படியாகச் செய்வித்து. இவ்வண்ணம் அம்மகத்தில் யஜமானனாக இருந்துகொண்டு அவ்வுபவனத்தினுள்ளேயே ஓரேகாந்த இடத்தில் தேவ இருடிமுனிவர் பூசையைக் கடைப்பிடித்து ஒருவருடத்திற்குமேற் கழிந்தது சம்வத்சரத்திற்கு மேற் சிறிது அதிகமாகக் கழிந்ததுபோல மனத்திற் றோற்றியது, உண்மையாக அங்ஙனம் ஒருவருடமாக வில்லை, பின்வருவதோடு மூரணுறுதலின் மறையவர் முன்னாக எல்லாப் பிராணிகட்கும் தனது சர்வ ஐசுவரியங்களையும் தக்ஷிணையாகக் கொடுத்து விட்டுப் பகற்போனபோது தானாகவே அம்மன்னவன் அவ்வுபவனத்திற் றானேபாகிய திருஷ்டியை யடைந்தனன். இவ்வாறு அந்த லவணமகாராஜா இராஜசூயத்தைச் செய்து முடித்தனன், அதனை மனத்தினாலேயே ஆதரவோடுஞ் செய்து முடித்திருத்தலின் அம்மகபலத்தையும் மனதடைதலே தகுதியாம். ஆகலின் இன்பத்துன்பங்களின் போக்தாவாகச் சித்தத்தை நன்குணரலாம். அக்காரணத்தால் மனத்தின் விசோதன வுபாயத்தில் விசார நிரோதாதிகளில், உண்மையில் அடைவிக்கவேண்டும் மனமேகிரியா சக்திப் பிராதான்யத்தால் கருத்தாவும் கரணமும் கிரியையுமாம், அதுவே சுகதுக்க பலவடிவமாகப் பரிணதமாகிய தன்பலமாம்; மனமே சிதாபாச வியாப்தியானே சிற்சக்திப் பிராதான்யத்தாற் போக்தாவும் போகமுமாம். ஆகவே இம்மனத்தைப் பரிபூர்ண பரமாத்மாவிற் செலுத்தில் நிறைந்தேசுகிக்கும், தேகாதிகளிற் செலுத்தில் அவைபோல அழிந்தேகும்; ஆகலின் தேகோக மென்னும் நைசுவர அகம்பாவம்போதும் பிரயோஜன மில்லாமையின் விட்டுத்தொலைத் தின்புறுக வென்பதாம்.

(ச) இருதயத்துணர்வான் = மனதினெடுங்காலஞ் சிந்தித்தான், குருவாம் = மேன்மையான, பிதாமகன் என்னும் அரிச்சந்திரன் இயற்றிய இராசசூயத்தை, செய்வேம் அவனது குலத்திற்பிறந்த யான் மனதால் இயற்றுவேன், மகத்தினுக்கு = இராஜசூயத்திற்கு, கலப்பைகள் = சாமான்கள், உண்டாக்கி = ஆதரவாய்ச்செய்து, துறவரை = முநீசுவரரை, வரித்து = இருத்விக்குகளாக = யாகதீக்ஷிதராக நியமித்து; யாகத்தில் ஓம முதலியசெய்யும் அத்வர்யு முதலானவர்களாம் என்பது பொருள். அருச்சித்து = அர்ச்சித்து வணங்கி, மறைமொழியால் = மந்திரத்தால், ஆரழல்கிளப்பி = அக்கினி தேவனைச் சொலிப்பித்து.

தானமாய்வழங்கி = அந்தணரை முன்னிட்ட கிலர்க்கும் தக்ஷிணையாகக்கொடுத்து மனத்தால் மனதினாலேயே, பகலுஞ்சென்றது = உபவனத்து அந்த நிருபனை திநாந்தத்தில் விழித்தனன், அதனால் = இங்ஙன் இராஜசூயஞ்செய்த அந்த லவணராஜன் மனதினாலேயே அதனது நிறைந்த பலத்தொடுங் கூடினானல்லவா! ஆதலின் இட்டு + உணர்வாய் = சுகதுக்கங்களின் போக்தாவைச் சித்தமயனெனத் தெரிவாய். (33)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இலவண இராஜனால், சண்டாளபாவாதி கற்பனைவடிவமாக இந்திரஜாலக்காரனால் காட்டப்பெற்ற இராஜசூய சம்பந்திய நிஷ்டபலம், அடையப்பெற்

றது, என்று ஐதிகமாகக் கூறப்பெற்ற பொருளின் கண்ணே பிரமாணஞ் சம்பவிப்பது துர்லபமாம்; காட்சியோகத்துவாதாம். எனதுமானத இராஜசூயத்தின் பலமிதுவென இலவணராஜனால் தானே புணர்ந்துகொள்ள முடியாமையின்; தத்வியாப்பிய லிங்கங்கட்கும் அப்பிரசித்தமாதலின் அதனால் அன்னியாானும் அறிந்து கோடற்கு முடியாமையின்; அதனை மூலமாகவுடைய சப்தத்திற்கேனும் ஐதிகத்திற்கேனும் ஆண்டு விவகாரமின்மையின்; சித்தாகாயத்தில் கற்பனாஜாலான் மகம் பலமெங்ஙன் கூடும்? என்று ஸ்ரீராகவர் கேட்ப அதற்கு ஸ்ரீவசிட்டபகவான் அன்னியர்கட் காண்டுப் பிரமாண விவகாரமின்றேனும் யோகபலத்தானே தமக்கு அதுபிரத்தியக்ஷம் ஆதல்கூடும் கூடவே அம்மூலமாகவே அன்னியர்கட்கும் வெளியாம் எனச்சமாதானஞ் செய்தல்:—சித்தனென.

சித்தனதியல்புசெப்பிடக்கேண்மோதிருந்தியலவணன்முன்னெய்தி
வித்தையான்மயக்கஞ்செய்துளசித்தன்மீண்டுபோயொளித்தனனாங்கே
யித்தனைசெயலுங்கண்டுடனிருந்தவெம்மையீதென்னெனவினவ
வத்திறல்வேந்துமியாவருங்கேட்பவகத்துணர்ந்துரைத்தனமனைத்தும்.

(ப - ரை.) சித்தனது இயல்பு செப்பிடக்கேண்மோ = இந்திரஜாலக்காரனது, நடத்தையைக்கூறக் கேட்குதி, திருந்திய லவணன்முன்னெய்தி = பயனையுறுவதற்குத் தகுதிவாய்ந்த அந்த அரசனது சபையையடைந்து வித்தையான் மயக்கஞ்செய்துளசித்தன் = தனது மாயாவித்தையினாலே மயக்கித் துயருறுத்தியசாம்பரிகன், மீண்டுபோய் ஒளித்தனன் = திரும்பிப்போய் மறைந்தனன், ஆங்கே = அவ்விடத்தில், இத்தனை செயலுங் கண்டுடனிருந்த-நடந்த விவகாரங்கள் யாவற்றையும் பார்த்துக்கொண்டு அவர்களோடு கூடவே யிருந்த, எம்மை = ஆசிரியராகிய நம்மை, ஈதென்னென வினவ = இஃதென்ன விருத்தாந்தமெனக் கேட்ப, அத்திறல் வேந்தும் = அந்தப் பராக்கிரமம் பொருந்திய மன்னவனும், யாவரும் கேட்ப = சபையோரும் செவிகொள்ளுமாறு, அகத்துணர்ந்து உரைத்தனம் அனைத்தும் = உள்ளே தெரிந்து யாவற்றையுஞ் சொன்னோம்.

(ஸ்ரீ - வீர.) இனிச் சாம்பரிகனது விருத்தாந்தம் ஹே ரகுநந்தன கேட்குதி! எத்காற் சாம்பரிகன் = சம்பராசுர சம்பந்தமாய மாயைகற்றவன், இந்திரஜாலக்காரன், லவணராஜ சம்பந்தியவையில் வந்துற்ற காலத்தில் யாமும் ஆண்டுவீற்றிருந்தேம், அங்குற்றவற்றைக் கண்ணாரக் கண்டேம். ஆண்டு அச்சித்தன் இந்திரஜாலவகையிற் செய்த சரித்திரம் நடந்தேறிய பின்னர். அவையோராலும் லவணராஜாவாலும், இஃதென்ன அதிசயம் சுவாமின்! உரைத்தருள வேண்டுமென வெகுவாக வேண்டிக்கொண்டபோது யாம்யோகபலத்தால் யாவற்றையும் கருத்திற்கண்டு உள்ளே யுணர்ந்தபடியே யாவருங் கேட்ப உரைத்தனம்.

(ச.) சித்தனதியல்பு = இராமா இனிச்சாம்பரிகனது விருத்தாந்தத்தை, லவணன் முன்னெய்தி = இலவணசபையை யடைந்து, வித்தை=இந்திரஜாலம், கண்டு = பிரத்தியக்ஷமாகப்பார்த்து, உடனிருந்த = சபையாரொடு வசித்திருந்த, வினவ = மகீபதி யத்தனத்துடன் கேட்க, அகத்துணர்ந்து யான் தியானதிருட்டியிற் சிந்தித்து. (34)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இராஜசூய யாகத்தின் பிரத்யக்ஷ துக்கபலத்தை யுரைத்தல்:—

ஈங்கிதுபுகலவிராகவகேட்டியிராசசூயத்திலேலவணன்
பாங்குறுமனத்தாற்றெருகுத்தவாயாரும்பன்னிருவருடம்வன்றுயரிற்
றீங்குறுவருத்தமுறுதலான்மகவான்சேணினின்றொருவனையேவ
வாங்கவன்சித்தனாகியேல்வண்ணற்கருந்துயரளித்துமீண்டகன்றான்.

(ப - ரை.) சுங்கிதுபுகல விராகவகேட்டி = ஹே இரகுநந்தன சண்டு சாம்பரிக னது செயலைக்கூறக் கேட்பாயாக, இராசசூயத்திலே லவணன் பாங்குறுமனத்தாற் றொகுத்தவா=இராஜசூயயாகத்திற்குக் கருத்தாவாக விருந்து லவணமகாராஜன் ஏகாக் கிரமாகிய மனத்தினாலே யாதொரு அங்கவிக்னமு மின்றிச்செய்து முடித்ததேபோல, யாரும் = எக்கருத்தர்கள். அவ்வியாகத்தைப் பாகியத்திற் செய்துமுடித்த போதினும், பன்னிருவருடம் வன்றுயரில் = துவாதசவருடம், நாணாகார சமயமாக, தீங்குறு வருத்தமுறுதலால் = அதிதுக்கத்தை யடைதலால், மகவான் = இந்திரன், சேணி னின்று = விண்ணினின்று, ஒருவனையேவ =ஒருதேவதூதனைச் செலுத்த, ஆங்கவன் சித்தனாகியே = அங்கு அத்தேவன் சாம்பரிகனாகி நின்று, லவணற்கு= லவணமகா ராஜனுக்கு, அருந்துயரளித்து = மகாபத்தைத்தந்து, மீண்டகன்றான் = அங்கிருந்து மீளவும் துறக்கத்திற்கேகினன்.

(ஸ்ரீ - வீர.) ஹே இரகுகுலதிலக! சாம்பரிக சேஷ்டையின் அபிப்பிராயகார ணத்தை யாம் கூறக்கேட்பாயாக, யாவர் இராஜசூயயாக கருத்தாக்கள் ஆவரோ அவர், பன்னிரண்டு வருடங்கள் நாணாவடிவமாம் தசைமயமாய அதிதுக்கத்தையடைவர். நாணா கார அவஸ்தைமயமான பன்னிருவருடத்திய துக்கத்தையும் அடைவர் என்பதாக யாதோதப் பெற்றதோ அது புருடஹிதத்தின் பொருட்டே பிரவிருத்தித்த வேதவிஹித இராஜசூயத்தின் பலமன்றும்மற்றோ அக்கால் வெளிப்பட்ட முற்பாவத்தினதே யாமென் றறிக. பற்பலதுயர் வாய்ந்த ஆபத்தையடைவராதலின் தேவேந்திரனால், துறக்கத்தி னின்றும் லவணனுக்குத்துயரீயும் பொருட்டு ஒரு தேவதூதனையனுப்ப அவன்சாம்பரிக ஆகிருதியுற்று வந்து இராஜசூயக் கிரியையையியற்றிய கருத்தாவாகிய அரையனுக்கு மகத்தான ஆபத்தைக்கொடுத்து விட்டுச் சுரசித்த நிஷேவிதமா யெப்போது முல்லாச மாயுலவும் விண்மார்க்கஞ் சென்றனன். சரீரராஜசூயபல துவாதசவருடத்திய ஆபத் தைக்குறித்து, அறுபது வருடக்கற்பனை வடிவதாதலின் ஐந்துமடங்கென்பார் அருந் துயர்=மகாபத்து என்றார். இதனானே மானச இராஜசூயாதிக்கு, சுவாராஜயாதி சுகபல மும், சரீர அபேக்ஷையால், ஐந்துமடங்கதிகமென அறியப்பெறும். ஆகலினிது இராகவ பிரத்தியக்ஷமேயாம் இதிலையம் யாதொன்றுமே செய்யலாகாதாம்.

(ச.) இராசசூயத்திலே தொகுத்தவரியாரும் = ராஜசூயத்தினது கர்த்தாவனைவரும், வன்றுயரிற்றீங்குறு வருத்தமுறுதலால், = நாணாகார அவஸ்தைமயமான அதிதுக்கத் தையடைவர், அரிச்சந்திர தருமாதியர்க்கு அவ்விததுக்கானுபவங் கண்டிருத்தலின், ஆதலால் மனத்தால் லவணன்பாங்குற = லவணனுக்குத் துக்க நிமித்தம், ஒருவனை = ஒருதேவதூதனை, சித்தனாகியே = சாம்பரிகாகிருதியாய், லவணற்கு = இராஜசூயக் கிரியாகருத்தனான அந்தலவணனுக்கு, அருந்துயரளித்து=மகா ஆபத்தைக் கொடுத்து, அகன்றான்=சுரசித்தர்வாழும் வியோமமார்க்கத்தை, அடைந்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமபுருடார்த்தப் பொருட்டுச் சித்தத்தைத் தெளிவிப்ப தாய எழுவிதயோகபூமிகள் இனியியம்பப் பெறுமென்ன, ஹேசர்வ தத்வவித்துக்களி னும் மேன்மையரே! ஹேபகவன்! அவ்வெழுவகைச் சித்தியைநல்கும் யோகபூமிகள் எத்தகையன விரிவாகப் பின்கூறுவனவாயினும் முன்சங்கிரகமாகக் கூறவேண்டும், அவற்றின் இலக்கணவகைகளையும் அவற்றிற் குபயோகியாய அர்த்தாந் தரங்களை யும் சுருக்கமாக அனுக்கிரகிக்க வேண்டும் என்று ஸ்ரீ இராகவர்கேட்ப, அதற்கு ஸ்ரீ வசி ஷ்டபகவான் ஞானபூமிகளின் போதம் எளிதிலுண்டாகும் பொருட்டு வேண்டியதாய

அஞ்ஞானபூமிகளின் பேதத்தை முதலில் மொழியும் வேட்கையுற்று ஞானஞ்ஞானபூமிகளைப் பிரித்துக் காட்டத்தொடங்கல்:—மற்றென.

(ச-அ-கை.) அந்த லவணனது மகத்தாகிய வாபத்துருவமான முற்கூறிய மனோவிலாசத்தையே விலாசமாகத் தெரிவித்தற்குப் பூமிகா நிரூபணங் கீர்த்தனிக்கின்றார்:—மற்றென.

மற்றுமொன்றுரைக்கவள்ளலேகேட்பாய்மடமையாம்பூமியேழ்பதமா
முற்றுள்ஞானபூமியேழ்பதமாமொழிந்தவிப்பதங்கடம்மிற்றும்
பற்றுளவாகுமொன்றொடொன்றளாவிப்பயில்வனபதங்கண்மட்டிலவா
மற்றமில்சொரூபநிலைபெறல்வீடாமதினமுவுறுதனானெனலே.

(ப - ரை.) மற்றுமொன்றுரைக்க=மேற்கூறியவற்றை யுணர்த்திச் சிவந்தாப்பூமிக்கிரமங்களைக்கூற, வள்ளலே கேட்பாய்! இராகவே கேட்குதி, மடமையாம் பூமியேழ்பதமாம் = அஞ்ஞானபூமிகள் சப்தபதங்களாம், முற்றுள்ஞான பூமியேழ்பதமாம்= சுக முழுவதும் முறையேபெறவுரிய ஞானபூமிகள் சப்தபதங்களாம், மொழிந்த விப்பதங்கள்=கூறிய இந்தப்பதங்கள், தம்மிற்றும் பற்றுளவாகும் = பரஸ்பரம் பற்றுடையனவாம், ஒன்றொடு ஒன்று அளாவி=அன்னியோன்னியம்விரவி, பயில்வனபதங்கண்மட்டிலவாம் = விவகரிக்கும் பதாந்தரங்கள் சங்கையற்றனவாம், அற்றமில் சொரூபநிலைபெறல் வீடாம் = களங்கமில்லாத சொரூப அவஸ்திதியே முக்தியாம், அதின் நழுவுறுதல், நானெனலே = அதினின்றும் பிரம்சமாதலே அகந்தை வேதனமாம்.

(ஸ்ரீ - வீர.) இனிமேல் வேண்டியயாவற்றையும் இயம்பக்கேட்குதி இராமச்சந்திர! முன்னர் என்னே யாபத்தை யடைந்தனன் என்னும் இடையிலுற்ற வினவுக்கு விடைதந்து இப்போது அவித்தை யில்லாததே யாயினும் பிரஞ்ஞை யில்லாதவரிடத்தில் உள்ளது போற்றோற்றும் பெயரான் மாத்திரம் அங்கீகிருத ஆகாரமுடைய அது நன் ஞானியர்பால் எங்ஙனிருக்கும் " ஊன்மாமாயை யுணர்விலோர் விதிக்க வுள்ளதா முணர்வுளோர்க்கிலதாம் " என்னுமிடத்திற் றள்ளத்தக்கதாக அவித்தைசாற்றப்பெற்றது; யாது கொள்ளத்தக்க வித்தையுளதோ, பிரஞ்ஞான வேறு பரியாயத்தையுடைய உதிதமாய அதைச் சங்கிரக விஸ்தாரங்களால் அவஸ்தை யறைவதாதியால் விரிக்கின்றார்: மடமையாம் என. அஞ்ஞானமேயாய பூமிகள் எழுபதங்களாம். உலகத்தில் பூமியை யுடையோனுக்கு அப்பூமி அவனுக் கநுகூலமாய பலத்தைக் கொடுப்பதேபோல, அஞ்ஞானபூமியுந் தருமென்பதாம், அதுவும் எழுபதங்களை யுடைத்தா யிருக்கின்றபடியினாலே, எழுபதாவஸ்தையை யுடையதாகும்; ஞானபூமியெனினும் ஞானியின் பூமியெனினும் ஒன்றே. ஞானபூமிகள் சப்தபதங்களே யாமென்பது பிரசித்தம் வித்வான்கட்காம். இப்பூமிகட்கந்நியோந்நியம் பதாந்தரங்க ளென்னும் அவாந்தர அவஸ்தைகள் சங்கையற்றன வுளவாம், பெறுவனபேத மொன்றுநூறும் பேதைமை யவ்த்தையிவ்வேழும் என இனிக்கூறவும் பெறும், சுவாபாவிகப் பிரவிருத்தி லக்ஷணபுருடப்பிரயத்நமும் போகாககார்ட்டிய லக்ஷண ரசாவேசமும், அஞ்ஞான பூப்பிரதிஷ்டையில் அசாதாரண ஹேதுவாம். சாஸ்திரீய சாதனசதுஷ்டய விசிஷ்ட சிரவணாதிப்பிரயத்நமும் முமுக்ஷுதார்ட்ய லக்ஷண ரசாவேசமும் ஞானபூமிப் பிரதிஷ்டையில் அசாதாரண ஹேதுவாம்: அதிஷ்டானப் பிரஹ்மசத்தை யுத்கர்ஷாதிசமான தன் சத்தைலாபமோ இரண்டிடத்தும் சாதாரண ஹேதுவாம். இவ்வேதுக்களானே இப்பூமிகள் பிரதியுதம் தம்தம் விடயத்திற்பத்தமூலங்களாய் தம்தமக்கு சிதமான சமுசாரஸ்திதி துக்கலக்ஷணம், அதன்முக்தியாய

பிரதிசயாநந்த அடைவுலக்ஷணம் ஆயபயனை யினிதுபயக்கும். கீழ்புவனபூமிகள் சப்த பதங்கள் உத்தரோத்தரம் இராஜஸ் தமோதுக்க பகுள நரகாந்தங்கள், மேற்புவனபூமிகள் உத்தரோத்தரம் சத்துவ சுகஞான பகுள சத்தியலோகாந்தங்கள் கிரமமுக்தி பலங்கள் எங்ஙன மிருக்கின்றனவோ அங்ஙனம் இவையுமாம் எனப்பொருளா லுணரலாம், சப்த பதங்களுந் தனித்தனியே பயன்பயப்பனவாம்; அவையும், பிரரூடமூலங்களேயாய்ப் பயன்றருவனவே யன்றிப் பிரசிதிலமூலங்களாய்ப் பயன்றருவனவலவாம். இவைபிரதி பதம் பத்தமூலங்களாய்ப் பிரதிபதம் தம்பயன்களைப் பயக்குமென்பதாம். பூமிகளின் சுவாமிகளைக் குறிக்கின்றார்: சொரூபவென்பது. ஆண்டுப் பூமியிரண்டிற்குத் தனித்த னிப்பலத்தாற் சாமானிய இலக்கணம் சாற்றல்: சொரூபவென்பது, சொரூப அவஸ்திதி முக்தியாம், சொரூப அவஸ்திதிவடிவ முக்தியில் நிலைபெறாமல் நழுவுதலின் சொரூபம் அகம்பாவஞானமாம் யானென்னும் பிராந்தியாம்.

(ச.) சுகமாய்க் கேட்பாய், மடமையாம் பூமியேழ்பதமாம் = அஞ்ஞானவஸ்தை சப்தப்பிரகாரமாம், ஞானபூமி = ஞானதசையும், பதங்கள் = ஞானஞ்ஞான பூமிகள், முன்பு ஞானியஞ்ஞானிகளின் இலக்கணஞ் சுருக்கிக்கூறல்:—அற்றமில் + வீடாம் = நிருபாதிக சின்மாத்திரரூபமான சொச்சொரூபத்திற் றிதியுறுவது முக்தியாம், நானெனல் = அநான்மாவாகிய தேகாதியில், அகந்தையாற்றிதியுறல், அதில் = சொரூபத்தில், நழுவுறுதல் = பந்தமென்பது பொருள், (36)

(ஸ்ரீ - வீர - அ -கை.) சொரூபத்தினின்றும் நழுவாதவர் திருசியதுக்கங்கடந்திருத் தலும், நழுவியவர் கடவாமையும் கூறல்:—அடக்கமென.

(ச - அ-கை.) இந்த ஞானி அஞ்ஞானி இலக்கணத்தையே விவரணஞ் செய்தல்:— அடக்கமென.

அடக்கமாயுரைத்தேமஃதறிந்தவர்க்குமறிகிலாதவர்க்குநற்குறிக
டொடக்கமில்சன்மாத்திரமதாமறிவின்சொரூபநின்றசைவிலாதவரே
விடற்கருங்காமமுதற்பகைகடந்தோர்மெய்யறிவிலார்கடப்பரியோர்
நடக்குறுகாட்சிவிதத்தில்வீழறிவேநோக்கருஞ்சொரூபத்திநழுவல்.

(ப - ரை.) அடக்கமா யுரைத்தேம் அஃது அறிந்தவர்க்கும், அறிகிலாதவர்க்கும்; நற்குறிகள் = பரமாத்மாவை யுணர்ந்தவர் உணராதவர்தம் இனிய இலக்கணங்கள் இவ் வண்ணம் சங்க்ஷேபமாகக்கூறினேம், தொடக்கமில் சன்மாத்திர மதாமறிவின் = அசங்க சுத்தசத்தாமாத்திர சம்வித்தின், சொரூப நின்றசைவிலாதவரே = சொரூபத்தினின் றும் சலனமில்லாதவரே, விடற்கரும் காமமுதற் பகைகடந்தோர் = சாமானியராற்றி யாகித்தற்கு முடியாத இராகத்துவேடாதி பகைகளைத் தாண்டினோராவர், மெய்யறிவி லார் = உண்மைஞான மில்லாதவர், கடப்பரியோர் = தாண்டமுடியாதவர், ஆவர், நடக்குறுகாட்சி விதத்தில் வீழறிவே = பந்தத்தையீயும் அநேகவிதமான திருசியப் பிராந்திகளில் மூழ்குதலே, நோக்கரும் சொரூபத்தில் நழுவல் = காண்டற்கரிய கரியாஞ் சொரூபத்தினின்றும் பரிப்பிரம்சமாம்.

(ஸ்ரீ - வீர.) தஞ்ஞத்வ அஞ்ஞத்வ இலக்கணம் இவ்வாறு சுருக்கமாக வியம்பப்பெற் றது. கேவலம் முக்திசாலியே தஞ்ஞன், அகங்காராதி பந்தசாலி அஞ்ஞன் என்பதாக மாத்திரம், அவர்தம் மிலக்கணங்கள் அலவாம்; மற்றோ, இராகாதி இன்மையும் உண் மையும் முறையே அவர்தம் மிலக்கணங்களாம் என்பார் தொடக்கமில் லெனத்தொடங் கினர். பரிசுத்த இருப்புமாத்திர அறிவுருவத்தி னின்றும் யாவர் அசையா மற்றிதிபெறு

வரோ, அவர்க்கு இராகத்வேஷாதியுத்யமே யிலதாம்: வேருய அஞ்ஞருக்கோ, அவை உளவாம். அறிவுடையோருக்கு அவையில்லாமையின் அஞ்ஞத்தன்மையு மிலதாம், இதுவே ஞானபூமியின் இலக்கண ஸ்புடமென வறிக, அஞ்ஞான பூமியின் இலக்கண ஸ்புடமோ இங்ஙனமாம் :—சேத்திய அர்த்தங்களாய அகமாதி ஞேயபதார்த்தங்கள் விடயஞ்செய்யும் பிராந்தியில் மூழ்கியதன் பரமாயாதல் சொரூபத்தினின்றும் பரிப்ரம்சமாதலாம்.

(ச) தொடக்கமில் = திருசிய சம்பந்தரகிதமான, சன்மாத்திரமதாம் = சன்மாத்திர ரூபமாகிய, அறிவின் சொரூபநின்று = சித்தென்னும் ரூபத்தினின்றும், அசைவிலாதவர் = எவர் சலியாரோ அவர்க்கு. விடற்கருங் காமமுதற்பகை கடந்தோர் = அஞ்ஞர்க்கிணக்கமான இராகத்துவேடாதிக ளின்றும், அவரே ஜீவன்முக்தர் என்பது பொருள். காட்சிவிதத்தில் = திருசியவஸ்துவில், வீழறிவே = சித்தமூழ்குதலே, ஞானந் திருசியதாதான்மியமுற்று அதன் சொரூபமாதல், சொரூபத்தினழுவல் இதுவே மகாமோக மென்பது பொருள். (37)

(ஸ்ரீ - வீர - அ - கை) சொரூபத்தை மறத்தல் பெருமோகமெனப் புகன்று அச் சொரூபத்தை நன்கறிவித்தல்:—சொரூபமென.

(ச - அ.) சொரூபஸ்திதியை மீட்டும் விவரணஞ் செய்தல்: —சொரூபமென.

சொரூபம்விட்டகலல்மோகமாம்வேறுசொல்லிடமுன்ப்பின்பில்லை
யொருபொருணினைவையொழித்துமேலப்பாலொருபொருணினைவுறிலந்த
விருபொருணடுவுணினைவறவிருக்குமிதுசொரூபத்தியல்பிதுதான்
மருவுகற்பனைமாண்டசைவில்கற்போலாய்வருநனுச்சுழுத்திதீர்வடிவாம்.

(ப - ரை.) சொரூபம் விட்டகலல் மோகமாம் = தனது சொரூபத்தை விட்டிருத்தல் பெருத்தமயக்கமாம், வேறு சொல்லிட முன்புபின்பில்லை = இதனினும் அயலான ஆபத்து ஒன்றுசொல்லுவதற்குப் பூதமுமில்லை பவிஷ்யத்துமில்லை,ஒருபொருள் நினைவை யொழித்து = ஒருபதார்த்தத்தினுடைய எண்ணத்தைத் தியாகித்து, மேலப்பால் ஒரு பொருள் நினைவுறில் = பின்னர் மற்றொரு பதார்த்தத்தினுடைய எண்ணம் எழுமானல், அந்த இருபொருள் நடுவுள் =அவ்விரண்டா காரங்களின் இடையில், நினைவற இருக்கும் இது சொரூபத்தியல்பு =மனஆகார மில்லாமல் இராநின்ற ஸ்திதியாகிய இதுவேசொரூபஸ்திதியெனப்படும்,இதுதான் = இந்த சொரூபஸ்திதியானது, மருவுகற்பனை மாண்டு= சர்வசங்கற்பங்களும் நன்ருகச் சாந்தமாகி, அசைவில் கற்போலாய் = சலனமிலாத சிலைபோலும் நிலைபெற்றதாய், வருநனுச் சுழுத்திதீர் வடிவாம் = ஜாட்டிய நித்திரை முதலியவை விடுபட்ட வடிவமாம். (38)

(ஸ்ரீ - வீர.) இதனினும் அபரமான மோகம் முன்னுமில்லை இனிமேலும் வாராதாம் மோகசப்தத்தானே மோககாரியங் கவரப்பெறும்; அக்ஙகாராதி யத்தியாச பரத்தன்மையினும் வேறு அதிசயமான மோககாரியம் முன்னும் பின்னும் கிடையாதாம். இராகத்துவேஷாதி சகல தோஷகாரண மாதலின் இதுவே பரமமான மோககாரியமாம். சித்தமானது ஒருவிடயத்தினின்றும் மற்றொரு விடயப்பொருட்டுச் செல்லுங்கால் அவ்விரு விருத்திகளின் சந்தியில் விகற்பங்கள் ஒன்றுமின்றி யிருக்குந்திருஷ்டாவி னெந்த ஸ்திதியுளதோ அதுவே சொரூபஸ்திதியாம்; விருத்திசந்தி சாக்ஷியாக எந்நிர்விகற்பகம் சைதந்யமுளதோ அதுவே சொரூபமதம், அதன்வடிவமாக நிலைபெற்றிருத்தலே சொரூப

ஸ்திதி யென்பது பொருளாம். பூர்வவிடயத்தி னின்றும், நழுவியவனுக்கு விடயாந்தர மனனத்தின்முன், மன்னமற்றதாய்ச் சொரூப அவஸ்திதியிருப்பது பிரசித்தமேயன்றோ. இது முதல்வகைப் பூமியின் அப்பிரசித்தியை விலக்கியதாம். சொரூப அவஸ்திதி முத்தி யென முன்மொழியப் பெற்றது, ஆண்டு, யாது இச்சொரூப அவஸ்திதியெனச்சங்கிப்பக் கூறல்: இது தானெனன்பது. சர்வசங்கற்பங்களும் பெரிது சாந்தமாகிச் சிலைபோலும் அசையாமலிருத்தல் சொரூப அவஸ்திதியாம். ஜாகரத்தைவிலக்கல்; வருநன. மூர்ச்சை சுழுப்திகளின் வாரணப்பொருட்டுச் சிறப்பித்தல்; வருநன ஜாட்டிய நித்திரை விடுபட்ட நிலையாதோ அது சொரூபஸ்திதி யெனப்படும். அவஸ்தாத்திரயங் கடந்து துரீயமதாக நிலைபெறுதல் சொரூபஸ்திதி யென்பதாம்.

(ச.) ஒரு+வேறப்பால் உறில் = சித்து பூர்வவிடயத்தினின்றும் விடயாந்தரத்தை யடையின், அந்த விருபொருணடுவில் = விடயசம்பந்த மற்ற சின்மாத்திரத்தில், நினை வற விருக்கும் = சங்கற்பாதி களங்கம் விடுபட்டிருக்கும், இது, சொருபத்தியல்பு = சொரூபஸ் திதியென்பது பொருள், அசைவில் கற்போலாய் = சிலைமத்தியி லிருப்பது போன்று, மருவுகற்பனை மாண்டு = சர்வசங்கற்போபசாந்தமாய், இருக்கு மிதுதான் எனக்கூட்டுக. சிலைபோற் சடாவஸ்தை காடநித்திரை யென்னும் நனுச் சுழுத்திநீர் = சமாதிபோற் சாட்டிய நித்திரை விலக்ஷணமான, வடிவாம் = சொரூபஸ்திதியாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சொரூபநிலையை யுபசங்கரித்து அஞ்ஞான பூமிகளை வருணித்தல்:—நானென.

நானெனும்பிரிவும்பேதமுமற்றுநல்லறிவாயசையாத
மானதநிலையேசொருபமாமுன்சொன்மடமையாம்புவிபதங்கேட்பா
யீனமாம்விந்துநனவுமேனனவுமியன்றமாநனவுமந்நனவி
லானதோர்கனவுங்கனவுமிக்கனவிலடர்நனவுஞ்சுழுத்தியுமே.

(ப - ரை.) நானெனும் பிரிவும் பேதமும் அற்று = அகந்தையி னங்கிசம் கெட்டுப் பேதமானது சாந்தமாகி, நல்லறிவாய் = கேவலஞ் சிற்சொரூபமாய், அசையாத மானத நிலையே = மநோசங்கற்பங்கள் ஒன்றும் இல்லாத நிலைமையே, சொரூபமாம் = சொரு பம் என நிலைபெறும், முன்சொல் மடமையாம் புவிபதங் கேட்பாய் = பூர்வம்புகன்ற அஞ்ஞான சப்தபூமிகளைக் கூறக்கேட்குதி, ஈனமாம் = சர்வாநர்த்த வேதுவாதலின் தாழ்வாம், விந்துநனவும் = பீஜஜாக்கிரம், மேல்நனவும் = ஜாக்கிரம், இயன்றமாநன வும் = பொருந்திய மகாஜாக்கிரம், அந்நனவில் ஆனதோர் கனவும் = ஜாக்கிரசொப்ப னம், கனவும் = சொப்பனம், இக்கனவில் அடர்நனவும் = சொப்பனஜாக்கிரம், சுழுத் தியும் = துயில் எனவாம். (89)

(ஸ்ரீ - வீர.) உள்ளே யகந்தையங்கிசம் கெட்டொழிய, வெளியில்வேற்றுமை சாந்த மாக, இருபாலும் அசைவிலாது போகவே, எவ்வசைவில்லாத சித்தத் தகைமையுளதோ அதன் சாக்ஷியாய் ஒளிராநின்ற சொப்பிரகாச சித்சொரூபமே சொரூபமென நிலைபெறும். அந்தப் பிரத்யக்குச் சித்தின்கண்ணே அநாதியாகவே அத்தியஸ்தமான அஞ்ஞானத்தி னது இப்பூமிகளைக் கேட்குதி! பீஜஜாக்ரத், ஜாக்ரத், மகாஜாக்ரத், ஜாக்ரத் ஸ்வப்நம், ஸ்வப்நம், ஸ்வப்நஜாக்ரத், சுழுப்தி; என்பனவாம்,

(ச.) நானெனும் பிரிவும் = பரிச்சின்ன தேகாதி அபிமானமும் அதனுற் கற்பித மான பேதமும், நல்லறிவால் = பரிபூரண பாவனையால், அற்று = நசிக்கின், அசையாத

மான தனிலேயே = சித்தத்தினது நிச்சலத்துவஞ் சாட்டிய சம்பந்தமின்மையாய்ப் பிரகாசிக்குமதுவே, சொரூபமாமென்பது பொருள். மடமையாம் புவிப்பதம் = அதில் ஆரோபிதம் அஞ்ஞானமாம், அதனது அவஸ்தாப் பிரகாரத்தைக் கேட்பாய்! இனியஞ்ஞான பூமியேழு நிதானித் துரைத்தல்: வித்துநனவும் = பீசசாக்கிரமும், நனவும் = சாக்கிரமும், மாநனவும் = மகாசாக்கிரமும், சாக்கிரச் சுவப்பனமும், சுவப்பனமும், சுவப்பன சாக்கிரமும், சுழுத்தியும் என்னும்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) வேதாந்தங்களில் அஞ்ஞான பூமியேழெனப் பெற்றதையே விரித்துரைக்கத் தொடங்கிக்கூறியவற்றுள் முதலதை விளக்கிக்கூறல்:—இத்திறமென.

இத்திறமேழுமோகமாய்நெருக்குற்றிவைபலபெயர்களையெய்துஞ்
சித்திலேநின்றோரறிவுபேரின்றிச்செறிமலமின்றிமேல்வந்து
வத்தியாநிற்குஞ்சித்தசீவாதிவருபெயர்செயல்களுக்கிடமாய்
வித்துருபமதாய்நின்றிடுமதனால்விதைநனவாமுதற்பதமே.

(ப - ரை.) இத்திறமேழும் மோகமாய் நெருக்குற்று = இந்தப் பிரகாரமாய ஏழு மோகங்களும் பரஸ்பரம் ஒன்றுசேர்ந்து நெருக்குற்றனவாய், இவை பலபெயர்களையெய்தும் = இவைபல நாமங்களை யடைவுறும், சித்திலேநின்று = சித்திலிருந்து, ஓரறிவு = ஒருசேதனம், பேரின்றி செறிமலமின்றி = பெயரற்றதாய் மலமற்றதாய், மேல்வந்து வத்தியாநிற்கும் = இனிமேல் வெளிப்போந்து விவகரிப்பதற்கு யோக்கியமாய, சித்த சீவாதி வருபெயர் செயல்களுக் கிடமாய் = சிதிஜீவாதி நாமசப்தார்த்த பாஜனமாய், வித்துருபமதாய் நின்றிடுமதனால் = பீஜரூபமதாய் ஸ்திதிபெற்றிருக்கும் தன்மையினானே விதைநனவாம் முதற்பதமே = முதற்பதமானது பீஜஜாக்கிரத் தென்றுசொல்லப்படும்.

(ஸ்ரீ - வீர.) என்று சப்தவிதமாய மோகமும் மீண்டுமே பரஸ்பரம் ஒன்று சேர்ந்து நிற்கும், அநேகம் பெயருடையனவாகும்: அவற்றின் இலக்கணங் கூறக்கேட்குதி; சப்த விதம் = ஏழுபிரகாரம். அஞ்ஞான அபரபரியாயமாய சப்தாவஸ்தை மோகமும் பரஸ்பரம் சம்பந்தம் உடையதாய் மறித்தும் அநேகம் பெயருடையதாகும். சப்த அவஸ்தைகளின் சம்பவித்தபடியாய கலப்பின் சிறப்பினாலே மோகம்மீளவும் அநேக அவஸ்தையதாகும், அங்ஙனமன்றே:—இரண்டவஸ்தைகட்கு, மூன்றுகட்கு நான்குகட்கு, ஐந்துகட்கு, ஆறுகட்கு, ஏழுகட்குத் தானுதல், கணத்தில் கணத்தில் வித்தியாசத்தால் உண்டாம்போது மீளவும் அநேகாவஸ்தையாம். மீண்டுமே பரஸ்பரம் சம்பந்திக்குமென்றது, பதாந்தரங்கள் எண்ணிக்கை யில்லாதன வெனயாது முன்னேதைப் பெற்றதோ அதனைத் தெளிவுபடுத்துவதாம் இவ்வேழுவித மோகத்தின் தனித்தனி யிலக்கணத்தைக் கூறக் கேட்குதி! பீஜஜாக்கிரத் திலக்கணங்கூறல்: மாயாசபல சைதன்ய சம்பந்தத்தானே சர்க்காதியிலேனும் சாக்கிராதியிலேனும், பிரதமம், சேதனம்சிதாபாச சம்வவிதிரூபமாய் யாதாமோ அது, பிராணதாரணாதிக் கிரியோபாதியானே பவிஷ்யத்சித்தஜீவாதி நாம சப்தங்களின் ஊடும் அவற்றின் அருத்தங்களின ஊடும், பஜனையுறுவதாய்க் கூறப்பெறும் ஜாக்கிரத் பீஜபூதமா யிருந்துகொண்டு பீஜஜாக்கிரத்தெனப்பேசப்பெறும். துயிலினின்றும் எழுந்தவுடன், முதலில் சித்தினது விசுவரூபத்தின் சம்பந்தியான எச்சேதன முளதோ பிரதிபிம்ப வடிவமாக அது பீஜஜாக்கிரத் தெனப்படும். அச்சேதனம் எத்தகையது எனின்? நிர்மலம், ஜீவாதி நாமத்தானே அக்கால் தெரிவுறுத்தப் பெறாதது. வராமின்றி சிதிஜீவ சேதனாதி நாமாத்மக சப்தங்களின், அவற்றின் அர்த்தங்களாய சித்

தத்துவ, பிராணபிருத்துவ (தாங்கல்) ஞான கருத்தருத்துவாதி வடிவங்களின் பாஜனம் = பாத்திரம் = பற்றுக்கோடா யிருப்பது. பீஜஜாக்கிரத் சப்தப் பொருளோ, உத்தர அவஸ்தைகட்கு விரைவடிவமாக இருந்துகொண்டு நனவாயிருப்பது என்பதாம்.

(ச.) ஏழும் = ஏழுபிரகாரமும், இவை நெருங்குற்று = இச்சப்தவித மோகமும் ஒன்றேடொன்று புணர்ந்து; இம்மோகத்தின் இலக்கணத்தைக் கூறத்தொடங்கி அவற்றில் முதற்பூமியின் இலக்கணங் கூறல்:—சித்திலே நின்று = ஆன்மசொரூபமா யிருந்த சுத்தமான சித்தினின்று, செறிமலமின்றி = திருசிய உபாதிகளங்கரகிதமாய், அதனாலே யினதென விவகரித்தற் கரிதாய், மேல்வந்து+செயல் (பொருள்) களுக்கிடமாய் = பின்புறுஞ்சித்தம் ஜீவனென்பன முதலிய நாமங்களுடைய சப்தார்த்தங்களுக்குப் பாத்திரமாய், அதன்ரூபமாக மென்மேற் றெளியப் படுவதாய், ஓரறிவு முன்றோன்றி = முன்பு யாதோர் வாசியஸ் புரணமுதித்து, வித்துரூபமதாய் நின்றிடும் = காரணரூபத்தோடு கூடினதாய் ஸ்திதமுறும், ஆதலால், விதைநனவாம் = பீஜஜாக்கிர மெனப்படும் என்பதந்நுவயம். (40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜாக்கிரத் மகாஜாக்கிரத்துகளின் இலக்கணங்களைக் கூறல்:—இது என.

இதுவறிவுக்குமுதலவத்தையதாமிதத்துறப்பிறந்தபின்னிவனு
னிதுவெனதெனப்பண்டிலாமைபாநொய்தாயெழுந்துளவறுதியேநனுவா
மிதுதனையொழியவிவனவனுனேயிதுவதுவென்னதென்றெண்ணு
மிதுமுதற்பிறப்பிற்றொடர்ச்சியாய்ப்பருக்குமிந்தநிச்சயம்பெருநனுவாம்.

(ப - ரை.) இது அறிவுக்கு முதல் அவத்தையதாம் = நுதலிய இது ஞப்திக்கு நவ அவஸ்தையதாகும், இதத்துறப் பிறந்தபின் = பரத்தினின்றும் நவமாயுண்டான பின்னர், இவன் நான் இது எனது என = அயம், அகம் இதம், மம, என்பதாக, பண்டிலாமையால் = முன்னில்லாமையின், நொய்தாய் = சொச்சமாய், எழுந்துள அறுதியே = உதித்துவரும் நிச்சயமே, நனுவாம் = ஜாக்கிரத்தாம்; இது தனையொழிய = இது தன்னைத்தவிர, இவன் அவன் நானே இது அது என்னது=அயம் ஸ: அகம் இதம் தத் மம, என்றெண்ணுமிது = எனச்சிந்திக்கும் இது, முதற்பிறப்பிற் றொடர்ச்சியாய் = ஜன்மாந்தர உதிதமாய், பருக்கும்= பீவரமாம், இந்த நிச்சயம் பெருநனுவாம் = இப்பிரத்தியயம் மகாஜாக்கிரத் தெனப்பெறும்.

(ஸ்ரீ - வீர.) நுதலிய இது = செப்பிய இப்பீஜஜாக்கிரத்து, ஞப்தியாகிய ஜீவனது நூதன அவஸ்தையாம், தருவுக்கங்குர அவஸ்தைபோலும். இனி நீ ஜாக்கிரத்தின் நன்னிலைமையைக் கேட்குதி ! நவப்பிரசூதமாய பீஜஜாக்கிரத்தின் பின்னர் இத்தூலதேகமியான், இதந்தேக போக்கியஜாதம் எனது என்பதாக எப்பிரத்தியயமுளதோ அதுஜாக்கிரத்தாம். பரமாத்மாவாகிய பிம்பத்தினின்றும் அபிநவஜாதமாய் ஜீவனுக்கு, முன்னுண்டாகாமையின் அயமகமிதம் மம என்னும் சொஸ்தமாய் சொச்சமாய எப்பிரத்யயமுளதாமோ அதுஜாக்கிரத் தென்பதாம். ஆண்டு இக்காரியகாரண சங்காதம் யானின்றேன், இவ்வில்லம் முதலியவை யென்னுடையது இவ்வகையாய வடிவமுடைய எப்பிரத்யய முளதோ அது ஜாக்கிரத்தென்னும் வேறு அவஸ்தையாம்; பீஜஜாக்கிரத் தல்லவாம்; ஏனெனின், அங்குர அவத்தையின் பின்னுண்டாம் இருதள அவஸ்தை போலும்; மகாஜாக்கிரத்தும் ஆகாதாம், முன்னுண்டாகாமையின் = முன் அநுபவ மின்மையின்;

பூர்வ அநுபவ சமஸ்காரத்தை யபேக்ஷித்தன்றே பிரத்ய பிஞ்ஞைரூபமாய மகாஜாக்கிரத் துண்டாகின்றது. இவனவனியா னிதுவது வெனது எனவியம்பிய விலக்கணமுற்ற ஜாக்கிரத்துப் பிரத்யயத்திற்கு, ஜன்மாநந்தரம் உதிதமாய்ப் பருத்தபிரத்யயம் மகாசாக் கிரத்தெனப்படும் சந்தசாதலின் நகாரலோபமென்ப. அல்லது சஜாதீயபூர்வ பூர்வஜந்ம சமஸ்கார உற்போதத்தானே அதிதிடமாக வுதிதமாய், அதனானே பயிற்சிமிகுதியாற் பருத்துவளர்ந்ததாய், இலங்கும் பிரத்யயம் பெருநனவெனப் பெறும். அங்ஙனமன்றேல்- பிராஹ்மணாதி ஜன்மம் சாதாரணமாக விருந்தபோதினும், ஜன்மாந்தர அப்பியாசத்தால், சிலருக்கு, மறையவருக்குத் தக்ககிரியைகளில் அபிநிவேசமும் ஆற்றலதிசயமும் காணப் பெறுகின்றது, எல்லாருக்குங் காணப் பெறுவதில்லை, அங்ஙனமாகவே இப்போதுற்ற அல்லது முன்னுற்ற திடாப்பியாச சாமர்த்தியத்தால் விருத்தியான அபிநிவேச ஜாக்கி ரத்துப் பிரத்யயம் மகாஜாக்கிரத் தெனப்பெறும். முற்பிறப்புணர் முனிவன்பால் மகா ஜாக்கிரத்தைக் காட்டல்: இவனவனானே யென்பது, அவனியானென்பது ஜன்மாந்தர அநுபவ சமஸ்காரத்தால் உண்டாய தென்பதாம். அல்லது, முற்பிறப்பைக் குறித்து இப்பிறப்பே ஜன்மாந்திரமாம் அதன்கண் முன்பழக்கத்தா லுண்டாகித் தூலித்து அதி திடமாய தென்பதாம். பெரும்போதைத் தீண்டிக் கொண்டமையானும், பெருத்திருத் தலினானும் இதற்கு மகாஜாக்கிரத் தன்மையா மென்றுணர்க, சிலரோ, ஜன்மாந்தர வுதிதமென்பதை அநந்தர மென்பதாகவும் வியாக்கியானித்துச் சர்வசாதாரண அத்த கைய பிரத்யயம் மகாஜாக்கிரத்தென வெண்ணாநிற்பர்,

(௪.) அறிவுக்கு = ஞப்திக்கு, முதலவத்தையதாம் = பிரதமதசையாம், சாக்கிரஸ் திதியைக் கூறல்:—இதத்துறப் பிறந்த = பரமான்மாவினின்றும் முன்புதித்த அறிவுக்கு சீவர்க்கு, பின்னெழுந்துள, இவனுனிது வெனது, என = என்னும், சொய்தாயுறு தியே = சொச்சமான நிச்சயமே; நனவாம் = ஜாக்கிரமெனப்படும், யாதினாலெனில்? பண்டிலாமையால் = இத்தன்மையான பிரத்தியயத்திற்குப் பிராகபாவத்தினால், முன் புற்பன்னமான பிரத்தியயமே ஜாக்கிர மெனப்படும் என்பதுகருத்து. இவனவனான் = இவனானவனான், இதுவது வென்ன தென்றெண்ணுமிது இஃதெனது அஃதெனது என்னுமிது, முதற்பிறப்பின் றுடர்ச்சியாய் = ஜன்மாந்தர வாசனாவசத்தினால் உதித்த தாய், பருக்குமிந்த நிச்சயம் = ஸ்தூலமாகா நின்ற இப்பிரத்தியயம், பெருநனவாம் = முற்கூறிய பிரகாரம் பிரகாசித்து மகாஜாக்கிர மெனப்படும். (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜாக்கிரத் சொப்பனத்தைத் தெரிவித்தல்:—அறிந்தென.

அறிந்துளதெனினுமறிகிலாதெனினுமழுந்துறத்தானதுவாகிச்
செறிந்துளநனவிற்சித்தராச்சியமேசெய்வதுநனைக்கனவாகு
மெறிந்தகானலினீர்சுத்திகைவெள்ளியிருமதியிவைமுதற்பலவாய்ப்
பிறிந்தபேதங்கணனவிலேபழகும்பெற்றியாற்கனவுபல்விதமாம்.

(ப - ரை.) அறிந்துளது எனினும் அறிகிலாது எனினும் = தெரிந்துளதெனினும் தெரிகிலா தெனினும், அழுந்துறத் தானதுவாகி = மிக்வும் அழுத்தமாகத்தான் அதன்மயமாகி, செறிந்துள = பொருந்திய, நனவில் = ஜாக்கிரத்தில், சித்தராச்சியமே செய்வது = மநோராச்சியஞ் செய்தல், நனைக்கனவாகும் = ஜாக்கிரத் சொப்பனமெனப் படும், எறிந்த கானலினீர் = தோற்றமாத்திரமா யலைவீசும் பேய்த்தேர், சுத்திகை வெள்ளி = இப்பிவெள்ளி, இருமதி = துவிசந்திரன், இவைமுதற்பலவாய் = இவை முதலாகப் பற்பலவாய், பிறிந்தபேதங்கள் = தோற்றும் வேற்றுமையால், நனவிலேபழ

கும் பெற்றியால் = ஜாக்கிரத்தப் பியாசத்தை யனுசரித்து, கனவுபல்விதமாம்=சொப்பனம் அநேகவிதமாம்

(ஸ்ரீ - வீர.) கண்காணுததாய்ப் பயில்விலாமையிற் கோமளமாய், கண்கண்டதாய் இலவணனுக்கென்ன அப்யாசத்தாற் றிடமாய் எல்லாவகையானும் விடயசொரூபமயமாய், எச்சாக்கிரத்தின் மநோராச்சியமுளதோ அது சாக்கிரத்துச் சொப்பன மெனப்படும், மநோராச்சிய சப்தத்தானே மீண்டும் பிரமைவடிவ, ஸ்மிருதிவிலக்ஷண எல்லாப் பிரத்தியயங்களுமே கவரத்தக்கனவாம் இதனுனேகூறல்:—கானலினீர் என. த்விசந்திர சுக்திருப்யாதி மயல்களும் ஜாக்கிரத்சொப்பன பேதங்களேயாம் எனல்:—கானலினீர் என்பது. த்விசந்திர, சுக்திருப்பிய, மிருகதிருஷ்ணை முதலிய பேதத்தானே ஜாக்கிரத்தி னப்பியாசமுற்றுச் சொப்பனம் அநேகவிதமாம். பூர்வம் ஒருகாலத்திலும் விடய அநுபவமிலதாயின் அதன்மாறுபாடு கூடாமையின் அப்பியாச முற்றெனச் சாற்றப்பெற்றது.

(ச.) அறிந்துளதெனினும் = வாசனுவிலாச வசத்தினுற் கிட்டினதைக் குறித்தாவது, அன்றி, அறியலாதெனினும் = வாசனுதிட மின்மையாற் கிட்டாததைக் குறித்தாவது, அழுந்துற = சர்வப்பிரகாரத்தாலும், தானதுவாகிச் செறிந்துள் = பாவிக்கும் விடயங்களோடு தாதான்மியம் பொருந்திய, நனவிற் சித்தராச்சியமே செய்வது=ஜாக்கிரத்திற் புருடனது மநோரத பரம்பரையின் முயற்சியே, நனுக்கனவாகும் = ஜாக்கிரத் சொப்பன மெனப்படும். அஞ்ஞானபூமியின் பேதமான சொப்பனலக்ஷணம், பிரசித்த சொப்பனத்தைச் சார்ந்து வருவதாதலின் அதன் பேதத்தை யிப்போதுரைத்தல்ஃ எறிந்த+பேதங்கள் = இதுநதி, இது இரஜதம், உபயசந்திரன், என்னும் இத்தன்மையான நதிமுதலிய பிராந்திவிடய பேதத்தினுல், அநேகப் பிரகாரமான பிராந்தியினுல், நனவிலேபழகும் பெற்றியால் = ஜாக்கிராவஸ்தையில் அப்யாசிக்கும், மாறிமாறிப் பிரவிருத்திக்கும் தன்மையால். சாக்கிர சமஸ்காரத்தை யடைந்து சொப்பனஞ் சாக்கிரசமஸ்கார ஜன்னியமாதலின், கனவு = பிரசித்தமான சொப்பனுவஸ்தை, பல்விதமாம் = அநேகவிதமாம். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சொப்பனத்தைக் கூறல்ஃ—அற்பவென.

(ச - அ - கை-) இப்போது பூமிபேதத்தினது சொப்பனலக்ஷணங் கூறல்ஃ—அற்பவென.

அற்பகாலத்திலநேகமாஞ்செயல்கண்டறிந்தனமெனுங்கனவழிந்து
முற்படுசெயலைநினைவதுகனவாமுந்துகண்டதனைநாளகன்று
பிற்படக்காணும்பொருள்களைமறந்துபெரும்பொழுதுணர்வுறநோக்குஞ்
சொற்பனநனவுபோனனவுக்கேதோன்றுமிச்செயல்களுநனவே.

(ப - ரை.) அற்பகாலத்தில் = சிறிதுபோதில், அநேகமாம் செயல்கண்டு = பலபலவாகிய செயல்களைப் பார்த்து, அறிந்தனமெனும் = அறிந்தோ மென்னும், கனவழிந்து = சொப்பனந்தீர்ந்து, முற்படுசெயலை நினைவது = முன்கண்டசெயலை எண்ணுவது. கனவாம் = சொப்பனமாம், முந்துகண்டதனை நாளகன்று பிற்பட=நீள்போது நற்றரிசனமில்லாமையின், காணும் பொருள்களைமறந்து = காணும் வஸ்துக்களை மறந்து, பெரும்பொழுதுணர்வுற நோக்கும் = நீள்போது தொடர்வுற்றதாகப் பார்க்கும், சொற்பனம் = சுவப்பனம், நனவுபோல் = ஜாக்கிரத்துப்போ லுதிதமாய், நனவுக்கே தோன்றும் இச்செயல் = நனவின்கண்ணும் பெரிதுவிளங்கும் இவ்விவகாரம், களுநனவே = சொப்பன ஜாக்கிரத்தென்று சொல்லப்படும்.

(ஸ்ரீ - வீர.) அற்பகாலம் என்றுற் காணப்பெற்றது இதுவோ இதுவல்லவோ, என, சொப்பனத்தினின்றும் விழித்தவனுக்குப் பராமரிசம் எக்காலத்தில் உண்டாமோ அக்கால், அது சொப்பனமென்று சொல்லப்படும் இதுவோ இதுவல்லவோ என்னுஞ் சம்சயம் யாங்ஙனமெனிற் கூறல்:—முந்து என்பது. நெடும்போது சந்தரிசன மில்லாமையின், வெளிப்படையாய்த் தோற்றாத பெருந்தூலவடிவ முடையதாகிச் சிரகாலம் அநுவிருத்தமுமான சொப்பனம், ஜாக்கிரத்தேபோல வுதிதமாய் = விஸ்பஷ்டமாய்ப் புலப்படத்தோன்றி, நனவின்கண்ணும் அதிஸ்புரண ஆரூடமாக வெளிப்படையாய் விளங்குவதாகிச் சொப்பன ஜாக்கிரத்தென்று சொல்லப்படும், அற்பகாலம் என்றுற்காணப்பெற்ற திங்ஙனம் சத்தியமலவாம் என்பதாகவும்; நித்திரைகால அநுபூத அர்த்தத்தில் நித்திரைமத்தியிலேனும் நித்திரை முடிவிலேனும் பிரதீதியாகின்ற எப்பிரத்தியய மனுசந்திக்கப் பெறுமோ அது சொப்பனமெனப்படும். அஞ்ஞனுக்கதுவும் மகாஜாக்கிரத்தின் உள்ளடங்கிய தூலசரீரத்தின் கண்டாதி ஹிருதயாந்த நாடீப்பிரதேசத்தில் உண்டாம். கூறிய இலக்கணத்தைத் தெளிவிக்கும் பொருட்டுச் சொப்பனத்தையே மீண்டுஞ் சிறப்பித்தல்:—சிரசந்தரிசன மின்மையின் என்பது, சொப்பன ஜாக்கிரத்தின் இலக்கணம் இயம்பல்:—சொப்பனம் ஜாக்கிரமாக ரூடமாய் = திட அபிநிவேசத்தாலாதல், சிரகாலஸ்தாயித்தன்மைக் கற்பனையினுதல், அரிச்சந்திரனுக்குப் பன்னிருவருடவடிவ விவகாரம் போலும், விருத்தியுற்றதாய், மகாஜாக்கிரத் தொப்புமை யுற்றதாய், தேகங்கெடினும் கெடாவிடினும் அது சொப்பனஜாக்கிரத்தென்று சொல்லப்படும். அதுவும் இவனுக்குத் தெய்வவசத்தாற் றேகமேகினும் அவ்வாறே அக்கிரத்திலும் அனுவர்த்திக்கும் எனக்குறிக்கும் பொருட்டுத் தேகங்கெடினு மெனப்பெற்றது.

(ச.) அநேகமாஞ்செயல் = எந்தத்திசையில் இவ்வர்த்தசாலத்தை, அற்பகாலத்தில் = சொற்பகாலத்தில், கண்டறிந்தனமென்று = என்றுற் காணப்பட்டதென்று, தான் விழித்து, முற்படுசெயலை நினைவது கனவாம் = கண்டபுருடனுக்குங் காலவேறுபாட்டின் அநுசந்தான முதியாமற் கேவலம் பரமார்த்தமென்று, தானே சொற்பனத்திற் கண்டபொருள் விளங்குமோ அத்திசைவிசேடஞ் சொற்பனமெனப்படும். பெரும்பொழுதுணர்வுறப் பிற்பட=சிரகாலந்திடஞான மின்மையின், முந்துகண் டநேகநாளகன்று= அதனாலே அஞ்ஞான மிகுதியால், காணும்பொருள்களை = ஸ்தூலரூப பதார்த்தங்களை, மறந்து, நனவுபோல் = ஜாக்கிராவஸ்தைபோல், நோக்கும் = காணப்படுகின்ற, எந்தச் சொப்பனம், நனவுக்கே = ஜாக்கிர அவஸ்தையிலும், தோன்றும் = விளங்குமோ, அச்செயல் = அத்தன்மையான சொற்பனவிசேடம், கனுனவு = சொப்பன சாக்கிரமெனப்படும் என்பதந்நுவயம். என்று தான்விழித்து, கண்டநேக நாளகன்று, எனப்பாடபேதங் கொண்டிவ்வுரையாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுழுப்தியைக் கூறி யுரைத்த பூமிகளை யுபசங்கரித்தல்:—அறுவகையென.

அறுவகையவத்தையகற்றியசீவனடைந்துளவவத்தையினியற்கை
யுறுசடமாகிமேல்வருந்துயர்கூருணர்வுளதாமிதுசுழுத்தி
துறுபுவனங்களிதனிடையிருளிற்றெலைவுறுமிப்பதமேழும்
பெறுவனபேதமொன்றுநூறுரும்பேதைமயவத்தையிவ்வேழும்.

(ப-ரை.) அறுவகையவத்தையகற்றியசீவன்=கூறிய ஷடவத்தைகளையும் பரித்தியாகஞ்செய்த சீவன், அடைந்துள அவத்தையின் இயற்கை = பிராப்தியுற்ற ஸ்திதியின்

இயற்கை, உறுசடமாகி = திடமானசடமாய், மேல்வருந்துயர்கூர் உணர்வுளதாம் = பவிஷ்யத்துக்க போதத்தோடு கூடியதாய, இது = இக்கதி, சுழுத்தி = சுழுப்தியெனப் படும்; துறுபுவனங்கள் = ஒன்றோடொன்று விரவிய உலகங்கள், இதனிடையிருளில் = இவ்வவஸ்தையின் அந்த தமசில், தொலைவுறும் = விலீனப்படும், இப்பதமேழும் = உரைத்த அஞ்ஞானபூமிகள் ஏழும், ஒன்று நூறுகும் பெறுவனபேதம் = ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கான வேற்றுமையை யடையும், பேதைமையவத்தை யிவ்வேழும் = ஹே இராகவ ! இவை அஞ்ஞான சப்தாவஸ்தைகளா மென்றறிந்து கொள்ளுதி.

(ஸ்ரீ - வீர.) ஆறு அவஸ்தைகளின் பரித்தியாகமாக, ஜடமாம் ஜீவனது எத்திதி யுளதோ, பவிஷ்யத்துக்கபோதாட்டியமாய அக்கதி துயிலென்று சொல்லப்படும். புகன்றபூர்வ ஷடவஸ்தைகள், கருமபல போகபூமித்தன்மையானே கருமஜங்களாம்; துயிலோ, முன்கிளம்பிய வினைகட்குப் போகத்தானே க்ஷயமுண்டாயவழி, பின்கிளம்பு மவற்றின் உற்பவமில்லாத அந்தராளத்தில், குடைசுருக்கல் போலும், சர்வசூக்குமனூலப் பிரபஞ்சம் விலயமாக, அதன்பீஜ அஞ்ஞானமாத்திர பரிசேஷத்தானே, அதனுபஹித ஆன்மமாத்திர பரிசேஷரூபமா மென்னுங் கருத்தா லறைந்ததாம், சடமாகி யென்றது. பவிஷ்யத் = வருந்துயரங்களை அநுபவிக்கச் செய்கின்ற வாசனைகருமங்களோடு, ஆட்டியம் = சேர்ந்தது துயிலேயாம், நஞுக்கஞுக்களின் வருந்துயரத்தின் அநுபவத்தின் பீஜமாய வாசனையோடு கூடியதாந் தன்மையை யுடையது, கதி = அவஸ்தை, இருளிற் றொலைவுறும் = தமமாய அஞ்ஞானத்தினுள்ளே சமஸ்காரசேடமாய் விலீனமாம். அகில மெல்லாம் அவ்வவத்தையில் அந்தத்தமசில் விலீனமாய். துயிலிற்காரணத்தில் விலீன மாய ஜகத்திற்குச் சமஸ்காரவடிவமாக இருப்பேயாம், அசத்வமிலதாம், மீண்டும் உற்பவ அபாவ வழக்காதலின் என்னுங் கருத்தாற் கூறியதாம், புவனங்கள் இதனிடை யென்றது. அவ்வவத்தையில் இத்திருண வோட்ட சிலைமுதலிய பதார்த்தங்கள் யாவும் பரமா ணுப் பிரமாணங்களா யிருப்பனவாம். உபசங்கரித்தல்: — இவ்வேழுமென்றது; ஹே இராகவ! எம்மால் அஞ்ஞானத்தின் சப்தாவத்தைகள், இவ்வண்ணம் இயம்பப்பெற்றன, அவ்வேழில் ஒவ்வொன்றனுள் அன்யோன்ய ஆவிர்ப்பாவத்தானும், பரஸ்பரம் பற்றிக் கோடலானும், அநந்த பேதங்களாகச் சம்பவிக்கு மென்பார், ஒன்று நூறுகுமென்றார். ஈண்டு; நாநாவிதமான காரியங்களின் வடிவம் வாய்ந்த ஒவ்வொன்றும் சதசாகையாம்; ஜாக்கிரத்சொப்பனமானது நீள்காலம் நீட்டமாகிச் சாக்கிரத்தின் கண்ணே கலந்துவிடு கின்றது.

(ச.) அறுவகையவத்தை யகற்றிய = முற்கூறிய ஆறவஸ்தைகளையும் பரித்தியாகஞ் செய்த, அதினதின் விலக்ஷணமான, சீவனடைந்துள வவத்தையி னியற்கை = ஜீவனது ஸ்திதியின் இயல்பு, உறுசடமாகி = ஜாட்டிய மிருந்ததாய், மேல்வருந்துயர் கூருணர் வுளதாம் = துக்கா நுபவத்தில் ஏதுவாயிருப்பதாம், இது = இத்திதி, சுழுத்தி = சுழுப் தியவஸ்தை யெனப்படும். பீஜஜாக்கிர முதலிய ஆறவஸ்தைக்கும் விலக்ஷணமாய்ச் சாட் டியமயமாய் மேல்வருந் துக்கவேதுவா யிருத்தலின் சமாதி முதலிய வவஸ்தாபேதத் திற்கு வேறான அவஸ்தை சுழுத்தியென்பது பொருள். இதனிடை யிருளிற்றுறுபுவனங் கள் = இச்சுழுத்திய வஸ்தையின் அகத்துச் சகமிருப்பினும், தொலைவுறும் = அவித்தை யாரூபத்தில் இலயமாம், இப்பதமேழும் = இவ்வவஸ்தை யேழினுள்ளும், ஒன்று = ஒவ் வொன்று, பெறுவனபேதம் = அவாந்தர பேதத்தினல், நூறுகும் = அபரிமிதமா மென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) ஞானபூமிகள் எழுப்தங்களே யென்ப் பெற்றதை விவரணஞ் செய்தல்:—ஞானவென.

(ச - அ.) இனி அரசனே நீ எதனையறிந்தாற் பின்பு சமுசாரசாகரத்தின் மூழ்காயோ அந்த ஞானசப்தாவஸ்தையைக் கேளென்று தெளிவிப்பவராய் மதாந்தரத்தைத் தெரிவித்துத் தன்மதத்தையே ஸ்தாபித்தல்:—ஞானவென.

ஞானபூமியைமுடிவிற்பேதமாகநவிலுவர்வாதியரவற்றினமக்குநல்ல
தானதிவையிவையறிதன்ஞானமாகுமறிந்தவிவற்றந்தமேயழிவில்வீடா [ற
மானமுறுசுபம்விரும்பல்விசாரமெய்தன்மனஞ் சிறுகலுண்மையிலேமன்னிநிற்
லீனமறுசங்கற்பமறல்பதார்த்தவெண்ணமறுத்திடறுரியமிவையேழாகும்.

(ப - ரை.) ஞானபூமியை முடிவில் பேதமாக நவிலுவர் வாதியர் = ஞானபூமியை வெகுவேற்றுமையாக விளம்புவர் ஞானியர், அவற்றில் நமக்கு நல்லதானவிவை = அவற்றுள் எமக்குச் சுகங்கொடுப்பன வெனத் தோற்றியவை யிவையேயாம், இவையறிதன் ஞானமாகும் = இவற்றின் அவபோதமே ஞானமென்பர், அறிந்த விவற்றந்தமே யழிவில்வீடாம் = ஞேயமாமிவற்றந்தமே நித்திய முத்தியாம், மானமுறு = புகழத்தக்க, சுபம் விரும்பல் = சுபேச்சை, விசாரமெய்தல் = விசாரணை, மனஞ்சிறுகல் = தநுமாநசை, உண்மையிலே மன்னிநிற்றல் = சத்வாபத்தி, ஈனமறுசங்கற்பமறல் = ஈனமில்லாத அசம்சக்தி, பதார்த்த எண்ணம் அறுத்திடல் = பதார்த்தாபாவநீ, துரியம் = துரியகை, இவையேழாகும் = இவையே யேழுஞான பூமிகளாகும்.

(ஸ்ரீ - வீர) அவபோதம் = அவகதி = சாக்ஷாத்தநுபவமாம். அற்றேல் யோக சாஸ்திரத்தில் இயமநியமாதியஷ்டாங்கபேத பின்னயோக பூமிகள் வெளியாயுள்ளனவே, அவையே ஏன் இவையாகாவென ஆசங்கித்துக் கூறல்:—யோகசாங்கிய வாதியர் யோக பூமிகளை பகுபேதமாகப் பகர்வர், துச்சசித்தி பயன்களையுடைய அந்த யோகபூமிகள் அந்நியர்கட்கு அபிமதங்களாம். எமக்கோ, சுபசுகங்களையேதரும் இஞ்ஞானபூமிகளே அத்தியந்தம் அபிமதங்களாம், இவைகளே பரமபுருடார்த்த லக்ஷண சுபப்பிரதங்களாதலின். எப்பூமிகள் வருணிக்கப் பெறுகின்றனவோ அவற்றில் அறியத்தக்கது தானென்னே அறிவுதான் என்னே யென்னும் சங்கையுண்டாக அவை குறிப்பிக்கப் பெறுகின்றன:—இவையறிதல் என அவபோதம் ஞானமென்றறிவர், அவ்விது எழுபூமிகளையுடையதாம், அப்பூமிகளி லுண்டாவதாம். எழுபூமிகளினும் பரமானமுக்தியோ ஞேயமெனப் பெறும்; பூமிகைப்பூமிகாந்தரத்தில் முக்தியோ ஞேயமெனப் பெறும் அகண்ட சுவாகார விருத்தியோடு ரூடமாய பிரஹ்மம் அஞ்ஞான நிவர்த்தகத் தன்மையானே ஞானமாம், அஞ்ஞானம் நீங்கிய அதுவே ஞேயம் என வுபசாரமாக இருவகையாகக் கூறப்பெறும். உத்தேசம்:—ஞானபூமி, சுபேச்சையெனப் பெயரியது முதலாவதாக மொழியப்பெறும், விசாரணை யிரண்டாவதாம், மூன்றாவது தனுமாநசையாம், சத்துவாபத்தி சதுர்த்தியாம், அசம்சக்தி ஐந்தாவதாம், பதார்த்தாபாவநீ யாறாவதாம், துர்யகை சப்தமியாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர் ! ஞான + தானவிவை = ஞானபூமிகள் வாதிகளால் வெகுவிதமாக நிரூபிக்கப் படினும் எனக்கு மேற்கூறப்படும் இவ்வேழுமே சுகந்தருவன வாதலிற் சம்மதங்களா மென்பதுபொருள். இவை = அவ்விவ்வேழு பூமியையும், அறிதன் ஞானமாகும், அழிவில் வீடாம், வீடு = முக்தி = கைவல்லியம், அஃதான்ம சொரூபமாதலின் சாக்ஷாத்கரிக்க வேண்டும் வஸ்துவாம், அறிந்த அழிவில் வீடு = நினைக்கறியத் தகுந்த

முக்தி, இவற்றந்தமேயாம் = மேற்கூறப்படும் ஞானபூமியின் மத்தியிலே யிருப்பதாம். ஞானசப்தபூமிகளை யுத்தேசஞ்செய்து கிரமமாக இலக்கணங் கூறல்:—ஈனமுறு சங்கமறல் = அசம்சக்தி, பதார்த்த மெண்ணமறல். பிற ஸ்ரீவீர சேகரத்திற்போலு முணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவற்றை யறிந்தவரிடர்ப்படா ரெனவியம்பி இருபூமிகளின் இலக்கணமியம்பல்.—இவையென

இவையறிந்தோர்மோகமெனு பளற்றில்வீழா ரிவற்றியலாமுத்திவரிலிடர் மீண்டில்லை, நவையுறுமோகத்தோடு நாமடைவதென்னே நல்லோரானன்னூலானன்றுஞானச், சுவைபெறுதுநிராசையினுலென்று நாடல்சுபம்விரும்பலாகுமிந்தச் சுபேச்சைமுற்றிக், நவையறுநல்லோ ரியற்கையாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும். (46)

(ப - ரை.) இவையறிந்தோர் மோகமெனும் அளற்றில் வீழார் = இப்பூமிகளை புணர்ந்தவர் மயலாகிய சேற்றில் அழுந்தார், இவற்றியலா முத்திவரில் = இவற்றின் அந்தத்தில். முத்தியானதுளதாம், உளதாகவே; இடர் மீண்டில்லை = மீண்டும் சோகமான துண்டாக மாட்டாதாம், நவையுறு மோகத்தொடு நாம அடைவதென்னே = குற்றத்தோடுகூடி மயக்கமுற்றுழன்று மூடனைப்போல் யாளிடர்படல் என்னே! நல்லோரால் நன்னூலால் நிராசையினுல் = சஜ்ஜனங்களாலும் சாஸ்திரங்களாலும் வைராக்கியத்தினுலும், நன்றும் ஞானச்சுவை பெறுதும் = சம்யக்ஞானந்தத்தைப் பெறுவாம், என்று நாடல் = என்று இச்சித்தல், சுபம் விரும்பலாகும் =சுபேச்சை யென்னும்முதற்பூமியாம், இந்தச் சுபேச்சைமுற்றி = இந்தப் பூமியானது திடப்பட்டு, நவையறு நல்லோர் இயற்கை ஆசாரங்கள் = குற்றமற்ற சாஸ்திர சஜ்ஜனசங்கமும் வைராக்கியப் பயிற்சியும், சதாசாரமும், கைவருதல்=முற்றுறவருதல், விசாரமாக்கருதல் வேண்டும்= விசாரணையென்று தெரிந்துகொள்ள வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) இவற்றின் ஈற்றில் முக்தியானது உளதாம் அவ்வவத்தையில் மீண்டும் சோகத்தைமேவான், உத்தேசித்தவைகளின் இலக்கணக் கூற்றை யியம்பப் பதிஞ்ஞை செய்தல்:—இப்பூமிகளினுடைய நிர்ணயமான இவ்விலக்கணத்தைக் கூறக்கேட்குதி! யான் மூடனுகவே எதன்பொருட் டிருந்தேன்! ஆராயும் வேதாந்த வாக்கியங்கள் ஆசிரியர்கள் சற்புருடர்கள் முதலிய உபாயங்களானே ஆத்மதத்துவத்தை மிகமுயன்று நன்கு காண்பேன். வைராக்கிய வாயிலான இவ்விச்சை சுபேச்சை யெனப்படும். வைராக்கியத்தைக்கவர்ந்தது சாதனசதுட்டய வுபலக்கணமாம். இங்ஙனமாகவே, நிஷித்தகாரியத்தை விட்டு, நிட்காம யாகதானுதி யனுஷ்டானப் பிரயுக்தமாய், சந்யாச சாதனசதுட்டய சம்பத்தி சகிதமாய், முக்திமுடிவு பேறுடையதாய், சிரவணுதிப் பிரவிருத்தி பல உபகிதமாய ஆத்மசாக்ஷாத்கார உத்கடமான இச்சையே, முதற்பூமியாம். இந்த முதற்பூமியானது புண்ணியகரும பலபூத பிரத்தியக்கு விவிதிஷைரூபமாம். அறியவிரும்புவர் யாகத்தினுலும் தானத்தினுலும், தவத்தினுலும், உண்டிசுருக்கும் ஒருமையினுலும் என்னும் சுருதியாதிகளில் இது பிரசித்தமாம். "அவ்விதனை வேதாத்தியயனத்தானும், யாகத்தானும், தானத்தானும், தபசானும், உண்டியை யொடுக்கலானும், பிராஹ்மணர் அறிய விரும்புகின்றனர்" எனமறையும் உளதாம். அங்ஙனமே நைஷ்கர்மியசித்தியினும் அதை யப் பெற்றுளது:—சித்தன்னை யுணரும் வேட்கை செனிப்பித்துச் செயல்களெல்லாம், புத்திக்குச் சுத்தியானே பொருந்துறன் முடித்தவாகி, அத்தத்தையடையலாகுமருந்துளியளித்தபின்னர், சத்தித்த சலதமெல்லா மீற்றினிற் சாம்புமாறே. அத்தியாத்ம சாஸ்திர

விசாரம் சதாசாரப் பிரவிருத்தி விசாரணைப் பிரதானத் தன்மையான் விசாரணையென விளம்பப்பெறும் என்னும் நிர்வசனத்தைக் கருதிக்கூறல்:—கவையறு மென்பது. அத்தியாத்ம சாஸ்திர விசாரணை, பிரஹ்மநிஷ்டர் சேவை, என்னும் இரண்டு பாயங்களாலும், வைராக்கிய ஹேதுபூத திருசிய மித்தியாத்வ தோஷதரிசன அப்பியாசவாயிலாக, எச்சதாசாரப் பிரவிருத்தியுளதோ அது விசாரணை யென்னும் இரண்டாவது பூமியாம். ஆத்தாதியாரியன் சேவை, பயிக்கவுணவு ஆந்தரபாகிய சௌசாதி யதிதர்மபாலன சகிதசிரவண மனனங்களே ஈண்டு சதாசாரமாம், மற்றவற்றிற்கு மனத்தூய்மை மாத்திர ஹேதுத்தன்மையானே முன்னரே சித்தத்தன்மை யுண்மையின்,

(ச.) இவற்றியலா முக்திவரின் இடர் மீண்டிலீலை, இப்பூமிகளுடைய அர்த்தநிர்வசனத்தைக் கேட்பாயெனக் கூறல்: நிராசையினுல் = வைராக்கியத்தினுல், என்பது சாதனசதுட்டய உபலக்ஷணம், சாதன சதுட்டயத்துடன் நல்லோரால்=சற்சனரென்னும் வித்துவான்களோடு, நன்னூலால் = அத்தியான்ம சாஸ்திர சித்தங்களான நியாயங்களால், ஞானச்சுவை பெறுதும் என்று நாடல், ஆன்மாநந்தத்தை அநுபவிப்போமென்று இச்சிப்பது, சுபம் விரும்பலாகும் = சுபேச்சையாம் என்பது பொருள். நல்லாசாரம் =இவ்விடத்து ஆத்மாநு சந்தானமாம், உ-ம்: யாஞ்ஞவற்கியர்: யோகத்தாலாத்ம தரிசனமாயின் இஃதே பரமதருமமா மென்பது. (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ' கேட்கத்தக்கது, மனனிக்கத்தக்கது நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது " எனச்சுருதி யியம்பிய சிரவணமனனரூப, நிதித்தியாசனவடிவ, மூன்ருவது பூமியை, நிர்வசனஞ்செய்தல்:—இனையவென.

இனையசுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறை தலும்விடயத் திச்சைமாற்றி, நினைவுகுவிவது சித்தஞ்சிறுகலாகு நிகழ்த்திய விம்மூன்ருலு நெஞ்சந்தன்னில், வனைதருமவ்விரத்தியினு லுண்மைப்போத மன்னுதலே யுண்மைநிலைமருவலாகு, மனையனவிந் நான்காலு முண்மைப் போதத்தழுந்திய யற்சங்கமறல சங்கமாகும்.

(ப - ரை.) இனைய சுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறைதலும்=கூறிய இலக்கணம் வாய்ந்த சுபேச்சையுடன் விசாரணையென்னும் இரண்டாவது பூமியும் பூரணமாக அவற்றின் வலுவால், விடயத்திச்சை மாற்றி = இந்திரிய அருத்தங்களில் விரக்தியுண்டாகி, நினைவுகுவிவது = எண்ணங்கள் தனுத்தன்மையை யடைவது; சித்தஞ்சிறுகலாகும் = தநுமாநசையாம், நிகழ்த்திய இம்மூன்ருலும் = உரைத்த மூன்றுபூமிகளின் பயிற்சியின் வலியால், நெஞ்சந்தன்னில் = மனத்தில், வனைதரும் அவ்விரத்தியினுல்= உண்டாகா நின்ற முன்மொழிந்த வைராக்கியத்தினது முதிர்ச்சியினுலே, உண்மைப் போதம் மன்னுதலே = சத்திய சுத்த நித்திய ஆன்மாவிற் சித்தத்தினது நிலைபேறே, உண்மைநிலை மருவலாகும் = சத்வாபத்தியாம், அனையன இந்நான்காலும் = நவின்ற நான்குதசைகளின் அப்பியாசத்தானே, உண்மைப் போதத்தழுந்தி = சத்துவசமத்காரம் ரூடமாகி. அயற்சங்கமறல் = அசம்சர்க்க பலமுறல், அசங்கமாகும் = அசம்சக்தியாம்,

(ஸ்ரீ - வீர.) எந்த அவஸ்தையின் கண்ணே பூர்வபூமிகளாகிய விசாரணை சுபேச்சைகளின் எதுக்களானே இந்திரிய அருத்தங்களாகிய அநாத்ம பதார்த்தங்களில் விரக்தத் தன்மையானது உதிதமாமோ அவ்வவத்தை தநுமாநசை யெனப்படும், மநம் தநுத்தன்

முக்தி, இவற்றந்தமேயாம் = மேற்கூறப்படும் ஞானபூமியின் மத்தியிலே யிருப்பதாம். ஞானசப்தபூமிகளை யுத்தேசஞ்செய்து கிரமமாக இலக்கணங் கூறல்:—ஈனமுறு சங்கமறல் = அசம்சக்தி, பதார்த்த மெண்ணமறல். பிற ஸ்ரீவீர சேகரத்திற்போலு முணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவற்றை யறிந்தவரிடர்ப்படா ரெனவியம்பி இருபூமிகளின் இலக்கணமியம்பல்.—இவையென

இவையறிந்தோர்மோகமெனு ளற்றில்வீழா ரிவற்றியலாமுத்திவரிலிடர் மீண்டில்லை, நவையுறுமோகத்தோடு நாமடைவதென்னே நல்லோரானன்னூலானன்றுஞானச், சுவைபெறுதுநிராசையினுலென்று நாடல்சுபம்விரும்பலாகு மிந்தச் சுபேச்சைமுற்றிக், கவையறுநல்லோ ரியற்கையாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும். (46)

(ப - ரை.) இவையறிந்தோர் மோகமெனும் அளற்றில் வீழார் = இப்பூமிகளை யுணர்ந்தவர் மயலாகிய சேற்றில் அழுந்தார், இவற்றியலா முத்திவரில் = இவற்றின் அந்தத்தில் முத்தியானதுளதாம், உளதாகவே; இடர் மீண்டில்லை = மீண்டும் சோகமான துண்டாக மாட்டாதாம், நவையுறு மோகத்தொடு நாம அடைவதென்னே = குற்றத்தோடுகூடி மயக்கமுற்றுழன்று மூடனைப்போல் யானிடர்படல் என்னே! நல்லோரால் நன்னூலால் நிராசையினுல் = சஜ்ஜனங்களாலும் சாஸ்திரங்களாலும் வைராக்கியத்தினுலும், நன்றும் ஞானச்சுவை பெறுதும் = சம்யக்ஞானனந்தத்தைப் பெறுவாம், என்று நாடல் = என்று இச்சித்தல், சுபம் விரும்பலாகும் =சுபேச்சை யென்னும்முதற் பூமியாம், இந்தச் சுபேச்சைமுற்றி = இந்தப் பூமியானது திடப்பட்டு, கவையறு நல்லோர் இயற்கை ஆசாரங்கள் = குற்றமற்ற சாஸ்திர சஜ்ஜனசங்கமும் வைராக்கியப் பயிற்சியும், சதாசாரமும், கைவருதல் = முற்றுறவருதல், விசாரமாக்கருதல் வேண்டும் = விசாரணையென்று தெரிந்துகொள்ள வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) இவற்றின் ஈற்றில் முக்தியானது உளதாம் அவ்வவத்தையில் மீண்டும் சோகத்தைமேவான், உத்தேசித்தவைகளின் இலக்கணக் கூற்றை யியம்பப் பதிஞ்ஞை செய்தல்:—இப்பூமிகளினுடைய நிர்ணயமான இவ்விலக்கணத்தைக் கூறக்கேட்குதி! யான் மூடனுகவே எதன்பொருட் டிருந்தேன்! ஆராயும் வேதாந்த வாக்கியங்கள் ஆசிரியர்கள் சற்புருடர்கள் முதலிய உபாயங்களானே ஆத்மதத்துவத்தை மிகமுயன்று நன்கு காண்பேன். வைராக்கிய வாயிலான இவ்விச்சை சுபேச்சை யெனப்படும். வைராக்கியத்தைக்கவர்ந்தது சாதனசதுட்டய வுபலக்கணமாம். இங்ஙனமாகவே, நிஷித்தகாரியத்தை விட்டு, நிட்காம யாகதானுதி யனுஷ்டானப் பிரயுக்தமாய், சந்யாச சாதனசதுட்டய சம்பத்தி சகிதமாய், முக்திமுடிவு பேறுடையதாய், சிரவணுதிப் பிரவிருத்தி பல உபகிதமாய ஆத்மசாக்ஷாத்கார உத்கடமான இச்சையே, முதற்பூமியாம். இந்த முதற்பூமியானது புண்ணியகரும பலபூத பிரத்தியக்கு விவிதிஷைஷரூபமாம். அறியவிரும்புவர் யாகத்தினுலும் தானத்தினுலும், தவத்தினுலும், உண்டிசுருக்கும் ஒருமையினுலும் என்னும் சுருதியாதிகளில் இது பிரசித்தமாம். "அவ்விதனை வேதாத்தியயனத்தானும், யாகத்தானும், தானத்தானும், தபசானும், உண்டியை யொடுக்கலானும், பிராஹ்மணர் அறிய விரும்புகின்றனர்" எனமறையும் உளதாம். அங்ஙனமே நைஷ்கர்மியசித்தியினும் அறையப் பெற்றுளது:—சித்தன்னை யுணரும் வேட்கை செனிப்பித்துச் செயல்களெல்லாம், புத்திக்குச் சுத்தியானே பொருந்துறன் முடித்தவாகி, அத்தத்தையடையலாகுமருந்துளி யளித்தபின்னர், சத்தித்த சலதமெல்லா மீற்றினிற் சாம்புமாறே. அத்தியாத்ம சாஸ்திர

விசாரம் சதாசாரப் பிரவிருத்தி விசாரணைப் பிரதானத் தன்மையான் விசாரணையென விளம்பப்பெறும் என்னும் நிர்வசனத்தைக் கருதிக்கூறல்:—கவையுறு மென்பது அத்தியாத்ம சாஸ்திர விசாரணை, பிரஹ்மநிஷ்டர் சேவை, என்னும் இரண்டு பாயங்களாலும், வைராக்கிய ஹேதுபூத திருசிய மித்தியாத்வ தோஷதரிசன அப்யாசவாயிலாக, எச்சதாசாரப் பிரவிருத்தியுளதோ அது விசாரணை யென்னும் இரண்டாவது பூமியாம். ஆத்தாதியாரியன் சேவை, பயிக்கவுணவு ஆந்தரபாகிய சௌசாதி யதிதர்மபாலன சகிதசிரவண மனனங்களே ஈண்டு சதாசாரமாம், மற்றவற்றிற்கு மனத்தூய்மை மாத்திர ஹேதுத்தன்மையானே முன்னரே சித்தத்தன்மை யுண்மையின்,

(ச.) இவற்றியலா முக்திவரின் இடர் மீண்டில்லை, இப்பூமிகளுடைய அர்த்தநிர்வசனத்தைக் கேட்பாயெனக் கூறல்: நிராசையினால் = வைராக்கியத்தினால், என்பது சாதனசதுட்டய உபலக்ஷணம், சாதன சதுட்டயத்துடன் நல்லோரால்=சற்சனரென்னும் வித்துவான்களோடு, நன்னூலால் = அத்தியான்ம சாஸ்திர சித்தங்களான நியாயங்களால், ஞானச்சுவை பெறுதும் என்று நாடல், ஆன்மாநந்தத்தை அநுபவிப்போமென்று இச்சிப்பது, சுபம் விரும்பலாகும் = சுபேச்சையாம் என்பது பொருள். நல்லாசாரம் =இவ்விடத்து ஆத்மாநு சந்தானமாம், உ-ம்: யாஞ்ஞவற்கியர்: யோகத்தாலாத்ம தரிசனமாயின் இஃதே பரமதருமமா மென்பது. (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ‘ கேட்கத்தக்கது, மனனிக்கத்தக்கது நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது ” எனச்சுருதி யியம்பிய சிரவணமனனரூப, நிதித்தியாசனவடிவ, மூன்றாவது பூமியை, நிர்வசனஞ்செய்தல்:—இனையவென.

இனையசுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறை தலும்விடயத்திச்சைமாற்றி; நினைவுகுவிவது சித்தஞ்சிறுகலாகு நிகழ்த்திய விம்மூன்றாலு நெஞ்சந்தன்னில், வனைதருமவ்விரத்தியினா லுண்மைப்போத மன்னுதலே யுண்மைநிலைமருவலாகு, மனையனவிந் நான்காலு முண்மைப் போதத்தழுந்திய யற்சங்கமறல சங்கமாகும்.

(ப - ரை.) இனைய சுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறைதலும்=கூறிய இலக்கணம் வாய்ந்த சுபேச்சையுடன் விசாரணையென்னும் இரண்டாவது பூமியும் பூரணமாக அவற்றின் வலுவால், விடயத்திச்சை மாற்றி = இந்திரிய அருத்தங்களில் விரக்தியுண்டாகி, நினைவுகுவிவது = எண்ணங்கள் தனுத்தன்மையை யடைவது; சித்தஞ்சிறுகலாகும் = தநுமாநசையாம், நிகழ்த்திய இம்மூன்றாலும் = உரைத்த மூன்றுபூமிகளின் பயிற்சியின் வலியால், நெஞ்சந்தன்னில் = மனத்தில், வனைதரும் அவ்விரத்தியினால்= உண்டாகா நின்ற முன்மொழிந்த வைராக்கியத்தினது முதிர்ச்சியினாலே, உண்மைப் போதம் மன்னுதலே = சத்திய சுத்த நித்திய ஆன்மாவிற் சித்தத்தினது நிலைபேறே, உண்மைநிலை மருவலாகும் = சத்வாபத்தியாம், அனையன இந்நான்காலும் = நவின்ற நான்குதசைகளின் அப்பியாசத்தானே, உண்மைப் போதத்தழுந்தி = சத்துவசமத்காரம் ரூடமாகி. அயற்சங்கமறல் = அசம்சர்க்க பலமுறல், அசங்கமாகும் = அசம்சக்தியாம்,

(ஸ்ரீ - வீர.) எந்த அவஸ்தையின் கண்ணே பூர்வபூமிகளாகிய விசாரணை சுபேச்சைகளின் எதுக்களானே இந்திரிய அருத்தங்களாகிய அநாத்ம பதார்த்தங்களில் விரக்தத் தன்மையானது உதிதமாமோ அவ்வவத்தை தநுமாநசை யெனப்படும்; மநம் தநுத்தன்

யாப்பியாச வேதுவினல், நெஞ்சந்தன்னின் வனேயும், விரதியினலே, விடயங்களிற் சித்தத்திற் குண்டாகும் பிரவிருத்தி யொழிவின் சாமர்த்தியத்தினல், உண்மைப்போத மன்னுதலே = நிருபாதிகமாய்ச் சத்துரூபமான ஆன்மாவிற் சித்தம் நிச்சலமாயிருக்கும் பூமியே, உண்மைநிலே மருவலாகும் = சத்துவாபத்தி யென்பதாம், நான்காலும் = பூமி சதுட்டயாப்பியாச வேதுவினல், உண்மைப் போதத்தழுந்தி = சுவான்மா நந்தாநுபவ ரூபத்திற் பிரதிட்டிதமாய், அதனலே அயற்சங்கமறல் = விடயசங்க நிவிர்த்தி பலமான பூமி, அசங்கமாகும் = அசம்சத்தி யென்பதாம். (47)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வைந்தாவதற்கே பரிபாகமேன்மையினல் உத்தர இரண்டு பூமிகள் உண்டாம் என்னுங் கருத்தாற் கூறல்?—அறைந்தவென.

அறைந்தபத மைந்தாலுந் தானும்போதத் தழுந்தியவின்பத் தமைவாற் புறனுமுள்ளு, முறைந்தபதார்த்தங்கண் மறந்தயலோர் வன்பாலுணர்வதுவே பதார்த்தநினே வொழிதலாகு, நிறைந்தவிவை யாருலும்பேதம் போக்கிநிலே பெறுதற் சுபாவத்தே நிற்றருனே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரியமாகுமாசறு சீவனின்முத்தர்வழியீதாகும்.

(ப - ரை.) அறைந்தபத மைந்தாலும் = பூர்வம்புகன்ற பூமிபஞ்சக அப்யாசத்தாலும், தானும் போதத்தழுந்திய இன்பத்தமைவால் = சுவாத்மா ராமத்தன்மையானே திடமாக, புறனும் உள்ளும் உறைந்த பதார்த்தங்கண் மறந்து = வெளியிலும் உள்ளிலுமுள்ள பொருள்களின் பாவனே யின்மையின், அயலோர் வன்பால் =பரப்பிரயுத்த சிரப்பிரயத்தநத்தினலே, உணர்வதுவே = அவபோதன மடைதலே, பதார்த்தநினே வொழிதலாகும் = பதார்த்தாபாவனே யென்னும் ஆருவது பூமியாம், நிறைந்த இவையாருலும் பேதம்போக்கி = ஆறு பூமிகளின் சிர அப்யாசத்தால், வேற்றுமை தோற்றமன் மாற்றி, நிலேபெறுதற் சுபாவத்தே நிற்றல்தானே = நிலேபெற்ற தனது சுபாவ ஏகநிஷ்டத்வமே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரியமாகும் = மறைபட்ட பதார்த்தத்தை வெளிப்படுத்தும் துரியகாகதியாம்; மாசறு சீவனின்முக்தர் வழியீதாகும் = இதுவே களங்கமற்ற சீவன் முக்தர்களிடத்தில் துரியாவஸ்தை யீண்டுள்ளது.

(ஸ்ரீ - வீர.) திடமாகப் பூமிஐந்தன் பயிற்சியால், அதிதிடமாகத் தனது அறிவுவடிவத்திலேயே இரமித்து ஒன்றையும் உன்னுவாற்றல், உள்ளிலும் வெளியிலும் உண்டென்பவற்றை யறிவாயே காண்டலால்; கூறிய ஐந்தாவது பூமியில் நிர்விகற்பத்தினின்றும் அக்காற்றுனகவே எழுவன், ஈண்டு ஒன்றும் பிரதீதியாகாமையின் அந்நியனது முயற்சியா லாக்கப்பெற்ற அவபோதத்தால் சமாதியினின்றும் தனதெழுச்சியாம், இதுவேபதார்த்த பாவனீ யென்னும் ஆருவது பூமியாம். சமாதியின்கண் மறந்த அநாத்மபதார்த்தத்தின், பரப்பிரயத்தநத்தினலே பாவனே, பதார்த்தபாவனே அது எதற்கோ அதுபதார்த்த பாவனீகதி = அவஸ்தை, இது அதிதிடமான சுவாத்மா ராமத்தன்மையாம் ஹேதுவினனே, உள்ளிலெழும் சுகதுக்காதிகளின், வெளியிற்றேற்றும் கடாதி பதார்த்தங்களின் திடமான அபாவனேயினலேயே யுண்டாம். நீள்போது அன்னியனலாற்றப்பெறும் பெருமுயற்சியினனே அவபோதனம் எக்காலுளதாமோ அக்கால் ஆருவது அவஸ்தை யுண்டாமென்றறிக. சிலரோ, சாக்ஷாத்காரம் விசுத்தபதார்த்த ஞானசாத்தியம் மகாவாக்கியார்த்த விடயம், அதனனே பதார்த்த பாவனீயென்னும் இவ்வவஸ்தை ஆதரிக்கத்தக்கது எனக்கூறுபவராய் ஆருவது பூமியைப் பிரஹ்மவித்யாசாதன

கோடியி விருப்பதாக எண்ணுகிற்பர், அஃதேலாதாம், நிர்வாணப்பிரகரண வசனவிரோ தத்தா னென்றுணர்க. அப்பூமியில் வாசனையற்றவனு யிருப்பன், அமுந்து துரியமெனு நாமத்தாரும் பூமியடைந் தொழுங்கி, னெழுந்து பலவாதனையி லனுயிப்பூமியிலே பரிச யிப்ப, னுழைந்து நானென்பது மென்னுததுவு முளதுமில்லாதுங், கழிந்துவெறிதேகினை விலனுய்க் காணுனிருமையோடொருமைகளைச் செறியுமுடிச்சுஷ்மயமும்போய்ச் சீவன் முக்த சுபாவத்தால், வெறிது வீடன்றியும் வீடுவிளைந்தோ வியத்தின் விளக்கொப்பான். அன்றியும், சுத்தசம்வின்மய ஆநந்தவடிவமான ஐந்தாவது பூமியையடைவுற்ற ஜீவன் முக்தன், பாதிதுயின்றும் விழித்தும் உளனுயாண்டு நிலைபெறுவன். உள்ளிலும் வெளியி லும் உளவபாவனத்தால், தெள்ளியபதார்த்தா பாவனை யெனவாம். ஆயின் யாங்ஙனம் ஆகயாத்திரை சித்தியாதல் எனின் ? விடை அறைவார், அயலோர்வன்பால் என்றார். இப்பூமியின்கண் ணிவன் பிரஹ்மவித் வரீயான் எனப்பெறுவன், ஆருவது பூமியின் அபேக்ஷயாற் றாழ்ந்ததாய ஐந்தாவது பூமியை யடைவுற்றவனது ஜீவன்முக்தத் தன் மையைக் கூறுபவரான், அதனினும் மேன்மைவாய்ந்த ஆருவது பூமிக்கு வித்யாகோடி காடியேகி விஷ்டமாதனக்கு அத்தியந்தம் அங்கீகரிக்கப் பெற்றதாந் தன்மையுண்மையி னுனு மென்றுணர்க: பூமிஷட்கசிர அப்யாசத்தானே, பேதத்தில் ஏேற்றமில்லாமை யின் எச்சுபாவ ஏகநிஷ்டத் தன்மையுளதோ அதைத்துர்யகைகதியென அறியத்தக்க தாம். தற்சுபாவத்தே நிற்றாுனே = ஸ்வபாவைக நிஷ்டத்வம் = தன்னுடைய சொரூப நிலையொன்றிலேயே யெப்போதும் தன்னுலும் பிறராலும், மீள எழுச்சியில்லாமலே நிலைபெற்றிருத்தலாம்; சப்தமிய துயரிப்பொளடை விடயமிதன்கண் ஜீவிதத்தி னின்று மின்றும் என்னும் நிர்வாணப் பிரகரண வசனத்தால், ஏழாவது பூமியையடைந்தயோ கிக்குத் தன்னுலும் பிறராலும் மீண்டும் கிளம்புகையே இலதாமெனத் தோற்றுகின்றது. அவ்வாறே பெரியாருங்கூறியுள்ளார்: துரியமெனப்பெயரிய ஏழாவதுபூமியை அடைந்த யோகிக்குத் தன்னுலும் பிறராலும் வியுத்தானமே கிடையாதென முமுக்ஷுக்களுக்குள் நிகழாநின்ற அவஸ்தாத்திர யாத்மகம் ஜாகரிதம், சதுர்த்த பூமியாத்மகம் சொப்பனம், பஞ்சமஷஷ்ட பூமிவடிவமான சுழுப்தி என்பவற்றைக் குறித்துச் சொரூபமே துரியம் சதுர்த்தம், அது அடைதலிற்றுரியகை, கதி = அவஸ்தை = துரீயாவஸ்தை யென்பது பொருள் இந்தச் சப்தமபூமிரூப துரியாவஸ்தை ஜகத்தில் எங்கும் இல்லவே யில்லை யெனச் சங்கிப்ப உத்தரந்தரல்: சீவனின் முக்தர் என்பது. ஜீவன் முக்தர்களாகிய சுகப் பிரஹ்மம் முதலியவரிடத்தில், இவ்வுலகில் இத்துரீயா வஸ்தை நிகழ்வதாகும். ஏழாவது பூமியையினிதியம்பல்:—பரப்பிரயத்நத்தினுலும் பேதத்தின் புலப்பாடின்மையின் என் பது பொருளாலறியலாம், " துர்யம் ஜாக்ரதாதியவஸ்தாத்திரய நிர்முக்தம்சிவம் அத் வைதம் சதுர்த்தம் என்றெண்ணுவர் " என்னும் சுருதியினுனே, அத்தகைய வித்வத் தநுபவசித்தத் தன்மையானே பிரதிபாதிக்கப் பட்டபிரஹ்மம் ஆன்மவடிவமாக அகண் டிதமாய் அநுபவிக்கப்பெறும் எவ்வவத்தையின்கண் அது துர்யகையாம். அதனையடைந் தவனே பிரஹ்மவித் வரிஷ்டன் எனப்பெறுவன். அவனும் பிரஹ்மவித்து முதலவருள் துரீயனுவன், அவனையடைதலின் துர்யகையாம், இத்தேகத்திலேயே என்றறிக.

(ச.) அறைந்த பதமைந்தாலும்=முற்கூறிய பூமிபஞ்ச வப்பியாசத்தினுல், தானும் போதத்தழுந்திய வின்பத்தமைவால் = சுவஸ்வரூப சுவாநுபவ நிகழ்ச்சி = லோலதை யாம் ஹேதுவால், புறனுமுள்ளு முறைந்த பதார்த்தங்கண் மறந்து = பாஹ்யாக்தர பதார்த்தாநு சந்தான மின்மையின், அயலோர் வன்பால் = பரப்பிரயத்தின் பலத்தால், உணர்வதுவே = வெகுகாலஞ்சென்று பகிர்முகம் எவ்விடத்தாமோ, அதுவே பதார்த்த

நினைவொழிதலாகும் = பதார்த்தா பாவனையென்னும் ஆறும்பூமியாம், நிறைந்த இவை யாறுலும் = முற்கூறிய பூமிசட்கத்தின் சிராப்பியாச வேதுவினுல், பேதம்போக்கி = பிரபஞ்சத்தினது அப்பிரதீதியினுல் விட்சேப மின்மையால், நிலைபெறுதற் சுபாவத்தே நிற்றலுனே = சொச்சொரூபத்தோடு ஏகமாயிருத்தலே, துரியமாகும். துரியபூமியாம், துரியஞ் சாக்கிராதிய வஸ்தாத் திரயாதீதமாதலின் நான்காவதான சொரூபத்தினது பிராப்தியானதினு லென்பதுகருத்து. ஈது = இத்துரியா வஸ்தை மாசறு சீவனின் முக்தர் வருயாம் = சீவன்முக்தரிடத் திருப்பதேயாம், சொரூபத்தோடு ஏகமாயிருத் தல் = சொரூபமாகவே யிருத்தல் என்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஏழாவது பூமியைச் சர்வோத்யோகத்தான் புருடதௌரேய ராற் சம்பாதிக்கத் தக்கது என அறிவுறுத்தற்கு அடைந்த அதைப் புகழல்:—சொன்ன வென. (48)

சொன்னதன்மே லுடலிறந்த முத்தர்மேவுந் துரியாதீதப்பதமாந் துரியச் செல்வந், தன்னுணர் வாற்றனையறிந்த பெருமைசான்ற தலைவனுலெய்தலுறுந் தன்மையாகு, மன்னியவிப் பதமடைந்த சீவன்முத்தர் மகிழ்ச்சிமறுக்கத் தழு ந்தாமரபினுலே, யன்னியர்சொல் வழிதுயில்விட்டெழுந்தார்போல வடுத் தனசெய்குவர் செய்யாராகிவாழ்வார்.

(ப - ரை.) சொன்னதன்மே லுடலிறந்த முத்தர் = கூறிவந்தவற்றின் மேலாக விதேகமுத்தர், மேவும் = அடைவுறுவது துரியாதீதப் பதமாம் = துரியாதீத மென் னும் பதமாம், துரியச்செல்வம் = சப்தமபூமியானது, தன்னுணர்வால் தனையறிந்த = ஆத்மஞானத்தினுல் ஆத்மாவையறிந்து ரமிக்கும், பெருமைசான்ற தலைவனுல்=மகாத்மா வாகிய மகாபாக்கியவானுல், எய்தலுறுந் தன்மையாகும் = அடையப் பெறுந்தன்மை யையுடையதாம், மன்னிய விப்பதமடைந்த சீவன்முக்தர் = பொருந்திய இப்பதத்தை யுற்ற உடல்சேர் முத்தர் , மகிழ்ச்சிமறுக்கத் தழுந்தா மரபினுலே = சுகதுக்கரசஸ்திதி யில் மூழ்காத தன்மையினுலே, அன்னியர் சொல்வழி = பக்கத்திருப்பவர் பகர்ந்த மார்க்கம், துயில்விட் டெழுந்தார்போல = நித்திரைவிட் டெழுந்தவர்போன்று, அடுத் தன செய்குவர் செய்யார் ஆகிவாழ்வர் = தங்கட்குரியன சிறிது செய்தாலுஞ்செய்வர், செய்யாம லிருந்தாலு மிருப்பர், ஆகிவாழ்வர் = இவ்வாறுய நடையுடையவராகி இனிது மகிழ்ந்திருப்பர்.

(ஸ்ரீ - வீர.) இதன்மேலாக உள்ளதுரியாதீதம் விதேகமுக்த விடயமாம் = கம்மிய மாம். இவ்வவஸ்தையின்மேல் விதேகமுக்தி விஷயம் துரியாதீதம் ! பிரஹ்மமே யெனப் பூகளுக்குள் கணக்கிடவில்லை. ஹே இராகவ ! எம்மகாபாக்கியர் ஏழாவது பூமியை யடைந்தனரோ, அவர்மகத்தாகிய ஸ்தானத்தை யடைந்தவர் ஆவர், மகாத்மத் தன்மை யின் பரியவசானபூமியை யடைந்தவர் ஆவர், மகாத்ம பதங்கதர் எனப்பாடம் பெறி னும், ஆண்டும் அதுவே பொருளாம். அவர் ஆத்மாராமர் மகாத்மானர் அவர் என்பதாம். ஏழாவது பூமியையடைந் தவனினும் வேறுயஜீவன் முக்தர் விக்ஷேபதசையில் எவ்வண் ணம் விவகரிப்பர் என்றுசங்கித்துக் கூறல்: மன்னிய என்பது. ஜீவன்முக்தர்கள், சுக துக்க அநுபவ ஸ்திதியின்கண் ஆசக்தியை யடையமாட்டார்கள், மகிழ்ச்சிவாட்டங்களை யடையார்கள் என்பதாம். அபிமானத்தை யடையார்கள் என்பதாகவும் கோடலாம். பிராகிருதமாய லோகசங்கிரக லக்ஷணப் பிரயோஜனமேயாய கார்ய ஹேதுவினுலே சிறிது செய்தாலுஞ் செய்வர் செய்யாமல் இருந்தாலு மிருப்பர். ஆர்யகார்யத்தாலென

மூலபாடமாயின் வித்வத் காரியமாகிய அநிஷித்தகாரியத்தால். சிறிதுசெய்வர் ஆறுவது பூமியின்கண் அதுவுஞ் செய்யார் ஏழாவது பூமியில் என்பது கருத்து. செய்வார் அலது செய்யார் என்றுரைத்ததில் யதேஷ்டா சாரபரத்வ ஆசங்கையைத் தடுத்துக்கொண்டு தமது கருத்தை வெளிப்படுத்தல்: அன்னியர் என்பது. அவ்வவ்வாசிரம நிட்டர்கட்கு, ஆசாரமுறையாக வந்த சதாசாரத்தையே ஆசரித்தே நடப்பர்கள் என இருவகையிலும் நியமம் ஈண்டியம்ப இச்சித்ததாம். அதுவும் பக்கத்தி லிருப்பவர்கள் போதித்தபடி நடப்பர்கள். துயின் றுணர்ந்தான் போனும், அசூதமாய் = ஆசங்கத்தால் அதூஷிதமாய், பலாசக்திலக்ஷண க்ஷதரகிதனாய்நடப்பன். எனவே யதேஷ்டாசரண அடைவு இலதாம் என்பதுகருத்து. இதனைப் பெரியோரும் கூறியுள்ளார்.—வாக்கொடு மனமுமிறந்ததி மதுரவாரியா யொழிவற நிறைந்து போக்கொடு வரவதின்றிய வமுதைப் பூரணமாக வுண்டவர்தாம், வீக்கிய கானனீரெனும் விடயமேவுற முயல்வரோமுயலி, ஞேக்குறு மந்தஞானியு நாயுமொத்திடும் வாசியொன் றிலதே. சுப்ரபுத்தவத் தென் றும்பாடம்.

(ச.) சொன்னதன்மேல் = அதன்பின்பு, துரியாதீதப் பதமாம் = துரியாதீதமாகிய பரமபதம், உடலிறந்த முக்தர்மேவும் = விதேகமுக்தரிடத் திருப்பதாம், சீவன்முக்தரின் புகழ்ச்சி:—துரியச்செல்வம் = துரியமென்னும் ஏழாம்பூமி, தன்னுணர்வால் = மகாமனதினுல், தனையறிந்த = ஆன்மாவில் ரமித்த, பெருமைசான்ற = மகிமைநிறைந்த, தலைவனுல் = மகான்மாவினுல், எய்தலுறும் = பொருந்தப்பட்ட, தலைமையாகும் = மகாபதமாம், மகிழ்ச்சி மறுக்கத்தழுந்தார் = சுகதுக்க போகத்தில் மூழ்கார், தாதான் மியமுறார், மரபினுலே அடுத்தனசெய்குவர் செய்யார் = தேகயாத்திரை நிமித்தம் அவசிய காரியவேதுவால் எதிர்ப்பட்ட சொற்பபோஜனுதியைச் செய்வரோ செய்யாரோ, அன்னியர் சொல்வழி = சீடர் முதலானவரது சொன்மூலத்தாற் சமாதியினின்றும் எழுந்திருந்தவராய், மரபினுலேயடுத்தன = முன்னேர்களுடைய ஆசாரக்கிரமத்தால் வந்த நித்திய நைமித்திகாதியை, துயில்விட் டெழுந்தார்போல, செய்குவராகி செய்யாராகி, அசலசொரூபராய், வாழ்வர் என்பதந்நுவயம். (49)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானபூமிகளின் அருமையும் பெருமையும் இவ்வகையென வியம்பி மெய்யுணர்வின் அறுதியுரைத்தல்:—இஞ்ஞானமென.

இஞ்ஞானபத மேழுமிகவும் புந்தியெய்தினர்க் கல்லதுதோன்று விவற்றை யெய்தி, லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகியதேகி யெனினும் முத்தனைய மில்லை, மெய்ஞ்ஞான மென்பதுதான் மனத்தின்கட்டு விடுதலிதுபெறிலிதுவே வீடு பேறும், பொய்ஞ்ஞானக் கானலினீர் முதலாமோகம் பொய்யெனப் போமடமை யும் பொய்யென்னிற் போகும்.

(ப - ரை.) இஞ்ஞான பதமேழும் = இவ்வேழுஞான பூமிகளும், மிகவும்புந்தி எய்தினர்க்கல்லது தோன்று = பெருந்தீமான்கட்கே கோசரமாம் அன்றிப் பிறர்க்கின்றும், இவற்றையெய்தில் = இஞ்ஞான தசைகளை யடையில், அஞ்ஞானமிலேச்சனே யெனினுந் தேகியதேகி யெனினும் முத்தன் ஐயமில்லை = பசுமிலேச் சாதிகளாயினும் தேகத்தோடு கூடியிருப்பினும் கூடாதிருப்பினும் முக்தர் என்பதில் சமுசயமின்றும், மெய்ஞ்ஞான மென்பதுதான் = உண்மை யுணர்வென் றுரைப்பதுதான், மனத்தின் கட்டுவிடுதல் = அகங்காரக்கிரந்தி விச்சேதமாம் இதுபெறில் இதுவே வீடுபேறும் = இதனையடையில் இதுவே மோக்ஷமாம், பொய்ஞ்ஞானக் கானலினீர் முதலாம் மோகம் = மித்யாஞானப் பேய்த்தேர் முதலான மயக்கம், பொய்யெனப்போம் = மித்தையென்று

பார்த்த அளவிலோடிப்போம், மடமையும் பொய்யென்னிற் போகும் = அறியாமையும் பொய்யென்று நாடிற்போய்விடும்.

(ஸ்ரீ - வீர.) இப்பூமி ஏழும்மதிமான் கட்கே கோசரமாம், பசுஸ்தாவராதி கட்கின்றும், மிலேச்சாதிபோலும் தேகாத்மபுத்தியுடைய மநுடர் கட்குமின்றும்; இந்தஞான தசைகளை யடைவுற்ற பசுமிலேச் சாதிகளும், தேகத்தோ டிருப்பினும், தேகத்தோடில்லரவிடினும், முக்தர்களே யாவர்கள் என்பதிற் சம்சயமே கிடையாது. பசுக்கள், ஸ்ரீமத்ஹநுமத் பிரபிருதிகள், மிலேச்சர்கள், தர்மவியாதாதிகள், ஆதிபதத்தால் அசுரர்கள், பிரஹ்லாத கர்க்கட முதலவர்கள் கவரப்பெறுவர்கள். ஞானதசை யடைந்தவர்கட்குத் தேகத்தோடு கூடியிருக்குந் தன்மையேல் யாங்ஙனம் முக்தத்தன்மையெனச் சங்கித்துக்கூறல்:—மெய்ஞ்ஞான மெனபது, ஞானதசையே பக்குவமாக, அகங்கார இலக்கணக் கிரந்தியின் காரணத்தோடு விநாசமாம், காரணத்தோடு கூடிய அகங்கார அத்தியாசத்திற்கு நிவிருத்தியின்றி ஞானதசைக்கே பக்குவங் கூடாமையின். அதனால் என்னேயெனின் ஆண்டுக்கூறல்; இது பெறில்என்பது. அந்தக்கிரந்தி விச்சேதமாகியவழி முக்தியாம் காரணசகிதகிரந்தி விச்சேதமாம். ஆயின், சத்தாதல், சதசதாத்மாவாதல், சதசத் விலக்ஷணமாதல் என்பதாக எவ்வாற்றானுமே இயைபுறாதாம் எனக்கடாவ விடையளித்தல்; கானலினீர் என்பது. மரீசிகையுதக அத்தியாச நிவிருத்தி அதிஷ்டானமாத்திரம் ஆவதேபோல, இக்கிரந்தி விச்சேதமும் ஆமென்பது பொருள். மிருகதிருஷ்ணைநீர் மதி. இப்பிவெள்ளிமதி யென்பவற்றின் சாந்தியாகிய பாதமியாதுளதோ அதுவே மாத்திரை = துலை எதற்கோ அதன்வடிவது. அதன்றுல்லியமாம். இரண்டாவதாதி பூமிகளிலேனும், நான்காவது பூமியிலேனும், ஞானம் உதயமாகவே அஞ்ஞான ஆவரண பங்கத்தான் மோகத்தினின்றும் நன்றாக உத்தீர்ணமானவரே யாயினும், பிரபலப்பிராரப்தப் பிரயுக்த விக்ஷேபத்தினின்றும் பாவனமான ஆத்தியந்திக மநோநாச உபலக்ஷிதமாய நிரதிசயாநந்த பூர்ணத்தன்மை வடிவவிதேக கைவல்யத்தை அடைந்திடாரென்பதருத்தம்.

(ச.) இஞ்ஞானபதமேழும் = இந்த ஞானபூமியேழும், மிகவும் புந்தியெய்தினர்க் இல்லதுதோன்ற = வித்துவான்களுக்கே விடயமாம், ஆயினும் பூர்வஜன்ம சம்ஸ்கார மகிமையால், அஞ்ஞானமிலேச்சரே யெனினும்= பசுமிலேச் சாதிகளாயினும், இவற்றை யெய்தின் = இஞ்ஞான பூமியையடைந்தாராயின், தேகியதேகி யெனினுமுத்தர் = சதேகமுக்தராயினும் விதேகமுக்தராயினும் ஆவர். ஐயமில்லை, எப்படிப் பாகவதத்தில் பசுவாகிய கஜேந்திரனுக்கும் மிலேச்சனாகிய அஜாமிளனுக்கும் மோக்ஷம். மெய் + விடுதல் = ஆத்மா நாத்மாக்களின் அந்நியோந்நிய தாதான்மியாத்தியாச ரூபமான வலித்தைக்கு வித்தையால் நிவிர்த்தியாதலின், இதுபெறில் = அக்கிரந்தி நிவிர்த்தியாயின், இதுவே = இக்கிரந்தி நிவிர்த்தியே வீடுபேறும் = விடுபட்ட பந்தமே வீடெனப்படும். இக்கிரந்தி நிவிர்த்தி விபரீதஞான நிவர்த்திரூபமா மென்பது பொருள். கட்டு = கிரந்தி,

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்பூமிகளிலிருப்பவர் இறைஞ்சுதற்குரிய ரெனவும், இதன் கண்ணிருப்பின் மேற் பெரும்பதங்களும் திருணத்திற் கொப்பாமெனவும் இயம்பல்:— தனையென,

தனையறியு நிட்டையுளோர்க் கெய்தலாகுந் தத்துவபூமிக ளறிந்ததலைமைமேலோர்,நினையவுந்தாழவு முரியார்பொறிக ளென்னுநெடும் பகைவென் றோரவழியா நிலையினின்றோர், தனைதருபல்லுயி ரிறைஞ்சமேலாய் வாழுஞ்சுரேந்திரரு நரேந்திரருந் துரும்பாய்த்தோன்று, மனையபெரும் பதம்பெற்றோ ரவரேயாகு மல்லாதோர் பவக்கடலி லமிழ்ந்தாநிற்போர்.

(ப - நை.) தனையறிவு நிட்டையுளோர்க்கு = சுவாத்மலாப பராயணர்கட்கு, எய்த லாகுந்தத்துவ பூமிகள் = பிரயாசைக்குத் தக்கபடி அடையத் தக்கனவாம் அறைந்த ஞானபூமிகள், அறிந்த தலைமைமேலோர் = இப்பூமிகளில் வாழும்மகாத்மாக்கள், நினைய வுந்தாழவும் உரியார் = தியானிக்கவும் வணங்கவும் தக்கவர்கள், பொறிகளென்னும் நெடும்பகை வென்றோர் = சுரோத்திராதிகளாகிய பழம்பகையை வென்றவர்கள், அழியா நிலையில் நின்றோர் = என்றும் பொன்றாதசாரமான நிலையில்வாழப் பெற்றவர்கள், துனை தருபல் உயிரிறைஞ்ச = தம்மைச் சூழ்ந்த அநேகம் பிரஜைகள் தோத்தரிப்ப, மேலாய் வாழும் = உயர்வாக வாழும், சுரேந்திரரும் நரேந்திரரும் துரும்பாய்த் தோன்றும் = வானத்ததிபரும் வையத்ததிபரும் திருணசமான மாய்ப்பிரதீதியாவர்; அனையபெரும் பதம்பெற்றோர் அலரேயாகும் = அத்தகைய மகாபதவியை அடைந்தவர் அப்பாக்கிய வான்களேயாவர். அவலாதோர் = மாறுகத்திரிபவர், பவக்கடலில் = சமுசாரசாகரத் தில், அமிழ்ந்தா நிற்பர் = மூழ்கிமாழ்குவர்.

(ஸ்ரீ - வீர.) தமது சொரூபத்திலேயே திதிபெற்று தற்பராயணராகி அதிவிரைவில் அப்பூமிகளில் நிலைபெற்று நின்றனர். சிலர் ஏழைபுமே யடைவுற்றனர் சாகரதியர். பிறர் பயிற்சிக்குத் தக்கபடி யெனவுணர்க, இந்திரிய சகிதமனோஜயமே சர்வசத்ருஜயத்திலும் மேன்மையானதாம், சுவாத்மசாம்ராஜ்யமே சர்வ உற்கிருஷ்டமான இராஜதையாம் அய லன்றும். கூறிய பொருளையே வெளியாய் விளம்பி யுபசங்கரித்தல்:—அறிந்தவென்பது. எம்மகான்கள் அப்பூமிகளில் சர்வ உற்கிருஷ்டமாக வீற்றிருப்பார்களோ, அவ்விந்திரிய சத்துருக்களை வெற்றிகொண்ட பாக்கியவான்களே போற்றி வாழ்த்தத்தக்கவர்கள் எவன் ராஜசூயயாகஞ் செய்து சம்பத்துற்றுளானோ, யாவன் ஒருவனுகவே சர்வபூமண்ட லாதிபதியோ. யாவன் அன்னிய அரசர்களையாள்பவனோ அதாவது மண்டலேசுரர்களின் சாஸ்தாவோ, அவன் சம்ராட்டாவன் பிரதமவயதாகிய யவ்வனம்; அதுவும் சாதுவா யிருக்கவேண்டும், பதினாறுக்குமேல் மத்தியவயது, அது, அங்குக்குன்றாத இந்திரிய சக்தியாம்; சரீராதி விகாரமில்லாமல் ரோகமில்லாமல், கந்தர்ப்ப சமானரூபத்தோடுற்ற யவ்வனமே சாதுவாம், சாங்கோபாங்க வேதந்தெரிந்து சர்வஞ்ஞனுயிருத்தல்; யாவரை யும் சிக்ஷிப்பவனுகி எக்காரியத்தையும் விரைவில் முடிக்கத்தக்க ஆற்றல்; விகாரமின்றிய வாக்காயமனம் பெற்றதிதிடமா யிருத்தல்; அதிசயமான பலசம்வன்னனுகி யிருத்தல்; என்னும் விசேஷணங்களோடு கூடிய அவனுக்கு, சப்ததீப அப்திவலயலோகமே கலை யுற்ற பூமிமுழுதும், திருஷ்டாதிருஷ்ட சுககரமாய், உபயோக சாதனமாய் கர்மசாதன மாய கோஹிரண்யாதி தனத்தால் பரிபூர்ணத் தன்மையையும் உடையவன் பிருதிவீபதி யாகியசக்கிரவர்த்தியாவன், அவனுக்குண்டாம் ஆநந்தம் மனுடர்களுக்குள் அதிமேன் மையான உவமையற்ற ஆநந்தமாம், இதற்குமேல் மநுடர்களுக்குள் ஆநந்தமின் றென் பதுகருத்து. என்பதாகச் சுருதிகூறிய 'லக்ஷணமாநுஷா நந்தசம்பன்னன் சம்ராட்டா வன். விராட் = பிரஹ்மாசரீரம். சுராட் = தேவேந்திரன், இம்மூவர் பதமும் எவ்வே ழாம் பூமியில் திரணமேயாமோ, பிரஜாபதி தைவாநந்தபரம அவதியாயினும் சப்தம பூமியை நோக்குங்கால் துரும்பேயாம், அத்தகைச் சாரமானபதத்தைம்பு, அதனினும் பரமாய விதேககைவல்ய சுகத்தையும் ஈண்டே அவர்கள் நன்கடைவர்கள். இச்சகலகா மாப்தி கூறுதல் வேதாந்த சூடாமணியிலுங் காணலாம்:—எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌமாதி, யிரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற, நல்லா நந்தங்களெ லாம் பற்றிலாவறி ஞனனுகுதலான் ஞாநங்கொண்டறி சிவத்தின் கூறாய்த், தொல்லா நந்தங்களெலா நிற்கையினு லவற்குத் தோமிலகண்டாநந்தச் சித்தி தோன்றுதலே,

பொல்லாத வினைப்பகையைக் கடந்த பெருந்தவர்கள் புகன்றிடுவர் சகலகாமாப்தியென வன்றே.

(ச) நிட்டை = நிச்சயம், அழியா நிலை = பரமபதம், சுரேந்திரரும் + தோன்றும் = சாம்பிராச்சியாதிகளும் திரணம்போல் துச்சமாய் விளங்குமோ, பெரும்பதம் = மகாசார முள்ளபதம்.

(51)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனம் பரத்திலொடுங்க ஞானபூமிகள் சாதனமெனப் புகன்று, பரத்தின் உண்மைநிலையை வர்ணித்தல்:—உள—பாவனையென.

(ச - அ.) ஞானபூமிகளே யோகபூமிகளெனவிவகரிக்கப் படுகின்றனவென்று அதில் முகாந்தரங் கூறல்.—உள—பாவ—என.

உளமொடுங்கு முபாயமே யோகமாகு முணர்வுறு பூமிகளிந்த வுபாயமாகும்
வளமிகுமிப் பூமிகளாலன்றி யிந்தமாதேவ பெரியபத மருவலாகா
வளவறநீநான்றான் வேறொன்று மின்றியபேதமாய நாமயமாய மூலமாகிக்
கிளர்சுகமாய்ச் சாந்தமாயறிவாயொன்றாய்க்கேடின்றிப் பெயரின்றிக்கீழ்மேலின்றி.
பாவனையும்பாவனையு முதலுமீறும் பற்றுமுளதும் மிலதும்பலவுந்தேசு
மேவறிவுமடமையு மென்றிவைகளின்றி விண்ணிலே யிருப்பதாய் விசாலமாகி
யாவதுமாயன்றாகி மனத்தால் வாக்காலெட்டரி தாயின்பத்தி லின்பமாகி
யோவரியநிறைவினிறைவாகியாசையொழிவிடமாய்த்தன்னாற்றானுணருமொன்று.

(ப - ரை.) உளமொடுங்கும் உபாயமே யோகமாகும் = மநநற் சாந்தியின் உபாயமே யோகமெனப்படும், உணர்வுறு பூமிகளிந்த வுபாயமாகும் = உரைத்த ஞானபூமிகளிவ் வுபாயமாகும், வளமிகுமிப் பூமிகளாலன்றி யிந்தமாதேவ பெரியபதமருவலாகா = பயிற்சியின் முன்னும் பின்னும் இன்பமேபயக்கும் இஞ்ஞான பூமிகளாலல்லது இப்பெரிய பிரஹ்மாநந்த பதமானது அடைய முடியாது, அளவற நீ நான்தான் வேறு ஒன்று மின்றி = அளவின்றிதுவம் அகம் சுயம் அயல் ஒன்றுமே யில்லாமல், அபேதமாய் = பேதமின்றி, அநாமயமாய் = நோயின்றி, அமூலமாகி = காரணமின்றி, கிளர்சுகமாய் = பேராநந்தமயமாய், சாந்தமாய் = பரம உபரமமாய், அறிவாய் = ஞானமயமாய், ஒன்றாய் = ஏகமாய், கேடின்றி = ஆபத்தற்று பெயரின்றி = அநாமமாய், கீழ்மேலின்றி = தாழ்வுயர் வில்லாமல்.

பாவனையும் = பாவ எண்ணமும், அபாவனையும் = அபாவ நிச்சயமும், முதலும் ஈறும் = ஆதியும் அந்தமும், பற்றும் = சங்கமும், உளதும் இலதும் = சத்தும் அசத்தும், பலவும் = நானுவும், தேசும் = ஒளியும், மேவறிவும் = பொருந்தாநின்ற சம்வே தனமும், மடமையும் = அறியாமையும், என்றிவைகள் = கூறிய இவைபோன்றன வொன்றும், இன்றி = இல்லாமல், விண்ணிலே யிருப்பதாய் = வியோமத்தமாய், விசால மாகி = விஸ்தாரமாகி, யாவதுமாய் = சர்வமுமாய், அன்றாகி = அல்லாததாய், மனத் தால் வாக்கால் எட்டரிதாய் = அவாங்மானச கோசரமாய், இன்பத்தில் இன்பமாகி = சுகத்தினும் சுகமாய், ஓவரிய நிறைவினிறைவாகி = கெடாத வியாபகத்தினும் வியாபக மாய், ஆசையொழிவிடமாய் = நிராசையின்றனமாய், தன்னாற்றான் உணருமொன்று = ஆத்மவேதனமா யிருப்பது ஒரு வஸ்துவாம்.

(ஸ்ரீ - வீர.) மனப்பிரச மநோபாயம் யோகமென அறையப்பெறும், அறைந்த அந்த ஞானபூமிகள் ஏழும் உபாயமென வுணரத்தக்கனவாம், இந்த ஞானபூமிகளால் அடை

யத்தக்கது பிரஹ்மமெனப் பெயரிய பரமபதமாம். எத்தகையது அந்தப் பிரஹ்மப் பெயரியபரமவஸ்து வெனின்? கூறல்; நீ நான் என்பது. துவம்பாவம், அகம்பாவம், ஆதம்பாவம் பரபாவம், என்பனயாதொன்றும் யாண்டிலதோ, பேதஞானம் எதுவும் பாவாபாவ அபிநிவேசரஞ்சனை இராகம் அதன்காரியம், முதலன எவையும் யாண்டில வோ அதுபரம் பிரஹ்மமாம். சர்வம், அதனினும் வேருய தொன்றின்மையின்; சாந்தம், அவித்யா இராகாதி மலரகிதம், நிராலம்பம், ஆதாரரகிதம், சர்வாதாரம்; அதுவும மாயை யால் என்பதுபொருள்; விண்ணிலிருப்பது, தன் மகிமையி லிருப்பது; சாசுவதம், என்று மிருப்பது; சிவம்,மங்கலம்; அநாமயம், நிருபத்ரவம், அநாபாசம், அப்பிரதிபிம்பம்; அநாத் மகம், அகாரணம்; சர்வம் ஜகத்வம், ஜகத்தின் பாரமார்த்திகரூபம், சாந்தம், அதிஷ்டா னசனமாத்திரம்; அந்தப் பிரஹ்மமாம். சத்துமல்ல, உற்பத்தியெனப் பெயரிய பாவ விகாரத்தை யுடையதாகாதாம், அசத்துமல்ல, நாசமெனப்பெயரிய அபாவவிகாரமுடை யது மாகாதாம்; அமத்தியாந்தம், ஆந்தராலிகபாவ விகாரமுடையது மாகாதாம், மத்தி அந்தமற்றதாம்; நஷ்டம் ஸ்திதம் என்பவற்றின் மத்யமாம்; உற்பத்திநாசங்கள் அந்தங் கள் அவதிகள் எதற்கோ அவ்வாறுறுவதாம்; சர்வமல்ல, பொய்மயமாய எல்லாவற்றி னின்றும் விலக்ஷணமாம் ஆயின் வஸ்துவினுலே பரிச்சேதமா மாலோவெனின்? ஆகா தாம், சர்வமுமேயாதலின் மனோவாக்குகளாற் கவரமுடியாதது, அதன்கண்ணேது சூனியத்தினும் சூனியம், அத்தியந்த நிராகாரம், சூனியத்தினும் சூனியமாயின் புருடார்த் தபகிர்பூதம் அஃதாம் எனின்? ஆகாதாம், சுகத்தினும் சுகமாம், பரமாநந்தரூபத் தன் மையான்; ஆயினது வேத்தியம் ஆமாலோவெனின்? அகாதாம், அசம்வேதனமாம், எங் கும் எப்போதும் முற்றினும் சாந்தமாயிருப்பது, ஸ்வயம் பிரகாசமா யொளிர்வது, சர்வ வியாபகமா யிருப்பது, அந்தப் பிரஹ்மமாம்.

(ச.) உளமொடுங்கும் = மனதின் சாஞ்சல்லிய நிவிர்த்தியாகும், யோகம்=ஞானம் உணர்வுறு பூமிகள் = முற்கூறிய ஞானபூமிகளேழுமே, அந்தவுபாயமாகும். ஞானபூமி யேழுக்குமேல் ஞேயசொரூபங் கூறல்:—வளமிகும்... மாட்சிமைமிகுந்த, அல்லதகண்ட செல்வமான அந்தமாரூத பெரியபதம் = பிரமவஸ்து, இப்பூமிகளாலன்றி மருவ லாகா = இப்பூமிகளாற் பேறுமென்பது பொருள். அஃதெத் தன்மையதெனச் சங் கைவர அதன் சொரூபத்தை விரித்துரைத்தல்:—நீநான்ருன் வேறளவு = நீயென்று நிச் சயவிடயமும் நானென்னும் பாவமும் ஆன்மாவென்னும் பாவமும், பரோயமென்னும் பாவமும், அற, ஒன்றுமின்றி = எவ்வளவுமின்றி, அவற்றில் நீ நானென்பன பிரத்தியக்ஷ விவகாரவிடயங்கள் ஆன்மா பரமென்பன பரோக்ஷவிவகார விடயங்கள், அபேதமாய் = பேதப்பிரதீதி யற்றதாய், அநாமயமாய், நிர்த்தோடமாய், அமூலமாகி = காரணரகித மாய், கிளர்சுகமாய் = கல்யாணரூபமாய், பூரணாநந்தமாய், சாந்தமாய் = நிர்விகாரமாய், அறிவாய், அநாபாசம் = ஆரோபமற்றதாய், ஒன்ருய் = சர்வான்மகமாய், கேடின்றி = சாசுவதமாய், நித்தியசித்தமாய், பேரின்றி = நாமஜாதியாதி ரகிதமாய் கீழ்மேலின்றி.

பாவனையும் அபாவனையும் = பாவாபாவ நிச்சயமும், முதலுமீறும் = ஆதிமத்தி யாந்தமும், பற்றும் = சம்பந்தமும், உளது மிலதும் = காரணங்காரியமும், பலவுந்தே சுமே வறிவுமடைமையு மென்றிவைகள், அன்றி = சூனியமாய், நிராலம்பமென்னும் நிர் விடயமாய், விண்ணிலே யிருப்பதாய் = சிதாகாசரூபமான ஸ்வஸ்வரூபத்தி லிருக்குந் தன்மையதாய், விசாலமாகி = விரிவாய், யாவதுமாய் = சர்வப்பிரபஞ்ச அதிஷ்டான மாதலின் சர்வமுமாய், அன்ருகி = கற்பித நாமரூபப் பிரபஞ்ச விலக்ஷணமாதலின் சர்

வழுமன்றாகி, மனத்தால் வாக்கால் எட்டரிதாய் = மன்வசனங்களாற் கிரகிக்கத்தகாத தாய், இன்பத்தினின்பமாகி = நிரதிசயானந்த ரூபமாதலின் = விடயசுகத்தினுஞ் சுசமாய், ஓவரிய நிறைவினிறைவாகி = சூனியமான ஆகாயத்தினும் அத்தியந்தஞ் சூனியமாய், ஆசை யொழிவிடமாய் = பிரஹ்மாநந்தத்தினும் வேறபேட்சிக்கத் தகுந்ததின்மையின் சகலமநோரதங்களின் நிவிர்த்திக் கிருப்பிடமாய், தன்னுற்றுணரும் = பிரமாணாந்தர சூனியமாதலின் தானே சர்வப்பிரமாணப் பிரசித்தமான, ஒன்று = ஏகமாகிய சிவமென்றுங் கல்யாணரூபமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே மோர்மிகை நிதர்சனத்தானே வருணிக்கத்தக்க விசுவத்தின் பிரஹ்ம விவர்த்தத்தன்மை அதனைப் பரீக்ஷித்துப் பார்த்தலவணனுக்கு அநுபவசித்தமாயதாகலின் உன்னுலும் ஆராய்ந்து காணத்தக்கதா மென்னுங் கருத்தானே லவணன் விந்தச் சாரற்செல்லல் கூறப்படுதல்:—எழு என,

எழுவகையாம் பூமியினுற் பெறும்பிரமமிதுமாயையேற்றங்கேண்மோ
விழுமமுறுலவணனுன்மெய்ம்மறந்துமுன்கண்டவிந்தச்சாரற்
பழுவமனக்கண்ணுடிபயில்கின்றவுடலொடும்போய்ப்பார்க்கிற்கண்ணிற்
றழுவுறிங்கொலெனவமைச்சருடனெண்ணித்தானையுடனசமைந்துபோனுன்.

(ப - ரை.) எழுவகையாம் பூமியினுற்பெறும் பிரமம் இது = சப்தவிதமான ஞான பூமிகளினுலே அடையத்தக்க ஞானனந்தப் பிரஹ்மம் நவிலப்பெற்றது இதுவரை, இனி, மாயையேற்றங் கேண்மோ = மீளவும் அவித்தையினது மாகாத்மியங்கூற ஹே இரகுகுலதிலகனே! விழுமமுறு லவணன்றான் மெய்ம்மறந்து = பூர்ணமேதாவியாகிய இலவணமகாராஜனுனவன் தேகத்தை மறந்து பிராந்தியினுல், முன்கண்ட = பூர்வம்பார்த்த, விந்தச் சாரற்பழுவம் = விந்தியாசலத் தாழ்வரையின் காடானது, மனக்கண்ணுடிபயில்கின்றவுடலொடும் போய் = சித்த ஆதரிசத்தின் கண்ணே திகழாநின்றது தேகத்தோடும் போய், பார்க்கில் = பார்ப்போமானுல், கண்ணில் தழுவுறுங்கொல்! = கண்ணாரக் காணலாமோ, என அமைச்சருடன் எண்ணி = என்று மந்திரிமார்களோடு ஆலோசித்து, தானையுடன் சமைந்துபோனுன் = நால்வகைச் சேனைகளுடன் சம்பிரமத்தோடு சென்றான்.

(ஸ்ரீ - வீர.) பொற்பூடணுதிபோலும் பொய்யெனப் புகன்ற அவித்தையின் ஆராய்ச்சிமாத்திரையானே அழிந்துபோந் தன்மையையும், போராச்சரிய பூதத்தன்மையையும் எத்தகைய தென்பதைக் கூறக்நேட்குதி. இதுகாறும் சப்தபூமி சம்பந்த ஞானத்தையும் அதனுல் அவித்தை யகலுதலேயும் கூறிவந்தேம் இனி அவ்வவித்தையின் பெருமையைக் கூறக்கேட்குதி யென்பதாம். முன்னர் வருணித்த லவண அரசன் அக்கான்மயலை யவ்வாறுகண்டு, இரண்டாவது தினத்தில், இந்திரஜாலக்காரனுலே காண்பிக்கப்பெற்ற பேரடவியைக் காண்பான் செல்லமுயன்றனன். எங்கு என்னுற்றுக்கம் அநுபவிக்கப்பெற்றதோ, மனக்கண்ணுடியி லிருக்கும் அத்தகையமகாரண்யத்தை யெண்ணுகின்றேன் ஒருகால் விந்தியாசலஞ் சென்று நோக்கின் கண்டாலு மதைக்காணலாமோ! என்பதாக மந்திரிமார்களோடும் நிச்சயித்துச் சென்றனன்.

(ச.) ஸ்ரீ வசிட்டர், பூமி = ஞானபூமி, மாயை = அவித்தையினது, ஏற்றம் = மாகான்மியத்தை, கேண்மோ = இராகவா நீ மீட்டுங் கேட்பாய்; அவித்தையின் மாகான்மியத்தைத் தெளிவித்தற்கு மீட்டு மிலவணன் கதையின் சேடத்தை வியந்துவிரித்தல்:- எண்ணி = இரண்டாந்திவசத்திற் சிந்தித்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தென்றிசை நோக்கிச்சென்ற மன்னவன் அன்று - காண் பழையவடிவிகாணல்:—தென் என:

தென்றிசைசென்றனமீட்டுந்திக்குவிசயஞ்செய்யச்செல்வான்போல
முன்றிகழும்விந்தகிரிமுற்பட்டான் வடக்கொழிந்தமூன்றுதிக்கிற்
றுன்றிவளர்வனமெல்லாஞ்சுற்றினனிநொந்தான்சூழலொன்றி
லன்றுகருதியகருத்துவடிவெடுத்ததெனப்பழையவடிவகண்டான். (55)

(ப - ரை.) தென்றிசை சென்றனன் = தெற்கே நோக்கிச் சென்றனன், மீட்டுந் திக்குவிசயம் செய்யச் செல்வான்போல = மீளவும் திக்விஜயஞ் செய்வதற்காகப்போவதேபோல, முன்றிகழும் விந்தகிரி முற்பட்டான் = முன்னர்த்தோன்றிய விந்தியமகீதரத்தையடைந்தனன். வடக்கொழிந்த மூன்றுதிக்கில் = கிழக்கு தெற்கு மேற்குத்திசைகளில், துன்றிவளர் வனம் எல்லாம் சுற்றினன் = நெருங்கிவளர்ந்த மகாவன தடஸ்தலமெல்லாம் குதூகலத்துடன் சுற்றிப்பார்த்தான், நனிநொந்தான் = மிகவும் வருந்தினன், சூழலொன்றில் = ஆங்கொரு பிரதேசத்தில்; அன்று கருதியகருத்து = அப்போது சிந்தித்த சிந்தையானது, வடிவெடுத்ததென = ஆகிருதியாக வுற்றதேபோல, பழைய அடவிண்டான் = புராதன மகாரண்யத்தைப் பார்த்தனன்.

(ஸ்ரீ - வீர.) தக்ஷிணபதஞ் சென்றனன், மீண்டுந்திக்கு விஜயத்தின் பொருட்டேபோல விந்தியமகீதரத்தை யடைந்தனன். பூர்வதக்ஷிணபாச்சாத்தியமகா வனதடஸ்தலங்கள் யாவற்றிலும் மிகவும் உற்சாகத்துடன் வியோமவீதியில் விண்மணி யுலாவியதே போலும் சுற்றிச் சுற்றிப்பார்த்தான். பின்னொருபிரதேசத்தில் முன்னிகழ்ந்த அச்சிந்தை முன்னின்றதேபோல உக்கிரமாய அம்மகாரண்ணியத்தை யெதிரே கண்டனன்.

(ச.) வியோமவீதி யெல்லாஞ் சூரியன்போலச் சுற்றினன், சூழலொன்றில் = பின் ஓரிடத்தில், கருத்து = சிந்தை. (55)

(ஸ்ரீ-வீர - அ-கை.) லவண அரசன் முன்கண்ட காட்சிகளைக் காணுதலும் மனமயங்குதலும்:—காலனென.

காலனகர்நிகராமக்கடியவனத்துலாவுதலுங்கடையர்செய்கை
போலவன்முன்சஞ்சரித்ததலங்களுமச்சேரிகளும்பொருந்தக்கண்டான்
சாலவியந்தானந்தக்கடையர்கடைச்சியர்குடில்கடப்பாவண்ணா
ஞாலநரபதிநோக்கிவியப்பினன்மனமயக்கநண்ணிநின்றான்.

(ப - ரை.) காலன் நகர்நிகராம் = பரலோக பூமியைப் போன்றுள்ள, அக்கடிய வனத்துலாவுதலும் = அம்மகாரண்யத்திற் சுற்றிச்சுற்றிப் பார்த்தலும், கடையர்செய்கைபோ லவன்முன் சஞ்சரித்த = நீசர் செயல்கள்போல் அவ்வரசன் நீசனுயிருந்தபோது திரிந்துசெய்த, தலங்களும் = இடங்களும், அச்சேரிகளும் = அப்பழையபறையர் வீட்டுக் கூட்டங்களும், பொருந்தக் கண்டான் = முன்னிருந்தபடியே பார்த்தான், சாலவியந்தான் = அத்தியந்தம் ஆச்சரிய மடைந்தான், அந்தக்கடையர் கடைச்சியர் குடில்கள் = அந்தப்புலையர் புலைச்சியர் குடிசைகள், தப்பாவண்ணம் = ஒன்றும் விடாமல், ஞாலநரபதி = பூபதியானவன், நோக்கி = பார்த்து, வியப்பினால் = ஆச்சரியத்தினால், மனமயக்க நண்ணி நின்றான் = மநோமயக்கத்தை யடைந்து நின்றனன்.

(ஸ்ரீ - வீர.) பரலோக மகிமையென்ன உக்கிரமாயிருந்த அந்தமகாரண்யத்தை நோக்கி அவ்வரசன் ஆண்டுச் சுற்றிச்சுற்றி முன்னரனுபவித்த தன் சரிதங்கள் யாவற்றையுமே கண்டனன்; வினவினன்; உணர்ந்தனன், விஸ்மயமு முற்றனன். அவன் மீளவும் ஆங்குற்ற பழையவேடர்களையும் புற்கசப் பிறவிகளையும் கண்டமிக் தாச்சரிய மடைந்தான்; குதூஹலியாய அவ்வரசன் விஸ்மய ஆகுலமதியுடன் மீளமீளவும் சுற்றிச்சுற்றிப் பார்த்தான். பின்பு அம்மகா அடவியில் ஒருபக்கத் தோரத்தில் புகைகள் சூழ்ந்து கறுத்துள்ள விடத்தில், எதன் கண்ணே அப்புஷ்ட புற்கசன் உண்டாயிருந்தனனே, அதேகிராமத்தைக் கண்டனன் நெருங்கினன், அவ்விடத்தில் அந்த அந்த ஜனங்களைக் கண்டனன் அந்த அந்தஸ்திரீகளைக் கண்டனன், அச்சிறுகுடில்களையும் கண்டனன். பஞ்சத்தினலே ஆர்த்தசை யடைந்து பந்துவர்க்கமற்றுத் தனித்துத் தவிக்கும் நீசர்களையும் கண்டனன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆங்குற்ற விருத்தாந்தத்தை வருணித்தல்:—கருத்தென-

கருத்தயருந்துயர்கரைப்பக் கண்கரைந்து மெய்கரைந்து கதறுநின்ற
விருத்தையர்தங் கூட்டத்தின் மிகமெலிவால் வாய்விட்டு விம்மிவிம்மி
யொருத்திமுதனு ளிறந்ததன்கிளைஞர் பெயரெல்லா முரையாநின்று
பெருத்தநெடுங் குரலாலேயிவ்வாறு புலம்பினுள் பேதமாக.

(ப - ரை.) கருத்தயரும் துயர்கரைப்ப = மனஞ்சோருந் துன்பம் கரைப்ப, கண்கரைந்து = விழிகளில் அருவிசொரிய, மெய்கரைந்து = என்புந்தோலாயிருந்து, கதறுநின்ற = ஓலமிட்டலறு நின்ற, விருத்தையர்தங் கூட்டத்தில் = கிழவிகளின் கூட்டத்தில் மிகமெலிவால் = அதிக மெலிவினுல், வாய்விட்டு விம்மிவிம்மி — வாய்திறந்துதுயர் பொறுமற் பொம்மிப்பொம்மி, ஒருத்தி = ஒரு கிழவி, முதனுள் இறந்த = முந்தியதினத்தில் இறந்துபோன, தன் கிளைஞர்பெயர் எல்லாம் = தனது பந்துக்களின் நாமங்களையெல்லாம், உரையா நின்று = சொல்லிக்கொண்டு, பெருத்த நெடுங்குரலாலே = பெரிய நீண்ட தொண்டையாலே இவ்வாறு புலம்பினுள் பேதமாக = இவ்வண்ணம் புலம்பியழுதாள் வேற்றுமையாக.

(ஸ்ரீ - வீர.) தங்களுடைய துக்கிதர்களான பந்துக்களுடைய துக்கங்களோடு கூடியவர்களாயத் தனக்கயலா யிராநின்ற விருத்தைகளாகிய சகிகளுக்குள் ஒரு விருத்தையானவள், கெட்டகாலத்தில் துர்க்கமமான மார்க்கங்களில், சிதறி யோடிப்போன தன் பந்துக்களின் அளவில்லாத துக்கங்களை வர்ணித்துக் கொண்டு அதிதீனையாய், கண்ணீர் ததும்பும் கண்களை யுடையவளாய், தன் பர்த்தாவுடன் கூடியவளாய், இனியியம்பும் வண்ணம் மிகவும் அழுதுகொண்டிருந்தாள்.

(ச) மாமிக் கன்னியமான விருத்தையர், ஒருத்தி = மாமியாகப் பார்க்கப்பட்ட சரையுண்டைய சண்டாளி. (57)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அக்கிழவி புத்திரர்களையும் புத்திரியையும் நினைந்து புலம்பும் விதம்:—மாறுனவென.

மாறுனவிதியாலென்மடிவிட்டுமடிந்துபோமைந்தர்காளோ
வேறுகியெத்தூர மேகினீர்யார் முகத்தே விழிக்கின்றீரோ
கூறுன்செங்குன்றின் மணிமாலைத் தோளாலே குளிரப்புல்லி
யாறுதவென் னெருப்பை யாற்றுவாரியோ மகளேயந்தோவந்தோ.

(ப - ரை.) மாறானவிதியால் = பேதித்து நின்றகருமத்தால், என்மடிவிட்டு = எனது உத்சங்கத்தை யொழித்து, மடிந்துபோ மைந்தர்காள் ஓ = மரித்துப்போம் ஓ என்மைந்தர்களே ! வேறாகி யெத்தூரமேகினீர் = என்னை விட்டுப்பிரிந்து எவ்வளவுதூரம்போய் விட்டீர்கள், யார்முகத்தே விழிக்கின்றீரோ = எவர் முகத்திற் றீனர்களாய் விழிக்கின்றீர்களோ, கூறான = கொத்தான, செங்குன்றின் மணிமாலை = சிவந்தகுன்றின் மணிமாலையணிந்த தோளாலே = புஜங்களாலே, குளிரப்புல்லி = தண்ணென்றுமாறு ஆலிங்கித்து, ஆறாத = ஆற்றமுடியாத, என் நெருப்பை = எனது துன்ப அக்கினியை, ஆற்றுவாயோ = தணிப்பாயோ, மகளே = புத்திரியே ! அந்தோ ! அந்தோ !! ஐயையோ யான் என்னசெய்வேன் !

(ஸ்ரீ - வீர.) ஹா புத்திரர்களே ! எத்தரை சென்றீர்களோ நீங்கள் ! தீனமான பார்வையோடும் யாரிடத்தில் ஆகாராதியின் பொருட்டுக்கெஞ்சிக்கொண்டுதிரிகின்றீர்களோ, என்மடியில் விளையாடிக் கொண்டிருந்ததை விட்டுவிட்டு எங்கேயோ வெகுதூரம்போயலைகின்றீர்கள் போலும்; ஹா புத்திரியே ! குஞ்சாபலமாலைகளையே ஹாரமாகக்கொண்ட அழகீ, மிகவும் உயர்ந்துபருத்த பயோதராங்கியே, காற்றுலுல்லாசமாகி யொளிரும் கஜ்ஜலலோல வன்னமுடையாய், பர்ணங்களை யம்பரமாக அணிந்து கொண்டிருக்கும் என்னுயிரே, இலந்தை விரைகள்போலும் ஜம்புப்பீஜங்கள் போலும் தந்தபந்திகளையுடையவளே ! எனது கெட்டதெய்வ வயத்தால் எவ்வளவுதூரம் எங்கேதான் தள்ளிக்கொண்டு போகப் பெற்றாயோ அறியேன் அந்தோ ! அந்தோ !!

(ஸ்ரீ - வீர - அ - கை.) மருமகனை நினைந்து வருந்தல்:—முன்னமென.

முன்னஞ்செய் தவத்தினாற் றேடாதமா நிதிபோன் முன்வந்தெய்திப்
பொன்னனார் நின்குலத்தோ ரவர்மயல் விட்டென்மகளைப் புணர்ந்துவாழ்ந்த
மன்னனுமருமகனே மறந்தனையோ மதிமுகத்தை வந்துகாட்டாய்
பின்னைநாயக வுனக்கென் பேதைசெயுஞ் சிறுபிழையாற் பேதித்தாயோ.

(ப - ரை.) முன்னஞ்செய் தவத்தினால் = பூர்வஞ்செய்த தவத்தினாலே, தேடாத மாநிதிபோன் முன்வந்தெய்தி = முயன்று தேடாமலே வலிதிற்கிடைத்த மாட்சிமையுற்ற நிக்ஷேபமொப்பத்தானே வந்தடைந்து, பொன்னனார் நின்குலத்தோரவர் = நிறத்தானும் குணத்தானும் உயர்வானும் அணியானும், போற்றத்தக்கமையானும், பதிவிரதா தருமத்தானும், மாறாத வியல்பானும் மாழைபோன்ற இலங்கிழையார் நின்னுடைய வங்கிசத்தாராகிய அவ்வுத்தமிகளாம் சுத்தாந்த விலாசினீகளின், மயல்விட்டு = மோகத்தை நீக்கிவிட்டு, என்மகளைப் புணர்ந்து வாழ்ந்த = என்னுடைய அவலக்ஷணமான கன்னியையும் ஆலிங்கனஞ்செய்து கொண்டு வாழ்ந்துவந்த, மன்னனும் = ராஜபுத்திரனும், மருமகனே = மாப்பிள்ளையே, மறந்தனையோ = மறந்துவிட்டாயோ, மதிமுகத்தை வந்து காட்டாய் = இந்துவதனத்தை வந்து தரிசனந்தாராயோ, பின்னை நாயக = சாம்ராஜ்யலக்ஷ்மி நாயகனே, உனக்கென் பேதைசெயும் சிறுபிழையாற் பேதித்தாயோ = உனக்கு என்னுடைய அறியாக்குமாரி செய்த பொறுக்கத்தக்க அற்பப்பிழையினாலே சித்த விகற்பத்தையடைந்து விட்டாயோ அறியேன் அந்தோ ! அந்தோ !!

(ஸ்ரீ - வீர). சுத்தாந்த விலாசினீகள் = அந்தப்புர அங்கனைகள்; அரசன் ஸ்ரீவிஷ்ணு அம்சசமாதலானே பின்னை நாயகவென விளித்ததாம். ஹா இராஜபுத்திரனே. இந்து சமானகாந்தனே ! அவ்வந்தப்புரத்துற்ற அழகிய அங்கனை மாரையடியோடு தியாகித்து,

எனது கன்னிகையை மணஞ்செய்து கொண்டு கூடிக்குலாவி வாழ்ந்தாய், என்மகளும் நின்னோடு கூடிவாழ்தலை நன்னிலையா யடைந்தனளில்லை. (59)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமுசாரத்தின் றுர்க்கதியை நினைந்துபுலம்பல்:—வன்னென.

வன்பிறவிப்போராற்றில்வல்வினையாருந்திரைகள்வந்துகூடித்
தன்பிறவியரசியற்கைதவிர்ந்தெமதுதையலுக்குத்தலைவனாகிப்
புன்பிறவிப்புலையரைப்போற்பூதலத்துப்புரந்தரனும்புன்மைபூண்டான்
மின்பிறவிநிற்கரிதுமிகக்கொடிதுமிகக்கொடிதுவிதியேயென்றாள்.

(ப - ரை) வன்பிறவிப் பேராற்றில் = வலிமைபொருந்திய சமுசாரமென்னும் பெரியநதியில், வல்வினையாருந் திரைகள் வந்துகூடி = கொடிய வினையாகுந் தரங்கங்கள்வந்துசேர்ந்து, விலாசஞ்செய்தலால் என்னகீழான காரியத்தைத்தான் இயற்றவில்லை தன் பிறவியரசியற்கை = தனக்கு க்ஷத்திரியவங்கிச பரம்பரையாய்க் கிடைத்த சாம்ராஜிய சம்பத்தையும், தவிர்ந்து = தவிரவிட்டு, எமதுதையலுக்குத் தலைவனாகி = எங்களுடைய குலக்குமரிக்குக் கணவனாகி, புன்பிறவிப் புலையரைப்போல் = நீசசென்மச் சண்டாளரைப்போல, பூதலத்துப் புரந்தரனும் = பூமண்டல நரேந்திரனாகிய சக்ரவர்த்தியும், புன்மைபூண்டான், கீழானதன்மையை யடைந்தனன், என்றால், மின்பிறவி நிற்கரிது = மின்னலைப் போன்ற சென்மம் நிலையற்றது, மிகக்கொடிது மிகக்கொடிது = மிகவும் கொடியது மிகவும் கொடியது, விதியேயென்றாள் = ஈதெல்லாம் தலைவிதியே யல்லவோ என்று புலம்பினாள். (60)

(ஸ்ரீ - வீர.) சமுசாரமாகிய நதியாற் றன்றரங்கபங்க உசித உபகாசங்களை யுண்டாக்கா நின்றனவாய கருமபரிபாகங்களாம், என்னதான் கெட்ட நிந்தியபலங்காரியம் இயற்றப் பெறவில்லை, அஃதென்னே யெனின்? எக்காரணத்தால் நிருபேசனும் புக்கச கன்னிகையினிடத்திற் சேர்க்கப் பெற்றனனோ, இதனினும் நிந்திய பலமென்னென்பதாம். ஒரேஜன்மத்தில் இராஜத்தன்மை புக்கசத்தன்மை கட்குக்காரணமா யிருத்தலினனே விவேகிகள் செய்யும் உபகாசத்தோடு கூடினவான தனது தரங்ககண்டரூபகரும விலாசங்களானே சமுசாரநதியால் எக்கெட்ட காரியந்தான் செய்யப் பெறவில்லை, எச்சாதனங்களாற்றான் எக்கெடுதல் தான் உண்டாக வில்லையென்பதாம். (60)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் புலம்பியதைக்கேட்ட அரசன் கிழவியை வினாதலும் அவள் உரைத்தலும் வருணித்தல்:—என்றவென.

என்றழுதவவள் புலம்பியிசைத்த வெலாநனிகேட்ட லவணனாங்கே
நின்றுளதன் சேடியரா லவடுயரந் தனையாற்றி நேயத்தோடுங்
கன்றியநின் னிடரேதுநீயார் நின்மகளார் நின்காதலோரா
ரொன்றுமொழி வறமொழியென் றிவன்வினவப் புலைக்கிழத்தி யுரைப்பதானாள். ()

(ப - ரை.) என்றழுத அவள் = என்று சொல்லியழுது கொண்டிருந்த அப்புலைச்சி, புலம்பியிசைத்த எலாம் = புலம்பிப் புலம்பிக்கூறிய யாவற்றையும், நனிகேட்ட லவணன் ஒருமையுடன் செவிகொண்ட லவணராஜன், ஆங்கே நின்றுளதன் சேடியரால், அவ்விடத்திற்றானே நின்றுகொண்டிருந்த தனது பணிப்பெண்களால், அவள் துயரந்தனை யாற்றி = அவ்விருத்தையின் றுக்கத்தைத் தீர்த்து, நேயத்தோடும் = அன்புடன், கன்றிய நின்னிடரேது = வாட்டத்தையும் துயரமியாது, நீயார் நின்மகளார் நின்காதலோரார் = நீயாவள் நினதுமகள் யாவள் நினதுமைந்தர்கள் யாவர்கள், ஒன்றும் ஒழிவற =

ஒரு விடயத்தையும் விடாமல், மொழியென்று = கூறுவாயாக என்று, இவன் வினவ = லவணராஜன் கேட்ப, புலைக்கிழத்தி = புலையர் குலவிருத்தை, உரைப்பதானுள் = கூறத் தொடங்கினள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் புலம்பிக்கொண் டிருந்தவளும், புற்கசபூத தனது போஷ்யர்களுக்குள் விருத்தையானவளும், ஆகிய அம்மாமியாகிய ஸ்திரீயை, அரசன் நேரேகூறல் கூடாமையின் தாசிகளானே துயராற்றி, வினவுவதாவது, ஈண்டுதானே நடந்த விருத்தாந்தம் என்னே ! நீயார், நினது குமாரத்தியார், நினதுமைந்தர் யாவர் யாவற்றையுங் கூறுதி.

(ச.) சேடியர் = தனதேவற் பெண்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) புலைச்சியாங்குற்ற விருத்தாந்தத்தை யரசனுக் கறைதலும் கேட்ட அரசன் அதிசயித்தலும் வருணித்தல்;—ஈது—நெடும் என.

ஈதுபுலைச்சேரியிதிலொருபுலையனென்கணவனிவனுக்கிங்கோர்
மாதுபிறந்தனளவளையிந்திரன்போலொருமன்னன்வந்துசேர்ந்தான்
போதுநெடும்புணர்வித்தவிதியாலேயவண்மூன்றுபுதல்வர்ப்பெற்று
ளேதுறுநல்வினைபோலத்தீவினைவந்தென்கிளைஞரிறந்துபோனார்.

நெடுங்காலம்வாழ்ந்ததற்பினிலைமுகிற்றுளிவறண்டுநிலனீர்சுண்டிக்
கடுங்காலனிகர்கலியாற்றிசைதிசைபோய்க்கடையரெலாங்கழிந்துபோனார்
நடுங்காநின்றனதுயருந்தனிமையுமேதுணையானேநாங்களென்ன
வடுங்காலவேல்வேந்தனமைச்சரைப்பார்த்ததிசயித்தானவசனுகி. (62-63)

(ப - ரை.) அப்புலைச்சி அழுதுகொண்டே சொல்வதாவது, ஈதுபுலைச்சேரி =இது புக்கசபோஷப் பெயரிய கிராமமாம், இதில் ஒருபுலையன் = இதன் கண்ணே ஒருபுக்கசன், என்கணவன் = என்நாயகன் இருந்தான், இவனுக்கு இங்கோர் மாதுபிறந்தனள் = இப்புக்கசபதிக்கு இவ்விடத்தில் ஒப்பற்ற ஒருகன்னிகை யுற்பவித்தனள், அவளை = அக்குமாரியை, இந்திரன்போல் ஒருமன்னன் வந்து சேர்ந்தான் = தேவேந்திரனுக்குச்சமானமான ஒருநரேந்திரன் வலிதில் வந்தணைந்தனன், போதுநெடும் புணர்வித்த விதியாலே = நீள்காலம் சேர்த்திவைத்த தெய்வயோகத்தாலே, அவள் = அக்குமரி, மூன்றுபுதல்வரைப் பெற்றாள் = மூன்று புதல்வரைப் பெற்றாள், ஏதுறு நல்வினைபோல = நல்வினையின் காரணத்தா லுண்டாகும் புண்ணியபலன்போல, தீவினைவந்து = தீயகருமத்தின் பலன் முன்னுற, என்கிளைஞர் = எனது பந்துக்கள், இறந்துபோனார் = மாண்டுபோனார்கள். ஏனென்னின் ?

நெடுங்காலம் வாழ்ந்தற்பின் = நீண்டகாலம் ஒன்றுகூடி வாழ்ந்ததன் பின்னர், நிலமுகிற்றுளிவறண்டு = கார்முகில் வர்ஷியாமையின், நிலனீர் சுண்டி = பூமியிலுள்ள குளங்குட்டைகள் காய்ந்து, கடுங்காலன் நிகர்கலியால் = கடுமையான யமனையொப்பான வறுமையினாலே, திசைதிசைபோய் = நாலுதிக்குகளிலும் ஓடிப்போய், கடையரெலாம் = புலையர்யாவரும், கழிந்துபோனார் = அழிந்துபோனார்கள், நடுங்காநின்றன துயரும் தனிமையுமே துணையானேம் நாங்கள் என்ன = நடுக்கத்தைத்தரும் மகாதுக்கங்களும் காப்பாரின்மையுமே துணையாகக்கொண்டு யாங்கள் ஈண்டுயிர் வாழ்கின்றேம் என்றுகூற, அடுங்கால வேல்வேந்தன் = யாவரையும் கொல்லும் காலனிகர்த்த வேலாயுதத்தையுடைய லவணராஜன், அமைச்சரைப் பார்த்து அதிசயித்தான் அவசனுகி = மந்திரிமாரைப் பார்த்துப் பரவசனாய்மிக ஆச்சரியத்தை யடைந்தான்.

(ஸ்ரீ - வீர.) பாஷ்ப விலோசனத்தோடுற்ற அவள் கூறுவதாவது: புக்கசகோஷ மெனப் பெயரிய கிராமமாமிது, ஈண்டுப் புஷ்கஸகன் அல்லது புக்கசபன் என்னும்பதி எனக்கிருந்தனன், அவனுக்கு இந்து சமமான ஒரு சுதையுண்டாயினள். அவள் பாக்கிய வயத்தினுலே, எங்கள் சேரிக்குத்துரதிர்ஷ்ட வயத்தினுலே வந்து சேர்ந்த இந்திரதுல் லிய மன்னவனை மணந்து கொண்டனள் இவளுக்கு இந்நல்ல அதிர்ஷ்டமானது, வனத் தில் துச்சமான பெண்கழுதைக் கேனும் பெட்டையொட்டைக்கேனும் முகமூடிதிறந்த மதுகும்பம் கிடைத்தது போன்றதாம். அவள் அவ்வொப்பற்ற பூலோக இந்திரனோடு வெகுகாலம் பலவகைச் சுகங்களை யநுபவித்தனள் ஆண்மக்களையும் பெண்மக்களையும் பயந்தனள், சுரைக்கொடியானது பெருவிருக்ஷத்தைப்பற்றி விருத்தியானதேபோல இக் கானன கோடரத்தில் விருத்தியடைந்தனள். சிலகாலங் கழித்து இந்தக்கிராமத்தில் ஹேஜனேஸ்வர ! மழைபெய்யாமற் பஞ்சமுண்டாகிப் பெருந்துயர முண்டாயிற்று, அந் தப்பயங்கரமான அவஸ்தையில் அநேக மநுடரிறந்தனர். மகத்தாகிய அத்துக்கத்தி னுலே இந்தக்கிராமத்தி லிருந்தஜனங்களி யாவரும் வெளிப்போந்து வெகுதூரம் ஓடிப் போனூர்கள் யாவருமே மரணமடைந் திருப்பார்கள். ஹே பிரபுவே ! அந்தப்பந்து மர ணத்தினுலும் துர்ப்பிக்ஷத்தினுலும், இவ்விடத்தில் மிகுந்ததுக்கத்தை யநுபவிப்பவர்க ளாய், குடிக்கக்கூடக் கஞ்சியில்லாதவர்களாய் யாங்கள் கண்ணும் கண்ணீருமாய்க் கரை கின்றோம்; பாஷ்பம் நிறைந்த நேத்திரங்களோடு கூடியயாங்கள் ஆசமன மியற்றியதே போல ஒழுகாநின்ற கண்ணீர்த் தாரையோடும் துக்கஜீவிதர்களாக இருந்து சோகிக்கின் றோம். என்றுகூறியவற்றை யெல்லாம் அக்கிழவியின் வாயிலாகக் கேட்டு லவணராஜா வானவன் அதிக விஸ்மயத்தை யடைந்தனன், மந்திரிமார் தம்வதனங்களை நோக்கிச் சித்திரத்தில் அர்ப்பித்த ஓவியம்போலாயினன்.

(ச.) ஈது = இக்கிராமம், தெய்வகதியால் இந்திரன் கணவனுகவந்து ஒரு பெண் ணும், இரண்டாணுமாக மூன்றுபுதல்வர்.

கலியால் = வறுமையால், வருமகாதுக்கத்தினுல் இக்கிராமத்திலுள்ள கடையரெ லாந்திசைதிசைபோய், கவிழ்ந்துபோனூர் = மரணமடைந்தார் வேந்தன், இத்தன்மை யான வசனங்களைக்கேட்டுச் சித்திரத்தெழுதிய பதுமைபோல்,அவசனுகி அமைச்சரைப் பார்த்தநிசயித்தான்.

(63)

(ஸ்ரீ - வீர - அ - கை,) விருத்தையின் வெந்துயரந்தீர்த்தரசன் நகரேகி ஞானியா னதைக்கூறல்:—வேண்டு என.

வேண்டுவனகொடுத்திவளைவெந்துயர்தீர்த்தந்நகரின்மீண்டுமேவி
நீண்டவுலகத்தியல்புமாயையின்வல்லபமுமவனெடிதுகண்டான்
காண்டகையபரம்பொருளுநாமுரைப்பவறிந்தமைந்தான்கருணைவள்ளா
லீண்டியவிம்மாமாயைகடப்பரியவன்மோகமியற்றுங்கண்டாய்.

(ப - ரை.) வேண்டுவன கொடுத்து = விரும்பியயாவற்றையும் மகிழ்வுடன் கொடு த்து, இவளை = இவ்விருத்தையை, வெந்துயர் தீர்த்து=கொடிய துயரங்களையெல்லாம் இல்லாமற்செய்து, அந்நகரின் மீண்டுமேவி=அந்த விந்தியச்சாரலினின்றுந் தனது நகரைமீள்வும் அடைவுற்று, நீண்டவுலகத்தியல்பும் மாயையின் வல்லபமும்=நீடிய விசாலஜகத் தியல்பையும், மகாமாயையின் மகிமையையும், அவன்நெடிது கண்டான் = அவ்வரசன் நன்றுகவுணர்ந்தனன், காண்டகைய பரம்பொருளும் = காணத்தக்கதான பரமசிவத்தையும், நாமுரைப்ப அறிந்து. அமைந்தான் = யாமுபதேசிப்பத்தனது வடிவ

மாகவுணர்ந்து பரமசாந்தன் ஆயினன், கருணைவள்ளால் = கருணைரூபமான இராகவ! ஈண்டிய இம்மாமாயை = இவ்வாறதாக இந்த மாட்சிமைபொருந்திய அவித்தையானது, கடப்பரிய = தாண்டமுடியாத, வன்மோகம் இயற்றுங் கண்டாய் = மகத்தான பிரம தாயினியாம். (64)

(ஸ்ரீ - வீர.) அவ்வறுத்தமமான ஆச்சரியத்தை மீண்டுமீண்டும் ஆராய்ந்து பார்த்தான், அநேகவகை வகைவினுக்களை மீண்டுமீண்டும் வினவி அதிக ஆச்சரியமுடையவனுன், அந்தப் பக்கண ஜனங்கட்கு, அநேகவித இனியவார்த்தைகளாலும் தானசற்காரங்களாலும், கருணைநிறைந்த உலகில் மேற்கீழ் பாவங்கண்ட அந்த லவணராஜன், உற்ற சர்வதுக்கங்களையும் நீக்கி, ஆண்டு நெடும்போதிருந்து நியதியாகிய தெய்வத்தின் கதியையோர்ந்து பார்த்து, மீண்டும் பிரஜைகள் போற்றத்தன் நகரத்தையடைந்து அரண்மனைபுக்கான், விடிந்தபின் ஆண்டுள்ள சபாஸ்தானத்தில் அவித்தையின் சுபாவத்தைக்கண்ட அவன் எம்மைவேண்டிக் கொண்டு, ஹே முனீந்திரரே! சொப்பனத்தைப் பிரத்யக்ஷமாகக் கண்ட இவ்விதவரலாறு எங்ஙனங் கூடும்? என்று அதிவிஸ்மயனாய் வினவ அவனுக்கு வஸ்துவின் முறைப்படியேயாம் உண்மையயுபதேசித்ததும் அங்ஙன் யதார்த்தமாய தன்னை யுள்ளப்படியே மோகமின்றிக் கண்டனன், அந்தரிக்ஷத்தினின்றும் காற்றினல் அம்புதம் அகற்றப் பெறுவதேபோல் இருதயத்தினின்றும் சர்வசம்சயங்களையும் தூரத்தகற்றினன், ஒருமையுடன் அறிவேயாயினன். ஹே இராகவ! இந்தப்பிரகாரம் அவித்தையானது மகத்தான மயக்கத்தைத் தருவதென்று நீயறிந்து கொள்ளுதி.

(ச.) விந்தகிரியினின்று மீண்டு, மாயை = அவித்தை, நெடிதுகண்டான் = விலாசமாயறிந்தான், கருணையால் நானுரைப்ப யறிந்தமைந்தான், ஸ்ரீவசிட்டர்: வள்ளால் = இராகவ! மாமாயை = மகா அவித்தை, வன்மோகம் = அதிப்பிரமையை. (64)

(ஸ்ரீ - வீர - அ-கை.) மாயையின் வைபவத்தைக் கேட்ட ஸ்ரீ இராகவர் கனவிற் கண்டது நனவிற்றோற்றும் வகையென்னே யெனவினவலும் ஸ்ரீவசிட்டபகவான் விடைதருதலும்:—இலதென.

இலதுளதாமுளதில்தாமிம்மாயைவல்லபத்தாலென்னலோடுங்
கலனமுறுசொப்பனத்திற்கண்டதெலலாஞ்சாக்கிரத்திற்கண்டதென்னே
குலமுனிவவெனக்கேட்டவள்ளலுக்குமுனியுரைப்பான்கொடியமாயை
யலகறுமோகம்புரியுங்காதிகதையாலிதுமேலறியலாகும்.

(ப - ரை.) இலதுளதாம் = இல்லாதது உள்ளதாகும், உளதிலதாம் = இருப்பது இல்லாததாகும், இம்மாயை வல்லபத்தால் = இந்தமகா அவித்தையினது சாமர்த்தியத்தால், என்னலோடும் = என்று ஸ்ரீவசிஷ்டபகவான் அருளியபோது, கலனமுறு சொப்பனத்திற் கண்டதெலாம் = அஸ்திரமான கனவவத்தையிற் கண்டன யாவற்றையும். மீண்டும், சாக்கிரத்தில் = நனவவத்தையில் கண்டதென்னே = பார்த்ததன் காரணம் யாதோ, குலமுனிவ = எங்கள் குலத்திற்கு ஆசார்ய சுவாமிகளாகிய முனிநாதரே! எனக்கேட்ட = என்று வினவிய, வள்ளலுக்கு = சர்வபலதாதாவாகிய ஸ்ரீ இராகவருக்கு, முனியுரைப்பான் = ஸ்ரீ வசிட்டபகவான் அருளுவதாவது, கொடியமாயை மிகத் துன்புறுத்தும் மகாமாயையானது, அலகறும் அளவில்லாத, மோகம்புரியும் = மயக்கத்தைச் செய்யும், இது = இந்த விடயமானது, காதிகதையால் = காதிவிருத்தாந்தத்தால், மேலறியலாகும் = இனித்தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். (65)

(ஸ்ரீ - வீர.) இந்தமகா அவித்தையானது அதிவிரைவில் அசத்தைச் சத்தாக்கிவிடும் சத்தையோ அசத்தாக்கிவிடும் அத்தியந்தம் நிமிடத்தில் ஸ்ரீ இராகவர் வினுதல்:—ஹே பிரஹ்மத்தையறிந்த முனீசுரரே! சொப்பனம் ஜாக்கிரத்கால அநுபவயோக்யதையை யடைந்த இஃதெங்ஙன்கூடும் அருளுவீராக, பிரமோதாரத்திற் போலும் இப்பொருள் சித்தத்தில் என்னுடைய ஐயத்தை நீக்கவில்லை, ஹேபகவன்! இவ்வையம் கரையாமல் உள்ளத்தி லிருந்துகொண் டிருக்கின்றது என்ன; ஸ்ரீ வசிஷ்டர் விடையருளல்:—ஹே இராகவ! இவையாவுமே அவித்தையின் கண்ணே சம்பவிக்கவே செய்யும் என்றுணர்தி, எவ்வாறு சம்பவிக்கு மென்னிற் காட்டல். கடத்திற் படத்தைக் கண்டாம் கனுமயல் என்பதாதியில், கனவின் கட்டன் மரணத்தையுங் காண்பதுண்டு. ககனத்திற் செல்ல லும் உண்டுகனவில், இன்பநித்திரையேல் இரவுஞ்சிறிதாம், கட்குடித்தானுக்குக்கன்மலை யும் கதிசெய்யும், மேலும்பலவிதமும் மேவும், முகூர்த்த மிரண்டால், பன்னிரண்டு வரு டத்திய லவணராஜன் விப்பிரமம் சொப்பனமெனப்படும். பொருந்துருத் தன்மையவித் தையினுக்குப் பூஷணமாகுந் தூஷணமன்றும், பொருந்துறுமாயின் எங்ஙனமேனும், பொருந்துருதன்றோ வவித்தையாந் தகைமை என்னும் ந்யாயத்தான் பொருந்தாததை யும் பொருத்திவைக்கும் ஆற்றலமைந்த அவித்தையில் இஃதசம்பாவிதமாகாதாம் எனப் பரிகரிப்பார், அலகறும் மோகம்புரியு மென்றார். சிங்காசனத்திலேயே வீற்றிருந்தலவண ராஜனுக்கு இரண்டுமுகூர்த்தத்தால் பன்னிரண்டு வருடசம்பந்தமான மயக்கம், காலாந் தரத்தில் அவனுக்குண்டாய அம்மயற்குச் சபலப்பிரவிருத்தி ஜனகத்தன்மை, லவணப் பிரதிபைக்கும் சர்வபுக்க சப்பிரதிபைகட்கும் பரஸ்பரம் என்பனமுதவியவை அலகறு என்பதன் பொருளாம். இஃதுனக்குக் காதிப்பிராமணவிருத்தாந்தத்தில் மேலேவெட்ட வெளியாகத் தெரிந்துவிடும்.

(ச.) ஓடும், ஸ்ரீஇராமர், கலகமுறு சொப்பனத்திற் கண்டது = சொப்பனஞ் சத்தி யத்துவமானது, என்னே, எப்படி, இச்சந்தேகம் என்மனதை விட்டேகும்படி தேவரீர் அநுக்கிரகிக்க வேண்டுமென்று, கேட்ட+புரியும், காதி+லாகும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவித்தையின்பால் இவையாவுமே சம்பவித்தல் கூடியதே யாயினும் எதேனுமூகம் இயம்பத் தகுதியதேயாம் எனச்சங்கித்துக் கூறல்:—அவ்வாறு கவே சற்பிதத்தன்மை சமமேயாயினும் சம்வாத விசம்வாதங்களானே உலகத்தில் சத்தி யத்வ மித்தியாத்வ விவகாரம் ஆம், பரமார்த்த ஆராய்வாலின்றும் என்னுங்கருத்தாற் கூறல்:—காகன மன்னவென.

காகதாலீயம்போல்வாதனையின்வசத்திலுளங்கலந்துநிற்கு
மேகமுறத்தம்மிற்றுமென்றுணர்வினிலைநின்றோரியம்பாநிற்ப
ராகவினுன்முன்னுளிற்சித்தனுற்புலைச்சேரியாகக்கண்ட
மோகமதேபின்னுளுங்கண்டதுவேறன்றுநாமொழிந்தவேந்தன்.

மன்னவன்கண்டுளகனவின்மதிமயக்கந்தன்னையேமலையின்சார
லன்னவருநன்னினைவாலறிவுற்றார்லவணனுமறிவின்றேறற்ற
துன்னிவருகடையர்மனங்களிற்றோற்றக்கடையரெனத்தோன்றும்போத
மின்னநரபதிமனத்திற்றோன்றியதான்மாமாயையேதுசெய்யா.

(ப - ரை.) காகதாலீயம்போல் = காகதாலீய ந்யாயம்போல, வாதனையின் வசத் தில் உளம் = சித்தத்தின் சம்ஸ்காரத்தின் வயத்தினுல், கலந்துநிற்கும் ஏகமுறத்தம்

யிற்றும் = தானாகவே பரஸ்பரம் பெருத்த விவகாரங்கள் பலருக்கும் விரவியுண்டாம், என்றுணர்வின் நிலைநின்றோர் இயம்பாநிற்பர் = என்று அறிவின் நிலையில் நின்றவர்கள் கூறுவார்கள், ஆகலினால் = ஆதலினால், முன்னுளிற் சித்தனால் = பூர்வம் சித்தனால், புலைச்சேரியாகக் கண்டமோகமதே = நீசக்கிராமமாகப் பார்த்தமயக்கந்தானே, பின்னும் = பிற்போதிலும், கண்டது = பார்த்தது, வேறன்று = அயலல்லவாம், நாமொழிந்த வேந்தன் = யாமியம்பிய லவணராஜன்.

மன்னவன்கண்டுள கனவின் மதிமயக்கந்தன்னையே = லவணராஜன் பார்த்ததான சொப்பனத்தின் புந்திமயக்கந் தன்னையே, மலையின்சாரல் = விந்தியபர்வதத்தின் தாள்வரையில் வாழ்ந்த, அன்னவரும் = அக்கடையரும், நன்னினைவால் அறிவுற்றோர் = திண்ண எண்ணத்தால் தெரிவுற்றோர், லவணனும் அறிவின்றோற்றம் = லவண்சம்பந்தி பிரதிபையானது, துன்னிவருகடையர் மனங்களில் தோற்ற = அச்சேரியில் நெருங்கியிருந்த நீசர் உள்ளங்களில் ரூடமாக, கடையரெனத் தோன்றும் போதம் = விந்தியபுக்கசசம்பந்தியானபோதம், இன்ன நரபதிமனத்திற் றோன்றியதால் = இந்தலவணனது சித்தத்தில் தோற்றியது இது காரணங்கொண்டு நாடின், மாமாயை எதுசெய்யா = பெருமை பொருந்திய எக்காரியத்தைத்தான் செய்யமாட்டாது; எதனையுமே செய்யுமென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) காகத்தின் தாலதருசம்யோக சமயத்திலேயே தெய்வயோகத்தால் அப்பனையிலிருந்த பழம்வீழ்தல் காகதாலீயமாம், இந்நியாயம்போல; சித்தத்தின் ஒப்பாயமயனை யுண்டாக்கும் வாதனையின் வயத்தினாலே, சுபாவமாகவே, வேறுநிமித்த மில்லாமலே அபின்னவடிவ விவகாரம் பரஸ்பரம் சம்வாதஞ்செய்வதாக ஆம். அதிலுற்றவர் சமான அருத்தத்தைப் பஜிப்பவர் ஆவர். அவர்கள் மகாகாரிய சம்பந்தமான விவகாரங்களை யுடையவர்கள் ஆவர்கள் ஸ்ரீமகாபாரதத்தில் இங்ஙன் ஸ்மரிக்கப் பெறுகின்றதுஃ= போரிற் பொன்றிப்போய் நானாலோகங்களை யடைந்தவர்களாகிய துரியோதனாதிகளை ஸ்ரீ வியாசபகவான் திருதராஷ்டிராதி சோகமகற்றற் பொருட்டு அந்த அந்தலோகங்களினின்றும் தவமகிமையாற் கொண்டுவந்து சேர்ப்ப, அவர்கள் திருதராஷ்டிர ரோடும் பாண்டவரோடும் மங்கையரோடும் ஒருங்குகூடிய மகாரம்பவிவகாரங்கள் சம்வாதிகளாயினவாம்: சதசின்கண்ணே வீற்றிருந்த இராஜாவினால் ஐந்திரஜாலிக சேஷ்டையால் எக்காற்சபாரலயத்தில் காணப்பெற்றதோ அக்கால்எவ்வெவ்வவித்தை யுல்லாசமாயதோ அதாவது விவர்த்தமாயதோ அவ்வதுவே அன்னியதினத்திலும் உல்லாசமாய தென்பது துணிபாம். அக்கால் இலவணனால் விரைவாகக்கண்ட எச்சொப்பன விப்பிரமமுளதோ அதுவே விந்திய புக்கசசித்தங்களாலே யுணரப்பெற்றதாம். பிரதிபை பேதகற்பமாயினும் அவ்வாறே, ஓரிடத்தி லுண்டாயதற்குத்தானே ஈரிடத்திலும் புலப்பாடு சம்பவித்தலின் என்னுங்கருத்தால் உரைத்தல்:—லவணனும் என்பது. லவணராஜசம்பந்தியாய பிரதிபைவிந்திய புக்கசசித்தத்தில் ஆரூடமாயது அதாவது லவணனது சித்தத்தில் யாதுதோற்றியதோ அத்தகையதே விந்தியபர்வதத்திருந்த புக்கசசித்தங்களிற் றோற்றியது என்பதாம், விபரீதமென் ஆகவில்லையெனின் ? உரைத்தல்: கடையர் என்பது விந்திய புக்கசவுணர்ச்சியானது பார்த்திவன் மனதிற் பாய்ந்தது. பிரதிபையதன் விடயங்களின் சம்வாதத்தில் திருஷ்டாந்த மிதுவாம்: வெகுகவிகளின் மாநச உற்பிரேக்ஷாரசித காவியார்த்தப் பிரதிபாதகவசனம் ஒருகால் ஒப்பானதாகிச் சப்ததத்தானும் அருத்தத்தானும் சம்வாதி யாதலேபோல லவணபுக்கச பிராந்திரூப சொப்பனத்திலும் காலமுந்தேசமும் கிரியையும் ஆமென்பதாம்.

(ச.) காகம் வருதற்கும் பனைவிழுதற்கும் உள்ள அநிச்சாசம்பந்தம் காகதாலீயமாம் அதுபோல், வாசனையின் வசத்தில் = வாசனைவசத்தினாலே, உளம் = சித்தத்தில், இருக்கும் விவகாரங்கள், தம்மிற்றும் = அந்நியோந்நியம், ஏகமுறக்கலந்து நிற்கும் = ஏகரூபமாயிருக்கும், ஆகையினான், அதனையே விவரணஞ்செய்தல், முன்னாளில் = முற்றினத்தில். சித்தனால் = ஐந்திரசாலிகனது மயிற்றோகையின் சுழற்சிரூபமான சேட்டையால், நாமொழிந்த வேந்தன், மோசமதே = அவித்தையே, பின்னாளும் = மறுதினத்தும், கண்டது = கண்டவிலாசமாம்.

மன்னவன் = இலவண அரசனால், அக்காலத்தில், கண்டுளை, கனவின் மதிமயக்கந்தன்னையே = சொப்பனரூபப் பிராந்தியையே, அறிவுற்றார் = அநுபவித்தார், அறிவின் றோற்றம் = சமஸ்காரத்தால் எழுந்தபிரதீதி, அன்னவரும் = விந்தகிரியிலுள்ள தோன்றியதால், அன்னியனது பிராந்தி அன்னியனிடத்தில் ஸ்புரணமாமென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) ஆயின் யாங்ஙனம் மயல் விவகாரத்திற்குச் சத்தியத்தகைமையென ஆசங்கித்துக்கூறல் ஆயினென் அதுவிவகாரகதி அத்தியந்தமில்லாததா வெனின் இன்றெனில் :—தோன்றியவென.

(ச-அ.) பிராந்திக்கு விவகாரயோக்கியத்துவ மெப்படியெனிற் கூறல்:—தோன்றியவென.

தோன்றியவைவிளக்கத்தாலுண்மையாமைம்பொறிக்குந்தொடர்பாய்நிற்கு
மான்றபதார்த்தங்களெலாமறிவினாலொழிந்துண்மையாகமாட்டா
வேன்றறிவானறிபொருளாமிரண்டினிடையறிவானுக்கியைந்தரூப
மூன்றியறிபொருளறிவானறிவிவைவுற்றிடுவதுயர்ந்தவீடு.

(ப - ரை.) தோன்றியவை விளக்கத்தால் = தோற்றுகின்ற பதார்த்தங்கட்குப் பிரதிபானமாதலினானே, உண்மையாம் = சத்தையுளதாம், ஐம்பொறிக்குந் தொடர்பாய் நிற்கும் = பஞ்சேந்திரிய விவகாரகதியை யடைந்துநிற்கும், ஆன்றபதார்த்தங்களெலாம் = எத்தகைய பெருமை பொருந்தினவாயினும் எல்லாப்பொருள்களுமே, அறிவினாலொழிந்துண்மையாக மாட்டா = சம்வேதனத்தை விடுத்து அயற்சத்தையாகாதாம், என்று அறிவான் அறிபொருளாம் இரண்டினிடை = திருஷ்டாதிருசியங்களின் சம்பந்த முண்டாகியவழி அவற்றின் மத்தியில், அறிவானுக் கியைந்தரூபம் = திருஷ்டாவிற்கு எச்சொரூபமுளதோ, ஊன்றியறிபொருள் அறிவான் அறிவு இவையில் = அழுந்தியறியுந் திருசிய திருஷ்டாதெரிசனாதி வர்ஜிதமான அச்சொரூபமாய் உற்றிடுவது உயர்ந்தவீடு = துவம்பதலக்ஷிய தற்பதலக்ஷியங்கள் ஒன்றுபட்டுறைவது பரமமேயாய மோக்ஷமாம்.

(ஸ்ரீ - வீர.) விவகாரகதியையுடைய அதற்குப் புலப்பாட்டானே சத்தையுளதாம்; கேவலம் விவகாரசொரூபமாய இதற்கே பிராதிபாசிகசத்வம் என்பதாக இன்றும்மற்றே எல்லாவுலகுக்குமே யவ்வாறும் எனல்: ஆன்றபதார்த்தம். அதிஷ்டான சிற்சத்தையானே சர்வவஸ்துசத்தா சுவாதந்திரியமாகவோ இலதாம் எனல்: ஆன்றவென்பது. கனப் பொருட்கட்கேபோலும் நனவிலும் எல்லாப் பொருட்கட்கும் பிரதிபாசத்தையொழித்து அயற்சத்தை யிலதாம், சம்வேதனமே சத்தையாம், சம்வேதனதசையிலேயேசத்தையாமென்பதுபொருள், அல்லது விளக்கத்தா லென்பதேனும், அறிவினாலென்பதேனும், அதிஷ்டான சைதன்யத்தைக் கூறும், கூறுவதாகவே, கற்பிதங்கட்கு அதிஷ்டானமே சத்தையென்பது பொருளாம், சம்வேதன சத்தையே, பூதபவ்யபவிஷ்

யத் பிரபஞ்சத்திருப்பதாய்ச் சம்வேதனத்தினும் இதரமென்ன இலங்காநிற்கும்; அறலிற் றிரைபோலும் விரையிற்றருப் போலுமாம். பிரகாணார்த்தத்தைப் புத்திசௌகர்யப்பொருட்டு ஈற்றிற் சுருக்கியுரைத்தல்: —என்று என்பது. திருஷ்டாவிற்கும் சப்தாதி திருசியங்கட்கும் காண்பான் காண்பொருள்வடிவ இலக்கண சம்பந்தமுண்டாயவழி உளவாய அநேகங்களின் மத்தியில், திருஷ்டாதிருசிய தரிசனங்களின் உள்ளே, புட்பங்களிற் சூத்திரம்போலும் தொடர்ந்து நின்ற திருஷ்டாவின் எவ்வடிவுளதோ = சாக்ஷியின் எச்சொரூபமுளதோ, திருஷ்டா தரிசனதிருசியாதி வர்ஜிதமாக எச்சொரூபமுளதோ, திருசியாதியிலதேனும் சுழுப்திசமாதிகளில் அதன் சாக்ஷிக்கிருப் புண்மையின்; திருஷ்டா தரிசன திருசியபல வர்ஜிதமாய அவ்விச் சோதித துவம்பதார்த்தரூபதற்பத லக்ஷியம் பரமேயாம். அல்லது திருஷ்டாவிற்கும் திருசியங்கட்கும் முன்மொழிந்த சம்பந்தமுண்டாகியவழி பவித்தவற்றின்மத்தியில், முன்பின் விருத்திகளின் சந்தியில், ஜீவனது எச்சொரூபமுளதோ அதுவும் காண்போனுந் தன்மையானே தரிசனாதிகளானே வர்ஜிதமாம், அவ்விச்சோதிததுவம் பதார்த்தரூபதற்பதலக்ஷியம்பரமேயாம். சலமொன்றே தரங்காதி தாருவொன்றே சாலபஞ்சிகை = பதுமை, நிலமொன்றே கும்பமாதி நிகிலமும்மயலொரேசிவம். கும்பாதியிற்றொடர்ந்து நின்ற அதிஷ்டான சாரபூத மண்வடிவமொப்பக் காண்போனாதிதிரிபுடியிற் றொடர்ந்து நின்ற அதன் சாக்ஷிசின்மாத்திரத்தைத் திரிபுடித்தியாகவாயிலாகக் காட்டல். என்றவென்பது. அம்முன் காட்டிய எப்பரம் பிரஹ்மமுளதோ அது இச்சாரபூதலக்ஷிய பிரத்தியக்குவின் சொரூபமேயாம் என அகண்டவாக்கியார்த்தம் காட்டப் பெற்றதெனக் கண்டுகொள்க.

(ச.) தோன்றியது = வெளிப்பட்டவவ்விவகாரகதி,விளக்கத்தால் = பிரதிபானத்தாலேயே,உண்மையாம்,யாதொருகாரணத்தினால் பதார்த்தங்களெல்லாம்=சர்வபதார்த்தங்களும், அறிவினொழிந்து = அறிவுக்குவேறாய், உண்மையாகமாட்டா = சத்தையாகாதோ அறிவேபகவதியாமென்பதும் விடயமுண்மையாதற்குச் சரணமென்பதும் நியாயமாதலின் என்பது கருத்து, இப்போது இராமரைநோக்கி யிதமுபதேசித்தல்: என்ற+இடை = திருட்டாதிருசிய சம்பந்தங்களின் மத்தியில், அறிவானுக்கு = ஆன்மாவிற்கு இயைந்தரூபம்; யாது அஃதெத்தன்மையது எனச் சங்கைவரில் நிச்சயித்துத் தெரிவித்தல்: ஊன்றியறிபொருளறிவானறிவினையற்றிடும் = திருஷ்டா முதலிய உபாதிவர்ச்சிதமாம், சர்வகதமானசைதந் நியமாத்திரமென்பதுபொருள்; இதுவேயுயர்ந்த வீடு = இவ்விசுத்தசைதந்நியமே பரம்பிரம மென்பது பொருள். (68)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதற்குத் திரிபுடிசூனியத்தன்மை யெய்பேது பிரசித்தமெனிற்கூறல்:—ஓரிடமென.

ஓரிடம்விட்டோரிடத்தேயுள்ளமுறிலவற்றினடுவுண்மையாகிப்
பேரிலதாயுணர்விலதாய்ச்சடமிலதாயதுநீயாய்ப்பிரியேலென்றுங்
கூரியபுந்தியினாலேயூகித்துக்குடும்பியெனுங்குறிப்பைமாற்றித்
தூரியதாம்படிமனத்தின்றுவக்கறுத்தேயிருந்தபடிதுணிந்துநிற்பாய்.

(ப - ரை.) ஓரிடம் விட்டோரிடத்தே யுள்ளமுறில் = தேசத்தினின்றுந் தேசமயலையடைதரிற்சித்தம், அவற்றினடுவுண்மையாகி = அவற்றின் மத்தியலிருப்பதாகி. பேரிலதாய் = பெயரற்றதாய், உணர்விலதாய் = சேதனமற்றதாய், சடமிலதாய் = ஜாட்டியமற்றதாய், யாதுளதோ, அது நீயாய் = அதுவே நினதுவடிவாய், பிரியேலென்

றும் = எப்போதும் தன்மயமாவாய்; கூரியபுந்தியினாலே = அதிசூக்கும மதியினாலே, யூகித்து = ஊகஞ்செய்து, கும்பியெனுங்குறிப்பைமாற்றி = பவபாவனையின்றும் முக்தனாய், தூரியதாம்படி = வெகுதூரத்திலோடிப்போமாறு, மனத்தின்றுவக்கறுத்தே = மனத்தைப்பரித்தியாகித்து அமனஸ்கனாகி, இருந்தபடி துணிந்துநிற்பாய் = எதுவாயுள்ளாய் அதுவாகவேயெப்போதுமிருந்து நிரமாயிலங்குவாய்.

(ஸ்ரீ - வீர.) ஓரிடம்விட் டென்பது முன்னர் வியாக்கியானிக்கப் பெற்றது. சித்தமானது விடயத்தினின்றும் வேறுவிடயத்தை யடைந்தவழி, பூர்வ உத்தரவிடய ஞானங்களின் அந்தராளத்தில், சித்தத்தை யுபாதியாகவுடைய ஜீவனது எவ்வபுவானது = சொரூபமானது, உளதோ சுழுப்திசொப்பனஜாகரித வர்ஜிதமான அதன் மயமாகவேத தான்ம நிஷ்டனாகவே பவிப்பாயாக வெப்போதும். அஜாட்யசம்வித் மனனமென்பதாய மூலத்திற்கு, ஜடபாவம் விவசாயஞானம் ஸ்மிருதி யென்பவற்றினும் விலக்ஷணமானதெனப்பொருள் கொள்ளினும், அல்லது விடயம் விடயஞானப் பிரமாணம், ஞாதாவென்னும் மூன்றும் அற்றது எனப் பொருள்கொள்ளினும் அமையும். இரண்டன்மத்தியில் ஒருவிடயமு மின்மையின் அஜாட்டியமாம், அதனானே விடயகோசரஞானமும் இல்லை. அதனானே விடயீகரிக்கும் வேலையுமில்லை யென்றுணர்க. நிருவிகற்பனாகி யென்பது துணிபு. ஜாக்கிரத் சொப்பன சுழுப்தியற்ற நினது எச்சநாதன வடிவமுளதோ, சித்த விருத்திரகிதமாயும், சேதனதருமபூத அவஸ்தாத்திரய ரகிதமாயும், பிரஞ்ஞான கனமாயும், நிர்விகாரமாயும்,எல்லாவஸ்துக்களையும் இலக்குவதாயும், உள்ள அதன்மயமாகவே= ததேகரசனாயே, சந்ததமும் சுகியாகவாழ்வாய். ஜடத்தன்மை யொன்றை யொழித்து. சிலையின் இருதயம் = கனம், சிதேககனம் யாதுளதோ; பாஷாணத்தின் அப்யந்தர சொரூபமானது ஜடத்தன்மை யொன்றை விடுத்து ஒருகாலிருக்குமாயின் எவ்விதமாயிருக்குமோ, இயற்கையாகவே மநோரகிதயாய அவ்விதமாகவே அதன் நிஷ்டாபரனாகவேயாகி; அதற்கொப்பான சொரூபநிஷ்டனெப்போதும் ஆகிவாழ்வாய். அம்மயமாக இருக்கும் நீ சமாதிஸ்தனாக இருந்தாலும் விவகாரபரனாக இருந்தாலும் சுகியேயாவா யென்பது திண்ணம். மூலத்தில் சிலையின்பாகிய சொரூபம் பதார்த்தாந்தர சங்கியாதலின் அசங்காத்ம சொரூபத்திற்குத் திருஷ்டாந்தம் ஆகாதெனக்கருதியே சிலையின் இருதயம் எனப்பெற்றது என்றறிக. எக்காரணத்தால் அவிவேகத்தாற் சமுசாரமாயதோ அக்காரணத்தால் விவேகத்தின் பொருட்டே முயற்சிசெய்ய வேண்டுமெனல்: கூரிய என்பது. சித்தத்தை யதிதூரத்திற் பரித்தியாகித்து எஃது ஆயிருக்கின்றாய் அஃது ஆகவே அதிதிடம் பெறுவாய்; சமுசாரபாவனையி னின்றும் முக்தனாகிச், சுருதியநுகூலமாயும் அத்தியந்தம் திடமாயுமுள்ள யுக்தியோடு கூடினவனாகி, மனனத்தியான பரனாகிச் சுகியாக வாழ்தி.

(ச.) ஓரிடம் விட்டோரிடத்தே யுள்ளமுறில் = சித்தம் விடயத்தினின்றும் விடயாந்தரத்தை யடையின், அவற்றினடு= அந்தராளாவஸ்தையில், உண்மையாகும்=உள்ளதான; சித்தத்தின் சொரூபயாது அஃதெத் தன்மையதெனில், மனனமென்னும் பேர் = மனோதன்மமும், உணர்வு = சேதனதன்மமும், சடம்=விடயகன்மமும், ஆகிய மூன்றும், இலதாம் = இன்மையதாம், சின்மாத்திர மென்பதுபொருள். அது நீயாய்ப் பிரியேலென்றும் = எப்போதுமதுவே ஆன்மாவின் சொரூபமெனப் பாவிப்பாய், அவஸ்தாத்திரியோபாதிரகிதமான நினதுசர்வா வஸ்தைகளினும் அநுசூதமும் திருஷ்டிருத்ருவோபாதிரகிதமும் திருசியவிலக்ஷணமும் ஆனசொரூபம்யாது, அதுவே என்றுந்தற்

சொரூபமெனப் பாவிப்பாய், சிலையினிருதயம்போலச் சங்கற்பவிகற்ப சூனியமும், ஜாட்டியவர்ச்சிதமும் ஆனரூபமே என்றுந் தற்சொருபமாகப் பாவிப்பாய், குடும்பியென்னுங் குறிப்பைமாற்றி = திருசியப் பிரபஞ்ச வாசனையினின்றும் முக்தனாய், கூரியயுந்தியிலுலே யூகித்து = பரமயோகத்தோடு கூடினவனாய், தூரியதாம் படிமனத்தின்றுவக்கறுத்து = சங்கற்பாதியை யத்தியந்தம் விட்டு, இருந்தபடி = எத்தன்மையான ரூபனுனோ அத்தன்மையான ரூபமேயோ மென்பதுபொருள். ஆதலின் துணிந்து நிற்பாய் = விக்ஷிப்த சித்தத்தை விட்டிருப்பாய். (69)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாதனையே யந்தமாதலின் அதனைப்பெரிதும் முயன்று க்ஷயம் செய்து மனதையடக்கெனல்:—பிறப்பென.

பிறப்பிறப்பாம்பூட்டைதனைப்பிணித்துழற்றும்வாதனையாம்பெரியபாச
மறப்பெரியமுயற்சியினுலறுத்திடுவாய்பரமமாமறிவின்முன்னே
புறப்படும்பொய்யாமுள்ளாம்புவனவிகற்பங்களெனும்பொய்யைக்காட்டுஞ்
சிறப்பிளவிண்ணிலதாயுமிலதானநீலநிறஞ்செறிவதேபோல்.

(ப - ரை.) பிறப்பிறப்பாம் பூட்டைதனை = சமுசாரமாகிய ஏற்றத்தை, பிணித்துழற்றும் = பந்தித்து மேலுங்கீழும் அலைவிக்கும், வாதனையாம் பெரியபாசம் = வாசனையாகிய பெரியவடத்தை, அறப்பெரிய முயற்சியினுல் = அத்தியந்தம் பெரியபிரயத்நத்தினுல், அறுத்திடுவாய் = சேதிப்பாய், பரமமாம் அறிவின்முன்னே புறப்படும் பொய்யாம் உள்ளம் = பரமாத்ம தத்துவத்தினின்றும் பூர்வம்பொய்யாகிய மனமானதுண்டாம், புவனவிகற்பங்களென்னும் பொய்யைக்காட்டும் = அதனது விகற்பஜாலங்களால் விஸ்தார இச்சகவிகற்பத்தை மித்தையாகவே தோற்றுவிக்கும், சிறப்புளவிண்ணிலதாயும் = அவகாசவிசேட வியோமம் ஆகிருதியற்றதாயும், இலதான நீலநிறஞ் செறிவதேபோல் = சூனியமான நீலவர்ண அத்தியாசத்திற்கதிஷ்டானமாவதேபோலும்.

(ஸ்ரீ - வீர.) சமுசார உக்கிர ஆரகட்டயந்திர இரஜ்ஜு—வாசனையைக் கெடுத்தியென்பதாம்; பெருமுயற்சியானே வாசனைப்பாசமறின் சமுசாரயந்திரம் சிறிதுமசையாது கெடும். அரைக்கும் யந்திரக்கீழ்ச் சிலையிடைச்சங்கில், திரியக்குக் காஷ்டப்பிராந்தத்தில் ஆரோபிதமாம், இதனுனே மேற்பேஷண பாஷாணத்தை வகிக்கும் சீலமுடைய தாமக்கயறு; அவ்வாறே ! பிருதிவி கீழ்யந்திரசிலைபோலும், மேருவதன் சங்குபோலும், ஜோதிச்சக்கிரம் மேற்சிலையந்திரம் போலும், வாசனையிற் கட்டுண்டவுலகங்காணப் பெறுகின்றதென்பது கருத்தாம். விஸ்தாரமாக விளம்பியபிரகரண அருத்தத்தைச் சங்கிரகித்துக்காட்டி யுபசங்கரித்தல்:—பரமுமென்பது. எங்ஙனம் சூனியமாகிய ஆகாயத்தால், அசத்தாயினும் நீலத்தகைமை சர்வஜன அநுபவத்தால் உல்லாசிதமாய், கீழ்முகமாகக் கவிழ்த்தப்பெற்ற, வர்ணமிகுந்த இந்திரநீலமணிமய மகாகடகம்போலும் நீலமாக ஆகாயம் காணப்பெறுகின்றது என் உவமையுற் பிரேக்ஷையாதி யோக்கியமாகமிக அழகாய்க் கூறும் வாக்குவிவகாரம் உடையுதானவ்வகையாய் வித்தரிக்கப் பெற்றுளதாமோ; அங்ஙனம், பரமாத்மதத்து வத்தினின்றும் முன்னர் மனமானது நன்குண்டாயது, அம்மனத்தானும் இவ்விஸ்தாரமாய வுலகமானது தனது விகற்பஜாலங்களால் காட்டப்பெறுமென்பதாம். பரமான்மாவினின்று முண்டாய அற்புதமான அநிர்வசநியமனத்தால் அநிர்வசநீயமானஜகத்துக் கற்பிக்கப்பட்டுள தென்பதாம்.

(ச.) பூட்டைதனை = ஏற்றமரத்தை, உருளையை யென்பதே சிறப்புபாசம் = கயிற்

றை, அறுத்திவோய், இராகவா நீ சேதிப்பாய், உற்பத்திப் பிரகரணத்திற் கூறியபொருளைச் சுருக்கிச்சொல்லுதல்:—பரமமாமறிவின் = பரமான்ம தத்துவத்தினின்றும், உள்ளம் = மனதே, முன்னே புறப்படும் = முன்புதித்தது, பொய்யாம், அம்மனம் உண்மையாகக் கற்பிதமேயாயினும், புவனவிகற்பங்க ளெனும் பொய்யைக் காட்டும் = சூனியமான அவாந்தர பேதமாகிய ஜகத்தைச் சிருட்டித்தது, விண்ணிலதாயும் = ஆகாயஞ் சூனியமாகினும், வியாபகமாய் இலதான = சூனியமான, சிறப்புள நீலநிறம் = காந்திமிகுந்த நீலத்தன்மை, செறிவதேபோல்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதனானே நிமித்தம் நீங்கியவழி நைமித்திகம் நீங்கிப்போமாதலின், நிர்மலாத்மமாத்திர பரிசேட சித்தியெனல்:—சோகமென.

சோகமுறுசங்கற்பநாசத்தான்மனமாளிற்றொன்றுதொட்ட
மோகமெனுமூடுபனிவிட்டகலுஞ்சாற்காலமுதிரவந்தான்
மாகம்விளங்குவதென்னநல்லறிவுமாத்திரமாய்மாயாதாகி
யேகமாய்வடிவின்றிப்பிறப்பிறப்பிலாப்பிரமமிலங்குநொய்தாய்.

(ப - ரை.) சோகமுறு சங்கற்பநாசத்தால் = துயரைத்தரும் சங்கற்ப சங்க்ஷயத்தால், மனமாளில் = சித்தம் கழியில், தொன்றுதொட்ட = வெகுகாலமாகப் பீடித்திருக்கும், மோகமெனும் மூடுபனி = சமுசாரமோக மூடுபனியானது, விட்டகலும் = விட்டுநீங்கும், சாற்காலம் முதிரவந்தால் = சரத்ருதுவானது வளர்ந்து வந்தால், மாகம் விளங்குவதென்ன = ஆகாயம் சொச்சமாக விளங்குவதேபோல, நல்லறிவுமாத்திரமாய் = கேவலஞ் சின்மாத்திரமாய், மாயாதாகி = அநந்தமாய், ஏகமாய் = ஒன்றாய், வடிவின்றி = நிராகாரமாய், பிறப்பு இறப்பு இலா = அஜமாய் அமரமாய், பிரமம் = சிவசொரூபமாகியதானே, இலங்கும் நொய்தாய் = அதிசுக்குமமாய் விளங்கிக்கொண்டிருக்கும்.

(ஸ்ரீ - வீர.) சங்கற்பமுற்றினும் அற்றொழியும் வாயிலாக மனமானது அழிவுறவே, சமுசாரமோக மிகிகை = பனி, மிகிகை = தூமாகாரமேகம், கழிந்துபோம் போகவே சாற்காலமானது நன்றாகவந்துவிடின், ஆகாயம் தெளிவாக விளங்குவதென்ன, அதி தெளிவாகப் பிரத்தியக் கான்ம வடிவமாய் இருதயத்திற்றானே சின்மாத்திர ஏக அஜராமரண அஜ ஆநாதியநந்த சதாநந்தப் பிரஹ்மமிலங்கும்.

(ச) சங்கற்பநாசத்தால் = சங்கற்பங்களின் அழிவு பாட்டால், சமுசாரமாகியமோகமெனு மூடுபனிவிட்டகலும், அன்றியும் சாற்காலம்வரின் வான்போல் சின்மாத்திரமான ஆன்மசொரூபஞ் சொச்சமாய்ப் பிரகாசிக்கும் என்பது பொருள்

உற்பத்திப் பிரகரணம் முற்றிற்று.

—————

# திதிப்பிரகரணம்

## சுக்கிரன் கதை.

இங்கெதுதனது மகிமையாலுலக வெழில்வடி வனைத்தையுந் தாங்கிப்
பங்குறுபலவென் னுயிர்மதியதனுற் படர்மயலா லவற்றுடும்
பொங்குறு சுருதிவிதிதமாயபயபூரணானந்தமெய்யறிவாய்த்
தங்குயர்தனது வடிவதாம்வீரத் தந்தியினிணைமலர் பணிவாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உற்பத்திப் பிரகரணத்தில் "எதினின் றிவையெலா மெழு கின்றனவோ" என்றற்றொடக்கத் தனைவாய எல்லாச் சிருஷ்டிப்பிரதிபாதக வாக்கியங் கட்கும், அத்வயப் பிரஹ்மத்திற், சகத்தத்தியாரோபப்பிரதரிசன வாயிலாகத் தடஸ்த லக்ஷணத்தன்மையானே தாற்பரிய விசிராந்திப் பிரதரிசனமுகமாக, ஜகத்ஜீவாதி பேதத்தை விலக்கிப்பிரத்தியக்குப் பிரஹ்ம ஏகரசமுண்மை விசேடமாய் விளம்பப்பெற் றது. இப்போது, "உண்டாயின வெதனல் வாழ்வுறுமே" "வானும் மண்ணும் வற் புறுமெதனல்" "இவ்வக்கரத்தி ஞணையிதானே, செவ்வர்க்கன் மதிசெறிதர நிகழும்" "இவ்வின்பம் பரமில்லையேயாயின், கவ்வெவனின் பிணைக்கதுவுவனலது, எவ்வெவன் வாழுவ னிவனேதானே, இவ்வெலாருக்கு மின்பினையியற்றுவன்" "இவனுக் கஞ்சியே யியங்கிடுங்காற்றே" "ஒருவனே சருவவுலகையுந் தாங்குவன்" "எவ்வொருவன்றன் ஜாலவானியக்கும் பவ்வியப்படுத்தும் பரமசக்திகளால்" "அறனுறாவேயாமயமாத்மா. மனுமுயிரெவைக்கு மகிழ்தனையீயும்." என்பதாதி நிகழ்காலத்திய நிகிலவுலகத்திதி நிர் வாகத்தன்மையை நிகழ்த்தாநின்ற நீண்மறைகட்கும், "சத்தேசௌமிய சகத்தின்முன் னிருந்தது" 'ஆன்மாவொன்றே வகிலமுன்னிருந்தது" என்பதாதிப் பிரளயகாலிக ஜகத்சத்தா நிர்வாகத்வப் பிரதிபாதக சுருதிகட்கும், புருடமதி வைசித்திரியத்தாலுண் டான நானுதாற்பரிய உற்பிரேக்ஷணத் தோடுற்றபிராந்தி வைசித்திரியநீக்கத்தால், சச்சி தாநந்த ஏகரசப் பிரஹ்மத்தில், சற்சித்ரூபத் தன்மையின் உப்பாதனத்தால், தடஸ்த லக்ஷணதாற் பரியபரியவசானப்பிரதரிசனவாயிலாகவும், விஸ்தாரமாக விளம்பப் பெற்ற பிரஹ்மாத்மைக்கியஞானம் திடப்படும் பொருட்டுத் திதிப்பிரகரணத்தைத் தொ டங்கும் ஸ்ரீ வசிஷ்டபகவான் ஏது சங்கதியைக் காண்பித்து உற்பத்திப் பிரகரணனந் தரம் திதிப்பிரகரணத்தைக் கேளெனப் பதிஞ்ஞைசெய்து பின்கூறல்:—எழுதுவோ னென்பது.

(ச.) முற்பிரகரணத்திற் சகம்மனோ விலாசத்தினு லுற்பன்னமாயிற்று, அதுவும் யோசத்தான் மனோவிலாச நசிக்கின் நசிக்குமெனப் பட்டது. இப்பிரகரணத்தில் மன த்தினின்றும் உற்பன்னமான ஜகம்மனதின் கண்ணே இருக்கின்றதென்றும், மனதுந் தனக்குக் காரணமான ஆன்மாவின்கண் ணிருக்கின்றதென்றுஞ் சொல்லப் படுகின்றது; இதிற்சுக்கிரன், தாமாதி, வீமாதி, தாசூரன், உபதேசமும் என்னும் ஐந்துகதைகள் உள, அவற்றில் இப்போது மனோமயமான திருசியம்மனதோடு ஆன்மாவின்கண் ணிருத்த லின், ஆதாரமாக ஆன்மாவைத் தெரிவித்தற்கு ஆதேயமான திருசியத்தைக் கூறல்:— எழுதுவோன் என்பது.

எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளுமிலதாகி
வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று மோவியந்தான்
பழுதின்மேவுந் தனைத்தானே பாராநிற்கும் பலபொறியு
நழுவுதுயிலி னுலன்றிநனவான் மேவுங்கன வொக்கும். (1)

(ப-ரை.) எழுதுவோனும் எழுதிடமும் எதிர்காண் பொருளும் இலதாகி=கருத்தா வின்றியும், ரங்கமின்றியும், திருஷ்டாவின்றியும், வழுவிலாத விண்ணிடையே = தெளி வாக இருக்கும் ககனத்தில், வந்துதோன்றும் ஓவியந்தான் = உதித்தெழுந்திலங்கும் சித்திரம், பழுதின்மேவுந் தனைத்தானே பாராநிற்கும் = குற்றமற்றிருக்கும் தன்னைத் தானே யநுபவிக்கும், பலபொறியும் நழுவும்=சர்வேந்திரியங்களும் உபரமமான, துயிலி

ஞலன்றி = நித்திரையினுலன்றி, நனவான்மேவும் = ஜாக்கிரத்தான்மேவும் கனவொக்கும் = சொப்பன தரிசனமாம். (1)

(ஸ்ரீ - வீர.) அகர்த்ருகம் = ஹேது கரணோப கரணசம்பன்ன எழுதுவோன் இல்லாதது, அரங்கம் = உபாதானரஞ்சக திரவியமுமற்றது, விண்ணிடையே என்றதால் ஆதாரச்சுவர் முதலன வில்லாமையும் சித்திரத்திற்குக் காண்பிக்கப் பெற்றதாம் திருஷ்டாவிற்கும் திருசியத் துள்ளடங்குந் தன்மையுண்மையின் காண்போன் இல்லதாமெனப் பட்டது, மோகநித்திரையில் பிரமாதாவிற்குக் குன்றுதல் இருப்பினும் சாக்ஷிக்குக் குன்றுதலின்மையின் துயிலினுலன்றி யெனப்பட்டது. அகர்த்ருகமாயும் அரங்கமாயும் அத்ருஷ்ட்ருகமாயும் ககனத்தில் சித்திரம் இனிதெழுந்தது சுவாநுபவமும் நித்திரையில்லாதும் கனுக்காண்பதுமாம், துயிற்கனு வென்பதின்றி நனுக்கனுக் காணும், அசன்மயமேயாயினும் மயன்மாத்திரமாகத் தோற்றும், வரும்புர நிர்மாணமே போலும், குரங்குகுன்றி மணிக்கொத்திற் குளிர்காயலே போலும் கந்தர்வபுரந் தோற்றலேபோலும், கானனீர் தோற்றலே போலும், கற்பனைப் புரம்போலும், கனுமேலேபோலும், கதைப்பொருள் காணல்போலும் என அறிந்துகொள்க.

(ச.) ஸ்ரீ வசிட்டர். சித்திரமென்பது ஒருகருத்தனுல் ஒருபித்தி முதலிய மூர்த்த வஸ்துவிற் சிலவன்னத் திரவியங்களால் எழுதப் படுவதன்றே, ஓவியந்தான் = இச்சகத்துருபமான சித்திரமானது, ஆன்மா நிஷ்கிரியத்தால் அகர்த்தாவாதலின், எழுதுவோனும் = கர்த்தாவும்; ஆன்மா நிரவயவத்தால் அமூர்த்தமாதலின். எழுதிடமும் = மூர்த்தவஸ்துவும், ஆன்மா அத்துவிதீயனுதலால் வன்னத்திர வியாந்தர மின்மையின், எதிர்காண்பொருளும் = வன்னத் திரவியங்களும், இலதாகி மூர்த்தமான ஓரதிகரண மின்மையால் வழுவிலாத விண்ணிடையே = சிதாகாயத்தில், வந்துதோன்றும் உதித்தொளிரும். அன்றியும், சித்திரம் தனக்குவேருன திருஷ்டா உண்டெனிலன்றே அநுபவிக்கப் படுகின்றது, இஃதங்ஙனமன்று, திருஷ்டா திருசியங்களுக்குப் பேதமின்மையின், பழுதின்மேவுந் தனைத்தானே பாரா நிற்கும் = திருஷ்டாவின்றிச் சுவாநுபவமாம், அன்றியும் நித்திரையானுலன்றே சொப்பன தரிசனமாம், இஃதங்ஙனமன்று, நனவான் மேவும் = சாக்கிரத்தின் கண்ணே தோற்றுதலின், துயிலினுலன்றிக் கனவொக்கும் = அநித்திரையுடைய சொப்பன தரிசனமாம், பலபொறியும் நழுவும் என்பது துயில் விசேடணமாம். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரிபூரண பரமான்மாவில், உலகமெலாம் வெறுந்தோற்றமாத்திரமாய்க் காரணகாரிய பாவமில்லாமலே தோற்று மெனல்:—கரி யென்பது.

கரியாய்ச் சமமாய் நொய்தாகிக் கலந்தவிகற்பந் தீரறிவிற்
பரியாநின்ற வுலகமெலாம் பற்றிபாய்தல் கண்ணடியிற்
றெரியாநின்ற பொருள்போலாஞ் செறிகாரண காரியமின்றிப்
புரியாநின்ற வுலகெல்லாம் பொலிந்து பிரமத்திடை யிருக்கும். (2)

(ப - ரை.) கரியாய் = சாக்ஷிபூதமாய். சமமாய் = எங்கும் ஒருபடித்தா யிருப்பதாய், நொய்தாகி = அதிசூக்கும அதிதெளிவாய், கலந்த விகற்பந்தீர் = நிர்விகற்பமாய்; ஒளிரும், அறிவில் = சிதாத்மாவில், பரியாநின்ற வுலகமெலாம் = பயனின்றித்தோற்று நின்ற ஜகங்களெல்லாம், பற்றிபாய்தல் = வாதனைப்படி மனத்திற்புலப்படல், கண்ணடியில் தெரியாநின்ற பொருள்போலாம் = முகுரத்திற் றேற்றும் பிரதிபிம்பப் பொருள்

போலவாம், செறிகாரண காரியமின்றி = பொருந்தாநின்ற காரணகாரியத் தன்மையை யடையாமலே, புரியாநின்ற வுலகமெலாம் = புலப்படாநின்ற ஜகங்களெல்லாம், பிரமத்திடை = தன்மயசிவத்தில்; பொலிந்து இருக்கும் = பிரதிபை மாத்திரரூபமாய் விளங்கிக்கொண் டிருக்கும்.

(ஸ்ரீ - வி.) சர்வவிருத்திகட்குஞ் சான்ருய், அபரிணமியாதலின் எல்லா விருத்திகளிலும் ஒரேபடித்தாய் அதனுனே அதிசூக்குமமாய், அதனுனே அதிசொச்சமாய், அதனுனே விகற்பமற்றதாய், இருக்கும், தன்மய சின்மயத்தில் இருப்பதுபோலப் பொலியும் உலகமெல்லாம், தர்ப்பணத்திற் ருேற்றும் வத்துக்களைப் போலவாம்; காரணகாரிய பாவத்தைக் கதுவாமலே இப்பிரதீதிக ளெல்லாம் பிரஹ்மத்திருக்கும். இத்தன்மையை இராகவ! நன்குணவில்வேம் கேட்டி! ஆகாயத்தினும் அதிசூக்குமமாய பரம்பொருளாம் பரமாத்மா, வாக்குமனமெதற்குமே யெட்டாதிருத்தலின் எக்காரியத்திற்குத்தான் எங்ஙனங்காரணத் தகைமையைமருவும், ககனங்கத்தினும் அதிசொச்சமாய் மகாசூனியமாய்ச் சத்தாசாமானியமா யிருக்கும் அந்தப் பரபதத்தில், சகன்மேரு சமுத்திரக்கனதிகள் எங்ஙனமிருத்தல் கூடும்? ஆகாரத்தோடுற்ற ஆலம்விரையாதிகளில் அங்குராதிகள் இருக்கின்றனவெனின் ஊகத்தோடு கூடியதாம், நிராகாரத்தில் மகாகாரவுலகங்கள் இருக்குமெனல் ஊகமற்ற சொல்லாம். எங்ஙனமெனின்? உற்பத்தியின் முன்னர்க்காரணத்தில் காரியமுளதா மென்பவன் கேட்கத்தக் கவனுவன், அதன் சத்தைசாமானியமாக விருக்கிறதா? அல்லது, பீஜாதிசத்தை யானேயா? அல்லது அங்குராதிசத்தை யானேயா? ஆதியதேல், அவ்வங்குராதி எதனேடு அசம்பந்த முடையதாம், சாமான்ய சத்தைக்குச் சர்வவஸ்து சாதாரண்யத்தன்மையானே உண்டாகாநின்ற அங்குராதிகட்கு எல்லாவிடங்களிலுமே சம்பந்த வழக்காம். ஆகுக இட்டந்தான் எனின்? இவ்வங்குராதி க்ஷேத்திரத்தில் அங்குரித்த பீஜத்தில் வாஸ்தவமாகக் கண்கண்டதேயாம்; குசூலத்திலிருக்கும் பீஜத்திலாதல், சிலாசகலத்தி லிருக்கும் பீஜத்திலாதல். பிராந்திதிருஷ்டம் அவாஸ்தவம் என்னுமிது யாங்ஙனங்கூடும்? இரண்டாவதிலும், பீஜத்தைக்குற்ற அங்குரசம்பந்தத்திற்கும், கடபடாதி சம்பந்தத்திற்கும் சொரூபமாக விசேடமொன்றும் விளம்பாமையின், என்னவஸ்து எப்பீஜத்தால் உண்டாகும் எனச் சம்பந்தமே யிராமையின், நென்முதலிய பீஜத்திற் சர்வஜகத் திருப்புவழக்காம்; இஷ்டமேலாயினே, அங்குரித்த பீஜத்தில் அங்குராதியே வாஸ்தவம், கடபடாதியன்ரும் என்னுமிது யாங்ஙனமேலும்? என்பதாம். மூன்ருவதிலும், அங்குரசொரூப சத்தையோடு பீஜசம்பந்தத்திற்கும் கடாதி சம்பந்தத்திற்கும் விசேடம் நிரூபிக்கமுடியாமையின் அசம்பந்த எவ்வத்து, எல்லாவிடங்களிலுமே அங்குரசற்பாவப் பிரசங்கமாம்; இட்டாபத்தியேலாயின், பீஜாதிகளிலேயே அங்குராதி வாஸ்தவம் மற்றிடத்தில்லை என்னுமிதுயாங்ஙனமேலும்? மேலும இச்சாங்கியாதியானே கற்பிக்கப்பெற்ற காரணத்திற் சகற்சற்பாவம்மது லௌகிகப் பிரமாண பலத்தாலா? அல்லது "சத்தேசௌமிய சகத்தின் முன்னிருந்தது" என்பதாதி சுருதிபலத்தினுலா? ஆதியதாகாதாம், எப்புத்தியாதி சர்வேந்திரிய சக்திதிருசியம் கடபடாதியோ அதனதிகரண தேசத்தினும் தேசாந்தரத்திலும், அதனதிகரண காலத்தினும் காலாந்தரத்திலும், நேரேதானே காண்போனிடத்திலேனும், வேறு காண்போனும் நரனிடத்திலேனும், திருஷ்டா இருந்தபோதிலும் இல்லாதபோதிலும், அவ்வவ்வகைக் காட்சிகருதலாதி புத்திவிருத்தி வடிவபோதத்தி இல்லாததே யிலங்காததே, அத்திருசிய அதரிசனுதியோக்கிய அநுபலப்திவசத்தால் அசத்தேயாமெனச் சர்வலௌகிகப் பிராமாணிகர்களானே கூறப்பெறும், ஆகலின் சர்வலௌகிக அநுபலம்ப விருத்தம்,

பிரளயத்திற் சகத்சற்பாவ கற்பனமாம் இரண்டாவதும் பொருந்தாதாம், சத்தேசௌமிய சகத்தின் முன்னிருந்தது" என்பதாதி சுருதிகளில், காரணகாரியங்களின் இருசத்தையிலங்கக் காணும், ஒன்றே அத்விதீயம் என்னும் வாக்கிய சேடவிரோத மாதலின். ஆண்டிஃதாராயாம்.—காரியமேசத்து, அக்காரிய சத்வமே காரணத்தன்மையை யடைவுற்றுக் காரணத்தி லாரோபிதமென மறையறைகின்றதா? அல்லது காரணமே சத்து, அச்சத்வமே காரியத்தில் ஆரோபிதமாம் எனச்சுருதி கூறுகின்றதா? அல்லது சத்தே சத்து, அச்சத்தையே காரிய காரணங்களில் ஆரோபிதமெனவா? அவற்றுள் அச்சாங்கியனுடைய போதமாகியவது ஆதியபக்ஷ அனுசாரியெனின்? அவ்விமூடபோதம்மயலேயாம், "திகழுறுவாக் காலாக்கு நாமமாத்திரம்விகாரம்" என்பதாதி காரியப்பொய்ம்மையயற்சுருதி யநுகுணத்தன்மை யின்மையானும், காரணப்பொய்ம்மைச் சம்பாதகத் தன்மையானே தற்சித்தாந்த பாதகத்தன்மையானும் என்றறிக. காரணங்களாய இணங்களுக்கே பொய்ம்மையாயின் அம்மகதாதி காரியம் எக்காரணங்களானே எழுந்துவருங்கொல்! காரணமிலதாகவே காரியத்தை யுண்டாக்கவே யொல்லாமையின். இதனானே யிரண்டாவது மியையாதாம், காரியமிலதாகியவழி, அவ்வக்காரணத் தன்மைக்கும், அதற்பொருந்துந் தன்மை யுண்மையானே, நிரூபிக்க முடியாமையின். இவ்வாறாகவே, பரிசேஷத்தால் மூன்றாவது கற்பமே சுருதிகருதியதும், கருத்துப்பொருத்தமும், ஆமெனக்கவர்தல் இனிமையாம். ஆகலின் காரியகாரணபேத சத்தியத்தன்மைக்குச் சுருதிய சம்மதத்தன்மை வுண்மையின் துர்ப்புத்தியையுடைய சாங்கியாதிகளானே சங்கற்பிக்கப்பெற்ற காரணகாரிய பாவத்தை = உபாதான உபாதேய பாவத்தை, தமது சககாரிரூப காரணாதிகளோடும் நிமித்தப் பிரயோஜனாதி பேதங்களோடும் வெகுதூரத்திற் பொய்யெனவிலக்கி, ஆதிமத்தியாந்த ரகிதமாய்ச் சன்மாத்திரமாய வஸ்துயாது அவசிட்டமாமோ அதுவேதான் குண்டலம் போலும் ஜகத்தென நிற்கும், அயலொன்றின்றாமெனவறிக,

(ச.) கரியாய் = திருக்குரூபமாதலிற் சாக்ஷியாய், பிரத்தியக்ஷமாய்ப் பார்ப்பவன் சாக்ஷியெனப்படுவன், சமமாய் = பரிபூரணமாய், நொய்தாகி = சொச்சமாய், கலந்த விகற்பந்தீர் = பேத சூனியமான, அறிவில் = சிதான்மாவில், பரியாநின்ற = தங்கிய, உலகமெல்லாம = ஜகங்களனைத்தும், கண்ணடியிற் றெரியாநின்ற பொருள்போல், பற்றிபாய்தலாம் = பிரயோஜன மின்றியே பிரதிவிம்பிப் பனவாம், ஜகங்கள் ஜடமாதலினானும் ஆன்மா அசங்கோதா சீனனாதலுனானும், இச்சை இன்றியே யெனினுமொவ்வும். புரியாநின்ற = தோற்றாமாத்திர ரூபமான, உலகெல்லாம் = விசுவமனைத்தும், செறி காரணகாரியமின்றி = காரியகாரண பாவமின்றியே, பிரமத்திடை, பிரதிபைமாத்திர ரூபமாய்ப் பொலிந்திருக்கும். இஃதிரகசிய மென்பது கருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) யாவுமே பிரஹ்ம சொரூபமா யிருத்தலின் தன்மயமேயாவுமென அச்சின்மயத்தைப் பாவிக்க வேண்டுமென வுபதேசித்தல்:—சொன்ன வென்பது.

சொன்னவுலகங்களுக்குருவந்தோன்றுநின்றமாத்திரமாம்
பின்னமின்றியாவையுமாய்ப்போாவறிவாய்ப்பெருவிண்ணாய்
மன்னுபிரமமொன்றென்றேவருந்திமுயன்றுபாவிப்பா
யன்னநிலையேகைவந்தாலலைவற்றுள்ளமறிவுருவாம்.

(ப - ரை.) சொன்னவுலகங்களுக்கு = பிரஹ்மத்திடை யிருக்குமெனச் சொல்லிய ஜகங்களுக்கு, உருவம் = வடிவம், தோன்றாநின்ற மாத்திரமாம் = பிரதீதிமாத்திரமே

யாம் அதிஷ்டானத்தினும் வேறுசத்தை யின்மையின், பின்னமின்றி = அகண்டிதமாய், யாவையுமாய் = சர்வான்மகமாய், பேராவறிவாய் = சதோதித சிற்சொரூபமாய், பெருவிண்ணுப் = பெரிதிற்கும் பெரிதான அம்பரமாய், மன்னுபிரமம் = இராநின்ற பிரஹ்மசொரூபம், ஒன்றென்றே = ஏகமென்பதாகவே, வருந்திமுயன்று = மிகக்கஷ்டப்பட்டு யத்தனித்து, பாவிப்பாய் = தன்மய சிந்தனஞ்செய்வாய், அன்னநிலையே கைவந்தால்=அத்தகைய ஸ்திதியானது சாக்ஷாத்கரிக்கவரின், அலைவற்றுள்ளம் அறிவுருவாம் = சித்தம் சாஞ்சல்யத்தை விட்டுச் சாந்தியாகிச் சின்மாத்திரமேயாம்.

(ஸ்ரீ - வீர.) ஆரோபிதமாய்த் தோற்றுகின்ற சர்வதிருசியங்கட்கும் அதிஷ்டான இருப்பினும் வேறு இருப்பின்மையின் முக்காலத்திய அத்தியந்தாபாவப் பிரதியோகித் தன்மையுண்மையின், சர்வான்மக அகண்டித சிதாகாச ஏகப்பிரஹ்மமே தன்வடிவமாயுளதென வருத்தப்பட்டேனும் முயற்சிசெய்து பாவிக்கின் உள்ளம் ஓடாது உபரமமுற்றுப் பிரஹ்மானந்தம் பெறுமென்பதாம். "பிரஹ்மமேயாய இவ்வமுதம்முன்னும்" என்பதாதி சுருதிகட்கும் பானதியிற் சாமானுதி கரண்யமாதலின் ஈண்டே தாற்பரியம் ஆம். எக்காலிச் சகத்திற்கு அத்தியந்த அபாவமே யுளதாமோ அக்காற்பிரஹ்மமே இவ்வியாவுமாம், அயலொன்றிராதாம். இவ்வாறுகவே மறையால் வந்தவாதையினும் முன்னர்ஜகத் சம்பந்த கடபடாதி உலக்கைபடி முதலியவற்றுனே யுண்டாம் பிரத்வம் சங்களானும், வஸ்து அந்தரவடிவமாக உண்டாம் அன்யோன்ய அபாவங்களானும் எவ்வுபசாந்தி யுளதாமோ, இது இப்போது இலலை இது இதுவாகாது என்பதாகக் கவரப்பெற்ற அபாவரூப உபசமம் பலிக்கின்ற தென்பதுயாதோ அது சாந்தியேயாய வுபசமமாகாதாம், மற்றே, மறைவினுனே அதற்குச் சக்ஷுராதி திருசியத்தன்மையின் உபரமமேயாம்; சித்தத்தின் கண்ணே வாசனை வடிவமாய்ச் சாந்தியடையவே யில்லையாதலின். இந்நியாயம், முன்னின்மை முற்றுமின்மை கட்கும் முன்னுறுக; தற்சத்தையாலாதல், பிரஹ்மசத்தையாலாதல் இராநின்ற சடாதிகட்குப் பாதமில்லாமல் எவ்விடத்துமே அசத்வங் கூடாமையின் மட்பிண்ட பூதலாதிகளில் அதரிசனத்திற்கு மறைவினுலும் பொருத்தமிருத்தலின் என்றுணர்க திருசியம், பாவகாமகரும வாசனுதி விரைகளோடு உபசாமியமடையுமாயின் அப்போது இத்திருசியத்திற் கத்தியந்த அபாவமென்னும் ஆத்தியந்திக உச்சேதமே பவிக்கும், சித்தமிருக்குமாயின் காமாதிபாவங்கள் கடத்தமுடியாமையின் சாந்தியடைவதே யில்லையாம், ஆகலின் திருசியத்தகைமை ஞானமில்லாமல் சாமியமாவது யாண்டையதென்க; அதனுபசமம் துர்லபமேயாம். இதனுனே சமூலமநோ நாசாந்த சிரௌதபாதத்தினும் அயலாகச் சருவதிருசிய அசர்த்த சம்க்ஷயரூப மோக்ஷத்தில் ஒருபாயம் இலதேயாம் ஆகலின் வருந்திமுயன்று தன்மயம் பாவிக்க வேண்டுமென வற்புறுத்தப்பெற்றதாம்.

(ச.) பின்னமின்றி = அகண்டிதமாய், யாவையுமாய் = சர்வான்மகமாய், பேராவறிவாய்ப் பெருவிண்ணய் = சிதாகாசமாய், பார்ப்பாய் = இராமா நீபாவனைசெய்வாய் உள்ளம் = மனது, அலைவற்று = சாஞ்சல்லிய சாந்தியாய், அறிவுருவாம். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்படிகசிலையினுள்ளே நயனதோஷத்தால் தோற்றுகின்ற ரேகைள்போலப் பதார்த்த பேதங்கள் இலவாம் என்றும் காரணமயலின்மையின் இலவாமென்றும், கூறி, தெளியச் சுக்கிர உபாக்கியானந் தொடங்கல்:—கீற்றென்பது.

(ச - அ.) பிரஹ்மம் ஒன்றென்றே பாவிப்பாய் என்று சொல்லப்பட்டது, பேதந் தோற்றுமிடத் தெப்படி அயிக்கியங் கூடுமெனில் உத்தரம்:—கீற்றென்பது.

கீற்றுப்பலசே ரொருகற்போற் கிளருஞ்சகங்கள் செறிபிரமந்
தோற்றப்படுமா லிரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினா
லாற்றச்சகமென் றொன்றிலதா மறிவேயுளதா மனைத்துலகுந்
தேற்றப்பிரமத் திருக்குமிவைதெளிய வெள்ளிகதை கேட்பாய்.

(ப - ரை.) கீற்றுப்பலசேர் = ரேகை யுவரேகைகள் நிறைந்த, ஒருகற்போல் = ஒரு பெரிய சிலைபொல, கிளரும் சகங்கள்செறி = மூவுலகவலிதம், பிரமந்தோற்றப்படும் = பிரஹ்மம் ஒன்றென்றேகாணவேண்டும், இரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமை யினால் = துவிதியகாரண மின்மையின், ஆற்றச்சகமென் றொன்றிலதாம் = இவ்வுலகம் உற்பன்ன மில்லாததேயாம், அறிவேயுளதாம் = உலக முண்டென வுன்னுந்தான் மாத்திர முளதாம், அனைத்துலகுந் தேற்றப் பிரமத்திருக்கும் = விருத்திகண் மயமான திருசியமியாவும் பூரணப் பிரஹ்மத்தில் பிரதிமைமாத்திர ரூபத்தைக் கொண்டிருப்பது போலிலகும், இவைதெளிய = அநுற்பன்னம் இவ்வுலகம் என்பதாதி யுளத்திற்காணும் பொருட்டு, வெள்ளிகதை கேட்பாய் = பார்க்கவ விருத்தாந்தத்தையாம் கூறச் சிரவணஞ் செய்வாய்.

(ஸ்ரீ - வீர.) பலரேகைகள் சேர்ந்ததொரு படிகக்கல்லேபோலத் திருசியங்கள் போலிந்து பூரிக்கும் பிரஹ்மசொரூபம் பிறங்கும், வேறொருகாரண மில்லாமையின் உண்டாமுலகமென வொன்றிலதாம், அவற்றைக்காணும் அறிவேயுளதாம், சர்வதிருசியமும் அறிவுக் கயலாகாமல் இருக்கும், இப்பொருள் நன்றாகத் திடமாதற்பொருட்டுச் சுக்கிர உபாக்கியானஞ் சொல்லக் கேட்குதி: திருசியங்கள் உண்டாவனவுமல்ல, ஒழிவனவுமல்ல, வருவனவுமல்ல, போவனவுமல்ல, மகாசிலைகளில் லேகைகளின் சந்நிவேசங்கள் போலும் அசலங்களாம் தானாகவே நிருமலமாந்தன்னில் இச்சர்க்கங்கள் இலங்குகின்றனவாம், ஆகாயபாகங்கள் ஆகாயத்திற்போலும், நிராகிருதியில் நிராகாரங்கள் போலும், எனத்திருஷ்டாந்த பாகங்கள் தனிச்சத்தை யில்லாமையிற் கோடத்தக்கனவாம். உதயசகிதா அஸ்தமய ஆரம்பமாமிச் சகத்துக்கூறிய திருஷ்டாந்தப் பிரகாரம் அநந்த சாந்த வத்வைத விஞ்ஞான கனமேயென விரிந்ததாம். இவ்வாறாகவே சககாரியிலதாகக் கருத்தா விருந்தபோதினும் உற்பத்தியாதி யசித்தியாதலின் சாங்கியர் தங்கற்பனை யுன்மத்த சேஷ்டைபோலு மாமென்பது துணிபாம். அறிந்தவனுக்கிது சாந்த அவ்யய கேவலப் பிரஹ்மமேயாம், அறியாதவனுக்கோ அநேக புவனங்களோடு கூடியதுபோல விளங்கும் தடஸ்தத் தகைமையதாகவேனும் அறியப்பெற்றி பிரஹ்மம் மேன்மைய தாமோ வெனின் ? இன்றாம், எவ்விஞ்ஞானாத்மா ஜீவனெனப் பெயரிய பிரத்தியக் காத்மாவோ, யாவன் விசுவத்தின் விரையாய்க் காரணமாய்ப் பஞ்சகிருத்தியனாய் ஈச்சுரனாவனோ, அவ்விருவரும், பரமார்த்த திருஷ்டியானே பரிசோதனஞ்செய்து பார்க்குங்காற் பரிபூர்ணமான பிரத்தியக்கேகரச சிதாகாசமாத்திரம் பிரஹ்மமேயாம் பாகியம் அந்தரமென்னும் இருபேதாவுபாதிகளும், பிரஹ்மத்தினின்றுமே யுண்டாயின வாம் எனக்கேட்கப் பெறுதலின் யாது எதினின்றும் உண்டாமோ அது அஃதேயாம்; என்பதும் " அக்காரணப் பிரஹ்மத்தினின்றும் காரியமாய ஜகத்திற்கு அனன்னியத் தன்மைமேயாம் அதாவது தனிச்சத்தை யின்மையாம், எங்ஙனமெனின் " நிகழும்வாக்கினாற் றொடங்கிய நாமமாத்திரம் விகாரமதாகும், புகழுமண்ணதே சத்தியமிதன் மயம் பொலிவுறு மூலகாரும், நிகழுமாங்கது சத்தியமாத்துமா நியதுவேயாவாய், அகழுமிங்குள வீதெனுமனைத்துமே யறிவதாஞ் சிவமாமே " என்பதாதி ஆரம்பணசப்தாதிகளால்; என்னும் வையாசிக நியாயத்தானே தெளியலாம், ஆகலின், வேத்தியம் யாவுமே தன்னுட்

போதத்திற் சம்போதமாத்திரம்சுத்தம் சின்மாத்திரமெனவறிந்து கொள்க. இதுதெளிய ஐந்தவலவண கற்பனைபோலும் சுக்கிர சொர்க்கபோக கற்பனையையுங் கூறக்கேட்குதி.

(ச.) சேற்றுப்பலசேர் ஒருகற்போல் = பெருத்த மலைக்கல்லானது கரிதுரகநராதி சித்திரவிசித்திர தேவாலயாதி ரூபமாய்த் தோற்றப் படுவதாகப் பேதஸ் புரணமாயிருப்பினும் உண்மையாக ஒன்றேயாவதுபோல், ஜளருஞ்சகங்கள் செறி = திரைலோக்கிய ரூபமாக விஸ்தாரமாய் விவர்த்தமாயினும், பிரமந்தோற்றப்படும் =பிரமமொன்றேயென நிச்சயிக்கப்படும், ஆல், அசை. சகமென்றென்று = இச்சகத்தென வேர் பொருள் இரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினால்= பிரஹ்ம வியதிரிக்தமாய் இரண்டாவது காரணமின்மையால் பாவரூப காரியாரம்பகமான சமவாயி அசமவாயி நிமித்தங்களினது அசம்பவமான ஏதுவினால் ஆற்றவிலதாம் = உண்டானதே யன்றும், அறிவேயுளதாம். ஆயிற்றேறு நிறுவது எப்படிக் கூடுமெனில் உத்தரம்; தேற்றப்பிரமத்து=வியாபகமான பிரஹ்மத்தில், அனைத்துலகும் தோற்றுமாத்திர ரூபமாயிருக்கும், பிரஹ்மத்தின்கண் அத்தியாசமாதலின் மருமரீசைகையில் நதிபோல் பிராதிபாசிகமா யிருக்கின்றதென்பது பொருள், இவைதெளிய = இந்த விசுவந் தோற்றுமாத்திர ரூபமென்பதும் உண்டானதே யின்றென்பதும், தெரிதற்கு, வெள்ளிக்கதை கேட்பாய் = சுக்கிரவிருத்தாந்தத்தை இராகவா நீ கேட்பாய். (4)

(ஶ்ரீ - வீர - அ-கை.) ஹேபகவந் ! பிருகுபுத்திரனுக்குச் சுவர்க்கபோக முண்ணும் விழைவால் யாங்ஙனம் அபசரஸ்போக ஆசைவந்தது, அதன் பொருட்டுச் சொர்க்காதி செல்லுகையும் ஜன்மாந்தர முடைமையும் யாங்ஙனமுற்ற தென்பதை யருளிச்செய்தல் வேண்டுமென ஶ்ரீ இராகவர் வேண்ட அதற்கு ஶ்ரீ வசிஷ்டபகவான் அருளல்:—முன்னமென்பது.

முன்னமொருநாட் பிருகுமுனி முதுமந்தரமால் வரைச்சாரன்
மன்னுதவஞ் செய்யுழிய வன்றன்மைந்தன் மதிமான்மதியனையோன்
றன்னதாதை கழற்பிரியான் றனிமெய்ஞ்ஞான மஞ்ஞான
வென்னுமிருபார்வை யினடுவே யியங்காநின்ற பெரும்பதத்தோன். (5)

செறியந்தாத்தே நிற்கின்ற திரிசங்குவைப் போற்சுக்கிரனு
மறிவோடறியா மையினடுவே யமருநாளி லவன்றாதை
பிறிவில்சமாதி யுறநிற்பப் பிரியாவெள்ளி தனியிருந்து
வெறியவிசும்பை நோக்குதலும் விண்மாதொருத்தி வரக்கண்டான்.

(ப - ரை,) முன்னமொருநாள் = முன்னொருகாலத்தில், பிருகுமுனி = பகவான் பிருகு, முதுமந்தரமால் வரைச்சாரல் = அநேகமகிமை வாய்ந்த பெருத்திரா நின்ற மந்தசைலத்தின் தாழ்வரையில், மன்னுதவஞ் செய்யுழி = கோரமான தவத்தைச் செய்து கொண் டிருந்தபோது, அவன்றன்மைந்தன் = அம் மகாமுனிவனது குமாரன் மதிமான் மதியனையோன் = மகாமதியை யுடையவன் பூர்ணசந்திர அழகன், தன்னதாதை கழற்பிரியான் = தன்னுடைய தந்தையின் திருவடியைப் பூசித்துக்கொண்டே யிருப்பவன், தனி = ஒப்பற்ற ஒருவன், மெய்ஞ்ஞான அஞ்ஞானம் என்னும் இருபார்வையின் நடுவே யியங்காநின்ற பெரும்பதத்தோன் = வித்தை யவித்தையென்னும் இரண்டு திருஷ்டிகளின் இடையிலிருந்து எய்தாத மகாபதத்தினன்;

செறியந்தரத்தே நிற்கின்ற = பொருந்தா நின்ற பூசுவர்க்கமத்தியி லிருக்கின்ற, திரிசங்குவைப்போல் = திரிசங்குவென்னும் அரசனைப்போல, சுக்கிரனும் = பிருதி

கீற்றுப்பலசே ரொருகற்போற் கிளருஞ்சகங்கள் செறிபிரமந்
தோற்றப்படுமா விரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினு
லாற்றச்சகமென் றொன்றிலதா மறிவேயுளதா மனைத்துலகுந்
தேற்றப்பிரமத் திருக்குமிவைதெளிய வெள்ளிகதை கேட்பாய்.

(ப - ரை.) கீற்றுப்பலசேர் = ரேகை யுவரேகைகள் நிறைந்த, ஒருகற்போல் = ஒரு பெரிய சிலைபோல, கிளரும் சகங்கள்செறி = மூவுலகவலிதம், பிரமந்தோற்றப்படும் = பிரஹ்மம் ஒன்றென்றேகாணவேண்டும், இரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினுல் = துவிதீயகாரண மின்மையின், ஆற்றச்சகமென் றொன்றிலதாம் = இவ்வுலகம் உற்பன்ன மில்லாததேயாம், அறிவேயுளதாம் = உலக முண்டென வுன்னுர்தான் மாத்திர முளதாம், அனைத்துலகுந் தேற்றப் பிரமத்திருக்கும் = விருத்திகண் மயமான திருசியமியாவும் பூரணப் பிரஹ்மத்தில் பிரதிபைமாத்திர ரூபத்தைக் கொண்டிருப்பது போலிலகும், இவைதெளிய = அநுற்பன்னம் இவ்வுலகம் என்பதாதி யுளத்திற்காணும் பொருட்டு, வெள்ளிகதை கேட்பாய் = பார்க்கவ விருத்தாந்தத்தையாம் கூறச் சிரவணஞ் செய்வாய்.

(ஸ்ரீ - வீர.) பலரேகைகள் சேர்ந்த தொரு படிகக்கல்லேபோலத் திருசியங்கள் போலிந்து பூரிக்கும் பிரஹ்மசொரூபம் பிறங்கும், வேறொருகாரண மில்லாமையின் உண்டாமுலகமென வொன்றிலதாம், அவற்றைக்காணும் அறிவேயுளதாம், சர்வதிருசியமும் அறிவுக் கயலாகாமல் இருக்கும், இப்பொருள் நன்றுகத் திடமாதற்பொருட்டுச் சுக்கிர உபாக்கியானஞ் சொல்லக் கேட்குதி: திருசியங்கள் உண்டாவனவுமல்ல, ஒழிவனவுமல்ல, வருவனவுமல்ல, போவனவுமல்ல, மகாசிலைகளில் லேகைகளின் சந்நிவேசங்கள் போலும் அசலங்களாம் தானகவே நிருமலமாந்தன்னில் இச்சர்க்கங்கள் இலங்குகின்றனவாம், ஆகாயபாகங்கள் ஆகாயத்திற்போலும், நிராகிருதியில் நிராகாரங்கள் போலும், எனத்திருஷ்டாந்த பாகங்கள் தனிச்சத்தை யில்லாமையிற் கோடத்தக்கனவாம். உதய சகிதா அஸ்தமய ஆரம்பமாமிச் சகத்துக்கூறிய திருஷ்டாந்தப் பிரகாரம் அநந்த சாந்தவத்வைத விஞ்ஞான கனமேயென விரிந்ததாம். இவ்வாறுகவே சககாரியிலதாகக் கருத்தா விருந்தபோதினும் உற்பத்தியாதி யசித்தியாதலின் சாங்கியர் தங்கற்பனை யுன்மத்த சேஷ்டைபோலு மாமென்பது துணிபாம். அறிந்தவனுக்கிது சாந்த அவ்யய கேவலப் பிரஹ்மமேயாம், அறியாதவனுக்கோ அநேக புவனங்களோடு கூடியதுபோல விளங்கும் தடஸ்தத் தகைமையதாகவேனும் அறியப்பெற்றி பிரஹ்மம் மேன்மைய தாமோ வெனின்? இன்றும், எவ்விஞ்ஞானத்மா ஜீவனெனப் பெயரிய பிரத்தியக் காத்மாவோ, யாவன் விசுவத்தின் விரையாய்க் காரணமாய்ப் பஞ்சகிருத்தியனும் ஈச்சுரனுவனே. அவ்விருவரும், பரமார்த்த திருஷ்டியானே பரிசோதனஞ்செய்து பார்க்குங்காற் பரிபூர்ணமான பிரத்தியக்கேகரச சிதாகாசமாத்திரம் பிரஹ்மமேயாம் பாகியம் அந்தரமென்னும் இருபேதாவுபாதிகளும், பிரஹ்மத்தினின்றுமே யுண்டாயினவாம் எனக்கேட்கப் பெறுதலின் யாது எதினின்றும் உண்டாமோ அது அஃதேயாம்; என்பதும் " அக்காரணப் பிரஹ்மத்தினின்றும் காரியமாய ஜகத்திற்கு அனன்னியத்தன்மைமேயாம் அதாவது தனிச்சத்தை யின்மையாம், எங்ஙனமெனின் " திகழும்வாக்கினுற் றொடங்கிய நாமமாத்திரம் விகாரமதாகும், புகழுமண்ணதே சத்தியமிதன் மயம் பொலிவுறு முலகாரும், நிகழுமாங்கது சத்தியமாத்துமா நியதுவேயாவாய், அகழுமிங்குள வீதெனுமனைத்துமே யறிவதாஞ் சிவமாமே " என்பதாதி ஆரம்பணசப்தாதிகளால்; என்னும் வையாசிக நியாயத்தானே தெளியலாம், ஆகலின், வேத்தியம் யாவுமே தன்னுட்

போதத்திற் சம்போதமாத்திரம்சுத்தம் சின்மாத்திரமெனவறிந்து கொள்க. இதுதெளிய ஐந்தவலவண கற்பனைபோலும் சுக்கிர சொர்க்கபோக கற்பனையையுங் கூறக்கேட்குதி.

(ச.) கீற்றுப்பலசேர் ஒருகற்போல் = பெருத்த மலைக்கல்லானது கரிதுரகநராதி சித்திரவிசித்திர தேவாலயாதி ருபமாய்த் தோற்றப் படுவதாகப் பேதஸ் புரணமாயிருப் பினும் உண்மையாக ஒன்றேயாவதுபோல், கிளருஞ்சகங்கள் செறி = திரைலோக்கிய ரூபமாக விஸ்தாரமாய் விவர்த்தமாயினும், பிரமந்தோற்றப்படும் = பிரமமொன்றேயென நிச்சயிக்கப்படும், ஆல், அசை. சகமென்றொன்று = இச்சகத்தென வோர் பொருள் இரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினால் = பிரஹ்ம வியதிரிக்தமாய் இரண் டாவது காரணமின்மையால் பாவரூப காரியாரம்பகமான சமவாயி அசமவாயி நிமித்தங் களினது அசம்பவமான எதுவினால் ஆற்றவிலதாம் = உண்டானதே யன்றாம், அறிவே யுளதாம். ஆயிற்றோற்றுவது எப்படிக் கூடுமெனில் உத்தரம்; தோற்றப்பிரமத்து = வியா பகமான பிராஹ்மத்தில், அனைத்துலகும் தோற்றுமாத்திர ரூபமாயிருக்கும், பிரஹ்மத் தின்கண் அத்தியாசமாதலின் மருமரீசைகையில் நதிபோல் பிராதிபாசிகமா யிருக்கின்ற தென்பது பொருள், இவைதெளிய = இந்த விசுவந் தோற்றுமாத்திர ரூபமென்பதும் உண்டானதே யின்றென்பதும், தெரிதற்கு, வெள்ளிகதை கேட்பாய் = சுக்கிரவிருத் தாந்தத்தை இராகவா நீ கேட்பாய். (4)

(ஸ்ரீ - வீர - அ-கை.) ஹேபகவந் ! பிருகுபுத்திரனுக்குச் சுவர்க்கபோக முண்ணும் விழைவால் யாங்ஙனம் அபசரஸ்போக ஆசைவந்தது, அதன் பொருட்டுச் சொர்க்காதி செல்லுகையும் ஜன்மாந்தர முடைமையும் யாங்ஙனமுற்ற தென்பதை யருளிச்செய்தல் வேண்டுமென ஸ்ரீ இராகவர் வேண்ட அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளல்:—முன்ன மென்பது.

முன்னமொருநாட் பிருகுமுனி முதுமந்தரமால் வரைச்சாரன்
மன்னுதவஞ் செய்யுழிய வன்றன்மைந்தன் மதிமான்மதியனையோன்
றன்னதாதை கழற்பிரியான் றனிமெய்ஞ்ஞான மஞ்ஞான
வென்னுமிருபார்வை யினடுவே யியங்காநின்ற பெரும்பதத்தோன். (5)

செறியந்தரத்தே நிற்கின்ற திரிசங்குவைப் போற்சுக்கிரனு
மறிவோடறியா மையினடுவே யமருநாளி லவன்றுதை
பிறிவில்சமாதி யுறநிற்பப் பிரியாவெள்ளி தனியிருந்து
வெறியவிசும்பை நோக்குதலும் விண்மாதொருத்தி வரக்கண்டான்.

(ப - ரை,) முன்ன மொருநாள் = முன்னொருகாலத்தில், பிருகுமுனி = பகவான் பிருகு, முதுமந்தரமால் வரைச்சாரல் = அநேகமகிமை வாய்ந்து பெருத்திரா நின்ற மந் தசைலத்தின் தாழ்வரையில், மன்னுதவஞ் செய்யுழி = கோரமான தவத்தைச் செய்து கொண் டிருந்தபோது, அவன்றன்மைந்தன் = அம் மகாமுனிவனது குமாரன் மதிமான் மதியனையோன் = மகாமதியை யுடையவன் பூர்ணசந்திர அழகன், தன்னதாதை கழற் பிரியான் = தன்னுடைய தந்தையின் திருவடியைப் பூசித்துக்கொண்டே யிருப்பவன், தனி = ஒப்பற்ற ஒருவன், மெய்ஞ்ஞான அஞ்ஞானம் என்னும் இருபார்வையின் நடுவே யியங்காநின்ற பெரும்பதத்தோன் = வித்தை யவித்தையென்னும் இரண்டு திருஷ்டிக ளின் இடையிலிருந்து எய்தாத மகாபதத்தினன்;

செறியந்தரத்தே நிற்கின்ற = பொருந்தா நின்ற பூசுவர்க்கமத்தியி லிருக்கின்ற, திரிசங்குவைப்போல் = திரிசங்குவென்னும் அரசனைப்போல, சுக்கிரனும் = பிருகு

மைந்தனும், அறிவோடறி யாமையினடுவே = ஞானஞ்ஞானங்களின் மத்தியில்; அமரு நாளில் = உறையுங்காலத்தில், அவன்தாதை = அவனுடைய தந்தை, பிறிவில் சமாதி யுறநிற்ப = நிருவிகற்ப சமாதியில் நீள்போழ் தழுந்தியிருப்ப, பிரியாவெள்ளி தனியிருந்து = நீங்காத சுக்கிரன் ஏகாங்கியா யிருந்துகொண்டு, வெறிய விசும்பை நோக்குதனும் = நிருமலமான ஆகாயத்தைப் பார்த்தலும், விண்மாதொருத்தி வரக்கண்டான் = தேவாங்கனையாகிய மடந்தையொருத்தி வரப்பார்த்தான்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! முன்னர் சானுவில் நடந்த பிருகுகாலர்களின் சம்வாத ரூப விருத்தாந்தத்தைக் கூறக்கேட்குதி! பூர்வம் பூஞ்சோலைகணிறைந்து சூழ்ந்த மந்தர சைலத்தின் ரூழ்வரையில் ஸ்ரீ பகவானாகிய பிருகுமகாமுனிவர் ஒருவர் கோரமான பெருந்தவத்தைச் செய்துகொண் டிருந்தனர். திவ்யவருட சகத்திரம் நிருவிகற்பமாய்த் திருசிய நாட்டமே யின்மையின் தவம்கோரமெனப்பட்டது சுக்கிரனென்னும் அவரது மைந்தன், மகாமதி யுடையவனாய்த் தேஜஸ்வியாய், பூர்ணசந்திரப்பொலி, பிரபையனாய், பிரகாசித்துக்கொண் டிருக்கும் போருக்கனாய்ப் பாலகனாகத் தனது தந்தையின் பாத கமலங்களைப் பரவிவாழ்ந்து கொண்டிருந்தான். பிருகுமுனிவரோ அவ்வுயர்ந்த வனத் திலேயே சமாதியிலேயே வீற்றிருந்தனர், சுக்கிரன் பாலகனானபடியால் அநேகவித விளையாட்டுகளுடன் கூடியிருந்தனன், பாரமார்த்திக ஆத்மதத்வதரிசனமாகிய வித்தியா திருஷ்டி, பாமராதிப் பிரசித்த ஜகத்சத்யதா தரிசனமாகிய அவித்தியா திருஷ்டி, என்னும் இரண்டன்மத்தியில், உள்ள மகாபதத்தை யடைந்திருந்தனன் எனினும், மத்தியில் நின்றபடியால் அடையாத மகாபதத்தினன் எனினும் அமையும், மத்தியிலுள்ளதுமொரு மகாபதமாதலின்; தேவுலக பூவுலகமத்தியில் ஸ்ரீ விசுவாமித்திரரானே நிர்மிக்கப்பெற்ற சுவர்க்கத்தில், திரிசங்குவாகிய ராஜரிஷி யிருந்ததேபோல இருந்தனன். அதனானே இராகாதியால் ஆகுலமுற் றிருந்தனன். தனது தந்தையானவர் நிர்விகற்பமான சமாதியில் வீற்றிருப்பத் தாஞெருகால், சத்துருக்களைச் சயித்த பூபாலனைப்போல யாதொரு கவலையு மில்லாமல் விடயாந்தரத்தில் நாட்டமில்லாமல் ஏகாந்தத்தே இருந்தனன். பாற்கடற்கடைய அதன் மத்தியிலெழுந்த பகவதி லக்ஷ்மிதேவியைப் பகவான் ஜனார்த்தனன் கண்குளிரக் கண்டதேபோல், மேலே நோக்கியபோது ஆகாசமார்க்கமாய்ச் செல்லா நின்ற பாற்கடலினின்றும் உண்டாகிய அப்சரசைக் கண்குளிரக் கண்டனன். ஸ்ரீதேவியைப்போலவே அமரமங்கையரும் பாற்கடனின்றும் உண்டானது பிரசித்தமாதலின் உபயவிசேஷணமாக வுரைக்கப்பெற்றது.

(ச.) இயங்காநின்ற = இளைத்துநிற்கும்: திரிசங்குவைப்போல் = திரிசங்குவென்னும் ராஜா விசுவாமித்திர மகிமையாற் சண்டாள தேகத்தோடேயே சுவர்க்கத்தை யடைந்தவனாய்த் தேவர்களாற் தள்ளப்பட்டுச் சுவர்க்கபூமிகளின் மத்தியி லிருப்பது போல, சுக்கிரனும் பிரஹ்மயாவத்தைப் பெருமையினால், வித்தையவித்தைகளினது மத்தியில், அமருநாளில்=இருக்குங்காலத்தில், பிறிவில்சமாதி = நிர்விகற்பசமாதி, வெள்ளி சத்துருவைச் சயித்தராதியன்போல், தனியிருந்து= ஏகாந்தத்திலிருந்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவாங்கனையின் உல்லாசத்தைக் காணுதலும் மனோராச்சியஞ் செய்தலும் வர்ணித்தல்:—மந்தாரவென்பது.

மந்தா நிலத்தா லசைகின்ற மந்தாரஞ் சூழ்மலர்க் குழலா
டந்தா வளத்தின் பிடிபோலத் தனியேவரலு மெதிர்நோக்கிச்
சிந்தா வசனு யவள்வடிவைத் தியானித் திருகண் முகிழ்த்திருந்து
முந்தா நின்ற வேட்கையினன் முடிவின் மனோராச்சிய முயன்றான்.

(ப - வை.) மந்த அநிலத்தால் அசைகின்ற = மெதுவான தென்றலினாற் சலியாநின்ற, மந்தாரமலர்சூழ் குழலாள் = மந்தாரபுஷ்ப மாலைகணிறைந்த அளகத்தை யுடையவள், தந்தாவளத்தின் பிடிபோல = பெண்யானைபோல, தனியேவரலும் = அவண் மாத்திரமாக வருவதை, எதிர்நோக்கி = முன்னிலையிற்கண்டு, சிந்தாவசனாய் = உல்லாச தரலமனத்தனாய், அவள்வடிவைத் தியானித்து = அவ்வங்கனையின் வடிவத்தையே தியானஞ்செய்து, இருகண் முகிழ்த்திருந்து = இரண்டு நேத்திரங்களையும் மூடிக்கொண்டு, மூந்தாநின்ற வேட்கையினால் = முதிர்ந்தெழுந்த ஆசையினால், முடிவில்மனோராச்சிய முயன்றான் = அந்தமில் மனோராச்சியஞ் செய்யத்தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) மந்தாரமாலை யலங்கரித்தவளாய் மந்த அநிலத்தாற் சஞ்சல அளகபாரத்தையுடையவளாய், ஹாரஜங்காரி யழகு நடையளாய், நபத்திற்குங் காற்றுக்கும், நறுநாற்றம், நாட்டினளாய், லாவண்யத் தருக்கொடியாய், மதோன்மத்த விழியளாய் வந்த காந்தையைக்கண்டு அவனுடைய மனமானது மகா உல்லாச சாஞ்சல்யத்தைத யடைந்தது, ஆகாயக் கவர்ச்சிகாற்று நீங்கினும் அப்பிரதேசத்திற்கு நீள்பொது சுகந்தித்தன்மை தோற்றுவதற்காம் ஆண்டே ஆமீலித்லோசனனாய், அவளை மனத்தாற் றியானித்து, கூறும்வகையாக மனோராச்சியஞ் செய்யத் தொடங்கினான்; அவ்வுசனாவின் அச்சிந்தனையாகத்தையும் மறந்திருந்திடுமாறு.

(ச.) மனோராச்சிய முயன்றான் என்றதன்மேற் சொல்லப்பட்ட சுக்கிரவிருத்தாந்தம் மானதமே யென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மனோ ராச்சியத்தையே யினிது தெரிவித்தல்:— பொன்—இமையென்பன,

பொன்னாட்டணங்கேயி வளந்தப் பொன்னாட்டியானும் போய்ப்புகுந்தே
னின்னாட்ட மாரிவர்போற்ற வெழில்கூர் சிங்காதனத்திலவன்
மின்னாற்செறியு முகிலென்ன வேந்தாமிவனைச் சூழ்ந்துமதன்
றன்னாற்களிக்கு மரம்பையஞ் சமூகமிவையென் றுளத்துணர்ந்து.

இமையோரிறைமை யிவன்வணங்க விவனையவனு மிறைஞ்சியபின்
னமையாவின்ப விண்ணாட்டி லகலாதுலவு மவ்வளவிற்
சுமைவார்கொங்கை யரம்பையருட் சொன்னவவண் முன்றோன்றுதலுங்
கமையாவன்பாற் கண்களிப்பக் கண்டானவளுங் கண்ணுற்றாள்.

(ப - வை.) பொன்னாட் டணங்கேயிவள் = சுவர்க்கத்திலுள்ள தேவாங்கனையே இக்கோமளாங்கி, அந்தப் பொன்னாட்டு இயானும்போய்ப் புகுந்தேன் = அந்தச் சுவர்ணமய வுலகத்தில் சுக்கிரனாகிய யானும் போய்ப் பிரவேசித்தேன், இன்னாட்டமரர் இந்நாட்டமரர் = இனிமையே வாய்ந்த இந்த நாட்டுத்தேவர், ஆகிய, இவர் = இத்தேஜோமயர், போற்ற = வணங்க, எழில்கூர் = கவின்வாய்ந்த, சிங்காதனத்தில் = அழகிய சிம்ஹாசனத்தில், வீற்றிருக்கும், இவன் = இத்தேவேந்திரன், வேந்தாம் = சதுர்த்தச புவன நாயகன் ஆவன், இவனைச் சூழ்ந்து = இத்தேவநாயகனை நெருங்கி, மின்னாற்செறியும் முகிலென்ன = மின்னலினாலே ஆலிங்கிக்கப்பெற்ற மேகமொப்ப, மதன் தன்னாற் களிக்கும் அரம்பையர்தம் சமூகம் இவை = மத மன்மதமா தங்கிகண் மருவிய மகிழ்பொங்கும் கூட்டமிவை, என் றுளத்துணர்ந்து = என்பதாக மனத்தானே சிந்தனஞ்செய்து. இமையோர் இறைமையிவன் வணங்க = தேவநாயகனைச் சுக்கிரன் நமஸ்கரித்தலும், இவனையவனும் இறைஞ்சியபின் = சுக்கிரனைத் தேவேசனும் நமஸ்கரித்தனன் அதன்

பின், அமையாவின்ப விண்ணுட்டில் = அடங்கா ஆநந்தம் நிறைந்த தேவ உலகத்தில், அகலாதுலவும் அவ்வளவில் = நீங்காது சுற்றிப்பார்க்கும் அச்சமயத்தில், சுமைவார் கொங்கை அரம்பையருள் = கனத்து நிமிர்ந்து கச்சணிந்ததனம் வாய்ந்த அமரமடந்தையருள், சொன்ன அவள்முன் தோன்றுதலும் = கூறிய அம்மாது சந்திக்கப்படலும், அமையா அன்பால் கண்களிப்ப கண்டான் = அடக்கமுடியாத காதலோடும் நேத்திரானந்த மிகப்பார்த்தான், அவளும் கண்ணுற்ருள் = அத்தேவமாதும் அவ்வாறே கண் குளிரக் கண்டனள்.

(ஸ்ரீ - வீர.) இந்த முன்னிகழும் தேவாங்கனை என்னும் பின்ருெடரப் பெற்றவளாய் விண்ணில் சகஸ்ரநயன இந்திரனுடைய ஆலயமாகிய சுவர்க்கத்திற்குச்செல்லுகின்றனள், ஆலோலசுர-சுந்தரமாய சுவர்க்கத்தையிவளடைந்தனள் இவளைப்பின்ருெடர்ந்த யானும் அடைந்தேன். மதமன்மத மத்சாங்கிகளாகிய இவர்கடாம் அச்சுராங்கனைகள், தேவேசுரனுகிய இந்திரனை, வனக்கொடிகள் வனத்தைச் சேவிப்பனபோல இனிது சேவிக்கின்ருர்கள் இந்திரநீல சமூக ரூபங்களாகவும், சந்திரகாந்த சமூகசதிருசங்களாகவும், உள்ள புட்பங்கணிறைந்த கற்பகவிருக்ஷங்கள் இவை, இவற்றிற்ருெங்கும் மொக்குகளும் பிஞ்சுகளும் பூங்கொத்துகளும் சிந்தாமணிகளேயாம்; இவற்றிலுள்ள பக்குவப் பழக்கொத்துகள் உன்னத தந்தங்களைப்போல அழகுசெய்து கொண்டிருக்கின்றன. ஈண்டிப்போது மூன்று உலகத்தையும்படைக்கும் இரண்டாவது பிரஹ்மாவிற்குச்சமானமாகச் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் தேவேந்திரனை யான் வணங்குகின்றேன்; எனச் சிந்தித்தினிது சுக்கிரனல் மனத்தினுலேயே சசிபதிவணங்கப் பெற்ருன், அவனுலும் இவன் ஆண்டு விண்ணில் இரண்டாவது பிருகுவைப்போல வணங்கப்பெற்ருன் பின்னர் ஆதரவோடும் எழுந்து சுக்கிரன் சக்கிரனுற் பூசிக்கப்பெற்ருன், இந்திரன் சுக்கிரனது கையைப்பிடித்துச சமீபத்தழைத்து,வந்து உட்காரவைத்துக் கூறுவதாவது: ஹே நாகனே! உனது வரவினுலே யான் தன்னியன் ஆயினேன், ஹே சுக்கிர இச்சொர்க்கமானது மிகவும், சொபிக்கின்றது, ஈண்டே வெகுகாலமிருக்க விரும்புகிறேன் என்பதாகத் தேவேந்திரன் சுக்கிரனை நோக்கி வேண்டிக் கொண்டனன். கூறிய மனோராச்சிய வகையினுனே சுக்கிரன் விபுதர்கள் வசிக்கும் சுவர்க்கத்தைத் தன்னுடைய புண்ணிய விசேஷ சாமர்த்தியமாகிய தேஜசால் அடைவுற்று மரணதுக்கம் யாதொன்றுமின்றியே பழைமையான தனது பாவத்தை மறந்துவிட்டனன். அந்தச் சசிமணாளன் பக்கத்தில் முகூர்த்தகால பரியந்தம் வீற்றிருந்து சுகாதிசயத்தால் எப்பக்கத்திலும் மகிழ்ந்தவனுகி, சுவர்க்கசஞ் சரணசீல தேவதைகளானே உற்சாகிக்கப் பெற்றவனுகிச் சுவர்க்கத்தைச் சுற்றிப்பார்க்க எழுந்து சுற்றிவரும்போது ஓரிடத்தில், காந்தைகளின் மத்தியிற் காந்தியுடனிருந்த தேவாங்கனையாகிய முன்கண்ட மான் கண்ணியைப் பார்க்கவன் விபினத்துள்ளிருந்த சூதலதையைப் போலும் கண்டுகளித்தனன் அவ்வமரமங்கையும், அந்தப் பிருகுமைந்தனை நோக்கிப் பரவசமாயினள்; ஒளிராநின்ற லோலவிலாசத்தோடு கூடிய ஆகிருதியையுடைய அவனைப்பார்த்துச் சுக்கிரனும் பரவசமாயினன். (8-9)

(ஸ்ரீ - வீர. - அ - கை.) இருவரும் உருகியவழி சம்போகத்திற் குரிய முயற்சி செய்தல்:—இருவர் என்பது.

இருவர் விழியுநினை வுகளுமேகமாக வுறப்பற்றி
யுருகுமளவிற் சங்கற்பத் தொன்றும் பிழையா வுயர்வெள்ளி
கருகுமிருண் மூடுகவென்று கற்பித்திடலுங் கற்பாந்தப்
பருவம்போலு மிருள்சூழப் பலருமகன்ருர் பலதிசையும்.

(ப - ரை.) இருவர் விழியும் நினைவுகளும் = இரண்டு பேர்களுடைய நேத்திரங்களும் எண்ணங்களும், ஏகமாக உறப்பற்றி=ஒன்றாக அழுந்திமூழ்கி, உருகும் அளவில்=கசிந்துருகியபோது, சங்கற்பத் தொன்றும் பிழையாவுயர் வெள்ளி = சத்தியசங்கற்பத்தோடு கூடிய உயர்ந்த தவமுற்ற சுக்கிரன், கருகுமிருண் மூடிக வென்று கற்பித்திடலும் = யாவற்றையு மறைக்கும். பேரந்தகாரம் வியாபிக்குக் என்று சங்கற்பித்த மாத்திரத்தில், கற்பாந்தப் பருவம்போலும் = கற்பாந்தகாலம் போலும், இருள்சூழ=அந்தகாரம் ஆச்சாதனஞ்செய்ய, பலதிசையும் பலரும் அகன்றார் = தத்தமது இச்சைவயமுற்ற திசைகளில் யாவரும் போயினர்.

(ஸ்ரீ-வீர.) அத்தியந்தம் அபேதமாய் அன்னியோன்னியம் அநுரக்தம் வாய்ந்த அவர்களது, பிரேமை வதிசயத்தானே நன்குமலர்ந்த சோபையானது, பிராதக்காலத்தில் அருக்க அம்புஜங்களினது சோபையையே ஒத்திருந்தது, அத்தகைய அவனைச் சுக்கிரன்கண்டு எண்ணிய எண்ணத்தை முடிக்கவேண்டு மென்னும இச்சையையுடையவனாகிப் பெருந்தவத்தின் பயனாகியசத்திய சங்கற்பவான் ஆனபடியினாலே, சர்வப்பிராணிகளையும் சங்கரிக்கும் உருத்திரமூர்த்தி பிரளயகாலத்தில் ஒப்பத்தமத்தைச் சங்கற்பித்தனன்; சங்கற்பித்தலும் சுவர்க்கபாகமாகிய நர்த்தனமானது திமிர ஆகுலமுற்றது;உறவே அவளுடைய சகிஜனங்கள் யாவரும் அவளைவிட்டுப் பிரிந்து தாங்கள் வாஞ்சித்ததிசையிற் சென்றனர்.

(ச.) உருகும் அளவில், வெள்ளி, அவனோடு சம்போக சங்கற்பநிறைவேற முயற்சித்தவனாய் அதற்கு யோக்கியகற்பனைக்கு கற்பித்திடலும்=உருத்திரன் சம்மாரத்தைப் போல, சங்கற்பிக்கவும், இஷ்டமுள்ள, பலதிசையும். அந்த அப்சரசானவள் தன்னிடத்தில் மிகவும் ஆசையடைந் திருப்பதைக்கண்டு தன்னெண்ணம் நிறைவேறமுயன்றவனாய் அவளையநுபவிக்க யோக்கிய காலகற்பனையின் பொருட்டுத்தமத்தைச் சங்கற்பித்தனன் என்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அமரமங்கை யிவனை வந்தணைதலும் இருவரும் சுகித்தலுமுணர்த்தல்:—அன்னாள் என்பது.

அன்னாளிவனை வந்தணைய வழகார்தருநீழலி லொருபாற்
றுன்னுமுயங்கி யோருயிராய்த் துன்பமில்லா வின்பத்தி
னன்னாளாகச் சதுரியுக நாலுநாலு நடந்ததற்பின்
முன்னும்புரிந்த தருமமெலா முடியுமுடியு மெனுங்கருத்தால். (11)

(ப - ரை.) அன்னாள் = அந்த அப்சரசானவள், இவனை வந்தணைய = வந்து இவனையாலிங்கனஞ் செய்துகொள்ள, அழகார் தருநீழலில் = கவின்வாய்ந்த கற்பகத்தருவின் சாயையில், ஒருபால் = ஓரிடத்தில், துன்னுமுயங்கி = காடாலிங்கனஞ் செய்துக்கொண்டு, ஒருயிராய் = இருதேகமாயினும் ஒருமனமுற்றவராய், துன்பமில்லா இன்பத்தில் = சிறிதுந்துயர் உறாத சிற்றின்பத்தில், நல்நாளாக = ஆனந்ததினங்களாக, சதுர்யுகம் நாலும் நாலும் நடந்தன்பின் = எட்டுச் சதுர்யுகங்கள் அவளோடுங் கழிந்ததன் பின்னர், முன்னாம் புரிந்த தருமமெலாம் = பூர்வம்யாம் செய்த அறங்கள்யாவும், முடியும் முடியும் எனுங்கருத்தால் = எஞ்சுதலின்றி முடிந்துவிட்டது என்னும் அனுசந்தானத்தால்.

(ஸ்ரீ - வீர.) அத்தீர்க்க சஞ்சல அபாங்கியானவள் மதனவேதனை மிகுத்தவளாகிப் பிருகு மைந்தனது சமீபத்தில் மயூரிமேகத்தை யடைவுற்றதே போலத்தானே வந்த

டைந்தனள். இனிதாகக் கற்பிக்கப்பெற்ற படிகமகா மண்டப மத்தியிலுள்ள பரியங்கத்தில் இருவரும் ஆநந்தித்தபின் கற்பகலதைக் குஞ்சங்களிற் சிறிது விசிராந்தியையடைந்தார்கள். இந்தப்பிரகாரம் சித்தவிலாசத்தினுலே நெடுங்காலம் கற்பிடிக்கப்பெற்ற பிரியப்பிரணயங்களோடு பார்க்கவனுக்குப் பரமசந்தோஷப் பொருட்டு இனிது சமாகமமானது உண்டாயது. சுக்கிரன் தனது விலாசினியுடன் அந்தப்புரங்கரபுரத்திற்றூனே சுகமாக இருந்தனன்; இங்ஙனம் அம்மான் கண்ணியுடன் எட்டுச் சதுர்யுகங்கள் கழிந்ததும் புண்ணியக்ஷய அநுசந்தானத்தாற்.

(ச.) மயில் நீர்கொண்ட மேகத்தைப்போல வந்தணைய, அழகார்தரு=கற்பகதரு, அவளோடுதானும், துன்ரு, கருத்தால்=அநுசந்தானத்தினுல்,

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போது அமரலோகத்தினின்றும் பூமண்டலமடைந்த சுக்கிரன் ஜன்மபரம்பரையை யடைந்தான் எனல்:—விழுந்தான்—அன்னுன் என்பன.

விழுந்தான் புவனமண்டலத்தின் மெய்யைமறந்தா னிவன்சீவன்
கொழுந்தார் மதியின்கலேசேர்ந்து குளிர்ந்தபனியாய் நெல்லாகிச்
செழுந்தா ணெல்லேத் தசார்ணதேச மறையோன் சமைத்தருந்த
வெழுந்தாதுவு மாய்ச்சுக்கிரன் வந்திவன்பாரியையின் மகவானுன். (12)

அன்னுன் முனிவர் தொடர்ச்சியினுலரிய தவமோர் மனுக்காலம்
பொன்னுர் வரைசூழ்வனத்திடையேபுரிந்தானவனங் கொருபெடைமான்
றன்னுலொருசேய் நரவடிவாய்ச் சாதனுனு னவனன்பாற்
பின்னுநின்ற பேதைமையாற் பேராவுண்மை நிலேபெயர்ந்தான். (13)

(ப - ரை.) விழுந்தான் புவனமண்டலத்தில் = அவனிமண்டலததில் வீழ்ந்தனன், மெய்யைமறந்தான் = ஆகத்தை மறந்தான், இவன்சீவன்=இவனுடைய உயிர், கொழுந்தார் மதியின் கலேசேர்ந்து பிரகாசமிக்க சந்திரனுடையஜோதியை அடைந்து குளிர்ந்த பனியாய் = சீதள நீகாரமாய், நெல்லாகி = சாலித்தன்மையை யடைவுற்று, செழுந்தாள் நெல்லே = கொழுத்த தாள்களேயுடைய அந்தநெல்லே, தசாரணதேச மறையோன் சமைத்தருந்த = தசாரணதேசத்துப் பிராஹ்மணன் பக்குவஞ்செய்து அயில, எழுந்தாதுவுமாய் = சாரமாயுற்ற சுக்கிலமாய், சுக்கிரன்வந்து = பார்க்கவன் ...ப்பத்தடைந்து, இவன்பாரியைபால் மகவானுன் = துவிஜோத்தமனது மனைவியி பக்ச..த்தில் தநயனுயினன்.

அன்னுன் = மைந்தனுய் வந்த அவன், முனிவர்தொடர்ச்சியினுல் = முனிவர்தஞ்சம் சர்க்கத்தினுல், அரியதவம் = உக்கிரமான பெருந்தவத்தை, ஓர் மனுக்காலம்=ஒரு மந்வந்தர பரியந்தம், பொன்னுர் வரைசூழ் வனத்திடையே = சொர்ணமயமாய மேருகிரியைச் சுற்றியுள்ள வனத்தின்கண்ணே, புரிந்தான் = நோற்றுன், அவன் அங்கு ஒரு பெடைமான்றன்னுல் = அம்மறையவன் மைந்தனுக்கு அவ்விடத்தில் ஒருபெட்டைமானுல் ஒருசேய் நரவடிவாய்ச் சாதனுனுன் =ஒரு குழந்தைமனுடாகிருதியா யினிதுண்டாயிற்று, அவன் அன்பால் பின்னுநின்ற பேதைமையால் பேராவுண்மை நிலேபெயர்ந்தான் = அம்மறையவன் அக்குழந்தையின் சிநேகத்தால் அக்குழந்தைக்குத் தனமாயுளாதி வேண்டுமென்று தொடர்புற்ற மோகத்தினுல் சத்தியமான நிலேமையைக் கைவிட்டான்.

(ஸ்ரீ - வீர.) அமரவுலகத்தினின்றும் அவனிமண்டலத்தில், பதனப்பிரதி சந்தானபயத்தினுலே திவ்யசரீரங்களையப் பெற்றவனுய், அம்மானினியோடு கூடவே, வீழ்ந்த

னன்; சமஸ்த அங்கங்களும் திரவீபாவத்தால் விச்சின்னமாகி, தேவர்களாலே பலாற் காரமாய் விமானம் நந்தனவனம் அலங்காராதி உபயோகாநந்த சாதனம் முதலன அப கரிக்கப் பெற்றவனுகி, சிந்தாபரவசனுகி, போரிற்பொன்றிய படனேபோல, கீழேவீழ்ந் தனன். தீர்க்கமான சிந்தையோடும், அவனியில் வீழ்ந்த அவனுடைய நெகிழ்ச்சியமாய தேகம், பெருஞ்சிலையின் மேல்வீழ்ந்த அருஞ்சலத் தாரையேபோல நூறுபாகுபாடாய்ச் சிதறிப்போயது. ஈண்டு மெய்யையிறந்தான் என்றேனும் இழந்தான் என்றேனும் பாட மிருத்தலே நலம். மூலமும் மிருதிமாகதா, எனவே பிரிக்கவேண்டும். தேகங்களிரண் டும் சிதறப்பெற்ற அவ்விரண்டு இலிங்கதேகங்களும் மிருந்ததுக்கத்தோடு கூடினவாகிக் கூண்டைவிட்டு வெளிப்போந்த விகங்கள்போல விண்ணிற் சஞ்சரித்தன. அந்த வியோ மத்தில் சந்திரசம்பந்தமான ரஸ்விஜாலத்தை அச்சித்தங்கள் அடைவுற்றன, விரைவில் ஹிமஜலத் தன்மையை யடைவுற்றுப்பின் சாலித்தகைமையை யடைந்தன. தசார்ண தேச விசேடத்திருந்த துவிஜோத்தமனுனவன் அச்சாலியைப் பக்குவப்படுத்தி யுண்ட னன், அச்சுக்கிர சுக்கிரமென்னும் ரேதஸ்தகைமையை யடைந்து அவன்மனைவிக்கு மக னுன். அதன்பின் முனிவரது கூட்டச் சேர்க்கையினுலே, மேருககனமாய இலா விருதாதி வருஷத்தில் வசித்துக்கொண்டு மந்வந்தர பரியந்தம், புகழ்ப்பெற்ற பெருந்த வத்தில் நிலைபெற் றிருந்தனன். ஆண்டு அவனுக்குப் பெண்மானுல் நராகிருதியாய்புத் திரன் ஒருவன் உண்டானுன். பெண்மான் = அந்த அப்சரசானவள் சாபத்தினுலே பெண்மான் ஆனுள்போலத் தெரிகின்றது, அக்குழந்தையினுடைய சிநேகத்தினுலே பெருத்த மோகத்தை மீளவுங்கணத்தில் அடைவுற்றனன்; இந்த என்னுடைய மைந்த னுக்குப் பெருந்தனமும் அருங்குணமும் சாசுவத ஆயுளும் உண்டாகுக வென்பதான இடைவிடாத சிந்தைகளாலே சுருதியாதிப் பிரமாண நியந்திரித அவஸ்திதியை விட்ட னன், அதனுனே தியானதானுதி நிஷ்டையையும் விட்டொழித்தனன். புத்திரன் பொ ருட்டுப் போகசிந்தையானே தருமசிந்தை நழுவியபடியால் ஆயுள்கழிந்த அவனை அரவங் காற்றை விழுங்குவதேபோலக் காலன் விழுங்கினுன். போக எகசிந்தையோடு கூடப் பிராணன்கிளம்பிப் போனவதனுனே மத்திரராஜனுடைய புத்திரனுகப் பிறந்து மத்திர மகீபதியாயினுன். முன்னிருந்த பிராஹ்மணயத்தைக் குறித்துத் தாழ்ந்ததான க்ஷாத் திரயோனியை யடைந்தனன் என்பது கருத்து. மத்திரதேசத்தில வெம்பிய பகைவரை வென்று வெகுகாலம் அரசாண்டபின், அம்புஜத்தில் ஹிமாசனி வீழ்ந்ததேபோல அவனை ஜடைவந்தடைவுற்றது. தவவாசனையுடன் அழகுபொருந்திய மத்திரராஜ தனு வைபொழித்து விட்டதனுல் தீபசன்மைந்தனுய்த் தபசியாயாயினன் தவவாசனையுடன் வாநப்பிரஸ்த தருமநற் சிந்தையுடன் என்பது பொருள். நியந்திரித அவஸ்திதி = நியமிக் கப்பெற்ற நிலை. ஹிமாசனி = பனியடி, தாபசன் = தவமிகுத்தவன்; என்பதருத்தம்.

(ச.) புவனமண்டலம் = பூமண்டலம், மெய் = சரீரம்.

முனிவர் தொடர்ச்சியினுல் = முனிவரது சம்சர்க்கத்தினுல், அரியதவம் = அதிந் திதமான தபசை, அவனுக்கு, அவ்விடத்து சாதனுன் = பிறந்தான், அவனன்பால் = அவனது சிநேகத்தால், பின்னுல் = பின்பு, நிறைந்த பேதைமையால் = பரமமோகத் தினுல், எனது அப்புத்திரனுக்குத் தனமும்குணங்களும் சாசுவதமான ஆயுளுமாகவேணு மென்கின்ற அனவரத சிந்தைகளால், பேராவுண்மை நிலைபெயர்ந்தான் = புத்திரநிமித் தம் போகசிந்தைகளாற் றர்மசிந்தையினின்று நழுவினமையின் அவனதாயுளைக்கணத்து மிருத்து சர்ப்பம் அநிலத்தைப்போல விழுங்கினுன் என்றுணர்க. (12-13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாதனையாற் பிறந்திறந்த சுக்கிரன் விருத்தாந்தத்தை யுப சங்கரித்து, அவன் பூர்வசரீரநிலையை யுணர்த்திப் பிருகுமுனிவர் தவத்தினின்றும் விழித்து மகனைப்பார்த்தான் எனல்:—மற்று - பிருகு என்பன.

மற்றுமளவில் பிறவிகளின் மருள் வாதனையாற் பிறந்திறந்து
முற்றுமுயர் கங்கையின் றடத்தோர் முனிவன்மகவாய் முனியானுன்
பற்றுமுயிர்போய் முதற்காயம் பவனனாலும் வெயிலாலும்
பெற்றுவளர்த்த பிருகுவின்பாற் பெரிதுமுணங்கி யென்பாகி. (14)

பிருகுமுனிவன் பெருமையினாற் பிணங்குமிருகம் புள்ளினங்க
ளருகுமணுக லறமண்மேலங் கமுழுதுங் கெடாதிருப்பத்
திருகுமனந்தீர் சமாதியிலே தெய்வவருட மாயிரம்போ
யிருகண்மலரத் தவமுனிவ னிட்டமகவை யெதிர்நோக்கி. (15)

(ப - ரை) மற்றும் = மேலும். அளவில் பிறவிகளில் = அநந்த ஜன்மங்களில், மருள்வாதனையால் = மயக்கமிக்க வாசனையால், பிறந்திறந்து = ஜநித்துமரித்து, முற்றும் உயர் = அத்தியந்தம் மகிமைவாய்ந்த, கங்கையின்றடத்து = ஸ்ரீ தேவநதியின்கரையில், ஓர் முனிவன் மகவாய் முனியானுன் = ஒரு மகரிஷியின் மைந்தனாகிப் பெருமுநீச்சுரனாயினான், பற்றும் உயிர்போய் = அபிமானித்திருந்த ஜீவன்போய், முதற்காயம் = சுக்கிரசரீரம், பவனனாலும் வெயிலாலும் = காற்றாலும் ஆதபத்தாலும், பெற்றுவளர்த்த = ஈன்றுபோற்றிய, பிருகுவின்பால் = பிருகுமகரிஷியின சந்நிதியில், பெரிதும் உணங்கி = மிகவும் ஜர்ஜரமாகி, என்பாகி = கங்காளமாய்.

பிருகுமுனிவன் பெருமையினால் = பிருகுமகரிஷியினது மாகாத்மியத்தினால், பிணங்குமிருகம் புள்ளினங்கள் = ஆண்டுச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் பசுபக்ஷியாதிகள், அருகும், அணுகலற் = சமீபத்திலும் வருதலிலதாக, மண்மேல் = பிருதிவியின் மீது, அங்கமுழுதுங் கெடாதிருப்ப = சரீரமுழுவது மழியாதிருப்ப, திருகுமனந்தீர் சமாதியிலே = சாஞ்சல்ய சித்தவிருத்தியிறந்த நிர்விகற்ப சமாதியின்கண்ணே, தெய்வ வருடம் ஆயிரம்போய் = ஆயிரந்திவ்ய வர்ஷங்கள் சென்றபின், தவமுனிவன் = பெருந்தவப் பிரஹ்மதரிசியாய முநீந்திரன், இருகண்மலர = விழிதிறந்து வெளிப்போகமுற, இட்டமகவை யெதிர்நோக்கி = பரமப்பிரியமான குமரனைச் சந்நிதியிற்பார்த்து.

(ஸ்ரீ - வீர.) அத்தாபசன் ஸ்ரீ கங்காமகாநதியின் திருக்கரையில் சேர்ந்து இராகாதி சந்தாபங்களை யெல்லாம் சாந்தியாதிகளானே நீக்கியவனாகி, மகாசூக்கும மதிமானாய் பெருந்தவத்தைப் புரிந்தனன். இவ்வண்ணமியம்பப்பெற்ற பிருகுநந்தனனாகிய சுக்கிரன் நானாவித வாசனைகளால் வாசிதனாகி, அவ்வவ்வாசனையை யனுசரித்த நானாவித ஜன்ம தசைகளையடைந்து, சரீரபரம்பரைகளை நன்கநுபவித்துத் தெய்வயோகத்தால் வைராக்கியாதிசாதன சம்பிராப்தியால் விக்ஷேபமெதுவுமேயில்லாமற் சித்தத்தைச் செப்பனிட்டு வாரநதியாகிய சமங்கையின் சுதடத்தில் திரமுறுமரமென்னச் சேதனபேதனாகி விக்ஷேப சகத்திரமுறினும் அசஞ்சல விருத்தியுடையவனாய் நிலைபெற்றிருந்தனன். பூர்வவிருத்தாந்தம்: கூறியபிரகாரமாக மனோராஜ்ஜியங்களானே கற்பித்துக் கொண்டிருந்த அச்சுக்கிரனுக்குப் பிருகுமகரிஷியின் சந்நிதியில் வெகுசம்வத்சர வடிவமான வெகுகாலம்சென்றது. பின்மகத்தாகியகாலஞ் சென்றதும் பவன ஆதபங்களால் ஜர்ஜரமான அதாவது அதிசிதலிதமான சுக்கிரனது சரீரம் வேரற்றமரம்போலப் பூமியில் வீழ்ந்தது, சரீரம் = பிருகுசுக்ரச முற்பவகாயம், ஆயின் அத்தநுவானது நாய்நரி கழுகுமுதலியவற்றானே

யேன் பக்ஷிக்கப்படவில்லை யெனின் ? ஆண்டுக்கூறல்: பிருகுவென்பது. அம்மகரிஷியினது புண்ணிய ஆசிரமத்தின் கண்ணே இராகத்துவேடம் ஒன்றுமின்மையினுனேயும், அவரது பெருந்தவத்தன்மையினுனேயும், மிருகபக்ஷிகளானே அக்காயம் பக்ஷிக்கப்படவில்லை. சப்பிரமாணத் தன்மையானும் விசீர்ணமாகவில்லை யென்பதாகவும் கண்டு கொள்க. இவ்வவருட சகத்திரஞ்சென்றபின் பரமேசுவரராகிய பிருகு இருஷியானவர் பரமான்மாவை வெட்டவெளியாய்க் காணும் பெருநிருவிகற்ப சமாதியினின்றும் வெளிப்போந்தனர்.

(ச.) உயிர்போய்=வெகுகாலஞ் சென்றதனுல் முதற்காயம் என்பாகி, பூமியில் விழுந்தது.

பெருமையினல் = தபோமகிமையினுலும், அப்புண்ணிய ஆச்சிரமத்தில் இராகத்துவேஷ மின்மையினுலும், அணுகலற, புழியாமல் கெடாதிருப்ப = அழியாது கிடப்ப, திருகுமனந்தீர் = பரமபோதமான சமாதியிலே; சமாதியினின்றும் இருகண்மலர்ந்த= விழித்த, அம்முனிவன் = பரமேசுவரனுன அப்பிருகுமுனி, இஷ்டமகவை=குணவெல்லைக் கெல்லையான புத்திரனை எதிர்காணுன், (14-15)

(ஸ்ரீ - வீர - அ-கை.) தனது குமரன் எதிர்காணுது கங்காளமெதிர் கிடப்பக்கண்டு ஓராதுமைந்தன் பொன்றிப் போனதாக நினைதல்:—அற-மென் என்பன.

அறத்தின்வடிவா யஞ்சலிசெய் தருகேயிருக்கு மகற்காணுன்
வறக்குமுடலின் கங்காளம் வறுமைவடிவா யெழுந்ததென
நிறக்குநிர்ப்பாங்கியம் வடிவாய் நிற்பதென்ன வெதிர்கிடப்பத்
துறக்குமனத் தான்பிருகு வெனுந்துய்ய தவத்தோன் றனிநோக்கி. (16)
மென்றோல் போர்த்தவெலுப்பு மனைவெளிகடோறுந் தித்திரிப்புள்
சென்றோடுவது முதாகுகை செறியுமண்டுகத் திரள்க
ளொன்றோடொன்று பாய்வதுங் கண்டுற்றவா லென்னெனவறிவா
னின்றோர் கிலன்றுஞ் சினனென்றே நேயமைந்தன் றனைநினைந்தான். (17)

(ப - ரை.) அறத்தின்வடிவாய் = தருமமூர்த்தியாய், அஞ்சலிசெய்து = நமஸ்கரித்து வணக்கத்துடன், அருகேயிருக்கும் = சமீபத்தில் நிற்கும், மகற்காணுன் = மைந்தனைக் கண்டிலன், வறக்கும் உடலின் கங்காளம் = காய்ந்தகாயத்தின் என்புப்பஞ்சரம், வறுமைவடிவாய் எழுந்தது என தரித்திரமானது மூர்த்திமத்தாய் எழுந்து வந்தது என்றுரைக்குமாறும், நிறக்கும் நிர்ப்பாக்கியம் வடிவாய் நிற்பது என்ன=அதிகரித்துத் தோற்றும் அபாக்கியமானது ஆகத்தோடு கூடியமர்ந்து நிற்கின்றதென் றுரைக்குமாறும், எதிர்கிடப்ப = சந்நிதியில் வீழ்ந்துகிடப்ப, துறக்குமனத்தான் = சகல வாதனைகளையு மொழித்த சத்துவமனத்தையுடைய, பிருகுவெனுந்துய்ய தவத்தோன் = பிருகுமகரிஷியென்று சொல்லப்பட்ட பரிசுத்தமான பெருந்தவத்தினன், தனிநோக்கி = கூர்ந்து பார்த்து.

மென்றோல் போர்த்த எலுப்புமனை = மெல்லிய சருமத்தால் வியாபிக்கப்பெற்ற எலும்பு இல்லத்தின், வெளிகடோறும் = இடமுள்ள பாகங்களில், தித்திரிப்புள் =தித்திரியென்னும் பக்ஷி, சென்றோடுவதும் = புகுந்து பாய்வதையும், உதாகுகைசெறியும் மண்டுகத்திரள்கள் = உதரமாகிய குகையின் நீழலின்கண் இளைப்பாறி யிருந்ததவளைக் கூட்டங்கள், ஒன்றோடொன்று பாய்வதும் = ஒன்றுக்கொன் றெதிர்த்துக் குதித்துப்

பாய்ந்து விளையாடுவதையும், கண்டு = நோக்கி உற்றவாறென்னென = நிகழ்ந்த காரணம்யாது என்று, அறிவால் நின்றோர்கிலன் = நுட்பமதியால் முன்பின் ஆராய்ந்து பாராமல், நேயமைந்தன்றனை = பிரியமான புத்திரனை துஞ்சினன் என்றே = இறந்தனன் என்பதாகவே, நினைந்தான் = எண்ணினான்.

(ஸ்ரீ - வீர.) பிருகுமகரிஷி யானவர், வணக்கத்தினாலே குனிந்த முகத்தையுடையவனும் குணசீலக்குச் சீமாந்தனும் குணக்கூட்டத்தின் றலைவனும், புண்ணிய மூர்த்தியைப்போல் இலங்குபவனும் ஆகியகுமரனை யெதிரிற்கண்டிலர்; மற்றோ, அபாக்கியம் ஆகமெடுத்து வந்ததுபோலவும், தாரித்திரியம் மூர்த்தீகரித்துற்றதுபோலவும் சந்நிதியில் மகத்தாய்க் கிடக்கும், கேவலம் காயவடிவ கங்காளமாகிய சவத்தைக்கண்டனர். கங்காளத்தையே வருணித்தல்:—

மென்றோல் என்பது. அது ஆதபத்தாலே காய்ந்தவபுவை யுடையதாயும், சருமசித்திரங்களில் ஆக்கிய கூண்டையுடைய பக்ஷி விசேடங்களாகிய தித்திரிப் புட்களையுடையதாயும், நன்றாகவுலர்ந்த நரம்புகள் வியாபித்த அகடாங்குகையின் சாயையில் விசிராந்தி யுற்றிருக்கும் தவளைக்குழுக்களை புடையதாயும் இருந்தது துக்கதந்தியின் பந்தனத் தம்பம்போ விராநின்ற, அந்தச் சுஷ்ககங்காளத்தை நோக்கி அம் மகரிஷியானவர் முன்பின் னாலோசனை செய்யாமல் எழுந்தனர். அதன்பின் அக்கங்காளத்தைப் பார்த்தபோதே அம்மகரிஷிக்கு என் எனது இம்மைந்தன் சிரஞ்சென்ற சீவனானன் எனக்கணத்தில் விதர்க்கமான துண்டாயது.

(ச.) அறத்தின் வடிவாய் = புண்ணியம் மூர்த்தமாகியதுபோல், கங்காளம் = அஸ்தி பஞ்சரத்தை.

மென்றோல் = ஆதபத்தால் உலர்ந்த சரீரத்தொக்கைப் போர்த்த, எலும்புமனை = அஸ்திபஞ்சரத்தின் வெளிகடோறும் = இரந்திரங்களில், தித்திரிப்புள் = பக்ஷிவிசேடங்கள் = தித்திரியென்பது சிச்சிலிக்குருவி பொன் வாய்ப்புள்ளென்ப நின்றோர்கிலன் = பூர்வபர விசாரமற்றவராய். மிகக்காய்ந்த பரியந்தத்தையுடைய வயற்றுக்குகையின் சாயையில் மண்டூகவீட்டம் இளைப்பாறி யிருந்தது. (16-17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகரிஷி சினந்து சாபமிட நினைதலும் பயந்து தருமர்வேண்டிக்கோடலும்:—அடை-வதன என்பன.

அடைத் தகாலத்தன்றி யெனதரிய மகவைய காலத்திற்
றுடைத்தகாலன் றனைக்கணத்திற் றுடைப்பனென்னா விடைப்பாகன்
விடைத்தவாபோற் பிருகுமுனி வெகுண்டுசாப மிடநினைப்பக்
கிடைத்தகால னடுநடுங்கிக் கிளரைம்பூத வடிவெடுத்து. (18)

வதனமாறுங் கரமாறும் வாளுங்கயிறுங் குண்டலமும்
பதனகவசத் துடன்மேவிப் பரந்தசேனை புடைசூழ
விதனமுனியை வந்தணுகி வேண்க்கொள்வான் மெத்தென்ன
நிதனமூல மெனுங்கால னிமலமுனிவற் கிவையுரைத்தான். (19)

(ப-ரை.) அடைத்த காலத்தன்றி = நியமித்தகாலத் தல்லாமல், எனதரியமகவை = என்னுடைய கல்யாணகுணக்குழந்தையை, அகாலத்தில் = காலமல்லாக்காலத்தில், துடைத்தகாலன்றனை = சங்கரித்தயமனை, கணத்தில் = இமைப்போதில், துடைப்பன் என்னா = சங்கரிப்பேன் என்று, விடைப்பாகன் விடைத்தவாபோல் = இடபநாயகர்

மார்க்கண்டனுக்காகச் சிநந்தெதாப்ப, பிருகுமுனி = மகரிஷியானவர், வெகுண்டு = கோபித்து, சாபமிட நினைப்ப = சாபங்கொடுக்கக் கருதலும், கிடைத்தகாலன் = அதைத் தெரிந்தயமன், நடுநடுங்கி = கம்பிதமடைந்து, கிளர் = விளங்காநின்ற, ஐம்பூதவடி வெடுத்து = பஞ்சபூத சம்பந்த ஆதிபௌதிக சரீரத்தைத் தாங்கி

வதனமாறும் கரமாறும் = ஷண்முகமும் ஷட்புஜமு முடையவராய், வாளும் கயிறும் = கட்கமும் பாசமும் தாங்கி, பதனகவசத்துடன் மேவி = காக்கும். கவசகுண்டலாதிகளை யணிந்துகொண்டு, பரந்தசேனை புடைசூழ = நாற்புறமும் கிங்கிரசைனியம் விஸ்தரித்துச் சூழ்ந்துகூடவர; விதனமுனியை வந்தணுகி = கிலேசமுற்றிருக்கும் மகரிஷியின் சந்நிதிக்குவந்து சேர்ந்து, வேண்டிக்கொள்வான் = பலவிதமாகப் பிரார்த்தித்துக்கொண்ட யமதருமர், அல்லது வேண்டிக்கொள்ளும் பொருட்டு, மெத்தென்ன = பரமசாந்தமாய், நிதனமூலமெனுங் காலன் 'சங்காரகாரண மாகியதருமர், நிமலமுனிவற்கு = பெருந்தவத்தால் அமலமாயிலங்கும் பிருகுமகரிஷியை நோக்கி, இவையுரைத்தான் = வருமாறு கூறத்தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) அவசியம் பலிக்கத்தக்க அருத்தத்தைச் சிந்தைசெய்யாமலே அந்த மகரிஷிக்கு, மிருதமானத நயனைக்கண்டதும், விரைவில் மிகமிகவுங் கொடிதான பெருங் கோபமானது காலனைக்குறித் துண்டாயது; அகாலத்திலேயே எனதுமைந்தனை இக்காலன் என்கொண்டுபோனான் எனச்சிநந்தவராகிப் பகவானாகிய பிருகுவானவர் காலன் பொருட்டுச் சாபங்கொடுக்கத் தொடங்கினர். பின் அரூபராயினும் கற்பிதரூபத்தை யுடையவராகி, பிரஜைகளை யெல்லாம் கவளீகரிப்பவராய தருமர் ஆதிபௌதிக வபுவை யுடையவராய் முனீந்திரரை வந்தடைந்தனர். கட்கபாசதரராகி ஸ்ரீமான் குண்டல முடையவராகிக் கவசமணிந்தவராகி, பக்கந்தோறும் ஆறுதோளாகத் துவாதசமாச புஜ முடையவராகி, ஆறு இருது முகத்தினராகி, வெகுகிங்கர சேனையால் வியாபிக்கப்பெற்றவராகி, அத்தருமதேவர், கற்பகலக்கக்கடற் கம்பீரக்கடுஞ்சினமகாமுனிவரைக்கண்டு வேண்டிக்கொண்டு பரமசாந்த முடையவராய்க் குளிர்ந்த வசனத்தைக் கூறினர்.

(ச.) விடைத்தவாபோல் = பெருங்கோபங் கொண்டதுபோல, கிடைத்த = அருபனுச் சகலப் பிராணிகளையும் புஜிப்பாகப் பெற்ற, ஐம்பூதவடிவெடுத்து = ஆதிபௌதிக தேகத்தைத்தரித்து ? பதனகவசம் = இடரைக்களையுங்கவசம், படர்ந்தசேனை = வெகுகிங்கரர் (குற்றேவற்காரர்) சேனை, வேண்டுகோளா ன் விரும்பிக்கோடலால், நிதனமூலமெனும் = அழிவுக்கேது வென்னும். (18-19)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தவத்தின் பெருமையைச் சாற்றித் தருமர்தம் பெருமையையும் சாற்றல்,—ஈன்ற-குடும்ப வென்பன.

ஈன்றநியதி பாவிக்கு மியாங்கணின்னை யீறில்லா
வான்றதவத்தாற் றுதித்திடுது மல்லாதில்லை யாதலினாற்
சான்றதவத்தை வெங்கோபத் தழலாற்சுடு தறகவன்றூற்
றேன்றுமுழிக் கனலுமெமைச் சுடாதுநின் சொற்சுடவற்றே. (20)

குடும்பவலையிற் பிணிப்புண்ட கோடாகோடி யுருத்திரரு
நெடும்பங்கயக் கண்மாதவரு நிலையாமென்றுற் றெலைவுற்று
ரிடும்பையுலகி லெனைக்கடந்தா ரில்லையாருமெனக் கிரையாம்
படும்பல் லுயிருமியாம் படுத்தல்பகுதி பாயபழநியதி. (21)

(ப - ரை.) என்ற நியாதிபாலிக்கும் யாங்கள் = பரமேசுரனால் ஏற்படுத்தப் பட்ட நியமத்தை மாறாமல் நடாத்தும் எம்போலியர், நின்னை ஈறில்லா ஆன்றதவத்தால் துதித்திடுதும் = உம்மை யந்த மில்லாத மகாமகிமைவாய்ந்த பெருந்தவத்தினாலே போற்றுவதாம், அல்லாதில்லை = அது அல்லது அயலொரு உத்தேசத்தாலன்றாம் ஆதலினால் = ஆகையால், சான்றதவத்தை = எத்துணையோ கஷ்டப்பட்டு நோற்ற பெருந்தவத்தினை, வெங்கோபத்தழலால் சுடுதல் தகவன்று = அற்பமாகிய கொடிய சினத்தீயால் தீத்தல் உசிதமல்லவாம், தோன்றும் ஊழிக்கனலும் எமைச்சுடாது = மிகுத்துவாரா நின்ற கற்பகாலமகாநலமும் எம்மையழற்றாது என்றால். நின்சொல் சுடவற்றோ = உமதுசாபம் தகித்தற்குரியதாமோ. ஆல், அசை குடும்பவலையில் பிணிப்புண்ட = சமுசாரஜாலத்தில் அகப்பட்டுழலும், கோடாகோடி = அநேகங் கோடி, உருத்திரரும் = உருத்திர கணங்களும், நெடும்பங்கயக்கண் மாதவரும் = நீண்ட செந்தாமரை யிதழ்போன்ற நேத்திரங்கள் வாய்ந்த விஷ்ணுகணங்களும், நிலையாம் என்னால் = நிலையாக இருக்கும் எம்மால், தொலைவுற்றார் = மாய்வுற்றனர்கள், இடும்பையுலகில் = துயர்மயமாய இச்சகத்தில், எனைக்கடந்தார் = எம்மைத்தாண்டினவர், இல்லை = இலர், யாரும் எனக்கிரையாம் = யாவருமே எமக்குப் பக்ஷணமாவர், படும்பல்லுயிரும் யாம்படுத்தல் = இறவாநின்ற எல்லாப்பிராணிகளையும் யாஞ் சங்கரித்தல், பகுதியாயபழ நியதி = சுயமேயாய புராதன புராந்தகன் நியமமாம்.

(ஸ்ரீ - வீர.) உலகின்றிதியை யறிந்தவரும், பராபரங்கண்டவரும் ஆகியபெரியோர் ஹே முனிவரே! பராபராதாதி நிமித்தமிருந்தபோதினும் மோகிக்கமாட்டார், என்றால், அவ்வுத்தமர் காரணமில்லாமல் மோகியார் என்பதில் கழறவேண்டியது யாதுளது! நீர் அநந்ததவத்தையுடைய விப்பிரர், யாம் நியதிபாலகர், அத்தவத்தினாலே பூஜிக்கப் பெறுகின்றீர் அலது ஹேசாதுவே! சாப பயாதிநிமித்த இச்சையினானே பூச்சியரல்லீர். சாபங்கொடுப்பின் மாறாக உமக்கே யநிட்டமீயும் எமக்கொன்று முறாதாம் என்னுங்கருத்தாற் கூறுதல்:—சான்றவென்றது மிகக்கோபத்தினாலே மதியற்றவரே = வீண்புத்தியையுடையவரே! ஞானபாதிதத் தன்மையானே அவித்யமான மதியரே! பெருந்தவத்தை வாளாகெடுத்துக் கொள்ளவேண்டாம்; கற்பகால மகாநலங்களானும் யாம் தகிக்கப்படமாட்டோம் எனின், அத்தகைய எம்மை, நீர் சாபத்தீயானே தீக்கவல்லீரோ! அல்லீர். தாம் எதனாலும் தகிக்கப்படாமலிருத்தலைச் சாற்றித்தமது அகண்டிதமான ஆற்றலையுரைதல்:—குடும்பவென்பது. பிரஹ்மாண்ட பந்திகள் பீடிக்கப்பெற்றன, ருத்திரகோடிகள் விழுங்கப் பெற்றார்கள், விஷ்ணு விருந்தங்கள் விழுங்கப்பெற்றார்கள், எந்த விடயத்திற்றான் எமக்காற்றலில்லை அதனை நீர் நிகழ்த்தும் பார்ப்போம் எவ்வப ராதத்தாற்றான் சபிக்கப்பெற்றோம் சாற்றும். ஹேபிராஹ்மண உத்தமரே! யாங்கள் போக்தாக்கள்; உங்களைப் போன்றவர் எங்கட்குப் போஜனம், என்னுமிது இயல்பாய மரியாதையாம்; இது நம்மனோரால் இச்சைதுவேடாதி நிமித்தாந்தரங்களால் ஆக்கப்பெற்ற தொன்றன்றாம்.

(ச.) அல்லாதில்லை = அன்றி மற்றோரிச்சையாலன்று, சான்றதவத்தை = மாதவத்தை நின்சொல் = உமதுசாபம். என்ற நியதிபாடபேதம்- யாரும் = நீர் முதலியவனைவரும், பகுதியாய = இயல்பான. (20-21)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நியதியின் நிலைமையையுரைத்து அறிஞர் அஞ்ஞர் திருஷ்டிகளைக் காட்டல்:—எமதென்பது.

எமதுவிதியன் றிந்நியதி யென்றுமுள்ள படியாகு
மமலவிழியிற் செய்வோனு மருந்துவோனு மிலவாகும்
விமலமல்லா விழிக்கிவர்கண் மிகவுமுளவாம் விதிவயத்தாற்
றமதுநினைவாற் பல்லுயிருஞ் சனிக்குங்கற்ப முடிவிற்போம். (22)

(ப - ரை.) எமது விதியன்று இந்நியதி = இந்த நியமமானது எம்மனோரால் விதிக்கப்பெற்ற தல்லவாம், என்று முள்ளபடியாகும் = எப்போதும் பரம்பொருளால் ஆக்கப்பட்டுள்ளதேயாம், அமலவிழியில் செய்வோனும் அருந்துவோனும் இல்வாகும் = களங்கங்கழன்ற கண்ணுற் காணுமிடத்துக் கருத்தாவுமில்லை போக்தாவுமில்லை, விமலமல்லா விழிக்கிவர்கள்மிகவும் உளவாம் = களங்கங்கதுவிய கண்ணுற்காணினே கருத்தாபோக்தா முதலிய சமுசாரிகள் வெகுவாக இருப்பனவாம், விதிவயத்தால் = விதிஹேதுவினுல், தமது நினைவால் = தத்தமது வாதனையா லெழுந்த எண்ணத்தால் பல்லுயிரும் சனிக்கும் = சகலபிராணிகளும் உண்டாம், கற்ப முடிவிற்போம் = கற்பாந்தத்திற் செல்லும்.

(ஸ்ரீ - வீர.) அக்கினிமேற்கிளம்புதலும் நீர் கெகிழ்ந்தோடலும் பரமான்மாவின் நியதிபோலவாம்; பரமாத்மா தன்பால் தானுகவே உலகவடிவமாக உண்டாகித் தானுகவே உபசங்கரிக்கும். இதுவும் உபநிஷத்சம்பந்த வியவகாரதிருஷ்டியினுலே யுரைக்கப்பெற்றது பரமார்த்த திருஷ்டியினுற் பார்க்கினே, களங்கமில்லாத திருஷ்டி அஃதாதலின் ஈண்டுக்கருத்தாவுமில்லை போக்தாவுமில்லையாம். கருமதிருஷ்டியாற் காணினே, களங்கங் கழியாதபடியினுலே அத்திருஷ்டியில் ஈண்டு வெகுகருத்தாக்கள் தோற்றும். ஹேபிரஹ்மங் கருத்துருத்தகைமை அகருத்திருத்தகைமைகள் நன்கிலாக் காட்சியானே கேவலம் நனிகற்பிக்கப் பெற்றவைகளாம், தத்துவ சாக்ஷாத்காரரூப நலமுறு காட்சியையுடையவனுக்கோ அவையிரண்டு மிலவேயாம் "கருத்துருத் தகைமையும் கருமங்களுமே, வருத்துலகுக் கிறைவழங்குவதிலையே" என்பதாதியவாக ஸ்ரீபகவானுற் காட்டியருளப்பெற்ற பக்கத்தைப் பற்றிப்பகர்தல், விதியென்பது தருகண்டங்களிற் புட்பங்களும், புவனங்களிற் பூதங்களும், சுயம்வருகின்றன வெனவும் போகின்றன வெனவும், ஈண்டுக்கருத்தாதி சப்தங்களானே கற்பிக்கப் பெறுகின்றனவாம். பிராணிகளின் கருமமே தான் ஆக்ஷேபித்த ஹேதுவாகிய நிமித்தவைசித்திரியத்தானே விசித்திரகாரியத்திலும் சமர்த்தமாகின்றது.

(ச.) எமது விதியன்று = நம்மிருவாது செய்தொழிலன்றும், அமலவிழியில் = விசுத்தஞானத்தால் விசாரிக்கும் பொழுதில், இச்சகத்தில் ஆன்மாவிற்கு நிர்விகாரத்துவமுலதாதலான் கருத்துருத்துவ போக்துருத்துவங் கூடாதாதலின், செய்வோனும் அருந்துவோனு மிலதாகும் = கர்த்தாவும் போக்தாவுமின்றும், விமலமல்லாவிழிக்கு = பிராந்தி தரிசனத்துக்கு இச்சகத்தில், இவர்கண் மிகவுமுளதாம் = வெகுகர்த்தாக்களும் போக்தாக்களும் உண்டாம், கர்த்தாமுதலிய பேதத்திற்கு அவித்யாகற் பிதத்தாற் பிராந்தியுள தியல்பாதலின்; பல்லுயிரும் = தருலதைகளிற் புட்பங்கள்போற் புவனங்களிற் சகலபிராணிகளும், தமது நினைவால் = தங்கள் கருமத்தினுல், சனிக்கும் கற்ப முடிவிற்போம், விதிவசத்தால், பிரமனது யாதொரு பிரவிருத்தி நிவிருத்தி யேதுவான காலமுண்டோ அஃதிசுர இச்சை அதனுற் பிறப்பனவும் இறப்பனவும் ஆமென்பது பொருள், விதி = பிரமன். (22)

(ஸ்ரீ - வீர - அ-கை.) பெருந்தன்மையோடு கூடிப் பிரகாசிப்பதை விட்டொழித்து அற்பத்தகைமையை யவலம்பித்து அவிவேக முறலழகோவெனல்:—கற்பதென்பது.

கற்பதான மறைதருசிற் கண்ணதெங்கே சிரத்தையதாய்
நிற்பதெங்கே யுயர்வெங்கே நெடியோர் விளங்கு மிந்நெறிக்கே
யற்பரானகுருட ரெனவயர்வ தென்னத் தம்வினையா
லுற்பவிக்குஞ் செயல்பாரா துருத்துச் சபிக்கவுரியாயோ. (23)

(ப - ரை.) கற்பதான மறைதருசிற் கண்ணது எங்கே = அத்தியயனஞ் செய்யத் தக்கதான உபநிடதந்தந்த ஞானமய திருஷ்டி எவ்விடத்தது, சிரத்தையதாய் நிற்பதெங்கே = சிரத்தையாக நிலைபெறுதலான தீரதையாண்டையது, உயர்வெங்கே = பெருந்தன்மை எங்குள்ளது, நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே = மகான்கள் நிதிபெற்றுத்திகழும் சர்வப்பிரசித்தமாய இம்மார்க்கத்தில், நிற்கும்நீரும், அற்பரான குருடறென அயர்வது என்ன ? = சொற்பமதியையுடைய அந்தகர்போல மோகமுறுவது என்னகாரணம் ? தம் வினையால் உற்பவிக்கும் செயல்பாராது = தத்தமது கருமபரிபாகத்தினாலே ஜனித்துழலும் தசையை நோக்காது, உருத்துச் சபிக்கவுரியாயோ = கோபித்து எம்மைச் சபிக்க விழைதல் உசிதமாமோ.

(ஸ்ரீ - வீர.) அந்த ஞானமயமாய திருஷ்டியெங்கே, மகத்துவம் எங்கே, தீரதையெங்கே, சர்வப்பிராஞ்ஞப் பிரசித்தமார்க்கத்தில் நிற்கு நீருங்கூட அவிவேகியர்போல மோகமுறுவது என்னேகொல் ! ஹே முநீச்சுரரே ! தங்கரும பலபாகத்தினாலே யெழுந்துழலுந் தசையையோர்ந்து பாராமல், முற்றுணர் வுடையவராக இருந்தும் வாளா மூர்க்கரைப்போல எம்மைச்சபிக்க வெனிச்சிக்கின்றீர் ?

(ச.) சிற்கண் = ஞானமயதிருஷ்டி, நிற்பது = தீரதை, உயர்வு = மகத்துவம் நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே = சர்வப்பிரசித்தமான இம்மார்க்கத்தில், அயர்வதென்ன = மகாமதியினையுடைய நீர் வீணுக் உன்மத்தமுறுவதென்? பாராது = விசாரியாமல் (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனத்தின் மகிமையால் யாவுமுண்டாக அதனை யறியாதிருத்தல் என்னேயெனல்:—மனமென்பது.

(ச - அ - கை.) பிருகுவுக்குப், புத்திரனது சித்தமயமான சமுசாரத்தை நிரூபித்தற்குக் காலன் சித்தத்தினது மகிமையை இப்போதுரைத்தல்:— மனமேயென்பது.

மனமேபுருடன் மற்றில்லைமனத்தின் செயலே செயலாகுங்
கனசீவனத்தாற் சீவனுமாங் கவர்நிச்சயத்தாற் புந்தியுமாஞ்
சினவும்பிமானத் தாலேதீய வகங்கார முமாகுந்
தனதுவிகற்ப சாலத்தாற்றானே சகமாந் தனிமனமே. (24)

(ப - ரை,) மனமே புருடன் மற்றில்லை = ஈண்டுச்சித்தமே புருடனும் பிறிது அல்லவாம், மனத்தின்செயலே செயலாகும் = சித்தஞ்செய்ததே செய்ததாகும், கனசீவனத்தாற் சீவனுமாம் = இவ்வுள்ளமே பெரிதான சீவனவிவகாரத்தாற் சீவனும் ஆகும், கவர் நிச்சயத்தாற் புந்தியுமாம் = ஈது இன்னது எனத்துணியுந் துணிபான் மதியுமாம், சினவும் அபிமானத்தாலே = கடுமையான அபிமானஞ் செய்தலானே, தீய அகங்காரமும் ஆகும் = கனற்றும் அகங்காரமும் ஆகும், தனிமனமே = சுயம் சித்தமே, தனதுவிகற்ப சாலத்தால் = தன்னுடைய விகற்பமான சிந்தைகளானே, தானே சகமாம் = தானே யுலகமாம்,

(ஸ்ரீ - விர.) சித்தமே யீண்டு புருடனும் பிறவற்றிற் காற்றலின்மையின் அது செய்த்துதான் செய்ததெனப்படும், அச்சத்சங்கற்ப வடிவமேயாய ஹேதுவினால் அச்சித்தம் பந்தத்தையடையும், அதுவிடுபடின் இதுவும் விடுபடும். மனமே ஜீவனினின்றும் ஜீவப் பெயரையடையும், ஒரேமனமானது பூர்வபூர்வ ஜீவனினின்றும் ஜீவாந்தரப் பெயரை யடையுமென்பது விரிவாக ஜீவடோபாக்கியானத்திற் கூறப்பெறும்; மனஞ்சங்கற்பித்த பொருளில் நற்றுணிபை நாட்டலானே மனமே யதன்பின்னர்மதியாம், அபிமானத்தைச் செய்தலானே அகங்காரமெனவும் படும், இங்ஙனம் மனமானது தானாகவே நானாத் தன்மையை யடையும்.

(ச.) மனமே = சித்தமே, புருடன் = ஜீவனும், மனத்தின் = சித்தத்தினால், செயலே = செய்யப்பட்டதே, செயலாகும் = செய்யப்பட்டதாம் எப்படிச் சீவத்வமெனிற் கூறல்: தனிமனமே = கனசீவனத்தால், பிராணதாரணத்தினால், சீவனுமாம் = ஜீவனெனப்படும், நிச்சயத்தால் = நிச்சயவேதுவினால், புத்தியுமாம் = புத்தியாம், நிச்சயாத்மிகை புத்தியென்னும் லக்ஷணத்தினால், சினவும் = தேகாதிகளிற் பொருந்தும், அபிமானத்தாலே — அகம் மம அபிமான ஹேதுவினால். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் பிருகுமகரிஷிக்கு அறிவுறுத்தி மனோவிலாச மாத்திரத்தா லாக்கப்பெற்ற அவர் மைந்தன் கதையையெடுத் தோதல்:—ஆதலாலென்பது.

(ச - அ - கை.) சுக்கிரனது சுவர்க்கபோகத்தின் பின்வந்த ஜன்மபேதங்களைக் கூறல்:—ஆதலாலென்பது.

ஆதலாலுன் புதல்வனுநீ யலேவில் சமாதி யமர்போதிற்,
காதலாலே சுக்கிரனுங் காயந்தன்னையிவ ணிருத்தி,
மீதில்விச்சுவாசியெனும் விண்ணாட்டணங்கை மேவியபின்
ஓதுபுவியிற்றே சார்ண வொருவேதி யன்பாலுற் பவித்து. (25)

(ப - ரை.) ஆதலால் = மனமே யாவற்றையு மியற்று மாகையால், உன்புதல்வனும் = நினதுமைந்தனும், நீயலேவில் சமாதியமர்போதில் = நீர் நிருவிகற்ப சமாதியை யடைந்திருந்தபோது, காதலாலே = காமபரவசத்தாலே, சுக்கிரனுங் காயந்தன்னை யிவன் இருத்தி = உசனசம்பந்தியான சரீரத்தை இவ்வாச்சிரமத்திலேயே யிருக்குமாறியற்றி, மீதில் விச்சுவாசியெனும் விண்ணாட்டணங்கை மேவியபின் = சுவர்க்கலோகத்தில் விசுவாசியென்னும் பெயர்வாய்ந்த தேவசுந்தரியை யடைந் தானந்தித்தபின், ஓதுபுவியில் = பூமண்டலத்திற் புகழப்பெற்ற, தெசார்ண ஒரு வேதியன்பால் உற்பவித்து = தசார்ண தேயத்திலிருந்த ஒப்பற்ற மறையவனிடத்தில் அவதரித்து.

(ஸ்ரீ - வீர.) நீர் அசம்பிரஞ்ஞாத சமாதியில் அமர்ந்திருந்த சமயம், உமதுமைந்தனது அம்மனமானது தன் மனோரதமார்க்கமாக வெகுதூரத்திலும் தூரம்சென்றது; உம்மாற்காணப்பெற்ற இந்த ஔசநச தேகத்தை மந்தரகந்தரத்தில் விடுத்து, கூண்டினின்றும் பறந்தபறவையானது மேற்போதல்போல விபுதர்தம் வாசஸ்தலமாகிய சுவர்க்கத்தையடைவுற்றது ஆண்டு மந்தாகுஞ்சத்துப் பாரிஜாத தலத்திலும், நந்தனோத்யான கண்டத்தும், லோகபால புரத்திலும், எட்டுச் சதுர்யுகங்கள் விசுவாசி யென்னும் அப்சரசை, அறுகால் அருமரையைப்போல, மகாதேஜஸையுடைய சரீரகற்பனை செய்து அதிலிருந்து சேவித்து. பின்னர் பாவனை மாத்திரையானே பூமியையுற்று, அம்மனமானது அவ்வவ்வாசனை கரும அநுசாரமாய் முன்னர் மொழிந்த மொழியாத அநந்த

கற்பதான மறைதருசிற் கண்ணெதெங்கே சிரத்தையதாய்
நிற்பதெங்கே யுயர்வெங்கே நெடியோர் விளங்கு மிந்நெறிக்கே
யற்பரான்குருட ரெனவயர்வ தென்னத் தம்வினையா
லுற்பவிக்குஞ் செயல்பாரா துருத்துச் சபிக்கவுரியாயோ. (23)

(ப - ரை.) கற்பதான மறைதருசிற் கண்ணது எங்கே = அத்தியயனஞ் செய்யத் தக்கதான உபநிடதந்தந்த ஞானமய திருஷ்டி எவ்விடத்தது, சிரத்தையதாய் நிற்ப தெங்கே = சிரத்தையாக நிலைபெறுதலான தீரதையாண்டையது, உயர்வெங்கே = பெருந்தன்மை எங்குள்ளது, நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே = மகான்கள் கிதிபெற் றுத்திகழும் சர்வப்பிரசித்தமாய இம்மார்க்கத்தில், நிற்கும்நீரும், அற்பரான குருடறென அயர்வது என்ன ?= சொற்பமதியையுடைய அந்தகர்போல மோகமுறுவது என்னகார ணம் ? தம் வினையால் உற்பவிக்கும் செயல்பாராது = தத்தமது கருமபரிபாகத்தினலே ஜனித்துழலும் தசையை நோக்காது, உருத்துச் சபிக்கவுரியாயோ = கோபித்து எம் மைச் சபிக்க விழைதல் உசிதமாமோ.

(ஸ்ரீ - வீர.) அந்த ஞானமயமாய திருஷ்டியெங்கே, மகத்துவம் எங்கே, தீரதை யெங்கே, சர்வப்பிராஞ்ஞப் பிரசித்தமார்க்கத்தில் நிற்கு நீருங்கூட அவிவேகியர்போல மோகமுறுவது என்னேகொல் ! ஹே முநீச்சுரரே ! தங்கரும பலபாகத்தினலே யெழுந் துழலுந் தசையையோர்ந்து பாராமல், முற்றுணர் வுடையவராக இருந்தும் வாளா மூர்க் கரைப்போல எம்மைச்சபிக்க எனிச்சிக்கின்றீர் ?

(ச.) சிற்கண் = ஞானமயதிருஷ்டி, நிற்பது = தீரதை, உயர்வு = மகத்துவம் நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே = சர்வப்பிரசித்தமான இம்மார்க்கத்தில், அயர்வ தென்ன = மகாமதியினையுடைய நீர் வீணுக் உன்மத்தமுறுவதென்? பாராது = விசாரி யாமல் (23)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனத்தின் மகிமையால் யாவுமுண்டாக அதனை யறியாதிருத் தல் என்னேயெனல்:—மனமென்பது.

(ச - அ - கை.) பிருகுவுக்குப், புத்திரனது சித்தமயமான சமுசாரத்தை நிரூபித்தற் குக் காலன் சித்தத்தினது மகிமையை இப்போதுரைத்தல்:— மனமேயென்பது.

மனமேபுருடன் மற்றில்லைமனத்தின் செயலே செயலாகுங்
கனசீவனத்தாற் சீவனுமாங் கவர்நிச்சயத்தாற் புந்தியுமாஞ்
சினவும்பிமானத் தாலேதீய வகங்கார முமாகுந்
தனதுவிகற்ப சாலத்தாற்றானே சகமாந் தனிமனமே. (24)

(ப - ரை,) மனமே புருடன் மற்றில்லை = ஈண்டுச்சித்தமே புருடனும் பிறிது அல் லவாம், மனத்தின்செயலே செயலாகும் = சித்தஞ்செய்ததே செய்ததாகும், கனசீவனத் தாற் சீவனுமாம் = இவ்வுள்ளமே பெரிதான சீவனவிவகாரத்தாற் சீவனும் ஆகும், கவர் நிச்சயத்தாற் புந்தியுமாம் = ஈது இன்னது எனத்துணியுந் துணிபான் மதியுமாம், சின வும் அபிமானத்தாலே = கடுமையான அபிமானஞ் செய்தலானே, தீய அகங்காரமும் ஆகும் = கனற்றும் அகங்காரமும் ஆகும், தனிமனமே = சுயம் சித்தமே, தனதுவிகற்ப சாலத்தால் = தன்னுடைய விகற்பமான சிந்தைகளானே, தானே சகமாம் = தானே யுலகமாம்.

(ஸ்ரீ - விர.) சித்தமே யீண்டு புருடனும் பிறவற்றிற் காற்றலின்மையின் அது செய்ததுதான் செய்ததெனப்படும், அச்சங்கற்ப வடிவமேயாய ஹேதுவினால் அச்சித்தம் பந்தத்தையடையும், அதுவிடுபடின் இதுவும் விடுபடும். மனமே சீவனினின்றும் சீவப் பெயரையடையும், ஒரேமனமானது பூர்வபூர்வ ஜீவனினின்றும் ஜீவாந்தரப் பெயரை யடையுமென்பது விரிவாக ஜீவடோபாக்கியானத்திற் கூறப்பெறும்; மனஞ்சங்கற்பித்த பொருளில் நற்றுணிபை நாட்டலானே மனமே யதன்பின்னர்மதியாம், அபிமானத்தைச் செய்தலானே அகங்காரமெனவும் படும், இங்ஙனம் மனமானது தானாகவே நானாத் தன்மையை யடையும்.

(ச.) மனமே = சித்தமே, புருடன் = ஜீவனும், மனத்தின் = சித்தத்தினால், செயலே = செய்யப்பட்டதே. செயலாகும் = செய்யப்பட்டதாம் எப்படிச் சீவத்வமெனிற் கூறல்: தனிமனமே =கனசீவனத்தால், பிராணதாரணத்தினால், சீவனுமாம்= ஜீவனெனப்படும், நிச்சயத்தால் = நிச்சயவேதுவினால், புந்தியுமாம் = புத்தியாம், நிச்சயாத்மிகை புத்தியென்னும் லக்ஷணத்தினால், சினவும் = தேகாதிகளிற் பொருந்தும், அபிமானத்தாலே — அகம் மம அபிமான ஹேதுவினால். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் பிருகுமகரிஷிக்கு அறிவுறுத்தி மனோவிலாச மாத்திரத்தா லாக்கப்பெற்ற அவர் மைந்தன் கதையையெடுத் தோதல்:—ஆதலா லென்பது.

(ச - அ - கை.) சுக்கிரனது சுவர்க்கபோகத்தின் பின்வந்த ஜன்மபேதங்களைக் கூறல்:—ஆதலாலென்பது.

ஆதலாலுன் புதல்வனுநீ யலைவில் சமாதி யமர்போதிற்,
காதலாலே சுக்கிரனுங் காயந்தன்னையிவ ணிருத்தி,
மீதில்விச்சுவாசியெனும் விண்ணாட்டணங்கை மேவியபின்
ஓதுபுவியிற்றே சார்ண வொருவேதி யன்பாலுற் பவித்து. (25)

(ப - ரை.) ஆதலால்= மனமே யாவற்றையு மியற்று மாகையால், உன்புதல்வனும்= நினதுமைந்தனும், நீயலைவில் சமாதியமர்போதில் = நீர் நிருவிகற்ப சமாதியை யடைந்திருந்தபோது, காதலாலே = காமபரவசத்தாலே, சுக்கிரனுங் காயந்தன்னை யிவன் இருத்தி = உசனுசம்பந்தியான சரீரத்தை இவ்வாச் சிரமத்திலேயே யிருக்குமாறியற்றி, மீதில் விச்சுவாசியெனும் விண்ணாட்டணங்கை மேவியபின் = சுவர்க்கலோகத்தில் விசுவாசியென்னும் பெயர்வாய்ந்த தேவசுந்தரியை யடைந் தானந்தித்தபின், ஓதுபுவியில்= பூமண்டலத்திற் புகழ்ப்பெற்ற, தெசார்ண ஒரு வேதியன்பால் உற்பவித்து = தசார்ண தேயத்திலிருந்த ஒப்பற்ற மறையவனிடத்தில் அவதரித்து.

(ஸ்ரீ - வீர.) நீர் அசம்பிரஞ்ஞாத சமாதியில் அமர்ந்திருந்த சமயம், உமதுமைந்தனது அம்மனமானது தன் மனோரதமார்க்கமாக வெகுதூரத்திலும் தூரம்சென்றது; உம்மாற்காணப்பெற்ற இந்த ஔசனச தேகத்தை மந்தரகந்தரத்தில் விடுத்து, கூண்டினின்றும் பறந்தபறவையானது மேற்போதல்போல விபுதர்தம் வாசஸ்தலமாகிய சுவர்க்கத்தையடைவுற்றது ஆண்டு மந்தாரகுஞ்சத்துய் பாரிஜாத தலத்திலும், நந்தனோத்யான கண்டத்தும், லோகபால புரத்திலும், எட்டுச் சதுர்யுகங்கள் விசுவாசி யென்னும் அப்சரசை, அறுகால் அருமரையைப்போல, மகாதேஜஜையுடைய சரீரகற்பனை செய்து அதிலிருந்து சேவித்து. பின்னர் பாவனை மாத்திரையானே பூமியையுற்று, அம்மனமதானது அவ்வவ்வாசனை கரும அநுசாரமாய் முன்னர் மொழிந்த மொழியாத அநந்த

ஜன்மங்களை யடைந்ததென்பார், ஒது எனத்தொடங்கினர். தசார்ணதேசத்தில் விப்பிரன் மைந்தனுகி, மேலும், அநந்தம் பிறப்பையடைந்தது.

(ச.) உன் புத்திரனும் = உமது புதல்வனும், மனோமயமே யாதலால், இவணிருத்தி = இவ்விடத்தில் விட்டு, மீதில் = சுவர்க்கத்திற் சென்று, அவ்விடத்தில், விண்ணுட்டணங்கை = தேவசுந்தரியை. (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தொடங்கிய ஜன்மபரம்பரையை வருணித்தல்:—கோச, சாலு, திரி, யென்பண.

கோசலதேசந் தன்னிற் கொற்றவ னுகத்தோன்றி
வீசலர் வனத்தினூடே வேடனுயுதித்துக் கங்கை
மாசலமருவு பாரின் மராளமாய்ப் பௌண்டரத்திற்
பேசரு நிருபனுனன் பெருங்கதிர்க் குலத்துவந்து. (26)

சாலுவ நாட்டிற்பானு மந்திரத் தலைவனுனன்
மேலுயர் கற்பகாலம் விஞ்சையர் வேந்தனுனன்
வாலுணர் வுளதாயங்கோர் மாதவன் மதலையானுன்
சேலுகள் சவ்வீரத்திற் சேர்ந்தசா மந்தனுனன். (27)

திரிகத்த தேசந்தன்னிற் றெசிகச் சைவனுனன்
முருகார்சூழ் வேடரூரின் மூங்கிலா ரணியமானு
னரிணத்தோர் பிறப்பாய்ச் சீர்ணசாங்கலத் தமரலுற்றுன்
விரிவில்சூழ் பனையின்காட்டில் வெஞ்சினப் பாந்தளானுன். (28)

(ப - ரை.) கோசல தேசந்தன்னில் = அச்சுக்கிரன்; கோசலமென்னும் நாட்டில், கொற்றவனுகத் தோன்றி = மகீபதியாகி, விசலர் வனத்தினூடே = மணங்காலு மலர் நிறைந்த மகாடவியில் வேடனுயுதித்து = நீவரனுகி, சங்கைமாசல மருவுபாரில் = மாசூழிமைதங்கிய ஸ்ரீ கங்காதீர்த்தம் பரவிய தடத்தில். மராளமாய் = ஹம்சமாகி, பௌண்டரத்தில் = பௌண்ட்ர மென்னுந்தேயத்தில், பெருங்கதிர்க் குலத்துவந்து = சூரிய வம்சத்திலுதித்து, பேசருநிருபனுனன் = சொல்லுதற்கரிய கீர்த்திவாய்ந்த அரசன் ஆனுன்.

சாலுவநாட்டில் = சாலுவமென்னும் தேயத்தில், பானுமந்திரத் தலைவனுனன் = சௌரதேசிகன் ஆனுன், மேலுயர் கற்பகாலம் விஞ்சையர் வேந்தன் ஆனுன் = அதன் பின் கற்பகாலம் மேன்மைவாய்ந்த வித்யாதர ஸ்ரீமானுனன், வாலுணர்வுளதாய் = நீமானுய் அங்கு ஓர் மாதவன் மதலையானுன் = அவ்விடத்து ஒருமகா தபசியினது மைந்தன் ஆனுன், சேலுகள் சவ்வீரத்தில் = மீன்கள் விளையாடும் வயல்கள் சூழ்ந்த சௌவீர தேயத்தில், சேர்ந்த சமந்தன் ஆனுன் = பொருந்திய சமந்தனுனன்.

திரிகத்த தேசந்தன்னில் = திரிகர்த்த மென்னுந் தேயத்தில், தேசிகச்சைவனுனன் = சைவதேசிகன் ஆயினன். முருகர் சூழ்வேடர் ஊரில் = சூலைகள் சூழ்ந்தகிராத மண்டலத்தில், மூங்கில் ஆரணியமானுன் = மூங்கிற்புதரானுன், அரிணத்தோர் பிறப்பாய் = மான்சன்மத்தை யடைதலுற்று, சீர்ணசாங்கலத்தமரல் உற்றுன் = சீர்ணமான காட்டில் உழன்று திரிந்தான், விரிவில் சூழ்பனையின் காட்டில் = வித்தாரமான புத்துகள் சூழ்ந்ததா லக்காட்டில், வெஞ்சினப்பாந்தள் ஆனுன் = கொடுங் கோபத்தோடு கூடிய பாம்பாயினுன்.

(ஸ்ரீ - வீர.) உமதுசுதன் கோசலதேசத்தில் மகீபதியாயினன், பின்மகா அடவியில் தீவரனாயினன், திரிபதகையின் றடத்தில் ஹம்சமாயினன், சூரியவங்கிசத்தில் புண்டர தேசாதிபதியாயினன், சால்வதேயத்தில் சௌரமந்திர சித்தனாகி அன்னியர்கட்குபதே சிக்கும் தேசிகன் ஆயினன், இதனனே மந்திர உபாஸ்திமகிமைகொண்டு கற்பபரியந்தம் ஸ்ரீமானான வித்யாதரன் ஆனன், பின்ஸ்ரீமானான முனியின் மைந்தனானன், சௌவீர தேசத்தில் மண்டலேசுரனானன், ஆண்டாற்றிய பாவங்களானே திரியக்குத்தாவராதி ஜன்மங்களையும் எடுத்தான் எனத்தொடங்கல், திரிகர்த்தவென்பது. ஈண்டுப்பாட பேத முளது. திரிகர்த்த தேயத்தில் வேசரிப்பிறப்பை யடைந்தான், கிராதமண்டலத்தில் வம்சகுல்மமாயினன், சீனஜாங்கலத்தில் ஹரிணமாயினன், தாலவிருக்ஷத்திற் சர்ப்பமா யினன், தமாலத்தில் வனக்குக்குடமாயினன்.

(ச.) வனத்தினூடே = மகாடவியில், கங்கைமாசல மருவுபாரின் = திரிபதகைத் தடத்தில் மராளமாய் = அன்னமாய், பெருங்கதிர்க் குலத்தில் = சூரியவம்சத்தில், தீவரன் = மத்சியாதிகாதகன். (26-27-28)

பானுமந்திரித் தலைவனானன் = சூரியமத தேசிகனானன், விஞ்சையர் வேந்தனா னன் = வித்தியாதரேந்திரனானன், வாலுணர்வுளதாய் = மகாபுத்திமானாய், ஆங்கு = அச்சாலுவநாட்டில், ஓர் மாதவன் = ஓர் முனிவனது, மதலையானன் = சுதனானன். சாமந்தன் = மண்டலேசுவரன்.

தேசிகச் சைவனானன் = சைவதேசிகனானன். முருகிழ்சூழ் = எலுமிச்சை முதலிய வற்றால் அழகுசூழ்ந்த = வேடரூரின் = கிராதநாட்டில், மூங்கிலாரணியமானன் = வேணுத்தூணானன், அரிணம் = மான், தமாலத்தில் வனகுக்குட மானனென வருவித் துக்காண்க. வம்சகுல்மம் = வேணுஸ்தம்பம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) இத்துணையே அவனது பிறப்புகள் என எண்ணற்க, மற்றோ, அன்னியஜன்மங்களும் அந்தமாயினவெனக் கூறி முடிவாய் வந்தபிறப்பையும் அதன் கண்ணே தவம்புரியு மகிமையையும் அறிவித்துத் தியானதிருஷ்டியானே காணுதிரெ னல்:—இவ், வரியென்பன.

இவ்வண்ண மநந்தயோனி யிழிவுயர் வாகவெய்தி
மைவண்ண மனத்தினாலே வாதனை வயத்தினின்று
மெய்வண்ணக் கங்கைமாட்டோர் மெய்ம்முனிக் குமரனாகிப்
பொய்வண்ணப் பொறிகளென்னும் புன்பகை யறுத்துவென்று. (29)

வரிசடை பயில்வுங்கட்டி வாசுதேவப் பேர்மேவிப்
புரிதவத்தெண் ணூறாண்டு பொருந்தின னினதுமைந்தன்
திரிதரு கனவையொத்த சித்தத்தின் மயக்கந்தன்னைப்
பரிவுறக் காண்டியென்னிற் சிறக்கணாற் பார்த்தியென்றான். (30)

(ப - கை.) இவ்வண்ணம் = இந்தப்பிரகாரம், அநந்தயோனி = அளவில்லாத ஜன்மபரம்பரையை, இழிவு உயர்வு ஆக எய்தி = தாழ்வாகவும் உயர்வாகவும் அடைந்து, மைவண்ண மனத்தினாலே = வாதனை வயத்தினின்று = அறியாமையோடுற்ற உள்ளத் தினாலே வாசனையின் வயமாகக் கட்டுற்று, மெய்வண்ணக் கங்கைமாட்டு = கெடாத பிரயோஜனத்தை யருளும் ஸ்ரீ கங்காநதியின் தீரப்பிர தேசத்தில், ஓர் மெய்முனிடஞ்

குமாரனாகி=ஒப்பற்ற ஒரு உண்மைத் தவத்தினன் மைந்தனாகி, பொய்வண்ணப் பொறிக ளென்னும் புன்பகையறுத்து வென்று = மித்தியாபூதமான சத்தாதிகளென்னும் அற்பப்பகையை வெற்றிகொண்டு.

வரிசடை பலவுங்கட்டி = நீண்டுதொங்கும் ஜடைகள் பலவற்றையும் ஒன்றுசேர்த்துப் பந்தித்து, வாசுதேவப் பேர்மேவி = வாசுதேவ முனிவனென்னும் திருநாமபூண்டு, புரிதவத்து எண்ணூறு ஆண்டு பொருந்தினன் நினதுமைந்தன் = உம்முடைய குமாரன் அஷ்டசத வருடங்களாகப் பெருந்தவத்தைப் புரிந்துகொண் டிருக்கின்றனன்; திரிதரு கனவையொத்த = நிலையின்றிய நித்திராதோஷஜன்னிய சொப்பனத்தைப் போன்ற, சித்தத்தின் மயக்கந்தன்னை=மனோவிப்பிரமத்தை, பரிவுறக் காண்டி யென்னில்=அன்புடன் பார்க்க ஆர்வமுறுதேல், சிறகணல் பார்த்தியென்றான் = ஞானநேத்திரத்தினால் விரைவிற் காண்பீராகவென்று தருமராஜர் கூறினர்.

(ஸ்ரீ - வீர.) வேறும் பலபலவிசித்திர விடமங்களாய யோனிகளில் வாசனை வயத்தினாலே தான்றானே உமதுமைந்தன் பிறந்திறந்தெய்த்தனன். இப்போது விப்பிர குமாரனாகி வாசுதேவன் என்னும் பெயர்சூடி, மதிமான்களின் மத்தியிற் சகல சுருதிகளையும் நன்றாக அத்தியயனஞ்செய்து, சமங்கையென்னுஞ் சரித்தின்றடத்தில் வீற்றிருந்து, பெருந்தவஞ் செய்துகொண் டிருக்கின்றனன். அதிர்ந்து மேலெழாநின்ற அலைக்கூட்டங்களின் பாங்கார மந்திரத்தொனிகளானே தொனித்துக் கொண்டிருக்கும் அநிலங்களோடு கூடிய சமங்கையென்னுந் தரங்கிணியினது தீரத்திலேயே இன்னும் உம்முடைய சுதன்றவம் புரிகின்றனன். விரிசடையுடையனும் விபூதியையுடையனும், அரன்மணி பூண்டோனும் அக்கமாவலயனும், புரந்திரி புலன்களெல்லாம் புரிமயல் வென்றோனும், வருடங்கள் எண்ணூறாக வன்றிறத் தவத்தினின்றான், ஹே முனிவரே! உமக்கு சொப்பனம் போன்ற புத்திரசரித்திரவடிவ புத்திரமனோ மயக்கத்தைக் காணவேண்டுமென்னும் இச்சையெழின், அறிவதற்குச் சாதனமா யிராநின்ற விஞ்ஞானயோக நேத்திரத்தை விரிவுறவிழித்து விரைவிற் காணுவீராக,

(ச.) அனந்தயோனி = மற்றும் அளவற்ற யோனிகளில், கங்கைமாட்டு = கங்கை நதிக்கரையில், மெய்முனி குமரனாகி = விப்பிரகுமாரனாய், பொறிகள் = சர்வேந்திரியங்கள் (29-30)

பலவும் = அட்சவலயமுதலிய தவச்சின்ன மனைத்தும், மைந்தன், அவனதுசித்தத்தின் மயக்கந்தன்னை = மனோப்பிரமையை, பரிவுறக்காண்டி யென்னில் — பார்க்க வேண்டுமென்று இச்சிக்கின்றனை யெனில், சிறகணல் = இவ்வூனநேத்திரத்தை விட்டு ஞானநேத்திரத்தாற் பார்த்தியென்றான். (30)

(ஸ்ரீ-வீர-அ-கை) பிருகுமகரிஷியானவர் பாலகனது செய்கைகளை யெல்லாம் ஞான திருஷ்டியினாற் பார்த்து வியந்து காலதேவதையை வேண்டிக் கோடல்:—காலன், வானதி, யென்பன.

காலனீதுரைப் பக்கேட்ட கலைமுனி ஞானக்கண்ணாற்
பாலகன் செய்கையெல்லாம் பார்த்தனன் கணத்தினெல்லை
மேலதா மொளியாற் றோற்றமாத்திரம் விளங்கிநல்ல
இலமார் புந்தியென்னுந் தெளுந்தகண் ணடியிற்பாய்ந்த. (31)

வானதிக் கரையினின்று மந்தரச் சாரலிற்றன்
மேனியில் வந்துசார்ந்த மெய்ம்முனி வியந்துசால
வூனமில் காலன்றன்னை யொன்றலா வேண்டுகோளா
லானதோர் காதலில்லா வருமுனி பகர்வதானன். (32)

(ப - ரை.) காலன் ஈதுரைப்பக் கேட்ட கலைமுனி —ஜகதீசனாகிய தருமதேவதை இவ்வாறியம்பக் சிரவணித்த சர்வசாஸ்திர சம்பன்ன மகரிஷியானவர், ஞானக்கண்ணால் ஞானதிருஷ்டியினால், கணத்தின் எல்லை = முகூர்த்தமாத்திரத்தில், மேலதாம் ஒளியால் தோற்றமாத்திரம் விளங்கி = உயர்வாகிய பிரகாசத்தினாற் பிரதியான வயமாகத் தோற்றி, நல்ல சீலமார்புந்தி யென்னும் = சத்விருத்தம் பூரித்த புத்தியென்னும் தெளிந்த கண்ணடியிற் பாய்ந்த = அதிசொச்சமான தர்ப்பணத்திற் பிரதிபிம்பித்த, பாலகன் செய்கையெல்லாம் =புத்திரச்சரித்திர மியாவற்றையும் பார்த்தனன்= கண்டார்.

வானதிக் கரையினின்று = பெருமை பொருந்திய ஸ்ரீ கங்காநதிக் கரையிலிருந்து, மந்தரச்சாரலில் = மந்தரசானுவின் கண்ணிருக்கும், தன்மேனியில் வந்துசார்ந்த மெய்ம்முனி =தமது திருமேனியின் கண்ணே திரும்பிவந்தடைந்த சத்தியதபோமுனிவர் வியந்துசால = அதியற்புதத்தை யடைந்த திருஷ்டியானே, ஊனமில் காலன்றன்னை = விருப்பு வெறுப்பற்ற தருமதேவதையை நோக்கி, ஒன்றலா வேண்டுகோளால் = அநேகவிதமான பிரார்த்தனைகளுடன், ஆனதோர் காதலில்லா அருமுனி பகர்வதானன் = யாதொருவிதமான ஆசையுமற்ற பெருந்தவத்தை யுடைய மகரிஷி கூறத் தொடங்கினர்.

(ஸ்ரீ - வீர.) இந்தப் பிரகாரம் சமதிருஷ்டியையுடைய ஜகதீசராகிய தருமரால் விளம்பக்கேட்ட மகரிஷியானவர் மைந்தனது சரித்திரத்தை ஞானசக்ஷுவினாலே நன்ருகத்தியானிக்கத் தொடங்கினர்; முகூர்த்த மாத்திரையானே பிரதிபான வசத்தால், யோகஜதரும விசுத்தபுத்தியாகிய தருப்பணத்திற் பிரதிபிம்பித்ததேபோலப் பிரத்தியக்ஷமாகத் தோற்றிய புத்திரனது சரித்திர முழுவதையும் கண்டனர். மீளவும் பிருகு மகரிஷியானவர். சமங்கையின் றடத்தினின்றும் அடைந்து; சுவஸ்தமாகக் காலனாது முன்னிலையில் மந்தரசானுவி லிருக்கும் தமது திருமேனியிற் றக்கார். ஈண்டு, பிருகு முனிவர் தமது தேகத்தினின்றும் வெளிப்போந்து சமங்கைத்தடம் வரையுற்ற அவ்வப் பிரதேசங்களில் மைந்தனது விருத்தாந்தத்தை முறையாகக்கண்டு மீண்டும் வந்துதமது சரீரத்திற் புகுந்தார் எனமயங்கற்க; யோகவலுமையால் தாமிருந்த இடத்திலேயே யாவற்றையுங் காணுதல் கூடுமாதலின். வெளிப்போந்து உலவுவதாயினும் சென்றவருந் தரிசனங் கூடாமையின். ஆகையாற் சமங்கையின் றடத்தினின்றும் வந்து தமதங்கத்திற் பிரவேசித்தார் என்று கூறியதற்கு அச்சிந்தைத்தியாக தஞ்சரீரப் பிரதிசந்தான மாத்திரத்திற் ருற்பரியமெனை வறிந்துகொள்க. அந்த மைந்தனது வாஞ்சையற்ற மகரிஷியானவர் மிகுந்த விஸ்மய முடையவராகிப் புன்சிரிப்போடு கூடிப் பிரகாசியாநின்ற திருஷ்டியினாலே இராகமற்ற காலனாரை நோக்கி இதனைக் கூறத்தொடங்கினர்.

(ச.) ஜகதீசனென்னும் சமதிருஷ்டியை யுடையகாலன், ஈது+கண்ணால், மேல + கண்ணடியில். பாய்ந்த = பிரதிவிம்பித்த, பாலகன் செய்கையெல்லாம் கணத்தின் எல்லை, பார்த்தனன் = சிந்தித்துக் கண்டான் என்பது அந்நுவயம். காலன்றன்னை = வீதராகனாகிய காலனைநோக்கி பிருகுவானவர் தியானதிருஷ்டியானே சமங்கைத்தடஞ்

சென்று மீண்டும்வந்து, காலசரீர புரோபாகவ்ரத் தினியாய தந்தனுவிற் புகுந்தனவென்பது மூலான்னுவயம். (31-32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) காலனுர் மகிமையைக் கூறித்தமது அறியாமையையுரைத்தல்:- முழுதென்பது.

முழுதுணர் தருமநீதி முதல்வநீ காலமூன்றும்
பழுதறத் தெரிதிநீயே பாலராய்ப் பரமஞான
மெழுதலி லிளைஞராகு மெம்மனோ ரென்றலோடுங்
கெழுதகை யுலகைநக்குங் கேடறுநிலை மைக்காலன். (33)

(ப - ரை.) முழுதுணர்தருமநீதி முதல்வன்நீ=பூதபவ்யேசராகிய பகவாந்தேவரீர் காலமூன்றும் பழுதறத் தெரிதிநீயே = தேவரீரே திரிகால அமலதரிசியாக உள்ளீர், பாலராய் = அறியாதவராய், பரமஞானம் எழுதலில் = பேருணர்வு தாயமில்லாதவர். ஆகிய, இளைஞர் ஆகும் எம்மனோர் = எம்போலியர் சிறியர் ஆவேம், என்றலோடும் = என இவ்வன மொழியக்கேட்ட, கெழுதகை யுலகைநக்கும் கேடறு நிலைமைக்காலன் = சர்வதம் பிறந்துகொண்டே யிருக்குந் தன்மைவாய்ந்த ஜகத்தைச் சங்காரஞ்செய்து கொண்டே ஸ்திதியுற்று நாசமற்றதருமர்.

(ஸ்ரீ - வீர) ஹே பகவந்! பூதபவ்ய ஈசரே! யாங்கள் இராகாதிமலின சித்தமுடையவர்கள் ஆகலின் அஞ்ஞர்கள் ஆவேம், ஹேதேவரே! தங்களைப் போன்றவர்களது மதியே மூன்றுகாலத்தையும் நின்மலமாகக் காணக்கூடியதாம்; அசத்தியரூபமாகிய இச்சகத்தின்றிதியானது பரமார்த்த ரூபம்போலத் தோற்றுவதாய் நாஞகார விகாரங்களோடு கூடியதாய், தீரனுக்கும் விப்பிரமத்தை விளைவிக்கின்றது; அறிஞனுக்கும் பரமார்த்தவஸ்து சொரூபத்திலே மயலையுண்டாக்குகின்றது? என்று இயம்பக் கேட்டதருமர்.()

(ஸ்ரீ-வீர - அ-கை.) காலனுர் மகரிஷியை யழைத்துக்கொண்டு வாசுதேவனிருக்கைசெல்லல்:—மாதவனென்பன.

மாதவன் கையைப்பற்றி மந்தரக் கந்தரத்தின்
மீதகன்ற மரராற்றை மேவினனிவரி லாங்கே
பேதமாம் வாசுதேவப் பெயரொடு மிருந்தசேயைக்
காதலான் முனிவன்கண்டான் காலனுமிதனைச் செய்தான். (34)

(ப - ரை.) மாதவன் = பிருகுமகரிஷியினது, கையைப்பற்றி = கரத்தைக் கரத்தாற்கவர்ந்து, மந்தரக் கந்தரத்தின் = மந்தராசல கந்தரத்தினின்றும், மீதகன்று = ஓழேயிறங்கிவந்து, அமரர் ஆற்றைமேவினன் = சமங்கைச் சரித்தின்றடத்தை யடைந்தனன், இவரில் = இவ்விருவர்தம்முள், ஆங்கே = அவ்விடத்தே, பேதமாம் = சுக்கிரனினும் அயலாக, வாசுதேவப் பெயரொடும்=வாசுதேவன் என்னும் திருநாமத்தோடும், இருந்தசேயை = வீற்றிருந்த குமாரனை, காதலான் முனிவன்கண்டான் = அன்போடும் மகரிஷிகண்டனர், காலனும் இதனைச் செய்தான் = தருமரும் இதனைச் செய்தனர்.

(ஸ்ரீ-வீர.) மகரிஷியானவர் மலர்ந்ததைக்கேட்ட, தருமதேவர் அநேகம்வகையான நியாயங்களை யெல்லாம் முனிவர்க் கெடுத்தோதி ஜகத்தின்றிதியையும் கதியையும் நோக்கிப் புன்சிரிப்புற்றவர் போன்றுற்ற பகவானுகிய அக்காலதேவர், அம்சுமான், கிரணத்தால். இந்துவைப்போலக் கரத்தாற் பிருகுமகரிஷியின் கரத்தைப் பிடித்துச் செல்லத்

தொடங்கினர். பின்கால பிருகு தேவரிருவரும் மந்தராசல கந்தரத்தினின்றும் கீழே அவனியில் வந்துசேர்ந்து சமங்கைச் சரித்தின்றடமடைய முயன்றனர், சர்வ புஷ்ப மயமா யிருப்பது போன்றதும், மலர்வோல அலைகளோடு கூடியதும் ஆகிய சமங்கை நதியை ஒருகணத்தில் யாதொரு ஆயாசமுமிலாமல் அடைந்தனர். அந்நதிக்கரையில் ஒருபாகத்தில் தன்மைந்த னிருப்பதைப் பிருகுமகரிஷியானவர் கண்டனர், அம்மைந் தன் அக்கால் அன்னியபாவமாகிய அசுக்கிரத் தன்மையையடைந்து வேறுதேகத்தை யுடையவனாக மாறுபட்டு இருந்தனன். சாந்த இந்திரியனும், சமாதிஸ்தனும் அசஞ் சலமனமானை யுடையவனும் அநாதி சமுசாரசிரமத்தின் சாந்தியின் பொருட்டு நீள் காலம் விசிராந்தனும் அம்மைந்தனிருந்தனன்.

(ச.) மந்தரக்கந்தரத்தின் = மந்தராசலத்தின் குகைகளினின்றும், அகன்றுமீது = பிறப்பட்டுப் பின்பு, அமரர் ஆற்றை = தேவகங்காநதியை கணத்தில் மேவினன், ஆங்கே = அந்நதி தீரத்தினோரிடத்து, இருந்த = ஜிதேந்திரியனும் மநோசாஞ்சல்லிய மற்றவனுமாய்ச் சமாதியிலிருந்த, சேயை = தன்புத்திரனை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தருமதேவர் சங்கற்பத்தினால் விழித்தமைந்தன் இருவரையும் பூசித்தபின் னொருங்கு வீற்றிருத்தல்:—இங்கென்பது. (34)

இங்குற்ற சமாதிநீங்கி யிவனெமைக் காண்கவென்று
சங்கற்பஞ் செய்தலோடுஞ் சமாதிவிட் டிவரைநோக்கி
வெங்குற்ற மில்லாமைந்தன் பணிதலும் விரும்பியாருந்
துங்கத்தோ ரொருகன்மீது மூவருஞ் சூழ்ந்திருந்தார். (35)

(ப - ரை.) இங்குற்ற சமாதிநீங்கி = இவ்விடத்தில் கூடியிருக்கும் நிர்விகற்பசமாதி கலைந்து, இவன் = இப்பிருகுமைந்தன், எமைக்காண்க என்று = எம்மிருவரையும் பார்க் கக் கடவன் என்பதாக சங்கற்பம் செய்தலோடும் = தருமதேவர் எண்ணியவுடனே; சமாதிவிட்டு = நிருவிகற்ப சமாதியினின்றுங் கிளம்பி, இவரைநோக்கி = இவ்விருவ ரையும் தரிசித்து, வெங்குற்ற மில்லாமைந்தன் = கொடிய குற்றமொன்று மில்லாத்புத் திரன். பணிதலும் — நமஸ்கரித்ததும், விரும்பியாரும் = பரஸ்பரம் செய்யப்பெற்ற நல்லாசாரமுடையராய், துங்கத்தோர் மூவரும் = பரிசுத்த சரிதமுடைய அம்மூன்று பேரும். ஒருகன்மீது சூழ்ந்திருந்தார் = ஓர் ஒப்பற்ற சிலையின்மீது வீற்றிருந்தனர்.

(ஸ்ரீ - வீர.) சமாதியின்கண் வீற்றிருந்த அப்பிருகுமைந்தனைநோக்கிக் காலதேவர், அத்தித்தொனியன்ன வாக்கியத்தால் உமதுமைந்தன் இவன்றான் என்றுமகரிஷியைவிளி த்து விளம்பினர். பின்னிம்மைந்தன் சமாதியினின்றும் வெளிப்போந்து எம்மைக்காண்க வென்று கூறிய சப்தத்தினாலே அப்பார்க்கவன் மாமேக கோஷத்தான் மயூரம் மெது வாக விழிப்பதேபோலச் சமாதியினின்றும் விழித்தனன், கண்களை விழித்ததும், ஒரே போதில், சன்முகத்துதித்து வந்திருக்கும் சசிதிவாகர தேவர்களைப்போலும் உள்ளகால பிருகுப் பிரபுக்களைச் சமீபத்திற் கண்டனன். ஹரிஹரர்களைப் போன்றவரும் விப்பிர வேடரும், சமானமானவரும், காந்திவாய்ந்தவரும், தன்னைநோக்கி வந்திருப்பவரும், ஆகிய அவ்விருவரையும், கதம்பலதிகை பீடத்தினின்றும் திடீரென்றெழுந்து நமஸ்கரித் தனன். அன்னியோன்னியம் அக்காலத்திற்குத் தக்கபடியாய கௌரவ அபிசந்தாநியா சாரமுடையராய், அம்மூவரும், மேருவின்மீது ஜகத்பூச்சியர்களாய பிரஹ்ம விஷ்ணு ஹரர்களைப் போலும் ஒரு சிலையின்மீது இனிது வீற்றிருந்தனர். (35)

(ஸ்ரீ-வீர.- அ-கை.) வாசுதேவ முனிவன் அவ்விருவர் தரிசனப்பேற்றை வியந் தோதல்:—வாசு என்பது.

வாசுதேவப் பேர்மைந்தன் மற்றிவர்தம்மை நோக்கித்
தேசுடையு மதுநல்ல தெரிசனப் பேற்றினாலே
மாசறுதவத்தா னுலான்மகங் களாற் றனந்தாற்போகா
வேசுறுமோகந் தீர்ந்தே னிதிலமுதின்பஞ் செய்யா. (36)

(ப - ரை.) வாசுதேவப் பேர்மைந்தன் = வாசுதேவன் என்னும் பெயர்வாய்ந்த அம்முனிவன், மற்றிவர் தம்மைநோக்கி = வந்து தரிசனந்தந்த அவ்விரண்டு முனிவரையும் பார்த்து, தேசுடையுமது நல்லதெரிசனப் பேற்றினாலே = மகாதேஜசு பொருந்திய தங்களுடைய தரிசன விசேடங் கிடைத்ததனாலே, மாசறு = குற்றமற்ற, தவத்தால் = தபசினால், நூலால் = சாஸ்திரத்தால், மகங்களால் = யாகங்களால், தனத்தால் = திரவியத்தால், போகா = நீங்காத, ஏசுறுமோகந்தீர்ந்தேன் = சோகந்தரலாலியாவருமிகழு மாசுவாய்ந்த மோகமென்னு மயல்தீரப் பெற்றேன், இதிலமுதின் பஞ்செய்யா = இதுபோல் இதனினும் அமிர்தம் ஆநந்தத்தைப் பயவாதாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ ! இவ்வண்ணம், சமாதியை முடித்த அந்த மைந்தன், அக்கங்கையின் நீரத்துப் பாறையிற்றன்னுடனமர்ந்திருந்த அவ்விரு பெரியோரையும் நோக்கி, அமிருதப் பிரவாகம் போன்ற சாந்தமான சுந்தரமொழிகளைக் கூறத்தொடங்கினான்: ஐயன்மீர் ! தங்களுடைய பரமதரிசன அடைவினாலே யான் இன்று பரம ஆநந்தத்தை யடைந்தனன்; சமமாகவந்திருக்கும் சூரியசந்திரர்களைப் போன்ற தங்களுடைய தரிசனமான துலகத்தில் யாவருக்குத்தான் இன்பம்பயவாது? சாஸ்திரங்களானும், தவங்களினானும், உபாசனைகளினானும், பிரஹ்மவித்தையினானும், எவ்வென்மனோ மோகமானது தீராதிருந்ததோ அது தங்களுடைய தரிசனத்தினனே தீர்ந்தேபோயது. அதிசய உக்தியாகிய இது பிரசம்சையின் பொருட்டாம். மகத்துக்களுடைய இத்திருஷ்டிகளே இவ்வாறு பேரானந்த மகிழ்ச்சியைப் பிறப்பிக்கும், நிருமலமான அமிர்த விருஷ்டிகளும் இங்ஙன் பெருஞ்சுகத்தைச் செய்வியாவாம். அம்பரத்தை அதிபவித்திரஞ் செய்விக்கும் அம்புலியருக்கர்கள் போலும் எங்களுடைய இத்தேயத்தைப் பாதப்பரிசங்களால் அதிபவித்திரஞ் செய்வித்த பரிபூர்ண தேஜசோடு கூடியதாங்கள் யாவர்கள் என்பதைத் தெரிந்துகொள்ள மிகுந்த ஆவலுடையவனாகிப் பிரார்த்திக்கின்றேன் என்றனன்.

(ச.) மோகம் = எனது மனோமோகம், இதில் = மகான்களாகிய உமது தரிசனப் பேறு சுகந்தருவதுபோல, அமுதின்பஞ்செய்யா = நிர்மலாமிர்த விர்ஷ்டிகள் சுகந்தாராவாம். (36)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறியம்பிய வாசுதேவனுக்கு மகரிஷியினது திருவருளால் நடந்தனயாவுந் தோற்றல்:—என்று என்பது.

என்றுரைசெய் தோன்றன்னை யியன்முனியினிது நோக்கி
நன்றுயர் ஞானஞ்சேர்க நவைதரு மடமைதீர்க
வுன்றனக் கென்றலோடு மூனக்கண் ணிரண்டு மூடிப்
பொன்றலின் ஞானக்கண்ணாற் புராதனமெல்லாங் கண்டான். (37)

(ப - ரை.) என்றுரை செய்தோன் றன்னை = என இவ்வண்ணம் வேண்டிக் கொண்டமைந்தனை, இயன் முனியினிது நோக்கி = சகஜமாகவே பெருந்தவத்தை

புடைய மகரிஷியானவர் கருணையோடும் பார்த்து, உன்றனுக்கு நன்று உயர்ஞானம் சேர்க=உனக்கு நன்மையான மேன்மை மிக்க உணர்ச்சி புண்டாகுக, நவைதரு மடமை தீர்க=குற்றத்தைப் பொருத்தும் அறியாமைதீர்ந்தொழிக, என்றலோடும்=இவ்வாறியம் பியவுடனே, ஊனக்கண்ணி ரண்டுமூடி=சர்மசக்ஷுகள் இரண்டையுங்குவித்து,போன்ற வில் ஞானக்கண்ணால் = கெடுதலில்லாத ஞானதிருஷ்டியினுல், புராதனம் எல்லாம் கண்டான் = பழமையான சரிதமுழுதும் பார்த்தனன்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! இவ்வாறு வேண்டிக் கொண்ட ஜன்மாந்தர ஆத்மஜனு கிய அக்குழந்தையை நோக்கிப் பிருகுமகரிஷியானவர், அஞ்ஞன் அல்லை நீ, பிரபுத்தன் ஆயினை நீ உன்னை யிப்போது நினைந்து பார்த்தி யென்றனர். பிருகுமகரிஷியினுலே பிர போதிதனுகிய அம்மைந்தன் தியானத்தானே நன்குதிறக்கப்பெற்ற திவ்யலோசன முடையவனுகி மூகூர்த்த மாத்திரத்தில் தனதுஜன்மாந்தர தசையை நன்கெண்ணினன்.

(ச) புராதனம் எல்லாம் =தனது பூர்வஜன்மாந்தர தசையனைத்தும், கண்டான்= கணமாத்திரத்திற் பார்த்தான். (37)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஞானதிருஷ்டியினுலே யாவற்றையுங் கண்டமைந்தன் பெரும் வியப்பை யடைந்திடல்:—நீத்தன வென்பது.

நீத்தன பிறவியெல்லா நிமிடத்தின் ஞானக்கண்ணுற்
பார்த்தபின் வியந்து சொல்வான் பகுதியா மிகுதிமோகங்
கோத்த ஞாலங்களாகிக் கோரவென் மனத்தினூடே
யாத்தமாய் வளராநின்ற தகோவகோ வீதொன்றென்னே. (38)

(ப - ரை.) நீத்தன பிறவியெல்லாம் = சென்ற ஜென்மங்கள் அனைத்தையும், நிமி டத்தில் = சொற்பகாலத்தில், ஞானக்கண்ணால்=ஞானதிருஷ்டியினுல், பார்த்தபின்= கண்டபின்னர், வியந்து சொல்வான் = ஆச்சரியப்பட்டு அறைவதாவது, பகுதியாம், மிகுதிமோகம்=மகாமாயையா லெழுந்த பிரமமயமாய திருஷ்டியானது, கோத்தஞாலங் களாகி = ஜகத் ஜாலங்களாய்ப் பிரவிருத்திக்குமாறு, கோர என்மனத்தினூடே= இர ஜோமய எனது சித்தத்தில், ஆத்தமாய் வளராநின்றது = சாங்கோபாங்கமாய் விருத்தி யாகின்றது, அகோ அகோ ஈது ஒன்று என்னே=அந்தோ அந்தோ இஃதொன்றிருந்த வாறு என்னையோ!

(ஸ்ரீ - வீர.) வாக்கில் வல்லவனுகிய அம்மைந்தன், ஆச்சரியத்தைக் கண்டவனுகி, மலர்ந்த முகத்தனுய், மகிழ்ந்த மனத்தனுய், விதர்க்கத்தகமந்த மந்தமொழிகளை விளம் பத் தொடங்கினுன், எதன்வயமாக இவ்விஸ்தாரமான ஜகத்சக்ரமானது பிரவிருத்திக் குமோ, அத்தகைய பரமாத்மாவினது கருமபல விவஸ்தை யேதுமாயா சக்தியென்னும் நியதியானது வெல்க; அந்நியதியானது எக்கால் எதைத் தொடங்குமென எவராலுமே யறிதல் ஏலாதாம்.

(ச.) நீத்தன = தான் முன்னெடுத்து நீக்கியதான; பகுதியாம்=பிரகிருதிமயமான, மிகுதிமோகம் = விரிந்த மோகத்தினுல், கோளுறு மனத்தினூடே = குற்றமான சித் தத்தின் கண், ஈதொன்று = இந்தப் பிரமைமயமான திருஷ்டி. (38)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஒன்றையுணர்ந்ததானேயே ஒருங்கனைத்து முணர்ந்ததாகக் காட்டல்:—கற்பன வென்பது.

கற்பன வனைத்துங் கற்றேன் காண்பன வனைத்துங்கண்டே
னுற்பவத்த நேககால முழன்றவெந் துயருந் தீர்ந்தே
னற்பய னறிவைப் பெற்றே னுமினியை யவேகி
யெற்படர் மந்தாரத்தி லிருக்கின்ற வுடலைக் காண்பேம். (39)

(ப - ரை.) கற்பன அனைத்துங் கற்றேன் = அறியவேண்டிய யாவற்றையும் அறிந்தனன், காண்பன அனைத்துங் கண்டேன் = பார்க்கவேண்டிய யாவற்றையும் பார்த்தனன். உற்பவத்த நேககாலம் உழன்ற வெந்துயரும் தீர்ந்தேன் = இச்சமுசாரத்தில் வெகுகாலம் பிறந்திறந்துலைந்த கொடியதுக்கங்களும் அகன்றேன், நற்பயன் அறிவைப் பெற்றேன் நல்லபிரயோஜனமாகிய ஞானத்தையுமடைந்தேன், ஐய! எந்தையே! இனி = இப்போது நாமேகி = நாம்போய், மந்தரத்தில் இருக்கின்ற = மந்தராசலத்திருப்பதாகிய, எற்பு அடர்? என்புநெருங்கிய, உடலை = கங்காளத்தை, காண்போம் = பார்ப்போம்.

(ஸ்ரீ - வீர) இப்போது அறியத்தக்கதை பறிந்தனன், காணவேண்டியதாயகத மின்றியதைக் கண்டனன் வெகுகாலம் இளைப்புற்றயானிப்போது விசிராந்தியுற்றவனாயினேன், எனது சகலமயல்களுஞ் சென்றன. ஹே தந்தையே! எழுந்திருங்கள். செல்வோம், சென்று, காய்ந்த வனலதைபோலும் மிகக் காய்ந்துலர்ந் திருக்கும் அந்தமந்திராசலத்திருக்குங் காயகங்காளத்தைப் பார்ப்பேம்.

(ச.) கற்றேன் = கற்றறிய வேண்டியதை யறிந்தேன், அற்புதமாய் காண்பன, நற்பயன் = சின்மாத்திரத்தைத் தவிரச் சிறிதுமின்றென்னும் நற்பிரயோஜனத்தையுடைய, உடலை = தேவகதி விலாசத்தைக் காண்போம். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அத்தனுவால் உனக்காக வேண்டியது என்னேயெனின்? ஒன்று மிலதெனல்:...கருமமென்பது.

கருமமே யேதுவாகுங் காயகங்கா ளந்தன்னை
யிருகணுனோக்கி யின்பமெய்து வானினைந்தேனியாது
மொருசெயல் வேட்கையில்லை யொழிப்புறு செயலுமில்லை
வருதிராலென்ன வன்னூர் மந்தரங்கணத்திற் சேர்ந்தார். (40)

(ப - ரை.) கருமமே யேதுவாகும் காயகங்காளந்தன்னை = நியதியின் இரசனையால் உண்டாவதா யிராநின்ற அவ்வுடலெலும்புப் பஞ்சரத்தை, இருகணுல் நோக்கி = இரண்டு நேத்திரங்களாலும் காட்சியாகக் கண்டு, இன்பம் எய்துவான் = ஆநந்தத்தை யடையும் பொருட்டு, நினைந்தேன் = எண்ணினேன், யாதும் ஒருசெயல் வேட்கையில்லை = இவ்வுலகத்தில் எத்தொழிலைச் செய்யவு மிச்சையில்லை, ஒழிப்புறு செயலுமில்லை = எத்தொழிலை யெள்ளளவு மிச்சையில்லை, வருதிர் = வாருங்கள், என்ன = என்றுகூற, அன்னூர் = அம்மூவரும், வந்தரங்கணத்தில் சேர்ந்தார் = மந்தராசலத்தை நொடிப்பொழுதிற் சார்ந்தனர்.

(ஸ்ரீ-வீர.) ஈண்டு இனிதியற்றத் தக்கதொன்றையும் கண்டிலேன், இனிதியற்றாது ஒழிக்கத்தக்கதையுங் காணேன், நியதியின் இரசனையைக் கேவலங்காணும் பொருட்டு யான் விளையாடிக் கொண்டிருப்பேன். அற்றேல் நியதியின் செயற்கையைக்கண்டு மகிழ விளையாடும் நினக்கு ஆண்டு அபிநிவேசத்தான் மீண்டும் முன்போலத் தேவாங்கனை மனோரதங்கொண்டு பின்றொடர்தலாதி சமுசாரத்தின் அடைவு வருமேயெனச் சங்கையுண்டாக, அதிதிடமான தத்துவஞான பாதித அநுவிருத்தி மாத்திரத் தன்மையானே

முன்போல அபினிவேச அடைவு இலதாம் என்று சமாதானித்தல்:—வருதிரால் என்றது. ஆல் அசையே யெனினும் பற்றற்ற பான்மையின் உல்லாசத்தைக் காட்டும் பொருட்டாம். எக்காரணத்திஞல் யான், ஒரேயாத்மா பரமார்த்த சத்தியம் அயலொன்றும் அன்று, என்னும் திடநிச்சயத்தானே, அத்தியந்தஞ் சுபத்தையே செய்யும் எச்சரித்திரமானது, ஆரியர்களாகிய அன்னியஜீவன் முக்தர்களாலும் சேவிக்கப் பெறுமோ, அச்சரித்திரத்தையே, அதிதிடமாக அநுசரிப்பேனே. முன்போல மூடவிருத்தனுயிரேனே; அக்காரணத்திஞலே, உங்களுக்கும் எனக்கும், அபிமதமாய பூர்வதேகஜீவனுதி ரூபமதி நன்காயுளதாகலாம்; அதஞலே யாதொருகோது முளதாகாதாம். அதஞலே பிரகிருதமான பிராரப்த சேஷபோஜக விவகாரத்தை ஆசரிப்பேன், மூடனைப்போல அபிநிவேசத்தை யடையேன்.

(ச.) ஒழிப்புறும் = அநிஷ்டமாய் விடத்தக்க, செயலுமில்லை, ஸ்ரீ வசிட்டர், கங்காதீரத்தினின்றும் மந்தரங்கணத்திற் சேர்ந்தார். சமீஹிதம் = இஷ்டம். (40)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகரிஷியின் ஆசிரமத்தை வந்தடைந்தபின் மைந்தன் தன் காயத்தை நோக்கி வியத்தல்:—முந்துறு என்பது,

முந்துறு சகத்தினெல்லை தெளிதரு மூவர்தாமும்
வந்துழி முன்னைச்சென்ம மருவிய வுடலைமைந்த
னந்தமில் மகிழ்வாஞேக்கி யருந்தவம் பிதாவைநோக்கி
யிந்தவன் கங்காளங்கொ லீன்றுநீ வளர்த்த தென்றுன். (41)

(ப - ரை.) முந்துறு சகத்தின் எல்லை தெளிதரு மூவர்தாமும் = பிராசீனமானஜகத்தின் கதியை இனிது ஆராய்ந்தறிந்த தத்துவஞ்ஞர்களாகிய அம்மூன்று பேர்களும், வந்துழி = ஆசிரமத்துற்றபோது, மைந்தன் = பிருகுசுதன், முன்னைச் சென்மம் மருவிய உடலை = பூர்வஜன்மத் தடைவுற்றிருந்த சரீரத்தை, அந்தமில் மகிழ்வால் நோக்கி = அளவற்ற சந்தோடத்தோடும் பார்த்து, அருந்தவப் பிதாவைநோக்கி = அரியதவமகிமை வாய்ந்த தந்தையை விளித்து, இந்தவன் கங்காளங்கொல் ஈன்று நீவளர்த்தது என்றுன் = இதோ கிடக்கும் வன்புமிக்க என்புக் கூண்டைத்தாஞ, ஹே தந்தாய்! தாங்கள் தவம்புரிந்து பெற்றுப் போற்றிச் சீராட்டி வளர்த்தது என்று புன்சிரிப்புடன் புகன்றனன்.

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்த வகையாகச் சமுசார சம்பமாய கதியை விசாரிப்பவராய், சஞ்சலப் பிராணன்களோடு கூடியவராய், தத்துவமுணர்ந்தவராய அம்மூவரும், சமங்கையின் றடத்தினின்றும் பிருகு ஆசிரமத்தை நோக்கிக் கணகாலத்தில் வந்து சேர்ந்தனர். சஞ்சலப் பிராணன் என்றதஞல், பிராணனது கிரியையினுலேயே அவர்கட்குச் சலனேபசாரம், ஆத்மாவின் கண்ணே கிரியையில்லை யென்பதை விளக்கியதாம். பார்க்கவன் பூர்வஜன்ம உற்பவ சுஷ்கமானதனுவைக் கண்டபின், ஹே தந்தாய்! எவ்வுடலானது தங்களால் சுகசம்போகங்களிஞலே முன்னர் நன்னர் கொஞ்சிக்கொஞ்சிப் போற்றப் பெற்றதோ; அவ்வுடலான இது மிகவும் இளைத்தன்றே யிருக்கின்றது, என்பதாக இனிக்கூறும் வண்ணம் கூறத்தொடங்கிஞன்:

(ச.) தெளிதரு = விசாரித்துணர்ந்த தத்துவஞ்ஞராகிய. (41)

(ஸ்ரீ - வீர - அ-கை.) காய்ந்த கங்காளக் காயமிருந்த நிலையை நோக்கிப் பல்லாற்றனும் வருணித்தல்:—பின்-மன, மென்பன.

பின்னரு முரைப்பானை யபெறலருஞ் சுகங்களாலே
முன்னநீ வளர்த்தகாய மொய்துய ரனைத்துமாறி
யின்னல்கூர் காதலையமிதா கிதமெல்லா மின்றி
மன்னிய சுகமதாகி மனமிறந் திருந்ததன்றே. (42)

மனமிலா நிலையினன்றி மன்னுயிர்க் கின்பமுண்டோ
கனமுறு சுகசம்போகக் கடலிலே திலைக்கலாகு
மனகபேரறிவு சாந்த மறிவுளோர் தாபநீங்கித்
தனதுயர் நிலையாமிந்தத் தனியுடல் வாழ்ந்ததன்றே. (43)

(ப - ரை.) பின்னரும் உரைப்பான் = மீண்டும் பார்க்கவன் கூறுவதாவது, ஐய ! தந்தாய் ! பெறலருஞ் சுகங்களாலே = கிடைத்தற்கரிய அநேகவித சுகசம்போகங்களாலே, முன்னம் = பூர்வம், நீ வளர்த்த = தாங்கள் பாலனஞ்செய்த காயம் = இத்தேகம், மொய்துய ரனைத்துமாறி = சம்பந்தித்த சர்வதுக்கங்களும் அகன்று, இன்னல் கூர்காதல் ஐயம் = துயரந்தரும் ஆசைசந்தேகம், இதாகிதம் = அநுகூலம் பிரதிகூலம், எல்லாமின்றி = என்பனயாவுமே யொழிந்து, மன்னிய சுகமதாகி = நிறைந்த ஆநந்தத்தையுடையதாகி, மனமிறந்திருந்தது அன்று ஏ = மனோலயத்தை யடைந்தன்றோ வாழ்கின்றது.

(ப - ரை.) மனமிலா நிலையினன்றி = சித்தமில்லாத திதியினல்லாது, மன்னுயிர்க் கின்பம் உண்டோ = இச்சமுசாரத் துழலும் ஜீவனுக்காநந்தலேசமும் உளதாமோ, அனக பேரறிவு சாந்தமறிவுளோர் = மனமற்ற தன்மையையுற்ற மகாமதியராய்ச் சாந்தராய்ச் சொரூப சாக்ஷாத்கார முற்றவர், கனமுறு சுகசம்போகக் கடலிலே திளைக்கலாகும் = ஞானகனமான ஆனந்த சம்போக சமுத்திரத்திலே மூழ்குவர், தாபநீங்கி = சர்வதுக்கங்களும் அகன்று, தனதுயர் நிலையாம் = அச்சீவன் முக்தாதுமேலான திதியிலிருக்கும் திருமேனிகள்போல, இந்தத்தனியுடல் வாழ்ந்ததன்றே = இவ்வேகாந்த வாசசரீரமும் வாழ்ந்து கொண்டன்றோ இருக்கின்றது. அன்று ஏ அசைநிலைகள், அல்லது ஏ என்பது ஓவின் பொருள்கொண்டு வியப்பினை புணர்த்தினும் உணர்த்தும்.

(ஸ்ரீ - வீர.) ஐயாவே ! சந்தேகமற்று, சர்வ கௌதுகமும் விடுபட்டு, சர்வதொழில் களையுஞ் செய்யாமல், சுகமாக இத்தேகம் வனத்தில் எங்ஙனம் தூங்குகின்றது பாருங்கள் ! சர்வ ஆசைகளின் வடிவசுரங்களின் காரணபூதமாய மோக இலக்கண மேககாரணப்பனிக்குச் சரத்வரவு வடிவமனோநாசம் அல்லாமல் வேறு மேன்மையை ஜந்துக்களிடத்திற் கண்டிலேன். ஆசைதிசை யெனப்பொருள் படலின், சர்வ ஆசைகளின் அல்லது சர்வ ஆசைகளில் ஜ்வரபூதமாய மோகப்பனியின் சரற்காலவரவு எனப்பொருள் கொள்ளினும் அமையும் எவர்கள் மனமற்ற தன்மையை யடைந்துள்ளார்களோ, அவர்களே, இரணியகருப்ப ஆநந்தமீறுய விடய சுகபோகங்களின் பரம அவதியாகிய பூமாநந்தத்தை யடைந்தவர்கள் ஆவர்கள் அபரிச்சின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரத் தன்மையானே பூரணபுந்தியர்கள் ஆவர்கள், இராகாதி தீகார்ய உபசமத்தானே சாந்தமதியினர்கள் ஆவர்கள். தனதுதேகத்தில் ஜீவன் முக்ததேகசாமியம் அடைவித்துமகிழ்: = தாபநீங்கியென்பது. சர்வதுக்கதசைகளினின்றும் விடுபட்டுச் சுரமத்தியந்த மற்றுச்சுகநிலையிலிருக்கும் காயத்தை மகத் புண்ணிய வயத்தாற் கண்டனன்.

(ச.) இருந்தது = தூங்கிக்கிடக்கின்றது.

மன்னுயிர்க்கு = ஜந்துக்களுக்கு, மனமிலா நிலையினன்றி = சகல ஆசைகளுக்கு மூலமான துக்கமோகங்க ளென்னும் பனிகளினுடைய நிவர்த்தக ரூபமான சரற்காலமாகிய நிர்மனஸ் கதையினலல்லது, இன்பமுண்டோ = மற்றென்றினுஞ் சுகமின்றும், இந்தத்தனியுடல் வாழ்ந்தது. அனகபேரறிவு=புனிதமான மகாமதியும், சாந்தவறிவு= சாந்தமதியும், உளோர் = உடையவர்கள், தனதுதாப நீங்கி (தமதென்னும் பன்மை தொடை நோக்கித்தனதென விகாரமாயிற்று) கனமுறு சுகசம்போகக்கடலிலேதிளைக்கலாகும் = பேராநந்தாநுபவ சாகரத்தின் முழுகற்குரிய, உயர்நிலையாம், நிர்மனஸ்கதைக் கொப்பாம். அன்று ஏ இரண்டும் அசை நிலைகள். (43)

(ஸ்ரீ-வீர - அ-கை) இவ்வாறு இயம்பியதைக் கேட்டுக்கொண் டிருந்தகாலனுர் அதனைமாற்றி யாசீர்வதித்தல்:—அரு என்பது.

அருந்தவப் பயனலிந்த வற்புதங்கண்டே னென்ன
விருந்தவக் காலனோக்கி யிவ்வுரை யிகந்து மாற்றிப்
பொருந்திய வுடலின்மன்னர் புரிபுகுமது போற்புக்குத்
திருந்தியவசுரர்க் கெல்லாந் தேசிகச் செய்கை செய்வாய். (44)

(ப - ரை.) அருந்தவப் பயனல் = பெரும்பாக்கிய வசத்தினல், இந்த அற்புதம் கண்டேன் என்ன = இத்தகைய ஆச்சர்யத்தைப் பார்த்தேன் என்றுமைந்தன் கூற, இருந்தவக்காலன் நோக்கி = அதனைக்கேட்டுக் கொண்டிருந்த பெருந்தவத்தினையுடைய அத்தருமர்பார்த்து, இவ்வுரை யிகந்துமாற்றி = இவ்வாறு கூறுதலை நன்றன்று என்று புகன்றுதிருப்பி, பொருந்தியவுடலின் = முன்னர்ப் பொருந்திய பார்க்கவசரீரத்தில், மன்னர் = அரசர்கள் திக்குவிஜயாநந்தரம், புரிபுகுவது போற்புக்கு= தமது நகரத்திற் பிரவேசிக்குஞ் செயல்போலப் பிரவேசித்து, திருந்திய வசுரர்க்கெல்லாம் தேசிகச் செய்கை செய்வாய் = பெரும்பாக்கியம் பெற்ற அசுரேந்திரர்கட் கெல்லாம் குருத்துவத்தைச்செய்து நீடூழிவாழ்தி.

(ஸ்ரீ - வீர.) பாக்கிய உதயத்தால், வனத்தில் இந்தச் சிந்தையற்ற விந்தைக்காயத்தையான் கண்டனன் என்றனன். அம்மைந்தன் அளவில் சரீரங்களை யடைந்தனனே அவற்றுள் இத்தேகத்தின் மாத்திரம் பிரிய அநுதாபங்கள் வருவானேன், மேல் இதன் கட்புகக்காலனுர் ஆனைதருதல் தானேன் எனின் ? மற்றவற்றைக் குறித்து இதன் கண்ணுகர் வினையின் ஆதிக்கிய மிருத்தலின், சென்றகற்பத்திற் செய்த தவப்பயனுக இக்கற்பத்தில் நவக்கிரகத் தொன்றாயும் அசுரதேசிகனும் இருக்கவேண்டிய அமைப்பிருத்தலினுனும் என்றுணர்க. முன்வருணித்த பிரகாரமியம்பிய பிருகுமகரிஷியின் றனயனுகிய சுக்கிரனது பரிதேவனை வாக்கியத்தை அயுக்தத்தன்மை வருணனத்தால் அகற்றிக் கம்பீரத் தொனியோடுங் காலபகவான் கூறுவதாவது. சமங்கைக்கரையிற் றவம்புரிந்து கொண்டிருந்த இந்தத்தநுவை விடுத்து ஹே பார்க்கவ! வெளிப்போந்த பார்த்திவன் நகரியை வந்தடைதல்போல இம்மங்கலதநுவிற் பொங்குற மகிழ்ச்சி புகுந்திடுதி, அதிகாரஞ் செலுத்தும்படியான் பிராரப்த எழுச்சிவரும்போது இம்முதற்றநு வினலே பெருந்தவம் புரிந்து அதனுனே மீளவும், உன்னுல் அசுரேந்திரர்களின் குருத்துவம் செய்யத்தக்கது.

(ச.) இந்த வற்புதம் = துக்கமின்றிச் சுகமாய் நிர்மனஸ் கதையாகிய இவ்வற்புதமான தேகத்தை இவ்வனத்தில் நான்கண்டேன் என்ன, அச்சுக்கிரனை, (44)

(ஸ்ரீ-வீர - அ-கை.) காலதேவரைப் பிரிந்த இருவரும் மறுகிநிற்றலும் மைந்தன் மாயப்பிரவேசமும் உணர்த்தல்:—என்று என்பது.

என்றுசுக்கிரனையே வியாவிருவரையும் வாழ்த்தி
நின்றுழிமறைந்தான் காலனந்தவாமறுகி நின்றார்
பின்றையவாசு தேவப்பேருறு கருத்தைநீக்கி
வன்றகைவெள்ளி முன்னமரு வியவுடலிற்புக்கான். (45)

(ப-ரை.) என்று=கூறியவகையால், சுக்கிரனையேவி=அப்பார்க்கவனை ஆதிசரீரத்திற் புகுமாறு கட்டளையிட்டு. இவரிருவரையும் வாழ்த்தி = பிருகுமகரிஷியையும் சுக்கிரனையும் சந்நிதியில் ஆசீர்வதித்து, நின்றுழி மறைந்தான் காலன் = நின்ற நிலையிலேயே யந்தர்த்தானமாயினார் தருமதேவர், நீத்தவர் மறுகி நின்றார் = தரிசனபாக்கியமிழந்த அவ்விருவரும் கண்ணீர்விட்டுநின்றனர். பின்றையவாசு தேவப்பேருறுகருத்தை நீக்கி = பின்னரடைவுற்றவாசு தேவன் என்னும் நாமமமைந்த எண்ணத்தையகற்றி, வன்றகைவெள்ளி = பெருந்தன்மை வாய்ந்த சுக்கிரன், முன்னம் மருவிய = பூர்வம் பொருந்திய, உடலிற் புக்கான் = காயத்திற் பிரவேசித்தான், (ஸ்ரீ-வீர.) சுபமானது உங்கட்குண்டாகுக, யாமோ அபிமதமானதிசை செல்வோம், யாமோ எற்றது மரியாதையாலாதல், அநுசர சாகித்ய விவக்ஷையலாதல் ஒல்லும், அபிமத திசை விசேஷணம் அநபிமத விலக்கப் பொருட்டு அடைவுற்றதல்லவாம் பூர்ணத்மாவிற்கு அநபிமதமே அப்பிரசித்த மாதலின்; எச்சித்தத்திற்குத் தான் இது அபிமதமெனவும், இஃது அநபிமதமெனவும் விகற்பமானதுண்டாமோ அதுவெறுப்பானதை விடுத்து விருப்பானதைத் தொடுத்துக் கொள்ளும், அச்சித்தமானது ஆராய்ந்து பார்க்குமிடத்து ஒருசிறிது வத்துருவத்தையும் உடையதாகாதாம் ஆகலின் அபிமதமானதிசை யென்பதற்குப் பரமப்பிரேமாஸ்பத ஆத்மபாவ அவஸ்தான மென்பதாம், ஆங்குச் செல்வோம், என்பதாகத்தமது கருத்தைத் தெரிவிக்கும் பொருட்டு விசேஷணம் தந்ததாம். விருப்பு வெறுப்புள்ள உள்ளம் ஒருபொருளாகாமையின், அஃதற்றயாம் அதிக விருப்பிற்கிடனாய எமது சொரூபத்தையே யடைவேம் எனபதாம். என இசைத்து, பிருகு மகரிஷியும் சுக்கிரனும் அன்பினாலே வெப்புற்று அருங்கண்ணீர் சொரிய, தப்தஅங்கங்களோடுற்ற மண்ணும் விண்ணும் கண்ணீர் சொரியக்கிரணங்களோடு கூடச்சகத்திர கிரண நாயகன் மறைந்ததே போலும் அக்காலனார் மறைந்தருளினார். அந்தக்கிருதாந்தர் ஆகியபகவான் சென்றதும பார்க்கவன் அவசியம் பவிக்குங்கன் மகதியையும், பரமேசுர இச்சையின் பேதிக்கத்தகாத அநிவார்யகதி யையும் விசாரித்து; வசந்த காலமானது ஹேமந்தசிசிரகால நிமித்தத்தானே நன்குகாய்ந்த, வரும்மலர்ப்பல முதிப்பிக்கத்தக்க, பாலசுலதையிற்புகுந்த தொக்க; வெகுகால காரணத்தானே அத்தியந்தம் சுஷ்கமாகி, பாவி புஷ்ப சுபவுதயமாகி விளங்கும் அவ்விளந்தனுவிற் புகுந்தனன்.

(ச.) இருவரையும், உங்களுக்கு மங்களமுண்டாக வென்றுவாழ்த்தி, இஷ்டமான திசைக்குயாம் ஏகின்றோம் என்றுகூறி நின்றுழி = அவ்விடத்திற்றானே. (45)

(ஸ்ரீ-வீர-அ-கை.) மேனியின்மைந்தன் பிரவேசித்த பின்னடந்ததை யறிவித்தல்:—வினையென்பது.

வினையது வயத்தினாலே வெள்ளிசே ருடலந்தன்னைத்
தனைநிகர் பிருகுவேத மந்திர சலத்தாலாட்ட
நனைதலு நாடியெல்லா நயம்பெறப் பிராணன்றாங்கி
புனையவ னெழுந்துதாதை யடிபணிந் தருகுநின்றான். (46)

(ப - ரை.) வினையது வயத்தினாலே = கருமவசத்தினாலே, வெள்ளிசேர் உடலந் தன்னை = சுக்கிரன் புகுந்தமக்கின சரீரமாமதனை, தனைநிகர் பிருகு = தமக்குத்தாமே யுவமிக்கத்தக்க மகரிஷியானவர், வேதமந்திர சலத்தால் ஆட்ட = வேதோர்க்த மந்தி ரங்களை மந்திரித்துக் கமண்டலுநீரால் ஆப்யாயன மாற்ற, நனைதலும் நாடியெல்லாம் = நரம்புகள்யாவும் பசைபற்றியவுடன், நயம்பெறப் பிராணன்றுங்கி = சௌக்கிய முறு மாறு பிராணவாயுச் சஞ்சரித்து விளையாடலும், அனையவன் = அப்புராதன சுக்கிரன், எழுந்து = துயிலினின்றும் உத்திதமானவன் போலக்கிளம்பி, தாதை = அருமைப்பிதா வின், அடிபணிந்து = வினையறுக்குந் திருவடியைத் துதித்து நமஸ்கரித்து, அருகுநின் றான் = சமீபத்தில் வணக்கத்துடன் கைகட்டிக் கொண்டு நின்றனன்.

(ஸ்ரீ - வீர.) சுக்கிரன் எனப்பெயரிய அத்தனுஜன் றனுவின்கண்ணே சென்றுவந்த சீவன் புகுந்தபின்னர், அம்மகாமுனிவர், கமண்டலு வாரிகொண்டு மந்திரங்களானே ஆப்யாயனஞ் செய்தனர். அவ்வாப்யாயனஞ் செய்தபின்னர் மழைகாலத்திற் சந்து பொந்துக ளெல்லாம் நீர்பூரித்து நிரம்பிவரும் நதியேபோல அத்தேகத்தினது சர்வநாடி களும் பூர்ணங்களாகி விளங்கிக்கொண்டிருந்தன. நீரினானும், புரோவாதத்தின் சையோ கத்தானும், பூரித்துநின்ற மேகமேபோலும், பிராணசமீரணன் நடந்து செல்லலும் சுக் கிரன் நன்கெழுந்தனன். முதலில் எழுந்துல்ல சித்தமேகமானது தான்றொனித்துப் பர்வதத்தையும் தொனிப் பித்ததேபோலப், புனிதமான திருமேனியை யுடையபிதா வின் சந்நிதியில் நாமகோத்திர கீர்த்த பூர்வகமாக நமஸ்கரித்து அன்பால் அவரையும் ஆசீர்வதிக்குமாறு செய்தனன்.

(ச.) வினையது வயத்தினாலே = நியதியினது வசத்தினாலே, வேதமந்திர சலத் தால் = வேதமந்திரங்களோடு கூடிய கமண்டலோதகத்தினால். (46)

(ஸ்ரீ-வீர - அ-கை ) ஸ்ரீ வசிஷ்டபகவான் பிதாபுத்திரரது சஞ்சாரங்கூறிக்கதையை யும் சங்கரித்தல்:—பிருகுவென்பது.

பிருகுவு மைந்தன்றானும் பிறங்குமந்தாரத்திற் கானிற்
றிருகிய சித்தமென்னுந் தீப்பகை தீரமாற்றி
வருதிரையி லாதநீர்போன் மாசறுநிலையில் வாழ்ந்தார்
கருணைமா முகிலேயென்று கற்றுணர் வசிட்டன் சொன்னான். (47)

(ப - ரை.) பிருகுவும் மைந்தன்றானும் = பிருகுமகரிஷியும் பார்க்கவ மகரிஷியுங், பிறங்குமந்தாரத்தில் = தவத்திற்குத் தக்க சாமக்ரிகளோடு விளங்கும் அம்மந்தார சலத் தில், கானில் = இலங்கும் புனிதமான கானனத்தில், திருகியசித்தமென்னும் தீப்பகை = மாறுபாடாகத் திருசியங்களைக் கருதித்திரியும் மனமென்று சொல்லப்பட்ட வெய்யவி ரோதியை, தீரமாற்றி = அத்தியந்தம் ஜயித்து, வருதிரையிலாத நீர்போல் = எழுமலைக ளற்றநீர் நிறைந்த மடுவைப்போல, மாசறு = நிலையில் = ஜீவன் முக்திப்பதத்தில், வாழ்ந் தார் = ஆநந்தித்திருந்தார், கருணைமாமுகிலே = அவ்யாஜதயாம் புதமே! என்று = என இவ்வண்ணம்; கற்றுணர் = ஸ்ரீ பிரஹ்மதேவர் மூலமாகச் சகல வேதங்களையும் அத்தி யாபனஞ்செய்து உணரத்தக்க பரமாத்ம வத்துவைச் சாக்ஷாத்கரித்தின் புற்றிலங்கும், வசிட்டன் = ஸ்ரீ வசிட்டபகவான், சொன்னான் = ஸ்ரீ இரகுநந்தனனுக் குபதேசித் தருளினர்.

(ஸ்ரீ - வீர.) ஒரு முகூர்த்த பரியந்தம் அன்யோன்யம் மயூரஜலதங்கள் போலும் சம்பாஷித்துக் கொண்டிருந்தபின் னெழுந்து உலகத்தோடொத்து வாழ்புவராய் வாசு

தேவ சரீரத்தைத் தகனஞ்செய்தனர். செய்தபின் பிருகு பார்க்கவர்கள் இருவர்களும் அந்தமகத் புனிதமான வனத்திற்றனே, பெருந்தவத்தைச் செய்துகொண்டு அதிதீப்தர் களாய் விண்ணில் சசிபாஸ்கரர்கள் போல விளங்கிக்கொண்டிருந்தார்கள். சந்தோஷ விஷாதங்களில் ஒத்துவாழ்ந்த ஜீவன் முக்தர்களாகிய அவ்விருவருள் சுக்கிராசிரியர் சில காலங்கழித்து அசுரகுருத்துவத்தையும் கிரகாதிகார பதவியையும் பெற்று வாழ்ந்தனர், பிருகு மகரிஷியும் தமக்கு யோக்கியமாய பிராஜபத்ய அதிகாரபதத்தில் ஆமயமற்று வீற் றிருந்தனர். இவ்வண்ணம் ஹேஇரகுநந்தன! உனக்கு இப்பார்க்கவ உபாக்கியானமானது வருணிக்கப் பெற்றது, உனதுள்ளத்தில் அதிதிடமாக இப்பொருள்களை யாராய்ந்து பார்த்து எவ்வண்ண மிச்சையோ அவ்வண்ணஞ் செய்தி.

(ச.) கருணைமா முகிலே = இரகுநந்தன, இத்தன்மையாக நினக்குரைத்த சுக்கிரன் கதையைச் சித்தத்தில் நன்றாய், விசாரித்து இச்சைப்படிசெய், என்று கற்றுணர் வசிட் டன் சொன்னான். (47)

சுக்கிரன் கதை முற்றிற்று.

---

## தாம வியாஸகடர் கதை.

---

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஐயந்திரிபறப் போதமுற்றவனுக்குச் சர்வதோஷ பரிக்ஷயமும் சித்தப்பிரசாதமும், சுத்தத்தினும் அதி சுத்தமாய் ஆன்மதரிசனமும் உண்டாதலை யுணர் த்த இதனைத் தொடங்கும் ஸ்ரீ வசிஷ்டபகவான். ஞானபல ஜீவன் முக்தாவஸ்தை வநுப வப் பிரகாரத்தைப் பிரபஞ்சஞ் செய்பவராய்ச் சிரவணமனனாதி வளர்ச்சி முறையானே எவ்வாறெவ்வாறு ஞானதாட்டியமாமோ, அவ்வாறவ்வாறு தோஷக்ஷயப் பிரகர்ஷமும் உண்டாமென்பதைப் பிரதமம் தரிசிப்பித்தல்:—மீண்டென்பது

(ச - அ - கை.) முன் சுக்கிரன்கதையிற் சித்தமயஞ் சம்சாரமென்று தெரிவிக்கப் பட்டது, இந்தத்தாமாதி கதையிற் சித்தமயமான சம்சாரம் விவேகத்தாற் சித்தசாந்தி வரிற் சிதையுமென்றும், விவேகமின்றேல் வர்த்திக்கு மென்றுஞ் சொல்லுகின்றார்:— அதிற்சித்தப் பிரசாதத்துக்குரிய சாமக்கிரியைத் தெரிவித்தற்கு மூன்று கவியாலுரைத் தல்:—மீண்டென்பது.

மீண்டுரைசெய்வான் முற்றும்விசாரத் தோர்தொழிறீர் நெஞ்சோர்
நீண்டதோர் மனனம்விட்டோர் நிகழ்சுகவறிவை யுள்ளோர்
பூண்டுளகாட்சி தன்னிற்போவ போய்க்கொள்வ கொண்டோர்
காண்டகுதன்னைக் கண்டோர் காணுதோர் தனைக்காணுதோர். (1)

(ப - ரை.) மீண்டுரை செய்வான் = மீளவும் ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுகின்றார், முற்றும் விசாரத்தோர் = அத்தியந்தந் தவசிறையாராய்ச்சி யுடையராயும், தொழில்தீர் நெஞ்சோர் = சித்தவிருத்திகளைச் செய்யாதவராயும், நீண்டதோர் மனனம் விட்டோர் = அநுபவித்தன எவற்றையுமே எப்போதுமே யெண்ணுதவராயும், நிகழ்சுக அறி வையுள்ளோர் = விளங்காநின்ற ஆநந்த சிற்சொரூபத்தில் விசிராந்தி யுற்றவராயும், பூண்டுள காட்சிதன்னில் = இருப்பதுபோ விலங்கும் திருசியந்தன்னை யில்லாமல் விட்ட வராயும், போவபோய்க்கொள்வ கொண்டோர் = விடவேண்டியவற்றை விட்டவராயும் தொடவேண்டியவற்றைத் தொட்டவராயும் காண்டகு தன்னைக்கண்டோர் = காணத்

தக்க திருசிய மியாவற்றையும் சின்மயமாகித் தன்மயமாகவே கண்டவராயும், காணுதோர் தனை = விளக்குமறிவுக்கு வேருயவற்றை யெல்லாம், காணுதோர் = பாராதவராயும், இருப்பர் பெரியோர்.

(ஸ்ரீ - வீர.) சந்ததம் விசாரசீலராய், சித்திவிருத்திகளை யெல்லாம் சிதைத்தவராய், சமாதி யப்பியாசத்தினுனே கிரமமாகப் பாகியமனனத்தையும் ஆன்ம மனனத்தையும் நியஜித்தவராய், உணரவேண்டியதை யுணர்ந்து நித்தியம் விசுத்தாத்ம ஆகாரமாக விசிராந்த மனத்தையுடையவராய், இலங்கும் அதிகாரிகளுடைய, ஜாட்டியம் ஜீர்ணமாகிய வழி, ஆன்மநீரோடும் ஒரு நீர்மைபுற்றுழி, விஞ்ஞானவயத்தால் மனமானது தெளிந்து சாந்தமாம் என் ஏதமற் றெளிருமென்பதாகவருவதோடு சேரும். திருசியத்தை நன்கு நியஜித்தவராய் தள்ளத்தக்க அஞ்ஞான பூமிகளின் வேறுபாட்டைத்தள்ளின வராய்! கொள்ளத்தக்க ஞானபூமிகளின் விசேடங்களைக் கொண்டவராய், பிரமாதாவையும் சாக்ஷிசித் வேத்திய திருசியமாகக் கண்டவராய், எல்லாத்திருசியங்களையுமே பாசக சின்மாத்திரமே யாகக்கண்டவராய், பாசகசித் வியதிரிக்தத்தைப் பாராதவராய், இலங்கும் பெரியோரது மனமானது ஏதமற்றெளிரும்.

(ச.) முற்றும் விசாரத்தோர் = விசாரம் முற்றும் பெற்றவர், தொழிநீர் நெஞ்சோர் = மலினவிருத்தி யின்றிய சித்தத்தை யுடையவர், மனனம் = சங்கற்பத்தை, பூண்டுன் காட்சிதன்னில் = ஆன்மாவில் விவர்த்தமான திருசியமாகிய, போவபோய் = ஏயத்தைவிட்டவராய், கொள்வகொண்டோர் = உபாதேயமான பிரஹ்மமென்னுந் திருக்குமாத்திரத்தைக் கைக்கொண்டவர், காண்டகுதன்னை = திருஷ்டாவாகிய ஆன்மாவை, காணுதோர்தனை = அதிருஷ்டாவாகிய அநான்மாவை. (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விழிப்பு விழிப்பற்றவராய் வீழ்த்திய வாதனையர் எனல்:—சீவன் என்பது.

சீவனுயிருந்து காணுஞ்சிற் பரதத்துவத்தே
மேவிய நனவையுற்றோர் வேம்பவ மோகமார்க்கத்
தோவலில் சுழுத்தியுற்றோ ரோர்முதிர் நிராசையாலே
பாவனை நலனிற்றீங்கிற் பயிலும் வாதனையை மாய்த்தோர். (2)

(ப - ரை.) சீவனாய் இருந்துகாணும் = ஜீவன்முக்ததசையில் வாழ்ந்துகொண்டு இருந்தே சுவசொரூபமாகக் காணத்தக்க, சிற்பரதத்துவத்தே = சின்மய மேலானதத்துவத்தில், மேவிய நனவையுற்றோர் = பொருந்திய ஜாக்கிரத்தை யடைந்துள்ளவரது, வெம்பவ மோகமார்க்கத்து = கனசம்மோக மயசம்சார நெறியில், ஓவலில் சுழுத்தியுற்றோர் = நீங்காத நித்திரையை யுடையவரது, ஓர் முதிர் நிராசையாலே = ஒப்பற்றபர வைராக்கியத்தினாலே, நலனில் தீங்கில் பாவனைபயிலும் வாதனையை மாய்த்தோர் = சரசங்களிலும் அரசங்களிலும் சந்ததஞ் சிந்தித்துழலும் வாசனையை அடியோடும் அழித்தவரது அகமானது ஏதமற்றெளிரும்.

(ஸ்ரீ - வீர.) விழித்துச் சுகிக்கவேண்டிய பரவத்துவில் வாழ்ந்து விழித்துக்கொண்டிருப்பவரது, கனமான சம்மோகமய அஞ்ஞான விகாராத்மக சம்சாரமார்க்கத்தில் நிரந்தரஞ் சுழுப்தியுற்றவரது, மனமானது தெளிவுற்றிருக்கும் இதன்கண் ஸ்ரீமத்பகவத் திருவாக்கியமு முளதாம் "யாதொரு பொருளையெல்ல வுயிர்களு மிருள்போற்காணு, ரோதருஞானியத்தை யுளங்கையிற் கனிபோற்காணு, மியாதொரு பொருளையெல்லா

வுயிர்களு மென்றுங்காண்மார், காதலின் ஞானியத்தைக் கண்ணிஞற் றெரியக்காணுன்" சர்வசுகலவ அவதியாய விரிஞ்சிபத பரியந்தம், அத்தியந்தமுற்ற பரவைராக்கியத்தாற் சரசங்களாய கிரமமுக்திரச முறுபொருள்களும், அரசங்களாய அஃதற்றவைகளும் ஆகிய, போககாலம் வரையுமே இரம்மியங்களெனத் தோற்றும், போகசாதனங்களாகிய மாலைசந்தன வனிதாதிகளிடத்தே நிராசையுடன் விரக்தியுற்றவரது உள்ளம் தெளிவடைந்தின்புறும்.

(ச.) சீவனுயிருந்து = ஜீவிப்பவனுயிருந்து, காணும் = அறிதற்குரிய, வெம்பவ மோகமார்க்கத்து = கொடிய சம்சாரமயமான மகாமோக வழியில் சுழுத்தியுற்றோர் = அநுசந்தானரகிதர், சுழுத்தியடைவதற் கேது, ஓர் முதிர்நிராசையாலே = அத்தியந்தம் பக்குவமான வைராக்கியத்திஞல், பாவனை = பாவனுரூபமான, நலனில் = சுகயோக மிருந்த பரலோக விஷயங்களிலும், தீங்கில் = சொற்ப சுகபோகமான இகலோக விஷயங்களிலும்: (2)

[ஸ்ரீ-வீர - அ-கை.) விரத்தியின் விருத்தியானே லோக அனுக்கிரகப் பொருட்டுச் செய்யாநின்ற கருமபலன்களின் மாட்டும், நுகர்வினைவலிதிற் றந்த போகங்களின் மாட்டும், நிசாசையினை யடைந்து, ஒன்றற்கொன்று மேன்மையுற்றுப் பதிஞெருவிதமாய்ப் பதுமன் பதத்தில் முடிவுபெறும் விடயசுகங்களில் வைராக்கிய முதிர்ச்சியானே, அவ்விடய சுகசாதனக்களாய அப்சரஸ் விமாஞதி விடயங்களிலும், இகலோக போகங்களிலும் விரக்தியுற்ற பெரியவரது மனப்பெருமையைக் கூறி அது தெளிதலில் உவமையுரைத்து எடுத்ததை முடித்தல்:—வாதனை யென்பது.

வாதனை வலையைச்செற்று மனப்பந்த மாற்றிவிட்டார்
காதல்செய் தேற்றின்வித்தின் கலங்குநீர் தெனிவதென்ன
மேதகுவிஞ்ஞானத்தான் மெய்ம்மையாஞ் சுபாவந்தானே
யேதமற் றெளிருமுன்ன மியம்பிய வியல்பிஞேர்கசே. (3)

(ப - ரை.) முன்னமியம்பிய இயல்பிஞேர்க்கு = பூர்வம் புகன்ற கல்யாண குணங்கள் வாய்ந்த மகான்கட்கு, வாதனை வலையைச்செற்று = வாசனமய சமுசாரகாலத்தைச் சின்னஞ்செய்து, மனப்பந்தம் மாற்றி விட்டால் = ஹிருதயகிரந்தியைச் சிதிலஞ் செய்திடின் காதல் செய்தேற்றின் வித்தின் = தெளிவித்தற்குச் சாதகமாக விரும்பிய தகபலத்திஞலே கலங்கும் நீர் தெளிவதென்ல = கலங்கியிருந்த ஜலம் நீர் மலமாவதேபோல, மேதகுவிஞ் ஞானத்தால் = அஞ்ஞானத்தை யழிக்கும் மேன்மைதங்கிய அபரோக்ஷஞானத்திஞலே, மெய்ம்மையாம் சுபாவந்தானே = சன்மாத்திரமாகிய மனமானது, ஏதமற்றெளிரும் = முன்னர் வந்து கலந்தா ஜதமங்கள் நீலங்கிச் சுத்த சத்துவமாயிலங்கி யின்புறும்.

(ஸ்ரீ) - வீ.) அநாதிஜடமான அஞ்ஞான ஆகாசம் கழிந்து அசங்கசின் மாத்திரவத்துவில் அழிந்துபோக; சலத்திற்சைந்தவ கண்டம் போலும் இரசாவசேட மாகவாவெனின்; அன்றும், மற்றே, ஆதாபத்தில் இமகண்டம் என்ன நிரவசேடமாக, ஆன்மநீரோடு தோருமைமைய் யடைந்துபோக; அநேகவித சாஞ்சல்ய தரங்கங்கள் பொங்கியிருபாலும் எடுத்தெறிந்து கோலாகலஞ்செய்து விளையாடும் நதிகள் மேகமோய்ந்தபோது, அத்தியந்தம் அடங்கிவிடுவ தொப்பக் கல்லோல ஜலமென்ன லோலாந்தரங்களை யியற்றிச் சஞ்சலப்படுத்தும் திருஷ்ணைகள் யாவும் பரமசாந்தியை யடைந்து செல்ல; பக்ஷிபந்தனப் பன்முடிவலை மூஷிகத்தாற்போல, சம்சாரவாசனைச் சாலம், துண்டிக்கப்பெற்று,

வைராக்கிய வேகத்தினலே இருதயகிரந்தியானது சிதலிதமடைந்தேக; கதகசய்பந்தி பலம் அதாவது அதன் பொடிசேரப்பெற்று வாரியானது மிகத் தெளிவுறல்போல, மனமானது விஞ்ஞான வசத்தினலே மிகப் பிரசன்னமாகி விளங்கும்.

(ச.) வாதனைவலையைச் செற்று = எலியினற் பக்ஷிகளின் சாலத்தைப்போலவைராக்கியமாகிய எலியினல் சம்சாரவாதனு சாலத்தையறுத்து, மனப்பந்தம் = இருதயக்கிரந்தியை = அகங்காரரூபமான முடிச்சை, மாற்றிவிட்டால் = வைராக்கிய மென்னும் வாளாற் சேதிக்கின், சுபாவம் = சொரூபம். எதன் பொடியின் சம்பந்தத்தானே கலங்கிய நீர் தெளிவையுறுமோ அது காதகபலமாம், அதனையடைந்து தண்ணீர் தெளிவதென்ன, விஞ்ஞான வசத்தினலே சுபாவமாகவே தெளிவாயிருந்த சொரூபமானது ஆவரணமகன்ற வழிதெளிந்தது போலாமென் றறிந்துகொள்க. (3)

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருஷ்டாந்த பூர்வகம் மனம் வெளிப்போதலை யுணர்த்தல்:—சங்கமென்பது.

சங்கஞ்செய் மயல்போய்த் தொந்தந்தவிர்ந் தொன்றைச் சார்வதின்றிச்
சிங்கிசெய் கூட்டினின்றுஞ் சேணுறச் செல்லும்புட்போற்
றுங்கமோகத்தி னின்றுந்தூய் மனம்வெளியிற் போந்து
பங்கமாமையந்தீரப் பற்றெனு மனைத்துந் தீரும். (4)

(ப - ரை,) சங்கஞ்செய் மயல்போய் = இராகமியாது மிலாமற் சங்கமெவற்றினும் விடுத்து, தொந்தம் தவிர்ந்து = நிர்த்துவந்துவமாய், ஒன்றைச் சார்வதின்றி = நிராசிரயமாய், சிற்கிசெய் கூட்டினின்றும் = பந்தப்படுத்திக் கொண்டிருந்த பஞ்சரத்தினின்றும், சேணுறச்செல்லும் புட்போல் = ஆகாயமார்க்கமாக இஷ்டப்படிபோம் பறவையொப்ப, துங்கமோகத்தி னின்றும் = உன்னதமான மயக்கத்தினின்றும், தூய்மனம் வெளியிற் போந்து = பரிசுத்தமான மனமானது பாகியப்பட்டு, பங்கமாமையந்தீர = துன்புறுத்திய சந்தேகங்கள் தொலைந்து, பற்றெனும் அனைத்தும் தீரும் = பிராந்திகள் யாவுமேதீர்ந்து சுகிக்கும.

(ஸ்ரீ - வீர.) காமமற்றும், (மூலம்: விடங்களின் அருகில் விரவுறுத்தலான் உபாசங்கம், அஃதின்மை நிருபாசங்கம்) விடய குணனுசந்தான மற்றும், பார்யாதி ஜனசாகித்ய மற்றும், மீளமீளப் போகலாப பூமியற்றும், உள்ள உள்ளமானது, கூறியவற்றினின்றும் முதலில் வெளிப்போந்தபின் அஞ்ஞானத்தினின்றும், பஞ்சரத்தினின்றும் விடுபட்ட பறவையே போலும், விடுபட்டேகும், விடுபட்டேகிய அதுமீண்டும் எத்தகைய திதியையடைந்திருக்கும் எனின்? அதனை வருணித்தல்: ஐயந்தீரவேன்பது. சந்தேகதுரான்மபாவஞ்சாந்தமானதாயும், கௌதுகவிப் பிரமம் கடந்ததாயும் அம்மனமிருக்கும்,

(ச.) சங்கஞ்செய்ய மயல்போய் = இச்சாரகிதமாய் அதனலே விஷயசங்சரகிதமாய், அதனல், தொந்தந் தவிர்ந்து = சுகதுக்காதி பேதானுசந்தான ரகிதமாய், அதனல், ஒன்றைச் சார்வதின்றி = நிராலம்பனமாய், மனம், துங்கமோகத்தினின்றும் = அஞ்ஞான சம்பந்தத்தினின்றும், தூய்வெளியிற் போந்து, பற்றனைத்துந்தீரும் = சங்கற்பங்களின் விலாசம் நசிக்கும், துரான்மபாவம் = துட்டத்தன்மை, கௌதுகம் = சங்கற்பம், விப்பிரமம் = விலாசம். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பூர்ணபாவத்தை யடைந்த மனத்துடன் பொலிகின்ற பெரியோர் மூன்று மூர்த்திகட்கும் கருணை பாலிப்பரெனல்:—ஆன்றவென்பது.

ஆன்றவம்மனம் பூர்ணத்தையடைந்து பூரணவெண்டிங்கள்
போன்றுற விளங்குமிந்த நிலையிலே பொலிவுற்றோர்கண்
மூன்றுமூர்த்தி களாந்தேவ முதல்வர்க்குங் கருணைசெய்வ
ரூன்றியவிசாரத்தாலே யுயர்பொரு ளெய்தவேண்டும். (5)

(ப - கை) ஆன்றவம்மனம் = மேலேவியம்பிய பிரகாரம் பெருமை பொருந்திய அந்தமனமானது, பூர்ணத்தையடைந்து = பரிபூரணமாக நிறைந்து, பூரணவெண்டிங்கள் போன்றுற விளங்கும் = கலைமுழுவதும் நிறைவுற்ற வெள்ளிய மதிமயம்போல நன்கிலங்கும் இந்த நிலையிலே பொலிவுற்றோர்கள் = இயம்பிய இன்பத்திதியின் கண்ணேயிலங்கிக்கொண் டிருக்கும் பெரியோர்கள், மூன்றுமூர்த்திகளாம் தேவமுதல்வர்க்கும் = பிரஹ்மா விஷ்ணு சங்கரர் எனப்பெற்ற தேவதேவர்க்கும், கருணைசெய்வர் = தயைபாலிப்பர், ஆகலின் அவர்போலாக விரும்பில், ஊன்றிய விசாரத்தாலே யுயர்பொருளெய்தவேண்டும் = அழுத்தமிக்க ஆராய்ச்சியானே உத்தமோத்தம வத்துவைச்சாக்ஷாத்கரித்தல் வேண்டும்,

(ஸ்ரீ - வீர.) உள்ளும் புறனும் அறிவாகவே செறிந்து நிறைந்த சித்தமானது பூர்ணேந்துவைப் போலவே பொலியாநிற்கும், பொலியுமம் மனத்தில் உத்தமமான சௌந்தர்யமானது திதமாகி, வெகுசேய்மையில் உன்னதமாய் மிதந்திருத்தன் முதலியவை அஸ்தமயமாய், காற்றற்ற கடல்போலப் பரமசாந்தம் வந்து எங்குஞ் சமமாயிருக்குந் தகைமை யெழாநிற்கும். அம்மகானது மகாப்பிரபாவத் தகைமையைக் கூறல்:—மூன்றென்பது. ஆராய்ச்சியின் மிகுதியானே தஞ்சுபாவத்தை நன்கறிந்து ஆன்மசாக்ஷாத்காரம்பெற்ற பெரியோரது கருணைக்கு, இவ்வண்டத்துற்ற அதிகாரபதத்திருக்கும் பிஹ்மா விஷ்ணு சங்கர இந்திரர் பாத்திரராவர். சர்க்க அவதாராதி அதிகாரக் கிலேச தரிசனத்தானே 'அனுகம்பிய ராவரென்பதாம், மூர்த்திகட்குந் தேவமுதல்வற்கு மென்று பாடமாயின் மூலப்படி பொருட்பெற வெளிதாம்.

(ச.) இந்த நிலையிலே பொலிவுற்றோர்க்கு = விசாரத்தால் ஆன்மதத்துவத்தைச் சாக்ஷாத் கரித்ததனாலே பரிபூரண சுபாவமானவனுக்கு, சுபாவமானவனால் எனினுமாம், மூன்று மூர்த்திகளும் தேவமுதல்வனும், பிரமன் மால் இந்திரன் சங்கரர், கருணைசெய்வர் = ஐயோ! சந்ததம் இவர்கள் துக்கிகள் எனச் சோகித்தற்கு உரியாரவர்கள் என்பது பொருள். (5)

(ஸ்ரீ-வீர - அ-கை) விசாரமிலதாயிற் பெறும் இடும்பையையும், உளதாயினுண்டாம் பெருமையையு முணர்த்தல்:—உலகென்பது.

உலகெது நாமாரென்ன வுற்றுநின்றுணரு மட்டுங்
கலகமார்பிறவி மோகங் கங்குல்போன் மூடிநிற்கு
மலகறு முலகுந்தாமு மழிவில்சிற் சோதியென்றே
சலனமில் கண்ணுற் கண்டோர் தத்துவ நிலைமைகண்டோர். (6)

(ப - கை.) உலகெது = இத்தோற்ற மெங்ஙன முண்டாயது; நாமார் = யான் என்பதன் பொருள்யாது? என்ன = என இவ்வண்ணம், உற்றுநின்று = ஆசாரியர் அருளால் ஆராய்ந்து ஆராய்ந்து, உணருமட்டும் = உண்மையினையறியும் வரையினுமே, கலகமார் பிறவிமோகம் = இராகத்துவேட மயமான சமுசார ஆடம்பரமயக்கம், கங்குல்

போல் = அந்தகாரமெப்ப மூடிநிற்கும் = ஆச்சாதித்துக் கொண்டிருக்கும், அலகறும் உலகும் = அநந்த அண்டமாய ஜகத்தும், தாமும் = ஜீவசமுதாயமும், அழிவில் சிற் சோதியென்றே = கெடாத அறிவொளி யென்வே, சலனமில் கண்ணால் = நிருவிகற்ப சமாதியிற்பெற்ற ஆன்ம சாக்ஷாத்காரரூப ஞானதிருஷ்டியால் கண்டோர் = தமது நன்மையைத் தரிசித்தவரே, தத்துவநிலைமை கண்டோர் = தத்துவத்தின் நிதியைத் தரிசித்தவர் ஆவர்.

(ஸ்ரீ - வீ.ர.) யான்யார் எனவும் இஃதெங்ஙன மெனவும் எத்துணை நன்றாகவிசாரம் செய்யவில்லையோ அத்துணை பேரிருள்போலச் சம்சார ஆடம்பரம் இருந்துகொண்டேயிருக்கும். ஆயின் எத்தகைய நிதியினாலே சம்சார அந்தகாரமற்ற பூர்ணாத்மாவைக் காணலாமெனின் ? அத்திதியை யுணர்த்தல்: அலகறுமென்பது மித்தையாகிய மிருமயலானே விளைந்ததாயும், சர்வ ஆபத்துக்கட்கும் ஆசிரயமாயும் உள்ளசரீரத்தில் அகம்புத்தியைப்பாதித்து, ஆன்மபாவனையாற் சிவத்தைக் கண்டவரே கண்டவர் தேசவசத்துண்டாய ஆதிபௌதிகங்களும், காலவசத்தெழுந்த ஆதிதெய்விகங்களும், சரீரத்தமுந்திய ஆத்தியாத்மிகங்களும், ஆகிய சுகதுக்கங்களை எம்முடையன வல்லவென்று கண்டு மயறீர்ந்து தாமறிவென்று கண்டவரே கண்டவர். அபாரபரியந்த ஆகாசம் திக்குகாலாதி, பரிச்சின்னமாய உற்பத்தி சலனாதிக் கிரியையோடுற்ற பொருள்கள், என்னப் பட்டயாவற்றினும் யாமேயிருப்பு விளக்கத்தை யீந்துகொண் டிருக்கின்றேம் என்றுகண்டவரே கண்டவர். வியாபியா யிருந்துகொண்டே கோடியெனப் பிரிக்கப்பெற்ற மயிர் நுனியின் இலக்ஷம் பாகத்தினும் யாம் அதிசூக்ஷ்மம் என்று தம்மைக்கண்டவரே கண்டவர். சுவான்மத் தன்மையானே வெளியாய ஜீவர், வேறாய திருசியங்கள் யாவையுமே சிற்சோதியே யாமென்னும் அபேத திருஷ்டியினானே நித்தியம் தம்மைக்கண்டவரே கண்டவர். தேசகால சரீரவச சுகதுக்கங்கள் இத்தகையனவெனப் பெரியாரும் கூறியுள்ளார்:—

இருவகையா மான்மிகமிக் காயத்தினெஞ்சின் வருமவைதா னேதக்கேண் மாணா, பொருவரிய, குன்மமதிசாரம் வெப்புக்கொடுஞ்சூலை, யன்னபிற வின்னங்களோய், மக்களொடு துட்ட மிருகம்பேய் வன்பசுசாற், பக்கிபறிப்போரசுரர் பற்பலவுந், தொக்கினுறல், சோகமருமை யபிமான மாற்சரிய, மாகுபலவுள்ளுறு நோயாம். சீதமுடன் வெம்மை செறிந்து மிகச்சலிக்கும், வாதமழைதடித்து வானிடி, தீதிற், கௌரியொருபாகன் கருணையினாலாகும், பௌதிகமீ தென்றேபகர் கருலாயுதரத்திற் கட்டுண்டன் மண்ணி, லுருவாகியுற்பவித்த லோங்க, னரைதிரைதான், மைவிரவஞ்ஞான, மரணநரகஞ்சனனந், தெய்விகமீதென்றே தெளி. யாவுஞ் சிற்சோதியென்றதற் குதாரணம் பரம்பொருள்வாக்கியம்:—உலகமியாவு முயிர்பயவுநானே சிறிதும் வேறில்லை யலகிலறிவர்லாய்ந்திடினு மாயாவிடத்து மருத்தமிதே, திலகமாய மறைதுணிந்து திகழ்த்தும் பொருளுமிதுவென்ற, னிலகுந்தன்மை யனுபவமுமிதிலோரைய முளதன்றால். நானேமுழுதுமெனை யொழிய நாடிற்சிறிதும் வேறில்லை, யானபொருளை யருமறை தானறையும்படி யான்தனுளும், யானுமிசைத்தபடியாலு மிதுவே திடமாயுள பொருடா, ஞானமின்றி நான்முகனுமுரைத்ததுங் கட்குன்மையிதே. இப்பொருளை யப்பட்டோ சிறப்பர்கள் கணத்தின் மெய்யே மெய்ப்படு பொருளையென்றும் விடுதனிச் சயமதாகு, மிப்பொருளையமின்றி யறிந்தவன் பவப்பரசத்தை மெய்ப்பட வொழிந்துமேலா மௌனியினை யடையுமன்றே. பிரஹ்மதேவரும் இப்பொருளை யுரைத்தல் காண்லாம்:— எப்பொருளு மாயையினொலனச்சிலவ ரியம்புவர்கண், மெய்ப்பரமன் றனையொழிய வேறொரு மாயையுமில்லை,

யொப்பரியபரஞெழிய் வொருமாயையுண்டாகி, லப்பரமன்றன் பெதுமைக் கதநேரே யழிவன்றே. பெதுமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி, லதுமறைவாக்கியம் பொய்யாமப் பிரமாணமுமாகும், பொதுவில் பரானந்த பரிபூரண மெய்ச்சுடராகுந் தெரிவருமா தேவனல்லாற் றிகழ்வதொழி சிறிதுமில்லை.

(ச.) உலகு எது என்பது ஜகத்தை முன்னிட்ட விசாரம், நாமார் என்பது ஆன்மாவை முன்னிட்ட விசாரம், உற்றுநின்று = அந்தக்கரணத் துறைத்துநின்று, உணருமட்டும் = விசாரிக்டிம் அளவும், மூடிநிற்கும், விசாரத்தினது சொரூபந்தெரிவித்தல்:— நாமும்= ஆன்மாவாகிய தன்னையும் இதரபுவிஷனையும், அழிவில் சலனமில் கண்ணால் = எப்போதும் பேதசுன்யமான ஞானத்தால், கண்டோர் = விசாரித்தறிந்தவர், அலகுறுமுலகும் = சர்வஜகத்தையும், சிற்சோதியென்றே = சைதந்ய மாத்திரமே யென்று, கண்டோர் = விசாரித்தவர்= இங்ஙனம் விசாரித் தறிந்தவப் புருடரே, தத்துவநிலைமை கண்டோர் = தத்துவத்தைச் சாக்ஷாத்கரித்தவர் ஆவரென்கலு பொருள். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்வான்மதரிசனத்தையே வேறுவகையாக உபத்தசித்தல்:— அகிலவென்பது.

அகிலசத்தியு மாயொன்று யநந்தமா மறிவுதானே
சகலபாவனைக்கு முள்ளாமெக் கண்டோர்தம்மைக் கண்டோர்
பகர்வுறுநானுமில்லை பிறிதிலைபரமே யுண்டென்
றிகமுறவுள்ள தில்லதிடையுறக் காண்டோர் கண்டோர். (7)

(ப - ரை.) அகிலசக்தியுமாய்=சர்வசக்தியுமாய், ஒன்றாய்=அத்விதீயமாய், அநந்தமாம்=அபரிச்சின்னமாம், அறிவுதானே=தமதுவடிவமாகிய சித்தே, சகலபாவனைக்கும் உள்ளாம்=என சர்வபாவாந்தரமா யிருக்கின்றதென்று, கண்டோர் = தரிசித்தவரே, தம்மைக்கண்டோர்=தங்கள் யதார்த்த வடிவத்தைத் தரிசித்தவர் ஆவர். பகர்வுறுநானுமில்லை=அகம் அகமெனக்கூறும் பொருளுமின்றும், பிறிதிலை=இதரமுமில்லை, பரமேயுண்டென்று=நிராமயமாய பிரஹ்மமே யுளதாமென்று, இகமுற உள்ளது இல்லது இடையுற=சத்தசத்துக்களின் மத்யமாக, கண்டோர் = தம்மைத்தரிசித்தவரே; கண்டோர்=தமதுண்மை வடிவினையுணர்ந்தவர் ஆவர்.

(ஸ்ரீ-வீர.) சகல சக்திகளையும் தனதிடத் தடக்கியதாய்: தேசகாலவத்துக்களாற் றடையுறாததாய், எல்லாப் பதார்த்தங்கட்கும் இருப்பு விளக்கத்தைக் கொடுத்துக் கொண் டுள்ளிருப்பதாய், இருந்தபோதினும் இருமை விவர்த்தமாதலின் இரண்டாவதில்லாததாய், உள்ள அறிவே எமதுசொரூப மென்னுள்ளே யாவருண்மையை யுணர்வரோ, அவரே தம்மைத் தரிசித்தவர், சூத்திரத்தில், மணிகணங்கள் போனும், சித்தேயாகிய தந்துவினுற்கோர்க்கப் பெற்றுலவுந் திருசியமியாவுமே எம்மிடத்தி லுள்ளனவாம், அதிரிக்த சத்தையின்மையின் யாமேயாம், அத்தக்கரணமோ யாமல்லவே யல்லவாம் என்று தமதுண்மையைக் கண்டவரே தம்மைக் கண்டவராவர், யாமேயெனக் காண்பவரே காண்பவர் எனக்கூறப் பெற்றதில், சிற்பரித்தியாகத்தால் அகங்காரமே பரிக்கிரகீதமென ஆகவேண்டாம் என அகங்காரத்தோடுகூட அகிலத்தை யகற்றுதலானே சிதேகரசமாய் பிரஹ்மமே பரிசேடமாகக் காணவேண்டும், என்பதாகக்கூறல்: நானுமில்லையென்பது யாமுமில்லை பிறவுமில்லை, ஆமயமெதுவுமில்லாத பிரஹ்மமேயுளதாம், என இவ்வண்ணம் நிகழ்வனவற்றின் சென்றனவற்றின் வருவனவற்றின், மத்தியால், வியக்

கத்தின் அவ்யகதத்தின் மத்தியில், யாவர்காண்பரோ அவரேதம் முன்மையைக் கண்டவராவர்.

(ச.) சகலபாவனைக்கு முன்னாந்தானே = சர்வபதார்த்தங்களின் அகத்திருக்கும் அந்தரியாமி யென்னும் புருஷனே, அகில சத்தியுமாய் = அநந்தசத்திமானாய், அநந்தமாய் = அபரிச்சின்ன சொரூபனாய், ஒன்றாய் = ஆதலினாலே தனக்குவேறாகவொன்றுமின்மையால் அத்துவிதீயனாய், அறிவென = சின்மாத்திர ரூபனுமாமென்று, அகத்தில், கண்டோர், தம்மை = தமதுதத்துவத்தை, கண்டோர். பகர்வுறுநானும் = அகந்தாபேதத்தோடு கூடிய வஸ்துவும், இல்லை, பிறிதில்லை = தனக்கு வேறானதிருசியமும் இன்று, மற்றென்னெனில், பரமே யுண்டென்று = நிர்விகாரமான பிரஹ்மமே யிருக்கின்றதென்று, இகமுற = இந்தப்பிரகாரமாக, உள்ளதில்லதிடை = ஆன்மா வனான்மாக்களினது மத்தியமான திருஷ்டிருத்துவ திருசியத்வோபாதி ரகிதமான, சின்மாத்திரத்தை, உறக்கண்டோர், தத்துவத்தைக் கண்டோர். (7)

(ஸ்ரீ-வீர. அ. கை.) மாசற்ற மகாத்மாக்களினது மனமானது மாசின்றியே செயல்களிற் செல்லுமெனல் :—முயல்வு என்பது.

முயல்வறத் தாமேதோன்று மொய்திசைப் பொருள்க டம்மின்
மயலறச் செல்லுங் கண்போன் மாசறு தீரர்புந்தி
செயல்களிற் செல்லுமன்றே தெளிந்துபல் போகந் துய்த்தாற்
றுயர்செயா தறிந்துசேர்ந்தாற் சோரருந் தோழராவார். (8)

(ப - ரை.) முயல்வறத் தாமேதோன்றும் = யத்தனமில்லாமலே தாமேபுலப்படும், மொய்திசைப்பொருள்க டம்மில் = சகலதிசைகளினும் நெருங்கியுள்ள வஸ்துக்களில், மயலறச்செல்லும் கண்போல் = நீராகமாகவே செல்லாநின்ற சக்ஷுரிந்திரியம்போல, மாசறு தீரர்புந்தி = குற்றமற்ற தன்மைவாய்ந்த தீரர்த்ந்தியானது, செயல்களிற் செல்லும் = காரியங்களிற் பிரவேசிக்கும், தெளிந்துபல் போகந்துய்த்தால் துயர்செயாது = நன்கு தெரிந்து பலபோகங்களை யனுபவித்தால் அனுருறத்தாமலாநந்தப் பொருட்டாம், அறிந்துசேர்ந்தாற் சோரருந் தோழராவார் = தெரிந்துகூடினாற் கள்வரும் மித்திரரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) நேத்திரமானது யத்தனமில்லாமலே புலப்படாநின்ற பர்வத வநபுஷ்கரணியாதிகளில், ஆங்குற்ற தருகுல்ம தாமரையாதி பதார்த்தங்களில் மமதை யபிமானமில்லாமையின் சேதபேத அபகாராதிகளைக் கண்டபோதினும் துயருறுதல் காணாமையின் நீராகமாகவே வீழுதல்போல், அறிஞனுடைய தீரனதுபுந்தியும் தனது புத்திரமித்திராதி வியவகார காரியங்களிலும் நீராகமாகவே வீழ்வுறுமென்பதாம். அறிஞனுக்கு மாலை சந்தனவனிதாதி போகக்கூட்டம் சேவிக்கப்பெறினும் புனர்ஜன்மாதி துக்கப்பொருட்டு ஆகாவாம், கெட்ட பிராரப்த போகக்கூட்டமும், தாத்காலிக துக்கப்பொருட்டாகாவாம்; மாறாகவோ நன்கிலங்கும். தத்துவவித்துக்கட்குத் தவமுதலியவை, கிலேசங்கள் போன்றனவோ, அல்ல, மற்றோ, எதிரிடையாக, அஞ்ஞஜனசிக்ஷை மகாபலந்தந் தவையிலங்குமென்ப; கடல்சூழ்புவி திவிகலக்குவதாயினும் காலகூடவிடம், கங்காதர பரமேசர் கவின்கண்டமுற்றுக் கிலேசந்தந்ததோ, இல்லை, மாறாகப் புகழையேதந்து பொலியாநிற்கும். இதற் குதாகரணம் சிவமகிமை :—மூவருட் கண்ணவகாலத்தி லண்டமுடிவுற, மாபயஞ்சார், தேவர் தயித்தியர் மேற்கிருபாவயத்தேவிட முண்ணினதே, மாவழகைச் செயலின்றெனவில்லை யெம்மாகளனிற் களங்க, மேவுலகின் பயமீர் விசனிக்கு

விகாரமும் மேன்மையகோ. அறிந்து அநுபவிக்கின் அஞரிலதயலாய், அறிஞனுக்கு ஆநந்த காரணமேயாம் என்னுங் கருத்தாற் கூறல்:— தெளிந்து என்பது. போகங்கள், அவற்றின் சாரமறிந்து புசிக்கப்பெறின் சந்தோடத்தின் பொருட்டேயாம் ; இவனின்னு னெனத்தெரிந்து சேர்ந்து நேயமுறின் விவகரிக்கிற் கள்வன் மித்திரபாவத்துட னிருப் பனேயல்லாது சத்துருத்தகைமையைச் சாதியான். அன்று ஏ அசை. சேர்ந்தார் சோர ராயினும் : தோழரேயாவர்.

(ச) முயல்வறத்தாமே = அயத்தனத்தினுலேயே, கண்தோன்றும் = நேத்திரேந் திரியத்தை வந்து பொருந்தும், மொய்திசைப் பொருள்க டம்பின் = திசைகளிலுள்ள திரவியங்களில், மயலற = நீராகமாகவே, செல்லும் மனம்போல், மாசறு நீரர்புந்தி = பிரஹ்மவித்துக்களுடைய புத்தியும், செயல்களில் = அவசியஞ் செய்யவேண்டுங் காரி யங்களில், செல்லும் = இராக ரகிதமாகியே பிரவிருத்திக்கும், அன்று ஏ இரண்டும் அசைநிலைகள். தெளிந்து பல்போகந் துய்த்தாற் றுயர்செயாது, இவ்விடத்து ஞானிகள் அறிந்து புஜிக்கும் போகவிசேடஞ் சுகநிமித்தமாங் கிலேச நிமித்தமன்று மென்பது கருத்து. அறிந்து சேர்ந்தாற் சோரரும் தோழராவார் = சோரர் சேரப்பட்டவராயி னும் அறிந்தவனை வருத்தமே செய்யார் மற்றென்னெனில் மித்திரபாவத்தா லுபகாரஞ் செய்வார் அதுபோலென்பதாம். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அஃதெங்கு யாங்ஙனங் கண்டதோவென ஆசங்கித்து, சேய்மையிற் செல்லுஞ் சீலம் வாய்ந்து ஒன்றுசேர்ந்த நரநாரீ நடக்கூட்டங்களின் யாத்தி ரைச் சேர்க்கைபோலும், சேர்க்கையின் பிரிவுபோலும், அறிஞனல் அத்தியந்த மாநந் தப்படுத்தும் அதிவிஸ்தார போக்கிய புத்திரனாதி ஸ்ரீசேர்க்கை வியோகம் பார்க்கப்படு மென யாத்திரையை யுவமைப்படுத்திச் சமாதானித்தல்:—நெறியென்பது.

நெறியிடைவந் தோர்கூட்ட நெறிசெல்வோர் காணுநேர்போற்
செறிதரு போகமெல்லாஞ் சேதனர் காண்பரன்றே
யறிவினுன் மனதைவென்றோ ரற்பமே பெரிதாய்க் காண்பர்
பிறகது துயராமென்றே பெரியன போகம் வேண்டார். (9)

(ப - ரை.) நெறியிடை வந்தோர்கூட்டம் = அகஸ்மாத்தாக மகா உற்சவநிமித்த மாக வந்துகொண்டிருக்கும் ஜனக்கூட்டத்தை, நெறிசெல்வோர் = அம்மார்க்கத்திற் செல்பவர், காணு நேர்போல் = யாதொரு பற்றுமற்றுக் காணுந் தகைமைபோல, செறிதரு போகமெல்லாம் = நுகர்வினை வயத்தினுலே வலுவிற் றுமேவந்து பொருந் திய போகங்களையெல்லாம், சேதனர் = உணர்வுவடிவ மாகின்ற ஜீவன்முக்தர், காண் பர் = பற்றற்றுப் பார்ப்பர், அறிவினுல் மனதை வென்றோர் = யாவும் பிரஹ்மசொரூப மென்று சிந்திக்கும் திருஷ்டியினுல் உள்ளத்தையும் அறிவாக்கி ஜயித்தவர், அற்பமே = சிறிது கிடைத்தபோதினும், பெரிதாய்க் காண்பர் = மகத்தாக வெண்ணுவர், பிறகது துயராம் என்றே பெரியனபோகம் வேண்டார் = பின்பது துக்கமாம் என்பதாகவே பெரிதான போகங்களை விரும்பார்.

(ஸ்ரீ - வீர.) நினையாமலே முன்வந்து தோன்றிய கிராம யாத்திரையானது மார்க் கத்திற் செல்பவரானே பார்க்கப்பெறுவ தொப்பாகவே, அறிஞர்களானும், விவகார மயத் தொழில்களும் போக ஐசுவர்யங்களும் பார்க்கப்பெறும் எல்லா வகையானுமே மனத்தைவென்ற வீரசேகரனுக்கு, எப்பின்புண்டாம் போகமண்டனமுளதோ அதாவது பிக்ஷாசனுதி அற்பவிஷயார்ப்பணத்தானே லாலனம் உளதோ, அது தானே கிடைத்த

வித்தாரபமும் போகபாகத்தினும் அதிகமாகத் தோற்றும்; அடங்கிய மனமானது அற்பத்தையே அலப்த விஸ்தாரமதாய்க் கிலிஷ்டத் தன்மையானே பெரிதாக எண்ணுகிற்கும்.

(ச) நெறியிடை வந்தோர் கூட்டம் = மார்க்கத்தில் ஓர் கிராமத்தைக் குறித்து விவாகாதி மஹோற்சவ வேதுவாற் செல்லுஞ் சனசங்கத்தை, நெறிசெல்வோர் = வழி நடப்பவர், இச்சையின்றி, காணு நேர்போல், செறிதரு போகமெல்லாம்=சகலபோகத்தையும், சேதனர்=ஞானிகள், நிராசங்கமாகவே காண்பர். அன்று ஏ இரண்டும் அசைநிலைகள். அறிவினால் = பிரத்தியாகாராதி யோகங்களால், மனதை வென்றோர் = மனதை நிக்கிரகித்தவர், அற்பமே = அனுதாரமாகவே புஜிக்கும் அற்பபோகத்தையும் பெரிதாய்க் காண்பர் = நிருத்தத்தன்மையானே கிடையாத விஸ்தாரமுடையதாய்க் காண்பர் = மனதிற் சிந்திப்பர் என்பதாம். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிய பொருளிற் திருட்டாந்தரங் கூறல்:—நலங்கென்பது.

(ச) இதற்குத் திருஷ்டாந்த மியம்பல்:—நலங்கென்பது.

நலங்கிய சிறைநீர் மன்னனகர்மட்டு மகிழ்வுகூரு
மலங்கல்வேல் வெற்றிவேந்த னவனியுஞ் சிறிதென் றெண்ணுங்
கலங்குறு மனதை வெல்வோர்கை க்கையாற் கால்கள்காலா
லிலங்கு பற்பல்லா லங்கமியாவு மிப்படிமுன் சேர்க்க. (10)

(ப - தை.) நலங்கிய சிறைநீர் மன்னன் = வெகு துயருற்றிருந்து காராக்கிரகத்தினின்றும் விடுதலையை யடைந்த அரசனானவன், நகர்மட்டும் மகிழ்வு கூறும் = அன்னபானாதி சௌகரியப் பொருட்டு ஒரு கிராமங் கிடைத்த போதினும் சந்தோஷத்தை யடைவன், அலங்கல் வேல் வெற்றிவேந்தன் = வெற்றிமாலை வேய்ந்து ஜயசீல வேலாயுதத்தை யுடைய ராஜ ராஜேந்திரன், அவனியும் சிறிதென்று எண்ணும் = பூமண்டல முழுதையும் கைவசப்படுத்திய போதினும் அற்பமென்பதாகத்தானே நினைவன், கலங்குறு மனதை வெல்வோர்=விடய விக்ஷேபமுற்ற சித்தத்தை வெற்றிகொள்ள முயன்றவர், கை கையாற் கால்கள் காலால் = பாணியைப் பாணியாலும் பாதத்தைப் பாதத்தானும், இலங்குபற் பல்லால் = விளங்காநின்ற தந்தத்தைத் தந்தத்தாலும், பிசைந்தும் உதைந்துஞ் சூரணித்தும், இப்படி = இவ்வண்ணம், முன் = ஆதியில், அங்க மியாவும்= எல்லா அங்கங்களையும் எல்லா அங்கங்களால், சேர்க்க=ஒன்றுசேர்த்து வருத்துக. அங்கங்களை வருத்தியேனும் மனத்தை வெல்லுக வென்பதாம்.

(ஸ்ரீ - வீர) சிறையினின்றும் விடுபட்ட மஹீபாலன், உணவுக்கு வேண்டிய ஒரு கிராமங் கிடைத்தலானே சந்தோஷத்தை யடைவன், பகைவராற் பந்தப் படுத்த முடியாமலும் வெற்றிகொள்ள முடியாமலும் சுதந்திரமாயிருக்கும் அரசன் தன்னுடைய அகண்ட இராஜ்ஜியத்தையும் பெரிதாக எண்ணுவதில்லை. ஆகலின் நீள்போது நிக்கிரகத்தாலும் போதத்தாலும், சமூல மனோஜயப் பொருட்டுப் பிரதமம் இந்திரியஜயமே சர்வப் பிரயத்நங்களாலும் செய்யத் தக்கதாம் என்பார் கலங்குறுமெனத் தொடங்குகின்றார். ஹஸ்தத்தை ஹஸ்தத்தால் அதிபீடனமாற்றி, தந்தங்களைத் தந்தங்களால் விசேடமாகச் சூணித்து, அங்கங்களை யங்கங்களால் அடங்கும்படி செய்து இந்திரியங்களாகிய சத்துருக்களை ஜயஞ் செய்க, மனோஜயப் பொருட்டுமாத்திர மல்லவாம், மற்றோ, பாகிய சத்துரு ஜயப்பொருட்டும் இந்திரியஜயம் ஆவசியகமாம் எனக் காட்டுவார் இப்படி யென்றார்

ஈண்டு மிகுந்த உற்சாகத்தோடுற்ற பண்டித புருடர்களான் மற்றவற்றை வெற்றிகொள்ளும் பொருட்டும் பூர்வம் ஹிருதய சத்துருத் தன்மையானே அத்தியந்தம் இந்திரியங்கள் ஜயிக்கத்தக்கனவாம்.

(ச) நலங்கிய = வாட்டமுற்ற, நகர்மட்டின் = கிராம மாத்திரத்தால், அன்ன பானுதி மாத்திரத்தால் என்றுரியபாடம், அவனியும் = இராச்சியத்தையும், சிறிதென்றெண்ணும், மநோநிக்கிரக உபாயங் கூறல்:—கலங்குறு மனத்தை வெல்வோர், கை கையால் = அஸ்தத்தை அஸ்தத்தாலும், கால்கள் காலால் = பாதங்களைப் பாதங்களாலும், பற் பல்லால் = தந்தங்களைத் தந்தங்களாலும், அங்க மியாவு மிப்படி = அங்கங்களை யங்கங்களாலும், முன் சேர்க்க = முன்பு சேர்த்துத் தன்மனதைச் செயிக்க வேண்டும்; அடயோகத்தாற் பவனஜயத் துவாரமாகத் தனது மனதைச் சயிக்க வேண்டுமென்பது தாற்பரியார்த்தம். பந்தப் படுத்திடும் பார்த்திபன் கிராச மாத்திரத் தானே மகிழுவன் என்பது மூலபாட பேதம். கிராச மாத்திரத்தானே = அன்ன பானப் பிரதான மாத்திரத்தானே யென்பது பொருள். (10)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனவெற்றியலது மரக்கலமிலை யென்றும், மனவராக் கொன்றூர் மகிமை யிதுவென்றும் கூறல்:—பகையென்பது.

பகைமன வெற்றியல்லாற் பவக்கடல் வங்கமில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறுவிலாதோர்
மிகையுயர் புருடர்கீர்த்தி மிக்கவரென் போருள்ளக்
குகையிடைத் தொழில்க ணஞ்சார் கொடுமனப் பாம்பைக் கொன்றூர். (11)

(ப - ரை.) பகைமன வெற்றியல்லால் = சத்துருவாய சித்தத்தினது ஜயமல்லாமல், பவக்கடல் வங்கமில்லை = பவார்ணவங் கடக்க வேறு கப்பற்கிடையாது, உள்ளக் குகையிடை = இருதய பிலத்தில், தொழில் கணஞ்சார் = குண்டலமிட்டுப் படுத்துக் கொண்டு, நஞ்சுட னமர்ந்த, கொடுமனப் பாம்பை = குரூரமான மன அரவை, கொன்றூர் = அதஞ்செய்தவர்; வகைபடு முலகில் = நானுவிதமாகத் தோற்றுஞ் சகத்தில், செல்வர் = பாக்கியவான்கள், வரிசையோர் = மரியாதை செய்யத்தக்கவர், மறுவிலாதோர் = களங்கமற்றவர், மிகையுயர் புருடர் = மிகவும் மேன்மைவாய்ந்த புருடோத்தமர், கீர்த்திமிக்கவர் = புகழ்மிகுந்தவர், என்போர் = என்னப் பெறுபவராவர்.

(ஸ்ரீ - வீர.) இந்திரியநிக்கிரக பலமாகிய மநோஜயத்தைப் பற்றியவனைப் பற்றிய பிரசம்சை யாதுகொலோ வெனின்? யாவர்கள் சித்தத்தை ஜயம் செய்கின்றூர்களோ அவர்களே தஞ் சித்தத்தானே ஜயிக்கப் படாதவர்கள், இப் பூமண்டல முழுதினும் அவர்களே சுபகர்கள், சாதுக்கள், அறிவு மிகுந்தவர்கள், புருடர்கள், புகழ்மிக்கவர்கள், புருடர்களுக்குள் தமது பந்தமோக்ஷ கௌசலங்களிற் கண்ணியர்கள், இருதய பிலத்தில் இயற்றிய குண்டல கலனையானே கர்வ பரவசமாய மகா புஜங்க மனத்தை வென்றவர்கள் ஆவர்கள்.

(ச) பவக்கடல் = பவார்ணவத்தைக் கடத்தற்கு, வங்கமில்லை = கப்பன் மற்றொன்றின்று, உளக் குகையிடை = இருதய பிலத்திற்குள், தொழில் கணஞ் சார் = விருத்திகளென்னும் வட்டத்தோடு கூடியதும், கொடுமனப் பாம்பைக் = கொடிய மநோபுயங்கத்தை, கொன்றோர். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தை வென்றவரை வந்தித்து, அவ்வெல்லைக்குத்தடை செய்யும் அக்ஷங்கள் வலுமிகுத்தனவாம், ஆனபோதினும் ஜயோபாய முளதாம், அத

ஞனேயுண்டாம் பிரசாத பேர்தங்களானே வாசனுக்ஷயம்வரும் எனக்கூறியருளக்கருதி, ஆண்டிந்திரிய ஜயத்தில் உபர்யபிரயத்ந ஆதிக்யத்தை விதித்தருள விழைந்த ஸ்ரீவஸிஷ்ட பகவான் அவ்விந்திரியங்களின் ஜயத்தூர்லபத்தை முதலில் அருளல்:—மனமென்பது.

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வா
மினநரகங்களென்று மிராச்சியத்திருந்து வாழ்ந்த
முனமுறுபாவ மென்னு மும்மதக் களிற்றினாலுங்
கனமயற் படைகளாலும் கரணமாம் பகையை வெல்வாய். (12)

(ப - ரை.) மனம் எனும் வினையைவென்றோர் = மனமாகிய முன்னுரைத்த புயங்கத்தை ஜயித்தவரது, மலரடிமுடிமேல் கொள்வாம் = தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சிர அலங்கார பூஷணமாகத் தரித்துக் கொள்வாம், இனநரகங்கள் என்னும் இரச்சியத்து = துக்கந்தருவதில் ஒருவகைப்பட்ட மகாநரக சாம்ராஜ்யத்தில், இருந்து வாழ்ந்த = அரசுசெலுத்திக் கொண்டு வாழ்ந்து வந்த, முனமுறுபாவ மென்னும் = வெகுகாலந் தொடர்ந்த தீவினைகள் எனப்படும், மும்மதக் களிற்றினாலும் = முத்துயர் மயமதமொழுகும் யானைகளானும், கனமயற் படைகளானும் = கனமாகிப் பேதிக்க முடியாத ஆசாசா சலாகைகளாலும், துணைவாய்ந்த, கரணமாம் பகையை = இந்திரியங்களாகிய சத்துருக்களை, வெல்வாய் = நீ வெல்வது மிகத்தூர்லபம்.

(ஸ்ரீ - வீர.) இயம்பிய மனோபுயங்கமானது எவனுக் கத்தியந்தம் நாசத்தையடைந்துளதோ, அம்மகாமுனிவனை, அத்தியந்தம் தன்வடிவத்தானே யொளிரும் மிகநிர்மலமான அறிவுருவ அந்தத்தத்துவ வித்தைப் பல்வகையானும் நமஸ்கரிப்பாம். தபனவீசி மகாரௌரவ ரௌரவசங்காத கால சூத்திரப்பெயர்கள் வாய்ந்த மகாநரகபேதலக்ஷண சாம்ராஜ்யத்தில் தனித்தனியே பட்டாபிஷேகம் பண்ணப்பெற்று, மதோன்மத்தகொடு வினைகளேயாய வாரணங்கள் சூழப்பெற்று, திருஷ்ணைகளேயாய சரசலாகைகளோடுங் கூடி, உள்ள இந்திரியங்களாய சத்துருக்கள் வெற்றிகொள்ள முடியாதவர்க ளாவர்கள். வெல்வாய் = வெல்லமுடியுங்கொல் முடியாதகாரியம், பாடபேதம்.

(ச.) இந்திரியங்களின் பிரவிருத்திக் கேதுவாதலின்பாவத்தை மதக்களிறு என்றார், மயல் = ஆசைகளென்னும் மனோரதங்கள், ஆசைகளால் இந்திரியங்கள் பிரவிர்த்தித்தலின் மனோரதங்களைப் படைகளென்றார், இந்திரியங்களுக்குப் போகஸ்தானமாதலின் இனநரகம் என்றார், களிற்றினாலும் = ஆனைகளையுடைய தாதலினானும், படைகளாலும் = ஆயுதங்களை யுடையதாதலினாலும், வெல்லமுடியாது. ஆகையால் நீ, கரணமாம் பகையை = சத்துருவாகிய இந்திரியங்களை, வெல்வாய் கஷ்டப்பட்டேனும் எனவொட்டுக. படைகள் = சலாகைவடிவச் சரங்கள். (12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பொறிகளை வென்றூற்றான் போகவாசனைகள்போம், ஆகலின் அவை யகலும்வரை ஆன்மானுசந்தானம் செய்துகொண்டே யிருக்கவேண்டுமெனல்:—துனியென்பது.

(ச.) சித்தோபசமத்திற்கும் இந்திரியசமத்திற்கும் பலத்தைக் கூறல்:—துனியென்பது.

துனிமனச் செருக்குமாய்த்துத் தொடர்பொறிப் பகையை வெல்லிற்
பனிபடு பதுமக்கான்போற் படர்ந்த வாதனைகண் மாளுந்
தனியறி வொன்றேயென்று சாதித்திம் மனம்வென் மட்டுங்
கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில் வாதனைவந் தெய்தும். (13)

ஈண்டு மிகுந்த உற்சாகத்தோடேற்ற பண்டித புருடர்களான் மற்றவற்றை வெற்றிகொள்ளும் பொருட்டும் பூர்வம் ஹிருதய சத்துருத் தன்மையானே அத்தியந்தம் இந்திரியங்கள் ஜயிக்கத்தக்கனவாம்.

(ச) நலங்கிய = வாட்டமுற்ற, நகர்மட்டின் = கிராம மாத்திரத்தால், அன்ன பானுதி மாத்திரத்தால் என்றுரியபாடம், அவனியும் = இராச்சியத்தையும், சிறிதென்றெண்ணும், மனோநிக்கிரக உபாயங் கூறல்:—கலங்குறு மனத்தை வெல்வோர், கை கையால் = அஸ்தத்தை அஸ்தத்தாலும், கால்கள் காலால் = பாதங்களைப் பாதங்களாலும், பற் பல்லால் = தந்தங்களைத் தந்தங்களாலும், அங்க மியாவு மிப்படி = அங்கங்களை யங்கங்களாலும், முன் சேர்க்க = முன்பு சேர்த்துத் தன்மனதைச் செயிக்க வேண்டும்; அடயோகத்தாற் பவனஜயத் துவாரமாகத் தனது மனதைச் சயிக்க வேண்டுமென்பது தாற்பரியார்த்தம். பந்தப் படுத்திடும் பார்த்திபன் கிராச மாத்திரத் தானே மகிழுவன் என்பது மூலபாட பேதம். கிராச மாத்திரத்தானே = அன்ன பானப் பிரதான மாத்திரத்தானே யென்பது பொருள். (10)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனவெற்றியலது மரக்கலமிலை யென்றும், மனவராக் கொன்றூர் மகிமை யிதுவென்றும் கூறல்:—பகையென்பது.

பகைமன வெற்றியல்லாற் பவக்கடல் வங்கமில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறுவிலாதோர்
மிகையுயர் புருடர்கீர்த்தி மிக்கவரென் போருள்ளக்
குகையிடைத் தொழில்க ணஞ்சார் கொடுமனப் பாம்பைக் கொன்றூர். (11)

(ப - ரை.) பகைமன வெற்றியல்லால் = சத்துருவாய சித்தத்தினது ஜயமல்லாமல், பவக்கடல் வங்கமில்லை = பவார்ணவங் கடக்க வேறு கப்பற்கிடையாது, உள்ளக் குகையிடை = இருதய பிலத்தில், தொழில் கணஞ்சார் = குண்டலமிட்டுப் படுத்துக் கொண்டு, நஞ்சுட னமர்ந்த, கொடுமனப் பாம்பை = குரூரமான மன அரவை, கொன்றூர் = அதஞ்செய்தவர்; வகைபடு முலகில் = நானாவிதமாகத் தோற்றுஞ் சகத்தில், செல்வர் = பாக்கியவான்கள், வரிசையோர் = மரியாதை செய்யத்தக்கவர், மறுவிலாதோர் = களங்கமற்றவர், மிகையுயர் புருடர் = மிகவும் மேன்மைவாய்ந்த புருடோத்தமர், கீர்த்திமிக்கவர் = புகழ்மிகுந்தவர், என்போர் = என்னப் பெறுபவராவர்.

(ஸ்ரீ - வீர.) இந்திரியநிக்கிரக பலமாகிய மனோஜயத்தைப் பற்றியவனைப் பற்றிய பிரசம்சை யாதுகொலோ வெனின்? யாவர்கள் சித்தத்தை ஜயம் செய்கின்றூர்களோ அவர்களே தஞ் சித்தத்தானே ஜயிக்கப் படாதவர்கள், இப் பூமண்டல முழுதினும் அவர்களே சுபகர்கள், சாதுக்கள், அறிவு மிகுந்தவர்கள், புருடர்கள், புகழ்மிக்கவர்கள், புருடர்களுக்குள் தமது பந்தமோக்ஷ கௌசலங்களிற் கண்ணியர்கள், இருதய பிலத்தில் இயற்றிய குண்டல கலனையானே கர்வ பரவசமாய மகா புஜங்க மனத்தை வென்றவர்கள் ஆவர்கள்.

(ச) பவக்கடல் = பவார்ணவத்தைக் கடத்தற்கு, வங்கமில்லை = கப்பல் மற்றென்றின்று, உளக் குகையிடை = இருதய பிலத்திற்குள், தொழில் கணஞ் சார் = விருத்திகளென்னும் வட்டத்தோடு கூடியதும், கொடுமனப் பாம்பைக் = கொடிய மனோபுயங்கத்தை, கொன்றோர். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தை வென்றவரை வந்தித்து, அவ்வெல்லைக்குத்தடை செய்யும் அக்ஷங்கள் வலுமிகுத்தனவாம், ஆனபோதினும் ஜயோபாய முளதாம், அத

ஞானேயுண்டாம் பிரசாத போதங்களானே வாசனுக்ஷயம்வரும் எனக்கூறியருளக்கருதி, ஆண்டிந்திரிய ஜயத்தில் உபாயபிரயத்ந ஆதிக்யத்தை விதித்தருள விழைந்த ஸ்ரீவஸிஷ்ட பகவான் அவ்விந்திரியங்களின் ஜயத்துர்லபத்தை முதலில் அருளல்:—மனமென்பது.

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வா
மினநரகங்களென்று மிராச்சியத்திருந்து வாழ்ந்த
முனமுறுபாவ மென்னு மும்மதக் களிற்றினுலுங்
கனமயற் படைகளாலும் காணமாம் பகையை வெல்வாய். (12)

(ப - ரை.) மனம் எனும் வினையைவென்றோர் = மனமாகிய முன்னுரைத்த புயங்கத்தை ஜயித்தவரது, மலரடிமுடிமேல் கொள்வாம் = தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சிர அலங்கார பூஷணமாகத் தரித்துக் கொள்வாம், இனநரகங்கள் என்னும் இராச்சியத்து = துக்கந்தருவதில் ஒருவகைப்பட்ட மகாநரக சாம்ராஜ்யத்தில், இருந்து வாழ்ந்த = அரசுசெலுத்திக் கொண்டு வாழ்ந்து வந்த, முனமுறுபாவ மென்னும் = வெகுகாலந் தொடர்ந்த தீவினைகள் எனப்படும், மும்மதக் களிற்றினுலும் = மூத்துயர் மயமதமொழுகும் யானைகளானும், கனமயற் படைகளானும் = கனமாகிப் பேதிக்க முடியாத ஆசாசர சலாகைகளாலும், துணைவாய்ந்த, காணமாம் பகையை=இந்திரியங்களாகிய சத்துருக்களை, வெல்வாய் = நீ வெல்வது மிகத்துர்லபம்.

(ஸ்ரீ - வீர.) இயம்பிய மநோபுயங்கமானது எவனுக் கத்தியந்தம் நாசத்தையடைந்துளதோ, அம்மகாமுனிவனை, அத்தியந்தம் தன்வடிவத்தானே யொளிரும் மிகநிர்மலமான அறிவுருவ அந்தத்தத்துவ வித்தைப் பல்வகையானும் நமஸ்கரிப்பாம். தபனுவீசி மகாரௌரவ ரௌரவசங்காத கால சூத்திரப்பெயர்கள் வாய்ந்த மகாநரகபேதலக்ஷண சாம்ராஜ்யத்தில் தனித்தனியே பட்டாபிஷேகம் பண்ணப்பெற்று, மதோன்மத்தகொடுவினைகளேயாய வாரணங்கள் சூழப்பெற்று, திருஷ்ணைகளேயாய சாசலாகைகளோடுங் கூடி, உள்ள இந்திரியங்களாய சத்துருக்கள் வெற்றிகொள்ள முடியாதவர்களாவர்கள். வெல்வாய் = வெல்லமுடியுங்கொல் முடியாதகாரியம், பாடபேதம்.

(ச.) இந்திரியங்களின் பிரவிருத்திக் கேதுவாதலின்பாவத்தை மதக்களிறு என்றார், மயல் = ஆசைகளென்னும் மநோரதங்கள்; ஆசைகளால் இந்திரியங்கள் பிரவிர்த்தித்தலின் மனோரதங்களைப் படைகளென்றார், இந்திரியங்களுக்குப் போகஸ்தானமாதலின் இனநரகம் என்றார், களிற்றினுலும்=ஆனைகளையுடைய தாதலினுனும், படைகளாலும்= ஆயுதங்களை யுடையதாதலினுலும், வெல்லமுடியாது. ஆசையால் நீ, காணமாம் பகையை = சத்துருவாகிய இந்திரியங்களை, வெல்வாய் கஷ்டப்பட்டேனும் எனவொட்டுக. படைகள் = சலாகைவடிவச் சரங்கள். (12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பொறிகளை வென்றாற்றான் போகவாசனைகள்போம், ஆகலின் அவை யகலும்வரை ஆன்மானுசந்தானம் செய்துகொண்டே யிருக்கவேண்டுமெனல்:— துனியென்பது.

(ச.) சித்தோபசமத்திற்கும் இந்திரியசமத்திற்கும் பலத்தைக் கூறல்:—துனியென்பது.

துனிமனச் செருக்குமாய்த்துத் தொடர்பொறிப் பகையை வெல்லிற்
பனிபடு பதுமக்கான்போற் படர்ந்த வாதனைகண் மாளுந்
தனியறி வொன்றேயென்று சாதித்திம் மனம்வென் மட்டுங்
கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில் வாதனைவந் தெய்தும். (13)

(ப - ரை.) தனிமனச் செருக்கு மாய்த்து = துன்புறுத்தா நின்ற வாதனைக ணிறைந்த சித்த தர்ப்பத்தை அதிக்ஷீணமாக்கி, தொடர் = அதனோடு சேர்ந்தாடும், பொறிப்பகையை வெல்லில் = இந்திரியச் சத்துருவை ஜயிக்கில், பனிபடு பதுமக் கான்போல் = ஹேமந்தகாலத்தில் தாமரைக் கூட்டங்கள்போலும், படர்ந்த வாதனைகள் மாளும் = நெருங்கி நிறைந்த போகவாதனைகள் தொலைந்துபோம், தனியறிவொன்றேயென்று சாதித்து = ஒப்பில்லாத சித்ருருவ ஏகதத்துவ திடஅப்யாசத்தினாலே, இம்மனம் வென்மட்டும் = இந்த மனதை ஜயஞ் செய்யாதவரையும், கனியிருள் செறியும் பேய்போல் = காடாந்தகாரத்திலுலவும் வேதாளங்கள் போல, கருத்தில் வாதனை வந்தெய்தும் = இருதயத்தில் வாசனைகள் சுழன்றேதிரியும்.

(ஸ்ரீ - வீர.) சித்ததர்ப்பத்தைக் கடிதுகெடுத்து, பொறிப்பகையைவென்ற புண்ணியனுக்குப் போகவாதனைகள் யாவும், ஹேமந்தகாலத்தில் தாமரைக் கூட்டங்கள் போலும் க்ஷீணமடைந்து விடும். ஏகதத்துவ திட அப்பியாசத்தால் எதுவரை மனம் வெல்லப்படவில்லையோ அதுவரை, பேரிர விருளிற்பெருத்த வேதாளங்கள் பிணங்கித் திரிதல் போலும் அஞ்ஞான அந்தகாரமய இருதயத்தில் வாசனைகள் வளர்ந்து வளர்ந்து விளையாடும். அஞ்ஞானாந்தகாரமய வாசனை வேதாளங்கள் இருதயத்தில் விளையாடுமெனினுமாம்.

(ச) படர்ந்த வாதனைகள் = போக வாசனைகள், அவை மீட்டு மீட்டெழும் போகாசைகளாம், சாதித்து = ஆன்மதத்துவ மொன்றிலேயே திடமாக ரூடமூலமான தியானப்பியாசத்தினால்; கருத்தில் = செறியும் வாதனைவந்தெய்தும். அத்துவய ஆன்ம தத்துவத்திற் றிடதரமான தியானப்பியாசத்தினால் மனது ஜயிக்கப்படாதவரையும் நிசியில் வேதாளங்கள் போல் இருதயத்தில் வாசனைகள் கர்ச்சிக்கும் அல்லது கூத்தாடும் என்பதாம். (13)

(ஸ்ரீ-வீர-அ-கை.) தன் தேக நகரீ சாம்ராஜ்யத்தில் தாசமந்திரி சாமந்தாதிகாரியத்தைச் சுத்தமாய சித்தமே நிர்வாகஞ் செய்யுமென்று கூறல் :—மந்திரியென்பது.

(ச.) வசியமான மனம் வெகுவிதமாகப் பிராணிகளுக் குபகாரஞ் செய்யுமெனல்:— மந்திரியென்பது.

மந்திரியெனலா முண்மை மருவுறும் விசாரத்தாலே
யிந்திரியங்க ளென்னு மிடர்ப்பகை யறுத்தலாலே
தந்திரியெனலா மிட்டஞ் சமைத்தலா லேவலாளா
நொந்திரி கிலாதவுள்ள நோக்கிய விவேகத்தோர்க்கே. (14)

(ப - ரை.) மந்திரியெனலாம் உண்மை மருவுறும் விசாரத்தாலே = சத்காரிய காரணத்தானே மந்திரி யெனப்பெறும், இந்திரியங்கள் என்னும் இடர்ப்பகை யறுத்தலாலே தந்திரியெனலாம் = பத்து இந்திரியங்கள் என்னும் படுபகை களைதலானே சாமந்தன் எனச் சாற்றலாம், இட்டஞ் சமைத்தலால் ஏவலாளாம் = வேண்டியவற்றைச் சம்பாதித்துத் தருதலானே பிருத்தியன் எனப்பேசலாம், உள்ளம் நோக்கிய விவேகத்தோர்க்கு = ஆன்மாவைத் தரிசித்த மகான்கட்கு, நொந்து இரிகிலாத உள்ளம் = விடயங்களில் விக்ஷேபப்பட்டுக் கெட்டுப்போகாத சத்துவமனம் இவ்வாறிருக்குமென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) விவேகிகட்கு மனமானது அபிமத கர்த்துருத் தகைமையானே பிருத்தியனாகவும், சற்காரிய காரணத்தானே மந்திரியாகவும், இந்திரியங்களை யெதிர்த்துச் சயிப்பதில் சாமந்தனாகவும், இருந்திலங்கும்.

(ச.) உண்மை மருவுறும் விசாரத்தாலே = தானே சர்வார்த்தங்களேயுஞ் (இதமான சகலகாரியங்களேயுஞ்) சாதிப்பதாதலின், இந்திரியங்கள் = ஞானகருமேந்திரியங்கள், தந்திரி = வெகுவித அதிகாரிகளேப் பிரவிருத்திப்பிக்கும் புருடனுகிய சாமந்தன், இஷ்டஞ் சமைத்தலால் = சந்தோஷவேதுவான காரியங்களுக்குத் தானே முக்கிய காரணமாதலின், ஞானத்தைத் தருதலின் குருவாமெனவுங் கொள்க. மனமானது பிருத்தியாதி காரிய காரணத்தானே பிருத்தியாதிரூபத்தன்மையை யடையுமென்பது கருத்தாம்.(14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இன்னணமே அன்புற்றிருக்கும் நாயகி முதலவாதலேக் கூறல்:—ஆலியென்பது.

ஆலிக்கு மின்பத்தாலே யன்புறு மனேவியாரும்
பாலிக்கு மியல்பினுலே பாவனத் தந்தையாகுஞ்
சீலிக்கு முறுதியாலே தேடரு நட்புமாகுந்
தூலிக்கும் வினேகளில்லாத் தூய்மனம் விவேகத்தோர்க்கே.　(15)

(ப - ரை.) ஆலிக்கும் இன்பத்தாலே = லாலனேசெய்யும் ஆநந்தமீயுஞ் செயல்களாலே, அன்புறு மனேவியாகும் = நேயமிகுந்த தருமபத்நியாம், பாலிக்கும் இயல்பினுலே = இரக்ஷிக்குந் தன்மையினுலே, பாவனத் தந்தையாகும் = பவித்தரமான பிதாவாகும், சீலிக்கு முறுதியாலே = மிகுந்த சீலத்தோடுற்ற விசுவாசத்தாலே, தேடரு நட்புமாகும் = தேடிக்காண்பரிய சுகிருத்துமாகும், விவேகத்தோர்க்கு = ஆராய்ச்சி மிகுந்த அதிகாரிகட்கு, தூலிக்கும் வினேகளில்லாத் தூய்மனம் = தூலதேகாதி முதலியபொருள்களில் யான் எனதென்னும் அபிமானமில்லாத பரிசுத்த சித்தம்.

(ஸ்ரீ - வீர.) இன்சொற்களாலும் இனிய பணிவிடைகளினுலும் இங்கிதங்களாலும் போற்றி யின்பந்தருதலால் சிநேகமிகுந்த பார்யையென்றும், அறிவுதந்து அளித்தலானே அதிபுனிதமாய அருந்தந்தை யென்றும், உள்ளத்தை யுரைக்கலாம் உணர்வுடையவர்க்கு உத்தமோத்தம விசுவாசத்தானே சுகிருத்தும் இந்நல்லுள்ளம் மகான்கட்காம் என்றுணர்க.

(ச) அன்புறு மனேவியாகும் = இரமிப்பிக்கும் இரம்பிய வஸ்து தரிசனத்திற்சாந்த சிருங்காராதி இரசோல்லாசத்தாற் சதாநந்த வேதுவாதலின், சுமங்கலிவிடய ரூபமான இளம்பாவையர்போல் எப்போதுஞ் சந்தோடந் தருதலின் மனேவியென் றறியத்தக்கது. பாலிக்கு மியல்பினுலே = இதமிதமேத்தி யாசனத்தினுல் மனது வசீகரமாயின் ஆதிவியாதி யபாவமாதலின் தேகசம்ரக்ஷணே செய்தலினுல், பாவனத்தந்தையாகும், சீலிக்கும் உறுதியாலே = இரசதமசுக்கள் நீக்கத்தாற் சுத்தசத்துவப் பிரதான மாதலின் = விசுவசிக்கிறதற்கு யோக்கியமாதலான், தேடருநட்புமாகும், மனது மந்திரியாதி காரியங்களுக்கு முக்கியகாரண மாதலின் மந்திரியாதிரூபத்தை யடையுமென்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனத்திற்குப் பிதாருத்தன்மையில் வேறேதுவும் உண்டென்றுரைத்தல்:—நல்லனவென்பது.

நல்லன நூல்களாலே நல்லன நெறியைநோக்கி
நல்லன தியானஞ்செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்திநல்கு நல்லதாய்த் தன்னேமாய்த்து
நல்லதோர் தாதையாகி நல்லவர்க் குள்ளந்தானே.　(16)

(ப - ரை.) துனிமனச் செருக்கு மாய்த்து = துன்புறுத்தா நின்ற வாதனைக ணிறைந்த சித்த தர்ப்பத்தை அதிக்ஷீணமாக்கி, தொடர் = அதனோடு சேர்ந்தாம், பொறிப்பகையை வெல்லில் = இந்திரியச் சத்துருவை ஜயிக்கில், பனிபடு பதுமக் கான்போல் = ஹேமந்தகாலத்தில் தாமரைக் கூட்டங்கள்போலும், படர்ந்த வாதனை கள் மாளும் = நெருங்கி நிறைந்த போகவாதனைகள் தொலைந்துபோம், தனியறி வொன்றேயென்று சாதித்து = ஒப்பில்லாத சித்ருருவ ஏகதத்துவ திடஅப்யாசத்தி னாலே, இம்மனம் வென்மட்டும் = இந்த மனதை ஜயஞ் செய்யாதவரையும், கனியிருள் செறியும் பேய்போல் = காடாந்தகாரத்திலுலவும் வேதாளங்கள் போல, கருத்தில் வாதனை வந்தெய்தும் = இருதயத்தில் வாசனைகள் சுழன்றேதிரியும்.

(ஸ்ரீ - வீர.) சித்ததர்ப்பத்தைக் கடிதுகெடுத்து, பொறிப்பகையைவென்ற புண் ணியனுக்குப் போகவாதனைகள் யாவும், ஹேமந்தகாலத்தில் தாமரைக் கூட்டங்கள் போலும் க்ஷீணமடைந்து விடும். ஏகதத்துவ திட அப்பியாசத்தால் எதுவரை மனம் வெல்லப்படவில்லையோ அதுவரை, பேரிர விருளிற்பெருத்த வேதாளங்கள் பிணங்கித் திரிதல் போலும் அஞ்ஞான அந்தகாரமய இருதயத்தில் வாசனைகள் வளர்ந்து வளர்ந்து விளையாடும். அஞ்ஞானாந்தகாரமய வாசனை வேதாளங்கள் இருதயத்தில் விளையாடு மெனினுமாம்.

(ச) படர்ந்த வாதனைகள் = போக வாசனைகள், அவை மீட்டு மீட்டெழும் போகாசைகளாம், சாதித்து = ஆன்மதத்துவ மொன்றிலேயே திடமாக ரூடமூலமான தியானப்பியாசத்தினல் ; கருத்தில்=செறியும் வாதனைவந்தெய்தும். அத்துவய ஆன்ம தத்துவத்திற் றிடதரமான தியானப்பியாசத்தினன் மனது ஜயிக்கப்படாதவரையும் நிசியில் வேதாளங்கள் போல் இருதயத்தில் வாசனைகள் கர்ச்சிக்கும் அல்லது கூத்தாடும் என்பதாம். (13)

(ஸ்ரீ-வீர-அ-கை.) தன் தேக நகரீ சாம்ராஜ்யத்தில் தாசமந்திரி சாமந்தாதிகாரியத் தைச் சுத்தமாய சித்தமே நிர்வாகஞ் செய்யுமென்று கூறல் :—மந்திரியென்பது.

(ச.) வசியமான மனம் வெகுவிதமாகப் பிராணிகளுக் குபகாரஞ் செய்யுமெனல்:— மந்திரியென்பது.

மந்திரியெனலா முண்மை மருவுறும் விசாரத்தாலே
யிந்திரியங்க ளென்னு மிடர்ப்பகை யறுத்தலாலே
தந்திரியெனலா மிட்டஞ் சமைத்தலா லேவலாளா
நொந்திரி லாதவுள்ள நோக்கிய விவேகத்தோர்க்கே. (14)

(ப - ரை.) மந்திரியெனலாம் உண்மை மருவுறும் விசாரத்தாலே = சத்காரிய காரணத்தானே மந்திரி யெனப்பெறும், இந்திரியங்கள் என்னும் இடர்ப்பகை யறுத்த லாலே தந்திரியெனலாம் = பத்து இந்திரியங்கள் என்னும் படுபகை களைதலானே சாமந்தன் எனச் சாற்றலாம், இட்டஞ் சமைத்தலால் ஏவலாளாம்=வேண்டியவற்றைச் சம்பாதித்துத் தருதலானே பிருத்தியன் எனப்பேசலாம், உள்ளம் நோக்கிய விவேகத் தோர்க்கு = ஆன்மாவைத் தரிசித்த மகான்கட்கு, நொந்து இரிலாத உள்ளம் = விட யங்களில் விக்ஷேபப்பட்டுக் கெட்டுப்போகாத சத்துவமனம் இவ்வாறிருக்குமென்பதாம்.

(ஸ்ரீ - வீர.) விவேகிகட்கு மனமானது அபிமத கர்த்துருத் தகைமையானே பிருத் தியனாகவும், சற்காரிய காரணத்தானே மந்திரியாகவும், இந்திரியங்களை யெதிர்த்துச் சயிப்பதில் சாமந்தனாகவும், இருந்திலங்கும்.

(ச.) உண்மை மருவுறும் விசாரத்தாலே = தானே சர்வார்த்தங்களையுஞ் (இதமான சகலகாரியங்களையுஞ்) சாதிப்பதாதலின், இந்திரியங்கள் = ஞானகருமேந்திரியங்கள், தந்திரி = வெகுவித அதிகாரிகளைப் பிரவிருத்திப்பிக்கும் புருடனாகிய சாமந்தன், இஷ்டஞ் சமைத்தலால் = சந்தோஷவேதுவான காரியங்களுக்குத் தானே முக்கிய காரணமாதலின், ஞானத்தைத் தருதலின் குருவாமெனவுங் கொள்க. மனமான து பிருத்தியாதி காரிய காரணத்தானே பிருத்தியாதிரூபத்தன்மையை யடையுமென்பது கருத்தாம். (14)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இன்னணமே அன்புற்றிருக்கும் நாயகி முதலவாதலைக் கூறல்:—ஆவியென்பது.

ஆவிக்கு மின்பத்தாலே யன்புறு மனைவியாகும்
பாவிக்கு மியல்பினாலே பாவனத் தந்தையாகுஞ்
சீவிக்கு முறுதியாலே தேடரு நட்புமாகுந்
தூவிக்கும் வினைகளில்லாத் தூய்மனம் விவேகத்தோர்க்கே. (15)

(ப - ரை.) ஆவிக்கும் இன்பத்தாலே = லாலனைசெய்யும் ஆநந்தமீயுஞ் செயல்களாலே, அன்புறு மனைவியாகும் = நேயமிகுந்த தருமபத்தினியாம், பாவிக்கும் இயல்பினாலே = இரக்ஷிக்குந் தன்மையினாலே, பாவனத் தந்தையாகும் = பவித்தரமான பிதாவாகும், சீவிக்கு முறுதியாலே = மிகுந்த சீலத்தோடுற்ற விசுவாசத்தாலே, தேடரு நட்புமாகும் = தேடிக்காண்பரிய சுகிருத்துமாகும், விவேகத்தோர்க்கு = ஆராய்ச்சி மிகுந்த அதிகாரிகட்கு, தூவிக்கும் வினைகளில்லாத் தூய்மனம் = தூலதேகாதி முதலியபொருள்களில் யான் எனதென்னும் அபிமானமில்லாத பரிசுத்த சித்தம்.

(ஸ்ரீ - வீர.) இன்சொற்களாலும் இனிய பணிவிடைகளினாலும் இங்கிதங்களாலும் போற்றி யின்பந்தருதலால் சிநேகமிகுந்த பார்யையென்றும், அறிவுதந்து அளித்தலானே அதிபுனிதமாய அருந்தந்தை யென்றும், உள்ளத்தை யுரைக்கலாம் உணர்வுடையவர்க்கு உத்தமோத்தம விசுவாசத்தானே சுகிருத்தும் இந்நல்லுள்ளம் மகான்கட்காம் என்றுணர்க.

(ச) அன்புறு மனைவியாகும் = இரமிப்பிக்கும் இரம்பிய வஸ்து தரிசனத்திற்சாந்த சிருங்காராதி இரசோல்லாசத்தாற் சதாநந்த வேதுவாதலின், சமஷ்டிவிடய ரூபமான இளம்பாவையர்போல் எப்போதுஞ் சந்தோடந் தருதலின் மனைவியென் றறியத்தக்கது. பாவிக்கு மியல்பினாலே = இதமிதமேத்தி யாசனத்தினுல் மனது வசீகரமாயின் ஆதிவியாதி யபாவமாதலின் தேகசம்ரக்ஷணை செய்தலினால், பாவனத்தந்தையாகும், சீவிக்கும் உறுதியாலே = இரசதமசுக்கள் நீக்கத்தாற் சுத்தசத்துவப் பிரதான மாதலின் = விசுவசிக்கிறதற்கு யோக்கியமாதலான், தேடருநட்புமாகும், மனது மந்திரியாதி காரியங்களுக்கு முக்கியகாரண மாதலின் மந்திரியாதி ரூபத்தை யடையுமென்பது பொருள். (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனத்திற்குப் பிதுருத்தன்மையில் வேறேதுவும் உண்டென்றுரைத்தல்:—நல்லனவென்பது.

நல்லன நூல்களாலே நல்லன நெறியைநோக்கி
நல்லன தியானஞ்செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்திநல்கு நல்லதாய்த் தன்மைமாய்த்து
நல்லதோர் தாதையாகி நல்லவர்க் குள்ளந்தானே. (16)

(ப - ரை.) நல்லன நூல்களாலே = வேதாந்த சாஸ்திரங்களாலே, நல்லனநெறியை நோக்கி = நன்மார்க்க பரிசீலனைசெய்து, நல்லன தியானஞ்செய்து = நல்லதான துணி புற்று, நல்லநுபவத்தை நண்ணி = சுவாநுபூதி யடையப்பெற்று, நல்லன சித்தி நல்கு நல்லதாய்த் தன்னைமாய்த்து = தன்னை முற்றினும் அழித்து ஆநந்த மோக்ஷத்தையடை விக்கும், நல்லவர்க்கு = விவேகியர்க்கு, உள்ளந்தானே நல்லதோர் தாதையாகி = மனம் சுயமாகவே அருமைமிக்க தந்தையாகி.

(ஸ்ரீ - வீர.) மனமாகிய பிதாவானவன், சாத்திரத்தாற் காண்பிக்கப் பெற்றதேவதா திருஷ்டியினானே, தாண்டாச் சாசனத் தன்மையினானும், சின்மாத்திர ஸ்பந்தத்தன்மை யினானும், தன்னைக் காண்பவனாகி, சிநேகபுத்தியினாலும் விவேகபுத்தி யினாலும், உள்ளே தன்னை யநுபவித்தவனாகி, தான் சம்பாதித்த தனாதி தத்துவஞானவடிவமேலான சித் தியை, தேகத்தையும் மநோரூபத்தையும் விடுத்து அடைவிப்பன் என்பதாம்.

(ச.) நல்லன நூல்களாலே = விசாரசித்தமாய அத்தியான்ம சாஸ்திரஜந்நிய ஞானத் தால், நோக்கி = நன்றாக இனிது பரியாலோசனைசெய்து, தியானஞ்செய்து = நலமுறத் துணிபுற்று, நல்லநுபவத்தை நண்ணி = சுவாநுபவத்தை யடைந்து, நல்லவர்க்கு = விவேகியர்க்கு, நல்லதோர் தாதையாகும் உள்ளந்தானே = பாவிக்கு மியல்பினாலே பாவனத்தந்தையாகும் என்று முற்கூறினமையாற் பிதாவென்னுமனமே, தன்னை மாய்க் கும் = தான்கெட்டு, நல்லன சித்திநல்கும் = கைவல்யபதத்தைக் கொடுக்கும். இத்தன் மையாக எவன் உபகாரஞ்செய்வன் என்பது கருத்து. (16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) யாவும் அறிவுருவமே யென்று கண்டுகொண்டிருந்தால் மனமா னது மணியென விளங்குமெனல்:—துணிவென்பது.

துணிவுறு திடமாய்ச் சாலத்துகளற நோக்கியாதும்
பிணியறக் கண்டுஞானப் பேருணர் வுணர்த்தப் பட்டாற்
பணிவுறு மிதயந்தன்னிற் பழுதிறன் குணத்தினாலே
மணியென விளங்காநிற்கு மாசறு முள்ளந்தானே. (17)

(ப-ரை.) துணிவுறு திடமாய்ச் சாலத்துகளற நோக்கி = அத்தியந்தம் யாதொரு தோடமுமில்லாமற் பார்த்த அதனானே மிகமிகவுந் திடதரமாகி யையந்திரிபற்று, யாதும் பிணியறக்கண்டு = அதிதெளிவாயறிந்து, ஞானப்பேருணர்வு = சர்வஞ் சின்மயமென் னும் சர்வான்மக திருட்டியைப் பயிற்றின், பணிவுறும் இதயந்தன்னில் = பரமசாந்த மான இருதயதாமரையில், பழுதில் தன்குணத்தினாலே = குற்றமற்ற தனதுயர்ந்த கல் யாணகுணத்தினாலே, மாசறுமுள்ளம் தானே = திருசியகளங்கமற்ற மனமானது சுயமா கவே, மணியென விளங்காநிற்கும் = மணியைப்போலப் பொலியா நிற்கும்.

(ஸ்ரீ - வீர.) ஆதியில் கனிகள் என்னுமிடங்களில், பாக்கியவசத்தாற் திருஷ்டமா கிப் பின்னர் நன்றாகச் சாணைபிடித்துப் பளபளப்பாக்கப்பட்டுக், கனகாதசகத்திரங்க ளானே பேதிக்கப் பெறாமல், தேஜோவியஞ் சகரசக்ஷாலனாதிகளானே மிகவொளிவிடு வதா யிலங்கும் வஜ்ஜிரமணியானது, சோபனகுணவதியாய சுவர்ண ஹாராதிகளில் இணைக்கப்பெற்று மார்பில் மலர்வதேமானும்; ஆதியிற் சாஸ்திரத்தினாலே தரிசிப்பிக் கப்பெற்ற, பரீக்ஷைத் திருஷ்டியினானே நன்றாகக் காணப்பெற்று, பின்னர் ஆசாரியர் முற்சரண்புகுந்தோர் முதலவர் பேருதவியினானே சுவானுபவம்வரையும் இனிதாக ஆரா யப்பெற்று, பின்னிதித்தியா சனத்தானே நன்றாகத் திடமாக்கப்பெற்று, பின்றத்துவ சாக்ஷாத் காரத்தானே இனிதாக வுணர்த்தப்பெற்று, பின்பஞ்சமாதி பூமிகா பேதத்தில் இணைக்கப்பெற்று, நின்றமனமானது உள்ளே நிருமலமாக நிறைந்தொளிரும்.

(ச.) சாலத்துகள்அற நோக்கி = நன்றாய்ப்பார்த்து அதனாலே சமுசய விபரீத ரகித மாதலின், துணிவுறு திடமாய், அதனாலே, யாதும் பிணியறக்கண்டு = சொச்சமாயுணர்ந்து, ஞானப்பேருணர்வு = சமீசீனமான போதத்தை, உணர்த்தப்பட்டால்=அடைந்த தாயின், பழுதின்ற குணத்தினாலே=சமம் முதலான குணத்தால், மாசறமுள்ளந்தானே இதயந்தன்னில் மணியென விளங்காநிற்கும் என்பதந்நுவயம். திடமாய் =அசைவின்றி. சொச்சம் = நிட்களங்கம். மநோமணியானது சுபேச்சையோடு கூடியதாய் உற்கிருட்டமாயதென்றுணர்க. (17)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேற்கூறியவண்ணம் ஸ்ரீ இராகவருக் குபதேசித்து, உரைத் தருளிய மணிரூபகத்தையேபற்றி யுபசங்கரித்தல்:—மனமென்பது.

மனமணி பேதச்சேற்றின் மறைந்தொரு வருக்குந்தோன்றாக்
கனமுறு விவேகநீரால் கழுவினாற் சித்திகாட்டும்
வினவுறு விவேகவன்பான் மெய்ம்மையை மதியாற்கண்டு
சினமுறு பொறியைவென்று தீர்வரும் பிறவிதீர்வாய். (18)

(ப - ரை.) மனமணி = மனமாகிய மணியானது, பேதச் சேற்றில் மறைந்து= பேதபங்கக்களங்கிதமாகி, ஒருவருக்குந் தோன்றா= எவருக்குமே புலப்படாது, கனமுறு விவேக நீரால்=மிகுதியாகப் பயிலப் பெற்ற பேரறிவுதக்கதால், கழுவினால் = சுத்தஞ் செய்தால், சித்திகாட்டும்= மோக்ஷத்தைத் தரிசிப்பிக்கும், வினவுறுவிவேகவன்பால்= ஆராய்ச்சியால் வரும் விவேகத்தைப் பரமாகப்பற்றி, மதியால் = புத்தியால், மெய்ம்மையை = சத்தியத்தைக்கண்டு = தரிசித்து, சினமுறு பொறியை = தடுக்குமதிகாரியைக் கண்டு கோபமூளும் இந்திரிய சத்துருவை, வென்று =அத்தியந்தம் ஜயித்து, தீர்வரும் பிறவிதீர்வாய் = தாண்டுதற்கரிய பவார்ணவத்தைத் தாண்டுவாயாக.

(ஸ்ரீ - வீர.) மணிமந்திர ஔஷதங்கட்கு அசிந்தியமான மகிமையிருத்தலின் மந்திர காரியசித்தி வைசித்திரியங்கள் மணியினாலும் சம்பவித்தலின் மநோமணியையே மந்திரியெனவுங் கூறலாம். ஜன்மவிருக்ஷச் சேதமும் நிரதிசயாநந்த உதயமும், அதனது சித்தி வைசித்திரியமாம், இங்ஙனந் தாற்பரியத்தானே மணிரூபக அநுசாரமாகவே சேர்க்கலாம். இராகவனே இவ்வண்ணம் வெகுபங்கத்தானே களங்க மடைந்துள்ள மநோமணியைச் சித்தியின் பொருட்டு விவேகவாரியனே அலம்பியினிதுகண்டு கொள்வாயாக. இங்ஙனம் விவேகத்திற்கு நிரதிசயசுப உதயமுரைக்கப் பெற்றது; இப்போது இயம்பிய இந்திரிய அரியின்ஜயோபாய உபதேசத்தை யுபசங்கரித்தல்:—வினவுறு என்றது. விவேகபதத்தைப் பலமாகப்பற்றிப் புத்தியினாலே சத்தியத்தை யினிது தரிசித்து, இந்திரிய சத்துருக்களை அத்தியந்தம் வென்று பவார்ணவத்தினின்றும் நீர்ணனுக் கடவாயென்பதாம். (18)

(ச.) பேதச்சேற்றின் = வெகுமலின வாசனைகளினால் களங்கத்தை யடைந்து, விவேகநீரால் = விசாரஜந்யமான விஞ்ஞான ஜலத்தினால் கழுவினால், சித்திகாட்டும்= கைவல்லியத்தைத்தரும், ஆதலால் கைவல்லிய நிமித்தம் இராகவா நீ, பொறியை = இந்திரிய சத்துருக்களை, வென்று = நன்றாய்ஜயித்து, தீர்வரும் பிறவிதீர்வாய் = பவார்ணவத்தினின்றும் கரையேறினவனாவாய், விவேகவன்பால் = விவேகத்தைத் திடமாய்ப் பெற்றதனா லுண்டாகும் மதியால் மெய்ம்மையைக் கண்டு, தத்துவஞ்ஞனாய், சினமுறு.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அற்றேல் உற்பத்திப் பிரகரணத்தில் தேகேந்திரியாதிகட்கு அசத்வம் அறையப்பெற்றது; கண்டு அதன் ஜயோபாய முபதேசித்தல் யாங்ஙனங்கூடு

மெனச் சங்கித்து ! இந்த ஆகமுதலியவை அத்தியந்த மில்லாதிருந்தபோதினும் சுகதுக்காதிகள் அத்தியந்த மில்லாதனவா யிருந்தபோதினும் மயக்கத்தினுனே வாளா அயம் அகம் என்னும் நிச்சயமுண்டா கின்றதென்று சமாதானித்தல்:—இத்திறத்தென்பது.

இத்திறத்திவனு னென்றே யிறுகியவறுதிவீணு
மத்திறம் புந்தியாலே யழுத்தமா யகற்றிமற்ற
மெய்த்திறம் பற்றிநீயா மதினின்று விழைந்தசெய்வாய்
பொய்த்திற மனத்தினுேடே புசித்தவை பந்தமாகா. (19)

(ப : ரை.) இத்திறத்து = இத்தூல தேகாதிகளினிடத்து, இவன் நான் என்றே= அயம் அகம் எனவே, இறுகிய அறுதிவீணும் = திடப்பட்ட துணிபு ஒருபயனற்றதாம் அத்திறம் = அவ்வாறுண்டா மயலை, புந்தியாலே = தனது விவேகமதியினுலே, அழுத்தமா யகற்றி = அதிதிடமாய் விடும்படிசெய்து, மற்ற மெய்த்திறம் பற்றி = ஜடவிலக்ஷணமான சத்திய சிற்களுநந்த தற்பதத்தைச் சொச்சொரூபமா யவலம்பித்து, நீயாமதினின்று = சாக்ஷிரூபமாகிய நின்னுடைய திதியிலிருந்து கொண்டே, விழைந்தசெய்வாய் = நுகர்வினைவயத்தால் வந்ததை யநுபவிப்பாய் ? பொய்த்திற மனத்தினுேடே புசித்தவைபந்தமாகா = விடயங்களைப் பொய்யெனக் கண்டு சங்கமின்றி நின்றமனத்துடன் அநுபவித்தவை கட்டுப்படுத்த மாட்டா.

(ஸ்ரீ - வீர.) திருசியபூதமா யிராநின்ற தேகாதியேயானென்னும் எவ்விண்டுணிபாய; மித்யாபிமான முளதோ அதனைத்தன் றத்துவ நிச்சயத்தானே அத்தியந்தம் அகற்றி, ஹே மகாமதியையுடைய குழந்தாய் ! இதுவெனத் தோற்றும் யாவினும்வேறாய்ப் பிரத்தியக் ஏகரசமா யிருப்பதுயாதோ அதையே பற்றி அதனியற்கையானே இருப்பதனுல் மனமற்றவனுய் நீ நடப்பினும் குடிப்பினும் நற்போக முண்ணினும் இடர்ப்படமாட்டாய் எவ்விவகார மியற்றினும் விடுபெட்டவனே யாவாய்.

(ச.) இத்திறத்தினன் = அகந்தா பரிச்சின்னுகார விஷயன், நானென்றே = இறுகியவறுதி = விபரீதநிச்சயம், வீணும்=வியர்த்தமாம், அத்திறம் அதனை, புந்தியாலே= தமதுபுத்தியால்; அழுத்தமாயகற்றி, மற்றைமெய்த்திறம் = இதரமான அகந்தையினுலனவச்சின்னமாகிய சைதந்நியத்தை, பற்றி = அவலம்பித்து, நீயாமதில் அமநஸ்கனுய் நின்று, விழைந்த செய்வாய் = இச்சைப்படி விவகரிப்பாய், அங்ஙனமாயின், பொய்த்திற மனத்தினுேடே புசித்தவை = அமனஸ்கனுய்ப் புசித்தபோகங்கள், பந்தமாகா = பந்தவேதுவாகாவாம்; நீ அமநஸ்கனுய் இச்சைப்படி விவகரிக்கிற் பந்தமுறுதென்பது பொருள். (19)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தத்துவதிருஷ்டியானே அசத்துவமா யிருந்தபோதினும், மோகதிருஷ்டியினுனே அதன் சத்துவமானது யாவருக்கும் அநுபவமா யிருத்தலின் சிகிச்சைசெய்யாது விடின் வாசனை யின்றிடத் தன்மையானே தாமவியாளகட நியாயத்தானே அனர்த்தப் பிராப்தியானது அகற்ற முடியாதாம், விவேகாதியின் பயிற்சியானே அதன் சிகித்சனமாயினே பீமபாச திடநியாயத்தானே அநர்த்த அடைவிலதாம் என அந்த நியாயத்தை யருளத்தொடங்கல்:—தாமன் என்பது.

தாமனேடு வியாளகடாசுரர் சாருநீதியை நீயணுகாதொழி
வீமபாசதிடா சுரர்நீதியை மேவிவேதனை தீர்கெனவோதலு
நாமமேபகர் தான்வராரெனு ஞானவீரன் வினவிடமாமுனி
யாமதேதிட வாதரமாகிய தேதுநீயதின் மேவெனவோதுவான். (20)

(ப - ரை.) தாமனோடு வியாளகடாசுரர் = தாமன்வியாலன் கடன் என்னும் பெயர்வாய்ந்த அசுரர்கள், சாருநீதியை = பொருந்திய நியாயத்தை, நீயணுகாதொழி = நீ பொருந்தாதிருத்தி, வீமபாசதிடாசுரர் நீதியை = பீமன்பாசன்திடன் என்னும் நாமம் வாய்ந்த அசுரர்களின் நியாயத்தை, மேவி = பொருந்தி, வேதனைதீர்கென வோதலும் = துயரந்தொலைத் தாநந்திப்பாயாக வெனக்கூறுதலும், நாமமேபகர் தானவரரென = ஹே பகவன்! தங்களால் அனுக்கிரகிக்கப் பெற்றபெயர் வாய்ந்தவராகிய அசுரர்யாவர் என்று, ஞானவீரன் = அறிவுருவமேயாய கம்பீர இராகவன், வினவிட = கேட்ப, மாமுனி = பிரஹ்மநிஷ்டை மாகுமிமைதங்கிய ஸ்ரீ வசிஷ்டபகவான், யாமரைதாதிட = அதன் விபரத்தையாம் கூற, ஆதரமாகியது எது = உனக்கவற்றுள் யாதுவிழைவோ, நீயதின்மேவு என ஓதுவான் = இர்ராமச்சந்திரா நீ அதன்கண்ணே பொருந்துதி என்று கூறத்தொடங்கினார்.

(ஸ்ரீ-வீ ர.) ஹே இராகவ! தாமவியாலகட நியாயமானது உனக்குண்டாகாதொழிக, பீமபாசதிடத் திதியினானேநீ விசோகத்தகைமையை யெய்தலாம். வாசனை யற்றவனுக்கும் பையப்பைய வாசனைச் சேர்க்கையானே தேகாதியபிமானம் ஜநநமாகியவழி ஜந்ம மரண பரம்பரையாமென்றால், விவேகங்குறைந்த வாசனையனுக்கு அஃதாவதில் அறைய வேண்டுவதென்னை யென்னும் கைமுதிக நியாயப் பிரதரிசன முகத்தானே, சிறிது ஆத்மவிற்பன்னர்களாய், பூர்ணநிஷ்டை யடையாதவர்களாய், உள்ளமந்த மத்யம அதிகாரிகளின் வாசனையுச்சேத முயற்சி முதிர்ச்சியின் இன்றியமையாமையைக் காட்டுவதிற் றற்பரமான தாமவியால கடாக்கியாயிகையைக் கூற விழைவுற்ற ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராமபிரானுக்கு அதனைக்கேட்கும் வெட்கை யுள்தாக்கும் பொருட்டுப் புகன்றதையே பிரித்து மீளவும் அநுவதித் தருளுவதாவது:— ஹே இரகுகுலதிலக! இவ்வுலகத்தின்கண் விநோதமாய் விவகரிப்பவனும், சகல ஜனங்களும் விசிராந்தியடைதற் கிடமானவனும், மதிமானும், சிரேயசின் பொருட்டுப் பெருமுயற்சியைச் செய்துகொண்டிருப்பவனும், உத்தமோத்தமமான சமதமாதி யருத்தங்களைத் தன்பா லொளிர்விக்கும் சீல முடையவனும் ஆகிய உனக்குத்தாம வியாலகடநியாயம் உண்டாக வேண்டாம், பீமபாச திடத்திதியானே நீ விசோகனாய் விமோகனாய் வாழ்தி; என்றிவ்வண்ணம் புனராநுவாதத்தாற் கிளப்பப்பெற்ற அறியும் வேட்கையையுடைய ஸ்ரீ இராகவர் அவ்விரண்டுக்தியின் வித்தாரத்தை வினாதல்;—நாமமேபகர் என்பது. ஹே பிரஹ்மந்! பவதாபத்தை யபகரிக்குந் தங்களால், தாம வியாலகட ந்யாயம் உனக்குண்டாக வேண்டாம் என்றருளப் பெற்றதே அஃதென்? ஹே பிரபுவே! தாபத்திரயங்களையுஞ் சாந்தப்படுத்தும் தேவரீராற் பீமபாச திடத்திதியானே சோகமற்றவனாகி வாழ்தி நீ யென்றருளப்பெற்றதே அக்கூற்றின் கருத்தென்னே? இக்கதை யிரண்டன் வர்ணனரூபமான உதார வுபதேசவாணியால், பெருமழைக்காலத்திற் கருவுற்ற மேகமானது, தாபங்களையெல்லாம் அகற்றும் இடிமுழக்கத்தான் மயிலினத்தை உல்லாசப் படுத்துவதேபோலத் துயருழகிய அடியேனை யுணர்வுடையவனாகச்செய்து மகிழ்வுறுமாறு செய்வீர்களாக. எனவேண்டிக் கொண்டதைக்கேட்ட ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது:—ஹே குழந்தாய்! தாமவியாலகட நியாயத்தையும், பீமபாசதிடத் திதியையும் கூறுகின்றோம், அதனை நீ யொருமையுடன் கேட்டு எது இட்டமோ அதை யநுசரித்து வாழ்வாயாக.

(ச.) தாமன் வியாளன்கடன் என்னுந்தைத்தியர் மேற்சொல்லப்படுகிறார், அவர்கள் சாரும், நீதியை = விவேகசூனியமான விவகாரத்தை, மகாமதியையுடைய இராகவா, நீயணுகாதொழி, வீமன் பாசன் திடன் என்னுந்தைத்தியர், அவர்களுடைய விவேகயுக்த

விவகாரத்தை, மேவி, வேதனை தீர்கென = சோகநீங்குவாயென்று, ஓதலும், ஞான வீரன் = ஸ்ரீ இராமன், நாமமேபகர் = தேவரீர் உத்தேசமா யுபதேசித்த, தானவரார் = தாமாதியர் வீமாதியரியார், அவர்களது நீதிகளியாவை, என வினவிட, மாமுனி = சமுசாரதுக்கத்தைத் தவிர்க்குஞ் சீலமுடைய ஸ்ரீ வசிட்டமுனிவர், யாமது, அவ்விருவரது நீதியையும், ஒதிட = இராகவாநீகேட்டு ஆதாரமாகிய தேததின் மேவெனவோதுவான்.(20)

(ஸ்ரீ-வீர - அ·கை.) சம்பராசுரன் பெருமையைப் பேசி வானவர் தானவர் போரை வருணித்தல்:— சஞ்சரி—ஆய—மேரு, என்பன.

சஞ்சரித்துயர் பாதலமேவிய சம்பரப்பெயரா னொருதானவன்
வஞ்சமுற்றிய மாயையில் வாழ்பவன் வன்படைக்கடலா லமரேசனை
யெஞ்சலித்திட வானவர்தாமுமே யிவன்சுழுத்தியி லாகியபோதினும்
விஞ்சவம்பர மேவியபோதினும் வெம்பியெற்றினர் தானவர்மாளவே.(21)

ஆயவன்பை யறிந்துயர் சம்பரனுருவன் றுரு மன்றிறன் முண்டிக
னேயவிங்கிவர் தம்படைமுன் செலவேவினன் பெரிதங்கெவரும்பட
மேயவண்டரடர்ந்தன ரென்றலும் வேகமிஞ்சிய சம்பரன்வந்திட
மாயைவிஞ்சை நிறைந்தவ னென்றெதிர்மாகர் நின்றிடவஞ்சியொதுங்கினர்.

மேருகந்தரமும்பரடைந்தனர் வீதியெங்கு மரம்பையர் நின்றழ
யாருமின்றி யவிந்திரன்றன்பதி யீசன்வென்ற புரங்களெனும்படி
நேருமங்கி சொரிந்து திரும்பின னீடகன்று ளவந்தனர் பின்றையு
மூருள்வந்தனரென்றுபெரும்படையோய்விலன்பெரிதுந்தினன்விஞ்சையால்

(ப-ரை.) சஞ்சரித்து = எல்லா வுலகங்களிலும் உலவிவந்து, உயர்பாதலமேவிய = சர்வைசுவரிய மனோகரமான பாதாலகுகரத்தில் வாழும், சம்பரப்பெயரான் ஒரு தானவன் — சம்பராசுரன் என்னும் பெயர் வாய்ந்த ஒப்பற்ற தைத்தியேந்திரன் ஒருவன் இருந்தனன், வஞ்சமுற்றிய மாயையில் வாழ்பவன் = வஞ்சனைகள் நிறைந்தமாயை வித்தைசெய்து கொண்டே தன் காலங்கழிப்பவன், வன்படைக் கடலால் அமரேசனை = பலம்பொருந்திய சேனாசமுத்திரத்தால் தேவேந்திரனை, எஞ்சலித்திட = துன்புறுத்திக் கொண்டிருப்ப, வானவர்தாமுமே = இந்திரனை யுள்ளிட்ட தேவர்கள் யாவர்களுமே, இவன் சுழுத்தியிலாகிய போதினும் = இச்சம்பிராசுரன் துயின்றுகொண் டிருக்கும் போதும், அம்பரமேவிய போதினும் = தேசாந்தரஞ்சென்ற சமயத்தும், விஞ்சவெம்பி = மிக்வுங் கரோமாய்ச் சினந்து, தானவர்மாள எற்றினர் = அசுரர் அழியும்படியாக அடித்து விடுத்தனர். ஏ. அசை.

ஆயவன்பை யறிந்து = இவ்வண்ணம் இமையவா இமையவர் இயற்றிய இடும்பையை யெண்ணி, உயர்சம்பரன் = மாயைவித்தையின் மேன்மையுற்ற சம்பராசுரன், ஆருவன் துருமன்திறல் முண்டிகன் = அங்கன் துருமன் வலுவுற்றமுண்டிகன் எய, இங்கு இவர்தம் முன்செல = முதலவர்களாகப் பொருந்திய இவர்கள், தலைமைவாய்ந்து தமது சேனை படைகளைக் காக்கவேண்டி முன்பு போம்படியாயிச் சமரில், ஏவினன் = இவர்தமைச் செலுத்தினன், அங்கு—அவ்வாறனுப்பிய அமரில், எவரும் = யாவரும், பெரிதுபட = அத்தியந்தம் அழியும்படியாக, மேய அண்டர் = அந்தரமடைந்த அமரர்கள், அடர்ந்தனர் = மோதிவென்றார்கள், என்றலும் எனச்சாரணர் கூறக்கேட்டலும், வேகமிஞ்சிய =

அதிவேகத்தோடு கூடிய, சம்பரன் = மாயாசுரன், வந்திட = தேவர்தைகளைத் தேடவரவே, மாயைவிஞ்சை நிறைந்தவன் என்று = மாயைவித்தையில்வல்லவன் என்பதாக, மாகர் = அமரர், எதிர் நின்றிட அஞ்சி ஒதுங்கினர் = அவன் முன்னிலையில் நிலைத்துப் போர்புரியப் பயந்து விலகியோடினர்.

மேருகந்தரம் உம்பர் அடைந்தனர் = காஞ்சனமலைக் கானனகுஞ் சங்களையஞ்சி யமரர் சரணடைந்தனர், வீதியெங்கும் அரம்பையர் நின்று அழ = தெருக்களில் எல்லாம் தேவமங்கையர் அலங்கோலமாய் நின்று ரோதனஞ்செய்ய, யாரும் இன்றிய இந்திரன் தன்பதி = ஒருவருமில்லாம லோடிவிடச் சூனியமாகத் தோற்றும் தேவேந்திரனது பட்டணமானது, ஈசன்வென்ற புரங்கள் எனும்படி = கற்பக்ஷீண ஜகத்சமமாய், அல்லது தொனியை யனுசரித்துச் சிவபெருமான் சிரித்தெரித்த முப்புரங்கள் என்று சொல்லும்படியாக, நேரும் அங்குசொறிந்து = தன்னிஷ்டப்படி இன்ன இடத்திற்றான் என்றில்லாமல் தீயைத்தீட்டி, திரும்பினன் = தனதாலயம் வந்து சேர்ந்தனன், நீடகன்று = வெகுகாலங்கழித்து, உள அந்தணர் = திக்குகளின் மறைந்திருந்த தேவர், பின்றையும் = மறுபடியும், ஊருள்வந்தனர் = பட்டணத்துள்ளே புகுந்தனர், என்று = என்பதாகக் கேள்வியுற்று பெரும்படை = பெரியசேனாதி நாயகரை, ஓய்விலன் = இடைவீடின்றியவனாகி, பெரிது = மீளமீளவும், விஞ்சையால் = மாயைவித்தையால், உந்தினன் = உண்டாக்கி யேவினன்.

(ஸ்ரீ - வீர.) சர்வ ஆச்சரிய மனோரமமாய பாதாளகுகையின் கண்ணே மாணிக்கவடிவ மணிகளுக்கு இடமாய மகார்ணவம் போலும் சம்பராசுரனென்னப் பெயரிய ஒருதைத்தியேந்திரன் சர்வ ஐசுவர்ய சம்பிந்நனாகி வாழ்ந்துகொண்டிருந்தனன். தேவதைகளை யெல்லாம் அடித்தோட்டிய சகிக்கமுடியாத அதிபயங்கர ஆகாயத்திற் சரிக்கும் ஆகிருதியையுடைய அச்சம்பராசுரனுக்கு, சுரர்களையெல்லாம் நாசஞ்செய்யும்படியான அசுரர்தஞ் சைனியம் அதிவிஸ்தாரமா யிருந்தது. அம்மாயாபலத்தை யுடையவன் நித்திரையி லிருக்கும்போதும், தேசாந்தரங்களிற் சென்றிருக்கும் போதும் அம்மாயாமய னில்லாதசமயம் பார்த்து இடையிற்புகுந்து தேவர்கள் வெகுவிரைவாக அவனது சேனைகளைக் கொன்று வென்றார்கள். பின்னர்ச் சம்பர தைத்தியனால் தன் சேனையைக் காக்கும்பொருட்டுச் சேனாதிபதிகளாய் முண்டி குரோதன் துருமன் முதலாயினர் தன் சேனையினில் நியமிக்கப் பெற்றார்கள். விண்ணிடைச்செல்லும் சேனங்கள் ஆகுலமிகுத்திருக்கும் சிறிய பறவைகளை யடித்தெறிவதே போல அத் தானைநாயகரையும் இடைப்படுத்திப் பயாநகராய் அமரர் கொன்று சென்றனர். அசுரர்களுக்குள் மேன்மை வாய்ந்திருந்த அச்சம்பிரன் மீளவும் சமுத்திரம் பேரலைகளை யுண்டாக்குவதேபோலப் போரிற் சபலமுடையவரும் உற்சாகரும் மகாவீரரும் மகாட்டகாசம் செய்பவரும் ஆகிய வேறுசேனாபதிகளை யுண்டாக்கிவைத்தனன், தேவர்கள் அவனது அத்தானை நாதரையும் சீக்கிரமாகவே சிதைத்துச் சென்றனர், அதனால் அவன் அதிகமான கோபத்தையடைந்து அமரர்களை யெல்லாம் அழிப்பான் தேவர்களாற் பரிபூர்ணமான திரிவிஷ்டபத்தை யடைந்தனன். அடையவே அவனது மாயையினாலே அவனிடத்தினின்றும் அச்சத்தை யடைந்தவர்களாய தேவர்கள், ஸ்ரீ கௌரியம்மையின் வாகனமாகிய சிங்கத்தைக்கண்டு பயந்து மறையும் மானினங்கள்போல மேருகானனகுஞ்சங்களில் மறைந்திருந்து கொண்டார்கள். அடிபட்டுப் புலம்பிக்கொண் டிருக்கும் அற்ப அமரகணத்தையும், அழுதுகொண்டு கண்ணீர் நிறைந்த வதனங்களையுடைய அமரமங்கையர்களையு முடைய சுவர்க்கத்தை அச்சம்பரன் கற்பக்ஷீண சகத்துக்குச் சமமாய்ச் சூனியமாயிருப்பதைப் பார்த்தான். அவ்விடத்

தில் அதிகோபத்தோடு திரிந்துகொண்டே யிருந்து, அச்சொர்க்கத்தைக் கொள்ளையிட்டுக் கிடைத்த சுந்தரமான ரத்னாதிகளை யபகரித்துக்கொண்டு லோகபாலபுரியைத் தகித்துத்தனது ஆலயத்தை நோக்கிச்சென்றனன். இவ்வகையாகத் தேவர்கட்கும் தானவர்கட்கும் துவேடம் அதிதிடதரமாக மூளவே, தேவர்கள் சுவர்க்கத்தை விடுத்துத் திசைகளில் அந்தர்த் தானத்தை யடைந்திருந்தார்கள். பின்னர்ச் சம்பரதைத்தியனால் எவ்வெச் சேனாதிநாயகர் முயல்வுடன் சிருஷ்டித்து அனுப்பப்படுவாரோ அவரையெல்லாம், சுரர்கள் அதிகமான வேறுமுயற்சி யுடனிருந்து கொன்றார்கள். ஈசன் வென்ற புரங்கள் எனக் கவிநாயகர் காட்டியதற் குதாகரணம்:—சிவமகிமை பூமிசயந்தன நான்முகனுந்தவன் பூதரவிந்திரன் வேணுமா, னேமியதிந்தொடு மாயிரமஞ்சுடர் நேமியுறுங் கரனோர் கோலாம், பாமரரின் புரமோர் திரணந்தகிபாலக சம்ப்ரமமீதேனோ, சாமிதொழும்பரொடாடிடு புந்தியுஞ்சார் பரதந்திரமாகாதே. இரட்டையர்: — நாவொன்றனைச் சிருக்கு நற்சாபங்கற்சாபம், பாணந்தான் மண்டின்றபாணமே, தாணுவே, சீராரூர்மேவுஞ் சிவனேநீ யெப்படியோ, நேரார் புரமெரித்தநேர்.

(ச.) உயர்பாதலம் = ஆச்சரிய மனோகரமான பாதாளகுகரத்தில், ஒருதானவன் = தைத்தியேந்திரன், உண்டிந்த, வன்படைக் கடலா லமரேசனை = சுரநாசஞ்செய்யும் ஆசுரசைந்நிய மகார்ணவத்தானிறைந்த பயங்கரமான ஆகிருதியுள்ளதைத்திய இராஜனை எஞ்சலித்திட = குறைக்க, வானவர் = அமரர், தான் அசைகிலே, மிகுவன் = மாயா வலியுடைய விவன், பாடபேதம், அம்பரமேகிய போதினும் = தேசாந்தரத்திற் சென்ற காலத்தும், விஞ்சி வெம்பி = மிகுந்தவராய்ப் பெருங்கோபங் கொண்டு, இடையிற் சென்று, தானவர் = அத்தைத்திய சைன்னியம், மாளவே எற்றினர் = கொன்றார்.

சம்பரனுகுவன் = சம்பராசுரன், துருமன்றிறன் முண்டிகனேய விவர் = ஹிருத்துருமன், இருத்துருமன் முண்டிகன் முதலான விவரை, முண்டிகாங்கத் துருமாதியரென்பது மூலபாடம். இங்கு = இந்தயுதத்தத்தில், தம்படைமூன் = தனது சேனைகளிடத்து, இரக்ஷைக்குச் சாமந்தராக, செலவேவினன், அடர்ந்தனர் என்றலும், இடையிற்சென்று பொருதாரென் றறிந்தபின்பு, சம்பரன், சுரபட்டணத்தைக்குறித்து தானே, வந்திட, அவனை மாகர் = சுரர், மாயைவிஞ்சை நிறைந்தவனென்று, அறிந்தவனது, எதிர் நின்றிடவஞ்சி, ஒதுங்கினர் = மறைந்தார்.

மேருகந்தர மும்பர் அடைந்தனர் = மேருகுகை வனங்களில் உம்பர் மிகுந்த பயத்தால் அடைந்தனர், யாருமின்றிய விந்திரன்றன்பதி, சூனியமான சுவர்க்கத்தை, ஈசன் வென்ற புரங்களெனும்படி = கற்பாந்தஜகத்துக் கொப்பாகக் கோபித்து, அங்கிசொரிந்து= எரித்துத் தனதாலயத்தை நோக்கித்திரும்பினன், வந்தனரென் றறிந்து பெரும்படை = சேனாதிநாயகரை, பெரிது உந்தினன் = மாறிமாறிச் சிருட்டித் தனுப்பினான்.

(ஸ்ரீ-வீர - அ - கை.) சிருஷ்டித்த வீரரையெல்லாம் தேவர்கள் மோதிக்காதச் சம்பராசுரன் மிக வெகுண்டு அமரர் அழிக்கமுடியாத ஆற்றல் வாய்ந்த வீரரைச் சிருஷ்டித்தலையும் அவர்தம் பெருமையையுங் கூறல்:—ஆவ—சாதல் என்பன.

ஆவதாகிய தானவர்பற்றற வாதிதேவர்கண் மோதினர்மற்றது
தாபமாயசுரேசன் விதித்துள தாமஞேடுவியாசை கடப்பெயர்
மூவர்மாயையி னல்வாலுற்றவர் மூரிமேருவு லாவுவதொப்பவர்
பாவனவச வாதனையற்றவர் பாசமாமபிமான நினைப்பிலர்.

சாதல்வாழ்தல் களிப்புறல் சோர்வுறுமவாகை கொள்வெற்றிகடோல்விகள்
போதன்மீடலனைத்தையு நாடலர்போர்செய் வோரை முருக்குவர்கேவல
மாதலாலிவர் பற்றலர்சேனையை யாசுகங்கொ டழிப்பாழிப்புறார்
பாதலாசுரன் வெற்பினர்வேலையர் பாருளாரிவர் பிற்செலவேவினன்.

(ப - ரை.) ஆவதாகிய தானவர்பற்றற = சம்பராசுரன் சிருஷ்டித்துச் சிருஷ்டித் தனுப்பிய அசுரவீரரெல்லாம் அடியோடு மாயும்படியாக, ஆதிதேவர்கண் மோதினர் = இந்திராதிதேவர்கள் அடித்தனர், மற்றது தாபமாய் = அதனைக் கேட்டதனாற் பெருங் கோபத்தையடைந்த, அசுரேசன் = தைத்தியேந்திரனால், விதித்துள = தேவரைக்கோற நியமிக்கப்பெற, தாமனோடு வியாளகடப்பெயர் = தாமன் வியாளன் கடன் என்னும் நாமம் வாய்ந்தவராய், மூவர் = மூன்றுபெயர், மாயையினால் வரலுற்றவர் = மாயைவித் தையினாலே வெளிவந்தனர், மூரிமேருவுலாவுவது ஒப்பவர் = பெரிது வலுமைவாய்ந்த சுமேருகிரி சஞ்சரிப்பதற்குச் சமானமானவர், பாவனாவச வாதனையற்றவர் = பாவிக்கப் பாவிக்கவளர்ந்துவரும் வாசனையேயில்லாதவர், பாசமாமபிமான நினைப்பிலர் = தேகாதிய வஸ்துக்களில் யான் எனதென்னும் அபிமான எண்ணமே யில்லாதவர். சாதல்வாழ்தல் களிப்புறல் சோர்வுறல் = மரித்தல் ஜீவித்தல் மகிழுதல் வாடுதல், தாமவாகைகொள் வெற்றிகள் தோல்விகள் = தாமவாகைகொள் = வெற்றிமாலையைத் தரித்து விளையா டும், வெற்றிகள் = ஜயங்கள், தோல்விகள் = அபஜயங்கள், போதல் மீடல் = முன் போதல் பின்போதல், அனைத்தையும் நாடலர் = என்பனயாவற்றையுமே நினையாதவர், போர்செய்வோரை = யுத்தம் இயற்றுவோரை, கேவலம் முருக்குவர் = மாத்திரம் தாக்கி யடிப்பவர், ஆதலால் இவர்பற்றலர் சேனையை ஆசுகங்கொடு = ஆகையினால் இம்மூவ ரும் சத்துருக்கள் சைன்னியத்தை யநேகவகைப் பாணங்கள்கொண்டு, அழிப்பர் = நாசஞ்செய்வர், அழிப்புறார் = அவர்களால் இவர் அழிவுபடுத்தப்பெறார், என்று சிந்தித்த, பாதல அசுரன் = பாதாளநாயகனாகிய தைத்தியேந்திரன், வெற்பினர் வேலையர் பாரு ளார் = மலையிடவாசிகள் அலைகடல் வாசிகள் பலவிடவாசிகள் ஆகிய அசுரர்களை ஆயுத பாணிகளாக, இவர்பிற்செல ஏவினன் = இவர்க்குச் சகாயமாகப் பின்பு தொடர்ந்து நடந்திடப் பிரேரணை செய்தான்.

(ஸ்ரீ - வீர.) அசுரேந்திரன், அனுப்பிய அனுப்பிய சேனைகளை யழித்துவிட்டதைக் கேட்டதும், மிகுந்த உத்வேகத்தை யடைந்து, அத்தியந்த கோபவானாய்த் திருணக் கூட்டத்திற் பற்றிவளர்ந்து சொலிக்கும் அநலச் சுவாலைபோலப் பெருமூச்சுடன் மிகக் கனன்று துடித்தனன். தீயவினை மேயவன் பெரும்பெரும் முயல்வினாலும் ஞானத்தை யடைய முடியாததேபோலச் சம்பராசுரன் மூன்றுலோகத்திற் றேடிப்பார்த்தும் தேவர் களை யடையவேயில்லை. பின்னர் மாயையினாலே அதிகோரர்களாயும், மகாபலவான்க ளாயும், சேனைகளின் இரக்ஷையின் பொருட்டுப் பெரும்பாடு படுபவர்களாயும், பூதபவிஷ் யத் வர்த்தமான காலங்கள் மூன்றும் மூர்த்திமான்களாய் வந்துற்றன போன்றவர்களா யும், உள்ளமூன்று அசுரவீரர்களைச் சிருட்டித்தான். மாயையினாலே ஆக்கப்பட்ட அவர் கள் அச்சத்தை விளைப்பவர்களாயும், பலபாதப வாசிகளாயும், மகாமாயை யுடையவர்க ளாயும் பக்ஷத்தோடுகூடி யசையும் பர்வதங்கள் போன்றவர்களாயும் மேற்கிளம்பிவந்தார் கள். தாமன் வியாலன் கடன் என்னும் பெயர்களால் நன்குகுறிப்பிடப் பெற்றார்கள், பகைவரைத் தமனஞ் செய்யவனாதலினாலே தாமன், வியாலன் = பெரும்பாம்புபோலும் புரரைச்சுற்றிக் கட்டலினாலே வியாலன், பகைவரது பாணங்களினின்றும் தம்மவரைப்

தில் அதிகோபத்தோடு திரிந்துகொண்டே யிருந்து, அச்சொர்க்கத்தைக் கொள்ளையிட்டுக் கிடைத்த சுந்தரமான ரத்நாதிகளை யபகரித்துக்கொண்டு லோகபாலபுரியைத் தகித்துத்தனது ஆலயத்தை நோக்கிச்சென்றனன். இவ்வகையாகத் தேவர்கட்கும் தானவர்கட்கும் துவேஷம் அதிதிடதரமாக மூளவே, தேவர்கள் சுவர்க்கத்தை விடுத்துத் திசைகளில் அந்தர்த் தானத்தை யடைந்திருந்தார்கள். பின்னர்ச் சம்பரதைத்தியனால் எவ்வெச் சேனாதிநாயகர் முயல்வுடன் சிருஷ்டித்து அனுப்பப்படுவாரோ அவரையெல்லாம், சுரர்கள் அதிகமான வேறுமுயற்சி யுடனிருந்து கொன்றார்கள். ஈசன் வென்ற புரங்கள் எனக் கவிநாயகர் காட்டியதற் குதாகரணம்:—சிவமகிமை பூமிசயந்தன நான்முகனுந்தவன் பூதரவிந்திரன் வேணுமா, னேமியதிந்தொடு மாயிரமஞ்சுடர் நேமியுறுங் கரனோர் கோலாம், பாமரரின் புரமோர் திரணந்தகிபாலக சம்ப்ரமமீதேனோ, சாமிதொழும்பரோடாடிடு புந்தியுஞ்சார் பரதந்திரமாகாதே. இரட்டையர்: — நாவொன்றானச் சிருக்கு நற்சாபங்கற்சாபம், பாணந்தான் மண்டின்றபாணமே, தாணுவே, சீராரூர்மேவுஞ் சிவனேநீ யெப்படியோ, நேரார் புரமெரித்தநேர்.

(ச.) உயர்பாதலம் = ஆச்சரிய மநோகரமான பாதாளகுகரத்தில், ஒருதானவன் = தைத்தியேந்திரன், உண்டிந்த, வன்படைக் கடலா லமரேசனை = சுரநாசஞ்செய்யும் ஆசுரசைந்நிய மகார்ணவத்தானிறைந்த பயங்கரமான ஆகிருதியுள்ளதைத்திய இராஜனை எஞ்சலித்திட = குறைக்க, வானவர் = அமரர், தான் அசைநிலை, மிகுவன் = மாயா வலியுடைய வீவன், பாடபேதம், அம்பரமேகிய போதினும் = தேசாந்தரத்திற் சென்ற காலத்தும், விஞ்சி வெம்பி = மிகுந்தவராய்ப் பெருங்கோபங் கொண்டு, இடையிற் சென்று, தானவர் = அத்தைத்திய சைன்னியம், மாளவே எற்றினர் = கொன்றார்.

சம்பரனுகுவன் = சம்பராசுரன், துருமன்றிறன் முண்டிகனேய விவர் = ஹிருத்துருமன், கிருத்துருமன் முண்டிகன் முதலான விவரை, முண்டிகாங்கத் துருமாதியரென்பது மூலபாடம். இங்கு = இந்தயுதத்தத்தில், தம்படைமுன் = தனது சேனைகளிடத்து, இரக்ஷைக்குச் சாமந்தராக, செலவேவினன், அடர்ந்தனர் என்றலும், இடையிற்சென்று பொருதாரென் றறிந்தபின்பு, சம்பரன், சுரபட்டணத்தைக்குறித்து தானே, வந்திட, அவனை மாகர் = சுரர், மாயைவிஞ்சை நிறைந்தவனென்று, அறிந்தவனது, எதிர் நின்றிடவஞ்சி, ஒதுங்கினர் = மறைந்தார்.

மேருகந்தர மும்பர் அடைந்தனர் = மேருகுகை வனங்களில் உம்பர் மிகுந்த பயத்தால் அடைந்தனர், யாருமின்றிய விந்திரன்றன்பதி, சூனியமான சுவர்க்கத்தை, ஈசன் வென்றபுரங்களெனும்படி = சுற்பாந்தஜகத்துக் கொப்பாகக் கோபித்து, அங்கிசொரிந்து= எரித்துத் தனதாலயத்தை நோக்கித்திரும்பினன், வந்தனரென்றறிந்து பெரும்படை = சேனாதிநாயகரை, பெரிது உந்தினன் = மாறிமாறிச் சிருட்டித் தனுப்பினான்.

(ஸ்ரீ-வீர - அ - கை.) சிருஷ்டித்த வீரரையெல்லாம் தேவர்கள் மோதிக்காதச் சம்பராசுரன் மிக வெகுண்டு அமரர் அழிக்கமுடியாத ஆற்றல் வாய்ந்த வீரரைச் சிருஷ்டித்தலும் அவர்தம் பெருமையையுங் கூறல்:—ஆவ—சாதல் என்பன.

ஆவதாகிய தானவர்பற்றற வாதிதேவர்கண் மோதினர்மற்றது
தாபமாயசுரேசன் விதித்துள தாமஷேடுவியாளகடப்பெயர்
மூவர்மாயையி னல்வரனுற்றவர் மூரிமேருவு லாவுவெதொப்பவர்
பாவனாவச வாதனையற்றவர் பாசமாமபிமான நினைப்பிலர்.

சாதல்வாழ்தல் களிப்புறல் சோர்வுறாமவாகை கொள்வெற்றிகடோல்விகள்
போதன்மீடலனைத்தையு நாடலர்போர்செய் வோரை முருக்குவர்கேவல
மாதலாலிவர் பற்றலர்சேனையை யாசுகங்கொ டழிப்பாழிப்புறார்
பாதலாசுரன் வெற்பினர்வேலையர் பாருளாரிவர் பிற்செலவேவினன்.

(ப - ரை.) ஆவதாகிய தானவர்பற்றற = சம்பராசுரன் சிருஷ்டித்துச் சிருஷ்டித் தனுப்பிய அசுரவீரரெல்லாம் அடியோடு மாயும்படியாக, ஆதிதேவர்கண் மோதினர் = இந்திராதிதேவர்கள் அடித்தனர், மற்றது தாபமாய் = அதனைக் கேட்டதனாற் பெருங் கோபத்தையடைந்த, அசுரேசன் = தைத்தியேந்திரனால், விதித்துள = தேவரைக்கோற நியமிக்கப்பெற, தாமனோடு வியாளகடப்பெயர் = தாமன் வியாளன் கடன் என்னும் நாமம் வாய்ந்தவராய், மூவர் = மூன்றுபெயர், மாயையினால் வரலுற்றவர் = மாயைவித்தையினாலே வெளிவந்தனர், மூரிமேருவுலாவுவது ஒப்பவர் = பெரிது வலுமைவாய்ந்த சுமேருகிரி சஞ்சரிப்பதற்குச் சமானமானவர், பாவனுவச வாதனையற்றவர் = பாவிக்கப் பாவிக்கவளர்ந்துவரும் வாசனையேயில்லாதவர், பாசமாமபிமான நினைப்பிலர் = தேகாதிய வஸ்துக்களில் யான் எனதென்னும் அபிமான எண்ணமே யில்லாதவர். சாதல்வாழ்தல் களிப்புறல் சோர்வுறல் = மரித்தல் ஜீவித்தல் மகிழுதல் வாடுதல், தாமவாகைகொள் வெற்றிகள் தோல்விகள் = தாமவாகைகொள் = வெற்றிமாலையைத் தரித்து விளையாடும், வெற்றிகள் = ஜயங்கள், தோல்விகள் = அபஜயங்கள், போதல் மீடல் = முன் போதல் பின்போதல், அனைத்தையும் நாடலர் = என்பனயாவற்றையுமே நினையாதவர், போர்செய்வோரை = யுத்தம் இயற்றுவோரை, கேவலம் முருக்குவர் = மாத்திரம் தூரத்தி யடிப்பவர், ஆதலால் இவர்பற்றலர் சேனையை ஆசுகங்கொடு = ஆசுகையினால் இம்மூவரும் சத்துருக்கள் சைன்னியத்தை யநேகவகைப் பாணங்கள்கொண்டு, அழிப்பர் = நாசஞ்செய்வர், அழிப்புறார் = அவர்களால் இவர் அழிவுபடுத்தப்பெறார், என்று சிந்தித்த, பாதல அசுரன் = பாதாளநாயகனாகிய தைத்தியேந்திரன், வெற்பினர் வேலையர் பாருளார் = மலையிடவாசிகள் அலைகடல் வாசிகள் பலவிடவாசிகள் ஆகிய அசுரர்களை ஆயுதபாணிகளாக, இவர்பிற்செல ஏவினன் = இவர்க்குச் சகாயமாகப் பின்பு தொடர்ந்து நடந்திடப் பிரேரணை செய்தான்.

(ஸ்ரீ - வீர.) அசுரேந்திரன், அனுப்பிய அனுப்பிய சேனைகளை யழித்துவிட்டதைக் கேட்டதும், மிகுந்த உத்வேகத்தை யடைந்து, அத்தியந்தங் கோபவானாய்த் திருணக் கூட்டத்திற் பற்றிவளர்ந்து சொலிக்கும் அநலச் சுவாலைபோலப் பெருமூச்சுடன் மிகக் கனன்று துடித்தனன். தீயவினை மேயவன் பெரும்பெரும் முயல்வினாலும் நிதானத்தை யடைய முடியாததேபோலச் சம்பராசுரன் மூன்றுலோகத்திற் றேடிப்பார்த்தும் தேவர்களை யடையவேயில்லை. பின்னர் மாயையினாலே அதிகோரர்களாயும், மகாபலவான்களாயும், சேனைகளின் இரக்ஷையின் பொருட்டுப் பெரும்பாடு படுபவர்களாயும், பூதபவிஷ்யத் வர்த்தமான காலங்கள் மூன்றும் மூர்த்திமான்களாய் வந்துற்றன போன்றவர்களாயும், உள்ளமூன்று அசுரவீரர்களைச் சிருட்டித்தான். மாயையினாலே ஆக்கப்பட்ட அவர்கள் அச்சத்தை விளைப்பவர்களாயும், பலபாதப வாசிகளாயும், மகாமாயை யுடையவர்களாயும் பக்ஷத்தோடுகூடி யசையும் பர்வதங்கள் போன்றவர்களாயும் மேற்கிளம்பிவந்தார்கள். தாமன் வியாலன் கடன் என்னும் பெயர்களால் நன்குகுறிப்பிடப் பெற்றார்கள், பகைவரைத் தமனஞ் செய்பவனாதலினாலேதாமன், வியாலன் = பெரும்பாம்புபோலும் புரரைச்சுற்றிக் கட்டலினாலே வியாலன், பகைவராது பாணங்களினின்றும் தம்மவரைப்

பாய்போன் முடிக்காத்தலினுனே கடன், என்பதான வியுற்பத்திப்படியே அருத்தங்களோடு கூடிய நாமங்களினுலே யலங்கரிக்கப் பெற்றிருந்தார்கள். எஃதலைவுற்றதோ அதைமாத்திரம் செய்பவர்களாயும், அறிவுமாத்திரம் உடையவர்களாயும் இருந்தார்கள். முன்னிருந்தவரினும் அவர்களிடத்தில் என்னே அதிசயகாரண மெனின் ? அத்தாமாதிகள் பூர்வசித்த சீவர்கள் அல்லர்கள், அவர்கட்கு வாசனையிலதாம், என்னை, கருமங்களாலுளவாய தருமங்கண் முதலியவை யிலவாகலின்; மற்றே, பயசங்கை பலாயனுதிவிகற்ப சூனியமான எச்சின்மாத்திர சந்நிதான நிமித்தமேதகவேக வசைவுளதோ, அவ்வொரே தருமமுடையவர்கள். அற்றேல் அவர்கட்குக் கருமகாம வாசனைகள் இலவாயின் ஜன்ம பீஜமின்மையின் ஜன்மமே யுண்டாகாதாம், பீஜமிலதாயும் ஜன்மம் உளதாயின், முக்தர்கட்கும் புநர்ஜன்மமாம்; அவ்வாறே மேலும் " யாண்டு வாசனையாப் புற்றுளதாம், ஆண்டது பருமையை யடையாநிற்கும் " அறையப்பெறும், ஆகலின், கருமாதிய பாவவசநம் அசங்கதம் என ஆசங்கிப்பின் விடைவருமாறு:—இவர்கள் சுதந்திரஜீவர்கள் அல்லர்கள் மற்றே, உள்ளே பிரேரிக்கும்படியான அந்தரியாமி சித்தின் நிமித்தபூதத்தினுனே, கருமஜீவசம்பிரனது, அற்பபரிமாணமுற்றதும், கருமவாசனுதிவளர்ச்சியையுற்றுப்புஷ்டியடையாததும், மாயாகற்பனை வடிவதும், அதனுனே போகசார சூனியமும், சர்க்க சங்கற்ப விருத்தியதும், ஆகிய கௌசலரூபகலையைக்கொண்டு ஆவிர்ப்பாவத்தை யடைந்தார்கள். அங்ஙனமாகவே ஐந்திரஜாலிக சிருஷ்ட புருஷாந்தரர்கட்கே போலும், சுதந்திர கருமமிலதேனும் ஆவிர்ப்பாவ லக்ஷணஜன்மம் பொருந்துறும் என்பது கருத்தாம். அல்லது விளம்பப்பெறும் விபச்சித்து பாக்கியான நியாயத்தானே சம்பரஜீவன்றனே அக்கினிப் பொறிகள்போலும், உள்ளிலும் வெளியிலும் பிரிந்திருத்தலின், கருமவாசனையாதிகளின் மிகவற்பத்தன்மையானே புஷ்டியுறாததும், மனப்பிராயமும், கிருத்திரமும், ஆகிய கருமஜீவனுடைய கலையென்னும் அங்கிசரூபம் வேற்றுமையை யுற்றுத்தேகாதி யுபாதியுதயத்தானே யுதயம் என்னும் ஜன்மத்தை யடைந்தவர்கள் ஆனுர்கள். ஆகவே யோகிதேகபேதம்போலும் சம்பரகாம கருமவாசனுபீஜ வயத்தானே இவர்கட்குச் சன்மம் சித்தித்தலின், தனித்து அதனபேக்ஷை யிலதாம். ஆயினும் இத்துணைச் சிறப்புளதாம்:—யோகிகளின் தேகபேதத்தில் தத்துவஞானத்தினுலே பாதிதத்தன்மை யுண்மையின் சரீரந்தோறும் காமாதிஜன்ம பீஜவிருத்தியிலதாம், தாமவியால கடாதிதேகத்திலோ அஞ்ஞத்தன்மை யிருத்தலினுலே அதுவளர்வுற ஜன்மபரம்பரைப் பிராப்தியாமென யாதொன்றும் பொருந்தாமை யின்றாமென்றுணர்க, இதனுனே போகிபோலுமே அவர்கட்கு வாசனைவளரும் வரைவிவகாரமாம், ஆகவே அந்தவீரர்களாய தாமாதிகள் வாதனை வயப்படாதவர்களாய், அர்த்தபாரம் புரியத்தானே காகதாலிய நியாயமென்ன நேர்ந்தநேர்ந்த காரியத்தைச் செய்து வருபவர்களாயினுர்கள். வெளிப்படாத வாசனை யுடையவர்களின் விவகாரம் கண்டது யாண்டுகொலோ வெனக் கடாவின் ? விடைதருதும், பாதிதுயிலுற்ற பாலர்கள் கேவலம் தங்கள் அங்கங்களாற்சேட்டை செய்வதுபோலவே வாசனுத்மாபிமானங்கள் அற்றவர்களாய் அவர்கள் விவகரித்தனர்கள். சமாசமயத்தில் எதிர்முகமாகச் சத்துருக்களின் வீழ்ச்சியு முணரார்கள். இளைப்பாறு நம்பிக்கை யியைந்தவர்மேல் அகஸ்மாத்தாகச் சத்துருக்களின் வீழ்ச்சியு முணரார்கள். அவர்கள் ஓடுவதையும் அறியார்கள், வாழ்வது முணரார்கள், மாள்வதும் உணரார்கள், போரையு மறியார்கள் வெற்றி தோல்விகளையும் உணரார்கள். இங்ஙனம் உணரார்களாயின் தாமே யாங்ஙனம் பகைவர்களை எதிர்த்து வீழ்த்தலேல்லும் எனின் ? அடித்தற்கெடுத்த அசலங்களையுடைய அவர்கள், போரிற் கேவலம் அடித்து கொல்லமுயன்று முன்வந்ததாக எதிரேகண்டபகைவர்

சேனைகளை மோதிக் காத முன்னுறுவார்கள். வீழ்த்தடித்துச் சூழ்ந்து கோறவேண்டு மென்னும் எண்ணம் நண்ணும் சம்பராசுரனது சங்கற்ப வாசனைமாத்திர சரீரத்தன்மை யானே எதிர்முக சத்துருதரிசனத்தால் அவ்வளவு மாத்திர உற்போதத்தால் எதிர்த்துச் செல்பவர்கள் ஆயினார்கள் என்பது அபிப்பிராயம். மாயையினாலே செய்யப்பெற்ற அசுரர்களானே நன்றாக்க் காப்பாற்றப்பெற்ற எனது பெருஞ்சேனையானது பகைவரை வென்றுவிடும் என்பதாக, அத்தியந்தம் சந்தோஷமடைந்த மனத்தினனாகிய சம்பராசுரன் சிந்திப்பானாயினன். வென்றுவிடும் என்பதாதியாய் முன்மொழிந்தவகையே தைத்தியேந்திரன் நிர்ணயித்து, தேவநாச கரியாகிய தாமவியால கடர்களோடு கூடிய சேனையைப் பூதலத்தை நோக்கி யேவினன், தைத்தியர் ஆயுதங்களோடு கூடியவராகிச் சாகரங்களினின்றும், வேலைவனக்குஞ் சங்களினின்றும், கிரிகந்தரங்களினின்றும் மார்க்கங் கிடைத்தபடி மேலேகிளம்பலுற்றனர்.

(ச.) ஆவதாகிய வாதிதேவர்கண் = பூர்வ தேவர்களென்னும், தானவர் = தைத்தியரை, பற்றற = சேடமற, மற்றவர் = சுரர்கள், மோதினர் = அடித்தார், அசுரேசன் என்னுஞ் சம்பாசுரன், தாபமாய் = மிகவும் வெப்பமுற்றவனாய், மாயையினால், விதித்தன = நியமிக்கப்பட்ட, மூரிமேரு = இறகின்றிய வலிய பருப்பதக்கள், பாவனாவசவாதனை = லோகவாசனை, பாசமாம்பிமானம் = தேகாபிமானம், நினைப்பிலர் = இல்லாதவர், (24)

ஆதலால், மனோவசமாகிய மாயாவசத்தால் எதுவின்றிப் பரமான்மாவினின்றும் பிரதம முதித்தவராதலாலே, அழிப்புறுர் என்று பாதலாசுரன்=தைத்தியேந்திரனென்னுஞ் சம்பராசுரன், சிந்தித்து வெற்பினர் வேலையர் பாருளார் = மலைகடல் பூமிகளிலுள்ள வசுரரை, வரவழைத்து. ஆதலாலே பகைவரை நோக்கிச் செல்லுதலேனும், பகைவர்களின் வருகையேனும் அறியாதவர்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மூவர்சேனையும் தேவர்சேனையும் கலந்து, மலைந்து கடும் போர் புரிதல்:—தான—ஆயுத வென்பன.

தானவாதிபன் விட்டநெடும்படை தாள்களோடு கிரித்திரள்வந்தென
மீனவேலைபரப்பில் விரிந்தென மேவினார்கள் சிருட்டி முடிந்தென
வானநாடருமப்படி வந்தனர்வாயு வோடுநெருப்பு மலைந்தென
வானசேனைகண் முட்டியுடன் றனவாதலான் மறுகற்பம் விளைந்ததே. (25)

ஆயுதங்களெரிந்து நெருங்கிடவாக மெங்கும்விழுந்தன வெற்பென
மாயுமங்கமுமிழ் குருதிக்கடன் மாதிரங்கட தும்பியலைந்தன
காயும்வஞ்சரடர்ந்து முடுக்கினர் காதுமும்பர் தளர்ந்தோடவுற்றனர்
சாயுமண்டர்கள் பின்தொடர்வுற்றனர் தாமனும்பிறருந் திசைமுற்றுமே. ()

(ப - ரை.) தானவாதிபன் = அசுரநாயகன், விட்ட நெடும்படை = ஏவியபெரிய சேனைகள், தாள்களோடு கிரித்திரள் வந்தென = பாதங்களோடு பர்வதக் கூட்டங்கள் கூடிவந்தன போன்றும், மீனவேலைப ரப்பில்விரிந்தென = மகரங்கணிறைந்த கடல் விஸ்தரித்து விரிந்து வந்ததுபோன்றும், மேவினார்கள் = கூடிக்குழுமினார்கள், சிருட்டி முடிந்தென = பிரளயம் வந்துவிட்டதெனும்படி வானநாடரும் = அமரநாட்டோரும், அப்படி வந்தனர் = அசுரர்களைப் போலவே வந்துசேர்ந்தனர், வாயுவோடு நெருப்பு

மலைந்தென = காற்றினோடு அக்கினி எதிர்த்ததுபோல, ஆனசேனைகள் = இங்ஙனம் ஒன்றான சைனியங்கள், முட்டியுடன்றன வாதலால் = எதிர்த்துப் போர்செய்தன வாதலின், மறுகற்பம் விளைந்ததே = வேறுகற்பம் உண்டாயது.

ஆயுதங்கள் எரிந்து நெருங்கிட = அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்தபோது அவையக்கினிகான்று அடர்ந்திட, ஆகமெங்கும் விழுந்தன வெற்பென = சரீரங்கள் எவ்விடத்திலும் மலைகள்போல் வீழ்ந்தன, மாயுமங்கம் உமிழ்குருதிக்கடல் = கழியும் காயங்கள் பொழியும் இரக்த சமுத்திரத்தில், மாதிரங்கள் ததும்பியலைந்தன = மலைகள் தத்தளித்துச் சலித்தன, காயும்வஞ்ச ரடர்ந்து முடுக்கினர் = கோபதாபமுற்ற அசுரர் நெருங்கித் துரத்தினர், காதுமும்பர் தளர்ந்து = எதிர்த்தடித் தடிபட்ட தேவதைகள் மெலிதலுற்று, ஓடவுற்றனர் = பலாயனஞ் செய்தனர், சாயுமண்டர்கள் பின் = அங்ஙனமோடுந் தேவதைகளின் பின்னர், தாமனும் பிறரும் திசைமுற்றும் தொடர்வுற்றனர் = தாமவியால கடரும் மற்றசேனா நாயகரும் எல்லாத் திக்குகளிலும் தொடர்ந்தே யோட்டினர்.

(ஸ்ரீ - வீர.) பக்ஷத்தோடுகூடிய பர்வதலீலையால் அச்சத்தைத்தரத்தக்க அதிகோர சப்தங்களுடன் அசுரக்கூட்டங்கள் மேற்கிளம்பின; தாம வியால கடர்களாலே காக்கப் பெற்றுப் பெருத்து வளர்ந்த அத்தானவர் தங்கரப் பிரகாரங்களினாலே இரவியொளி நொறுங்குமாறு மண்விண் மத்தியில் நிறைந்திருந்தனர். பின்னர்த் துறக்கவாசிகளாகிய தேவகணங்கள், மிகப் பயங்கரர்களாய்க் கலக்கமற்ற தீரர்களாய், மேருகிரிமுதலியவற்றினின்றும் கந்தரங்களி னின்றும் நிகுஞ்சங்களி னின்றும் பிரளயாந்தத்திற் போலப் போரின் பொருட்டுக் கிளம்பினார்கள். அகாலத்தில் சகிக்கமுடியாத பிரளயம் போலும் பயந்தரத்தக்க பெரும்போரானது புவனாந்தரத்தில் அத்தேவாசுரர் தஞ்சேனைகட் குண்டாயது. அக்கால், அங்குநிகழ்ந்த அதிகோர சமர சம்பிரமத்தில், தேவாசுர சரீரங்களில் உண்டான விரணங்களில் அப்பிர வுதரங்களிற்போல ரக்தப் பிரவாகமான துண்டாயது. வீழ்ந்த அங்கங்களின் வேதனை பொறாதனவாய், பெருகிய வுதரப்பே ருருவியினவாய், நிலைபெறாத தேவசைனியங்கள், கரைகளையுடைத்துப் புரண்டோடும் காட்டாறுகள்போலக் காணுமலோடத் தொடங்கின. தாம வியாலகடர் மூவரும் நீள்போது நெடுந்தூரம் ஒளிந்துகொண் டிருக்கும் அத்தேவசேனைகளைப் பெருங் கர்ச்சனைகளுடனே வீர மொழிகளுடனே பாவகர்கள் இந்தனங்களைப் போலப் பின்றொடர்ந்துகொண் டிருந்தார்கள்.

(ச.) வானநாடரும், வனத்திலும் குகையிலும் மலையிலும் நின்று, அப்படி வந்தனர் மறுகற்பம் = புவனாந்தரம், முடியுங்காலம். (27)

ஆகம் = சரீரங்கள், மாதிரங்கள் = திக்குகளில், உடைவுற்றனர் = சாய்ந்தார் திசைமுற்றுஞ் சாயுமண்டர்கள் பின் தாமனும் பிறருந் தொடர்வுற்றனர் என்பதந்நுவயம்.

(ஸ்ரீ-வீர - அ-கை) தேவரைக்காணுமன் மூவரும் சம்பராசுரன்பாற் சார்தலும் தேவர்களோடி ஸ்ரீ பிரஹ்மதேவரைச் சரண்புகுதலும்:—உம்பரென்பது.

உம்பரோடி மறைந்தமை கண்டிலருந்து மூவருநின்று திரும்பினர்
சம்பராசுரன் முன்புறவந்தனர் சங்கவானவ ரென்செய லென்றுகொ
டம்புயாசனன் முன்புநடந்தன ரன்பினோடு பணிந்து புகன்றனர்
வெம்புதீநிகர்சம்பரன்வஞ்சமும் வெங்கண் மூவர்துரந்து தொடர்ந்ததும்.

(ப - ரை.) உம்பரோடி மறைந்தமை கண்டிலர் = தேவர்கள் ஓடிப்போய் ஒளித்துக்கொண்டதைக் காணாதவராய், உந்துமூவரும் = பின்றொடர்ந்து சென்ற மூன்று பேரும், நின்று திரும்பினர் = முயன்று தேடிப்பார்த்து விட்டுச் சிறிது தாமதித்துத் திரும்பினர், சம்பராசுரன் முன்புறவந்தனர் = பாதாளகோசத்தில் வீற்றிருக்கும் பிரபுவினிடத்தில் வந்து சேர்ந்தனர், சங்கவானவர் = ஓடிக் கூடிய தேவர்கள், என்செயல் என்று கொடு = இனியாம் செய்யத்தக்கது யாதுகொலோ வென ஆலோசித்துக் கொண்டே, அம்புயாசனன் முன்பு நடந்தனர் = ஸ்ரீ பிரஹ்மதேவர்தஞ் சந்நிதியிற் சரணாகதியாக வடைந்தனர். அங்ஙனமடைந்தவர், அன்பினோடு பணிந்து = மிகுந்தபக்தியுடன் நமஸ்கரித்துத் தோத்தரித்து, வெம்பு தீயிகர் = சுவாலை விட்டெரியும் அக்கினியனைய, சம்பரன் = தைத்தியேந்திரன், வஞ்சமும் = வஞ்சனையையும், வெங்கண்மூவர் துரந்து தொடர்ந்ததும் = சினந்த செங்கண்கள் வாய்ந்த தாமாதிமூவர் துரத்திப் பின்றொடர்ந்து வந்ததையும், புகன்றனர் = விண்ணப்பித்தனர்.

(ஸ்ரீ - வீர.) அதிசிபிடமான லதாதி ஜாலங்கள் நிறைந்த வனத்திற் குதித்தோடியொளிந்துகொண்ட மான்களைச் சிங்கங்கள் அடையப் பெறாததேபோல, ஓடியொளிந்த தேவர்களை வெகுபிரயத்தினப்பட்டுத் தேடிப்பார்த்தும் அசுரர் அடைந்தாரில்லை. அமரக்குழுக்கள் அகப்படாதொழியவே தாமவியாலகடர் என்பவர் அக்கால் மிகச்சந்தோடமுடைய கருத்தினராய், பாதாளகோசத்தின்கண்ணிருக்கும் பிரபுவை நோக்கிச் சென்றனர். நிர்வாசனைத் தன்மையானே தானாகவே பிரமுதித ஆசயத்தன்மை ஐயலாபநிமித்தகத் தன்மையானே உபசரிக்கப்பெறும், பின்னர்ப் பகைவரானே தோற்கடிக்கப் பெற்றுப்பெரும் வியாகூலம் அடைந்திருந்தவமரர், கணமிளைப்பாறித் தெளிந்து வெற்றியுபாயத்தை வினவும்பொருட்டு அளவிறந்த தேஜஸையுடைய ஸ்ரீ பிரஹ்மதேவரை நோக்கிச் சென்றனர், மாலைக்காலத்தில் இரக்தகாந்தியினாலே சிவப்பாக்கப்பெற்ற நீர்கணிறைந்த செங்கடல் களுக்குப் பூர்ணசந்திரன் புறப்பட்டதேபோல, இரக்தத்தினாலே இரக்தானன ஸ்ரீயுடனிலங்கும் அத்தேவர்கட்கு ஸ்ரீ பிரஹ்மதேவர் பிரசன்னமானார். அந்நான்முகரை யமரர் நன்றாகவணங்கிச் சம்பரனது வாஞ்சையையும் அவன்செய்யும் அநர்த்தத்தையும், அவன் தாம வியால கடர்களைச் சிருஷ்டித்துப் போர்க்கேவியதையும் அவரியற்றிய அவலத்தையும் சவிஸ்தாரமாக வினிது விண்ணப்பித்துக் கொண்டனர்.

(ச.) மறைந்தமை = ஒளித்தமையால், திரும்பினர், பாதாளலோகத் திருக்குஞ் சம்பராசுரன், என்றுகொடு, செயோபாயநிமித்தம், அம்புயாசனன் முன்பு துரந்துதொடர்ந்ததும் = துரத்திப் பின்றொடர்ந்ததும். (28)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தேவர் குறையிறத்தலைச் செவிகொண்ட ஸ்ரீ பிரஹ்மதேவர் துயர்நீங்கு மவதியன்றந்து அதுவரைசெய்யு முபாயத்தையருளி, நிராசையின் பெருமையையும் வாசனையின் றிறமையையும் அருளல்:—கேட்ட—என்ற—நிலை, என்பன.

கேட்ட நான்முக னஞ்சலென் றிவ்வுரைகிளத்தா
னீட்டமாகிய வருடமோ ராயிர மிறந்தால்
வாட்டுசம்பரன் போரிலே யரியினான் மடிவான்
வீட்டுமவ் வளவுஞ் செயத்தக்கது விதிப்பான். (28)

என்றதாமனும் வியாளனுங் கடனுமென் பவரைச்
சென்றழைத் தமர்செய்வது திரும்புவதாகத்
தொன்று தொட்டுநீர் தொந்திக்கின் வாதனை தொடர்ந்து
நின்றகண் ணடிநிலமென மனத்திலே நிற்கும். (29)

நிலைபெறும்படி நானெனும் வாதனைநின்றால்
வலைபுகுந்த புள்ளாமென மூவருமடிவர்
கொலைசெயற் கெளிதாசையே யுயிர்க்கெலாங் கூற்றாய்த்
தொலைவிறுன்ப மாநிராசையே துன்பமிலின்பம். (30)

(ப - ரை.) கேட்ட நான்முகன் = தேவர்தங் குறைதனைத் திருச்செவிகொண்ட ஸ்ரீ பிரஹ்மதேவர், அஞ்சலென்று = பயப்படாதீர்கள் என்றபயமருளி, இவ்வுரைகளைத் தான் = வருமாறாய இந்த இதவுபதேசத்தைச் செய்யத் தொடங்கினார், ஈட்டமாகிய வருடம் ஓராயிரம் இறந்தால் = திரளாகிய ஒருசகஸ்திர சம்வற்சரஞ் சென்றால், வாட்டு சம்பரன் = உங்களைக் கஷ்டப்படுத்தும் சம்பராசுரன், போரிலே = யுத்தத்தில், அரியினான் மடிவான் = ஸ்ரீ மகாவிஷ்ணுவினாலே நாசமாவான், வீட்டுமவ்வளவும் = அவ்வாறு ஸ்ரீ பகவான் அவனைக் கொல்லும் அளவும், செயத்தக்கது விதிப்பாம் = செய்ய வேண்டிய வுபாயத்தைத் தெரிவிப்பாம்.

என்ற தாமனும் வியாளனும் கடனும் என்பவரை = நீங்கள் மூவர்வந்துளார் என்றவரைவெல்லும் உபாயமோ இதுவாம் அத்தாம வியாலகடமூவரையும், சென்றழைத்து = போர்க்குச் சென்று கூப்பிட்டு, அமர்செய்வது திரும்புவது ஆக = போரைப்புரிவதும் திரும்பிப் போவதுமாக, தொன்றுதொட்டு = நெடுநாள், நீர்தொடர்ந்திக்கின் = நீவிர் தொடர்ந்து செய்யின், வாதனைதொடர்ந்து = வாசனையானது அவர்மனத்தைப் பற்றி, கண்ணடிநின்ற நிழலென = தர்ப்பணத்தின் கண்ணே பதிந்த பதிவிம்பம்போல, மனத்திலே நிற்கும் = உள்ளத்திலே இறுகும்.

நிலைபெறும்படி நான் எனும் வாதனை நின்றால் = அதிதிடமாகயான் என்னும்வாசனை பற்றிக்கொண்டால், வலைபுகுந்த புள்ளாமென = ஜாலத்தி லகப்பட்டுக் கொண்டபறவையேபோல, மூவரும் கொலைசெயற் கெளிதுமடிவர் = அம்மூவரும் அதிசுலபமாகவே வெல்லவும் பெறுவர் நாசமும் ஆவர், ஆசையே யுயிர்க்கெலாம் கூற்றாய்த் தொலைவில் துன்பமாம் = ஆஸ்தைமாத்திரமே யநந்ததுக்கங்கட்கு ஆகரமாய்ச் சீவர்கட்கெல்லாம் யமனும், நிராசையே துன்பமிலின்பம் = அநாஸ்தைமாத்திரமே சர்வசுகங்கட்கும் ஆகரமாம், துன்பமணுவுந் துன்னாதாம்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ பிரஹ்மதேவர் தேவருரைத்த சகலத்தையும் சிரவணித்து, ஆராய்ச்சியின் முதிர்ந்த அவர் நன்காராய்ந்து, தேவரீட்டத்திற்குப் பரமசுகத்தைத் தரத்தக்க இவ்வசனத்தைக் கூறத்தொடங்கினார்.

சதவருட சகத்திரவீற்றில் ஹரியின் றிருக்கரத்தால் சம்பராசுரன் மடிவன், சமரேசனது அக்காலத்தை யெதிர்பார்த்திருங்கள். இப்பொருளை யனுசரித்தே வாட்டு சம்பரன் போரிலே யரியினான் மடிவான் எனப்பாடம் திருத்தப்பெற்றது; அவ்வாறே ஸ்ரீ மகாவிஷ்ணுவின் கரத்தார்சம்பரன் பீமபாசதிட யுத்தாநந்தரம் போர்புரிந்து மரித்தல் பெரியவாசிட்டத்திற் காணப்பெறுதலின், தாமவியால கடரோபின் போர்தொடங்கி 35 வருடம் 8 மாதம் 22 நாட்களுக்குள் மகவானால் நாசமெய்தியதாகக் காணப்பெறுதலினானும் என்றுணர்க. ஹே தேவோத்தமர்களே ! இப்போது இத்தாமவியாலகடாசுரர்களைக் கொல்வதற்கோ இது உபாயமாம், மாயப்போரால் இவர்களோடு போர்செய்துகொண்டே யிருந்து திடீரென்று ஓடிப்போய் விடுங்கள். போர்ப்பயிற்சியின் வயத்தால் இவர்தம் உள்ளத்தில், தர்ப்பணங்களின் இடையிற் பிரதிபிம்பம் தோற்றுவதேபோல, அகமென்னும் ஆகாரம் வாய்ந்தபிரதம அந்தக்கரண விருத்திப் பிரதிவிம்பம் அடைவுறு

நிற்கும். இத்தாம வியால்கடர் அகம் விருத்தியினாலே முறைமேயவளர் வுற்ற வாசனையை யுடையவர்களாய், ஜாலங்களிற் சிறையுற்ற பறவைகள்போல எளிதில் வெல்லக் கொல்லப்படுவார்கள். ஆகலின் அசத்வஸ்துக்க ளிடத்தில் ஆசையைவிட்டொழிப்பதேயாவர்க்கும் நலமெனத்தெரிந்து கொள்ளுங்கள் எனல்:—ஆசையே என்பது. ஆஸ்தைமாத்திரம் அநந்தநுக்கங்கட்கு ஆகரமெனவறியின், அநாஸ்தைமாத்திரம் எங்கு மெப்போதுமே, ஆநந்தத்தின் ஆகரமெனவறியின்.

(ச.) கேட்ட நான்முகன் அஞ்சலென்று=நன்றாய் விசாரித்துத் தேவர்களைநோக்கி இவ்வுரை = இளைப்பாற்றும் இவ்வசனத்தை, அசுரரை இந்தத் தாமவியாலகட ரென்னுமசுரரை. (30)

தொன்றுதொட்டு நீர்தொந்திக்கின் = முன்போல் ஆரம்பித்து நீர் மாறிமாறித் தொடரின் = மாறிமாறி யியற்றும் யுத்தமுயற்சியினால், வாதனை =அகங்காரரூபமாகிய சமத்காரம் பிரத்யயவிசேடம் கண்ணடி நின்ற நிழலெனமனத்திலே தொடர்ந்து நிற்கும் பிரதிவிம்ப மாமென்பது அந்நுவயம்.

தொலைவிறுன்பமாம் = அநந்தநுக்கங்களுக் காலயமாம், துன்பமிலின்பம் = அபிமத (சம்மத) சுகங்களுக்காலயமாம்.

[ஸ்ரீ-வீர - அ-கை.) தேகாதி யுகம்பாவக்கிரா கிணியாகிய அந்தர் வாசனையினாலே தேகாதிநாசத்தானே ஆத்மநாச சம்பாவனையால் எவரும் தீனத்தன்மையை யடைவர், அத்தகைய வாசனையிலதே லோமசகமாயினும் மாதங்கமலைபோல மவங்காமலுறையும் எனக்காணப் பெறுதலின் வாசனையுறலாகாதெனவற்புறுத்தல்:—வாதனையென்பது.

வாதனைப் பாசத்தாலே மன்னுயிரெல்லாங் கட்டுண்
டேதமா மந்தப்பாச மிறுகுமேலிடரைச் செய்யும்
வேதனை யிலதாந்தீர நழுவுமேல் வேட்கையாலே
தீதிலோர நேகங்கற்றோர்தீர ரென்னினுங் கட்டுண்பார். (31)

(ப - ரை.) வாசனைப் பாசத்தாலே = வாசனையென்னுந் தந்துவினாலே, மன்னுயிரெல்லாங் கட்டுண்டு ஏதமாம் = உலகத்திலுள்ள பிராணிகள் யாவுமே பந்தப்பட்டுத் துன்பத்தை யடையாநிற்கும், அந்தப்பாசம் இறுகுமேல், அவ்வாதனை வளர்ந்துகொண்டேபோமேல், இடரைச்செய்யும் = அதிதுக்கத்தை யுண்டாக்கும், தீரநழுவுமேல் = அடியோடும் அது கெடுமேலாயினோ, வேதனையிலதாம் = இன்பமே யுண்டாம், தீதிலோர் அநேகங்கற்றோர் தீரர் என்னினும் = தீரராயினும் மிகமிகவும் அறிந்தவராயினும் பிரவிருத்த ரெனினும் மகான்களா யிருந்தபோதினும், வேட்கையாலே = ஆசையாலே, கட்டுண்பார் = பந்தப்படுவர்.

(ஸ்ரீ) - வீ.) வாசனைத்தந்து பத்தனாகியாவன் இவ்வுலகத்தில் விபரீதமாகவிவகரிக்கின்றனனோ அவனுக்கு அவ்வாசனை வளர்ந்துவளர்ந்து அதிதுக்கத்தின் பொருட்டேயாம், அவ்வாசனை நன்குசேதிக்கப் பெறினோசுகத்தின் பொருட்டேயாம். தீரராயினும் அதிபகுஞ்ஞராயினும், நற்குலத் துண்டானவராயினும், பெரியோராயினும், பிராணிகள் ஆசையினாலே கட்டுப்பட் டுழல்வார்கள்.

(ச.) பாசத்தாலே = தந்துவால், கட்டுண்டு = பந்தப்பட்டு, ஏதமாம் = கெடுகின்றது, தீரநழுவுமேல் = அத்தியந்தம் விலகின், வேதனையிலதாம் = சுகமாம், தீதிலர் = குற்றமற்ற சாதியர், அநேகங்கற்றோர் = மிகவுமுணர்ந்தவர், தீரர் என்னினும், வேட்

கையால், விலங்குறு சிங்கம்போற் கட்டுண்பாரென்று பிறகவியோ டந்நுவயஞ்செய்க விலங்கினுற் சிங்கங்கட்டுப் படுவதுபோல

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ பிரஹ்மதேவர் இதோபதேசஞ்செய்து சென்றபின் றேவர் சுவர்க்கஞ்சென்று போர்முயற்சி செய்தல்:—விலங்கென்பது.

விலங்குறு சிங்கம்போல வேட்கையா லுயர்ந்தோர் தாழ்வர்
கலங்கன்மி னென்றுவேதா கண்டுழிமறைந்த பின்னர்
புலன்கொள வனைத்துங்கேட்ட புங்கவர்பொன் னாட்டெய்தி
நிலங்கிழிந் தண்டம்பிற நெடியதுந்துமி யோடார்த்தார். (32)

(ப - ரை.) வேட்கையால் = ஆசையால், உயர்ந்தோர் = மகத்துக்களும், விலங்குறு சிங்கம்போல = சிருங்கலையிற் சிக்குண்ட சிங்கம்போல, தாழ்வர் = துன்புடன் மற்றுமுறுவர், கலங்கன்மின் = நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம், என்று = என இவ்வண்ணமியம்பி, வேதா = ஸ்ரீ பிரஹ்மதேவர், கண்டுழி = பார்த்துக்கொண் டிருக்கும்போதே, மறைந்தபின்னர் = திருவுருக் கரந்தபின்பு, புலன்கொள அனைத்துங் கேட்ட புங்கவர் = புந்தியிற்படும்படி யாவற்றையும் வினவியதேவர், பொன்னாட்டெய்தி = சுவர்க்கலோகஞ் சென்று, நிலங்கிழிந் தண்டம்பீற = பூப்பிளந்து அண்டம் வெடிப்ப, நெடிய=பிரளய மேககர்ஜனைக் கொப்பாம் கொடூரசப்தஞ் செய்யும், துந்துமியோடார்த்தார் = போர்ப்பறையென்னு மிரணபேரி முதலவற்றைக் கோரமாயடித்தனர்.

(ஸ்ரீ - வீர) இரும்புச் சங்கிலியினுலே யிறுகக்கட்டுண்ட சிங்கமானது அகப்பட்டஞரடைவதேபோல விழைவினுற் பிராணிவீக்குண்டு துன்புறும்; என்பதாகத் தேவரை நோக்கி இனிதியம்பிவிட்டுப் பகவானுகிய ஸ்ரீ பிரஹ்மதேவர், வேலையவனிடத்திற் சப்தஞ்செய்துவிட்டு மறையும் கடற்கல்லோலம்போல அங்கேமறைந்து சென்றனர். சுரர்கள் அவ்வாக்கியத்தைக் கேட்டுக்கொண்டு, அநிலங்கள்கமல ஆமோதங்கவர்ந்துகொண்டு, தாங்கருதிய வனமாலையை யடைந்ததேபோல, தாந்தாங்கருதிய அவ்வத்திக்குப் பாலஅதிஷ்டித திசையை நோக்கிச் சென்றனர். சிறிதுநாட் கழித்தொருநாள் தங்கட்கு மிகுந்த சுபத்தை யுண்டாக்கக் கூடியதா யிராநின்ற, பிரளய அப்பிர அரவத்திற் கொப்பான துந்துமி நிர்க்கோஷத்தைச் செய்தனர்.

(ச.) உயர்ந்தோர் = மகான்களும், என்றுகூறி வேதா, கண்டுழி = அவ்விடத்திற்றானே, அனைத்தும் = அவ்வாக்கியம் அனைத்தும், துந்துமியோடு நெடிதார்த்தார் = பிரளயமேகம் போன்றொலித்தார். (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அசுரரோடு சுரர் அமர்வஞ்சித்தாற்றல்:—ஆர்த்தன வென்பது

ஆர்த்தன கேட்டவந்த வசுரர்பாத லத்தினின்றும்
வேர்த்தனர் பொங்கிவந்து வெம்படை யமரர்மீது
தூர்த்தனர் காலம்போக்குஞ் சுரர்பொரு துடைந்துபோகிப்
பேர்த்தும்வந் தமர்செய்தோடிப் பின்னும்வந் ததனைச்செய்தார். (33)

(ப - ரை.) ஆர்த்தன = சப்தித்தனவாய சப்தங்களை, கேட்ட அந்த அசுரர் = செவிசெவிபடச் சிரவணித்த அத்தாம வியாலகடாதியர், பாதலத்தினின்றும் = பாதாளலோகத்தினின்றும், பொங்கிவேர்த்தனர் வந்து = மிகச்சினந்து வேர்வை விட்டவராகியெழுந்துவந்து, வெம்படை யமரர்மீது தூர்த்தனர் = கொடியபாணப் பிரயோகங்களைத்

தேவர்மேற் பெய்தனர், காலம்போக்குஞ் சுரர் = பொழுதைக் கழிக்கவேண்டு மென்னுந்தேவர், பொருதுடைந்துபோகி = சிறிதுபோர் புரிந்து சிதறியோடி, பேர்த்தும் வந்து = திரும்பியும் வந்து, அமர்செய்து = சிறிதுயுதஞ்செய்து, ஓடி = மறைந்து சென்று, பின்னும் வந்து = பின்னரும் திரும்பிவந்து அதனைச் செய்தார் = அப்போரைப் புரிந்துவிட்டுச் செல்லுதல் வருதலைச் செய்துகொண் டிருந்தனர்.

(ஸ்ரீ - வீர.) பின்னர்த்துந்துபி யாதியின் அரவத்தைக் கேட்டுப் போர்க்கோலம் பூண்டுங் களித்துப்பாதாள லோகத்திலிருந்து மேலேகிளம்பிவந்த அவ்வசுரர்களோடு மகாவியோமபதமாகிய அந்த ரிக்ஷலோகத்தில், காலக்ஷேப காமாகிய கோரப்போரை மீளவும் தொடங்கினர்தேவர். தேவரானே அப்போரானது ஒருகான் மாயையானும், வாக்குயுத்த மாத்திரத்தானும், தானுதியுபாயங்களாற் சந்தியினுனும், ஒருகால் விக்கிரகத்தானும், ஓரொருகால் ஓடிவிடுதலினுனும், மறைந்திருந்து கொண்டு தங்களது ஜனங்களை மறைத்துக் காத்தலினுனும், ஒருகாற் கிருபணர்போலும் சரணுகதியாஞ் சாதியானும், ஒருகால் தைரியத்தானும், அஸ்திரயுத்தத்தானும், பெரும்பான்மையுந் தாங்கள் பல வகை அந்தர்தான மாதலினுனும் நடத்தப்பெற்றது. ஆண்டு நடந்த முதற்சங்கிராமம் முப்பது ஆண்டுகள், நடந்தது; இரண்டாவதோ ஐந்துவருடங்களும், எட்டுமாதங்களும், பத்துத் திவசங்களும் நடந்தது; மூன்றுவதோ பன்னிரண்டு திவசங்கள் நடந்தது; அத்துணையொன்றும், இரண்டு சேனைகளிலும் விருக்ஷங்களின், அக்கினிகளின், ஆயுதங்களின், முக்கியங்களான அசனிகளின், அசலங்களின், விருஷ்டிகள் பெய்துகொண்டேயிருந்தன பொருது முதலாவது அமர்சேய்து இரண்டாவது, அதனைச்செய்தார் மூன்றுவது, போர் என்பது விவேகமாம்; ஆனுல் ஒவ்வொன்றினும் உபாயம் பலவாம்.

(ச) பொங்கி = கிளர்ந்து, மகாவியோமத்தில் வந்து. (33)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவர்கள் செய்தபல வுபாயத்தானே தாமவியாலகடாசுரர்க்கு அபிமான மெய்தியுள்ள மகப்படல்:—இவ்வென்பது.

இவ்வகைபலவுபாய மிறந்த நீள்காலஞ்செய்ய
நைவருதிடமதான நானெனும் பழக்கத்தாலே
மெய்வரநானென்றுன்னும் வேட்கையை விருப்பமுற்று
ரவ்வகையாலேயுள்ள மகப்பட்டு நின்றதன்றே. (34)

(ப - ரை.) இவ்வகை = கூறியபிரகாரம், பலவுபாயம் = நானுவித வுபாயங்களை, இறந்த நீள்காலஞ்செய்ய = 35 வருடங்கள், 8 மாதங்கள், 22 நாட்கள் இயற்றிவரவே, நைவருதிடமதான நானெனும் பழக்கத்தாலே = ஊன்றி யூன்றிவளரும் அதிதிரமான அகங்கிருதியின் அப்பியாசத்தினுலே, மெய்வர = தேகத்திற்றேன்ற, நானென்றுன்னும் வேட்கையை விருப்பமுற்ருர் = அகமென்னும் ஆசையையாற்ற அதிமுயற்சியுற்ருர். அவ்வகையாலே = அத்தன்மை முயன்றதானே, உள்ளம் அகப்பட்டு நின்றதன்றே = மனமானது பந்திக்கப்பட்டு நின்றது. அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) இவ்விதம் நானுவித வுபாயங்களையாற்றி வந்த இத்துணைக் காலத்துட்டானே அகங்கிருதியின்திட அப்பாசத்தால், வாதனையினுலே பந்திக்கப்பட்ட சித்தமுடையராகித்தாமாதியர் யாமென்னும் ஆஸ்தையுடையவராயினர். அபிமான அப்பியாசத்திற்கு அகங்கார தார்ட்டிய ஹேதுத்தன்மையில் இத்திருட்டாந்தத்தையும் வைத்துக் காணலாம்:—பிம்பமானது அதிசமீபத்திலிருக்கும் அதிசயத்தினுற் பிரதிபிம்பமுடைய

தாக்த் தரப்பணமாவதே போல அப்பியாச அதிசயத்தினுலே அகங்காரமுடையை யவர டைந்தன ரென்பதாம்.

(ச) பலவுபாயம் = நானுவித வுபாயங்களால், இறந்த நீள்காலம் = வெகுகாலம், யுத்தஞ்செய்ய, நானெனும்பழக்கத்தாலே, அகங்கிருதியினது அப்பியாசத்தினுல், தாமாதிகள், மெய்வர நானென்றுன்னும் வேட்கையை = நானென்னும் ஆசையை. (34)

(ஸ்ரீ-வீர - அ-கை) தாமாதியர் வாசனையின் வயத்தினுலே பயந்து மயங்கிப் பந்தமுற்றுப் பலமில்லாமல் அழிந்துபோதல்:—பயம், சந்ததம், வலி என்பன.

பயம்வந்து பிடித்துக்கொள்ளப் படர்தரு மோகங்கட்ட
வயர்வுறுமாசா பாசத்தழுந்தி யென்செய்து மென்னு
துயருற விளைத்துக்காயந் துஞ்சுரு திருக்குமாறு
மயலுறு தனத்தாலின்பம் வருவது மெவ்வாறென்றுர். (35)

சந்ததமிவ்வாறெண்ணத் தளைப்புண்ட மனத்தராகி
யந்தமிறீரமின்றியம ரென்று லறவுமஞ்சிப்
புந்திநொந்திறப் போமென்றும் புகலிடமெமக்கே தென்றுஞ்
சிந்தனையாலேகெட்ட சித்தத்தாற் றியங்கிச் சோர்ந்தார். (36)

வலியெலா மிழந்துமுன்னே வந்தொருபெயர் நின்றுலு
நலிவுறமாட்டாராகி நடுங்கினர் விறகுமாண்டாற்
பலிதரும வியையங்கி பருகிட வல்லதுண்டோ
வொலிதர வுரைத்தெனஞ்சி யோடினர் பொன்றிபோனுர். (37)

(ப - ரை.) பயம் வந்து பிடித்துக்கொள்ள = பயவாசனையானது நன்றுகப் பற்றிக்கொள்ள, படர்தருமோகங்கட்ட = அதிவிஸ்தாரமயலானது பந்திக்க, அயர்வுறுமாசா பாசத்தழுந்தி = துயரைமிகுதியும் பயக்கும் ஆசைப்பாசத்தினுலழுத்தமாய்க் கட்டுப்பட்டு, என்செய்துமென்னு = இனியாம்யாது செய்வோமென்னு கிருபணத் தன்மையையடைந்து, துயருற விளைத்துக்காயம் துஞ்சுருதிருக்குமாறும் = துன்பம் வெம்பிப் பம்பக்கிருச்சிரமடைந்து சரீரம் கெடாது நிலைபெறுதற்குபாயமும், மயலுறு தனத்தால் இன்பம் வருவதும் = மயக்கத்தைத் தரவல்ல தனத்தினுலே சுகம் வந்துறுவதும், எவ்வாறு என்றுர் = எம்மார்க்கத்தாலெனக் கவலையுற்றெண்ணத் தொடங்கினர்.

சந்ததம் = எப்போதும், இவ்வாறெண்ண=இங்ஙனமே சிந்திப்ப, தளைப்புண்ட மனத்தராகி = கட்டுப் பட்டகருத்தையுடையாராய், அந்தமில் தீரமின்றி = கெடாததாகிய தைரியமுழுவதும் கெட்டு, அமரென்றுல் அறவுமஞ்சி = போர் என்னின் மிக மிகவும் பயந்து, புந்திநொந்து = சிந்தாகுலமுற்று, இறப்போ மென்றும் = மரித்துப் போவோமென்றும், புகலிடம் எமக்கேதென்றும் = சரணடையுந்தானம் எமக்கு யாதெனவும், சிந்தனையாலே = ஓயாமல் எண்ணுதலாலே, கெட்ட சித்தத்தால் = தீங்குற்ற மனத்தினுல், தியங்கிச் சோர்ந்தார் = மயங்கி வாடினுர்.

வலியெலாமிழந்து = பலமுழுதும் பழுதாகி, முன்னே வந்தொரு பெயர் நின்றுலும் = எதிரில் ஒருபடன் சண்டையிடவந்து நின்றபோதிலும், நலிவுறமாட்டாராகி= கெடுக்கவல்லவரல்லராகி, நடுங்கினர் = கம்பிதராயினர், விறகுமாண்டால் = இந்தனம் க்ஷீணமாயின், பலிதருமவியையங்கி = தேவதையை யுத்தேசித்துக் கொடுக்கும் ஆகு

தியை அக்கினி, பருகிடவல்லதுண்டோ = மாந்திடவாற்றல் உடைத்தாயிருக்குமோ, இராதாம், ஒலிதர உரைத்தென் = அதிகமாகக் கூறுவதாலாம் பயன் என்னே! அஞ்சி யோடினர் பொன்றிப்போனுர்=மரணத்தாற் பயந்தமனத்தராய்ப் பலாயன ஏக சரண ராய் அம்மூவரும் அழிந்தொழிந்தனர்.

(ஸ்ரீ-வீர.) எக்காற்றுமாதியர் அகங்காரமே யாத்மாவென்னும் வாசனையுடையவராயி ஞரோ, அக்கால் வாழ்க்கை யெமக்குண்டாக வேண்டுமென்றும், அதன்பொருட்டுத் தனமெமக்குண்டாகவேண்டுமென்றும், உதித்த ஆசையினுலே, தைன்யத்தை யடைந் தனர். பின்னர் விதிநிடேதப் பிரவிருத்தியினின்றுண்டாம் வாசனையாற் கிரஸ்தராய் தேகமானது எமக்கு எப்போதுமே அரோகதிடபோக சமர்த்துண்டாம் தாருகவென்ப தாதி மோகவாசனையாற் கட்டுப்பட்டவராய், ஆசாபாச நிபத்தராகிய அவர் மூவரும் இரு பணத் தன்மையையடை வுற்றனர். எம்முடைய தேகமானது திரமாயுற்றக, சுகத்தின் பொருட்டு எமக்குத் தனமுளதாருக, எனக்கட்டுற்ற மதியர்களாகிய அவர்களுடைய தைரி யம் அடியோடு மகன்றொழிந்தது. மதோன் மத்தயானைகள் போரின் பொருட்டுக் கண மாகச் சினந்தவனத்தில் மானினங்கண் மானும், அந்தப்போரிற் பயத்தாற் சீவனத்திற் சாபேக்ஷத்தன்மையை அவரடைந்தனர். இறந்துபோவோம் இறந்துபோவோம் என்னுஞ் சிந்தையினுலே கெடுக்கப்பட்ட மனமுடையராய், வெகுண்டு மோதும் ஐராவணரணத் தில் மந்தமந்தமாகச் சுற்றித்திரிந்தனர். ஐராவணம் = ஐராவதமென்னுந் தேவேந்திர கஜம். பலமிழந்த அந்தமூவரும், எதிரில்வந்த வொருபகைவனையும் கொல்லுவதற்கு, இந்தனம் க்ஷீணமாகியவழி அக்கினிகள் ஹவியைத் தகிப்பதற்கு அசமர்த்தமாவனபோல அசமர்த்தராயினர். ஈண்டு மிகுதியாக விளம்புவதானே யாதுபிரயோஜனம், மரணத் தானே அஞ்சியநெஞ்சினராய் அத்தைத்தியர், தேவர்கள் மேல்விழுந்து மோதிக்காதவே, போர்க்களத்தி னின்றும் பறந்தோடி யிறந்துபோயினர்

(ச.) பவவாதனையால், பயம்வந்து, அவரைமோகம் = மோகவாசனை, ஆசாபாசத் தழுந்தி = ஆசாபாசத்தா லழுத்தமாய்க் கட்டுப்பட்டு, பின்பவர், காயந்துஞ் சுறுதிருக்கு மாறும்=எனது தேகந்திரமா யிருக்கவேண்டும், மயலுறு தனத்தாலின்பம் வருவதும்= சுகநிமித்தமெனக்குத் தனம்வரவேண்டும் = இவைவரும்வழி எவ்வாறென்றூர்=யாதென் றெண்ணினுர்.

நலிவுறமாட்டாராகி = கொல்லுதற்கு வலியின்மையராகி, ஒலிதரவுரைத்தென் = இவ்விடத்து வெகுவாகச் சொல்லியென்ன, அஞ்சி = மரணத்துக்குப்பயந்த மனதுடை யராய்; அத்திரிதசாரிக ளென்னும் பாலிய கௌமார யௌவனமுடைய தேவசத்துருக்க ளென்னும், அத்தாமாதிகள், ஓடினுர்பொன்றிப் போனுர்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) முன்மொழிந்ததை ஸ்மரிப்பித்துக்கொண்டு பிரகிருதகதையை ஆண்டுப் பொருத்தல்:—தாமனுமென்பது.

தாமனும் வியாளன்றுனுங் கடனுமுன் சரித்தமார்க்கந்
தோமறு முணர்வுண்டாகச் சொல்லினம் விநோதத்தாலே
மாமனம விவேகத்தை வரம்பறப் பழகிவிட்டாற்
பாமரப் பிறவித்துன்பம் பற்றறுநிந்த வண்ணம்.

(ப - ரை,) தாமனும் வியாளன்றுனும் கடனும் = தாமாதிமூவரும், முன்சரித்த மார்க்கம் = பூர்வஞ்சஞ்சரித்த நெறியானது, தோமறும் உணர்வுண்டாக = குற்றமற்ற

பிரபோதமுளதாக, உன்னைவந்து பற்றுநிருக்குமாறு, விநோதத்தாலே சொல்லினம் = லீலையாகக் கூறினேம், விநோதத்தாலே = விளையாட்டாக, மாமனம் = வாசனைப்பெருமையான் மயங்கியவுள்ளம், அவிவேகத்தை = துர்வாசனையை, வரம்பற = அளவுக்குமிஞ்சி, பழகிவிட்டால் = அப்பயசித்துக் கொண்டுவிடின், பாமரப்பிறவித்துன்பம் = அஞ்ஞஜனங்களா லநுபவிக்கப்பட்டு வரும்ஜனனமரண துக்கம், இந்தவண்ணம் பற்றறுது = இவ்வாறு தொடர்ந்தே நிற்கும்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாமதியையுடைய இராகவ ! ஆகையால் உனக்குப் பிரபோதமுண்டாதற் பொருட்டு, தாமவியாலகட நியாயம் உண்டாக வேண்டாமென லீலையாற் கூறுகின்றேம், அவிவேகாநு சந்தானமென்னும் விவேக அநுசந்தான அபாவத்தால், உள்ளமானது இத்தகைய அபிமானவடிவ ஆபத்தை விளையாட்டாக அநந்தபவ துக்கப் பொருட்டு நன்குகவரும்.

(ச.) இந்தவண்ணம் = இத்தன்மையாகிய, பாமரப் பிறவித்துன்பம் பற்றறுது.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ இராகவர் தாமாதியர் உதயாதியைப் பற்றிச் சங்கித்தலும் அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் சமாதானஞ் சாற்றலும்:—இனைய, எதிருறு, பரத்தினது, என்பன.

இனையவர் நியாயநீயிங் கெய்தலை யென்றலோடு
மனையவர் பரத்தினின்று முதித்தவா றறியவேண்டு
முனைவகூ றென்றிராமன் மொழிதலு முனிவன் சொல்வான்
றுனையுறு தாமன்முன்னோர் தோற்றமாத்திர மெய்யானோர்.

எதிருறுதோற்ற மெய்யா யிவர்கள்போ லிங்குயாமும்
விதியதாய்ப் புறத்திலொன்று மேவலம் வீரனேநின்
மதியினுனெனனும் பொய்யே மதியினீயெனலும் பொய்யே
யதிர்குரற்று மன்முன்னு மவர்களுண் டெனலும்பொய்யே.

பரத்தினதொளியே மெய்யாய்ப் பாரித்தோர் சிவசத்தி
திரத்துறு சம்பரன்றன் றியானத்தா லசைந்துமூன்று
யுரத்தவுல்லாச மேவிற்றுரைத்த வித்திறத்தினாலே
வரத்துறு மவருநாளும் வாய்மையே யெங்குமில்லை.

(ப - ரை.) இனையவர் நியாயம் = இத்தாமாதி யரதநீதியை, நீயிங்கு எய்தலை = ஈண்டு இராகவனே நீ அடையவேண்டாம், என்றலோடும் = என்பதாக ஸ்ரீ வசிஷ்டபகவான் அநுக்கிரகம் செய்தபோது, அனையவர் = அத்தாமாதியர், பரத்தினின்று முதித்தவாறறிய வேண்டும் முனைவகூறென்று = பரமாத்மாவி னின்றும் ஜனித்தவகையைத் தெரிந்துகொள்ள வேண்டும் யான், அதனை முனிசிரேஷ்டரே தாங்கள் திருவருள் செய்யவேண்டும் என்று, இராமன் = ஸ்ரீ இராமச்சந்திரர், மொழிதலும் = வினவுதலும், முனிவன் சொல்வான் = அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரம் அருளுவதாவது, துனையுறு தாமன்முன்னோர் தோற்றமாத்திர மெய்யானோர் = துன்பத்தை யடைந்த தாமாதியமூவரும் பிரதிபாமாத்திர ரூபசரீரமுடையவர் ஆயினர்.

எதிருறு தோற்றமெய்யாய் இவர்கள்போல் = எதிரேதோன்றும் தோற்றமாத்திரமே காத்திரமாய இம்மூவர்போலவே, இங்கு = இவ்வுலகிலுள்ள, யாமும் = யாமியா

வரும், விதியதாய்ப் புறத்திலொன்றும் மேவலம் = பாவமா யிருப்பதாகப் பாகியத்தில் யாதொன்றையும் அடைந்திருந்திலேம், வீரனே = ஆந்தரசத்துருக்களாய் காமாதிகளை ஜயித்தவீர சேகரனே, நின்மதியில் = நினதுபுந்தியில், நான் எனலும் = மத்பாவமும், பொய்யே = அலீகமே, மதியில் = புத்தியில், நீ எனலும் பொய்யே = துவத்பாவமும் அலீகமே, அதிர்குரல் = பெருங்கர்ச்சனைகள் வாய்ந்த, தாமன் முன்னுமவர்கள் = தாம வியாலகடர்கள், உண்டெனலும் பொய்யே = இருந்தார்கள் என்பது உம்மித்தையேயாம்.

பரத்தினது = பரமாத்மாவினது சம்பந்தத்தினுல், ஒளியே மெய்யாய்ப் பாரித் தோர் சிவசத்தி = பிரதிபாச மயமாய ஒரு ஜீவசக்தியானது, இரத்துறு சம்பரன்றன் = அதிசமர்த்தனுன சம்பராசுரனது, தியானத்தாலசைந்து = தியானத்தினுலே விக்ஷேப்த மாகி, மூன்ருய் உரத்த உல்லாசம்மேவிற்று = மூவகையான வுல்லாசத்தை யடைவுற் றது, உரைத்த வித்திறத்தினுலே = கூறிய இந்தத் தன்மையினுலே, வரத்துறும் அவ ரும் நாமும் = சம்பரன் மாயையினுல் வந்த அத்தாமாதியரும் இந்தயாமும், வாய்மையே எங்குமில்லை = எவ்விடத்தினும் சத்தியமேயாயில்லை.

(ஸ்ரீ - வீர.) ஹேபகவன்! இந்தயாம் இருக்கிறவர்களாகவே திதிபெற்றவர்களா யிருக்கின்ருேமென்பது ஏலும், தாமாதியரோ இல்லாதவர்களாயினும் இருப்பவர்களா கத் திதிபெற்றிருந்தார்கள் எனத்தாங்கள் எங்ஙனம் கூறினீர்கள்? நம்மனோரது இருப்பு, பிரத்யக்ஷாதிப் பிரமாண சித்தமாம், தாமாதிகட்கோ, மாயா மாத்திரத்தன்மை யுண்மை யின் அசத்தாந் தன்மை யுண்மையைத் தாங்களே கூறினீர்கள், ஆகவே அவர்கட்கு மீளவும் சத்துவம் விப்பிரதிஷித்தம் விளம்புகின்றீர்கள், தங்களுடைய அபிப்பிராயந் தான் யாதோ? என்று ஸ்ரீ இராகவர் வினவ, நம்மனோரது சரீரங்கட்கு வியாவகாரிகப் பிரமாண வியவகார யோக்கியத்தன்மை யுண்மையின் சத்துவம் எண்ணுதியாயின் தாமாதிகட்கும் அது துல்லியமேயாம்; இனித் தத்துவஞான பாத்தியப் பான்மையானு தல், பகாமுடியாமை யானுதல், அசத்துவம் அங்கீகாரமேலாயினே அதுவுந் துல்லியமே யாம் எனவிப்பிரதி ஷேதமிலதாம் என்னுங்கருத்தால் ஸ்ரீவசிட்டபகவான் விடையிறுத் தல்:—எதிருறு என்பது. ஹே இரகுகுலதிலக! எங்ஙனம் தாமாதியர் கானனீர்ப் பிர வாகம்போல இல்லாதவர்களே யெனினும் இருப்பவர்கள் போன்று மாயாமயர்களாய்த் திதமாயினுர்களோ; அங்ஙனமே, இவ்வியாமும் சுர அசுர அரக்கராதியர்களும் அசத்தி யர்களேயாயும் சுழல்கின்றேம் செல்கின்றேம் வருகின்றேம் என்பவேயாயவிவகாரத்தகப் படுவேம். இராமசரீரபாவமும் பொய்யேயாம், வசிஷ்ட சரீரபாவமும் பொய்யேயாம், அநுபூதமாயினும் கனவிற்றனது மரணமேயென்ன அசத்ரூபமாம். ஆயினும் நீணுட் பயின்ற கெட்டசமஸ்காரம், சாஸ்திரார்த்த தத்வாப்யாசமிலாது கெடுவதின் றென்று ணர்க. பிரகிருதத்திற் கூறிவந்ததை யுபசங்கரித்தல்:—உரைத்த வித்திறத்தினுலே யென்பது. ஆகலின், காட்சியாகக்கண்ட வசிஷ்டராமாதி தேகவடிவங்களாகப் பிரசித்த மாயயாம் சாஸ்திர திருஷ்டியானே சத்தியரல்லேம், அறிஞரது அநுபவதிருஷ்டியினு னும் அசத்தியரேயாவேம்; யுக்தியினுல் ஆராய்ந்து பார்க்கினும் நம்மனோருக்கு சற்பா வம் இலவேயில்லை யென்பதுண்மையேயாம். தாமாதியரும் ஒருபாலும் உண்மையிலுண் டாகவேயில்லை, அவரும் அசத்தியரேயாவர்.

(ச.) என்றலோடும் = ஸ்ரீ இராமர், அனையவர் = தாமவியாளகடர், கூறெனமொழி தலும், ஸ்ரீ வசிட்டர், தோற்றமாத்திர மெய்யானோர் = மாயாபரிகற் பிதத்தினுற் பிரதி பாசிகதேகராம். இவர்கள்போ லிங்கெதிருறுயாமும், தோற்றமெய்யாம் = தோற்ற

மாத்திரரூபிகளாம், புறத்தில் = சிதாகாசத்துக்கு வெளியில், ஒன்றும் மேவலம் = எவ்விடத்துமிலேம்.

பரத்தினின்று = பரமான்மாவினின்று, ஒளியே மெய்யாய்ப் பரித்தது = பிரகாசமே சொரூபமாகிய, மூன்ருய் = தாமாதிரூபமாய், பேதப்பிரபஞ்ச மனைத்தும் அசத்தியமென்பது பொருள், பரமான்மாவினின்றும் பிரதிபாசமயமாய ஒருஜீவசக்தியானது, சம்பரத்தியானத்தானே சலனமுற்றதாகி, மூவகைத் தாமாதிரூபமாக வுல்லாசமுற்றதென்பதாம். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் உண்மையா யிருப்பதுயாது கொலோவெனின்? உரைத்தல்:—அறிவதா யென்பது.

அறிவதா யறிவேமெய்யா யமலமாயனைத் தாயாறிப்
பிறிவுறுவர வுபோக்கில் பிரமமேயுளதா மந்தச்
செறிபொருட் சத்திதோற்ற மாத்திரஞ் சகமாய்நிற்கும்
பொறிகள் பல்காட்சி பொய்யே பொருண்மெய்யே யென்றுவாழ்வாய்,

(ப - ரை.) அறிவதாய் = சம்வேதனமாய், அறிவே மெய்யாய் =போதாகாரமாய், அமலமாய் = நிரஞ்சனசுத்தமாய், அனைத்தாய் = சர்வகதமாய், ஆறி = சாந்தமாய், பிறிவுறுவரவுபோக்கு இல் = பேதமும் உதய அஸ்தமனமும் இல்லாததாய், ஒளிரும், பிரமமே = பரப்பிரஹ்ம வத்துவே, உளதாம்=இருப்பது ஆகும், அந்தச் செறிபொருட் சத்தி = அவ்வுளதாய வத்துவின் சக்தியினது, தோற்றமாத்திரம் = சமுல்லாசமாத்திரம், சகமாய் நிற்கும் = ஜகமெனத் திதியுருநிற்கும், பொறிகள் பல்காட்சிபொய்யே= இந்திரிய வேத்தியங்களாய சர்வதிருசியங்களுமே மித்தையாம், பொருண்மெய்யே = பரம்பொருள் சத்தியமே, என்றுவாழ்வாய் = எனத்துணிந்து அதுவேதானுய் மகிழ்ந்து சீவிப்பாய்.

(ஸ்ரீ - வீர) சத்தியமாயும், சம்வேதனமாயும், சுத்தமாயும், போத ஆகாசமாயும், நிரஞ்சனமாயும், சத்தியமாயும், சர்வகதமாயும், சாந்தமாயும், அஸ்தமய உதயமற்றதாயும், இலங்கும் பரம்பிரஹ்மமேயுளதாம்; சம்வேதனமே சாஸ்திர திருஷ்டியினுனும் சத்தியம் வித்வதநுபவத்தானும் சத்தியம்; யௌக்திக திருஷ்டியினுனும் அதுவே அநஸ்தமய வுதயமதாகவுளதாம், என்பது பொருள். சர்வஜகத்தும் உபரதமாம், சூனியபரிசேடமாகவோ எனின்? அல்லவாம், மற்றே நிரஸ்த சூனியமாயே, ஆயின் யாங்ஙனஞ் சாந்தமெனின்? சர்வசூனியம் போலும், சூனியமேயென வல்லவாம், சன்மாத்ர பூர்ணபாவத்தாற்றிதமாம் என்பது அருத்தம், ஆண்டு வியோமத்தில், இச்சிருஷ்டியென்னுந் திருஷ்டிகள், தன்னொளியாயே தன்கற்பனையானே அயல்வகையில் அமர்தல்போல் தோற்றுநிற்கும். அத்தியாரோபதிருஷ்டியில் எவ்விடத்திலுமுள்ள சிதாகாசத்தின் கண்ணே சர்வாரோபசம்பவத்தால் யாண்டு மெல்லாமுளவாம்; அபவாத திருஷ்டியிலோ எங்குமே எதுவுமே கிடையாதாம்; இவ்வண்ணம் கூறியவகை யிரண்டினும் இவ்வுலகு, சாந்தமாயும் பேதமற்றதாயும் அதனுனே யேகமாயும் சத்தாயும், சத்தாயும் பூர்ணமாயும் இருக்கின்றது, ஆகலின் நீயும் சோகபய பேதங்களை யடியோடும் விட்டவனுகிப் பூரணனுகவே பொலிந்து வாழ்வாய்.

(ச) அறிவதாய் = சம்வேதனமாய், அறிவே மெய்யாய் = போதாகாரமாய், அமலமாய் = நிரஞ்சனமாய்ச் சுத்தமாய், அனைத்தாய் = சர்வகதமாய்ச் சர்வான்மகமாய்,

ஆறி = சாந்தமாய், வரவுபோக்கில்=உதயாஸ்த மனமின்றிய, பிரமமேயுள்ளதாம்=சத்தியமாயிருப்பதாம்,=சிதாகாசமாத்திரமான சம்வேதனமே சத்தியமென்பதுபொருள். அந்தச் செறிபொருள் = அந்தப்பூர்ண வஸ்துவினது, சத்திதோற்றமாத்திரம் = சக்தியினுல்லாச மாத்திரம், சகமாய் நிற்கும்; இந்தச் சகத்தந்தச் சின்மாத்திரத்தினுடைய சக்தி உல்லாசமாத்திர மென்பது பொருள். பொறிகள் பல்காட்சிபொய்யே = அநுபவாநுசாரமாய் ஈதனைத்து மெவ்விடத்திலு முண்டு, அநுபவமின்றேல் எவ்வளவு எவ்விடத்து மின்றுமென்பது பொருள். பொருண்மெய்யே யென்றுவாழ்வாய் = சாந்தரூபமான சத்துருபமாகிய ஏகவஸ்துவே இங்ஙனம் வியாபகமாய் இச்சகத்துருபமாக விளங்குகின்றது ஆதலினுல் இராகவா நீசங்கையையும் கேதத்தையும் பேதத்தையும் விட்டுச் சுகமாயிருப்பாய் என்பது பொருள். (43)

தாமவியாளகடர் கதை முற்றிற்று.

---

# பீமபாசகிடர் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) யாவர்கள் மகாவாக்கியார்த்த வடிவசாஸ்திரத்தானே சர்வதிருசியங்களையும் இலயஞ்செய்து பிரத்யக்கபின்ன பிரஹ்மாகம் புத்தியையே விருத்திசெய்து கொண்டே நிர்வாணநிலையில் நிலைபெற்றிருக்கின்றார்களோ அவர்கள் பரப்பிரஹ்மஞானத்தாற் பவாம்போதியைத் தாண்டுவர்கள்; ஆயின் மகாவாக்கியம் பற்றலெற்றினுக்குத் தருக்கங்களினுனே அந்நிர்ணயம் ஆகாதது என்னை சொல்லெனின்? நானுதுக்க விகாரங்களோடுற்ற சுஷ்கதர்க்க மதங்களையுடைய மூடர்கள் யாவர்களோ அவர்கள், பள்ளத்தைநோக்கியேகும் ஜலங்களைப்போல, பாரமார்த்திக ஆத்மபாவத்திலக்ஷண பரம புருடார்த்த லாபத்தை யிழந்தவர்களாவர்கள்; அல்லாமலும் உபதிட்ட சம்பந்தமார்க்கம் அநுபூதியையும் நன்கு நவிலும், தர்க்கசம்பந்த மார்க்கஞ் சாற்றுவதில்லை; ஆகலின், சுருதியின் அநுசாரியாயிராநின்ற சுவாநுபூதிப் பிரசித்தத்தானே யுள்ளமார்க்கத்தானே, குழந்தாய்! பரமகதியையே யடைவர்கள் விநாசத்தை யடையவே மாட்டார்கள் என்ன, ஆயின் எதனுற் பரமபுருடார்த்த விநாசமாமென்று சங்கிப்பக்கூறல்:—இது என்பது.

(ச - அ - கை) முன்பு தாமாதி உபாக்கியானத்தில் அவிவேகத்தினு லுளதான அகம்மம அபிமானங்களால், இச்சம்சாரம் வர்த்திக்குமென்று சொல்லப்பட்டது, இப்போது வீமாதி உபாக்கியானத்தில் தேகாதிகளில் அகங்காரமின்மை புருடார்த்தத்தைக் கொடுப்பதற்குச் சாமர்த்தியமுள்ள தெனக் கூறப்படுகிறது, அதில் முன்பு இதமுபதேசித்தல்:—இதுவென்பது.

இதுநமக்கிது நமக்கென் றிரங்குறு பொல்லாவாழ்வா
லுதவியோர் சாம்பரேனு முறப்பெறு துதாரமிக்குச்
சுதமுறுமுலக மெல்லாந் துரும்புபோற் காண்போர்தம்பால்
விதனங்க ளனைத்தும்வாரா மிருகங்களுலர் புற்றீண்டா.

(ப - தை.) இதுநமக்கு இதுநமக்கு = இஃதெனக் குண்டாகுக இஃதெனக் குண்டாகுக, என்றிரங்குறு பொல்லாவாழ்வால் = என்பதாக இரக்கத்தை யடைந்தடைந்தேங்கிவேண்டும் பெருந்துயரைப் பெய்யும் தைனிய ஜீவனத்தால், உதவியோர் சாம்ப

ரேனும் உறப்பெருது = சாதகமாக ஒரு அற்பசாம்பற்றாளேனும் கிடைக்கமாட்டாது, உதாரமிக்கு = மிகுந்த வுதாரான்மாவாய், சுதமுறும் உலகமெல்லாம் = துயரேபயக்கும் மூவுலகங்களையும், துரும்புபோற் காண்போர் தம்பால் = திருணத்திற்குச் சமானமாகத் துச்சமாய்ப் பார்ப்பவரிடத்தில், மிருகங்கள் உலர்புற்றீண்டா = மானினங்கள் ஜரத்திருணத்தைத் தொடாத தொப்ப, விதனங்க ளனைத்தும்வாரா = சர்வ ஆபத்துக்களுஞ் சம்பந்திக்க மாட்டாவாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாமதியையுடைய இராகவ! இது எனக்குண்டாக வேண்டும் இது எனக்குண்டாக வேண்டும் என்னும் மதியையுடைய புருடனுக்குத் தனது தௌர்ப்பாக்கியத்தா லெழுந்ததைனியத்தானே, நஷ்டமான புருடார்த்தத்தின் பஸ்மமுங்கூடக் கிடைப்பதேயில்லை, இலதாகவே எல்லாவகையானும் நிராசையையே யடையவேண்டும். இவ்வண்ணம் ஆசையின் அநர்த்தத் தன்மையை யறைந்து வைராக்கியத்தின் சர்வா நர்த்த நிவர்த்தகத் தன்மையைச் சாற்றல்:—உதாரமென்பது. எவ்வுதாராத்மா மூவுலக ஐசுவரியங்களையும் நித்தியந்திருண துல்லியமாக வுணர்வனோ, அவனைச் சர்ப்பங்கள் பழஞ்சட்டையைப் பாறுவதொப்பச்சர்வ ஆபத்துகளும் விடுகின்றனவாம். மான்காய்ந்த புல்லும் பாம்புப் பழங்கஞ்சுகமும் பாடபேதமாம்.

(ச). இது நமக்கு = இந்தப்புத்திராதிகள் நமக்குவேண்டும், இது நமக்கு = இந்த க்ஷேத்திராதிகள் நமக்குவேண்டும், பொல்லாவாழ்வால் = இப்படியே உண்டானபுத்தியென்னு மேதுவினால், உறப்பெருது = சத்தியமான பிரமம் பிரகாசியா தென்பது பொருள். உதாரமிக்கு = எப்போதும் உதாரமிகுந்த மனமுடையராய். சர்வசகத்தும் ஆன்மாவின் கண்ணே யுளவாம் ஆன்மாவோ சர்வான்மகமாம், இவ்வாறுகவே தன்னுடையதேயான தௌர்ப்பாக்கியதைனியத்தானே அதாவது துர்ப்பகன்யான் என்னும் தீனபாவத்தானே, இதுநமக்கு இது நமக்கென்னும் அற்பப்புந்தியால் உண்மைப் பிரஹ்மம் ஒளிராதென்பதாம். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விரக்தனு யிருப்பவனுக்கு ஞானகலையும் ஒருங்குகூடியிருப்பின், அவனுக்கு ஆபத்துச் சங்கையதிதூரமாம், மாறுகச் சர்வதேவரும் சுவ உபஜீவ்யமும் சுவ ஆதாரமும் ஆனபிரஹ்மாண்டத்தைப்போல எப்போதும் அவ்வறிஞனைக் காக்கவுஞ்செய்வர் எனல்:—உளத்தென்பது.

உளத்துறச் சமத்காரஞ்சே ருண்மையை யுணர்வோர்தம்மை
யளக்கரும் பிரமாண்டம் போலட்டதிக் காளர்காப்பர்
கிளப்பருங் குணத்திலன்பாய்க் கேள்வியில் விருப்பாயுண்மை
விளக்குறு வருத்தமிக்கோர் நார்நின்றேர் மிருகந்தானே.

(ப - ரை.) உளத்துறச் சமத்காரஞ்சேர் = உள்ளத்தின்கண்ணதிதிடதரச் சமாதிப்பயிற்சி யமைதலால், உண்மையை = சத்திய ஞானனந்தப் பிரஹ்மத்தை, உணர்வோர்தம்மை = சாக்ஷாத்கரித் தவர்களாகிய மகான்களை, அளக்கரும் பிரமாண்டம் போல் அட்டதிக்காளர் காப்பர் = அளவிடற்கரிதாய்ப் பெருத்த பிரஹ்மாண்டத்தைக் காப்பதொப்பலோகேசர் இரக்ஷிப்பர், கிளப்பருங் குணத்தில் அன்பாய் = கிடைத்தற்கரும்மவாய்ந்த சற்குணங்களிற் சந்தோஷராய், கேள்வியில் விருப்பாய்=சிரவணத்தில் இராகமுடையவராய், உண்மை விளக்குறு வருத்தமிக்கோர் = சத்தியவத்துவைச் சாக்ஷாத் கரிக்கவேண்டு மென்பதில் வியசனமுடையவர், யாவரோ, அவரே, நரர்=பிற

விப்பயனைப் பெற்றவர் ஆவர், நின்றோர் மிருகந்தானே=வீண்காலங் கழிக்கும் மூர்க்கர் ஓரிருகாற் பசுவென்னவே வோதப்பெறுவர்.

(ஸ்ரீ - வீர.) எவர்தம்முள்ளே நித்தியம் சத்துவசமத் திருதியானந் நன்குபொலி யுமோ, அவரை அகண்டப் பிரஹ்மாண்டத்தைப்போல லோகேசர்காப்பர். வைராக்கி யாதி குணங்களில் எவர்தமக்கு. அசந்தோஷமோ = போதாதென்னும் புத்தியோ, அத் தியாத்ம சாஸ்திரசிரவண அப்யாசாதிகளின் பொருட்டு எவர்தமக்குச் சததம் இச்சை யுளதோ, எவர்க்கு மெய்ம்மொழி புகல்வதன் கண்ணும் மெய்ப்பிரஹ்மத்தை மேவுவதன் கண்ணும் பெருங்கவலையுளதோ, அவரே நரஜன்மத்தைப் பயனுடையதாக ஆக்கலின் நரராவர், ஏனையரோ நரராயினும் பசுப்போல வாளாபோம் பிறவியை யுடைத்தாயிருத் தலின் பசுக்களேயாவர்.

(ச.) உளத்து = அந்தக்கரணத்தில், உறச்சமத்காரஞ்சேர் = திடமான பிரமாணு சந்தானத்தால், உண்மையை = சத்தியசொரூபமான பிரஹ்மத்தை, உணர்வோர் தம்மை=அறிந்தவர் பிரஹ்மகரப் பராதலின் அவரை, அளக்கரும் பிரமாண்டம்போல்= அகண்டமான பிரமாண் டத்தைப்போல், அட்டதிக்காளர் = லோகேசர், காப்பர் = வெகுமானிப்பர், குணத்திலன்பாய் = குணங்களிற் சந்தோடமாய், விருப்பாய் =இராக மாய், உண்மைவிளக்குறு வருத்தமிக்கோர் = சத்திய விபசனிகள், நரர்=புருடராம், நின்றோர் = மற்றையர், மிருகந்தானேகுணமுடையரே புருடர் இதரர் பசுக்களா மென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை) எத்துணைத்துயர் செய்தினும் தகாதனவற்றைச் செய்தல் கூடாதெனவும், நல்லகுணங்களை நண்ணின் எல்லாத்துயரும் அகலும் எனவும் கூறல்:— செயல் என்பது.

> செயலருந் துயருற்றாலுஞ் செயத்தகாச் செயல்களாகா
> வியல்பலாவழியா லுண்ணவிரா குவைய முதங்கொன்ற
> தயலெலாம் வசமாயாபத் தனைத்தும்போ யென்றுநன்று
> முயலுநற் குணங்களாலே மொய்புக ழெய்தினோர்க்கே.

(ப - ரை.) செயலருந் துயருற்றாலும் = நீக்கமுடியாத ஆபத்தடைந்த போதினும், செயத்தகாச் செயல்கள் ஆகா = அக்கிரமத்திற் செல்லுதலாகாது, இயல்பலா வழியா லுண்ண = அக்கிரமத்தாலயில, இராகுவை = கரும்பாம்பை, அமுதங்கொன்றது = அமிருதமாயினும் அழித்தது, முயலுநற் குணங்களாலே மொய்புகழ் எய்தினோர்க்கே = பிரயத்னசாத்திய சமதமாதி குணங்களினாலே அமைவுறும் விக்கியாதியை யடைந்துள்ள வர்கட்கு, அயலெலாம் வசமாய் = அவசியமானவை யெல்லாம் வசியமாய், ஆபத்தனைத் தும்போய் = சர்வ ஆபத்துக்களும் க்ஷயமாய், என்றும் நன்றும் = அக்ஷயமான சிரேய சானதுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) வெகுதுர்க்கடமான ஆபத்து வந்துறினும் அசத்து மார்க்கத்திற் செல் லுதலே கூடாது, இராகுவும் இங்ஙனம் அசன்மார்க்கத்தில் அமிருதத்தை மாந்தியும் மிருதத்தை யடைந்தது. ஆயின் மார்க்கம்யாது கொலாமெனின் ? இதுவாம், சற்சாஸ்தி ரங்களாகிய உபநிடதங்களையும், அவற்றின் உபப்ரும் ஹணங்களாம் புராணாதிகளையும், அவற்றின் அர்த்த நிஷ்டர்களாய சாதுக்களையும் எப்போதும் சேவிப்பதே யானதும், தயையில்லாமல் நிச்சேஷசம் சாரசங்காரகத் தன்மையானே உக்கிரனென்னும் பரமசிவ

மாகிய பரமாத்மாவின் சாக்ஷாத்கார ஹேதுவதாக இருளைக்கெடுப்பதும் ஒளியைக்கொடுப்பதும், ஆகிய சூரியனை, யாவர்கள் ஆசிரயம் செய்கின்றார்களோ அவர்கள் மீளவும் மோகலக்ஷண அந்தகாரத்தின் வசத்தை யடையமாட்டார்கள் என்பதாம். இப்போழ்து வைராக்கியாதி குணங்களை மறித்தும் புகழுதல்:—அயலெலாமென்பது. எந்தப்புருஷ சிரேஷ்டனால், வைராக்கிய சமதமாதி குணங்களினாலே கீர்த்தி = சற்புருடர்களுக்குள் அக்கிரகண்யத் தன்மையானே விக்கியாதி, இயற்றப்பெற்றதோ, அம்மகானுக்கு அக்ஷய மாகிய சிரேயசான துண்டாம், வசியமாகாதன வெல்லாம் வசியங்களாம், சர்வ ஆபத்துக் களும் க்ஷயத்தையடையும்.

(ச.) செயலரும் = நீக்கற்கரிய, துயருற்றாலும் = ஆபத்தடையினும், செயத்தகாச் செயல்களாகா = அக்கிரமத்திற் செல்லவே கூடாது, இயல்பலாவழியால் = அக்கிரமத்தி னாலே, உண்ண = பானஞ்செய்ய, கொன்றது = இராகுவும் அக்கிரமத்தினாலே அமிர் தத்தைப் பானஞ்செய்தவனாயினும் இறந்தா னென்றதாயிற்று, முயலும் = தான்முயற் சித்தடைந்த, நற்குணங்களாலே மொய், புகழ் = கீர்த்தியை, எய்தினோர்க்கே, அயலெ லாம் = வசமாகாத வனைத்தும், வசமாய், ஆபத்தனைத்தும் நாசமாய்ப்போய், என்று நன்றாம் = அட்சயமான சிரேய சுண்டாம் என்பதந்நுவயம்,

(ஸ்ரீ-வீர - அ-கை.) கீர்த்தி யெங்ஙனம் சம்பாதித்தற்கேலும் எனின் ஆண்டுறை தல்:—ஒழிவறுமென்பது.

ஒழிவறு முயற்சிதன்னா லூகத்தா லுயர்ந்தநூலா
லிழிவறவியற்று வோர்கட் கெப்பய னெளிதினெய்தா
வழிபடு நன்னூலாளர் வருபயன் கருத்தாச்செய்யி
லழிவற முற்றுமுற்றி யளவறுபயனை நல்கும்.

(ப - ரை.) ஒழிவறு முயற்சிதன்னால் = இடைவிடாத பரமபுருடப் பிரயத்தனத் தினால், ஊகத்தால் = ஆராய்ச்சியினால், உயர்ந்தநூலால் — சற்சாத்திரங்களால், இழி வற = சாவதானமாய், இயற்றுவோர்கட்கு = காரியத்திற் பிரவிருத்திப்பவர்கட்கு, எளிதின் எப்பயன் எய்தா = அதிசுலபமாக எந்தப் பிரயோஜனந்தான் கிடைக்கமாட் டாது, வழிபடு நன்னூலாளர் = சாஸ்திரமுறையில் உத்யமனஞ் செய்பவர், வருபயன் = சித்திகளில், கருத்தாச்செய்யில் = விரைவுறாமல் ஊகமாக நீள்போது ஆற்றில், அழிவற முற்றும் = பரபக்குவ சித்தியாம், முற்றியள வறுபயனை நல்கும் = சித்தியாயவது புஷ்ட பலத்தைச் சேர்ப்பிக்கும்.

(ஸ்ரீ-வீர.) பரமபௌருஷயத்நத்தைப் பற்றிக்கொண்டு, நலமிக்க தொழில்களையே புரிந்துகொண்டு, சாஸ்திரமுறைதவறாமல் வெகுசாவதானமாய் வருத்தமின்றிச் சாதனங் களை யாசரிக்கின் யாவர்தாம் எப்பயனைத் தாமடையப்பெறார். அடையத் தக்கனவாய சித்திகளில், நூன்முறையிற் செல்லும் அதிகாரிகள் அவசரப்படாலே யாகாதாம்; சிரகால பரிபக்குவ சித்தியானது பூர்ணபலத்தைப் பயப்பதேயாகும்.

(ச.) ஒழிவறு முயற்சிதன்னால் = பரமபௌருடமான வெத்தனத்தால், இயற்று வோர்கட்கு = ஆசரிப்பவர்க்கு, வழிபடு நன்னூலாளர் = சாஸ்திரப்படி யாசரிப்பவர், வருபயன் = சித்திகளில், கருதா = அவசரப்படாமல், செய்யின் = சிரகாலம் அப்ய சிக்கின், அழிவறமுற்றும் = பக்குவசித்தியாம், முற்றியளவறு பயனைநல்கும். சிரகா

லம் பக்குவமாய சித்தியானது புஷ்டபலம் போதுவதாகி மிகவுற்கிருட்டமாக மிளிரா நிற்கு மென்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) இன்னவண்ணம் இயற்றில் இரியாமல், இன்புறல் எனுமென வும், இன்பப்பெருக் கின்னதெனவு மியம்பல்:—வருத்த மென்பது.

வருத்தமற்றச் சஞ்சோக மதமின்றி நன்னூற்பின்போ
யொருத்தரா லேவலின்றி யுலாவுக நசிக்கவேண்டா
வருத்தங்க ளநர்த்தமாகு மளவில்போ கங்கணேயாம்
பெருத்தவாபத் தாஞ்செல்வம் பேரின்ப நிராசைதானே. (5)

(ப - ரை.) வருத்தமற்று = ஆயாசமகன்று, அச்சஞ்சோகம் மதம் இன்றி = பயம் துயரம் கருவம் இல்லாமல், நன்னூற்பின்போய் = சற்சாஸ்திரத்தினைப் பின்றொடர்ந்து, ஒருத்தரால் ஏவலின்றி = நிர்ப்பந்தரகிதனய், உலாவுக = விவகரிப்பாய், நசிக்கவேண் டாம் = விநாசத்தை யடையவேண்டாம், அருத்தங்கள் = அருத்த சம்பத்தியானது! அநர்த்தமாகும் = பெருந்துன்ப வேதுவாம், அளவில் போகங்கள் நோயாம் = போக சமுதாயம் பவரோகத்தைத் தருவதாம், பெருத்தவாபத்தாம் செல்வம் = சம்பத்துகள் யாவுமே மகத்தான வாபத்துக்களைக் கொடுப்பதாம், நிராசைதானே பேரின்பம் = ஆசை யின்மையே பேரானந்தமாம்.

(ஸ்ரீ - வீர.) சோகபய ஆயாசமின்றிக் கருவமின்றிச் சீக்கிரத்தகைமை நிர்ப்பந்த ரகிதமாய் விவகாரத்தைச் சாஸ்திரமுறையிற் செய்தல் வேண்டும் வீணே யழிந்துபோத லாகாதாம். அதிதீக்ஷணங்களான சரச்சிரேணி சதங்களானே சின்ன வாரணங்களை யுடைய போரின்கண்ணும், தற்போதே யேற்பட்டதாய மகாபய மிருத்தியுவாதி ஆபத் துக்களையும் நிவாரணஞ் செய்யும் அஸ்திரமாய, அஜராமர நித்திய நிரதிசய ஆநந்த ஆத்ம வஸ்துவை நன்குகாட்டும் இச்சாத்திரத்தை அவசியம் விசாரிக்கவேண்டும் என்பதாம். வெய்யிற்போதில் வெப்பத்தால் மிக வெம்பிய சிறுகுட்டைத்தீநாற்றச் சேற்றுக்கொப் பான சம்சாரத்தில் மறித்தும் மறித்தும்மரித்து முதித்தும் வாழும் பழையதவளைபோல் வாழவேண்டு மென்னும் வாஞ்சையால் என்னேபயன் ! அதிதுச்சமன்றோ ! என்மோ கிக்கவேண்டும்; வேண்டாமாதலின் போகவாசனையை இருதயத்தினின்றும் ஏக நீக்க வேண்டு மென்றுணர்க; அதன்பொருட்டாய அற்பதிரவியத்தால் என்னே காரியம் ! ஹே ஆரியரே . யாவற்றையுமே விட்டுத்தொலைத்து மோக்ஷ சாஸ்திரத்தையே யாராய்ந் துய்தல் வேண்டும்; விடயாகார விருத்திப் பிரதிபலித சிதாபாசர்கட்கு அந்தக்கரண வச் சின்னம் சைதன்யம்பிம்பம், அந்தக்கரண உபகித சிதாபாசனுக்கோ சுத்தமாய பிரஹ்ம சைதன்யமே பிம்பமாம். பிரதிபிம்ப வதனுபாதி யசத்தியமாம், பிம்பமோசத்தியமாம், ஆண்டந்தக்கரணோபாதி யசத்தியத் தன்மையை யணுகியவழி அதனவச் சின்னபிம்ப சைதன்யத்திற்கும், அதன் சமகியத சிதாபாச பிம்பபூத பிரஹ்ம சைதன்யத்திற்கும், இருந்தபேதமானது மித்தையேயாமென அகண்டசத்திய பிரத்தியக்கபின்னப் பிரஹ்ம சைதன்யமே இனிது எஞ்சாநிற்கும் என்பதாகப் பெரிதாராய்மின் அற்றேல், சாங்கிய பாதஞ்சல கௌதம கணதபுத்த அருகாதிய பிறரோ பிரதிபாதித்த பிரதிபிம்பதைப் பிரக்கிரியையை இச்சித்திலர், மற்றோ, அயலாற்றுனே அயலாற்றுனே நிரூபிப்பவராகி ஆண்டே பிராணிகளைப் பிரேரணையுஞ் செய்கின்றனர், அந்தப் பிரேரணையையும் 'அங்கீ

கரிப்பதா வென்னெனின் ? கூடாதாம், "இரவிதானொருவனுயு மிலங்கிய சலங்களூடே, பரவிய வாறுபோலப் பலபலபலவேயாக, விரவிய சோதியான்மா விளங்குபல் லுபாதி தம்மால், திரவிஃதேகமாயும் பலவெனத் திகழுமாலோ " என்பதாதி சுதந்திரசுருதிப் பிரமாண அநுசாரிகட்குப் பசுப்போலப் பரப்பிரேரணையானே செல்லுதல் அநுசிதமேயாம், பரப்பிரேரணை மதியோடு பசுக்களல்லவோ செல்லும், நீவிர்செல்லன்மின் ! இங்ஙனம் சாஸ்திரார்த்த விசாரணையை விதித்து இப்போது ஜீவனதனபசு புத்திராதி சாம்சாரிக விசாரணையையும் தரிசனாந்தர விசாரணையையும் விடுவிப்பார் இகழ்கின்றார்:— அருத்தங்க ளென்பதால், குட்டையிற் கிழட்டாமைபோலத் தூங்கிக்கொண்டே யிராதீர் எழுந்திருமின் எழுந்திருமின் ! ஜராமரண சாந்தியின் பொருட்டு வேதாந்த சாஸ்திரத்தையே விசாரியுங்கள். பொருள்களின் அடைவோபூரண அநர்த்தமாம், போகக்கூட்டமோ பவரோகந் தருவதாம், சம்பத்தெவையுமோ ஆபத்தளிப்பவாம், யாண்டுமநாதரம் ஈண்டுறும் வெற்றியாம். இதற்குதாரணங்கள் இவையாம்:—இன்னறும்பொருளையீட்டுதலுந்துன்பமே, பின்னதனைப் பேணுதலுந் துன்பமே, அன்ன, தழித்தலுந் துன்பமேயந்தோ பிறர்பா, லிழத்தலுந் துன்பமேயாம். போகமுங்குலமும் பொருளொடுமானம் பொலிவுறு நூலொடுகுணமு, மாகமென்னிவற்றிற் பிணியழி வரசாலரிய் தீனதைசரையரியான், மோகவாதிய ரற்றீயரானமனுன் முற்றுறுபயம் புவிநரர்க்காஞ், சோகவெவ்வியாவும் பயத்தொடு விரவுஞ்சொல்பயமில் வைராகமதே. தன்பலவாதி வியாதியின் சதத்தாற் சனங்களின் சேமமதறுமான், முன்பினையாண்டு புகுமவன் விபத்து மூடியதிறந்தபோன் மூரணும், பின்பினுமுண்டாம் விவசரைகியதம் பின்னொடிதன் வயங்காலன், மன்புரிதருமங்கிரங்குசவிதியான் மனையெதுவது வெதுதிரமே. காயிகள்போகங் கார்க்குழு நடுவுட்கதிர் மினலெனவலைகாலு, மாயுளும் வாயுவறை மரையிலையி லறலெனப்பங்குரமாகுந், தேயுறுமெவன லாலசையெனவே தேர்ந்தினித் துரிதமாய்ப்புதர்கா, ளாயதைரிய சமாதியார் சுலபவரிய யோகினின் மனமமைமின். ஆயுளுமலையிலழியுமெவ்வனச்சீராஞ் சிலதினமனும் பொருள்க, டேயுளதினைவை யுறழுமின்மழையிற் றிகழ்மினலெனற்றிரள்போகம், மாயமங்கையராற் களமுறத்தழுவ மகிழ்வது நொடிபவப்பயநீ, ரேயரிப்பாரங்கடந்திடப் பிரமத்தியைந்திடு மதியராயிருமின். துன்புறமலநடு நியமிததனுக்களாற் றுன்னுறுங்கருமீதி, லன்பினள் பிறிதரவுறுதுயர் விஷமமாமரிய யவ்வனபோக, மின்பெழில் விழியர்களி கணகைக் கிலங்கிழமென்னல நரரேரே, வன்பவ மதுதனிலணுவுங்கிஞ்சிலுஞ் சுகம்வருமெனி னறைவீரே. பிரமனொடு மிந்திரனே முதலனவானவராம் பெருங்கணங் கடமைத்திரண்கண மெனவெங்கிருந்தே, திரமெனுமோவெதன் சுவையாற்றிரிலோக வரசாதியவிபவம் விரசமதாய்த்திகழ்வுறுமோயாதோ, பரமவனவரத மிளிரொன்றது வேயாகப்பனுபோக மிலங்கலுறுமையவருந்தவரே, யுரறவேயொருகணபங்குர மானவதின்வேறுள போகங்களிற் களிப்பையுறு திரு மினிருமின்,

(ச.) வருத்தமற்று = ஆயாசமின்றி, அச்சம் = பயம், சோகம்=துன்பம், மதம் = கர்வம், இன்றி = அற்று, நன்னூற்பின்போய் =சாஸ்திரத்தை யநுசரித்து, ஒருத்தராலேவலின்றி, உலாவுக = விவகாரஞ் செய்வாய், நசிக்கவேண்டா, அருத்தங்கள் = அர்த்தசம்பத்தி=சம்பாதனம், அநர்த்தமாகும்=அநர்த்த நிமித்தமாம், அளவில் போகங்கள் = போகௌகம், நோயாம் = பவரோகத்தைத் தருவதாம், நிராசை சகலத்திலும் அநாதரம். போகௌகம் = போகக்கூட்டம். வருத்தமற்று என்றதானே ஆகாங்க்ஷையின்மையையும், குடிலத்தன்மை யின்மையையும் கொள்க. ஹ்ரூயா என்பது அபிகாங்க்ஷ, இதனினின்றும் ஹயா௨ ரூபம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜனவிவகாரங்களை யனுசரித்து மூரணின்றியிருப்பதும் விசாரத்தால் விவகரிப்பவர்களின் சாஸ்திர ஆசாரங்களை யனுசரித்திருப்பதும் ஆகியகருமத்தானே காலங்கழித்தற் பொருட்டும், அதன்பயனுய சத்தையடையும் பொருட்டும் எழுகையை யங்கீகரியுங்கள் எனப்பலவகையாகப் பகர்ந்ததைச் சுருக்கி யுபசங்கரித்தல்:— இடும்பை யென்பது.

இடும்பைகூர் சங்கமின்றி யியற்கையா சாரமெய்திக்
குடும்பமாந் துயர்சிற்றின்பங் குறித்திடாப் பெருமையோர்க்கு
நெடும்புகழ் வாணுள்செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்தகாலக் கொடிகள்போற் பலிக்குமன்றே.

(ப - ரை.) துயரையுண்டாக்குங் கூட்டத்தோடு கூடுதலின்றி, இயற்கையாசாரம் எய்தி = அழகிய ஆசாரசரிதம் பொருந்தி, குடும்பமாந் துயர்சிற்றின்பம் = சமுசார சௌக்கிய பலதுக்கத்தை, குறித்திடா =விரும்பாமல், இருக்கும், பெருமையோர்க்கு= மகான்கட்கு, நெடும்புகழ் = நீண்டயஸசும், வாணுள் = ஆயுளும், செல்வம் = இலக்ஷ்மியும், நிறைகுணம் = சமதமாதி பூர்ண்குணங்கள், அனைத்தும் = யாவும், உண்டாய்= உற்பன்னமாகி, படும்பலன் = அவற்ருற் கிடைக்கும் நற்பலங்களை, வசந்தகாலக் கொடிகள்போல் = மாதவலதையைமானும், பலிக்குமன்றே = அவையாநந்த முறத்தரும் அன்று ஏ அசை நிலைகள்.

(ஸ்ரீ - வீர.) ஆசாரசாரு சரிதனுகி, ஏகாந்தத்தனுகி, விவேகமதியை யுடையனுகி, குடும்ப சௌக்கிய பலதுக்கதசை யபிலாஷையற்றவனுகி, ஒளிரும் மகானுக்கு, வசந்த காலத்தில் வளர்ந்த கொடிபோல உத்தமபலத்தைக் கொடுப்ப, ஆயுளும் புகழ்களும், குணங்களும் செல்வத்தோடுங் கூடவே யோங்கியொளிரா நிற்கும்.

(ச.) இடும்பைகூர் சங்கமின்றி, விரக்தசித்தனுய், வசந்தகாலக் கொடிகள் (முல்லை) மாதவிலதைகள், படும்பலன்போல் = பலந்தருவதுபோல, பலிக்கும் = சத்பலத்தைத் தரும், அன்று ஏ இரண்டுமசை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சித்த சுத்தியின் பொருட்டுச் சேவிதங்களாய தவ முதவியவற்றிற்கும் சற்சன சேவனவாயிலாகவே ஞானுபயோகமாம், அயலாற்ருலாகாதாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—தவமென்பது.

தவங்களாற் றெய்வநீராற் சாத்திரங்களினுற் போகாப்
பவங்களை யுயர்ந்தோர்பாதம் பணிந்துபற் றறுக்கவேண்டு
மவங்களாங் காமங்கோப மறவுந்தேய்ந் தியற்கையான
சுவங்களினடந்து நன்னூற் றுறைநின்ரே ருயர்ந்த மேலோர்.

(ப - ரை.) தவங்களால் = கிருச்சிரசாந்திராய ணுதிகளால், தெய்வநீரால், தெய்வ கங்கை முதலிய தீர்த்தங்களால், சாத்திரங்களினுல் = நூல்களினுல், போகாப்பவங்களை = கடக்கமுடியாத பவசாகரத்தை, உயர்ந்தோர் பாதம்பணிந்து = சற்புருடரைச் சேவித்து, பற்றறுக்க வேண்டும் = கடக்கவேண்டும், அவங்களாம் = துன்புறுத்தா நின்ற, காமம் கோபம் = லோபமோக ரோஷாதிகள், அறவுந்தேய்ந்து = அத்தியந்தம் அழிந்து, இயற்கையான சுவங்களினடந்து = தங்கருமங்களாகிய நல்லொழுக்கங்களில் ஒழுகி, நல்நூற்றுறை நின்ரேர் = சற்சாஸ்திர முறைப்படி திதிபெற்றவர், உயர்ந்தமேலோர் = சற்சனராவர்.

(ஸ்ரீ - வீர.) சமுசாரசாகர உத்தாரத்தில், சற்சனசேவன மில்லாமல் தவங்களும் தீர்த்தங்களும், சாஸ்திரங்களும் ஜயத்தை யடையாதனவாம், ஞானஉற்பத்தியின் பொருட்டு நாட்டமுடையன வாகாவாம். இப்போது சற்சன இலக்கணமியம்பல்:—அவங்களாமென்பது. எவரது சேவனத்தானே அநுதினம் காமக்குரோத லோபமோகமதாதிகள் சிறுமையை யடையாநிற்குமோ. யாவர்தமது சுபகருமங்களில் நூன்முறையே ஒழுகுவாரோ, அவரேசற்சனராவர். எப்போதும் சற்சனசேவையிற் றற்பரனுக்கு ஒருகால் ஆத்மவித்தின் சங்கமும் அவசியம் உண்டாகும் அதனல் ஞானலாபமுமாம்; ஆன்மஞானிகளின் சங்கத்தானே சற்சனசேவை செய்துவந்த சாதுவிற்கு, தோற்ருநிற்கு மித்திருசியவுலகிற்கு அத்தியந்த அபாவமே தோற்றுமாறு ஞானமுதயமாம். அதனுனே அவனுக்குப் பரமபுருடார்த்தமும் உண்டாகா நிற்கும், திருசிய அத்தியந்த அபாவத்தானே பரம்பொருளே யெஞ்சாநிற்கும் அத்தியந்த அபாவவசத்தானே விரைவில் ஜீவன் ஆண்டே லீனப்படுவன்.

(ச.) தெய்வநீரால் = தீர்த்தங்களால், பற்றறுக்கவேண்டும் = சம்சாரசாகரத்தின் கரையேறுவதற்குச் சற்சனசேவையைத் தவிரத் தவ முதலியவை கைதராவென்பதாயிற்று; அவங்களாம் = பிரயோஜனமற்ற, காமகோபம் = லோபமோகங் கோபங்கள், அறிவுந்தேய்ந்து = அநுதினம் அடங்கி, சுவங்களில் நடந்து = சுபகருமங்களிற் பிரவேசித்து, நன்னூற்றுறை நின்றோர் = சாஸ்திரவொழுங்கிற் சஞ்சரிப்பவர், உயர்ந்தமேலோர் = சற்சனராவர். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இயல்பாகவே இச்சவிகற்பமாய சித்விருத்தியாஞ் சிதாபாசனது உன்மேஷம் ஜகத்தநுபூதியின் உதயமாம், நிமேஷம் அஸ்தமயமாம்; அல்லது இந் நிருவிகற்பரூபமாய சித்விருத்தி யென்னும் சரமசாக்ஷாத் காரத்தினது உந்மேஷம் ஜகத்ரூப அநுபூதியின் அஸ்தமயமாம், நிமேஷம் = அநாவிர்பாவமோ உதயமாம்; ஆகலின் நிமேஷமே பிரத்தியக்கான்மாவின் அவித்யாமலமாம், உன்மேஷமோனநிர்மல்ய லக்ஷண மோக்ஷமாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—நான் என்பது.

நானெனும் பொருள்காணுதோர் ஞானவாகாயங் காணுர்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவாகாய மாவார்
நானெனு மகங்காரக்கார் ஞானவின் மதியைமூடி
னுனெனுப் பரமவாம்ப னன்மலர் விரியாதன்றே.

(ப - ரை.) நான் எனும் பொருள் காணுதோர் = அகஞ்சப்தார்த்தத்தை யறியாதவர், ஞானவாகாயங் காணுர்=பரமார்த்த அம்பரத்தைப் பாராதவர் ஆவர், நானெனும் பொருளைக்கண்டோர் = அகஞ்சப்தார்த்தத்தை யறிந்தவர், ஞானவாகாயம் ஆவர் = பரமார்த்த அம்பரம் ஆவர், நானெனும் அகங்காரக்கார் = யான் என்னும் அகங்காரமேகம், ஞானவிண்மதியை மூடின் = சிதாகாச சந்திரனை யாச்சாதிக்கின், நானெனுப் பரம ஆம்பல் நன்மலர் = நிரகங்கார பரமார்த்த குமுத்வதியானது, விரியாது = மலர்ந்திலங்காது, அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ - வீர.) அறியப்பெருத அகமர்த்தமானது பரமார்த்த அம்பரத்தில் மலமாம், அறியப்பெற்ற அகமர்த்தமோ பரமாத்ம அம்பரமேயாம். அற்றேல் அகமர்த்தம் அகங்காரமாம் அதுயாங்ஙனம் அறியப்பெற்ற போதினும் பரமாத்மாம்பர மாதல் கூடுமெனின்? கூறுதும், எத்துணைதத்துவமாக அறியப்பெற வில்லையோ அத்துணையே யகங்

காரமாம், அஃதறியப் பெறினே அவ்வாறாகார்தாம், நன்றாக அறிந்துகொள்ளினேஅகம் பாவமாகாமல் அறிவாகாய வடிவமாய்விடும்; அம்புதன்னோடு அம்பான்று ஒருமையை யடைதலேபோலும். உண்மையா யாராயின் அகமாதி ஜகத்திருசியம் இல்லவே யில்லையாம்; நன்காராய்ந்தறியின் பாதிக்கப்படுமாயின் யாதுசேஷிப்பதோ எனின்? கற்பிதமாதலின் இவ்வகம்பதார்த்தம் யாதுகொலாம் என்னும் அளவைவாயிலாயாற்றும் ஆராய்ச்சியினுலாய அறிவினுல் ஒருதலையேயாய் அச்சிதாகாசமே பரிசேஷியா நிற்கும். அபிசாசிற் பிசாசுமதி நிருமலமான பிரௌட மதியினர்க்குப் பாதிக்கப்படும், அற்பமார்க்கப் பிரவிருத்தபுத்தி யுடையபாலர்க்கோ, நூறுவகையானே இது பேயல்லவென் றுபதேசித்த போதினும் விசாரணை சம்சயமேயாம், பாதிக்கப்படவே மாட்டாதாம், பாலர்களின்மோகம்போத நிரோதியாவதேபோலப் பிரௌடர்களின் அபிமானமும் அதன் நிரோதியேயாமெனுங் கருத்தாலுரைத்தல்,—ஞானவிண்மதியை யென்பது; எத்துணையுள்ளிருக்கும் அகங்காரமேக ஆவிருதமாகிச் சிற்சந்திரகையானது இருக்குமோ, அத்துணையுமே பரமார்த்த குமுததடாகத்தை மலர்விக்கமாட்டாது; அகமபிமான மகன்றவழியோ, பய இராகமுமுக்ஷயேதுக துவேட இராககோசர நரகசுவர்க்க மோக்ஷதிருஷ்ணையும் அகலாநிற்கும்.

(ச.) நானெனும் பொருள்காணுதோர் = அகஞ்சத்தார்த்தத்தை யறியாதவர், ஞானவாகாயமாகார் = சிதாகாசத்தில் களங்கராவதுபோல், நானெனும் பொருளைக்கண்டோர் அகஞ்சத்தார்த்தத்தை யறிந்தமேன்மைய ராயினவரே, ஞானவரகாயமாவர், ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஐக்கியத்தா லென்பது கருத்து, மூடில் = அஃததனுன் மறைபட்டு நிற்கும் வரையும், பரமவாம்பனன்மலர் = பரமார்த்த கைவல்யமென்னும் குமுதவதியை = ஆம்பலோடையை, மலராது = விகாசஞ்செய்யாது என்பதாயிற்று, அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அகங்காரமானது கெடாவிடில் வருமனர்த்தத்தைக் கூறல்:— மடிவென்பது.

மடிவறுபிறவி யென்னு மரத்திரளென தீதென்னு
நெடியபல் பணைகணீட்டி நிரயமாங் காய்கள்காய்க்கு
முடிவறுதுய ராங்காரமுளையாக விளையாநிற்கு
மிடியிலா ஞானத்தீயால் வேரொடும் வெந்துபோமே.

(ப - ரை.) முடிவறு துயராங்கார முளையாக விளையாநிற்கும் = அநந்த துக்க ஹேதுவாய் அகம்பாவத்தையே யங்குரமாகக் கொண்டுண்டாகா நிற்கும், மடிவறு பிறவி யென்னும் மரத்திரள் = கெடாத ஜன்மமென்னும் விருக்ஷசமுதாயம், எனது ஈதென்னும் = மம இதம் என்னும், நெடியபல்பணைகள் நீட்டி = நீண்டனவாய பலபலவாயிர சாகைகளை விஸ்தீரணஞ்செய்து, நிரயமாம் = நரகங்களாம், காய்கள் காய்க்கும் = பக்குவமற்றபயனைப் பயக்கும்; மிடியிலா = சர்வோதார, ஞானத்தீயால் = ஞானக்கினியால், வேரொடும் வெந்துபோமே = காரணமுமின்றிக் கருகிநீறும்.

(ஸ்ரீ - வீர.) எவனால் அகங்காரவடிவ துர்விருக்ஷ அங்குரம், விசாரபரிஷ்கிருதமனக் கலப்பையானேயே உழுதலான் மூலசிதிலத் தன்மையை யடைவிப்பதாகிப் பிடுங்கியெறியப்பெற்றதோ, அவனுடைய ஆத்மக்ஷேத்திரத்தில், சமுசாரநாசனமாய ஞானப்பயிர் துச்சேதமாய் ஆயிரக்கணக்கான சாகைகள் உற்றதாய் மிகவளர்ந்து பெரும்பயன்றரும். அங்ஙன் உழுது பிடுங்கியெறியா விடினோ, ஞானகுடார மில்லாமல் அழிக்கமுடியாத

இமற்கைவாய்ந்த ஜன்மவிருக்ஷங்கட்கு, அகம்பாவமானது அங்குரமாய், எனது இது என்னும் விஸ்தீர்ண சாகைகள் ஆயிரக்கணக்கா யுண்டாம்.

(ச) முடி + நிற்கும் = அகம்பாவமே யங்குரமாக முளைத்த, மடிவறு பிறவியென்னுமரத்திரள் = ஜன்மமென்னும் விருக்ஷங்கள், எனதிதென்னும் பாவங்களானபலபணை கணிட்டி = பல்சாகைளை மிகவளர்த்து, நிரயமாங்காய்கள் காய்க்கும் = துக்கபலங்களை யுண்டாக்கு மென்பதாறுவயம் மிடி + பேரமேயென்பது கவிநாயகர் கருத்து.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ அகங்காரவடிவத்தையும், ஐயோபாயத்தையும், ஐய பயனையும் வினுதல்:—என்றலு மென்பது.

என்றலு மிவ்வாங்கார மெவ்வுரு வுடைத் தெவ்வாறு
வென்றிட லாகுந்தேக மேவிய மேவா தாயு
நின்றொரு காலம்வென்றா னேருறு பயனேதென்று
நன்றுணர் வள்ளல்கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான்.

(ப - ரை.) என்றலும் = என இவ்வண்ணம் அகங்காரத்தின் கொடுமையையெடுத்து விரித் துபதேசித்தலும், இவ்வாங்காரம் = இயம்பியருளிய அகங்காரம், எவ்வுருவுடைத்து = என்ன ஆகிருதியையுடையது, எவ்வாறு வென்றிடலாகும் = எங்ஙனம் ஏக விடமுடியும், தேகமேவியும் மேவாதாயும் நின்று ஒருகாலம் வென்றால் = சரீரத்தோடு கூடியும் கூடாதாயும் உள்ள இதனை முயன்று ஒருபோது விட்டொழித்தால், நேருறு பயன் ஏதென்று = உண்டாகும்பலன் யாதாம் என்பதாக, நன்றுணர் வள்ளல்கேட்ப = நன்மையை யுணரும் வேட்கைமிக்க ஸ்ரீ இராமபிரான் வினவ, ஞானமார் வசிட்டன் சொல்வான் = ஞானசொரூபமாகிய ஸ்ரீ வசிட்டபகவான் விடைதருவா ராயினர்.

(ஸ்ரீ - வீர.) அகங்காரம் என்ன ஆகிருதியை யுடையது, ஹே பிரபுவே! எந்த வுபாயத்தால் அதை அத்தியந்தம் தியாகஞ்செய்வது சசரீரமாயேனும் அசரீரமாயேனும் இருக்கும் அதனைவிட் டொழிப்பின் எய்துறும் பயன்யாதோ! சசரீரம் = நனவகங்காரம், அசரீரம் = கனுச்சம்பந்தியகங்காரமும் மனோரதசம்பந்தி யகங்காரமும், அல்லது, சசரீரம் = தேகமாத்ர அகம்பாவவடிவது, அசரீரம் = தேகவியதிரிக்த புத்திமாத்திர வுபாதியையுடைய அகம்பாவவடிவது, சர்வாகம்பாவவடிவதும் என்பது பொருள். சசரீரமா? அசரீரமா? அவ்வகங்காரம்.

(ச.) ஸ்ரீ இராமர்: வென்றிடலாகும் = விடுபடும், தேகம் + காலம் = சரீரராயாவது அசரீரராயாவது, வென்றோர் = அதனை விடினவர்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ இராகவர் வினுவுக்கு ஸ்ரீ வசிட்டபகவான் அகங்காரத்தை மூவகையாய்ப் பிரித்து விடைதருதல்:—மூவகை யென்பது.

மூவகை யுலகிலிந்த வகங்கார மும்மை யென்று
மேவருமி ரண்டுநன்று மிகவுமொன் றீனமாகும்
யாவதும் பரமுநாமே யீறிலமெமை யலாதோர்
பாவனையில தென்றோரும் போதமே பரமாங்காரம்.

(ப - ரை.) மூவகையுலகில் = ஜகத்திரயத்தில், இந்தவகங்காரம் = கூறிய அகங்காரம், மும்மை = மூன்றுவகையாகும், என்றுமேவரும் = சாதாரணரால் எப்போதுமே அடைதற் கசாத்தியமான, இரண்டு மிகவும் நன்றும் = இருவகை அதிமேன்மையது,

ஒன்றுமிகவும் ஈனமாகும் = இதரமோ அத்தியந்தம் தியாகிக்கத் தக்கதாகக்கூறாயதாம், யாவதும் = இவ்விசுவம் யாவும், பரமும் = பரமாத்மாவும், நாமே = அகமேயாம், ஈறு இலம் = அகமே அச்சுதம், எமையலாதோர் பாவனேயில்து = எம்மைத்தவிர யாதொரு பொருளுமே கிடையாது, என்றேரும் போதமே பரமாங்காரம் = எனவெண்ணுஞ் சிந்தனேயேபரம அகங்காரமாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! இம்மூவுலகில் அகங்காரம் மூவிதமாக விருக்கும், இரண்டு சிரேட்டங்களாம், இதரம் தியாச்சியமாம், உனக்கு அதன் விபரத்தையறியக் கூறக்கேட்குதி நீ, அசாஸ்திரீய்மாய அகங்காரத்தின் தியாஜனப் பொருட்டுச் சாஸ்திரீயங்களாய இரண்டகங்காரங்கள் விகிதங்களாம், சூக்ஷும ஆத்மவிடயமும் சார்வாத்மிய விடயமும் ஆய அவற்றிற்குத் தத்துவதரிசன அப்பிரதிகூலத் தன்மையுண்மையானும், சாம்பிரதிகத் தன்மையானே சுத்யஜத் தன்மையாற் பரிச்சின்னமற்ற ஆத்மதரிசனவாயிற் றன்மையானும், மேன்மைமிக்க தன்மையுளதாம்; இதரமாய தேகமாத்ர அகம்பாவ ரூபத்திற்கு அநர்த்தரூபத் தன்மையுண்மையின் தியாஜ்யத் தன்மையாம் என்பது பொருள். அகம்சர்வ இவ்விசுவமும் ஆவேன், இது காரியப் பிரஹ்மவிஷய மாயாதல் தற்பத வாச்சியார்த்த விடயமாயாதல் ஆம்; யான்பரமாத்மா அச்யுதன், இது காரணவிடய மாயாதல், தற்பதார்த்த லக்ஷியவிடய மாயாதல், ஆம். அகம்பூதத்திற்கு அயலாயதொன்று இவ்வுலகில் இலவே யில்லையாம், என்னுமிதுபரம அகங்கிருதியாம்.

(ச.) மும்மையென்னும் = திரிவிதமெனப்படும், இவற்றில், இரண்டு நன்றும் = சிரேட்டமாம், ஈனமாகும் = தியாச்சியமாம், யாவதும் = இந்தவிசுவம் அனைத்தும், பரமும் = பரமான்மாவும், நாமே = அகஞ்சத் தார்த்தமான நாமேயாம், ஈறிலமெமைய லாது = அச்சுதமாகிய எம்மையன்றி = ஓர் பாவனை யிலதென்றேரும் = மற்றோர் பதார்த்தமும் இன்றென்றறியும், போதமே பரமாங்காரம்; (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மற்றைய அகங்காரத்தின் இலக்கணமியம்பி, இரண்டகங்காரங்களும் சீவன்முத்தர்பாலிருந்து சுகந்தருவனவாம் எனல்:—செந்நெல்லென்பது.

செந்நெல் வாலினுஞ்சற்றூகிச் செகங்களுக் கயலரயென்று
மன்னுதுமெனக் கொள்போத மற்றையாங் காரமாகு
மிந்நிலையிரண்டுஞ் சீவன்முத்தர் பாலிருந் தீடேற்றித்
துன்னரு முத்திநல்குஞ் சுழல்வுறு பந்தநல்கா

(ப - ரை.) செந்நெல்வாலினும் சற்றூகி = வாலாக்கிரசதகற்பிதனாய், செகங்களுக்கயலாய் = சர்வத்தினும் வியதிரிக்தனாய், என்றுமன்னுதும் = எப்போது மிருக்கின்றேன், எனக்கொள் போதம் = என்று கவரப்பொறும் பேருணர்ச்சியானது, மற்றையாங்காரமாகும் = இரண்டாவது அகங்காரமாகும், இந்நிலையிரண்டும் = இந்தஸ்திதிகள் இரண்டும், சீவன்முத்தர்பாலிருந்தீடேற்றி = மகான்களிடத்தி விருந்து அவர்கட்கநுகூலஞ்செய்து, துன்னருமுத்தி நல்கும் = பெறுதற்கரிய மோக்ஷத்தைக் கொடுக்குமேயலது, சுழல்வுறும் பந்தநல்கா = சுற்றித்திரியும் பந்தத்தைப் பயவாதாம்.

(ஸ்ரீ - வீர.) முதலது ஜீவன் முக்தனாகிய சதுர்த்தபஞ்சம பூமியிலிருப்பவனுக்கு மோக்ஷத்தின் பொருட்டேயுளதா மலதுபந்தத்தின் பொருட்டுளதாகாதாம், இது அப்யாசதசை யடைந்தவனுக்கும் உளதாமெனினும் ஜீவன் முக்தரிடத்திற் பக்குவமாம்

என்பது கருத்தாம். வாலர்க்ரசத கற்பிதனாய் = கேசாக்ரபாகத்தின் சததமபாகமாகக் கற்பிக்கப் பெற்றவனாகி, சோதனத்தானே நிரவயவன் எனச்சமர்த்திதனாகித் தூலத் தன்மையின்மையினாதல், புத்திசூக்கும தத்தன்மை யுபாதிக சூக்குமத்தன்மையின் முடிவினாதல் இத்திருஷ்டாந்தம் ஆமலது அணுபரிமாணத் தன்மையில் ஆகாதாம், அதற்கு அவைதிகத்தன்மை யுண்மை யினானும், " அதுவும் அநந்தியப் பொருட்டுக் கற்பிக்கப் பெறும் " என்னும் சுருதியின் முரண்பாட்டை யடைதலானும் எனவுணர்க. சர்வத்தினும் வியதிரிக்தனாகி யுள்ளேன்யான் எனவுண்டா மிவ்வுணர்ச்சியானது சுபமான இரண்டாவது அகங்கிருதியாம். இதனானே ஆறுவது பூமியையடைந்துள்ள ஜீவன்முக்தனுக்கு இதுமோக்ஷப் பொருட்டேயாமலது பந்தப்பொருட் டாகாதாம் எனக்கருதப்பெறும். யாவர்தாம் சப்தமபூமிகையில் ரூடரோ அவர்களிடத்தே ஜீவனம் வேறோராற்றாற் பெறப்படாமையின் யாதுகற்பிக்கப் பெறுமோ, வாஸ்தவம் அலதாமோ அதுகற்பமாத்திரம், கற்பிப்பவனாற் றானாதல், உணர்பவனாற்றானாதல், பிரத்தியக்ஷமாக அனுபவிக்கப் பெறாமையின்; ஆகலின் அத்தியந்தம் அசத்துவத்தால் அகங்காரமென நாமமாத்திர பரிசேட்த்தால் அகங்கார அபிதைமாத்திரமாம்.

(ச.) வாலினும் = வானுனியினும், சற்றாகி = சத்பங்கற்பமாய், செகங்களுக்கயலாய் = சகலத்துக்கும் வியதிரிக்தமாய், அகஞ்சத்தார்த்த மாகியயாம், மற்றைய ஆவகாரமாகும் = துவிதீயமான சுபாகங்காரமாம்! இந்நிலையிரண்டும் = இத்தன்மையான இரண்டகங்காரமும்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மூன்றாவதைக் காட்டல்:—கரவென்பது.

— கரசரணாதி மட்டா நானிது வென்றுகாணுந்
திரமதுதானே மூன்றும் கங்காஞ் செகத்தோர்க் கெல்லாம்
முரியதாமிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூலமாகும் வருந்தியு மொருக்க வேண்டும்.

(ப - ரை.) கரசரணாதி மட்டாம் இது = பாணி பாதாதிமாத்திரமாய இத்தேகமே, நான் என்றுகாணும் திரமதுதானே = அகமென்னு நிச்சயவடிவமித்யா அபிமானமே, மூன்றாமகங்காரம் = திருதீய அகங்காரமாகும், செகத்தோர்க் கெல்லாம் உரியதாம் = இது இலௌகிகமேயாகும், மிகவும் பொல்லாது = அத்தியந்தம் துராத்மாவாம், உற்பவமென்னும் = சமுசாரமென்னும், நச்சுமரமெழும் = விஷவிருக்ஷம் விருத்தியாம், மூலமாகும் = காரணமாகும், வருந்தியும் ஒருக்கவேண்டும் = வெகுபிரயத்தனப் பட்டும் கெடுக்கவேண்டும். (52)

(ஸ்ரீ-வீர.) கரங்கான் முன்னளவே யாமிதுயான் என்னுமிப் பிராந்தி மூன்றாவது அகங்காரமாம், லௌகிகமேயாம், துச்சமேயாம், துராத்மாவாய இது பெரும் பகையேயாமாதலின் தள்ளத்தக்கதேயாம்.

(ச.) கரசரணாதி மட்டாம் = பாணிபாதாதி மாத்திரமாகிய, நானிவனென்றுகாணும் = இவன் நான் என்றுணரும், திரமதுதானே = நிச்சயமே, உற்பவம் = சம்சாரம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மூன்றாவதகங்காரத்தின் கொடுமையைக் கூறிவெல்லும் உபாயுத்தை விளம்புவல்:—கொடிதென்பது.

கொடிதிது கொடிதுசாலக் கொடிதிதன் கொடுமையாலே
முடிவறு முயிர்களெல்லா மோகமுற் றறிவுகெட்டார்
கடிதிலவ் விரண்டினுங் கடிந்திதெவ் வளவுவிட்டாய்
படிவுறவ் வளவேயெய்தும் பரமமாந் தற்பதார்த்தம். (14)

(ப-ரை.) கொடிதிது கொடிது சாலக்கொடிது=மிகமிகமிகவு முபத்திரவத்தையே தரத்தக்கதாமிது, இதன் கொடுமையாலே =, இவ்வகங்காரத்தினது கொரேத்தினலே, முடிவறு முயிர்கள் எல்லாம்=முடிபில்லாத சகலபிராணிகளும், மோகமுற்று அறிவு கெட்டார்=மயக்கமடைந்து உணர்விழந்தார், கடிதில்=விரைவில், அவ்விரண்டினு லும்=முன்னியம்பிய இரண்டுவித அகங்காரங்களாலும், கடிந்து=கண்டித்து, இது= இம்மூன்றுவது அகங்காரத்தை, எவ்வளவு விட்டாய்=எத்துணை நன்குதியாகித்தாயோ, படிவுறவ்வளவே = அலாகங்காரம் அடங்கிய அத்துணையே, பரமமாந்தற் பதார்த்தம் எய்தும்=மேலாகிய தற்பரம் பொருள் கிடைக்கும்.

(ஸ்ரீ-வீர.) இம்மூன்றுவது அகங்காரத்தானே அழிக்கப்பட்ட ஜந்துவானது மறு படியும் அபரிச்சின்ன சுபாவத்தானே ஆவிர்ப்பாகத்தை யடைவதில்லை; ஆகவின் இதைப்போலும் பெரும்பலப் பகையே கிடையாதாம், ஆதிவியாதிகளாய பலவகைப் பெருந்துயர்களை யீவதுவொன்றிலதாம். சுபாவத்தானே அநாதிகாலந்தொடங்கிச் சம் பந்தித்திராநின்ற இந்தத்துரகங்கிருதியானே கஷ்டீகிருத மதியராய் அதாவது துர்வாச னைப்பிரசய துஷ்பிரவிருத்தியாதி சம்பாதனத்தானே பீடிதசித்தராய், உலகர் சங்கடங் களிலேயே மூழ்காநிற்பர். ஆயின் எவ்வகையானே அதனினின்றும் ஜந்துவிடுபடு மெனின்? உரைத்தல்:—கடிதில் என்பது. சிட்டங்களென முன்புகன்ற எத்துணைய வகங் காரங்கள் உளவோ அவற்றோடு கூடியதாய், மமதைப்பிரயுக்த இராகாதி தோஷங்களை முற்றிலும் கெடுப்பதாய், இச்சர்வான்மபாவ அகங்காரத்தின் கண்ணும், லோகப்பிர சித்த தேகாத்ம பாவாகங்காரம்போலத் திடமுடையதாய், ஜந்துவானது ஹிரண்யகர்ப்ப பகவானுயாதல் ஈசுவரனுயாதல், சுயமாகவே பாவனையாற் சம்பன்னமுற்றுத் தேகாகம் பாவாகங்கார முக்தத்தகைமையை யடையாநிற்கும். அந்நியப் பிரஹ்மநிஷ்டர்களின் சம்மதமும் இவ்வண்ணமேயாகும், அந்நியதேகாத்மபாவ அகங்காரம்போல நிரூடதமங்க ளாய் ஆதிய இரண்டகங்காரங்களையும் முதலி லங்கீகரித்து, தேகமல்லேன் எனவிசா ரத்தாலும் நிர்ணயித்து, அவ்வகங்கார வர்ஜனத்தைச் செய்யவேண்டும் என்பது பழைய மகத்துக்கட்கும் சம்மதமாம். ஆகலின் முதலில் அலௌகிகங்களாய இரண்டகங்காரங் களையும் அங்கீகரித்துத் துக்கதாயினியாய் லௌகிகமாயுள்ள திருதீய அகங்கிருதி யைப் பின்றியாகிக்க வேண்டும். இது இயம்பிய பொருளையே மீண்டும் அனுவதித் துப சங்கரித்ததாம், இதன்கண்ணியம்பிய உபாக்கியானமும் நிதர்சனமாகக் காணலாம்:— இத்துரகங் கிருதியினலன்றோ தாமவியாளகடர் மூவரும் அந்தோ, கதைகளிலும் கேத த்தை விளைவிக்கும்படியான அத்தகைய தசையைப் பெரிதடைந்தனர். இருவினக்கள் இனிது விடைபெற்றபோது ஸ்ரீ இராமர் பொருளான் மூன்றுவதகங்கார நிவிருத்தி பல விணுத்தன்மையானே முடிவுபேறுற்ற மூன்றுவது விணுவில் அத்தியவசியம் தெரியத் தக்கதாய அத்தகைய புருஷஸ்திதிவகை வேறுபாடுகளை விணுதல்:—ஹேபிரஹ்மந் ! சித்தத்தினின்றும் இத்திருதீயமாய லௌகிக அகங்கிருதியைத் தியாகித்துத் தனக்கித மாய எத்திதிப் பிரகாரங்களைப் புருடன் அடைவன்? ஹே இராகவ! இம்மூன்றுவதகங்

காரத்தை முதலில் முற்றினும் விடுத்துத் தொலைக்கவேண்டும். இத்துக்கதாயினியாய அகங்காரத்தைத் தொலைத்தபின்னர், எங்ஙன் எங்ஙன் சர்வாகம்பாவத்தால், சுததாகம் பாவத்தால், சிரவணகுருசுசுரூஷாதி பரமாகவாதல், சப்தபூமிகைப் பேதங்களிற்றூறுதல், எவ்வெவ்வகையானே நிலைபெறுதல் கூடுமோ அங்ஙன் அங்ஙன் சொரூபசுக அபிவ்யக்திமேன்மை லாபத்தால் பரம்பொருளையே யடையாநிற்பன்,

(ச.) கொடிநிது கொடிதுசாலக் கொடிது என்பது கவிநாயகர் கருத்து, இதன் கொடுமையாலே — பரிமிதாகார தேக விடயமான இத்துரகங்காரத்தால், கடிநிது = இவ்வகங்காரம் வருத்தத்தாலும் நீக்கற்கரிதாம், அவ்விரண்டினுளும் = சர்வான்ம போகம் சர்வாதிதோக மென்னும், அலௌகிகமாய்ச் சிரேட்டமான அவ்விரண்டகங்காரங்களையும் அங்கீகரித் தலைவகளால், இது = துக்கத்தைத்தாரா நின்ற லௌகிகமான மூன்றுவதாகிய துரகங்காரத்தை, எவ்வளவு = எப்போது, கடிந்து படிவுறவிட்டாய் = இராகவா நீ அழித்துவிடுவாயோ, அவ்வளவே = அப்போதே, பரமமாந்தற்பதார்த்த மெய்தும் = அடையப்படும், முத்தியடையப் படுமென்பதாயிற்று, = எவ்வளவு = எம்மாத்திர மெம்மாத்திரம், அவ்வளவே = அம்மாத்திரம் அம்மாத்திரம் தற்பதமடையப் படும் என்றுமாம். அறிவுகெட்டார் என்னும் அபிப்பிராயத்தானே அடியோடு இதனை விட்டொழித்துப் பரமாங்காரத்தைப் பழகவேண்டும் என்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சர்வாகங்கார நீக்கத்தை யுபதேசித்து, மோக்ஷத்தின் முக்கிய உபாயத்தை மொழிதல்:—ஏற்றமாமென்பது.

ஏற்றமாமகங்காரங்க ளிரண்டினுற் பரமமெய்தி
யூற்றமா மவற்றைநீக்கி யோரகங் காமுமின்றி
யாற்றலா னிற்றியென்னி லறவுயர் பதமதாகுந்
தோற்றுட னானெனுமை சுருதிகள் சொல்லுமுத்தி. (15)

(ப - ரை.) ஏற்றமாம் அகங்காரங்கள் இரண்டினால் = உயர்ந்தன வாயமுன் மொழிந்தனவாய அகங்காரங்கள் இரண்டின் பயிற்சியினாலும், பரமமெய்தி = பரமதற்பத்தையடைந்து, ஊற்றமாம் அவற்றைநீக்கி = தற்பதமடைவதற் கேதுவாயிருந்த அவ்விரண்டையும் அகற்றி, ஓரகங்கார மும்இன்றி = சர்வாகங்கிருதிவர்ஜிதனாய், ஆற்றலால் நிற்றியென்னில் = திடமனதுடன் நிதிபெறுதியேல், அறவுயர் பதமதாகும் = அதியுச்சபதத்தையே யடையாநிற்பாய், தோற்றுடல் நானெனுமை சுருதிகள் சொல்லும் முத்தி = உடலில் நசையுடன் பிரதீதியாகும் அகமென்னும் அபிமானத்தைச் செய்யாமையே உபநிடதங்கள் உரையாடும் மோக்ஷமாம்.

(ஸ்ரீ - வீர.) உரைத்ததையே விரித்துரைத்தல்:—இரண்டினுலென்பது. முன்னர் மொழிந்தனவாய ஆதிய இரண்டகங்கார திருஷ்டிகளையும் பாவித்துக்கொண்டே யிருக்கும் அநகனாகியபுருடன் பரமமான தற்பதத்தையே பற்றுநிற்பன். பின்னர் அவ்விரண்டையும் நன்குதியாகித்துச் சர்வாகங் கிருதிகளையும் வர்ஜிதஞ் செய்தவனாகி நன்கு நிலைபெறுக, அவ்வாறு செய்தலா லவன் மேலுக்கு மேலாயுள்ள பதத்தையே யடையாநிற்பன், சுகமாயிருப்பன். நூறுமுறை யெனினும் நல்லதே சொல்லுகவென்னும் நியாயம் பற்றி மீண்டுந் தேகாத்மபாவனைத் தியாகுணங்களைக் கீர்த்தித்துக்கொண்டு அத்தனாவசியகத்தன்மையை யுணர்த்தல்:—தோற்று என்பது எப்போதும் எல்லாமுயற்சியானும், பரமானந்தபோதப்பொருட்டு இயம்பிய இம்மதியானே, லௌகிகமாய துரகங்கிருதியை வர்ஜனஞ் செய்யவேண்டும், வேண்டவே சரீர ஆஸ்தையடியமாய், ரூபபாவ

மாய், இருக்கும் எத்தூரகங்காரமுளதோ அதன்வஜனம், அத்தியந்தபரம சிரேயசாம், இதுவே பரமபதமுமாம், ஆராய்ச்சியின் மிகுதியினாலே இந்த லௌகிகமாயதுலை அகங்கிருதியைத் தியாகித்துவிடின் அம்மகான் இருப்பினும் விவகரிப்பினும் இழிவை யெய்துவதேயில்லை.

(ச.) பரமம் ஆனதற்பதத்தை யெய்தி, அவற்றை = அவ்விரண்டையும், நீக்கி, ஓரகங்காரமுமின்றி = சர்வாகங்காரவர்ச்சிதனாய், ஆற்றலானிற்றியென்னில் = இராகவா நீ திடமாயிருக்கின், பதமதாகும் = முத்தியடையப்படும், தோற்றிட ஞனெனுமை = முற்கூறிய தூரகங்காரத்தை வர்ச்சித்துச் சரீரத்தில் விளங்கும், மகாபுண்ணிய ஹேதுயாது அது யோகசாதனமாதலின் சுருதிகள் சொல்லு முத்தி = பரமபதமாம், இதுவேயதற்குச் சாதனமாதலின் மற்றொன்றும் பரமசிரேயசன்றும், என்றதாயிற்று. திரண்டபொருள்:—முற்புகன்ற தூரகங்காரத்தை வர்ச்சித்து எச்சரீர அவஸ்தையுளதாமோ அது மகத்தாயபுண்ணியத்தின் ஹேதுவாம் யோகசாதனத்தன்மையாற் பரமம் சிரேயசு பரமபத மென்பதூஉம் இதுவே அயலன்று தற்சாதனத்தன்மையான்.

(ஸ்ரீ-வீர - அ-கை) ஞானவிவேகங்களின் அபாவம் உளதாயவழி நிர்வாசனைத் தகைமை நேர்ந்தபோதினும் தீப்பயிற்சியானே கெடுக்கப்படும், அவை மிகத் தாட்டியமாயமையினே "அவனுக்குத் தேவரும் அளித்திடாரிடரை, அவனிவர் தமக்கும் ஆத்துமாவாதலின்" என்று மறையறைந்ததிசை தேவரானும் மீண்டும் பந்தஞ்செய்யமுடியாதாம் என்னும் பொருளில் பீமபாசநிடநியாயத்தை யினிதுகாட்டத் தொடங்கல்: இதனென்பது.

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன்முன்னோ
ரதமுற மடிந்தபின்ன ரனையசம்பரன் வேசித்து
மதமுறு மிமையோர்சேனை வதஞ்செய்வா னுபாயந்தன்னை
விதமுற வினையவாறு நினைந்தனன் விஞ்சைவல்லான். (16)

(ப - ரை.) இதனியல்பு உரைக்கக்கேள் = இதனது தன்மையை நன்கு நவிலச் சிரவணஞ்செய்தி, முன் இசைத்துளதாமன் முன்னோர் = பூர்வம் புகன்ற தாமாதி மூவரும், அதமுற மடிந்த பின்னர் = கண்டங் கண்டமா யழிந்தபின்பு, அனைய சம்பரன் வேசித்து = அம்மாயா வல்லவனான சம்பராசுரன் மிகச் சினந்து, மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வா னுபாயந்தன்னை = வெற்றிபெற்றுக் கர்வமடைந்துள்ள தேவசேனையை அதஞ்செய்யும் பொருட்டு என்னுபாயமென்பதை, விதமுற = நானாவிதமாக, இனையவாறு = இத்தன்மைத்தாய், விஞ்சைவல்லான் = மாயையிற் பெருஞ்சமர்த்தனான அத்தயித்தியேந்திரன், நினைந்தனன் = எண்ணுவானாயினன்.

(ஸ்ரீ - வீர) விசாரத்தானே யகங்கிருதியைவிட்டு என்பதாதியாக வருணிக்கப்பட்ட பொருளில், தாமாதிகள் சென்றதன்பின், அச்சம்பராசுரனுடைய சம்பத்தான் மேருசதிருசமான நகரத்தில் நடந்ததேயாய விருத்தாந்தத்தைக் கூறுவாம் கேட்டி! வருணித்தபிரகாரமாக, சரற்காலத்தில் அப்தமண்டலம்போல, மரியாதைமாறிய சமஸ்த சம்பராநீகமானது விநஷ்டமாகிக் ககனத்தினின்றும் விப்பிரட்டமாய்க் கீழே விழவே, தேவநிர்ஜித சைன்யத்தையுடைய அச்சம்பரன் சில வருடங்களைப்போக்கி மீளவும் தேவவதத்தின்பொருட்டு முயன்றவனாகிச் சிந்திப்பானாயினான்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அச்சிந்தையின் பிரகாரத்தையே கூறல்:—தானவ வென்பது.

தானவரென முன்னஞ்செய் தாமனே முதலாமூவர்
ஞானமில்லாமையாலே நானெனதென்று பொய்யாய்
வானவர் போரின்மாண்டார் மற்றினி ஞானநன்னூற்
போனவர் விவேகத்தோராய்ப் புணர்ந்த மாயத்தாற் செய்வேன். (17)

(ப - ரை.) தானவரென = அசுரசேனாநாயகராக, முன் நாம் செய்=பூர்வம் யாம் சிருஷ்டித்த, தாமனேமுதலாம் மூவர்=தாம வியால கடர் என்னும் மூவரும், ஞானமில் லாமையாலே=பிரஹ்மவித்யா விஹீனரானபடியினாலே, நான் எனதென்று பொய்யாய்= மித்தையாகவே தூரகங் கிருதியைப் பாவித்தவராய், வானவர் போரில் மாண்டார்= தேவர்களோடு மெதிர்த்த யுத்தத்திற் பொன்றிப்போயினர், மற்றினி = இப்போது வேறு, ஞான நன்னூற்போனவர் = அத்தியாத்ம சாஸ்திர முணர்ந்தவராய், விவேகத் தோராய் = ஆன்ம அனான்ம விவேகம் நிறைந்தவரா யுள்ளவரை, புணர்ந்த மாயத்தாற் செய்வேன்=என்னிடத்திருக்கு மாயாசக்தியால் உண்டாக்குவேன்.

(ஸ்ரீ - வீர) எத்தாமன் முதலாய அசுரர் என்னுன் மாயையால் உண்டாக்கப் பெற் றனரோ, அவர் மூர்க்கத்தன்மையினாலே யுத்தத்தில் மித்தையாகவே தூரகங் கிருதியைப் பாவித்தனர். இப்போது மாயையினின்றும் உதயமானவராக அன்னியதானவரைச் சிருஷ்டிப்பேன், அவரையும் அத்தியாத்ம சாஸ்திரஞ்ஞராகவும், விவேக மிகுத்தவராக வும் செய்வேன்.

(ச.) நான்செய்=நாம் மாயையினா லியற்றிய, பொய்யாய்=அசுத்தமான அவித்தை யையே பாவித்தவராய், ஞானநன்னூற் போனவர்=அத்தியான்ம சாஸ்திரஞ்ஞர், விவே கத்தோராய்=விவேகசகிதராய், வேறு தானவரை நாம்.

ஸ்ரீ - வீர - அ - கை.) வருமவர் மகிமைநினைந்து சிருஷ்டித்தல்:—மெய்யென்பது.

மெய்யுணர் வுறுதலாலே வெறும்பொய் யாமகங்காரத்தி
னையுறார் விண்ணோர்சேனே நலிவுற வெல்வரென்னு
மையுறு மனத்தினெண்ணி மாயையா லவரைச்செய்தான்
மொய்யுறு வேலைதந்த மொக்குள்போன் மூவர்வந்தார். (18)

(ப - ரை.) மெய்யுணர்வுறுதலாலே=தத்துவபரிஞானத்தினாலே, வெறும்பொய்யா மகங்காரத்தில் னையுறார்=அத்தியந்தம் மித்தையான அகங்காரத்தில் அழுந்தி யழியார், விண்ணோர்சேனே நலிவுறவெல்வர்=தேவர் சைன்யங்களை முதுகுகாட்டிப்பயந்து ஓடி விடும்படிசெய்து செயிப்பர், என்னு=என விவ்வண்ணம், மையுறுமனத்தின் எண்ணி || மிகவுந்தெளிந்த சித்தத்திற் சிந்தித்து, மாயையால் அவரைச்செய்தான்=மாயாசாமர்த்தி யத்தால் அத்தகையரை யாற்றினன், மொய்யுறு வேலைதந்த மொக்குள்போல் மூவர்வந் தார்=தரங்கங்கள் நிறைந்து சப்திக்கும் வாரிதிபடைத்த புற்புதங்கள்போல மூன்றுபேர் வந்தனர்.

(ஸ்ரீ - வீர.) உண்டாக்கப்பெறு மவர் தத்துவபரிஞானத்தினாலே மித்தியாபாவ னையினின்றும் விடுபட்டவராய், அகங்காரத்தை யடைந் தழியார், அத்தேவரையும் வென்றுவிடுவார்; என்றிவ்வண்ணம் மகாமதியினாலே சிந்தித்துத் தைத்தியேந்திரன் அத் தகைய தானவர்களை, வரப்பிராப்தி வித்யாபல வசீகிருத அவித்தை வடிவமாயையி னாலே, வாரிதி புற்புதங்களைச் சிருஷ்டித்தல்போலச் சிருஷ்டித்தான்.

(ச) மெய்யுணர்வு = தத்துவஞானத்தை, வெறும்பொய்யாம்=மித்தியபாவனையா லாகிய, நலங்குற = வதங்க, வெல்வரென்று = செயிப்பரென்று, தைத்தியேந்திரன், மனத்தினெண்ணி = புத்தியினுற் சிந்தித்து, அவரை = அத்தன்மையான தானவரை; மொக்குள்போல்—புற்புதங்கள்போல்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வந்த மூவரது பெருமையைச் சாற்றல்:—அனைத்தையு மென்பது.

அனைத்தையு மறிந்தோர்தம்மை யறிவென வறிவாற் கண்டோர்
வினைத்தொட ரிலாதோர்ஒன்றின் விருப்பமும் வெறுப்புமில்லோர்
நினைத்துள நிகழ்காலத்தி லெய்திய நிலையினிற்போர்
இனைத்துணை யெனினுமைய மிலாதவர் தெளிவுசான்றோர். (19)

(ப - ரை.) அனைத்தையும் அறிந்தோர்=முற்றையு முணர்ந்தவர், தம்மையறிவென வறிவாற்கண்டோர் = தங்களுடைய சொரூபத்தைச் சித்துருவமென விவேக திருஷ்டியாற் பார்த்தவர், வினைத்தொடரிலாதோர்=பாவசம்பந்தமற்றவர், ஒன்றின் விருப்பமும் வெறுப்பும் இல்லோர்=ஒருபொருளிலேனும் ஆசையாதல் துவேஷமாதல் இல்லாதவர், நினைத்துள நிகழ்காலத்தில் எய்தியநிலையில் நிற்போர் = எண்ணிய வர்த்தமானகாலத்தில் அடைவுற்றபடியே விவகரிப்பவர், இனைத்துணையெனினும் ஐயமிலாதவர் = அணுவளவேனும் சந்தேகமில்லாதவர், தெளிவுசான்றோர் = ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த வுத்தமர்.

(ஸ்ரீ - வீர.) அம்மூவரும் எல்லாமறிந்தவராயும், அறியவேண்டியதை யறிந்தவராயும், ஆசையற்றவராயும், பாவமற்றவராயும், வந்து பொருந்தியதை மாத்திரம் செய்பவராயும், ஆன்மாவையே பாவித்துக்கொண்டிருப்பவராயும், உத்தமராயும், இருந்தனர். ஏகவிஞ்ஞானத்தானே சர்வவிஞ்ஞான முண்டாதலின் சர்வஞ்ஞரென்றதாம் அறிய வேண்டிய ஆத்மதத்துவத்தை யறிந்திருக்குந்தன்மையானே வீதராகாதி விசேஷணங்களாம்.

(ச) தம்மை=தமது சொரூபத்தை, வினை=பாவம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவர்கள் நாமங்களையும், நாமங்கட்குத்தக்க நடக்கையையும் நவின்று போர்க்கேவுதல்:—பேரினுலென்பது.

பேரினுல்வீமன் பாசன்றிடனெனப் பிரிக்கப்பட்டோர்
சீரினு லுலகையெல்லாந் திருணமாய்த் தேருஞ்சுத்தர்
போரிலே போமினென்று சம்பரன்புகலப் போகி
நேரிலா வமரரோடு நெடுஞ்சமர் புரியலுற்றூர். (20)

(ப - ரை.) பேரினுல் = நாமத்தால், வீமன் பாசன் திடன் எனப் பிரிக்கப்பட்டோர் = பீமன் பாசன் திடன் என்பதாக இனிது குறிப்பிக்கப்பெற்றோர், சீரினுல் = பிரஹ்மவித்தையின் பெருமையினுல், உலகையெல்லாம் திருணமாய்த் தேரும்சுத்தர் = அசேஷமான ஜகத்தையும் பட்டதுரும்புக்குத் துல்லியமாய்ப் பார்க்கும் பாவஞசயர், போரிலே போமினென்று சம்பரன்புகலப்போகி = சமரிற்சென்று தேவரைச் சாய்மின் என்று சம்பராசுரன் ஆணையிடச்சென்று, நேரிலா வமரரோடும் நெடுஞ்சமர் புரியலுற்றூர்=ஒப்பில்லாத தேவரோடும் உவமையில்லாத பெரும்போரைச் செய்யலாயினுர்.

(ஸ்ரீ - வீர.) அம்மூவருள் பீமன் = கம்பீரசொரூபவிசிட்டன், பாசன்=சதாசொரூபமாகவே யிலங்குபவன், திடன்=திரப்பிரஞ்ஞன், என்னும் நாமங்களாற் பரிலாஞ்சிதராவர், சர்வப்பிரபஞ்சத்தையும் சாம்பியசருகுபோலக் காண்பவர், பவித்திரமான இருதயமுடையவர், அத்தகைய அத்தயித்தியர், மழைகாலத்தில் மேகங்கள் மின்னிக் கர்ச்சித்துக் கோலாகலத்துடன் விண்ணை மறைப்பவேபோல, ஊர்த்தபுவனமுற்று ஆயுதங்களை வீசிக்கொண்டும் கர்ச்சனைசெய்துகொண்டும் அம்பரத்தை யாச்சாதனம் செய்தனர்.

(ச) திரணமாய் = துரும்புபோல், சுத்தர் = பாவனசிலர், அவர் சம்பரன் என்னுந் தைத்திய இந்திரன் போகி=அம்பரத்திற்சென்று.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மூவரும் போரியற்றலையும் அன்னார் பெருமையையும் புகலல்:—எண்ணிலா—பன்மையாம் என்பன.

எண்ணிலா வருடம்வெம்போ ரியற்றின ரிவர்கணெஞ்சிற்
றுண்ணென வெனதியானுந் தோற்றர வுதித்தபோது
நுண்ணறிவாலே யாமாரென் றுற நோக்கலோடும்
புண்ணியமிலாதோர் வாழ்வுபோலது பொய்யாய்ப் போகும். (21)

பன்மையாம் விசாரத்தாலே படாகங்கார மற்றோர்
சன்மமே மரணமேயென் றஞ்சுறு சலிப்பிலாதோர்
நின்மல ரெளிதின்வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்தவெல்லாந்
தொன்மையா நவமாங் கண்ணுற்றுகளறச் சமமாய்க் காண்போர். (22)

(ப - ரை.) எண்ணிலாவருடம் = வெகுவருட கணங்கள், வெம்போரியற்றினர்= அமரகணங்களோடும் கொடுஞ்சமரைச் செய்தனர், இவர்கள் நெஞ்சில்=இம்மூவர் உள்ளத்தில், துண்ணென=திடீக்கென்று, எனது யானும் தோற்றரவு உதித்தபோது=மம இதம் அகம் என்னும் வாசனை கிளம்பியபோது, நுண்ணறிவாலே = சூக்குமவிசார திருஷ்டியினாலே, யாமார் என்று உறநோக்கலோடும் = நாம் யாவர் இஃதென்னே என்பதாக. அழுத்தமாய் நாடியவுடனே, புண்ணியமிலாதோர் வாழ்வுபோல் அது பொய்யாய்ப்போகும்= தருமமற்றவரது ஜீவனம் போனதுபோல அவ்வத்தியாசமும் அத்தியந்தம் மித்தையாய் ஓடிவிடும்.

பன்மையாம் விசாரத்தாலே = பலவகை விசாரத்தாலே, படாகங்காரமற்றோர் = வந்த அகம்பாவமகன்றோர், சன்மமே மரணமேயென் றஞ்சுறுசலிப்பிலாதோர் = ஜன்மஜராமரணங்கள் உண்டென்னும் அச்சமேயின்றி யசலமானவர், நின்மலர் இராகத்துவேடமின்றி மிகத்தெளிந்தவர், எளிதின்வந்த பொருள்கொள்வோர் = அதிசுலபமாகக் கிடைத்த வத்துக்களைக்கொண்டே விவகரித்துக்கொள்பவர், நிகழ்ந்தவெல்லாம் கொள்வோர் = வர்த்தமான மியாவற்றையும் அநுசரிப்பவர் தொன்மையாம் நவமாம் கண்ணால் துகள்அற சமமாய்க்காண்போர் = பிராசீனமாய் அற்புதமாய் இலங்கும் ஞான திருஷ்டியாற் குற்றமின்றிச் சந்ததம் ஒப்பாகப்பார்ப்போர், அம்மூவருமாவர்.

(ஸ்ரீ - வீர.) தேவர்களோடுங்கூட அம்மூவரும் அநேகம் சம்வற்சரங்கள் போரைப் புரிந்தனர், விவேகவசமாகவே யிருந்தனரன்றி அகங்காரத்தை யொருக்காலும் அசைந்திலர், அவர் தமக்கு எப்போதாவது உள்ளத்தில் அகம் மம இதமென்ன வாதனை எழும்புமாகும், இஃதென் யாமார் என வுண்டாம் ஆராயச்சியினால் அப்போதே அது அசத்தியத் தன்மையை யடைந்துவிடும். அகங்காரமற்றவராயும், ஜராமரணபயம் இல்லாதவராயும்,

கிடைத்தபொருட் கொண்டியற்றுபவராயும், தீரராயும், வர்த்தமான அனுசாரியராயும், நித்தியம் அசக்தபுத்தியராயும், அன்னியரை ஹதஞ்செய்தபோதினும் உறஞ்செய்தோ மென்னும் அபிமானமற்றவராயும், வாசனைக்கூட்டத்தால் வளைப்புறாமல் விடுபட்டவ ராயும், காரியங்களை யியற்றியபோதினும் கருத்துருத்துவமில்லாதவரும், ஆகியே போர் புரிந்தனர்; ஆயின் அவர்கட்குச் சங்கரத்திற் பிரவிருத்தியுண்டாயது யாங்ஙனம் என்னின்? இங்ஙனமாம், பிரபுவாகிய சம்பரனுடைய திருஷ்டியானே இதுகாரியம் அவனுக்கஞ்ஞத் தன்மையுண்மையின், பிரபுவின்காரியம் ஆகலினிது செய்பத்தக்கதாம் என்றெண்ணிச் சங்கரதற்பரர்களாய், இராகத்துவேடமற்றவர்களாய், எப்போதும் சமதிருஷ்டியுடைய வர்களாய் இலங்கிய அம்மூவரும் தேவசேனையை ஹதஞ்செய்யப் பிரவிருத்தித்தனர். சேவகர்களாய் இருப்பவர்கள், சத்தாகவாதல் அசத்தாகவாதல் இருப்பினும் பிரபுவின் காரியம் அவசியம் ஆற்றத்தக்கது, என்பது நியதியாம் என்னும் ஹேதுவினாற் சமரிற் றற் பரர்களானார்கள், பலாபிலாஷையின்பொருட்டு ஆயிலர்கள் என்பதாம்.

(ச) என தியானும் = இஃதெனது இவன் நான் என்னும், தோற்றரவு = வாசனு பேதங்கள் உதித்தபோது = எப்போது உதித்ததோ அப்போது, நுண்ணறிவாலே யாமா ரென்றுறநோக்கலோடும் = சொச்சொரூப விசாரவேதுவினால், அது பொய்யாய்ப் போகும் = அவ்வாதனைகள் அசத்தியத்துவமடையும், அவர்கள் பிரஹ்மவித்துக்களாத லால், ஞானத்தினால், அகந்தை மமதைகள், இன்றெனபது பொருள்.

நின்மலர் = இராகத்துவேடமின்மையர், நிகழ்காலத்து, எளிதின்வந்த பொருள், கொள்வோர் = கிரகிக்குந்தீரர்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்மூவரால் அமரர்சேனை வெந்நிட்டோடி ஸ்ரீமந்நாராயண ரைச் சரணடைய அவராலவர் மோக்ஷமடைதல்:—ஆதல்—அடையென்பன.

ஆதலால் வீரரான வவர்களா லமரர்சேனை
காதலாற்புசித்து மாய்க்குங் காமுகர் செல்வம்போலப்
போதலே புரிந்துதிக்கிற் போயொளித் துலகமுண்ட
மாதவா சரணமென்றே மாயனைச்சேர்ந்த தன்றே. (23)

அடைக்கலம் புகுந்தவானோர்க் கஞ்சலென் றபயநல்கி
விடைத்துவர் தமரின்போதும் விண்டுவோ டரும்போர்செய்து
படைக்கல நேமியேவப் பாய்க்கன றீய்க்கத்தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன்வாழுந் தூயவைகுந்தம் புக்கார். (24)

ப - ரை. ஆதலால் = மேற்கூறிய ஞானகுணசம்பன்னராதலினால், வீரரான அவர்க ளால் = அதிதீரவீரசூரர்களான அம்மூவரால், அமரர்சேனை = தேவசைன்யம், காதலாற் புசித்துமாய்க்கும் = ஆசையால் அளவுகடந்து போகித்துக் கெடுத்துக்கொள்ளும், காமு கர் செல்வம்போல = ஆசாவான்களது ஐசுவரியம்போல, போதலேபுரிந்து = ஓட்டமே யெடுத்து, திக்கிற்போயொளித்து = திசைகளிற்போய் மறைந்து, உலகமுண்ட = பல்வுல கங்களைப்பற்றிப் பவளத்திருவாயில்வைத்த, மாதவா = இலக்குமிநாயக, சரணமென்றே = தேவரீரே சரணாகதியென்று, மாயனைச் சேர்ந்ததன்றே = மகா மாயாவியாகிய ஸ்ரீபக வானை அப்போதே அடைக்கலம் புகுந்தது. அன்று ஏ அசை யெனினுமாம்.

அடைக்கலம் புகுந்த வானோர்க்கு = சரணாகதியடைந்த தேவர்கட்கு, அஞ்சலென்ற

பயம் நல்கி=பயப்படாதீர்கள் என்று அபயஸ்தந்தந்தருளி, விடைத்துவந்து கோபித்து எழுந்தருளிவந்து, அமரில்=போரில், மோதும்=போர்புரியும், விண்டுவோடு=ஸ்ரீமகாவிஷ்ணுவோடு, அரும்போர்செய்து=அம்மூவரும் சம்பராசுரனும் அருமையான யுத்தத்தைப்பற்றி, படைக்கலநேமியேவப் பாய்கனல் தீய்க்கத்தீய்ந்து = சர்வாயுத சிரோரத்ரமாகிய சக்கிராயுதத்தை ஸ்ரீபகவான் ஏவியருள அதனினின்றும் எழுந்த அக்கினிஜ்வாலையாலே தகிக்கப்பெற்றுப் பஸ்மமாகி, தொடைத்துழாய்மார்பன்வாழும்=துழாயலங்கல் திருமார்பில் வேய்ந்த ஸ்ரீயப்பதியெழுந்தருளியிருக்கும், தூயவைகுந்தம்=பரிசுத்தபரமபதத்தையும் ஸ்ரீவைகுண்டத்தையும் முறையே, புக்கா=அடைந்தனர்.

(ஸ்ரீ.-வீர.) அத்தெய்வசேனையானது, வீரர்களாய பீமபாசதிடாதி தானவர்களானே, போக்தாக்களானே தமதன்ன இலக்குமி, வேகமாக வசீகரிக்கப்பட்டு சேவாதிவால் அயிலப்படுவதேபோல, ஹதமாக்கப்பட்டது, அயிலப்பட்டது, தம்வயப்படுத்தப்பட்டது, பஸ்மமாக்கப்பட்டது. ஸ்ரீ கங்கையானது இமயமலையினின்றும் விழுந்து ஓடுவதேயென்னக் கீர்வாண வாகினியானது, பீமபாசதிடர்களானே தூளாக்கப்பட்டுத் துன்புற்று அதிவேகத்தோடும் விழுந்தடித் தோடிப்போயது. வாதத்தினாலே பீடிக்கப்பட்ட அப்தமாலிகையானது சைலத்தைச் சரணடைவதேபோல, அந்தச் சுர அநீகினீ=சைன்யம், பாற்கடலிற் பள்ளிகொண்டருளும் ஸ்ரீ பகவானாகிய தேவதேவனைச் சரணடைந்தது, விடபுருடரானே வலுவிற் புணர்வதற்காய்ச் சூழப்பெற்றதாற் பயந்துள்ள ஒண்டியாயிருக்கும் இரமணியை அவன் நாயகன் தேற்றுவதொப்ப, அசுரர்களானே அச்சமடைந்த அமரசேனையை ஹரியானவர் ஆசுவாசமாற்றி யருளினர். பின்னர் சௌரிசம்பரர்கட்குத் தாருணமான யுத்தமான துண்டாயது, கற்பாந்தத்திற்போல அகாலத்திலும் இனிதெழுந்து செல்லும் குலாசலங்களை யப்போர் உடைத்தாயிருந்தது. அச்சமரில், பலவாகனத்தையுடைய தைத்தியன் இறந்தனன், ஸ்ரீநாராயணரால் ஹதம்பண்ணப்பட்ட சம்பரன் வைஷ்ணவபுரியை அடைந்தனன். "மூவுலகிறையா யாழி முதிசனுர்த்தனனென்மோத, யாவர்தா மசுரர்போனார் யாழி போன் மொய்ம்பகேட்டி, ஆவவரெவரு மாயனரும்புர மடையலானார், தேவன் வெஞ்சினமும் நல்லவரமெனத் திகழுமன்றே" எனச் சாஸ்திரமுமுளதாம். அவ்விடயமான அமரில்; பீமபாசதிடாகளாகிய அவர்களோ, பவனனாலே தீபங்கள்போல ஸ்ரீமகாவிஷ்ணுவினாலேயே விதேக கைவல்யத்தை யடைந்தனர். அவர்கட்கும் சம்பரனுக்கேபோ லசைவுற்ற தேசாந்தரகதியை நிடேதித்தல்:—சாமி யத்தன்மையையடைவுற்ற தீபங்கட்குப் போங்கதியறியப் பெறுததேபோல, நிர்வாசனையே யுடையவர்களாயிருந்த அம்மூவர்களும் சாந்தியையடைந்தபோது இவர்தங் கதியறியப் பெறவில்லை. கதிகாரணம் வாசனையேயன்றோ, அஃதின்மையின்கதி யாண்டைய தென்க. நிர்வாசனைத்தன்மை புண்மையின் அவர்கட்குக் கதியின்மையினானே கதியறியப் பெறவில்லையென்பதாம். "பற்றுளனெவனவன் புயில் வினையோடும் பற்றுதலடைவன் எவன் மனம் பற்றறும் பற்றுறவடைத லெங்ஙனமவனே" என மறையு மிருக்கின்றது.

(ச.) அவர்களால் = வீமாதி தானவர்களால், போதலேபுரிந்து=இமயகிரியினின்றும் வீழாநின்ற கங்கைபோல அடிபட்டோடி, சேர்ந்தது=வாயுவாற் பீடையுற்ற மேகக்குழாஞ் சயிலத்தை யடைவதுபோ லடைந்தது. விடைத்துவந்து = பெருங்கோபங் கொண்டெழுந்தருளி, விண்டுவோடு = க்ஷீரசாகர சயன தேவனோடு, அத்தயித்தியர், அரும்போர்செய்து, படைக்கலநெமியேவ=அம்மாயன் சக்ராயுதத்தை யனுப்ப, பாய்கனல்=அஃதுமிழும் அக்கினிச்சுவாலை, 23—24.

(ஸ்ரீ - வீர - அ - கை.) முதலிய கதையைப் பிரகிருதத்திற் பொருத்தி யுபசங்கரித்தல்:—மற்றென்பது.

மற்றினி யிந்தவாற்றால் வாதனையாலே பந்தம்
பற்றுறு மதனைநீங்கிற் பந்தம்போம் விவேகத்தாலே
யுற்றறி வுண்மைசேரி லுளத்தில் வாதனைபோம் போனா
லற்றயில் சித்தநெய்தீர் தீபம்போ லாகுமன்றே.

(ப • ரை.) மற்றினி யிந்தவாற்றால்=நிர்வாசனையையுடைய பீமாதிகள் மோக்ஷமேயடைந்தவிதனால், வாதனையாலேபந்தம் = வாசனையினாலே பத்தமாம். பற்றுறு மதனை நீங்கில் = பற்றுற்ற அவ்வாதனையகலில், பந்தம்போம்=கட்டகலும், விவேகத்தாலே= பகுத்துணர்வானே, உற்று அறிவு உண்மைசேரில் = ஞானத்தையடைந்து சத்தியத்தைச் சார்ந்துவிடில், உளத்தில் வாதனைபோம்=சித்தத்திற் சேர்ந்துள்ள வாதனை தீரும், போனால் = தீர்ந்தொழியின், அற்றயில்சித்தம் = குற்றமற்ற நெஞ்சகம், நெய்தீர் தீபம் போலாகும் = தைலமில்லாத விளக்குப்போல ஆய்விடும். அன்று, ஏ அசைநிலை. அன்றே=வாசனைபோன வக்கணமே யெனினுமமையும்.

(ஸ்ரீ - வீர.) ஆகலின் வாசனையாற் பத்தமாம், நிர்வாசனை மனமுக்தமாம், ஹே இராகவனே! விவேகத்தானே நிர்வாசனைத்தன்மையை அவசியம் நீ சம்பாதிக்கவேண்டும். அச்சம்பாதனையின்கண்ணே யாதுகொலோ வுபாயமெனின்? அதனைக்கூறல்:— உற்றறிவென்பது. எவ்வாறிருக்குமோ அவ்வாறான அருத்தகோசரமாகச் சம்யக்காலோகனத்தால் இரத்தினதத்துவ சாக்ஷாத்காரம்போல நீண்டபோ தாராய்ச்சியினிரந்தரப் பழக்கத்தாலேயுண்டாய சாக்ஷாத்காரத்தால் வாசனை யத்தியந்தம் லீனமாம், வாசனை விலயமரிசியவழி மனமானது தீபம்போலும் நாசத்தையடையாநிற்கும். சம்யக்காலோகனப் பிரகாரத்தை யிப்போது காட்டுவாம்:—பூர்ணமாகிய பரமார்த்த சத்திய சிதாத்மாவண்டு எவ்விடத்திருசியத்தைப் பாவிக்கின்றதோ அது ஒரு சிறிதுமே, மெய்யேயல்லவாம், ஆகலின் அத்திருசியத்தின் பாவனை வடிவதரிசனமும் திருசிய விசேஷாகாரமாக இலவேயிலையாம் என்பதான, ஸ்வப்பிரகாசசின்மாத்திர பரிசேடமாமித்தரிசனமே சம்யக்கீக்ஷணமாம். ஆன்மாவே யிவ்வுலகமுழுவதும், யார்தான் எதைத்தான் எங்குதான் பாவிப்பதோ, முதலிரண்டும் திரிபுடிநிட்டதம், மற்றது ஆதாரநிட்டதம், ஆகலின் பாவனையென்பதுமே கிடையவே கிடையாது, இது அதன் சமஸ்கார நிட்டதம், அங்ஙனமாய இதுவே சம்யக்கீக்ஷணமாம். ஹே இராகவ இவ்வீக்ஷணம்பற்றிப் பீமாதியர்போலச் சுகமாகவாழ்தி, நினக்குபதேசித்த இது எமக்குமுன் எமது பிதாவாகிய ஸ்ரீ பிரஹ்மதேவரால் அருளப்பெற்றதாம்.

(ச.) ஆகும்=சமமாம்.

பீமபாசதிடர் கதை முற்றிற்று.

## தாசூரன் கதை.

(ஸ்ரீ-வீர - அ கை.) ஆன்மமனோநிக்கிரகமே முக்கிய உபாயம், வேறாய போகேச்சைத்தியாகம் சத்சாங்கம் விவேகம் ஆத்மபோதரூட சமாதி பயிறல் என்பன வாதியெல்லாம் அதன்பொருட்டனவேயாம் என்னுங் கருத்தால் அதனையே முதலில், அவித்தை

யின் சாந்திவாய்ந்த உல்லாசங்களால் விஷயோன் முகமாய தமதுமனத்தை யாவர் நன்கு வென்றனரோ அவரே மகாசூரர் சாதுக்கள் யாவற்றையும் வென்று விளங்குபவர் ஆவர் என்பதாகப், பிரசம்சைசெய்துகொண்டு மாயபத்தையொழிக்கும் மநோநாச உபாயத்தைக் கூறத்தொடங்கல்:—ஒழியாத என்பது.

(ச - அ - கை.) முன்பு வீமாதி கதையில் அகங்கார பரித்தியாகம் புருடார்த்தத்தைக் கொடுக்கச் சமர்த்தமாமெனப்பட்டது, இனித் தாசூரன் கதையில் அதனை ஸ்தாபித்தற்காக ஜகத்திற்கு மாயாமயத்துவம் விசதமாகச் சொல்லப்படுகின்றது, விசதம்=தெளிவு அதில் இப்போது உபாய முபதேசிக்கின்றார்:—ஒழியாத என்பது.

ஒழியாததுயர் மாயையெனு மாபத்தையொழிக்க மனநாசமோ ருபாயமாகு, மிழியாத மெய்ஞ்ஞானப் பொருளையெல்லா மியம்பக்கேட் டயாரமலிதயங்கொள்வாய், பழியானயோகத்தி னிச்சைதானே பந்தமாமதுவிடலே பரமமாகும், வழியான பன்னூலாற் பயன்கொலென்ன வருந்தாம லிவ்வழியே வருதல்வேண்டும்.

(ப - ரை.) ஒழியாத துயர் மாயை எனும் ஆபத்தை = எப்போதுமே துன்பத்தை விளைவித்துக்கொண்டிருக்கும் பொய்யாய சமுசாரமென்னப்பட்ட சர்வ உபத்ரவமீவதை, ஒழிக்க = அடியோடுங் கெடுக்க, மனநாசம் = தனது மனதின் நிக்கிரகம், ஒருபாயமாகும்=ஒன்றே யுபாயமாக உள்ளதாம், இழியாத=பயனிற் குறையாத, மெய்ஞ்ஞானப் பொருளையெல்லாம் =சத்தியஞான சர்வஸ்வ முழுவதையும், இயம்ப = உபதேசிப்ப கேட்டு=ஒருமையுடன் சிரவணித்து, அயராமல்=சமுசயாதியான் மயங்காமல், இதயம் கொள்வாய்=உனது இருதயத்தில் அவதாரணஞ்செய்தி, பழியான=நிந்தைக்கிடனான, போகத்தின் இச்சைதானே = போகங்களிலுள்ள இச்சைமாத்திரமே, பந்தமாம் = கட்டாம், அதுவிடலே பரமமாகும்=அதன் தியாகமே மோக்ஷமெனப்பெறும், வழியான= மார்க்கங்களான, பன்னூலால் = அன்னிய பல சாஸ்திரசந்தர்ப்பங்களால், பயன்கொல் என்ன = யாது பிரயோஜனங்கொல்! வருந்தாமல்=ஆயாசப்படாமல், இவ்வழியே வருதல் வேண்டும்=இதனையே செய்துதீரவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) சர்வ உபத்ரவதாயியாப்புள்ள இச்சம்சார துக்கத்திற்குத் தனது மனதின் நிக்கிரகரூபமாய ஒரேயுபாயமுளதாம். மநோநிக்கிரக உபாயங்களுள்போக இச்சைத்தியாகம் முக்கியம் எனக் கூறல்:—இழியாத என்பது. ஞானசர்வ ஐசுவரியத்தைக் கேட்பாயாக, கேட்டுத்தான்பின் இருதயத்தினிது துணிதல் வேண்டும், போக இச்சைமாத்திரமே பந்தந்தருவதாம், அதனது தியாகம் மோக்ஷமெனப் பெறும். அன்னிய சாஸ்திர சந்தர்ப்பங்களால் என்னே பிரயோஜனம், யாவற்றையும் ஒழித்து இதனையே செய்தல் வேண்டும்.

(ச.) ஒழியாததுயர்=அநவரதந் துக்கமயமான, மாயையெனும்=அசத்தியமான சம்சாரமென்கின்ற, ஆபத்தை=சர்வோபத்திரவத்தையும், ஒழிக்க=நிவர்த்திசெய்ய, மனநாசம்=தன் மனத்தினது நிக்கிரகம், ஒருபாயமாகும்=ஒன்றே உபாயமாம், இழியாத= குறையாத, மெய்ஞ்ஞானப்பொருளையெல்லாம்=மெய்ஞ்ஞானமாகிய சர்வசொத்தையும், போகத்தின் இச்சைதானே=போகேச்சைமாத்திரம், பரமமாகும்=மோக்ஷமாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அப்போக இச்சைத் தியாகத்தின் கண்ணும், விடயங்களிற் றோடதரிசனத்தினால் அச்சமுண்டாதல் உபாயமாம் எனக் கருதிக்கூறல் :—இன்பமென்பது.

இன்பமிதா மின்பமிதா மென்றவெல்லா மெரியென நஞ்செனநினைகி வேற்றத் தாய்வாய்த், துன்புறுபோகம் பலகாற் றேர்ந்துநெஞ்சிற் றோயாமலெளிதருந் திற் சுகமேயாகும், வன்புபயின் மனத்தோற்ற நாசமாகு மனத்தினது நாசமே மகத்தாந்தோற்றம், நன்பரமஞானிக ணெஞ்சிறந்துபோகு நடைவிலங்கா மறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம்.

(ப - ரை.) இன்பம் இதாம் இன்ப மிதாம் என்றவெல்லாம் = யாது யாது சுவாது சுவாது எனத் தோற்றுகிற்குமோ அவ்வியாவற்றையும், எரியென நஞ்சென நினைக = வன்னி யெனவும் விட மெனவும் பார்த்தல் வேண்டும், ஏற்றத்தாழ்வாய் = விஷமமாய், துன்புறுபோகம் = துயர்மயபோகம், பலகால் தேர்ந்து = மீண்டும் மீண்டும் நன்கு விசாரித்து, நெஞ்சில் தோயாமல் = மனத்தால் நன்குபரித்தியாகித்து, எளிதருந்தில் = சுலபமாகச் சேவிப்பதாயின், சுகமேயாகும = ஆனந்தத்தையே யளிப்பதாகும், வன்புபயில் மனத்தோற்றம் நாசமாகும் = அடங்காமற்றிரியும் மனத்தினது அப்யுதயம் அழிவதாகும், மனத்தினது நாசமே மகத்தாந்தோற்றம் = மனோநாசம் மகோதயமாம், நன்பரமஞானிகள் நெஞ்சிறந்துபோகும் = நல்ல மேலான ஜீவன் முத்தரது மனம் நாசத்தைநண்ணும், நவைகூர்நெஞ்சம் அறிவிலர்க்கு = மலின வாசனுவிசிஷ்ட மனமானது அஞ்ஞானிகட்கு நடைவிலங்காம் = காலிற்பூட்டிய சங்கிலிக்கொப்பாம்.

(ஸ்ரீ - வீ ர) இவ்வுலகின்கண்ணே யாதுயாது சுவாதாமோ அவ்வியாவற்றையுமே விட வன்னியென்னவே காணல் வேண்டும். ஆண்டாராயாமல் துரிதமாக விடயத்தியாகஞ் செய்யின் துயரத்தைத் தருவதேயாகும்; விசாரித்துக் குருசாஸ்திரக்கூறிய முறையாகத் தியாகஞ் செய்யினே, தொடக்கத்தில் துயரமாயிருப்பினும், பிற்போதில் மகத்தாஞ் சுகத்தை யளிக்குமென்ல் :—ஏற்றமென்பது. விசாரமில்லாமல் விடயங்களின் அபோகமாய தியாகம் விடயமாம், மறித்தும் மறித்தும் நன்காராய்ந்து சகஞப்பியாசத்தால், மேலே முறையாக போகவர்சனையைப் பரித்தியாகித்துச் சேவிக்கப்பெறுவதாயினே பரிபாகத்தில் இன்பத்தையே யினிதீவதாம் காமாதி பிரவிருத்தியற்ற மனமானது யாதுசெய்யுமெனின்? கேட்டி! ஆத்மாயாது? எத்தகையதுதான்? எச்சாதனங்களாற்றன் கிடைக்கும்? கருமங்களாற்றனு அல்லது ஞானத்தினுற்றனு? எத்தகையதுதானந்தஞானம்? அதனது சாதனங்கள்தாமெவை? என்னை, நானுவிதவாதிகளால் அயல்வகையாய் நிரூபிக்கப்பெறுதலின்; என்பனவாதி வெகுவித சந்தேகங்களேயாய உக்கிரமான கெட்ட மைந்தரையுடையதும், சரகோப சாகைகளாய்ப் பிரிந்திலங்கும் நானுமனோரத ஆரம்பங்களோடு கூடியதும், திருஷ்ணைகள் வடிவ அநேக மனைவியரையுடையதும், துலசரீர பஞ்சரத்தையுடையதும், ஆகிய மனமாந் தனது சொரூபத்தைக்கெடுத்து, தனது ஈசுரனுய பிரத்தியக்காத்மாவைச் சம்பந்தித்துள்ள ஜீவன் முக்திவடிவ பரமபுருடார்த்தத்தைச் சாதித்துவைக்குமென்றுணர்தி. மனமானது எம்முறையில் தன்னை நாசஞ்செய்யும் எனக்கடாவின் விடைதருதும், முதலில் மனது தனதுபுஷ்டிக்கேதுக்களாய சத்துரு மித்துரு அசாது சாது ஆதிவிகற்பங்களை விடுகின்றது, யாங்ஙனமெனின்? இவ்விகற்பங்களில் தனதுற்பாதனத்திற்போல நிக்கிரகத்தினும், சமர்த்தத்தன்மையை நன்கு சிந்தித்தென்க. அதன்பின் தேகாகாரமான தனது கற்பிதரூபத்தைத் திருணம்போலும் தியாகிக்கின்றது; எவ்வளவேதான் தேக அகம்பாவத்தால் வாசிதமாய மனமானது தேகாகாரமாமோ, அவ்வளவே, தேக அநுகூலபிரதிகூல விடயங்களில் இராகத்துவேடாதிகளாலுளவாம் ஆயிரக்கணக்கான விகற்பங்களானே வளராநிற்கும் அஃ

தொழிந்து க்ஷீணமாயினு க்ஷீணத்தை யடையும் என்பது கருத்து. அற்றேல், தன் னாசத்திற்கு அப்புதயத்தன்மை யின்மையின், மாருகவோ, அனர்த்தரூபத்தன்மை யுண் மையின், ஆண்டு மனம் பிரவிருத்திப்பது யாங்ஙனம் எனின்? கூறல்:—வன்பென்பது. மனோநாசம் அப்புதயம் ஆம்; இஃதபிப்பிராயம்:—மனம் சுதந்திரமதாக அப்புதாபத்தை யிச்சிக்கின்றதில்லை, மற்றே, ஆத்மபூதத்தன்மையான், ஆத்மபூதத்திற்கும் மனோபாவம் அனர்த்தமாம் அதன் நாசமோ, சர்வ அனர்த்தவிநாசரூபத்தன்மையானும் நிரதிசய ஆநந்த சொரூப பரிசேடத்தானும் அப்புதயமே யென்பதாம். பிரத்தியக் காத்மாவிற்கோ, சொரூபலாபத்தான் மகோதயத்தன்மை நிர்விவாதமேயாமென்னுங் கருத்தாலுரைத் தல்:—மனத்தினதென்பது. மனோநாசம் மகோதயமாம். ஆயின் தேக அகங்காரத்தியாக மாத்திரஞ் செய்யத்தக்கதாம், பிரஹ்மான்மத்தன்மை ஞானத்தானே பிறக்கும்பயன் யாதுகொலா மாலோவெனின்? அதன்கண்ணிதுவாமெனல்:—நன்பரமவென்பது. பிரஹ் மாத்மைக்கியத்தை யுணர்ந்தவனது மனது நாசத்தை நன்கு நண்ணுநிற்கும்; அஞ்ஞனுக்கு அஞ்ஞானரூப மலமெனும் ஆவரணம் கெடாதபடியினால் அவன் மனம் மீளவும் உதித் துதித்து வளர்ந்துகொண்டே யிருக்கும்.

(௪.) இன்பமிதா மின்பமிதாமென்று = எந்தெந்தப்பொருள் இதமென்று மனதுக் குத் தோன்றுகிறதோ, அதெல்லாம் = அஃதனைத்தும், எரியென நஞ்சென = வந்நி போலும், விடம்போலும், நினைக = சந்தாப ஹேதுவாதலின் அகிதமென்று விசாரிப்பாய், போகம் = விடயங்கள், பலகாற்றேர்ந்து = மாறி மாறி விசாரித்து, நெஞ்சிற்றேயாமல் = மனதினுற் பரித்தியாகஞ்செய்து, எளிதருந்தில் = சேவிக்கப்படின், சுகமேயாகும் = சுகந் தருவனவாம், வன்புபயின் மனத்தோற்றம் = மனத்தினது உதயம் = வித்தாரம்யாதது சொரூப தரிசனவேதுவன்றாதலின், நாசமாகும் = ஆன்மாவினது நாசமாம், மனத்தினது நாசமே = கைவல்லியவேதுவாதலின் ஆன்மாவினது மகத்தாந்தோற்றம் = மகோதய மாம், ஞானிகள் மனம் நாசமடையும், அஞ்ஞர்க்கு மனமே சிருங்கலையா மென்றதாயிற்று.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஞானியினது மனதை வியத்தலும் ஸ்ரீ இராகவர் ஜகத்தின் றிதியை வினுதலும்:—ஆனந்தமென்பது.

ஆனந்தநிராநந்த மிரண்டுமில்லை யசைவுமசை வின்மையுமா மவையுமில்லை, யீனந்தீர் சத்தசத்தன் றிவற்றுக்கெல்லா மிடையல்லஞானிமன மென்றலோடுந், தானந்தமிலா வறிவா யுலகின்மேலாந் தத்துவத்தி லுலகிருக்குந் தன்மைதன்னை, ஞானந்தான்வளர் பொருட்டா யுரைப்பாயென்று நாதனியம்பிட வசிட்டனவில்வ தானுன்.

(ப - ரை.) ஆனந்த நிராநந்தம் இரண்டும் இல்லை = சுகாசுகமென்னும் இரண்டுமே அல்லவாம், அசைவும் அசைவின்மையும் ஆம் அவையும் இல்லை = சல அசலங்கள் இரண் டுமே அல்லவாம், ஈனந்தீர் சத்து அசத்து அன்று = கெடுதல் என்னுந் தாழ்மை யகன்ற சத்தேனும் அசத்தேனும் அலதாம், இவற்றுக்கெல்லாம் = கூறியவற்றிற்கெல்லாம், இடையல்ல = மத்தியும் அல்லவாம், ஞானி மனம் = ஜீவன் முக்தனது மனது, என்ற லோடும் = இவ்வாறு அருளவே, தான் அந்தமிலா அறிவாய் = தன்வடிவாய்ப் பரிச்சின்ன மில்லாத சிதாத்மகமாய், உலகின்மேலாம் = விசுவாதீதமாய், இலகுந், தத்தவத்தில் = பர மான்மவஸ்துவில், உலகிருக்கும் தன்மைதன்னை = விசுவம் ஸ்திதமாக இருக்கும்பான் மையை, ஞானந்தான் வளர்பொருட்டாய் = போதமானது விருத்தியாதற் பொருட்டாக, உரைப்பாய் என்று = அருளிச் செய்வாய் என்று, நாதன் இயம்பிட = ஸ்ரீ இராமபிரான்

விண்ணப்பித்துக்கொள்ள, வசிட்டன் நவில்வதானுன் = கூறியருளத் தொடங்குகின்றார் ஸ்ரீ வசிஷ்டபகவான்.

(ஸ்ரீ - வீர.) இவ்வியாவுமே, பந்தமோக்ஷதசையற்றதும், இருமை ஒருமையில்லாததும், ஆகிய பிரஹ்மசத்தையாம், என்னும் இதுவே பரமார்த்தத் தன்மையாம். எல்லா திருஷ்டிகளிலும் சம்பந்தமெய்தாததும், நிர்மலத்தகைமையின் அதிசயத்தானே சந்நிதி தன்னைசமுற்றதும், இதனானே மனத்தன்மையையற்றதும், ஆகிய மனமானது இவ்வதிகாரி சரீரத்திலேயே பரப்பிரஹ்மத்தைக் காணும், அயலாறிதாம். இதனான்றே ஞானியின் மனமானது சுகாசுக, சலாசல, சத்தசத், இவற்றினிடையென்பனவொன்றும் அன்றாம் எனப் பெறுகின்றது. இப்போது முக்கிய மாயபிரகரணார்த்தமாஞ் சகத்திதி சொரூபத்தையறியும் வேட்கையுற்ற ஸ்ரீ இராகவர் வினுதல்:—தாள் என்பது, ஹே பிரஹ்மந் ! விசுயாதீதசிதாத்மாவின்கண் முன் வருணித்தவகையே விசுவமிருந்தபடியை, போதம் விருத்தியாதற்பொருட்டு மீளவும் கருணையால் அடியேற் குபதேசித்தருள வேண்டும்.

(ச ) ஞானிமனம் = ஞானிகளதுமனது, வாசனையில்லாமையினானும் வ்வகாரஹேதுவாதலினானும், இஃதெனை நிருபித்தற்கரிதாம், அஃதெங்ஙனமெனின்? ஆநந்தநிராநந்த மிரண்டுமில்லை = ஜடமாதலின் ஆநந்தரூபமுமன்று, ஆநந்தாநுபவவேதுவாதலின் நிராநந்தமுமன்று, அசைவு மசைவின்மையு மாமவையுமில்லை = ஆன்மாவில் முக்கிய நிட்டையுடையதாதலின் சலமுமன்று, வெளியிலும் விளங்குவதால் அசலமுமன்று, ஈனந்தீர் சத்தசத்தன்று = சங்கற்பாதி அதன்காரியமின்மையினாலே சத்துமன்று, இந்திரியங்களுக்கு விடயங்களிற் பிரவிருத்திவருதலின் அசத்துமன்று, இவற்றுக்கெல்லா மிடையல்ல = பரஸ்பர விரோதமாயிற் பக்ஷாந்தரமுதியாதாதலின், ஆநந்தநிராநந்தாதிகளினது மத்தியமுமன்று, என்றலோடும் = பரஸ்பர விரோதமாயிற் பிரகாராந்தரத்திதி யின்றாதலின், அநிர்வசநீயம் ஞானியின் மனமென்றறியென்பது கருத்து. நாதன் = ஸ்ரீ இராமர், அந்தமிலாவறிவாய் = நித்திய சிதாகாரமாய், உலகின்மேலாம் = விசுவாதீதமான, தத்துவத்தில் ஆன்மாவின்கண், உலகிருக்குந்தன்மைதன்னை = இந்த விசுவந்திதிபெறுந் தன்மையை, ஞானம் வளர்பொருட்டு = போதம் விருத்தியாதற்கு, மீட்டும், உரைப்பாயென்றியம்பிட வசிட்ட னவில்வதானுன். நேர்ந்தவண்ணம் வெளியிலுமிலங்கலானே நியதமுமன்று என்றுணர்க.

ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஹ்மசத்தையினாலே ஜகத்தின்றிதி யாம் தனித்திலதாம், தனித்துத்தற் சத்தையானே உலகின்றிதி இருப்பதாகப் பிராணிகட் குணர்வுண்டாதலோ, பிரஹ்மசொரூபத்திதி யுணர்வின்மையின் நிபந்தனமேயாம், எனச் சமாதானிக்கும் வேட்கையுற்ற ஸ்ரீ வசிஷ்டபகவான் அதற்கொத்த வடிவதாய திருஷ்டாந்த மருளல்:= வேறிலாதென்பது.

(ச - அ - கை ) விசுவம் விவர்த்தபாவத்தாற் சிதான்மாவினிடத்து ஸ்திதி பெறுந் தன்மையைத் தெரிவிக்கும் இச்சையுடையராய்ச் சிற்சொரூபத்தை நிருபித்தற்குத் தார் லக்ஷியத்துவமெனல்:—வேறிலாதென்பது.

வேறிலா தெவ்விடத்து மேவிநின்றுமேவாம னுண்மையினால் வேறும்விண்போற்
கூறிலாச்சிற்பாவ மெங்குநின்றுங் கூறுபடுமவற் றொன்றுங் கூடிப்பற்றுப்
பேறிலாச் சங்கற்பமனைத்துமின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேதமின்றி
யூறிலா வாகாயங்கோடி கூறுவுரித் தவற்றிலொரு கூற்றையொப்ப னொய்தாம்.

(ப - ரை.) வேறிலாது = அயலிலாமல், எவ்விடத்தும் மேவிநின்றும் = சர்வகதமாயிருந்தபோதினும், நுண்மையினால்=சூக்குமத்தன்மையானே, மேவாமல்=சம்பந்தமுறாமல், வேறாம் = இலக்ஷியப்படுவதின்றாகிய, விண்போல்=ஆகாசம்போல, கூறிலாச் சிற்பாவம் = நிரம்சமாகிய சித்தியற்கையானது எங்கும் நின்றும்=எவ்விடத்திலும் நிறைந்திருந்தும், கூறுபடும் அவற்றொன்றும் = சாம்சகபதார்த்தங்கள் எவற்றோடும், கூடிப்பற்றா = சம்பந்தித்துப் பற்றையடையாது, பேறிலாச்சங்கற்பம் = பயனற்ற எண்ணங்கள், அனைத்துமின்றி = யாவுமேயற்று, பேரின்றி=எந்நாமமும் இயையாததாய், அழிவின்றி=அவ்விநாசாத்மாவாய், பேதமின்றி=அபேதமாய், ஊறிலா ஆகாயம்=பரிசாதியற்றுள்ளமேய மாயககனத்தை, கோடிகூறு உரித்து=நூறுகோடியங்கிசப்படுத்து, அவற்றில் ஒருகூற்றையொப்ப நொய்தாம் = அவ்வங்கிசங்களுள் ஓரங்கிசத்துக்குச் சமானமாகச் சூக்குமமாம்.

(ஸ்ரீ - வீர) வெளிப்படாதனவாயினிவருந் தரங்கங்கள் நீரின்கண்ணே யிருப்பனபோலவும் வேறாக இல்லாதனபோலவும், சித்துத்தத்துவத்தில், சிருஷ்டிகள் இருப்பனவாம், சத்ரூபமாய ஆன்மாவின் அன்னியத்தன்மையானும், தாமாக இருப்பின்மையானும் இல்லாதனவாம். சித்தானதுயாண்டுந் தன்னிருப்பாலிருக்கும், அவ்விருப்பைப் பற்றி மற்றவை யொருவாறிருந்தால் இருக்கலாமேயலது தாமா யிராவாமென்பது கருத்து.

ஆன்மாவின் இருப்பினாலேயே எல்லாவற்றின் இருப்பாயின் யாண்டும் ஆத்மா யாங்ஙனங் குறிக்கப்பெறவில்லையெனின்? ஆண்டு விடைதரல்:—நுண்மையினால் என்பது. எங்ஙனம் சர்வகத ஆகாசமானது சூக்குமத்தன்மையானே காணப்பெறுவதிலதாமோ, அங்ஙனம் அங்கிசமற்று அதிசூக்குமமாய சித்ரூபம் யாண்டுமிருந்தபோதினும் தெரிவதிலதாம். அதனது பிரதிபிம்பத்தன்மையும், அதன் அதீன காம சங்கற்ப நாமரூபச்சேவையும் வாஸ்தவமாகவாமெனல்:—சங்கற்பமென்பது. சர்வசங்கற்பரகிதமும் சர்வசம்ஞை விவர்ஜிதமுமாம் அவ்விச்சித்தானது அழிவிலாத வடிவதாம். ஆயின் ஜீவாதிய நாமங்கள் யாதினாலாக்கப்பெற்றன வாமாலோவெனின்? இவற்றாலாமெனல் :—நன்றிதரு முண்மை முதற்பெயர்கள் பெற்றென்பது. இது சுலோகமுறையில் ஈண்டெடுத்துக்கொள்ளப்பெற்றது. அதுசேத்திய ஆபாசங்களால் ஆக்கப்பெற்ற நாமமுடையதாம். சித்தினது சூக்குமத்தன்மையையும் மிகத் தெளிவுற்றிருக்குந் தன்மையையும் பரியாலோசனைசெய்து பார்த்தால் ஆகாசமும் சதகுணந்தூலமும் அஸ்வச்சமும் ஆமெனல்:—ஆகாயமென்பது. ஆகாச சதபாக மமல சூக்குமமாம்.

(ச) முன், விசுவத்திற்கு விவர்த்தபாவத்தாற் சித்வடிவமாக இருப்பதாகவே அதனைக் காட்டும்பொருட்டு, சிற்சொரூபத்தை நிரூபிப்பார் முதலில் அதனது துர்லக்ஷியத் தன்மையைக் கூறுகின்றார், என்ற அவதாரிகையில் வந்தவிவர்த்தத்தையும் அதனைச் சம்பந்தித்துவந்த பரிணாமத்தையும் இலக்கணத்தாற் றெரித்தல்:—சுக்தி இரஜ தாகாரமாக விவர்த்தமாவதுபோற் பூர்வரூபத்தைப் பரித்தியாகஞ்செய்யாது ரூபாந்தரத்தைச் சுவீகரிப்பது விவர்த்தமாம்; க்ஷீரம் த்தியாகாரமாகப் பரிணமிப்பதுபோற் பூர்வரூபபரித்தியாகத்தால் ரூபாந்தரத்தைச் சுவீகரிப்பது பரிணாமமாம். ஸ்ரீ வசிட்டர்: விண்=சித்தினாற் பிரகாசிக்கும் பூதாகாசம், வேறிலாதெவ்விடத்து மேவிநின்றும்=சர்வகதமாயினும், நுண்மையினால்=சூக்குமத்தால், நிரவயவமாதலின், மேவாமல் வேறாம்=ஆதலிற் குறிக்கக்கூடாததுபோல், கூறிலாச் சிற்பாவம்=சித்ரூபப்பொருள், எங்குநின்றும்=சர்வகமாயினும் நிரம்சமாதலின், கூறுபடு மவற்றொன்றுங்கூடிப் பற்றா = ஆதலிற் குறிக்கப்

படாது, பேறிலாச்சங்கற்ப மனைத்துமின்றி=சர்வசங்கற்பரகிதமாய், பெயரின்றி=சர்வ நாம விவர்ச்சிதமாய், சதகுணகிமலமாய்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சொச்சத்தன்மையில் ஞானிகளநுபவத்தை யுரைத்து, அத ஞனேயே ஆண்டுப் பிராந்தியினுற்கண்ட பாவவிகாரங்கள், அதற்கயலாக விலவா மெனல்:—நன்றியென்பது.

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள்பெற்று ஞானிகள்பா னிமலமாஞான மாகி, யொன்றுமல வுருவான குடும்பரூப மொன்ருகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த், தன்றுணைச் சின்மாத்திரத்துக்கய லற்றிந்தத்தொத் தாமத்தாமய மாஞ் சகங்களெல்லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்தவெல்லாஞ் சூழ்கடலில் வேருகாத் தொடர்ச்சிபோலாம்.

(ப - ரை.) நன்றிதரும் உண்மைமுதல் பெயர்கள்பெற்று=நன்மையைப் பயக்கும் சத்தியஞான அநந்த ஆநந்தாதிநாமங்களையடைந்து, ஞானிகள்பால் நிமலமாஞானமாகி= அறிஞர்களிடத்தில் நிஷ்கலசித்துருவமாகி, அறிவிலாரிடத்தோ, ஒன்றும்=களங்க சகித மாய்ச் செறியும், மலம்=அஞ்ஞானம், உருவமான குடும்பம்=அதன்காரியம், ரூபமொன் ருகி=அவைகளின் சொரூபத்தோடு ஐக்கியத்தையடைந்து, தனை=இலங்குந் தன்மைய தாகிய ஆன்மாவை, தெரிவித்து=தரிசிப்பித்து, உணர்வே மெய்யாய் = நிருபாதிக அறிவே திருமேனியாயிலங்கி, தன்றுணைச்சின்மாத்திரத்துக்கு=தனக்குத்தானேசமான மான விஞ்ஞானகனமாத்திரத்திற்கு, அயலற்று=வேறிலாமலே, இந்தத்தொத்தாமத்தா மயமாஞ்சகங்கள் எல்லாம்=பிரதீதியாகாநின்ற விசாலமான இந்நீயுனதென்னுந்தன்மை யான் எனதென்னுந் தன்மைமயமான நானாவித உலகங்கள்யாவும், பிரதீதியாகும், எது போலாமெனின்? துன்றுதிரை = கோர்த்தெழுங்கல்லோலம், முதலாக=நுரையாதிய வாக, பிறந்தவெல்லாம்=கிளம்பிய விசால நானுத்தகைமையாவும், சூழ்கடலில்=பூர்ண சலில ஆர்ணவத்தில், வேருகா = அவ்வியதி ரேகமாகத் தோற்றும், தொடர்ச்சிபோ லாகும்=திருஷ்டாந்தம்போலவாம்.

(ஸ்ரீ - வீர.) அறிஞரிடத்தே நிஷ்கலரூபமாம், சகலமாயினும் நிட்கலமான சம்சார சொரூபமியாண்டோ, அவ்வகையா மேகாத்மிய தரிசனசீலமுடையதாம்; இது வித்வத் தநுபவ அபிராயமாம். அமலமென மூலபாடமாயினே மாயாமலரகிதமெனப் பொருள் கொள்க. அலையாதிவிகாரங்கள் கடலின்வேறிலாதனபோலத் திருசியமயல் விகாரங்கள் சிதர்வணத்தினும் வேருக இல்லையெனல்:—தன்றுணையென்பது, தரங்காதிமயமாய சலில ஆர்ணவத்தில் விசாலமாக விளங்கும் நானுத்தகைமை, அக்கடலினின்றும் எங்ங னம் வியதிரேகமாகத் தோற்றுவதில்லையோ, அங்ஙனம், பாவவிகாரிபோலவும் த்வத்தா மத்தா மயம்போலவும் சித்தர்ணவத்திற்ருேற்றும் விசாலமான இப்பன்மை, சின்மாத்திர வியதிரேகமாக ஒருகாலும் பிரகாசிப்பதே கிடையாது.

(ச.) நன்றிதரு முண்மை முதற்பெயர்கள்பெற்று=அச்சித்துரூபம் அவாச்சியமாத லின் உண்மையாகச் சர்வநாமவிவர்ஜிதமாயினும், அவிநாசி, ஆன்மா, சுவாமி, சேதனன், என்பன முதலிய சத்தங்களாற் கற்பிதநாமங்களை யடைந்ததென்பது பொருள். ஞானி கள்பால் நிமலமாஞானமாகி = நிட்களங்கபோதரூபமாய, ஒன்று+தெரிவித்து=ஞான நிஷ்டைமுற்கூறினமையின் அஞ்ஞானிகள்பாற் களங்க ரூபத்தோடு, ஒன்றும்=பொருந் தும், அதனாலே, மலம் = அஞ்ஞானம், உருவானகுடும்பம் = அதன்காரியம், ரூபம்= அவைகளின் ரூபத்தோடு, ஒன்ருகி = ஐக்கியமுற்றுள்ளதனை=அத்தன்மையான ஆன்

மாவை, தெரிவித்து = அறிவித்து, அஞ்ஞானதற்காரியங்களோ டபின்னமான ஆன்மாவைத் தரிசிப்பிக்குமென்பது பொருள். மலசம்சாரங்களினது சொரூபத்தோடு அபின்னமான ஆன்மாவைத் தெரிவிக்குமென்பது கருத்து. இந்தச் சகங்களெல்லாம் = நீ நானென்னும் ரூபமாய்விரிந்த இந்த நானாத்துவம், தன்றனைச் சின்மாத்திரத்துக் கயலற்றுச் சத்தமாத்திர மயமாமென்ப தந்நுவயம்:—அர்ணவத்திற் றரங்கபேனபுத்புதாதி சொரூபங்கள் கதிவயத்தால் விரிவாக விரிந்து நானாரூபத்தகைமையவாகத் தோற்றிய போதினும் எங்ஙனம் அவ்வர்ணவத்தினும் அவ்யதிரேகமாகப் பிரகாசிக்கின்றனவோ; அங்ஙனம் த்வத்தாமத்தாமபமாயிலங்கும் விசால இந்நானுமதங்களும், சித்தர்ணவத்திற் சின்மாத்திர அவ்யதிரேகமாகவே பிரகாசியாநிற்கும் என்பது மூலாநுசாரமாக அந்நுவயமாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சித்தானது, சேத்தியத்தை விளக்கின்றதென வெண்ணுதி போலாயின், சித்துச் சித்தையே செனிப்பிக்கின்றதென வெண்ணுதி, சேத்தியம் அயலாகவில்லையென வெண்ணுதி, இவ்வண்ணம் மாசமாயவழி, அதனால் அறிவுக்குத்தன்பால் வியாபாரங் கூடாமையேயாய ஏதுவினால்; இச்சிற்சொரூபம் தன்பாலே நின்றுகொண்டு ஒருசிறிதையு முண்டாக்கவில்லையென்றுபலமாம், அவ்விதுபரமார்த்ததிருஷ்டியாம், அஞ்ஞனேயாகியும் ஞன்யான் என அபிமானமுற்ற அவனுக்கே, அல்லது, யாவன் அஞ்ஞனேயாவன் அவன் ஞன்யான் அல்லன் என அபிமானிப்பன், அவனுக்கே; சித்விய திரிக்தமாக சர்க்கங்களில் அயல் வந்ததெனவும், அன்னியமிருக்கின்றதெனவும் கற்பனையான துண்டாகின்றது என்று கூறும் வேட்கைவாய்ந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் அச்சித்தத்தானே மீளவும் ஞானியஞ்ஞானிகளின் கற்பனையால் வகுத்துரைத்தல்:—துனையென்பது.

துனைதரு பல்பிறப்பாகிக் கொடிதாய்ப்பொல்லாச் சுபாவமாந்தனை யறியாச் சுமடர்க்கென்றுந், தனையறிந்தோர்க் கொளியுருவா யெல்லாமொன்றாய்த்தானாக வனுபவிக்குந் தன்மையாலே, நினைவொடு செய்வோன் செய்கைசெயலிம் மூன்று நிகழ்விக்கும் பாவித்த நினைவுக்கெல்லா, மனையசுவையாய் நிற்கும் பிறவிப்போக மருந்துவோர்க் கப்போகமாகிநிற்கும்.

(ப - ரை.) தனையறியாச் சுமடர்க்கு என்றும் = தம்முடைய சொரூபத்தை யுண்மையாயுணராத மௌட்டியர்க்கு எப்போதும், துனைதருபல் பிறப்பாகிக் கொடியதாய்ப் பொல்லாச் சுபாவமாம் = விரைந்து துயரமேதரும் உக்கிரசமுசார கனகர்ப்பிணியாய் அசத்து இயற்கையதாம், தனையறிந்தோர்க்கு = தமது சொரூபத்தைச் சிவமாக வுணர்ந்த பெரியோருக்கு, ஒளியுருவாய் = பிரகாசரூபமேயாய், எல்லாம் ஒன்றாய்த்தானாக = சகலஏகாத்மிகமாய், அனுபவிக்குந்தன்மையாலே = அநுபூதிவசத்தால், நினைவொடுசெய்வோன் செய்கைசெயல் இம்மூன்றும் நிகழ்விக்கும் = நித்தியம் கருத்தோடுசெய்யுங் கருத்தா முதலிய காரகக்களையும் காரியத்தையும் பிரகாசிப் பிக்கும்; பாவித்த நினைவுக்கெல்லாம் அனைய சுவையாய் நிற்கும் = எண்ணிய எல்லா எண்ணங்கட்கும் ஏற்றபடியாயரசமயமா யிருக்கும், பிறவிப்போகம் அருந்துவோர்க்கு அப்போகமாகி நிற்கும் = பவபோகிகட்கு அவ்வப் போகமாகி நின்றிலங்கும்.

(ஸ்ரீ - வீர.) அறியாதவரிடத்தில் அசத்துச் சுபாவமுடையதாகிக் கொரேமான கும்பக் கூட்டக்கருவாய்ந்ததாகி விளங்கும், அறிந்தவரிடத்தோ, பிரகாசரூபமேயாகிச் சகல ஏகாத்மிகமாகி யிலங்காநிற்கும். அச்சித்தினுக்கே ஜகத்பிரகாச யோகஜன்ம நிர்

வாசகத்தனைகமையை நிகழ்த்தல்: —நினைவொடு மென்பது அநுபூதிவசத்தால் நித்தியம் அருக்காதிகளையும் அவிர்விப்பதாம், சர்வபூதங்கட்கும் விடயாநந்த ஹேதுவாய்ச் சுவாதாகி யிருப்பதாம், பவபோகிகளாய ஜீவர்கட்கு வாராநின்ற ஜன்மாதிகளில் நிமித்தபூதமாம். ஆநந்தத்தினின்றுமே உரமாயிவ் வுலகங்களெல்லாம் ஆகின்றனவெனச் சுருதியுமறைகின்றது.

(ச.) நினையறியாச் சுமடர்க்கு = அஞ்ஞர்க்கு, துனைதருபல் பிறப்பாகி = சம்சாரமூசமாய், கொடிதாய் = கோரமாய், என்பதற்கேது, பொல்லாச் சுபாவமாய் =இராகத்துவேடாதி களங்கமுடையதாதலின், துஷ்டச் சுமாவமாய், சம்சாரபரம்பரையினேது வென்பதுபொருள்: நினையறிந்தோர்க்கு = ஞானிகளுக்கு, என்று மொளியுருவாய் = விசுத்தஞானரூபமாய், எல்லாமொன்றாய் = சகலத்தினும் அபின்ன சுபாவமாய் = தானுக வநும்விக்குந் தன்மையாலே, அவ்வவ்விடயாநுபவ வசத்தினுல், நினைவொடு செய்வோன் செய்கைசெயலிம் மூன்று நிகழ்விக்கும் = கர்த்தா, கன்மம், கிரியைகளைப் பிரகாசிப்பிக்கும், பாவித்த நினைவுக்கெல்லாம் = சகலபோக்கிய வஸ்துக்களினது, அனையசுவையாய் நிற்கும்=இரசஞானவேதுவாம், பிறவிப்போகம் அருந்துவோர்க்கு= சம்சாரிகளுக்கு, அப்போகமாகி நிற்கும் = பிரவிருத்தி யேதுவாய், அறியாதவரிடத்துத் துக்க வியற்கையானே கோரமான சமுசாரசமூகத்தானே கருப்பவதியாம் = இத்தகையதாயிருப்பது அச்சித்தென்றறிக.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அஞ்ஞர்கட்கு ஜன்மாதி நிமித்தபாவமா யிருப்பினும், அறிஞரது திருஷ்டியானே கூடஸ்த அபரிச்சன்ன ஏகரூபமேயாம் அது எனல்:—அத்தமனமென்பது.

அத்தமனமுதய மில்லையெழு தனிற்றலயல் போதல்வருத லெனுமனைத்து மில்லை, யித்தலத்திவில்லையிலா திருக்கவில்லை யித்திறமாஞ் சித்துமலமில்லா மெய்யாய்ச், சுத்தமுறுதானே தன்னிடத்தினிற்குஞ் சொன்ன நெறியே சகமாய்ச் சொல்பேராலே, மெத்தவெகு ரூபமாந்தற்சுபாவம் விரிந்தெங்குஞ் சிற்பெயரால் விளங்கிநிற்கும்.

(ப - ரை.) அத்தமனம் உதயமில்லை = அஸ்தத்தையும் அடைவதில்லை உதயத்தையும் அடைவதில்லை, எழுதல் நிற்றல் அயல்போதல் வருதலெனும் அனைத்துமில்லை = எழும்புவதும் நிற்பதும் பிறவிடத்துக்குச் செல்லுவதும் வருவதும் என்பனவாதி பிறவெவையும் இல்லை, இத்தலத்தி லில்லை = ஈண்டிருப்பதில்லை, இலாதிருக்க வில்லை = இல்லாமலுமில்லை, இத்திறமாஞ்சித்து = இத்தகைமைத்தாய அறிவானது, மலமில்லா மெய்யாய் = அமலாகாரமாய், சுத்தமுறுதானே தன்னிடத்தில் நிற்கும் = ஆயதாய தன்பாற் சுயம் நன்னிலைபெறும், சொன்னநெறியே = கூறிய முறையே, சகமாய்ச் சொல் பேராலே= உலகமென்று சொல்லப்பட்ட நாமத்தாலே, மெத்தவெகுரூபமாம்= மிகமிகவும் விஜ்ரும்பணத்தை யடையும், தற்சுபாவம் விரிந்து எங்கும் சிற்பெயரால் விளங்கிநிற்கும் = அவ்வத்துவானது இயற்கையாய், சர்வகமாய்ச் சித்தென்னும் நாமத்தால் உதிதமாயொளிரும்,

(ஸ்ரீ - வீர.) ஒழிவதுமில்லை யுதிப்பதுமில்லை, எழுவதுமில்லை நிற்பதுமில்லை, வருதுமில்லை போவதுமில்லை, இங்குளதில்லை இங்கிலதில்லை, தங்கிய வறிவெனுந்தானும் வடிவே. அவ்விச்சித்தோ வமலாகாரமாம், செவ்விதிற் சுவந்தனிற் செறிந்து துதையும், இவ்விதம் விரிவாயிராகவ வுலகென, ஒவ்வியபெயரால் விவரத்தமா யொளிரும், சித்வி

வர்த்தமதாயினும் பரமார்த்த திருஷ்டியானே சித்தேயாம், என்னை, ஓங்கியெரியுந் தீயி னீட்டத்தினின்றும் தீப்பொறி நிகழ்வதெனவும், ஓடியாடும் நீரப்பூரத்தினின்றும் திரை முதலியவை நிகழ்தல் போலவும், சர்க்கவிப்ரமங்களானே சித்தானது சித்தாகவேநிகழு மென்றுணரக. சுயம் சுத்தமேயாயினும், அவித்தையானேயாஞ்சர்க்க விப்பிரமங்க ளானே நன்கிலங்குதலே சர்க்ககருத் தருத்தகைமையாம், அயல்வகையா யிலதாமெனக் காட்டற் பொருட்டு அதற்குபயோகியாய் இரண்டு ரூபங்களையியம்பல்:—தற்சுபாவமென் பது. அது சுபாவமாகச் சித்து நாமத்தோடு நிகழும், வியவகாரங்கொண்டு யாண்டு முள தாயுதிதமாம் வடிவதெனவும் உலவும்.

(ச.) இத்திறமாஞ் சித்து = அஸ்தமன முதயமில்லை=நித்தியமாதலின், ஒடுங்காது, உதியாது நிர்விகாரமாதலின், எழுதல் நிற்றலும்,நிஷ்கிரியமாதலின், அயல்போதல்வருதல் எனும் அனைத்துமில்லை, ஜத்தலத்திலில்லை=நிராதாரமாதலின் இவ்விடத்திலின்று, இலா திருக்கவில்லை. பரிபூரணமாதலின் இவ்விடத்தின்றென்பதின்று, மலமில்லாமெய்யாய்= நிர்மலாகாரமாய், மெத்தவெகுரூபமாம் = பிரபஞ்சமாக விரியும், தற்சுபாவம் = தனது சுபாவத்தினுல், எங்கும் விரிந்து = சர்வகமென்னும் பரிபூரணமாய், சிற்மெயரால் = சித்தென்னு நாமத்தால், விளங்கிநிற்கும் = அஸ்தமனத்தை யடையாத அநந்தமிதரூப மாம். முன்மொழிந்த சித்து, அமலாகாரமாய்த் தன்னிடத்திலேயே நன்னிலையுற்று, இவ் விதம் விசுவப்பெயரான் விரிந்தோங்கு மென்பது திரண்டபொருள். அச்சித்தேயாய பர வத்து, பரிபூர்ணமாகி எங்கும் மங்காவெளியா யிலகுமென்பது இயற்கையாம் என்றறிக.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இச்சித்தின் பெருமையையே பலதிறத்துரைத்து, இழிந்து வருமுறையை யினிதறிவித்தல்:—இன்னவென்பது.

இன்னசுபாவந்தானே யொளியாய்நிற்கு மிருளாகுமொன் றுகுமீறில்கூறுந், தன்னுடைய தொழிலாலே தானேபூர்ண தத்துவம் விட்டிவனவனு னென்னுந் தன்மை, யுன்னியபாவனையாலே மெள்ளச்சீவ னுருவாகிக் குடும்பியெனு மூகத் தாலே, பன்னியநா நாத்துவத்திலழுந்திப் பாவாபாவம் பற்றுதல் விடலாம் பதத்தினிற்கும்.

(ப - ரை.) இன்ன சுபாவந்தானே = இச்சிற் சொரூபமே, ஒளியாய் நிற்கும் = பிரகாசமா யிலங்கும், இருளாகும் = அப்பிரகாச மாயவிரும், ஒன்றுகும் ஈறில்கூறும்= ஏகமாகி நிரம்சமாய் அம்சதாரியா யிருக்கும், தன்னுடைய தொழிலாலே தானே = கற்பனை யோகத்தானே சுயமாகவே, பூர்ணதத்துவம் விட்டு = அநந்த பதத்தினகன்று, இவன் அவன் நான் என்னுந் தன்மையுன்னிய பாவனையாலே = இவன் அவன்யான் என்னும் முன்னிலை படர்க்கைதன்மைப் பான்மையை யெண்ணிய சிந்தனையாலே, மெள்ள = மெதுவதாக, சீரவனுருவாகி = அஞ்ஞபதத்தை யடைந்து, குடும்பியெனும் மூகத்தாலே = சமுசார பூர்வகமாக, பன்னிய நாநாத்துவத்தி லழுந்தி = உரைத்த நாநாத்தன்மையை மிகமிகவும் விருத்திசெய்து, பாவாபாவம் பற்றுதல் விடலாம் பதத் தில் நிற்கும் = பாவ அபாவரிரக உத்சர்க்கபதத்தில் ஸ்திதியையடையும்.

(ஸ்ரீ - வீர.) பரமார்த்தமாகப் பிரகாசமாய், யானறிகின்றிலேன் என்னும் விவகாரத் தானே அப்பிரகாசமாய், (இன்னணம் மேலுமுணர்க) நிரம்சமாய், அம்சதாரியாய், அவித் தையின் கண்ணே தற்பிரதிபிம்பமுற்று அவ்விலக்கணமாய விசால வஞ்சகவேடத்தாற் சுயம் அபரிச்சிகன்ன சொரூபத்தை யனுசந்தானஞ் செய்யாதது போலாய், யானிருக் கின்றேன் என்னும் பாவத்தானே ஜீவத்தன்மையைப் பையவடைவுற்று, சம்சிருதி பூர்

வகமாக நானாத்தன்மையாய இதுமென்மேலும் வளர்ந்தோங்கிவர, இஃதிருக்கின்றது இஃதில்லை யென்னும்பாவ அபாவங்கட்கும், இது கொள்ளத்தக்கது இது தள்ளத்தக்கது என்னும் இஷ்ட அநிஷ்டங்களின் கிரக உத்சர்க்கங்கட்கும், ஸ்தானமாகியதேகாத்ம பாவத்தில் அருந்திதியை வடைந்து நிற்கும்.

(ச.) இன்ன சுபாவந்தானே =முற்கூறிய சித்தரூபமான பரம்பொருளே, ஒளியாய் நிற்கும் இருளாகும் = ஞான அஞ்ஞானரூபமாம், ஒன்றாகுமீறில் கூறும் = நிரவயவசாவயவரூபமாம், தன்னுடைய தொழிலாலே = தனது சங்கற்பவசத்தினால், தானே =சுவயமே, பூர்ணதத்துவம் விட்டு = சொச்சொரூப ஸ்திதியை விடுத்து, பாவனையாலே = உபகிதாகார அபிமானத்தினால், மெள்ள = மெல்ல, சீவனுருவாகி = ஜீவபாவத்தையடைந்து, குடும்பியெனும் = சிற்பெயரான சுபாவத்தாற் சம்சாரியென்னுங் கருத்தினால், பாவாபாவம் பற்றுதல் விடலாம் பதத்தில் = இது பாவரூபம், ஈதபாவரூபம், இது கிரகிப்பது, விதுவிடுவது என்பதாகிய, இப்பேதரூபபதத்தில், நிற்கும் = ஸ்திதிபெறும். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும்விரியும் முறையை விரித்தல்:—அப்பதத்தென்பது.

அப்பதத்தினின்று புரியட்டகத்தை யளவிலசைவா லமைக்கு மமைத்திடாதா, மிப்பரிசினின்று ரவேவடிவமான வெழுபிறவி வகைமாலை யியற்றுமெங்கு; மொப்பரிய தற்பிரம சுபாவத்தாலே யுரைத்தவெலா மெழுமீண்டு மொடுங்கிப் போகு, மெய்ப்படிவமில்லாத விண்ணிற்கானல் விரிவதுபோற் சிதினினைவு விரிந்துதோன்றும்.

(ப-ரை.) அப்பதத்தினின்றும் = மேற்புகன்ற பதத்தினின்று, புரியட்டகத்தை = சூக்குமசரீரத்தை, அளவிலசைவால் = ஸமந்த சதங்களால், அமைக்கும் அமைத்திடாதாம் = செய்யும் உண்மையிற் செய்யாதாம், இப்பரிசினின்றாவே வடிவமான = இவ்வண்ணம் இதஸ்திர பலாகாரமான, எழுபிறவி வகைமாலை யியற்றுமெங்கும் = எழுவகைத்தோற்றமாம் சமுசார வலவங்களை யெவ்விடத்துஞ் செய்யும், ஒப்பரியதற்பிரமசுபாவத்தாலே = உவமையில்லாத தனது பிரஹ்ம சுபாவத்தானே, உரைத்தவெலாம் எழும்மீண்டும் ஒடுங்கிப்போகும் = கூறியயாவையுமே மீளவும் வருவனவும் போவனவுமாம், மெய்ப்படிவமில்லாத விண்ணில் = ஆகாரமியாதொன்று மொன்றாத ஆகாயத்தில், கானல்விரிவதுபோல்=நிதாகத்தாற் சரித்துப்போல, சிதில்நினைவுவிரிந்துதோன்றும் = சித்தத்துவத்திற் சிருஷ்டிரூப திருஷ்டிகள் வித்தாரமாகி விளங்கும்.

(ஸ்ரீ-வீர.) அத்தியஸ்த ஆத்மபாவ புரியஷ்டக நூற்றுக்கணக்கான அசைவுகளால், விதிநிடேத கருமங்களால், போக்கியரூபஜகத்தை ஆற்றும் உண்மையாயோ ஆற்றாதாம். சிற்சொரூபத்திதியே ஜகத்திதியாம், சித்திற்கே ஜகத்ரூபமாக அவஸ்தானத்தான், என வியம்பும் பொருட்டு, முன்மொழிந்ததை யநுவதித்தல்:—இப்பரி சென்பது, இங்ஙனம் திரதர ஆகாரங்கள் வாய்ந்த சர்வசம்சாரா வலயங்களும் எங்கும் மீண்டுமீண்டும், பிரஹ்ம சுபாவத்தால் வருவனவும் போவனவுமாம். நிராகாரமாய ஆகாயத்தின்கண் நிதாகத்தால், சரித்தானது = மிருக திருஷ்ணையானது, எழும்புவதென்னவே; இச்சிருஷ்டிரூப திருஷ்டிகள் = தேகாதி யெண்ணங்கள், நிராகார ஞானதத்துவத்தில் இலங்கா நிற்கும்.

(ச.) அப்பதத்தினின்று = முற்கூறிய பதத்திற் றிதிபெற்றிருந்து, அளவிலசைவால் = அநந்த விகற்பங்களால், புரியட்டகத்தை = மேற்கூறு மிலக்கணமுடைய சூக்கும சரீரத்தை, அமைக்கும் = விதிக்கும், அமைத்திடாதாம் = உண்மையாகக் காரண

பாவமாதலின், விதியாததுவுமாம், இப்பரிசினின் ஜெப்பரிய தற்பிரம சுபாவத்தாலே அலேவே வடிவமான = ஸ்திரசலாகாரமான, எழுபிறவி வகைமாலே = சம்சாராவளிக ளென்னும் சர்க்கங்களே, எங்குமியற்றும் உரைத்ததெலா மெழுமீண்டும் ஒடுங்கிப்போ கும் = மெய்ப்படிவ மில்லாத=நிராபாசமான, விண்ணில் = வியோமத்தில், நிதாகாநந் தரம், வெப்பத்தின்பின் னெவ்விடத்தும், கானல் விரிவதுபோல்=விருஷ்டிகள் காணப் படுவனபோல, மழைத்துளிக ளென்பது வடமொழியருத்தம், மனநினைவில்—நிஷ்களங்க மான சித்தத்துவத்தில், சிருஷ்டிரூபமான திருஷ்டிகள், விரிந்துதோன்றும் = காணப் படுவனவாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) வங்கபிராந்தியிற் றிட்டாந்த முரைத்து, ஆன்மாவை யறியு முறைமையையும் அதன் பெருமையையும் உரைத்தல்:=படர் என்பது.

படர்மதத்தாற் றனைப்பிறர்போற் றேன்றுமாபோற் பகுத்தலிலாவந்தச் சிற் பாவந்தானே, யடர்பொய்போற் றேன்றியதாற் சத்தமாதி யைம்புலனுமே தொன்று லறியாநின்றுய், தொடர்கின்ற வதுவிந்த வான்மாவாகுந் தோற்ற மெலாந் தானுகித் துன்னிநின்ற, விடமுடைய பரப்பிரமமிதுவே யீதிங்கிருப்பது வும் பெயர்மலமா மிதின்வேறில்லே.

(ப - ரை.) படர்மதத்தாற் றனைப்பிறர்போல் தோன்றுமாபோல் = ஏறிய மதிரா பானமயக்கத்தால் அன்னியமாயதன்னே யன்னியமாய்க் காண்பதேபோல், பகுத்தலிலா அந்தச் சிற்பாவந்தானே = பிரிவுறுத அவ்வறிவியற்கையேயதான், அடர் பொய்போற் றேன்றியது = அவித்தையினுல் நெருங்கிய அசத்துப்போலிலங்காநிற்கும், ஆல் அசை, ஏதொன்ருல்= எவ்வறிவினல், சத்தாதி யைம்புலனும்=சத்தப் பரிச ரூப ரச கந்தமென் னும் ஐந்து விடயங்களேயும், அறியாநின்ருய் = ஹே இராகவா நீ யுணர்கின்றனேயோ தொடர்கின்ற அது இந்த ஆன்மாவாகும்=யாவற்றுள்ளும் சத்தாஸ்பூர்த்திமயமாய் அனு சரித்திருக்கும் அவ்வறிவே அகமென்னு மிவ்வான்மாவாகும், தோற்றமெலா ந்தானுகித் துன்னிநின்ற இடமுடைய பரப்பிரமம் இவ்வான்மாவே சர்வதிருசியங்களும் ஆரோபமா தலிற் சர்வான்மகமாய், சர்வகமாய், தேசகாலவஸ்து பரிச்சேதரகிதமாய் வியாபகமாய், மேலுக்குமேலாய பிரஹ்மமாம், இதுவே=இந்தப் பிரஹ்மமே, பெயர்=வியதாதி நாம வேற்றுமையானே, ஈது=இவ்வுலகமாக இருப்பதுவும்=திதி பெறுவதுமாம், இங்கு= ஈண்டு, மலம்=அவித்தையதன்காரியரூபம், இதின்வேறு இல்லேயாம் = இந்தப் பிரஹ் மத்தினும் வியதிரிக்தமாக ஒரு சிறிதும் இல்லாததேயாகும்: ஆல் என்பதை யசை யெனக் கோடாமற்பெயராலெனக்கூட்டிப் பொருளுரைப்பினும் அமையும்.

(ஸ்ரீ - வீர.) மதவசத்தாயபுருடன் அவனுயினும் அன்னியனைப்போல எங்ஙனந் தோற்றுவானே, அங்ஙனமே, அதேசுவாத்மா, அன்னியம்போல ஜாட்டியபாவமயக் கத்தை யடையாததேனும் ஜாட்டியபாவமயக்கத்தை யடைந்ததுபோலச் சித்துத் தன் மையாற் சிற்சாரம், அசித்தென்னவிருக்கும் அறியாமையான், சத்தே அவ்வேடந் தரித் திருத்தலின் அசத்துவம் துர்வசனம், பாத்தியப்பான்மையானே சத்துவந்துர்வசனம், ஆகலின், தோற்றம் அநிர்வசநீயமாம் என்றறிக. அற்றேல், பிரமஹ்மத்தினின்றும் ஜகத் விவர்த்தங் கேட்கப் பெறுகின்றதேயல்லாமற் பிரத்தியக்கினின்றும் கேட்பதில்லே யெனின்? அதுவே பிரஹ்மமெனா வறிவுறுத்தல்.—சத்தமாதியென்பது. ஹே இராகவ! எதனுனே சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்பவற்றை யறிகின்றுயோ, அஃதிவ்

வான்மா பரப்பிரம்மம் சர்வத்தையும் பூரித்து நற்றிதியடையும். "சத்தப் பரிச வுருவர் தஞ்சக கந்தமுமைதுன முதலா, யெத்தைக்கொண்டிங்கறிகின்ற னதனை யொழியவேதுளதா, மத்தற்பரத்தைக் கண்டிந்தவவத்தைமூன் றுங்காணுமை, சித்தித்திருக்கு மவனலமுந் தீங்குமின்றித் திகழ்கின்றான்." என்னும் காடகசுருதியிற் பிரஹ்மத்திற்கே பிரத்தியக் காத்மத்தகைமை இயம்பப்பெற்றிருத்தலின் என்பது கருத்து. ஆயின் ஆன்மாக்கட்கு நானாத்தன்மையுண்மையின் பிரஹ்மத்திற்கோ ஏகத்தன்மை யுண்மையின் யாங்ஙன மைக்கியமாம் என்னற்க; நானைகத்வங்கட்கு மித்தியாத்தன்மை யுண்மையின், இஃதொருதோடமல்லவாமென வுணர்க. தத்துவவித்துக்குத் தன்வடிவே பூர்ணமாகத் தோற்றும், காணினும் ஜகத்தைக்கண்டிலன் தத்துவத்தையே காண்பன்; அற்றாயினும், தத்துவவித்துக்கட்கும், இலௌகிகங்களும் சாஸ்திரீயங்களும் ஆகிய கருமங்களிற் கருத்திருத்துவங் காணப்பெறுகின்றதே, அதுவும் அவசியம் இஷ்டாநிஷ்ட போக்துருத்தகைமையை யடைவிக்கும், எனவே, அறியாளினும் யாதுகொல் சிறப்பெனின்? இங்ஙனமிருப்பினும் சுகதுக்க போகபலந்தருங் கருமங்களிற்றானதல், சமாதியப்பியாச பரிபாக பூமிகைப்பேதங்களிற்றானுதல், தத்துவவித்துக்கட்கு, எவ்விக்கருத்துருத்துவங் காணப்பெறுகின்றதோ, அவ்விக்காணப் பெறுங்கருமம் இல்லாததேயாம், மூர்க்கர்கட்கு அஃதவ்வாறல்லவாம் என்னுமிதுவே சிறப்பென வுணர்க. யாதுள்ளேயிருக்கும் மனோவிருத்தியின் நிச்சயமோ, உபாதேயத்தன்மை யுணர்வோ, வாசனைப் பெயர்வாய்ந்ததோ, அதுவே கருத்துருத்வம் ஆம்; ஆகுக, வாசனையே கர்த்ருத்தன்மையேனும் போக்த்ருத்தன்மையேனும், ஆயினும் யாங்ஙனம் தஞ்ஞ அஞ்ஞர்கட்கு விசேஷ சித்தியெனின்? கேட்டி! இயற்றுவாரேனும் இயற்றாரேனும் வாசனையிருத்தலின் தத்துவத்தை யறியாதவர்கட்குக் கருத்துருத்தன்மை யிருந்துகொண்டேயிருக்கும், தத்துவத்தை யறிந்தவர்க்கோ அவாசனைத்தன்மையனே அங்ஙனிலதாம். அறிந்தவன்பால் விசேடத்தை நன்கிலக்குதும்:—தத்துவமுணர்ந்தவனோ சிதிலீபூதவாசனையனாயியற்றினும் பலத்தை யநுசந்தியான், மற்றோ, அசக்தமதியனாகி யசைவுமாத்திரத்தைக் கேவலம் ஆற்றுவன், இங்ஙனமே யவனது போக்த்ருத்தகைமையும் அசத்தேயாம், சம்பிராப்தமாயினும் பலம், இவ்வியாவும் ஆன்மசொரூபமேயாமெனக் கருமபலத்தையநுபவிப்பன், மக்கின மனத்தராய்ப் போகாசக்தசித்தராய அஞ்ஞரோ செய்யாரெனினும் செய்பவரேயாவர். அச்சீவர்களுக்குள் ஆத்மவித்துக்களுடைய அம்மனமானது, மேகம் பொழியும் மழைகாலத்திற் கானனீரென்ன அத்தியந்தம் உபசாந்தியை யடைந்துறுவதாய், பிரசண்ட ஆதபத்தில் இமகணமென்ன விலீனப்பட்டுத் துரியதசையைத் துதைந்துறுவதாய், அத்தன்மையதாகவே இருப்பதாகும் என்பதே விசேடமென அறிந்துகொள்க. இதனானன்றோ "ஆநந்த நிராநந்த மிரண்டுமில்லை யசைவுமசைவின்மையுமா மவையுமில்லை, யீனந்தீர் சத்தசத்தன் றிவற்றுக்கெல்லா மிடையல்ல ஞானிமன" மெனக்கூறியதூஉம், விடயசுக விசிராந்தமுமல்ல, சொரூபாநந்த சூனியமுமல்ல, சிலாதிபோலும் ஜடாவஸ்தமுமல்ல, கூறிய ஆநந்த நிராநந்த சலாசலசத்தசத்துக்களின் சந்தியவஸ்தை வடிவமும் அல்ல, மற்றோ, பரிசேடத்தாற் பூமாத்மசுகைகரசமாமென்பது பொருள். நிர்விகாரத்தினின்றும் யாதுண்டாயதோ அது நிர்விகாரமாகவே யிருக்கவேண்டும், அல்லாமற் சிதாத்மாவினும் வியதிரிக்தமாக இருக்குமாயின் நிட்களங்கமாய பரமேசுரருக்கு எச்சகற்பாவ ஆபத்திதங்களாலருளப்பெற்றதோ, அவ்விதுகளங்காபத்தியருளியதே யாகுமென ஸ்ரீ இராகவர் சங்கிப்பக்கேட்ட ஸ்ரீ வசிஷ்டபகவான் தத்துவதிருஷ்டியானே ஜகத்திற்குச்சிற்பாவத்தையும் இங்ஙனம் அவிகாரத்தன்மையையுங்கண்டு சமாதானித்தல்:—இதுவேயென்பது

இப்பரமேசுரரே இச்சகமாயுண்மையாயுளர், ஹே அநக! ஈண்டுமல மிறையுமில்லவே யில்லை.

(ச.) படர்மதத்தால் = மிகவும் மோகாநந்தங் கலந்த மதுவாதியால் செய்யப்பட்ட மதமாம் அதன் வசத்தினால், ஆன்மா = புருடனானவன், தனைப்பிறர் போற்றோன்று மாபோல், = தனக் கன்னியம்போல் விளங்குவதுபோல, தனக்கென்னும் நான்காம் வேற்றுமை தனையென இரண்டாம் வேற்றுமையாயிற்று, பதத்தலிலா வந்தச்சிற் பாவந் தானே = அந்தச் சித்ரூபமான வான்மாவே, பொய்போற் றோன்றியது = தனது அஞ்ஞானமென்னும் ஏதுவினா லன்னியம்போல் விளங்குவதாம், ஏதொன்றால் = வாகி யேந்திரியத் துவாரத்தினின்றும் வெளிப்புறப்படும் எந்தச் சைதன்யத்தினால், சத்தமாதி யைம்புலனும் = சத்தாதி விடயங்களை, இராகவா நீ, அறியாநின்றாய் = தொடர்கின்ற வது இந்தவான் மாவாகும் = அத்தன்மையான சைதன்யரூபம் இவ்வான் மாவாகும், தோற்றமெலாந் தானாகித்தன்னி னின்றவிடமுடைய பரப்பிரமம் இதுவேயாகும் = இவ் வான்மாவேயாம், இஃதுள்ளும் புறமும் வியாபித்துளதாம் இப்பிரஹ்மமே வியதாதி நாமபேதத்தானே இச்சகத்ரூபமாகத் திகழ்பெறும், இந்த அவித்யாதற் காரியரூபம் பிரஹ்மத்தினும் வியதிரிக்தமாகக் கிஞ்சித்துமிலதாம்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) உரைத்ததற்கு உவமனங்காட்டி, இந்நிலையை அதிகாரிகட்கே யருளவேண்டுமெனல்:—பொரு என்பது.

(ச.) அங்ஙனமன்றே.

பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகிவிளங்காமற் புழு தியாமோ, வொருபொருளாம் பிரமமாத்திர மேயல்லாது பயமெனுங் கற்பனைப் பேரொன்றுமில்லை, யெரியிடத்திற் சூடுமாத்திரமே யல்லாலிரண்டுண்டோ வவ்வ கைபோ லென்றுமொன்றாஞ், சரியைகிரியாயோகப் பதத்தின்முற்றிச் சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்.

(ப - ரை.) பொருகடலில் திரைமுதலாய்ப் பிறந்த எல்லாம் = பாரோடுபோர்புரி யும் வாரதியில் அலையேயாதியாக உண்டாய அனைத்தும், புனலாகி விளங்காமல் புழுதி ஆமோ = வாரியேயாகி வயங்காமல் தூள் ஆகுமோ ஆகாதாம், அதுபோலவேறாக இல் லையாம். ஒருபொருளாம் பிரமமாத்திரமே யல்லால் = ஒப்பற்ற ஏகவஸ்துவாம் சிவமே யல்லாமல், உபயமெனுங் கற்பனை = இரண்டாவதாய கற்பனை, பேரொன்றும் இல்லை = பெயர்மாத்திரமுங் கிடையாது, எரியிடத்தில் சூடுமாத்திரமே யல்லால் = அக்கினியிடத் தில் ஔஷ்ண்யமாத்திரமே யல்லாமல், இரண்டுண்டோ = இரண்டாவ தொன்று முளதோ, இல்லை, அவ்வகைபோல் என்றும் ஒன்றாம் = அத்தன்மைபோல எப்போதும் ஒருபொருளேயுளதாம், சரியைகிரியா யோகப்பதத்தின் முற்றிச் சாதனங்கள் நிறைந்த வர்க்கே சாற்றல் வேண்டும் = சரியைமுதலிய மூன்று பதங்களிற் பரிபாகமடைந்து மோக்ஷசாதனங்களைப் பூரணயாக உடையவர்க்கே யுபதேசிக்க வேண்டும்.

(ஸ்ரீ - வீர) சிந்துவின்கண் தரங்கபேன புற்புதாதி சமுதாயகணங்களனே நீரே யிலங்குகின்றது அன்றிப் பொடிகளலவாம், ஹே இரகூத்வஹ ! வன்னியில் ஔஷ்ண்ய மாத்திரமலது மற்றொன் றில்லாததேபோலப் பிரஹ்மமாத்திரமலது இரண்டாவது கற் பனையே யீண்டுளதாவதில்லை யென்றுணர்தி.

(ச.) புழுதி என்பது உபலக்ஷணம், வஸ்து அந்திரம் விளங்காததுபோல் என்பது பொருள். ஒருபொருளாம் = அத்வயமாகியவஸ்துவாம், பிரமமாத்திரமே யல்லால் =

சச்சிதாநந்தான் மகமான பிரஹ்மரூபத்தைத்தவிர, வன்னிக்கு உஷ்ணத்தைத்தவிர துவிதீயகற்பனை யில்லாததுபோல், உபயமெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை = துவிதீயமனுங் கற்பனுநாமம் எவ்வளவுமின்றாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அஞ்ஞதிருஷ்டியிலேயே இருக்கும் ஸ்ரீ இராகவர், எல்லாவாற்றானும் ஆநந்தைகரச சுபாவத்திருத்தலின், அதன் விருத்தத்தக்க ஜகத்ரூபத்தன்மை பிரஹ்மத்திற்குக் கூறமுடியாததே யெனமன்றூபெவராய், பிரஹ்மம் நிர்த்துக்கம் நிர்த்வந்தவம், அதனினுண்டாயது துக்கமயம் ஜகத்தென்னும் அஸ்பஷ்டார்த்தமேய தங்களுடைய இவ்வசனத்தை யறிகின்றிலேன் என்றாசங்கிப்ப, இவ்வண்ணம் விடைவிளம்பாதபடி ஸ்ரீ இராகவராற் செய்யப்பெற்ற வசிஷ்டபகவான், இராமப்பிரபோதன உபாயத்தைச் சிந்திக்கும் பிரகாரத்தை ஸ்ரீவான்மீகிபகவான் அருளல்:—இயற்கையென்பது.

(ச.) இங்ஙனம் சேதனசேதனப் பிரபஞ்சத்திற்குச் சித்து விவர்த்தத் தன்மையுண்மையின், அதனோடபேத நிரூபித்து அத்தகைய அதிகாரிக்கே இவ்வர்த்தம் பிரகாசிக்குமென்றறிவித்தற் குரைத்தல்:—இயற்கை யென்பது.

இயற்கைகுணஞ் சோதித்து முன்னேபின்னே யாவையுமாம் பிரமநீயென்னல் வேண்டும், வியப்புறவாசையி லுழல்வார்க்கிவ் வாறோதின்மீளா ததிநரகில் • வீழ்த்ததாகுந், தியக்குறுபோகத் தாசைதீர்ந்து புந்திதெளிந்த மகத்தாவார்க்கே திகழத்தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக்கிட்டா வருந்திபுந்தன் பிறப்பறுக்கு மகனுமாங்கே.

(உனைப்போல்வார்க்கே யென்பது 6000-ப் பாடம்.]

(ப - ரை.) முன்னே = ஆதியில், இயற்கைகுணஞ் சோதித்து = சமதமகுணங்களாற் சீடனைப் பரீக்ஷித்து, பின்னே = அதன்பின், யாவையுமாம் பிரமநீயென்னல்வேண்டும் = சர்வமாயுமிருக்கும் இந்தச் சுத்தப் பிரஹ்மமேநீயென் றுபதேசிக்க வேண்டும், வியப்புற ஆசையில் உழல்வார்க்கு = விடயசத்திய புத்தியால் விஸ்மயமடைய விடயஅவாக்களில் மோகமுற் றலைபவர்க்கு, இவ்வாறோதின் = எல்லாமாய சிவமேநீயெனவுபதேசிக்கின், மீளாததிநரகில் வீழ்த்ததாகும் = மீட்சியில்லாத மகாநரகஜாலங்களில் தள்ளியதாகும், தியக்குறு போகத்தாசைதீர்ந்து = மயக்கத்தைச் செய்யும்போகங்களில் அவாவொழிந்து, புத்திதெளிந்த மகத்தாவார்க்கே திகழத்தோன்றும் = பிரபுத்தபுத்தியையுடைய மகாத்மாக்கட்கே உபதேசித்தலுசிதமாம், விளம்பவெளியா மாதலின், மயக்கமற உணர்த்தவல்ல குருவைக்கிட்டா = மோகமேகுமாறு தெரிவிக்கும் ஆற்றலுற்றதேசிகரை யடைதலும் துர்லபம், வருந்திபும் தன் பிறப்பறுக்கும் மகனுமாங்கே = அதுபோலவே சிசுருஷையாலும்சிரவணுதியாலும் சிரமமெடுத்துக்கொண்டு தன்னுடைய ஜனனமரணந் தீர்த்துக்கொள்ளும் முயற்சியுள்ள சீடனும் துர்லபமேயாம். தத்வஞ்ஞனும் அதிகாரியும் துர்லபராதலின் அதத்வஞ்ஞன் அநதிகாரிக் குபதேசித்தல் வஞ்சனையாதலின் நரகபாதவேதுவாம்,

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ இராகவருக் குபதேசிக்கும் விடயத்தில் ஸ்ரீ வசிஷ்டராகியமுனிசார்த்துலர் சிந்திப்பதாவது:—எப்புருடன் வியுத்பந்ந மனமுடையவனும், ஜகத்திற்குச் சடபாவத்தை விட்டுச்சித்தைகரசத்தன்மையைக் காணசமர்த்தனுவனோ, அறியவேண்டியதையறிந்தவனும், மதிமானும், மோக்ஷோபாய சாஸ்திரங்களின் கரைகண்டவனும், விவேகம் நிறைந்தவனும், உள்ள அத்தகைய அதிகாரியினது திருஷ்டியால் எவ்வித்து

விற்கும் எத்தோட்டமும் விரோதமும் உண்டாகாதாம், ஜகத்விருத்தரூபம் வித்யாத்மா வின்கண் ணெங்குமில்லையாதலின் நன்ருக எத்துணை எம்மனேரால் இராகவன் உபதேசிக்கப்பெருனே, அத்துணையுமே இளைப்பாறுதலை யெய்தமாட்டான், ஆகலின் அவசியம் அவனுக் குபதேசிக்கவேண்டும்; ஆனல், அர்த்த வியுற்பன்ன மதியுடையவன் றிருஷ்டிக்கோ, முன்மொழிந்த சர்வம் பிரஹ்மமென்னும் இவ்வுபதேசம் வியக்தமாகச் சோபை செய்வதில்லை, ஏனெனின், இவ்வரை விற்பத்தியுடையோன், திருசியங்களைச் சம்பாதித்துச் சம்பாதித்துப் போற்றி வாழ்வானுதலின், அவ்வகையானே யோகதிருஷ்டியானே எப்போதுமே திருசியவத்துக்களையே பாவித்துப் பாவித்துக்கெட்டுத் தத்துவபோதத்தினின்றும் பிரட்டனுவன் என்பதாம். ஆயின் யாவனுக்கத்தகைய வுபதேசம் பொருந்துறுமெனின்? மேலான திருஷ்டி யடைந்துள்ளவனுக்குப் போகேச்சை யுண்டாவதே கிடையாது, அக்காலோ சர்வம் பிரஹ்மென்னும் சித்தாந்த மாயபரிகிஷ்டித வுபதேசம் அவனுக்குப் பொருத்தமுடைத்தாம். ஆயின்யாங்ஙனம் அர்த்த விற்பனனன் உபதேசிக்கத்தக்கவன் எனின்? அறைதல்:—இயற்கையென்பது. ஆதியிற் சமதமப்பிராய குணங்கள் இருக்கின்றனவாவென்று சீடனை நன்கு சோதித்துப் பின்னர் இவ்வியாவும் சுத்தப்பிரஹ்மம் அதுவே நீயென் றுபதேசிக்கவேண்டும். அர்த்தப் பிரபுத்தனுய அஞ்ஞனுக்குச் சர்வம் பிரஹ்மமென யாவ னுபதேசிப்பனே அவன் அதனுல் மகாநரகஜாலங்களில் விநியோஜிதனுவன். தெளிந்த புந்தியனும், மிகக்ஷீணமான போகேச்சையனும், சகலவித ஆசைகளும் அற்றவனும் ஆகிய மகாத்மாவிற்கு, அவித்யாமலம் இல்லையாம் எனவுபதேசித்தல் பொருத்த முடைத்தாம்.

(ச.) முன்பு சாதன சதுபட்டய சம்பத்தியைப் பரீக்ஷித்துப் பின்பு அதிகாரிக்குப் போதிக்கவேண்டும் என்பது பொருள். அநதிகாரிக்குப் போதிக்கின் மகாபாவமெனல்:—வியப்புற ஆசையிலுழல்வாருக்கு=அர்த்தப்பிரபுத்தன அஞ்ஞனுக்கு, இவ்வாறேதின்=சர்வம் பிரமமென்று போதிக்கின் அப்போதகன் அவ்வஞ்ஞனை, வீழாத நீரைில் வீழ்த்ததாகும் = மகாநரக சாலங்களிற் றள்ளினவனுவன், உனைப்போல்வார்க்கு = நிர்ச்சங்கற்பமான வுன்னைப் போன்றவர்க்கே, அவித்தைமலமின்மையின், திகழத்தோன்றும் = போதங் கோசரமாமென்பது பொருள். மயக்கம் + ஆங்கே என்பது கவிநாயகர் இருதயம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அஞ்ஞானதிமிரங் கெடுக்கும் பூமிபாஸ்கரராய் முனிசிரேஷ்டராய் இலங்கும் ஸ்ரீ வசிடபகவான் இவ்வாறு சிந்தித்து ஸ்ரீ இராகவரை நோக்கிக் கூறியருளல்:—விளக்குமென்பது.

விளக்குமிரவியுமலரு முண்டாயுண்டாம் வீசொளியும் பகற் பொழுதும்விரை போலத், துளக்கமில் சித்துண்டாகி லுண்டாஞாலந் தோற்றவு மாத்திரமே சொரூபமாகுங், கிளத்தபரமார்த்தத்தா லில்லையென்னக் கேட்டலுமேபாற்கடல்போற் கம்பீரத்தால், லளக்கரிதாய்ச் சீதளமாயமலமாகி யற்புதமாகின் மொழியென்றண்ணல் சொல்வான்.

(ப - ரை.) விளக்கும் இரவியும் மலரும் உண்டாய் = தீபமும் அருக்கனும் புஷ்பமும் உண்டாயிருக்குமாயின், உண்டாம் வீசொளியும் பகற்பொழுதும் விரையும்போல = எறியாநின்ற பிரகாசமும் தினமும் வாசனையும் உளவாகும், அதுபோல, துளக்கமில் சித்துண்டாகில் = களங்கங் கலக்கமகன்ற அறிவுண்டாகின், உண்டாஞாலம் — பிரபஞ்சமுளதாம்; தோற்றவுமாத்திரமே சொருபமாகும் = பிரதிபாசமாத்திரமே வடிவமாகும்; கிளத்த பரமார்த்தத்தால் இல்லை என்னக்கேட்டலுமே = ஆராய்ச்சியாற் றேற்றும்

உண்மைநோக்கினுனோக்கின் உலகமில்லவேயில்லை என்றருளக் கேட்டபோது, பாற் கடல்போல் = க்ஷீரோதகுக்ஷி துல்லியமாய், கெம்பீரத்தால் அளக்கரிதாய் = அதிவித தககனகம்பீரமாய், சீதளமா யமலமாகி = சீதலாமலதீப்தியுடையதாய், அற்புதமாம் = அதிவிசித்திரமாம், நின்மொழி = தேவரீரது உபதேசத்திருவாக்கியம், என்று = என்பதாக, அண்ணல் சொல்வான் = ஸ்ரீ இராகவர் கூறுவார்.

(ஸ்ரீ-வீர.) ஹே அநக ! களங்ககலனை பிரஹ்மத்தின் கண்ணேயுளதா இலதா என்பதை நீயேசுயமறிவாய், அறியாயின் சித்தாந்தகாலத்தில் உரையாடத்தக்கதாம், இப்போது இன்றாம். இப்போது அர்த்த விற்பத்தியுடையவனுக்குத் தக்கவாய, பிரஹ்மத்திற்கு முற்புகன்ற சர்வசக்தித் தன்மையாதியையும், பிரத்தியக்குக்குச் சர்வாகம் பாவ தரிசனத்தையும் பிரதமம் கூறக்கேட்டி:—பிரஹ்மம் சர்வசக்தி, சர்வவியாபி, சர்வகதம், சர்வோகமே யென்பதாம், மாயையினாலேயே இதற்குச் சர்வசக்தித்தன்மையும் பிரத்தியக்கிற்குச் சார்வாத்மியமுமா மென்பதை விரிந்தறிக: இந்திரஜாலக்காரர் மாயையால் விசித்திரக் கிரியைகளை யுண்டுசெய்பவராய், சத்தை யசத்தாக்குகின்றனர், அசத்தை யோசத்தாக்குகின்றனர் என்பதை யெங்ஙனங் காண்கின்றாயோ அவ்வனமே, ஆத்மா அமாயாமயமாயினும் மாயாமயமடைந்ததுபோலப் பரமஜந்திர ஜாலிகனெனவாகிக் கடத்தைப் படமாக்கும் படத்தையோகடமாக்கும், பாறையிற் கொடியைப் பயக்கும், மேருவிற் கனகதடத்தில் நந்தனவன மெனலதையிலுபலத்தை யுண்டாக்கும், இது அசம்பாவித சம்பாவனப் பொருட்டு லோகசாஸ்திரப் பிரசித்த திருஷ்டாந்தமாம், கற்ப பாதபங்களில் இரத்நப் பூங்கொத்துகள்போல வியோமத்திற் கானனத்தை யத்தியாரோபஞ்செய்யும்; தேவசக்தியானே அசம்பாவிதங்களேயாய நந்தனவன ரத்நஸ்தபகாதிகளும் சம்பவிக்கின்றன வெங்ஙனமோ அங்ஙனமே ஆத்மசக்தியானும் சம்பவிக்கலாம் என்பதுகருத்து. அத்தகைய பரமார்த்தவத்துவும் உளதாயின், ஜகத்துண்டாம் என்பதிற் றிருட்டாங்கள் இவையாம்:—கேவலம் சான்றாயும், நிராமயமாயும், சர்வசமவடிவமாயும், நித்தியம் சிறிதும் கலக்கமிலதாயும் ஆன்மதத்துவம் இருக்கின்றபடியால் இவ்வாறுலகமுண்டாகின்றது; தீபமுளதாயின் ஆலோகம் உளதாதல் போலவும், அருக்கனுளனாயின் வாசரம் உளதாதல் போலவும், புஷ்பம் உளதாயின் ஆமோதமுளதாதல் போலவும், தானாகவேயுலக முண்டாகின்றது பரம்பொருளின்பால். ஆபாசமாத்திர மாகவே இவ்வுலகம் காணப்பெறுகின்றதே யல்லாமல் வேறில்லை, சமீரணனுக்கு ஸ்பந்தமென்ன சத்துமல்ல, அசத்துமல்ல, விலக்ஷண அநிர்வசநீயமாய்த்திதமாம். பூர்வம்யாண்டும் கலனையே மனுதிதுவைதகற்பனைக்கு மூலம் எனமொழியப் பெற்றது, இப்போதுநிர்விகார அத்வயவத்துவிற் கலனைக்கு நிமித்தம் சம்பவியாதென்று கொண்டு அதனைக்கேட்கும் வேட்கையராய ஸ்ரீ இராகவர், குருவின் ஆதரப்பொருட்டு முன்புகன்றருளியதைப் புகழ்தல்:—கினத்தவென்பது, க்ஷீராப்தி யுதரத்தினின்றும் உதிதமாய அமிர்தகிரணனுக்குச் சமானமானவையும், அதனானே அதிசீதல அமலதீப்தி யுடையனவும், எங்கணும் பரவிக் கம்பீரமானவையும், விசித்திர முற்றவையும்,ஆய தங்களுடைய திவ்யவாக்குகளாற் பரம சந்தோஷமுற்றேன்.

(ச.) தீபமிருக்கிற் பிரகாசமும், அருக்கனிருக்கி னொளும், புஷ்பமிருக்கில் வாசனையுமிருக்கும்; அதுபோற் சித்திருக்கிற் சகத்திருக்கும், இச்சகம் இல்லை, தீபப்பிரகாசாதிகள்போற் சிற்சங்களுக்குங் காரியகாரணமாதலினால்; ஒன்றற்கொன்று வியோகமுமின்று பேதமுமின்றென்பது கருத்து. என்ன, இராகவர் கேட்டலுமே, நின்மொழி =

உமது உத்திகளால், யான் போதிக்கப்பட்டேன், என்றண்ணல் சொல்லி மீட்டும் சொல்வான். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உபதேசத்தாலுண்டாய நன்மையையும், தமது வியாமோக மிருக்குந் தன்மையையும் ஸ்ரீ இராகவர் உரைத்தல்:—இம்மொழி யென்பது.

இம்மொழிகளா லிமைப்போ திருளாமீளவிமைப் போதோவொளியாகுமிவ் வாருகி, மைம்முகிலா லற்பமாய்வெய் யிற்சீதம் வந்துவந்து போகின்றமழைநா ளொத்தேன்,மெய்ம்முனியே யநந்தமாய்ப் பலவாயொன்ருய் வீயாதாயளக்கரி தாய் விளக்கமெய்திச், செம்முறையா மாத்துமதத்து வத்துக்கிந்தச் செய்தொ ழில்கள் வந்தவாசெப்பு கென்ருன்.

(ப - ரை.) இம்மொழிகளால் = முன்னுபதேசித்த திவ்யவசனங்களால், இமைப் போதிருளாமீள விமைப்போதோ, வொளியாகும் = கணகாலம் ஆந்தியத்தையடைகின் றேன், கணகாலம் பிரகாசத்தன்மையை யடைகின்றேன், இவ்வாருகி = இங்ஙனமியை யுற்றவனுகி, மைம்முகிலால் அற்பமாய் வெய்யில்சீதம் வந்துவந்து போகின்ற மழைநாள் ஒத்தேன் = கார்மேகத்தா லிலவலேசமாய் ஆதபசாந்தம் தோன்றித்தோன்றிமறைகின்ற மழைகாலத்தியவாசர சமானமானேன், மெய்ம்முனியே, = சத்தியத்தை புணர்ந்த தபோதனரே ! அநந்தமாய் = அந்தமில்லாததாய், பலவாய் ஒன்ருய் = அநேகமாய் ஏக மாய், வீயாதாய் = அஸ்தமித மற்றதாய், அளக்கரிதாய் = அப்பிரமேயமாய், விளக்க மெய்தி = அதிபாசுரமாய் செம்முறையாம் = மிகச்சத்தா சாரமாயிலகும், ஆத்தும தத்துவத்துக்கு = பிரத்தியக்க பின்னப் பிரஹ்மத்திற்கு, இந்தச் செய்தொழில்கள் = இக்கலனை விசேடங்கள், வந்தவா = வந்துற்றது எங்ஙனமென்ன, செப்புக என்ருன் = உரைத்தருள வேண்டுமென்றனர் ஸ்ரீ இராகவர்.

(ஸ்ரீ - வீர.) கணப்போது ஆந்தியம் = வியாமோக தமத்தையடைகின்றவன் போ கின்றேன், தங்கள் திருவாக்குகளால், கணப்போது பிரகாசத்தன்மையை யடைகின் றேன்; அடைவதான் மழைகாலத்தில் உழலாநின்ற மேகங்கள் உன்னதினம் சாந்த ஆத பலவத்துட னிருப்பதுபோலு மிருக்கின்றேன். அந்தமற்றதாயும், அநந்தத்தன்மை யானே அப்பிரமேயமாயும் = பிரமாண அபரிச்சேத்தியமாயும், சர்வமாயும், பூர்ணமாயும் ஏகமாயும், சுயமாகவே யெப்போதும் பிரகாசிப்பதாயும், அஸ்தமியாத பரமார்த்தசொரு பப் பிரசித்தியுடையதாயும், இலகும் அத்விதிய பூர்ணசுபாவத்தில், பரிச்சின்ன கலனை வடிவவிகாரம் உண்மையாக்க் கற்பனையானுதால் சம்பவிக்கமாட்டாதாம் எனவதன் கண்ணே யேதுவை யருளல்வேண்டும் என்பதாம்.

(ச ) இமைப்போது = கணம், இருள் = ஆந்தியம், ஒளி = பிரகாசம், இவ்வா ருகி = நான் இத்தன்மையனுய், வெயின் மந்தாரம் பாடபேதம், மழைநாள் ஒத்தேன் = வருஷாகால வாசரத்துக் கொப்பானேன், ஸ்ரீ இராமர்:—மெய்ம்முனியே, பலவாய் = சர்வான்மகமாய், ஒன்ருய் = அத்துவிதீயமாய், வியாதாய் = நாசரகிதமாய், அளக்கரி தாய் = அப்பிரமேயமாய், விளக்கமெய்தி = நித்தியப் பிரகாசமாய், செம்முறையாம் = அநட்டசத்தியை யுடைத்தான, ஆத்மதத்துவத்துக்கு = இந்தச் செய்தொழில்கள் = பந்தவேதுவான வவித்தை, வந்தவா செப்புகென்ருன் = எப்படிவந்த திசைத்தருளு மென்ருன், தேசுக்குத் திமிராவரணம் அசம்பவமாதலி னென்பதுகருத்து. சீதலவங்க ளானும் ஆதபலவங்களானும் உபலக்ஷிதமாய வருஷாகாலத்தில் லோல அப்பிரங்களை

யுடைய வாசரம்போலக்கணம் ஆந்தியத்தை யடைகின்றேன், கணம்பிரகாசத் தன்மை யையடைகின்றேன் என்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ கை.) உனக்கு இவ்வியாமோகம் எமதுவாக்கிய தோடத்தானே வந்த தன்றும், மற்றே, தாற்பரிய அவதானமின்மைத் தோடத்தானே யெனக்காட்டி ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராகவரைச் சமாதானித்தல்:—மெய்யென்பது.

மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் முன்னொடு பின் விரோதமின்றிக், கையாருநெல்லி யெனக்காட்டவல்ல கட்டுரையேயாமிங்கு கழறிற்றெல்லா, மெய்யான ஞானவிழி வெளியாய்ப்போதம் விரியவுதித்தாலென் சொன்மன்னும் வித்தை, கையாரவலிதெளி தென்றுள்ளவாறு கலக்கமற நிலை நின்று காண்டியன்றே.

(ப - ரை.) மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் = உள்ள படியேயான பொருளையுடைய தொடர்மொழியின் உண்மைப் பொருளாகி, முன்னொடு பின் விரோதமின்றி=பூர்வாபர விரோதமின்றி, கையாருநெல்லி யெனக்காட்டவல்ல= கரதலா மலகம்போலக் காட்டக்கூடிய. கட்டுரையேயாம் = சத்தியசமர்த்த வசனமே யாம், இங்குகழறிற் றெல்லாம் = இவ்விடத் துனக்குபதேசித்த வுபதேசங்கள் யாவும், மெய்யான ஞானவிழிவெளியாய் = உண்மையான ஞானதிருஷ்டி பிரசந்நமாய், போதம் விரிய உதித்தால் = பிரபோதம் விததமாகவுதயமாயில், என்சொல் மன்னும் வித்தை= எமது வாக்கியமும் அதனாலடையப்பெறும் ஞானமும், கையார = காட்சிப்பட, வலி தெளிது என்று = பலம் அபலம் என்பதாக, உள்ளவாறு = இருக்கின்றபடியே, கலக்கமற நிலைநின்று காண்டியன்றே=சுவஸ்தமாக அறிவாய். அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) திதமானபடியாய அர்த்தமே வாக்கியார்த்தமாகவுள்ள வெமதுபதே சங்கள்யாவுமே, பதங்களின் ஆகாங்க்ஷை யோக்கியதை ஆசக்திரகிதங்கள் அல்லன வாம், அவாந்தர வாக்கியங்கட்கு மகாவாக்கியார்த்த அபரியவசானம் அற்றனவாம், பூர்வாபர விரோதமற்றனவாம், உபக்கிரம உபசங்காரங்கட்குப் பரஸ்பரவியாகாதங்கள் அற்றனவாம். ஆயின் எக்கால் எமதுதாற்பரிய அவதானம் எனின் ? அதற்கறைதல்:— மெய்யென்பது. ஞானதிருஷ்டியான்து பிரசன்னமாகிப் பிரபோதமான்து விஸ்தாரமாயு தயமானவுடனே எமது வாக்குகட்கும், அவற்றாலுளதாம் தத்துவதிருஷ்டிக்கும், இதர வாக்கு திருஷ்டி யபேக்ஷையால், பலாபலம் = பிராபல்யம், சுவஸ்தமாக வுள்ளவாறே யறிந்துகொள்வாய். அற்றேல், எங்ஙனம், தன்றாய்மலடி, என்வாயில் நாவில்லை, ஊமை யான், என்னும்வாக்கியம் ஹேது சுவசத்தாபாதித அர்த்தமுடையதாமோ, அங்ஙனம், " ஈண்டற்பமும் நானுவில்லை, ஒன்றே அத்துவிதீயம் " என்பதாதி சுருதிசாஸ்திரமும் தங்கள் வாக்கியங்களும் ஆம், ஆகலின்யாங்ஙனம் விரோதபரிகாரம் எனின் ? இங்ஙன மாம், உபதேசி யோபதேசார்த்தம், சாஸ்திரார்த்தப் பிரதிபத்தியின் பொருட்டு, சப் தார்த்த வாக்கியரசனை மயலாம், அம்மயமாக வேண்டாம்; அதாவது, அசத்தியமாய சொப்பனாதிகட்கும், சத்தியார்த்தப் பிரதிப்த்தி யுபாயத்தன்மை காண்டலின், மித்தியா பூத சப்தார்த்த வாக்கியரசனைப் பிரமமும், சத்தியசாஸ்திரார்த்தப் பிரதிபத்தி ஹேது வாகச் சம்பவிக்கின்றதென வியாமூடத் தன்மையானே பிரமம்யம் ஆகாதொழிதி யென்பதாம்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்:—யாமிங்கு கழறிற்றெல்லாம் = எமது வாக்கியமனைத்தும், மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் = அவிசம்வாதி வாக்கியார்த்தமேயாய், முன்னொடுபின் விரோதமின்றி = பூர்வாபரவிரோதத்தினுல், அசங்கதார்த்தங்களும் விபரீதார்த்தங்களும், இன்மையதாய், கையா + யாம்=இங்ஙனமாயின், யாதினல் அங்ஙனந் தோன்றவில்லையெனின்? உத்தரம், மெய்யான ஞானவிழி வெளியாய் = ஞானதிருஷ்டி பிரசன்னமாய், போதம் விரியவுதித்தால் = பிரபோதம் வியாபகமாகவுதயமாயின், கையாரக் கலக்கமற நிலைநின்று = உடனே சுவஸ்தனுகி, என் சொல்லென்னும் வித்து = எனது வாக்கையும் அதன் மூலத்தாற் கிடைக்கும் பொருளான ஞானத்தையும், வலிதெளிதென்று = பிராமாண்ணியம் அப்பிராமாண்ணியம் என்று, உள்ளவாறு காண்டி=உள்ளபடியுணர்வாய், அன்று ஏ இரண்டும் அசைநிலை.(15)

(ஸ்ரீ-வீர - அ-கை) வாக்குப் பிரபஞ்சமில்லாமல், இச்சாதனுஞ்ஞானமும், மூலாஞ்ஞானமும், பரஸ்பர சகாயத்தானே பிராந்தி சகஸ்ரசாகைகளை மேலும்மேலும் உண்டாக்கும் வாயிலாக நன்ருய் வளர்ந்து திடமாயிருக்கின்றன, இவற்றைப் பிளத்தற்கும், அதன் சாதனங்களிற் பிரயத்நம் செய்யவும் முடியாதாம்; எனினும், உபதேசவாக்குப் பிரபஞ்சத்திற்கும், அதனுலுண்டாய வித்தைக்கும், அவித்தையின் காரியத்தன்மை சமமாதலின், யாங்ஙனம் அவித்தை விரோதித்தன்மை? தன்விரோதி வித்தையைத்தான் யாங்ஙனம், அவித்தை பிரார்த்திக்கும் எனின்? ஆண்டுரைத்தல்:—தன்னென்பது.

தன்னுருவ மாய்வதற்கே முயல்வதாயுத்தமமான வவித்தையினுற் சகலமான, வின்னலுறு குற்றமிலா வித்தையெய்து மெய்கணைகள் கணையாலே நஞ்சைநஞ்சாற், றுன்னுபகை பகையாலே தீதுதீதாற் றுடைப்பதுபோ லவித்தை தனைத்துடைத்தல் வேண்டு, மூன்னியுறப் பார்த்தலுமே யிதன்சுபாவமொழிந்து போய்த்தன் மாய்வாலுதவு மின்பம்.

(ப - ரை.) தன்னுருவ மாய்வதற்கே முயல்வதாய் = சுவாத்மநாச உத்யம இச்சையுடையதாய், உத்தமமான =பரிபக்குவமடைந்த, அவித்தையினுல்=அவிச்சையினுலே, சகலமான இன்னலுறு குற்றமிலா வித்தையெய்தும் = சர்வதுக்கந் தருந்தோஷ அபஹாரிணியாய வித்தையைப் பிரார்த்திக்கும், எய்கணைகள் கணையாலே = ஏவாநின்ற அஸ்திரம் அஸ்திரத்தாலே, நஞ்சைநஞ்சால் = விடம் விடத்தினுல், துன்னுபகைபகையாலே = நெருங்கிய சத்துருசத்துருவாலே, தீதுதீதால்=மலம் மலத்தினுலே, துடைப்பதுபோல் = கெடுக்கப்படுவதேபோல, அவித்தை தனைத்துடைத்தல் வேண்டும் = மாயையைக் கெடுத்தல் வேண்டும், உன்னியுறப் பார்த்தலுமே = ஆராய்ந்து அழுந்தி நோக்கலுமே, இதன் சுபாவமொழிந்து = இதனியற்கை யிழிந்துபோய் = அத்தியந்தாபாவமடைந்து, தன் மாய்வால் = தனதுசொரூப மின்மையினுனே, இன்பம் உதவும் = ஹர்ஷத்தைத் தருவதாம்.

(ஸ்ரீ - வீர.) தன்வடிவழிவு முயல்வு விழைவனுஉம், வெகுஜன்ம சஞ்சிதசுகிருதவிசுத்த அந்தக்கரண ஆகாரபரணத முற்றனுஉம், ஆகிய அவித்தையானே, சர்வதோஷ அபஹாரிணியாய வித்தையானது பிரார்த்திக்கப் பெறுகின்றது. பெறவே, தனது சரீர விரோத மிருப்பினும், தனது ஆத்மஹிதத் தன்மையுண்மையின் விவேகியாய பதிவிரதையினுக்குப் பதிசிதை யாரோகணமேபோல அதன் பிரார்த்தனைகூடும் என்பது கருத்து. விரோதித்தகைமையை உபபாதித்தல்:—எய்கணையென்பது. அஸ்திரம் அஸ்தி

ரத்தானே சமிக்கின்றது, மலம் மலத்தானே = க்ஷாரத்தானே கழுவப்பெறுகின்றது, விடம் விடத்தானே சமமுறுகின்றது, ரிபுவானே ரிபுஹநநஞ் செய்யப்படுவன். அதற்குத் தன்னுசகத்தன்மையேல் கர்மகர்த்ருதை விரோதம் வருமேயென வாசங்கித்து, கிரியையின் கண்ணவ்விரோதமாம், ஞானத்தானே யஞ்ஞானபாதத்தில் இலதாம் என்னுங் கருத்தாவியம்பல்:—போலவித்தையென்பது. இத்தகையதேயாகு மிராகவவிம்மாயை, யீது தனதழிவானே மகிழ்வுதருமோ, இதனியற்கை குறிப்பிக்கப் பெறுதாம், இது ஓர்ந்து நோக்கும்போதே யழிந்துபோம்.

(ச.) தன்னுருவம் மாய்வதற்கே முயல்வதாகி = சொச்சொரூப நாசத்திற்குரிய எத்தனத்தா லுதித்ததாய், சரமசாக்ஷாத்கார ரூபவித்தையும் அவித்தையின் பரிணாமரூபமாதலின் அவித்தைக்குத் தன்னுருவமாய்வதற்கே முயல்வதாகுவது தகும்; அச்சரமமும் சுவசொரூப நாசப்பொருட் டுண்டாயவுத்யமத்தானே யுதிதமான தாமென்றுணர்க. தமமொழித்த = பரிபக்குவமான, அவிச்சையினுல் = அவித்தையால், சகலமான வின்னலுறு குற்றமிலா = சர்வதோஷ அபகாரிணியான, விச்சையெய்தும் = வித்தையடையப்படும், தீதுதீதால் = மலத்தை மலத்தால், இதன் சுபாவம் = பிராணிகளின் சம்சார மூலமான இந்தமாயையினது சொரூபம், அறிதற்கசக்கியமாம், யாதினுலெனில், உன்னி புறப்பார்த்தலுமே = விசாரிக்கும்போதே, ஒழிந்துபோம் = நசிக்கும், அசத்தியமாதலின் என்பதுகருத்து, தன்மாய்வால் = சுயநட்டமாயின், இன்பமுதவும் = பிரஹ்மாநந்தத்தைத்தரும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வாஸ்தவமாக மாயையிலதென்றும் அதுதெரியுங்கால மிலதென்றும், அதுவரைசிரத்தை எமது வசனத்தாற்றுக வென்றும் இயம்பல்:—நனியென்பது.

நனிமெய்யாய் மாயையிலதென் றிவ்வாறுநாடுவாய் ஞானியாய்ஞேயம்பெற்றுற், றுனிசெயுமீதுள மாயையறிதியன் றேதுகளிலா நற்போதந் தோன்றுமட்டும், பனிமாயையில்லை யெனவென் சொல்லாலே பழுதில்லாவறுதி யுறப்பற்றி நிற்பாய், புனிதமுறு பிரமமேயெல்லா மென்று புந்தியிற்கண்டோர் முத்திபொருந்தினுரே.

(ப - ரை.) நனிமெய்யாய் = மிகவும் உண்மையாய், மாயையிலதென்று = மாயையானது இல்லவேயில்லை யென்று, இவ்வாறு = இங்ஙனம், நாடுவாய் = சிந்திப்பாய், ஞானியாய்ஞேயம் பெற்றால் = அறியவேண்டியதையறிந்து அடையவேண்டியதை அடைந்தாயேயானுல், துனிசெயுமீதுளமாயை அறிதியன்றே = அக்கணமேய ஞருறுத்தும் இம்மாயையி னதியற்கையைத் தெரிந்துகொள்ளுவாய், துகள் இலாநற்போதம் தோன்றுமட்டும் = பிரதிபந்தகரகித உண்மையுணர்வு உதயமாங்காறும், பனிமாயை யில்லையென என்சொல்லாலே = பனிபோல ஆவரணஞ்செய்து மூடிக்கொள்ளும் அவித்தை நாஸ்தியென்பதாக எமதுவாக்கினுலே, பழுதில்லா அறுதியுறப்பற்றி நிற்பாய் = நிச்சல நிச்சயமுடையவனுக ஆதி, புனிதமுறு பிரமமேயெல்லா மென்று புந்தியிற் கண்டோர் = பவித்திரமாய பிரஹ்மமேசர்வமும் என்று புத்தியிற் றரிசித்தவர், முத்தி பொருந்தினுரே = மோக்ஷசொரூபமே யாவர்.

(ஸ்ரீ - வீர.) இம்மாயையானது வஸ்துவிருத்தியாகவோ இல்லவேயில்லை, இவ்வண்ணம் ஆசாரிய சுருதிதருக்க சுவானுபவ அப்யாசப்பிரதீபித பாவனையினுலே, நீதத்துவவித்தாகிச் சுவாத்மவாஸ்த வரூபம், விஸ்மிருதகண்ட சாமீகரம்போலும், அடைவுற்றவ

ஞகி, எமது வாக்கியத்தின் ஆசயத்தை அறிவாய் நன்குபாவிப்பாய், இப்போதோ, எமது வசன விசுவாசத்தால், பரோக்ஷகற்பமாகவே யாங்கூறிய பொருள் கிரகிக்கத்தக்கதாம் எனல்:—நற்போத மென்பது. நீ யெதுகாறும் நன்குணரவில்லையோ அதுகாறும் எமது வாக்கியத்தானே உனக்கு அவித்தையே யில்லையென்பதான அதிசிரேஷ்ட நிச்சயமானது நிச்சலமாக வுண்டாகக்கடவது. நிச்சயத்திற்கு நிச்சலத்தன்மைச் சம்பாதனத்தில் உபாயங் கூறிமுடித்தல்:—பிரமமே யென்பது. மனோவிருத்தி ரூபம்யாது இது சாக்ஷி பிரத்யய வேத்யத்தன்மையை அடைவுற்றது, சர்வவியவகார பீஜத்தன்மையானேமகத் மனனம் = அதீத அநாகத அநேகார்த்தப் பிரதிசந்தானம் இது அசத்துமாத்திரமேயாம் அதன்கண்ணே துயாதோவெனின் ? மனோமாத்திர விஜ்ரும்பித மாதலின் என்பதாம். மநநிராச மருவியவழிமனம் நிரிந்தன அக்கினியொக்கத் தானேசாந்தியாம், எனப் பிரஹ்மசன்மாத்திர பரிசேடமாக, முன்மொழிந்த நிச்சயநிச்சலத் தன்மையானே புருடார்த்த சித்தியாம் என்னுங்கருத்தானே கூறல்:—பிரமமே யென்பது. சத்தத்பிரஹ்ம மென எவனதுண்ணிச்சயம் அவனே மோக்ஷவடிவமாவன்.

(ச) நனிமெய்யாய் = பரமார்த்தமாக, மாயையிலதென்று, = அவித்தையே யின்றென்று; இவ்வாறு நாடுவாய் = இங்ஙனம் உதித்தபாவனையால் ஞானியாய் ஞானப் பேற்றால் = பிரமான்மைக் கியத்தினது லாபத்தினால், துனிசெயுமீதுள மாயைய றிதியன்றே = இவ்வவித்தையினது சுபாவத்தை நீயுணர்வாய், அன்று ஏ அசை, துகளிலா நற்போதந் தோன்றுமட்டும் = நீ பிரதிபுத்த ஞாதவரையும், என்சொல்லாலே = எனது வசனத்தாலே, பனிமாயை யில்லையென அவித்தையே யின்றென்று, பழுதில்லா வுறுதியுறப்பற்றி நிற்பாய் = இராமா நீ நிச்சலநிச்சயனுவாய், புனிதமுறு பிரமமேயெல்லா மென்று = சர்வம்பிரமமென்று, புந்தியிற்கண்டோர் = அகத்திற் பாவிப்பவர், முத்தி பொருந்தினோரே.

(17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேதமதியைக் கெடுத்துப்போதமுற வேண்டு மென்றும், போதம்புக்கா லிம்மாயையித்தகைத் தெனத்தெரியு மென்று மியம்பல்:—பேதமென்பது.

பேதமுறுபுந்தியே மாயையாகும் பெரிதுவருந்தியு மிதனைப்போக்கல் வேண்டும், போதமுறு பேற்றினலன்றி மாயைப் பொருநதியின் கரைதோன்றாப் பொருந்தத்தோன்றி, லேதமறுமப் பதமேயிறவாவீடா மிம்மாயை பிறப்பிடமே தென்னவேண்டாஞ், சேதமுறக் கொல்வழியே தென்றுதேர்வாய் சிதைவுற்றா லிதனியல்பு தெரியுமன்றே.

(ப - ரை.) பேதமுறு புந்தியே = வேற்றுமையோடு கூடியமதியே, மாயையாகும் = அவித்தை யெனப்படும், பெரிதுவருந்தியும் இதனைப் போக்கவேண்டும் = எவ்வகையானும் முயற்சித்து இந்த மாயையை நிவர்த்திக்க வேண்டும், போதமுறு பேற்றினலன்றி = ஆத்மபோதமடையும் நிலாபத்தால் அல்லாது, மாயைப்பொருநதியின் கரை தோன்றா = மாயையென்னுங் கோலாகலம் வாய்ந்த பேராற்றின்பாரம் அடையமுடியாதாம், பொருந்தத் தோன்றில் = நன்றாக அடையப்பெறின், ஏதமறும்ப்பதமே யிறவா வீடாம் = குற்றமில்லாததும் மெய்யிடமே அக்ஷயமான மோக்ஷமாம், இம்மாயைபிறப்பிடம் ஏதென்னவேண்டாம் = இந்தமாயையானது யாங்ஙனமுண்டாயது ? என்னும் விசாரணையுனக்கு வேண்டாம், சேதமுறக் கொல்வழியேதென்று தேர்வாய் = நட்டம் அடையும் படியாக ஊதஞ்செய்யும் மார்க்கம் யாதென்பதாக விசாரணைசெய்தி, சிதைவுற

றுவ = க்ஷீணமடைந்த பின்னர், இதனியல்பு=இதனது இயற்கையானது, தெரியும்= அறிந்துகொள்வாய், அன்று ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) கூறியபொருளைத் திரமுறுத்தும் பொருட்டுப் பாகியார்த்த மனன திருஷ்டிகட்குப் பந்தஹேதுத் தன்மையைப் பகர்தல்: — பேதமென்பது, எவ்வெத்திருஷ்டிகள் சலாசல ஆகிருதி யுடையனவாய் வேறுபட்ட வெளிப்பாவனை மயமாமோ, அவையாவுமே சமஸ்தஜகத்தினும் உள்ளஜீவபக்ஷிகளின் பந்தவலைகளாம்; வருவனசென்றனவென்னும் அசத்துகள், நிகழ்வனவென்னும் சத்துகள், ஆம் இருவகைமனனவிடயங்களிலும், சத்தேயிவை யென்றூதல், அசத்தேயிவை யென்றூதல் ஆகவேசுரூபநிட நிச்சயம், யாவனுக்கோ அவ்வித அதிகாரியாவன் ஜகத்சொப்பன பூமிபோலும் பிராந்திமாத்திரமெனப் பற்றற்றவனுய்க் காண்பனே அவன்மூழ்கான். அவித்தை முதலியவை உண்மையில் இல்லாமலே யிருக்குமாயின் யாதின்பொருட்டுச் சாத்திரமெனின்? கேட்டி! அவித்தையாம் நதியில் அடித்து இழுக்கப்படும் ஆத்மா ஆன்மஞானமில்லாமல் ஈண்டு அநுபவிக்க அகப்படவே மாட்டாதாம்; அவ்வான்மஞானமும் சாஸ்திரார்த்தத்தானே நன்கடையப் பெறும். உண்மையாக அவித்தைச் சரித்தின்பாரம் ஆன்மலாபமின்றி அடையப்படாதாம், அடையப்படினதுவே அக்ஷயபதமென வறையப்பெறும். அற்றேல் இவ்வவித்தை பரமான்மாவின்கண் யாங்ஙன முண்டாயது எனின்? எங்ஙனமாகவோ மலத்தைத்தரும் இவ்வவித்தை யுதயமாகிப் பரமான்மாவை யாசிரயஞ்செய்து பெருந்தியடைந்து நன்றூக உட்கார்ந்துகொண் டிருக்கின்றது; இஃதெங்ஙன முண்டாயது என்னும் ஆராய்ச்சியானது உனக்கு வேண்டாம், அதனூலென்பயன்? மற்றூ, இதனை யாங்ஙனம் யான்சொல்வேன் என்னு மிவ்விசாரணை யுனக்கனவரத மிருக்கவேண்டும் ஆயின் இஃதென் அனுதியா சாதியா? முதலதேல், ஆன்மாவைப்போல நித்தியமேயாம், இரண்டாவதேலோ ஹேது இயம்பத்தக்கதாம்; இவ்வண்ணம், இஃதென்னுண்மையதா? இன்மையதா? ஆதியதேல், ஞானத்தா னீங்காதாம், இரண்டாவதேல், சம்வாதிவிவகார ஹேதுத்வங்கூடாதாம், என்பவாதியவாய சங்காசகத்திரமும் அதன் நாசத்தானேதீரும், என்னுங்கருத்தானே=கூறல்:—சிதைவுற்றூல் என்பது. இது அஸ்தத்தையடைந்து க்ஷீணமுறில் இதனது இயற்கையின்னதென எளிதில் நீயுணர்வாய்.

(ச.) பேதமுறுபுந்தியே = பேதபுத்தியே, மாயையாகும் = இவ்வவித்தையாம், இதனை=இவ்வவித்தையை, பெரிதுவருந்தியும் = சர்வப்பிரயத்தனத்தாலும், போக்க வேண்டும் = தள்ளவேண்டும், போதமுறு பேற்றினூலன்றி = சொரூபசாக்ஷாத்காரத்தைத்தவிர, மாயைப்பொருநதியின் கரைதோன்றூ=அவித்தியா சரித்தினது பாரத்தை யடையக்கூடாது, (சரித்து=நதி,) அவித்தியா நிவிர்த்தி சித்தியாதென்பது பொருள். ஏதமறு மப்பதமே = அவ்வவித்தியாபாரமே, இறவாவீடாம் = கைவல்லிய மெனப்படும், இம்மாயை = இவ்வவித்தை, பிறப்பிடமேது =எவ்விடத்தினின்றுஞ் சனித்தது, என்னவேண்டாம் = என்னும் விசாரணை நிஷ்பிரயோஜன மாதலின் இராமா நினக்கு வேண்டாம். சேதமுறக்கொல்வழியே தென்று தேர்வாய் = இவ்வவித்தை நின்னைமீள வுஞ் சென்மதுக்கங்களிற் சேர்க்காதபடி, இவ்வவித்தையை எப்படி நாசஞ்செய்வேனென்றே விசாரிப்பாய், இதுவேபிரயோஜனமாதலின் என்க. பிரயோஜனத்தையே சொல்லுகின்றூர்: சிதைவுற்றூல் இதனியல்புதெரியும் = இவ்வவித்தை க்ஷீணமாயொழியின் இதனது சுபாவம் வெளிப்படும். அன்று ஏ இரண்டும் அசை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவித்தையின் றேற்றூதிகள் அழிந்தாற் புலப்படுமாதலின் அதற்குரிய சிகிச்சைசெய்யெனல்:—யாதென்பது.

யாதினிற்றோன்றிய தென்றும் யாதீதென்றுமிறந்த நெறியாதென்று மிறந் தாற்றோன்று, மாதலினால் வன்றுயரின் சாலையான வவித்தையெனு நோய்க்கு மருந்தருந்தச் செய்தாற், றீதுபயில்பிறப்பென்னுங் கடலின்மூழ்காய் செறிகாற் றுத்தன்னுருவாஞ் சேணிறன்னாற், சாதமுறத் திரிவதுபோற் றன்பாற்றோன் றுஞ் சத்தியினாலாத்தும தத்துவநின்றோல்கும்.

(ப - ரை) யாதினிற் றோன்றியது என்றும் = எதனினின்றும் உண்டாயதென் றும், யாதீதென்றும் = எவ்வாறென்றும், இறந்தநெறி யாதென்றும் = நட்டமெங்ஙன மென்றும். இறந்தாற் றோன்றும் = நசிக்கின்யாவுமே புலப்படும், ஆதலினால் = ஆகை யால், வன்றுயரின் சாலையான அவித்தையெனு நோய்க்குமருந்து அருந்தச்செய்தால் = கொடியதுக்கங்களின் இடமான அவித்தையென்னும் ரோய்த்திற்கு ஔடதம் புசிக்கப் பண்ணின், தீதுபயில் பிறப்பென்னும் = தீமையைவிளைவிக்கும் ஜன்மமென்னும், கட லில்மூழ்காய் = துக்கசமுத்திரத்தில் அழுந்தமாட்டாய், செறிகாற்று = பொருந்திய வாயுவானது, தன்னுருவாம் சேணில் = தனதுவடிவாம் வியோமத்தில், தன்னால் = தானா கவே, சாதமுறத்திரிவதுபோல் = தோன்றியோடி யாடுவதுபோல, தன்பால் தோன் றும் சக்தியினால் = சுவாத்மாவினிடத்திலே பிரதீதியாகும் சுவாத்மசக்தியினாலே, ஆத் துமதத்துவ நின்றோல்கும் = ஆன்மதத்துவமானது லோலத்தன்மையை யடையும்.

(ஸ்ரீ - வீர.) எதனினின்று மிஃதுண்டாகின்றதென்றும், எவ்வாறிதுண்டாகின்ற தென்றும், எங்ஙன் நட்டமுறுகின்றதென்றும், நட்டமானபின் நன்றாயறிவாய், உண் மையாயோ இஃதில்லவேயில்லை, ஆராய்ந்து பாராமைவிளங்குவது போன் றதாம். எத்தகைய சூரர்களாயினும் மதிமான்களாயினும் அவித்தையினாலே விவசமாய் விடுவார்களாதலின், ரோகசீலம்வாய்ந்த இதனை விநாசஞ்செய்வதில் முயற்சிசெய்வா யாக; எங்ஙனமிது ஜன்மதுக்கங்களில் மறுபடியும் உன்னைச்சேர்ப்பியாம லிருக்குமோ, சுயமாகவே கூடஸ்தனிடத்திலும் அத்தியாசத்தாலாய சலனம்விரோதமற்றதாமெனல்:- செறிகாற்றென்பது. தன்னிடத்திலேயே தன்னாலேவியோமத்தில்மாருதம் உலாவுதல் நேருதல்போலஈண்டாத்மா ஆத்மசக்தியினானே தன்னிடத்திலேயே லோலத்தன்மையை யடையாநிற்கும்.

(ச.) யாதினிற் றோன்றியதென்றும் = பிறந்ததிப்படியென்றும், யாதீதென்றும் = சொரூபமித்தன்மையதென்றும், இறந்தநெறியா தென்றும் = நஷ்டமானது இவ்வழி யென்றும், இறந்தால் = அவ்வவித்தை நஷ்டமாயின், தோன்றும் = அகிலமும் அறி வாய், ஆதலினால் + செய்தால் = அந்தக்கரணத்தினால் ரோகாதிகளுக்கு ஆசிரயமான இவ்வவித்தை நசிக்கும்படி சிக்ஷிக்கவெத்தனஞ்செய்வாய், அங்ஙனஞ்செய்யின், தீது × மூழ்காய் = இத்தன்மையான அவித்தை ஜன்மதுக்கங்களில் மறுபடி நின்னைக்கூட்டாது, தன்னுருவாஞ் சேணிற்றன்னால் செறிகாற்று சாதமுறத்திரிவதுபோல் = மாருதம் உலாவுவதுபோல், தன்பால் = சுவான்மாவில், தோன்றுஞ் சத்தியினால் = ஆன்மசத்தி யினால், ஆத்துமதத்துவ நின்றோல்கும் = ஆன்மாவேயுலாவுவன், துவளும். தன்னுருவாஞ் சேணில் மாருதமெப்படி ஆசிரயாந்தரமின்றி ஆன்மாவின்கண்ணே காரணாந்தர மின்றித் தோன்றி நடக்கின்றதோ, அப்படி ஆன்மாவும் சுவாபின்னமான சிற்சத்தியாலே சுவான் மாவின் கண்ணே நின்றோல்கும் = ஜகத்ரூபத்தை யடைவன்; ஆன்மாவேஜகத்துக்கநி தரணம் உபாதானம் நிமித்தமும் ஆமென்பது பொருள், ।

(ஸ்ரீ-வீர - அ-கை.) பரமார்த்தமாக அயல்வகையாகவே யிருப்பதற்குக் கற்பிதரூபாந்தரமாக ஸ்புரணமாவதில் திருஷ்டாந்த மிதுவெனல்:—நொய்யவென்பது.

நொய்யநெடுஞ்சிற் கடறன்னிடத்தே யற்பநுடக்கத்தாற் கணம்விளங்கு நுண்மைநோக்கா; லையமறத் தற்பதமொன் றகண்டமென்றே யழுந்துவாயக்கடலிலசைந்துசற்றே, மொய்யறிவாஞ் சிற்சத்திகண காலத்தின் முழுதுறு சத்தியினுலு முழங்கத்தோன்றித், துய்யவிடங் காலமொடு தொழில்கண் மூன்றுதூயன சத்திகடம்மைத்துணையாய்ச் சேர்க்கும்,

(ப - ரை.) நொய்யநெடுஞ் சிற்கடல் = சொச்சமாய்ச் சூக்குமமாய் விசாலமாய சிதர்ணவம், தன்னிடத்தே = சுவாத்மாவின் கண்ணே, அற்பநுடக்கத்தால் = தனதுபரிஸ்பந்தங்களால், கணம்விளங்கும் = க்ஷணத்தில் ஸ்புரிக்கும், நுண்மைநோக்கால் = சூக்குமதிருஷ்டியால், ஐயமற = சமுசயமில்லாமல், தற்பதம் ஒன்று அகண்டம் என்றே = பரமான்மபதமானது ஏகாத்மகம் கண்டிதமற்றது என்பதாகவே, அழுந்துவாய் = திடதரமாயுள்ளே பாவிப்பாய், அக்கடலில் = அச்சிற் சமுத்திரத்தில், சற்றேயசைந்து = கிஞ்சித்துக் கலக்கமுற்று, மொய்யறிவாஞ் சிற்சத்தி = சிற்சத்திதன்மயமாகவேவிளங்கும், கணகாலத்தில் = நொடிப்போதில், முழுதுறு சத்தியினுலும் முழங்கத்தோன்றி = அத்தேவிசர்வ சக்தித்தன்மையானே கிளர்ந்துவிளங்கி, துய்ய இடம்காலமொடு தொழில்கள் மூன்றுதூயன சத்திகள் தம்மைத்துணையாய்ச் சேர்க்கும் = பரிசுத்த தேசகாலக்கிரியாசக்திகள் மூன்றையும் சகிகளாகக் கூட்டிக்கொள்ளுவள்.

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் சரதாதபங்களின் சமுதாயங்களானே யொளிர்ந்துகொண்டு நெகிழ்ந்த கனகம்போலச் சாகரமிலங்குகின்றதோ அங்ஙனம் தன்னிடத்திற் சிற்கடல் நன்கசைவுற்ற இந்திரியகப் பிரகாசங்களானே இலங்காநிற்கும். அதீந்திரியத்தில் ஐந்திரியகரூபஸ் புரணத்தினும் திருஷ்டாந்த முளதாம்; அதீந்திரிய வியோமத்தில் இந்திரியகோசரமுத்து மாலையினசைவு காணப்பெறுவதேபோலச் சின்மகாம்பரத்திற் சிற்சக்தி பிரகாசரூபமா யிலங்கும். சிறிதுகலக்கரூபமாகவே அச்சிற்சக்தியானது, சின்மகார்ணவத்தில், அம்மயமாய சித்தாயிலங்கும் தெளிவாய் ஆண்டே, அர்ணவத்தில் ஊர்மிபோலும். ஐந்திரியகசிற்சக்தி பரமார்த்தசித்தே, ஜன்னியத்தன்மை யாரோபமே, கேவலம் ஔபாதிகம், எனக்கருதல் வேண்டும், சூசீபாசாதி கற்பித ஆலோக சித்திரத்தில் உபாதிபாரவசியத்தையடைவுற்ற ஆலோக ஸ்ரீயைப்போல, ஆன்மாவினின்றும் அவ்வியதிரிக்தமாகவே யிருந்தபோதினும் வியதிரிக்தம்போலவே யிருந்து விளங்கும். இதனுனே யதற்குக்காலிக பரிச்சேதமும்; சக்திசக்தி மத்தாதிபேத விபாவனமும் பொருத்தமாம் என்னுங்கருத்தால் உரைத்தல்:—கணமென்பது கணத்தில் அத்தேவி சர்வசக்தித்தகைமையாளாகவிளங்குவள், சலேந்துவின் சீதத்தன்மையைப்போல், சுயம்சக்தியாகிய தன்னைக் கற்பிக்கின்றது. அயற்சக்திகட்கும் சிற்சக்தி யுதயாதீனமாகவே பிரவிருத்தியாம் சுவாதந்திரியமாக வின்றும், எனல்:—துய்ய வென்பது. பரமான்மாவினின்றும் உதயமாய இச்சிற்சக்தியானது பிரகாசமென்னும் பெயரையுடையதாகி, தேசகாலக்கிரியாசக்திகளைச் சகிகளாகக் கொண்டிலவும்.

(ச.) நொய்ய நெடுஞ்சிற்கடல் = சிதருணவம், அற்பநுடக்கத்தால் = சொரூபவிக்ஷேபங்களால், தன்னிடத்தே = சுவான்மாவின் கண்ணே, கணம்விளங்கும் = பிரகாசிக்கு மென்பதாயிற்று; நுண்மைநோக்கால் = அந்தக் காரணத்தினுல், தற்பதம் = அந்த

வஸ்து, ஒன்று = ஏகான்மகமும், அகண்டமுமாமென்று, ஐயமற வமுந்துவாய் = அகத்திற்றிடமாகப் பாவிப்பாய் விசாரிப்பாய், அக்கடலில் = சின்மகார்ணவத்தில், மொய்யறிவாம் = அவித்தியாரூபமான, சிற்சத்தி, சற்றேயசைந்து = சொற்பஞ் சலனரூபமாய், கணம்விளங்கு மதினேடொட்டுக. சித்ரூபமாகவே யவ்விடத்திற்றனே கடலிலலைபோற் பிரகாசிக்கு மென்றதாயிற்று, அந்தச் சித்ரூபமானதேவி அநந்தமாதலின், முழுதுறு சத்தியினாலும் = சர்வசக்தியினால், கணகாலத்தில் = கணம், முழங்கித் தோன்றி = அப்படிப் பிரகாசிப்பதாய், துணையா = சகிகளாக = சகசாரிணிகளாக, துய்ய+ கடம்மை = தேசகாலக் கிரியாசத்திகளை, சேர்க்கும் = பிரோகஞ்செய்யும் சிருஷ்டி நிமித்தம் பிரவிர்த்திப்பிக்கும். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிற்சத்தியானது பாவித்துப் பல்வகையா தலையியம்பல்:— தனதென்பது.

தனதுசுபாவத்தை யறிந்தநந்தமான தற்பதத்தி லிருந்துஞ்சிற்சத்திதானே, யெனதுருவிவ் வளவென்றே யறிவற்றூற்போ லெண்ணுறுமிப் படியுருவையிது பாவிக்கி, லனுகதமாயப் பொழுதே பெயர்களெண்ணே யாதியாம் பார்வைகள் வந்தடையாநிற்குங், கனவிகற்பந் தருவடிவாய்ச் சித்ரூபங் கவரிடங்காலந்தொழிற்குக் கலந்தபற்றும்.

(ப - ரை.) தனது சுபாவத்தையறிந்து = சுவசுபாவத்தை யுணர்ந்து, அநந்தமான தற்பதத்தி லிருந்தும் = அநாதியநந்தமான பரமபதத்தில் திதமாயும், சிற்சத்திதானே = சிற்சத்தியானது சுயமாகவே, எனதுரு இவ்வளவு என்றே = என்னுடையவுருவம் இத்துணைப் பரிமாணந்தான் என்பதாகவே, அறிவற்றூற்போ லெண்ணுறும் = விசாரரகிதமானதுபோலப் பாவிக்கும், இப்படியுருவை யிதுபாவிக்கில் = இவ்வண்ணம் ரூபத்தை யிது பாவனைசெய்யின், அனுகமாய் அப்பொழுதேபெயர்கள் எண்ணேயாதியாம் பார்வைகள் வந்தடையாநிற்கும் = தொடர்பாய் அக்கணத்திலேயே நாமசங்கை முதலான திருஷ்டிகள் வந்தொன்றுநிற்கும், கனவிகற்பம் தருவடிவாய்ச் சித்ரூபம் = விகற்பகற்பிதாகாரமாய்ச் சித்ரூபம், கவரிடம்காலம் தொழிற்குக் கலந்தபற்றும் = கொள்ளும் தேசகாலக் கிரியைகட்கு விரவிய ஆஸ்பதமாம்.

(ஸ்ரீ - வீர.) இங்ஙனம் ஸ்வஸ்வபாவம் தெரிந்து அநாதியந்த பதத்தில்திதமாம், அவிபாவிதமாய் இங்ஙனங்கூறிய இலக்கணங் கற்பிதரூபத்தைப் பிராந்தியினாலே ஸ்வ ஸ்வபாவமாகக் கவர்ந்து பரிச்சின்னமாக யானிருக்கின்றேன் என்று தன்னைத்தானே பாவிக்கும் இடமாக வாசனைப்படுத்தும். அப்பரமசத்தையினாலே எக்காலிங்ஙனம் ரூபம் பாவிதமாமோ அக்காலேயிதனை நாமசங்கியாரூப பேதங்களும் இஷ்டாநிஷ்டாதி சர்வ ஜகத்கற்பனைகளும் ஆகிய திருஷ்டிகள் தொடர்ந்து நிற்கும். "உயிர்த்தே பிராணன் எனும்பெயருறுமால், வழங்கியே வாக்காம் கண்டேகண்ணும்" என்னும் சுருதியும் அவ்வாறே யியம்புகின்றது. இவ்வண்ணமாகவே சித்தினிடத்திற் கற்பிதமாய சர்வத்திற்கும் சின்மாத்திரத்தன்மையே பரமார்த்தரூபமென்பது பலிதமாம். பெருங்கடலில் அளவில்லாத அலைமுதலியவைகள் தோற்றியபோதினும் அக்கடலே யாமாபோல,ஆன்மாவிற்றோற்றியயாவுமே ஆன்ம அறிவேயாம்! சத்ரூப ஆன்மாவினின்றும் வியதிரிக்த கற்பனை அவஸ்தவே யாமாதலின் என்றுணர்க. தேசகாலாதியோடு கூடிச்சங்கற்பித்துக் கலனையை யடைகின்றபடியினாலே க்ஷேத்திர உபாதிகற்பனை யதீனமான சித்தானது

க்ஷேத்திரஞ் ஞத்தன்மையை யடைகின்றது பிரசித்தமாமெனல்:—கனவிகற்பமென்பது. விகற்ப கலிதாகாரமூற்றுத் தேசகாலக் கிரியைகட்கு இடமாம்.

(ச.) சிற்சத்திதானே = இந்தச் சித்துருபமான தேவியே, தனது சுபாவத்தை = சுவசொரூபத்தை, அறிந்து உன்னதமாய் அநந்தமான தற்பதத்தில் = கைவல்லியபதத்தில், இருந்தும், பிரமத்தமாய் = விசாரரகிதமாய், எனதுரு விவ்வளவென்றே காட்டும்ப் போ லெண்ணுறும் = பரிச்சின்னகாரமாகப் பாவிப்பள், இப்படியுருவை யிதுபாவிக்கில் = இத்தேவி பரிமிதாகாரமாகப் பாவிக்கில், அப்பொழுதே இத்தேவியைப்பெயர்களெல்லையாதியாம் பார்வைகள் = நாமசங்கியாதி திருஷ்டிகள், அநுகதமாய் வந்து = பின்வருவனவாய், அடையாநிற்கும், நாமசங்கியாதி பேதத்தையே பிரபஞ்ச (விசாலஞ்) செய்தற்குச் சொல்லுகின்றார்:—கன + பற்றும் என்றது = இப்பாதமினி யங்வயம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இனிமுறை க்ஷேத்ரஞ்ஞன், அகங்காரம், புத்தி, மனம், பொறியாதலை இயம்பல்:—ஈங்கென்பது.

ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந்தன்னை யாவருஞ்சேத் திரக்கியனென் றியம்பாநிற்ப, ராங்கதுவும் வாதனையைச் செய்யாநின்றே யகங்கார பாவனையை யடையாநிற்கும், வாங்கருமாங் காரமுநிச்சயிப்பதாகி மலினமுறுபுந்தியா மலஞ்சேர்புந்தி, வீங்கியகற்பனை வடிவாய் மனனநெஞ்சாம் விகற்பமிகு மனம்பொறியா மெல்லவந்தே.

(ப - ரை.) ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந்தன்னை = முன்னர் உரைசெய்த சித்தினது ரூபத்தை, யாவரும் சேத்திரக்கியன் என்றியம்பாநிற்பர் = க்ஷேத்ரஜ்ஞன் என்று இயம்புவர், ஆங்கதுவும் = அந்தக்ஷேத் ரஜ்ஞனும், வாதனையைச் செய்யாநின்றே = வாதனையைவளர்த்தி, அகங்காரபாவனையை யடையாநிற்கும் = அகங்காரத் தகைமையை அடையும், வாங்கரும் = கெடுத்தற்கரியதாய, ஆங்காரமும் = அவ்வகந்தையும், நிச்சயிப்பதாகி = நிண்ணயஞ் செய்வதாய், மலினமுறுபுந்தியாம் = களங்கபுத்தியெனக் கழறப்பெறும், மலஞ்சேர்புந்தி = அம்மலமயமதி, வீங்கியகற்பனை வடிவாய்மனன நெஞ்சாம் = பருத்தசங்கற்ப வடிவமாகி மனனஸ்பதத்தைமருவும், விகற்பமிகுமனம் பொறியா மெல்லவந்தே = பையப்பைய மனங்கன விகற்பத்தையடைந்து இந்திரியத்தன்மையை யடையும்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாபாகுவே! சித்தினதுருவம் க்ஷேத்திரஜ்ஞனெனச் செப்பப்பெறும், சரீரத்தை க்ஷேத்திரமென்பர், அதனையிது அகண்டிதமாய் அகமும்புறனும் அறிதலினால் க்ஷேத்ரஜ்ஞனெனப் பெற்றதாம். க்ஷேத்திர கற்பனைக்கிரமம் தரிசிப்பித்தல்:—வாதனையென்றது. அதுவும் வாதனையை வளர்த்திக்கொண்டே மீண்டு மகங்காரத்தன்மையை யடைகின்றது, அகங்காரமும் அத்தியவசாதாவாய நிர்ணேதாவாகி, அதனுனே கற்பனுந்தர களங்கியாம் புந்தியாம், அப்புத்தியானது சங்கற்பங்களைச் செய்து மனத்தினது பதத்தை மன்னுகிற்கும், கனவிகற்பத்தோடு கூடியமனந்தானே மெதுவாக இந்திரியத் தன்மையை யடையும்.

(ச.) கனவிகற்பம் தருவடிவாய் — விகற்ப கற்பிதாகாரமாய் — சங்கற்ப விகற்பாதியோடு கூடினதாய், கவரிடங்காலந் தொழிற்குக் கலந்தபற்றும் — தேசகாலகிரியாஸ்பதமாகியது, — தேசகாலாதிகளோ டவ்ச்சின்னமானது, சித்துருபம் — சித்தினது ரூபம், ஈங்கு + தன்னை — இதனை, யாவரும் க்ஷேத்திரக்ஞ னென்றியம்பா நிற்பர், —

க்ஷேத்திரக்ஞனென்று ஸ்ரீ இராமாமகான்கள் சொல்லுவர், ஆங்கு அசை, அதுவும் = க்ஷேத்திரக்ஞனென்னும் ஜீவன், வாதனையைச் செய்யாநின்றே=வாசனையைப் பாவிப்பவனுய அகங்காரபாவனையை யடையாநிற்கும் = அகங்காரதையை அடைவன், வாங்கருமாங்காரமும் = அகங்காரமும், மலினமுறும் = பின்வாசனு களங்கியாய், நிச்சயிப்பதாகி = நிர்ணயிப்பதாய், புந்தியாம் = நிச்சயான்மிகை புத்தியென்னும் வசனத்தினுற் புத்தியெனப்படும், மலஞ்சேர்புந்தி = புத்தியும், வீங்கியகற்பனை வடிவாய் =சங்கற்பாதிகளினுற் கற்பிதமாகிய, மனனநெஞ்சாம் = மனனுஸ்பதமாம், மனத்தன்மையடையும், மனம் = மனதும், விகற்பமிகும்=கனவிகற்ப முடையதாய் நிபிடவிகற்பமுற்று, பொறியாம் = வாகியேந்திரியமாம், (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உடற்கற்பனையை யுரைத்து, 'கற்பனைக்கயற்றினுலே கட்டுண்ட ஜீவன் பந்தப்படுதலை யுடைத்தல்:—கரவென்பது,

கரசரணமயவுடலைம்பொறிக ளென்பர்கவல் வுறவிப்படியன்றோ கலந்துசிவன்
விரவியசங்கற்ப மெனும்பாசத்தாலே வீக்குண்டு துன்பவலை வீசப்பட்டுத்
தரமறவீனதை யடைவேயடையா நிற்குஞ்சத்தி மயமாமனமித் தன்மையாகிப்
பொரவகங்காரதைமேவிக்கோசகாரப்புழுப்போற்றன்னிச்சையினுற்பூணும்பந்தம்

(ப - ரை.) கரசரண மயவுடல் ஐம்பொறிகள் என்பர் = பாணிபாதாதி மத்தேகம் இந்திரியங்கள் என்பர், கவல்வுற இப்படியன்றோ கலந்துசிவன் = எல்லாச் சஞ்சலங் கட்குமிடனுக இவ்வாறல்லவோ விரவியுயிரானது, விரவியசங்கற்ப மெனும்பாசத்தாலே வீக்குண்டு = தன்னைப்பற்றிய சங்கற்பவாசனை யென்னும் இரஜ்ஜுவினுலே வேஷ்டிதனுய், துன்பவலை வீசப்பட்டு = துக்கஜாலம் பரப்பப்பெற்று, தரமற = தன்யோக்யதையிழந்து, ஈனதையடைவே யடையாநிற்கும் = முறையே நீசத்தன்மையை முற்று நிற்கும், சத்திமயமா மனமித்தன்மையாகி = சக்திமயமாஞ் சித்தம் இப்பான்மையயியையந்து, பொரவகங்காரதைமேவி = துன்புறுத்த வகங்காரத் தன்மையையடைந்து, கோசகாரப் புழுப்போல = கோசகாரக் கிருமிபோல, தன்னிச்சையினுல் = சுவ இச்சையால், பூணும்பந்தம் = பந்தனத்தை யடையும்.

(ஸ்ரீ - வீர) பாணிபாதமயமான தேகத்தன்மையை இந்திரியங்கள் அடைகின்றன வெனப் பெரியோர் உணர்வர்; இதனைத் தேகமெனவுலகர் அறிவர், பிறக்கின்றது இருக்கின்றது விவகரித்து வாழ்கின்றது. இங்ஙனம் ஜீவன்றனே, சங்கற்பவாசனு ரஜ்ஜுவேஷ்டிதனுய், துக்கஜால பரீதாத்மாவாய், கிரமமாகப் பாகியார்த்த சேதன சமர்த்தத் தன்மையை யடையாநிற்கும். கூறியமுறையே, இராகத்துவேடாதி சக்திப் பிரசுரமாய சித்தம், சாகோப சாகைகளாகக் கிளைத்துச் சதகோடி வேற்றுமைகளானே அபிமான அபிவிருத்தியாற்கன அகங்காரத் தன்மையே யடைவுற்றதாகி, கோசகாரக் கிருமிக் கொப்பாகத் தன்னுசையினுலே கட்டினைக்கதுவும்.

(ச.) கரசரணமயவுடலைம்பொறிகளென்பர் = இந்திரியங்கள் பாணிபாதமயதேகமென்பர், இந்திரியங்களே தேகமென்பதுபொருள். வேறுவாக்கியம், கவல்வுறவிப்படிக் கலந்து = இங்ஙனங்கூறிய பிரகாரமாக, விரவிய சங்கற்பமெனும் பாசத்தாலே வீக்குண்டு = சங்கற்பவாசனு ரச்சுவினுற் கட்டுப்பட்டவனுய், சிவனன்றோ = சீவனே, துன்பவலை வீசப்பட்டு = துக்கஜாலத்தி ல்சப்பட்டு, தரமறவடைவே = கிரமமாக. ஈனதையடையா நிற்கும் = நீசத்தன்மையைப் பொருந்துவன், இந்தன்மையாகி = பூர்

வோக்தப் பிரகாரத்தால், சத்திமயமாம் = விசித்திர சத்தியையுடைய, மனம்—சித்தே, பொரவகங்காரதைமேவி — கஞகங்காரமாய், கோசகாரப் புழுப்போல், தன்னிச்சையி ஞல் — சுவேச்சையாலே, பந்தம்பூனும் — பந்தனமணியும், (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தனது சங்கற்பத்திஞலே தானேகட்டுண்டு துன்புறலும், பரியாய நாமங்கள் பெறலும் உரைத்தல்:—தானேயென்பது,

தானேசங்கற்பித்து தன்மாத்திரத்தாற் றனிவலேயா முட்டொழில் கடன் னேக்கட்டக். கானேறுசிங்கம் விலங்குற்றதென்னக் கவலேயிஞன்மிகவு மனங்க ரைந்துசோரு, மாஞுதமனம்புந்தி ஞானஞ்செய்கை யகங்காரம் வாதனேயுடலம் பகுதிமாயை, யூஞனமலங்கருமம் பந்தஞ்சித்தமோ தவித்தையிச்சை யெனவு ரைப்பான்றே.

(ப - ரை.) தானே சங்கற்பித்து = சுயமாகவே சங்கற்பித்துள்ள, தன்மாத்திரத் தால் — சப்தாதிகளால், தனிவலேயா முட்டொழில்கள் தன்னேக்கட்ட —ஒப்பற்றஜால மாம் உள்தொழில்கள் தன்னேயகப்படுத்த, கானேறுசிங்கம் விலங்குற்றதென்ன — சங்கி லியிஞலே கட்டுப்பட்ட சிங்கம்போல, கவலேயிஞன் மிகவும் மனங்கரைந்து சோரும் — மனமானது மிகக்கிலேசப்பட்டு அத்தியந்தம் பரவசத்தையடையும், ஆஞதமனம்புந்தி— ஓரிடத்திற் கெடாதமனமெனவும் புத்தியெனவும், ஞானம்செய்கை அகங்காரம் வாதனே உடலம் பகுதி மாயை — ஞானமெனவும், கிரியையெனவும், அகங்காரமெனவும் வாதனே யுடலம் — புரியஷ்டக மெனவும், பகுதிமாயை — பிரகிருதியெனவும் மாயையெனவும், ஊஞனமலம் கருமம்பந்தம் சித்தம் — ஊனபிமானமூற்ற மலமெனவும் கருமமெனவும் பந்தமெனவும் சித்தமெனவும், ஓது அவித்தை இச்சையென உரைப்பர் — சொல்லா நின்ற அவித்தையெனவும் இச்சையெனவும் கூறுவர், அன்று ஏ அசைகள்.

(ஸ்ரீ - வீர.) தன்ஞலே சங்கற்பிக்கப்பட்ட சப்தாதி விடயங்களாங் காய்ந்தவிறகு கள் வேய்ந்த இராகாதி சுவாலேகளுக்குள் ளகப்பட்டமனமானது வித்தையைவிட்டு அவித்தையைத் தொட்டுக் கட்டுப்பட்டதாக வெண்ணிச் சிருங்கலேயாற் சிறையுண்டசிங் கம்போல அத்தியந்தம் பரவசத்தன்மையை யடைகின்றது. விசித்திரங்களாய விதி நிடேத நாஞுரூபகருமங்களின் கருத்துருத் தகைமையை முயற்சியுடன் சம்பாதித்து வாசனேயின் வசத்தால், தனது இச்சைமாத்திரத்தானே அஞுரசிதமான நாஞயோனி நரகாதி துர்த்தசைகளேயும், இனிக்கூறப்பெறும் மனஞுதிதசைகளேயும் மிகமிகவு மடைந்து முற்றினும் பற்றுற்றுப் பரவசமாகித்திரியும். அதற்கே மனஞதிவிருத்திபேதங் களிஞலே மனமுதலிய சப்தங்களேப் பஜிக்குந்தன்மையாம் அலது அயலொன்றிற்கு மில தாம் எனல்:—ஆஞதவென்பது. ஒருபான்மனம், ஒருபாற்புத்தி, ஒருபான்ஞானம், ஒரு வாற்கிரியை, ஒருபாலிது அகங்காரம், ஒருபாற்புரியஷ்டகம் எனப்படும்; ஒருபாற் பிர கிருதியெனப்படும், ஒருபான்மாயை யெனக்கற்பிக்கப் பெறும், ஒருபான்மலமென வோ தப்பெறும், ஒருபாற்கருமமென நன்னிலேபெறும், ஒருபாற் பந்தமென வொளிராநிற்கும், ஒருபாற் சித்தமெனப்புடமாம், ஒரு பாலவித்தையென உரைக்கப்படும், ஒருபாலிச்சை யென இனிதிருக்கும்.

(ச.) தானே தன்னிடத்தில் மனஞ்சலனமாகி — அதுவே மனஞ்சுவ சங்கற்பிதங்க ளான, தனிவலேயா முட்டொழில் கடன்னேக்கட்ட — தன்மாத்திரைக ளென்னுஞ் சத் தாதிகளினுடைய ஜாலாப்பியந்தரத் திருப்பதுமாய், கானேறுசிங்கம் விலங்குற்ற

தென்ன =சிருங்கலையாற்பெத்த முற்றசிம்மம்போல், கவலையினுன் மிகவுமனங்கரைந்து சோரும் = பெரியவிவசதை (சுவாதீனமின்மை) யைப்பொருந்தும், வேறுவாக்கியம், ஆனுதமனம் = ஓரிடத்தில் மனம், புந்தி = ஓரிடத்திற்புத்தி, செய்கை = கிரியை, வாதனையுடலம் = ஓரிடத்திற் புரியஷ்டகம், பகுதி = பிரகிருதி, ஊனுன = கற்பித மான, சித்தம், ஒதவித்தை = சொல்லப்படுமவித்தை, ஓரிடத்தி விச்சையெனவுரைப்பர் இதுவே = நாஞசக்தியுக்தமான சைதன்னியமே மனேபுத்தியாதி ரூபத்தால் நானுத் தன்மையை யடைகின்றது என்பதுபொருள். அன்று ஏ இரண்டு மசை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) இங்ஙனமாகிய வழிபத்தத்தன்மையும் அதற்கே, யான்மாவிற் கோவிலதா மென்றும் அம்மனம் துயருறுவ திங்ஙனமென்றும் இயம்பல்:—அப்பரி சென்பது.

அப்பரிசோ ரோரிடத்தி லோரொன்ருக வாசாபாசத்தினுலமைத் துச் சொன்ன, வொப்பரிய சகவிரிவா மிவற்றையெல்லா முட்கொள்ளும் பலமிதனி லொன்றுமில்லை, கப்புடைய நெடுவடத்தை வடத்தின்வித்துக் காந்திருப்ப தொக்குமிடர்க் கவலைத்தீயின், வெப்பமிகக்கோபப்பாம்பெடுத்து நுங்கவேட்கை யெனுங் கடற்றிரையான் மெலியுமுள்ளம்.

(ப - ஊ.) அப்பரிசு ஓரோரிடத்தில் ஒரொன்ருக = கூறியவகையில் ஒவ்வொரு தானத்தில் ஒவ்வொன்ருக, ஆசாபாசத்தினுல் அமைத்துச்சொன்ன ஒப்பரியசகவிரி வாம் — ஆசாபாசவிதாயகமாம் இச்சம்சாரம் அகிலமும், இவற்றையெல்லாம்=இவ்வியா வற்றையும், உட்கொள்ளும் = அந்தரத்திற்ருங்கும், பலமிதனில் ஒன்றுமில்லை = பலன் களால் ஈனமாம், நிட்பலமென்றபடி, கப்புடைய நெடுவடத்தை வடத்தின்வித்து = சாகோபசாகைகளாய் விரிந்துள்ள விசால வாலவிருக்ஷத்தை ஆலம்விரையானது, காந் திருப்பது ஒக்கும் = அடக்கிக்கொண் டிருப்பதற்குச் சமானமாம், இடர்க்கவலைத்தீயின் வெப்பமிக = சிந்தையாம் அநலச்சிகை யினுற்றக்தமாகி, கோபப்பாம்பு எடுத்து நுங்க= வெவ்வியசினமாம் வெம்பாந்தளால் விழுங்கப் பொறுவதாய், வேட்கையெனுங் கடற்றி ரையால் மெலியும் = காமக்கடற்கல்லோலத்தா லதங்கதுவியதாய், உள்ளம் = மனமா னதுவாடும்.

(ஸ்ரீ - வீர.) இச்சமுசாரம்யாவுமே ஆசாபாசங்களால் உண்டாகி நிலைப்பவாம், சேத னத் துள்ளிருப்பவாம், புருடார்த்தங்களால் ஹீனங்களாம். வடபீஜம் வடதருவையடக்கி வைத்துக்கொண் டிருப்பதுபோலவாம்; எண்ணுத வெண்ணமெல்லாம் எண்ணும் பேரழ லின் கொழுஞ்சிகையால் எரிக்கப்பெறுவதாம் சித்தமானது, கோப அஜகரத்தானே பக்ஷிக்கப் பெறுவதாகிக் காமக்கடற்றிரையாற் கெடுக்கப்படும்.

(ச.) அப்பரிசென்பதற் கருத்தமுன் பாயிற்று. கப்பு+ஒக்கும்=வடபீஜங்கருத்தா, வடத்தைப்போல, ஆசாபாசத்தினு லமைத்துச்சொன்ன = ஆசாபாச விதாயகமும், பலமிதனி லொன்றுமில்லை = நசுவரபலமுமான, ஒப்பரிய சகவிரிவாம் இவற்றையெல் லாம் = இந்தச் சமுசாரத்தை, உட்கொள்ளும்= அந்தரத்திற் றரித்திருப்பதாம், உள்ள முடன் மெலியுமென்பது முடிபு. கவலைத்தீயின் வெப்பமுற = சிந்தைகளே யென்னும் அநற்சிகைகளினுற் றகிப்புற்று, கோபப்பாம்பெடுத்து நுங்க = கோபமே யென்னும் அச கரமாகிய மகாசர்ப்பத்தினுற் பக்ஷிக்கப்பட்டு, வேட்கையெனுங் கடற்றிரையான் மெலி யும் உள்ளம் = காமங்களே யென்னும் அத்தி (சமுத்திர) கல்லோலங்களால் அடி பட்டு.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியதுயரங்களால் திகைப்புற்ற வின்னெஞ்சைக் கடைத்தேற்றுவதே கருணையெனல்:—பெருகிய வென்பது.

பெருகியவித் துயர்களாலவசமாய்த் தன்பிதாமகனை மறந்து மிகப்பீடையுற்றுக், கருகியவிம் மனந்தன்னை யளற்றிலானைக்கரையேற்றி விடுவதுபோற் கரையிலேற்றாய், வெருவுசார மரணமெனும் விடத்தால் வெந்துமிகுநலந் தீங்கெனும் பகையான் மெலியுநெஞ்சுக், கருள்புரியா நரர்மனித வடிவமான வரக்கரே யருள் வடிவமான வள்ளால்.

(ப - ரை.) அருள்வடிவமான வள்ளால் = கிருபையே சொரூபமான தலைவள்ளலாகிய இராகவனே ! , பெருகிய இத்துயர்களால் = உரைத்தவிசாலமான இந்தத்துன்பங்களானே, அவசமாய் = பரவசப்பட்டு, தன்பிதாமகனை மறந்து = ஆத்மாதாமகனை அத்தியந்தம்மறந்து, மிகப்பீடையுற்று = பெரும் பெருந்துயர்களையடைந்து, கருகிய இம்மனந்தன்னை = இந்தச் சிந்தாகுலங்களால் வெந்தமனத்தினை, அளற்றில் ஆனைகரையேற்றி விடுவதுபோல் = சேற்றினின்றும் மாதங்கத்தை வெளிப்பாகத்தில் ஏறுமாறு செய்விப்பதேபோல, கரையில் ஏற்றாய் = நன்குத்தாரம் புரிவாய், வெருவுசார மரணமெனும் விடத்தால் வெந்து = பயப்படுமாறு சொலித்தெரியும் ஜராமரண விஷார்தமூர்ச்சிதமாகி, மிகுநலந்தீங்கெனும் பகையின் மெலியுநெஞ்சுக்கு = விஸ்தரித்துவரும் சுபாசுபங்களாகிய சத்துருக்களானே திரஸ்கரிக்கப்பட்டு வாடும் மனத்திற்கு, அருள்புரியா நரர் = தயைசெய்யாத மனிதர், மனிதவடிவமான = நராகிருதியையுடைய, அரக்கரே = இராக்ஷசரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) ஆத்மசொரூப பிதாமகமூலகாரணத்தை முற்றினும்மறந்து, தன்கிளைக் குழுவினின்றும் நழுவிய நவ்வியெனச் சோருற்று, வெவ்வழல் வீழ்ந்த விட்டில்போல விடயபாவகத்தே வெம்பிப்புரளும் மனந்தன்னை ஹே தேவர்போற்றுங் காவலராகவ ! கர்த்தமத்தினின்றும் மாதங்கங்கடுப்ப நன்குத்தரம்புரிதி. ஆனைக்கரை யெனப்பாடமிட்டமாயின், மதனபல்வலத்தில் வீழ்ந்து மக்கினமான மாட்டைமேட்டின் மீட்டல் போல் என்று பொருளுரைத்துக்கொள்க. தத்துவஞானம் அதன் சாதனங்கள் முதலியவற்றில் அநாதரவு வடிவமான கடலின்கண் மூழ்கியிதக்கும் மனத்தையாதரவு பூர்வகமாகக்கரை சேர்க்கவேண்டும். அவ்வாறுதரவு செய்யாத மௌட்டியரை யிகழும்வாயிலாக முடிக்கத்தொடங்குவார் வெருவு எனத்தொடங்கினார்; காமியசுகிருதங்களாய சுபங்களின், நிஷித்த கர்மங்களாகிய அசுபங்களின் றிரள்களால் மிகமிகவும் மலினம் பண்ணப்பட்ட ஆகிருதியுடையதாகிச் சொலியாநின்ற ஜரைமரண துக்கங்களால் மூர்ச்சையடைந்து கிடந்துதபிக்கும் மனத்தைக்கண்டும் அதனுத்தாரபல சிந்தையுந்திய பீடையாவனுக் கீண்டுண்டாக வில்லையோ அப்புமான் ஜகத்தில் மநுடவடிவுகொண்டு மறைந்துவந்த இராக்ஷசனேயாவன் என்பதாம். தன்மனத்தை யனர்த்தப்படாமற் றடுப்பத் தயையில்லாத தாழ்ந்தோன் இரக்கமிலாத வரக்கனேயாவன் என்பது திரண்டபொருள்.

(சு.) பெருகிய + மறந்து = ஆன்மபிதாமகனை மறந்ததுமாகிய, மிக + தன்னை = அத்தன்மையான மனதை, அளற்றிலானை கரையேற்றி விடுவதுபோல் = மாதங்கத்தைப் போல், கரையிலேற்றாய் = ஸ்ரீ இராமா சம்சாரமாகிய பங்கத்தினின்று நன்றாயுத்தரிப்பாய், அருள்வடிவமான ஐயா = ஸ்ரீஇராமா ! வெரு × மிக = சொலியா நின்றஜராமரண விஷாதங்களினால் மூர்ச்சித்து, நல × மெலியும் = புண்ணிய பாவங்களின்றிரளால் அடி

பட்டுமெலியும் ஆகிருதியுடைய, நெஞ்சுக்கு = தன்மனதினிடத்தில், அருள்புரியாநரர்= எவர்க்கு அருள் = தயை, அதாவது உததரிக்குமிச்சை யுதிக்கவில்லேயோ அவர், மனித வடிவமான வரக்கரே = ஜகத்தில் நராகிருதியரான இராக்ஷதரேயாம். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜீவர்கட்குக் கருமகதிகள் பலபலவெனவும், விவேகாதிகள் மிகமிகவுந் துர்பலமெனவும், என்பதனுனே முக்திசிலர்க்கேகூடுமெனவும், கூறவிழைந்த ஸ்ரீவசிஷ்டபகவான், கூறியவண்ணம் மனத்திற்குத் தன் பந்தகத்தகைமை வகையை யுபவர்ணனேசெய்து, அதனே யுபாதியாகவுடைய சித்ருவ ஜீவர்கட்கு மோக்ஷபரியந்தம் சமுசாரஸ்திதிப் பிரகார வைசித்திரியத்தை வருணித்துக்கொண்டு அதன் சங்கதிகாட்டும் பொருட்டு முன்மொழிந்த ஜீவ உற்பத்தியைப் பிரகார பேதங்களானே அனுவதிக்கத் தொடங்கல்:—இவ்வகை யென்பது.

இவ்வகையேசிற் பாவசீவபேத மியல்வடிவாம் பிரமத்தினிடையே நின்று, வவ்வியபாவனேயாலே வந்தகோடி வாராநின்றனகோடி வருவகோடி, தெய்வ வரையருவி நீர்த்துளிபோல் வந்தோர்சிலர் பிறவியொன் றிரண்டுமூன்று சேர்ந்தோர், நைவருசென்மங்கள் சிலர்நூற்றின் மிக்கோர் நாடரியபவஞ்சிலர்கணண் ணிநின்றோர். (27)

(ப - ரை.) இவ்வகையே=கூறியவாறாகவே, சிற்பாவசீவபேதம்=உபாதிகளினாலே வேறுவேறுபட்ட அறிவின்வடிவ ஜீவர்கள், இயல்வடிவாம் = சச்சிதாநந்த நிர்விகார சோபாதிகவடிவ, பிரமத்தினிடையே நின்று = பிரஹ்மசொரூபத்தினின்றும், வவ்விய பாவனேயாலே = பவபாவனேயாலே யேவப்பெற்றவர்களாய், வந்தகோடி = சொரூபத்திற் கானியில்லாமலே உபாதி விவர்த்தகற்பித, ஆகாரமுடைய வர்களாய் வந்தவர்கள் கோடிக்கணக்கினர்கள், வாராநின்றனகோடி = வந்துகொண் டிருப்பவர்கள் கோடிக் கணக்கினர்கள், வருவகோடி = இனிவரப்பட்டவர்கள் சங்கியாதீதர்கள், தெய்வவரை யருவி நீர்த்துளிபோல் வந்தோர் = சுமேருகிரியின் ரிர்ஜரத்தினின்றும் பெருகும் ஜலக் கூட்டம்போல வந்துகொண்டிருக்கும் இவர்களுள், சிலர் = சிலபேர்கள், பிறவியொன் றிரண்டு மூன்றுசேர்ந்தோர் = முதலாவது இரண்டாவது மூன்றாவது ஜன்மமுடைய வர்களாவர்கள், நைவருசென்மங்கள் = துன்புறுத்தும் பிறவிகள், சிலர் = சிலவர்கள், நூற்றின் மிக்கோர் = சத அதிகம் எடுத்தவர்கள் ஆவர்கள், நாடரியபவஞ்சிலர்கள் நண்ணிநின்றோர் = சிலகலர்கள் எண்ணிக்கையில்லாத ஜன்மங்கள் எடுத்தவர்கள் ஆவர்கள்.

(ஸ்ரீ - வீர.) இங்ஙனம் சிற்சொரூபத்தின் உபாதியினுலாய விபாவரூபமான சீவர் கள், சம்சாரவாசனேயானே பிரவாகிதர்களாகிப், பூர்வவாசனேயின் அனுசாரப்படி கற்பி தாகாரப் பிரஹ்மசம்பந்தமா யிலக்ஷக்கணக்காயும் கோடிக்கணக்காயும் உண்டாகின்றார் கள். எண்ணிக்கை யில்லாதவர்கள் முன்னர் உண்டானார்கள், இப்போதும் எண்ணிக்கை யில்லாதவர்கள் உண்டாகிக்கொண்டே யிருக்கின்றார்கள், இனிமேலும் அளவில்லாத வர்கள் அருவியினின்றும் அம்புகணக் கூட்டம்போலும் உண்டாகிக் கொண்டே யிருப் பார்கள். தத்தம் வாசனுதசாவேசத்தானே ஆசாபரவசர்களாய அவர்களுட் சிலர்கள் பிரதம ஜன்மானர்களாவர்கள் அதாவது இக்கற்பத்தில் ஒரே பிறப்புற்றவர்களாவர்கள், சிலர்களோ ஜன்மசங்கியையேயற்றவர்கள் ஆவர்கள். சிலர்களோ இரண்டு மூன்று பிறப்பினே யடைந்தவர்கள் ஆவர்கள்.

(ச.) ஸ்ரீவசிட்டர்: சீவபெதம் — ஜீவர், சிற்பாவம் = சித்தினது பாவங்கள், வவ்வியபாவனையாலே = பவபாவனையால், துளிபோல்=கணசமூகங்கள்போல், நாடரிய= அசங்கியமான. தெய்வவரை யருவி நீர்த்துளிபோல் = பிரவாகத்தினின்று தெறித்த கணௌகங்கள் = ஜலகணக் குழாங்கள்போல், இயல்வடிவாம் பிரமத்தினிடையே நின்று = மாயாசகிதமான பிரமத்தினின்று, பவபாவனையாலே = சம்சாரவாசனையோடு சகிதமான, சீவபேதம் = ஜீவரூபங்களும், சிற்பாவம் = சித்தினது விலாசங்கள், வந்த கோடிவாராநின்றன கோடிவருவகோடி= இலக்ஷந்தரம் கோடிதரம் சங்கியாதீதங்களாய் முன்புதித்தன இப்போதுஞ் சனிக்கின்றன மேற்பிறப்பனவுமாம், வந்தோர் = அவரும் ஜன்மகால பூர்வாபரத்தினாலும். புண்ணியபாவ தாரதம்மியத்தினாலும், ஞானவைச்சித்திரியத்தினாலும் பிரதம சரமபாவமாகவும், சுரநரதிரியக் காதிபாவமாகவும், ஜடபாவமாகவும், வெகுவித பேதப்பட்டவராவர்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) வாதனையின் பலவகையினானே வந்துதோற்றும் ஜீவர்களின் பிறவிகளுட் சிலவற்றை யியம்பல்:=சிலர்-சிலர் என்பவை.

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவரானோர் சிலர்விச்சாதரருரகர் திரளாய்நின் றோர், சிலரருக்கரிம கிரணன் வருணனானோர் சிலர்பிரமன்றிரு நெடுமால்சிவனாய் நின்றோர், சிலர்மறையோர் சிலரரசராகினின்றோர் சிலர்வணிகர் வேளாண்மை செயலினின்றோர், சிலர்விலங்கு பறவைகளூர் வனவாய்வந்தோர் சிலரிலைகாய்பழ மூலந்திரணமானோர். (28)

சிலர்மயேந்திர சைலஞ்சைய மேருதென்மலய மந்தரமாய்ச் சிறந்துநின் றோர், சிலர்கடம்பஞ் செம்பீர்ந்தா லஞ்சாலஞ்சிறந்த தமாலங்களாய்ச் செறிந்து நின்றோர், சிலருவரிதயிர்நெய்பாற் கருப்பஞ்சாறு தேனொடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்துநின்றோர், சிலர்திசைகள் சிலர்நதிகளாகி நின்றோர்சிலர் மேலோர்சிலர் கீழோர் சீவரானோர். (29)

(ப - ரை) சிலர் சிலர்கள் — சிற்சிலர், கின்னரர் கந்திருவரானோர் — கின்னரர் கந்தர்வர் ஆயினார்கள், சிலர் விச்சாதரர் உரகர்திரளாய் நின்றோர் = சிற்சிலர் வித்யாதரர் மகோரகக்கூட்டங்கள் ஆய்நின்றார்கள், சிலர் அருக்கர் இமகிரணன் வருணன் ஆனோர்= அநேகர் சூரியர் சந்திரன் வருணபகவான் ஆனார், சிலர் பிரமன் திருநெடுமால் சிவனாய் நின்றோர் = அநேகபுண்ணியர் அயன் அரியரன் ஆகின்றார், சிலர்மறையோர் = அநேகர் பிராஹ்மணர்; சிலர் அரசர் ஆகிநின்றோர் =அநேகர்மன்னவர் ஆகிவாழ்ந்தனர், சிலர் வணிகர் = அநேகர்வைசியர் ஆகி, வேளாண்மை = கிருஷிவாணிஜ்ய கோபாலனாதி செய்துவாழ்ந்தனர், சிலர் செயலினின்றோர் =அநேகர் சூத்திரகணங்களாய் மூவருணத் தினரக்கும் தொண்டுபுரிவாராயினர், சிலர் = அநேகர், விலங்குபறவைகள் ஊர்வன வாய் = மிருகபக்ஷி பாம்பாதியாய, வந்தோர் = பவமுற்று வருந்திவருவர், சிலர் இலை காய்பழம் மூலந்திரணம் ஆனோர் = அநேகர் புண்ணிய ஔஷதிபத்திர பலமூலதிருணங்கள் ஆயினர். (28)

சிலர்மயேந்திரசைலஞ் சையமேரு தென்மலய மந்தரமாய்ச் சிறந்துநின்றோர் = சிற்சிலர் மஹேந்திரமலையாகவும், சஹ்யபர்வதமாகவும், சுமேருகிரியாகவும், தென்றற்றோன் றும் மலயாசலமாகவும், சுந்தரமிகுந்த மந்தரமலையா கவும், விசேடம் பெற்றுவாழ்வர் சிலர் கடம்பம் செம்பீரம் தாலம் சாலம் சிறந்த தமாலங்களாய்ச் செறிந்துநின்றோர் =

சிற்சிலர் கதம்பதருவாகவும், எலுமிச்சமரமாகவும் சாலவிருக்ஷமாகவும் பனைபச்சிலைமரங்களாகவும் சிறப்புற நெருங்கிநின்று வாழ்வர், சிலர் = அநேகரோ, உவரிதயிர் நெய்பால் கருப்பஞ்சாறு தேனெடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்துநின்றோர் = லவணததிகிருதக்ஷீர சமுத்திரங்களாகவும் இக்ஷுரச சுத்தோதக பெரும்புறக் கடல்களாகவும் ஆகிருதியையடைந்து வாழ்வர், சிலர் திசைகள் = அநேகர் திக்குகளாகவும், சிலர் நதிகள் = சிலரோ ஆறுகளாகவும், ஆகிநின்றோர் = ஆகிவாழ்வர், சிலர்மேலோர் சிலர் கீழோர் சிவரானோர் = அநேகர் உச்சர் அநேகர் நீசர் ஆகிச்சீவர்வாழ்வர்.

(ஸ்ரீ - வீர.) சிலர்கின்னர கந்தர்வ வித்யாதர மகோரகர் ஆவர், சிலரோ அருக்க இந்திர இந்துவருணராகவும் திரியக்ஷ அதோக்ஷஜபது மஜராகவும் ஆவர்; திரியக்ஷாதிக்கிரகணம் = சிவனுதிக்கிரகணம், திரியக்ஷாதி சாரூப்யப் பிராப்தஜீவ அபிப்பிராயமாம். திரியக்ஷன் = முக்கண்ணன்; அதோக்ஷஜன் = இந்திரியங்களைக் கீழ்ப்படுத்தி யுண்டானவன், ஜிதேந்திரியர்கட்குப் பிரத்தியக்ஷ மாயவன், இந்திரியஜன்னிய ஞானத்தைக் கீழ்ப்படுத்தியவன், விஷ்ணு; பதுமஜன் = சதுர்முகன்; அப்பதவிகளைக் கொண்டவரைக்கொள்க. சிலரோகூஸ் மாண்டவேதாளயக்ஷ ரக்ஷபிசாசுகளாவர்; சிலரோ பிராஹ்மணபூபால வைசிய சூத்திரகணங்களாவர். சிலரோ நாய்க்கறிப்போர் சாண்டாளர் கிராதாவேசர் புஷ்கசர் ஆவர், சிலரோ திருண ஔஷதிஜாதியர் ஆவர், சிலரோ பலமூலபதங்கர் ஆவர், கிராதஆவேசர் = வேடயோனியிற் புகுந்தவரும் அவரேயாவர், பலமூலக்கிரகணம் அவற்றுள்ளடங்கிய பீஜாவஸ்த ஜீவாபிப்பிராயத்தா னென்றுணர்க. சிலரோ சித்திரலதைகுல்மதிருண உபலதிருசர் ஆவர், மீண்டுந் திருணக்கிரகணம் அதனுட் பிரிவுச்சாதி விரித்தற்பொருட்டாம். உபலம் = கல்லை, திருசர் = காண்பர் தந்தேகமாக, என அவர் உபலதிருசர் = பர்வதாதி, சிலரோ நீபஎலுமிச்ச ஆச்சாபனை பச்சிலைமரங்களாவர். சிலரோ மந்திரி சாமந்தர், முனியாதியர், கிருமிகீடர், மிருகேந்திராதிகொக்குக்குபாலர், கமலாதி, மத்தமாதங்க விருஷபாதி, துவிரேபமசகர், ஆவர். சிலரோ கல்யாண பாஜனராகிச் சீவன்முத்தராய்க் குலவுவர், சிலரோதாங்கேவலமாக வெறுப்பவராவர் சிலரோ விசாலமாயதிக்குத் தேவதைகளாவர், சிலரோ மிகவேகப் பிரவாகநதிதேவதைகள் ஆவர், சிலரோ ஞானோபதேசஞ் செய்யவர், சிலரோ சமாதிகைவந்தவர் ஆவர். இங்ஙனம் ஜீவர்தம் வாசனுவேசபரவச ஆசயத்தகைமையை யடைந்துநிற்பர். இவர்யாவருமே சம்சரண அநர்த்தவாசனை வசத்தானேயாகுவர் என்பதனுனே மூலசுஇதமாக அதனையே கெடுக்கச்சந்ததம் முயலவேண்டும். வாதனைவயத்தால் அவ்வவ்வுவத்தைகளில் எளிது கட்டுண்டுழலல் காட்டியருளவே ஸ்ரீ மணிவாசகப் பெருந்தகையாரும் அருளியுள்ளார்:—“ புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருகமாகிப்பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச் செல்லா அநின்றவித் தாவரசங்கமத்துள், எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான், மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன் ” என்பதனுனே இவ்வுலகிற்சிலர் புவியிற்கிரிடையிற்சரிப்பர், நரகில்வீழ்வர், துறக்கத்தோங்கிமகிழ்வர் என்பதாம்.

(ச.) விச்சாதரர் = வித்தியாதரர், உரகாதிரன் = மகோரகர், வேளாண் செயலினின்றோர் = சூத்திரர், பலங்கள் = பத்திரபலமூல பதங்கங்கள் (பக்ஷிகள்) செடிகள் கொடிதிருணமானோர் = ஓடதிகளானோர்.

மயேந்திரம் = மகேந்திரமலயஸைய மந்தரமேருக்களாய், கதம்பசெம்பீர சாலதாலதமாலங்கள், க்ஷாரததிக்ஷீரகிருத இக்ஷுஜலராசிகள், திசைகள் = விசாலமான திக்கு

கள், நதிகள் = மகாவேகமுள்ள நதிகள், சிலர்மேலோர் சிலர்கீழோர் = உச்சகர்களாற் கீழுறுபவரும் மேற்போபவருமாக விளையாடப்படுகிறார்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) நுதலியவண்ணம் மேலுங்கீழுமாய் அலமருதலானே காலன் விளையாடுங் கந்துகமென வருணித்துச் சீவர்தம் மூர்க்கத் தகைமையை யறிவித்துமா மாயையின்செயலை யுரைத்தல்:—கையினுலென்பது.

கையினு லறையுண்ணும் பந்துபோலக் காலனுலறையுண்டு கணக்கிலாத மெய்யிலேபுகுந் தலுத்துவிவேகம் பெற்றும்விரகிலார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார், மையினுன் மூன்றுலகாம் பணிசெய்து வருநிற்கும்போமாகி வளர்ந்துவாளாப், பொய்யினுன் மிகவிரியும் வேலையூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்தமாயை, (30)

(ப - ரை.) கையினுல் அறையுண்ணும் பந்துபோல = அத்தத்தினுலே யடிபட்டு எழும்பி அடிக்கடியும் அடிபடும் கந்துகங்கடுப்ப, காலனுல் அறையுண்டு = யமனுலே யிடைவிடாமல் அடிபட்டு, கணக்கிலாத = அளவில்லாத, மெய்யிலே புகுந்தலுத்து = காயத்திலே பிரவேசித்துக் கிலேசித்து, விவேகம்பெற்றும் = கடைத்தேறும் படியான பகுத்தறிவுற்றும், விரகிலார் சிலர் = முயற்சிசெய்யாத சிலர், பிறப்பின்மீண்டும் வீழ்ந்தார் = சம்சாரசங்கடத்தில் மறுபடியும் விழுந்துவருந்தினர், மையினுன் = மயக்கமாத்திரமாக; மூன்றுலகாம் பணிசெய்து = திரிலோகமாகிய ஆபரணங்களையுஞற்றி, வேலையூடே பொருதிரைபோல் = வாரிராசியில் வீணுகவேபொருதும் தரங்கமென்ன, பரபதத்தே = பரமபதமென்னும் ஆன்மாவில், புரிந்தமாயை = மயல்செய்யும் மாயை, வாளாவளர்ந்து பொய்யினுன் மிகவிரியும் = வீணுகவேவிருத்தியை யடைந்து மித்தையாகவே நிரந்தரம் அதிவிஸ்தாரத்தையடையும், வருமாகிநிற்கும் = பற்பலவாறுக விபரீதத்தையடையும், போம் = விநாசத்தையடையும்.

(ஸ்ரீ - வீர.) இவ்வுலகின்கண் மண்ணுலகிற் சிலர் மாழ்கின்றனர், விண்ணுலகிற் சிலர் வீழ்கின்றனர் நரகப்புண்ணுலகிற் சிலர் புழுங்குகின்றனர், இதனுனே கரத்தாலடிபடும் கந்துகமேபோல மிருத்யுவினுல் நிரந்தரம் அதம்பண்ணப்படுவர்; ஆசாபாச சத்பத்தராகி, வாதனை வடிவங்களாய வருந்தேகங்கண் முதலியவற்றைத் தாங்குஞ்சிலராய், அண்டஜங்கள் விருக்ஷத்தினின்றும் விருக்ஷத்தைப்போ யடைவதேபோலக் காயத்தினின்றுங் காயத்தையடைவார்கள். விவேகப்பிரட்டர்கட்கு எக்கதியாமோ அக்கதியை யருளல்:—கணக்கிலாத வென்பது. ஜன்மசகஸ்திரங்களை யனுபவித்து, விவேகித்தன்மையை நன்குபெற்றும் சிலவுணர்விலா ஆலசியர் மீண்டும் சமுசாரசங்கடத்தில் விழ்கின்றனர். சிலரோ புகழுத்தக்கஜன்மம் தேசகாலப்பிரதிமை விநயசத் சமாகமாதி சம்பன்னத் தகைமையை யடைந்தும், தேவகந்தர்வ பிராஹ்மணுதி மேன்மையான் சம்பத்ரூபத்தையுற்றும், துச்சவிடயலம்படமானதம் புத்தியினுனே நஹுஷனைப் போலமீண்டும் திரியக்குத் தகைமையை யடைந்து வருந்துவர், திரியக்குத் தகைமையினின்றும் நரகங்களையுமடைவர். கூறியஜீவஜகத் சர்க்கதைச் சங்க்ஷேபித் துபசங்கரித்தல்:—மையினுன் என்பது இந்தத் திரிபுவனரசனைப் பிராந்திலக்ஷண விமோகமானய பரமபதத்தேவான் வாரிராசியில் வளர்தரங்கம்போல, சந்ததம் வீணுகவே சர்க்கத்தானே விஸ்திருதமாம், பெரிதுவளரும், மிகமேன்மையுற்றபின் விபரிணமத்தை யடையும், விநாசத்தையும் பிரவாநிற்கும்.

(ச.) காலனுல் அறையுண்டு = மிருத்துவால் அனவரதம் அடிபட்டும், கணக்கிலாத மெய்யிலே புகுந்தலுத்தும் = ஆயிரஞ்சன்மம் அநுபவித்தலுத்தும், விவேகம்பெற்றும் = விவேகத் தன்மையைப் பொருந்தியும், விரகிலார் சிலர் = சிலபுத்தியீனர், பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார் = மீளவுஞ் சம்சாரசங்கடத்தின் மூழ்குகின்றார்கள், வேலையூடே பொருதிரைபோல் = சமுத்திரத்தினிடத்து லகரிபோல், பரபதத்தே = பரமபதத்தில் பிரமத்தில், மூவுலகாம் = திரிபுவனத்தைச் செய்கிற (இரசனு) ரூபியான, பொய்யினுல் மிகவிரியுமாயை = விமோகமென்னும் மாயை, வாளா = சும்மாவே, பணதிசெய்து வருகிற்கும்போம் = சிருஷ்டிதிதி லயமுமாம் என்பதந்நுவயம் அதிசமிது மிகுவிரிவா யிருக்கும்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) கால்க்கிரமமாக உண்டாகியுண்டாகித் தேகபரம்பரையை யநு பவித்துச் சுயமாகவே ஜீவராசிகள் பீஜபூதசாந்தபதத்தில் பிரளயத்தில் லயத்தை யடையுமென்றருளிய ஸ்ரீ வசிட்டபகவானை நோக்கி, அங்ஙனம் சுயமாகவே ஜீவன்பரம பதத்தில் தனது ஸ்திதியையடையின் அவன் முக்தனேயாவுன், ஆகவேமீண்டும் யாங்ங னம் உடம்பெடுத்தல் கூடும்? பரமபதமடைந் தானுக்குமீண்டுந் திரும்புகையாயின் முக்தனிடத்தினும் அநாசுவாசவழக்காம்; அஞ்ஞானத்தால் மறைபட்டானுக்குப்பீஜபாவ கிருதவிசேட முண்டா மென்னற்க; அபீஜசிலாசகலாதிக்கு அஞ்ஞானமாத்திர ஆவர ணத்தானே அங்குராதி பீஜத்தகைமை காணப்பெறுமையின். என்பதாக ஸ்ரீ இராகவர் மறுக்க, தமது சமசத்தையுடையவற்றிற்குப் பீஜத்தன்மை காணப்பெறுவிடினும், ஆவ ரண சமசத்தையுடையசர்ப்பாதிகளின் மறைபட்ட இரஜ்ஜுவாதிகட்குப் பீஜத்தகைமை காணப்பெறுதலின், மித்தியாபீஜத்வம் ஆவரணமாத்திரத்தா லாக்கப்பெற்றதெனச் சிறப்புறச் செப்பாதிருப்பினும் நின்மதியானே நீ யூகித்துணரலாமெ, மனேகற்பனைமாத் திரம் யாவுமாம், மனமேயித்தேகமுமாம் என்றுணர்தி, உத்தமகரும பரிபாகத்தானே உத்தமமேயாய தேகமுண்டாகின்றது என்பது ஆதிசர்க்கத்திலாம் இதுவேபதுமகோச கிருகத்திருக்கும் பிரஹ்மாவாம், இதன் சங்கற்பமுறையானே ஸ்திதியானதையிச் சிரு ஷ்டி அபரியந்தமாய்க் கனமாயையால் அடையும் என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை யருள ஸ்ரீ இராகவர் அருளியவிடயத்தை விரிவிலுணரும் பொருட்டு மீண்டுஞ் சங்கித் தல்—தெரிந்தென்பது.

தெரிந்துணர்ந் தோனிவ்வாறு செப்பலோடுஞ் சீவன்முன்மனப் பதத்தைச் சேர்ந்துநின்றும், விரிஞ்சனெனும் பெயர்பெற்ற தெவ்வாறென்று வித்தாரத்தா லுள்ளபடி விளம்புகென்ன, வரிந்தமன் கேட்டலும் வசிட்டனுரைப்பான் வள் ளாலந்தநெறி கேட்டலுமே யகிலஞாலம், புரிந்தநெறி யறிதியிதன் றன்மையெல் லாம் புந்தியுறக்கேட்டுணர்வு பொருந்துவாயே. (31)

(ப - ரை.) தெரிந்துணர்ந்தோன் இவ்வாறு செப்பலோடும் = அறியவேண்டிய முழுவதையுமறிந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் மனேமாத்திரம் உலகமெனவும், சங்கற்பமே சதுர்முகனெனவும், அச்சங்கற்ப முறையானே யுலகின்றிதி யாமெனவும் அருளிச்செய்ய, சீவன்முன் மனப்பதத்தைச் சேர்ந்துநின்றும் = சீவன் மனப்பதவியையடைந்திருந்தும், விரிஞ்சனெனும் பெயர்பெற்றது எவ்வாறு = விரிஞ்சபதவியை யடைந்தது எங்ஙனம் என்று வித்தரத்தாலுள்ளபடி விளம்புக என்ன = இங்ஙனமென்பதாக வெளியாமாறு யாவற்றையும் விஸ்தாரமாக விரைவில் யதார்த்தமா யருள்செய்தல் வேண்டுமென்று, அரிந்தமன் கேட்டலும் = வெற்றிபொருந்திய மகாவிஷ்ணுவின் அனுக்கிரக திவ்யமங்

களமூர்த்தி கேட்டலும், வசிட்டன் உரைப்பான் = ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது, வள்ளால் = ஹே உத்தமோத்தம இராகவ ! அந்தநெறி கேட்டலுமே=அம்மார்க்கத்தைச் சிரவணித்தலுமே, அகிலஞாலம் புரிந்தநெறியறிதி = சகலஜகத்தும் திதியாகியிருக்குந் தகைமையை யறிந்துகொள்ளலாம், இதன்றன்மையெல்லாம் புந்தியுறக்கேட்டு உணர்வு பொருந்துவாயே = பிரஹ்மா சம்பந்தமான சரீரக்கிரகணக் கிரமத்தை யாமுபதேசிப்பச் சிரவணித்து ஞானத்தை யடைவாயாக.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரஹ்மந் ! எங்ஙனம் ஜீவன்மனப் பதத்தையடைந்து வைரிஞ்ச பதத்தை யடைந்தனனோ, அங்ஙனம் யாவற்றையும் விஸ்தாரமாக விரைவில் அடியேற்கருளல்வேண்டும் என்று ஸ்ரீ இராகவர் கேட்ப ஸ்ரீ வசிஷ்டர் கூறுகின்றார்:—ஹே மகாபாகுவே ! பிரஹ்மாசம்பந்தியாய சரீரக்கிரகணத்தில் முறையை நீ கேட்பாயாக ! அதே நிதரிசனத்தானே ஜகத்சம்பந்த மாயஸ்திதியை யறிந்துகொள்ளுவாய் !

(ச.) விரிஞ்சனெனும் பேர்பெற்று = வைரஞ்சபதத்தைப் பொருந்தியது, எவ்வாறென்று = அவ்வாறனைத்தும் இவ்வாறென்று, சீக்கிரம், விரிந்த மனவிகற்பமற, மேதவரீர், விளம்புமெனக் கேட்குமெல்லே, இதன்றன்மை யெல்லாம்=இச்சகஸ்திதியை. புந்திபுறக்கேட் டுணர்வு பொருந்துவாய், அதனாலே, புரிந்தநெறியறிதி = பிரமசரீரக்கிரமத்தை உணர்வாய், (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முறையையோதல்:—திசையென்பது.

திசைகாலமாதிகளாற் றன்னுடைய சத்தியினாற் றிரியாச்சீவன்
பசையானலீலை யினாற்றிசைகால மாதிகளாற் பயின்றமேனி
யிசையாநின் றுளபோதே சீவனுக்குப் பரியாய மென்னப்பட்ட
வசையான வாதனையின் வசத்தாலே யுலையுமனம் வந்துதோன்றும். (32)

(ப - ஸா.) திசைகால மாதிகளாற் றிரியாச்சீவன் = திக்குக்கால மாதிகளால் வரையப்பெறாத ஆத்மதத்துவம், தன்னுடைய சக்தியினால் = தனது ஆற்றலினானே பசையான லீலையினால் = நசையான லீலையினாலே, திசைகாலமாதிகளால் பயின்றமேனி இசையா நின்றுளபோதே = திக்குக்காலகலிதமாய எவ்வபுவை யெப்போதுதாங்குமோ அப்போதே, சீவனுக்குப் பரியாய மென்னப்பட்ட = அவ்விதஜீவனுக்குப் பரியாயமென்று சொல்லப்பட்ட, வசையான வாதனையின் வசத்தாலே = நிந்திதமான வாசனையின் வசத்தினாலே, உலையுமனம் வந்துதோன்றும் = லோலமாயமனது என்று புலப்படத்தோன்று நிற்கும்.

(ஸ்ரீ - வீர.) திக்குக்காலாதி அநவச்சின்னமாய ஆத்மத்த்துவஞ் சுவசக்தியினானே லீலையினாலேயே எக்கால்திக்குக்கால கலிதமாய எத்தேகத்தையெடாநிற்குமோ அதுவே அக்கால், ஜீவபரியாயமாய் வாசனாவேச தற்பரமாய்லோல மனமென நணியாம்,

(ச.) திசைகாலமாதிகளாற் றிரியாச்சீவன்=திசைகாலாதியநவச்சின்னமான ஆன்மதத்துவகருதரு பசையான லீலையினால், சுவசக்தியாகிற ஏதுவினால், காலமாதிகளாற் பயின்றமேனி யிசையாநின்றுளபோதே = திசைகாலசகிதமான திருவுருக்கொள்ளும் அப்போதே, சீவனுக்குப் பரியாய மென்னப்பட்ட = சீவத்தபரியாய வாச்சியமாம், வசயான வாசனையின் வசத்தாலே = அவ்வுருவ வாசனையினாலே, உலையுமனம் வந்து தோன்றும் = கேவலம் லோலமான மனம்வந்து பொருந்தும். (32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மனம் கலனுகலனேன் முகமாயிருத்தலை விரித்துரைத் தல்:—செயல், பரிச, கண, என்பன.

செயல்செய லின்மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மனச்சத்தி செயலைமேவி
இயல்பின்முத னெய்தாகிச் சத்தவிதை யிரதத்தி லெழுவதான
வுயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கணத்திலே யுடனேயந்த
வியனலைவின் றன்னெறியா லந்தமனங்கனதை யினைமேவுமன்றே. (33)

பரிசவிதையிரதத்தி லெழுவதாங்காற் றசைவைப் பாவித்துன்னும்
விரிதருவின்காற் றிரண்டினெவெய்ந் நெருக்கிலே நின்றும்வந் தீத்தோன்றி
யிருதிறச்சத்தப் பரிசந்திடமா கப்பழக்கமுறு மியல்பினாலே
யுருவதன்மாத் திரைமேவுமிம் மூன்றினுடன் மேவுமுள்ளந் தானே. (34)

கணத்திலிரதத் தியல்பைப் பாவிக்கநீரறிவக் கருத்திலுண்டாங்
குணத்தினையத் திறங்களொடுங் கூடுமனங் கணத்திலே குறித்துநாடி
மணத்தினைப் பாவித்தலுந் தன்மாத்திரத்தாற் பாரறிவு வருமிவ்வாறே
தணத்தபூதத் தன்மாத்திரம் வளைத்துவளைத் தருவாய்ச்சகமாய்த் தோன்றும்.()

(ப - ரை) செயல் செயலின்மைகள் இரண்டும் சேர்ந்தெழுந்த மனச்சத்தி = தொழில் தொழிலிலாமை யுன்முகமாய மனவாற்றலானது, செயலைமேவி = தொழிலை மேவி, இயல்பின் முதனெய்தாகி = எண்ணுவதாய் ஆதியில் தெளிவுறுவதாய, சத்த விதையிரதத்தி லெழுவதான=சப்தபீஜரசோங் முதியான, உயர்தருவின் பாவனையை= விசாலமாகிய விண்ணின்பாவனையை, கணத்திலேபாவிக்கும் = கணகாலத்திற் பாவனை செய்யும், உடனே யந்தவியனலை வின்றன்னெறியால் = செய்தவுடனே அக்கன அசை வின்முறையானே, அந்தமனம் = அம்மனமானது, கனதையினைமேவும் அன்று ஏ = அக்கனத் தன்மையையடையாநிற்கும் அப்போதே, அன்று ஏ அசைநிலைகள் எனினுமாம்.

பரிசவிதை யிரதத்திலெழுவதாங் காற்றசைவைப் பாவித்துன்னும் = ஸ்பரிசபீஜர சோங்முகமாகிய அநிலஸ்பந்தத்தைப் பாவிக்கும் இருதிறச் சத்தப்பரிசம் விரிதருவின் காற்றிரண்டின் = இருவகை சத்தப்பரிசசொரூப விசாலமான அவ்வாகாச வாதங்க ளிரண்டினுடன்; திடமாகப் பழக்கமுறு மியல்பினாலே = திடாப்யாச வசத்தால், மெய்ந்நெருக்கிலே நின்றும் = அவற்றின் சங்கர்ஷத்தினின்றும், வெந்தீத்தோன்றி = வெம்மையாகிய அநலமுண்டாகி, உருவதன் மாத்திரைமேவும் = ரூபதன்மாத்திரை யுறும், இம்மூன்றின் உடன்மேவும் உள்ளந்தானே = கூறியமூன்றோடும் மனமானது கூடும்.

கணத்தில் = கணகாலத்தில், இரதத்தியல்பைப் பாவிக்க = ரசதன்மாத்ரவேதன மாக, நீரறிவு அக்கருத்திலுண்டாம் =ஜலசம்வித்தானது அவ்வெண்ணத்தில் உதிக்கும், குணத்தினை = சத்தாதியை, அத்திறங்களொடும் = மேற்கூறிய தன்மையனவாக, கூடுமனம் = பொருந்திய வுள்ளமானது, கணத்திலே குறித்து நாடி=க்ஷணகாலத்தில் ஒருமையோடு கூடி, மணத்தினைப் பாவித்தலும் = கந்ததன் மாத்திரையைக் கருதிய மாத்திரையானே, தன் மாத்திரத்தால் = அதன்மாத்திரத்தானே, பாரறிவுவரும் = பூமிசம் வித்தானதுண்டாம், இவ்வாறே = இன்னணமே, தணத்த பூதத்தன்மாத்திரம் வளைத்து வளைத்தருவமாய்ச் சகமாய்த்தோன்றும் = பிரிந்துபோந்த பூததன்மாத்திரம் சுற்றிசுற்றித் தூலவடிவமாய்ச் சகமாய்ப் பிரதீதியாகும்.

(ஸ்ரீ - வீ.) கலனுகலனேன் முகமாக மனமெழுந்தபின், அம்மனவாற்றலானது எண்ணத்தொடங்கும் = பூர்வசர்க்கத்தில் ஆகாசாதிக்கிரம ஆவிர்ப்பூத ஹிரணியகருப்ப அகங்கிரக உபாசனையினாலே சமஸ்சரிக்கப்பெற்ற மனமானது அவ்வாறே அவ்யாகிருதத்தில் லீனமாயிருக்கு மனமானது சக்தியெனப்பெறும், அது அதேமுறையானே சுவ ஆவிர்ப்பாவம் கற்பிக்கும்; ஆதியில், சப்தங்களின் பீஜபூதமாய சப்ததன்மாத்திர, ரசமாய சுரோத்திரேந்திரிய உன்முகமாகிச் சொச்சமான ஆகாசபாவனையைக் கணத்திற் பாவிக்கும்; பின்னர், அத்தகைய ஆகாசபாவனையை யடைந்து, விருத்தியை யடைந்தமனமானது கன அசைவின் முறையானே அநிலவடிவமாகிய அற்பசலனத்தை ஸ்பரிசபீஜராசோன்முகமாகிப் பாவனை பண்ணும்; சத்தப்பரிச சொரூபம்வாய்ந்த அவ்வாகாச வாதங்களாய, அபஞ்சீகிருதத் தன்மையானே அதிசூக்குமதமமாதலின் மனோவச்சின்ன சைதன்ய வடிவஜீவனாற் கானக்கூடாத பொருள்களின் விருத்தியானும் அபிகாதத்தானும் ரூபபீஜராசான்மக அநலமானதுண்டாம். மனமானது அக்கனத் தன்மையையடைந்து, பின்னர் நொடிப்போதில் பிரகாசிய அமல ஆலோகத்தைப் பாவிக்கும், அதனானே பேரொளி விருத்தியாம் மனமானது ஆகாசவாயுதேயுக்களானே குணவிருத்தியை யடையும், அது இரசதன்மாத்திர வேதனமுடையதாக அரைக்கணத்திலே அப்புவின்சைத்தியமாய இரசதன் மாத்திரத்தை யடைந்து ஜலமென வுணரப்பெறுகின்றது அதாவது உணர்வின் ஏற்றத்திற் குரியதா மென்றுணர்க. கூறிய பிரகாரங்களாய நான்கன்குண சங்காதபாவத்தை யடைந்த மனமானது, கணத்திற்கந்தவத்தூல சொரூபத்தைப்பாவிக்கும் அதனானே மேதினியான துண்டாம், இவ்வண்ணம் பூததன்மாத்திர வன்னியினானே = இவ்வைந்தும் சேர்ந்ததனானே சூக்குமத்தனைமையை விட்டுவிடும்.

(ச.) மனச்சத்தி = மனோரூபமென்னுஞ் சத்தி, செயலைமேவி யியல்பின், விசாரஞ் செய்வதாய், முதல் = ஆதியில், நொய்தாகி = சொச்சமாய், சத்தவிதையிரதத்தி லெழுவதான = சத்தமென்னும் பீஜம் = சத்ததன்மாத்திரை யென்பதுபொருள், இரதம் = அதன்விஷயமான ரசம், அதன்பாவனையாம், அதிலெழுவது = அதனைய பேக்ஷிப்பது + அதனை மூலமாகவுடைய தென்பதுபொருள், ஆன = அத்தன்மையாகிய, உயர்தருவிண் பாவனையைப் பாவிக்கும் = ஆகாயபாவனையைப் பாவிக்கும், முன்புசத்ததன் மாத்திரையைப் பாவித்துப் பின்பு ஆகாசபாவனையைச் செய்யுமென்பது பொருள். சத்ததன்மாத்திரை ஆகாசநிதானமாதலின் என்க. கணத்திலேயுடனே, அதன்பின்பு, அந்தமனம், கனதையினைமேவும் = கனத்தை யடைந்ததாய், வியனலைவின்றன் னெறியால் = நிரந்தர சலனவசத்தினால், அன்று - ஈ - இரண்டுமசை, பரிசவிதை யிரதத்திலெழுவதாம் = பரிசதன் மாத்திரையின் பாவனாபூர்வகமான, காற்றசைவைப் பாவித்துன்னும் = அநிலசலனத்தைப் பாவித்ததுவாம், இருதிறச் சத்தப்பரிசம் = சத்தப்பரிச சொரூபங்களான, விரிதருவிண் காற்றிரண்டின் மெய்நெருக்கிலே நின்றும் = அவ்வாகாச வாதங்களினாடு, இடமாகப் பழக்கமுறு மியல்பினாலே = இடாப்பியாச வசத்தினால் வருஞ்சங்கருடவேதுவினால்; உள்ளந்தானே = மனதே வெந்தீத்தோன்றும் = அக்கினியைப்பாவித்து அதன்ரூபம் ஆமென்பது பொருள்; உருவதன் மாத்திரைமேவும் இம்மூன்றினுடன் மேவும் = ரூபதன்மாத்திரை சகிதமான அம்மூன்றுகளோடுங் கூடும்,

சத்தப்பரிசரூப குணயுக்தமானமனம், குணத்தினை = இரசதன் மாத்திரையைப் பாவித்துக் கிரமமாக, நீர்ச் சயித்தியத்தை = ஜலசயித்தியத்தையும், பாவிக்க = பாவிக்கும், பின், அக்கருத்தில் = அப்பாவனையினால், நீரறிவுண்டாம் = ஜலபோதமாம்; அத்

திறங்களோடுங் கூடுமனம் = சத்தப்பரிசரூபரச யுக்தமானமனது = மனத்தினைப் பாவித்தலும் = கந்ததன் மாத்திரையைப் பாவிக்கும், பின், தன்மாத்திரத்தால் = இந் தப்பாவனையினுல், பாரறிவுவரும் = பூமிசம்வித்தாம், மகாபூத சிருஷ்டியநந்தரங், இவ் வாறே = இந்தப் பிரகாரமாக, தனத்த பூதந்தன்மாத்திரம் வளைத்துவளைத்து=பூதங்க ளாலும் தன்மாத்திரைகளாலும் வேட்டிதமாய், சூழப்பட்டு, அதனலே, உருவாய்ச் சக மாய்த் தோன்றும் = சூக்குமத்தை விடும். (35)

(ஸ்ரீ-வீர - அ-கை ) புரியட்டகத்தை வருணித்தல்:—திகழ்ந்த வென்பது.

திகழ்ந்தவனற்பொறி யென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக்காணு
மகங்கரமாந் தொழின்மேவிப் புந்தியுடன் விதையோடு மணுகியந்தப்
புகன்றதெலாஞ் சேர்ந்து புரியட்டகமா யுயிர்களுளப் பூவில்வண்டா
மிருந்தகடுங் கூட்டரவாற் பாவிக்கு மிகவிளங்கு மேனிதன்னை. (36)

(ப - ரை.) திகழ்ந்த அனற்பொறி யென்னத்திகழ் வடிவை = விளங்காநின்ற அக் கினியின் கணமென்று சொல்லும்படியாய் நிகழும் உருவத்தை, விண்ணிலே தெரியக் காணும் = ஆகாயத்திலே புலப்படநோக்கும், அகங்கரமாந் தொழின்மேவி= அகங்கார கலாயுகதமாய், புந்தியுடன் விதையோடுமேணுகி = புத்திபீஜ சமன்விதமாய், அந்தப் புகன்றதெலாஞ் சேர்ந்தது = அந்தக்கூறிய யாவையுங்கூடி, புரியட்டகமாய் = புரியட் டகதேக மென்று சொல்லுமாறு நிலவும், உயிர்கள் உளப்பூவில் வண்டாம் = பிராணிக ளின் இருதயதாமரையறுகாலாம், மிருந்தகடுங் கூட்டரவால் மிகவிளங்குமேனிதன்னைப் பாவிக்கும் = அதிதீவிர சம்வேகத்துடன் பாசுரமாகாநின்ற வாபுவைப்பாவனைசெய்யும்.

(ஸ்ரீ - வீர.) அகங்காரகலையோடுகூடியதாயும், புத்திபீஜசமன்விதமாயும் விண்ணின் கண்ணே வன்னிகணகாரமாயிலங்கும் வபுயாதுளதாய்க் காணப்பெறுமோ; அது இலிங்க மெனப்பெயரிய புரியட்டகமெனப் புகலப்பெறும்; அது பூதஹிருத் பதுமஷட்பதமாம். “ கன்மஞானப் புலன் ஹங்கணங்களும், மன்மபூதப் பிராணமனோகணம், கன்மகாமம வித்தையாய்க் காண்பவும், என்மனர் புரியட்டகலிங்கமே ” கழறப்பெறுங் காயபாவனை யினலே லிங்கத்திற்கே தான் பஞ்சீகரணத்தால் கனதையுண்டாகத் தூலதேகத்தன்மை விபாவனமெனல்:—மிருந்தவென்பது. அதன்கண்ணே பிரகாசமயமான தேகத்தைத் தீவிரசம் வேகத்தாற் பாவனைசெய்யும்.

(ச.) மனதுகருத்தா, விண்ணிலே திகழ்ந்தவனற் பொறியென்னத் திகழ்வடிவை= வியோமத்தில் விளங்கும் வன்னிகணகார வபுவை தெரியக்காணும் =பாவிக்கும், அகங் காரமாந் தொழின்மேவி=அகங்காராம்சங்க ளென்னும் ஏகாதசேந்திரியங்களோடு சகித மாய், புந்தியுடன் விதையோடுமேணுகி = புத்தியோடும் தன்மாத்திரைகளோடுஞ் சமன் விதமாய், இந்தப் புகன்றதெலாஞ்சேர்ந்து, அவ்வியோமத்தில் விளங்கும் வபுவாய், உயிர் களுளப்பூவில் வண்டாம் = பூதங்களின் இருதய புண்டரீகத்திருக்கும், புரியட்டகம், ஆம் என்று சொல்லப்படும், அப்புரி யட்டகத்தினின்று, சித்தம் = மனது, மிருந்தகடுங் கூட்டரவால் = தீவரவாசனை வேகத்தினல், பின், மிகவிளங்கும் மேனிதன்னைப்பா விக்கும். (36)

(ஸ்ரீ-வீர-அ-கை) பாவனையின் பரிபக்குவத்தால் ஆகிருதிவுறல்:-பாவனை யென்பது.

பாவனைமுற்றிடத் தூலமேனியாய் வில்வத்தின் பழம்போற்சித்த
மேவுகருவிற் பாய்ந்தபொன்னிறம் போன்மிகவிளங்கி விமலவிண்ணிற்

மூவாமுண்டாய் நிற்குமந்த வொளிதன்னுடைய சுபாவந்தன்னாற்
கேவலமேற்றலை கீழ்காற்பக்கங் கைநடுவயிறுக் கிளர்ந்தோனாகும். (37)

(ப - ரை.) பாவனைமுற்றிட =பாவனையானது முதிர்ந்தபோது, தூலமேனியாய்= தூல ஆகிருதியுற்றதாய், வில்வத்தின் பழம்போல் = கூவிளங்கனிபோல், சித்தம்=மன மானது, மேவுகருவிற் பாய்ந்த பொன்னிறம்போல் = பொருந்தவியற்றிய மூஷையிற் செலுத்தப்பெற்ற பொற்பாலின் பொலிவுபோல், மிகவிளங்கி = நனியிலங்கி, விமல விண்ணில் = நின்மலமான ஆகாசத்தில், அந்த ஒளி = அத்தேஜசானது, தன்னுடைய சுபாவந்தன்னால் = சுவசுபாவத்தினனே; தாவரம் உண்டாய்நிற்கும் = சந்நிவேசத்தை யடையாநிற்கும் கேவலம் மேல்தலை = ஊர்த்வம் சிரப்பிண்டமய மாத்திரமாயும், கீழ் கால் = கீழ்பாகத்தில் பாதமயமாயும், பக்கங்கை = பக்கங்களில் பாணிகளின் அமைப் பாயும், நடுவயிறுய் = மத்தியில் உதரதருமியதாயும், கிளர்ந்தோன் ஆகும் = உடையதா யிலங்கும் அந்த ஆகிருதி.

(ஸ்ரீ - வீர.) வில்வப்பழம்போலும் மனம்பாகத்தால் ஸ்தூலத்தன்மையையடையும் மூஷையெனப் பெயரிய பிரதிமையாகார ஆகாயகர்ப்ப மிருத்துப் இண்டம், ஆதனுள் ளேவார்த்த பொற்பலொளிபோலும் ஒளிர்வதும், விமலாம்பரத்தில் விளங்குவதும், வெளியில் தூலமாயிலங்குவதும் உள்ளில் சூக்குமமாய்ச் சுடர்வதும் ஆகிய தூலகே* சம் வலிதமான சந்நிவேசத்தை, அத்தேயுங்கமானது தன்னியற்கையானே அடையா நிற்கும், நின்றபோது மனமானது விசேடகற்பனு பினிவேச சாகோபசாகையாய் விரிந்துவிருத் தியாம், அத்தேயுப் புஞ்சமயமான தன் சந்நிவேசத்தைச் செய்தபின்னர், மனமானது, மிகத்துணியாய மிகவிரிவாயுள்ள அநேகங்கோடி பாவனைகளைச் செய்யாநிற்கும்; செய்வ தன்கண்ணும் முறையே சிரமுதலிய அவயவகற்பனை யறைதல் மேற்றலையென்பது மேலேசிரத்தையும், கீழேபீடமயமாய பாதமயத்தையும், பக்கங்களில் ஹஸ்தசம் ஸ்தா னத்தையும், மத்தியில் உதரதருமியையும் பாவிக்கும். அங்குலியாதி யடைவதனானே அழகொடு வெளியா மவயவப்பாலன் சுவாலைமாலை யமலவாகிருதியாய்ச் சுடராநிற்பன்.

(ச.) பாவனை முற்றிட = பாவித்துப் பரிபாகவசத்தினால், வில்வத்தின் பழம் போல் = வில்வபலம்போல், தூலமேனியாய் மேவும் = தூலரூபமாம், பின், மேவுகரு விற்பாய்ந்த பொன்னிறம்போல் = கருவென்பது, பிரதிமாதிகளினுடைய நிர்மாண நிமித்தமியற்றிய உள்வெளியுள்ள மண்மயாகிருதியாம், அதிற்பாய்ந்திருக்கும் தங்கசமா னம், விமலவிண்ணில் = விமலாம்பரத்தில், மிகவிளங்கி நிற்குமிந்தவொளி = மிகவிளங் கும் இந்தப் புரியட்டக ரூபமானதேசு, தன்னுடைய சுபாவந்தன்னாற் கேவலம் = சுபா வத்தினாலேயே, மேற்றலை = உபரிபிண்டமயமான, சிரசும், கீழ்கால் = கீழேபாதமய மும், பக்கங்கை = பார்சுவங்களிற் கரங்களும், நடுவயிறுய் = உதரதர்முமாய், கிளர்ந் தொன்றுகும் = தாவரமுண்டாய் நிற்கும் = சன்னிவேசத்தைத் தரிக்கும்.

(ஸ்ரீ - வீர - ன் - கை.) மனோரதவசமாக வடைவுற்ற வபுவோடு கூடியிருந்த, பூர்வோபாசிதப் பிரகாரமனன சீலப் பிரஹ்மதேவர் தமது வடிவத்தைப் பார்த்தார் எனல்:—மூர்த்தியவென்பது.

மூர்த்தியகாலத்தினால் வெளியாகி நின்மலமா மூர்த்தியாகிப்
புந்தியொடு சத்துவமொய்ம் புச்சாகம் விஞ்ஞானம் பொறியுமேவு

மந்தவவனே யகிலபிதாமகனும் முழுதுணர்ந்த வயனுமன்னான்
சுந்தரமாயுத் தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்றநோக்கி. (38)

(ப - ரை.) மூந்தியகாலத்தினால் = காலபரி பக்குவத்தினால், வெளியாகி = ஸ்புடத்தை யடைந்து, நின்மலமாமூர்த்தியாகி = அமலவிக்கிரகனாகி; புந்தியோடு சத்துவம் மொய்ம்பு உச்சாகம் விஞ்ஞானம் பொறியும் மேவும் = புத்தி சத்துவ பல உற்சாக விஞ்ஞான ஐசுவர்யங்களோடு கூடியவனாகி, இருப்பன்,

அந்த அவனே அகில பிதாமகனும் = அத்தகைய அவனே சர்வலோக பிதாமகன் என்னப்பெற்று, முழுதுணர்ந்த = சர்வஞ்ஞனாயிலங்கும், அயனும் = பகவானாகிய பிரஹ்மாவாம்; அன்னான் = அப்பிரஹ்மதேவன், சுந்தரமாய் உத்தமமாய் திகழ்கின்ற = மிக அழகும் மிகமேன்மையும் வாய்ந்திலங்கும், தன் வடிவை = தனது மேனியை, தோன்ற நோக்கி = திகழக்கண்ணுற்று.

(ஸ்ரீ - வீர.) போதமேவுறப்புடத் தகைமையைப் பொருந்தியமலவிக் கிரகனாகி யிலங்கும் பிரமதேவன்; "அகத்துணர் விணையுணைவு மற்றதா, மகத்தயிசொரியந் தருமமுடன், இகத்திலங்குள வெள்ளிடலாவதுஞ், சகத்திறைக்குச் சகச மிந்நான்குமே" என்னும் ஸ்மிருதிப் பிரசித்த விசேஷண சித்தியை அவனுக்குக் காட்டல்:—புந்தியென்பது. புத்தி, சத்துவம், பலம், உற்சாகம், விஞ்ஞானம், ஐசுவரியம் உடையவனாகி யொளிர்வன்; அவனே பகவானாகிய சர்வலோகபிதாமகன் என்னும் பிரமதேவனாவன். அவ்வயன் தன்னுடைய மகா காந்திவாய்ந்த உத்தமோத்தமான திருமேனியை ஊன்றிப் பார்த்துச் சிந்திப்பானாயினன்.

(ச.) மூந்தி வந்தவவனே = முற்புகன்ற சந்நிவேசனே, காலத்தினால் வெளியாகி நின்மலமூர்த்தியாகி, அமலவிக்கிரகனாய், புத்தியாதி யுக்தனாய், அகிலபிதாமகனாய், பகவானன அயனும் = பிரமனும் என்பதந்நுவயம். அவற்றில் புத்தி = நிகழ்காலத்துள்ள காரியாகாரிய நிச்சயவேதுவான மநீஷையும், சத்துவம் வியவசாயமும், மொய்ம்பு = பலம், = சரீரசாமர்த்தியமும், உற்சாகம் = லோகோத்தர காரியங்களிற்றிதி பெறும் தன்னிச்சைப்படியான எத்தனமும், விஞ்ஞானம் = விசிட்டமான ஈசுரசாக்ஷாத் காரரூப ஞானமும், பொறியும் = அணிமாதி ஐசுவரியமும் ஆமவற்றிற்பிரதிஷ்டிதன், அன்னான் = பிரமன், சுந்தரமாய் = காந்தியாய், திகழ்கின்ற தன்வடிவை = மிகவிளங்குமேனியை, தோன்றநோக்கி = நன்றாய்ப் பார்த்து (38)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிந்தனையின் வகையையும் கண்டதையும் கூறல்:—குன்றாத வென்பது.

குன்றாதவறு குணத்தோன் மூன்றுகாலமும் வெளியாக் குறிக்கும்வேதா
வொன்றாகிச் சின்மயமே யுருவமாய்க் கரைகாணா வுயர்வானத்தின்
மூன்றானுண் டாகியதென்னென நினைந்தா னழுக்கிலா முழுஞானக்கண்
ணன்றுவப் போதுதித்தோன் பலகோடி சிருட்டிமுத னடத்தக்கண்டான். ()

(ப - ரை.) குன்றாத அறுகுணத்தோன் = கெடாதனவாய ஷட் கல்யாணகுணங்களை யுடையவனாய், மூன்றுகாலமும் வெளியாக் குறிக்கும்வேதா = திரிகால அமல தரிசியாய அவ்வயன்; ஒன்றாகி = ஏகமாய், சின்மயமே யுருவமாய் = அறிவுமயமே வடிவமாகி, கரைகாணா = அபாரமான, உயர்வானத்தில் = பரமாகாசத்தில், மூன்றான் = பிரதமந்தான், உண்டாகியது என் என நினைந்தான் = ஜனித்தது யாதென்று எண்ணி

ஞன், அழுக்கிலா முழுஞானக் கண்ணன்ரு அப்போதுதித்தோன் = நன்குபெற்றவமல ஆத்மதிருக்காய்ச் சத்யோசாதஞன அப்பிரமதேவன், பலகோடி சிருட்டிமுதல் நடத்தக் கண்டான் = சென்றனவாய அநேகவகைச் சர்க்கங்களைக் கண்டனன்.

(ஸ்ரீ-வீர.) திரிகால அமலதரிசியாய பகவான் சிந்திக்கத் தொடங்கிஞன்; கரைகாணுதவண்ணம் விரிந்து விசாலமாகி, கருவண்டின் சமானமான கறுப்பாற் குறிப்பிக்கப்பெற்ற இவ்வாகாச குகரத்தில், எனதுற்பத்தியின் முன்னர், யாதுண்டாகியிருந்ததோ! என்பதாக, நிர்மலத்தன்மையானே அதீதவநாகத் தரிசனத்தில் ஆற்றலுற்ற அமல ஆத்மதிருஷ்டியை யுடைத்தாகி, அப்போதுதான் உண்டாகியிருக்கும் பிரஹ்மதேவன் சிந்தித்தனன்; பலகோடிக ளென்னச் சென்றனவாய சிருஷ்டி சமுதாயங்களைக் கண்டனன்.

(ச.) குன்ருதவறு குணத்தோன் = பகவான், மூன்று +வேதா = திரிகாலாமல தெரிசனன், ஒன்ருகி + வானத்தில் = ஏகசின்மயரூபமாய்ப் பாரபரியந்தம் பார்த்தற்கரிய இப்பரம ஆகாயத்தில், முன் + நினைந்தான் = முன்பு இஃதாகியது என்னெனச் சிந்தையை யடைந்தான், இங்ஙனஞ் சிந்தித்தவன் பிரமா = அழுக்கிலா முழுஞானக் கண் = அமலான் மகதிருக்கு, கன்ருயிப்போ துதித்தோன் = சத்தியோஜாதன் = உடனுண்டானவன், பல + கண்டான் = அநேகந்தரஞ் சர்க்கபிருந்தங்கள் நன்ருச்சென்றனவாகப் பார்த்தான். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சாதிமுதல் மோக்ஷமீருய்ச் சாஸ்திரமுறை வேதாகற்பித்தல்:—சாதியென்பது.

சாதிகுலந் தருமமெலா முணர்ந்தவற்றை லீலையினுற் றுன்கற்பித்தா
ஞேதரிய லீலையினுற் சங்கற்பத்தாற் பிறக்குமுயிரை யெல்லா
மேதமுறு கந்தர்ப்பநகரம் போலறம் பொருள்வீ டின்பமெய்த
மேதகைய பலகோடிசாத்திரங் களவர்க்காக விதித்தான்வேதா. (40)

(ப - ரை.) சாதிகுலந் தருமமெலாம் = ஜாதிகுலம் தருமம்குணம் என்பவற்றின் முறையாவற்றையும், உணர்ந்து = ஸ்மரித்து; அவற்றை = அவ்வியாவற்றையும், லீலையினுற்ருன் கற்பித்தான் = விளையாட்டாகத்தானே கற்பனைசெய்தனன், ஓதரியலீலையினுல் = கிளத்தற்கரிய கிரீடைமாத்திரத்தானே, சங்கற்பத்தாற் கந்தர்ப்பநகரம்போற் பிறக்கும் ஏதமுறு உயிரையெல்லாம் = நினைவினுனே கந்தர்வபட்டணத்திற்கொப்பாக வுண்டாம் களங்கம் நிறைந்த ஜீவர்கள்யாவரும், அறம்பொருள் இன்பம் வீடெய்த = தருமம் அர்த்தம்காமம் மோக்ஷம் என்னும் சதுர்விதமான புருடார்த்தங்களையு மடைய, மேதகையபலகோடி சாத்திரங்கள் விதித்தான் வேதா = மேன்மைமிக்க அநந்த விசித்திர சாஸ்திரங்களைப் பிரமாநன்ருகச் செய்துவைத்தான்.

(ஸ்ரீ - வீர.) தற்காரண சிந்தனையின் பின்னர்ச்சாங்க உபாங்கச் சர்வதர்மக்கணங்களையும், அதர்மக்கூட்டங்களையும், முறையாக நினைந்தனன்; வசந்தகாலம் மலர்களைப் போலச் சகலவஸ்துக்களையும் பிரதிபாதிக்கும், சகலருப்போற்றும், வேதங்களைக் கொண்டு மகிழ்ந்தனன். அதனுனே அவனுக்குத் தாகாலத்திற் சர்க்கமும் வேதமோதியுநீதியானே செயற்கெளிதாயாயது என்னுங்கருத்தா லுரைத்தல்:—லீலையினுல் என்றது லீலையினுலே, நாஞசாரசமாசார மாகக்கந்தர்வ நகரத்திற்போலச் சித்திரசங்கற்ப ஜனனியப் பிரஜைகளைக் கற்பித்தனன்; அவர்களுக்குச் சுவர்க்க அபவர்க்கப் பொருட்டும்,

தர்மகாமார்த்த சித்தியின் பொருட்டும், அநந்த விசித்திர சாஸ்திரங்களை யழகாகக்கற் பித்துவைத்தனன்.

(ச.) சாதிகுலந் தருமமெலாம், அதனோடு சர்வதர்ம குணக்கிரமங்களையும், ஒதரிய லீலையினாற் சங்கற்பத்தாற் பிறக்குமுயிரை யெல்லாம் = சித்திரங்களாய்ச் சங்கற்பஜன னியங்களான நாநாசார சமாரம்பமுள்ள பிரஜைகளை, எதமுறு கந்தர்ப்பநகரம்போல்= கந்தருவ நகரம்போல், கந்தர்ப்பநகர் போற்றந்து என்றும் பாடபேதமுளது. அவர்க் காக = அப்பிரஜைகளுக்கு, வீடு = சுவர்க்கா பவர்க்கநிமித்தம், அறம்பொருள் இன்ப மெய்த = தர்மகாம அர்த்தஞ் சித்தித்தற்கு, மேதகைய பலகோடி சாத்திரங்கள் விதித் தான் = அநந்த விசித்திரசாத்திரங்களை உதிப்பித்தான். (40)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மனத்தினின்றே சர்வசிருஷ்டியென யாது பதிஞ்ஞைசெய்யப் பெற்றதோ அது இம்முறையானே சமர்த்திதமாம் எனவுப சங்கரித்தல்: — விரிஞ்சன் என்பது.

விரிஞ்சனு ருவாமனத்தா லிச்சிருட்டியிற் சிருட்டிமேவி நின்றும்
புரிந்தலரு மலரெல்லாம் வசந்தகாலத் தினுற்பூப்ப தொக்கும்
பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தாற் பிறவியுற்றார்
தெரிந்தனைய சங்கற்பமறிற் பிறவார்நெய் மாண்ட தீபம்போல. (41)

(ப - ரை.) விரிசனுரு வாமனத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவிநின்றும் புரிந்தல ரும் = பிரஹ்மாவின் வடிவமான சித்தத்தானே இச்சருக்கத்தில் அநேகவகைச் சிருஷ் டிகள் உண்டாகித்திதியாகி யொளிராநிற்கும், மலரெல்லாம் வசந்தகாலத்தினுல் பூப்பது ஒக்கும் = புஷ்பலக்ஷ்மியாவும் வசந்தகாலத்தை யநுசரித்துண்டாகி மலர்ந்து மணந் தருவதை யொப்பாமது, பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தஞ் சங்கற்பத்தால் பிறவியுற் றார் = வேறுவேறாக விளங்கும் தேவர் மநுடர் அசுரர் முதலியோர் தங்கள் தங்களது பாவனையானே ஜனனத்தை யடைந்தனர், தெரிந்தனைய சங்கற்பம் அறில்பிறவார் நெய் மாண்ட தீபம்போல = எண்ணத்தானே யிடர்ப்பிறப்பாகின்ற தென்றுணர்ந்து செய்து கொண்டிருந்த சங்கற்ப கற்பனைகளை யெல்லாம் தொலைக்கின் தைலந்தீர்ந்த விளக்குப் போலச் சனியார்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராகவ! இவ்வண்ணம் இச்சருக்கத்தில் இத்திருஷ்டியே, விரிஞ்சிருப மனத்தினின்றும், மதுவினின்றும் புஷ்பலக்ஷ்மி யுண்டாகிப் பூத்திருப்ப தொப்பவே, உண்டாகித் திதியையடைந்து நிலவுகின்றது. விவிதவிரசனக் கிரியாவிலா சங்களானே யலங்கரிக்கப்பெற்ற கமலஜரூப தரமனத்தினானே தற்பரிகற்பனையினானே ஹே இரகுநந்தநியே! காணப்பெற்ற இத்திருசியசருக்க இலக்குமி, சத்தியதுச்ச விலக் கணத் தன்மையானே யொப்பிலாத தாகியதிதியை இவ்வுலகில் அடையாநிற்கும். மனத் திற்கு ஸ்மிருதிமாத்திரத்தில் ஹேதுத்தன்மையானே அதனை லாக்கப்பெற்ற இது ஸ்மி ருதி துல்லியமே யாமாதலின் தான்றோன்றுங் காலத்தும் சதர்த்தமல்லவாம், தேகாதி புவனத்திரய மியாவுமே மனத்தினானே கற்பிக்கப் பெற்றதாம், பெறவே, சக்ஷுவானது ஆலோகனத்திற்போல் இம்மனமும் சமுசாரத்திற் காரணமாம். இதனானே தேவாதி சக்திகளினாலும் முக்தி தடைப்படுத்த முடியாதாமென்னுங் கருத்தொடுங் கூறல்:— பிரிந்த என்பது. தேவாசுர நராதிகள் யாவருமே, சுவசங்கற்பகிருதர் ஆவர், சுவசங்கற் பம் உபசமனமாகியவழியோ அஸ்நேகதீயம் போலும் உபசமமுறுவர்:

(ச.) விரிஞ்சனுருவா மனத்தால் = விரிஞ்சரூபமான மனதினால், இச்சிருட்டி = இச்சகத்தில், இச்சிருட்டி = சிருஷ்டியான பிரபஞ்சம், மேவிநின்று, புரிந்தலரும் = ஸ்திதியைப்பெறும், அது, மலரெல்லாம் = புஷ்பலக்ஷ்மி, பூப்பதொக்கும் = ஸ்திதி பெறுவதுபோலாம், பிரிந்தசுரர் நரர்முதலோர் = தேவாசுர நராத்மகரனைவரும், தத் தஞ்சங்கற்பத்தாற் பிறவியுற்றார் = சுவசங்கற் பிதராவர், தெரிந்தனைய சங்கற்பமறில் = சுவசங்கற்பம் உபசமமாயின், பிறவார் = உபசமமுறுவார். (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) உண்மையிலீதெனவுரைத்தல்:—வானவென்பது.

வானநிகரா மனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளராநிற்கு
மானசக நனவுதனிற் கனவுபோலி ராகவனே யறிதியன்றே
யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்றுமென்றும்
ஞானபரமார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணுமன்றே. (42)

(ப - ரை.) வானநிகராம் அனைத்தும் = ஆகாசசதிருச மாகயாவுமே, கற்பனைமாத் திரம் வாளாவளராநிற்கும் = கற்பனைமாத்திரமாய் வீணாகவே விருத்தி யடையாநிற்கும், ஆனசகம் = தோற்றலானவுலகத்தை, நனவுதனிற் கனவுபோல் = ஜாக்கிரத்தின் கண்ணே சொப்பனம்போல, இராகவனே அறிதியன்றே = மகாமதிமானாகிய இராமச்சந் திரா நீதெரிந்து கொள்ளுதி, ஈனமுறப் பிறப்பில்லை இறப்பில்லை எவ்விடத்தும் ஒன்றும் என்றும் = ஒருபொருளும் எங்கும் எப்போதுமே நீசமுறுமாறு பிறப்பது மில்லை இறப் பது மில்லையாம், ஞானபரமார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணுமன்றே = சுமதியே! உண்மையாய திருஷ்டி யானேயுற்று நோக்குழி, இவையாவுமே மித்தையா கப்பொருந்துறும், அன்று, ஏ, அசைகள்.

(ஸ்ரீ - வீர.) ஆகாச சதிருசம் சர்வம் கற்பனைமாத்திரமாக விஜ்ரும்பிதமாம், ஹே மகாமதிமானே! மிக நீண்டகனாப் போலெழுந்த வுலகைக்காண்குதி; ஈண்டொரு சிறிதும், எப்போதுமே உண்டாவது மில்லை யொடுங்குவது மில்லை; ஹே சுமதியே! பர மார்த்தமாய்ப் பார்த்தால் யாவுமே பொய்யேயாம். (பிறப்பதிலை யிறப்பதிலை யென்றே பாடமிருக்கலாம்) இவ்வுலகமியாவுமே பிரஹ்மமேயாம், ஆகவே வேற்றுமையுளதாவ தில் அளவையுங்காணேம், காணின் என்னே பிரமாணம்? எத்தகையது அஃதென வழங்குவதோ? எவ்வடிவினதோவது? யாண்டுளதாவதோ அது? இஃதசலமெனவும் இதுஸ்தாணுவெனவும் வழங்கலோ வெறும் ஆடம்பர விப்பிரமமேயாம், உபசயாவதி யாயகிரி அபசயாவதியாய ஸ்தாணு வென்பவற்றிடைப் பட்டபரிச்சேத ஆடம்பரவிப் பிரமங்கள் யாவுமே மனத்தினது பாவனாதார்ட்டியத்தானே அசத்தாயிருந்தபோதினும் சத்தெனத் தோற்றா நிற்கும்.

(ச.) கனவுபோல் = அதிதீர்க்க சொப்பனமென்று, இராகவனே = மகாமதிமா னை ஸ்ரீ இராமா நீ, நனவுதனிலறிதி = பார்ப்பாய், நனவுதனில் எனுங்கவி நாயகர் கருத்தை யூகித்துணர்க, பிறப்பில்லை = செனித்தலில்லை, இறப்பில்லை = மரித்தலில்லை, உளதிலது ஒன்றும் எவ்விடத்தும் ஒருபோதும், ஞானபரமார்த்தத்தால் = பரமார்த்த மாக, மகாநுபவனே, இவையெல்லாம் பொய்யாக நண்ணும், இதன் பொருள் வெளிப்படை. (42)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கனவின்கண் ணைத்துணை மகாரம்பங்க டோற்றினும் உண்மையாயிலவாகிப் பிராந்திமாத்திரமே யாதல்போலவே மனத்தினாலே மயக்கமாத்

திரத்தானே தோற்றுகின்ற வித்தீர்க்க சொப்பனசகம் வெறும்பொய்யே யாமென் றுணர்தியெனல்:—வெங்காதல் என்பது.

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றுங் குடும்பபாம் வெறும்பொய்யென்றே
யிங்காசை யறநீக்கி யெல்லேயிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய்
சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற்றென் தீதோநன்றோ
பங்கான மனேமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாசமாயை. (43)

(ப - ரை.) வெங்காதல் = கொடிய ஆசைகளாகிய, பெரும்பாம்பு = அதிதீர்க்க மாய அரவங்கள், நெளிபுற்றும் = சுழலும் வல்மீகமாய, குடும்பபரம் = சம்சாராடம் பரம், வெறும்பொய் என்றே = அத்தியந்தம் மித்தையென்றே, இங்காசை யறநீக்கி = இவ்விடத்திலுள்ள வத்துக்களில் எழாநின்ற நசையையத்தியந்தம் அகற்றி, எல்லேயிலாப் பரமபதத்திருந்து வாழ்வாய் = தேசகாலவஸ்து பரிச்சேதமில்லாத பிரஹ்ம சொரூபத் துபத்திதிபெற்றிச் சுகிப்பாய், சிங்காரக் கந்தர்ப்பநகர் = அதிவிசித்திரமான கந்தர்வ நகரம், இருந்தென் சிதைவுற்றென் = பூஷிதமாயின் என்னே தூஷிதமாயின் என்னே, தீதோநன்றோ = துக்கமோ சுகமோ, பாசமாயை பங்கான மனேமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் = அவித்தையின் அங்கிசங்களான சம்பாதிப்பதின் மாத்திரம் பங்காளி களான மனேவிமைந்தர்கள் வாழ்ந்தாற்றுனென் தாழ்ந்தாற்றுனென் சுகமோதுக்கமோ.

(ஸ்ரீ - வீர.) இச்சமுசார ஆடம்பரம் திருசியமான அவஸ்தை யுடைத்தாய் மகா போகமாய் வெகுவிஸ்தீர்ணமாய் இரமணீயம்போலத் தோற்றும், இவற்றுள்ளுஞ் சிலவை யேகவர்தற்குக் கூடுமாதலின், கவர்ந்தவற்றுள்ளும் ஒரொருகால் ஏதாவதொன்றே யுப யோகத்திற்கு வருதலின், அதனுத்தரக் கணத்திலேயே க்ஷயமாதலினுனும், அவஸ்துக மாய துச்சமேயாம்; புசியாதனவாய்ப் பூர்வங்கண்டனவாய் காணுதனவாய விடயங்களிற் றிருஷ்ணுவிஷ உற்கடங்களாய ஆசையரவங்கட்குக் கோசமாய புற்றென்னப் பொலிவ தாம். இத்தகைய சமுசார ஆடம்பரத்தை யடியோடும் விட்டுத் தொலேப்பாயாக. யாங்ங னம் விட்டுத்தொலேப்பது கொலோவெனின் ஆண்டுக்கூறல்: வெறும்பொய் யென்றே யென்பது. இஃதெலாம் அசத்தே யெனவறிந்து இதிற்கருத்தை இராகத்தைச் செலுத் தாதிருக்கவேண்டும். பேய்த்தேரை யுணர்ந்தபேரறிவாளி பின்றொடர்ந்தே கானன்றே. தொடர்வனேற் றுயரையே பெரிதுறுவன் அன்றியும் பரமபுருடார்த்தத்தையு மிழப்பன், இஷ்டம் எய்தினன்றோ ஹர்ஷ முண்டாம், இஷ்டமே மாயாமயத்தில் இல்லேயாகும். அத்தியந்தம் யாண்டுமே அசத்தியபூதமா யிராநின்ற இச்சமுசாரத்தில் யாதுதான்கொள் ளத்தக்கதாகவுள்ளது எதைக்கொண்டு அறிஞன் மகிழ்ச்சியை மருவுவானே. இவ்வண் ணம் சர்வமும் ஆநந்தைகரசமாகப் பார்த்துக்கொண் டிருக்கும் பாக்கியவானுக்குத் தள் ளத்தக்கதா கவொன்று மேயின்றும்; யாண்டுஞ் சத்தியபூதமாய் நிறைந்தொளிரு மிந்தப் பிரஹ்மதத்துவமயத் திரிபுவனத்திலுந்தான் என்னே அறிஞன் தள்ளத்தக்கதுளது ? எதனேப் பரிகரித்துவிட்டு அறிஞன் மகிழ்ச்சியை மருவுவானே. இரண்டு பக்ஷங்களின் துல்லியத் தன்மையில் உத்தியிதுவாம்:—“ அசத்தாகத்தான் இதுமுன் னமர்ந்தது ” ‘ இலதேயிங்கெதும் முன்னிருப்பதாய் ” என்பதாதி சுருதிகளினுனே ககனபவன பூவ னுதிகட்டு முதலிலு மீற்றிலும் அசத்தன்மை கேட்கப்பெறுகின்றது, கடாதிகட்கோ காட்சியா யனுபவிக்கப் பெறுகின்றது, நீள்காலம் முன்னும்பின்னும் அசத்வம், அற்ப காலமிடையின் மாத்திரம் உண்மை வியக்திதோறும் வெட்டவெளியாம்; அவையும் பரஸ் பரங்கெக்கு மியற்கையாண் உண்மை யின்மைகளானே ஏகவஸ்துவின் கண்ணே ஏக

தரவிசேடஹான மின்றியே புகுத்தப்பெறும் என அவசியம் ஏகதரங்கெடுக்கப் பெறும் வழி, ஆதியந்தங்களிற் சிரதரம் அசத்வப் பிரசித்தியானே வர்த்தமான தசையினும் அசத்வமே சர்வவியக்திகட்கும் ஆமென அசத்வபக்ஷ இச்சுவானே அசத்வமே சுருதி யுக்தியனுபவங்களானே காணப்பெறலாம். " சத்தேசோமிய இது முன்னிருந்தது யாங் ஙனம சத்திற் சத்துண்டாகும் " என்பதாதி சுருதிகளானே சத்துசத்து என்பதாகவே பிரமாணப் பிரவிருத்திகாலத்திற் சர்வவஸ்து அநுபவத்தால் ஆதியந்தகாலங்களில் சத் தாநபிவியக்தி திரோதான மாத்திர கற்பனையானும், அசத்துத்தான் இது முன்னாயது என்பதாதி சுருதியுக்திகளின் பொருத்தத்தானே, சத்வசுருதியுக்திகளை அயலோராற்றால் அமைவுறுத்தற்கு ஆகாமையினானும், எப்போதுமுள்ளதாயும் எங்குமிருப்பதாயுமான சர்வவஸ்துக்களின் சத்தையெளிதிற் கோடலானே யொன்றேயாம் என்பது பொருத்த முடைத்தாம், எனச்சத்தொருமையாய்ச் சித்தமாக ஆதியிலும் அந்தத்திலும் காரணப் பிரஹ்மசத்தையினானே சர்வத்திற்கும் சத்தியத்தன்மை யுண்மையின் நிகழ்காலத்தில் அஃதவ்வாறே யாமெனச் சத்வாதியானே அகண்டம் பிரஹ்மசத்தையே யாண்டும் காணப் பெறுவதாகும். தேசகால பரிச்சின்ன சத்தையின் கற்பனம் பக்ஷத்துவய பகிஷ்கிருதமாம், சர்வசுருதியுக்தி விருத்தமாம், ஆயிரக்கணக்கான மூர்க்கரானே அந்தபரம்பரையாக மிகவுங்கற்பிக்கப் பெற்றதாகும், சர்வ அநர்த்தங்களையும் பயப்பதா கும், என்பதாகவே அப்பாலருக்கே யஃதுசிதமாகும், நினக்காகாதாம்; அசத்தியபூத மாய்த் தோயத்துட்டோற்றும் சந்திரவியோம தலாதிகள் ;மனோமோகப் பொருட்டுப் பாலர்களே மிகவாஞ்சிப்பர் உத்தமோத்தமர் வாஞ்சியார் மாயாமூடரானே ஆன்மத் தன்மையுடையதாகக் கற்பிக்கப்பெற்ற அகங்காரத்தோடுகூட இவ்வகிலவுலகும் அசத்தே யாமென வெண்ணிச் சுருதிகுருயுக்தி சுவாநுபவங்களானே துணிந்து புத்திரமித்திரஞாதி நாசமுற்றவழி சோகத்தையும், விடம்போலும் பரிணாமதுக்கந்தரும் விடயங்களை யிலும் சிலம்வாய்ந்துழலும் இராகத்தையும், அடையவேண்டாம். அங்ஙனமாகவே சோகராகாதி நிராசவாயிலாக ஐக்காத்மிய தரிசனத்தில் உலக அசத்துவவாதம் பொருந் தும். இவ்வண்ணம் அன்னிய அர்த்தமாய அசத்வாதப் பிரஸ்தாவத்தானே நிஸ்தத்வமே ஜகத்தென வெண்ணலாகாது, மற்றோ, சகலம் சத்தேயாம்; சத்வத்திற்கு அப்பிரசித்த மாயினோ அதன் பிரதிக்ஷேபகமாய அசத்வத்திற்கும் அப்பிரசித்தி யாதலின், பிரசித்த மாயினோ, அதன் பிரதிக்ஷிப்தத் தன்மையானே அசத்வம் அசித்தியாதலின். இங்ஙனம் யாண்டுமே சத்தையானே பிரதிக்ஷிப்தமாய அசத்வம் நிராஸ்பதமாய் யாண்டும் எதனையும் பரிச்சேதப் படுப்பான் ஆகாதாம் என அபரிச்சின்ன சதைகரசியம்சித்தமாக, கடபடாதி பரிச்சேதக ஆகாரத்திற்குத் தனித்து அவசேடமின்மையின், சோதிதசின்மாத்திர ஏகர சமாய பிரத்தியக்ககண்ட ஐக்கியத்தோடுகூடப் பூமாவெனப் பெயரிய சத்பிரஹ்மமே யான் என்பதாக நோக்கிச் சுவாத்மப் பிரதிஷ்டனாய உனக்கு மீண்டும் சாம்சாரிகஜன்ம மரணாதி விஷாதத்தன்மையின் அடைவு உண்டாகமாட்டாதாம், காலத்திரயத்தினுமே சம்பவியாதாம். சர்வவஸ்துக்க ளிடத்திலும் அநாஸ்தையானே நஷ்ட உபேக்ஷணம் வாராததில் வாஞ்சையின்மை வடிவகுணங்களைத் தொடக்கத் தேயிறல் வேண்டும், இரம்மியமா யிராநின்ற தனங்களிடத்திற் றானாதல் தாராதிகளினிடத்திற் றானாதல் சோகத்தின் அவசரம் எங்கே? கணங்கண்ட இந்திரஜால நட்டமாக நாடியழுதலென் னே? வாராதனவற்றைக் குறித்துத்தான் என்வருந்தல் வேண்டும். கந்தர்வநகரப்பொரு ளில் ஆடிதமாயினும் பூடிதமாயினும் என்னே? அஃதொக்க, அவித்யாம்சங்களாய் சுதாதிகளிற் சுகதுக்கங்களின் பரவுதல் யாதுதான்கொலோ. இரம்மியமாய தனதாராதி கள் விருத்தியடையும் போதுதான் மகிழ்வின் அவகாசந்தா னெங்கே, கானனீர் பெருகி

வரக்கண்ட நீர்வேட்கையர்க்கு நீர்விளையாடன் முதலிய இன்பமீகுதிதானெங்கே. திரு வாசகம்:—பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப், பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணமாகாமே, தீர்த்தாய் திகழ்தில்லையம் பலத்தே திருநடஞ்செய், கூத்தாவுன் சேவடி கூடும்வண்ணந் தோணேக்கம்.

(ச.) மாத்ரபாவம் நிவேசய (மூலம்) = அத்ர = சமுசார ஆடம்பரத்தில், பாவம்= தாற்பரியம், மாநிவேசய = செலத்தற்க. கந்தர்வ நகரசப்தத்தின் அர்த்தம் பூஷிதமாயி னும் தூஷிதமாயினும் சுகமேனும் துக்கமேனும் உண்டாகாததேபோல அவித்யா கற்பித சுராதிகளிலும் சுகதுக்கங்களின் அக்கிரமமாம். (43)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தாராதிவிருத்திபுறச் சமுசாரரோகம் விருத்தியாம் சம்பாவனை யால் துயருறுதலேதகும் மகிழ்வுறுதல் தகாதெனக் காட்டித் தாரதனுதியால் அறியார்க் குறுந்துயரும் அறிந்தார்க்குறும் உயர்வும் இன்னண மெனல்:—தாரதனமென்பது.

தாரதனமிகு மென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக்கொண்டா
லாரதனைய றுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசைவிஞ்சிக்
கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறித்தபோதே
தீரதையா மறிஞர்க்கு விரத்தியுளதாய்ச் சித்தந் தெளியுமன்றே. (44)

(ப - ரை.) தாரதனமிகும் என்னில் = தாரதனங்கள் விருத்தியாகுமாயின், தளை யாகும் = நடைவிலங்காகும், அப்பாசந் தளைத்துக் கொண்டால் = அந்த ஆசையாகிய விலங்கையடைந்து விட்டால், ஆரதனையறுத்தகலும் விரகுடையார் = எவருள்யாவர் தாம் அவ்வாசாபாசத்தைச் சேதித்துத் தவப்பொருட்டுச் செல்லும் ஆற்றலுற்றவர், அறிவில்லார் = மூர்க்கர், ஆசைவிஞ்சி=இராகமிகுத்து, கூரிதையாம் அப்போகத்து= ஜன்மவேது வாதலிற்கொடூரமான அந்தப் போகங்களில், உழன்று = அலைவுற்றுமூழ்கி, உழக்குங் கொடுந்துயரை = அடிபட்டநுபவிக்கும் பெருந்துக்கத்தை, குறித்தபோதே= நாடிய கணத்திலேயே, தீரதையாம் அறிஞர்க்கு = தைரியம்வாய்ந்த விவேகிகட்கு, விரத்தியுளதாய்ச் சித்தந்தெளியும் = வைராக்கிய முண்டாகி மனமானது தூய்மையையு றும், அன்று ஏ அசை.

(ஸ்ரீ - வீர.) தனதாரங்கள் மிகுந்து விருத்தியாயின் துயருறுதலே பொருத்தமன்றி மகிழ்வுறுதல் தகாதாம், மகாமோக மாயையானது விருத்தியாகிவர யாவர்தாம் ஈண்டு இன்புற்று வாழ்ந்தார், அபிவிருத்தியாகிவரும் எத்தாராதிகளானே மூர்க்கருக்கு இராக மானதுண்டாமோ, அப்போகங்களானே பிராஞ்ஞருக்கு விராகமானது இனிதுண்டா கும். நச்வர இயற்கைவாய்ந்த தனதாராதி வத்துக்களில் ஹர்ஷத்தின் அவசரந்தான் யாதோ, மேலுண்டாம் அழிவுபாடு நரகவேதனைத்துவாதிகடு கதையைக்காணும் சாதுக்கள் இவற்றானே வைராக்கியத்தை யடைவர் என்பதாம்,

(ஸ்ரீ-வீர - அ-கை.) எதர்த்தமயம் பிரஸ்தாவத் துற்றதோ அதனைக் காட்டல்:— ஆன வென்பது.

ஆனதிறத்தாற் குடும்பபார வியாபாரத்தி லணுகும்போது
போனபொருட் கிரங்காமற் பொருந்து பொருண்மாத்திரமே புசித்துவாழ்வாய்
தீனமுறவருபொருளைச் சிந்தியார் வந்தபொருட் டீதன்றெண்ணார்
ஞானபரரா ஞேர்க்குச் சுபாவமாங் குணமிதுவே நளினக்கண்ணுய். (45)

(ப - ரை.) ஆனநிறத்தால் = ஆகியதன்மையினால், குடும்பபார வியாபாரத்தில் = சமுசார பாரவியவகாரங்களில், அணுகும்போது = வியவகரிக்கும்போது, போனபொருட்கிரங்காமல் = நஷ்டமான வற்றிற்காக வாட்டத்தை யடையாமல் உபேக்ஷித்து, பொருந்து பொருள் மாத்திரமே = நுகர்வினைவயத்தானே கிடைத்தவத்து மாத்திரத்தையே, புசித்துவாழ்வாய் = அநுபவித்துச் சுகிப்பாய், தினமுற = தைனியமுற்று, வருபொருளைச் சிந்தியார் = அநாகத யோகங்களை வாஞ்சியார். வந்தபொருள் தீதென்று எண்ணார் = வினைவயத்தால் வந்த போகத்தைக் கெட்டதென்று சிந்தியார், ஞானபாராளர்க்குச் சுபாவமாம் குணம் இதுவே நளினக்கண்ணாய்! = தாமரையிதழ்போலும் திருநேத்திரங்களையுடைய இராகவ! உணர்வுமயமாய் நின்ற ஜீவன்முக்தர் தமக்கு இயற்கையாய இலக்கணமிஃதேயாம் என்றறிதி.

(ஸ்ரீ - வீர.) ஆகலின் ஹே இராகவ! தத்துவத்தை புணர்ந்தவனாகிச் சமுசார விவகாரங்களில் நட்ட நட்டமானதை விட்டுபேக்ஷித்து, கிட்டியதைக் கிட்டியதை யநுபவிப்பாய்; பிராப்த உபயோக அர்த்தம் பிராப்தத்தன்மையானே விதேய குணமாகாதாம். குணாந்தரங் கூறல்:—தினமென்பது. அநாகத போகங்களின் இயற்கையாய இச்சையில்லாமையும், ஆகதங்களின் சம்போகமும் பண்டித இலக்கணமாம்.

(ச.) ஆனநிறத்தார் = தத்துவஞ்ஞர், சுபாவமாங்குணம்=இலக்கணம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருசியதரிசன அரதியிலக்கணம் அபரங்குணம் என்றறைந்து, அங்ஙனமே பாகியார்த்த அபிநிவேசத் தியாகமும் குணமாம் என்னுங் கருத்தானுரைத்தல்:—கண்டன வென்பது.

கண்டனவெல்லாம் பொய்யென் றுள்ளத்தி லனைத்தினும் வெங்காதனீத்த
பண்டிதராமுழு துணர்ந்த பெரியோரை யீராது பாசமாயை
யுண்டிலையென் பவற்றிடையின் சுத்தமாம்பதம் புந்தியூன்றப் பற்றி
விண்டவுடற் குட்புறம்பா முலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா. (46)

(ப - ரை.) கண்டன வெல்லாம்=காணப்பட்ட திருசியவர்க்கங்கள் யாவற்றையும், பொய்யென்று = மித்தையென்று எண்ணி உள்ளத்தில் = மனத்தில், அனைத்தினும் வெங்காதல் நீத்த=எழாநின்ற சர்வவிஷயகக் கொடிய ஆசையைவிலக்கிய, பண்டிதராம் முழுதுணர்ந்த பெரியோரை = வித்வான்களாகிய சர்வஞ்ஞர்களாம் மகாத்மாக்களை = ஈராது பாசமாயை = பந்தப்படுத்த மாட்டாது யாவரையுங் கட்டுமாயை, உண்டிலையென்பவற்றிடையின் = சத்தசத்துக்களின் மத்தியிலிருப்பதாம், சுத்தமாம்பதம் = தூயதாயுள்ள பதத்தை, புந்தி = மதியினால், ஊன்றப்பற்றி = அழுத்தமாக அவலம்பித்து, விண்டவுடற்கு=யானல்லவென்று விட்டுத்தொலைத்த தேகத்திற்கு, உட்புறம்பா முலகை = பாகியாப்யந்தர திருசியத்தை, நீ பற்றுதலும் விடலும் வேண்டா =கவரவும் தவிரவும் வேண்டாம் நீ,

(ஸ்ரீ - வீர.) யாவனுக்கு இஃதசத்தென்னும் நிச்சயத்தானே சர்வவஸ்துக்களிடத்திலும் ஆஸ்தையென்னு மபிநிவேசமானது அகன்றுளதோ அம்முற்றுணர் முனிவரனை அவாஸ்தவமாய அவித்தையானது ஒருபத்திரவமும் செய்யமாட்டாது. ஐக்கியாத்மதரிசனமும் குணமேயென்றறிதி, எங்ஙனமெனின்! யானும் இவ்வுலக மியாவுமே ஒரேபரம்பொருள் என்னும் மதியானது யாவனுக்கோ, யாவன் ஆஸ்தையநாஸ்தைகளைப் பரித்தியாகித்துக் கிடைத்ததைக் கொண்டு வாழ்ந்திருப்பானோ, அவன் மாயையின் மூழ்கான்,

கூறியதையே விரித்துக்கூறல்:—உண்டிலே யென்பது. சத்தசத்துக்களென்று சொல்லப்பெற்ற வியக்த அவ்வியக்தங்களின் மத்தியிற் றொடர்ந்திருக்கும், சுத்தமாய்ச் சத்தா மாத்திரமா யிருக்கும் சிவபதமியாதுளதோ அதனையே பிரத்தியக்காத்மா வென்பதாக ஏன்மதியாற்பற்றி யுள்ளிலும் வெளியிலுமுள்ள திருசியத்தைப் பற்றுதலும் வேண்டாம் எற்றுதலும் வேண்டாம். உபரதி சந்தோஷா நிகேதனத்வா சங்கற்வகுணங்களையும் பயிறல்வேண்டும், அத்தியந்த விரதனுய்ச் சுவஸ்தனுய் சர்வவாச விவர்ஜிதனுய் வியோமம் போலும், நிராகனுய், ஹே இராகவ ! காரியபரனு யிருந்தபோதினும் இருந்தின்புற்று வாழுதி.

(ச.) ப்ரசமாயையீராது = இழுக்காது = அவாஸ்தவமான அவித்தை மறைக்காது என்பதுபொருள், சுத்தம் = நிட்களங்கம், உண்டிலதென்பவற் றிடையாய் = காரிய காரணரூபமான திருக்குத்திருசியங்களின் மத்தியமென்னுங் காரியகாரணாத்மகமான சின்மாத்திரரூபமாகிய, பதம் = பொருள், புந்தியூன்றப்பற்றி = புத்தியினல் அவலம்பித்து, உலகை=திருசியத்தை பற்றுதலும் விடுதலும் வேணடாம், எத்திருசியத்தையுப் பேக்ஷிப்பாயென்பது; யாவனுக்குச் சர்வவஸ்துக்களிலும் இஃதாருக வென்னும் ஆஸ்தை விலகுவதாமோ அச்சர்வஞ்ஞனே அவாஸ்தவ அவித்தை மறையாதென்பதாம். (46)

(ஸ்ரீ-வீர - அ-கை.) யாங்ஙனம் நிராகனுதல், யாங்ஙனந்தான் அசங்கனுதல் எனின்? கேட்டியென்றருளல்:—எக்கருமத் தென்பது,

எக்கருமத்திலு மிச்சைய னிச்சையற நின்றுணர்வை யெய்திளோர்க்கே
யக்கருமங்களி லறிவுபற்ரு தாமரையிலே சேரம்புபோலத்
தொக்கபொறி விடயநலஞ் சுவையற நின் மனமாரத் தோன்றில்வீரா
தக்கவுணர் வுணர்ந்தோனுய்ப் பவக்கடல்கள் கடந்தன்றே சநநந்தீர்ந்தாய்.

(ப - ரை.) எக்கருமத்திலும் = எந்தத் தொழில்களிலும், இச்சை அநிச்சையற = இச்சையேனும் அநிச்சையேனும் இல்லாமல், நின்று = ஸ்திதிபெற்று, உணர்வை எய்தினோர்க்கே = அறிவையடைந் துள்ளோர்க்கே, அக்கருமங்களில் = அத்தொழில்களில், அறிவு = பிரஞ்ஞை, தாமரையிலே சேரம்புபோல = நீர்த்துளிகளானே பதுமபத்திரம் போல, பற்ரு = சம்பந்தியாது, தொக்கபொறி விடயநலம் சுவையற = தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் இந்திரியார்த்த ஸ்ரீரசவர்ஜமாக, நின்மனமாரத் தோன்றில்வீரா = ஹே வீரராகவனே ! உனது இருதய மியையப் புலப்படில், தக்கவுணர்வு உணர்ந்தோனுய் = அவித்தை நீக்கற்பொருட்டு அறியத்தகுந்த தென்னுஞ் சிற்சொரூபத்தை யறிந்தவனுய், பவக்கடல்கள் கடந்து அன்றே சநநந்தீர்ந்தாய் = ஜனனசாகரங்களைத் தாண்டி அப்போதே பிறத்தலிறத்தல் கடந்தவனுவாய்.

(ஸ்ரீ - வீர.) பாதித அநுவிருத்தி மாத்திரத் தன்மையானே அமுக்கியத் தன்மையாற் கௌணமாய உனது இந்திரியசகிதமனம் தரிசனப் பரிசனுதிகளைச்செய்க அல்லது செய்யாதொழிக, நீ யாசையற்றவனுய் ஆன்மவானுய் ஆகக்கடவாய். இந்திரியார்த்தத்தில் மமதைத்தியாக இலக்சணகுணத்தை நன் கப்யசிக்கவேண்டும், அநாஸ்தையையும் பழகவேண்டும், எனது இது என்று அசத்பூதமா யிந்திரிய அர்த்தத்தில் நினதுமனம் மூழ்கவேண்டாம், நீ யறியானு யிருந்துகொண்டு மனத்தை விடயத்தே மூழ்குவிக்காதே; மனம் விடயத்தின்கண் மூழ்காமற்செய்க செய்யாதொழிக. தனக்குச் சீவன்முக்தத்தன்மைப் பிராப்திப் பிரத்யயத்தில் இலிங்கங்கூறல்:—தொக்கபொறி யென்பது, எக்கானி

னக்கு இந்திரியார்த்த ஸ்ரீ இருதயத்தில் அநர்த்த காரணத்தன்மைப் பிரதிசந்தானமன்றி யிலும் சுயமாகவே ருசிதராமலிருக்குமோ, அக்கால் இராகவ ! விஞ்ஞாத விஞ்ஞானனுகி பவார்ணவத்தை யினிது கடந்தவனுய்ச் சுகிப்பாய், விஸ்தாரமான இகலோக சம்பந்த பரலோகசம்பந்த இந்திரியார்த்த விடயங்கள் அருசிவிடயிகிருதங்கள் ஆக்கப்பெற்ற தீரவீரன் வியுத்தானனுய்த் தேகபாவத்தோடு கூடியிருப்பினும், சமாதியினனே அஃதின்றியவனு யிருப்பினும், வாஞ்சியாதிருப்பினும் முக்தியநாயாசமாக வலிதினுண்டாம்.

(ச.) எக்கருமத்திலும் =அவசியஞ் செய்யவேண்டுங் கருமத்தில், நின்று=பிரவிர்த்திப்பவனுய், உணர்வை யெய்தினேர்க்கே = ஞானநிஷ்டனுக்கே, அக்கருமங்களில் = விஷயங்களில், இச்சையிச்சையறும் = இஷ்டசாதன புத்தியின்மையின் இச்சைபிறவாது, அநிஷ்டசாதன புத்தியின்மையின் அநிச்சையும் பிறவாது, அறிவு = அவனது பிரஞ்ஞை, மரையிலேசேர் அம்புபோல = ஜலங்களாற் பதுமபத்திரம்போல, பற்றுது= மகிழ்வு சோர்வாதிகளாற்றபியாது, சேராது, ஆம், அசை, அஃதல்கொன்றேனும் இரண்டேனுங்கொண்டு சேர்க்குறுப்பாய் வருவதுபகுதி விகுதியுமாம். வீர = ஸ்ரீ இராகவா ! தொக்க + அறம் = இந்திரியார்த்தலக்ஷமி, நின் + றில் = இருதயத்திற் பொலியின், தக் + தொதானுய்=அதுவாயறிய வுரியவரையறிந்தோனுய், பவ + தாய்=பவார்ணவத்தின் பாரங்கடந்தாய். (47)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அந்தஜீவன் முக்தியின் கண்ணே வாதனைகளினின்றும் சித்தத்தின் நிஷ்கர்ஷமே முக்கியசாதனம் எனல்:—உச்சமென்பது.

உச்சமுறு பதம்வேண்டி லனைத்து வாதனையிலு நின்றுள்ளந்தன்னை
நிச்சயமா முணர்வாலே நீக்குவாய் மலரின்மண நீங்குமாபோற்
றுச்சமுறு வாதனையாந் தரங்கநீர் பவக்கடலிற் றுளைவார்க்கெல்லா
மச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்று மயலொன்றுண்டோ. (48)

(ப - ரை.) உச்சமுறு பதம்வேண்டில் = மேலாகிய பதத்தைவிரும்பில், அனைத்து வாதனையிலும் நின்றுள்ளந்தன்னை = சர்வவாசனைக் கூட்டத்தினின்றும் மனத்தினை, நிச்சயமாம் உணர்வாலே =மேலான பிரஞ்ஞையினுலே, மலரின்மணம் நீங்குமாபோல்= புஷ்பத்தினின்றும் கந்தம் அகலுவதென்ன, நீக்குவாய் = அகற்றுவாய், துச்சமுறுவாதனையாம் தரங்கநீர் = தள்ளத்தக்கதாகிய வாசனையென்னும் அலைசலநிறைந்த, பவக்கடலில் = சம்சாரார்ணவத்தில், துளைவார்க் கெல்லாம் = மூழ்குவோர்க் கெல்லாம், அச்சமற = பயம்நீங்கும் படியாக, நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்றும் = பெரும்பிரஞ்ஞையானது நாவாயாக நின்று அவர்யாவரையும் முத்தியங்கரையிற் சேர்ப்பிக்கும், அயலொன்றுண்டோ = மற்றையதொன்றும் இவ்வாறுளதோ இலதாம் என்றபடி.

(ஸ்ரீ - வீர.) உயர்வாய பதப்பொருட்டுப் பரமானவுணர்வினுலே வாசனுகணத்தினின்றும், மலரினின்றும் மணம்மான, விவேகவைராக்கிய உற்கிருஷ்டம் வாய்ந்த மனத்தினைத் தனிப்படுத்துதி, வாசனையம்புபொங்கும் சமுசாரவாரிதியின் கண்ணே வீழ்ந்த யாவர் பிரஞ்ஞை நாவத்தைப் பெரிதுபற்றினரோ, அவர்தாண்டினேராவர், பிறரோ மூழ்கிவருந்துவர். அந்தஞான வங்கம், விவேகவைராக்கியாதி தீக்ஷணமாக்கப் பெற்றுத் துவந்துவசகனத்திற் பரமதைரிய முடையதாம்.

(ச.) உச்சமுறுபதம் வேண்டில் = கைவல்லியம் பெறுதற்கு, நிச்சயமாமுணர்வாலே = பிரஞ்ஞாபலத்தால், ஏதுவால்; அனைத்து வாசனையிலு நின்று = வாதனுஜா

லங்களினின் று, உள்ளந்தன்னை = சித்தத்தை, நீக்குவாய் = வேறுசெய் = கரையேற்றுவாய், மலரின் மணநீங்குமாபோல் = மலரினின்றுங் கந்தத்தைப்போல, வாதனையாந் தரங்கநீர் = வாசனையென்னுநீர் நிறைந்த, பவக்கடலில் = இந்தச் சசாசாகரத்தில், துணை × லொன்றில்லை = பிரஞ்ஞையென்னும் நாவாயை அவலம்பித்தவர் கரையேறிய பரமபண்டிதராம் என்றாயிற்று; பிரஞ்ஞை யவலம்பிக்கப் படாவிடின் ஒருபோதுஞ் சம்சாரத்தினின்றுங் கரையேறுவதின் றென்பது கருத்து. (48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹே இராகவ ! விவேகவைராக்கியாதியாற் கூர்மையாக்கப் பெற்றுத் திதிக்ஷை முதலியவற்றானே யலங்கரிக்கப் பெற்று மகாதைரிய வதியாயிலங்கும் மதியினானே ஆன்மதத்துவத்தை நன்காராய்ந்து பின் சுவபதத்தையடைதி; தத்துவவித்துக்களாய் ஞானநிறைந்த சித்தர்களாயுள்ள பேரறிஞர் எங்ஙனமொழுகுவாரோ அங்ஙனம் ஒழுகவேண்டுமேயல்லாது மூடரைப்போல மோகிக்கலாகாது; ஜீவன்முக்தராய் மகாத்மாக்களாய் நித்தியதிருப்தரா யிலங்கும் பேரறிவாளர்தம் ஆசாரங்களையே பின்பற்றவேண்டு மல்லாது போகதிருபணராய் ஸ்வபரவஞ்சகராயுள்ள சடர்நெறியைப் பின்பற்றலாகாதென வுபதேசிப்பவராய்ப் பராபரங்கண்டோர் பெருமையை யதன்பொருட்டுபதேசித்து நியமித்தல்:—பராவென்பது.

பராபரங்கண் டோரனைத்தும் பின்செல்வ ருலகியல்புபற்றார் நீங்கார்
சுராலயநந் தனவனத்தும் பற்றார்கள் சூனியத்துந் துயரமெய்தார்
விராவுநியதி யுந்தள்ளார் வெய்யவன்போ லனுசரிப்பர் மேன்மைசான்றோ
ரிராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்டமுனி யியம்பலோடும். (49)

(ப - ரை.) பராபரங் கண்டோர் = பாரவாரவித்துக்கள், அனைத்தும் பின்செல்வர் = சர்வமுமே யனுவர்த்திப்பர், உலகியல்பு பற்றார் நீங்கார் = ஜகத்திலுண்டாம் விவகாரத்தைத் தியாகியார் வாஞ்சியார், சுராலய நந்தனவனத்தும் பற்றார்கள் = தேவோத்யான வனத்திலும் பற்றையடையார்கள், சூனியத்தும் துயரம் எய்தார் = விடயங்களில்லாத விடத்தும் விஷாதமெய்தார், விராவுநியதியுந்தள்ளார் = ஏற்பட்ட நியதியையுங்கடவாது பரிபாலிப்பர், வெய்யவன்போல் அனுசரிப்பர் = சூரியனைப்போலக் காப்பாற்றுவர், மேன்மைசான்றோர் = அதனானே மகாத்மாக்கள், இராகவனே = ஹே இரகுகுலதிலகனே ! இவ்வாறு நடத்தியென = இங்ஙனம் நீ யொழுகுவாயென்று, வசிட்டமுனியியம்பலோடும் = ஸ்ரீ வசிஷ்டபகவான் உபதேசித்தருளினர்.

(ஸ்ரீ - வீர) ஜகத்கதமாய விவகாரத்தைத் தியாகியார், வாஞ்சியார், பாரம் என்னும் பிரஹ்மதத்துவத்தையும், அவாரமென்னும் ஜகத்தத்துவத்தையும் உணர்ந்த பெரியோர் யாவற்றையும் பின்றொடர்ந்து விவகரிப்பர். அற்றேல், அறிஞர்கட்கும் சிலபாற் கிருபண முடைமையா மாலோவெனின் ? ஆகாதாம், வித்தைதபம் பராக்கிரமம் முதலியவற்றின் உற்கர்ஷவடிவப் பிரபாவம், அபிமானம், தாக்ஷயகுலசீலாதி குணங்கள், புகழ்ச்சி, சம்பத்து, என்னும் இவற்றின் விடயத்திலுண்டாம் உலகப்பிரசித்தமாய கார்ப்பண்யமானது, பிரபாவாதிகள் பொய்யாயிருத்தலின் அபுருஷார்த்தமாக அவற்றைக் காணுந் தத்துவதரிசிகளாகிய மகான்கட்கு இவ்வுலகில் யாண்டுமே உண்டாகமாட்டாது. அப்பெரியார் சர்வநாசமுற்ற போதினும் கேதத்தை யடையமாட்டார், சர்வகாமங்களையும் பயக்கும் சர்வஐசுவரிய சம்பத்தோடுகூடிய தேவோத்யானமென்னும் நந்தனாதிகளிலும் ஆசக்தியடைய மாட்டார் அம்மகான்கள் பாஸ்கரன் ஆகாசத்தில் தன்மார்க்க மரியாதையைத் தாண்டாததேபோல நியதியாகிய சாஸ்திர

மரியாதையைத் தாண்டமாட்டார்கள். இச்சையற்றவர்களாய், நேர்ந்தபடியாய விவகாரந் தொடர்ந்தவர்களாய்ச் சஞ்சரிப்பார்கள், "மதியெனுஞ் சாரதிமனமெனும் பரியுறுநரன்" என்பதாதி சுருதியுணர்த்திய சாதன சந்நத்தர்களாய்த் தேகத்தேரில் ஏறியவர்களாய்ச் சுவஸ்தர்களாய் மகான்கள் சஞ்சரிப்பர்கள். ஆயின் என்பால் அக்குணங்க ளிருக்கின் றனவா. இல்லனவா வென்னும் சந்தேககாதராமரை ஆசுவாசனஞ் செய்வார் இராக வனேயென்றார். நீயும் இவ்விஸ்தார விவேகத்தை யடைந்தவனேயாதி, ஹே சுந்தர? இப்பிரஞ்ஞையின் பலத்தினாலே சுவஸ்தனாதி.

(ச.) பாராபரமென்பது பராபரம் என விகாரமாயிற்று, சம்சாரத்தினது பாரங்கரை யேற்றும் ஏதுவித்தை, அபாரம், சம்சாரவேதுவான அவித்தை, அஃதறிந்தவ ரென்பது பொருள். உலகியல்பனைத்தும் பின்செல்வர் = ஜகவியல்பான சகல விவகாரத்தையும் அநுசரிப்பர், பற்றார் = வாஞ்சியார், தேவோத்தி யானத்திலும் பெரியசூனியத்திலும் பேதியார், அசங்கிகள் அன்றே நியதி = நியதியையும், மேன்மைசான்றோர் = மகான்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உபதேசித்த அர்த்த ரகசியங்களின் ஸ்ரீ இராமரது உள்ளில் உன்மேஷத்தானே ஆவிர்ப்பவித்ததை ஸ்ரீ வான்மீகிமகரிஷி யருளுகின்றார்:—பரத்துவ என்பது.

பரத்துவ கேளிவ்வாறு பரமமுனி பரமபதம் பகரக்கேட்டுத்
திரத்துவமா நிறைந்தான்போற் சீராமனமலமாய்த் தீர்ந்துசித்தந்
தரத்துவமை யில்லாதமெய்ஞ் ஞானநல்லமுதாற் றதும்பித் தண்ணென்
றுரத்துவளர் சந்திரன்போ னிறைவுற்றான் வசிட்டனுமீண் டுரைப்பதானான்.

(ப - ரை.) பரத்துவ! = ஹே குழந்தாய்! கேள் = ஒருமையுடன் சிரவணிப்பா யாக, இவ்வாறு = இயம்பியவகையே, பரமமுனி = மேலாயவிமலாசய ஸ்ரீ வசிஷ்டபக வான், பரமபதம் = மோக்ஷபத சாதனங்களை, பகரக்கேட்டு = அநுக்கிரகித் தருளச் சிரவணித்து, சீராமன் = ஸ்ரீ இராகவர், திரத்துவமா நிறைந்தான்போல் = சபரிபுஷ்ட ரைப்போல, அமலமாய் = நின்மலமாகி யொளிர்ந்து, தீர்ந்துசித்தம் = சகலவிகற்பங்க ளுங் ஒழித்து, தரத்துவமையில்லாத = மாதுரியவகையில் உபமானமற்ற, மெய்ஞ்ஞான நல்லமுதால் = மகாமாதுரிய உண்மைஞானா மிருதத்தானே, ததும்பி = சத்துவசித்தம் பெருகி, தண்ணென் றுரத்துவளர் = கலைகள் கூடக்கூடச் சீதளமிகுத்து மிகுத்து வளர்ந்து பூரணபாவமடைந்த, சந்திரன்போல் = இந்துவொப்ப, நிறைவுற்றான் = அரு ளியதைச் சிரவணித்துச் சிரவணித்து ஆராய்ந்து ஆராய்ந்து அதிதிடமான பரமசாந்தத் தாற் சீதள பூரணபாவத்தை யடைவுற்றார், வசிட்டனும் மீண்டுரைப்பதானான் = மீளவும் ஸ்ரீ இராகவர் சிருஷ்டி விஷயகமான பிரசினஞ்செய்ய ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரம் அருளத்தொடங்கினார்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வான்மீகிபகவான் அருளல்:—விமலாசயத்தோடுகூடிய ஸ்ரீ வசிஷ்ட முனிவரது உபதேசித்த வகையாய நிருமலவுபதேசத்தானே ஸ்ரீ இராமர், இனிது விளக் கிய தரும்பணங்கர்ப்ப அதிவிரைவில் நன்கிலங்கினார்; அதிமாதுரியமாய ஞானாமிருதத் தானே விராஜித அந்தக்கரணமானது சம்பூர்ணமுற்றுச் சம்பூர்ண சசாங்கன் ஒப்பச்சீத ளத் தகைமையைத் தாபத்திரயோப சாந்தியை யடைவுற்றது,கேள் என்றதனானே நீயுங் கேட்டு அத்தகைமையை யடைவாயாக வெனவுணர்த்தியதாம்.

(ச.) ஸ்ரீ வான்மீகிபகவான்:—பரமமுனி = விமலாசயரான ஸ்ரீ வசிட்டமுனிவரது விமலமானவாக்கினுல், ஆசீர்வாத பலத்தினுல், மகிழ்ச்சி, சித்தம் = சித்தமாய், அன்றி, சித்தந்தரத்து = சிதாகாயத்தில், மெஞ்ஞான நல்லமுதலால் = ஞானமிர்த மென்னு மதுரத்தால், சிராமனமல மனந்தெளிந்து = விளங்கிய அந்தக்கரணனுய், வளர்சந்திரன் போல் = பூரணசந்திரன்போல், ததும்பித்தண் ணென்றுரத்து நிறைவுற்றுன் = பூரண சீதளத்தைப் பெற்றுன். (50)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஹே பகவன்? சருவதரும முணர்ந்தவரே! சர்வவேதவேதாங்க பாரகரே! மிகத்தூய்மைமேவிய தங்களது உபதேசங்களாலே, பாரமிரக்கியவழி நடப்போன், மருவிய சிரமத்தை யொருவியதேபோல இளைப்பாறினேன்; உத்தமோத்தம பூரியர்த்தங்களைத் தருவனவாய், வர்ணபத் வாக்கியப் பிரகரண பேதங்களானே வியக்தங்களாய் விசித்திரகதையுக்தி சந்தர்ப்ப சதுரங்களாய், ஆத்மதத்வப் பிரகாசகத் தன்மையானும், இருதயபதும விகாசகத் தன்மையானும், சூரியாதிபோலும் உதிதங்களாய், இலங்கும், உபதேசிக்குந் தங்களுடைய திருவாக்கியங்களைச் சிரவணக்கச் சிரவணிக்கத்திருப்தியான துண்டாகவில்லை, யென்றிவ்வண்ணம் புகழும் வாயிலாக ஆசிரியரை யுற்சாகப் படுத்திப் பிரசங்கத்துற்ற பிரஹ்மாதிதேவதை சுவரியதத்துவத்தை யறியும் வேட்கை யுற்றவராகி ஸ்ரீ இராகவர், இராஜச சாத்விகங்களான ஜீவஜாதிகளின் கதன அவசராந்தரத்தில், தேவரீரால், நானுவிதசிருஷ்டிப் பிரதிபாதக சுருதிபுராணுதிப் பிரமாணங்களினுலே, கமலஜன்மாவின் உற்பத்தியாது கழறப்பெற்றதோ புகழப்பொற்றதோ அதனை வெளியாகத் தெளியுமாறு வருணித்தருளுவீராக வெனவினுவ ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளல்:—ஒரு என்பது. சிருஷ்டியானது ஏகவிதமாகவே யாகின்றதா? அல்லது பகுவிதமாகவும் ஆகின்றதா? என்பதையருளல் வேண்டும், அதனையுணர்தலானே மாயையினதுரூபம் புடதரமாய்ப் பவிக்கும் என்றிராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டமுனிவர் இயம்பல்:—ஒரு என்பது.

(ச - அ - கை.) ஒருகால் என்பது முதலிய மூன்றுகவியால், சிருட்டிக் கிரமத்திற்கு நியமமின்மையைத் தெரிவிக்கின்றுர்; அவற்றில் கருத்தாநியம மின்றென்பதைத் தெரிவிக்கின்றுர்:—ஒரு என்றது.

ஒருகால மரன்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலகமெல்லா
மொருகால மரிபடைப்ப னொருகாலமுனிவர் படைப் புள்ளதாகு
மொருகாலம் புயத்துதிப்ப னொருகால் வாரியினுதிப்ப னுயர்ந்தவேதா
யொருகாலண்டத் துதிப்ப னொருகால் விண்ணகத்திலே யுதிப்பனன்றே.

(ப - ரை.) ஒருகாலம் = ஒவ்வொருபோது, அரன்படைப்பன் = ருத்திரன் சிருஷ்டிப்பன், ஒருகாலம் அயன்படைப்பன் = சிலசமயம் பிரமன் சிருஷ்டிப்பன், உலகம் எல்லாம் = சர்வலோகங்களையும், ஒருகாலம் அரிபடைப்பன் = சிலபோது விஷ்ணு சிருஷ்டிப்பன், ஒருகாலம் = மற்றெவ் வொருபோது, முனிவர் படைப்புள்ளதாகும் = மகரிஷிகளே படைப்பைப் பண்ணுவார்கள், உயர்ந்தவேதா = மேன்மைவாய்ந்த பிரமன், ஒருகால் அம்புயத்துதிப்பன் = ஒரு சமயம் தாமரையினின்றும் வருவன், ஒருகால் வாரியின் உதிப்பன் = மற்றெவ்வொரு போதிற் சலிலத்தினின்று முதிப்பன், ஒருகால் அண்டத்துதிப்பன் = ஒருசமயம் அண்டோற்பனுவன், ஒருகால் விண்ணகத்திலே யுதிப்பனன்றே = ஒருபோது அம்பரத்தினின்றும் உண்டாவன் அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர) இந்திரஜாலம் போலத்தோற்றும் தோற்றங்கட்கு என்னேகணக்கு! ஒருபோது சிருஷ்டிகள் ருத்ரபூர்வங்களாம், ஒருசமயம் பத்மஜோத் பவங்களாம், முதலி லுண்டாய பதுமஜனிடத்தினின்றே உற்பவமாயினவாம், ஒவ்வொரு சமயத்திலோ விஷ்ணுபூர்வங்களாம்; அவ்வாறே புராணத்திலும் அறையப்பெற்றுளது:—“ தவம்புரிந் தீசனைத்தான் மகிழ்வித்தே, சிவனயன் விண்டுவுந் தேரிவர்தம்மின், பவமடைவாரும் பரப்பரம் வெற்றி, நவமுறுகாதலி னுருமேயாவர்.” ஒவ்வொருகான் முனிநிர்மிதங்க ளாம்; முனிநிர்மிதங்கள் என்றது அவாந்தர சர்க்காபிப் பிராயமாம். பிரஹ்மாதிகட்கு ஆவிர்ப்பாவஸ் தானங்களும் அநியதங்களே யாமெனல்:—அம்புயத்தென்பது. ஒருகால்= பாத்மகற்பத்தில், பிரஹ்மா பத்மஜனுவன், ஒவ்வொருகாற் சலிலோற்பவனுவன் அப்புப் பெயரிய கற்பத்தில், ஒவ்வொருபோதோ அண்டோற்பவனுவன பிரசித்தமாம், ஒவ்வொ ருக்கால் அம்பரத்தினின்றும் வருவன், அங்ஙனமே ஆகாசப்பிரபவன் பிரமன் என்பதா கச் சூரியவம்சாதிப் பிரஸ்தாவத்தில் முன் இராமாயணத்தில் இயம்பப் பெற்றுள்ளது.

(ச.) ஒருகாலம், உலகமெல்லாம் = சிருட்டிகள், அரன்படைப்பன் = சிவசம்பந்தி களாம், அயன்படைப்பன் பதுமனினின்றும் உதித்தனவாம், முனிவர் படைப்புள்ள தாகும் = நிர்மிதங்களுமாம், உயர்ந்தவேதா = பிரமா, விண்ணகத்திலே யுதிப்ப னன்றே= அம்பரத்திற் சநிப்பவனுமாவன், பிரமாவுக்கு உற்பத்தித்தானமும் நியதமின்று என்றுர் பாதியால். (51)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிருஷ்டிதோறும் பலவகைப் படுதலை யுரைத்தல்:—வன் என்பது.

வன்மரங்களே நெருங்குமொரு படைப்பிலொரு படைப்பின் மனிதர் துன்னும்
பன்மலைகளே நெருங்குமொரு படைப்பிலொரு படைப்பிற்படர் மண்ணுகும்
கன்மயமா மொருபடைப்பி லொருபடைப்பிற் றசைமயமாய்க் காணலாகும்
பொன்மயமா மொருபடைப் பிலிப்படியே பலவிதமாம் பூமிதானே. (52)

(ப - ரை.) ஒருபடைப்பில் = ஒரு சிருஷ்டியில், வன்மரங்களே நெருங்கும் = பூமி யானது நிரந்திரதரு சங்கடத்தை யுடைத்தாகி யிருக்கும், ஒருபடைப்பில் மனிதர் துன் னும்=ஒருசிருஷ்டியில் இடையீடின்றி நரரேமிகுந்திருப்பர் ஒருபடைப்பிற் பன்மலைகளே நெருங்கும் = ஒருசிருஷ்டியில் பூதரங்களான் மறைபட்டிருக்கும், ஒருபடைப்பிற் படர் மண்ணுகும் = மற்றொரு சிஷ்டியில் வெறும் மண்ணே வியாபித்திருக்கும், ஒருபடைப் பில் கன்மயமாம் = ஒரு சிருஷ்டியில் அத்தியந்தம் சிலைகளே நிறைந்திருக்கும், ஒரு படைப்பில் தசைமயமாய்க் காணலாகும் = ஒரு சிருஷ்டியில் மாம்சமயமாகக் காணப் பெறும், பொன்மயமாம் ஒரு படைப்பில் = ஒரு சிருஷ்டியில் காஞ்சனமயமாகவேகவின் பெறும், இப்படியே பலவிதமாம் பூமிதானே=இவ்வண்ணமே அநேகவகையாக அநேக சிருஷ்டிகளில் ஆகுமிப்பூமி, தான் ஏ அசைகள்.

(ஸ்ரீ - வீர.) ஒருபடைப்பில் இப்பூமி இடைவெளியின்றித் தருக்களாற்சங்கடமாய்ப் பிரதமமிருந்தது, பிரதமம் என்பது யாண்டுஞ் சேடமாம், ஒருபடைப்பில் நரரேநெருங்கி யிருந்தனர், மற்றொரு சிருஷ்டியில் பலமலைகளே பரவியிருந்தன, சிலபடைப்பில் பூமி யானது மண்மயமாகவே யிருந்தது, ஈண்டுமெயட் பிராசுரியப் பொருளிலாம், மற்றொரு படைப்பில் கன்மயமாகவே யிருந்தது, சிலசமயம் ஹேமமயமாகவே யிருந்தது, சில போது தாமிரமயமாகவே யிருந்தது, இவ்வண்ணம் அநேகங்கோடி விசித்திரங்களாய்

அநேகமுறை அநேகங்காலத் துண்டாகி யுண்டாகி யொடுங்கிக்கொண்டே யிருக்கும். எல்லாப் பிரஹ்மாண்டங்களுமே லீலோபாக்கியானத்திலியம்பியமுறையே இருதய ஆகாசலபத்திருக்கும் பிரஹ்மத்தின் கண்ணே கற்பனமாம்; இப்போதும் அநேகம் பிரஹ்மாண்ட பந்திகள், பிரஹ்மத்தைக் காணுமிடமாகலின் பிரஹ்மபுரமென்னும் சரீரத்துள்ளிருதய புண்டரீக தேசத்திருக்கும் அத்தியந்த விஸ்தீர்ணப் பிரஹ்மபதத்திலேயே நிகழ்ந்துகொண் டிருக்கின்வாம்; " விண்ணும் மண்ணும் விரிந்தனவுள்ளிலே " என்னும் மறையும் இதனையே யறைகின்றது பிரஹ்மபுரோபலக்ஷித இருதயாகாசத்தின் சோலை பூதங்களாய பிரஹ்மநிர்மித பிரஹ்மாண்ட பந்திகள், தொனிபேதங்கள் ஆகாயத்தில் உண்டாகியுண்டாகி யொடுங்குகின்றன வென்ன, உண்டாகி யுண்டாகி யொடுங்கு மென்றறிக.

(ச.) பிருதுவி சொரூபமும் நியதமின் றென்றபடி.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஒருகாலம்புயத்துதிப்பன் உய்ர்ந்தவேதாவென யாதோதப் பெற்றதோ அதில் ஏற்பட்டபடி பஞ்சீகரணேத் தரபாவிஸ்தூல வியோமாதிகளின் பிரதம ஆவிர்ப்பாவக்கிரமம் நியாமகமெனல்:—வான் என்பது.

(ச-அ-கை.) வியோமாதிக்குப் பூர்வாபரத் தன்மையும் நியதமின்றெனல்:—வான் என்பது.

> வான்முதலா மண்முதலாநீர் முதலாந்தீ முதலாமற் றைவாயுத்
> தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று தலைமையாகும்
> யான்முதலோரயன் சிருட்டி தரிசனமாவுனக் குரைத்தே னிந்தவாற்றுன்
> மேன்முதலா நியமமிதற்கொன்றுக இலதுபலவிதமாய்த் தோன்றும். (53)

(ப - ரை.) வான்முதலாம் = ஒருகால் பிரதமம் வியோமம் பிரதிஷ்டையை யடையும், மண்முதலாம் = ஒருகாற் பிரதமம் பிருதுவி, நீர்முதலாம் = ஒருபோது முதலிற் சலம், தீமுதலாம் = ஒருபோது முதலிற்றேயுவாம், மற்றைவாயுத்தான் முதலாம் = மற்றொரு சமயம் பிரதமம்மருத்தாம், இப்படியே சிருட்டிதொறும் = இவ்வாறே சிருஷ்டிதோறும், ஓரொன்று தலைமையாகும் = ஒவ்வொருபூதம் முதன்மைபற்றி நிற்கும், யான் = யாம், முதலோர் அயன்சிருட்டி = பிரஜாபதி யென்னும் ஒருபிரமனது சிருஷ்டியை, தரிசனமா = திருட்டாந்தப் பொருட்டாக, உனக்குரைத்தேன் = இராகவா உனக்குக்கூறினேம், இந்தவாற்றால் = இம்முறைபற்றி, மேல்முதலாம் நியமம் இதற்கு ஒன்றுக இலது பலவிதமாய்த் தோன்றும் = மேலாக முதலாகிய நியமம் இதற்கு ஒருமுறையாக இல்லையாகும், பற்பலவகையாகப் பிரதீதியாம்

(ஸ்ரீ - வீர.) பதவுரை ஆறுயிரப்படி எழுதலாயது, வியாக்கியானம் முப்பத்தீராயிரப்படி யெழுதப்பெறும்:—ஒரு காற்பிரதமம் வியோமம் பிரதிஷ்டையை யினிதாகவடையும், அதனினின்றும் பிரமனுண்டாஞன் இப்பிரஜாபதி வியோமஜனெனப் பொறுவன்; ஒருகாற் பிரதமம்வாயு பிரதிஷ்டையை யினிதாகவடையும், அதனினின்றும் பிரமன் உண்டாவன், இப்பிரஜாபதி வாயுஜன் எனப்பெறுவன்; ஒருகாற்பிரதமம் தேயுவினிதாகப் பிரதிஷ்டையை யடையும், அதனினின்றும் பிரமனுகிய கருத்தாவருவன் இப்பிரஜாபதிதைஜசன் எனப்பெறுவன்; ஒருசமயம் பிரதமம்வாரி பிரதிஷ்டையை யினிதாகவடையும், அதனினின்றும் பிரமன் உதிப்பன், இப்பிரஜாபதி வாரிஜன் எனப்பெறுவன்; ஒருபோது பிரதமம் பிருதுவி விசாலமாய் விரிந்தோங்கிப் பிரதிஷ்டையையடையும், அதனினின்றும் பிரமன்வருவன், இப்பிரஜாபதிபார்த்திவன் ஆவன், நுதலியவியோ மாதிகளுள்

ஒவ்வொன்று பிரதமம் ஆவிர்ப்பாவம் ஆவதில் யுக்தியாது கொலாமெனின்? முதலுதும் இத்தன்னினும் பின்னமாய பூதசதுட்டயத்தைத் தன்னங்கிசப் பெருக்கானே மறைப் பதுமான வரக்கிப் பஞ்சமமான எப்பூதந்தான் எக்கால்விருத்தியாமோ, அக்கால், அதனி னின்று முண்டானவனேயாய இப்பிரமன் ஜகத் சம்பந்தமான அதனுத்தர சிருஷ்டியா திக்கிரியையைச் செய்வன். முற்கற்பத்திற் சூரியாதிகளா யிருந்தவர்களும் இக்கற்பத் திற்பிரஹ்மாதிகளாய் வருவர்களாகலின், பிரத்தியக்கான் மாவின்கண்ணே விகீனங்க ளாய விசித்திரமா யீண்டுண்டாஞ் சிருஷ்டிகளுள் விவகரித்துவரும் இரணிய கருப்பன் றன் விசித்திர உற்பத்திகள் விவிதமாகப் போந்தனவாம். ஒருவனது இவ்வர்ணனம் அன்னியர்களுக்கும் ஸ்தாலீபுலாக நியாயத்தானே நிதரிசனப் பொருட்டாம் எனல்:— தரிசனமாவென்பது. சிருஷ்டியின்து நிதரிசனப்பொருட்டு எம்மால் ஒருபிரஜாபதியின் உற்பத்தி நினக்கு நிகழ்த்தப்பெற்றது, அதில் நியமம் ஒன்றுமேயில்தாம் மனோவிஜ்ரும் பணம் இச்சமூசாரம் என்பது சித்தாந்தமாம் நன்றாக அறிவுறுத்தற் பொருட்டு நினக்குச் சிருஷ்டிக்கிரமம் உபதேசிக்கப் பெற்றதாம்,

(ச.) வான்முதலாம் = ஒருபோது முன்பு வியோமம் பிரதிஷ்டையைப் பெறும், யான் = நான்; முதலோரயன் = பிரஜைகள்பதி யென்னும் ஒருவனது, சிருட்டி, சிருஷ் டியினது, தரிசனம் = திருட்டாந்தம், உற்பத்தியும் இதின் நியமமும் எவ்வளவும் இன் றென்று நன்றாய்த் தெரிவிக்கும் நிமித்தம் கூறிய அநியமத்தின் உபசங்காரமாயது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) யாவுமே மாறிமாறி யுற்பவிக்கு மென்றுரைத்ததன் பொருட் டாகத்தாசூராக்கியாயிகையை யுதாகரித்தல்:—கிருதவென்பது.

கிருதமுதலுக நாலுமீண்டு மீண்டுற்ப விக்குங்கிளைத்து ஞாலத்
தொருபொருளும் வளைத்து வளைத்தநந்த மடங்குற் பவமாயுழலாதில்லை
யிருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலையா யாமிங்கோத
வருமறைதேர் தாசூரன்கதை கேட்டியிராம வெனவுறைவதானுன். (54)

(ப - ரை.) கிருதமுத லுகநாலும் மீண்டுமீண் டுற்பவிக்கும் = கிருதமும், திரேதா வும், துவாபரமும், கலியும்மீள மீளவுமுண்டாகிக் கொண்டே யிருக்கும், கிளைத்துஞாலத் தொருபொருளும் வளைத்துவளைத்து அநந்தமடங்கு உற்பவமா யுழலாதில்லை=சொல்லா நின்ற இந்தஜகத்தில் எந்தவஸ்துவுமே மீளவும் மீளவுமே அளவில்லாத முறைஜனித்து அவதிப்படாததே கிடையாது, இருள்பெருகு மாமாயை வன்னனைக்கு = அந்தகாரமய மாய் எல்லாரையும் மூடல்செய்யும் மாண்புடைத்தாய மாயையின் வர்ணனைக்கு, முன்னி லையா = வியபதேசமாக, இயாமிங்கோத = எம்மா வியம்பப்பெறும், அருமறைதேர்தா சூரன் = அரியவேதங்கள் யாவையும் கற்றுணர்ந்த தாசூரமுனிவனது, கதை=ஆக்கியா யிகையை, இராம! = இராகவனே! கேட்டி = சிரவணஞ்செய்தி, என = என்பதாகக் கூறி, அறைவதானுன் = கூறத்தொடங்கினுர். அரியமறையின் ஆராய்ச்சி வடிவகதை யெனினும் அமையும்.

(ஸ்ரீ - வீர.) மீளவும் கிருதம், மீண்டும், திரேதா, மீளவுமேதுவாபரம், மீளவுங்கலி, சக்கிரமானது மீளமீளவுஞ் சுழன்று திரிவதேபோல ஜகத்சர்வமும் மீளமீளவுமே சுழன்றுவரும். இரவும்பகலும் கலைகாஷ்டை கடிகைமுகூர்த்தம் முதலியவற்றானே யவா விடப்பட்டனவே யாகியவையாவும் மீளமீள உண்டாம், மீளமீள உண்டாகாதன எப் பொருளுமே யிலவாம். ஜகன்மாயா சொரூபத்தின் வருணனையின் உதாகரணமாகத்தா சூர ஆக்கியாயிகையை வருணிப்ப நீ ஒருமையுடன் கேட்பாயாக.

(ச.) நான்கு கங்களும் மாறிமாறி வருவனவென்பது பொருள், கிளர்த்து ஞாலத்தொருபொருளும், ஈதனைத்தும், வளை + இல்லை = மாறிமாறி வருவதுவேயாம், யாதொன்று மாறிமாறி யின்று = காலாந்தரத்திலு மப்படியேயிருக்கு மத்தன்மையான கூடத்தம் நித்தியமானவத்து இன்று இருள்பெருகு மாமாயை வன்னனைக்கு = ஜகன் மாயாசொரூபத்தினது வர்ணனைக்கு, முன்னிலையா = வியபதேசமாக, யாமிங்கோதவரும் = என்னல் வர்ணிக்கப்படும், தாசூரன்மறை தேர்கதை = தாசூராக்கியாயிகையை. ()

(ஸ்ரீ - வீர - அ - கை.) இச்சமுசார சக்கிரம் கற்பனைமாத்திரம். பிரஹ்மமே புண்மையா யிருப்பது என்பதாயின், மேதைபிரதிபை கௌசலசாலிகளாகிய மகாஜனங்கட்குள்ளும் ஒருவனேனும். அவ்வகையாக என்காண்பதில்லை, அதன் கண்ணேது யாதெனின் ? அதன் அநபேக்ஷையும், அதனினும் விருத்தமாய போகஐசுவரியாதி.யபிநிவேசமும் ஹேதுவாமெனக் காட்டற்குக் கதையைத் தொடங்கல்:—இந்த பரவென்பன.

இந்தப்புவனத் தூடேயெழிலார் மலரின் பொழில்வாய்
மந்தக்குளிர் கால்கமழு மகததேசந் தன்னிற்
கந்தக்கதலி கடம்பு கன்னிகாரஞ் செறிந்து
சிந்தைக் கினிதாகியதோர் சிறப்பாமலை யினிடத்தே. (55)

பரலோகஞ் சேர்தவமே பண்ணிய யன்போலுயர்ந்த
சரலோமா வின்மைந்தன் றாசூரப் பெயர்முனிவன்
சுரலோகத்தின் குருவின் றோன்றற்க சனையொப்பா
னரலோகத் தின்மேலா னவைதீர் தவத்தாற் பெரியோன். (56)

(ப - ரை.) இந்தப் புவனத்தூடே = இவ்வசுதைப் பீடத்தில், எழிலார் மலரின் பொழில்வாய் = விசித்திர குசுமத்துருமங்க ளின் றுவாரமாக, மந்தக்குளிர் கால்கமழும் = மந்தமந்தம் சீதளமான தென்றல்வீசும், மகததேசந்தன்னில் = ஸ்ரீ மாஹனமாகதமென்னும் பிரசித்தமகா ஜனபதத்தில், கந்தக்கதலி கடம்புகன்னி காரஞ்செறிந்து = மணக்கும் மலைவாழைகளும் நீபங்களும் கோங்குகளும் செருங்கி, சிந்தைக்கினி தாகியதோர் = மனோரம்மியமாகிய ஒப்பற்ற ஒரு, சிறப்பாம் மலையின் இடத்தே = பலசிறப்புற்ற பருப்பதத்தின்பால்.

பரலோகஞ் சேர்தவமே பண்ணி = மறுமைப்பயனைப் பயக்கும் மகாதவத்தைச் செய்து, அயன்போலுயர்ந்த = பிரஹ்மாவைப்போலப் பரமதருமாத்மாவாய் மேம்பட்ட, சரலோமாவின் மைந்தன் = அயலயன் இவனெனக் கியாதியுற்ற சரலோம முனிவன்றன் அருஞ்சுதன், தாசூரப்பெயர் முனிவன் = தாசூரமுனி நாதன் எனப்பெயரிய ஒரு முனிவன் இருந்தான், அவன், சுரலோகத்தின் குருவின்தோன்றல் கசனையொப்பான் = தேவலோக ஆசாரியராகிய பிருஹஸ்பதியின் குமாரன் கசன் என்பவனுக்குச் சமானமானவன், நரலோகத்தில் = பூமண்டலத்தில், மேலான் = பூசுரசிரேட்டன், நவைதீர்தவத்தால் பெரியோன் = குற்றங்கடிந்த மகத்தான தவயோகத்தோடு கூடியவன்.

(ஸ்ரீ - வீர.) இந்த வசுதாபீடத்தில், விசித்திரமான பூஞ்சோலைகள் நிறைந்தலங்கரிக்கப்பெற்ற, மகதர்கட்கு நிவாசமாய் மாகதமெனப் பிரசித்தமான நாமம்வாய்ந்த, அஷ்ட இலக்ஷுமிகளானே யலங்கரிக்கப்பெற்ற ஒருபெருந்தேசமுளது. கதம்பவாவிஸ்தாரலீலையால் வளர்ந்தஜங்கல முடைத்தாய் விசித்திரவிககவியூக சருவாச்சரியமனோகரமானது அத்தேயம்; அதன்கண், கர்ணிகாரசமா குலமுற்று, கதலீகண்ட மிடைநீ

டின்றி நிறைந்து, கடம்பங்களும் அன்னியகுல்மங்களும் வியாபித்து விளங்கிக்கொண் டிருக்கும் ஒருகிரிதடமுண்டு. விசித்திர விகசத்தருமமுற்ற மகா புண்ணியமயமான அவ் வரமுறுகிரியில், மகாதபசிரேஷ்டராய், பரமதருமாத்மரா யிலங்கும் ஒருமுனிவரிருந்தார் அவர் தாசூரமுனிவர் எனப்பெயர் வாய்ந்தவர், மகத்தான தபசஹிதயோகத்தோடு கூடிய வராய், இராகமற்றவராய், மகாமதியராய், ஒருகதம்ப அக்கிரபாகத்தில் வசித்துக்கொண் டிருந்தனர். ஹேபகவன் ! இத்தபசி எவ்வேதுவானே அவ்விபினத்தில் கதம்பமகா தரு வின் பிருஷ்டத்தில் எப்பிரபாவத்தானே எப்பிரகாரத்தானே வசித்தார் எனின் ? கேட்டி ! ஹே இராமச்சந்திர ! சரலோமர் என விக்கியாதமாய் அம்முனிவரது பிதா அப்பர்வதத்திற்றனே, மற்றொரு மலரவன்போல வசித்துக்கொண் டிருந்தார்; தேவகுரு விற்குக் கசன் என்னும் ஒருகுமரன் இருந்ததேபோல இத்தாசூரர் அம்முனிவருக்கு ஏகபுத்திரராயிருந்தார்.

(ச.) சிந்தைக் கினிதாகியது = சர்வாச்சரிய மனோகரமான, பரலோகஞ் சேர்த வம் = மகாதவம், அயன்போலுயர்ந்த = பரமதர்மாத்துமா வென்று பிரசித்தியுள்ள வேறொரு பிரமன்போல் இராமா, சரலோமாவின் = என்றொருவ னுண்டவனது, தாசு ரப்பேர் = தாசூரனென்னு நாமமுள்ளவன், முனிவன் = மகாதபோயோக சகிதன் அக் கிரியிலிருக்கின்றான் அவனுக்கிவன், சுரலோகத்தின் குருவின் = தேவகுருவினது, தோன்றல் = ஒரேபுத்திரன், கசனையொப்பான் = கசன்போன்றவன். (56)

(ஸ்ரீ - வீர - அ கை.) சரலோமமுனிவரின் சரிதையுரைத்தல்:—தனயன் என்பது.

தனயனொருவனோடுஞ் சரலோமா வாமுனிவ
னனையகிரியின் வனத்தி லநேகயுகஞ் சென்றதற்பின்
புனையங்கூடு கழிந்துபுட் போவதுபோற் போகி
வினைசெய்யுடலை விட்டுவிண்ணோர் வடிவை யெடுத்தான். (57)

(ப - ரை.) தனயன் ஒருவனோடும் = அவ்வேக புத்திரனோடும், சரலோம ஆமுனி வன் = சரலோமர் என்னும் அம்முனிவர், அனையகிரியின் வனத்தில் = பகர்ந்தபர்வ தத்திலுள்ள வனத்தின்கண் அநேகயுகஞ் சென்றதற்பின் = அநேககாலங் கழிந்ததன் பின்னர், புனையுங் கூடுகழிந்து = பந்தித்திருந்த நீடத்தைவிடுத்து, புட்போவது போற் போகி = பறவை செல்வதுபோலச் சுராகாரஞ்சென்று, வினைசெய்யுடலை விட்டு = கரும சம்பந்தகாயத்தை யொழித்து, விண்ணோர் வடிவை எடுத்தான் = தேவவடிவத்தைச் செறிந்தான்.

(ஸ்ரீ - வீர.) அம்மைந்தனோடு கூட அம்முனிவர் அவ்வனத்திற்றனே ஆயுளைக் கழித்து வந்தனர், பின்னுதலிய முனிவர் நாயகராகிய சரலோமர், யுககணம் = அயநயுக லாத்மகவத் சரகணம், சுகதுக்காதி துவந்துவகணம், அநுபவித்து, முக்தநீடகம்போ லத் யக்ததேகராய்ச் சுராகாரம் எய்தினர்.

(ச.) அனையகிரியின் வனத்தில், அநேகமுகஞ் சென்றதற்பின் = யுககணம் அனந் தஞ்சீவனம் புசித்துச்சென்றது, விண்ணோர் வடிவையெடுத்தான் = சுராகாரமானான்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தாசூரர் தந்தையன்னை பிரிவாற்றாமையும் வனதேவதை கண் டருளுதலும் உரைத்தல்:— தனி, தந்தை, என்பன.

தனியே யந்தவனத் தேதாசூரப் பேர்முனிவ
னினியதாதை யிறவுக்கிரங்கி யுதகத்தி யற்றும்

புனிதமான பிரமபூசை முழுதும் புரியான்
கனியுநெஞ் சனன்றில் கதறு மாபோற் கதறி. (58)

தந்தை யன்னை பிரிவாற் சாலவெம்பித் தளர்ந்த
மைந்தன் றன்னை யருளால் வனதேவதை கண்டருளி
முந்துறும னின்றுமுனி மாமகவா முனிவா
சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோரென னொந்தயரேல். (59)

(ப - ரை.) தனியேயந்த வனத்தே = ஒருவரேயாக அவ்வனத்தில், தாசூரப்பேர் முனிவன் = தாசூரன் என்னும் அம்முனிவர், இனியதாதை யிறவுக்கிரங்கி = அன்பு மிக்கதந்தையினது மரணத்திற்கு இரக்கமுற்று, உதகத்தியற்றும் = நீரிலாற்றும், புனிதமான = பவித்திரமான, பிரமபூசைமுழுதும் = பிரமபூசையாவும், புரியான் = செய்யான், கனியுநெஞ்சன் = உருகுமனத்தினன், அன்றில் கதறுமாபோற் கதறி = அன்றில் என்னும் சிறுபறவை தியருற்றுக் கரையுமாறுபோலக் கரைந்து.

தந்தையன்னை பிரிவால் = பிதாமாதாக்களினது நீக்கத்தால், சால வெம்பித் தளர்ந்த = அத்தியந்தம் சோகசந்தாபித சிந்தையான் மெலிவுற்ற, மைந்தன்றன்னை = அக்குமாரனை, அருளால் = கிருபையால், வனதேவதை கண்டருளி = அவ்வனத்தின் அதிதேவதை பார்த்தருளி, முந்துறும்ல் நின்று = எதிர்ப்படாமல் நின்றருளி, முனிமாமகவாமுனிவா = சரலோம முனிவரின் மாண்புறு மைந்தனுய ஹே தாசூரமுனிவ!, சிந்தைதெளிந்தோய் = மகாப்பிராஞ்ஞனே, தெளியாச்சிறியோர் என = அற்ப அறிவிலார்போல, நொந்தயரேல் = துன்புற்று ரோதனஞ் செய்யாதே.

(ஸ்ரீ - வீர.) ஒருவராகவே அவ்வனத்திற் றாசூரமுனிவர் அழுதுகொண் டிருந்தார், என்றதனுனே தாய்தந்தையர் இருவருமே தொடர்ந்திருந்து போய்விட்டதாகத் தெரிகின்றது; தசப்பிராணன்களாற் றேகத்தினின்றும், சரமபாவ விகாரத்தால், கிரகதசா விசேடத்தால், விடுபட்டுப் பரலோகஞ்சென்ற தந்தையை யுடையவராய்க் கருணையோடும் குரர்ப்பறவைபோலும் விடாமல் ரோதனஞ் செய்தனர். தாய்தந்தையர்தம் வியோகத்தாற் சோகசந்தாபித ஆசயராகி, ஹேம மந்தபங்கஜம்போலும் அத்தியந்தம் மலினபாவத்தை யடைந்தனர். அதி தீனுத்மாவாகிய இப்பாலகர் அவ்வனத்திலுள்ள, காணுது மறைந்து நின்ற, வனதேவதையானே அக்கால் வழங்கப்பெறும் வகையாகச்சமாதானப்படுத்தப் பெற்றனர். ஹேமகாப் பிராஞ்ஞனுகிய இருடிகுமாரனே! அஞ்ஞனைப்போலேன் அழுகின்றனை.

(ச.) தனியே = ஒருவனேயாய் இரங்கிக்கதறி அழுதான் வெளிப்படை தந்தையன்னைபிரிவால் = மாதாபிதா வியோகத்தால், சாலவெம்பித் தளர்ந்த = சோகசந்தாபிதனுய்! பனிகால பங்கஜம்போன் மிகுவாட்டமுற்றுன், மைந்தன்றன்னை = பின்பித்தப்பாலனை, வனதேவதை = வனத்தில், முந்துறுனின்று = அதிருசியசரீரியாய், அருளாற்கண்டருளி இங்ஙனம் அநுக்கிரகித்தாள், ஸ்ரீஇராமா, சிந்தைதெளிந்தோய் = மகாப்பிராக்ஞனே, தெளியாச் சிறியோரென = அஞ்ஞன்போல், நொந்தயரேல் = அழுகிறுயென் என்றதாயிற்று. மூலம் ரசாபரீதபித்ருகः = தசை = ஜீவிதகாலத்தின் ஈற்றவத்தை அதனுல், அபரீத: = நீக்கப்பெற்ற, பித்ருக: = தந்தையை யுடையவன் என்பதாம், குரர: = உத்க்ரோச மெனப்பெயரிய பக்ஷிவிசேஷமாம். இறப்புக்கிரங்கி = ஜீவிதகாலத்தின் அந்தத்திசையதனுல் கிரகிக்கப்பட்ட பிதாவுக் கிரங்குமவன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) வனதேவதையின் ஆசுவாசனப் பிரகாரம்: — அனித்த மென்பது.

அனித்தமான குடும்பத் தபத்த முணர்கின் றிலையென்
சனித்தபொழுதே மரித்தல் சற்றுந்தப்பா கண்டாய்
பனித்தவிழி யோடயர்வாய் பகலோ னுதயஞ் செய்தா
னினித்தன் னிலையுத்த மனத்தெய்தா னென்பாருளரோ. (60)

(ப - ரை) அனித்தமான குடும்பத்து = மித்தையான சமுசாரத்தினது, அபத்தம் = சஞ்சலசொரூபத்தை, உணர்கின் றிலையென் = எக்காரணத்தாற் றெரியாமலிருக்கின்றாய், சனித்தபொழுதே மரித்தல் சற்றுந் தப்பாகண்டாய் = எப்போது உதயமாயிற்றோ அப்போது அஸ்தமனத்தை யடைதல் ஒருசிறிதும் தவிராதென்றே நீதெரிந்துகொள், பனித்த = விழியோடு அயர்வாய் = கண்ணுங் கண்ணீருமாய் அழுதுகொண்டு திரியுங்குழந்தாய் !, பகலோன் = தினகரன், உதயஞ்செய்தான் = ஏழுந்துவந்தான், இனித்தன்னிலை = இனிமேல் தனது நிலையாகிய, அத்தமனத் தெய்தான் — அஸ்தமய கிரியை யடையமாட்டான், என்பாருளரோ = என்று சொல்பவரும் இருப்பாரோ, இரார்.

(ஸ்ரீ - வீர.) ஹே குழந்தாய்! எதனால் நீ சமுசாரத்தினுடைய சொரூபத்தை அசாசுவதமென அறிந்தாயில்லை; ஹே சாதுவே ! சமுசாரத்தில் எப்போதுமே இத்தகையதாய சம்ஸ்ருதிச் சலனமுளதேயாம்; உண்டாகும் வாழ்ந்திருக்கும், பின்பு அவசியமாகவே விநாசத்தையு மடையும்; விவகாரதிருஷ்டியில் எவ்வெவ் பிராணியர் பிரசித்தராயுளரோ அத்தகையரும் ஹேமுனிவ ! மற்றியாவருமே, விநாசத்தையடைய வேண்டியேவரும், இதில் ஐயமேகிடையாது; அக்காரணத்தினாலே, பிதாவினது மரணத்தைக்குறித்து வியர்த்தமான விஷாதத்தை யடையவேண்டாம்; அவசியம் பவிக்கும் அஸ்தமயம், உதயமாய தினகரனுக்கே போலும்,

(ச.) அனித்தமான குடும்பத்தபத்தம் = சம்சாரத்தினது சஞ்சலசொரூபத்தை, நீ உணர் கின்றிலையென் = யாதினால், சாதுவே சம்சாரத்தில் எப்போதும் இத்தன்மையாய்ச் சலிக்குந்திதி ஜநித்துச் சீவித்துப்பின்பு அவசிய நசிக்கின்றதேயாம் அதன் நிமித்தம், பனித்தவிழியோ டயர்வாய் அய்ரேல், பிதாமரணசோகம் வியர்த்த மென்றதாயிற்று. (60)

(ஸ்ரீ-வீர - அ-கை) வனதேவதை யருளியதைக் கேட்ட தாருமுனிவர் தங்கடன் முடித்தல்:—வாளாவென்பது.

வாளாவயரே லென்று மறைந்து தெய்வ முரைப்பக்
கேளா வுணர்ந்து தளருங்கேத மொழித்து நிலையாய்
நீளாரணத் தின்படியே நீர்ன்கடன் கண் முடித்து
மீளாநெறி சேர்தவத்தின் மிகவும் விருப்பமானன். (61)

(ப - ரை.) வாளா = வீணாக, அயரேல் = மயங்கித் துன்புறேல்; என்று = என்பதாக, மறைந்து = அசரீரியாய், தெய்வம் = அவ்வனதேவதை உரைப்ப = அருள்செய்ய, கேளா = சிரவணித்து, உணர்ந்து = விவேகத்தைப் பெற்று, தளருங் கேதமொழித்து = வாட்டஞ்செய்யும் துன்பமோகத்தை விடுத்து, நிலையாய் = சித்தசுவாதீனனாகித் தைரியமுடையவனாய், நீள் ஆரணத்தின்படியே = பிராசீன பரம்பிரமாண வேதங்களின்

விதிப்படியே, நீரின்கடன்கண் முடித்து = பிதுர்கார்ய முதலியவற்றை வழுவாமற் செய்து, மீளாநெறிசேர் = புநராவிருத்தியின்றியதை யடையும்படியான, தவத்தின் = தபத்தின்மாட்டு, மிகவும் விருப்பம் ஆனான் = அத்தியந்தம் பிரியமுடையவனானான்.

(ஸ்ரீ - வீர.) அசரீரியாகத் தெய்வமுரைத்த வாக்கியங்களைச்செவியுற்ற ஆரக்தலோசனராகிய அத்தாசூரர், மேககர்ஜிதங்கேட்ட சிகண்டி யொப்பத் தைரியத்தை யடைந்தனர். உடனேயெழுந்து புத்திரனுலே அவசியம் செய்யத்தக்கதாய பிதாவின் மேலுலக சம்பந்த உத்தரக்கிரியையை ஆதரவோடும் செய்து முடித்தனர்; உத்தமசித்தியின் பொருட்டுத் தவம்புரியத் திடமதியையும் அடைந்தனர்.

(ச.) கேளா = விசாலரக்த லோசனன் தாசூரன் அசரீரவாக்கியத்தை இங்ஙனஞ் சிரவணஞ்செய்து, கிலையாய் = தைரியத்தை யடைந்தவனாய், தனிதத்தினால் = மேக கர்ச்சிதத்தால், சிகண்டிபோல் = மயிற்போல், கேதமொழித்து நின்றான், பின்வெளிப் படை, பிரமபூசை முழுதும் = பிதாவுக்குமேல் இங்ஙன மியற்றுங்கன்மம், இது முன் செய்யாதது, இதில் ஆதரனாய் எழுந்திருந் தவசியமாகச் செய்யவேண்டியதைச் செய்து முடித்து உத்தம சித்திதரும் தபசுக்குப் புத்தியைத் திடமாகச் செலுத்தினான் என்ற தாயிற்று.

(ஸ்ரீ - வீர - அ-கை.) அம்முனிவருக்கு அவனியில் அகில இடங்களும் அபவித்திர மாகத் தோற்றல்:—தக்கவென்பது.

தக்கபிரம கருமந்தன்னாற் றவமே செய்வான்
றொக்க சங்கற்பத்தாற் சுத்தாசார மிருந்தான்
மிக்கஞான மில்லான் விசுத்தமான புவியிற்
புக்கவிடங்க ளெல்லாம் புனிதமன் றன்றென்னு. (62)

(ப - ரை) தக்கபிரம கருமந்தன்னால் = தகுதியாய பிராஹ்ம கருமத்தினாலே, தவமேசெய்வான் = தவம்புரிய வெண்ணிய அவர், தொக்க சங்கற்பத்தால் = தொடர்ந்த அநந்த சங்கற்பத்தால், சுத்தாசார மிருந்தான் = தூய ஆசாரமிருந்தவர், மிக்கஞானமில்லான் = அறியவேண்டியதை யறியாத மனத்தினன், விசுத்தமான புவியில் = பவித்திர மாய தராதலத்திலும், புக்க இடங்கள் எல்லாம் = சென்றதலங்கள் யாவற்றையுமே, புனிதம் அன்று அன்று என்னு = பவித்திரம் அல்ல அல்லவென எண்ணினார்.

(ஸ்ரீ - வீர.) அவ்வினத்தில் பிராஹ்ம கருமத்தானே தவம்புரியு மவருக்கு, அநந்த சங்கற்பமயமாய பகுதரசுத்தி யசுத்தியாதி கற்பனைப் பிரசுரம், வேதாத்தியயன அதனர்த்த விசார அநுஷ்டான நிஷ்டைத் தன்மையாகிய சுரோத்திரியத்வம் உண்டாயது. அவசியம் அறியத்தக்கதாகிய பிரஹ்மத்தை யறியாத மதியையுடையவரும் சுரோத்திரிய ரும் ஆகிய அவருக்குச் சுத்தி யசுத்தியாதி கற்பனையினாலே தராதலம் பவித்திரமா யிருந் தும் அவரது சித்தம் இளைப்பாறு தலையடையவில்லை. இத்தராதல மியாவுமே கேவலம் சுத்தமாயிருந்தும் அசுத்தம் போலக்கண்டு அவர் ஓரிடத்திலும் இரமிக்கவேயில்லை.

(ச.) தவமேசெய்ய = வனத்திற் றவமியற்றும் அவனுக்கு, சங்கற்பத்தாற்றொக்க = அநந்த சங்கற்பமயமான சோத்திரியனானான், தபசில் இத்தன்மைய விசுத்தமான தேசத் தாற் கூடவேண்டும் இவ்விதம் பாவனமான சாதனங்களாற் சேரவேண்டு மென்னும் அநந்த சங்கற்பப் பிரசுரஞ் சுத்தாசார மென்னுஞ் சோத்திரியத்துவம், சாந்தசத்துவம் மிகுந்ததென்றாயிற்று. மிக்கஞானமில்லான் = அறியவுரியதை யறியாத புத்தியுள்ளவ

னது சித்தம் அச்சுத்தாசார மிகுதியால் விசிராந்தி யாகவில்லை, விசுத்தமான புவியில்= பவித்திரமான தராதலத்திலும், இத் தராதல முழுதுங் கேவல மசுத்தமே யென்று சிந்தித்து ஓரிடத்தும் இரமித்ததே யின்றென்ப தாயிற்று. (62)

(ஸ்ரீ-வீர - அ-கை) புனிதமான இடம் பெறுந்தவம் புரிய அத்தவத்தான் மகிழ்ந்த ஸ்ரீ அக்கினிபகவான் முனிமுன்றோன்றல்:—வையம் உடலையென்பன;

வையஞ் சுத்தமல்ல மரத்தினுனியே புனித
மையபுட் போலாங்கே யமர்தற்கான தவமே
செய்யகிற் போமென்னுச் சிந்தையார நினைந்து
வெய்யகனலை மூட்டி விண்ணோர் குழுவைநினைந்து. (63)

உடலை யரிந்துவாங்கி யோமஞ் செய்யலோடுங்
கடவுள வர்க்கென் முகத்தாற் கலைவேதியன் மெய்த்தசைகண்
மிடறும்புயமு முதலவே வதென்னே யென்னுச்
சுடருங்கன லோனினைந்து சுருதிமுனி முன்றோன்றி. (64)

(ப - ரை.) வையம் சுத்தமல்ல = பூமண்டலம் புனிதமல்ல, மரத்தின் நுனியே புனிதம் = விருக்ஷாக்கிரமே வெகுதூயது, ஐயபுட்போல் = அதிற் பொருந்துறுத லெனக்கு சிதமாதலின் பறவைநிகர்ப்ப, ஆங்கே யமர்தற்கான தவமே = சாகைகளிலும் தலங்களிலும் இருத்தற் குரித்தான தவத்தையே, செய்யகிற்போமென்னு = பண்ண முயலுவோமென்று, சிந்தையாரநினைந்து=புந்தியிற் பொருந்துற மதித்து, வெய்யகனலை மூட்டி = அதிபாசுவரமான ஹுதாசனைமிகச் சுவாலைப்படுத்தி, விண்ணோர் குழுவை நினைந்து = கீர்வாண விருந்தத்தைச் சிந்தித்து.

உடலையரிந்து வாங்கி = சரீரத்தைச் சேதித்துக் கரங்கொண்டு, ஓமம்செய்யலோடும் = ஆகுதியை ஆற்றியபோது, கடவுளவர்க்கு = தேவதைகட்கு, என்முகத்தால்= எனது வாயிலாக, கலைவேதியன் = சாத்திரங்கற்ற சோத்திரிய மறையவனது, மெய்த் தசைகண் மிடறும் புயமும்முதல = உடம்பின் மாம்சங்கள் களம்புஜம் முதலன, வேவதென்னே = பஸ்மம் ஆகவேண்டாம், என்னுநினைந்து = எனச்சிந்தித்து, சுடருங்கனலோன் = சொலியாநின்ற ஸ்ரீ அக்கினிபகவான், சுருதிமுனி முன்தோன்றி =வேதமா முனிவர் எதிரிற் பிரசன்னமாய்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் அவர் தஞ்சங் கற்பத்தினுலேயே இவ்வண்ணம் சங்கற்பிப்பார் ஆயினர்: தருவின்நுனியே இனிதுதூய்தாம், ஆண்டே திதி எனக் குசிதமாம். அதன் பொருட்டிப்போது தவத்தைத் தபிப்பேன், எத்தவத்தால் விருக்ஷங்களில் பக்ஷிபோலும் தெய்வம்போலும் அவஸ்தான சாமர்த்யத்தைச் சாகைகளிலும் தலங்களிலும் அடைவேன். என்றிந்தப் பிரகாரம் திரமுற எண்ணி மிகவும் ஒளிராநின்ற அவியுணியை நன்கு சொலிக்கச்செய்து, அதன்பால், தன்ஸ்கந்த பித்தியினின்றும் மாம்சத்தை அரிந்தெடுத்து ஆகுதிசெய்தார். தபத்தைத் தபிப்பேன் எனச் சங்கற்பம் காணப்பெறுதலின், தவத்தின் பின்னர், அதனுல் விரைவில் சித்திகாணப் பெருமையின் இவ்வண்ணமாய ஹோம சாஹசஞ்செய்யத் தொடங்கினு ரெனவுணரலாம். அதன்பின்னர் ஸ்ரீ பகவானுகிய சப்தார்ச்சி யானவர்வரும் வகையாகச் சிந்திக்கத் தொடங்கினுர். சிந்தையின் பிரகாரத்தையே காட்டல். கடவுளவர்க் கென்பது, கீர்வாண விருந்தத்திற்கு "அக்கினி முகர்துணிவாக வமரரே" என்னுஞ் சுருதியை யனுசரித்து அக்கினியாகிய எனமுகத்தானே சமக்கிரகண்ட தேசங்கள் ஆகுதி பண்ணப்பட்ட விப்பிர மாம்சத்தானே வெந்து

பஸ்மத்தன்மையை யடையவேண்டாம் என்பதாகச் சிந்தித்து; அக்கினிபகவானாகிய தேவதை அத்தாருரர் முன்னர் பாஸ்வரப் பிரபுவாகிய சூரியபகவான் பிருகஸ்பதி முன்னர் பிரசன்ன மானதேபோலப் பிரசன்னமாயினர்.

(ச.) பின்பவன் தன் சங்கற்பனையினாலேயே இங்ஙனஞ் சங்கற்பித்தான்: — ஐய, அதிற்றிதியெனக்கு உசிதமாம், ஆங்கே = சாகிகளிற் சாகைகளிற் றளங்களிலும், அமர்தற்கான = எந்தத்தவ சாற் றிதிபெறுவேன் அந்தத்தவமே, செய்யகிற்பேமென்று = இப்போதே செய்கிறேனென்று.

செய்யலோடும் = செய்தான்பின், வேவதென்னே யென்று = என்முகத்திருந்து சாம்பலாவதென் வேண்டாம், சுடரின் கனலோன் = அக்கினிபகவான், தோன்றி = பிரகஸ்பதிக்குச் சூரியன்போற் பிரசன்னமாய்ப் பின்பு. (64)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ அக்கினிபகவான் பிரசன்னமாகி வரந்தரல்: — கருதிற்றென்பது.

கருதிற்றென்ன வென்னக் கைகண் முகிழ்த்துத் துதித்துப்
பரிசுத்த மதாமிடமிப் பாரிற்காணே னதனாற்
றருவிற்றலை யிற்றளிர் மேற்றலந் தந்தருள்வா யென்ன
வரமுற்று தவிக்கனலோன் வாரித்திரை போன்மறைந்தான். (65)

(ப - ரை.) கருதிற்று என்ன என்ன = விரும்பியது யாதோவென்று ஸ்ரீ அக்கினி பகவான் கேட்ப, கைகள் முகிழ்த்து துதித்து = இருகரங்களைச் சிரங்கூப்பித் தோத்தரித்து, பரிசுத்தமதாம் இடம் இப்பாரில் காணேன் = பாவனமான தானம் இவ்வவனி மண்டலத்தில் அடைந்திலேன்; அதனால் = அக்காரணத்தினால், தருவில்தலையில் தளிர் மேல் = மரத்தின்நுனியின் இலைமேல், தலம் தந்தருள்வாய் என்ன = இருக்க இடம் தந்தருள்வாய் என்று பிரார்த்திப்ப, வரமுற் றுதவிக்கனலோன் = ஸ்ரீ அக்கினிபகவான் அவ்வாறே யாகுகவென்று வரந்தந்தருளி, வாரித்திரைபோல் மறைந்தான் = கடலிலலை போல உருக்கரந்தான்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ அக்கினிபகவான் கூறுவதாவது. ஹே தீரகுமார! வேட்கையுற்ற வரம் வேண்டுதி, நினது சங்கற்ப சித்தமாய் நின்பால் இருப்பதேயா யதைக்கவர்ந்து கொள்ளுதி, கோச உதரத்தினின்றும் மணியையதன் சுவாமிகவர்ந்து கொள்வதேபோலும். ஈண்டுத் தீரவென்றது சாஹசானுரூபம் சம்போதனமாம். என்பதாக வருளிய ஸ்ரீ அக்கினிபகவானை, அவ்விப்பிரகுமாரன், சோபிதமான அர்க்கபுஷ்பத்தானும் ஸ்துதிவாதத்தானும், இனிதாக நன்குபூசித்துப் பிரார்த்திப்பதாவது. ஹே பகவன்! விசுத்திதவதக ரூத்திர சாண்டாள ஞாளிபூசையாதி பூதங்களானே நிறையப்பெற்ற பூமியிற்பவித்திரப் பிரதேசத்தை யடையப் பெற்றிலேன், அதனானே எனக்கு விருக்ஷங்களின் உபரிஸ்திதியுளதாகுக; எனமுனிமைந்தன் கூற, சர்வதேவமுகமாய ஸ்ரீஅக்கினிதேவர், உனக்கவ்வாறே யுளதாகுகவெனக் கூறியருளி அவ்வீசுரர் மறைந்தருளினர்; அத்தேவர் மறைந்தருளவே, க்ஷணகாலம் மாலையைக்கண்ட மரைமலர்போலாயினும், பூர்ணகாமமுற்ற அக்குமாரன் பூர்ண இந்துவைப்போலப் பிரபையுடையவனானன்.

(ச.) கருதிற்றென்ன வென்ன = விப்ரகுமார சாதுவே இஷ்டமான வரத்தைக் கோசாகாசத்திற் றூபித்த மணியைப்போல் வாங்கிக்கொள் ளென்றுரைப்ப, அக்கினி தேவனை விப்பிரகுமாரன் கைகண்முகிழ்த்துத் துதித்து, அருக்கியமலரோடு சோபிக்குந் துதிவாதத்தினால் பூசித்துச் சொல்லுகிறான், தலந்தந்தருள்வாய் = எனக்கு ஸ்திதிதந்தருளும், வரமுற்றுதவி = உனக்கிங்ஙனந் தந்தேனென்று சொல்லி, மறைந்தான் = கணத்திலந்தர்த் தானமானான். (65)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது சாகைபல்லவ புஷ்பங்கணிறைந்து பல பக்ஷி மநோகரமாயப்பல அலங்காரங்களோடு கடம்பமிருப்பதை வருணித்து, அதன் கண்ணே, வாஞ்சிதவரம் வந்ததானே கிளர்ந்த, ஆனனமண்டல ஒளிமிகுதியானே, வெண்புன்னகைக் கவின் வகையானே கலைக்குலம் நிறைந்தபூர்ண சந்திரனையும், விகசிதமாய அம்புஜத்தையும், வெற்றிகொண்ட மகிழ்ச்சிமிகுந்த அத்தாசூரமுனிவர் இருந்து தவம்புரிய விரும்பினுரெனல்:—கானத்தென்பது.

கானத்திடையோர் கடப்பங்காரின் பதத்தைக் கடந்து
வானத்துயர்ந்த ததன்மேல் வருபல்லவ மென்றவிசின்
ஞானத்தைய மின்றித்தா சூரன்ரு னிருந்து
மேனற்றவமே செய்வான் மிகவும்விரும்பு மனத்தான். (66)

(ப - ரை.) கானத்திடை = கானகமத்தியில், ஓர் கடப்பம் = ஒப்பற்ற ஒரு கதம்ப தருவிருந்தது, அது, காரின்பதத்தைக் கடந்து = மேகமண்டலத்தைத் தாண்டி, வானத்துயர்ந்தது = ஆகாயத்தில் வியாபித்தது, அதன்மேல் வருபல்லவமென்ற விசின்ருனத்து = அத்தருமீது தளிர்த்திருக்கும் மிருதுவாயதளிர் விஷ்டாத்தில், ஐயமின்றித்தாசூரன்ருனிருந்து = ஆசங்கையில்லாமல் தாசூரமுனிவர் விற்றிருந்து, மேனற்றவமே செய்வான் = உயர்வாகிய இனியதவத்தையே செய்யும் பொருட்டு, மிகவும் விரும்பு மனத்தான் = அதிக ஆவலுற்ற உள்ளத்தினன் ஆயினன்.

(ஸ்ரீ-வீர.) கானன மத்தியிற் கதம்பமொன்றிருந்தது, அஃதம்புத மண்டலத்தைச் சும்பித்து நின்றது, மத்தியானத்தில் இளைப்படைந்தவைபோன்ற சூரியாசுவங்களாற் சேவிக்கப்பெற்ற ஸ்கந்தமண்டலங்களை யுடைத்தாயிருந்தது, விடபபாகுக்களானே திக்குக்ஷிதீர்க்கத்தை விதானமென்னச் செய்துகொண்டிருந்தது, விடபவிதான அநாவிருததேசம் பரிசிஷ்டமாக அயலொன்றுளதா? இலதா என்பதாக நாற்புறங்களிலும் திசையை, விகாசியாங்கு சுமசக்ஷணங்களால், பார்த்துக்கொண்டிருந்தது; புத்திபல பல்லவசாலியாயும், புஷ்பரூப அசல உபமமாயும், விண்மண்களின்றம் போன்றதாயும், ஏகார்ணவகதமாய்ச் சௌரிவடவிருக்ஷம்போன் றுன்னதமாயும், வனத்தின்கண் வளப்பமிக்க அக்கடம்பில், ஆனந்தமந்தா மனத்தினராய் பூமி, அபவித்திரதாமதியுற்ற அந்தத் தாசூரமுனிவர், ஆரோகணித்து, அதன் கண்ணிலங்கும் வியோமமளாவிய சாகையின்பாற் செறி நறுந்தளிரிற் சங்கையில்லாதவராய், அதாவது அபவித்திர மென்னும் விக்ஷேப ஆசங்கையற்றவராய்ப் பிரவேசமாயினர், ஒருமையுடன் அங்குத் தவம்புரியத் தொடங்கினர்.

(ச.) கடப்பம் = கதம்பம், நற்றவம் = ஏகாக்கிரமான தபசு. (66)

(ஸ்ரீ-வீர - அ-கை.) திசைநோக்கி யம்முனிவர் திருந்திய வாதனத்திருந்து, நசைபோக்கிக் கருமமெலாமனமதனு னடத்தினுரெனல்:—ஒரு என்பது.

ஒருகணந் திசைகளனைத் தையுநோக்கி யுறைத்தபத் மாதனத்திருந்தான்
பெருகியதிசை கண்முழுதினுந் திரும்பிப் பிரமபாவனை யறிவரிதாய்க்
கருமமாத்திரத் தினிற்பதாய்ப் பலமாங்கற்கசம் விரும்புறு மனத்தால்
வருடமைந்திரண்டு மகங்களே நடத்திவான வர்க்கவியுண வளித்தான். (67)

(ப - ரை.) ஒருகணம் = கணமாத்திரகாலம், திசைகள் அனைத்தையும் = எல்லாத் திசைகளையுமே, நோக்கி = பார்த்து, உறைத்த பத்மாதனத்திருந்தான் = திடபதுமாதனத்

திருந்தான், பெருகியதிசைகள் முழுதினும் திரும்பி = விசாலமான சர்வதிசைகளினின்றும் பிரத்யாகரித்து, பிரமபாவனை யறிவரிதாய் = பாமார்த்த முணராமையின், கருமமாத்திரத் தினிற்பதாய் = கிரியாமாத்திரத்தில் நிலைபெறுவதாய, பலமாங்கற்க சம்விரும்புறு = பல கார்ப்பண்ய யுக்தமான, மனத்தினால் = சித்தத்தால், வருடமைந்திரண்டு = தசசம்வற்சரங் கள், மகங்களை நடத்தியஞ்ஞக் கிரியைகளையே செய்து, வானவர்க் கவியுணவளித்தான் = சுரர்கட்கு அவியாகாரந் தந்தான்.

(ஸ்ரீ - வீர.) நவபல்லவகற்பித மிருதுவான ஆசனத்தில் உட்கார்ந்து கௌதுகத்தாற் சபல ஈக்ஷணமுடையவராகி அவர்கணப்போது திசையைப்பார்த்தார், அது, நதிவடிவங்களான ஹார பேதங்களானே ரம்மியமாயும், சைலேந்திரஸ் தனகுட்மலங்களை யுடைத்தாயும், நிரு மல ஆகாசகபரத்தை யுடைத்தாயும், சஞ்சலமான நீலமேக அளகத்தை யுடைத்தாயும்: நீல பல்லவ வசனத்தை யுடைத்தாயும் இருந்தது; புஷ்பக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பெற்றும், கடல்களாகிய பூரணகும்பங்களைக் காத்திற்றரித்தும், பகுபூஷண அலங்கிருதமாயும் இருந் தது. அது முதலாக அத்தாபச ஆசிரமத்தில் கதம்பதாசூார் எனப் பிரசித்தராகித் தாருண மானதவத்தில் அபராங்முக சூரராகி எப்போதும் தவம்முயன்றவராகி வாழ்ந்தனர். அந்த லதாதலத்தில் இருந்து திசையைநாடிக்கணம், திடபதுமாசனங் கட்டித்திக்குகளி னின்றும் திருப்பிய மனத்தராகி, உண்மை யின்னதென உணராதவராகி, கிரியாமத்திரத்திலே நிலை பெற்றவராகிப் பலகார்ப்பண்ய யுக்தமனத்தினாலே அவர்மகம் புரிந்தனர். விண்ணில் வியா பித்த சாகையின் பத்திரங்களில் வீற்றிருக்கும் அந்தராத்மாவாகிய அவரானே தம்மனங் கொண்டே ஆதானுதிய சுவமேதாந்தயஞ் ஞக்கிரியைகள் யாவும் முறையே செய்யப்பெற் றன. அங்கிவரிங்ஙன் தசவருடங்கள் மனத்தினாலே தேவர்களை யஜனஞ்செய்தனர்.

(ச.) நோக்கி = கௌதுகலீலையா னோக்கினவனாய், திரும்பி = திரும்பினமனதுடை யனாய், பலமாங்கற்கசம் விரும்புறு = பலகார்ப்பண்ய சகிதமான. (67)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பற்பலயாகங்கள் பயின்ற நற்பண்பால் விற்பனஞானம் விளங்கிய துணத்தேயெனல்:—கோத்திர னென்பது.

கோத்திரள் புரவிமனிதரா லியற்றுங்கோதறு வேள்விகண் முற்றுஞ்
சாத்திரவிதியா லியற்றிநீள் காலந்தவறற நடந்தமை யாலே
மாத்திரமான மனமிகத்தெளிந்து வரம்பிலதாதலு மாங்கே
நேத்திரமான ஞானம்வந்தெய்தி நிறைந்தனன் வலிதினன் னெஞ்சம். (68)

(ப - ரை.) கோத்திரள் புரவி மனிதரால் இயற்றும் = கோ அசுவநா மேதாதிகளால், செய்யப்பெறும், கோதறுவேள்விகள் = குற்றமற்றயாகங்கள், முற்றும் = யாவற்றையும், சாத்திர விதியாலியற்றி = நூன்முறையே நிறைந்த தக்ஷிணையாதிக ளானேசெய்து, நீள் காலம் தவறு அற நடந்தமையாலே = சிரகாலம் குற்றமற நிற்றலினனே, மாத்திரமான மன மிகத்தெளிந்து = சர்வதோஷ விநிர்முக்தமாய்ச் சத்துவமாத்திரமான சித்தம் அத்தியந்தம் அமலத்தன்மையை யடைந்து, வரம்பிலதாதலும் = எல்லையற்றதாதலும், ஆங்கே = அவ் விடத்தே, வலிதில் = பலாத்தாக, நேத்திரமான ஞானம் வந்தெய்தி = ஆத்மப்பிரசாதஜ மாயஞானமானது, வந்தடையவே, நன்னெஞ்சம் = உள்ளத்துள்ளே, நிறைந்தனன் = பூர்ணபாவமுற்றான்.

(ப - ரை.) விபுலதக்ஷிணைகளுடன் கோ அசுவநாமேதாதி யஞ்ஞங்க ளியற்றிவர்ச் சிர காலஞ் செல்லவே அவருடைய விசாலமானமதியில் இராகாதிதோஷ சூனியமாய அமலத்

தன்மையடைவுற்றது; உறவே, ஆத்மப்பிரசாத ஜன்னிய ஞானமானது, மொழிந்தவகையில் தடைபடு பொடியாக, வலிதில் = முற்சன்மஞ்செய்த சிரவணசமஸ்கார உற்போதவலுவி ஞனே, உள்ளே தோற்றியது.

(ச.) இயற்றி = மிருதகஷிணேகளோடு நடத்தி, மாத்திரமான = தனிமையான, மனம் = அவனது சித்தம், ஆங்கே = அம்மனதில், நேத்திரமான ஞானம் = ஆத்மப்பிர சாதத்தைத்தரும் ஞானம், வலிதின் பலத்திஞல், வந்தெய்தி நெஞ்சம் நிறைந்தனன்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தெளிந்திருந்த அம்முனிவர் முன் வனதேவதை தற்காரியப்பொ ருட்டுவருதல்:—பிறவியென்றது.

> பிறவியாவரணங் கழிந்து வாதனைகள் பேரறமாண் டுளபெரியோ
> னிறிவியதளிர்மே லிருத்தலு மொருநாணிமலமாம் விழிகளுக் கெதிரே
> யுறவிரிமலரின் மேகலையுடுத்த வுயர்வன தேவதைதோன்ற
> வறிவனுநோக்கி யார்கொனீ யென்னவழகிய வணங்குரை செய்வாள். (69)

(ப - ரை.) பிறவியாவரணங் கழிந்து = ஜநந ஆவரணந்தீர்ந்து, வாதனைகள் பேரற மாண்டு = வாசனை மலங்களியாவும் அத்தியந்த மழிந்து, உளபெரியோன் = வாழ்ந்து கொண்டிருக்கும் மகாத்மா, நிறவியதளிர்மேல் = படர்ந்ததளிர்மீது, இருத்தலும் = வீற்றி ருத்தலும், ஒருநாள் = ஒரு சமயம், நிமலமாம் விழிகளுக்கு எதிரே = நிர்மலமான நேத்தி ரங்களுக்கு முன்னிலையில், உறவிரிமலரின்மே கலையுடுத்த = பொருந்துமாறு விரிந்தபுட் பங்களின் மேகலைதரித்த, உயர்வனதேவதைதோன்ற = மேலான வனதேவதை பிரதீதி யாக, அறிவனும் நோக்கி = உணர்வுமயமான தாரூரர்பார்த்து, யார்கொல் நீ என்ன = நீயாரென்று கேட்ப, அழகிய அணங்கு உரைசெய்வாள் = கவின்வாய்ந்த வனதேவி கூறத் தொடங்கினள்.

(ஸ்ரீ - வீர.) ஞானத்திஞலே அஞ்ஞானுவரணம் அகன்றவராய், அதன் அப்யாசத் தானே வாசனைமலமகன்று ஜீவன்முக்தராய் வாழும் அத்தாரூரமுனிவர், ஒருகால், அந்த லதையின் அக்கிரபாகத்தில் நின்றுகொண்டிருந்த வனதேவியைக் கண்ட ர்; விசாலாக்ஷியா யும், ஆலோககுசும அம்பர முடையவளாயும், அழகுநிறைந்த வளாயும், லோற்பல ஆமோத வதியாயும், அத்தியந்தம் சுமநோகரையாயும், காமிநியாயும், காந்தவதநையாயும், மதகூர்ணித லோசனையாயும், கோகுலத்தானும் குசுமாபூரங்களானும் வணக்கமுற்ற வனலதைபோன் றவளாயும், பக்திபிரணமலஜ்ஜைகளானே வணங்கிய வதனத்தை யுடையவளாயும், குற்ற மற்றதூய மேனியளாயும், நின்றுகொண்டிருக்கும் அத்தேவியை நோக்கி அம்முனிவர், ஹே உற்பலபத்ராக்ஷியே காந்தி விக்ஷோபிதஸ்மறையே நீயார்? புஷ்பசம்பத்து நிறைந்ததோழி போலும் லதையைப் பிடித்துக்கொண்டு என்னகாரணம் பற்றிநிற்கின்றனை? என்றனர். எனவே மிருகசாவாக்ஷியாய் கௌரபீன பயோதரையாய் மநோஹாரியாயிலங்கிய அத்தேவி அம்முனிவரை நோக்கி இத்தழுதழுத்த வசனத்தைக் கூறத்தொடங்கினள்.

(ச.) உற = அத்தளிரினுனியிற்றிதி பெற்றவளாய். (69)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தன்னையின்னவளென வனதேவி தெரிவித்தல்:—பெரியவ ரென்பது.

> பெரியவர் தம்பாற்பெற லருநேயம் பெற்றவர் விரும்பியவெல்லா
> மரியனவெனினு மிமைப்பினி லெளிதிலணுகு மென்றய்ய மற்றறிந்தேன்
> றெரிவருண் முனிவநீயுறை வனத்திற் செறிவனதே வதையிங்ஙன்
> விரியலர் கொடியாம் விநோதவீட் டிடையே விருப்பொடு மிருப்பவனே.

(ப - ரை.) பெரியவர் தம்பால் = மகான்களிடத்தில், பெறலருநேயம் = பெறுதற் கரியகருணையை, பெற்றவர் = அடைந்தவர், விரும்பிய வெல்லாம் = அவாவிய அனைத்தும், அரியன எனினும் = அருமையாயின வென்றாலும், இமைப்பினில் = நொடிப்போதில், எளிதில் = சுலபமாக, அணுகும் என்று = பிராப்தம் ஆமென்று, ஐயமற்றறிந்தேன் = சமுசயமின்றி யறிந்துளேன், தெரிவருண்முனிவ = ஞானத்தை யனுக்கிரகஞ் செய்யும் முனீந்திரரே ! நீயுறைவனத்தில் = தேவரீர் தவம்புரியும் இவ்வனத்தில், செறி = வசிக்கும், வனதேவதையே நான் = வனதேவியேயான், இங்ஙன் = இவ்வண்ணம், விரியலர் கொடியாம் விநோத வீட்டிடையே = விரிந்த புஷ்பங்கணிறைந்த கொடிகளின் விசித்திரலீலாலயத்தில், விருப்பொடும் இருப்பவள் = ஆசையோடும் வாசம்செய்பவள்.

(ஸ்ரீ - வீர.) இம்மகீதலத்தில் யாவையாவை கிடைக்கப் பெறுதனவாய் வாஞ்சிக்கப் பெறுவனவாமோ அவை அவையாவுமே விரைவிலேயே மகத்துக்களின் பிரார்த்தனையினாலேயே கிடைத்து விடுகின்றன. தேவரீரது கதம்பதரு அத்தியந்தம் அலங்காரம்செய்து கொண்டிருக்கும் கொடிகள் நிறைந்த இந்த விபினத்தில், ஹே பிரஹ்மத்தையுணர்ந்த பெரியவரே ! லதாகுஞ்சங்களையே லீலார்த்த ஆலயங்களாக வுடையவன தேவதையான்.

(ச.) நீயுறை = கதம்பாதி யலங்காரமுள்ள வனத்தில், விநோதவீட்டிடை = லீலாலயத்தில். (70)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முனிவர் யார்கொல் நீ யென்று வினவியதற்கு விடைதந்து தனது ஆகமனப் பிரயோஜனத்தை வனதேவதை கூறல்:—மேட என்பது.

**மேடமாதத்திற் பிறைபதின் மூன்றுகலையுற மேவியநாளி**
**னாடருமதன னுயர்திருநாளி னந்தனவனத் திலேவந்து**
**கூடியவனதே வதைக்கணந் தன்னைக்குறுகினேன் பாங்கியர்முழுதுந்**
**தேடருமைந்த ருடன்மகிழ்ந்திருந்தார் சிறுவனில்லாத யான்றளர்ந்தேன்**

(ப - ரை.) மேடமாதத்தில் = சித்திரைமாதத்தில், பிறைபதின் மூன்று கலையுறமேவிய நாளில் = சுக்கிலபக்ஷ திரயோதசிதினத்தில், நாடருமதனன் உயர்திருநாளில் = நாடுதற்கரிய ஸ்மரோற்சவத்தில், நந்தனவனத்திலே = பூங்காவனத்தின் கண்ணே, வந்துகூடிய வனதேவதைக் கணந்தன்னை = ஒருங்குசேர்ந்த வனதேவிகளின் கூட்டத்தை, குறுகினேன் = அண்மினேன், பாங்கியர்முழுதும், தோழியரனைவரும், தேடருமைந்தருடன் மகிழ்ந்திருந்தார் = தவத்தினால் அருமையாய் அடையத்தகுந்த புத்திரர்களுடன் சந்தோஷித்திருந்தார்கள், சிறுவனில்லாத யான்றளர்ந்தேன் = குழந்தையில்லாத அபாக்கியவதியாய் யான்மெலிந்தேன்.

(ஸ்ரீ - வீர.) சித்திரைமாத சுக்கிலபக்ஷமதன திரயோதசியில், மதனோற்சவத்தில் = ஸ்மர ஆராதனையின் பொருட்டு முயன்ற கீதவாத்திய நாட்டிய பலிபோச்சியாதியுற்சவத்தில் அநங்கபூஜாவிரத அனுஷ்டானார்த்தம், நந்தனவனத்தில் வந்துசேர்ந்தது வனதேவிகளின் சமாஜம், மூவுலகத்தினின்றும் வந்துசேர்ந்த லலனைகளாகிய வனதேவிமார்களின் அச் சமாஜத்தையானு மடைந்தேன். ஆண்டம்மதன உற்சவத்தில் எல்லாச் சகிமார்களையும் புத்திரர்கள் உடையவர்களாகப் புத்திரனில்லாதயான் கண்டேன், அபுத்திரத் தன்மையானே யான் அத்தியந்தம் துக்கிதையானேன்.

(ச.) மேடமாதத்தில் = சித்திரைமாதத்தில், பிறைபதின் மூன்றுகலையுறமேவிய நாளில் = பூர்வபக்ஷத்தினது திரயோதசியில். (71)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வனதேவி முனிவர்பால் மைந்தனை வேண்டலும் பெறாவிடின் அக்கினிப் பிரவேசஞ் செய்வேன் என அடம்புரிதலும் காட்டல்:—காதலித்தென்பது.

காதலித்தவர்க்குக் கருதியதளிக்குங் கற்பகமனைய நீயிருப்ப
நாதனேநாத ரில்லவர்போல நான்மகற் கிரங்குதனன்றே
நீதரல்வேண்டும் புதல்வனையன்றி நின்னருளென் பொருட்டிலதேற்
றீதறுமதலை யிலதெனுந் துன்பஞ்செந்தழன் மூழ்கியே தீர்ப்பேன். (72)

(ப - ரை.) காதலித்தவர்க்கு = விரும்பியவர்க்கு, கருதியது அளிக்கும் = விரும்பிய யாவற்றையுந் தரும்படியான, கற்பகம் அனையநீ இருப்ப=பெருங்கற்பக தருவிற்குச் சமான மாகத்தேவரீர் எழுந்தருளியிருப்ப, நாதனே = காப்பாற்றுந் தேவதேவனே, நாதரில்லவர் போல = அநாதர் என்ன, நான் = அடியேன், மகற்கு இரங்குதல் நலனே = குழந்தைக் காக இரக்கமுறுதல், நன்றோ, புதல்வனை நீதரல்வேண்டும் = மைந்தனைத் தேவரீர் அனுக் கிரகஞ் செய்தல்வேண்டும், அன்றி = அவ்வாறருளாது, நின்னருள் = தேவரீரதுதிருவருள், என்பொருட்டு இலதேல் = ஏழைபொருட்டு இல்லாது போமானல், தீதறுமதலை குற்ற மற்றகுழந்தை, இலதெனுந்துன்பம் = இல்லையென்னுந் துயரம், செந்தழன் மூழ்கியேதீர்ப் பேன் = சொலிக்கும் அக்கினியிற் பிரவேசித்தே தீர்த்துக்கொள்வேன்.

(ஸ்ரீ - வீர.) சர்வபுருடார்த் தங்களின் சங்கத்தினது பிருகத்கற்பதருவாகத் தாங்களி ருப்ப, ஹே நாதனே! நாதன் இல்லவன்போலப் புத்திரன் இல்லவளாய் எங்ஙனம்யான் சோகத்தை யடைந்திடுவேன்; ஹேபகவன்! நின்னடியவளுக்குப் புத்திரனைத் தந்தருளுதி, அருளிலதேலாயின், புத்திரதுக்கதாக உபசாந்தியின் பொருட்டு ஈண்டுத்தேகத்தை யக்கினி யில் இட்டாகுதியினிது செய்வேன்; மாநசதாகத்தைக் குறித்துச் சரீரதாகம், அற்பதுக்கத் தைத்தருவதாம், சுகந்தருவதாம், என்பதுகருத்து. (72)

(ச.) செந்தழன் மூழ்கியே = இவ்விடத்து அக்கினிக்குத் தேகத்தை யாகுதிசெய்து, புத்திரதாகத்தை, தீர்ப்பேன் = உபசாந்திசெய்வேன்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) முனிவர் மைந்தனுண்டாமா றருள்செய்து, வலிந்து பெற்றதால் ஞானம் மெலிந்து பெறுவன் எனல்:—என்னலும் என்பது.

என்னலுமுனிவ னகைத்தொரு மலரையீந்தொரு மதியிலேயெளிதா
யன்னமேமக வைப்பெறுதி யானீமுன்னருங் கனன்மூழ்குவே னென்று
மின்னலால் வலித்துமகவு வேண்டுதலா லினிதுநீயீன் றிடுமகவும்
பின்னுறுவருத்த நெறியினுன் ஞானம்பெறு மெனப்பேசினன் பெரியோன்.

(ப - ரை.) என்னலும் = இவ்வண்ணம் வனதேவி யியம்பலும், முனிவன் = தாரூர முனிவர், நகைத்து = புன்னகை கொண்டருளி, ஒருமலரை = ஒருபுஷ்பத்தை, ஈந்து = தந்தருளி, ஒருமதியிலே = ஒருமாசத்திலே, எளிதாய் = அநாயாசமாய், அன்னமே = தன்வங்கியே, முன் = பூர்வம், அருங்கனல்யான் மூழ்குவேன் என்று =சோதித்தீயில்யான் பாய்ந்துதுயர் தீர்ப்பேன் என்று, நீ இன்னலால் = நீ துயரத்தால், வலித்து =பலாத்காரப் படுத்தி, மகவுவேண்டுதலால் = புத்திரனை யாசித்ததால், இனிது நீ யீன்றிடுமகவும் =இனி மையாக நீ பெற்றிடும் புத்திரனும், பின் — பிற்போது, வருத்தம் உறுநெறியினுல் =பிரயா சம் பெரிதுற்ற மார்க்கமாக, ஞானம்பெறும் என = பிரஹ்ம வித்தையையடைவன் என்று. பெரியோன் பேசினன் = தாரூரமுனிவர் அநுக்கிரகித்தார்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணங் கூறிநிற்கும் அவ்வனதேவியாகிய தங்கியைநோக்கி, புன்ன கைகொண்டு முநிபுங்கவர், தைரியத்தினின்றும் நழுவாத தயாங்கிதராய், கரம்பொருந்தும் பூவைத்தந்து கூறுவதாவது:—செல்லுதி தங்வங்கியே! ஒருமாதத்தில் ஜகத்பூஜ்யனுய் அளி லோசனனுய்ப் பிரகாசமயனுயுள்ள சுதனை நற்கொடிவாசனைப் பூப்பூப்ப தொப்பப் பிரசவிப் பாய்; ஆனுல், ஆத்மகாத சங்கற்பத்தானே வந்தவுன்னுல் எம்மிடத்தினின்றும் மைந்தன் யாசிக்கப் பெற்றுன், அவ்வேதுவினுலே, இவன் பிராணசங்கடத்தை யடைந்து தத்துவஞ் ஞன் ஆவன், அன்னிய வனதேவிமார் புத்திரர்போல இவன் போகலம்படனுகான்.

(ச.) ஈய்ந்து — தயவொடுகொடுத்து, மகவை = பூஜிக்கத்தகுந்த புத்திரனை, பெறுதி யால் — நற்படர்கொடி பிரசூனத்தைப் பெறுவதுபோற் பெறுவாய், வலித்தின்னலால் = மரணுவேசபாபத்தினுல். (73)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வரப்பிரசாதத்தாற் சந்தோஷமுற்றுப் பாதசேவை விரும்பிய வன தேவியை இமையாது விடுப்ப அத்தேவி தனதிடஞ்சென்று சுதனைப்பெறுதல்: — கேட்ட வள் என்பது.

*கேட்டவண் மகவுகிடைத்த தேயென்று கிளர்முகமதி நிலாக்குலாவ*
*மீட்டுமம்முனியை நோக்கிநின் னேவல்விரும்பி யீண்டுறைகுவ னென்ன*
*வாட்டமின் முனிவனியைந் திலன்விடுப்ப வந்தனளணங்கு தன்னிடத்திற்*
*சேட்டமாமகவை யளித்தனள் கலையாற்செறி தருமதியென வளர்த்தாள். ()*

(ப - ரை.) கேட்டவள் = முனிவரோதிய வசனத்தைக் கேட்டவனதேவி, மகவு கிடைத்தே என்று = குழந்தையை யடையப்பெற்றேமே யென்று, கிளர்முகமதி நிலாக் குலாவ = விளங்காநின்ற பூர்ணசந்திரவதன சந்திரிகை பொலிய, மீட்டும் = மீளவும், அம் முனியைநோக்கி = அத்தாசூர மகாமுனிவரைப் பார்த்து, நின்னேவல் விரும்பி = தேவரீ ரது திருப்பணிவிடையை இச்சித்து, ஈண்டுறைகுவன் என்ன = இவ்விடத்திலேயே வசிக் கின்றேன் என்றுகூற, வாட்டமில் முனிவன் இயைந்திலன் = திருசியங்களில் வாடுதலில் லாத முனீந்திரர் சம்மதித்தில,விடுப்ப = போமாறுத்தரவு, அளிப்ப, வந்தனள் = தனதிட மடைந்தனள், அணங்கு = அடைந்த அந்தவனதேவி, தன்னிடத்தில்=தனது வாசஸ்தலத் திலேயே, சேட்டமாம் மகவையளித்தனள் — சிறப்புவாய்ந்த குமரனையீன்றனள், கலையால் செறிதருமதி எனவளர்த்தாள் = கலைகளினுலே நாட்குநாள் உயர்ந்துவளரும் சந்திரன் எனவளர்த்தனள்.

(ஸ்ரீ - வீர.) அம்முனிவர் இவ்வண்ணமியம்பி, பிரசன்ன முகமண்டலத்தோடு கூடிய வளாய்ச் சங்கமசேவாதி யுபசாரம்செய்கின்றேன் என்று பிரார்த்திக்கொண்டு நின்றதங்கியை விஸர்ஜனஞ் செய்தனர். அத்தேவி ஆத்மசதனத்தை யடைந்து தான்மாத்திரமாக வாழ்ந் திருந்தனள், அசாகாய்மாயிருந்தனள். (74)

(ஸ்ரீ - வீர - அ - கை.) காலாந்தரத்தில் மைந்தனேடும் வனதேவிமுனிவர் தரிசனஞ் செய்தல்:—இருது என்பது.

*இருதுவேயாண் டேயெனுங் குறிகளினு லிறந்தனவாறி ரண்டாண்டு*
*திருமுனிபாத மகவொடுமடைந்து சென்னிதாழ்ந் தெதிருறநின்று*
*பெருமைகண் டருள்வாய் நீதாயானே பெற்றவிப் பெருங்குணக்குமர*
*னருமறைநூல்க ளனைத்தையு நானேயளித் திடவறிவினு லறிந்தான். (75)*

(ப - ரை.) இருதுவே ஆண்டே = இருமாதம் பன்னிருமாதம், எனுங்குறிகளினுல்= என்னும் சின்னங்களினுல், இறந்தன ஆறிரண்டாண்டு=பன்னிரண்டாண்டுகள் சென்றன,

திருமுனிபாதம் = தாரூரமுனிவரது திருவடியை, மகவொடும் அடைந்து—மைந்தனோடும் வந்து சேர்ந்து, சென்னிதாழ்ந்து = நமஸ்கரித்து, எதிர் உறநின்று = சந்நிதியிற்கை கூப்பி நின்று, பெருமை கண்டருள்வாய் —தேவரீரது மகத்துவத்தைப் பார்த்தருள்வீராக, நீதர= தேவரீர் வரந்தந்தருள, யானேபெற்ற = வனதேவியாகிய யானே ஈன்ற, இப்பெருங்குணக் குமரன் = இந்தச் சாந்தியாதி யரியகுணங்களை யுடையமைந்தன், அருமறைநூல்க ளனைத் தையும் = அரியவேத சாஸ்திரங்களாம் கலைகள் யாவற்றையும், யானேயளித்திட = யானே போதித்திட, அறிவினால் அறிந்தான் = சூக்குமமதியினால் உணர்ந்து கொண்டான்.

(ஸ்ரீ - வீர.) இருது சம்வற்சர அங்கிதமாகிக்காலம் முறையேகடந்து சென்றது, நீள் காலஞ் சென்றபின் உற்பல லோசனையாகிய அத்தேவியே, சுதனுக்குப் பன்னிரண்டாண்டு நிரம்பவே அவனுடன் முனீந்தரரைத் தரிசிக்கவந்தனன்; வந்து வந்தனம் புரிந்துசந்நிதியில் நின்றுகொண்டு இந்துசமானன முனிவரைநோக்கி, சூதத்துருமத்தை நோக்கி அளிரீங்கா ரஞ் செய்வதேபோலக் கலைவாக்கால் உரையாடத் தொடங்கினள்; ஹேபகவன், இப்பவித் திரமாய குமாரன் நம்மிருவருக்கும் புத்திரனவன், யான் இவனுக்கு, வேதாதிசர்வ வித்யாரூ பக்கலைகள் யாவற்றையும் படிப்பித்தனேன், அவ்வியாவற்றையும் இவன் நன்கறிந்துள்ளான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) எல்லாநூல் களையும் இவன் உணர்ந்தான் எனினும், பிரஹ்ம வித்தையை யடையவில்லை, யதனையருளுதி யென்னவனதேவி, அம்மகனை முனிவர் மாணாக் கனுக்கல்:—கலையென்பது.

கலையெலா நிறைந்தும் பிறப்பிலாஞானங் கண்டிலன் கடற்பவத்துயரா
லலைவுறாநின்றான் றனையுணர்ஞான மளித்தியென் றணங்குரை செய்ய
நிலைகொண் மாணாக்க னமக்கிவ னக்கிநீயகல்கெனவ வள்கன்றா
டலைமைசேர் முனிவன் றாளிணைவிடாது சற்குண மதலையுநின்றான். (76)

(ப - ரை.) கலையெலாம் நிறைந்தும் = சர்வசாஸ்திர சம்பத்து நிறைந்திருந்தும், பிறப் பிலாஞானம் = ஜனனமறுக்கும் பிரஹ்மவித்தையை, கண்டிலன் = அடைந்து பிரஹ்ம தரிசனஞ் செய்திலன், கடற்பவத்துயரால் அலைவுறாநின்றான் =பவசாகரத் துன்பத்தால் அலைந்து வெருளாநின்றான், தனையுணர்ஞானம் அளித்தி என்று = ஆத்மாவையறியும் அறிவை உபதேசித் தருளுவாய் என்று, அணங்குரைசெய்ய = வனதேவி கூறியபோது நமக்கு இவன் நிலைகொள் மாணாக்கன் ஆக்கி=எமக்கு இம்மைந்தனை ஸ்திரமாயிருக்கும் சீட னாக இவண்விட்டு, நீ யகல்கென = நீ யுனது சுவஸ்தானத்தை யடைவாயாக என்றுகூற லும், அவள் அகன்றாள் = அவ்வனதேவி தனதிடஞ்சென்றனள், தலைமைசேர் முனிவன்= முதன்மைவாய்ந்த முனீந்திரரது, தாளிணை = திருவடித்தாமரையை, விடாது=விட்டு நீங் காமல், சற்குணமதலையும் நின்றான் = நற்குணம் வாய்ந்தமைந்தனும் சேவைசெய்து கொண்டிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) ஹே பிரபுவே! யாவற்றையும் அறிந்தும் இவன் கேவலம் சுபமாகியபிரஹ்ம வித்தையை யடைந்திலன், அடைந்தானாயின் இச்சமுசார சக்கிரத்தில் மீளவும் அடிபட்டுழ லான், ஹேவிபுவே! இவனுக்குத் தேவரீரே ஞானத்தைக் கிருபையால் இப்போது உபதே சிக்கவேண்டும், யாவர்தாங்குலத்திற் பிறந்தமைந்தனை மூர்க்கத் தன்மையோடும் சேர்த்துவர்? இதரவித்தைகட்கு அதத்துவவிடயத் தன்மையுண்மையின் அவித்தையாத் தன்மையேயுள தாமென மௌர்க்கியநீக்கம் அவற்றானே இலதாம் என்பது கருத்தாம். இவ்வண்ண மியம்பி யுவனதே வியைநோக்கி ஹே அயலையே! சுதனும், உத்தமசிஷ்ய குணசம்பன்னனும்,

இலகுமிவனை யிங்கேயே ஸ்தாபித்துவிட்டு நீயுன்னிடம் போய்ச் சேருதியென்று கூறியவளை விசர்ஜனஞ் செய்தனர். அவ்வாறே செய்துவிட்டு அவ்வனதேவி சென்றபின் அக்குமரன் பிதாவின் சீடத்தன்மையைப்பற்றிக் குருசுசுரூஷண விரதத்தானே திரநியமமுடையவனுகி யிருந்தான் ஸ்ரீமான் அருணன் = கருடாக்ரஜன், அருக்கனது சந்நிதியில் இருந்ததே போலும்.

(ச.) தனையுணர் ஞானம் = இவனுக்கு நீரே ஆன்மஞானத்தை, அளித்தி = கிருபையா லிப்போதே உபதேசியும், சற்குணம தலையும், மாணுக்க பாவத்தோடு கூடினவனுய் அருக்க னது முன்பு அருணன்போல் நின்ருன் = அநுசரித்திருந்தான். (76)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அநேகவித உபாயங்களினுல் முனிவர்மகற் குபதேசிததிடத் தொடங்கல்:—வருந்தி யென்பது.

வருந்திமெய்ஞ் ஞானம்பெறத் தகுமகவை மாதவனருளி னுன்மெல்லத்
திருந்தியகதைக ளளவைகளிதி காசத்திலே செப்பிய திறங்கள்
பெருந்துணை மறையின்முடிவிலே துணிந்துபேசிய பழம்பொருண் மற்றும்
பொருந்திய நெறிகளநேக மாய்விரித்துப் பூரணபோதமே புகன்ருன். (77)

(ப-ரை.) வருந்தி மெய்ஞ்ஞானம் = கஷ்டப்பட்டுத்தத்துவ அபரோக்ஷ ஞானத்தை, பெறத்தகும் = அடையத்தக்க, மகவை = குழந்தையை, மாதவன் = பெருந்தவத்தையுடைய தாசூரமுனிவர், அருளினுன் = கிருபையினுல், நோக்கி, மெல்ல = மெதுவாக, திருந்திய கதைகள் = திருத்தமான கதைகள், அளவைகள் = திருஷ்டாந்தங்கள், இதிகாசத்திலே செப்பியதிறங்கள் = இதிகாசங்களிலே சொல்லிய தன்மைகள், பெருந்துணை மறையின் முடிவிலே = மோக்ஷமடைய முயல்பவர் கட்குப்பெரிய அரியதுணையான உபநிடதங்க ளிலே, துணிந்துபேசிய = சித்தாந்தப் படுத்தியுரைத்த, பழம்பொருள் = பிராசீன அருத் தங்கள், மற்றும்பொருந்திய நெறிகள் = இன்னும் அநேக திருஷ்டாந்தங்கள், கொண்டு, அநேகமாய் = பற்பல ஆருய், விரித்து = விஸ்தரித்து, பூரணபோதமே = நிறைதரு முணர்வையே, புகன்ருன் = உரைத்தனர்.

(ஸ்ரீ - வீர.) சுசுரூஷை விரதசரியாதி கிலேசங்களினுனே கஷ்டப்பட்டு, உபாயபூத சாஸ்திரஜன்னிய பரோக்ஷஞானத்தை யடைந்துறந்த அக்குமரனே, அதன்பின் சிரகாலம், அபரோக்ஷ பாவப்பொருட்டுத் தெளிவித் துபதேசித்தனர், அல்லது பிதாமுன் தபக்கிலே சங்களானே வெகுகட்டப்பட்டு விஞ்ஞானத்தை யடைந்தனர், புத்திரனும் இங்ஙனம் கட் டப்படவேண்டாம் என்பதாக மைந்தனுக்குச்சுயம் அநேகவிசித்திர உக்திகளானே உணர்த் தினுர். நூற்றுக்கணக்கான சுவ உபலப்தார்த்தகதை நிபந்தங்களாய ஆக்கியாயிகைகளானும், பராக்கியாணுதிகதை நிபந்தங்களாய ஆக்கியானங்களானும், சாமியதரிசன கற்பிததிருஷ் டாந்தங்களானும், பாரதாதி இதிகாசப் பிரசித்த விருத்தாந்தங்களானும், வேதவேதாந்த நிச்சயவடிவ சித்தாந்தங்களானும், சாவதானமாக அமைதியாய் நித்தியம் விஸ்தாரமான கதைக்கிரமங்களானும், மைந்தனது அநுபூதிக்கொத்த அநேகவித உபாயங்களானும், பிரத் தியக்காத்மாவின் கண்ணே வியுத்பத்தி தார்ட்டியம், எங்ஙனம் மதியால் மைந்தன் அடைந் திடுவானே அங்ஙனம் உபதேசித்தனர். சுவாத்மபோத சமஸ்காரவசத்தினுலே சர்வசங்களி னும் வேருயதிசயமாய, பரமபுருடார்த்த ரூபத்தன்மையானே அவசியபோதார்ஹ அருத்தம் களேயுடையனவாய, வாக்கியகணங்களால் மகாத்மாவாய மகரிஷியானவர், போதிய அளவு விருக்ஷாக்கிரத்தில் எதிரிலிருக்கும் மைந்தனைநோக்கி அந்தரிக்ஷத்தில் மேகமானது, சிரவண மாத்திரத்தானே சிகண்டிகட்குப் பிரீதியுண்டாக்கலான் அன்னியாசம் அதிகரித்த, சிகண்

டிகளோடுகூட நிருத்தியாதி யருத்தங்கள் எவற்ருலாமோ, அத்தகையனவாய, கர்ஜிதசமூஹங்களானே, மேகமானது தன் முன்னிருக்கும் மயூரத்தையொப்ப, உபதேசம் புரிந்தனர்.

(ச.) கதைகள் — ஆக்கியாயிகை ஆக்கியானம் என இருவகை, அவற்றில் பிரத்தியக்ஷமாகப் புலப்படும் பொருள் ஆக்கியாயிகை, பரோக்ஷ விருத்தாந்தம், ஆக்கியானம்; உவமைகள்—சுவஞான கற்பிதமான திருஷ்டாந்தங்கள், நெறிகள் — கதைக்கிரமங்களுமாகிய விசித்திரயுக்திகளால். (77)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தமக்கும் தாசூரமுனிவருக்கும் ஒருகால் உண்டாய சந்திப்பிற்கு மானுக்குபதேசித்த பொருள்களைக் கேட்டபடி யுரைப்பேம் என ஸ்ரீ. வசிஷ்டபகவான் கூறல்:—வானதியென்பது.

**வானதிமூழ்கவது நெறியாகவானிலே மறைந்துபோ யொருநா**
**ளானவேழ்முனிவர் பதவிநின் றணுகி யனையதாசூரன் வாழ்கடம்பின்**
**றானமேமேவி யிருட்பொழு திருந்துதாபதன் றனயனுக்குரைத்த**
**ஞானநற்பொருள்கள் கேட்டனம்தனை நாமுனக்குள்ளவா றுரைப்பாம்.(78)**

(ப - ரை.) வானதிமூழ்க—ஸ்ரீ கங்கையில் ஸ்நாநம்செய்யும் பொருட்டு, அது நெறியாக — அம்மார்க்கமாய், வானிலே மறைந்துபோய், ஆகாயத்திலே மறைந்துசென்று, ஒருநாள் — ஒருசமயம், ஆன எழ்முனிவர் பதவிநின் றணுகி — சர்வவளப்பங்களுடனும் விளங்குவதான சப்தமுனி மண்டலம்வாழும் ஸ்தானத்தினின்றும் சென்று, அனையதாசூரன் வாழ்கடம்பின் — மேலேகூறியபடியாய தாசூரமுனிவர் வசிக்கும் கதம்பதருவின், தானமேமேவி — இடமேயடைந்து, இருட்பொழுதிருந்து — அந்தகார சமயத்திற்றங்கி யிருந்து, தாபதன் தநயனுக்கு உரைத்த — தவமுனிவர் குமரனுக்குபதேசித்த, ஞானநற்பொருள்கள் —நல்ல ஞானர்த்தங்களை, கேட்டனம் அதனை — வினவினேம் அவற்றை, நாம் உனக்குள்ளவாறு உரைப்பாம் — யாம் இராகவா உனக்குக் கேட்டபடியே கூறுவேம்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராமச்சந்திர ! யாம் ஒருசமயத்தில், ஸ்ரீ கைலாசவாசினியாகிய மந்தாகினியில் ஸ்நாநஞ்செய்யும் பொருட்டு அந்தத் தாசூரகதம்போபலக்ஷிதமாய மார்க்கத்தானே அதிருசிய ஆத்மாவாய் வியோமவீதி சென்று வந்தேம், சப்தமுனி மண்டலத்தை கோடரம்போல எகதேசமாக வுடையதியலோக ஆகாசத்தைக் கடந்து, ஹேசுமதியே ! உன்னதமான தாசூரதருவை யிரவில் அடைந்தேம், குட்மல அம்போஜலக்கினமாய அறுகாவின் றெனிபோலும் விடபகு சுரத்தினின்றும் கானனத்தில் வாக்கியத்தை விடாமற் கேட்டேம், கேட்டமுழுதையுமே உனக்குக்கூறுவேம்.

(ச.) ஸ்ரீ வசிட்டமுனிவர்:—மறைந்து — யாம் அதிருசியரூபமாய், அணுகி—அம்பரத்தைக் கடந்து, உரைத்த, குவிந்த அம்போஜ மத்தியத்திருக்கும் வண்டின் றெனிபோல் விடபகுசுரத்திருந்து உபதேசித்தார்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ வசிட்டபகவான் எவ்வசனத்தைக் கேட்டுவந்தனரோ அவ்வசனத்தையே கூறத்தொடங்கல்:—பிறப்பிலா வென்பது.

**பிறப்பிலாப் பிரமமிது வெனவறுதி பிறப்பதோர் கதையிதுகேளாய்**
**சிறப்பதோ ராசன்வீரமும் புகழுஞ்சிறந் தவன்றெனி ஞும்பெயரோ**
**னிறப்புறு முலகபாலராயுள் ளாரவனுடை யேவலே முடிமே**
**னிறப்புறுமணிபோற் றங்குவரெவர்க்கு நிலைபெறநிறுத்தெ தா ஞெடியோன்.(79)**

(ப - ரை.) பிறப்பிலாப் பிரமம் இது என — அஜமாயபிரஹ்மம் இஃதென்று, அறுதி பிறப்பது — நிச்சயம் உண்டாவதாய, ஓர் கதையிதுகேளாய் —ஒப்பற்ற ஒருகதையிதுவாம், யாம் ஓதக்கேட்குதி, சிறப்பது ஓர் அரசன்—ஒருமன்னவன் மிகவுஞ் சிறந்தவன், வீரமும் புகழுஞ்சிறந்தவன் — வீரியமும் கீர்த்தியும் மிக்கவன், தெளிஞனும் பெயரோன் — நாமத் தானே கோத்தன் என்னும் ஸ்ரீமான், இறப்புறும் உலகபாலராயுள்ளார் — அநித்தியமான புவநநாயகரா யிருப்பவர், அவனுடை யேவலைமுடிமேல் — அவ்வரசனுடைய அநுசாசனத் தைச் சிரத்தின்மீது, நிறப்புறுமணிபோல் தாங்குவர் — தனிகர் சூடாமணியை உயர்வாகப் போற்றுதல்போலத் தரிப்பர், எவர்க்கும் நிலைபெற நிறுத்தொணு நெடியோன் —எவரானும் மூவுலகத்தின் கண்ணும் அம்மகாத்மா வசீகரிக்க முடியாதவன்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாமதிமானுகியமைந்த ! இச்சமுசாரத்தின் உபமான பூதமாய மகா ஆச்சரிய ஒரு ஆக்கியாயிகை உனக்குரைப்பேம், இதனை யொருமையுடன் கேட்டி ! முப்பு வனத்திலும் விக்கியாதனும், மகாவீரியனும் ராஜா ஒருவன் உளன், நாமத்தானே கோத் தன் — அவ்யாகிருத ஆகாசத்தினின்றேனும், காலத்திரயத்திலும் ஜகத்தில்லாத பிரஹ்மா காசத்தினின்றேனும், எழுந்தவன்; என்னும் ஸ்ரீமான், ஜகதாக்ரமணக்ஷமன், இவனது அநு சாசனத்தை எல்லாப் புவனங்களிலு மிருக்கின்ற பிரஹ்மாதிகள் யாவருமே, தனிகர்சூடா மணியை உயரத்தரிப்பதேபோலச் சிரத்திற்றரிப்பர்கள். இவ்வுலகங்கள் மூன்றிலுமே எவரா லுமே அம்மகாத்மா வசீகரிக்கப்பட மாட்டான்,

(சு.) கேளாய் — இவ்வஸ்துவினது தன்மைக்குச் சமானமாக இவ்வாக்கியா யிகையை வர்ணிக்கின்றேன் என்றதாயிற்று, தெளிஞனும் பெயரோன் — சுகோத்தன் என்னும் நாம முள்ள ஸ்ரீமான், முடி — சிரங்களால், மேனிறப்புறு மணிபோல் — உத்தமமான உயர்ந்த சூடாமணிபோல், தெளிஞனென்பது முதலிய நாமபேதங்களாற் கோபிதார்த்தமான ஆக் கியாயிகையைப் புத்திரனது வினுவின்பின் தாசூரன்றுனே விரித்துரைப்பானுயினும், அங்ஙு னம் சிறிதுசொல்லப் படுகிறது. (79)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மகாத்மாவின் பெருமையையே மீண்டும் எடுத்துரைத் தல்:—சாகசமென்பது.

**சாகசமொன்றும் விரும்புவோன் பலவாச்சாலவும் வியப்புறு தொழிலோன்**
**சோகமுமகிழ்வுந் தருவதாய் முயலுந் தொழில்களின் றொகுதியை யெண்ணின்**
**மாகடலலைக ளெண்ணினுந் தொலையாவாட் படைவாயு வன்னிகளி**
**லேகமுமிவனை யடர்வுறுதாகு மிருகையால் விண்ணையென் செயலாம்,** (80)

(ப - ரை.) சாகசம் ஒன்றும் விரும்புவோன் — சாகசைகரசிகன், பலவாச்சாலவும் வியப்புறு தொழிலோன் — நானு அத்தியந்த ஆச்சரிய விகாரவான், சோகமும் மகிழ்வும் தருவதாய் முயலும் — சுகதுக்கங்களை யீவனவாகச் செய்யும், தொழில்களின் தொகுதியை எண்ணில் — தொழிற்கூட்டத்தைச் சங்கையிடின், மாகடல் அலைகள் எண்ணினுந்தொ லையா — மகத்தான சமுத்திரத்தின் தரங்கங்களைச் சங்கையிடினும் முடியாதகாரியமாம், வாட்படை வாயுவன்னிகளில் ஏகமும் — கூர்மைபொருந்திய சஸ்திரங்கள் காற்றுகனல் என் பவற்றுள் ஒன்றேனும், இவனை அடர்வுறுதாகும் — இம்மகாத்மாவை யெதிர்த்துப்போராடி டாததுஆகும், இருகையால் விண்ணையென் செயலாம்— இரண்டு முஷ்டிகளால் ஆகாயத் தையாது செய்தல் கூடும்.

(ஸ்ரீ-வீர.) அக்கோத்தன் பலாத்காரமான பிடிவாத மொன்றிலேயே மிகவும் ரமிப்ப வன், அநேகவகையான ஆச்சரியச் செய்கைகளைச் செய்பவன், அத்தியந்தம் மேலும்மேலும்

சுகதுக்கங்களைத்தரும் அவனது ஆரம்பசகத்திரங்கள் யாவராற்முன் எண்ணமுடியும், கடலின் கல்லோலங்கள் எண்ணமுடியா தனபோலும். மிக்கவீரியம் வாய்ந்த அவனது வீரியம், சஸ்திரங்களாலேனும் பாவகாதிகளாலேனும் புவனத்தில் எவராலும் அபிபூதமாயேனும் அநுசுருதமாயேனும் செய்யமுடியாதாம், முட்டியால் ஆகாயம் போலும்.

(ச.) சாகசம் — தான்பிடித்ததை விடாது நிறைவேற்றல்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்மகாத்மாவின் பெருத்த மகாத்மியத்தையே மீண்டுமியம்பல்:— வரம்பற வென்பது.

**வரம்பறவிரிந்து லீலையாற் புரியுமட் டறு முயற்சிக ளனைத்துந்**
**திரம்பெறுதேவர் மூவராலெனினுஞ் சிறிதுபிற் செல்லவுமரிதாம்**
**பரம்பிய விவனுக்குடலமா யெல்லாம் பரிப்பவர் மூவருண்டனைய**
**ருரம்பயி லுலகையடர்ந்து நிற்பவர் களுத்தமன் மத்திமனதமன். (81)**

(ப - ரை.) வரம்பு அறவிரிந்து — எல்லையில்லாமல் விஸ்தரித்து, லீலையால்புரியும் — விநோதமாகச் செய்யும், மட்டறு முயற்சிகள் அனைத்தும் — இவ்வளவென்னுதை ஆரம்பங்கள் யாவும், திரம்பெறு தேவர்மூவர் ஆலெனினும் — நிலைபெற்ற இந்திராதி தேவர்களாலேனும் பிரஹ்மாதி மூவர்களாலேனும், சிறிது — அற்பமும், பிற்செல்லவும் அரிதாம் — பின்றொடர்ந்து நேரவும் முடியாதனவாம், பரம்பிய இவனுக்கு — விரித்து விளையாடும் இம்மகாநுபாவனுக்கு, உடலமாய் — தேகங்களாய், எல்லாம்பரிப்பவர் — யாவற்றையும் ஆக்கித்தாங்குபவர், மூவருண்டு — மூன்றுபெயர் இருக்கின்றனர், அனையர் — அம்மூவரும், உரம்பயில் உலகை — அதிதிடமான இந்தஜகத்தை, அடர்ந்து நிற்பவர்கள் — ஆக்கிரமணஞ் செய்து வாழ்பவர், உத்தமன் மத்திமன் அதமன் — உத்தமமத்திம அதமராவர்.

(ஸ்ரீ-வீர.) அம்மகானுடைய, அற்பப்பிரயோஜனமாயினும் வெகுவெகு கற்பனைசகத்திர சங்குலத்தன்மையானே வித்தார ஆரம்பமாயும், கனுமனோரதாதி நிர்மாணங்களானே மிக மிகவுமிலங்குவதாயும், உள்ளலீலையை, இந்திர உபேந்திருத்திராதியரும் சிறிதும் அநுசரித்துச் செல்லும் ஆற்றலற்றவராவர். ஹே மகாபாகுவே! அம்மகானுக்கு மூன்று தேகங்கள், சர்வவிவகாரக் கிரீடா சமர்த்தங்களாய், சாத்விக இராஜசதாமச பேதமுடையனவாய், அதனுனே உத்தமமத்தியம அதமங்களாய், ஜகதாக்கிர மணங்களாய், உளவாம்.

(ச.) இவனுக்கு = அக்கோத்தனுக்கு, உடன் முதலெல்லாம் பரிப்பவர் = திசைகளினிறையுஞ் சக்தியுள்ள, மூவர் = மூன்றுதேகங்கள் சத்துவாதி குணரூபங்கள். சுவோத்தன் என்றும் பாடம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்மகாமகிமை வாய்ந்தகோத்தன் நிர்மிதநகரத்தை வருணித்தல்:—முடிவிலா வென்பது.

**முடிவிலா விசும்பிற்றோன்றி யாங்குறைவோன் மூவகையுட லுடைமுதல்வ**
**னெடியவவ் விசும்பிலவன் றருநகர்நீண்ட வீதிகள்பதினுலா**
**மொடிவறும் பகுதிமூன்றினு லெழிலாரு பவனம்வனங்கள் செய்குன்றங்**
**கொடிநிகர் முத்தமாலை யேழ்வாவி குளிர்கொதிப் புளவிருதீபம்.**

(ப - ரை) முடிவிலா விசும்பிற்றோன்றி யாங்குறைவோன் = அதிவிஸ்தாரமாய ஆகாயத்திலுதித்து அங்கிருப்பவன், மூவகையுடலுடை முதல்வன் = மூன்றுபிரகாரமாய சரீரஞ் சார்ந்தகருத்தன், நெடிய அவ்விசும்பில் =விசாலமாய அவ்வாகாயத்தில், அவன்றருநகரம்= அம்மகாத்மா நகரத்தை நிர்மித்தனன், அதன்கண், நீண்டவீதிகள் பதினுலாம் = சதுர்தச

மகாமார்க்கங்கள் உளவாம், ஒடிவறும் பகுதிமூன்றினல் =விபாகத்திரய பூஷிதமாய்க்கெடா திருக்கும், எழிலார் உபவனம் வனங்கள் செய்குன்றம் = வன உபவனமாலைக ணிறைந்து கிரீடாசிகரிசுந்தரம் வாய்ந்தது, கொடிநிகர் = லதைபோலும், முத்தமாலை = தானத்தார் என்னும், ஏழ்வாவி = விளங்தவாபி ஏழால் எழின்மிகுத்துளது, குளிர்கொதிப்பு உள இரு தீபம் = சீதள உஷ்ணவடிவ இரண்டு தீபங்களையுடையது அந்நகரம். உள = அந்நகரில் இவையாவும் உள்ளனவெனினும் அமையும்.

(ஸ்ரீ - வீர.) இம்முச்சரீரங்களையுடைய மகாத்மா அதிவிததமாய வியோமத்திலிருந்தே யுண்டாகி, ஆண்டேஸ்திதியையு மடைந்து, பக்கிபோலும் சப்தபாதனும் ஆவன், பக்ஷியா னது வியோமத்திலேயே அண்டபிண்ட சிறகுமயத்தேகத்திரயான்மகமாய் முறையே உண் டாகி, யெவ்விடத்தும் அவமான ஐயமுடைத்தாகி, சாரமற்ற அரசுமுதலவற்றின்கனி சுவைக் கும் ஆசைமிக்குடைத்தாகி, சத்தமாத்திரத்தானே மேற்கிளம்பாநிற்கும், அருத்ததத்து வத்தை யாராய்ந்திடாது; அதுபோலவே இம்மகாத்மாவும், தூல சூக்குமகாரண வடிவமுச் சரீரமுடையவனுகிப் பிரஹ்மாகாசத்தின்கண்ணுண்டாகி யாண்டும் பீதியுடையவனுகி' துச்சமான விடயாசக்தனுகி, விதிநிடேதசப்தாறு பாதியாய்ப் பிரமிப்பன். அபாரககனமாகிய ஆண்டே பிரஹ்மாண்டரூப நகரத்தை அம்மகாத்மா உண்டாக்கினன், அது சதுர்த்தசலோக வடிவமகா வீதி களையுடையது, சதுர்த்தச வித்யாவடிவ வீதிமார்க்கவிபக்தமானது, விபாக மானதிரிலோக வடிவத்தானே யலங்கரிக்கப் பெற்றது, விபாகவேதத்திரயிவடிவத்தானே பூஷிதமாயது. வனங்களாகிய நந்தனுதிகளானும் உபவனங்களானும் மாலைசூடிக்கொண்டும், சுமேருமுதலிய கிரீடாசிகரிசுந்தரமாயும், முத்துமாலைக் கொடிகளைச் சூடிக்கொண்டதே போலும் ஏழுகடல் வாபிகளானே எழில்பெறப் பூடிதமாயுமிருக்கும் அந்நகரம், சீதள உஷ் ணுத்மக க்ஷீணமில்லாத தீபத்வயங்கள் என்னும் சந்திரசூரியர்களானே விராஜிதமுமாயது.

(ச.) பக்ஷிவியோமத்திலே யுண்டாயிருந் தழிவதுபோல, மூவகை—மூவகைச் சத்து வாதிருபங்களை, உடலுடை = சரீரங்களாகவுடைய, முதல்வன் = இக்கோத்தனும், முடி விலாவிசும்பில் = சிதாகாசத்திலே, தோன்றி ஆங்குறைவோன் லயிப்பவனுமாம் என்று ணர்க, அவன்றரும் = அவனல் நிருமிதமான, நகரம் = பிரமாண்டம், நீண்டவீதிகள் பதி னலாம்,=சதுர்த்தச புவனங்களே அதின்மகா வீதிகளாம், பகிர்ச்சிமூன்றினல் = மேல் கீழ் நடுவுலக பேதத்தால் மூவகைப்பிரிவுள்ளதாய், செய்குன்றம் = கிரீடாசிகரிகள் மேருமந்த ராதிகள், முத்தமாலை = நதிகள், வாவி=சமுத்திரங்கள். இருதீபம்= சந்திராருக்கர். மூலம். சத்திக்கின்றது இதன் கண்ணெனச்சப்தம் வியோமமாம், ஆண்டே வீழ்கின்றதெனச் சப்த பாதமுமாம் பக்கிபோலும். முத்தமாலை = சரித்துகள், அவற்றானே தவலிதமான வாபிக ளாம் கடல்கள். இந்து இரவிகளா மிருசுடர்களானே இனிதாக இலங்குமந்நகரம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நுதலிய நகரத்தில் அம்மகாத்மா நிருமித்த அபவாரகங்களை வரு ணித்தல்:—என்பன, மந்தவென்பன.

என்பன நிறைந்த விந்நகரத்தி லிவன்றருமப வரகினங்கண்
முன்புறுகீழ் மேனடுவெனும் பதங்கண்முழுதினு முழல்வுறவிதித்த
வன்புறுதூண் கண்மூன்றுள வெலுப்புமரங்களாற் செறிந்தனபுண்ணீர்
மென்படர்தோலா னெய்த்தினிதான விரிமயிர்க் கற்றையான்மேய்ந்த.

மந்தமாருதஞ்சூழ் சாலகமொன்பான் மருவினவைம் பொறியென்னுஞ்
சுந்தரவிளக்கால் விளங்குவவிரண்டு தோளெனுந் தோற்றமுமுடைய

வந்தமில்பரம பாவனைக்கஞ்சு மகங்காரப்பேய்கள் காத்தளிப்பச்
சந்ததமிலாத மாயையாலந்தத் தாணிபன்சமைத்த பாவறைகள்.

(ப - ரை.) என்பன நிறைந்த = கூறியவற்றானே நிரப்பப்பெற்ற, இந்நகரத்தில் = இப்பட்டணத்தில், இவன்றரும் அபவரக இனங்கள் = இம்மகாத்மாவாற் சிருஷ்டிக்கப்பெற்ற இல்லங்களின் ஈட்டங்கள், முன்புறு = முன்னாராக்கப்பெற்ற. கீழ்மேல் நடு எனும்பதங்கள் முழுதினும் = தாழ்ந்துயர்ந் திடைப்பட்டன வென்னும் புரங்களெவற்றினும், உழல்வுற விதித்த = சுற்றித்திரியும்படி விதிக்கப் பெற்றனவாம் வன்புறுதூண்கள் = வலிமைமிகுத்த ஸ்தம்பங்கள், மூன்றுள = திரயங்களுளவாம், எலும்புமரங்களாற் செறிந்தன-சுக்கிலதாருக்களால் நிரம்பினவாம், புண்ணீர் மென்படல் தோலால் செய்த்து = உதிரமுண்மேவ மென்மையாகப் போர்த்த சருமத்தானே பசைத்து, இனிதான = அழகான, விரிமயிர்க்கற்றையால் = விரிந்துள்ள கேசப்புற் கத்தையால், மேய்ந்த = மூடப்பெற்றனவாம்.

மந்தமாருதஞ்சூழ் = இளங்காற்றடிக்கும், சாலகம் ஒன்பான் மருவின = வாதாயனங்கள் ஒன்பது பொருந்தியுள்ளன, ஐம்பொறியென்னும் சுந்தரவிளக்கால் விளங்குவ = பஞ்சேந்திரியங்கள் என்னும் அழகிய தீபங்களால் இலங்குவன, இரண்டு தோளெனுந்தோற்றமு முடைய = இருபுஜங்கள் என்னும் மார்க்கங்களும் உடையன. அந்தமில் பரமபாவனைக் கஞ்சும் = கெடாததான பரமபாவனைக்குப் பயப்படும், அகங்காரப் பேய்கள், அகங்காரயக்ஷர்கள், காத்தளிப்ப = இரக்ஷித்துப் போற்றுவன, சந்ததம் இலாத = எப்போது மின்றிய, மாயையால் = மகாமாயா சக்தியால், அந்தத்தாணிபன் = அம்மகாத்மா, சமைத்த = உண்டாக்கிய, பாவறைகள் = அபவரகங்கள் = கர்ப்பக்கிரகங்கள், ஆம்.

(ஸ்ரீ - வீர.) சாஸ்திரீய கருமங்களானே மேற்கதி, அசாஸ்திரீயங்களானே கீழ்க்கதி, என்னும் வடிவினவாய வணிங் மார்க்கங்களானே சங்குலமிகத்த தந்நகரம், அத்தகைய அதி விபுலபத்தனத்தில் அம்மன்னவனால், ஜங்கமங்களும், விடயவியா மூடங்களும், உண்மனை போலும் ஆத்மாகாசபரிச் சேதகத் தன்மையானே அபவாகங்களும், ஆகிய தேவமானுடாதி தேககணங்கள், சிறப்புறவாக்கப் பெற்றனவாம்; மேலேசிலவும் கீழேசிலவும், சிலமத்தியினியோஜிதங்களாமே, சில சிரமிருந்தொழிந்திடும் சிலவோதாஞ் சீக்கிரம் விநாசிகளாகிப்போகும், கேசதிருணங்களால் வேய்ந்துளவாகும், நவத்துவாரங்களால் விபூஷிதங்களாம், நிரந்தரங்காற்று நிகழ்ந்து கொண்டிருக்கும், அளவறுமேற் சித்திரங்களன் விதங்களாம், தீபபஞ்சக ஞானேந்திரியங்களால் வாளொளிமிகுத்து வயங்காநிற்கும், இருதுடை யென்புகள் முதுகென்பென்னும் முத்தம்பங்கள் நாட்டப் பெற்றனவாம்; வெள்ளென்புகளே வம்சதாரு ஸ்தானீயங்களாக வுடையனவாம், ஸ்நிக்தமாம் ஆலேபமிருத்திகாஸ் தானீயங்களான சருமங்களானே மிருதுக்களாம், மார்க்கரூப புஜங்களானே சங்குலங்களாம், இத்தகைய மனைகளை மாயையால் மகாத்மாவாகிய அம்மன்னவன் ஆற்றி அவற்றில், அவ்வபவாகங்களை அபிமானங்கொண்டு காப்பவர்களாய், காரியகாரணங்களாற் பூஜ்ஜியர்களாய், சுவாமிபூதர்களாயுள்ள மகாயக்ஷர்கள் என்னும் அகங்காரங்களையும் மாயையினாலேயே சிருஷ்டித்துவைத்தனர்; அவ்வகந்தைகள் அனவாதம் ஆத்மவிவேகத்தானே பயமிகவடைந்தனவா யிருந்தன; அதனானே அவைகட்கு க்ஷயமெய்து மாதலின்.

(ச.) முன்புறுமிவன்றரு = அப்பூபதியா லியற்றப்பெற்ற, பாவறையினங்கள் = தேகரூபங்களே அந்தர்க்கிரகங்கள். உழல்வுற = அதிலதிலதிற் சிலசிலசில சஞ்சரிப்பனவாக, வன்புள தூண்மூன்று = ஆதாரபூதங்களான தம்பங்கள்; வாதபித்த கபரூபங்கள், அவைகளே தேகதாரணமாதலின் என்க; மயிர்க்கத்தை = கேசரூபமான திரணம்.

சாலகமொன்பான் = சுரோத்திராதிகள் என்னும், வாதாயனங்கள் = நாசியுட்டுளை முதலியன, பொறியெனும் = சட்சுராதி யிந்திரியபஞ்சக மென்னும், அந்தமில் பரமபாவ னைக்கஞ்சும், தத்துவஞானத்தால் நிவிர்த்திப்பதாதலின் என்க. வெள்ளென்புகளான் தாருக் கள். மஸ்ருண ஆலேபம் மிருத்துவும் அவற்றிற்காம், அவற்றுள் ஆலேபம் = பாகியத்து வக்காம், மிருத் = மாம்சமாம், புஜாதியங்களுபங்கள் வீதிகளாம், மஸ்ருணம் = ஸ்நிக்தம், கசிவுறுவது. (84)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அம்மகாத்மா அகங்காரப் பேயுடன் கூடியுலாவி நடித்தல்:— அசைதருமென்பது.

அசைதருமினிய பாவறைத்திரளி லகங்கரப்பேய்க ளோடுலாவிக்
குசைதரு விநோதம்விவிதமா வியற்றிக்கூடுறை புள்ளெனவுறைந்து
விசையினு லவற்றைவிட் டகன்றயலே மேல்வருபாவறை விதித்து
நசையுறமேவிப் பூதவாவேச நண்ணினர் போலவனடிக்கும்.

(ப - ரை.) அசைதருமினிய பாவறைத்திரளில் = சலனமாயுலவும் இன்பாலய அபவரக ஈட்டங்களில், அகங்கரப் பேய்களோடுலாவி = அகங்காரங்களாகிய யக்ஷர்களுடன் சஞ்ச ரித்து, குசைதருவிநோதம் = கடிவாளமீயும் கிரீடைகள், விவிதமாவியற்றி = நானுவகை யாகச் செய்து, கூடு உறைபுள் என உறைந்து = நீடத்தில் வாழும் விகங்கம் என்றுரைக் குமாறு இருந்து, விசையினுல் = வேகத்தினுல், அவற்றைவிட்டு அகன்று = அவ்வபவர கங்களை விடுத்து வெளிப்போந்து. அயலே = வேறுகவே பிறவிடத்தில், மேல்வருபாவறை விதித்து = இனிமேல் வாராநின்ற அபவரகத்தை விதானஞ்செய்து, நசையுறமேவி=ஆசை யுடன் அதனையடைந்து, பூத ஆவேசம் நண்ணினர்போல் = பூதம் பிடித்தாட்ட ஆடுமவர் போன்று, அவன் நடிக்கும் = அத்தாணிபன் நடனம்புரிவன்.

(ஸ்ரீ - வீர') பின் விவகாரவான்களாக இராநின்ற அதிசஞ்சல அபவரகக் கூட்டங்களில் மகீபதியாகிய சங்கற்பாத்மாஜீவன், கூண்டுகளிற் பறவைபோலும் நானுவிதமான கிரீடை யைச் செய்வன். திரிசரீரசதங்களில் உள்ளேயிருக்கும் யக்ஷர்களோடு லீலைகளால் வசமின்றி அசுவாதீனம் அடைந்ததுபோலு மிருந்து வாழ்ந்து மீண்டும் வெளிப்போந்து செல்வன். ஒருகால் அலையுமனத்தையுடைய அவனுக்கு, இல்லாததான பவிஷ்யத் நிர்மாணசொப்பனுதி சகத்துச்சிறிது போகந்தரும் வரைதிரமா யிருக்குமாறுசெய்து புகுந்து விளையாடாநிற்பேன் என்னும் இச்சையுண்டாம். பூதஆவிஷ்டனைப்போல நித்திராதியா வேசத்தானே ஜாக்கிரத் துத் தேகாதியபிமானம் விடுத்து அங்கிருந்தெழுந்தோடுவன்; கந்தர்வர்களானே நிர்மிக்கப் பெற்ற கந்தர்வநகரம் போலும் பொய்யாய புரத்தையதன்பின் அடைவன். ஓடுதலைச் சுருதியு மறைகின்றது:—“ அவ்விவனிந்த நனவி லிரமித்தும், கவ்விச்சரித்துங் கண்டே யறத்தையும் ஒவ்வின் மறத்தையு மொழிவறமீளவும், ஒவ்வும்பிரதி நியாயம் யோனியே, செவ்விதிற் செல் லுங்கனு முடிபிற்கே” பொருள்:—எங்ஙனமிவன் கனவில் அசங்கத்தன்மையானே கனுவழக் கினுலாம் தோஷங்களானே நனவில்வந்து நலியப்பற்று றுவதில்லையோ, அங்ஙனம் நனுவழக் காணண்ணிய தோடங்களானும் நலியப்பற்று றுவதேயில்லை யிந்நனவின் கண்ணும் என்ப தை யிம்மந்திர மியம்பாநிற்கும். இங்குவிவகரித்துக் கொண்டுவரும் சுயஞ்சோதியாய புருடன் இச்சாக்காரத்தின் மாட்டு இரதியையனுபவித்தும், மித்திரபந்து ஜனதரிசனுதியானே என்ப தாம், அநேகவகையாகச் சரணபல சிரமமிகவுற்றுச் சஞ்சரித்தும், புண்ணியத்தையும் பாவத் தையுங்கண்டே, செய்தின் றென்றபடி. புண்ணிய பலத்தையும் பாவபலத்தையுங் கண்டே யென்பதாம், புண்ணிய பாவங்களை நேரேகாண முடியாதன்றே, காண்டாலால் அறம்மறத்

தாற் கட்டுப்படான், யாவன்செய்வனோ அவன் கட்டுறுவன் அவற்றால், அவ்வறமறங்களைக் கண்ணுறுதன் மாத்திரையானே அவற்றாற் கட்டுறானன்றே, ஆகலின் கனவையடைந்து மிருத்தியுவைத் தாண்டவே செய்வன், கேவலம் மிருத்தியு ரூபங்களே யல்லவாம், அதனானே மிருத்தியுவிற்கு ஆன்மவியற்கைத் தன்மைச் சங்கையின்றாம், மிருத்தியு இவனுக்கு இயற்கை யாமேலாயின் கனவினுஞ்செய்க, செய்வதோ இன்றாம், இயற்கையேல் வினையாம், அநிர்மோக்ஷத்தன்மையேயாம், இயற்கையோ அல்லவாம், கனவிலின்மையின்; ஆகலின் இவனுக்கு மிருத்தியுவாகிய புண்ணிய பாவங்களினின்றும் விமோக்ஷம் பொருந்தும். அற்றேல் நனவில் இவனுக்கு இயற்கையேயாம் எனின் ? அற்றன்றாம், மதியாதி யுபாதியாலாக்கப் பெற்றதே யாமது, "சிந்திப்பதே சலிப்பதேபோலும்" என அதுவும் ஒப்புமையாலுரைக்கப்பெற்றது. ஆகலின் முற்றினுமே கனவில் மிருத்தியுரூப அதிக்கிரமணத்தால் சுவாபாவிகத் தன்மையா சங்கையேனும் அநிர்மோக்ஷத் தன்மையேனும், இலதாம். நிச்சிதம் ஆயம் = நியாயம், அயனம் = ஆயம், நிர்க்கமனம், மீளவும், முற்கமனமாறாக எவ்வாகமனம் உளதோ அது பிரதி நியாயமாம், சென்றபடி மீண்டும் வந்ததென்றபடி பிரதியோநி = யதாஸ்தானம், யதாஸ்தானத்தையே நோக்கிமீண்டும் வருகின்றது, கனாந்தங்குறித்தே ஓடிவரும். அவன் அந்நனவில்யாது சிறிதுகாண்பன், அதனாற்றொடர் புறான், அசங்கனேயாவனா மிப்புருடன் என்பது சுருதியாம். அற்றேற்கண்டேயென யாங்ஙனம் துணியப்பெறும், செய்கின்றானன்றே ஆண்டறமறங்களை, அவற்றின் பயனையும் காண்கின்றனன், எனின் ? அற்றன்றாம், காரக அவபாசகத்தன்மையானே கருத்துருத்துவங் கூடலின், ஆன்மச்சோதியானே யிவனிருப்பன் என்பதாதியானே; ஆன்மச்சோதியால் நன்கிலங்கப் பெறுவதாய்க் காரியகாரண சங்காதம் விவகரிக்கின்றது, அதனாலிதற்குக் கருத்துருத் தகைமை யுபசரிக்கப் பெறுகின்றது, தானாகக்கருத்துருத் தகைமையிலதாம், தியானஞ்செய்வதே போலும் லீலைசெய்வதே போலும் என அவ்வாறு கூறவும் பெற்றிருக்கின்றது, மதியாதியுபாதி யாலாக்கப்பெற்றதேயாம் சுயமாயல்லவாம்; புண்ணியத்தையும் பாவத்தையும் கண்டே செய்தன்று என்னுமீண்டோ பரமார்த்த அபேக்ஷையானே உபாதிநிரபேக்ஷ முரைக்கப் பெறுகின்றது; அதனால் முன்னொடு பின்முரணும் வியாகாத ஆசங்கையிலதாம், எதனால் நிருபாதிகம் பரமார்த்தமாகச் செய்யாதோபற்றுறாதோ கிரியைப்பயனால், அவ்வாறே ஸ்ரீ பகவானும் திருவாய்மலர்ந்தருளுவர்:-- உணர்வ விகாரியென்றும் வினையெலா முடம்பினோடே, புணர்வன வென்றுங் கண்டான் பொய்யிலா மெய்யைக்கண்டா, னிணர்மலர் முடியாயெல்லா வினைகளுஞ் செயினுமான்மா, குணமிலியாதலாலே யவற்றொடுங் கூடிநில்லான், என்பதாம், முன்னும் அசங்கத்தன்மையே மொழியப்பெற்றதாம், ஆதலின் முத்தானங்களிலும் சுயம் அசங்கமேயாமிது, அதனானே தானத்திரயதரும விலக்ஷணமாம். கனாமுடிபிற்கே = நித்திரைக்கே, நித்திரையை நோக்கியோடு மென்றபடி,

(ச,) குசைதரும் = தருப்பைகளா லியற்றப்பெற்ற, கூட்டு=கூண்டுகளில் பாவறை= தேகாந்தரம். (85)

**இவற்றைவிட் டவற்றையெய்துவ மென்றேயெண் ணுறவப்படியெய்து**
**மவற்றினின்றிறப்போ மென்றெண்ணு நினைவாலப் படியிறந்து போஞ்சித்தங்**
**கவற்றியாலலையப் பிறந்திறந் துழலுங்கனமே யிவற்றினுக்கிடமாந்**
**தவற்றினையெய்தி மீளவுந்தோன்றுந் தவழ்திரை நீரிலேவரல்போல்.**

(ப - ரை.) இவற்றைவிட்டு = இவ்வபவகங்களை விடுத்து, அவற்றை = அப்பாவறைகளை, எய்துவம் =யாமடைவேம், என்று எண்ணுற = என்பதாக இச்சைசெய்த அளவில், அப்படி எய்தும் = அவ்வாறே அடையும், அவற்றினின்று = அவ்வபவுரகங்களி னின்றும்,

இறப்போம் என்று எணும் நினைவால் = இறந்துவிடுவோம் என்பதாகச் சங்கற்பிக்கும் சங் கற்பத்தால், அப்படி யிறந்துபோம் = அவ்வாறு மரித்துப்போம், சித்தம் = மனமானது, கவற்றியால் = வருத்தத்தால், அலைய = அலைவதற்காக, பிறந்து இறந்து உழலும் = ஜனித்து மரித்து அவதிப்படும்; ககனமே யிவற்றினுக்கு இடமாம் = ஆகாயமே இவ்வியாவற்றிற்குத் தலமாம், தவற்றினையெய்தி = தவறுதலையடைந்து; மீளவுந்தோன்றும், மறித்தும் பிறந் திடும்; தவழ்திரை நீரிலேவரல்போல் = கடலின் கண்ணேயுழலும் தரங்கம் மாறிமாறி வருதல்போலும்.

(ஸ்ரீ - வீர.) ஒருகாற் சஞ்சலசித்தம் வாய்ந்த அவனுக்கு இச்சையிங்ஙனுண்டாம், விநா சம் நன்கடைவேன் என, அதனால் விரைவில் அவன் விநாசத்தை யடைவன்; அதாவது சங் கற்பலயா வஸ்தையாகிய துயிலையடைவன் என்னும் அவாவால் விரைவில்காரண அவத்தை யின்கண்ணே கர்மபீஜ சமஸ்காரசேஷம் காகங்கடுப்ப விலீனமாம். மீண்டு முற்பன்னனுவன் விவேகமாக முன்னியற்கையினனே, அவனேயா னென்னும் துயின்றெழுந்தானுக் குண்டாம் பிரத்திய பிஞ்ஞையநுபவத்தா லென்பதாம், நீரி லூர்மி நிகழ்வதேமானும். (86)

மேனிமூன் றுடையோன் சிறந்தகந்தர்ப்ப விதித்தவூரனை யதற்புரத்திற்
றனினிதிருந்து தொலைவற மேன்மேற்றழைப்புறு காரியவசனு
யீனமாமொரு கானன்மையா மொருகாலென் செய்வோமென் றிடுமொருகான்
மானமாமொருகான் மயக்குறுந்தெளியும் வருந்துறு மகிழ்வுறும்பல்கால்.

(ப - ரை.) மேனி மூன்றுடையோன் = முத்தேகங்களை உடையவன், சிறந்த = அநேக விசித்திர சம்பத்துடைய, கந்தர்ப்ப விதித்தவூரனைய = கந்தர்வர்களானே நிர்மிக்கப்பெற்ற புரம்போன்ற. தற்புரத்தில் = தனது நகரத்தில், தான் இனிது இருந்து = தான் ஆனந்த மாக வீற்றிருந்து, தொலைவற = ஒழியாமல், மேன்மேல் = மேலும்மேலும், தழைப்புறு காரியவசனாய் = விருத்தியாகுந் தொழிற் பரவசனாய், ஈனமாம் ஒருகால் = ஒரொருபோது கெடுதலையடைவன், நன்மையாம் ஒருகால் = ஒரொருபோது நலத்தை நண்ணுவன், என் செய்வோம் என்றிடும் ஒருகால் = செய்யற்பாலது யாதோ எனவோதுவனே ரொருபோது, மானமாம் ஒருகால் = அபிமானத்தை யடைவன் ஒரொருபோது, மயக்குறுந் தெளியும் வருந்துறும் மகிழ்வுறும் பல்கால் = பலபோது மயங்கித்திரிவன்; தெளிவுற்றுலவுவன், துக் கத்தையடைவன், சந்தோஷத்தை யெய்துவன்.

(ஸ்ரீ - வீர.) மிகமிகவும் மீளமீளவும் ஓங்கிவளரும்படியாக விவகாரத்தை விரிப்பன் மீண் டும் பையத்தொடங்குவன், தானே விவகரித்தொருகால் சத்துருரோக தரித்திர முதலியவற் றுனே பெருந்துன்பத்தை யடைவன், யான் என்னசெய்வேன் என்றும், யான் அறியாதவனு யிருக்கின்றேனேயென்றும், துக்கியாயிருக்கின்றேனே யென்றும் சோகப்பட்டுழல்வன், பூர்வ மநுபவித்த சுகத்தைத் தண்டியேனும் நினைத்தேனும் ஒரொருபோது சுயந்தீனத் தன்மை யையடைவன், முதத்தையடைந்து ஒரொருபோது தானேயீனத் தன்மையைத் தரிப்பன் மேகங்கள் பொழிந்து தரங்கங்கள் எழுந்து உல்லாசமாய்ப் பெருகும் பூரணப்பிரவாகத்துப் பெருமையினுல் நதியின்வேகம் போலும், அதன் சிறுமையினுல் அஃதின்மைபோலும் கூறிய பீனத்தன்மை தீனத்தன்மைகளை யுணர்க. (87)

(ச,) கந்தர்ப்பர் = கந்தருவர்களால்,

தளர்ந்தனனென்னுந் தடித்தன னென்னுந் தாழ்ந்தன னுயர்ந்தனனென்னும்
வளர்ந்தனனென்னுங் குறைந்தனனென்னு மாருதமோதுறு கடல்போ
லுளர்ந்தனலந்த மன்னவன் சுழல்வதுரைப்ப தெனென்றலு மைந்தன்
இளர்ந்தாதையை நீதெளினுனென் றுரைத்த கீர்த்தியோ னுரெனக் கேட்டான்.

(ப - ரை.) தளர்ந்தனன் என்னும் = இளைத்தேன் என்பன், தடித்தனன் என்னும் = பருத்தேன் என்பன், தாழ்ந்தனன் உயர்ந்தனன் என்னும் = கீழவன் ஆயினேன் மேலவன் ஆயினேன் என்பன், வளர்ந்தனன் என்னும் = நெடியவன் ஆயினேன் என்பன், குறைந்தனன் என்னும்=குறியவனாயினேன் என்பன், மாருதம் = பெருங்காற்றால், மோதுறுகடல் போல் = அடிபட்டுச் சிதறுஞ் சமுத்திரம்போல, உளந்தனால் அந்தமன்னவன் = மனத்தினால் அம்மகிபதியானவன், சுழல்வது = சுற்றித்திரிவது, உரைப்பது என் = சொல்வதென்னே; என்றலும் = என்று தந்தைகூறலும், மைந்தன் = குமரன், இளந்ததாதையை = இவ்வாறருளிய மகிமைவாய்ந்த தந்தையாகிய ஆசிரியரைநோக்கி, நீ=தேவரீர், தெளிஞன்= கோத்தன் = சுவோத்தன், என்றுரைத்த = எனவருளிய கீர்த்தியோன் = கியாதிவாய்ந்தவன் , ஆரெனக்கேட்டான் = யாரென்று வினவினான்.

(ஸ்ரீ - வீர.) ஹே மைந்த ! அம்மகாத்மாவாகிய முன்மொழிந்த மகீபதி, பிறரைமடக்கு மாற்றல் மிகுதியாயவழி பிறர்மேல் நடப்பன், ஓட்டெடுப்பிப்பன் வெற்றிகொள்வன் சுற்றித்திரிவன், சம்பத்தையடைந்து பெருமிதங்கொள்வன், பெருஞ்சஞ்சல மடைவன், நனுக்கனுக்களில் விளங்காநிற்பன், துயில் பிரளய சமாதிமுக்திகளில், விளங்கவுமாட்டான், உள்ளேயிராநின்ற ஆத்மச்சோதியினாலே விளக்கமுடையவனா யிருப்பன், அதனானே மகாமகிமை வாய்ந்தவனாகி யிலங்குவன்; வாயுவேகத்தால் ஆகுலமுற்ற நதிகளின்பதியேபோல அலைவுறுவன். ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—அதன்பின் ஜம்புத்தீவில் மகாகிரியில், பெருங்கதம் பவிருக்ஷ உச்சியில் சிரோபூஷணமா யிலங்கும் பவித்திர இருதயத்தையுடைய தந்தையைப் பணிந்து அந்தமைந்தன் ஆண்டுவினவத்தொடங்கினான்; புத்திரன் புகலல்:—ஹே தந்தாய் ! கோத்தன் என்னும் பிரக்கியாதியையுடைய உத்தம ஆகிருதிவாய்ந்த அப்பூபதியாவன்? இப்போது தேவரீரால் செப்பப்பெற்ற இச்சரிதமியாது ? இதனை யதார்த்தமாக அடியேனுக் கருள வேண்டும். கேட்டபடியாய அர்த்தத்திற்றூற் பரியமில்லை, மற்றேறு, மற்றதிற்றூற் பரியம் என உன்னா லுணரப்பெற்றது யாதுகாரணம் எனின் ? பவிஷ்யத்தாக நிர்மாணம்புரம் சிறிது போகந்தரும் வரைதிரமாமாறுசெய்து புகுகின்றேன் என்பதாதிய வாக்கியங்களில் இனி வருந்தன்மையிப் போதிருக்குந் தன்மைகட்கு ஒருபோதுறைதல் முரணுதலின் சேர்க்கைப் பொருளுடைமையின்மைகாணப் பெறுதலின், பவிக்கும் நிர்மாண மியாண்டையது வர்த்தமானப் புகுதல் யாண்டையது. இருபொருண் முரண்பாட்டால் அடியேன் மயற்பொருட்டேயாகின்றது தேவரீரது திருவாக்கியம்; என்றனன் மைந்தன் என்பதாம்.

(ச.) என = இஃதனைத்தும் உள்ளபடி எனக்கு உபதேசியுமென்று கேட்டான்,

(அ - கை.) தாசூரமுனிவர் கூறல்:—வண்மையென்பது.

**வண்மையாலந்த மன்னனை யுரைத்தால் வரும்பிறப்பிறப் பெனும்பொய்யி**
**னுண்மைநன்குணர்தி யென்றுதாசூர னுத்தமமைந்தனுக் குரைப்பா**
**னெண்மயமாகிப் பொய்யெனத் தோன்றியிடமுற விரிமுயற்சியதாய்க்**
**கண்மயலான பிறவியினிலையைக் கட்டுரையாக முன்னுரைத்தோம்.**

(ப - ரை.) வண்மையால் = உள்ளபடி, அந்த மன்னனை = அப்பூபதியை, உரைத்தால் = இன்னானெனத் தெரியச்சொன்னால், வரும்பிறப்பு இறப்பு எனும் = ஆரோபிதமாக வாராநின்ற ஜனனமரண சக்கிரமென்னும், பொய்யின் உண்மை = மித்தைமயக்கத்தின் றத்து வத்தை, நன்குணர்தி = நன்றாக நீதெரிந்து கொள்ளுவாய், என்று = என்பதாக முன்னருரைத்துப்பின், தாசூரன்=அப்பெயரிய முனிவர்பெருமான், உத்தமமைந்தனுக்கு=

நான்கு சாதனங்களும் நிறைந்த தஞ்சீடனுக்கு, உரைப்பான் = உபதேசிக்கத் தொடங்கினர், எண்மயமாகி = சங்கற்பமாத்திர வுருவுடையதாய், பொய் எனத்தோன்றி = அசத்தென வெழுந்ததாய், இடமுற விரிமுயற்சியதாய் = விலாசமாக வித்தரித்த யத்தனத்ததாய், கண் மயலான = தேசகாலாதிய வஸ்துமயமதாய், உள்ள, பிறவியின்நிலையை = இச்சமுசாரக் கட்டுப்பாட்டை, கட்டுரையாக = புனைந்துரையாக, முன் = பூர்வம், உரைத்தோம் = யாம் கூறினேம்.

(ஸ்ரீ - வீர.) தாசூரமுனிவர் கூறுவதாவது:—ஹே புத்திர ! இதனையுள்ளபடி உனக்கு யாமுரைப்பக் கேட்குதி, எதனுல் இச்சமுசார சக்கரத்தின் றத்துவத்தை யுணர்ந்துகொள்ளு வாயோ; பரமார்த்தசத்தா ஞனியமேயாய அஞ்ஞானத்தினின்றும் ஆரோபிதமாய் விவர்த்த மாக மிகக்கிளம்பியதாய், அதனுனே அவஸ்துவாயமாயாமயமதாய், அதிவிஸ்தாரமாய், உள்ள, இச்சம்சாரப்பொய் சம்ஸ்தானத்தையே, இவ்வாறு இப்பொருளின் போதனப்பொ ருட்டுப் பரோக்ஷகற்பனையானே வருணித்தோம். (89)

தற்பாவிசும்பி லுதித்தசங்கற்பஞ் சாற்றிய தெளிஞ்ஞ மன்னன்
பற்பலகாலுந் தோன்றியு மறையும் பரம்பிய வுலகதன்வடிவா
மற்பசங்கற்ப முளதெனி லுலகுண்ட துவிலதெனி லுலகிலதா
முற்படுமூவர் முதலியதேவர் மொய்த்தமெய் யவயவமதற்கே.

(ப - ரை.) தற்பாவிசும்பில் உதித்த = தன்மயமான வியாபக ஆகாசத்தில் உதயமாகிய, சங்கற்பம் = எண்ணமே, சாற்றிய = உனக்குரைத்த, தெளிஞும் மன்னன் = கோத்தன் என்னும் மகிபதியாவன், பற்பலகாலும் = பலபலபோதும், தோன்றியும் மறையும் = தாஞகவே புலப்படும் தாஞகவே இலயமாம், பரம்பிய உலகு = விஸ்தாரமாய இச்சகமுழுதும், அதன்வடிவாம் = அச்சங்கற்ப வடிவமேயாம், அற்பசங்கற்பம் = தோற்றரவுமாத்திரமாகிய நினைவு; உளது எனில் = உண்டாம் ஆயின், உலகு உண்டு = இச்சகமுளதாம், அது இலது எனில் = அவ்வெண்ணம் இலதாயின், உலகு இலதாம் = இச்சகம் இல்லதேயாம், முற்படு மூவர் = முன்னேசொன்னமுதன்மைவாய்ந்த மும்மூர்த்திகள், முதலியதேவர் = ஆதியேயாய தேவர்கள், மொய்த்த = நெருங்கிய, மெய் அவயவம் அதற்கே = அதனது சரீர அவயவங்களேயாம்;

(ஸ்ரீ - வீர.) பரமமாய ஆகாசத்தினின்றும் சங்கற்பப் பிரதானமாய மனமானதுண்டாயது, சமஷ்டி வியஷ்டி மனத்தினுக்கு, ஏகீகாரமாக, காத் = அவ்யக்த ஆகாசத்தினின்றும், உத்த = எழுந்தது, என்னும் வியுற்பத்தியினுனே கோத்தன் எனப்பெயராம்; சுவோத்தன் எனப்பாடமேல் தன்னினின்றும் எழுந்தவன் என்றுபொருள்கூறிக்கொள்க. தானுயெழுந்தது சுயம்பு எனினும் அமையும் சுயமாகவே தற்சங்கற்ப ஜன்னியப் பிரவிருத்திவாசனை யுற்பவத்தானே யுண்டாமது; நிவிருத்திவாசனை தாட்டியத்தானேயோ சுயமாகவேவிலீனமாம். இவ்வெல்லாவுலக வித்தாரமும் அதன்பரிணமமாகவே யிருக்கும், நுதலியபொருளை அதன் உடன்பாடெதிர் மறைத்தொடர்பு காட்டலானே திரப்படுத்தல்:—அஃதுண்டாமேலாயின் உண்டாம் அஃதொழியுமாயின் ஒழியும் என்பதாம், அற்றேல் பிரஹ்மவிஷ்ணு வாதிகளின் சமபந்தத்தானே ஜகத்துண்டாயது எனக்கேட்கப் பெறுகின்றது அங்ஙனமாக யாங்ஙனம் அன்னியத்தினின்றும் உண்டாகின்ற தென்றுகூறுதல் கூடும் எனச்சங்கித்து விடைதருதல்,—பிரஹ்மா விஷ்ணு இந்திரன் ருத்திரன் முதலியவர்கள் அதற்கே யவயவங்கள் எனக் கூறப்பெறுவார்கள், கிளைகப்புக் கொம்புமுதலியவை விருக்ஷத்திற்கே போலும் சிருங்கங்கள் பர்வதத்திற்கே போலும்.

(ச.) பலகாலும் (தானே) தோன்றி, உலகு=இச்சகமனைத்தும். (90)

மேயதன் பத்திப் பாச்சன் மாத்திரத்தால் விரிஞ்சனும் பாவனைமேவி
யாயசங்கற்பம் வடிவிலா விண்ணி லமைத்தது முப்புவிநகா
நாயகரீரேழாகிடு மீரேழ்ஞாலமே நகருறு தெருக்க
டூயஞாலங்கள் செறிபொழிற் றிரள்கள்சொல்லிய வனமுபவனமே.

(ப - ரை.) மேயதன் பத்திப்பாச்சன் மாத்திரத்தால் = பொருந்திய தனது பிரதிபாச அநுசந்தான மாத்திரத்தானே, விரிஞ்சனும் பாவனைமேவி=விரஞ்சித்தன்மையையடைந்து; ஆயசங்கற்பம் = முன்னுளதாய சங்கற்பமானது. வடிவிலா விண்ணில்=சூனியமாய வியோமத்தில். முப்புவிநகரம் அமைத்தது = இம்முச்சகத்துப் புரத்தை நிர்மித்தது, நாயகர் ஈரேழாகிடும் = லோகாதிபர் பதினான்காயிடும், ஈரேழ்ஞாலமே நகருறுதெருக்கள் = பதினான்கு புவனங்களே அந்நகரத்திற் பொருந்திய வீதிகளாம்; தூயஞாலங்கள் = பரிசுத்தமாய அப்புவனங்களில், செறி = பொருந்திய, பொழில் திரள்கள் = உத்தியான பரம்பரை, சொல்லிய = கூறிய, வனம் உபவனமாம் = வனோபவனமாலையாம்,

(ஸ்ரீ - வீர.) முக்காலத்திலும் ஜகத்தில்லாததேயாய பிரஹ்மத்தின் கண் அதனால் இம்மூவுலகப்புரம் நிருமிக்கப்பெற்றது; அசேதனமாய இதற்கு நிர்மாணசக்தி யெங்கிருந்துண்டாயது எனின்? அதிஷ்டான சைதன்ய அநுக்கிரகத்தால் சேதன விரிஞ்சி யாகாரதைப் பிராப்தியாதலின் என்கவென்கின்றார்: பிரதிபாச அநுசந்தான மாத்திரத்தானே விரிஞ்சித் தன்மையை யடைந்து என்பது. அதேதிரிஜகத்புரம் முன்வர்ணிதமென்கின்றார்: யாண்டு இவ்விஸ்தாரப் பிரபைமண்டல சூரியாதிப் பிரபையானே யொளிரப்பெற்றனவாய லோககோசங்கள் பதினான்கும் உள்ளனவாமோ; பிரசித்தமாய வனோபவனமாலையும் யாண்டு உத்யானபரம்பரையாமென வர்ணிதமாமோ.

(ச.) நாயகர் = லோகேசர், தூயநாலங்கல் = மாலையென்று சொல்லிய,

மேருமந்தரமே முதலவந்நகரின் மேவியவிநோத வெற்பினமாஞ்
சூரியன் றிங்கள் காற்றினலைசையாச் சுடர்களா நித்திலமாலை
நீருயர்நதியின் றிரள்களாம்வாவி நிகழ்த்தியவே ழெனுமவைதாம்
பேரியல்வடவை கமலமாய்ப்பூத்த பெருங்கடலேழுமேபெரியோய்.

(ப - ரை.) மேருமந்தரமே முதல = சகியமந்தர்மேருபருவதங்கள், அந்நகரின் = அப்புரத்தின்கண், மேவிய = பொருந்திய, விநோத வெற்பினமாம் = கிரீடாசலங்களாம், சூரியன்திங்கள் = சூரியசந்திரர்கள்; காற்றினலைசையாச் சுடர்களாம் = பிரசண்டவாயுவினலுமசையாத சீத உஷ்ண தீபங்களாம்; நித்திலமாலை = முத்துமாலை. நீருயர் நதியின்திரள்களாம் = ஜலப்பிரவாகம் நிறைந்தயாறுகளின் கூட்டங்களாம், வாவிநிகழ்த்திய ஏழெனும் அவைதாம் = ஏழுவாவிகள் என்று சொல்லிய அவைதாம், பேரியல் வடவை கமலமாய்ப் பூத்தபெருங்கடல் ஏழுமே=கடலையும் பருகும் பெரியதன்மைவாய்ந்த வடவாக்கினிகளையே தாமரைகளாக வாய்க்கப்பெற்ற பெரிய சமுத்திரங்கள் ஏழு என்பவைகளே ஆம், பெரியோய் = மகாமதியையுடைய மைந்தா !

(ஸ்ரீ - வீர.) யாண்டுச் சகிய மந்தரமேருகிரிகள் கிரீடாசிகரிகளாமோ, யாண்டுதான் சீத உஷ்ணதீப்திகள் வாய்ந்த சந்திர அருக்கதீபங்கள் காற்றினலே அக்ஷதங்கள் = அணையாதனவாமோ. கொடிநிகர் முத்தமாலையேழ்வாவி யென்பதற்குப் பொருள் கூறுகின்றார், சூரியகிரணங்காலு மாலோலதரங்க உத்துங்கமுத்துக் கணிறைந்த நதிகள் பிரவகிப்பதே

யாண்டு நன்முத்துமாலைகள் நடிப்பனவாமோ, தாரங்கட்குத் தாளச்சாமியத்திற் பொருத்தம், சூரியகிரணங்காலு மாலோலத் தன்மையாம். வடவாக்கினிகளையே அம்புஜங்களாகவும், மேன்மைவாய்ந்த மணிரத்தினங்களையே தாமரையங்குரங்களாகவும், பொருந்திய இக்ஷூ க்ஷீராதிசலிலங்கள் எந்நகரத்தின் கண்ணே வாபிகள் ஏழுமகா அர்ணவங்கள் ஆமோ. நூற் கிளர் வினைகளான் மேற்கதியாமே, தாழ்க்குறுமவத்தினாற் கீழ்க்கதியாமே, மங்கிலாவடிவாம் வணிகமா நெறிகளாற், சங்குலமிகுத்த தாமந்தமா நகரம், எனயாது ஓதப்பெற்றதோ அதன் பொருளைக்கூறல்:—கீழிலும் பூமியிலும் அங்ஙன்மேலிலும் ஆகாயத்திலும், புண்ணியங்களாந் தன ஸ்ரீயையுடைய நரர்களாகிய கரும உபாசனை யதிகாரமுற்ற ஆரியர்கட்கும் அமரர்கட்கும் "செயல்வகையா னீங்களவர்திறம் போற்றுமாங்கவரும், புயல்வகையா லுங்களையேபுரம் போற்றிப் புரந்தருள்வ, ரியல்வகையானது பிழையீரெனி லிரண்டுதிறத்தீரு, முயல்வகை யான லனைடவீரென நிலத்தோர்க் குரைத்தனனால்" என்று ஸ்ரீ பகவானருளிய நியாயப் படியே புண்ணியவதன் பலக்கிரய விக்கிரயங்களாம்; தேசச்சுற்று வாசிகளாகிய கருமாதிகார வெளிப்பாடுற்ற கிராதர்களுக்குப்பாவ வதன்பலத்தாவரதிரியக் காதிகளோடு பரஸ்பர உபகார மிகுதிப் பாட்டால் கிரயவிக்கிரயங்களாமென வுணர்ந்து கொள்ளலாம்; இத்தகைய விவகாரம் எதன்கண்ணுமோ, (92)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இந்நகரத்தில் இவன்றருபாவறையினங்கள் எனக் கூறியதன் கருத்துரைத்தல்:—இனையவென்பது.

இனையமாநகராஞ் சகத்திடை முன்னமியம்பு சங்கற்பமன்னவனால்
வினையினால்வந்த வுடல்கள் பாவறையா மேற்பதத் திமையவரென் றும்
வனையகீழ்பதத்தி னாகரேயென்று மனிதரேநடுப் பதத்தென்றுந்
துனைதருவாத வெந்திரவிசையாற் சுழல்வனதசைச் சுவரகங்கள்.

(ப - ரை.) இனையமா நகராம் சகத்திடை = இத்தகைய மகாமகிமைவாய்ந்த பட்டணமாகிய இவ்வுலகத்தில், இயம்பு = முன்மொழிந்த. சங்கற்பமன்னவனால் = சங்கற்ப அரசனால், வினையினால் = கருமவசத்தால், வந்த = தோற்றப்பெற்ற, உடல்கள் = தேகங்கள், பாவறையாம் = அபவரகங்களாம், மேற்பதத்து = உம்பருலகில், இமையவர் என்றும் = தேவர்கள் எனவும், வனையகீழ்பதத்தில் = அம்பராமதோ வுலகத்தமைக்கவே, நாகரேயென்றும் = நாகசாதிகளே எனவும், நடுப்பதத்து மனிதரே யென்றும் = மத்தியபூவுலகாமிம்பரில் மநுடரேயெனவும், துனைதருவாத எந்திர =வேகமிகுத்த வாயுயந்திரத்தினது, விசையால் = பிரவாகத்தால், தசைச்சுவரகங்கள் = மாமிசமண் விகாரங்கள், சுழல்வன = சலித்துழல்வனவாம்,

(ஸ்ரீ - வீர.) அப்புரமேயாய இச்சகத்தின் கண்ணே சங்கற்பமன்னவனால், தனதுவினையாட்டின் பொருட்டு விசித்திரங்களாய தேக அபவரகங்கள் செய்யப்பெற்றனவாம்; சில கீர்வாணப் பெயரினர் மேலேசேர்க்கப் பெற்றவராவர், சிலநாகாதியர் கீழேசெர்க்கப் பெற்றவராவர் சில நரரென்பவர் இடையிலே இயைவிக்கப் பெற்றவராவர், வாதயந்திரங்களாய பிராணன் களின் பிரவாகத்தானே, மாம்சங்களேயாய மண்களின் விகாரத்தானே யாக்கப்பெற்ற அபவரகங்கள் உழன்றுதிரிவனவாம். (93)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அநேகவகை யாகவமரும் அபவரகங்களில் அகங்காரத்தோடும் அவ்வறையன் அலைவன் எனல்;—பல்லென்பது.

பல்வகைதானே யியங்குறுமுடலாம் பாவறைதோறு மவ்வேந்த
னல்வழியுணர்வை நோக்குறநடுங்கு நலமிலாவகங் கரமென்னும்
வல்லவிப்பேய்கள் பொய்களாயிருந்தும் வந்துமெய்போ லெழுமவற்றோ
டொல்வதாம் விநோதம் புரிதருங்கணத்தி லுண்டுமாமில்லையுமாகும்.

(ப - ரை.) பல்வகைதானே = நானுவிதமாக, இயங்குறும் =விளங்காநின்ற, உடலாம் பாவறைதோறும் = தேகங்களாகிய வபவரகங்கள் தோறும், அவ்வேந்தன் = அம்மன்னவன், நல்வழியுணர்வை = நிட்காமிய கருமத்தான் மனத்தூய்மை வாயிலாய்ச் சிரவணுதிகொண்டடையப்பெறும் பரமஞானத்தை, நோக்குற = காண்புற்றபோதே, நடுங்கும் = அச்சத்தையடையும், நலமிலா = எவரும் அடரும் பிறவிக்கடி யென்றுணர்ந்த கற்றமுயலுந்தீய, அகங்கரம் = அகங்காரம், என்னும் = என்று பிரக்கியாதிபெற்ற, வல்ல = வலிமைவாய்ந்த, இப்பேய்கள் = இம்மகா இயக்கர்கள், பொய்களாயிருந்தும் = மாயாமயங்களாக இருந்தும், வந்து = சங்கற்பமன்னவனு லுண்டாக்கப்பெற்று, மெய்போல் எழும் = சத்தியம்போலச் சர்வாங்கமுடைத்தாம், அவற்றோடு = அம்மகா அகங்கார இயக்ஷர்களோடும், ஒல்வதாம் = பொருத்தமாக, விநோதம்புரிதரும் = மிகவும் கிரீடைசெய்து கொண்டிருப்பன், கணத்தில் = கணகாலத்தில், இனிதுதயத்தை யெய்துவன், இல்லையும் ஆகும் = தனது இலயத்தையுஞ் சார்வன்.

(ஸ்ரீ - வீர) அவ்வபவரகங்கள் ஊன்றப்பெற்ற வெள்ளெலும்புகளாம் தூண்களோடு கூடினவாம், விசித்திர முற்றனவாம், தைலவர்க்கங்களானும் பசையுற்ற வாசனைத் திரவியங்களானும் தோற்பூச்சுற்றனவாகிப்பளபளப் புற்றனவாம், வேண்டிய இடங்களில்மயிர்கள்நெருங்கித் தகரமைகொண்டு கசிந்து கண்கட்கு அமலமாய் ரமணீயமாயிருப்பனவாம்; இவற்றுட் சில சிரகாலமிருந்து போவனவாம், மற்றுஞ் சிலவோ விரைவில் மரிப்பனவாம், சிலவோகேச வடிவங்களாய கரும்புற்புதர்ச் சிறப்பினுல்லாசத்தா லாக்கப்பெற்ற மறைப்பின் கவினையுடையனவாம். இது விரிமயிர்க் கற்றையான்மேய்ந்த என்பதன் விவரணமாம். மந்தமாருதஞ் சூழ்சாலகம் ஒன்பான் மருவின வென்றதை விவரணப்படுத்தல்:—காது கண்மூக்கு முதலிய நவத்துவாரங்களோடு கூடியவாம் எப்போதும் வீசிக்கொண்டிருக்கும் பிராணவாயுவினுலே உஷ்ணசீதளங்க ளுடையனவாம். பிராணனுக் குஷ்ணத்தன்மையும் அபானனுக்குச் சீதத்தன்மையும் பிரத்தியக்ஷ சித்தமாம்; கர்ணநாசி முகதாலு வாதிவாதாயனங்கள் என்னும் பலகணிக் கூட்டங்கள் நிறைந்து நிலவுவனவாம், புஜாதியங்க மார்க்கங்களையும் உடையனவாம், ஐந்து இந்திரியங்களாகிய குதீபங்களை யுடையனவாம், ஈண்டு மூலத்திற்குதீபகமென்னும் விவரணத்தானே முன்மொழியப் பெற்ற தீபபஞ்சக மென்னுமிடத்திற் சங்கப்பொருளி லேற்பட்ட கன் விகுதிதந்திரத்தாற்குத்சையையும் இலக்குமென்னுங் கருத்து குறிப்பிக்கப் பெற்றதாமென் றுணர்ந்துகொள்க. பகர்ந்த சிறப்புகளனைத்தையும் கவிநாயகர் பல்வகையி லடக்கிப் பகர்ந்தார். அகங்கரப்பேய்கள் காத்தளிப்ப வென்பதன் விவரணம்:— ஹே மகாமதியை யுடையோய்! அவற்றுள், பரமாலோகபயங்காளிகளாகிய அகங்காரமகாயக்ஷர்கள் மாயையாற் சங்கற்பத்தா லாக்கப்பெற்றார்கள். பரமாலோகப்பயங்காளிகள் என்பதற்குப் பரமாத்ம தரிசனத்தான் ஹிருதயக் கிரந்திவடிவ அகங்காரக்ஷய சுருதியானே, பரமத்தின்பார்வையாற் பயப்படுவன என்பது தாற்பரியமாம். தேக அபவரகங்களினுள்ளே அம்மன்னவன் அசத்தினின்றும் வந்தவர்களாயமகா அகங்காரயக்ஷர்களோடு கூடி எப்போதுமே அத்தியந்தம் நன்குவிளையாடிக் கொண்டிருப்பன். அற்றேல் தேகமே யகங்காரம் அயலன்றெனின் அற்றன் றென்கின்றார்:—குதிர்க்குட் பூனைபோலும், தோற்பைக்குட் பாம்புபோலும், வேணுவின்மாட்டு வெண்டாளம் போலும் தனுவின்கண் ணகங்கார மிருக்குமென்

யாண்டு நன்முத்துமாலைகள் நடிப்பனவாமோ, தரங்கங்கட்குத் தரளச்சாமியத்திற் பொருத்தம், சூரியகிரணங்காலு மாலோலத் தன்மையாம். வடவாக்கினிகளையே அம்புஜங்களாகவும், மேன்மைவாய்ந்த மணிரத்தினங்களையே தாமரையங்குரங்களாகவும், பொருந்திய இக்ஷு க்ஷீராதிசலிலங்கள் எந்நகரத்தின் கண்ணே வாபிகள் எழுமகா அர்ணவங்கள் ஆமோ. நூற்கிளர் வினைகளான் மேற்கதியாமே, தாழ்க்குறுமவத்தினூற் கீழ்க்கதியாமே, மங்கிலா வடிவாம் வணிகமா நெறிகளாற், சங்குலமிகுத்த தாமந்தமா நகரம், எனயாது ஓதப்பெற்றதோ அதன் பொருளைக்கூறல்:—கீழிலும் பூமியிலும் அங்ஙன்மேலிலும் ஆகாயத்திலும், புண்ணியங்களாந் தன ஸ்ரீயையுடைய நரர்களாகிய கரும உபாசனை யதிகாரமுற்ற ஆரியர்கட்கும் அமரர்கட்கும் "செயல்வகையா னீங்களவர்திறம் போற்றுமாங்கவரும், புயல்வகையா லுங்களையேபுரம் போற்றிப் புரந்தருள்வ, ரியல்வகையானது பிழையீரெனி விரண்டுதிறத்தீரு, முயல்வகை யான லனடைவீரென நிலத்தோர்க் குரைத்தனனல்" என்று ஸ்ரீ பகவானருளிய நியாயப் படியே புண்ணியவதன் பலக்கிரய விக்கிரயங்களாம்; தேசச்சுற்று வாசிகளாகிய கருமாதிகார வெளிப்பாடுற்ற கிராதர்களுக்குப்பாவ வதன்பலத்தாவரதிரியக் காதிகளோடு பரஸ்பர உபகார மிகுதிப் பாட்டால் கிரயவிக்கிரயங்களாமென வுணர்ந்து கொள்ளலாம்; இத்தகைய விவகாரம் எதன்கண்ணுமோ, (92)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இந்நகரத்தில் இவன்றருபாவறையினங்கள் எனக் கூறியதன் கருத்துரைத்தல்:—இனையவென்பது.

இனையமாநகராஞ் சகத்திடை முன்னமியம்பு சங்கற்பமன்னவனால்
வினையினால்வந்த வுடல்கள் பாவறையா மேற்பதத் திமையவரென்றும்
வனையகீழ்ப்பதத்தி னாகரேயென்று மனிதரே நடுப் பதத்தென்றுந்
துனைதருவாத வெந்திரவிசையாற் சுழல்வனு தசைச் சுவாகங்கள்.

(ப - ரை.) இனையமா நகராம் சகத்திடை = இத்தகைய மகாமகிமைவாய்ந்த பட்டணமாகிய இவ்வுலகத்தில், இயம்பு = முன்மொழிந்த. சங்கற்பமன்னவனால் = சங்கற்ப அரசனால், வினையினால் = கருமவசத்தால், வந்த = தோற்றப்பெற்ற, உடல்கள் = தேகங்கள், பாவறையாம் = அபவரகங்களாம், மேற்பதத்து = உம்பருலகில், இமையவர் என்றும் = தேவர்கள் எனவும், வனயகீழ்பதத்தில் = அம்பராமதோ வுலகத்தமைக்கவே, நாகரேயென்றும் = நாகசாதிகளே எனவும், நடுப்பதத்து மனிதரே யென்றும் = மத்தியபூவுலகாமிம்பரில் மநுடரேயெனவும், துனை தருவாத எந்திர =வேகமிகுத்த வாயுயந்திரத்தினது, விசையால் = பிரவாகத்தால், தசைச்சுவாகங்கள் = மாமிசமண் விகாரங்கள், சுழல்வன = சலித்துழல்வனவாம்,

(ஸ்ரீ - வீர.) அப்புரமேயாய இச்சகத்தின் கண்ணே சங்கற்பமன்னவனால், தனதுவினையாட்டின் பொருட்டு விசித்திரங்களாய தேக அபவரகங்கள் செய்யப்பெற்றனவாம்; சில கீர்வாணப் பெயரினர் மேலேசேர்க்கப் பெற்றவராவர், சிலநாகாதியர் கீழேசெர்க்கப் பெற்றவராவர் சில நரரென்பவர் இடையிலே இயைவிக்கப் பெற்றவராவர், வாதயந்திரங்களாய பிராணன் களின் பிரவாகத்தானே, மாம்சங்களேயாய மண்களின் விகாரத்தானே யாக்கப்பெற்ற அபவரகங்கள் உழன்றுதிரிவனவாம். (93)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அநேகவகை யாகவமரும் அபவரகங்களில் அகங்காரத்தோடும் அவ்வறையன் அலைவன் எனல்;—பல்லென்பது.

பல்வகைதானே யியங்குறுமுடலாம் பாவறைதோறு மவ்வேந்த
னல்வழியுணர்வை நோக்குறநடுங்கு நலமிலாவகங் காரமென்னும்
வல்லவிப்பேய்கள் பொய்களாயிருந்தும் வந்துமெய்போ லெழுமவற்றோ
டொல்வதாம் விநோதம் புரிதருங்கணத்தி லுண்டுமாமில்லையுமாகும்.

(ப - ரை.) பல்வகைதானே = நானுவிதமாக, இயங்குறும் =விளங்காநின்ற, உடலாம் பாவறைதோறும் = தேகங்களாகிய வபவரகங்கள் தோறும், அவ்வேந்தன் = அம்மன்னவன், நல்வழியுணர்வை = நிட்காமிய கருமத்தான் மனத்தூய்மை வாயிலாய்ச் சிரவணுதிகொண்டடையப்பெறும் பரமஞானத்தை, நோக்குற = காண்புற்றபோதே, நடுங்கும் = அச்சத்தை யடையும், நலமிலா = எவரும் அடரும் பிறவிக்கடி யென்றுணர்ந்த கற்றமுயலுந்தீய, அகங்கரம் = அகங்காரம், என்னும் = என்று பிரக்கியாதிபெற்ற, வல்ல = வலிமைவாய்ந்த, இப்பேய்கள் = இம்மகா இயக்கர்கள், பொய்களாயிருந்தும் = மாயாமயங்களாக இருந்தும், வந்து = சங்கற்பமன்னவனு லுண்டாக்கப்பெற்று, மெய்போல் எழும் = சத்தியம்போலச் சர்வாங்கமுடைத்தாம், அவற்றோடு = அம்மகா அகங்கார இயக்ஷர்களோடும், ஒல்வதாம் = பொருத்தமாக, விநோதம்புரிதரும் = மிகவும் கிரீடைசெய்து கொண்டிருப்பன், கணத்தில் = கணகாலத்தில், இனிதுதயத்தை யெய்துவன், இல்லையும் ஆகும் = தனது இலயத்தையுஞ் சார்வன்.

(ஸ்ரீ - வீர) அவ்வபவரகங்கள் ஊன்றப்பெற்ற வெள்ளெலும்புகளாம் தூண்களோடு கூடினவாம், விசித்திர முற்றனவாம், தைலவர்க்கங்களாலும் பசையுற்ற வாசனைத் திரவியங்களாலும் தோற்பூச்சுற்றனவாகிப்பளபளப் புற்றனவாம், வேண்டிய இடங்களில்மயிர்கள்நெருங்கித் தகரமைகொண்டு கசிக்து கண்கட்கு அமலமாய் ரமணீயமாயிருப்பனவாம்; இவற்றுட் சில சிரகாலமிருந்து போவனவாம், மற்றுஞ் சிலவோ விரைவில் மரிப்பனவாம், சிலவோகேச வடிவங்களாய கரும்புற்புதர்ச் சிறப்பினுல்லாசத்தா லாக்கப்பெற்ற மறைப்பின் கவினையுடையனவாம். இது விரிமயிர்க் கற்றையான்மேய்ந்த என்பதன் விவரணமாம். மந்தமாருதஞ் சூழ்சாலகம் ஒன்பான் மருவின வென்றதை விவரணப்படுத்தல்:—காது கண்மூக்கு முதலிய நவத்துவாரங்களோடு கூடியவாம் எப்போதும் வீசிச்கொண்டிருக்கும் பிராணவாயுவினலே உஷ்ணசீதளங்க ளுடையனவாம். பிராணனுக் குஷ்ணத்தன்மையும் அபானனுக்குச் சீதத் தன்மையும் பிரத்தியக்ஷ சித்தமாம்; கர்ணநாசி முகதாலு வாதிவாதாயனங்கள் என்னும் பலகணிக் கூட்டங்கள் நிறைந்து நிலவுவனவாம், புஜாதியங்க மார்க்கங்களையும் உடையனவாம், ஐந்து இந்திரியங்களாகிய குதீபங்களை யுடையனவாம், ஈண்டு மூலத்திற்குதீபக மென்னும் விவரணத்தானே முன்மொழியப் பெற்ற தீபபஞ்சக மென்னுமிடத்திற் சங்கப் பொருளி லேற்பட்ட கன் விகுதிதந்திரத்தாற்குத்சையையும் இலக்குமென்னுங் கருத்து குறிப்பிக்கப் பெற்றதாமென் றுணர்ந்துகொள்க. பகர்ந்த சிறப்புகளனைத்தையும் கவிநாயகர் பல்வகையி லடக்கிப் பகர்ந்தார். அகங்கரப்பேய்கள் காத்தளிப்ப வென்பதன் விவரணம்:—ஹே மகாமதியை யுடையோய்! அவற்றுள், பரமாலோகபயங்காளிகளாகிய அகங்காரமகாயக்ஷர்கள் மாயையாற் சங்கற்பத்தா லாக்கப்பெற்றுர்கள். பரமாலோகப்பயங்காளிகள் என்பதற்குப் பரமாத்ம தரிசனத்தான் ஹிருதயக் கிரந்திவடிவ அகங்காரக்ஷய சுருதியானே, பரமத்தின்பார்வையாற் பயப்படுவன என்பது தாற்பரியமாம். தேக அபவரகங்களினுள்ளே அம்மன்னவன் அசத்தினின்றும் வந்தவர்களாயமகா அகங்காரயக்ஷர்களோடு கூடி எப்போதுமே அத்தியந்தம் நன்குவிளையாடிக் கொண்டிருப்பன். அற்றேல் தேகமே யகங்காரம் அயலன்றெனின் அற்றன் றென்கின்றுர்:—குதிர்க்குட் பூனைபோலும், தோற்பைக்குட் பாம்புபோலும், வேணுவின்மாட்டு வெண்டாளம் போலும் தனுவின்கண் ணகங்கார மிருக்குமென்

றறியலாம். சங்கிரீடனப் பிரகாரத்தைச் சாதித்தல்:—தேககேகங்களிற் சங்கற்ப விருத்திகள், சாகரங்களிற் றரங்கங்கள்போலவும் தீபம்போலவும் கணத்தில் நன்குதயங்களாம், கணத்தில் நனி நாசங்களாம்.

(ச.) தீபம்போல், உண்டுமாய் = க்ஷணத்திலுதிப்பதும், இல்லையுமாகும் = நசிப்பதுமாம். (94)

காயமென் றுரைத்த பாவறைதோறுங் கடலிடையலைகள் போற்றோன்றி
மாயுமேலியற்று மனைகளில்விடாமல் வருமிவனியற் றியவெல்லா
மேயதோர்கணத்தில் வீண்களாய் நசிக்கும்வீணி லேதிரிதருமிவன்றூ
னுயதன்சங்கற் பத்தினுலிருக்கு மவ்வளவருந் துயருழக்கும்.

(ப - ரை.) காயமென்றுரைத்த பாவறைதோறும் = சரீரமெனச் சாற்றிய அபவரகங்கள் தோறும், கடல் இடை அலைகள்போல் தோன்றிமாயும் = சமுத்திரத்தின் கண்ணே தரங்கங்கள் போன்று உதித்து நசிக்கும், மேலியற்று மனைகளில் விடாமல் = இனிமேலுண்டாக்கும். புரங்களில் இடைவிடாமல், வரும் = அவ்வப்போது வந்துசேரும், இவன்=இவ்வரையன், இயற்றிய எல்லாம் = செய்தயாவும், ஏயதோர் கணத்தில் = பொருந்தியது ஒரு கணத்திற்றூனே, வீண்களாய் = வாளாவிரைவாகவே, நசிக்கும் = அழியும், வீணிலேதிரிதரும் இவன்றூன் = இவன் ஒருபோதும் இன்பமென்பதே யில்லாமலேயுழலும், ஆயதன் சங்கற்பத்தினுல் = உண்டாகிய தனது சங்கற்பத்தினுல், இருக்கும் அவ்வளவு = உண்டாங்காறும், அருந்துயர் உழக்கும் = அநந்தந்துயரையே அடைந்தழும்.

(ஸ்ரீ - வீர.) மாயும் வரையுரையுரைத்தாமுன். அவற்கிச்சை உண்டாம் என்பதாதியின் றூற்பரியம் முன்மொழிந்த விரோதபரிகாரத்தானே வருணித்தல்:—மேலென்பது. பவிஷ்யத்து நவநிர்மாணபுரத்தை அவனக்காலடைந்திடுவன், எக்காற் சங்கற்பிக்கப்பட்ட வஸ்துவைக் கணமாத்திரையானே நோக்குறுமோ; அதனுல் விரைவில் அவன் விநாசமுறுவன் என்பதன் றூற்பரியமுரைத்தல்:—நனுக்கனு அவஸ்தைகளில் அத்தியந்தம் சுழல்வதனுலுண்டாய ஆயாசமடைந்து விசிராந்தி சுகப்பொருட்டு அசங்கற்பன மாத்திரத்தானே துயிலின்கண் நாசத்தன்மையானே அதாவது மிருதியாமிலயமாய காரணபூத அவித்யாமாத்திர பாவத்தானே சம்பவஞ் சத்தை யென்பதாம். தானே விரைவில் விநாசத்தையடையும். நானுஜன்ம கோடிகளில் ஆயாசப்பட்டவனுக்குத் தைவயோகத்தானே வைராக்கியாதி சம்பத்துண்டாகிச் சாஸ்திர ஆசார்ய சமாதியப்பியாசாதி பலத்தானே ஆத்மதத்வ சாக்ஷாத்கார முளதாகிய வழி சங்கற்பமூலஞ்சாம்புதலானே அசங்கற்ப மாத்திரத்தானே சிரேயசாய மோக்ஷப்பொருட்டுச் சம்பவம் நிர்விருதியாம். இவனது சங்கற்பநாசத்தானே வாசனை க்ஷயத்தாலுளதாய சூனியபாவமாக விருத்தல் பரமமேன்மையின் பொருட்டேயாம், மீண்டு முதிப்பனென்பதன் கருத்துரைத்தல்:—சுயம் சங்கற்பமாத்திரமாகவே பாலயக்ஷனென்னத் தோற்றுநிற்கும், அதுவுந்தனது அநந்த துக்கப்பொருட்டேயாமலது ஒருபோதும் ஆநந்தத்தின் பொருட்டாகாதாம். (95)

இறையுமோர் சுகமற்றிரங்குவோன் றூனுண்டென்பதோர் பாவனையாலே
நிறைசகமியற்றுந் தானிலதென்றே நினைத்திடிலக் கணத்திறந்து
குறைவறுகதிர் முன்னிருளெனப் போகுங்குறித்த சிற்றின்பமுற்றமிழு
மூறைவுறுமிவனுக் குடல்கண் மூன்றுளவா முத்தமமத்திம மதமம்.

(ப - ரை.) இறையும் ஓர் சுகமற்று = அணுவளவும் யாதொரு இன்பமுமில்லாமல், இரங்குவோன் = ஏங்கியிருப்போன், தான் உண்டு என்பதோர் பாவனையாலே = யானிருக்கின்றேன் என்னும் ஆன்மசத்தையினுலே, நிறைசகம் இயற்றும் = விசாலமான விசுவத்தையுண்டாக்கும், தானிலதென்றே நினைத்திடில் = தான் இல்லையென்னும் அசத்தையினுலே, அக்கணத்து = அப்போதே, இறந்து = நாசமாக்கும், குறைவறு கதிர்முன் இருளெனப்போகும் = பூரணப்பிரகாசத்தின் சந்நிதியில் அந்தகாரம் இராதேகுதல்போல ஏகும் குறித்த சிற்றின்பம் உற்றமிழும் = வாஞ்சித்த சிறிய ஆனந்தங்கிடைத்த மாத்திரையானே அதுகொண்டே பெருமிதங்கொள்ளும், உறைவுறும் இவனுக்கு = தன்னதேயாயது யர்தருஞ் சேட்டையினுலே பெரிதுபுலம்பித் திரியுமிம்மன்னனுக்கு, உத்தமம் மத்திமம் அதமம் உடல்கள் மூன்று உளவாம் = நல்லதென நடைப்பட்டதாயும் இடைப்பட்டதாயும் கடைப்பட்டதாயும் இலங்குந்தேகங்கள் மூன்று உள்ளனவாம்.

(ஸ்ரீ - வீர.) இந்த விசாலமான ஜகத்துக்கத்தை ஆன்மசத்தையினுனே மிகமிகவும் விரிக்கும், அசத்தையாலோ, தம்மானது கனமான ஒன்றுந் தெரியாமையை யுண்டாக்கலே போலும் அழிக்கும், என்னசெய்வேன் என்பதாதி சோகக்கூற்றிற்கு விரைதல் தன்னுடையதேயான துயரந்தருவதாய நிஷித்தாசரண அபிமானுதிரூபச் சேஷ்டையினுனே மிகவும் ரோதனஞ்செய்வன், கவட்டுத் தொன்மரத்திடுக்கில் விரைமாட்டிக்கொண்டு ஆப்பதனைப் பிடித்தசைத்த பேய்க்குரங்குபோல வென்பதாம், இதன் வியாக்கியானம் பெரியஞான வாசிட்ட உற்பத்திப் பிரகரணத்திற் காட்டியுள்ளோம் ஆண்டுக்கண்டுகொள்க. சங்கற்பிக்கப்பட்ட ஆனந்தலேசங் கொண்டு தலைநிமிர்ந்து மிகமிதந்து மகிழும், அகஸ்மாத்தாக ஒழுகுந்தேன் றுளியுண்ட கிழக்கழுதை மானும், இதனுனே கர்த்தபமென்னும் நீள்செவியனுக்கு விடயசுகமும் தேன்னக்கல்போல அதிதுர்லபம்மாயின்மற்றென்னே மோக்ஷ சுகத்தைப்பற்றிக்கூறுவது, எனத்தொனிக்கப் பெற்றதாம். பாலன்போலும் சங்கற்பத்தினுலேயே கணம்விரதியையடைவன், சுய்ங்கணம் இரதியையடைவன், கணம் விகாரத்தையடைவன். கோத்தனது ஆக்கியாயிகை வருணனப் பிரயோஜனங் கூறல்:—இவனைச் சர்வ பாகிய வஸ்துக்களினின்றும் திருப்பிச்சமாதி யப்பியாசத்தானும் தத்துவஞானத்தானும் ஆதரவுடன், வாசனக்ஷயஞ் செய்து அஞ்ஞானத்தையழித்து மதியானது பிரத்தியக்கு வடிவமாய பிரஹ்மத்தை யினிது பற்றி இளைப்பாறுதலை யடையா நிற்கும்படிசெய்து மைந்தநீவாழ்தி. முன்னர் எம்மூன்று தேகங்கள் மொழியப்பெற்றனவோ அவற்றை விரித்தல்:—சங்கற்ப வடிவமாய அம்மனத்திற்கு அதம உத்தம மத்யமங்கள் என்னும் முத்தேகங்கள் உள்ளனவாம்.

(சு.) நிறைசகம் = துக்கம் நிறைந்தசகம், அக்கணத்து, சகமிறந்துபோகும், குறித்த = தனது துக்கமயமான சேட்டையால்.

(96)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முக்குணத்தின் முறைமையை மொழியல்:—முக்குணமென்பது,

முக்குணந்தானே மூன்றுடலாகி மூலமா மூன்றுலகிற்கு
மக்குணந்தன் னிற்றமங்கொள் சங்கற்பமாவது பகுதியின்செயலாற்
றுக்கமாய்வருந்திப் பாதலப்புழுவாந் தூயசத்துவங் கொள்சங்கற்ப
மிக்கசற்றருமஞானம் வீடுளதாய் வேந்தர்வேந் தெனமிகவிளங்கும்.

(ப - ரை.) முக்குணந்தானே = சத்துவம் இரஜசுதமசு என்னும் மூன்றுகுணங்களே, மூன்று உடலாகி = முத்தேகங்களாகி, மூன்று உலகிற்கும் மூலமாம் = முச்சகத்திதியின் காரணமாம், அக்குணந்தன்னில் = அம்மூன்று குணங்களுள், தமங்கொள் சங்கற்பமாவது = தமோரூப சங்கற்பமானது, பகுதியின் செயலால் = பிராகிருதசேஷ்டையால், துக்கமாய்

வருந்தி = பரமகிருபணத் தன்மையை யடைந்து, பாதலப்புழுவாம் = கிருமிகீடத் தன்மை யையடையும், தூய = பரிசுத்தமாய, சத்துவங்கொள் சங்கற்பம் = சத்துவரூப சங்கற்ப மானது, மிக்க நல்தருமம் = இச்சையின்றிய மேன்மைவாய்ந்து மனத்தூய்மையாய நன்மை யைப்பயக்கும் நிட்காமிய புண்ணியம், ஞானம் = அதனாற் பரம்பரையா யுண்டாம் தத்துவ வுணர்வு, வீடு = அதனாலாம் மோக்ஷம், என்பவற்றைப் பயப்பதாய், வேந்தர் வேங்கெதன மிக விளங்கும் = சாம்ராஜ்யம்போல இருந்திலங்கு மிகவும்.

(ஸ்ரீ - வீர.) தமசத்துவரஜப் பெயரியனவே உலகின்றிநிக்குக்காரணமாம், தமோரூப மாய சங்கற்பமோ நித்தியம் இயற்கையாலமைந்த பிரவிருத்தியினாலே நரகங்களிற் பிரசித்த மாய பரமகிருபணத் தன்மையை யடைந்து, பின் நரகசேடமாக கிருமிகீட ஸ்தாவராதி ஜன்மங்களையு மடையும். சத்துவரூபமாய சங்கற்பமோ தர்மஞானப்ராயணமாம், ஞானமாத் திர வுபாசனம்சாஸ்திரீயப் பிரவிருத்திநியமம் என்பதாம், சந்நிகிதமோக்ஷமாம் ஐரண்யகர்ப்ப பாவாந்த தேவதாபதமாம். இவையாவும் சத்துவ சங்கற்பத்தானே யுண்டாவனவாம்.

(ச.) தமங்கொள் சங்கற்பம் = தமோரூப சங்கற்பம், பகுதியின் செயலால் = எப்போ தும் பிராகிருத சேஷ்டையால், பலவிதமாகும் = நானாவித கிருமிகீடங்களாம். (97)

இராசதகுணசங்கற்ப மிவ்வுலகி லியல்புறுகுடும்பி யாயியங்கும்
விராவியவிந்த மூன்றையும் விட்டுமெய்ம்மை யாய்த்தானிலதென்னி
னிராகுலமாக வனையசங்கற்ப நிமலமாம்பர பதமடையுந்
துராசையாம் பார்வையனைத்தையு நீக்கித்துகண்மன மனத்தினாணிறுத்தி.

(ப - ரை.) இராசத குணசங்கற்பம் = இரஜோரூப மாய சங்கற்பமோ, இவ்வுலகில் = இச்சகத்தில், இயல்புறு குடும்பியாய் இயங்கும் = பொருத்தமான வியவகாரியாய்ச் சரிக்கும், விராவிய = கலந்த, இந்த மூன்றையும் விட்டு = இம்முக்குணங்களையும் விட்டு, மெய்ம்மை யாய்த்தானில தென்னில் = உண்மையாகத்தான் க்ஷயமாயின், நிராகுலமாக அனையசங்கற் பம் = ஆகுலமில்லாமல் அச்சங்கற்பம், நிமலமாம் பரபதமடையும் = தூயதாய பரமபதத் தைப்பெறும், துராசையாம் பார்வை அனைத்தையும் நீக்கி = முடிவுபெறாத ஆசைவடிவங்க ளாய சர்வதிருஷ்டிகளையும் நன்றாக அகற்றி, துகள்மனமனத்தினால் நிறுத்தி = குற்றமுற்ற மனத்தைக் குற்றமற்ற மனத்தாலே தகைந்து.

(ஸ்ரீ - வீர.) இரஜோரூப மாயசங்கற்பமோ மநுஷ்யஜன்மத்தால் அதற்குத்தகுந்த விவ காரத்தோடு கூடியதாகிப் புத்திரதாராநுரஞ்சிதமாய்ச் சமுசாரத்தில் இனிதாக இருக்கும், ஹே மகாமதியையுடையோய் ! இம்மூவகையாய ரூபங்களையும் பரித்தியாகஞ்செய்து ஆத்தி யந்திக சங்கற்ப உச்சேதமாகியவழி அச்சங்கற்பம் பரமபதமென்னும் மோக்ஷத்தையடையும் அற்றாயின், சங்கற்பக்ஷயத்தில் யாதுகொல் உபாயம் எனின் அதனைக்கூறல்: சர்வபாகிய அர்த்த தரிசனங்களாய பாகிய இந்திரியங்களை வைராக்கியத்தினானே அடங்குமாறு செய்து, நன்மனத்தாற் றுன்மனத்தை நிறுவி, உள்வெளிப் பொருள்களை யுடைத்தா யெழுந்தோடும் உள்ளத்தை க்ஷயம்செய்தி.

(ச.) இராசதகுண சங்கற்பம், இவ்வுலகில் = இச்சம்சாரத்தில், இயல்புறு = உலகவிவ காரியாய், குடும்பியாய்=புத்திரதாராநு ரஞ்சிதமாய், இயங்கும்=திதிபெற்றுவிளங்கும். (98)

(ஸ்ரீ-வீர - அ-கை,) சங்கற்பக்ஷயஞ் சாதிக்கப்பால தொன்றன்றாம், ஆகலின் அய லொன்றே உபாயம் மோக்ஷப்பொருட்டு உபதேசித்தருள வேண்டும் என்று சங்கிப்பக்கூடா தெனல்:—உள்ளென்பது,

உள்ளினும்புறத்து மெழுந்தசங்கற்ப மொருக்கிட வொருப்படநினைவா
யெள்ளருந்தவங்கள் கற்பகோடிகணீ யியற்றினும் பாதலம்பூமி
தள்ளருந்துறக்க மேவினுமுனக்குச் சாற்றுசங்கற்பமாய் வல்லாற்
றெள்ளியபரம பதத்தினைமேவத் தியக்கமிலுபாயம் வேறில்லை.

(ப - ரை.) உள்ளினும் புறத்தும் = ஆந்தரத்திலும் பாகியத்திலும், எழுந்த = உதயமாகிய, சங்கற்பம் = எண்ணங்களை, ஒருக்கிட = க்ஷயஞ்செய்ய, ஒருப்பட நினைவாய் = ஒருமனப்பட முயல்வாய், எள்ளருந்தவங்கள் — தள்ளுதற்கரிய தாருணமாய தபசுகளை, கற்பகோடிகள் = அநேகங்கோடிகாலம், நீ இயற்றினும் = மைந்த நீசெய்தபோதினும், பாதலம்பூமி தள்ளரும் துறக்கம் மேவினும் = கீழுலகத்தையேனும் பூவுலகத்தையேனும் யாவரும் வாஞ்சைசெய்யும் மேலுலகத்தையேனும் அடைந்த, உனக்கு=நின்றனக்கு, சாற்று சங்கற்பமாய்வு அல்லால் = உபதேசித்த சங்கற்ப உபசமம் அல்லாது, தெள்ளிய பரமபதத்தினைமேவ=தெளிந்த மேன்மைவாய்ந்த நித்திய ஆநந்தபதத்தை யடைய, தியக்கமில் உபாயம்வேறு இல்லை = மயக்கமற்ற யாதொரு உபாயமும் மற்றொன்று கிடையாது.

(ஸ்ரீ - வீர.) வருட சகத்திரங்கள் நீ கடுந்தவம் புரிந்தபோதினும், விலயவியற்கை வாய்ந்தவுனது தேகத்தைச் சிலையின் கண்ணே அத்தியந்தஞ் சூரணமாக்கினும், அக்கினியின் கண்ணே பிரவேசித்த போதினும், வாடவக்கினியின் மாட்டுத்தான் வீழ்ந்தபோதினும், குழிக்கட்குப்புறவீழினும், கட்கதாரை யோகத்திற்கடிது வீழ்ந்திடினும்; சிவனேதான் விஷ்ணுவேதான் பதுமஜனேதான் உனக்குக் குருவாய்வந்து ஆநுக்கிரகஞ் செய்யினும், அல்லது, உலகநாதரென் றெண்டுறவியராம் ஸ்ரீ தத்தாத்திரேயர் ஸ்ரீ துர்வாசர்தாம் பெருங்கருணையை நிறைய மேவினராய் வந்துதிருவருள் செய்தபோதினும், அத்தியந்தங்கருணைக் கிராந்தராய் ஆத்தியந்திக அகிம்சையை உபதேசித்தவராய யதீந்திரராம் புத்தரேவந்து போதித்தபோதினும், நீபாதாளத்தை யடைந்தபோதினும், பூதலத்தைப் பொருந்திய போதிலும், சுவர்க்கத்தை யடைந்தபோதினும், உனக்கு அந்தப்பரம பதத்தை யடையச் சங்கற்ப நாசத்தையொழித்து அன்னிய உபாயம் யாதொன்றுமே கிடையாது. ஈண்டுப் புத்ததேவரைக் கவர்ந்தது யாதுகாரணங் கொல்லோ வெனின், அவைதிக மார்க்கங்களிலும். மோக்ஷமுண்டா மென்னும் வாஞ்சை வாரணப் பொருட்டாமென்றறிக.()

(ஸ்ரீ - வீர - அ - கை.) அச்சங்கற்ப உபசமமும் பிரஹ்ம சொரூபமேயாம் என்னுங் கருத்தாற் சிறப்பித்தல் துயர்களும் என்பது.

துயர்களும் விகாரங்களுமிலாப் பிரமசுகஞ்செய் சங்கற்பநாசத்தை
முயலுதிநனிசங் கற்பமாங்கயிற்றின் முடிவறு பாவனையெல்லா
மியல்புறுகோவை யா லெழுமந்தக் கயிற்றினை யெளிதினிலறுத்தான்
மயல்கொள்பாவனைக ளெங்ஙனேதூளாய் மடியுமோ வறிகிலமைந்தா.

(ப - ரை.) துயர்களும் விகாரங்களும் இலா = பாதங்களும் விகாரங்களும் இல்லாத, பிரமசுகம்செய் = பிரஹ்மாநந்தத்தைப் பயக்கும், சங்கற்ப நாசத்தை=சங்கற்ப உபசமத்தை நனிமுயலுதி = நன்றாகமுயன்று தேடுதி, சங்கற்பமாம் கயிற்றில் = சங்கற்பமாகிய தந்துவில், முடிவறுபாவனை எல்லாம் = எண்ணமுடியாத சகலபாவனைகளும், இயல்புறு கோவையால் எழும் = சுவாபாவிகமாய்ப் பொருந்தும் நிரைநிரை கோத்தலினாலே திகழும், அந்தக் கயிற்றினை = அச்சங்கற்பமாகிய தந்துவை, எளிதினில் அறுத்தால் = சுலபமாகச் சேதித்தால், மயல்கொள் பாவனைகள் = பிராந்தியினாலே கொண்ட அந்தப்பாவனைகள், மைந்தா=

ஹே குழந்தாய் ! எங்ஙனே தூளாய்மடியுமோ அறிகிலம் = எவ்வாறு பொடிப்பொடியாகி எங்குதான் பறந்தோடி விடுமோ யாமறிந்திலேம்.

(ஸ்ரீ - வீர.) யாதொருபாதமு மில்லாததாயும் விகாரமில்லாததாயும் சுகமாயும் பரமபாவனமாயும் உள்ளசங்கற்ப உபசமத்தில், சாதனசதுஷ்டய சம்பத்தி சிரவணமனன நிதித்தியாசனவடிவ மேலான பிரயத்தினத்தைப் பௌருஷத்தாற் செய்தி அற்றேற் சங்கற்பமாத்திர உச்சேதத்தானே சர்வஜகத்பந்த நிவிருத்தியாங்ஙனம் எனின் ? உரைத்தல்:—ஹே அநக ! நிச்சயமாகச் சங்கற்பதந்துவின் கண் எல்லாப் பாவங்களும் புரோதங்களாம்; ஆயின் அப்பாவங்கள் நஷ்டமாயின் யாண்டுச்செல்லா நிற்கும் எனின்கூறல்:—தந்துவானது சின்னமாகவே அவை கட்டுக்குலைந்தனவாகி யாண்டோடிவிடுமோ அறியேம்; ஆரோபிதமாய பாவங்கள் அதிஷ்டானத்திற் பாதமாகவே பிறுண்டுக்கமனம் பிரசித்த மின்மையின் என்பது கருத்தாம்.

(ச.) சங்கற்ப நாசத்தை = பாவனமான சங்கற்போப சமத்தை, நீ நனிமுயலுதி, முடிவறுபாவனை யெல்லாம் = அகிலபாவங்களும். (100)

(ஸ்ரீ-வீர - அ-வை.) அற்றேல், இச்சங்கற்பாதி சர்வபாவ நிவிருத்தியானது அசத்தா ? சத்தா ? சதசத்தா ? ஆதியதேன்மோக்ஷ அசித்தியாம், இரண்டாவதேன் மோக்ஷத்திலும் இருமையின் அடைவாம், மூன்றாவதேற் பக்கத்தாலாய பந்தத்துவைதங்களின் நீக்கமின்மையாம் எனமுத்தியின் கண்ணும் நிர்த்துக்கத் தன்மைச் சித்தியிலதாம், என்பதாதி தோஷகணங்களை ஒரேகூற்றாலகற்றி யியற்றத்தக்கதை யுபதேசித்தல்:—துனியென்பது.

**துனிசெய்சங்கற்ப மின்றிமுன்வந்து தோன்றிய தொழில்வழிநிற்பாய்**
**பனிசெய்சங்கற்ப மாண்டிடிலறிவு பார்வைகளனைத் தினும்பற்றாத்**
**தனியுயர்பிரம பதமடைந்தகில விகற்பமாந் தனையெலாந்தள்ளி**
**யினியனாயேகத்து வத்திலேசுழுத்தி யிதயமுற்றின்பமே பெறுவாய்.**

(ப - ரை.) துனிசெய் = துயரந்தரும், சங்கற்பமின்றி — சங்கற்பங்கள் ஓய்ந்தவனாகி, முன்வந்து தோன்றிய — நுகர்வினைவயத்தால் வந்தடைந்த = தொழில்வழி நிற்பாய் = விவகாரபரனாவாய், பனிசெய் சங்கற்பம் மாண்டிடில் = தன்வடிவத்தை மறைக்கும் சங்கற்பமானது நன்றாகக்ஷயமாயின், அறிவு = தன்சித்தானது, பார்வைகள் அனைத்தினும் பற்றா = சேத்தியமென்னும் திருசிய உன்முகத் தன்மையை யடையமாட்டாது, தனி உயர்பிரமபதம் அடைந்து = ஒப்பில்லாத மேலான பரமார்த்தபதத்தை யறிந்தடைந்து, அகிலவிகற்பமாம் தனை எலாம்தள்ளி = சகலவிகற்பங்களாய ஜாலங்கள் யாவற்றையும் வலிதிற்றொலைத்து, ஏகத்துவத்திலே இனியனாய் = அவ்வத்விதீயபதத்தில் அன்புடன் அழுந்தி, சுழுத்தி இதயம் உற்று = சுழுத்தசித்தவிருத்தியுடைவனாய், இன்பமே பெறுவாய் = விததசுகத்தை விளைவித்தடைவாய்.

(ஸ்ரீ - வீர.) அசத்து, சத்து, சதசத்து, என்பனவாய எல்லாவிகற்பங்களும் சங்கற்பத்தானே பாவங்களுடன் உண்டாவனவாம் மற்றொன்றாலாகாவாம், அவை சங்கற்பத்தையே சத்தசத்தென்பதாக விகற்பிப்பான் சமர்த்துடையன வாகாவாம், ஈண்டு, பரமார்த்த சத்திய சங்கற்பப் பிரஹ்மத்தைத் தீண்டாவென வென்னே சொல்வது' காரியங்கட்கு யாண்டுத்தற் சம்பந்தியாய காரணத்திலும் ஆந்தரத்திற் குண்டீபாவமாமோ ஆண்டு என்னேயியம்புவது அசங்க பரமாத்மாவின் கண்ணென்பது கருத்தாம். எவ்வெதனை எவ்வாறு சங்கற்பிக்கின் றனையோ, அவ்வது கண்த்தில் அவ்வாறுண்டாம்; ஆகலின் தத்துவமுணர்ந்த மைந்த ! ஒரு

போதினும் ஒன்றையுமே சங்கற்பியா தொழிவாய்; நிர்ச்சங்கற்பனுசிக் கிடைத்தபடியாய விய வகாரபனுதி, சங்கற்ப சம்க்ஷயமாகவே சித்தானது அசேத்திய உன்முகத் தன்மையையே யடையும். அற்றேல் மோக்ஷசம்பாதனத்தில் க்ஷதியாது கொல்லாமாலோ வெனின் ஆண் டுரைத்தல்:—உண்மை யொன்றையே யியற்கையாக உடைய பிரஹ்மம், அசத்தியமாயாவ யத்தானே சுரநரதிரியக்காதி எண்பத்து நான்கிலக்கமென்னும் யோனித்துவாரத்தால், அவ்வப்பிராணிபேதரூபமாக வெழுந்துவாளாவே ஜகத்துக்கத்தை யநுபவிக்கின்றது. இஃது ஆன்மாவாகிய தனக்கு ஒவ்வாததேயாம். அந்நாஞயோனி ஜந்மநிமித்தத்தாலும் பெருந்துய தாப்பொருட்டேயாய மறித்துமறித்தும் மரித்தலினுலும், ஹே அநக ! நினக்கென்னே பயன் ? யாது அதுக்கப்பொருட்டோ அதனைப் பிராஞ்ஞர் நன்குதொடர்வ ரீண்டயலல் வாம். ஆயின் அடியேனுற் செய்யத்தக்கது யாதுதானெனின், அருளல்:—தனியுயரென்பது. நீ தத்துவஞ்ஞத் தன்மையை யடைந்து மூல உச்சேதவலுவானே விலக்கமுடியாத விகற்ப ஜாலத்தை விலக்கி, மோக்ஷமெனப் பெயரிய எவ்வத்விதீய பதமுளதோ அதனை, நிரதிசய ஆநந்த மடைதற்பொருட்டுச் சுழுப்த சித்தவிருத்தி யுடையவனுய் நனவிற்சுழுத்தி நிலைமேவி நன்ருயெல்லா முள்ளகற்றி, நினது பெருமுயற்சியினுலே நீசாதித்தடைதி.

(ச.) பார்வைகளனைத்தினும் பற்ரு = அசேத்தியோன் முகமாம், இதயமுற்று = சித்தவிருத்தி சுழுத்தியடைந்து, இன்பமே = பேராநந்தத்தை, பெறுவாய். (101)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சங்கற்பத்தின், உற்பத்திப் பிரகாரத்தையும் ரூபமுடைமையை யும், கனதைவகையையும், எவ்வித உபாயத்தானே விநாசமா மென்பதையும், குமான்கேட்ப முனிவர் யாவற்றிற்கும் உத்தரங்கூறத் தொடங்கல்:—என்னலுமென்பது.

என்னலுமுயர் சங்கற்பமே தென்னவெழுந்ததும் வளர்ந்ததுமாய்ந்து
சன்னமாகியது மெங்ஙனமென்று தவஞ்செய்தா சூரனைமைந்தன்
பன்னியேகேட்ப வதற்கவனுரைப்பான் பரமமாயுண் டெனல்வடிவா
மின்னியசமமா மறிவுகாண்ப வற்றின்மேவுற வெழுதல்சங்கற்பம்.

(ப - ரை.) என்னலும் — கூறியவண்ணம் முனிவர் மொழிதலும், உயர் சங்கற்பம் ஏதென்ன = மேலாயசங்கற்பமாயது எத்தகையது, எழுந்ததும் வளர்ந்ததும் மாய்ந்து சன்ன வாகியதும், எங்ஙனம் = இதனது உற்பத்தியும் விருத்தியும் விநாசமும் யாங்ஙனம், என்று = என இவ்வண்ணம், தவம்செய்தாசூரனை = பெருந்தவம் புரியும் அருந்தாசூர முனிவரை மைந்தன் = புத்திரன். பன்னியேகேட்ப = அழுத்தமாகவினவ, அதற்கு = அவ்வினுவிற்கு, அவன் = அம்முனிவர், உரைப்பான் = கூறுவதாவது, பரமமாய் உண்டெனல் வடிவாய் = அநந்த ஆத்மதத்துவமாய் சத்தாசாமானிய ரூபியாய், மின்னிய = விளங்காநின்ற, சமமா மறிவு = எவ்கும் விளக்கந்தருஞ் சித்தானது. காண்பவற்றின் மேவுறவெழுதல் சங்கற்பம் = சேத்திய = திருசிய, உன்முகத்தன்மை யுறுதலே — நன்ருட்டம் நண்ணுதலே, சங்கற்ப அங்குரமென்பர், சேத்தியோன்முகத்தன்மையாது முன்மனமென வியாக்கியானிக்கப்பெற் றதோ அதுவே சங்கற்பவிருக்ஷத்தின் அவித்யாபீஜ உற்பவமாய பிரதம அங்குரம் என உணர் வர், என்பதாம்.

(ச.) புத்திரன் வினுவுக்கு உத்தரம்:— ஏதென்ன = எத்தன்மையது: சமமாம் = சர்வ வியாபியாகிய, உண்டெனும் வடிவாய் = சத்தாமாத்திர ரூபமாய்; அதனுலே, பரமமாய் மின்னிய = அநந்தாத்ம தத்துவந்தனது ரூபமாய் விளங்கும், அறிவு = சைதந்யம், காண்ப வற்றின்மேவுற எழுதல் = சேத்தியோன்முகமாக பகிர்முகமாக வெழுவதே, சங்கற்பம் = சங்கற்பாங்குர மென்னுஞ் சூக்ஷ்மரூபமா மென்றதாயிற்று. (102)

அற்பமாயெழுந்து தானுளதாகி யடைவிலேபையப் பையப்பருத்துத்
தற்பரமனமாம் வெளியினைமூடிச் சடத்துவந்திடத்தி லுண்டாக
வுற்பவமுகில்போல் வளர்வுறுமைந்தா வுணர்வுகாண் பவற்றினையுன்னி
நிற்பதாந்தனக்கு வேறுபோற்கண்டு நிகழ்த்துசங் கற்பமாய்நிகழும்.

(ப - ரை.) அற்பமாய் எழுந்து தானுளதாகி = லேசமா யுண்மைபெற்று, அடைவிலே = முறையே, பையப் பையப்பருத்து = அதுவே மெதுவுமெதுவாகக்கனத்தன்மையையடைந்து, தற்பரமனமாம் வெளியினைமூடி — உண்மையிற் பரம்பொருள் வடிவமேயாய மனமென்னும் ஆகாயத்தை நன்குவியாபித்து, சடத்துவந்திடத்தி லுண்டாக — திடமான ஜாட்டிய முண்டாதற் பொருட்டு, உற்பவமுகில்போல் = ஆகாயத்தில் உண்டாயமுகில் ஆகாயத்தை மறைத்துவிரிவதேபோல, வளர்வுறும் = விருத்தியாகும்; மைந்தா ! = ஹேகுழந்தாய் ! உணர்வு = அறிவானது, காண்பவற்றினையுன்னி = திருசியங்களைச் சிந்தித்து, நிற்பதாம் தனக்குவேறுபோல் = நிலையாகிய ஆன்மாவிற் கன்னியம்போல, கண்டு=பாவித்து, நிகழ்த்து சங்கற்பமாய் நிகழும் = சொல்லாநின்ற சங்கற்பத் தன்மையை யடையாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) லேசமாக அடைந்த சத்தையை யுடையதாகி அதுவே மெதுவாகக்கனதையையடையும், யாதின்பொருட்டோவெனின் ? அந்தச் சித்தாகாசத்தையே எல்லாவாற்றானும் எங்கும் வியாபித்து, அதிஷ்டானசித்தினது சித்தியற்கையை மறைத்தலாற் சடப்பிரபஞ்ச ஆகாரசம்பத்தியின் பொருட்டு என்பதாம். எதுபோல் எனின்? மேகம்போலு மென்பதாம். இவ்வண்ணஞ் சமஷ்டிசங்கற்பத்தாற் சகத்துற்பவ முரைத்து அவ்வாறே மதியகங்காரவுயிர் புலனுடம்பாதியாகார வியஷ்டிசங்கற்ப உற்பத்தியை யுரைப்பார் உணர்வெனத் தொடங்குகின்றார், சித்தானது சேத்தியத்தை ஆன்மாவினும் அன்னியம் போலப்பாவித்துச் சங்கற்பத்தன்மையை யடையும்.

(ச.) அற்பமா யெழுந்து = சூட்சுமாங்கிசத்தால், உளதாகி = சொரூபமுள்ளதாய், தான் = அவ்வறிவே, சேத்திய ஒன்முகீபாவரூப மென்னுஞ்சங்கற்ப அங்குரமே, அடைவிலே பையப்பையப் பருத்து, தற்பரம் = சித்தினது சொரூபமென்னும், மனமாந்தெளிவு = சித்தத்துவத்தை, அறமூடிச் சடத்துவந்திடத்தி லுண்டாகி, உற்பவம் = சடான்மகப் பிரபஞ்சபாவத்தாற் பரிணமித்தற்கு, வளர்வுறும், முகில்போல, = மேகமானது முன்பு அற்பமாயுளதாகிப் பையப்பைய ஆகாசத்தை யறமூடிச் சாட்டியமாய்ச் சடாகாரமாதற்கு வளர்வுறுதல் போலென்பது பொருள். உணர்வு = ஆத்மாவினது சைதந்யம், காண்யவற்றினை = திருசியத்தை, நிற்பதாந்தனக்கு = ஆன்மாவுக்கு, வேறுபோல், உன்னிக்கண்டு, நிகழ்த்து=மேற்கூறப்படும், சங்கற்பமாய் நிகழும் = சங்கற்பபாவத்தைப் பொருந்துவது போலாம். (103)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மூலாங்குரத்தாற் சாகாங்குரங்கட்கே போலும், அதனினின்றும் பாகிய விடயாகார சங்கற்ப பரம்பரைகளானே விருத்தியைத் துக்கம்வரை யுரைத்தல்:— அறிவென்பது.

அறிவெனும்விதை சங்கற்பமாமுளையா மனையசங்கற்ப மாந்தன்னைப்
பிறிவுறத்தானே செய்துதான் பிறக்கும்பெரிதுற வளர்ந்திடுந்தானே
செறிதுயரொழிய வின்பமொன் றில்லையாதலாற் செப்புசங்கற்ப
நெறியுறநினையே னிற்புறுநிலையி னிமிடமும் பாவனைநினையேல்.

(ப - ரை.) அறிவெனும் விதை = சித்தாகியபீஜம், சங்கற்பமாம் முளையாம்=சங்கற்பமாகிய அங்குரமாம், அனையசங்கற்ப மாந்தன்னை = அத்தகைய சங்கற்பமாகிய தன்னை,

பிறிவுறத்தானே செய்துதான் பிறக்கும் = பேதமாகத்தானே யியற்றித்தானுண்டாம், பெரிதுறவளர்ந் திடுந்தானே = பெரிதாகவே சுயமேவிரைவில் விருத்தியாகும், செறிதுயரொழிய இன்பம் ஒன்றில்லை = பொருந்தாநின்ற துன்பமேயல்லாது இன்பமென்பது அணுவுங் கிடையவேகிடையாது, ஆதலால் = ஆகையினால், செப்புசங்கற்ப நெறியுற நினையேல் = சொல்லிய சங்கற்பத்தைச் சங்கற்பியாதே, நிற்புறுநிலையில் = இத்திதியில், நிமிடமும் = கணப்போதும், பாவனை = அநுபவித்ததை, நினையேல் = எண்ணவேண்டாம்.

(ஸ்ரீ - வீர.) பீஜம் அங்குரத்தன்மையை யடைந்ததேபோல உணர்வானது சங்கற்பத் தன்மையை யடையும். சங்கற்பத்தானேயே சங்கற்பம் சுயமாகவே யுண்டாகாநிற்கும், விரைவாகச் சுயமாகவே விருத்தியடையும், வெறுந்துக்கப் பொருட்டே யல்லாமற் சுகப்பொருட் டல்லவாம். ஜலமாத்திரம் அர்ணவம் என்பதுபோலச் சங்கற்பமாத்திரமே ஜகத்தாம், சங்கற்பத்தைவிடுத்து அயலாக உனக்குச் சம்சாரதுக்கித் தன்மைகிடை டயவேகிடையாது. அற்றேல் நிருவிகார அத்வயவத்துவில் யாங்ஙனம் நிர்ப்பீஜ ஜகத்துற்பவம் எனின் ' கேட்டி ! காகதாலீய யோகத்தானே வீணாகவே அறிவின்மையினானே யுண்டாகியுளதாம். விவர்த்தவாதங் கோடலானே இத்தோடம் பரிகரித்துக் கொள்ளலாமன்றோ, கானனீர் இருநிலவாதல்போல அசத்தியமே விருத்தியாகின்றது ஆயின் இப்பிரமத்தினது நீக்கத்தில்யாது உபாயம் எனின் அதனைக்கூறுகின்றார்:—செப்பு என்பது சங்கற்பத்தைச் சங்கற்பிக்க முயலவேண்டாம், முன்னனுபவித்த சுகதுக்காதிபாவத்தை இப்போதுள்ள திதியின்கண்ணே யெண்ணவேண்டாம். மிருதிக்கு முன்னிருப்பானது கிடைப்பினோ அதன்கோடல் வீடலாதிப்பொருட்டாய சங்கற்பம் அவசிய முதயமேயாம் என்பது கருத்து.

(ச.) வடபீஜமங்குர மாவதுபோல் அறிவுசங்கற்பமாய், அனையசங்கற்பம்; ஆந்தன்னை பீஜரூபமாகிய அறிவை, தானேபிறிவுற = சேத்தியபாவனஞ்செய்து, தான் =சுயமே, பிறக்கும்=உற்பவிக்கும், தானேபெரிதுறவளர்ந்திடும், அன்றியும் சங்கற்பம், செறிதுயரொழிய= கேவலந்துக்க நிமித்தமலது, இன்பமொன்றில்லை = ஒருபோதுஞ் சுகநிமித்தமாகாது, ஆதலால், எயமே யென்பதுபொருள். அதனது நாச உபாயத்தை யுபதேசிக்கின்றார் செப்புசங்கற்ப நெறியுறநினையேல் = சங்கற்பத்தைக் குறித்துப் பிரவிருத்தியா திருப்பாய், நிற்புறுநிலையில் = சுகத்திதியில், பாவனை = தாற்பரியம்; நிமிடமுநினையேல் = செய்யாதிரு பீஜம் அங்குரத் தன்மையை யடைந்ததேபோலச் சித்திற்குத்தன்னினும் அன்னியமாய சேத்திய பாவனமே சங்கற்பமாம் என்பதுபொருள். பொருந்துவது போலாமென்றதனானே பிராந்தி மாத்திர கற்பிதமிது, உண்மையாயோ இலதாம் எனக்காட்டுவார் அனைய எனக்கூறினார். எக்காரணத்தானே சங்கற்பனம் = அசத்கற்பனமே சங்கற்பமாமோ, அக்காரணத்தானே அதற்கு நிமித்தாந்தர அபேக்ஷையின்மையின், சுயமேயுண்டா மென்பதாம். (104)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனோநாசம் அநாயாசம் எனத்திருஷ்டாந்த பூர்வகம் தெரித்தல்:—இவ்வளவென்பது.

**இவ்வளவான பாவனையாலே யின்பமாமினைய சங்கற்பந்**
**தவ்வுறப் பெரியமுயற்சிகள் வேண்டாந்தாக்கு பாவனையெலா மொழித்த**
**வவ்வகையாலே யிறந்துபோந்தன்னெஞ்சலர் வுறுபூவினைக்கசக்கிற்**
**கைவருவருத்த மொன்றுளதாகுங் கழறிய விதற்கது வேண்டா.**

(ப - ரை.) இவ்வளவான பாவனையாலே = முன்மொழிந்த அளவான பாவனையினாலே, இன்பமாம் = பரமானந்த முடையவனே யாவாய், இனையசங்கற்பம் = இச்சங்கற்பமானது தவ்வுற = நின்னைவிட் டகலுவதற்கு, பெரியமுயற்சிகள் வேண்டாம் = அதிப்பிரயத்நங்கள்

எதுவும் வேண்டியதில்லை, தாக்குபாவனையெலாம் ஒழித்த அவ்வகையாலே = தோற்றும் எல்லாபாவனைகளின் அபாவமாத்திரத்தினலே, இறந்துபோம் தன்னெஞ்சு = சுயமாகவே தனது சங்கற்பம் க்ஷயமாய்விடும், அலர்வுறு பூவினைக் கசக்கில் = மலர்ந்தபுஷ்பத்தின் இதழினைக் கசக்குவதில், கைவருவருத்தம் ஒன்றுளதாகும் = கரத்துக்குண்டாகுங் கட்டமொரு சிறிதேனும் சேர்வுறும், கழறிய இதற்கு அது வேண்டா = இயம்பிய இதனுக்கு அக்கட்டமும் அணுகாதாம்.

(ஸ்ரீ - வீர.) இத்துணையான பாவத்தானேபூதியின் பொருட்டுப் பவ்யனுவாய், சங்கற்ப நாசயத்தனத்தினலே அச்சங்களுந் தொடரமாட்டாவாம், ஆகவே சங்கற்பக்ஷயத்தானே சர்வ பயக்ஷயமாம்; பூர்வபாவ அபாவனத்தானும் சங்கற்பக்ஷயமாம் என்னும் முறைதுணியப் பெறுமெனல், பாவனையென்றது. பாவனையபாவமாத்திரத்தானே சங்கற்பம் க்ஷீணம் சுயமாகின்றது. இவ்வுபாயம் அத்தியந்தம் எளியதெனப் புகழுதல்: அலர் என்றது. காட்டுவாகை முதலிய புஷ்பங்களின் தளங்களைக் கசக்குவதாயினும், யாதேனுஞ் சிறிதுபிரயத்நம் எளிதாகவேனும் செய்யவேண்டுவதாகும், அபாவனை யென்பதன் மாத்திரத்தானே சாதிக்கத்தக்க சங்கற்ப நாசனத்தில் அதன் சம்பாவனையு மின்றும். விளம்பியதையே விளக்குவார் கைவருமென்றார். புட்பத்தைக் கசக்குவதாயின் கையசைவுமுயற்சிமைந்த ! பொருந்தாநிற்கும், சங்கற்ப பரிக்ஷயமாகிய இங்கற்பமிதில் அவ்வளவும் உபகாரம் ஒவ்வுவதின்றும். சங்கற்பம் எதனுற்கெடுக்கத்தக்கதாமோ —அதனல் ஸ்மிருதியினது அஸ்மரணமுண்டாகியபோது அரைநிமிடமாத்திரத்தினலேயும் லீலையாகவே கெடுத்து விடலாம். அற்றுயின், சங்கற்பக்ஷயத்தானே துக்கக்ஷய முண்டாயினும் நிரதிசய ஆனந்த அடைவு எவ்வுபாயத்தானே சாதிக்கப்பாலதாம் எனின் ? நிரந்தரம் சுவபூர்ண ஆனந்த ஆத்மத்தன்மைச் சிந்தனமாத்திரத்தானே அடைவுற்ற தன்பால், சொரூப நழுவாமை வந்துழியாதுஅசாத்தியமாமோ அதுவும் சாதிக்கப்பெறும் எனலாம். அசாத்தியம் சாதிக்கப்பெறு மென்பது விப்பிரதிஷித்த மாமெனின் ? தானகவே சித்தமாயுள்ளது என்னும் அது அகலமாட்டாது என்னுங்கருத்தாற் சாத்தியம் எனப்பெற்றதேயல்லாமல், உற்பத்தியாம் என்னுங்கருத்தால் உரைக்கம்பெறவில்லை; பாவங்களினது நீக்கமோ, அன்னியனல் அபகாரம் அடைந்தவழியாதல்; நாசத்தால் பவாந்தரப்பான்மை பற்றியவழியாதல், என இருவகையாம்; ஹே குழந்தாய் ; நினதாத்மா அன்னியனல் அபகரிக்கப் பெற்றதாய் எவனுடையதாம், அத்விதீய ஆன்மாவினும் அன்னியனெருவன் வெளியாவதில்லையல்லவா ! விநாசமாகித்தான் எது போற்றுனஷ்தாம் ? கடமோ அழிந்து கபாலமாவதுகண்டோம், ஆன்மாவோ என்னும், யாது ஆமோ அது நட்டத்தால் காணமுடியாததாம், ஆன்மா அயல்காண்பானக உளதாதலுமிலையாம், ஆகலின் ஆன்மநாசம் சாக்ஷியுடையதாகாதாய்ச் சித்தியுடையதே யாகாதாம், எனவேயாத்மரூப மோக்ஷம்தானே சித்தமாகியகற்றவே முடியாததாம்.

(ச.) இவ்வளவான பாவனையாலே = சகத்திதியில் நிர்ச்சங்கற்பமான பாவனையால், நிராதரவான அபிப்பிராயத்தாலுமே, இன்பமாம் = கைவல்லியசுகம்பெற யோக்கியனுவாய், இனையசங்கற்பம் = இச்சங்கற்பம், தவ்வற = நாசமாக, பெரியமுயற்சிகள் வேண்டா=மிகு பிரயத்நம் வேண்டுவதின்று, தாக்குபாவனை யெலாமொழித்த அவ்வகையாலே = சங்கற்ப பாவனையின் அபாவமாத்திர மென்னும் அப்பிராவர்த்தனத்தாலே, தன்னெஞ்சு — சங்கற்பம் இறந்துபோம் = நசிக்கும். அலர்வுறுபூவினை =மாலதிமலரை, கசக்கின் = கொஞ்சங்கசக்குமிடத்தும், கைவருவருத்தம் ஒன்றுளதாரும்=அற்பயத்தந பேதமுண்டு, கழறியவிதற்கு = இச்சங்கற்ப நாசத்திற்கு, அது வேண்டா—ஓர் எத்தன பேதமுமின்று, யாதினலெனில்? ()

எழுந்தசங்கற்ப பாவனைவிட்டா லிறந்துபோ மிதனையிங்கிதனு
லழுந்துறமாய்த்து மனத்தினுன் மனத்தையறுத்து நின்னறிவினீநிற்பா
யுழுந்துருள்பொழுதின் முடியுமீதரிதோ வுலகமும் வானமுமொக்கு
முழுந்தியபொய்யாய்ப் போம்விகற்பத்தான் முளைத்தவையன்றி முன்னிலதால்.

(ப - ரை.) எழுந்த சங்கற்ப பாவனைவிட்டால் இறந்துபோமிதனை = தோற்றிய சங்கற்பபாவனையை விடுதன் மாத்திரையானே இறந்துபோவதான இச்சங்கற்பத்தை, இங்கு = இவ்விடத்தில், இதனுல் = சங்கற்பத்தினுலேயே, அழுந்துறமாய்த்து = நன்ருகக்கெடுத்து, மனத்தினுன் = தூயசித்தத்தால், மனத்தை = நேயசித்தத்தை, அறுத்து = சிதைத்து, நின்னறிவில் = நின்சித்துருவத்தில், நீ = தைரியமுடைய நீ, நிற்பாய் = நிலைபெற்றிருப்பாய், உழுந்துருள் பொழுதில் = ஒரு கணநேரத்தில், முடியும் ஈது அரிதோ = முற்றுப்பெறுமிது அரியதோரு காரியமோ' உலகமும் வானமும் ஒக்கும் = ஜகத்தும் ஆகாசமும் சூனியத் தன்மையானே சமமாம், முழுந்திய பொய்யாய்ப்போம் விகற்பத்தால் = அத்தியந்தம் அசத்து மயமாகிய விகற்பத்தினுலே, முளைத்தவையன்றி = எழுந்தனவே யல்லாமல், முன்னிலதால் = பூர்வம் இல்லாததன்மையை யுடையனவே யாமாகலின்.

(ஸ்ரீ - வீர.) அசங்கற்பன சங்கற்பனத்தானே சர்வசங்கற்பத்தையும் பாதித்து, ஆத்மதத்வ மநநரூபமனத்தானே தனது மனதைக்கெடுத்து, ஹே மனனசீலமைந்த ! நினது சித்துருவத்திலேயே நிலைபெற்று நிற்றிநீ இத்துணைமாத்திரஞ் செய்வதில் நினக்குமுடியாமையென்னுளது, அதிசுலபமான இதனைச்செய்வது மிகவும் எளிதேயாம், தேகாதி யியக்கமின்றிமநோமாத்திர விவகாரமாதலின் என்றபடி சங்கற்ப முபசாந்தமாயின் உபசாந்தமிதுவாம், சமுசாரதுக்கமகிலம் மூலத்தோடுங்கெடும் திடமதியோய் ! உரைத்த உபாயமிரண்டானே மூலமும் உபசாந்தமுறவே துக்கமும் அடியோடு மறுமென்பதாம். அற்றேற்சங்கற்பம் உபசாந்தமாயினும் ஜீவசித்தவாசனை முதலவற்றின் வயத்தானே துயரமுண்டாகவே செய்யும் என்ருசங்கித்து அவற்றிற்குச் சங்கற்பத்தில் அந்தர்ப்பாவங் காட்டல்: அருத்த மறிந்தவரிலருமையோய் ! சங்கற்பமே, மனம் ஜீவன் சித்தம் புத்திவாசனை யெனவாம், நாமத்தானே இவ்வேறும், அருத்தத்தாலன்ரும். சங்கற்பனத்தைவிட்டு ஈண்டியாண்டுமே ஒரு சிறிதுமேயில்லவேயில்லை, அதனையே இருதயத்தினின்றும் சிதைத்தி, இதற்காகவேறு என்னேமிகச்சோகமுறுகின்றனை ! அற்றேற் சங்கற்பமே ஜீவஜகத்து வடிவமாயின் அது க்ஷயமாகவே நைராத்மிய லக்ஷணசூனியத் தன்மையடைவுண்டாம், ஜீவனினும் அயலாக ஆன்மாவென்பது ஒன்றுளதாவ தில்லையன்றோ வென்ருசங்கிப்ப, விடைதால்:—உலகமும் என்பது. எவ்வாறுதான் இவ்வாகாயம் சூனியமாமோ அவ்வாறுதானே ஜகத்துஞ் சூனியமாம். அசத்துமய விகற்பத்தினின்றும் எழுந்த இரண்டும் சமமேயாம், ஆரோபண விஸ்திருதமாதலின். மருமரீசிகை மறைப்பினும் மருப்பூமி சூனியவடிவ முடையது ஆகாதாம், இத்திருட்டாந்தமேபோல ஜகத்து ஜீவாதிதிருசியமாத்திர பாதமெய்தினும் திருக்குருவ ஆன்மா சூனியான்மகம் ஆகாதாம், கானனீர்போன்ற இவை ஒப்பேயாம் பொய்யேயாதலின்.

(ச.) பாவனை விட்டால் = சுகசாத்தியமான காரியமும் அன்ருதலினுனும், உபேக்ஷாமாத்திரத்தால் நிவிர்த்திப்ப தாதலினுனும், சங்கற்பம் இறந்துபோம் என்றதாயிற்று; இங்கிதனுல் = இவ்விடத்து அந்தர்முக சங்கற்பத்தினுல், இதனை = பகிர்முக சங்கற்பத்தை, மாய்த்து = சேதித்து, மனத்தினுல் = சாஸ்திர சற்சங்கமாதி தீரத்தாற்ருபமற்றமனத்தால், மனத்தை = சிந்தாசந்தாபமான மனதை, அறுத்து = சேதித்து, நின்னறிவில் =

நினதான்மாவில், நீ நிற்பாய் = நீயிருப்பாய் என்பது விவேகம். உழுந்துருள் போதின் முடியுமீதரிதோ = இந்தமாத்திரத்தில் வருத்தம் என்னென்றதாயிற்று. சங்கற்பத்தினது பகிரமுகத்துவ நிவிர்த்திக்காகச் சகம் வியோமம்போற் சூனியமெனல். உலகமும் வானமும் = ஜகம் அம்பரம் என்னுமிரண்டும், முழுந்திய பொய்யாய்ப்போம் = அஞ்ஞானமயமான, விகற்பத்தால் = விகற்பத்தினுலே, மூளைத்து = எழுந்தவைகளாய், அளவின்றி மூடுதலால்=விஸ்தீரணங்களாதலால், கற்பிதத்துவ அவிசேடத்தினல் இரண்டும், அற்று= சூனியத்துவ மென்பதுபொருள். (106)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தத்துவஞானிக்கு ஆயாசமியாதொன்று மில்லாமலே உச்சேத யோக்கியமாகவே சமுசாரமலம் விஸ்தரித்தி ருக்கின்றதேயன்றிவேறல்ல; என்னே, அநாதியஞ்ஞானத்தாலுண்டாகியதிவிஸ்தீர்ண மாயதற்கும் இரஜதசுவப்பனுதி விப்பிரமத்திற்கும் பிரபோதமாத்திரத்தானே யுச்சேதங்காணப் பெறுதலின்; ஆனல் அசம்பாவனே விபரீத பாவனே முதலியமலமோ ஞானபூமிகை யப்பியாசவடிவப் புருடப்பிரயத்நத்தானும் நசிக்கும் என்னுங்கருத்தாற் கூறுதல்:—தண்டுலமென்பது.

(ச-அ - கை.) தங்கை, சுபாவிகமான மலத்திற்கு எப்படிப் புருடப்பிரயத்தனத்தால் நிவிர்த்திவருமெனச் சங்கித்துத் திருஷ்டாந்த முகத்தாற் றெரிவிப்பவராய்க் கூறல்:— தண்டுலமென்றது.

**தண்டுலத்தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சம்பந்தந் தொழில்விசேடத்தால்**
**விண்டுபோமதுபோற் புருடனுமலத்தை மேவியே போக்குதலியலும்**
**கொண்டசந்தேக மொழித்துநீ முயல்வாய்குருவின் வல்லபவிளக்கந்தாங்**
**கண்டனமெனல் வீணுநீதானுங் கண்டனபரம் பொருட்பொலிவே.**

(ப - ரை.) தண்டுலத்தோலும் = அரிசியின் உமியும், செம்பினிற்களிம்பும் =தாமிரத்தின் அழுக்கும், சம்பந்தம் = பற்றியதாம், தொழில் விசேடத்தால் ... கிரியையின் சிறப்பானே, விண்டுபோம் = நசித்துப்போம், அதுபோல் = இத்திருட்டாந்தம்போல, புருடனும் = சேதனனும், மலத்தை = மொழிந்த களங்கத்தை, மேவியே = மயலாலுற்றே, போக்குதல் இயலும் = நீக்குதல்கூடும், கொண்ட சந்தேகம் ஒழித்து=உள்ளத்திலள்ளிய ஐயத்தையகற்றி. நீ முயல்வாய் —ஞானபூமிப்பயிற்சி யுடையவனுக நீயாதி. குருவின்வல்லப விளக்கந்தாம் = மகத்தான தென்னும் சம்பத்துக்களானே தீப்யமானங்களாய போகவிலாசங்கள், கண்டனமெனல் வீணும் = சாசுவதங்கள் என்றுண்டாம் விப்பிரமம் நினக்காகாதொழிக, நீதானும் கண்டன—நீயுந்திருசிய மியாவும், பரம்பொருள்பொலிவே=அவ்வாத்ம தத்துவத்தின் விலாசமேயாமென்பதே சத்தியம்.

(ஸ்ரீ - வீர.) விகற்பத்தானே மூளைத்தமலம் சத்தியமாயின் கரியைக்கழுவுதல்போலாம் சிறிதுகழுவின் மலமேநிற்கும், முழுதுங்கழுவின் ஒன்றுமில்லாமற் போய்ப் புருடார்த்தமே எஞ்சாதாம். துஷகஞ் சுகமானது அதண்டுல பூதமாயேதண்டுலத்தில் அகற்றப்பெறுதலே போல அசத்தாயே யுள்ளமலமகற்றத் தக்கதாகும், அநாதியாகவே அம்மலங் கற்பிதமாயினும் அநாயாசமாகவே யறிஞன் அறிவாலதை யகற்றுவன், தண்டுலத்தின் சருமமும் தாமிரத்தின் காலிமையும், கிரியையான்மைந்த இரிவதேபோலும் புருடனது மலமும் இரிந்தேபோம். இதிற்சந்தேகமுற வேண்டியதே இல்லேயாகலின் பெருமுயற்சியுடன் ஞானபூமி சம்பாதனமே செய்யவேண்டு மென்பதாம். சமுசாரி சுபாவத்தையுடைய வெனது, மகத்தாய சம்பத்துக்களினுலே விளங்குவனவாகிய இப்போக விலாசங்கள், சத்தியங்களும் சாசுவதங்க

ளுமாம் என்னும் பெருமயக்கம் வீணுகவே நினதுள்ளாகாதொழிக; — சமுசாரியாகிய நீயும் விஸ்தாரமாகிய அவ்விலாசங்களும், மற்றுமுள்ள இவ்வெல்லா ஜனனமரணுதி தீருசியமாத் திரங்களும், ஆக அவ்வாத்மதத்துவ மொன்றே விளங்குகின்றது, திருசியரூப மெந்துவுமே சத்தாகிய அதற்கயலா யில்லவேயில்லே.

(ச.) தொழில் விசேடத்தால்=குத்துதன் முதலிய கிரியையால்; தண்டுலத்தோலும்= தண்டுலத்தினது சர்மமும், புளியுப்பாதிகளாற் றேய்த்து அலம்பலாதியால், செம்பினிற் களிம்பும் = செம்பினது களிம்பும், சகஜம் = சகஜமாயினும், விண்டுபோம் = நாசமாம், அதுபோல்; புருடனும் = புருடனது மலஞ்சகசமாயினும், மலத்தை=அஞ்ஞானரூபமான அம்மலத்தை, மேவியே = சிரவணமனன நிதித்தியாசனுதிக் கிரியையைப் பொருந்தியே, போக்குதல் = விநாசஞ்செய்வது, இயல்பாம்=இயற்கையா மென்பது விவேகம், ஆதலின், கொண்ட சந்தேகமொழித்து நீ முயல்வாய் குருவின் மகத்துக்களின், வல்லப —சம்பத்துக் களினுடைய, விளக்கத்தாற் கண்டனமெனல் வீண் — விளக்கமான விலாசங்களென தென்று அந்தக்காணத்தில் வீயர்த்தமாக விப்பிரமம் வேண்டாம், நானுநீதானுங் கண் டன = நீயும் விரிந்தவவ் விலாசங்களுமாகிய வீதனைத்தும், புரம்பொருட் பொலிவே = அவ்வான்ம தத்துமமே விளங்குகின்ற தென்றதாயிற்று. (107)

(ஸ்ரீ - வீர - அ - கை ) ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ தாசூர முனிவருடன் கலந்து சம் பாஷித்ததை ஸ்ரீ இராகவருக் கருளல்:—என என்பது.

**எனவவருரைத்த யாவையுங்கேட்டவ்விரவிலங் கவரைநானெய்த**
**மனமகிழ்ந்தருச்சித் தென்னுடைத்தளிர் மேல்வதிந்தன ளிருவருமெய்ம்மைக்**
**கனகதைகளினுற் காதலுற்றவர் போற்கங்குலைக் கணமெனக்கழித்தவ்**
**வனகனைநீங்கிக் கங்கையுற்றன ஞனவன்கதை போலுமிச்சகமே.**

(ப - ரை.) என = கூறிய பிரகாரம், அவர் உரைத்தயாவையும் கேட்டு = அத்தா சூரமுனிவரும் மைந்தரும் சம்பாஷித்துக் கொண்டிருந்த யாவற்றையுஞ் செவிகொண்டு, அவ்விரவில் = அந்தராத்திரியில். அங்கு = அவ்விருக்ஷத்திடத்தில், அவரை = அவ்விருவ ரையும், நான் எய்த = யாமடைந்த மாத்திரத்தே மனமகிழ்ந்து = பரமசந்தோடத்தையுள் ளத்தடைந்து, அருச்சித்து = பெரிதுபூசித்து, என்னுடைத் தளிர்மேல் வதிந்தனன் = எம் மோடுங்கூட அப்பத்திரத்தின்மீது அத்தாசூர முனிவிருந்தனர், இருவரும் = யாங்கள் இரண்டுபேரும், மெய்ம்மைக்கன்கதைகளினுல் = தத்துவமயமான பெரும் விசித்திரக் கதைகளினுற் பரஸ்பரம், காதலுற்றவர்போல் = ஆசைமிகுந்தமர் இரவினை நொடியிற்கழிப் பதேபோல, கங்குலை = அவ்விரவை, கணமென = சிறிது போதாக, கழித்து = அகற்றி, அவ்வனகனை = அந்தப் புண்ணியமுனியை, நீங்கி = விட்டு, கங்கையுற்றனன் = நான் ஸ்ரீதேவநதியிற் புனிதமுறும் பொருட்டுச் சென்றேம் யாம், அவன்கதைபோலும் = அத்தா சூர ஆக்கியா யிகைபோலவேயாம், இச்சகமே=இவ்வுலகம் ஆமெனவே யெண்ணவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—ஹே இரகுகுல ககனசசாங்க இரகுநந்தன! யாம் இவ்வண்ணம் அவ்விருவர்தம் வியக்தமான சம்பாஷணத்தை அப்போது ஆண்டிரவிற் கேட்டு; பத்திரபுஷ்ப பலாகுலகதம்பதரு அக்கிரபாகத்தில், விருஷ்டிஜலவேடத்தை விடுத் துக் கீழேயிறங்கும் வடிவினதாய மேகமானது சிருங்க சிகரத்தில் மெதுவாகவந்து அமர்வதே போலக் ககனத்தினின்றும் சப்தமியாதொன்றுஞ் செய்யாமல் இறங்கினேம். இந்திரியநிக்கிர கம் செய்வதில் மகாசூரராய் தாசூரமுனிவரை ஆண்டுக்கண்டேம், அவரும் அவணுற்ற வெம்

மைக்கண்டார், எழுந்தார் காதல்கூர்ந்தார் ஆசனம்விரித்தார் எம்மையெழுந்தருளச்செய்தார் வெகுபூஜா திரவியங்கள் கொண்டும் பத்திரபுஷ்ப பலாதிகள் கொண்டும் மிகவும் பூசைசெய் தார், பின்னர் அம்முனிவருக்கும் எமக்கும் பரஸ்பரம் உரைத்த சித்திரங்களாய தத்துவக் கதைகளானே ஆண்டே அவ்விரவானது மிகுந்த காதலுற்றவர்க்கேபோல முகூர்த்தமொத் துக் கழிந்தது. அவ்விடம் நின்று எழுந்துயாம் புறப்படவும் வெகுதூரம்வரை அவ்விருவரும் தொடர்ந்தனர், அவரையரிதினீங்கி அமரர் நதியையடைந்தேம். ஆக்கியாயிகையின் முன் மொழிந்த சங்கதியை நினைப்பூட்டுவார் அவன்கதைபோலு மிச்சகமே யென்றார். தாசூர ஆக் கியாயிகைபோலும் இதுவுமாம், என்னுமிது எம்மால் உனக்குப்போதப் பொருட்டு ஜகத்ரூப நிரூபணத்தில் உரைக்கப்பெற்றது, ஆகலின் வாஸ்தவம்போலத் தோன்றிமயக்கும் இரஞ் சனையாய அவாஸ்தவமா மிதனைவிட்டுத் தாசூரானே யுபதேசிக்கப்பெற்ற சித்தாந்த திருஷ் டியானே சந்ததம் உதாரமுடையவனுகி ஆத்மவானுகி வாழ்வாயாக.

(ச.) ஸ்ரீ வசிஷ்டமுனிவர்:—இரகுகுலாகாசச் சசாங்கனை இரகுநந்தனை! அவ்விரவில்; ஆகாயத்தினின்றிழிந்து, அங்கு = அக்கதம்பாக்கிரகத்தில் வசிக்கும் அவரை, யானெய்த, பின்பு அந்தத்தாசூரன் என்னைக்கண்டு மனமகிழ்ந்து. அரிக்கியாதிகளோடு வித்தாரமான கதம்பபத்திரங்களால், அருச்சித்து = அன்புற்றுப் பூசித்து, என்னுடைத்தளிர் மேல்வதிந்த னன், பின்னிருவரும் மெய்ம்மைக் கதைகளினுல் ஒருவருக்கொருவர், காதலுற்றவர்போல்= காந்தர்போல் கங்குலைக் கணமெனக்கழித்து, அவ்வனகனை = அத்தாசூரனை, நீங்கி, கங்கை யுற்றனனுன் = நான் அமரநதியை யடைந்தேன், அவன்கதைபோலும் = அத்தாசூரனது ஆக்கியாயிகையேயாம் இச்சகமே — இச்சகமென்றே பாவிப்பாய். (108)

———:———

## தாசூரன் கதை முற்றிற்று.



## கசன் கதை.

(ஸ்ரீ-வீர - அ-கை.) திருசியமானது சத்தா, அசத்தா, சதசத்தா, என்னுமிப் பக்ஷத்திர யத்திலும் ஆண்டு அகந்தாதிரஞ்சனம் உசிதம் அன்றென்றும்; இவ்வுலகம் சகர்த்துருகமா அகர்த்துருகமாகர்த்துரு அகர்த்துரு சாதாரணமாய் உதாசீன ஆத்மசந்நிதி மாத்திரத்தானே கிடைக்கப்பெற்ற சொரூபத்தையுடையதா, என்னுமிம் மூன்று பக்ஷங்களிலும் உனக்கு அவ் விரஞ்சனை பொருந்தாதென்றுங்கூறஇக்கதையைத் தொடங்குகின்றார்:—முடிவறு என்பது.

(ச - அ - கை.) முன்பு தாசூரன்கதையிற் சகஸ்திதிக்கு மாயிகத்துவஞ் சொல்லப்பட் டது, இப்போது திதிப்பிரகரண தாற்பரியஞ் சங்கிரகமாக உபதேசப் பிரகாரமாய்ச் சொல் லப்படுகிறது:—முடிவறு என்றது.

முடிவறுகாலந்தன்னின் மொழிதரு மாண்டுறூறு
நொடியள வெனினும் பற்றுதிதனையே நெடிதாய்நோக்கி
யொடிவறு பாரவேட்கை யுறவதென் பொருள்களுன்னிப்
படர்வதா முள்ளத்தாசை பற்றறவொருக்கி நிற்பாய்.

(ப - கை.) முடிவறு காலந்தன்னின் = பரியந்தமில்லாத போதினது, அங்கிசமாக நோக்குமிடத்து, மொழிதரும் = பூரண ஆயுளாகப்புகலும், ஆண்டு நூறும் =சதசம்வற்சரங்

களும், நொடியளவு எனினும் பற்ருது = கணப்போதென்று கழறவுங்கட்டாது, இதனையே = இவ்வற்பத்தினும் அற்பத்தையே, நெடிதாய் நோக்கி=மகா ஆயுளாக மகிழ்ந்து, ஒடிவறு பாரவெட்கை யுறுவதென் = கெடுக்க முடியாதபடியாய ஆசைச்சுமையை யடைவதென்னே, பொருள்களுன்னிப் படர்வதாம் = அதுவேண்டும் இதுவேண்டும் என்று எண்ணி எண்ணி விசாலிப்பதாகிய, உள்ளத்தாசை = அந்தராஸ்தையை, பற்றற ஒருக்கிநிற்பாய் = அடியோடு நீங்கும்படியாகச் செய்து சுகிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) வரையறைவில்லாத காலத்தினதுயாதாவது ஒரு அணு அங்குசம்நூறுவருடமென்பது முடியாததே, சரச்சதம் = மாநுடதேக ஜீவனபரம அவதியாய நூறுவருடகாலமாம், அநாதியநந்த பூர்வோத்தர காலங்களில் எப்போதுமே யின்மையின் அத்தியந்தம் அசம்பாவிதமாய அத்துணைக்கால மாத்திரத்தைப் பெரிதாயதிதிடமாய் நினைந்து மநுஷ்யதேக ஆன்மத்தன்மை யிலக்கண ஆச்சரியத்தை யுடையவனுகிய சர்வ இந்திரியபத அதீத ஆத்மா யாதின் பொருட்டோ அலைந்துதிரிவன், எல்லாவாற்ருனுமே இது அநுசிதமாம்; ஆகலின் ஸ்திரீயாதி வஸ்துக்களின் சௌந்தரியத்தை நாளுவகையாகச் சிந்தித்துச்சிந்தித்துளவாம் உள்ளத் திருஷ்ணையை யொழித் தாநந்திப்பாய்.

(ச.) நொடியளவெனினும் பற்ருது = அற்பமாம், இதனையே = இந்நூறுண்டினை, நெடிதாய் நோக்கி = மகாயுளாகப் பார்ப்பவனும், ஒடிவறுபார வேட்கை = ஆதாம், உறுவதென் — அநுசரிப்ப தென்னே, உள்ளத்து = அந்தக்கரணத்து, பொருள்களுன்னி=மகா சத்தாரூபமான பாவத்தை அநுசரித்தவனும், படிவதாமாசை = சங்கற்பமயமான வாதரத்தை, பற்றறவொருக்கி நிற்பாய். (1)

மாலறவெங்ங னின்ருயங்ஙனே வாழ்வாய் பாரிற்
கோலநன்மணிகள் வேண்டா திருக்கவுங்கு றுகிப்பாயுந்
தூலநன்னிழல் போலுண்டா மாத்திரந் தோற்றமான
ஞாலமும் பரமந்தன்னி னலம்பெறத் தோன்றுமன்றே.

(ப - ரை,) மாலற = ஆசையாவும் அற்றமுறையில், எங்ஙன்நின்ருய் அங்ஙனே வாழ்வாய் = எவ்வாறுள்ளாயோ அவ்வாறே சச்சிற்சுகவானுயிருந்து விவகரிப்பாய், பாரில் = இவ்வுலகின்கண், கோலநல்மணிகள் = அழகியநல்ல இரத்தினங்கள், வேண்டா திருக்கவும் = இச்சையின்றி யிருக்கவும், குறுகிப்பாயும் தூலநல் நிழல்போல் = நெருங்கிப் பிரவிருத்திக்கும் அலோகம்போல, உண்டாமாத்திரம் = சத்தாமாத்திரமாக, தோத்றமான ஞாலமும் = இச்சகத் கணங்களும், பரமந்தன்னில் = பரமாத்ம தேவனிடத்தில், நலம்பெறத்தோன்றுமன்றே = நன்மை பயப்பனபோலத் தோற்றும். அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) ஆசையையடியோடு மழித்து யாதாய்ச் சேடித்து நின்ருய் அதுவாகவேயிருந்து இவ்வுலகின் கண்ணே ஹே அநகமைந்த ! லீலையாக விவகரிப்பாய் ! அகர்த்துருத்வபதத்தையும் அதனிச்சையையும், கர்த்துருத்வ பதத்தையும் அதனிச்சையையும் மாந்திபரிசிஷ்டமாக யாதானுய் அதுவாகவே நிற்பாய் என்றபடி லீலையாக விவகரித்த வியாங்ஙனமெனின், விவகாரத்தில் உதாசீனத் தன்மையுடைமையானே கர்த்துருபூதமாய், சர்வபாவத்துள்ளு மிருப்பதாய், சர்வத்தையுங் கடந்ததாய் உள்ள ஆன்மாவாகிய நினது, சந்நிதிமாத்திரத்தானே இச்சையில்லாமலே இந்நியதியானது விவகாராகாரமாக வெளியாகி விரிந்தோங்குகின்றது; என்பதற்குத் திருஷ்டாந்தம்:—தீபசந்நிதி மாத்திரத்தானே இச்சையில்லாமலே பிரபை பிரகாசிப்பதே போலும்; நிரிச்சையுடையதாகவே இரத்தினம் இனிதிருப்ப ஒளியா

னது பிரவிருத்திப்பதே போலும்; பரமாத்மாவினிடத்திலே சத்தாமாத்திரமாக இச்சகத் கணங்கள் தோற்றும் என்பதாம்;

(ச.) மாலற = மநோபாவமற்று, எங்ஙனின்ருய்= எந்தரூபமாய்ச் சேடித்திருப்பாயோ, அங்ஙனே = அந்தரூபனுய், அஙகனே நீ லீலையினுல், பாரில் = இச்சகத்தில், விவகரித்து, வாழ்வாயென்பது பொருள், கோலநன்மணிகள் = இரத்தினம், வேண்டாது = பிரபைபிர விர்த்திக்கட்டு மென்று இச்சாசூனியமாய் இருக்கவும், குறுகிப்பாயுந்தால நன்னிழல்போல்= பிரபைபிரவிர்த்திப்பதுபோல், பரமந்தன்பால் = பரமாத்மா நிரிச்சையா யிருக்கவும், அவன் சந்நிதியின், உண்டாமாத்திரம் = சத்தாமாத்திரத்தால், தோற்றமான ஞாலமுநலம் பெறத் தோன்றும். அன்று ஏ இரண்டும் அசை. (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கர்த்துருத்துவ அகர்த்துருத்துவக் கூற்றுகளின் விரையைக்காட்டி யுபசங்கரித்தல்:—ஆதலாலென்பது,

ஆதலாற் பரமந்தன் பாலகர்த்தனே கர்த்தனேயென்
றேதுபாவனைக ளுண்டா முற்றபற்றி லாமையாலே
சாதமிலகர்த்த னுகுஞ்சந்நிதி மாத்திரத்தான்
மேதகுகத்தனு மிவ்விரண்டலால் வேறுமேவா.

(ப - ரை.) ஆதலால் = ஆகையினுல் பரமந்தன்பால் = சுவாத்மாவில், அகர்த்தனே கர்த்தனே என்றேதுபாவனைகள் உண்டாம் = கருத்துருத் தகைமையும் அகருத்துருத் தகைமையும் நன்குநிதமாம், உற்றபற்றிலாமையாலே = நிரிச்சைத் தன்மையினுலே, சாதமில் அகர்த்தனுகும் = பிறப்பற்ற அகர்த்தனுமிவன், சந்நிதிமாத்திரத்தால் = முன்னிலை மாத்தி ரையானே, மேதகுகத்தனும் =மேன்மையையுடைய கருத்தனுவன், இவ்விரண்டலால் வேறு மேவா = இவ்விரண்டே ஆன்மாவின் மாட்டிருக்கின்றனவாம்,

(ஸ்ரீ - வீர.) ஆகலின் தனது ஆன்மாவின்கண் கர்த்துருத்தன்மையும் அகர்த்துருத்தன் மையும் *சம்ஸ்திதங்களாம், நிரிச்சைத்தன்மையானே அகர்த்தாவாமிவன், சந்நிதிமாத்திரத் தானே கருத்தாவாம். விரைவேறு முண்டு:—சருவ இந்திரியாதி அதீதத்தன்மையானே சன் மயன் அகர்த்தாவும் அபோக்தாவு மாவன், இந்திரியாந்தர்க்கதத் தன்மையானே அவனே கருத்தாவுமாவன் போக்தாவுமாவன். ஹே அஙகமைந்த ! கர்த்ருதை அகர்த்ருதை யென்னு மிரண்டுமே யான்மாவின் கண்ணிருக் கின்றனவாம்.

(ச.) பரமந்தன்பால் = ஆன்மாவின் கண், உற்றபற்றிலாமையாலே, நிரிச்சையியல் பாதலின், சாதமில் = களங்கமில்லாத விவன், இவ்விரண்டலால் வேறுமேவா = அனகனே ஆன்மாவின் கண் கருத்துருத்துவம் அகருத்துருத்துவம் என்னும் இரண்டுமே யிருக்கின்றன வென்றதாயிற்று. (3)

(ஸ்ரீ - வீர - அ-கை.) நிற்குந்துயரற்ற நிலையிதுவென நிகழ்த்தல்:—அகத்தனிலென்பது.

அகத்தனிற் கத்தன்றன்னி லமைந்ததே ததனினிற்பாய்
முகத்தமா மிரண்டுமின்றி முளைத்தெழு மனதைநுங்கி
மிகத்தனிதிரமாய் நிற்றியகத்தனு விளம்புகேரிற்
சுகத்தனு நிற்றியேனு நன்றிது துயரொன்றில்லை.

(ப - ரை.) அகத்தனிற் கத்தன்றன்னில் = அகர்த்ருதை கர்த்ருதை யென்னு மிரண் டில், அமைந்தது ஏது = மேன்மைப் பயன்யாதால் ஆமோ, அதனில் நிற்பாய் = அதைப் பற்றி நிலைநிற்பாய், முகத்தமாமிரண்டு மின்றி = முன்மொழிந்த கர்த்ருதை அகர்த்ருதைத்

யென்னும் இரண்டையும் அடியோடும் விட்டு, மூளத்தெழு மனதை நுங்கி = வாசனுவயத்தால் உதித்து உதித்துக் குதிக்குமுள்ளத்தை இலயம்செய்து, மிகத்தனித்திரமாய் நிற்றி = அத்தியந்தங் கேவலமாய்ப் பரிசேடித்தபடி அதிதிடமாய் அந்நிலைபற்றி நிற்பாய், அகத்தனு விளம்புநேரில் = அகர்த்தனுக மொழிந்த முறையில், சுகத்தனுய் நிற்றியேனும் = பரமா நந்தபரிதனுயிருந்து வாழ்வாயேனும், இதுநன்று = இம்முறையில் யாதொரு பாதகமுமில்லை, யாநந்தமாகவே யிருக்கலாம், துயரொன்றில்லை = சர்வ அநர்த்தமுமகன்று பரமாமிருத மெனப் பெயரிய சமத்தன்மையே பரிசேடிக்கும் என்பதாம்.

(ஸ்ரீ - வீர.) கருத்துருதை அகருத்துருதை யென்னும் இரண்டனுள் எதனுனேசிரேய சுண்டாமென்று உனக்குத் தோற்றுகின்றதோ அதனையே பற்றித் திடமுடையவனுதி; இரண்டிற்கும் சிரேயஸ்தன்மையைத் தனித்தனியே காட்டல்:—எல்லாவற்றினு மிருக்கு மியான் அகர்த்தனேயாவன் என்னும் இத்திடபாவனையோடு கூடிநின்று பிரவாகத்தில் வீழ்ந்தகாரியத்தைச் செய்தபோதினும் அவன்பற்றுருன். எங்ஙனம் பற்றுருன் என்னின் அதையறைதல்:—சித்தத்திற்குப் பிரவிருத்தியின்மையினுலேயே ஜந்து நீரசத்தன்மை வடிவ வைராக்கியத்தை யடைகின்றது; எந்தஜந்துவிற்கு ஈண்டுயாதொரு சிறிதுமே செய்கின்றே னில்லை யென்னுந் துணிபானதுளதாமோ, ஆண்டு, போகக்குழுக் காமவான் யாவனுருன் செய்பவனுவன் விடுபவனுவன், அச்செந்து தொடாது விடாது. ஆகலின் நித்தியம் அகர்த்தா யான் என்னும் திடமான பாவனையினுலே சுகிப்பன், பரமாமிருத மெனப்பெயரிய அது சமதையாகவே எஞ்சாநிற்கும். முகத்த மாய்நிற்றி யென்பது இப்பதினெட்டாவது சர்க்கத்தின் 14 வது சுலோகமொழி பெயர்ப்பாம், கவிநாயகருக்குப் பாடம்மாறிக் கிடைத்திருக் கலாம் என்றுணர்க.

(ச.) அகத்தனிற் கத்தன்றன்னில் = இவ்விருவருக்குள், அதாவது இவ்விரண்டு தன்மைகளுக்குள், எது = எதில், அமைந்தது = இயைந்தது = நினக்கிஷ்டமோ, அதனினிற்பாய் = அக்கருத்துரு பாவனையையாவது அகர்த்துரு பாவனையையாவது அநுசரித்து ஸ்திரனுவாய், மூளத்தெழு மனதை = விஷய இச்சையால் உதித்துவளரும் மனதை, அப்பிரவிருத்தியாகிய எதுவினுல், நுங்கி — விஷய இச்சையறும் படிவிழுங்கி, அதனுல், விளம்பு நேரில் = ஒன்றன்பின் ஞென்ருய் வருங்காரியங்களிற் பிரவிர்த்திப்பினும், அகர்த்தனுய் = எவ்விடத்துமியான் அகர்த்தாவென்னுந் திடபாவனை யுடையவனுய். மிகத்தனித்திரமாய் நிற்றி, அலது, சுகத்தனுய் = அனைத்துஞ் செய்கின்றே னென்னும் மகாகர்த்துருபாவனை யுடையவனுய், நன்று = பரமாமிர்த ரூபமென்னுஞ் சமத்துவமே சேஷிக்கும், (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இரண்டாவது கற்பத்திற்கும் சிரேயஸ் தன்மையைக் காட்டல்:— முன்னியவென்பது.

முன்னிய கத்தனுகி யான்சகமுறை செய்கின்றே
னன்னிய நினைவிலாமை யாலதில் விகாரமில்லை
யென்னது நீநான்செய்தேன் செய்திலே னென்னும்பார்வை
யுன்னிய பொழுதேதுன்ப முடலைநா னென்பாருண்டோ.

(ப - ரை:) முன்னிய கத்தனுகி = மகாகர்த்ருதையுடையவனுகி, யான் சயமுறைசெய் கின்றேன் = நான்ஜகத் சம்பந்தமான பிரமம் யாவற்றையுஞ் செய்கின்றேன், அதில் = அதன்கண், அன்னிய நினைவில்லாமையால் = அயல்நினைவே முற்றும் அசம்பவமாதலின், விகாரமில்லை = இராகத்துவேட முறையேயில்லை, என்னது = என்னுடையது இது, நீநான் = துவம் அகம், செய்தேன் செய்திலேன் = பண்ணினேன் பண்ணிலேன், என்னும்

பார்வையுன்னிய பொழுதேதுன்பம் = என்பதாய பாவானுசந்தான் மயதிருஷ்டியைச்செய்த போதே துயரமாம், உடலே = இத்தனைக்கும் காரணமாய தேகத்தை, நான் என்பார் உண்டோ = அகமென நினைவாரும் உளர் ஆகலாமோ.

(ஸ்ரீ-வீர.) இனியாவற்றையுஞ் செய்கின்றேன் என்னும் மகாகர்த்ருதையாகிய தன்மையானே ஸ்திதியை விரும்புவாயாகின் அத்தகையதையும் உத்தமமெனவே யுன்னுவாய். இக்கற்பத்தில் இராகத்துவேடாதியடையாமையைக் காட்டல்:—யான் என்பது. யான் ஜகத்சம்பந்தமான மயலாய இவ்வியாவற்றையும் செய்கின்றேன், என்று யாண்டாமோ ஆண்டு இராகத்துவேடப் பிரசங்கம் எனக்கு யாங்ஙன முண்டாம், என்னினு மன்னியன்எவ்வாற்றாலும் இயையாமையின்; மேலுமதனையேயுணர்த்தல்:—தேகமோ அன்னியனாலேதக்தமாயது அல்லது அன்னியனாலேகொண்டாடப்பெற்றது என்றாலும் அதுவும் எனதாரம்பமே அதாவது என்னாலியற்றப் பெற்றதேயாம், ஆகலின் வாட்டமகிழ்ச்சிகளின் முறையாண்டையதென்க. எனது சுக அசுக விஸ்தாரத்திலும் ஏதுவாய ஜகத்ஜாலத்தின் க்ஷய உதயத்திலும் யானே கருத்தாவென உள்ளே யெண்ணிக்கொண்டிருக்கும் எனக்குக்கேத வுல்லாசங்களின் கிரமமேதாகும். ஆகுகஅவ்வாறே ஆயினும்யாங்ஙனம் சமத்தன்மையின்இலாபமாதல் எனின் கேட்டி! கேத உல்லாச விலாசங்கள், இச்சுவாத்ம கர்த்ருத் தன்மையானே சுயமாகவே விலயம் ஆகவே சமதையே அவசேடித்து நிலவும். சமதையென்பது சர்வபூதங்களிலு மிருக்கும் சத்தியமான பரம்பொருளின் றிதியேயாம்; அதன்மாட் டவஸ்திதியடைந்த சித்தமானதுமறித்தும் பிறப்பிறப்பைச் சிறிதுமருவாது. அப்பியாசதிருஷ்டியானே இரண்டுதிருஷ்டிகளையும் விளக்கியுரைத்து ஆரூடமாய பின்னிகழுந் திருஷ்டியைக் காட்டல்:—ஹே இராகவ! சர்வகர்த்ருத்வமும் அகர்த்ருத்வமும் ஆகிய யாவற்றையும் விட்டு மனத்தை மாந்தியாதானாய் அதுவாகவே சேடித்துத்திரமுற்றுவாழ்தி முகத்தமாய் நிற்றியென்றது இச்சுலோகப்பொருளேயாம், இத்திருஷ்டியைக் குறித்துப் பூர்வதிருஷ்டிகட்கு அற்பத்தன்மையைக் காட்டல்: என்னதென்பது. இத்தேகத்திற் பிரசித்தமாயயானே சர்வதேகாத்மக சமஷ்டிரூபனாகிய அவன் என்னு மிரண்டாவது கற்பத்தில், சமஷ்டி பரிச்சேதத்திற்கும் கர்த்ருத்வ அபிமானத்திற்கும் நீக்கமின்மையின் அபூர்ணதையாம், முதலாவது கற்பத்திலோ, இத்தேகேந்திரியாதிகள் யானல்லவாகவின் இவ்வொருசிறிதும் யான்செய்கின்றிலேன் என்னும் அத்தியாத்ம பரிச்சேதத்திற்கும் கர்த்ருத்வாதிகட்கும்,நிராசத்தானே, சோதிக்கப்பெற்றது வம்பதார்த்த மாத்திர.நிஷ்டத்தன்மை யிருப்பினும் தற்பதார்த்த சோதனத்தையும் வாக்கியார்த்த நிஷ்டையையும் அடையப் பெறாமையானே அபூர்ணதையாம், எனத்திருஷ்டிகளிரண்டுமே மகிழ்ச்சியின் பொருட்டாகாவாம். இந்நானே யர்த்நான், இது நானல்ல; இதைச்செய்வேன் இதைச்செய்யமாட்டேன் என்பனவாயுளவாம் பாவாநுசந்தானமய திருஷ்டிகள் துஷ்டியின் பொருட்டாகாவாம் என்பதாம்.

(ச.) முன்னியகத்தனாகி = மகாகர்த்துரு பாவனையுடையவனாய், சகமுறை = இச்சகலஜகப் பிரமையையும்; யானே = நானே, செய்கின்றேன், அதில் = என்னும் அபிமானத்தில்; நிற்கும் வாஞ்சையேலாயின், மகாகர்த்ருதைவடிவ அவ்வகங்கிருதியையும் உத்தமமெனவேயுணர்வர்; அதில் = என்னுமபிமானத்தில்; அன்னிய நினைவிலாமையால் = அந்நியகருத்தா வின்மையின்; விகாரமில்லை = இராகத்துவேடாதிகளின்று; எனது சரீரம் மாதாபிதா முதலானவராற் பேணப்பட்டது; புத்திராதியா லெரிக்கப்பட்டது; என்பதான ஜன்மவிருத்திநாசரூபம் எனதுகர்மவிபாகமேயாம்; ஆதலாற் சுகதுக்கமின்று; மகிழ்ச்சிவாட்டங்கட் கவகாசமே தென்றபடி. எனது சுகதுக்கங்களின் விஸ்தாரத்திலும், ஜகச்சாலத்தினது நாச உதயத்திலும் நானே கர்த்தாவென்று மதிக்கின் மகிழ்வுசோர்வுக் கவகாசமின்று

சுகதுக்க விலாசங்களில் நானே கர்த்தாவென்னும் அகண்டிதபாவனையால் இங்ஙன மியற்ற வேண்டு மென்பது முதலிய தனது சங்கற்பரூப நசிக்கின் உபேக்ஷாபுத்தியே சேடிக்கும். சர்வபாவங்களிலு முள்ள சமத்துவம் பிரமநிஷ்டையாம் அச்சமத்துவத்திற்றிதிபெற்ற சித்தம் மறுஜன்ம முடையதாகா தென்றுஞ் சுலோகார்த்தங்களை அன்னிய நினைவிலாமையா லதில் விகாரமில்லை என்னும் வாக்கியத்தினும், அன்றி இராகவா ! கருத்துருத்துவம் அகர்த்துருத்துவம் அனைத்தையும் விட்டுமனதைவிழுங்கி எந்தரூபனுய்ச் சேஷிக்கின்றனை யோ அந்தரூபனுய்த்தீரனுவாயென்னுஞ் சுலோகார்த்தத்தை முன்பு முகத்த +பாய்நிற்றி என்னும் வாக்கியத்தினும் கவிநாயகர் அடக்கிக் கூறியதோருத்தியென்க. நான் = தேவ தத்தனுன், இவன் எக்ஞதத்தன், நீநான் = நீநானென்று, இன்னது =இத்தன்மையான பரிமிதாகாரியத்தை, செய்தேன்=செய்கிறேன், எக்கியதத்தாதி காரியத்தைச் செய்தி லேன் = செய்யேன் என்னும் பார்வை = பேதபாவாநு சந்தானமயமான திருஷ்டி பிரஹ்மாநந்த நிமித்தமன் றென்பது பொருள். (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அற்றேல்; அவைதுஷ்டியின் பொருட்டா காவாயின் யாதின்பொருட் டுபந்யசிக்கப் பெற்றனவெனின், சருவ அநர்த்தமூலதேக அகம்பாவவிமோசன உபாயத் தன்மையானே உபந்யசிக்கப் பெற்றனவாம் என்னுங்கருத்தானே தேக அகம் பாவத் திற்கு அநர்த்த ரூபத்தன்மையையும், எல்லாவாற்றானும் விட்டொழிக்குந் தன்மையையும் காட்டுகின்றார்:—மொய்யென்பது.

> **மொய்யுடலானை யென்னின் மூவேழு நரகுமஃதே**
> **வெய்யவன் றுயராமேனு மெய்யைவா னென்னவேண்டா**
> **வையமில் கேள்விநல்லோர் நினைவரோ வனைத்தாமூனுங்**
> **கையுறத் தின்பரேனு நாய்ப்பிணங் கவரார்நீசர்.**

(ப - ரை.) மொய்யுடல்=தோலிரத்தம் என்பிறைச்சி சுக்கிலமேதை மச்சையொன்றாய்த் தூலிகரித்த உடம்பை, நானேயென்னில்=அகமேயென்றபிமானிக்கில்; மூவேழு நரகும் அஃதே = இருபத்தொரு வகையாகிய நரகங்களும் அத்திதியேயாம், வெய்யவன் துயராமேனும் = கொடிய வலியதுக்கங்கள் வந்துறினும், மெய்யை = தேகத்தை; யானென்ன வேண்டா=அகமென் றபிமானிக்க வேண்டாம், ஐயமில் கேள்விநல்லோர் நினைவரோ= சமுசயமற்ற சிரவணதிவாய்ந்த மகான்கள் அங்ஙன்அபிமானிப்பரோ; அபிமானியார்; அனைத்தாம் ஊனும் கையுறத்தின்பரேனும்=சகலமாம்சங்களையும் பிரியத்துடன் கரங்கொண்டு தொட்டுண்பர்க ளாயினும், நீசர்=புற்கசர்கள், நாய்ப்பிணங்கவரார்= நாய்மாம்சத்தைத் தீண்ட மாட்டார்க ளல்லவா.

(ஸ்ரீ - வீர.) தேகோகம் என்னும் திதியாதொன் றுளதோ அதுவே காலசூத்ரபதவியாம், அதுவேமகாவீசிவலையாம்; அதுவே அசிபத்திரவனபந்தியாம், காலசூத்திர முதவியவை நரகபேதங்களாம்;காரியகாரணங்கட்கு ஆயுணெய்யென்பதேபோல அபேத ஆரோபத்தாற் சாமானாதிகரண்யமாம். சர்வநாசங்களும் எதிர்கொண்டு வந்துறினினும் சர்வயத்நத்தானும் அது தியாகிக்கத் தக்கதேயாம், நாய்மாம்சகிதப் புலைச்சியேபோலும், பவ்வியனுலது தீண்டத்தக்கதேயன்றாம்,தேகம் அகம் என்னும் புந்திக்கும்நாய்மாம்சத்திற்கொப்பாய்க்காமாதி அசுசி தூடிதத்தன்மை யுண்மையின் என்பதுகருத்தாம்.

(ச.) அஃதே = தேகோகமென்னும் பாவனையே, மூவேழு=மூவேழென்னும், காலசூத்திரம்மகாவீசி அசிபத்திர மென்பன முதலிய, நரகம் ஆம், வெய்யவன்றுயரமேனும்= சகலமுநாசமாயினும், சர்வ எத்தனத்தாலும், மெய்யை நானென்ன வேண்டாம், ஐயமில்

கேள்விநல்லோர் = முமுக்ஷுக்கள், நினைவரோ=தேகான்மபாவனை செய்யார், புக்கசீ= சண்டாளி என்பது மூலம். (6)

(ஸ்ரீ-வீர-அ-கை.) தேகோகம் மதியினால்வரும் அநர்த்தத்தையும் அது அகலலானே வருமரும் பயனையும் தெரித்தல்:—நாம் என்பது.

நாமுடலென்னு மாசான் ஞானக்கண் குருடாய்ப் போகும்
தோமுறுமதனைத் தூரத்தூர்ப்ப ரேற்சோதி ஞான
மாமுகிலிலா நிலாப்போல் வயங்கிடு மினையகண்ணா
லேமுறுபிறவி வேலையிருங் கரைவெளிது தோன்றும்.

(ப - ரை.) நாம் உடல் என்னும் மாசால் = தேகோகமென்னும் படலலேகையால், ஞானக்கண் = உணர்வுவிழி, குருடாய்ப் போகும் = மூடப்பெற்றுப்போம், தோமுறும் அதனை=குற்றமுற்ற அதனை, தூரத்தூர்ப்பரேல் = வெகுசேய்மையில் ஏகுமாறு அகற்றுவாரேல், சோதிஞானம் = பரஞ்சோதியின்உணர்வானது, மாமுகில் இலாநிலாப்போல்= பெருமேகம் மறையாத பூர்ண சந்திரன்போல, வயங்கிடும்=விளங்கா நிற்கும், இனைய கண்ணால் = இத்தகைய திருஷ்டியினால், ஏமுறு = துக்கமயமாய, பிறவிவேலை = சமுசார சாகரத்தின், இருங்கரை=பெருமையாய் முத்தியங்கரையை, எளிதுதோன்றும் = சுயமாகவே காணலாம்.

(ஸ்ரீ - வீர.) விசுத்தாத்ம திருஷ்டியாகிய தனத்திஷ்டானத்தில்படலலேகைபோலும் ஆவரண விக்ஷேப ஹேதுபூதமாய அத்தேகோகம் புத்தியினனேபெருந்துயரமே யாதலின் வெகுதூரத்தில் அதனை விட்டொழிக்க வேண்டும், ஒழித்தவழி அம்புதமகன்ற அமிர்தகிரணபோனும் மேன்மையானபார்வையானது உதயமாகின்றது, அஃதினிதுதயமாகவே பவசாகரத்தைக் கடந்து பரமானந்த முறலாம்.

(ச.) மாசால் = பாவனையான படலத்தினால். மூலம், படலம்=கட்பார்வையைத் தடைப்படுத்தும் நேத்திரரோகம். (7)

(ஸ்ரீ - வீர - அ-கை.) இப்போது திருஷ்டித்திரயத்தைத் தொடுத்து அவற்றுள் தன்னதிகாரத்திற்குத் தக்கபடியாய் வாஞ்சித்த திதியையுபதேசித் துபசங்கரித்தல்:—அனைத்தினும், அன்றெனில். என்பன.

அனைத்தினுங் கத்தனல் லேனவனிவ னல்லேனென்ன
நினைத்துளத் துறுதியாகி நிற்றியாலஃ தின்றென்னி
லனைத்தினுங் கத்தனேனே யளவறுமது நானென்ன
நினைத்தசை வொன்றுமின்றி நிச்சயமாகி நிற்பாய்.

அன்றெனி லொன்றுமல்ல வொன்றுநா னுமென்றே
நின்றவிப் பதத்தினன்று நிஜபதந் தனினிற்பா
யொன்றெனும் பதத்தைக் கண்டவுத்தமர் தம்பானிற்பர்
துன்றுவாதனையே பந்தந்தொல்லை வீடதனைத் தீர்தல்.

(ப-ரை.) அனைத்தினும் = யாவற்றினும், கத்தன் அல்லேன் = கருத்தாயானுகின்றிலேன், அவன் இவன் அல்லேன் = அவனும் இவனும் யானுகேன், என்ன=என்பதாக, நினைத்து=உணர்ந்து, உளத்து உறுதியாகி =மனத்தின் கண்ணேமாறாத நிச்சய முடையவனாகி, நிற்றி = நிலைபெறுதி, ஆல், அசை, அஃது இன்று என்னில்=அவ்வாறு நிலை

பெற்றுவாழச் சம்மதமின்றாயின், அனைத்தினுங் கத்தனுனே = சமக்கிரமும்யானேயாகின்றேன், அளவு அறும் அது நான்=அளவில்லாத அதுவேயான், என்ன = என்பதாக, நினைத்து = உணர்ந்து, அசைவொன்றும் இன்றி= யாதொரு சலனமுமில்லாமல், நிச்சயமாகி நிற்பாய் = நிச்சய முடையவனாக நின்று வாழ்வாய்.

அன்றெனில்=அவ்வாறிருக்க வாட்டமில்லையாயின், ஒன்றுமல்ல = யாதொன்றுமல்லன்,ஒன்று நானுகும் என்றே=எவனே ஒருவன் யானுகுவேன் என்பதாகவே, நின்றவிப்பதத்தில் நன்று நின்பதந்தனில் = நிர்ணயிக்கப்பெற்ற சர்வ உத்தமமாய நினதுயதார்த்தசொரூபத்தின் கண்ணே நீ நிற்பாய் =நீ நிலை பெற்றுச் சுகிப்பாய், ஒன்றெனும் பதத்தைக்கண்ட=ஏகமேவ அத்விதீய பதமாயதமதுசொருபத்தைத் தரிசித்த, உத்தமர்= மேன்மைவாய்ந்த சாதுக்கள், தம்பானிற்பர் = தமதாநந்த பதத்திலே யிருந்துவாழ்வர், துன்றுவாதனையே பந்தம் = நெருங்கிய துர்வாதனையே பந்தமென்று பகரப்பெறும், தொல்லை அதனைத்தீர்தல் வீடு=அநாதியாகச் சம்பாதித்துக் கொண்டதாற் பெருந்துன்புறுத்தும் அவ்வாதனையை யறுத்தெறிதலே மோக்ஷமாம்.

(ஸ்ரீ-வீர.) யான் கர்த்தாவுமல்லன், கருத்துருத் தன்மைப் பிரயோஜகமாய தேகாதியும் யானுகேன், என்றிவ்வண்ணம் உள்ளே ஸ்புடமாகத் தெரிந்து நிற்றி; அல்லது, மூலத்திலிருக்கும்சமக்ரபதம் தந்திரமாகத்துவிதீயைப் பிரதமாந்தமாம், தேகலீதீபநியாயத்தானே= வாசற்படியில் வைத்தவிளக்கே போலவென்னும் லௌகிக நியாயங்கொண்டு, முன்னிலும் பின்னிலும் சம்பந்திக்கும்; சம்பந்திக்கவே, சருவகருத்தாயானே யாகின்றேன், சருவசமஷ்டிபூதமாய அந்தப்பிரஹ்மாண்டமும் யானேயாகின்றேன் என்றதாயிற்று; இவ்வண்ணமேனும் நன்றாகவுணர்ந்து துணிந்து சுகிப்பாய்; இவ்வண்ணம் வெளியாய திருசியரூபம் ஒருசிறிதும் யான் அல்லேன், மற்றே, லோகப்பிரசித்த பரிச்சின்ன ஜடதுக்கசுபாவாத்ம விலக்ஷணபூர்ணனந்த சிதாத்மாவாகிய யாதோவொரு அகோசரவத்துவே யானுகின்றேன், என்றேனும் நிண்ணியித்துச் சர்வோத்தமமான தற்பதத்தில் நீ நிட்டை யுடையவனுகச்சுகி; நிண்ணயித்து என்றதனுனே, முற்றிருட்டிகட்கும் இதன்பரியவசானமாம் என்பதொரு தலையாகவேண்டற்பாலதெனத் தொனிக்கப் பெற்றதென வுணர்ந்துகொள்க. பிரஹ்மபதத்தை யுணர்ந்தபெரியோர்களாகிய உத்தமசாதுக்கள் எப்பதத்திற்றிதிபெற்று வாழ்கின்றார்களோ அதன்கண்ணே நீயுமிருந்து வாழ்தியென்பதாம். இப்போது பந்தமோக்ஷ இரகசியங்களைத் தரிசிப்பித்துக் கொண்டு, வாசனையுச்சேத உபாயமுறையைக் கூறல்:—துன்று என்பது, வாதனைக்கட்டே பந்தமாம், வாசனுக்ஷயமே மோக்ஷமாம்.

(ச.) உளத்து நினைந்து = அறிந்து, நான் கர்த்தாவன்று பரிச்சின்னனுமன்று என்பது ஒருபாவனை, சர்வகர்த்தாவும் சர்வான்மகனும் நானென்பது இரண்டாம் பாவனை.

ஒன்றுமல்ல=இங்ஙனங் கர்த்துருத்துவாதி யுபலக்ஷிதமாயயாதும் யானன்று, மற்றென்னெனின், ஒன்றுநானுகுமென்றே =சர்வவிகற்ப அதீதனுனஎவனே ஒருவனேநானுவேன் என்று நிச்சயிப்பது மூன்றாம்பாவனை. நின்றவீது= இம்மூன்றிலொன்றை யநுசரித்துநீ, அனைத்தினன்றாம் = சர்வோத்தமமான, நின்பதந்தனில் நீநிற்பாய், உத்தமர் = ஞானிகளான சாதுக்கள்; எந்தத்தம்பானிற்பர். ஸ்ரீவசிட்டர், (8-9)

(ஸ்ரீ - வீர - அ-கை.) வாசனுக்ஷயத்தையே தெளிவு பெறுத்துதல்:—புலன் என்பது.

புலன்களிற் பழகிச்சித்தம் பூண்டவாதனை கண்முன்னே
யலம்பெறமாற்றி வீட்டிற்கடுத்த வாதனையுந் தீர்வாய்
நலந்திகழருள் சந்தோட நட்புதாசின மிந்நாலு
மலந்தவிர் குணங்களாக மனத்தழுந்தாது செய்வாய்.

(ப-ரை.) புலன்களிற் பழகி = இந்திரியங்களோடு கூடிவிடயங்களைக் கவர்ந்துபயின்று, சித்தம் = மனமானது, பூண்டவாதனைகள் = அலங்கரித்துக் கொண்ட வாசனைகளை, முன்னேயலம் பெறமாற்றி = பூர்வம்தன்புருவாறு மெதுவாய் முற்றினும் பரித்தியாகித்து, வீட்டிற்கடுத்த வாதனையுந்தீர்வாய் = மோக்ஷார்த்தித் தன்மையையும் விட்டுவிடுவாய், நலந்திகழ் அருள் = துக்கிப்பிராணிகட்கு நன்மையைப் பயக்குங்கருணை, சந்தோடம் = புண்ணியர்பாற்காட்டும் முதிதை, நட்பு = சற்புருடர்பால் வைக்கும்மைத்திரி, உதாசினம் = பாவியரிடத்துண்டாம் உபேக்ஷை, இந்நாலும் = என்னுமிந்த நான்கையும், மலந்தவிர்குணங்களாக = அமலவாசனையாக, மனத்தழுந்தாது செய்வாய் = உள்ளத்தின்கண்ணழுந்தாது உஞற்றுவாய்.

(ஸ்ரீ - வீர') நீவாசனையைப் பரித்தியாகித்து மோக்ஷார்த்தித் தன்மையையும் தியாகிப்பாய்; ஆண்டு வாசனாக்ஷயத்திற் பிரதமபீடிகை வைராக்கியத் திடமுடைமை யென்று கூறுவார் அலம் பெறமாற்றி யென்றார். விடயங்களால் வாசிதங்களாய் அதாவது சம்பாதிக்கப் பெற்றனவாய், தமப்பிரதான்திரியக்குயோனியாதி கதிகளைப்பெரிதீயும் வலுவுடையனவாய தாமசவாசனைகளைப்பூர்வம் அடியோடும் விடுத்து, இராஜசமநுடாதி ஜன்மங்களைத் தருவனவாய விடயவாதனைகளையும் நன்றாகத்தீர்த்து, மைத்திரி கருணைமுதிதை உபேக்ஷையாகிய வற்றின் பாவனைப்பெயரிய அமலவாசனையைக் கவர்ந்துகொள்ளுதி; கொண்டவற்றோடு விவகரிப்பினும் உள்ளே பற்றல்வேண்டா மென்பதாம்.

அவ்வாறே ஸ்ரீ பதஞ்சலிபகவா னருளியுள்ளார்:—இப்போது சம்பிரஞ்ஞாத பூமிரூப ஒருமையுபாயங்களை யுரைத்தல்:—மத்தின்பு துன்பறம் மறவிடயங்களாம், மைத்திரிகருணை முதிதை யுபேக்ஷைத்ம், சித்திபாவனையாற் சித்தத்தூய்மையாம்.

(பொருள்.) சித்தமோ, இராகத்துவேஷ புண்ணிய பாவங்களானே களங்கம் பெறுகின்றது, ஆண்டுச் சொப்பனாதிகளிற் றன்னுலநுபவிக்கப் பெற்றவின்பந் தென்படவே, "எல்லா இன்பக்கூட்டங்களும் எனக்குண்டாகுக" என்னும்மதியின்ஒருவிருத்திவிசேடமே இராகமாம், அதுவும், சுகசமுதாயத்திற்கு, திருஷ்டாதிருஷ்ட சாமக்கிரிய பாவத்தானே, சம்பாதிப்பதற்குக் கூடாமையின், சித்தத்தைக் களங்கப்படுத்தும்; எப்போதுதான் "இவர் யாவருமே யென்னவரின்பினர்" எனச்சுகிப் பிராணிகளிடத்தில் மைத்திரியை யெண்ணுவானோ, அப்பொழுது அச்சுகம் தன்னதாகவேயடைவுறும், உறவே ஆண்டுவிருப்புவிலகும், கேவலம் இராக மாத்திரம் அன்றும், மற்றோ, பிறர்குணம் பொறாமை மாசுதோற்றுதல் வடிவ அசூயை ஈரிஷை முதலனவும் நீங்கும். இராக அசூயை ஈரிஷையாதிகள் அகலவே, மழைகள் ஒழியவேசரற்சரித்தொப்பச் சித்தந்தெளியும். அங்ஙன்றுன்பமடைய நேர்ந்திடின் எல்லாத் துயரமும் எவ்வகையானும் எனக்கேயாதொழிக" என்பதாம் விருத்திவிசேடம் துவேடமாம், அதுவும் வைரியாதிகளிடத்தி லிருக்குமாயின் நிவாரணஞ் செய்யக்கூடாமையின் சதா இதயத்தைத்தகிக்கும், எக்கால் "தனக்கே போலப்பிறர்க்கும் பிரதிகூலம் துக்கம்தாவாதொழிக" என்னும் வகையாகக் கருணையைத்துக்கிப்பிராணிகளிடத்திற் பாவித்திடப்பெறுமோ அக்கால்வைரியாதி களிடத்தில்வெறுப்பு விலகும்; கேவலந்து வேடமாத்

திரமன்றும் மற்றே, துக்கித்தன்மையைப் பிரதியோகியாகவுடைய தனது சுகித்தன்மை யானுளதாயதர்ப்பமும் அகன்றுபோம். அத்தர்ப்பத்தையும் ஸ்ரீ பகவான் றரிசிப்பித் துள்ளார்:—

இப்பொருளடைந்தோம் வேறுபொருளினி யடைவோமென்று
மிப்பகைசெகுத்தோம் வேறுபகையினிச் செகுப்போமென்றுந்
துய்ப்பவரெம்மிற் றுய்க்கவல்லவ ரில்லையென்று
மொப்பவரெம்மின் மிக்காருளர்கொலென்றுரைரா நிற்பார்.

இனம்வலியின்பம் பெற்றேமெம்மின் மிக்கார்களில்லைத்
தனமிகவுடையேமென்றுதம்மையே வியவாநிற்பார்
மனமகிழியாகஞ் செய்வோமழையெனக் கொடுப்போமென்று
தினமவைதோறுஞ் சிந்திப்பதுவலாற் செய்வதில்லார். எனபவைவாம்.

ஆகலின் உபயமொழியவே உள்ளந்தெளியும். அவ்வாறே பிராணிகட்கு இயற்கையாகவே அறப்பயிற்சி கிடையாதாகும், மறப்பயில்வோ முயல்வதாகும், ஆகலின், அவ்வறமறங்கள் பச்சாத்தாபத்தை யுண்டுபண்ணு நிற்கும், புண்ணிய புருடரிடத்தில் முதிதையைப் பாவிக்கிறே அக்கால் அவ்வாசனையாற்றானும் அப்பிரமத்தனைப் புண்ணியத்திற் பிரவிருத்திப்பன், அவ்வாறே பாவிகளிடத்தில் உபேக்ஷையைப் பாவித்துத் தானும் பாவத்தினின்றும் நிவிர்த்தியாவன்; ஆதலின் பச்சாத்தாப மின்மையானே சித்தந்தெளியும். அற்றேல், புண்ணியவான்களிடத்தில் முதிதையை பாவிப்பவனுக்கு புண்ணியத்திற் பிரவிருத்தி பலத்தன்மையானே பகரப்பெற்றது, அதுவும் யோகிக்கோ பொருந்தாது, அவனுக்கு மறுபிறப்பைச் செய்யுமாதலின் எனின்? இங்ஙன் வினுதல் அடாதாம், காமியமாகிய இஷ்டா பூர்த்தாதிகட்குப் பிறப்பின் காரணத்தன்மை யுண்மையின், ஈண்டோ யோகாப்பியாச ஜன்னியமாய் ஜன்மசம்பாதக மாகாததாய் அசுக்லகிருஷ்ண மென்னும் புண்ணியத்தைப் புகலும்வேட்கை யுண்மையின் என்க. ஸ்ரீ பகவான் சூத்திரக்காரரே இதனைக் கூறியருளுவர்:— இவ்வாறு கிலேசகரும விபாகாசய சூனியமாய் அபவர்க்க யோக்கியமாய் ஆகுக யோகியின் சித்தம் அதன்கருமம் எத்தகைய தென்னும் அவாவுண்டாக அருளப்பெறுகின்றது:—முயல்வினைய சுக்லகிருஷ்ணம் யோகிக்கு மூவிதமிதரர்க்காம் = பொருள்:—காமியகரும விகிதத்தன்மையானே சுக்லம், நிஷித்தம் கிருஷ்ணம், மிசிரம்சுக்கிலகிருஷ்ணம், அவ்விம்மூன்றும் மற்றைய அயோகிகட் குண்டாம், அதுவும் மூவகைப்பிறப்பை முற்றுவிக்கும், "தேவத்தன்மை நலங்கொடுசேரலாம், பாவத்தன்மை நரகம்பயக்குமால், மேவத்தன்மை யிரண்டுமிசிரமே, லேவித்தந்திடு மாநுடமென்பவே" என்றஃதறையப் பெற்றதாம். இனியோகத்திற்கு நிஷித்தத்தன்மையின்மையின், அகிருஷ்ணத்தன்மை யுண்மையேனும், விகிதத்தன்மையுண்மையானே சுக்கிலத்தன்மையே யாமெனின்? அற்றன்றும், அகாமியத்தன்மை யபிப்பிராயத்தானே அசுக்லகிருஷ்ணத்வ மறையப்பெறுதலின், பெறவே மனத்தூய்மை விவேகக்கியாதி வாயிலாக மோக்ஷமொன்றையே பலமாகவுடையது அசுக்லகிருஷ்ணம் யோகிக்குக்கருமம் என்றருளிய தாயிற்று.

ஆகலின் மைத்திரியாதி பாவனையானே இராகாதிவாசனை நிவிர்த்தியாகவே பிரசாதமாகிய திரத்தன்மையை அடைவுற்ற நற்சித்தம் ஒருமைப்பதத்தை யடையாநிற்கும், "தன்னது முயற்சியிற் சனித்தவீற்றினுற், பின்னுறுவாதனை பேதமாகவே, நன்னிலைமன்னி நின்னுட்டமாகுமே, லின்னலில் பதமதை யெய்தலாகுமே" எனவஃதறையவும் பெற்றுளது.

(ச.) புலன்களில் = சத்தாதி விடயங்களோடு, பழகி=அதன்மயமாய், சித்தம்=சித்தத்தில், பூண்டவாதனைகள் = பொருந்திய வாசனைகள், முன்னே யலம்பெறமாற்றி = முன்பு விடுத்து, மலந்தவிர் குணங்களாக = அமலவாசனைகளாக, செய்வாய் = கிரகிப்பாய், மைத்திரியாதி யமலவாசனைகளைக் கிரகிக்கின் நினக்குச் சித்தந்தெளிவுறும், தீர்வாய் என்று கூறினது அதுவும் வாசனாவிசேஷமாதலின் என்க. உதாரணம், ஸ்ரீ பதஞ்சலிபகவான் "மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷகளென்னுஞ் சுகதுக்க புண்ணியா புண்ணிய விஷயங்களின் பாவனையதனாற் சித்தப்பிரசாத மாமென்பது. (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆன்ம சாக்ஷாத்காரம்வரை வாசனையை விடுமுறையறைதல்:— உள், வாதனையென்பன.

உள்ளுறுதொழில் கண்முற்று மொருக்கியோரு ணர்வைப்பற்றி
மெள்ளவாங் கதுவுமந்தக் கரணங்களுடனே விட்டுத்
தள்ளுவவெல்லா மெத்தாற் றள்ளினுய துவுந் தள்ளித்
தெள்ளுணர் வுள்ளஞ்செய்கை தேசிருளனைத்துந் தீர்ந்து.

வாதனைவடிவமான வினைகளு மற்றிவற்றைப்
பேதமாய்ப் பழகுவோனும் பிராணனி லியக்கந்தானு
மியாதுமூலந் தோடீர்த்து விண்ணக மென்னநின்று
வியாதுதீர் சாந்தனுயென்னு யினையதுநீ மெய்யால்.

(ப - ரை.) உள்ளுறு தொழில்கள் முற்றும் ஒருக்கி = சமஸ்தசேஷ்டைகளும் உள்ளே சாந்தமானவனாய், ஓர் உணர்வைப்பற்றி மெள்ளவாங்கு = சின்மாத்திர வாசனையுடையவனுதி; அதுவும் = அதனையும், அந்தக் கரணங்களுடனே = மனோபுத்தி சமன்விதமாக விட்டு = பரித்தியாகித்து, தள்ளுவவெல்லாம் எத்தாற்றள்ளினுய் = தள்ளத்தக்கன வெல்லாவற்றையும் எதனாலே தியஜித்தாயோ, அதுவுந்தள்ளி = அதனையும் தியஜிப்பாய், தெள்ளுணர்வு உள்ளம் செய்கைதேசு இருள் அனைத்தும் தீர்ந்து = கலனைகாலம் பிரகாசம் திமிராதிகள் யாவற்றையும் விடுப்பாய்; விடுத்து.

வாதனை வடிவமான வினைகளும் = வாசனையுருவமான இவற்றினையும், மற்று இவற்றைப் பேதமாய்ப் பழகுவோனும் = கூறிய இவற்றை வேற்றுமையாகப் பயிற்சிசெய்பவனையும், பிராணனி லியக்கந்தானும் = பிராணஸ்பந்தனத்தையும், யாதும் = மற்றெவற்றையும், மூலத்தோடீர்த்து = வேரோடுங்களைந் தெறிந்து, விண்ணகமென்ன நின்றால்=வானம் போல நிர்மலமாகத் திதிபெற்றால், யாதுதீர்சாந்தனாய் = எல்லாவிக்ஷேபங்களும் நீங்கிய பரமசாந்தனாய், என்னுயினை = எச்சத்வடிவமாகச் சேடித்திருந்தாயோ, அது = அப்பொருளே, நீமெய் = நீயென்ப துண்மையாம், ஆல் அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) அவ்வமலவாதனையையும் உள்ளேபற்றுமல் விட்டொழித்து, உள்ளே சின்மாத்திரத்தினும் அயலாகமைத்திரியாதிகளும் இலவாமெனக் காண்டலானே வெளியே அம்மைத்திரியாதிகளோடு விவகரித்தபோதினும் சின்மாத்திரமே யான் என்னுஞ்சம்பிரஞ்ஞாத சமாதியப்பியாச திரமுறுத்தப் பெற்றவாசனை யுடையவனாதி; மனம்புத்தி சித்தம் அதன் விருத்திகளோடு கூட அதனையும் பின்விடுத்து, ஆன்மத்தன்மையானே விடமுடியாமையின் அவசியம் பரிசேடித்து நிற்கும்பிரத்தியக்குத் தத்துவத்தில் திரசமாதானமாகிய இளைப்பாறுதலையுடையவனாய், அதாவது அசம்பிரஞ்ஞாத சமாதியில் விசிராந்தி யடைந்தவனாய், எக்கலனையெனப் பெயரிய துவைதகற்பனையின் மூலஸ்தப்ப பூதமாய அகங்காரத்தானே,

முன்மொழிந்த யாவற்றையும் தியாகித்தாயோ அதனையும் விட்டொழித்து வாழ்தி; எல்லா வற்றிற்குமே தியாகமென்பது ஆண்டாண்டுயான் எனது என்னும் அபிமானமறுதலேயாம்; அதுவும் அகங்காரத்திலும் சுத்தசின்மாத் திரரூப அநகம்பூத பூர்ணாத்ம தரிசனத்தால், மூல அஞ்ஞான உச்சேதத்தால் தானகவே யுண்டாம் எனவாண்டு வேறுகாண அவாவில்லை, இல தாகவே எல்லையின்றிச் செல்லுதலுமில்லை யென்பது கருத்தாம். பிராணஸ்பந்தனபூர்வகம் கலனைகாலப்பிரகாச திமிராதிவாசனையையும் வாசனை வனைபவனையும் விடயத்தையும் அதன்வாயிலாய இந்திரியங்களையும், மூலத்தோடும் அகங்காரத்தையும் பறித்தெறிந்து, சீமூதமுக்த விமலாம்பரம்போல நிருமலக்கவின் வாய்ந்து, விக்ஷேபங்களியாவும் வெகுசாந்த மாய், பிரஹ்மான்ம அகண்டைக ஆகாரமாயிலகும் மதியுடையவனாகி, எச்சின்மயனாய் நீயடைவுறுவாயோ அதே பரமார்த்தரூபம் நீயாதி; ஹே நன்மதிமைந்த ! இங்ஙன் சத்தா மாத்திர நீயாதலினனே சர்வபூஜிதனாக வாழ்வாய்.

(ச.) உள்ளுறத்தொழில் கண்முற்று:—தொழில்கள் = அம்மைத் திரியாதிகளோடு விவ கரிப்பினும், உள் = உள்ளில், உறமுற்று மொருக்கி = அவைகள் அனைத்தையும் நன்றாய் விட்டு, சர்வேச்சையு நிவிர்த்தித்தவனாய், ஒருணர்வைப் பற்றி = சின்மாத்திர வாசனையை யடைந்து. அந்தக்கரணங்களுடனே = மநோபுத்தியோடு கூடிய, அதுவும் = சின்மாத்திர வாசனையையும், மெள்ளவிட்டு, ஆங்கு = சர்வவாதனா ரகிதமான சித்துரூபத்திற் றிரமான சமாதனனாய், தள்ளுவதெல்லாம், எத்தால் = எந்தப்பிரயத்தின விசேடத்தால், தள்ளினாய், அதுவும் = அதனையும், தள்ளி = விட்டவனாய், தெள்ளுணர்வு = இந்தச்சித்து, உள்ளம் = மனம், செய்கை = கலனாகாரம், தேசு = பிரகாசம், இருளனைத்தும் = திமிராதிகளும், தீர்ந்து = சித்திதுமனமிது என்பதாதிரூபமாயசித்தாதி விகற்பங்க ளெல்லாம் தவிர்ந்து.

வாதனை வடிவமான விவைகளும் = அவ்விடயமான வாசனையும், மற்றிவற்றை ப்பேத மாய்ப் பழகுவோனும் = வாதனாவேதுவானவனும், பிராணனிலியக் கந்தானும் = பிராண சலனமும், இயாதும்=ஆகியவனைத்தையும், மூலத்தோடீர்ந்து, தள்ளி, விண்ணகமென்ன= வியோமம்போல், நின்றாய், சௌமியனாய், சாந்தரூபம் = பிரசாந்த புத்திரூபனாய், இயாதா யினை = எத்தன்மையனாயினை, இதே = இத்தன்மையுள்ள பூச்சியனாணீ, மெய் = உண் மையாக, அதுவாயினை = அத்தன்மையனாயினை, என்பதுபொருள். ஆல், அசை, அவற்றிற் றெள்ளுணர்வு = சொரூபசைதன்யம், உள்ளம் = அந்தக்கரணம், செய்கை = அவித்தியா தற்காரியப் பிரபஞ்சம், தேசு = பிரகாசம், இருள் = தமம், அனைத்து மெனுஞ்சத்தத்தாற் கடாதிகள். மூலம் = கலனை = அவித்தை, ஆகாரம் = பிரபஞ்சம். (11-12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இத்தகைய நிலைமையை யடைந்தவனுக்குப் பூச்சியத்தன்மை யையே பிரசம்சைகளினாலே காட்டுகின்றார்:—உளத்தென்பது,

> உளத்தினி லனைத்துமாற்றி யுலகிலோர் பற்றநின்றித்
> துளக்கிலா நிலையினின் றோன்றுக ளறுமுத்தனவா
> னளக்கருமீச னவானவன் மிகுசமாதிதானுங்
> கொளத்தகு கருமந்தானுங் கூடினும் விடினுமுத்தன்.

(ப - ரை.) உளத்தினில் அனைத்தும் மாற்றி = இருதயத்தினின்றும் யாவற்றையுமே நன்கு பரித்தியாகித்து, உலகிலோர் பற்றநின்றி = உலகப்பொருள்களின் வாசனையுமில்லாத மகாமதியனாகி, துளக்கிலா நிலையில் நின்றோன் = விக்ஷேபமற்ற திதியிற்றிதி பெற்றமகான், துகளறு முத்தனவான் = சர்வ அநர்த்தங்களு மகன்ற பரமாநந்த வடிவமுக்தனாகின்றான், அளக்கரும் ஈசனவான் = அநந்தமகிமைவாய்ந்த பரமேசுரனாகின்றான், அவன் = அத்த

கைய அறிஞன், சமாதிதானும் = சமாதியையேனும், கொளத்தகுகருமந்தானும் = வருணு சிரமத்திற் கேற்றபடி யங்கீகரிக்கத்தக்க தொழிலையேனும், கூடினும் விடினும்=செய்யினும் செய்யாவிடினும், முத்தன் = விடுபட்டவனே யாகின்றான்.

(ஸ்ரீ - வீர.) எம்மகாமதியை யுடையவன், அந்தக் காரணத்தினின்றும் அனைத்தையுமே அடியோடுமகற்றிச் சர்வவிக்ஷேப ஹேதுவாய அபிமானத்தைத் தொலைத்து, நிலைத்துச்சொரூபமாயிருக்கின்றானோ, அம்மகானே முக்தனும் பரமேசுவரனு மாகின்றான். இத்தகைய அப்பியாச பரிபாகத்தானே ஏழாவது பூமிகையில் ஏறினவனுகிய சித்தனுக்கு, கிருதகிருத்தியத் தன்மையேயாம், அலது செய்யத்தக்கது பிறிதொன்று ஈனியெஞ்சி நில்லாதெனல்:— அவன் என்றது. அம்மகான் சமாதியைத் தானுதல் கருமங்களைத் தாமாதல் செய்யாதொழிக அலதுசெய்க, விடுபெற்றவனே.

(ச,) உளத்தினில் = இருதயத்தினின்றும், அனைத்துமாற்றி = சகலத்தையும் விட்டு, மகாமதியாய அளக்கருமீசன் = பரமேசுவரன், சமாதிதானும் = சமாதியையும், கருமந்தாமும் = சர்வகருமங்களையும், கூடினும் விடினும் = செய்யினும் செய்யாதொழியினும், முத்தன் = முத்தனேயாவன், (13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறியதையே வற்புறுத்திக் கூறுநூலுங் கூடாமைகாட்டல்:— இருதயத்தென்பது,

இருதயத்தாசை யொன்றுமிலாமையா லெண்ணப்பட்ட
கருமங்கள் செய்துந்தீர்ந் துங்கையுறு பயனொன் றில்லை
யொருவழிப் படநீள்கால முளமொருப் படுதலாலே
பெருகுவாதனை தீர்நெஞ்சிற் பேசுநூலனைத்தும் வேண்டா.

(ப - கை.) இருதயத்தாசை ஒன்றும் இலாமையால் =மனத்தில் எப்பற்றும் இன்மையினுனே, எண்ணப்பட்ட கருமங்கள் = இப்பயனைக்குறித்து இவ்வினையாம் என்று சங்கிக்கப்பெற்ற தொழில்களை, செய்தும் தீர்ந்தும் = ஆற்றியுமாற்றியும், கையுறுபயன் ஒன்றில்லை = காமேற்பெறும் பலம் ஒன்றையும் காணேம், ஒருவழிப்பட நீள்காலம் = ஒரேநெறியாக நின்று சிரகாலம், உளம் ஒருப்படுதலாலே = மனஞ்சமாதான முற்றுச்சபாதிகள் செய்தலினுலேயும், யாதொருபயனுமில்லை, பெருகுவாதனைதீர் நெஞ்சில் = விருத்தியாகா நின்ற வாசனையற்ற மனத்தின் கண், பேசுநூல் அனைத்தும் வேண்டா = விவாத விஷயீபூதமாய சாஸ்திரம் யாவுமே வேண்டியதின்றாம்.

(ஸ்ரீ - வீர.) எல்லா ஆசைகளும் முன்மொழிந்த அபிமான அத்தியாசங்களும் நன்மனத்தாலே நீங்கப்பெற்றவன், உத்தமபுத்தியையுடைய முத்தனேயாவன். நைஷ்கர்மியத்தானும் அவனுக்கு யாதொருபயனுமில்லை, கருமங்களானும் அவனுக்கு யாதொருபயனுமில்லை, எவனுடையமனம் நிர்வாசனை யுடையதாமோ, சமாதான ஜபாதிகளானும், அவனுக்கொருபயனுமில்லை, சிறிதுபோது அநுஷ்டிக்கப்பெற்ற சிரவணமனனத் தியானங்களானே வாசனக்ஷயம் வருவதற்கு முன்னரே, செய்யவேண்டியதைச் செய்துமுடித்து விட்டேமென்னும் மயக்கத்தால், திரும்புவதைத் தடுத்துரைத்தல்:—பேசுமென்பது. பரஸ்பரம் வித்வான்களோடு கூடச் சம்வாதத்தானே திடமாக உபந்யாச ஆற்றலுற்றதாக வாற்றியதும் சாலும், சாஸ்திரத்தைச்சரிவர ஆராய்ந்ததும் சாலும், பெரும்பரிசிரமத்தானே சர்வவித்வத் சம்மதியானும் இதுவே மோக்ஷசாஸ்திர ரகசியம் என நிண்ணயிக்கப் பெற்றுளது.

(ச.) ஆசை = சர்வதிருசியாதரம், எண்ணப்பட்ட கருமங்கள், நைஷ்கர்மியத்தானும் காமியாதிகன்மங்களானும் உளமொருப்படுதலால் = சமாதான ஜபங்களோடு கூடுதலினுலே

யும், பயனொன்றில்லை; நிர்வாசனையான மனதுடையோனுக்கு நைஷ்கர்மியமாதிகளால் எவ்வளவும் பிரயோஜன மின்றென்பது பொருள். நைஷ்கர்மியம் = காம்யகர்ம பரித்தியாகம், யாவன் அத்தியந்தம் தூயமனத்தானே சர்வகிருசியாதரத்தையும் விட்டொழித்தானோ அவன் உத்தம ஆசயமுத்தனே யாவன். (1)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது பிராஹ்மணனுடைய யதார்த்த இலக்கணத்தைப் போதித்தல்:—மறுகு என்பது.

மறுகுவாதனைக டீர்ந்த மவுனத்தை யொழியவேறோ
ருறுகதிநல்ல தில்லையுணர்வ னவுணர்ந்ததாகும்
துறுதிசை பத்துஞ்சுற்றி மீண்டதாந் தொல்லைஞாலத்
தறுதியாயுண்மை கண்டோர் சிலர்நின்றோ ரவத்தின்மாய்வோர்.

(ப - ரை.) மறுகுவாதனைகள் = துன்புறுத்தாநின்றவாசனைகள், தீர்ந்த = ஒழிந்த, மவுனத்தையொழிய = மவுனத்தைவிட்டு, வேறு ஓர் உறுகதி நல்லதில்லை = அயலாக ஒரு அடையத்தக்க உத்தமமாகியபதம் இலதாம், உணர்வன உணர்ந்ததாகும் = காணத்தக்கன யாவுங் கண்டனவாகும், துறுதிசைபத்தும் சுற்றிமீண்டதாம் = வியாபகமான தசதிசைகளும் உழன்று திரும்பியதாம், தொல்லைஞாலத்து = பிராசீனத்துயர் மயப்பிரபஞ்சத்தில், அறுதியா யுண்மைகண்டோர் சிலர் = திண்ணமாய் வஸ்துவையுள்ளபடி தரிசித்தவர் ஏக தேசியரேயாவர், நின்றோர் அவத்தின் மாய்வோர் = சேடித்தவரியாவரும் அவலவினைகளே புரிந்து கவலையடைபவரேயாவர்.

(ஸ்ரீ - வீர.) சகல வாதனைகளையும் நன்றாகவிடுத்த மவுனத்தைப் பார்க்கினும் உத்தமமான பதமியாதொன்றுமில்லை, பாலிய பாண்டித்திய சப்தவாச்சிய சிரவணமனன பரிபாகத்தானே யுளதாய முன்மொழிந்த நிர்விகற்ப அசம்பிரஞ்ஞாத சமாதி பரிபாகாந்த முனிபாவத்தைக் காட்டினும் உத்தமபதம் = பரமபதம், பிராஹ்மணப் பெயரியபரத்தில் நன்கு நிலைபெற்றதத்துவ ஞானம், இலதாம் என்று நிர்ணயிக்கப் பெற்றுளது என்பதாம். அவ்வாறே சுருதியுமுளவாம்:—எதனாற் பூர்வத்திற் பிராஹ்மணர் அசாதன பலசுபாவமாய இவ்வான்மாவை யுணர்ந்து சர்வசாதன பலசொரூப ஏஷணை வடிவத்தினின்றும் கிளம்பிப்பிக்ஷாசரியத்தை யாசரித்தனரோ, திருட்ட அதிருட்டப் பொருட்டுக் கருமவுதன் சாதனத்தையும் விட்டு, அதனால் இப்போதுள்ள பிரஹ்மவித்தாய பிராஹ்மணனும், பண்டிதபாவமாகிய இவ்வாத்ம விஞ்ஞான பாண்டித்தியத்தை நிச்சேஷமாக வுணர்ந்து ஆன்மவிஞ்ஞானத்தை நிரவசேஷஞ்செய்து, இருந்துவாழ்க; ஆசிரியரானும் ஆகமத்தானும் ஏஷணைகளினின்றுங்கிளம்பி ஏஷணையெழுச்சி முடிபேயன்றோ அந்தப் பாண்டித்தியம்! ஏஷணாதிரஸ்கார உற்பவத்தன்மையான், ஏஷணாவிருத்தத் தன்மையான்; ஏஷணையைத் திரஸ்கரிக்காமல் ஆன்மவிடயமாய பாண்டித்தியத்தி னுற்பவம் இலதாமென ஆன்மஞானத்தானேயே ஏஷணையெழுச்சி விதிக்கப் பெற்றதாம். ஆன்மஞான சமானகருத்தாவை யுடையக்த்வா விகுதிகோடுங் குறிமறையாற்றிட மாற்றப்பெற்றதாம். ஆகலின் ஏஷணையி னின்றுங்கிளம்பி ஞானபலபாவபாலியத்தால் நிலைபெறவிழைக, அனாத்ம வித்துக்களாய இதரர்கட்குச் சாதனபலாசிரயணமே பலமாம், அப்பலமகற்றி வித்வான் அசாதனபல சொரூப ஆத்ம விஞ்ஞானமேபலம், அதன் பாவமேகேவலம் ஆசரித்தல் வேண்டும் என்பதாம். அதனை யாசரிக்கிறோ காரணங்கள் ஏஷணை விஷயத்தில் இவனை இழுத்து அழுத்தமுடியாதனவாம், இஞ்ஞான பலஹீனனாகிய மூடனையன்றோ திருட்ட அதிருட்ட விடயங்களாய ஏடணையிலேயே கரணங்கள் செலுத்தா நிற்கும், பலமென்பது ஆத்மவித்தையானே அசேஷவிஷய திருஷ்டி திரஸ்காரணமாம், ஆக

லின் அதன்பாவமாய பாலியத்தானே நிலைபெறுதல் வேண்டும்; அவ்வாறே "ஆன்ம அறிவினால் வீரியம் விளையும்" என்றும், "இவ்வான்மாப் பலவீனனாலெய்தரு" என்றும், அயற்சுருதிகளுண்மையின். பாலியத்தையும் பாண்டித்தியத்தையும் நிச்சேடமாக்கிப் பின்மனனத்தான் முனியோகியாவன், சர்வ அநாத்மப் பிரத்தியயதிரஸ்கரண மியாதொன்றுளதோ அவ்விவ்வளவே பிராஹ்மணனாற் செய்யத்தக்கதாம், இதனையியற்றி யோகியாய்க் கிருதகிருத்தியனாயாவன். ஆன்மஞான அநாத்மப் பிரத்தியய திரஸ்காரமாம் பாண்டித்திய பால்யப் பெயரிய அமௌனத்தையும் நிச்சேடமாக்கி, மௌனமென்னும் அநாத்மப் பிரத்திய யதிரஸ்காணத்தின் பரியவசான பலமாமதனையும் நிச்சேடமாக்கிப்பின், பிராஹ்மணன் கிருதகிருத்தியனாவன்; பிரஹ்மமேயாவும் என்னும் பிரத்தியயம் உண்டாம், அவன் பிராஹ்மணன் கிருதகிருத்தியனாகலின் பிராஹ்மணன். ஆசார்யபரிசர்யை வாயிலாகவே வேதாந்தங்களின் ரூற்பரியந் துணிதல் பாண்டித்தியமாம், ஊகத்தினாலே அநாத்மநோக்கத்தை நூக்கல் பாலியமாம், அகமாத்மா பரம்பிரமமாம் என்னினும் அன்னியம் எதுவுமேயில்லை என்றுமனத்தினாலேயே மகிழ்ந்தநுசந்தானஞ் செய்தல் மௌனமாம், மகாவாக்கியார்த்த ஞானம்பிராஹ்மண்யமாம், என்பது விபாகம்.

இந்நேதிநேதியாதி லக்ஷண நித்தியமகிமை பிராஹ்மணனுக்காம், அயன்மகிமைகளோ கருமங்களானே யாக்கப்பெற்றனவென அநித்தியங்களாம், இதுவோ அவற்றினும் விலக்ஷண மகிமையாம் இயற்கையா யுண்மையானே எல்லா வடணைகளையும் எறிந்தவனாகிய பிரஹ்மவித்தாம் பிராஹ்மணனுக்கு நித்தியமாம், நித்தியத்தகைமை யாங்ஙனமா மாலோவெனின், வல்வினையானே வளர்வது மிலையது, தீவினையானே தேய்வதுமிலையது ஆதலினென்க. இவ்விருமறைகளும் தெளிதற் பொருட்டுப் பொருளொடுங் காட்டப் பெற்றனவாம்.

இதனானே தத்துவஞ்ஞர் ஏகதேசியருங் கிடைத்தற் கரியருமாவர் எனல்:—உணர்வன என்பது பார்க்கத்தக்க தகிலமும் பார்க்கப் பெற்றதாயது, தசதிசையும் உழன்றுழன்று என்றபடி; உள்ளபடி வஸ்துவை யுண்மையாகக் கண்டவர்களாகிய ஜனங்கள் சிலர்களேயாவர்கள். சர்வஜனங்கட்கும், வெளிமுகத் தன்மையுண்மையின், வெளியிலேயுள்ள இட்டவநிட்டங்களிலேயே கண்ணுண்மையின் அதனை யடையவும் விடவும் ஆமுபாயம் ஆற்றும் ஆற்றலையே கண்டாமன்றி, ஆன்மாவை யறியுமாற்றலைக் காணேமென்பார் சிலர் என்றூர். யாதுயாது சிறிது காணப்பெறுகின்றதோ அது இட்ட அநிட்டங்களினும் அயலாகவிலதேயாம், அதனினும் அயலாகயாதொரு அவிடயமாய ஆத்மதத்துவ முளதோ அதன்மாட்டோ எவனும் எத்தனம் செய்வதேயில்லை, மற்றூரே, யாவரும் இஷ்டவநிஷ்டங்களிலேயேமுயல்வர். சேடந் தொடர்பு பற்றிவருங்கவி யுரையிலுரைக்கப் பெறும்.

(ச.) சாஸ்திரத்தைப் பரஸ்பரம் நன்றாய் விசாரிப்பினும், ஏகாந்தத்திற்றனது புத்தியாற்றூனே யாலோசிப்பினும், மறுகுவாதனை கடந்த = நிர்வாசனையான, மவுனத்தையொழிய = தூஷ்ணீம் பாவத்தைத்தவிர, வேறோருறுகதி நல்லதில்லை = உத்தமமான பரம்பொருள் மற்றொன்றுமின்று, உணர்வன அறியவேண்டிய வினைத்தையும், உண்மை=மெய்ப்பொருளை, அவத்தினின்றூர், வீணன கிரியாக்கிரமத்தில் நின்றூர், மாய்வோர் = மடிபவராவர்; அல்லது, நின்றூர் = ஆரம்பமுடையவர், அவத்தின் = வீணன கிரியாக்கிரமத்தில், மாய்வோர் = மடிபவராவர். (15)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வநாத்ம விடயத்தில் உளதாய முயற்சியும் அநாத்மதேகமாத்திரப் பொருட்டாகலின் மறித்தும் மறித்தும் தேகத்தைத் தொடங்கும் அநர்த்தஹேதுவேயாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—தேகத்தை யென்பது,

தேகத்தை நோக்கியன்ரே செகமெலாந் திரிவதல்லா
லேகத்தை நோக்கியன்றே வெங்கணும் பஞ்சபூத
நாகத்தை மண்ணைக் கீழைநாடினு மாறுகாணோ
மோகத்தை விடுதுமென்றே திடமுற்றார் முழுதும்பற்றார்.

(ப - ரை.) தேகத்தை நோக்கியன்ரே = தேகமாத்திரார்த்த மாகவல்லவா, செகமெலாந்திரிவது = உலகமெல்லா முழல்வது, அல்லால் = அதுவேயன்றி, ஏகத்தை நோக்கியன்றே = ஆத்மார்த்தப் பொருட்டல்லவே, எங்கணும் பஞ்சபூதம் = எவ்விடத்தினும் ஐந்துபூத சம்பந்தமேயாம், நாகத்தைமண்ணைக் கீழை = சுவர்க்க பூதலபாதாளங்களை, நாடினும் = நோக்கிச்சென்றபோதினும், ஆறுகாணேம் = ஆறுவது ஒன்றையுங் கண்டிலேம், மோகத்தைவிடுதும் இரதியைவிட் டொழிப்பேம், என்றே = என்பதாகத்தானே, திடமுற்றார் முழுதும்பற்றார் = தீரமான மதியையுடையவர் திடமடைந்தார்.

(ஸ்ரீ - வீர.) இலௌகிக வீடு மாடமாளிகை முதலிய விடயத்தொடக்கங்கள் யாவை சிலவுளவோ வைதிக யாகமுதலியவையாவை சிலவர்தஞ் செய்கையாயுளவோ, அவையாவுமே தேகமாத்திரப் பொருட்டேயல்லாமல் ஆன்ம உணர்வின்பொருட்டு ஒரு சிறிதுமாகாவாம். அற்றேற் சமுசாரத்தின் கண்ணும் உத்தம இராஜ்ஜியாதி பதங்கிடைக்கின் இளைப்பாறுதல் காணப்படுகின்றதாகலின். ஆன்மதரிசனத்தா லாகவேண்டிய தென்னே! உரைக்கின்றாம் கேட்டி! புவனத்தில் இராஜ்ஜியம் போற்றுக, இந்திரபதலாபத்தானே விருஷ்டியதிகாரத்தில் மேகத்துட்புகுதுக, வருணபதலாயத்தானே நீரிற்றான் நில்வுக, யோகசித்திகளாற்றுமாதல் பூதவெற்றிகொண்டு யாண்டுமேநுழைக, எனினும் ஆத்மலாபமில்லாமல் ஐந்து விசிராந்தியை யடையவே மாட்டாதாம். ஆயின் விசிராந்தியை வாஞ்சிப்பவனுல் எவையுபாசிக்கத்தக்கவையெனின் அவற்றைக் கூறுவாம், யாவர்மகா மதியையுடையவரோ, அதனானே யாவர் புலன்கள் வென்னிட வெற்றிகொண்ட வீரசேகர சூராரவரோ பரமசாந்தரோ, மகா ஞானியாராய அவரே, அதிசூக்கும மதியையுடைய முமுக்ஷுக்களால் சன்மச்சுர விநாசப் பொருட்டுப் போற்றி யுபாசிக்கத்தக்கவராவர் என்று அறிக. அவரையுபாசித்தலானே தத்துவபோதம் உண்டாயினும், மீண்டும் போகபூமிகளில் உண்டாம் இரதியானது யாவரால் அகற்றப்பெறும் எனின், கூறுகின்றார்:—எங்கணும் என: எவ்விடத்திலும் பஞ்சபூதங்களே யுள்ளனவாம், ஆறுவதுசிறிதும் ஆய்ந்தாய்ந்துங்காணேம், பாதாளத்திற் பூதலத்திற் சுவர்க்கத்தில் மற்றெங்குதான் இரதியையடைவன் றைரியபுந்தியன்; அடையான் என்றபடி = சுருதி:—" எவ்வத்தேவதைகட்குத் திரிவித்கரணம்கூறப்பெற்றதோ அதற்கே உதாகரணம் உரைக்கப் பெறுகின்றது; உதாகரண மென்பது ஏகதேசப் பிரசித்தியானே அசேஷப் பிரசித்தியின் பொருட்டுக் கூறப்பெறுதலாம், அவ்விதனைக் கூறல்:—திரிவித்கிருதமான எவ்வக்கினியின் ரோகிதம்ரூபம் உலகிற்பிரசித்தமாமோ அது, திரிவித்கிருதமாகாத தேஜசின் ரூபமாமென்றறிதி, அவ்வாறே அக்கினிக்கே யெச்சுக்கிலரூபமுளதோ அது, திரிவித்கிருதமாகாத அப்புவினதாம், அவ்வக்கினிக்கே எக்கிருஷ்ணரூப முளதோ அது, திரிவித்கிருதமாகாத அன்னமென்னும் பிருதுவியினதாம், என்றுணர்தி. ஆண்டிவ் வண்ணமாகவே ரூபத்திரய வியதிரேகமாக அக்கினியென வெதனை நினைகின்றனை நீ அவ்வக்கினியின் அக்கினித்தகைமை இஞ்ஞான்று அகன்றது, ரூபத்திரய விவேகவிஞ்ஞானத்தின் முன்னினக்கு எவ்வக்கினி புத்தியகன்றது அக்கினிசப்தமும் அகன்றது, காணப்பெற்ற சிவப்புப்பாதியோடு கூடியபடிகம் கவரப்பெறுவதாகி, இதுபதுமராகம் என்னும் சப்தபுத்திகளின் பிரயோஜகமாகின்றது, உபாதிபடிகங்களின் விவேகவிஞ்ஞானத்தின்முன், அதன்விவேக விஞ்ஞான

முண்டாயினே பதுமராக சப்தபுத்திகள் அதன்விவேக விஞ்ஞாதாவிற்கு அகன்றுபோம் அதுபோலென்றுணர்க. ஈண்டு, புத்திசத்த கற்பனையால் இயற்றப்பெறுகின்ற தென்னே ரூபத்திரய விவேகஞ்செய்வதினும் முன்னக்கினியே இருந்தது அவ்வக்கினியின் அக்கினித் தன்மை ரோகிதாதிரூப விவேகஞ் செய்தலானே அகன்றது; என்பது பொருத்தம், நூற்கள் சிதைவுற்றவழி ஆடையிலதுபோலும் எனின் ? அற்றன்ரும், புத்திசத்த மாத்திரமே தானக்கினி, வாக்காலம்பன மாத்திரம் நாமமேகேவலம் அச்கினியென்னும்விகாரம் இல்லையாம் என அஃதறையைப் பெற்றிருத்தலின், அக்கினிக்கு நாமமாத்திரத் தன்மையாகவே அக்கினிமதியும் பொய்யேயாம்; ஆயின் என்னுண்டுண்மை யெனின், மூன்றுரூபங்கள் என்பதே மெய்யாம், அணுமாத்திரமும் ரூபத்திரயத் தயலாகச் சத்தியமில்லையென்பது தேற்றப் பொருளாம்;" என்று மறையறைந்த நெறியானே எல்லாப் பூதகாரியங்கட்கும் பூதமாத்திரத் தன்மைவடிவப் பொய்ம்மைப் போதமுறவே அவற்றில் இரதி உதயமாகாமையின் அடையான் என்பதுகருத்து.

(ச,) அவரனைவரும், தேகத்தை நோக்கியன்ரே = தேகமாத்திர நிமித்தமல்லவா, திரிவதெல்லாம் = சஞ்சரித்தன் முதலியவனைத்தும், ஏகத்தை நோக்கியன்று = ஆத்மார்த்தம் எவ்வளவுமன்ரும், ஆத்மார்த்தம் = ஆன்மாவின் பந்தம் விடுபடு நிமித்தம். ஒ, என்பது இரக்கக்குறிப்பு, நாகத்தை மண்ணைக்கீழை = சுவர்க்கத்திலும் பூதலத்திலும் பாதாளத்திலும், ஆறுகாணேம் = ஆருவ்து அற்பமும் இன்று, அப்பூதங்களும் சுசுவரங்களும் ஜடங்களும் ஆமாதலின், திடமுற்ரேர் = தீரரான விவேகிகளது புத்திமுழுதும் பற்ரூர் = எவ்விடத்தும் விசிராந்தியடையா தென்பதாயிற்று, ஆன்மசொரூபத்தின் கண்ணே இரமித்தற்குரியதா மென்பது கருத்து, (16)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்ருயின் எஞ்சிநின்ற பூதங்கட்கே முடிவுகிடையாமையின் அவற்றைத்தாண்டல் கூடாதெனின் ? இஃதுண்மையே, அஞ்ஞர்கட் கிங்ஙனமேதான், தத்துவவித்துக்கட்கோ " ஆககாரியம் அன்னமூலமாவதே போலத் துணிபாகச்சோமியகாரிய பூதமாய அன்னத்தானே அப்புமூலம் அன்னகாரியத்திற் கறிதி அப்புவிற்கும் விநாச உற்பத்தியுடைமையின் காரியத்தன்மையே யாமென அப்புக்காரியத்தானே சோமியகாரணம் தேஜோமூலந் தேடிக்கொள், தேஜசிற்கும் போதலும் ஆதலும் பொருந்துகின்றமையின் காரியத் தன்மையாமெனச் சோமிய தேஜஸ்காரியத்தானே சன்மூலம் ஏகமேவாத்விதீயம் பரமார்த்த சத்தியமாம். எதன்கண்ணே இவையாவும், இரஜ்ஜுவின்பாற் சர்ப்பாதிவிகற்பக்குழுப்போலும் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் அநிருதம் அத்தியஸ்தமாமோ, அவித்தையாலது இச்சகத்திற்கு மூலமாம், ஆகவின். ஹேசோமிய இத்தாவர ஜங்கமவ்டிவ சர்வப் பிரஜைகளுமே சத்தைக்காரணமாக வுடையனவாம், கேவலஞ்சன்மூலங்கண்மாத்திரமன்ரும், இத்திரிகாலத்திலும்சற்பற்றுக் கோடுடையனவேயாம், மண்ணைப்பற்ருமற்குடாதிகட்கு இருப்பாதல் திதியாதல் உளதாவதில்லையன்ரே, ஆகலின் மட்போலச் சன்மூலத் தன்மை யுண்மையின் பிரஜைகட்குச் சதாயதனர்களே பிரஜைகள் எனலாம், முடிபிலும், சத்தே பிரதிஷ்டையாம் = இலயமாம் = சமாப்தியாம் = அவசானமாம் = பரிசேடமாம், ஆகவே சற்பிரதிஷ்டை யுடையனவேயாம்" என்னுஞ் சுருதிகாட்டிய ஊகத்தானே சருவாதிஷ்டானப் பிரஹ்ம தரிசனத்தால், பூதங்கட்கும் பொய்மைத் துணிபுளதாவதால் அவற்றைத்தாண்டல் எளிதேயாம் என்னுங் கருத்தால் உரைத்தல்:—ஊகமென்பது.

ஊகமின் மூகர்க்கெல்லா மூழிவெங்கட லாஞ்சென்ம
மோகமிலூகத் தோர்க்கு முன்னுறு கோவின்றுளாஞ்
சோகமின் ஞானிநெஞ்சிற் றொடர்ந்த சிற்றின்பம்பற்றாப்
போகமில் சிற்றூர்ப் புன்பெண் பொலிநகர் விடலைக்கென்னும்.

(ப - ரை.) ஊகமில் மூகர்க்கு எல்லாம்=யுக்தியை வெகுதூரத்தில் விடுத்தமூடர்யாவருக்கும், ஊழிவெங்கடலாஞ் சென்மம் =சம்சாரம் மகாப்பிரளய அர்ணவமாம், மோகமிலூகத்தோர்க்கு = குதர்க்கமற்ற யுக்தியுடைய அறிஞர்க்கோ, முன்னுறு கோவின்றுளாம்= எதிரில் அற்பமாய்த் தோற்றுஞ்சமுசாரம் ஆவின்பாதப் பைம்புனலாம், சோகமில் ஞானிநெஞ்சில் = சோகமயச் சகத்திரயமும் உதயமேயாகாத தத்துவஞ்ஞனுடைய மனத்தில், தொடர்ந்த சிற்றின்பம் பற்றா = மற்றையர் யாவரும் பின்பற்றிய எச்சகத்துப் பாவங்களும் மயக்கமாட்டாவாம், போகமில் = சிறியவயதையுடைய; சிற்றூர்ப் புன்பெண் = குக்கிராமத்தில் வாழ்ந்து மயக்குந்திறனற்ற அவலக்ஷணமான அழுக்காடை யற்பச்சிறுமி, பொலிநகர்விடலைக்கு என்னும் = சர்வாலங்கார சோபிதப்பெரிய நாகரீகமான பட்டணத்தில் வாழும் மன்மதன்போன்ற காளையை மயக்குவதற்கு எவ்வகையினளாவள், ஆகாள் அது போலப்பற்றா வென்றறிக.

(ஸ்ரீ - வீர.) ஊகத்தோடுகூடி ஆராயும் பெரிய அறிஞனுக்குத் துணிபாக இச்சம்சாரம் ஆன்குளப்படி யறற்கொப்பாம்; ஊகத்தையடியோடு மொழித்த மூர்க்கனுக்கோ, சம்சாரம், பெரியமத்தார்ணவப் பிரளயக்கடற்குச் சமானமாம், தத்துவத்தை யுணர்ந்தவனோ பரவைராக்கிய தாட்டியத்தாற் போகவாசனையை வீட்டியத்தால் நிர்வாசனைத் தூயவந்தக்கரணம் படைத்தவனவன், அன்னானை, லோகபால போக்கியங்களேயாய இம்மூவுலகசம்பந்தி இராச்சியாதி ஜகற்பாவங்க ளனைவையுமே, மீண்டுமீண்டும் பரிசீலிய மானங்களாயினும், ஆகாயத்தை யம்புதங்கள் என்ன இரஞ்சனையியற்ற மாட்டாவாம். சகத்திரயமும் உதயமேயாகாத வென்பதை மாண்டூக்கியத்துங் காணலாம்:—"நிகணிரோதமு மில்லையுற்பத்தியும் நிகழா, நிகழுபத்தமுமில்லை சாதகமுமேயில்லையாம். முகிழ்முமுக்குவு மில்லைமெய் முத்தனுமில்லையாம், புகழுமிங்கிஃதுண்மைய தென்னவே புகல்வார்." துவைதம்பொய், ஆன்மாவொன்றே உண்மையாகவுளது என்னுந் துணிவுளதாகியவழி இவ்வெல்லா லௌகிகவைதிக விவகாரங்களும் அவித்தை விடயங்களேயாம், ஆகவே பிரளயமுமில்லையாம், ஜனனமுமில்லையாம், சம்சாரியுமில்லையாம், மோக்ஷசாதனமு மில்லையாம், மோசனார்த்தியு மில்லையாம், விமுக்தபந்தனு மில்லையேயாம், உற்பத்திப் பிரளயங்களின்மையானே பத்தாதிகளு மில்லையென்னுமிது பரமார்த்ததையாம். யாங்ஙனம் உற்பத்திப் பிரளயங்களினின்மை யெனின் நுதலுதும்:—துவைதத்திற்கு அசத்துவ முண்மையின், "யாண்டுதானிருமை போற்றோற்றுமோ, யாவனீண்டு பன்மைபோற் பார்ப்பனோ, ஆன்மாவே யிவ்வியாவும், பிரஹ்மமே இவ்வியாவும், ஒன்றேயத்துவிதீயம், இவ்வியாவும் எவ்விவ்வான்மா," என்பவாதி சுருதிகளானே துவைதத்திற்கு அசத்வம் துணியலாம். சத்திற்கன்றோ உற்பத்தியாதல் பிரளயமாதல் சார்தல், சசவிஷாணதிய சத்திற்குச் சாராதன்றோ, அத்வைதம் உற்பத்தியுமாவதில்லை லயமுமாவதில்லையாம், அத்வயமும் உற்பத்திப் பிரளயமுடையதும் மென்பது விப்பிரதிஷித்தமாம். யாதுதான் மீண்டுந் துவைத நல்வியவகாரமோ அது இரஜ்ஜுசர்ப்பம்போலும் ஆன்மாவில் உயிர்ப்பாதி வடிவமாய்க் கற்பிதமெனக் கழறப்பெற்றது, மனோவிகற்பமாகத் தோற்றும் பழுதைப் பாம்பாதி வடிவத்திற்குப் பிரளயமாதல் உற்பத்தியாதல் இரஜ்ஜுவின் கண்ணின்றாம்; இரஜ்ஜுவைக் காணும் யாவருக்கும் தோற்றும் வழக்காதலின். மனத்தின் கண்ணிரஜ்ஜு சர்ப்பத்தின் உற்

பத்தியேனும்பிரளயமேனும் இலையாம், வெளிப்புலப்பாடு விரோதமாதலின், இரண்டினுமிரண்டும்உண்டாவதில்லை; இரண்டாதாரத் தன்மையேலாமையின். அவ்வாறே துவைதத்திற்கு மானசத்தன்மை யொப்பாயிருத்தலின், யாண்டுமே உண்மையான ஜன்மவிநாசங்கள் காட்ட முடியாதாம், மனம் நிற்பினும் துயிலினும்துவைதம் கவரப்பெறுவதில்லையாம், ஆகலின், மநவிகற்பனமாத்திரம் துவைதம் எனத்துணியப்பெறும், பெறவேதுவைதத்திற்கு அசத்வமுண்மையின் நிரோதாதிய பாவத்திற்குப் பரமார்த்ததையாம் எனநன்கு நவிலப்பெற்றதேயாம், இவ்வண்ணந் துவைத அபாவத்தில் சாஸ்திரவியாபாரமாயின், அத்வைதத்தில் இல்லையாகும், விரோதமாதலின்; அவ்வாறாகவே, அத்வைதத்திற்கு வத்துத்தன்மையில் அளவையின்மையின், சூனியவாத வழக்காம்; துவைதத்திற்கு யிருப்பின்மையின்; கூடாதாம், இரஜ்ஜுசர்ப்பாதி விகற்பனைக்கு நிராஸ்பதத் தன்மைப் பொருந்தாதெனக் கண்டிக்கப்பெற்றதிது, யாங்ஙனம் உற்பவிக்கு மாறுசெய்கின்றாய், சர்ப்பவிகற்பத்திற்கு ஆஸ்பதபூதமாய இரஜ்ஜுவும் விகற்பிதமே யாமெனத் திருஷ்டாந்தம் பொருந்தாறுதா மெனின், அற்றன்றும், விகற்பனை க்ஷயமாகவே அவிகற்பிதத்திற்கு அவிகற்பிதத் தன்மையானே சத்துவமொத்திருத்தலின்; இரஜ்ஜுசர்ப்பம்போலும் அசத்துவமாமெனின், ஆகாதாம், ஏகாந்தமாக அவிகற்பிதத் தன்மையான், சர்ப்பாபாவ விஞ்ஞானத்தின்முன் அவிகற்பித இரஜ்ஜு அம்சம் போலும். விகற்பம் விளைப்பவனுக்கும் விகற்பனை விளையுமுன் சித்தத்தன்மை யங்கீகரித்தலின் அசத்துவ மமையாதாம். யாங்ஙனத்தான் பின்வியாபார அபாவசொருபத்திற் சாஸ்திரத்திற்குத் துவைதவிஞ்ஞான நிவர்த்தகத்தன்மையாதல்? இதுகோதாகாதாம், தாம்பின்மாட்டுப்பாம்பாதிபோலும் ஆன்மாவின் பாற்றுவைதத்திற்கு அவித்தையத்தியஸ்தத்தன்மையுண்மையின். யாங்ஙனம் ? சுகி யான் துக்கிமூடன் பிறந்தேன் இறந்தேன் ஜீர்ணன் சரீரி காண்கின்றேன் வியக்தன் அவ்வியக்தன் கர்த்தா பலமுடையவன் சேர்ந்தவன் பிரிந்தவன் சிதைந்தவன் கிழவன்யான் என்னுடையவரிவர் இன்னோரன்ன முதலனயாவும் ஆன்மாவின் மாட்டத்தியாரோபிக்கப் படுகின்றனவாம், ஆன்மா இவற்றுள் தொடர்ந்திருக்கும் யாண்டும் பிறழாதிருத்தலின், சர்ப்பதாராதி பேதங்களில் இரஜ்ஜுவேபோலும்; எக்காற்றானிங்ஙனம், விசேடிய சொரூபப் பிரத்தியயத்திற்குச் சித்தத்தன்மையான் இன்று கர்த்தவ்யத்தன்மை சாத்திரத்தான். செய்யப்பெறுதலைச் செய்வதல்லவோ சாத்திரம் கிருத அநுகாரித்தன்மையில் அப்பிரமாணமாம்; எதனுல் அவித்தையத்தியாரோபிதசுகித்வாதி விசேஷப்பிரதிபந்தத்தானேயே ஆன்மாவிற்குச் சொரூபமாக அநவஸ்தானமாமோ, சொரூப அவஸ்தானந்தானே நிச்சேட துக்கநிவிருத்தி நிரதிசய ஆனந்தப்பிராப்தி யென்னும் மேலாயசிரேயசாம் என்பது மோக்ஷசாஸ்திரங்களிற் பிரசித்தமாம். சுகித்வாதி நிவிர்த்தகமான சாஸ்திரம் ஆன்மாவின்கண் அசுகித்வாதிப் பிரத்தியயமாக்கலால்நேதிநேதி தூலமற்றதாதி வாக்கியங்களானே ஆன்மசொரூபம்போலும் அசுகித்வாதியும் சுகித்வாதி பேதங்களில் தொடர்ந்திருக்குந்தருமமல்லவாம், தொடர்ந்திருப்பதா மேலாயினோ அத்தியாரோபித சுகித்வாதி லக்ஷண விசேஷமாகாதாம், உஷ்ணத்வ குணவிசேஷவானைய அக்கினியின் கண்ணே சீதத்தன்மை போலும், ஆகலின் நிர்விசேஷமேயாய ஆத்மாவின்கண் சுகித்வாதி விசேஷங்கள் கற்பிதங்களாம், அசுகித்வாதி சாஸ்திரமான்மாவிற்கு யாதாமோ அது சுகித்வாதிவிசேஷ நீக்கப்பொருட்டேயெனத் துணியப்பெறும். “ சித்தமோ நிவர்த்தகத் தன்மையான் ” என்பது ஆகமமறிந்தவரின் சூத்திரமாம், இதுதிரவிட ஆசாரியசம்மதி யென்ப. பிரஹ்மத்தின் மாட்டுப் பதங்களின் விற்பத்தியபாவமிருப்பினும், சித்தமேயாய சாஸ்திரப் பிராமாணியம் அபாவத்தையறிவிக்கும் விற்பந்நமாய நஞ்மொழிகலந்த தூலாதிவிற்பன்ன பதங்களானே இயற்கையாயமைந்த இருமை யின்மைய யுணர்த்தலானே அத்தியஸ்த நிவர்த்தகத் தன்மை

யுண்மையின் என்பது சூத்திரப் பொருளாம், மற்றையர்யாவரும் பின்பற்றிய வென்பது மறையே மலரும்:—இந்தப் பரமாநந்தத்ததேயாய, அவித்தையா லாக்கப்பெற்ற விஷய இந்திரிய சம்பந்தகாலப் பகுப்புற்ற கலையைப்பெற்று அன்னியபூதங்கள் ஆநந்தித்துவாழும் என்பதாம். போகமில்லென்பது பாடபேதம்.

(ச.) மூகமில் யூகத்தோர்க்கு = பரிபூரண பிரமபாவனு ரூபமான மகாயோகமுடையோர்க்கு, தொடர்ந்த சிற்றின்பம் = ஜகபாவனைகளற்பமும், விடலைக்கு = சுந்தரிகாந்தனுக்கு. (17)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜகத்திற்குத் தத்துவவித்தாத்மப் பிரகாச அபேக்ஷயை விரித்தல்:—பிரமமென்பது.

பிரமமாஞ் சுத்தவேலை நுரைகளாம் பிறங்கலெல்லாம்
பரமவாதித்தன் முன்னர்க் கானலாம் பரவைஞாலந்
திரமதாமிதனை முன்னே செப்பினன் வியாழன்றந்த
வரமகன் கசனும்பே ரோன்மற்ற துவள்ளல் கேட்பாய்.

(ப - ரை.) பிரமமாம் சுத்தவேலை = பிரஹ்மசொரூபம் அமல அம்போதியாம், பிறங்கல் எல்லாம் நுரைகளாம் = குல அசலங்களியாவும் பேனங்களாம், பரம ஆதித்தன்முன்னர் = கானலாம் பரவைஞாலம் = பேய்த்தேராம் ஆர்கலியுலகம், திரமதாமிதனை = அதிடமாகிய இத்திருஷ்டியை, வியாழன்றந்த வரமகன்=பிருகஸ்பதியீன்ற மேன்மைவாய்ந்த குமரன், கசனும்பேரோன் = கசன் என்னும் நாமதேயம் வாய்ந்தவன், முன்னேசெப்பினன் = முன்ஒருகாலத்தி லுரைத்தனன், மற்றது = மலர்ந்த அதுதன்னை, வள்ளல் = ஹே இராகவ! கேட்பாய் = யாம்கூறக்கேட்குதி!

(ஸ்ரீ-வீர) விசாலமான நின்மலப்பிரஹ்ம சமுத்திரத்தில் நுரைகள் போன்றனவாம் குலாசலங்களியாவும், சித்தாதித்திய மகாபாசமிருக திருஷ்ணைகளாம் நதி சமுத்திராதிகளோடு கூடியசகங்கள்யாவும்! இங்ஙனம் அதிஷ்டானத் தன்மைக்குமாத்திரம் அதனபேக்ஷையென்பதாக வின்றும், மற்றோ, ஜடங்கட்குப் பிரகாசப் பொருட்டும், முன்மொழிந்த சுருதிப்படி சர்வப்பிராணிகட்கும் ஜீவன ஹேதுவாய விடயானந்தப் பொருட்டும் அதனபேக்ஷயாமென் றறிந்துகொள்க. எல்லா வாழ்வினையுமுறும் சார்வபௌமாதி யிரணியகருப்பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற நல்லானந்தங்க ளெல்லாம் அதன் லேசமாத்திரமாயிலங்கலின். பூர்ணபதத்தை யடைந்த ஆரூடனுடைய சார்வாத்மிய ஸ்திதியைப் போதிப்பதாகிய கசன்கீதையை உபதேசிக்கத் தொடங்கல்:—திரமதாமென்பது. ஹே இராகவ! முன்மொழிந்த இதேவிடயத்தில் பிருஹஸ்பதி மைந்தனுகிய கசனுற்கானஞ்செய்யப் பெற்றதாயுதித்த பூர்வகாலவிருத்த அதிபவித்திரமாகிய கீதையைக் கூறக்கேட்பாயாக. பார்ஹஸ்பத்யேந = அநந்தரா பத்தியத்தில் பதி உத்தரபத லக்ஷணண்ய விகுதியாம் ஆதிவிருத்தியாம் ப்ராஜ பத்யசப்தம்போலு மென்பதாம்; பின்மூன்றும் வேற்றுமை.

(ச.) பிறங்கல் எல்லாம் = சர்வகுலாசலங்களும், பரமவாதித்தன் முன்னர் = சிதாதித்த மகத்தேசின்கண், கானலாம் = மரீசிகளாம், பரவைஞாலம் = சகலஜகங்களும், திரமதாம் = சித்துவிலாசமாத்திர கற்பிதங்களாம் என்பது பொருள். இதனை = இப்பொருளைமூலம்: பார்ஹஸ்பத்யேந = பிருகஸ்பதி அபத்தியமென்னுங் குழந்தையால். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) கசன் சுவாநுபூதியை வெளியிட்டபடி வெளியிடல்:—கசன்மேனியென்பன.

கசனுயர் சமாதிநீங்கி யொருபகற் களிக்குநெஞ்சன்
வசமறத் தழுதழுத்த வசனத்தன் யாதுசெய்கேன்
திசையுற வெங்குசெல்கேன் றீர்ப்பதென் கொள்வதென்று
மிசையுயர் கற்பநீர்போன் மேதினி யெங்குநானே.

மேனியிற் புறத்தினுள்ளின் மேலொடு கீழிற்றிக்கில்
வானில்வை யகத்திலெங்கு நானன்றிமற் றொன்றில்லை
யானிலாவிடமு மில்லை யெனதிடத் திலாதுமில்லைத்
தானிகழ் பொருள்வே றில்லைசச்சிதா நந்தமென்றான்.

(ப - ரை.) கசன் = தேவகுரு சுதன், உயர்சமாதிநீங்கி = மேன்மைதங்கிய நிருவிகற்ப சமாதியினின்றுங் கிளம்பி, ஒருபகல் = ஒருபோது, களிக்கும் நெஞ்சன் = மகிழ்நிறைமனத்தனய், வசமற = பரவசனய், தழுதழுத்த வசனத்தன் = கத்கதவாணியனய், கூறியதாவது, யாதுசெய்கேன் = எதனையியற்றுவேன் திசையுற எங்குசெல்கேன் = எத்திசையை நோக்கியாண்டு போவேன், தீர்ப்பது என்கொள்வது என்று=எதனைக்கவர்வேன் எதனைத் தியாகிப்பென், மிசையுயர் கற்பநீர்போல் மேதினி எங்கும் நானே = மேலுங்கீழும் எங்குந் தங்கும் மகாகற்பஜலம்போல விசுவம்முழுவதும் யானே வியாபித்துள்ளேன்.

மேனியில் = தேகத்தில், புறத்தில் = பாகியத்திலும், உள்ளில் = ஆந்தரத்திலும், மேலொடுகீழில் திக்கில் = ஊர்த்வ அதோபாகங்களிலும் திசைகள் எட்டிலும், வானில் வையகத்தில் = தேவினும் பூவிலும், எங்கும் = பிறயாண்டுமே, நானன்றி = ஆத்மாவலது மற்றொன்றில்லை = பிறிதொன்றுமே கிடையாது, யான் இலா இடமும் இல்லை=யாண்டக மில்லையோ அத்தகைய இடமேகிடையாது எனது இடத்து இலாதும் இல்லை = என்னிடத்தில் யாவுந்தோற்றலின் இல்லாததொன்றுமேயில்லை, தானிகழ்பொருள் வேறு இல்லை= தன்னைப்பார்க்கினும் அன்னியம் ஒன்று மின்மையின் யாதையான் அன்னியமென வாஞ்சிப்பேன், சச்சிதாநந்த மென்றான் = சர்வமும்சம்வின்மயமாகவே யிருக்கின்றது என்றுதனது பரமானந்த அநுபூதியை யுரைத்தான்.

(ஸ்ரீ - வீர.) சுமேருகிரியின் சோலையில் ஒருகோணத்திருந்த சுரகுருசுதன் ஒருகால் கேட்ட பிரஹ்மவித்தையினது மனன நிதித்தியாசன பரிபாகத்தால் தன்னிடத்தில் விசிராந்தியை யடைந்தனன். நன்காய் ஞானமிருதத்தானே நிறையப்பெற்ற அவனுடைய நன்மதியானது, அநாதரவுசெய்யத் தகுதியதாய்ப் பஞ்சபூதமயமாய்த் திருசியமாய்த் தன்னினைவு மாத்திரத்தானே கற்பிதமாயுள்ள இத்தோற்றத்தில் இரமிக்கவில்லை. அக்கசன் திருசிய அரமணத்தால் ஏகரசத்வடிவத்தினும் அயலாகப் பொருளொன்றையுங் காணுகி ஏகமாத்திர பரிசேடத்தானே துக்கிதன்போலும் ஹர்ஷகத்கத வசனத்தாலினிதாக வருமிதனையியம்பத்தொடங்கினன். எதனைக்கூறினனே அதனைக் கூறல்:—யாதென்பது. என்னசெய்வேன் எங்குசெல்வேன் என்னகொள்வேன் என்னவிள்வேன், என்னாற்பூரிதம் விசுவம் எங்கும் பெருங்கற்ப நீர்போல், அற்றேல், சீவான்மாவிற்கு யாவைசுகசாதனங்களாமோ அவற்றைச் செய்தி, யாண்டவற்றைப் பெறலாமோ ஆண்டு செல்லுதி, இன்பத்தையும் அதன் சாதனங்களையும் பெறுதி, துன்பத்தையும் துன்பசாதனங்களையுந் துடைத்தியெனின், கூடவில்லையே, துக்கம் அதன் உபபோக்தாவாய ஆத்மாவாயஜீவன், அவனலாசைப் படத்தக்கசுகம் என்பதாதியாவு மாயவுலகமூலந் தேடியவழி ஆகாசமாத்திரமாக விருந்து, திக்குகளினும் மனோரதங்களினும் நன்மகத்தாக ஆன்மமயமாயது, சுவார்த்தத்தில் மயட்கிகுதியாம், ஆன்

மாவேயென அறியப்பெற்றதாம்; ஆகலின், ஆநந்தைகரசவடிவ ஆத்மாவாகிய அதனுனே சர்வதுக்கமும் நஷ்டமுடையவ னுயினேன், ஆகவேஹான உபாதானப் பிரயோஜன மில்லே யென்பதாம். ஆதிபெளதிகாதி பாகியங்களோடும், ஆத்தியாத்மிக ஆப்யந்தரங்களோடும், கூடிய, உபயவிபாக நிமித்தபூத உடம்பிலும், கீழிலும் மேலிலும், கிழக்கு முதலியதிசைகளி லும், தத்துவமாகக் காணப்பெற்றவைகளிலும், ஆன்மாவேயுளதாம், அவையாவுமே ஆன் மாவி லாரோபமாகலின் சர்வமும் ஆன்மாவேயாம் அவ்வாறே சுருதியும் " ஆன்மாவே கீழி லும், ஆன்மாவேமேலிலும், ஆன்மாவே பின்னிலும், ஆன்மாவேமுன்னிலும், ஆன்மாவே தெற்கிலும் ஆன்மாவே வடக்கிலும், ஆன்மாவே யிவ்வியாவுமாமே " என்றறைகின்றது. இங்குமாத்மா, அங்குமாத்மா, எங்குமாத்மா, அநாதமயமெனல், எங்குமேயிலதாம்; யாண்டு மேயதிஷ்டானத் தன்மையானேயாத்மா உளதேயாம், விவர்த்தாத்மக கற்பிதவிகார தரிச னத்திலோசர்வம் ஆன்மமயமாம், தத்துவதரிசனத்திலோ சர்வம் ஆத்மாவேயாம். இவ்வியா வுமே யான்மாவென்னு மித்திருஷ்டியினுனே யான் பரமார்த்த ஆத்மாவின் கண்ணெப் போதுமே யிருப்பேன் என்பதாம்.

(ச.) வசமற = ஏகாந்தத் தேகனுப், யானிலாவிடமுமில்லே = எந்த வஸ்துவில்யா னின்றே, அந்த வஸ்துவில்லே, அது சிருஷ்டித்து அதே அநுப்பிரவேசித்த தென்னும், மறையாற் சர்வான்மாவுக்கு அநுப்பிரவேசங் காண்டலின் என்றுணர்க. எனதிடத்து இலா தும் இல்லே = எந்தவஸ்து என்னிடத்தின்றே அஃதின்று, சர்வப்பிரபஞ்சமும் ஆன்மம் வில் அத்தியஸ்த மாதலின். ஆதலாற் சர்வமும் சச்சிதாநந்தமயம், தானிகழ்பொருள் வேறில்லே = அதனினும் அந்நியமாக எதைவாஞ்சிப்பேன், என்றான் என்பது கசன் வாக்கியம்.

கசன் கதை முற்றிற்று.

———(*)———

# திதிப் பிரகரணம்



(ஸ்ரீ - வீர - அ - கை.) சுரநரர்கள் ஒழிந்துள்ள அரக்கபிசாசாதிகளும் திரியக்குகளும் ஸ்தாவராதிகட்கொப்பாதலின் ஞானுதிகாரக் கதையில் விசாரயோக்கியதையே கிடையா தாம், தத்துவமானது அத்தகைய துர்லபமாதலின், உத்தமஜன்மத்தை யடைந்த சுரர்நரர் கட்குள்ளும் " மாயுமாநுட ரனேகர்பா லொருவனென்னேயாயு மனம்வைத்துளா, னுயுமா நுடரனேகர்பா லொருவனேயறிந்துமுடிவானேயா " என்றருளிய ஸ்ரீ பகவானது திருவாக் கியப்படியே, சிலரேசாம்சாரிக போகருசியைவெறுத்துக் கடந்துகடவுளே நினேப்பவராவர், வைராக்கியமும் பகவத்பக்தியும் அதிதுர்லபதமமாதலின், ஆயினும், சமதமாதி சர்வகுண சம்பத்தியானேவிசேஷமாக ஆத்மவிசாரணயோக்கியதையை யடைந்தவரும், நிரந்தரசமாதி சுகவிக்கினபூத பிராரப்த போகத்தாற் சிறிது இராஜசமைந்த சாத்விகமே பெறுவரன்றிச் சுத்தசாத்விகம் பெருர், அத்தகைய முத்தியோக்கியரே புகழப்பெறுவரெனின், சுத்தசாத் விக நிரந்தரசமாதியி லிருப்பவரைப் பற்றியென்னே யுரைப்பதென்னுங் கருத்தையுடையவ ராய், அவ்விராஜச சாத்விகரைப் புகழ்ந்துகொண்டு, அவர்தமக்கு விவேகவைராக்கியமிகுமா றுபதேசிக்கத் தொடங்கல்:—பெறற்கொணத வென்பதாதி,

பெறற்கொணுத சத்துவகுணப் பிறப்பினர்புவிமே
னிறத்துவாழ் வதுவான்றிகழ் நிறைமதி நிகராம்
வறக்குந்துன் பத்தில் வாடலரிரவு தான்வரினுஞ்
சிறக்கும் பொற்கமலத் தலர்குவியுமோ சிறிதும்

(ப - ரை.) பெறற்கொணுத = கிடைத்தற்கு அதிதுர்லபமாய, சத்துவகுணப்பிறப்பினர் = சிறிது இராஜசகலந்த சத்துவகுணத்துடன் அவதரித்தவர், புவிமேல் = இவ்வுலகத்தில், நிறத்து வாழ்வது = மகாமகிமையுடன் மகாகுணங்களுடன் மலர்ந்திருப்பது, வான்திகழ் = ஆகாயத்தின் கண்ணெளிரும், நிறைமதி = பூர்ண அமிருதகிரணனுக்கு, நிகராம் = ஒப்பாம், வறக்குந்துன்பத்தில் வாடலர் = தேகத்தைச் சிறிதுமடைந்து வாட்டமுரூர், இரவுதான் வரினும் = நிசிவந்து நிகழ்ந்தபோதினும், சிறக்கும் பொற்கமலத்தலர் குவியுமோசிறிதும் = விசேடமாய் விளங்கும் ஹேமாம்புஜம் அற்பமேனும் சங்கோசமடைந்து வாடுமோ.

(ஸ்ரீ - வீர.) எம்மகான்கள் விசேஷ விசாரண யோக்கியதையைத் தொடர்ந்தவராய், இராஜச சாத்விகராய், பழையகரும உபாசனைகளானே உலகின்கண்ணே யவதரித்துள்ளார்களோ, அம்மகாகுண முடையவர்கள் எப்போதுமே ஆநந்தித்து விளங்கிக்கொண்டு ககனத்தி லிலங்கும் பூர்ணசந்திரர்கட் கொப்பாக வாழ்வார்கள். வியோமபாகமலம் போலும் மாநசதுக்கத்தை மருவமாட்டார்கள், இரவிற் பொற்றுமரையென்ன ஆபத்தால் ஆகதுக்கத்தையும் அடையமாட்டார்கள்,

(ச.) ஸ்ரீ வசிஷ்டர்:—சத்துவகுணப் பிறப்பினர் = சமதமாதி குணங்களையுடைய ஞானநிஷ்டர் நிறத்துவாழ்வது = பரமபதத்தில் அநவரதஞ் சீவிப்பது, மதிநிகராம் = சசிபோற் சந்தோஷகரமாம். (1)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவர்தம் பெருமையையே பல்லாற்றுனும் புகழுதல்:—பகுதம் இயற்கையென்பன.

பகுதமன்றி யேமற்றுள தொழில் களிற்பற்றூர்
தகுதியாகிய மேலவர் நெறியிலே சரிப்பர்
மிகுதியா னிறைந்தசை வறுமுளத்தி ஞன்மிகுவர்
தொகுதியான நட்பருண் முதற்குணங் களாற்சுடர்வார்.

இயற்கையாகிய குணத்தின ரிழிவுபர் விரண்டு
மயக்கலரதவர் சமமுளோர் நன்னெறி நடப்போர்
வியக்குமாறு தன்கரைகடா வேலையை யொப்போர்
மயக்கிலாத வரிரவிபோ னியதியை வழாதோர்.

(ப - ரை.) பகுதமன்றியேமற்றுள தொழில்களில் = இயற்கையாகவே யேற்பட்டுள்ளவை யொழிந்துவேருக உள்ள வினைகளில், பற்றூர் = சம்பந்தியார், தகுதியாகிய மேலவர் நெறியிலேசரிப்பர் = யாவருங்கொண்டாடத்தக்க சற்புருடரது சதாசாரத்தாலே யொழுகுவார், மிகுதியால் நிறைந்து = அத்தியந்தம் பூர்ணத்தன்மையை யடைந்து, அசைவறும் உளத்தினுல் = கலக்கமற்ற கருத்தினுல், மிகுவர் = கவின்வாய்ந் தொளிர்வர் தொகுதியான = மிகவும் ஆராய்ந்து சம்பாதித்த, நட்பு அருள்முதல் = மைத்திரிகருணையாதிய, குணங்களால் சுடர்வார் = சற்குணங்களினுலே பிரகாசிப்பர்.

இயற்கையாகிய குணத்தினர் = மாறுபடாத நல்லகுணத்தினை யுடையவர், இழிவு உயர்வு இரண்டும் நயக்கலாதவர் = துதியில் நிந்தையில் துல்லியமானவர், சமமுளோர்= சுகதுக்கங்களில் ஒப்புள்ள முடையவர், நன்னெறி நடப்போர் = சாதுவிருத்தியை யுடையவர், வியக்குமாறு = ஆச்சரியம் அடையும் வண்ணம், தன்கரைகடாவேலையை = தனது மரியாதையைத் தாண்டாத சமுத்திரத்தை, ஒப்போர் = ஒத்து நடப்பவர், மயக்கிலாதவர் = விடயங்களிற் சற்றும் மோகமில்லாதவர், இரவிபோல் நியதியைவழாதோர் = சூரியனைப்போலக் கடமையைத் தவராதுசெய்பவர்.

(ஸ்ரீ - வீர.) எங்ஙனம் விருக்ஷாதிகள் பிராரப்த மோகத்தினும் அயலொன்றைவாஞ்சியாவோ, அங்ஙனம், அம்மகான்கள் ஞான அதன் சாதனசம்பத்தினும் அயலொன்றை அவாவார்கள். எங்ஙனம் பாதபங்கள் தமது புஷ்பபலாதிகளாகிய ஹேதுக்களானே இரமிக்குமோ அங்ஙனம் அறிஞர்களும் தமது சதாசாரங்களானே இரமிப்பார்கள். ஹே இராமச்சந்திர ! கூறியஜீவன் முக்தனுகிய இராஜசசத்வ குணத்தனது மதியானது இவன் மோக்ஷமியையவதேபோல, சாந்தியாதிசுதை விருத்தியாகியவழி நித்தியம் பரிபூர்ண விருத்தியையே யடைகின்றது, அதனுனே சுக்கிலபக்ஷ இந்துவைப்போலும் சுந்திரமாக இருக்கும். அத்தகைய அறிஞர்கள் பேராபத்தின் கண்ணும் சீதத்தன்மையைப் போன்றிராநின்ற சௌமியத் தன்மையைச் சசிபோலும் விடமாட்டார்கள். நவதனமெனும் பூங்கொத்துகளானே பிரேமை யுடையனவாய கொடிகள் எப்போதுந் தம்மை யாலிங்கனஞ்செய்து கொண்டிருக்கப் பெற்றவனத்துருமங்கள்போல இயல்பாகவே மைத்திரியாதி குணகாந்தையானே விளங்கிக்கொண் டிருப்பார்கள். சமமுடையவர்கள், சமரசமுடையவர்கள், சௌமியர்கள், சந்ததம் சாதுக்களினும் சாதுக்களா யிருப்பவர்கள், அவர்கள் உன்னைப்போன்றே அத்தியொத்துத் தாங்கியமரியாதையை யுடையவர்கள் ஆவர்கள்.

(ச.) பகுதம் + பற்றூர் = அவசியஞ் செய்யவேண்டுங் காரியத்தைத் தவிர மற்றவற்றையபேக்ஷியார். பகுதியன்றி யென்பது பாடபேதம் மூலம், சிஷ்டவர்த்தமநி= ஆன்றோர்நெறியில், சசிந:= பன்மை, மைத்ரயாதி குணகாந்தயா = மைத்திரிகருணை முதிதை உபேக்ஷைவடிவ குணகாந்தையால், சமா: = இராகத்துவேட ரகிதர், சமரசா: = சமமாகிய சர்வகதப் பிரஹ்மம்ரசம் எவர்கட்கோ அவர் அத்தகையசமரசர் என்பதாம். (2-3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதுவரை உதாரப்பிரசம்சை வாயிலாக ஸ்ரீ இராமருக்குச் சற்குணங்களையுபதேசித்து இப்போது நேராகவே உபதேசித்தல்:—கொள்ளென்பது.

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற்பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
யெள்ளற்பாலதா முலகமே தியாமெவ னென்றே
தெள்ளற்பாலது குரவரா லறிவினுற் றீர.

(ப - ரை.) கொள்ளற்பாலது = கைக்கொள்ளத் தக்கது யாதெனின், துயரிலாதவர் நிலை= துக்கமில்லாதவரதுதிதியாம், குறுகத்தள்ளற்பாலது = அத்தியந்தம் நிவிர்த்திக்கத் தக்கது, தீயவர் நெறியெனுஞ் சழக்கே = கொடியவரது மார்க்கமென்னும் ஆபத்தேயாம், உலகமேது இயாம் எவன் என்றே = இச்சம்சாரம் எங்ஙன் விரிந்தது யான்யார் என்றுதானே, எப்போதும், எள்ளற்பாலது ஆம் = சிந்திக்கத்தக்கது கடமையாம், குரவரால் அறிவினுல் = தேசிகோத்தமராலும் அவர்தந்தருளிய பிரஞ்ஞையாலுமே, தீரத் தெள்ளற்பாலது = அஞ்ஞானதிகள் அகல அத்தியந்தம் தெளியத்தக்கதாம்.

(ஸ்ரீ - வீர.) எதனலித்தகைய குணசம்பன்னர்களோ அதனல் ஹேமகாபாகோ ! = ஹே பெருந்தோளோய் ! புகன்ற அப்புண்ணியவான்கட்கு ஆபத்துக்களின் இடமல்லாத பதமியாதுளதோ அதுவே யெப்போதும் அடையத்தக்கதாம், அதுபோலவே இவ்வுலகின் கண்ணும் கேதமற்ற மனத்தினலே விவகரிக்கத் தக்கதாம் விவகரிப்பினும் ஆபத்துக்கடலில் மூழ்கியமிழ்ந் தாகவேண்டிய தொன்றுமில்லை யென்றறிதி; அறிந்தே விவகரித்தலின். தன்மனத்தால் விரைந்து அதியாதரத்தோடும் நாளு நிமித்த உபபாத்ய அநித்தியத் தன்மையை நன்காய்ந்து நித்தியம்விசுத்தபுத்தியானவன், ஆதியில் இகலோக சம்பந்த உபபோகப் பொருட்டு இனிது பொருந்திய இலௌகிக மென்னும், அந்தத்தில் மரண உத்தர காலத்தில் நன்குபொருந்தும் பாரலௌகித மென்னும், மூவுலகத்தினும் நிகழ்வனவாய கிரியைகளையும்; அவற்றின் பலபூதங்களாய பசுபுத்ரதன சுவர்க்க விமான அப்சரசாதி பதார்த்தங்களையும்: ஆபத்துக்களேயென விரைவிற் பாவித்தல் வேண்டும், சம்பத்திதுவென வெதையும் பாவித்தல் கூடாது, இவ்வாறறிந்து ஒழுகுபவனுக்கு ஆபத்தேவரமாட்டாதாம். வீணை அஞ்ஞான சந்ததியாலாய நன்கலாக்காட்சியை நழுவவிட்டு இனியியம்பும் வகையாய விசாரவடிவ ஞானத்தானே அந்தமின்றிய அருத்தம்பெற நன்றாகவே நாடத்தக்கது. விதிப்பிரகாரம் ஆசாரியசந்நிதியை யடைந்து பழவடியார்களுடன் மிகமுயன்று நால்வகைச் சேவையானே ஞானசிரியரை மகிழ்வித்து, ஹேபிரபுவே ! யானர் இச்சம்சார ஆடம்பரம் அடியேனுக்கு வந்தவாறென்னென்ப வாதியாய் விநயசகித வினவாயிலாய், உத்தமஞானசிரியரிடத்தி லுபதேசம்பெற்று, நன்குதியானிக்க வேண்டும்.

(ச.) உலகெது = இச்சம்சாரமரம் எப்படி விரிந்தது, மூலம், ஆபதவீக்ஷிதம் = ஆபத்துக்களானே நோக்கப்பெருதபதம். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை,) கேள்விக் கங்கமதாகக் கருமசந்யாசங்கூறல்: = வருந்தென்பது.

வருந்துகிற் பதுதனையறி நெறியிலே மனத்தாற்
றிருந்துகிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்துகிற்பது தீயவ ரல்லவர் புணர்ச்சி
யருந்துகிற்பது நானென்ப தாக்குகிற் பதுவே.

(ப - ரை.) வருந்துகிற்பது தனையறி நெறியிலே = ஆன்மாவையறியும் மார்க்கத்திலேயே பிரயாசமெடுத்துக் கொள்ளல் வேண்டும், அதுவும், மனத்தால் = ஆராய்ச்சியால், திருந்துகிற்பது கருமத்தில் அழுந்திலாச் செய்கை = திருத்தமுறச் செய்யவேண்டியது வினையில் மூழ்காத செய்கையேயாம், தீயவர் அல்லவர் புணர்ச்சி = புல்லர் அல்லார்தம் புகழுறுசேர்க்கையே, பொருந்துகிற்பது = சேரவேண்டியதாம், நான் என்பதாக்குகிற்பதுவே = அகந்தைசெய்யும் உபத்திரவத்தையே, எப்போதும், அருந்துகிற்பது = அருந்திக்கொண்டிருக்க வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) கருமத்தின் கண்ணே மூழ்கலாகாது, அநர்த்தத்தோடு கூடலாகாது, சர்வப்பிரியங்களின் விச்சேதமானது எப்போதும் சமுசாரத்தைத் தொடர்ந்திருக்கின்றபடியினலே அவசியம் பவிக்குமென்று காணவேண்டும். மயூரத்தானே அம்புதந்தொடரப்பெறுவதேபோலச் சற்புருடரையே தொடர்ந்திருக்க வேண்டும். உள்ளேயிருக்கும் அகங்காரம், அதனினும் வெளியே இருக்கும் தேகம், அதனினும் வெளியாய புத்திரமித்திராதி சமுசாரம், என்னும் தாண்டமுடியாத முக்கடற் கொப்பாயவற்றிற்கு வங்கவடிவத்தனது விசாரத்தைப் பூர்ணப்ராவாவசானஞ்செய்து சத்தியத்தையே காணவேண்டும். மூலம் :

மங்க்தவ்யம் = மஸ்ஜ என்பதற்குப் பாவத்தில் தவ்யவிகுதியாகி மஸ்ஜிநஸோர்சபலி (7-1-60) என்பதானேநும்.

(ச,) மூலம், அவஹேலயா = அநாதரவாக. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சத்தியத்தையே காணவேண்டும் எனயாது கூறப்பெற்றதோ அதன் கண்ணுபாயம் கூறல்:—தீர்க்கவென்பது.

தீர்க்கத்தக்கது நரம்பெலும் பெனுமுடற் றியக்கம்
பார்க்கத்தக்கது முழுதுயிர்க் குள்ளுறை பரம
மீர்க்கத்தக்கதே ரிரவியி னிடத்திலும் பாரி
னீக்கத்தக்கி லாப்புழுவினுஞ் சித்தொன்றே நிற்கும்.

(ப - ரை.) நரம்பு எலும்பு எனும் உடற்றியக்கம் = மயிர்தோல் எலும்புமாமிசருதிர நரம்புமயமாம் மலவுடலில் யான் என்னும் மயக்கமே, தீர்க்கத்தக்கது = தியாகஞ்செய்யத் தக்கதாம், முழுதுயிர்க்குள் ளுறைபரமம் = சகலஜீவர்களிடத்தும் சாக்ஷிமயமா யுள்ளிருக் கும்பரம் பொருளே, பார்க்கத்தககது = அவசியம் அவலோகனம் செய்யத்தக்கதாம், ஈர்க் கத்தக்கதே ரிரவியினிடத்தினும் = ஏழுகுதிரைகளால் நடத்தப்பெறும் ரதத்தெழுந்தருளி யிருக்கும் சூரியபகவானிடத்திலும், பாரில் = பூமியில், நீக்கத்தக்கிலா = அகற்றற்கும் அரிதாயசிறிய, புழுவினும் = கீடத்தின் கண்ணும், சித்தொன்றே நிற்கும் = உணர் வோன்றே சான்றுமாத்திரமாய் நின்று நிலவும்.

(ஸ்ரீ - வீர.) அஸ்தி மாம்சமயமாய் இரக்தாதி அசோபனவடிவ சரீரத்தை யகமென் பது விடுத்து, அகங்காரத்தையும் அடியோடு விட்டு, ல்யப்பாகாமை சாந்தசம், அத்தியந்தம் சோபனமாய், வியாப்தமாயது முக்தாவலி எதினுல் அத்தகையதாய அதனுள்ளடங்கி யிருக்கும் தந்துவைப்போல் எல்லாதேக அகங்கார சாதாரணமாய் அந்தர்க்கதமான சாக்ஷி சின்மாத்திரத்தைப் பார்க்கவேண்டும் பூதமுக்தாவலிப்பாடமே நலமுடையது. வீதமுக்தா வலி=சாந்தசமாதலின் உபசர்ஜனஹ்ரஸ்வாபாவமாம் திருஷ்டாந்த சாமியம் காட்டப்பெறு கின்றது:—நித்தியமாய் வியாபகமாய்ச் சர்வகமாய்ச் சர்வபாவிதமாய்ச் சிவமாயுள்ள அப்பதத் தின் கண்ணே யிவ்வியாவுமே சூத்திரத்தில் மணிகணங்கள்போலப் புரோதமாம் விசால மான புவனங்களிலும் ஆகாயத்திலும் வியோமபூஷணமாய் விண்மணியிலும் வியாபித் திருக்குஞ் சித்துத்தானே தரைச்சித்ர கோசத்திருக்கும் கீடத்தின் உதரத்திலும் பூரித் திருக்கின்றது. இத்துணையானே சிற்பேத சங்கையுண்டாகு மென்றெண்ணலாகாது, ஈண் டுண்மையாகக் கும்பம்பம்பும் அம்பரத்தில் வேற்றுமை யில்லாததேபோல, சரீரத்துள் ளிருக்கும் ஜீவர்களினது சித்துருவத்தின் கண்ணும் வேற்றுமையின்றும் என்றநகனே தெரிந்து கொள்வாய்.

(ச.) முத்துமாலையிற் றந்துபோல் முழுதுயிர்க் குள்ளுறை, பரமம் = சின்மாத்திரத் தையே. அஸ்திமாம்ச ரக்தாதிரூபம் அதனுனே அசோபனம் சரீரம், இதில் அகமதியகற்றத் தக்கது பூதமுக்தாவலீதந்து = சர்வபூத அநுஸ்யூதம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தத்தமது முயற்சியானே பிறவியின் மாறுதல் உண்டாமெனல்:— தாமதத்தென்பது.

தாமதத்துட னிராசதஞ் சாத்திக மென்னு
நாமமுக்குணப் பிறவியுமுயற்சியா னண்ணுஞ்
சேமமுத்தியைச் செய்திடுஞ் சாத்திகச் செய்கை
யிராயவுத்தம ராகவவென்று மீட்டுரைப்பான்.

(ப - ரை.) தாமதத்துடன் = தாமசத்தேடும், இராசதம் சாத்திகம் = இராஜசம் சாத்விகம், என்னும் = என்று சொல்லப்பெற்ற, நாம = பெயர்களையுடைய, முக்குணப் பிறவியும் = மூன்று குணங்களாலாகிய ஜன்மங்களும், முயற்சியால் நண்ணும் = பிரயத்தனமதனுற் கிடைக்கும், சேமமுத்தியைச் செய்திடும் = சர்வ அநர்த்த நிவிர்த்திரூபமாகிய மோக்ஷத்தை யுண்டாக்கும், சாத்திகச் செய்கை = சாத்விகஜாதித் தன்மையானது தனது விவேகமுயற்சியின் முதிர்ச்சியால் உண்டாம், இராம உத்தம இராகவ = ஸ்ரீ இராமபத்திர ! உத்தசத்துவ உபாதியை யுடையோய் ! இரகுகுலதிலகமே ! என்று = எனவிளித்துரைத்து, மீட்டுரைப்பான் = மீளவுங்கூறத் தொடங்குகின்றார்.

(ஸ்ரீ - வீர.) பழைமையான அகிலபாவங்களையும் கருமவசஞ்செல்பவர் அடைவர், இந்தவுடலம் விடும்பொழுதி யாவனியாதொன்றினை நினைந்தா, னந்தவளவே யந்தப்பாவனையா லதனையடையுமா, லென்றனியல்பே யெப்பொழுது மிதயத்திடை கொண்டெடன்பாலாஞ், சிந்தையொடும் வாளமர்தொடங்கி லதனுலெனையே சேருதியால். என்பதுநியாயமாதலின். எத்தகைய கீழாமவரே யெனினும் அவசியம் மோக்ஷப் பொருட்டே முயலவேண்டும் இடைவிடாமல் முயல்பவனுக்குப் பயனுண்டாதல் ஒருதலையேயாம்; இராஜாக்களின் மலைகளின் மகாகுலங்களாய சேனைகளும் வனங்களும், நீதிசாஸ்திர அநுசாரியாய முயற்சிகளானும் சேதனுதிகளானும் உலகில் வெற்றிபெற்றுத் தளைகின்றன வென்பது வெளிப்படையாகலின் சேற்றில் வீழ்ந்தமூட பசுவைக்கரை யேற்றல்போல மிகுந்ததைரியங்கொண்டு தனது புத்தியை விடயங்களினின்றும் மீட்பிக்கவேண்டும், அரக்கபிசாசு சூத்திராதிரூப தாமசஜாதியை யேனும், க்ஷத்திரிய வைசியாதிரூப இராஜச ஜாதியையேனும், அன்னிய சத்துவதபமிசிர சர்ப்பாதி ஜாதியையேனும் அடைந்த புருடன் முயன்றால் மீட்டலாம். சற்புருடர் தமது முயற்சி விவேகங்களின் வயத்தானே சாத்விகஜாதித் தன்மையையடையா நிற்பர்.

திதிப்பிரகரணம் முற்றிற்று.

———*———

# உபசமப் பிரகரணம்

## சனகராசன் கதை.

### மங்களம்

திசைதருபுவன ரசனபாலனமுந் திகழ்ந்திடச் சாந்தியுந்தெரிவோன்
இசைபெருவிபவ வியற்கையாய்ப் பூன்றவிபமுக விமவலிதநயன்
நசையுறுநிகம மனக்கரியாகி நானிலமுதலன விலனும்
நிசசுகபோத கனசிவவீர நிமலசேகரன் றனைப்பணிவாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உற்பத்திப் பிரகரணத்திற் சர்வசிருஷ்டி சுருதிதாற்பரியத்தை வெளிப்படுத்தும் பொருட்டுச் சர்வப்பிரபஞ்சரசனையும் மனத்தின் அதீனமே யெனக்காட்டப்பெற்றது, திதிப்பிரகரணத்திலும் சர்வசகத்திதிப் பிரதிபாதக சுருதிதாற்பரியத்தையினிதுகாட்டற் பொருட்டு மனத்திதியின் அதீனமே சர்வப்பிரபஞ்சத் திதியெனக்காட்டப்பெற்றது, இப்போது:—ஸ்ரீ பகவான் பிப்பலாத ஆசிரியர் கூறுவதாவது, ஹே கர்க்ககோத்திர உற்பன்ன சூரியன்பேரனே ! கேட்டதனைக் கேட்டி ! ஆதித்தியனது + இரஸ்மிகள்

அதரினம் ஆவனவாய்ச் சேடமறயாவுமே இத்தேஜோமண்டலராசியில் ஒருமையையுறும், பகுக்கத் தகுதியில்லாதபடி யொப்புமையை யடையும் அவ்வருக்கனது அம்மரீசிகள் மீண்டும் மீண்டும் வெளிப்போந்து தசதிசைகளிலும் பரவிவீழ்ந்து விளங்கும். இத்திருஷ்டாந்த மேபோல, விஷயேந்திரியாதிக் குழுமுழுதும் மேன்மைதங்கிய தேவனிடத்தில் = மலர்விப்பதாய மனத்தின் மாட்டு, அதாவது, சக்ஷுராதி தேவர்கட்கு மனத்தந்திரத் தன்மையுண்மையின், மேலாயதேவன் மனமாம் அதன்கண் சொப்பனகாலத்தில், ஒருமையையடையும் = மண்டலத்தில் மரீசிமானும் அவிசேஷத் தன்மையை யடையும். நஞுநனவில் மறித்தும் மறித்துந்தோற்றி மண்டலத்தினின்றும் இரஸ்மிபோலும் மனத்தினின்றுமே தமது வியாபாரப் பொருட்டெலவா நிற்கும். எதனுற்சப்தாதி உபலப்தி கரணங்களாய சுரோத்திராதிகள் சொப்பனப்போதில் மனத்தில் ஒருமையடைந்தன போன்று கரணவியாபாரத்தினின்றும் உபரதியடைந் தனவாமோ, அதனல், அச்சொப்பன காலத்தில், இத்தேவதத்தனே, கேட்பதில்லே, காண்பதில்லே, முகர்வதில்லே, நுகர்வதில்லே தீண்டுவதில்லே, பேசுவதில்லே, வாங்குவதில்லே, கொடுப்பதில்லே, ஆநந்திப்பதில்லே, விடுப்பதில்லேநடப்பதில்லே, தூங்குகின்றுன் என்பர் இலௌகிகர். பிரஸ்நோபநிஷத். சுரோத்திராதிகளின் ஏகீபாவமென்பது தன்றன் வியாபாரத்தை விடுத்து மனத்தந்திரத் தன்மையானே அவஸ்தான மாத்திரமாம், முக்கியமாய ஏகத்வமின்றும், அவற்றிற்கு மனப்பகுதியுடைமை யின்மையானே பகுதியல்லாத தன்கண்ணே அஃதொவ்வாமையின், என்பதுகருதியே போன்றென்றதாம். ஆனந்தபோக அவசரமாகிய துயிற்போது நிகிலவிசேஷ விஞ்ஞானமும் தற்காரணத்தில் விலயமாகியவழி, இத்துணைதுயிலிலும் மோக்ஷத்திலும் சமமாம், இத்துணையோ சிறப்பாம், அஞ்ஞான ஆவிருதனுய்ச் சுயம்பிரகாச ஆநந்தாத்ம சொரூபத்தை யடைவன் கைவல்ய உபநிஷத்.

எதனினின்றும் இப்பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தங்களாய பிராணிகள் உண்டாகின்றனவோ, எதனுல் உண்டானயாவும் பிராணன்றரித்து விருத்தியாமோ, விநாசகாலத்தில் எப்பிரஹ்மத்தை நோக்கிச் சென்று அதன்வடிவத்தையே யடைகின்றனவாமோ, இவ்வண்ணம், உற்பத்திதிலயகாலங்களில் எதன்வடிவத்தை விடமாட்டாவோ பூதங்கள், அந்தப் பிரஹ்மத்தின் தடஸ்த இலக்கன மிதுவேயாம். தைத்திரீயோபநிஷத். எங்ஙனம் ஸ்ரீகங்கை முதலியநதிகள் செல்வனவாய்ச் சமுத்திரத்தைச் சார்ந்து பெயர் வடிவங்களை விட்டு அதரிசனமாய் அவிசேஷ ஆத்மபாவத்தை யடைகின்றனவோ, அங்ஙனம், அவித்தையா லாக்கப்பெற்ற நாமரூபங்களி னின்றும் விடுபட்டு அறிஞன்முன் மொழிந்த பரமென்னும் அக்ஷரத்தினின்றும் மேலான சச்சிதாநந்த திவ்யபுருடனை யடையாநிற்பன். மோக்ஷகாலத்தில்; தேகத்தைத் தொடங்குவனவென எப்பிராணுதிகளேகள், பிராணன், சிரத்தை, கம், வாயு, சோதி, அப்பு, பிருதிவி, இந்திரியம், மனம், அன்னம், வீர்யம், தபம், மந்திரங்கள், கருமம், லோகங்கள், நாமம், என்பனவாக வுள்ளனவோ, அவை தத்தமதுகாரணத்தை யடையாநிற்கும்; பதினைந்து எண்ணிக்கை யுடையனவெனயாவை அந்தியமவது பிரசினத்திற் படிக்கப் பெற்றனவோ. பிரசித்த அதிதேவர்கள் என்னும் தேகாசிரயர்களும் =சக்ஷுராதிகரணத்திருப்பவர்களும், ஆகியயாவர்களும், ஆதித்தியாதி தேவதைகள்தோறும் அடங்காநிற்பர்கள் பிரவிருத்த பயன்கட்கு உபயோகத்தானே க்ஷயமாதல்கூடலின், அப்பிரவிருத்தபலன்களையுடைய, முமுக்ஷுக்களா லாற்றப்பெற்ற கருமங்களும், விஞ்ஞானமயமாய ஆத்மாவும், பரத்தில் ஒடுங்கும். விஞ்ஞானன்மாவும், அவித்தையா லாக்கப்பெற்ற புத்தியாதியுபாதியை ஆன்மத்தன்மையானேமதித்து, நீராதிகளிற் சூரியாதிப் பிரதிபிம்பம் போலும் ஈண்டுப் புகுந்ததாம், தேகாதிபேதங்களில் கருமங்கட்கு அதன்பவப் பொருட்டாந் தன்மையுண்மை

யின், அவ்விஞ்ஞானமய ஆன்மாவோடு கூடவேயாகலின் விஞ்ஞானப் பிராயமாம் ஆத்மா, அவ்விக்கருமங்களும் விஞ்ஞானமய ஆத்மாவும் ஆகியயாவும் உபாதியகன்றவழி, பரமாய், அவ்யயமாய், அநந்தமாய், அக்ஷயமாய்,ஆகாயம்போன்றதாய், அஜமாய், அஜரமாய், அமிருதமாய், அபயமாய், அபூர்வமாய், அநபரமாய், அந்தரமற்றதாய், பாகியமற்றதாய், அத்வயமாய், சிவவாய்ச் சாந்தமாய பிரஹமத்தில், ஏகமாம் = அவிசேஷத் தன்மையை யடையும்; ஜலாதியாதாரம் அகன்றவழி சூரியாதிப் பிரதிபிம்பங்கள் சூரியனிடத்தில், ஒருமையுறுதல் போலவும், கடாதியகலவே கடாதியாகாசங்கள், ஆகாயத்தில் ஒருமையுறுதல் போலவும், ஒருமையையடையும் என்பதாம். முண்டக உபநிடதம்.

திருஷ்டாந்தம்:—உலகில் இந்நதிகள் ஓடுகின்றனவாகிச் சமுத்திரத்தைக் கதியாக ஆத்மபாவமாக உடையனவாகிக் கடலையடைவுற்று நாமரூப திரஸ்காரத்தைப் பெறும். அஸ்தமான அவற்றினது கங்கை யமுனையென முதலனவடிவமாம் நாமரூபங்கள் தோற்று மற்போம்; அதனோடபேதமாகியபோது எல்லாம் நீராகவேயிருத்தலின் சமுத்திரமென்றே சாற்றப்பெறும், இத்திருஷ்டாந்த மென்னவே, கூறிய இலக்கணம் வாய்ந்தபிரகிருத இந்த, அருக்கன் சொப்பிரகாசனு யிருந்துயாவற்றையும் விளக்கிவைப்பதேபோலச் சுயம் பிரகாசவடிவமாக இருந்துகொண்டு சகலலோகங்களையும் விளக்கிவைக்கும் புருடனது, கூறியபிராணாதி இச்சோடசகலைகள். நதிகட்குக் கடல்நகுப்ப, புருடனை வடிவமாயுடையனவாகச் செல்வனவாய்ப் புருடன்மயமேயாம், புருடனையடைந்து புருடாத்மபாவம்பொருந்தி அவ்வாறே யஸ்தமடையும். பிராணாதிகலைகட் கேற்றபடியிருந்த உருவமும் பெயரும் ஒன்றுமில்லாமற்போம், போகவே நாமரூபங்கள் போகாததத்துவமாய புருடன்மாத்திர முளன் என்பதாகவே பிரஹ்ம வித்துக்களாற் பேசப்பெறுவன். கடல்வடிவநீர், எழிலிகொண்டு பொழிந்தவழி ஸ்ரீ கங்காதிநாமரூப உபாதியானே முந்நீரினும் அன்னியமென்ன விவகரிக்கப்பெற்று, உபாதியொழிந்தவழி கடல்வடிவமேயாம், இன்னணம் அவித்தையா லாக்கப் பெற்ற நாமரூப உபாதிவசத்தான் தன்னின் அன்னியமென்ன் மன்னிய எல்லாவுலகும் வித்தையால் அவித்தையாக்கிய நாமரூபமொழியவே பிரஹ்மமாத்திரமாகவே எஞ்சாநிற்கு மென்பதுகருத்து.

இங்ஙனம் ஞானசிரியரானே ;லைப்பிரளய மார்க்கம் காட்டப்பெற அறிந்த அறிஞன் யாவனே அவ்விவன், வித்தையினலே, அவித்யாகாமகர்மஜநிதபிராணாதி கலைகள்யாவும் ஒழிக்கப் பெற்றவனுகிக் கலையற்றவனுவன், அவித்தையா லாக்கப்பெற்ற கலைநிமித்தமேயாகலின் மிருத்தியு, அஃதொழியவே, கலையற்றவனுந் தன்மையானே அமிருதனுவன் என்பதாம். பிரசினேபநிஷத் என்பதாதி, சுழுப்திப்பிரளய சமாதிசாக்ஷாத்கார விதேககைவல்யங்களில், பிரபஞ்சம் உபசமமாதலின் ஜீவனுக்குப் பிரஹ்ம சுபாவத் தன்மையடைவைப் பிரதிபாதித்தலாற் பிரத்தியக்குப் பிரஹ்மைகரச அகண்டவஸ்துவைக் குறிப்பிலறிவிக்கும் சுருதிகட்கும், மன உபசமத்தானே சர்வப்பிரபஞ்ச உபசமத்தாற் சொரூபப் பிரதிஷ்டையிற்றுற்பரியம் ஆமென்னுமிரகசியத்தை வெளிப்படுத்தும் பொருட்டு உபசமப் பிரகரணத்தைத் தொடங்குபவ்ராய ஸ்ரீ வசிஷ்டபகவான், இந்த உத்தமசித்தாந்த சுந்தரமாகிய இத உபதேசத்தைக் கேட்பாயாக, சுந்தாநந்த ஆகிருதியுடைய இராகவ! எனவிளித்து ஸ்ரீஇராமரது சித்தத்தைச் சாவதானப் படுத்திக்கொண்டு கூறல்:—சுரர்குருவென்பது.

(ச-அ-கை.) முன்பு ஜக உற்பத்தி ஸ்திதிகளுக்கு மனதேகாரண மென்னப்பட்டது. இப்போது அஃதுபசம நிமித்தம் உபசமம் பிரகரணம், ஆரம்பிக்கப் படுகிறது; அதிற்சனகன், புண்ணியபாவனர், மாபலி, பிரகலாதன், காதி, உத்தாலகன், சுரகு, பாசவிபாசர்;

வீதகவ்வியன், ஜீவன்முக்தனுக்கா காசகமனுதியின்மை யென்னும் பதின் கதைகளுள், அவற்றில் ஜநகவிருத்தாந்தத்தைப் பிரித்துரைத்தற்குப் பீடிகைசெய்கின்றார்:—சுரர்குரு வென்பது.

சுரர்குருவின் மகனுரைத்தபடியே யிவ்வுலகெல்லாஞ் சொரூபமாகும்
விரவியநீள் பிறப்பிறப்பாமிம் மாயைராசத தாமதத்தைமேவும்
புருடர்தரித்திட வற்றாய்த்தூண் சுமக்குமண்டபமே போலநிற்குந்
திரமுள்சத்துவ குணத்துன் போல்வார்கள் சநநபயந்தீர்ந்து நிற்பார்.

(ப - ரை.) சுரர்குருவின்மகன் = தேவாசிரியரின் குமாரன், உரைத்தபடியே = கூறியவாறே, இவ்வுலகு எல்லாம் = இச்சகமுழுவதும், சொரூபமாகும் = தன்மயமேயாம், விரவிய = கலந்த, நீள்பிறப் பிறப்பாமிம்மாயை = நீர்க்கசம்சாரமாகிய இம்மாயை, ராசத தாமதத்தைமேவும் புருடர் தரித்திடவற்றாய் = இரஜோகுண தமோகுணப் பிறப்பை யடைந்திருக்கும் மானவர்களால் எப்போதுந் தரித்திடல் குறித்தாய், தூண்சுமக்கும் மண்டபமேபோல = நல்லதம்பங்களானே தாங்கப்பெற்ற மண்டபமானும், நிற்கும்—நிதிபெறும், திரம் உள = தைரியம் மிகுந்துள்ள, சத்துவகுணத்துன்போல்வார்கள் = சத்துவகுணப் பிறப்பை யடைந்துள்ள உன்னைப்போன்ற புண்ணிய புருடர்கள், சநபயந்தீர்ந்து நிற்பர் = பிறப்பிறப்பின் பெரும் பீதியற்றுச் சுகிப்பர்.

(ஸ்ரீ - வீர.) ஸ்திதிப் பிரதிபாதக சுருதிதாற் பரியவர்ணனத்தின் பின்னர், உபசங்கா ரத்தைப்போதிக்கும் சுருதிதாற்பரியவர்ணனத்தின் அவசரசங்கதியாம்; பூர்வப்பிரகரணப் பிரயோஜனமேயாய நிர்வாணமே இதற்கும் என ஏககார்ய காரிதைச் சங்கதியும் உளதா மெனவுணர்க. முன்னுரைத்ததை யநுவதுத்து வருவதோடு சேர்ப்பார் உரைத்தபடியே யென்றார். நீர்க்கசம்சாரமாகிய இம்மாயையானது இராகவனே ! இராஜச தாமசர்கள் என்னமுன்னருரையாடப் பெற்ற ஜீவர்களானே நித்தியம் திண்தம்பங்களினால் வண்மண் டபமேபோலும் தாங்கப் பெறுகின்றது. இத்தன்மையைச் சுருதியும் அறைகின்றது:— எக்காற்பிதாவால் அன்னங்கள் ஏழும் சிருஷ்டிக்கப் பெற்றுத் தனித்தனியாகத் தரப்பெற் றனவோ, அக்காற் றொடங்கியே அப்போக்தாக்களினனே அயிலப்பெற்றன அவை, அவர் தந்திதியும் அந்நிமித்தத்தது ஆதலின், எப்போதும் நிரந்தரமாக அயிலப்பெறவேக்ஷீணமாம், இயற்றப்பெற்றது இரிந்தேகுதல் ஏலுதலானும் அவற்றிற்கு க்ஷயம்கூடும், ஆனலவைக்ஷீய மாணங்கள் ஆம் எனவும் அமையா, ஜகத்திற்கு அவிப்பிரட்ட ரூபமாகவே நிலைபேறு காணப்பெறுதலின், அக்ஷயகாரணத்தோடு அமையவே வேண்டும். ஆகலின் எக்காரணத் தாற்றான் அவைமறித்து மரியாமலிருக்கின்றன ? அதனது விடைவருமாறு—எங்ஙனம் இவன்பூர்வம் அன்னங்களின்சிருஷ்டர் ஆயினனோ, மேனதயானும் ஜாயாதி சம்பந்தத்தா னும் பாங்க்தகருமத்தாற் போக்தாவும் ஆயினனோ, அங்ஙனம் எவர்பொருட்டு அன்னங்கள் கொடுக்கப் பெற்றனவோ அவரும் அவவன்னங்களின் போக்தாக்களாக இருந்தும் பிதாக் களேயாவர். மேதையினும் தவத்தானும் அவ்வன்னங்களை யுண்டாக்குவராகலின், அதனு விது அறையப் பெறுகின்றது:—புருடன்றானியாவன் அன்னங்களின் போக்தாவாவனோ அவன் அக்ஷய ஹேதுவாவன் என்பதாம். இவனுக்கு அக்ஷயகாரணத் தன்மையாங்ஙன மெனின் ? அவன்றான் இப்புசிக்கப்பெற்ற எழுவகையாய காரியகாரணவடிவ கிரியாபல வடிவ அன்னத்தை மீளமீளவும், அவ்வக்காலத்தே பவிக்கும் அவ்வப் பிரஞ்ஞையானும் வாங்மனக்காய சேஷ்டைவடிவக் கருமங்களானும்; உண்டாக்குவனுகலின். கூறிய இச் சப்தவித அன்னத்தைக் கணமாத்திரையும் உண்டாக்கானேற் பிரஞ்ஞையானும் கருமங்க

னானும்; அதனல் விச்சேதப்படும், எப்போதுமே புசித்துக்கொண் டிருத்தலானே க்ஷய மல்லவோவாம். ஆகலின் எங்ஙனந்தான் இப்புருடன் அன்னங்களின் நிரந்தர போக்தாவா வனே அங்ஙனமே பிரஞ்ஞைப்படியுங் கருமப்படியும் உண்டாக்கிக் கொண்டேயுமிருப்பன்; இருத்தலின் சந்ததகருத்துருத் தன்மையானே புருடன் அக்ஷயஹேதுவாவன்; அகவே அன்னங்களைப் புசித்துக்கொண்டே யிருந்தபோதினும் அழியாவென்பதாம்.

(ச.) மங்களம்:—மங்களமா நிர்த்தனஞ்செய் மன்றனுகிமகத்துக்கு மகத்தாகி மனவாக் கெட்டா, தெங்களங்க விருளிரிக்கு மிரவியாகி யாமாகியாவையுமா யாவுமன்றாய், திங்களரி யங்கியொளிக் கோளியாய் நாளுந்திகழருணு சலகுரவன் செம்பொற்பாத, நங்களகத்திருத் திடுவாம் வணங்கிவாழ்த்தி நாதாந்தமோன சுகானுகவென்றே.

சீர்கொண்ட வுபநிடதச் செம்பொருளையுணரச் செனனமறப் போகசிந்தை தீர்ந்திடவேமாயைப், பேர்கொண்ட துவிததிட்டி கானலினீராகப் பிரமசுகவநு பூதிப் பெருங்கடலின்மூழ்க, நேர்கொண்ட யோகியர்க ணிட்டையகத் திலகு நின்மல சின்மயரூப நித்தியநிர்க்குணமா, மேர்கொண்ட வருணகிரிப் பெம்மா னற்றளை யிதயகமலத்திருத்தி யெப்போதும் வாழ்வாம்.

பூமேவும் விதிவயத்தாற் றமதெண்ணத்தாற் பொல்லாவேழ் பவப்பௌவத் தமிழ்ந்துஞ்சீவர், தாமேவு மெண்ணமெனுங் கன்மமாளிற்றன வசமாளுமென வறிந்துமீண்டு, நாமேவும் போகேச்சை தடுத்தாட்கொள்ள நயந்திரங்கித் திருமேனி சாத்திவந்த, மாமேவுஞ்சீரருணு சலவெம்மத்தன் மலர்த்தாளை யனு தினமும் வணங்குவாமே.

இராசத தாமதத்தைமேவும் = இரஜதமப் பிரதானமான, இரஜசுமுதலியவைகளின் இலக்கணம். சத்துவம்லகுபிரகாசகபிஷம், இராஜசு அவஷ்டம்பகம்சலம், தமசுகுரு ஆவரண கம் என்று சாங்கியத்திலும்; சத்துவம் — ஞானம், தமம் = அஞ்ஞானம், இராஜசு=மிசிரம், என்று கீதைகளிலுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது. ஈசுரகீதை:—ஒத்தமுக் குணங்களாம் பகுதியுத்தமஞ், சத்துவஞான மாந்தமமஞ்ஞானமா, மத்திமங்கலப்பதாமற்றிம் மூன்றையும், புத்தியின் விகாரமே புலப்படுத்துமால்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சத்துவகுணத்தோரது பெருமையையே யுரைத்திதத்தை யுபதே சித்தல்:—வழுவறு என்பது.

வழுவறுசத்துவ குணத்தோர் தோலுரிக்குமர வென்னமாயாபாச
நழுவுவரெல்லாம் பிரமநாமதுவே யென்றெண்ணி நாமும்வேறே
முழுதுலகம் வேறென்னுமோக மொழிப்பாய் பிரமமூலச்சித்தி
லெழுவனகற்பனை யெல்லாங்கடலி லலைபோலமெய்யா யில்லையன்றே.

(ப - ரை.) வழுவறு சத்துவகுணத்தோர் =குற்றமற்ற சத்துவகுணத்தை யுடையவர் தோலுரிக்கும் அரவென்ன = கஞ்சுகமகற்றும் சர்ப்பம்போல, மாயாபாசம் நழுவுவர் = மாயாபாசத்தை யெளிதாய்விடுப்பர்; எல்லாம்பிரமம் = சமஸ்தமும் பிரஹ்மசொரூபம், நாமதுவே = அந்தச் சர்வான்மகப் பிரஹ்மமேயாத்மா, என்றெண்ணி = எனச்சிந்தித்து, நாமும்வேறே =அகமோ அன்னியமே, முழுதுலகம்வேறு = இஃதெவையும் அயலேயாம், என்னும்மோகம் = என்றுண்டாம் பிராந்தியை, ஒழிப்பாய் = அகற்றுவாய், பிரமமூலச் சித்தில் = வியாபகமாகிய ஞானகனப் பிரஹ்மத்தில், எழுவன கற்பனையெல்லாம் =உதிப்

பனவாய ஆரோபங்கள் யாவுமே, கடலில் அலைபோல=சமுத்திரத்திற் றரங்கமேபோன்று மெய்யாய் இல்லை = சன்மயமாகாவாம். அன்று எ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்த இலக்கணம் வாய்ந்த இராஜச சாத்விக சுத்தசாத்விகப் பிறப்பினராய்த் தைரியமிக்கவராய் உன்போன்ற குணநிறைந்தவராய் விளங்குபவரானே, பக்குவமாய்த் துச்சமாயுள்ள இம்மாயையானது, உரகங்களானே தோலேபோலும், விளையாட்டாகத் தியாகிக்கப்படும். பரமார்த்தமாகவோ மயக்கமும் தனியேநிரூபிக்க முடியாததாகலின், "பிரஹ்மமே யிவையாவும் ஆத்மாவேயிவையாவும்" என்னும் சுருதியோதிய திருஷ்டியானே பிரஹ்மமே சர்வமும் எனக்கூறல்:—எல்லாம் பிரமமென்பது. உண்மையாயிவையாவுமே பிரஹ்மமாம்; விரிந்துள்ளயாவும் வியாபகமாய் ஆன்மாவேயாம், ஹே அநகனே. யான்வேறு இதுவேறு என்னும்பிராந்தியை விட்டொழிப்பாய். தேசத்தாலாம் பரிச்சேத மில்லாததாயும்; வஸ்துவாலாம் பரிச்சேதமில்லாததாயும், காலிகபரிச்சேத சூனியமாயும், அதாவது வியாபகமாயும், ஞானகனமாயும், நித்தியமாயும், உள்ளசச்சிதாநந்த சிவமாகிய தன்னிடத்தில், கடலின்கண்ணே தரங்கபேன புற்புதாதிகள் நீரினும்வேறாக இல்லாததேபோல எக்கற்பனைகளும் சம்பவியாவாம், தோற்றினும் அதிஷ்டானத்தைத் தவிர இன்மையின் சன்மயமல்லவாம்,

ஈண்டுவழுவறு சத்துவகுணத்தோர் நழுவுவர் என்றமையின் மற்றையர் நழுவார் என்றதாயிற்று, காரணம், சூக்குமமும் பிரகாசமும் இன்மையேயாம், இதுபற்றியே ஸ்ரீபகவானும் முக்குணங்களின் குறிகளைத்தெரிந்து இரண்டையகற்ற மொழிந்தருளியுள்ளார்:— ஒத்து நல்லறிவு மிக்கதியாதொரு போதப்போது, சத்துவந் தழைத்ததாகுந் தாங்கரும் வினைகளேகொண், டுய்த்துவந் தாசை கூர லோபம் வந் துற்றபோது, மத்திமகுணமே சால வளர்ந்ததென்றறி நீமன்னு. தக்கதுதகாதென் றென்றைத் தானறியாதபோது; மெக்கருமங்கண் மாட்டு. மிகழ்ச்சியோ டிருக்கும்போது, மொக்கமெய் மயக்கத்தோடு முறக்கம் வந்துற்றபோது, மிக்கது தமமேயென்று விசயநீ யறியவேண்டும்,

இக்குணங்களின் செயற்பாகு பாட்டைச் சாங்கியநூலுடையாருங்கூறுவர்:—" சத்துவ லகுபிரகாசகஞ் சார்பாம், தத்துபட்டம் பகஞ்சலமுமிரசசாம், கத்துகுருவ ரணகமதேதமமாம், ஒத்துறுசுட ரெனவர்த்தத்தினுளதே " பிரகாசப் பிரவிருத்தி நியமார்த்தங்கள் என முன்னிகழ்த்தப் பெற்றது; ஆண்டுயாவையவை இத்தகையன யாண்டிருக்குதான் வருவனவெனின்? கூறல்:—சத்துவமென்பது. சத்துவமே லகுப்பிரகாசகம் இட்டப்பட்டதாம் சாங்கிய ஆசிரியரால்; ஆண்டுக் காரியங்களம்புவதில் ஏதுதருமம் இலாகவம் கௌரவப் பிரதித்துவந்துவி, எதனுல் அக்கினிக்கு ஊர்த்வச் சொலனமாமோ, அது வேலாகவம், சில வற்றிற்குத் திரியக்குக் கமனத்தில் ஏதுவாம், வாயுவுக்கேபோலும்; இங்ஙனம் கரணங்கட்கு விருத்தி படுத்துவஹேது இலாகவமாம், குருத்துவ மிருப்பினே மந்தங்களாம் எனச்சத்துவத்திற்குப் பிரகாசவடிவுடைமை வழங்கப்பெற்றதாம் சத்துவதமங்கள் சுயம் தொழிற்படாதனவாய்த் தங்காரியப் பிரவிருத்தியின் பொருட்டுத் துயருற்று இரஜசைப் பற்றுநிற்கும், இடர் நீங்கப்பெற்றுத் தங்காரியத்தில் உற்சாகமாய்ப் பிரயத்தனம் புரியும். ஆகலின் உபட்டம்பகம் ரஜசெனப் பெற்றதாம். எதனுலெனக் கடாவவிடையாம் சலமென்பது. அவ்விதனுனே இரஜசிற்குப் பிரவிருத்தி யருத் தத்தன்மை காட்டப் பெற்றதாம் இரஜசோ சலமாகலானே எப்புறமும் முக்குணத்தையும் சலிப்பிக்கும். கனமாயும் மறைப்பதாயும்உள்ள தமசினுலே ஆண்டாண்டுப் பிரவிருத்தி தடைப்படுவதாகச் சில்பாலே பிரவிருத்திக்கப்பெறுமென அதின் அதின் விலக்கலாற்றமம் நியாமகமென நிசழ்த்தப்பெற்றது, குருவரண கமதே

தமமாம் என்பது. தேற்றம் தனித்தனி மாறுமுறையிற் சம்பந்தித்து ச் சத்துவமே இராஜ சேதமசே யெனவாம். அற்றேல், பரஸ்பரம் விரோத சீலங்கள்வாய்ந்த இக்குணங்கள் சுந் தோப சுந்தர்போலப் பரஸ்பரம் துவம்சமாமென்பதே பொருத்தமாம், முன்னரே இவற் றிற்கு ஏகக்கிரியா கருத்துருத் தகைமையன்றோ வாகின்றது எனின் உரைக்கப் பெறுகின், றது; ஒத்துறு என்பது; கண்கண்டதே யன்றோவிது, எங்ஙனம் வர்த்திதைலங்கள் அநல விரோதிகளா மெனினும்பின் ஒன்றுசேர்ந்து அநலத்தோடுகூட ரூபப்பிரகாச இலக்கணம் காரியம் செய்யாநிற்குமோ; எங்ஙனந்தான், வாதபித்தசிலேஷ்மாணங்கள் பரஸ்பரம் விரோ திகளேயாயினும் சரீரதாரண வடிவக்காரி யஞ்செய்வனவாமோ, அங்ஙனம், சத்துவரஜதமங் கள் பரஸ்பரம் விருத்தங்களாயினும் தொடர்ந்து நிற்பனவாகித் தங்காரியத்தைச் செய்பவே யாம். அர்த்தத்தின் = புருஷார்த்தத்தின் என்பதாம். "புருடார்த்தமே யேதுவாம் மற் றெவரானும் கரணம் ஏவப்பெறுவதே கிடையாதாம் = போக அபவர்க்கவடிவ புருடார்த் தமே வருவதா யிருந்துகொண்டு கரணங்களை முயல்விக்கும், ஈண்டு அவற்றின் சொரூப அறிமூனுகிய கருத்தாவானே யாற்றியது சாலும்; வச்சவிசேஷவிருத்திநிமித்தம்பாலுக்கே போலும் என்பதிற் கூறுவாம், என்பதாக இது இனியியம்பவும் பெறுமென்றுணர்க. ஈண் டும் சுகதுக்க மோகங்கள் பரஸ்பரம் விரோதிகளாகத் தந்தமனுரூபமாய்ச் சுகதுக்கமோகாத் மகங்களாகவே நிமித்தங்களைக் கற்பிக்கும், அவற்றிற்கும் பரஸ்பரம் அபிபாவ்ய அபிபாவக பாவத்தான் நானாத்தன்மையாம், அஃதெங்ஙனமெனின், ரூபயவ்வன குலசீலசம்பன்னையாய ஓரேஸ்திரீயானவள், சுவாமியை இன்புறுத்துவள், அஃதெவ்வேதுவினால், சுவாமியின் பொ ருட்டு அவள் சுகரூபசமுற்பவமாதலின், அந்த அங்கனையே சபத்நியைத் துயரப்படுத்துகின் றனள், அஃதெவ் வேதுவினால், அவள்பொருட்டவள் துக்கரூப சமுற்பவமாதலின், இவ் வண்ணம் அம்மடந்தையை யடைந்திலாத அயலானை அவளேமயக்கு கின்றனள், அஃதெவ் வேதுவினால், அவன்பொருட்டவள் மோகரூப சமுற்பவமாதலின், இம்மானினியாலே சர்வபாவங்களும் வியாக்கியாதங்களாம். ஆண்டு, யாதுசுகவேது அது சுகான்மகமாகிய சத் துவமாம், யாதுதுக்கவேது அதுதுக்கான் மகமாகிய இரஜசாம், யாதுமோகவேது அது மோகான்மகமாகிய தமசாம். சுகப்பிரகாச லாகவங்கட்கோ ஒன்றன்பால் ஒரேபோதில் உற் பூதமாவதில் முரணின்றாம், சகதரிசனமாகலின்; அதனால் விரோதிகளாகிய சுகதுக்கமோ கங்களாற்போல அவிரோதிகளாய் ஒவ்வொருகுணத்திருப்பனவாய சுகப்பிரகாசலாகவங்களா னேநிமித்த வேற்றுமைகள் குறிப்பிடப் பெறாவாம். இன்னணம் துக்க உபட்டம்பகத்வபிர வர்த்தகத்வங்களானே, இவ்வண்ணம் மோககுருத்வ ஆவரணங்களானே, குறிப்பிடப் பெறா வாம் எனத்துணியப்பெறுந் திரைகுண்யம். எண்ணி மோகமொழிப்பாய் மெய்யாயில்லை யாதலின் எனப்பெற்ற தன்கருத்திதுவாம்:—அந்தப் பிரஹ்மதரிசனத்திற் சாதனம் மனமே யாம், பரமார்த்த ஞானசமஸ்கிருத அம்மனத்தானே ஞானசார்ய உபதேச பூர்வகம் நன்கு காணத்தக்கது, அந்தத்தரிசன விஷயமாய பிரஹ்மத்தின் கண்ணுறு ஒருசிறிதும் கிடைய வேகிடையாது, நானாத்வம் இலதாயும் அவித்தையானே ஆரோபிக்கின்றனன், அவன் மர ணத்தினின்றும் மரணத்தையடைவன், அவன்யாவன்? யாவனீண்டு நானுப்போலப் பார்க் கின்றானே; அவித்யாத்யாரோபணத்தினு மயலாய்ப் பரமார்த்தமாகத் துவைதமில்லவே யில்லை என்பதாம். ஆகலின் விஞ்ஞானகனைகரசப்பிரகாரமாகவே ஆகாயம்போலும் நிரந் தரமாகவே இனிது காணவேண்டும் ஏகரசமாய இப்பிரஹ்மம் அப்பிரமேயமாம், சர்வ ஏகத் தன்மையான், அயலாலன்றோ அயலொன்று அளக்கப் பெறுகின்றது, இதுவோ ஒன்றேயா மாகலின் அப்பிரமேயமாம், துருவம்நித்தியம் கூடஸ்தம் அவிசாலியாம். அற்றேற்கூறியது முரணேயன்றோ அப்பிரமேயமாயது அறியவும் பெறுமோ, அறியப்பெறுதல் என்பது அள

வையால் அளவிடுவதல்லவோ, அப்பிரமேய மென்பது அதையகற்றுவ தல்லவோவெனின்? இது ஒருகோதென்னற்க, அன்னிய வஸ்துவைப்போல அநாகமப் பிரமாணப் பிரமேயத் தன்மைப் பிரதிஷேத அர்த்தத்தன்மை யுண்மையின். எங்ஙனம் அன்னியவஸ்துக்கள் ஆகம நிரபேக்ஷப் பிரமாணங்களானே விஷயீகரிக்கப் படுகின்றனவோ, அங்ஙனம் இவ்வான்மதத்து வம் பிரமாணாந்தரத்தானே விடயீகரிக்க முடியாததாகும், எல்லாவற்றிற்கும் ஆன்மத்தன் மையேல், எதனாலெதைப் பார்ப்பது அறிவது என, பிரமாத்ருப் பிரமாணாதி வியாபாரப் பிரதிஷேதத்தானேயே யாகமமும் விஞ்ஞாபனம் செய்கின்றதன்றி, அபிதான அபிதேய லக்ஷணவாக்கிய தரும அங்கீகாரத் தானன்றாம்; ஆகலின் ஆகமத்தானும் துறக்கமேருவாதி போலும் அது பிரதிபாதிக்கப் படுவதின்றாம் பிரதிபாதிப்பவனது ஆத்மபூதமேயாமது, பிரதிபாதாபிதாவிற்குப் பிரதிபாதனத்தின் பிரதிபாத்ய விஷயத்தன்மை யுண்மையின்; பேதமிருந்தாலன்றோ பிரதிபாத்தியத்வ முண்டாகும், ஞானமும் அதன்கட் பராத்மபாவ நிவிருத்தியேயாம், அதன்கட் சாக்ஷாத்தாத்ம பாவங்கர்த்தவ்யமன்றாம், ஆத்மபாவ மிருத்த லின், நித்தியமேயாய ஆத்மபாவம் பூரணமாய பிரஹ்மத்திற்குப் பிரஹ்மவியதிரிக்த விடயம் போலத் தோற்றாநிற்கும், நிற்றலின் அதத்விஷய ஆபாசமாகிய தேகாதியின் கண்ணாத் மத் வப் பிரதிபாச நிவிருத்திக் கயலாகப் பிரஹ்மத்தின் மாட்டான்மபாவம் விதிக்கப்பெறுவ தில்லையாம்; அன்னியாத்மபாவம் அகற்றப் பெற்றவழி சுவாத்மாவின் மாட்டுச்சுவாபாவிக மாக எவ்வான்ம பாவமுளதோ அது கேவலமாகின்றது என ஆத்மா அறியப்பெறுகின்ற தென்று கூறப்பெறுகின்றது. சுயமாகவோ அப்பிரமேயம், பிரமாணாந்தரத்தானே விஷயீ கரிக்கப் பெறுவது மில்லையென்னு மிரண்டும் முரணற்றவேயாம்; விருத்திவியாப் பியத்தன் மையானே மேயத்தன்மையாம், ஸ்புரண அவ்வியாப்பியத் தன்மையானேயோ அமேயத் தன்மையா மெனவறிக.

(ச.) சத்துவகுணத்தோர் = சத்துவகுணப் பிரதான ஜன்மத்தை யுடையராய் மைத் திரியாதி குணங்களோடு வாழுந்தீரர், மாயபாசம் = இம்மாயை யென்னும் பாசத்தை, நழு வுவர் = விளையாட்டாக விடுவர், எல்லாம் = ஈதனைத்தும், பிரமம், அது = விரிவானவீத னைத்தும், நாமே = ஆன்மாவேயாம், நாமும்வேறே = அகமங்கியன், மோகம் = பிராந் தியை, கற்பனை யெல்லாம் = கற்பனாரூபமாகிய விக்ஷேபங்கள், அலைபோல் = தரங்காதி பேதங்கள்போல். த்வக் = கஞ்சுகம். குமிஞ் = பிரக்ஷேபணத்தில், அன்றாயினோ மயட் டிற்குடித் தன்மையான் சன்மய்யவென மூலத்தில் ரூபமுண்டாக வேண்டும். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வாஸ்தவ ஏகத்வ விரோதத்தானும் துவைதகற்பனை யுண்மையா காதாம், வன்னியின் கண்ணே ஹிமகண மில்லாததேபோல ஓரேயெல்லாமாய பரமாத்ம வத்து வின்கண்ணிரண்டாவது கற்பனையிலதாம், ஆகவே அத்தகைய ஆத்மபரிசயத்தானே ஆண்டு விசிராந்தியின் பொருட்டு எப்போதும் அப்பாவனையே இயற்றவேண்டும், க்ஷீர உத கம்போலும் சித்ரூபத்தை யடைந்தமனத்தினானே சித்தின்மயமாகிய தன்னையே யுன்னி யன்னியத்தை யென்னென உபேக்ஷிக்குக. என்னை, மாயையின்வஞ்சக மலினமொன்று மில்லாத தன்பாற்றானே தானாயிலங்கியதன்றோ, என்று பாவித்து அம்மயமாய சின்மய னுக்கு ஜீவன்முக்தி விசிராந்தியைக் காட்டல்:—சோகமிலை யென்பது.

சோகமிலைமோக மிலைபிறப்பில்லை பிறப்பிற் சுழல்வாரில்லை
போகமென விங்கென்று முள்ளபொருளேயுள்ள திரங்கவேண்டா
மூகமுறவருவன போவனநினையேற் றொருந்தனைக ளொன்றுமில்லா
மாகனசத்துவ குணத்தோடொருவனை யிடரெல்லா மாற்றிநிற்பாய்.

(ப - ரை.) சோகமில்லை = சோகமுங் கிடையாது, மோகமில்லை = மோகமுங்கிடையாது, பிறப்பில்லை = ஜன்மமுங்கிடையாது, பிறப்பு இறப்பிற் சுழல்வாரில்லை = ஜன்ம மரணங்களில் உழல்வாருமில்லை, ஏகமென்ன = ஒன்றேயென்று, இங்கென்றும் = இவனெப்போதும், உள்ள பொருளேயுள்ளது = யாதுளதோ அதுவேயுளது, இரங்கவேண்டாம் = இராகவனே நீ தாபமற்றவனுவாய், ஊகமுற = ஆத்மவானுய், வருவனபோவனநினையேல் = யோகக்ஷேமங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம், தொந்தனைகள் ஒன்றுமில்லா = சீதோஷ்ண சுகதுக்காதிதுவந்துவங்கள் ஒன்றுமில்லாதவனுகி, மாகனசத்துவ குணத்தோடு = நித்தியசத்துவத் திருப்பவனுகி, ஒருவனுய் = அத்விதீயனுய், இடரெல்லா மாற்றி = விசோகாத்மாவாய், நிற்பாய் = தாபமற்றவனுவாய்.

(ஸ்ரீ - வீர) சோகமுமில்லை மோகமுமில்லை ஜன்மமுமில்லை ஜன்மவானுமில்லை, யாதுள தீண்டு அதுவேயுளதாம் ஆதலினிராகவ சுரமற்றவனுவாய். சீதோஷ்ணுதி சாரீரதுவந்துவ விக்ஷேபரகிதனுவாய், நித்தியசத்துவத்தி லிருத்தலினுலே இராஜதமமேவியவேயாயமாநச விக்ஷேபரகிதனுவாய், அதனுனே அவ்விருவிக்ஷேப பரிகார உபாய யோகக்ஷேமச் சிந்தையற்றவனுவாய், ஆத்மவானுவாய், அத்விதீயனுவாய், சோகமற்றவனுவாய், எத்தாபமுமற்றவனுவாய், கருத்திதுவாம்:—சீதோஷ்ணுதிகளை நீக்குவான் யாதேனுமுபாயஞ் செய்யவேண்டாங் கொலோவெனின், வேண்டாம் நிர்த்துவந்துவனுயிருத்தி, சீதம் உஷ்ணம் சுகம் துக்கம் மானம் அபமானம் பகை உறவு என்பன முதலிய சர்வதுவந்துவ தர்மங்கள் உறினும் நித்தியநிருக்குருவ என்னிடத்திலிவை கற்பிதங்கள் சங்கற்பமாத்திர வடிவுடையவைகள், அநியதரூபங்கள்; என்பனவாதி யூகங்களானே அவ்வியாவற்றையும் சகிக்கும் இயற்கையனுகுதி; பொறுக்கக் கூடாத துக்கத்தை யாங்ஙனம் பொறுத்தல் ஏலுமெனின், நித்தியசத்துவஸ்தனு யிருந்தால்ஏலும், சலனமற்ற தைரியமென்னும் சத்துவத்தின் கண்ணிருப்பவனுதி, இராஜ தமோகுணங்களாற் றிரஸ்கரிக்கப்பட்ட சத்துவத்தை யுடையவன் சீத உஷ்ணுதியாலாம் பீடையாற்றுன்புற்றுத் திரும்புவன், நீயவ்விரு குணங்களாற் றிரஸ்கரிக்கப் படாத கேவல உத்தமோத்தம சத்துவத்துயர்வை யுற்றுவாழ்தி: சீதாதியைச் சகிப்பினும் பசியாதி நீக்குவான்முன்னர் மன்னுத் அன்னுதி மன்னவும், பின்னர்மன்னிய அன்னுதி பின்னமாகாமற் காக்கவும் முயலவேண்டிய தவசியமாம், ஆகவே அந்நித்திய சத்துவத்தகைமை யாங்ஙனமுண்டாம் எனின். பெறுததன் பேறும் யோகத்தையும் பெற்றறதன் காப்பாம் க்ஷேமத்தையும் அடையற்க, சித்தவிக்ஷேப ஹேதுவாய பொருள்களின் பெறுகையை யுறவேண்டாம். உறுதொழிவனேலாயின் எனது ஜீவனம் நடப்பது யாங்ஙனமாலோவெனின், ஜீவன்சிந்தையைச் செய்யாதொழிதி, சர்வாந்தரியாமியாகியபரமேசுரரே யோகக்ஷேம நிர்வாகஞ்செய்வர், பரமாத்மாவைத் தியானஞ் செய்பவனுகவும், யோகக்ஷேமங்களைக் கவனிக்குமாறு கடவுளை வைத்தவனுகவும் உள்ள ஆத்மவான் நீயாகுதி, விழைவுகள் யாவையும் விட்டொழித்து நீ மழையெனக் கருணையன் மற்றுடம்பினைக் கழைமுதற் பொருள்கொடு காக்குமென்பதாய்ப் பழையசிந்தனை யெலாம் பாறிவாழ்தியால். அல்லது யாவுமறந்து ஆத்மாவில்மூழ்கிச் சிறப்புறுதன் ஞனந்தமாத்திரமாய்த் தனித்திருக்கும்சித்தம் பெறுதியென்பதாம், அத்விதீயனுதியேற் சோகஞ்சோரும் சோரவேயது சுரமுமாறும் என்பது திண்ணம்.

(சு.) உள்ளபொருளே = பரமார்த்தமா யிருக்குஞ் சின்மாத்திர வஸ்துவே, உள்ளது = சத்தையாற் றேன்றுகின்றது; ஆதலின், இரங்கவேண்டாம் = இராகவா நீ தாபத்திரய மின்மையனுவாய் என்றதாயிற்று, ஊகமுற = அப்பிரமத்த சித்தனுய், வருவன = இஷ்டசாதனமென்னுமியோகமும், போவன = அநிஷ்ட நிவாரணமென்னும் க்ஷேமமும், நினையேல் =

இன்மையனாய்; தொந்தனைகள் ஒன்றுமில்லா = சீதோஷ்ணாதி சிதைவுற்ற, மானசசத்து வகுணத்தோடு = நித்தியசத்துவகுணத்தோடு, ஒருவனாய் = பேதபாவனை யற்றவனாய், இட்டெல்லாம் மாற்றிநிற்பாய் = விநஷ்ட அநுசோசன சிற்சுகனாவாய். (3)

(ஸ்ரீ - வீர - அ - கை) மேலுமதனையே வற்புறுத்தல்:—சமமென்பது.

சமமாகிச் சொரூபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்தனாகி
யமர் மனனமவுனியாய் நன்மணிபோற் றெளிந்து துயரனைத்துந்தீர்வாய்
நிமலமுற நிகழ்காலத் தொழிற்செய்தி யாவையினு நேயமின்றி
நமதெனக் கொள்ளுதல் விடுதலிரண்டு மறத்துன்பமெலாநாசஞ்செய்வாய்.

(ப - ரை.) சமமாகி = சமதிருஷ்டி யுடையவனாய், சொரூபத்தே நிலையாகி=சுவஸ் தனாய், திரமதியாய் = திடப்பிரஞ்ஞை யுடையவனாய், சாந்தனாகி = பரமசாந்தியை யுடையவனாய், அமர்மனனமவுனியாய் = மனனத்தோடு கூடிய மௌனமுடைய முனிவ னாய், நன்மணிபோற்றெளிந்து = உத்தமரத்தனம்போற் சொச்சனாய், துயரனைத்துந் தீர் வாய் = சகல அநர்த்தங்களும் அற்றவனாவாய், நிமலமுற = நின்மலனாயிருந்து கொண்டு, நிகழ்காலத் தொழிற்செய்தி = வர்த்தமான காலத்தில் வந்தகாரியத்தைப் பற்றறச்செய் வாய், யாவையினும் நேயமின்றி = எப்பொருள்களினுமே சிறிதும் நசையில்லாமல், நம தெனக்கொள்ளுதல் = எமதென்று கோடலும், விடுதல் = அல்லவென்று வீடலும். ஆகிய, இரண்டும் = இருவகையத்தியாசமும், அற = இல்லாமற்செய்து, துன்பமெலாம் நாசம் செய்வாய் = சகலதுக்கங்களையும் அடியோடு கெடுப்பாய்.

(ஸ்ரீ - வீர.) சமமாய், சுவஸ்தமாய், ஸ்திரமதியாய், சோகமியாவுஞ் சாந்தமனத்தனாய், முனிவனாய், மவுனியாய், வரமணியெனச் சொச்சனாய், எல்லாத்தாபமும் அற்றவனாதி. கிடைத்ததைக் கொண்டு மகிழ்ந்தநுபவிப்பவனாய், எதனிடத்திலும் எள்ளளவும் இச்சை யில்லாதவனாய், விடுத்தல் மடுத்தல் விடுத்தவனாய், வெந்துயர் எவற்றையும் விட்டுநீயொழிப் பாய், காமாதிகள் யாவும் மநோதருமங்கள் ஆகலின் ஆன்மாவிற் குண்மையி லின்மையின் எளிதில் விட்டொழிப்பாய்; பரமாநந்தஸ்வரூப ஆன்மாவின் கண்ணே பரமபுருஷார்த்தப் பிராப்தியால் திருப்தியை அடைந்து வாழ்வாய். “ இவன் மனத்துள்ள காமாதியாவும் எஞ் சுதலின்றிப் பஞ்சுபோற் பறக்கும், அந்தப்போதில் இந்தச்சீவன் அமிருதமாந் தன்மையை யடைந்து வாழ்வன், கசத்ததேகத்தி லிருந்துளா னெனினும் கடற்சுகப் பிரமமாய்க்களித்து வாழ்வன் ” எனமறையும் அறையும்.

(ச.) சாந்தனாகி = பிரவிர்த்தி மார்க்கத்தினின்றுந் திரும்பினவனாய், அமர்மனன = உபசாந்த சித்தமனன நிஷ்டையுள்ளவனாய், நன்மணிபோல் = ஆகாரஜ (இரத்தினம் விளையு மிடத்துள்ள) மணிபோல், தெளிந்து = நிர்மலனாய், நிகழ்காலத் தொழிற்செய்து = கிடைத்த பிரார்த்த பலத்தினது அநுபவத்தினால், யாவையினும் = அப்பிராப்தமான அனைத்தினும், நேயமின்றி = வாஞ்சையின்றி, அவ்வேதுவினால், நம + செய்வாய். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முன்னர் உத்தரோத்தரம் உற்கிருஷ்டமாய மநுடஜன்மங்களையே புசித்து, இச்சன்மத்தின் கண்ணேயாவர் முத்தியடைவரோ அவர் இராஜசசாத்விகராய முடிந்த பிறப்பினர் என்றும் அவர்க்குச் சாந்தியாதி குணங்கள் எல்லாம் தாமேவளர்ந்தோங் கும் அவதரித்த அவர்பருவத்துறுஞ் சந்திரன்போல விருத்தியை யடைந்துகொண்டேபோ வர், மல்லிகை மழைகாலத்தில் புஷ்ப ஸ்ரீயையடைவதேபோல அவரைச் சாதனசதுஷ்டய மாகிய சௌபாக்கியம் தாமேவந்தடையும் என்றும் அவரைச் சிலாகித்தல்:—இனி யென்பது.

இனிப்பிறவா முடிவானபிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம்
பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலல்லாற் படுவதுண்டோ
செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திரராய்த் தெளிந்தோராகி
யனித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமெல்லா மவரைச்சேரும்.

(ப - ரை.) இனிப்பிறவா முடிவான பிறப்பிலே = இனிமேல் ஜன்மமெடாத வகையான தன்மையுற்ற அந்தியஜன்மத்திலே, மெய்ஞ்ஞானம் எளிதில் உண்டாம் = விமல மாயதத்துவ வித்தையானது அதிசுலபமாகலபிக்கும், பனிச்சுடர் வெண்ணித்திலங்கள் = குளிர்ச்சியும் ஒளியும் மிகுந்தவெள்ளிய முத்துக்கள், உத்தமமாம் மூங்கில் அல்லாற்படுவதுண்டோ = மேலாயவேணுவி லல்லாமல் உண்டாவ துண்டுகொல்! செனித்தவரில் = பிறந்தவருள், மேலோராய் = உயர்ந்தவராய், நல்லோராய் = மநோரம்மியராய், மித்திரராய் = மைத்திரியுடையவராய், தெளிந்தோராகி = சௌமியராகி, அனித்தமறு முத்தராய் = நித்தியசொரூப சுகமுற்றுச்சர்வ அநர்த்தங்களும் நீங்கினவராய், ஞானிகளாம் = உணர்வுடையவர்கள் ஆவர்கள், குணமெல்லாம் = கருணைமுதலிய குணங்கள்யாவும் அவரைச்சேரும் = அந்திய ஜன்மமுடைய அவரை யடையாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) ஹே மகாமதியையுடைய மைந்த! யாவனுக்கிந்த ஜன்மம்முடிவாக உற்றதோ அவனையதி விரைவிலேயே, உத்தமவேணுவின் கண்ணேமுத்துக்கள் போல, பிரஹ்மவித்தைக் குபாயங்களாய சர்வவிமல வித்தைகளும் அடைகின்றனவாம், வேணு விசேடத்திற்கும் முத்துண்டாதற் கிடனுதல் வெளியாம். அம்மகானை, ஆரியத்தன்மை, ஹ்ருத்யத்தன்மை. மைத்திரி, சௌமியத்தன்மை, கருணை, ஞதை = பரோக்ஷப் பிராயம் ஞானம், என்பவைநித்தியம், அந்தப்புரத்தையங்கனைகள் அடைவதேபோல நன்கடையாநிற்கும். அவன் சர்வகாரியங்களையும் செய்தபோதினும் அதன்பயன் புஷ்டமாயினும் நஷ்டமாயினும் அவ்வியாவற்றிலும் சமதிருஷ்டி யுடையவனுய்ச் சர்வமும் சங்கற்பமயமென்றுதல் சர்வமும்தன்மயமாகிய சின்மயமென்றுதல் ஒப்புற்று மகிழ்ச்சியையாதல் வாட்டத்தையாதல் அடையான்.

(ச.) முடிவான பிறப்பிலே = அந்தியஜநநத்தில், இனிப்பிறவா = மேற்சன்மாந்தரமின்மையின், மெய்ஞ்ஞானம் = ஞானவேதுக்கள், மேலோராய் = சதாசாரபரம்பரராய், நல்லோராய் = சர்வசம்மத முடையோராய், மித்திரராய் = சர்வபூத தயவுடையாராய், தெளிந்தோராகி = மனச்சீதள முடையாராய், முத்தராய்=நிர்ச்சங்கராய், ஞானிகளாம்= ஞானநிஷ்டராம், அவரை சதாசார பரத்துவமுதலிய குணமெல்லாம், அந்தப் புரத்தையங்கனைகள்போல், சேரும் அநுசரிக்கும். பாச்சாத்யம் = சரமம். (5)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மகான்களினது சரிதையைப் புகழ்ந்து இருவழிகளை யஷ்டதைவான் உபதேசிக்கத் தொடங்கல்:—மெத்தென்பது.

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்புந்தன்மை
கொத்தொன்று வனமூங்கிற் குழலிசையான் மகிழ்விலங்கின் கூட்டம்போலு
மித்தன்மை யாவருக்கும் பொதுமையினு லியம்பியதா மிதனில்வேறுய்ச்
சத்தென்ற வழியிரண்டேழ் பவந்தீர்ப்ப வர்க்கவற்றைச் சாற்றக்கேண்மோ

(ப - ரை.) மெத்தென்ற சரித்திரத்தினவர்தம்மை = கோமள ஆசாரமாதுரியமுள்ள அம்மகான்களை, உலகெலாம் விரும்புந்தன்மை = சர்வஜனங்களும் வாஞ்சிக்குந்தகைமை, கொத்தொன்று வனமூங்கிற்குழல் இசையால் = கொத்திற்பொருந்திய வனமூங்கிலின்

புல்லாங்குழலால் உண்டாய மாதுரியகனத்தால், மகிழ்விலங்கின் கூட்டம்போலும் = சந்தோஷத்தையடையும் வனமிருக சமுதாயம் போலும் ஆம்; இத்தன்மை = இம்மார்க்கம், யாவருக்கும் = சர்வதேகிகட்கும், பொதுமையினால் = சாமானியமாக, இயம்பியதாம்= உபதேசித்ததாம், இதனில்வேறாய் = இதனினும் அன்னியமாய், ஏழ்பவந்தீர்ப்பவர்க்கு = ஏழுவகைத் தோற்றமுமாற்றி மோக்ஷமடைபவர்க்கு, சத்தென்ற வழியிரண்டு = உத்தமமான இருகிரமங்கள் உள்ளன, அவற்றை = அவ்விரண்டையும், சாற்றக்கேண்மோ = கூறக்கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) பகலில் இருள்கள் ஒழிந்தேகலேபோலச் சுகதுக்காதி துவந்துவங்கள் ஒழிந்து, சாற்காலத்தில் மேகங்கள் தூய்மையுறுதல் போல முன்னர் மலிமாயினும் திருதி சிரத்தைலஜ்ஜை முதலியகுணங்கள் தூய்மையை யடைந்து தெளிந்து, வழங்கும் அவாது மிருதுவாசார மதுரத்தைச் சர்வஜனங்களும் வாஞ்சிப்பார்கள், மாருதபூர்ண ரந்திரத்தன் மையானே மதுரத்தொனி தொனிக்குங் கீசகத்தை வனத்தில் வனமிருகங்கள் போலும். அந்திய ஜன்மத்தையுடைய அதிகாரியைக் கூறியவாயகுண ஸ்ரீகள் பாலியமுதலாகவே மேகத்தைக்கொக்குகள் தொடர்வதேபோலத் தொடராநிற்கும். ஈண்டுத்தன் விசாரத்தானே சிறிது விற்பன்னமான சித்தத்திற்கு ஆகாசபலம் வீழ்தலேபோல ஞானநல்லடைவைவர்ணிக்க உத்தேசித்துக்கொண்டு, நுதலிய சாமானியக் கிரமத்தை யநுவதித்து ஒவ்வொருபாக்கியவானுக்கு அஃதின்றியே தெய்வத்திருவருளானே கிடைக்கப்பெற்ற தனது விசாரமாத்திரத்தினாலேயே அதிவிரைவிற் சர்வகுண சம்பத்சகித ஞானோதயவடிவ விசேடத்தைக்காட்டல்:—இத்தன்மை யென்பதாதி, ஆண்டு இக்கிரமம் சாமானியமாகச் சர்வதேகிகட்கும் உரையாடப் பெற்றது, ஹேதாமரைக்கண்மஞ்சே! இவ்வன்னிய விசேடத்தை நீகேட்பாயாக; இச்சம்சார ஆடம்பரத்தில் உண்டாகியிருக்கும் தேகதாரிகட்கு மோக்ஷபலந் தருவனவாய இவ்விரண்டு கூறியகூறும் உத்தமக்கிரமங்கள் உள்ளனவாம்,

(ச.) சரித்திரத்தி னவர்தம்மை = சதாசாரமதுரரான சகலரையும், உலகமெலாம் = ஜனங்களனைத்தும், விரும்பும் = வாஞ்சிக்கும், இசையால் = மதுரத்தொனியால், இத்தன்மை = முற்கூறிய இம்முத்திக்கிரமம், யாவருக்கும் = சகலஜந்துக்களுக்கும், பொதுமையாய் = சாதாரணமாய், இயம்பியதாம், இராஜீவலோசனனான ஸ்ரீ இராமா! இதனில்= இப்பொதுமையிலும், வேறாய் = அந்நியமாய், விசேடமான, ஏழ்பவந்தீர்ப்பவர்க்கு = இச் சம்சாரப் பிரமையிற் சனித்த தேகதாரிகளாய் அதுதீர முயல்பவர்க்கு, சத்தென்றவழி = மோக்ஷங்கொடுக்குஞ் சாமர்த்தியமுள்ள உத்தமக்கிரமங்கள், இரண்டுண்டு, அவற்றைச் சாற்றக்கேண்மோ. (6)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்விரண்டு மின்னதெனவுரைத்தல்:—தேசிகன் என்பது,

தேசிகன்சொற் பிழையாம லனுட்டிக்கிற் பையப்பையத் தியக்கநீங்கிப்
பேசியசன் மத்தாத லடுத்தசில பிறப்பினு லாதல்பேறும்
மாசறுவிற் பத்திசிறி துண்டாகு மனத்தாற்றன் மனனத்தாலே
யேசறுமா காசபலம் வீழ்வது போன் மெய்ஞ்ஞான மெளிதினுண்டாம்.

(ப - ரை.) தேசிகன் சொல்பிழையாமல் = தனது ஞானசிரியர் உபதேசித்தருளிய நெறிதவறாமல், அநுட்டிக்கில் = ஞானநிஷ்டை புரிந்துவரில், பையபைய = மெதுவு மெதுவாக, தியக்கநீங்கி = மயக்கமகன்று, பேசிய சன்மத்தாதல் = உபதேசம்பெற்ற சன்மத்திலேனும், அடுத்த சிலபிறப்பினிலாதல் = மறுபிறப்புக்களிலேனும், பேறும் = முயற்சிக்குத்தக்கபடிபயனும், மாசறு = குற்றமற்ற, விற்பத்திசிறிது = சிரவணஞ்சொற்பம்,

உண்டாகும் மனத்தால் = கிடைக்குஞ் சித்தத்தால், தன்மனனத்தாலே = தனது சயுக்திக விசாரணையினாலே, எசறு = களங்கமற, ஆகாசபலம் = ககனக்கனி, வீழ்வதுபோல் = பதனமாவதுபோல, மெய்ஞ்ஞானம் = உண்மையுணர்வு, எளிதிலுண்டாம் = சுலபமாக உதயமாம்.

(ஸ்ரீ - வீர.) அவ்விரண்டனுள் ஒன்று இதுவாம்:—ஞானகுரு உபதேசித்தருளிய அனுஷ்டானத்தானே சிறிது சிறிதாகச் சித்தந்தெளிந்து, ஒருஜன்மத்திலேனும் அல்லது வெகுஜன்மங்களிலேனும், மோக்ஷத்தை யடையலா மென்று முன்னே சொன்னேம் என்பதாம். இரண்டாவதோ;—சிறிது விற்பன்ன சித்தத்தானே, தெய்வத் திருவருளாலுண்டாய ஜீவஜகத்தத்வ விசாரவானாகிய தன்னானே, ஆகாசபல வீழ்ச்சியொப்ப, ஞான அடைவை விரைவிற்பெறுவன் என்பதாம்.

(ச.) பேறும் = சித்தியைத் தருவதொன்று இப்போது கூறப்பெற்றது. (7)

(ஸ்ரீ - வீர - அ-கை.) இரண்டாவது கிரமத்தில் ஜநக ஆக்கியாயிகையை உதாகரிக்கும் பொருட்டுப் பூமிகைபோடல்:—இவ்விரண்டி லென்பது.

இவ்விரண்டி லாகாச பலம்போல மெய்ஞ்ஞான மியைந்ததன்மை
செவ்வியவள் ளான்முன்னோர் கதையாலே யான்செப்பத் திருந்தக்கேட்பாய்
தெவ்வுலகி லாபத்தென் றொன்றுமிலோன் விதரணத்தோன் செல்வமிக்கோன்
அவ்வியமில் விதேகநா டரசாள்வோன் சனகனெனு மரசர்கோமான்.

(ப - ரை.) இவ்விரண்டில் = உரைத்த இருநெறிகளுள், ஆகாசபலம்போல = ககனக்கனிவீழ்ச்சிபோல, மெய்ஞ்ஞானம் = உண்மையுணர்வு, இயைந்ததன்மை=உற்றபான்மை, செவ்வியவள்ளால் = சிறந்ததலைவள்ளலே ! முன்னோர் கதையாலே= பிராக்தன ஒருவிருத்தாந்தத்தானே, யான்செப்ப = யாமுபதேசிக்க, திருந்தக்கேட்பாய் = ஒருமையுடன் சிரவணஞ்செய்வாய், உலகில் = ஜகத்தின் கண்ணே, தெவ்வாபத்தென்று ஒன்றுமிலோன் = பகை ஆபத்து என்று சொல்லப்பட்ட இடர்கள் எதுவும் ஒருபோது மில்லாதவன், விதரணத்தோன் = உதாரமதியை யுடையவன், செல்வமிக்கோன் = சம்பத்ததிக முடையவன், அவ்வியமில் விதேகநாடு = எவ்வளப்பமுங் குன்றாத விதேகநாட்டை, அரசாள்வோன் = பரிபாலனம் புரிபவன், சனகனெனும் அரசர்கோமன்=ஜனகராஜாவென்னும் நாமதேயத்தையுடைய இராஜாதிராஜன்; ஒருவனிருந்தான்.

(ஸ்ரீ - வீர.) ஆகாசபல வீழ்ச்சிக்கொப்பாக ஞானம் நன்கடைந்ததன் பொருட்டு உதாரணமாக உனக்குயாம் முன்னடந்த இவ்விருத்தாந்த மொன்றை யுபதேசிக்கக் கேட்பாயாக, சர்வ ஆபத்துக்களும் இல்லாதவனாய், பெருஞ்சம்பத்தோடு கூடியவனாய், உதாரமதியுடையவனாய், வீரியவானாய், ஜனகன் என்னும் பெயர் வாய்ந்தவனாய், விதேகநாட்டார்தம் மகீபாலனாய், ஒரு இராஜ இராஜேசுவர னிருந்தான்,

(ச.) கேளாய், ஸ்ரீ வசிட்டர், விதரணத்தோன் = உதார புத்தியுள்ளவன், அரசர்கோமானுண்டு. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வரசனது கல்யாணகுணங்களையே புகழ்ந்து நடந்ததை யுரைக்கத் தொடங்கல்:—சற்குணமென்பது,

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்குநீரா
னற்குணஞ்செய் வசந்தனா ணறு மலர்சூழ் நந்தனத்தி னயந்துமேவி
தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனாய்ச் சரிக்கும்வேலை
சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியிற்கேட்டான்.

(ப - ரை:) சற்குணத்தாற் கடலனையான் = நல்லகல்யாண குணங்களால் நிறைகடலுக்கொப்பானவன், சக்கரத்தான் என = ஸ்ரீ மகாவிஷ்ணுவேபோல, உலகந்தாங்கும் நீரான் = ஜகத்தை சம்ரக்ஷணைசெய்து பரிக்கும்பான்மையன், நற்குணஞ்செய் வசந்த நாள் = நல்ல ஆநந்தத்தைப் பயக்கும் வசந்தகாலத்தில், நறுமலர்சூழ் = வாசனைவீசும் புஷ்பங்கணிறைந்த, நந்தனத்தில் = உத்யானவனத்தில், நயந்துமேவி = உற்சாகத்துடன் உலாவ உற்று, தற்குரிய = தனக்குரித்தாகச் சேவைசெய்யும், தந்திரர்கள் = அநுசாரர்கள், புறநிற்ப = தூரத்தேயிருப்ப, தனியனாய் = ஏகாங்கியாய், சரிக்கும்வேலை = குஞ்சங்களில் உலாவும்போது, சிற்குரியமனமுடைய சித்தர்கணம் = சிதாகார நிஷ்டைவாய்ந்த சித்தமுற்ற ஞானசித்தரின் கூட்டம், பாடுவபண் செவியிற்கேட்டான் = கீதஞ்செய்த கீதையைச் சிரவணஞ்செய்தான்.

(ஸ்ரீ - வீர.) யாசகஜன சங்கங்கட்குக் கற்பவிருக்ஷமாகவும், மித்திரத் தாமரைகட்குத் திவாகரனுகியும், பந்துவடிவ புஷ்பங்கட்கு வசந்தமாகவும், மடந்தையர்கட்குமகரகேதனனுகவும், மறையவராம் பலமலர்த்து மதியாகியும், துவேஷியரிருளைத் தொலைக்கும் பாஸ்கரனுகவும், சௌஜன்யரத்ந ஜலதியாகவும், பூமியைப் பரிபாலிக்கும் பொருட்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவே யெழுந்தருளியது போலவும் வீற்றிருந் தரசுபுரிந்தான். பிரபுல்லபாலலதைகள்விளையாடிக் கொண்டிருப்ப, மஞ்சரீபுஞ்ச பிஞ்சரங்கொண்டு, மத்தரைப்போல விஜிரும்ப மாணவதனுனே கோகில ஆலாபங்களானே கூத்தாடுவது போற்பொலியும் வசந்தகாலத்தில் ஒருபோது, எங்கும் புஷ்பித்தோங்கி நறுமணந்தாங்கி, சுவிலாசலதைகளேயாய அங்கனைகளானும், லதைகளேபோன்ற அங்கனைகளானும், அலங்கரிக்கப் பெற்று, மகத் காந்தியுடனிலங்கும் உத்தியானவனத்திற்கு, வாசவன் நந்தனவனத்திற்குச் சென்றதேபோலும் லீலையாகச் சென்றனன். கேசரங்களில் ரஜசௌகந்திய மகரந்தகண அபகரண சமர்த்தமாய்த் தூளிகளைக் கிளப்பலின்றிய மந்தசுரபி சீதவாதம்வீச, மநோகரமான, அவ்வாவனத்தில், சேவகர்கள் சேய்மையிலிருப்ப, கிரீடாசைலப் பிரதேசங்களில் விளைந்து வளர்ந்திருக்கும் கொடிவீடுகளில் உலாவிக்கொண் டிருந்தனன். இருக்குங்கால் ஒருதமாலவன குல்மகத்தில், நித்தியம் சைலகந்தர சாரிகளாய் விவிக்தவாசிகளாய், கட்புலனுக்கு அப்பிரதிருசியர்களாய் மறைந்து நின்ற சித்தர்களின், தமதநுக்கிரகப் பொருட்டு உதாகரித்தனவாய், சுருதிஸ்மிருதிபுராண இதிகாசங்களானே கீதஞ்செய்யப்பெற்ற ஆத்மாவைச் சிரவண மாத்திரத்தானே பாவித்தலாற் சுயமாகவே சாக்ஷாத்தா மாறுசெய்வனவாய்; இலங்கிய இயம்பப்பெறும் ஸ்மார்த்த உபநிஷதங்களை, ஹே கமலபத்ராக்ஷ ! அவ்வரசன் கேட்டான்.

(ச.) அர்த்தத்தை யிச்சிப்பவர்க்குக் கற்பகவிருக்ஷம்போற் கொடுப்பவனும், மித்திரரென்னுங் கமலங்களுக்குத் திவாகரனும், சுஜனபாவரத்தின சலதியும் ஆனவனென்னும் விசேடணங்களை சற்குணத்தாற் கடலனையான், என்பதில் அடக்கிக்கூறினர். சக்கரத்தானென = விஷ்ணுபோல, உலகம் = பூமியை, தாங்குநீரான், அவன் வாசவன்போல் நயந்துமேவி, சிற்குரிய மனமுடைய சித்தர்கணம்=விரக்தமனதுள்ள சித்தர்கள், பாடுறுபண் = தமது பிரசங்கத்தாற் சொல்லப்பட்ட கீதைகளை, செவியிற் கேட்டான், மத்தகோகில உல்லாச சாலினியாய வதுவில் = வசந்தத்தில், வாசவன் = இந்திரன். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சித்தர் கீதையை மன்னவன் கேட்டபடி கூறிக் கீதையையுபதேசிக்கத் தொடங்கல்:—வெறியென்பது.

வெறியாரும் பொருப்புறை வோர்விழிப் புலத்தின் மேவாதோர் விளம்புகீத
நெறியார்மன்னவன் கேட்டபடியுரைப்ப நெடியவனே நினைவிற்கொள்வா
யறிவானுமறிபொருளுங் கூடியகூட்டரவி லெழுமறிவா நந்தம்
பிறியாதவான் மதத்துவத் தெழுந்ததா மதனைப்பேணல் செய்வாம்.

(ப - ரை.) வெறியாரும் பொருப்புறைவோர் = மணங்கமழ் சோலைகள் சூழ்ந்தசைல சஞ்சாரிகள், விழிப்புலத்தின் மேவாதோர் = கட்புலனுக் கெட்டாமற் காந்துறையும் சித்தர்கள், விளம்புகீதம் = தாமே தம் பொருட்டுரைத்த கீதங்களை, நெறியார் மன்னவன் = அகஸ்மாத்தா யங்குற்ற நிட்காமகரும அநுட்டானம் முற்றுப்பெற்ற உத்தமோத்தம அதிகாரியாய அரசன், கேட்டபடி = சிரவணித்த பிரகாரம், உரைப்ப = யாங்கூற, நெடியவனே = நீண்டபுகழுடைய நெடுமாலே! நினைவிற்கொள்வாய் = கருத்திற் கொண்டிருத்துவாய். அறிவானும் = திருஷ்டாவும், அறிபொருளும் = திருசியமும், கூடியகூட்டரவில் = நற்சேர்க்கையில், எழும் = கிளம்பும், அறிவாநந்தம்=பிரத்தியய ஆநந்த நிச்சயம், பிறியாத ஆன்மதத்துவத் தெழுந்ததாம் = அபேதமாய தனது ஆன்மதத்துவத்தினின்றும் உண்டாயதாம், அதனை = அசையாத அப்பொருளை, பேணல் செய்வாம் = விகற்பமின்றி நன்குபாசிப்பாம்,

(ஸ்ரீ -வீர.) விழிமுதலிய வற்றின் வாயிலாக விடயப்பிரமாதாவிற்கு மாலை சந்தன வனிதாதி விடயத்தோடுண்டாம் நற்சம்பந்தத்தா லுளதாய விடயாகாரப் புத்திவிருத்தியின் கண் தானே வெளியாம் எவ்வாநந்தரூப நிச்சயமுளதோ, அவ்வியற்கையாயே ஆத்மதத்வ பரிசோதனத்தால், நிரதிசயபூமா சொரூபமாக ஆவிர்ப்பூதமான தன்னுண்மாவை, நிர்விகற்ப சமாதியினனே பாகிய அந்தக்கரண அசைவையகற்றி நிரந்தரம் அநுபவிப்பேம். கருத்திதுவாம்:—விடயாகார விருத்தியிற் சுயம் வெளியாம் ஆநந்தம் விடயகோடியில் இலது, ஜடத்தன்மைவழக்காதலின், கர்த்துருகரண விருத்திகோடியிலும் இலதாம், அவற்றிற்குக்காரகத் தன்மையானே அதன்சேஷதை யநுபவவிரோத மாதலின், முடிபாகச் சாக்ஷிகோடியிலே யுளதாம்: சாக்ஷியேதான் அவித்யா வரணத்தான் மந்தமாக்கப்பெற்ற சிதாநந்த வியற்கையதாய், அயலாய அகங்காரான்மாவைக்கற்பித்து அதன் சேஷதையையடைந்ததுபோலவாகி விடயாகார விருத்தியாவிர்ப்பூதமாய தன்னுனந்தத்தை அதன்சேஷதையைப்போலவாக்கி நிரதிசயாநந்த மாகிய தன்னுண்மாவை யறிவதின்றுமாகலின், தமது தத்துவ விசாரத்தாலுண்டாய நிரதிசயாநந்த இயற்கைத்தாய அதனையே ஒருமையோடு கூடியமனத்தானே யாமுபாசிப்பாம் "இவ்வானந்தத்தின் இலேசமா மிதனையே அவ்வயலுயிர்க ளநுபவித்துழலும்," என்னுஞ் சுருதியானே பிரஹ்மாநந்தத்திற்கே அவித்தையால் விடயாகாரவிருத்தி பரிச்சேதத்தால் விடயாநந்தத்தன்மை விபாவனஞ் செய்யப்பட் டிருத்தலின். அல்லது காண்போனுக்கும் காணப்பெற்ற வியதாதிகட்கும் பாகிய அத்யாத்மிகவைஷம்மியப்பிரவிலாபனத்தானே, பரிசிஷ்டசன்மாத்திர சுவாபாவத்தில் ஆத்யந்திக அபேத ஆபத்திவடிவமாய ஆயோகத்தானுதல், மேலனுருட யோகத்தானுதல் அதாவது நிர்விகற்ப சமாதிபரிபாகத்தானுதல், தனதனுபவத்தானே விசுவசிக்கத்தக்க பூமாநந்த நிச்சயம்யாதோ, அந்த யதார்த்தரூபமாக எழுந்து பிரகடீபூதமாய தனது அசைவற்றதன்மையை நன்குபாசிப்பாம். அல்லது, புத்தியினதாம் விடயங்களினதாஉம் உபசய அபசய ஜாட்யபிரிய அப்பிரியாதிரூப சாமியத்தால் சம ஆயோக சம்பந்தத்தானே அவ்விரண்டன் அந்தராளிக அவ்விரண்டன் விலக்ஷணத்தன்மையால் பிரத்தியயமே ஆநந்த மென நிச்சிக்கப் பெறுகின்றது பெற்றவானந்த நிச்சயமி யாதொன்றுளதோ, சக்கிரியவிருத்தி யுபாதி நிர்முத்த மென்பதனுனே தன்னது யதார்த்தரூபமாக ஆவிர்ப்பவித்த வச்சிதானந் தைகரசப் பிரத்தி

யக்காத்மாவை யினிது பாசிப்பாம். அல்லது, எவ்வான்மா, யான் என்னுந் திருஷ்டா இது எனதென்னுந் திருசியங்களோடும் அன்னியோன்னிய தாதாத்மிய சம்சர்க்க அத்தியாச வடிவச்சமா யோகத்தானே, சனகசுகராதிகளானும் அநுபவிக்கப்பெறுகின்ற விடயாநந்தத்தையே புருடார்த்த மென்பதாகத் துணிந்து, சம்சாரமுறுகின்றதோ, தனது வேதாந்தஜன்னிய அகண்டாகார விருத்தியினனே தனது பாரமார்த்திகரூபத்தை ஆவிர்ப்பூதஞ்செய்து, அதனையே நிச்சலமாக நனியுபாசிப்பாம், அல்லது, எச்சொப்பிரகாச ஆனந்தைகரச சொரூப நிச்சயமானது, திருஷ்டாதிருசியாகார மாயாசகிதமாகிச் சொரூப நழுவுதலை யடைந்துளதோ, அவ்வாநந்த நிச்சயத்தை சரமசாக்ஷாத்கார விருத்தியாரூட சுவாத்மபூநமேயாய பிரமையினாலே, திருஷ்டா திருசியமாயா நிராசத்தால், தனதுபாரமார்த்திகரூபத்தால் ஆவிர்ப்பவிக்கச்செய்து நிச்சலமாக நிரந்தரமுபாசிப்பேம், அல்லது, எவ்வான்மா " அவ்விதுபிரியம் தனயனிற்பிரியம் தனத்தினிற் பிரியம் அன்னியமெவற்றினுமாமிது பிரியம் " என்பதாதி சுருதியநுபவ சித்தபரமப் பிரேமாஸ்பதத்தன்மைப் பிரத்தியயத்தானே ஆநந்தரூபமாகத் துணியத்தக்கதே யெனினும், விவேகவிசாராதிப் பிரத்தியயமில்லாமையின், போக்தாபோக்கியப் பிராயமான சம்சாரதசையை யடைந்துவிட்டதோ, விவேகவைராக்கிய சிரவண மனனாதிப் பிரயத்நங்களானே சாக்ஷாத் கரிக்கப்பெற்றதாயும், சர்வதிருஷ்டா திருசியதுவைதக் கூட்டத்தையும் தானே பரிச்சின்னப் படுத்துவதும் இம்சிப்பதும் எவ்வான்ம தத்துவமாமோ அதன்பாவத்தானே வெளிப்பெற்றதாயும், மீண்டு ஒருபோதும் சம்சாரப்பிராப்திச் சங்கையற்றதாயும், உள்ள அதனைச் சர்வசாமீப்பிய பரியந்தம் பிரத்தியக் காத்மாவாக அடைவுற்றுச் சுகித்திருப்பேம். யஸ்தம் = யசுப்பிரயத்நத்தில் க்த: உரைத்த உரைகளை மூலசுலோக மநுசரித்துத் தெரிந்துகொள்வதுடன் இனிவருமுரைகளையும் இவ்வாறே தெரிந்துகொள்க.

(ச.) விழிப்புலத்தின் மேவாதோர் = அதிருசியருமாகிய சித்தர், விளம்பும் = சுவாநுசந்தானப் பிரகாரமாய் வசனிக்கப்பட்ட, கீதம் = சொரூபநிரூபணஞ் செய்யப்பட்ட உபநிடதார்த்த சங்கிரகசுலோகங்களை, அவர்களிற் பிரதமசித்தர் வசனித்தல்:—அறிவானு மறிபொருளுங் கூடிய கூட்டரவில் = திருஷ்டாவாகிய புருடனுக்குத் திருஷ்டிப் பிரியமான வஸ்துவோடு சையோகமாகிய வேதுவினால், அறிவு எழும் = புத்தியிற் பிரகாசியாநின்ற, ஆநந்தம் = ஆநந்தமானது, ஆத்மதத்துவத் தெழுந்ததாம், = சீவனுக்குப் பிரஹ்மபாவத்தாலுதித்ததாம், அதனை = அத்தன்மையுள்ள ஆநந்தான்மகமான சுவான்மாவான தேவையே, பேணல் செய்வாம் = நிச்சலமாகப் பாவனைசெய்வாம், வாஞ்சிதார்த்தங் கிடைக்கில் சபலமாதலாற் சித்தம் உபரதியுறில் ஆன்மாவிலுதிக்கும் ஆநந்தம் பிரஹ்மாநந்தமே யென்பது கருத்து. (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வான்மாவையே நன்குதுணிந்து கரதலாமலகம்போலக் காண்பிப்பாரென அன்னியர் கூறல்:—காணென்பது.

காண்பானுங் காண்பனவுங் காட்சியும் வாதனையுடனே கழலவிட்டுச்
சேண்பாவு காட்சிக்கு முதலொளியாமச் சொரூபஞ்சிந்தை செய்வா
மேண்பாலா முள்ளதில தெனுமிரண்டி னிடையெய்தி யிறவிலாதாய்
மாண்பான வொளிக்கெல்லா மொளியாமச் சொரூபத்தை மதித்தல்செய்வாம்.

(ப - ரை.) காண்பானும் காண்பனவும் காட்சியும் = திருஷ்டாவையும் தரிசனத்தையும் திருசியத்தையும், வாதனையுடனே = வாசனையோடு கூடவே, கழலவிட்டு = தியா

சித்து, சேண்பாவு காட்சிக்கு முதலொளியாம் = ஆகாயத்தையளாவும் தரிசனத்துக்குப் பிரதமாபாசமான, அச்சொரூபம் = அவ்வான்மாவை, சிந்தைசெய்வாம் = செவ்விதி னுபாசிப்பாம்; ஏண்பாலாம் = நிலையுடையதாகிய, உள்ளதிலதெனு மிரண்டின் = அஸ்தி நாஸ்தியென்னும் இருபக்ஷங்களின், இடையெய்தி = மத்யகதமாய், இறவிலாதாய் = நித் தியமாய், மாண்பான = மாக்ஷிமைவாய்ந்த, ஒளிக்கெல்லாம் ஒளியாம் = பிரகாசியங்கட் கும் பிரகாசனமாய, அச்சொரூபத்தை = அவ்வான்மவடிவத்தை, மதித்தல் செய்வாம் = புத்தியின்கட் டியானம் புரிவாம்.

(ஸ்ரீ - வீர.) அன்னியர் கூறல்:—திருஷ்டா தரிசன திருசியங்களை வாசனையோடுகூட விட்டு, தரிசனப் பிரதமாபாசமாகிய ஆன்மாவை யினிதுபாசிப்பாம். திருஷ்டா முதலிய திரிபுடித்தியாகத்தானே அவஸ்தையிரண்டன் நீக்கமாம், வாசனையோடுகூட என்பதனானே அவ்விரண்டன் பீஜவாசனையைத் தாங்கிய சுழுத்திசம்பந்த அஞ்ஞானத்தினதூஉம் நீக்க மாம் என்றதாயிற்று. சாக்ஷாத்ஷமானசாதி தரிசனவிருத்திகளின் முன்னரே அவற்றினுற் பத்தி சாக்ஷியாக விளங்குவது என்றதனானே பூர்வசித்ததிரிபுடி சாக்ஷி, சர்வாநுபவ சித்த மாகப்பகுத்துக் காட்டப்பட்டதாம்; பீஜசகிததிரி புடித்தியாகத்தானே அத்துரிய ஆன்மா வையே யினிதுபாசிப்பாம். தரிசனப் பிரதமாபாச சாக்ஷியில் யாவர் உளது இலது என்று ஐயுறுவரோ அவர் பொருட்டும் அவ்வுபயபக்ஷ அவிருத்தமாய சாக்ஷியைச் காட்டுவராய் மற் றையர் கூறல்:—உள்ளதென்பது. நித்தியமாய் உண்டு இல்லையென்னும் பக்ஷங்கள் இரண் டன் இடையிலிருப்பதாய்ப் பிரகாசியங்கட்கும் பிரகாசனமாயிலங்கும் ஆன்மாவை யினிது பாசிப்பாம். யாவர் ஆண்டு உளது தரிசனப் பிரதமாபாசம், ஆனால் அதுவும், ஜன்னியமே நித்தியமன்றாம் என்பரோ, அவர்கட்கு பூர்வபூர்வ அதனுபாசங்கட்குச் சொப்பிரகாசத்தன் மையிலேனும் சுவவிஷயத் தன்மையிலேனும் சுவமாத்திரபான பரிக்ஷீணத் தன்மையினு னும், பூர்வோத்தர விஞ்ஞான அஸ்பரிசத் தன்மையானும், அதனுற்பத்தியாதி சாக்ஷித் தன்மை நிர்வகிக்க முடியாதென அதன்சாக்ஷி யன்னியமொன்று ஆவசியகமெனத் தற்பக்ஷ மத்யகதமாய் அதனவிருத்தமாம், யாவர்தாம் நாஸ்தியென நாட்டுவரோ, அவர்கட்கு, நாஸ்தித்தன்மைக்கும் சாக்ஷியிலதென்பதாயின் அசித்திவருதலின், தற்பக்ஷசாதகத் தன் மையானே அதன் மத்தியகதமாய் வேண்டற்பாலதேயாம். அல்லது, ஜகத்தின் அஸ்தித் தன்மை ஆவிர்ப்பூத அவஸ்தாகாரியம், நாஸ்தித்தன்மையோ திரோபாவ அவஸ்தாகாரணம், "இஃதுண்டாமுன் அசத்துத்தானிருந்தது அதனினின்றுமே சத்துண்டாயது" என்னுஞ் சுருதியினால், அவ்விரண்டிற்கும் ஒருபோதுளதாந் தன்மையின்மையின், பக்ஷங்களில் பாக்ஷி கங்களில் அநுகதசன்மாத்திர ரூபத்தான் மத்தியகதம், அல்லது, அஸ்திநாஸ்தி யென்னுங் பக்ஷங்களாகிய கற்பிதவிருத்த கோடிகளிரண்டினுக்கும் அதிஷ்டானமாக மத்தியகதம், இதனானே கற்பித நாஸ்தித்வத்திற்கு அதிஷ்டானத்தைத் தீண்டாமை யுண்மையின் நித்தி யம் பிரகாசியங்களாகிய பாவாபாவங்களின் பிரகாசகமாம்.

(ச.) இரண்டாஞ்சித்தர் வாக்கியம்:—காண்பானும் = திருஷ்டாவென்னும் அகங்கார உபகிதான்மாவும், காட்சியும் = தரிசனமென்னும் சக்ஷுமுதலிய வியாபார உபகிதமான விருத்திஞானமும், காண்பனவும் = திருசியமென்னும் அதின் விஷயமுமாகியமூன்றையும், வாசனையுடனே = அவைகளின் வாசனையுடனே, கழலவிட்டு, காக்ஷிக்கு = தரிசனமென் னும் விருத்தி ஞானத்துக்கு, முதலொளியாம் = முன்பொளிருவதான, சேண்பாவுஞ்சொரூ பத்தை = யாவைக்கு முன்பு விளங்குவதுங், சுபாசத்தாலே எவ்விடத்தும் ஒளிசெய்வதும் ஆகிய ஆன்மாவை; சிந்தைசெய்வாம். மூன்றாஞ் சித்திர்வாக்கியம்: — உள்ளதிலதெனும் இரண்டின் = பக்ஷத்துவயங்களுக்கும், இடையெய்தி = மத்தியகதமாய் = சத்துரூபத்

தாலுள்ளதும், நிராகாரமாதலின் இல்லது மென்னின்ற பக்ஷத்துவய சாதாரணமாய். ஒளிக் கெல்லாம் = சூரியசந்திர மின்னலாதிகளின் ஜடப்கா சங்களுக் கெல்லாம், ஒளியாம் = ஒளிசெய்யும் பிரதீதி எதுவான, அச்சொரூபத்தை = அந்த ஆன்மாவை, மதித்தல் செய் வாம். ((11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வேறுசில சித்தர் விளம்பல்:—அகமென்பது.

அகமகமென் றனைத்துயிரி னிடத்து மிருந்தனவரத முரைப்பதாகி
நிகழொளியா யான்மதத்து வமானசொரூபத்தை நினைத்தல் செய்வாந்
திகழிதயகுகை யுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந்தேடல்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கைபோலாம்.

(ப -ரை.) அகமகமென்று=அகம் அகம் என்பதாக, அனைத்துயிரினிடத்து மிருந்து= சசலஜீவர்களி னிடத்தும் இருந்து, அனவரதம் உரைப்பதாகி=எப்போதும் இயம்புவதாகி, நிகழ் ஒளியாய் = விளங்காநின்ற பிரகாசமயமாம், ஆன்மதத்துவமான சொரூபத்தை = ஆன்மதத்துவமான வடிவத்தை, நினைத்தல் செய்வாம் = நன்றாகத்தியானஞ் செய்வாம்; திகழிதய குகையுறையும் = தன்மயமாக விளங்கும் இருதயகுகைத் தேயத்திராநின்ற, தேவதையைவிட்டு = ஆன்மதெய்வத்தை விடுத்து, அயலேதெய்வம் தேடல் = வேறொரு தெய்வத்தை யாராய்தல், மிக அரியகவுத்துவத்தை யெறிந்து = அத்தியந்தம் கிடைத்தற்கு அரிதாய கௌஸ்துப மணியைக் கரத்தினின்றும் எறிந்துவிட்டு, சிறுமணிதேடும் = அற்ப ரத்தினம் கோடும், வேட்கைபோலாம் = ஆசைக்கொப்பாம்.

(ஸ்ரீ - வீர.) அன்னியசித்தர் கூறல்:—ஏழாம் வேற்றுமை தொடங்கி மாறுமுறையாய் எல்லாவிபக்திகளும், ஆறுகாரகங்களையும் சம்பந்தப் பிராதிபதிகார்த்த அபேதத்தையும் காட் டற்பொருட்டு ஈண்டுக்குறிப்பிக்கப் பெறுகின்றன; "எதனில் யாவும் எதனதுயாவும் எத னின்யாவும் எதுதனக்கிது, எதனுல் யாவும் எதுதானியாவும் அதுசத்தியநன் காற்றுது முபாசனை," எப்பிரஹ்மம், சர்வாதாரத் தன்மையானும் சர்வசுவாமித் வாதியினுனும் சர் வோபாதான நிமித்தாவதி பாவத்தானும் சர்வபாரார்த்திய சம்பிரதானுதி பாவநிர்வாகத் தன்மையானும் சர்வகர்த்துரு கரணுதிபாவத்தானும், மாயையாற் சர்வஜகத் விவகாரநிர்வக கமும், சர்வாத்மகமும் ஆமோ, அது சர்வாதிஷ்டானம் பரமார்த்தசத்தியம் பிரத்தியக்காத் மாவே யென்னும் போதத்தானே நன்கடைவுற்று அவ்வடிவமாக அமர்வுற்று வாழ்வேம். அன்னிய சித்தர்கூறல்:—அசிரம்போலப் பிரதமம் எதற்கோ அது அகார ஆதியது, ஹகாரம் அந்தத்தில் எதற்கோ அதுஹகார அந்தத்தது; அகம்பதம்: அசேஷவஸ்துப் பிரகாசகவேத சாஸ்திராதி சப்தஜாலப் பிரகிருதி பூதங்களாய அசேஷவர்ணங்கட்கும், அக்ஷரசமாம் நாய மாசேசுவர சூத்திரத்தில், அகாரஹகார அந்தரால நிவேசத்தால், அசேஷஜகத்தாகாரசப் பிரபஞ்சப் பிரஹ்மத்திலும், கெடுக்கப்படாதது விடுக்கப்படாதது என்னும் விற்பத்தியினு னும், அஹவியாப்தியில் என்னும் பகுதி நிட்பத்தியினுனும், சேடிப்பதில்லை யாகாரம் எதன் கண் என்னும் அசேஷாகார நிர்க்குணத்திலும், நன்கு நிலைபெத்றதாம் = தாற்பரிய நிட் டையை யடைந்துளதாம்; நிரந்தரம் நிகழ்த்தப்பெற்ற தன் விவகாரகங்களில் உச்சரிக்கப் பெறுவதாம்; அகங்கார உபாதி நிராசமாக வர்ணிக்கப்பெற்ற அவ்வகம் பதார்த்தத்தை = "சென்றேயிவையெலாஞ் செறியாமுன்ன, மொன்றே யாத்துமா வுள்ளதேயாகும்" என்ப தாதி சுருதிப்பிரசித்த பிரஹ்மாத்மாவை, நிரந்தரம் பாவிப்பேம், அல்லது, அசேஷவஸ்து ஆகாரசம்ஸ்திதமாய லம்வம்ரம்யம்ஹம் எனஹகாராந்தம் பஞ்சபீஜப் பிரதிபாத்ய பஞ்ச

மகாபூத மூலாஞ்ஞானரகிதம் செய்வான்போலுளதாம் மாயாந்தம் ஜகத்து, என்னும் விற்பத்தியானே, அஸ்மத்சப்த நிட்பந்நமாய அகார சிரஸ்கஹகாராக்தம் அகம்பதம் நிரந்தரம் உச்சரித்துக் கொண்டிருக்கும் ஆன்மாவைத் தொழுவாம் யுஷ்யசிப்யாம் மதிக்கென்னும் உணுதியானே அஸ் என்பதற்கு அஸ்மத்சப்த விற்பாதனத்தா னெனவறிக. அல்லது, அசேஷஜகத்தாகார சம்ஸ்திதம் பிரமாணமற்றதாந் தன்மையானே மூலமின்மையினுனும் சுருதி சிரபாகியத் தன்மையானும் அசிரஸ்கம், ஹகாராந்தம் சோகம் பரமார்த்த அசங்கசிதேகாசத்தன்மையால் நிரந்தரம் எங்கும் நிகழ்ந்து யாவற்வறயும் சின்மயமாக்கும் தனது பிரத்தியக்குருவமாய ஆன்மாவை யுபாசிப்பாம். சங்கிரகத்திலோ சசிரஸ்கம் ஹகாராதிம் என்று பாடமாம், அதற்கோ; சுரநரதிரியக்காதி அசேஷசரீர ஆகாரங்களில் சம்ஸ்திதமாய சசிரஸ்கம்ஹகாராதீம் ஹம்ச என்னும் மந்திரம் அஜபாகாயத்திரி ரூபத்தானே 21600 எண்ணிக்கையாக நிரந்தரந்தினந்தினம் சுவாச உசுவாசச் சலத்தால் உச்சரிக்கும் ஆன்மாவையென்று பொருள்கொள்க. "உதச்சர: சகர்மகாத்" என ஆத்மநே பத விஷயத்தில் லட்டிற்குச் சத்ராதேசம் சாந்தசமாம். அல்லது, பூர்வரூபமாக அபகாரத்தால் சேடிப்பதில்லை அகாரம் யாண்டோ அது அசேஷாகாரம் சோ என்னும்பதம், ஆண்டு சம்ஸ்திதம், அதனுனே அசிரஸ்கம் சிரோபூத பிரதமவர்ணரகிதம் ஹகாராந்தம் ஹகாரமாத்ராவசேஷம் அகம்பதம் சோகம் மந்திரமென்பதாம். அஜஸ்ரம் உச்சரந்தம் என்பதாதி முன்போன்றே, அன்னியர் கூறல்:—இதயகுகையில் வாழும் ஈசனைப் போகவிட்டே, வித ஒரு அயல்தெய்வம் வேண்டுமென்றேவர் சேர்வார், முதமுறு கௌத்துபத்தை முளரியங்கை நெகிழ்த்தே, சிதலிதமணி தன்னைத்தேருவார் போல்வரேதாம். இதயகுகையீசானம் என்றுரைத்தது சுருதிகளிலும் பிரசித்தமேயாம்:—சுவேதாசுவதரம், அங்குட்டமாத்திரம் புருடன் அந்தராத்மா சந்ததம், இங்குஜனங்களினுள்ளே யிதயத்தே சந்நிவிட்டமாம் = வெளிப்படற்கிடனுய இருதயகுகையளவுகுறித்து அங்குஷ்ட மாத்திரமாம், பூர்ணத் தன்மையானும் புரியிற்சயனித்தலினுனும் புருடன், எல்லாருடைய உள்ளிலும் ஆத்மபூதமா யிருத்தலின் அந்தராத்மா, எப்போதும் ஜனங்களின் இருதயத்தில், சந்நிவிஷ்ட: = இருதயத்திருக்கும் மனத்தால் மிகயறைக்கப் பெற்றிருக்கும்; இதனையுணர்ந்தவர் அமிர்தமாயிருப்பர். விசேடம்:—இருகால்கள் யாவற்றிற்குமே தம்மங்குஷ்ட பரிமாண மிருதயமாம், புத்திக் கணுத்தன்மையுளதேனும் இருதய வியாபிப்பிரகாசத் தன்மையானே அதுவும் இருதயத்திருப்பதாய் இருதய பரிமாணமுடையதாம்; ஆகலின் புத்தியுள்ளிருக்கும் புமானும் அங்குஷ்ட பரிமாணமுடையவனுவன்; எல்லாருடைய புத்தியினுள்ளிலுமிருப்பன், ஜனித்தவர்தம் இருதயசரசிஜத்தில் நிரந்தரம் புகுந்தவனுவன்; அங்குஷ்டமாத்திரம் = இலிங்கசரீர அபிமானி. பரமேசுரனுக்கே சருவ அந்தக்கரண உபாதிகளிலும் அநுப்பிரவேச நிபந்தனத்தால், ஜீவத்தன்மையும், நல்லஞானத்தானே ஜீவபாவவிலக்கினுல் நிஜரூபமாக ஆவிர்ப்பவித்தலும் ஆம் என்பதன் பொருட்டு அங்குஷ்டமாத்திரமெனப் பெற்றது. தத்தமது அங்குஷ்டமாத்திர அளவினுலே இருதயத்தில் அளக்கப்பெறுதலின் அங்குஷ்டமாத்திரம் புருடன், சர்ப்பாதிகளில் இரஜ்ஜுவாதி போலும் சர்வோபாதிகளிலும் ஆந்தரத் தன்மையானே யிருந்துகொண்டு சர்வ உபாதிகளின் சொரூபத் தன்மையானே, அந்தராத்மாவாம், சதாஜநாநாம் என்பதறருக் காக்கைக்கண்மானும் சம்பந்தமாம், ஜநநாதி தர்மவான்களாயீ உபாதிகளின் அந்தராத்மா எப்போதும், எப்போதும் ஜனங்களின் இருதயத்தே புகுந்திருப்பதெனவும் பொருள்பெற்று நிலவும், அங்குஷ்ட மாத்திரத்தன்மை தானுகவேயில்லையாம், மற்றுே, அங்குஷ்டபரிமாண இருதயாவச்சின்னத்தன்மையான் ஆன்மாவிற்கு அங்குஷ்டமாத்திரத் தன்மையாம் எனற்பொருட்டு இருதயத்தில் இனிதுபுகுந்த தெனப்பெற்றது. சம்யங் நிவிஷ்ட: சந்நிவிஷ்ட:, இருதய

மெனப் பெயரிய சூக்குமசரீரத்திற்குச் சொரூபாநந்தஸ் புரணந்தருந் தன்மையானே புகுந்த தாம். காடகம், அங்குஷ்ட பரிமாணம் இருதயபுண்டரீகம் அதன் சித்ரவர்த்தியாய அந்தக் கரண உபாதியங்குஷ்ட மாத்திரம் அங்குஷ்டமாத்திர வம்சபர்வமத்ய வர்த்தியம்பாம் போலும், ஆன்மாவிற்கு அங்குஷ்ட மாத்திரத்தன்மை யுபாதியால் ஏற்பட்டதாம், அங்குஷ்ட அளவதாய வேணுவிலிருக்கும் விண்ணிற் குபாதியின்வயத்தால் அங்குஷ்ட வளவதாந் தன்மையாதலேபோலும் புருடன் = பூர்ணமிவனுல் யாவும் என்பதால், சோதியைப்போலும் அதூமகமாம், வெறுஞ்சோதியா யிருத்தலின், எப்பிரத்தியக்காத்மாபூத பவ்வியமாம் காலத்திரயத்தின் ஈசானனுக யோகிகளால் இருதயத்தில் குறிப்பிக்கப் பெறலாமோ, அதுவே நித்தியம் கூடஸ்தம், இப்போது பிராணன்களிலுளதாம், நாளையுமிருக்கும், அதற்குச் சமமாயய லொன்றுமில்லை, பிறபிறவெல்லாம் பிறந்திறந்துழலும்.

(ச.) நான்காம் சித்தர் வாக்கியம்:—அனைத்துயிரினிடத்து மிருந்து = சுரநரதிரியக்காதி சரீரங்களனைத்தினும் அந்தரியாமியாக விருந்து, அகமகமென்று = சசப்தாந்தமான ஹகாராதியாகிய ஹம்சமந்திரத்தை அனவரத முரைப்பதாகி நிகழ் = ஆன்மாவை நினைத்தல் செய்வாம். (12)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அன்னியர் அதனடைவின்கண் வைராக்யமே முக்கியமான சாதனம் என்றுகூறல்:—மாளாத என்பது.

மாளாத காதலெனும் வற்சநாபிக்கொடியின் வனத்தைச்சுட்டு
நீளாசையனைத்து மறுத்தவர்க்கன் றோவிப்பயன்றா னேராநிற்குங்
கோளான பொருளனைத்தின் முன்பொடுபின் பினிமையிலாக்குற்றங்கண்டு
மீளாதபாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறொன்றன்றால்.

(ப - ரை.) மாளாத காதலெனும் = கெடாத ஆசையென்னும், வற்சநாபிக்கொடியின் வனத்தைச்சுட்டு = விடக்கொடியின் காட்டைப் பஸ்மமாக்கி, நீளாசையனைத்தும் = நீண்டுகோண்டுபோம் சகல ஆசைகளையும், அறுத்தவர்க்கன்றோ = விட்டுத்தொலைத்தவர்க்கல்லவோ, இப்பயன்றான் = இந்தப் பிரயோஜனமானது, நேராநிற்கும்=கிடைப்பதாகும். கோளான பொருளனைத்தில் = அநித்தியமான சகல வஸ்துக்களிலும், முன்பொடு பின்பு இனிமையிலாச் குற்றங்கண்டும் = முன்னும் பின்னும் முற்றினும் விரசபாவக்குற்றத்தைத் தெரிந்தும், மீளாதபாவனையால் = நீங்காத பாவனைமாத்திரத்தினுல். கட்டுண்பார் = பந்தப்படுவார், வேசரியே = கழுதைகளே யல்லாமல். வேறொன்றன்று = நரர் அல்லர். ஆல், அசை.

(ஸ்ரீ - வீர.) அன்னியர் கூறல்:—சர்வ ஆசைகளையும் அடியோடுவிட்டு இருதயத்தின் கண்ணிருக்கும் இஞ்ஞானபலமாய பிரஹ்மத்தை யடையவேண்டுவ தவசியம், எவ்வந்தலாபத்தானே ஆசாவிஷவல்லிகளின் மூலமாலையென்னும் வாசனுஜால ஜடிலஹிருதயக்கிரந்தியானது நன்றாக நசிக்குமோ. ஸ்ரீ பகவானும் "குறையுமாப் பிணிப்புற்றாலுங் கொண்டவிப்புலன்களெண்ணி, லறைகடலனைய நெஞ்சத்தவாவ றானறிவினில்லான்" என்றருளியுள்ளார், அன்னியர் கூறல்:—அத்தியந்தம் இரசமில்லாமையை யறிந்தும் யாவன் துர்மதியுடையனுகிப் போக்கிய விடயங்களில் மீளமீளவும்போக ஆசையைப்பற்றுறுவானோ, அவன் கர்த்தபமாவன் அலது நரன் ஆகான்.

(ச.) காதலெனும் = இகபரலோக விடயங்களான சகல மனோரதங்க ளென்னும், வர்ச்சனுபிக் கொடியின் = விடவல்லியின், சந்தாபஹேதுவாதலின். காதலேவர்ச்சனுபிக் கொடியாயிற்று, வனத்தைச் சுட்டு, நீளாசையனைத்தும் = அக்காதல்களினது மூலமான

அஞ்ஞான பரம்பரைகளை, அறுத்தவாக்கன்றே = சேதித்த முமுக்ஷுக்களுக்கே, இப்ப யன்றான் = இவ்வான்மோபாசனை ரூபமானபலம், நேராகிற்கும். பொருளனைத்தின் = சகல பதார்த்தங்களிலும், முன்பொடுபின்பு = பிராகபாவப் பிரத்துவம் சாபாவங்களில், இனி மையிலாக்குற்றம் = சாரமின்மையை, கண்டும் = அறிந்தும், மீட்டும், மீளாதபாவனையால், கட்டுண்பார் = பந்தப்படும், அற்பபுத்தியுள்ள நரர், வேசரியே வென்றென்றன்றால். (13)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அன்னியர் இந்திரிய நிக்கிரகத்தையே முக்கியம் சாதனம் என்னுங்கருத்தாற் கூறல்:—எழுந்தென்பது,

எழுந்தெழுந்து சீறுகின்ற விந்திரியப் பாம்புகளை யிதயந்தன்னி
லழுந்துவிவேகத் தடியால் வச்சிரங்கொண் டிந்திரன்வெற்படர்வதென்ன
விழுந்திடமோ துற வேண்டுஞ் சாந்தியினுற் சமமேவியிடர் தீர்நெஞ்ச
முழுந்துசுகவடிவாந் தற்பதநிலையைப் பெறுமிதுவே முத்தியென்ன.

(ப - ரை.) எழுந்தெழுந்து சீறுகின்ற = கிளம்பிக்கிளம்பிச் சீறுகின்ற, இந்திரியப் பாம்புகளை = இப்புலன்களாகிய அகிகளை, இதயந்தன்னில் = இருதயத்தில், அழுந்து விவேகத்தடியால் = அழுத்தமாகிய விவேகமென்னுந் தண்டத்தால், வச்சிரம்கொண்டு இந்திரன்வெற்பு அடர்வதென்ன = வச்சிரமென்னும் ஆயுதங்கொண்டு தேவேந்திரன் கிரி களைப் பொடிப் படுத்துவதேபோல, விழுந்திடமோதுறவேண்டும் = நசித்திடுமாறு புடைத் திடவேண்டும், சாந்தியினுற் சமமேவி = சமவசத்தினுற் சமத்தையடைந்து, இடர்தீர், நெஞ்சம் = துயர்தீர்ந்த மனமானது, முழுந்துசுகவடிவாந் தற்பதநிலையைப்பெறும் = பூரண இன்பவடிவமான உத்தமபதத்திதியை அடையும், இதுவே முத்தியென்ன = இதுவேமோக்ஷ சுக என்பதாகத்தானே.

(ஸ்ரீ - வீர.) நிமிர்ந்து நிமிர்ந்துசீறும் இவ்விந்திரியப் பாம்புகளைமறித்தும் மறித்தும் வஜ்ஜிரத்தானே ஆகண்டலன் கிரிகளைப் பேதித்தலேபோலும். விவேகமாகிய தண்டத் தானே நொறுக்கவேண்டும். இங்ஙனமே “ஏகம் ஏகம் காலகூடமாம் இந்தி யம் நாசஞ்செருத் தாமீண்டு, அதுவேசோதிதமாகச் சாக்ஷாத், தெங்ஙனம் விஷமே யெனினுமமுதமோ” எனப்பிரஹ்மவைவர்த்த மியம்பும், அவ்வாறே ஸ்ரீமத் பாரதத்திலும் “ அச்சுறுபுலன்களே அதுவெலாமாகும், எச்சொர்க்க நரகமென்னு மிரண்டோ, சொச்சமா யொறுக்கின சொர்க் கப்பொருட்டாம், நச்சிநின்றடின நரகப்பொருட்டாம்” என்றுரைக்கப் பெற்றுளது, அன் னியரோ உபசமமே முக்கியசாதனம் பிறயாவுமே அதன்பொருட்டாம் என்னுமபிப்பிராயங் கொண் டுபசங்கரித்தல்: சாந்தியினுலென்பது, வெளிவுள்ளிந்திய வியாபார ஓய்வாம் உப சமத்தானே, விக்ஷேபதுக்க உபசமம்போலும் ஆவிர்ப்பூதமாய ஆத்மசுகம் சம்பாதிக்கத்தக்க தாம், அதுவோ விடயமும் மின்பம்போலும் தோஷவேதுவாகாதாம், மற்றே. மனத்தெளி வின் எதத்தன்மையானே பவித்திரமாம், சமவயத்தினுலே விறகற்ற அக்கினிபோல நல்ல சித்தம் சமமாமுபக்ஷயத்தை யடையும், இங்ஙனம், மிகவுமோய்ந்த மனமானது நிரதிசய ஆனந்தமான தன்னுடைய பரமார்த்த சொரூபத்தில் பூமிகைப்பரம்பரை யாரோகணக்கிரம மாக உத்தமமான சத்தமபூமிகைப் பிரதிஷ்டைவடிவம் விதேககைவல்ய பரியந்தமாம்.

(ச.) இந்திரியப் பாம்புகளை, மீட்டுமீட்டும், இந்திரன், வச்சிரங்கொண்டு = வச்சிரா யுதத்தால், வேற்பு = கிரிகளை; முமுக்ஷு முன்பு நிர்த்தோடமான உபசமசுகத்தைச் சம்பா திக்கவேண்டும், சாந்தியினுல், = பின்பு அவ்வுபசம சுகசாமர்த்தியத்தினுல்; நெஞ்சம் = விடயசுகங்களிற் சித்தம், சமமேவி நன்கு உபசமமுறும், பின்பு, மிடைதீர்நெஞ்சம் = உப

சாந்தசித்தம், முழுந்து சுகவடிவாந் தற்பதம் = சொச்சொரூப சுகத்தில், நிலையைப் பெறும் = உத்தமமான ஸ்திதியை நீடூழிபெறும், இதுவே முத்தியென்றார். (14)

(ஸ்ரீ - வீர - அ-கை.) இவ்வண்ணம் சித்தர்கீதையைச் சிரவணஞ்செய்த சனகராசன் ஆங்கிருந் தரண்மனையடைந்து அனைவரையும் அகற்றித் தனியனாயிருந்து ஆராயத்தொடங்கினன் என்று ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்:—தெளிவென்பது,

தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப் பாடியகீதந் தெளியக்கேட்டுக்
களிதருவெஞ்சினக் கருடனொலி கேட்ட பாம்பென்னக் கலங்கிமன்னன்
குளிர்பொழினின் றக மடைந்தானனைவரையும் விடைகொடுத்துக் கோயில்புக்கா
னளிர்சுதைசெய் மேனிலத்தி லொருவனேயிருந்து நனிநாடலுற்றான்.

(ப - ரை.) தெளிவுடைய சித்தர்கணம் = சந்தேக விபரீதமில்லாத சித்தர்கூட்டம், திகழ்வுறப் பாடியகீதம் = விளங்கும்படியாக விளம்பிய கீதையை, தெளியக்கேட்டு = சம்சய விபரீதமில்லாமற் சிரவணித்து, களிதருவெஞ்சினக் கருடன் = மதோன்மத்தமாய்க் கடுங் கோபத்தோடுற்ற பக்ஷிராஜனது, ஒலிகேட்ட = கர்ஜனையைக் கண்ணுற்ற, பாம்பென்ன = கட்செவிகடுப்ப, கலங்கி = விஷாதமுற்று, மன்னன் = மகீபதி, குளிர்பொழில் நின்று = தண்மையாய உத்யானவனத்தி லிருந்து, அகம் அடைந்தான் = அரண்மனையை யடைவுற்றான், அனைவரையும் = யாவரையும், தத்தமது சேர்க்கைசேரும்படி, விடைகொடுத்து = ஆஞ்ஞைசெய்து விட்டு, கோயில் புக்கான் = உள்ளரண்மனையுட் புகுந்தான், நளிர்சுதை செய் மேனிலத்தில் = குளிர்ச்சி பொருந்திய முத்துச்சுன்னத்தாற் றீற்றிய மேல்வீட்டில் ஒருவனேயிருந்து நனிநாடலுற்றான் = ஏகாங்கியாயிருந்து நன்றாக ஆராயலானான்.

(ஸ்ரீ - வீர.)சித்தர்கணங்கள் உத்கீதஞ்செய்த கீதையை மகீபதிசிரவணித்து, போர்ச் சத்தத்தானே பயசீலன் கலங்கலேபோல விரைவில் விஷாதமுற்றனன். மூலத்தில் பீரு என்பதிற்றீர்க்கம், ட்ரலோபே பூர்வஸ்ய தீர்க்கோண: என்பதாலாய தெனவறிக. பின்றனது பரிவாரத்தை யழைத்துக்கொண்டு தன்னரண்மனையை நோக்கி, தந்தீரதருக்கள் பின்றொடர்ந்த சரித்தின்வேகம் சாகரத்தைநோக்கிச் செல்வதேபோலும் சென்றனன். சகலபரிவாரங்கட்கும் தத்தமது கிருகத்திற் கேருமாறு ஆணையிட்டுவிட்டு, ஒருவனாகவே உதயாசல மேலேறிய சூரியனைப்போலத் தனது மேல்வீட்டின்மே லேறினன், (15)

(ஸ்ரீ-வீர - அ-கை.) உலகைநோக்கி இரங்கித்தன்னையே நோதல்—பற என்றது.

பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன வனவரதம் பதைத்துலாவி
யிறக்கின்ற வுலகநடை நோக்கிவாய் விட்டிரங்கி யியம்பலுற்றா
னறக்கன்றி யவத்திலுழன் றலமருமிவ் வுலகிடையா னந்தோவந்தோ
நிறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலுருண்டு நெரிந்தேனந்தோ.

(ப - ரை.) பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன = மேலெழுந்து சுழலும் பக்ஷிகளின் பக்ஷங்கள்போல, அனவரதம் பதைத்து உலாவி = எப்போதுமே துடிப்புற்றுச் சுழன்று, இறக்கின்ற = இறந்துபோகின்ற, உலகநடைநோக்கி = உலகவிவகாரத்தைப் பார்த்து, வாய்விட்டிரங்கி = அந்தோகட்டம் என்று வாய்திறந்துரைத்து இரக்கத்துடன், இயம்பலுற்றான் = கூறத்தொடங்கினன், அறக்கன்றியவத்தில் உழன்று = அத்தியந்தம் கஷ்டத்துடன் வீணாகவே சுழன்றுதிரிந்து, அலமரும் = துயருற்றுமயங்கும், இவ்வுலகிடை =

இவ்வுலக விவகாரத்திடையில், யான் = அகம், அந்தோ அந்தோ = பரிதாபம் பரிதாபம், நிறக்கின்ற மயக்கத்தால் = பூர்ணமான மோகத்தால்; கல்லிடைகற்போல் உருண்டு = பாஷாணங்களிற் பாஷாணங்கள் போலப் புரண்டுருண்டு, நெரிந்தேன் அந்தோ = நொறுங்கினேன் ஐயோ !

(ஸ்ரீ - வீர.) பூதரமேறிய மிருகேந்திரன் போன்ற பூபனுண்டோர்வதாவது:—பறக்கும்போது அதிசஞ்சலமுறும் ககங்களின் பக்ஷமூலங்கள் போலும் அதிசஞ்சலமுற்று உத்வேகத்தோடும் கூடிப்பங்குரமாய லோககதியென்னும் தேகாதிதிருசிய பதார்த்தஸ்திதியினை ஊன்றிநோக்கி, ஆகுலமிகுத்தவனு யியம்பும்வகையில் துயர்மிகுத்துரைத்தான். ஹாகஷ்டம் ! அதிகஷ்டம் வாய்ந்த ஜீவர்கடம் ஜன்மஜராபய மரணாதியானே அவதிப்படு மித்தசைகளில், சிலைகளிற் சிலைகளேபோல மயல்கொண்டு வலிதிற்புரண்டுருண்டு திரிகின்றேன்யான் ஈண்டுப்பாஷாண திருஷ்டாந்தம் தந்தது மௌர்க்ய கடோரதையை விளக்கற்பொருட்டாமெனவறிக.

(ச.) நடை = கதிகளை, இயம்பலுற்றான் சனகன். (16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது தனதுகால மற்பமெனத்தானே யியம்பல்:=காலமென்பது,

காலமொரு கான்முடியா திதனிடையென் னூறுண்டோர் கணமுமில்லை
சாலவிது தனைமதித்து வன்காதலிடை வீழ்ந்து தளர்வதேனன்
றாலமதியாற் கெட்டவெனைப் போலவீனரார் சொல்லற்பாற்றோ
சீலமறு வாணாளைப் பெரிதாக நினைவதே சீசீயந்தோ.

(ப - ரை.) காலம் ஒருகால் முடியாது = காலமானது ஒரு காலத்திலும் அவதியடையாதது, இதனிடை = இத்தகைய மகத்தாகிய இதன்கண், என் = எனது வாழ்க்கையாகிய, நூறுண்டு = மநுடவருடம் நூறும், ஓர்கணமுமில்லை = ஒருகணம்சம் என்பதாகவும் எண்ணமுடியாது, சால இதுதனை மதித்து=இவ்வற்பவாயுளைத்தானே மகத்தாகவெண்ணி வன்காதலிடை வீழ்ந்து தளர்வதேனன் = பேராசையில் அழுந்தி வருந்துவதேனன். தூலமதியாற்கெட்ட = அதமஜட சித்தத்தாற் கெட்டுப்போன, எனைப்போல = அடியனைப் போன்ற, ஈனரார் = நீசரியார், சொல்லற்பாற்றோ = மொழிந்திட முடியுமோ, சீலமறு வாணாளை = நன்மைபயக்காத அற்ப ஆயுளை, பெரிதாக நினைவதேசீசீயந்தோ = அதிமகத்தாக எண்ணுவதே திக்திக் ஐயைய்யோ '

(ஸ்ரீ - வீர.) வரையறை வற்றகாலத்தின் எவ்வங்கிசம் என்னால் ஜீவிக்கப்பெறுகின்றது, அதன் கண்ணும் எண்ணம் அதிகமாகப் பற்றுறுகின்றது, அற்ப அறிவினையுடைய அதமசித்தம்வாய்ந்த என்னை யென்னென்பதோசீசீ, மூலம்:—ஜீவதாதுவிற்கு அகர்மகத் தன்மையிருப்பினும் காலபாவ அத்வகந்தவ்யங்கள் கர்மசம்ஞைகள் அகர்மங்கட்கு, அகர்மகதாது பிர்யோகேதேச: காலோபாவோ கந்தவ்யோகத்வாச கர்மசம்ஞக இதிவாச்யம் (வா) என்னுங் காத்தியாயனவசனத்தானே ஜீவ்யதே என்பது காலத்தில் கருமத்தில் லகாரமென்றறிக. ஸ்ரீ வீரசேகர கௌமுதி காரகப்படலத்தில்நன்குகாணலாம். அத்தகைய ஜீவனத்தின்கண்ணும் ஆசையுண்டாகின்றதே இஃதென்னென்பதாம். (17)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தேசமற்பமெனவும் தேடத்தகுவ தொன்றையும் காணேமெனவும் கூறல்;—எல்லையென்பது,

எல்லையிலா வண்டத்தி லியானுளும் புவிநோக்கி லிறையுமில்லை
யல்லலுறு மிதுபெரிதா வாதரித்து நிற்பதேயந் தோவந்தோ
புல்லிமையற் றினிதாகியு தாரமாச்செயப் படாப்பொரு ளீதென்னத்
தொல்லுலகி லொருபொருளுங் காணேனித்தொடர்ச்சி நிலையென்னேயென்னே.

(ப - ரை.) எல்லையிலா வண்டத்தில் = அளவில்லாத அண்ட கோடிகளுக்குள், இயான் ஆளும் புவிநோக்கில் = நான் ஆளும் ராஜ்யத்தைப்பார்த்தால், இறையும் இல்லை= அணுவெனவும் அறையமுடியாது, அல்லல் உறும் இதுபெரிதாவாதரித்து நிற்பதே அந்தோ அந்தோ = துன்பங்கணிறைந்திருக்கு மித்தேசத்தை விஸ்தாரமதாக நினைந்துபற்றுற்று விவகரிப்பதே ஐயோ ஐயோ, புல்லிமையற்று = அற்பத்தன்மையின்றி, இனிதாகி = இரம் மியமாய், உதாரமா = உதாரமாய், செயப்படாப்பொருள் ஈதென்ன = அக்கிருத்திரிம வஸ்து இது என்று சொல்லும்படியாய், தொல்லுலகில் = அநாதியாய இப்பிரபஞ்சத்தில், ஒருபொருளும் = எப்பொருளையுமே, காணேன் = கண்டிலேன், இத்தொடர்ச்சிநிலை என்னே என்னே = எனதுமதியின் இப்பற்றுறுநிலையாதுகொல் ! இஃதென்ன ஆச்சரியம்!

(ஸ்ரீ - வீர.) ஜீவிக்கும் பரியந்தம் ஆளும்படியான எனது இந்தராஜ்யந்தான் எத்துணை மாத்திரமென்பதோ ! இவ்வளவு மாத்திரையானே சந்துஷ்டனுகிப் புத்திகெட்ட மூர்க் கனைப்போல வருந்துயரை நீக்கும் சிந்தை செய்யாதவனுய் இவ்வாறிருப்பதேன் யான் ? அல்லது, இத்துணைமாத்திரையானே விநஷ்டபுத்தி யுபாதிஜீவன்முக்தனைப்போலத் துய ரமேயில்லாமல் என்னே யிவ்வாறிருக்கின்றேன்? தேகமேயாத்மாவாகுக, அதனதழிவாகவே அதனேடுகூடவே சர்வதுக்க நிவிருத்தியேனுகாதெனின் ? காமகர்மவாசனைப் பீஜமின்றி, போகவைசித்திரியப் பிரயோஜகஜன்ம அசித்தியாதலினுலும், விதிநிஷேத மோக்ஷசாஸ் திரப்பிராமாண்ய அநுரோதத்தானும், அநாதியாயும் அநந்தமாயும் இருக்கும்யான்தேகமாத் திரம் ஆகேன்; மத்தியிற்பேல வுஜீவிதன். சித்திரத்திற் சித்திரிக்கப்பெற்ற இந்து வல்லாத தையே இந்து புந்தியினுற் கவர்ந்த பாலகனைப்போல, ஆநாத்மாவாய தேகத்தையே ஆத்மா வெனக்கவர்ந்து ஆசுவாசமடைந்து வீணுக இறுமாந்திருக்கின்றேன் என் ? இல்லாதபிரபஞ்ச இந்திரஜாலத்தாலியான் அந்தோகஷ்டம் மிகவும் மோகிக்கப்பட்டுளேன், எவ்விந்திரஜாலக் காரனுல் இவ்வாறு பெரிதுமயக்கப் பட்டேன் ? யாதுதான் உளதாதலிற் சத்தியவஸ்து வாமோ, இரம்மியமாய்ச்சுக ஏகரூபம் யாதாமோ, உதாரமென்னும் அபரிச்சின்னம் யாதா மோ, அகிருத்திரிமமென்னும் அஜன்னியந்தானியாதாமோ, அத்தகையவத்து எதுவுமே யிவ்வுலகி லிலவேயில்லை, இதலாக எனதுமதி எதில் இளைப்பாறுதலை யீண்டடையாநிற்கும்?

(ச.) இறையுமில்லை = அதிசொற்பமாதலின் இந்தவிராச்சியத்தால் எவ்வளவும் பிர யோஜனமின்றென்பது பொருள் பயனின்றாயும், நட்டபுத்திபோலவாளா இவ்விராச்சியத்தி லிருக்கின்றேனென்பது கருத்து, புல்லிமையற்று = புன்மையதன்றாய் உள்ளதாய், இனி தாகி = நிர்த்தோடமாய், உதாரமாய் = உத்கிருஷ்டமாய், செயப்படா = அகற்பிதமான, பொருளீதென்னத் தொல்லுலகி லொருபொருளுங் காணேன் = இன்றேயின்று, ஆதலின்' இத்தொடர்ச்சிநிலை = எனது பிரியத்துக் கிருப்பிடம், என்னே = யாது, எவனென்னும் வினு என்னென்றாய் இல்லையென்னும் பொருளைக் குறிப்பித்து நின்றது, என்னேயென்பது இகழ்ச்சிக்குறிப்பு.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அநித்தியமாய இவற்றிற் பெருமையை நினைத்தல் தகா தெனல்:—தலைவரென்பது.

தலைவர்தலைமே லுறைவோர் நாட்களினுற்றாழ்ந் தோர்க்குத் தாழவீழ்வர்
நிலையில்பெருமையை யுறுதிநினைக்கின்ற நெஞ்சேயின் னினைவீதென்னே
தொலைவில்பெரும் போகங்கள்பெரியோர்கள் கிளையோடுந் தோன்றித்தோன்றி
யுலைவுறமாண்டார் முன்னாளிந் நாளிங்கிவையனைத்திலுறுதியென்னே.

(ப - ரை.) தலைவர் தலைமேலுறையோர் = மகத்துக்கள் சிரமேலுறைந்திருப்பவரும், நாட்களினால் = தினங்களினால், தாழ்ந்தோர்க்குத் தாழவீழ்வர் = கீழுக்குங் கீழாய்வீழுவர் நிலையில் பெருமையை = மாய்ந்துபோம் மகத்துவத்தை, உறுதி நினைக்கின்ற=நிலையென் றெண்ணுகின்ற, நெஞ்சே = சித்தமே, இல்நினைவு ஈது என்னே = அசம்பாவிதமாய இந்த எண்ணம் என்னபயனை வுத்தேசித்தோ ! தொலைவில் பெரும்போகங்கள் = புசித்துத் தொலைக்க முடியாதனவாய அளவிறந்த போகங்களும், பெரியோர்கள் கிளையோடும் = நெருங்கிய பந்துக்களோடு கூடிய மகத்துக்களும், தோன்றித்தோன்றி=உதித்து உதித்து உலைவுற மாண்டார் = நினைவின் விடயீபூதமாய் நீங்கிப்போனார், முன்னாள் =முற்போது, இந்நாள் = இப்போது, இங்கு = ஈண்டு, இவையனைத்திலுறுதி யென்னே = இவ்வியா வற்றிலும் நிலையாதுகொல் !

(ஸ்ரீ-வீர.) இன்றுயாவர் பெரிதான இராஜ்ஜியாதிவைபவ உற்கர்ஷத்தில் மனமயங்கிய வகையில் இராஜ்ஜிய அபிமானத்தை யடைந்து தலைமைவகித்துத் திரிந்தனரோ. அவரே தினங்கள் சிறிதிலேயே அதோகதியாய் வீழ்ந்துபோகின்றனர், அந்தோ இந்த அற்பமாய பெருமையின் கண்ணே நம்பிக்கைவைத் துழல்கின்றனையே இஃதென்னே ! மடநெஞ்சே செத்திலாய் கெடுவாயே, சக்கிரவர்த்திகளாகிய பிருதுமருத்து முதலியவர்தம் பிரசித்த மான மகா ஐசுவர்யங்கள், அந்தப் போகங்கள், அச்சற்குணங்கள், அதிநேய முற்றவவர்தம் புந்துக்கள், என்னும் யாவருமே யாவையுமே, மிருதிமார்க்கத்தை யடைவுற்றனவாம், இப்போதிருப்பவற்றிற்றான் என்னேநிலை, ஆஸ்தைதானென் ? மூலம், சர்வம் என்பது சாமான்யே நபும்சகம். நினைவின்நெறியுறுமென்பதை ஸ்ரீபர்த்ருஹரியும் தெரிவித்துளார்—சவிமிகு நகரும் பெரியமன்னவனுஞ் சாமந்தவலயமு மவற்சூழ், கவிகளின் குழுவுந்தாசரும வன்றன் கலைமதிமுகவரிவையருஞ், சுவைமதிமதத்த கோமகக்குழுவுஞ் சுபம்வழுத்துனர வன்கதையென், னெவையுமியார் வயத்தாலென நெறியுறுமோ வெழிலக்காலனைப் பணி குதுமே.

(ச.) அறுதி = சொந்தமாக. மூலம், சித்தவென்பது விளியாம். (19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சுரநரேந்திர பிரமாதியர் தம்வாழ்வும் எண்ணில நண்ணிலவென் னின் நின்வாழ் வென்னேயெனல்:—மண்ணென்பது.

மண்ணாடு மன்னவரு மவர்தனமு மாண்டன நுண் மணலையொக்கும்
விண்ணாடு மிந்திரருமவர் வாழ்வும்போ யினவிண்மீனை யொக்கு
மெண்ணாடும் பிரமருமண் டமும்பூதங்களு மிறந்த வெல்லையில்லை
கண்ணாடு மவையெங்கே நின்வாழ்க்கை நிலையென்னே கவலுநெஞ்சே.

(ப - ரை.) மண்ணாடு மன்னவரும் அவர்தனமும் = தேசங்களும் மகீபர்களும் அவர் தம் ஐசுவரியங்களும், மாண்டன = அழிந்தன எண்ணின், நுண்மணலை யொக்கும் = சூக் குமரேணுக்களினு மதிகமாம், விண்ணாடு மிந்திரரும் அவர்வாழ்வும் = தேவலோகங்களும் தேவேந்திரர்களும் அவர்தம் ஐசுவரியங்களும், போயின = சென்றொழிந்தன வெண்ணின் விண்மீனை யொக்கும் = ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரக் கூட்டங்களினு மதிகமாம், எண்ணா

டும் = எண்ணிக்கை செய்யத்தக்க, பிரமரும் = பிரஹ்மதேவரும், அண்டமும் = அவர் தம்பிராரப்த ஐசுவரியமாய அண்டகோடியும், பூதங்களும் = பூசபஞ்சகங்களும், இறந்த= ஒழிந்தன, எல்லையில்லை = அளவேகிடையா, கண்ணுடு மவையெங்கே, கண்ணினுற் கண்டநுபவித்த அவ்வியாவையும் எங்கேசென் ருெழிந்தன, நின்வாழ்க்கைநிலையென்னே = உன்னுடைய ஜீவிதமாத்திரம் என்னதிர முடையதோ, கவலும் நெஞ்சே = இவற்றில் ஆசக்தியுற் றுழலும்மனமே!

(ஸ்ரீ - வீர.) மகீபதிகள் தந்தனங்கள் யாண்டேகின, பழைய இரணியகருப்பர்தம் புவனங்கள் எங்குசென்றனதாம், பழைய அவையெல்லாம் சென்றவிடந் தெரியவில்லையே, நினது இவ்வற்பதனுதிகளில் மாத்திரம் என்னவிசுவாசம் செய்யத்தக்க திருக்கின்றது? வாரியின் கண்ணேபுற்புதங்கள் வயங்கக்கழிந்தார்களன்றோ காலத்தால், இலக்ஷக்கணக்கான இந்திரர்கள், எனினும் ஜீவிதத்திற் பேராசையடைந்து அதற் கேற்றபடிதிரியும் என்னைக்கண்டு நகையாரோ விவேகமிகுத்த பெரியோர். பிரமகோடிகள் பெயர்ந்து போயினர், பெரிது சாம்பின சர்க்கதாரைகள், திரமதென்கொலோ பூதபூபர்கள், சிதைந்துபோயினுர் தூளி போலவே, திருதியென்ன வென்சீவிதந்தனில்; கோடிக்கிரகணம் ஆநந்திய உபலக்ஷணமாம், சம்சாரத்திற்கு அநாதித்தன்மை யுண்மையின்; திருதி = ஆஸ்தை. (20)

(ஸ்ரீ - வீர - அ-கை.) இறையேனுமிச்சை பூண்டிடில் இதனில் என்னைப்போற்பேதையர் எவரெனல்:—செல்லென்பது.

செல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத்தி யக்கமான
பொல்லாத நீள்கனவாஞ் சூனியத்தி லிச்சையிறை பூண்டேனென்னிற்
கல்லாதபுல்லிய னேன்சீசீநா னனவரதங் காணுநாட்க
ளெல்லாம் போயினபோ மாலிறவாதென்ருய் நன்ருமெழினுட்காணேன்.

(ப - ரை.) செல்லாத மாயையிருள் இரவிலே = பிரஹ்மஞானத்தாலன்றிக் கெடாத மாயாந்தகார இராத்திரியில், தேகமயத்தியக்கமான பொல்லாத நீள்கனவாம் = தேகமயமயலான தீர்க்கதுர்ச் சொப்பனமாம், சூனியத்தில் = ஒருபயனுமற்றதில், இச்சை இறை பூண்டேன் என்னில் = ஆசையற்பம் அடைந்தேனுயின், கல்லாதபுல்லியனேன் நான் = ஒன்றும் உணராத அற்பனேயானுயினேன், சீசீ = திக்திக், அனவரதங்காணு நாட்கள் எல்லாம் போயினபோம் = நிரந்தரம் வந்தவாசரங்கள் யாவுமே சென்றன செல்கின்றன' என்ருலும். இறவாது ஒன்ருய் நன்ரும் = நாசமில்லாத ஏகமான சத்துவத்தவை ஐயமறத் தரிசித்த, எழில் நாள் காணேன் = அழகியதின மொன்றை இன்றளவுங் கண்டிலேன், ஆல், அசை.

(ஸ்ரீ - வீர.) தமோமயத் தன்மையானே சம்சாரமேயாய இரவின்கண்ணே துக்க சொப்பன பூததேகப் பிரசுர அகந்தைமமதை விவகாரமயலாஞ் சேத்திய சூனியத்தில் ஆஸ்தையையற்பமேனும் அடைந்துள னேலாயினே, ஆண்டிம் மரியாதையற்ற எனது அவிவேகித்தகைமையானது சீசீயென இகழ்த்தற்பாலதேயாம், ஆகத்தன்மையாம் அபரோக்ஷத் தன்மைக்கற்பனை, அதனிற் சேய்மையாம்;பரோக்ஷத் தன்மைக்கற்பனை, உடம்பில் ஆத்மத்தன்மைக்கற்பனை, யென்னும் இம்மூவகையாய கற்பனைகளும், அசத்சொரூபியின் மாட்டே வாளாவரும், ஆகலின் அகங்காரப் பேயினுலே மயக்கப்பெற்று யான் அறியானைப்போல இவ்வளவுகாலமும் எதன்பொருட்டாக ஆராய்ச்சி யற்றவனுக இருந்தேன் என்பதாம். நிரந்தரம் இத்தினங்கள் வருவனவாம், இவ்வளவதாம் வயதிலும் வீணுகவே செல்வனவுமாம்;

நித்தியமாய் ஏகமாய்ச்சத்தாய்நிர்த்தோஷமாய் ஆநந்தைகரசமாய் இலங்குமவத்து அடைந்து விட்டோம் என்னும் அத்தகையதினம் இத்துணைக்காலம் வரையும் கண்டிலேன்.

(ச.) தமோமயமாதவின் மாயையென்னுஞ் சமுசாரமே இருள் இரவாயிற்று, பொல்லாததேகமயத் தியக்கமான = துக்கமயதேக ரூபப்பிரமமான, சீசீ = எனது இத்திதி கஷ்டமென்பது பொருள். எழில் — அழகுள்ள வஸ்துவும், நாள் = நாளும், இப்போதும் காணேன்! (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நல்லவல்லாப் பொருளெல்லாம் நாசமாம் எனக்கண்டுலகர்க் கிரங்கல்:—நடுவென்பது.

நடுவின்முடிவி னிலடியினன்றன பொருளொன்று ஞாலத்தில்லை
படுபொருளெல்லா மிறப்பாம லத்தினுலேபூசப் பட்டதன்றே
கடுவினைக ளுடோறுங் காய்துயர நாடோறுங் கரையொன்றில்லாக்
கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்ற றறிவில்லார் குரம்பைக்கூத்தால்.

(ப - ரை.) நடுவில் முடிவினில் அடியில் நன்றனபொருள் ஒன்றும் = மத்தியில் பரியந்தத்தில் ஆபாதத்தில் மனோரமமான வத்துவெதுவும், ஞாலத்தில்லை = உலகத்திலில்லை, படுபொருளெல்லாம் = தோற்றப்படும் பொருள்கள்யாவுமே, இறப்பாமலத்தினுலே பூசப் பட்டதன்றே = விநாச அமேத்திய தூஷிதமேயல்லவா, கடுவினைகள் நாடோறும் = பாப வினைகளையே தினந்தோறும், காய்துயரம் நாடோறும் = மிகுந்த துக்கமே தினந்தினம், கரையொன்றில்லாம் கொடுமைகளே நாடோறும் = எல்லையில்லாத குரூரமானசெய்கைகளே அகர்நிசம், அறிவில்லார் = ஜடஜனங்கள், குரம்பைக்கூத்தால் = தேக அகம் அபிமான அபினிவேசத்தால், செய்கின்றார் = பண்ணுகின்றார்கள்.

(ஸ்ரீ - வீர.) கஷ்டத்தினும்கஷ்டதரத்தை யடைந்தும், துக்கத்தினும் துக்கதரத்தைத் துதைந்தும் இன்றளவும் விரக்தியை யடைந்திலேன் அந்தோ இஃதென்னே! இராகலோபாதி தூஷிதத்தன்மையானே அதமமனத்தை யுடையயான் ஈண்டு வாழ்ந்தென்னேபயன் திக்திக். எந்த எந்த இரமணீய வஸ்துக்களாகிய விடயங்களில் அதிதிடமாகப் பிரீதிவைக் கப்பட்டதோ அவையாவுமே அழிவுற்றன வெனக்கண்டோம், ஈண்டுத் தமமென்பது தான் யாதோ அறிந்திலேம். எவ்வயதுமத்தியில் மனோரமமாமோ, எத்தருமந்தான் பரியந்தத்தில் மனோரமமாமோ, எவ்விடயங்கடாம் ஆபாதத்தில் = தொடக்கத்தில் மனோரமங்களாமோ, அவ்வியாவுமே அபவித்திரங்களாம், அவைவிநாச அமேத்திய தூஷிதங்களாம். எவ்வெப் பதார்த்தங்களில் மானவன் ஆஸ்தையை யடைகின்றனனோ அவ்வவற்றிலேயே அம்மானவனுக்கு, அத்தியந்தம் துக்கப்பிராதுர்ப்பாவத்தைப் பிரசித்தமாகக் கண்டோம், அஞ்ஞனுக்குத்தரகாலத்திலும் விசிராந்தி யடைந்திடலாம் என்னும் ஆசையிலதாம் எனல்: கடுவினை யென்பதாதி. இவ்வுலகத்தில் ஜடமதி ஜநங்கள், இராகலோபாதி யபிவிருத்தியானே மகாபாவமயமாம் இத்தசையையே நாட்கு நாளடைகின்றார்கள்; நாட்குநாள் ஹிம்சாதிப் பிரவிருத்தியானே குரூரதரமான அவத்தையையே யடைகின்றார்கள், நாட்கு நாள் அவற்றின் பலகாலத்தில் துயர்ப்படுத்தும் அவத்தையையே யடைகின்றார்கள்.

(ச.) நடுவில் = யவ்வனமானவயதில், நன்றனபொருள் மனோரம்மியமான பொருள் தேகாதி, முடிவினில் மனோரம்மியமான பொருள் மாம்பலாதி, அடியில் = பிரதமத்தில் மனோரமம் மாலதி (முல்லை) குசுமாதி, ஒன்றும் ஞாலத்தில்லை, அவ்வனைத்தும் பவித்திரம் இன்மையனவேயாம், கடுவினைகள் = பாவமுள்ளதும், காய்துயரம் = கேதந்தருவதும்,

கொடுமைகள் = குரூரங்களுமாகிய தசைகளை, குரம்பைக்கூத்தால் = தேகத்தன்மையால் = ஜடவியல்பால், அறிவில்லார் செறிகின்றார். (22)

(ஸ்ரீ - வீர - அ- கை.) ஒவ்வொரு அவத்தையிலும் துயரமே துதைதலின் இளைப்பாறுதல் இன்றெனல்:—பாலகன் என்பது.

பாலகனுயஞ்ஞானத் தழுந்துவனற் காளையாய்ப் பாவைமாராற்
சாலவருந்துவன் விருத்தன்றானு கிக்குடும்பத்தாற் றளர்ந்துசாவன்
ஏலவிவனெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்தவாறே
ஞாலமெலாமாடரங் காய்ப்பொறி மேளமாய் மனப்பேய் நடிக்குமன்றே.

(ப - ரை.) பாலகனாய் அஞ்ஞானத்தழுந்துவன் = பாலியத்தில் அறியாமையானே ஹதமாவன், நற்காளையாய்ப் பாவைமாரால் சாலவருந்துவன் = நல்லயவ்வனத்தில் மதன விதனமேலிட்டு மங்கைமாரால் மயங்கிவாடுவன், விருத்தனாகிக் குடும்பத்தால்தளர்ந்து சாவன் = வயோதிகனாகிக் களத்திர சிந்தையால் வாட்டமுற்று மரிப்பன், ஏலவிவன் எக்காலத்து என்செய்வான் = இவ்வாறு துன்பியைந்த இச்சடன் எப்போது என்னதான் இயற்றுவன், மாயக்கூத் திருந்தவாறே = மாயா நடனம் இருந்தமுறையே யாமிது, ஞாலமெலாம் = அசாரசம்சார முழுவதும், ஆடரங்காய்=நடனசாலையாய், பொறிமேளமாய்= இந்திரியங்கள் வாத்திய விசேடங்களாக, மனப்பேய் = மனமாகிய வேதாளம், நடிக்கும்= கூத்தாடும்; அன்று ஏ அசைநிலைகள்.

(ஸ்ரீ - வீர.) பாலியத்தில் அறியாமை யொன்றானே யடிபடுவன், யவ்வனத்தில் மன் மதவிகாரத்தானே மயங்கித்திரிவன், சேடவ்யதில் களத்திர உபலக்ஷித குடும்பந்தாங்குதலாதி சிந்தையானே பரமதுக்கியாவன், களத்திரவித்தாதி க்ஷயமாக ரோதனஞ்செய்து வருந்துவன். எப்போது இவன்றன்னை யுத்தாரஞ்செய்யும் சாதனத்தைச் சம்பாதிப்பதோ! ஒருபோது மிச்சடன் முயலான். இச்சம்சாரமானது ஆகமாபாயியாம். ஆதியந்தங்களி லசத்தாம், மயற்போதினும். இரசமில்லதாம், தரித்திரம் நோய்கிழமை, முதலியதசை விஷமபாவத்தானே தூஷிதமாம், அசாரமே யாமாயினும் சாரமதியானே கவரப்பட்டதாம், இத்தகையதை இத்துர்மதியேன் வீணாக நோக்குகின்றனன், பார்த்துப் பார்த்துக் கூத்தாடல் எந்நிமித்தமோ அறியேம். எப்போது மிடர்ப்படலை ஸ்ரீ பர்த்ருஹரியும் ஞாபகப்படுத்துவர்:—துன்புறமலநடு நியமிததனுக்களாற் றுன்னுறுக்கருமீதி, லன்பினள் பிறிதரவுறுதுயர் விடமமா மரியயெவ்வனபோக, மின்பெழில் விழியர்களிகணைகைக் கிலங்கிழ மென்னல நரரேரே, வன்பவமதுதனி லணுவுங்கின் சிலுஞ்சுகம் வருமெனினறைவீரே.

(ச.) அஞ்ஞானத்து = அஞ்ஞானத்தால், அழுந்துவன் = வருந்துவன், குடும்பத்தால்= குடும்ப சிந்தைகளால், ஏலவிவன் = இவ்வியல்புள்ளஜடன், (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பங்குரப்பான்மைதுக்க பீடிதத்தன்மைகளால் யாவற்றிற்கும் அமங்கலத் தன்மையையே விரித்துரைத்தல்:—உள்ளென்பது,

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகிலென்றுந்
தெள்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமைவாழு
மெள்ளற்றவின்பத் தின்றலைமேலே துன்பங்களிருக்குமென்றாற்
கொள்ளத்தக் கனவானகுற்ற மிலாப்பொருளெது குறிப்புளேற்கே.

(ப - ரை.) உள்ளத்தின் முடிமேலே = நாடுறு பொருள்களின் சிரமீது, இல்லாமை வீற்றிருக்கும் = நாசமானது எழுந்தருளியிருக்கும், உலகில் என்றும் = ஜகத்திலெப்போ

தும், தெள்ளுற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதும் தீமைவாழும் = சாத்விகமான சத்தர்மமௌலியில் எஞ்ஞான்றும் தாமததீமைகள் வாழ்ந்து கொண்டிருக்கும், எள்ளற்ற இன்பத்தின் = தள்ளத்தகாத சுகத்தினது, தலைமேலே = சிகைமீது, துன்பங்கள் இருக்கு மென்றும் = துயரங்கள் உள்ளனவாயின், கொள்ளத் தக்கனவான் = அங்கீகரிக்கத் தகுந் தன வென்னும், குற்றமிலாப் பொருளேது = தோஷமற்ற வஸ்துக்கள் யாவைதாம்; குறிப் புனேற்கே = ஆராய்வுற்ற எனக்கே; மூடர்க்குத் தக்கனவெனினும் எனக்குத்தகா வென் பது தேற்றப்பொருளாம்.

(ஸ்ரீ - வீர.) நிகழ்காலத் துளவாம் திருசியத்தின் முடிமேல் நாசமிருக்கும், இரம்மியங் களின் சிரமீது அரம்மியத்தன்மையுளதாம். சுகங்களின் மூர்த்தனியில் துக்கங்களுளவாம், எதுதான் ஒன்றையான் இனிது கொள்ளுவேன். இதனை ஸ்ரீ ஹரியார் ஆகியபெரியாரும் கூறுவர்:—சனனமோ மரணபீடிதமதிக சதரயெவ்வனஞ் சரையாலே, யினிமகிழ் வருத்த னசையினுற் சமவின்பிளைய வங்கனை மயல்களினு, னனிகுணந்தாமோ மற்சரவுலகானவ வனப்புவிகள் பாம்பவற்றுன், மனவன்றுர்ச்சனராணிதி யழிவத்துன் மருவுருதெது வெத ஞனே, இவ்வாறிருப்பினும் குரம்பைக் கூத்தாடிச்சாவன் என்பதுமாண்டே" கணத்தினிற் பாலனுகியே கணத்திற்காமவிரசிக வெவ்வனனுய்க், கணத்தினிற் றனத்தினீனனுய்க் கணத் திற் கணக்கறும் விபவனுய்ச் சரையா, லுணத்துறு முடலானடனென வலிகளுறைதருதனு வனுய்மனுட, னெணத்தகு குடும்பவீற்றினிற் புருவனெம புரியிடையுடல் விடுத்தே. என்ப தாகக் காணலாம்.

(ச.) உள்ளத்தின் = இருப்பதென்னும் பொருளினுடைய, முடிமேலே = பரியந் தத்தில். (24)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் இராஜத்தன்மை யுண்மையின் சர்வஙியமன சமர்த்த னுய் உத்தம புருடனுயுள்ள உனக்கு இளைப்பாறுதல் கூடவாமே யெனக்கடாவக் கூறல்:— விழியென்பது.

விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமாமே லோருண்டாற்
பழிப்பரியவன்னுர் முன்னென்போல் வாரென்னென்று பகரலாவ
ரிழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங்காயி
லொழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தாமுள்ளம் வேண்டில்.

(ப - ரை.) விழிப்பதுவும் இமைப்பதுவும் = கண்டிறந்து மூடலானே, சகத்தோற்றம் ஒடுக்கம் ஆம் = உலகங்களின் உதயவிலயங்களாம், மேலோர் உண்டால் = பெரியோர் உளர் ஆவர் ஆயின், பழிப்பரிய அன்னுர்முன் என்போல்வார் = பூசித்தற்குரிய அப்பெரிய வர்சந்நிதியில் என்போன்ற அற்பர், என்னென்று பகரலாவர் = எட்டிமுன் சந்தனமெனவா கதிர்முன்மின் மினியெனவா மற்றென்னென்றுதான் கணிக்கப்பெறுவர்; இதயங்கா யில் = உள்ளம் வெறுக்கில் = இழிப்பரிய = இகழ்த்தகாத. விசித்திரமாம் சம்பத்தும் = நானு வகைச் சம்பத்தும், ஆபத்தாம் = மகத்தாபத்தாம், உள்ளம்வேண்டில் = மனம்விரும்பில், ஒழிப்பரிய = அகற்றமுடியாத, விசித்திரமாம் ஆபத்தும் = நானுவகையாய ஆபத்தும், சம்பத்தாம் = சம்பத்தெனலாம்.

(ஸ்ரீ - வீர.) எவர்தம் நிமேஷண உன்மேஷணங்களானே ஜகத்துக்களின் பிரளய உத யங்களாமோ, அத்தகைய புருடருமுள்ளார், என்னின், எம்மனோரது எண்ணிக்கையேயா தாம்? இரம்மிய தாங்களினும் இரம்மியங்கள் உளவாம், நற்றிரங்களினும் நற்றிரங்கள் உள வாம், அர்ஜனரக்ஷண வியோகாதியானே சிந்தையையே முடிந்த பலமாகமடையன இப்ப

தார்த்த ஸ்ரீகளாம் ஆகலின், அவற்றை யிச்சிக்கின்றனையென்? நானாரத்ன கஜவாஜிதன தாராதி பேதத்தானே விசித்திரமான சம்பத்துக்கள் யாவையோ அவைசித்தத்திற்குச் சம் மதமேலாயின் = மனத்தான் மிகமானிக்கப் பெறுமேலாயின், அம்மகாரம் பங்களும் பகுப் பிரயத்ந லப்யங்களும் துக்க இரக்ஷியங்களும், அவசியமகல் வனவும் ஆமெனவந்தோமகா ஆபத்துக்கள் என்றே யெண்ணுகின்றேன். இங்ஙனம் தரித்திரம் பந்து இராஜ்யாதி நாச வடிவ ஆபத்துக்களும், சாதுசங்கதீர்த்த தபப்பிரயோதாதி யடைவித்தலானே விசித்திரங்க ளாய சிரேயசுகளே எனமனத்திற் சம்மதமேலாயின் அவையும் விவேகவயிராக்கியாதி மகா ரம்பங்களாகச் சம்பத்துக்களே யெனமனத்தில் எண்ணுகின்றேன், ஆகலின் அசத்தியமாய ஜகத்தில் மமதை யபிவிருத்தியே விபத்தாம், விவேகத்தானே பரிக்ஷயமே சம்பத்தாம் எனக்கருதிச் சகம்மமதை செய்யத்தகாதது என்று காணவேண்டுவ தவசியம்; என்னை; அப்தியிற் பிரதிபிம்பிதமாய இந்து வென்னப்பங்க வியற்கைத்தாய்ப் பொய்யாய் மநோவச் சின்ன சைதன்யமாத்திர விவர்த்தமாயுள்ள இவ்வுலகில் எனது இது என்பதாங் கற்பனையா மிது அபூர்வமேயாம், பதவாக்கிய வடிவமாயவர்ண பந்தியாமிது யாண்டையதோ! பய னற்றதேயாம். பெரியார் முன் எம்மாத்திர மென்பதைப் பெரியாராகிய ஸ்ரீஹரியாரும் பகர்ந்தார்:—விரிமனவீசர் முன்னிவ் விசுவத்தை விரித்தார்மற்றோர், பரிதநல் புரிந்தார் செற்றேபார்துரும் பெனவேயீந்தார், சரிசிலிஞ்ஞான்றுந்தீரர் சதுர்த்தசப்புவன முண்பா, ரிரிசிலபுரமான் வேந்தரிம்மத்ச் சுரமதென்னே.

(ச.) விழிப்பதுவும் இமைப்பதுவும் ஆகிய இரண்டினுல், செகத்தோற்ற மொடுக்க மிவை, = ஜகங்களினுடைய உற்பத்தி நாசங்களென்னும் இரண்டுகளையும், கண்டார் = செய்தவராகிய, மேலோர் = பிரமாதிகள், உளர் எனவருவித்துக் காண்க. விசித்திரமாஞ் சம்பத்தும், புத்திர வியோகாதியாற் றுக்கமுற்றவனது, இதயம் — சித்தத்தில், காயில் = வெறுப்பா மாதலின், அச்சம்பத்துகளும் ஆபத்தாம் = மகத்தான ஆபத்துக்களா மென் றெண்ணுகின்றேன். மனது துக்கிக்கின் அனைத்தும் வெறுப்பாம் என்னும் நியாயத்தினுல் என்க. விசித்திரமாம் ஆபத்தும், உள்ளம்வேண்டில் = சித்தத்தில் இஷ்டங்களாதலின், அவ்வாபத்துகளும் சம்பத்தாம் = சகல சம்பத்துக்களு மாமென் றெண்ணுகின்றேன். பிரஹ்மாதிகளின் நித்திரைப் பிரபோதங்களே ஜகத்தின் பிரளய உதயங்களாம். உள்ளம் வேண்டில் = மகாப்யுதய சிரஸ்கமாக = பேரானந்தத்தை விளைப்பதிற் றலைமையுபாயமாக, மனத்தால் ஒப்புக்கொள்ளப் பெறின். விசித்திர ஆபத்தே ஆசிரியரடைவு சிரவணுதி சகல சம்பத்துக்களும் பயக்கும் ஆமென்பது கருத்து. (25)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விடயசுகங்கட்குச் சுபத்தன்மை இல்லவேயில்லை, மற்றோ, துக்க விசேஷரூபதையே யுளதாம் என்று ஊகத்தாற் பொருத்திக்காட்டல்:—வெம்மென்பது.

வெம்மாய வாழ்வன்றோ துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விளம்புகின்ற
தம்மாவிங்கி தனிடையே யழுந்துமவர்க் கின்பமுளதாவ தெங்ஙன்
மைம்மாயை யென்னுமரம் பணையிலைபூகாய் பழத்தால் வரம்பற்றோங்க
விம்மால்செய் மனம்வேரா மிம்மனந்தான் சங்கற்ப மென்பதாகும்.

(ப - ரை.) வெம்மாய வாழ்வன்றோ = கொடிய சம்சாரமல்லவோ, துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் = துக்கங்கள் யாவற்றிற்கும் ஜன்மஸ்தானமாய், விளம்புகின்றது = கூறப் பெறுகின்றது, அம்மா இங்கு இதனிடையே = அந்தோ ஈண்டிதன்மாட்டு, அழுந்து மவர்க்கு = மூழ்கிக் கிடப்பவர்க்கு; இன்பமுளதாவ தெங்ஙன் = சுகமுண்டாவது யாங்ங

னம்? மைம்மாயை யென்னும் மரம் = மயலுற்ற சம்சாரவிருக்ஷம், பணையிலைபூகாய் பழத் தால் = சாகைபத்திரம் புஷ்பம் காய்கனிகளால், வரம்பற்றோங்க = எல்லையில்லாமல்வளர, இம்மால் செய்மனம் = இம்மயக்கத்தை யியற்றும் சித்தம், வேராம் = மூலமாம், இம்மனந் தான் சங்கற்பமென்பதாகும் = இந்தமனதோ சங்கற்பம் என்று சொல்லப்படுவதேயாம்.

(ஸ்ரீ - வீர.) சம்சாரமே துக்கங்கட்கு எல்லை முடிவென்றியம்பப் பெறும், அதன்மத்தி யில் வீழ்ந்தாழ்ந்த தேகத்தில் இன்பம்பெறுவ தெங்ஙனமாம்? ஆயின்யாங்ஙனம் சுகத்தன் மையநுபவம் எனின், ஆண்டுயுக்தியிதுவாம்:—அகிருத்திரிம மகாதுக்க சம்சாரத்தில் விவத் திதியடைந்தவர் இவ்வன்னிய மாயதுயரங்களையே அத்தியந்தம் மதுரங்கள் என உணர்வர்; கட்கவெட் டநுபவத்தினும் கசையடியநுபவம் சுகம் என்பதுபோலத் துக்கங்களையே மாது ரிய சுகங்களாக எண்ணுநிற்பர் என்பதுகருத்து. சுருதிமிருதியாதிப் பிரமாண குசலனும் மேதாவியாய். ஆராய்ச்சியாற்றலுற்றவனேனும் யான் அதம உற்கிருட்ட காட்டலோட்ட சமத்திதியடைந்துளேன், முற்றினுமே சாஸ்திரலோகப் பிரமாணவஸ்துக்களை யாராயாத தன்மையராய மூர்க்கரோடும் ஒப்பேயாயினேன்; முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயன் றும் அமர்போலவே தெளிவிலாமையிற் களிமிகுத்திருந்தும் மேற்காரியங் கருதுறாதவனுயி னேன் என்பதாம். இப்போது தனது பிரமாண குசலத்தன்மையைச் சம்சாரமூல அவதார ணத்தால் பலமுடையதாக ஆக்கலாம்:—மைம்மாயை யென்பதாதி சகத்திராங்குர சாகை யாத்மா பலபல்லவசாலியாய இச்சம்சார விருக்ஷத்திற்கு மனோமூலமகாங்குரம். அங்குரங் கள் = சங்கற்பங்கள், சாகைகள் = தேகபுவனுதிகள். ஆத்மா = சாகாதி யவயவிவிராட்டு, பலங்கள் = சுகதுக்கங்கள், பல்லவங்கள் = இராகலோபங்கள். என்னும் இவற்றுற்சோபியா நிற்கும் இச்சம்சார விருக்ஷத்திற்குச் சித்தம் மூலமாய மகாங்குரமாம். சித்தத்தினது இரக சியமும் தன்னுற்றெரியப் பெற்றதேயாமெனல்: — இம்மனந்தான் என்பது. சங்கற்பமே யஃதாமென எண்ணுகின்றேன். சகத்திரம் = ஆயிரம், மிகுதிபற்றி யென்பதாம்,

(ச.) வெம்மாய வாழ்வன்றோ = சம்சாரமே, மைம்மாயை யென்னுமரம் = இச்சம் சாரமென்னுந்தரு, அங்குரம் = இராகத்துவேடாதிகள், பனைகள் = புத்திரதாராதிகள், அதின்மூல சாகைதேகம், அதினிலைபூ = சுகதுக்க வேதுக்கள், அதின் காய்பழம் = சுக துக்கங்கள், சகஸ்திர மென்பதைப் பணையாதிகளுடன் கூட்டுக. ஆயிரக்கணக்கான அங்கு ராதிகளானே விசாலமுற்றது விருக்ஷம் என்பதாம். (26)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மரமாய்தலையுபசங்கரித்துக் கள்ளனைக்கண்டு பதிஞ்ஞை செய் தல்:—சங்கற்பமென்பது.

சங்கற்பநாசத்தா லெளிதாக மனநாசந் தானேயெய்து
மங்குற்ற மனமிறக்கிற் சநநமரணங்க ளெனுமரமுமாயு
மிங்கிப்பாலெனைத் திருடுங்கள்ளனைக் கண்டேன்கண் டேனிவன்பேர்நெஞ்சம்
பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாளுணுந் தேனின்று பொன்றுவிப்பேன்.

(ப - ரை.) சங்கற்ப நாசத்தால் = சங்கற்பத்தைச் செய்யாமையானே, மனநாசம் = மனத்தினது அழிவானது, எளிதாகத்தானே யெய்தும் = சுலபமாகச் சுயமாகவேகிடைக் கும், மங்குற்ற மனமிறக்கில் = எண்ணுமையானே தனது ஆற்றல்குன்றிய மனதானது சாவுறில், சனனமரணங்க ளெனும்மரமும் மாயும் = பிறப்பிறப்பு வடிவமான விருக்ஷமும் அழிவுறும், இங்கிப்பால் = இங்குணர்ந்து கொண்டேன், எனைத்திருடும் கள்ளனைக்கண்டேன் கண்டேன் = ஆன்மாவைச் சோரஞ்செய்யும் திருடனைக் கண்டுகொண்டேன் கண்டு

கொண்டேன், இவன்பேர் நெஞ்சம் = இத்திருடன் பெயர்மனமாம், பொங்குற்ற நெஞ்சத்தால் = எண்ணாத எண்ணமெல்லா மெண்ணி யெண்ணி யேங்குமனப் புண்ணால், நெடுநாள் நொந்தேன் = வேகுகாலம் சிரமப்பட்டேன், இன்றுபொன்று விப்பேன் = யான் அரசனாதலால் இத்தினமிதனைக் கழுவிலிடுவேன்.

(ஸ்ரீ - வீர.) சங்கற்ப உபசமனத்தால் மனத்தைச் சோஷணம் புரிவேன், ஆதனானே சம்சாரபாதபமும் சோஷத்தை யடையாநிற்கும். அந்தோஹதனாயினேன், விநஷ்டனாயினேன், மிருதமாயினேன், என்பதாகத்தானே என்னால் மறித்தும் மறித்தும் முன்னர்ச் சோகிக்கப்பட்டது யாதோ அது சென்றொழிந்ததேயாம். யானிப்போது சோகிக்கவே மாட்டேன். என்சோகிக்கவே மாட்டாயென்னின் ? உரைத்தல்:— இங்கு என்பது, விழித்துக்கொண்டேன் களித்துக்கொண்டேன் கண்டேன் கண்டேன் சோரனை. எனது பாரமார்த்திகரூப தனமாய ஆன்மாவை யபகரிப்பவனிவனே, இவன் நாமதேயம்மனமாம், இவனைக் கொல்லுவேன், கேவலம்கள்வனாந்தன்மையான் மாத்திரமிவனைக் கொல்வேனல்லேன் மற்றே, வைரித்தன்மையானும் கொல்வே னென்பார், நெடுநாள் மனத்தால் ஹதமாயினேன் = நெடுநாள் நெஞ்சத்தால் நொந்தேன் என்றார்.

(ச.) சனன மரணங்களெனும் மரம் = சம்சாரபாபம், எனை = ஆன்மாவை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தனது வித்யானந்தத்தின் பெருமையை வெளிப்படுத்தல்:— இத்தனை யென்பது.

இத்தனைநாண் மனமுத்தைத் துளைத்திலே னின்று துளைத் தியைந்தநூலாற்
சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தேனெல்லாஞ்
சுத்தபர மாநந்தந் தோற்றுவிக்கு நல்லறிவாஞ் சோதிபெற்றேன்
மெத்தவிவ னானெனதிங் கிவையெனும்பொய் யுள்ளொழித்தேன் மீண்டுநாடேன்.

(ப - ரை.) இத்தனைநாள்=இவ்வளவுகால பரியந்தம், மனமுத்தைத் துளைத்திலேன்= எனது மனதாகிய முத்தினைத்துவாரஞ்செய்திலேன், இன்று துளைத்து = இப்போது துவாரமிட்டு, இயைந்தநூலால் = பொருந்திய சூத்திரத்தால், சித்திரமாய்க் கோத்தணிவன் = விசித்திரமாகக் கோவைசெய்து அலங்கரித்துக் கொள்ளுவன், முழுதுணர்ந்த தேசிகரால் = யாவற்றையுந் தெரிந்த ஆசிரியரால், தெளிந்தேன் எல்லாம் = முழுவதும் போதிக்கப்பெற்றேன், சுத்தபரமாநந்தம் தோற்றுவிக்கும் = தூய்தாய பிரஹ்மாநந்தத்தைப் பிரகடப்படுத்தும், நல்லறிவாம் சோதிபெற்றேன் = சாதனமாகிய சச்சிதாநந்த சொரூபத்தை யடைந்தேன், மெத்த இவன் நான் எனது இங்கு இவையெனும் பொய் = மிகுந்தெழுந்து கொண்டிருந்த அயம் அகம்மம ஈண்டிவை என்பவான மித்தைத்தோற்றங்களை, உள்ளொழித்தேன் = அகத்திலும் நாடாமல் தொலைத்தேன், மீண்டும் நாடேன் = மறித்தெப்போதுமே சிந்தியேனிந்த வண்ணம்.

(ஸ்ரீ - வீர.) இத்துணைப்போதும் எனது இம்மனதாகிய முத்தாபலத்தை யலக்ஷியஞ் செய்துவிட்டேன், சித்திரம் செய்யாம லிருந்துவிட்டேன், இப்பொழுது, இலக்ஷியப்படுத்தியதாலோ, சித்திரித்ததாலோ. சமதமாதி குணயோக்கியமாயது, சூத்திரஞ்சேரத் தகுதியாயது: எனது சித்தமாகிய முத்தென்பதாம். விவிதசாதுக்களாகிய சித்தர்களானே யான் நன்றாக நானாவித உபதேசங்களால், இனிது போதிக்கப் பேற்றேன், பரமானந்த சாதனமாய ஆன்மாவைப் பின்றொடரா நிற்பேன், அநுகதிமாத்திரத்தானே பரமாநந்தமாய தனக்கே சாதனமாம், அபேதமெனினும் உபசாரத்தாற் காணதையா மென்றுணர்க, ஆக

வின் பரமாத்ம நிஷ்டையை ஒருபோதும் விடவேமாட்டேன், ஆன்மாவாகிய மணியை, யேகாந்தத்தில் அடையப் பெற்றவனேயாகிக் கண்டுகொண்டு களிப்புடன் வீற்றிருப்பேன், சரற்போதில் ஹிமவதாதிய சலங்களில் அம்புதங்கள் அஸ்தமித மாவனபோலப் பிறவிடய ஆசைகளியாவுமே அடியோடும் அழிந்தேபோயினவாம், இத்தேகமியான் எனவும், இத்தன ராச்சியாதி யென்னது எனவும், வித்தாரமாகத் தோற்றாநின்ற அசத்தியரூபத் தோற்றத்தை மெய்யுணர்வின் பலத்தால் உள்ளிருந் தொழித்தேன், வெளியிலிருந்து உட்சென்றவற்றை மீண்டும் வெளியே தள்ளினேன்.

(ச.) துளைத்திலேன் = சிக்ஷித்திலேன், துளைத்து = செவ்வையாகச் சிக்ஷித்து, இயைந்தநூலால் = சமமுதலிய குணத்தால், பரமாநந்தந் தோற்றுவிக்கும் = பரமானந்த சாதனமான, நல்லறிவாஞ் சோதி = ஆன்மாவை, இவனெனென திங்கிவையெனும் = அகம மாபிமானங்களோடு, உள் = திடமாயகத்தில் விளங்கும், மெத்தப்பொய் = மிகுந்த அசத்தியத்தையகற்றினேன். மூலம், பிறண்டு, வித்தம் = சித்ரிதம் = துளைக்கப்பெற்றது. குணம் = கோர்க்கும் நூல். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இப்போதியம்பியதைச் சுருக்கி யுபசங்சரித்து விவேககுருவை வணங்கி நிருவிகற்ப சமாதியையடைந்தான் ஜனகர்பிரான் எனல்:—பேதிக்குமென்பது.

பேதிக்கு மனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்துவென்றேன்
வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாந்த வாழ்வுபெற்றேன்
சாதித்த விவேகமே யுனைவணங்கி னேனென்று சனகர்கோமான்
சேதித்த மனவலைவெல் லாமொழித்துத் தானேசித் திரம்போனின்றான்.

(ப - ரை,) பேதிக்கும் மனமென்னும் பெரும்பகையை = உள்ளேயிருந்து துன்புறுத்தும் மனமென்று சொல்லப்பட்ட மிகவலுவுள்ள சத்துருவை, முழுவலியால் = சர்வம் பிரஹ்மமயம் என்னும் பெரும்பலத்தால், பிளந்துவென்றேன் = சொரூப நாசஞ்செய்து செயித்தேன், வாதித்ததுயரெல்லாம் மாற்றினேன் = இடர்ப்படுத்திய துக்கங்களை யெல்லாம் பொடிப்படுத்தினேன், உபசாந்தவாழ்வு பெற்றேன் = பரமசாந்தமாகிய பதத்தினை யடைந்தேன், சாதித்த விவேகமே = இதனை மேவும்படி செய்வித்துத் தந்தபகுத்துணர்வே, உனைவணங்கினேன் = உன்னைப் பன்முறை நமஸ்கரித்தேன், என்று = என்பதாக, சனகர்கோமான் = ஜனகமகாராஜாவானவன், சேதித்தமன அலைவெல்லாம் ஒழித்து = சாபலசித்திம் சாந்தியடையப் பெற்று, தானே சித்திரம்போல் நின்றான் = சுயம் பித்தியிலமைத்த பதுமைபோல நிருவிகற்ப சமாதியிலிருந் தானந்தித்தான்.

(ஸ்ரீ - வீர.) சமாதியப்பியாசத்தானே மிகவும் பலவானாகிய மநோரிபுவை எஞ்சுதலின்றிக்கொன்று, ஏழாவது பூமிவிசிராந்தி வடிவப்பரமசாந்தியை யடையாநிற்பேன், இத்துணை துணைசெய்த விவேகமே உன்பொருட்டு நமஸ்காரம் நமஸ்காரம், இந்தவண்ணஞ் சிந்தித்துக் கொண்டிருந்த அரசன் சந்நிதியில் துவாரபாலன் வந்துநின்று, ஹேதேவ! ஸ்நாநத்திற்கெழுந்தருளியாக வேண்டும், குசுமகர்ப்பூர குங்கும நீர்க்குடமங்கையர் காத்துளார், என்பதாதியாகக்கூறிப் பிரார்த்திப்ப, “எத்துணைமாத்திரம் இந்தராஜ்ஜிய மென்பது, இதனாலுண்டாம் சுகமென்று நின்றதுதான் எம்மாத்திரம்? இக்கணபங்கியால் எனக்கீண்டுண்டாம் பயன் யாதொன்றையுமே கண்டிலேன், மித்தையாய சாம்பரீமாயா ஆடம்பரமும்; மிருகதிருஷ்ண ஜலம்போன்றதும் ஆயயாவற்றையுமே விட்டொழித்து, பரமசாந்தமுற்ற நிஸ்தரங்க சமுத்திரம்போல, ஏகாந்தத்திலேயே யிருப்பேன், இவ்வசத்பிராய போகவி

ஜிரும்பிதங்களானே எனக்குண்டாயது போதும்போதும், எல்லாக் கருமங்களையும் விட்டுத்தொலைத்து, கேவலம் சுகமாக வீற்றிருப்பேன், ஹேசித்தமே! இப்போதாப்பியாச குசம் பிரமத்தினின்றும் சுகலவ ஆசுவாத சதுரத்தன்மையை யொழித்தி. ஜன்மஜராஜாட்டிய ஜாலஜம்பால சாந்தியின் பேறுண்டாம்'' என்பதாதியாகச் சிந்தித்து ஜனகமகாராஜன் சித்தத்தின் சஞ்சலத்தன்மைகளை யெல்லாம் அறநீக்கிச் சாந்தமுற்று விபிகர்ம அர்ப்பித உபமனுகித் தூஷ்ணீமாகவே எழுந்தருளி யிருந்தனன்

(ச.) மனமென்னும் பெரும்பகையை = அதிபலமுள்ள சத்துருவென்னும் மனதை வணங்கினேன். ஸ்ரீ வசிஷ்டர், என்று நின்றான் = சும்மாவிருந்தான். மூலத்தில் அதிபல வானகிப் பகைவனும் மனத்தை நெரித்துக்கொல்வேன் என்பது அன்னுவயம்.

(ஸ்ரீ - வீர - அ - கை) நிருவிகற்ப சமாதியினின்றும் எழுந்தபின்னையந்தைக் குறித்துக்கூறத் தொடங்கல்:—வாளாவென்பது.

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சனகர்பிரான் மாய்த்துநெஞ்சை
மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப்பார்த்தான்
றாளாண்மையா லியற்றும் பொருளேது கைக்கொள்ளத் தக்கதேது
கோளா னகற்பனையென் சுபாவவறி வாமெனக்குக் குறிக்குங்காலே.

(ப - ரை.) வாளாசித்திரம்போல நெடிதிருந்து = தூஷ்ணீமாகச் சித்திரப்பதுமையொத்து நீள்போது சமாதியிலிருந்து, சனகர்பிரான் = சனோபகாரியாய அம்மன்னவன், மாய்த்து நெஞ்சை = மனத்தின் சொரூபத்தை நாசஞ்செய்து, மீளாநல்லுபசாந்த நிறை நெஞ்சால் = மீண்டுமிகவும் சமசாலியாகிய மனத்தினாலே, உலகியல்பை மேவிப்பார்த்தான் = ஜகத்தியற்கையை நன்குசிந்தித்து நாடினன், தாளாண்மையால் இயற்றும் பொருளேது = பிரயத்தனத்தினாற் சாதிக்கத்தக்க வத்துயாது, கைக்கொள்ளத்தக்கது எது = உபாதேயமாயது யாது, சுபாவ அறிவாம் எனக்குக் குறிக்குங்கால் = இயற்கையாகவே சித்தாயிருக்கும் எனக்கு உத்தேசிக்கும்போது, கோளான கற்பனையென் = குற்றமுற்ற கற்பனையாதுளது?

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்த வண்ணம், ''எதனாலுதித்தவை வாழுகின்றன'' என்னுஞ் சுருதியினானே பிராணிஜீவன நிதானமாயபத்திற் சிறிதுபோது விசிராந்தியுற்றுச் சும்மாவேயிருந்து, சர்வஜன உபகாரியாய ஜனகராஜாவானவன்; மீண்டு சமசாலியாய மனத்தினாலே நன்காலோசிக்கத் தொடங்கினன், யாதுகொள்ளத் தக்கதாயுளதீண்டு யத்தனத்தால் நன்குசாதிப்பேன், எவ்வழிவில்லாததாய வஸ்துவின்கண்ணே திருதியைப் படுத்துவேன். எனக்குக் கிரியாபரத் தன்மையானே தான்யாது செய்யத்தக்கது, கிரியையற்றதன்மையாற் றான் யாதுசெய்யத்தக்கது, யாது ஜன்மத்தை யடைந்ததோ அதுதிண்ணமாக விநாசத்தை விட்டேயிராது அல்லவா! ஜந்யபாவத்திற்கு விநாசநியமத்தால் என்பது கருத்து. அசத்தினின்றும் எழுந்த இக்காயம் தொழிலோடுங் கூடுக அல்லது வினையைவிடுக. தேகசலன அசலனதசைகளில் துல்லிய ரூபமாயிருக்கும் தூய்தாயசின்மாத்திர சுபாவமுற்ற எனக்கு என்னதான் கெட்டுவிடுமோ! மூலபாடபேதம் க்ஷணம் ஸ்தித்வா, சிரம் ஸ்தித்வா.

(ச.) நெடிதிருந்து = ஞானஜீவிதனாய் நெடுங்காலமிருந்து, மாய்த்து நெஞ்சைமீளா, உலகியல்பைமேவி = உத்திதனாய், பார்த்தான் = சிந்தித்தான், ஸ்ரீஜனகன், தாளாண்மையால் = எத்தனத்தினால், இயற்றும் = இவ்விடத்துயான் சாதித்தற்குரிய, பொருளேது = யாதிருக்கின்றது, கைக்கொள்ளத் தக்கது = உபாதேயப் பொருள், சுபாவ அறிவா

மெனக்கு = இயற்கையாகவே நிஷ்களங்கமான சற்சித்தரூபமாகிய திரவெனக்கு, கற்பனை யென் = என்னகற்பனை யிருக்கின்றது = எவ்வளவுங் கற்பிக்கத்தக்கதின் றென்பது பொருள். பாடபேதம், மாய்ந்தநெஞ்சை மீளா = இறந்தமனதை மீண்டுநாடாத. (30)

(ஸ்ரீ - வீர - அ - கை.) விசிராந்தி விசாரத்தை யுபசங்கரித்தல்:—சுத்தமென்பது,

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுருவ லால்வேறு தோன்றக்காணேன்
வத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளனைத்துந்தள்ளே
னித்தமாய்த் தன்னிலையி னிற்குமென தறிவுருவி னிலையாநிற்பே
னுத்தவா றேதுவரு மதுவருக வென்றழுந்தி யொருமையானன்.

(ப - ரை.) சுத்தமாய்ச் சொரூபமாம் = தூய்தாய் அறிவுருவாம், என்னுருவலால் = எனதுவடிவமே யல்லாமல், வேறு = அயலொன்று, தோன்றக் கானேன் = பிரதீதியாகக்கண்டிலேன், வத்தியான் வாராதபொருணயவேன் = வாடியான் அடைவுறாப் பொருளில் ஆசைவையேன், வந்தபொருள் அனைத்துந்தள்ளேன் = அடைவுற்ற வஸ்து எதுவாயினும் அங்கீகரிப்பேன், நித்தமாய்த் தன்னிலையில் நிற்கும் எனது அறிவுருவில் = அழியாததாய்ச் சுவஸ்தமாயிருக்கும் என்னுடைய சித்துருவத்தின் கண், நிலையா நிற்பேன் = அசையாமற்றிதிபெறுவேன், உத்தவாறு = உற்றவண்ணம், ஏதுவரும் = யாதுபிராப்தமாமோ, அதுவருக = அஃதுண்டாகுக, என்றழுந்தி யொருமையானன் = என ஊன்றி ஏகமாயினன்=விகற்பமற்றான். வற்றி உற்றவென்பன எதுகைநோக்கி வத்தி உத்த எனவாயின.

(ஸ்ரீ - வீர,) அசம்பிராப்தமானதை யபிவாஞ்சியேன், சம்பிராப்தமானதைத் தியாகியேன், சுவஸ்தமாய ஆன்மாவின் கண்ணே யிருப்பேன், யாதெனக்குப் பிராரப்தம் தந்ததாக வுளதாமோ அதுவேயுளதாகுக, அயலொன்றும் வேண்டாம், எனக்கு எந்நிரதிசயானந்தரூப ஆந்தரமுளதோ அதுவேயுளதாகுக, பாகியமொன்றும் வேண்டாம்; ஆகலின் எழுந்து இக்காயமானது, பூர்வபூர்வ விவகாரமுறையி லடைவுற்ற பகுதமாகிய தொழிலைப் பயிலுக, அசையாமல் வைக்கப்பட்ட இத்தேகந்தான் என்னே நலமுடைத்தாம், காய்ந்தன்றோ போம், அஃதென் னின்றியமையாததா ? அன்றென்பதாம். இரஞ்சனங்களை விட்டுச் சமரூபத்தில் அழுந்தி நிட்காமமுற்ற மனம்பெற்றபோது காய அவயவஜன்னிய காரியங்கள் அசைவு அசைவின்மைகள் நுகர்வினை வயத்தால் வந்தவைகள், புண்ணிய பாவ அநுதய இலக்கணபலத்தில் ஒப்பானவைகளேயாம் அஃதெங்ஙனமெனின், கருமஜன்னியங்களாய பல ஸ்ரீகளில் மனத்தாற் கருத்துருதை போக்துருதைகளாம், அவைசாந்தமாகிய வழியோனார்கட்குச் செய்துஞ் செய்யாமையேயாம், உண்டும் உண்ணாமையேயாம். (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆராய்ந்த அரசன் உலாவியதுணர்த்தல்:—வானென்பது,

வானேகுகதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்துவந்து
தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச் சனகனெண்ணித்
தீனேய வருகாலஞ் செல்கால மிமையளவுஞ் சிந்தைசெய்யா
னானேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலோடுலாவ லுற்றான்.

(ப - ரை.) வானேகுகதிரிரவி = ஆகாயத்தில் கமனஞ்செய்யும் சகஸ்திரகிரணங்களோடு கூடிய சூரியன், நாளியற்றும்வாறென்ன = தினஞ்செய்யும் முறைபோல, வந்துவந்து தானேதோன்றிய தொழிலை = நுகர்வினை வயத்தானே தானேவந்துவந்து பிரதீதியாகிய காரியங்களை, பற்றின்றி = வாதனைக்கிட மில்லாமல், செய்துமென = செய்வோ

மென்று, சனகன் எண்ணி = ஜனகமகாராஜா சிந்தித்து, நீனேய வருகாலம் செல்காலம்= அநுபவிக்கும்படியாக வருங்காலம் சென்றகாலம், இமையளவும் = அணுமாத்திரமும், சிந்தைசெய்யான் = எண்ணன், ஊனேறு நிகழ்காலத்து ஒரிமைப்பில் = சரீரசம்பந்தமான வர்த்தமான நிமிடத்தோ, நகைதலோ டுலாவலுற்றான் = புன்னகைப்புடன் புரிதலாயினன்.

(ஸ்ரீ - வீர.) முன் மொழிந்த வண்ணம் சிந்தித்துப்பார்த்த அந்த ஜனகமகாராஜன் பிராரப்தவசத்தால் வந்ததொழிலே, தினபதிதினகரணமாறு, கருத்ருத்வ போக்துருத்வ அபிமானவடிவப் பற்றற்றவனுய்ச் செய்யவெழுந்தான். இஃதெனக்கிஷ்டம்; இஃதெனக் கநிஷ்டம் என்னுங் கற்பனைகட்கு நிமித்தபூதமாய வாசனைகளைச் சித்தத்தாற்றானே நன்ருக விட்டு நுகர்வினைவயத்துற் றவற்றைச் சாக்கிரத்தின்கண்ணே சுழுப்தனைப்போலச் செய்யத் தொடங்கினன்; தூலசூக்குமதேகாதி யபிமான அபாவமாகவே ஜாக்கிரத்துச் சுழுப்தி கட்கு விசேடமின்மையின் என்பது கருத்தாம். செய்யும்போதுஞ் சிறிது திருசிய சம்பந்த முற்றிலன், என்னே, இல்லாத பொருளோடும் என்ன சம்பந்தமுண்டாம், இவ்வண்ணம் பல ஆராய்ச்சியின் முதிர்ச்சியானே ஆண்டுத் தன்னிராச்சியத்தில் ஜனகமகாராஜனனவன், சகல காரியங்களையும் செய்தனன், என்றாலும் முன்போன்று அகந்தை மமதைகளானே மோகத்தை யடைந்திலன், கலங்காத ஞானியாய்த் தீரனுன், அதுமுதலாகவே யாவரும் புகழும் புண்ணியவானய ஜனகன் ஜீவன்முக்தனய் ஞானவிருத்தனய் லோகபராவர முணர்ந்தவனய் வாழ்ந்துவந்தனன். செய்துஞ்செய்யாத வன்போன்ற சுழுப்த அவஸ்தித னேயாய ஜனகமகீபதிக்குச் சர்வபாவங்களி னின்றும் இராகாதி வாசனைகள் எல்லாம் எல் லாவாற்றானுமே அஸ்தமித்துப் போயின, வாசனுக்ஷயபலம் பகர்தல்:—நீனேயவென்ப தாதி. வருவதை யெண்ணுவதுமில்லே, சென்றதைச் சிந்திப்பதுமில்லே; வர்த்தமான நிமிடத் தோ புன்னகையுடனே பொருந்தியதைப் பொருந்தினன், வாசனவசத்தாற் பூர்வஉத்தர அநுசந்தானம், அதனனே, பழைய அநிஷ்டகாரிகளில் வெறுப்பு, ஆகாமிப் பிரியப் பொருட்டு விருப்பு, அதனினின்றும் பிரவிருத்தி யெனச்சர்வ அநர்த்த அடைவாம். வர்த்த மான மாத்திர தரிசனமோ, துக்கத்திற்கும் உபேக்ஷையாய் அப்பிரியத்தன்மை யநுசந்தான மாகாதாமெனச் சகஜாநந்த அநுவிருத்தியானே புன்னகைகொண்டே புரிந்துலாவினன் என்பது பொருளாம்.

(ச.) பொழுதுகழித்து விளையாடினன்; யாவற்றையும் அநுசரித்தான் என்றதாயிற்று.,()

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆக்கியான உபக்கிரம பீஜத்தை நினைப்பூட்டிக்கொண்டு உபசங் கரித்தல்:—பேசிய வென்பது.

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான் பெரும்பேறு பெற்றதல்லால்
வாசியுள மற்ருென்ருல் வந்ததல்ல வாரீச மலர்க்கண்மாலே
யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடைவதல்லாற்
றேசிகரில்லாவீணர் செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொரூபம்.

(ப-ரை.) பேசியதன் விசாரத்தால் = கூறியதனது ஆராய்ச்சியினல், சனகர்பிரான்= ஜனகராஜாவானவன், பெரும்பேறு = பெரியதா யடையத்தக்க பிரயோஜனத்தை பெற்ற தல்லால் = அடைந்ததேயன்றி, வாசியுளமற்ருென்ருல் = நன்மையைப் பயக்கத்தக்க அயலொன்றினல், வந்ததல்ல = அடைந்ததல்ல, வாரீச மலர்க்கண்மாலே =தாமரையிதழ் போன்ற திருநேத்திரங்களையுடைய ஹரியின் அபரவடிவமே, ஆசிலதாய் =குற்றமற்றதாய், செவ்வியதாய் = சிறப்புற்றதாய், தனதான விசாரத்தால் = தன்னுடையதான ஆராய்ச்சி யினல், அடைவதல்லால் = பிராப்தமாவதே யல்லாமல், தேசிகரில்லா வீணர் = ஆசிரிய

றில்லா நீசர், செய்தொழிலால் பெறலாமோ சிற்சொரூபம் = சிதானந்த வடிவத்தை இயற்றும் வினையினுல் எய்தலுமாமோ.

(ஸ்ரீ - வீர.) ஹே தாமரசேக்ஷணா ! அந்த ஜனகராஜாவால் தனது விசாரவசத்தானே, எஞ்சுதலின்றி யடையத்தக்க வெல்லாமே, மறந்தகண்ட சாமீகரம்போலும் அடையப்பெற்றனவாம், வேறொரு இச்சையால் இலவாம். ஆகையினுற் பலபரியந்தம் விசாரஞ்செய்யத் தக்கதாம், இடையில் வெறுப்பினை யடைந்து விட்டுவிடலாகாது, அவ்வளவு அவ்வளவு தன்னுடைய மனத்தினுலேயே நன்காராய்க. எவ்வளவு எவ்வளவு விசாரங்களின் பயன்றன் எல்லை நன்கடையப் பெறுமோ, சற்சாஸ்திர விவேகாதி பரிஷ்கிருதங்களாய்த் தன்னுடைய ஊஹாபோஹ குசலங்களாய மதிவிருத்திகளாம் பிரஞ்ஞைக ளென்னுஞ் சகிகளானேயே; உயர்ந்தபதமானது அடையப் பெறலாம், வேறெக்கிரியையினுலுமே அடையமுடியாதாம்.

(ச.) பெறும்பேறு = அடைதற்குரிய ஆன்மபதத்தை, மற்றொன்றாலும் = மற்றொரு கிரியையானும், வந்ததல்ல = பெற்றதன்று, அவ்வேதுவினுற் சகல முமுக்ஷுக்களாலுந் தம் விசாரத்தினுலே யடைதற்குரிய ஆன்மபதம் அடையப்பட்ட தன்றி இதரக்கிரியையாலடையப் படவில்லை யென்றதாயிற்று, (33)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரஞ்ஞையினுலே யடைய வேண்டியதாய பிரமபதம் அடையப்பெறுதலின் தொடக்கத்திலிருந்தே அந்தப் பிரஞ்ஞையை வளர்க்கவே பிறமுயற்சிகளையும் உபயோகிக்கவேண்டு மெனல்:—புறவென்பது.

புறப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியிலுள்ளோர்
சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்றுமுதற் செய்யிற்பேறு
மிறப்பான வாபத்து விளைநிலமா யிருந்துதுயர் வேலையாகிப்
பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப் பிளக்கல்வேண்டும்.

(ப - ரை.) புறப் பேறுகளை வேண்டி = பாகியப் பிரயோஜனங்களை விரும்பி, இயற்றுகின்ற புண்ணியத்தே = செய்யாநின்ற யத்தனத்தை, புவியிலுள்ளோர் = உலகிலுள்ள முமுக்ஷுக்கள், சிறப்பான நல்லறிவு = விசேடமான நல்லபிரஞ்ஞை, மிகவேண்டு மென்று = மிக்வும் உண்டாகி வளரவேண்டு மென்பதாக, முதல் = பூர்வம். செய்யிற் பேறும் = செய்வார்களேயாயின் நல்ல பிரயோஜனமாம், இறப்பான ஆபத்து = பெருந் துன்பப் படுத்துவனவாய ஆபத்துகள் எல்லாம், விளைநிலமாய் = உண்டாம், பூமியாய், இருந்து = திடமுடனிலைத்து, துயர்வேலையாகி, துக்கக்கடலாகி, பிறப்பான நச்சுமர = சம்சாரமாகிய விடவிருக்ஷங்களின், வித்தாகும் = பீஜமாகும், பேதைமையை = பிரஞ்ஞா மாந்தியத்தை, பிளக்கல்வேண்டும் = விநாசஞ் செய்யவேண்டும்.

(ஸ்ரீ - வீர.) ஜனங்களால் வெளிப்பொருள் தேடுவதில் எதேமுயற்சி செய்யப்பெறுகின்றதோ அதேமுயற்சி பூர்வம் பிரஞ்ஞைவளர்தற் பொருட்டுச் செய்யத்தக்கதாம். எத்தகைய உத்யோகமோ, அத்தகையதேசாலும் அதிக சிரமம்யாதொன்றும் வேண்டியதில்லை யென்பதாம், பாடுபடாமலா இருக்கின்றோம், பட்டும் பயனில்லை, பயனுறு தொழிலன்மையின், இதனை ஸ்ரீபர்த்ருஹரியாரும் உணர்த்துவர் "பொறுமையிற் பொறுக்கே மிலத்தினது சிதபுற்சுக மகிவிழ்வினுற் போக்கேம், பொறுவினம் பொறுவாக்குளிர் வளியழற்சிப் பொங்களுர் புகழ்தவம் புரியேஞ், சிறுதனமிரவும் பகலுமே நினைந்தேஞ்சி வன்பதமில்லுயிர் செயித்தே, வறிதவ்வப்பயனுன் வஞ்சியாமுனிவர் வனைதருகருமமே வளைந்தேம்" சகலதுக்கங்கட்கும் துர்த்தசைகட்கும் பரம அவதியாகியும், ஆபத்துக்கட்கெல்லாம் உத்தமமான

கோசமாகியும், சம்சார விருக்ஷங்கட்குப் பீஜமாகியும், இருக்கும் பிரஞ்ஞாமாந்தியத்தை விநாசஞ்செய்ய வேண்டும். பிரஞ்ஞையை வளர்த்தால் அதுவேசர்வ சம்பத்தின் வைப்பிடமாம், ஆத்தியந்திக துக்கக்ஷயத்தை யாற்றும் சாதனமாம், துக்கமுதலியவற்றைப் பயக்குங் கருவியாம், கல்வியுஞ் செல்வமும் பிறவுந்தரு மென்பதை யுய்த்துணர்ந்து கொள்க.

(ச.) புறப்பேறுகளை = வாகியார்த்தங்களை, புண்ணியத்தை = எத்தனவிசேடத்தை, முதற்சிறப்பான நல்லறிவு = முன்பு பிரஞ்ஞை, பிறப்பான = சம்சாரமென்னும், பேதைமையை = பிரஞ்ஞா மாந்தியத்தை, பிளக்கவேண்டும் = நாசஞ்செய்யவேண்டும், (34)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போதங்கற்பகம் போன்றதே யெனவும் வாதையதற்பமும் வாரா தெனவும் வழங்கல்:—இலங்கென்பது.

இலங்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சரக்கறையி லிருக்கும்போதங்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போற் கணத்தினல்குந்
துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய் நல்லறிவு தோன்றினோரை
விலங்குகவ சத்தோரை யம்புகள்போற் காமாதி விகற்பந்தாக்கா.

(ப - ரை.) இலங்கிய சிந்தாமணியாம் = சிறப்புற்றோங்குஞ் சிந்தாமணியாகிய, இதயமெனுஞ் சரக்கறையில் = இருதயமாகிய கோசத்தில், இருக்கும்போதம் = இராநின்ற இப் பிரஞ்ஞை, கலங்கல் இலாவிவேகியர்க்கு=விக்ஷேபமில்லாத விவேகிகட்கு, கருதுபொருள்= சிந்தித்தபலத்தை, கற்பகம்போல் = கற்பகக்கொடிபோல, கணத்தில் நல்கும் = க்ஷணத்திற் கொடுக்கும், துலங்குவிசாரம் படைத்து = விளங்காநின்ற ஆராய்ச்சிவிளைந்து, பேதைமைபோய் = அறியாமையகன்று, நல்லறிவுதோன்றினோரை = உண்மையுணர் வுடையவரை = விலங்குகவசத்தோரை யம்புகள்போல் = காப்பாகும் கவசமுடையவரைச் சாயகங்கள்போல, காமாதி விகற்பந்தாக்கா = பலதோடாதி பாதகம் பண்ணுவாம்.

(ஸ்ரீ - வீர.) இருதயகோசத்தி லிருப்பதாகிய இனியநல் லறிவதாமெனுஞ் சிந்தாமணி, விவேகிகடமக்கிது வேண்டிய பலமெலாம் கணந்தனிலுதவிடுங் கற்பகக்கொடிபோல், கப்பலானதுகடலில் ஒழுங்காகச் செலுத்தப்பெறின் நரனைக்கரையடைவிக்கும், அல்லாக்காற் சுழன்று துன்புறுத்தும், அதுபோலவே இச்சம்சாரத்தில் மதியானது நன்றாக விவேக வைராக்கியாதி சன்மார்க்கத்தில் பொருத்தப் பெறுமேலாயின் முத்தியங்கரையை யடைவிக்கும், தீதாக இராகத்துவேட லோபாதி அசன்மார்க்கத்திற் செலுத்தப்பெறினோ ஆபத்தையேதரும், சுழன்றுவரும். கவசம்பூண்டு கொண்டவனையம் பகழிகள்போல=மோகமுழுவது மகன்று பிறஞ்ஞைமிகுந்த விவேகியை, ஆசையும் அதன்பக்ஷத்துற்றனவாய லோப மோககுரோத சிந்தாதிகளாங் கணங்களும்: அவற்றினின்றும் உதிதமாம் துவேஷசிந்தா விஷாதாதியவாய தோஷங்களும், சிறிதும் பாதிக்கமாட்டா.

(ச.) போதம் = பிரஞ்ஞையானது, கருதுபொருள் = சிந்தித்தபலத்தை, விலங்கு = தடைசெய்யும். (35)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அகங்காரமானது அதிவச்சிரமெனினும் விவேகம் விளையவிலகும், அது விளைவதும் ஆசையறினுமெனல்:—பரமவென்பது.

பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவற் றுக்களித்துப் படர்ந்துமீண்டு
திரமான வகங்கா முகில்விவேகக் காற்றுற் சிதறிப்போகும்
வரமான பதம்வேண்டிற் றன்மனத்தி னைசைமுதன் மாற்றவேண்டு
முரமான புவியைமுத லுழுதன்றோ வினைபயன்க ளுறுகின்றதே.

(ப - ரை.) பரம ஆதித்தனை=பரம அருக்கனை, மறைத்து=ஆச்சாதித்து, கறுத்து= இருண்டு, அறிவற்று = ஜடவடிவாகி, களித்து = மதத்து, படர்ந்து = விசாலித்து, மீண்டு திரமான, திருசியங்களில் மறித்தும் மறித்தும் பழகப்பழகத் திடப்பட்டுக் கொண்டேவாராநின்ற, அகங்காரமுகில் = அகங்காராம்புதமானது, விவேகக்காற்றால்=பிரஞ்ஞை வடிவ வாதத்தினாலே, சிதறிப்போகும் = பாதிக்கப்படும், வரமானபதம் வேண்டில் = மேலானபதத்தை விரும்பில், தன் மனத்தினாசை=தனது உள்ளத்திலுள்ள பேராசையை, முதல் = ஆதியில், மாற்றவேண்டும் = நீக்கவே வேண்டும், உரமானபுவியை = கடினமான்பூமியை, முதல் உழுதன்றோ = பிரதமத்தில் பண்படுத்தியே யன்றோ, விளைபயன்கள் உறுகின்றார் = உண்டாம் உண்பொருள்களாம் பலனைக் கிருஷீவலர் அடையாநிற்பர்; ஏ = இருபாலும் அவதாரணப் பொருட்டாம்.

(ஸ்ரீ - வீர.) பரமான்மவடிவ அருக்கன் றன்னை மறைப்பதுவாய், ஜடாத்மாவாய், லடக்கட்கு அபேதமுண்மையின் அம்புதபக்ஷத்தில் ஜலாத்மாவாய், விஸ்தீர்ணமாய், ஸ்வச்சமாய் நீலமாய், வளரும் அகங்கார அம்புதம் =மேகம், மதோன்மத்தமாய்த் திரியினும், பிரஞ்ஞாவாதத்தானே பாதிக்கப்படும். ஒப்பில்லாததா யுயர்ந்ததான பதத்தையடைய விரும்பிய அதிகாரியானவன் பிரதமம் இம்மதியையே லாலனஞ்செய்யத்தக்கது. பாலனைப் போல முறையாக விவேகசிக்ஷணத்தாற் சோதிக்கத்தக்கது என்பதாம்: கிருஷியின் பலமாகிய தானியாபி விருத்தியை விரும்பிய மேழிச்செல்வனால் முதல்முதலில் பிரசித்தமாக, தரையே சீர்திருத்தப் பெறுகின்றதுபோலும்.

(ச.) விவேகக்காற்றால் = பிரஞ்ஞையென்னும் மாருதத்தினால், ஆசைமுதன் மாற்ற வேண்டும் = அவாமுதலியவற்றை மாற்ற இப்பிரஞ்ஞையை முன்புவளர்க்கவேண்டும். (36)

## ஜனகராஜன் கதை முற்றிற்று.



## புண்ணிய பாவனர் கதை.

———(*)———

(ஸ்ரீ-வீர - அ-கை.) மிகத்தெளிந்து கெம்பீரமாய் எங்கணும்மேவி அத்தியாத்ம அதிகாரத்தானே சகல தேவர்களாம் இந்திரியங்கட்கும் ஈசனாய் வசியாய்த் தேஜோமயமாய பரமாத்மாவைச் சுயம் பார்த்தபோதே யெல்லாத் துக்கதிருஷ்டிகளும் அழிந்துபோமென்றிதமுரைக்கத் தொடங்கல்:—மோகவென்பது.

(ச-அ-கை.) முன்பு ஆகாசபலம் வீழ்வது போற்றெய்வகதியாற்பெற்ற சித்தர் கீதையின் சிரவணத்தினாற் சனகனுக்குச் சித்தோபசாந்தி சொல்லப்பட்டது, இப்போது முன்பு சென்ற அநேகஜன்ம சிந்தனா வசத்தாற் சித்திக்கும் ஆன்மஞானத்தினாற் சித்தத்தினது உபசமம் புண்ணியபாவனர் கதையாற் சொல்லப்படுகிறது, அதில் இப்போது சித்த உபசம உபாயங்களை யுபதேசிக்கின்றார்:—மோகமென்பது.

மோகவற்ச நாபிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோகமாசுண மிருந்தர சாள்வதோர் சூழ
லாகமேமுத லியானெனக் காணு மஞ்ஞான
மேகமாகிய பராபரந் தோன்றினு லிறக்கும்.

(ப - ரை.) மோகவந்ச நாபிக்கொடி = மோகமாகிய விடக்கொடி, மூளைத்தெழு மூலம் = உண்டாகி யோங்குவதற்கு ஹேதுவும், சோகமாசுணம் இருந்து அரசாள்வதோர் சுழல் = சோகமாகிய சர்ப்பம் எழுந்தருளியிருந்து இராஜ்யபரிபாலனம் செய்வதற்கு ஒப் பற்றுதரும், ஆகமேமுதல் யானெனக்காணும் = தேகமே முதலாயவற்றை யகம்மெனக் காணும், அஞ்ஞானம் = அறியாமையும், ஆகியது, ஏகமாகிய பராபரந்தோன்றினுல் இறக் கும் = அத்விதீயமாகிய பராபரவஸ்துவின் சாக்ஷாத்காரம் உண்டானுல் நசிக்கும்.

(ஸ்ரீ-வீர.) மோகபீஜங்களாய துர்வாசனைகளின், முஷ்டிக்கும்முஷ்டிபோல உள்ளேதிட மாகச் சங்கிராஹகங்களும், சித்தபூமியில் நடவுபெற்றவைகளும்; நானுவிதமாய அத்தியாத்மீ காதி வேற்றுமையுற்ற ஆபத்துக்களின்றுயரங்களின் விருஷ்டிகளும், விருஷ்டிபோல அகஸ் மாத்தாகஎப்பக்கங்களினின்றும் சாம்பர்களைத்தூற்றுவனவும்,ஆகியகுதிருஷ்டிகள்-அகந்தை மமதையாதிப் பிரத்தியயவடிவ இருதயக்கிரந்திகள், அந்தப் பராவரத்தைக் கண்டபோது விண்டுபோம்; பராவரம் = மாநுஷாநந்தாதி ஹைரண்ய கர்ப்பாநந்தாந்தங்களாய சுக உத் கர்ஷங்கள், அவரங்கள் = நியூநங்கள் = கீழானவை எதனினின்றும், அத்தகையது பரா வரமாம். அவ்வாறே சுருதியுமியம்பும், இதயமாமிந்த விமலகோசத்தே யிரசமாய் விளங்கு நற்பிரமந், துதயமே விடுமச்சோதியே யெல்லாச் சோதிக்குஞ் சோதியாவதுவு, மிதயமே நிகழுமிதனை மெய்கண்ட விடத்தின் மற்றிதயநோ யெல்லாஞ், சிதையுமையுறவுந் தீருமெவ் வினையுஞ் செய்யினுஞ் செய்திலனுமால். மூலசுருதிப் பொருளிதுவாம்:—இந்த ஜீவன்முக்த னுடைய பரமாத்ம ஞானத்தின் பலமிதுபகரப் பெறுகின்றது, ஹ்ருதயகிரந்தி=அவித்யா வாசனுப்பிரசய புத்தியாசிரய காமம், "காமங்கள்ளெவை யிவனிருதயத்துள்ளன" என வேறு சுருதியுமிருத்தலின்; இக்காமங்கள் இதயத்தைப் பற்றினவே யன்றி ஆத்மாவைப் பற்றினவல்ல; பித்யதே = பேதம் = விநாசம் ஆகின்றன; சித்யந்தே சர்வசம்சயா:=சர்வ ஞேய விஷயங்களாகிய சம்சயங்களும் லௌகிகர்கட்கு மரணபரியந்தமும் ஸ்ரீ கங்கையின் அருவிபோன் ெறுழுகப்பட்ட அவைதாமும். விச்சேதமாவனவாம்; அஸ்ய = சம்சயம் விச்சின்னமாகிய வித்தை நீங்கப்பெற்ற இஜ்ஜீவன் முக்தனுடைய கர்மாணி = விஞ்ஞான உற்பத்தியின் முந்தினவும், ஜன்மாந்தரத்தில் அப்பிரவிருத்த பலங்கள் உடையனவும், ஞானேற்பத்தி சகபாவிகளும், ஆகியகருமங்கள், க்ஷீயந்தே = கெட்டுப் போகின்றன; இச் சன்ம ஆரம்பகங்க ளிலவாம், பிரவிருத்த பலத்தன்மையான்; சர்வஞ்ஞமாயும் அசம்சாரியா யும், காரணவடிவமாய பரமாயும், காரியவடிவமாய அவரமாயும் உள்ள தஸ்மிந்பராவரே = அந்தப் பராவரப் பிரஹ்மத்தைநேராக யானுயிருக்கின்றேன் என்று, திருஷ்டே = கண்ட போது, சம்சாரகாரண உச்சேதமாதலின் விடுபடுகின்றுன்.

(ச.) மூலம், முஷ்டிகள் = மோகபீஜங்களை நடும் ஹேதுக்களாகிய விரல்கள் குவித்த கரங்கள், திருஷ்டிகள் = தரிசன ஹேதுக்கள், குதிருஷ்டிகள் = பிராந்திகள், முஷ்டிகள் திருஷ்டிகள்என்னும் இருபதங்களுமே குதிருஷ்டிகள் என்பதற்கு விசேஷணங்கள் என்று காணவேண்டும். மோகசோகமய அஞ்ஞானமானது ஏகபோதசுக சாக்ஷாத்காரத்தாலிறந்து போமென்பது திரண்டபொருள்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) எப்போதுஞ் சனகனைப்போல இராகவ, விவேக புத்தியினுலே தன்னைச் சர்வஜகத் துற்பத்தியாதியதிஷ்டானப் பிரஹ்மவடிவமாகச் சாக்ஷாத்தநுபவித்துப் பரமபுருஷார்த்த லக்ஷ்மியுடையவனுகவும் அதனுனே சர்வ உற்கிருஷ்ட முடையவனுகவும் ஆகுதியென் றநுக்கிரகித்து, இப்போது ஆத்மப்பிரசாத உபாயத்தில் விசாரமே முக்கியமா மெனல்:—அநித்தமென்பது.

அநித்த மிச்சக மென்பதை நாடொறு மகத்தி
னுனித்து நோக்கினர் சனகனைப் போலநுண் ணறிவாற்
றனித்த மெய்ப்பொருள் பக்குவத் தறிகுவர் தனத்தால்
மனித்த ராற்கரு மத்தினாற் றேவரால் வாரா.

(ப - ரை.) அநித்தமிச்சகம் என்பதை = இவ்வுலகமானது அத்தியந்தம் அசத்து என்பதை, நாடொறும் = நித்தியம், அகத்தில் = உள்ளத்தில், நுனித்து நோக்கினர் = அதிசூக்குமமாகப் பார்த்தவர், சனகனைப்போல = ஜனகராஜாவைப்போல, நுண்ணறிவால் = சூக்குமப் பிரஞ்ஞையால், தனித்த மெய்ப்பொருள் = கேவலமாய்ச் சுயமாய ஆத்மதத்துவத்தை, பக்குவத்து = பக்குவகாலத்தில், அறிகுவர் = உணர்வர்; தனத்தால் மனித்தரால் கருமத்தினால் தேவரால் = தனத்தினாலும் பந்துக்களினாலும் கருமத்தினாலும் தெய்வங்களினாலும், வாரா = பவபீதர்கட்குச் சரணுகதியுண்டாகா.

(ஸ்ரீ - வீர.) உலகமானது அநித்தியம் என்றும் சுழலும் இயற்கையதென்றும், நித்தியம் உள்ளே விசாரஞ்செய்யப் பெற்றவனுக்கு நேரேகாண்பவனுக்கு, ஜனகனுக்கேபோலக் காலத்தால் ஆத்மாத்தானே வெளிப்படும்;ஜனனமரண சம்சாரத்திற்குப் பயந்தவர் தமக்குச் சரண்டருவன தெய்வங்களல்ல கருமங்களல்ல தனங்களல்ல பந்துக்களல்லவாம்.

(ச.) அகத்தின் நுண்ணறிவால் = விசாரத்தினால், நுனித்து நோக்கினர் = கூர்ந்துணர்ந்தவர், பக்குவத்து = காலபரிபாகத்தால், தனித்தமெய்ப்பொருள் = சொச்சொரூபத்தை, அறிகுவர், வாரா = ஆன்மஞானம் பெறவாராது. (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விசாரத்திற்கும் மூலம் புருடப் பிரயத்தினமே யாமென்னுங்கருத்தாற்கூறல்:—சனனமென்பது.

சனன மஞ்சினர்க் கவருடை முயற்சியே சரணும்
தினமு மிங்கிவ னெனுஞ் சிறுமைதான் சிதையி
லனகமாயுல கெங்குமாம் விசால முண் டாகும்
மனனுறத் தன துயர்ச்சி தான்காண்புற வருமால்.

(ப - ரை.) சனனமஞ்சினர்க்கு = பவபீதர்கட்கு, அவருடைமுயற்சியே = அவர் தமது பிரயத்நமே, சரணும் = சரணுகதியாம், தினமுமிங்கு = நாளுமிவ்விடத்தில், இவன் நான் எனும் சிறுமைதான் சிதையில் = அயமேவ அகமென்னும் சங்கோசமானது க்ஷயமாயின், அனகமாய் = பவித்திரமாய், உலகெங்குமாம் விசாலமுண்டாகும் = புவனவியாபியாய விஸ்தாரம் உண்டாவதாகும், மனனுறத்தனதுயர்ச்சிதான் காண்புறவரும் = உள்ளத்திற் பொருந்துறுமாறு தன்னுடைய மேன்மையானது காணும்படியாகத்தோற்றும்.

(ஸ்ரீ - வீர.) மற்றோ, தனது பிரயத்னமே பவபீதர்க்குச் சரணுகதியாமன்றிப் பிறவன்றாம்; தெய்வவயத்தாற் காலத்தாற்றானேவே ஞானம் பலிக்கும், நமது பிரயத்நத்தாலென்னேயென்று யாவ ரெண்ணுவரோ அவர் நிந்திக்கத் தக்கவரேயாவர், முயற்சி விவேக வைராக்கிய விசாராதிகளிடத்தில் யாவர்தெய்வ நிட்டராவரோ; தெய்வம் பிரதிகூலமாயின் தற்பிரயத்தன சகத்திரத்தானும் உறுவதென், வெகுயத்தன சாலிகளும் தெய்வத்தாலிடையூறு செய்யப் பெற்றவராய்க் காமக்குரோத முதலியவற்றானே தட்டுக்கெட்டுப் போதலைக் காண்டலின் என்பதாதி குவிகற்பபராயணரோ; அவர்தம் மந்தமதி தொடர்புறுவ தாகாதாம் யாவற்றையுமே கெடுத்துவிடும் என்பதேக அகம்பாவத்தியாகமே பூர்ணத்மதரிசனத்தில் முக்கியமான சாதனமெனல்:— தினமுமென்பதாதி, இதுவேயான் என்பதாய இரவா

னது க்ஷயமாகுமாயின், சுயம்சர்வகதமாய தனதுபிரகாசம் விஸ்தாரமாய்ப் பிரவிருத்திக்கும்; இதுவேயான் என்பதான சுருங்கியமதி விலயமா குமாயின் அநந்த புவனவியாபியாய்த் தனது விஸ்தாரம் இணையற்றோங்கும்.

(ச.) இவனுனெனும் = தேகபரிமிதாகாரனே, நான் என்கின்ற, சிறுமைதான் = அகங்காரமானது, தனதுயர்ச்சி = சுவான்மதத்துவ ஞானம், காண்புறவருமால் = உதயமாம், தேகபரிமிதாகாரனே நானென்கின்ற நிசிதமோ மயமாதலின், அதனது க்ஷயோதயத்தில் எங்குநிறைந்த ஆத்மதத்துவஞானம் உதயமாம், என்னுஞ் சுலோகார்த்தத்தை யடக்கி மனனுறவெனக் கூறினர். (3)

(ஸ்ரீ-வீர - அ-கை,) கொள்ளத்தக்க விடயங்களி விராகமும், தள்ளத்தக்க விடயங்களிற்றுவேடமும், உடையமனமே புருடனுக்குப் பந்தமாம் அயலன்றுமெனல்:— பற்றென்பது.

பற்றுவீ டென்றிரண்டிற் பற்றலும் விடுதலுறு
முற்றவை மனத்துரூப முயர்பந்த மதுவேறில்லை
முற்றுறு பற்றுவீட்டின் மோகமுந் துயரும்விட்டுத்
துற்றுள பற்றுவீடு துடைத்தசை யாதுநிற்பாய்.

(ப - ரை.) பற்றுவீடு என்றிரண்டில் = உபாதேயம் ஹேயம் என்னும் இரண்டன் கண்ணும், பற்றலும் = கொள்ளலும், விடுதல்தானும் = விள்ளலும், உற்றவை = பொருந்தியவை, மனத்துரூபம் = மனத்தினது வடிவமாம், உயர்பந்தம் = பெரியபந்தமாம், அது = அப்பந்தம், வேறில்லை = அயலொன்றில்லையாம், முற்றுறுபற்று வீட்டின் = வாசனையை யதிகரிக்கச்செய்யும் கொள்ளத்தள்ளத் தக்கவற்றின், மோகமும் துயரும்விட்டு = மயக்கத்தையும் துக்கத்தையும் விட்டோட்டி, துற்றுளபற்றுவீடு துடைத்தசையாது நிற்பாய் = உள்ளத்தே பொருந்தியுள்ள ஹேய ஆதேய திருஷ்டிகளைத் தியாகித்துச் சேடத்தனுகி, சொச்சத் தன்மையைப் பஜிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) உபாதேயத்தைப் பின்றொடர்ந்து வீழ்தல், ஹேயத்தை யேகாந்தமாக விடுதல், எனமனத்திற்குள்ள இதுவேபந்தமாம், மற்றொன்றுமின்றும் என்றுணர்தி. ஹேயங்களிற் பெருங்கேதத்தைப் பேணவேண்டாம், உபாதேயபரனுகவேண்டாம், ஹேய ஆதேய திருஷ்டிகள் = இராகத்துவேஷாத் மகதிருஷ்டிகள், அவ்விருத்திகளை யடியோடுமகற்றி, சேடித்த அவற்றின்சான்றுய்த் ததேகநிஷ்டனுகி விக்ஷேப காலுஷ்ய சூனியத்தன்மையைப் பஜிப்பாயாக.

(ச.) பற்று = பற்றற்குரியதும், வீடு = விடுதற்குரியதும், ஆகிய, இவ்விடத்துப்பாமர திருஷ்டியால் பற்று வீடுகளின் விபாகமென் றுணரத்தக்கது. அசையாது நிற்பாய் = சமதிருஷ்டியி விருப்பாய். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது ஜீவன்முக்த இலக்கண பூதங்களாய பஞ்சதசகுணங்களைக் கூறல்:—மயலின்மை யென்பது.

(ச-அ-கை.) சமதிருஷ்டியி விருப்பவனது இலக்கணமான குணங்களைக் கூறல்:— மயலென்றது.

மயலின்மை யறித்தமின்மை மடமின்மை வருத்தமின்மை
செயலின்மை கருமமின்மை தியக்கின்மை விகற்பமின்மை
பயமின்மை துவட்சியின்மை பகையின்மை குறைவொன்றின்மை
கயமின்மை கடினமின்மை கடினமாய்க் கழற்லின்மை.

(ப - ரை.) மயலின்மை = ஆசையின்மை, அநித்தமின்மை = நித்தியத்தன்மை, மடமின்மை = ஞத்தன்மை, வருத்தமின்மை = துயரமில்லாமை, செயலின்மை = எண்ணமில்லாமை, கருமமின்மை = தொழிலில்லாமை, தியக்கின்மை = சமத்தன்மை, விகற்பமின்மை = நிருவிகற்பத்தன்மை, பயமின்மை = அச்சமில்மாமை, துவட்சியின்மை = கலக்கமில்லாமை, பகையின்மை = மைத்திரி, குறைவொன்றின்மை = சந்துஷ்டி, சயமின்மை = சித்தைமதித்தே யிருத்தல், கடினமின்மை = மிருதுத்தன்மை, கடினமாய்க்கழறல் இன்மை = இன்சொற்பகர்தல்.

(ஸ்ரீ - வீர.) ஆசையில்லாமை, அச்சமில்லாமை, மோசமில்லாமை, முற்றினுஞ்சமதை, பேசறிவுண்மை, பிறழ்மனமின்மை, காசுறுங்காயகருத் துருத்வாபினி வேசமில்லாமை விளம்புமெப்போதும், தேசுடைத் தெளிவு திருகலில்லாமை; மாசிலாத்திருதி மைத்திரியெவர்க்கும் ஆசிலாச் சுகிருத்தாயிநேந்தன்மை, பேசியமனனம்பேணிநேந்தகைமை, மீசெலாத் துட்டி மிருதுதைமிருது, பேசுதலெனவே பிறங்கிடுமெவையும்.

(ச.) மயலின்மை = ஈது எனக்கு வரவேண்டுமென்னும் பாவி விஷயேச்சை நிவர்த்தியும், அநித்தமின்மை = தேகவிலக்ஷணமான நித்தியான்ம பாவமும், மடமின்மை = பரிபூரண ஞானதிருஷ்டியும் நிஷ்டையும், வருத்தமின்மை = மகிழ்ச்சியும், செயலின்மை = பற்றற்குரியதிலும் அப்பிர விருத்தியும், கருமமின்மை = அநிஷ்டத்தினது உம் அமரிகாரமும், தியக்கின்மை = அசஞ்சலத்துவமும், விகற்பமின்மை = ஏகாக்கிரசித்தத்துவமும், பயமின்மை = சர்வபூதாபயப்பிரதானத்திஞற்றனக்குப்பய நிவர்த்தியும், துடர்ச்சி யின்மை = எவையுஞ் சுவாநுபூதிக்கவிரோத மாதலின் மதவாதிகளியாவரோடும் வழக்கின்மையும், பகையின்மை = எவர்களிடத்தும் மித்திரபாவமென்னும் மைத்திரியுங், குறைவொன்றின்மை = கிடைத்ததில் திருப்தியும், சயமின்மை = பெருமையும், கடினமின்மை = அநிஷ்டுரசித்தத்துவமும், கடினமாய்க் கழறலின்மை = பிரியவசனமும். (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மொழிந்ததை முடித்து வாதனையின் வன்மையை வழங்கல்:— வீடென்பது.

வீடுபற் றிரண்டுநீத்த மேலவ ரிடத்துமேவி
நீடுவா தனைகளின்றி நிகழ்த்திய குணங்க ளிற்கும்
பீடுறு நினைவா நூலாற் பிணிப்புற்றுப் பிறவிவேலை
யூடுற மயன்மீன்வாரு முயர்ந்தவா தனையாஞ்சாலம்.

(ப - ரை:) வீடுபற்றிரண்டும் நீத்தமேலவரிடத்து = ஹேய உபாதேய நிர்முக்தஞானிகளிடத்து, மேவி = பொருந்தி, வாதனைகளின்றி = வாதனைவழங்காமல், நிகழ்த்தியகுணங்கள் நீடுநிற்கும் = முன்மொழிந்த பதினைந்து குணங்களும் நிலைத்து இருக்கும், பீடுறுநினைவா நூலால் பிணிப்பு உற்று = பெருமைபொருந்திய அளவற்ற எண்ணங்களானே நிர்மிக்கப்பெற்று, உயர்ந்த = மேன்மையுற்ற, வாதனையாம் சாலம் = வாசனையாகியவலை, பிறவிவேலையூடுற = சம்சாரசாகரத்திற் பரப்பியவழி, மயன் மீன்வாரும் = ஆசையாங் கயல்களையள்ளாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்த பதினைந்து குணங்களும், வீடுதல் பற்றுதல் இரண்டும் விடுபட்ட ஞானிகளிடத்தில் உளவாகியுலவும் உரைத்தகுணங்க ளிருக்குமாயின் அவற்றின் வாசனையினுலேயே அவனுக்குப் பந்தமாம் எனச்சங்கிப்ப கூறல்:—நீடுவாதனைகள் இன்றியென்பது. வாசனையின் விரையாய அறியாமை யழிந்துபோனமையின் வாசனையகன்று நிற்கும் என்பது கருத்தாம். வெளிப்பொருள்களில் ஆன்மத்தன்மைப் பிராந்தியணுகாதிருத்

தற்குத்தியாகமே உபாயமாய், உள்ளவற்றிலோ அஃதணுகற்கு எப்போதும் எல்லாவகையாலும் ஆண்டு இரத்தினதத்துவ பரீக்ஷைபோலும் விசாரம் செய்யத்தக்கதாம்; இப்பாஙியப் பொருள்களை யடியோடும் விட்டு நிற்றல் நடையோடல் கண்படுத்தல் கால்விடுத்தல் ஆங்காஙம் எல்லாவகையினும் எஞ்ஞான்றும் சர்வ ஆந்தரங்களையு மாராய்க. நடந்திடினு மிருந்திடினும் நனவுறினும் கனவுறினும், படர்ந்தவிசாரம் படையாப் பாவிமனம் படைத்தவனே, இறந்தவனென்றே சுவரேயிணையில்லாப் பெரியோரே. என்பர் பெரியார். "நிற்றலிருத்தல் கிடத்த னடையோடல், பெற்றவக்காலுந் திருவருள் பேராமற், சற்றியன் ஞானந்தந்தானந் தந்தங்கவே, யுற்றபிறப்பற் றொளிர்ஞான நிட்டையே" என்னுந் திருமந்திரமு மீண்டுணர்தற்பாலது, சிந்தைகள் வடிவமாந்தந்துக்களானே பின்னப்பெற்றதும், மோகசைவாலங்களால் மலினமடைந்ததும், சமுசாரசாகரத்தே வீசப்பெற்றதும், திருஷ்ணைகளாகிய சபரிமச்சங்களைவாரிக் கொண்டிருப்பதும், ஆகியது வாசனைஜாலமாம்; இத்தகைய வாசனையாஞ யத்தை = வலையை. யாமுபதேசித்த இப்புத்திவடிவ கர்த்தாவாஞ் சலாகையினுற் சிந்திநிற்பாயென வருவதோடு அந்நுவயம்.

(ச.) நிகழ்த்திய குணங்கள், வீடுபற்றிரண்டு நீத்தமேலவரிடத்து = சமதிருஷ்டியுள்ள ஞானிகளிடத்து, வாதனைகளின்றி. நீடுமேவிநிற்கும், ஊடுற்றென்பது ஊடுற எனவிகாரமாயிற்று. மூலம், சம்சாரமெனப் பெயரியஜலத்தில் வீசப்பெற்றதும் சிந்தைகளேயாய தந்துக்களால் விஸ்திருதமும், ஆகிகவரப்பெற்றன திருஷ்ணைகளேயாய மீனங்கள் எதனுல் அத்தகையதாம் வாசனைவலை, (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) வழங்கிய வலையைச் சிந்திநிரமாய் நிற்றியெனல்: = வாதனையென்பது.

வாதனை யென்னுமிந்த வலைபுந்தி வாளாலீர்ந்து
மோதுசூறைக் காற்சிந்து முகிலெனச் சிந்திநிற்பாய்
பாதவங் குடாரத்தாலே படுப்பபோ னெஞ்சைநெஞ்சாற்
றீதறமாய்த்து மேலாம்பதத்திலே திரமாய் நிற்பாய்.

(ப - ரை.) வாதனை யென்னுமிந்தவலை = வாசனையென்று சொல்லப்பெற்ற இவ்வலையை, புந்திவாளால் ஈர்ந்து = புத்தியாகிய வாளினுல்அறுத்து, மோதுசூறைக்கால் சிந்து முகிலென = அடிக்கும் பெருங்காற்றுச் சிதறடிக்கும் மேகமென்ன, சிந்திநிற்பாம் =சின்னு பின்னப்படுத்தி விடுவாய், பாதவம் = விருக்ஷமானது, குடாரத்தாலே = கோடாரியாலே, படுப்பபோல் = வெட்டப் பெறுவதேபோல, நெஞ்சை = மனத்தை, நெஞ்சால் = மனத்தால், தீதறமாய்த்து=களங்கமறக்கெடுத்து, மேலாம்பதத்திலே = பாவனமான பதத்திலே, திரமாய் நிற்பாய் = அதிதிடமாக நிலைபெறுவாய்.

(ஸ்ரீ - வீர.) முன்மொழிந்த வாசனையாகிய வலையை இக்கூர்மையான மதிவாளாயுதத்தினுலே சிதைத்துச் சிந்துவாய். விஸ்தீர்ணதரமான ஆகாசப் பிரஹ்மபதத்தினிடத்தில், அடித்தொளிரா நிற்கும் காற்றுங் கட்கத்தால் காலத்தில் மேகமாம் வலையைச் சிதறடித்து வெட்டியெறிவாய். ஹேகல்யாண மூர்த்தியே! நீள்பயிற்சியினுலே திடமாக்கப் பெற்ற தீரத்தால், ஏகான்மத்திரபாவவடிவச் சித்ததைரியத்தால், அடைவுற்ற அதனுனே அநாதிகாலமாய் மூழ்கியிருக்கும் ஆத்மாவை யுத்தாரஞ் செய்வதிற்சமர்த்துற்ற அபரோக்ஷ சாக்ஷாத்காரயுத்தியால், இச்சம்சார விருக்ஷத்தின் மூலமாய் தோஷாங்குராஸ்பதமா யிருக்கும் வாசனு சகித அஞ்ஞானத்தைச் சிதைத்தெறிவாய். விக்ஷேப ஹேதுவாய மனதிருக்கும்போது யாங்ஙனம் மூலோச்சேதம் எனிற்கூறல்:—பாதலமென்பதாதி. முன்னர்ப் புகுத்திய இரும்போடு

கூடியபாதப அவயவக்கர்ஷ்ட வடிவக்கோடாரியானே பாதபம் வெட்டப்படுவதேபோல, நுனியிற் புகுத்தப்பெற்ற விருத்தியிற் சம்பந்தித்த பிரஹ்மசைதன்ய மனத்தானே மனத்தைக்கெடுத்து, பாவனமான பதத்தைப்பற்றி இப்போதே திரமாயிருந்து வாழ்தி, பாதத்தில் நீர்மாந்தலாற்பாதபம்,

(ச.) வாதனையென்னு மிந்தவலை = இந்தச் சிந்தனுரூபமாகிய வாதனுசாலத்தை, சூறைக்கால் = வாயுசமூகங்களால், முகிலென = மேகத்தைப்போல, சிந்தி நிற்பாய் = வியாபகபதத்திருப்பாய். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) என்றபோதினும் தத்துவவித்தின் ஜீவனசித்தியின் பொருட்டு அதன் உபாதானபூத அவித்தையெனப் பெயரியமோகம் அவசியம் அங்கீகரிக்க வேண்டும், வேண்ட அதுவே மீளச்சம்சாரத்தை விளைவிக்கும் எனின், விளைவியாதாம், மோகம்மறந்திடிற் சம்சாரம் மீண்டெங்ஙனமாம், வாசனுக்ஷயவடிவ விஸ்மரண முண்டாயபோது அதற்குப்பீஜசக்தியின்மையின்; ஆயின், சம்சாரம் அந்தமோக க்ஷேத்திரத்திற்றூனே யுண்டாகலாமே யெனின், சித்தம் மறக்கச் சம்சாரம் சிறக்கமீளவாராதாம், சித்தசம்ஸ்கார உச்சேத வடிவச்சித்த விஸ்மரணமுண்டாகிய வழிச்சேத்தியத்தின் றிலேசீட்சி சம்பவியாதாம், சித்த சம்ஸ்காரத்திற்கும் சேத்திய ஆரோப பீஜத்தன்மை யுண்மையின்; ஆயின்சித்தம் சேத்தியம் என்னும் இரண்டினையும் மறப்பதற்குயாது கொல்லுபாயமாலோ வெனின், அவற்றின் ஆஸ்தைத்தியாகமே உபாயமாமென வருளல்:—ஏகுதலென்பது.

ஏகுதல்வருத றுஞ்சல் விழித்திட லிருத்தனிற்ற
லாகியவெல்லாம் பொய்யென் றழுந்தியுள்ளா சைதீர்வாய்
சேகுறவலையுஞ் சித்தம்பகுதியாற் சித்தின்பின்னே
போகலூன் மணத்தாற் சிங்கந்தனைத் தொடர் பூசைபோலாம்.

(ப - ரை.) ஏகுதல் வருதல் துஞ்சல் விழித்திடல் இருத்தல் நிற்றல் = செல்லுதல் திரும்பப்புல்லுதல், துயிலுதல் கண்டிறந்தயிலுதல், இருக்குதல் எழுந்து தருக்குதல், ஆகிய எல்லாம் = இவைமுதலியயாவும், பொய்யென்றழுந்தியுள் = மித்தை யென்றுள்ளே நிச்சயித்து, ஆசைதீர்வாய் = ஆஸ்தையை விட்டொழிப்பாய், சேகுற அலையும் சித்தம் பகுதியால் = மிகமிகவும் சாஞ்சல்யமானமனம் இயற்கையானே ஜடமாம், சித்தின் பின்னேபோகல் = சித்தத்துவத்தைத் தொடர்ந்து நிற்றல், = ஊன்மணத்தால் = மாம்சவாசனையால், சிங்கந்தனைத் தொடர் பூசைபோலாம் = மிருகேந்திரனைப் பின்றொடரும் இற்புலி போலவாம்:

(ஸ்ரீ - விர.) நின்றுஞ் சென்றும் தூங்கியும் வாங்கியும் வசித்தும் புசித்தும் எழுந்தும் விழுந்தும், என்பனவாதிகள் அசத்தேயாம் என்றுள்ளே துணிந்து ஆஸ்தையையறுத்தெறிந்திடுவாய்; ஆஸ்தையைப் பரித்தியாகஞ் செய்யின் சமதன்மையுஞ் சித்தமாம், சமத்தன்மையை யத்தியந்தம்பற்றி அடைவுற்ற காரியத்தையாற்றி, அடைவுறாததைச் சிந்தியாமல் ஈண்டு மகிழ்வுடன் விவகரிப்பாய், இவ்வுலக முந்தானும் சிற்சத்தை மாத்திரமேயாம் நிச்சயமுடைய மனமானது, போகசிந்தையை விட்டொழித்ததாய், ஹே மகாமதியையுடைய இராகவனே! சமத்தையடையா நிற்கும். சித்சத்தை மாத்திரமே இது என யாதோதப்பெற்றதோ அதனை நிருபித்தல்:—சேகுறவென்பதாதி. இயல்பாகவே சித்தம் ஜடம் ஆகலின், தான் சித்திக்கவும் பிறவற்றைச் சாதிக்கவும் அசமர்த்த முடையதாம், ஆகவே, தன் சித்தியின் பொருட்டும் தனது விடயசித்தியின் பொருட்டும், தன் சாக்ஷிபூதமாயும் சுவப்பிரகாச சித்து

ரூபமாயும் உள்ள பாரமார்த்திகவத்துவை யநுசரிக்கும், தன்ஜீவனப் பொருட்டும் தன் புத்திராதி பரணப்பொருட்டும் மார்ச்சாரம் மாம்சமணத்தால் வனத்தில் மிருகபதியைத் தொடர்தலே போலும்.

(ச.) ஆகுவது = ஆகியசகல அவத்தைகளிலும், எல்லாம் = சகத்தனைத்தும், பொய்யென்று அழுந்தியுள் = நிச்சயித்து, அதில் ஆசைதீர்வாய் என்பதுபொருள், பகுதியால் = பிரகிருதியினாலே, சேதநவலையும் = அதிசஞ்சலமுள்ள; சித்தம் = மனமானது, மார்ச்சாலம் யானையைக் கொன்ற சிங்கத்தை மாம்சலோபத்தால் தொடர்வதுபோன் மனது விஷயலோபத்தினாற் சிற்சொரூபத்தைத் தொடர்ந்தோடு மென்பது பொருள். (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பூனைபோன் மனதும் பொருளைப் பற்றுதானவை நூக்கின் முத்தியாமென்னல்:—மடங்கல் என்பது.

மடங்கல் வீரியத்தாற் பெற்றதசை தின்மார்ச் சாலம்போற்
றொடர்ந்து சென்மனனுஞ் சித்தாற்றோன்றிய பொருளைப்பற்றும்
படர்ந்துகாண்ப வற்றைப்பற்றின் மனங்கெடாப் பந்தம்போகாத்
திடங்கொள் காண்பவற்றை நீக்கிற்சித்தம் போய் முத்தியாகும்.

(ப - ரை.) மடங்கல் வீரியத்தால் = சிங்கத்தின் வலிமைவயத்தானே, பெற்றதசை = கிடைத்த மாம்சத்தை, தின்னும் மார்ச்சாலம்போல் = உண்ணும் பூனைபோல, தொடர்ந்து செல்மனனும் = அறிவைப் பின்பற்றியமனமும், சித்தாற்றோன்றிய பொருளைப் பற்றும் = அறிவால் விளங்கியவத்துவைப் பருகும், படர்ந்து காண்பவற்றைப்பற்றின் = விஸ்தரித்துத் திருசியத்தை யாசிரயஞ்செய்யின், மனங்கெடா பந்தம்போகா = மனம்மரியாது பந்தந் தொலையாது. திடங்கொள் காண்பவற்றை நீக்கில் = திருசியத்தைத் திடங்கொண்டு நன்றாக அகற்றின், சித்தம்போய் முத்தியாகும் = மனமிறந்து வீடுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) பின்றொடர்ந்த பூனையானது சிங்கவீர்யவசத்தால் இலப்தமாய மாம்சத்தைப் புசிக்கும், அதுபோலவே, சித்வீர்யவசத்தானே பிராப்தமாய திருசியத் தன்னையும் தனது விடயத்தையும் பற்றிவாழும், ஆகுக விங்ஙன் அதனாலென்னெனின்? மனமேயசத்கற்பமாம் சிற்பிரசாதத்தானே ஜீவிதமாம், இங்ஙனமாகவே மனம் அசத்கற்பம் = சூனியப் பிராயம் மித்தையெனச் சித்தமாம். எங்ஙனம் ஜீவிதமாமெனின், ஒன்றாய அத்விதீய ஆத்மாவைமறந்து ஜகதாகாரத்தையே பாவித்து, ஜகதாகாரத்தைக் கற்பித்து அதன்வடிவாய் வாழும், அதனானே ஆன்மஸ்மிருதியை யடைந்து மீண்டும் சித்தும் ஆம் சித்தத்தன்மையைத்தியாகிக்கும் மனத்திற்குப் பிரகாச சக்திபோலும் ஸ்பந்தசக்தியும் சித்தின் அதீனமேயாம், அதனாற்றான் சித்தின் ஸ்பந்தகற்பனையே மனமென்பதும் பொருந்தல், சித்தானது சேத்தியத்தைத் தியாகிப்பதே பிரஹ்மத் தன்மையாம், எனின், விருத்தினானமே விடயபரித்தியாகத்தால் அஃதாமென்னற்க, அதனினும் உள்ளிருக்கும் சான்றேசுத்த சித்தேயஃதாதலின். இதுவே உபாதியைவிடச் சர்வசாக்ஷியாம், பந்தமோக்ஷ இரகசியம் பகர்தல்:— படர்ந்தென்பதாதி. இத்திருசியத்தைப் பற்றுதியேலாயின் அதனாற் சித்தமுடையவனாகிப் பந்தவானாவாய், இத்திருசியத்தை யிகந்து கைவிடுதியேலாயின் அதனாற் சித்தமற்றவனாகி மோக்ஷவானாவாய், ஆயின் திருசியதத்துவந்தான் என்னேயெனின்? இது திரிகுணாத்மக மாயாமயமேயாம், பற்றப்பற்றப் பந்தமேயாம், விட்டுத்தொலைத்தால் வீடேவிளையும், எவ்வாறிட்டமோ அவ்வாறுசெய்தி.

(ச.) தமக்குச் சாமர்த்திய மின்றாயினும் பூனைநரி முதலியவை சிங்கத்தை யநுசரித்தன வாய் மாமிசத்தைப் புஜிப்பதுபோல், மனதும் சிற்சாயையோடு சம்பந்தமுற்றதாய், தான் ஜடமாயினும் விஷயக்கிரகண சாமர்த்தியமுள்ளதா மென்பதுபொருள், திருசியாசிரயமே சசித்தத்துவம் பந்தவேதுவுமாம், திருசியத்தியாகமே அசித்தத்துவமும் மோக்ஷவேதுவுமாம் என்பதுபொருள். (9)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகமிதந்தீர்ந்து அசலம்போல மகிழ்வுடனிருந்து வாழ்வா யென்னல்:—யானென்பது,

யானிவை யிரண்டுமில்லென் றெண்ணி மேருவைப் போனிற்பா
யூனிறமில்லா விண்போ லுளத்தனாய் நல்லுளத்தே
தானும்வையமு மாய்க்காண்பான் காண்பன தம்மினூடே
மேனிகழ் காட்சியென்னு நின்னை நீவிடாது தேர்வாய்.

(ப -ரை.) யானிவை இரண்டும் இல்லென்று எண்ணி = அகமுமில்லை இதுவுமில்லை என்பதாகச் சிந்தித்து, மேருவைப்போல் நிற்பாய் = பொன்மலைபோ லசையாது நிற்பாய், ஊனிறமில்லா விண்போல் = மேகாதியொன்று மில்லாத ஆகாசம்போல, உளத்தனாய் = இருதயமுடையவனாய், நல்லுளத்தே = நல்ல இருதயத்தே, தானும் வையமும் ஆய் = ஆத்மாவும் ஜகத்துமாய், காண்பான் காண்பன தம்மினூடே = திருஷ்டாதிருசிய தசாந்தரத்தில், மேனிகழ்காட்சி யென்னும நின்னை = மேலாக இலங்கும் தரிசனமென்னும் நின்வடிவத்தை, நீ விடாதுதேர்வாய் = எப்போதும் பாவித்துச் சுகியாவாய்.

(ஸ்ரீ - வீர.) அகமென்னும் உட்டிருசியமும், இதமென்னும் வெளித்திருசியமும் இல்லவேயில்லை யெனத்தியானித்துக் கொண்டு அசலமென அசலனா யதிதிட முடையவனாய் நீ நிற்றி; அநந்தாகாசசங்காச இருதயமுடைய ஆத்மாவா யிருப்பாய்: நான் என்றும் இவ்வுலகமென்றும் உண்டாம் இருமைமயமாயமயக்கத்தை அடியோடும் விட்டொழித்துசேடித்து நின்றநிலையில் அதிதிடமாக நிற்பாய், அற்றேல் அவ்விரு மயக்கத்தையும் அகற்றின் யாது சேடிக்கும், யாண்டுத் திதியான துபதேசிக்கப் பெறுகின்றதோ வெனின் அதற்குரைத்தல்:—தானும் என்பதாதி. ஆன்மாவிற்கும் ஜகத்திற்கும் அந்தா திருஷ்டாதிருசிய தசாந்தரத்தில் தரிசனப் பெயரியதில் தன்னான்மாவை யெப்போதும் பாவித்தின்புற்றுவாழ்வாய், திருஷ்டாதிருசிய தசைகளின் அந்தரே = அந்தராளத்தில் என்றித்துணை மாத்திரம் கூறுவதாயின் விருத்தி ஞானத்திற்கும் அந்தராளிகத் தன்மையுண்மையின் கவர்ச்சியாம் அஃதாக வேண்டாம் என ஆன்மாவிற்குஞ் சகத்திற்கும் அந்தரென்றதாம், ஆகவே திரிபுடியநுஸ்யூதசன்மாத்திர ரூபதரிசனப் பெயரிய திரிபுடிசாக்ஷி யியற்கையதில் இராநின்ற தனதான்மாவைப்பாவித்து ஆனந்தியாய் வாழ்வாய்.

(ச.) ஆன்மா அபரிச்சின்னன் ஜகத்து அசத்தியம், என்று நிதித்தியாசனஞ் செய்து கொண்டு கிரிபோற்றிரமுடையவனாய் அநந்தாகாசம்போல் நிர்மலவிருதயனா யிருதயேசுவர கூடஸ்தனிடத்து நிற்பாய், தானும் — ஆன்மாவுக்கும், வையமும் ஜகத்துக்கும், ஆய் = மத்தியமாய், யாதொரு தரிசினமானது, காண்பான் காண்பன தம்மினூடே திருஷ்டா தசையையும் திரிசியதசையையும், பொருந்தாமல், மேனிகழ் = சின்மாத்திரரூபமாக நிகழுமோ. காட்சியென்னும் = அத்தன்மையுள்ள தரிசனரூபமான, நின்னை = நினதான்மாவை, நீவிடாது தேர்வாய் = எப்போதும் பாவித்திருப்பாய். (10)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சாக்ஷ்யத் திரிபுடிபோலும் இராசனுதித் திரிபுடிகளிலும் அதே அதன் சாக்ஷியாகவுளதென அநுசந்தானஞ் செய்யவேண்டு மெனல்:—இனியென்பது.

(ச - அ.) இவ்வர்த்தத்தை மற்றொருவழியாகக் கூறல்:—இனியென்பது.

இனியனவினிமை கொள்வானிரண்டு விட்டிவற்றி னூடே
தனிநிகழினிமை நாடித்தற் பரமயமாய் நிற்பாய்
நனிபலதுய்ப் பான்றுய்ப்ப திரண்டுக்கு நடுவே தானே
யனிசம்பற்றின்றி நிற்குமதுபற்றிய தனுணிற்பாய்.

(ப - ரை.) இனியன இனிமைகொள்வான் = சுவாதானவை சுவாதுகொள்வோன், இரண்டும் விட்டு = என்னும் இரண்டையும் விடுத்து, இவற்றினூடே = இவ்விரண்டின் மத்தியில், தனிநிகழ் = கேவலமாயிலங்கும், இனிமைநாடி =சுவாதனத்தைத் தியானித்து, தற்பரமயமாய் நிற்பாய் = நித்தியம் ஆத்மமயமா யிருப்பாய். நனிபல துய்ப்பான் = நன்ருக நானாவகையநுபவிப்பவன், துய்ப்பது = அநுபவிப்பது, இரண்டுக்கு நடுவேதானே= என்னும் இவ்விரண்டினுக்கும் இடையிற்கேவலம், அனிசம்=பகலும் இரவும், பற்றின்றி= அசங்கமாய், நிற்கும் = சாக்ஷிமாத்திரமா யிலகும், அதுபற்றி = அவ்வான்மாவை நாடி, அதனுள் நிற்பாய்= அதன்கண்ணே திடமுடையவனாக எப்போது மிருந்துவாழ்வாய்.

(ஸ்ரீ - வீர.) சுவாத்திய சுவாதகங்களை நன்குவிடுத்து. சுவாத்திய சுவாதகமத்தியிலிருக்கும் கேவலம், சுவாதனத்தைத் தியானித்து நித்தியம் ஆத்மமயன் ஆகிமாழ்வாய். அனுமிதியாதி அநுபவாந்தரங்களிலும் இவ்வண்ணம் உணர்ந்துகொள்ள வேண்டுமெனல்:—நனியென்பதாதி. அனுபவிக்கப் பெறுவதற்கும், அநுபவிப்பவனுக்கும் இடையிலுள்ள அநுபவரூபமாய்ச் சுயமாய், விடயபூதத் திரிபுடியங்கிச வியதிரிக்தமாய், அதனுள்ளிருப்பதாய், இலங்கும் ஆன்மாவை இருதயமத்தியிற் கொண்டு திடப்பிரஞ்ஞை யுடையவனாய் வாழ்தி ராமச்சந்திரனே.

(ச.) இனியன = சுவைகொள்ளற் குரியபானகாதியும், இனிமைகொள்வான்=சுவைகொள்பவனும், ஆகிய இவற்றினூடே = இரண்டின் மத்தியிலிருப்பதாய், இரண்டும்விட்டு = அந்தக் கர்த்தா கருமங்களோடு கூடாததாய், தனிநிகழ் = கேவலம் அனவச்சின்னமாய் விளங்கும், இனிமை = இரசாநுபவ ரூபமான பொருளை, நாடி = தியானிப்பவனாய், தற்பரமயமாய் நிற்றி: பரமான்மமயமா யிருப்பாய், துய்ப்பான் = அநுபவிப்பவனும், துய்ப்பது = அநுபவித்தற்குரிய அங்கனையாதியும், ஆகியவிரண்டுக்கும் நடுவேதானே=சுயமாய், அனிசம் = அனவரதமும், பற்றின்றி = கருத்துருகன்மபாவங்களோடு கூடாததாய், நிற்குமது = இருக்குமனுபவரூபத்தை, பற்றி = அவலம்பித்து, இராமா நீ, அதனுணிற்பாய் = அதன்மத்தியி லிருப்பாய். (11)

(ஸ்ரீ - வீர - அ - கை.) யாங்ஙனந்திருசிய வீழ்ச்சி, அதனாற்றான் யாங்ஙனம் சங்கற்பகமனம், எங்ஙனந்தான் அதனழிவு எனின்? பூர்வாநுபவ ஜநிததிருசிய சம்ஸ்காரமுற்போதமாகியவழி சித்தேசிறிது தூலத்தன்மையைப்போல அடைவுற்றதாகிச் சித்தமென்னுஞ் சம்வித்தால் ஆன்மாவினும் வேறாயது சித்தமாம், அப்போதே, மறித்தும் மறித்தும் மனனத்தானே அதிதிடப்பட்டுச் சங்கற்பசமர்த்த முடையதாய் மனமெனவாம் அதுவே துக்கியாம், தனக்கயலாய சத்தைச் சம்வித்தாற்றியாகிக்கப்படின் க்ஷயித்துப்போம், ஆகலின்யாவும் ஆன்மாவே யென்னும் ஞானதையப் பொருட்டு அகம்பாவத்தை யடியோடுந் தியாகிக்கவேண்டு மென்றுபதேசித்தல்:—காதலென்பது.

காதலாற் கட்டிலுய்யார் கயிற்றினாற் கட்டிலுய்வா
ராதலாசைஸபக் கட்டை யசங்கற்பத் தறுப்பாய் நானென்
றோதுபாவனையை நானென்னுத் தோர்வாளால் வீட்டி
யேதமில் சுபாவம்பாவித் தெழுபவமிலா வீடெய்தி.

(ப - ரை.) காதலாற் கட்டில் உய்யார் = திருஷ்ணையாற் பந்திக்கப்படின் விடுபடார், கயிற்றினாற்கட்டில் உய்வார் = இரஜ்ஜுவாற் பந்திக்கப்பெறின் விடுபடுவார். ஆதலால் ஆசைக்கட்டை = ஆசையாம் ஆசையாகிய கட்டினை, அசங்கற்பத் தறுப்பாய் = சங்கற்ப வர்ஜனத்தானே தியாகிப்பாய், நான் என்று ஓதுபாவனையை = அகமென்று சொல்லப் பட்ட பாவனையை, நான் என்னுததோர் வாளால்வீட்டி = அநகம் பாவனையாகிய வாளி னாலேவெட்டி, ஏதமில் = குற்றமற்ற, சுபாவம் = இயற்கை வடிவத்தை, பாவித்து = தியா னித்து, எழுபவமிலா வீடெய்தி = எழுவகைத் தோற்றமற்ற மோக்ஷத்தையடைந்து.

(ஸ்ரீ - வீர.) இவ்வுலகயாத்திரையாவுமே திருஷ்ணையாகிய சர்மக்கயிற்றினாலே கோர்க் கப் பெற்றுள்ளன வாகலின் இரஜ்ஜுபந்தத்தி னின்றும் விடுபடுவரெனினும், திருஷ்ணா பந்தத்தினின்றும் ஒருவருமே விடுபடமாட்டார்; ஆகலினிராகவ ! நீ சங்கற்பவிவர்ஜனத் தானே திருஷ்ணையைத் தியாகிப்பாயாக. சங்கற்பவர்ஜன மாத்திரத்தானே யாங்ஙனம் திருஷ்ணாத்தியாக சித்தியெனின், சங்கற்பரகிதமாக மனம்கிடையா தாதலின், மனமில தாகவே யாங்ஙனம் திருஷ்ணையின் அடைவாதல், ஆகாதாமென்பது ஊகத்தானே நிண்ணயிக் கப்பெறு மென்பதாம். இவ்வகம் பாவமயமாய திருஷ்ணையாம் அபுண்யபுஞ்சத்தைக் கத்த ரித்தெறிந்து; அநகம் பாவவடிவக் கத்தரியானே சிதைத்தென்றபடி; ஹே கல்யாணகுண கணலங் கிருதகுமர ! பவத்தின் பாதமாகியபூமியில் அதாவது பிரஹ்மத்தில், அல்லது சப் தமபூமிகைப் பேதத்தில், இயற்கையாயதில் ஆத்மபாவனைசெய்து வாழ்வாய்,

(ச.) கட்டில் = கட்டுறுவர் எனில், உய்யார் = வீடுறார், நான் என்னுததோர் வாளால் = அனகம் பாவசலாகையால், நான் என்றோதுபாவனையை = அகம்பாவமய மென்னுந் தனதுபாவனையை, வீட்டி = சேதித்து, வீடெய்தி = வீட்டிலிருப்பாய். பிர சாந்த அகிலபூத பீதியனாகிச் சம்சாரத்தின் பாரத்தில் இருப்பாயென்பதாம். (12)

(ஸ்ரீ-வீர - அ-கை,) ஸ்ரீ வசிஷ்டபகவான் தமது திருமொழிகளை யுபசங்கரித்தலும் ஸ்ரீ.இராகவர் ஞானாசிரியரது உபதேசத்தை வியந்தோதலும்:—அனைத்தென்பது.

அனைத்துயிர்க் கச்சமில்லா நிலைநிற்பாய துலவென்ன
வினைத்தொட ரகம்பாவத்தின் வேட்கைதீ ரென்றநின்சொ
னினைத்திடின் மிகவுமாழ நீடகங்கார நாசந்
தனைச்செயி லுடலமென்னு மேதுவைத் தவிர்க்கின்றேனால்.

(ப - ரை.) அனைத்துயர்க்கு அச்சமில்லாநிலைநிற்பாய் அதுல என்ன = ஹே உபமான மற்றகுணவிசிஷ்டனே ! சகலஜீவர்க்குப் பயமற்றநிதியில் திடமுற்று நிற்றியென்றருளிய போது, ஸ்ரீ இராமர்:—வினைத்தொடரகம் பாவத்தின் வேட்கைதீர் = கருமத்தொடர் பினாற்கனிந்த அகங்கார திருஷ்ணையை யகற்றுவாய், என்றநின்சொல் = எனவுபதேசிக்கும் தேவரீரது திருவாக்கியத்தை, நினைத்திடின் = சிந்தித்துநோக்கின், மிகவும் ஆழம் = அதிக கம்பீரமாக இருக்கின்றது, நீடகங்கார நாசந்தனைச்செயில் = நீண்ட அகங்கார அழிவுதன் னைச் செய்தால், உடலமென்னும் ஏதுவைத் தவிர்க்கின்றேன் = தேகமென்ற காரணத் தைத் தியாகிக்கின்றேன். ஆல் அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) அகில பூதபீதியன் அல்லவனுகி வாழ்வாய்; வாழ்பவனும் தேகத்தில் யான் என்னுந்தன்மையை விடுதல் முடியாமையின், சீடனது மரணத்தில் குருவினது கருத்துங் கூடாமையின் "இவ்வகம் பாவமயீ திருஷ்ணையைச் சேதித்து" என்பதாதி யுபதேசத்திற்குத் தாற்பரியம் துணியாதவராய ஸ்ரீ இராகவர் வினுதல்:—வினைத்தொட ரென்பதாதி. ஹேபகவன்! எவ்வகங்கார திருஷ்ணையை நீ கவரற்கவென வென்னைநோக்கிக் கூறியது யாதோ, அந்தத்தேவரீரது திருவசனமானது சுபாவகம்பீரமா யிருக்கின்றது. இந்த அகங்கார நற்றியாகம் செய்வேனுயின் ஹேபிரபுவே! அக்கால், தேகமெனப் பெயரிய சந்நிவேசத்தைச் சேடமில்லாமலே தியாகித்தவனுவேன், அதாவது, பிராண அகங்காரங்கட்கு ஒருமையின் அடைவு தேவரீராலேயே யருளப்பெற் றிருத்தலின்பிராணன்களை யெஞ்சவைத்து அகங்காரத் தியாகஞ்செய்தல் சம்பவியாமையின் பிராணன் கட்கும் எஞ்சுதலின்றியே தியாகமாகு மென்பதாம்.

(ச.) அதுலவென்ன = ஒப்பற்ற ஸ்ரீ இராகவா என்று ஸ்ரீ வசிஷ்டர்கூற, ஸ்ரீ இராமர், வினைத்தொடர் = பாவமயமான, நீரென்றது = விடுவாயென்று தேவரீர் கூறிய விவ்வசனம் மிகவும் ஆழம் = அதிகம்பீரமாம், அகங்கார நாசந்தனைச்செயில் = நான் அகங்காரத் தியாகத்தைச் செய்வேனெனில், ஆல் = அதனுல், உடலமென்னு மேதுவை = காமங்களுக்கு இருப்பிட மென்னுந்தேகத்தை, தவிர்க்கின்றேன் = சேடமறத்தியாகஞ் செய்தவனுகிறேன், தேகபந்தத்துக்கு அகங்காரமூலமாதலின், அகங்காரத்தியாகஞ் செய்யில் தேகத் தியாகமேயா மென்பது பொருள், (13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ இராகவர் தமது வினவையுபகங்சரித்தலும் அதற்கு வித்தாரமாக விடையருள விரும்பிய ஸ்ரீ வசிஷ்டபகவான் வாதனையைப் பிரித்துரைக்கத் தொடங்கல்:—அகமென்பது.

அகமென லொழிக்கிற்றனே யங்கமுமடியி வீர்ந்த
நகமென விறக்குமன்றே யென்றுயர் நாதன்கூற
மகமுனி யுரைப்பான் வள்ளால்வாதனை மாற்றுமாறு
நிகழ்வுறு தேயஞேய மிரண்டென நினைப்பர் கற்றோர்.

(ப - ரை.) அகம் எனல் ஒழிக்கில் = அகம்பாவத்தை யகற்றிவிட்டால், தானே = சுயமாகவே, அங்கமும் = தேகமும், அடியிவீர்ந்த நகமெனவிறக்கும் = மூலத்தில் வெட்டப்பட்ட பெருந்தருவைப் போலக் கெட்டுப்போம், அன்றே = என்பது துணிபல்லவா, என்றுயர் நாதன்கூற = என்பதாக உயர்ந்த ஸ்ரீ இராகவர் கூற = மகமுனியுரைப்பான் = அநேக யாக்கருத்தாவாகிய மகாமுனிசிரேஷ்டர் கூறுவார், வள்ளால் = தலைவள்ளலாகிய இராகவ! வாதனைமாற்றுமாறு = வாதனையின்றியாகப்பொருட்டு = நிகழ்வுறு= விளங்காநின்ற, தேயஞேயம் இரண்டென = தியேயத்தியாகம் ஞேயத்தியாகம் என்றிரண்டாக, நினைப்பர் கற்றோர் = பெரியோர் எண்ணுவர்.

(ஸ்ரீ - வீர.) ஜானுமானும் பரந்த மூலபந்த சுற்றுப்பற்றால் எங்ஙனம் பெரியமரமானது தாங்கப்பெறுகின்றதோ, அங்ஙனமே இத்தேகமும் அகங்காரத்தானே நன்றாகத் தாங்கப்பெறுகின்றது; அதனையே எதிர்மறை வாயிலாகத் திடப்படுத்தல்:—அகமென்பதாதி. அகங்காரக்ஷயமாயின் தேகம் அவசியமாகவே க்ஷயமாய்ப்போம், மூலமானது இரம்பத்தா லறுக்கப்பெறின் பெரிய விருக்ஷம் விழுந்துவிடல் போலவாம். ஆகலின் எங்ஙனம் நன்குதியாகிப்பேன், யாங்ஙனந்தான் ஜீவிப்பேன் சுவாமிந்! இப்பொருடன்னை யினிதாய்த் துணிந்தே செப்புவீராக செப்புவர்க் கிறைவரேஎன்று ஸ்ரீஇராகவரியம்ப ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்:—

ஹோராஜீவலோசன ஸ்ரீ இராமசந்திர ! யாண்டும் வாசனுத்தியாகம் ஞேயமும் தியேயமும் என இருவகையாக அஃதறிந்தவராற் கூறப்பெறும், ஞேயமென்பது, அறிஞர்தஞ் சமாதிகாலத்திலும் விதேக கைவல்யத்திலும் ஞனபாதிதமாம்; அதிஷ்டான மாத்திர பரிசேடவடிவம் தேயமாம் சமாதியினின்றும் எழுந்தபோது, வாக்கியஜன்னிய அகண்டாகார விருத்தியானே வாசனையோடு கூடிய அஞ்ஞானத்திற்குப் பாதமிருப்பினும், ஜீவன்முக்தி சாஸ்திர அநரோதத்தானும், பிராரப்த பலபோகசேடத்தானும், அவற்றின் நிர்வாகப் பொருட்டுப் பாதிதாநுவிருத்தியானே அவித்யாலேச பரிசேடத்திற் காதல் விக்ஷேபாம்ச அபாதத்திற் காதல், உடன்பாடுண்மையின், அநத்தியஸ்த அகம்பாவ தேகத்தாற் போகஹேது வியவகார அசித்தியாதலின், அப்போதிய அகங்கார ஆபாச அநுவிருத்திக்கு அறிஞரநுவப சித்தத்தன்மை யுண்மையின் அத்தசையில் தற்பாத அநுசந்தானத்திற்கு யத்நசாத்தியத் தன்மையானே தியானப் பிராயத் தன்மையால் தியேயம் போலுந்தியேயம் என்றிருவித மென்பது பொருள்.

(ச.) அங்கமும் = தேகமும், நகமென = பெரியபாதபம்போல், அங்கமும் என்பதில் உம்மை சிறப்புப் பொருளில் வந்தது. மகமுனி = ஸ்ரீ வசிஷ்டர், வாசனை மாற்றுமாறு = வாதனுத்தியாகப் பிரகாரம். (14)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்விரண்டினுள், தேயத்தியாகத்தைத் தெளிவுபடப் பகர்தல்:— இந்த, பொருள், என்பன.

(ச - அ - கை.) தேயஞேய மென்னும் வாசனுத்தியாக மிரண்டினுள் தேயவாதனுத்தியாகத்தினது இலக்கணங் கூறல்:—இந்த, பொருள், என்பன.

இந்தநம்பொருட் குவாணுளியாமிவை யெமக்குவாணு
ணந்துறு மிவற்ருலன்றி நாமில்லை நம்மாலன்றி
வந்தவிப் பொருள்க ளில்லையெனு மனத்துறுதி மாற்றிப்
புந்தியானு சாவியாமும் பொருள்களும் வெவ்வேறென்றே.

பொருளினேு மல்லநாமு நமதல்லப் பொருளுமென்றே
தெருளுற்றுட் குளிர்ந்தியாவும் விநோதமாய்ச் செய்யுநெஞ்சான்
மருளறு நிச்சயத்தால் வாதனை விடுதருனே
யருள்பொழி மேகமொப்பாய் தேயமென் றறிவாயன்றே.

(ப - ரை.) இந்நம் பொருட்குயாம் வாணுள் = இந்த நமது பதார்த்தங்கட்குயாம் ஜீவிதம், இவை எமக்குவாணுள் = இப்பொருள்களே எமக்குஜீவிதம், நந்துறுமிவற்ருலன்றி நாமில்லை = விருத்தியாகும் இவற்றினுலல்லாமல் நாம் இலம், நம்மாலன்றி = நம்மாலல்லாமல், வந்த இப்பொருள்கள் இல்லையெனும் = கிடைத்த இந்தப்பொருள்கள் இலவாம் என்பதான, மனத்துறுதி மாற்றி = உண்ணிச் சயத்தைத்தியாகித்து, புந்தியால் உசாவி = மனதினுல் விசாரித்து, யாமும் பொருள்களும் வெவ்வேறு என்றே = நாமும் வஸ்துக்களும் வேறுவேறு என்பதாகவே துணிந்து; அதனுல்,

பொருளினேுமல்ல நாமும் = பதார்த்தத்தினேும் நாமும் அல்ல, நமதல்லப்பொருளும் என்றே = எமதல்ல இந்தப்பொருளும் என்றுதானே, தெருளுற்று = உணர்ந்துணர்ந்து, உட்குளிர்ந்து = அந்தர்சீதளமாகி, யாவும்விநோதமாய்ச் செய்யும் நெஞ்சால். எல்லாக்காரியங்களையும் லீலையாக இயற்றும் மனத்தினுலே, மருளறு நிச்சயத்தால் = மயக்கமற்ற துணி

பினுலே, வாதனைவிடுதல்தானே = வாசனைத்தியாகஞ் செய்தலே, அருள்பொழிமேக மொப்பாய் = தயையே பெய்யும் கார்முகில்போன்ருய் ! தேயமென்றறிவாயன்றே! தேயத் தியாகமென் றறிந்துகொள்வாய்.

(ஸ்ரீ - வீர.) விவேகி திருஷ்டியினுனே ஈண்டு இரண்டு அகம்பிரத்தியய கோசரங்கள் பிரதீதியாகின்றன, தேகேந்திரிய புத்திமனவபேக்ஷை யுடையதாகிச் சங்காதாத் மாவாய்ப் புத்திரமித்திர களத்திரதனுதி மமதை நிரூபகமாம் ஒன்று; மற்றென்றே அகண்டைகசுபாவ மாய், அவஸ்தாத்திரய மரணமூர்ச்சை ஜன்மாந்தர சாதாரணமாய்ச் சின்மாத்திர சுபாவமாய் விவேகபரிசிஷ்டமாம்; அவற்றுள் ஆதியதன் சொரூபத்தை முதலில் விசாரித்து நிர்த்தார ணஞ் செய்யத்தக்கது எனல்:—இந்தவென்பது.

இத்தேகேந்திரி யாதிகட்கும், பாகிய அன்னபானுதிகளாய உபபுக்த பதார்த்தங்கட்கும், சங்காதாத்மா வென்பது பொருள். இத்தேகாதிகளும் அன்னுதிகளும் எனது ஜீவிதம் = சொரூபசித்தி நிமித்தம்; இதனுனே இவைகளானன்றி யான் எவ்விகார பதத்திலும் பிரசித் தனுகேன் என்னுலன்றி யிவைகளுமிலவாம் என்றுள்ளே பிரதமமாகிய அகம்பதார்த்தத் தின் நிச்சயஞ்செய்து மனத்தோடு கூடப் பிருத்தக் கரணத்தில் அத்தியந்தம் அசத்துருவ மேயாய சங்காத ஆன்மாவை விசாரித்து, இரண்டாவதில் இனிதெஞ்சிய சித்துருவத்தில் அகம்பதார்த்தத்தினன் அல்லன், எனக்கிப் பொருள்களிலவாம் என்னும் நிஷ்கிருஷ்ட போதத்தால் அவ்வாறே பாவித்தபோது எப்பாவனுத்மாவாய வாசனுத்தியாக முளதோ அதுதியேயம் எனவெம்மாற் கீர்த்திக்கப் பெற்றதாம்; செயலை விளையாட்டாகச் செய்து கொண்டு, உட்சீதள மாயமதியினுலே எத்திண்ணமான வாசனுத்தியாக முளதோ அதுதி யேயமெனப் புகலப்பெறும். மூலம்:—க்ருத்வா என்னுமிடத்து த்யக்த்வா என்று சங்கிரக வாசிட்டப்படி பாடமிருப்பின் எளிதிற் பொருளாமென்று தோற்றுகின்றது.

(ச.) மனத்துறுதி = அகங்காரத்தை, உசாவி = முன்பு விசாரித்து, புத்தியால்=மன தோடுகூடமாற்றி = தியாகஞ்செய்து.

தெருளுற்று = பாவிக்கில், யாவும் = சகலகிரியையும், இவ்விரண்டு கவிக்குங்கருத் துரை:—ஆன்மாவுக்குத் தேகாதிகளோடு ஒன்றற்கொன்று சம்பந்தாபிமானரூபமான அகங் காரத்தை விசாரபூர்வகம் மனதுடன்றி யாகஞ்செய்து தேகாதிபதார்த்தங்களுக்கும் எனக் கும் ஒரு சம்பந்தமுமின்றென்று பாவிக்கின் உட்குளிர்ந்து இராகத்துவேடாதி ரகிதமான புத்தியாற் கிரியையைச் செய்பவனுக்குவரும் இவ்வாதனுத்தியாகமே, தேயமெனப்படும்

(ஸ்ரீ-வீர - அ-கை.) முதலாவதாய வாசனுக்ஷயத்தைமொழிதல்:—தனதென்பது.

(ச-அ-கை.) ஞேயவாசனுத்தியாக விலக்கணங் கூறல்:—தனதென்பது.

தனதுவாதனை மாண்டெல்லாஞ் சமமதா நெஞ்சாற்பண்ணி
யெனதெனு துடலைநீக் கினிந்தவாசனை நாசந்தா
னனகமா ஞேயமாகு மகங்கர மயமதான
வினவுவாதனையை முற்றும் விநோதமாய் விட்டோர் மேலோர்.

(ப - ரை.) தனது வாதனைமாண்டு = தன்னுடைய வாசனையை க்ஷயஞ்செய்து, எல் லாம் சமமதா நெஞ்சாற்பண்ணி = யாவற்றையுஞ் சமமாகவுணர்ந்து, எனது எனுது உடலை நீக்கின் = தேகத்தை என்னுடையது என்றிடாதகற்றின், இந்தவாசனை நாசந்தான் = இவ்வாசனுக்ஷயமானது, அனக ! பாவமற்ற பவித்திரமூர்த்தியே ! மாஞேயமாகும் = மாக்ஷி மைதங்கியஞேய மெனப்பெறும், அனகமாம் எனப்பதச் சேதமேல் ஞேயத்திற்கே சிறப்

பாம், அகங்கரமயமதான = அகங்காரமயமாகிய, வினவுவாதனையை = விசாரித்துற் றன் ளத்தக்க வாசனையை, முற்றும் = அடியோடும், விநோதமாய் = லீலையினாலேயே, விட்டோர் = விடுத்தவர், மேலோர் = ஜீவன்முக்தராவர்.

(ஸ்ரீ - வீர.) எல்லாவுலகையும் சமமாகிய பிரஹ்மபாவமாகச் சாக்ஷாத் காரஞ்செய்து பூமிகையப்யாசமுறையில் எவ்வாசனக்ஷயத்தைச் செய்து மமதையற்று; அகந்தையற்று நிருவிகற்பக சமாதியுற்றுதல் பிராரப்த க்ஷயத்தினலாதல் எல்லாவாற்றானும் தேகத்தைவிடுதல் யாதொன்றுளதோ அது ஞேயவாசனக்ஷயமெனப் பெயரியதாம் ஆண்டிரண்டாவதை யுதாகரித்தல்:= அகங்கரமென்பது. அகங்காரமயமாய வாசனையை, லோகசங்கிரகத்துக்குத் தக்கபடியாய வியவகாரலீலையானே விடுத்து இருப்பவர் ஞேயவாசனத் தியாகமுடையவராவர்.

(ச.) சமமதா நெஞ்சால் = பேதரகிதமான புத்தியால், தனது வாதனைமாண்டு, வாசனையை நாசமாம்படி, பண்ணி, எனதெனுது = நான் எனதென்னும் பாவனையற்றவனாய், உடலையெல்லாம் = தூலசூக்ஷும காரணபேதத்தால் மூவிதமான தேகத்தையும் நீக்கில் இந்தவாசனை நாசந்தான் = இவ்வாசனத்தியாகம், ஞேயமென்று சொல்லப்படும், அனகமாம் = இது மாசின்மையதாம், மகிமையுள்ள இராம எனினுமொக்கும், (17)

(ஸ்ரீ - வீர.) இரண்டு தியாகங்களின் பயனையும் பகர்ந்து இரண்டும் ஒன்றற்கொன்று விஞ்சாதெனல்:—தீரர் என்பது.

(ச-அ-கை.) இங்ஙனங்கூறிய தியாகமிரண்டையும் சீவன்முக்தர் விதேகமுக்தர் இடங்களில் விபாகஞ்செய்கின்றார்:—தீரர் என்பது.

> தீரராமவரே தேயத் தியாகஞ்செய் சீவன்முக்தர்
> வேரறத் தொழில்களோடே வாதனை விட்டுள்ளாறித்
> தூரமாஞேயம் விட்டோர் துகளறு முத்தராகும்
> வீரனேயிவை யிரண்டின் விடுதியுந் தம்மிலொக்கும்.

(ப - ரை.) தீரராம் அவரே = அகங்காரத்தை யொழித்த தைரியவான்களே, தேயத் தியாகஞ்செய் = தியேயசந்தியாகிகளாய, சீவன்முக்தர் = ஜீவிதமுக்தராவர்கள், வேரறத் தொழில்களோடே = நிர்மூலமாக வினைகளோடும், வாதனைவிட்டு = வாசனையையும் விடுத்து, உள்ளாறி = சமமடைந்து, தூரமா = வெகுசேய்மையி லேகுமாறு, ஞேயம்விட்டோர் = ஞேயத்தியாகம் செய்தவர், துகளறு முத்தராகும் = குற்றமற்ற முத்தராவர், வீரனே = வீரத்தைச் சேகரித்த இராகவனே! இவையிரண்டின் விடுதியும் = இவ்விரண்டு தியாகங்களுமே, தம்மிலொக்கும் = ஒன்றோடொன்று ஒப்பாகவே யொளிரும்.

(ஸ்ரீ - வீர,) தியேயத்தியாகியே ஜீவன்முக்தனெனச் செப்பப்பெறுவன்; ஆதியதை யறைதல்:—வேரறவென்பது மூல அஞ்ஞானத்தோடுகூடத் தொழில்களையும் விடுத்து, வாசனையையும் விட்டுச் சாந்தியையடைந்து, இருப்பவன் ஞேயத்தியாகமயன்=ஞானத் தாற் பாதிக்கப்பெற்ற வாசனையோடுகூடிய அஞ்ஞான பரிசிஷ்ட சின்மாத்திரப் பிரதானன், என்றுணர்தி, அவனையே முக்தன் எனவும் இரகுநந்தனனே நீயறிவாய். கூறியதையே விரித்தருளுவார் வீரனே யென்றருளினர்:—ஜீவன்முக்தர்களாய் மகாத்மாக்களாய்ச் சுஜனர்களாயிலங்கி ஞானவீரம்வாய்ந்த ஜனகாதிகள் தியேயமென்னும் அவ்வாசனத் தியாகத்தைச் செய்து விவகாரலீலையால் வாழ்கின்றனர். உபசாந்தியை யடைந்த விதேகமுக்தர் ஞேக்மென்றுரைத்த வாசனத்தியாகத்தைச் செய்தோ, பராவரமாய பிரஹ்மத்திலேயே இருக்கின்றனர். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இயம்பிய இரண்டு தியாகங்களையும் பெருமைப் படுத்தியுரைத்தல்:—தேயமென்பது,

தேயஞேயத் தின்றியாகங்கண் முத்தர்பாற் செறிவ
தேயஞேயத் தின்றியாகங்கள் பிரமத்தைச் சேர்ந்த
தேயஞேயத் தின்றியாகங்க ளிடரெலாந் தீர்ந்த
தேயஞேயத் தின்றியாகங்கள் தேடருஞ் செல்வம்.

(ப - ரை.) தேயஞேயத்தின் தியாகங்கள் = இவ்விரண்டு தியாகங்களுமே, முத்தர் பாற்செறிவ = முக்தபதத்தி விருப்பனவாம்: தேயஞேயத்தின்றியாகங்கள்= இவ்விரண்டும், பிரமத்தைச் சேர்ந்த = பிரஹ்மத் தன்மையை யடைவுற்றனவாம், தேயஞேயத்தின்றியாகங்கள் = இரண்டும், இடர் எலாந்தீர்ந்த = சகலதுக்கங்களு மில்லனவாம்: தேயஞேயத்தின்றியாகங்கள் = என்னுமிவை, தேடரும் செல்வம் = கிடைத்தற்கரிய ஐசுவரியங்களாம்.

(ஸ்ரீ - வீர.) தேயஞேயத் தியாகங்களிரண்டும் ஜீவன்முக்தர் விதேகமுக்தர் பாலிருப்பனவாம், ஆனந்த பிரஹ்மமயமாவனவாம், சகல அனர்த்த நிவிர்த்தி வடிவமாவனவாம். ஹே அனகனே! சமாதியாரூடனுகிய யுக்தமதி, வியுத்தான விவகாரவானுகிய அயுக்தமதி, என்னும் இவ்விருவருமே இன்பமாக இளைப்பாறி யிருப்பர், அவித்யாமல நிர்முக்த பிரஹ்மத்தின் கண்ணே கேவலமிருப்பர்; ஆயின்யாவன் சிறந்தவன் என்னின்? ஒருவன் ஒளிராநின்ற உடம்பினனுகி வியுத்திதனுயிருப்பன், மற்றொருவன் சாந்ததேகனுகிச் சமாகிதனுயிருப்பன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) விவகரிக்கும் முக்தனது இலக்கணங்களை யியம்பல்:—சூழுறு மென்பது.

(ச-அ-கை.) ஜீவன்முக்த இலக்கண மியம்பல்:—சூழென்பது.

சூழுறுமின்ப துன்பந் தொடர்வுறி லொருகாலத்து
மாழுதன் மிதத்தலில்லா வவர்களே சீவன்முத்தர்
கேழுயர் மகிழ்ச்சியச்சஞ் சினமின்மை பொறுமைகேத
மூழுறு மிவற்றை நோக்கா வுளத்தினர் சீவன்முத்தர்.

(ப - ரை.) சூழுறும் இன்பதுன்பம் தொடர்வுறில் = நுகர்வினை வயமாயிடைவிடா மற் சுகதுக்கங்கள் வந்து தொந்திக்கினும், ஒருகாலத்தும் = எப்போதும், ஆழுதல் மிதத்தல் இல்லா = மகிழ்ச்சிவாட்ட மற்றுள்ள, அவர்களே சீவன்முக்தர் = அத்தகையர்களே ஜீவன் முக்தர்கள் எனப்பெறுவார்கள்; கேழ் உயர் மகிழ்ச்சி = மிகுந்த ஐசுவரியாதியால் உண்டாய சந்தோஷம், அச்சம் = பயம், சினம் = குரோதம், இன்மை = தீனத்தன்மை, தரித்திரம், பொறுமை = சகியாமை, கேதம் = துயரம், ஊழுறும் = என்பன வாதியாய்ப் பிராரப்த வயத்தால் வந்துற்ற, இவற்றை = இப்பொய்களை, நோக்கா = இலக்ஷியஞ் செய்யாத, உளத்தினர் = சித்தத்தினர், சீவன்முத்தர் = சீவிக்கும்போதே வீடுற்றவர்.

(ஸ்ரீ - வீர.) நிரந்தரம் காலத்திற்குத் தத்தக்கவாறு வினைவயமாகச் சுகதுக்கங்கள் வந்து வீழ்ந்துகொண்டே யிருப்பினும், மகிழாமலும் வாடாமலு மிருப்பவனே சீவன்முக்தன் எனப்பெறுவன்; விருப்பு வெறுப்புக ளில்லாதவனுய், அஞ்ஞதிருஷ்டியானே இஷ்ட அநிஷ்டத் தன்மையன்வாகச் சம்மதித்த வத்துக்களிற் றுயின்றான் போன்று சரிப்பவனே சீவன்

முக்தன் எனப்பெறுவன்; ஈண்டுத்தேகத்திலும் அதன் சம்பந்திகளிலும் யான் எனவும் என தெனவும், தள்ளத்தக்க கொள்ளத்தக்க சடங்குகள் எனவும், உள்ள தொந்தங்களியாவும் எவன்றனுள்ளே எள்ளளவுமில்லாமல் இரிந்து கரிந்துபோயினவோ அவனே சீவன்முக்தன் எனப்புகழப் பெறுவன்; ஹர்ஷம், அமர்ஷம், பயம், குரோதம், காமம், கார்ப்பண்யம் முதலிய திருஷ்டிகளானே யாவனதுள்ளம் சிறுபான்மையும் தீண்டப்பெறுமல் அறிவாகவேயிருக்குமோ அவன்வாழும் போழ்தே முக்தனென வாழ்த்தப் பெறுவன்.

(ச.) சூழுறும் = தன்னைச் சூழாநின்ற, இன்பதுன்பம் = சுகதுக்கங்களும், ஆழுதல் மித்தல் = சந்தோஷமும் கிலேசமும்; மூலம்:—வஸ்து திருஷ்டிஷு=இஷ்ட அநிஷ்ட தரிசனங்களில், அமர்ஷம் = ஈண்டு அஹாந்திவடிவ ஈர்ஷ்யையாம், குரோதம் = பரதிரஸ் காரரதியானே மனத்தினது பிரஜ்வலனம், காமம் = அபிலாஷை, கார்ப்பண்யம் = ஷ்தைந்யம். (20)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதுவுமது:—சுழுத்தியென்பது.

சுழுத்திபோ லாறிநின்ற பாவனைத் தொழிலினுலே
பழுத்தநெஞ் சதனுனீங்காச் சாக்கிரம் பயில்வோர்நாளும்
விழுத்தகுகலைகள் சூழ்ந்தமதி யெனமே லோர்மேவ
முழுத்தமும் பிரிவிலோரே முக்தரென் றுரைக்கத்தக்கோர்.

(ப - ரை.) சுழுத்திபோலாறி நின்ற =துயில்பவனைப்போல் மிகவுஞ் சாந்தமாகியுள்ள, பாவனைத்தொழிலினுலே=பாவவிருத்தியினுலே, பழுத்தநெஞ்சதனுல் = அசங்கமானமனத்தினுல், நீங்காச் சாக்கிரம்பயில்வோர் = சந்ததம் விழித்து விவகரிப்பவர், நாளும் = எப்போதும், விழுத்தகுகலைகள் சூழ்ந்தமதியென =சோடசகலைகளும் நிறைந்த பூர்ணசந்திரன் என்ன, மேலோர்மேவ = பெரியோர் பொருந்த, முழுத்தமும் பிரிவிலோரே = எப்போதும் வேறு பெருதவரே; முத்தரென் றுரைக்கத்தக்கோர் = ஜீவன்முக்தர் என்பதாகக் கூற யோக்கியர்.

(ஸ்ரீ - வீர.) பாவவிருத்திகளாய பதார்த்தங்களிலுள்ள ஆஸ்தைகள் எவனுல் துயில்பவனைப்போலப் பரமசாந்தப் படுத்தப்பட்டனவோ, எவனுக்கு அவ்வகையாய சேதசோப லக்ஷிதத்தானே விழித்திருத்தலாமோ, ஜாகரத்திலும் எப்போதுந்திதியாமோ, (பாவத்தில்க்தவிகுதி) யாவன்றான் எஞ்ஞான்றும் இயற்கையாய மகிழ்ச்சியினுனே பூர்ணகலைகளையுடைய் சந்திரனைப்போல மிகத்தெளிவாக இனிது சேவிக்கப் பெறுவனே, இயல்பாகவே மிகமலர்ந்த சந்தோஷவதனனு யெப்போது மிலங்குவானே, உவன் இவ்வுலகின் கண்ணே ஜீவன்முக்தன் எனப்புகழப் பெறுவன்! ஏகாதசதிவசம்.

(ச.) சாக்கிரம் = சாக்கிரா வஸ்தையிலும், சுழுத்திபோல் = சுழுத்தியவஸ்தையிருப்பதுபோல் பாவனை = சந்தோஷக் கிலேசாதிபாவனை, ஆறிநின்ற = நிவிர்த்தித்திருக்கும், தொழிலினுலே = விருத்தியினுலே, பழுத்த நெஞ்சதனுல், பரிபக்குவமான மனதோடு, நீங்கா = கூடினவராய், பயில்வோர் =இருப்பவர், மேலோர்=அறிஞர்களால், மூலம் = தேஜ = முமுக்ஷுவால், மேவி = பொருந்தி, முழுத்தமும் = கணமும், பிரிவிலோர் = பிரிவுபடாதவர். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ இராமரது இங்கிதங்களால் விதேகமுக்த இலக்கண ஜிஞ்ஞாசையை யுணர்ந்து, அது ஒருவடிவமாதலினுனே இலக்கணுதி யில்லாமையின், வாக்கு சுட்டுக்குண்டீபாவ உக்தியினுனே நிரதிசய சுவப்பிரகாச பூமானந்த மாத்திர வசிஷ்டம்

அதன் சொரூப இலக்கணமாம் எனக்குறிப்பித்துக்கொண்டு ஜீவன்முத்தி யிலக்கணங்களி லேயே அவசியங் கொள்ளத்தக்கனவான விசேடங்களைத் தெரிந்துகோடல் வேண்டும் என, ஆயின்ஜீவன் முக்தர்கட்கு அவ்வவ்வர்ணாசிரம உசிதகர்ம பலதிருஷ்ணையுளதேல், அஞ்ஞர் கட்கேபோலும் அப்போகப் பொருட்டு மீண்டும் தேகபந்தமுமாம், இலதேல், பிரவிருத் தியே யுண்டாகாதாம், பிரயோஜனங் குறியாது மந்தனும் பிரவிருத்தியான், என்னும் நியா யத்தான், எனவருந்தோடத்தை யகற்றும் பொருட்டு, ஞானியஞ்ஞானிகளின் பிரவர்த்தக மாயசுத்த அசுத்ததிருஷ்ணை வைலக்ஷண்யத்தை யுபபாதிப்பவராகி உரைத்த இலக்கணத் திலேயே திருஷ்ணைகளை விரித்துரைத்துக் கொண்டு பிண்டமாக்கிக் கூறல்:—புறப்பொரு ளென்பது.

புறப்பொருள் விட்டாலுள்ளே பூண்டமாலென்று சொல்வர்
மறப்பற வனைத்தும் விட்டான் மாண்டமா லென்றுசொல்வர்
திறப்பட வெனக்கீதாக வென்றெழுஞ் சிந்தையாசை
துறப்பில்பொன் விலங்காமித்தைத் துவக்கறத் துடைத்தல் வேண்டும்.

(ப - ரை.) புறப்பொருள் விட்டால் = பாகியப் பொருள் விட்டால் உள்ளே பூண்ட மால் என்றுசொல்வர் = உள்ளேபற்றிய ஆசை என்றுகூறுவர், மறப்பற அனைத்தும் விட் டால் = மறவாம லியாவற்றையும் விட்டால், மாண்டமாலென்று சொல்வர் = இறந்த இச் சையென் றியம்புவார்கள், திறப்பட = இவ்விதமாக, எனக்கீதாக = எனக்கிது உண்டா குக, என்றெழும் சிந்தையாசை =எனவுதிக்கும் பாவனையாகிய திருஷ்ணையே, துறப்பில்= விடமுடியாத, பொன் விலங்காம் = தங்கச்சங்கிலியாம், இத்தைத்துவக்கறத் துடைத்தல் வேண்டும் = இதனையடியோடு கெடுத்தல் வேண்டும்.

(ஸ்ரீ - வீர.) பாகியார்த்த வியசனலம்படத்தன்மை. வாசனைபொருமிய வாசையே பந்தமெனப்படும், சர்வார்த்த வியசனம் விடுபட்டவிழைவே முத்தியென மொழியப்பெறும். விடயப்பிராப்திக்கு முன்னரும், விடயநாச உத்தரகாலத்திலும், எத்திருஷ்ணையினுடைய இராகவிரகாதியாலாயதுக்க சூனியத்தன்மை யுளதோ, விடயப் பிராப்திகாலத்திலும் அத் துக்கக்கிளர்ச்சி யிலதாயின் அதுவே சாசுவதமாய முத்தியெனப்பெரியோராற் பேசப்பெறும் இது உண்டாகுக எனக்கு என்றுள்ளேயாதொரு இத்தகைய பாவனையுளதாமோ அத்திருஷ் ணையைச் சிருங்கலையென் றுணர்தி, அதற்கேற்ற வினையையும் அங்ஙனமேயறிதி மகாமதி யோய்! ஆகலின் இதுதனை யழித்திடல் வேண்டும்.

(ச.) ஸ்ரீ வசிஷ்டர்:—உள்ளே = சிந்தையானது, புறப்பொருள் விட்டால் = வாகி யார்த்த வாசனைகளோடு மலரின், பூண்டமால் என்று சொல்வர் = பந்தேச்சை யென்பர், மறப்பறவனைத்தும் விட்டாம் = சர்வார்த்த விசனங்களைத் தவிர்ந்தால், மாண்டமாலென்று சொல்வர் = மோக்ஷேச்சை யென்பர். இச்சையின் சொரூபத்தைக் கூறல்:—சிந்தை = அப்பாவனையே, ஆசை = இச்சையும், துறப்பில் பொன்விலங்காம் = பந்தமும் பந்த ஏதுவுமாம் என்பது பொருள். (22)

(ஸ்ரீ - வீர - அ-கை.) நிற்கு நிலையை நிச்சயப்படுத்தல்:—சத்தென்பது.

சத்தசத் தென்னப்பட்ட சகலபாவனையி லென்றுங்
கொத்தற வாசைமாற்றிக் குறைவில்பே ருளத்தனாகிச்
சுத்தநல் லுதாரமான சொரூபத்தி னிற்பாய்பெத்த
முத்தமா மாசையின்ப துன்பங்கண் முழுதுநீக்கி.

(ப - ரை.) சத்து அசத்து என்னப்பட்ட சகல பாவனையில் = உள்ளது இல்லது என்று சொல்லப்பெற்ற எல்லாப் பாவங்களிலும், என்றும் = சந்ததம், கொத்தற வாசைமாற்றி = உள்ள அனைவற்ற ஆசைகளேயும் அடியோடுங் கெடுத்து, குறைவில் பேருளத்தனுகி = யாதொரு குறைவுமில்லாத பரம உதாரமுடைய மனத்தனுகி, சுத்த நல்லுதாரமான = தூய் மையாய்ப் பரமானந்தம் பயப்பதில் அதிக உதாரம்வாய்ந்த, சொரூபத்தில் = நினது வடிவத்தில், நிற்பாய் = ஸ்திதிபெறுவாய், பெத்தம் முத்தமாமாசை = பந்தாசைமோக்ஷாசை, இன்பதுன்பங்கள் = சுகதுக்கதசைகள், முழுதும் நீக்கி = யாவற்றையும் விடுத்து; நிற்பாய்.

(ஸ்ரீ - வீர.) சத்துக்கள் அசத்துக்கள் என்னப்பட்ட சர்வபாவங்களிலும் எப்போதும் அவ்விவ்வாசையை விட்டுத்தொலைத்து, பரம உதாரமகாமனத்தினர் பரம உதாரஜீவன்முக்தி பதத்தை யடைகின்றனர். கட்டுப்படுத்துவ வாய உடம்பாதிகளின் ஆசையையும், அதன் நிவிருத்தியாய் மோக்ஷ ஆசையையும், தியாகித்து, பந்தமித்தியாத்வ நிச்சயமாகியவழி அதன் நிவிருத்தியின் அநாசை யுண்மையின், விழித்துக்கொண்டவன் கனச்சங்கிலிக்கட்டுவிடு தலையை விரும்புவதில்லை யன்றோ என்பதுகருத்து; சுகதுக்க தசைகளேயும் தியாகித்து, சுக துக்கதசைகட்கும் மித்தியாத்வ நிச்சயமே ஈண்டுத்தியாகமாம்; சத்தசத்தாசையையும் தியாகித்து, கலங்காத பெருங்கடல்போல இருப்பாய்.

(ச.) பெத்த முத்தமா மாசை = பந்தேச்சையும் மோக்ஷேச்சையும்! இன்பதுன்பம் = சுகதுக்கமும், முழுதும் = சத்தசத் திச்சையுமாயும் வினைத்தையும், நீக்கி. (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நுதலியதை முடித்துக் கூறப்பெறும் நிச்சயநான்கனுள் முதனிச்சயத்தை மொழிதல்:—பேனமென்பது.

(ச-அ-கை.) மானவகேள் என்பது முதலிய மூன்று பாதத்தோடு மூன்றுகவிகளால் அகங்காரத்தை நான்குவிதமாகப் பிரித்துரைத்தல்:—பேனமென்பதாதி.

பேனமுந் திரையுமில்லாப் பெருங்கடல் போலநிற்பாய்
மானவகேண் மற்றொன்று மாசிலாவிசார முள்ளோர்க்
கானநிச்சய நாலுண்டா மடிதலை மட்டுநானே
யீனலுற்றவர் தாய்தந்தை யென்பதோ ரறுதிதானே.

(ப - ரை.) பேனமுந்திரையும் இல்லாப் பெருங்கடல்போல நிற்பாய் = அகிலமும் அகற்றி அலைநுரையாதியற்ற அகண்டாகார ஆழியென்ன அமர்ந்திருப்பாய், மானவ! மனுவங்கிசத்தை விளக்கவவதரித்த இராகவ! கேண் மற்றொன்று = வேறொன்று விளம்பக் கேட்பாயாக! மாசிலாவிசாரமுள்ளோர்க்கு = குற்றமற்ற ஆராய்ச்சி யுள்ளவர்கட்கு, ஆன நிச்சயம் நாலுண்டாம் = உண்டாகும் நிச்சயங்கள் நான்குள்ளனவாம். அடிதலைமட்டும் நானே = பாதமுதல் மஸ்தகபரியந்த மாத்திரந்தான் யான், ஈனலுற்றவர் = என்னையீன்றவர், தாய்தந்தை = அன்னையும் பிதாவுமாவர், என்பதோர் அறுதிதானே = என்னுமித்தொரு நிச்சயம் அநேக ஜன்மப் பழக்கத்தாற் சுயமாயே யுண்டாம்.

(ஸ்ரீ - வீர.) ஹே இராமச்சந்திர! மற்றொன்று = கூறப்படும் நான்குவிதநிச்சய பேதத்தைக் கேட்பாய்; அதனையேகூறல்:—மாசிலா வென்பது, மனசினிலென்றே யிருக்கலாம் மூலமிருத்தலின். மனத்தில் விசாரமுடைய புருடனுக்குப் பராகாரமாய் நான்குவித நிச்சயமுண்டாஞ் சாதுவே. கால்முதல் தலைவரையே யான் மாதாபிதாக்களான் மகிழப்பெற்றிட்டது, என்பதேக நிச்சயமாம், பரமாவேச்சுருதித்திச் சார்வாகன் ஆராய்ச்சி யிற்றலைப்

பட்டான் எனமகிழ்ந்தார் போலும் நால்வருட்படுத்தினர். அல்லது விஜாதீயசங்கியா பூரணமாதலுமுண்டு; அகங்காரசாமியம் பற்றியெனினு மமையும்.

(ச.) அவற்றிற்பாத மஸ்தகபரியந்தனே நானெனென்பது முதலாவது. (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முதலாவதன் பயனைமொழிந்து, இரண்டாவத னிலக்கணமியம் பிப்பயனையும் பகர்தல்:—கன்றிய வென்பது.

கன்றியபந்த மாகுமிது மெய்ம்மை கருதாவற்றா
னின்றனவ னைத்தின்மேலோ னெல்லின்வா லினுஞ்சற்றேநா
னென்றிரண் டாவதான நிச்சயமெய்து மென்னி
லொன்றிய முத்தியுண்டா முத்தமர்க் குடைமையாகும்.

(ப - ரை.) கன்றிய பந்தமாகும் இது =இயம்பிய இவ்வகங்காரம் துன்புறுத்தா நின்ற பந்தமாம், மெய்ம்மை கருதாவாற்றால் = அசத்தைக் கண்டுகொண் டிருத்தலான், நின்றன அனைத்தின்மேலோன் = சர்வபாவங்களி னின்றும் அதீதன், நெல்லின்வாலினும் சற்றே நான் = நெல்வாலுனியினும் நெடிது நுண்மையன்யான், என்று இரண்டாவதான நிச்சயம்= என உண்டாம் இரண்டாவதான துணிபு, எய்தும் என்னில்=கிடைக்குமாயின், ஒன்றிய முத்தியுண்டாம் = ஆனந்தம் நிறைந்த மோக்ஷமான துண்டாம், உத்தமர்க்குடைமை யாகும் = சற்புருடருக்குச் சம்பத்தாயாம்.

(ஸ்ரீ - வீர.) முதனிச்சயவடிவத் தேகாத்மமதியானது பொய்ப்பொரு ளைக்கமிக் கிருத்தவின், பெருந்துயரத்திற்குரிய பந்த ஹேதுவாம். தேகேந்திரியாதி பேதங்களி யாவற் றினும் அதிரிக்தன் நுண்மயிர் நுனியினும் நுண்ணியனேயான், மூலம், தனு = சூக்குமம்= ஸ்தௌல்யரகிதம், என்னுமிது இரண்டாவது நிச்சயமாம் மோக்ஷத்தின் பொருட்டுச் சற் புருடருக்குண்டாம்: துவம் பதார்த்தசோதன விதியினனே இதற்கு மோக்ஷ ஹேதுத் தன்மையாம்.

(ச.) சர்வாதீதமான பரமசூக்குமன் யான் என்பது இரண்டாவது.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மற்றிரண்டையும் மலர்தரல்:—புவியென்பது.

புவியெலா மெனதுருபம் பொன்றுத லிலனுனென்று
குவிவறக் காண்டன் மூன்றாநிச்சயங் குறைவில்வீடா
மவியுறுமுலகு நானுமனைத்தும் பொய் விண்போலென்றுந்
தவிர்கில மென்றனலா நிச்சயுந் தனிவீடாகும்.

(ப - ரை.) புவியெலாம் எனதுருபம் = ஜகத்ஜாலங் களியாவும் என்னுடையவடிவம், பொன்றுதல் இலன் நான் என்று = அக்ஷயன்யான் என்பதாக, குவிவறக்காண்டல் = சங் கோசமில்லாமல் நோக்குதல், மூன்றாம் நிச்சயம் = மூன்றாவது துணிபாம், குறைவில் வீடாம் = பரிபூரணமோக்ஷத்தைப் பயப்பதாம், அவியுறும் உலகும் நானும் அனைத்தும், அழிந்துபோகாநின்ற ஜகத்தும் யானும் என்னுமியாவும், பொய் = மித்தை, விண்போல் வியோமசமமாகத் தோற்ற மற்றனவேயாம், என்றும் = எப்பொழுதும், தவிர்கில மென் றல் = விடுகில மெப்போது முள்ளேம் என்றிருத்தல், நாலாம் நிச்சயம் = நான்காவது துணிபாம், தனிவீடாகும் = கேவலம் மோக்ஷமே பலமாகவுடையதாம்.

(ஸ்ரீ - வீர.) ஜகத்ஜால பதார்த்தாத்மா சர்வமுமேயான் நாசமற்றவனியான் என்னும் இத்தகையது மூன்றாவது நிச்சயமாம், ஹே இரக்ஷத்வஹ! இது மோக்ஷத்தின் பொருட்

டேயாம்; இதற்கும் ஆத்தியாத்மிக பரிச்சின்ன ஆன்மத்தன்மை மயனீக்கத்தானே தற்ப தார்த்தத்தோடே சோதனசம்பவத்தால் மோக்ஷோப யோகமாம். அகமாதல் ஜகத்தாதல் சகலமும் சூனியம் வியோம சமமெஞ்ஞான்றும், என்றுண்டாதல், நான்காவது நிச்சயமா மிது அன்னியம் மோக்ஷசித்தியின் பொருட்டாம்; அகமென்றது ஆத்தியாத்விக பரிச்சேத உபாதியாம், ஜகத்தென்றது ஆதிதை விகாதி யுபாதியாம், எஞ்ஞான்றும் = காலத்திரயத் திலும், இது சர்வநிருசிய பாதாத்ம நிச்சயமாம். இந்நான்குவித நிச்சயங்களுள் முதலாவது பந்தத்தின் பொருட்டாம், பிறமூன்றும் சுத்தபாவனையானே யெழுந்தனவாகி மோக்ஷத் தின் பொருட்டாம் என இயம்பியதாயிற்று.

(ச.) சர்வான்மகன் நானென்பது மூன்றாவது. நானும் ஜகத்தும் ஆகியவனைத்தும் சூனியமே யாதலின் வியோமம்போற் சர்வவிகற்பாதீதன் நானென்பது நான்காவதாம். (26)

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருஷ்ணபேத நிரூபணத்தில் இதன் விபாகத்திற்குயாது பிரசக்தியெனின்? உரைப்பதாம்:—பெத்தவென்பது.

பெத்தவாசை யதாமுன்னே பேசுநிச்சயம தொன்றுஞ்
சுத்தவாசை களாமூன்று நொய்யவாய்த் துகளில்சீவன்
முத்தர்பால் விளங்குமிந்த மூன்றினு ளெல்லாநானென்
றொத்ததோர் நிச்சயத்தை யுறிற்பின்னை யுள்ளஞ்சோரா.

(ப - ரை.) பெத்த ஆசையதாம் முன்னேபேசும் = பத்தயோக்கிய திருஷ்ணைவடிவ மாய் முதலில் உரைத்த, நிச்சயமதொன்றும் = நிச்சயமாகிய அஃதொன்றும், சுத்த ஆசை களாம் மூன்றும் = தூயதிருஷ்ணை வடிவங்கள் வாய்ந்தபின் மூன்றும், ஆம், நொய்யவாய்த் துகளில் சீவன் முத்தர்பால் விளங்கும் = இவை அதிசூக்கும முடையனவாய் மைத்திரி யாதி நிறைந்த ஜீவன் முத்தரிடத்தி விலங்குவனவாம், இந்த மூன்றினுள் = பின்மூன்றி னுள்ளும், எல்லாநானென் றொத்ததோர் = எல்லாவடிவமா யிருப்பவனியானே யென் னும் சமதிருஷ்டி வடிவமாய, நிச்சயத்தை = துணிபை, உறில் = சாரில், பின்னை = மறு படி, உள்ளஞ்சோரா = மனத்தில் வாட்டம் மன்னுறமாட்டாது.

(ஸ்ரீ - வீர.) இந்நான்கின் மத்தியில் முதலிலுரைத்தது திருஷ்ணைக்குப் பந்தயோக் யதைதருவதாம், இஃதிருந்தே திருஷ்ணைக்குப் பந்தகத்தன்மை யுண்மையின் இதுவே பந்தஹேது வென்பது பொருளாம். சுத்தமாய்த் தோடமற்றனவாய திருஷ்ணைகளை யுடையனவாய பின் மூன்று நிச்சயங்களும் சொச்சங்களாய்ச் சீவன்முக்த விலாசிகளாம். அவற்றுள் மூன்றாவதன் பிரயோஜனத்தைக் கூறல்:—இந்த என்பதாதி. சர்வம் ஆத்மா அகமேவ என்னும் நிச்சயம் யாதுளதோ ஹேமகாமதியை யுடையோய்! அதனைக்கொண்டு பயின்றால் மறுபடிவிஷாதப் பொருட்டாகான் என்பது எமதுகருத்தாம். எங்குமியானென எல்லாம் யானெனத் தங்குமதியினன்றான் பிறந்திறவான்.

(ச.) இவைகளின் மத்தியில் முதலாவது பந்தயோக்கிய இச்சையை அநுசரித்திருத்த லின் பந்தப்பொருட்டேயாம் =ஹேதுவேயாம், மற்றைய மூன்றுமோ; தூய இச்சையோடு கூடியிருத்தலின் ஜீவன் முக்தர்களிடத்தே விளங்குவனவாம். கொள்ளத்தகுந்த அம்மூன்ற னுள்ளும் சர்வான்மா நானென்னும் நிச்சயம் மேலானதெனல்: —எல்லா மென்பது. சர்வ மும் அகமும் ஆன்மாவே யென்னும் எந்நிச்சயமுளதோ என்பதன்வயமாம் மூலத்தில். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) நான்காவதற்குச் சூனியவாதி மதம் புகுதலை விலக்கி விளம் பல்:—சூனியமென்பது.

(ச-அ-கை.) சூனியவாத சங்கையைத் தவிர்த்தற்குச் சூனியமென்பது முதலிய சப்தங்கள் எப்படியும் சிதான்ம பரியாயங்களாம் என்றுகூறல்:—சூனியமென்பது.

சூனியம் பகுதிமாயை பிரமஞ்சிற் சோதிஞான
மீனமில் புருடனுன்மா வீசானன் சிவமேநித்த
மானவை யென்னலா மொன்றிரண் டெனுமகல்பேதத்தால்
வானுயர் சகம்படைக்கும் விநோதத்தால் வளருமொன்றே.

(ப - ரை.) சூனியம் பகுதிமாயை பிரமம் சித்சோதி ஞானம் ஈனமில்புருடன் ஆன்மா ஈசானன் சிவமேநித்தம் ஆனவை என்னலாம் = சூனியம் பிரகிருதிமாயை பிரஹ்மம் விஞ்ஞானம் சிவம்புருடன் ஈசானன் என்பதாதி சப்தங்களானே வாதிகளால் நித்திய ஆன்மாவே நிகழ்த்தப் பெறுகின்றதாம், ஒன்று இரண்டு எனும் அகல்பேதத்தால்=அத்வைதத்வைதமென்னும் விரிந்த வேற்றுமையானே, வானுயர் சகம்படைக்கும் விநோதத்தால் = ஆகாசாதி உயர்ந்த உலக நிர்ம்மாண லீலையால், வளரும் ஒன்றே = ஏகமே விஜ்ரும்பணமாம்.

(ஸ்ரீ - வீர.) சூனியம் தத்பிரகிருதிமாயை பிரஹ்மம் விஞ்ஞானம் எனவும், சிவம் புருடன் ஈசானன் என்பதாதி சப்தங்களானே, சூனியர் யோகியர் சுருதிமுடிவினர் தானியல் கணிகர்சைவர் சாங்கியர் முதலிய வாதிகளானே, ஜன்குசேடித் தினிதுநிற்கும் நித்திய ஆன்மாவே அறையப் பெறுமலது அவஸ்து அறையப்பெறுதாம், உண்மையில் எல்லாம் உயர்ந்தாய்க்காணும், தண்ணீரன்றித் தரங்கமுன்னுளவோ, விண்ணிய லன்றியோவியம்விளங்குமோ,பண்ணிய கடககேயூரநூபுரங்,கண்ணிப காஞ்சனமலதுதான் காணுமோ,மண்ணினையன்றித் தருதிருணுதிகள், எண்ணிடிற் பிறிதென விலங்குறுங்கொல்லோ,திண்ணமெய்யிது போற்றிகழ்தரும் வீர, அண்ணலைக் கரியினையன்றி யொன்றிலையே. ஆயின் யாங்ஙனம் ஜலசமூத்திராதி பூகத்திற் பேதாபேதப் பிரத்தியயமெனின் ? உரைத்தல்; — ஒன்றென்பதாதி. இருமை யொருமை யென்று சொல்லவா யெழுந்து குமுறும் வேற்றுமைகளானும், ஜகந்நிர்ம்மாண லீலையானும் ஒருபொருளே கிரீடிக்கு மென்பதாம்.

(ச.) அவற்றில், நிராகாரமாதலின் சூனியமாம் பரோக்ஷத் தன்மையால் தத்தாம், ஜகத்துக்குபாதான மாதலின் பிரகிருதியாம், விவிதவிக்ஷேப வேதுவாதலின் மாயையாம், பெரிதுக்கெல்லாம் பெரிதாதலின் பிரஹ்மமாம், விசுத்தஞானரூப மாதலின் விஞ்ஞானமாம், பூரகமாதலிற் புருடனும், இயக்கஞ்செய்தலின் ஈசானனும், கல்யாணரூப மாதலிற் சிவனும், என இங்ஙனம் ஆன்மாவே நித்தியம் சொல்லப்படுகின்றது. ஒன்றிரண்டெனும்= தொய்தமும் அத்தொய்தமு மென்னும் பேதாபேதங்களிலுள்ள, அகல்பேதத்தால் = பிரகாரங்களால், வானுயர் சகம்படைக்கு விநோதத்தால் =ஜகந்நிர்மாண லீலையால், இங்ஙனம் வளருமொன்றே, மூலம்: இரண்டின் றன்மைத்விதா இருமையே த்வைதம் பேதமென்பது திரண்டபொருள். இருமையும் ஒருமையும் அவற்றின் சேர்க்கையும் என்னும் அவ்வகைகளானே எச்சகந்நிர்மாண ரூபலீலையுளதோ அதனல் ஒன்றே யாடியமருமென்பதாம். (28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பேதகாரணத்தையே யோதியுணர்த்தி நீதிவாயிங்ஙனம் நிற்றி யென்னல்:—ஒன்றென்பது.

ஒன்றெனும் பரமரூபத் தொருசத்தி பொருமையாலே
நின்றெழு கின்றதன்றே நின்னது பிறரதென்றும்
பொன்றிய திருந்ததென்றும் பொருள்களிற் கருமந்தன்னி
லென்றுமின் பத்துன்பங்க ளிதயத்திலுன்ற வேண்டாம்.

(ப - ரை.) ஒன்றெனும் பரமரூபத்து = அத்விதியமாய பரமவத்துவில், ஒருசத்தி = உள்ள ஒப்பற்ற 'தெய்வாத்மசக்தி, ஒருமையாலே = அத்வைதமாகவே, நின்றெழுகின்ற தன்றே = இருந்து விஜ்ரும்பண மாகின்றதல்லவோ, நின்னது பிறாது என்றும் = தன்னது அன்னியரது எனவும், பொன்றியது இருந்தது என்றும் = நட்டமாயது விருத்தியாயது என்றும், பொருள்களில் கருமந்தன்னில் = வத்துக்களில் வினைகளில், என்றும் = எப்போதும், இன்பத்துன்பங்கள் = சுகதுக்கங்களை, இதயத்தில் = மனத்தில், ஊன்ற வேண்டாம் = அழுத்தவேண்டாம். எழுகின்றதே பிறிதன்று எனினும் அமையும்

(ஸ்ரீ - வீர.) பிரஹ்ம சத்தையேயாய அத்வைத பரமாத்மமய சக்தி, அறியார்பொருட்டுத் துவைத அத்துவைத சமுற்பேதங்களானே விஜ்ரும்பணமாகின்றது. ஆகுக வீங்ஙன் சீதனலென்னெனின், தன்னது அல்லது அன்னியரது புத்திரமித்திராதி யெல்லாவுலகிலுமே எப்போதுமே, விருத்தி யுண்டாயினும் ஆனியுண்டாயினும் பிறகாரியங்கள் செய்யினும், அறிவுடையவனாகியநீ இன்பதுன்பங்களை யெய்தவேண்டாம். ஆயின் எங்ஙனம் என்னால் விவகரிக்கத்தக்கது எனின், பிரஹ்மத்தைப்போலும் துவைத அத்துவைதம் பற்றுதலானே விவகரிக்கலாம்; பிரஹ்மத்தைப் போலவே நீ பரமார்த்தமாகச் சத்தாத்வைதமயான் மகனேயாகி, வியவகார காலத்திலும் பாவனையால் அத்வைதத்தையே நன்குபற்றி அவ்வப்பிராணிகரும பலதானத்திற் பிரஹ்மம்போல வருணாசிரம தரும விவத்தாபன கருமவிஷயத்தில் அத்வைதத்தை எல்லாவாற்றானுமே அநாதரவுசெய்து, விவகரித்துக் கொண்டு தக்கபடி துவைதாத்துவைத உபயபரனாகிவாழ்வாய். அத்வைதத்தில் கருமங்கட்கே யசித்தியாதவினானும், ஏகரூபமதாக யாண்டுமே ஒருவாறு அத்வைதா சரணமேல் ஜகத்விவத்தை தரும சாஸ்திராதி பாதவழக் காதவினாலும், ஆண்டுத்துவைதாசிரயணமே உசிதமாமென்பது கருத்தாம்.

(ச.) பரமரூபத்து = பரமான்மமயமான, ஒருசத்தி = இத்தகைத்தாய ஒரு சிற்சத்தி, ஒருமையாலே = எவ்விடத்துஞ் சச்சிதாநந்தான்ம சொரூபத்துக்கு வேறாகாததாகவே, நின்றெழுகின்றது = பிரகாசிக்கின்றது, தரங்காதி வைசித்திரியமாயினுஞ் சமுத்திரத்துக்கு ஐக்கியமே யென்பது கருத்து. அவற்றில், காரியகாரணங்களுக்குச் சிறிதிடத்திற் றெய்தமே காணப்படுகின்றது:—கோமயத் தினின்றும் விருச்சிகம் உதிக்கின்றது என்னுமிடத்திற் போலும்; சிறிது அத்வைதம்:—எங்ஙனம், சொர்ணத்தினின்றும் கடகுண்டல மூகுடாதி; சிறிதுதுவைதாத் துவைதங்கள், எங்ஙனஞ் சீரத்தினின்றும் ததியாதி. அன்று எ இரண்டு மசைநிலை. (29)

(ஸ்ரீ - வீர - அ - கை ) எத்திறியாற்றிதமாய அறிஞன் சம்சாரத்திற் றுன்புறானே அத்திதிசார்ந்து சமாகித மனமுடையவராய், காமலோபாதி குதிருஷ்டிகளானே தூடிக்கப் படாதவரா யிலங்கும் பெரியாரது பெருமையைப்பேசல்:—யாது, இழிவு, என்பன.

யாதினுமுயர்ந்து மாளாப்பதம் பற்றியிதய மென்றுஞ்
சீதமாயின்பத் துன்பஞ் சேர்கிலார் றபிறப்பிற்சேரார்
சாதுகொள் பகைகொளாத்தல் தஞ்சம்வல் லபங்களுள்ளோர்
ரோதிய நெறியிற்செல்லு முத்தமர் பிறப்பிற்சேரார்.

இழிவுயர் விரண்டுமெண்ணா ரிச்சைகோபங்க ளெய்தார்
தொழிற்றொழி லிலாமைவிட் டோர்துன்னிய பிறப்பிற்சேரா
ரெழில்பெற விளங்கியார்க்கு மினியனவினி திற்சொல்வோ
ரழிபொரு ளனைத்தின் சால்பை யறிந்துளோர் பிறப்பிற்சேரார்.

(ப - ரை,) யாதினும் உயர்ந்து மாளாப்பதம் பற்றி = சர்வாதீதமாய நித்தியபதத்தை யாசிரயித்து, என்றும் = எப்போதும், இதயம் சீதமாய் = மதிபூரணமதியெனத் தண்மையாய், இன்பத்துன்பஞ் சேர்கிலார் = மகிழ்ச்சி வாட்டமடையாதவர், பிறப்பிற்சேரார் = சம்சாரத்திற் சோகமுறார்; சாதுகொள் பகைகொள் ஒத்தல் = சத்துரு மித்துருக்களிடத்திற் சமதிருஷ்டி யுடையவராய், தஞ்சம் வல்லபங்கள் உள்ளோர் = தயாதாக்ஷணியமுடையவராய், ஓதியநெறியிற்செல்லும் உத்தமர் = விதிதமான மார்க்கத்திற்பயிலும் மேன்மையர் சம்சாரத்திற்றுயர் உறார்.

இழிவு உயர்வு இரண்டும் எண்ணார் =கீழ்மேல் இரண்டையும் நாடார், இச்சைகோபங்கள் எய்தார் = ஆசைசினதி யடையார், தொழில் தொழிலிலாமை விட்டோர் = வினை வினையின்மை விடுத்தோர், துன்னிய பிறப்பிற்சேரார் = நெருங்கிய பிறவியில் நிமக்கினமாகார்; எழில்பெறவிளங்கி = சுப்பிரசன்னமாய்ப் பிரஹ்மதேஜசோடுமிலங்கி, யார்க்கும்= எப்பிராணிகட்கும் ஏற்றத் தாழ்வின்றி, இனியன = இதமானவற்றை, இனிதிற்சொல்வோர் = இன்சொற்களா லுபதேசிப்பவர், அழிபொருளனைத்தின் = அநித்தியவத்துக்கள் யாவற்றின், சால்பை = இயல்பையும், அறிந்துளோர் = தெரிந்துள்ளவர், பிறப்பிற் சேரார் = சமுசாரத்திற் றுன்படையார்.

(ஸ்ரீ - வீர.) சர்வாதீதமாயுள நினைவிலா விமலபரபதத்தைப் பற்றியவராகி, பூரணசந்திரனென்னக் குளிர்ந்த வகமுடையவராய், இடருற்றபோழ்து ஏங்கிவருந்தாராய், சுகமுற்றபோது துள்ளிக்குதியாராய், விளங்குபவர் சம்சாரத்தி லிடர்ப்படார்; சர்வசத்துருக்களிலும் மத்தியஸ்தராய், சத்துருவினிடத்திலும் மித்துருவினிடத்திலும் சமமுடையவராய், தயை தாக்ஷிண்ய முடையவராய் விதான கருமங்களைச் செய்பவராய், ஆசிரியர் முதலியவர்க்குச் சமயோசிதப் பிராப்தசேவை பரிபாலனதி கருமங்களைச் செய்பவராய், உள்ளவர் சம்சாரத்திலுள்ள மெலியார். அபிநந்தன மடையார் துவேடமு மடையார் சோகமுமடையார் காங்க்ஷையுங் கதுவார், மௌனமுமுடையார் மிதபாஷணத்தர் இதபாஷணத்தர், ஆவசியக காரிய ஆரம்பமுமுடையார் ஆலசியமடையார், சமுசாரத்தில் அவதியுமடையார். பிராரப்தம் அடைவித்த சுககாரணப் பிரியவிடயங்களை யடைந்திடினும் மகிழ்ச்சி விசேஷவாயிலாய் அவற்றைப்புகழார், நுகர்வினைதந்த துக்ககாரண அப்பிரிய விடயங்களை யடைந்திடினும் அருவை வாயிலாய் அவற்றைஇகழார்; அஞ்ஞானிகட்குச் சுகஹேதுக்களாய மனைவியாதியர்கள் சுபங்களாம், அவற்றின் குணகதனப் பிரவர்த்தகப் பிராந்திரூப தாமசவிருத்தி அபிநந்தனமாம்; அந்நியர்தம் வித்தையாதி ஈரிஷையைப் பயக்கும் வாயிலாய் அறியாதவர்க்குத் துயர்க்காரணங்களாம், ஆகலினசுபங்களாம் அவற்றின் நிந்தையாதிப் பிரவர்த்தகமயல் வடிவத்தாமசவிருத்தி துவேஷமாம்; இவ்விரண்டும் மயலற்றவரை மருவாவாம், அவை மருவும்போதும் அவர்புகழார் இகழார் நொதுமலையடைந் திருப்பர் என்றபடி. கிடைத்த பிரியவஸ்து நீங்கும்போது சோகமுமடையார். இஷ்டா நிஷ்டவஸ்துக்களின் சேர்தல் பிரிதல்களை யிச்சியார் என்பதாம். மவுனத்தையே கிளத்தில், வினவின் நடப்பைநவிலுவர். வினவாவிடில் தாணுவைம்போ விருப்பர். இன்னது செய்தல்வேண்டும் இன்னதுசெய்தல் கூடாது என்னுங் கற்பனையும் விட்டவர் இச்சம்சாரத் திடர்ப்படார், யாவருக்கும் பிரியத்தையே கூறியருளுவர், ஆக்ஷேபித்ததற்கு மிகவும் சாதுரியமாகவும் இனிமையாகவும் விளங்கச் சமாதானந்தருபவர், பூதங்களின் ஆசயமுணர்ந்தவர், சமுசாரத்திற் பொன்றுறார்.

(ச.) யாதினுமுயர்ந்து = சர்வாதீதமாய, சீதமாய் = பூரணேந்துபோற் சீதளமாய், சாதுதைபகைகளொத்தல் = மித்துரு சத்துருக்களிடத்துச் சமத்துவம்; தஞ்சம் வல்ல

வம் = தயைதாக்ஷண்யம். இழிவு = துக்கமும் அதின் சாதனமும், உயர்வு = சுகமும் அதன் சாதனமும், ஆகிய இரண்டும் கிட்டின், எண்ணுர் = துவேடமும் பிரியமும் உறூர், கிடையாத இஷ்டத்தைக்குறித்து இச்சையும், இஷ்டம் நஷ்டமாயின் கோபங்கள் சோகமும் எய்தார், ஆகலின், தொழில் தொழிலிலாமை = இஷ்டா நிஷ்டங்களை, விட்டோர், எந்த முமுக்ஷுக்களோ அந்தப் புருடர், துன்னிய பிறப்பில் = ஜன்மாதி துக்கங்களால், சோரார் = கிலேசமுறுர், எழில்பெற விளங்கி = சுபாவமாகவே மிருதுவசன முடையரும், எமக்கிஷ்ட மென்னென்று அந்நியரால் வினவப்பட்டவருமாய், என்னசெய்யத்தக்கதெனப் பரரால் வினவப்பெற்றவருமாய், யார்க்குமினியன = அபிமதத்தை, இனிதிற்சொல்வார்= உசிதமாகவே போதிப்பவர், அபிமதத்துவ நிச்சயம் எங்ஙனமெனிற் கூறல்:—அழிபொருள் என்பது. பூதங்களுடைய அபிப்பிராயத்தை யறிந்தவரென்பது பொருள். மூலம்:—அபிமதம் வக்தா, அச்சீலமுடையதாக த்ருந்விகுதியாம், இது கிருதந்தப் பிரகாணத்திற் காணலாம், த்ருந்விகுதிவந்ததனுல், நலோகாவ்யய நிஷ்டாகலர்த்த த்ருநாம், ல, உ, உக, அவ்யய நிஷ்டா, கலர்த்த, த்ருந், இவற்றினது பிரயோகத்தில், க்ருத்யோகமாகக் கர்த்தாவிலும் கருமத்திலும் ஷஷ்டியாம், என்பதாற் கண்டஷஷ்டி யாகாதாம், என்பதனுனே க்ருத்யோகவடிவ ஷஷ்டியின் நிடேதத்தால் அபிமதம் எனத்விதியா பொருந்துறும் எனக்காரகத்தாரும் வேற்றுமைப் பிரகாணத் தறிந்துகொள்க. (30-31)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பரமபதத்தில் ஏறியவர் பங்குரமாய ஜகத்சம்பந்த ஸ்திதியை உட்சிதள அகத்தாற் புன்சிரிப் புடன்காண்பர், பராபரங்கண்டு மனத்தை வென்றமகாத்மக்கள் இயற்கையித்தகையதாகலின் நீயும் வித்வத் சரித்திரத்தானே சஞ்சரிப்பாய் அயலொன்றுல் வேண்டாம் என்றித முபதேசித்தல்:—தேயவென்பது.

(சு.) தேயவாதனே யென்பது முதலிய மூன்றுகவிகளாற் சீவன் முக்தன் விவகாரத்தைக் கூறல்:—

தேயவாதனை நீங்கிப்பூர்ண மாகித்தெளிந்த விழியிமையாமற் சீவன்முத்தி
யாயபாவனையாலே சொருபமேவி யனவரதமுலகில் விளையாடுவீரா
மாயவாசையை நீக்கிப்பற்றறுத் துவாதனைபோ யுள்வெளியாய் வாகியத்தே
மேயவாசாரமெலா மியற்றியென்றும் வேண்டியவா றுலகில்விளையாடுவீரா.

(ப - ரை.) தேயவாதனை நீங்கி = தியேயத்தியாக முடைத்தாகி, பூர்ணமாகித் தெளிந்தவிழி=பரிபூரணமாக நிச்சயித்த திருஷ்டி, இமையாமல்=அகலாமல், சீவன் முத்தியாய பாவனையாலே = ஜீவன்முக்தத்தன்மையானே, சொருபமேவி = சுவஸ்தனுய், அனவரதம் = எப்போதும், உலகில் விளையாடுவீரா = இவ்வுலகின் கண்ணே விவகரித்துவிளையாடுவாய் வீரராகவனே; மாயவாசையை நீக்கி = மாயாகாரியத்துற்ற ஆசைகள் அனைத்தையும் அகற்றி, பற்றறுத்து = வீதராகனுகி, வாதனைபோய் = வாசனை யற்றவனுய், உள்வெளியாய் = உள்ளே சிதாகாசமாய், வாகியத்தே மேயவாசார மெலாமியற்றி=வெளியில் யாவற்றையும் நன்ருக அனுஷ்டித்து, என்றும் = எப்போதும், வேண்டியவாறு = இஷ்டப்படி, உலகில் = இச்சகத்தில், விளையாடுவீரா = விளையாடிக் கொண்டிருப்பாய் வீரராகவனே.

(ஸ்ரீ - வீர.) தியேயத்தியாக விலாசினியாய பூர்ணமாகிய திருஷ்டியை நன்ருகப்பற்றி ஜீவன்முக்தத் தன்மையானே சுவஸ்தனுய் இவ்வுலகில் ஹே இராகவனே விவகரித்து விளையாடுவாய். அந்தக்கரணத்தி னின்றும் சர்வ ஆசையையும் ஓட்டினவனுகி இராகமற்றவனுய்

வாசனையற்றவனாய், பாகியத்தே சர்வசமாசாரனாகி ஹே இராகவனே இவ்வுலகில் இன்புடன் விளையாடிக்கொண் டிருப்பாயாக.

(ச.) தேயவாசனை நீங்கி = முற்கூறிய அகங்காரரூபமான தேயவாதனாத்தியாகமாய், அதனால் விளங்கிய பூர்ணமாகி = பிரஹ்மமயமாய், வருங்காலத்தபிமதத்திலாசை பற்று, நிகழ்காலத்தில் இராகம், சென்றகாலத்தில் வாசனை, ஆகியவிம்மூன்றும் இன்மையனாய்.(32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேலும் அதனையே விரித்துபதேசித்தல்,—சகத்தென்பது,

சகத்திலேபுறத் தொழிலிலாரம் பித்துத்தனி யிதயத்தாரம் பஞ்சற்றுமின்றி
யகத்திலேசெயா தோனாய்ப்புறத்தே செய்வோனாகியே யுலகில் விளையாடுவீரா
வகுத்தவகங்காரம் போய்ச்சித்தந் தேறிவானம் போனொய்தாகி மாசொன்றற்று
வெகுத்துவமா மடையாளமனைத்துமின்றி வேண்டியவாறுலகில் விளையாடுவீரா.

(ப - ரை.) சகத்திலே = இவ்வுலகத்திலே, புறத்தொழிலில் ஆரம்பித்து = வெளித் தொழிலில் தொடக்கமுடையவனாய், தனி இதயத்து ஆரம்பம் = சொரூபத்தி விளைப்பாறும் இருதயத்தில் தொடக்கம், சற்றுமின்றி = சிறிதுமில்லாமல், அகத்திலே செயாதோனாய் = உள்ளேயகர்த்தாவாய், புறத்தே செய்வோனாகியே = வெளியிற் கர்த்தாவாய், உலகில் விளையாடுவீரா = இவ்வுலகத்தின் கண்ணே வீரம்பொருந்திய இராகவனே விளையாடி விவகரிப்பாயாக, வகுத்த அகங்காரம்போய் = பல ஆறாய்விரிந்த அகங்கிருதியைத் தியாகித்து, சித்தந்தேறி = மதிதெளிந்து, வானம்போல் = ஆகாசம்போல, நொய்தாகி = அதிசூக்குமமாய், மாசொன்று அற்று = களங்கமொன்று மின்றி, வெகுத்துவமாம் அடையாளம் அனைத்துமின்றி = அநேகவிதமான குறிகள் எதுவு மில்லாமல், வேண்டியவாறு = இஷ்டப்பிரகாரம், உலகில் = இச்சம்சாரத்தில் விளையாடுவீர = வீரராகவ! நீகிரீடிப்பாய்!

(ஸ்ரீ - வீர ) பாகியத்தில் நன்கு தொடங்கியவன்போல் நடித்து, இருதயத் தெவ்வளவுந்தொடக்கவர்ஜிதனாய், பாகியகருத்தாவாய் ஆந்தர அகர்த்தாவாய், இராகவ ' விளையாடுதியுலகில்; அகங்காரத்தை யடியோடுந் தியாகஞ்செய்தவனாய் விசிராந்தியடைந்த மதியையுடையவனாய், ஆகாசசோபனனாய், களங்க அங்கங்கள் எவையும் கவராதவனாய், உலகில் ஹே இராமச்சந்திர ! நீவிளையாடுவாய். சந்திரனோ இரவில்யானே பிரகாசகன் எனக்கவர்ந்த அகங்கிருதியுடையவன், க்ஷயரோகித் தன்மையானே இளைப்பாருதமதியன் கவர்ந்த களங்கலாஞ்சனனுமாவன், நீயோ அவ்வாறல்ல எனவியதிரேகமாம்.

(ச.) ஆரம்பித்து = கற்பிதமான இராகத்துவேடாதி விகாரத்தோடு கூடினவனாய், ஆரம்பஞ் சற்றுமின்றி = வாதனையின்மையின் நிர்விகாரனாய், செயாதோனாய் = அகர்த்தாவாய், மாசு = மனோதோடங்கள், அடையாளம்=பிரித்தறியும் எதுக்களானகுறிகள். (33)

(ஸ்ரீ-வீர - அ - கை,) மேலும் அவ்விதத்தையே வேறோராற்று லுபதேசித்தல்:— இதமென்பது.

இதமானவுதாரியாய்க் கடினாசாரமின் றியாசாரங்கட் கெளிதுபின்போய்,
விதமானவனைத்துக்குஞ் சார்மைநோக்கி வேண்டியவா றுலகில்விளையாடுவீரா,
புதனாகிநிராசைதனை யுள்ளேதேக்கிப் புறத்தேயாசையிற் றொழில்கள்பூண்டான்
போலா, யதனாலுட் சீதளமாய்ப் புறம்வெய்தாகி யனவரதமுலகில் விளையாடு
வீரா.

(ப - ரை.) இதமான உதாரியாய் = நல்ல உதாரமுடையவனாய், கடினசார மின்றி = கோமளாசார முடையவனாய், ஆசாரங்கட் கெளிதுபின்போய் = சர்வாசார அநுவிருத்திமானாய், விதமான அனைத்துக்குஞ் சார்மைநோக்கி = நானாவகையான யாவற்றிற்கும் பற்றைப்பார்த்து, உட்சர்வ பரித்தியாகியாய், வேண்டியவாறு = உனதிஷ்டப் பிரகாரம், உலகில் = ஜகத்தில், விளையாடுவீரா = விவகரிப்பாய் இராகவனே; புதனாகி = அறிவுடையவனாய், நிராசைதனை யுள்ளேதேக்கி = ஆசையின்மையை யகத்தேகொண்டு, புறத்தே = பாகியத்தே, ஆசையிற்றொழில்கள் பூண்டான்போலாய் = அவாவோடு கூடிக் காரியங்கள் ஆற்றுவோன் போல்பவனாய், அதனால் = அக்காரணத்தால், உட்சீதளமாய் = அகங்குளிர்ந்தவனாய், புறம்வெய்தாகி = வெளியில் வெம்பியவனாய், அனவரதம் = நிரந்தரம், உலகில் = ஜகத்தில், விளையாடுவீரா = வீரசேகரராகவ நீ கிரீடிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) உதாரமிகுந்து மிருதுவான ஆசாரமுடையவனாகி, எல்லா ஒழுக்கங்களையும் பின்றொடர்ந்தவனாய், உள்ளே சர்வபரித்தியாகியாய், சர்வபாவங்களின் சாராசார தாரதம்மியத்தை விவகாரத்தானும் பரமார்த்தத்தானும்; நன்கறிந்தவனாய், எவ்வாறிட்டமோ அவ்வாறே யவனியில் விவகரித்து நீ இராகவ விளையாடுவாய்; எல்லா அஞ்ஞானிகளினது கருமாதியாசாரங்களிலும் அநுவிருத்திமான் என்பது ஸ்ரீ பகவத் வசனத்தானும் வெளியாம்:—என்செயற விரிலியான் செயாவினைக ளியாவருஞ் செயாரதனாலே, மன்செய்த குலங்கண் மயங்கிமாய்ந்திடுவர் மற்றவர் மற்றதற்காகப், பின்செயலறியா தவாவொடு முயலும் பேதையைப்போற் பிறர்பொருட்டா, லுன்செயல்களைச் செய்யவை செய்வார் தம்மினுணர்வை வேறுக்கலு மொழிவாய். ஈற்றடியின் கருத்திதுவாம்:—அசுத்தாந்தக் கரணமுடைய அனதிகாரிகட்கு அசங்கான்ம ஞானமுபதேசிக்கில் சுபகர்மங்களிலுள்ள சிரத்தை நீங்கிவிடுவதனாலும், அசுத்தாந்தக் கரணத்தில் ஆன்மஞான முண்டாகாமையினாலும் போகமோக்ஷங்க ளிரண்டையும் இழந்து விடுவார்கள், ஆதலால் ஆன்மஞானியானோன் தானும் சுபகர்மங்களைச் செய்துகொண்டு அவர்களையும் சுபகர்மங்களிலே சேர்ப்பிக்க வேண்டுமென்பதாம். உள்ளே ஆசையின்மையைப் பூரித்து வெளியே ஆசையுண்மையன் போல விவகரித்து, வெளிவெப்பத்தனாய் உன்தட்பத்தனாய் உலகத்திலிருந்து விளையாடி வாழ்வாய் இரகுகுலதிலகனே; ஆசோன் முகர்களைப்போன்ற சேட்டையுடையவனாதி, சர்வவடிவத்தானும் ஆசையின்மையைப் பிரகடனப்படுத்தின், தனமித்திராதி சங்கிரகங் கூடாமையானும், இராஜ்யபரிபாலன நிர்வாகம் எலாமையானும், அங்ஙனம் படுத்தற்க என்பது பாவமாம். மற்றோ, உல்லாசமாய் மகிழ்ந்தான் போலும். உண்மையில் உத்வேகமுடையான் போலும், அறியார் கருமநிட்டன் என அவமதித்தாற் போலும், ஆடம்பரமாகப் பொய்யாயாரம்ப மியாவும் செய்வான்போலும், இப்பொய்யுலகில் மெய்யை விடாமல் உய்யயாவரும் செய்யுங் கருத்தேபோல ஐயவிளையாடுவாய்.

(ச.) கடினசாரமின்றி = மிருது விவகாரனாய், ஆசாரங்கட் கெளிதுபின்போய். சகலருடைய வாசாரத்தையு நோக்கி மிகச் சந்தோஷிப்பவனாய் என்பதுபொருள். வித்துவான் யுக்தனாகச் செவ்வையாய் அநுசரிப்பவனாய்ச் சகல கருமங்களையும் செய்விக்கவேண்டுமென்னு நியாயத்தினால், சார்பைநோக்கி = அகத்திற் சர்வ பரித்தியாகியாய், ஆசையிற்றொழில்கள் பூண்டான்போலாய் = ஆசானுகூல சேஷ்டிதனாய். நியாயம் ஸ்ரீபகவத்கீதாஸ்மிருதி: ஸ்ரீ வீரசேகரத்திற் காட்டியதே ஈண்டுங்கொள்க. (34)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் எக்கால் அடியேனுக்கு விவகார உபரமம் உண்டாமெனின், வாசனக்ஷய காரிணியாய விசாரணையுனக்கு எவ்வாறெவ்வா றுதயமாமோ அவ்

வாறவ்வாறு விவகாரகாரியங்கள் உபராமத்தை யடையும், ஆகலினீ யிவ்வாறு ஆராய்தி யெனல்:—இவனென்பது.

இவன்சுற்ற னிவன்பகைவ னிவனானென்னு மிவ்வெறும் பொய்பிராமநீ யிறையுமெண்ணே, லவம்பற்று நொய்யமனத் தவர்க்கிவ்வாரு மறிந்தோர்க்குச் சகமுழுது மகலாச்சுற்ற, நிவந்துற்ற பலகோடி பவமோகத்தா னீபகைநீயுற வென்பர் நிமிடந்தோறு, முவந்துற்ற மயக்கிதுவாம் பரமார்த்தத்தா லுலகெல் லாம் பகையாகு முறவுமாகும்.

(ப - ரை.) இவன் சுற்றன் இவன்பகைவன் இவன் நான் என்னும் = இவன்பந்து இவன் சத்துரு இவன்யான் என்பதான, இவ்வெறும்பொய் = இந்த ஒருபயனுமற்ற முழுக் கட்டுப்பொய்யை, இராம = யோகிகளிருதயத்தி லிரமிக்கத் தக்கவனே ! நீ இறையுமெண் ணேல் = நீ அணுவளவுஞ் சிந்தியாதே, அவம்பற்றும் நொய்யமனத்தவர்க் கிவ்வாரும் = அதர்மப் பிரவிருத்தியையுடைய அற்பமனத்தினர்க்கு இங்ஙனமாம், அறிந்தோர்க்குச் சகமு ழுதும் அகலாச் சுற்றம் = உணர்ந்தவர்கட்கு உலகமியாவுமே நீங்காதபந்துவாம், நிவந் துற்ற பலகோடி பவமோகத்தால் = வந்துவந்து சென்ற அநேகங்கோடி ஜன்மமயக்கத் தால், நீபகை நீயுறவு என்பர் நிமிடந்தோறும் = நீ அபந்து நீபந்து என்றுகற்பிப்பர் கணந் தோறும், உவந்துற்ற மயக்கிதுவாம் = அன்புமிக்குப் பழகிய பிராந்தியே யாகுமிது, பர மார்த்தத்தால் = உண்மையாக நோக்கின், உலகெல்லாம் பகையாகும் உறவுமாகும் = திரி புவனமும் அபந்துவுமாகும் பந்துவுமாகும்.

(ஸ்ரீ - வீர.) இவன்பந்து இவன் அபந்து இதுயான் இது தாங்கள் என்னும் மித்தியா திருஷ்டியானது நினக்குச் சிறிதுமில்லாமல் ஒழிந்திடுக விப்போதே; இவையாவுமே அநியத சுபாவங்களாம், இவன்பந்து இவனல்லன் என்னும் எண்ணம் அற்பமன முடையவர்க்கே யாம், உதார சரித முடையவர்கட்கோ, இவனே பந்துவென்னும் பரிச்சேத லக்ஷணவா ணங்கழிந்ததாகிய தீயேயாம், அத்தகையமதியே யாண்டும் சமத்தன்மையைக்காண்பதாம். ஆலோசிக்குமிடத்துப் பூதஜாதிகளியாவுமே நினக்குப் பந்துக்களேயாம், அத்தியந்தஞ் சேர்க்கை யற்றவர்களாக இவர்கள் எவர்களுமே கிடையார்கள்; அநாதிசம்சாரத்தில் சர்வ யோநிகளிலும் தனக்கு அநேகமாகச் சன்மாநுபவ முண்மையின். பந்துத்தன்மையானே அத்தியந்தஞ் சேராதவர் எங்கும் எப்போதுமே எவருமேகிடையார், பரியாயமாகச் சருவ ரோடுஞ் சம்பந்தமிருத்தலின், தேகத்துவாரக பரம்பரா சம்பந்தத்தைக் குறித்துச்சர்வ ஜீவர்களோடும் சாக்ஷாத்தை காத்மியசம்பந்தத்திற்கு அந்தரங்கத் தன்மையுண்மையின் அச் சம்பந்தத்தானே அத்தியந்தஞ் சேர்க்கையற்றவர் ஒருவருமேயிலர் என்பதாம். கூறியபொ ருளேயே சுருக்கி விவரணித் துபசங்கரித்தல்:—நிவந்துற்ற என்பதாதி நானாயோனி விசித் திரவிவிதஜன்ம சதங்களானே நீண்டுநீண்டு வந்துற்ற சம்பிரமங்களை யுடையதாகிய ஜகத் தில் இவன்பந்து இவனபந்து என்னும் ஈக்ஷணம் = பேததரிசனம், பிரமதசையினாலேயே விஜ்ரும்பண மாகின்றது; உண்மையாயோ ஜீவபாவதிருஷ்டியில் திரிபுவனத்திலு முள்ள ஜீவக்கூட்டம் நிஜபந்துவாம், பிரஹ்மபாவ திருஷ்டியிலோ, சுயமே சர்வமுமாதலின் அபந் துவும் அதுவேயாம்.

(ச.) இவ்வெறும்பொய் = இப்பேத திருஷ்டிகளை, நொய்யமனத்தவர்க்கு = பரிச் சின்னமான தேகாதியில் ஆன்மாவென்னும் புத்தியுடையவர்க்கு, இவ்வாரும்=இவன்பந்து இவனன்றெனும் விசாரணையாம், அறிந்தோர்க்கு = பிரஹ்மமயமான பரிபூரண ஆன்மா வில் நிஷ்டையுடையவர்க்கு, செகமுழுதும் அகலாச்சுற்றம் = போகோப கரணத்திர விய

மாம் சர்வமும் குடும்பகமாம் = என்பதுபொருள். நிவந்துற்ற பலகோடிபவமோகத்தால்= சுரநரதிரியக்காதி ரூபங்களான பலகோடி ஜன்மங்களா லுண்டாகிய விபரீதபாவனையால், மயக்கிதுவாம் = இது பிராந்திதசையாம், தோற்றமேயாம், விசாரிக்கும்போது பரமார்த் தத்தின் = உண்மையாக, உலகெலாம்=திரிபுவனமும் ஜன்மபேதத்தால் பகையாகும் உறவு மாகும் = வெகுகால பந்துவுமாம் பந்துவுமாம், ஜன்மபேதங்களைக் குறிக்கின் சம்பந்தங்க ளுக்கு நியமமின்மைதலின் என்பது கருத்து. மயக்கிதுவாம் = மாறுபாடுடைய இவ்வுலகில் இவன்பந்துவென்று தானுதல் இவன் அபந்துவென்று தானுதல் நோக்குதல் கேவலம் பிராந்த தசாஸ் புரணமேயாம். (35)

(ஸ்ரீ-வீர - அ-கை,) இப்பொருளை நன்கு புலப்படுத்தற்பொருட்டு ஒருபழைய சரிதை யை யுதாகரணமாக எடுத்துபதேசிக்கத் தொடங்கல்:—இது என்பது.

இதுபொருட்டா லிதிகாச மொன்று கேள்பண்டி யைந்தது கங்கையின் கரையினிருடிமைந்த, ரதுலமயேந் திரகிரியினயலே வாழ்வோ ரருந்தவத்தோர் தீர்க்கதவனளிக் கவந்தோர், சதுர்மறைதேர் புண்ணியபாவன ரென்றுள்ளார் தந்தையொடு கங்கையின் பாற்றவஞ் செய்நாளிற், பொதுவுறச் செய்தவப் பய னுற்கால முற்றிப் புண்ணியனும் புண்ணியவான் போதம்பெற்றான்.

(ப - ரை.) இது பொருட்டால் = இப்பொருள் தெளிதற்காக, இதிகாசம் ஒன்று கேள் = கதையொன்று கூறக்கேட்குதி, அக்கதை, பண்டியைந்தது= புராதனமானது, கங்கையின் கரையில் = திரிபதாதையின் தீரத்தில், அதுல = ஒப்பில்லாத, மயேந்திரகிரி யின் அயலேவாழ்வோர் =மகேந்திரபர்வதத்தின் சோலையில் வாழ்வோர், இருடிமைந்தர்= இருஷிகுமாரர், அருந்தவத்தோர் = பெருந்தவ முடையோர், தீர்க்கதவன் அளிக்கவந் தோர்!= தீர்க்கதவ இருடியின்குமாரர், சதுர்மறைதேர் புண்ணியபாவனர் என்றுள்ளார்= நான்கு வேதங்களுந் தேர்ந்த புண்ணிபாவனர் என்னும் நாமதேயம் வாய்ந்தவர், தந்தை யொடு கங்கையின்பால் தவஞ்செய் நாளில் = பிதாவினோடு ஸ்ரீ கங்காதீரத்தில் தவபுரி காலையில், பொதுவுறச் செய்தவப்பயனுற் காலமுற்றி = நிட்காமியதவத்தின் பயனுகப் பரிபக்குவ காலத்தில், புண்ணியனும் புண்ணியவான் போதம் பெற்றான் = நிட்காமியபுண் ணியம் நிறைந்த புண்ணியன் என்னும் குணஜேஷ்டன் ஞானபூரணனுனன்.

(ஸ்ரீ - வீர.) விளம்பியபொருள் விடயத்தில், திரிபதகாதீரத்தில், சகோதரர்களாகிய முனிபுத்திரர்களின் சம்வாதவடிவப் பழைமையான இவ்விதிகாசத்தை, உதாகரிக்கின்றனர் ஹே இராகவ ! இவன்பந்து இவன் அபந்துவென்னுங் கதையின் பிரஸ்தாவத்தி னின்றும், நினைவில்வந்த, புண்ணியமும் ஆச்சரியமுமாய இவ்விதிகாசத்தைக் கேட்டி ! இந்தஜம்புத் தீவினது ஒரு கிரிஜாலமத்தியில், நிர்த்தாரணத்தில் ஏழாம் வேற்றுமை மூலம்புஞ்சகே என் னும் பாடம்வெளியாம், வனவியூகம்கா பூஷணமகேந்திர மெனப்பெயரிய மகாபர்வத மொன்றுளது, அது கற்பத்துருமவனச் சாயையில் இளைப்பாறிக் கொண்டிருக்கும் முனிவர் கின்னரர்களை யுடையது, ஆகாசம் விஸ்தீர்ணமாயினும் சமுந்நத சிருங்கங்களானே வெற்றி கொண்டு வியாபித்து நிற்பது, என்பனவாதி அநேகவளப்பங்கள் நிறைந்து பிரஹ்மலோகாந் தரம் என்று சொல்லப்பெற்ற அதனது ஏகதேசத்ததிவிஸ்தாரமாய இரத்தினப் பாறை களினோரங்களில் மனோரம்மியமாய சோலைகளின் தீரங்களில், முனிவர்களின் ஸ்நானபா னப்பொருட்டு வியோம கங்கையென்னும் மந்தாகினி யவதரித்து விளையாடும்; அந்ததிரிப தாகையினது, தேன்றுளி சிதறிக்கொண்டும் பூந்துணர் துருமிக்கொண்டும் வண்டினம் ரீங்

காரஞ்செய்து, கொண்டும் விளங்காநின்ற விருக்ஷங்களிறைந்த தீரத்தில், மேருவின்றடம் போல் மிகமிக விளங்கும் கனகவொளியது காலுஞ்சோலையில், பரமாத்மபோதம் நிறையப் பெற்ற தபோராசியாயும் பரம உதாரமதியை யுடையவராயும், தபமே அபரசரீரந் தரித்து வந்தது போன்றவரும், தீர்க்கதவர் என்னுந் திருநாமம்வாய்ந்த வருமாகிய ஒரு பெருந்தவ ரிருந்தார். அம்முனிவருக்கு, பிரகஸ்பதிக்கு இரண்டுகசர்கள் உண்டானாற்போலப் புண் ணியபாவனர்கள் என்று நாமம்படைக்கப்பெற்ற இந்து சுந்தரர்களாய இரண்டு மைந்தருண் டாகி யிருந்தார்கள்; இரண்டு கசர்கள் போன்றென்றது, அபூத உவமையாம், கசன் ஒரு வனேயாதலின். அம்முனிவர் அவ்விரு குமரரோடும், அருமையாய தனதொருபாரியோ டும்; அந்தச் சபலபாதப சரித்தின்றீரத்தில் வசித்தனர்; சிறிதுகாலஞ் சென்றபின்னர், அம்முனிவரது இருகுமாரர்களுக்குள் புண்ணியனெனப் பெயரிய குணங்களில் மூத்தவனாகிய மூத்தவன் ஞானவானாகிய தத்துவவித்தாயினான். (36)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சின்னவன் செய்தியைச் சிறிதுவிளம்பல்:—அங்கவன் என்பது.

அங்கவன் பின்னவனான பாவனன் பாலறிவுடைமை பார்தியளவா தலாலே, செங்கதிரோ னுதிப்பதன் முன்னருணன்றோன்றச் செங்கமலங் கிண்கிணிவாய்ச் செய்வதொத்துத், துங்கவறியாமையு மெய்வீடு மின்றித்தோளா வெந்திரம்போ லத் துவண்டு நின்றான், பொங்குதவத் தீர்க்கதவ னென்னுந்தந்தை போகத்தி லிச்சையெலாம் புந்திதீர்ந்தான்.

(ப - ரை.) அங்கு அவன் பின்னவனான பாவனன்பால் = அவ்விடத்தில் புண்ணியன் றன் சின்னவனான பாவனன் என்பவனிடத்தே, அறிவுடைமை பாதியளவு ஆதலாலே = ஞானங்கொண் டிருக்குந்தன்மை அர்த்தபரிமாண மாகையினால், செங்கதிரோன் உதிப்ப தன்முன் = சிறந்திலங்குஞ் சூரியன் உதயமாவதன் முன்னர், அருணன் றோன்ற = அரு ணோதய சமயத்தில், செங்கமலம் கிண்கிணிவாய் செய்வதொத்து = செந்தாமரையானது சதங்கைவாய் போலச்சிறிதுவிரிந்தும் விரியாமலும் இருப்பதுபோல, துங்க அறியாமையும் மெய்வீடுமின்றி = அத்தியந்த மஞ்ஞானமும், முதிர்ந்த மெய்ஞ்ஞானமும் இல்லாமல், தோளாவெந்திரம்போல = ஊஞ்சல்போல, துவண்டு நின்றோன் =சலனப்பட்டிருப்பவன், பொங்குதவத் தீர்க்கதவ னென்னுந்தந்தை = மிகுந்ததவத்தை யுடைய தீர்க்கதவர் என் னும் அம்மைந்தர் தந்தையானவர், போகத்தி லிச்சையெலாம் புந்திதீர்ந்தான் = போகத்தி லுள்ள ஆசைகளனைத்திலும் எண்ணமற்றவரானார்.

(ஸ்ரீ - வீர.) பூர்வசந்தியா அம்புஜம்போலப் பாவனன் அர்த்தப் பிரபுத்தனானான், மூர்க் கசம்பந்தத்தைக் கடந்தான் எனினும் பரமாத்மபதத்தை யடைந்திலான், இரண்டிற்கிடை யில் ஊசலாடிக்கொண் டிருந்தான், அதன்பின், பிராணிகளானே ஆயுக்ஷயத் தன்மையானே அலக்ஷிதமும், சம்வற்சர சதவடிவினதும், காரணங்கழியக் கழிவதும், தவத்தானே செலுத் தியதும், தீர்க்கதேகக் கொடியையும் ஆயுளையும் ஜீர்ணஞ்செய்ததும் ஆகியகாலங் கடந்து போக, அம்முனிவர் பஞ்சபூதத்தோடு கூடியதும், ஜன்மஜரா மரண சுவர்க்கபாத நரகாதி விருத்தாந்த சதங்களானே அதிபீஷண மாயதும், ஆகிய இச்சம்சாரத்தினின்றும், ஜராஜர் ஜராஜீவிதத்தினின்றும் இரதியை விட்டொழித்தனர், (37)

(ச.) மெய்வீடும் = பிரஹ்ம நிஷ்டையும்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) தீர்க்கதவரது விதேகமுக்தி:—காலமே யென்பது.

காலமே காரணமாய்க் குடும்பவாழ் விற்காத லொழித்தறச் செறிந்தகாயந் தன்னைச், சால்மிகு தொழிற்பறவைக் கிடமாங்கூட்டைச் சானவியின் கரைவரை யிற்றனே தீர்ந்தான், கோலியொரு சுமைசுமப்பான் குறித்தவெல்லை கொண்டு போய்ப்போடுவ போற்குரம்பை போட்டு, மாலுறுபற் றென்றின்றிப் பூவினாற் றம் வானுறல்போற் பரமபத வாழ்வுபெற்றான்.

(ப - ரை.) காலமே காரணமாய் = காலத்தையே நிமித்தமாகக்கொண்டு, குடும்ப வாழ்வில் = சமுசார வாழ்க்கையில், காதலொழித்து = ஆசையையகற்றி, அறச்செறிந்த காயந்தன்னை = தவம்புரிந்து ஜராஜர் ஜரமாகிய சரீரத்தை, சாலமிகு தொழிற்பறவைக்கிட மாங் கூட்டை = அத்தியந்தம் அலையும் வினைவிகங்கத்திற்கு இடமாகும் நீடத்தை, சான வியின் கரைவரையிற்றனே தீர்ந்தான் = ஸ்ரீ கங்கைக்கரைவரைக் குகையிற் சுயமாகவே விலக்கினன், கோலியொரு சுமைசுமப்பான் = இன்ன இடத்திற் போடுவதென்று நிய மனஞ் செய்துகொண்டு ஒருபாரத்தையெடுத்துச் செல்லுவோன், குறித்தவெல்லை கொண்டு போய்ப் போடுவபோல் = நியமித்த இடத்திலப் பாரத்தை யெடுத்துக்கொண்டு சென்று அடைந்தத்தலத்தில் போடுவதுபோல, குரம்பைபோட்டு = நுகர்வினை தீர்ந்தவுடனே தேகத்தை விடுத்து, மாலுறுபற் றென்றின்றி = மயக்கத்தைத் தரத்தக்க யாதொரு வாஞ் சையு மில்லாதவனாய், பூவினாற்றம் வானுறல்போல் = புஷ்பகந்தம் அம்பரமடைதல்போல், பரமபதவாழ்வு பெற்றான் = பரமபத வாழ்வாகிய மோக்ஷத்தை யடைந்தனன். அறச் சரிந்த = முற்றினும் சரைமூடிய.

(ஸ்ரீ - வீர.) வினைவிகங்கத்தின் வீடாகிய நீடதேகத்தைத் தீர்க்கதப ரென்னுமம் முனிவர், கிரிகுகைக் கேகத்தில், வைவதிகன் = விறகுமுதலிய பாரம்தூக்கிச் செல்பவன் வீட்டில் கொண்டுபோன பாரத்தைப் போட்டுப் போதல்போல், விட்டுவிட்டார். மூலம் விவதவீவத சப்தங்கள், இருபாலு முறிகட்டிய ஸ்கந்தவாகிய காஷ்டவிசேடத்தில் நிகழும், புஷ்பகந்தம் அம்பரமடைந்ததைப்போல நீராகபதத்தை யடைந்தார்.

(சு.) அறச்செரித்த = சரையான் மிகவுஞ்சீர்ணமான, காயந்தன்னை = தேகமென் னும், தொழிற்பறவைக்கு = அகங்கிருதி யென்னும் பக்ஷிக்கு, பூவினாற்றம் = மூகளபந் தத்தினின்றும் நீங்கி வானுறல்போல், மாலுறு பற்றென்றின்றி = பந்த வேதுக்களான சங்கற்பாதிக ளொன்றுமின்றி, பரமபதவாழ்வு = பரிசுத்த சின்மாத்திர ரூபமான கைவல்லி யத்தை, பெற்றான். மூலம்:—கலிதகாரணே = ஜன்மாதி காரணங்களைப் பிரேரணைசெய்த காலங்கடந்து செல்லவே; வைவதிக:, விவத:=பாரயஷ்டி. அதைத் தூக்குபவன்=காவடிச் சுமைதூக்கி. சேத்யமுக்த சிதாஸ்பதம் = திருசியத்தை விட்ட சித்திற்குப் பிரதிஷ்டை வடிவமாயது, இராகாதி இரகிதங் கைவல்யமாம், அதனைப் பெற்றான்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அன்னையும் பிதாவும் ஆகம்விட்டபின் முன்னவன் பின்னவன் செய்கையை மொழிதல்:—தொழிலென்பது.

தொழிலின்றிக் காட்சியெனுந் துன்பமின்றித் தொல்லறிவு தோன்றிட மாஞ் சொரூபம்பெற்ற, வழிவின்முனி யிறத்தலுமே யவன்றன்பன் னியம்புய நின்றகலளிபோ லங்கம்விட்டாள், விழிகணிகர் தாய்தந்தை யிறப்பக்கண்டு மேற்செய வேண்டிய கிரியைவிதியிற் செய்வான், வழிபடு புண்ணியன் மூயன் றன்பாவன்றனும் வருத்தமெனுங் கடற்புகுந்து மயங்கலுற்றான்.

(பூணா.) தொழிலின்றி = கிருதகிருத்திய வடிவமாய், காட்சியெனுந் துன்பமின்றி = இருசியமென்பதான துயரமொன்று மில்லாமல், தொல்லறிவு தோன்றிடமாம் = சிதாஸ்பதமாம், சொரூபம்பெற்ற அறிவின்முனி யிறத்தலுமே = சொரூபத்தைச் சாக்ஷாத்கரித்த நித்தியமுனிவர் சரீரத்தை விடுதலும் உடனே, அவன்றன்பன்னி = அவரது தருமபத்தினியும், அம்புயம் நின்றகலளிபோல் அங்கம்விட்டாள் = தாமரையினின்றும் நீங்கும்வண்டேபோல் ஆகத்தை விட்டனள், விழிகளிகர் தாய்தந்தை யிறப்பக்கண்டு = இரண்டுநேத்திரங்கட்குச் சமானமான அன்னையும் பிதாவும் தேகம் விட்டதைப்பார்த்து, மேற்செயவேண்டியகிரியை = செய்யத்தக்க உத்தரக்கிரியையை, விதியிற்செய்வான் வழிபடு புண்ணியன் முயன்றான் = விதிப்பிரகாரம் செய்யும் பொருட்டுத் தாய்தந்தையரைத் தெய்வமாகப் போற்றிக் கொண்டிருந்த முன்னவன் முயல்வதானான், பாவன்றானும் = பாவனனோ, வருத்தமெனுங் கடற்புகுந்து = துக்கமாகிய சாகரத்துட்டுளைத்து, மயங்கலுற்றான் = மயல் கொண்டழத் தொடங்கினான்.

(ஸ்ரீ - வீர.) அம்முனிவர் பூமணங்கம் முறலேபோல, சகலதொழில்களும் ஓய்ந்ததும், சேத்தியங்களினின்றும் அகன்ற அவ்வச்சிவ் சைதன்யங்கட்குப் பிரதிஷ்டாபூதமாய பரம பதமும் ஆகியமோக்ஷ மடைந்தபின்னர், பிராண அபானவிவர்ஜிதமாய முனிவரதுதேகத்தை அவ்வம்மையார் கண்டு நாளமில்லாத பங்கஜம்போலப் பூமியின் கண்ணே புரண்டழுதனள், பதியினாலே யுபதேசிக்கப்பெற்ற யோகயுக்தியினானே வெகுகாலம் பயின்றயோக வல்லமையானே, அறுகாலளியம்புயத்தினின்றும் அகலுதல்போல, ரோகஜராதி மலினமொன்று மின்றேனும் தனுவைவிடுத்தனள். அஸ்தமடைந்த சந்திரன் பிரபாக கனகோசத் திருத்தலேபோலும், ஜனங்களின் கண்காணுமையை யடைந்த அவ்வம்மையாரும், பர்த்தாவையே பின்றொடர்ந் தடைந்தனள்; பிரஹ்மமய்மாய பர்த்தாவையே யடைந்தனள் = தாமும் பிரஹ்மபாவத்தையே யடைந்தனள் என்பதாம், பிரஹ்மவித்துக் கட்குத் தேசாந்தரத்திற் கதிகிடையாதாம்; " அவ்னது பிராணன் எழுந்தடையாவாம், இவணேயிலய மெய்திடுமினிதே " எனமறையுமறையும். சென்றமாதா பிதாக்கட்கு நடத்தவேண்டிய மேல்தாய சரீரசம்பந்த கருமத்தில், புண்ணியனே வியசனசோகாதி யொன்றுமின்றி நின்றான், பாவனன் துயரமேமிக அடைந்தான். பாவன்றானும் என்ற இடத்தில் பாவனன்றான் என்றிருப்பினும் செய்யுளமையும், எனினும் பாவன் என்று விகாரப்படுத்தி யுரைத்தது, அவனது விகாரத்தைக் காட்டுவதற்கே போலும்.

(ச.) பர்த்தாவாற் கொடுக்கப்பட்ட யோகபலத்தால் தாயும் உடல்விட்டாள். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னவன் மதியறவின லெய்தலும் முன்னவன் விதிமுறை வினை செய்தலும் விளம்பல்:—அன்னே யென்பது.

அன்னேயன்னே யென்னுமென்னை யீன்றவை யாவையா வென்னுமந்தோ வந்தோ, வென்னேயென்னே யென்னுமாற்று ணகியெரிமிதித்தாற் போற்கானமெங்குமோடுந், தன்னேரின் முன்னவனை நோக்கித்தேறான் றம்பிமிகத் தளர்வுற்றான் றளராமுன்னோன், மின்னேரு முடற்கிறத்த லியல்பேயென்று வேறொன்று நினையாமல் விதியேசெய்தான்.

(பூணா.) அன்னே அன்னே யென்னும் = மாதாவே மாதாவே யென்றழுவன், என்னை யீன்ற ஐயா ஐயா என்னும் = என்னைப்பெற்ற பிதாவே பிதாவே யென்றலறுவன், அந்தோ அந்தோ = ஐயோ ஐயோ, என்னே என்னே யென்னும் = எங்களை பரிதவிக்க விட்டுப்

போய்விட்டீர்களே இஃதென்ன காரணம் இருவருந் திடீரென்று போய்விட்டீர்களே இஃதென்னகாரணம் என்று புலம்புவன், ஆற்ருனுகி = துயரஞ் சகியாதவனுகி, எரிமிதித்தாற் போற் கானம் எங்கும் ஓடும் = அக்கினியை மிதித்தவன் பதறியோடுதல் போலச் சோலையெங்கும் சோகாக்கினியால் சுழன்று சுழன்றேடும், தன்னேரின் முன்னவனை = தனக்கொப்பற்றவனுகிய சேஷ்டனை, நோக்கித் தேருன் = பார்த்தாறுதலை யடையான், தம்பி மிகத்தளர்வுற்ருன் = பாவனன் அத்தியந்தம் சோகத்தை யடைந்தனன், தளராமுன்னேன் = சோகமடையாத பெரியவன், மின்னேருமுடற்கு = மின்னினிலையி லிம்மனுயிராக்கைகட்கு, இறத்தல் = அழிதல், இயல்பே = சகஜமே, என்று=எனவெண்ணி, வேறென்றும் = அயலொன்றையும், நினையாமல் = சிந்தியாமல், விதியே செய்தான் = பிதுர் காரியமே யியற்றினன்.

(ஸ்ரீ - வீர.) சோகத்தானே நிறையப்பெற்ற மனத்தை யுடையபாவனன் கானனவீதிகளில் பிரமமடைந்து சுற்றி, சேஷ்டபிராதாவை நோக்காமலே = நோக்கியவனைப்போல இவனும் தைரியத்தைப் பற்ருமலே, ஓலமிட்டலறி யுலறினன். புண்ணியனே இத்தரையிற் பிறந்திறப்ப தெடுத்தவுடற் கடுத்தபொறி யென்றெண்ணி மறைநெறியே கருமங்களைச் செய்தான். (40)

(ஸ்ரீ-வீர - அ-கை.) புண்ணியன் உத்தரகிரியையை முடித்து, பின்னவனைத் தேற்றத் தந்தைதாய ரடைந்தபதத்தின் பெருமையை யெடுத்துரைத்தல்:—மறையென்பது.

மறைநெறிகண் முடித்ததற்பின் சோகத்தாலே வாய்மூடா விளவறனை வந்துசார்ந்து, நிறையறிவாம் புண்ணியன்பா வனனைநோக்கி நெஞ்சழிக்குந் துயரமைந்தா நீத்தலென்னே, பொறைமிகுநின் பிதாநின்ன தன்னையோடும் பொருந்தியிருந்துளபதத்தின் பொலிவைக்கேளாய், குறைவுநிறைவில தென்றுந் தனதாய்த்தானுய்க் கோதிலதாம் வீடெனும்பேர் கூறவற்றும்.

(ப - ரை.) மறைநெறிகண் முடித்ததற்பின் = ஔர்த்வதேகிக கர்மஞ்செய்து முடித்ததன்பின். சோகத்தாலே = துயரத்தாலே, வாய்மூடா இளவலதனை வந்துசார்ந்து=அழுதுகொண்டேயிருந்த சின்னவனைத் தேடியடைந்து, நிறையறிவாம் புண்ணியன் = பூர்ணஞானம் பெற்றுள்ள சேஷ்டன், பாவனனை = கநிஷ்டனை, நோக்கி = கருணையோடும் பார்த்து நெஞ்சழிக்குந் துயரம்மைந்தா நீத்தல் என்னே ! = அவிவேக காரணமாகிய துக்கத்தை விடாமல் இருக்கின்ருயே இஃதென்னே குழந்தாய் ! பொறைமிகும் = சாந்திமிகுந்த, நின்பிதா = உனதுதந்தை, நின்னது அன்னையோடும் = உனது தாயாரோடும், பொருந்தியிருந்துளபதத்தின் = அடைந்திருந்துள்ள இடத்தின், பொலிவைக்கேளாய்= பெருமையைக் கூறக்கேட்பாயாக, குறைவு நிறைவு இலது = அவயவத்தோடு கூடியில்லாமையின் சங்கோச விகாசாதி தருமங்களற்றது, சிறுகல் பெருகல் இல்லது, என்றும் =எப்போதும், தனதாய் = தன்னுடையதாய், தானுய் = ஆத்மபதவியாய், கோதிலதாம் = குற்றமற்றதாம் மாயையையுங் கடந்திருத்தலின், வீடெனும்பேர் கூறவற்றும் = மோக்ஷமெனப்பெறுவதாம். நின்பிதா அத்தியாசத்தியோதனம்

(ஸ்ரீ - வீர.) மாதாபிதாக்கட்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவற்றையும் செய்து முடித்தபின்னர், உதாரதீயாகிய பரமதார்மிக புண்ணியன் சோகலால்சனுகிய பாவனனைத் தேடிவந்து விபினத்திற்கண்டு கூறுவதாவது:—ஹே குழந்தாய் ஹேமைந்த ஹேபாவன ! பிதாவுக்கொப்போன் சேட்டன் என்னும் நான் முறைபற்றி மைந்தவென விளித்ததாம்,

மலழுகாலத்திய தாமரையானது, பெருமேகமண்டல கோரகர்ச்சனையையும் தாரையாகப் பொழியுமெழி லியையும் பேரிருளேயும் உடைத்தாகிச் சோகமுறுவதேபோலக் கனமான துக்கத்தையும் வெம்பிய பொருமலையும் பெருமூச்சையும் பெருங்கண்ணீர்த் தாரையை யும் பேரழுகையையும் உடையவளு யதனுனேயே யுளக்கண்ணுங் குருடடைந்து வெளிக் கண்ணுங் குருடடைந்து தாமரைபோன்ற வதனம்வாடி மரையிதழ்போன்ற விழிகளுஞ் சோர்ந்து வருந்துகின்ருயே இஃதென்? மூலத்திற் சிலேடை யாதலின் விசேடணங்கள் சாதாரணங்களாம், மகாப்பிராஞ்ஞராகிய நின்றுபிதாவானவர், நின்து மாதாவாடும் தன்னதேயாய மோக்ஷமெனப் பெயரிய பரமாத்ம ஆத்மபதவியை யடைவுற்றனர்.

(ச.) துயர் = துக்கசாகரத்தில், நீந்தல் = நீஞ்சுவது, என் = மிகுந்தசோகத்தை யடைவதென்ன காரணமென்ற தாயிற்று. (41)

(ஸ்ரீ-வீர - அ-ஞ்கை.) மீளவும் அப்பதத்தையே வியந்தோதிச் சுற்றமொரு மட்டில்லை யெனல்:—அனைவருக்கு மென்பது.

அனைவருக்குப் மேவுமிட மதுவேயாகு மறிஞருக்கு மெய்புருவ மதுவேயா குந், தனையகலா வப்பதத்தில் வாழுந்தாதை தனைநோக்கித் தளருமதுதகவோ தம்பி, துனைபுனலி னேட்டத்துக் கெய்தும்பள்ளத் தொகுதிபோற் பிறவிதொ றுந் தொடர்பாய்ப்போன, வனையுறுநின் ருய்தந்தைக் கிலக்கமுண்டோ மனை மக்கள் சுற்றமொரு மட்டுண்டாமோ.

(ப - ரை.) அனைவருக்கும் மேவுமிட மதுவேயாகும் = ஜந்துக்கள் அனைத்துக்குமே அது அடையத்தக்க தானமாம், அறிஞருக்கு மெய்யுருவமதுவேயாகும் = விஜிதாத்மாக் கட்கு அதுவே வடிவமாம், தனையகலா வப்பதத்தில் வாழுந்தாதை தனைநோக்கித்தளருமது தகவோதம்பி = ஆத்மசொரூபத்தை விட்டகலாத அந்தப் பிரஹ்மாநந்த பதத்தில் ஆநந்த மாக வாழ்கின்ற அன்னை பிதாக்களைக் குறித்துச் சோகமுறுவது யோக்கியமாமோ இளை யோய், துனைபுனலின் ஓட்டத்துக்கு = நெருங்கிய ஜலப்பிரவாகத்திற்கு. எய்தும்பள்ளத் தொகுதிபோல் = நேரும் நீர்மடுக்கள்போல, பிறவிதோறும் = ஜன்மந்தோறும், தொடர் பாய்ப்போன = தொடர்ந்து கொண்டேசென்ற, வனையுறு நின்ருய் தந்தைக்கு=நின்னை யீன்ற அன்னையத்தருக்கு, இலக்கமுண்டோ = கணக்குண்டோ, மனைமக்கள் சுற்றம் ஒரு மட்டுண்டாமோ = மனைவிகள் மைந்தர்கள் பந்துக்கள் என்பவர் ஒருகோடிக் கணக்கில் அடங்குவனவாமோ.

(ஸ்ரீ - வீர.) அப்பதம் சர்வஜனன தர்மிகளாகிய பிராணிகட்கும், உற்பத்தியாதி காலத் திரயத்திலும் ஆதாரபூதமாம், விஜிதாத்மாக்களாகிய பிரஹ்மவித்துக்கட்கு அது சொரூப மாம், அதனுனே பிதாமாதாவைக் குறித்துச் சோகிக்கலாகாதெனல்:—தனை + தம்பியென் பது, தஞ்சுபாவ சுகத்தை யடைந்துள்ள பிதுர்க்களைக் குறித்துப் படர்ந்து சோகமடைந் திடல் உசிதமாகா தென்பதாம். ஹேசுத ! நினக்கு மாதாக்களும் பிதாக்களும் நன்றுசென் றவர்கள் ஆயிரங்கோடியன்றே ! வனந்தோறும் ஜலப்பிரவாகத்தினது அளவில்லாதபள்ளத் தாக்குகள் போல்வாம் = கம்பீரஸ்தானங்கள் போலவாம், எண்ணமுடியாத மைந்தர்களை யுடைய அவ்விருவருக்கும் நீயே சுதன் என்பதாக வில்லையல்லவோ, மூலம். நீயே என்பதற் குப்பவானேவ என்றுள்ளது தாங்களே யென்பது அதற்குப் பொருளாம், அவ்வளவு மரியா தையாக உரைத்தது அருமை தோன்றவாம், ஆகவே அநேகங்கோடி சுதருள் நீயு மொரு வன் என்பதாம். ஹேபுத்திர ' அன்னிய நரர்கட்கும் சரித்தரங்கம்போலும் புத்திரகணங்

கள் சென்றனவாம்; புத்திரமித்திர பந்து விருந்தங்கள் ஜன்மஜன்மந்தோறும் ஜந்துக்கட்குக் கோடானு கோடியாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) காலமெல்லாம் கதறினும் கழியாத காரியத்திற் கையிட்லாகா தெனக்கூறிப் பேதவாதனையின் பெருமையைப் பேசல்:—பருவமென்பது.

பருவங்க டொறும்பெரிய வனத்திற் காய்க்கும் பலங்கள்போற் பவங்க டொறும் பரந்தசுற்றங், கருதுங்கா லிறந்தவவர்க் கிரங்கவேண்டிற் கற்பமளவ லறினுமோர் கரையுண்டாமோ, சொருபமிலா வஞ்ஞானக் கானன்மேட்டிற் றொடர்ந்தவாதனைக் கோடைச்சுழல் வெங்கானற், பெருகுநீர் சுகாசுகமாந்திரை கண்மோதிப் பேதமொரு கரையின்றிப் பிறழுமன்றே.

(ப - ரை.) பருவங்கள் தொறும் = இருது இருதுக்களில், பெரியவனத்தில் = மகத்தான வனங்களில், காய்க்கும் பலங்கள்போல் = உண்டாகும் கனிகள்போல, பவங்கள் தொறும் பரந்தசுற்றம் = ஜன்மஜன்மங்களில் விஸ்தரித்த பந்துவர்க்கம், அளவில்லதாம், கருதுங்கால் = ஆலோசிக்கும்போது; இறந்த அவர்க்கு இரங்கவேண்டில்=சென்றவரைக் குறித்து அழுவதானல், கற்பமளவு = கற்பகால பரியந்தம் அலறினுமோர் கரையுண்டாமோ = கதறினும் ஒருஎல்லைகாண முடியுமோ, முடியாதாம், சொரூபமிலா அஞ்ஞானக் கானல்மேட்டில் = அநிர்வசனீயமான அஞ்ஞான மருப்பூமியில்; தொடர்ந்த வாதனைக் கோடைச் சுழல்வெங்கானல் பெருகுநீர் = அநாதியாகச் சம்பந்தித்துவரும் தனதுவாசனை யெனப்பெயரிய மரீசிவாரியானது, சுகாசுகமாந் திரைகண்மோதி = இன்பத்துன்பங்களாகிய தரங்கங்கள் அலைப்ப, பேதமொரு கரையின்றிப் பிறழுமன்றே = அநந்தரூபமதாக அவிர்ந்தோங்கும், அநாதியாகவே, அன்று ஏ அசைநிலைகள் எனினுமாம்.

(ஸ்ரீ - வீர.) இருது இருதுதோறும் பெருந்தருவி னின்றும் சென்றன கனிகள்போல ஜன்மந்தோறும் சென்றனர் உறவோர்யாரும், நேயமிகுதியினனே சென்ற மாதாபிதாசுதாதிகளைக்குறித்துச் சோகித் தழுவதென்றால் ஆயிரங் கோடிகாலம் நிரர்தரம் அழுதாலும் முடியுமோ, ஆகலின், உன்னுற்சோகிக்கத் தகாதவரேயாவர்; மாதாவர்தியர் அன்பாற்சோகிக்கத் தக்கவரேலாயின் என் உன்னல் நிரந்தரம் ஆயிரம்வகையாகச் சென்றவர் சோகிக்கப்பெற வில்லை, நீ நிரந்தரம் சோகித் தழுதுகொண்டே யன்றோ விருக்கவேண்டும். ஹே மகாபாகுவே! இப்பிரபஞ்சம் ஜகத்கற்பனு நிமித்தமான மோகமிருந்தான் மாத்திரம் காணப்பெறும், உண்மையாகவோ உனக்குப் பிரஞ்ஞையே வடிவமாதலின் ஹே பிராஞ்ஞனே மித்திரருமில்லை பந்துக்களுமில்லை. அவ்வாறே வார்த்திகத்தும் கூறப்பெறுகின்றது: —அவித்தையிலிருந்தே யவித்தைய துண்டெனக்கு வித்தையிற் கற்பனை குவலயமியற்றும், அவித்தையென்பதுதான் அகண்டமாம் பிரம சுவித்தையினனே சொற்பமுமிலதே, அஞ்ஞான வடிவ ஆதபத்தானே விஸ்தீர்ணமாக ஆச்சன்னமான மருப்பூமிசதிருச ஆத்மாவில், சுபாசுபமாய்க் காலாநின்ற ஓலமிடு மலைகளானே விலோலமாம், சுவசங்கற்பவாசனை நாமம் வாய்ந்த மிருகதிருஷ்ண உதகம் அநந்தரூபமாக எதிரிற்றிகழ்ந்து தோற்றும்,

(ச.) அஞ்ஞானம் என்னும் கானன்மேட்டில் = மருப்பூமியில், தொடர்ந்த வாதனை = தனது வாதனையென்னும், கோடை = தாபத்தால், கற்பிதமாய்ச் சுழலும் = வெங்கானல் ரூபமாய். பெருகு நீரானது = சுபாசுபமாந் திரைகண்மோதி, தரங்கங்களை யடித்துக் கொண்டு, பேதமொரு கரையின்றி = அநந்தரூபமாய். இச்சகத்து பிறழும், ஔிர்கின்றது பார் எனவருவித்துக் காண்க.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சோகத்திற்கு மோகமூலகத்தன்மையுண்மையின், மோகமகற்றலாலே இவனது சோகமகலும் என எண்ணினவனாய புண்ணியன் அதன் விடயங்களாய பிதாதிகட்கு அநிர்வசநீயத் தன்மையாற் பொய்ம்மையைப் பதிஞ்ஞைசெய்து ஞானத்தால் விலக்கப் பெறுந்தன்மையைக் கூறல்:—இல்லென்பது.

[2] இல்லுறவு பகைநேயங் கோபமாசை யிழிவுயர்வா திகள்வடிவா யெழுந்த ஞாலம், புல்லுறுதன் னாமமாத்திரத்தினாலே பொலிந்து விரிகின்றதல்லாற் புறனிலுண்டே, நல்லுறவா நினைத்திடினல் லுறவேயாவர் நண்ணாராய்ப் பாவிக்கினண்ணாராவர், கொல்லுறுநஞ் சமுதிரண்டின் குணங்கள்போலுங் குறித்திடுபாவனைக்கட்டுக் குலைந்தாலுண்டோ.

(ப - ரை.) இல்லுறவு பகைநேயம் கோபம் ஆசை இழிவு உயர்வு ஆதிகள்வடிவா யெழுந்த ஞாலம் = பந்துமித்திர சுதஸ்நேக துவேஷமோக தசைமயம்பெற்று இது எனத் தோற்றும் பிரபஞ்சம், புல்லுறுதன் னாமமாத்திரத்தினாலே பொலிந்து விரிகின்றதல்லால் புறனில் உண்டோ = பொருந்துறு தனதுபெயர் மாத்திரையானே விளங்கி விஸ்தரிக்கின்றதேயன்றி வெளியில் உள்ளதாமோ, நல்லுறவா நினைத்திடில் = நல்லபந்துவாக நினைக்கின், நல்லுறவேயாவர் = நல்லபந்துவேயாவர், நண்ணாராய்ப் பாவிக்கின் நண்ணாராவர் = பரராய் எண்ணிடின் பரரேயாவர், கொல்லுறு நஞ்சு அமுது இரண்டின் குணங்கள்போலும் = கொல்லா நின்றவிடம் அமிருதம் என்னும் இரண்டின் தசைகள்போல ஈண்டுத்திதி பாவநிபந்தனியாம். குறித்திடு பாவனைக் கட்டுக்குலைந்தாலுண்டோ = பாவித்திடும் பாவனைக்கட்டுச் சிதைந்தாலுளதோ.

(ஸ்ரீ - வீர.) பிதாவென்பதன் சொரூபமென்ன? மித்திரனென்றூற்று னென்ன? மாதாவென்னிற்று னென்ன? பந்துக்கள் என்றூற்றூன் என்ன? உண்மையாக நன்குகூற எவ்வாறுமே முடியா; தமதுமயலெனும் வாயுவினானே ஜனத்தூளிகளைக் கிளப்புகின்றனர்; தமது விவேகபுத்தி வடிவவாயுவினானே சுவஜனத்தூளிகளை விலக்குகின்றனர். பந்துமித்திர சுதஸ்நேக துவேஷமோக தசாலக்ஷண ஆமயம் = ரோக இப்பிரபஞ்சமானது, தாஞ்செய்த சங்கேத மாத்திரத்தானே விரிந்திலங்குகின்றது; கூறியதை விளக்கியுரைத்தல்:—நல்லுறவென்பது. பந்துத்தன்மையிற்றிட பாவனையானே சங்கேதிதமாகியவழி பந்துவாம், சத்ருத்தன்மையிற் றிடமுறச் சத்ருவாம்; விஷத்திற்கு ஜீவனஹேதுத்தன்மையானே விடக்கிருமிகளானே செய்யப்பெற்ற திடபாவனையான் அவற்றின் பொருட்டு அமிருததசையும், அன்னியங்களானே அதனினும் விபரீதபாவனையான் விஷதசையும், என்பதாகப் பாவநிபந்தநி ஸ்திதி எங்ஙனமாமோ அங்ஙனமென்றறிக.

(ச.) அவற்றில் நண்ணாராய்ப் பாவிக்குந்திதி நஞ்சின்குணம் போலும், உறவாய்ப் பாவிக்குந் திதியானது அமுதின் குணம்போலும், பாவனைக்கட்டு = பாவனையாற் கட்டுற்றதாம் என்பது பொருள். (44)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சாலும் பர்துதத்துவ சிந்தைகள், அது குறித்துச் சோகப்படும் நினக்கு நினதுதத்துவ ஆராய்ச்சி மாத்திரையானே அவையகற்றக் கூடியவாம் என்னுங் கருத்தானே யுரைத்தல்:—ஒன்றிலே யென்பது.

ஒன்றிலேதோன்றி யனைத்துருவமான வுணர்வுக்குப் பகையுறவென்றுரைப்ப தெங்ஙன், னின்றியொழி தசைபுண்ணீர் தோல்கண்மேய்ந்த வெறுப்புபஞ் சரந்தன்னிலியா மாரென்று, நின்றிவணீ நின்மனத்தா னினைந்து நோக்காய் நிமலமாம் பரமவிழி நெறியானேக்கிற், பொன்றுதுயர் நீயில்லைநானுமில்லைப் புண்ணியபாவன னெனல்பொய் போதந்தோன்றும்.

(ப - ரை.) ஒன்றிலேதோன்றி = ஏகமாகவே யிருந்திலங்குவதாய், அனைத்துருவ மான = எங்குமாய் எல்லாமாய, உணர்வுக்கு = அறிவுருவ ஆன்மாவிற்கு, பகை உறவு என்று உரைப்பது எங்ஙன் = சத்துருவென்றும் மித்துருவென்றும் கூறுவது எப்படிக் கூடும்? இன்றியொழி தசைபுண்ணீர் தோல்கண் மேய்ந்த = இல்லாமலழிந்து போம்மாம் சரக்தாதி நிறைக்கப்பெற்றுச் சருமங்கள் போர்த்த, எலுப்புப் பஞ்சரந்தன்னில் = என்புக் கூண்டில், யாம் ஆரென்று = அகம் சப்தார்த்தம் என்னென்று, நின்று இவண் நீ நின்மனத் தால் நினைந்து நோக்காய் = ஏகாக்கிரமாய் இத்தேகத்துட்டானே நீ உனது சித்தத்தினு லேயே நன்காலோசனை செய்துபார்ப்பாய், நிமலமாம் பரமவிழிநெறியால் நோக்கில் = அமலயாய் உண்மையாயுள்ள திருவஷ்டியானே பார்த்தால், பொன்றுதுயர் நீயில்லை=சாந் துயர்ப்படும் நீயுமில்லை, நானுமில்லை = உனக்கித முரைக்கும் யானுமில்லை, புண்ணியப்பாவ னன் எனல்பொய்ப் போதந்தோன்றும் = புண்ணியன் என்றும் பாவனன் என்றுந்தோன் றுதல் மித்தியா ஞானமே யிவ்வாறு பிரதீதியாகின்றது.

(ஸ்ரீ - வீர.) சர்வதேகங்களிலும் அபின்னமாக விருக்குஞ் சர்வகமாய ஆன்மாவிற்குத் தான், இவன்பந்து இவனபந்து வென்பதான இவ்விவகாரம் எங்ஙன் எலும்; அற்றேல் யான் யாங்ஙனம் சர்வதேகங்களிலும் ஏகன் எனின்? அகம் பிரத்தியயவேத்யமேயாகிது என்று ஆராய்தியெனல்:—தசையென்பதாதி. இரக்தமாம்ச அஸ்தியாதி ஜடக்கூட்டமாய எலும் புக் கூண்டாந் தேகத்தி னின்றுந்தானே அன்னியமாய்ச் சேதன இயற்கைவாய்ந்த யான் யாராவேன் என்று சித்தத்தாற் சுயம்புத்திர! விசாரித்துப்பார். பாரமார்த்திக்கிய திருவஷ் டியானே பாவனசப்த வாச்சிய தேகாதியா தொன்றுமேயின்றும், புண்ணிய சப்தவாச்சிய தேகாதியுமின்றும், புண்ணியன் பாவனன் என்னுமிது தேகாத்மத் தன்மையமேயாய மித்தியாஞானமே மிளிர்ந்து வெளியாம். இவ்வண்ணம் பிதுராதிசரீரமும் ஆராயில் மயலே யாம் என்றறிதி.

(ச.) ஒன்றிலே தோன்று = ஏகனுயிருப்பவனும், அனைத்துருவமான =சர்வகதனுன, உணர்வுக்கு = ஆன்மாவுக்கு, பகையுறவு = இவன்பந்து இவன் அன்னியன் என்றுரைப் பது என்னும் இக்கற்பனை, பஞ்சரந்தன்னில் = பஞ்சரமான தேகத்தினின் றாரம்பித்து, நோக்காய் = விசாரிப்பாய், இவ்விசாரப் பிரயாசம் நிற்க இவ்விடத்து இந்தப்பரமார்த்த திருவஷ்டியை அவலம்பிப்பா யெனல்:—பரமவிழி நெறியால் = பரமார்த்தத்தை யாலோ சிக்கும் பிரமாண திருவஷ்டியால், நோக்கில் = விசாரிக்கும்போது, நீயில்லை = நீயென் றொருவன் பரமார்த்தமாக வின்று. நானுமில்லை = நானென் றொருவனும் பரமார்த்தமாக வின்று, மற்றென்னெனில். பொய்ப்போதம் = மித்தியாஞானமே, புண்ணியபாவன னெ னல் = புண்ணியன் பாவனன் என்பதாக, தோன்றும் = விளங்கும், புண்ணியன் நான், பாவன்ன் நீயென்பது, மித்தியாஞான கற்பிதமாதலின் பிராந்தியே யென்பதுபொருள். பரமார்த்த சத்தாயெங்கும் நிறைந்துள்ள ஆன்மாவிற்கு அத்விதீயத் தன்மையாம்போது, அயம்பந்து அயன் பரன் என்னும் கற்பனை யாண்டையதென்க. இரக்த மாம்சாதி சங்காத ரூபத்தன்மையானே இத்தேகமே யாத்மாவன்று மென்றூலும் அவ்வாறுருவுற்ற ஆகத்தி னின்றே தொடங்கியான் யாராயுள்ளேன் என்று விசாரிப்பாய். மூலம், பாரமார்த்திக்யா= பர்யாலோசன சாமர்த்தியமுடைய, பரமார்த்தமாக = பதார்த்தமாக. (45)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜன்மாந்தர பந்துக்களை விஸ்தரித்தோதல்:—ஏகிய, கோசலத் தென்பன;

ஏகியதீவுகடோறும் பிறந்தசென்ம மெண்ண வொண்ணா வின்னாவற்பெருந் தீவத்திற், கோகிலமாய் முன்பிறந்தாய் விலங்குமேகங் குன்றுமரமூர் வனபுட்கு லங்கடம்மிற், போகியசென்மத் தொகுதிபுகல வொண்ணாப் பொருந்து மவற் றுன் கிளையாய்ப் போனார்க்கெல்லா, மாகுலமுற் றிலையென்னீ யவற்றின்மட் டோவனந்த தேசப்பிறவி யறையக்கேளாய்.

கோசலத்துந் தெசார்ணவத்தும் பௌண்டாத்துங் குச்சரத்துந் துழாரத் துங் கோகனத்தும், போசலத்துமே கையத்துஞ் சாளுவத்தும் பூபதியாய்வான ரமாய்ப் புழுவாய்ப் புல்வாய், மாசலத்திற் கரண்டமாய்ப் பதங்கமாகி மாசுண மாய் வேசரியாய் மட்டில்சென்ம, நீசகலவாதனையாற் பிறந்தபோதி னின்கிளை ஞர்க் கிரங்காத நீதியென்னோ.

(ப - ரை.) ஏகியதீவுகள் தோறும் = சென்றதீவுகள் தோறும், பிறந்தசென்மம் = எடுத்தபிறப்பு, எண்ண ஒண்ணா = அளவிடமுடியா, இந்நாவல் பெருந்தீவத்தில் = இப் பெரிய ஜம்புத்தீவில் கோகிலமாய் முன்பிறந்தாய் = குயிலாய்பூர்வஞ்சன்மித்தாய், விலங்கு மேகங்குன்று மாமூர்வன புட்குலங் கடம்மில் = பசுகார்கிரிதரு ஊர்வன பறவைச் குலங்கள் தம்மில், போகியசென்மத் தொகுதி = சென்றபிறப்பின் கூட்டம், புகல ஒண் ணா = கூறமுடியாது, பொருந்துமவற்று = சேர்ந்த அவற்றுள், உன்கிளையாய்ப் போனார்க் கெல்லாம் = உனதுறவாய்ச் சென்றவர்க் கெல்லாம், ஆகுலம் உற்றிலை = சோகித்தா யில்லை, என்னீ என்னோநீ, அவற்றின்மட்டோ = இவ்வளவுதானோ, அநந்ததேசப் பிறவிய றையக்கேளாய் = அளவறு தேயத்துதயங்களைக் கூறக்கெட்குதி.

கோசலத்தும் தெசார்ணவத்தும் பௌண்டரத்தும்குச்சரத்தும் துழாரத்தும், கோக னத்தும், போசலத்தும் ஏகையத்தும் சாளுவத்தும் = கோசல, தசாரண பௌண்டிரகுச் சரதுஷாரகோகன போசல ஹைஹய சாளுவமுதலிய தேயங்களில், பூபதியாய் = அரசனாய், வானரமாய் = குரங்காய், புழுவாய் = கீடமாய், புல்வாய் = மானாய், மாசலத்தில் = மாநீரில், கரண்டமாய் = நீர்க்காக்கையாய், பதங்கமாகி = விட்டிலாய், மாசுணமாய் = பாம்பாய், வேசரியாய் = கழுதையாய், மட்டில் சென்மம் = அளவற்ற பிறப்புகளில், நீசகல வாதனையாற் பிறந்தபோதில் = நீசர்வவாசனையினாலே ஜன்மமெடுத்த போதில், நின்கிளை ஞர்க்கிரங்காத நீதியென்னோ = இருந்த உனது உறவினர்க் குறித்துச்சோகியாத நியாய மியாது கோலோ !

(ஸ்ரீ - வீர.) சுபுஷ்பங்கணிறைந்த ஸ்தலங்களில் மிருகஜாதிகளில் ஜன்மித்தபோது, மிருகயோனி ஜன்னிய ஜீவர்கள் பந்துக்களாகப் பகுபேர்கள் உண்டாகியிருந்தார்களே அவர் களைக்குறித்து நீ எங்ஙனம் சோகியாம லிருக்கின்றாய், பர்வதங்களினுடைய மகா உக்கிர மாகிய சிகரங்களில் நீ பிறந்தபோது வெகு சிங்கங்கள் நினக்குப்பந்துக்களாகி யிருக்கலாமே அவர்களைக்குறித்து நீயேன் அழுகாம லிருக்கின்றாய். இங்ஙனம் ஹம்சங்களும், விருக்ஷங்க ளும், மீனங்களும் ஆங்காங்கு நீஜனித்தபோது பந்துக்களாமே யுனக்கு அவற்றைக்குறித்து நீயேன் புலம்பவில்லை, இப்போது யோகபலத்தானே கண்டனவாய சகோதரனது ஜன்ம பேதங்களைச் சிறப்பித்து மரித்துரைத்தல்:—கோசலமென்பதாதி. தசாரணங்களில் கபில வனவானரமா யிருந்தாய், துஷாரங்களில் ராஜபுத்திரனாகி யிருந்தாய் புண்டரங்களில் வன வாயசமாயிருந்தாய்; தசார்ண துஷார புண்டராதிகள் தேசவிசேடங்களாம். ஹைஹயங் களில் மாதங்கமாயும், திரிகர்த்தங்களில் கர்த்தபமாயும், சால்வங்களில் நாயாயும், சூலஞ்

சாமாபுத்ர:—ராயின்சுதன், சாலத்துருமத்தில் பக்ஷியாயும் இருந்தாய், இவ்விரண்டும் சால்வங்களிலேயே, இன்னும் அநேகமிடங்களில், பிப்பலமாயும் குக்குடமாயும் விப்பிரனுயும் இத்திரியாயும் சற்பரியாயும் மட்புழுவாயும் முற்பகமாயும் இற்கொதுகாயும் ஷட்பதமாயும் வ்ருச்சிகமாயும் பற்பலவாயும் எற்கனுஜனுமாயிருந்தாய். இவைகளுலும் அன்னிய வெகு ஜனயோனிகளிலும் ஹேபுத்திர ! முன்னர் நூறுயிரங்கால் இச்சம்புத்தீவில் ஜன்மித்துளாய் எத்துணை யுறவினர்க்காகத்தான் அழுதுமுடியும் ஆலோசனைசெய்து பார்ப்பாயாக.

(ச.) மூலம், மார்க்கா = மிருகசம்பந்திகள். (46-47)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அன்னை தந்தைகள் அளவிலேயாகலின் இன்னவர்க் கெனவழு தெவர் துயராற்றுவார், உன்னருவினை யுளத்துன்னி யுன்னிநீ பொன்னென விளங்குதி யென்னவோதுவார்:—அளவிறந்த வென்பது.

அளவிறந்த பிறவிதொறும் பிறந்தோர்க் கெல்லாமன்னை தாதைபையெண் ணிலகன்றகானிற், கிளர்மரங்கடருஞ் சருகையெண்ண வற்ருங்கேதமுறக் கணக் கில்லைக் கேளாய்மைந்தா, தளர்வின்றிப் பாவாபாவனைக ளின்றிச்சரா மரண மற்றவுனைச் சங்கியாதே, யுளமுறநோக்காய் துயர்விட்டஞ் ஞானத்தையொழித் துணரிலுள்ளபடி யுன்னைக்காண்டி.

(ப - ரை.) அளவு இறந்த பிறவிதொறும்=அளவில்லாத ஜனமந்தோறும், பிறந்தோர்க் கெல்லாம் = ஜன்மித்தவர்க் கெல்லாம், அன்னைதாதையை எண்ணில் = மாதாபிதாக்களை எண்ணில். அகன்றகானில் = விஸ்தாரமாகிய கானகத்தில் உள்ள, கிளர்மரங்கள் தரும் = விருத்தியாய பெரியதருக்கள் தரும், சருகை யெண்ணவற்ரும் = பர்ணத்தை யெண்ணு வதுபோலவாம், கேமுறக்கணக்கில்லை =துக்கப்பட அளவுமில்லை நியாயமுமில்லை, கேளாய் மைந்தா = புத்திர நீகேட்குதி ! தளர்வின்றி = விசிராந்திவடிவமாய், பாவாபாவனைக ளின்றி = பாவ அபாவவிகிர் முக்தமாய், சராமரணமற்ற = ஜராமரண வர்ஜிதமாய், இலங் கும், உன்னை = ஆத்மசொரூபத்தை, சங்கியாதே=ஐயந்திரிபு இல்லாமலே, உளமுற நோக் காய்=சித்தத்தில் ஊன்றிப்பார்ப்பாய், துயர்விட்டு = விக்ஷேபத்தைவிலக்கி, அஞ்ஞானத் தையொழித்து = அறியாமையை யகற்றி; உணரில் = சாக்ஷாத்கரிக்கில், உள்ளபடி உன் னைக் காண்டி=யதார்த்தமாக உனது சொரூபத்தைக்கண்டு மகிழ்வாய்.

(ஸ்ரீ - வீர.) அநந்த பிதாக்கள் சென்றனர், அநந்தமாதாக்கள் சென்றனர், சென்றவ நீண்டு சம்சாரிகளாய புருடர்கட்கு வனபாதபபர்ணம் போலும் அளவில்லையாம். ஆகலின் இங்கு துக்கத்திற்கும் சுகத்திற்கும் அளவை அவதியென்னே ! இல்லையாகையால் சோகம் யாவற்றையும் அல்லது திருசியமாத்திரத்தையும், விடுத்து மிகத்தெளிந்து கம்பீரமாக விருப் பேம், பாவ அபாவங்களை விட்டு ஜாராமரணவர்ஜிதமாய ஆன்மாவைச் சாவதானமாய் இலய விக்ஷேப இரசாஸ்வாத கஷாயமென்பனவாந்தடையின்றி நன்கு சிந்திப்பாய். விமூடமனத் தையுடையவனுக வேண்டாம். உனக்குத்துக்கமுமில்லை ஜன்மமுமில்லை மாதாவுமில்லைபிதாவு மில்லை, ஹே நன்மதிமைந்த ' நீயாத்மாவாகவே யிருக்கின்றுய், அநாத்மபூத தேகாதி யொன்றுமே நீயல்லை, என்றுணர்தி. (48)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகில ஆசைகளையு மகற்றி அதிருக்கும மதியினுலே ஆன் மாவைத் தரிசித்து ஆநந்தமயமாவா யெனக்கூறினுன் என்றுபசங்கரித்தல்:—உன் னென்பது.

உன்னுருவை நீகாணுஞானக் கண்ணிலொன்ற லாவாசை யெனுங்காச மூறு, மன்னதுதீர்த் துளக்கமலத்துள்ளே நொய்யவறி வுடையவுன் மனத்தா லுன்னாலுன்னை, யின்னபடி யெனநோக்கி மயக்கமெல்லா மிறையுமற வொழித் தின்பமெய்தி யிருப்பாய், பின்னவனே யெனமுன்னோ னுரைத்தானென்று பெருந் தகைக்கு வசிட்டமுனி பேசினனே.

(ப - ரை.) உன்னுருவை = நினது சொரூபத்தை, நீகாணும் = நீதரிசிக்கும், ஞானக் கண்ணில் = ஞானதிருஷ்டியில், ஒன்றலா ஆசையெனும் காசமூறும் = அநேக ஆசைகள் என்று சொல்லப்பட்ட காசபடலங்கள் உண்டாகித் தடைசெய்யும், அன்னது தீர்த்து = அத்தகைய இடையூறுகளை நீக்கி, உளக்கமலத்துள்ளே = இருதய அப்ஜமத்தியில், நொய்ய அறிவுடைய = சூக்குமவுணர்வுடைய, உன்மனத்தால் = உன்னுடைய வுள்ளத்தால், உன் னால் = அதிப்பிரயத்ந முடைய உன்னால், உன்னை = உனதுமெய்வடிவை, இன்னபடி யெனநோக்கி = சச்சிதாநந்தமா யிருக்கின்றேனென் றுள்ளபடி சுவாநுபூதியாற் கண்டு, மயக்கமெல்லா = ஆவரணாதிகள் யாவற்றையும் = இறையுமற = அணுவு மில்லாமல், ஒழித்து=தொம்சஞ்செய்து, இன்பமெய்தி = பரமாநந்தமுற்று, இருப்பாய்=பரமசந்தோஷ சித்தனாய் வாழ்வாய், பின்னவனே = என்னிளையோய்! என =என்பதாக, முன்னோன்= புண்ணியன், உரைத்தான் = உபதேசித்தான், என்று = என, பெருந்தகைக்கு = ஸ்ரீ இராமருக்கு, வசிட்டமுனி = ஸ்ரீ வசிஷ்டபகவான், பேசினனே = கூறியருளினார்.

(ஸ்ரீ - வீர.) ஹே புத்திர! சர்வ ஏஷணமய களங்கங்கள் விடுபட்டவதனானே மகாம னன சீலவான்மாவால் ஆன்மாவில் தன்னானே இருதயதாமரை யிடையில் சுவஸ்த ஆத்ம சுபாவமாகச் சாக்ஷாத்காரஞ் செய்தலால் சம்சார சம்பிரமத்தைச் சேடமின்றித் தியாகித்துப் பரிசிட்டமாய ஆன்மாவானேயே பரமசந்தோஷத்தை யடைந்து வாழ்வாய்.

(ச.) ஆசையெனும் = புத்திரகளத்திராதி விடயேச் சாமயமென்னும், மூலத்தில்:— ஏஷணைகள் = புத்திரகளத்திராதி விஷயேச்சைகள், அவற்றின் மயகளங்க வர்ஜிதமாய், சொச்சபாவத்தோடுகூடிய அந்தக்கரணத்தால், சம்பிரமத்தை நன்றாகத்தியாகித்து, ஆன்மா வின் கண்ணே பரமசந்தோஷத்தை யடைதியென்ப தந்வயமாம். (49)

புண்ணிய பாவனர் கதை முற்றிற்று.



## மாவலி கதை.

———(*)———

(ஸ்ரீ - வீர - அ-கை.) புண்ணியனதினிய வுபதேசத்தாற் பாவனனும் ஞானியான னெனல்:—புண்ணியன் என்பது.

புண்ணிய னுரைத்தஞானம் பொலிந்த பாவனன் றனுள்ள
நண்ணிய விடியற்கண்ட ஞாலம்போல் விளங்குத் தோன்றத்
திண்ணிய விருவர்தாமுஞ் சித்தராய் விவேகஞானத்
தெண்ணிய கரையையெய்தி யியமாய் வனத்திருந்தார்.

(ப - ரை.) புண்ணியன் உரைத்தஞானம் = புண்ணிய னுபதேசித்த பிரஹ்மவித்தை யானது, பொலிந்த = பரிபக்குவப்பட்ட, பாவனன்றன் = இளையோனுடைய, உள்ளம் = உள்ளத்தில், நண்ணிய விடியற்கண்ட ஞாலம்போல் = பொருந்திய சூரியோதயத்தைத் தரிசித்த பிரபஞ்சம்போல, விளங்கித்தோன்ற = சமுசாயாதி யில்லாமல் தன்வடிவமாகவே புலப்பட, திண்ணிய இருவர்தாமும் = திடமுற்ற இரண்டுபேருமே சித்தராய் = யாவும் பெற்றவராய், விவேகஞானத் தெண்ணியகரையை எய்தி = ஞானவிஞ்ஞான பாரகராய், இயம்பிய வனத்திருந்தார் = கூறியவனத்தில் வசித்துக்கொண்டிருந்தார்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—அந்தப் புண்ணியனால் இவ்வண்ணம் அக்கால் உணர்த்தப்பெற்ற பாவனன், பிரகாசியமாய பூதலம் பிரபாதத்திற்போல, பிரபோதத்தை யடைந்தனன்; பிரபோதம் = பரிநிஷ்டிதமான ஆத்மநிச்சயம். அநிந்திதராய், ஞானவிஞ்ஞானங்களைக் கரைகண்டவராய், சித்தராய், இலங்கிய அவ்விருவரும் அதன்பின் னவ்வனத்தில் பிராரப்தக்ஷய பரியந்தம் சஞ்சரித்துக் கொண்டிருந்தனர்.

(ச.) ஞானம் = ஞானத்தினால், சித்தராய் = தவச்சித்தராய், விவேகஞானத்து = பரோக்ஷ அபரோக்ஷப் பிரஹ்ம ஞானத்தினது. பிரபாதத்திற் பூதலம் கர்த்துரு பிரகாசியம் = பிரகாசமானத்தன்மை. (1)

(ஸ்ரீ - வீர - அ-கை.) கூறியகதையை யுபசங்கரித்துப் பிரகிருதத்திற் பொருத்தல்:— வேண்டிய வென்பது.

வேண்டிய காலமெல்லாம் விநோதமாம் விளையாட்டெய்தி
யீண்டிய காலஞ்செல்ல யாக்கைதீர் வீட்டிலெய்தித்
தூண்டிடுதிரி நெய்யில்லாச் சுடர்கள்போற் சாந்தமுற்றார்
மாண்டிடு முயிர்கட்கெல்லா மரபிந்த மரபுபோலாம்.

(ப - ரை.) வேண்டிய காலமெல்லாம் = தேகபதன பரியந்தம், விநோதமாம் விளையாட்டெய்தி = அதை நினைத்தும் அதையுரைத்தும் அதன்மயமே யாகியென்றும் அமரா நின்ற விநோதமாம் லீலையை அடைவுற்று, ஈண்டிய காலஞ்செல்ல = இவணுற நியமித்த காலமானது அதீதமாக, யாக்கைதீர் வீட்டில் எய்தி = விதேகமுக்தியை யடைந்து, தூண்டிடுதிரிநெய் இல்லாச் சுடர்கள்போல் சாந்தமுற்றார் = தூண்டும்படியான திரியும் எண்ணெய்யும் இல்லாதனவாய தீபங்கள்போலப் பரம உபசாந்தியை அடைந்தார்கள் மாண்டிடும் உயிர்கட்கு எல்லாம் = இறந்திடுஞ்சீவர்க ளெவர்க்கும், மரபு இந்த மரபுபோலாம் = வங்கிசம் இந்தவங்கிசம் போலவாம்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் வெகுகாலங்கழித்து அந்தத்தில் அவ்விருவரும் க்ஷீணதைலங்களையுடைய தீபங்கள்போல விதேகராய் நிர்வாணபதத்தை யடைந்தனர் பரமசாந்தியை யடைந்தனர். இவ்வண்ணம் முன்புக்த தேகங்கட்குச் சுகிருத்துச் சனபந்து சமூகம் அநந்தமாம்.

(ச.) மாண்டிடு முயிர்கட்கெல்லாம் = பூர்வ ஜந்மாநுபவமுள்ள தேகசம்பந்தமுடையோர்க்கு, இந்தமரபுதானேயாம் = வம்சம் இத்தன்மையதேயாம். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆசையே அகிலசிந்தாகுலமெனல்:—அனந்தமென்பது:

அனந்தமாம் பிறப்புற்றார்க் ககிலமு மயலன்றாகிற்
சினந்திட னயத்தல் வேண்டாவா தலாற்செறிந் தவாசைக்
கனந்தனை விடுவதல்லாற் கதித்துற வளர்க்கலாகா
மனந்தனில் வளர்க்கிற்சிந்தை வன்னிக்கு விறகாமன்றே.

(ப - ரை.) அனந்தமாம் பிறப்புற்ருருக்கு = அந்தமில்லாது பிறப்பை யடைந்தவர்க்கு அகிலமும் அயலன்ருகில் = சகலமும் வேறன்று ஆயின், சினந்திடல் நயத்தல்வேண்டா= தள்ளலுங் கொள்ளலும் வேண்டா, ஆதலால் = ஆகையினுல், செறிந்த ஆசைக்கனந்தனை= வெகுவாகச் சேர்ந்துள்ள அவாவின் கூட்டத்தை, விடுவதல்லால் = விட்டுத்தொலைக்க வேண்டுமே யல்லாமல், கதித்துற வளர்க்கலாகா = மேலும் மேலும் விருத்தியாம்படி போற்றிக்கொண்டே யிருத்தல்கூடாது, மனந்தனில் வளர்க்கில் = உள்ளத்திலாசையை விளைவித்துக் கொண்டே போற்றில் = சிந்தைவன்னிக்கு விறகாம் = சிந்தையக்கினிக்கு இந்தமாம், அன்றே = இது உசிதமல்லவேயல்ல, அல்லது அன்று ஏ அசைநிலைகள்,

(ஸ்ரீ - வீர.) ஜனசமுதாயமே பந்துவானுல், யாவரால் யாதுதான் கொள்ளற்பாலதுள்ளது, அவற்றினின்றும் யாதுதான் தள்ளற்பாலதுள்ளது, அந்தோ ஆச்சரியம்! எதைக் குறித்துத்தான் சோகிப்பது = சோச்சியத் தன்மையானே கவர்வது, எதைக்குக்குறித்துத் தான்மோகிப்பது; ஆகையால், ஹே இரகுநந்தன! விடயந்தோறு மநந்தங்களாய், சர்வசோகாதி மூலபூதங்களாய திருஷ்ணைகளின்றியாகம் ஒன்றே உபாயமாம், பரிபாலனம்=விடய சம்பாதனங்களால் விருத்திசெய்து கொண்டேபோதல், என்பதன்றும். விடய அசிந்தனமே அதன் பரித்தியாகமாம், என்னுங்கருத்தா லுரைத்தல்:—மனந்தனி லென்பதாதி, சிந்தனத்தானே சிந்தையோ விருத்தியாம், இந்தனத்தானே பாவகனென்ன.

(ச.) சினந்திடல் நயத்தல் வேண்டா = புத்தியளித்தற்கு இராமனை நோக்கிக்கேட்கின்ருர் ஜனபந்து ஜன்னிய அநந்த ஆசைகளைக் கவருதியோ என; அவற்றின் ஆசையின் றியாமம் யுக்தமா? கிரகணம் யுக்தமா? எனத்தியாகமே யுக்தமென்பது கருத்து, மூலம்:— எங்ஙனமிஷ்டஞ் சித்திக்குமென்னும் விசாரஞ் சிந்தையாம், கண்டபொருள்களின் மீண்டு மீண்டுள்ள தொடர்ந்த எண்ணம் சிந்தனமாம். (3)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இச்சையை யிரித்து இவ்வுலகினைத் துச்சமாய்க்கண்டு இன்புடன் இருத்தியெனல்:—இச்சையென்பது.

இச்சையாம் விறகுமாண்டா லெண்ணமாம் வன்னிமாளு
நிச்சயமாகுந் தேயத்தி யாகமா நெடுந்தேரேறி
மெச்சிய வுதாரக்கண்ணுல் வேட்கையான் மிக்வும்வாடுங்
கொச்சைஞா லத்தைநோக்கிக் குறைவற விருப்பாய்நீரா.

(ப - ரை.) இச்சையாம் விறகுமாண்டால் = ஆசையாகிய இந்தனந்தீர்ந்தால் எண்ணமாம் வன்னிமாளும் = சிந்தையாகிய தீதீர்ந்துபோம், நிச்சயமாகும் தேயத்தியாகமாம் நெடுந்தேர் ஏறி = துணிபாகும் தேயத்தியாக மெனமொழிந்த பெருந்தேரில் ஆரோகணித்து, மெச்சிய உதாரக்கண்ணுல் = புகழும் கருணோதார திருஷ்டியால், வேட்கையால் மிகவும்வாடும் = ஆசையால் அத்தியந்தம் வாட்டத்தை யடையும், கொச்சை ஞாலத்தை நோக்கி = தீனமான ஜகத்தைப்பார்த்து, குறைவற இருப்பாய்நீரா = பரிபூரண ஆனந்தயினுகி வாழ்வாய் தைரியசாலியாகிய இராகவனே.

(ஸ்ரீ- வீர.) சிந்தையானது, இந்தனமில்லாத எரியேயென்ன, சிந்தனமின்மையினுனே நிதைந்துபோம், முன் வருணித்தநியேய வாசனைத் தியாகமாகிய இரதாரூடனுகி, எல்லாப் பிராணிக ளிடத்திலும் தயை உதாரமாந் திருஷ்டியினுனே தீனமாகிய லோகத்தைநோக்கிப் பிரகிருத விவகாரத்தை யநுஷ்டித்துச் சுகிக்க எழுந்திருத்தி இராகவனே.

(ச.) மெச்சிய உதாரக்கண்ணால் = கருணையோடு உதாரமான திருஷ்டியால், குறைவற = சுகியாய்ச் சீவன்முத்தி நிமித்தம் யத்தனஞ்செய்பவனா யிருப்பாய். (4)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரஹ்ம நிலையையடையின் அறியாதவரும் சுகிப்பரெனல்:—நொய்யென்பது.

நொய்யதாயொரு மயலின்றி நோயெலா நீங்கி
மெய்யதாகிய பிரமமா நிலையிது வீரா
வையமின்றி யிந்நிலையுறி லறிவில ரேனு
மையன்மேவல ரிராமநீ யிவ்வகை வாழ்வாய்.

(ப - ரை.) நொய்யதாய் = சொச்சமாய், ஒருமயலின்றி = நிட்காமமாய், நோயெலா நீங்கி = ஆமயமகன்றதாய், மெய்யதாகிய = சத்தியமாகிய, பிரமமா நிலையிதுவீரா = ஹே மகாபாகுவே! பிரஹ்மஸ் திதியிதுவாம், ஐயமின்றி = சமுசயாகிதமாய், இந்நிலையுறில் = இந்தஸ்திதியை யடையில், அறிவிலரேனும் = அறியாதவரேனும், மையன்மேவலர் = மோகத்தை யடையமாட்டார், இராமநீ = இராகவனேநீ, இவ்வகை வாழ்வாய் = இந்தப் பிரகாரம் சுகிப்பாய்.

(ஸ்ரீ - வீர.) இந்தப் பிரஹ்ம சம்பந்தஸ் திதியானது மிகத்தெளிவுடையதாம், காமமற்றதாம், வியாதியற்றதாம், ஹே பெருந்தோளோய்! இதனை யடைந்தவன் விவகாரங்களில் அசதுரனாய்விமூடனேனும் மோகத்தை யடையமாட்டான். (5)

(ஸ்ரீ - வீர - அ- கை.) நன்மையடைந்திட இருநண்பைத் தெரித்தல்:—நல்லஎன்பது.

நல்லபுந்தியும் விவேகமு மெனவிரு நண்பா
லல்லறீர்ந்திடு மொருவரை யென்னி னுமணுகிற்
சொல்லு பல்பொருட் சுற்றங்க டடக்கறத்தீர்ந்து
புல்லு திண்மையி னலன்றித் துயரெலாம் போகா.

(ப - ரை.) நல்லபுந்தியும் = நன்மதியும், விவேகமும் = விவேகமும், என இரு நண்பால் = என்ற இரண்டு நேயரால், அல்லல் தீர்ந்திடும் = துக்கந்தொலைந்திடும், ஒருவரை யென்னினும் அணுகில் = ஒருவரையேனும் அடையில், சொல்லும் பல்பொருள் = ஆசாவிடயங்கள் என்று சொல்லப்பட்ட சகல வஸ்துக்களையும், சுற்றங்கள் = பந்துக்களையும், துடக்கறத்தீர்ந்து = சம்பந்தமில்லாமல் விடுத்து, புல்லுதிண்மையினல் = பொருந்தாநின்ற தைரியத்தினல், அன்றி = அல்லாமல்; துயரெலாம் போகா = சங்கடங்கள் எல்லாம் சாம்பா.

(ஸ்ரீ - வீர.) விவேகலக்ஷண மித்திரன் ஒருவன், பரமார்த்தபோத லக்ஷணப் பிரியசகிஏகை, என்பவரைத் துணையாகக்கொண்டு விவகரித்த போதினும் இவ்வண்ணம் சங்கடங்களில் மோகியான், சர்வதனங்களையும் அத்தியந்தம் அகற்றல், உண்ணேய நண்ணுதொழிதவின் கையான்மாட்டை யதட்டியோட்டல் போலப் பந்துக்களைக் கைவிடுதல், தனதுதைரியம், என்னுமிம் மூன்றையும் விடுத்து எவனும் தன்னைச் சங்கடங்களி னின்றும்மீட்பரிதாம்.

(ச.) நண்பு = நட்புள, அவரில், ஒருவரை யென்னினும் அணுகில் = அநுசரித்துவாழில், அல்லறீர்ந்திடும், சொல்லுபல் பொருள் = சர்வார்த்தங்க ளென்னுஞ் சம்சாரப்பிரயோஜன மூள்ளவைகளையும், சுற்றங்கள் = பந்துக்களையும், துடக்கறத் தீர்ந்துவிட்டதாய், புல்லுதிண்மையினலன்றி = பொருந்திய தனது விவேக வைராக்கிய தைரியத்தினலன்றி,

துயரெலாம் போகா = சம்சாரதுன்பம் எவ்வளவு நீங்காது. தனது தைரியமே சம்சாரசங் கடத்தினின்றுங் கரையேற்று மெனப்பட்டது. மூலம்:—அபஹஸ்திதா = அத்தத்தா லகற்றல். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நிறைந்த மனத்திற்குத் திரிலோக ஐசுவரியமும் குறைந்ததே யெனல்:—மயலென்பது.

(ச-அ-கை.) இப்போது தைரியத்தைச் சம்பாதிக்கும் பிரகாரத்தையே கூறல்:—மயலென்பது.

மயலிலா மையா னூல்களான் மகத்துவ முதலா
முயர்குணங்களால் வருந்தியு மனத்தினை யுய்க்கிற்
றுயர்கணீங்குமூ வுலகுறு செல்வமுந் தொக்கும்
பயனளிக்கினு முயர்வுறு மனமெனப் பயிலா.

(ப - ரை.) மயல் இலாமையால் = வைராக்கியத்தால், நூல்களால் = சாஸ்திரத்தால், மகத்துவ முதலாம் உயர்குணங்களால் = பெருந்தன்மை யாதியுயர்ந்த குணங்களாலும், வருந்தியும் மனத்தினை = கஷ்டப்பட்டும் சித்தத்தினை, உய்க்கில் = உய்த்திடின், துயர் கள் நீங்கும் = துக்கங்கள் தொலையும், மூவுலகுறு செல்வமும் தொக்கும் = திரிபுவன ஐசு வரியமும், இரத்நாதி நிறைந்தகோசமும், பயன் அளிக்கினும் = பிரயோஜனத்தை நல்கி னும், உயர்வுறு மனமெனப்பயிலா = மகத்துவத்தாற் பூரிக்கப்பெற்ற மனத்தைப்போலச் சுகந்தரா.

(ஸ்ரீ - வீர.) வைராக்கியத்தினாலும் சாஸ்திரத்தினாலும் மகத்துவாதி குணங்களினாலும் மிகுந்தமுயற்சியினானே ஆபத்து விகாதப்பொருட்டுச் சுயமாகவே மனத்திற்கு உத்கர்ஷம் அடைவிக்குக, அல்லது விடயப் படுகுழியினின்றும் மனத்தைக் கரையேற்றி யுய்விக்குக, திரிபுவன ஐசுவரியத்தானும் இரத்நதாரியாய கோசத்தினானும், சர்வதுக்கப் பிரசமன உபல க்ஷித நிரதிசய ஆநந்தலாபலக்ஷணமான அந்தப் பிரயோஜனமடைய முடியாதாம்; எவ்வித னுத்துச்சவிடய அநபிலாஷையினானே பூரணிக்கப் பெற்று விருத்தியை யடைவுற்ற சித் தத்தானே யடைந்திடலாமோ. இதனைப் ஸ்ரீபர்த்ருஹரியும் கூறியுள்ளார்:—கோவணநூறு கூறுபுற் பீறற்கொளுங் கந்தைமற்று மத்தகைத்தே யாவலில் பயிக்கவுணவெண மிலதா மருந்துயில் வனமயானத்தே, தாவிறன் வயனுய்த் தடையறத்திரிதல் சந்ததஞ்சிந்தை தண் மையதா, மூவுறில்யோக மகோற்சவத்திறமை மூவுலகாளலா லென்னே. அதோகதிகள், ஊர்த்தகதிகள், மர்த்யலோகங் களிலேயே ஜன்மபரம்பரையால் சுழல்பவைகள், என்பவற் றின் நிமித்த பூதங்களாய விடயாபிலாஷைகளால் யாவர்வீழ்கின்றார்களோ, அவர்களுடைய மனம் எப்போதுமேசந்தாபம் அடைவுற்றதாகவே யிருக்குமன்றி யொருக்காலும் விசிராந் தியை யடையவே மாட்டாதாம், என்னுமவ்விது இச்சகத்குக்ஷியின் கண்ணியற்கையேயாம். யாவர் வீழாரோ அவர்தம்மனம் சந்தாபமற்றதேயாம், அழிந்தெழுந்தமரும் விடயராகங் களினின்றுங் கிளம்பிப் பிரத்தியாகார உபாயங்களானே ஆன்மாவின்கண் ஸ்தைர்யசம்பா தனத்தானேயாவர் மனத்தைப் புனிதமாக்கி முயல்விக்கின்றனரோ, அவர்தம்மனம் திரிவித தாபமுறுவதினின்றும் சாந்தமுற்றதேயாம்.

(ச.) துயர்கணீங்கும் = சம்சாரநிவிருத்தி நிமித்தம் வைராக்கியாதி சாதனங்களினாற் றானே மனதைத் தைரியமுடைய தாக்கவேண்டும் என்பதுபொருள். மகத்துவாதிகுணங்க ளாலுன்னதி யாக்கப்பெற்றுத் தயிரியமான சித்தத்தினால் மகாபலமான கைவல்லியம் பெற லாம் அப்பலந் திரிபுவன ஐசுவரியாதியினாலும் பெறப்படா தென்பதுபொருள். (7)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேற் சந்தாப ஏதுக்கள் என்று சொல்லப்பெற்ற ஆத்யாத்மித் ஆதிதைவிக ஆதிபௌதிகங்களாய ரோகவருஷ ஆதப சோரசர்ப்பாதிகள் இருக்கும்போது யாங்ஙனம் மனப்பிரசாந்தி மாத்திரத்தானே சர்வதாப நிவிருத்தியெனின், இங்ஙனமெனல்:—மனமென்பது.

மனநிறைந்திடி லமுதமாய் நிறைந்திடும் வையந்
தனதுதாட் செருப் புல்கெலாந் தோன்முச்சுந் தரம்போற்
கனவிராசையா னிறையுநெஞ் சாசையிற் கவிழா
தினமுமாசையா னிறைமனங் குறைவென்றுந் தீரா.

(ப - ரை.) மனம் நிறைந்திடில் = மனம்பூர்ணமாயின், அமுதமாய் நிறைந்திடும் வையம் = அமிருதப் பிரவாகத்தாற் சர்வசகத்தும் சம்பூர்ணமாம், தனதுதாள் செருப்பு உலகு எலாம் தோல்முச்சும் தரம்போல் = தற்பாதத்திற் பாதரக்ஷையைத் தரித்திடிற் பூமிமுழுதுமே சருமம் பரப்பிய தொத்தலாகும்; கனவிராசையால் நிறையுநெஞ்சு = அதிதிடமான வைராக்கியத்தானே பூர்ணத்தன்மையை யடைந்த மனமானது, ஆசையிற்கவிழா = ஆசாவசாநுகமாகாதாம், தினமும் ஆசையால் நிறைமனம் குறைவென்றுந்தீரா = எப்போதும் ஆசையினுனே நிறைவுற்ற மனமானது ஒருபோது குறைதீராதாம்.

(ஸ்ரீ - வீர.) மூவித சந்தாபங்களும் மனோதோஷ மூலங்களேயாம், மனத்திற் சித்வி சுத்த பிரஹ்மாமிருத ரசம்பூர்ணமாகியவழி யெல்லா வுலகமும் ஆனந்த பூர்ணமாகவே விளங்காநிற்கும்: மிருதுவான பாதரக்ஷைகளான் மறைக்கப் பெற்றபாதனுக்குக் குசகண்டகாதி சங்குலமாய பூமிமுழுதும் அதிம்ருதுவாய சருமம் விரிக்கப்பெற்றதேயாகி விளங்குவதுபோலு மென்றறிக. வைராக்கியத்தானே பூர்ணத்தன்மையை யடைவுற்ற மனமானது ஆசையின் வசமாய தன்பின் ஞெடாராதாம், ஆசையால், காய்ந்தகட வுதாகற்பத் தன்மையையடையும், சரற்காலத்திற் பின்னதடாக பங்கம்போலும், அல்லது சரோஜலம்போலும்.

(ச.) மனநிறைந்திடில் = மனது மகிழ்ச்சியுறில், வையம் = சகலசகத்தும், அமுதமாய் நிறைந்திடும் = அமிர்தரசங்களாற் பூர்ணமானது போற் சுக நிமித்தமாமென்பது பொருள். மனதிற்குப் பூர்ணத்வம் எப்படி வருமெனிற் கூறல்:—வைராக்கியத்தானே மனம் பூர்ணத்தன்மையை யடையும், ஆசையின் வசமாயலைந்து திரிவதோ ஒருபோதும் பூர்ணத்தன்மையையடையாதாம், பராசரர்வாக்கியம் உதாகரணம்:—காமிகளுடைய காமமானது மிகு போகங்களால் ஒருபோது மொழியாது அவிசினுல் அக்கினிபோல மீண்டும் விருத்தியேயாம் என்பது. (8)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஒன்றுமில்லாமற் போகின்ற தென்பதையே திருஷ்டாந்தவ்ரியாக விளக்கிக்கொண்டு இவ்வுலகிலுள்ள பெரும்பாக்கியங்களும் மாலிலாமனமென மலராதெனல்:—அகத்தியன் என்பது.

அகத்தியன்கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கு
மிகுத்தமாலிலா மனமென நிறைமதி விளங்காப்
பகுத்தபாற்கட னிறைவுறு ப்பரிமளக் கோக்
னகத்திறையகி திருமுக நலம்பெறத் தோன்று.

(ப - ரை.) அகத்தியன் கவர்கடலென = ஸ்ரீ அகஸ்தியர் மாந்திய சமுத்திரம்போல நல்நெஞ்சை யழிக்கும் மிகுத்தமால் = நல்லமனத்தையும் நாசஞ்செய்யும் பேராசை, இலா மனமென் = அப்பேராசை யில்லாத மனதுபோல, நிறைமதி = பூரணசந்திரன், விளங்கா = தண்மையாய்ப் பிரகாசியாது, பகுத்தபாற்கடல் = சப்த சாகரங்களுள்ளும் குறையாத

தெனப்புகழும் க்ஷீரசாகரமும், நிறைவுறு = பூரணத்தை யடைந்திருக்க மாட்டாது, பரிம ளக் கோகனத்தின் நாயகி = பரமசுகந்தம் பொருந்திய பங்கஜச்செல்வியின், திருமுகம் = அழகிய திருவதனமும், நலம்பெறத் தோன்று = கவின்மிகுத்துக் கதிர்த்திடாது.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ அகத்தியர் குடித்த அர்ணவம்போல ஆசாவிவச சித்தமுடையவர்க ளின் பிரகடஞ் செய்யப்பெற்ற கோடர இருதயமானது சூனியத்தன்மையை யடைகின் றது, கோடரத்தின் பிரகடீகரண மீண்டு உள்ளடங்கிய லோபதைன்னியாதி தோஷங்களின் னுடும், கிராகபுஜங்காதி களினனுடும்; புடமான பிரகாசனமாம். அபரிச்சின்னப் பிரஹ்மா நந்த திருஷ்டியினுனே நோக்கின் பிரஹ்மாண்டத் துள்ளடங்கிய சுகலவங்கட்கு அற்பதரத் தன்மை யுண்மையினுனும், நித்தியசர்வகதப் பிரஹ்ம திருஷ்டியினுனே நோக்கின் தேசகால பரிச்சின்ன ஆதிபத்தியாதி விபவங்களும் அற்பங்களே யாகலினுனும், அவற்றைத் திருட் டாந்தப்படுத்தி மாலிலாமனத்தை வியந்தோதல்:—மாலிலாவென்பதாதி, ஆசையற்றமனம் எவ்வாறே, அவ்வாறு பூர்ண இந்துபொலிந்திட மாட்டாது, க்ஷீரசாகரம் பூர்ணமாகமாட் டாது, ஸ்ரீ தேவிவதனம் காந்தியுடையதாகாது.

(ச.) பூரணசந்திரன் முதலானவைக்கு நாசமும் விருத்தியு முளதாதலின் நித்தியசோ பையின்றும் நிராசையை யுடையவனது மனதுக்கு ஒருபோதும் மகிழ்ச்சிசோர் வின்மை யின் நித்தியசோபை யுளதாமென்பது கருத்து. மூலம்:—ஹிருதயத்திற்குப் பிரகடகிருத கோடரத் தன்மையென்றது திருஷ்டியதிசயப் பிரகாசனமாம். (9)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஈன்னெஞ்சை யாசைகெடுக்கும் என்பதைத் திருஷ்டாந்த முகமா யிலக்கி மாலின்மையே முத்தியெனல்,—மதியையென்பது.

மதியை மேகம்போல் வெண்டலச் சுதையினை மைபோ
லதிகநன் னெஞ்சை யாசையாம்பே யழகழிக்கும்
பொதியுமா லெலாநீக்கி வன்பவப் பயம்போக்கி
முதிர்மனத் தின்மால் பிணிப்பறன் முத்திவேறுளதோ.

(ப - ரை.) மதியை மேகம்போல் = சந்திரனைக் கார்கடுப்ப, வெண்டலச் சுதையினை மைபோல், = வெள்ளிய தலச்சுதையைக் கஜ்ஜலம்போல, அதிக நல்நெஞ்சை = மிகவும் நல்ல மனத்தினை, ஆசையாம்பேய் = ஆசாபிசாசு, அழகு அழிக்கும் = கவின்பெறுமற கெடுக்கும், பொதியுமாலெலாம் நீக்கி = வெகுகாலமா யடைந்து கடக்கும் அவாவெல்லா மகற்றி, வன்பவப் பயம்போக்கி = கொடிய பவபந்தத்தைக் கெடுத்து, மூதிர்மனத்தின் மால் பிணிப்பறில் = மனத்தின் மாட்டுற்ற ஆசையின் வலியகட்டு அற்றுப்போனல், முத்தி வேறுளதோ = வீடுவே றென்றுண்டோ.

(ஸ்ரீ - வீர.) சசியை மேகபந்தியானது போலவும், சுதைலேபத்தை மைநீர்போலவும், ஆசைப்பேயானது உத்தமமான மனுடனதுள்ளத்தை மலினமே படுத்தும்; ஆகலின் ஆசை யையடியோடு மகற்றவே வேண்டு மென்பதாம். அங்ஙனமாயினும் ஆசையின் நியாகமாத்தி ரத்தானே யாங்ஙனம் சித்தோபசமம். சங்கற்பம் சம்சயம் திருதி அதிருதியாதி விருத்தியந் தரங்களானும் அதன் வளர்வைத்தடுக்க முடியாமையின் எனச்சங்கை யுண்டாயின், சருவ விருத்திகட்கும் ஆசைமூலத் தன்மைநற் காட்டானே பரிகரித்துக்கொள்க, அஃதிங்ஙன மாம்:—சமாதியாரம்ப காலத்தில், பாகியகரணங்கட்கு நிருத்தத்தன்மை யுண்மையின், சாக்ஷ்யத்தாதி விருத்தியின்னடைவு இலதாமென அக்கால சிந்தனமேயாய சித்தத்தின் விருத்தி

பரிசேடிங்கும் என்பது முன்னரியம்பப் பெற்றது, சிந்தனத்திலோ சித்தம் ஆசையினுனே பிரவிருத்திப் பிக்கப் பெறுகின்றது, ஆசைவாயிலாய விடயங்கட்கே சிந்தனங்காண்டலின்; சங்கற்பாதி விருத்திகட்கும் சிந்திதார்த்த விடயத்தன்மையானே சிந்தாபூர்வகத் தன்மை யுண்மையின், சிந்தாமூல பூதமாய ஆசையெனப் பெயரிய சித்தவிருத்தியை விடுத்து நிச்சித் தத்தன்மையை அடைவாயாக. கூறியபொருளையே தொகுத் துபசங்கரித்தல்:—பொதியு மென்பதாதி, ஹே மகாத்மாவே ! நீ புத்திரவித்த லோகாதி சகல எடணைகளி னின்றும் மிகச் சாந்தமடைந்தவனுய், ஆசையெனப் பெயரிய பவபந்தத்தை யகற்றி, ஜீவன்முக்தன் ஆகக்கடவாய்; நிந்திதமான ஆசைகள் மனத்தில் இருப்பவைகளாய் ஆன்மாவிற்குச் சங்கலி போலும் கயிறுபோலும் பந்தன ஹேதுக்களா மாகலின், அவைகள் நன்குகழிந்த அளவில் யாவர்தாம் முக்தராகார், எல்லா ஜந்துக்களுமே வீடுபெறுபவர்களே யாவர்கள் என்பதாம்.

(௪.) மாலெலாம் = ஆசையனைத்துந் தவிர்ந்தவனுய்ப் பவபந்தத்தை விட்டு, முதிர், முக்தசித்தனுவாய், மனத்தின்மால் = மனத்தின் கண்ணுள்ள புத்திரகளத்திர சிநேகாதி ரூபங்களான கொடிய வாசைகள், பிணிப்பு = விலங்கு, கயிறெனப் பந்தஹேதுக்களாம், ஆதலின் அவைகள் அறின் முத்திவேறுளதோ, எவன்ருன் முக்தனுகான், யாவரும்முக்தரே யென்பது பொருள். மூலம், அப்ரலேகை = மேகபந்தி, சுதாலேபம் = சூர்ணதிரவிய லேபம், இப்பதின் கவியும் புண்ணியபாவனர் கதைச்சேடமாம். (10)

(ஸ்ரீ - வீர - அ - கை ) முன்னர் ஆசையற்றவனைப் புகழுங்கால் மூவுலகமும் பதுமபீஜ கோசம்போலும் அற்பம், நான்கு குரோசதூரம் ஆவின்பாதம், அரைநிமிடம் மகாகற்பம், ஆசையற்ற மனத்தினர்க்கு என்பதாக விவேக உதயத்தில் மூவுலக ஐசுவரியத்திற்கும் அற் பத்தன்மையா தோதப்பெற்றதோ அதனையுப பாதனஞ்செய்யும் பொருட்டு இப்போது பலியின் ஆக்கியானத்தைக் கூறும் வேட்கையராய ஸ்ரீ வசிஷ்டபகவான் பூமிகை இரசனை செய்தல்:—இன்னதென்பது.

(ச-அ-கை.) முன்புசென்ற வநேகஜன்மங்களைத் தொடர்ந்து நினைக்கும் வழியால் வருஞ்சொரூப ஞானத்தால் சித்தோபசாந்தி சொல்லப்பட்டது, இப்போது புண்ணிய மிகு தியால் ஏகதேசத்தில் விடயசம்பந்தமான சுகமும் சித்தோபசாந்தி நிமித்தமாமென்றுமாவலி கதையால் நிரூபிக்கின்ருர், அதில் வெகுகால போகத்திஞற் போக்கியங்களில் அருசிபிறந்த தெனல்:—இன்னதென்பது.

இன்ன தன்றெனி லிராகவ மாபலி யென்ன
நன்ன தாகிய புந்தியான் ஞானமே நேர்வா
யன்னதேநல னென்றது மனையதே தென்று
சொன்னமாமுனி தன்னையே யிராமனுஞ் சொன்னுன்.

(ப - ரை.) இன்னது அன்றெனில் = இல்வாறில்லை யாயின், இராகவ = ஹே ராமச் சந்திர ! மாபலியென்ன = மகாபலிச் சக்கிரவர்த்தியைப்போல, நன்னதாகிய புந்தியால் = நல்லதாகிய புத்தியால் ஞானமே நேர்வாய் = ஞானத்தையே அடைவாயாக, அன்னதே நலன் என்றலும் = அதுவே நல்லது என்று ஸ்ரீ வசிஷ்டபவான் கூறுதலும், அனையது ஏதென்று = அத்தகையதுயாது என, சொன்ன மாமுனிதன்னையே இராமனுஞ் சொன் னுன் = கூறிய மகாமுனிவரையே நோக்கி ஸ்ரீ இராமச்சந்திரரும் வினவினர்.

(ஸ்ரீ - வீர.) அல்லது ஹே இரகுவம்சப் பெயரிய ஆகாசபூர்ண சந்திரனே ! பலிபோ லும் அகஸ்மாத்தாக விசாரமுதயமாய மதிபேதத்தால் அமலமான ஞானத்தையடைவா

யாக என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறியபோது ஸ்ரீ இராகவர் கூறுவதாவது:—ஹேபகவ்ந்! சர்வதர்மஞ்ஞரே! தேவரீரது திருவருளால் அடியேன் அடையத்தக்கதாகிய சர்வான்மகப் பிரஹ்மத்தை இருதயத்தில் அடைந்தனன், அதே நிர்மலபதத்தில் விசிராந்தியையும் அடையப்பெற்றேன்; என்றாலும் அடியேன், ஹே சகலசம்சயலக்ஷண அம்போதங்களின் சரற்சமயம்போ னிவாரகரே! ஹே ஞானாசிரியரே' உபதேசித்துக் கொண்டிருக்கும் தங்களுடையஇந்தத்திவ்ய அமிருதமயத்திருவாய்மொழிகளின் சிரவணவிடயத்தில் திருப்தியை அலம்புத்தியை யடைந்திலேன்; ஆகையினால், மகாபலியின் விஞ்ஞானப் பிராப்திப் பிரகாரத்தை மீளவும் அடியேனது போதவிருத்தியின் பொருட்டு ஹே வியாபகமாகிய சிவசொரூபரே! உபதேசித் தருளுவீராக, வணங்கியடங்கி விநயாதி குணசம்பந்ந சீடன்பொருட்டுபதேசிக்கும் விடயத்தில் சற்புருடர்களாகிய மகான்கள் கேதமுறாரன்றே. (11)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மகாபலியினுடைய பெருமையை யெடுத்துரைத்து அவன் விசாரப்பொருட்டு முயன்றதை மொழிதல்:—வினயமாவலி, யென்பன.

வினயவள்ள லுக் கருந்தவ னுத்தரம் விளம்புந்
தனதுதோள்களா லுலகெலா மஞ்சுறச் சயித்தோன்
பினகிசார்ங்கியை முதலினர் தாழ்வுறப் பெரியோ
னனதியாமெனப் பாதலத் தரசுசெய் யதுலன்.

மாவலிப் பெயரானுயர் விரோசனன் மைந்த
னாவலிப் புறுகோடி பத்தாண்ட ரசானோன்
காவலிற் றிகழ்மேருவின் சிரமணிகதுவு
மேவலிற் பொலிசாளர மேனிலமேவி.

(ப - ரை,) வினய வள்ளலுக்கு = வினவிய ஸ்ரீ இராகவருக்கு, அருந்தவன் = அரிய தவவடிவமான ஸ்ரீ வசிஷ்டபகவான், உத்தரம் விளம்பும் = விடையருளிச் செய்வதாவது, தனதுதோள்களால் = தன்னுடைய புயபலத்தால், உலகெலாம் = சகல புவனங்களையும், அஞ்சுறச் சயித்தோன் = பயப்படும்படியாக வெற்றிகொண்டவன், பினகி சார்ங்கியே முதலினர் தாழ்வுறப் பெரியோன் = சகலதேவர்களும் கீழ்ப்படும்படியாக உயர்ந்தவன், அனதியாமெனப் பாதலத்தரசுசெய் யதுலன் = ஆதியின்றென்று சொல்லும்படியாகப் பாதாளலோகத்தில் அரசாளும் உவமையற்றவன்;

மாவலிப் பெயரான் = மகாபலியென்னும் பெரும்பெயர் வாய்ந்தவன், உயர் விரோசனன் மைந்தன் =உயர்ந்த விரோசனனுடைய குமாரன், ஆவலிப்புறு கோடிபத்து ஆண்டு அரசானோன் = ஆச்சரியமாக வலிமிகுந்து பத்துக்கோடி வருடங்களாக அரசாண்டு கொண்டு வரப்பெற்றவன், இத்தகைய அவ்வரசன், காவலிற்றிகழ் மேருவின் சிர = கவரலோடு பொலியும் சுமேருசிருங்கத்தின் அக்கிரபாகத்தில், மணி =இரத்தினங்களால் துதாக் ஆகப்பெற்று, மேவலில்=இருத்தலினாலே, பொலி = விளங்காநின்ற; சாளரம் = வாயதனம் பொருந்திய, மேனிலமேவி பிராசாதத்தை யடைந்து ஓர்வனானன்.

(ஸ்ரீ - வீர.) இராகவ கேளுனக்குயர்ந்த மாபலியின் விருத்தாந்த மியம்புகின்றோம், எதனுடைய சிரவணத்தா லத்தகைய தத்துவத்தின் இனியபோதம், விசாரபூர்வகதத்துவ அவதாரணம், நித்தியாத்மலாபபலம், நித்தியம் தத்துவபூதம் ஆத்மசொரூபபோதம் அடைந்திடுவாயோ, இச்சகத்தின் கோசமாகிய பிரஹ்மாண்டத்தில், ஒருதிக்கிலக்கண நிகுஞ்சகத்

தில் = அற்பகுஞ்சத்தில், பாதாலமெனப் பிரசித்திபெற்ற லோகம் பூமியின் கீழாக நிலை பெற்றுளது; அசுரமங்கையரானும் அவர்தஞ் சேனைகளானும் அர்ப்பிக்கப் பெற்றனவும், வெகுவித உபகரணங்களானே யாற்றப் பெற்றனவுமாகிய பூஜைகளையும், கிரீடனங்களை யும், விரும்புஞ் சீலத்தை யுடையவரும், ஸ்காந்தாதி புராணப் பிரசித்தரும், சுவர்ணலிங்க வடிவரும், பகவானுகிய பரமசிவமும் ஆகிய ஸ்ரீ ஹாடகேசுரரால் ஒருபாற்பாலிதமாம், அப் பாதாலலோகம்; அத்தகைய பெருமைவாய்ந்த பாதாளலோகத்தில் அசுரர்தம் புஜஸ்தம் பங்களானே தாங்கப்பெற்ற மகத்தான இராஜ்யபார விடயத்தில், விரோசன சுதனுகிய மகாபலியென்பவன் தானவர்தம் மரசனுயிருந்தான்; சர்வசுரவித்யாதர உரகமுதலவரும் அவன்பானடுங்கி யடங்கியிருந்தனர்; மூவுலகவடிவ இரத்தினங்களைக் கோசம்போலத் தம் மூதரத்தே வைத்துக் காப்பவரும், சர்வசரீரிகளையும் விரும்பியதந்து காப்பவரும், மூவுலக பாலகராகிய இந்திர மனுசேடாதிகளின் ஆதாரபூதருமாகிய ஹரியானவர் அம்மகாபலியின் பாலயிதாவாவர். எனவே பூஜனத்தானும் பூதானத்தானும் பரமசிவத்தையும் மகாவிஷ்ணு வையும் தன்வயப்படுத்தி யிருந்தனன் என்பது பெற்றும், இதனைக் கவிநாயகரும் பினுங்கி சார்ங்கியென்பதானே குறிப்பித்தனர். அத்தகைய மகாபலியால், அசேஷபுவன போகங்க ளாய லோகசம்ஸ்தானங்களின் பூஷண பூதநாயகர்களாகிய இந்திராதிகள் லீலையானே வெல்லப் பட்டவர்களாகி யிருந்தார்கள்; தசகோடி வருடங்கள் அத் தயித்திய அரசன் இராஜ்ய பரிபாலனம் நடத்திவந்தனன்; பின்னர் நீர்ச்சுழலொத்த இயற்கை வாய்ந்தயுகங்கள் அநற்பங்கள் சென்று கொண்டுபோக, சுராசுரப் பெருங்கூட்டங்கள் எழுந்துகொண்டும் விழுந்துகொண்டு மிருப்ப, மூவுலகத்திலும் உதாரவிருத்திகளாய் உத்கிருஷ்ட ஸ்திதியுடை யனவாய போகங்களை நிரந்தரம் மிகமிகவும் அநுபவித்துக் கொண்டே வந்தபோது விடய பூதங்களாய அவற்றில் தானவ நாயகனுகிய அம்மகாபலிக்கு வைராக்கியம் உண்டாயது; அக்கால் மேருசிருங்கத்தின் அக்கிரபாகத்தில் இரத்தினங்களா லாக்கப்பெற்ற ஹர்மியவா தாயனத் திருப்பவனுகி வருமாறோர் வானுயினன்.

(ச.) மூலம்:—யுகங்கள் மாறிமாறி வருதலின் ஆவர்த்தவ்ருத்திஷு எனச் சிறப்பிக்கப் பெற்றன, அம்பசாம் பிரமமாவர்த்த மென்ப வென்பதானே அதனது நிகழ்வுபோன்ற நிகழ்வு எவற்றிற்கோ அவைகள் என்பதாம், உத்வேகம் = அருசி. (12-13)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அவ்வாசனது ஆராய்ச்சியைப் புலப்படுத்தல்:—ஒரு என்பது.

ஒருபகற் றனியிருந்தன னிவையிவை யுணர்ந்தான்
பெருகுபோகங் கண்முனிந்தனன் பிறவியை நினைந்தான்
பொருவின் மூவுலகங்களிற் போகங்க ணெடுநாட்
பருகநல்கு நம்பேரர சாலென் கொல்பயனே.

(ப - ரை.) ஒருபகல் = ஒருபோது, தனியிருந்தனன் =ஏகாந்தமாக இருந்து, இவை இவையுணர்ந்தான் = இனிவருமாறு சிந்திக்கத் தொடங்கினுன், பெருகுபோகங்கள்முனிந் தனன் = வெகுவகை மிகுத்துவரு போகங்களை வெறுத்தான், பிறவியை நினைந்தான் = ஜனனுதி துன்பத்தை யெண்ணினுன், பொருவு இல் மூவுலகங்களில் = உவமையற்ற திரி லோகங்களிலும், போகங்கள் = திவ்யசப்தாதிகள், நெடுநாள் = வெகுகாலமாக, பருக = அநுபவிக்க, நல்கும் நம் பேரரசால் என் கொல்பயன் ஏ = தரும் நமது பெரியராஜ்ஜிய சம் பத்தால் என்னே பிரயோஜனம் அந்தோ ஒன்றுமே கிடையாது.

(ஸ்ரீ - வீர.) ஒருகாற் சுயமாகவே சம்சாரசம் ஸ்திதியைச் சிந்தித்துப் பார்த்தனன்:— மிகுந்த போகங்களின் அதிசயத்தானே மனோஹாரியாயும், திரைலோக்கிய அற்புதகாரியா யும், உள்ள என்னுடைய மகத்தான புஜிக்கப்பெற்ற இராச்சிய சம்பத்தா லென்னே பயன்?

(ஸ்ரீ-வீர - அ-கை.) எத்தகையன வாயினும் விடயங்கள் அழிவனவே யன்றியும் வந்தனவே மீண்டும், அத்தகைய விடயங்கோடல் சிறுவர்செயலேயாயும் யானிற்றலென்னென்பனவாதியாயாராய்தல்:—எய்து, உண்ட, அருந்து, என்பன.

எய்துபோதினி லினியவா யெங்ஙனே யெனினு
நொய்தி னீங்குமிப் போகத்தி னின்பமேறுவலி
னெய்த னோக்கிய ரின்பமு நெருநல்போ லின்றுஞ்
செய்தசெய் வதேயல்லது கண்டிலஞ் செயல்கள்.

உண்ட வின்பமே மீளவுமுண் கின்றதொரு நாட்
காண்ட காட்சியே மீளவுங்காண் கின்றதுவந்து
கொண்ட கோலமே மீளவுங்கொள் கின்றதென்றால்
விண்டமேலவர் நாணுரு தொழிவரோ வெறுத்து.

அருந்துமட் டினிதென்றதே மீண்டுமீண் டருந்தித்
திருந்திடாத புன்சிறுவர் போற்செய லறியாது
வருந்துகின்றன னாள்பக்க மாதமாண் டுகங்கள்
பொருந்தி வந்ததேயல்லது புதிதொன்றும் வாரா.

(ப - ரை.) எய்துபோதினில் = கிடைக்கும் காலத்தில், இனியவாய் = மதுரமுடையனவாய், எங்ஙனே யெனினும் நொய்தில் நீங்கும் = எவ்வாறாயினும் அதிவிரைவிற் செல்வனவாம், இப்போகத்தின் இன்பமேறுவலின் = இந்தப் போகங்கள் சுகத்தையியம்புமிடத்திவ் வளவினவேயாம். நெய்தல் நோக்கியர் இன்பமும் = கருங்குவளை விழிநோக்கக் காரியரின் ஆலிங்கன சுகமும், நெருநல்போ லின்றும் = நேற்றுப் போன்றே யின்றுமாம், செய்த செய்வதேயல்லது கண்டிலஞ் செயல்கள் = இயற்றியதை இயற்றுகின்றோமே யல்லாமற் புதிதொரு செயலையுஞ் செய்யக்காணேம். அதனையே விரித்துரைத்தல்:—

உண்டவின்பமே = அனுபவித்த சுகபோகமே, மீளவும் உண்கின்றது = மீண்டு மநுபவிப்பது, ஒருநாட் கண்டகாட்சியே = ஒருபொழுது தரிசித்த விநோதமே, மீளவும்காண்கின்றது = மறுபடியும் பார்ப்பது, உவந்துகொண்ட கோலமே = மகிழ்வுடன் அலங்கரித்துக்கொண்ட ஆடையாபரண அலங்காரமே, மீளவும் கொள்கின்றது = மறித்துந் தரித்துக் கொள்வது, என்றால் = என்பதானால், விண்டமேலவர் = ஆசையை யொழித்த பிராஞ்ஞர், வெறுத்து நாண் உருதொழிவரோ = வெறுப்படைந்து இலஜ்ஜையை யடையாமல் விடுவரோ. என்னைப்போல் விடயமயமாய்ப் போய்விடமாட்டார்.

அருந்துமட்டு இனிதென்று அதே மீண்டுமீண்டருந்தி = புசிக்கும்வரை இனிமையாகவிருக்கின்றதென்று அதனையே மறித்துமறித்தும்புசித்து, திருந்திடாத புன்சிறுவர்போல் = திருப்தியை யடையாத அற்பப்பாலர்போல, செயலறியாது = கிருத்தியமின்னதென உணராமல், வருந்துகின்றனன் = வருத்தத்தையே யடையா நிற்கின்றேன், நாள் பக்கம் மாதம் ஆண்டு உகங்கள் = தினம் பக்ஷம் திங்கள்வருடம் யுகம் என்பன, பொருந்திவந்ததே யல்லது புதிது ஒன்றும்வாரா = இசைந்து வந்துகொண் டிருக்கின்றதே யன்றி நவீனமாக ஒன்றும் வரக்காணேம்.

(ஸ்ரீ - வீர்.) தொடங்கும்போது மாத்திரம் மாதுரியமாக இருப்பது, ஒருதலையா யழிந்தேபோவது, புருஷார்த்தாந்தரம் ஒன்றும் இன்றியதாகிக் கேவலம் முழுவதும் உபபோகமே

ஆகிய இது எனக்கென்னதான் சுகத்தைக் கொடுக்கப் போகின்றது. புனர்த்தின எக விவகாரம், இரவின் நிலைமையும் மீண்டே, மீண்டும் ஸ்நானபோஜன சயனாதிகளும், அவை களே, அபிநவமாய சிறிதுகருமமேனும் சிறிது சுகமேனும் இல்லவேயில்லை யாகலின் பெரி யோர்தஞ் சந்நிதியிலிலாம் பட்டியம் இலஜ்ஜையின் பொருட்டே யாமன்றிச் சந்துஷ்டியின் பொருட்டாகாதாம். கூறியதையே புடஞ்செய்தல்:—நெய்தலென்பதாதி, மீண்டுமீண்டும் காந்தையாலிங்கனம், மீளமீளவுமே போகமே புசித்தல், அவ்விது சிசுஜனக்கிரீடையேயாம், ஈண்டு மகத்துக்கட்கு இலஜ்ஜையின் பொருட்டேயாம், தினந்தினம் மீண்டு மீண்டும் அதே புக்தவிரசமாய வியாபாரம் கூட்டத்தைச் செய்துகொண்டு பிராஞ்ஞன் எதனால் இலஜ்ஜை யடையான், அவசியமடைவான் என்றபடி மீண்டுந்தினம் மீளவுமிரவு மறித்துங்காரிய பரம் பரைகள், மீளவுமீளவு மிவ்வாறுயின், கிருத அநுகரணம் போலத்திருசிய இவ்விடம்பனை பிராஞ்ஞனுக்கு உபகாசஹேதுவாமெனயான் எண்ணுகின்றேன். வீணைகச்செய்த செய்வ திற் திருஷ்டாந்தம்:—ஊர்மித் தன்மையை மீண்டு மடைந்துநீர் நிரூர்மித்தன்மையைமீண்டு மடைதல்போல் அவ்வவ்வினைகளை யகிலருமடைவர், உன்மத்தசேஷ்டிதாகாரமாய் மறித்து மறித்துஞ் செய்யுமிக் கிரியையானது, அடிக்கடியாற்றும் பாலலீலைக்கொப்பாக. ஜனங்களை நோக்கி யறிவாளியைச் சிரிக்கச் செய்கின்றது.

(ச.) நோக்கியர் = மாதர்; உண்ட = உச்சிட்ட மீண்டநுபவித்தற்கு யோக்கியமன் றுதலின் என்பது கருத்து.

(15-16-17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வளவுஞ்செய்து மடையும் பயனியாதெனவும் செயற்கை யற்றது போகத்தாலன்றி யெங்ஙன்வருமெனவுஞ் சிந்தித்தல்:—செய்யவென்றது.

செய்யத்தக்கன யாவையுஞ் செய்துமிச் செயலா
லுய்யப்பெற்ற தென்செயன் மறித்திலாத தொன்றுலகி
லையப்பாடற யாதினுலெய்து மப்பொருடான்
மையப்போகத்தா லொழிந்து மேல்வரு நெறியாதே.

(ப - ரை.) செய்யத்தக்கன யாவையும் செய்தும் = இயற்றவேண்டு வனவாக எவற் றையுமே யியற்றியும், இச்செயலால் உய்யப் பெற்றதென் = இக்கிருத்தியத்தா லடையப் பெற்றதென்னே, செயல்மறித்து இலாதது ஒன்று உலகில் = மீண்டுஞ் செய்யவேண்டுவ தொன்றில்லாததான ஒப்பற்ற தொருபதத்தை யிவ்வுலகில், ஐயப்பாடற = சந்தேகவிபரீத மில்லாமல், யாதினால் எய்தும் = எதனாலடையலாம், அப்பொருடான் = அவ்வத்துவானது, மையப் போகத்தால் ஒழிந்து = மயக்கத்தைத் தரத்தக்க போகத்தினாலன்றி, மேல்வரு நெறியாதே = வாராநின்ற உயர்ந்த மார்க்கம் யாதுதானும்.

(ஸ்ரீ - வீர.) செய்ததை செய்வதான இந்தச்செயலானே, எப்போதுஞ் செய்துகொண் டே யிருந்தபோதினும், அடையத்தக்க பொருள்யாதாம்; எவ்வடைவினுனே மீளவும் கரும முளதாகாதோ கிருதகிருத்தியத் தகைமையாமோ, அத்தகைய பொருளியாதாம். அல்லது எவ்வளவு காலந்தான் இந்த மகத்தாடம்பரமாய திருஷ்டாதிருஷ்டி அர்த்தகருமஜாதம் ஈண்டு எம்மனோரா லநுஷ்டிக்கத் தக்கது? அதனாற்றான் என்னே யடையத்தக்கது? எதையடைந்தவுடனே வேறுக யாதொருகாரியமுஞ் செய்யத்தக்கதாக விலதாமோ, அத்த கைய மகோதாரமா யேகமாயுள்ள பலவடிவப் புருடார்த்தம் ஈண்டு ஒன்றையுங்கண்டிலேன். க்ஷணிகதுச்ச விடயசுகமன்றி, அன்னியமாகயாது நித்தியமாமோ அந்த மங்கலமாய சுகம்யாதாம்?

(ச.) செயன் மறித்திலாததொன்று = கிருதகிருத்தியம், யாதினு லெய்தும் = ஒரு கிரியையாலும் வாராதென்பது பொருள். போகத்தாலொழிந்து = போகரூபமான விடய சுகத்தையல்லாமல், பயன்படுத்தப் பட்டபோதினும் நித்தியஞ்செய்த இக்கிரியையால் அத்தகைய எப்பொருளாம் எப்பொருளான் மீண்டுங்கருமம் உளதாகாதோ, கிருதகிருத்தியதாவேதுவாக எக்கிரியையுமே யிலதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணஞ் சிந்தித்துக் கொண்டிருந்த மகாபலியானவன் ஏதோ ஒன்றைமனத்திற் சிந்தித்துக்கொண்டு வியத்தல்:—அழிவிலாத வென்பது.

அழிவிலா ததா யன்னியமாகிய வதுசேர்
வழியதேதெனச் சிந்திப்பான் மனத்தொன்றை நினைந்து
மொழியலுற்றன னறிந்தனனென் றொருநொடியில்
விழிபெருத்திடப் புருவமே லேற்றினன் வியந்தான்.

(ப - ரை.) அழிவிலாததாய் அன்னியமாகிய அதுசேர் = அவிநாசியாய் இவ்வியாவினும் அயலாகிய அதனையடைய, வழியது ஏதென = மார்க்கம்யாதாமென, சிந்திப்பான் = ஆராய்ந்து கொண்டிருந்தவன், மனத்தொன்றை நினைந்து = சித்தத்தில்யாதோ ஒன்றைச் சிந்தித்து, மொழியல் உற்றனன் அறிந்தனன் என்றொரு நொடியில் = தெரிந்துகொண்டேன் என்று ஒருநொடியில் கூறத்தொடங்கினன், விழிபெருத்திடப் புருவமேல் ஏற்றினன் வியந்தான் = நேத்திரத்தை யுருட்டிப் புருவமேற்சொருகி யாச்சரியத்தையடைந்தான்.

(ஸ்ரீ - வீர.) இவ்வாறு சிந்திக்கின்றேன் என்றெண்ணி இம்மகாபலியானவன் விரைவில் எண்ணத் தொடங்கினன்; தியானத்தானேசம்ஸ்கார உற்போதத்தால் விமர்சையோடு கூடிய, முன்தன்னால் வினவப்பெற்ற பிதாவின் உபதேசக் கிரமஸ்மிருதியைக் காட்டல்:— மொழியலுற்றன னென்பது, பின்ன சுரராட்டானவன் கணத்தில் தனக்குள்ளேயே சொல்லிக்கொள்ளுவா னுயினன், என்ன சொன்னுனெனின், உரைத்தல்:—அறிந்தனன் என்பது ஆ நன்ருக என்னல் ஸ்மரிக்கப்பெற்றது ஆ = ஸ்மரத்தியோதக நிபாதம். ஸ்மரித்தபொருளை மனத்திலேயே புரூபங்கத்துடன் ஆய்ந்து கூறிக்கொண்டான். மூலம்;—பிரேக்ஷண அத்தியாரோபத்தால் ணிச்சாம், விமர்சயன் என்பது.

(ச.) அழிவிலாதாய் = அவிநாசியாய், அந்நியமாய் = விடயசுகத்திற்கு அன்னியமாய், நினைந்து = நிச்சயித்து விழியாதி விசாரதிருஷ்டியின் அபிநயம், மூலம்:—பின்னர் அசுர அரசனுகிய மாபலிமனத்தில் விசாரித்த அர்த்தத்தைச் சப்ரூபங்கமாகத் தன்புத்தியிலேயே தாபித்துக் கணத்திற்குமேல் ஆ நன்குநினைந்தேன் என்றினிது கூறிக்கொண்டான். ஆ = ஸ்மிருதியை விளக்கும் அவ்வியயம். (19)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்மரித்தபொருளை முறையாகக் கூறல்:—தன்னதென்பது.

தன்ன துள்ளுற நினைத்தது விளம்பி னன்றுனே
முன்னமிங்கியான் கேட்டனன் முழுதுணர் முதன்மை
யென்னரும் பிதாவிரோ சனன்றன்னை யிப்படியே
யன்னவன் புகன்றனனென விவையெலா மறைவான்.

(ப - ரை.) தன்னதுள்ளுற நினைத்தது = தனக்குள்ளேயே எண்ணியதை, விளம்பினன்றனே = சுயஞ்சொல்லிக் கொண்டான், முன்னம் = பூர்வம், இங்குயான் = ஈண்டு

யான், முழுதுணர் = சகலமுமுணர்ந்த, முதன்மை = ஆத்மதத்வஞானமுகிய என்னரும் பிதா விரோசனன் றன்னை=எனது தந்தையாகிய பகவான் விரோசனனை, கேட்டனன்= வினவினன், இப்படியே = இவ்வாறே அன்னவன் புகன்றனன் = அவ்வரியபிதா உபதேசித்தனன், என = என்று, இவையெலாம் அறைவான் = வருமாறுள்ளவற்றை யெல்லாங் கூறத்தொடங்கினன்.

(ஸ்ரீ - வீர.) முன்னர் ஈண்டு: ஆத்தும தத்துவத்தை யுணர்ந்தவனும் லோகபராவரங் கண்டவனும் பகவானும் எனது தந்தையும் ஆகிய, அவ்விரோசனன் என்னால் வினவப்பெற்றனன்.

(ச.) நினைந்தது விசாரித்தபொருளை தானே = தனதுபுத்தியிற் பாவிப்பவனுய்க் கணத்தின் பின்றானே, விளம்பினன் = நினைத்ததை மேற்கூறுகின்றான்:—முன்னமென்பதாதி, மூலம்:—திருஷ்டலோக பராவர: = பரம் = பரியவசானஹேது, அவரம் = ஆதிகாரணம், கண்டவன். (20)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வினவியது யாதோ அதனைக்கூறல்:—ஐயவென்பது.

(ச-அ-கை.) தான் வினவிய பிரகாரத்தைக் கூறல்:—ஐயவென்பது.

ஐயதுன்பமு மின்பமு மென்பன வனைத்தின்
மையலியாவையு மடிந்ததோ ரிடமெது மனத்தின்
வெய்யமோகந் தீரிடமெது வேட்கைக ளெல்லாங்
கையறப்பட்ட விடமெது கருணையா லுரையாய்.

(ப - ரை.) ஐய = என்னருமைத் தந்தையே ! துன்பமும் இன்பமும் என்பனவனைத்தின் = சகலதுக்க சுகங்களின், மையல்யாவையும் = சர்வ பிரமங்களும், மடிந்ததோரிடமெது = சாந்தமாகிய ஒப்பில்லாதபத மியாதாம், மனத்தின்வெய்யமோகந்தீர் இடமெது= மனத்தினது கொடிய மயக்கமற்ற இடமியாதாம், வேட்கைகள் எல்லாம் கையறப்பட்ட இடமெது = சகல எடணைகளும் அடியோடுந்தீர்ந்த இடமியாதாம், என்பதை, கருணையால் உரையாய் = என்பேரில் வைத்ததயையினு லுரைப்பாய்.

(ஸ்ரீ - வீர.) வினவியவகையைக் கூறத்தொடங்கல்:—ஹே தந்தையே ! ஹேமகாமதியையுடையோய் ! சகல துக்கங்களினதூஉம், சாம்சாரிக சுகங்களினதூஉம் பரிகாரப் பிராப்தி உபாய கோசரங்களாய சர்வவிவகாரப் பிரமங்களும், எங்குசாந்தமாமோ, அச்சம்சார எல்லையின் அவதி யாதாமென்று பிராஞ்ஞராற் பேசப்பெறும் ? மனோமோகம் யாண்டுபசாந்தமாம் ? சகல எடணைகளும் யாண்டு அதீதங்களாம் ?

(ச.) ஐயாபிதாவே ! துன்பமு மின்பமு மென்பனவனைத்தின் = விஷயஜன்னியமான சுகதுக்கங்களுக்கும், ஓரிடமெது = பரம அவதியாது, மையலியாவையு மடிந்தது ஓரிடமெதுவென்றுங் காட்டுக; கூவப்பிரமசாந்தியையே விரித்துரைத்தல்:—மனத்தின் வெய்யமோகம் = மனோமோகங்கள். (21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முன்னர் அனர்த்த நிவிருத்தியைப்பற்றிக் கடாவி, இப்போது பரமானந்தப் பிராப்தியைப் பற்றிவினுதல்:—நிராசையென்பது.

நிராசையாகி யேயிளைப் பெலாநீங் கிடமேது
விரவுபேரின்பத் தழுகிதாய் விரிவிடமேது
பராபரந் தெளிந்துணர்ந்த நீபகர்தியென் னெஞ்சை
யராவுதுன்பம் விட்டிளைப் பெலாமாறுதற் கென்றேன்.

(ப - டை.) நிராசையாகியே = சகல ஆசைகளுந்தீர்ந்து, இளைப்பெலாம் நீங்கிட மேது = விசிராந்தியடையு மிடம்யாதாம் ? விராவு பேரின்பத் தழகிதாய்விரிவிடம் எது= பேரின்பமானது நிறைந்து சுந்தரமாகியிலங்கும் பதமியாதாம், பராபரந் தெளிந்துணர்ந்த நீ=பராபரவத்துவை யையந்திரிபற ஆய்ந்துணர்ந்த நீ, பகர்தி = எனக்குபதேசிப்பாய், என்னெஞ்சை அராவுதுன்பம் விட்டு = எனது மனத்தைத் தேய்க்கும் துயரமெல்லாம் விடுத்து, இளைப்பெலாம் ஆறுதற்கு என்றேன் = சிரமமெல்லாம் தீர்தற்கு என்று வினவினேன்.

(ஸ்ரீ - வீர.) புனரா விருத்திரகிதமாய விசிராந்தி நீள்போது எவ்விடத்திற்கிடைக்கும், புமான் எச்சுகத்தை யடைந்தவனாயித் தேகத்திலேயே சமஸ்த பிரஹ்மலோகாந்த விடங்களி னின்றும் அடையப்படு மின்பத்தில் எத்திருப்தி ஆசையின் பரிபூர்த்தியுடையவனிங்கு ஆவனோ; என்னகண்டு தான் றரிசனம்மறித்தும் மன்னும் மற்றொரு பலாந்தரத்தானே நன் னரா யுபகாரமதாகா தன்னதேதுரையா யருளானே, எகவிஞ்ஞானத்தானே சர்வவிஞ்ஞா னஞ்சித்திக்கு மென்பதெதனால் ? அந்த ஜிஞ்ஞாசை யுனக்காய தெங்ஙனமெனின்? அத்தி யந்த வெகுவாக விருந்தபோதினும் இப்போகங்கள் சுகாவகங்க ளாகாவாகலின். சுகாவகங் கள் ஆகாவகை யென்னெனின் ? சற்புருடருடைய மனத்தையும் மோகத்தில் வீழ்த்துகின் றன கலக்குகின்றன வாட்டுகின்றன வாகலின். கெடாததாய்த் தடையற்றதாய் அதிவிஸ்தார மான ஆனந்த சுந்தரமாயது யாதொன்றுளதோ அஃதென்னென் அடியேனுக் கெந்தைநீ யருளவேண்டும், எத்தகைய அதுகிடைக்கப்பெறின் நெடும்போதிருந்துயான் விசிராந்தியை யடையா நிற்பனோ. இவ்வண்ணம், சுவர்க்கத்திலிருந்து வலிதிற்கொணர்ந்து, முற்றத்திற்று பித்திருக்கும் கற்ப விருக்ஷத் தின்றலத்தில் வீற்றிருந்த எனது பிதாவாகிய விரோசனனை வினவினேன், அதற்கென்றந்தை, கற்பதருவானது தனது மணமதுர மலர்பல மகரந்தாதி யானே ஜராமரண துக்கநிவாரணஞ் செய்வதேபோல என்னுடைய அஞ்ஞானப் பிரமநிவா ரணப் பொருட்டு எதனை யுபதேசித்தனனோ அது என்னாலிப்போது ஸ்மரிக்கப்பெற்ற தென்பதாம்.

(ச.) நிராசையாகியே=அருசி யத்தியந்தமின்மைதேயாய், இளைப்பெலாம் நீங்கடம்= சிரம் விசிராந்திச் சுகஞ்சம்பவிக்குந்தானம், எது, விராவு பேரின்பத்தழகிதாய் = எனது சொரூபமானது அதிவியாபகாநந்த சுந்தரமாய், விரிவிடம் = விவகரித்தற் கரியதாகுமோ, எது, அத்தன்மையான பொருளை, பராவரம் = முன்போல், தெளிந்துணர்ந்த நீபகர்தி, இளைப்பெலா மாறுதற்கு = அதில் விசிராந்தியடைதற்கு, என்றேன். (22)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சிர்தஞ் சிந்தையற்றுன்றனக் கெவ்வுழிதேய்ந்தே, சித்தமன்றென நின்றிடுமெவ்வுழி சிவமாம், முத்தியென்றிடு முழுமுதலுட் செறிமுதமா, சத்தைவந்துறுஞ் சந்தத நிறைதருமதுவே, என்று மோக்ஷத்திற்குச் சித்தஜயா தீனத்தன்மை இயம்பப் பெற் றது, சித்தஜயத்தின் கண்ணும் ஆத்தியந்திக ஆசையின்றியாகம் உபாயமென் றுரைக்கப் பெற்றது, அதுவும் ஆன்மதரிசனமன்றி யமையமாட்டாது, "குறையுமாப் பிணிப்புற்று ருலுங் கொண்டவிப் புலன்களெண்ணி, லறைகடலனைய நெஞ்சத்தவாவரு னறிவினில் லான், மறைமொழிபலவு மோதியடக்குவான் மனத்தைவாங்கிப், பொறைகெடப் புலன் களைந்தும் பொறியிலே புகட்டுங்கண்டாய்" என்னும் ஸ்ரீ பகவானது திருவாக்காலுணர லாம்; ஆன்மதரிசனமும் மனோஜயமின்றிச் சித்தியாதாம், என அன்னியோன்னியா சிரயத் தன்மையை யடைவுற்ற விது முடியாததேயாகும் என்னுமா சங்கையைப் பரிகரித்தற்குச் சாதனத்துவய யௌகபத்திய அப்பியாசாதி யுபாயபேதத்தைக் கூறும் பொருட்டுப் பலியு

பாக்கியான் அந்தராளத்தில் இராஜமந்திரி யுபாக்கியானத்தை விரோசனமுகத்தால் இனிது புகழ்தல்:—எந்தை யென்பது.

(ச-அ-கை.) தனது பிதாவின் உத்தரத்தைத் தொடர்ந்து கூறல்:—எந்தை யென்பது.

எந்தையப்பொழு துரைசெய்வான் மைந்தகே ளியம்ப
வந்தமற்றற விசாலமாய வளவறவகன்று
சுந்தரத்ததாந் தேசமுண் டண்டத்தின் றொகுதி
வந்துதித்திருந் திறப்பதற் கிடமதாய் வயங்கும்.

(ப - ரை.) எந்தை = எந்தந்தை, அப்பொழுது = அக்கேள்விகள் கேட்டபோது, உரைசெய்வான் = உத்தரங் கூறத்தொடங்கினன். மைந்தகேளியம்ப = ஹே குழந்தாய்! விடைபகர ஒருமையுடன் கேட்குதி, அந்தமற்று = அந்தமின்றி, அறவிசாலமாய் = அத்தியந்தம் விஸ்தாரமாய், அளவற அகன்று=அளவில்லாமல் விடமுடைத்தாய், சுந்தரத்ததாப் தேசமுண்டு = அழகியதாம் தேசமொன்றுளது, அண்டத்தின்றொகுதி =அண்டக் கூட்டமாயிரம், வந்துதித்து இருந்து இறப்பதற்கு இடமதாய் வயங்கும் = வந்துதயமாகித் திதியாகிச் சங்காரமாகி விவகரித்தற்கு இடமாக இலங்கும்.

(ஸ்ரீ - வீர.) விரோசனன் விடைதரல், ஹேபுத்திர! அதிவிதத விபுலகோடரமாய தேசமொன்றுண்டு, மூவுலகங்களின் சகத்திரங்கள் வெகுவாக இருந்தபோதினும் நிறைவுறாமலேகதேசத்திலங்கும். (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆங்கொன்று மில்லையென்றும் இறைவனே யிருக்கின்றானென்று மியம்பல்:—ஆயவென்பது.

ஆயதேயத்தி லைம்பெரும் பூதமு மில்லைச்
சேயகுன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்க ளில்லைத்
தூயதேவரே முதலிய தொல்லுயி ரில்லை
நாயகன்பெருஞ் சுடரொனு மொருவனே நண்ணும்.

(ப - ரை.) ஆயதேயத்தில்=விசாலமாய அந்தத்தேசத்தில், ஐம்பெரும் பூதமுமில்லை= ஆகாசாதி பஞ்சபூதமுமிலவாம், சேயகுன்றில்லை உன்னதமான பர்வதமுமில்லை; வனமில்லை தீர்த்தமுமில்லை =ஆரண்யமும் நதிகளுமிலவாம் தூயதேவரே முதலியதொல்லுயிரில்லை= பரிசுத்தாகிய தேவதைகளே முதலிய பிராசீனஜீவ ஜெந்துக்களுமில்லை, நாயகன்பெருஞ் சுடரொனு மொருவனே நண்ணும் = பரஞ்சோதி வடிவமாய இறைவன் ஏகனே எழுந்தருளியிருப்பன்.

(ஸ்ரீ - வீர.) கடல்களு மலைகளும் காணவாங்கே, வனமும் தீர்த்தமுங் வந்துறமாட்டா, நதியுஞ்சரமு நண்ணவாங்கே, மகியும்ககனமும் மன்னுறமாட்டா, திவமும் பவனமுஞ்சேராவாகும், மதியுமிரவியும் மருவுலோகேசரும் திதியின்சுதரும் தேவருஞ்சேரார், ஆண்டுப்பேரொளியான்மா வொன்றே தூண்டருஞ் சுடராய்த் துலங்குமா மகத்தே.

(ச.) தேசம் = மோட்சம், இராஜா = ஆன்மா மந்திரிமனமென்று மாவலி வினவின் பின் விரோசனரே சொல்வர். (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இறைவன் பெருமையை யியம்பி மந்திரிமூலமாக காரியசித்தி யுரைத்தல்:—முழுதுமென்பது.

முழுதுங் காண்பவன் முழுதினுஞ் செறிபவன் முதல்தன்
பழுதில் சாந்தனாய் நிறைந்துவா ளாவுறை பண்போன்
வழுவி லாவிவ னாக்கிய மந்திரி வசத்தாற்
றழுவு செய்கைக ளியாவையு நடத்திடுந் தானே.

(ப - ரை.) முழுதுங் காண்பவன் = யாவற்றையுங் கண்டுசெய்பவன், முழுதினுஞ் செறிபவன் = எங்குமிருப்பவன், முதல்வன் = சர்வன், பழுதில் சாந்தனாய் = குற்றமற்ற சாந்தமூர்த்தியாய், நிறைந்து = பூரணித்து, வாளாவுறை பண்போன் = துஷ்ணீம் நிலையை யடைந்துள்ளவன், வழுவிலாவிவன் ஆக்கியமந்திரி = நித்தியமாகிய இவ்விறைவன் சங்கற்பித்தமந்திரி, வசத்தால் = மூலமாக, தழுவுசெய்கைகள் இயாவையு நடத்திடுந்தானே = சம்பந்தியா நின்றகாரியங்கள் எல்லாவற்றையும் சுயமேசெய்வித்திடும்.

(ஸ்ரீ - வீர.) சர்வகிருத்துவாய்ச் சர்வஞனுப் சர்வஞ யிருக்கப்பெற்ற அவ்விறைவனும் வாளா இருக்கும் கூடஸ்தனுவன்; அவனாற் சங்கற்பிக்கப்பெற்ற மந்திரியென்னும் மனம், சர்வசந்மந்திரண உன்முகனுவன்.

(ச.) முழுதுங்காண்பவன் = சர்வமுஞ்செய்பவன், சர்வத்தையும் அறிபவன் எனினுமாம், இவன் = இந்தராஜாவால், ஆக்கிய = அவன் ஈக்ஷித்து லோகங்களைச் சிருஷ்டித்தான் என்னுஞ் சுருதிப்படி சிருஷ்டிக்க வேண்டுமென்னும் இச்சாமாத்திர கற்பிதனுன, மந்திரி = மந்திரியினது, வசத்தால் = விசாரபூர்வகமாய், தழுவுசெய்கைகள் யாவையும் = இராஜகாரிய மனைத்தும், நடத்திடுந்தானே. (25)

(ஸ்ரீ-வீர -அ-கை.) மந்திரியின் ஆற்றலைவருணித்தல்:—இல்லதென்பது.

இல்ல துள்ளதா முள்ளது மில்லதா மிமைப்பிற்
புல்லு மந்திரி நினைத்திடி லிவனென் றும் புசிக்க
வல்ல தில்லையொன் றறிகிலன் மன்னனை விடாது
செல்லுந் தன்மையாற் கேவல மனைத்தையுஞ் செய்யும்.

(ப - ரை.) இல்லது உள்ளதாம் = முடியாதது முடியும், உள்ளதும் இல்லாதாம் = கூடுவது கூடாதாம், இமைப்பில் = விரைவில், புல்லுமந்திரி நினைத்திடில் = சந்நிதியிலிருக்கும் மந்திரி யெண்ணிடில், இவனென்றும் புசிக்கவல்லதில்லை = இவன் ஒருசிறிதும் அயில ஆற்றலற்றவனுவன், ஒன்றறிகிலன் =யாதொன்றையு மறிந்திலன், மன்னனைவிடாது செல்லுந்தன்மையாம் கேவலம் அனைத்தையும் செய்யும் = எப்போதும் சந்நிதியிலேயே யிருத்தலால் அறியானுயினும் கேவலம் இராஜாவின் பொருட்டே யாவற்றையுஞ் செய்து முடிப்பன்.

(ஸ்ரீ - வீர.) அகடம் = அத்தியந்தம் அநுபபந்நமாயினும் ஆன்மாவிற்குச் சம்சாரித்தன்மையை, கடயதி = பொருத்திவைப்பன், கடம் = பொருந்துவதாயினும் பூர்ணனந்த ஏகரசத்தன்மையை, அலம் =அத்தியந்தம், ஆசு = விரைவில், விகடயதி =இருப்பதில்லை இலங்கவில்லை யெனக்கெடுத்துத் தொலைப்பன். சிறிதும் புசிக்க ஆற்றலற்றவன், சிறிதுந் தெரிய முடியாதவன் = இங்ஙன் ஜடனுயினு மிவன் எந்தனுான்றும் அரசன் பொருட்டுக் கேவலம் சர்வமும் செய்வன்.

(ச.) இல்லது = பொல்லாங்கு, உள்ளது = நீதியாம், உள்ளதும் = நீதியுள்ளகாரிய மும், சம்மதமின்றெனில், இல்லதாம் = நாசமாம் என்பதுபொருள்; இவனொன்றும் புசிக்க வல்லதில்லை = அற்பமும் புசித்தற்குச் சக்தியுடையனல்லன், ஒன்றறிகிலன் = அற்பமுமறி யான், மனது அசேதனமாதலின் என்பதுகருத்து. கேவலம், அவனே அனைத்தையும் = சர்வ்காரியத்துக்கும் முக்கிய கருத்தாவாம். (26)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மந்திரியியற்ற மன்னவனிருப்பன் மைந்தவென்றிசைத்த தந்தை யை வினவினேன் எனல்:—இந்த என்பது.

இந்த மந்திரி தன்னெதி ரியாவையு மியற்ற
வந்த மன்னவ னென்றுமே காந்தத்த ஞகு
மைந்த வென்றுரைத் தருளிய பிதாவைநான் மகிழ்ந்து
புந்தி யாலந்த வகையெலாம் வினவினேன் புகழ்ந்து.

(ப - ரை.) இந்த மந்திரிதன்னெதிர் = கூறிய மந்திரிதனது சந்நிதியில், இயாவையும் இயற்ற = எல்லாவற்றையும் செய்ய, அந்த மன்னவன் = அவ்வான்மராஜன், என்றும் = எப்போதும், ஏகாந்தத்தன் ஆகும் = ஏகாந்தத்தில் சொஸ்தனு யிருப்பன், மைந்த = குழந் தாய் ! என்றுரைத்தருளிய = என இந்தப்பிரகாரம் கூறியருளிய, பிதாவை = தந்தையை நோக்கி, நான் = அகம், மகிழ்ந்து புகழ்ந்து = சந்தோஷித்து ஸ்தோத்திரஞ்செய்து, புந் தியால் அந்தவகை யெலாம் வினவினேன் = புத்தியால் அவ்வகையை யெல்லாம் விபரமா கக் கேட்டேன்.

(ஸ்ரீ - வீர.) அந்த மகீபதிக்குச் சர்வகார்யங்களின் முக்கியகர்த்தா அம்மந்திரியே யாவன், இராஜாகேவலம் ஏகாந்தமாய் அத்விதீய சுபாவத்தில் சுவஸ்தமாகவே வீற்றிருப் பன்; என்று என்றந்தை யுபதேசிப்ப அதன் விபரத்தை வினவினேன். (27)

(ஸ்ரீ - வீர - அ - கை.) வினவியவகையை யுணர்த்துதல்:—அற, புவனமென்பன.

அறவி லாசமா யாதியும் வியாதியு மின்றி
நிறைவி தானவத் தேசமே ததுதனை நேருந்
திறவி யாதது யாதினு லெய்துமத் தேசத்
திறவி லாதவம் மன்னனூர் மந்திரி யாவன்.

புவன மியாவையும் விநோதத்தா லடர்த்தவென் புயத்தா
லவனம் மந்திரி யுடனடர்ப் புருவலி யமர்ந்த
தெவன றைந்தருள் கென்றனு மென்பிதா விசைப்பான்
கவன நீள்வலி மந்திரி வேகமார் கடப்பார்.

(ப - ரை.) அறவிலாசமாய் = அத்தியந்தம் விஸ்தாரமாய், ஆதியும் வியாதியுமின்றி = இருவகையுடம் பின்நோயு மில்லாமல், நிறைவிதான பரிபூரணமான, அத்தேசமேது =அத் தேயமியாதாம், அதுதனை நேரும் = அத்தேயத்தை யடையும். திறவியாது = மார்க்க மியாதாம், அதுயாதினுல் எய்தும் = அதை யெங்ஙன மடையலாம், அத்தேசத்து இறவி லாத அம்மன்னன் ஆர் = அத்தேயத்திருக்கும் நித்தியமாகிய அவ்வரசன் யாவன், மந்திரி யாவன் = மந்திரி யார்.

புவனமியாவையும் = சகலபுவனங்களையும், விநோதத்தால் = விளையாட்டாக, அடர்த்த என்புயத்தால் = வெற்றிகொண்ட என்னுடைய புயங்களால். அவன் அம்மந்திரியுடன்

அம்மன்னவன் அவ்வமைச்சனுடன், அடர்ப்புறு = வெற்றியிடப் பெருத, வலியமர்ந்த தெவன் = பலத்தோடு கூடியிருத்தல் யாதுகாரணம்? அறைந்து அருள்க என்றலும் = கூறியருளுதி யென்று யான்வணங்கிக் கேட்டலும், என்பிதா இசைப்பான் = எனது தந்தை கூறியதாவது, கவனநீள்வலி மந்திரி வேகமார்கடப்பார் = யாவரையும் கலங்கச்செய்யும் தகுந்த பலத்தையுடைய அம்மந்திரி யினது வேகத்தைக் கடந்தேற வல்லவரியாவருளர். ஒருவருமேயில்லை.

(ஸ்ரீ-வீர.) மகாபலிவாக்கியம்:—ஹேமகாமதியையுடைய பிதாவே! தூலசரீரவியாதியும் சூக்குமசரீரவியாதியும் அற்ற அத்தேசம் யாதாம்? ஹேபிரபுவே! எங்ஙனமடையலாம்? எதனை லெய்தலாம், யாவராலேனும் அடையப் பெற்றதா? அவ்விதமாய மந்திரிதானியாவன்? மகா பலம்வாய்ந்த அந்த ராஜாதானியாவன்? விளையாட்டுமாத்திரத்தானே ஜகத்ஜாலங்களையெல் லாம் வெற்றிகொண்டு எம்வசப்படுத்திய எம்மனோரானும் எவ்விருவிரும் வெற்றிகொள்ளப் பெருமல் இருக்கின்றனரோ அவர் தாமியாவர்? ஹே அமரபயப் பிரதனுகிய தந்தையே! இவ்வாக்கியானம் எனக்கு அபூர்வமாகவே தோற்றுகின்றது, ஆகலின், எம்மனோரால் அவர் தம் அஜயவிடயத் தேற்பட்ட நிமித்தத்தைக்கூறும் வாயிலாக எம்மனோரது இருதய ஆகா யத்தினின்றும் சமுசாய அம்புதத்தை விலக்கியருளல் வேண்டும் என்று பிரார்த்தித்தேன்; அப்போ தென்றந்தை கூறியதாவது:—ஆண்டாதியில் அந்தத்தில் வினவிய அவர்தம்மஜயத் தில் நிமித்தத்தையே விஸ்தாரமாக விளம்பல்:—கவனமென்பது. விரோசன வாக்கியம்:— ஹேமைந்த! ஆண்டுள்ள அம்மந்திரியானவன் மிகுந்த பலவானுவன், தேவாசுர கணங்கள் கோடிக்கணக்காக ஒன்றுசேர்ந்து போராடின போதினும் இறையளவும் வெற்றிசேர முடி யவே முடியாது. (28-29)

(ஸ்ரீ - வீர - அ - கை.) எவரும் வெல்லாமையோடு எவ்வாயுதமும் பயன்படாமையைப் புலப்படுத்தல்:—தேவர் என்பது

தேவர்தானவ ரெண்ணறு கோடிக டிரண்டு
மேவ வென்றிலர் சூலநே மிகண்முத லென்ற
மேவரும் படைக் கலமெலா மவன்மிசை விட்டான்
மாவருங் கல்லி லறைந்தபூ வெனமுனை மடியும்.

(ப - ரை.) தேவர்தானவர் எண்ணறு கோடிகள் திரண்டு = சுராசுரக்கூட்டம் கோ டானு கோடியாக ஒருங்குகூடி. மேவ = எதிர்த்துப் போராடியும், வென்றிலர் = வெற்றி கொண்டிலர், அதுவேயுமன்றி, சூலம் நேமிகள் முதல் என்றமேவரும் படைக்கலமெலாம் = திரிசூலம் சக்கிரம் வச்சிரம் முதலனவாகப் பிரசித்தி பெற்ற தாங்கமுடியாத தேஜசோடும் வலிமையோடும் கூடிய ஆயுதவர்க்கங்கள் எல்லாம், அவன்மிசை விட்டால் = அம்மந்திரி யின்மீது எவினல், மா அருங்கல்லில் அறைந்த பூவென முனைமடியும் = மாகூர்மைதங்கிய பெரும்பாறையில் அடித்தபுஷ்பம்போலக் கூர்மைகெட்டு நொருங்கித் தூளாகிப்போகும்.

(ஸ்ரீ - வீர.) தேவாதி யாவருங்கூடிய கோடானு கோடியானும் வெல்லமுடியான் அம் மந்திரியெனின்? அவனென்னிரண்டாவ திந்திரனு? அல்லதென்னமனு? அல்லதுதா னென் குபேரனு? அலது யாதேனுமொரு அமரவிசேடனு? அசுரவிசேடனு? அலது எவ னேனும் மகாநுபாவனு? எதனல் வெல்ல முடியாதவனே யாகின்றனே எனின்? இவர்யா வருமே யலனவன், ஆயிரங்கண்ணனும் அன்றவன் யமனும், தூயதனேசனும் அமரனும் அசுரனும் ஆயவனல்லன் அவரிலோருவனேல் நீயுன்மைந்த திண்வெற்றி நினைக்கலாம்.

ஆயின் என்னெனக்கு ஆயுதங்களில்லையா படர்களிலரா ? உளவாகுக, அவன் இவற்றிற்கெல்லாம் விடயனேயல்லன் எனல்:—சூலமென்பதாதி, அவன்மேல், வாள், உலக்கை, ஈட்டி, வச்சிரம், சக்கிரம், கதை முதலனவும், அக்கினிகாலும் பாணவிசேடங்களும் வலிஞல்,பெரும் பாறையிலறைந்த கருங்குவளை மலர்போல மழுங்கிப் பொடியாகின்றன. மன்மதன் பஞ்ச மாத்திர சரனுயினும் சாடோபமாய்ச் சம்பிராட்டைப்போல, அம்மந்திரியின் றிருவருளால் இம்மூவுலகையும் வெற்றிகொண்டு விளையாடுகின்ருன்; குணஹீனனுய்த் துர்மதியாய்ச் சுராசுரக்கூட்டங் கொண்டவனுய்த் துராகிருதியாயினும் குரோதன் அவன்றிருவருளால் அனல் போலக் கொதித்தாடு கின்ருன். (30)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மந்திரி கேவலம் அவ்வாத்மப் பிரபுவினுலேயே வெற்றி கொள்ளலாகுமெனல்:—விளியென்பது.

விளிவ ருந்திர லந்தமந் திரியந்த வேந்தா
லெளிது வென்றிடில் வணங்குறு மிவ்வகை யின்றே
லளிய மேருவை யசைப்பினு மசைப்பரி தாகு
மொளிகொ ளூகபுந் தியினலால் வெலப்படா னொருங்கே.

(ப - ரை:) விளிவருந்திறல் = கெடாத வலிமையையுடைய, அந்தமந்திரி = அவ்வமைச்சன், அந்தவேந்தால் = அவ்வரசனுல், எளிது வென்றிடில் = சுலபமாகச் செயஞ்செய்யின். வணங்குறும் = கீழ்ப்படிந்து நிற்கும், இவ்வகையின்றேல் = அங்ஙனமாக்கா தொழியின். அளிய = கருணையுதார முதலிய குணங்களா லலங்கரிக்கப்பெற்று எனது கிருபைக்குப் பாத்திரனுன புத்திர ! மேருவை யசைப்பினும் = சுமேரு பருவதத்தைப் பிடுங்கினும், அசைப்பரிதாகும் = சலிப்பித்தற்கு முடியாதாம், ஒளிகொள் ஊகபுந்தியினலால் = பிரகாசம் பொருந்திய ஊகமதியினுனன்றி, வெலப்படான் ஒருங்கே = செயிக்கப் பெருன் அத்தியந்தம்.

(ஸ்ரீ - வீர.) அம்மந்திரியைக் கேவலம் அவ்வாத்மப் பிரபுவினுலேயே வெற்றிகொண்டால் அவ்வெற்றி நல்வெற்றியாகும், மாருயினே அசல உபமனுவன். அவ்வொருவனை, வியாமோக பரிஹீனமாய் நிச்சிதமாய் ஏகாக்கிரமா யிலங்கும் புந்தியினுலே வெற்றிகொள்ளச் சமர்த்தனுதியேலாயின் அக்கால் ஹேசுவிரத! நீதீரனேயாவாய் என்றவிரோசனனை நோக்கி, ஹேதாத ! எவ்வுபாயத்தானே அந்தப் பலவான் நன்குஜயிக்கப் பெறுவன், அவ்வதிமகா வீரியவான்ருன் யாவன், யாவற்றையும் அடியேற்கு விரைவில் உபதேசிக்கவேண்டும் என்று மாபலிகூற அதற்கு விரோசனன் கூறல்:—ஹேதநய ! அம்மந்திரி நித்தியம் வெற்றிகொள்ளக்கூடாத நிலைமையிலிருந்த போதினும், அவனை யெளிதாக வெல்லுமுபாய மியம்பக் கேட்டி; எதனுல் அவனைநீ வெல்லலாமோ ; யுக்தியினுலே கவ்ரப்பெற்றிடினவன் கணத்தில் வயப்பட்டு நிற்பன். (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஊகமின்றியவன் பாலுற்றிடிற் சோகமொன்றிடு மென்றிசைத்தல்:—ஊகவென்பது.

ஊக புந்தியா லல்லதவ் வமைச்சனை யுற்றால்
வேக நாகம்போ லெரித்திடும் வேந்தனே டமைச்ச
னேக ராச்சியஞ் செய்யுமத் தேசமு மியாவுஞ்
சோக மற்றிடக் கேளென விரித்திது சொன்னுன்.

(ப - ரை.) ஊகயுக்தியால் அல்லது அவ்வமைச்சனையுற்றால் = யுக்தியினல் அன்றி நெருங்கி அந்தமந்திரியை எதிர்த்தால், வேகநாகம்போல் எரித்திடும் = மிகுந்த சீற்றத்தையுடைய நாகசர்ப்பம்போல் தகித்துச் சாம்பராக்குவன், வேந்தனோடு அமைச்சன் ஏகராச்சியம் செய்யும் = அம்மன்னவனோடுகூடி யம்மந்திரி ஏக அரசாக்ஷிசெய்யா நின்ற, அத்தேசமும் யாவும் = அத்தேயத்தையும் பிறயாவற்றையும், சோகமற்றிடக்கேள் என = கூறக்கலங்காமல் ஒருமையுடன் கேட்பாயாக வென்று, விரித்திதுசொன்னான் = விரிவாக இதனைக்கூறினன்.

(ஸ்ரீ - வீர.) யுக்தியின்றி எதிர்த்தால் விடமுடைய சர்ப்பம்போலக் கோபத்துடன் சீறிவிழுந்து கனற்றிச் சாம்பராக்கும், பாலனைப்போல, அற்பவிடயப் பிரதானத்தாலும் அடிக்கடி விடயதோடத்தை யறிவித்தலாலும் லாலனஞ்செய்து வஞ்சித்து இம்மந்திரியை இராஜயோக யுக்தியினனேயாவர் நியமனஞ் செய்கின்றனரோ, அவர் அந்தராஜாவை நன்கு பார்த்து இராஜபதத்தை யடையாநிற்பர்; அம்மகீபாலனைக் கண்டபோது அம்மந்திரி வயப்பட்டு நிற்பன், அம்மந்திரியை வெற்றிகொள்ளில் அவ்வரசன் தரிசிக்கப் பெறுவன், மாறுபடில் மாறுபடுமாகலின் பயிற்சியினலே யிரண்டையுமே சமமாகவே தொடங்க வேண்டும், பௌருஷப் பிரயத்நத்தானே யாம் தனது பயிற்சியின் வலியால் மெதுவு மெதுவாக இராஜசந்தரிசனத்தையும் மந்திரி பராஜயத்தையும் சம்பாதித்து அச்சுபமாய தேயத்தை முயற்சியானே யடைவாய். அப்பியாசமானது சபலீபூதமாயின் ஞானபல வடிவமாய்ப் பரிணதமாயின் நீ அத்தேயத்தை நன்கடைவாய், அடைதியேல் ஹே தைத்தியேந்திர ! மறுபடிசிறிதும் சோகத்தை யடையமாட்டாய் அவ்விடத்தி லியாவர் இருப்பர் என்னிற்கேட்டி ! சம்சாந்த சகலாயாசரும் நித்தியப் பிரமுதிதாசயரும் பிரசாந்த அசேஷசம்சயரும் ஆகிய சாதுக்கள்= சர்வ அநர்த்தங்களும் நீங்கியவரும் நிரதிசய நித்தியாநந்த பூரணரும் சந்தேக விபரீதமியாவு மற்றவரும் ஆகியசாதுக்கள் ஆண்டெழுந்தருளி யிருப்பர். இப்போதுகூட உக்தியைவிவரப் படுத்தல்:—விரித்திது சொன்னான் என்பது. ஹேமைந்த ! அத்தேசமியா தென்பதும் பிற யாவும் வெளிப்படுத்தி யுரைப்பக்கேட்டி ! என்றுரைத்தான். (32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதன்வித மிதுவாம் எனல்:—முன்னம் என்பது.

முன்னநாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி
மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந்
தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே
யன்ன வேந்தனு லமைத்தமந் திரிமன மாகும்.

(ப - ரை.) முன்னம் நாம் சொன்னதேசம் = பூர்வம் எம்மாலுரைக்கப் பெற்றதேயம், ஓர் முடிவிலாமுக்தி = சகலதுக்கமுந்தீர்ந்த ஒப்பற்ற மோக்ஷமாம், மன்னன் என்றது = ராஜாவெனக் கூறியது, மாசிலாமணி யெனவயங்கும் = சர்வபத அதீதமாகிய பகவான், தன்னில் வேறிலா ஆத்துமதத்துவந்தானே = தனது வடிவமேயாய ஆன்மதத்துவமே யாம், அன்னவேந்தனல் அமைத்த மந்திரிமனமாகும் = அத்தகைய அரசனலமைக்கப் பெற்ற ஆமாத்தியன் மனமெனப் பெறுவன்.

(ஸ்ரீ - வீர.) எம்மாற்றேச மெனக்கூறப் பெற்றது எல்லாத் துயரையுந் தீர்க்கும்மோக்ஷமாம் ஆண்டுராஜாவோ, மாநுஷாநந்தாதி ஹைரண்ய கர்ப்பாநந்தாந்த சருவபுதங்களையும் கடந்து நடந்தவனும், சர்வவாக்குமன அகோசரனுமாவன், அவனேபகவானகிய ஆன்மா. ஹேமகாமதியை யுடையமைந்த ! அவனல் ஆக்கப்பெற்ற மந்திரியோ, சர்வப்பிரஞர

ஆயின் என்னெனக்கு ஆயுதங்களில்லேயா படர்களிலரா ? உளவாகுக, அவன் இவற்றிற்கெல்லாம் விடயனேயல்லன் எனல்:—சூலமென்பதாதி, அவன்மேல், வாள், உலக்கை, ஈட்டி, வச்சிரம், சக்கிரம், கதை முதலனவும், அக்கினிகாலும் பாணவிசேடங்களும் ஏவினல்,பெரும் பாறையிலறைந்த கருங்குவளே மலர்போல மழுங்கிப் பொடியாகின்றன. மன்மதன் பஞ்ச மாத்திர சரனுயினும் சாடோபமாய்ச் சம்பிராட்டைப்போல, அம்மந்திரியின் றிருவருளால் இம்மூவுலகையும் வெற்றிகொண்டு விளேயாடுகின்றான்; குணஹீனனாய்த் துர்மதியாய்ச் சுராசுரக்கூட்டங் கொண்டவனாய்த் தராகிருதியாயினும் குரோதன் அவன்றிருவருளால் அனல் போலக் கொதித்தாடு கின்றான். (30)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அம்மந்திரி கேவலம் அவ்வாத்மப் பிரபுவினாலேயே வெற்றி கொள்ளலாகுமெனல்:—விளியென்பது.

விளிவ ருந்திர லந்தமந் திரியந்த வேந்தா
லெளிது வென்றிடில் வணங்குறு மிவ்வகை யின்றே
லளிய மேருவை யசைப்பினு மசைப்பரி தாகு
மொளிகொ ளூகபுந் தியினலால் வெலப்படா னொருங்கே.

(ப - ரை:) விளிவருந்திறல் = கெடாத வலிமையையுடைய, அந்தமந்திரி = அவ்வமைச்சன், அந்தவேந்தால் = அவ்வரசனால், எளிது வென்றிடில் = சுலபமாகச் செயஞ்செயின். வணங்குறும் = கீழ்ப்படிந்து நிற்கும், இவ்வகையின்றேல் = அங்ஙனமாக்கா தொழியின். அளிய = கருணையுதார முதலிய குணங்களா லலங்கரிக்கப்பெற்று எனது கிருபைக்குப் பாத்திரனான புத்திர ! மேருவை யசைப்பினும் = சுமேரு பருவதத்தைப் பிடுங்கினும், அசைப்பரிதாகும் = சலிப்பித்தற்கு முடியாதாம், ஒளிகொள் ஊகபுந்தியினலால் = பிரகாசம் பொருந்திய ஊகமதியினானன்றி, வெலப்படான் ஒருங்கே = செயிக்கப் பெறான் அத்தியந்தம்.

(ஸ்ரீ - வீர.) அம்மந்திரியைக் கேவலம் அவ்வாத்மப் பிரபுவினாலேயே வெற்றிகொண்டால் அவ்வெற்றி நல்வெற்றியாகும், மாறாயினோ அசல உபமனாவன். அவ்வொருவனை, வியாமோக பரிஹீனமாய் நிச்சிதமாய் ஏகாக்கிரமா யிலங்கும் புந்தியினாலே வெற்றிகொள்ளச் சமர்த்தனாதியேலாயின் அக்கால் ஹேசுவிரத! நீதீரனேயாவாய் என்றவிரோசனனை நோக்கி, ஹேதாத ! எவ்வுபாயத்தானே அந்தப் பலவான் நன்குஜயிக்கப் பெறுவன், அவ்வதிமகா வீரியவான்றான் யாவன், யாவற்றையும் அடியேற்கு விரைவில் உபதேசிக்கவேண்டும் என்று மாபலிகூற அதற்கு விரோசனன் கூறல்:—ஹேதநய ! அம்மந்திரி நித்தியம் வெற்றிகொள்ளக்கூடாத நிலைமையிலிருந்த போதினும், அவனை யெளிதாக வெல்லுமுபாய மியம்பக் கேட்டி; எதனால் அவனைநீ வெல்லலாமோ; யுக்தியினாலே கவ்வப்பெற்றிடினவன் கணத்தில் வயப்பட்டு நிற்பன். (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஊகமின்றியவன் பாலுற்றிடிற் சோகமொன்றிடு மென்றிசைத்தல்:—ஊகவென்பது.

ஊக புந்தியா லல்லதவ் வமைச்சனை யுற்றால்
வேக நாகம்போ லெரித்திடும் வேந்தனோ டமைச்ச
னேக ராச்சியஞ் செய்யுமத் தேசமு மியாவுஞ்
சோக மற்றிடக் கேளென விரித்திது சொன்னான்.

(ப - ரை.) ஊகபுத்தியால் அல்லது அவ்வமைச்சனையுற்றால் = யுக்தியினால் அன்றி நெருங்கி அந்தமந்திரியை எதிர்த்தால், வேகநாகம்போல் எரித்திடும் = மிகுந்த சீற்றத்தையுடைய நாகசர்ப்பம்போல் தகித்துச் சாம்பராக்குவன், வேந்தனோடு அமைச்சன் ஏகராச்சியம் செய்யும் = அம்மன்னவனோடுகூடி யம்மந்திரி ஏக அரசாக்ஷிசெய்யா நின்ற, அத்தேசமும் யாவும் = அத்தேயத்தையும் பிறயாவற்றையும், சோகமற்றிடக்கேள் என = கூறக்கலங்காமல் ஒருமையுடன் கேட்பாயாக வென்று, விரித்திதுசொன்னான் = விரிவாக இதனைக்கூறினான்.

(ஸ்ரீ - வீர.) யுக்தியின்றி எதிர்த்தால் விடமுடைய சர்ப்பம்போலக் கோபத்துடன் சிறிவிழுந்து கனற்றிச் சாம்பராக்கும், பாலனைப்போல, அற்பவிடயப் பிரதானத்தாலும் அடிக்கடி விடயதோடத்தை யறிவித்தலாலும் லாலனஞ்செய்து வஞ்சித்து இம்மந்திரியை இராஜயோக யுக்தியினானேயாவர் நியமனஞ் செய்கின்றனரோ, அவர் அந்தராஜாவை நன்கு பார்த்து இராஜபதத்தை யடையாநிற்பர்; அம்மகீபாலனைக் கண்டபோது அம்மந்திரி வயப்பட்டு நிற்பன், அம்மந்திரியை வெற்றிகொள்ளில் அவ்வரசன் தரிசிக்கப் பெறுவன், மாறுபடில் மாறுபடுமாகலின் பயிற்சியினாலே யிரண்டையுமே சமமாகவே தொடங்க வேண்டும், பௌருஷப் பிரயத்நத்தானே யாம் தனது பயிற்சியின் வலியால் மெதுவு மெதுவாக இராஜ சந்தரிசனத்தையும் மந்திரி பராஜயத்தையும் சம்பாதித்து அச்சுபமாய தேயத்தை முயற்சியானே யடைவாய். அப்பியாசமானது சபலீபூதமாயின் ஞானபல வடிவமாய்ப் பரிணதமாயின் நீ அத்தேயத்தை நன்கடைவாய், அடைதியேல் ஹே தைத்தியேந்திர ! மறுபடிசிறிதும் சோகத்தை யடையமாட்டாய் அவ்விடத்தி லியாவர் இருப்பர் என்னிற்கேட்டி ! சம்சாந்த சகலாயாசரும் நித்தியப் பிரமுதிதாசயரும் பிரசாந்த அசேஷசம்சயரும் ஆகிய சாதுக்கள் = சர்வ அநர்த்தங்களும் நீங்கியவரும் நிரதிசய நித்தியாநந்த பூரணரும் சந்தேக விபரீதமியாவு மற்றவரும் ஆகியசாதுக்கள் ஆண்டெழுந்தருளி யிருப்பர். இப்போதுகூட உக்தியைவிவரப் படுத்தல்:—விரித்திது சொன்னான் என்பது. ஹேமைந்த ! அத்தேசமியா தென்பதும் பிற யாவும் வெளிப்படுத்தி யுரைப்பக்கேட்டி ! என்றுரைத்தான். (32)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அதன்வித மிதுவாம் எனல்:—முன்னம் என்பது.

முன்னநாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி
மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந்
தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே
யன்ன வேந்தனு லமைத்தமந் திரிமன மாகும்.

(ப - ரை.) முன்னம் நாம் சொன்னதேசம் = பூர்வம் எம்மாலுரைக்கப் பெற்றதேயம், ஓர் முடிவிலாமுத்தி = சகலதுக்கமுந்தீர்ந்த ஒப்பற்ற மோக்ஷமாம், மன்னன் என்றது = ராஜாவெனக் கூறியது, மாசிலாமணி யெனவயங்கும் = சர்வபத அதீதமாகிய பகவான், தன்னில் வேறிலா ஆத்துமதத்துவந்தானே = தனது வடிவமேயாய ஆன்மதத்துவமேயாம், அன்னவேந்தனால் அமைத்த மந்திரிமனமாகும் = அத்தகைய அரசனாலமைக்கப் பெற்ற ஆமாத்தியன் மனமெனப் பெறுவன்.

(ஸ்ரீ - வீர.) எம்மாற்றேச மெனக்கூறப் பெற்றது எல்லாத் துயரையுந் தீர்க்கும்மோக்ஷமாம் ஆண்டுராஜாவோ, மாநுஷாநந்தாதி ஹைரண்ய கர்ப்பாநந்தாந்த சருவபதங்களையும் கடந்து நடந்தவனும், சர்வவாக்குமன அகோசரனுமாவன், அவனேபகவானாகிய ஆன்மா. ஹேமகாமதியை யுடையமைந்த ! அவனால் ஆக்கப்பெற்ற மந்திரியோ, சர்வப்பிரஞ்ஞ

சமஷ்டிரூப மனமெனப் பெயரியோனும். மனத்தில் வாசனுன்மக சூக்குமபாவமாக இருந்து தானே இவ்விசுவமானது தூலபாவ பரிணாமத்தை யடைந்துளது, கடபாவமாகப் பிண் டாந்தர்க்கத மட்பாகம்போலும், அம்புதத்தன்மையதாகப் புகைபோலும், ஆம்; அதைஜயித் தால் வெற்றிகொள்ள வேண்டியயாவும் வெற்றிகொள்ளப் பெற்றுப் பற்றிக்கொள்ள வேண் டியாவும் பற்றிக்கொண்டதாகும்; ஆகலின், துர்ஜயமென்றே அதனையுணர்ந்து கொள்ளல் வேண்டும், யுக்தியினலேயே இனிது வென்று சுகிக்கலாம். (88)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஹேபகவந் ! அந்தச் சித்தத்தினுடைய சமரில் வெற்றிபெறுவ தில் எவ்வூகம் புடமாகவுளதோ அதனை யடியேனுக்கருளல் வேண்டும், எவ்வுபதேசத்தானே அக்கொடிய பகையைவென்று கொடியிடுவேனோ அஃதென்னென மகாபலிவினவ விரோச னன் விளம்பல்:—விடயமென்பது.

விடய மியாவையு மொருப்பட வொருக்கிநல் விராக
முடைமை யாவது பரமமாம் யூகமென் றுரைத்தேந்
தடையி லாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை
படைசெய் மத்தமா தொழுவத்து ளகப்பட்ட பண்பே.

(ப - ரை.) விடயம் யாவையும் = சகல விடயங்களையும், ஒருப்பட ஒருக்கி = எல்லா வகையாலுமே ஒடுக்கி, நல்விராகம் உடைமையாவது = நன்றாக அநாஸ்தையை அடைந் திருத்தலே, பரமமாம்யூகம் என்று உரைத்தேம் = மேலானயுக்தி என்று கூறினேம், தடை யிலாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை =சித்தமானது வைராக்கியத்தானே தடை யின்றி ஜெயிக்கப்பெற்ற பெற்றியானது, படைசெய்மத்தமா = போர்புரியும் மதோன்மத்த மாதங்கமானது, தொழுவத்துள் அகப்பட்ட பண்பே =படுகுழியிற் பட்டுக்கொண்டு வயவர் கைவசமாய் வயங்குதலொக்கும்.

(ஸ்ரீ - வீர.) ஹேமைந்த ! எல்லாவிடயங்களைக் குறித்துமே எல்லாவகையாலுமே ஆஸ்தையில்லாமையே மனோஜய விடயத்தில் மேலான உபாயமாம். என்னும் இதுவேயுக்தி யென்றதாம்; இதனினும் உயர்ந்த உபாயமே கிடையாதாம்; இதனானே மகாமதத்தை யுடைய தன்மனமாகிய மத்த மாதங்கமானது சடுதியிலேயே அவமதித்தடக்கப் பெறுகின் றது. “முத்தியையடைய முதிர் விழைவுளதேல், வித்தகவிடயம் விடமென விடுவாய்” எனப்பெரியோருங் கூறியிருத்தல் காணலாம். பயில்வினலல்லாமல் யாருமே விடயவைராக் கியத்தை யடையமுடியாதாம், அத்தியந்தம் பலத்தையுடைய தேகியாயினும் தேசாந்தரத் தைக்கமன சூனியனாயின் அடைய முடியாததே போலும். புருடப்பிரயத்நமின்றி ஹர்ஷா மர்ஷ விவர்ஜிதமாய கிரியாபலத்தை நன்கடைய அநுகூலமாய சுபசாதனம் அடையமுடியா தாம். தைவத்தானே அதனடைவு ஏன் கூடாதெனின் ? தன்னுடைய நியதிப்பிரயுக்தமாய சுபாசுபக் கிரியையாதுளதோ அதுவே தைவமெனப் பெறும்; முயல்வின்றியும் தைவத் தானே சிலர்க்கு ஹர்ஷ அமர்ஷ உபசமங்காணப் பெறுகின்றதே அஃதெங்ஙன மெனின் ? ஹர்ஷ அமர்ஷஹேது கருமக்ஷயமாகிய வழியாதுதான் ஹர்ஷ அமர்ஷவிநாசப் பொருட்டுச் சம்பன்னமாமோ அதுவே தைவமெனப்பெறும், ஆகுக அறைந்தபடியே தைவம் அதனு லென்னெனின் ? கூறியநியதி ரூபதைவமோவைராக்கிய தார்ட்டிய அப்பியாசாதி பௌரு ஷத்தானே சொற்பகாலத்திலேயே, மருப்பூமித் தத்துவஞான விலாசத்தானே மிருகதிருஷ் ணைப் பிரமம்போலச் செயிக்கப்பெறும்: தைவமெனப் பெயரிய நியதியானது பௌருஷத் தானே செயிக்கப்பெறுமாயின் அதனது பல நியமமின்மையின் அந்யதத்தன்மை வழக்காம் எனின் ? அஃதிஷ்டமேயாம்; மனச்சங்கற்பத்தா லுளவாய யாவற்றிலும் பாதகமில் வழி

அனவைகளினுல் பலமுடையதாகக் கவரப்பெறுந் தன்மையுளதாமாயின் பலமுடைமை சுகப் பிரதமென்றே நியமமங்கீகரிக்கப் பெற்றிருத்தலின். இல்லாருயின் அநியதித்தன்மை வழக் காமென்னற்க, மனமாகிய கருத்தாவால் இத்தகைய நியமத்திற்கே கற்பனையாதலின் நிய தித்தன்மை விகார சித்தியாதலின்; கருமஞானுதிகாரி சரீரங்கொண்டவன் எதனையெவ் வாறு சங்கற்பிக்கின்ருனே அஃதவ்வாறேயாம் எனத்தனது சங்கற்பத்தில், பௌருஷத் தானே வைராக்கியாதி சாதனங்களைச் சம்பாதித்துப் பரமபுருஷார்த்த வடிவப்பிரஹ்மாத்ம பாவமே சங்கற்பிக்கத் தக்கதாமன்றி சம்சாரியாத்ம பாவமன்ரும். (34)

(ஸ்ரீ - வீர - அ- கை.) போகங்களில் அரதியே, உள்ளில் ஜீவனுக்கு நித்தியாத்மபாவ மாக நிலேபேற்றைத் தருவதாய், நிலேயுறுவதாக வருவதெங்ஙன், ஹே சர்வாசுரேசுவரனே ! என்று மாபலிவினவ அதற்கு, ஆத்மாவலோகனத்தானே இவ்வுத்தமமாய விடய அரதியா னது, இருதயத்தில், இலக்குமி பதுமகருப்பத்தில் நிலேபெறுவதேபோல நிலேபெறுவதாகும், ஆகலின் பிரஞ்ஞாமணியின் சாணைத்தானத்ததாய வதிசாருவான விசாரத்தானே தொல்லிய காலத்தில் பிரமான்மதேவனையும் காணவேண்டும் பவபோகரதியையும் நாணவேண்டும், என்றுரைத்து ஆண்டுச் சித்தபரிபாக பேதாநுசாரமாகப் பூமிகாபேதங்களை விளம்பும் வேட் கைவாய்ந்த விரோசனன் பிரதமபூமிகையைக் கூறல்:—கற்றென்பது.

கற்றறிந்திலார் மனத்தைநாற் கூறெனக் கற்பித்
துற்றபோகத்தி லுபயமு நூல்வழி யொன்றும்
பெற்றதேசிகன் பூசையி லொன்றுமாய்ப் பேணிற்
றுற்றகங்குல் போய் விவேகமாஞ் சுடர்வந்து தோன்றும்.

(ப - ரை.) கற்றறிந்திலார் = விற்பன்ன மில்லாதவர், மனத்தை நாற்கூறெனக்கற் பித்து = சித்தத்தை நான்குகூருகக் கற்பனைசெய்து, உற்றபோகத்தில் உபயமும் = நுகர் வினைவயத்தாற் கிடைத்த போகத்தில் இருமடங்கும், நூல்வழியொன்றும் =சாஸ்திரமார்க் கத்தில் ஒருமடங்கும், பெற்றதேசிகன் பூசையில் ஒன்றும் = சரணுகதியடைந்து உபதேசம் பெற்ற ஞானுசாரியரது சேவையில் ஒருமடங்கும், ஆய்ப்பேணில் = ஆக இம்முறையை யநுட்டித்துவரில், துற்றகங்குல்போய் = பொருந்திய அஞ்ஞானம்போய், விவேகமாம் சுடர்வந்து தோன்றும் = விவேகமாகிய பிரகாசம் உண்டாகி விளங்கும்.

(ஸ்ரீ - வீர.) அவ்வியுற் பன்னனுடைய சித்தத்தினது சற்கிரமத்தில் = சன்மார்க்க ஆரம்பத்தில் = சாஸ்திரோக்தக் கிரமத்தில், போகங்களால்=தேகமாத்திர உபாயங்களால், தினத்தின் காலபாகங்கள் இரண்டை நிரப்புக, சாஸ்திர சிரவணத்தானே ஒன்றைநிரப்புக, குரு சுசுரூஷையால் ஒன்றை நிரப்புக.

(ச.) சித்தஜயக் கிரமத்தையதிகாரிபேதத்தால் மூன்றுகவிகளாற் கூறல்:—மனத்தை= சித்தத்தினது விவகாரகாலத்தை, நாற்கூறெனக் கற்பித்து, கற்றறிந்திலார் = ஞானுப்பியா சத்திற் சிக்ஷிப்புருத சித்தத்தையுடையவர், உற்றபோகத்தில் = விஷயபோகங்களினுல், உபயமும் = இருபாகங்களான காலத்துவயத்தையும், நூல்வழி = அத்தியான்ம சாஸ்திர மார்க்கத்தால், ஒன்றும், பெற்றதேசிகன் பூசையில் = குருபணிவிடையினுல், ஒன்றும் = நான்காம் பாகத்தையுங் கழிக்கவேண்டு மென்பது பொருள். (35)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதனது ஜயத்தில் அதன் உத்தர பூமிகையைச் கூறல்:—சிறி தென்பது.

சிறிதறிந்தவர் மனத்தைநாற் கூறெனச் செய்து
பொறிவசத் தொன்றுந் தேசிகர் பூசையி லிரண்டு
மறியுநூற் பொருண் மனனத்தோர் கூறுமே யாக்கி
னெறிவி வேகத்தா லொன்றுணர் ஞானமே நிரம்பும்.

(ப - ரை.) சிறிதறிந்தவர் = கிஞ்சித்து விற்பத்திவாய்ந்தவர், மனத்தைநாற்கூறெனச் செய்து = சித்தத்தை நான்குபாகமாகச் செய்து, பொறிவசத்தொன்றும் =போகங்களால் ஒருபாகமும், தேசிகர்பூசையி லிரண்டும் = குருபணிவிடையால் இரண்டு பாகங்களும், அறியும் நூற்பொருண் மனனத்து = தெரிந்துகொள்ள வேண்டிய சாஸ்திர அர்த்தசிந்தையானே, ஓர்கூறுமே = ஒருபாகமுமே, ஆக்கின் = நிரப்பின், நெறிவிவேகத்தால் = இம்முறையில் வரும் விவேகத்தானே, ஒன்றுணர் ஞானமே நிரம்பும் = ஏகசிவத்தையறிவும் மெய்யுணர்வே பூரணமாம்.

(ஸ்ரீ - வீர.) சிறிது விற்பத்தி யதிகரித்து ஆன்மஞானத்திற் சமத்கார மடைந்தவனது சித்தத்தைப் போகங்களா லொருபாகம் நிரப்புக, அதனானே போகங்களில் அநாஸ்தை யுதயத்தானே பாகக்குறைவி னடைவாம், குருசுசுரூஷையானே இரண்டுபாகங்கள் நிரப்புக, குருபணிவிடையிலோ பாகாந்தர விருத்தியாம், சிரங்குருசந்நிதானங் கிடைப்பதால் சமயங்கிடைத்தபோது ஆசிரியரிடத்தில் தனது சந்தேகப்பிரசின சம்பவத்தா னென்பது பாவமாம். சாஸ்திரார்த்த சிந்தையானே ஒருபாகம் நிரப்புக.

(ச.) சிறிதறிந்தவர் = கொஞ்சம் விற்பன்னமுள்ள சித்தத்தினர், மனத்தைநாற் கூறெனச்செய்து, பொறிவசத்து = போகங்களினால், ஒன்றும் = ஒருகாலத்தையும், தேசிகன் பூசையிற் காலத்துவயத்தையும், அறிவும் நூற்பொருள் மனனத்து = சாஸ்திரார்த்த சிந்தையால். ஒருகூறும் = சதுர்த்த காலத்தையும், கழிக்கவேண்டு மென்பதுபொருள். (36)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அதன் வெற்றியின்பொருட்டு அதனுத்தர பூமிகையையறைதல்;— ஞானமென்பது.

ஞானமுற்றவர் மனத்தைநாற் கூறென நாட்டி
யான நூலினும் விராகத்து மநுபவந் தனினு
மானநற் குரு பூசையின் வழியினுஞ் செலுத்தி
லீனமற்ற நன் முத்திவந் தெய்திடு மெளிதின்,

(ப - ரை.) ஞானமுற்றவர் = தத்துவந்துணிந்தவர், மனத்தைநாற் கூறெனநாட்டி = சித்தத்தை நான்குகூறாகப் பகுத்து, ஆனநூலினும் விராகத்தும் = பிரமாணகத சம்சயந் தீர்வதற்கான சாஸ்திரத்தும் வைராக்கியத்தும், இருகூறையும், அநுபவந்தனிலும் மானநற் குருபூசையின் வழியினும் = பிரமேயகத சம்சயந்தீர்வதற் கேதுவான தியானத்திலும் யாவரும் போற்றத்தக்க நல்லஞானாசிரியரது பணிவிடையின் கண்ணும், இருகூறையும், செலுத்தில் = கழிப்பாராயின், ஈனமற்ற = சர்வ அநர்த்த நிவிருத்தி, நல் = பரமானந்த. வடிவு, முத்தி = மோக்ஷம், எளிதின் = சுலபமாக, வந்தெய்திடும் = தனது வடிவமாதலிற்றானே வந்து கிடைக்கும்.

(ஸ்ரீ - வீர.) இரத்தினதத்துவம் போலச் சிரபரீக்ஷணத்தானே தத்துவமாகத்துணிதல் விற்பத்தியாம் அதனை நன்கடைந்தவன் தனது சித்தத்தின் இரண்டுபாகங்களைத் தினந்தினம் சமுச்சிதமாய சாஸ்திர வைராக்கியங்களானே பூரணஞ்செய்க, மற்றிருபாகங்களையோ, தியானங்களானும் குருபூஜனத்தானும் முறையாகப் பூரணஞ்செய்க. நான்குவிதமாய

முறையிலும் தூயமனமுடையவனே யதிகாரியாவனன்றி மற்றையனுகான், எங்ஙனமெனின் நிர்மலாகிருதியையுடைய ஆடையானது நலமிக்க பரிசுத்த நன்னிலைமையிலிருந்தே உத்தம மாகிய குசும்பகிம்சுகாதி இரஞ்சனையை யேற்றுக் கொள்கின்றது, வலினமிக்க துணியா யிருந்தோ வற்காதாம்; அஃதொப்ப, சாதுத்தன்மையை யடைந்த ஜீவனே ஞானகதைக் கிரமத்திற் றகுதியுடையவனுவனன்றி மற்றையனுகான், ஆயின் சிறிது மலினனுக்கு யாங்ஙனம் எனின், இங்ஙனமாம்:—பையப்பையச் சித்தபாலகனே, துக்கான்வய வியதிரேகப் பிரதரிசனமான யுக்திகளானும், சுருதிம்ருதி குருவசனங்களாய பாவன உக்திகளானும் லாலனஞ் செய்யவேண்டும், சாஸ்திரார்த்தத்திற் சித்தத்தினது பரிணமத்தானே = சிரபரிசீலனத்தாற் சர்க்கராமலகமென்ன மதுரைகரஸ்ய பரிணதியினுனே, பாலனஞ்செய்ய வேண்டும்.

(ச.) ஞானமுற்றவர் = திடவிற்பன்ன சித்தர், மனத்தை நாற்கூறென நாட்டி, விவ காரகாலத் துவயங்களை, ஆனநூலினும் விராகத்தும் = அத்தியான்ம சாஸ்திரவிசாரங்களாலும் விடயங்களின் ஹேயத்வ விசாரங்களாலும், இரண்டு காலங்களை, அநுபவந்தனி லும் = தியான நிஷ்டையாலும், மானதற்குரு பூசையின் வழியினும் = ஸ்ரீ குருபூசையாலும் கழிக்கவேண்டு மென்பது பொருள்; தியானசகிதமான குருபூசையானும் கழிக்குக வென்பதாம். (37)

(ஸ்ரீ-வீர - அ-கை.) விசாரபல திருஷ்ணசந்தியாகமும் ஆத்தியந்திகமாக அக்காலே யுண்டாம் என்னுங் கருத்தாற் கூறல்:—மிக்கவென்பது.

மிக்கவறிவால் விசாரத்தான் மெய்ம்மையுணர்வு நிராசையுநீ
யொக்கவென்றுங் கைக்கொள்வா யூற்றமான நிராசையினுற்
றக்கவிசாரம் விசாரத்தாற் றவிராநிராசை தம்மாற்றுந்
தொக்குநிரம்பும் வாரிதியுந் தொடர்மேகமுந்துன் னுதல்போலாம்.

(ப - ரை.) மிக்க அறிவால் விசாரத்தால் = பிரஞ்ஞையினுலும் விசாரவசத்தினுலும், மெய்ம்மையுணர்வும் நிராசையும் நீ = ஆத்மாவலோகனமும் திருஷ்ண சந்தியாகமும் நீமைந்த ! ஒக்க = சமமேயாக, என்றும் = எப்போதும், கைக்கொள்வாய் = நன்ருகக் கவர்வாய், ஊற்றமான நிராசையினுல் = அதிதிடதர வைராக்கியத்தினுல், தக்கவிசாரம் = தகுந்த விசாரமாம், விசாரத்தாற் றவிராநிராசை = விசாரத்தினுலே கெடாத நிராசையாம், தம்மாற்றும் தொக்குநிரம்பும் = ஒன்றற்கொன் றுதவியாயிவை பூரணமாம், வாரிதியும் தொடர்மேகமும் துன்னுதல் போலாம் = சமுத்தரமும் அதைத்தொடர்ந்தமேகமும் பரஸ் பரம் பூரித்துக் கொள்வது போலவாம்.

(ஸ்ரீ - வீர.) பிரஞ்ஞை விசாரவசத்தினுற் சமமாகவே சந்ததம் மைந்த : ஆன்மதரிச னத்தையும் ஆசையின்றி யாகத்தையும் இனிது கவர்வாய். விசாரபலமாய புருஷாபராத நிவிருத்தியும் ஞானபலமாய மூலாவித்யா நிவிருத்தியும் தனித்தனி சித்தியாவாம், பரதி ருஷ்டியுளதாயவழி நிராசையுளதாம், நிராசையுளதாய வழியோ திருக்குப்பரமாம், வன்னியி னது தேஜோதசையாகிய பிரபையவத்தையும் தீபதசையாகிய தீபாகாராவஸ்தையும், திமிர தைல மிரண்டையுந் தீர்ப்பனவாயவை, அன்னியோன்னிய யௌகபத்யத்தானே, இதங்களா வனபோலவே, கூறிய திருஷ்டிகளிரண்டும் பரஸ்பர மிருப்புறுவனவாம். சசியாதி அபி விருத்தியோடு கூடிய மழைகாலமுள்வழி சாலியாதி பல சம்பத்தினுலே ஸ்ரீமாந், சரற்காலத்

தில் அமலம்போல, விசாரபோக நிராசையென்பவற்றிற்கும் பரஸ்பர அதீனமாம் அபி விருத்தியென் ஒரேகாலத்தில் விருத்தியாக்க வேண்டுமெனல்:—ஊற்றமான வென்பதாதி. போகம் போக்கலால் விசாரமாம், விசாரத்தானே போகநிராசையாம், சமுத்திரஜலதங்கள் போல அன்னியோன்னிய மிவைபூரித்துக் கொள்ளும். சமுத்திரத்தானே இரஸ்மிவாயிலாய் மேகங்கள் பூரிக்கப் பெறுகின்றன, மேகங்களானே மழைவாயிலாய்ச் சமுத்திரம் பூரிக்கப் பெறுகின்றதென்பது வெளியாம்.

(ச.) மிக்கவறிவால் = இங்ஙனம் பிரஞ்ஞை வசத்தினாலும், விசாரத்தால் = விசார வசத்தினாலும், ஒக்க = சித்த உபசமமாக, நிராசையும் = ஆசையின் றியாகத்தையும், மெய் யுணர்வு = ஆன்மாவலோ கனத்தையும் = பார்வையையும், கைக்கொள்வாய் = சம்பாதிப் பாய், ஊற்றமான நிராசையினால் = விடயசுகங்களினதுதோட தரிசனத்தினால். தக்கவிசா ரம் = புருடார்த்த விசாரம், நிரம்பும், விசாரத்தால் = புருடார்த்த விசாரத்தினால், தவிரா நிராசை = விடயசுகங்கள் புருடார்த்த மின்மையன வாதலின் குற்சிதார்த்தம் (அருவருப் புள்ளது) ஆதலும், நிரம்பும், தம்மாற்றும் = இப்படி இவ்விசார நிராசைகளும் அன்னி யோன்னியம், தொக்கு நிரம்பும், எங்ஙனமெனில், சமுத்திரம் மேகத்தால் மழைவாயிலாய் நிரம்புவதும் சமுத்திரோதகத்தினால் மேகம் நிரம்புவதும் போலாமென்பது பொருள். (38)

(ஸ்ரீ - வீர - அ-கை.) கூறியபொருளைச் சுருக்கியுபசங்கரித்தல்:—நாட்டின் என்பது.

நாட்டினியல்பு வழுவாம னட்டோர்க்கிதமா நற்பொருள்க
ளீட்டிமுன்ன மதனாலே யினியகுணத்தி னுயர்ந்தோரைக்
கூட்டியவரா னிராசையினைக் கூடியதனால் விசாரத்தைத்
தீட்டியதனுன் மெய்ஞ்ஞானந் தெளிந்தான் முத்திசித்திக்கும்.

(ப-ரை.) நாட்டின் இயல்பு வழுவாமல் = உலகத்தோடொத்து வாழ்ந்து முறைதவ றாமல், நட்டோர்க்கு = உறவினர்க்கு. இதமா = அநுகூலமான, நற்பொருள்கள் = தரும தனங்களை, ஈட்டி=சம்பாதித்து, முன்னம் = பூர்வம்; அதனாலே=அதுகொண்டு, இனிய குணத்தி னுயர்ந்தோரைக் கூட்டி = மைத்திரியாதி கல்யாணகுணங்க ணிறைந்த பெரி யோரைப் பூஜித்துச் சேர்த்து, அவரால் = அம்மகான்களால், நிராசையினைக்கூடி =ஆசை யின்மையை யடைந்து, அதனால் = அந்த வைராக்கியத்தினால், விசாரத்தைத் தீட்டி = ஆராய்ச்சியை யதிகரிக்கச்செய்து, அதனால்=அவ்வாராய்ச்சி முதிர்ச்சியால், மெய்ஞ்ஞானந் தெளிந்தால் = சத்தியஞான அநந்தானந்த வடிவத்தைச் சாக்ஷாத்கரித்தால், முத்திசித்திக் கும் = மோக்ஷமானது தனது வடிவமாகவே எஞ்சியிலங்கும்.

(ஸ்ரீ - வீர.) தேசாசார அவிருத்த முறையானே தனத்தைச் சம்பாதித்து, அத்தனத் தானே அற்பமாய்த் துச்சதரமாயுள்ள போகத்தைவெறுத்து அதன் பொருட்டுத் தனத்தை செலவிடாமல், சாதுஜனங்களையும் பிரஹ்ம வித்துக்களையும் நமஸ்காராதிகளானும் சேவைக ளானும் அன்னமாடையாதி யுதவியருச்சித்தலானும் சன்மானபூர்வகம் சம்பாதித்து, “அப் பொருளறியும் பொருட்டங் கவன்றான், மெய்ப்பாங் குருவையோமேவுக சமித்தை, வைப் புறுகாணுவ்வரு சுரோத்திரியனும், நிற்புறுபிரம நிட்டையன்றனையே” என்னும் சுருதி கூறியமுறையே யென்பதாம். அதன்பின்னர், சற்சங்கமத்தினின்று மெழுந்த விடயவதன் விருப்புவெறுப்பு முதலவற்றை யிகந்து வீடலானே சாதனசதுஷ்டய சம்பத்தியாற் பிரவி ருத்தித்த நலமிகுமத்தியாத்ம சாஸ்திரவிசாரத்தின் விபவத்தால் ஹே குழந்தாய்! உனக்கு ஆத்மலாபமானது, மறந்த கண்டாபரண லாபம்போலு முண்டாம்.

(ச.) நாட்டினியல்பு வழுவாமல் = தேசாசார விருத்தமின்றி, நட்டோர்க்கு = உறவினர்க்கு, இதமாய் = முக்கியசம்மதமாகிய புருடப் பிரயத்தினத்தினல் முன்ன, நற்பொருள் களீட்டி = தனங்களைச் சம்பாதித்து, அதனுலே = அத்தனங்களால், இனியகுணத்தினுயர்ந்தோரை உபசரித்துக் கூட்டி, அவரால் = அவர்களது சங்கத்தினுற் குணவந்தனுய், நிராசை = விஷயவைராக்கியத்தை. மூலத்தில், சொற்பதோஷத்தானே தேசாசாரக்கிரமத்தானே தனத்தைச் சம்பாதித்து, அத்தனத்தானே சற்கார பூர்வகமாகச் சாதுஜனங்களைச் சம்பாதித்து, அச்சாது சங்கமத்தானே யுண்டாய விடயவைராக்கியத்தானும் சம்யக் விசார விபவத்தானும் உனக்கு ஆன்மலாப முண்டா மென்பதன்வயமாம். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவாந்தர ஆக்கியானத்தை யுபசங்கரித்துப் பிரகிருத்தத்திற் சேர்த்தல்:—என்று என்பது.

என்றுமுன்ன மென்றந்தை யிசைத்தான்றெய்வ சகாயத்தா
லொன்றுமொழியா தின்றுணர்ந்தே னுணர்வுபெற்றேன் போகத்தி
னின்றவாசை யின்றொழித்து நிராசையென்னு நிதியாலே
துன்றிநொய்தா யுபசாந்தச் சுதையிற்குளிர்ந்த சுகம்பெற்றேன்.

(ப - ரை.) என்று = எனவிவ்வண்ணம், முன்னம் = பூர்வம், என்றந்தை = எனது பிதா, இசைத்தான் = உபதேசித்தான், தெய்வசகாயத்தால் = பரமேசுரரது திருவருளால், ஒன்றும் ஒழியாதின் றுணர்ந்தேன்=ஒன்றையும் விடாமல் இப்போது ஸ்மரித்தேன், உணர்வுபெற்றேன்=விவேகத்தை யடைந்தேன், போகத்தினின்ற வாசையின்றொழித்து= போகத்தின் கண்ணே நிலைபெற்றிருந்த அவாவை இப்போதுவிட்டு, நிராசையென்னும் நிதியாலேதுன்றி = போகவிராக மென்னும் ஐசுவரியத்தானே பூரணனுகி, நொய்தாயுபசாந்தச் சுதையிற் குளிர்ந்தசுகம் பெற்றேன் = சொச்சமாய மிருதசீதளமாய சமசுகத்தை யடைந்தேன்.

(ஸ்ரீ - வீர.) எழிலாருமாராய்ச்சி மிகுந்த எனது தந்தைபூர்வம் எனக்கிவ்வண்ண மிதனைக்கூறினுன், இப்போது தெய்வகதியானே யாவற்றையும் நன்கெண்ணினேன், நல்லபிரபோதத்தையும் நானடைந்தேன்; இப்போது எனக்கு இப்போக விராகமானது நன்ருக இனிதுண்டாயது, தெய்வத்திருவருளானே அமிருதசீதளமாய அதிதெளிவான உபசாந்திச் சுகத்தை யடைகின்றேன்.

(ச.) தெய்வசகாயத்தால் என்பது ஆனந்தத்தில் வந்தது, உணர்ந்தேன் = நினைந்தேன், திஷ்ட்யா = அவ்யயம் ஆநந்தப் பொருளில். (40)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மீண்டும் மீண்டும் ஆசையைப் பூர்த்திசெய்து கொண்டும், மீண்டும் மீண்டும் தனத்தைச் சேகரித்துக் கொண்டும், மீண்டும் மீண்டும் காந்தையைப் பிரார்த்தனையாதியானே யநுகூலப்படுத்திக் கொண்டும், இங்ஙன் சம்பத்பரிபாலன விடயத்திற் சந்தப்தனுகி யிருந்தயானிப்போது சந்தோட மடைந்தேனென்றப் பதத்தை வியந்தோதல்:—அந்தோவென்றது.

அந்தோவந்தோ விதுநெடுநா ளறிந்திலேனின் றறிவுற்ற
சந்தோடத்தை யென்சொல்வேன் சகலநினையுஞ் சமித்தாறி
நொந்தோரின்ப துன்பத்தா னேவாதிருக்கு மிடமிதுவே
யுய்ந்தோருறையும் பதமிதுவே யுபசாந்தத்தி னுயர்விதுவே.

(ப - ரை.) அந்தோ அந்தோ = அகோ அகோ ! இது நெடுநாள் அறிந்திலேன் = இதனை வெகுகாலம் அறியாமற் போனேன், இன்றறிவுற்ற சந்தோடத்தை யென்சொல் வேன் = இப்போது அறிந்துகொண்ட மகிழ்ச்சியை என் எனக்கூறுவேன், சகல நினைவும் சமித்தாறி=எல்லா எண்ணங்களும் இரிந்து சாந்தமாய், இன்பதுன்பத்தால் நொந்தோர்= சுகதுக்கங்களாற் கவலையுற்றவர், நோவாதிருக்கும் இடமிதுவே = கிலேசமுறு திருக்கும் பதமிதுவேயாம், உய்ந்தோர் உறையும் பதமிதுவே = அவித்தையின் கரைகண்டு தேரியவர் சுகமாய்வாழுந் தானமிதுவே, உபசாந்தத்தின் உயர்வு இதுவே = பரம உபசாந்தியின் காஷ்டையு மிதுவேயாம்.

(ஸ்ரீ - வீர.) ஆச்சரியம் ! ஆச்சரியம் !! அதிதிண்ணமாக வன்றேவிது இரம்மியமா யுளது, உபசாந்தி பூமியாயுளது, சகல சீதளங்களினும் விலக்ஷணமா யுள்ளத்ததிசீதளமா யுளது, சாந்திகுணத்தில் இன்பதுன்ப திருஷ்டிகளியாவுமே நாசத்தை யடைகின்றனவாம், சமத்தில் நிலைபெற்றயான் சாமியத்தை யடைகின்றேன், சர்வதாப உபசமமாயிற்றென்றதாம், சந்திரபிம்பத்தில் அர்ப்பிதன்போல வெப்பங்கள் யாவுந்தீர்ந்துகுளிர்ந்தேன் இதுசித்தத்தின் நிரதிசய சுகபாரவசி யோக்தியாம், சுகமாயிருக்கின்றேன் இது அதன்ஹேது இன்பவடிவமா யிருத்தற்கூற்றும், உள்ளேயென்று எல்லாவிடங்களிலும் கூட்டிக்கொள்க, இதனைக்கவர்ந்து மகிழ்கின்றேன் இது ஹர்ஷலிங்க புலகாதி யதிசயக்கூற்றும்.

(ச.) மூலம், சமபூ: = சமதசை. (41)

(ஸ்ரீ - வீர - அ - கை ) இவ்வண்ண மியம்பிய மாபலி சம்சய நிவிர்த்தியின் பொருட்டுத் தரிசனந்தர ஸ்ரீ சுக்கிராசாரியரைத் தியானித்தல்:—என்ன வென்பது.

என்னவுரைத்து நானுரென் னுருவமேதென் றியான்விளங்கத்
தன்னையறியுஞ் சுக்கிரனைத் தாழ்ந்துவினவித் தத்துவத்தை
யுன்னும்பொழுதே யஞ்ஞான மோடுமென்ன வுசனைவை
முன்னவேண்டு மெனக்கண்கண் முகிழ்த்துநினைந்தான் முழுதன்பால்.

(ப - ரை.) என்னவுரைத்து = இவ்வண்ணமியம்பி, நானுர் என்னுருவமேது என்று= யான்யாவன் எனது வடிவமியாது என்பதாக, யான்விளங்க = யான்விளங்கும்படியாக, தன்னையறியுஞ் சுக்கிரனை = சுவாத்ம வேத்தாவாய ஸ்ரீ சுக்கிராசாரியரை, தாழ்ந்து = நமஸ்கரித்து, வினவி = உசாவி, தத்துவத்தை = யதார்த்த வத்துவை, உன்னும் பொழுதே = தியானிக்குங் காலத்திலேயே, அஞ்ஞானமோடு மென்ன = அஞ்ஞானமா னது ஓடியொழிந்து போகுமென்று, உசனைவை = ஸ்ரீ வெள்ளிபகவானை, முன்னவேண்டு மென் = பிரசன்னமாக வேண்டுமென்று, கண்கள் முகிழ்த்து = விழிகளைமூடி, நினைந் தான் முழுதன்பால் = தியானித்தான் பூரணபக்தியால்.

(ஸ்ரீ- வீர.) இப்பிரபஞ்ச மானது யாது ? அகம் என்னும் உணர்விற்கு விடயமாய ஜீவ தத்துவமியாது ? ஆன்மாவென்பது யாது ? என, ஆன்மாவை யறிந்துள்ளவரும் அறியும் வேட்கையர்க் குபாயத்தை யுபதேசிப்பவரும், குலகுருத் தன்மையானே குலத்திற்கே பர மேசுரரும் ஆகிய ஸ்ரீசுக்கிராசாரியரை அத்தியந்தம் அஞ்ஞான சாந்தியின்பொருட்டு வினவு வேன், யான்பரமேசுரராய் யோக சித்தத் தன்மையானே சர்வகாமேசுரராய், தன்னைச்சரணு கதி யடைந்தவரிடத்தில் விரைவிற் றிருவருள்சுரக்கும் பகவானுயுள்ள ஸ்ரீ சுக்கிராசாரியரை நன்கு தியானிப்பேன், அவர் பிரசன்னமான பின்னர், இன்பமய அவரது உபதேசமகாவாக்

யெத்தால் உபதேசிக்கப்பெற்ற அநந்தவிபவ ஆன்மாவில் சுயம் ஆன்மாவாகவே நிலைத்திருப் பேன், அவண் நிலைபெறுதலில் என்ன ஹேதுவாலுனக்கு நம்புதலாதல் எனின், மகத்துக் களினது உபதேசத் திருமொழியானது அக்ஷயப்பொருளைப் பயக்கும் அன்றி யொருகாலத் திலும் விபலமாகமாட்டா வாகலின் என்பதாம். ஸ்ரீ வசிஷ்டபகவான்: — இவ்வண்ணம் நன்கு சிந்தித்த மகாபலவானுகிய மாபலிச் சக்கிரவர்த்தி, விழிகளையினிதுமூடி, பிரஹ்மா காசத்தையே விசிராந்தி ஸ்தானமாகவுடைய கமலபத்திராக்ஷராகிய ஸ்ரீ சுக்கிராசாரியரைத் தியானஞ் செய்தான்.

(ச.) யானுர் = அகஞ்சத்தார்த்த மியாது, என்னுருவம் = ஆன்மசொரூபம், என்னு = என்று சிந்தித்து, உசனுவை = சுக்கிராசாரியரை, மூலத்தில், ஆன்மதரிசனஞ் செய்தவரா கிய ஸ்ரீ சுக்கிரரென்னும் ஞானுசாரியரை, யார்யான் இவ்வான்மா வென்னும் என அகம் சப் தார்த்தத்தையும் ஆன்மசொரூபத்தையும், அஞ்ஞானம் அகலுதற் பொருட்டுத் துணிபாக வினவுவேன் என்பது அன்வயமாம். (42)

(ஸ்ரீ - வீர - அ - கை,) மாபலியின் நற்சிந்தனத்தின் பின்னர் எப்போதும் தியானபர ராய ஸ்ரீ பார்க்கவர், சர்வாந்தரப் பிரஹ்மரூபத் தன்மையானே எங்குமிருக்கப் பெற்றதம் மைச் சிந்தியாநின்ற தமது சித்தத்திலிருக்கும் மாபலியென்னுஞ் சீடன் புரத்திற் குருவை யடையும் விருப்பினனுய்த் தத்துவ ஜிஞ்ஞாசையால் தம்மைத் தரிசிக்கும் வாஞ்சையனு யிருப்பதை யுணர்ந்தவராய்ச் சந்நிதிசெய்தலும் அவன் பிரார்த்தித்தலும்:—மெய்யென்பது.

மெய்யாகியசச் சிதாநந்த வெளியேவடிவா கியவெள்ளி
யுய்யாநின்ற மாவலிமுன் னுதிப்பவவனு முவந்திறைஞ்சிக்
கையார்மணியா லுயர்மலராற் காலிலருச்சித் துரைசெய்வா
ஐயாநின்னன் பெனையெழுப்ப வடியேனுரைப்ப தறிந்தருள்வாய்.

(ப - ரை.) மெய்யாகிய = சத்தியமாகிய, சச்சிதாநந்த வெளியே = உண்மையறி வின்ப ஆகாசமே வடிவாகிய, = உருவமாகிய, வெள்ளி = ஸ்ரீ சுக்கிராசாரியர், உய்யாநின்ற மாபலிமுன் = உபதேசத்தாற் சீவன் முக்தனுகும் மாபலிச் சக்கிரவர்த்தியின் முன்னிலை யில், உதிப்ப = பிரசன்னமாக, அவனும் = அம்மாபலியும், உவந்து = பரமசந்தோஷத்தை யடைந்து, இறைஞ்சி = நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து, கையார் மணியால் உயர்மல ரால் = கரநிறைந்த ரத்தினங்களானும், மேன்மையான மணநிறைந்த புஷ்பங்களாலும், காலிலருச்சித்து = பாதங்களில் அருச்சனைசெய்து, உரைசெய்வான் = விண்ணப்பிக்கின்ற தாவது, ஐயா = எனதாசிரியரே, நின் அன்பு = தேவரீரது பாதாரவிந்தங்களிலுள்ள பக்தி யானது, எனையெழுப்ப = அடியேனையேவ, அடியேன் உரைப்பது அறிந்தருள்வாய் = நாயினேன் விஞ்ஞாபனஞ் செய்துகொள்வதைத் திருச்செவி கொண்டருள்வாய்.

(ஸ்ரீ - வீர.) பின்னர்ச் சர்வகத அநந்த சிதாத்மாவாகிய ஸ்ரீ பார்க்கவர், ஆகிய அந்தப் பிரபுவானவர், தமது திருமேனியை மகாபலியினுடைய இரத்தினச் சாளரம் வாய்ந்தஸ்தா னத்தை நோக்கிக் கொணர்ந்தனர் தாமாகவேவந்தனர் என்பதாம். குருப்பிரான் றிருமே னிப்பிரமையின் ஜாலந்தீண்டப் பெற்றதனுவையுடைய மகாபலியானவன், காலைப்போதில் அருக்கனது கிரணவிகாசித அம்புஜம்போல உணர்ந்தனன் ஆண்டு இரத்தின அர்க்கிய தானத்தானும், மந்தாரமலர் மாலைகளானும், பாதாபி வந்தனங்களானும், பிரசன்னமான ஸ்ரீ பார்க்கவரைப் பூசைசெய்தபின், மகத்தான ஆசனத்தில் விசிராந்தியை யடைந்த ஞானு சாரியரை நோக்கிக் கூறுவதாவது, ஹேபகவந் ! தேவரீரது திருவருளானே எழுந்த நவநவ

உன்மேஷ சாலினீயாய இப்புத்தியானது தேவரீரது சந்நிதியில் அடியேனை விண்ணப்பிக்கு மாறு, காலையிலுதித்த சூரியப்பிரபையானது பிராஹ்மணுதிகளைச்சந்தியாவந்தனுதி காரியம் செய்யும்பொருட்டுச் சந்நிதான மாத்திரத்தானே யேவுவதேபோல ஏவுகின்றது.

(ச.) கையார் புனலால் = இரத்தினர்க்கிய தானத்தானும், உயர்மலரால் = மேலான மந்தார குசுமங்களாலும், பகவனே! தேவரீர் அநுக்கிரகத்தா லெழுந்த இந்தப்பிரதிபை தேவரீரது முன்பு என்னைச் சொல்லுகின்றதற்கேவுகின்றது, சூரியப்பிரபைகள் காரியத் தைச் செய்தற்கேவுதல்போ லென்பது பொருள். (43)

(ஸ்ரீ-வீர - அ-கை,) மகாசம்மோகத்தைக் கொடுப்பனவாகிய போகங்களின்பொருட்டு விரக்தனுயுள்ளேன், யாதுதனது ஞானமாத்திரத்தானே மகாசம்மோக ஹாரியாமோ அத்த கைய தத்துவத்தை யறியும் வேட்கையுற்றுளேன், ஆகலின் அடியேற்குக் கிருபையானே யுண்மையை யுணர்த்தவேண்டு மென்று வேண்டிக்கொண்டு வினுதல்:—என்னென்பது.

என்னிங்குள்ள தப்பாலென் னெல்லைசொல்லப் பட்டுளதென்
றுன்னுமெல்லை யில்லாதென் சொல்லுநானுர் நீயாரிம்
மன்னுமுலக மேதென்று மயக்கந்தீர வருளென்ன
வன்னதெல்லாந் தெரியவிரித் தவனுக்கிவனன் றறிவித்தான்.

(ப - ரை.) என்னிங்குள்ளது = இவணிருப்பது யாது, அப்பாலென் = அவணிருப் பதுயாது, எல்லைசொல்லப் பட்டுளது என் = எல்லைகூறப் பெற்றுள்ளது யாது, துன்னு மெல்லையில்லாதென் = பொருந்திய எல்லை இல்லாததுயாது, சொல்லுநானுர் = இவ்வாறு வினவும் யான்யார், விடையருளும், நீயார் = தேவரீர்யாவர், இம்மன்னும் உலகமேது = இந்நிலைபோன்ற ஜகத்தேது, என்று = எனத்தோன்றும் சங்கைகட்கெல்லாம், மயக்கந் தீர = எனதுள்ளத் துறையும் மோகமேக, அருள் என்ன = உத்தரங்களைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்று, மகாபலிபிரார்த்திப்ப, அன்னதெல்லாந்தெரிய = அவ்வெல்லா வினுக்கட்கும் விடைக டெளிவாகத் தெரிந்து கொள்ளுமாறு, விரித்து = பகுத்து, அவ னுக்கன்று இவன் அறிவித்தான் = அம்மாபலிக்கு வினவிய அப்போது ஸ்ரீ சுக்கிராசாரியர் உபதேசித்தருளினுர்.

(ஸ்ரீ - வீர.) எத்துணை மாத்திரை உத்கர்ஷ அவதியையுடையது இது, போகஜாலமா கிய விடயசுகமானது என்பிரகிருதியை யுடையது, இது போகதத்துவப் பிரசினமாம், யான்யார், தேவரீர்யாவர், இது போக்துருதத்வப் பிரசினமாம், இவ்வுலகங்களென், இது போக்கியதத்துவப் பிரசினமாம், போகானுபவ விடயங்களாகலின் லோகங்கள் போக்கியங் கள் என்னப்பெற்றன, இவ்வினுக்கட்குத் திண்ணமான விடைகளை விரைவில் அடியேனுக் கனுக்கிரகம் செய்யவேண்டும். சின்னவாசிட்டத்தின் கண் கிம் இக அஸ்தியெனப் பாட பேதம் உளது விடையை நோக்க இப்பாடமே சிலாக்கிய மென்றறிக. (44)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போக்தாமுதலிய திரிபுடிபேதத்திற்கு, ஒரு சித்தின்கட் கற்பிதத் தன்மை யுண்மையின் சுருக்கமாக அதனுபதேசத்தானே வினுமூன்றற்கும் விடைதருதல் எளிதாகுமென்னுங் கருத்தை விளக்கிக்கொண்டு அருளல்:—வருமென்பது.

வருங்கற் பகவின் விரைந்தேக வந்தேன்பலசொல் வியும்பயனென்
சுருங்கச் சொல்லும் பயன்கேளாய் தோன்றவிங்குள் ளதுவுஞ்சித்
தொருங்கப் புறத்துஞ் சித்தெல்லை யுள்ளதுஞ்சித் தெல்லையற
நெருங்குற் றதுஞ்சித் தியான்சித்து நீசித்துலக திறைசித்தே.

(ப - ரை.) வரும் கற்பகவிண் = சகலவளப்பங்களும் மேன்மேலு முண்டாம் கற்பகம் நிறைந்திலங்கும் ஆகாசமார்க்கமாக, விரைந்தேகவந்தேன் = சீக்கிரத்திற் செல்லவந்தேன், பல சொல்லியும் பயனென் = நம்பினும் நம்பாவிடினும் அநேகமுபதேசித்தும் பிரயோஜனம் என்னே ! சுருங்கச்சொல்லும் பயன்கேளாய் = சங்கிரகமாக உபதேசிக்கும் பயனுந் தன்மையைக் கேட்குதி ! தோன்ற இங்குள்ளதுவும் = புலப்பட இவணிருப்பதுவும், சித்து = அறிவேயாம், ஒருங்கப்புறத்தும் சித்து = இவ்வியாவற்றிற்கும் அப்பாலும் அறிவேயாம், எல்லையுள்ளதும் சித்து = சீமாவுடையதுஞ் சித்ரூபமேயாம், எல்லையற நெருங்குற்றதுஞ் சித்து = எல்லையில்லாமல் விரிந்துள்ளதும் அறிவேயாம், யான் சித்து = ஆசாரியராகிய யாமும் அறிவேயாம், நீ சித்து = சீடனுகிய நீயும் அறிவேயாம், உலகம்நிறை சித்தே = பூரணமாகிய சித்ருருவமே ஜகத்ருருவமுமாம்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ சுக்கிராசாரியர்:—வெகுவாக வீண்டுவிளம்புவதானே என்னேபிரயோஜனம், விண்ணெறி செல்வான் விழைந்துவந்தேம், ஹே சர்வதானவ ராஜேந்திர ! சுருக்கமாக, பிரசினத்திரய சாரம்கூறக்கேட்டி ! இவ்வுலகின் கண்ணே சித்தேயுளது, தோன்ற என்றது அதன் சித்திக்கு அன்னிய நிரபேக்ஷத்தன்மைப் பிரசித்தியை விளக்குதற்பொருட்டாம். இச்சித்திருசியம் = சிதநீன சித்திகம்போகஜாதம். சித்தையே உத்கர்ஷ அவதியாகவுடையது, சின்மயமேயாம். " எதனினின்றும் வாக்குகளெல்லாம் எட்டாமற்றிரும்புகின்றனவோ " என்னுஞ் சுருதியானே பூரணசித்திற்கே சர்வாநந்த உத்கர்ஷ அவதித்தன்மை கூறப்பெற்றிருத்தலின், " சித்திலேயே பேதவைச்சித்திரிய அத்தியாசத்தாற் சின்மயமேயாம் " " இவ்வின்பினது மாத்திரைகொண்டே யெல்லாவுயிரும் வாழுகின்றனவே " என்னும் சுருதியினுனும். இவ்வண்ணம் " தத்துவமசி அகபிரஹ்மாஸ்மி இது பிரஹ்மா இது இந்திரன் " " இதனினுங் காண்போன் அயலெதுமிலேயே. இதனினுங் கேட்போனயலெது மிலேயே " என்பதாதி சுருதி சதங்களானேதுவம் அகமாதி போக்ருருதத்வமும் சின்மாத்திரமேயாமெனக் கூறல்:—யான் என்பதாதி. சித்துநீ சித்துயாம். இவ்வண்ணம் போக்கிய ஜாதமும் பரமார்த்தமாகச் சித்தேயாம் அதன் இருப்புண்மைகட்குச் சித்தநீனத் தன்மையுண்மையினுனும், " பிரமமேயிந்த விசுவமாமிது வரிட்டமதாம் " என்பதாதி சுருதியினுனும் என்னுங்கருத்தா லுரைத்தல்; உலகம் = இவ்வுலகங்கள் எல்லாம் சித்தேயாமென்பது சங்கிரகம். சிரத்தையையுடைய விவேகியேயாயின் நிச்சயமாக இவ்வுபதேச மொன்றுனுமே கூறிய இத்துணையானுமே யாவற்றையுமே நீபெறலாம், அல்லாக்கால் உபதேசங்கோட்டானு கோடியேனும் நின்பாற் கிளத்தினும் சாம்பரில் ஓமம் செய்ததையே யொக்கும். சித்திற்குச் சேத்திய = திருசிய, ஆகாரமுறுதலே பந்தமாம், அதுவிடுபடுதலே வீடெனப்படும், சேத்தியாகாரம் நன்கு விடுபட்டதாய சித்துப் பூர்ணுத்மாவாம், என்னுமிதுவே சர்வசித்தாந்த சங்கிரகமாம்.

(சு.) சின்மாத்திரத்திற்கு வேறுக ஒன்று மின்றென்பது பொருள். மூலம்:—சின்மாத்திரம் = அறிவுருவம், சின்மயம் = அறிவைப் பகுதியாகவுடையது. (45)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சுருக்கமா யுபதேசித்தருளியபின் இங்நிலையிலிருவென ஆசீர்வதித்து ஸ்ரீ சுக்கிராசாரியர் ஏகுதல்:—இதுவே யென்பது.

இதுவே சுருக்க மிவ்வறுதி யிதயங்கொண்டிவ் வகைக்கேற்ற
மதியா னின்னை நினைநீயே மாறுதுணர்ந்து நோக்குதியே
லதனு லநந்த மாம்பதத்தை யடைதியோரே ழுருந்தவரும்
புதிதோர் தெய்வ காரியத்திற் புகுந்தாரியாமும் போகுதுமால்

(ப - ரை.) இதுவே சுருக்கம் = இப்போ துபதேசித்ததே சங்கிரகமாம், இவ்வுறுதி இதயங்கொண்டு = இந்நிச்சயத்தை இருதயத்திற் கவர்ந்து, இவ்வகைக்கேற்ற மதியால் = இத்தன்மைக்கேற்ற புத்தியால், நின்னை = உன்னை, நீயேநினை = நீயேசுயம் எண்ணுதி, மாறுதுணர்ந்து நோக்குதியேல் = இடைவிடாது அறிந்து பார்ப்பாயேல், அதனால்=அத்தன்மையால், அநந்தமாம் பதத்தையடைதி = அந்தமில்லாத பரமபதத்தினை யடைந்து சுகிப்பாய், ஓரேழ் அருந்தவரும் =ஒப்பற்றசப்த இருடிகளும், புதிதோர் செய்வகாரியத்திற் புகுந்தார் = நவமானதோர் சுரகாரியத்திற் பிரவேசித்தார், யாமும் போகுதும் = யாமுமங்குச்செல்வேம். ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணமாய நிச்சயத்தை இருதயத்திற் கொண்டு விளையாட்டாக இனிபார்ப்பாயாயின், சுயமாகவே அகண்டாகார விருத்தியாரூடப் பிரத்தியக்காத்மாவானே, அநந்தம் = தேசகால வஸ்து பரிச்சேதாரகிதமாய பதமார்தன்னை யடைந்து சுகிப்பாய். இங்கிருந்தேயாம்தேவலோகஞ் செல்லவேண்டும், ஆண்டு ஏழுமகரிஷிகளும் ஒருதேவ காரியத்திற் புகுந்துளார்கள். யாமுமவண் அவசியம் முன்னிற்கவேண்டும். வஸ்தவ்யம் = பாவத்தில் தவ்யவிகுதியாம்.

(சு.) முற்கூறிய இந்நிச்சயத்தினால் யோக்கியனாய் அனைத்து மடைவாய், அன்றெனின் நின்னிடத்திற் பலசொல்வது சாம்பலில் ஆகுதிகொடுத்த தொக்கும், திருசியபாவனையோடு கூடிய சித்தேபந்தமாம், அது விடுபட்ட சித்து முத்தியெனப்படும், திருசிய பாவனையோடு சம்பந்தமற்ற சித்தே ஆன்மாவா மென்னும் இதுவே சர்வசித்தாந்த சங்கிரகம். (46)

(ஸ்ரீ - வீர - அ - கை.) சுராசுரசபைகளில் மிகமிகவும் மேன்மையோடு கூடிவிளங்கும் அந்தப்பிருகு சுதராகிய ஸ்ரீ சுக்கிராசாரியர் சென்றபின்னர் மதிமான்களுட் சிரேட்டனாய மாபலியானவன் மனத்தினாலே என்ன சிந்தித்தா னென்பதைக் கூறல்:—என்னுவென்பது.

என்னு வெள்ளி யேகியபின் னெல்லாமறிவா முலகினைப்பார்த்
துன்னு வொக்கு மொக்குமெனக் குசனுவுரைத்த துண்மையதே
முன்னு மவனி சித்துலகு மூன்றுஞ்சித்து நான்சித்து
நன்னு லான திசைசித்து நாட்டுகின்ற தெலாஞ்சித்தே.

(ப - ரை.) என்னுவெள்ளி ஏகியபின் = என்றிவ்வண்ணம் உபதேசித்தருளி ஸ்ரீசுக்கிர பகவான் சென்றபின்பு, உலகினை யெல்லாம் அறிவாப்பார்த்து = சகல லோகங்களையும் சித்தாகவே பார்த்து, உன்னு = ஆலோசித்து, ஒக்கும் ஒக்கும்=பொருந்தும் பொருந்தும், எனக்குசனு உரைத்தது = எனக்கு ஸ்ரீ சுக்கிராசாரியர் உபதேசித்தருளியது, உண்மையதே = சத்தியமேயாம், முன்னும் அவனிசித்து = எதிரிற் புலப்படும் திருசியமியாவும் அறிவேயாம், உலகம் மூன்றுஞ்சித்து = ஜகத்திரயமும் சித்தே, நான்சித்து=காணுமியான் அறிவுருவமே, நன்னுலான திசைசித்து = எட்டுத்திசைகளும் சித்தேயாம், நாட்டுகின்ற தெலாம்சித்தே = எப்பொருள்களுமே சித்தேயாம்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ பகவானாலே பொருத்தமாகவே புகன்றருளப் பெற்றது, இச்சகத்திரயமும் சித்தேயாம், யான்சித்து, இவ்வுலகங்களியாவும் சித்து, திசைகளும் சித்து, இத்தொழிலுஞ்சித்து, உண்மையாக நோக்குங்கால் உள்ளும் புறம்பும் உள்ளவையாவும் சித்தேயாம். சித்திற்குவேறாக எப்பொருளுமே எவ்விடத்துமே கிடையவே கிடையாதாம்.

(சு.) ஸ்ரீ வசிஷ்டர்:—உலகினை யெல்லாம், அறிவாம் = சிதான்மகமா மென்று, பார்த்துன்னு = கவனித்துச் சிந்தித்தவனாகி, கவனித்தல் = கருத்துவைத்தல். (47)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணமாகவே யான்யார் என்னும் வினவின் பின்னரும் சுய மாகவே என்றுலுணரப் பெற்றதெனல்:—தெரிக்கு மென்பது.

தெரிக்கும் பொருளுந் தரிசனமுந் தீர்ந்துவெறுநின் மலவடிவாய்ப்
புரிக்கு முதயம் விடாதென்றும் பொலியும்பரமப் பொருளானேன்
வரிக்குங் காட்சி யிலாவறிவே வடிவாயொருகா லேயெங்கும்
விரிக்கு நிறைவா யுபசாந்த வெளியாயறிவா மிகுபொருணன்.

(ப - ரை.) தெரிக்கும் பொருளும் =திருசியமும். தரிசனமும்=காட்சியும், தீர்ந்து= விடுபட்டு, வெறு நின்மலவடிவாய் = கேவலாமல ரூபவானாகி, புரிக்குமுதயம் விடாது என்றும் = யாவற்றையும் எப்போது மிலக்குபவனாய், பொலியும் பரமப்பொருளானேன்= ஒன்றாலன்றிச் சுயமேயிலங்கும் உயர்ந்தவத்து வாயுள்ளேன்; வரிக்குங்காட்சியிலா=வாதனை யானே வாதனைப்படுத்தும் சேத்தியமில்லா, அறிவேவடிவாய் = சித்ரூபமாய், ஒருகாலே எங்கும் விரிக்கும் நிறைவாய் = ஒருபாதமே எவ்விடத்திலும் வியாபிக்குப் பூரணமாய், உபசாந்த வெளியாய் = பரமசாந்தமான வெட்டவெளியாய், அறிவாமிகுபொருள் நான் = உள்ள சச்சிதானந்த மகத்தேயான்.

(ஸ்ரீ - வீர.) திருசியதரிசன நிர்முக்தனாய், கேவலம் நிர்மலவுருவ முடையவனாய், நித்திய உதிதனாய் நிராபாசனாய்த் திருஷ்டாவாய்ப் பரமேசுவரனாயுள்ளேன். சேத்திய நிர்முக்த சித்ரூபனாய், நானாவித பதார்த்தங்களோடு கூடிய விசுவத்தை யெங்கும் வியாபித்தவனாய், சர்வசம் வேத்தியமும் சம்சாந்தமானவனாய், சச்சின்மாத்திரனாய் மகத்தாயுளேன்யான்.

(ச.) தெரிக்கும் பொருளும் = திருசியங்கள் என்னும் பூதபௌதிகங்களும், தரிசனமும் = ஞானசாதனங்களும், தீர்ந்து = ஆகிய இவற்றிற்குவேறாய், வெறு நின்மலவடிவாய் = அதனாற் கேவலாமல ரூபமாய், புரிக்கும் = பிரகாசாந்தரா பேக்ஷையின்றி விளங்கும், உதயம் விடாதென்றும் பொலியும் = நித்தியப்பிரகாசமான, பரமப்பொருள்=பரமேசுவரன் என்னும, கண்டேன் = சர்வசாக்ஷியானே; உபசாந்த வெளியாய் = சகல விஷய வாசனையு மற்றதாய், ஒருகாலேயெங்கும், விரிக்கும் நிறைவாய் = விசுவபூரகமாய் மிகு பொருள் = பூரண்மான சின்மாத்திரம், நான் = நானானேன், என்று பரமஞானியான மாபலி சிந்தித்தானென வருவித்துக் காண்க. மூலம்: சேத்ய நிர்முக்தசித்ரூபம் = விசுத்த சித்துருவ மியான், விஷ்வக் = உள்ளும்புறம்பும் எவ்விடத்தும். (48)

(ஸ்ரீ-வீர – அ-கை.) தன்னையன்றிச் சகமொன் றிலையெனப், பன்னுமாய்வினைப்பற் றிய மாபலி, பொன்னதே முதற்போக்கி மெய்ச்சித்திர, மென்னவே நெடும்போ திருந்தானெனல்:—ஓங்குமென்பது.

ஓங்குஞ் சின்மாத் திரப்பொருளா மோங்காரத்தை யுண்ணினைந்து
தூங்குந் தியான பரனாகித் தொடர்ச்சங்கற்ப மெல்லாம்போய்
வாங்குந் தொழிலே டணையைய மனனஞான ஞேயமிவை
தாங்கு ஞாதா வனைத்துமறத் தனிச்சித்திரம்போ னெடிதிருந்தான்.

(ப - ரை.) ஓங்கும் சின்மாத்திரப் பொருளா மோங்காரத்தை = வியாபகமாகிய அறிவுமாத்திரத்தைப் பொருளாகவுடைய பிரணவார்த்த மாத்திரையை, உண்ணினைந்து = மனத்திலேயே தியானித்து, தூங்குந் தியானபரனாகி = ஞானயோக நித்திரையை நன்

கடைந்தவனுகி, தொடர் சங்கற்பம் எல்லாம்போய் = பற்றிய சகல சங்கற்பங்களும் பரம சாந்தமடையப் பெற்றவனுகி, வாங்குந்தொழில் = தொழில்களெவையும் தொடாதவனுகி, எடணை ஐயமனனஞான ஞேயமிவை தாங்குஞாதா அனைத்தும் அற=எடணைமூன்று சம்சயமிரண்டு சிந்தனை தியானம் தியேயம் தியானகருத்தாவாய்த் தியேயத்தை விடயஞ் செய்பவனுய தியாதாவென்பனயாவும் அற்று, தனிச்சித்திரம்போல் நெடிதிருந்தான் = கேவலம் பதுமைபோல நெடும்போ திருந்தனன்.

(ஸ்ரீ - வீர.) ஒன்றேயாய சித்தேயான் சித்து வடிவனுகிய எனக்குச் சங்கற்பவிகற்பங்களானே என்னேவிருத்தி என்னே யானியாவதோ ! அஞ்ஞானத்தினின்றும் நன்குகலங்குறுவேன் தத்துவபோதத்தானே அதிபாவனமாய ஆன்மாவின் கண்ணே பரமசாந்தத்தையடைவேன் என்றிந்தப் பிரகாரம் பரமபண்டித ஞானியாய மாபலிசிந்தித்துக் கொண்டே யோங்காரத்தால் தூலசூக்குமக் கலக்கங்களானும் அவற்றின் பீஜமாய அஞ்ஞானத்தானும் வளக்கப்பெற்ற சைதன்யத்தை யுணர்த்திக்கொண்டு அகாராதி மாத்திராத் திரயத்தையும் விடுத்து, மேலாய அர்த்தமாத் திரார்த்தத் துரியத்தைப் பாவித்துத் தன்வடிவமாகவே யநுபவித்துக்கொண்டு ஆண்டுச் சமாகிதனுகி யிருந்தனன், மௌனமாகவே யிருந்தனன், சர்வ சங்கற்பங்களுஞ் சமித்தாறியவனுகவே யிருந்தனன், வினக்குழுவெவையும் விட்டேயிருந்தனன். சம்சயமும் கவலேயயு மற்றவனுயினன், சேத்தியசிந்தக சிந்தனங்களே வெகுதூரத்தில் விட்டவனுயினன், திரிபுடிமாத்திரத்தியாக உபலக்ஷணமாமிது, அதிலேதுவாய தியாதாதியேயம் தியானமு மற்றவனுயினன், நிர்மலனுகிச் சாந்தவாசனையனு மாயினன், பதுமைய தொத்தசையாது படிந்தான்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்:—ஓங்காரத்தை = வாகியப் பிரணவத்தினுல் நிச்சயத்தையடைந்து, ஓங்குஞ் சின்மாத்திரப் பொருளாம் =தொனிரூபமான அந்தப் பிரணவாநு சந்தானத்தைச் செய்தவனுய், தியானபரனுகி, சிதாகாசரூப பரப்பிரம பாவனையைப் பெற்றிருந்தா னென்பது கருத்து. எடணையைய மனனமனைத்துமற என்றதனுல், பகிர்முக விக்ஷேபராகித்தியஞ் சொல்லப்பட்டது. ஞானம் = தியானம், ஞேயம் = தியேயம், ஞாதா = தியாத்துரு, அனைத்துமற என்றதனுல் நிர்விகற்பசமாதி யுடையன் ஆனுன் என்பதுகருத்து. அந்தர் முகவிக்ஷேபமுமற்றான். (49)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகாபலியினது நிருவிகற்ப சமாதியையே வருணித்தல்:—காற்றென்பது.

காற்றிலாத விளக்கொளிபோற் கலங்காதிருந்த மாவலிதான்
சீற்றமயறீர்ந் தறநிறைந்து சிந்தையென்னு மாசின்றித்
தோற்றுஞ்சத்தா மாத்திரத்தாற் சுடர்விட்டெறித்த படிசொல்லி
லாற்றன்முகிறீர் சரற்காலத் தறவேதெளிந்த விண்போலும்-

(ப - ரை.) கற்றிலாத விளக்கொளிபோல் = நிவாதத்தலத்தில் வைத்திருக்கும் தீபச் சுடர்போலும், கலங்காதிருந்த மாவலிதான் = சஞ்சலமற்றிருந்த மகாபலியானவன், சீற்றமயல் தீர்ந்து = துக்கப்படுத்தும் மோகமகன்று, அறநிறைந்து = அத்தியந்தம் பூரணமாகி, சிந்தையென்னும் மாசின்றி = மனனமென்னும் தோஷமற்று, தோற்றுஞ் சத்தா மாத்திரத்தால் = நிருமலமாகப்புலமாம் சன்மாத்திரமாகவே, சுடர்விட்டெறித்தபடி சொல்லில் = விளங்கிக் கொண்டிருந்த சமாதியின் நிலைமையை உவமித்துரையாடின், ஆற்றல் முகில்தீர் = மழைபெய்யுஞ் சமர்த்தற்ற முகில்கள் யாவும்விலகிய, சரற்காலத்து=சரத்து இருது வந்துற்றபோது, அறவே தெளிந்த விண்போலும் = அத்தியந்தம் சொச்சத்தன்மையை யடைந்துள்ள ஆகாயமேபோல ஆனுன்.

(ஸ்ரீ - வீர.) மகாபலியானவன் வாதமில்லாத விடத்தில் வைத்துள்ள தீபம்போல மகா பதத்தை யடைந்தவனாய் நிருவிகற்பமா யிருந்தான்; உபசாந்த மனத்தினனாய் அந்த இரத்தின வாதாயன ஸ்தலத்திலேயே யிருந்தனன்; கல்லில் உளியாற் செதுக்கியமைத்த விக்கிரகமேபோல = புருஷாகிருதியேபோல; வெகுகாலம் நிலைபெற் றிருந்தனன், மகாபலிச்சக்கிரவர்த்தியானவன், சகல ஏஷணைகளும் சாம்பினோனாய், அதனானே பரிபூர்ணநிலையை யடைந்தவனாய், அதனானே விடயமனன தோடதசைகளி னின்றும் விடுபட்ட இந்நிர்மல பிரஹ்மபாவப் பிராப்திலக்ஷண சன்மாத்திரமேயாகி மேகங்கள் ஒழிந்த சரந்நபமென்ன ஒளிர்ந்தனன். (50)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சமாதியில் தங்கள் அரசனிருந்ததை யுணராத அநுசரர் துயருறுதலும் மாபலியுணர்தலும் தெரித்தல்:—ஆங்கென்பது.

ஆங்கப்படியே யவனிருப்ப வவனதேவற் புரியசுர
ரோங்கற்கோயின் மேனிலத்தை யுற்றாருயர்மா வலிதானு
நீங்கற்கரிய நிருவிகற்ப நிலைகூர்சமாதி நெடும்போது
தேங்குற்றதற்பின் விழித்துணர்ந்து மமதைதீர்ந்த சிந்தையனாய்.

(ப - ரை.) ஆங்கு அப்படியே அவனிருப்ப = அவ்விடத்தில் அவ்வாறே அம்மாபலியிருந்தபோது, அவனது = அவ்வரசனது, ஏவல்புரி யசுரர் = பணிவிடைசெய்யும் அநுசர அசுரர், ஓங்கற்கோயின் மேனிலத்தையுற்றார் = ஆகாயமளாவிய அரண்மனையின் மேன்மாடியை யடைந்தனர், உயர் மாவலிதானும் = மேன்மை மிக்க விரோசனன் மைந்தனும், நீங்கற்கரிய நிருவிகற்ப நிலைகூர்சமாதி = அவன் மந்திரிமாரது பிரயத்தனத்தானும் கலைக்க முடியாத நிருவிகற்ப நிலைமையோடு கூடிய சமாதியில், நெடும்போது = நெடுங்காலம், தேங்குற்றதற்பின் = விசிராந்தியடைந்த பின்னர், விழித்துணர்ந்து = சமாதி கலைந்து கண் விழித்துணர்ந்து, மமதை தீர்ந்த சிந்தையனாய் = சிறிது மமதையில்லாத சித்தத்தை யுடையவனா யுலாவினான்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் ஆண்டு மகாபலியின் பணியாளராகிய தானவர் அப்போது அம்மன்னவனது ஆசிரயபூதமாய படிகத்தமைத்த மேன்மாடியின்மேல் கணப்போதில் ஏறினார்கள்; ஏறிய டிம்ப குமுத ஹயக்ரீவ லடுக பல்லூகர் முதலியயாவரும், சித்திரார்ப்பித அசலம் போலத்தியான மௌனசமாதியி லிருந்த மன்னவனை நமஸ்கரித்து, நோக்கி விஷாவிஸ்மய ஆனந்தபய மந்தரத்தன்மையை யடைந்தனர். அந்த மந்திரிகள் அரசனுக் கடைந்ததென்னேயென நன்காராய்ந்தும் அறியாதவராய், யாவற்றையும் உணர்ந்தவருள் மேன்மைமிக்கவராய ஸ்ரீ பார்க்கவராகிய தங்கள் ஆசிரியரைத் தியானம்புரிந்தனர், புரிந்த அளவில் அங்கு எழுந்தருளிய பகவான் ஸ்ரீ பார்க்கவர் தியானமௌனத் திருந்ததான வேசனைக்கண்டு மகிழ்ந்து புன்னகை கொண்டருளி மந்திரிமாரை நோக்கி, நீங்கள் இராஜ்யகாரியங்களை கவனித்துக் கொள்ளுங்கள் ஆயிரம் வருடங்கழிந்த பின்றான் மாபலிவிழிப்பன் என்றருளி மறைந்தனர். பின் திவ்ய வருடமாயிரம் சென்றபின் னுணர்ந்த மாபலி ஒன்றும் வேண்டியதின்றாயினும் உலகுபகாரப் பொருட்டுப் பிராரப்தபரியந்தம் விவகரிப்போமென நிச்சயித்து எழுந்து குளிர்ந்துலவினான்.

(ச.) உதாரமதியையுடைய மகாபலியானவன், நெடும்போது நிர்விகற்ப சமாதியிலிருந்து, அதன்பின் அவர்களது முன்பு விழித்தனன். (51)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வாறிருந்து இராஜ்ய பரிபாலனஞ் செய்து வாழ்ந்தான் மாபலியெனல்:—பற்றிலாத வென்பது.

பற்றிலாத மனத்தாலே பயின்றிராச காரியங்கண்
முற்றுமியற்றி யாபத்து முதிர்சம்பத்துஞ் சமமாகக்
குற்றமில்லாக் குறிப்பாலே குறிப்புற்றின்ப துன்பத்திற்
சற்றுமிதவா தமிழாது சமபாவனையிற் றானுன்.

(ப - ரை.) பற்றிலாத மனத்தாலே = யான் எனதென்னும் சங்கமற்றமனத்தினாலே பயின்று = விவகரித்து, இராச காரியங்கண் முற்றுமியற்றி = சகல இராஜகாரியங்களையும் ஒழுங்காகச்செய்து, ஆபத்தும் முதிர்சம்பத்தும்=பேராபத்தும் பெரும்சம்பத்தும், சமமாகக் குற்றமில்லாக் குறிப்பாலே குறிப்புற்று = துல்லியமாகப் பார்க்கும் மாசற்ற திருஷ்டியினாலேகண்டு, இன்பதுன்பத்தில் = சுகதுக்கங்களில், சற்றும் மிதவாது அமிழாது = சிறிதும் மகிழாதுவாடாது, சமபாவனையிற் றானுன் = அவனது பிரஞ்ஞையானது அஸ்தமும் உதயமுமற்ற அறிவுருவாகவே யிருந்தது.

(ஸ்ரீ - வீர.) பின்விரோசனன் றவப்பயனாகிய மகாபலியானவன், ஆண்டு, முன்மொழிந்த தியேய வாசனாத்தியாகமய வடிவனாய் அதன்விலாச ஆதிக்யத்தான் மேன்மைமிக்க மனத்தினாலே சகல இராஜகாரியங்களையும் செய்தான். அக்கால் அவன் அசுவேதமகாமகமியற்ற, அங்கு இந்திரசகாயமாய்ச் சென்றருளிய ஸ்ரீபகவானாலே மூன்றடி மண்வேட்டு வஞ்சிக்கப் பெற்றுப் பாதாளதலத்திற் கட்டுப்பாட்டுடன் இன்றும் அம்மாபலியானவன் மறு இந்திரத்தன்மை யேதுவினானே பிராரப்தத்தானே யுபலக்ஷிதனாய் நன்கிருக்கின்றான்; ஜீவன்முக்த வபுவையுடையவனாய்ச் சுவஸ்தனாய், நித்தியம் நிர்விகற்ப சமாதியிற்கழிந்த மதியையுடையவனாய்ச் சுகித்து வாழ்கின்றான்; இவ்வண்ணம் பாதாளகுகரத்தி லிருக்கப் பெற்ற அவன் ஜீவன்முக்த கதியையுடையவனாகி விழித்தபோது விவகரித்தபோதினும், சமதிருஷ்டியினாலேயே ஆபத்தையும் சம்பத்தையும் காண்கின்றனன், சுகதுக்கங்களில் அவனது பிரஞ்ஞையானது பூரிப்பதுமில்லை காரிப்பதுமில்லை.

(ச.) இயற்றி = நானெனதென்பன முதலிய வாதனாத்தியாக மென்னுந் தேயத்தியாகமயரூபமான மனத்தால் இத்தன்மையனாய் இராஜகாரியங்களைச் செய்தானென்றதாயிற்று. குறிப்பால் = திருஷ்டியால், ஆபத்தும் = ஆபத்தையும், சம்பத்து = சம்பத்தையும், குறிப்புற்று, அவனது பிரஞ்ஞையானது. (52)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகாபலியின் பெருமையையே எடுத்துரைத்து மனத்தை யடக்கவேண்டு மெனல்:—ஓவாதென்பது.

ஓவாதவன்ற னுள்ளெழுந்த வூகாபோகம் பலகோடி
பாவாபாவம் பலகோடி பரந்ததெல்லா மிளைப்பாறி
மேவாநின்று னெவ்விடத்தென் விண்ணின்மண்ணில் வேட்கைகளிற்
றாவாநின்ற மனந்தன்னைத் தன்னதிதயத் துள்வைப்பாய்.

(ப - ரை.) ஓவாது = இடைவிடாமல், அவன்றன் உள்ளெழுந்த = அவனுடைய உள்ளத்தெழுந்த, ஊகாபோகம் பலகோடி = கொள்ளுவதுந் தள்ளுவதுமாகக் கிளைத்தன கோடானுகோடியாம், பாவாபாவம் பலகோடி = பாவ அபாவங்கள் கோடானுகோடியாம், பரந்ததெல்லாம் இளைப்பாறி = இங்ஙன விஸ்தரித்த யாவற்றினின்றும் ஆறுதலையடைந்து, மேவாநின்றான் = பிரஹ்மானந்த பரிதனாகி யிருக்கின்றான், எவ்விடத்தென் = எங்குதான் என்னபற்றை யடைந்தான், ஒன்று மடைந்திலன் ஓரிடத்தும், விண்ணில் மண்ணில் வேட்கைகளில்= பரத்திலிகத்திற் பற்றிய விருத்திகளின் வாயிலாக, தாவாநின்ற மனந்தன்னை=

வீழ்ந்து சத்தளியாநின்ற மனத்தினை, தன்னது இதயத்துள் வைப்பாய் = உன்னுடைய இருதயக் குகையின்கண்ணே யிருத்தி யின்புறுவாய்.

(ஸ்ரீ - வீர.) பத்துக்கோடி வருடபரியந்தம் ஜகத்திரயத்தையும் ஆண்டு அந்தத்தில் விரத்தியையடைந்து மகாபலியின் மனமானது உபசாந்தியை யடைந்தது. சுகதுக்கங்களின் ஊகாபோகங்கள் = ஆகமாபாயங்கள் ஆயிரக்கணக்காம் பாவாபாவங்கள் =சம்பத்து விபத்துகள் நூற்றுக்கணக்காம், சகத்திர சதசப்தங்கள் எண்ணிக்கையற்றன என்பதன் பரங்களாம். மாபலியாற் பரிந்து பார்க்கப்பட்டன இத்துணை யெனினும், எவ்விடத்தில் சமாசுவாசத்தை யடைந்தானவன் ? போகாசையை அடியோடும்விட்டுச் சம்பூர்ணமனத்தையுடையவனாய், நித்தியம் ஆத்மாராமனாய், பாதாலகோடர மத்தியத்தில் = சப்தபாதாளங்களின் மத்தியபூதமாய இரசாதலப் பெயரியபாதாள கோடரத்தில் எல்லாவிபத்துக்களும் இன்றியவனாய், இருக்கின்றான். இங்ஙனம் மாபலிசரித்திரத்தை யுபசங்கரித்து ஸ்ரீ இராமருக் குபதேசித்தல்:—விண்ணில் என்பதாதி. மகாபலியினுடைய இவ்விஞ்ஞான சம்பிராப்தியானது இவ்வாறு கூறப்பெற்றது, இத்திருஷ்டியைப் பின்பற்றி நீயும் இராகவ! மிக மேன்மையை யடைவாயாக. இகலோக போகங்களிலும் பரலோக போகங்களிலும் ஓடித்திரியாநின்றதும், பாமரசேஷ்டைகளில் முயன்று புரள்வதும், ஆகிய இச்சித்தத்தை யிருதய கோடரத்திற் கட்டுப்படுத்தி நன்குதாபிப்பாய்.

(ச.) இஷ்ட சாதனபாவனை ஊகமாம், அநிஷ்ட நிராசபாவனை அபோகமாம், அவைகளின் பலகோடியும், பதார்த்தங்களினுடைய பாவாபாவம் பலகோடியும், ஆகப் பரந்ததெல்லாம், மாவலியாற் பார்க்கப்பட்டனவாயினும் இம்மாவலியானவன் இளைப்பாறிமேவாநின்றதெவ்விடத்தே=எவ்விடத்து விசுவாசத்தை யடைந்தான், ஓரிடத்தும் அடைந்திலன் என்பதுபொருள். ஆசையற்றவனேயாய் இராச்சிய காரியஞ்செய்தா னென்பதாம். இனி இராமற்கு ஸ்ரீ வசிட்டர் இதமுபதேசிக்கிறார்:—ஸ்ரீ வசிஷ்டர், இவ்வுலகத்திலும் பரலோகத்திலும், வேட்கைகளில், அர்த்தசம்பாதன முதலிய விவகாரங்களில், தாவாநின்ற = விடயசுக வாஞ்சையால், வேகமாய்ச் செல்லாநின்ற, மனந்தன்னை = விவேகவைராக்கியாதிகளால் நிரோதஞ்செய்து, தன்னிதயத்துள் = இருதய புண்டரீகத்தில் வைப்பாய் ஆன்மானுசந்தான முடையதாகச் செய்யென்பது பொருள். (53)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மனத்தையடக்கும் உபாயம் கூறல்:—எங்கே யென்பது.

எங்கேயெங்கே மனமோடி யிளையோரென்ன வீழ்ந்தழுந்து
மங்கேயங்கே நின்றெழுப்பி யகண்டவறிவி லடைவிப்பாய்
சங்கேதமதா யிவ்வாறு சாதித்துளமா மதகரியை
வெங்கேதமறத் தளைத்தெல்லா விசாரத்தாலும் வீடணைவாம்.

(ப - ரை.) எங்கே எங்கே மனமோடி = எந்த எந்தப் பிரதேசங்களில் மனமானது ஓடி, இளையோரென்ன வீழ்ந்தழுந்தும்=பாலர்போல விழுந்துமூழ்குமோ அங்கேயங்கே = நின்று அங்கங்கிருந்தும், எழுப்பி =மேற்கிளப்பி, அகண்ட அறிவில் அடைவிப்பாய் = கண்டிதமில்லாத சித்துரூபத்தில் சேர்ப்பிப்பாய், சங்கேதமதா யிவ்வாறு சாதித்து = நியமமாக இவ்வாறுபயிலும் பயில்வினாலே, உளமாமதகரியை = மனமாகிய மதோன்மத்தமாதங்கத்தை, வெங்கேதமறத் தளைத்தெல்லா விசாரத்தாலும் வீடணைவாம் = சகல கொடூர துயரங்களும் நீங்கும்படியாக நிபந்தனஞ்செய்து சர்வபாவத்தாலும் பரமமான சிரேயசு அடையப்பெறும்.

(ஸ்ரீ - வீர.) எந்த எந்தப்பிரதேசங்களில் மனம்பாலர்போல வீழ்ந்து ஆழ்ந்துபோமோ, அவணின்றும் அவணின்றும் நன்குகவர்ந்து அந்த மனத்தைத் தத்துவமாகிய அவ்வவ்வதிஷ்டானமாகிய சின்மாத்திரத்தில் அடைவிக்க வேண்டும். அவ்வாறே பகவானும் அருளியுள்ளார்:—வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை, நீங்கிடாவகை நின்னுளிருத்தியே, நீங்கி யாவையுஞ் சிந்தைசெயாமையாம், பாங்கியாததுவே பயில்வாயரோ. நேத்திரமுதலிய இந்திரியவாயில்களாற் புறம்போந்து உருவமுதலிய பஞ்சவிஷயங்களிற் சஞ்சரித்து நிற்கின்ற மனத்தை விஷயத்தின் ரோஷதிருஷ்டி முதலிய வைராக்கியத்தின் ஏதுவாதிய உபாயங்களால் உள்ளே இழுத்து லயரூபமான நித்திரையடையாதபடி சர்வ உபாதிகளினின்றும் விடுபட்ட பிரத்தியக் கான்மாவின் கண்ணே நிரோதமாகப்பண்ணி, சமாதிக்குயாதாமொரு சிந்தனையும் விக்கினமாகலின், யாதானும் ஓர் அநான்ம பதார்த்தத்தை யாவது, அல்லது பிரத்தியக்கான்மாவை யாவது கொஞ்சமும் விருத்திக்கு விஷயமாக் காமையாகிய தன்மையினையுடைய அப்பியாச மெதுவோ அவ்வுபாயத்தையே பழகுவாய்; என்பதாம் இதன்விரிவுரையைக் கூடார்த்த தீபிகையுரையின் கண்ணே கண்டுகொள்க, இவ்வண்ணம் தீர்க்க காலம் அப்யாசஞ்செய்து உன்மத்த மனமாகிய மதமுற்றகஜத்தைச் சர்வப்பிரயத்னத்தாலும் சர்வாத்மபாவத்தாலும் நிரோதஞ்செய்து பரமசிரேயசானது அடையப்பெறும்.

(ச.) எங்கேயெங்கே = எந்தெந்தப் பிரதேசங்களில், சங்கேதமதாய், நியமமாய் = பொருத்தமா யெனினும் ஒக்கும், எல்லா விசாரத்தாலும் = சர்வபாவத்தால், வீடு = பரமசிரேயசு, அணைவாம் = அடையப்படும்.

மாவலி கதை முற்றிற்று.



## பிரகலாதன் கதை.

———(*)———

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் கேவலம் காகதாலீய நியாயப் பிரவிருத்த தனது விசாரத்தானும், சாஸ்திர ஆசாரிய உபதேச அனுக்கிர கீதத்தானும் ஞானேயக்கிரமம் நிருபிக்கப் பெற்றது. இப்போது உபாசிக்கப்பெற்ற ஈசுவர அனுக்கிரக ஜன்னிய விசாரத்தானே ஞானேயப் பிரகாரத்தை வர்ணிக்கும் பொருட்டுப் பிரகலாத உபாக்கியானத்தையுபதேசிக்க வேண்டுமென் றிச்சித்த ஸ்ரீ வசிஷ்டபகவான் அதன் சிரவணத்தில் ஸ்ரீ இராகவரை ஒருமைப்படுத்தல்:—பின்னுமென்பது.

(ச-அ-கை.) முன்பு மாவலிகதையிற் புண்ணிய மிகுதியினல் விஷயஜன்னியமான சுகமும் ஏகதேசத்திற் சித்தோபசாந்தி நிமித்தமாமெனச் சொல்லப்பட்டது; இப்போது ஈசுவரானுக்கிரகத்தினலே, ஒருகாலத்து ஆன்மதத்துவ போதமுண்டாகு மென்று பிரகலாதன் கதையாற் பிரதிபாதிக்கின்ருர்:—பின்னு மென்பது.

பின்னுமீதோர் கதைகேட்பாய் பிரகலாதப் பெயரோனுந்
தன்னதுணர்வான் மெய்ஞ்ஞான தத்துவத்தைச் சாதித்தா
னன்னதுரைப்பா மிரணியனு மசுரவேந்த னிறந்தளவே
மின்னல்கூரு மவன்மைந்த னிதயநடுங்கி யிவையுணர்ந்தான்.

(ப - ரை.) பின்னும் = மீட்டும், ஈதோர்கதை = இஃதொருகதை, கேட்பாய் = கூறச்சிரவணஞ் செய்வாய், பிரகலாதப் பெயரோனும்=பிரகலாதன் எனப்பிரசித்தி பெற்ற தைத்தியேசுவரனும், தன்னதுணர்வால் = தனது விவேகத்தாற்றனே, மெய்ஞ்ஞான தத்துவத்தை = சச்சிதானந்தப் பிரஹ்மவத்துவை, சாதித்தான் = தனது சொரூபமாய்ச் சாக்ஷாத்கரித்தான். அன்னது உரைப்பாம் = அதனைக் கூறுவாம், இரணியனும் அசுரவேந்தன் = ஹிரண்யகசிபு என்னும் அசுரேசன், இறந்தனவே = மரித்தபோது, இன்னல் கூரும் அவன்மைந்தன் = துயரத்தையடைந்த அவ்வசுரேசனது குமாரன், இதயநடுங்கி= மனத்தின் மிகவும் அச்சமடைந்து; வருமாறு, இவையுணர்ந்தான் = இன்னவற்றைச் சிந்தித்தான்.

(ஸ்ரீ - வீர.) இனி இராகவ ! விஞ்ஞானத்தினது மிக முக்கியமான அடைவில் மிகவும் மேலான இம்முறையை, சிரவணஞ் செய்வாய், யாதொருதடையு மில்லாத அடைவாமித னில், தைத்தியஈசுரனுகிய பிரகலாதன் ரூனகவே சித்தனுனன். பிரகலாதனது தந்தையா கிய இரணியகசிபு என்பவன் மகாவீரபராக்கிரமனு யிருந்து தேவதைகளைத் துன்புறுத்த ஸ்ரீ நரசிங்கரூப ஹரியான் மாண்டனன், பின்னர் அத்தானவேந்திரன் மடிந்த பாதாலகோ டாரத்தில், துயரம்மிக நிறைந்த வடிவினனுகிய பிரகலாதன் மௌனியா யிருந்து சிந்திக்கத் தொடங்கினன். (1)

(ச.) திரிதச விருத்தர்களின் ரிபுவாகிய இரணியகசிபு உயிர்விடுத்ததும், சோகசம் விக்ர மானசனுகிய பிரகலாதன் சிந்திக்கத் தொடங்கினன் என்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிந்தித்த பிரகாரத்தைக் கூறல்:—எனது என்பது.

எனதுதாதை முதலசுர ரெனதுகுலத்தோ ரெண்ணிறந்தோர்
கனகமேரு வனுவென்னக் காயநிலைமை பெரிதுடையோர்
வனசயோனி யதிகார மாற்றவல்லோர் தரவல்லோர்
புனைவண்டுளவோ னெனுங்கனலிற் பூளைவீபோற் போயொழிந்தார்.

(ப - ரை.) எனதுதாதை முதல் அசுரர் = என்னுடைய தந்தையே முதலானதைத்தியர், எனது குலத்தோர் எண்ணிறந்தோர் = என்னுடைய வம்மிசத்தினர் அளவற்றவர், கனகமேருவனு வென்னக் காயநிலைமை பெரிதுடையோர் = சுவர்ணச் சுமேருபர்வதமும் அற்பமென்று சொல்லும்படியாகத் தேகவியற்கையானது மகத்தென்றுடையவர் வனச யோனியதிகாரம் மாற்றவல்லோர் தரவல்லோர் = பிரஹ்மாவினது படைப்பின் அதிகாரத்தை இஷ்டமறின் தடுக்கவல்லவர் இஷ்டமுறின் கொடுக்கவல்லவர், புனைவண்துளவோன் = அணியாநின்ற வளப்பம் பொருந்திய துளபமாலையன், எனும் கனலில் = என்னும் அக்கினியின் கண்ணே, பூளைவீபோற்போய் ஒழிந்தார் = பூளைப்பூ விழுவதுபோலப் போயெதிர்த்து மடிந்துபோனர்.

(ஸ்ரீ - வீர.) எனது இத்தந்தை முதலிய அசுரசத்தமர் யாவருமே, கலங்கிய கற்பாந்த வாதத்தானே குலாசலங்கள்போல அவ்வரியினுலேயே கொல்லப்பெற்று வீழ்த்தப்பட்டனர். பர்வதங்களைப் பரஸ்பரம் எடுத்தெறியப் பெற்றபோர்க் கௌசல விசேஷர்களாய்ப் பீமர்களாகிய வெகுபேர்கள் எனது பிதாமகர்களோடு கூடப் போர்புரிந்து அவ்வரியாற் சிக்ஷிக்கப் பெற்றூர்கள். (2)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சிந்தித்தவகையை உபசங்கரித்து உபாயங்காணல்: — அன்னு ரென்பது.

அன்னாரொக்கும் பேரசுர ரழியுமூழிப் பெருங்காற்றாற்
சின்னகங்கள் போன்மடிந்தார் செறிநுண் மணலிற்பலகோடி
யின்னாளவனுக் கஞ்சாதா ரியாருமில்லை யெம்பகையா
மின்னார்நேமிப் படையோனை வெல்வானுபாய மீதொன்றே.

(ப - ரை.) அன்னாரொக்கும் பேரசுரர் = அத்தகையர்கட்குச் சமானமான மலை போன்ற பெரிய அசுரர்கள், அழியும் ஊழிப் பெருங்காற்றால் = யாவற்றையும் அழியும்படி செய்யும் கற்பாந்த பிரசண்ட மாருதத்தால், சின்னகங்கள் போல்மடிந்தார் =குலாசலங்கள் போலத் துவம்சமானார், அழிந்தவரை யெண்ணின், செறிநுண்மணலில் பலகோடி = நெருங்கியிருக்கும் சூக்குமமணலினும் அநந்தங்கோடியாம், இன்னாள் = இக்காலத்தில், அவனுக்கு அஞ்சாதார் = அந்நாராயணனுக்கு வெருவாதவர், யாருமில்லை = நம்மவரில் எவருமேகிடையாது, எம்பகையாம் = எமதுகுலப் பகைவனை, மின்னார் நேமிப்படை யோனை = பிரகாசம் பொருந்திய அக்கினிகாலும் சக்கிராயுதத்தைத் திருக்கரத்திற்றரித்த ஸ்ரீ பகவானை, வெல்வானுபாயம் = ஜயிக்கும்படியான உபாயம், ஈதொன்றே = இஃ தொன்றேயாம்.

(ஸ்ரீ - வீர.) அதிகோரர்களாய் விஸ்தாரமாய் நிகழ்ந்த பெருங்கூட்டங்களில் அவ்வவ் வசலங்கள்போல விளங்கியவருக்குள் அஞ்சாதார்யாவர்தாம், இப்போது அவ்வரிபயப்படுத்து கின்றான் என்பது என்னேகதை ! என்னே பிரசங்கம் ! யாவருமே நடுங்காநின்றனர். அத் தகைய ஸ்ரீமந்நாராயணரின் வசீகரணத்தில் ஸ்புடமாக உள்ள உபாயம் இஃதொன்றேயாம். (8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இதைவிட வுயர்ந்த உபாயம் வேறில்லை யெனவும் அதுவும் ஸ்ரீமந் நாராயணனைச் சரணாகதியடைதலே யாமெனவும் கூறல்:—எத்தன்மை யென்பது.

எத்தன்மையினா லெண்ணுகினு மிதில்வேறுயர்ந்த நெறியில்லை
தத்துந்திரைப்பாற் கடலுறைவோன் சரணமன்றிச் சரணில்லை
சித்தமிந்தக் கணந்தொடங்கிச் சேர்கநாரா யணன்சரணம்
பத்தனாகி நானவனாய்ப் பகிராதொழிக பாவனையே.

(ப - ரை.) எத்தன்மையினால் = எவ்வகையினால், எண்ணுகினும்=சிந்தித்துப்பார்த்த போதினும், இதில் வேறுயர்ந்த நெறியில்லை = இதனினும் அயலாக மேலானமார்க்கம் கிடையாது, தத்தும் = ததும்பிவிளையாடும். திரை = தரங்கங்கள் வாய்ந்த = பாற்கடல் உறைவோன் = க்ஷீராப்தியின் கண்ணே ஆலிலையிற் பள்ளிகொண்டவன், சரணமன்றிச் சரணில்லை = திருவடிகளைத் தவிர்த்து வேறுசரணாகதியில்லை, சித்தம் இந்தக்கணந்தொடங் கிச்சேர்க = மனமானது இந்நொடி தொடங்கித் தியானிக்குக, நாராயணன் சரணம் = ஸ்ரீ பகவானது திருவடித்தாமரையை, பக்தனாகி = அனன்னிய பக்தியுடையவனாகி, நான் அவனாய் = நானேயவனாக பகிராதொழிக பாவனையே=பேதியாதொழிக சிந்தனையே.

(ஸ்ரீ - வீர.) அதற்குவேறாக அவன்செய்த பீடையினீடுதொழில் ஒன்றும் இன்றெனத் துணிகின்றேன், இல்லாதது என்னேயென வுரைத்ததாம்:—எத்தன்மை யென்றது. ஜகத் தில் சர்வவஸ்து சுபாவத்தாலுஞ் சர்வபுத்திபேதத்தாலும், சர்வக்கிரியை உத்யோகத்தாலும் சரணார்த்திகட்கு அவனேசரணம், அயலொருகதி கிடையவே கிடையாது, ஆகலின் சரணா கதவத்சலன் அத்தேவனே; அன்னியர் சரணம் ஆகார் என் எனின், ஆகலின் லோகத்திர யாந்தரத்தில் அதிகமா யெவனுமிலனேயாவன், பிரளயஸ்திதி சர்க்கங்கட்கு ஹரிகாரணத்

தன்மையை அடையாநிற்பன். இங்ஙனந்துணிந்து சர்வபாவத்தானே அவன் சரணாகதியைச்
சங்கற்பித்தல்:—சித்தமென்பதாதி, இந்நிமிடந்தொடங்கி அஜனாகிய ஸ்ரீமந்நாராயணனைச்
சந்ததம் நன்கடையா நிற்பேன், தேசகாலவஸ்து பேதத்தானே யடைகின்றனையோ
வெனின், இலையென்பான் பகிராதொழிக வென்றனன். சர்வதேசகால வஸ்துக்களிலும் (4)
யான் நாராயணமயனே யாவேன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிரந்தர தற்பிரதிபத்திதாரணானுஸ்மரணஜப சாதனமாகிய
சிரௌத அம்மந்திரத்தைத் தொடர்ந்து ஸ்மரித்து நிரந்தரம் அச்செபத்தைச் சங்கற்பித்
தல்:—நயந்தது.

நயந்ததெல்லா மெளிதருளு நாராயணாய நமவென்னு
முயர்ந்ததிரு மந்திரமென் றனுளத்தில் விண்ணின் மாருதம்போற்
பெயர்ந்துநீங்கா துள்ளுறைகப் பேணியரியைப் பூசிப்போ
ரியைந்தவரிதா மப்பூசை யியற்றிற் பலனுமலதில்லை.

(ப - ரை.) நயந்தது எல்லாம் எளிதருளும் = வாஞ்சித்தவற்றையெல்லாம் சுலபமாக
அநுக்கிரகஞ் செய்யும், நாராயணாய நமவென்னும் = நாராயணனுக்கு நமஸ்காரம் என்று
சொல்லப்பட்ட, உயர்ந்த திருமந்திரம் = மேன்மைமிக்க அழகியமந்திரராஜன், என்றன்
உளத்தில் = அன்புநிறைந்த எனது மனதில். விண்ணில் மாருதம்போல் = ஆகாயத்தில்
வாயுப்போல, பெயர்ந்து நீங்காது உள்ளுறைக = அசைந்தகலாமல் அந்தரமைக, பேணி
யரியைப் பூசிப்போர் = அன்போடு ஸ்ரீபகவானைப் பூசைசெய்வோர், இயைந்தவரிதாம் =
பூச்சியனாகப் பொருந்திய ஸ்ரீ நாராயணனே தாமாகி, அப்பூசையியற்றில் = அந்தப் பூசை
யைச்சாதிக்கில், பலனும் = சபலமாம், அலதில்லை = மாறாயினோ பலனிலதாம்.

(ஸ்ரீ - வீர.) நமஸ்காரம் நாராயணனுக்கு என்னும் மந்திரம் சர்வார்த்த சாதகமாம்,
ஆகாயத்தினின்றும் காலேபோலும் எனது இருதயகோசத்தினின்றும், அஃதகலாதுறைக;
பிரணவத்தோடு கூடிய இது பவித்திரமாய தேசாதிகளிலேயே நியமிதகாலத்தில், சுசியாக
இருந்து ஜபிக்கத்தக்கது நிரந்தரம் தகாது எனப் பிரணவமின்றிக் கொண்டதாம்; இருதய
கோசத்தினின்றும் எனக்கூறியது மானசஜப முக்கியத் தன்மையை விளக்குதற் பொருட்
டாம். முன்னர் யாண்டும் நாராயணமயனே நான் என்று புகன்றதைத் தெளிவுபடுத்தல்,
ஹரியேயாசையும் = திசையும், ஹரியேவிண்ணும், ஹரியேமண்ணும். ஹரியேஜகத்தும்,
அமேயாத்மாவாகிய ஹரியேயானும், எனுமுறையில் விஷ்ணுமயமே யானாயினேன்; விஷ்
ணுமயம் = பாவனையானே விஷ்ணுப்பிராயம், பெண்மயன் விடன் என்பதுபோலப் பாவ
னையாலாக்கப் பெற்றதற்பாவ இலக்கணப் பிராசுரியத்தில் மயட்விகுதியாம் யாதின்
பொருட்டு இங்ஙனங் கற்பிக்கின்றனை யெனிற்கூறல்:—பேணியரியை யென்பதாதி, அவிஷ்
ணுவாயிருந்து விஷ்ணுவைப் பூசித்துப் பூஜாபலத்தை யநுபவிப்பவனாகமாட்டான்;
"அவிண்டுவாய் விண்டுவை யருச்சியாதொழிக, அசிவமாய்ச் சிவத்தையருச்சியாதொழிக"
என்னும் விதியையனுசரித்தென்பதாம். அஷ்டாக்ஷர மந்திரத்தின் பெருமை ஸ்ரீ சுவாநு
பவத்திருவாக்கு:—நடந்துவிடுங் காணிருவினைக, ணாராயணாய நமவென்னி; னடந்துவிடுங்
காண் பிறப்பிறப்பு, நாராயணாய நமவென்னி; னடுந்துவிடுங் காண்பகையுறவு, நாராயணாய
நமவென்னி; னடந்துவிடுங் காணகங்கரப்பேய், நாராயணாய நமவென்னில். சுயஞ்சோதி
யாய சர்வான்மதேவரே நாராயணசப்த வாய்ச்சியராவர்,தற்சமீபத்தன்மையானே யாவற்றை
யும் தத்தங்காரியத்தே முயல்விப்பது நரமாம், மாயை அதற்குச் சம்பந்தியாதலின் மாயை

நாராவாம், சூக்குமவுலகம் மாயாகாரியமாகலின் நாரவாம், இவ்விரண்டிலும் அதுபிரதிபிம்ப ரூபமாய் நிகழுதலின் அம்மாயா விசிஷ்டப் பரமான்மாவும் அச்சூக்குமப் பிரபஞ்சவிசிஷ்ட இரணியகருப்பரும், நாராயணரெனப் பெறுவர்; பரமான்மரூப நரன் உண்டாக்கிய நீர் நாராவாம், அது விராட்டுக் காதாரமாதலின் நாராயணரெனப்பெறுவர்; நதிநீர் ஓடாதாரமே போலப் பூமியோடாதார நீர் பரமான்மாவி னின்றேயுண்டா மாதலின் நாராவெனப் பெறும், அதனையதுவே சூத்திரான்ம வடிவப் பிராணரூபத்தால் தாரணஞ் செய்தலின் நாராயண வெனப்பெறும்; தூலப்பிரபஞ்ச சரீரவிராட்டும், சூக்குமப் பிரபஞ்சசரீர இரணிய கருப்பரும் நரரெனப்பெறுவர், அவ்விருவரின்றிதியும் பரமான்மா விடத்ததேயாகலின் அது நாராயண வெனப்பெறும்; பிரதிபிம்பஜீவர் நாராவர், அவர் நிரூபணம் பிம்பரூபப் பரமான் மாவானே நிகழுமாகலின் நாராயணவெனப் பெறும்; ஜீவர்களிடத்துள்ள காமக்குரோ தாதி தோடங்கள் அரவாம், அவற்றாலாந் துக்கம் ஆரவாம், அதற்காசிரய அஞ்ஞானுதி ஆராயணமாம், அது சுயஞ்சோதியானந்த ஆன்மாவில் முக்காலத்து மின்றாமாகலின் நாரா யணவெனப் பெறும்; அவித்தையாதி ஐந்து கிலேசங்கள், அறம்பாவம் இன்பத்துன்பம், அவற்றின்வாசனை என்பனயாவும் சம்சாரசக்கிரத்தின் அராக்களாம், இவற்றிற்கு மாயை பரிணுமி யுபாதானமா மாதலின் இது ஆராயணமாம், இதனினும் கூடஸ்தர்வேறாமாதலின் நாராயணரெனப் பெறுவர்; கற்பிததாதாத்மிய அத்தியாசரூப சம்பந்தத்தால் மாயையாகிய நாரியின்ஸ்திதி பரமான்மாவிலேயே யாமாகலின் நாராயண வெனப்பெறும், பரமேசுரரூப நரசம்பந்தி இலக்குமி நாரியெனப்படுவள், அவ்வம்மை சகல தேகதாரிகட்கும் பிரியையும், அநேகங்கலையோடு கூடியவளும், அநேகம்ரூப முடையவளும், அத்தியந்தம் மனோரமையும், புண்ணியவான்கட்குச் சந்ததம் சுகங்கொடுப்பவளும், பாவிகட்குத் தன்னையடைவியாமலும் நாசத்தானும் எப்போதும் துக்கத்தை யடைவிப்பவளும் ஆவள், அஃநாரிபரமான்ம புருட னிடத்தே நிச்சலமாய் நிலைபெறுவ ளாதலின், நாராயணராவர். ஆனந்தவடிவ திருஷ்டா வாய ஆன்மாவிற்கு நானுவகையாய பதார்த்தங்களைக் காண்பிக்கும் சர்வஜீவர்களின் புத்தி நாரியாம், அதனை யான்மாவே யொளிர்விக்கு மாதலின் நாராயணராம்; பரமான்மாவினும் வேறுயொரு சிறிதும் இன்றுமாதலின் நாராயணராம்.

(ச.) அரிதாம் = விஷ்ணுதானும், அப்பூசையியற்றின் = அவ்விஷ்ணுவைப் பூஜிக்கின், பயனும் = பூஜாபல முடையனும், அலது = அவிஷ்ணுவாய் விஷ்ணுவைப் பூஜிப்பினும், இல்லை = பூஜாபலமுடையனல்ல னென்றதாயிற்று. (5)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ மகாவிஷ்ணுவின் வடிவமே தானுகப்பாவித்துத் தியானித் துப் பின் பாகிய பூசைக் கொருப்படல்:—அந்தவென்பது.

அந்தநெறியா லரியுருநா னுகியரியைப் பூசிப்ப
னிந்தவுடன்மா தவன்வடிவா மிதனில்வாயு வடிவாகிப்
பந்தமுறுவோன் பராபரனு மிவனேபிராண பவனத்தின்
முந்துமோட்டத் தாலிரண்டா முகுந்தனுகிப் புறத்துறைவோன்

(ப - ரை.) அந்தநெறியா லரியுருநானுகி = கூறியமுறையால் ஸ்ரீ மகாவிஷ்ணுவடிவ மேயானுகி, அரியைப்பூசிப்பன் = ஸ்ரீ முகுந்தனைப் பஜிப்பேன், இந்த உடல் = இச்சரீரம் மாதவன் வடிவாம் = ஸ்ரீநாயகன் ஆகிருதியாம், இதனில் வாயுவடிவாகி = இதன்கண் வாயுவினுருவமாகி, பந்தமுறுவோன் = கட்டுப்படுவோன், பராபரனும் = பராவரனுவன், இவனே பிராணபவனத்தின் = இம்மகா விஷ்ணுவே பிராணவாயுவின், முந்தும் ஓட்டத்

தால் = பிரவாகத்தால். இரண்டாம் முகுந்தன் ஆகிப் புறத்துறைவான் = வேறொருபகிர் விஷ்ணுவாகி வெளியிலிருப்பன்.

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ மகாவிஷ்ணுவாகி யவனைப் பூஜிப்பேன், இப்பெருமான் யானேயா கின்றேன், ஹரியானவனே பிரகலாதப் பெயரிய பெரியோன், " இவனினு மயலாய்க்காண் போனில்லை " என்பதாதி சுருதியிருத்தலின். பிரத்தியக்கான என்னினும் அன்னியம் ஹரி பிருத்தக்காகவில்லை = ஆத்மாந்தர பூதமாகவில்லை யென்பதாம், எங்குமேயான் வியாபக மாக விருக்கின்றேன் என்பதாக உள்ளே திட நிச்சயமுடையவனாகி நன்கு சிந்தித்துப் பிரக லாதன் றன்றனுவைப் பாவனையானே ஸ்ரீமந்நாராயண வடிவமாக ஆக்கி, மீண்டுமரியைப் பூசிப்பான் இனிதெண்ணுவா னுயினன், என்னல் இனிதுகற்பிக்கப்பட்ட திரிவிதவைஷ் ணவ இவ்வபுவினும் அன்னியமாகப்பரா = சமஷ்டிரூப, அவரா = வியஷ்டி தேவதைவடிவ மாகத்தானுதல், ஆகாதொழிக, மற்றே, இவ்வெனதுவடிவ மகாவிஷ்ணுவே இருதயத்தி னின்றும் பிராணப் பிரவாகத்தானே புட்பாஞ்சலி பாவனையால் வெளியே ஆவாகனஞ் செய் யப்பெற்றுப் பூஜாகாலபரியந்தம் வேறுபோலக் கற்பிக்கப்பெறும். அஃதெத்தகைய மகா விஷ்ணுவெனின், வைநதேய சமாரூடமாம் அம்மூர்த்தம், விளங்காநின்ற கிரியைஞான இச்சை அநுக்கிரகமெனப் பெயரிய நான்கு சக்திகளுடன் கூடியது, சங்கசக்ர கதாபாணி, சியாமளாங்கம் சதுர்ப்புஜ முடையது. சந்திர அர்க்கநயன முடையது, ஸ்ரீமானுயது, காந்தி பொருந்திய நந்தகமென்னும் கட்கத்தோடு கூடியது. தனுஜஜன ஆநந்தந்தருவது, பத்ம பாணி, விசாலாக்ஷம் சாரங்கதனுவுடைய மகாப்பிரகாச மயமாயது.

(ச.) மாதவன் வடிவாம் என்று சிந்தித்து அப்பிரகலாதன் பூசைநிமித்தம் மீண்டுஞ்சிந் தித்தல், பரர் = பிரமாதிகள், அபரர் = அதமர்கள் எவனினின்றே; அவன் பராபரனும், இவனே = இவ்விஷ்ணுவே, இதனில் = நாராயணமயமான இவ்வடிவத்தி னின்றும், புறத்து, பிராணபவனத்தின், முந்து மோட்டத்தால், வாயுவடிவாகி, இராண்டா முகுந்தனுகி யுறைவோன் என்பதந்நுவயம். (6)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பூசைசெய்ய உத்தேசித்த பிரகலாதன் அகத்தே சகலமுங் கற்பித் துப் பூசைசெய்ததையும் புறத்தே பூசைசெய்ததையும் புகலல்:—அவ்வாறு, மணி.

அவ்வாறுன விவ்வரியை யகிலவுபசா ரங்களையுந்
தவ்வாமனத்தா னுளதாக்கிச் சதாபூசனையே சமைப்பனெனு
விவ்வாறெண்ணிப் பாரமெலா மெடுத்துச் சுமக்குமனத்தாலே
செவ்வான் மணிப்பாத்திரதூப தீபங்கந்த மெலாஞ்செறித்து.

மணிப்பூண்களும் பீதாம்பரமும் வாடாமலரு நல்லமுதுங்
கணிப்பிலாத பொருளெல்லாங் கருத்தாற்பாவித் தருச்சித்துத்
தணிப்பிலாத வன்பான்முன் றந்தப்புறத்தின் பொருட்டிரளாற்
பணிப்பாயவனை யுட்போலப் பரிந்துபுறத்தும் பூசித்தான்.

(ப - ரை.) அவ்வாறுன இவ்வரியை = மொழிந்தபிரகாரம் எனது வடிவமான இவ்விஷ் ணுவை, அகில உபசாரங்களையும் = சகல உபசாரங்களையும், தவ்வாமனத்தால் = ஏகாக் கிரசித்தத்தால், உளதாக்கி = இருப்பனவாகப் பாவித்து, சதா = எப்போதும், பூசனையே = பூசையே, சமைப்பன் எனு = செய்வேனென்று, இவ்வாறெண்ணி = இந்தப் பிரகாரஞ் சிந்தித்து, பாரமெலாம் எடுத்துச் சுமக்கும் மனத்தாலே = சகலலோக பாரங்களையும்

அநாயாசமாகத் தூக்கிச் சுமதாங்கிபோலே சுமந்துகொண்டாடுஞ் சித்தத்தினாலே,செவ்வான் மணிப்பாத்திரம் = செக்கர்வானம் போன்ற இரத்தின பாத்திரம், தூபதீபம் கந்தம் எலாம் செறித்து = தூபம்தீபம் சந்தனம் முதலிய யாவற்றையும் அர்ப்பித்து.

மணிப்பூண்களும் = நானாவித இரத்தின பூஷணங்களும், பீதாம்பரமும் = சுவர்ண ஆடையும், வாடாமலரும் = அன்றலர்ந்த புஷ்பமும், நல்லமுதும் =பரமான்னமும், கணிப் பில்லாதபொருள் எல்லாம் = என்பனமுதலிய எண்ணிறந்த வஸ்துக்கள் யாவற்றையும், கருத்தால் பாவித்து = மனத்தினாலே பாவனைசெய்து, அருச்சித்து = அருச்சனைசெய்து, தணிப்பிலாத அன்பால் = அளவுகடந்து தீராதபக்தியினாலே, முன்றந்து = எதிரிற்சமர்ப் பித்து, அப்புறத்தின் பொருள் திரளால் = அந்தப் பாகியத்தின்வஸ்து சமுதாயங்களால், பணிப்பாயவனை = சேஷசயனத் தெழுந்தருளுந் திருநெடுமாலை, உட்போல = உள்ளே போல, பரிந்து = அன்புமிக்கு, புறத்தும் பூசித்தான் =பாகியத்திலும் பூசைசெய்தான்.

(ஸ்ரீ - வீர.) சர்வசம்பாரரம்மிய மாயமனோமய சாமக்கிரியைகளாலும் அத்தன்மயமாய மகாவிஷ்ணுவை, சங்கர்ஷண பிரத்தியும் நாதிவியூகங்கள் பார்ஷதர்கள் முதலிய பரிவாரங்க ளோடுகூட விரைவிற் பூசைசெய்வேன்; என்பதாகப் பிரகலாதன் சிந்தித்துச் சம்பாரபர பாரியாகிய மனத்தானே, ஸ்ரீ மாதவனைக் கமலாதவனைப் பூசைசெய்தான், மா = கமலா= இலக்குமி, தவன் = நாயகன், இரத்தினக் குழுத்தழுவிய பாத்திரங்களின் படலவபிஷே சனங்களானும், நானாவிபவபூஷண அலங்காரங்களானும், சந்தனாதி விலேபனங்களானும், தூபதீப விசித்திரங்களானும், அநேகவித புஷ்பார்ச்சனைகளானும் மாலைகளானும், நைவேத் யதாம்பூல தர்ப்பண சத்ரசாமர நீராஜன புஷ்பாஞ்சலி பிரதக்ஷிண நமஸ்காராதிகளானும், சௌந்தரிய யுக்தசம்மான யுபசாரங்களானும், சுயம் ஆத்மார்ப்பணங்களானும், ஜகத்தின் கண்ணே எவ்வெவ் விபவங்கள் பிரசித்தங்கள் ஆமோ அவ்வவற்றால் உபகரணீ கிருதபவித் திரமான பரமபக்தியினானே ஜகத்பதியாய் சுவசுவாமியா யிலங்கும் ஸ்ரீமந் நாராயணனைப் பிரகலாதன் அந்தப்புரத்தில் மனத்தாற் பூஜிப்பானாயினன்; மாநசபூஜாநந்தரம் அவ்வந்தப் புரத்தின் கண்ணேயிருக்கும் தேவகிருகத்தில், பாகியார்த்தங்கள் கொண்டு பரிபூரணமாகிய பூசையால் தானவேசன் ஸ்ரீஜனார்த்தனனைப் பூசித்தான்; மாநசபூசையிற் புகன்ற முறை யானே, பகிர்திரவ்யங்களாற் பரமேசுரனை மீண்டும் மீண்டும், பூசித்துத் தானவேந்திரன் சந்துஷ்டிமானாயினன்.

(ச.) அவ்வாறான இவ்வரியை = வாயுரூபமாக இருக்கும் ஜனார்த்தனன் என்னும் விஷ்ணுவை. பாரமெலாம் = பூஜோபகரணங்கள் அனைத்தும், மணிப்பாத்திரம் = இரத்தி னார்க்கியபாத்திரங்கள். மூலம், சம்பா:=பூஜோபகரணங்கள், பூஜயா=பூஜாவிதியால் (7-8)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தங்கள் அரசன் பூசையைக்கண்ட அசுரரும் பூசாதற்பரராதல்:— ஆயவென்பது.

ஆயவாறக் கணந்தொடங்கி யகண்டவடிவப் பரம்பொருளா
மாயனடிக ளருச்சித்தா னவனைப்போல வாளசுரர்
தீயகுணம்விட் டெல்லோருந் திருமாற்கடிமைத் திறம்பூண்டார்
மேயமன்னன் குணமன்றோ விரிந்தவுயிரின் குணந்தானே.

(ப - ரை.) ஆயவாறு = கூறியபிரகாரம் அக்கணந் தொடங்கி = அப்பொ தாரம் பித்தே, அகண்டவடிவப் பரம்பொருளாம் மாயனடிகள்=கண்டிதமில்லாத அறிவுருவமான

பரமேசுரமாயவன் திருவடிகளை, அருச்சித்தான் = அருச்சனைசெய்து பூசித்தான், அவனைப் போல வானசுரர் = அந்தப் பிரகலாதனைப்போல அவன் பிரஜைகளாகிய வானாயுதந்தரித்த அசுரர், தீயகுணம் விட்டு = கொடிய குணங்களை விட்டொழித்து, எல்லோரும் = யாவருமே, திருமாற்கடிமைத் திறம்பூண்டார் = ஸ்ரீமகாவிஷ்ணுவிற்கு அன்பர்களாகிய வைஷ்ணவராயினர், மேயமன்னன் குணமன்றோ = ஒருதேயத்தை யாளப்பொருந்திய அரசனது ஆசாரமல்லவோ, விரிந்த உயிரின் குணந்தானே = அத்தேயத்திற் பரந்த பிரஜைகளின் ஆசாரமாக இலங்காநிற்பது.

(ஸ்ரீ - வீர.) அது முதலாகத்தானே பிரகலாதன் பரமேசுவரனை முன்மொழிந்த வகையானே பூரணமாய பக்தியினானே தினந்தினம் பூஜித்துக்கொண்டு வந்தனன். பின்னர் அந்தப்புரத்திலுள்ள தைத்தியர்கள் எல்லாம் அதுமுதலாகவே வைணவராயினர். யாவருமே மங்களமாய்ப் பவித்திரராயினர், இராஜாவன்றோ வாசாரகாரணம்; " தன்மியென்றிடின் மன்னவன் றன்மியராவர், கன்மியென்றிடிற் கன்மியர் துலியனேற்கடுப்பர், தன்மமென்பதைத் தழுவுவர் தழுவினரிறைவன், றன்மையெங்ஙனமங்ங மவனனைந்தவரே " என்னும் நியாயமிருத்தலின். (9)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அமரர் இந்திரன் அசுரர் செய்கையைக் கேட்டயர்தல்:—திதி யென்பது.

திதிகாதலரு மவர்க்கரசுஞ் செங்கண் மான்மேற் சினந்தீர்ந்து
புதிதாகிய பத்தியிலடிமை புக்காரென்று புரந்தரனுந்
துதிவானவருங் கேட்டலுமே துணுக்கமோடு வியப்பெய்தி
யதிபாதகர்க ளெம்பெருமாற் கன்பாகியதென் னெனவயிர்த்தார்.

(ப - ரை.) திதிகாதலரும் அவர்க்கரசும் = தைத்தியரும் அவருடைய அரசனும், செங்கண்மால் மேற்சினந்தீர்ந்து = செந்தாமரை யிதழ்போலும் திருநேத்திரங்களையுடைய ஸ்ரீமந்நாராயணர் மீது குரோதம் நீங்கி. புதிதாகியபத்தியில் = நவீனமாகிய பக்தியில், அடிமைபுக்கார் = வைஷ்ணவர் ஆயினர், என்று புரந்தரனும் துதிவானவரும் = என்பதாக தேவேந்திரனும் அவனைப்போற்றுந் தேவரும், கேட்டலுமே = செவிகொள்ளலுமே, துணுக்கமோடு வியப்பெய்தி = பயத்தோடும் ஆச்சரியத்தை யடைந்து, அதிபாதகர்கள் = மகாபாதகர்களாகிய அசுரர்கள், எம்பெருமாற்கு = எமது பெருமானுக்கு, அன்பாகியது = பக்திபூண்டது, என்னென் அயிர்த்தார் = இஃதென்னே யென்று மயங்கினர்.

(ஸ்ரீ - வீர.) ஹே சத்துருஜயசீல இராகவ ! அதன்பின், ககனத்திற் றேவலோகத்தில் வார்த்தையானது சாரவாயிலாக எட்டியது, அவ்வார்த்தை: தைத்தியர் ஸ்ரீமகா விஷ்ணுவின் றுவேடத்தை அடியோடும் விடுத்துப் பக்தர்களாக இருக்கின்றனர் என்பதாம். மருத்கணசகித சக்கிராதி தேவர் விஸ்மயத்தை யடைந்தனர், தைத்தியர்களானே வைஷ்ணவீபக்தி கவரப்பெற்றுளதே இஃதென்ன காரணத்தானே கவரப்பெற்றதோ ! (10)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவேந்திராதிதேவர் ஸ்ரீ பகவானைச் சேவித்து அசுரரது செய்கையைப்பற்றி வினுதல்:—திரு, கொடிய என்பன.

திருப்பாற்கடலிற் கண்வளருந் திருமான்முன்பு சென்றணுகி
விருப்பாற்றுதித்திந் திரன்முதலோர் மேகமேனி யனைநோக்கி
நெருப்பாந்தன்மை யசுரரெலா நினைப்பாவித்து நின்வடிவா
யிருப்பாராணன் மாயையென வெண்ணினோ மீதென்னென்ற.

கொடிய கொலைசெய் வல்லசுரர் குணங்களெங்கே பெறவரிய
முடிவதான பிறப்பெங்கே முகுந்தன்பத்தப் பேறெங்கே
கடியதீயோர் நற்குணங்கள் கலந்தாரென்று கதையல்லா
னெடியமாலே நின்பத்தி நீசர்க்கெல்லா நேருமதோ.

(ப - ரை.) திருப்பாற்கடலில் கண்வளரும் = ஸ்ரீக்ஷீராப்தியின் கண்ணே யோகநித்திரைசெய்யும், திருமால் முன்புசென்றணுகி = ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ஸந்நிதியைச் சென்றடைந்து, விருப்பாற்றுதித்து = அன்போடும் ஸ்தோத்திரம் செய்து, இந்திரன் முதலோர் = தேவேந்திரன் முதலிய தேவர்கள், மேகமேனியனை நோக்கி = கார்மேனியனாகிய ஸ்ரீ கண்ணபிரானை நோக்கி, நெருப்பாந்தன்மை யசுரரெலாம் = அக்கினிக்குச் சமானமாய் கொடூரசுபாவத்தோடு கூடிய தைத்தியர்களெல்லாரும், நினைப்பாவித்து நின்வடிவாய் = தேவரீரைத் தியானித்து தேவரீருடைய திவ்யமங்களமாய், இருப்பாராகில்=கவலையின்றி யிருப்பார்களாயின், மாயையென = மாயாவிசித்திர மென்று, எண்ணினோம் = நினைந்தோம், ஈதென் என்ன = இஃதென்னே ஆச்சரியம் என்றனர்.

கொடிய கொலைசெய்வல் லசுரர்குணங்கள் எங்கே = கொடூரமான கொலையாதியதி பாதகங்கள் செய்யும் கொடிய அசுரரது துஷ்டகுணங்கள் எவ்விடத்தன ! பெறவரிய = பெறுதற்குத் துர்லபமான, முடிவதான பிறப்பெங்கே = இனிப்பிறவா முடிவானபிறப்பெவ்விடத்தது ! முகுந்தன் பத்திப்பே றெங்கே = ஸ்ரீமந் நாராயணனது பக்திப்பிரயோஜனம் எவ்விடத்தது !, கடியதீயோர் கொடுமைவாய்ந்த பாதகர், நற்குணங்கள் = நல்ல குணங்களை, கலந்தார் என்று கதையல்லால் = அடைந்தார் என்றுரைப்பது கதையேயல்லாமல் உண்மையல்ல, என்னை! நெடியமாலே=சர்வவியாபகமாகிய ஸ்ரீபகவந் ! நின்பத்தி= தேவரீரது அன்பு, நீசர்க்கெல்லாம் நேருமதோ = தாழ்ந்தோர்க் கெல்லாம் கிடைக்குங் கொல்லோ !

(ஸ்ரீ - வீர.) விஸ்மய ஆகுலர்களாகிய விபுதர்கள் அமராவதி நகரத்தைவிடுத்து, ஸ்ரீ க்ஷீராப்தியின் கண்ணே ஆதிசேஷசயனத்தே யோகநித்திரைசெய்தருளும் போரில்வன்மைமிக்க ஸ்ரீ ஹரியைநோக்கிச் சென்றார்கள்; சென்று தரிசித்த அத்தேவதைகள் மிகவுந்தோத்தரித்து விண்ணப்பித்ததாவது:—ஹே பகவந் ! இஃதென்னே ஆச்சரியம் ! தேவரீரைச் சந்ததமுமே துவேஷித்துக் கொண்டிருக்கும் தைத்தியருங் கூடத்தேவரீர் மயமாகப்பத்தியினால் ஆனார்கள் என்றால் இதனை மாயையென்றே எண்ணுகின்றோம்; அந்தோ அத்தியந்தம் கெட்ட ஒழுக்கமுடைய தானவர், துவேஷத்தினாலே தேவரீருடைய பக்தர்களாகிய தேவர்களினிதுவாழும்பர்வதங்களையும் பட்டணங்களையும் துவம்சம்செய்வதே கடனாக உடையவர் எங்கே ! பச்சாத்துண்டாவதான மகாஜன்மத்தி லடையத்தக்க ஜனார்த்தனனிடத்தில் அன்பெங்கே ! ஹே பகவன் ! பாமரர் குணவான்கள் ஆயினார்கள் என்னுமிது கதையேயாம். உத்பாத சம்பந்தியாய அகாலபுஷ்ப மாலைபோலும் அசுகத்தின் பொருட்டும் உபத்திரவத்தின் பொருட்டுமாம், சுகத்தின் பொருட்டும் என்றும் பாடமுளது; கசியபவம்சத்தன்மையானே உங்களுக் கொப்பானவர்களே அவர்கள் எனின், குணவைஷம்மிய மிருத்தலின் அல்லருவாமெனல்:—நெடியமாலே யென்பதாதி. எங்கேயதமர் பிராகிருதாரம்பர் எப்போதும் ஹீனகருமாதியுடையர், துச்சர்தானவர் ஹீனஜாதியாகிய தாமசயோனியர்; எங்கே வைஷ்ணபக்தி. ஈண்டு கமலினீ தப்தமாய ஊஷரப்பூமியில் ஆர்ந்ததென்னுங் கதையெங்ஙனங் கேட்பவர்கட்குச் சுகத்தையுண்டாக்க மாட்டாதோ, அங்ஙன்மே ஹே பரமே

சுர ! திதியின் சந்ததிகளும் ஸ்ரீ மாதவனிடத்தில் பக்தியுடையவர்கள் ஆயினார்கள் என்னும் அதமாசிரய விஷயகதையும் எங்களுக்குச் சுகமாக விருக்கவில்லை.

(ச.) கலவாரென்று கூறுவது கதையாம், கலவாரென்ற பாடத்தை யொப்பியதாமிது, அல்லால் = அன்றெனில். மூலம், வராக:=சோச்சிய: = சோகிக்கத்தக்கவர். (11-12)

(ஸ்ரீ-வீர - அ-கை.) அநுசிதக்காட்சியானே மிகவுங் கோபமுடையவராய், அதனானே முன்மொழிந்த முறையே பெருங்குரலால் வினவுபவராய், நின்றதேவர்களை நோக்கி ஸ்ரீமாதவன் அம்புதம் சிகிவிருந்தத்தைப்போல இத்திருவாக்கியத்தைக் கூறத்தொடங்கினான். என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் வென்றிக் குரிசிலாகிய ஸ்ரீ இராகவருக்கு அனுக்கிரகித்தல்:— என்றவென்பது.

என்றவிண்ணோர்க் கெம்பெருமா னிமையோரஞ்சா தொழிமின்கள்
வென்றிபயிலும் பிரகலாதன் மீண்டும்பிறவாப் பிறப்புற்றான்
கன்றுதுயர்போய் மெய்ஞ்ஞானக் கண்ணால்வீடு காண்குவனா
லொன்றுமிதனிற் கைதவமென் றுணரற்பால திலதாகும்.

(ப - ரை.) என்றவிண்ணோர்க்கு = கூறியவண்ணம் தெரிவித்துக் கொண்ட தேவர்கட்கு, எம்பெருமான் = எமது பெருமானாகிய ஸ்ரீ பகவான், இமையோர் = ஹே தேவதைகளே ! அஞ்சாதொழி மின்கள் = பயப்படாதீர்கள், வென்றிபயிலும் பிரகலாதன் = வெற்றியையே மேற்கொண்ட பிரகலாதாழ்வான், மீண்டும் பிறவாப்பிறப்புற்றான் =இனிப் பிறவாத அந்திய ஜன்மத்தை யடைந்தனன், கன்றுதுயர்போய் = துன்புறுத்தா நின்றதுக்கங்கணீங்கி, மெய்ஞ்ஞானக் கண்ணால் =தத்துவஞான திருஷ்டியினால், வீடுகாண்குவன்= மோக்ஷத்தைத் தரிசிப்பன். ஒன்றும் இதனில் = இதன்கண்ணியா தொன்றும், கைதவம்= பொய், என்றுணரற்பாலது இலதாகும்= என அறியத்தக்கது இல்லையாம், ஆல், அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) ஹே விபுதர்களே ! பிரகலாதன் பக்திமான் என்று நீங்கள் வருத்தப்படாதீர்கள், அவனுக்கிந்தப் பிறப்பானது முடிவானதாகும்; தாமேபலமுடையவர் தைத்தியர், தேவரீரது பக்தியுடனும் கூடிவிடின், மிகுந்த வலுவுடையவராய் விடுவர், ஆகவே எங்ஙனம் யாங்கள் வருத்தப்படாம விருக்கக்கூடும் என அருளல்:—வீடுகாண்குவன் என்பது ஹே பகைவரை வென்றிகொள்ளும் சீலரே ! மோக்ஷயோக்கியன் அவனென்றறிவீர். மோக்ஷயோக்கியன் ஆனபடியினாலே உங்களுடைய துச்சமான இராஜ்ஜிய சுகத்தையவன் வாஞ்சிக்கமாட்டான், என்பதாம். (13)

(ச.) ஸ்ரீபகவான் சொல்லுகின்றார், வென்றிபயிலும் = பக்திமானை.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவர்களாற் கூறப்பெற்ற அவனது பகவத்பக்தி யுசிதமின்மைத் தோடத்தைப் பரிகரித்தருளிப் போமெனப்போய்ப் புரையற்ற தமராதல்:—நல்லோரென்பது.

நல்லோர்தீமை யுறிற்கேடாந் தீயோர்நன்மை யுறினன்றா
மெல்லோரும்போ மெனவருளி யெம்மானங்கே மறைதலுமே
கல்லோலஞ்சூழ் கடனின்றுங் ககனாலயஞ்சேர்ந் தமரரெல்லாம்
புல்லாரென்ற வசுரருடன் புரையிலாத தமரானார்

(ப - ரை.) நல்லோர் தீமையுறிற் கேடாம் = குணவான்கள் குணமின்றியவர்களாயின் கெடுதலாம், தீயோர் நன்மையுறின் நன்றாம் = குணமில்லாதவர்கள் குணமுடையவர்களா

யின் நலமேயாம். எல்லோரும் போமென்வருளி = யாவர்களும் உங்களிருக்கை சேருங்கள் என்று திருவாய் மலர்ந்தருளி, எம்மான் ஆங்கேமறைதலுமே = எமது பெருமான் அவ்வி டத்திலேயே மறைந்தருளலுமே, அமரர் எலாம் = தேவதைகளியாவருமே, கல்லோலஞ் சூழ் = திரைகள் சூழப்பெற்ற, கடல்நின்றும் = திருப்பாற்கடனின்றும், ககனலயஞ் சேர்ந்து = விண்ணிலுள்ள தங்கள் நகரமடைந்து, புல்லார் என்ற அசுரருடன் = பகைவர் என்று கொண்டிருந்த அசுரர்களுடன் புரையிலாததமர் ஆனர்=வஞ்சகமில்லாத நேயர்கள் ஆனார்கள்.

(ஸ்ரீ - வீர.) குணவான் நிர்க்குணனுவனுயின் அநர்த்தமுடிவு பேற்றையும் புருடார்த்த விகாதகத்தையும் முறையே யடைந்தவனுயினன் என்றறிமின் பெரியோரும் பேசுவர், நிர்க் குணன் குணவானுயின் சித்திதரும் கிரமமெனக் கிளத்துவர், ஈண்டு இப்பிரகலாத சம்பந் தியாய எமது பக்தியாதிகுணிதம் உங்கட்கு அசுகப்பொருட் டாகாதாம், ஆகலின் ஹேஅம ரோத்தமர்களே ! உங்களுடைய விசித்திரமான புவனங்கட்குப் போய்ச் சேருங்கள் என்று விபுதர்களை நோக்கிக் கூறியருளிய ஸ்ரீபகவான் ஆண்டு க்ஷீரோதார்ணவவீசிகளில், தடத் திற்றேன்றிய தமாலநீலப் பூங்கொத்தானது உன்னதமான தரங்கங்களில் தடையான் மறை தலை யடைவதேபோலும் மறைந்தருளினர். சுரக்கூட்டமும் நன்ருக ஸ்ரீ ஹரியைப் பூசித்து விட்டு அம்பரஞ்சென்றது, பூர்வம் அம்பரத்தினின்றும் அர்ணவத்தில் வீழ்ந்தகணஜாலமா னது மந்தரமகற்றலானே அர்ணவத்தினின்றும் மீண்டும் அம்பரமடைதலேபோலுமிருந்தது. பிரகலாதன் பொருட்டுக் கீர்வாணர் அது முதலாகச் சௌகிருதத்தை யடைந்தனர். எப் புருடனிடத்தாதல் விடயத்தி னிடத்தாதல், பெரியோர் = தற்பூச்சியர் = பிதுர் ஆசிரியர் ஆதியர் வெம்புதலடையாரோ, அவன்பாலாதல் அதன்பாலாதல் பாலர்களுடைய மனமும் விசுவாசமுடைய தென்பது வெளியாம்.

(சு.) மூலம் பிராஹ்லாதி = பிரகலாத சம்பந்தியான குணிதா =குணமுடைமையின், உற்பவா = மேன்மையான பிரபாவமானது அசுகப் பொருட்டாகாதாம். தாபிச்சகுச்சம் போலும் = தமாலபுஷ்பஸ்தபகம்போலும். ஸ்தபகம் = மஞ்சரி.

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரகலாதன் பூசையினது பெருமையால் இன்ன இன்னதுண்டா யிற்றெனல்:—என்பு சாதனம் என்பன.

என்புகுளிரும் பத்தியினு லிமைப்போ தொழியாதெப்போது
மன்புகூர நெடுமாலை யசுரர்வேந்த னருச்சித்தான்
வன்புபயிலு முக்கரணம் வழுவாப்பூசா பலத்தாலே
முன்புவிவேக மாநந்தமுதிர்வும் விராகமுளைத் தெழுந்த.

சாதனங்கண் முதற்குணங்கள் சாலவுண்டா யிவனெஞ்சங்
காதலான போகத்திற் கவலும்பற்றுக் கழன்றனவாற்
சீதமுத்து முத்துடனே சேர்ந்தாற் பற்றுச் சேர்வுறுமோ
வாதலாலே போகத்தி லழுந்தா துள்ள மாறினதே.

(ப - ரை.) என்புகுளிரும் பத்தியினல் = என்புந் தண்ணென்றும் அன்பதனல், இமைப்போது ஒழியாது = கணகாலமும் இடைவிடாது, எப்போதும் = அனவரதமும், அன்புகூர = மிகுதியாய பக்தியுடனே, நெடுமாலை = ஸ்ரீமந்நாராயணனை, அசுரர்வேந் தன் = தானவேந்திரன், அருச்சித்தான் =பூசித்தான், வன்புபயிலும் முக்கரணம் வழுவாப் பூசாபலத்தாலே = இடர்ப்படுத்தும் மூன்று கரணமும் மாறுபடாத பூசையின் வலுவாலே, முன்பு விவேகம் = பிரதமம் விவேகமும், ஆனந்த முதிர்வும் = இன்பமுதிர்ச்சியும், விரா கம் = வைராக்கியமும், முளைத்தெழுந்த = உற்பத்தியாகிக் கிளம்பின.

சாதனங்கள் முதற்குணங்கள் = நித்தியாநித்திய வஸ்து விவேகாதியே முதலவாய்ச் சாந்தியாதி குணங்களியாவும், சாலவுண்டாய் = மிகவும் உண்டாகி, இவன்நெஞ்சம்=பிரகலாதனது மனமானது, காதலான போகத்தில் = ஆசைப்படத்தக்க போகங்களில், கவலும் பற்றுக்கழன்றன = கவலைப்படும் ஆசக்தியானது அவிழ்ந்தன, சீதமுத்து முத்துடனேசேர்ந்தால் = குளிர்ச்சிபொருந்திய முத்தானது முத்தினோடு கலந்தால், பற்றுச் சேர்வுறுமோ= பற்றுதல் உண்டாமோ, ஆதலாலே = ஆகையினாலே, போகத்தில் அழுந்தாது உள்ளம் ஆறினதே = சப்தாதி போகங்களில் இரமியாது மனமானது சாந்தியையே யடைந்தது. ஆல் அசை, ஏதேற்றம்.

(ஸ்ரீ - வீர.) மிகுதியாய அன்பினையுடைய பிரகலாதனானவன் மனத்தாலும் கருமத்தாலும் வாக்காலும் தினந்தோறும் இடைவிடாமல் தேவதேவனாகிய ஜனார்த்தனனைப் பூசிப்பான் ஆயினன்; அதன்பின்னர் பூஜாபரனாய இவனுக்குக்காலமாக ஆக, விவேகாநந்த வைராக்கிய விபவாதி முக்கிய குணங்களியாவும் நன்கு விருத்தியடைந்தன. ஆநந்தம் = கிடைத்தது கொண்டு மகிழ்ந்திருத்தல். சாஸ்திரார்த்த சம்பாஷணத்தை விடுத்து அசாஸ்திரீயலோக விருத்தங்களில் அவனிரமிப்பதே கிடையாது, தாமரைதலத்திற்போலத் தரிசனயோக்கியமாயசமாஜ உற்சவாதி கௌதுகத்தில் அவனுக்கு ரதியுண்டாகவில்லை, போகரூபங்களாய ரோகங்களின் விடயாபத்திய சேவனத்தானே அநுகூல ஆசரணத்தில், பிரகலாதனுடைய சித்தமானது இளைப்பாறுதலை யடையவில்லை, கோர்க்கப்படாத சித்திரஞ்செய்யப்பெறாத முக்தாபலம் = தரளம், அமலமான முக்தாபலத்திற் போலச் சேரவில்லையென்பதாம். (15-16)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிரகலாதனது உள்ளமிருந்த விதத்தைக்காட்டி அவனது பூஜாநிருகத்தில் ஸ்ரீமந்நாராயண ரடைந்தார் எனல்:—பூன்றவென்பது.

பூன்றவடிவுங் காணுமற் போகத்துள்ளு மழுந்தாம
ஞன்றவூச லாடுவபோ னல்லோனுள்ளந் திரிவதனை
மூன்றுசகத்தின் சான்றுன முகுந்தன்றிருவுள் ளத்துணர்ந்து
சான்றகுணத்தோன் பூசிக்குந் தனிமாமனையிற் றுனடைந்தான்.

(ப - ரை.) பூன்றவடிவுங் காணுமல் = பூர்ணவடிவத்தையும் தரிசியாமல், போகத்துள்ளும் = போகங்களிலும், அழுந்தாமல் = மூழ்காமல், நான்றவூசல் ஆடுவபோல் = தொங்கிய ஊஞ்சல் ஆடுவதுபோன்று, நல்லோன் உள்ளம் திரிவதனை = தமது அன்பனுடைய மனம் சஞ்சலப்படுவதனை, மூன்று சகத்தின் சான்றுன =மூவுலகத்தின் சாக்ஷியான, முகுந்தன் = ஸ்ரீமந் நாராயணன், திருவுள்ளத் துணர்ந்து = திருவுள்ளத்தின் கண்ணே தெரிந்தருளி, சான்றகுணத்தோன் பூசிக்கும் = உயர்ந்த மைத்திரியாதி கல்யாண குணங்கள் வாய்ந்தோன் பூசைசெய்யும், தனிமாமனையிற் றுனடைந்தான் = ஒப்பற்றமாக்ஷிமைதங்கிய அரண்மனையிற் சுயம் பிரசன்னமாயினன்.

(ஸ்ரீ - வீர.) ஆயின் அவனதுள்ளம் எங்ஙனமிருந்தது எனிற்கூறல்:—போகாதி விவகாரங்கள் எவற்றையுமேதியாகித்தும், பரம்பொருளில் விசிராந்தியை யடைந்திடாமலும் அவனதுள்ளம் கேவலம் ஊசலிற் சேர்ப்பித்ததுபோல இருந்தது, ஊசற்போல ஒருபாகத்திலுமே விசிராந்தியை யடையவில்லை, உள்ளே பற்றுதலடையவில்லை யென்பதாம். ஸ்ரீமகாவிஷ்ணுவாகிய பரமதேவரானவர் பிரகலாதனது அந்நிலைமையை க்ஷீரோதக மந்திரத்திலிருந்தேசுத்தசத்துவவடிவமாய்ச் சர்வகதமாயிலங்கும் ஞானசக்தியினுனேயுணர்ந்தனர். அதன்

பின்னர்ப் பாதாளமார்க்கமாகப் பக்தர்கட்குமகிழ்வை யுண்டாக்குபவராகிய ஸ்ரீமகாவிஷ்ணுவானவர், "இதேயாநந்தத்தினுடைய மாத்திரையைப் பற்றியன்னிய ஜீவர்கள் இனிதுஜீவிக்கின்றனர்" என்று மறையறைதலின் சர்வாநந்த கர்த்தாவாகிய ஸ்ரீபகவானானவர் பூஜா தேவக்கிருகத்தை யடைந்து அந்தப் பிரகலாதன் முன்பு பிரசன்னமாயினர்.

(ச.) முகுந்தன் க்ஷீரசாகரத் திருமந்திரத்தி லிருந்தே சர்வகதமானபுத்தியால் உணர்ந்தான் என்றதாயிற்று. சான்ற்ன என்பது ஏதுகர்ப்பவிசேஷணம். க்ஷீரசாகரத்தின் மூழ்கி. பூஜிக்குந் தனிமாமனையில் = பிரகலாதனது தேவபூஜாகிரகத்தில், பாதாளமார்க்கமாக தானடைந்தான் = எழுந்தருளினர், என்பதுபொருள், பக்தாநுக்கிரக பரபரப்பாற் சந்தோஷிக்கும் பரிவாரசமன்விதராய் எனவுங்கூட்டுக. மூலம்,—மந்திராத்தென்பது அதிகரணத்திலும் கூறலாம் என்னும் வார்த்திகப்படில் யப்லோபமாக ஐந்தாம் வேற்றுமையாயது.(17)

(ஸ்ரீ - வீர - அ-கை.) ஸ்ரீ பகவான் பிரசன்னமானதும் உணர்ந்த பிரகலாதன் இனிது பூசித்தான் எனல்:—மூவரென்பது.

மூவராகி நின்றமுதன் மூலமடைந்த படியறிந்து
தேவதேவன் றனைமுன்னர்ச் செயலினிரட்டிப் பூசனைசெய்
தியாவராலுங் காண்பரிய வெம்மானம்மா வெதிர்ந்தனனென்
றுவதான படியன்பா லவனைத்துதித்தா னசுரேசன்.

(ப - ரை.) மூவராகிநின்ற = மும்மூர்த்திகளாகி விளையாடாநிற்கும், முதன்மூலம் = ஆதிகாரணம், காரணப்பிரமம் என்றபடி: அடைந்தபடியறிந்து = எழுந்தருளி வந்திருப்பதையுணர்ந்து, தேவதேவன்றனை = தேவர்கட்கெல்லாந் தேவனாகிய மகாதேவனை, முன்னர்ச்செயலின் இரட்டிப் பூசனைசெய்து = பூர்வஞ்செய்ததைக் காட்டினும் இரண்டு மடங்கு பூசித்து, இயாவராலும் காண்பரிய = எவர்தம்மாலும் கனவினும் தரிசித்தற்குத் துர்லபமான, எம்மான் = எமது பெருமான், அம்மா = அகோ ஆச்சர்யம், எதிர்ந்தனன் = பிரசன்னமாயினன், என்று = என உரைத்து, ஆவதானபடியன்பால் = இயன்றவகையெழுந்த பக்தியினாலே, அவனைத்துதித்தான் அசுரேசன் = சகலலோக நாயகனைத் தோத்தரித்தான் அசுரஜன நாயகன்.

(ஸ்ரீ - வீர.) தேவதேவன் எழுந்தருளினன் என்றுணர்ந்து இருமடங்குபகரண உபசாரத்தானே தீப்தமாய பூஜையால் தைத்தியேந்திரன் ஸ்ரீ புண்டரீகாக்ஷனை மிகுந்த ஆதரவோடும் நன்குபூசித்தான். பூஜாகிருகத்தை யடைந்து பிரத்தியக்ஷமா யெதிரில் திருச்சந்நிதி செய்துள்ள ஸ்ரீமகா விஷ்ணுவாகிய தேவதேவனை நோக்கிப் பிரகலாதனானவன் பரமப்பிரீதனாய் மகிழ்ச்சி பொங்கித்ததும்பும் வாணியினால் தோத்தரிக்கத் தொடங்கினான். (18)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தோத்தரித்த பிரகாரத்தைக் காட்டல்:—அண்ட, மேலோன், கேதம், என்பன.

அண்டமென்னு மொருவீட்டி லரியபொருள்சேர் சரக்கறையே
சண்டபானு வெனவுதயாத் தமமற்றொளிருந் தற்பரமே
கண்டவுயிர்க ளனைத்திற்குங் களைகணான வான்றுணையே
புண்டரீகை நாயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி.

மேலோனுகிச் சகம்படைக்கும் விளையாட்டுடைய வித்தகனே
நாலோடொருப தனுமுலகி னண்ணுவுயர்ந்த நற்பொருளே
யாலோனுகிக் கண்வளர்ந்த வையாமெய்யா வருண்மூர்த்தி
பூலோகத்தி னயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி.

கேதமிகுந்த வசுரரெனுங் கிளைத்தாமரைக்கு நெடும்பனியே
வேதநெறிச்செல் லமரரெனும் விரிதாமரைக்கு வெய்யோனே
பேதமறுத்தோ ருள்ளமெனும் பெருந்தாமரையிற் பிரமரமே
பூதமனைத்தி னயகமே போற்றிபோற்றி மிகப்போற்றி.

(ப - ரை.) அண்டமென்னும் ஒருவீட்டில் = திரிபுவனமாகிய பிரஹ்மாண்ட மென்
னும் ஒப்பற்றபவனத்தில் அரியபொருள் சேர்சரக்கறையே = அருமையான பொருள்கள்
சேர்ந்துள்ள கோசமே, சண்டபானுவென = பிரசண்ட சூரியனைப்போல, உதய அத்த
மும் அற்று ஒளிருந்தற்பரமே = எழுதலும் விழுதலும் இல்லாமல் பிரகாசிக்கும் பரம்பிர
காசமே, கண்ட உயிர்கள் அனைத்திற்கும் = பிரதீதியாகப்பெற்ற சகல சீவர்கட்கும், களைக
ணைவான் றுணையே = சரண்யனை உயர்ந்த துணையே, புண்டரீகை நாயகமே = ஸ்ரீசெங்க
மலச் செல்வியின் மணவாளரே, போற்றிபோற்றி மிகப்போற்றி = நமஸ்காரம் நமஸ்காரம்
மிகமிகவும் நமஸ்காரம்.

மேலோனுகிச் சகம்படைக்கும் விளையாட்டுடைய வித்தகனே = உயர்ந்தவனுகிச்
சதுர்த்தச புவனங்களையுஞ் சிருட்டிக்கும் கிரீடையையுடைய சர்வஞ்ஞ சிகாமணியே,
நாலோடு ஒருபதெனுமுலகில் நண்ணு உயர்ந்த நற்பொருளே = பதினுன்குலகிலும் கிடைக்
கக்கூடாத மேலான நல்லவஸ்துவே, ஆலோனுகிக் கண்வளர்ந்த ஐயாமெய்யா = ஆலிலை
யின்கண்ணே துயில்கொண்டருளும் குழந்தையே சத்தியவடிவமே, அருண்மூர்த்தி = கிருபா
விக்கிரகமே, பூலோகத்தின் நாயகமே = பூவுலகத்தின் நியந்தாவே, போற்றிபோற்றி மிகப்
போற்றி = நமஸ்காரம் நமஸ்காரம் மிகமிகவும் நமஸ்காரம்.

கேதமிகுந்த வசுரரெனும் = பிறருக்குந்தமக்கும் துயரமே மிக்காக்கும் திதிசுதர்க
ளென்று சொல்லப்பட்ட, கிளைத்தாமரைக்கு = பதுமக்கூட்டங்கட்கு, நெடும்பனியே =
தீர்க்கமான இமமே, வேதநெறிச்செல் அமரரெனும் = மறைமார்க்கத்திற்போம் தேவதை
கள் என்னும், விரிதாமரைக்கு வெய்யோனே = மலாத்தக்கனவாய பங்கஜங்கட்கு மார்த்
தாண்டனே, பேதமறுத்தோர் உள்ளமெனும் = அபேததிருஷ்டியை யுடையவாது மன
மென்னும், பெருந்தாமரையிற் பிரமரமே = விகசிதபங்கஜத்தில் மதுகரமே, பூதமனைத்தின்
நாயகமே = சகலப்பிராணிகளின் நியந்தாவே. போற்றிபோற்றி மிகப்போற்றி = நமஸ்காரம்
நமஸ்காரம் மிகமிகவும் நமஸ்காரம்.

(ஸ்ரீ - வீர.) திரிபுவனத்தின் எப்பவனமுளதோ சுரக்ஷிதஸ் திதியுளதோ, அதனனுகூல
மான அபிராமகோசக் கிருகமும், தன்னுள்ளிருக்கும் முப்புவனத்தையும் தானேபரிபால
னஞ்செய்தலின், சகலபாகிய அந்தாகளங்கதமத்தை யபகரிப்பவரும், சூரியசந்திர அக்கினி
வாக்குக்கரண பிரகாசங்களினும் உத்கிருஷ்டமாய சுயஞ்சோதிப் பிரகாசமும், அன்யசா
ணமில்லாதவர்களாகிய அசரணர்களைக் காப்பாற்றுபவரும், அவிநாசித் தன்மையானே சா
ணர்கமாயவரும், சர்வசக்தி சம்பன்னராய ஈசரும், அதனுனே இராஜசால் அஜரும், சத்துவத்
தால் அச்சுதரும், தமத்தால் ஈசுரரும், சர்வதுக்கங்களையும் அரிக்குந்தன்மையானே ஹரியும்
ஆகியிலங்கும் பரமேசுரராகிய தேவரீரை நமஸ்கரிக்கின்றேன். நீலோற்பல தளம்போலும்

நீலமணியே போலும் கவின்காலுங் காந்தியுற்றவரும், சரற்காலத்திய மேகங்களகன்ற நின்மலமான அம்பரகோடர உபமானமுற்றவரும், பிரமர திமிர கஜ்ஜல அஞ்சனம்போலும் பிரபையுடையவரும், ஆகிய கமலசக்கிர கதாதாரரைப் பணிவாம். அளிக்கூட்டம் போலும் கோமளமாகிய சுந்தரமாகிய விமலமாகிய அங்கங்களை யுடையவரும், வெண்டளத் தண்டாமரைக்குட் மலம்போலுமொளிரும் வெண்சங்குடையவரும், சுருதிகளேயாய கும்கும்மெனச் சப்திக்கும் சப்தங்களைச் செய்யும் பிரஹ்மாவாகிய வண்டாடும் நாபிபதுமத்தை யுடையவரும், தம்முடைய பக்தர்களின் இருதய பதுமதளங்களை ஆதாரமாக வுடையவரும், ஆகி விளங்கும் ஸ்ரீமந்நாராயணரை நமஸ்கரிக்கின்றேன். வெண்ண ககணதாரகைகள் விரியப் பெற்றவரும், புன்னகையால் வெண்மையான திருமுகவடிவாம் பருத்தபூர்ணேந்து சுந்தர பிம்பத்தை யுடையவரும், ஹிருதயமணியாகிய கௌஸ்துபமணியின் மரீசிஜாலங்களேயாய ஸ்ரீமந்தாகினியை யுடையவரும், ஆகிய, ஸ்ரீமந்நாராயண ரென்னும் சரத்காலாகாசத்தை வியாபக வத்துவை நமஸ்கரிக்கின்றேன்.

சகல நெருங்கிய சிருஷ்டிக்காதாரமாகி யிருப்பவரும், யாதொருபாதமு மில்லாமலே சர்வத்திற்கும் இலயத்தான மானவரும், தாமோ எப்போதும் உண்டாகாதவரும், அதனானே விருத்தியாதி விகாரசூனியரும், யாங்ஙனம் அவருக்குத் தேகமுடைமை யெனின் ? கூறல், சத்துவாதி மாயாகுணங்களானே யேற்பட்ட அநந்த கல்யாண குணங்களால் அதிசிறந்தன அபிஜாத சுந்தரமாந் திருமேனியை யுடையவரும், பிரளயகாலத்தில் வடதருதளத்தில் சயனித்துக்கொண் டிருக்கும் குழவியும், ஆகிய ஸ்ரீபகவானைப் பணிகின்றேன், நவவிகசிதமாய நாபிபதுமத்தின் ரேணுக்களானே கௌரம் = பீதம் பொருளால் உதரதேசத்தில் என்டதாம், உதரத்தே கௌரமாயவரும், ஸ்புடமாய்ப் பிரகாசமானமாய கமலையாகிய ஸ்ரீதேவியின் திருமேனியால் அலங்கரிக்கப்பெற்ற திருமார்பை யுடையவரும் இடது திருத்துடையையுடையவரும், தினசமசமயமாகிய சாயங்காலம்போல இரக்த சந்தனகாஸ்மீராங்க இராகத்தை யுடையவரும், கனகநிகர்த்த கவின்காலும் பீதாம்பரசோபிதரும் அதிசுந்தரரும் ஆகி விளங்கும் ஸ்ரீபகவானைப் பஜிக்கின்றேன். திதிசுத நளினங்கட்குப் பனிவீழ்ச்சியாயும், சுர நளினங்கட்குச் சதத உதிதமாய அருக்கபிம்பமாயும், கமலஜப்பிரஹ்மா நளினஜலத்தானே பூரிக்கப்பெற்ற தடாகவடிவினரும், இருதயபதும நிலயரும் விபுவும் ஆகியபரமேசுரரைப் பணிகின்றேன். திரிபுவன நளினியின் சித அரவிந்தங்கள் காத்தி லெச்சூரியனுக்கோ அத்தகையரும், அதனானே திமிரசமானமாய விமோகத்தின்றீபமும், மேன்மையரும், பௌதிகப் பிரகாசரோ அவர் எனின் அல்லர். மற்றோ, நித்தியசுவப்பிரகாசர் அதனானே அஜடர், சித்துரூபமாய ஆத்துமதத்துவம் ஆவர், ஆவதனானே சாக்ஷாத்கார மாத்திரத்தாற் சகத்துக்கட்கும் ஜகத்திலுள்ள ஜீவர்கட்கும் சகலபீடைகளையும் அகற்றுபவராவர் அத்தகையரும் ஆகிய ஸ்ரீஹரியை நமஸ்கரிக்கின்றேன்.

(௪.) சரக்கறையே = சரக்கறைபோற் சகலரும் ஜீவிக்குந் தன்மையினால் அத்தன்மையரே, ஒளிரும் = சகல களங்கத்தையும் போக்கி அனைத்தையும் விளக்கும், தற்பரமே = பரமப்பிரகாசமே.

பனியே = ஸ்ரீநரசிங்காதி அவதார அபிப்பிராயத்தாலென்க; வெய்யோனே=ஞானப் பிரதிபந்தகமான இருள்போன்ற அஞ்ஞானத்தைச் சூரியன்போன்றொழிப்பவரே; இத்தோத்திரம் மூன்றுகவியும் கீர்வாணத்திற் பிரகாராந்தரமாய் விஸ்தாரமா யிருக்கின்றது. கீர்வாணம்:—எட்டுச் சுலோகங்களாற் பிரகலாதன் ஸ்ரீ பகவானைத் தோத்தரிக்கின்றான்:— திரிபுவனமேபவனம் அதன் அபிராமகோசம் அருத்தக்கூட்டம் போலும் யாவரானும் உபஜீவ்யத் தன்மையால் அத்தகைமையாம், கருநெய்தல் மலர்த்தளங்களின் சைலாகாராகி

யெண ஒளிர்வது, கஜ்ஜலரூபம் அஞ்சனம், நயனப்பிரசாத காரணமாகிய அஞ்சனதிரவியத்திற்குப் பகுவிதத்தன்மை யுண்மையின் விசேஷண உபாதானமாம், வேதங்களானே ஓதங்களாடும் விரிஞ்சனேயாய பிரமரத்தை யுந்தியந்தாமரையி லுடையவரை, பிரகலாதனுகிய எனது இருதயமேயாய பதுமத்திற்குச் சலாசயம்போல ஆசிரயபூதரை, திருமார்பிலிரா நின்ற முத்துமணிகளின் மரீசிஜாலமேயாய ஸ்ரீ மந்தாகினியை யுடையவரை, திரிபுவனமேயாய தடாகத்தின் கண்ணே சிதாரவிந்தரை, சிதத்தன்மையும் நரசிம்ஹாதி அவதார அபிப்பிராயத்தானே யாம், ஞானப்பிரதிபந்தகத் தன்மையால்திமிரசமானமாயமோகத்தின், தீபம் போலும் நிவர்த்தகமாயவரை, நவவிகசித பத்மரேணுவெனக் கௌரமாய, மிகவும் பிரகாசமாகத்திருமார்பில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ இலக்குமிதேவியின் திருமேனியினுலே உபபூஷிதமாய அங்கங்களை வுடையவரை, சந்தியாகாலம் போலும் அருண அங்கராகத்தையுடையவரை, அவிரத சுலோகத்தில் நிரந்தரமாற்றியருளும் விசுவசர்க்கலீலையர்க்கு சந்ததம் அஜாதத்தன்மையும், அவர்த்தனர்க்கு விசாலத்தன்மைவும், ஜாடருக்கு அபிஜாததேகத்தன்மையும் அர்ப்பகத் தன்மையும் விருத்தமாம் எனவிரோதாபாசம் விளங்குகின்றது. வர்த்தனமில்லாத தேயாயதில் இயற்கையாயே வியாபகத்தன்மையால், யுகசதங்களில் ஜீர்ணமாயினும் இரம்மியத் திருமேனியுடையவரை, வடபத்திர சாயியானவரை, திதிசுதர்களேயாய தாமரைகளுக்குச் சம்ஹார ஹேதுத்தன்மையானே பனியிடியாயவரை: பிரஹ்மாவேயாய நளினீ = தாமரைத்தடாகம், அநேகமுக பதுமங்களோடு கூடியிருத்தலின், அதன்ஜலாசயமாயவரை, ஹ்ருதிநளினீ நிலயம் = நளினீசப்த மீண்டு பதுமமாத்திர வாசியாம், இருதயமாகிய மார்பில் எப்புண்டரீகமுளதோ அதன் நிலயமாயவரை வணங்குகின்றேன் எனக் கூட்டுக. (19-20-21)

(ஸ்ரீ - வீர - அ - கை.) துதியினுல் மகிழ்வுற்ற ஸ்ரீ பகவான் பிறவாவரங்கேளென்றருள அவ்வாறே வேட்டல்:—என்பதென்பது.

என்பதான துதிபலவு மிசைப்பவிதயங் குளிர்ந்தருளி
யன்பமறுத்துப் பிறவாவா ருயவரங்கே ளெனக்கருணை
முன்பனுரைப்ப வனைத்திதய முளரியினுஞ்சேர் முதற்பொருளே
துன்பமில்லா வுயர்பதமே தருவேயருள்வா யெனச்சொன்னுன்.

(ப - ரை.) என்பதான துதிபலவும் இசைப்ப = கூறிய பிரகாரமாய அநேகதோத்திரங்களாற் ருேத்தரிப்ப, இதயங்குளிர்ந்தருளி = திருவுள்ளம் மகிழ்ந்தருளி, அன்ப =பக்தசிரோரத்தினமே, மறுத்துப் பிறவாவாருய வரங்கேள் =மீண்டும் ஜனியாத தன்மையதாய வரத்தைக் கேட்பாயாக, என = என்று: கருணைமுன்பன் = தயாக்ரகண்யன், உரைப்ப= திருவாய் மலர்ந்தருள. அனைத்திதய முளரியினுஞ்சேர் முதற்பொருளே = சகலாந்தக்கரணகமலங்களிலும் உறைந்தருளும் ஆதிவத்துவே, துன்பமில்லா வுயர்பதமேதருவே = துயரம் அணுவுமணுகாத மேலான பதமியாதோ அதனையே, அருள்வாய் எனச்சொன்னுன் = அருள் செய்வாய் என்பதாகப் பிரார்த்தித்தான்.

(ஸ்ரீ - வீர.) இவ்வண்ணம் மொழிந்த பிரகாரமாய வெகுகுணங்கள் வாய்ந்த ஸ்துதிமொழிகளால் நன்கருச்சிக்கப் பெற்றவரும், அசுரகுலகாலரும், ஸ்ரீதேவியால் ஆலிங்கனஞ் செய்யப்பெற்ற அம்சதேசத்தை யுடையவரும், பிரீதியுடையவரும் குவலயதல நீலரும் ஆகிய ஸ்ரீ பகவான் ஜலதம் மயூரத்தைப்போல் மிகுந்த அன்புடன் எதிரிலிருக்கும் ஆஹ்லாதயோக்கிய அசுரேந்திரனுகிய பிரகலாதனை நோக்கி யருள்செய்யத் தொடங்கினர். ஹேதைத்தியகுல சூடா மகாமணியே! குணநிதியே! மீண்டும் பிறவித்துயர் வாராமல் உப

சாந்தியடையுமாறுய உனக்கத்தியந்த மிஷ்டமாய இவ்வரத்தை நீவாங்கிக் கொள்வாயாக. ஹே சர்வசங்கற்ப பலதரே ! சர்வலோகங்களுள்ளும் பிராணிகளுள்ளும் உள்ளில் இருதயத்தில் இருப்பவரே ! யாதினைச் சர்வகார்ப்பண்ய நிவாரகம் என்றுணர்ந் தருளுகின்றீரோ அதனையே ஆஞ்ஞாபனஞ் செய்தருளுவீராக, அடியேனுக்கு ஹே விபுவாகிய பரமேசுரரே ! இது வினயோக்தியானே யாசனமா மென்றறிக.

(ச.) கருணை முன்பன் = சர்வசங்கற்பவரதன். (22)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் பிரார்த்திக்கப் பெற்ற ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தனது விசாரணையினால் உதிதமாய பிரஹ்மாத்ம தத்துவ சாக்ஷாத்கார விசிராந்தியில்லாமல் ஆத்தியந்திக கார்ப்பண்ய நிவிருத்தி கூடாதென்று திருவுளங்கருதி அதற் கநுகூலமாய வரத்தையருளல்:—சித்தமென்பது.

சித்தப்பிரம மெல்லாம்போய்த் தெளிந்தபரம சுகம்பெற்றுச்
சுத்தப்பிரமத் திளைப்பாற முடிவாம்விசாரந் தோன்றுகவென்
றத்தப்பதும மமைத்தருளி யமலனேக வவன்றுதியான்
மெத்தப்பரவி மலர்தூவித் தொழுதான்விவேகி களின்மிக்கோன்.

(ப - ரை.) சித்தப்பிரமம் எல்லாம்போய் = சித்தத்திலுள்ள மயக்கங்க ளெல்லாம் தீர்ந்து, தெளிந்த பரமசுகம்பெற்று = அதிசொச்சமா யிலங்கும் மேலான வின்பத்தை யடைந்து, சுத்தப்பிரமத் திளைப்பாற=தூயசிவஸ்வரூபத்தில் விசிராந்தியடைய, முடிவாம்= வேண்டிய அளவு, விசாரந் தோன்றுக = ஆராய்ச்சியானது மனத்தே பிரதீதியாகுக, என்று = என்பதாக, அத்தப்பதுமம் அமைத்தருளி = திருக்கரகமலத்தைச் சிரக்கிரிசிகரத்தில் வைத்தருளி, அமலன் ஏக = நின்மலனான பரமேசுரன் பாற்கடற்குச் சென்றருள, அவன்றுதியால் மெத்தப்பரவி = அம்மகாவிஷ்ணுவைத் தோத்திர கலாபங்களால் மிகவும் புகழ்ந்து, மலர்தூவி = பூஜையிற் குசுமாஞ்சலிசெய்து, தொழுதான் விவேகிகளின் மிக்கோன் = வணங்கினன் விவேகிகளுக்குள் அக்ரகண்யனாகிய பிரகலாத ஆழ்வான்.

(ஸ்ரீ - வீர.) சர்வசம்பிரமசம சாந்தியாகிய ஆத்தியந்திக அநர்த்தநிவிர்த்தியின்பொருட்டும், பரமபலமாய நிரதிசயானந்த அடைவின் பொருட்டும், பிரஹ்மவிசிராந்தி பரியந்தமுறும் விசாரம் உனக்கு ஹே அநகனேயுளதாகுக. இவ்வண்ணமருள் புரிந்து திதிபுத்திரேந்திரனை யாசீர்வதித்து, ஸ்ரீமகா விஷ்ணுவானவர் கடலினின்றும் கர்க்கர ஓசைசெய்து கொண்டு கிளம்பியதரங்கம் ஓசையோய்ந்து அடங்குவதேபோலும், மறைந்தருளினர்.

(ச.) ஸ்ரீபகவான்: இளைப்பாற முடிவாம் = விசிராந்தி பரியந்தமான. மெத்தப்பரவி, உத்துவாசனுங்க பூதமான, மலர்தூவி. (23)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீபகவானைப் பூஜித்துப் பதுமாதனத் தமர்ந்து விசாரஞ்செய்யத்தொடங்கல்:—பனியென்பது.

பனிவார்கடலிற் றிரையென்னப் பரமபுருடன் மறைந்ததற்பின்
னினிதாம்பதுமா தனத்திலிருந் திறைவன் றுதிக ளேத்தியபின்
சனியார்விசாரந் தந்தளித்தான் சரநமறுக்குந் தனிமூர்த்தி
நனிநாநம்மை யாரென்று நாடுவோமுள் ளெனநினைவான்.

(ப - ரை.) பனிவார் கடலிற்றிரை யென்ன = குளிர்ச்சிபொருந்தி நீர்நிறைந்த சமுத்திரத்திற் றரங்கம்வந்து போவதேபோல, பரமபுருடன் = உன்னதமான புருடோத்தமன்,

மறைந்ததற்பின் = அந்தர்த்தான மானபின், இனிதாம்பதும ஆதனத்திலிருந்து = மிகவும் அநுகூலமாகிய பத்மாசனத்தில் உறைந்து, இறைவன்றுதிகள் ஏத்தியபின் = பரம்பொருளைத் தோத்திரங்களாற் றோத்தரித்தபின், சனியாவிசாரந் தந்தளித்தான் = சனியாதபதமடையுமாறு ஆராய்ச்சியைக் கொடுத்தருளினர், சநநம் அறுக்குந் தனிமூர்த்தி = சனனமரண சம்சாரத்தை யகற்றும் ஒப்பற்ற தெய்வமூர்த்தி, நனிநாநம்மை யாரென்று= நன்ருக நாம் நமது சொரூபத்தை, எத்தகைத்தா யிருக்கின்றதென்று, நாடுவோம் உள் என நினைந்தான் = ஆராய்ந்து பார்ப்போம்உள்ளே என்பதாக எண்ணினன்.

(ஸ்ரீ - வீர.) பரமதேவராகிய ஸ்ரீமகாவிஷ்ணு வானவர் மறைந்தருளியபின்னர்ப் பூஜையின்கண் மணிரத்ந பரிஷ்கிருதமாய பாச்சாத்திய குசுமாஞ்சலியைத் தானவேந்திரன்றாவி; அதிக சந்தோடத்தோடும் வாசனத்தில் உட்கார்ந்து பதுமாதனத்தனு யிருந்து, தோத்திர பாட விதானகாலத்தில் உள்ளே இனியியம்பும் பிரகாரமாக நன்மனத்தானே நாடுவான் ஆயினன். விசாரவானகவே நீயாவாய் என்று சம்சாரநிவாரக தேவதேவனல் அனுக்கிரகிக்கப்பெற்றேன், அக்காரணத்தால் உள்ளே ஆத்மவிசாரணையைச் செய்வேனக.

(ச.) நினைவான் = நினைந்தவனானன், பாச்சாத்தியம் = பின்னுண்டாவது. உத்வாசன (கிளப்பிவிடுதல்) அங்கபூதமென்பது பொருள். மணிரத்ந பரிஷ்கிருதம் = மணிசிரேஷ்டங்களானே யலங்கரிக்கப் பெற்ற, பாங்குபட விருந்தபத்மா தனம்பகரி, ஞெங்கியிருந்தடியை யூருவிலேமாறுடி, வாங்கி மனமொன்றி வலக்கையிடக்கைமேற், ருங்கிவிழி நாசியினை நோக்குந் தகைமைத்தே,

தடித்தவூருவி ரண்டின்மேற் சாரவைத் தடித்தலங்க விரண்டுந் தன்கையினற், பிடித்துக்காலிற் பெருவிரல் பின்புபோய்ப், படுத்துவைத்தல் பதுமாசனமிதே. என்பது பதுமாதன இலக்கணம். தோத்திரபாட விதியிலீண்டு முன்மொழிந்த தோத்திரவிடயத்தில். (24)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆண்டுச் சர்வதிருசியங்களும் ஆன்மாவின் பொருட்டாதவின் ஆன்மாவையே முக்கியமாகத் துணிந்து அதுவேயிதன் கண்ணியாதாம் என்றாராயத்தொடங்கல்:—யானென்பது.

(ச.) பிரகலாதன் ஆத்ம விசாரஞ்செய்தல்:—யானென்பது.

யானார்முன்ன மெவனுனே னிந்தப்புவியா டம்பரத்தி
லானுதிருந்து நின்றேடி யழுதுசிரித்து மகிழ்ந்தயர்ந்தே
னுவான சகமல்லே னகங்கல்புல்லு மண்மரங்க
டானுய்ப்புறம்பா யசேதனமாஞ் சகநானென்னத் தக்கதுவோ.

(ப - ரை.) யானார்முன்னம் எவனுனேன் = யானியாவன் பூர்வம்யாவனுயினேன், இந்தப் புவியாடம்பத்தில் = இப்புவனுடம்பரத்தில், ஆனுதிருந்து = கெடாதிருந்து, நின்று ஓடி அழுது சிரித்து மகிழ்ந்து அயர்ந்தேன் = நின்று ஓடி அழுது நகைத்துச் சந்தோஷித்து மயங்கியுள்ளேன், நானுவான சகமல்லேன் = பலவகையான வுலகமல்லேன், நகம் கல்புல்லு மண்மரங்கள் தானுய் = மலைபாஷாணம் திருணம் மண் விருக்ஷங்கள் வடிவமாய், புறம்பாய் = பாகியமாய், அசேதனமாம் = ஜடமாம், சகம் = உலகம், நானென்னத் தக்கதுவோ = அகமென்று சொல்ல யோக்கியமாமோ.

(ஸ்ரீ - வீர.) இந்தப்புவன ஆடம்பர விவகாரத்தில் ஈடுபட்டுள்ளயான் முதலில் என்ன வடிவமா யிருக்கின்றேன், பேசுகின்றேன் செல்கின்றேன் நிற்கின்றேன், சர்வ உத்யோகத்

தானே விடயங்களை யுபபோகிக்கின்றேன். அவற்றுள் தேகத்தினும் வெளியேயிருப்பது ஆண் டான்மாவாகாதாம் எனல்;—சகமென்பது. விருக்ஷதிருண பர்வதசகிதமாய இந்த ஜகத்தானது ஆண்டியானுகேன், யாதுபாகியமாய் அசுத்தமாய் அத்தியந்தம் அசேதனமாய் உளதோ அஃதெங்ஙனந்தான் யானுவேன்.

(ச.) இருந்தென்பது முதலியது சர்வேந்திரிய வியாபார உபலக்ஷணம், சர்வேந்திரிய வியாபாராபிமானியான நான் எத்தன்மையனு மென்பது விசாரோபக்கிரமம். நானுவான சகமல்லேன் = இச்சகத்துயானன்று, வாகியமாதலினுனும் ஜடமாதலினுனும், என்பது பொருள். (25)

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேகமும்சத்தமும் அகமன்று என்றுதேர்தல்:—இல்லென்பது.

இல்லாவிடத்துண் டாய்மூக மெனலாய்க்காற்றி லியங்குவதாய்ச்
செல்லாநின்ற சிலநாளிற் சிதைந்துசடமா முடனுனே
நில்லாதாய்ப்பொய்க் கேதோன்றி நிராகாரமதா யறிவின்றிப்
புல்லாவறிவிற் செவிக்குணவாய்ப் போன்றுஞ்சத்த நானுமோ.

(ப - ரை.) இல்லாவிடத் துண்டாய் = இல்லாதிருந்தும் எழுந்து தோற்றுவதாய், மூகமெனலாய் = ஒன்றும் பேசாததாய், காற்றில் இயங்குவதாய் = வாயுவானடிப்பதாய், செல்லாநின்ற சிலநாளில் = கழியாநின்ற சொற்பதினங்களில், சிதைந்து =கெட்டுப்போம், சடமாம் உடல்நானே = அசேதனுமாகிய தேகம்யானே, நில்லாதாய் = நிலையற்றதாய், பொய்க்கேதோன்றி = மித்தையாகப் பிரதீதியாவதாய், நிராகாரமதாய் = சூனியாகிருதியதாய், அறிவின்றி = சடமாய், புல்லா அறிவிற்செவிக்குணவாய் = அவிவேகதசையிற் சுரோத்திரத்திற்கு விடயமாய், பொன்றும் = அழிவுபடும், சத்தம் நானுமோ = ஓசையகமாமோ.

(ஸ்ரீ - வீர.) அசத்தாகவே யிருந்தும் சத்துப்போலத் தோற்றுவதாய், அறிவின்றி யொன்றையும் உணராமையானே சாற்றச்சமர்த்தற்றதாய், பிராணவாயுக்களால் சுவசஞ்சார க்ஷணத்தில் சஞ்சலிதமாய், அற்பகாலத்தில் விலயமாவதாய், அசேதனமாய இத்தேகம் யானல்லேன், இவ்வண்ணம் சப்தாதி விடயங்களும் ஆத்மாவாகாதாம் எனத்தொடங்கல்:— நில்லாதாயென்பது. அசித்துருபமாய கர்ணசஷ்குலியினுல், தாரம் = சுரம், மந்திரம் பதம் வாக்கியம் என்பதாதி பேதங்களானே கற்பிக்கப் பெற்றதாய் = சமர்த்திய மானமாய், க்ஷணத்தில் க்ஷயிப்பதாய், க்ஷயித்தன்மையானே சூனியாகிருதியதாய், சூனியமாய ஆகாயத் தினின்றும் உண்டாவதாய், தோன்றும் சப்தம் அசேதனமாகலின் யானல்லன். ஆகாசம் சூனிய சுபாவமாகாதாயினும் ஆன்மசத்தை யினின்றும் பிருத்தக்காகச் செய்யில், சொரூப மற்றதாமெனச் சூனியத்வ உக்தியாம், நேத்திராதிகட்கு விடயமாய ரூபாதிகளின்மையின் சூனியத்வ உக்தியெனினும் அமையும்.

(ச.) உண்மையாக இல்லாதிருந்தே கற்பிதமாம் பூதேந்திரியக் கூட்டரவிற்கே தேக மென்னும் விவகாரமாதலின், உடல் நானே = தேகம் நானலன், ஓ என்பது எதிர்மறை, ஜடமாதலினுல், ஜடத்துவ மெங்ஙனமெனின், அசத்திலுண்டானதாலும், மூகமாதலானும், பவனப் பிரேரிதமாதலாலும் என்பதுபொருள், பிரேரிதம் = காரியப்படுவது. பொய்க்கே தோன்றி = ஆகாசத்திற் பிறந்ததாதலின் சூனியஜன்னியமாய்=நிராகாரமதாய், அமூர்த்த மாதலின், சூனியாகிருதியாய், இவ்விடத்தும் சாத்தியசாதனபாவங் கூட்டுகமுன்போல்.(26)

(ஸ்ரீ - வீர - அ - கை,) பரிசஞ் சுவை உருவம் கந்தம் என்பவை நான் அல்லன் எனல்:—தோல், கணத்தென்பன.

தோலிலன்றி யறிவரிதாய்த் தோற்றமின்றிக் கணத்திறந்து
கோலுமறிவா லறிந்தறிவு கூடாப்பரிச நானல்ல
காலிலசைந்து வசித்துருவாய்க் காதன்மிக்குக் கணத்திறக்குந்
தாலுவுணவாய்த் திரவியத்திற் சனித்துச்சடமாஞ் சுவைநானே.

கணத்தினிறக்குங் காண்பவற்றிற் காட்சிதன்னிற் பற்றாகிப்
புணர்ப்பில் காண்பானிடத் திறக்கும்போத மில்லாவொளிநானே
குணக்குழக்கா மசேதனத்தாற் குறிப்பதாகிச் சடமாகி
மணக்குநொய்ம்மை நியமங்கள் மருவுகந்த நானுமோ.

(ப - ரை.) தோலில் அன்றியறிவரிதாய் = துவக்கிலல்லாமல் உணர முடியாததாய், தோற்றமின்றி = அப்பிராப்பியமாய், கணத்திறந்து = க்ஷணவிநாசினியாய், கோலுமறிவா லறிந்து = சிற்பிரசாதத்தானே பிரதீதியாவதாய், அறிவுகூடா = அசேதனமாய், உஷ்ண பரிசம் = ஊறு, நானல்ல = யானுகேன்; காலிலசைந்து = சொற்ப மசைவுடையதாய் அசித்துருவாய் = துச்சமாய், காதன்மிக்கு = லோலமுடையதாய், கணத்திறக்கும் = லோலசத்தையோடு கூடியதாய், தாலுவுணவாய் = ஜிஹ்வையாற் பத்தாத்மாவாய், திரவியத்திற் சனித்து = திரவியநிஷ்டமாய், சடமாம் = அசேதனமாம், சுவை = இரசம், நானே = அகம் ஆவனே.

கணத்தின் இறக்கும் = க்ஷணவிநாசிகளாய, காண்பவற்றில் = திருசியங்களில், காக்ஷி தன்னில் = தரிசனத்தில், பற்றாகி = லீனமாய், புணர்ப்பில் காண்பான் இடத்திறக்கும் = கேவல திருஷ்டாவின் கண் க்ஷீணமாம், போதம் இல்லா ஒளிநானே = அசேதனமான ரூபமியானே. குணக்குழக்கா மசேதனத்தால் = க்ஷயமுடையதாய்ச் சடமாயுள்ள நாசியால், குறிப்பதாகி = பரிகற்பிதமாய், சடமாகி = அசேதனமாய், மணக்குநொய்மை நியமங்கள் மருவுகந்தம் = இடைவெளி யுள்ளதாய், அநியதாகாரமாய் வீசும்மணம், நான் ஆமோ = அகம் ஆவனே.

(ஸ்ரீ - வீர.) துவக்காலுணரத் தக்கதாய் க்ஷணவிநாசிநியாய், ஒரொருகாற் கிடைப்பதாய், ஒரொருகாற் கிடையாததாய், அறிவின் திருவருளால் தோற்றும்வடிவதாய், அசேதனமாய உஷ்ணத்வாதி ஸ்பரிசனம் யானுகேன்; இத்தகைய இது நித்தியப்பிராப்த சுபாவ ஆத்மா ஆதற்குத் தகுதியதாகாதாம் என்பது கருத்து, அநித்தியமாய்ச் சலமாய், ஜிஹ்வையாற் கட்டுப்பட்ட வியற்கையதாய், இரசனேந்திரிய அதீனசித்திகமாய், துச்சமாய், சிறிது அசைவதாய் அதாவது நாவின் நுனியினின்றும் களம்வரை சுவைத்து விளையாடுவதாய், பொருளி லிருப்பதாய், அசேதனமாய இரசம் அகமன்று. திருசியத்தில் = திரவியத்திலும் தரிசனத்தில் = சக்ஷுஷிலும், லீனமாய் = அவ்விரண்டன் அதீன சித்தியை யுடையதாய், அவ்விரண்டும் கணவிநாசிக ளாகலின் இதுவும் கணவிநாசியாய். கேவலம் அசங்கமாய திருஷ்டாவின் கண்ணே உபபோக ஜனனத்தானே உபக்ஷீணமாவதாய், அசேதனமாயுள்ள ரூபம்யானல்ல. அந்நவத்சடமாய் = அப்பிரகாசமாய், க்ஷயியாய கிராணஇந்திரியத்தானே பரிகற்பிதமாய், பேலவமாய் = இடைவெளி யுள்ளதாய், விரளமாய், காலத்தால் வேறொரு விதமாய்ப் பரிணும மடைதலின் நியதமின்றிய ஆகாரமுடையதாய், அசேதனமாய் மிளிரும் கந்தம்யான் ஆகேன்.

(ச.) தோலினன்றி = தொக்கிந்திரியத்தால் அறியப்படுவதின்றி, பிரகாராந்தரத்தால், அறிவரிதாய், கோலுமறிவால் = இந்திரியத் துவாரத்தால், வெளிப்புறப்படு முணர்வால்;

அறிந்து = பிரகாசமுறுவதாய், காலிலசைந்து = காற்றெனச் சலிப்பதாய், காற்றினுல் எனினும் ஒக்கும்; கணநிலையாம்=க்ஷணசத்தையுள்ள, தாலு=ஜிகுவையால், உணர்வாம்= அறியப்படுவதான.

காண்பவற்றில் = கடாதியிலும், காட்சிதன்னில் = நேத்திரேந்திரியத்திலும், பற்ருகி = கூடினதாய், புணர்ப்பில் காண்பானிடத்து = கேவலமான திருஷ்டாவினிடத்து, இறக்கும் = இல்லாததான, கேவலக்கிரகணம் உபகிதநிவிர்த்தி நிமித்தமாம், குணிக்கும் = கந்தமுள்ள, ஜடமான, மூக்காம் = மூக்கின்வழியாய் வெளிப்புறப்படும், மணக்குநொய்மை நியமங்கள் மருவும் = கணுந்தரத்திற் கந்தாந்தரமாதலின், நியதாகாரமற்ற, பேலவம் = விரலம். (28)

(ஸ்ரீ-வீர - அ-கை,) சப்தாதி விடயங்களின் அனுன்மத்தன்மை வசனம், வசன ஆதான ஆதிகட்கும் சமானமாகி, யாண்டும் திரிபுடிகட்கு நியாயசாமியத்தால் அனுன்மத்தன்மையுபலக்ஷணம் ஆம், ஆகவே, அகங்கார மநோபுத்தி சித்தமென்னுந் திரிபுடிகளும் அநான்மத்தன்மையானே நிராசமாகவே, சுத்தசின்மாத்திர ஆன்மாவே பரிசிஷ்டமாம் என்னுங் கருத்தாலுரைத்தல்:—எனதற்றென்பது.

(ச-அ-கை.) ஆயின் நீயாவன் எனிற்கூறல்:—எனதற்றென்பது.

எனதற்றெண்ண மெல்லாம்போ யிளைப்பற்றைந்து பொறிமயல்போ
யனகவறிவாய்த் தொழிலின்றி யறியும்பொருடீ ரறிவேயாய்க்
கனமாயுள்ளும் புறம்பினுநிட் களமாயுண்டா மாத்திரமாய்ச்
சநநமரணமிலா வென்னைத் தயங்கக்கண்டேன் சத்தியமே.

(ப - ரை.) எனது அற்று = மமதையற்று, எண்ணம் எல்லாம்போய் = மனவிருத்திகள் ஓய்ந்து, இளைப்பற்று = சாந்தமாய், ஐந்துபொறி மயல்போய் = பஞ்சேந்திரிய பிரமமகன்று, அனகவறிவாய் = சுத்தசேதனமாய், தொழிலின்றி =நிட்கிரியமாய், அறியும் பொருள்தீர் அறிவேயாய் =சேத்தியவர்ஜித சின்மாத்திரமாய், கனமாயுள்ளும் புறம்பினும்= பாகிய அந்தரவியாபியாய், நிட்களமாய் = அவயவமற்றவனுய், உண்டாமாத்திரமாய் = சன்மாத்திரமாய், சநநமரணம் இலா என்னை=பிறப்பிறப்பில்லாமல் அமலமாயிருக்கும் என்னை, தயங்கக்கண்டேன் சத்தியமே = சேடித்து விளங்கக் கண்டனன் உண்மையே.

(ஸ்ரீ - வீர.) நிர்மமனுய் அமனனுய், சாந்தனுய், ஐந்து இந்திரியப் பிரமமகன்றவனுய், கலைகலினை யற்பவனுய், சுத்தசேதனனுகவே யான் உள்ளேன். சேதன மென்றதானே சேதனுவானுகிய ஜடாம்சத்திற்கும் கிரகணம் ஆகவேண்டாம் எனவதன் பரிசோதனைப் பொருட்டுக் கூறல்:—அறியும் பொருள்தீர் அறிவேயாய் என்றதாம். திருசியமற்ற திருக்குமாத்திரமாகிய யான் இவ்வியாவற்றையும் விளக்கிக்கொண் டிருக்கின்றேன், வெளியிலும் உள்ளிலும் வியாபித் திருக்கின்றேன், நிட்கல அமலசன்மாத்திரனேயான்.

(ச.) ஐந்துபொறிமயல்போய் என்பதனுல் நேத்திராதி இந்திரிய தாதான்மியம் நீக்கப்பட்டது, எண்ணம் எல்லாம்போய் = மனோவியாபாரம் நீங்கி, எனதற்று=எனதென்னும் அபிமானமற்ற அனகங்காரமாய், அனக அறிவாய் = சுத்தசேதனமாய்; ஜீவபாவத்தையும் ஒழித்தல்:—அறியும் என்றது. அறியும் பொருள்தீர் அறிவேயாய் = திருசியசம்பந்தமற்ற சின்மாத்திரமாய், உள்ளும் புறம்பினும் கனமாய் = பாகியாந்தர வியாபியாய், நிட்களமாயுண்டாமாத்திரமாய் = நிட்களாமல சன்மயமாய், மூலம்:—மம என்பது அவ்யயம், நிர்கத

மாயது மம என்னும் அபிமானம் எதனினின்றும். கலாகலனவர்ஜித: = மாயாசம்பந்த ரகிதம், நிட்களாமலசன்மய:= நிஷ்கலம் = நிரம்சம், அமலமும் எச்சத்துவத்து அவ்வடிவமாய். (29)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இவ்வண்ணம் துவம்பதார்த்தம் பரிசுத்தமாயதை விசாரித்து அம்முகத்தானேயே தற்பதார்த்தத்தையும் பரிசோதித்துத் துணியும் பொருட்டுத் தொடங்கல்:—ஆவாவென்பது.

ஆவாவிப்போ துள்ளபடி யறியுநெறியி லெனையறிந்தே
னோவாவிகற்ப மற்றறிவுள் ளொளியாஞ்சீவ னுருவிதுவோ
தாவாதெங்கு முளநானுந் தத்துவத்திற் சகமெல்லா
மேவாநின்ற விரவிமுதற் கடமீறாக விளங்கியதால்.

(ப - ரை.) ஆஆ இப்போது = ஆச்சரியம் ஆச்சரியம் இப்பொழுது, உள்ளபடி = யதார்த்தமாக, அறியுநெறியில் = உணரும் மார்க்கத்தில், எனையறிந்தேன்=என்னையுணர்ந்தேன், ஓவாவிகற்பம் = ஓயாதசலனம், அற்று =ஒய்ந்து, அறிவுள்ளொளியாம் = சித்துப்பிரகாசமாம், சீவனுருவிதுவோ = ஆன்மவடிவம் இஃதோ, தாவாதெங்கும் உள நானும் தத்துவத்தில் = குறைவின்றி யெவ்விடத்திலும் இருக்கும் யானும் உண்மைவத்துவில், இரவிமுதல் கடம் ஈறாக மேவாநின்ற சகம் எல்லாம் = சூரியனே முதலாகக்குடம் வரையுமாகப் பொருந்தி நிறையும் உலகம் யாவும், விளங்கியதால்=இலங்காநிற்கும், ஆல் அசை.

(ஸ்ரீ - வீர.) அன்னிய நிரபேக்ஷத் தன்மையானே உத்தமதேஜசுவாய்ந்த இச்சேதனமாகிய தீபத்தானே, இக்கடபடாதியாய்ச் சூரியாந்தமாயுள்ள யாவுமே விளங்காநின்றன: ஆச்சரியம்! இப்போது உண்மையாகவே இது அது முழுதும் என்னால் ஸ்மரிக்கப்பெற்றது வியதாதி விகற்பசூனிய சித்வடிவப் பிரகாசமாகிய இவ்வாத்மாவாக யானிருக்கின்றேன், என்னுமிது அநாத்ம ஈசுவர நிராசமாம்.

(ச.) ஆஆ என்பது அறிந்ததைக் குறிப்பித்தது, சீவனுரு= ஆன்மரூபம், நானுந்தத்துவத்தால் = சேதனமான நானென்னுந் தீபத்தால், இக்கடபடாதியாய் இரவியீறாகிய சகமெல்லாம் விளங்கியது; அதனதொளியால் ஈதனைத்தும் விளங்குகின்றது என்னும் சுருதியினு லென்றுணர்க. மூலம்:—ஆ என்பது மிருதியைக் குறிக்கும் அவ்வயமாம். சத்தியம் அகிலம் சர்வான்மகமுமாய இவ்வுருவம் என்னால் உன்னப்பெற்றது என்றன்னுவயம். அதே உருவத்தை விகற்பமற் றென்பதாதியாற் காட்டியதாகும்.

(ஸ்ரீ - வீர.) என்னாலே ஐம்பொறிகளும் திகழ்கின்றன வென்றும் எவையும் சென்றபோதும் யானே யொளிர்வன் என்றும் எண்ணுதல்:—உள்ளில் என்பது.

உள்ளிலொளியாற் கனற்பொறிக ளொளிர்வதென்ன வைம்பொறியுந்
தெள்ளியறியு மென்னாலே செறிசித்திரமாய்த் திகழ்ந்தனவாற்
றள்ளிலயனோ டுட்பட்ட தனிக்கற்பாந்தத் துயிரனைத்தும்
வெள்ளவெளியா மப்போது மீளாதொளிரு மென்வடிவே.

(ப - ரை.) உள்ளில் ஒளியால் கனற்பொறிகள் ஒளிர்வதென்ன = தேஜசின் உட்பிரகாசத்தால் அக்கினி கணபந்திகள் பிரகாசிப்பதொப்ப, தெள்ளியறியும் என்னாலே=தெளிவாக உணரும் என்னாலே, சித்திரமாய்ச் செறியைம் பொறியும் திகழ்ந்தன = விசித்திர இந்திரிய விருத்திகள் விளங்கின, ஆல், அசை, தள்ளில் அயனோடு உட்பட்ட=அகற்ற முடியாத பிரஹ்மாவோடும் அந்தர்க்கதமான, தனிக்கற்பாந்தத்து = ஒப்பற்ற கற்பமுடிபில்,

உயிரனைத்தும் = ஜீவர்களனைத்தும், வெள்ளவெளியா மப்போதும் = அடியோடுமறைந்த அப்பொழுதும், மீளாது = அகலாது, ஒளிரும் = பிரகாசித்துக் கொண்டிருக்கும், என் வடிவே = என்னுடைய வுருவமே.

(ஸ்ரீ - வீர.) தேஜசாந்தப் பிரகாசத்தானே எங்ஙனம் அக்கினிபூதங்களாய அங்காரகண பந்திகள் விளங்குகின்றனவோ, அங்ஙனம், ஈண்டு விசித்திரமான இந்த இந்திரியவிருத்திகளியாவும் விளங்குகின்றன விதனுனே. உத்தரோத்தரமாகப் பதின்மடங்கு பார்த்திவாதியாவரணவிருத பிரஹ்மாண்டவடிவ விரிஞ்சிபவனத்தின் பரத்தினும், சாங்கிய வைஷ்ணவாதி தந்திரப் பிரசித்தங்களாய இருபத்து நான்கு எண்ணிக்கைவாய்ந்த தத்துவங்களின் அந்தத்தினும், சைவபாசுபதர் கருதியுள்ள முப்பத்தாறு எண்ணிக்கைவாய்ந்த தத்துவங்களின் அந்தத்தினும், பதம்பரப்புவதாகி யெனதுரூபம் விரிவையே யடைகின்றது இன்றும் நீங்குவதில்லை; விரிவையே யென்றது வாஸ்தவமேயாய விஸ்தாரத்திற்கு விரிவுறுந்தன்மையானே கற்பனையாம்.

(ச.) ஐம்பொறியும் = இவ்விசித்திரேந்திரிய விருத்திகளும், உள்ளிலொளியாற் றெள்ளியறியு மென்னுலே, திகழ்ந்தனவால், கனல் = அந்தர்க்கதாக்கினியால், பொறிகள் = காட்டகணங்கள், ஒளிர்வதென்ன, அப்போதும் இப்போதும் மீளாதொளிருமென்வடிவே = தேசகாலங்களால் அபரிச்சின்னமாதலின் எவ்விடத்தும் பரிபூரணமாய் விளங்குவது எனது சொரூபமென்பது பொருள். எனது சைதன்யரூபம் சத்தியலோகத்தின் மேலினும், கற்பாந்தத்தினும், ஸ்தானத்தைச் சம்பாதித்துக்கொண்டு பரவாநிற்கும், இன்றும் அகலுவதில்லையாம் என்பது கருத்து. (31)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போதவடிவமே பூரணமாதலின் ஒதருபேதம தோதுறுமாறென் எனல்:—இவனென்பது.

இவனானென் றுள்ளேபற்று மெண்ணமெங்கே யெல்லையறப்
புவனமெல்லா நிறைந்தொளிரும் போதவடிவா மென்றனக்குக்
கவருமனப்பா வனைதானே கருதிலுண்டோ முடிவில்சுகத்
துவமையில்லா வுபசாந்த வுணர்வாங்கண்ணே யுலகெங்கும்.

(ப - ரை.) இவன் நான் என்றுள்ளே பற்றும் எண்ணம் எங்கே = இவன்யான் என்பதாக ஆந்தரத்தில் அவலம்பனஞ் செய்யும் நினைவுயாங்ஙனமாம், எல்லையறப் புவனம் எல்லாம் நிறைந்தொளிரும் = தேசகாலாதிகளால் எல்லை கட்டப்படாமல் எல்லாவுலகங்களிலும் பூரித்திலங்கும், போதவடிவாம் என்றனக்கு = ஞானவுருவமாம் எனக்கு, கவருமனப் பாவனைதானே = கிரகிக்கும் சித்தத்தின் சிந்தனையே, கருதில் உண்டோ = ஆராயில் உளதாமோ, முடிவில் சுகத்துவமையில்லா =அனந்தாநந்த உபமானரகித, உபசாந்த= உபசமமய, உணர்வாங்கண்ணே = சின்மயதிருஷ்டி, உலகு எங்கும் = சர்வதிருஷ்டிகளிலும் ஐயமுறும்.

(ஸ்ரீ - வீர.) இத்தேகாதி யான்என்னும் கற்பனையுள்ளே எங்ஙனமிருந்ததோ இத்துணைக்காலம்; பற்றுக்கோடற்றதே யாகுமிது, அபரியந்த ஆகிருதியை யுடைய எனக்கு இவ்வற்பத்தகைமையாதல் கூடுமோ ? கூடவே கூடாதாம். இதுநீ இதுயான் என்பது பொய்யேயாய மயலேயாம், தேந்தானியாதாம் ? தேகத்திற்கே அப்பிரசித்தியாம் போது அதேகந்தானியாதாம் ? வந்தியா புத்திரனுக்கே போலும், அவனைக் கொல்பவனும் வெளியாகாமையின், இவ்வண்ணம் இறந்தவ னியாவன் ? பிராணனுக்கே அப்பிரசித்தமாக, அஃதற்ற

வனியாவன் ? யாவன்ருன் பிராணதாரணேவடிவ வாழ்க்கையை யுறுவன் ? அநந்தாநந்த சம் போகமாய், பரோபசம சாலினியாய், தூயதாயுள்ள இச்சின்மய திருஷ்டி அகிலதிருஷ்டி களிலும் ஐயம்பெற் றிலங்கும்.

(ச.) அபரிச்சின்னமான ஆன்மாவிற்கு இவனுனென்னும் பரிச்சேத பாவனேயானது நிராலம்பமும், நிரேதுகமுமா மென்பதுபொருள். உபசாந்த வுணர்வாம் கண்ணே = எனது திருஷ்டியே, உலகெங்கும் = சகலவஸ்து தரிசனங்களிலும், முடிவில் சுகத்து = அநந்தா னந்தானுபவத்தினல், உவமையில்லா =உவமையற்றதாம். பிரகிருஷ்ட உபசமசாலினியாய இவ்வெனது திருஷ்டி, சமஸ்தவஸ்து தரிசனங்களிலும் அநந்தமான ஆனந்தத்தை யநுப விப்பதாய்ச் சின்மயமாய் ஐயத்தையடையு மென்பது அன்வயமாம். (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சர்வான்மகமாய்ச் சுத்தமாயிருக்கும் பிரத்தியக் கான்மாவாக விலங்கும் என்பொருட்டே நமஸ்காரமெனல்:—நோக்க வென்பது.

நோக்கப்பட்ட நோக்கெல்லா நுண்மையறிவா நோக்கொன்றே
யாக்கப்பட்ட வுயிரனேத்தி னகத்தாயறிவ திலாவறிவாய்த்
தாக்கப்பட்ட தொன்றில்லாத் தனித்தத்துவமாய்த் தனேயன்றிப்
போக்கப்பட்ட தில்லாவெம் பொருட்டுவணங்கிப் புகழுதுமால்.

(ப - ரை.) நோக்கப்பட்ட நோக்கெல்லாம் = பார்க்கப்பட்ட பார்வையாவும், நுண் மையறிவாம் நோக்கொன்றே = சூக்குமசித்தாம் பார்வையேகமே, ஆக்கப்பட்ட வுயிரனேத் தினகத்தாய் =படைக்கப்பட்ட சரீரங்களோடு கூடியபிராணிக ளெல்லாவற்றின் உள்ளாய், அறிவதிலா அறிவாய் =திருசியத்தன்மை விடுபட்டசித்தாய், தாக்கப்பட்ட தொன்றில்லாத் தனித்தத்துவமாய் = சமபந்திக்கத்தக்க திருசியங்கள் யாதொன்று மில்லாதகேவல உண் மைவத்துவாய், தனேயன்றிப் போக்கப்பட்டதில்லா வெம்பொருட்டு = பிரத்தியக்காத்மா வாய தன்னேத்தவிர அன்னியமில்லாத் தன்மயமான எம்பொருட்டு, வணங்கிப்புகழுதும் = நமஸ்காரஞ்செய்து தோத்தரிப்பாம், ஆல், அசை.

(ஸ்ரீ - வீர.) சர்வபாவாந்தரத் திருக்கப் பெற்றதாய், திருசியம் விடுபட்ட சிதாத்மா வாய். பிரத்தியக்குச் சேதனரூபமா யிலங்கும் என்பொருட்டே நமஸ்காரம் நமஸ்காரம்.

(ச.) அறிவாநோக்கொன்றே = சின்மயமான அத்திருஷ்டியே, நோக்கப்பட்ட நோக் கெல்லாம் = அகில திருஷ்டிகளிலும் நுண்மையா மென்பது பொருள். உயிரனேத்து மகத் தாய் = சர்வபாவத்திற் குள்ளுமிருப்பதாய், தாக்கப்பட்ட தொன்றில்லா = திருசியசம்பந்த மியாதுமற்ற, தனித்தத்துவமாம் = பிரத்தியக்குச் சைதன்னியமா , போற்றப்பட்ட தென் பது போக்கப்பட்டது எனத்தொடை நோக்கித்திரிந்து நிற்கின்றது. ஆன்மாவே தேவதை யனேத்தும் என்னுஞ் சுருதியினல் ஆன்மா அத்துவிதீயனுதலின் றனக்கே வணக்கந்தகும். சர்வபதார்த்த அந்தரியாமியான விஷயசம்பந்த ரகித சற்சித்ரூபமென்னும் பிரத்தியக் கான்மாவாகிய எனக்கு நமஸ்கார மென்றதாயிற்று. (33)

(ஸ்ரீ - வீர - அ - கை ) நிர்விகாரசேதன சந்நிதியில், சகலசக்திகளும் நடிக்குமெனல்:— அறவுமென்பது.

அறவுநொய்தாய்ச் சமமாகி யவிகாரமதா யதீதமதா
யிறவுநிகழ்வோ டெதிர்வென்ன வெண்ணுங்கால மூன்றிலதாய்ப்
பிறவுநினேக்கு நினேவின்றிப் பேதமற்ற வறிவாலே
நிறைவிதான சத்தியெலா நேரேசெய்யப் பட்டனவே.

(ப - ரை.) அறவு நொய்தாய் = அத்தியந்தம் சூக்குமமாய், சமமாகி = எங்கும் ஒரு படித்தாய், அவிகாரமதாய் = விகாரமற்றதாய், அதீதமதாய் = சகலமுங்கடந்ததாய், இறவு நிகழ்வோடு எதிர்வு என்ன = பூதவர்த்தமான பவிஷ்யத்தென்று சொல்லப்பட்ட, எண்ணுங்கால மூன்றிலதாய் = கணக்கிடும் காலத்திரயா தீதமதாய், பிறவுநினைக்கும் நினைவின்றி = எண்ணும் எண்ணங்களும் எண்ணப்பட்ட விடயங்களும் இல்லாததாய், பேதமற்ற அறிவாலே = எவ்வேற்றுமையுமற்ற உணர்வானே, நிறைவிதான சத்தியெலாம் = விசித்திரமான சக்திகளியாவும், நேரேசெய்யப்பட்டனவே = சந்நிதிமாத்திரத் தானேயியற்றப் பெற்றனவேயாம்.

(ஸ்ரீ - வீர.) இயற்கையின் நழுவாததாய், அதனானே யேகரூபமாய், வாஸ்தவ விகார சூனியமாய், அவ்வச்சக்தி காரியானுசந்தானத்தோடு கூடியதாய், விளங்கும் பரமான சித்தினாலே விசித்திரசக்திகள் செய்யப் பெறுவனவாம். அற்றேல், விசித்திரமாய அருத்தங்களின் விசித்திர வெளிக்காட்சியால் யாங்ஙனஞ் சித்திற்குச் சமதையெனின்? விகற்பஹீனமான சித்தானது கோடிக்கணக்கான பதார்த்த திருஷ்டிகளில் ஒப்பாகவே நிகழ்கின்றமையின் என்க. திக்குக்கால வேற்றுமை கொண்டும் விடமபாவ மடையாதாம், சௌரியின் பிரபை போலும் சிற்பிரபை விளங்கலின், ஒன்றே பலவாய்க் கணுவுறழ வொளிராநிற்கும், நிற்கவே பரிபூர்ண அகண்டமாய சுத்தசித்தே அபின்ன காலத்தைப் பின்னியதாயே அதீதாதி திரிகால விவகார சதபின்ன மென்னவும், பிரத்தியக்ஷ அனுமிதி யுபமிதியாதி அநந்தமானமேய புருஷபேத பின்னவித்தார மென்னவும் விளங்கிக்கொண் டிருக்கும். இதனானே காலபேதம் விருத்திபேத முறினும் அவற்றின் கரியாய அறிவுக்குப் பேதமின்றென்றும் அது பூர்ணமே யென்றும் அறிக. இதனானேயே இனிப்பிரண்டு ஆதல் கசப்பிரண்டு ஆதல் ஒரேபோதில் ஆசுவாதிக்கப் பெறின், விடயபேத மிருப்பினும் அநுபூதிபேத மிலதாம், இலதாகவே விடயாதிபேதம் சிற்பேதப்பிரயோஜக மாகாதென்க. கூறியபொருளையே கூறுவேறாற் கூறல்:- இறவு என்பதாதி, நிகழ்கால திருசியத்தை யுபேக்ஷித்து, சென்றதிருசிய வாசனைப் பந்தனங்களானே ஹீனமான, திருசிய ஆதாரமாய காலத்திரயத்தையும் காணாத சித்திற்கு, எதிர்வாம் திருசியசையோகமும் சம்பவியாதாம், ஆகவே சமதையே நன்குசேடியாநிற்கும்.

(ச.) அறிவாலே = சித்தினாலே, நிறவிதான சத்தியெல்லா நேரேசெய்யப் பட்டனவே = விசித்திரங்களான சக்திகள் ஜகசிருஷ்டியாதிக்கு அநுகூலங்களான பிரமாதிரூப மூர்த்திகளாகத் தரிக்கப்பட்டன வென்பது பொருள். மூன்றிலதாய் = மூன்றையும் அநுசந்தியாததாய், நினைவின்றி = சங்தோஷக் கிலேசமற்றதாய், பேதமற்ற = திருசியபேதத்தையுபேக்ஷிக்கும், அறிவாலே யென்று கூட்டுக. அறவுநொய்தாய் = அத்தியந்தம் சொச்சமாய்; சமமாகி = ஒப்புறுவதாய். அவிகாரமதாய் = நிர்விகாரமாய்ப் பரமாய். அதீதமதாய் = களங்கமலம் விடுபட்டதாய்; மூலம்:—உபேக்ஷித்ர்யா என்பது த்ருந் நந்தத்தானே, ருந்நேப் யோநீப்பென்பதால் நீப்பில் உருவமென வுணர்க. (34)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இன்ன வின்னபடியால் இன்ன வின்னவகையாக இலங்குமெனல்;—தாக்கற்றென்பது.

தாக்கற்றென்றி லறிவுக்குச் சமமேயொழிந்து கண்டதிலே
வாக்குக்கெட்டா மையினாலே வசனங்களினாற் சமந்தோன்றா
நோக்கற்கரிதாம் பொய்ப்பொருள்போ னெய்தாயழியா நிராசைதனைத்
தேக்கிற்சமபா வனைதானே திரைதீர்கடல்போற் சேடிக்கும்.

(ப - ரை.) தாக்கற்றென்றில் = ஒருபொருளிலும் சம்பந்தமில்லாத, அறிவுக்கு = சிதாத்மவஸ்துவிற்கு, சமமேயொழிந்து கண்டதிலை = சமத்தன்மையே யியற்கையல்லாமல் அயலொருவிதம் பார்த்ததில்லை, வாக்குக்கு எட்டாமையினாலே = வசனத்திற்குக் கோசர மாகாமையினாலே, வசனங்களினால் சமம்தோன்று = வசனங்களினாலே சமமானதுதோன்ற மாட்டாது, நோக்கற்கரிதாம் பொய்ப்பொருள்போல் நொய்தாய் = பார்த்தற் கரிதாகிய சூனியவத்துவைப்போல அதிருக்குமமாய், அழியா = சாசுவதமாம், நிராசைதனைத் தேக்கில் = ஆசையின்மை யதிகரிக்கவே, சமபாவனைதானே=சமதிருஷ்டியானது சுயமாகவே, நிறைநீர் கடல்போல் சேடிக்கும் = நிஸ்தரங்க சமுத்திரம்போல நிகழாநிற்கும்.

(ஸ்ரீ - வீர.) வாக்குகட்கு அகோசரமாதலினாலே சாசுவதமாய அசத்தைபோல ஆம்; நைராத்மிய சித்தாந்த நசையை அடைந்ததுபோல இருக்கும், உண்மையாயோ அடைந்திடாமலே யிருக்குமாதலின்போல என்றதாம், சத்திற் சசத்துத்தகைமை தகாமையின் என்பதுகருத்து. யாதிருக்கும் அது சாஸ்திரீய விவகாரத்தில் பிரத்தியக்குத் தன்மையால் ஆன்மாவாம், அவ்வாறே பிருகத்தன்மையால் அதாவது பெருந்தன்மையாற் பிரஹ்மமாம், பரமார்த்த திருஷ்டியானோ வாக்குகட்குப் பிரவிருத்தி யின்மையின் ஒருசிறிதுமல்லவாம், பிரவிருத்தி நிமித்தகற்பனையாற் சப்தப்பிரவிருத்தி கூறப்பெறினோ அப்போழ்து சங்கோச காரணாபாவத்தாற் சர்வப்பிரவிருத்தி நிமித்த கற்பனத்தால் அகிலமுமாம்; " எதனினின் றும் வாக்குகள் திரும்புற்றிடும் எய்தலாகாமையின் மனத்தொடுங்கூட" "ஆகலினஃதெலா மாகியே யொளிரும்" எனவும் சுருதியில் இருவகையாகவும் நிரூபணத்தானே என்பது கருத்தாம். சருவதிருசியங்களும் பரம் உபசாந்தியை யடைந்தபோது அஃதவதியா யிருத்தலின் லீனமாகாதபரையாய சமதைமோக்ஷமெனப் பெயரியதாம் என்றுமொழியப்பெறும்.

(ச.) தாக்கற்றென்று வறிவுக்கு = தனது வலியால் ஒன்றோடு மொன்றுறத சித்துக்கு, சமமேயொழிந்து கண்டதிலை, பூரணத்துவமே சேடிக்குமென்பது பொருள். சமம் = அச்சமத்துவத்தை யடைந்தசித்து; வாக்குக்கெட்டாமையினாலே = விவகரித்தற் கரிதாதலின், பொய்ப் பொருள்போல் = சாசுவதமான சமத்துவத்தை யடைந்ததுபோல, நோக்கற் கரிதாம் = சூனியவாதிகளின் சித்தாந்த அவஸ்தையான சூனியரூபத்தை யடைந்ததுபோற் சேடிக்கும். (35)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் பேதசங்கற்ப கலனாத்தியாகம் உபாயத்துடன் வருணிக்கப் பெற்றது; இப்போது சங்கற்பச் செயல்களிற் சேர்ந்த சித்தானது மந்தமாய் விரியும்முறை இற்றெனவும், சங்கற்பகலிதமாய இது மந்தாபாசத் தன்மையானே இவ்வுலகத்தை நன்றாகப் பாரமார்த்திக ரூபத்தானே பார்ப்பதில்லை யெனவும், இச்சித்திருஷ்டிபடலாவரணவதி போலாகி இவ்வாறு துன்புறுத்துகின்றதெனவும் திருஷ்டாந்த பூர்வகமாகத் தெரிவித்தல்:—செயலென்பது.

> செயலுஞ்செயலி லாமையுமாய்த் தியங்குஞ்செயலிற் சேரறிவு
> பயிலும்வலையிற் புட்போலப் பந்தமடையு மாதலினான்
> மயல்வெங்கோப மிரண்டாலும் வருந்தொந்தனையா மயக்காலே
> யுயிர்களெல்லா நிலப்புழுப்போ லொன்றுமகலா தாகுவதாம்.

(ப - ரை.) செயலும்செயல் இலாமையுமாய்த் தியங்குஞ்செயலிற் சேரறிவு=விரும்பும் வெறுக்கும் எண்ணவடிவ மலங்களோடு கூடிய உள்ளறிவானது, பயிலும்வலையிற் புட்போலப் பந்தமடையும் = அகப்பட்ட ஜாலத்திற் பக்ஷியென்னக் கட்டுப்பட்டுழலும், ஆதலி

னல் = ஆகையால், மயல்வெங்கோபம் இரண்டாலும் =இச்சை துவேடமென்னும் இரண்டினலும், வரும் = எழுந்த, தொந்தனையா மயக்காலே = துவந்துவ மோகத்தினலே, உயிர்கள் எல்லாம் = ஜந்துக்களியாவும், நிலப்புழுப்போல் = தரைக்கீடமொப்ப, ஒன்றும் அகலாதாகுவதாம் = ஒன்றுங்கூட நீங்காமல் நிகழும்.

(ஸ்ரீ - வீர.) இஷ்ட அநிஷ்ட சங்கற்பனரூப மலங்களானே உள்ளே யெச்சித்துச் சூழப்பெற்றதாமோ அதுதான், பாசபத்தமாயாகாயத்திற் செல்லமுடியாத பக்ஷியைப்போல விண்முழுதும் வியாபிக்க முடியாததாகும். இச்சைதுவேடங்களினின்றும் இனிதெழுந்து வந்தது வந்தமோகத்தானே = சுகதுக்க சீத உஷ்ணாதி ஆக்கல் போக்கல் அபிநிவேசத்தானே, ஜந்துக்கள், தரைப்பொந்திற் றவித்துழலும் கீடங்களின் சமத்தன்மையை யடைந்துழல்வனவாம்.

(ச.) செயலுஞ் செயலிலாமையும் = இராகத்துவேட மூலங்களாகிற மனோதோஷங்களோடும், சேரறிவு = கூடிய சித்து. பயிலும்வலையிற் புட்போல = வலையாற் கட்டுப்பட்ட பட்சிபோல், பந்தமடையும் = விடுபடுதற்குச் சத்தியற்றதாம், ஆதலினல், நிலப்புழுப் போல் = நிலத்துக்கு ளமிழ்ந்திக் கிடக்குங் கீடங்களுக்குச் சமானமாவதன்றி விசேடமொன்று மல்லாதாகுவதாம். (56)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்போது அகண்ட வாக்கியார்த்தத்தைச் சாக்ஷாத்கரித்துத்தற் பாவத்தி லவத்திதமாய் அதிதுர்லபமா யறியப்பெற்றதாய் உள்ள ஆன்மாவை மிகுந்த அன்புடன் வணங்கல்:—

நீடத்தகுமன் னுயிர்க்கெல்லா நெஞ்சத்துறைவாய் நெடுநாளாக்
கூடப்பெற்றே னுனையிந்தக் குறைவில்பேற்றை யார்பெற்றார்
தேடப்பட்டாய் பெறப்பெற்றாய் தெரியநின்றாய் விகற்பமெலாம்
வீடப்பட்டா யெதுவானு யதுவாய்நின்றாய் மிகத்துதிப்பாம்.

(ப - ரை.) நீடத்தகு மன்னுயிர்க்கெல்லாம் = விஸ்தாரமான உலகிலுள்ள உயிர்கள் எவற்றினதூஉம், நெஞ்சத்துறைவாய் = உள்ளத்தின் கண்ணே யிருப்பாய், நெடுநாளாக் கூடப்பெற்றேன் உனை = வெகுகாலங்கழித்து நினையறிந்து சேர்ந்தேன், இந்தக்குறைவில் பேற்றையார் பெற்றார் = இப்பூரணமாகிய பிரயோஜனத்தை யாவரேபெற்றவர், தேடப் பட்டாய் = ஆராயப்பெற்றாய், பெறப்பெற்றாய் = அடையப்பெற்றாய், தெரியநின்றாய் = உதயமானாய், வீகற்பமெல்லாம் வீடப்பட்டாய் = சகல விகற்பங்களினின்றும் விடுபட்டாய். எதுவானய் அதுவாய் நின்றாய் = எதுவாயிருத்தியோ அதுவேயா யிருக்கின்றாய் மிகத்துதிப்பாம் = அதிகமாகப் போற்றுவாம்.

(ஸ்ரீ - வீர.) கெடாத சிதாத்மாவாகிய என்பொருட்டு நமஸ்காரம், சகல ஆன்மவடிவான என்பொருட்டு நமஸ்காரம், உலகத்தின் ஞானப்பிரகாசத்தின் நிமித்தபூதமாய மணியாய தேவனுமென்பொருட்டு நமஸ்காரம், நீடூழிபோழ்துபோய் நின்னையானுக நெறியிலறிந்து நேர்ந்தேன் அந்தோ ஆச்சரியம், என்னுமிதனை,"நிலவணுவளவி னோராநெகிழ்த்திய படியினன்கு, குலவனுவதனர் போயும் கொண்டிடற் கரியதாகித், தலவணுவ ஒருமின்றித் தடையடு சுகமாசிந்துப், பலவணுகுதனினன் மப்பயனினும் பரம்பேறின்றாம்" என்னும், சுவாராஜ்ய சித்தியின் கண்ணுங் காணலாம். அரியதாகியனுகு பயனினுமின்று மென்று சேர்க்க, நன்காராயப் பெற்றாய், அதனனே இனிதடையப் பெற்றாய், உனது பரமார்த்த ரூபத்தானே நன்குவெளிப்பட்டு விட்டாய், நெடும்போது கழித்தன்றே நேர்ந்தாய், சகல

விகற்பங்களினின்றும் எடுத்துய்யப் பெற்றாய், சேடித்தபோது யாது ஆகியிருந்தாய் அதுவேயாய் அமர்ந்தாய், அத்தகைய யானாகிய நின்பொருட்டு நமஸ்காரம்.

(ச.) தேடப்பட்டாய் = சுருதியினாலும் ஆசாரியவாக்கியங்களாலும் நன்றாய் விசாரிக்கப் பட்டவனாய், ஆதலினால், விகற்பமெலாம் = கற்பிதாகார மியாவற்றினு நின்று, வீடப்பட்டாய், அதனால், தெரியாநின்றாய் = உத்தமமான சத்தியஞானானந்தாதி லக்ஷணமாகிய சொரூபமாகப் பிரத்தியக்ஷமானாய், அதனால், பெறப்பெற்றாய் = ஐக்கியத்தாற் சோகமென அபரோக்ஷமாகவே அநுபவிக்கப் பட்டாய், எதுவானாய் = இங்ஙனம் முன்பு எந்தரூபனாயிருந்தனையோ, அதுவாய் நின்றாய் = அந்தரூபமாகவே இப்போது மிருக்கின்றாய், மிகத்துதிப்பாம் = கற்பிதாகார நிவிருத்தியாற் சொரூபமாகவே யிருக்கின்றாய், அத்தன்மையான நினக்கு நமஸ்காரம் என்பதுகருத்து. மூலம்:—லோகாலோகமணே=லோகங்களை யொளிர்விக்கும்படியான மணியே ! (37)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மகாவாக்கிய விசார பூர்வகமாகத் தன்னைத் தொழுதல்:— நானேயென்பது,

நானேநீயாய் நீநானாய் ஞானவடிவாய் முடிவின்றித்
தானேயாகி யண்டத்தின் றலையாய்ப்பரம தத்துவமாங்
கோனேயுன்னைத் தொழுகின்றேன் கொண்டன்மறையா நிறைமதிபோ
லூனேர்நினைவு களின்மறையா வொளியாமுருவே யுனைப்பணிகேன்.

(ப - ரை.) நானே நீயாய் = அகமேதுவமாய், நீநானாய் = துவமகமாய், ஞானவடிவாய் = அறிவு சொரூபமாய், முடிவின்றி = அநந்தமாய், தானேயாகி = சுயமேயாகி, அண்டத்தின் றலையாய் = தேவாதிதேவனாய், பரமதத்துவமாம் = மேலானதத்துவமாம், கோனே = பரமாத்மாவே, உன்னைத் தொழுகின்றேன் = நின்னை நமஸ்கரிக்கின்றேன், கொண்டல் மறையாநிறைமதிபோல் = மேகமறைக்காத சந்திரன்போல, ஊனேர்நினைவுகளின் மறையா = தேகான்மாதி மதிகளினாலே மறைக்கப்பெறாத, ஒளியாமுருவே யுனைப் பணிகேன் = சிற்பிரகாச வடிவமே யுன்னை நமஸ்கரிக்கின்றேன்.

(ஸ்ரீ - வீர.) என்பொருட்டு உன்பொருட்டு அநந்தப்பொருட்டு, என்பொருட்டு உன்பொருட்டுச் சிவவடிவப் பொருட்டு, நமஸ்காரம், முதலில் என்பொருட்டு உன்பொருட்டு என்னும் பதங்கள் பரஸ்பரவிசேஷணத்தால் சோதன அர்த்தத்திலாம், அதனானே யநந்தப் பொருட்டாம், இரண்டாவதிலோ, அகண்டைகரசத்தன்மை லக்ஷண வாக்கியார்த்த லாபார்த்தத்திலாம், அதனானே சிவவடிவப் பொருட்டாம், பிரஹ்மாதி தேவர்கட்கும், சர்வேந்திரியப் பிராணமனசுகட்கும், அதிதேவன் பொருட்டு, அதிஷ்டாவின் பொருட்டு, பிரகாசகன் பொருட்டு, பரன்பொருட்டு, பரமாத்மாவின் பொருட்டு நமஸ்காரம். மேகாவரணம் நீங்கப்பெற்ற பரிபூர்ண இந்து பிம்பம்போலக் கலனாவரணம் கழியப்பெற்ற தன்வடிவத்தையே நமஸ்கரிக்கின்றேன்.

(ச.) அண்டத்தின் றலையாய் =தேவாதிதேவனாய், கோனே=பரனாய பரமான்மாவே' ஜீவபரங்களுக்கு ஐக்கியத்தினால் நானே நீயாய்த் தொழுகின்றேன் என்றது, எனதுரூபமாகிய வுனதுரூபத்தை யென்பது கருத்து. மூலம்:—என்வடிவமாய உன்பொருட்டு நமஸ்காரம், உன்வடிவமாய என்பொருட்டு நமஸ்காரம்; அவித்யாவரணம் அகலப்பெற்றதனாலேயே கனமகன்ற பூன்ற நிலவின் பிம்பம்போல விருப்பது. (38)

(ஸ்ரீ-வீர - அ-கை.) நிராவரண வடிவமாகிய என்னையே வணங்கிப் பற்றற்றிருப்பேன் எனல்:—உன்னலென்பது.

உன்னலென்னு மாவரண மொன்றுமில்லா வெளியாகித்
தன்னதான சுகவடிவிற் றானேவிளங்கித் தன்வசமா
மென்னதுருவை யான்பணிகே னிருந்துநடந்துஞ் சாந்தமுற்று
மன்னதன்ன திலதாகு மனைத்துஞ்செய்தும் பற்றிலதாம்.

(ப - ரை.) உன்னலென்னும் ஆவரணம் = அபிமானவடிவ நினைவுகள் என்பனவான மறைப்புகள், ஒன்றும் இல்லாவெளியாகி = யாதொன்று மின்றிய வெட்டவெளியாகி, தன்னதான சுகவடிவில் = தன்னுடையதேயான ஆனந்தவடிவத்தின் கண், தானேவிளங்கி = சுயமாகவே யிலங்கி, தன்வசமாம் = தனதுவயமாம், என்னதுருவை = எனதுவடிவத்தை, யான்பணிகேன் =யான் நமஸ்கரிக்கின்றேன், இருந்தும் நடந்தும் சாந்தமுற்றும்= இருப்பதாயும் நடப்பதாயும் சாந்தமுடைத்தாகியும், அன்னது அன்னது இலதாகும் = அவ்வதனை யியற்றாததாகும், அனைத்தும் செய்தும் பற்றிலதாம் = யாவற்றையு மியற்றியும் சம்பந்தமற்றதாம்.

(ஸ்ரீ - வீர.) ஆவரணம் யாதொன்று மின்றி, சுவாத்மாவாகிய ஆனந்தைகரசத்தில், அனன்னிய ஆதாரத் தன்மையானே பாரமார்த்திக ரூபமாக விசிராந்தமாயதும், நிராதாரமென்பது திரண்டபொருள்; சுவப்பிரகாசமாய், சுவாதீன சுவாநந்தமாய், அனன்னியமாயிருப்பதும் ஆகிய என்னை யான் நமஸ்கரிக்கின்றேன்: சர்வ உத்கர்ஷமாக என்னை யான் அநுசந்தானஞ்செய்வேன் என்பதாம். ஓங்காரவடிவமாய ஆன்மா யாவற்றையும் ஒளிர்வித்தலின் யாவுமாம் யாதும்செய்தும் செய்திலதெனல்:—இருந்தும் என்பாதி. எப்போதும் நிட்கிரியமாயினும், உட்காராததுபோலத் தாவனுதி விவகாரத்தினின்றும் உபரதமடையாதாம், வாயுவாதித்தியாதி வடிவமாய்ச் சதாகதியுடைமையின் அவ்வாறே காலவடிவமா யெப்போதுஞ் சென்றுகொண் டிருந்தபோதினும் குலால சக்கிரம்போல, திலமாத்திரமும் அயற்பானடப்பதில்லை, நிர்வியவகார மதேயாயினும் சர்வவியவகாரமதேயாம், செய்வதேயாயினுஞ் செறிவதேயில்லை. அற்றேற் பூர்வஞ் செய்தவகையானே இப்போது சுகதுக்கங்களானேபற்றும் இப்போதீண்டு இயற்றலானே இனிப்பரத்திற் பற்றையடைந்திடும், அங்ஙனமாக யாங்ஙனம் செய்வதேயாயினுஞ் செறிவதேயில்லை யென்றோதியதோ வெனின்? முன்னரின்றும் அவ்வாறே யிப்போதினியும், இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் இகலோக சந்திபூதசுவப்பிரஸ்தானத்திலும், சாஸ்திர அநிஷித்த சுபகர்மபலபுக்காகியும், சாஸ்திரநிஷித்த அசுபகர்மபலபுக்காகியுமிது, சர்வபோக விருத்திகளிலும் சமமாகவே யிருக்கும்; திருசியபோகங்களானே திருக்கிற்குவிகார அசித்தியாதலின் என்பது கருத்தாம்.

(ச.) ஆவரணம் = அவித்தியாவரணம், தன்னதான சுகவடிவில் = ஆனந்தான்மகமான சொச் சொரூபத்தில், தன்வசமாம் = அநந்நியாதீனமான, இருந்தும் = நிஷ்கிரியனுதலி னிருப்பவனுயினும் இருக்கும்தேகாபிமான மின்மையின் இருப்பவனன்று, நடந்தும்= தேசாந்தரத்தைப் புணரினும், செல்லுங்கிரியை தேகநிஷ்ட மாதலினுனும், ஆன்மா அதற்கந்நியமாதலினுனும் சென்றிலன், சாந்தமுற்றும் = நிர்விகாரசித்தனுயினும், சர்வேந்திரியங்களையும் பிரவர்த்திப்பவனுதலின் விவகரித்திருப்பவனுமாம், இவ்வர்த்தத்தையன்னதன்னதிலதாகும் என்றதில் அடக்கிக்கூறினுர்; அனைத்துஞ்செய்தும் =இங்ஙனம் விவகரிப்பவனுயினும் ஆன்மாபற்றிலதாம் புண்ணிய பாவங்களாற் சம்பந்தமுறாதவனும், அகங்கார நிவிர்த்தியாதலி னென்க, மூலப்படி:—முதிதே = ஆனந்தான் மகமான, ஸ்வவபுஷி = தனது வடிவத்தில், தன்னின் அயலாய ஆதாரத்திலோ அல்லவாம், ஸ்வயம் = தன்னுனே, அயற்காரணத்தா லல்லதாம், ஸ்வசமஸ்தம் = தனது சொரூபபூதம், கிரியாரூபத் திதியுடை

யதோ அல்லவாம், ஸ்வயமுதிதம் = தானாகவே வெளிப்படுவதாம், ஸ்வவசம் = அயற்பற்றுக்கோ டற்றதாம், ஸ்வயம் நமாமி = இத்தகையதனது வடிவத்தையே நமஸ்கரிக்கின்றேன். (39)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அற்றேல் அசையாதது யாங்ஙனம் சுழலும் எனின்; நித்தியாத்மசத்தைக்கேஸ்பந்த சத்தாத்தன்மை யுண்மையின் நித்தியம் ஸ்பந்தமயமாம் அதன்றூதாத்மியத்தால் என்க, எனினும் மனமாதல் புலன்களாதல் தேகாதிகளைப் பிரவிருத்தியாகிற்கும் ஆன்மாவல்லவாம் எனின் விடைதரல்:—பல்லவமென்பது.

பல்லவங்க டமையசைக்கும் பவனன்போல மனமுதலாய்ச்
செல்லுங்கரணங் களையிந்தச் சித்தாம்புருட னசைத்திடுமால்
வல்லபாகர் நடத்துகின்ற வாசித்திரள்போற் றனதான
வல்லன்மேவப் பொறியெல்லா மவனேபரிக்கு மநவரதம்.

(ப - ரை.) பல்லவங்கள்தமை யசைக்கும் பவனன்போல = இலைகள்தம்மை இயக்கும் காற்றேபோல, மனமுதலாய் = மனதேயாதியாக, செல்லும் கரணங்களை = விடயங்களிற் போம் உட்புறப் புலன்களை, இந்தச் சித்தாம்புருடன் அசைத்திடும் = இவ்வறிவுருவமாய் புருடன் சலிப்பித்திடுவன், வல்லபாகர் நடத்துகின்ற வாசித்திரள்போல் = சாமர்த்தியமுடைய சாரதிகள் செலுத்துகின்ற அசுவக் கூட்டமேபோல, தனதான வல்லன்மேவப் பொறியெல்லாம் = தன்னுடையதான விடயங்களிற் சுழன்றலைந்திடப் புலன்கள் அனைத்தையும், அவனேபரிக்கும் அநவரதம் = அவ்வான்மதேவனே நடத்துமெப்போதும். ஆல், அசைநிலை.

(ஸ்ரீ - வீர.) இவ்வான்மா, பல்லவங்கடம்மை யசைக்கும் மாருதமேமான மனங்களைக் கலக்கும், சாரதி யசுவமாலையைப்போல, தனது இந்திரியப் பந்தியை நடத்திடும். இவ்வான்மா, அத்தியந்தந் தூர்த்தசையை யடைந்ததுபோலத் தேககேகத்தில் எப்போதும் விளைவிளைத்து விளையாடும், போல என்றது தூர்த்தசை மித்தையெனுணர்த்தற் பொருட்டு, பூர்வவிருத்த தசைகளிலும் பொருத்துக, விபுவாகிய ஆன்மா, சம்ராட்டைப் போலத் தன்பாலே சொஸ்தமாயிருந்து கொண்டு போகம்புசித்து விளையாடு மென்பதுகருத்து.

(ச.) மனம் முதலாய்ச் செல்லுங் கரணங்களை = மனம்புத்தியாதிஅந்தக் கரணங்களை, பொறியெல்லாம் = வாகியேந்திரியங்கள் அனைத்தையும், பரிக்கும் = நடத்துவன். (40)

(ஸ்ரீ-வீர - அ-கை.) தேடல் துதித்தல் தியானித்தல் முதலிய சகலத்திற்கும் இவ்வான்மாவே தகுதியதெனல்:—இவனே யென்பது.

இவனேதேடப் படுகிற்போ னிவனேதுதிக்கப் படுகிற்போ
னிவனேதியானிக் கப்படுவோ னிவனுன்மரண மயக்கொழிந்த
திவனேயெளிதி னெய்திடுவோ னிவனேநன்று யறிகிற்போ
னிவனேயெல்லார் மனக்கமலத் திடையிலிருக்கு மிசைவண்டே.

(ப - ரை.) இவனே தேடப்படுகிற்போன் = இவ்வான்மாவே ஆராயத்தக்கதாகும், இவனே துதிக்கப் படுகிற்போன் = இதுவே தோத்திரித்தற் குரித்தாகும், இவனே தியானிக்கப்படுவோன் = இதுவே தியானஞ்செய்தற் குரித்தாகும், இவனுன் மரணமயக்கு ஒழிந்தது =இதனுனே மரணமோக மழிந்தது, இவனே எளிதின் எய்திடுவோன்=இதுவே சுலபமாக அகப்படுத்தப் பெறும், இவனே நன்றுயறிகிற்போன் = இதுவே சம்யக்காகச்

சாக்ஷாத்கரிக்கப்பெறும், இவனேயெல்லார் மனக்கமலத்திடையிலிருக்கும் இசைவண்டே= இதுவேயாவருடைய இருதய தாமரையிடையிலும் வீற்றிருக்கும் கானவறுகாலாம். ஏகாரம் தேற்றப்பொருட்டாம்.

(ஸ்ரீ - வீர.) இதுவே யெப்போதும் ஆராய்தற்குரியது, புகழுதற்கும் தியானித்தற்கும் உரியது, தேடியவிதனுனே ஜராமரண சம்மோகத்தினின்றும் கடந்தேறிக்கதியடையலாம், இது அத்தியந்தம் சுலபமாம் = ஞானமாத்திரத்தானே கிடைக்கக் கூடியதாம், ஆப்தபந்துவைப்போலச் சுஜேயமாம் = ஸ்மிருதி மாத்திரத்தானே வயப்படுத்தற்கு யோக்கியமாம், சர்வப் பிராணிகளினுடைய சரீரபத்மகுகரத்துமுறையும் ஷட்பதமேயாம்.

(ச.) இவனே =இவ்வான்மாவே, தேடப்படுகிற்போன், அவன்றேடற் குரியன் அவன் அறிதற்குரியன் என்னுஞ் சுருதியினுல், இத்தன்மையாகவே, இவனுல் = இவ்வான்மாவால், மரணமயக்கு = சராமரண சம்மோகமயமான சமுசாரமானது, ஒழிந்தது = ஒழிந்ததாம், நன்ருய்நிகிற்போன் = கிட்டிய பந்துபோல் அத்தியந்தம் செவ்வையா யறிதற்குரியன்.(41)

(ஸ்ரீ-வீர - அ-கை.) போகத்தில் விருப்பற்ற எனக்கு வந்தது வருக, வாராதது ஒழிக வெனல்:—மேவலென்பது.

மேவலுற்ற போகத்தில் விருப்புவெறுப்பு மெனக்கில்லை
யாவதெய்து மதுவருக யாதுபோகு மதுபோகப்
பாவமிகுமிவ் வஞ்ஞானப் பகைவனுலே விவேகமெனு
மேவமில்லாப் பொருளெல்லா மிழந்தேனுணர்வா லவைபெற்றேன்.

(ப - ரை.) மேவலுற்ற போகத்தில் விருப்பு வெறுப்பும் = கருமவயத்தால் அடையாநின்ற விடயங்களில் இராகமும் துவேடமும், எனக்கில்லை = ஆராய்வுற்ற என்றனக்குக் கிடையாது, யாவது எய்தும் அதுவருக = யாது அடையா நிற்குமோ அஃதடையுறுக, யாதுபோகும் அதுபோக = எஃதகலுமோ அஃதகலுக, பாவமிகு மிவ்வஞ்ஞானப் பகைவனுலே = மறமதிகரித்தற் கேதுவாகிய இந்த அறியாமையாகிய சத்துருவினுலே, விவேகம் எனும் = பகுத்துணர்வு என்னும், ஏவம் இல்லாப் பொருளெல்லாம் = குற்றமற்ற சர்வ ஐசுவரியத்தையும், இழந்தேன் = கைவிடப்பெற்றேன், உணர்வா லவைபெற்றேன் = ஞானத்தால் அவற்றை யடைந்தேன்.

(ஸ்ரீ - வீர.) போகஸ்திதியின் கண்ணே யெனக்கு வாஞ்சையுமில்லை, போகவிவர்ஜனமாயின் துயரமுமில்லை, யாதுவருமோ அதுவருக, யாது செலுமோ அது செல்க. சுகங்களிலெனக்கு அபேக்ஷையுமில்லை, துக்கவிருத்திகளி லுபேக்ஷையுமில்லை சுகதுக்கங்கள் வருமேல்வருக, போமேற்போகுக, இவற்றில் யான்யார், ஜடங்கட்கும் சேதனத்திற்கும் என்னே சம்பந்தம்? நானுவித வாசனைகள் தேகத்தில் அஸ்தமாகுகதான் உதயமாகுகதான், இவைகளில் யானுமில்லேன், எனக்கிவை யெவையுமில்லை, இவை = வாசனைகள்; இத்துணைப் போதும் யான் அஞ்ஞான ரிபுவினுலே ஹதனுனேன், என்னுடைய விவேகசர்வ ஐசுவரியத்தை யபகரித்துக்கொண்டு என்னை யத்தியந்தம் தனித்திம்சித்தது, அப்பகை; மூலத்தில் அவபோதிதம் என்பது பாடமாயின், அவிவேக சர்வஸ்வம் எனப் பதச்சேதஞ் செய்க, வைஷ்ணவ அநுக்கிரகத்தானே என்னுடைய அவிவேக சர்வஸ்வம் அபகரிக்கப்பெற்று நியத ஏகசுபாவமாய பிரஹ்மம் அறிவிக்கப் பெற்றேன் என்றுணர்க.

(ச.) மூலம்:—ஏகாந்தம்=பரர்கள் அறியாதபடி, அவபோதித:=ஹிம்சிதன் ஆனேன்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மன அகங்காராதிகள் போய்க் கேவலந்தத்துவமா யிருக்கின்றேன் எனல்:—துனையுமென்பது.

துனையுமனத்தான் மனமறுத்துத் துயர்செய்யகங்கா ரந்தீர்ந்து
நினைவானினைவு போயசையா நிலைக்கேதனிக்கே வலநின்றேன்
வினையாநினைவற் றகங்கரம்போய் மேவுமனம்போய்த் தொழிலின்றித்
தனையேநிகர்கே வலத்தொடர்ச்சித் தத்துவத்தென் வடிவிருக்கும்.

(ப - ரை.) துனையு மனத்தான் மனமறுத்து = சுத்தவாசனு விசிஷ்டமனத்தினுலே மலினவாசனு விசிஷ்டமனத்தைக் கெடுத்து, துயர்செய் அகங்காரந் தீர்ந்து = துன்புறுத்தா நின்ற அகந்தையொழிந்து, நினைவால் நினைவுபோய் = பாவத்தாற் பாவங்கழிந்து, அசையா நிலைக்கே தனிக்கேவல நின்றேன் = சொச்சமாய்க் கேவலமாய்த் திரமாயிருக்கின்றேன்' வினையா நினைவற் றகங்கரம்போய் = பந்தமாம் பாவமற்று அகங்காரமற்று, மேவுமனம் போய்த் தொழிலின்றி = மனமற்று மற்றொரு செய்கையுமற்று, தனையேநிகர் = தனக்கே யொப்பாம், கேவலத்தொடர்ச்சித் தத்துவத் தென்வடிவிருக்கும் = அத்தியந்தம் சுத்த வடிவமாய்த் தத்துவமாய் என்னுடைய சொரூபமிருக்கும்.

(ஸ்ரீ - வீர.) மனத்தினுலே மனங்கெட்டிட, நிரகங்காரத் தன்மையும் அடைந்திட, பிரஹ்மாகம் பாவத்தானே தேகாதியகம் பாவங்கழிந்தோடவே சொச்சமாய்க் கேவலமா யிருந்திடுவேன்; பாவனுஹேதுவாய புத்திசூனியமாய், நிரகங்காரமாய், மனமற்றிட இச்சா ஹேதுவாய சித்தசூனியமாய், கேவலமாய், பிராணனக்கிரியா மாத்திரத்தானே சுத்த ஆத் மாவாய், இலங்கும் ஜீவன் முக்தாத்மாவின் கண்ணே யிருக்கும் எனதுவபு; " ஆதலினுரே விரதஞ்சரித்தமைக, ஒதருபிராணனபான ேனுடிடவே " எனச்சுருதியு மறைகின்றது.

(ச.) துனையு மனத்தால் = சாஸ்திரவிரைவுள்ள மனேவிருத்தி விசேடத்தால், மனம் = சம்சாரவாசமுள்ள சித்தத்தை, அறுத்து = நிரகங்காரத்தை யடைந்து, நினைவால் = பிரஹ் மத்தை அத்தொய்தமாய்க் காணுந் தாற்பரியத்தால், நினைவுபோய் = சம்சாரப் பிடிப்புள்ள பாவம் நீங்கிக்கேவலனுகிச் சுவத்தனு யிருக்கின்றேன் என்றதாயிற்று, சுவத்தன் = சுகன், தத்துவத்து = சுத்தாத்மாவில், மூலத்தில் நிர்ப்பாவ மென்பதாதி திஷ்டதிக் கிரியையின் விசேஷணமாம், பாவம் = சம்சாரவாசனை. (43)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அகங்காரம் அகன்று ஐக்கியமடைந்ததை யறைதல்:—காத லென்பது.

காதலென்னுங் கட்டறுத்துக் காயமென்னுங் கூடகன்று
சாதன்மேவு மகங்கரமாந் தனிப்புள்ளெங்கே பறந்துளதோ
வேதமறுநீ நானுனீ யென்னுமொருமை யிருமையதா
யோதும்விதியான் மீண்டொன்றி யுயர்நீநானு னீயானேம்.

(ப - ரை.) காதல் என்னுங்கட்டு அறுத்து = திருஷ்ணாரஜ்ஜு குணத்தைச்சேதித்து, காயமென்னுங் கூடகன்று = எனது சரீரமாகிய பஞ்சரத்தினின்றுஞ் சென்று, சாதன்மே வும் அகங்கரமாம் = நைசுவரமாம் அகங்கிருதி யென்னும், தனிப்புள்ளெங்கே பறந்து ளதோ = ஒப்பற்ற பக்ஷியானது யாண்டு பறந்தோடி விட்டதோ அறியேன், ஏதமறு நீ = குற்றமில்லாதநீ, நான் = யான், நான் நீ என்னும் = அகம் துவம் என்னும், ஒருமை இருமையதாம் = பேதமின்மை பேதமுண்மையதாய், ஓதும் விதியால் = வேதப்பிரதிபாத் தியமான தெய்வகதியால், மீண்டொன்றி = அறியாமை நீங்கப்பெற்று மீளவும் பொருந்தி, உயர் நீ — பரிபூரணமாகிய நீ; நான் = யான், நான்நீ = கூடஸ்தனுகிய யான் நீ, ஆனேம் = ஆகிவிட்டோம்.

(ஸ்ரீ - வீர.) தாகங் கொருதியாகிய பக்ஷியானது திருஷ்ணாரஜ்ஜு குணத்தைச் சேதித்துக்கொண்டு எனது சரீரகபஞ்சரத்தினின்றும், கிளம்பி எங்குசென்றதோ யானறியேன்; இத்துணைப்போதும் இவ்வாறாக மகா அகந்தையை யடைந்து பரிதபித்த தென்னையந்தோ! இப்போது பகவானாகிய ஆன்மாவைக் கண்டேன், இனிவிடேன் தன்மயமாதலின்; இது பற்றியே "உடலமான்ம வுணர்வென மெய்யுணர், வுடலமான்ம வுணர்வை யொழிப்பதாய், மடமைமாய்ந்திடத் தன்னிடத்தேமனும், விடும்விழை வினையேனும் விடுபடும்" என்பர் பெரியோர். பாக்கியத்தானே என்றன்மையை யடைந்துளாய், பாக்கியத்தானே உன்றன்மையை அடைந்துளேன், ஹேதேவ! அகம்துவம் துவம் அகம், பாக்கியவயத்தால், நம்மிருவருக்கும் பேதமில்லையேயாம், நானீ நீநான் என்னும் மாற்றுப் பார்வையால், அபேதம் திடப்படுத்தியதாம்; அகம்துவம் என்பன பரியாயங்களே யாவனவாம்.

(ச.) நீ நானுநீ = தேவனே நான் நீ நீ நான் என்னும், இருமை = இருவருக்கும், ஒருமையதாய் = பேதமின் றென்பதாய், ஓதும் விதியால் = தெய்வகதியால், நீ நானும் = எனது ரூபமுள்ளவனாய், நீயானேன் = உனது ரூபமுள்ளவனானேன், என்பது பொருள்.

((ஸ்ரீ-வீர - அ-கை.) இங்ஙனம் சிற்பிரகாசத்தோடு கூடாதசத்தும் அசத்பிராயமேயாம் என்றுரைதல்—ஒழிவிலென்பது.

ஒழிவிலுலகின் சீரெல்லா முண்டாயிருந்து நீயிலையேல்
விழியிலவர்க்குப் பேரெழில்கூர் மின்னாரைப்போல் விளங்காதால்
வழுவிறேவே சயசாந்தி மன்னுமிடமே சயவேத
முழுதுக்கயலே சயவேத முளைத்தவிடமே சயவென்னு.

(ப - ரை.) ஒழிவில் உலகின் சீரெல்லாம் = சேடமற இலௌகிகச் சிறப்புகள்யாவும், உண்டாயிருந்தும் நீயிலையேல் = இருப்பனவாயினும் நீயில்லாவிடின், விழியில் அவர்க்கு = நேத்திரமில்லாதவர்கட்கு, பேரெழில்கூர் மின்னாரைப்போல் விளங்காதால் = மிகுந்த அழகோடுகூடிய மங்கையரைப்போல விளங்காவாம்? ஆல் அசை, வழுவில் தேவேசய = கெடுதலில்லாத பெரிய தேவ தேவனே ஜய, சாந்திமன்னு மிடமேசய = சாந்திபொருந்தும் இடமேஜய, வேதமுழுதுக் கயலேசய = சருவ ஆகம அதீதனேஜய, வேதமுளைத்த விடமே சயவென்னு = சர்வ ஆகம ஆஸ்பதனே ஜயவென்று தியானித்து,

(ஸ்ரீ - வீர.) வஸ்து ஸ்ரீ இருந்தபோதினும் நீயில்லாதிருந்தால் இல்லாததேயாம், கண்ணில்லாதவர்க்கு வனிதை சம்பந்திரூபலாவண்ய சத்தையேபோலும்; இப்போது விவேகி அவிவேகிப் பிரசித்தரூப மிரண்டினாலும் தோத்தரித்தல்: — வழுவிலென்பது. பிரஹ்மாண்டாதி யதிவிஸ்தாரமான ஆகாரமுடையவனே வெல்க, சாந்திபராயணனே வெல்க, சர்வ ஆகமாதிப் பிரமாண அதீதனே வெல்க, சர்வ ஆகமாதிப் பிரமாண வேத்தியனே வெல்க; என்றெண்ணி.

(ச.) ஆன்மாவையே துதித்தல்:—வேதமுழுதுக் கயலே = சர்வாகமாதீதனே யென்பது நாமஜாதியாதி அபாவத்தினால், வேதமுளைத்த விடமேயென்பது, சர்வோப நிடததாற்பரிய கோசரமாதலின்: மூலம்:—ப்ரோட்டாமர: = பயங்கரபைரவாதி யாகாரமுடையவன்; சர்வாகமாஸ்பத = சர்வோபநிஷத் சமன்வயகம்மியத் தன்மையால் என்பதாம். (45)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பலவாறு துதித்தபின் பரமசமாதிச் சுகமடைந்தா னெனல்:—பிறக்கு மென்பது.

பிறக்குமுதலே சயவென்றும் பிறவாமுதலே சயநாளு
மிறக்குமுதலே சயவென்று மிறவாமுதலே சயவென்று
சிறக்குமனத்தாற் சிந்தித்துச் செம்பொற்பெயரோன் றிருமதலை
பறக்கும்விகற்ப மில்லாத பரமசமாதிச் சுகமுற்றான்.

(ப - ரை.) பிறக்கு முதலேசய = ஜனிக்கும் பொருளேவெல்க, என்றும் பிறவாமுதலேசய = எப்போதும் ஜனியாத பொருளே வெல்க, நாளும் இறக்குமுதலேசய = தினம் இறக்கும் பொருளேவெல்க, என்றும் இறவாமுதலேசய = எப்போதும் நாசமில்லாதபொருளேவெல்க, என்று = என இவ்வண்ணம், சிறக்குமனத்தாற் சிந்தித்து = அன்போடு கூடிய சித்தத்தினாலே தியானித்து, செம்பொற் பெயரோன்றிருமதலை = இரணியனுடைய தவமைந்தனாகிய பிரகலாதன், பறக்கும் விகற்பமில்லாத = விஸ்தரிக்குஞ் சலனமற்ற, பரமசமாதிச் சுகமுற்றான் = அசம்பிரஞ்ஞாத சமாதியானந்தத்தை யடைந்தான்.

(ஸ்ரீ-வீர.) ஜயஜாதனே, ஜய அஜாதனே. ஜயக்ஷதனே, ஜய அக்ஷதனே, ஜயபாவனே, ஜய அபாவனே, ஜய ஆவித்யக ரூபத்தானே வெற்றிகொள்ளத் தக்கவனே, ஜய சுவாபாவிகத்தானே வெல்லத்தகாதவனே, நின்பாணிலைத்த என்றனுக் கென்னேகுறை; பரம உபசாந்தியை யடைகின்றேன் என்று வர்ணித்த வகையில் தன்னை நன்குசிந்தித்துப் பாவீாஹனனாகிய பிரகலாதன், நிர்விகற்ப பரமானந்த சமாதியை இனிதாக அடைவுற்றனன். (46)

(சு.) சர்வான்மகமாதலின், பிறத்தல் பிறவாமை முதலிய ரூபத்துவம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) நிகழ்த்திய வண்ணம் நீண்டகாலம் நிர்விகற்பசமாதியில் நிலைத்திருந்தபோது பாதலத்தில் நிகழ்ந்த திதுவெனல்:—நிருவிகற்ப வென்பது.

நிருவிகற்ப சமாதியிலே நிகழ்சித்திரம்போ னிலைபெற்று
வருடமையா யிரஞ்செல்ல மாறுவொருபார் வையினிற்ப
வருணமணிசூழ் பாதலத்தி லரசிலாம லசுரரெலாங்
கருடன்முதற்புள் ளினங்கவரக் கலங்குகுளமீ னினமொத்தார்.

(ப - ரை.) நிருவிகற்ப சமாதியிலே = அசம்பிரஞ்ஞாத சமாதியின்கண்ணே, நிகழ்சித்திரம்போல் = பித்தியிலமைத்த சித்திரப்பதுமைபோல, நிலைபெற்று = திரமானதிதியை யடைந்து, வருடம் ஐயாயிரம் செல்ல = ஐயாயிரவருடங்கள் கழியும் பரியந்தம், மாறுவொருபார்வையி னிற்ப = மாறுபடாத ஏகதிருஷ்டியில் நிலைத்திருப்ப, அருணமணிசூழ் பாதலத்தில் = பிரகாசம் பொருந்திய அரதனங்கணிறைந்த பாதாள லோகத்தில், அரசிலாமல் = அரசன் இல்லாமையினால், அசுரர் எலாம் = அசுரர்கள் யாவருமே, கருடன் முதற் புள்ளினம் கவர = கருடன் முதலியபறவைகள் கிரகணஞ்செய்ய, கலங்கு = சஞ்சலமுற்ற, குளமீன் இனம் ஒத்தார் = தடாக மச்சக்கூட்டத்திற் கொப்பானார்.

(ஸ்ரீ - வீர.) சித்திரத்தி லர்ப்பித்த அசலம்போல நிர்விகற்ப சமாதியில் நிலைபெற்றனன், சைலத்தினின்றும் வகுத்துவைத்த விக்கிரகம்போலச் சொரூபசாம்ராஜ்ய மடைந்திருந்தனன், அம்மகாமதியானவன் அசுராதீசர்களானே உணர்த்தப் பெறினும், உணர்ந்திலன், அகாலத்தில் வெகுமழை பெய்தபோதினும் பீஜபுடத்தினின்றும் அங்குரம் கிளம்பாததேபோலும்; இவ்வண்ணம் வருடசகத்திரங்கள் மிகமிகவும் விரிந்த பிரஹ்மவடிவமாய் ஏகதிருஷ்டியை யடைந்து பாகிய திருஷ்டி சூனியனாய், பாறையில் வகுத்த பாஸ்கரனைப் போல நிச்சலனாய், சாந்தனாகவே அசுரபுரத்தில் வீற்றிருந்தனன், இருந்த அந்தக்காலத்தில்

அந்தரசாதலமண்டலமானது, அராஜகத்தையும் தீக்ஷணத்தையும் அடைந்து மச்சநியாய பீடிதமாயது, மச்சநியாயமாவது:—பலவான்களாய தன்னினத்தவரானும் அன்னியரானும் காரணமின்றியே துர்ப்பலர்தம் வதாதியாம், அதனாற் பீடிதமாய தென்பது பொருள்.

(ச.) மீனினம் ஒத்தார் = பெலமுள்ளவராற் றுர்ப்பலர்க்கு வாதை மிகுந்ததென்ப தாம், மூலம்:—தீக்ஷணம் = ஹிம்சைமிகுதி, மச்சநியாயம்:—பெருமீன்கள் சிறுமீன்களைத் துன்புறுத்துவதே போலும், பலவானால் துர்ப்பலர்தம் பாதமாம். (47)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஜகத்விவத்தையின் சித்தியின் பொருட்டு ஸ்ரீ பகவான் சிந்தித்தரு ளல்:—ஆவதாய வென்பது.

ஆவதாய காலத்தி லனைத்தாமுலகி னெறியனைத்துங்
காவல்புரியுந் திருநெடுமால் கடல்வாய்விழித்துக் கண்வளர்வான்
றாவல்வருடக் கார்நாளிற் றுயிலைத்தவிர்ந்து வொருகாலைச்
சேவல்கூருந் திருவுளத்திற் செகத்தினெறியைச் சிந்தித்தான்.

(ப - ரை.) ஆவதாயகாலத்தில் = முற்கூறியவண்ணம் நிகழும்போது, அனைத்தாமுல கின் = சகலலோகங்களின், நெறியனைத்தும் =மார்க்கங்கள் யாவற்றையும், காவல்புரியும்= காப்பாற்றியருளும், திருநெடுமால் = ஸ்ரீமந்நாராயணர், கடல்வாய் விழித்துக் கண்வளர் வான் = க்ஷீராப்தியில் சேஷசயனத்தில் யோகநித்திறையில் எழுந்தருளியிருந்தவர், தாவல் வருடக்கார் நாளில்= தாவும்வருஷ மேககாலத்தில்=மழைப்போதில், துயிலைத்தவிர்ந்து= விழித்தருளி, ஒருகாலை= ஒருபோது, சேவல் கூருந்திருவுளத்தில் = யாவரையுங் காக்க வேண்டுமென்னும் கவலைபூண்ட திருவுள்ளத்தின்கண், செகத்தின் நெறியைச் சிந்தித் தான்=உலகமுறையை உன்னியருளினார்.

(ஸ்ரீ - வீர.) அதன் பின்னர், சகல ஜகத்ஜால சம்பந்திகளின் நியதிகளைக் காப்பாற்று வதே திருவிளையாட்டாக வுடையவரும், க்ஷீரசாகர நகரத்திற் சேடசய்யாசனத் தெழுந் தருளி யிருந்தவரும், ஆகிய ஸ்ரீஹரியானவர், கார்த்திகாந்தத்தில் நித்திரைகழிந்ததும், தேவதைகட்குப் பிரயோஜனத்தைச் சாதித்தருட வார் அரிசூதனர், ஒருபோது மூவுலக சம்பந்தியாய கதியை=தாத்காலிகஸ் திதியைத் திருவுள்ளத்திற் சிந்தித்துப் பார்த்தருளு வாராயினார்; இதனானே தேவதைகளாற் காலத்தில் ஸ்துதியால். இனிதுணர்த்தி யருளப் பெற்றார் என்றதாயிற்று.

(ச.) அனைத்தாமுலகின் நெறியனைத்தும்=சகல ஜகச்சாலமும் அதனது நெறியென் னும் வருணாச்சிரம மரியாதைகளுமாகிய விவற்றினது, காவல்புரியும் = பாலன நிமித்தந் திருமேனி தரித்தருளிய, திருவுளத்தின் = திருவுள்ளத்தினால், தாமே, நெறியை = ஸ்தி தியை, சிந்தித்தான் = ஸ்ரீபகவான் சிந்தித்தருளுவாராயினார்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆண்டுப் பாதாள லோகத்தில் பிரகலாத தானவேந்திரன் அதிதிடமான நிர்விகற்ப சமாதியை யடைந்திருப்ப, தேவேந்திரனுடைய புரமாகிய சுவர்க் கத்தில் மிகவும் அபிவிருத்தியை யடைந்துள்ள சம்பத்தைக் கண்டருளி, பூர்வம் க்ஷீரோ தார்ணவசாயியா யிருந்தருளிய ஸ்ரீமந்நாராயணர், பின்விழித்தருளி, ஆதிசேடனது அதி மிருதுவாகிய மேற்றலத் தெழுந்தருளி, ஆண்டும் பதுமாசனபத்தராய், சங்கு சக்கிரகதை முதலியவற்றைத் திருக்கரந் தரித்தருளிய அந்தரசாரியாந் திருமேனியுடையவராய், வீற்றி ருந்தருளும் அந்த ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தம் திருவுள்ளம், தற்கற்பிதமாய் மிகமிகவும் ஒளிவாய்ந் தொளிரும், மூவுலகமுளரியின், பெரும்பிரமா பூதத்திருமேனியினாலே, இக்கூ

றம் பிரகாரமான கர்த்தவ்யத்தை இனிதுசிந்தித் தருளத் தொடங்கிய தெனல்:—பேத, தேவ, இன்ன, தானவர், என்பன,

(ச - அ - கை.) நான்கு கவிகளாற் பகவற்சிந்தைபின் கிரம மித்தன்மைய தெனல்:— பேதமுதலன.

பேதமில்லாச் சாந்திபதம் பிரகலாதன் பெற்றிருப்ப
வேதன்சிருட்டி யழிந்துளவால் வெவ்வாளசுர ரிலாமையினு
லேதவசுர ரில்லையெனி லிகலற்றிமையோ ரெல்லோரும்
போதவுபசாந் தியராகிப் பொருவில்வீடு பொருந்துவரால்.

தேவருபசாந் தியையடையிற் செந்தீவேள்வி தவமெல்லாம்
போவதாகிப் பயனெல்லாம் பொருந்தாதெவையும் பொன்றிடுமா
லோவலுற்ற கிரியையெலா மொழிந்தாற்பூமி யொடுங்கிடுமாற்
கேவலத்திற் புவியொடுங்கிற் கிளருஞ்சிருட்டி யற்றிடுமால்.

இன்னசிருட்டி சூனியமா யிரவிமதியோ டெலாமிறக்கிற்
பின்னர்யாமும் வடிவொழித்துப் பேதமில்லாப் பதமடைவோஞ்
சொன்னகாலத் தலாதிடையே தொல்லைஞால மெலாமிறக்கி
துன்னநலங்காண் கிலமிதனுக் குறுதியுபாய முணர்ந்தனமால்.

தானவருய்க வுய்ந்தாற் சமருண்டாஞ் சமருமுண்டேல்
வானவருண்டா முண்டேன் மகந்தவமுண்டா முண்டே
லானதோர் சிருட்டியுண்டா மன்றெனிற் சிருட்டிமாளு
மூனமிலசுரர் கோனிவ் வுடலொடு மூழிவாழ்க.

(ப - ரை.) பேதமில்லாச் சாந்திபதம் = அபேதமான பரமசாந்தி பதத்தை, பிரகலாதன் பெற்றிருப்ப = தானவேந்திரன் அடைந் தானந்தித்திருப்ப, வேதன்சிருட்டி = பிரஹ்மாவினது சிருட்டி, அழிந்துள = கெட்டிருக்கின்றது, வெவ்வாள்=கொடியவாளாயுதத்தையுடைய, அசுரர் இலாமையினல் = அசுரர்கள் இல்லாமையினலே, ஏத அசுரர் இல்லையெனில் = துன்புறுத்தும் அசுரர்கள் இல்லையாயின், இகல் அற்று = பகையில்லாமல், இமையோர் எல்லோரும் = தேவதைகள் யாவரும், போத உபசாந்தியராகி =அத்தியந்தம் அறிவுருவில் உபசாந்தியை யடைந்தவராகி, பொருவில்வீடு = துவந்துவமற்ற மோக்ஷத்தை, பொருந்துவர் = அடைந்திடுவர். ஆலிரண்டும் அசைநிலைகள்,

தேவர் உபசாந்தியை யடையில் = அமரர்கள் உபசாந்தத்தை யடைந்து விடுவார்களாயின், செந்தீவேள்வி தவம் எல்லாம் = சிறந்த அக்கினியிற்செய்யும் யாகாதிகளும் தவமுதலனவும், பிறயாவும், போவதாகிப்பயன் எல்லாம் = சகலபலன்களும் அற்றனவாகி, பொருந்தா தெவையும் பொன்றிடும் = ஐயமில்லாமல் யாவுமே நாசத்தை யடைந்திடும், ஓவலுற்ற கிரியையெலாம் ஒழிந்தால் = சிரத்தையோடுஞ் செய்யப்படும் வைதிகக்கிரியைகளியாவும் சிதையுமாயின், பூமி ஒடுங்கிடும் = பூலோகமானது அத்தத்தையடையும். கேவலத்திற் புவியொடுங்கில் = கேவலவடிவத்திற் புவியானது ஒடுக்கமடைந்திடில், கிளருஞ் சிருட்டியற்றிடும் = விளங்காநின்ற சம்சாரமானது அசம்சாரப் பிரசங்கத்தை யடையும், ஆல்கள் அசைகள்,

இன்ன சிருட்டி சூனியமாய் = இங்ஙனிலங்கும் சிருட்டியானது சூனியமுற்று, இரவி மதியோடு எலாம் இறக்கில் = சூரியசந்திர நக்ஷத்திர முதலியயாவும் ஒழியில், பின்னர் யாமும் வடிவொழித்து = அதன் பின்பு யாமும் திருமேனிகரந்து, பேதமில்லாப்பதம் அடைவோம் =அபேதமயமாய தற்பதத்தை யடைந்திடுவோம், சொன்ன காலத்தலாது= நியமித்த காலத்தில் அல்லாமல், இடையே = மத்தியில், தொல்லை ஞாலமெலாம் = பிராசீனப் பிரபஞ்சமியாவும், இறக்கில் — நாசமடைந்திடில், உன்ன நலங்காண்கிலம் = ஆராய்வுழி யாதொரு சிரேயசையும் கண்டிலேம், இதனுக்கு உறுதியுபாயம் உணர்ந்தனம்= இதற்குத் திடமான சாதகம் தெரிந்துகொண்டேம், ஆல் அசைநிலை.

தானவர் உய்க = அசுரர் வாழ்க, உய்ந்தால் = வாழ்ந்தால், சமருண்டாம் =அமருண்டாம், சமரும் உண்டேல் = அமரும் உண்டேல், வானவருண்டாம் = மாசுரர் உண்டாம், உண்டேல் = உண்டேல், மகந்தவமுண்டா முண்டேல் = மகந்தபமுண்டாம் உண்டேல்' ஆனதோர் சிருட்டியுண்டாம் = பேசுறுபடைப்பும் உண்டாம், அன்றெனில் = பிறவெனில், சிருட்டிமாளும் = படைப்புமாயும், ஊனமில் அசுரர்கோன் = தேசுறும் பிரகலாதன், இவ்வுடலொடு மூழிவாழ்க = தேகமோடொளிர்க கற்பம்.

(ஸ்ரீ - வீர.) பிரகலாதனனவன் சமாதி சாம்ராஜ்யபதத்தில் இளைப்பாறுதல் அடையவே, பாதாளத்தில் நாயகன் இலனாக, கட்டம் சிருட்டியிது பெரிதும் தைத்தியரில்லாமையைக் கதுவியது தைத்தியர் இல்லாமற்போகவே தேவர்கூட்டம் வெற்றிபெறும் வேட்கை விட்டுப்பரம உபசாந்திபதத்தைப் பற்றும், அப்தபடலங்கள் காணப்பெறாத அநாவிருஷ்டி காலத்தில், யாருமாறு உபசாந்தி பெறவே, க்ஷீண அபிமான விரசலதையானது மிகமிகவும் காய்தலை எய்தலேய்ப்பத் துவந்துவங்கள் அகன்றுள்ள மோக்ஷமெனப் பெயரிய தற்பதத்தை யடையும்; சாந்தியினாலே சீத உஷ்ணாதி துவந்துவங்களற்ற அத்விதீய பதத்தை யடையுமென்பதாம்; எனவே நீர் தெளித்தலில்லாத கொடியேபோலச் சொர்க்க சுகத்தினின்றும் விரக்தர்களாய் எவற்றினும் அபிமானமில்லாத அத்தேவர்கள் குழுமிய அக்கூட்டம் இருந்துவிடுமென்பதாயிற்று. துவேஷ்ய மின்மையின் சுவர்க்க சுகத்திற் றுர்லபத்தன்மை காணாமையின் உபேக்ஷையுண்டாதலின் சுயமாகவே சாத்விகத்தன்மை யுண்மையின் தேவர்கூட்டம் சாந்தியைச் சார்ந்தபோது; " ஏகமதாம் வீடெய்து பயத்தான் மோகமதானும் முழுத்துவர் நரரை, ஆகலினமரர்க் கஃதப்பிரியம் ஊகமதாய் வீணர்தான்மநுடர் ; ஆகலினித்தேசுறு சுரரிடையூராசரித்திடுவர் சபித்தலும் ஆற்றுவர்; பிரமாதியர் வெளிச்சித்தர் பிசுனர்கலக கேலியர், திரமாதுறவியருங் காண்பர் தேவசந்தூஷிதாசயர் " என்பதாதி சுருதிமிருதி வார்த்திகாதிப் பிரசித்ததேவ சந்தூஷித ஆசயத்தன்மை யசித்தியான் மநுடர்கட்கும் சமாதிப் பிரசங்கமுளதாகவே புவியில்வேள்வி தவவினைகள்யாவுமே, அதேவத்வ பலமுடையனவாகி ஐயமெதுவு மில்லாமல் அழிந்து போவனவாகும் ; வினைகளின் விளிவுவிளைவுற்றிக அவ்விய தன்மையினு லழிவுதா னென்னெனின் ! உரைப்பார்:—ஒவலுற்ற வென்பதாதி. கிரியைகளியாவும் கெட்டொழிந்திடவே வரமுறுபூமியும் வாடியேமடியும், பூலோகக் கிரகணம் கருமபூமிபரம் வியர்த்தமாய்ப்போம், அதுதான் வியர்த்தமா யகன்றொழிந்திடவே, பொதுவினையதின் சமுசாரத்தின், வதமதாமென்னும் வழக்குவந்திடுமே ஆகுக விவணமதனுலென்னு மக்கேகுதலென்றிடின் ? எவ்வித்திரிபுவனம் கற்பாந்த பரியந்தம் எம்மாற் கற்பிக்கப் பெற்றதோ, அவ்விது, தாபமுறவே இமகணம் சாம்புதலொப்ப அகாலத்திலேயே நாசத்தை நண்ணுநிற்கும்; நிற்கவே இவ்விஸ்தாரமாகிய ஜகத்சம்ஸ்தானமானது விலீனமாகி க்ஷயத்தையடைந்திடில் தமது லீலையின் க்ஷயகாரியாயஎம்மால் ஈண்டுசிதமாக வியற்றப்பெற்றது யாதாகும்? ஒரு சிறிதுமேயின்றாம். எமது லீலையின் க்ஷயமெய்தியவுடன் யாமும் சந்திர

அருக்கதாரகைகள் எல்லாம் நட்டமாய் மகாசூனியமாகிய இத்தற்பதத்தின்கண், லீலார்த்தமாகிய திருமேனியின் உபசங்காரத்தைக் கொண்டு மீண்டுஞ் சமுசார உற்பவமாகாதவாறு அந்தப்பூர்ணாத்ம பதத்திலேயே திதியையடையா நிற்பேம். மூலம்:-சம்பாவனை யதிகமாயப விஷயத்திலும் ல்ருட்லகாரமேயாம். இங்ஙனிங்ஙன் விளம்பிய நானுவகையாய வேற்றுமையானே அநவசரத்தில் ஜகத்தானது உபசமத்தை யடையுமாயின், ஈண்டுத்தேவ மநுடாதி ஜீவவர்க்கத்தில் மேன்மையைக் கண்டிலேம்; அல்லது, சிரேயசைக் கண்டிலே மென்பதாக இல்லை, மற்றேரு, காணவே செய்வேம், "வைராக்கியத்தானே பகுதியிலிலயம்" என்னும் மிருதியினுல், பகுதி இலயத்தில் துயிலிற்போலச் சர்வதுக்க உபசமவடிவச் சிரேயசின் சித்தியாதலின். ஆனுல், "அப் பரம்பொருளையே யறைமறையினுல், விப்பிரருணர்ந்திட விழைதல் செய்குவார்" "நீடுமனநிலை நின்றிலனுயினு, மோடும்வகையால் விடாதே யுழன்றவன், பாடும்பவங்கள் பலகடந்தாயினும், வீடும்பெறு மின்னும் வேறுஞ்சில கேளாய்." என்பதாதி சுருதிமிருதி சித்த அநேகஜன்ம அநுட்டித நிட்காமகரும சாத்தியமாய விவிதிஷைதத்துவ சாக்ஷாத்கார மின்மையின் மூலாஞ்ஞான ஆவரணம் நீங்காமையின், விரையுளதாகவே மறித்துந் திரும்புகைக் கடாவருதலினுனும், நிரதிசயாநந்த அடைவுவடிவச் சிரேயசானது எவர்க்குமே எய்தாதென எண்ணுவேம்; ஆகலின் முறையே யாவர்க்கும் அதன் இலாபப்பொருட்டுத் தானவர் வாழ்ந்திடுக. அதேமுறையை மீளவும் தொகுத்துக்கூறல்:—தாணவரென்பதாதி. தைத்திய உத்தியோகத்தால் தேவர்கள், அத்தேவர்களால் யாகதவக் கிரியைகள், அவற்றினுலே சமுசார நன்னிலைபேறு, ஆம், அன்னியவகையாற் சமுசார முறையாகாதாம்.

(ச.) பிரகலாதன் றற்பதத்தில் விசிராந்தி யடைதலின் பாதாளம் அரசில்லாமல்வாதைமிகுந்து அசுரர் அநாதர்களாய் இறப்பர், இமையோ ரெல்லோரும் இகலற்று ஜயிக்க வேண்டுமென்னும் இச்சையைவிட்டு உபசாந்தியராகில் முத்தி விருப்புறில் அதனுலவாது போகபூமியாகிய சுவர்க்க மின்மையிற் புவியில் வேள்விதவ முதவிய சுவர்க்கதபலங்களும், சற்கருமங்களும் பொன்றிடும். அதனுற்றருமப் பிரவிருத்தி யின்மையின் புவியொடுங்கிடும், சிருஷ்டி சூனியமாய்ச் சம்சாரப் பிரசங்க மின்மையாயின் பாலிக்கத் தக்கதின்மையின் யாமுந் தற்பதத்தில் விசிராந்தி யடைவோம்; அதனுற் சொன்ன காலத்தல திடையே பிரளயமா மாதலின் தானவருய்வதே நலமென் றெண்ணுகிறேன், தானவரது சமரத்தால் வானவர்க்கு விஜயேச்சை யுண்டாய் அதனுல் மகமுதலிய கிரியாப்பிரவிருத்தி யுண்டாயின் சம்சாரந்திதிபெறும் அன்றெனில் மாளுமென்பதாம். (49-50-51-52)

(ஸ்ரீ-வீர - அ-கை.) கூறியவண்ணஞ் சிந்தித்தருளிய ஸ்ரீ பகவான், பிரகலாதனுக் கிட்டிருக்கும் நியதியைக் கண்டருளி அவ்வன்பு நிறைந்தவனைச் சமாதியினின்றும் பகிர்முகப் படுத்த ஆங்கெழுந்தருளல்:—பரமமென்பது.

பரமமா மீசனுலே பாலிக்குங் கடவுணீதி
திரமுற விவ்வாறென்று சிந்தித்த செங்கண்மாய
னரவணைப் பாயனீங்கி யசுரர்கோ னருகுசேர்ந்தான்
பிரமலோ கத்தையொக்கும் பெரியபா தலநகர்க்கே.

(ப - ரை.) பரமமாம் ஈசனுலே = பரமேசுவரனுலே, பாலிக்கும் = நியமிக்கப்பெற்ற, கடவுள் நீதி = தெய்வநியதியானது, திரமுற இவ்வாறு = திடமாக இத்தகைத்து, என்று = என்பதாக, சிந்தித்த செங்கண்மாயன் = அறிந்தருளிய செந்தாமரை யிதழ்போலும் திரு

நேத்திரங்களையுடைய மாயவனாகிய ஸ்ரீ பகவான், அரவணைப்பாயல் நீங்கி = ஆதிசேட சயனத்தினின்றும் அகன்றருளி, அசுரர்கோன் அருகுசேர்ந்தான் = தைத்தியேந்திரனது சமீபத்தை யடைந்தருளினன், பிரமலோகத்தை யொக்கும் = சகல ஐசுவரியங்களானும் சத்தியலோகத்திற்குச் சமானமான, பெரிய= அதிவிசாலமான, பாதலநகர்க்கே=பாதாள லோகத்திலிருக்கும் பிரகலாதனது இராஜதானி நகரத்தை நோக்கிவந்தருளினார். நகர்க்கே அருகுசேர்ந்தான் எனக்கூட்டுக.

(ஸ்ரீ - வீர.) பிரகலாதனுடைய இத்தேகமோ பச்சிமம் பாவனம் மகத்தாகவுடையதாம்' ஈண்டுக்கற்ப பரியந்தம் இத்தேகத்தோடும் அவன் வசிக்கவேண்டும், என்பதாகவே பாரமே சுவரி நியதிதேவி நிச்சிதமாம், ஆகவே இத்தேகத்தோடும் அவன் ஈண்டுக்கற்ப பரியந்த மிருக்கவேண்டிய தின்றியமையாததாம், ஆகலின் அத்தைத் தியோந்திரன்பால் யாமே சென்று சமாதியினின்றும் அவன் உணருமாறு செய்வேமாக என்று சர்வான்மாவாகிய ஸ்ரீபகவான் சிந்தனையினிது செய்தருளி; பாற்கடற்குள்ளடங்கிய சுவேததீப அந்தர்க்கத மான தமது திருப்புரத்தினின்றும், பரிவாரத்தோடுகூடத் தாழ்வரை சகிதமாய மந்திரா சலமென்ன, பரமார்த்தமாகச் சலன ஞூனியரேயாயினும், அசைதலையடைந்தருளி; தாதா வினது சங்கற்பத்தினாலேயே தம்பிதமாகிப் பாதாளகுகர அப்பிரவேசியாய அம்புநிறைந் துள்ள க்ஷீரோதகத்தின் றலரந்திரக்கீழ் துவாரவாயிலாகவே, அயலொரு தேவேந்திரலோ கம் போன்றிராநின்ற அதிரம்மியமாகிய பிரகலாதனது திருநகரத்தை யடைந்தருளி; அந் தப்பிரகலாத நகரத்தில், சுமேருபர்வதத்துற்ற குகையின் கண்ணே லீனமாய்ச் சமாதியி லிருக்கும் பிரஹ்மாவேயென்ன ஹேமமந்திர கோசத்திருந்த பிரகலாதனை ஸ்ரீஹரியானவர் கண்டருளினர். (53)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆண்டிரண்டு மூன்று முக்கிய அசுரர்களோடு கூடப் பரிவார சகித ஸ்ரீஹரியானவர் பிரகலாதனது அரண்மனையில் தாராவாணாகிய சசியாகாசத்திற்போ லப் பிரவேசித்தருளினரெனல்:—கருட என்பது.

> கருடவாகனத் துறைபவன் கவரிசேர் செங்கைத்
> திருமடந்தைவாழ் வலத்தின னைம்படை செறியு
> மிருபுறத்தினன் றேவரு முனிவரு மிறைஞ்ச
> வருளுநாயக னசுரனை யுணர்தியென் றருளி.

(ப - ரை.) கருடவாகனத் துறைபவன் = வைநதேய ஆசனஸ்தன்; கவரிசேர்செங் கைத் திருமடந்தை வாழ்வலத்தினன் = சாமரஞ்சார்ந்த செந்தாமரை புரையுந்திருக்கரத் திருவல்லி யெழுந்தருளுந் திருமார்பினன், ஐம்படைசெறியும் இருபுறத்தினன் = பஞ்சாயு தங்கள் படைத்த இரண்டு பாகத்தினன், தேவரும் முனிவரும் இறைஞ்ச = இமையவரும் இருடியரும் முனிவரும் இனிதேத்த, அருளுநாயகன் = அவர்கட்கு வேண்டியவற்றை யெல்லாம் அநுக்கிரகஞ் செய்யும் எம்பெருமான், அசுரனையுணர்தி யென்றருளி = பிரக லாதனைநோக்கி நீ சமாதியினின்றும் உத்தானதிசையை ஹேமகாத்மாவே யடைவாயென்று கூறியருளி.

(ஸ்ரீ - வீர.) கருடாரூடரும், ஸ்ரீதேவியிரட்டிய சாமரத்தினரும், தமதாயுதாதிபரிவார ரும், தேவருஷி முனிவர்களானே வந்திதரும் ஆகிய ஸ்ரீமகாவிஷ்ணுவானவர், ஹே மகாத் மாவே ! மிகநன்றாக விழுமதி வெளியாவாய் என்பதாக இயம்பியருளி. (54)

(ஸ்ரீ - வீர - அ - கை,) உரைத்தருளிய ஸ்ரீபகவான் வலம்புரிச் சங்கத்தொனிசெய் தருளப் பிரகலாதன் பைய உணர்ந்தனன் எனல்:—வலமென்பது.

வலம்புரித்தொனி கிளப்பினன் மாதிரம் பிளப்ப
நிலம்பிளப்புற நெடுந்திசை பிளப்புற நிமிர்ந்த
வலம்புமோதையான் மெல்லென மெல்லென வறிந்தா
னலம்பயப்புறு தற்பதத் தொன்றிய நல்லோன்.

(ப - ரை.) வலம்புரித் தொனிகிளப்பினன் = பாஞ்சஜன்யத்தின் நாதத்தை வெளிப் படுத்தியருளினன், மாதிரம் பிளப்ப நிலம்பிளப்புற நெடுந்திசை பிளப்புற = விண்ணுலகை யும் மண்ணுலகையும் திசைகள் தசங்களையும் பிளந்து வியாபித்து, நிமிர்ந்த = ஓங்கிய, அலம்பும் ஓதையால் = மகத்தாகிய அச்சப்தத்தானே, மெல்லென மெல்லென அறிந்தான் = பையப்பைய உணர்ந்தனன், நலம்பயப்புறு தற்பதத்தொன்றிய நல்லோன் = ஆநந்தமே யுண்டாக்கும் தத்பதப் பிரஹ்மத்தின் கண்ணொடுங்கிய நல்லதானவேசுரன்.

(ஸ்ரீ - வீர.) திசைக்கணங்க ளெல்லாம் பிரதித்தொனி செய்யும்படியாகப் பாஞ்சஜன்ய மென்னுஞ்சங்கை ஸ்ரீபகவான் முழக்கியருளினர், ஸ்ரீவைஷ்ணவபலத்தினாலே யுண்டாகிய, ஒரேகாலத்திற் கலக்கமுற்றுக் கிளம்பிய பிரளயமேகங்களின் பிரளய அர்ணவங்களின், வேகப்பிரவாகத்திற் சனித்த பெருந்தொனி போன்ற தொன்றும் மகத்தாகிய அந்தச் சப் தத்தானே, மெதுவுமெதுவாகத் தானவேசனாகிய பிரகலாதன் சம்பிரபுத்தனாக ஆயினான்.

(ச.) மூலம்: வைஷ்ணவப் பிராணஜன்மநா = விஷ்ணுசம்பந்தப் பிராணவாயு ஜநித மான பெருந்தொனியினாலே. (55)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மேகாவசாத்திற் கானனத்தில் மலர்ந்த கதம்பம்போல உணர்தற் குரிய பிரகலாதனது சம்பிரபோதக் கிரமத்தை விஸ்தரித்தல்: — பிராண, அறிவு, அற்பம், அமைவில், என்பன.

பிராணசத்திதான் பிரமரந் திரநின்று பெயர்ந்து
புராதனப்படி நாடிக ளாலெங்கும் பொருந்தி
விராவலுற்றன வொன்பது துவாரத்து மேவப்
பராபரத்தினை யறிந்துளோ னறிவுசம் பவித்த.

அறிவுதோன்றியுட் பிராணதர்ப் பணநிழ லாகி
யறிவதாம்பொரு ளோக்குற்ற தன்னதா மறிவு
பிறிவதாமறி பொருளிலே மனத்தன்மை பெற்ற
பிறிவிலாமுகந் தர்ப்பணத்திருமைபெற் றதுபோல்.

அற்பமுள்ளமங் குரித்தலு மரும்பவிழ் வுற்ற
வுற்பலங்கள்போன் மெல்லென மலர்வுற்ற வொண்கண்
ணிற்பதாய்நரம் புறுபொறி யறிவுக ணிறைய
நற்பிராணனு மபானனு மெங்கணு நடந்த.

அமைவில்காற்றுற்ற பதுமம்போ லசைவினை யடைந்தா
னிமைகளுக்கிடை யளவிலே மனந்தடித் தெழுந்த
சமைவுறத்தெரி கண்மனம் பிராணன்மெய் தயங்கக்
கமையின்மிக்கவன் விளங்கினன் கருணைமால் காண.

(ப - ரை.) பிராண சத்திதான் = பிரகலாதனுடைய பிராணசத்தியானது, பிரமரந் திர நின்று பெயர்ந்து = அடங்கியிருந்த பிரமரந்திர மூர்த்தன்ய ஸ்தானத்தி னின்றும் எழுந்து, புராதனப்படி = பழையபடி, நாடிகளால் எங்கும் பொருந்தி = நாடிகளின் வாயி லாக எவ்விடத்திலும் வியாபித்து நின்றது, விராவலுற்றன = கலத்தலையடைந்தனவாகிய பிராணன்கள், ஒன்பது துவாரத்துமேவ = நவரந்திரத்தும் பொருந்திய அளவில், பராபரத் தினையறிந்துளோன் அறிவு சம்பவித்த = பராபரமாகிய பிரஹ்மத்தை யறிந்த பிரகலாத னது சித்தானது சேத்தியோன் முகமாயது.

அறிவுதோன்றி = உணர்வானது விடயமுன்னிலைப் படுதலையடைந்து, உட்பிராண தர்ப்பண நிழலாகி = அந்தர் பிராண தர்ப்பண பிம்பிதமாகி, அறிவதாம் பொருள்நோக் குற்றது = விடயத்தை நாடலுற்றது, அன்னதாமறிவு = அத்தன்மையை யடைந்த சித் தானது, பிறிவதாமறி பொருளிலே = பேதமதுற்ற திருசியம் போலவாகி, பிறிவிலாமுகந் தர்ப்பணத் திருமை பெற்றதுபோல் = பேதமதாகாதவதனமானது கண்ணுடியின் கண் ணிரண்டாந் தன்மையை யடைந்ததொப்ப, மனத்தன்மை பெற்ற = மனதாந்தகைமை யைமருவியது.

அற்பம் உள்ளம் அங்குரித்தலும் = சிறிதுசித்தம் முளைத்தலும், அரும்பவிழ்வுற்ற உற் பலங்கள்போல் = நீலோற்பல மொட்டுகள் சிறிது வாய்திறந்தனபோல, மெல்லெனமலர் வுற்ற ஒண்கண் = மெதுவாக விழிகள் அற்பமலர்ந்து, நிற்பதாய் = நின்ற அளவே, நரம் புறு பொறியறிவுகள் நிறைய = நாடிகளின் துவாரங்களிற் பொருந்துவனவாகிய விடய வுணர்வுகள் வியாபிக்குமாறு, நற்பிராணனும் அபானனும் எங்கணும் நடந்த = சாதகமாகப் பிராணவாயுவும் அபானவாயுவும் சகல நாடித் துவாரங்களிலும் சஞ்சரித்தனவாம்!

அமைவில் காற்றுற்ற பதுமம்போல் அசைவினை யடைந்தான் = சலன சுபாவம் வாய்ந்த சதாகதி சார்ந்த சலசமென்னச் சற்று சலனத்தைச் சார்ந்தான், இமைகளுக்கிடை யளவிலே = நிமேட அந்தரமாத்திரமாக, மனந்தடித் தெழுந்த = மனமானது பருமையை யடைவுற்று நின்றது, சமைவுறத் தெரிகண்மனம் பிராணன் மெய்தயங்க = பொருந்துறு மாறு விகாசமுற்ற நேத்திரங்களும் மனதும் பிராணனும் தேகமும் ஒன்றுபெற்றொளிர, கமையின் மிக்கவன் = சொருபத்திற் பரமவிசிராந்தியை யடைந்தவன், கருணைமால் காண விளங்கினன் = தயாவடிவம் வாய்ந்த தாமோதரன் கண்குளிரக் கண்டருளக் கவின்வாய்ந் திலங்கினன்.

(ஸ்ரீ - வீர.) பின்னர் அவ்வசுரேந்திரனுடைய பிராணசக்தியானது பிரமரந்திரத்தா னத்தினின்றுங் கிளம்பி, ஸ்ரீ கங்கை அர்ணவமுழுவதும் பூரித்ததொப்ப, அவனை மெது வாக வியாபித்தது; நாடிகளின் வாயிலாயென்பது கோடக்கிடந்தது; ஒன்பது வாயின் புரத்தில் இந்திரியங்கள் முயன்ற அளவில், அவனது சித்தானது, திருசிய உன்முகத்தை யடைவுற்று, உட்பிராணக் கண்ணுடியிற் பிரதிபிம்பித் திலங்கியது, பிராணனென்னும் லிங்க தேகவடிவ ஆடியிற் பிரதிபலித்திலங்கிய தென்பதாம்; விடயநாட்டமடைந்த சித்தானது திருசியாகார சமஸ்கார வுற்போதத்தால் திருசியம்போலவாகிச் சிற்சட உபயரூபத்தன்மை வடிவமான மனத்தன்மையை மருவியது, முகுரத்திற் கலந்தமுக ஸ்ரீயானது சிகரத்தி லிரு மையைச் சிவணியதெனவாம். சித்தமானது சிறிது அங்குரித்திடச், சுத்தமானவன்றன் விழிகளிரண்டும், நித்தகாலையி னினீலவுற்பலமென, மெத்து மெத்தாக மிளிர்வைமேவி னவே; உள்ளே புகுந்தனவாகிய பிராண வபானன்களால், உற்போதிதமாகி, சகல விடங் களிலுமுள்ள நாடிகளின் துளைகளிலிலங்கும், உணர்வின் நிமித்தத்தினுல், காற்றினுற்றூற் றப் பெற்ற கமலத்தினசைவென வவனது காயத்தின் அற்ப அசைவான தினிதுளதாயது.

புருவத்திடை மாத்திரத்தானே மனம் பொரும்பிப்பருமையைப் பொருந்தியது, தரங்கமென வாரியிற் பிராணவயத்தாலது பூரணமாகியமர்ந்த அவவே, ஆதித்தியன் அர்த்தமுதிதமாக மலர்ந்த தாமரைமடுவேமானப் பிரகலாதனும் விரிந்த நேத்திரமனப் பிராணவபுவுடையவனுகி வயங்கினன்.

(ச.) அறிந்த பின்பு, பிராணசக்தி = சைதந்யசக்தியானது, பிரமரந்திரம் நின்று = முன்சமாதி சமயத்தில் அந்தப் பிரமரந்திரத்திற்றனே யிருந்தது; பின்பெயர்ந்து சர்வநாடிகளால் மெல்லெனப் பொருந்திப் பிரகலாதனை வியாபித்த தென்பதாம், ஒன்பது துவாரத்தும் = நவத்துவார மென்னும் இந்திரியங்களில்.

அறிவுதோன்றி உட்பிராண தர்ப்பணமிழலாகி = பின் அந்தர்ப் பிராணன் = அந்தரிந்திரிய மென்னுந் தர்ப்பணத்திற் பிரதிவிம்பமாய், அறிவதாம் பொருளுக்குற்றது = திருசியோன் முகமாயிற்று, பிறிவதாமறி பொருளிலே = திருசியத்தில், அன்னதாமறிவு = உன் முகமாய் அந்தக்கரணப் பிரதிவிம்பமாதலின் றிருசியரூபமாகிய வவ்வறிவு, மனத்தன்மை பெற்ற = மனோரூபத்தை யடைந்தது, பிறிவிலா முகந்தர்ப்பணத்திற் பிரதிபலித்ததாய் ரூபாந்தரத்தைப் பெற்றதுபோல.

நரம்புறுபொறி = நாடிகளினுட் டுளைகளில், மூலம்: சேதனீயம் = சேத்யம் = திருசியம். முகஸ்ரீ = முகச்சோபை, த்வித்வம் = ரூபாந்தரம். பிராண + சம்வித்: = பிராண அபானன்களினுற் பிரபோதிதமாகி நாடிகளின்றுளைகளி லுற்றுள்ள சேதனத்தோடு கூடிய அத்தேகமானது வாதமோதிய பதுமம்போல ஸ்பந்தத்தை யடைந்தது. (56-57-58-59)

(ஸ்ரீ-வீர - அ-கை,) பூரணப் பிரஞ்ஞையை யடைவுற்ற பிரகலாதனை நோக்கி ஸ்ரீபகவானருளல்:—பரந்து என்பது.

பரந்துநாட்டங்க ணோக்கின மனனமும் பருமை
நிரந்தரித்தன வவ்வயி னவன்றனை நெடுமால்
சுரந்தவன்புட னோக்கியே யருள்செய்வான் றூயோய்
புரந்தரன்புக ழுனதுசீர் நோக்குவாய் புரிந்து.

(ப - ரை.) பரந்து நாட்டங்கள் நோக்கின = மலர்ந்து கண்கள் மகிழ்ந்து நாட்டின, மனனமும் பருமைநிரந் தரித்தன = இன்னுன் என்னுஞ் சங்கற்பமும் இனிய எண்ணங்களும் உதயமாயின, அவ்வயின் அவன்றனை நெடுமால் = அப்போது அந்த அசுரேந்திரனை சர்வஞ்ஞனுகிய ஸ்ரீ பகவான், சுரந்த அன்புடன் நோக்கியே = சுயமாகவே விளம்பியவாத்சல்யத்துடன் பார்த்தருளி, அருள்செய்வான் = அநுக்கிரகித் தருளுவார், தூயோய் = பரிசுத்தனுகிய எமதன்பனே, புரந்தரன் புகழ் = தேவேந்திரன் கீர்த்திக்கும், உனது சீர்நோக்குவாய் புரிந்து = உன்னுடைய சீர்த்தியைச் சற்று நிதானித்து நோக்கியுணர்வாய்.

(ஸ்ரீ - வீர.) விழியாதிகள் விகாசமடைந்தபோது விபுவானவர், உணர்ந்து காண்டியென்றருள் செய்யவே, அவ்வளவில், மேகசப்தத்தால் மயூரம்போலப் பிரகலாதன் இனிதுணர்ந்தனன்; நயன நளினங்களின் மலர்தலையும், பிரகலாத அகம்பாவப் பிரத்தியபிஞ்ஞையின் உதயத்தையும், நன்றாகவளர்ந்த முன்னவத்தாதி மிருதியையும், அடைந்த பிரகலாதனை, திரிலோக நாயகன் நோக்கியருளி; முன்னர் உந்தியந்தாமரை வந்தவனை நோக்கியருளியனுக்கிரகித்ததேபோல அனுக்கிரகிப்பார், ஹேசாதுவே ! உன்னுடைய மகத்தான இலக்ஷ்மியாகிய தைத்தியராஜ்ய ஐசுவரியத்தை யெண்ணுதி ! (60)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ பகவானிதோபதேசஞ் செய்தருளல்:—உடலையென்பது.

உடலைநோக்குதி யகாலத்தி லுன்னுடை யுடலை
விடநினைப்பதென் பற்றுதல் விடுதல்சங் கற்பம்
படர்கிலாவுனக் கபாவமும் பாவமு முடலிற்
றொடரிற்சேதமென் னெழுதியா லிருத்தியாற் றூயோய்.

(ப - ரை.) உடலைநோக்குதி = உன்னுடைய தேகத்தை யுற்றுப்பார்ப்பாய், அகாலத்தில் = காலமல்லாத காலத்தில், உன்னுடையுடலை உனது வஜ்ஜிரதேகத்தை, விடநினைப்பதென் = தியாகஞ்செய்ய எண்ணுவதென்னே, பற்றுதல் விடுதல் சங்கற்பம் படர்கிலாவுனக்கு = ஹேய உபாதேயசங்கற்ப விகீனனாகிய நின்றனக்கு, அபாவமும் பாவமும் உடலில் தொடரில் சேதமென் = சரீரசம்பந்தமான பாவாபாவங்களானே நினக்கென்னே பயன்? எழுதியால் இருத்தியால் தூயோய்! =ஹேபரிசுத்த சித்தத்தையுடைய பக்தனே! எழுந்து சுகமாகநினது விவகாரத்தைச் செய்துகொண் டிருப்பாயாக.

(ஸ்ரீ - வீர.) உன்னுடையதாகிய தேகாகாரத்தைத்தான் எண்ணிப்பார்! நீ தேகத்தை மறந்திடுதலானே அநவசரத்திலேயே, தேகத்தின் அவசானத்தையேன் செய்யத்தொடங்குகின்றாய்? அதனாலுனக் கென்பயன்? அற்றேல், "ஆகமுடையனுக் காசையும் வெறுப்பும் ஏகலின்றென வெழின்மறை யறைதலின், சர்வஜனங்கட்கும் அவ்வாறே யநுபவமிருத்தலினாலும் அநர்த்த ஹேதுவாம் தேகஸ்மரணம் எனின்? விடையருளுவார்:—பற்றுதல் என்பதாதி. தள்ளத்தக்கதிது கொள்ளத்தக்க திதுவென்னும் எண்ணங்கள் எதுவுமின்றிய உனக்குச் சரீரத் துறுவனவாகியலாப நஷ்டங்களானே மகிழ்ச்சி வாட்டவடிவப் பிரயோஜனம் எங்ஙனமுண்டாம்? ஹேய உபாதேய சங்கற்பந்தியாகமாகவே தேகமிருந்தபோதினும் பிரியாப் பிரியங்களாலும் பாவாபாவங்களாலும் உனக்குப் பயனிலதாம் என அநர்த்த அடைவின் றென்பதாம். ஆகலின் உடனேயெழுந்து நினது இராஜ்ய விவகாரத்தைக் கவனித்துக் கொண்டிருப்பாய்.

(ச.) அபாவனை = அநிஷ்டங்களும், பாவனை = இஷ்டங்களும், அபாவமும் பாவமும் என்னும் பாடபேதத்திற்கும் இதுவே பொருள்; சேதமென்= ஆனியேது, ஆதலிற்சமாதியினின்று எழுதி, ஜீவன்முக்திப் பதத்தில் இருத்தி. ஹேயோபாதேய விஷய சங்கற்பவிகீனனாகிய நினக்கு ஆகத்துற்ற இஷ்ட அநிஷ்டங்களானே ஆனியென் னென்றதாம். (61)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் எத்துணைப்போது தேகதாரணஞ் செய்யவேண்டுமெனின்? ஈண்டு இத்தேகத் தோடுங் கற்பகாலபரியந்தம் நன்னிலைமை பெற்று வாழ்வாயாக, யாமோ உள்ளபடியாய அநிர்திதமான நியதியையறிவேம், நினது ஆயுணியமத்தை யுணர்வேம், என்னுந் திருக்கருத்துடன் ஆசீர்வதித்தருளல்:—சீவனென்பது.

சீவன்முத்தனா நீயிந்த வுடலொடுஞ் செங்கோற்
காவலாளனாய்ச் சுமையறக் கற்பமட் டிருப்பாய்
பாவகன்சுடப் பன்னிரு கதிர்சுட வுலகம்
யாவதுங்கெடா திருப்பநீ யிறப்பதென் வாளா.

(ப - ரை.) சீவன் முத்தனாநீ = ஜீவித்துக்கொண்டே முக்தனாகி யிருக்கும் நீ, இந்த உடலொடும் = இத்தேகத்தோடும், செங்கோற் காவலாளனாய் = இராஜ்யபரிபாலனஞ் செய்பவனாய், சுமையற = உத்வேகமின்றி, கற்பமட்டிருப்பாய் = கற்பகால பரியந்தம் இருந்துவாழ்வாய்; பாவகன்சுட = அக்கினி சொலித்துக் கொண்டிருப்ப, பன்னிருகதிர்

சட = துவாதச ஆதித்தியர்கள் தகிப்ப, உலகம் = ஜகத்து, யாவதும் கெடாதிருப்ப = முழுவதும் அழியாதிருப்ப, நீ இறப்பதென்வானா = வீணுகவே நீதனுவை விட்டுவிடுதல் என்னகாரணமோ.

(ஸ்ரீ - வீர.) ஈண்டிவ் விராஜ்யத்திற்றுனே ஜீவன்முக்தனுகிய நீ இருந்துகொண்டு இராகத்துவேட மற்றுச் சாந்தனுய்க் கற்பகால பரியந்தம், இத்தேகத்தை விவகாரத்திற் பிரேரிப்பாயாக. ஆயிற் கற்பாந்தத்தில் யான் இருக்கவேண்டிய தெவ்வாறெனில்? ஹே அநகனே! கற்பாந்தத்தே தேகமுடிந்தபோது, சுவாத்மபூதமாய நிரதிசய நின்மகத்துவத்தில், கும்பமுடைந்தபோது கும்பம்பும் அம்பரமானது மகாம்பரத்தில் இருப்பதேபோல நீயுமிருப்பாய். ஆயின் என்கற்பாந்தம் சந்நிகிதமா வெனின்? இன்றென் றருளுகின்றார்:— பாவகன் என்பதாதியாய். துவாதசாதித்தியர் உதயமாகாதிருப்ப, பெரும்பர்வதங்கள் பிரலீனமாகாதிருப்ப, ஜகத்ஜொலித மாகாதிருப்ப, ஹேசாதுவே! வீணுகவே நீ தனுவைவிட வெண்ணுவ தென்னே! (62)

(ச.) சுமையற = பயமின்றி, தேகத்தைப் பிரவர்த்திக்கச் செய்வாய்.

(ஸ்ரீ - வீர - அ - கை) இரவிமதியாதி யாவுமிருப்ப இராகத்துவேடமற்ற நினக்குமரணம் இப்போது சோபிதமாகாதாம், என்றருள, ஆயின்யாவர்க்கு மாணமுசிதம் எனவினவ, விடையருளுகின்றார்:—ஒங்கு மென்பது.

ஓங்குமாசையாம் பாசத்தா லுறப்பிணிப் புண்டு
வீங்குமுள்ளுணர் வதன்வழி யோடியே மெலிந்து
தாங்குசெய்கையான் மனமிகச் சலிப்பவர்க் கன்றே
தீங்குமேவிய மரணந்தான் சிறப்பது சகத்தில்.

(ப - ரை.) ஓங்கும் ஆசையாம் பாசத்தால் = வளர்ந்தே செல்லும் ஆசாபாச சதங்கனானே, உறப்பிணிப்புண்டு = அத்தியந்தங் கட்டுப்பட்டு வீங்கும் உள்ளுணர்வு அதன்வழி= அதன்மார்க்கமாகவே, ஓடியேமெலிந்து=சென்று வீங்கியேங்கிக் கிடக்கும் அந்தர்மனமானது, அதன்மார்க்கமாகவே, ஓடியேமெலிந்து=சென்றோடிநைந்து சிறுத்து, தாங்குசெய்கையால் = அதன் பொருட்டாக்கும் வினைகளால், மனமிகச் சலிப்பவர்க்கு அன்றே = உள்ளம் மிகவுஞ் சஞ்சலமுற்றவர்க்கல்லவோ, தீங்குமேவிய மரணந்தான் = மகாதுன்பத்திற் கேதுவாகிய மரணமானது, சிறப்பது சகத்தில் = அகாலத்தில் வருவது இவ்வுலகத்தில்.

(ஸ்ரீ - வீர.) பெருத்த அஞ்ஞான யோகத்தானே பரியாகுலப்பட்ட எவன்மனத்தைத் துக்கங்கள் துளையாநிற்குமோ அவனுக்கு மரணஞ்சிறந் துண்டாம்; "அத்தியந்தம் பீடிதன் ஜீவன் றாலதேகமகற்றுவான்" என்னும் மிருதிசித்த மாணஹேது பொருந்தலின் என்ப தாம் இளைத்தேன், அதிதுக்கி, மூடன்யான் என்பனவாதியும், பிறதுர்ப்பாவனைகளும், எவன்மதியை மூழ்கடித்துத் துன்புறுத்திக் கவலைப்படுத்துமோ அவனுக்கு மரணஞ்சிறப்புடைத்தாகும்; ஆசாபாச நிபத்தமாய் அந்தக்கரணம் எவனது அகற்றப்பெறுமோ, விடயங்களை நாடியோடுமோ, மனோவிருத்திகளானே யாவன் மகாலோலனுகித்திரிவனோ அவனுக்கு மரணமானது விசேடித்தோங்கா நிற்கும்.

(ச.) அந்தக்கரணம் ஆசாபாசத்தாற் பிணிப்புண்டிருத்தலின், வீங்கு முள்ளுணர்வதன் வழி, மிகுசஞ்சலமுள்ள மனோவிருத்தி வசமாய், பசுப்போ லிங்கு மங்கும், ஓடியே, சுகம் அற்பமும் இன்மையின், மெலிந்து = மெலிவுள்ளவனுய், தாங்குசெய்கையால், தாரித்திராதி

துக்கவாதனையால், மனமிகச் சலிப்பவர்க்கன்றே = தைரியமற்றவர்க்கே: மரணஞ் சிறப்புள்ளதென்பது பொருள். (63)

(ஸ்ரீ-வீர - அ-கை.) முன்மொழிந்தவர்க்கு மரணஞ் சிறப்புடைத்தாயின் மற்றியாவர்க்கு ஜீவிதம் சோபிதமாகும் எனவினவ விடையருளிச் செய்கின்றார்:—அகமென்பது.

(ச - அ - கை.) ஜீவன் முத்தனுக்கு உயிர்வாழ்க்கையே சிறப்புள்ளதெனல்:—அகமென்பது.

அகங்கரத்தினை யகற்றியோர் பற்றின்றி யனைத்துஞ்
சுகந்தருஞ்சம மானவ ராயுவே சுகமா
முகந்தவாசையுஞ் சினமுமற் றுட்குளிர் மதியாற்
செகங்களின்கரி யானவ ராயுவே சிறக்கும்.

(ப - ரை.) அகங்கரத் தினையகற்றி = தேகாதிகளில் யானென்னுந் தோற்றத்தைத் துடைத்து, ஓர்பற்றின்றி = யாதொருபற்றுதலும் எவற்றின் கண்ணுமில்லாமல், அனைத்தும் சுகந்தரும் சமமானவர் =சர்வபாவங்களிலும் இன்பமீயும் சமமுடையவர்தம், ஆயுவே= ஜீவிதமே, சுகமாம் = இன்புற்றிலங்கும்; உகந்த ஆசையும் = அநுகூலங்களில் விருப்பும், சினமும் = பிரதிகூலங்களில் வெறுப்பும், அற்று = கடந்து, உள்குளிர்மதியால் =உட்சீதளபுத்தியால், செகங்களின் கரியானவர் = இவ்வியாவற்றையும் சாக்ஷிபோற் காண்பவர்தம், ஆயுவே = ஜீவிதமே, சிறக்கும் = விசேஷித்து விளங்கும்.

(ஸ்ரீ - வீர.) சுவாத்மதத்வ அவலோகநத்தானே எவனுடைய மதிகிளம்புவதில்லையோ, யதார்த்த தரிசியாய அவ்வறிஞனுடைய வாழ்நாளே யாவரும் புகழ இலங்குவது; தேகத்தினின்றும் பிராணன் வெளிக்கிளம்புதல் மரணமென்ப தின்றும், மற்று, ஆத்மதத்வத்தி னின்றும் மதியின் வெளிக் கிளம்புகையே அதுவாம், அதுவும், அறிஞனுக் கிலதேயாம் என எப்போதுமே அவனது ஜீவிதம் சோபிதமாம்; அறியாதவனது மதியோ, எஞ்ஞான்றுமே சுவாத்ம தத்துவத்தினின்றும் வெளிக்கிளம்பு கின்றதென அவன் நித்தியமிருத சொருபனே யாவன் என்பது பாவமாம், மேலும் ஏகதேசாபிமான மிருப்பில் அதனது தியாகம் மரணமாம், எவனுக்குத்தான் அத்தகைய அகங்காரமானது இலதோ, எவனதுபுத்திதான் அதனது பிரியாப் பிரியங்களானே பற்றுறமாட்டாதோ, அவன் சர்வபாவங்களிலும் தேகங்களிலும் விடயங்களிலும் சமமாய்ச் சாதாரணாத்மாவாவன், அவனுக்கு மரணஞ் சம்பவியாமையின், ஜீவிதமே விளக்கமுடையதாம்; மேலுமிங்ஙனமே யூகிக்கத்தக்கதாம். யாவன், இராகத்துவேட விமுக்தமான அந்தர்ச் சீதளபுத்தியினாலே சாக்ஷியைப்போல இவ்வியாவற்றையும் கண்டு கொண்டிருப்பனோ, அவனது வாழ்க்கையே வானும் வையமும் வணங்கத்தக்கதாகும். பரமான்மாவாகிய தன்னை யொழிந்துள்ள பிறயாவற்றையும் நன்றாக அசாரமெனக் கண்டு தள்ளுதல் கொள்ளுதன் முதலிய சடங்குகளை யெல்லாம் ஒழித்து, சித்தத்தினது அவசானபூமியாகிய சாக்ஷியினிடத்தில் யாவனுற்சித்தம் அர்ப்பிக்கப் பெற்றதாமோ, அவனது ஜீவிதம் சோபிதமாகும்; தள்ளத்தக்க துக்கஹேதுவாயது வந்தடைந்தபோது மங்கி மடிதலுமிலை, கொள்ளத்தக்க சுகசாதனம் சம்பிராப்தமானபோது உள்ளே யானந்தித்துப் பொங்கி மகிழ்தலுமிலை யென்றுணர்க.

(ச.) அகங்காரத்தினை யகற்றி = தேகாதியினிடத்து யானென தென்னும் அபிமான சூனியராய், ஓர் பற்றின்றி = சந்தோஷக் கிலேசாதிகளால் அற்பமும் பரிசிக்கப்படாதவராய், அனைத்தும் = சர்வபூதங்களிடத்தும், சமமானவர் = சமதிருஷ்டி யுடையவரது,

ஆயுவேசுகமாம்; செகங்களின் கரியானவர் = இச்செகங்களைச் சாட்சிபோற் பார்ப்பவராது, ஆயுவே சிறக்கும். ஆன்மதத்துவத்தை யுள்ளபடி யுணர்ந்து பற்றுதலற்று, சித்தலயத்தான மான சொச்சொரூபத்தில் சித்தத்தை அதன்வசமாய் வைப்பவராது உயிர்வாழ்க்கையே சிறப் புள்ளதெனவுங் காண்க, மூலம்: பாவம் = அந்தக்கரண விருத்தி. (64)

(ஸ்ரீ-வீர - அ-கை.) மெய்யுணர்ந்த சின்மயர்ஞாயர், பரமார்த்த சொரூப ஆவிர்ப்பாவத் தானே வியாபித்து நன்னிலைபெறுவர், அவர்க்கு அப்பிராப்தமெவை, எவ்விகலோக சம்பந் தியாயபலத்தை யில்லையென விளிதுகவருவர், எதனைத்தான் கவர்ந்ததாக விட்டொழிப் பர்; கிராகியகிராகக வதன்சம்பந்த லக்ஷண அஞ்ஞதசையில் உண்டென அளவிடப்பெற்ற கிரியாகாரக சம்பந்தமடங்கிய அவாந்தர வாக்கியார்த்தவடிவ அவயவிக் கிரமங்களானும், மகாவாக்கியப் பிரமேய அவயவங்களாகிய அங்கப்பிரதான கிரியாகலாப லக்ஷண விகாரங்க ளானும் தீண்டப்பெறாத, கூடஸ்த வடிவமானவர், அவையடங்கிய அங்கசகிதப் பிரதானக் கிரியை முடித்துச் சாதிக்கத்தக்க பாரலௌகிக சொர்க்காதி பலத்தைத்தான் எதற்காகக் கவருவர் எதன்பொருட்டு விட்டொழிப்பர், அசங்க சாந்தமோக்ஷ வடிவமாகவே யமருவர் என்றுணர்த்தி யருளுவார் அதன் வடிவத்தைக் காட்டியருளல்:—பற்றென்பது.

பற்றுவான் பற்றுபொரு ளிரண்டும் பயில்பந்த
மற்றபோ துப சாந்திதோன் றிடுமது நிலைமை
பெற்றபோ துவீ டெனும்பெய ரந்நிலை பெறுமால்
வெற்றிவீ ரசிங் காதனத் திருத்தியால் விளங்க.

(ப - ரை.) பற்றுவான் = கிராககன், பற்றுபொருள் = கிராகியம், இரண்டும் பயில் பந்தம் = இரண்டுஞ்சேர்ந்து விவகரிக்கும் சம்பந்தம், அற்றபோது = க்ஷீணமாகியபோது. உபசாந்தி தோன்றிடும் = நல்லசாந்தியான துண்டாகும், அது நிலைமைபெற்றபோது = அவ்வுபசாந்தியானது திதியடைந்தபோது, அந்நிலை = அந்தத்திதியானது, வீடெனும் பெயர்பெறும் = மோக்ஷமென்னும் நாமத்தையடையும், வெற்றி வீரசிங்காதனத்திருத்தி விளங்க = ஜயசாலிகளாகிய வீரர்கள் வீற்றிருந்த சிங்க ஆசனத்தின்கண் அவர்கள் போல் அல்லாமல் யாவருக்கும் அநுகூலத்தனாய் இவன் இத்தகையனோ வென யாவரும் போற்ற வீற்றிருப்பாய். ஆல்கள் அசைகள்,

(ஸ்ரீ - வீர.) இகத்துள்ள பரத்திலுள்ள இட்டவநிட்ட சாதனஹானோபாதான நிமித்த இராகிய கிராககசம்பந்தம் உபசமமாகவே, அத்தியந்தம் இராகாதி விக்ஷேபசாந்தியுதயமாம், அச்சாந்தியே இராகாதிமூல உச்சேதத்தானே நல்லதிதியை யடையுமாயின் மோக்ஷநாமத் தான் மொழியப்பெறும்; எனவுரைத் தருளி யதன் உபபாதன உபசங்காரமாம். இவ்வண் ணம் நிலைபெற்றவர்க்கும் நூகர்வினை நீங்குகாறும் விவகாரசித்தியுண்டாம் என்பதிற் றிருட் டாந்தம்:—துயில்வோர் துயிலானே பிரஹ்மப் பிராப்தரேயாயினும் பிராண உதர அன்னர சாதியசைவை ஜீவன அதிர்ஷ்டாத்ம சந்நிதிமாத்திரத்தானே ஆசரிக்கின்றனர் எனக்கூறு மாறு, அந்த நிலைமையில் திதிபெற்றுச் சந்ததஞ் சாந்தராய், இலங்கும் உன்னைப்போன்ற ஜீவன் முக்தர்களாகிய புருடோத்தமர்களும் விவகரிப்பார்கள். அஃதொப்பநீயும் இராஜ்ய பாலனம் ஆசரிப்பாயெனக் கருதியருளல், பராவபோத விசிராந்த வாசனையனுகி யீண்டிச் சகத்திற்றிதியை, நீ ஆத்மாவில் வைத்த சிந்தையனாய், சுழுத்த சாக்கிரத் சந்தியிலிருப்பவன் போலக்காண்குதி, சுவாத்மாவின் கண்ணே செலுத்திய கருத்தினராய், இரம்மியங்களாகத் தோற்றும் அநாத்ம வர்க்கங்களிடத்தே இரமிக்கவே மாட்டார் பெரியோர், ஆன்மாவைத்

நீண்டாத துக்கங்களில் அஞர்டைந்து பொங்கார், தம்மிடத்திலேயே ஒரு இராசயனம் போல மதுரமாய சுகத்தையே யுடையவர் ஆகலின்; " துக்கிசான்றெனத் துன்றுறிலியாவர் தாந், துக்கிதைக் கரியாகித் துலங்கலோ, துக்கிதற்குக் கரித்தகைதுன்னுறு, துக்கிதாகரிக் கெங்ஙனந் தோன்றுமால் " என்னும் வார்த்திகத்தும் இப்பொருள் விளக்கங்காணலாம். இவ்வண்ணம் ஸ்ரீபகவாந்திருவருள் செய்தபோது, பிரகலாதன் எழுந்து வணங்கித் தோத் தரித்து ஆராதித்து, எந்தையே நினதுதெய்வத் திருவருளால் யாதொருகுறைவு மில்லாமல் விசிராந்தியையடைந்து சுகித்தேன், விருப்பு வெறுப்பையும் தள்ளல் கொள்ளலையும் துவந் துவங்களையுங் கண்டிலேன் என்று விண்ணப்பித்தபோது ஸ்ரீ கமலாபதி கூறியருளல்:— வெற்றியென்பதாதி. ஹேகுழந்தாய்! தானவாதீசனே ! உற்சாகத்துடன் இச்சிங்காசனத்தை யேற்று வீற்று வாழ்தி.

(ச.) பந்தம் = சம்பந்தம், பற்றுவான் முதலிய பேதப்பிரதீதி நிவிர்த்தியாயின், உப சாந்தி = சித்தத்திற்கு நிர்விகாரத்துவம், தோன்றிடும், அதுவே நிலைமைபெற்றபோது = திதியைப்பெறின், மோக்ஷமெனப்படும். (65)

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஸ்ரீ பகவான் பிரகலாதனுக்கு இராஜ்யாபிடேகஞ்செய்தருளி ஆசீர் வதித்தருளல்:—குரை, மங்கல, என்பன.

குரைசெய் சங்கின தோசையாற் குமுறுறவந்த
புரையில்வானவர் மங்கலப் பணிசெய்து புகழ
விரைவிலின் றுனை மாமுடி மிலைச்சு வனே
யரசுசெய்க நீயூழியி னளவென வருளி.

மங்கலப் புனல்கொணர் கென மஞ்சன மாட்டிச்
சங்குசக்கரந் தரித்தன கைகளாற் றனே
புங்கவத்திரள் போற்றிடப் பொன்முடி சூட்டி
யங்கணச்சுத னசுரர்கோ னுக்கிவை யறைந்தான்.

(ப - ரை:) குரைசெய் சங்கினதோசையால் = தொனித்தருளிய பாஞ்சஜன்யாரவத்தி னாலே, குமுறுறவந்த = உற்சாக அச்சாதிகளுடன் வந்த, புரையில்வானவர் = இக்குற்ற மற்றதேவக் கூட்டங்கள், மங்கலப் பணிசெய்து புகழ = மங்களவாழ்த்துகள் பாடிப்புகழ்ந் திட, விரைவில் இன்றுனை = அதிசீக்கிரமாக இப்போது உனக்கு, மாமுடி= மாணிமைதங் கிய நவரத்நகசித கிரீடத்தை, மிலைச்சுவல் நானே = யாமே சூட்டியருள்வோம், அரசு செய்கநீ ஊழியின் அளவென அருளி = கற்பகாலபரியந்தம் நீ தைத்தியராஜ்ய பரிபாலனம் செய்து வருவாயாக என்றனுக்கிரகித்தருளி.

மங்கலப்புனல் கொணர்கென = ஸ்ரீ கங்கை க்ஷீராப்தியாதி தீர்த்தங்கள் கொண்டு வருக வென்றுஞ் ஞாபித்தருளி, வந்தபின், மஞ்சனமாட்டி = அபிடேகித்தருளி, சங்குசக் கரந் தரித்தன கைகளாற்றனே = சங்கையும் சக்கிரத்தையுந் தாங்கிய திருக்கரங்களாற் சுயமே, புங்கவத்திரள் = தேவதைகள் முதலியவர்கள், போற்றிட = தோத்திரஞ்செய்ய, பொன்முடிசூட்டி = நவரத்நகசிதமான ஆயிரத்தெட்டு மாற்றுச் சுவர்ணகிரீடத்தைப் புனைந் தருளி, அங்கண் அச்சுதன் அசுரர்கோனுக்கு இவையறைந்தான் = அழகிய செந்தாமரை யிதழ்போலுந் திருநேத்திரங்களை யுடைய அழியாத செல்வநாயகன் தைத்தியேந்திரனுக்கு வருமாறு அருளிச் செய்வானாயினன்.

(ஸ்ரீ - வீர.) உனக்குயாமே விரைவில் திருவபிடேகம் செய்தருளுவேம்; பாஞ்சஜன் னியமென்னுஞ் சங்கநாதத்தைக் கேட்டு இங்குகுழுமிய சித்தர் சாத்தியர் சுரர்கூட்டங்கள் நினக்குமங்களஞ் செய்க, என்று புகன்றருளி ஸ்ரீ புண்டரீகாக்ஷர், மேன்மை மிக்கதானவ நாயகனை மிகவழகிய யோக்கியமாய இரத்நசிங்காசனத்தில், அம்புதத்தைச் சுமேருசிருங்கத் திற்போல வீற்றிருக்குமாறு அருளினர், கொண்டுவரும்படி ஆணையிட்டருளிய வண்ணங் கொணர்ந்துதந்த க்ஷீராப்தி முதலிய பெருங்கடல்களின் உதகத்தாலும், ஸ்ரீ கங்கைமுதலிய தீர்த்தப் பிரவாகங்களானும், சர்வதீர்த்த ஜலங்களானும், சர்வவிப்பிர இருடிமுனிக் கூட் டங்களோடும், சர்வசித்த கணங்களோடும், கூடியவராய், மீளவும் வித்யாதரயுதராய், லோக பால சமன்விதராய், இலங்கும் அமேயாத்மாவாகிய ஸ்ரீமந்நாராயணர், மகா அசுரேந்திர னுக்குத் தைத்தியராஜ்ய பட்டாபிடேகத்தைச் செய்தருளினர். மீளவும் என்ற சப்தசுவா ரசியத்தானே, பூர்வம் தாமொருவரே அபிடேகித்தருளினர், வித்தியாதராதிக ளுடன்கூடி மீளவும் உற்சாக அதிசயத்தானே அபிடேகித்தருளினர் எனத்தோற்றுகின்றது. அப்போது சுவர்க்கத்தில் தேவேந்திரனை மருத்கணங்கள் முன்னர் தோத்திரஞ் செய்ததேபோலச் சுரா சுரர்கள் பிரகலாதனைத் தோத்திரஞ்செய்தனர்கள், இவ்வண்ணம் இராஜ்யபட்டாபிடேகம் செய்வித்துக் கொண்ட அசுரநாயகனை நோக்கியருளி, சுராசுரர்களானே கீர்த்திக்கப்பெற்ற ஸ்ரீ மதுசூதனர் வருமாறு அருளத்தொடங்கினர்.

(ச.) சங்கு = பாஞ்சஜன்னியம், வானவர் = சித்தசாத்திய சுரகணங்கள்.

ஸ்ரீவசிட்டர்: தான் வரவழைத்த சர்வதீர்த்தங்களாலும், மஞ்சனமாட்டி. (66-67)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீபகவான் ஆசீர்வதித்தருளிய பின்னர் மறைந்தருளினு ரெனல்:—தள்ளின் என்பது.

தள்ளின் மேருவும் புவனமு மருக்கனுஞ்சசியு
முள்ளநாளெலா மரசுசெய் துயர்கென வருளிக்
கள்ளமாயையின் சிருட்டியொன் றொளித்தல் போற்கணத்தில்
வெள்ளவானவர் குழாத்தொடு மறைந்தனன் விண்டு.

(ப - ரை.) தள்ளின் மேருவும் = கெடாதசுமேருபர்வதமும், புவனமும் = சதுர்த்தச புவனங்களும், அருக்கனும் சசியும் = சூரியசந்திரர்களும், உள்ளநாளெலாம் = இருக்குங் காலமெல்லாம் அரசுசெய்துயர்க என அருளி = இராஜ்ய பரிபாலனஞ்செய்து மேம்பட வாழ்வாயாக என்றனுக்கிரகித்தருளி, கள்ளமாயையின் = வஞ்சகமாகிய மாயாசக்தியின், சிருட்டியொன்று = ஒரு சம்சாரமானது, ஒளித்தல்போல் = இலயமாதல் போல், கணத் தில் = க்ஷணப்போதில், வெள்ளவானவர் குழாத்தொடு மறைந்தனன் விண்டு = தேவதை களின் மிகப்பெரிய கூட்டத்துடன் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அந்தர்த்தானமாகி யருளினர்.

(ஸ்ரீ - வீர.) சுமேருபர்வதமும் பிருதிவியும், பிறமலைகளும் உள்ளவரையும், சந்திரார்க்க மண்டல முள்ளவரையும், அகண்டித குணசிலாகியாகிய மகாராஜாவாய் ஹே அநகனே நீ வீற்றிருத்தி. இஷ்ட அநிஷ்ட பலங்களைத் தியாகம் புரிந்து, சமதரிசனமாகிய மதியினனே, இராகபயக் குரோதமற்றவனாகி இராஜ்யத்தை யினிதாக நன்குபாலிப்பாயாக. ஸ்ரீ புண்டரீ காக்ஷராகிய பகவான் இவ்வண்ணம் ஆசீர்வாதஞ் செய்தருளியபின்னர், அசுரேந்திரனது திவ்ய மந்திரத்தினின்றும், நர அமர கிந்நராதிகளுடன் கூடினமையானே இரண்டாவது சம்சாரம்போல் விஸ்தாரமாகிய அப்பரிவாரக் கூட்டங்களுடன் மறைந்து சென்றருளினர்.

பிரகலாதாதிகளானே தாவப்பெற்று, பக்ஷிராஜாவாகிய கருடபகவானுடைய பிற்பாக இறகுகளில் இராசிபூதங்களாகக் குவிந்திருந்த பச்சாத் புட்பாஞ்சலிச் சமுதாயங்களை ஸ்ரீஹரியானவர் பூர்யமாணராய், முறையே ஸ்ரீபாற்கடலை யடைந்தருளி, சுரப்பிரவ தைப்போமாறு விடைகொடுத்தருளி, வெண்டாமரையின்கண் ணறுகால் வீற்றிருந் போல யோகி போகாசனத்தின் கண்வீற்றிருந்தருளினர்.

(ச.) உயர்கென = அகண்டிதகுண சிலாக்கியனுவா யென்றருளி.

(ஸ்ரீ-வீர - அ-கை.) சமாதிமுக்தனுக்கு விதேகமுக்தனோடு கூட விசிராந்தி சுக சாமியமாக மீண்டும் கிளம்பும் காரணத்தையறியும் வேட்கையராய் ஸ்ரீஇராகவர் வினுதல் என்னவென்பது.

என்னவோதிய வசிட்டனை யிராகவ னோக்கி
யன்னதானவர்க் கரசனுய் வீடுற்ற வறிஞன்
தன்னதுள்ள மெய்ப்பரத்திலே தன்மயமான
பின்னர்மால் சங்கிஞேசையாற் பிறந்ததெப்பரிசோ.

(ப - ரை.) என்னவோதிய வசிட்டனை = என்றிவ்வண்ண மருளிச்செய்த ஸ்ரீவசிட் பகவானை, இராகவன் நோக்கி = ஸ்ரீ இராமச்சந்திரர் பார்த்து, அன்னதானவர்க் கரசனு வீடுற்ற அறிஞன் தன்னது = தாங்கள் அருளிய தானவேந்திரனுய் மோக்ஷசொரூபமாகி விவேகியாம் பிரகலாதனுடைய, உள்ளம் = சித்தமானது, மெய்ப்பரத்திலே = சத்தியமாகு பரமபதத்திலே, தன்மயமான பின்னர் = ஏகைகபாவத்தை யடைந்தபின்னர், மால்சங்கி ஓசையால் பிறந்தது எப்பரிசோ = ஸ்ரீமந்நாராயணரது பாஞ்சஜன்னிய நாதத்தினுலே கிளம்பியது எவ்வாறோ.

(ஸ்ரீ - வீர.) ஹேபகவந் ! மகாத்மாவாகிய பிரகலாதனுடைய மனமானது பரபதத்தி லீனதமாகிய தன்மயமான பின்னர் பாஞ்சஜன்யத் தொனியினுலே யாங்ஙனம் உணர்த்தப் பெறலாயது, மனமானது விலயமாயின் பாஞ்சஜன்ய நாதசிரவணமும் துர்லபமாகலின் யாங்ஙனம் அதனுற்பிரபோதம் என்பது கருத்து.

(ச.) மெய்ப்பரத்தில் = பிரஹ்மத்தில். (69)

(ஸ்ரீ-வீர - அ-கை.) பிராரப்தசேஷ உற்போதித சுத்தவாசனுசகித பகவதிச்சையே உள்ளப் பிரபோகத்தில் ஹேதுவாம் என்று சிறப்புரைப்பார், சதேகவிதேகமுக்தியைப் பகுத்துக்காட்டி, ஜீவன் முத்தர்கள்பால் சுத்தவாதனை யிருக்கும் இயல்பைக்கூறுகின்றுர்;— என, சுத்த வென்பன.

எனவினுவலு மிராமனுக் கருந்தவ னுரைப்பா
னனல்பயின் றவித் தாமென வமல்வா தனைதான்
கனமில்சீவன்முத் தருக்கெலா மிதயத்தின் கண்ணே
சனன்வங்குர மீண்டில தாகியே சாரும்.

சுத்தமாய்ப் பரமமாகித் தோற்றஞ்சா லுதாரமாகிச்
சுத்தமாஞ் சாத்திகத்தைத் துன்றியே விடாமலொன்றிச்
சுத்தவாத் துமத்தியான மயமதாய்த் துவக்கொன்றில்லாச்
சுத்தவா தனைகணித்தஞ் சுழுத்திவா தனைபோனிற்கும்.

(௧ - வை.) எனவினவலும் = என்று ஸ்ரீ இராகவர் வினவியதும், இராமனுக்கு = இராமச்சந்திர மூர்த்திக்கு, அருந்தவன் = அரியதவத்தினையுடைய ஸ்ரீவசிட்டபகவான், ...ப்பான் = அனுக்கிரகிப்பதாவது, அனல்பயின்ற வித்தாமென = தக்தபீஜஙியாயமாக, ...ாதனை தான் = சுத்த வாசனை யானது, கனமில் சீவன்முத்தருக்கெல்லாம் = தேகா...ிமானங்கழன்ற உணர்வுருவமாய ஜீவன்முத்தர்கள் எவர்கட்கும்; இதயத்தின் கண் ... = மனத்தானத்தில், சனனவங்குர மீண்டிலதாகியே சாரும் = பிறப்பா முளை மறுபடி ...மாறே பொருந்தாநிற்கும்.

...த்தமாய்ப் பரமமாகி = தூய்தாய் மேன்மைமிக்கதாய். தோற்றஞ்சால் உதாரமாகி = ...ாதாரப் பிரதீதிமத்தாய், சுத்தமாம் சாத்திகத்தைத் துன்றியே விடாமல் ஒன்றி = ...ிகத்திற் சாத்விகத்தை யெப்போதுமே விடாமலுடையதாய், சுத்தவாத்துமத் தியான ...தாய் = பரிசுத்தமான பரமான்மத் தியானவடிவ முடையதாய், துவக்கொன்றில்லா = ...ந்தமே யில்லாததாய், சுத்தவாதனைகள் = இலங்கும் சுபவாசனைகள், நித்தம் = நித்தி ...ில் இடைவிடாமற் சகசமாகவே, சுழுத்திவாதனைபோல் நிற்கும் = துயில்வாதனை ...ல், ...ருக்கும்.

...ச் (... - வீர.) ஹே அனகனே! இவ்வுலகத்தின் கண்ணே இருவகை முக்தத்தன்மை ...க ...பவிக்கின்றன, அவற்றுள் ஒரு விபாகம் தேகத்தோடு கூடியதாம், மற்றொருவிபாகம் ...ம் மற்றிருப்பதாம். கூறும் வகையாய அவற்றை யொருமையுடன் கேட்குதி; விபாகமென் ... விபாஜகலக்ஷண பேதமாம். இஷ்ட அநிஷ்டங்களாகிய கருமங்களின் தள்ளுதல் கொள் ...ல் விடயங்களில் எந்தப்பற்றற்ற மதிக்கு இராகமிலதாமோ அந்தத்திதியை நீயறிதி ...டு ஜீவன்முக்தத் தகைமையாமென வவனுக்கு, அதுவே தேகதாரண வேதுவாய ...ரப்தசேடம் போகத்தானே க்ஷயமாகவே புனர்ஜனன வர்ஜிதமாய் விதேகமுக்தத் ...கைமையெனப் புகல்ப்பெறும், அந்நிலைமை திருசியத் தகைமையை வரவொட்டாதாம். ...த்தவிதைக் கொப்பாகி, மீண்டுந் திருசியத்தகைமை யடையவொட்டாமன் மறுபடியும் ...மாங்குர விவர்ஜிதமாயது மருவும்; ஜீவன் முக்தர்களிடத்திலோ சமாதியெழுச்சியானே ...டும் தேகதிருசியத் தகைமையில் ஹேதுவாகாவாம் எனல்:—கனமில் என்பதாதி. ...த்துக்கொண்டே விமுக்தர்களா யிருப்பவரின் இருதயத்தில் ஆசங்கமாலின்ய நிர்முக்த ...ய தூய்தாய சுபவாசனை யிருக்கும்; அந்தச்சுத்தப் பிரஹ்மாத்ம பாவனையானது பவித் ...மாய்ப்பரம உதாரமாய் திருஷ்ணு கார்ப்பண்யரகிதமாய் தூயசத்துவந் தொடர்ந்ததாய்த் ...லங்கும்.

அந்தக்கரணத்திற்குப் பிரஹ்மத்தின் கண்ணே இலயமெய்திய போதினும் வாசனை ...ருக்கு மென்பதில் திருஷ்டாந்தமறைதல்: — சுழுத்திவாதனை யென்பது. ஆன்மத்தியான ...மாய அவ்வாதனை நித்தியம் துயில்வோனுக்கே யெனநிற்கும்.

(சு.) ஸ்ரீ வசிஷ்டர்; அனல்பயின்ற வித்தாமென = வறுத்த விதைக்கொப்பாய், அத ...லே, மீண்டு ஜனனரூபமான அங்குரமிலதாகி. அமலவாதனை ஜீவன்முத்தருடைய இரு ...பத்தில், சாரும் = வசிக்கும் என்றதாயிற்று.

அதனையே விரித்துரைத்தல்:—பர்பம் அற்பமும் இன்மையின், சுத்தமாய், கைவல்ய ...த்தைத்தருவதாதலின், பரமமாகித் தோற்றஞ்சாலுதாரமாகி, சுத்தமாஞ் சாத்திகத்தைத் ...ன்றி = இரசதமோ குணங்களால். விடாமல் ஒன்றி = பின்னப்படாமல் விருத்திசெய் ...தாய், சுத்த + வாதனைகள், ஜீவன் முத்தரிடத்து, நித்தஞ் சுழுத்திவாதனைபோல் மிகவு ...க்கமாய், நிற்கும். மூலம்:—அசம்பின்னம் = கலவாமல்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) எவ்வளவுகாலஞ் சென்றபோதினும் தேகமானது இதியாகுரயின் வெளியேவருதல் கூடுமென விளம்பல்:—ஆயிரமென்பது.

(ச-அ-கை.) பரமபதத்திற் ருதாத்மியத்தை யடைந்த உள்ளமானது சரீரமிருந்தால் நுகர்வினை வயத்தானே திரும்புதல் கூடுமெனல்:—ஆயிரமென்பது.

ஆயிர வருடஞ்சென்று மங்கமே யிருக்கிலுள்ளே
மேயதா மவ்வவத்தை மெல்லென வொருபானின்று
தேயல தாகித்தோன்றுஞ் செறியுமவ் வவத்தையாலே
தூயநற் சீவன்முத்த ருணர்ச்சியைத் தொடர்வரென்றான்.

(ப - ரை.) ஆயிரவருடம் சென்றும்=சகத்திர சம்வத்சரங்கள் சாம்பியபோதினும், அங்கமே யிருக்கில்=சரீரமானது நுகர்வினை வயத்தாற்றங்குமேலாயின், உள்ளேமேயதாம்அவ் வவத்தை=அந்தரிற் பொருந்தியதான அந்த அவத்தை, மெல்லெனவொருபா னின்று தேயலதாகித்தோன்றும் = ஓரிடத்தமர்ந்திருந்து கெடாமன் மெதுவாக வினைவ[illegible]ல் வெளியேவரும், செறியும் அவ்வவத்தையாலே=பொருந்தாநின்ற அந்த அவத்தை[illegible]லே, தூயநற்சீவன் முத்தர்=பரிசுத்தமான சுபவாசனையையுடைய ஜீவன் முத்தர்கள், [illegible]ர்ச்சியை = வெளிநாட்டத்தை, தொடர்வர் என்றான் = பற்றுவர் என்று ஸ்ரீ வசிட்டபக வான் அருளிச்செய்தார்.

(ஸ்ரீ - வீர.) வருட சகத்திராந்தத்திலும், அடங்கியிருந்த அதேயுள்ளவத்தையானே, தேகதாரண ஹேதுவாய பிராரப்தசேட மிருக்குமாயின், ஜீவன்முக்தர் உணராநிற்பர். அது வே பிரகலாதபோதத்தினும் எதுவாகும், பிரகலாதனனவன் உள்ளேயிருந்த தன்னுடைய சங்கு சப்தத்தானே யுணர்த்தப்பெற்ற சுத்தசத்துவ வாசனையானே. போதத்தை யடைந்த னன். செவியானது அடங்கியிருப்பின் சங்கத்தொனியும் கேளாமையின் அத்துணைமாத் திரையானே யாங்ஙனம் போதமாதல் எனின்? ஸ்ரீ ஹரியானவர் சகல பூதங்கட்கும் கார ணாத்மா = சத்தியசங்கற்பர், அவருக்குயாது தோற்றுகின்றதோ அது அவ்வாறேயாம் விரைவில், சர்வம் ஆன்மாவே காரணம். பிரபோதத்தைப் பிரகலாதன் எய்துகவென ப் போது ஸ்ரீ பகவான் சிந்தித்தருளினரோ அப்போதே நிமிடமாத்திரத்தில் அவன் உணர முயன்றனன். சுத்தவடிவத்தானே, பூதங்களின் காரணமாகிய அவ்வியாகிருதத்தானும், காமகருமாதி நிமித்தங்களானும் தம்மாலே ஜகத்சிருஷ்டியின் பொருட்டு ஸ்ரீ வாசுதேவ மயவடிவமாகத் திருமேனியொன்று கவரப்பெறும், என்பது சுருதிமிருதி புராணப்பிரசித்த மாம். அதனானே, அந்தத்திருமேனியின் றரிசனத்தான் ஆன்மதரிசனமாம், ஆன்மதரிசனத் தானே எளிதாக அதன்றரிசனமாம், என்னை ஆன்மாவலோகனத்தானே மாதவன் விரைந்து காணப் பெறுவன், மாதவாராதனத்தானே விரைவிற் சுயமான்மாக் காணப் பெறும் என்பது பெரியோரது சம்மதமாதலின். ஹே இரகுகுலதிலகனே ! இத்திருஷ்டி யைப் பின்பற்றி ஆன்மாவலோகனத்தில் முயன்றிடுதி விரைவில், அதனால் விசாராத்மாவா கிய நீ சாசுவதமான பதத்தை யடைந்திடுவாய். பரமேசுரப் பிரசாதஜனித விசாராதியாலே யவசியம் ஞானலாபமாம் என்பது இக்கதையின் முக்கிய தாற்பரியமாம்; இங்ஙனமே ஸ்ரீ பகவான் வாதராயணரது சூத்திரமும் கூறுகின்றது:—"பராபிதியானத்தானே மறைந்தது அவனினின் றுயிர்க்கடல் விடலாமே" = உயிர்க்கு = ஜீவனுக்கு, மறைந்தது = மறை பட்டிருந்ததாகிய ஐசுவரியம், பரஸ்ய = ஈசுவரரது, அபிதியானத்தானே =மிகுந்த ஒருமை யோடும் அன்போடும் செய்யப்பெற்ற நிரந்தர ஆதரவோடு கூடிய நற்றியானத்தானே, அ[illegible]

